# விவிலியக் களஞ்சியம்

## I

## அ, ஆ, இ, ஈ

பதிப்பாசிரியர்
''தியாகு''



விவிலிய அறிமுகம்
தியான ஆசிரமம்
சென்னை-28.

முதல் பதிப்பு - மார்ச், 1991.
இரண்டாம் பதிப்பு - மார்ச், 1992.
மூன்றாம் பதிப்பு - மார்ச், 1994.
நான்காம் பதிப்பு - அக்டோபர், 1996.
ஐந்தாம் பதிப்பு - மே, 2000.
ஆறாம் பதிப்பு - மார்ச், 2004.
ஏழாம் பதிப்பு - அக்டோபர், 2009.

**Nihil Obstat,**
P.C. Thomas

**Imprimaters,**
+M. Arockiasamy,
Archbishop of Madurai.

விலை : ரூ 250/-

நூல் கிடைக்கும் இடங்கள்

தியான ஆசிரமம்

சென்னை-28.

மற்றும் மறைமாவட்ட மேய்ப்புபணி நிலையங்கள்

Type Setting : Sri Maruthy Laser Printers, Chennai.
Savithri Laser Printers, Chennai.
Printed at Hi-tech Offset (P) Ltd., Chennai - 107. Ph.: 2479 3339, 2479 7245.

# அர்ப்பணம்

இறைவனின் வார்த்தையை இதயத்தில் ஏற்று
வார்த்தையாம் இறைவனை உதரத்தில் வளர்த்து
மனு உருவான வார்த்தையை உலகிற்கு அளித்த
இறைவனின் அன்னையாம் மரியாளுக்கு
அன்பு கலந்த அர்ப்பணம்.

# முன்னுரை

விவிலியக் களஞ்சியம்-முதல் பாகத்தைத் தமிழ்கூர் நல்லுலகிற்கு அளிப்பதில் பெரும் மகிழ்ச்சி கொள்கிறேன். இக்களஞ்சியம் பலர் சேர்ந்த கூட்டு முயற்ச்சியின் விளைவாகும். தமிழ்க் கத்தோலிக்கப் பாரம்பரியத்தில் முதல் முயற்சியாகும். இந்நூலும் இதற்குப்பின் வரும் நூல்களும் விவிலிய அன்பர்களுக்குப் பெரிதும் பயன்படும் என்ற நம்பிக்கையில் இந்நூலை வெளியிடுகிறேன்.

இங்குச் சில குறிப்புகளைத் தருவது நல்லது. ஆள், இடம் ஆகியவற்றின் பெயர்களின் மூல எபிரேய, கிரேக்க உச்சரிப்புக்கள் தமிழ் இலக்கண மரபுக்கேற்ப மாற்றி அமைக்கப்பட்டுள்ளன. உதவியாக ஆங்கிலச் சொற்களும் அடைப்புக் குளிகளுக்குள் தரப்பட்டுள்ளன. சங்கீதங்களின் எண்கள் எபிரேய முறையில் தரப்பட்டுள்ளன. இறையியல் கட்டுரைகளில் பெரும்பகுதி Xavier Leon-Dufour-இன் Dictionary of Biblical Theology நூலைத் தழுவி எழுதப்பட்டுள்ளன.

இனி, நன்றி நவில்தல் என்ற இனிய கடமைக்கு வருகிறேன். இந்நூல் தயாரிப்பில் பலர் ஈடுபட்டுள்ளனர். இவர்கள் பல கட்டுரைகளின் பொருட்களையும் செய்திகளையும் தொகுத்துத் தருவதில் பெரிதும் உதவியுள்ளனர். ஒவ்வொரு கட்டுரைக்குப் பின்னும் அதைத் தொகுத்தவரின் பெயர் கொடுக்கப்படவில்லை. இவர்கள் அனைவரின் பெயர்ப்பட்டியல் பின் தரப்படுகிறது. இவர்கள் அனைவருக்கும் எனது நன்றி உரித்தாகுக.

இந்நூலைத் திட்டம் செய்த காலத்தில், அறிவுரை கூறியும் உற்சாகப்படுத்தியும் பொருள் உதவி நல்கியும் ஊக்கமளித்த மேதகு கர்தினால் சைமன் D. லூர்துசாமி ஆண்டகை அவர்களுக்கு எனது உளம் கனிந்த நன்றி உரியதாகும். தயாரிப்புக் காலத்தில் பொருள் உதவி செய்த Adam Schall Var Bell E.V., Koln, பதிப்பித்தலுக்குப் பொருள் உதவி செய்த Missio, Munchen. ஆகிய இரு நிறுவனங்களுக்கும் எனது மனமார்ந்த நன்றி. இவர்களின் உதவியின்றி இந்நூலை இவ்வளவு மலிவாகக் கொணர்ந்திருக்க முடியாது.

இந்நூலுக்கு அணிந்துரை வழங்கியுள்ள மதுரைப் பேராயர் மேதகு M. ஆரோக்கியசாமி ஆண்டகை அவர்களுக்கும், இறையியல் கட்டுரைகளில் பலவற்றைத் தணிக்கை செய்து உதவிய அருட் தந்தை P.C. தாமஸ் அடிகளார்க்கும், இந்நூல் தயாரிப்பில் நெடுகலும் பிரதிகளைத் திருத்தியும் பலவாறு உதவியும் செய்து வந்துள்ள திரு. தனராஜ், திரு. சக்கரியா, அருட் தந்தையார்கள் P.T. அமல்ராஜ், சேவியர் இளங்கோ, N. யோனாஸ், U. சுந்தரம், S.I. அருள்சாமி ஆகியோர்களுக்குச் சிறப்பான முறையில் நன்றி கூறுகிறேன். இம்முயற்சியில் ஊக்கமளித்த இயேசு சபை மதுரை மாநில முன்னாள் தலைவர் அருட்தந்தை மைக்கிள் ஜெராஜ் அடிகளார்க்கும் தயாரிப்புக் காலத்தில் எங்கள் குழு தங்குவதற்கு இடமளித்து விருந்தோம்பி நல்லுதவிகள் செய்த திருச்சிராப்பள்ளி, புனித சின்னப்பர் குருத்துவக் கல்லூரியினருக்கும், குறிப்பாக அதன் முன்னாள் அதிபர்கள் அருட்தந்தையர் லாம்பர்ட் மிராண்டா, ராசசேகரன் ஆகியோருக்கும் அன்போடு பராமரித்து உதவி செய்த எனது இல்லங்களாகிய லோயோலாக் கல்லூரி, தியான ஆசிரமம் ஆகியவற்றின் இயேசு சபைச் சகோதரர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றி. வரைபடங்கள் கொடுத்துதவிய திண்டிவனம், தமிழ்நாடு முப்பணி நிலையத்தினருக்கும் எனது மனமுவந்த நன்றி. அச்சு அமைத்த Sri Maruthy Laser Printers, Savithri Laser Printing, Hi-Tech Offset Printers, சென்னை ஆகியோருக்கும் எனது உளம் கனிந்த நன்றி.

இறைவார்த்தையை நன்குணர்ந்து, அன்பு செய்து, அதன்படி வாழ்வதற்கு இந்த விவிலியக்.களஞ்சியம் பெரிதும் துணை செய்யும் என்று நம்புகிறேன். இக்களஞ்சியத்தைத் தயாரிப்பதில் நெடுகலும் ஏவுதலும் ஊக்கமும் உரமும் அளித்து வழி நடத்திய இறைவன் திருவருள் துணைக்குச் சிரம் தாழ்த்தி நன்றியுடன் வணக்கம் செலுத்துகிறேன்.

**"தியாகு".**

# விவிலியக் களஞ்சியம்
# அணிந்துரை

விவிலியக் களஞ்சியம் தமிழ்க் கத்தோலிக்க உலகில் பூத்த புதிய மலர், முதல் மலர். ஐந்து ஆண்டுகளாக அருட்தந்தையர் சிலரும் குரு மாணவர் சிலரும் இணைந்து செய்த இனிய முயற்சியில் மலர்ந்த பூ. இம்மலருக்கு மூன்று அல்லது நான்கு இதழ்கள் உண்டு; இதழ் ஒவ்வொன்றும் ஏறத்தாழ 1000 பக்கங்களுக்கு விரிந்து நிற்கும்.

இதில், விவிலியத்தில் வரும் மக்களின் சிறப்புப் பெயர்கள், இடங்களின் சிறப்புப் பெயர்கள், பொதுப் பெயர்கள், இறையியல் தலைப்புகள் ஒவ்வொன்றுக்கும் ஒரு கட்டுரை உண்டு. இதில் உள்ள படங்களும் வரைபடங்களும் பொன் மலருக்குப் புதுமணம் ஊட்டுகின்றன.

இப்போது வெளிவரும் முதற்பகுதி உயிரெழுத்துகளில் தொடங்கும் சொற்களுக்குரிய கட்டுரைகள் கொண்டுள்ளது.

இது ஒரு புதிய பூ என்றால், காகிதப் பூ அன்று; நறுமணம் கமழும் மல்லிகை, முல்லை ஆகும். இதை நாம் நடைமுறையில் பயன்படுத்த வேண்டும்.

இது ஒரு செடி என்றால், பார்ப்பதற்கு மட்டும் உரிய அழகுச் செடி (குரோட்டன்ஸ்) அன்று; அதாவது மற்ற நூல்களின் நடுவில் வைத்து அழகு பார்க்க வேண்டிய நூலன்று.

இதை ஒரு தோப்பு என்று சொல்லலாம். மா, பலா, வாழை போன்ற தீங்கனிகள் தரும் மரங்கள் உள்ள ஒரு கனித்தோப்பு, இதை நாளும் சுவைக்க வேண்டும். இதன் வழியாக, இறை வார்த்தை கொண்ட விவிலியத்தை ஆழமாக அறிந்து கொள்ளலாம்.

இதற்கு வித்திட்டு, நீருற்றி, வளர்த்தவர் அருள் தந்தை எம். சந்தியாகு சே.ச. ஆவார். இவர் கணித ஆசிரியராகக் கல்லூரிகளில் பணி புரிந்தவர்; இறைவாக்கால் ஈர்க்கப்பெற்று அதன் பணிக்கே தம்மை மனமுவந்து அர்ப்பணித்தவர், பொது மக்கள் விவிலியத்தை அறிந்துகொள்ள அதன் பல்வேறு நூல்களைப் பற்றி அறிமுக நூல்கள் படைத்தவர். சிறுவர்களும் விவிலிய உலகிற்குள் வர, விவிலியச் சித்திர நூலைத் தமிழ் உலகில் பரப்பி வருபவர். எனவே, தமிழ் விவிலிய உலகில் சுவாமி சந்தியாகுக்கு ஒரு தனி இடம் உண்டு.

''ஆற்றின் இரு பக்கங்களிலும் வாழ்வின் மரமிருந்தது. மாதத்திற்கு ஒருமுறையாக அது ஆண்டுதோறும் பன்னிரு முறை கனிகள் தரும் (திருவெளிப். 22:1-2)

இந்தப் பயன்தரு மரம் போல சுவாமி 'தியாகு' வின் பணி சிறக்க மனமார வாழ்த்துகிறேன்.

**+ M. ஆரோக்கியசாமி,**
**மதுரைப் பேராயர்**

*17.12.90.*

# இந்நூலைத் தயாரிப்பதில் உடன் உழைத்தவர்கள்

அந்தோணிசாமி A.
அமலதாஸ் M.
அமல் ராஜ் P.T.
அருள்சாமி S.I.
அருள்ராஜ்
ஆரோக்கிய சாமி C.
ஆரோக்கியதாஸ்
ஆரோக்கிய நாதன் P.
ஆன்ரு டிரோஸ்
இஞ்ஞாசி G.
இருதயராஜ் A.
உபால்டு M.
ஏர்னஸ்ட் A.
கருணைதாஸ்
சந்தியாகு M.
சவரிமுத்து X.
சர்லஸ் குமார் N.A.
சுந்தரம் U.
சூசை ஆரோக்கியசாமி
சேவியர் இளங்கோ
ஜான்சன் ராஜ் S.
ஜெயபாலன்
ஜெரால்டு S.
ஜேம் ரொசாரியே B.
ஜோசப் லயனஸ் S.
ஜோ லாரன்ஸ்
ஜோனாஸ் N.
ஞானப் பிரகாசம் F.
தாஸ் F.X.
தீம்மஸ் P.
நசரேன் S.
பாக்கியராஜ் S.
பால்ராஜ் B.
பீட்டர் சகாயராஜ்
பிரான்சிஸ்
போனவென்சர்
மரியதாஸ் I.
மரிய பீட்டர்
மரிய வளன்
யூக்கரிஸ்ட்
லூர்து Y.A.
லூர்து சாமி A.
லூர்துராஜ் G.G.
ரொசாரியோ கோமஸ்
விக்டர் M.
வின்சென்ட் G.

## விவிலியத் திருநூறைப் பட்டியலும் சுருக்கக் குறிப்பும்

### I. பழைய ஏற்பாடு

| | |
|---|---|
| 1. ஆதி ஆகமம் (தொடக்கநூல்) | ஆதி. |
| 2. யாத்திராகமம் (விடுதலைப் பயணநூல்) | யாத் |
| 3. லேவியராகமம் (திருப்பணியாளர் நூல்) | லேவி |
| 4. எண்ணாகமம் (எண்ணிக்கை நூல்) | எண் |
| 5. உப ஆகமம் (துணைச்சட்டநூல்) | உப |
| 6. யோசுவா ஆகமம் | யோசு |
| 7. நீதிபதிகள் ஆகமம் (விடுதலைத் தலைவர்கள் நூல்) | நீதி |
| 8. ரூத்து ஆகமம் | ரூத் |
| 9. 1 சாமுவேல் ஆகமம் | 1 சாமு |
| 10. 2 சாமுவேல் ஆகமம் | 2 சாமு |
| 11. 1 அரசர்கள் ஆகமம் | 1 அர |
| 12. 2 அரசர்கள் ஆகமம் | 2 அர |
| 13. 1 நாள் ஆகமம் (ஆட்சிக் குறிப்பேடு) | 1 நாள் |
| 14. 2 நாள் ஆகமம் (2 ஆட்சிக் குறிப்பேடு) | 2 நாள் |
| 15. எஸ்ரா ஆகமம் | எஸ் |
| 16. நெகேமியா ஆகமம் | நெகே |
| 17. தோபியா ஆகமம் | தோபி |
| 18. யூதித்து ஆகமம் | யூதி |
| 19. எஸ்தர் ஆகமம் | எஸ்த |
| 20. யோபு ஆகமம் | யோபு |
| 21. சங்கீதங்கள் (திருப்பாடல்கள்) | சங் |
| 22. பழமொழி ஆகமம் (நீதி மொழிகள்) | பழ |
| 23. திருவுரையாளர் ஆகமம் | திருவுரை |
| 24. உன்னத சங்கீதம் (பேரின்பப் பாடல்) | உ.ச. |
| 25. ஞான ஆகமம் | ஞான |
| 26. சீராக்கு ஆகமம் | சீரா |
| 27. எசாயா ஆகமம் | எசா |
| 28. எரேமியா ஆகமம் | எரே |
| 29. புலம்பல் ஆகமம் | புல |
| 30. பாரூக்கு ஆகமம் | பாரூ |
| 31. எசேக்கியேல் ஆகமம் | எசே |
| 32. தானியேல் ஆகமம் | தானி |
| 33. ஓசேயா ஆகமம் | ஓசே |
| 34. யோவேல் ஆகமம் | யோவே |
| 35. ஆமோஸ் ஆகமம் | ஆமோ |
| 36. ஒபதியா ஆகமம் | ஒப |
| 37. யோனா ஆகமம் | யோனா |
| 38. மீக்கா ஆகமம் | மீக் |
| 39. நாகூம் ஆகமம் | நாகூ |
| 40. அபக்கூக் ஆகமம் | அப |
| 41. செப்பானியா ஆகமம் | செப் |
| 42. ஆகாய் ஆகமம் | ஆகா |
| 43. செக்கரியா ஆகமம் | செக் |
| 44. மலாக்கி ஆகமம் | மலா |
| 45. 1 மக்கபேயர் ஆகமம் | 1 மக் |
| 46. 2 மக்கபேயர் ஆகமம் | 2 மக் |

### II. புதிய ஏற்பாடு

| | |
|---|---|
| 47. மத்தேயு நற்செய்தி | மத் |
| 48. மாற்கு நற்செய்தி | மாற் |
| 49. லூக்கா நற்செய்தி | லூக் |
| 50. யோவான் நற்செய்தி | யோவா |
| 51. அப்போஸ்தலர் பணிநூல் (திருத்தூதுவர் நூல்) | அ.ப. |
| 52. உரோமையர் | உரோ |
| 53. 1 கொரிந்தியர் | 1 கொரி |
| 54. 2 கொரிந்தியர் | 2 கொரி |
| 55. கலாத்தியர் | கலா |
| 56. எபேசியர் | எபே |
| 57. பிலிப்பியர் | பிலி |
| 58. கொலேசியர் | கொலோ |
| 59. 1 தெசலோனிக்கேயர் | 1 தெச |
| 60. 2 தெசலோனிக்கேயர் | 2 தெச |
| 61. 1 திமொத்தேயு | 1 திமொ |
| 62. 2 திமொத்தேயு | 2 திமொ |
| 63. தீத்து | தீத் |
| 64. பிலமோன் | பில |
| 65. எபிரேயர் | எபி |
| 66. யாக்கோபு | யாக் |
| 67. 1 பேதுரு | 1 பேதுரு |
| 68. 2 பேதுரு | 2 பேதுரு |
| 69. 1 யோவான் | 1 யோவா |
| 70. 2 யோவான் | 2 யோவா |
| 71. 3 யோவான் | 3 யோவா |
| 72. யூதா | யூதா |
| 73. திருவெளிப்பாடு | திருவெளி |

## துணை நின்ற நூல்கள்


Anderson G.N : A Critical Introduction to the O.T.
A History and Religion of Israel.
The Living Word of the O.T.

A New Catholic Commentary on Holy Scripture.

Bright J : A History of Israel.

Claus Schedl : History of the O.T.

Danielou J : The Lord of History

Daniel-Rops : Sacred History

Edman Jacob : God, the Lord of History

Ellis P.F : The Men and Message of the O.T.

Grelot P : Introduction to the Bible

Harry Thomas Frank : Discovering the Biblical World

Helmer Ringgren : Israelite Religion

James Hastings : Dictionary of the Bible

Leon-Dufour X : Dictionary of Biblical Theology

Louis Hartman : Encyclopedic Dictionary of the Bible

Mc Kenzie J.L : Dictionary of the Bible

Moriarty F.L : Introducing the O.T.

Osmund Lewry O.P : Introducing the O.T.

Robert A & Feuillet A : Introduction to the Bible

Robert A & Tricot A : Guide to the Bible

The Eerdmans Bible Dictionary

The Harper's Dictionary of the Bible

The Interpreter's Dictionary of the Bible 5 Vols

The Jerome Biblical commentary

The Jerusalem Bible

Weather head : A Guide to the Bible

William P. Baber : Everyone in the Bible

''தியாகு'' : *விவிலிய அறிமுகம் (10 பாகங்கள்)*

# அ

**அ** தமிழின் நெடுங்கணக்கில் முதல் எழுத்து எல்லா மொழிகளிலும் முதல் ஒலியைக் குறிக்கும் அடையாள எழுத்து "அகர முதல எழுத்தெல்லாம்" (திருக்குறள் 1.1.) எபிரேய மொழியில் அலேபு (அலெஃப்) என்றும் கிரேக்க மொழியில் ஆல்பா என்றும் உச்சரிக்கப்படும் காண்க: ஆல்பாவும் ஒமேகாவும்

**அகசியா** (AHAZIA – யாவே பற்றிக் கொண்டார்)

1. ஆகாப்–ஈசெபேல் ஆகியோருக்குப் பிறந்தவர். யூதாவின் அரசன் யோசபாத்து அரியணை ஏறிய 17–ஆம் ஆண்டு, இவர் சமாரியாவின் அரசனாகி இஸ்ராயேலில் ஈராண்டுகள் ஆட்சி செலுத்தினார் (கி.மு. 854–853; 1 அர 22: 52). இவர் ஆண்டவர் திருமுன் தீயன புரிந்து, தன் தாய் தந்தையர் வழியிலும், இஸ்ராயேலைப் பாவத்திற்கு உள்ளாக்கின நெபாத்தின் மகன் எரொபெயாமின் வழியிலும் நடந்தார். அத்தோடு பாகாலுக்கு ஊழியம் செய்து, அதை வழிபட்டார். இதனால் ஆண்டவருக்குக் கோபம் வருவித்தார் (22:53–54).

இவரது ஆட்சிக் காலத்தில் அண்டை நாடுகளோடு இஸ்ராயேல் உறவு நன்கு அமையவில்லை. ஆகாபு இறந்தபின் மோவாப்பியர் கிளர்ச்சி செய்தனர். கப்பம் கட்ட மறுத்தனர் (2 அர 1:1; 3:4–5). யோராம் ஆட்சி வரை இந்தக் கிளர்ச்சியை அடக்க ஒரு முயற்சியும் எடுக்கப்படவில்லை (3:6). எசியோன்–கெபேரை மையமாகக் கொண்டு ஒரு கப்பற்படை அமைக்க யோசபாத்து மறுத்துவிட்டார். ஏனெனில் இஸ்ராயேலின் ஆதிக்கம் தனது நாட்டில் ஏற்பட்டுவிடும் என்று அஞ்சினார் (1 அர 22:47–49; 2 நாள் 20:35–37).

அரசர்கள் நூல்படி அகசியா மாடியிலிருந்து விழுந்து நோயுற்றார். ஆனால் ஆண்டவரின் உதவியால் நலம்பெற நாடாமல், பெலிஸ்திய தேவதை பாகால்–செபூபின் உதவியை நாடினார். இதன் விளைவாக, ஆண்டவர் எலியா வழியாக, "அவன் ஆண்டவரின் உதவியை நாடாமையால் படுக்கையினின்று எழுந்திராமலே சாவான்" என்று அறிவித்தார். இச் செய்தியை அறிவித்தவர் எலியா என்றறிந்த அரசன் அவரைக் கைது செய்ய இரு முறை வீரர்களை அனுப்பினார். இரு முறையும் வானின்று தீ இறங்கிவந்து அவர்களைச் சுட்டெரித்தது. மூன்றாம் முயற்சி எலியாவை அரசனிடம் கொண்டு வந்தது. ஆனால் இறைவாக்கினர் இறைவனது முன்னறிவிப்பை மாற்றவில்லை. ஆண்டவர் எலியாவின் வாயிலாகக் கூறிய வாக்கின்படியே அகசியா இறந்தார். அவருக்குச் சந்ததியில்லாததால் அவரது சகோதரன் யோராம் அரியணை ஏறினார் (2 அர 1:2–17).

2. இவர் யூதாவின் அரசன். ஆகாபு–ஈசெபேல் ஆகியோருடைய மகளான அத்தாலியாவுக்கும், யூதாவின் யோராம் என்ற அரசனுக்கும் பிறந்த கடைசி மகன் (2 அர 8:24–26; 2 நாள் 22:1). அவருடைய மூத்த சகோதரர்களை அராபிய கூட்டத்தினர் கொன்றுவிட்டதால் (2 நாள் 22:1) அவர் தந்தைக்குப்பின் அரியணை ஏறினார். இவர் 2 நாள் 21:17–இல் யேவாக்காசு என்றும், 22:6–இல் அசரியா என்றும் அழைக்கப்படுகிறார். இவர் தனது 22–ஆம் வயதில் அரசனானார். இவரது ஆட்சி ஓர் ஆண்டே நீடித்தது (842). இவரையும், முன் கூறிய இவர் மாமன் அகசியாவோடு குழப்பிவிடக்கூடாது (காண்க: அகசியா–1).

இவரும் வட அரசின் அரசனும் இவருடைய மாமனுமான யோராமும் சேர்ந்து சீரியா அரசன் கசாயேலுக்கு எதிராக இராமோத்–கிலயாத்தில் போரிட்டனர் (2 அர 8:28; 2 நாள் 22:5). யோராம் போரில் காயம்பட்டு சிகிச்சை பெற இஸ்ராயேலுக் குத்திரும்பினார். யோராமைப் பார்த்து வரும் பொருட்டு அகசியா அங்குச் சென்றார் (8:29). அப்போது இறைவனால்

பழிவாங்க நியமிக்கப்பட்ட ஏகூவால், அம்பு எய்யப்பட்டு யோராம் அவரது தேரிலேயே மடிந்ததை அகசியா கண்டார் (921–26). அகசியா பேத்தாகான் திசையில் தப்பியோடினார். ஏகூ அவரைத் துரத்திச் சென்று இபுலயாம் அருகிலுள்ள கூருக்குப் போகும் வழியில் அம்பு எய்து காயப்படுத்தினார். ஆனால் அகசியா மெகிதோவுக்குத் தப்பியோடி அங்கு இறந்தார். அவருடைய ஊழியர்கள் அவரை எருசலேமுக்குக் கொண்டுச்சென்று அவரது முன்னோரோடு அடக்கம் செய்தனர். (9:27–28).

நாளாகம ஆசிரியர் உரைப்படி அகசியாவின் மரணம் வேறுவிதமாக விவரிக்கப்படுகிறது. 2 நாள் 22:7–9–இன்படி ஏகூவிடம் தப்பியோடியபோது பெற்ற காயத்தால் மரிக்கவில்லை. மாறாக மெகிதோவில் கொல்லப்பட்டார்.

அரசர்கள் நூலும் நாளாகம நூலும், ஆகாபுவின் சமயப் பழக்கவழக்கங்களை அகசியா பின்பற்றினார் என்று கூறுகின்றன (2 அர 8:27; 2 நாள் 22:3). நாளாகம ஆசிரியரின் கருத்துப்படி அவருடைய தாய் அத்தாலியாதான் இந்தப் பதிதத்தை உற்சாகப்படுத்தினாள். இவர் யோராமின் பால் காட்டிய அக்கறையின் விளைவாக இவரது மரணம் இறைவனால் முன் திட்டம் செய்யப்பட்டதாகும் என்று ஆசிரியர் சுட்டுகிறார் (2 நாள் 22:67; 2 அர 9:21).

**அகசுத்தாரி** (HAAHASHTARI – ஒடுபவர்)

அசுகூர், நாகரா என்பவர்களுக்குப் பிறந்த ஒருவராவார். இது எதுவும் அதிகம் அறியப்படாத ஒரு குடும்பம். புவியியல், இனக் கூறுகளுக்கிடையில் யூதா இனத்தைச் சேர்ந்த குடும்பமாகக் கருதப்படுகிறது (1 நாள் 4:6).

**அகசுபாய்** (AHASBAI – நம்புகிற)

இவர் தாவீதின் "முப்பது வல்லவர்களில்" ஒருவரான எலிப்பெலத்தின் தந்தை (2 சாமு 23:34). இவர் ஆபேல்–பேத்து மாக்காவிலோ (20:14) சீரியாவிலுள்ள மாக்காவிலோ (10:6.8) வாழ்ந்தவராக இருக்கலாம். 2 சாமு 23:34–க்கு இணையான 1 நாள் 11:35–இல் "....ஊரின் மகன் எலீப்பால்" ஏன்றுள்ளது.

**அகசுவேரு** (AHASUERUS–இளவரசன்)

1. இவர் முதலாம் செர்சீஸ் என்ற பாரசீக மன்னர் (கி.மு.485–465) "இந்தியா முதல் எத்தியோப்பியாவரை இருந்த நூற்று இருபத்தேழு மாநிலங்களையும் மன்னன் அகசுவேரு ஆட்சி செய்தான். அவன் அரியணை ஏறியபொழுது சூசா தலைநகரமாயிருந்தது" (எஸ்த 1:1–2). "கடலிலுள்ள எல்லா தீவுகளிலும் வாழ்ந்து வந்த மக்களையும் தனக்குக் கப்பம் கட்டச் செய்தான்" (எஸ்த 10:1). எஸ்தர் இவருடைய மனைவி. பெரிய தாரியுவின் மகனான அகசுவேரு, சைரசு (எஸ் 4:5). அர்த்த சேர்சீஸ் (எஸ் 4:7) ஆகிய மன்னர்களுக்கு இடைப்பட்ட காலத்தில் ஆட்சி செய்தார் என்று எஸ் 4:6 கால வரையின்படி கொடுத்துள்ளது. எழுபது நூல் இவரை அர்த்தா சேர்சீஸ் என்றழைக்கிறது.

தோபித் 14:15–இன்படி நெபுக்கதுனேசார், அகசுவேரு ஆகியவர்கள் நினிவே நகரை அழித்தனர். இது காலமயக்கமான கூற்றாகும். உண்மையில் மேதிய இனத்தவனாகிய சியாசாரெசும் நபோபொலாசரும் சேர்ந்து நினிவேயை கி.மு. 612–இல் கைப்பற்றினர்.

2. மேதிய இனத்தவராகிய தாரியுவின் தந்தை (தானி 9:1). யோசிபஸ் இவரை முதலாம் அசித்தியாகுவின் மகன் என்று குறிப்பிடுகிறார். இது பொருத்தமுடையதாகத் தெரியவில்லை.

**அகதோலிம்** (HAGGEDOLIM – பெரியவர்கள், பெரிய குருக்கள்)

இவர் நாடு கடத்தலுக்குப்பின் எருசலேமில் வாழ்ந்த மேற்பார்வையாளரான சபிதியேலின் தந்தை ஆவார் (நெக 11:14). ஒருவேளை இது, "பெரியவர்களின் தந்தையான சபிதீயேல்" என்று மொழிபெயர்க்கப்பட வேண்டும். வாசகம் பழுதுபட்டிருக்கிறது.

**அகந்தை, ஆணவம், செருக்கு** (ARROGANCE)

1. அகந்தையும் அதன் விளைவுகளும் :-

அகந்தை கடவுளாலும், மனிதராலும் அருவருக்கப்படத்தக்கதாய் இருக்கிறது (சீரா 10:7). அகந்தை பல வகைகளில்

வெளிப்படுகிறது. சாதாரண மனிதன் உயர்ந்த மதிப்பை எதிர்பார்க்கிறான் (லூக் 14: 7; மத் 23:6 தொ). தன்னைத்தானே உயர்ந்தவன் என எண்ணுகிறான் (உரோ 16:3). அடுத்தவரைப் பார்த்துப் பொறாமைப்படுகிறான் (கலா 5:26) இறுமாப்புள்ள பார்வை கொண்டுள்ளான் (பழ 6:17). செருக்குடைய பணக்காரன் தன் செல்வச் செருக்கை வெளிக்காட்டுகிறான் (ஆமோ 6:8); மக்கள் பார்க்கவேண்டும் என்பதற்காகத் தன் செயல்களைச் செய்யும் வெளிவேடக்காரன் (மத் 23:5. 25–28). மேலும், இறுமாப்புக்கொண்ட மனிதன் இறைவனைச் சார்ந்து வாழ மறந்து, இறைவனுக்கு இணையாக தன்னை நினைத்துக் கொள்கிறான் (ஆதி 3:5; பிலி 2:6; யோவா 5:18). அவன் இதயம் கண்டனங்களுக்கு அமையாதது (பழ 15:12). தாழ்ச்சி அவனுக்குப்பிடிக்காது (சீரா 13:20). தயக்கமின்றி பாவம் செய்கிறான் (எண் 15:30 தொ). ஆண்டவரது ஊழியரைப் பார்த்தும், அவரது வாக்குறுதிகளைக் குறித்தும் ஏளனம் செய்கிறான் (சங் 119:5; 2 பேதுரு 3:3 தொ). ஆண்டவர் செருக்குற்றோரைச் சபித்து அவர்களைப் பயத்திலே வாழச் செய்கிறார் (சங் 119:21; லூக் 16:15). அகந்தையால் ஆக்கிரமிக்கப்பட்டோர் (மாற் 7:22) அருளையும் (1 பேதுரு 5:5) விசுவாசத்தையும் பெறார் (யோவா 5:44). தனது தவறினால் கட்டுண்டவன் (மத் 23:24; யோவா 9:39தொ) ஞானத்தைக் கண்டுபிடியான் (பழ 14:6). அவனோடு சேர்பவர் அவனைப் போல் ஆவர் (சீரா 13:1); எனவே அவனை விட்டு விலகுவது நலம் (சங் 1:17)

2. இஸ்ராயேலரைத் துன்புறுத்தும் புறவினத்தாரின் ஆணவம் :- உண்மைக் கடவுளை அறியாத ஆணவக்காரன் அரசாளும்போது வலுவிழந்தோர் ஊழியம் செய்யவேண்டிய நிலை ஏற்படுகின்றது. இஸ்ராயேல் விடுதலை பெறுவதை பாரவோன் தனது ஆணவத்தால் தடுக்கிறார் (யாத் 5:2). இத்தகைய ஆணவக்காரர்கள் இஸ்ராயேலரை அடிமைப் படுத்தப்போவதாக அச்சுறுத்துவார்கள். கோலியாத்து முதல் அந்தியோக்கு வரை (1 சாமு 17:4; 2 மக் 9: 4–10) பலரும் அகந்தை கொண்டு அலைந்தது கண்கூடு. அகங்காரத்தின் உச்சியிலே நின்றது பாபிலோனிய அரசு. நாடுகளிலே சிறந்த நாடு; எல்லாக் காலமும் நிலைபெறும் நாடு (ஏச 13:19); தானே தனிப்பெரும் நாடு எனப் பெருமிதம் கொண்ட நாடு இது (ஏச 47:5–10). இந்த மக்களின் கூட்டு ஆணவச் சின்னமாக பாபேல் கோபுரம் முற்றுப் பெறாமல் நின்று, விண்ணை அடையவேண்டும் என்ற அவர்தம் அகந்தையை எடுத்துக் காட்டுகிறது (ஆதி 11:4).

3. இறைவனை ஏற்காது ஏழைகளைத் துன்புறுத்துபவர்களின் ஆணவம்:- இஸ்ராயேலரிடையே அகந்தை ஆண்டவனை மறக்கச் செய்தது; அடுத்தவனை ஒடுக்கச் செய்தது. வலுவிழந்தோர்க்கு அன்பு காட்ட வேண்டும் என்று சட்டம் கூறியது (யாத் 22:21–27). அரசன் ஆணவத்தால் அளவுக்கு அதிகமான பொன், வெள்ளியைச் சேர்க்கவோ, அடுத்தவனை விட உயரவோ முயலக்கூடாது (உப 17:17,20). தான் செல்வந்தனாக ஆணவக்காரன் ஏழைகளை வாட்டி வதைக்கிறான் (ஆமோ 8:4–8; எரே 22:13 தொ). ஆனால் ஏழைகளை அவமதிப்பது இறைவனையும் அவரது நீதியையும் அவமதிப்பதாகும். ஆணவக்காரர்கள் இறை பற்றற்றவர்கள்; புறவினத்தவர் போன்றவர்கள். அவர்களால் துன்புறுத்தப்பட்டோர் (சங் 10:2 தொ; 123:4) ஆண்டவனை நோக்கிக் கூக்குரலிடுகின்றனர் (சங் 73:6–9). அகந்தையும் பண ஆசையும் கொண்டவர் ஆண்டவருக்கு ஊழியம் செய்யஇயலாது (லூக் 16:13 தொ).

4. ஆணவக்காரனுக்குரிய தண்டனை:- ஆண்டவரை விட்டு விலக நினைக்கும் ஆணவக்காரனை அவர் ஏளனம் செய்கிறார் (பழ 3:34; சங் 2: 2 தொ). மக்களினங்களை இரக்கமின்றித் துன்புறுத்தி ஆணவத்தோடு வாழ்ந்தவன் இறந்தபின் அருவருப்பான அழுகல்போல் கல்லறைக்குப் புறம்பே விடப்படுவான் (ஏச 14:3–20; எச. 28:17 தொ. 31). கொடுங்கோலர்களைப் போல் அவர்தம் அரசுகளும் அழிக்கப்படும். சில சமயங்களில், இவ்வரசர்கள் இஸ்ராயேலரை தூய்மைப்படுத்தும் இறைவனின் கருவிகளாகவும் செயல்படுகிறார்கள். ஆனால் அவர்கள் அகந்தையுடன் தங்கள் வேலையைச் செய்தபோது

இறைவன் அவர்களைத் தண்டித்தார் (ஏச 10:12; 47:9.11). ஆண்டவரின் நாளிலே ஆணவமிக்க இஸ்ராயேலரும் தண்டிக்கப் படுவர் (எரே 9:3; எச 7:10). "அந்த நாளிலே மனிதனின் அகந்தையெல்லாம் அடங்கும்; மனிதர்களின் இறுமாப்பு தாழ்த்தப்படும்; ஆண்டவர் ஒருவரே அந்நாளில் உயர்த்தப் படுவார்" (ஏச 2:6–22). "செருக்குற்று நடப்பவர்களுக்கு அவர் நிறைவான தண்டனை அளிக்கிறார்" (சங் 31:24). நீதி மான்களைப் பழித்தவர் புகைபோல் மறைவர் (ஞான 5:8–14). தன்னைத் தானே உயர்த்துகிறவன் தாழ்த்தப்படுவான் (மத் 23:12).

5. ஆணவத்தை அடக்குபவர், தாழ்ச்சி யுடையோரின் மீட்பர்:- எப்படி ஆண்டவர் "நெஞ்சிலே செருக் குற்றவர்களைச் சிதற டிக்கிறார்" (லூக் 1:51). மனிதனை அகந் தைகொள்ள ஏமாற்றிய பழம்பாம்பும் (ஆதி 3:5) தன்னைக் கடவுளாகத் தொழும் படி உலக முழுவதையும் வசியம் செய்ய விரும்பும் பேயுமான (திருவெளி 12:9; 13:5; 2 கொரி 4:4) சாத்தானை எவ்வாறு ஆண்டவர் வெற்றி கொள்கிறார்?

ஒரு தாழ்ச்சியுள்ள கன்னியும், அவளது குழந்தையும் வழியாக இதை ஆற்றலோடு செயலாற்றுகிறார். மாட் டடைக் குடிலிலே மரியாளின் மடியிலேப் பிறந்த இயேசு பாலன் (லூக் 2:1 தொ) நெஞ்சிலே செருக் குற்றோரைச் சிதற டித்தார். அவரை ஏரோதின் அகந்தை கொல்லத் திட்டம் தீட்டியது (மத் 2:13). ஆணவமிக்க சாத்தானை வென்றார். அவர் தமது பணியிலே சாத்தான் அளித்த இவ்வுலகப் பெருமையை நிராக ரிக்கிறார் (மத் 4:3–10). இறைவனுக்குச் சமமானவர் என்றாலும் (யோவா 5:18), அதனால் ஆதாயம் தேடவில்லை (8:50). தமக்கு பெருமை சேர்க்க அவர் விரும்ப வில்லை. கேவலமான சிலுவை மரணத் தையும் ஏற்றார் (12:31 தொ; பிலி 2:6 தொ). தந்தை தம்மை மகிமைப்படுத்தும்படிக் கேட்பதுவும், தந்தை அவரில் மகிமைப் படுத்தப்படுவதற்காகவே (யோவா 12:28; 17:1). அவர் காட்டிய வழியிலே அவரது சீடர்கள், குறிப்பாக அவரது திருச்சபை யின் ஆயர்கள் நடக்க வேண்டும் (லூக் 22:26 தொ; 1 பேதுரு 5:3; தீத் 1:7). அவர் பெய ராலே சீடர்கள் சாத்தானின் ஆதிக்கத்தை வெல்வார்கள் (லூக் 10:18 தொ). ஆணவத் தின் வல்லமை ஆண்டவரின் மாட்சி வெளிப்படும் நாளன்றுதான் அழிக்கப் படும் (2 தெச 1:7 தொ). அப்போது ஆண்ட வரோடு தங்களைச் சமமாகக் கருதிய இறைபற்றற்றவர்கள் ஆண்டவரின் ஆவி யாலே அழிக்கப்படுவர் (2 தெச 2:4.8). அப் போது கடவுளாக்கப்பட்ட அரசின் அடை யாளமான பாபிலோன் ஒரே அடியில் அழிக்கப்படும் (திருவெளி 18:10.21). தாழ்ச்சியுடையோர் மட்டும் ஆண்டவரின் பிள்ளைகளாக இருப்பர் (மத் 18:3 தொ; 1 யோவா 3:2).

**அகபு** (AGABUS – வெட்டுக்கிளி)

தூய ஆவியால் பேசும் வரம் பெற்ற, யூதேயாவிலிருந்து வந்த ஒரு கிறிஸ்தவ இறைவாக்கினார். இவர் மற்ற இறை வாக்கினருடன் எருசெலேமிலிருந்து அந்தியோக்கியாவிற்குச் சென்று, உலகம் முழுவதும் (அநேகமாக உரோமைப் பேரரசு முழுவதும் அல்லது) யூதேயாவில், பஞ்சம் நிலவும் என்று முன்னுரைத்தார். (அ.ப. 11:27–30). பேரரசர் கிளதியு ஆட்சிக் காலத்தில் (46–47 கி.பி.) யூதேயா முழுவ தும் பஞ்சம் நிலவியது. இவரது வார்த் தையை நம்பி அந்தியோக்கியாவிலுள்ள கிறிஸ்தவர்கள் காணிக்கை எடுத்து எருச லேமிலுள்ள ஏழைக் கிறிஸ்துவர்களுக்குப் பொருளுதவி அனுப்பினர் (11:30). அ.ப. 21:10–11–இல் பவுலின், மூன்றாம் பயண முடிவில் அவர் எருசலேமிலுள்ள யூதர் களால் பிடிக்கப்பட்டு புறவினத்தாருக்குக் கையளிக்கப்படுவார் என்பதை அகபு ஓர் அடையாளச் செய்கையின் மூலம் முன்னு ரைக்கின்றார்; ஆனால் இந்த இறைவாக்கு அப்படியே நிறைவு பெறவில்லை. இவரை ஒரு வேத சாட்சி எனக் கருதி, கிரேக்கத் திருச்சபை இவருடைய திருவிழாவை மார்ச் மாதம் 8–ஆம் நாள் கொண்டாடு கின்றது.

**அகர வரிசை அமைப்பு** (ACROSTIC)

இது ஒரு யாப்பு யுக்தியாகும். இதன் படி ஒரு பாடலின் ஒவ்வொரு வரியின் அல்லது அடியின் முதல் எழுத்து அகர வரிசைப்படி அமைக்கப்பட்டிருக்கும்

அல்லது ஒரு குறிப்பிட்ட சொல் அல்லது பதத்தில் வரும் எழுத்துக்களின் வரிசையில் அமைக்கப்பட்டிருக்கும்.

விவிலியத்தில் ஞான நூல்களிலும் ஞானம் பற்றிய சங்கீதங்களிலும் இவ்வரிசை அமைப்பு மூலமொழியில் காணப்படுகிறது. சங் 111:112–இல் ஒவ்வொரு அரை வரிசையும் எபிரேய எழுத்துக்களின் வரிசைப்படி அமைந்துள்ளது. சங்.25;34; 145; பழமொழி 31:10–31–இல் ஒவ்வொரு வரியிலும் இவ்வமைப்பு காணப்படுகிறது. புலம்பல் நூலின் ஐந்து பாடல்களில் நான்கில் இவ்வமைப்பு காணப்படுகிறது. புல 1–2–இல் மூன்று வரி கொண்ட ஒவ்வொரு அடியும் எபிரேய எழுத்துக்களின் வரிசைப்படி அமைந்துள்ளன. புல 3–இல் மூன்று வரிகொண்ட ஒவ்வொரு அடியும் இவ்வமைப்பைக் கொண்டிருப்பதோடு, ஒவ்வொரு அடியும் அதற்குரிய எழுத்தை முதல் எழுத்தாகக் கொண்டுள்ளது. சங். 119–இல் எட்டு வரிகொண்ட 22 அடிகள் அகர வரிசையைக் கொண்டிருப்பதோடு ஒவ்வொரு அடியும் அதற்குரிய எழுத்தை ஒவ்வொரு வரியின் முதல் எழுத்தாகக் கொண்டுள்ளது. சங் 9–10–இல் காணப்படும் அகர வரிசை அமைப்பு, இரண்டையும் ஒரே சங்கீதமாகக் கருத விளக்கவுரையாளர்களைத் தூண்டியுள்ளது. இப்படித்தான் எழுபதுநூல் கணித்துள்ளது. சங் 4–இல் வரும் முதல் எழுத்துக்கள் எபிரேய எழுத்து வரிசையில் தலைகீழாக அமைந்துள்ளன.

ஆப்பு எழுத்து இலக்கியங்களிலும் இத்தகைய யாப்பு யுக்திகள் பயன்பட்டுள்ளன. இவ்வகை அமைப்பைப் பயன்படுத்துதலின் நோக்கம் என்ன? எழுத்துக்களின் மந்திர சக்தியின் மேலுள்ள நம்பிக்கையாகவோ, ஆசிரியரது இலக்கிய ஆற்றலைக் காட்டுவதாகவோ அல்லது வெறுமனே இலக்கியப் பாணியாகவோ இருக்கலாம். விவிலியத்தைப் பொறுத்தமட்டும் இது மனனம் செய்வதற்கும் மனதில் பதிய வைப்பதற்கும் பயன்பட்ட ஒரு பயிற்சி யுக்தியாகவும் ஞானப்பள்ளிகளில் பயன்பட்டிருப்பதாகத் தெரிகிறது. மேலும் ஒரு பொருள்பற்றி தான் கூற விரும்பியவற்றைக் கூறிவிட்டதாகக் காட்ட ஆசிரியர் பயன்படுத்தும் ஒரு யுக்தியாகும் இம்முறை. அலபுவிலிருந்து தௌவரை ஒரு கவி எல்லாவற்றையும் கூறிவிட்டால் ஒரு தலைப்பைப் பற்றிச் சொல்லக் கூடியதை எல்லாம் சொல்லிவிட்டார் என்று பொருளாகும்.

**அகராகு** (AHARAH – ராவின் சகோதரன், சகோதரனைப் பின்பற்றுபவன்)

*1 நாள் 8:1*–இன்படி பென்யாமினின் மூன்றாவது மகன்; அநேகமாக இவர் அகிராமாக இருக்கலாம் என்று சிலரும் அகேராக இருக்கலாம் என்று சிலரும் கூறுவர்.

**அகரேல்** (AHARHEL – ராக்கேலின் சகோதரன்; கோட்டைக்குப் பின்)

யூத குலத்தைச் சேர்ந்த ஆரும் என்பவரின் மகன் (*1 நாள் 4:8*).

**அகவா** (AHAVA)

அகவா என்ற பெயருடைய ஓர் ஆற்றின் கரையில் அமைந்திருந்த ஒரு பாபிலோனிய நகரம் (எஸ் *8:15. 21.31*). இங்குதான் தன்னோடு எருசலேமுக்கு திரும்பிவர இருந்த யூதர்களை எஸ்ரா ஒன்று கூட்டினார். இங்கு இவர்கள் மூன்று நாள் தங்கி (*8:15*) ஆண்டவர் திருமுன் தங்களையே தாழ்த்தி, நல்ல முறையில் எருசலேம் போய் சேரவேண்டி, நோன்பு இருந்தனர் (*8:21*). இந்த மன்றாட்டு கேட்கப்பட்டது. யாவரும் எந்தக் கேடுமின்றி எருசலேம் போய்ச் சேர்ந்தனர் (*8:31–32*).

அகவா ஆறு பாபிலோனியாவின் முக்கிய ஓடைகளில் ஒன்றாக இருக்கலாம். இது வடிகாலாகவும், நீர்ப்பாசனத்திற்கும் பயன்பட்டிருக்கலாம். இது நாடு கடத்தப்பட்ட யூதர்கள் பலர் வாழ்ந்த தலைநகருக்கு அருகில் இருந்திருக்கலாம்.

**அகலமான மதில், பெரிய மதில்**

நெகமியாவால் பழுது பார்க்கப்பட்ட எருசலேம் மதிற் சுவரின் ஒரு பகுதி. சூழ்நிலையிலிருந்து இது நகரின் வடமேற்கு சுவராக இருக்கலாம் எனத் தோன்றுகிறது (நெக *3:8; 12:38*).

**அகழி** (MOAT)

கோட்டை மதிலையோ நகரையோ சுற்றித் தோண்டப்பட்ட பள்ளமாகும். இது

ஒரு அரணாகவும் பாதுகாப்பாகவும் அமைந்தது. 'அகழி சூழ் அரண்' (தானி 9:25) எருசலேம் நகர் மீண்டும் கட்டப்படுவதுபற்றிய விவரிப்பின் ஒரு விபரமாகும்.

**அகழெலி** (MOLE)

இது பூச்சிகளை உண்ணும் பாலூட்டி வகை உயிர்களில் ஒன்று. ஒன்பதிலிருந்து இருபத்திரண்டு சென்டிமீட்டர் நீளமுள்ளது. பாலஸ்தீனத்தில் சாதாரணமாய்க் காணக் கூடியது. இந்த எலி பூமிக்கு அடியில் வாழ்ந்து வேர்களையும் கிழங்குகளையும் பெறுவதற்காக விடாமுயற்சியோடு பூமியைக் குடைந்து செல்லக்கூடியது. இந்த எலியும் வௌவாலும் இருள் உலகிலே வாழ்ந்தாலும் இவை இரண்டும் ஒரே இடத்தில் வாழ்பவையல்ல என்பது குறிப்பிடப்பட வேண்டும். ஏச 2.20–இன் படி இரண்டும் சேர்த்துக் கூறப்படுகின்றன.

இறைவனது தீர்ப்பை எதிர்கொள்ளும் சிலைவழிபாடு செய்வோர் தங்கள் சிலைகளை அகழெலிகளுக்கும், வௌவால்களுக்கும் எறிந்துவிடுவர் என்று கூறப்படுகிறது. லேவி 11:30–இன்படி இந்த அகழெலி ஒரு அசுத்த விலங்காகும்.

**அகன்ற இடம், பரந்த இடம்** (BROAD PLACE)

இப்பொருளுள்ள சொல் யோபு 30:16; 2 சாமு 22:20; சங் 18:19–இல் உருவகமாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

பரந்த இடத்திற்குக் கொணர்ந்தார் என்பது வேதனை, கலக்கம், அச்சம், பஞ்சம் இவற்றிலிருந்து காப்பாற்றினார் என்று பொருள்படும்.

**அகாகியர்** (AGAGITE – அகாகுவின் வழித் தோன்றல்கள்)

ஆமானைக் குறிக்க உபயோகப்படுத்தப்படும் ஒரு சொல் (எஸ்த 3:1. 10; 8:3.5; 9:24). இது அநேகமாக இஸ்ராயேலின் பழைய எதிரியான, அமலேக்கியர்களின் அரசனான அகாகுவைக்குறிக்கும் (உப 25:17–19); ஏனெனில் ஆமானின் எதிரியான மோர்தெக்காய், ஆகாகின் எதிரியான சவுலின் வம்சத்தைச் சேர்ந்தவர் என்று கொடுக்கப்பட்டுள்ளது (எஸ்த 2:5; 1 சாமு 15:7 தொ). எழுபது நூல் தொகுப்பு இதற்கு "எதிரி" என்று பொருள் கொடுக்கின்றது (எஸ்த 9:24)

**அகாகு** (AGAG – அனற் பிழம்பு, சீற்றம் உடையவன், மூர்க்கன்)

1. பெனிசியா மொழியில் இவ்வார்த்தை காணப்படுகின்றது. அநேகமாக இந்த வார்த்தை பாரவோன் என்பது போன்ற ஓர் அரச பட்டமாகும். தனி ஆளின் பெயரன்று. எண் 24:7–இல் வரும் அகாகு இப்படிப்பட்ட பட்டமாக இருக்கலாம். இதனுடைய சூழ்நிலை அமைப்பு இது ஒரு புராணக்கதை என்று காட்டுகிறது. இறையரசுக்கும், உலகிற்குமிடையேயுள்ள பகைமைக்கு அடையாளமாகிறது.

2. சவுலினால் தோற்கடிக்கப்பட்டு, சாமுவேலால் கொல்லப்பட்ட ஓர் அமலேக்கிய அரசன் (1 சாமு 15:8–9. 20.32–33). சவுல் மன்னருக்கும், அகாகு மன்னன் தலைமையில் வந்த அமலேக்கியருக்கும் இடையில் நடைபெற்ற போரானது, சாமுவேலும் சவுலும் நிரந்தரமாகப் பிரிவதற்கு ஒரு தருணமாய் அமைந்தது. "அமலேக்கியர்களையும், அவர்களுடைய சொத்துக்கள் அனைத்தையும் அழித்துவிட வேண்டும்" என்ற சாமுவேலின் கட்டளைக்கு சவுல் கீழ்ப்படியவில்லை. சாமுவேல் இந்த கீழ்ப்படியாமையைப் பற்றிச் சவுலிடம் வினவியபொழுது, "கடவுளுக்கு ஒப்புக்கொடுப்பதற்காக இவைகளை அழிக்கவில்லை" என்று முதலில் சாக்கு சொன்னாலும், பின்பு பழியை முழுவதும் மக்கள் மேல்போட்டார். சாமுவேல்தானே அகாகுவைக் கொலை செய்தார் (1 சாமு 15:33).

சவுல் கீழ்படியாததும், அதன் விளைவாக அரச பதவி பறிபோனதும், ஆதி பெற்றோர் கீழ்ப்படியாததற்கும் அதன் விளைவாக இன்பவனத்திலிருந்து விரட்டப்பட்டதற்கும் ஒத்துள்ளன என்று இறையியல் விவரிப்பு எடுத்துக்காட்டுகிறது.

**அகாபே** (AGAPE – அன்பு) –சொல் தோற்றம்

இது ஓர் கிரேக்க வார்த்தை. இதை மொழி பெயர்க்காமல் அப்படியே சில மொழிகளில் எழுதப்படுகிறது. அன்பைக் குறிக்கப்பயன்படுத்தப்படும் பல கிரேக்க வார்த்தைகளில் இதுவும் ஒன்று. இதன் அடிப்படைப் பொருளில் பிறர் நன்மைக்காகத் தன்னையே எந்த அளவுக்கும் தியா

கம் செய்யும் இறை தன்மையுடைய, தன் னலமற்ற அன்பைக் குறித்தது (காண்க: அன்பு). ஆதித் திருச்சபையிலே இது தனிப்பட்ட ஓர் முறையிலே பயன்படுத்தப் பட்டது. இதற்கு அன்பு விருந்து என்பது பொருள். காண்க: அன்பு விருந்து.

**அகி** (AHI – என் சகோதரன்)

யாவே என் சகோதரன் என்று பொருள்படும் அபியா என்ற பெயரின் சுருக்கமாக இருக்கலாம். நாளாகம நூல் களில் தந்துள்ள மரபுமுறை அட்டவணை யில் இந்தச் சொல்லானது இரண்டுமுறை பயன்படுத்தப்பட்டுள்ளது. வாசகங்கள் ஐயத்திற்குரியவை.

1. பாசானில் வாழ்ந்த காது குலத்தின ரான அபிதியேல் என்பவரின் மகனாவார் (1 நாள் 5:15).

2. செமேரின் புதல்வர்களில் ஒருவர் ( 1 நாள் 7:34). இப்பகுதியில் எபிரேயச் சொல், ஒரு ஆளின் பெயராக எடுத்துக் கொள்ளப்படுவதைவிட "என் சகோதரன்" என்று இடுபெயராக எடுத்துக் கொள்வது மேல்.

**அகிக்காம்** (AHIKAM – என் சகோதரன் எழுந்துவிட்டான்)

அகிக்காம் சாப்பானின் மகன் (2 அர 22:12). கெதலியாவின் தந்தை (25:22; எரே 39:14). அகிக்காம் யோசியாவின் அமைச் சரவையில் ஒருவர். இவர் சட்ட நூலில் மன்னனைப் பற்றியும், மக்களைப்பற்றியும் என்ன எழுதியிருக்கிறது என்று குல்தா இறைவாக்கினியிடம் கேட்டறியச் சென்ற குழுவில் ஒருவர் (2 அரச 22:12.14). இறை வாக்கினர் எரேமியா, மன்னன் யோயாகி மினால் கொலை செய்யப்படாமலிருக்க அவருக்கு உற்ற துணையாக இருந்து அவரைப் பாதுகாத்தவர் (எரே 26.24).

**அகிக்கார்** (AHIKAR – மதிப்புமிக்க சகோதரன்)

1. அனாயேலின் மகன். அசீரிய மன்னன் சனகெரிபுவின் காலத்திலும், அவர் கொலை செய்யப்பட (2 அர 19:36–37) அவருக்குப்பின் மன்னராக வந்த எசர்க தோன் காலத்திலும் (தோபி 1:21–22) முதல் மந்திரியாக இருந்தவர். தனது செல்வாக் கைப்பயன்படுத்தி தனது சிற்றப்பன் தோபித்து நினிவேக்குத் திரும்பிவர உதவினார் (1:22). தோபித்து குருடரான போது அவரைக் கவனித்துப் பேணிக் காத்து வந்தார் (2:10). பிற்காலத்தில் மகன் தோபியாவின் திருமணக் கொண்டாட்டங் களில் பங்குகொண்டார் (11:18).

2. இவர் பழம் மேற்காசியாவின் ஞானி களில் ஒருவர். காண்க: அகிக்காரின் நூல்.

**அகிக்காரின் நூல்** (BOOK OF AHEKAR)

ஒரு பழமையான ஞான நூல். பழ மொழிகளையும், நீதிக் கதைகளையும் கொண்டது. முகவுரை அகீக்கார் என்ற ஞானியின் வாழ்க்கைக் குறிப்பைக் காட்டு கிறது. நூலில் காணப்படுபவை அவர் தனது மகனுக்கு அறிவுரையாகக் கூறப் பட்டதாக அமைந்துள்ளன. அந்நூல் சீரியா, அராபிய, அரமேயா மற்றும் சில மொழிகளில் காணப்படுகிறது. ஆயினும் பழைய அரமேயிக் வடிவம் எலெபென் டைன் ஏடுகளில் திரும்பக் கண்டுபிடிக்கப் பட்டது பெரிய வியப்பை ஊட்டியது. அது கி.மு. ஐந்தாம் நூற்றாண்டைச் சார்ந்தது. இது கண்டுபிடிக்கப்படும்வரை இந் நூலுக்கும் தோபித்து நூலுக்கும் இடையே யுள்ள தொடர்பை ஒருவரும் எண்ணிப் பார்க்கவில்லை.

அகிக்கார் அசீரிய அரசன் சென கெரிப்பின் கீழ் ஒரு மேலதிகாரியாக இருந்தார். அவருக்கு மகன் இல்லாத தால், தனது சகோதரியின் மகன் நாட னைத் தத்து எடுத்துக்கொண்டார். அவனை நூலில் பிறகு வரும் அறிவுரை களால் கல்வி கற்றவனாக்கி அரசன் எசர் கதோனிடம் கொண்டுவந்தார். நாடன் அகிக்காரின் வாரிசாக நியமிக்கப் பட்டார். அகிக்கார் ஓய்வுபெற்று தனது வீடு திரும்பினார். ஆனால் நாடன் தனது வளர்ப்புத் தந்தையான அகிக்கார் கற்றுக் கொடுத்தவையால் பயன்பெறவில்லை. அகிக்கார் அரசுக்கு எதிராகச் சதிச்செய் வதாகக் குற்றம் சாட்டி அவரது பெயரைக் கெடுத்தான். அரசனும் அதை நம்பி, சினந்து, நபு–சும்–இங்குன்னையும் மற்றும் இரண்டு பேரையும் அகிக்காரைக்கொல்ல அனுப்பினார். அவர்கள் அகிக்காரை அவரது திராட்சைத் தோட்டத்தில் இரு

மலைகளுக்கிடையில் கண்டனர். அகிக்கார் நபு–சும்–இங்குன்னிடம், செனகொரிபு அவரைக் கொலை செய்ய உத்தர விட்டபோதுதான் அவரைக் காப்பாற்றியதை எடுத்துரைத்தார். மேலும் அவன் குற்றமற்றவன் என நிரூபிக்கப்பட்டபோது அரசன் மகிழ்ந்ததையும் நினைவுப்படுத்தினார். அகிக்கார் அதேபோன்ற பதிலுதவி எதிர்பார்த்தார். மூவரும் இரகசியத்தைக் காப்பாற்றுவதாக உறுதி எடுத்துக் கொண்டனர். இதன் பின் ஒரு அடிமையைக்கொன்று அகிக்காரை மறைத்து வைத்துப் பாதுகாத்தனர். எகிப்தியரோடு போர் தொடங்கியபோது, அகிக்கார் மட்டுமே கொடுக்கக்கூடிய ஆலோசனை அரசனுக்குத் தேவைப்பட்டது. ஆகவே அரசன் தனது தண்டனைத் தீர்ப்பைப் பற்றி வருந்தினார். அச்சமயத்தில் கொலையை நிறைவேற்றுபவர் அகிக்காரை அரசர் முன்கொண்டு வந்தார். அரசனும் மகிழ்ந்து அவரைப் பயன்படுத்தினார். அகிக்கார் தனது மதியால் எகிப்திய மன்னனை வென்ற பின் மகிமையோடு நாடு திரும்பினார். நாடன் மக்களால் பழித்துக்கூறப்பட்டு, கைதியாக்கப்பட்டார். சிறையில் ஊதி, வெடித்து மிகக் கேவலமாக மடிந்தார். இவ்வாறு அகிக்காரின் கதை நேர்மைக்காக எண்பிக்கப்பட்டவரது வரலாறு ஆகும்.

அரேமேயிக் நூல் அசீரிய நூலிலிருந்து வந்ததென்பதை நம்பக் காரணங்கள் உள்ளன. இதில் வரும் சில மனிதர்கள் உண்மையிலேயே வாழ்ந்தவர்களாக இருக்கலாம். செனகெரிபுவின் கீழ் நபு–சும்–இங்குன் என்ற உயர் அதிகாரி இருந்ததாகத் தெரிகிறது. அகிக்கார் இருந்தாரா என்பது தெளிவாகத் தெரியவில்லை. ஆனால் அது ஒரு அசீரியப் பெயர். நாடன் அல்லது நாடின் என்பது அதாத்–நாடின்–சும் போன்ற பெயர்களின் சுருக்கமாக இருக்கலாம். அகிக்கார் புரட்சி செய்ததாகக் கூறப்படுகிறது உண்மையாக இருக்கலாம். அசீரிய நூற்களின்படி ஆட்சிக்கு வரவேண்டியவர்களைத் தோற்கடித்து ஏசர்கதோன் ஆட்சியைக் கைப்பற்றினார்.

அரமேயிக் படிவம் வழியாகத்தான் இந்நூல் பரவலாக அறியப்பட்டது. ஆனால் இன்றைய வடிவில் இது கி.மு. 500–க்கு முந்தியதாக இருக்க முடியாது. கிரேக்க ஆசிரியர்கள் அகிக்காரின் கதையை பலவாறு பயன்படுத்தியுள்ளனர்.

இவற்றில் ஞானியான அகிக்காரைப் போற்றும் கதையைப்பற்றிய குறிப்புகளைக் காண்கிறோம். தோபித்து நூல் ஆசிரியர் தன் கதையில் அகிக்காரைத் தோபித்தின் உறவினர் ஆக அறிமுகப்படுத்துவது, ஏற்கெனவே நன்கு அறியப்பட்டு ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒரு கதையோடு தமது கதையை இணைத்துத் தமது கதைத் தலைவரின் புகழை அழுத்திக் கூறுகிறார் எனலாம். ஒருவேளை ஆசிரியர் தோபித்தை ஒரு யூத அகிக்காராக எண்ணியிருக்க வேண்டும். ஒரு பழங்கால கதையின் ஒழுக்கப்பாடத்தைத் தமது மக்களின் மொழியிலும் சிந்தனை வடிவிலும் எடுத்துக்கூற விரும்பியிருக்கலாம். அகிக்காரின் கதையில் அவர் கூறியதாகப் பல ஞானமிக்க கூற்றுக்கள் வருகின்றன. அவற்றிற்கு இணையானக் கூற்றுக்கள் தோபி 4–இல் காணப்படுகின்றன.

**அகிசகார்** (AHISHAHAR – விடியலின் சகோதரன், சகோதரன் விடியல் ஆனான்)

ஐயப்பாடுகளுக்கு இடம் தருகின்ற பென்யாமின் மரபுப் பட்டியலில் எதியேல் குடும்பத்தைச் சேர்ந்த பிலிகானின் புதல்வர்களில் ஒருவர். ஆற்றல்மிக்க வீரன் (1 நாள் 7:10–11). ஆனால் அதிகாரப்பூர்வமான பட்டியலில் (1 நாள் 8:1–40) பிலிகான், அகிசகார் போன்ற பெயர்கள் காணப்படவில்லை. எனவே செபுலோன் வழி மரபுப் பட்டியலின் ஒரு பகுதியாக இருக்கவேண்டும் என்பது பலரின் கருத்து.

**அகிசமாக்கு** (AHISAMACH – என் சகோதரன் ஆதரிக்கிறான், உதவியாளன் ஆனான்)

இவர் தாண் குலத்தைச் சேர்ந்தவர். ஒகலியாபுவின் தந்தையாவார். உடன்படிக்கைக் கூடாரமும், அதனுடன் தொடர்புடைய மற்ற பொருட்களையும் அமைப்பதற்காக நியமனம் செய்யப்பட்டவர்களில் இருவரும் ஒருவராவார் (யாத் 31:6; 35:34; 38:23).

***அகிசா*** (ACHSAH – *சிலம்பு, கணுக்கால் அணி)*

காலேபுவின் மகள். காலேபு தன் தம்பி கெனாசின் மகன் ஒதினியேல் என்பவனுக்கு, கிரியத்து சேபரைப் (தெபீர்) பிடித்ததற்குச் சன்மானமாக, தான்கொடுத்த வாக்கின்படி அவனுக்கு இவளை மண முடித்துக்கொடுத்தார் *(யோசு 15:16–19; நீதி 1:12–13; 1 நாள் 2:49)*. மேலும் அகிசாவின் விருப்பத்திற்கிணங்கி, நெகேபில் நீர் ஊற்றுக்களைச் சீதனமாக காலேப்பு அவளுக்கு அளித்தார் *(யோசு 15:19; நீதி 1:15)*.

***அகிசாபு*** (ACHSHAPH – *மாயவித்தை, கவர்ச்சி, ஈர்ப்பு)*

இது ஆசேர் புதல்வர்களின் கோத்திரத்திற்குக் கிடைத்த எல்லைப்புற பகுதிகளில் ஒன்று *(யோசு 19:25)*. இஸ்ராயேல் மக்கள் யோசுவாவின் தலைமையின் கீழ் பாலஸ்தீன நாட்டில் நுழைந்தபோது காணப்பட்ட ஓர் பழைய நகரம். இந்த கானானிய நகரம் மற்ற பல நகரங்களோடு சேர்ந்து யோசுவாவை எதிர்த்த கூட்டணி தோல்வியுற்றபோது, அதன் அரசன் கொல்லப்பட்டான். நகரமும் அழிந்து போனது *(யோசு 11:1; 12:20)*.

எகிப்திய ஏடுகளிலும் (கி.மு.19–18–ஆம் நூற்றாண்டு), மூன்றாம் துத்–மோஸ் (கி.மு.1440–1435) வென்ற நகரங்களின் கர்னாக் பட்டியலிலும் (15–ஆம் நூற்றாண்டு) அமர்னா ஏடுகளிலும் (14–ஆம் நூற்றாண்டு) அனஸ்தாசின் புல்தாள ஏடுகளிலும் (13–ஆம் நூற்றாண்டு) இந்நகரம் குறிக்கப்படுகிறது. இந்த இடத்தை உறுதியாக அடையாளம் காட்டமுடியாது. ஆனாலும் ஆக்கோ சமவெளியில் ஆக்கோவுக்கு தென் கிழக்கில் 10 கி.மீ. தொலைவிலுள்ள தேல்–கிசானை அடையாளம் காட்டுவர். அடையாளங் காட்டக்கூடிய மற்ற இடங்கள் தேல்–பெர்வேயும், தேல்–கர்பாக்கும் ஆகும்.

***அகிசாய்*** (AHZAI – *ஆண்டவர் பற்றிக் கொண்டார்.*

எஸ்ரா காலத்திலிருந்த குரு *(நெக 11:13)*. ஆசரேலின் தந்தையும் இம்மேரின் பேரனுமாவார்.

***அகிசார்*** (AHISHAR – *பாடகனின் சகோதரன்)*

சாலமோன் அமைச்சரவையில் அகிசார் அரண்மனை மேற்பார்வையாளராயிருந்தார் *(1 அர 4:6)*.

***அகிசீபு*** (ACHZIB – *ஏமாற்றல், வஞ்சகம்)*

1. மேற்கு யூதர் நாட்டில் கெயீலாவுக்கும், மரேசாவுக்கும் இடையிலுள்ள ஒரு நகரமாகும் *(யோசு 15:44)*. ஒருவேளை ஆதி 38:5–இல் குறிக்கப்படும் கெசிப்பும் இதுவும் ஒரே நகரைக் குறிக்கலாம். இப்பெயரை வைத்து மீக் 1:14 சிலேடை அணியல் ஒரு கூற்றைக் கொண்டுள்ளது.

பழங்கால அகிசீபுக்கு யுசேபியஸ் அதுல்லாம் அருகிலுள்ள ஒரு அழிவுக் குன்றை அடையாளம் காட்டுகிறார். இவ்விடம் அதுல்லாமுக்குக் கிழக்கே 5 கி.மீ தொலைவிலுள்ள இக்கால தெல்–ஏல்–பெய்தா என்று இப்போது ஏற்றுக் கொள்ளப்படும்.

2. கலிலியோவின் மத்திய தரைக் கடற்கரையில் உள்ள நகரமாகும். இது பெனிசிய எல்லைக்கு அருகில் உள்ளது. ஆசேர் நாட்டைச் சேர்ந்ததாயினும் ஆசேரியர்களால் இந்நகர் கைப்பற்றப்படவில்லை *(யோசு 19:29; நீதி 1:31)*.

ஆக்கோ நகருக்கு வடக்கே 14 கி.மீ. தொலைவிலுள்ள, இக்கால எஸ்–ஸிப் என்ற இடத்தில் நடந்த தொல்பொருள் அகழ்வாய்வுகளிலிருந்து கி.மு. 19–ஆம் நூற்றாண்டில் இந்நகரை நிறுவியவர்கள் பள்ளம் தோண்டி இதை ஒரு தீவாக்கினர் என்று தெரிகிறது. 11–6–ஆம் நூற்றாண்டுகளில் இந்நகர் செழிப்புற்று விளங்கியது. இதில் 10–8–ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பாறையில் வெட்டப்பட்ட பல குடும்பக் கல்லறைகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. செனகெரிப்புவின் தலைமையின் கீழ், கி.மு. 701–இல் இந்நகரை வெல்ல அசீரியர்கள் படையெடுக்குமுன், இந்நகரின் தலைவர்கள் நகரைவிட்டு ஓடிப்போயினர்.

***அகித்தோபல்*** (AHITOPHEL – *மடமையின் சகோதரன்)*

தாவீதின் அறிவுக் கூர்மைமிக்க ஆலோசகராய் பணிபுரிந்த அகித்தோபல் யூதா மேட்டு நிலங்களிலுள்ள கீலோ

(யோசு 15:31) என்ற ஊரினைப் பிறப்பிட மாகக் கொண்டவர். இவர் நாடறிந்த மதி நுட்பம் நிறைந்தவர். இவருடைய அறிவு ரைகளெல்லாம் இறைவனின் கூற்று களுக்கு இணையானவை என்று இவரு டன் வாழ்ந்தவர்களால் ஏற்றுக்கொள்ளப் பட்டன (2 சாமு 16:23).

அபிசலோம் தனது தந்தை தாவீதுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்து கெபிரோனில் முடிசூட்டிக் கொண்டபொழுது அகித் தோபல் அவரது ஆதரவாளராகச் சேர்ந் துக்கொண்டார். எருசலேமை எந்த விதச் சண்டையுமின்றிக் கைப்பற்றியபின் அகித் தோபலின் அறிவுரையின்படி, இஸ்ரா யேல் முழுமையும் அறியும்வண்ணம், தன் தந்தையின் வைப்பாட்டிகளுடன் அபிச லோம் படுத்தான். இந்த நிகழ்ச்சி அவனைப் பின் தொடர்பவர்களுக்கு மனத் துணிவைக் கொடுத்தது (2 சாமு 16:20–22). மேலும் தாவீதின் படையானது விலிமை பெறுமுன்னே அவரை அழித் தொழிக்க வேண்டும் என்றும் அபிச லோம் பன்னிராயிரம் வீரர்களோடு உடனே தாவீதைத் துரத்திச் சென்று, தாவீது அரசனை அழித்து விட வேண்டும் என்று அகித்தோபல் அறிவுரை வழங்கி னார் (17:1–3). இத்தகைய அறிவுரைகள னைத்தையும் நல்லவையாகத் தோன்றினா லும், தாவீதைத் துரத்திச் செல்வதைத் தள்ளிப்போடவேண்டும் என்று தாவீதின் ஒற்றன் கூசாய் அபிசலோமுக்குக் கொடுத்த மடமைமிக்க திட்டங்களின் காரணத்தால் கைவிடப்பட்டன (17:5–14). அகித்தோபலின் அறிவுரைகள் அனைத் தும் விழலுக்கு இறைத்த நீராக மாறிய தால், அபிசலோமின் விதி முடிந்து விட்டது என்றும், தன்னுடையவும் மற்ற சதிகாரர்களின் முடிவும் தெளிவாயிற் றென்பதாலும், அவர் வீட்டிற்குச் சென்று தற்கொலை செய்துகொண்டார் (17:23;1 நாள் 27:33–34).

அகித்தோபல் எலியாமின் தந்தையா வார் (2 சாமு 23:24). ஊரியாவின் மனைவி யாகிய பதுசேபா எலியாமின் மகளா வாள் (2 சாமு 11:3). இவளை மணந்து கொள்ள தாவீது இவளது கணவன் ஊரி யாவைக் கொலைச் செய்தார் (11:17–27). பதுசேபாவோடு தாவீது கொண்ட இழி வான செயல்தான் அபிசலோம் தாவீ துக்கு எதிராகக் கிளர்ச்சி செய்தபோது ஆலோசகர் பதவியிலிருந்து அகித்தோ பல் விலகிக் கிளர்ச்சியாளர் குழுவில் சேர்ந்ததற்குக் காரணமாக இருக்கலாம் (16:15).

இறையியல் மட்டத்தில், விவிலிய விவரிப்பு தாவீதைக் காட்டிக் கொடுத்த லில் அகித்தோபல் காட்டிய தாழ்ச்சியின் மையை, இவரது பேத்தியான பதுசேபா வோடு தாவீது இழிவாக நடந்துகொண்ட தற்கு தாவீது காட்டிய மனத்துக்கத்தோடு ஒப்பிட்டு வேறுபடுத்துகிறது (2 சாமு 12:13). இறைவன் தாவீதின் மன்றாட்டைக் கேட் டருளினார் (15:3). அகித்தோபலின் ஆலோ சனையை முழுவதும் மடமைமிக்கதாக்கி னார். இதை, அகித்தோபலுக்கு அளிக்கப் பட்ட தண்டனை என்பதைவிட, அபிசலோ முக்கு அளிக்கப்பட்ட தண்டனையாக எடுத் துக்கொள்ள வேண்டும் (17:14).

**அகிதூபு** (AHITUB – என் சகோதரன் நல்லவன்)

*1.* பினகாசின் இரு புதல்வர்களில் ஒருவர். ஏலியின் பேரன். அகிதூபு குரு வாகிய அகிமெலக்கின் தந்தையாவார் (1 சாமு 22:9. 11–12.20). இவர், முதல் சாமு வேல் ஆகமத்தில் (14:3) சவுலின் தனிப் பட்ட மத குருவாகிய அகீயாவின் தந்தை என்று அழைக்கப்படுகின்றார். இரண் டாம் சாமுவேல் ஆகமத்தில் (8:17) இவர் குருவாகிய சாதோக்கின் தந்தை என்று தவறாகக் குறிப்பிடப்படுகிறார் (இந்த தவறுகளுக்கு மூலங்கள் 1 நாள்6:8; 6:52–53; 18:16; எஸ் 7:2)

*2.* அமரியாவின் மகன். இவர் சாதோ க்கு என்று பெயரிடப்பட்ட மற்றொரு குரு வின் தந்தையாகவோ (2 சாமு 8:17; 1 நாள் 6:7–8) பாட்டனாகவோ (1 நாள் 9:11; நெக 11:11) இருக்கலாம்.

*3.* யூதித்தின் மூதாதையராவார் (யூதித் 8:1) மற்றொரு அமெரியாவின் மகனும், சாதோக்கு என்ற பெயருள்ள மற்றொரு குருவின் பாட்டனுமாவார் (1 நாள் 6:11–12).

**அகிபான்** (AHBAN–விவேகம் உள்ளவனின் சகோதரன், ஞானியின் சகோதரன்)

இவர் அபிசூர், அபிகயில் ஆகியோ ரின் புதல்வர்களில் ஒருவர். மோலீத்தின் சகோதரன். யூதர் குலத்தைச் சேர்ந்தவர். எரகுமேலின் மூல மரபுப்பட்டியலில் இவர் பெயர் வருகிறது (1 நாள் 2:29).

**அகிமாசு** (AHIMAAZ–சினத்தின் சகோதரன்)

1. சவுலின் மனைவியாகிய அகினோ வாமின் தந்தை அகிமாசு என்றழைக்கப் படுகின்றார் (1 சாமு 14:50).

2. அகிமாசு தலைமைக் குருவான சாதேக்கின் மகனாவார் (2 சாமு 15:27; 1 நாள் 6:8.53). இவர் அசரியாவின் தந்தை யுமாவார் (1 நாள் 6:9). அபிசலோமின் கிளர்ச்சியின் பொழுது சாதோக்கும், அபி யத்தாரும் எருசலேமிலிருந்தனர். அகிமா சும், யோனத்தானும் தாவீதோடு தொடர்பு கொள்வதற்காக ஏன்–ரோகேல் நீரூற்றரு கில் மறைந்திருந்தார்கள். அங்கிருந்து தாவீதுக்குச் செய்தி அனுப்பிவந்தனர். அபிசலோமின் திட்டங்களனைத்தும் குருக் களாலும், கூசாயினாலும் இவர்களுக்கு அறிவிக்கப்பட்டன. ஆனால் அபிசலோ மின் ஆட்கள் ஒரு சிறுவனின் உதவியால் எதிரிகள் இருக்குமிடத்தை இனம் கண்டுக் கொண்டனர். எனவே அவர்கள் பகுரிமில் ஒரு வீட்டு முற்றத்திலுள்ள கிணற்றில் இறங்கி மறைந்து கொண்டார்கள் (2 சாமு 17:17 தொ). பின் அவர்கள் அபிசலோமின் திட்டங்களைத் தாவீதிடம் சொல்ல விரைந்துசென்றனர். மேலும் எப்பிராயி மில் நடந்தபோரில் அபிசலோமின் படை கள் முறியடிக்கப்பட்டன. அவரும் கொலை செய்யப்பட்டார். இந்த மா பெரும் வெற்றியைத் தாவீதிடம் அறிவிக்க அகிமாசு யோவாபிடம் அனுமதி கேட் டார். ஆனால் அவர் இந்த வெற்றியை அறிவிக்க அனுமதி அளிக்கவில்லை. ஏனென்றால் அபிசலோமின் இறப் பானது வெற்றியை மறைத்து தாவீதிற்கு ஆழ்ந்த வருத்தத்தை தரக்கூடும். எனவே நற்குணசீலர் அகிமாசை இந்த துக்கச் செய்தியைக் கூற அனுமதியளிக்கவில்லை. மாறாக ஒரு கூசியரை அனுப்பினர். இருப்பினும் அகிமாசு வலியுறுத்திக் கேட்டதால் அனுமதி வழங்கப்பட்டது. கூசி யருக்கு முன்பே வந்து, அவர் மன்னரை அணுகித் தாங்கள் அடைந்த வெற்றியை அறிவித்தாரே ஒழிய அபிசலோமின் இறப்பினை எடுத்துச் சொல்ல அவரால் இயலவில்லை. பின்பு வந்த கூசியர் கிளர்ச்சி செய்தவரின் அவல முடிவை அறிவித்தார் (2 சாமு 18:19–33). அகிமா சின் பிற்கால வாழ்வு பற்றி ஒன்றும் தெரியவில்லை. அவரது தந்தை சாதோக் குக்குப்பின் பெரிய குருவானார் என்ப தற்கு ஒரு சான்றுமில்லை.

3. தாவீதால் நியமிக்கப்பட்ட 12 மாவட்ட அதிகாரிகளில் ஒருவர் நப்தலி நாட்டிற்குத் தலைவனாவார் (1 அர 4:15). அரசருக்கும் அவரது அரண்மனைக்கும் வேண்டிய உணவுப் பொருட்களைச் சேகரித்துக் கொடுப்பது இவர்களுடைய வேலையாகும் (4:7). அகிமாசு சாலமோ னின் மகள் பாசமத்தை மணந்தார். சில ஆய்வாளர்கள் இப்பெயர் ஒரு அதிகாரி யின் தந்தையின் பெயராகும் என்றும் அந்த அதிகாரியின் பெயர் விடப் பட்டுள்ளது என்றும் , கருதுகின்றனர். இவர் அகிமாசு 2–இல் குறிக்கப்படுவரே என்பது அவர்கள் கருத்தாகும்.

**அகிமான்** (AHIMAN – என் சகோதரன் கொடை ஆவான்)

1. கெபிரோனில் வாழ்ந்த ஆனாக்கின் மூன்று புதல்வர்களில் ஒருவர் அகிமான் என்று அழைக்கப்படுகிறார் (எண் 13:32; யோசு 15:14; நீதி 1:10). இஸ்ராயேல் மக்கள் பாலஸ்தீனத்தில் குடியேறும் முன்னால் கெபிரோனிலும், எருசலேமிற்குத் தெற்கி லும் வாழ்ந்து கொண்டிருந்தவர்களும் அனாக்கின் வழிவந்தவர்களாகக் கருதப் பட்டனர். கெபிரோனில் இவர்கள் தோற் கடிக்கப்பட்டனர். இந்த வெற்றி நீதி 18:10 –இல் யூதாவைச் சேர்ந்தவர்களுக்கும், யோசு 15:14–இல் கலேபுக்கும் சாற்றிக் கூறப்பட்டுள்ளது.

அனாக்கின் வழிவந்தவர்களாகிய அகி மான், சேகாய், தல்மாய் ஆகியவர்களின் பெயர்கள் இவர்கள் அரமேயர்கள் என்று சுட்டுகிறது.

2. ஒரு லேவியர். இஸ்ராயேலர் நாடு கடத்தப்பட்டுத் திரும்பியபின் எருசலேம்

நகரில் வாழ்ந்தவர். ஆலயத்தின் நான்கு தலைமை வாயில் காப்பாளர்களில் அகிமானும் ஒருவராவார் (1 நாள் 9:17–18).

**அகிமெலக்கு** (AHIMELECH – என் சகோதரன் அரசன் ஆவான்)

1. அகிதூபின் மகனாகிய அகிமெலக்கு நோபு என்ற ஊரிலுள்ள குருவாவார். நோப் ஊரிலிருந்த குருக்கள், தப்பியோடிய தாவீதுக்கு, உதவி புரிந்தனர் (1 சாமு 21:1–9). இது அங்குள்ள குருக்களைக்கொன்று குவிக்க சவுலைத் தூண்டியது. அரச வீரர்கள் இக்கட்டளையை நிறைவேற்ற மறுத்தாலும், ஏதேமியனான் தோயேகு அகிமெலக்கின் புதல்வர்களில் ஒருவரான அபியத்தாரைத்தவிர மற்றவர்கள் அனைவரையும் கொன்று தீர்த்தார் (22:17–20). இவரோ, இவரது சகோதரனோதான் 1 சாமு 14:3.18–இல் வரும் அகீயாவாக இருக்கலாம். சங் 52–இல் வரும் தலைப்பு தாவீது அகிமெலக்கு செய்த உதவியை தோயாகு சவுலுக்கு அறிவித்த சூழ்நிலையில் அமைக்கப்பட்டுள்ளது. முற்காலத்தில் அகிமெலக்கைச் சவுல் அழைத்துக் கலந்துரையாடியிருப்பதாகத் தெரிகிறது (1 சாமு 22:15). இவர் சவுலின் தனி சமய குருவாகிய அகீயாவோடு ஒப்புமைப்படுத்தப்படுகிறார் (1 சாமு 4:3.18). அகீயா அகிமெலக்கிலிருந்து சிறிது வேறுபட்டவராகவும் கருதப்படுகின்றார்.

2. குருவான அபியத்தாரின் மகனாவார். அகிமெலக்கு 1–இன் பேரன் ஆவார். தாவீது ஆட்சிக்காலத்தில் சாதோக்கோடு முக்கிய குருத்துவ அலுவலில் பங்குகொண்டார் (2 சாமு 8:17; 1 நாள் 18:16). ஆனால் இரண்டாம் சாமுவேல் ஆகமத்தில் (8:17) அகிமெலக்கின் மகன் அபியத்தார் என்பது அபியத்தாருடைய மகன் அகிமெலக்கு என்பதன் தவறான கூற்றாகக் கருதப்படுகிறது.

3. இவர் தாவீதுக்குப் பணிபுரிந்த ஒரு இத்தியர் (1 சாமு 26:6).

**அகிமோத்து** (AHIMOTH – மோத் என் சகோதரன் ஆவார்)

இவர் கோராகு குடும்பத்தைச் சேர்ந்த லேவியரராவார் (1 நாள் 6:25). மேலும் சாமுவேலின் தந்தையான எல்கானாவின் ஒரு மூதாதையர். இப்பெயர் ஒருவேளை அகிமகாத்து என்று வாசிக்கப்படவேண்டும். (1 நாள் 6:35).

**அகியா** (AHIAH – யாவேயின் சகோதரன்)

நெகமியா தலைமையில் உடன்படிக்கை புதுப்பிக்கப்பட்டபோது கையொப்பம் இட்டவர்களில் ஒருவர் (நெக 10:26).

அகீயா என்ற பெயரின் மற்றொரு வடிவமாகும். இவ்வடிவில் ஒருதரம் வருகிறது. காண்க: அகீயா – 8.

**அகியாம்** (AHIAM – தாயின் சகோதரன்)

இவர் அராரியக் குலத்தவரான சாரார் (2 சாமு 23:33) அல்லது சாக்காரின் (1 நாள் 11:35) மகனாவார். இவர் தாவீதின் முப்பது புகழ்மிக்க வல்லவர்களில் ஒருவர்.

**அகியான்** (AHIAN – சகோதரத் தன்மையுடைய)

இவர் மனாசேயின்வழி மரபுப் பட்டியலில் வரும் செமிதாவின் முதல் மகனாவார் (1 நாள் 7:9).

**அகியூது** (AHIHUD – மாட்சிமை, கீர்த்தி, மாட்சிமையின் சகோதரன்)

1. சலோமீயினுடைய மகனாகிய அகியூது ஆசேர் குலத்தின் தலைவராவார் (எண் 34:27). மேலும் கானான் நாட்டை இஸ்ராயேல் மக்களுக்குப் பங்கிட்டுக் கொடுக்க எலயாசர், யோசுவா, ஆகியவர்களின் தலைமையின் கீழ் நியமிக்கப்பட்ட பத்துக் குலத்தலைவர்களில் இவரும் ஒருவராவார்.

2. குல மரபு அட்டவணையில் இவர் பென்யாமின் குலத்தினைச் சேர்ந்தவராகக் குறிப்பிடப்பட்டிருக்கிறார். எகுதின் மகன் (1 நாள் 8:7). வாசக வேறுபாடுகளால், அகியூதை எகிலாம் அல்லது கேராவின் புதல்வராக எண்ணுவதற்கு இடமிருக்கிறது.

**அகியேசர்** (AHIEZER – என் சகோதரன் உதவியாளன் ஆனான்)

1. இவர் அம்மிசத்தாயின் மகனாவார். இவர் மக்கள் தொகை கணக்கெடுப்பின் பொழுதும் (எண். 1:12;2:25); பீடம் திருநிலைப்படுத்தப்பட்டபோதும் பலிக்கென காணிக்கை செலுத்தும் பொழுதும் (எண்

7:66.71), தாண் குலத்தைச்சேர்ந்த படையின் தலைவராகயிருந்து அவர்களை வழி நடத்தும் பொழுதும் (எண் 10:25) தாண் குலத்தின் பிரதிநிதியாக மோசேக்கு உதவி புரிந்தார்.

2. இவர் பென்யாமீன் குலத்தினரான சவுலின் குடும்பத்தைச் சேர்ந்த திறமையும் ஆற்றலும் மிக்க வில்வீரர்களின் தலைவர். இவர்கள் தாவீது சிக்கிலாகு, என்னுமிடத்தில் தலைமறைவாயிருந்தபோது அவருக்கு உதவ வந்து சேர்ந்து கொண்டார்.

**அகியோ** (AHIO – தம்பி)

1. இவர் அபினதாபுடைய மகனாவார். தாவீதின் நகரமாகிய எருசலேமிற்கு இறைவனது பேழையைத்தேரில் ஏற்றித் தன் தந்தையின் வீட்டிலிருந்து எடுத்துக் கொண்டு வரும்பொழுது அகியோ அப் பேழைக்கு முன் நடந்தார் (2 சாமு 6:3–4; 1 நாள் 13:7). அவரும் அவர் சகோதரர் ஊசாவும் பேழையோடு நாக்கோனின் போரடிக்கும் களம்வரை வந்தனர் (6:6). அகியோ என்பதை என்சகோதரன் என்று எடுத்துக்கொள்ளாமல் சில மொழி பெயர்ப்புக்கள் செய்வதுபோல் ஒருஆளின் பெயராக எடுத்துக்கொள்வது மேல்.

2. மசரோட்டிக் வாசகத்தின்படி, பென்யாமின் குலத்தினரான பெரியாவின் புதல்வர்களில் ஒருவராகக் கருதப்படுகின்றார் இவர். "எழுபது நூல்கள்" அடிப் படையில் அகியோவை "அவர்களின் சகோதரன்" என்று கூறுவது வரவேற்கப் படுவது என்பது பல அறிஞர்களின் கருத்து.

3. பென்யாமின் குலத்தினரான எயியேலின் புதல்வர்களில் ஒருவர் (1 நாள் 8:29–31). இவருடைய தாய் மாக்கா ஆவாள். சவுலின் தந்தையான கீசின் சகோதரர்களில் ஒருவர் (9:35–37).

**அகிரபா** (ACRABA)

மொகுமூர் ஓடை மேலுள்ள கூசிக்கு அருகிலுள்ள ஓர் இடம் (யூதி 7:18). இவ் விடம் எருசலேமுக்கு வடக்கே 42 கி.மீ. தொலைவிலும், சிக்காருக்குச் சில கி.மீ. தொலைவிலும் யோர்த்தானிலிருந்து எழும் மலைப்பகுதியில் அமைந்துள்ள இக் கால அக்ராபே–ஆக இருக்கலாம்.

**அகிரபிம்** (AKRABBIM – தேள், அல்லது தேள்வழி)

கானான் நாட்டின் தென் எல்லையிலுள்ள ஒரு கணவாய் (எண் 34:4; யோசு 15:3; நீதி 1:36). பெயேர் – செபாவிலிருந்து அராபாவிற்குச் செல்லும்பாதை திடீரென வாடி–மூரா என்ற ஓடைக்கு இறங்கும் இடத்தில் உள்ள நெக்–எஸ்–சபாவாக இது இருக்கலாம் என சாதாரணமாக அடையாளம் காட்டப்படும். இலிசானுககு எதிர்த் திசையில் சாக்கடலுக்கு மேற்கேயுள்ள உம்–எல்–அக்கராப் தான் இது என்ற மற்றொரு கருத்தும் நிலவுகின்றது. கிரேக்க மொழி அறிந்த யூதர்கள் காலத்தில் இவ்விடம் அக்கிரபத்தானே என்று அழைக்கப்பட்டது. இவ்விடத்தில்தான் யூதா மக்கபேயு இதுமேயர்களைத் தோற்கடித்தார் (1 மக் 5:3).

**அகிரா** (AHIRA – சகோதரன் நண்பன் ஆவான்)

அகிரா ஏனானின் மகனாவார். நப்தலி குலத்தின் தலைவன் (எண் 1:15; 2:29; 7:78–83; 10:27). இஸ்ராயேல் மக்கள் தொகை கணக்கெடுப்பிலும், பாலைவனத்தில் ஆற்றப்பட்ட மற்றப் பணிகளிலும் மோசேக்கு உதவியாளர்களாக இருந்த பன்னிரண்டு குலத்தின் தலைவர்களில் இவரும் ஒருவராவார்.

**அகிராம்** (AHIRAM – என் சகோதரன் உயர்த்தப்பட்டான்)

அகிராம் பென்யாமினுடைய மூன்றாவது மகனாவார். இவர் அகிராமியர்களின் குடும்பத் தலைவனாவார் (எண் 26:38). நாளாகம ஆசிரியர் தந்துள்ள பென்யாமின் வழி மரபு பட்டியலில், அகராகு தான் இவரது மூன்றாவது புதல்வர் என்று எழுதப்பட்டிருக்கிறது (1 நாள் 8:1). ஆனால் அகிராம் என்றுதான் இடம் பெறவேண்டும் என்பது பலஅறிஞர்களின் கருத்து. இதே மாற்றம் முதல் நாளாகமத்தில் (7:12) அகேர் என்ற பெயருக்குப் பதிலாக இடம் பெறவேண்டும். மேலும் மற்றொரு வழி மரபுப் பட்டியலில் ஏகீ, உரோசு, முப்பிம், குப்பிம் போன்றவர்கள் தான் தான் பென்யாமினின் மக்களாகத் தரப்படுகின்றனர் (ஆதி 46:21). ஆனால் பெரும்பாலும் இது தவறாகத்தான்

இருக்கவேண்டும். ஏனென்றால் இதனை எண்ணாகமம் இருபத்தி ஆறாம் அதிகாரத்தோடு ஒத்துப்போகும்படி "அகிராம், சுப்பாம், கூப்பாம்" என்று அமைந்திருக்கவேண்டும்.

**அகிரி** (HAGRI – அலைந்து திரிபவர், என் அழகு)

தாவீதின் படையில் உள்ள திறமை வாய்ந்த வீரர்களில் ஒருவரான மிபிகாரின் தந்தையாவார் (1 நாள் 11:38). "அகிரியின் மகன் மிபிகார்" என்பதற்குப் பதிலாக 2 சாமு 23:36–இல் "காதியனான பானி" என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. விளக்கவுரையாளர்கள் இதையே பயன்படுத்துகிறார்கள்.

**அகிரிப்பா** (AGRIPPA)

யூதேயாவின் இரண்டு அரசர்களின் பெயர்.

1. முதலாம் அகிரிப்பா அல்லது ஏரோது அகிரிப்பா (கி.மு. 10–கி.பி.44) என்பவர் யூதேயாவின் அரசர் (கி.பி. 41–44). அரித்தோபுலின் மகன். பெரிய ஏரோது, அசமோனிய மரபைச் சேர்ந்த மரியம்னே ஆகியோரின் பேரன். ஏரோது அந்திப்பாவின் ஒன்றுவிட்ட அண்ணன் மகன்.

இவர் தன்னுடைய குழந்தைப் பருவத்தையும், இளமைப் பருவத்தையும் உரோமையில் கழித்தவர். அங்கு அவர் ஊதாரித்தனமாக வாழ்ந்தார். தன் தாயின் நண்பர்களின்மூலம் இந்த அரச போக வாழ்க்கையை அடைய முடிந்தது. குறிப்பாகத் தன்னுடைய தாயின் மரணத்திற்குப் பிறகு கடன்கொடுத்தவர்களின் தொல்லையைத் தாங்கமுடியாமல் உரோமையைவிட்டு வெளியேற வேண்டியதாயிற்று. ஒரு நிலையில் இவர் தற்கொலை செய்துகொள்ளவும் நினைத்தார். ஆனால் தன்னுடைய மனைவியினுடையவும், அவருடைய சகோதரன் ஏரோது அந்திப்பாவினுடையவும் உதவியால் திபேரியாவிலுள்ள கடைகளை மேற்பார்வையிடும் வேலை கிடைத்தது. இந்த வேலை நிரந்தரமாக உதவி செய்யவில்லை. ஏனெனில் அவருடைய மனைவியின் இரு சகோதரர்கள் தங்களுக்குள் சண்டைபோட்டுக் கொண்டார்கள். ஆகவே வேலையை ராஜிநாமா செய்துவிட்டார். பின்பு அந்தியோக்கியாவிலுள்ள உரோமை ஆளுநருடன் நட்புக் கொண்டார். அவர் உதவி செய்தார். பல ஆண்டுகளுக்கிடையில் உரோமைக்குச் சென்று மறுபடியும் அரச வீட்டினரோடு உறவு கொண்டார். அவருடைய ஊதாரித்தனமான வாழ்க்கை அவரைக் கடனாளியாகவே வைத்திருந்தது. அவருடைய கட்டுப்பாடற்ற பேச்சினால் அவர் சிறையில் தள்ளப்பட்டார். ஆறு மாதங்களுக்குப் பின் திபேரியு இறந்த பின்பு சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டார்.

தன்னுடைய நெருங்கிய நண்பன் கலிகுலா திபேரியுவுக்கு அடுத்து அரசனான பின் அகிரிப்பாவிற்கு நல்ல காலம் பிறந்தது. அவர் உடனே சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டதுமன்றி, பிலிப்பு, இலிசானியா ஆகியோரின் பகுதிகளின்மேல் சிற்றரசராக நியமிக்கப்பட்டார். கி.பி. 39– இல் ஏரோது அந்திப்பா ஆட்சி செய்த பகுதியும் இவருக்குக் கொடுக்கப்பட்டது. கி.பி. 41–இல் கலிகுலா கொலை செய்யப்பட்ட பிறகு கிளாதியு என்ற புதிய மாமன்னரிடமிருந்து யூதேயா, சமாரியா ஆகிய பகுதிகளையும் பெற்றார். இவ்வாறாகத் தன்னுடைய தாத்தா முன்பு ஆண்டு சென்ற பகுதிகளுக்கு அகிரிப்பா இப்பொழுது அரசனானார். மேலும் அரசவை அங்கத்தினரும் ஆனார்.

கடைசியாக பாலஸ்தீனத்திற்கு அரசனானபொழுது அவருடைய நன்னடத்தை (உண்மையாகவோ, நடிப்போ தெரியாது) தன்னுடைய குடிமக்களான யூதர்களின் நல்ல எண்ணத்தைப் பெற்றுத்தந்தது. பரிசேயரின் நல்லெணத்தை இவர் பெற்றார். யூத மாநிலங்களில் அம்மக்களின் சட்டங்களையும், பாரம்பரியங்களையும் அனுசரிப்பதில் கவனம் செலுத்தினார். கோவிலுக்கு நன்கொடைகளைத் தாராளமாகக் கொடுத்தார். தன்னுடைய பக்திச் செயல்களை எல்லோரும் காணும்படி செய்வதில் கவனம் செலுத்தினார்.

தன்னுடைய தாத்தா செய்தது போலவே, யூதர்கள் அல்லாதவர்கள் வாழும் பகுதிகளில் அவர்களுடைய அனுதாபத்தைப் பெறுவதற்காக கட்டிட வேலைகளை மேற்கொண்டார். அ.ப. 2–

இன் படி யூதர்களைப் பிரியப்படுத்தும் படி இவர் சில ஆதிக் கிறிஸ்தவர்களைத் துன்புறுத்தினார். செபதேயுவின் மகனான யாக்கோபுவைச் சிரைச் சேதம் செய்தார். பேதுருவைச் சிறையில் இட்டார். உரோமை அரசு இவருடைய நிர்வாகத்தில் மிகவும் எச்சரிக்கையாக இருந்தது. சீரியா நாட்டுத் தூதுவரின் தூண்டுதலால் இவருடைய இரண்டு பேராசைமிக்க வேலை ஏற்பாடுகள் உரோமை அரசால் நிறுத்தப்பட்டன.

இவரது மக்கள் இவரை ஒரு கடவுள் என்று அறிக்கையிட்ட சில காலத்திற்குள் கி.பி. 44–இல், இவர் திடீரென செசரியாவில் காலமானார். இவருடைய மரணத்தைப்பற்றி இரண்டு வரலாறுகள் உள்ளன. அவற்றில் ஒன்று அ.ப. 12:19–23 ஆகும்.

2. இரண்டாம் அகிரிப்பா அதாவது மார்கஸ் யுலியு அகிரிப்பா (கி.பி. 27–100) முதல் அகிரிப்பாவின் மகன்.

தந்தையைப் போலவே இவர் உரோமையில் தன்னுடைய கல்வியை முடித்தார். தன் தந்தை இறந்தபொழுது இவர் 17 வயதினர். தன்னுடைய தந்தையைத் தொடர்ந்து அரசபீடம் ஏற கிளாதியு அனுமதி வழங்கினாலும், அவருடைய ஆலோசகர்கள் இதற்கு மாறாக ஆலோசனை கூறினார்கள். ஆகவே யூதேயா, ஆளுநர்களிடம் ஒப்படைக்கப்பட்டது.

கி.பி. 50–இல் கிளாதியு, கால்க்கிசின் நாட்டை (இக்கால லெபனோன்) அகிரிப்பாவுக்குக் கொடுத்தார். சிறிது காலத்திற்குப் பின்பு சிறிய பாகத்திற்குப் பதிலாக பெரிய பகுதியாக ஏரோது பிலிப்புவின் பகுதிகளாகப் பத்தனேயா, திரக்கோனீது, காலனீத்து, அபிலேன் ஆகிய பகுதிகள் 53–இல் அகிரிப்பாவுக்கு அளிக்கப்பட்டன. பின்பு நீரோ காலத்தில் (54–இல்) கலிலேயா, பெரயாவின் சில பகுதிகளும் ஏரோதுக்குக் கொடுக்கப்பட்டன. இவர் எருசலேமிலுள்ள அசமோனிய அரண்மனையைப் பெரிதாக்கினார். செசரியாவில் பல கட்டடங்களை எழுப்பினார்.

இவருடைய சகோதரி பெர்னீக்காவோடு இவர் கொண்டிருந்த தவறான நெருங்கிய உறவு துர்மாதிரிகையாக இருந்தது. மதத்தில் ஆர்வம் அற்றவராகவே வாழ்ந்தார். இதை யூதர்கள் வெறுத்தனர். சில சமயம் சிதறிக்கிடந்த யூதர்களுக்குச் சார்பாக இவன் பேசினாலும், பெரும்பாலும் உரோமையர்களுக்குப் பிரமாணிக்கமாய் இருந்தார். குருத்துவத்தைத் தன் கட்டுப்பாட்டுக்குள் வைத்துக் கொண்டார். ஒருவேளை இந்தச் சமய அதிகாரத்தினால்தான் பெஸ்து பவுலின் தற்காப்புரையைக் கேட்க இவரைக் கேட்டிருக்கலாம் (அ.ப. 25:13–26:32). ஆலயக் காரியங்களில் இவர் அதிகாரம் செலுத்தியதால், எருசலேம் குருக்கள் இவரை வெறுத்தனர். கி.பி. 66–70–இல் உரோமைருக்கும் யூதர்களுக்குமிடையே நடந்த போரில் இவர் உரோமையர் பக்கமே பிரமாணிக்கமாய் இருந்தார். போரின் முடிவில் இவர் தீத்துவோடு உரோமை சென்றார். அங்கு உரோமைப் படைத் தலைவனாக நியமிக்கப்பட்டார். இவருக்குப்பின் சந்ததியிருந்ததாகத் தெரியவில்லை. இவரே ஆட்சி செய்த ஏரோதர்களில் கடைசியானவர். கி.பி.100–ஐ ஒட்டி இறந்தார். இதற்குப்பின் இவருடைய அரசு சீரியா மாநிலத்தின் ஒரு பகுதியாக்கப்பட்டது.

**அகிரியர்** (HAGRITES)

யோர்தானுக்கு அப்பால் கிலயாத்துக்குக் கிழக்கில் வாழ்ந்த ஒரு ஆயர் இனம் (1 நாள் 5:10.19–20; சங் 83:6). இவர்கள் ஆகாரின் சந்ததிகளாகக் கருதப்பட்டனர் (சங் 83:6). இவர்கள் மோவாபியா, ஏதோமியா, இசுமயேலியர் ஆகியவர்களோடு சேர்த்து இஸ்ராயேலருக்கு எதிரானவர்கள் என்று பெயர் பெற்று யோர்தானுக்கு அப்பால் சமவெளியில் வாழ்ந்து வந்தார்கள்.

சவுலின் காலத்தில் ரூபன் குலம் ஒருவேளை யோர்தான் பகுதியில் வாழ்ந்த மற்ற மக்களின் உதவியோடு அகிரியர்களை வென்று தன்னுடைய நிலப்பரப்பை விரிவுபடுத்தியது (1 நாள் 5:10;19–22). தாவீது அரசாண்டபொழுது அகிரியரான யாசிசு என்பவருக்கு ஆடுகளைக் கண்காணிக்கும் பொறுப்புக் கொடுக்கப்பட்டது (1 நாள் 27:30). இந்த அகிரியர்கள் இசுமயேலின் தாயான ஆகாரோடு கொண்டுள்ள உறவு தெளிவாகத் தெரியவில்லை.

தேமான் நாட்டினரோடு ஆகாரின் மக்களை தொடர்புப்படுத்திச் சொல்லப் பட்டிருக்கிறது (பாரூக் 3:23). இங்கு ஒன்று படுத்தப்பட்டிருப்பது முக்கியத்துவம் அல்ல. கீழ்த்திசை ஞானத்தைப்பற்றி சொல்லுவதில் உள்ள மரபின்படி உள்ளது. இது 1 அர 4:30; எரே 49:7; ஒப 8 ஆகிய பகுதிகளிலும் சொல்லப்பட்டி ருக்கிறது.

**அகிரோத்து** (HAHIROTH)

கிழக்கு நைல்நதிக் கழிமுகத் துறையில் உள்ள இடம். எகிப்திலிருந்து யாத்திரை செய்தபோது, இஸ்ராயேல் கடந்துசென்ற ஓர் இடம் (எண் 33:8). காண்க: பியகி ரோத்து.

**அகிலாபு** (AHLAB – கொழுத்த, செழிப்பான, பலனுள்ள)

அகிலாபு ஆசேர் ஆட்சிப் பகுதியில் உள்ள ஒரு நகரம். நீதி 1:31–இன் படி அகி லாபு நகரத்தில் குடியேறியிருந்த கானா னியர்களை ஆசேரால் வெளியேற்ற இயல வில்லை. அதே வரியில் குறிக்கப்படும் கெலிபா, இப்பெயரின் இரட்டிப்பாகும். தொடர்புடைய விவரிப்பில் (யோசு 14:29) குறிக்கப்படும் மகலாபு இதே நகரத்தைக் குறிக்கலாம். அப்படியானால், தீர் நாட்டுக்கு வடகிழக்கே 6 கி.மீ. தொலை விலுள்ள கிர்பேத்து–ஏல்–மகாலிபு என்ற இடத்தில் அகிலாபு இருந்ததாகக் கூற லாம். அசீரியர்கள் ஏடுகளின்படி மகா லிபு கி.மு. 743–இல் திகிலாத்து பிலேசரா லும், பிற்காலத்தில் செனகொரிபுவாலும் கைப்பற்றப்பட்டது.

**அகிலாய்** (AHLAI – ஓ அப்படியிருந்தால்)

1. தாவீது குலத்தைச்சேர்ந்த எரகுமே லின் மரபுப் பட்டியலில் இவள் சேசா னின் மகள் (1 நாள் 2:31–இல் வரும் புதல் வர்கள் வழித்தோன்றல்களை உணர்த்து கிறது). இவளது தந்தைக்கு ஆண் வாரிசு இல்லாததால், இவர் இவளை யரிகா என்ற எகிப்திய அடிமைக்கு மணம் செய் வித்தார். இவர்களின் மகனின் பெயர் அத்ததாய் ஆகும்.

2. தாவீதினுடைய வல்ல வீரர்களின் பெயர் பட்டியலில் சாபதுவின் தந்தை யாக அகிலாய் குறிப்பிடப்பட்டிருக்கிறார் (1 நாள் 11:41). சாபது என்ற பெயர் சேசா னின் புதல்வியின் வழி வந்தவர்களில் காணப்படுவதால் (1 நாள் 2:36) அகிலாய் சாபதுவினுடைய தாயாக இருக்க வேண்டும் அப்படியானால் அகிலாய் – 1 ஆவாள்.

**அகிலூது** (AHILUID – என் சகோதரன் பிறந்துள்ளான்)

அகிலூது என்பவர் தாவீது, சால மோன் மன்னர்களிடம் பதிவு செய்பவரா யிருந்த யோசபாத்தின் தந்தை ஆவார். (2 சாமு 8:16; 1 அர 4:3; 1 நாள் 18:15). சால மோன் ஆட்சியில் 12 மாவட்ட அதிகாரி களுள் ஒருவரான பானாவின் (1 அர 4:12) தந்தையாக (1 அர 4:12) இருக்கலாம்.

**அகினதாபு** (AHINADAB – என் சகோதரன் உயர்ந்த பண்பு உடையவர், உயர்தரமானவர்).

இத்தோவின் மகன். அகினதாபு சால மோனால் நியமனம் பண்ணப்பட்ட பன்னி ரெண்டு பணியாளர்களில் ஒருவராவார். இவர் மகனாயிம் பகுதிக்குத் தலைவரா வார் (அர 4:14).

**அகினோவாம்** (AHINOAM – என் சகோதரன், மகிழ்ச்சி, பெருந்தன்மை, அன்பானவன் ஆவான்)

1. அகிமாசின் மகளும், சவுலின் மனைவியுமாவாள் (1 சாமு 14:50).

2. இசிரியேல் என்ற ஊரைச் சேர்ந்த அகினோவாம் தாவீதின் மனைவிகளில் ஒருவள் (1 சாமு 25:43–44). தாவீது பெலிஸ் தியர்களுக்குத் தப்பிச் சென்றபோது, அபிகாயிலும், அகினோவாமும் அவ ரோடு காத்துக்குச் சென்றனர் (27:3). பின்பு சிக்கிலாகில் தாவீது தங்கியிருந்த போது இவர்கள் அமலேக்கியரால் சிறைப்பிடிக் கப்பட்டனர் (30:5). பின்பு தாவீதால் விடுதலை செய்யப்பட்டு கெபிரோனுக்குத் தாவீதுடன் சென்றனர். அங்கு அகினோ வாம் தாவீதின் தலைமகனான அம் னோனை பெற்றெடுத்தாள் (2 சாமு 2:2; 3:2; 1 நாள் 32:1).

**அகியா** (AHIJAH – யாவேயின் சகோதரன்)

1. சவுல் காலத்தில் சீலோவில் குரு வாக இருந்தவர். அகிதூபுவின் மகனா

வார். குருவாகிய ஏலியின் மகனாகிய பினகாசின் பேரனுமாவார் (1 சாமு 14:3). கிபயாவில் தங்கியிருந்த சவுலின் படை வீரர்களோடு சேர்ந்து அவருக்குப் பணி புரிந்தார். ஏபோதை அணிந்திருந்தார். உடன்படிக்கைப் பெட்டகத்தைக் கண் காணிக்கும் பொறுப்புப் பெற்றிருந்தார். இந்த ஏபோதும், உடன்படிக்கைப் பெட்டகமும் இறைவனது விருப்பத்தை அறிவதற்குரிய அடையாளங்களாகப் பயன்படுத்தப்பட்டன (1 சாமு 14:18–19. 41–42). தலைமைக்குருக்கள் பெயர் பட்டிய லில் இப்பெயர் இடம் பெறவில்லை (1 நாள் 6:50–53; எஸ் 7:2–5). இவர் அகிமெ லக்கின் மூத்த சகோதரராகவும் முதியவ ராகவும் இருந்திருக்கலாம். பிள்ளை யில்லாது இறந்திருக்கலாம் அல்லது நோபு என்ற ஊரிலுள்ள குருவாகிய அகிதூபுவின் மகனாகிய அகிமெலக்கு என்பதுதான் இவருடைய உண்மையான பெயர் என்று அறிஞர்கள் கருதுகின்றனர் (1 சாமு 21–22).

2. சீலோவின் இறைவாக்கினரான அகீயா, முதலில் இஸ்ராயேலரின் முதல் அரசராகிய எரொபயாமின் சார்பாளராக வும், பின்பு எதிர்ப்பார்ப்பாளராகவும் இருந்தார் (1 அர 11:14; 12:15; 15:29; 2 நாள் 10:15). எரொபயாம் பத்துக்குலத்தவர்களுக் குத் தலைவராகப் போகின்றார் என்று அகீயா வாக்களித்து, அவரைச் சாலமோ னுக்கு எதிராக கிளர்ச்சி செய்யும் படித் தூண்டிவிடுகிறார் (1 அர 11:29 தொ).

இதனை உணர்த்துவதற்காகத் தான் அணிந்திருந்த புதிய சால்வையை எடுத்து, பன்னிரண்டு துண்டுகளாக்கிப் பத்துத் துண்டுகளை அவருக்கு அளிக்கின்றார். இதைக் கேள்வியுற்ற சாலமோன் எரொ பயாமைக் கொல்ல வழி தேடுகின்றார். ஆனால் அவர் ஒடி ஒளிந்து கொள்கின் றார். சாலமோனின் இறப்பிற்குப்பின் எரொபயாம் மன்னனாகிறார். ஆனால் சாலமோனைவிட எரொபயாம் ஒழுக்கத் தில் சிறந்தவராக இல்லை. மேலும் அவரது மகன் நோயுற்றிருக்கும் பொழுது ஆண்டவரின் விருப்பம் என்ன என்று இறைவாக்கினர் அகீயாவிடம் கேட்டறிய தனது மனைவியை மாற்றுடையில் அனுப்புகின்றார். அகீயா அவளை இனம் கண்டுகொண்டு, எரொபயாமின் மகனது திடீர் இறப்பினையும், அவரது பாவங் களின் விளைவாக அவரது சந்ததியின் அழிவினையும் எடுத்துக் கூறுகின்றார் (1 அர 14:1–20; 15:29–30). 2 நாள் 9:29–இல் சாலமோனின் செயல்கள் பற்றி எழுதிய வர்களுள் அகீயா ஒருவராகக் குறிக்கப் படுகிறார்.

3. இவர் இஸ்ராயேலின் அரசராவார். பாசாவின் தந்தையாவார். இசக்கார் குலத்தின் உறுப்பினராவார் (1 அர 15:27.33;21:22; 2 அர 9:9).

4. யூதா குலத்தைச் சேர்ந்த எரகுமே லின் புதல்வர்களில் ஒருவர் (1 நாள் 2:25).

5. பென்யாமின் குலத்தைச் சேர்ந்த பெலாவின் மகன் (1 நாள் 8:7). 8:4–இல் இவர் அகோவா என்றழைக்கப்படுகிறார்.

6. தாவீதின் வலிமைமிக்க வீரர்களில் ஒருவர். பெலோனியர் என்றும் அழைக் கப்படுகிறார் (1 நாள் 11:36).

7. தாவீது அரசர் காலத்தில் இருந்த ஒரு லேவியர். ஆலயத்தில் சில கருவூலங் களுக்குப் பொறுப்பாக நியமிக்கப்பட்டி ருந்தார் (1 நாள் 26:29).

8. சீசாவின் மகனாகிய அகீயா சால மோனது செயலராகவோ, எழுத்தாள ராகவோ இருந்தார் (1 அர: 4:3).

**அகுசாத்து** (AHUZZATH – உடைமை)

இவர் பெயேர்–செபாவில் ஈசாக்குடன் உடன்படிக்கை செய்து கொள்வதற்காக கெராரிலிருந்து பெலிஸ்தியனான அபி மெலக்குடன் வந்தவர் (ஆதி 26:26–31). ஆனால் ஆதி 21:22–32 இதிலிருந்து வேறு பட்டக் கருத்தினைக் கொடுக்கிறது. இவர் மன்னனுக்கு அறிவுரை கூறுகின்றப்பணிப் பொறுப்பினைக் கொண்டிருந்துபோல் தோன்றுகிறது.

**அகுசாம்** (AHUZZAM – உடைமையாளர்)

யூதாவின் தலைமுறை அட்டவணையில் அசுகூர்–நாகரா என்பவர்களின் மகனாக அகுசாம் இடம் பெறுகிறார் (1 நாள் 4:6).

**அகுமாய்** (AHUMAI – கோழையான)

யூதரவின் மரபு அட்டவணையில் யாகா த்தின் புதல்வர்களில் ஒருவராக அகுமாய்

இடம் பெறுகிறார் (1 நாள் 4:2). "எழுபது நூல்களைப்" பின்பற்றி அறிஞர்கள் அகுமாயை "அகிமாய்" அல்லது "அகிமான்" என்று அழைக்கிறார்கள்.

**அகுஸ்து** (AUGUSTUS – போற்றத் தகுதி உடையவர், மதிப்பிற்குரிய, உயர்த்தப்பட்ட)

அகுஸ்து என்பது இயேசு பிறந்த பொழுது (லூக் 2:1) மத்திய தரைக்கடல் நாடுகளை ஆண்டுவந்தவரும் உரோமைப் பேரரசை நிறுவியவருமான கையு யூலியஸ் சீசர் அக்டாவியான் என்பவருக்கு உரோமானிய ஆட்சிப் பேரவையினால் வழங்கப் பட்ட சிறப்புப் பெயராகும். இவ்வார்த்தை யானது "மதிப்பிற்குரிய" என்று பொருள் படும். இவருக்குப் பின்னால் உரோமை நகரை ஆட்சிபுரிந்த அனைத்து மன்னர் களும் இப்பெயரால் அழைக்கப்பட்டனர்.

அகுஸ்து சீசர் கி.மு. 63–இல் செப்டம்பர் திங்கள் 23–ஆம் நாள் பிறந்தார். இவரை இவரது மாமனார் யூலியு சீசர் தனது மகனாகவும் தனது உடைமை களுக்கு உரிமையாளராகவும் தத்தெடுத் துக்கொண்டார். இவருக்கு இராணுத்தி லும், அரசியலிலும் பயிற்சி கொடுத்தார். சீசர் இறந்தபின், கையு அக்டாவியன் என்ற தன் பெயருடன் தனது மாமனார் பெயரையும் சேர்த்து வைத்துக்கொண் டார். முதன் முதலில் தனது மாமனாரின் தலைமை மெய்க்காப்பாளராய் விளங்கிய மாற்கு அந்தோனியோடு தனது உறவை முறித்துக் கொண்டு, சீசரின் படைகள் தனக்கு ஆதரவளிக்க வழிதேடினார். பின் உரோமானிய அரசப்பேரவை அவருக்கு முழு ஆதரவு கொடுத்தது. ஆனால் விரை வில் அதனோடு கொண்டிருந்த தொடர்பை முறித்துக்கொண்டு, கி.மு. 43–இல் உரோமை நகரைக் கைப்பற்றி னார். உடனே மாற்கு அந்தோனியையும், லெப்பிதஸ்ஸையும், தன்னோடு சேர்த்துக் கொண்டு 300 பேரவை உறுப்பினர்களை யும், இரண்டாயிரம் வீரர்களையும் சாவுக்கு உட்படுத்தினார். இம்மூவரும் தங்களுக்குள் ஒப்பந்தம் செய்துகொண்டு உரோமைப் பேரரசின் அதிகாரத்தைப் பங்கிட்டுக் கொண்டனர். மேலும் சீசரைக் கொலை செய்தவராகிய புருட்டஸ் என்பவரின் படைகளுக்கு எதிரரக போரிட்டு அவர்களைத் தோல்வியுறச் செய்தார். அக்டாவியனின் சகோதரி அக்டாவியாளை மாற்கு அந்தோனி மணந்து கொண்டார். அதன்பின் லெப்பிதஸ்ஸை ஆப்பிரிக்காவுக்கு அனுப்பிவிட்டு, மற்ற இருவரும் சிசிலியை ஆண்ட மக்கள் கட்சித் தளபதியின் படைகளைத் தோற் கடித்தனர்.

கி.மு. 41–க்குப்பின் அந்தோனி தனது கவனம் முழுவதையும் கிழக்குப் பகுதியில் செலுத்தி, பார்த்தியர்களுக்கு எதிராகப் போர்புரிந்து தோல்வியுற்றார். எனவே அவர் அலக்சாந்திரியாவுக்குச் சென்று ஒய்வு எடுத்தார். அங்கிருந்தபொழுது எகிப்து நாட்டு அரசி கிளியோபத்திரா வுடன் காதல் உறவு கொண்டார். கி.மு. 35–இல் தனது மனைவி அக்டாவியாளை நீக்கிவிட்டு, கிளியோபத்திராவை திரு மணம் செய்துகொண்டார். எனவே கி.மு. 31–இல் அகுஸ்து சீசர் கிளியோபத்திரா விற்கு எதிராகப் போர் புரிந்து எகிப்து நாட்டைக் கைப்பற்றி உரோமை ஆட்சிப் பகுதியுடன் இணைத்துக் கொண்டார்.

கி.பி. 14–வரை உரோம் பேரரசை ஆண்டுவந்தார். கி.மு. 27–இல் "அகுஸ்து" என்ற சிறப்புப் பெயர் இவருக்கு வழங் கப்பட்டது. படைகளையும் அயல்நாட்டுக் காரியங்களையும் தன் கட்டுப்பாட்டிற்குள் வைத்துக் கொண்டு, உள்நாட்டுக் காரியங் களை ஆட்சிப் பேரவையின் பொறுப்பில் கொடுத்தார். அதனுடைய எண்ணிக்கை யையும் குறைத்தார். கி.பி. 27–இல் தன் பதவிகளையெல்லாம் ராசினாமா செய்ய முன் வந்தார். ஆனால் ஆட்சிப் பேரவை அதை ஏற்றுக் கொள்ளவில்லை. மாறாக அவருக்கு அகுஸ்து" என்ற பட்டத்தை வழங்கியது. ஆட்சிப் பேரவை, உரோமை, இத்தாலியா, படைப்பாதுகாப்புத் தேவைப் படாத பகுதிகளையும் கவனித்துக் கொண் டது. மற்ற பகுதிகளையும், அயல் நாட்டுக் காரியங்களையும் அக்டாவியன் தனக்கே பொறுப்பான ஆளுநர்கள் வழியாக ஆட்சி செய்தார். உண்மையில் எல்லா அதிகாரத் தையும் தன்னிடமே கொண்டிருந்தாலும், தோற்றத்திற்கு இவர் தான் தனியாக இருந்து தன் மனம் போனபடி ஆட்சி புரியாமல் அரசப் பேரவையின் வழியாக

ஆட்சிப் பொறுப்பை நடத்தினார். இவர் மக்களார்வத் தலைவர் அல்லது நடுவர். மாநிலங்களில் ஆளுநர்களின் வழியாக நேரடியாக ஆட்சி செய்தார். இவர்கள் அகுஸ்துவுக்கு மட்டுமே பொறுப்பானவர்கள். பிரச்சினைகளுக்குத் தீர்வுகாணும் பொழுதும், திட்டங்களை வகுக்கும்பொழுதும், இவர் தனித்திருந்து செயல்படாமல், அரசப் பேரவையில் கலந்துரையாடி முடிவு எடுத்தார். இவர் அரசபட்டத்தை விரும்பவில்லை; நிராகரித்துவிட்டார். இவற்றால் முதல் "குடிமகன்" என்ற பேற்றையும் உரிமையையும் பெற்றார். உரோமையின் அரசியல் பெயரளவிற்குக் குடியரசாக இருந்த போதிலும் அகுஸ்து சர்வாதிகாரியாகவே விளங்கினார். அவர் காலத்திற்குமுன் பேரரசில் புகுந்த பல ஊழல்களைக் களைந்தார். இதனால் மக்களின் அன்பைப் பெற்றார். இவர் காலத்தில் உரோமைப் பேரரசு மிகுந்த உயர்நிலை அடைந்ததால், அது பொற்காலம் எனப்புகழ்பெற்றது. கி.பி. 14–இல் அகுஸ்து காலமானதிலிருந்து அவர் மரபினர் பலர் உரோமைப் பேரரசர்களாக ஆண்டனர். இவர்கள் சீசரின் குடும்பத்தைச் சார்ந்தவர்களாகையால் சீசர் என்னும் பெயர் பேரரசர்களின் பட்டப்பெயராக மாறிற்று. இவருக்குப் பின், இவரது மருமகன் திபேரியு ஆட்சிப் பொறுப்பினை ஏற்றார்.

புதிய ஏற்பாட்டில் பெயர் குறிப்பிடப்படும் பேரரசர்களுள் இவரும் ஒருவர். இவரது ஆட்சிக் காலத்தில்தான், வரி சேகரிப்பதற்காக, உலக முழுமையும் மக்கள் தொகைக் கணக்கிடும்படி இவர் விட்ட கட்டளைக்கேற்ப இயேசு பெத்லகேமில் பிறந்தார் (லூக் 2:1). தொடக்கத்தில் பெரிய ஏரோது அந்தோனிக்கு ஆதரவு அளித்தார். ஆனால் பின்பு பெரிய ஏரோதுக்கு அகுஸ்து புரவலனாக இருந்து, அவரை யூதர்களின் அரசனாக உறுதிப்படுத்தினார்.

### அகுஸ்துவின் பட்டாளம்
(AUGUSTAN COHORT)

இது சர்ச்சைக்குரிய ஒரு சொற்றொடர். உரோமைப்படையின் ஒரு பிரிவாகும். ஏறக்குறைய 600 பேரைக் கொண்டது. அகுஸ்து என்ற பெயரைக் கொண்டது. அகுஸ்துவின் முதலாவது படைப்பிரிவாக இருக்கலாம். கி.பி. 6–க்குப்பின் சீரியாவிலும், 2–ஆம் அகிரிப்பாவின் ஆட்சிக் காலத்தில் (கி.பி. 50–100) பத்தனோயிலும் காணப்படும் கல்பொறிப்புகள் இப்படைப் பிரிவுக்குச் சான்று கூறுகின்றன. அ.ப.27:1 இப்படைப் பிரிவைக் குறிப்பிடுகிறது.

செசரியாவில் தங்கியிருந்த ஐந்து துணைப் பட்டாளங்களை லூக்கா அறிந்திருக்கவேண்டும். அவற்றில் ஒன்று அகுஸ்து என்ற பெயரை மதிப்புமிக்க புனைப்பெயராகக் கொண்டிருந்தது.

லூக்கா, பட்டாளம் என இப்படிக் குறிப்பிடுவது யூலியுவின் பெருமையைக் குறைத்து, பவுலின் பெருமையை உயர்த்தவே. எனவே பவுல் அகுஸ்துவின் காவலில் இருந்ததாகக் குறிப்பிடுகின்றார்.

உரோமையர் பட்டாளங்கள் அவர்கள் தங்கியிருந்த இடத்தைச் சார்ந்தவர்களைப் பொதுவாக கொண்டிருந்ததால், செசரியாவில் இருந்தவர்கள் பெரும்பாலும் செசரியாவையும் சமாரியாவையும் சேர்ந்தவர்களே. எனினும் லூக்கா சமாரியாவில் உள்ள பட்டாளம் என்பதற்குப் பதில், அகுஸ்து பட்டாளம் என தவறுதலாக எழுதி இருக்கலாம். இப்பட்டாளம் செப ஸ்தேயிலிருந்து வந்திருந்தாலும், லூக்காவிற்கு அவர்கள் எங்கிருந்து



அகுஸ்துவின் தலையையுடைய நாணயம்



அகுஸ்துவின் நெஞ்சளவு உருவம்

வந்தனர் என்பது முக்கியமல்ல. அவரது ஒரே எண்ணம் பவுலின் பெருமையை உயர்த்துவதே.

லூக்காவின் கருத்தின் அடிப்படையில் பார்த்தால் அகுஸ்து பட்டாளம் அரசருக்கும், இராணுவத்திற்கும் இடையே செய்திகளைக் கொடுக்கின்ற ஒரு படைப்பிரிவை சார்ந்தது என்றும், கைதிகளை உரோமிற்கு அனுப்பும் பணியை செய்து வந்தவர்கள் என்றும் தெரிகிறது. முக்கிய கைதியான பவுல் சீரியாவிலுள்ள நூற்றுவர் தலைவரிடம்தான் ஒப்படைக்கப்பட வேண்டுமா என்பது கேள்வி. லூக்காவிற்கு யூலியு, அகுஸ்து என்ற இரு உரோமைப்பெயர்களும் பெருமை வாய்ந்ததாகத் தெரிகிறது. இப்பட்டாளம் எந்த கும்பலைச் சார்ந்தது என்பது முக்கியமல்ல. பவுல் அகுஸ்து பட்டாளத்தில் உள்ள நூற்றுவர் தலைவன் யூலியுவின் பொறுப்பில் விடப்பட்டார் என்பதுதான் முக்கியம்.

**அகேர்** (AHER – *மற்றொருவன்)*

நாளாகமத்திலுள்ள குலமரபுப் பட்டியலின்படி இவர் உண்மையில் பென்யாமின் கோத்திரத்தைச் சேர்ந்தவர். கூசிமின் தந்தையாவார் (*1 நாள் 7:12*). ஆனால் எழுபது நூலின் அடிப்படையில் திருத்தப்பட வேண்டியதிருக்கிறது. இவர் ஏகீ ஆகவோ (*ஆதி 46:21*) அகிராமாகவோ (*எண் 26:38*) அல்லது அகராகு ஆகவோ (*1 நாள் 8:1*) இருக்கலாம்.

**அகோகி** (AHOHI)

மசோரெட்டிக் வாசகம் உரைப்பது சரியென்றால், இவர் தோதோவின் தந்தை. தாவீதின் வலிமைமிக்க மூன்று வீரர்களில் ஒருவராகிய எலயாசர், இவரது பேரன் ஆவார் (*2 சாமு 23:9*). அவருடைய வழி வந்தவர்களின் வீரச் செயல்களுக்காக அளிக்கப்பட்ட அகோகியர் என்ற தந்தை வழிப் பெயரைத்தவிர, அகோகி என்பது விவிலியத்தில் வேறு எங்கும் சுட்டிக் காட்டப்படவில்லை.

*1 நாள் 11:12*–இல் வரும் இணைப்பகுதியின் அடிப்படையில் "அகோகின் மகன்" என்பது (மசோரெட்டிக் வாசகம்) அகோகியர் என்று கூறப்படவேண்டும் என்பது பல அறிஞர்களின் கருத்து. மேலே கூறப்பட்ட கூற்றுச் சரி என்றால், இந்த தந்தை வழிப்பெயரை நாளாகம ஆசிரியர் பயன்படுத்தவேண்டும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

**அகோகியர்** (AHOHITE)

தோதோ (*1 நாள் 11:12; 2 சாமு 23:9*) சல்மோன் (*2 சாமு 23:28*) ஈலாய் (*1 நாள் 11:29*) ஆகிய தாவீதின் மூன்று வல்ல வீரர்களுக்கு அளிக்கப்பட்ட, தந்தை வழிப்பெயராகவோ இனப்பெயராகவோ இருக்கலாம்.

**ஆகோவா** (AHOAH – *சகோதரத் தன்மையுடைய)*

இவர் பென்யாமினின் மரபுப் பட்டியலில் இடம் பெறுகின்ற பெலாவின் ஆறாவது மகன் (*1 நாள் 8:4*). பென்யாமினின் பேரன். அகோவா என்பது ஒரே ஒரு முறைதான் விவிலியத்தில் காணப்படுவதால் அகீயா என்பதைத் தவறாக அகோவா என்று குறிப்பிட்டிருக்கலாம் என்று சில ஆய்வாளர்கள் கருதுகிறார்கள்.

**அக்கதா** (HAGGADAH – எடுத்துரைத்தல், போதகம்)

விவிலிய காலத்திற்குப்பின் வந்த யூதத்துவத்தில் விவிலியத்தில் சட்டமல்லாத நிகழ்ச்சியுரைப் பகுதிகளுக்கு அளிக்கப்படும் விளக்கவுரைகளாகும். இவ்வாறு அக்கதா பழைய ஏற்பாட்டின் முக்கியமாக வரலாற்றுப் பகுதிகளுக்குக் கோட்பாடு ஒழுக்க நியதி அடிப்படையில் விளக்கம் அளிக்கிறது. பெரும்பாலும் அக்கதா, நாடோடிப் பாடல்கள், வீர காவியங்கள், கதைகள், பழமொழிகள் உவமைகள் முதலியவற்றைப் பயன்படுத்தி நிகழ்ச்சியுரைகளை ஆழப்படுத்தி மெருகூட்டுகிறது. இது உண்மையான பக்தியையும், சமயஉணர்வையும் தூண்டும் நோக்கத்துடன் எழுதப்பட்டது. மற்றொரு யூத விளக்க முறையாகிய 'அலாக்காவை' நிறைவு செய்கிறது. அலாக்கா விவிலியத்தின் சட்டப்பகுதிகளுக்கு விளக்கம் அளிக்கிறது. இஸ்ராயேலின் கடமை என்ன என்பதை எடுத்துக் கூறுகிறது. இதை ஆர்வத்தோடு நிறைவேற்ற அக்கதா அவரைத் தூண்டுகிறது. பின்பு புதிய ஏற்பாட்டிலும் போதனை அளிக்கும்போது

இதே வகையான முறையும் பொருட்களும் பயன்படுத்தப்பட்டுள்ளன. ஆயினும் புதிய ஏற்பாடு வேத விளக்க நூல் அல்ல என்ற அளவில் அது அலாக்காவுடன் தொடர்புடையதன்று. அது அக்கதா பகுதிகளைக் கொண்டிருப்பதாகக் கூறவும் முடியாது.

**அக்கலிதமா** (AKELDAMA – இரத்த நிலம், துக்க நிலம்)

யூதாசு நாண்டு கொண்டு இறந்த இடம். அ.ப. *1:17–18*–ன்படி இயேசுவைக் காட்டிக் கொடுத்தவரும், அவருடைய சீடருமான யூதாசு, அவரைக் காட்டிக் கொடுக்க வாங்கிய "கூலியைக்கொண்டு ஒரு நிலம் வாங்கி அதில் தலைகீழாக விழ, அவர் வயிறு வெடித்து குடலெல்லாம் சிதறிப்போயின . ஆகவே இவ்விடம் இரத்த நிலம் எனப்பட்டது. இப்பெயர் விளக்கம் மத்தேயுவின் விவரிப்போடு (மத் *27:7–8*) ஒத்துப்போகிறது எனலாம். அதன்படி இயேசுவைக் காட்டிக் கொடுக்கப்பெற்ற கூலிப்பணத்தை யூதாசு ஆலயத்தில் எறிந்துவிட்டுச்சென்றார். தலைமைக் குருக்கள், "இரத்தத்தின் விலையைக்" கொண்டு அன்னியரை அடக்கம் செய்ய "குயவன் நிலத்தை வாங்கினார் (எரே *18:2*). அதனால் இந்நிலம் "இரத்த நிலம்" என்று அழைக்கப்பட்டது.

கி.பி. நான்காம் நூற்றாண்டைச் சேர்ந்த யுசெபியசின் சான்றுபடி இன்னோம் பள்ளத்தாக்கில் தெற்குச் சரிவிலுள்ள வாடி–ஏர்–ரபாபே என்ற ஓடை அருகிலுள்ள நிலமாகும் இது.

**அக்கறை, கவனம்** (Care & Carefulness)

*1. அக்கறைபடுவதற்காக அறிவுரைகள்:-* அக்கறை என்பது முதலாவதாக ஒரு செயலையோ, பணியினையோ செய்து முடிப்பதற்காக ஒரு மனிதன் கொண்டுள்ள கவனமாகும். தனது எல்லா கடமைகளுக்குமான மனிதனுடைய இத்தகைய புத்திசாலித்தனமான மற்றும் சுறுசுறுப்பான, கவனத்தை விவிலியம் வியந்து பரிந்துரை செய்கிறது. எடுத்துக்காட்டாக முதலில் வீடு (பழ *31:10–31*), ஒருவரது பணி (சீரா *38:24–34*), அல்லது சமூகக் கடமைகள் (*50:1–4*) முதலிய தாழ்வான பொறுப்புகளைப்பற்றி அக்கறைகொள்ளவேண்டும். விவிலியமானது, ஞானத்தைத் தேடுதல் (ஞான *6:17*; சீரா *39:1–11*) அல்லது ஒழுக்க முன்னேற்றம் (1 திமோ *4:15*; தீத் *3:8*; 1 கொரி *12:25*) அப்போஸ்தலரின் ஆர்வம் (2 கொரி *11:28*; *4:8* தொ) போன்ற ஆன்மீக கடமைகளை இன்னும் சற்று உயரிய இடத்தில் வைக்கின்றது. தம்முடைய பணியினை நிறைவேற்றுவதற்காக, எந்தவித வரையறையுமின்றி தம்மையே அளித்த இயேசுவே இங்கு உயர்ந்த எடுத்துக்காட்டாக விளங்குகின்றார் (லூக் *12:50*; *22:32*). ஆண்டவருடைய செயல்களுக்கான அக்கறையானது எவ்வளவு உயர்ந்தது என்றால் தேவையான ஒரே பொருளின் மீது நேரடியாகக் கவனம் முழுமையாகவும் அக்கறை செலுத்துவதற்காக, கிறிஸ்துவின் அழைப்பிற்கேற்ப, அது உலக அக்கறைகளைத் துறந்துவிட நம்மை நடத்திச் செல்லக்கூடும் (1 கொரி *7:32–33*; லூக் *10:41* தொ).

*2. அக்கறையும் விசுவாசமும்:-*விவிலியமானது எல்லா பகுதிகளிலும் கவனக் குறைவையும், சோம்பலையும் கண்டிக்கிறது. ஆனால், மனிதன் ஆன்மீகக் கவனம் சிதைவுறுமாறு உலக அக்கறைகளால் மூழ்கடிக்கப்படக்கூடிய ஆபத்தான பாதையில் மனிதன் தன்னையே ஈடுபடுத்துவதையும் விவிலியம் அறிந்திருக்கிறது (லூக் *8:14*; *16:13*; *21:34*). இயேசு இந்த அபாயத்தை வெளிப்படையாகவே கண்டிக்கிறார். இறையரசின் மீது மட்டுமே அக்கறை கொள்ளுமாறு அவர் தமது சீடர்களை அழைக்கிறார்.உலகப்பொறுப்புகள் ஒரு கடமையாக இருப்பதால், அவர்களுக்கு தேவையான ஆவியின் விடுதலை கவனமின்மையால் வராது; மாறாக, இறைவனின் தந்தைக்குரிய அன்பின்மீது கொண்ட நம்பிக்கையினின்றே வரும் (மத் *6:25–34* இ; *16:5–12*).

எதைப் பற்றியது ஆனாலும் அக்கறையானது தன்மையிலேயே நம்பிக்கைக்கும் விசுவாசத்திற்கும் உரிய அழைப்பாக விளங்குகின்றது. சில குறிப்பிட்ட சமயங்களில் நன்கு நிறைவேற்றப்பட்ட ஒரு செயலானது வரவிருக்கும் நாளைநோக்கிச் "சிரிப்பதற்கு" ஒருவனை அனுமதிக்குமானால் (பழ *31:25*) அதில் ஈடுபட்டுள்ள அக்

கறையானது, உறுதியற்ற நிலை, பயம், அங்கலாய்ப்பு ஆகியவற்றில் தன்னுடைய குறைபாடுகளை அவன் உணர்ந்து கொள்வதற்கான வாய்ப்பாகவே பெரும்பாலும் விளக்குகின்றது. இவ்வாறு தோற்றுவிக்கப்படுகின்ற துன்பமானது எல்லா மனிதருக்குமே பொதுவான ஒன்றாகும் (ஞான 7:4). "உன்னதர் அனைத்தின் மீது அக்கறை கொண்டுள்ளார்" என்னும் விசுவாசத்துடன் (ஞான 5:15) தங்களது கவலைகளின் சுமையானது, அது தங்களுடைய பாவங்களின் விளைவாகவே இருந்தாலும் (சங் 37:19; லூக் 15:16–20) அச்சுமையினை ஆண்டவரிடம் ஒப்படைத்துவிடுமாறு அது அழைக்கின்றது (சங் 55:23; 1 பேதுரு 5:7). உண்மையில் "இவ்வுலகை அவர்கள் உபயோகிக்காதது போன்று" எல்லாத்தேவையான அக்கறையுடன் அவர்கள் இனி உலகை உபயோகிக்க முடியும் (1 கொரி 7:31). உண்மையில் எல்லா அக்கறைகளுக்கும் அப்பால், "அறிவெல்லாம் கடந்த இறை அமைதி கிறிஸ்து இயேசுவுக்குள் அவர்கள் உள்ளத்துக்கும் மனதுக்கும் அரணாயிருக்கும்" (பிலி 4.7).

**அக்காதியன்** (AKKADIAN)

பொதுவாக கி.மு. 2000 முதல் 500 வரை மெசபொத்தாமியாவில் பேசப்பட்ட மொழி இவ்வாறு அழைக்கப்படுகிறது. கீழ்த்திசை செமித்திக் வகுப்பைச் சேர்ந்தது. இது முன்பு அசீரிய மொழி என்று அழைக்கப்பட்டது, ஏனெனில் இதனுடைய இலக்கிய ஞாபகச் சின்னங்கள் முதலில் அசீரிய மொழியில்தான் கண்டுபிடிக்கப்பட்டன. இம்மொழி மெசபொத்தோமியாவில் கி.மு. 3000 ஆண்டுகளுக்கு முன்பு தோன்றியது. செமித்திய மக்களின் ஆதிக்கம் அதிகரித்தபோது, இம்மொழி சுமேரிய மொழியை அகற்றி, அரமேயிக் மொழி அதன் இடத்தை எடுத்துக் கொள்ளும் வரை, மக்களின் பொது மொழியாகத் திகழ்ந்தது. இது பாபிலோனியா, அசீரியா ஆகிய இரண்டு முக்கிய பிரிவு மொழிகளில் காணப்படுகிறது. இது சுமேரியா ஆப்பு வடிவ எழுத்துக்களால் எழுதப்பட்டது. செமித்திக்கு மொழியில் உள்ள மெய்யெழுத்துக்களுக்கு சுமேரியா ஆப்பு வடிவ எழுத்துக்களில் அடையாளங்கள் இல்லாமையால் பல சுமேரிய வார்த்தைகளை இது ஏற்றுக்கொண்டது. கி.பி. 1835–இல் இருந்து பல அக்காதிய ஏடுகள் கண்டுபிடிக்கப்பட்டு, விளக்கப்பட்டுள்ளன. பழைய ஏற்பாட்டு உலகைப் பற்றிப் புரிந்துகொள்ள தனிச்சிறப்பான ஒரேமூலம் மட்டுமன்றி, இம்மொழி எபிரேய மொழியைப் புரிந்துகொள்ள முக்கிய உதவியாகவும் அமைந்துள்ளது.

**அக்காது** (AKKAD, ACCAD)

வடபாபிலோனியாவில் சின்னார் நாட்டின் ஒரு நகரம். நிம்ரோத்தின் ஆட்சிக்குட்பட்டது. பாபேல், எரேக்கு ஆகிய நகரங்களோடு சேர்த்துக் குறிக்கப்படுகிறது (ஆதி 10:0). முதலாம் சார்கோனின் (கி.மு. 2242–2186) தலைநகராக நிறுவப்பட்டது. இவரது அரசு மரபு மெசபொத்தாமியாவையும் சீரியாவின் ஒரு பகுதியையும் சிறிய ஆசியாவின் ஒரு பகுதியையும் உள்ளடக்கியது. நராம்–சின் என்பவரின் 56 ஆண்டு ஆட்சிக் காலத்தில் நகரும் பேரரசும் அரசியலிலும், கலாச்சாரத்திலும் சிறந்து விளங்கியது. சார்–காலி–சாரியின் காலத்தில் (கி.மு. 2100–ஐ ஒட்டி) அக்காது அழிக்கப்பட்டது. மீண்டும் கட்டப்படவே இல்லை.

அக்காது பொதுவாக வடபாபிலோனியாவைக் குறிக்கும். "அக்காது–சுமோ நாடு" என்ற சொற்றொடர் பாபிலோனியாவைப் பொதுவாகக் குறிக்கும். அக்காதியன் என்ற சொல், செமித்திய மொழியைக்குறிக்கும் அக்காதிய மூலமொழியாகும். அசீரியர், பாபிலோனிய மொழிகள் அதன் பிரிவு மொழிகளாகும்.

அக்காதை இப்போது அடையாளங்காட்ட முடியாது. அது சிப்பார் அல்லது பாபிலோனுக்கு அருகில் இருக்கவேண்டும். ஒரு வேளை இக்காலத் தேல்–தெர் ஆக இருக்கலாம்.

**அக்காத்தான்** (HAKKATAN – சிறுவன்)

அசிகாது குடும்பத்தைச் சேர்ந்த ஒருவர். யோகானானின் தந்தை. பாபிலோனிய அடிமைத்தனத்தினின்று எஸ்ராவோடு எருசலேமிற்குத் திரும்பி வந்தவர்களில் இவரும் ஒருவர் (எஸ் 8:12).

**அக்காயா** (ACHAIA – *தொந்தரை, மனக்குழப்பம்*)

அக்காயா நாடு கோமேரின் பாடலிலேயே காணப்படுகிறது. எரோடொத்தஸ் குறிப்பிடுகிறார். அது பெலொப்போனேயசில் இருப்பதாகக் கூறுகிறார்.

இப்பெயர் பெலொப்போனேயிசின் ஒரு பகுதியைக் குறிக்க மூலத்தில் பயன்பட்டது. பிற்காலத்தில் கிரிசின் தென் பகுதி முழுவதையும் குறித்தது. கிரிசின் சுதந்திர ஆட்சிக் காலத்தில் அக்காயா நாட்டுக் குழு முக்கியம் வாய்ந்த அரசியல் சக்தியாகத் திகழ்ந்தது. இக்குழுவில் ஏதன்சும் கொரிந்தும் சேர்ந்திருந்தன. கொரிந்து தலைமை தாங்கியது. கி.மு. 146–இல் கொரிந்து நகரம் உரோமையர்களால் அழிக்கப்படும்வரை, இக்குழு செல்வாக்குக் கொண்டிருந்தது. உரோமையர் ஆட்சிக்குட்பட்டிருந்தபோது, இப்பகுதி, மக்கதோனியாவுக்குத் தெற்கிலுள்ள ஓர் உரோமை மாகாணமாகியது. ஓர் ஆளுநர் ஆண்டார்.

பவுல், தனது இரண்டாவது மூன்றாவது வேதபோதகப் பயணத்தில் அக்காயாவைப் பார்க்கச் சென்றார் (அ.ப. 19:21–ஐக் காண்க) அப்போது கல்லியோ அக்காயாப் பகுதிக்கு ஆளுநராக இருந்தார் (18:12). 18:27–வின்படி அப்பொல்லோ இப்பகுதிக்குப் போக விரும்பினார். இந்தப் பகுதியில் முதலில் மனம் திரும்பியவர்களில் ஸ்தேவானாவும் ஒருவர் (1 கொரி 16:15). அக்காயாவும் மக்கதோனியாவும் எருசலேமில் வறுமையில் தவித்த திருச் சபைக்குப் பொருள் உதவி செய்தன (உரோ 15:26;2 கொரி 9:2). மக்கதோனியாவில் தெசலோனிக்கா திருச்சபை, அக்காயப் பகுதியிலுள்ள திருச்சபைக்கு ஒரு எடுத்துக்காட்டாகக் காட்டப்படுகிறது. (1 தெச 1:7–8). கொரிந்தியருக்கு எழுதப்பட்ட 2–ஆம் திருமுகம் அக்காயா முழுவதிலுள்ள இறை மக்களையும் நோக்கி எழுதப்பட்டதாகும் (2 கொரி 1:1; 11:10).

**அக்காயிக்கு** (ACHAICUS – *அக்காயாவைச் சேர்ந்தவன்*)

கொரிந்தின் முதல் கிறிஸ்தவர்களில் ஒருவர் (1 கொரி 16:17). பவுல் கொரிந்தியருக்கு எழுதும்போது எபேசு நகரில் இருந்தார். ஸ்தேவானா, போர்த்துனாத்து ஆகியோர், அவரோடு இருந்தவர்கள். 1 கொரி 7:1–இல் குறிப்பிடப்படும் கடிததைக் கொண்டு வந்தவர்கள் இம் மூவராகத்தான் இருக்கவேண்டும். கொரிந்தியருக்கு எழுதப்பட்ட முதலாம் திருமுகத்தைக் கொண்டு சென்றவர்களும் இவர்களாகத்தான் இருக்கவேண்டும். இவர்கள் அப்போஸ்தலருடன் நல்ல உறவு கொண்டிருந்தனர் என்பது தெளிவாகிறது.

**அக்கான்** (AKAN – *கோணலான, வளைந்த*)

ஏசாவின் குடும்பத்தைச் சேர்ந்த கோரியனான ஏசேரின் புதல்வர்களில் ஒருவர் (ஆதி 36:27). 1 நாள் 1:42–இல் இவர் யாக்கான் என்றழைக்கப்படுகிறார். காண்க: யாக்கான்.

**அக்கிம்** (ACHIM – *யாவே நிறுவுகிறார், யாவே நிலை நாட்டுகிறார்*)

யோசேப்பின் தூரத்து மூதாதையர். இவர் இயேசுவின் மூதாதையர் பட்டியலில் மத்தேயுவால் மட்டுமே குறிக்கப் பெறுகிறார் (மத்1:14)

**அக்கியோர்** (ACHIOR–*ஒளியின் சகோதரன்*)

அசீரியப் படைத்தளபதியான ஒலபெரினேயின் கீழ் அம்மோனியர் படைத்தலைவன் ஆவார். இவர் இஸ்ராயேல் மக்களைக் கடவுள் கட்டாயம் காப்பார் என்று ஒலபெரினேயுக்கு எச்சரிக்கை செய்தும் அவர்கள் மீது படையெடுப்பதைத் தடுக்க முயன்றார் (யாத் 5:50.86). வரலாறு பற்றிய அக்கியேரின் சமய விளக்கத்தை, ஒலபெரினேயின் மூத்த தலைவர்கள் புறக்கணித்து, அவரைக் கொல்ல எண்ணினர் (5:22–23). இஸ்ராயேலரோடு கொல்லப்படுவதற்காக அக்கியோரை இஸ்ராயேலரிடம் அனுப்பிவிட்டனர்.

யூதித் ஒலபெரினேயின் தலையைக் கொணர்ந்து காட்டியபோது, அக்கியோர் அச்சத்தால் மயங்கித் தரையில் முகம் குப்புற விழுந்தார். பிறகு இறைவன் செய்துள்ள அரும்பெரும் செயல்களைக் கண்டு வியப்புற்று அக்கியோர் மென்மேலும் கடவுள் மீது ஆர்வத்தோடு உறுதியான விசுவாசம் கொண்டவரானார். விருத்தசேதனம் செய்து கொண்டார்.

இஸ்ராயேல் மக்களோடு சேர்ந்து கொண்டார் (14:10). விருத்தசேதனம் பெற்ற வெகு சில அம்மோனியருள் இவரும் ஒருவர் (உபா 23:3–இல் வரும் கட்டளையைக் காண்க).

**அக்கிரபத்தேன்** (AKRABATTENE)

இது யூதேயா, இதுமேயா எல்லையில் உள்ள ஒரு கோட்டை. அக்கிரபிம் ஏற்றத்துக்கு அருகில் உள்ளது. இங்கு யூதா மக்கபேயு இதுமேயர்கள்மேல் வெற்றி கொண்டார் (1 மக் 5:3) செக்கேமுக்குத் தென் கிழக்குத் திசையில் அக்கிரபத்தேன் மாவட்டம் உள்ளது என்று யோசிபஸ் கூறுகின்றனர். வட யூதேயாவிலுள்ள ஒரு கோட்டையை 1 மக் 5:3–இல் கூறப்பட்டுள்ள அக்கிரபத்தேன் என்று சிலர் அடையாளம் காட்டுகின்றனர்.

**அக்கிரமி** (MAN OF LAWLESSNESS)

இயேசுக் கிறிஸ்துவின் இரண்டாம் வருகையின்போது அவரை எதிர்த்து நிற்கும் தீமையே உருவான மனிதனே இவன் (2 தெச 2:8). புராணச் சாத்தான் தன்மையுடையவன். இது ஒரு உருவகமாகக் கூறப்படும் தீய சக்தியாகும். காண்க: எதிர் கிறிஸ்து.

**அக்கிலா** (AQUILLA – கழுகு)

1. அக்கிலாவும் பிரிசிக்கில்லாவும் கொரிந்திலும், எபேசுவிலும் பவுலுடைய தோழர்களாக இருந்த கணவன் மனைவியர். பவுல் தனது மடல்களில் பிரிசிக்கில்லாவைப் பிரிசிக்கா என்று குறிப்பிடுகிறார்.

அ) முந்திய வாழ்க்கை:- அக்கில்லா என்பவர் போந்து என்ற ஆசியா மாகாணத்தைச் சேர்ந்த ஒரு யூதர் (அ.ப. 18:2). இவர் இத்தாலிக்குக் குடிபெயர்ந்தார். ஆனால் யூதர்கள் உரோமைப் பேரரசிலிருந்து வெளியேற்றப்பட்டபோது (கி.பி. 49) கிளாதியுவின் சட்டப்படி இவரும் தன்னுடைய மனைவியோடு உரோமையிலிருந்து வெளியேற்றப் பட்டார். பிரிசிக்கில்லாவின் குடும்பப் பெயர் கொடுக்கப்படவில்லையாதலால், இவள் ஒரு யூதப்பெண் அல்ல, உரோமைப் பெண் என்று தீர்மானம் செய்யப்பட்டுள்ளது. இருப்பினும், இரண்டு பெயர்களும் இலத்தீன் மொழியைச் சேர்ந்தவை. உரோமைத் தொடர்புடையவையாகக் காணப்படுகின்றன. இவர்கள் இத்தாலியிலிருந்து வெளியேற்றப்பட்டபொழுது கிறிஸ்தவர்களாக இருந்தார்களா அல்லது கொரிந்தில் கிறிஸ்தவர்களாக ஆனார்களா என்று சரியாகத் தெரியவில்லை. ஆளுநர் கல்லியோவைப் பற்றியுள்ள வரலாற்றுக் குறிப்புகளைக் கொண்டும், புதைபொருள் கண்டுபிடிப்புகளைக் கொண்டும் இவர்கள் ஏறக்குறைய கி.பி 49–50 இல் இத்தாலியாவிலிருந்து வெளியேற்றப்பட்டு கொரிந்திற்குச் சென்றிருக்கலாம் என்று கருதப்படுகிறது (அ.ப. 18:12). அக்கிலாவும், பிரிசிக்கில்லாவும் கூடாரம் கட்டுபவர்கள் என்று சொல்லப்பட்டுள்ளது. இது கூடாரத்திற்கு துணி நெய்பவர்களாகவோ அல்லது தோலினால் கூடாரம் கட்டுபவர்களாகவோ இவர்களைக் குறிக்கலாம்.

ஆ) பவுலுடன் தோழமை:- பவுல் தனது இரண்டாம் போதகப் பயணத்தில் முதன் முறையாக கொரிந்திற்கு வந்தபொழுது இவர்கள் அந்நகர்வாசிகளாக இருந்தார்கள் (18:2). பவுலும் அவர்களும் ஒரே தொழிலையே செய்து வந்ததால், அவர்களுடன் உடனே தொடர்பு கொண்டார். அக்கிலா ஒப்பந்தக்காரனாகவும் பவுல் அவர் அடியில் வேலை செய்தும் இருக்கலாம். தன்னிடம் வேலை செய்பவர் தங்கும் அளவிற்கு வீட்டு வசதி இருந்தது (18:3). இவர்களுடைய தோழமை தொழிலில் மட்டுமல்ல, நற்செய்தி பரப்புவதிலும் பவுலுடன் அநேகமாக போதகர்களாகவும், பங்காளிகளாகவும் ஆனார்கள் (1 கொரி 12:28).

பவுல் கல்லியோவின் முன்பு விசாரிக்கப்பட்ட பின்பு, கொரிந்தை விட்டுச் சென்றபொழுது (அ.ப.18:18–19) அக்கிலாவையும், பிரிசிக்கில்லாவையும் தன்னுடன் எபேசுவிற்கு அழைத்துச் சென்றார். இந்த மாற்றத்திற்குத் தொழில் சம்பந்தமான சில காரணங்களும் அவர்களுக்கு இருந்திருக்கலாம். பவுல் எருசலேமிற்குச் சென்றபொழுது, அவர்கள் நற்செய்திப் பணியைத் தொடர்ந்து நடத்தும்படி நகரிலேயே விடப்பட்டார்கள். புத்திசாலியும்,

ஞானஸ்நானத்தைப் பற்றி அதிகம் அறியாதவருமான அலெக்சாந்திரியாவைச் சேர்ந்த அப்பொல்லோவை இவர்கள் எபேசுவில் சந்தித்தார்கள். இவருக்கு மனத்தெளிவு அளித்ததில் சிறப்பாக "கிறிஸ்துவில்" "ஆவியின் கொடைகள்" ஆகிய கருத்துக்களைப் புரிந்துகொள்ள வைத்ததில் இவர்கள் கருவியாக இருந்தனர் (அ.ப. 18:25–26; 19:67). 1 கொரி 16:19–இன்படி இவர்கள் இருவரும் தங்கள் வீட்டில் ஒரு கோவிலைக் கொண்டிருந்ததாகத் தெரிகிறது. எவ்வளவு காலம் இவ்விருவரும் எபேசுவில் தங்கினார்கள் என்று தெரியவில்லை. பவுலுக்கு எதிராகச் செய்யப்பட்ட கலகத்தில் இவர்களுடைய பெயர்கள் சொல்லப்படவில்லை (அ.ப. 19:23–41). இருப்பினும் "பிரிசிக்கில்லாவும், அக்கிலாவும் என் உயிரைக் காக்க தங்கள் தலைகளைக் கொடுக்கவும் முன் வந்தார்கள்" என்று பவுல் கூறுகின்றார் (உரோ 16:3–4). பவுல் எபேசுவிலிருந்து கொரிந்திற்கு எழுதிய முதல் மடலில், அக்கிலா, பிரிகிக்கில்லாவின் வாழ்த்துக்களையும் சேர்த்து அனுப்புகின்றார் (1 கொரி 16:19). கிளாதியுவின் இறப்புக்குப்பின் அவன் சட்டம் நடைமுறையில் இல்லாததால், இவர்கள் இருவரும் உரோமைக்குச் சென்று, இவர்கள் தங்கள் வீட்டை மையமாக வைத்து ஒரு சபையைத் தொடங்கினர். உரோ 16:3–இல் பவுல் கூறும் வாழ்த்துதலில் இவர்கள் பெயர்தான் முதலில் வருகிறது. பவுலுக்காக இவர்கள் எவ்வித ஆபத்துக்களை அனுபவித்தார்களோ (16:4). பவுலும் "புறவினத்தார் நடுவிலுள்ள சபைகள் அனைத்தும்" இவர்களுக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளன என்று பவுல் கூறுகிறார். 2 திமோ 4:19 இவர்களுடைய இருப்பிடத்தைப் பற்றி ஒன்றும் கூறவில்லை. தான் கொல்லப்படுவதற்குமுன் சிறையிலிருந்து இந்த வாழ்த்தைப் பவுல் அனுப்பியிருக்க வேண்டும்.

இ) பிற்காலப் பாரம்பரியம்:- அப்பொல்லோவிற்கு அறிவுலரைக் கூறியதில் பிரிசிக்கில்லாவின் பெயர் முதலில் சொல்லப்பட்டிருப்பதால் (அ.ப. 18:26) இவள் தன்னுடைய கணவரைவிட திறமையும் ஆர்வமும் உள்ளவளாக இருந்திருக்க வேண்டும் என்ற எண்ணம் தோன்றுகிறது. அநேகமாக இவள் உரோமைக் கிரேக்கப் பண்பாடுகளைக் கொண்டவளாக இருந்திருக்கலாம். பல வல்லுநர்கள், இவள் எபிரேயருக்கு எழுதப்பட்ட திருமுகத்தின் ஆசிரியை எனக் கருதுகின்றார்கள்.

2. போந்துவிலுள்ள சினோப்பே என்ற ஊரைச் சேர்ந்தவர். அதிரியானால் எருசலேமுக்குக் கொண்டுவரப்பட்டார். ஒரு கிறிஸ்துவர் ஆனார். ஆனால் பிறகு திருச்சபையிலிருந்து விலக்கப்பட்டார். பிறகு யூதமதத்தைத் தழுவி, ராபி அக்கிபாவின் சீடன் ஆனார். இவர் பழைய ஏற்பாட்டை உயர்ந்த கிரேக்க நடையில் மொழி பெயர்த்தார். இம்மொழிபெயர்ப்பு கி.பி 533–வரை செபக் கூடங்களில் அதிகாரப் பூர்வமான அனுமதி பெற்றிருந்தது.

**அக்கிபா** (AKIBA)

யூத ராபிகளில் ஒரு தலைவர் (கி.பி. 50–136). ஆசிரியர்கள் எனப் பொருள்படும் தனாயீமியர்களின் இரண்டாம் தலைமுறையைச் சேர்ந்தவராகக் குறிக்கப்படுகிறார். சட்டத்தை விளக்குபவர். யோசேப்பின் மகனான அக்கிபா, தனாயீமியர்களின் கூற்றுக்களை ஒன்று சேர்த்து வரிசைப்படுத்தும் வேலையைத் தொடங்கினார். அதை அவரது சீடர் ராபி மேயீர் தொடர்ந்து நடத்தினார். இதனால் அக்கிபா, மிஸ்னாவில் செல்வாக்குக் கொண்டிருந்தார். இல்லேலுக்குப் பிறகு, அக்கிபா மிகப்பெரிய ஒழுக்க ஆசிரியராகக் கருதப்படுகிறார். அவரது போதகம் மிஸ்னாவில் அடிக்கடி எடுத்துக் கூறப்படுகிறது. சீமோன்–பார்–கோக்பாதான் மெசியா என்று உரிமை கொண்டாடியதை ஏற்று, அவர் உரோமைக்கு எதிராகச் செய்த கிளர்ச்சியை (132–135), அக்கிபா உற்சாகத்துடன் ஆதரித்தார். தோராவைப் படிப்பதைத் தடை செய்யும் அதிரியானின் சட்டத்திற்குக் கீழ்படியாததற்கான தண்டனையாக, இவர் கைதியாக்கப்பட்டு உயிரோடு எரிக்கப்பட்டார்.

**அக்கூபு** (AKKUB – வஞ்சகமான. துரத்துகிறவன்)

1.தாவீது அரசரின் தூர வழித்தோன்றலான எலியோனாயின் மகன் (1 நாள் 3:24).

2. பாபிலோனியாவிலிருந்து நாடு திரும்பிய பின்பு, கோவிலின் வாயில் காக்கும் லேவியர் குடும்பங்களில் ஒன்றுக்குத் தலைவர் (எஸ் *2:42*; நெக *7:45*; *11:19*; *12:25*; *1* நாள் *9:17*).

3. கோவில் ஊழியர்களின் குடும்பங்களில் ஒன்றுக்குத் தலைவர் (எஸ் 2:45). காண்க: நெத்தினிம்

4. எஸ்ரா மக்கள் கூட்டத்திற்குமுன் வாசித்த சட்டத்திற்கு விளக்கம் அளித்த ஒரு லேவியர் (நெக 8:7).

**அக்கெனாத்தோன்** (AKHENATON – ஆத்தானோடு எல்லாம் நன்றாக உள்ளது).

பதினெட்டாவது அரசகுலத்தைச் சார்ந்த பாரவோன். சமய, பண்பாட்டுப் புரட்சியை எகிப்தில் ஏற்படுத்தியவர் (கி.மு.1363–1347). இவர் முதன்முதலில் நான்காம் அமென்–கோதெப் என்று அழைக்கப்பட்டார். இப்பெயருக்கு "அம்மோன் (கடவுள்) மன நிறைவடைந்தார்" என்பது பொருள். இவர் பழம்பெரும் தெய்வத்தின் "ஆமோன்" என்ற பெயரைத் தவிர்த்து, "சூரியனின் வாழ்வு கொடுக்கும் சக்தி" என்ற பொருள்படும் 'ஆதோன்' என்ற புதிய தெய்வத்திற்கு ஆதரவளிக்கும் வகையில் தன்னுடைய பெயரை மாற்றிக் கொண்டார்.

கி.மு. 1370–இல் ஆசியாவில் எகிப்திய பேரரசானது ஒரு நூற்றாண்டை எட்டிப் பிடித்தது. எகிப்து நாடானது செல்வாக்கிலும், செல்வப் பெருக்கிலும் மற்ற நாடுகளைவிட முன்னணியிலிருந்தது. ஆனால் அயல்நாட்டுப் பண்பாட்டின் பாதிப்பால் எகிப்திய பண்பாடு பெரும் மாற்றம் கண்டது. (எ.கா.) மற்ற நாட்டு மக்கள் பற்றிய அக்கறை எகிப்திய தெய்வங்கள் எகிப்து நாட்டின் வளர்ச்சியில் மட்டும்தான் ஈடுபாடு கொண்டவர்கள் என்று நம்பிக்கையை மாற்றியமைக்கச் செய்தது.

மூன்றாம் அமென்–கோதெப் என்ற பாரவோன் (கி.மு. 1398–1361) அரசு, சமயம், கலை, இலக்கியம் போன்ற துறைகளில் புதிய மாற்றங்களை, அணுகுமுறைகளைக் கையாள்வதை ஏற்றுக் கொண்டார். இவரது மகனும் கூட்டு அரசனுமான நான்காம் அமென்–கோதெப புதிய ஆட்சி முறையை ஏற்படுத்தும் நோக்குடன் புரட்சியில் புகுந்தார். உடனே நான்காம் அக்கெனாத்தோன் பழைய தலைநகராகிய திபிசுவை விட்டு வெளியேறி தேல்–ஏல்– அமர்னாவுக்கு அருகிலுள்ள ஆக்கெதாத்தோன் என்ற புதிய இடத்திற்குச் சென்றார். அங்கு மன்னனும், அவரது மனைவி நெப்பர்தித்தியாளும், இறைவழிபாடு, கலை போன்றவற்றில் மாற்றங்களைக் கொண்டுவர அயராது உழைத்தனர். இவர் 'ஆத்தோன்" என்ற கடவுளின் மேல் கொண்டிருந்த ஆழ்ந்த ஈடுபாடு உலகிலேயே காலத்தால் முந்திய இறையொருமைக் கொள்கை என்றழைக்கப்பட்டுள்ளது. இவ்வாறு ஒரே இறைவன் மேல் எகிப்தியர் செலுத்திய ஆழ்ந்த ஈடுபாடு மோசேயையோ அல்லது எந்த ஒரு எபிரேயனையோ நேரடியாக பாதித்ததற்கு ஆதாரங்கள் இல்லை. உள் நாட்டில் மறுமலர்ச்சியைக் கொண்டுவரவேண்டும் என்ற இவரது ஆர்வம் சீரியா, பாரசீகம் போன்ற நாடுகள் எகிப்திய பேரரசிலிருந்துப் பிரிந்து தனி மாநிலங்களாக ஆவதற்கு வழி வகுத்தது என்று தலைநகரில் கண்டுபிடிக்கப்பட்ட கடிதங்களில் அறியப்படுகிறது. இவருக்குப் பின் வந்த இவரது மருமகன் துத்–அங்–ஆமோன் காலத்தில், முந்தைய புரட்சி அழிந்தது. எகிப்து பழைய நிலையை அடைந்தது. திபிசு மறுபடியும் தலைநகராக்கப்பட்டது.

முந்தைய இயக்கங்கள் பதிதமாகக் கருதப்பட்டாலும் அவை எகிப்திய சமயம், அறிவு சார்ந்த துறைகள், கலைத்துறை ஆகியவற்றில் நிலையான நல்ல மாற்றங்களை விட்டுச் சென்றன.

**அக்கெதாத்தோன்** (AKHETATON – சூரிய கடவுள், ஆத்தோனின் மகிமையின் இடம்)

நான்காம் ஆக்கெனாத்தோன் என்ற எகிப்திய பாரவோன், ஏற்படுத்திய புதிய எகிப்தியத் தலைநகர். இது இக்கால தேல்–ஏல்–அமர்னா என்ற இடத்துக் கருகில் இருந்திருக்க வேண்டும். காண்க: ஆக்கெனாத்தோன்.

**அக்கேமேனியர்** (ACHAEMENIANS)

இரண்டாம் சைரசிலிருந்து (கி.மு. 559–530) வந்த பாரசீக அரச மரபுக்கு மற்

றொரு பெயராகும். இந்த சைரசுதான், நாடு கடத்தப்பட்ட யூதர்கள், "ஆண்டவரின் ஆலயப் பாத்திரங்களை" (எஸ் 1:7) மீண்டும் எருசலேமுக்கு எடுத்துச் செல்ல அனுமதித்தவர். பேரரசின் பரந்த, பல்வேறுபட்ட வளங்கள் அக்கேமேனியரின் கலை தோன்றுவதற்கும் பெரிதும் உதவின.

**அக்கோசு** (HAKKOS – *முட்புதர்*)

தாவீது காலத்தில் வாழ்ந்த குருக்களின் ஏழாவது பிரிவின் தலைவர் (*1 நாள் 24:10*). பாபிலோனிய அடிமைத்தனத்திலிருந்து செருபாபேலோடு திரும்பி வந்தவர்களில் இக்குடும்பத்தைச் சேர்ந்தவர்களும் இருந்தனர். இவர்கள் தங்கள் உரிமையை எவ்வளவோ கேட்டும் அவர்கள் இந்தத் திருப்பணியிலிருந்து ஒதுக்கி வைக்கப்பட்டார்கள். ஏனெனில் இவர்கள் தங்கள் குருகுல மரபை நிரூபிக்க முடியவில்லை (எஸ் *2:61–62*; நெக *7:63–64*). ஒரு வேளை எருசலேம் சுவர்களைப் பழுது பார்க்க உதவி செய்த உரியாவால் இந்தக் குடும்பம் குறிக்கப்படலாம் (நெக *3:4.21*). இந்த வீட்டின் சார்பாக யோகானானின் புதல்வன் யூப்பொலமை யூதா தேர்ந்தெடுத்து உரோமையரோடு சமாதானமும் நட்பும் செய்து கொள்வதற்காக அனுப்பி வைத்தார் (*1 மக் 8:17*).

**அக்ரபா** (AGRAPHA – *எழுதப்படாதவை*)

ஜே.ஜி. கோர்னர் என்பவரால் 18-ஆம் நூற்றாண்டில் ஏற்படுத்தப்பட்ட சொல். இது கிறிஸ்துவினால் சொல்லப்பட்ட, ஆனால் திருமுறை நற்செய்திகளில் எழுதப்படாத வாக்குகளின் தொகுப்பைக் குறிக்கும். இந்தச் சொல்லின் பொருள் "எழுதப்படாதவை" என்பதாகும். கிறிஸ்துவின் போதனைகளில் சில எழுதப்படவில்லை. ஆயினும் எழுதப்பட்ட கருத்துக்களுக்கு இணையாக இவை வாய் மொழியாகச் சேகரிப்பட்டன. ஆனால் தன்மையால் நமது எழுதப்பட்ட நற்செய்திகளுக்கு இணையானவை.

சிறிய போதனைகள் முதல் பெரிய படிப்பினைகள் வரை உள்ள இவ்விதப் பல தொகுப்புகள் உள்ளன. இவை கிறிஸ்துவின் வாழ்நாள் முதல் இன்று வரை இவை சேகரிப்பட்டுள்ளன. தொடக்கத்தில் அறிஞர்கள் உண்மையிலேயே இவை கிறிஸ்துவால் கூறப்பட்டவை என்று நம்பினர். அவற்றின் மூலம், எழுதப்படாத தொடக்கக்கால வாய்மொழி நற்செய்தியாகும் என்றும், எழுதப்பட்ட திருமுறை நற்செய்திகளும் அவற்றையும் மூலமாகக் கொண்டிருந்தன என்றும் நம்பினர். ஆனால் இன்று இக்கருத்தை மிக எளிதாக ஏற்றுக் கொள்வதில்லை. அதனால் நமது தீர்மானங்கள் எல்லாம் அகவியலானவையே. இத் தொகுப்புகளில் வரும் மத உண்மைகளை வெளிப்படுத்தும் நீண்ட உரையாடல்களும், திருமுறை சேராத அப்போஸ்தலர் பணி போன்ற வீரகாதைகளும் நீக்கப்படலாம். ஆனால் சொற்செறிவுடைய, நன்மை பயக்கும் வாக்கியங்கள் முற்றிலுமாக மறுக்க முடியாதவை. பல வல்லுநர்கள் இவை திருமுறை நற்செய்திகளில் காணப்படும் கிறிஸ்துவின் தன்மையை ஒத்து இருக்கின்றன என்பதை ஏற்றுக்கொள்கின்றனர். இவை திருமுறை நற்செய்திகளில் இல்லை என்று முடிவாகத் தீர்மானிக்க முடியாது. ஆனால் இவற்றில் சிலவே காலத்தாலும் தரத்தாலும் இயேசுவுக்குச் சாற்றிக் கூறப்படக் கூடியன என்பது, திருமுறை நற்செய்தி ஆசிரியர்கள் தாங்கள் சேகரித்த பாரம பரியத்தில் ஒரு சிலவற்றை மட்டுமே எழுதாமல் விட்டனர் என்று காட்டுகிறது.

அக்ராபாவில் பல கூற்றுக்களில் போதனைகள் வெறுமனே விரிவாக்கப்பட்டுள்ளன. மிகைப்படுத்தப்பட்டுள்ளன அல்லது மாற்றப்பட்டுள்ளன அல்லது திருமுறை நற்செய்திகளில் வரும் சொற்களின் தொகுப்பாக அமைந்துள்ளன. இப் பண்புகளைப் பிற்காலத்தில் திருத்தியமைக்கப் பட்ட திருமுறைசாராத நற்செய்திகளில் காணலாம். உ.ம்:பணக்கார ஆட்சியாளன் கதை; தாலந்து உவமை; மத் *18:22* வேறு வடிவமைப்புகளில் காணப்படுகின்றது. "உன்னுடைய சகோதரன் வார்த்தையால் பாவம்செய்து, மனம் வருந்தினால் அவனை ஒருநாளில் ஏழுமுறை ஏற்றுக் கொள். ஆம். நான் உங்களுக்குச் சொல்கிறேன். எழுபது முறை ஏழு. ஏனெனில் இறைவாக்கினர்களும் பரிசுத்த ஆவியினால் அபிசேகம் செய்யப்பட்ட பின் பாவம் நிறை சொற்களைக் கூறினர்".

இதுபோன்ற பல "அக்ரபாக் கூற்றுக் கள்" நற்செய்திக் கைப்பிரதிகளில் காணப் படுகின்றன. குறிப்பாக லூக் 14:8–11–க்கு இணையாண பகுதியில் காணப்படுகிறது. வேறுசில: கோடெக்ஸ் பெஸே–யில் மத் 20:28. அல்லது ஓய்வு நாளில் வேலை செய்த மனிதனிடம் கிறிஸ்து கூறியது. "நீ செய்வது இன்னதென்று அறிந்திருந்தால் நீ பேறு பெற்றவன். நீ அறியாமலிருந் தால் சபிக்கப்பட்டவன். சட்டத்தை மீறுப வனாகின்றாய்". இது அதே கைபிரதியில் லூக் 6:4–இல் காணப்படுகின்றது. இவற்றில் நாம் சந்திக்கும் பிரச்சினை வாசகப் பேத திறனாய்வினைச் சார்ந்த தாகும். ஏனெனில் கிறிஸ்துவின் பல வார்த்தைகள் இன்று பல பிரதிகளில் அச்சிடப்பட்டிருப் பினும் (உ.ம்: மத் 6:13; மாற்கு 16:15–18; லூக் 23:34) இவற்றின் தன்மை, வாசக அளவில், இவை பிற்சேர்க்கை என்பதையும், அதனால் அக்ரபாவைச் சேர்ந்தவை என்பதையும் சுட்டுகின்றன.

மேலும் தனிப்பட்ட நற்செய்திக் கைப் பிரதிகளில் காணப்படும் சில வாக்கு களைத் தவிர, சில கூற்றுகள் புதிய ஏற் பாட்டு நற்செய்திகளில் கிறிஸ்து கூறிய தாகக் குறிப்பிடப்படுகின்றன. ஆனால் நற்செய்திகளுக்குப் புறமே சில கூற்றுகள் இயேசு கூறியதாகத் தரப்படுகின்றன. "பெறுவதினும் தருவதே இன்பம்" (அ.ப. 20:35). இறுதி உணவின் போது கிறிஸ்து கூறியதாக பவுல் குறிப்பிடும் வார்த்தைகள் (1 கொரி 11:24–25). அக்ரபா எவ்வாறு வளர்ச்சியடைந்துள்ளது என்பதற்கு ஒரு எடுத்துக்காட்டு: இதையடுத்து பவுல் குறிப்பிடும் வாக்கியம் அப்போஸ்தலர் சட்டத்தில் அப்படியே இடம் பெறுகிறது. "எனவே நீங்கள் இந்த அப்பத்தை உண்டு கிண்ணத்தில் பருகும் போதெல்லாம் ஆண்டவர் வரும் வரையில் அவரது மரணத்தை அறிக்கையிடுகிறீர்கள்".

பெரும்பான்மையான அக்ரபா கூற்று கள் திருமுறைக்குப் புறம்பான இலக்கியங் களில் இருந்து வருகின்றன. இப்படிப் பட்ட சில நூல்கள்: இயேசுவின் "ஒக்சிரிங்கசு" கூற்றுகள், திருச்சபையின் தந்தையர்கள், தோமையாரின் நற்செய்தி என்ற நூல், 1940–இல் செனோபோஸ் கயோனில் கண்டுபிடிக்கப்பட்ட மறையி யல் ஞானக் கோட்பாட்டைச் சார்ந்த நூல், பாபிலோனிய யூதர்களின் சட்டம், தால்மூது, இஸ்லாமிய நூற்கள்; இவை போன்றவற்றிலிருந்து வளர்ச்சியடைந் திருக்கலாம். ஆனால் பெரும்பாலும் இந் நூல்கள் தோன்றிய காலத்தையோ இடத்தையோ குறிப்பிடவில்லை.

இப்படிப்பட்ட கூற்றுகள்அடங்கிய பல நூல்கள் இருந்தாலும் சிலவே உண்மைத் தன்மையுடையன. பெரும்பாலானவை, திருமுறை நற்செய்திகளில் வரும் கூற்று களை விரிவாக்குகின்றன அல்லது மாற்றி அமைக்கின்றன. பெரும்பாலானவை, குறிப்பாக, திருமுறை சேராத நற்செய்தி களில் காணப்படுபவை திருமுறை நற் செய்தி வாக்குகளோடு, ஒப்பிடப்படும் போது, வடிவிலும் பொருளடக்கத்திலும் தாழ்ந்தவையாக உள்ளன. ஒரு வேளை இவை பக்திமிக்க கள்ள வேலையாக இருக்கலாம்.

**அங்கவீனம்**

சமயச் சூழ்நிலையில், குருவிடமோ அல்லது பலியிடப்பெறும் விலங்கிடமோ காணப்படும் அங்கக் குறைகளாகும்.

கூடாரத்திலும், பிற்காலத்தில் ஆலயத் திலும் வழிபாட்டு சடங்குகள் முடிந்த அளவு நிறைவாகச் செய்யப்பட வேண்டும் என்பதால், அங்கவீனமுடைய குரு பிர சன்ன அப்பத்தை ஒப்புக்கொடுக்கத் தடை செய்யப்பட்டிருந்தது (லேவி 21:17). ஆனால் அவர் அந்த அப்பத்தை உண்ணலாம் (21:22). பிற்கால இறைவாக்குகளில், வர விருக்கும் மீட்பர் இத்தகைய குறைபாடு களிலிருந்து, குறிப்பாகக் குருடர்களையும், செவிடர்களையும், விடுவிப்பார் (ஏச 29:18; 35:5–6;42:7).

புதிய ஏற்பாட்டில், திருச்சபை எக் குறையுமின்றி ஆண்டவர் திருமுன் துலங்க வேண்டும் (எபே 5:27). மாசுமறுவற்ற செம்மறியென கிறிஸ்து அழைக்கப்பெறு கிறார் (1 பேதுரு 1:19). அவருடைய மாசற்ற முழுமையின் வழியாகத் தூய்மைப்படுத்து தல் நிறைவேறுகிறது (எபி 9:13–14).

**அங்கலாய்ப்பு** (ANGUISH)

இவ்வுலக உயிர்களால் உண்டாக்கப் படும் பயத்தைப் போன்றோ அல்லது குறிப்பிட்ட குறிக்கோள் மற்றும் உண்மை யான பணி ஆகியவற்றின் மீதான தனிப் பட்ட அல்லது அதிகப்படியான கவனிப் பால் ஏற்படும் கவலை போன்றோ இல் லாமல், அங்கலாய்ப்பானது ஒருவரது அடி மனதிலிருந்து உருவாகின்ற மன அமைதியற்ற உணர்வினையே குறிக்கின் றது. இத்தகைய நிலை சாவை எதிா கொள்ளும்போது அல்லது பொதுவாக எதிர் காலத்தைப்பற்றி எழும் ஒரு உறுதி யற்ற உணர்வேயாகும். விவிலியத்தில் குறிப்பாக கிரேக்க மொழி பெயர்ப்பில், இந்நிலையை விவரிக்கப் பல சொற்கள் பயன்பட்டுள்ளன. பல சூழ்நிலைகளில் விவரிக்கப்படுகின்றன (2 மக் 3:14–15; 15:19; லூக் 22:44; ஒசே 13:8; 2 மக் 8:20; ஞான 11:5; லூக் 21:25; 1 சாமு 23:8; 2 சாமு 20:3; லூக் 8:37; மத் 4:24; லூக் 4:38; உப 28:53; 2 கொரி 4:8; 6:4.12).

1. தமது மக்களுடன் யாவே செய்து கொண்ட உடன்படிக்கையானது, உறுதி மொழிகளின் ஆண்டவருடைய பிரசன்னத் தை உறுதிப்படுத்துகின்றது; ஆனால், அது மனிதன் சட்டத்தைக் கடைப் பிடிப்ப தில் காட்டும் பிரமாணிக்கத்தைப் பொருத் தது. ஆகவே இந்த உறுதிப்பாடு நடப்பில் மறைந்துவிடும் அபாயம் எப்போதும் உள்ளது.

யாபோக்குக் கரையை அடையும் யாக் கோபு ஒன்றும் இயலாத ஒரு சூழ்நிலை யில் தான் இருப்பதைக் காண்கிறார் (ஆதி 32:8). ஆனால், தனது தந்தையுடனும் (22:16 தொ) தன்னுடனும் (28:14) இறைவன் மீண்டும் மீண்டும் செய்த உடன்படிக்கை களைத் தனக்குப் பின்னணியாகக் கொண்டுள்ளார். ஆயினும், தனது சகோத ரன் ஏசாவைச் சந்திப்பதற்கு முன்னர், அவருக்கு அங்கலாய்ப்பினை உருவாக்கும் ஒரு சூழ்நிலையை எதிர்கொள்கிறார். ஆண்டவரின் தூதருடன் போராடித் தரையில் விழுந்த பின்னர், இறைவன் அவருடன் உள்ளார் என்னும் உறுதி மொழியை தூதரிடமிருந்து பெறுகிறார் (32:23–33).

சூரைச் செடியின் கீழ் அமர்ந்துள்ள எலியா, இறப்பதற்கும் தயாரான மனக் கசப்பில் இருக்கிறார் (1 அர 19:3 தொ). மக்களின் பொது பதிதம் பற்றி (தவறாக) உறுதியாக அறிந்த நிலையில் அவர் தனது வாழ்வினைத் தோல்வியெனக் கருதுவது சரியல்லவா? ஆனால், பிற் காலத்தில் இயேசுவிற்கு கெதுசமனியில் நடந்தது போன்று, ஆண்டவரது தூதரால் வலிமைபடுத்தப்பட்டு, அவரைச் சரியான பாதையில் செலுத்தும் இறைவனுடைய சந்திப்புவரை, அவரது பாதையில் தொடர்ந்து நடத்தப்படுகின்றார் (19:5–18).

எல்லா மக்களும் இருளில் மூழ்கி யிருக்கும்போது அவர்கள் அங்கலாய்ப் பில் இல்லையா? (எச 8:22 தொ; 5:30; 24:19). உடன்படிக்கையின் காப்பாளராக இருக் கின்ற நிலையில், மக்கள் பஞ்சத்தினால் துன்புறும்போது தனது இதயமே தன்னைக் கைவிட்டது போன்ற நிலையில், எரேமியா இக்கவலையில் மூழ்கிவிடுகி றார் (எரே 8:18.21). அவர் மட்டுமே துன் புறுமபோது அவரது உணர்ச்சிகள் வேறு விதமாக உள்ளன. தான் வேதனைக்குட் படுத்தப்பட்ட போது தான் பிறந்த நாளி னையே சபிக்கும் அளவிற்குச் சென்றாலும் (15:10; 20:14). தனக்காகப் பழி வாங்கித் தன்னைப் பாதுகாப்பவரில் ஒரு தீர்வினை அவர் கண்டடைகிறார் (11:20; 20:12).

யோபுவின் நிலையினை எடுத்துக் கொண்டால், தனிநபர் மீட்பு என்னும் ஊன்றிவிட்ட கருத்து வெளிப்படையாகத் தெரிகிறது. அச்சத்தால் மேற்கொள்ளப் பட்ட அவர் அழுகிறார் (யோபு 3:24); "நான் அஞ்சியது எனக்கு வந்துற்றது, நான் கண்டு நடுங்கியது எனக்கு நேரிட்டது" (3:25); அவரது ஆன்மா கசப்புற்றதால் அவர் இவ்வாறு பேசுகின்றார் (10:1; 7:11). இறைவன் அனுப்பும் வேதனைக்காக அஞ்சி நடுங்குகிறார் (31:23). இறுதியாக, இச்சொற்களை உபயோகிக்காமலே, அவருடைய இயலாத சூழ்நிலையினின்று அவரை காப்பாற்றக்கூடிய இறைவனை நோக்கி நீதிமான் தனது அங்கலாய்ப்பில் கூக்குரலிடுகிறார் (சங் 22; 31; 35; 38; 57; 69; 88; 102).

இந்த எல்லா நிலைகளிலும், மரணம் காத்திருப்பதால், தனிநபர் மைய இடத்தைக் கொண்டுள்ளார். இறைவனுடைய காரியம் அவருடையதில் இணைந்திருப்பதால், அவரது அங்கலாய்ப்பில் இருமுகத் தெளிவின்மை காணப்படுகிறது. மோசேயும், முதலில் தனது பிரச்சினைக்கு ஒரே தீர்வாக மரணத்தையே காண்கிறார் (எண் 11:11–15); ஆனால், தொடரும் நிகழ்ச்சிகளில் அவரது அங்கலாய்ப்பிற்குக் காரணம் மக்களின் பதிதமே என்பது தெளிவாகிறது. வாழ்வின் நூலிலிருந்து மக்களின் பெயர் அடிக்கப்படும் போது, தனது பெயரையும் அழிக்குமாறு இறைவனை மன்றாடும்போது, தனது பாவமிக்க சகோதரர்களுடன் தனக்குள்ள ஒன்றிப்பை வெளிப்படுத்தினாலும் இறைவனுடைய வெற்றி கொள்ளும் அன்பின் மீது உறுதியாக உள்ளார் (யாத் 32:31 தொ).

2. ஒவ்வொரு மனிதனுடைய இதயத்திலும் இத்தகைய அங்கலாய்ப்பு உணரப்பட்டாலும், இயேசுவின் வருகையோடு அதன் கருத்து மாறுபடுகிறது. தமது மரணத்தை எதிர்கொள்ளும் அங்கலாய்ப்பினை மட்டுமன்றி, ஐயப்பாடு, உறுதியற்ற நிலை ஆகிய பயங்கர உணர்வையும் அவர் தன் மீது ஏற்றுக்கொள்கிறார். ஒலிவ தோட்டத்தில் அவர் அச்சம், திகில், துயரம், மனக் கலக்கம் ஆகியவற்றால் ஆட்கொள்ளப்படுகிறார் (மாற் 14:33 தொ). அவருடைய அங்கலாய்ப்பு எல்லாக் காலத்தையும் சேர்ந்த நீதிமான்கள் அனைவருடைய அங்கலாய்ப்பினையும் ஒன்று சேர்த்துக்கொள்கிறது (சங் 41:6.12; 42:5). அவர் கூக்குரலிட்டுக் கண்ணீர் விடுகிறார். தன்மைச் சாவிலிருந்து மீட்க வல்லவரிடம் அவர் செபிக்கிறார் (எபி 5:7); இறுதியாக, தந்தையின் விருப்பத்திற்கே தனது விருப்பத்தையும் கொண்டு வருகிறார் (மாற் 14:36 ). இரத்த வியர்வை சிந்தும் வரை போராடுபவரைப் பலப்படுத்த மீண்டும் ஒருமுறை ஆண்டவரின் தூதர் வருகிறார். இதற்குப்பின், வெற்றி கொண்டவராய் தமது முடிவை எதிர் கொள்ள ஆயத்தமாகிறார் (லூக் 22:41–45).

இயேசு மனித அங்கலாய்ப்பின் ஆழத்தை அனுபவித்ததன் மூலம் "தமக்குக் கீழ்ப்படிகிறவர்கள் அனைவருக்கும் முடிவில்லா மீட்பின் காரணராகிறார்" (எபி 5:9); அவர் ஒரு புதிய திருப்ப இயலாத சகாப்தத்தை துவக்குகிறார். விசுவாசிகள் தாம் வாழும் இக்காலத்தின் பண்பினைத் தனக்கு உறுதிப்படுத்திக் கொள்வதற்காக நம்பியிருக்கும் செயலானது, கடந்த காலத்தில் நடைபெற்றுவிட்டது (7:27); ஆனால், அது காலத்திற்கு வெளியே நின்று வரலாற்றின் ஏற்றத் தாழ்வுகளின் மீது ஆதிக்கம் செலுத்துகின்றது (திரு வெளி 1:5). இயேசு என்னும் ஆளில் அங்கலாய்ப்பானது அடக்கப்படவில்லை; அதற்குரிய இடத்தைப் பெறுகிறது; ஏனெனில், இப்போது முதல் நம்பிக்கையானது உறுதியானதாகவும் மரணமானது பலனளிப்பதாகவும் உள்ளது.

3. விசுவாசியின் மனதில் ஆழம் மற்றும் பரப்பு என்னும் இரு நிலைகளில் அங்கலாய்ப்பினை அனுபவிக்கலாம். "உயிர் வாழ பெருமூச்சுவிட்ட நிலையில், தன் மேல் நம்பிக்கை வைக்காமல், இறந்தோரை உயிர்ப்பிக்கும் கடவுள் மீது மட்டுமே நம்பிக்கை வைக்க வேண்டுமென (பவுல்) இதன்மூலம் அறிந்து கொண்டார்" (2 கொரி 1:9; 5:4). "கலாபனையோ? வேதனையோ? எதுவுமே (தன்னை) கிறிஸ்துவின் அன்பினின்று பிரிக்கமுடியாது" என உண்மையாகவே பவுல் அறிந்திருந்தார் (உரோ 8:35.39). கிறிஸ்துவில் மரணம் வெற்றிக் கொள்ளப்பட்டது என்னும் உறுதியான நிலையில் இந்த அங்கலாய்ப்பு ஏற்றுக் கொள்ளப்படுகிறது (1 கொரி 15:54 தொ). இயேசுவின் வேதனையுடன் இணைக்கப்படும் போது மரணமானது ஒரு பொருளையும், மீட்பு மதிப்பீட்டையும் பெறுகிறது; "எங்களுள் சாவும், உங்களுள் வாழ்வும் செயலாற்றுகிறது" (2 கொரி. 4:1).

ஆனால், அங்கலாய்ப்பானது இன்னும் ஆழமான நிலையில் மீண்டும் தோன்றலாம். இந்நிலையில் மனிதனுடைய மரணத்தையும் தன் சொந்த மீட்பையும் பற்றி பவுல் அக்கறை கொள்ளவில்லை. ஏனெனில் இவை விசுவாசத்தினால் பெறப்பட்டுவிட்டன என்று அறிந்திருந்தார் (உரோ 5:1–5; 8:24). ஆனால்

மற்றவர்களின் மீட்பையும் மற்ற மக்களின் விடுதலையும் பற்றி அங்கலாய்ப்பு தோன்றுகிறது. மோசேயைப் போன்று, தனது சகோதரர்களுக்காக சாபத்துக்கு உட்பட விரும்புவதாக பவுல் இப்பொருளிலேயே கூறுகின்றார் (9:3); தான் துன்புற, கிறிஸ்துவோடு சேர்ந்து துன்புற அவர் விரும்புகிறார் (8:17). உண்மையில், இறுதிவரை உலகம் ஏங்கிக்கொண்டே இருக்கின்றது (8:18–23) ; அதன் மற்றொரு கூறின் அடிப்படையில் நம்பிக்கை எழுகிறது; ஆவியின் மூலமாக, இது உறுதியானதாக மட்டுமில்லாமல் எதிர்பார்ப்பையும் மாறாத்தன்மையையும் கொண்டதாக உள்ளது (8:24–25). இயேசு தனது பலியின் முன்னனுபவத்தால் முழுமையாக ஆட்கொள்ளப்பட்டதைப் போன்று (லூக் 12:50), அப்போஸ்தலரும் கிறிஸ்துவின் அன்பினுல் முழுமையாக மேற்கொள்ளப்படுகிறார் (2 கொரி 5:14). வேதனை மற்றும் கலக்கத்தின் விளிம்பில் அவரை நாம் கண்டாலும் (2 கொரி 6:4), நம்பிக்கை இழந்தவராகவோ, நசுக்கப்பட்டவராகவோ அவர் இல்லை (4:8). கிறிஸ்துவின் வேதனையானது உலகமுடிவுவரை நிலைத்திருக்கும்.

இவ்வாறு கிறிஸ்தவன் தனது விசுவாசத்தின் மூலம் மரணம் மற்றும் மீட்பு பற்றிய எண்ணத்தின் மீது ஏற்படும் அங்கலாய்ப்பினை மேற்கொள்ள முடியுமெனில், கிறிஸ்துவினுடைய உடலின் எல்லா உறுப்பினர்களுடனும் கொண்டுள்ள ஒன்றிப்பின் விவரிக்க முடியாத அங்கலாய்ப்பிலும் வாழலாம். உறுதியானது மற்றும் உறுதியற்றது ஆகிய இரண்டும் ஒரே மட்டத்திலும் இல்லை; ஒரே பொருளைப் பற்றியும் குறிப்பிடவுமில்லை.

**அசக்கா** (AZEKAH – கொத்தப்பட்ட நிலம்)

அய்யாலோன் பள்ளத்தாக்கிற்குத் தென்புறத்தில் உள்ள அரண்சூழ்ந்த நகரமாகும். பேயித்–கிப்ரின் என்ற இடத்திற்கு வடக்கே 6.5 கி.மீ. தொலைவிலும், கெபிரோனுக்கு வடமேற்கே 24 கி.மீ. தொலைவிலும் உள்ள தேல்–எஸ்–சக்கரியே என்ற இடத்தை அசக்காவிற்கு அடையாளம் காட்டுவர். தேல் மேலே உள்ள மேட்டு நிலத்தில் அழிந்துபோன சுவர்களும், கோபுரங்களும் காணப்படுகின்றன. பல நிலத்தடிப் பாதைகளும், அறைகளும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவை போர்க்காலத்தில் அடைக்கலமாகவும், உணவுப் பொருள்களைச் சேர்த்து வைப்பதற்கும் பயன்பட்டிருக்க வேண்டும். இஸ்ராயேல் காலத்தைச் சேர்ந்த, அரச செய்திகளைக் கொண்ட பாண்டங்கள் பலவும் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. தேலுக்குக் கிழக்குப் பகுதியிலுள்ள கிர்பெத்–ஏல்–அலாமி என்ற இடம்தான் அசக்கா இருந்த இடமாக பைசான்டைன் காலத்தில் கருதப்பட்டது.

எருசலேமின் அரசராகிய அதோனி–சதேக்கின் தலைமையில் வந்த கானானியர்களின் படைகளை யோசுவாவின் படைகள் அசக்காவரை துரத்திச் சென்றனர் (யோசு 10:10–11). இது யூதா நாட்டின் செப்பேலா மாவட்டத்திலுள்ள ஒரு நகரமாகும் (15:35). பெலிஸ்தியர்கள் போருக்குப் படையைத் திரட்டிக்கொண்டு வந்து அசக்கா என்ற இடத்தில் பாசறை அமைத்தனர். தாவீது பெலிஸ்தியர்களின் தலைவனாகிய கோலியாத்தைக் கொன்றவுடன் 'அசக்கா' நகரானது இஸ்ராயேலர்களால் கைப்பற்றப்பட்டது ( 1 சாமு 17:1).

வடக்கு ஆட்சிப் பகுதி கிளர்ச்சி செய்து பிரிந்து போனபின் சாலொமோன் மகன் இரகபெயாமினால் அரண்சூழக் கட்டப்பட்ட நகர்களில் அசக்காவும் ஒன்றாகும் (2 நாள் 11:10). உணவுப் பொருட்களைச் சேர்த்து வைப்பதற்கும் பயன்பட்டது (11:11). எருசலேமைத் தாக்குவதற்கு முன்னால் நெபுக்கதுனேசாரின் படைகளால் கடைசியாகப் பிடிக்கப்பட்டது யூதாவின் அரண் சூழ்ந்த நகராகிய அசக்கா ஆகும் (எரே 34:7 கி.மு. 588). நாடு கடத்தப்பட்டதற்குப் பின் அடிமைத்தளையில் இருந்து திரும்பி வந்த யூதர்களால் அசக்கா நகரானது மறுபடியும் கைப்பற்றப்பட்டது, குடியேறப்பட்டது (நெக 11:30).

**அசசியா** (AZAZIAH – யாவே வலிமைமிக்கவர், யாவேயால் பலப்படுத்தப்பட்டவர் அல்லது யாவேயால் வலு அடைந்தவர்)

1. ஆண்டவரின் உடன்படிக்கைப் பேழையை எருசலேம் தேவாலயத்திற்கு

எடுத்து வருவதற்காகத் தாவீது முன்னேற் பாடு செய்த பாடகர் குழுவில் ஒரு லேவியர் (1 நாள் 15:21)

2. தாவீதின்கீழ் எப்பிராயிம் குலத் தாருக்குப் படைத்தலைவராக இருந்த ஓசயாவின் தந்தை ஆவார் (1 நாள் 27:20)

3. எசக்கியா காலத்தில் ஆலயப் பொறுப்பினைக் கண்காணிக்க நியமிக்கப் பட்டவர்களில் மூன்றாம் தர அலுவலர் (2 நாள் 31:13).

**அசரமேல்** (ASARAMEL)

வுல்கத்தா வாசகப்படி இது ஓர் இடத் தின் பெயராகும். ஆனால் இது எபிரேயச் சொற்றொடரைத் தவறாகப் புரிந்து கொண்டதின் விளைவாக இருக்கலாம் என்றும் கருதப்படுகிறது. சிலர் இது எருசலேமைக் குறிக்கிறது என்றும் இன்னும் சிலர் இது இறை மக்களின் முற்றம் அல்லது இறைமக்களின் இளவர சன் என்று பொருள்படும் என்பர்.

முன்னதென்றால் இது ஆலயத்தில் பெரிய முற்றத்தைக் குறிக்கும். பின்ன தென்றால் இது இடத்தைக் குறிக்க வில்லை. மதிப்புமிக்க ஒரு பட்டமாகும். இதனால் பெரிய குருவாகிய சீமோன் "இறை மக்களின் தலைவர்" என்று குறிக்கப்பெறுகிறார் (1 மக் 14:47; 15:1).

**அசரியா** (AZARIAH – யாவே உதவி செய்தார்)

1. சாலமோனின் கீழ் உள்ள உயர் அதிகாரி. பெரிய குரு சாதோக்கின் புதல் வராவார். அகிமாசுவின் சகோதரராகவும் இருக்கலாம் (1 அர 4:2 காண்க: 2 சாமு 15:27).

2. இவர் நாத்தானின் மகனாவார். சாலமோனின் ஆட்சிக்குட்பட்ட பன்னி ரெண்டு மாகாணங்களின் அரச அலுவ லர்களுக்குத் தலைவராக இருந்தார் (1 அர 4:5). சாபதுவின் சகோதரராவார். இவர் இறைவாக்கினர் நாத்தானின் மகனா (2 சாமு 12) அல்லது சாலமோ னின் அண்ணன் மகனா (2 சாமு 5:14) என்பது பற்றி அறிஞர்கள் மத்தியில் கருத்து வேறுபாடுகள் காணப்படு கின்றன.

3. அசரியா யூதாவின் அரசர் அமசி யாவின் மகனும் வாரிசுமாவார் (2 அர 14:21; 15:1.6–8. 17, 23. 27; 1 நாள் 3:12). இவரு டைய மற்றொரு பெயர் ஊசியா என்ப தாகும்.

4. யூதாவைச் சேர்ந்த ஒரு மனிதர். ஏத்தானின் மகன் செராகுவின் புதல்வர் களின் தலைமுறை அட்டவணையில் இடம் பெறுகிறார் (1 நாள் 2:8).

5. யூதாவிலுள்ள ஒரு மனிதர். ஏகூவின் புதல்வரும், ஓபேதுவின் பேரனுமாவார். எரகுமேலின் புதல்வர்களின் தலைமுறை அட்டவணையில் சேசானின் எகிப்திய அடிமை வழியாக இடம் பெறுகிறார் (1 நாள் 2:38–39). இவரை கீழ் வரும் 14–இல் இருந்து வேறுபடுத்த வேண்டும்.

6. அகிமாசுவின் புதல்வரும், சாதோக் கின் பேரனும் ஆவார் ( 1 நாள் 6:9).

7. பெரிய குரு யோகானானின் புதல்வரும், 6–இல் குறிக்கப்படுபவரின் பேரனுமாவார் (1 நாள் 6:10–16; எஸ் 7:3). இவர் அரசன் ஊசியா குருத்துவப் பதவி யைப் தனக்கே அபகரித்துக் கொண்டதை எதிர்த்தவராக இருக்கலாம் (2 நாள் 26:17–18).

8. பெரிய குரு கிலிக்கியாவின் புதல்வ ரும், செராயாவின் தந்தையும் ஆவார் (1 நாள் 6:13–14). இவர் நாடு கடத்தப்படு தலுக்குச் சிறிது முன்பு வாழ்ந்த எஸ்ரா வின் மூதாதையர் ஆவார் (எஸ் 7:1).

9. கொகாத்தியர்களின் குலத்தைச் சேர்ந்தவர். சாமுவேலுக்கும் லேவியரான இசை வல்லுநர் ஏமானுக்கும் மூதாதைய ராவார் (1 நாள் 6:36). யோவேல் இவரது மகனாவார். இவர் 1 நாள் 6:24–இல் ஊசியா என்றழைக்கப்படுகின்றார்.

10. கிலிக்கியாவின் ஒரு வழித்தோன் றல். நாடு கடத்தலுக்குப் பின் எருசலே மில் ஆலயத்தின் முக்கிய அதிகாரி (1 நாள் 9:11). ஒருவேளை நெக 11:11–இல் குறிக்கப்படும் செராயாவும் இவரும் ஒரு வரையே குறிக்கலாம்.

11. இவர் சமயச் சீர்திருத்தங்களைச் செய்ய யூதாவின் அரசராகிய ஆசாவிற்கு உற்சாகமளித்த இறைவாக்கினர் (2 நாள் 15:1–8). இறைவாக்கினர் ஓதேதுவின் மகனாவார்.

12. 13. யூதாவின் அரசராகிய யோச பாத்தின் புதல்வர்களில் இருவர் (2 நாள்

*21:2–4).* இவர்களின் தந்தைக்குப்பின் ஆட்சிப் பொறுப்பை ஏற்ற இவர்களது மூத்த சகோதரர் யோராம் இவர்களைத் தன் வாளுக்கு இரையாக்கினார். 'அசரியா' என்ற பெயர் யோசபாத்தின் புதல்வர்கள் பட்டியலில் இரண்டு முறை வருகிறது.

*14.* அத்தலியாவைப் பதவியிலிருந்து நீக்கும் சதித்திட்டத்தில் தீவிரமாக பங்கு பெற்ற ஒரு அதிகாரி. இவர் யோராமின் மகனாவார் *(2 நாள் 23:1).*

*15.* யூதாவைச் சேர்ந்த படைத்தலைவர். ஒபேதுவின் புதல்வர். அத்தலியாவைப் பதவி நீக்கிவிட்டு யோவாசுவை அரசராக்க வேண்டும் என்ற சதித் திட்டத்தில் தீவிரமாகச் செயல்பட்டார் *(2 நாள் 23:1).* இவரை மேலே 5–ஆம் எண்ணில் குறிப்பிட்டிருப்பவரோடு தொடர்புப்படுத்தக் கூடாது.

*16.* எப்பிராயிம் மக்கள் தலைவர்களில் ஒருவர். யோகானானின் புதல்வர். சிறைப்பிடித்தவர்களை விடுவிக்க வேண்டி பெக்காவின் படையினை வலியுறுத்தியவர்களில் ஒருவர் *(2 நாள் 23:12).*

*17.* எசக்கியாவின் காலத்தில் யோவேல் என்றழைக்கப்பட்ட கெகாத்தியர் குலத்தைச் சேர்ந்த ஒரு லேவியரின் தந்தையாவார் *(2 நாள் 29:12).* இவர் ஆலயத்தைச் சுத்தி செய்த அலுவலில் பங்கு பெற்றார். ஆனால் 9–வது எண்ணில் குறிப்பிட்டவரோடு தொடர்புடையவர் இல்லை.

*18.* எகல்லலேலின் மகன். எசக்கியா காலத்திலிருந்த மெராரிய குலத்தைச் சேர்ந்த ஒரு லேவியர். ஆலயம் சுத்தி செய்தபோது உதவியவர் *(2 நாள் 29:12).*

*19.* எசக்கியாவின்கீழ் இருந்த தலைமைக்குரு *(2 நாள் 31:10.13).* ஆலயத்தில் மக்கள் அளித்த பொருட்களைச் சேமித்து வைப்பதற்கென அறைகளைக் கட்டினார். இவர் சாதோக்கின் குடும்பத்தைச் சேர்ந்தவரும், ஆண்டவரது ஆலயத்தின் முக்கிய அதிகாரிகளின் தலைவரும் ஆவார் *(1 நாள் 9:11; நெக 11:11; எரே 20:1).* இவர் 27–இல் குறிக்கப்படுபவராக இருக்கலாம்.

*20.* அசரியா என்பவர் தன்னுடைய வீட்டிற்குப் பின்னாலிருந்த எருசலேம் மதில் சுவரைப் பழுது பார்த்தவரும் மாசேயாவின் மகனுமாவார் *(நெக 3:23–24).*

*21.* நாடு கடத்தப் பெற்றதற்குப்பின் உள்ள காலக் கட்டத்தில் இருந்த ஒரு தலைவர். அடிமைத் தனத்திலிருந்து விடுதலைப்பெற்று செருபாபேலோடு திரும்பி வந்தவர்களில் இவரும் ஒருவர் *(நெக 7:7).* இதற்கு இணையான பகுதியில் 'செராயா' என்று குறிப்பிடப்படுகிறார் *(எஸ் 2:2; காண்க நெக 12:1).*

*22.* எஸ்ராவின் காலத்தின் சட்டத்தை மக்களுக்கு எஸ்ரா வாசிக்க, அதைப் புரிகின்ற விதத்திலே விளக்கிக் கூறிய ஒரு லேவியர் *(நெக 8:7–8).* இவர் எபிரேயத்தியிலிருந்து அரமேயிக்குக்கு மொழிபெயர்த்திருக்கலாம்.

*23.* நெகமியாவின் காலத்தில் புதுப்பிக்கப்பட்ட இஸ்ராயேலின் உடன்படிக்கையில் கையொப்பமிட்ட குருக்களில் ஒருவர் *(நெக 10:2).*

*24.* இவர் யூதா நாட்டுக் குருவாக அல்லது தலைவராக இருந்தவர் *(நெக 12:33).*

*25.* ஒசாயாவின் மகன். இறைவாக்கினர் எரேமியாவின் எதிரிகளில் ஒருவர் *(எரே 42:2).* எரே *42:1–* இல் சில வாசகங்கள் இவரை எசனியா என்று குறியிடுகின்றன.

*26.* தானியேலின் தோழர்களில் ஒருவரான ஆபதுநெகோவின் மூல எபிரேயப் பெயர் *(தானி 1:6.7.11.19; 2:17; 3:25.88 (1:2.66); 1 மக் 2:59).*

*27.* ஊசியாவின்கீழ் உள்ள தலைமைக் குரு *(2 நாள் 26:17.20)* அரசன் குருவின் பணியை ஆற்றுவதை எதிர்த்த குருக்களின் தலைவராக இருந்தவர். இவர் 19–இல் குறிக்கப்பட்டவராக இருக்கலாம்.

*28.* அடிமைத் தனத்திலிருந்து வந்தபின் எருசலேமில் வாழ்ந்தவர்களாகக் கூறப்படுகின்றவர்களின் பட்டியலில் இவர் ஒரு குருவாகக் கருதப்படுகின்றார். சிலிக்கியாவின் மகனாவார். ஆண்டவரது ஆலயத்தின் தலைமைக் குருவாகவும் எண்ணப்படுகின்றார் *( 1 நாள் 9:11).* இவர் 8–இல் குறிக்கப்பட்டவராக இருக்கலாம். நெக *11:11–*ல் இவர் செராயா என்றழைக்கப்படுகிறார். ஒருவேளை இதுவே சரியான வாசகமாக இருக்கலாம்.

29. யூதா மக்கபேயுவின் படையில் ஒரு அதிகாரி (1 மக் 5:18.56.60). யூதா இல்லாத காலங்களில் படைத்தலைவராகப் பொறுப் பேற்றிருப்பவர். கோர்க்கியா என்பவரால் தோற்கடிக்கப்பட்டார்.

**அசரியா** (AZARIAS)

மாறுவேடம் கொண்டிருந்த தூதர் இரபேலால் பயன்படுத்தப்பட்டப் பெய ராகும் (தோபி 5:12; 6:6.13; 7:8; 9:2).

**அசரியாவின் மன்றாட்டு** (PRAYER OF AZARIAH)

இது தானி *3:24–50* என்ற பகுதியைக் குறிக்கும். இது எபிரேய விவிலியத்தில் காணப்படவில்லை. ஆகவே பிரிவினைச் சகோதரர்கள் தங்கள் விவிலியங்களில் இதைச் சேர்த்துக் கொள்வதில்லை. இதைத் திருமுறையைச் சேராத பிற் சேர்க்கை என்று அழைப்பர். ஆனால் இப்பகுதி கிரேக்க எழுபது நூலில் காணப்படுகிறது. கத்தோலிக்கத் திருச் சபை இதையும் இறையூக்கம் பெற்ற பகுதியாக ஏற்றுக் கொள்ளும். இப்பகுதி துணைத் திருமுறைப் பகுதிகளில் ஒன்றாகக் கருதப்படும். இதுவும் மூன்று இளைஞர்களின் பாடலும் *(3:46–90)* சேர்ந்த ஒரே தொகுப்பாகக் கருதப்படும்.

தானியேலின் மூன்று தோழர்களான சதிராக்கு, மேசாக்கு, ஆபதுநெகோ ஆகியோரின் கதையாகும். நெபுகத்து னேசார், தூரோ என்னும் சமவெளியில் பொற் சிலை ஒன்றை நாட்டி வைத்தார். அதை எல்லோரும் தாழ விழுந்து வணங்க வேண்டும் என்று கட்டளையிட்டார். இதற்குப் பணிய மறுத்த இம்மூன்று இளைஞர்களும், தண்டனையாகத் தீச் சூளையில் எறியப்பட்டனர். ஆபதுநெகோ என்ற அசரியா *(1:6–7)* இறைவனைப் பார்த்து மன்றாடின செபம் தான் இப்பகுதி. அதில் தன் பாவங்களை அறிக்கையிட்டு இஸ்ராயேலின் உடன் படிக்கையின் நிமித்தம் பாவ மன்னிப்பும், விடுதலையும் கோருகிறார் *(3:24–45)*. இதற்குப் பிறகு வரும் உரைநடைப்பகுதி, அரசரது ஊழியர்கள் எப்படிச் சூளை யின் நிலக்கீல், குங்கிலியம், சணற்கூளம், விறகுச் சுள்ளிகள், ஆகியவற்றை ஓயாமல் இட்டுத் தீச் சுவாலையை 49 முழம் உயரம் வரை வளர்த்தனர் என்று கூறுகிறது. தீச் சூளை, அருகில் நின்ற கல்தேயர்களைப் பொசுக்கிவிட்டது. ஆனால் ஆண்டவரின் தூதர் அசரியாவோடும் அவரது சகோத ரர்களோடும் சூளைக்குள் இறங்கி, தீக் கொழுந்தைச் சூளையினின்று வெளியே செல்லச் செய்து அதன் நடுவில் குளிர்ந்த காற்று வீசும்படி செய்தார் *(3:50)*. அதனால் தீ அவர்களைத் தொடவில்லை. அவர்கள் கொஞ்சமும் வருத்தமோ துன்பமோ அடையவில்லை.

இஸ்ராயேலுக்காக இறைவன் முன்பு செய்த அருஞ்செயல்களை எடுத்துக் கூறி இக்கதை அந்தியோக்கு எப்பிபானின் காலத்திலும் எக்காலத்திலும் மறைக் காகத் துன்புறுபவர்களுக்கு நம்பிக்கை அளிக்கிறது.

**அசரேலா** (ASHARELAH)

ஆசாபுவின் புதல்வர்களுள் இவரும் ஒருவர். இவர் அரச கட்டளைப்படி சுர மண்டலம் தம்புரு, கைத்தாளம் ஆகிய வற்றை ஒலித்து இறைவாக்குரைத்து வந்தவர் (1 நாள் 25:2). இவர் 25:14–இல் எசரேலா என்றழைக்கப்படுகிறார்.

**அசரேல்** (ASAREL – இறைவன் சிறைக் கூடம்)

யூதா இனத்தைச் சேர்ந்த எகல்லலே லின் நான்கு புதல்வர்களில் ஒருவர் ஆவார் (1 நாள் 4:16).

**அசலியா** (AZALIAH–யாவே ஒதுக்கி வைத்தார், யாவே சிறந்து விளங்கினார்)

அசலியா என்பவர், ஆண்டவருடைய சட்ட நூல் கண்டுபிடிக்கப்பட்ட சூழ்நிலை யில் குறிக்கப்படுபவரும், யோசியாவின் கணக்கருமாகிய சாப்பானின் தந்தையா வார். மெசுல்லாமின் மகன் (2 அர 22:3).

**அசலெல்போனி** (HAZZELELPONI – வரும் நிழல்)

ஏதாம் ஊரைச் சேர்ந்த யூதா இனத்துப் பெண். ஏதமின் புதல்வர்களின் சகோதரி என்று குறிக்கப்படுகிறார் *(1 நாள் 4:3)*.

**அசனா** (HASSENAAH)

எருசலேம் சுவர்களைப் பழுதுபார்ப்ப தில் உதவிய ஒரு குடும்பத்தின் தலைவர்

(நெக 3:13). சென்ற என்ற பெயரின் மற்றொரு வடிவம்.

**அசனாத்து** (ASENATH – நெயித் என்ற கடவுளுக்குரியது)

ஓனின் குருவாகிய போத்திபராவின் மகள். பாரவோன் மன்னன், யாக்கோபின் மகன் யோசேப்புக்கு இவளை மனைவியாகக் கொடுத்தார். இவள் மூலம் யோசேப்புக்குப் பிறந்தவர்கள் மனாசே, எப்பிராயிம் என்பவர்கள் ஆவர். (ஆதி 41:45. 50–52; 46:20)

கி.பி. 2–ஆம் நூற்றாண்டில் கிரேக்கப் போலிநூலில் இவளது புற இனத் தன்மையை மாற்றி விளக்கம் அளித்தனர். இவளைச் செக்கேம்–தீனா ஆகியோரின் மகள் என்று கூறி அவளை ஒரு எபிரேயப் பெண்ணாக்கினர். அவளை போத்திபராதத்து எடுத்துக் கொண்டார். மற்றொரு பாரம்பரியம், இவளை எகிப்தியள் ஆக்கியது. ஆனால் அவள் யோசேப்பால் யாவே வழிபாட்டுக்கு மதமாற்றப்பட்டாள்.

**அசனியா** (AZANIAH–யாவே கேட்டு அருளினார், யாவே ஒதுக்கி வைத்தார்)

எசுவா என்ற லேவியரின் தந்தை. நெகமியாவின் தலைமையில் உடன்படிக்கை புதுப்பிக்கப்பட்ட போது கையொப்பமிட்டவர்களில் ஒருவர் (நெக 10:9).

**அசனுவா** (HASSENUAH – வெறுக்கப்பட்ட பெண், கோபமுள்ள)

1. ஒதவியாவின் தந்தை. பென்யாமின் இனத்தைச் சேர்ந்தவர். இவரது சந்ததியினர் நாடு கடத்தலுக்குப்பின் எருசலேமில் வாழ்ந்தனர் (1 நாள் 9:7).
2. நெகமியா காலத்தில் யோவேலுக்கு அடுத்த நிலையில் தலைவராக இருந்த யூதாவின் தந்தை (நெக 11:9).

**அசாசேல்** (AZAZEL–பாவப் பரிகாரக் கிடா)

'அசாசேல்' என்ற வார்த்தை பாவப் பரிகாரப் பலி செலுத்தப்படும் நாளில் பாலை நிலத்திற்கு ஒட்டி விடப்படுகின்ற பாவங்களைச் சுமக்கும் வெள்ளாட்டுக் கிடாயைக் குறிக்கிறது (லேவி 16:18.10–26). இவ்வார்த்தைக்கு மூன்று விளக்கங்கள் தரப்படுகின்றன.

அ) பாவங்களைச் சுமக்கும் வெள்ளாட்டுக்கிடாயைக் குறிக்கிறது என்பது "எழுபது நூல்கள்", வுல்கத்தா போன்றவைகளின் கருத்தாகும். இதிலிருந்து வேறுபட்ட குறிப்புக்களில், இவ்வார்த்தையானது 'துரத்துதல்' 'நீக்குதல்' என்ற பொருள்படுகின்ற அசாலா என்று அராபிய வார்த்தையோடு தொடர்புபடுத்தப்படுகிறது.

ஆ) பாவங்களைச் சுமக்கும் வெள்ளாட்டுக் கிடாயானது ஒட்டிவிடப்படுகின்ற பாலைநிலத்தை இவ்வார்த்தை குறிக்கிறது. இக்கருத்து யூத ராபிகளின் விளக்க நூல்களில் காணப்படுகிறது. ஒரு சிலர் 'அசாசேல்' என்ற இப்பெயரை 'கரடுமுரடான' என்று பொருள் கொள்ளப்படுகின்ற 'அஸ்ஸா' என்ற அராபியச் சொல்லோடு தொடர்புபடுத்திச்' செங்குத்தான இடம் என்று பொருள்படுகின்ற பேத்து–கித்துதோ என்ற இடத்தை அடையாளம் காட்டுகின்றனர்.

இ) பாலைநிலத்தில் குடியிருக்கின்ற சாத்தானைக் குறிக்கின்ற பெயராகும் என்பது இன்றைய விளக்கவுரையாளர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டக் கருத்தாகும். ஆனால் எந்த ஒரு பண்பாட்டிலும் வெள்ளாட்டுக் கிடாய்கள் சாத்தானுக்குப் பலியிடப்படுவதில்லை. மேலும் லேவி 16–இல் ஆடு சாத்தானுக்குப் பலியிடப்படுவதாகக் கூறப்படவில்லை; மாறாக, இஸ்ராயேலின் பாவங்களைச் சுமந்து சென்று சாத்தானுக்கு அவமானமாக அனுப்பப்படுகிறது. மனித பாவங்கள் சாத்தானுக்குச் சொந்தமாகின்றன. ஆடு பாவங்களைச் சுமந்து செல்லும் வாகனமேயொழிய பரிகாரப்பலிப் பொருள் அல்ல.

**அசாசு** (AZAZ– ஆற்றலுள்ள)

ரூபனின் தலைமுறை அட்டவணையில் பெலாவின் தந்தையும், சேமாவின் மகனும் ஆவார் (1 நாள் 5:8)

**அசாயா** (ASAIAH – ஆண்டவர் படைத்தது)

1. யோசியா அரசன் கீழ் இருந்த ஓர் "அரச ஊழியன்" (2 அரசர் 22:12.14; 2 நாள் 34:20). ஆலயத்தில் கண்டெடுக்கப்பட்ட சட்ட நூலைப்பற்றி ஆண்டவர் விருப்

பத்தை அறிய இறைவாக்கினி குலிதா விடம் அனுப்பப்பட்ட குழுவில் ஒருவர்.

*2.* சிமியோன் குலத்தின் ஒரு தலைவ ராக இருந்தவர். மெயுனியரை அழித்த தில் பங்கு பெற்றவர் *(1 நாள் 4:36 – 41).*

*3.* கக்கியாவின் மகன் அசாயா, மெராரியின் மக்கள் என்றழைக்கப்பட்ட லேவியர் குலத் தலைவரும் இவரே. திருப் பேழை ஆண்டவரின் ஆலயத்தில் நிறுவப் பட்டபோது தாவீதுக்கு உதவியர்களுள் ஒருவர் *(1 நாள் 6:30; 15:6.11).*

*4.* சீலோனியர்களில் மூத்தவர் இவரே. பாபிலோனியரின் அடிமைத் தனத்தில் இருந்து திரும்பிய பெயர் பட்டியலில் இடம் பெறுகிறார் *(1 நாள் 9:5).* இப்பட்டியலுக்கு இணையான பகுதியில் இவர் பாரூக்கின் மகனான மாசேயா என்றழைக்கப்படுகிறார் *(நெக 11.15).*

**அசாயேல்** (ASAHEL– *இறைவன் செய்தார்)*

*1.* தாவீதின் சகோதரியான செருயா வின் கடைசி மகன். யோவாபு, அபிசாய் ஆகியோருக்குச் சகோதரன் *(2 சாமு 2:18).* காட்டு மான் போல் மிகவும் வேகமாய் ஓடக் கூடியவர் *(2:18).* தாவீதின் முப்பது வலிய வீரர்களில் ஒருவர் *(23:24; 1 நாள் 11:26).* ஒவ்வொரு மாதமும் ஒரு படைப் பிரிவு பணியாற்றும் முறைப்படி நான் காம் மாதம் பணியாற்றும் படைப்பிரிவுக்கு இவர் தலைமை வகித்ததாகக் கூறப்படு கிறது *(1 நாள் 27:7).* இப்பட்டம் அவர் இறந்த பின், அவரைப் பெருமைப்படுத்த கொடுக்கப்பட்டதாக இருக்கலாம். ஏனெ னில் அவரது இறப்புக்குப்பின், அவரது மகன் செபதியாதான் படையின் நான்காம் பிரிவுக்கு உண்மையான தலைவராக இருந்தார்.

இசிபோசத்தின் படை அபினேர் தலைமையில் தாவீதின் படையோடு, கிபயோன் என்ற இடத்தில் போரிட்டது. அதில் தோல்விடைந்து தப்பி ஓடிய அபினேரை அசாயேல் விடாது துரத்தி னார் *(2 சாமு 2:17).* யோவாவுக்காக இந்த இளைஞனைக் கொல்ல மனமில்லாத அபினேர் அவரை இருமுறை எச்சரித்து, திரும்பப் போகக் கேட்டுக் கொண்டார். இதற்கு செவிமடுக்காது துரத்தி வந்த அசாயேலை வயதான அபினேர் தற் காப்புக்காகக் கொல்ல நேரிட்டது. இந்த இளைஞனின் முடிவு அவ்வழியே செல்பவர்களில் ஆழ்ந்த பாதிப்பை உண்டு பண்ணியது *(2 சாமு 2:18–23).* போர் முடிந்தபின் அசாயேல் பெத்ல கேமிலுள்ள தன் தந்தையின் கல்லறையில் அடக்கம் செய்யப்பட்டார் *(2:32).* அசாயே லின் சாவு அவருடைய சகோதர்களில் பழிக்கு பழிவாங்கும் உணர்வை வளர்த்தது. பிற்காலத்தில் யோவாபு, அபினேரை அழைத்து நம்பிக்கைத் துரோகமாக அவரைக் கொன்று பழி தீர்த்துக் கொண்டார் *(3:26–30).*

*2.* லேவியருள் ஒருவர். இவர் யூதா வின் இளவரசர்களோடும் குருக்களோடும் சேர்ந்து யோசபாத்தின் ஆட்சிக் காலத்தில், சட்ட நூலை மக்களுக்குப் போதிக்க அரசனால் நியமிக்கப்பட்டவர் களில் ஒருவர் *(2 நாள் 17:8).*

*3.* எசக்கியா காலத்தில் "ஆண்டவ ருடைய ஆலயத்தின் அறைகளைக்" கட்டு வதற்கு முதற்பலன்களையும், தசம பாகத்தையும் நேர்ச்சிப் பொருட்களையும் சேர்ப்பதில் உதவி செய்ய நியமிக்கப்பட்ட அலுவலர்களில் ஒருவர் *( 2 நாள் 31:13)*

*4.* பாபிலோனின் அடிமைத்தனத்தி லிருந்து திரும்பி வந்தபின் யூதர்களின் அந்நிய மனைவியர் அனுப்பப்பட வேண்டுமென்ற எஸ்ராவின் கோட் பாட்டை எதிர்த்த யோனத்தானின் தந்தை யாவார் *(எஸ் 10:15).* சில மொழி பெயர்ப்பு கள் இந்தக் கோட்பாட்டை நிறைவேற்று வதில் பயன்பட்டவர் யோனத்தான் என்று கூறுகின்றன.

**அசான்** (AZZAN–*வலிமை)*

இவர் இசக்கார் குலத்தின் தலைவரா கிய பலித்தியேலின் தந்தையாவார். யோர் தானுக்கு மேற்கிலுள்ள கானான் நாட்டை இஸ்ராயேல் மக்களுக்குப் பங்கிட்டுக் கொடுக்க நியமிக்கப்பட்டவர்களில் பலித் தியேலும் ஒருவர் *(எண் 34:26).*

**அசிகாது** (AZGAD – *இறைவன் வலிமை யுள்ளவர்)*

அடிமைத் தனத்திற்குப்பின் பாலஸ்தீ னாவிற்குத் திரும்பி வந்த குடும்பங்கள் ஒன்றின் தலைவராக அசிகாது விளங்கி னார் *(எஸ் 2:12; நெக 7:17).* அசிகாதுவின்

மக்களில் அக்காத்தானின் மகன் யோகானானும் மற்றும் நூற்றுப்பத்து ஆடவர்களும் எஸ்ராவுடன் திரும்பி வந்தனர் (எஸ் 8:12). எஸ்ராவின் கீழ் புதுப்பிக்கப்பட்ட உடன்படிக்கையில் கையெழுத்திட்டவர்களில் ஒருவராக அசிகாது விளங்குகிறார் (நெக 10:15).

***அசிங்கிரித்து*** (ASYNCHRITUS – *ஒப்புமையில்லாத)*

உரோமை 16:14–இல் பவுலால் வாழ்த்தப்பட்டுள்ள ஒரு கிறிஸ்தவர்.

***அசிசா*** (AZIZA–*வலிமை)*

சட்தூ குடும்பத்தைச் சேர்த்த ஒரு இஸ்ராயேலர். எஸ்ராவின் காலத்தில் புறவினப் பெண்களை மனைவியாகக் கொண்டிருந்தவர்களைக் கட்டாயப் படுத்தி அப்பெண்களை விலக்கிவிடக் கோரப்பட்டவர்களில் ஒருவராவார் (எஸ் 10:27).

***அசித்தராவியர்*** (ASHTERATHITE)

அசித்தரோத்தின் குடிமகன் அல்லது அந்த ஊரைச் சேர்ந்தவர். தாவீதின் வலிய வீரர்களில் ஒருவரான உசியாவைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளது (1 நாள் 11:44).

***அசித்தரோத்து–கர்னயிம்*** (ASHTEROTH-KAR NAIM –*அஸ்தாரோத்தின் இரு கொம்புகள்)*

கிலயாதிலிருந்த மிக முக்கியமான கோட்டை நகரம். பிற்காலத்தில் கர்னாயிம் என்று சுருக்கி அழைக்கப்பட்டது (ஆமோ 6:13). கலிலேயக் கடலுக்குக் கிழக்கே 32 கி.மீ. தொலைவிலும் தேல்–அஸ்தராவிற்கு வடக்கே 5 கி.மீ. தொலைவிலும் உள்ள செயிக்காத் இருக்கும் இடத்தில் இவ்விடம் அடையாளம் காட்டப்படுகிறது. இந்த இரண்டு இடங்களும் ஒன்றாக சேர்ந்து வளர்ச்சியடையவில்லை. மாறாக மாறி மாறி வளர்ந்ததாகப் புதைபொருள் ஆராய்ச்சிகள் காட்டுகின்றன. இந்த இரண்டு இடங்களும் இரண்டு கொம்புகளையுடைய அசித்தார்தியைப் பொதுவாக வழிபடவில்லை. உண்மையைச் சொல்லப்போனால் கர்னயிமின் பாதுகாவலான தேவதை அசித்தார்த்தி அல்ல, மாறாக அத்தர்காத்தி ஆகும் (2 மக் 12:26)

கெதர்லகோமேரும் அவருடைய கூட்டு அரசர்களும், யோர்தானுக்கு அப்பால் தெற்கு நோக்கிச் சென்ற பொழுது இந் நகரம் அவர்களுடைய தாக்குதலுக்கு இலக்கானது, முழுவதும் அழிக்கப்பட்டது. அப்போது இந்நகரில் இரப்பாயிமியர் வாழ்ந்து வந்தனர் (ஆதி 14:5). இது எவ்வளவு தூரம் அழிபட்டதென்றால், இது கி.மு.16 முதல்13–ஆம் நூற்றாண்டு வரையிலும் (வெண்கலக்காலம்) எந்த மக்களாலும் குடியேறப்படவில்லை. இஸ்ராயேல் வந்த பிறகுதான் இது மறுபடியும் கட்டப்பட்டது. இது சீரியா (ஆராம்) அல்லது இஸ்ராயேல் மக்களால் கட்டப்பட்டிருக்கலாம். இருவருக்கும் போராட்டம் எழுதற்கு ஒரு ஊராக இருந்தது. இஸ்ராயேலின் அரசன் இரண்டாம் எரொபெயாம் (கி.மு. 781–741) "லோ–தெபாரை"க் கைப்பற்றிய பொழுது இதையும் சேர்த்துக் கைப்பற்றினார். அசீரிய நாட்டு அரசர் மூன்றாம் திகிலாத்து பிலேசர் இந்நகரை கார்னென் என்று குறிப்பிடுகின்றார். இவர் இந்தப் பகுதி முழுவதையும் கி.மு. 732–இல் கைப்பற்றி கார்னெனைத் தலை நகரமாக்கினார்.

அடிமைத்தனத்திலிருந்து திரும்பிய பிறகு கர்னயிம் அல்லது கர்னியோன் என்று அழைக்கப்பட்ட இந்நகரம் யூதர்களாலும், கிரேக்கர்களாலும் குடியேறப்பட்டது. அக்காலத்தில் இது மிகவும் வல்லமை வாய்ந்த ஒரு கோட்டையாகக் கருதப்பட்டது. ஆனால் யூதர்கள் தங்களைக் காப்பாற்றும்படி யூதா மக்கபேயுவிடம் முறையிட அவர் அதைக் கைப்பற்றி அழித்துவிட்டார் (1 மக் 5:26. 43–44; 2 மக் 12:21.26).

தொல்பொருள் அகழ்வு ஆய்வுகள் இது மூன்றடுக்குச் சுவர்களைக் கொண்ட பெரிய நகரமாயிருந்தது என்றும், முற்றுகையிடக் கடினமானதாகவும் இருந்தது என்றும் காட்டுகின்றன (1 மக் 12:21). இதை இதற்குத் தெற்கில் 5 கி.மீ. தொலைவிலுள்ள அசித்தரோத்து நகரோடு குழப்பிவிடக்கூடாது.

**அசித்தார்த்தி** (ASTARTE)

அசித்தரோத்தின் கிரேக்க வடிவம்.

**அசித்தரோத்து** (ASHTAROTH – தேவதை)

கானானியரின் பாலினப் பெருக்கத் தேவதையான அசித்தோரேத்து என்ற பெயரின் பன்மை வடிவம்.

எபிரேயக் குடியிருப்பில் இஸ்ராயேல் பாகாலிம், அசித்தரோத்து கடவுள்களுக்கு வழிபாடு செய்ததாக கூறப்பட்டாலும் (நீதி 2:13; 10:16), இது அவர்கள் பாகாலுக்கும், அசித்தரோத்துக்கும் நேரடியாக வழிபாடு செய்யாமல், அவர்கள் நடத்திய பாலினப் பெருக்க வழிபாட்டின் பருவச் சடங்குகளைக்குறிக்கலாம். பாகலீமையும், அசித்தரோத்தையும் எறிந்துவிடும்படி சாமுவேல் இஸ்ராயேல் மக்களுக்கு மிசுப்பா கூட்டத்தில் கட்டளையிட்டார் (1 சாமு 7:3–4). பெலிஸ்தியர்களால் இஸ்ராயேல் மக்கள் தோற்கடிக்கப்பட்ட பின்பு, தாங்கள் பாகாலிமுக்கும் அசித்தரோத்திற்கும் வழிபாடு செய்ததை வெளிப்படையாக ஒத்துக்கொண்டார்கள் (1 சாமு 12:10)

இந்த தேவதைக்கு அநேகமாக பேத்துசான் என்ற இடத்தில் ஒரு கோவில் இருந்தது (1 சாமு 31:10). தாவீது இதை அழித்தார். எபிரேயர் அதில் குடியேறவில்லை.

**அசித்தரோத்து** (ASHTAROTH) – இடம்

1. அசித்தரோத்து தேவதையின் பெயருடைய பாசானில் உள்ள ஒரு ஊராகும். இது யோர்தானுக்கு அப்பால் வடகிழக்கிலுள்ள ஒரு நகரின் பெயர் எனக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. யோசு 12:4; 13:12–இன்படி இங்கு இரப்பாயிமியர் வாழ்ந்தனர் இது எதிரையோடு (இக்கால தேர) தொடர்புப்படுத்தப்பட்டுள்ளது. இது பாசான் நாட்டு அரசனான ஒகுவின் இருப்பிடமாகும் (உப 1:4; 3:10; யோசு 12:4). பின்பு இது மனாசே குலத்தவர்களுக்குப் பங்கீடு செய்யப்பட்டது மாக்கிரால் (யோசு 13:12.31) குடியேறப்பட்டு, இது இஸ்ராயேலின் தஞ்சமடையும் நகர்களுள் ஒன்றாகவும் கெரிசோனிய லேவிய நகரமும் ஆயிற்று (1 நாள் 6:71; யோசு 21:27). கெதர்லாகோமேரால் கொள்ளையிடப்பட்ட இரப்பாயிம் என்பது இவ்விடம்தான் என்று கருதப்படுகின்றது (ஆதி 14:5). இங்கு இவ்விடம் அசித்தரோத்து–கர்னயிம் என்று கொடுக்கப்பட்டுள்ளது. இவற்றை அருகருகில் உள்ள வெவ்வேறு நகரங்களாகக் கருதுவதுமேல். அறிஞர்களிடைய கருத்து வேறுபாடு உண்டு. இரண்டையும் இந்த ஊரையும் பெயெசுத்தராவையும் சிலர் ஒன்றாகக்கருதுவர். (காண்க. யோசு 21:27). கலிலேயாக் கடலுக்குக் கிழக்கில் 32 கி.மீ. தொலைவிலுள்ள இக்கால தேல்–அஸ்தாரா பழங்கால அசித்தரோத்து இருந்த இடத்தில் அமைந்திருக்கலாம் என்று கருதப்படுகிறது.

2. 'இளமை' அல்லது "பெருகும்மந்தை" ஆகிய பொருள்களைக்கொண்ட ஒரு பொதுப்பெயர் (உப 7:13; 28:4; 18:51).

**அசித்தோரேத்து** (ASHTORETH – விண்மீன்)

இது அசித்தரோத்து என்ற கானானிய பாலினப் பெருக்கத் தேவதையின் பெயரின் திரிபு. இத்தேவதை அசித்தரோத்து, அசித்தார்த்தி, இசிதார் என்று பலவாறு அழைக்கப்படும். 1 அர 11:5.33; 2 அர 23:13 ஆகிய இரண்டு இடங்களில்தான் பழைய ஏற்பாட்டில் இப்பெயர் ஒருமையில் பயன்படுத்தப்பட்டுள்ளது. கானானிய புற இன மதத்தைக் குறிப்படும்பொழுது எல்லாம் பொதுவாக இப்பெயரின் பன்மை வடிவமான அசித்தரோத்து என்பது பயன்படுத்தப்பட்டுள்ளது. இக்கடவுளின் இடத்திற்குரிய வெளிப்பாடுகளைக்குறிக்கும் 1 சாமு 31:10–இல் ஒரு கோவில் குறிக்கப்பட்டுள்ளது. இது அநேகமாக பேத்துசானில் உள்ளதாக இருக்கலாம். இங்கு கில்போவாப் போருக்குப்பின் பெலிஸ்தியர் சவுலின் படைக்கலங்களை வைத்தனர். இத்தேவதையை அசேரா என்ற தேவதையோடு குழப்பிவிடக்கூடாது.

பாபிலோனியக் கடவுள்கள் கூட்டத்தில் இத்தேவதை இசிதார் என்றழைக்கப்படுகிறது. இவள் சந்திரக்கடவுளான சின்னுக்கும் அவரது துணைவியும் விண்ணகத் தேவதையுமான அனுவுக்கம் பிறந்தவள். இவள் காதலுக்கும், சிற்றின்பத்திற்கும், பாலின விருத்திக்கும் உரிய கடவுளாக சாதாரணமாகக் கருதப்பட்டாள். ஆனால் அசீரியர்கள் இவளைப் போரின் கடவு

ளாகக் கருதினர். இந்த இரட்டை அலுவல்கள் அடையாளம் மாலைவெள்ளி, காலை வெள்ளியோடு தொடர்புடைய தாகச் சிலர் கருதுகின்றனர். மாலை வெள்ளி சிற்றின்பச் செயல்களோடும், காலைவெள்ளி போர்களோடும் தொடர்பு டையதாகக் கருதுகின்றனர்.

கிரேக்கர்காலத்தில் இசிதார் காதலின் தேவதையான வீனஸ் அல்லது அப்ரோ தைட் ஆனாள். இவளது சில உருவங்கள் தாடியுடன் காணப்படுகின்றன. இது இவள் ஒரு அர்த்த நாரீசுவரத் தன்மை யுடையவள் என்பதைச் சுட்டுகிறது.

பெனிசியர்களிடையே சீதோனியர் களின் மிக முக்கியத் தேவதையாவாள் (1 அரச 11:5.33). உகரிட்டிக்கு வாசகங் களில் இவள் பாகலின் கூட்டாளி ஆவாள். ஆனால் உயிரும் மரணமும் கொடுக்கும் இவளது அலுவல், பாகாலின் சகோதர துணைவியான அனாத்தால் எடுத்துக் கொள்ளப்படுகிறது. பெலிஸ்தியர் இவளைப்போரின் கடவுளாக வழிபட்டனர் (1 சாமு 31:10; காண்க 1 நாள் 10:10). சீரிய பாலஸ்தீனம் முழுவதும் கண்டெடுக்கப் பட்டுள்ள பல அம்மணமான பெண் உரு வங்களில் இவளது உருவங்களும் காணப் படுகின்றன.

இஸ்ராயேலர் பாலஸ்தீனத்தில் குடி யேறிவிட்டபின் அவ்வப்பொழுது இந்தத் தேவதையின் வழிபாட்டில் ஈடுபட்டிருந்த னர் (காண்க: நீதி 2:13). சாலமோன் பிற மதப் பெண்களை மணந்தபின் இவ்வழி பாட்டுக்கு ஊக்கம் அளித்ததாகத் தெரி கிறது. 1 அர 11:5–இன்படி சாலமோன் சீதோனிய அசித்தோரேத்து, அம்மோ னிய மில்க்கோம் ஆகியோரின் வழி பாட்டை நாட்டில் புகுத்தினார். அதற்குத் தண்டனையாக இறைவன் அவரது மகன் இரகபெயாமிடம் இருந்த அரசை எடுத்து அதன் பெரும்பகுதியை எரொபயா முக்குக்கொடுத்தார் (11:33). 2 அர 23:13– இல் யோசியா சீர்திருத்தக் காலத்தில் இந்த வழிபாட்டை அழிப்பது குறிக்கப்படு கிறது. இதுவரை இந்த வழிபாடு இஸ்ரா யேலரிடையே நிலைபெற்று இருந்தது.

பாலஸ்தீனத்திலும், தென்சீரியா நாட் டிலும் அசித்தோரேத்தின் வழிபாடு மிகவும் சிறப்பாக இருந்தது என்று பழைய ஏற்பாடும், 10–ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பெனிசிய குறிப்புகளும் காட்டு கின்றன. எப்பூ என்ற இடத்தில் தோலமி காலத்தில் இவள் சிங்கத் தலையுடன் காட் டப்பட்டுள்ளாள். சிங்கத்தின் தலையுடன் இத்தேவதை சேர்க்கப்பட்டுள்ளது. இது 19–ஆவது அரச மரபுச் சிற்பக் கலைகளு டையதென்பதைக் காட்டுகின்றது. இத் தேவதையினுடைய வழிபாடு பேத்து– சானில் கி.மு. 15 முதல் 13–ஆம் நூற் றாண்டு வரை சிறப்பாக இருந்தது.

பெனிசியா நாட்டு எஸ்மூன் என்ற குணமாக்கும் கடவுளுடன் இது தொடர்பு படுத்தப்பட்டிருப்பதால், இது வாழ்வு கொடுக்கும் தேவதையும்கூட எனத் தோன்றுகிறது.

**அசிபத்தா** (ASPATHA)

பதிலுக்குப் பதில் யூதர்களால் கொல லப்பட்ட அகாகிய ஆமானின் 10 புதல் வர்களில் ஒருவர் (எஸ்த 9:7).

**அசிபார்** (ASPHAR)

பாலைவனத்திலுள்ள ஒரு குட்டை யோனத்தான் மக்கபேயும் சீமோன் மக்கபேயும் கூடாரம் அடித்துத் தங்கிய இடங்களில் ஒன்று (1 மக் 9:33).

**அசிபுக்கு** (AZBUK – பாழாக்கு)

இவர், பேத்துசூர் மாவட்டத்தின் ஒரு பாதிக்கு ஆளுநராய் இருந்தார். அடிமைத்தனத்திலிருந்து திரும்பி வந்த பின் எருசலேம் மதிலைக் கட்டி எழுப்பு வதில் ஈடுபட்டிருந்த நெகமியா என்ற பெயர் கொண்ட ஒருவரின் தந்தையாகக் கருதப்படுகின்றார் (நெக 3:16).

**அசிபெனாசு** (ASHPENAZ – குதிரை மூக்கு)

நெபுக்கதுனேசாரின் அரண்மனையி லிருந்த அண்ணகர்களின் தலைவர். அழகுள்ள ஞானத்தில் சிறந்த உயர்குடி சேர்ந்த யூத இளைஞர்களை அரசனின் பணிக்காக, அரண்மனைக்குக் கொண்டு வரும்படி இவர் கட்டளையிடப்பட்டார் (தானி 1:3–4).

**அசிமவேத்து** (AZMAVETH – சாவு வலிமை வாய்ந்தது) – ஆள்

1. இருகையாலும் கவணையும், அம்பை யும் கையாள்வதில் திறமை படைத்த

எசியேல், பெலத்து ஆகிய இருவரும் அசிமவேத்தின் புதல்வராவர். இவர்கள் பென்யாமின் குலத்தைச் சேர்ந்தவர்கள். இவர்கள் இருவரும் சிக்கிலாகு என்னு மிடத்தில் தலைமறைவாயிருந்த தாவீதுடன் சேர்ந்து கொண்டார்கள் (1 நாள் 12:3). இவரும் அடுத்து குறிககப்படுபவரும் ஒருவராக இருக்கலாம்.

2. தாவீதின் திறமையும், ஆற்றலுமிக்க முப்பது படை வீரர்கள் அடங்கிய குழுவில் அசிமவேத்து ஒருவராவார். இவர் பகுரிம் என்ற இடத்திலிருந்து வந்தவர் (2 சாமு 23:31; 1 நாள் 11:33).

3. இவர் அதியேலின் மகனாவார். இவர் எருசலேமில் தாவீது மன்னனின் கீழிருந்து அரண்மனைக் கருவூலங்களைக் கண்காணித்து வந்தார் (1 நாள் 27:25).

4. இவர் யோயதாவின் புதல்வராவார். சவுல் குடும்பத்தின் வழித்தோன்றல்களில் ஒருவர் (1 நாள் 8:36). 1 நாள் 9:42–இல் இவரது தந்தை யாரா என்றழைக்கப்படுகிறார்.

**அசிமவேத்து** (AZMAVETH) – இடம்

எருசலேமிற்கு வடக்கிலும், வடமேற்கிலுமிருந்து 8 கி.மீ. தொலைவிலும் அனாத்து (அனாதோத்து)க்கு 3 கி.மீ. தொலைவிலும் உள்ள அண்மைக் காலத்திய கிஸ்மே நகரோடு இந்நகர் அடையாளம் காட்டப்படுகிறது. இதன் சிதைவுகள் இது பாறையின் மேல் கட்டப்பட்டிருந்தது என்றும், அதிலே களஞ்சியங்களும் நீர்த்தொட்டிகளும் வெட்டப்பட்டிருந்தனவென்றும் காட்டுகின்றன. அசிமவேத்து நகரைச் சேர்ந்த 42 ஆட்கள் பாபிலோனியாவிலிருந்து செருபாபேலோடு திரும்பி வந்தார்கள் (எஸ் 2:24). எருசலேம் மதிலின் அர்ப்பணிப்பு விழாவில் அசிமவேத்திலிருந்து வந்த பாடகர்களும் பங்கு கொண்டார்கள் (நெக 12:29). நெக 7:28–இல் இது பேத்து–அசிமவேத்து என்றழைக்கப்படுகிறது.

**அசிமா** (ASHIMA – குற்றம்)

கி.மு. 722–இல் வட அரசின் வீழ்ச்சிக்குப்பின் கம்மாத்து நகரிலிருந்த சமாரியாவில் அசீரியர்களால் குடியேற்றப்பட்ட மக்களின் கடவுள் (2 அர 17:30). இது கானானிய தாய்த் தேவதையான அசேராவின் திரிபுப் பெயராகும். ஆமோஸ் இறைவாக்கினர் காலத்தில் வாழ்ந்த மக்கள் சத்தியம் செய்த கடவுளின் பெயராக இருக்கலாம் (ஆமோ 8:14). எகிப்தைச் சேர்ந்த எலிபைன்டைன் ஏடுகளில் காணப்படும் அசேம்–பேத்தேலுடன் தொடர்புடையதாக இருக்கலாம்.

**அசிமோன்** (AZMON – வலிமை)

யூதாவின் தென் எல்லையோரப் பகுதியில் இந்த இடம் உள்ளது. எகிப்து நாட்டின் நதிக்கு முன்னால் மேற்குப் புறத்தில் உள்ள கடைசி ஊராகும் (எண் 34:4–5; யோசு 15:4). ஒருவேளை அசிமோன் என்ற ஊரானது "ஏசேம்" என்ற நகராக இருக்கலாம். வரலாற்றிற்கு முன்னால் புனிதப் பொருள்கள் கண்டுபிடிக்கப்பட்ட இடமாகிய பழம்பெரும் காதேசு–பார்னேயாவுக்கு வடமேற்கில் 16 கி.மீ தொலைவிலுள்ள அயீன்–ஏல்–கோசேமே என்ற இடத்தில் அஸ்மோன் என்ற ஊர் இருந்ததாகக் குறிப்பிடப்படுகிறது. இந்த இடத்தில் எகிப்தியப் புறக்காவல் நிலையச் சிதைவுகள் இன்னும் காணப்படுகின்றன.

**அசியேல்** (ASIEL – இறைவன் படைத்தது)

1. சிமியோன் குலத் தலைவர்களுடைய பட்டியலில் உள்ள ஏகூ என்பவருடைய கொள்ளுப்பாட்டனும் செராயாவின் தந்தையுமாவார் (1 நாள் 4:35). கெதோரில் மேய்ச்சல் நிலம் தேடிச் சென்ற தலைவர்களில் ஒருவர் (4:39).

2. தோபித்தின் மூதாதையர் (தோபி 1:1). இவர் நப்தலீ குலத்தைச் சேர்ந்தவர்.

**அசியேல்** (AZIEL – இறைவன் என்பலம் ஆவார்)

அசியேல் என்பவர், ஆண்டவரின் உடன்படிக்கைப் பேழையை எருசலேமிற்கு எடுத்துக்கொண்டு வரும்பொழுது யாழ்களை மீட்டுக்கொண்டு வந்தவர்களில் ஒருவராவார். இவர் ஒரு லேவியர். இவருடைய முழுப் பெயர் 'யாகசீயேல்' எனப்படும் (1 நாள் 15:20).

**அசிரிக்காம்** (AZRIKAM – என் உதவி எழுந்துவிட்டது)

1. இவர் நெயரியாவின் புதல்வராவார். செருபாபேல், தாவீது ஆகியோரின் வழித் தோன்றல் ஆவார் (1 நாள் 3:23).

2. இவர் பென்யாமின் குலத்தைச் சேர்ந்த ஆசேலின் மகனாவார். யோனத்தான், சவுல் ஆகிய இருவரின் வழிவந்தவர் (1 நாள் 8:38; 9:44)

3. ஒரு மெராரி குலத்தைச்சேர்ந்த ஒரு லேவியர். செமாயாவின் பாட்டனும் கெசபியாவின் மகனும், கசூப்பின் தந்தையுமாவார் (1 நாள் 9:4; நெக 11:15).

4. ஆகாசு மன்னனின் அரண்மனைத் தலைவராவார். எப்பிராயிமின் வலிமை மிக்க வீரன். சிகிரி என்பவரால் போரில், இவர் மாசேயா, எல்கானா ஆகியோருடன் கொல்லப்பட்டார் (2 நாள் 28:7). இவரும் 2–இல் குறிக்கப்பட்டவரும் ஒருவராக இருக்கலாம்.

**அசிரியேல்** (ASRIEL – இறைவன் உதவியாயுள்ளார், இறைவன் மகிழ்ச்சியால் நிரப்பினார்)

மனாசேயின் குலத்தவருள் ஒருவர். மோசேயால் வனாந்திரத்தில் எடுக்கப்பட்ட இரண்டாவது மக்கள் தொகைக் கணக்கெடுப்புப் பட்டியலில் வருகின்ற கிலயாத்தைச் சேர்ந்த ஒருவர் (எண் 26:31; யோசு 17:2; 1 நாள் 7:14). யோசுவாவால் நிலம் ஒதுக்கப்பட்ட மனாசே குலத்தைச் சேர்ந்த குடும்பங்களில் ஒன்றான அசிரியேலருடைய மூதாதையர். குலப் பெயர் முதல்வர்.

**அசிவாத்து** (ASHVATH)

ஆசேரின் மரபுப்பட்டியலில் வரும் யபிலேத்தின் புதல்வருள் ஒருவர் (1 நாள் 7:33).

**அசினா** (ASNAH – முட்புதர், "நா"வைச் சேர்ந்தவர்)

பாபிலோனியாவில் இருந்து செருபாபேல் தலைமையில் பாலஸ்தினத்திற்கு நாடு திருப்பிய ஆலயப்பணியாளர்களுள் ஒரு குடும்பத்தின் தலைவர் (எஸ் 2:50).

**அசினோத்து–தாபோர்** (AZNOTH-TABOR-தாபோரின் சரிவுகள்)

நப்தலியின் தென் எல்லையோரத்திலுள்ள ஒரு பகுதியாகும். ஒருவேளை இது நப்தாலி, இசக்கார், செபுலோன் ஆகிய பகுதிகள் தாபோர் மலையின் ஒன்றுகூடிய இடமாக இருக்கலாம் (யோசு 19:34). தாபோர் மலைக்கு அருகிலுள்ள ஊன்–எபேயில் என்ற இடத்தில்தான் அசினோத்து–தாபோர் என்ற இடம் இருந்திருக்கலாம்.

**அசீரியா** (ASSYRIA)

மெசபொத்தாமியாவில் திகிரிசு நதியின் மேற்குப் பகுதியில் நிலவியிருந்த ஒரு பேரரசும் நாகரிகமும் ஆகும். கி.மு. முத லாம் ஆயிரம் ஆண்டுகளில் யூதாவும் இஸ்ராயேலும் எதிர்கொண்ட முக்கிய எதிரியுமாகும். இது அக்காதிய ஏடுகளிலும் பழைய ஏற்பாட்டிலும் அசூர் என்றழைக்கப்பட்டது (எண் 24:22.24). இது பாபிலோனுக்கு வடக்கிலும் சீரிய பாலைவனத்திற்குக் கிழக்கிலும் அந்தோலியாவுக்குத் தெற்கிலும் குர்தீஸ் மலைகளுக்கு மேற்கிலும் அடங்கிய பகுதியைக் கொண்டது.

1. வரலாறு:- நமக்குக் கிடைத்திருக்கும் சான்றுகளிலிருந்து வரலாற்றுக்கு முந்திய காலத்திலிருந்தே இப்பகுதியில் மக்கள் வாழ்ந்து வந்துள்ளனர். உணவுப் பொருட்கள் உண்டாக்கும் வாழ்க்கை முறையோடு கிராம வாழ்க்கை இங்குத் தொடங்கியது. இதற்கு இக்கால கிர்குக்குக் கிழக்கிலுள்ள காரீம் சாகீர்க்கு (கி.மு. 7000), யார்மோ (கி.மு. 6000) ஆகிய ஊர்கள் இருந்த இடங்கள் சான்றுகளாக உள்ளன. கி.மு. 5500 – 3000–க்கு இடைப்பட்ட காலத்தில், தொழில்கள் முன்னேறியதாகத் தெரிகின்றது. இதற்குக் கசூனா, சமர்ரா, தேல் கலாப், உபய்த், ஊருக் போன்ற இடங்களில் காணப்படும் கலாச்சாரத் தடையங்கள் சான்றுகளாக அமைகின்றன. கி.மு. 2900–ஐ ஒட்டி அரசாட்சி தொடங்குகிறது. அதோடு எழுத்துக் கலாச்சாரமும் தொடங்குகிறது.

அசீரிய அரசர்களின் பட்டியல்படி, தொடக்ககால அரசர்கள் பெரும்பாலும் கூடாரங்களில் வாழும் நாடோடித் தலைவர்களாவர். கி.மு. மூன்றாம் ஆயிரமாண்டு காலத்தின் முடிவில் சுமேரியன் செல்வாக்கு இங்கு காணப்படுகிறது. அக்காதிய சார்கோனின் (2300–2230) செமித்திய அரச மரபினர் நினிவே, அசூர், காலாக் ஆகிய நகர்களை மீண்டும் கட்டினர். ஏலாமியர் 2000–ஐ ஒட்டி அமர் சுயென்னையும் ஊரின் மூன்றாம் அரச மரபையும் தோற்கடிக்கும் வரை இந்நிலை நீடித்தது. விவிலியம் நாடுகளின் பட்டிய

லில் தொடக்க நிலை அசீரியாவில் பாபிலோனியர் கொண்டிருந்த பாகத்தைக் குறைத்துக் கூறுவதாகத் தெரிகிறது (ஆதி 10:11–12.22).

சுதந்திர நகர–நாடான அசூர் வணிக மையமாகத் திகழ்ந்தது. சிறிய ஆசியாவின் குடியிருப்புகளுடன் வணிக உறவு கொண்டிருந்தது. கப்பதோக்கியாவில் கனேசில் (இக்கால குல்தெபே) கண்டெடுக்கப்பட்ட ஏறக்குறைய 3000 ஆப்பு எழுத்து ஏடுகள் இந்த வணிகச் செயல்களுக்குச் சான்று பகர்கின்றன. அக்காதிய அரசர்கள் இலுசுமா, முதலாம் சார்கோன் ஆகியோரின் கீழ் அசீரியா பாபிலோனின் மேல் படைஎடுத்துச் சென்றது. 19–ஆம் நூற்றாண்டு மத்தியில் அந்தோலியாமவைச் சேர்ந்த இத்தியர்களின் படையெடுப்பு அசீரிய வணிகத்தை முடிவுக்குக் கொண்டு வந்தது. சிறிது காலத்திற்கு தியாலா ஆற்றுப் பகுதியிலுள்ள எஸ்னுன்னானைச் சேர்ந்த நராம்–சின் என்பவர் ஆசூரில் ஆதிக்கம் செலுத்தினார். சிறிது காலத்திற்குப் பிறகு எமோரியத் தலைவர் முதலாம் சம்சீ–அதாத் அசூரில் அரியணை ஏறினார். அவரது மகன் யஸ்மா–அதாத் என்பவர் மாரியைக் கைப்பற்றினார். சம்சீ–அதாதின் இறப்புக்குப் பின் பதவி நீக்கப்பட்ட சிம்ரி–லிம், மாரியில் அதிகாரம் செலுத்தினார். இவரைப் பாபிலோனைச் சேர்ந்த கமுராபி தோற்கடித்தார். ஒரு குறுகிய போராட்டத்திற்குப்பின் அசூர் மித்தன்னீ பேரரசின் சிற்றரசாகியது, இதோடு பழைய அசீரிய காலம் முடிவுக்கு வந்தது (1650). இதற்குப் பின் வந்த இருண்ட காலத்தில் அரசியல் செய்திகள் கிடைக்கவில்லை என்றாலும், இப்பகுதி விவசாயத்தில் ஓரளவு செழிப்புற்றிருந்தது என்பது நூசி ஏடுகளிலிருந்து தெரிகிறது.

14–ஆம் நூற்றாண்டின் மத்தியில் மித்தன்னீ அரசின் வீழ்ச்சியோடு, அசீரியா மீளவும் அகில உலக முக்கியத்துவம் பெறத் தொடங்கியது. அசீரியப் பகுதியில் அரசப்பட்ட உரிமை கோரியவரான முதலாம் அருபல்லி (1365–1330) எகிப்திய அரசவைக்குத் தூது அனுப்பினார். இரண்டாம் கராயின்தாசுக்குத் தன் மகளைத் திருமணம் செய்து கொடுத்து பாபிலோனோடு உடன்படிக்கை செய்து கொண்டார். அவனது வழித் தோன்றலான இரண்டாம் குரிகல்சூ பாபிலோன் அரியனை ஏறக் கருவியாக அமைந்தார். அசூருபல்லியின் மரணத்துக்குப் பின் குரிகல்சூ அசீரிய அரியணையையும் சேர்த்துக் கொள்ள முயற்சித்தார். இதன் விளைவாக ஏற்பட்ட போராட்டங்கள் பாபிலோனியாவை மிகவும் பலவீனப்படுத்தியது. அரசுக்கு வரும் மரபுமுறை செய்யப்பட்டது. மத்திய அசீரியர் காலத்தில் அரசர்கள் வடக்கிலும் மேற்கிலும் வியாபாரப் போக்குவரத்தைத் திறந்துவிட்டனர்.

முதலாம் சால்மனேசர் (1274–1245) மேற்கு மாநிலமான கனிகல்காத்தில் நடந்த கிளர்ச்சியை அடக்கி அப்பகுதியைத் தன் அரசுக்குள் சேர்த்துக் கொண்டார். பிற்காலத்தில் அசீரியர்கள் வழக்கமாக இருந்த முறைப்படி தோற்கடிக்கப்பட்ட மக்களை நாடு கடத்திச்சென்று தன் அரசின் பலபகுதிகளில் குடியேற்றினர். வடக்கு எல்லையை உரத்துக்கு எதிராகப் பாதுகாத்தார். காலாக்கில் (நிம்ரூத்) புதிய தலைநகரை அமைத்தார். அவர் மகன் முதலாம் துகுல்தி–நிதுர்தா (1244–1208) பாபிலோனின் மேல் குறி வைத்து, அதை வென்று அசீரிய ஆட்சிக்குள் முதல் முறையாகக் கொண்டு வந்தார். ஏழு ஆண்டுகளுக்குபின் அரசன் அவன் மகனால் கொல்லப்பட்டார். அசீரியா உள்நாட்டுப் போரில் ஈடுபட்டது. இது பாபிலோனின் மேலாண்மையைக் கொண்டு வந்தது. அசூர்–ரெஸ்–இஸ்ஸி மீளவும் அசீரியாவைச் சுதந்திர நாடாக்கினார் (1125). அவரது மகன் முதலாம் திகிலாத்து பிலெசேர் (1115–1077) சுபாரிய, அக்லாமு ஆகிய இனத்தவர்மேல் ஆதிக்கம் செலுத்தினார். இவர் மத்தியதரைக்கடல்வரை அரசை விரிவாக்கினார். பிப்லோஸ், சீதோன், ஆர்வாது போன்ற நகரங்களைக் கப்பம் கட்டச்செய்தார். ஆனால் அரமேயரின் தாக்குதல் நீடித்திருந்தது. அசீரிய பலம் நாட்டின் நிலைக்கு ஈடு கொடுக்க முடியவில்லை. ஆகையால் அசீரியா தளர்ச்சியுறத் தொடங்கியது. 1100–900–க்கு இடைப்பட்ட காலத்தில் இந்நிலை

தான் அசீரியாவிலும் பாபிலோனிலும் எலாமிலும் நீடித்தது. இந்நிலை தாவீது, சாலமோன் ஆகியோரின்கீழ் இஸ்ராயேலின் முடியாட்சி எழுச்சிக்குச் சாதகமாக இருந்தது.

10–ஆம் நூற்றாண்டின் இறுதியில் அசீரியா படைப்பலத்திலும், பொருளாதாரத்திலும் மீண்டும் வளர்ச்சியுறத் தொடங்கியது. புதிய அசீரிய அரசர்களான இரண்டாம் அசூர்தான் (934–912) 2–ஆம் அதாத்னிராரி (911–891) ஆண்டுதோறும் படையெடுக்கும் முறையைத் தொடங்கி வைத்தனர். இது இக்காலத்தின் பண்பாகியது (காண்க: 2 சாமு 11:1). புதிய அசீரியப் பேரரசு பழைய மேற்காசியாவில் ஆதிக்கம் செலுத்தும் சக்தியாக மாறினாலும் இது உறுதியான நிலையை ஒரு போதும் அடையவில்லை. அரண்மனைச் சதிகளும் வாரிசு உரிமைப் போராட்டங்களும் சர்ச்சைகளும் சாதாரண நிகழ்ச்சிகளாயின. ஒவ்வொரு அரசரும் மாநிலங்களில் கிளர்ச்சிகளை அடக்கவும், அண்டை நாட்டாரின் படையெடுப்பை எதிர்க்கவும் வேண்டியிருந்தது. ஒவ்வொரு அரசரும் மிகுந்த படைப்பலத்தைப் பெருக்குவார், பெரும்பகுதிகளை வென்று அரசை விரிவாக்குவார். ஆனால் அவர் இறப்போடு பேரரசு நசித்துப் போய்விடும்.

இரண்டாம் அசூர்னசிர்ப்பால் (883–859) யூப்பிரத்தீசு பள்ளத்தாக்கில் அரமேயப் படையெடுப்பை நிறுத்தினார். மத்திய தரைக்கடலுக்கு வழி தொடங்கி வைத்தார். கொடுங்கோலன் என்ற படத்தில் பெருமை பாராட்டிக்கொண்டார். வென்ற பகுதிகளிலிருந்து பெரும் கப்பம் கட்டச் செய்து தலைநகர் காலாக்கை மீண்டும் கட்டினார். அவர் மகன் 3–ஆம் சால்மனேசார் (858–824) கர்கேமிசைக் கைப்பற்றினர். பித்–அதினி என்ற அரமேயப் பகுதியைப் பேரரசுக்குள் சேர்த்துக்கொண்டார். ஆனால் அவர் முன்னேற்றத்தைத் தமஸ்குவின் 2–ஆம் பென்–அதாத்தின்கீழ் செயல்பட்ட இஸ்ராயேலின் ஆகாபு அடங்கிய கூட்டணி தடுத்து நிறுத்தியது (காண்க 1 அர 20). 841–இல் இப்போது அரசுரிமையை அபகரித்துக்கொண்ட கெசாயேலின்கீழ் செயல்பட்ட சீரியக் கூட்டணியைப் பழிக்குப்பழி தீர்த்தார். நாட்டுப் புறங்களைக் கொள்ளையடித்தார். இஸ்ராயேலின் ஏகூ உள்ளடங்கிய சீரிய–பாலஸ்தீன கூட்டணியை அடிபணியச்செய்தார். அரசி சம்மூர்மாத்தின் (செமிராமிஸ்) பகர ஆட்சிக்குப்பின் 3–ஆம் அதாத்நிராரி (810–783) தமஸ்குவின் பென்–அதாத்தின் கூட்டணியைக் கலைத்தார். இது யோவாசின்கீழ் இஸ்ராயேலுக்குச் சிறிது ஓய்வளித்தது (2 அர 13:25; காண்க 2 நாள் 24:23–24). 2– ஆம் சால்மனேசர் (782–772) உரத்தியர்களிடமிருந்து நெருக்கடி நிலையிருந்தாலும் தமஸ்குவைக் கட்டுப்பாட்டுள் வைத்திருந்தார். இது 2–ஆம் எரொபயாம் இஸ்ராயேலின் எல்லையை கம்மாத்து வரை நீடிக்க உதவியது (2 அர 14:25–28).

3–ஆம் திகிலாத்து பிலெசேர் (745–727) அரியணையை அபகரித்துக் கொண்டார். அவருக்குப் பின் வந்தவர் அசீரியப்படைப் பலத்தையும், பொருளாதார ஆதிக்கத்தையும் மீண்டும் நிறுவினார். இஸ்ராயேலின் அரசன் மெனகேம் இவருக்குக் கப்பம் கட்டி இவரது ஆதரவைக் கோரினார் (காண்க 2 அர 15:19). தமஸ்குவின் இரசீன், பெக்கா ஆகியோரின் தாக்குதலுக்கு எதிராக ஆகாசின் ஆதரவு கோரும் வேண்டுதலுக்கு இணங்கி (கி.மு. 734; 16:5–9), திலாத்து பிலெசோர் சீரிய பாலஸ்தினத்தின்மேல் படையெடுத்து பரவலாக அழிவை ஏற்படுத்தினார் (15:29). இரு ஆண்டுகளுக்குப் பின் ஓசியாவை இஸ்ராயேலின் அரியணையில் ஏற்றினார் (காண்க: 15:30). பின் எருசலேமின்மேல் படையெடுத்தார் (16:5–6; 2 நாள் 28:17.19–21). சிறிது காலத்திற்குப் பின் கல்தேயாவைக் கைப்பற்றி பூலூ என்ற பட்டத்துடன், தன்னையே பாபிலோனின் அரசனாக்கிக் கொண்டார் (2 அர 15:19; 1 நாள் 5:26). ஓசியா கப்பம் கட்டாததால் சினமுற்று 5–ஆம் சால்மனேசர் (727–722) சமாரியாவை முற்றுகையிட்டு, நகரைக் கைப்பற்றி அதன் மக்களை நாடு கடத்தினார் (கி.மு.722; 2 அர 17:3–6; 18:9–10). அசீரியாவின் கடைசி அரச மரபைத் தொடங்கி வைத்த 2–ஆம் சார்கோனின் (721–705) ஆட்சிக்காலம் முழுவதும் 3–ஆம் திக

லாத்து–பிலெசேரால் ஆட்சி செய்யப்பட்ட பகுதிகளை மீண்டும் கைப்பற்றுவதில் செலவிடப்பட்டது. 10 ஆண்டுகளுக்குப்பின் கல்தேய மர்துக்–அப்லா–இத்தினா (மெரோதாக்–பலதான்)விடம் பாபிலோனை இழந்தார். ஆனால் எகிப்திய ஆதரவு பெற்ற கூட்டணியை கர்காரிலும், அசுதோத்திலும் முறியடித்தார் (காண்க. ஏச 10:5–6.9; 20: 1–6). சனகெரிபுவின் (705–681) காலத்தில் ஓரளவு அமைதியும் நிலையான அமைப்பும் நிலவியது. ஆண்டுதோறும் நடக்கும் போர்கள் நிகழவில்லை. ஆனால் 701–இல் பாபிலோனில் மர்துக்–அப்லா–இத்தினாவும் எருசலேமில் எசக்கியாவும் கிளர்ச்சி செய்தபோது இந்த அமைதி குலைந்தது. இது அசீரியர்கள் எருசலேமை நீண்டகாலத்திற்கு முற்று கையிடுவதற்கு இட்டுச்சென்றது (கி.மு. 701; 2 அர 18:13–19:37; 2 நாள் 31:1–22; ஏச 36–37). பாபிலோனும் அழிக்கப்பட்டது (689). சனகெரிபுவின் மனைவியருள் ஒருத்தி நக்கீயா அல்லது சக்கூத் ஆவாள். இவள் இஸ்ராயேலின் அரசன் ஓசியாவின் மகளாக இருக்கலாம். இவள் வழியாகப்பிறந்த மகன் ஏசர்கத்தோனை சனகெரிபு தன் வாரிசாக நியமித்தார். இது அவரது புதல்வர் களே அவரைக் கொலை செய்வதற்கு இட்டுச் சென்றது ( காண்க: 2 அர 19:37; ஏச 37:38) ஏசர்கத்தோன் (681–669) பாபிலோனின் வாரிசு இளவரசனாக இருந்தார். அப்போது அந்நகரை மீளவும் கட்டி எழுப்பினார். வடக்கிலிருந்து சித்தியர் சிம்மேரியர் ஆகியவர்கள் வழியாக வந்த இடுக்கண் நிலையைச் சமாளித்து இவர் வெற்றிகரமாக எகிப்தின் மேல் படையெடுத்து, பாரவோன் தகார்காவை மெம்பிசில் 671–இல் தோற்கடித்தார் (2 அர 19:9; ஏச 37:9). இவருக்குப்பின் வந்த அசூர்பானிப்பால் (668–626) எகிப்தைத் தொடர்ந்து வெற்றி கண்டு திபிசை அழித்தார். 663–இல் பாரவோன் நெக்கோவைக் கொன்றார் (காண்க: நெக 3:8) அசூர்பானிப்பால் வடக்கிலிருந்தும், மேற்கிலிருந்தும் வந்த தாக்குதல்களில் கவனம் செலுத்தியபோது, இவரால் பாபிலோனின் பொறுப்பு அளிக்கப்பட்ட இவர் சகோதரன் சமாஸ்–சும்–உகின் கிளர்ச்சி செய்தார் (652). இருவருக்கும் இடையே ஏற்பட்ட மோதல்கள் கிளர்ச்சி செய்தவனின் தற்கொலையில் முடிந்தது. இவை அசீரியப் பேரரசை பெரிதும் பலவீனப் படுத்தியது. 612–ல் கல்தேய நபு–அப்லா–உசூருக்கு (நபோபோலாசார்) நினிவே சரண் அடைந்தது. 609–ல் மெகித்தோவில் யோசியாவின் தலையீடும் (2 அர 23:24–30), 605–இல் கர்கேமிசில் பாபிலோனியர்களோடு நடந்த போர்களும், 2–ஆம் நெக்கோவின் தலைமையில் எகிப்திய உதவி 2–ஆம் அசூர்பலித்துக்கு காரானில் வந்தடைவதைத் தடுத்தது. இதோடு அசீரியப்பேரரசு முடிவுக்கு வந்தது. அசீரியா பாபிலோனின் ஒரு மாநிலமாயிற்று.

2. சமயம்:- அசீரிய வரலாற்றின் மாறுபட்டுக்கொண்டிருந்த அரசியல் அமைப்பின் விளைவாக, இப்பகுதியின் சமயமும், கலாச்சாரமும் பாபிலோனிய சமயத்தோடு நெருங்கிய விதத்தில் ஒத்திருக்கிறது. இரண்டும் சுமேரியர்களிடமிருந்து தோன்றியதாகத் தெரிகிறது. அசூர் நாட்டு கடவுளாவார். இவர் பாபிலோனிய மர்துக்குக்கு இணையாவார். இருவரும் சுமேரிய ஏன்லில்லின் வாரிசுகளாகும். அசூர்தான் அரசர்களுக்கு ஆற்றல் அளிப்பவர். அவருக்கே தங்கள் போர்ச் செயல்களை அர்ப்பணித்தனர். மிகப்பெரிய கடவுள்கள் குழுவில், மற்ற முக்கிய கடவுள்கள் சந்திரக் கடவுள் ஆன சின், போருக்கும் காதலுக்கும் கடவுளான இசிதார், போருக்கும் வேட்டையாடுதலுக்கும் காவலான நினுர்தா, ஞானத்திற்கும் இலக்கியத்திற்கும் கடவுளான நபு ஆகியவர்களும் உள்ளடங்குவர். மழை நீரையே நம்பியிருந்ததால் நீருக்கும் வாழ்வுக்கும் அசீரிய சமயம் வானிலை காட்சிகளில் அக்கறை காட்டியது. ஆகவே புயல் கடவுளான அதாத் போன்ற தேவர்கள் முதன்மை பெற்றனர்.

இப்பகுதியில் ஏராளமான கடவுள்களின் சிலைகளும் உருவங்களும் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இவற்றில் அக்கடவுள்கள் வாழ்வதாகக் கருதப்பட்டது. ஆகவே அவர்களைக் கவனிப்பது, சேவை செய்வது பற்றி விரிவான நடைமுறைகள் கொடுக்கப்படுகின்றன. அரசனை சுத்தி செய்யவும் அவனுக்கு வழிகாட்டவும். பல

கடவுள்களின் பெயரால், விரிவான சடங்குகள் அனுசரிக்கப்பட்டன. பாது காக்கிற ஆவிகள், பேய்கள் ஆகியவற்றின் மேல் மிகுந்த கவனம் செலுத்தப்பட்டது. சோதிடத்தையும், விலங்குகளின் ஈரலின் வடிவம், வண்ணம் போன்ற இயற்கை நிகழ்ச்சிகளைக் கவனித்து, விலங்குகளின் நடத்தை, இயற்கைக்கு மாறான பிறப்பு கனவுகள் போன்ற குறிகளையும் பயன் படுத்தி வருவது உணர்ந்து கூறுவதற்குத் தங்களையே அர்ப்பணித்த சிறப்புக் குழுக் கள் இருந்தன.

3. இலக்கியம்:- இப்பகுதிபற்றி கி.பி. 1842–இல் இருந்து அகழ்வாய்வுகள் செய் யப்பட்டுள்ளன. நினிவே (கியுன்யிக்) தூர்–சரூக்கின் (25 கி.மீ. தொலைவில் வட கிழக்கிலுள்ள கொர்சாபாத்) ஆகிய இடங் களில் செய்யப்பட்ட ஆய்வுகளில் அசீரிய இலக்கிய கலாச்சாரம் பற்றிய செய்திகள் அதிகம் கிடைத்துள்ளன. குறிப்பாக. நினி வேயில் கண்டெடுக்கப்பட்டுள்ளன (1345–851). இவர்கள் கி.மு. 3000–க்கு முன்னரே எழுதக் கற்றுக்கொண்டிருந்தனர். இம் முறையை பாபி லோனியர்களிட மிருந்து பெற்றதாகத்தெரிகிறது. இவர்கள் சிறப் பான இலக்கியத்தைத் தோற்றுவித்தனர். இவர்கள் களிமண் பலகை செய்து அதில் நூல்களை எழுதினர். பழங்காலத்தில் ஆப்பு வடி எழுத்தில் எழுதினர். இதோடு சேர்த்து கி.மு. 700–இல் இவர்கள் அரிசுச் சுவடி முறையில் அராபிக் மொழி யில் எழுதலாயினர். அசூர்பானிப்பாலின் நூல் நிலையம் பற்றிய ஆய்வுகள் 26,000 ஆப்பு எழுத்து ஏடுகளையும் கொண் டுள்ளன. இவற்றில் பல்வேறு இலக்கியங் கள் காணப்படுகின்றன. அசீரிய அரசர் கள் எழுத்தர்கள் குழுவைக் கொண்டிருந் தனர். இவர்கள் வியாபார, ஆட்சிப் பதி வேடுகளைக் கவனித்துக் கொண்டதோடு, சுமேரிய, பாபிலோனிய அசீரிய வாசகங் களைப் பாதுகாத்தனர். இவற்றில் மதம், கதைகள், இதிகாசங்கள், அரச நாட் குறிப்புகள், மரபு முறைப்பட்டியல்கள், சடங்குகள், அடையாளங்கள், அவற்றின் பொருள், ஞான இலக்கியங்கள், சட்டத் தொகுப்புகள் சுமேரிய பலவகைப்பட்ட அக்காதிய பிரிவுமொழிகளின் மொழி பெயர்ப்புக்காக அகராதிகள், சொல் தொகுதி, நிகண்டு, பாடத்திட்ட முறைகள் ஆகியவை காணப்படுகின்றன. கணிதம், வானஇயல், மருத்துவம், கண்ணாடி செய்தல் போன்றவற்றில் அசீரிய விஞ் ஞான, தொழில்கள் பற்றிய நூல்களும் காணப்படுகின்றன. இவர்களது சட்டத் தொகுப்பு நூல் கி.மு. 1400–இல் எழுதப் பெற்றதாகும். இவற்றை அகர வரிசைப் படுத்தி அலமாரிகளில் அடுக்கி வைத்த னர். இப்போது ஆங்கில நாட்டுப் பொருட் காட்சி நிலையத்தில் உள்ளன. கலைத் துறையில் இவர்கள் பாபிலோனிய, மேற்கு மெசபொத்தாமியா, சீரிய கலைகளால் பாதிக்கப்பட்டிருந்தாலும் அவர்களையும் மிஞ்சினர். கி.மு. 2000–1000–ல் தனி அசீரிய கலை ஒன்று எழுந்தது. இவர்கள் வெண்கல்லிலும், சுண்ணாம்புக் கல்லிலும் புடைப்புச் சித்திரம் செதுக்கினர். ஆனால் இவர்களுக்கு இயலுறுத்தோற்றம் தெரி யாது. அசீரியர்கள் கட்டடக் கலையிலும் மற்ற கலைகளிலும், சிறந்து விளங்கினர். பல அரசர்கள் அரண்மனைகள், ஆலயங் கள் கட்டுவதிலும் அவற்றை அழகுபடுத்து வதிலும், குறிப்பாகத் தலைநகர்களான அசூர், காலாக், நினிவே ஆகிய நகர் களில் தங்களது ஆற்றலைப் பெரிதும் செலவிட்டுள்ளனர். அரச, பொதுக் கட்ட டங்களில் பெரும் சிலைகளும், அழகு செய்யப்பட்ட சித்திரங்களும் அழகு செய் தன. தலைநகர்களில் பரந்த தாவர, விலங்குப் பூங்காக்கள் அமைக்கப்பட்டன. நிமிரு, சமாரியா, ஆகிய இடங்களில் காணப்படும் தந்தத்தில் செதுக்கப்பட்ட உருவங்களும், கல்உருளை முத்திரை களும், அசீரியாவின் கலைஞர்களின் ஆற்றலைச் சுட்டுகின்றன. இவர்களுடைய கலைப் பொருள்களில் சிறந்தவை அசூர் பானிப்பாலின் காலத்தைச் சேர்ந்தவை யாகும். இவர்கள் பெரிய நகரங்களை அமைத்தனர். அவற்றில் மாடியுடைய கட்டடங்கள் இல்லை. சில அரண்மனை கள் முற்றங்கள் முதலியவற்றுடன் மிகுந்த பரப்பளவு உடையன. அரண்மனையைச் சுற்றி அகழிகள் வெட்டப்பட்டன.

4. கொடியவர்கள்:- இவ்வளவு அறிவி யல், கலாச்சார முன்னேற்றம் அடைந்தி ருந்தாலும், அசீரியர்கள் கொடியக் காட்டு மிராண்டிகளாகக் கருதப்பட்டனர். அதற்

கேற்றவாறு நடந்துகொண்டனர் (காண்க: ஏச 10:12–15). அசீரிய அரசர்கள் தங்களது படைப்பலத்தையும் தோற்கடிக்கப்பட்டவர்களைக்கொடுமையாக நடத்தியது பற்றியும் பெருமை பாராட்டிக்கொண்டனர். கூரிய கம்பங்களில் எதிரிகளைக் கழுவேற்றினர். நகரங்களை எரித்தனர். கொள்ளையிட்டு பெரும் கொள்ளைப் பொருட்களைக் கவர்ந்துசென்றனர். மத்திய, புதிய அசீரிய காலங்கள், தோற்கடிக்கப்பட்ட மக்களை பேரரசின் மற்றொரு பகுதிக்கும், அங் குள்ளவர்களை இங்கும் குடியேற்றி, பரந்த பகுதிகளைத் தங்கள் கட்டுப்பாட்டுக்குள் அடக்கி வைத்திருந்தனர். அதனால் பழைய ஏற்பாட்டில் குறிப்பாக ஆமோஸ், ஓசேயா, ஏசயா, மீக்கா, செப்பனியா, நாகூம் போன்ற இறைவாக்கினார்கள் அசீரியர்களைக் காட்டுமிராண்டிகள் என்றழைத்தார்கள். இவர்களை யாவே தமது மக்களுக்கு ஒழுக்கம் கற்பிக்க ஒரு கருவியாக அடிக்கடி பயன்படுத்தினார். (காண்க: ஏச 10:5; எரே 1:13).

5. தொழில்:- அசீரிய மக்கள் தச்சு வேலை, மண்வேலை, சித்திரத் தையல், நெசவு, உலோக வேலை ஆகியவற்றில் திறமையுள்ளவர்களாயிருந்தனர். இவற்றில் பாபிலோனியரைப் பின்பற்றினர். குழந்தைகள் பொதுவாகப் பெற்றோர் தொழிலையே செய்தனர்.

6. மக்கள்:- இம்மக்களிடையே, அரசினர் தொழிலாளர், பொதுமக்கள், அடிமைகள் என நான்கு பிரிவினர் காணப்பட்டனர். ஆளுநர்கள், புரோகிதர்கள், தளபதிகள் ஆகியோர் அரசினர் வகுப்பைச் சேர்ந்தவர்கள் ஆவர். அடிமைகள் என்போர் அயல் நாட்டிலிருந்து சிறைப்பிடித்துக்கொணரப்பட்டவர்கள்.

பெண்கள் தாழ்வாகக் கருதப்பட்டனர். அரசினர் வகுப்பைச் சேர்ந்தவர்கள் எத்தனை மனைவியர் வேண்டுமானாலும் மணந்து கொள்ளலாம். மற்றவர்கள் ஒரு மனைவியை மட்டுமே மணக்க வேண்டும்.

7. பொருளும் முக்கியத்துவமும்:- விவிலிய வரலாற்றில், ஆசீரியா 200 ஆண்டுகளுக்கு இஸ்ராயேல் வரலாற்றைக் கட்டுப்படுத்தியது எனலாம். இதைத் தவிர, அதன் மறைமுகமான கலாச்சாரப் பாதிப்பு பலவகையிலும் உறுதியாகவும் பாதித்தது. கலாச்சாரத்தில் அசீரியா பாபிலோனைத் தழுவியது என்று முன்பு கூறினோம். அசீரியாதான் பேரரசு முழுவதும் பாபிலோனியக் கலாச்சாரத்தைப் பரப்பியது. அசீரிய அரசர்களின் ஆட்சி பற்றிய ஆண்டுக்குறிப்பு ஏடுகள்தான் இஸ்ராயேல் உட்பட்ட பழங்கால மேற்காசியாவில் கி.மு. 9–7–ஆம் நூற்றாண்டுகளில் நடந்த நிகழ்ச்சிகளுக்குக்காலம் குறிக்க நம்பகமாக, நிலையான ஆதாரமாகும். இந்த ஆட்சி ஏடுகள், பழங்கால அரச ஏடுகளைவிட நயப்படுத்தப்பட்டு, ஒரு புதிய இலக்கியவகையாக உருவெடுத்தது. இக்காலம் பற்றிய, பழைய ஏற்பாட்டு நூல்களைத் தவிர்த்த, ஒரே முக்கியப் புகழ்பெற்ற நூல் தொகுப்பாகும்.

அரசியலைப் பொறுத்தமட்டும், அசீரியர்கள்தான் உலகலாவிய அரசை முதன்முதலில் எய்தியவர்கள். இக் கருத்து அக்காதிய சார்கோனின் காலத்தி லேயே தோன்றுகிறது. அவர்களது போர் படைத்துறைக்கு ஒத்த அரசியல் ஆட்சி முறையையும் கொண்டிருந்தனர் என்றால் அப்பேரரசு வெகுகாலத்திற்கு நிலைத்திருக்கும். ஆனால் படைவலிமையால் பேரரசைக் கட்டிக்காக்க வேண்டியிருந்தது. அவர்கள் கைப்பற்றிய நாட்டினரை எப்படி நடத்தினர் என்று ஏற்கனவே கூறியுள்ளோம். ஆனால் இவர்கள் கொடியவர்களானாலும் பொருட்களும் மனிதர்களும் சுதந்திரமாக பரிமாற்றம் செய்துகொள்ள அனுமதித்தனர். அசீரியப் பேரரசு அப்படியே பாபிலோனியப் பேரரசுடன் சேர்த்துக்கொள்ளப்பட்டது. பிற்காலத்தில் பாரசீகப் பேரரசுக்குள்ளும், அலக்சாந்தரின் பேரரசுக்குள்ளும் சேர்த்துக் கொள்ளப்பட்டது. அலக்சாந்தருக்குப்பின்தான் இப்பேரரசு சிதறிப் பிரிவுபட்டுப் போய் விட்டது. அரசியல் அடிப்படையில் சிதறிப்போனாலும், கலாச்சார ஒருமைப்பாடு நிலைத்தது.

உலகலாவிய அரசு, ஒரே அரசின் கீழ் மக்கள் மிகுந்த அமைதியும், பாதுகாப்பும் அடையலாம் என்ற குறிக்கோள் அலக்சாந்தரிடம் கையளிக்கப்பட்டது. அவரிடமிருந்து உரோமையரிடம் வேருன்றியது.

அசீரியர் செயல்படுத்திய இக்குறிக்கோள் பிற்காலத்தல் பரிசுத்த உரோமையப் பேரரசு, "கிறிஸ்தவ உலகம்" ஆகியவற்றி லும், பிற்காலத்தில் கண்டம் முழுவதை ஒருமை ஆட்சிக்குள் கொண்டு வரும் முயற்சிகளிலும் தோன்றியது. இறையரசு பற்றிய எபிரேய இறைவாக்குக் கருத்து, இந்த இறையரசையே அழித்து விட்டி ருக்கக்கூடிய அசீரியப் பேரரசைக்காணும் வரையும் ஒரு நிலையான வடிவம் எடுக்க வில்லை. நற்செய்தியில் எடுத்தியம்பப் படும் இந்த இறையரசு பற்றிய கருத்து கிறிஸ்துவ விசுவாசத்திற்கு அடிப்படை யானதாகும்.

***அசீர்*** (ASSIR – சிறைப்பட்டவர்)

*1.* லேவியர் குலத்தைச்சேர்ந்த கோரா குவின் புதல்வருள் ஒருவர். (யாத் *6:24*; *1* நாள் *6:22*). இருப்பினும் நாளாகம ஆசிரிய ரின் திருப்பணியாளர் மரபுப்பட்டியலின் படி அசீர், எலியாசாபுவின் மகன் என்றும் தாகாத்தின் தந்தை என்றும் அழைக்கப்படுகின்றார் (*1* நாள் *6:23.37*). கோராகுவின் குலத்தில் இரண்டுபேர் அசீர் என்ற பெயருடன் இருந்தார்கள் என்றோ இந்த இரண்டு மரபு முறைப் பட்டியின் செயற்கை முறையின் விளை வான தவறாகவோ நாம் எடுத்துக் கொள்ள வேண்டும்.

*2.* எலியாவின் மகனும் கோராகுவின் பேரனும் ஆவார் (*1* நாள் *6:23.37*).

***அசீனா*** (ASHNAH – மாற்றம்)

*1.* யூதாவின் அடிவாரத்திலுள்ள செப் பேலாவிலுள்ள ஓர் நகர். எசுத்தாவோல், சோரா ஆகியவற்றோடு கொண்டுள்ள தொடர்பில் கூறப்படுகிறது (யோசு *15:33*). இதன் இடத்தை அடையாளம் காட்டுவது கடினம். அநேகமாக, யூதாவின் கடற் கரையின் சமவெளியின் ஒரத்திலுள்ள அஸ்லின் என்ற கிராமமாக இருக்கலாம் எனக்கருதப்படுகின்றது.

*2.* அதே பகுதியில் ஆனால் இன்னும் தெற்கிலுள்ள ஓர் ஊர் (யோசு *15:43*). இது மரேசாவுக்கு அருகிலும் கெபிரோனுக்கும் இலாக்கீசுக்கும் இடையிலுள்ள இத்னா வாக இருக்கலாம்.

***அசுகூர்*** – (ASHHUR)

கெசிரோனின் மனைவியாயிருந்த எப்பிராத்தா வழியாக, அவர் இறந்தபின், காலேப்புக்குப் பிறந்த மகன். அசுகூர் தெக்கோவாவின் தந்தை அல்லது அதை நிறுவியவர் ஆனார் (*1* நாள் *2:24*). *1* நாள் *4:5–6*–இல் அவரது பிள்ளைகளின் பட்டி யல் தரப்படுகிறது.

***அசுக்கலோன்*** (ASHKELON – இடம்மாறுபவர்)

பெலிஸ்தியருடைய ஐந்து முக்கிய நகரங்களுள் கடற்கரையில் இருந்த ஒரே நகரம் (எரே *47:7*). இது காசாவிற்கு வடக் கே ஏறக்குறைய *19* கி.மீ. தொலைவிலும் அசுதோதுக்குத் தெற்கே *16* கி.மீ. தொலை விலும் இருந்தது.

வரலாறு:- இது நீண்ட, சிறந்த வரலாற் றைக் கொண்டிருந்திருக்கிறது. எகிப்திய பேரரசில் கிளர்ச்சி செய்த நாடுகளில் முதலாவதாக கி.மு. *1850*–ஐச் சேர்ந்த பழித்துரை ஏடுகளில் கொடுக்கப்பட்டுள் ளது. அமர்னா காலத்தில் இந் நகரம் கிளர்ச்சியால் பாதிக்கப்பட்டாலும், எகிப் திற்குப் பிரமாணிக்கமாய் இருந்ததாகச் சொல்லப்படுகிறது (கி.மு. *1375–1350*). *2*–ஆம் பாரவோன் இராம்சேசின் ஆட்சி யில் இந்நகரம் கிளர்ச்சி செய்தது. அவர் திடீரென்று இந்நகரைத்தாக்கி வென்று இந்நகரில் கார்னாக் என்ற இடத்திலுள்ள கோவில் சுவரில் அப்போரின் படத்தை வரைந்து வைத்தார்.

இந்நிலையில் பெலிஸ்தியர்கள் வந் தார்கள். வரலாற்றில் இங்கிருந்து நடந் ததை விவிலியத்தில் பதிவு செய்யப்பட் டுள்ளன. அசுக்கலோனும் அதனைச்சுற்றி யுள்ள நகரங்களும் யோசுவாவால் வெல் லப்படவில்லை (யோசு *13:3*). இருப்பினும், காசாவையும் அசுக்கலோனையும் எக் கரோனையும் யூதா இனத்தவர் பிடித்துக் கொண்டதாக இஸ்ராயேல் பாரம்பரியம் சொல்லுகிறது (நீதி *1:18*). அவைகள் வெல் லப்படவில்லை என்று எழுபது நூல்கள் கூறுகின்றன. நீதிபதிகள், சவுல், தாவீது காலங்களில் அசுக்கலோன் உறுதியாக பெலிஸ்திய நகரமாகத் திகழ்ந்தது (நீதி *14:19*; *1* சாமு *6:17*; *2* சாமு *1:20*). சவுல் இறந்த போது தாவீது புலம்பல் பாடலில்

"காத்திலும் இதை அறிவிக்காதீர்கள். அசுக்கலோனின் தெருக்களிலும் தெரியப் படுத்தாதீர்கள். தெரிந்தால் பெலிஸ்தியரின் புதல்வியர்கள் அகமகிழ்வர்" (2 சாமு 1:20) என்று கூறப்படுகிறது. இது பெலிஸ்தியாவின் கிழக்கு, மேற்குப் பகுதிகளையோ அல்லது முழு நாட்டையோ குறிக்கிறது.

அசீரியருடைய காலம் வரை இதைப் பற்றி வேறெதுவும் சொல்லப்படவில்லை. ஆமோஸ் 1:8 அரசன் மீதும், நாட்டின் மீதும் அதன் அடிமை வியாபாரத்திற்காகத் தண்டனையை முன்னறிவிக்கின்றது (750).

பல வருடங்களுக்கு அசீரியாவுக்கு அடியில் இருந்தது இந்நகரம். நெபுக்கதுனேசாருக்குக் கப்பம் கட்டுவதா இல்லையா என்று இந்நகர மக்கள் தீர்மானிக்க வேண்டிய இடுக்கண் நிலை ஏற்பட்டது. கப்பம்கட்ட மறுத்தபோது, கல்தேய மன்னன் விரைவில் இந்நகரை அழித்தான் (கி.மு. 605; காண்க: எரே 25:20; 47:5–7). செப்பனியாவும் இந்நகரின் அழிவை முன்னறிவித்தபோது இஸ்ராயேல் இந்நகரைக் கைப்பற்றும் என்று இறைவாக்குரைக்கிறார் (செப் 2:4–7).

கிரேக்கப் புவியியல் வல்லுநர் கிலாக்சின்படி இந்நகரம் பாரசீகர் காலத்தில் தீரின் கட்டுப்பாட்டில் இருந்தது. யூதர்கள் இதைப் பகை உணர்வுடன் நோக்கினர் (செக் 9:5). மாமன்னன் அலெக்சாந்தரின் வருகைக்குப்பின் இது கிரேக்கப் பண்பாட்டை ஆர்வத்துடன் அரவணைத்து அறிவியல் களஞ்சியமாகியது. நான்காம் தோலமி எப்பிபானின் ஆட்சியின்கீழ் தோபியாவின் மகனான யோசேப்பு என்ற யூத வரிவசூலிப்பவர் அசுக்கலோனிற்குச் சென்று கப்பத்தைக் கேட்டார். ஆனால் மறுக்கப்பட்டது. இதனால் 20 முக்கிய மானவர்கள் கொல்லப்பட்டார்கள். பொருட்களும் அழிக்கப்பட்டன. ஒரு அழிவும் செய்யாத மக்கபேயருடன் இது சமாதானத்துடன் இருந்தது (1 மக் 10:86; 11:60; 12:33). இக்காலத்தில் குறிப்பிடத்தக்க அளவு யூதர்கள் அதில் வாழ்ந்திருந்தாலும், இது யூத நகரில்லை என்று யூதி 2:28 கூறுகின்றது. பிறகு உரோமையிடம் செய்த முறையீட்டால் இது சுதந்திர நகரமாக்கப்பட்டது. பெரிய ஏரோது, அசுக்கலோனியக்கோவில் ஊழியர்களின் வழிவந்தவன் அல்லது அந்நகரைச் சேர்ந்தவன் என்ற பாரம்பரியம் யூதர்களின் பழித்தூற்று என்று சிலர் கருதுகிறார்கள். ஏரோது அதை கட்டுப்படுத்தாவிட்டாலும் அங்கு பூங்காக்களையும் குளிப்பு அறைகளையும் விலைமதிப்பற்ற அமைப்புகளையும் ஓர் அரண்மனையையும் கட்டியதாகவும் அதை அவன் சகோதரி சலோமேக்குக் கொடுத்ததாகவும் கூறப்படுகின்றது. உரோமைக்கு எதிராகப்போர் எழுந்த பொழுது யூதர்கள் இந்நகரைத் தாக்கி ஒருபகுதியை அழித்தார்கள். புதிய ஏற்பாட்டின் காலத்தில், கிரேக்க மொழிப் பெயர்ச்சிக்கு இது புகழ் பெற்றிருந்தது. அதன் மொழி "அசுக்கலோன் கிரேக்கம்" என்றும் அழைக்கப்பட்டது.

கி.பி. முதல் நூற்றாண்டுகளில் இது ஒரு முக்கிய நகரமாகத் திகழ்ந்தது. கி.பி. 4–ஆம் நூற்றாண்டில் இது கிறிஸ்தவ நாடானது. இங்கு ஓர் ஆயர் இருந்தார். வெற்றி பெற்றுக் கொண்டு வந்த இஸ்லாமியரால் இது "சீரியாவின் மணப்பெண்" என்று அழைக்கப்பட்டது (கி.பி.7–ஆம் நூற்றாண்டு). 1153 வரைச் சிலுவைப் போர்களை எதிர்த்தது. 1187–இல் சாலதீன் இதைவென்று இதன் சுவர்களை இடித்துத் தள்ளினார். முதலாம் ரிச்சர்ட் இதை பழைய நிலைமைக்குக் கொண்டுவர முயற்சித்துச் சிறிது வெற்றிகண்டார். மீதியிருந்தது 1270–இல் சுல்தான் பாய்பாரால் அழிக்கப்பட்டது. அன்றிலிருந்து இன்றுவரை மக்களற்ற இடிபாடுகளுடன் உள்ளது. 1953–இல் நிறுவப்பட்ட இக்கால அசுக்கலோன் பழைய நகரின் அழிவிலிருந்து 1 கி.மீ. தொலைவிலும் உள்ளது.

தொல்பொருள் ஆய்வு:- ஸ்தான்கோப் என்பவர் 1815–இல் முதல் அகழ்வாய்வை நடத்தினார். 1920–22க்கு இடையில் பாலஸ்தீன தொல்பொருள் ஆய்வு நிறுவனம் அகழ்வாய்வு நடத்த உதவியது. அதிலிருந்து. இந்நகரின் வரலாற்றை கி.மு. 1800 வரை தடம் காண அறிஞர்களால் முடிந்தது. பெலிஸ்தியர் குடியேறியதற்குச்

சான்றுகளையும் எரோது கட்டிய சில கட்டடங்களையும், சில சிலைகளையும் கண் டெடுக்க முடிந்தது.

**அசுக்கனாசு** (ASHENAZ – பரவும் தீ)

யாப்பேத்தின் மகனான கோமேரின் மகன் (ஆதி 10:3; 1 நாள் 1:6): அராராத்து, மின்னீ என்ற அரசுகளுடன் சேர்ந்த ஒரு அரசின் பெயராகும் (எரே 51:27). அசீரியா நாட்டு சித்தியர்களும் இவர்களும் ஒன்றே என்பது சரியாக இருப்பதுபோல் தோன்றுகிறது. சித்தியர்கள் கோமேரின் வழித்தோன்றல்களாக இருந்ததால்தான், இவர்கள் சிமிரியர் படையெடுத்தபொழுது அவர்களை உந்தும் ஆற்றலாக விளங்கினர். மன்னாயேர்களோடு சேர்ந்து அசீரியர்களுடன் போரிட்டனர். ஆனால் பிற்பாடு மேதியர், பாரசீகர் ஆகியவர்கள் இவர்களை வென்றனர். பூர்வீக அரசுகளாகிய உரார்து, அசீரியா (கி.மு. 538) வின் வீழ்ச்சிக்கு இவர்கள் கருவியாக இருந்தார்கள்.

**அசுதோது** (ASHODOD – கோட்டை)

பெலிஸ்தியர்களுடைய ஐந்து முக்கிய நகரங்களுள் ஒன்று (யோசு 13:3). கடற்கரைக்கருகிலோ கடற்கரையிலோ உள்ள மூன்று நகரங்களில் வடகோடியில் உள்ளது. காசா, யோப்பாவிற்கு இடையில் கடற்கரையிலிருந்து ஏறக்குறைய 5 கி.மீ. தொலைவில் அசுக்கலோனிற்கு வடக்கே ஏறக்குறை 16 கி.மீ தொலைவிலும் உள்நாட்டில் அமைந்துள்ளது. கிரேக்கத்தில் அசோத்தோஸ் என்றழைக்கப்படுகிறது.

வரலாறு: பூர்வீக அனாக்கியர் என்ற மக்களால் ஒரு காலத்தில் குடியேறப்பட்ட ஒரு பழமையான நகரம் என்று போற்றப்படுகின்றது (யோசு 11:22). இது, இதனைச் சுற்றியிருந்த இடங்களுடன் சேர்ந்து யூதா குலத்திற்கு பங்கீடு செய்யப்பட்டது (யோசு 15:46–47). ஆனால் இது பெலிஸ்தியருடைய கையில் இருந்தது (யோசு 13:1–3). பெலிஸ்தியர்கள், இஸ்ராயேலுடன் போரிட்டபொழுது உடன்படிக்கை பெட்டகத்தைக் கைப்பற்றி, அசுதோத்திலிருந்த தாகோன் கடவுளின் ஆலயத்திற்குக் கொண்டுச் சென்றார்கள். ஆனால் தீயகுறிகளும், கொள்ளைநோயும் தோன்றின. ஆகவே, அதை உடனடியாக காத்திற்குக் கொண்டுச் சென்றனர் (1 சாமு 5:1–8; 6:17). தாவீது பல தடவை பெலிஸ்தியரை வென்றாலும் இந்நகரைக் கைப்பற்ற முடியவில்லை.

ஊசியாவின் காலத்தில்தான் யூதா தன்னுடைய வலிமையின் உச்சநிலையில் இருந்தபொழுது, அசுதோத்தையும் அதைச் சுற்றியிருந்த நகரங்களையும் யூதாவின் அரசன் வென்றார் (2 நாள் 26:6). ஆனால் சிறிது காலத்திற்கே இது நிலவியது.

அசீரியர்கள் படையெடுப்பில், இந்நகரத்தைத் தங்கள் மாகாணம் ஒன்றின் தலைநகராக்கி அதைக்கப்பம் கட்டச் செய்தனர். 712–க்குச் சிறிது காலத்திற்கு முன்பு இரண்டாம் சார்கோனின் ஆட்சியில் இந்நகர மக்கள் குழப்பம் செய்து, விடுதலையடையப் பார்த்தனர். சார்கோன், அந்நாட்டு அரசன் அசூரியை அரச பதவியிலிருந்து நீக்கிவிட்டு, அவருடைய இளைய சகோதரன் அகிமித்தியை அரசானாக்கினார். சார்கோனால் இத்தியர் என்றழைக்கப்பட்ட இவர்கள் இயாமானியின் தலைமையில் கிளர்ச்சியை இன்னும் தொடர்ந்தனர். சினம் மேலீட்டால் சார்கோன் படையெடுத்து அசுதோது, காத்து, அசுதும்மு ஆகியவற்றை வென்றான். இயாமானி எதியோப்பியாவிற்கு ஓடினார். அங்கிருந்து அசீரியாவிற்கு வெளியேற்றப்பட்டார். கிளர்ச்சி செய்தபகுதி அசீரியர்களின் ஒரு மாகாணமாக மாற்றப்பட்டது (ஆமோ 1:8; 3:9). இந்தக் கிளர்ச்சியில் யூதா ஈடுபடக்கூடாது என்று ஏசயா எச்சரித்தார். எகிப்தியர் சதிகளைத் தூண்டிவிடுவர், ஆனால் உண்மையாக உதவி அளிக்க மாட்டார்கள் என்றும் எச்சரித்தார் (ஏச 20:1–6); காண்க. செக் 9:6).

701–இல் இன்னும் அசுதோது அசீரியாவிற்கு பிரமாணிக்கமாயிருந்தது. அது சனேகெரிப்புவுக்கு கப்பம் கட்டி கைம்மாறாக யூதாவின் பல பகுதிகளைப் பெற்றது. அப்பொழுது மித்திந்தி என்பவர் அரசனாக இருந்தார். ஏசர்கதோன்னும் (680–669) அசூர்பானிபாலும் (668–633) எகிப்தை எதிர்த்துப் போரிட்டபொழுது (671–667) அசுதோத்தின் அரசனான அசி

மல்கியிடமிருந்து (அநேகமாக மித்தின்தி லின் வாரிசு) கப்பத்தை வாங்கிக் கொண்டுச்சென்றனர். இதன்பிறகு எகிப் தில் புதிய வலிமை வாய்ந்த முதலாம் சாம்டிக் (663–610) என்ற அரசன் தோன்றி னார். இவர் அசுதோத்தை 29 ஆண்டு கள் முற்றுகையிட்டு கைப்பற்றினார். இது வரலாற்றிலேயே மிக நீண்ட முற்றுகை என்று எரோதோத்தோஸ் கூறுகின்றார். அநேகமாக இச்சமயத்தில்தான் சித்தியர் கள் அவர்களுடைய பங்கை எடுத்துக் கொண்டார்கள் (செப் 2:4; எரோ 25:20). பிறகு அநேகமாக இன்னும் இருந்து கொண்டிருந்த எகிப்திய ஆதிக்கத்தால் கல்தேயர்களுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்தது. மற்ற அரசர்களோடு சேர்ந்து அசுதோதின் அரசனும் கல்தேய நாட்டு அரசவையில் கைதியாக இருந்தார் என்று நெபுக்கதுனேசாரின் பிற்காலக் குறிப்பு களில் ஒன்று கூறுகிறது.

இவ்வளவு துன்பங்களுக்கிடையிலும் பாரசீகர் காலத்தில் பெலிஸ்திய நாடு களிலே அசுதோது வலிமை வாய்ந்ததாக வும் பெரும்பகுதிகளை தன் கட்டுப் பாட் டுக்குள் கொண்டதாகவும் பண்பாட்டுத் தொடர்புகளால் யூதர்களுக்கு ஓர் அச் சுறுத்தும் நாடாகவும் இருந்தது (நெக 9:7; 13:23–24; செக் 9:6; யூதி 2:28) மக்கபேயர்கள் ஆட்சிக்காலத்தில் இது ஒன்றன்பின் ஒன்றான தாக்குதல்களால் யூதா (1 மக் 9:15; 5:68) யோனத்தான் (10:77–85; 11:4) யோ வான் இரிக்கானு ஆகியோரால் அழிக்கப் பட்டது. யோனத்தான் யூதாவின் கொள் கையைப்பின்பற்றி நகரிலிருந்து புற இன வழிபாட்டை அகற்றினார் (1 மக் 10:84). 16:10–இன்படி யோவான் இரிகானு நகரை எரித்து அழித்தார் (நெக 13:23–24). 1 மக் 14:34–இல் காசாரா (கெசேர்) அசு தோத்தின் எல்லைப்புறத்தில் குறிப்பிடப் படுகிறது. ஆனால் இந்த இடங்கள் 24 கி.மீ. அப்பால் உள்ளன. அநேகமாக இது பாரசீகர் காலத்திலிருந்த பரந்த அசு தோத்தைக் குறிக்கலாம் (நெக 13:23–24). அலக்சாந்தர் யன்னேயு காலத்தில் இது யூதர்களுடைய ஆளுகையின் கீழ் இருந்தது. பாம்ப்பே இதை விடுவித்து (கி.மு. 63), சீரியாவின் ஒரு பகுதியாக்கினார். ஆளுநர் கபீனசின்கீழ் (கி.மு. 57–55) இந்நகரம் மீண்டும் கட்டப்பட்டு, குடியேற்றப்பட்டு உரோமை நகராக்கப்பட்டது. அப்போது அது அசோத்து என்றழைக்கப்பட்டது. ஏரோது இதைக்கட்டுப்படுத்தி, தன்னு டைய சகோதரி சலோமேக்கு அளிப்பித் தார். நற்செய்தியைப்பரப்பிய பிலிப்பு காசாவிற்கு அருகில் எத்தியோப்பிய அண்ணகருக்கு ஞானஸ்நானம் கொடுத்த பின்பு, போதித்துக்கொண்டு செசரியா விற்குச் செல்லும் வழியில் இந்நகரைக் கடந்துசென்றார். இவ்வாறாக பல பெலி ஸ்திய நகரங்கள் முதன்முறையாக நற் செய்தியைக்கேட்டன (அ.ப. 8:40). கி.பி. 66–70–இல் உரோமையருக்கு எதிராக எழுந்த கிளர்ச்சிக் காலத்தில், இந்நகரில் யூத ஆதிக்கம் இருந்ததால் வெஸ்பாசியன் அதற்கு எதிராகப் படையெடுத்து, அங்கு ஒரு படைப்பிரிவை நிறுத்தி வைத்தார். 4–ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இது ஒரு முக்கியமான நகரமாக இருந்ததென்று யுசேபியஸ் கூறுகின்றார். 4 முதல் 6–ஆம் நூற்றாண்டுவரை இது கிறிஸ்தவ ஆயர்களைக் கொண்டிருந்தது. இடைக்காலங்களில் இது அழிந்து இப் பொழுது ஒரு சிறிய கிராமமாக மட்டும் உள்ளது.

தொல்பொருள் ஆராய்வு:- 1962–1969–க்கு இடையில் பரந்த தொல்பொருள் அகழ்வாய்வுகள் நடந்துள்ளன. இங்கு எடுக்கப்பட்ட தொல்பொருள்களிலும் பழைய ஏடுகளிலும், கல்வெட்டுக்களிலு மிருந்து கிடைக்கும் செய்திகளும் சேர்ந்து, இந் நகரின் வரலாற்றை ஓரளவு முழுமை யாகத் தரவல்லன.

அசுதோத்தின் வரலாறு கி.மு. 17–ஆம் நூற்றாண்டில் தொடங்குகிறது. அப் போது அது 7 ஹெக்டேர் நிலப்பரப்பில் ஒரு கோட்டைப் பாதுகாப்புடன் கூடிய நகரமாக நிறுவப்பட்டது. பிறகு இதைக் கானானியர்கள் வியாபார மையமாக விருத்தி செய்தனர். ஆனால் 13–ஆம் நூற் றாண்டின் பிற்பகுதியில் அழிக்கப்பட்டது. இதில் கடலைச் சார்ந்த மக்கள் சிறிது காலத்திற்குக் குடியேறியிருந்ததாகத் தெரி கிறது. 12–ஆம் நூற்றாண்டில் இங்கு பெலிஸ்தியர் குடியேறினர். அகழ்வுகளி லிருந்து எடுக்கப்பட்ட பெலிஸ்தியர்களின் பாண்டங்களின் தொகுப்பு, இஸ்ராயேலும்

யூதாவும் தாழ்வுற்ற காலத்தில், இந்நகரம் பெரிதும் விரிவடைந்திருக்கவேண்டும் என்று காட்டுகிறது. பெண் தேவதை வடிவிலுள்ள ஒரு அரியணை பெலிஸ்தியரின் அகியன் தோற்றத்தைச் சு ட்டலாம். நான்கு அடுக்குச் சாம்பல் மட்டங்கள் யூதாவின் ஊசியா, அசீரியாவின் இரண்டாம் சார்கோன், எகிப்தின் முதலாம் சம்டிக், பாபிலோனின் நெபுக்கதுனேசார் ஆகியோரால் நகரம் அழிக்கப்பட்டதைக் காட்டலாம்.

பெரிய கட்டடங்களின் அமைப்பும், பல்வேறுபட்ட கைவினைப் பொருட்களும் கிரேக்க உரோமையர் காலத்தில் இந்நகரம் மிகவும் செழிப்புற்றிருக்க வேண்டும் என்று காட்டுகின்றன. இந்நகரின் அருகில் கண்டெடுக்கப்பட்ட ஒரு நாணயம் யோவான் இரிக்கானவின் படையெடுப்பு கி.மு. *114*–க்குப்பின் நடந்திருக்க வேண்டும் என்று காட்டுகின்றது.

*1948*–வரைக் கைவிடப்பட்டு அருகிலுள்ள குன்றின் மேலுள்ள ஒரு ஊர் இப்போது இஸ்தூது என்றழைக்கப்படுகிறது. 5 கி.மீ. தொலைவிலுள்ள பழைய நகரம் இருந்த இடம் இப்போது மினெத்–ஏல்–காலா என்றழைக்கப்படுகிறது.

**அசுபா** (AZUBA – கைவிடப்பட்டவர்)

*1.* அசுபா என்பவள் அரசன் யோசபாத்தின் தாயும் சில்கியின் மகளும் ஆவாள் (*1* அர *22:42*; *2* நாள் *20:31*).

*2.* அசுபா கெசிரோனின் மகனான காலேபின் மனைவியாவாள். இவளுக்கு ஏசேர், சோபாபு, அருதோன் ஆகிய மூன்று புதல்வர்கள் பிறந்தனர் (*1* நாள் *2:18–19*).

**அசுபேல், அசுபேலியர்**
(ASHBEL, ASHBELITES – குற்றம் கூறுதல்)

பென்யாமினின் புதல்வர்களுள் ஒருவர். இரண்டாம் (*1* நாள் *8:1*) அல்லது மூன்றாம் மகனாக (ஆதி *46:2*) பட்டியலில் குறிக்கப்படுகிறார். இவர் அசுபேலியர்களின் மூதாதையர் எனப்படுகிறார் (எண் *26:35*). *1* நாள் *7:6*, இவர், "இறைவனுக்குத் தெரிந்தவர்" என்ற பொருள்படும் எதியேல் என்ற பெயரால் குறிக்கப்படுகிறார். இது அசுபேல் என்ற பெயரின் புற இனப் பொருளைத்தவிர்ப்பதற்காக இருக்கலாம்.

**அசுமதேயு** (ASHMODEUS – அழிப்பவன்)

தோபித்து நூலில் இது முக்கியமான இடத்ததை வகிக்கிற தீய ஆவியாகும். இது சாராவின் மேல் கொண்ட காதலால் அவளுடைய ஏழு கணவர்களை முதலிரவில் கொலை செய்கிறது (மாற் *12:20–22* இதைக் குறிப்பதாக இருக்கலாம்). இரபேல் வானதூதரின் உதவியால், தோபியா இதை விரட்டிவிட்டு, மணப்பெண்ணை அடைகின்றார் (தோபி *6:15–18*; *8:3*).

பிற்கால யூதப்பாராம்பரியங்களில் "அலகைகளின் அரசன்" என்றும் இதுசில சமயங்களில் பேல்செபூல் (மாற் *3:22*) என்றும் அபிதோன் (யோபு *31:12*) என்றும் அப்பொல்லியோன் (திருவெளி *9:11*) என்றும் கருதப்பட்ட ஒரு அசுத்தப்பிறவி. தால்முதில் சாலமோனைச் சாந்த நிகழ்ச்சிகளில் இது அடிக்கடி தோன்றுகிறது. இலக்கியங்களில் திருமண பிணக்குகளைக் குறிக்கின்ற அடையாளமாகிறது.

**அசூரிம்** (ASSHURIM – செல்வந்தர், படிகள்)

ஆபிரகாம்–கெத்தூரா ஆகியோரிலிருந்து தெதான் அல்லது யொக்கிசான் வழியாகத் தோன்றிய இனமாகும். இதைவிட அதிகமாக இவர்களைப் பற்றிக் கூற முடியாது.

சில விளக்கவுரையாளர்கள் ஆதி *25:18*–இன் அடிப்படையில் அசீரியர்களோடு தொடர்புடையவர்கள் என்று கருதினாலும், இவர்கள் ஓர் அராபிய இனத்தவர்களாக இருக்கலாம். இவர்களை அசீரியர்களோடு குழப்பாதிருத்தல் நல்லது.

**அசூரியர்** (ASHURITES)

இசிபோசத்து ஆட்சியின் ஒருபகுதியாகச் சொல்லப்பட்டுள்ள வடக்கு இஸ்ராயேலில் கிலயாத்து, இசிரியேல் ஆகிய வற்றுக்கிடையில் வாழ்ந்த மக்கள் (*2* சாமு *2:9*). யோசு *12:5*–இல் இவர்கள் கெசூரியர் என்று அழைக்கப்படுகின்றனர் ஆனால் 'கெசூர்' ஓர் சுதந்திரமடைந்த அரசு (*2* சாமு *3:3*; *13:37*). ஒருவேளை இவர்கள் 'அசேரியர்களாக' இருக்கலாம். ஏனெனில் ஆசேர் என்பது ஆசேர், செபுலோன், நப்தாலி ஆகிய இனத்தவர்களைக் குறிக்கும், குழுப் பெயராகும்.

**அசூர்** (ASSHUR) – ஆள்

சேமீன் புதல்வருள் ஒருவர். அசீரிய ருடைய குலப்பெயர் முதல்வர் ஆவார் (ஆதி 10:22; 1 நாள் 1:17).

**அசூர்** (ASSHUR) – தேவதை

அசீரியா நாட்டு அனைத்துக் கடவுள் குழுவின் ஆலயத்திலுள்ள முதன்மையான கடவுள். இப்பெயரில் இருந்தே அசூர் நகரமும், அசீரியா, அசீரியர்கள் என்ற பெயர்கள் தோன்றுகின்றன. விவிலியத்தில் இப்பெயர் ஆட்களின் பெயர்களில் பகுதியாகத் தோன்றுகின்றது. உதாரணமாக ஏசர்கத்தோன் "ஆசூர் (சகோதரனை (களைக்) கொடுத்திருக்கிறார்"), அசூர் பானிப்பால்.

**அசூர்** (ASSHUR) – இடம்

1. அசீரியாவின் ஒருநகரம். ஒரு காலத்தில் தலைநகரமாகத் திகழ்ந்தது. அசீரியாவின் (எச 27:23) நிலம் முழுவதும் வடக்கு ஈராக்கில் திகிரிசுக் கரையில் அமைந்திருந்தது. அசூர், காலாகு, நினிவே, தூர்–சருக்கின் ஆகியவை வெவ்வேறு காலங்களில் அசீரியாவின் தலைநகரங்களாக இருந்தன. இந்நகரம் (இன்றைய காலாத்சர்காத்) செர்மானியர்களால் தோண்டிஎடுக்கப்பட்டது. பல முக்கியமான ஏடுகள், அசூர், இசிதார் ஆகியோருக்கு அர்ப்பணிக்கப்பட்ட ஆலயங்கள், கோட்டைகள், அரண்மனைகள் நினைவுச் சின்னங்கள் ஆகியவை கிடைத்திருக்கின்றன.

எச 27:23–இல் இந்த நகரமோ நாடோ குறிப்பிடப்படலாம். திரிபு வாசகங்களில் காணப்படும் ஆராம் (சீரியா) சூழ்நிலைக்குப் பொருத்தமாக இருக்கலாம். பிலயாமின் இறைவாக்கிலுள்ள (எண் 24:22.24) அசூர் அநேகமாக அசீரியா நாடாகும்; ஏனென்றில் இச்சொல் சாதாரணமாக அசீரியா என்று மொழி பெயர்க்கப்படுகிறது.

2. அசீரியாவுக்கு அதன் மக்களுக்கும் உரிய மற்றொரு பெயராகும் (எண் 24:22. 24; ஓசே 14:13).

**அசூர்** (AZZHUR–உதவி பெற்றவர்)

1. இவர் மக்களின் ஒரு தலைவராவார். நெகமியா ஆளுநராக இருந்தபோது உடன்படிக்கையில் கையொப்பமிட்டவர்களில் இவரும் ஒருவர் (நெக 10:17).

2. கிபயோனிலிருந்து வந்த போலி இறைவாக்கினர் கெனனியாவின் தந்தை அசூர் ஆவார் (எரே 28:1).

3. இவர் எசக்கியேலுக்கு சமகாலத்தவரான யாசானியாவின் தந்தை (எச 11:1).

**அசூர்பானிப்பால்** (ASHURBANIPAL– அசூர் வாரிசு படைத்தவர்)

அசீரியாவின் அரசன் (668–629) ஏசர்கதோனின் மகன். இவர் அசீரியாவின் மாமன்னர்களில் கடைசியானவர். பாபிலோனிய அரசனும் தன் சகோதரனுமான சமஸ்சுமுக்கின் தலைமையில் கூட்டுச் சேர்ந்து தன்னை எதிர்த்த அரசர்களுடன் செய்த நீண்ட போர்தான் இவர் ஆட்சியில் நடந்த மிகமுக்கிய நிகழ்ச்சியாகும். தன்னுடைய ஆட்சியின் தொடக்க ஆண்டுகளில் அவர் தந்தை எகிப்தியருக்கு எதிராகக் கொண்டிருந்த கொள்கைகளையே இவரும் பின்பற்றினார். கி.மு. 663–இல் மெம்பிசைக் கடந்தும் திபிசை அழித்தும் வெற்றிகண்டார். கி.மு.652–ல் தன்னுடைய சகோதரனுக்கு எதிராக எழ சரியான நேரம் வந்துவிட்டது என்று சமஸ்சுமுக்கின் நினைத்தார். பாபிலோனியாவின் தலைநகர் வலிமைவாய்ந்த ஆசிரியா படைகளால் சூழப்பட்டிருந்தும், தன் கூட்டாளிகளான எலாமியர் உதவியும், கல்தேயருடைய படைகளும் அராபியர்களுடைய படைகளும் பயனற்றவை எனறு அறிந்திருந்தும், ஏன் படையெடுத்தார் ஏன்று தெரியவில்லை. ஊர், ஊரூக் ஆகிய முக்கிய நகரங்களை சமஸ்சுமுக்கின் கைப்பற்றத் தவறினார். எலாமியருடையபடை அசீரியர்களால் தோற்கடிக்கப்பட்டது. அதனால் பாபிலோனியர்கள் பாதுகாப்புப் பேரில் இறங்கினார்கள். ஆனால் அது அவரது அழிவிற்கு இட்டுச் சென்றது. 650–இல் அசீரியர்கள் எலாமியர்களையும், கல்தேயர்களையம் கைப்பற்றினர். அராபிய படை தோற்கடிக்கப்பட்டு பாபிலோனுக்கு ஓடியது. அசீரிய படை பாபிலோனை முற்றுகையிட்டது. இந்த முற்றுகை இரண்டு ஆண்டுகள் தொடர்ந்தது. பஞ்சம்வேறு வந்ததால் பாபிலோனியப்படை தோற்றது (648).

அசூர்பானிப்பால் அராபியர்களையும் ஏலாமியரையும் தண்டித்து சூசாவை அழித்தார். இவர் 629 வரை ஆண்டாலும் இவரது பிற்கால ஆட்சி குழப்பமிக்கதாய் அமைந்திருந்தது. அதுபற்றி செய்திகள் கிடைக்கவில்லை. இந்த இருட்டடிப்பை விளக்குவது கடினம். திடீரென்று அவருடைய மகன் சின்சாரிஸ்குன் என்பவரின் (627–612) ஆட்சியில் அசீரியா அரசு சிதைந்துவிட்டது. பாபிலோனிய நபோபோலாசாரிடம் சரண் அடைந்தது. பேரரசின் வடக்கு, கிழக்குப் பகுதிகள் சுதந்திரம் அடைந்தன. 612–ல், மேதியர்களால் இதன் தலைநகரான நினிவே அழிக்கப்பட்டது.

மேலும் இவர் எப்போதும் போர்ச் செயல்களில் ஈடுபட்டிருந்தாலும், ஒரு செழிப்பான பண்பாட்டு மரபுரிமையை விட்டுச் சென்றுள்ளார். நினிவேயிலுள்ள அவரது அரண்மனையிலும், ஆலயத்திலும், மற்ற நகரங்களிலுள்ள பொதுக் கட்டடங்களிலும் காணப்படும் சித்திரங்களும் சிலைகளும் அசீரியக் கலைக்குச் சாட்சியாகின்றன. நினிவேயிலிருந்த இந்த அரசரின் நூலகம் அசீரிய அரசர்களிலேயே அசூர்பானிப்பால் ஒருவர் மட்டும் மிகுந்த படிப்பாற்றல் கொண்டிருந்தார் எனக் காட்டுகின்றது. இவர் ஒரு பெரிய எழுத்தாளர் குழுவுக்கு ஆதரவு அளித்தார். இவர்கள் சுமேரிய, அக்காதிய இலக்கியச் சொத்துக்களைப் பாதுகாத்தனர். இவரது நூல் நிலையத்தைச் சேர்ந்த ஏறக்குறைய 30,000 வாசகங்கள் தோண்டி எடுக்கப்பட்டன. இதன் ஒரு பகுதி இப்பொழுது தோண்டி எடுக்கப்பட்டு பிரித்தானிய பொருட்காட்சியில் வைக்கப்பட்டுள்ளது. இது இவருடைய அழியாத ஞாபகச் சின்னமாகத் திகழ்கிறது.

**அசூர்னசிர்ப்பால்** (ASSURNASIRPAL)

இரண்டாம் அசூர்னசிர்ப்பால் (கி.மு. 883–859) அசீரியாவின் அரசனாவார். இவர் இரண்டாம் திலுக்தி–நினுர்தாத்தின் மகன். கார்கேமிசையும் பித்–அதினீ என்ற பலம் வாய்ந்த அரமேய நாட்டையும் வென்றபின் (868) இவர் மத்தியதரைக் கடலுக்கு ஒரு வழியை உண்டாக்கினார். தோற்கடிக்கப்பட்டவர்களை இவர் கொடுமையாக நடத்தியதால் இவர் கொடுங்கோலன் என்ற பெயர் பெற்றார். ஆனால் ஒரு பலம் வாய்ந்த ஆட்சியை நிறுவுவதில் வெற்றி பெற்றார். இவர் மாநில ஆட்சிகளுக்கு மதிப்புக் கொடுத்துச் செயல்பட்டார். முற்றுகை ஆயுதங்களை விருத்தி செய்தார். காலாகுவின்மேல் புதிய தலைநகரைக் (நிம்ரூத்) கட்டினார் (ஆதி 10:11).

**அசேரா** (ASHERAH)

ஓர் எமோரிய அல்லது கானானிய பெண் தெய்வத்தினுடையவும் அவளுக்கு அர்ப்பணிக்கப்பட்ட வழிபாட்டுக்கும் உரிய பெயரே இது. தொடக்கக்காலப் பாபிலோனியரின் முக்கிய கடவுள்களில் ஒன்றான அமுரூவின் துணைவியான அஸ்ராத்துமோடு இது ஒன்றாய் இருக்கலாம். உகரித்து புராணங்களில் தெய்வங்களின் தந்தைக் கடவுளான 'ஏல்' என்பவரின் துணைவியாகக் காட்டப்படுகிறாள் இப்பெண் தெய்வம். "பாகால்" தெய்வத்தின் புராணத்தில் ஆசேரா பல பூதகணங்களைப் பெற்றுத் தருவதாகவும் அவை பாகால் தெய்வத்தை விழுங்கி பாகால் தெய்வத்துக்காக எழுப்பப்படும் அரண்மனையைக் கட்டவிடாமல் தடுப்பதாகவும் கூறப்படுகிறது. இவளுக்கு "கடலின் தலைவி அசேரா" என்ற பெயரும் உண்டு. இவள் தாய் தெய்வமாவாள். கானானியர் பாலின விருத்தித்தேவதை அசித்தார்தியாவிலிருந்து வேறுபட்டவள். இவளை வழிபட்ட மேற்காசிய நாடுகளில் பெனிசியா சிறப்புப் பெற்றதாகும்.

பழைய ஏற்பாட்டில் இப்பெண் தெய்வம் பாகாலின் துணைவியாகவே தோன்றுகிறாள். பொதுவாக இது ஒரு வழிபாட்டுப் பொருளாகவே பார்க்கப்படுகிறது. அது மரத்தாலான ஒன்றாகவோ, கம்பமாகவோ, தோட்டமாகவோ இருக்கலாம். ஏனெனில் இதனை நட்டு வைக்கவோ, வெட்டி எறியவோ கூடிய தெனக் கூறுகின்றனர்.

வாக்களிக்கப்பட்ட நாட்டில் குடியேறியவுடன் அசேராவை இஸ்ராயேலர் வணங்க ஆரம்பித்தனர். இந்தப் பிரமாணிக்க மின்மைக்காக இறைவன் அவர்களைத் தண்டிக்க வேண்டியிருந்தது (நீதி 3:7–8) கோரேபு மலையிலும் (யாத் 34:13–14),

பிற்பாடும் (உப 7:5) கூறப்பட்ட இறைவனது எச்சரிக்கைளுக்கு அவர்கள் செவிசாய்க்க வில்லை.

பாகாலின் பலிப்பீடத்துடன் இது காட்சியளிப்பதாக, கிதயோனின் வீட்டுப் பொருள்களுடன் இருந்ததாகக் கூறப்படு கிறது (நீதி 6:25 தொ). இரகபெயாமின் ஆட்சிக் காலத்திலும் (1 அர 14:23) ஆசா (1 அர 15:13), ஆகாபு (1 அர 16:33), யோவாசு (2 அர 13:6), மனாசே (2 அர 21:7) ஆகி யோர் ஆட்சிக்காலத்தில் எல்லாம் இப் பெண் தெய்வ வழிபாடு இருந்திருக்கு மெனத்தெரிகிறது. அரசன் ஆகாபுபெனி சிய இளவரசி ஈசபேலை மணந்தபின் அசேராவின் வழிபாடு, பாகாலின் வழி பாட்டோடு சேர்ந்து, அதிகம் வளர்ந்தது. இறைவாக்கினர் எலியா, இதை எதிர்த் துப்போராட வேண்டியிருந்தது. சாமாரி யா இவ்வழிபாட்டின் மையமாகத் திகழ்ந் தது (2 அர 13:6). இஸ்ராயேலரின் இந்த வழிபாடு அசீரியாவுக்கு நாடு கடத்தலுக்கு ஒரு காரணமாயிற்று (17:10.16). இவ்வழி பாடு யூதா நாட்டிலும் பரவியிருந்தது. சாலமோனின் மகன் இரகபெயாம் தமது அரசில் இந்த வழிபாட்டை ஊக்குவித் திருந்தார் (1 அர 14:23). தாய் அரசியான மாக்கா யூதாவில் அசேராவின் சிலையை வைத்திருந்தாள். அதை அவளது பேரன் ஆசா கிதரோன் ஓடையில் அழித்தார் (15:13; 2 நாள் 15:16). யோசபாத்து (2 நாள் 18:4) எசக்கியா (2 அர 18:5) போன்ற அரசர்கள் சீர்திருத்த முயன்றாலும், யூதா வைச் சேர்ந்தவர்கள் தங்கள் வழிபாட்டு முறையை மாற்றிக்கொள்ளவில்லை. மனாசே எருசலேம் ஆலயத்தில் அசேரா வின் சிலையையும் தொங்கல்களையும் நிறுவியிருந்தார் (2 அர 21:7; காண்க: 2 நாள் 33:3.19). அரசன் யோசியா தனது சீர்திருத்த முயற்சியில் ஆலயத்தில் அவன் தந்தை வைத்த அசேராவின் பொருட் களையெல்லாம் அழித்தார் (2 அர 23:4.7; 2 நாள் 34:3.7). யோசியாவுக்குப்பின் வந்த அரசர்கள் ஆண்டவருக்குப் பிரமாணிக்க மாக இருக்கவில்லை. இந்த அசேரா வழி பாடு தான் பாபிலோனுக்கு நாடு கடத் தப்படுதலுக்கு வித்திட்டது (ஏச 27:9; எரே 17:1 தொ; மீக் 5:14). ஏசயா இக்காலத்தை மக்கள் மனிதன் செய்த வழிபாட்டுப் பொருட்களை விட்டுவிட்டு, படைத்தவ ரைப்போற்றும் காலத்தோடு ஒப்பிட்டு வேறுபடுத்துகிறார் (ஏச 17:8).

அவர்கள் வழிபட்ட பொருள் ஒரு மரத் துண்டில் அந்தத் தெய்வத்தில் உருவம் பொறிக்கப்பட்டோ அல்லது அதன் வடிவம் செதுக்கப்பட்டோ இருந்திருக்க வேண்டும். இஸ்ராயேலில் இத்தெய்வம் அனாத்து, அசித்தார்த்தி, இசிதார் போன்ற பலரின் உருவங்களில் இருந்து வந்தது. இவற்றின் பயன் என்னவெனில் மக்கள் செல்வம் பெருகவேண்டும் என்னும் எண்ணத்திற்கான வழிபாட்டில் பெரிதும் ஈடுபடுத்தப்பட்டனர். இது போன்ற பல மூடநம்பிக்கைகள் இஸ்ரா யேலில் இருந்தது என்பது இதன்மூலம் தெரிகிறது.

**அசோத்து** (AZOTUS)

அசுதோது என்ற பெயரின் கிரேக்க வடிவம்.

**அசோப்பரத்து** (HASSOPHERETH – எழுத்தர்)

செருபாபேலோடு நாடு கடத்தலிலி ருந்து திரும்பிய "சாலமோனின் ஊழியர் கள்" என்றழைக்கப்பட்ட ஒரு குடும்பத்தின் அல்லது குழுவின் தலைவர் (எஸ் 2:55). காண்க: சோப்பரத்து.

**அச்சம்** (FEAR)

மறை நூலில் பயன்படுத்தப்பட்டுள்ள இந்த சொல்லுக்குப் பலபொருள் உண்டு. தவிர்க்க முடியாத ஆபத்தால் எழும் பயம், தெரிந்தோ தெரியாமலோ வரும் ஆபத் தால் வரும் பயம், சந்தேகத்தால் ஏற்படும் பயம் என பலபொருள் உண்டு. இச் சொல் உலக வழக்கிலும் ஆன்மீக வழக்கி லும் பயன்படுத்தப்படுகிறது. தூயவரும் உன்ன தருமான கடவுளை நோக்கி இருக் கும்போது எழும் உணர்ச்சியைக் கடவுள் பயம் என்று குறிப்பிடுகின்றனர். இந்த உணர்ச்சி மதிப்பு, மரியாதை, பயம், ஆரா தனை, விசுவாசம், நம்பிக்கை ஆகிய உணர்வுகளைத் தூண்டுகிறது. இது விவிலியத்தில் மட்டுமல்ல, அண்டை மேற் காசிய நாடுகளின் பல இலக்கியங்களிலும் இந்தக் கருத்து காணப்படுகிறது.

1. புதிய ஏற்பாட்டைவிட பழைய ஏற் பாட்டில் இச்சொல் அதிகமாக பயன்

படுத்தப்பட்டுள்ளது. 'அஞ்சினர்' என்ற சொல்லை எபிரேயத்தில் நாம் அடிக்கடி காண்கிறோம் (யோனா 1:10; பழ 1:7; சங் 19:9; 130:4; யோபு 13:11). இது ஓர் உள்ளார்ந்த ஆழ்ந்த உணர்ச்சியைக் குறிக்கும் (ஆதி 15:2; எரே 8:15; 6:25; ஆதி 35:5). கிரேக்கத்திலே இதற்கு மரியாதை பக்தி என்ற பொருள்படும் வார்த்தையைப் பயன்படுத்தியுள்ளனர் (எச 11:2; பழ 1:7; ஆதி 15:12). கோழைத்தனம், பயம் என்ற வார்த்தைகளும் பயன்படுத்தப்பட்டுள்ளன (சங் 54:4). 'பயத்தால் பாதிக்கப்பட்ட', 'நடுக்கம்' 'அச்சம் மேலிட' போன்ற தொடர்களை நாம் புதிய ஏற்பாட்டில் காண்கிறோம் (மத் 10:31; மாற் 4:14; உரோ 13:7; எபி 12:28; 2 திமோ 1:7; யோவா 14:27). விவிலியத்தில் கவலைப்படுவதிலிருந்து அச்சம் வேறுபடுத்தப்படுகிறது.

2. பழைய ஏற்பாட்டில் சமயச் சார் பற்றச் சூழ்நிலையில் மிருகங்களும் மனிதர்களுக்கு அஞ்சி நடுங்குவனவாக என்றும் (ஆதி 9:2), வேறு சில அஞ்சுவதில்லை என்றும் (யோபு 39:16; 41:33) கூறப்பட்டுள்ளது. இயற்கைகூட அஞ்சுவதாகக் கூறப்படுகிறது (சங் 76:8). அழிவைக் கண்டு மனிதர் பொதுவாக அஞ்சினர்.

அ) உலகு சார்ந்த அச்சம்:- தன்பாதுகாப்பிற்கு, குறிப்பாக உயிருக்கு எதிராக ஆபத்து வரும் போது மனிதன் பயந்தான் (ஆதி 4:14; 32:7; 46:3; எண் 14:9; ஆமோ 3:8). நாடோடியான காயின், காண்பவர் எவரும் தன்னைக் கொல்லக்கூடும் என்று அஞ்சினர் (ஆதி 4:14). யாக்கோபு, தனது சகோதரன் ஏசா பழிவாங்குதலைக் கண்டு அஞ்சினார் (32:7) பிற்காலத்தில் தெரியாத நாட்டிற்குக் குடியேற அஞ்சினார் (46:3). கானானியரின் படைப்பலத்தைக் கண்டு எபிரேயர் அஞ்சினர் (எண் 32:7). இடையன் சிங்கம் கர்ச்சிப்பதைக்கேட்டு அஞ்சுகிறான் (ஆமோ 3:8). ஏன்-தோரின் சூன்யக்காரி சாமுவேலின் ஆவியைக்கண்டு பயந்து கூக்குரல் இடுகிறாள் (1 சாமு 28:12). தேமானைச் சேர்ந்த எலிப்பாசு இரவு ஆவிகளின் காட்சி கண்டு அஞ்சினார் (யோபு 4:14). தனக்கு வரவிருக்கும் அகால மரணத்தை எண்ணி யோபு அஞ்சினார் (3:25; 21:6; 22:10;...)

இவ்வாறு சான்றுகளை அடுக்கிக் கொண்டே போகலாம்.

ஆ). அச்சமும் பாவமும்:- மனிதன் கடவுளுக்குப் பயந்தான். இவன் பாவத்தின் காரணமாகவும் இறைவன் தண்டிக்கக்கூடும் என்ற எதிர்பார்ப்பாலும் கடவுளுக்கு அஞ்சினான் (ஆதி 3:10; 18:15; 20:8; உப 9:19; சங் 76:8; 78:33; 90:7–11). துன்புறும் மக்கள் தாங்கள் தவறு செய்ததால்தான் கடவுள் இத் துன்பத்தைத் தங்களுக்கு அளித்தார் என எண்ணி அஞ்சினர். தாம் அறியாத தவற்றிற்காகவும் கடவுள் தண்டிக்கிறார் என எண்ணினர் (யோபு 23:15; சங் 22:1; 8:1). மனிதனின் இந்த பாவ நிலையை கருத்தில் கொண்டு கடவுளின் இறுதி தீர்ப்பைப்பற்றிய ஓர் அச்சத்தை எபிரேயர் வளர்த்தனர் (உப 32:25; சங் 47:5; எச 2:6–22; எச 27:35; யோவேல் 2:1; ஆமோ 5:18; அப 3:2; செக் 9:5; மலா 3:2–3).

இ) அச்சமும் வெளிப்பாடும்:- இறைவன் தன்னை வெளிப்படுத்தும்போது மக்கள் அஞ்சினர் என நாம் வாசிக்கிறோம். அப்போதெல்லாம் 'அஞ்சாதே' என்ற வார்த்தையைக் கடவுள் கூறுவதாக நாம் அடிக்கடி காண்கிறோம் (ஆதி 15:1; யாத் 14:13; நீதி 6:23; எச 41:10). இறைவன் தம்மை வெளிப்படுத்தும் போதெல்லாம், அதில் பயங்கர மறைபொருள் அடங்கியிருக்கிறது. இதில் அச்சத்தை ஏற்படுத்தும் இறைவனது புனிதத்தின் மறைபொருள் அடங்கியிருக்கிறது (ஆதி 31:42). இதில் இறைவனது மகிமை உணரப்படுகிறது. மனிதன்பால் இறைவன் காட்டும் ஆழ்ந்த அக்கறையையும், அன்பையும் கண்டுணர்வதினால் வரும் மனவெழுச்சியும் மகிழ்ச்சியும் உண்டாகிறது (சங் 18: அப 3). இத்தகைய அச்சம், இறைவனது பரிசுத்தத்தை உணர்வதால் மட்டுமன்று, அவரது மீட்கும் அருளை அனுபவித்ததால் வருவதாகும் (ஆதி 28:13–14; 17). மோசே எரியும் புதரைக் கண்டு அஞ்சினார். ஆனால் கடவுள் தம் திருப்பெயரை அவருக்கு வெளிப்படுத்தி, அவரைத் தம் கருவியாக்கினார் (யாத் 3:6; சங் 98:3).

கடவுளை நேருக்கு நேர் பார்த்த சில மனிதர்களைப் பார்க்கவும் மக்கள் அஞ்சி

னர். மோசே மலையில் கடவுளோடு உரையாடியபின் திரும்பியபோது அவரைப் பார்க்க ஆரோனும் மற்றவர்களும் அஞ்சினர் (யாத் 34:30; யோசு 4:14; 1 சாமு 12:18; 18:12; 5–6; 2 சாமு 6).

ஈ) அச்சமும் வழிபாடும்:- இந்தப் பயம் அவர்களின் வழிபாட்டிற்குள்ளும் இடம் பெற்றது. இந்த கடவுள் பயம், விசுவாசம், அன்பு, நம்பிக்கை உறவு ஆகியவற்றோடு இணைத்தே காணப்படுகிறது. "ஆண்டவருக்கு அச்சத்தோடு ஊழியம் செய்யுங்கள் நடுக்கத் தோடு அகமகிழுங்கள்" (சங் 2:11) என்பது போன்ற கூற்றைப் புரிந்துகொள்வது நமது காலத்தவர்க்குக் கடினமாக இருக்கலாம். இந்த பயம் என்பது கடவுளின் சினத்தாலோ அல்லது அவரின் தண்டனை தீர்ப்புக்கு அஞ்சியோ எழுவதல்ல. மாறாக இந்த கடவுள் பயம் கடவுளின் அன்பை உணர்ந்ததால் எழவேண்டும் (ஓசே 11:9–11). விசுவாசத்தோடு ஒத்து வராத பயம் பொருளற்றது. கடவுள் மேல் கொண்ட விசுவாசம் நம்மை உலக ஆபத்துக்களில் இருந்து காக்கும் (சங் 23:4; 130:4). ஏனெனில் விசுவாசத்தோடு கூடிய கடவுள் பயம் இறைவனின் புனிதத்தன்மையை உணரச் செய்யும் (ஏச 8:12; உப 1:17).

3. ஆண்டவர்பால் அச்சம்:- கடவுள் பயம் என்பது 'இராத் யாவே' என்று எபிரேயத்தில் கூறப்பட்டது. நாடு கடத்தலுக்குப்பின் இது யூத மதத்தில் சிறப்பிடம் பெற்றது. கடவுள் பயம் வெறும் மரியாதையால் மட்டும் எழுவதல்ல மாறாக கடவுள் மேல் கொண்ட முழுமையான தனிப்பட்ட அன்பினால் எழுவது. இதுதான் செமா என்னும் எபிரேய வழக்கில் வலியுறுத்தப் பட்டுள்ளது (உப 6:4–5). இதில் பயம் என்பது இறைவனை அன்பு செய்யும் கட்டளையிலிருந்து பிரிக்கப்படவில்லை (உப 6:2.13;10:20;28:58..). ஏனெனில் முழுமையான அன்பு முழுச்சரணடைதலைக் கோருகிறது. இது கடவுள் பயத்தையும், அன்பையும் உள்ளடக்கிய ஒன்றாகத்தான் மனித நடத்தையின் கோட்பாடாகுகிறது. ஞானத்தின் தொடக்கமாகிறது (யோபு 28:28; சங் 111:10; பழ 1:7). கடவுள் மீது மனிதன் கொண்டுள்ள அன்பு கலந்த பயமே அவனைப் பாவம் செய்யாமல் விலக்குகிறது (சங் 51:6–15). மெசியாவின் பண்புகளில் ஒன்று இறைஅச்சமாகும் (ஏச 11:2).

4. திருமுறைப் புறநூல்களிலும் போலி நூற்களிலும் அச்சம்:- திருமுறையில் ஏற்கப்படாத நூல்களில் இந்த அச்சத்தைப்பற்றி அதிகமான கருத்துகள் குறிப்பிடப்படவில்லை. சில இடங்களில் மட்டுமேபயம் என்ற இந்த வார்த்தை காணப் படுகின்றது. பாவத்திற்கு அஞ்சுதலே ஞானத்திற்கு அடிப்படை என சிலநூல்களில் கூறப்பட்டுள்ளது. சில இடங்களில் கடவுள் பயம், கடவுள் அன்பு என்ற வார்த்தைகளும் ஒரே பொருளோடு பயன்படுத்தப்பட்டுள்ளது.

5. புதிய ஏற்பாட்டில் அச்சம்:- அ) உலகம் சார்ந்த அச்சம்:- புதிய ஏற்பாட்டிலும் இந்த அச்சம் என்ற சொல் முக்கிய இடத்தை வகிக்கவில்லை. உலக சார்புள்ள அச்சம் சிலஇடத்தில் விளக்கப் பட்டுள்ளது. அர்க்கெலா யூதேயாவை ஆண்டு வந்தான் என அஞ்சி யோசேப்பு அங்குச் செல்லவில்லை (மத் 2:22). அதிகாரிகள் மக்களுக்கு அஞ்சினர் என்று பல தடவை கூறப்படுகிறது (மத் 14:5; 21:26–46; மாற் 11:18; அ.ப. 5:26). கிறிஸ்து உலக அச்சத்தினின்று விடுவிப்பார் எனக்கூறும் போது பேய், எதிரி ஆகியோரைப் பற்றிய அச்சத்தையே குறிப்பிடுகிறார். "அச்சத்திற்குள்ளாக்கும் அடிமையுள்ளம் அன்று, பிள்ளைகளாக்கும் தேவ ஆவியை பெற்றுக் கொண்டீர்கள்" (உரோ 8:15). கடவுள் மேல் நாம் கொண்டுள்ள அன்பு நம்மை உலக அச்சத்தினின்று காப்பாற்றுகிறது. ஏனெனில் "அன்பில் அச்சத்துக்கு இடமில்லை, நிறை அன்பு அச்சத்தை அகற்றும்". இறைவன் தம் ஆவியால் கோழை உள்ளத்தை நமக்கு அருளவில்லை, வலிமையும் அன்பும் விவேகமும் கொண்ட உள்ளத்தையே அருளினார் (2 திமோ 1:7).

ஆ) அச்சமும் கிறிஸ்துவும்:- கிறிஸ்துவே பழைய ஏற்பாட்டில் வாக்களிப்பட்ட மெசியா. எனவே கிறிஸ்து பிறப்பு திருமுழுக்கு அருளப்பரின் பிறப்பு ஆகிய நிகழ்ச்சிகளை அறிவிக்கும்போது தூதர் 'அஞ்சாதே' என்கிறார் (லூக் 1:13. 30;2:10). கிறிஸ்துவே 'அஞ்சாதே' என்று அடிக்கடி

கூறுகிறார் (லூக் 5:10; 8:50; 12:7.32). கிறிஸ்து இயல் வெளிப்பாட்டிலும் அதே சொற்கள் பயன்பட்டுள்ளன (யோவா 12:15). ஆண்டவரின் உருமாற்றத்தின்போதும் அஞ்சாதே என்கிறார் (மத் 17:6–7; லூக் 3:34). சிலுவைச் சம்பவங்கள் உயிர்த்தெழுதல் ஆகிய நிகழ்ச்சிகள் (மத் 27:54;28:4) யாத்திரைக் காலத்தில் இறைவன்தம்மை வெளிப்படுத்தியதை எதிரொலிக்கின்றன. இன்னும் அச்சம் ஒரு தன்னல உணர்ச்சியாக கருதப்பட்டது. இதை விலக்கி இறைவனின் அழைப்பை ஏற்கவேண்டும் (மாற் 10:32).

இ) அச்சமும் மகிழ்ச்சியும்:- இயேசுவின் வல்லமையையும், தூய்மையையும் சீடர்கள் உணரும்போது அவர்களை வேறு விதமான அச்சம் ஆட்கொள்கிறது. புயலால் வரும் ஆபத்தைக்கண்டு சீடர்கள் கொள்ளும் உலகு சார்ந்த அச்சம் ஆண்டவரின் ஆற்றலைக்கண்டு புனித அச்சமாக மாறுகிறது (மாற் 4:37.41; மத் 9:8; 14:26–27; மாற் 5:15.33). இயேசு இறந்தவர்களை உயிர்ப்பித்தபோது கடவுளே நம் நடுவே வந்துள்ளார் என மக்கள் அஞ்சினர் (லூக் 5:26; 7:16). இங்கு நாம் காண்பது ஓர் மகிழ்ச்சி கலந்த அச்சம் (மத் 28:8; மாற் 16:8, அ.ப. 2:43). இதில் தொடக்ககாலக் கிறிஸ்தவர்கள் முரண்பாடு காணவில்லை.

ஈ) ஆண்டவருக்கு அஞ்சுவோர்:- "யாவேயின் அச்சம்" என்ற பழைய ஏற்பாட்டு பதம் புதிய ஏற்பாட்டில் "இறைவனுக்கு அஞ்சுவோர்" என வடிவம் எடுக்கிறது. கடவுள் பயம் என்பது கடவுள்மேல் முழு நம்பிக்கை வைப்பதைக் குறிக்கிறது (லூக் 1:50; 18:24). இப்படி விவரிக்கப்படுவோர் ஆழ்ந்த நம்பிக்கையால் உந்தப்பட்டு, இறைவனது சித்தத்துக்கு, அது எதுவாயிருந்தாலும், எங்கு இட்டுச்சென்றாலும், தங்களை அர்ப்பணித்தனர்.

உ) அச்சமும் அர்ச்சிப்பும்:- கிறிஸ்துவில் புதுமனிதன் என்பவன் இந்த சகல விதமான உலக அச்சத்தினின்றும் விடுபட்டவன். ஆனால் தீமை எவ்வடிவத்தில் தோன்றினாலும் அதைக்கண்டு அஞ்ச வேண்டும் என்று நினைவுபடுத்தப்படுகிறது (மத் 10:28; உரோ 11:20). ஒரு கிறிஸ்தவனையோ அல்லது சபையையோ அர்ச்சிக்கும் பணி இந்த கடவுள் பயத்தின் விளைவே (2 கொரி 5:10–11; கொலோ 3:22; எபி 10:31). ஆகையால் கிறிஸ்துவம் இறை அச்சத்தின் இடத்தை அகற்றி இறை அன்பிற்கு இடம் அளிக்கிறது என்பது தவறாகும். பழைய ஏற்பாடு, புதிய ஏற்பாடு இரண்டுமே கடவுள் பயத்தையும் கடவுள் அன்பையும் சார்புபடுத்தியே கூறுகின்றன (பிலி 2:12). திருச்சபை தூய ஆவியால் தூண்டப்பட்டு கடவுள் பயத்திலேயே முன்னேறுகிறது (அ.ப. 9:31). மீட்பரை வழிபடுவதும், ஆராதிப்பதும், விண்ணையும் மண்ணையும் படைத்த ஆண்டவரின்பெயரை மகிமைப்படுத்துவதும் அஞ்சுவதும் ஆகும். ஏனெனில் அவர் ஒருவரே புனிதர் (திருவெளி 14:6–7; 15:3–4).

**அச்சாரம்** (EARNEST)

இச்சொல்லின் மூல கிரேக்கச் சொல்லான 'அரபோன்' செமித்திய மொழியில் தோன்றியது. ஆனால் பெனிசியர்களால் கிரேக்க மொழிக்குக் கொண்டுவரப்பட்டிருக்கலாம். கிரேக்க எழுபது நூல் இச்சொல்லை 'அடைமானமாகக் கொடுக்கும் பொருள்' என்று மொழி பெயர்க்கிறது (ஆதி 38:17–18; உப 24:6; யோபு 24:3). கி.மு.. நான்காம் நூற்றாண்டிலிருந்து "அச்சாரப்பணத்தைக்" குறித்தது. புதிய ஏற்பாட்டில் இச்சொல் உருவகமாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. தூய ஆவியே விசுவாசியின் உரிமைப் பேறான முடிவற்ற வாழ்வின் அச்சாரமாக இருக்கிறார் (எபே 1:14; 2 கொரி 5:5). உரோ 8:23–இல் வரும் முதற் கனியான தேவ ஆவி என்ற உருவகத்தை யும் கவனிக்க. அடைமானம் என்ற பொருள் 2 கொரி 1:22; எபே 1:14–இல் அச்சாரமும், முத்திரையும் சமமாக்கப்படுவதில் பிரதிபலிக்கிறது. உரிமைப்பேறு சுவீகாரம் தொடர்பான ஆவணங்களில் அக்காலத்தில் பயன்படுத்தப்பட்ட வார்த்தைகளே புதிய ஏற்பாட்டிலும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**அடக்கம்** (BURIAL)

வரலாறு வரைவதற்கு முந்திய காலந்தொட்டே, குறிப்பாக பழங்கால மேற்காசியாவில் இறந்தோரை அடக்கம் செய்வதில் கவனம் செலுத்தி வந்துள்ளனர். இதற்கு விவிலியதில் நாம் காணும் பல குறிப்புகளும், மற்ற முற்கால ஏடுகளும்,

விவிலிய நாட்டில் கண்டுபிடிக்கப் பட்டுள்ள ஆயிரக்கணக்கான கல்லறை களும் சான்றுகளாக உள்ளன. இந்தக் கவனம் பல்வேறு தோற்றங்களில் வெளிப் படுத்தப்பட்டது. இவற்றிற்கெல்லாம் அடிப்படையாய் விளங்கியது, மனிதன் சாவிற்குப் பின்னும் ஏதோ ஒருவகையில் வாழ்கிறான் என்று மக்கள் கொண்டி ருந்த நம்பிக்கையேயாகும். ஆனால் தெளி வான சான்றுகள் இல்லை.

I. பழங்காலத்தில் :

1. இறந்தவர்களை அடக்கம் செய்யும் பழக்கம் மக்களிடையே இருந்தது என்பதை பின்வரும் பகுதிகளில் இருந்து நாம் அறியலாம்: திருவுரை *6:3*; ஏச *14:20*; எரே *22:19*; இவைகளில் புதைக்கும் இடம் பற்றிய குறிப்புகள் இல்லை. ஆனால் பின் வரும் பகுதிகளில் அத்தகைய குறிப்பு களும் உள்ளன: ஆதி *47:30*; உப *34:6*; *2* அர *9:28*; *21:26*; *23:30*; எச *32:23–24*. இறந்த வர்களை அடக்கம் செய்வோர் புதைப் போர்எனப்பட்டனர் (எச *39:15*). இறந்த வர்களைப் புதைக்குமுன் என்னென்ன நடைபெறும் என்பதும் விளக்கப்பட்டுள் ளன (மத் *26:12*; மாற் *14:8*; யோவா *12:7*; *19:40*). மத் *8:21–22*; அ.ப. *2:29*; *1* கொரி *15:14* ஆகிய பகுதிகளில் அடக்கம் செய்யும் செயலே விளக்கப்பட்டிருக்கிறது. இவ் வார்த்தையானது ஞானஸ்நானத்தால் நாம் கிறிஸ்துவுக்குள் புதைக்கப்பட்டுள் ளோம் (உரோ *6:4*; கொலோ *2:12*) என்ப தை உவமையாகக் கூறவும் பயன்படுத்தப் பட்டிருக்கிறது.

பாலஸ்தினத்தில் முற்காலத்திலேயே அடக்கம் செய்யும் பழக்கம் இருந்தது என்பதை நாம் மக்கபோலக் குகை பாரம்பரியத்திலிருந்து அறியலாம். இங்கு தான் சாரா (ஆதி *23:19*) ஆபிரகாம் (*25:9*) ஈசாக்கு, ரெபேக்கா, லேயா (*49:31*) யாக் கோபு (*50:13*) ஆகியோர் அடக்கம் செய்யப் பட்டனர். கர்மேல் மலைப்பகுதியில் வாடி –ஏல்–முகாராவில் உள்ள குகைகளில் காணப்படும் எலும்புக்கூடுகள், மற்றும் சாக்கடலுக்கு வடக்கே உள்ள தொலயீ லாத் காசுல், பழங்கால முற்கால எரிகோ ஆகிய இடங்களில் உள்ள கல்லறைகளை நாம் பார்க்கும்போது அடக்கம் செய்யப் படுவது என்பது கற்காலம், வெண்கலக் காலம் ஆகியவற்றின்போதே மிக முக்கிய மானதொரு செயலாகக் கடைப்பிடிக்கப் பட்டு வந்திருக்கிறது.

குகைளைத் தவிர்த்து, ஏராளமான அடக்கம் செய்யும் இடங்களின் பெயர் களும் விவிலியத்தில் வருகின்றன. பெரும் பாலும் ஒரு நகரத்தின் அல்லது பகுதியின் பெயர் கொடுக்கப்படுகின்றன. ஆரோன் மொசேராவில் அடக்கம் செய்யப்பட்டார் (உப *10:6*; காண்க: எண் *33:8*; இங்குள்ள கோர் என்ற மலையே இவர் புதைக்கப் பட்ட இடம் எனத்தெரிகிறது). பேத்து– பெயோர் என்பதற்கு எதிரே உள்ள மோவாபு பள்ளத்தாக்கில் மோசே அடக் கம் செய்யப்பட்டார் (உப *34:6*). யோசுவா திம்னாத்து செராக்கிலும் (யோசு *24:30*; நீதி *2:9*) இபிதாகு அவரது ஊரான கில யாத்திலும் (நீதி *12:4*) சிம்சோன் சோரா விற்கும் எசுத்தாவோலுக்கும் இடைப்பட்ட அவரது தந்தையின் கல்லறையிலும் (நீதி *16:31*) அடக்கம் செய்யப்பட்டனர். சவுல் யோரைத்தான் இருவரையும் பெலிஸ்தி யர் யபேசில் எரித்தபின் (*1* சாமு *31:13*) அவர்கள் எலும்புகள் சேலா என்ற பென்யாமின் ஊரிலுள்ள கீசின் கல்லறை யில் அடக்கம் செய்யப்பட்டன (*2* சாமு *21:14*). தாவீதும், சாலமோனும், தாவீதின் நகரில் அடக்கம் செய்யப்பட்டனர் (*1* அர *2:10*; *11:43*). இஸ்ராயேல், யூதா நாடுகளின் அரசர்கள் மற்றும் பலரும் தாவீதின் ஊரில் (*1* அர *15:8.24*; *2* அர *8:24*; *12:21*) திரிசா (*1* அர *16:6*), சமாரியா (*1* அர *16:28*; *22:34*) மற்றும் எருசலேம் (*2* அர *14:20*) ஆகிய இடங்களில் அடக்கம் செய்யப் பட்டனர்.

இப்பகுதிகளில் அடக்கம் செய்யப்பட்ட இடங்கள் துல்லியமாகக் குறிக்கப்பட வில்லை. ஆனாலும், குறிப்பிடப்பட்ட ஊர் களில் மக்கள் வாழ்ந்த பகுதியில் கல்லறை கள் இருந்திருக்கவேண்டும். மேலே சொன்ன இடங்களில் கல்லறைகள் இருப்பது கண்டுபிடிக்கபட்டுள்ளது. பழங் கால எரிகோவில் உள்ள வீடுகளினடியி லும் முந்திய வெண்கலக் காலத்தில் வீடு களின் முற்றங்களிலும், தரைக்குள்ளேயே கல்லறைகள் காணப்படுகின்றன. பிற்

காலங்களில் இயற்கையாக அல்லது செயற்கையாக எடுக்கப்பட்ட குகைகளில் அடக்கம் செய்தனர். இக்குகைள் நகருக்கு வெளியே அமைந்திருந்தன. அந்நகர்களாவன: எரிகோ, இலாக்கீசு, மெகிதோ, கெசெர், தெல்லென்-நாஸ்பே, மிசுபா, தெல்லெபாரா, திரிசா, தீபோன், எருசலேம் முதலியன. குகைகளில் உள்ள கல்லறைகளில் எலும்புகள் அப்புறப்படுத்தி விட்டு திரும்பவும் வேறு உடல்களை அதில் அடக்கம் செய்தனர். ஒரு கல்லறையில் ஓர் உடல்தான் என்று அடக்கம் செய்யும் பழக்கம் பரவலாக இல்லாவிடிலும், கும்ரான் குகைப்பகுதியில் இத்தகைய ஆயிரத் ிற்கும் மேற்பட்ட கல்லறைகள் இருப்பது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

புதைக்கப்பட்ட இடங்கள் என்று குறிப்பிட்டு சிலபகுதிகள் விவிலியத்தில் வருகின்றன. அவை: பெத்தேல் எனும் இடத்தில் கருவாலிமரத்தடி (ஆதி 35:8), தோட்டம் (2 அர 21:18.26) முதலியன. இயேசுவின் அடக்கம் பற்றிப் பேசும்போது தோட்டத்தில் ஒரு புதுக்கல்லறை இருந்தது. அதில் யாரையும் இதுவரை வைத்ததில்லை என்று யோவா 19:41-இல் திட்டவட்டமாக இடம் குறிப்பிடப்பட்டுள்ளது. மற்றும் வீடுகளில் அடக்கம் செய்ததாகவும் வாசிக்கிறோம் (1 சாமு 25:1; 1 அர 2:34; 2 நாள் 33:20). வீடுகளில் என்று குறிப்பிடுவது சாமுவேல், யோவாபு, மனாசே இவர்களைப் பற்றியே. ஆனால் இப்பழக்கம் அப்போது இருந்த ஒன்றல்ல. ஏற்கெனவே முற்காலத்தில் இருந்த பழக்கத்தைச் சுட்டிக் காட்டுவதாக இருக்கலாம். எச 43:1-ன்படி கல்லறைகள் எருசலேம் அரண்மனையிலேயே இருந்திருக்கின்றன. 2 அர 21:8-இன்படி மனாசே அவரது வீட்டின் பக்கமுள்ள தோட்டத்தில் அடக்கம் செய்யப்பட்டுள்ளார் என்றுள்ளது.

2. அடக்கப்பெட்டிகள் பொதுவாக எபிரேயர்களிடையே காணப்படவில்லை. யோசேப்புவின் உடல் மட்டும் எகிப்துநாட்டில் சவப்பெட்டியில் வைத்து அடக்கம் செய்யப்பட்டது என்று அறிகிறோம் (ஆதி 50:20). எகிப்தில் அடக்கப் பெட்டிகள் செய்யும் பழக்கம் இருந்தது. எகிப்தில் மரப்பெட்டிகள் மனிதனது வடிவில் செய்யப்பட்டு அலங்கரிக்கப்பட்டு உபயோகப்படுத்தப் பட்டன. தீபோன், பேத்து-சான் பகுதிகளில் உள்ள கல்லறைகளில் பெட்டிகளில் மனித உருவம் பொறிக்கப்பட்ட சுட்ட மண்பாண்டப் பெட்டிகள் பல கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. எலும்புகள் வைத்திருக்கும் எலும்புக்கலங்கள் ஏறத்தாழ கி.மு. 3-ஆம் நூற்றாண்டிலேயே பயன் படுத்தப்பட்டன.

3. அடக்கம் செய்யும்போது உள்ள வழிமுறைகள் ஒவ்வொரு பாரம்பரியத்திற்கும் வித்தியாசமாக உள்ளன. நறுமணத் தைலம் பூசுவது என்பது எபிரேயர்களிடையே இருந்த ஒன்றல்ல. யாக்கோபு, யோசேப்பு, இதற்கு விதிவிலக்காவார். ஆனால் எகிப்தியர்களிடையே காணப் பட்டது. யூதர்களிடையே, கிறிஸ்தவர்களிடையே உடல்களை எரிக்கும் பழக்கம் இல்லை. ஆனால் உரோமை, கிரேக்க நாடுகளில் சில சமயங்களில் பிணங்களை எரித்தனர். பிணங்களை எரிப்பது என்பது பழி தீர்த்துக்கொள்வதற்கு அடையாளம் (1 சாமு 31:12). அல்லது அநீதியைக் குறிப்பதன் அடையாளம் (ஆமோ 6:10) அல்லது குற்றவாளிகளுக்குத் தண்டனை கொடுப்பதன் அடையாளம் (லேவி 20:14; 21:9; யோசு 7:25). மிஸ்னா எரிப்பது என்பது ஒரு சிலை வழிபாடாகும் என்று தடுக்கிறது.

அன்றைய மேற்காசிய நாடுகளில் இன்றுபோலவே இறந்த அன்றே அடக்கம் செய்யும் பழக்கம் நிலவியது (லேவி 10:4; உப 21:23). ஒருவேளை உடல் நலனையும், தீட்டுப்படுதலையும் கருதி இது நடந்ததாக இருக்கலாம் (எண் 19:11-14). உறவினர்கள் அடக்கத்திற்காக உடலைத்தயார் செய்தனர். இறந்தோருக்காக அழுது புலம்புவதும் உண்டு. இதை உறவினர்களோ (12:92-14) புலம்புவதைத் தொழிலாகக் கொண்டவர்களோ செய்தனர் (திருவுரை 12:5). அடக்கம் செய்யமுடியாது போனால் அது பெரிய துன்பம் எனக்கருதினர். வெட்கத்திற்குரியதாக அல்லது இறை தண்டனையாகக் கருதப்பட்டது (1 அர 14:11; 21:23; சங் 79:3; காண்க: 2 சாமு 21:10 தொ; எரே 7:33; தோபி 17-18). பிறரை நல்லடக்கம் செய்வது புண்ணிய செயலாகக் கருதப்பட்டது (தோபி 1:17-18).

பல்லக்கு அல்லது தூக்குக்கட்டிலில் வைத்துப் பிணங்கள் கல்லறைகளுக்கு எடுத்துச் செல்லப்படும். அவைகளின் பின் தற்காலத்தில் நாம் செல்வதுபோல் மக்கள் ஊர்வலமாக பின் செல்வர் (புலம்பிச் செல்வர்). இறந்தவர்களின் உடமைகளும் அவர்களோடு சேர்த்து புதைக்கப்படும். கானானியர், மோவாபியர் கல்லறைகளில் ஆயுதங்கள், மோதிரங்கள், காதணிகள், கையணிகள், விளக்குகள், உணவுப் பொருட்கள், மரத்தால் செய்யப்பட்டத் தட்டுகள் பலஇருந்தது கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. இறந்தோருக்கு உணவு கொடுப்பது இறந்தோர் வழிபாடாகலாம் என்பதால் எபிரேயச் சட்டம் தடுத்தது (உப *26:14*).

**II.** இஸ்ராயேல் மக்களும், அவர்களது அண்டை மக்களும் இறந்த ஒருவரை அடக்கம் செய்யமுடியாதபொழுது, அதை அவருக்கு ஏற்பட்ட பெரும் அவப்பேறாகக் கருதினர் (சங் *79:3*). தீங்கிழைப்போருக்கு இவ்வாறு ஏற்பட இருக்கிறது, இத்தகைய தண்டனை வரவிருக்கிறது, என்று இறைவாக்கினர் எச்சரித்தனர் (*1* அர *14:11*; எரே *22:18–19*).

ஆதலால் ஒருவரை அடக்கம் செய்வதில் இஸ்ராயேல் மக்கள், ஆபிரகாமைப் போன்று, அதிகக் கவனம் செலுத்தினர் (ஆதி *23*, மூதாதையரின் கல்லறையைக் கட்டுவித்தல்). இறந்த ஒருவனைச் சவ அடக்கம்செய்வது, அவன் மகனின் தலையாய கடமையாகும் (ஆதி *25:8*; *35:29*; *50:12*; தோபி *4:3*; *6:15*; *14:10*). இச்செய்கையானது, யுத்தகாலத்தில் போர் வீரர்களுடைய வும், மற்றும் பிரமாணிக்கமுள்ள ஒவ்வொரு இஸ்ராயேல் மகனுடையவும் மிகப் புண்ணியம் நிறைந்த கடமையாகக் கருதப்பட்டது (தோபி *1:17–20*; *2:4–8*; *12:12*).

இறந்தவர்களுக்காக அழுது துயர் கொண்டாடுவதற்கான சடங்குகள் பலவாகும். அவைகள் சிக்கலானவைகளும் கூட. இச்சடங்குகள் இஸ்ராயேலரின் அண்டை மக்களிடமும் காணக்கிடக்கின்றன. உபவாசம் (*1* சாமு *31:13*; *2* சாமு *1:12*; *3:35*), கிழிந்த ஆடை (ஆதி *37:34*; *2* சாமு *1:11*; *3:31*; *13:31*), சாக்குத் துணி தரித்தல் (ஆதி *37:34*; *2* சாமு *3:31*; *14:12*; எச *7:18*), முடி வெட்டிக் கொள்தல், தன்னையே காயப்படுத்திக் கொள்தல் (ஆமோ *8:10*; மீக் *1:16*; ஏச *22:12*) எனப் பல சடங்குகள் இருந்தன. (இக் கடைசிச் சடங்கு உப *14:1*–இலும் லேவி *19:2*–இலும் விலக்கப்பட்டுள்ளது. ஏனெனில் ஒருவேளை, இச்சடங்கு பாகால் என்னும் தெய்வத்திற்குக் காட்டப்பட்ட சடங்கின் ஒரு பகுதியாய் இருந்திருக்கலாம்). இவ்வாறே ஒப்பாரி வைத்தலும் (*2* சாமு *1:12.17–27*; *3:33*; *13:36*; *1* அர *13:30*: ஆமோ *5:16*; எரே *22:18*; *34:5*) பரவலாகக் காணப்படும் சடங்காகும்.

இச்செய்கைகள் துக்கத்தை வெளிப்படுத்தும் அடையாளங்களாக மட்டுமல்ல. நிறைவேற்றப்பட வேண்டிய சடங்குகளாகவும் இருந்தன. அச்செய்கைகளில் முதல் நோக்கத்தைப் பெரும்பாலும் நாம் தெரிந்துகொள்ள முடியாத நிலையில் இருக்கிறோம் (இறந்தோரை வழிபடுதல், தீய ஆவிகளிடமிருந்து பாதுகாப்பு முதலானவைகளாக இருக்கலாம்). ஆண்டவரைக் கடவுளாகக் கொண்ட இஸ்ராயேல் மக்களிடையே, இறந்தோரைத் தொழுதல் விலக்கப்பட்டிருப்பதால், இச்சடங்குகள் இறந்தோர், தம் முன்னோரை அடையும் வரை அமைதியான நிலைபெற வேண்டுமென்று நிறைவேற்றப்பட்டன (ஆதி *25:8*; *35:29*; *1* அர *2:10*; *11:43*) எனலாம்.

**III.** நற்செய்திகளிலும், இயேசுவின் காலத்தில் வாழ்ந்தவர்கள் இறந்தோரை அடக்கம் செய்வதற்கான பழைய ஏற்பாட்டு வழக்கு முறைகளைப் பின்பற்றுவதைக் காண்கிறோம் (மாற் *5:38*; யோவா *11:38–44*) இயேசுவும் இவ்வழிமுறைகளைக்கூடாது என்று வெறுத்து ஒதுக்கவில்லை. ஆனால் இதேசமயத்தில், ஒருவருக்கு, தன் இறந்த தந்தையைப் புதைத்திடும் திருச்சடங்கைக்காட்டிலும், இறைவனின் அழைப்பு மேலானது எனக் காட்டத் தயங்கவில்லை (மத் *8:21*). யூதகுலத்திலுதித்தவர் இயேசு. தம் வாழ்வின் இறுதியில் தாம் அடக்கம் செய்யப்படுவதற்கான எவ்வித ஆடம்பரமும், மரியாதையுமின்றி, குற்றவாளியைப்போல் தாம் மரிக்க இருப்பதை நினைத்து நாணித் துயருறுகிறார் (மாற் *14:8*).

உண்மையில் இம்மரியாதைகளெல்லாம் ஆண்டவருக்கு அரிமத்தியா யோசேப்பினால் அளிக்கப்படும். ஆனால் பண்டிகைநாள் அடுத்து வந்ததால் இவைகள் அவசரம் அவசரமாய் செய்யப்பட்டன (மாற் 15:46) என்றும், உயிர்ப்பு ஞாயிறன்று பெண்கள் வாசனைத் தைலத்தால் அன்று அவசரமாய்ச் செய்ததை சரியாய் நிறைவேற்றி அடக்கம் செய்ய வரும் பொழுதே (மாற் 16:1; யோவா 19:39 இயேசுவின் உடம்புக்கு, அவர் மரிப்பதற்கு முந்தியநாளே தைலம் பூசப்பட்டது), வான தூதர் அவர்களிடத்தில் "அவர் உயிர்த்து விட்டார் இங்கில்லை", என்று கூறினர்.

இயேசுவின் இவ்வரலாற்றினைப் பின்பற்றி, இறந்தோரைக் கல்லறையிலும் சுரங்கக் கல்லறைகளிலும் புதைக்கும் சடங்குமுறையானது கிறிஸ்தவர்களிடையே வழக்கில் வந்தது. பரிசுத்த ஆவியால் அர்ச்சிக்கப்பட்ட உடலுக்கு அளிக்கப்பட்டுள்ள மரியாதையிலிருந்தும் உயிர்த்த ஞாயிறு நமக்கு அளித்துள்ள நம்பிக்கையினின்றும், இச்சடங்கிற்கான ஆதரவும் ஆதாரமும் கிடைக்கின்றன.

**அடித்தளம்** (FOUNDATION)

விவிலியத்தில் பல சொற்களை மொழிபெயர்க்க இது பயன்படுகிறது. ஒரு கட்டடத்தின் (1 அர 7:9–10; 2 நாள் 8:16; எஸ் 5:16) அல்லது சுவரின் (எஸ் 4:12) அல்லது முழு நகரின் (சங் 137:7; மீக் 1:6) அடி அமைப்பாகும் இது. சாலமோனின் ஆலயத்திற்கு பத்து முழமும் எட்டு முழமுமான விலையேறப்பெற்ற பெரிய கற்களால் அடித்தளமிடப்பட்டது (1 அர 7:10). எசக்கியேல் ஆலயத்தின் சுற்றுக்கட்டுகளின் அடிப்படைகள் இருமுழம் கொண்ட கோலால் அளக்கப்பட்டன (எச 41:8).

பழங்கால மேற்காசியாவில் ஒரு நகரத்திற்கோ அல்லது ஒரு ஆலயத்திற்கோ அடித்தளமிடுவது விரிவான சடங்காகும். குறிப்பிட்ட சமயப் பொருளுடையதுமாகும். அசீரிய ஆலயங்களிலும் அரண்மனைகளிலும் அந்தந்த தேவதைக்கு மட்டும் அளிக்கப்பட்ட செய்தி பொறிக்கப்பட்ட அடித்தளங்கள் காணப்படுகின்றன. பாலஸ்தீனத்தில் மற்ற பகுதிகளிலும் அடித்தளம் இடும்போது மனிதப் பலிகளும் கொடுக்கப்பட்டிருக்கலாம் என்று அறிஞர்கள் கருதுகின்றனர் (யோசு 6:26; 1 அர 16:34). புதைபொருள் ஆராய்ச்சியில் கோட்டைகளின் மேல் அமைப்புகள் அழிக்கப்பட்டிருந்தாலும் அடித்தளத்தைக் காணமுடிந்தது. உருவகப்பொருளில் இச்சொல் நாடுகளையோ அரசுகளையோ (எச 30:4; எரே 50:15), சட்டங்களையோ (சங் 11:3) பூவுலகின் அடித்தளத்தையோ (2 சாமு 22:16; சங் 18:15) மலைகளின் அடித்தளத்தையோ (2 சாமு 22:8; சங் 18:7) குறிக்கலாம். இம்மைக்குரிய பொருளில் 'பூவுலகுக்கு அடித்தளம் இடுதல்" படைப்புச் செயலைக் குறிக்கிறது (சங் 102:25; ஏச 51:13; திருவெளி 13:8).

**அடித்தள வாயில்** (GATE OF FOUNDATION)

எருசலேமில் ஒரு வாயிலாகும். ஒருவேளை அரச மாளிகையிலிருந்து ஆலயத்திற்கு இட்டுச்செல்லும் வாயிலாக இருக்கலாம் (2 நாள் 23:5; காண்க: எரே 39:3). அரசை அபகரித்துக் கொண்ட அத்தாலியாவைக் கைப்பற்றியபோது குரு யோயதா வாயிற்காவல்களின் ஒரு பகுதியை இங்கு நிறுத்தி வைத்திருந்தார். இந்நிகழ்ச்சியின் இணை விவரிப்பு இதைச் சூர்வாயில் என்றழைக்கிறது (2 அர 11:6).

**அடிபடுதல்** (SCOURGING)

ஒழுங்குக்காகவும், தண்டனையாகவும், கோலால் அல்லது தடியால் அடிப்பது வழக்கமாயிருந்தது. இது அடிமைகளுக்கும், சிறுவர்களுக்கும் கொடுக்கப்பட்டது. ஞான இலக்கியத்தில் முட்டாள்களுக்கு கொடுக்கப்பட்டது (யாத் 21:20; பழ 13:24; 26:3; ஏச 9:4). வார்ச்சாட்டை அதிகத் துன்பத்தை அளிக்கவல்லது (1 அர 12:11.14). பெரும்பாலும் விலங்குகள் மேல் பயன்பட்டது (பழ 26:3; நெக 3:2). மனிதர்கள் மேல் கோலோ தடியோ பயன்படுத்தப்பட்டது.

உப 25:13–இல் யூதசட்டப்படி, தண்டனை அதிகபட்சம் நாற்பது அடிகளாகும். இது குற்றவாளி அதிகம் இழிவுபடுவதைத் தடுக்கவே வரையறை செய்யப்பட்டது. எண்ணிக்கை குற்றத்திற்கு தகுந்தாற்போல் மாறும். ஆனால் சட்டங்கள், எது எதற்கு சாட்டை அடிகள் என்று குறித்துக் காட்டத் தவறிவிட்டன. குற்றவாளி, அடிவாங்கும்

போது, சாய்ந்து இருக்கும்படி செய்யப் படுவார். இது நீதிபதியின் பார்வையில் தான் நடக்கும்.

பிற்கால யூதச் சட்டம், விவிலியத் தடைக்கு மாறாகத் தண்டித்திருக்கிறது. மிஸ்னாவில் காணப்படும் முறை சாட்டை யடியைத் தாங்கிக் கொள்ளக் கூடியவனா என்று சோதிக்கப்பட்டபின், குற்றவாளி யின் கைகள் தூணில் கட்டப்படும். நெஞ்சு, முதுகிலிருந்து உடைகள் நீக்கப் படும். செபக்கூடத்தை நடத்துபவர் (மத் 10:17) சாட்டையடியை அடிப்பார். கழுதை, பசுங்கன்றுகளின் தோலினால் செய்யப் பட்ட சாட்டை பயன்பட்டது. மூன்றில் ஒரு பகுதி அடிகள் குற்றவாளியின் நெஞ்சிலே கொடுக்கப்படும். மூன்றில் இரண்டு பகுதி பின்னால் கொடுக்கப்படும். மொத்தம் நாற்பதுக்கு ஒன்று குறைவாக முப்பத் தொன்பது அடிகள் கொடுக்கப்படும் (2 கொரி 11:24). எண்ணிக்கையில் தவறு நடப்பதைத் தடுக்க உப ஆகமம் அனும தித்ததற்கு ஒன்று குறைவாகக் கொடுக் கப்பட்டது.

உரோமையர்களிடம், குற்றவாளிகளின் நிலை பார்த்து சாட்டையடி கொடுக்கும் வழக்கம் இருந்தது. சுதந்திரமாகத்திரியும் மனிதர்கள் தடியால் தண்டிக்கப்படுவர் (1 கொரி 4:21; அ.ப. 16:22; 2 கொரி 11:25). அடிமைகள், உரோமையர் அல்லாதவர் கள் சாட்டையடி கொடுக்கப்பட்டு சோதிக் கப்படுவர் (அ.ப. 22:23–25). உரோமையர் விசாரிக்கப்பட்டுத் தீர்ப்பிடப்பட்ட பின்பு தான் கசையடியால் தண்டிக்கப்பட்டனர். குற்றவாளிகளின் ஆடைகள் கிழிக்கப்பட்டு சாட்டையால் அடிக்கப்படுவர் (16:22). அவரது கைகள் முள்ளோடு சேர்த்து தூணில் கட்டப்படும் (22:25). அடிமைகள், அந்நியர், மரண தண்டனைபெற்ற குற்ற வாளிகள் போன்றோர் முடிச்சுள்ளவார் களின் நுனியில் எலும்பு, உலோக கண்ணாடித் துண்டுகள் முடிக்கப்பட்டி ருக்கும் சாட்டையால் அடிக்கப்படுவர். அதிகம் துன்புறுத்தப்படுவர். இந்த பயங் கரமான சாட்டை வெறும் முதுகில் கொடுக்கப்பட்டது. இதனால் குற்றவாளி கள் இறப்பதும் உண்டு.

1 அர 12:11.14–இல் வரும் முற்சாட்டை உருவகமாகப் பயன்பட்டிருக்கலாம். 2 கொரி 11:24–ஐ பவுல் எழுதியபோது, அவர் ஏற்கெனவே ஐந்துமுறை, யூத முறைப்படி, கசையடிபட்டிருந்தார். இதே வாக்கில், தடியால் அடிபடுவது வேறு படுத்தப்படுகிறது. இயேசு தண்டனை யாகக் கசையடிப்பட்டார் (மத் 27:26).

**அடிமை** (SLAVE)

'அடிமை முறை' இஸ்ராயேல் நாட்டில் இருந்தது. பெரும்பாலன அடிமைகள் வெளிநாடுகளிலிருந்து கொண்டு வரப் பட்டவர்கள். வழிவந்த முறைப்படி, போரில் கைது செய்யப்பட்டவர்கள் அடி மைகள் ஆக்கப்பட்டனர் (உப 21:10). மேலும் வியாபாரிகள் மூலமும் அடிமைகள் விலைக்கு வாங்கப்பட்டனர் (ஆதி 17:12). சில எபிரேயர்கள் கூட அடிமைகளாக விற்கப்பட்டனர்; அல்லது தங்களையே அடிமைகளாக விற்றுக்கொண்டனர் (யாத் 21:1–10; 2 அர 4:1).

விவிலியக் காலத்தில் அடிமை முறை பெருமளவிலும் முறைப்படியும் பிறநாடு களில் நிலவியது. இஸ்ராயேலில் மட்டும் அந்நிலையை அது அடைந்ததில்லை. இஸ்ராயேலின் வரலாற்றில் இருவகை யான அனுபவங்கள் கோடிட்டுக் குறிக்கப் படுவதைக் காண்கிறோம். அவை அந்நிய நாடுகளில் அவர்கள் அடிமைகளாக அனுபவித்த துன்ப துயரங்களும், இறை வன் அற்புதமாக அவர்களை விடுவித்தது மாகும் (உப 26:28; யாத் 22:20). இவ்வனு பவத்தால், இச்சமூக பிரச்சினையை இஸ்ராயேல் அணுகிய விதமும், இறை நோக்கோடு உணர்ந்த உண்மைகளும் தனித்தன்மை படைத்தவையாகும்.

I. பழைய ஏற்பாட்டில் அடிமைத் தனம்: மனிதனே மனிதனை உரிமை யாக்கிக் கொள்வது, ஏறக்குறைய ஆயிரம் ஆண்டு காலம் அளவிற்கு, பொருளாதார அடிப்படையிலும், குறிப்பிடத்தக்க அள விற்குச் சமுதாய வாழ்விலும் பழங்கால மேற்காசியாவின் முக்கியமான பகுதியாக இருந்து வந்தது. அடிமைமுறை ஒரு பொ ருளாதார நிறுவனம். விவிலிய அடிமை முறையை அதற்குரிய கண்ணோட்டத்தில்

மதிப்பிடுவதற்கு, மேற்காசியா பகுதிகளில் அடிமை முறை நிறுவனமாக இருந்ததை கவனத்தில் எடுத்துக்கொள்ளவேண்டும். அடிமை முறை சம்பந்தப்பட்ட விவிலிய கருத்துப் பரிமாற்றத்தில், அடிக்கடி அருகாமையில் இருக்கின்ற மக்களுடைய அடிமை முறைக்கு குறிப்பீடுகள் காட்டப் படுவதால், இதற்கு மற்றொரு காரணம் உள்ளது, அதாவது அவை மூலப்பொருளாக அமைகின்றன.

1. இலக்கிய ஆதாரங்கள்:- சட்ட நூல்களும், பாபிலோனிய, சீரியா ஆகிய நாடுகளிலிருந்து வந்த அடிமை முறையுடன் தொடர்புள்ள ஏராளமான தனி, பொருளாதார சம்பந்தமான பத்திரங்களும், பழைய ஏற்பாட்டில் உள்ள சட்டப்பூர்வமான சட்டத்திற்கு வெளியே உள்ள, இது சம்பந்தமான செய்திகளை வளப்படுத்துகின்றன. உறுதிப்படுத்துகின்றன. விவிலியத்திற்கு வெளியே உள்ள மதிப்பிட முடியாத கருவூலங்களான இந்த சான்றுகளை நல்ல முறையில் பயன்படுத்தியதனால் ஒற்றுமைகளும், அதேபோல் வேற்றுமைகளும், குறிப்பாக விவிலியம் அடிமை முறையைப் பார்க்கின்ற விதத்திற்கும், அருகாமையில் இருந்த மக்கள் பார்த்ததற்குமிடையேயுள்ள வேறுபாடு பொருள் உள்ளதாகவும், தெளிவானதாகவும் தென்படுகின்றது. பழங்கால மேற்காசியா நாடுகளில் இருந்த அடிமை முறையைப் படிப்பதற்கு முக்கியமான மூலங்களாக இருப்பவை அ) ஊர்-நமு சட்ட நூல் (கி.மு. 2050), எஸ்நுன்னாவின் சட்டங்கள் (2000), லிப்பித்-இசிதர் சட்ட நூல் (1950), கமுராபியின் சட்ட நூல் (1700), மத்திய அசீரியர்களின் சட்டங்கள் (1400–1200), ஆ) பாபிலோனிய அசீரியாவிலிருந்து வந்த தனியாருடையவும் அரசரவை பத்திரங்களும் குறிப்பாக கி.மு. மூன்றாம் நூற்றாண்டின் முடிவுப் பகுதியிலிருந்து, கிறிஸ்துவ சகாப்தத் தொடக்கம் வரையுள்ள காலங்களிலிருந்து வந்தவைகள் இ) இத்தியருடைய சட்டங்கள் (1550), ஈ) கி.மு. 18–ஆம் நூற்றாண்டிலிருந்து பதிமூன்றாம் நூற்றாண்டுவரை அலாலாக் உகரிட்டிலிருந்து வந்த அக்காதியப் பத்திரங்கள் ஆகியவையாகும். விவிலிய அடிமைச் சட்டங்கள் யாத் 21; லேவி 25–லும் பதிவு செய்யப்பட்டுள்ளன. மேலும் பழைய ஏற்பாட்டின் மற்ற புத்தகங்களிலும் பலகுறிப்புகள் உள்ளது. யூத அடிமைக்காலம் பற்றிய ஒரே ஒரு விவிலியத்திற்குப் புறம்பான குறிப்பு கி.மு. ஐந்தாம் நூற்றாண்டில், யூதர்களின் குடியிருப்பான எலே பென்டைன் என்ற இடத்தில் கண்டு பிடிக்கப்பட்ட அரமேயிக் புல்தாள் ஏடாகும்.

2. அடிமை முறையின் மூலங்கள்:- அ) போர்க்கைதிகள்:- "சுமேரிய அடிமை" என்ற சொல், போரிலிருந்துதான் அடிமைகள்' கொண்டு வரப்பட்டனர் என்பதைத் தெளிவாகக் காட்டுகின்றது. போர்க் கைதிகளும் தோற்கடிக்கப்பட்ட நாட்டு மக்களின் பெரும்பகுதியினரும் அடிமை முறைக்கு உள்ளாக்கப்பட்டனர் என்பது பழங்கால மேற்காசிய நாடுகளின் பழைய போர் சம்பந்தமான குறிப்பு ஏடுகளில் காணக்கிடைக்கின்றது. இதே மாதிரியாக போர்க்கைதிகளை அடிமைகளாக்கும் முறை கி.மு. இரண்டாம் ஆயிரமாண்டின் மத்திய காலத்தில் சீரியாவிலுள்ள நகரங்களிலும் பாலஸ்தீனத்திலும் பின்பற்றப் பட்டு வந்தது. சில நூற்றாண்டுகளுக்குப் பிறகு இஸ்ராயேலர்களால் பின்பற்றப் பட்டது (எண் 31:77 தொ; உப 20:10 தொ; 1 அர 20:39; 2 நாள் 28:8 தொ). கமுராபியின் சட்டத்தொகுப்பும் விவிலிய சட்டமும் இந்தப் பொதுவான வழக்கமான போர்க் கைதிகளை அடிமையாக்கும் முறையை ஏற்றுக்கொண்டன. மேலும் அவர்களுடையவும், அவர்களது உடனடியான குடும்பங்களுடையவும் துன்ப நிலையைச் சீர்செய்வதற்குத் தேவையான ஏற்பாடுகளைச் செய்தன.

கமுராபியின் சட்டத் தொகுப்புகளின் படி கைதி வீரர்களும், மாநில அதிகாரிகளும், தங்களுக்கென்று ஒரு வழியும் இல்லாது இருப்பவர்களும், நகரக் கோயிலினாலோ அல்லது நாட்டாலோ மீட்கப் படலாம். ஒரு பெண்ணுடைய கணவன் கைதியாக இருந்தால் அவள் தன்னுடைய குழந்தைகளையும் தன்னையும் காப்பாற்றிக் கொள்வதற்கான வழியில்லாமல் இருந்தால் அவள் மீண்டும் திருமணம்

செய்துகொள்ளலாம். அதேபோல் மத்திய அசீரியச் சட்டங்கள் கைது செய்யப்பட்ட படைவீரனின் மனைவி தன்னைக் காப் பாற்றிக்கொள்ளும் நிலையில் இல்லாமல் இருந்தால் அவளை அரண்மனைப் பாது காப்பில் வைக்கவேண்டும் என்று கூறு கிறது. உப 21:10–14–இன்படி படைவீரன் கைதிகளின் நடுவில் ஒரு அழகான பெண்ணைக் கண்டு அவளைத் தன் மனைவியாக்கிய பிறகு அவளைச் சுதந் திரப் பெண்ணாக நடத்தவேண்டும். பிற் பாடு அவளை விரும்பவில்லையென்றால் போர்க்கைதிகளில் ஒருத்தியாக விற்க முடியாது.

ஆ) அன்னிய அடிமைகள்:- பண்டைய கிழக்கத்திய நாடுகளின் வாணிபர்களு டைய நடவடிக்கைகளின் அன்னிய அடிமை வாணிபமும் பின்னிப் பிணைந்த ஒன்றாக இருந்தது. மெசபொத்தாமியா வின் பல்வேறு பகுதியிலிருந்து அடிமை களை இறக்குமதி செய்ததற்கும், ஏற்றுமதி செய்ததற்கும் தேவையான சான்றுகள் உள்ளன. ஆனால் இது பற்றிய விவிலிய பாலஸ்தீனச் சான்றுகள் மிகக்குறை வாகவே உள்ளன. வெளிநாட்டு அடிமை கள் குறைந்த எண்ணிக்கையில் பாலஸ் தீனத்தில் இறக்குமதி செய்யப் பட்டிருந் தாலும் (1 நாள் 2:34–35) குறைந்த எண்ணிக் கையில் அடிமைகள் பாலஸ்தீனத்திலி ருந்து வெளிநாட்டிற்கு ஏற்றுமதி செய்யப் பட்டது பற்றி இரு சட்டங்கள் தான் மறை முகமாகக் குறிப்பிடுகின்றன. யாத் 21:16; உப 24:7 ஆகியவை சுதந்திரமான தனி மனிதனைக் கடத்திக்கொண்டு போய் விற்றால் அதற்கு மரண தண்டனை விதிக்கின்றன. சட்டங்கள் குறிப்பாக கடத் தப்பட்ட மனிதன் வெளிநாட்டில் விற்கப் படமாட்டான் என்பதைச் சொல்லாவிட்டா லும், நாம் அதை அப்படி எடுத்துக் கொள்ளலாம் (ஆதி 37:28). மேலும் உப ஆகமத்தின் சட்டம் (23:15–16) வெளி நாட்டி லிருந்து தப்பிவந்து உள்நாட்டில் அடைக் கலம் தேடும் அடிமையைப் பிடித்து அவனுடைய தலைவனிடம் ஒப்படைக் காதே என்று இந்தச் சட்டம் பகர்கின்றது. இப்படியாக பாலஸ்தீனத்திலிருந்து அடி மைகளை இறக்குமதி செய்தலும், ஏற்று மதி செய்தலும் விவிலிய காலத்தில் நடந் துள்ளன என்பதற்கான சில சான்றுகள் உள்ளன.

இ) வயது வராதவர்களின் விற்பனை:- தாங்களாகவே முன்வந்து தங்களுடைய குழந்தைகளைப் பொருளாதார நெருக் கடி காலத்தில் அல்லது போர் சமயங் களில் விற்ற செயல் பண்டைய மேற்காசிய நாடுகளில் இல்லாமல் இல்லை. இந்தச் செயல் பாலஸ்தீனத்திலும் இதே மாதிரி யான சூழ்நிலையில் ஏற்பட்டிருக்கலாம். ஆனால் அதற்கான சான்றுகள் இல்லை. யாத். 21:7–11–இல் உள்ள சட்டமும் நெக 5:1–5–இல் குறிப்பிடப்பட்டுள்ள செய்தி களும், பெற்றோர் வயது வராத தங்களு டைய குழந்தைகளை வெளிப்படையாக விற்பனை செய்வதற்கான தெளிவான சான்று பகர்வதில்லை. யாத் 21:7–11 பெண் பிள்ளையை அவளது தந்தை விற்பதைப் பற்றியும், அவளை வயது வந்தவுடனேயே மனைவியாகவோ அல்லது வைப்பாட்டி யாகவோ தலைவனோ அல்லது அவனு டைய பிள்ளைகளில் ஒருவனோ மணந்து கொள்ளவேண்டும் என்று சொல்கின்றது. பெண் பிள்ளைகள் விற்பனை பற்றிய அதே மாதிரியான நிபந்தனை நூசி என்ற கூரியர் குடியிருப்பில் இருந்ததாகச் சொல்லப்படுகின்றது. ஒருசில விற்பனை ஒப்பந்தங்களில் அந்தப்பெண்ணின் வருங் காலத் திருமணம் ஒரு சுதந்திர மனித னுக்கோ அல்லது அடிமைக்கோ செய்யப் படவேண்டும் என்று சுட்டிக் காட்டப் பட்டுள்ளது. "அன்னிய மக்களுக்கு அவளை விற்றுவிட தலைவனுக்கு அதி காரமில்லை" (யாத் 21:8). இங்கு அந்தத் தலைவன் அவளை மனைவியாக ஏற்றுக் கொள்ள வில்லையெனில் அவளை விடு விக்கவேண்டுமென்று சொல்லப்பட்டுள் ளது. மேலும் யாத் 21:9–11–லிருந்து தலை வன் அவளை வைப்பாட்டியாகவோ அல்லது தன்னுடைய மகன்களில் ஒருவ னுக்குத் திருமணம் செய்துவைக்காமல் இருந்தால் "அவள் பணமொன்றும் கொ டாமலேயே விடுதலையாய்ப் போவாள்". நெக 5:1–5–இல் சொல்லப்பட்டுள்ள நிகழ் ச்சியில் "தாங்களாகவே" முன்வந்து பெற் றோர்கள் தங்களுடைய குழந்தைகளை

விற்றார்கள் என்று சொல்ல முடியாது. பொருளாதார நெருக்கடி ஒரு சில விவசாயிகளைத் தங்களுடைய நிலங்களையும், குழந்தைகளையும் தாங்கள் பெற்றுக் கொண்ட தவணைத் தொகைக்கு அடைமானமாக அளித்தனர். அந்தக் கடன் தொகை அளிக்கப்படாதபோது அதற்குரியவர்கள் அந்த நிலத்தை மீட்கும் உரிமையைத்தடை செய்துவிட்டு, ஈடு செய்யப்பட்ட குழந்தைகளைப் பெற்றோர்களின் விருப்பத்திற்கு எதிராகக் குழந்தைகளை விற்றுவிட்டனர்.

ஈ) தங்களை விற்பனை செய்து கொள்ளுதல்:- வறுமை அல்லது கடன் தங்களுடைய பிள்ளைகளை முதலிலும் பிறகு தங்களையும் அடிமை நிலைக்கு விற்குமாறு செய்கின்றது. தாங்களாகவே முன்வந்து தங்களையே அடிமை ஆக்கிக் கொண்ட நிலை அன்னியர்களிடம் பொதுவாகக் காணப்பட்டது. இது குறிப்பாக நூசி என்ற இடத்தைச் சேர்ந்த கெபீரூ என்றவர்களுக்கு ஏற்பட்ட நிலையாகும். அவர்கள் தங்களுக்கென்று ஒரு பணியை அமைத்துக் கொள்ளமுடியாத நிலையில் "தங்களுடைய சொந்த விருப்பத்தின்படி" தனிமையாக அல்லது அவர்களுடைய குடும்பங்களுடன் அடிமை நிலையை ஏற்றுக்கொண்டனர். பண்டைய சட்டத் தொகுப்புக்களிலும், பழைய ஏற்பாட்டுச் சட்ட அமைப்புக்கள் மட்டுமே தங்களையே விற்பனை செய்து கொள்வதை அல்லது மனமுவந்த அடிமை முறையையும் குறிக்கின்றது (யாத் 21:5–6; லேவி 25:39 தொ; உப 15:16–17). எபிரேய கடன்கார அடிமைக்கு, அவனுடைய தலைவன் ஒரு மனைவியைக் கொடுத்தபிறகு, தன்னுடைய ஆறு வருட பணி முடிந்தபிறகும் வெளியே சுதந்திரமாகச் செல்ல மறுத்துவிட்டால் அவன் வாழ்நாள் முழுவதும் தலைவனுக்கு ஊழியம் செய்வானாக என்று யாத் 21:5–6 கூறுகின்றது. அந்த அடிமை அப்படி நடந்து கொண்டதற்கான காரணங்கள் பொருளாதார பாதுகாப்பு, தன்னுடைய மனைவியுடனும் அவள் பெற்றெடுத்த பிள்ளைகளுடனும் இணைந்து இருக்க வேண்டும் என்ற விருப்பம் ஆகியவை ஆகும். யாத்திர, உப ஆகமங்களின் சட்டங்களுக்கு எபிரேயே கடன்கார அடிமைகள் உட்பட்டவர்களாக இருக்கும்போது, லேவி 25:39–55 ஆனது ஒரு எபிரேயன் தன்னுடைய வறுமையினால் தானாக முன் வந்து சகோதர எபிரேயனிடமோ அல்லது அங்கேயே நிரந்தரமாக வாழ்கின்ற ஒரு அன்னியரிடமோ அடிமையாக இருப்பவனைப் பற்றிக் குறிக்கின்றது. உன்னுடைய சகோதரன் ஏழ்மையினால். தன்னை உன்னிடம் விற்றால்....அல்லது அன்னியனுக்கோ விற்றால்" இப்படியாக எபிரேயர்கள் தாங்களாகவே முன்வந்து அடிமையாக்கிக்கொள்வது பற்றிய மூன்று அடிமைச் சட்டங்கள் இருப்பதனால், இவ்வகையான அடிமை முறை எதாவது ஒரு வகையில் பழங்கால இஸ்ராயேலில் பொதுவாக இருந்திருக்கவேண்டும் என்று எண்ண வேண்டியிருக்கிறது.

உ. கடனைச்செலுத்தமுடியாத வகையற்ற நிலை:- போர்க்கைதிகள், வெளிநாட்டு அடிமைகள், அடிமைப் பெற்றோர்களுக்குப் பிறந்த குழந்தைகள் அனைத்தும், பண்டைய மேற்காசிய நாடுகளின் சுதந்திரமற்ற மக்கட்தொகையின் அடிப்படைப் பகுதிகளாக இருந்தாலும், சுதந்திர குடிமக்களாக வந்த அந்நாட்டு மக்களே; கடன் தொல்லை தாங்கமுடியாமல் அடிமைகளாக மாறினர். மெசபொத்தாமியாச் சட்டம் கடன் அளித்த தலைவனின் உரிமையான, தன்னுடைய கடன்காரன் கடனைக் கட்டாதபோது அவனைக் கட்டாயப்படுத்திப் பணி செய்யுமாறு பல வந்தப் படுத்தலாம் என்கின்றது.

கடன்கட்ட இயலாமை நிலைக்குப் பல காரணங்கள் இருக்கலாம். ஆனால் தலையான காரணமாக தட்டிக் கேட்க முடியாத அளவுக்கு கடன் கொடுக்கப்பட்ட தொகையின் மீது விதிக்கப்பட்ட வட்டித் தொகையாகும். பாபிலோனியா, அசீரியா, சீரியா போன்ற நாடுகளில் வெள்ளி மீது சராசரி வட்டி 20–25 சதவிகிதமாக இருந்தது. தானியங்கள் மீது $33^1/_3$ சதவிகிதமாக இருந்தது. பாலஸ்தீனத்தில் கடன் தொகையின் மீது எவ்வளவு வட்டி விதித்தார்கள் என்பதற்கான சான்றுகள் பழைய ஏற்பாட்டில் இல்லை. இரண்டாவது சக எபிரேயரிடமிருந்து வட்டி வாங்குவதற்கு

எதிராக மூன்றுசட்டங்களிலும் கட்டளை உண்டு (யாத் 22:28; லேவி 25:35–37; உப 23: 19–20). மேலும் வட்டிகள் வசூலிக்கப்பட்டன என்ற விவிலிய குறிப்புகள் உள்ளன (சங் 15:5; பழ 28:8; எச 18:8–17; 22:12). இவற்றிலிருந்து பாலஸ்தீனத்தில் வட்டி வாங்கும் வழக்கம் இருந்திருப்பது தெரிகிறது.

பாலஸ்தீனத்தில் கடன் கொடுத்தவன் தன்னுடைய கடன்காரன் தன்னை ஏமாற்றும் பொழுது அவனைத் தன்னுடைய அடிமை ஆக்குவது பற்றி ஏட்டில் சொல்லப்பட்டுள்ளது. தாவீதுடன் அதுல்லாம் குகையில் சேர்ந்து கொண்டவர்களும் தங்களுக்குக் கடன் அளித்தவனை ஏமாற்றி விட்டுத் தப்பித்து ஓடிவந்தார்கள் (1 சாமு 22:2). 2 அர 4:1–இல் "கடன் கொடுத்தவன் இறந்துபோன கடனாளியின் குழந்தைகளை தங்களுடைய உடமையாக்கிக் கொண்டார்கள். எனவே விதவை உதவிக்காக இறைவாக்கினர் எலிசாவிடம் வந்தாள்". "கடன்காரன் என் இரண்டு மக்களையும் தனக்கு அடிமைகளாக எடுத்துக் கொள்ள வந்திருக்கிறான்" என்று குறிப்பு உள்ளது. நெக 5:1–5 ஈடு செய்யப்பட்ட குழந்தைகள் அவர்களுடைய பெற்றோர்கள் கடன் செலுத்தமுடியாத நிலை ஏற்படும்போது அடிமைகளாக்கப் பட்டார்கள் என்று குறிப்பிடுகின்றது. இந்த வகையான செயல்முறை இறைவாக்கு இலக்கியத்தில் பிரதிபலிக்கின்றது. "அவர்கள் நீதிமானை பணத்திற்கும், எளியவனை ஒருசோடி செருப்புக்கும் விற்கின்றார்கள்" (ஆமோ 2:6). "உங்களை விற்றுவிடும் படி நமக்கு கடன் கொடுத்தவன் எவன்" (ஏச 5:11).

கடன்காரன் ஏமாற்றும்போது கடன் கொடுத்தவன் அவனைத் தனக்குச் சொந்தமாக்கிக்கொள்ளும் உரிமை பரவலாக ஏற்றுக்கொள்ளப்பட்டது என்று யாத் 22:2 காட்டுகின்றது. இந்தச் சட்டம் திருடனை அடிமை முறையில் விற்கும்படி சொல்கின்றது. ஆனால் இது அவனுக்குத் தண்டனையாக இல்லாமல், அவன் தன்னுடைய உரிமையாளருக்கு ஏற்பட்ட சேதத்தை நிவர்த்தி செய்யமுடியாத நிலையில் இருக்கின்றான் என்பதற்காகத் தான் இந்நிலைக்கு உட்படுத்தப்படுகின்றான். யாத் 21:2–4; உப.15:12–இல் உள்ள சட்டங்களுக்கு உட்பட்டவர்கள் எபிரேயர்கள், ஏனெனில் இவர்கள் சட்டங்கள் இவர்களுடைய வலுக்கட்டாயமாக்கப்பட்ட பணி ஆறு வருடத்திற்கு என்று நிர்ணயித்து அவர்களைப் பாதுகாக்கின்றது.

3. சட்ட நிலை (அ) சூட்டுக்குறி:- சட்டப்பூர்வமாக அடிமைகள் ஒரு தட்டு முட்டுப் போன்றவர்களே. அடிமையைக் கடைச் சரக்காகக் கருதினர். அதை விற்க முடியும், வாங்கமுடியும், குத்தகைக்குக் கொடுக்கலாம், மாற்றிக்கொள்ளலாம் அல்லது வாரிசு உடமையாக ஆக்கிக் கொள்ளலாம். இவனுக்கும் சுதந்திரமாக உள்ள மனிதனுக்குமிடையே இருக்கின்ற மிகவும் கூர்மையான வித்தியாசம் என்னவெனில் இவனுடைய தந்தையின் பெயரை எப்பொழுது குறிப்பிடுவதில்லை. அவனுக்குப்பெயர் இல்லாததால் அவனுக்குத் தலைமுறை கிடையாது. சொத்தின் ஒரு பகுதியாக விலங்குகளைப்போல் அடிமையை ஒரு குறியிட்டு அவனை அந்த தலைவனுக்குரிய சொத்தில் சேர்க்கின்றனர். பழைய கால எகிப்தியர்கள் கைதிகளுக்குச் சூடு குறிபோட்டனர், அரசனுடைய பெயரைக் கொண்ட முத்திரையும் குத்தினர்; தனியாக உரிமையாக வைக்கப் பட்டிருந்த அடிமைகளின் தலைகள் வழிக்கப்பட்டிருந்தன. சில சமயம், வால் போன்ற முடி உச்சியில் விடப்பட்டிருந்தது. பண்டைய பாபிலோனிய அடிமைகளில் குறிப்பாக தப்பித்து ஓடும் போக்குடையவர்கள் எல்லாரும் அறியக் குறியிடப் பட்டிருந்தனர். இது நெற்றிமீது இடப்பட்ட சூட்டுக்குறியாக இருக்கலாம், இது சிறப்பான முறையில் முடிவழித்தலாகவோ இருக்கலாம்; வேறுசிலர் இது மண்ணால் அல்லது உலோகத்தால் செய்யப்பட்டு அடிமையின் கழுத்திலோ, கையிலோ அல்லது காலிலோ கட்டப்பட்ட தகடாகவோ இருக்கலாம். புதிய பாபிலோனிய காலத்தில், அடிமையின் கையில் அவனுடைய தலைவனின் பெயரை பச்சைக்குத்தும் வழக்கம் இருந்தது. ஆலய அடிமைகள் எந்த ஆலயத்திக்கு உரிமையுடையவர்களாக இருந்தார்களோ அந்த ஆலயத் தெய்வத்தின், தேவதையின் அடையாளத்தால் குறியிடப்பட்டிருந்தனர்.

விவிலியச் சட்டத்தின்படி ஆறு ஆண்டு காலப்பணி முடிவடைந்த அடிமை மீண்டும் வாழ்நாள் முழுவதும் பணிசெய்ய விரும்பினால் அவனுடைய காதில் தோல் தைக்கும் ஊசியால் துளைபோடப்படும் (யாத் 21:6; உப 15:17). அந்தத் துளை ஓட்டை அவசியமாக சிறியதாகவும், கண்ணுக்குப் புலப்படாததாகவும் இருந்தால் அது எந்த தேவைக்காக செய்யப்பட்டது என்பதைத் தெரிந்துகொள்வது மிகக்கடினமாக இருந்தது. அந்தத் துளையானது வளையமோ அல்லது நூல் கயிறோ நுழைக்கப்பட்டு அதன் மீது மண்ணால் அல்லது உலோகத்தால் செய்யப்பட்ட முகவரித் தொங்கல் சீட்டுக் கட்டப்பட்டது. இந்த முறையுடன் பச்சைக்குத்தும் பழக்கமும் இருந்தது. காயினுடைய குறி (ஆதி 4:15), கையின் மீது எழுதப்பட்ட யாவேலின் பெயர் (ஏச 44:5; 49:16) நெற்றியின் மீது இருந்த "தௌ" என்ற எபிரேய எழுத்துப் போன்ற அடையாளம் போன்றவைகள் பச்சைக்குத்தும் வழக்கம் இருந்ததைத் தெளிவாக விளக்குகின்றன. பச்சைக் குத்துதல் ஒருவனுக்குச் சொந்தமான பொருட்களை அடையாளம் காட்டியது. இது கி.மு. ஐந்தாம் நூற்றாண்டில் எலெபென்டைன் குடியிருப்பில் உள்ள அடிமைகளின் கையில் இப்படிப்பட்ட அடையாளங்கள் பொறிக்கப்பட்டதாகத்தெரிகிறது.

ஆ) பெண் அடிமை:- பெண் அடிமையும், ஆண் அடிமையைப் போல தட்டு முட்டுப் பொருளாக நடத்தப்பட்டாள். அவள் வேலைக்கு குத்தகைக்கு விடப்பட்டாள். ஈடாக கொடுக்கப்பட்டாள் அல்லது வர தட்சிணையின் ஒரு பகுதியாகக் கொடுக்கப்பட்டாள். அவளுடைய அன்றாட வேலைகளுடன், அவள் தன்னுடைய பெண்பால் நிலைக்கு ஏதுவான துன்பத்திற்கும் ஆளாகி இருந்தாள். பெண் அடிமையை கொண்டிருப்பது தலைவனுக்கு அவளிடமிருந்து சாதாரண பணிகளை மட்டும் எதிர்ப்பார்ப்பது என்பது மட்டுமல்ல, அதோடுகூட பெரும்பாலான நேரங்களில் முதன்மையாக, தலைவனுடைய குடும்பத்தைத் சார்ந்த ஆண்கள் அவளுடைய அழகைப் பயன்படுத்திக்கொண்டார்கள், மேலும் அவளுடைய உடலை அடிமைக் குழந்தைகளைப் பெற்றெடுப்பதற்காகப் பயன்படுத்தினார்கள். பெண் அடிமை அடையக்கூடிய உயர்ந்த பதவி தன்னுடைய தலைவனுக்குக் குழந்தை பெற்றெடுக்கும் வைப்பாட்டியாக இருப்பதும், மிகவும் தாழ்ந்த விபச்சாரத் தொழிலில் பயன்படுத்துவதும் ஆகும்.

கமுராபி சட்டத்தொகுப்பின்படி தன்னுடைய தலைவியின் கணவனுக்குக் குழந்தையைப் பெற்றுக்கொடுத்த அடிமைப் பெண்ணை விற்கமுடியாது. ஆபிரகாமும் சாராளும் தெள்ளத் தெளிவாக ஆகாரின் காரியத்தில் இந்தப் பழைய சட்டத்தின்படி நடந்துகொண்டார்கள். ஆகார் சாராயிக்கு சொந்தமானவள். அவளுக்கு இசுமாயேல் பிறந்த பிறகு அவள் தலைவியை "அலட்சியம்" செய்தாள். ஆனால் தலைவி அவளுடைய வாழ்க்கையை கசப்புள்ளதாக ஆக்கலாம், ஆனால் அவளை விற்க முடியாது (ஆதி 16). சிலிப்பா, பிலியா என்ற இரண்டு பெண் அடிமைகள் யாகோபுக்குப் பிள்ளைகளைக் பெற்றுக் கொடுத்தார்கள். அவர்கள் ராக்காலுக்கும், லியாவுக்கும் சொந்தமானவர்கள். ஆனால் அவர்களுடைய நடத்தையைப்பற்றி எந்த செய்தியும் கிடைக்கவில்லை. ஆனால் அவர்கள் ஆகார் நடந்து கொண்டது போல நடந்திருந்தால் மேற்கூறிய அதே சட்டத்தை இவர்களுக்கும் பயன்படுத்தலாம்.

ஆண் அடிமைகளும், பெண் அடிமைகளும் அடிமைக் குழந்தைகளைப் பெற்றுக் கொடுக்கும் நோக்கத்தில் கூடினார்கள். யாத் 21:4 "அவன் தலைவன் அவனுக்கு ஒரு பெண்ணை மணமுடித்துக்கொடுத்து அவள் அவனுக்கு ஆண் பிள்ளைகளையும் பெண் பிள்ளைகளையும் பெற்றிருப்பாளாயின், அந்தப் பெண்ணும் அவள் பிள்ளைகளும் தலைவனுக்கேச் சொந்தம், அவன் தனியே செல்வானாக" என்கின்றது. பெண் அடிமை வரையறையற்ற முறையில் தலைவனின் குடும்பத்தில் உடலுறவு நிகழ்ச்சியில் பயன்படுத்தப்பட்டாள் என்ற செய்தியை யோபு 31:10–இலிருந்து அறிந்து கொள்ளலாம்.

இ) அடிமைகளுக்கும் உரிமை குடிமக்களுக்குமிடையேயான திருமணம்:- பண்டைய பாபிலோனியாவில் உரிமை

குடிமக்களுக்கும், அடிமைக்கும் திருமணம் நடப்பது பொதுவான செயலாக இருந்தது. தலைவனுடைய அனுமதியின் பேரில் அடிமை ஒரு பெண்ணைத் தேர்ந்தெடுத்துச் சட்டப்படி இவளைத் திருமணம் செய்துகொள்ளலாம். கெமுராபி சட்டத் தொகுப்பின்படி இவர்களுக்குப் பிறந்த குழந்தைகளை உரிமைக் குடிமக்களாக கருதப்பட்டனர். அவர்களுடைய தந்தையின் தலைவன் அவர்களின் சேவையைக் கோரமுடியாது. ஆனால் இப்படிப்பட்ட திருமணங்கள் பாலஸ்தீனத்தில் இருந்ததாகத் தெரியவில்லை. லேவி 19:20 –இல் உள்ள குறிப்பீடு பெண் அடிமையைப்பற்றியதாகும். அவள் மற்றொருவருக்கு நிச்சயிக்கப்பட்டிருந்தாள். ஆனால் இது தெளிவாக இல்லை. இந்தக் காரியத்தில் உள்ள பெண்களின் நிலை என்ன என்பது தெரியவில்லை. அதேபோல அந்த ஆள் யார் என்றும் தெரியவில்லை. சேசானுக்கு புதல்வியரேயன்றி புதல்வரில்லை. ஆகையினால் அவனுடைய ஒரு பெண்ணை தன்னுடைய யரிகா என்ற அடிமைக்கு மணமுடித்து கொடுத்தார் (1 நாள் 2:34–35). இது கலப்புத் திருமணத்திற்கான சான்று அல்ல (1 நாள் 2:34–35). யரிகா விடுதலை அளிக்கப்பட்டு சேசானால் தத்து எடுக்கப்பட்டிருக்கவேண்டும், ஏனெனில் யரிகா, யூதாவின் மரபு முறைப்பட்டியலில் இடம் பெறுகிறார்.

ஈ) வீட்டில் பிறந்த அடிமை:- சட்டபூர்வமாக வீட்டிலே பிறந்த அடிமைக்கும் வெளியிலிருந்து வாங்கிய அடிமைக்கும் எந்த வேறுபாடும் கிடையாது, ஆனால் சமுதாய அடிப்படையில் முந்தியவனுடைய நிலை பிந்தியவனைவிட மேன்மையானதாக இருந்தது. எலியேசர் ஆபிரகாமின் பிரமாணிக்கமுள்ள ஊழியனின் காரியத்தில் இந்தக் கருத்து தெள்ளத் தெளிவாக்கப்பட்டுள்ளது. எலியேசர்தான் தன்னுடைய வாரிசாக இருப்பான் என்ற ஆபிரகாமின் முறையீடு (ஆதி 15:2–4) பிள்ளைகளற்ற தலைவனின் அடிமைகள் சொத்துரிமை பெற்றனர் என்பதற்கு சான்று அன்று. பாலஸ்தீனத்திலோ பழமேற்காசியில் எங்குமோ இதற்குச் சான்று இல்லை. ஆபிரகாமின் முறையீட்டின் பொருள், அவர் பிள்ளையின்றி இருந்தால், எலியேசரைத் தத்து எடுத்துத் தன் வாரிசாக நியமிக்க வேண்டியிருக்கும் என்பதே.

உ) தப்பியோடிய அடிமை:- தப்பியோடிய அடிமையைப் பாதுகாத்து வைப்பதென்பது திருடிய பொருட்களை பெற்றுக் கொள்வது, சொந்தமாக்கிக் கொள்வது போன்றதாகும். இது சட்டத்தினால் தண்டிக்கப்படக்கூடியது. எஸ்நூன்னா சட்டம் தப்பியோடிய அடிமைகளைப் பிடித்து வைத்தவர்களுக்கு அபராதம் விதிக்கின்றது. தொடக்ககால பாபிலோனிய சட்டங்கள் இந்தக் காரியத்தில் அவ்வளவு கடுமையாக இருக்கவில்லை. ஆனால் கமுராபி சட்டம் மிகவும் கடுமையானதாகத் தெரிகிறது. தப்பியோடிய அடிமையைப் பிடித்து வைத்திருப்பதென்பது தலையாய குற்றமாகும். அடிமைக்கு நகர எல்லையிலிருந்து தப்பியோடுவதற்கு உதவி செய்தால் அல்லது அவனை அதிகாரிகளிடம் ஒப்படைக்க மறுப்பது, மரண தண்டனைக்குரிய குற்றமாகும். பிடித்துக் கொடுப்பவனுக்குச் சன்மானமும் உண்டு. பழைய ஏற்பாட்டுச் சட்டம் (யாத் 21: லேவி 25; உப 115) தப்பியோடுகின்ற அடிமைகளைப் பற்றி கவலைப்படுவதில்லை. ஆயினும் தலைவர்களுடைய கொடுமை தாங்க முடியாமல் அங்கிருந்து தப்பியோடுவதும், சுதந்திரத்திற்காகத் தப்பியோடுவதும் பாலஸ்தீனத்தில் பரவலாக இருந்தது. ஆகார் தன்னுடைய தலைவி சாராவிடமிருந்து தப்பி ஓடிவிட்டாள் (ஆதி 16). "தாவீது யார்? ஈசாயின் மகன் யார்? இன்றைக்கு ஏராளமான அடிமைகள் தங்களுடைய தலைவர்களிடமிருந்து தப்பி ஓடுகின்றார்கள்" (1 சாமு 25:10) என்று நாபால் கேட்கிறார். சிமயி தன்னுடைய இரண்டு அடிமைகள் ஓடிவிட்டார்கள் என்று கேள்விப்பட்டவுடனேயே, காத்து என்ற நகரத்திற்குப் போய் அவர்களைக் கூட்டி வந்தார் ( 1 அர 2:39–40).

ஊ) நடத்துமுறை:- அடிமைகளை அவர்கள் வீட்டுப்பொருட்களாகக் கருதினாலும், சட்டமும், சமுதாயமும் அவர்கள் மனிதர்கள் என்பதை மறந்துவிடவில்லை.

ஒருபுறம் அவர்கள் பொருட்களாகக் கருதப்படுகின்றனர். அதே வேளையில் மறுபுறம் அவர்கள் மனிதர்களாக கருதப் படுகின்றனர். அவன் கொல்லப்பட் டாலோ அல்லது ஊனப்படுத்தப்பட் டாலோ அல்லது பெண் அடிமையின் காரியத்தில் அவள் ஒரு அந்நியரால் தவ றாக நடத்தப்பட்டாலோ அதற்கான இழப் பைச்செய்தவன் அவர்களுடைய தலை வனுக்கு ஈடுசெய்தான், ஆனால் அவர்கள் பாதிக்கப்பட்டவர்களாக கருதப்பட வில்லை. விவிலியம் இப்படிப்பட்ட இரண்டு நிகழ்ச்சியை மட்டும் குறிப்பிடு கின்றது. முதலில் எருதுவினால் கொல் லப்பட்ட ஒரு பெண்ணையும் மற்றொன்று ஒரு அன்னியன் அடிமைப் பெண்ணுடன் உடலுறவு கொண்ட நிகழ்ச்சியும் ஆகும். முதல் நிகழ்ச்சியில் எருதுவின் சொந்தக் காரர் தலைவனுக்கு 30 செக்கேல் கொடுத்து ஈடு செய்யவேண்டும் (யாத் 21:32). இரண்டாவது நிகழ்ச்சியில் "பாவம் பரிகாரப்பலியுடன்" குற்றவாளி தப்பித்துக் கொள்கிறான் (லேவி 19:20). விவிலியச் சட்டம் மற்ற சட்டத்தைப்போல் அல்லா மல் அடிமைமீது அவனுடைய தலைவ னுக்கு இருக்க வேண்டிய அதிகாரத்தை வரையறை செய்து, அடிமையின் மனிதத் தன்மையை ஏற்றுக்கொள்கிறது. தலை வன் தன்னுடைய அடிமையைக் கொடு மைப்படுத்தலாம் "ஏனெனில் அடிமை அவனுடைய பணம்" (யாத் 21:20–21). ஆனால் இவனுடைய கொடுமையினால் அவன் நிரந்தர ஊனமாக்கப்பட்டு விட் டால் அதற்கு ஈடாக அவனுக்குச் சுதந்திரம் அளிக்கப்படவேண்டும் (யாத் 21: 26–27). அடித்ததினால் அவன் இறந்து விட்டால் தலைவன் தண்டனைக்குள்ளா வான் (யாத் 21:20–21).

விவிலிய பாலஸ்தீனத்தில் அடிமைகள் வீட்டு வேலைக்காரர்களாக இருந்தார் கள், தங்கள் தலைவனோடு தோள் கொடுத்து வீட்டிலும் வயலிலும் பணி செய்தார்கள். எபிரேயர் அல்லாத அடி மைகள் தங்கள் தலைவனுடைய ஓய்வு நாள் உட்பட்ட சமயக்காரியங்களில் பங்கெடுக்க வேண்டும் (ஆதி 17:13.28; யாத் 12:44; 20:10; 23:12; லேவி 22:11; உப 5:14; 12: 12.18; 16:11.14). இறைவாக்கு இலக்கியம் அடிமைகளின் மனித்தன்மையை நினைவுபடுத்துகின்றது. "அடிமையாக இருக்கும் பெண் கள் மீதும் ஆண்கள் மீதும் அந்நாட்களில் நாம் ஆவியைப் பொழிந்திடுவோம்" (யோவேல் 2:24). யோபு அடிமை ஒழுக் கத்தை எதிர்த்து அதனுடைய முழு அமைப்பு முறையையும் கண்டித்தார் (யோபு 31:15).

எ) அடிமையின் சேமிப்பு: பாபிலோ னிய அசீரிய எகிப்திய அடிமைகளுக்கு சேமிப்பு வைத்துக்கொள்ளும் உரிமை கொடுக்கப்பட்டிருந்தது. அடிமை இறந்த பிறகு சேர்த்து வைத்துள்ள செல்வத்தை அவனுடைய சுதந்திர மனைவிக்கும் அவனுடைய தலைவனுக்கும் இது சரிபங் காகப் பிரித்துக் கொடுக்கப்பட வேண் டும். இது அடிமையின் உடமைக்குத் தலைவனுக்குரிய உரிமையைச் சுட்டிக் காட்டுகிறது. பிற்கால அசீரியாவிலும் புதிய பாபிலோனியாவிலும் பொருளாதார வாழ்வில் அடிமைகளுக்கு ஏராளமான பங்கு இருந்தது. சிலர் கைவினைஞர் களாகவும், மேற்பார்வையாளர்களாகவும், குத்தகை விவசாயிகளாகவும் இருந்தனர். அவர்களுக்கென்று, வீடுகள், நிலம் இன் னும் அவர்களுக்கென்றே அடிமைகள் இருந்தார்கள். இதை அனுபவிப்பதற்காக அவர்கள் தங்களுடைய வருமானத்தின் ஒரு பகுதியைத் தங்களுடைய தலைவனு க்குச் செலுத்தினர். அடிமை இறந்த போது அவனுடைய உடமைகள் எல்லாம் தலைவனுக்குச் சொந்தமாயின.

இதே மாதிரியான உரிமை பாலஸ் தீனத்தில் வாழ்ந்த அடிமைகளுக்கும் வழங்கப்பட்டது (லேவி 25:49). எபிரேயன் தன்னை ஒரு எபிரேயன் அல்லாதவனுக்கு விற்கும்போது அவனை அவனுடைய உற வினர்கள் மீட்கவேண்டும் அல்லது அவன் பணக்காரன் ஆகும்போது அவனே தன் னை மீட்டுக்கொள்ளவேண்டும். கீசு என்ப வனின் அடிமை கால் வெள்ளிச்சேக் கேல் பணம் கொண்டிருந்தான். அதே போல் சவுலின் அடிமையான சீபா 20 அடிமைகளும், 15 மகன்களும் வைத்திருந் ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது (2 சாமு 9:10). ஆனால் இவர்கள்மேல் சட்ட உரிமை யுள்ளவன் சீபாவின் தலைவனே (9:12).

ஏ) அடிமையை விடுதலை செய்யும் முறை:- கமுராபி சட்டத் தொகுப்பு நான்கு வகையான முறையில் விடுதலை செய்வதைக் குறிப்பிடுகின்றது. அ) கடன் பெயரால் அடிமையாகக்கருதப்பட்டவனும், அவனுடைய குடும்பமும் மூன்றாண்டு ஊழியத்திற்குப்பிறகு விடுதலையளிக்கப் படவேண்டும். ஆ) அடிமை வைப்பாட்டியும், அவளுடைய குழந்தைகளும் தலைவனுடைய இறப்பிற்குப் பிறகு விடுதலையளிக்கப்பட வேண்டும் இ) உரிமை குடிமகளுக்கும், அடிமைக்கும் பிறந்த குழந்தைக்குச்சுதந்திரம் அளிக்கப்படவேண்டும் ஈ) வியாபாரியால் வெளிநாட்டில் வாங்கப் பட்ட பாபிலோனிய அடிமை தன் தாய் நாட்டுக்குக்கொண்டு வரப்பட்ட உடனேயே விடுதலையளிக்கப் படவேண்டும்.

மிகவும் பொதுவாக பின்பற்றப்பட்ட அடிமையை விடுதலை செய்யும் முறை விலை கொடுத்து விடுதலை வாங்குதலும், தத்து எடுத்து விடுதலை அளித்தலுமாகும். அவனுடைய நிலை பாதுகாப்பாக இருப்பதற்காக சில காலத்திற்கு அவர்களைத் தெய்வங்களுக்கு அர்ப்பணித்து விட்டார்கள்.

விவிலியச் சட்டத்தின்படி அடிமைகளை ஐந்துமுறையில் உரிமை குடிமக்களாக்கலாம் அ) ஒரு எபிரேய அடிமை அவனுடைய மனைவி அல்லது எபிரேய பெண் அடிமை ஆகியவர்கள் ஆறு வருட பணிக்குப் பின் விடுதலை செய்யப்பட வேண்டும் (யாத் 21:2–4; உப 15:12). ஆ) சொந்த விருப்பத்தினால் தானாக முன் வந்து தன்னையே ஒரு எபிரேயனுக்கோ அல்லது அன்னியனுக்கோ விற்றுக் கொண்ட எபிரேய அடிமை ஜுப்லி ஆண்டின்போது விடுவிக்கப்படவேண்டும் (லேவி 25:34–43.47–55). இ) தன்னுடைய தந்தையினால் தலைவனிடம் ஒப்படைக்கப் பட்ட பெண், நிபந்தனையின்படி அவள் வயதை அடைந்தவுடன் தலைவனுக்கோ அல்லது அவனுடைய மகன்களில் ஒருவனுக்கோ திருமணம் செய்து வைக்கப்படவில்லையெனில் அவளை அவனுடைய தந்தைக்கே திருப்பிக் கொடுக்கவேண்டும் (யாத் 21:7–11). ஈ) தலைவனால் நிரந்தரமாக ஊனமாக்கப் பட்ட அடிமை எந்தவித ஈடும் இல்லாமல் விடுவிக்கப்படவேண்டும் (யாத் 21:26–28). உ) தப்பி ஓடிய அடிமையை அவனுடைய தலைவரிடம் ஒப்படைக்கக்கூடாது. மாறாக அவனுக்கு அடைக்கல உரிமை அளிப்பது மற்றவர்களுடைய பொறுப் பாகும் (உப 23:15–16).

யாத் 21:2–4; உப 15:12 போன்ற சட்டங்களுக்கு எபிரேய கடன்கார அடிமைகள் உட்பட்டிருந்தனர். யாத்திர ஆகமத்திலும், உப ஆகமத்திலும் அடிமைகளைப் பற்றியான சட்டம் ஒரே மாதிரியாக இருந்தது. பாலஸ்தீனத்தில் இருந்த சட்டம் மற்ற சட்டங்களைவிட அடிமைகளை விடுவிப்பதில் விடுதலை அளிப்பதைச் செயல்படுத்துவதில் அதிக முன்னேற்றம் அடைந்திருந்ததா என்று சொல்லமுடியாது. ஏனெனில் எரே.34:8–16 தன்னுடைய காலத்தில் எபிரேய அடிமைகள் ஏழாம் ஆண்டில் விடுதலை செய்யப்படவில்லை என்று வெளிப்படையாக கூறுகின்றார். அதே போல் நெகமியா காலத்தில் இருந்ததாகவும் கூறப்படுகின்றது.

லேவி.25:39–43. 47–55–இல் உள்ள சட்டத்திற்குட்பட்ட அடிமைகள் தாங்களாக முன் வந்து தங்களையே விற்றுக் கொண்ட ஏழை எபிரேயர்கள் ஆவார்கள். இந்தச் சட்டமானது எல்லா எபிரேயர்களுக்கும் ஜூபிலி ஆண்டில் விடுதலை அளிக்குமாறு கூறுகிறது. மேலும் தாங்களாக முன்வந்து நிரந்தர அடிமையானவர்களையும் இந்தச் சட்டம் உள்ளடக்கியுள்ளது. எழுத்து அடிப்படையில் ஜூபிலிச் சட்டம், மற்ற கிழக்கத்திய நாடுகளில் இல்லாத சட்டத்தைப்போன்று, நிரந்தர அடிமை முறையை அந்த சமுதாயத்தின் எல்லா குடிமக்களிடமிருந்தும் அழிக்கின்றது. இந்தச் சட்டம் எந்த, எவருக்கும் ஒரு எபிரேயனையும் நிரந்தரமாக உரிமையாக்கிக்கொள்ளும் தகுதி கிடையாது என்று கூறுகின்றது. "ஏனென்றால், இஸ்ராயேல் மக்கள் நமக்கே ஊழியக்காரராம். நாமல்லவோ எகிப்து நாட்டிலிருந்து அவர்களை மீட்டுவந்தோம்" (லேவி 25:55).

யாத் 21:26–27 எவ்வகை அடிமைகளைப்பற்றியது என்பது விளக்கவுரை

யாளர்களிடையே கருத்து வேறுபாடு உண்டு. சிலர் இது எபிரேயரல்லாதவர்களுக்கு மட்டுமே பொருந்தும் என்பர். மற்றவர்களைவிட எபிரேயர்களுக்கே அதிகம் பொருந்தும் என்பர் வேறு சிலர். இதைவிட உடன்படிக்கையின் புத்தகம் எந்தவித வேறுபாடுமின்றி எல்லா அடிமைகளுக்கும் குறிப்பாக அவர்களுடைய உறுப்புக்கள் ஊனப்படுத்தப்படுவர்களுக்கு பாதுகாப்பு அளிக்கிறது என்பதே மேல்.

பாலஸ்தீன அடிமை தன்னுடைய சுதந்திரத்தை வாங்க முடியும். ஆனால் அவனுடைய தலைவனே அதற்கு இணங்க வேண்டும். எபிரேயனை ஒரு அன்னியன் அடிமையாக வைத்திருந்தால், அவனுக்குச் சுதந்திரத்தை வாங்கக்கூடிய வழிகள் இருந்தால் அவனுடைய தலைவன் அதற்கு அனுமதி வழங்கவேண்டும் (லேவி 25:47–54). ஆனால் அதே வேளையில் எபிரேய தலைவன் அப்படிச் செய்ய வேண்டுமென்பதில்லை (25:39–41).

உப ஆகமச் சட்டங்கள் (23:15–16) தப்பி ஓடிவந்த அடிமையை அவனுடைய தலைவனிடம் ஒப்படைக்கக்கூடாது என்று தடை செய்கின்றது என்பது நடைமுறைக்கு ஒவ்வாதது என்று சிலர் கூறுவர். இந்தச் சட்டமானது பின்வருமாறு உள்ளது "உன் அடைக்கலத்தைத் தேடி வந்த அடிமையை அவனுடைய தலைவன் கையில் ஒப்புவியாதே. அவன் உனக்குள்ள இடங்களில் தனக்கு வசதியான ஒன்றைத் தேர்ந்து கொண்டு உன் நகரங்களுள் ஒன்றிலே உன்னோடு இருப்பான். நீ அவனைத் துன்புறுத்தாதே" (உப 23:15–16).

25:16 மிகவும் தெளிவாக இந்தச் சட்டம் வெளிநாட்டிலிருந்து தப்பி வந்து அடைக்கலம் புகுந்த அடிமையை நடத்தும் முறையைப்பற்றி குறிப்பிட்டுள்ளது. மேலும் சொந்த நாட்டைச் சார்ந்தவர்களை அன்னிய நாட்டில் விற்பதையும் தவிர்க்கின்றது.

பொதுவாக சமீப காலத்தில் கண்டுபிடிக்கப்பட்ட கல்லேடுகளிலிருந்து, வேறு நாட்டிலிருந்து தப்பி ஓடி வந்துள்ள அடிமைகளைப் பிடித்து அந்நாட்டில் ஒப்படைக்க வேண்டுமென்று கூறுகின்றது. கானானிய நாட்டுச் சட்டப்படி வெளிநாட்டில் சொந்த நாட்டைச் சார்ந்த அமைகளை விற்பதைத் தவிர்க்கவில்லை. அவர்கள் தப்பித்துத் தங்களுடைய சொந்த நாட்டிற்கு வந்துவிட்டால், அவர்களை அவர்களுடைய தலைவனிடத்தில் ஒப்படைக்கவேண்டும். உப ஆகமம் இதற்கு மாறுபட்ட கோணத்தில் மற்றொரு நாட்டிலிருந்து தப்பி ஓடிவந்த பாலஸ்தீன அடிமையை அவனுடைய தலைவனிடம் ஒப்படைப்பதை தடை செய்கின்றது. ஆனால் இங்கு 'அடிமை' என்ற வார்த்தை யாரைக் குறிக்கின்றது என்ற கேள்வி எழுகின்றது. பாபிலோனிய, அசீரிய எழுத்துக்களில் 'அடிமை' என்ற சொல் தங்களுடைய நாட்டைச் சார்ந்தவர்களை மட்டும் குறித்தது. உப 23:16–இன்படி தப்பி ஓடிவந்த எபிரேய அடிமை எந்த கூட்டத்தில் அடைக்கலம் தேடுகின்றானோ அங்கு அவனுக்குத் தகுந்த பாதுகாப்பு அளிக்க வேண்டும் என்று கூறுகிறது.

*4. அரச அடிமைகள்:-* காலம் காலமாகப் போரில் கைதிகளாகப் பிடிபட்டவர்களில் தலைவிதியாக இது உள்ளது. இந்த கைது செய்யப்பட்ட அடிமைகள் சாலைகள் அமைக்கவும், கோட்டைக் கட்டவும், கோயில்கள் கட்டவும், நிலத்தைப் பயிர் செய்யவும், அரண்மனையுடன் இணைந்த தொழிற்சாலையில் பணி செய்யவும் பயன்படுத்தப்பட்டனர். பாலஸ்தீனத்தில் எகிப்தியர்களின் ஆட்சி வீழ்ச்சி அடைந்தபிறகு அதற்குப் பிறகு வந்த நீதிபதிகளின் காலத்தின் மத்திய மையமாக்கப்பட்ட ஆட்சி அமைப்பு நிலவவில்லை. எனவே அரச அடிமை முறை இஸ்ராயேலில் இருக்கவில்லை. தாவீது, சாலமோன் இவர்களுடைய காலத்தில் மீண்டும் அரச அடிமை முறை நிறுவப்பட்டது. போரில் கைதியாக்கப்பட்ட அரச அடிமைகளில் சிலர், வெற்றிபெற்ற நாட்டின் தேவதையின் கொள்ளைப் பங்காக ஆலயத்திற்கு அளிக்கப்பட்டனர். ஏனெனில் தேவதை அவர்களது வெற்றிக்கு உதவி செய்ததாக நம்பினார்கள் (எண் 31:32–47; யோசு 9:23–27; எஸ் 8:20; எச 44:7–9). மேலும் மற்றவர்கள் பழங்கால மேற்காசிய வழக்

கப்படி படைத் தளபதிகளுக்கும், அரசாங்க அதிகாரிகளுக்கும் பணி செய்யும்படி நன்கொடைகளாக கொடுக்கப்பட்டனர் (உப 20:10–14; 21:10; நீதி 5:30). அரச அடிமைகளின் பெரும்பகுதியினர் அரசனுடைய பங்காகும். தாவீதின் வெற்றிகளுக்குப்பின் இஸ்ராயேலில் அரச அடிமை முறை புகுத்தப்பட்டது. அராபாவைக் கைப்பற்றிய பிறகு அரச அடிமை முறை ஒரு பொருளாதார பிரச்சினையாக மாறி விட்டது. புறம்போக்கு நிலங்களிலும், பெரிய பெரிய பண்ணைகளிலும், சுரங்கத் தொழில்களிலும் ஈடுபடுத்தப்பட்டனர். தாவீது, சாலமோன், அதற்குப் பின்னர் வந்த அனைத்து அரசர்களும் அரச அடிமைகளைச் சுரங்கத் தொழிலில் ஈடுபடுத்தி அதிக நன்மை அடைந்தனர். அரச அடிமை முறை நிறுவனம் பாலஸ்தீனத்தில் தாவீதின் நாட்களிலிருந்து எஸ்ரா, நெகமியா காலம் வரை இருந்தது. இவர்கள் யூதா அரசாட்சிவரை நீடித்திருந்தார்கள். புதிய முறையில் எஸ்ரா, நெகமியா இவர்களால் தொடங்கப்பட்ட குருக்களாட்சி முறையில் அரச அடிமைகள் ஆலய அடிமைகளோடு சேர்க்கப்பட்டனர் (எஸ் 2:55–58; நெக 7:57–60; 11:3). இஸ்ராயேல் சுதந்திர நாட்டு அமைப்பை இழந்தபோது அரச அடிமை முறையும் முடிவுக்கு வந்தது.

5. ஆலய அடிமை முறை:- மெசபொத்தாமியாவில் ஆலய அடிமைகள் இரண்டு வகையில் சேர்க்கப்பட்டனர். போரில் பிடிபட்ட கைதிகளை அரசன் அளிக்கலாம். தனிநபர்கள் காணிக்கையாக ஆலயத்திற்கு அளிக்கலாம். மற்ற நாட்டின் ஆலயங்களைப் போன்றே பாலஸ்தீனத்தில் இருந்த ஆலயங்களின் புனித இடத்திற்கும் போரில் கிடைத்த கொள்ளைப் பொருட்களின் பங்காக அடிமைகள் கொடுக்கப்பட்டனர். மோசே மிதியா நாட்டினரைத் தோற்கடித்தபோது, போர்க்கைதிகளை நன்கொடையாக கோயிலுக்குக் கொடுத்ததாகச் சொல்லப்படுகின்றது (எண் 31:25–47). யோசுவா கிபயோனியர்களைப் புனித இடத்திற்கு "விறகு வெட்டுபவர்களாகவும், தண்ணீர்கொண்டு வருபவர்களாகவும்" ஆக்கினார் (யோசு 9:21–27). அதே வேளையில் தனி நபர்கள் பாலஸ்தீன ஆலயத்திற்கு அடிமைகளை காணிக்கையாக கொடுத்ததற்கான சான்றுகள் ஏதும் இல்லை. நேர்ச்சையின்பேரில் கடவுளுக்கு கொடுத்த பொருட்கள் வரிசையில் அடிமைகள் இடம் பெறவில்லை (லேவி 27:2–9). பாலஸ்தீன ஆலய அடிமைகள் முதல் முறையாக நாடு கடத்தப்பட்ட காலத்திற்குப் பிறகு குறிப்பிடப்பட்டுள்ளனர். அதாவது அவர்கள் எஸ்ரா, செருபாபேல் ஆகியோருடன் பாபிலோனிலிருந்து திரும்பி வந்ததாகக் கூறப்படுகிறது (எஸ் 2:43–54; நெக 7:46–56). லேவியர்களுக்கு உதவி செய்யுமாறு தாவீதும் அவர்களுடைய அலுவலர்களும் நியமித்திருந்தவர்களிலிருந்து" இவர்கள் தோன்றியிருக்கலாம் என்று நெக 3:20 குறிப்பிடுகிறது. எசக்கியாவில் விருத்த சேதனம் செய்யாதவர்களும் ஆலயத்தில் பணி செய்தார்கள் என்று குறை கூறினார் (44:7–9). பாபிலோனிய ஆலயங்களில் பணி செய்த அடிமைகளைப்போலவே, பாலஸ்தீனத்தில் இருந்த ஆலய அடிமைகளை தனிக் கட்டிடத்தில் வைக்கப்பட்டு, மேற்பார்வையாளரின்கீழ் பணி செய்துவந்தனர் (நெக 3:31; 11:21). அவர்கள் அந்த வகுப்புக்கு வெளியே திருமணம் செய்துகொள்ளலாம், ஆனால் அவர்களுடைய குழந்தைகள் ஆலயத்திற்குச் சொந்தமாவர்.

6. அடிமை முறையின் பொருளாதாரப் பங்கு:- பாபிலோனியா, அசீரியா, சீரியா, இஸ்ராயேலர்களுக்கு முன்பிருந்த பாலஸ்தீன நாடு ஆகிய பகுதிகளிலிருந்து கிடைத்த சான்றுகளின்படி அடிமைகளின் பங்கு விவசாயத்திலும், தொழில் துறையிலும் மிகவும் குறைந்த அளவாகவே இருந்தது. எகிப்தில் நிலம் அனைத்தும் அரசனுக்கே சொந்தமாக இருந்தது. ஆனால் பழங்கால மேற்காசிய நாடுகளில் தனி நபர்களுக்கு நிலங்கள் சொந்தமாக இருந்தன. அரசனுக்கும், ஆலயத்திற்கும் உடைமையாக இருந்த நிலங்கள் போக மற்றவை அனைத்தும் சிறிய நிலச் சொந்தக்காரர்களிடமிருந்தது. அவர்கள் அதைத் தங்களுடைய குடும்ப உறுப்பினர்களைக் கொண்டே கொத்திப் பயிரிட்டார்கள். அவர்கள் வாடகைக்கு ஆள் அமர்த்த

வேண்டிய சூழ்நிலையும் ஏற்படவில்லை. மேலும் அடிமைகளின் விலை அதிகமாக இருந்தது. எனவே சாதாரண விவசாயி ஒரு அடிமையைக் கூட வாங்க முடியாது. பெரிய நிலச் சொந்தக்காரர்கள் கூலிக்கு அமர்த்தப்பட்டவர்களைக் கொண்டு தங்களுடைய நிலத்தைப் பயிரிட்டார்கள் பழங் கால மேற்காசிய நாடுகளிலிலும், பாலஸ்தீனத்திலும் விவசாயத்தில் அடிமைகளின் உழைப்பு ஒருமுக்கியமான பங்கு கொள்ளவில்லை.

ஒருசில அடிமைகளே நன்கு வளர்ச்சியடைந்த தொழிலில் ஈடுபட்டதாக மெசபொத்தோமியாவிலிருந்து வந்த சான்றுகள் கூறுகின்றன. இந்த வகையான வளர்ச்சியடைந்த தொழிலுக்கு உரிமைக் குடிமக்களே சேர்த்துக்கொள்ளப்பட்டனர். ஒருசில இப்படிப்பட்ட சிற்பிகள் தங்களுடைய சொந்த தொழிற்சங்கங்களை அமைத்துக் கொண்டனர் என்று விவிலிய ஆதாரங்கள் கூறுகின்றன.

பொதுவாக, பாலஸ்தீனத்தின் பொருளாதாரம் உரிமைக் குடிமக்களின் அடிப்படையில் அமைந்த ஒன்றாகும். அடிமையின் பணி முக்கியமாக பணக்காரர்களின் வீடுகளை மையம் கொண்டிருந்தது. அவர்களுடையப் பணி விவசாயத்திலும், தொழிற்சாலையிலும் மிகக் குறைவாகவே இருந்தது.

### II சிந்தனை

*1. சமூகப்பிரச்சினை:-* 'அடிமை' என்ற ஒரே சொல், வேதாகமத்தில், வேலையாளையும், அடிமையையும் குறிக்கின்றது. அடிமைத்தனம் சமுதாயத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒரு முறைமையாகவே சட்டம் காண்கிறது (யாத் 21:21). இருப்பினும், இதன் கொடுமையை குறைப்பதற்கேச் சட்டம் எப்போதும் முயல்கின்றது. நடைமுறையில் அவ்விதம் இல்லாதிருந்தால் கூட, மனிதனை மதிக்கும் ஒரு மனப் பான்மையை காண்கின்றோம். தலைவனின் சொந்த உடைமையே அடிமை. அதனால், ஒரு தலைவன் தனது விருப்பம் போல், தனது அடிமையைக் கொடுமைப் படுத்தும் உரிமையைப் பெற்றுவிடுவதில்லை (யாத் 21:20.26). எபிரேய அடிமைகளைப் பற்றிப் பேசும்போது, மேலும் பல சலுகைகளைச் சட்டம் காட்டுகிறது. அவனே விரும்பினாலன்றி, ஒருவன் வாழ்நாள் முழுவதும் அடிமையாய் இருப்பதைச் சட்டம் தடைசெய்கிறது. ஏழாண்டுக்குப்பின் ஒரு அடிமை விடுதலை செய்யப்படவேண்டுமென்பது உடன்படிக்கையின் சட்டமாகும் (யாத் 21:2). உப ஆகமத்தின் பிற்பகுதியில், ஒரு அடிமை விடுதலை பெறும்போது சகோதரனைப் போல் நடத்தப்படவேண்டுமென்று கூறப் பட்டுள்ளது (உப 15:13). ஜூபிலி ஆண்டில் எல்லா குற்றவாளிகளுக்கும் விடுதலை அளிக்கப்பட வேண்டுமென்ற விதிமுறை லேவியராகமத்தில் உள்ளது (லேவி 25:29–30; எரே 34:8). இறுதியாக, 'கூலி பெறும்' நிலைக்கு எபிரேய அடிமைகளை உயர்த்துகிறது. காரணம், எகிப்திலிருந்து கடவுளால் மீட்கப்பட்ட இஸ்ராயேல் மக்கள், மனிதனுக்கு ஒருபோதும் அடிமையாய் இருத்தலாகாது.

கிரேக்க–உரோமைப் பேரரசின்போது, அடிமைப் பிரச்சினை திரும்பவும் கிறிஸ்தவ சமுதாயத்தில் எழுந்தது. புனித பவுல் கொரிந்தில் இப்பிரச்சினையைச் சந்திக்கிறார். இப்பிரச்சினைக்குச் சரியான பதிலையும் தருகின்றார். கிறிஸ்துவைப் பின்பற்றுபவனுக்குச் சமுதாய ஏற்றத் தாழ்வுகள்முக்கியமல்ல: இறைவனின் அழைப்பே முக்கியம். அவன் எந்நிலைக்கும் அழைக்கப்படலாம் (1 கொரி 7:17). ஒரு அடிமை கிறிஸ்துவுக்குக் கீழ்ப்படிவதுபோல தன் தலைவனுக்குக் கீழ்படிந்து தன் கடமைகளை ஆற்றவேண்டும் (எபே 5:5–8). கிறிஸ்துவத் தலைவன், தனது அடிமையை கிறிஸ்துவில் தன் சகோதரனாகக் காண்பானாக; சகோதரனைப்போல் நடத்துவானாக (எபே 6:7: பில 14–21). கடவுள் முன்னிலையில் தலைவனும் அடிமையும் சரி நிகர். கிறிஸ்துவுக்குள் திருமுழுக்குப் பெற்றவர்களுள், அடிமை என்றும், குடிமகனென்றும் இல்லை (கலா 3:24). கிறிஸ்துவுக்குள் புதிய படைப்பாவதே முக்கியமாகும் (கலா 6:15).

*2. ஆன்மீகப் பொருள்:-* அடிமை நிலையிலிருந்து இறைவனால் மீட்கப்பட்ட பின்னும், தனது பிரமாணிக்கமற்ற செயலால், இஸ்ராயேல் திரும்பவும் அடிமைத் தனத்திற்குள்ளானது. இதிலிருந்து,

தங்கள் அடிமை நிலைக்கு தங்கள் பாவங்களே காரணமென உணர்ந்தனர். எனவே, பாவங்களிலிருந்து விடுதலை பெறவேண்டியதன் அவசியத்தை உணர்ந்தனர் (சங் 130;141:36). புதிய ஏற்பாடு இப் பிரச்சினையின் அடித்தளத்திற்கே நம்மை இட்டுச் செல்கிறது. ஆதாமினால் பாவம் உலகில் நுழைந்தது; எல்லா மனிதரும் பாவத்திற்கு அடிமையாயினர் பாவத்தால் சாவுக்கும் அடிமையாயினர் (உரோ 5:2; 7:13–24; எபி 2:14). சட்டம் இந்த அடிமைத் தனத்தை மேலும் வலுப்பெறச் செய்கிறது.

கிறிஸ்துவே பாவத்திலிருந்து நம்மை விடுவிக்க வல்லவர். ஏனெனில், அவர் மேல் மட்டுமே இவ்வுலகின் தலைவனுகு அதிகாரமில்லை (யோவா 14:30). பாவிகளுக்கு விடுதலையளிக்கவே கிறிஸ்து வந்தார் (8:36). இதற்காக அடிமையின் தன்மை பூண்டார் (பிலி 2:7). பாவப் பிடியிலுள்ள நம் இயல்பில் பங்குபெற்றார் (உரோ 8:3). சிலுவைச் சாவை ஏற்கும் அளவுக்குக் கீழ்ப்படிபவரானார் (பிலி. 2:8). கடவுளுக்கு மட்டுமல்ல, மனிதருக்கும் பணிவிடை புரியவும், மனிதருடைய மீட்புக்கு விலையாகத் தம் உயிரை அளிக்கவும் வந்தார் (மத் 20:28; யோவா 13:1–17).

எபிரேய மக்கள் எகிப்திலிருந்து மீட்கப் பட்டனர். திருமுழுக்குப் பெற்றவர்கள் பாவத்திலிருந்து கிறிஸ்துவால் மீட்கப் பட்டவர்கள். கிறிஸ்துவுக்கும், இறைவனுக்கு ஏற்புடைய நிலைக்கும் உரியவர்கள் (1 கொரி 7:22; உரோ 6:16–22; லேவி 25:55). பாவம், சாவு, சட்டம் இவற்றிலிருந்து விடுதலை பெற்றவர்கள், கிறிஸ்துவின் முன் மாதிரி கையைப் பின்பற்றி எல்லோருக்கும் எல்லாமுமாய், பிறருக்குத் தங்களை அடிமைகளாக்கிக் கொள்கின்றனர் (1 கொரி 9:17; மத் 20:26–27; யோவா 13:14).

**அடிமைத்தனம்** (CAPTIVITY)

1. அடிமைத்தனத்தின் சோதனை:- முதுகுலத் தந்தையர்களை வரவேற்ற நாடு இஸ்ராயேலுக்கு "அடிமைத்தனவீடாகிற்று" (யாத் 13:14; உப 7:8). இஸ்ராயேலின் வரலாற்றுத் தொடக்கத்திலிருந்து எகிப்தில் அனுபவித்த இதுதான் "முதல் அடிமைத்தன"மாகும். கைதிகள், அல்லது பிடிபட்டவர்கள் என்பதைவிடக் குறிப்பாக எபிரேயர்கள் பாரவோனின் அடிமைகளாயிருந்தனர். பிற்பாடு ஒரு தடவைக்குமேல் இறைமக்கள் நாடு கடத்தப்பெற்றனர். பழைய மேற்காசியாவில் இது பரவலாக இருந்தபோதிலும், இந்தப் பழக்கத்தை ஒருகுற்றம் என்று ஆமோஸ் கண்டனம் செய்கிறார் (ஆமோ 1:6.9). சமாரியா அழிவுற்றபின் வடபகுதியினருக்கும் (2 அர 17:6.23). ஆறாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் யூதாவிற்கும் (24–25) இதே கேடு தான் ஏற்பட்டது. இறைமக்களின் விசுவாசமின்மைக்குத் தகுந்த தண்டனையாகவே இரண்டும் அமைந்தன. பரம்பரையின் படி பாபிலோனிய அடிமை நாடு கடத்தல் ஆனாலும், அது சிறப்பான பொருளில் எடுத்துக்காட்டான அடிமைத் தனம் என்றாகிறது. தள்ளிவைக்கப்பட்டதைவிட நாடு கடத்தப்பட்டதையே அது குறிக்கும்.

இந்தக் குழுச் சோதனைகளை ஒட்டி, தனிப்பட்டவர்களை அடிமைகளாகவோ கைதிகளாகவோ விவிலியம் குறிக்கிறது. சிலருக்குச் சிறைபடுதல் உண்மையான தண்டனை (காண்க: மத் 5:25). மற்றவருக்கு அது தேவ பராமரிப்பைச் சார்ந்த சோதனையாகும் (காண்க: திருவெளி 2:10). யேசேப்பைப் பொறுத்தவரை இப்படியே தான் (ஆதி 39:20 தொ); கடவுளின் ஞானம் "அவன் விலங்கிடப்பட்டிருந்தபோது, அவனைவிட்டு அகலாமல் இருந்தது" (ஞான 10:14); பல இறைவாக்கினருக்கும் இதேகதிதான் (காண்க: 1 அர 22: 26 தொ); எரேமியாவுக்கு (எரே 20:2; 32:2 தொ; 37:11–21; 38:6), திருமுழுக்கு யோவானுக்கு (மத் 14:3); இறுதியாக இயேசுவும் கட்டப் பெற்று (யோவா 18:12; மத் 27:2) சிறைக்குள் தள்ளப்பெற்றார். அப்போஸ்தலருக்கும் திருச்சபையில் இதே கதிதான் காத்திருக்கிறது (அ.ப 5:18; 12:3 தொ; 16:23 தொ); தானே முன் வந்து அடிமையாகிய (அ.ப. 20; 22) பவுலும் பிற்காலத்தில் தன்னை 'இயேசுவின் கைதி' என்கிறார் (எபே 3:1; 4:1; காண்க: 2 கொரி 11:23). இருந்தாலும் "கடவுளுடைய வார்த்தைக்கு விலங்கெதுவுமில்லை" (2 திமோ 2:9; காண்க: பிலி 1:12 தொ); நற்செய்தியை அடிமைப்படுத்தமுடியாது என்பதைப் புதுமையான விடுதலை (அ.ப 5:19; 12:7–11; 16:26) தெளிவாக்கும்.

ஏனெனில் கைதிகள்மேல் கடவுளுக்கு அக்கறையுண்டு. விசுவாசிகளுக்கு "அக்கிரமத்தின் சங்கிலிகளை அறுத்துவிடச்" (ஏச 58:6) சொல்கிறவர், சிறைச்சாலைக்குச் செல்லுதல் இரக்கத்தின் செயலாகும் என்கிறவர் (மத் 25:36–40; காண்க: எபி 10:34; 13:3). அவருடைய கைதிகளின் மேல் பரிவுள்ளவர், தமது கட்டளைகளை வெறுத்து உதறியவர்களையும் (சங் 107: 10–16) அன்புடன் நோக்குகின்றவர் கடவுளன்றோ! அவருடைய மக்களுக்கு விடுதலை அறிவிக்கிறார் (ஏச 52:2). இதுவே நற்செய்தியின் முன் சுவையாகும் (61:1).

2. பாவியின் ஆன்மீக அடிமைத்தனம்: - தற்காலிகமான அடிமைத்தனத்தின் அனுபவ வாயிலாய் வேறொரு அடிமைத்தனத்தை இறைமக்கள் கண்டுணர்கிறார்கள். முன்னால் நடந்தது வெளிப்படையான அடையாளமே. அவர்கள் காண்பது பாவிகளின் அடிமைத்தனமாகும். இதிலும்கூடப் பிடிபட்ட நிலையும் அடிமை நிலையும் கலந்துள்ளது. விசுவாசமில்லாதோரை அவர்களின் எதிரிகளுக்குக் கடவுள் கையளித்தார் (நீதி 2:14) என்கிற பழைய ஏற்பாட்டு பின்னணியில் "பாவஞ் செய்கிற எவனும் பாவத்திற்கு அடிமை" (யோவா 8:34) என்று இயேசுவும் திட்டவட்டமாக உறுதிப்படுத்துகிறார். அவர்களின் குற்றங்களின் ஆற்றலுக்கே அவர் கையளித்தார் (ஏச 64:6); ஞானிகளின் சொற்படி பாவம் ஒருவகையில் ஒருவனைத் தனிப்படுத்துவதாகும், பிரிப்பதாகும்: "அக்கிரமிகள் தங்கள் சொந்த அநீதங்களாகிய கண்ணிக்குள்ளே சிக்கிப் போய், பாவக்கயிறுகளாலேயே கட்டவும் படுகிறார்கள்" (பழ 5:22; காண்க: 11:6).

இயேசு விடுதலை நல்குவதாய்ச் சொல்லவிருக்கும் (காண்க: லூக் 4:18; காண்க: ஏச 61:1) மனிதனின் ஆழமான துன்பத்தை அப்போஸ்தலரின் எழுத்துக்கள் வெளிப்படுத்துகின்றன. "நானோ பாவத்திற்கு அடிமையாக விற்கப்பட்டவன்; சீரழிந்த இயல்புள்ளவன்"; "என் உறுப்புகளில் இருக்கும் பாவச்சட்டத்திற்கு" நான் அடிமைபோன்றவன் (உரோ 7:14.23). பவுலின் கூற்றுப்படி இதுதான் ஒவ்வொரு மனிதனும் ஏற்புடைமை ஆகு முன் அனுபவிக்கிறதாகும். பாவம் என்பது ஏதோ எட்டாத இடத்தில் இல்லை: "பேயின் வலையில் சிக்குண்டு அதன் விருப்பத்திற்கு அடிமைகளா"யிருக்கிறவர்களே பாவிகள் (2 திமோ 2:26).

இறுதியாக ஆன்மீக அடிமைத்தனம் "கீழுலகின் தளைகள்" என்பதிலும் "சாவின் கண்ணிகள்" (சங் 18:5) என்பதிலும் வேறொரு திட்டவட்டமான வெளிப்பாடாக உள்ளது. இவைகள் மனிதனுக்கு அச்சம் தருபவை (காண்க: எபி 2:14 தொ). இயேசுவின் விடுதலைச் செயலும் அந்த அளவுக்கு நீளுகிறது. சாவை அனுபவித்துச் "சிறையிலிருந்த ஆன்மாக்களிடம் சென்று, அவர்களுக்குத் தம் நற்செய்தியை அறிவித்தார்" (1 பேதுரு 3:19).

இறுதியாக, பவுல் சில சமயங்களில் திருச் சட்டமும் ஒரு வகைச் "சிறை" என்று சொல்லத் தயங்குவதில்லை; "விசுவாசம் அளிக்கப்படும் முன்.... சட்டத்தின்கீழ் அடைப்பட்டுக் காவலில் வைக்கப்பட்டிருந்தோம்" (கலா 3:23: காண்க. உரோ 7:6). ஒருவகையில் இவைகள் மிகைப்பட்டுத் தோன்றினாலும், இயேசுக் கிறிஸ்து கொணரும் உண்மையான விடுதலைபற்றி அறியப் பெரிதும் உதவுகின்றன.

கிறிஸ்துவால் விடுதலை பெற்ற பாவிகள் என்ன ஆகிறார்கள்? அவர்கள் ஆண்டவரின் அடிமையாகின்றார்கள். கேட்கவே புதிரான சொற்கள்! பாவத்தினின்று விடுதலைபெற்று இறைவனின் ஏற்புடைய நிலைக்கு அடிமை ஆவதைப் பவுல் முரசொலிக்கிறார் (உரோ 6:12–23; 1 கொரி 7:22); ஆவியானவரால் கட்டுண்டவன் என்று தன்னைப்பற்றி அவர் நினைக்கிறார் (அ.ப 20:22); "மனித எண்ணங்கள் அனைத்தையும் கிறிஸ்துவுக்குக் கீழ்ப்படியுமாறு" (2 கொரி 10:5; காண்க: உரோ 1:5) அடிமைப்படுத்தவும் விரும்புகிறார். பழங்காலப் படைத்தலைவர்கள் போல் இயேசுவும் உண்மையில் அவரது வெற்றிப் பவனியில் " "பகைவரைக் கைதியாக்கிக் கொண்டு சென்றார்" (எபே 4:8; சங் 67:19). அப்படிச் செய்தது அவர்களுக்குக் கொடைகள் அளிக்கவும் அவரது வெற்றியில் பங்குகொள்ளவுமே. காண்க: நாடு கடத்தப்படுதல்.

**அடுப்பு, அடுப்படி, சூளை** (HEARTH, OVEN)

இதன் அடிப்படைப் பொருளில், தரையில் ஒரு பள்ளம் செய்து, அதில் சமைப்பதற்காகவோ அல்லது சூடு உண்டாக்குவதற்கோ தீமூட்டி எரியவிடுவதாகும். வழிபாட்டு விழாக் காணிக்கைகள் எரிக்கப்பட்ட பலிபீடத்தின் மேற்பகுதி அடுப்பாக இருந்தது (லேவி *6:9*: எச *43:15–16*). இது சிலசமயம் பீட அடுப்பு என்றழைக்கப்பட்டது. எச *46:23–24*–இல் எசக்கியேலின் எடுத்துக்காட்டான ஆலயத்தில் அடுப்பு பலிகளை வேகவைக்கப் பயன்பட்டது.

இக்காலப் பாலஸ்தீன மக்கள் பயன்படுத்துகின்ற அடுப்பானது எகிப்தியர்கள், அசீரியர்கள் ஆகியோர் பற்றிய தொல்பொருள் ஆய்வுகளில் கண்டுபிடிக்கப்பட்ட அடுப்புகளிலிருந்து அவ்வளவாக வேறுபட்டு இருக்கவில்லை. அவை உருளை வடிவத்தில் *2* அல்லது *3* அடி விட்டத்தில் அமைந்து, அதன் அடியில், நெருப்பு மூட்டப்பட்டது. அடுப்பு போதிய மட்டும் சூடுபடுத்தப்பட்டபின், சாம்பல் அகற்றப்பட்டு, அடுப்பின் வளைந்த பகுதியில் தட்டையான அப்ப மாவு போடப்பட்டது. இன்றையதினம் கட்டப்படும் அடுப்புகள் வீட்டின் பின்பகுதியின் பாதுகாப்பான இடத்திலோ அல்லது ஊருக்குப் பொதுவான இடத்திலோ ஓர் மூலையில் கட்டுகிறார்கள்.

நெகமியா காலத்தில் எருசலேமின் வட மேற்குப் பகுதியிலுள்ள கோபுரம் சூளைக் கோபுரம் என வழங்கப்பட்டது (நெக *3:11*). ஏனெனில் வியாபாரத்திற்கு அப்பம் சுடுவோர் இப்பகுதியில் அடுப்புகள் வைத்திருந்தனர். பொதுவாக சூளையை எரிப்பதற்கு காய்ந்த புல்லையும், காட்டுப் புதர்களையும் சாணவிறாட்டிகளையும் பயன் படுத்தினார்கள் (மத் *6:30*; லூக் *12:28*). எச *4:12*–இல் குறிப்பிடப்பட்டுள்ள மனித மலத்தை விறகாகப் பயன்படுத்தியது அப்பொழுது இருந்த மக்களின் இழிநிலையை விளக்கிக் காட்டுவதற்காகவேயாகும்.

**அடைக்கல நகரங்கள்** (CITIES OF REFUGE)

திட்டமிடாது தற்செயலாகக் கொலை செய்தவனை ஏற்று அடைக்கலம் அளிக்க நியமிக்கப்பட்ட நகர்களாகும். இவை லேவியர் நகரங்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவை.

பெனிசியர்கள், சீரியர்கள், கிரேக்கர்கள், உரோமையர்கள் போன்ற பழங்கால மக்களிடையே சில புனித இடங்கள் தப்பியோடுபவர்களுக்கு நிபந்தனையற்ற பாதுகாப்பு அளிக்க நியமிக்கப்பட்டிருந்தன. குற்றமற்றவர்களும், குற்றவாளிகளும், தப்பியோடும் அடிமைகள், கடன் பட்டவர்கள், அரசியல் அகதிகள், இப்படிப்பட்ட இடங்களை அடைந்து, அந்த இடத்துக் கடவுளின் பாதுகாப்பைக் கோரினால், அவர்கள் பழிவாங்கப்படுவதிலிருந்தும், நீதித் தீர்ப்பிலிருந்தும் தப்பினர். இஸ்ராயேலில் யாவேயின் பீடம் தப்பியோடுபவர்களுக்கு அடைக்கலம் அளித்தது (*1* அர *1:50–53*; *2:28–34*). ஆனால் விவிலியச் சட்டம் தற்செயலாக நடந்த கொலைக்கு மட்டும்தான் அடைக்கல உரிமை அளித்தது (யாத் *21:12–14*; எண் *35:9–34*; உப *19:1–13*; யோசு *20*). கொலை செய்தவனுக்கும் இரத்தப்பழி வாங்குபவனுக்குமிடையில் இடையிட்டுப் பொது நீதி கிடைக்கச்செய்து இரத்தப் பழி வாங்குதலைக் கட்டுப்படுத்துவது இதன் நோக்கமாகும். "கொலை செய்து அவைகளில் அடைக்கலம் புகுந்தவன் சபையிலே நியாயம் விசாரிக்கப்படுமுன் கொலை செய்யப்பட்டவனுடைய உறவினர் கையாலே அவன் சாகாமல் தப்பித்துக்கொள்வான்" (எண் *35:12*). இப்படி தற்செயலாகக் கொலை செய்தவனுக்குப் பாதுகாப்பு அளிப்பது முழுச்சமூகத்திற்கும் முக்கியமானதாகும். "அதனால் உன் கடவுளாகிய ஆண்டவர் உனக்கு உரிமையாகக் கொடுக்கும் மண்ணில் குற்றமில்லாத இரத்தம் சிந்தப்படாதிருக்கும். எனவே இரத்தப்பழி உன்னைச் சாராது" (உப *19:10*).

அடைக்கலத்தின் தன்மை பற்றி யாத்திரை நூல், தற்செயலாகக் கொலை செய்தவன் ஓடி அடைக்கலம் தேடக்கூடிய இடத்தைப் பற்றி தெளிவில்லாமல் கூறுகிறது. ஆனால் உண்மையான கொலைகாரன் பீடத்திலிருந்தும் கூட எடுக்கப்பட்டுத் தண்டிக்கப்படவேண்டும் (காண்க:

1 அர 2:31–34). உப 4:41–43–இல் மோசே, யோர்தானுக்கு அப்பால் மூன்று அடைக் கல நகரங்களை நியமித்தார். மேலும் கானானில் மேலும் மூன்று அடைக்கல நக ரங்களை நியமிக்கும்படியும் கட்டளையிட் டிருந்தார். இவை லேவியர் நகரங்கள் என்று உபாகம நூல் கூறவில்லை. யோசு 20:7–8, கானானில் காதேசு, செக்கேம், கெபிரோன், யோர் தா னு க் க ப் பா ல் பெசேர், இராமோத் – கிலயாத்து, கோலான் ஆகிய நகரங்களை அடைக்கல நகராகக் குறிக்கிறது. இவையாவும் லேவி யர் நகரங்களாகும் (காண்க: யோசு 21:13. 21.27.32; 1 நாள் 6:63).

கொலைகாரனை நடத்துவதுபற்றிய கருத்தும், முறையும் இருபாரம்பரியங்களி லும் வேறுபடுகிறது. எண்ணாகம நூலில் அடைக்கல இடத்திற்கு வெளியில் உள்ள 'சபை' கொலைகாரனை விசாரிக்கிறது. அவன் குற்றமற்றவன் என்று கண்டுபிடிக் கப்பட்டால் அவனை இரத்தப் பழி காரனிடமிருந்து விடுவித்து, அடைக்கல நகருக்கு அனுப்புகிறது. அங்கு அவன் அந்த இடத்துத் தலைமைக் குரு இறக்கும் வரை தங்கியிருக்கவேண்டும். அதற்குமுன் அவன் அவ்விடத்திலிருந்து வெளிவந் தால் பழிவாங்குபவரால் எந்தத் தடையு மின்றி அவன் கொல்லப்படலாம். அவன் உயிருக்குப் பதிலாக மீட்புப் பணம் வாங் கப்படக் கூடாது (எண் 35:32). இவ்வாறு அவன் அங்குத் தங்கியிருப்பது ஒரு தண்ட னைச் சிறையாகிறது. அது தலைமைக் குருவின் மரணத்தோடு முடிவது, உயிருக்கு உயிர் பகரப் பரிகாரமாகும் என்று பிற்காலத்தில் விளக்கப்பட்டது. இரத்தக் குற்றம் பற்றிய பழங்காலக் கருத்து, இச்சட்டங்களில் ஆதிக்கம் செலுத்துகிறது.

உபாகம நூல், கொலைகாரனுக்கு அடைக்கலம் கிடைக்கச்செய்வதும் உண் மையான குற்றவாளி நீதியிலிருந்து தப்பா திருக்கப் பார்த்துக்கொள்வதும் சமூகத் தின் பொறுப்பாகும் என்பதை வலியுறுத்து கிறது. உண்மையான கொலைகாரன் அடைக்கல நகருக்கு ஓடிவிட்டால், அவன் ஊர் முதியவர்கள் அவனை அழைத்து பழிகாரனிடம் ஒப்படைக்கவேண்டும். கட்டாயமாக அங்குத் தங்கியிருப்பது பற்றியோ தலைமைக் குருவின் மரணத் துக்குப்பின் விடுதலைபற்றியோ ஒன்றும் கூறப்படவில்லை.

யோசு 20, இரண்டு பாரம்பரியங்களை யும் பிரதிபலிக்கின்றது. அடைக்கல நகரின் முதியவர்கள், தப்பியோடுகிறவன் வந்தவுடன் அவன் உரிமைப்பற்றித் தீர்ப் பிட வேண்டும்; பின்பு சபையில் அவனை விசாரிப்பர். அவன் குற்றமற்றவன் ஆனால், தலைமைக் குருவின் மரணம் வரை அவன் அங்கு தங்கியிருக்க வேண்டும்.

உபாகமச் சீர்திருத்தம் இதுவரை அடைக்கலமாக விளங்கிய தலத்துப் பீடங் களை அழித்துவிட்டதால் அவற்றிற்குப் பதிலாக, அடைக்கல நகரங்கள் நிறுவப் படுவது, உபாகமத்தின் நோக்கமாகும் என்று பொதுவாக ஏற்றுக்கொள்ளப் படும். இருப்பினும் தலப் புனித இடங்கள் இருந்த காலத்திலும், பீடங்கள் தற்காலி கப் பாதுகாப்பை அளித்ததால் அவன் நீண்ட காலத்திற்குப் பாதுகாப்போடு இருக்க இடம் அவசியமாயிற்று.

மேலும் இரத்தக் குற்றம் புறநிலைமை யைச் சார்ந்ததும் நாட்டைச் தீட்டுப்படுத் தும் தன்மையுடையதால், தற்செயலாகக் கொலை செய்தவன்கூட அதற்குப் பரி காரம் செய்யவேண்டும் என்பது பழங் காலக் கருத்தாகும். கிரீசு போன்ற நாடு களில் கொலை செய்யப்பட்டவனின் உறவினர் மன்னிக்கும் வரைத் தற்செய லாகக் கொலை செய்தவன் நாடு கடத்தப் பட்டான். நாடு கடத்தப்படுதல் விவிலியத் தண்டனையில்லை என்பதால், கொலை செய்தவன், அவன் ஊரிலிருந்து மற் றொரு இடத்தில் கட்டாயமாகத் தங்குதல், இஸ்ராயேலில் நாடு கடத்தப்படுதலைப் போன்றதாகும். மேலும் உறவினன் கொலைகாரனோடு ஒத்துப்போகச் சட்டம் அனுமதிக்கவில்லையாதலால், பரி காரம் செய்ய வேறொரு வழி கண்டு பிடிக்கப்படவேண்டும். எண்ணாகமக் கருத்துப்படி அடைக்கல நகரம் இந்தக் கூறுகளையெல்லாம் கவனத்தில் எடுத்துக் கொள்கிறது. அது கொலைகாரனின் உயிரை நீடிய காலத்திற்குப் பாதுகாக்

கிறது. அதே சமயம் முதலில் கொலைகாரன் தன் ஊரிலிருந்து புறம்பாக்கப்படுதலுக்குச் சமமான கட்டாயமாக வேறொரு இடத்தில் தங்கியிருப்பதாலும் இரண்டாவது தலைமைக் குருவின் இறப்பாலும், குற்றத்திற்குப் பரிகார வழியையும் அமைக்கிறது. இம்முறையில் நோக்கினால், அடைக்கல நகரங்கள் தலத்துப் பீடங்களுக்குப் பதிலாக அமைவதைவிட அவசியமான காரியமாகிறது.

அடைக்கல நகரங்கள் லேவியர் நகரங்களாகும். இந்த ஆறு நகரங்களும், ஒன்றித்த அரசாட்சியின் உச்ச காலத்தில் தான் அதாவது தாவீதின் மரணத்துக்கு முன்னும் பின்னும்தான், இஸ்ராயேல் நாட்டின் பகுதிகளாகத் திகழ்ந்தன. இந்த ஒன்றித்த அரசாட்சிதான் இரத்தப் பழி தீர்ப்புப்பற்றிய நாடு தழுவிய கட்டுப்பாட்டைச் சிந்திக்க மிகவும் பொருந்திய காலமாக இருந்திருக்கலாம். உபாகமம், குருக்களின் தொடர்பை அழித்துவிட்டு அடைக்கலம் என்ற பழங்காலக் கருத்தை மாற்றி அமைத்தது. இந்த நகரங்களின் லேவியர் தன்மையை அதாவது இவை கோவில் நகரங்களாயிருந்ததையும், தலைமைக் குருவின் மரணத்தையும், உபாகமம் புறக்கணிக்கிறது. ஏனெனில் அதன் மையப் படுத்தப்பட்ட வழிபாட்டுக் கோட்பாடு இந் நகரங்களைச் சமயச்சார்பற்ற தாக்குகிறது. எண்ணாகமம் மட்டும் பழங்காலத்தைச் சேர்ந்த வழிபாட்டு, பரிகார பண்புகளைப் பாதுகாக்கிறது. இவ்வாறு சட்டத்திற்குப் புறம்பே அடைக்கல நகரங்கள் பற்றி ஒன்றும் கூறப்படாவிட்டாலும், சட்டங்கள் முந்திய காலத்து உயிருள்ள வழக்கிலிருந்து தோன்றியிருக்கவேண்டும்

**அடைக்கலம், தஞ்சம்** (REFUGE)

ஆபத்திலோ அல்லது துன்பத்திலோ பாதுகாப்பளிப்பதாகும். மழை (யோபு *24:8*), காற்று (ஏச *32:2*), எதிரிகளின் படை (*14:32*; நாகூ *3:11*) முதலியவற்றிலிருந்து தப்பிக்கப்பயன்படும் மறைவிடம் அல்லது தஞ்சமாகும். உருவகமாக வலிமையுள்ள அரசன் அல்லது கூட்டாளி அடைக்கலமாகக் கருதப்படுவான் (நீதி *9:15*; ஏச *30:2*).

பெரும்பாலும் 'அடைக்கலம்' என்பது பழைய ஏற்பாட்டில் பயன்படுத்தப்படும் போர் மொழியாகும். "உயரமான இடத்தை அடைதல்" "உறுதியான பாறை" என்பவை அன்றைய கானான் நாட்டில் தப்பி ஓடியவர் ஒளிந்துகொள்ள வசதியாக இயற்கையாகவோ அல்லது செயற்கையாகவோ அமைந்துள்ள பாதுகாப்பைக் குறிக்கிறது.

'அடைக்கலம்' என்பது யாவேயின் மற்றொரு அடைமொழியாகும். இது அவர் மனிதர்களைக் காப்பவர் என்பதன் இணை மொழியாகும் 'அடைக்கலப் பாறை, அரண்' (சங் *18:1–2*) போன்றவை யாவே பற்றி சங்கீதம் காட்டும் ஒரு முக்கிய கருத்தாகும் (உப *32:3*; எரே *16:19 17:12–18*; நாகூ *1:2–8*).

பக்தியுள்ளவர்கள் அவரது சிறகின் நிழலில் அடைக்கலம் புகுவர் (ரூத் *2:12*; சங் *17:8*; *36:7*). இது ஒருசில சமயங்களில் எருசலேம் ஆலயத்தினைக் குறிக்கப் பயன்படுத்தப்படலாம் (சங் *57:1*; *61:4*; *63:7*). அவர்கள் அவரிடம் அடைக்கலம் புகுகின்றனர் என்றும் கூறப்படுகிறது (சங் *2:12*; *5:11*; *16:1*; பழ *30:5*; நாகூ *1:7*; ஏச *57:13*). இறைவனைத் தவிர, செல்வம் போன்ற மற்றவற்றில் அடைக்கலம் புகுவது மடமையாகும் (சங் *52:7*).

**அடைக்கலான் குருவி** (SPARROW)

ஊர்க்குருவி, சிட்டுக்குருவி ............. கிளை அல்லது கொம்பினைப் பற்றிக் கொண்டு அமர்வதற்கேற்ற கால்களையுடைய ஒரு வகை பறவையினம். சங் *83:3*; *101: 7*; பழ *26:2*..... இவ்வகைக் குருவியைப் பற்றிய குறிப்புகள் தருகின்றன.

புதிய ஏற்பாட்டில் மத் *10:29–31*; லூக் *12:6–7*; இக்குருவிகளின் அற்பமான விலை மதிப்பைக் குறிப்பிடுகின்றன. "அற்பமான இக்குருவிகளுள் ஒன்றும் கடவுள் முன்னிலையில் மறக்கப்படுவதில்லை எனில் பல குருவிகளைவிட மேலான சீடர்களும், மனிதர்களும் அஞ்ச வேண்டியதில்லை" என்று இயேசு கூறுகின்றார்.

**அடைமானம், ஒற்றி வைத்தல்** (MORTGAGE)

அடைமானத்தின் பேரில் எடுத்தல், அடைமானத்தில் கொடுத்தல், மாற்றுதல் (நெக *5:3*; ஆதி *43:9*; *44:32*; எஸ் *9:2*; சங் *105: 35*; பழ *6:1*; *11:15*; *14:10*; *17:18*; *20:16*; *24:21*; *27:13*; ஏச *36:8*; *2* அர *18:23*; *38:14*; எரே *30:21*).

விவிலியத்தில், 'அடைமானம்' என்ற வார்த்தை ஒரு முறை மட்டுமே வினைச் சொல்லாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. நெகமிய, எஸ்ரா ஆகியோர் வாழ்ந்த காலத்தில் யூதாவின் உள்நாட்டுப் பொருளாதார நிலைமை எப்படி இருந்தது என்பதை விளக்கும் பகுதியில் (நெக 5:1–13) இச்சொல் வினைச் சொல்லாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

அன்றைய ஏழை யூதர்கள், பணக்கார யூதர்களுக்கு எதிராகப் பல குற்றச்சாட்டுகளை எழுப்பினார்கள். அவற்றில் ஒன்று அடைமானம் பற்றியது. பஞ்சகாலங்களில் உணவு வாங்குவதற்காகத் தங்களின் நிலங்களையும், வீடுகளையும் அடைமானம் வைக்க வேண்டியது மிக அவசியம் என்று கூறினார்கள் (நெக 5:3). வரி செலுத்துவதற்காக, நிலங்களையும் தோட்டங்களையும் அடைமானம் வைத்துப் பணம் கடன் வாங்கவேண்டியிருந்தது என்று முறையிட்டனர் (நெக 5:4).

**அடையாளம், இலக்கு, அருங்குறி :** (MARK, GOAL, SIGN)

*1. பழைய ஏற்பாட்டில்:–* காயீனின் 'அடையாளம்' முகத்தில் பச்சைக் குத்தப்பட்டதாகும் (ஆதி 4:15). இவ்வாறே எச 9:4.6–இல் கூறப்படும் 'அடையாளம்' மற்றவர்களை வேறுபடுத்திக் காட்ட பயன்பட்டது. லேவி 19:28–இல் கூறப்படும் அடையாளங்கள் கானானியரின் வழிபாட்டு சின்னங்களாக இருக்கலாம். வானவெளியில் உள்ள ஒளிதரும் பொருட்கள் நேரத்தைப் பிரித்துக்காட்டும் அடையாளங்களாக இருக்கலாம் (ஆதி 1:14). மோசேயின் புதுமைகள் அவருடைய அழைப்பின் உண்மைத் தன்மையைக் காட்டப் பயன்பட்டது (யாத் 4:8–9)

2. புதிய ஏற்பாட்டில்:– அருங்குறி என்பதற்குச் சாதாரணமாகப் பயன்படுத்தப்படும் சொல் "செமேயியோன்". எவ்வாறு யோனா நினிவே மக்களுக்கு அருங்குறியாய் இருந்தாரோ அவ்வாறே மனுமகனும் அவர் காலத்திய தலைமுறைக்கு அருங்குறியாய் இருந்தார் (லூக் 11:30). அப்போஸ்தலர்களின் காலத்தில் இறைவாக்குரைத்தல் விசுவாசிகளுக்கும் பரவசப்பேச்சு அவிசுவாசிகளுக்கும் அடையாளங்களாய் கருதப்பட்டன (1 கொரி 14:22). குறிப்பாக அருங்குறி என்ற சொல் இறைமகன் இயேசுவால் செய்யப்பட்ட அரும் பெரும் செயல்களைக் குறிக்கப்பயன்படுத்தப்பட்டது. பிலி 3:14–இல் குறிப்பிடும் 'அடையாளம்' பவுல் தம் அப்போஸ்தலப் பணியில் அடையவேண்டிய இலக்காகும். இயேசு வின் காயங்கள் பவுலின் தழும்புகளோடு ஒப்பிடப்படுகின்றன (கலா 6:17). விலங்கின் அடையாளம் எதிர்கிறிஸ்துவைப் பின்பற்றுகிறவர்கள்மேல் இடப்பட்ட எதிர்க்கிறிஸ்துவின் பெயராகும் (திரு வெளி 13:16–17). அ.ப. 28:11 குறிப்பிடும் அடையாளம் கப்பலின் முகப்பு ஆகும்.

**அடையாளவியல்** (SYMBOLISM)

பார்க்கப்படாத மற்றும் பார்க்க இயலாத ஒன்றின் பார்வைக்குரிய அல்லது கருத்தளவிலான உருவமைப்பே இது. சமய அடையாளம் அதன் தன்மைக்கு அப்பாற்பட்டு உண்மையைச் சுட்டிக்காட்டி, அதனுடைய ஆற்றலில் பங்கு பெற்று, அதன் பொருளை அறிவுக்குப் புலப்படக் கூடியதாக்குகிறது. இவ்வாறு, அது குறி அல்லது உருவத்திற்கு அப்பாற்பட்டும் செல்கிறது. ஒரு அடையாளத்தின் மதிப்பானது, தெளிவுபடுத்துதல் ஆகும். அதன் திறன், உடனே அறியப்பட்டு மனதில் தங்குதல் எளிய, அர்த்தமுள்ள முழுமையாகச் சுருக்கித்தருதலும், நடத்தையையும் நம்பிக்கையையும் வடிவமைக்க ஒரு மையத்தை அளித்தலும் ஆகும்.

அடையாளங்கள் விசுவாசமொழியின் ஒரு பகுதியாகும்; விசுவசமானது தூய்மை, முடிவற்றது மற்றும் எல்லை கடந்தவை ஆகியவற்றை அறிவிக்கும் போதும், இறைசந்திப்பு உரிமைகள் மற்றும் கோரிக்கைகளை அறிவிக்கும்போதும், விசுவாசம் இத்தகைய அடையாள மொழியைப் பயன்படுத்துகிறது. இதன்படி அடையாளவியலானது ஆதியிலிருந்தே விவிலிய சமயத்தின் ஒரு பகுதியாக உள்ளது.

அடையாளவியலானது இறைவெறிப்பாட்டின் ஒரு சாதனமாகும். சந்திப்பின் போது உருவாகி, உள்தூண்டுதலின் போது அளிக்கப்படும் அடையாளங்கள் அனுபவத்தைச் சுருக்கி விளக்குகின்றன. இவை மாறுகின்ற சூழ்நிலைகளுக்கு

இடையில் படைக்கப்பட்டு, அளிக்கப்பட்டு பிறந்து, வளர்ந்து மடிகின்றன. சில சமயங்களில் அவை புதியன போன்று தோன்றுகின்றன. சில நேரங்களில், தங்களுடைய பொருளையே இழந்துவிட்ட அல்லது மற்றவற்றினின்று தழுவப்பட்ட அமைப்புகளுக்கு, புதிய பொருளைக் கொடுக்கின்றன. மனித அனுபவத்தின் எல்லையினின்று எடுக்கப்பட்ட இவைகள், இறுதியான அக்கறையோடு மனிதனை உறவு கொள்ளச் செய்கிறது.

1. பழைய ஏற்பாடு:- எபிரேயருக்கிடையே புனிதமானவற்றிற்கும், உலகைச் சார்ந்தவற்றிற்குமிடையே எந்தவிதமான தெளிவான வேறுபாடும் கிடையாது. ஆன்மீகமானது உடல் சார்ந்தவற்றில் தன்னை வெளிப்படுத்துகின்றது. இவ்வாறு, இயற்கையும் வரலாறும் வெளிப்பாட்டின் தலங்களாகின்றன. அடையாளச் சிறப்பிற்குரிய ஆற்றலை ஒவ்வொன்றும் தனக்குள்ளேயே கொண்டிருக்கின்றன. சொற்கள், நபர்கள், நிகழ்ச்சிகள் அல்லது செயல்கள் ஆகியவை இஸ்ராயேலின் வரலாறு மற்றும் விசுவாசத்தினுடைய நம்பிக்கைகள் மற்றும் எதிர்பார்ப்புகள், பொருள் மற்றும் சிறப்பு, நடந்தவை மற்றும் நடக்கவிருப்பவை ஆகியவற்றை ஒன்று சேர்த்த வரையில், அவற்றை அடையாளங்கள் என்று குறிப்பிடலாம்.

அ. அடையாளச் சொற்கள்:– இஸ்ராயேலின் சமயமானது பேசுதல்– கேட்டல் உறவாகிய உரையாடலை அடிப்படையாகக் கொண்டிருந்தது. அதனுடைய இறைவ்ன் ஒரு பேசும் இறைவனாவார். அவர் வார்த்தைகள் மூலம் அதனுடன் தொடர்பு கொண்டார். ஒரு வார்த்தையானது தொடர்பு முறையை விட உயர்ந்ததாக இருந்தது. இது பேசுகிறவருடைய ஆற்றல், அதிகாரம், மற்றும் நோக்கம் இவற்றை ஒன்றாக இணைத்து செயல்படுகின்ற இயக்கமுள்ள உயிருள்ள உண்மையின் அடையாளமாக இருந்தது (ஏச 55:11; உப 18:22; எரே 28:9). ஒரு வார்த்தையானது ஒரு பொருளாக, நிகழ்ச்சியாக, சந்திப்பாக உரிமையாக, கோரிக்கையாக இருந்தது. இதுவே இறைவாக்கினர், குரு, நீதி வழங்குவோர் ஆகியோருடைய பணியைச் சிறப்புடையதாகச் செய்தது. உச்சக் கட்டங்களில் இஸ்ராயேலானது, அருளையும் தீர்ப்பையும் வாக்களிக்கின்ற, கவனித்து கீழ்படிகின்ற, பதிலை எதிர்பார்க்கின்ற இறைவார்த்தையை எதிர்கொள்வதை உணருகின்றது. பேசப்படுகின்ற வார்த்தைகள் சேகரிக்கப்பட்டு, பாதுகாக்கப்பட்டு, படிக்கப்பட்டு, போற்றப்படுகின்றன; இவை நடக்க வேண்டிய பாதைக்கு விளக்காகவும் செல்லும் வழிக்கு வெளிச்சமாகவும் உள்ளன (சங் 119:105). இறுதியாக இறைவன், அனைத்து முற்பட்ட வார்த்தைகளையும் நிறைவேற்றிய ஊனுடல் எடுத்த வார்த்தையாகிய தம்முடைய இறுதி வார்த்தையை அளித்தார். அவர் அனைத்தையும் தம் முன் கொண்ட, மனிதனுக்கான இறைவனின் ஒரே வார்த்தையாக ஆனார்.

வார்த்தையின் செயல் திறனானது, நல்லதையோ (ஆதி 27:33–37; எண் 22:6; சங் 129:8) அல்லது தீயதையோ (ஆதி 9:25; எண் 23:7–8; ஏச 24:6) புரியக்கூடிய திறமையை தம்முள் கொண்டுள்ள ஆசீர்களிலும் சாபங்களிலும் காணப்படுகிறது. வார்த்தையானது ஒருமுறை பேசப்பட்டவுடனே, விளைவு உறுதிப்படுத்தப்படுகிறது.

வார்த்தை அடையாளவியலானது பெயரிலும் அடங்கியுள்ளது. ஒரு பெயரானது அம்மனிதனுடைய ஆளுமையின் பிரதிநிதியாகவும் விரிவாகவும் இருந்து, அப்பெயருக்குரியவருடைய ஆன்மா, உள்ளுரம், ஆற்றல் மற்றும் அதிகாரம் ஆகியவற்றை தன்னுள் கொண்டுள்ளது. (யாத் 3:13–15; ஆதி 17:15; 1 சாமு 17:45). இறை பெயரால் பேசுவதென்பது இறை ஆவியை உரிமையாக்கிக் கொள்ளுதலும் (2 நாள் 15:1; ஏச 61:1; மீக் 3:8), 'ஆண்டவர் கூறுவதாவது' என்று இறை அதிகாரத்தால் பேசுவதுமாகும். இறைவனுடைய பெயரைக் கூவி அழைப்பது இறையாற்றலை அழைப்பதாகும் (1 அர 8:29.33; 18: 24; 2 அர 5:11)

சில சமயங்களில் ஏற்கனவே நிகழ்ந்ததையோ அல்லது நிகழவிருப்பதையோ குறிப்பிடும் வண்ணம், பிள்ளைகளுக்கு அடையாளப் பெயர்கள் அளிக்கப்பட்டன: செயார்–யசூப= "எஞ்சிய ஒருவன் திரும்பு

வான்" (ஏச 7:3); இம்மானுவேல்= "இறைவன் நம்மோடு" (7:14); லோ–அம்மி= "எம் மக்கள் அல்லர்" (ஒசே 1:9).

வார்த்தை அடையாளவியலானது, மனித, நரவிலங்கு அல்லது மனித சமுதாயப் பண்புகளை இறைவனுக்குச் சாற்றிப் பேசும்போது மேலும் தோன்றுகிறது. இறைவன், பார்வைக்குரிய முறையில் வருணிக்கப்பட முடியாதவராகையால், அவருடைய இயல்பையும் செயலையும் புரிந்துக்கொள்ளக்கூடிய விதத்தில், அவர் அடையாளங்களால் விவரிக்கப்படுகிறார். அவர் மனிதனுடைய, மிருகங்களுடைய, இயற்கையினுடைய தோற்றங்களாலேயே குறித்துக் காட்டப்படுகிறார். அவருடைய கண் அவரது யாவற்றையும் அறியும் தன்மையையும் (எரே 5:3; ஆமோ 9:8) மற்றும் சலுகையையும் (உப 11:12; சங் 33:18; 34:15) குறிப்பிடுகிறது; அவரது கை அவருடைய ஆற்றலையும் (யாத் 15:16) அவரது வலக்கரம் வெற்றி மற்றும் எண்பிக்கப்படுதலையும் (யாத் 15:6; சங் 17:7; 43:3) குறிக்கின்றன. தீர்ப்பின் போது அவர் கர்ச்சிக்கும் சிங்கத்தைப் போலவும் (ஆமோ 3:8), கிழக்கு திசைக்காற்று போலவும் (எரே 18:7), சூறாவளிக்காற்று போலவும் (எரே 30:23) வருகிறார். இத்தகைய எல்லா வர்ணனைகளின் மூலம், இறைவன் அறிவுக்குப் புலப்படக்கூடியவராகவும் அவரது நோக்கமும் விருப்பமும் தெளிவானவையாகவும், அவரது செயலானது வாழ்வின் மாற்றத்தில் உயிருள்ள சக்தியாகவும் வெளிப்படுத்தப்படுகின்றன.

ஆ. அடையாள ஆட்கள்:- இஸ்ராயேலுடைய வரலாற்றின் தொடக்கத்திலிருந்தே குழுவின் நம்பிக்கை, வல்லமை மற்றும் பண்புகளைக் குறித்துக் காட்டுகின்றவர்களாக, கோத்திரம் அல்லது நாட்டின் பிரதிநிதிகளாக இருந்த மக்கள் இருந்தனர். ஆபிரகாம் போன்ற குலமுதியவர்கள் (ஆதி 12:2–3; 17:4–8; ஏச 51:1–2; லூக் 3:8; உரோ 4:15.9–12) ஏசா போன்ற இனப் பெயர் முன்னோர் (ஆதி 25:25; 27:39–40; ஒப 10; மலா 1:2–5) மற்றும் யாக்கோபின் புதல்வர்கள் (ஆதி 49; உப 33), இன்னும் சற்று கீழ்ப்பட்ட நிலையில் பாராக்கு, கிதயோன், சாமுவேல் மற்றும் சவுல் போன்ற அருங்கொடையைப் பெற்ற தலைவர்கள் இத்தகையோரே.

மீண்டும் ஆண்டவரால் அபிடேகம் செய்யப்பட்ட அரசன், விண்ணக அரியணையில் பகர ஆட்சியாளராய் அமர்ந்து (சங் 2:6–7; 45:6), நாட்டின் நம்பிக்கைகளை தன்னுள் கொண்டு, அதனுடைய முடிவிற்குப் பொறுப்பாளராக இருந்தான்.

பிற்காலத்தில், தனது விதியில் நம்பிக்கையிழந்து, நம்பிக்கைக்குரிய ஆட்சியாளர்களை இழந்த நிலையில் இஸ்ராயேல், தன் பழைய வரலாற்றில் சிறப்புற்று விளங்கியவர்களை உயர்வுபடுத்தி, தன்னை மீண்டும் இறைவனுடைய தயவுக்குட்படுத்தி எல்லா நாடுகளிலும் உயர்ந்ததாக தன்னை கொணரக்கூடிய எதிர்பார்க்கப்பட்டுள்ள மீட்பராகிய மெசியாவில் அவர்கள் மீண்டும் தோன்றவேண்டுமென ஏங்கியது. சட்டத்தை வழங்கியவரும் இறைவாக்கினர்களிலெல்லாம் மிகச் சிறந்து விளங்கியவருமான மோசே (உப 18:15; ஒசே 12:13; யோவா 1:21; 6:14; 7:40); முன்னோடியாகிய எலியா (மலா 4:5; சீரா 48:4– 11; மத் 16:14); அரசராகிய தாவீது (ஏச 34:23; 37:24; ஏச 9:1–6; 11:1–5) குருவாகிய ஆரோன் (அல்லது சாதோக்கு) (செக் 6:12–13; 1 மக் 14:41) ஆகியோர் இத்தகையோரே. நாடு கடத்தலின் இறைவாக்கினர், நாட்டையே வரவிருக்கும் மீட்பரின் அடையாளச் சின்னமாகப் பார்த்தார் (துன்புறும் ஊழியனாகிய இஸ்ராயேல்; ஏச 49:1–6; 52:13–53:12; மாற் 10:45; அ.ப. 8: 32–35). இத்தகைய அனைத்து தனிநபர்களும் இஸ்ராயேலின் ஊழோடு தொடர்புபடுத்தப்பட்டிருந்தனர். ஒவ்வொருவரும் தனக்கேயுரிய வழியில் இறைவனையும் மனிதனையும் குறித்துக்காட்டினர். ஒவ்வொருவரும் பழமையின் பாரம்பரியத்தையும், நிகழ்கால அனுபவத்தையும், எதிர்கால நம்பிக்கையையும் தம்முள் கொண்ட வரவிருக்கும் ஒருவரையே அவர்கள் ஒவ்வொருவரும் சுட்டிக்காட்டினர். இந்த நம்பிக்கைகள் அனைத்தும் மொத்தமாக இயேசுவில் நிறைவேறுவதை புதிய ஏற்பாடு காண்கிறது.

இ. அடையாளப் பொருட்கள்:- தொடர்பு அல்லது அறிகுறித்தன்மையால்

பொருட்களுக்கு அடையாளத் தன்மை அளிக்கப்பட்டது. இவ்வாறு உடன்படிக் கையைச் சாட்சித்தூணும் (ஆதி. 31:44–53; யோசு 24:26–27). இறை வழிகாட்டுதலையும் (யாத் 13:21) மற்றும் மகிமையையும் (யாத் 16:10) மேகத்தூணும், இறை பிரச்சன்னும், மகிமை (யாத் 3:2–6; 24:17; லேவி16:2), வழி காட்டுதல் (யாத் 13:21), மற்றும் சினத்தை (எண் 11:1; உப 4:24; எபி 12:29) நெருப்பும் போன்ற இயற்கைப் பொருட்கள் சுட்டிக் காட்டின. உடன்படிக்கையின் அடை யாளம் (யாத் 25:10–22) மற்றும் இறைபிர சன்னத்தைப் பேழையும் (எண் 3:31; 1 சாமு 4:3–6), சட்டத்தைச் சாட்சிப்பலகையும் (யாத் 25:16.21; 31:18; 40:20), செபத்தை நறு மணப்புகைப்பீடமும் (சங் 142:2), வெளிப் பாட்டைப் பலி பீடமும் (ஆதி 12:7–8; 26:25; 35:1; 2 அர 16:15) போன்ற வழிபாட்டு பொருட்கள் சுட்டிக்காட்டின. இறைவனுக் குரிய சேவையை சீட்டுப்பட்டங்களும் (யாத் 13:16; உப 6:8; 11:18), மற்றும் கட்டளைகளைக் குஞ்சலங்களும் (எண் 15: 37–41; உப 22:12) போன்ற சொந்தப் பொருட்கள் வெளிப் படுத்தின.

உடலின் பகுதிகளும் குறிப்பிட்ட ஆன்மீகப் பொருளைக் கொண்டிருந்தன. எபிரேய உளவியலில் ஆன்மீகத்திற்கும் உடலுக்கும் இடையில் இருந்த நெருங்கிய இணைப்பானது, ஒவ்வொரு உடலுறுப்பும் தனக்கேயுரிய உளவியல் மற்றும் நன் னெறிப் பண்புகளைக் கொண்டிருப்பதை வெளிப்படுத்தியது. இவ்வாறு கண் மனதின் புலனுணர்வையும், காது கீழ்ப் படிதலையும், கரம் வலிமையையும், நாசி கோபத்தையும் (யாத் 15:8; 2 சாமு 22:9; சங் 18:8) இதயம் அறிவாற்றலையும் (பழ 14:33) மற்றும் சித்தத்தையும் (16:9), சிறு நீரகங்கள் மனக்கிளர்ச்சியையும் (23:16), குடல் அன்பு அல்லது இரக்கத்தையும் (உ.ச. 5:4), ஈரல் வாழ்வின் மையத்தையும் (பழ 7:23; புல 2:11), இரத்தம் வாழ்வின் ஊற்றையும் (லேவி 17:11; உப 22:12) வெளிப்படுத்துகின்றன.

ஈ) அடையாள இடங்கள்:- ஆழம் (ஆதி 1:2; பழ 8:28; ஏச 51:10; ஆமோ 7:4), பாதாளம் (செயோல்) (யோபு 26:6; சங் 16:10; 139:8; ஆமோ 8:2) மற்றும் பள்ளம் (சங் 30:3; 88:6; ஏச 14:15) போன்ற புராணக்கதை களில் எஞ்சியிருந்த சுவடுகள் அடை யாளப் பொருளைக் கொண்டிருந்தாலும் புவியில் சார்ந்த இடங்களும் சில நேரங் களில் அடையாளங்களாக உருவாயின; இவ்வாறு கெட்ட ஒழுக்கம் மற்றும் கொடுமைத்தனத்தின் இருப்பிடமாக சோ தோமும் (ஏச 1:10; எச 16:46; ஏச 3:10–இன் மறைசாட்சியம்; திருவெளி 11:18) அடிமைத் தனம் மற்றும் தீமையின் இடமாக எகிப் தும் (ஓசே 11:5; திருவெளி 11:8) கடவுளின் உறைவிடம், புனித நகர் மற்றும் சீயோனும் (ஏச 2:3; 60:14; எரே 31:6; 50:5; யோவே 3:17) எருசலேமும் (எச.24:23;62; யோவே 2:32;செக் 2:4.12; 8:3; திருவெளி 21:2. 10) அடையாளமாக உணர்த்தின. புதிய ஏற்பாட்டின் காலத்தில், கொடுமையின் அரியணையாக விளங்கிய உரோமைக்கு பாபிலோன் அடையாளமாயிற்று (1 பேதுரு 5:13; திருவெளி 17:5; 18:10).

உ) இறைவாக்கு அடையாளவியல்:- பழைய ஏற்பாட்டின் அடையாளவியலுக்கு மற்றெவரையும்விட இறைவாக்கினர்களே அதிக பொறுப்பானவர்களாவர். செமித் தியச் சிந்தனையின் ஆழ்ந்த மற்றும் எளிதான இயல்வாய்மையுடன் ஒன்றுபட்ட இறைவாக்கினரின் கடமை மற்றும் அனு பவத்தின் இயல்பானது இறைவாக்கு பணி யில் அடையாளவியலை மிக முக்கியமான ஒன்றாக உருவாக்கிற்று, காட்சிகள், கனவுகள், செயல்கள் மற்றும் சொற்கள், இறைநோக்கத்தையும், விருப்பத்தையும் மெய்யாக்குவதற்கேற்ற, தங்களுக்கே உரிய புறநிலை கொண்டிருந்தன. இறைவாக்கி னர்களின் காட்சிகள், வரவிருக்கும் இறை செயலின் அச்சாரமாக இருந்தன. விழிப் பாயிருக்கும் மரக்கிளையானது இறைசெய லின் தவறாத தன்மையினையும் (எரே 1:11–12) பொங்கிக் கொதிவரும் பானை யானது வடக்கிலிருந்து வரும் தீங்கையும் (1:13–15), இரண்டு கூடை அத்திக்காய்கள், நல்லது கெட்டதையும், நாடு கடத்தப் பட்டோர் மற்றும் எஞ்சியோரையும் (எரே 24) கனிந்து பழுங்களுடைய கூடையானது இஸ்ராயேலின் அழிவையும் (ஆமோ 8:1–2), சதையால் மீண்டும் உடுத்தப்பட்ட உலர்ந்த எலும்புகள், இறைவனுடைய

ஆவியால் புதுப்பிக்கப்பட்ட இஸ்ராயேலை யும் (எச 37:1–14) குறிப்பிடுகின்றன.

வருங்காலத்தை முன்னறிவிக்கின்ற கனவுகள், காட்சிகளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன (1 சாமு 28:15; ஆதி. 37: 5–8; 40:7–13; 41:1–32; தானி 4:13–27). முடிவில்லாத அரசை உருவாக்குவதைப் பற்றிக் குறிப்பிடும், கல்லினால் அழிக்கப் படுகின்ற, தங்கம், வெள்ளி, வெண்கலம், இரும்பு மற்றும் மண்ணால் செய்யப்பட்ட மிக உயர்ந்த உருவம் பற்றிய நபுக்கதுனே சாரின் கனவானது, சமயச் சிறப்புடையது (தானி 2:31–45).

இறைசெய்தியை நாடகமாக்குகின்ற இறைவாக்குச் செயல்களும் இத்தகைய இயல்புடையவையே, சாமுவேல் தனது மேல் போர்வையை கிழிப்பது, இறைவன் சவுலிடமிருந்து அரசை எடுத்துக்கொள்வ தின் அடையாளம் (1 சாமு 15:27–28); அகீயா தன்னுடைய சால்வையைப் பன்னி ரெண்டு துண்டுகளாகப் பிரிப்பது, சாலமோனு டைய அரசை பிரிப்பதன் அடையாளம் (1 அர 11:30–32); எலிசா கட்டளைப்படி யோவாசு அம்பு எய்வது, சீரியாவின் மீதான இஸ்ராயேலுடைய வெற்றியின் அடையாளம் (2 அர 13:15–19); எரேமியா நுகத்தடியை அணிவது, பாபிலோனுக் கான யூதாவினுடைய அடிமைத்தனத்தின் அடையாளம் (எரே 27:2–7. 10–12); கைதி யின் உடையில் ஏசயா மூன்று வருடம் நடந்தது, அசீரியாவினால் எகிப்துவும், எத்தியோப்பியாவும் அடிமைப்படுவதன் அடையாளம் (ஏச 20:2); எசக்கியேல் மரத்தில் கோத்திரங்களின் பெயர்களைப் பதிப்பது, யூதா மற்றும் இஸ்ராயேலுடைய ஒன்றிப்பின் அடையாளம் (எச 37:15–23) என்று நாம் வாசிக்கிறோம். இத்தகைய நடிப்புச் செயல்கள் வருங்காலத்தைக் குறிப்பிட்டு, அதனுடைய வருகையைத் தோற்றுவித்தன.

இறைவாக்கினர்கள் அடையாள உரு வங்களையும் மிக அதிக அளவில் பயன் படுத்தினர். எண்ணற்ற உருவங்களோடு இஸ்ராயேலின் வாழ்வின் பொருளை வெளிப்படுத்தும் பல்வேறு உருவங்களும் இருந்தன. இப்படிப்பட்ட ஒருவகை உரு வகமே திராட்சைக்கொடி (திராட்சைத் தோட்டம்). இஸ்ராயேலின் பொருளா தாரத்தில் திராட்சை ஒரு முக்கிய பொரு ளாகும். அதற்கு தினசரி கவனிப்பும், கவாத்து செய்தலும் தேவைப்பட்டது. அது வளமையையும் (1 அர 4:25: மீக் 4:4; செக் 3:10), செழிப்பையும் (ஆதி 49:22: சங் 128:3) குறிப்பிட்டது. இவ்வுருவத்தின் மூலமாக இஸ்ராயேல் இறைவனுடன் கொண்டி ருந்த உறவின் பல்வேறு வடிவங்கள், அவருடைய அருள், அதனுடைய பதிதம் போன்றவற்றை இறைவாக்கினர்கள் விவரித்தனர். எகிப்திலிருந்து கொண்டு வரப்பட்ட தேர்ந்தெடுக்கப்பட்ட திராட்சைக் கொடியான இஸ்ராயேல் (சங் 72:8), ஆண்டவரால் நடப்பட்டு (எரே 2:21), அவருக்குப் பலன்கொடுப்பதற்காக உருவாக்கப்பட்டது (ஏச 5:1–5). ஆனால், இஸ்ராயேல் கெட்டு தன்மையிழந்து (எரே 2:21), காட்டுத் திராட்சைகளை அளித்தது (ஏச 5:4.7). அதனால், அது மேய்ப்பாளர்களால் அழிக்கப்பட்டு (எரே 12:10) பாழ்வெளியாகியது. தனக்கும், தனது சீடருக்கும் இடையில் உள்ள உறவை வெளிப்படுத்த, இயேசு இந்த உருவகத்தைப் பயன்படுத்துகிறார்.

இஸ்ராயேலின் ஆன்மீக வரலாற்றை வெளிப்படுத்தப் பயன்படும் மிக வளமை யும் பலகோணமுமுள்ள மற்றொரு உருவ கம் செம்மறியாடு ஆகும். செம்மறியானது பிறரைச் சார்ந்ததாகவும், உதவியற்றதாக வும் உள்ளது. அதற்கு தொடர்ந்த கவனிப்பு, வழிகாட்டுதல், பாதுகாப்பு போன்றவை தேவைப்படுகின்றன. குரல் மூலம் அது வழிநடத்தப்படுகிறது. அது இல்லாவிட்டால், அலைந்து திரிந்து, வழி தவறி, காட்டு விலங்குகளுக்கு உணவாகி விடுகிறது. இஸ்ராயேல், இறைவனுடைய மந்தையாகவும், அவரது மேய்ச்சலின் செம்மறியாகவும் உள்ளது (சங் 70:13; 100:3; எச 34:6). இறைவனே அவர்களுடைய உண்மையான மேய்ப்பர் (சங் 23: எச 34:12. 16). ஆனால், அவர் அவர்களை மனித மேய்ப்பர்களின் (சமயத்தலைவர்கள்) கவனிப்பின் கீழ் ஒப்படைத்தார்; ஆனால், அவர்களோ நேர்மையற்றவர்களாகவும், பேராசை கொண்டவர்களாகவும் தங்களை வெளிப்படுத்தினர் (எச 34: 1–10). அதன் விளைவாக, ஆடுகள், வழி தவறி அலைந்து திரிந்தன (சங் 119:176; ஏச 53:6;

எரே 23:1; எச 34:5–6), தாங்கள் விரும்பியதைச் செய்தன (எச 34:6), காணாமல் போயின (எரே 50:6; எச 34:11), கொலை செய்யப்படுவதற்கு எண்ணப்பட்டன (சங் 44:22). இறுதியாக, ஆண்டவர் அவர்களைத் தேடி (எச 34:11–16), செம்மறியாட்டுக் குட்டிகளைக் கைகளில் ஏந்தியவராய், அவர்களைக் கொண்டு வரத் தீர்மானிக்கிறார் (ஏச 40:11)

சமய உண்மையினை வெளிப்படுத்த சரியாக பொருந்தியுள்ள மூன்றாவது உருவமானது, அனுதின வாழ்விலிருந்து எடுக்கப்பட்ட 'வழியாகும்'. ஒரு சாலை அல்லது பாதையானது செயலையும் (நடத்தல்) திசையையும் (நெறி) அதன் மூலமாக நோக்கத்தையும் குறிப்பிடுகின்றது (சங் 103:7; ஏச 26:8). வாழ்க்கையில் முக்கியமானது சரியான சாலையை எடுப்பதாகும். ஏனெனில், ஒரு வழியானது வாழ்வுக்கும் (பழ 6:23; 10:17; எச 21:8) அல்லது சாவுக்கும் (பழ 7:27; 14:12; எரே 21:8) நடத்திச் செல்லலாம். இஸ்ராயேலின் சமயத்தலைவர்கள் அதனுடைய வழியினைக் குறிப்பிட்டு காட்டுமாறு முக்கியமாக பணிக்கப்பட்டிருந்தனர். சீயோனுக்கு நடத்திச் செல்கின்ற தூய்மையான வழியும் (ஏச 35:8), ஆண்டவருடைய வழியுமான சரியான வழியை தேர்ந்தெடுப்பதே, ஓர் ஆசீராகும் (சங் 1:6; பழ 12:28; ஏச 26:7). இஸ்ராயேலின் முழு வாழ்வானது, எகிப்திலிருந்து கானான் நாட்டிற்கு, அடிமைத்தனத்தினின்று விடுதலைக்கு சாவிலிருந்து வாழ்விற்கு செல்லும் நடைப்பயணமாகவே இருந்தது. அது தன்னுடைய பாதை தவறி கைதியாக்கப்பட்டபின், இறைவனுடைய நகருக்கு திரும்ப வருவதற்கு (ஏச 35:8–9) மீண்டும் ஒரு வழி தயாரிக்கப்பட வேண்டும் (ஏச 40:3; மலா 3:1). நடத்தையானது வாழ்விற்கு முக்கியமான பாதிப்புகளைக் கொண்டுள்ளது என்பதை இவ்வுருவம் சிறப்பாக வற்புறுத்திக் கூறுகின்றது. யூத கட்சியினரிடையிலும், கிறிஸ்தவரிடையிலும் புதுப்பிக்கப்பட்டு வலியுறுத்தப்பட்டது.

சிங்கம் அதனுடைய வலிமை, அச்சமூட்டும் கர்ச்சித்தல் பதுங்கியிருந்து திடீரென இரையின் மீது பாயும் தன்மை, ஆகியவை இறைசினத்தையும் தீர்ப்பையும் குறித்துக்காட்டுவதற்கு இறைவாக்கினர்களால் பயன்படுத்தப்பட்டன. (ஏச 31:4; ஓசே 5:4; 11:10). யாவே சீயோனிலிருந்து கர்ச்சிக்கிறார் (எரே 25:30; யோவே 3:18; ஆமோ 1:2; 3:8). இதன் மூலம், அவரது எதிரிகளின் இதயங்களில் பயத்தை உண்டு பண்ணுகிறார். அழிவானது உறுதியானதாகவும் பாழாக்குவதாகவும் இருக்கும். சில பகுதிகள் மட்டுமே விடுபட்டிருக்கும் (ஆமோ 3:12.)

ஊ. வழிபாட்டு அடையாளங்கள்:- அன்றாட வாழ்விலிருந்து பிரிக்கப்பட்டு தனக்குரிய தாக்கப்படுகின்ற உயரிய வழிபாட்டு அடையாளமானது, உடன்படிக்கைக்கு உரியதாகும். வாழ்க்கையின் எல்லா நிலைகளிலும் அடிப்படைப் பண்பாக அமைந்திருப்பது உடன்படிக்கையாகும். உடன்படிக்கைகளை உருவாக்குவதில் வாழ்க்கை அமைந்திருந்தது. இஸ்ராயேலின் வாழ்வே, சீனாய் மலையில் நடைபெற்ற உயர்ந்த உடன்படிக்கை கொண்டாட்டத்தினால் விளைந்தது. அங்கு, அது இறைவனுடைய குரலைக் கேட்டது. அங்கு அது சட்டத்தைப் பெற்றது. இறைவனுடைய மக்களாகவும் கீழ்ப்படிதல் உறுதி மொழி எடுத்ததாகவும், சேவைக்கு ஒப்படைத்துக் கொண்டதாகவும், நெறி முறைக்கு கீழ்ப்பட்டதாகவும், இரக்கத்தைக் சார்ந்துள்ளதாகவும், தான் இருப்பதை அங்கு அது அறிந்தது. உடன்படிக்கையைப் பின்பற்றுவதில் அதனுடைய வாழ்க்கை நிலை சார்ந்திருந்தது. அதனுடைய வழிபாட்டு மற்றும் சமய வாழ்விற்கு அடிப்படையாகவும், ஒற்றுமையின் இணைப்பாகவும், நேர்மையின் இடமாகவும், காலந்தோறும் புதுப்பிக்கப்பட்டு, உடைபட்டாலும் புதிதாக வாக்களிக்கப்பட்ட உடன்படிக்கையானது, இஸ்ராயேலின் முழு வரலாற்றையும் நோக்கச் சாதகமான நிலையாகும்.

வழிபாட்டு அடையாளவியலானது சைகை நாடக முறையில் அமைந்திருந்தது. இவ்வாறு முதற்கனிகளின் காணிக்கை விளைச்சலைப் புனிதப்படுத்தியது (யாத் 23:16; 34:22; உப 26:1–11); முதல்

பிறப்பு, மந்தைகளையும் கூட்டத்தைப் புனிதப்படுத்தியது (யாத் *22:29–30*; *34:19–20*), ஆசீரையும் புனிதத்தையும் கொண்டு வந்தது (உப *15:19–23*); தகனப் பலிகள் (லேவி *1–13*), பாவப்பரிகார பலிகள் (*4:6*), புனிதத்துவத்தை புதுப்பித்தது; பரிகார நாள் சடங்குகள் (லேவி *16*) பாவ மன்னிப்பைக் கொண்டு வந்தன.

பெரிய விழாக்களில், மீண்டும் நடிக்கப்பட்ட வழிபாட்டு நாடகங்கள், நாட்டு வாழ்வின் அடித்தளத்தை வலிமைப்படுத்தின. தொன்மையான விவசாய துவக்கமுடைய இவ்விழாக்கள் யாவே வழி பாட்டிற்கு மாற்றி அமைக்கப் பட்டு, வரலாற்று மற்றும் அடையாளப் பொருள்கள் அளிக்கப்பட்டன. இவ்வாறு, எகிப்திலிருந்ததான வெளியேற்றத்தை கொண்டாடிய பாஸ்காவானது புதிய யாத்திரையின் இறைவாக்காகவும், புதிய நாளின் துவக்கமாகவும் உருவாயிற்று; புத்தாண்டு விழாவானது, ஆண்டவர் அரியணை ஏறுதல் மற்றும் உலகின் படைப்பைக் கொண்டாடியது; ஆண்டவருடைய இறுதிக்கால நாளின் இறைவாக்காக அமைந்தது; வாரங்களின் விழா, சட்டத்தை அளிப்பதையும்; கூடாரவிழா, பாலைவன வாழ்வையும் குறிப்பிடுகின்றன.

சடங்குகளோடு மிக நெருங்கி தொடர்புடையதாக, உடன்படிக்கை மற்றும் கடவுளுடைய குடும்பத்தின் உறுப்பினர் என்பதன் அடையாளமான விருத்தசேதன சடங்கும், படைப்பினை (யாத் *20:11*) அத்துடன் வருகின்ற ஒய்வுடன் (உப *55:15*) கொண்டாடும் ஒய்வு நாளும் உள்ளன. ஒய்வு நாளை அனுசரிப்பதென்பது பிற்காலத்தில் இறைவனுக்குக் காட்டும் உண்மை பக்தியின் அறிகுறிகளில் ஒன்றாயிற்று.

**2.** பிற்கால யூத மதம்:- நாடு கடத்தலுக்குப் பிற்பட்ட மற்றும் பிற்கால யூத மதம், தொடர் உருவகமான விரிவுரையால் மேம்படுத்தப்பட்டு, பழைய ஏற்பட்டிற்குள் அதிக அளவில் அடையாளப் பொருளைக் கண்டது. விவிலிய சொற்களின்பின் மறைவான உண்மைகள் இருப்பதாகவும் இவை அறிவொளி பெற்ற விரிவுரையாளர்களால் மட்டுமே வெளிப்படுத்தப்பட முடியும் என்றும் கருதப்பட்டது. தேவாலயம் அதனுடைய துணைப் பொருட்கள், பலிகள், கட்டடங்கள், உணவு விதிமுறைகள் ஆகிய அனைத்துக்கும் அடையாளப் பொருள் அளிக்கப்பட்டது. எண்களின் பொருளுக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. (மூன்று என்பது புனிதம் அல்லது இறைவனையும்; நான்கு, பூமியையும்; ஏழு, வானம் மற்றும் பூமி, கடவுளுடனான உறவு ஆகியவற்றையும்; பத்து, முழுமையையும் குறிப்பிடுகின்றன). உலோகங்களுக்கும் (உ.ம். தங்கம், கடவுளின் மகிமை; வெள்ளி, மாசற்ற ஒழுக்கம்; பித்தளை, வலிமை) நிறங்களுக்கும் (நீலம்–புனிதம்; கருஞ்சிவப்பு–அரசுரிமை; வெண்மை–தூய்மை; கருப்பு–தீமை மற்றும் அழிவு) உருவகமான பொருள் அளிக்கப்பட்டது. ஏழு கிளைகளுடைய விளக்குத் தண்டு ஆன்மாவையும், ஆட்டுக்கடாவின் கொம்பானது மெசியாவையும், கதிர் மணியானது உயிர்ப்பையும் குறிப்பிடுவதாகக் கருதப்பட்டது.

வெளிப்பாட்டு இலக்கிய தோற்றத்துடன், பழமையினையும் வருங்கால வரலாற்றையும் விவரிக்க, விசித்திரமான இயல்புக்கு மீறிய உருவங்கள் பயன்படுத்தப்பட்டன. விசித்திர மிருகங்கள் (தானி *7:1–8*) மற்றும் விலங்குகளின் கொம்புகள் (*7:24*; *8:8.22*) ஆகியவற்றால் வரலாற்று அரசர்களும் அரசுகளும் குறிப்பிடப்பட்டன. வெள்ளாட்டுக் கடாவின் கொம்பு, பெரிய அலக்சாண்டரையும் (*8:5–8*); பெரிய ஆட்டுக்கடாவின் கொம்பு, யூதா மக்கபேயுவையும் (ஏனோக் *90:9*); சிங்கம் கழுகை அழிப்பது, தாவீது மரபு மெசியாவின் மூலம் உரோமை வெல்லப்படுவதையும் குறிப்பிடுகின்றன. இதன் சற்று மேம்பட்ட வளர்ச்சியானது, மேலும் விரிவான வானதூதர் மற்றும் பேய்கள் பற்றிய கோட்பாடு, உலக அழிவுடன் கூடிய வளர்ந்த இறுதிக்கால இயல், இறுதித் தீர்ப்பு மற்றும் பேரின்ப புது உலகம் என்பனவாகும்.

யூதப்பிரிவுகளின் இடையிலும், இறைவாக்கு நூல்களுக்கு தற்காலப் பொருளை

அளிக்க அடையாளச் சிறப்பை குறிப்பிடுவதன் மூலம், அந்நாளின் ஆன்மீக நிலைகளுக்கு ஏற்ற விளக்க முறைகளையும் காண்கிறோம்.

3. புதிய ஏற்பாடு:- பெரும்பாலும், புதிய ஏற்பாட்டு அடையாளவியலானது, இயேசு கிறிஸ்துவின் ஆள்தன்மை, அவருடைய அடையாளம், அவரது வாழ்வு மற்றும் பணி ஆகியவற்றின் பொருள் ஆகியவற்றைப் பற்றியதாகும். பெரும்பாலான உருவங்கள் பழைய ஏற்பாட்டிலிருந்தும், யூத வெளிப்பாட்டிலிருந்தும் எடுத்தாளப் பட்டுள்ளன.

அ. அடையாள தலைப்புகள்:- புதிய ஏற்பாட்டில் அனைத்தையும் உள்ளடக்கும் அடையாளமானது, அபிடேகம் செய்யப் பட்டவரும் மெசியாவும் ஆகிய இயேசுக் கிறஸ்துவே ஆவார். அவர் தம்மிலேயே இஸ்ராயேல் நாட்டையும் எதிர்ப்பார்ப்புகளையும், புதிய உடன்படிக்கை மற்றும் புதிய சமுதாயத்தையும் கொண்டுள்ளார். அவரில் அரசன் (மத் 21:15; யோவா 18:37), குரு (எபி 4:14–5:10), இறைவாக்கினர் (யோவா 6:14; 7:40), வழிபாடு (எபி 9:1–10;25), மற்றும் வார்த்தை (யோவா 1:1; எபி 1:1) ஆகியவற்றின் பணிகள் நிறைவேறுகின்றன. விளக்கமான தலைப்புகள் மற்றும் உருவகமான பெயர்களின் மூலம், அப்போஸ்தலர்கள், யூதர் மற்றும் கிரேக்கர்கள் முதலான எல்லா மக்களுக்கும் இயசுவின் பொருளை வெளிப்படுத்த முயன்றனர்.

இவற்றில் அதிகப் பொருளுடையதாக இருப்பது, இறைவனுடன் கொண்டிருந்த நெருங்கிய உறவினைக் குறித்துக் காட்டுகின்ற 'மகன்' என்ற தலைப்பாகும். இறைவனுடைய திராட்சை தோட்டத்தில் பழங்களை சேகரிக்க அனுப்பப்பட்ட ஒரே, தனித்துவ மிக்க மகன் இவரே. மனிதனை மீட்கவும் கடவுளின் பிள்ளைகளாக அவர்களை உருவாக்கவும், அவர் தன்னுடைய உயிரையே அளித்தார்.

இயேசுவினுடைய தாழ்ச்சியையும், அவருடைய மரணத்தின் பலிப்பண்பையும் வலியுறுத்துகின்ற மற்றொரு அடையாளம் செம்மறியாகும். "உலகத்தின் பாவத்தைப் போக்குகின்ற இறைவனின் செம்மறியாகிய" (யோவா 1:29) உண்மையான பாஸ்காச் செம்மறி இவரே (1 கொரி 5:7)

இவ்வுருவத்துடன் மிக நெருங்கிய தொடர்புடையது குரு என்ற உருவகமாகும். எபிரேயருக்கான திருமுகத்தின் ஆசிரியர் இதனைப்பற்றி அதிக அளவில் குறிப்பிடுகின்றார். இறைவனிடம் செல்வதற்கான நிலையான வழியை தருகின்ற, எல்லாம் நிறைவான ஒரே பலியினை அளிக்கின்ற, ஒரே உன்னத தலைமைக் குரு கிறிஸ்துவே. இவ்வாறு, அவரில், இஸ்ராயேலின் முழுவழிபாட்டு சமயமானது தனது நிறைவைக் காண்கிறது.

மீண்டும், இயேசு வார்த்தை (யோவா 1:1), படைப்பு, வெளிப்பாடு மற்றும் மீட்பு ஆகியவற்றில் செயல் தலைவரான வார்த்தை என்று குறிப்பிடப்படுகின்றார். அவரில் இறைவார்த்தையின் ஆற்றல், உறுதிமொழி மற்றும் உரிமைக் கோரிக்கையானது மீண்டும் வெளிப்பாட்டை காண்கிறது. மனிதர்கள் பதிலுரைக்குமாறு அழைக்கப்படுகின்ற இறுதி வார்த்தை இவரே.

பல சமய மற்றும் சமூக உறவுகளைக் கொண்ட வார்த்தையாகிய ஆண்டவர் என்ற சொல்லால், இயேசு மேலும் குறிப்பிடப்படுகிறார். இவரே மனித வடிவிலான இறைவன் வழிபாட்டின் ஆண்டவர், மனிதருடைய பற்றுறுதி, பக்தி மற்றும் சேவையைக் கோருகின்ற அவர்களின் ஒரே உண்மையான தலைவர்.

ஆ. இயேசுவின் அடையாளவியல்:- இயேசு அடிக்கடி உருவங்களையும் அடையாளங்களையும் பயன்படுத்தினார் என்று எல்லா நற்செய்தி ஆசிரியர்களும் சான்றுரைக்கின்றனர். சமய உண்மைகளை விளக்குவதற்கு, வாழ்க்கையின் மிகச் சாதாரண ஆரம்ப நிலைகளினின்று உருவங்களை அவர் பயன்படுத்தினார். அவருடைய முதன்மையான அடையாளமானது இறையரசு: மனிதருடைய இதயங்களில் இறைவனுடைய ஆட்சி என்பதாகும். இதுவே, அவரது போதனையின் மையக் கருத்தாகவும் (மத் 4:17), அவரது உவமைகளில் முதல் பொருளாகவும் (மத் 13), அவரது அக்கறையின் இலக்காகவும்

இருந்தது. மனிதர்கள் அதனை அறிந்து, அதற் கான வழியைக் கண்டுபிடித்து, அதில் நுழைய வேண்டும் என்பதில் அவர் ஆர்வமிக்கவராய் இருந்தார். உடன்படிக் கையையும் இறையாட்சியையும் நினை விற்கு கொண்டுவந்து, இயேசுவில் நிறை வேறிய இவ்வுருவமானது, மீட்பின் முழு வரலாற்றுக்கு பணிச்சட்டமாக உருவாகி, "அரசருக்கெல்லாம் அரசர் மற்றும் ஆண்டவருக்கெல்லாம் ஆண்டவர்" என்று இயேசு புகழப்பட விருக்கும் சிறப்பான உச்ச நிலையை எதிர்நோக்குகிறது. இந்த இயேசு ஓர் அரசை உருவாக்கி, அதைத் தந்தையிடம் அளிக்கவந்தார்.

இயேசுவினுடைய மற்றொரு அடை யாளம், ஆயனும் ஆட்டு மந்தையும் என்ப தாகும். பழைய ஏற்பாட்டில் இவ்வுருவம் கொண்டிருந்த பொருளுக்கு, வழி தவறிய மக்களுக்கு தனது உயிரையே அளிக்கின்ற தன்னுடைய பணியின் உட் பொருளையும் சேர்க்கின்றார் (யோவா 10: 11.15). திருடர் களாகவும் கொள்ளைக்காரர்களாகவும் (10:8), கூலியாட்களாகவும் (10:12–13), போலி இறைவாக்கினர்களாகவும் உள்ள சமய தலைவர்களின்று முற்றிலும் வேறுபட்டு, உண்மையான ஆயனாக அவர் உள்ளார். அவருடைய குரலையே அவை பின் தொடர்கின்றன; அவைகளுக்காக தன்னு டைய உயிரையே அளிக்கின்றார்; மற்ற கிடையிலுள்ளவற்றையும் இறைவனின் ஒரே மந்தைக்கு சேகரிப்பதற்காக அவர் செல்கிறார் (10:16).

இயேசு தன்னுடனான ஒன்றிப்பின் அவசியத்தை, திராட்சைக்கொடி அடை யாளத்தினால் வலியுறுத்துகின்றார். அவரது கவனமானது பலனுள்ள வாழ் வின் மீது அமைந்துள்ளது. கிளைகள் திராட்சைக்கொடியினின்று வாழ்வு பெறு வது போல, சீடனும் கிறிஸ்துவிடமிருந்து பெறுகிறான் (யோவா 15:4). சீடனுடைய உள்ளுரமானது இவ்வுறவையே சார்ந் துள்ளது; கிறிஸ்து இன்றி, அவன் ஒன்றும் செய்ய இயலாது (15:5). மேலும், கனி கொடாவிடில், கிளையானது வெட்டப் பட்டு அழிக்கப்படும் (15:6).

மீண்டும், அவர் 'வழி' என்னும் உருவத்தை பயன்படுத்துகிறார் (யோவா 14:6). இவ்வடையாளத்தின் மூலம் தாமே வழிபற்றிய இறைவாக்கினர்களின் கூற்றுக் களை நிறைவேற்றி (எசா 35:8; 40:3; மலா 3:1) இறைவனிடம் செல்வதற்கான வழியை அளித்து, இறைவனுடன் தோழமை கொள்வதற்கு அவசியமான வாழ்க்கை முறையினை வெளிப்படுத்தியதாக (மத் 22: 16) இயேசு குறிப்பிடுகிறார். இவ்வாறு, கிறிஸ்தவமானது வழியாகவும் (அ.ப. 9:2; 19:9.23; 22:4), கிறிஸ்தவர்கள் அவ்வழியைச் சார்ந்தவர்களாகவும் அறியப்பட்டனர்.

இ. மீட்பின் அடையாளவியல்:- மீட்பி னுடைய முதன்மையான அடையாள மானது, சிலுவையாகும். அதில் பெரும் பான்மையான புதிய ஏற்பாடு இறையியல் ஒருங்கு சேருகின்றன. சிலுவையானது மீட்பின் வழியாகவும் (கலா 6:14; கொலோ 2:14), மனித இனத்தின் பிளவுபட்ட நிலை களை ஒன்றிணைக்கும் சாதனமாகவும் (எபே 2:16; கொலோ 1:20), கிறிஸ்தவர் களுக்கான வாழ்வின் வழியாகவும் இருப் பதால் (மத் 10:38; 16:24; மாற் 8:34; 10:39; லூக் 9:23; 14:27), சிலுவையின் செய்தி என்பது இறைவனின் ஆற்றலாக உள்ளது (1 கொரி 1:18). புதிய ஏற்பாடு காலந் தொட்டு, உலகின் பாவங்களுக்கான அவரது மரணத்தையும் மனிதருக்கு அவர் அளிக்கின்ற புது வாழ்வையும் வலியுறுத்து கின்ற சிலுவையானது, கிறிஸ்துவில் வரு கின்ற மீட்பின் ஒரே உலகளாவிய அடை யாளமாக விளங்குகிறது.

மீட்பின் உண்மையை விவரிக்கும் போது, புதிய ஏற்பாட்டு ஆசிரியர்கள் பல்வேறு அடையாள சொற்களைப் பயன் படுத்துகின்றனர்; விடுதலை தீர்ப்பினை குறிப்பிடும் "ஏற்புடையவராதல்" (உரோ 4:25; 5:16.18; 3:24; 9:30; 1 கொரி 6:11); மகன் என்கிற நிலையில் குடும்ப உறவில் நுழை தலை குறிப்பிடும் "சுவிகாரம்" (உரோ 8:15; கலா 4:5); அடிமையை விடுதலை செய்தல் அல்லது சிறையிருப்போரை மீட்பதைக் குறிப்பிடும் "விலை" (மத் 20:28; மாற் 10:45; எபே 1:7; கொலோ 1:14; 1 திமோ 2:6; எபி. 9:15); பலியின் மூலம் தோழமையை மீட்ட ளித்தல் அல்லது குற்றத்தை நீக்குதலைக் குறிப்பிடும் "பரிகாரம்" (உரோ 3:25; 1 கொரி 5:7), ஆகியவை இப்படிப்பட்ட அடையாளச் சொற்களாகும்.

மீட்கப்பட்ட சமுதாயம் என்பது, 'கிறிஸ்து எங்குள்ளாரோ அங்கு திருச்சபையும் உள்ளது' என்பதை வலியுறுத்தும் கிறிஸ்துவின் உடலாக அழைக்கப்படுகிறது. இவ்வுருவத்தின் மூலமாக, திருச்சபையினுடைய கூட்டான இயல்பும், பணியும் வலியுறுத்தப்படுகின்றன.

மீண்டும், கிறிஸ்துவினுடனான நெருங்கிய உறவையும், அதனுடைய துணை நிற்கும் நிலையைக் குறிப்பிடும் முறையில் திருச்சபை கிறிஸ்துவினுடைய மணமகள் என்று கூறப்படுகின்றது.

ஈ. வழிபாட்டின் அடையாளவியல்:- வழிபாட்டின் அடையாளவியலானது திருவருட்சாதனங்களில் முன்னிலைக்கு வருகிறது. ஒவ்வொரு அருட்சாதனமும் சைகை நாடகத்தொனியை உள்ளடக்கிய, நற்செய்தியினுடைய, நாடக வடிவ வெளிப்பாடாக உள்ளது. ஞானஸ்நானத்தில், நீரானது, தீய சக்திகளின் மீதான வெற்றி வாழ்வை அச்சுறுத்தும் நீரினிடையே செல்வது, செங்கடலனைக் கடப்பதை நினைவூட்டுகிறது (1 கொரி 10:1–2; சங் 74:13; ஏச 51:9–10); சாவிலிருந்து வாழ்விற்குச் செல்லுதல் (உரோ 6:14); கறையினை அகற்றுதல் (அப.2:38; தீத் 3:5); வாழ்வை அளிப்பது (உரோ 6:4; கலா 3:27; யோவா 3:5) என்பனவற்றை குறிப்பிடுகின்றது. புனித சமுதாயத்திற்குள் நுழைவதற்கான துவக்கச் செயலாக, விருத்த சேதனத்தின் இடத்தினை ஞானஸ்நானம் ஏற்கிறது (1 கொரி 12:13). இது இயேசுவின் மரணத்திலும் உயிர்ப்பிலும் பங்கு பெறுவதாகும் (உரோ 6:3–5; கொலோ 2:12). ஒருவன் கிறிஸ்துவோடு புதைக்கப்பட்டு (உரோ 6:3), புதிய வாழ்விற்கு உயிர்தெழுந்து (உரோ 6:4; கொலோ 2:12), அதன் மூலம் கிறிஸ்துவின் உடலுக்குள் நுழைகிறான் (1 கொரி 12:13). இவ்வாறு, இது மீட்பு நாடகத்தின் மறு அரங்கேற்றமாக உருவாகிறது.

இதே முறையில் நற்கருணையானது (ஆண்டவருடைய இரவுணவு) நற்செய்தியை நாடகமாக்குகிறது. இது புதிய உடன்படிக்கையின் அடையாளமாகும் (மத் 26:26–29; மாற் 14: 22–25); தனது சீடர்களுடனான இயேசுவின் தோழமை விருந்தை நினைவு கூர்கிறது; சிலுவை உயிர்ப்பு நிகழ்ச்சியைப் பறைசாற்றுகிறது (1 கொரி 10:16–17; 11:23–30); மெசியாவின் பெருவிருந்தை எதிர் நோக்கியுள்ளது (லூக் 22:15–19; திதாக்கே 9–10). மீட்பினுடைய முழுப்பொருளானது, இயேசுவின் மரணம் மற்றும் அதனின்று வெளிப்படும் தோழமையின் புதுவாழ்வை வலியுறுத்தும் விதமாக நாடகமாக்கப் பட்டுள்ளது.

உ இறுதிக் கால இயலின் அடையாளவியல்:- புதிய ஏற்பாட்டு இறுதிக்கால இயலில், புதிய எருசலேமின் உருவகத்தின் கீழ், விசித்திர விலங்கு அடையாளவியல் மற்றும் எண்ணியலோடு சேர்ந்து, விண்ணக வழிபாடு, கொள்ளை நோய்கள், விண்ணக போர்முறை, தீமையின் புத்தெழுச்சி மற்றும் அழிவு, உயிர்ப்பு, தீர்ப்புக் காட்சி மற்றும் பேரின்பத்தை மீட்டளித்தல் போன்ற மையக்கருத்துக்களுடன் சேர்ந்து, மீண்டும்வெளிப்பாட்டு இலக்கியம் பயன்படுகிறது. அடையாள உருவகங்களைப் பயன்படுத்தி, வரலாற்றினை மீண்டும் அண்டவியல் சொற்களால் எழுதுவதன் மூலம், உரோமையரின் அடக்குமுறையின்போது திருச்சபைக்கு ஆறுதலளிக்க, வலிமையளிக்க ஆசிரியர் விரும்புகிறார்.

அப்போஸ்தலருக்கு பிற்பட்ட காலத்தில், கிறிஸ்து, ஞானஸ்நானம், உயிர்ப்பு, நற்கருணை, அரசு, மேலும் நற்செய்தியின் ஆற்றல் (யோவா 21:1–13) ஆகியவற்றை குறிப்பிடுகின்ற அடையாளமாக மீனையும், வாழ்வின் கடலில் விசுவாசிகளை சுமந்து செல்லும் திருச்சபையினை குறிப்பிடுகின்ற அடையாளமாக கப்பலையும், கிறிஸ்தவ கலை மற்றும் சிற்பக்கலையில் குறிப்பிடப்பட்டுள்ள அடையாள பொருட்களின் சித்திரம், போன்றவற்றை நாம் சந்திக்கிறோம்.

'அடையாளம்' என்னும் சொல்லானது, விசுவாசத்தின் சுருக்கமான அறிவிப்பைக் குறிப்பிடவும் உபயோகிக்கப்படுகிறது. உ–ம்: அப்போஸ்தலர்களுடைய விசுவாசப் பிரமாணத்தின் முன்னோடியான "உரோமை அடையாளம்" (விசுவாச அறிக்கை).

## அட்டை (Leech)

புழு வகையைச் சார்ந்த இந்த உயிரினமானது இரத்தத்தை உறிஞ்சும் தன்மை

கொண்டது (பழ 30:15). பாலஸ்தீனத்தில் தேங்கி நிற்கும் குட்டைகள் அல்லது மெது வாக ஓடும் ஓடைகளில் வாழ்ந்த பலவகை யான அட்டைகள் குறிப்பிடப்படுகின்றன. அட்டையை விழுங்கிவிடும் அச்சத்தால், ஆற்றிலிருந்தோ குட்டைகளிலிருந்தோ நேரடியாக வாய் வைத்தோ கையாலோ நீர் அருந்துவதற்கு எதிராக தல்மூது எச்சரிக்கிறது.

**அணிவகுத்து நிற்கும் படை** (BATTLE ARRAY)

பகைவர்கள் தாக்கினால் எதிர்த்து நிற்கவோ, அல்லது வாய்ப்பு ஏற்படும் போது முன்சென்று தாக்கவோ தயாராக இருக்கும் போர்நிலை அல்லது அமைப்பு. இது யோசுவா, மற்றும் அரசர்கள் செய்த போர்களில் விளக்கமாகக் கூறப்படுகிறது (யோசு 1:14; 1 சாமு 17:10; 2 சாமு 10:8–17). இறைவாக்குகளிலும் இந்தப் "போருக்கு ஆயத்தமாயிருக்கும்" நிலைபற்றிக் கூறப் படுகிறது (எரே 6:23). "கடவுள் தரும் நடுக்கங்கள் எனக்கெதிராய் அணிவகுத்து நிற்கின்றன" என யோபு குறிப்பிடுகிறார் (யோபு 6:4). திருவெளி 9:7–இல் வெட்டுக் கிளிகள் போருக்கு அணிவகுத்துச் செல் லும் குதிரைகள் போல் நிற்பதாக உருவக மாகக் கூறப்படுகிறது.

**அணுகும் பேறு** (ACCESS)

கீழை நாடுகளின் அரசவையிலே பார்வையாளர்களையும், குறைகளைக் கூற வருவோரையும் அரசரைப் பார்க்க அழைத்து வரத் தனி அதிகாரி இருந் தார். இந்த அதிகாரியின் தயவு இருந் தால்தான் அரசரைக் காண இயலும். மேலும் இவர் இவ்வாறு வருபவர்கள் உண்மையான காரணத்துடன் வருகிறார் கள் என உத்தரவாதம் அளிக்கவும் கடமைப்பட்டிருக்கிறார் (காண்க: பர்னபா பவுலை எருசலேம் சபைக்கு அறிமுகப் படுத்தி உத்தரவாதம் அளிக்கிறார். அ.ப. 9:27.28). பொதுவாக, இப்படி ஒருவரை மற்றவருக்கு அறிமுகப்படுத்தும் பணியை செய்பவரை இடையீட்டாளர் அல்லது இணைப்பாளர் எனவும் கூறலாம். அகிலத்தை ஆண்டவர் ஆள்வதால் அவர் அனைத்திற்கும் அரசர் (சங் 29:10; 10:47; 96:10; 99:1). அவ்வரசரை அணுகும் வாய்ப்பை மானிடருக்குப் பெற்றுத் தந்தவர் இறைமகன் இயேசு (எபி 10:19–22). இங்கே மனிதனை இறைவனோடு இணைக்கும் இயேசுவின் பணி வெள்ளிடை மலை. இது பாவி இறைவ னோடு உறவு கொள்ளவும் தொடர்ந்து அவரை அணுகவும் வழி செய்கிறது உரோ 5:2; எபே 2:12–18 ஆகிய பகுதிகள் பாவத்தினால் மனிதன் கடவுளிடமிருந் தும், உடன்படிக்கை உரிமையிலிருந்தும் பிரிக்கப்படுகிறான் (உரோ 3:23) எனவும், இறைவனிடம் மீண்டும் தங்களை அறி முகப்படுத்த இடையீட்டாளர் தேவை எனவும் இயேசு தனது பாடுகளால் பிரிவினைச் சக்திகளைத் தகர்த்தெறிந்து உறவை ஏற்படுத்தினார் எனவும் கூறுகின்றன (எபே 2:15–18; 1 பேதுரு 3:18). இயேசு ஏற்படுத்திய உரிமை இறைவ னோடு நேரடி உறவு கொள்ளும் உரிமை ஆகும் (எபி 4:16; 10:22). இது ஆவியினால் ஏற்பட்ட உரிமை (எபே 2:18). இயேசுவின் இறப்பு இறைவன் – மனித உறவைப் புதுப்பித்தது. மேலும் மனித உறவுகளை யும் மேம்படுத்தியது. இந்த உரிமை நாளும் தொடர்கிறது. இதற்குக் காரணம் இயேசுவின் மீட்புப் பணி தொடர்ந்து செயல்படுவதேயாகும் (உரோ 5:1; காண்க: உரோ 3:25; எபி 11:6).

**அண்ணகன்** (EUNUCH)

அண்ணகர்கள் அரண்மனையில் பெண்கள் தங்கியிருக்கும் பகுதியின் மேற் பார்வையாளர்களாக நியமிக்கப்பட்டவர் கள். வழக்கமாக இவர் விதை அடித்து ஆண்மை நீக்கப்பட்டவர். திருமணம் செய்துகொண்ட அண்ணகர்களும் உண்டு (ஆதி 39:1). ஆனால் போத்திபார் அநேக மாக அண்ணகராக இருக்கமுடியாது. ஏனெனில் 'அண்ணகன்' என்ற சொல் அவனது வேலையையே குறிக்கும். பழ மேற்காசிய அரசவைகளில் இருந்தது போல், மெசபொத்தாமியா வழியாக உரோமை, பைசன்டைன் பேரரசுகளி லும் அரசியல் முக்கிய வேலைகளுக்கு அண்ணகர்களைப் பயன்படுத்தும் முறை புகுத்தப்பட்டது.

அண்ணகர்கள் உயர் அதிகாரிகளாக வும் இருந்தனர் (ஆதி 39:1: அ.ப. 8:27). ஆனால் இஸ்ராயேலில் பழுதுபட்ட ஊன

முற்ற மற்ற பொருட்களைப் போன்று அண்ணகர்களும் ஆண்டவருடைய உடன் படிக்கைச் சபையில் புகுவதற்கு அனுமதி மறுக்கப்பட்டனர் (லேவி 22:24; உப 23:1). எனவே இஸ்ராயேல் மக்கள் நாடு கடத் தப்படும்போது பாபிலோன் அரண்மனை யில் அண்ணகராய் இருப்பார்கள் (ஏச 39:7) என்று ஏசயா இறைவாக்குரைத்த போது அனைவரும் அஞ்சினர். இந்த இறைவாக்கு நிறைவேறியதா என்பதும், தானியேல் ஓர் அண்ணகரா (2 அர 20: 17–18) என்பதும் தெளிவாகத் தெரிய வில்லை. ஆனால் அடிமைகள் பொது வாக அண்ணகராக்கப்பட்டனர் என்று எரோதோட்டஸ் என்பவர் கூறுகிறார். பழைய ஏற்பாட்டில் இஸ்ராயேல் அண்டை நாட்டவர் அரசவைகளில் அண்ணகர்கள் பயன்படுத்தப்பட்டுள்ளனர் (எஸ்த 1:10–15; தானி 1:3.8–9). தீரிலிருந்து வந்த ஈசபேல் அண்ணகர்களைப் பயன் படுத்தினாள் (1 அர 22:9; 2 அர 8:6; 9:32). தாவீதும் அவர்களை அலுவலர்களாகப் பயன்படுத்தினார் (1 சாமு 8:15; 1 நாள் 28:1). யூதாவை இறுதியாக ஆண்ட மன்னர் களும் அண்ணகர்களைப்பற்றி அறிந் திருந்தனர் (2 அர 24:15; 25:19; எரே 41:16). திருமுறைப் புற நூல்களில் சட்டத்தைக் கடைப்பிடிக்கும் அண்ணகர் பாராட்டப் படுகிறார். பெரிய ஏரோது தனக்குப் பானம் அளிக்கும் அதிகாரியாக ஒரு அண்ணகரைப் பயன்படுத்தினார் என்று யோசிபஸ் கூறுகிறார். மெசியா அரசில் விசுவாசமற்ற இஸ்ராயேலர்களுக்கு முன்னால் விதையடிக்கப்பட்ட அண்ணகர் களும் அன்னியர்களும் நுழைவார்கள் என்று ஏசயா முன்னறிவிக்கிறார் (ஏச 56:3–5; காண்க: ஞான 3:14).

புதிய ஏற்பாட்டில் எத்தியோப்பிய அரசியான காத்தாக்கேயின் மேலலுவலன் ஒரு அண்ணகன் ஆவான் (அ.ப. 8:27–29). இதன் வழியாக நிலையானச் சடங்கு தீட்டுடையவனும், இறையரசை ஏற்றுக் கொள்ளுதல், கிறிஸ்துவின் உடலில் முழுப்பங்கு பெறுதல் ஆகியவற்றிலிருந்து விலக்கப்படுவதில்லை என்று சுட்டிக் காட்டுகிறார் ஆசிரியர். திருமண முறிவு பற்றிப் பேசுகையில் ‘தாய் வயிற்றினின்று அண்ணகராகப் பிறந்தவரும் உளர். மனிதரால் அண்ணகரானவரும் உளர். விண்ணரசை முன்னிட்டு அண்ணக ராக்கிக் கொண்டவரும் உளர் என்று (மத் 19:12) இயேசு அண்ணகர்களை வேறு படுத்துகிறார்.

இறைவனின் அரசில் நன்முறையில் சேவை செய்யத் தங்களது இனவிருத்தி ஆற்றலைத் தியாகம் செய்பவர்களே இயேசுவுக்காகத் தங்களையே அண்ணகர் களாக்கிக் கொண்டவர்கள் என்று உருவக மாகக் கூறப்படுகின்றனர். இது உடற் கூறு களுக்கு அப்பாற்பட்ட பொருளில் கூறப் படுகிறது. அறுவை சிகிச்சை அல்ல. இயேசு இங்கு தன்னை அல்லது திரு முழுக்கு யோவானைக் குறிப்பிடுகிறார் என்று சிலர் கருதுகிறார்கள். அண்ணகர் கள் ஆற்றலற்ற மனிதர்கள் என்று சீராக் ஆகமம் கூறுகிறது (சீரா 20:3; 30:21). மத் 19:2– என்ற வாசகம், கன்னிமைக் குருத் துவத்திற்கு அடிப்படையாக விளக்கப்படு கிறது.

**அதசா** (ADASA)

யூதா மக்கபேயர் நிக்கானோரின் சீரியாப்படையை கி.மு. 161–இல் தோற் கடித்த இடமாகிய அதசா, எருசலேமிற் கும் பேத்து – கோரனுக்கும் இடையேயுள்ள வழியோரம் அமைந்துள்ள நகரம் (1 மக் 7:40.45). இது. எருசலேமிலிருந்து வடக் கில் 8 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள இன்றைய கிர்பேத்–அத்தசே ஆக இருக்க லாம்.

**அதசா** (HADASHAH – புதிய நகர்)

இது யூதாவில் இலாக்கீசுக்கு அருகில் செப்பேலா மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர் (யோசு 15:37). இது மோரசேத்துகாத்துப் பகுதியில் அமைந்திருந்தது. ஆனால் சரி யான இடத்தை அறிய முடியவில்லை. ஒரு காலத்தில், இது திகிரிசுக்கும் அசுக் கலோனுக்கும் இடையில் உள்ள இக்கால கத்தாவாகக் கருதப்பட்டது, ஆனால் இது அரகு எல்–மென்சியோவுக்கும் கிர்பெத்து அய்லானுக்கும் இடையில் இருக்கும் கிர் பெத்து ஏல்–நுதேயிதாவாக இருக்கலாம் என்பது சரியான ஊகமாக இருக்கலாம்.

***அதலியா*** (ADALIA - *மதிப்பிற்குரியவர், நெருப்புக் கடவுள்)*

அகாகியனான ஆமானின் ஐந்தாவது புதல்வன் (எஸ் *9:8*)

***அதாசா*** (HADASSAH – *மண மலர்ச் செடி)*

எஸ்தரின் மூல எபிரேயப் பெயரா கவோ (எஸ்த *2:7*) அல்லது அவளுக்கு அளிக்கப்பட்ட பெயராகவோ இருக்க லாம். பின்னது சரியென்றால் அக்காதிய மொழியில் அதாசாவுக்கு "மணப்பெண்" என்று பொருள் உண்டு. இது இசிதார் தேவதைக்கு அளிக்கப்பட்ட பட்டமாகும். பென்யாமீன் குலத்து மோர்தெக்காய் என்பவர் இவளை எடுத்து வளர்த்தார். ஏனென்றால் அவளுக்குத் தாயும், தந்தை யும் இல்லை.

***அதாதா*** (ADADAH)

ஏதோமின் எல்லைக்கருகே யூதோயா வின் தென் கிழக்குப்பகுதியில் அமைந் துள்ள நகரம் (யோசு *15:22*). இப்பெயர் வடிவம் அசாதாரணமானது. இது யூதா வைச் சேர்ந்த அரோயர் என்ற இடத்தின் (*1* சாமு *30:28*) மறு பெயரான அராராவாக என்று இருக்கவேண்டும் என்பது அறிஞர் கள் கருத்தாகும். தாவீது அமலேக்கிய ரிடம் கொள்ளை அடித்த பொருட்களில் ஒரு பகுதியை அன்பளிப்பாகக் கொடுத்த நகரங்களில் இதுவும் ஒன்றாகும். இவ் விடம் பேயேர் - செபாவிக்குத் தென்கிழக் கில் *19* கி.மீ. தொலைவிலுள்ள கிர்பேத் – அராராவாக இருக்கலாம்.

***அதாதுரிம்மோன்*** (HADAD - RIMMON- *ரிம்மோன் ஓர் இடி)*

மேற்குச் செமித்திய புயல் கடவுளின் கலப்புப் பெயராகும். ஒருவேளை மெகிதோ பகுதியில் வழிபடப்பட்ட கானா னியப் பாகாலின் தல வடிவமாக இருக்க லாம். இந்த வழிபாட்டில் தாவரக் கடவு ளின் மரிப்பும் உயிர் பெறுதலும் புலம்பப் பட்டது. இந்த வழிபாட்டோடு தொடர்புப் படுத்தப்பட்டது. செக் *12:11*–இல், தாங் களே கொன்றுபோட்ட தாவீது குடும்பத் தைச் சேர்ந்த அரசனைப்பற்றி யூதா கொள்ளும் அவ நம்பிக்கை இப்புலம்ப லோடு ஒப்பிடப்படுகிறது. சில அறிஞர் கள் *609*–இல் மெகிதோவில் எகிப்திய பாரவோன் நெக்கோவுடன் நடந்த போரில் யோசியா அரசன் கொல்லப் பட்டது (காண்க: *2* நாள் *35: 24–25*) பற்றிய புலம்பலோடு இக்கூற்றைத் தொடர்பு படுத்துகின்றனர்.

அதாதுரிம்மோன் ஒரு இடப்பெயராக வும் இருக்கலாம். இது தன்பெயரை இந்தப் புலம்பல் வழிபாட்டிலிருந்து பெற்றிருக்கக்கூடும். செக் *12:11*–இல் கூறப் படும் சடங்கு நடந்த இடமாக இருக்கக் கூடும். சிலர், இந்த இடம் விவிலிய இட மான தானாக்குக்கு அருகிலுள்ள ரும் மானே என்ற கிராமமாக இருக்கலாம் என்பர். இதைவிட, மெகிதோச் சம வெளியில் சிறிது கிழக்கிலுள்ள உரோமை யர் படை நகரமாக (இக்கால லெக்குன்) இருந்திருக்கலாம். இந்த இடத்தை கி.பி. *4*–ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த போர்டோ என்ற மாக்சிமியன் திருயாத்ரீகர் பொலி என்று அழைக்கிறார். இது செசரியா வுக்குக் கிழக்கில் *27* கி.மீ. தொலைவி லும், இசிரியேலுக்கு மேற்கில் *16* கி.மீ. தொலைவிலும் உள்ளது. எரோனிமுசின் கருத்துப்படி மாக்சிமியன்பொலி முற் காலத்தில் அதாதுரெம்மோன் என்றழைக் கப்பட்டது.

***அதாதெசர்*** (HADADEZZER – *அதார் ஓர் உதவி ஆவார்)*

அரமேய நாட்டைச் சேர்ந்த சோபா வின் அரசன் அதாதெசர் ஆவார். இவர் தாவீது அரசரால் தோற்கடிக்கப் பட்டார். தமஸ்கு நகர மக்கள் அதாதெசருக்கு, உதவி செய்ய வந்தனர். அரமேய அரசர் களில் ஆற்றல்மிக்கவர். முன்னால் அசீரி யாரிடமிருந்த பகுதியில் யூப்பிரத்திசு வரை யிலும் ஆட்சி செய்தார். கோழையான இரண்டாம் அசுராபி (கி.மு. *1012–972*) இதைத் தடுக்க முடியவில்லை. சவுலின் காலத்தில் சோபாவினருக்கும் இஸ்ராயே லருக்கும் போர் மூண்டது.

பழைய ஏற்பாட்டில் அதாதெசர், தாவீது கொண்ட தொடர்பை *3* இடத்தில் சொல்லுகிறது.

(அ) *2* சாமு *10:6–14*–இல் அம்மோனி யர்கள், சீரியர்கள் ஆகியவர்களுடன் இவரும் இரபாவில் யோவாபுவால் தோற்கடிக்கப்பட்டார்.

(ஆ) 2 சாமு 10:15–18 தாவீதுக்கும் அதாதெசருடைய படைத்தலைவன் சோபாக்கு தலைமையில் அணி வகுத்த புதிய போர்ப் படைக்கும் கேலாம் என்ற இடத்தில் நடந்தபோரைப் பற்றி விளக்குகிறது. திரும்பவும் தாவீது அரமேயர்களைத் தோற்கடித்தார். இதனால் அரமேயர்களிடமிருந்து தாவீது பெரும் கப்பம் பெற்றார். அவரது ஆதிக்கம் யோர்தானுக்கு அப்பாலும் பரவியது (8:7–8; 10:19). அதாதெசருக்கு அடியில் இருந்த எல்லா அரசர்களும் இஸ்ராயேலரோடு சமாதானம் செய்து கொண்டனர்.

(இ) 2 சாமு 8:3–8 தாவீது யூப்பிரத்திசு நதிக்கரையிலுள்ள நாட்டைக் கைப்பற்றிச் செல்லுகையில், இரகோபுவின் மகன் அதாதெசர் என்ற சோபாவின் அரசரைத் தோற்கடித்தார். தமஸ்கு நகரத்தாராகிய சீரியர் சோபாவின் அரசன் அதாதெசருக்கு உதவி செய்ய வந்தார்கள். ஆனால் தாவீது அங்குத் தம் படைகளை வைத்து சீரியர்களை அடிமையாக்கி விட்டார். இவை யோர்தானுக்கு அப்பால் வியாபாரக் கட்டுப்பாட்டையும், பிகாவிலுள்ள செம்புக் கனிவளங்களின் மேல் கட்டுப்பாட்டையும் கொடுத்தன. அதாதெசருடைய ஊழியர் வைத்திருந்த பொற் கலன்களையும், பேத்தா, பேரோத்தாய் ஆகிய நகர்களிலுள்ள வெண்கலத்தையும் தாவீது எருசலேமிற்கு எடுத்துக் கொண்டு வந்தார். சில ஆய்வாளர்கள் இம்மூன்றும் தனித்தனி போர்களை விவரிக்கின்றன என்பர். மற்றவர்கள் ஒரே தொடர்ச்சியான நிகழ்ச்சிகளை விவரிக்கின்றன என்பர்.

**அதாமா** (ADAMAH – செம்மண், செந்நிலம்)

நப்தலி நாட்டிலுள்ள மதிற்சுவர்களால் பாதுகாக்கப்பட்ட ஓர் நகரம் (யோசு 19:36). இது இருந்த இடம் தெளிவாகத் தெரியாத போதிலும், மதிற்சுவர்களால் சூழப்பட்டுள்ள நகர்களின் பட்டியலின்படி கலிலேயா கடலின் வடமேற்கே அமைந்திருந்ததாகத் தெரிகிறது. இது கெனசரேத்து (கலிலேயாக்) கடலில் யோர்தான் ஆறு வந்து சேரும் இடத்திற்கு வடகிழக்கே 4 கி.மீ தொலைவிலுள்ள காசர்–எத்தம் ஆக இருக்கலாம்.

**அதாமி–நெகபு** (ADAMI - NEKEB - கணவாயின் அதாமி)

நப்தலி நாட்டின் எல்லைப் பகுதியிலுள்ள நகர் (யோசு 18:33). கலிலியோர்வின் தென் மேற்குப்பகுதியில் அமைந்துள்ள கிர்பேத்தாமியேயாக இருக்கலாம்.

தாபோர் மலைக்கு வட கிழக்கில் 10 கி.மீ. தொலைவில் உள்ளது. கவுரானையும் ஆக்கோ சமவெளியையும் இணைக்கும் வியாபார வழியில் ஒரு கணவாய் இருந்தது. இதையும் ஆதாம் என்ற இடத்தையும் குழப்பி விடக்கூடாது. சில அறிஞர்கள் இவ்விடம் கிர்பேத்–எத்– தேல் லாக இருக்கலாம் என்பர்.

**அதாயா** (ADAIAH – யாவே தம்மையே அணி செய்து கொண்டார்)

1. போசுக்காத்தைச் சேர்ந்த யோசியாவின் தாய்வழிப் பாட்டனார் (2 அர 22:1).

2. இவர் கெரிசோம் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு லேவியர். தாவீதால் நியமிக்கப்பட்ட ஆலயப் பாடகர்களின் பட்டியலில் இடம் பெறும் ஆசாபுவின் தூரத்து மூதாதையர் ஆவார் (1 நாள் 6:41).

3. பாபிலோன் அடிமைத்தனத்திலிருந்து, எருசலேமிற்கு திரும்பி வந்த குருக்களின் ஒருவர் (1 நாள் 9:12; நெக 11:12). மலக்கியாவின் குடும்பத்தைச் சேர்ந்தவர், எரொகாமின் மகன் ஆவார்.

4. பென்யாமின் குலப் பெயர் பட்டியலில் காணப்படும் சிமயியின் மக்களில் ஒருவர் (1 நாள் 8:21).

5. இது புறவினப் பெண்களை மணந்தவர்களின் பட்டியலில் இடம் பெறும் இருவரின் பெயராகும். ஒருவர் பானியின் வழித்தோன்றல் (எஸ் 10:29). மற்றவர் பினுயியின் வழித்தோன்றல் (10:39).

6. எருசலேமில் குடி கொண்டிருந்த யூதர் குலத்தைச் சேர்ந்தவர். யோயாரீபுவின் மகன் (நெக 11:5).

7. அரசி அத்தாலியாவை பதவியிலிருந்து நீக்குவதில் ஈடுபட்டிருந்த சேனைத் தலைவர்களில் ஒருவரான மாசேயாவின் தந்தையாவார் (2 நாள் 23:1).

**அதார்** (நிறைவு, மகிமை)

யூத ஆண்டுக் கணிப்பில் 12–வது மாதமாகும் (எஸ் 6:15). பெப்ரவரி – மார்ச், மாசி மாதங்களுக்கு இணையானது. இம்

மாதத்தில் பூரிம் விழா கொண்டாடப் பட்டது (எஸ் 9:17.19.21). ஒவ்வொரு இரண்டு அல்லது மூன்று ஆண்டுகளுக்கு இடையில் பதின்மூன்றாவது மாதம் சேர்க் கப்பட்டது. இது இரண்டாவது அதார் என்றழைக்கப்பட்டது.

**அதான், அதோன்** (ADDAN, ADDON – அரண் செய்யப்பட்ட இடம்)

பாபிலோனைச் சார்ந்த அடையாளம் தெரியாத பகுதி. இங்கு வாழ்ந்து தாயகம் திரும்பிய நாடு கடத்தப்பட்டவர்கள் தங்கள் முன்னோர் பாரம்பரியத்தை நிரு பிக்க முடியவில்லை (எஸ் 2:59: நெக 7:61). நெக 7:61–இல் இது அதோன் என்ற ழைக்கப்படுகிறது.

**அதி** (ADDI – அணி செய்யப்பட்டது)

1. நாடு கடத்தப்படுதலுக்கு முந்திய காலத்தைச் சேர்ந்தவர். இயேசுவின் மூதாதையருள் ஒருவர் (லூக் 3:28).

2. அதினா என்ற பெயரின் மற்றொரு வடிவமாகத் தெரிகிறது. அதினா – 1ஐக் காண்க.

**அதிகாரம்** (AUTHORITY)

யூத, கிறிஸ்தவ எண்ணங்கள் அதிகா ரத்தின் மூலம் இறைவனே எனக் கூறு கின்றன (தானி 2:37தொ; யோவா 19:11; உரோ 13:1). எனவே ஆண்டவரிடமின்றி அதிகாரமில்லை என்பது சாலப் பொருந் தும்.

I பழைய ஏற்பாடு :

(அ) "அதிகாரம் அளிப்பவர் ஆண்ட வரே" என்று பவுல் வகுத்த (உரோ 13:1) இக்கோட்பாட்டை, பழைய ஏற்பாடு என்றுமே ஏற்று வந்திருக்கிறது. ஆனால் பழைய ஏற்பாட்டில் இறைவன் இட்ட கட்டளைக்குக் கட்டுப்பட்டே இவ்வதிகாரம் பயன்படுத்தப்பட்டதாகத் தெரிகின்றது. ஆண்டவரின் அதிகாரம் எங்கும் எதிலும் எப்பொழுதும் எல்லையற்று நிறைந் துள்ளது.

1. இவ்வுலக அதிகாரத்தின் பண்புகள்:-

இறைவனது படைப்பில், எல்லா அதி காரங்களும் இறைவனிடமிருந்தே வருகின் றன: மனிதனுக்கு இயற்கையின் மீதும் (ஆதி 1:28), கணவனுக்கு தன் மனைவி மீதும் (ஆதி 3:16), பெற்றோருக்குத் தங்கள் பிள்ளைகள் மீதும் (லேவி 19:3) அதிகாரம் அளிக்கின்றார். பலவகையான நிறுவனங் களைக்கொண்ட சமுதாயத்தில், குடிகளுக் காகவும் பொதுநலத்திற்காகவும், ஆளுநர் கள் இறைவனிடமிருந்தே தங்கள் பொறுப் பைப் பெறுகின்றனர். எனவே தான் தலைவிக்கு அடங்கி நடக்கும்படி ஆகா ரைக் கட்டளையிடுகிறார் யாவே (ஆதி 16:9); தமஸ்கு நகரின் ஆட்சியை கசயேலுக்கும் (1 அர 19:15; 2 அர 8:9–13), கீழ்த்திசை நாடுகள் அனைத்தின் மேல் அதிகாரத்தை யும் நெபுக்கதுனேசாருக்கும் (எரே 27:6) ஒப்புவிக்கின்றார். இவ்வாறு புறவினத் தாரே தங்கள் அதிகாரத்தை இறைவனிட மிருந்து பெறுவாரெனில் (காண்: சீரா 10:4), இறைவனுடைய மக்கள் அதிகாரத்தை அவரிடமிருந்து பெறு கிறார் என்று சொல்லத் தேவையில்லை. ஆனால் இவ்வதிகாரம் உலகில் நாம் காணும் அதிகாரத்திலிருந்து மாறுபட்ட பண்பு கொண்டது. இவ்வுலக அதிகாரம் எண்ணற்ற பிரச்சினைகளை எழுப்புகின் றது. அதனைப் பற்றிய அறிவு தனிப்பட்ட ஆய்வுக்கும் சிந்தனைக்கும் உரியதாகும்.

2. அதிகாரத்தை பயன்படுத்தும்போது கவனிக்க வேண்டிய விதிகள்

இறைவன் நமக்கு அளித்த அதிகா ரத்தை அவரவரர் விருப்பப்படி பயன் படுத்தாது நீதிக்கும் ஒழுங்குக்கும் கட்டுப் பட்டு பயன்படுத்த வேண்டும். இறைவன் நமக்கு அளித்திருக்கும் அதிகாரம் வரம் பில்லாத ஒன்று அன்று. மாறாக ஒழுக்க நியதிகளால் அது கட்டுப்படுத்தப்பட்டுள் ளது. அடிமைகளின் உரிமைகளை நுண்ணியமாக எடுத்துக் கூறும்போது சட்டம் அதிகாரத்தைக் கட்டுப்படுத்து கின்றது (யாத் 21:1–6.26 தொ; உப 15:12–18; சீரா 33:30. ...). பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகள் மேல் கொண்ட அதிகாரமும் அவர்கள் சீரான கல்வியைப் பெற வேண்டும் என்ற நோக்கத்திற்காகவே பயன்படுத்தலாம் (பழ 23:13 தொ; சீரா 7,2 தொ; 30.1....). அரசியல் துறையில் மட்டுமே மனிதன் எளிதில் வரம்பு கடந்து தன் அதிகாரத்தைப் பயன்படுத்தக்கூடிய

சூழ்நிலையில் இருக்கிறான். வெற்றி மயக்கம் ஏறிய அசீரியர்களைப் போன்று, (ஏச 10:7–11. 13 தொ), அதிகாரப் போதையில் "எல்லாம் என் கைவன்மையே" என்று இறுமாப்புக் கொள்கிறான் அவன்; 'தானே கடவுள்' என்ற மமதையில் (எச 28: 2–5), ஒப்பற்ற இறைவனுக்கு ஒப்பாக தன்னையே உயர்த்தி (ஏச 14:13 தொ) பழிச் சொற்களைக் கூட கக்குகின்றான் (தானி 11:36). இந்நிலையில் அவனுக்கும், தானியேல் கண்ட கடல் மிருகங்களுக்கும் மிக்க வேறுபாடுகள் இல்லை; இறைவன் அம மிருகங்களைத் தங்கள் போக்குப்படி ஒரு சிறிது காலம் செல்ல விட்டுவிட்டது போன்று (தானி 7:3–8. 19–25), அவனுக்கும் சிறிது காலம் அதிகாரத்தை அளித்துள்ளார். ஆனால் இவ்வாறு தவறான வழியில் பயன்படுத்தப்பட்ட அதிகாரம் இறைவனின் தீர்ப்புக்குள்ளாகி, ஒரு நாள் அழிவுறும் (தானி 7:11 தொ. 26); தீய சக்திகளோடு கைகோர்த்து இயங்கிய இவ்வதிகாரம் முடிவில் அவைகளோடே அழியும்.

ஆ. இறைமக்களிடையே அதிகாரம்

மனிதன் இவ்வுலக அதிகாரத்திற்குரிய விதிகளையும் ஒழுங்குகளையும் மதியாது போனான். எனவே அவற்றை மீண்டும் அமைக்க இறை மக்கள் வரலாற்றில் ஒரு மீட்புத் திட்டத்தை ஆரம்பித்து வைக்கின்றார் இறைவன்.

இத்திட்டத்தின் மூலம், மீட்பை இலக்காகக் கொண்டு இவ்வுல அதிகாரம் புதுப்பிக்கப்படும்.

1. இரு அதிகாரங்கள்:-

தம் மக்களை நடத்திச் செல்ல, இறைவன், சிலருக்கு அதிகாரம் கொடுத்து அவர்களைத் தமது பிரதிநிதிகளாக நியமிக்கின்றார். இவர்கள் முதன்மையாக அரசியல் தலைவர்கள் அல்லர். மாறாக இஸ்ராயேலை "குருக்களின் அரசாகவும், புனித மக்களினமாகவும்" (யாத் 1:16) உருவக்கும் பணிக்காக அனுப்பப்பட்ட இறை நடுவர்கள் இவர்கள். மோசேயும், இறைவாக்கினரும், குருக்களும் பெற்ற அதிகாரம் அடைப்படையில் ஆன்மீகத் துறையைச் சார்ந்ததாகும்; இறைவன் கொடுத்த இவ்வதிகாரத்தை யாவரும் பார்க்க வெளிப்படையாக இவர்கள் பயன்படுத்தினர். இருப்பினும் இஸ்ராயேல் ஒரு தேசிய சமூகமாகவும், தனக்கென அரசியல் அமைப்புக்கள் கொண்ட ஒரு தனி நாடாகவும் திகழ்ந்தது. ஆனால் இறைவன் பெயராலேயே இங்கே எல்லா அதிகாரங்களும் செலுத்தப்படுவதால், இது ஒரு தெய்வீக அரசாகும்: இவ்வாறே மோசேயுக்கு உதவியாக தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவர்களும் (யாத் 18:21 தொ; எண் 11:24 தொ) செல்வாக்கு மிக்க யோசுவா, நீதிபதிகள் போன்றோரும், அரசர்களில் சிலரும் இறைவன் பெயரில் இஸ்ராயேலை ஆண்டு நடத்திச் சென்றனர்.

இறைவன் இஸ்ராயேலரோடு ஏற்படுத்திய உடன்படிக்கை, ஆன்மீக அதிகாரத்திற்கும் அரசியல் அதிகாரத்திற்குமிடையேயுள்ள நெருங்கிய பிணைப் பையும், இஸ்ராயேலின் தெய்வீக அழைப் பின் அடிப்படையில் அரசியல் அதிகாரம் ஆன்ம அதிகாரத்துக்கு கீழ் படுத்தப்பட்டதையும் உணர்த்துகிறது. எனினும் நடைமுறையில் இவ்விரு அதிகாரங்களுக்குமிடையே தவிர்க்க முடியாத பூசல்களுக்கு வழிகோலுகின்றது. இவ்வாறு சவுல் சாமுவேலோடும் (1 சாமு 13:7–15:15), ஆகாபு எலியாவோடும் (1 அர 21:17–24) அரசர் கள் பலர் தங்கள் காலத்து இறைவாக்கினர்களோடும் மோதிக் கொள்கின்றனர். மேலும் இறை மக்களிடையே, மற்றெங்கும் போல, இறைமக்களும் தவறான வழியில் அதிகாரத்தைக் கையாளுவதைத் தவிர்க்கவில்லை. இவ்வதிகாரம் தெய்வத் தீர்ப்புக்குள்ளாவதற்கு இதுவும் ஒரு காரணமாகும்; இஸ்ராயேல் அரசர் குலத்தின் அரசியல் அதிகாரம் நாடு கடத்தப்பட்ட நிலையில் முற்றுப்பெறும்.

2. புறவினத்தாரின் ஆட்சியின் கீழ்:-

பாபிலோனிய அடிமைத்தனத்திலிருந்து தாயகம் திரும்பியபின் யூதர்கள் செய்த சீர்திருத்தத்தில், தங்கள் சமுதாயத்தை முந்திய காலத்தைப்போல இறைவனை மையமாகக் கொண்ட ஆட்சிமுறையிலேயே அமைத்தனர். ஆனால் இப்பொழுதோ அன்னியர் தங்களை ஆள, இவர்கள் சாதாரண குடிமக்களாக வாழ்ந்தனர். இந்நிலை ஆன்மீக அதிகாரத்திற்கும்

அரசியல் அதிகாரத்திற்குமிடையே உள்ள வேறுபாட்டைக் கண்கூடாக வெளிக்காட்டியது. இப்புதிய சூழ்நிலைக்கு ஏற்றவாறு இறைமக்கள் இருவகையான நடத்தையை ஏற்றுக்கொண்டனர். அன்னியர் அதிகாரத்தை மனப்பூர்வமாக ஏற்றுக்கொள்வது முதல்வகையாகும். இதன்படி இறைவனிடமிருந்தே சைரசும் அவர் பின் வருவோரும் தங்கள் பேரரசைப் பெறுகின்றனர் என்று ஏற்றுக் கொண்டனர் (எச 45:1 தொ): தெய்வ வழிபாட்டைப் பழைய நிலைக்குக்கொண்டு வருவதற்கு இவர்கள் ஆதரவு தருவதால், யூதர்கள் இவர்களுக்கு விசுவாசமுள்ள குடிமக்களாக பணியாற்ற வேண்டும்: அவர்களின் நலனுக்காக ஆண்டவரிடம் மன்றாட வேண்டும் (எரே 29:7; பாரூ 1:10 தொ). தங்கள் எதிரிகளை இறைவன் சீக்கிரம் பழிவாங்க வேண்டும் என்று மன்றாடுவதும் இறுதியில், அன்னியர் தங்களை அதிகமாகக் கொடுமைப் படுத்தத் தொடங்கினால் கிளர்ந்தெழ வேண்டும் (யூதித்; 1 மக் 2; 15–28) என்பதும் அவர்கள் ஏற்றுக்கொண்ட இரண்டாம் போக்கு ஆகும். மக்கபேயர் காலத்தில் மீண்டும் முடியாட்சி தளிர்விட்டபோது, இருவித அதிகாரங்களுக்குமிடையே சந்தேகமான உறவு நிலவி, இறுதியில் மிகவும் தரங்கெட்டுப் போயிற்று. கி.மு. 63–ம் ஆண்டில் உரோமைப் பேரரசு தலையிட்டபோது, இறைமக்கள் தாங்கள் வெறுத்து வந்த புறவினத்தாரின் ஆட்சியிலேயே மீண்டும் தங்களையே அடிமைகளாகக் கண்டனர்.

II. புதிய ஏற்பாடு

அ. இயேசு

1. அதிகாரம் உடையவர் இயேசு:-

இயேசு தாம் போதித்து வந்த காலத்தில் ஒருதனிப்பட்ட அதிகாரத்தைப் பெற்றவராய்க் காணப்படுகிறார்: அதிகாரமுள்ளவராய்ப் போதிக்கின்றார்: (மாற் 1:22தொ) அதிகாரத்தோடு பாவங்களை மன்னிக்கின்றார் (மத் 9:6): அவரே ஓய்வு நாளுக்கும் ஆண்டவராய்த் திகழ்கின்றார் (மாற் 2:28). "எந்த அதிகாரத்தைக் கொண்டு இப்படிச் செய்கிறீர்" (மத் 21:23) என்று யூதர்கள் அடிப்படைக் கேள்வியையே எழுப்பும் வண்ணம் இறைவனால் அனுப்பப்பட்டவர்க்குரிய முழு ஆன்மீக அதிகாரம் உடையவராய் இருக்கின்றார். இயேசுவும் இக்கேள்விக்கு நேரடியான பதிலிறுப்பதில்லை (மத் 21:27 இ). ஆனால் அவர் புரியும் செயல்களே அக் கேள்விக்கான பதிலைக் காட்டுகின்றன. பிணிகள் மீதும் (மத் 8:8), காற்று, கடல் ஆகியவை மீதும் (மாற் 4:41 இ), பேய்கள் மீதும் (மத் 12: 28 இ) அவருக்கு வல்லமை உண்டு. எனவே அவருடைய அதிகாரம் அரசியில் மீதும் நீடிக்கின்றது. அலகையிடமிருந்து அவர் பெற மறுத்த இவ்வதிகாரத்தை (லூக் 4:5 தொ), உண்மையில் அவர் இறைவனிடமிருந்து முன்பே பெற்றுவிட்டார். எனினும் அவர் மனிதரிடையே இவ்வதிகாரத்தைப் பயன்படுத்தவில்லை. பிறரை அடக்கி, உலகத் தலைவர்கள், தங்கள் அதிகாரத்தை வெளிக்காட்ட விரும்பும் போது, இயேசுவோ சீடர்களிடையே பணிவிடைபுரிபவராக விளங்குகின்றார் (லூக் 22:25 தொ). அவர்தான் போதகர்: அவரேதான் ஆண்டவர் (யோவா 13, 13): ஆனால் அவர் பணி விடை புரியவும், தம் உயிரை அளிக்கவும் வந்துள்ளார் (மாற் 10: 42 தொ.இ). அவர் அடிமையின் தன்மை பூண்டதினால்தான், அனைவரும் அவர் முன் மண்டியிடுவர் (பிலி 2:5–11). எனவேதான், தம் உயர்ப் புக்குப்பின், 'விண்ணிலும் மண்ணிலும் எல்லா அதிகாரமும் எனக்கு அளிக்கப்பட்டிருக்கிறது" (மத் 28:18) என்று தன் சீடர்களுக்குக் கூறுவார்.

2. இவ்வுலகத் தலைவர்கள் முன் இயேசு:-

இவ்வுலகத் தலைவர்கள் முன்னிலையில் இயேசு நடந்துகொள்ளும் முறை மிகப் பொருளுள்ளதாய் விளங்குகின்றது. யூதத் தலைவர்கள் முன் இயேசு மனுமகன் பட்டத்திற்கும் (மத் 26:63 தொ. இ) அப்பட்டத்தோடு மறைநூல் உறுதிப்படுத்தும் அதிகாரத்திற்கும் (தானி 7:14) உரிமை கேருகிறர். அரசியல் தலைவர்கள்முன் அவர் நிலை வேறுபடுகிறது. சீசரின் தகுதியை அங்கீகரிக்கின்றார் (மத் 22:21 இ); ஆனால் அதிகாரத்தின் பெயரைச் சொல்லி நடக்கும் அட்டூழியங்களைச் சுட்டிக் காட்டத்தவறவில்லை (மத் 20:25: லூக் 3:32). பிலாத்துவின் அதிகாரம் மேலி

ருந்து அருளப்பட்டதை இயேசு அறிந்திருந்ததால், அவர்முன் நிற்கும் போது அவருடைய அதிகாரத்தைக்குறித்து அவர் விவாதிக்கவில்லை; ஆனால் நடக்கப் போகும் அநியாயத்திற்கு அவர் கருவியாக பயன்படுத்தப்படுகிறார் என்பதையே வலியுறுத்துகிறார் (யோவா 19:11): ஆனால் அதே சமயத்தில் இவ்வுலகைச் சாராத அரசின் மேல் தனக்குள்ள உரிமையை வலியுறுத்த அவர் தவறவில்லை (18:36). இவ்வாறு, ஆன்மீக அதிகாரமும் இவ்வுலக அதிகாரமும், தனித்தனி வகையில் அவரிடமிருந்தே வந்தாலும், அவர் அவைகளின் வேறுபாட்டைப் புனிதப்படுத்துகிறார், ஆசீர்வதிக்கிறார்; இவ்வுலக அதிகாரம் தற்காலிகமானதே என்றாலும் அதற்கு உரிய மதிப்பையும், இன்றியமையாமையையும் தெளிவுபடுத்துகிறார்; மகிமையில் அவர் திரும்பி வரும்வரை இந்நிலையே நீடிக்கும். இறைவனை மையமாகக்கொண்ட இஸ்ராயேல் அரசில் இவ்விரு அதிகாரங்களும் கலந்திருந்தன: திருச் சபையிலோ இவ்விதக் கலப்புக்கு இடமே இராது.

ஆ. அப்போஸ்தலர்கள்

1. இயேசுவின் அதிகாரத்தைப் பெற்றவர்கள்:-

இயேசு தமது சீடர்களை அனுப்பும் போது தமது அதிகாரத்யையும் ("உங்களுக்குச் செவிசாய்ப்பவன், எனக்குச் செவி சாய்க்கிறான்"), வல்லமையையும் (காண்: மாற் 3:14 தொ.இ; லூக் 10:19) அவர்களிடம் ஒப்படைக்கின்றார். எனினும் இவ்வதிகாரத்தைப் பணிக்காகவே பயன்படுத்த வேண்டும் என்றும் போதிக்கின்றார் (லூக் 22:26இ; யோவா 13:14 தொ). பிற்காலத்தில் அப்போஸ்தலர்கள் தங்களுக்குக் கொடுக்கப்பட்டச் சலுகைகளைப் பயன்தரும் வகையில் பயன்படுத்துகின்றனர். எடுத்துக்காட்டாக, கெட்டநடத்தையில் ஈடுபட்டுபட்டவர்களைக் கிறிஸ்துவ சமுதாயத்திலிருந்து விலக்குகின்றனர் (1 கொரி 5:4 தொ). அவர்கள் தங்கள் அதிகாரத்தைக் கொண்டு, கிறிஸ்துவுக்கும், மனிதர்களுக்கும் பணி புரிவதிலேயே கண்ணும் கருத்துமாய் இருந்தனரே அல்லாமல் மக்களை அடக்கியாள முயலவில்லை (1 தெச 2:6–10). இவ்வாறு வெளிப்படையாக அதிகாரம் பயன்பட்டாலும், இது ஆன்மீகத் துறையைச் சார்ந்ததாகும்; ஏனெனில் தாகும்: ஏனெனில் இது திருச்சபையை மட்டுமே ஆளுவதற்குப்பயன்படுத்தப்படும் அதிகாரமாகும். இவ்வாறு ஆன்மீக அதிகாரமும் இவ்வுலக அதிகாரமும் தனித்து வேறுபட்ட நிலையில் செயலாற்றுவது பழங்கால நகர ஆட்சிகளில் காண இயலா ஒரு புதுமையாகும்.

2. இவ்வுலக அதிகாரத்தைக் கையாளும் வகை:-

இவ்வுலக அதிகாரத்தின் மேன்மையையும், அதைக் கையாளுதற்குரிய முறைகளையும் பற்றிய பழைய ஏற்பாட்டுக் கொள்கைகளைப் புதிய ஏற்பாடு ஏற்றுக் கொள்கிறது. ஆனால் புதிய ஏற்பாடு இவ்வதிகாரத்தைப் புதியதொரு அடித்தளத்தில் எழுப்புகின்றது. திருச்சபை கிறிஸ்துவுக்குப் பணிந்திருப்பதுபோல் மனைவியர் தங்கள் கணவருக்குப் பணிந்திருத்தல் வேண்டும்; கணவர்களோ, கிறிஸ்து திருச்சபைக்கு அன்பு செய்தது போல் தங்கள் மனைவியருக்கு அன்பு செய்யவேண்டும் (எபே 5:22–33). பிள்ளைகள் பெற்றோர்களுக்குக் கீழ்ப்படிய வேண்டும் (கொலோ 3:20 தொ; எபே 6:1 தொ). ஏனெனில் தந்தையர் அனைவரும் அவ்வுரிமையை இறைவனிடமிருந்தே பெறுகின்றனர் (எபே 3,15); பெற்றோர்கள் பிள்ளைகளுக்கு அறிவு புகட்டி வளர்க்கும்போது எரிச்சல் மூட்டக்கூடாது (எபே 6:4; கொலோ 3:21). அடிமைகளோ, கல்மனத்தவரும் கொடூரமானவருமானத் தலைவர்களுக்குக்கூட (1 பேதுரு 2:18), கிறிஸ்துவுக்கே கீழ்ப்படிவது போல் (கொலோ 3:22; எபே 6:5...) கீழ்ப்படிந்து இருக்க வேண்டும். தலைவர்கள், தாங்களுக்கு ஒரு தலைவர் வானகத்தில் இருக்கிறார் என்பதை மனதிற்கொண்டு (எபே 6:9) அடிமைகளைத் தங்கள் அன்புமிக்க சகோதரர்களாக பாவிக்கவேண்டும் (பில 16). இத்தகைய சமூக ஒழுக்கமுறை, சமுதாயத்தில் அதிகாரத்தைச் சரியான முறையில் புரிந்து கொள்வதற்குப் பாதுகாப்பாக அமையும் என்பதில் ஐயமில்லை. ஆனாலும் இது பிறர் வாழத் தேவையான

பிறரன்புச் சேவைகளுக்கு ஓர் அடிப்படை யையும், அத்தகைய உயரிய வாழ்க்கைக்கு ஒரு குறிக்கோளையும் நமக்குத் தரு கின்றது.

3. திருச்சபையும் உலகத் தலைவர்களும்:-

இயேசுவின் அதிகாரத்தைப் பெற்ற அப்போஸ்தலர்கள் இவ்வுலக அதிகாரத் தோடு தொடர்பு கொள்ளவேண்டிய நிலையில் இருக்கின்றனர். யூதத் தலைவர் கள் மற்ற தலைவர்களைப்போல் அல்லர்; அவர்களுடைய அதிகாரமும் ஆன்மீகத் துறையைச் சார்ந்தது. அவர்களின் தலை மை பீடமோ இறைவனால் ஏற்படுத்தப் பட்டது. எனவே, கிறிஸ்துவுக்கு வெளிப் படையாக அவர்கள் தடையாக அமையாத வரை, அவர்களை அப்போஸ்தலர்கள் மிகவும் கண்ணியமாக நடத்துகின்றனர் (அ.ப. 4:9; 23:1–5). ஆனால் கிறிஸ்துவை மறுதலித்து அவர் சாவுக்குக் கையளிக் கப்பட அவர்கள் காரணமாயிருந்ததால் அவர்களின் பொறுப்பு அதிகமாகின்றது (3:12 தொ; 13:27 தொ). அதோடு நற் செய்தி போதிக்கப்படுவதைத் தடுக்கும் போது, மேலும் தங்கள் நிலையை மோசமாக்கிக் கொள்கின்றனர்: எனவே அப்போஸ்தலர் களும், மனிதர்களுக்குக் கீழ்ப்படிவதை விட கடவுளுக்கு கீழ்ப்படிவதே மேல் என்று எண்ணி (5:29) அவர்கள் கட்டளை களை நிராகரிக்கின்றனர். இவ்வாறு கிறிஸ்துவின் அதிகாரத்தை ஏற்றுக் கொள்ள மறுத்ததினால், யூதத் தலைவர் கள் தங்கள் ஆன்மீக அதிகாரத்தை இழக் கலாயினர்.

அரசியல் தலைவர்களோடு உறவு கொள்வது அப்போஸ்தலர்களுக்கு ஏற் பட்ட மற்றொரு பிரச்சனையாகும். உரோ மைப் பேரரசுக்கு பவுல் தனது முழு விசு வாசத்தை ஊரறியப் புலப்படுத்துகின் றார்; உரோமைக் குடிமகன் என்ற பட்டத் துக்கு உரிமை கொண்டாடி (16:37; 22:25...) நீதி பெற சீசரின் மன்றத்தில் வழக்காட விரும்புகிறார் (25: 12). மேலும் கடவுளிட மிருந்தே எல்லா அதிகாரமும் வரு கின்றது என்றும், பொது நலத்திற்கா கவே அரசினருக்கு அத்தகைய அதிகா ரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன என்றும் நாட்டுத்தலைவர்கள் கடவுளுக்கே பணிபுரி கிறார்கள் என்பதால் நமது மனச்சாட்சி யின்படி அவர்களுக்கு அடங்கி நடக்க வேண்டுமென்றும் அவர் குறிப்பிடுகின் றார் (உரோ 13:1–17). அரசர்களுக்காக வும், அதிகாரிகளுக்காகவும் நாம் மன்றாடவேண்டும் (1 திமோ 2:2) என்றும் உரைக்கின்றார் பவுல். பேதுருவின் முதல் மடலிலும் இதேக்கருத்துக்களைக் காண்கி றோம் (1 பேதுரு 2:13–17). நாட்டுத் தலை வர்களும் இறைவுளத்திறகுக் கட்டுப்பட்டு நடக்க வேண்டும் என்பதைச் சொல்லத் தேவையில்லை. ஆனால் திருச்சபையின் ஆன்மீகத் தலைவர்கள் அரசியலுக்கு நேரடியாக உரிமை கொண்டாடுவதை நாம் எங்கும் காண்பதில்லை.

மாறாக, அன்று சீரியப் பேரரசு யூதர் களைக் கொடுமைப்படுத்தியதைப் போன்று, இறைவனுக்கும் அவர் கிறிஸ் துவுக்கும் எதிராக நாட்டுத் தலைவர்கள் எழும் போது, கிறிஸ்துவ இறைவாக்கினர் இறைவனின் தீர்ப்பையும் அழிவையும் எடுத்துரைக்கின்றனர். இதைத்தான் நீரோ, தொமிசியன் ஆகியோரின் உரோ மைப்பேரரசுக்கு எதிராக மொழிந்தது திரு வெளிப்பாட்டுப் நூல் (திருவெளி 17:1–19:10). இறை அதிகாரத்தின் மனு உருவாகப்பாவனை செய்யும் சர்வாதி பத் தியப்பேரரசில் அரசியல்சக்தி சத்தானின் கேலிக்கூத்தாகின்றது. அதன் முன் எந்த விசுவாசியும் தலைவணங்கக் கூடாது.

**அதிகாரி**

அரசனுக்குக் கீழ், இராணுத்தில், ஆலயத்தில் பணி செய்வோர் அதிகாரிகள் என்றழைக்கப்பட்டனர். ஆனால் அதி காரியை குறிக்கக்கூடிய எபிரேய கிரேக்க வார்த்தைகள் வரையறுக்கப்படவில்லை. ஒவ்வொரு வார்த்தைக்கும் ஒரு குறிப் பிட்ட வேலையை வரையறுப்பது மிகவும் கடினமான ஒன்றாகும். அரசனுடைய செயலன், செபக் கூட்டத் தலைவன் ஆகி யோர் அதிகாரிகளே. இராணுவமானது அதனுடைய அதிகாரிகளால் கட்டுப்படுத் தப்படுகிறது. அரண்மனையிலே அரச னுக்குக் கீழ் வேலை செய்யும் அனை வரும் அதிகாரிகளாவர்.

1. பழைய ஏற்பாட்டைப் பொறுத்தவரை அதிகாரிகள் என்று சொல்லப்பட்டோர்

ஊர் தலையாரி, கண்காணிப்பாளர் ஆவர் (யாத் 5:6.14). இவர்களுடன் வழிநடத்தும் நீதித்துறையைச் சேர்ந்த முதியோரும் (எண் 11:16; உப. 16:18; 1 நாள் 23:4; 2 நாள் 19:18). சேர்க்கப்பட்டனர். இஸ்ராயேலின் குலத் தலைவர்கள் அதிகாரிகளாக (உப. 29:10; 31:28; 1 நாள் 26:29) விளங்கினர். அவர்கள் எவ்வாறு அப்பதவிக்கு தெரிந்து கொள்ளப்பட்டனர் என்பது தெளிவாகத் தெரியவில்லை.

பொதுவாக அதிகாரிகள் இளவரசர் களாகவும் அரண்மனையோடு தொடர்பு டையவர்களாகவும் (எஸ் 7:28) இராணுவத் தலைவர்களாகவும் (2 நாள் 32:3; நெக 2:9) விளங்கினர். இஸ்ராயேல் நாட்டில் அதிகாரிகள் அரசர்களால் நியமிக்கப் பட்டனர் (1 அர 4:5; 5:16; 9:23). சாலமோனு டைய அரசில் பணிபுரிந்த படைத்தலைவர் களைக் குறிக்க இச்சொல் பயன்படுத்தப் பட்டது (2 நாள் 8:10). அரசாங்க வேலை களைப் பொறுத்தவரை அவர்கள் நாட் டின் ஒரு பகுதியில் தங்கிக் காண்டு அரச னுடைய மேற்பார்வையாளராகப் பணி புரிந்தனர் (நீதி 9:28; ஏச 60:17). சில நேரங்களில் அவர்கள் அரசரால் ஒரு குறிப்பிட்ட பணிக்காக அமர்த்தப்பட்டனர் (எஸ் 2:3).

குருக்களிடமிருந்தும், லேவியர்களிட மிருந்தும் ஆலயத்தைக் கண்காணிக்கும் அலுவலர்கள் (2 நாள் 24:1; 31:13; 35:8; எரே 20:1; 29: 26) நியமிக்கப்பட்டனர். எனவே அவர்கள் ஆலயத்தின் காவலர்கள் (2 அர 11:18) என்று அழைக்கப்பட்டனர்.

2. புதிய ஏற்பாட்டில்:-

லூக் 12:58-ல் பயன்படுத்தும் 'அதிகாரி' என்ற வார்த்தைக்குப் பதிலாக இணைப் பகுதியாகிய மத் 5:25 கிரேக்கமொழி பொதுச் சொல்லாகிய சிறைக்காவலன் என்ற பதத்தைப் பயன்படுத்துகின்றது. யோவான் தலைமைக்குருக்கள், நூற்றுவத் தலைவன் அடியில் பணிபுரியும் காவல் காரர்களைக் (யோவா 7:32.45-46) குறிக்கப் பயன்படுத்துகின்றார். அதே காவலர்கள் தான் இயேசுவைத் தோட்டத்தில் பார்த் தனர் (18:13. 18.22). இயேசுவும் தமக்கும் அத்தகைய காவலர்கள் இருந்தாலும், அவர்கள் போர்புரிய மாட்டார்கள், ஏனெனில் அவருடைய அரசு இவ்வுல கைச் சார்ந்ததன்று (18:13) என்றார்.

காவலர்கள்தான் பிலாத்துவின் முன் னால் இயேசுவைக் குற்றம் சாட்டினார் கள் (19:6). அப்போஸ்தலர்களும் கூட காவ லர்களால்தான் பிடிக்கப்பட்டனர் (அ.ப. 5:22.26) பவுல் தன்னைக் கிறிஸ்துவின் பணியாளர், கண்காணிப்பாளர் (1 கொரி 4:1) என்றே எண்ணினார்.

**அதிதா** (ADIDA)

எருசலேமிலிருந்து கடற்கரைக்கு வட மேற்காகச் செல்லும் பாதையில் அமைந் திருந்த நகரமாக இருக்கலாம். யூதேயா வின் சமவெளிப் பகுதிக்குப் புறத்தே இலிதாவுக்குக் கிழக்கில் ஏழு கி.மீ அப்பால் ஓர் குன்றின் மேல் அமைந்தது. சீமோன் மக்கபேயுவாலும் பிற்காலத்தில் வெஸ்பேசியனாலும் வலுப்படுத்தப் பட்டது (1 மக் 12:38; 13:13)

**அதிதூதர்** (ARCHANGEL)

வானத் தூதர்களின் தலைவர் (1 தெச 4:16). மிக்கேலுக்கு அளிக்கப்படும் இடு பெயராகும் (யூதா 9). பாரசீகர், கிரேக்கர் காலத்தில் வானதூதர் இயல் பற்றிய ஆர்வம் உச்ச நிலையடைந்தது எனலாம். அப்போது அதிதூதர்களைத் தலைமை யாகக் கொண்ட படிமரபுடைய வான தூதர் இயல் தோன்றியது எனலாம் (தோபி 12:15). யூதப் பாரம்பரியப்படி உரி யேல், இரபேல், இரகுவேல், மிக்கேல், சாரியேல், கபிரியேல், இரெமியேல் என்ற ஏழு வானத்தூதர்கள் அதிதூதர்கள் எனக் குறிக்கப்படுகின்றனர். இவர்கள்தான் திரு வெளி 8:1-இல் சுட்டிக்காட்டப்பட்ட வான தூதர்களாக இருக்கவேண்டும். மற்ற விவரங்களுக்கு காண்க: வானதூதர்.

**அதித்தாயிம்** (ADITHAIM-இரட்டிப்பு அணிகலன்)

இது செப்பேலாவிலுள்ள யூதா குலத் தைச் சேர்ந்த சோரா-அசக்கா மாவட்டத் திலுள்ள ஒரு நகரமாகும் (யோசு 15:36). இந்த நகர் இருந்த இடம் சரியாகத் தெரியவில்லை. ஆயினும் இது அய்ய லோனுக்கு வடக்கிலுள்ள ஏல்-கதித்தே என்று அடையாளம் காட்டுவர்.

**அதிபேல்** (ADBEEL – *இறைவனின் மூச்சு)*

இசுமாயேலின் மூன்றாம் மகன். ஆகவே அராபிய இனப் பெயர் (*ஆதி 25:13; 1 நாள் 1:20*) அசீரியாவின் மூன்றாம் திகிலாத்து – பிலேசரால் தோற்கடிக்கப் பட்ட பின், எகிப்திய எல்லைப்புற காவ லாளியாக நியமிக்கப்பட்ட இதிபா–இலே யர்கள் தான் இந்த இசுமாயேல் வழிவந்த அரேபிய இனமாக இருக்கலாம். அவர் கள் வடமேற்கு அரேபியாவில் கேதார், நெபயோத்து அருகில் வாழ்ந்தவர்கள்.

**அதிமா** (ADMA – *கோட்டை, அரண்)*

பாவத்தின் விளைவாகச் சோதோம், கோமோரா செபோயிம் ஆகிய நகரங் களுடன் சேர்ந்து அழிக்கப்பட்ட சிதீம் பள்ளத்தாக்கிலுள்ள நகரங்களுள் ஒன்று (*ஆதி 19:24–29; உப 29:23*). கானானியரின் எல்லை விவரிப்பில் குறிக்கப்படுகிறது (*ஆதி 10:19*). நான்கு கீழ்த்திசை மன்னர் களால் தாக்கப்பட்ட ஐந்து நகரங்களுள் ஒன்றாகம் (*ஆதி 14:1–7*). இந்நகரின் அரசன் சினாபு, முதலில் கெதர்லா– கோமேரின் சிற்றரனாக இருந்தார் (*14:2*). இவர் ஆதி 19:24–29–இல் சோதோம், கோமோரா, செபோயீம் ஆகிய நகரங் களின் சிற்றரசர்களோடு சேர்ந்து தங்கள் அரசனுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்தார். இந்நாட்டின் அழிவிற்கு அர்த்தம் கொடுக்கப்பட்டுள்ளது. உப 29:23–ல் இந் நாடு வீழ்த்தப்பட்டது குறிப்பாக நினைவு கூறப்படுகின்றது. அதிமா, செபோயீம் ஆகிய நாடுகளின் அழிவை, ஒசேயா இறைவாக்கினர் (*11:8*) இஸ்ராயேலுக்கு ஒரு எச்சரிக்கையாகப் பயன்படுத்து கின்றார்.

அதிமா, சிதீம் பள்ளத்தாக்கில் நிறுவப் பட்டிருந்தது. சாக்கடலின் தெற்கு வளை குடாவில், இப்பொழுது கடலுக்கு அடியில் உள்ள செயில் எஸால், செயீல் ஏன் – நுமெய்ரா ஆகிய நீரோடைகளுக்கு இடையில் மேற்கு நோக்கி நீண்டு ஓடும் நீரோடையின் மேல், இப்பொழுது இது குறிக்கப்படலாம்.

**அதிமாத்தா** (ADMATHA – *வெல்லப்படாத, அடக்கி வைக்கப்படாத)*

அகசுவேரு மன்னனின் ஆட்சியில் ஏழு சிற்றரசர்களில் இவர் ஒருவர் (*எஸ்த 1:14*). இந்தச் சட்ட ஆலோசகர்கள் (*1:13*) அன் றாட ஆட்சிப் பொறுப்பில் பங்கேற்றனர். இவர்களின் ஆலோசனைப்படி அகசு வேரு வஸ்தியின் அரசிப்பட்டத்தை நீக்கி னார் (*எஸ்த 1:19*). இவர்கள் எஸ் 7:14–இல் குறிக்கப் பெறுகின்றனர்.

**அதிமின்** (ADMIN)

தாவீது மன்னர் காலத்துக்கு முந்தி வாழ்ந்த இயேசுவின் மூதாதையருள் ஒருவர் (*லூக் 3:33*).

**அதியேல்** (ADIEL – *இறைவன் எண் அணிகலன் ஆவார்)*

1.சிமியோனின் புதல்வர்களில் ஒருவர். எசக்கியாவின் ஆட்சிக் காலத்தில் இவர் கள் தங்கள் ஆடுகளுக்கு மேய்ச்சலைத் தேடிக் கெதோரின் எல்லையான பள்ளத் தாக்கின் கீழ்ப்புறம்வரை சென்று மிகச் செழிப்பான மேய்ச்சல் நிலங்களைக் கண்டுபிடித்தனர் (*1 நாள் 4:36–43*).

2. *1 நாள் 9:12* –இல் குறிப்பிடப்படும் ஓர் குரு. இவரே யக்சேராவின் மகனாவார். இவர் நெக 11:13–இல் ஆசரேல் என்று அழைக்கப்படுகிறார். இவரது மகன் மாசாய் (நெக 1:13–இல் அமசாய்) பாபிலோன் நாடுகடத்தலிலிருந்து திரும் பியவர்.

3. தாவீதால் அரண்மனைக் கருவூலங் களைக் கண்காணித்து வந்த அசிமா வேத்து என்பவரின் தந்தை (*1 நாள் 27:25*).

**அதிராம்மெலக்கு** (ADRAMMELEK *ஆதார் அரசன் ஆவார்)*

1. தேவதை:- செப்பர்வாயிம் (அநேக மாக சீரியாவிலுள்ள கமாத்துக்கு அருகி லுள்ள சபராயீம்) என்ற இடத்திலுள்ள மக்களால் அனம்மெலக்கோடு வழிபடப் பட்ட கடவுள். செப்பாவாயிம் அசீரியர் களால் கி.மு. 722–21–இல் சமாரியாவில் குடியேறப்பட்டது. மெலேக்கு என்பது செப்பர்வாயிம் என்ற இடத்தின் பெயரி டப்படாத ஒரு கடவுளின் பட்டமாக இருக் கலாம் அல்லது அத்தார் (வீனஸ் நட்சத்தி ரம்) என்ற கடவுளின் பட்டமாக இருக்க லாம் என்று கருதப்படுகின்றது. இத்தேவ தையின் வழிபாடு குழந்தைகளைப் பலி யாக எரிக்கும் வழக்கத்தையும் கொண்டி ருந்ததால் (*2 அர 17:31*) அதிராம்மெலக்கு அசீரிய அல்லது பாபிலோனியத் தேவதை

என்பதைவிட சீரியாத் தேவதை என்பது மேல். ஏனெனில் அசீரியர்களும், பாபிலோனியர்களும் இவ்வழக்கத்தைக் கொண்டிருக்கவில்லை. அதிராம்மெலக்கும் பெனிசிய அதாரும் ஒன்றே என்று கருதப்படுகிறது.

2. ஆளின் பெயர்:- 2 அர 19-37 (ஏச 37:38) இன்படி தன் சகோதரன் சரேசருடன் சேர்ந்து நிஸ்ரோக் என்ற கோவிலில் தன்னுடைய தந்தையைக் கொலை செய்தான். பின் அரராத்து நாட்டிற்குத் தப்பி ஓடி விட்டான். இந்த கொலை அசீரியா வரலாற்றில் குறிக்கப்பட்டுள்ளது. இப்பெயர் அந்ரோமாக்கேஸ் என்று யோசிபசின் நூலிலும், கிரேக்க மூலங்களில் அதிரமெலோஸ், அரிதுமுசான் என்றும் காணப்படுகிறது.

***அதிராமித்தியம்*** (ADRAMYITIUM – *தந்தையின் பெயர், ஆளின் பெயர்)*

சிறிய ஆசியாவிலுள்ள உரோமை மாகாணத்தின் வடமேற்குப் பகுதியிலுள்ள மீசியாவின் துறைமுகமாகும்.

பவுல் தமது நான்காம் பயணத்தில், ரோமைக்குச் செல்லும் கப்பலுக்கு மாறுமுன் செசாரியாவிலிருந்து இலீசியாவிலுள்ள மீராவுக்கு அதிராமித்தியக் கப்பலில் பயணம் செய்தர் (அ.ப. 27:1-6).

எரோதோத்தஸ் இவ்விடத்தின் பெயரை தன்னுடைய நூலில் குறிப்பிடுகின்றார். இது இலிதியா மக்களால் கட்டப்பட்டதென்றும், பின்பு மீசியினருக்குச் சொந்தமானதென்றும் ஸ்ட்ராபோ குறிப்பிடுகின்றார். இது ஒரு புகழ்வாய்ந்த நகரமென்றும், செனோகிலிஸ் என்ற பேச்சாளர் பிறந்த இடம் என்றும் அவர் மேலும் குறிப்பிடுகின்றார்.

தெற்கு அராபியாவிலுள்ள அத்ரமொத் என்ற இடத்திலிருந்து வந்த வணிகர்கள் முதன் முதலில் தங்களுடைய வணிகத்தலங்களை இங்கு நிறுவினர். கி.பி.1100-இல் துருக்கியரால் கொள்ளையடிக்கப்பட்டபின் இத்துறைமுகம் கைவிடப்பட்டது. இந்த இடத்தின் இன்றைய பெயர் எத்ரெமித் என்பதாகும். இது இன்னும் சிறிது உள் நாட்டில் உள்ளது.

***அதிரியா*** (ADRIA)

இத்தாலிக்கும், கிரீசுக்கும் தென்பகுதியில் கிரேத்தேக்கும், மால்தாவுக்கும் இடையில் உள்ள கடல் அத்ரியாக் கடலாகும். இது இப்போது இயோனியன் கடல் என்றழைக்கப்படுகிறது. பவுலையம் மற்ற கைதிகளையும்கொண்ட கப்பல் மால்தாவை அடையுமுன் இங்குதான் இங்குமங்கும் அலைக்கழிக்கப்பட்டது. (அ.ப. 27:27)

பவுல் காலத்தில் வாழ்ந்த யோசிப்பஸ் இதே போன்ற தன்னுடைய அனுபவத்தை கூறுகின்றார்; மேலும் அதே காலத்தில் வாழ்ந்த கோரேஸ் என்ற இலக்கிய ஆசிரியரும் இக்கடலின் கொந்தளிப்பையும், அமைதியின்மையையும், அழிவுச் செயலையும் பற்றி எழுதுகின்றார்.

***அதிரியேல்*** (ADRIEL – *என் உதவி இறைவன் ஆவர்)*

மெகாலாத்தியரான பார்சில்லாயின் மகன். சவுல் மன்னனின் மகள் மேராபுவின் கணவன் (*1 சாமு 18:19*); "மேகாலாத்தியரான அதிரியேல்" என்று அழைக்கப்பட்டார். பிற்காலத்தில், சவுலின் கொலைக் குற்றத்திற்கு விலையாக கொலை செய்யப்படுவதற்காக அதிரியேலின் புதல்வர்களைத் தாவீது கிபயோனியரின் கையில் ஒப்படைத்தார். இங்கு சில வாசகங்களில் மேராப்புக்குப் பதிலாக மீக்காள் பயன்பட்டிருக்கிறது.

***அதிலாய்*** (ADLAI – *யாவே நீதி உள்ளவர்)*

தாவீது அரசர் குலத்தின் பள்ளத்தாக்குகளில் இருந்த அரசருடைய ஆட்டு மந்தைகளைக் கண்காணித்து வந்த சாப்பாத்து என்பவருடைய தந்தை இவர் (*1 நாள் 27:29*)

***அதிலாய்*** (ATHLAI – *யாவே உயர்த்தப்பட்டவர், யாவேயால் துன்பறுத்தப்பட்டவர்)*

எஸ்ராவின் காலதில் புறவினப்பெண்களைத் தங்கள் மனைவியராகக் கொண்டிருந்தவர்களில் அதிலாயும் ஒருவராவார். எனவே இந்தப் புறவினப் பெண்களைத் தள்ளிவிடக் கோரி எஸ்ராவினால் கட்டாயப்படுத்தப்பட்டவர்களில் இவரும் ஒருவராவர் (*எஸ் 10:28*)

***அதினா*** (ADINA – அணிகலன்)

சீசாவின் மகன். தாவீதின் பலம் வாய்ந்த ஆட்களின் பட்டியலில் இடம் பெறும் தலைவன். ரூபன் குலத்தைச் சேர்ந்த தலைவன் (1 நாள் 11:42).

***அதினா*** (ADNA – இன்பம்)

1. பாகாத்து – மேவாப்பின் மகன். அயல் நாட்டுப் பெண்களைத் திருமணம் செய்துகொண்ட பின்பு அப்பெண்களை அனுப்பி விட கட்டளை பெற்ற ஓர் இஸ்ரா யேலர் (எஸ் 10:30).

2. செருபாபேலுடன் நாடு திரும்பிய ஒரு குரு (நெக 12:15). காரிம் குடும்பத்தைச் சேர்ந்தவர்.

***அதீன்*** (ADIN – சுவைமிக்க, இன்பத்தில் திளைக்கிற)

பாபிலோனில் அடிமைத்தனத்திலி ருந்து செருபாபேல் அல்லது எஸ்ராவு டன் எருசலேமிற்குத் திரும்பிய ஒரு சில யூதர்களின் தந்தையும் மூதாதையுமாவார் (எஸ் 2:15; 8:6; நெக 7:20; 10:16).

***அதும்மிம்*** (ADUMMIM – சிவப்புப் பாறை)

யோர்தான் பள்ளத்தாக்கிலிருந்து மலைதேசத்திற்குச் செல்லும் ஒரு கண வாய். தொன்று தொட்டு எரிகோவி லிருந்து எருசலேமிற்குச்செல்லும் வணி கர்கள் இந்தக் கணவாயைப் பயன்படுத் தினர். எல்லாக் காலங்களிலும், இன்றும் கூட, இந்த கணவாய் இந்த இரண்டு நகரங்களுக்கு இடையில் செல்லும் வழி யைச் சேர்ந்ததாகத் தோன்றுகிறது. இது யூதாவின் வடக்கு எல்லையாக இருந்தது (யோசு 15:7); பென்யாமின் பகுதியின் தெற்கு எல்லையில் உள்ள சூரிய நீரூற்று எனப்படும் ஏன்–செமசுவைக்குறிக்க இது உதவுகிறது (18:17). இன்று எருசலேமி லிருந்து எரிகோவிற்குச் செல்லும் வழியில் இங்கு தான் "நல்ல சமாரியன் விடுதி" குறிக்கப் படுகிறது (லூக் 10:34–35). இங்கு நிலமெல் லாம் மிகவும் சிவப்பாக உள்ளது. ஆகவே "இரத்தின் ஏற்றம்" என்று பொருள்படும் தலாத்–எத்–தம் என்று இப்போது அழைக் கப்படுகிறது.

***அதுல்லாம்*** (ADULLAM – பின்வாங்குதல், அடைக்கலம்)

யூதா நாட்டைச் சேர்ந்த ஒரு நகரம் (யோசு 15:35); செப்பேலாவிலுள்ள ஒரு கானானிய நகரம் (12:15). யாக்கோபின் மகனான யூதா, அதுல்லாம் நகரப் பெண்ணை மணந்து கொண்டதும், அதைத் தொடர்ந்து அங்கு அவனுடைய நடவடிக்கைகளும் ஆதி 38:1. 12–20–இல் கொடுக்கப்பட்டுள்ளன. இங்குதான் இந்தப் பெயர் விவிலியத்தில் முதல் முதலாக வருகின்றது.

இஸ்ராயேல் கானான் நாட்டில் குடி யேறிய பொழுது யோசுவால் தோற்கடிக் கப்பட்ட முப்பத்தொரு கானானிய அரசர் களுள் அதுல்லாம் நாட்டின் அரசனும் ஒருவர் (யோசு 12:15). இது யூதா கோத்தி ரத்திற்காகக் குறிக்கப்பட்டு செப்பேலா விலுள்ள சோரா–அசக்கா மாவட்டத்தைச் சேர்ந்த நகரங்களில் ஒன்று (15:35).

தாவீது, சவுல் மதன்னருக்குப் பயந்து ஓடிச்சென்று இந்த இடத்திற்கு அருகிலி ருந்த ஒரு குகையில் தங்கினார். இங்கு இவருடைய குடும்பமும், இவரைப் பின் பற்றியவர்களும் வந்து சேர்ந்து கொண்ட னர் (1 சாமு 22:1–2). சிறிது காலத்திற்கு இந்தக் குகை தாவீதின் தலைமைச் செயல கமாக இருந்தது (2 சாமு 23:13 தொ; 1 நாள் 11:15 தொ).

பெலிஸ்தியருடன் சண்டை போட்ட பொழுதும் தாவீது இங்குதான் தங்கி னார். இவ்வாறு தங்கியிருந்த பொழுது தாவீதின் வீரர்கள் பெத்லெகேமிலிருந்து குடிக்கத் தண்ணீர் கொண்டு வந்தனர் (2 சாமு 23:11; 1 நாள் 11:15). சீசாக்கு யூதா வின் மேல் படையெடுக்கும் முன் இரக பெயாமால் இதன் கோட்டை மதில்கள் கட்டப்பட்டன (2 நாள் 11:7; கி.மு. 918).

மேற்கு, தெற்கிலிருந்து ஏற்படும் படை யெடுப்பைத் தடுக்க ஒரே வரிசையாய் கட்டப்பட்டுள்ள கோட்டை நகரங்களுள் இதுவும் ஒன்று.

கி.மு. 710 சனகெரிபு படையெடுத்து கைப்பற்றிய 46 கோட்டை நகரங்களுள் இதுவும் ஒன்றாக இருந்திருக்கலாம் (2 அர 18:13 தொ; 2 நாள் 32:1 தொ). செப் லோவிலுள்ள நகரங்களின் மேல் நடக்க விருந்த இந்த படையெடுப்பை எதிர் பார்த்து மீக்கா இறைவாக்கினர் புலம்பி னார். கி.மு. 711–இல் இரண்டாம் சார்

கோன் எடுத்த படையெடுப்பைக் குறித்தும் இருக்கலாம். எப்படியிருப்பினும் யூதா வின் நகரங்கள் இந்த படையெடுப்பிலி ருந்து தப்பின (மீக் 1:8–16; குறிப்பாக 1:15).

பாபிலோனியாவிலிருந்து நாடு திரும் பிய மக்கள் மீண்டும் குடியேறிய நகரங் களுள் இதுவும் ஒன்று (நெக 11:30). யூதா மக்கபேயு 164–இல் இதுமேய படையெடுப் பின் பொழுது நான்காம் அந்தியோக்கு எப்பிபானின் படைத்தளபதிகளுள் ஒருவ ரான கோர்க்கியாவைத் தோற்கடித்த பின்பு அதுல்லாமில் சென்று ஓய்வெடுத் தார் (2 மக் 12:38 தொ; 1 மக் 5:55 தொ).

இந்த இடம் இப்பொழுது செப்பேலா விலுள்ள பேய்த்–சிப்ரின்னுக்கு கிழக்கு வடக்கிழக்கில் 14 கி.மீ. தொலைவில் உள்ள எஸ் தேல்–செயீக்–மத்கூர் என்ற இடத்தில் குறிக்கப்படுகிறது.

**அதுவேல்** (ADUEL)

நப்தலி குலத்தைச் சேர்ந்த அசியேலின் வழிவந்தவர்களின் பட்டியலில் வரும் தோபியா என்பவரின் மூதாதையாவார் (தோபி 1:1).

**அதுனா** (ADNAH – இன்பம்).

1. யோசபாத்து ஆட்சிக் காலத்தில் யூதா கோத்திரத்தைச் சேர்ந்த ஒரு படைத்தலைவன் (2 நாள் 17:14).

2. சவுல்அரசரைக் கைவிட்டு, சிக்கிலா துவில் தாவீதின் படையில் சேர்ந்த மனாசே குலத்தவர் (1 நாள் 12:29).

**அதோராம்** (HADORAM – அதாத் உயர்த்தப்பட்டார்)

1. கமாத்தின் அரசன் தோகு என்பவ ரின் மகன் (1 நாள் 18:10). தாவீது அதா தெசர் மேல் கொண்ட வெற்றிக்குப் பாராட்ட அவரது தந்தையால் அனுப்பப் பட்டவர். 2 சாமு 8:10–ல் இவர் தோயின் மகன் யோராம் என்று குறிப்பிடப்படு கிறார். இது அதோராம் என்று திருத்தப் பட வேண்டும்.

2. யொக்கிதானின் தலைமகன் என்ற ழைக்கப்பட்ட அதோராம் ஒரு அராபிய இனத்தின் குல முதியவர் ஆவார் (ஆதி 10:27; 1 நாள் 1:21).

3. அரசன் இரகபெயாமின் ஓர் அதி காரி. கட்டாய உழைப்பை மேற்பார்ப்பவ ராக இருந்தார். அரசன் அதோராமை இஸ்ராயேலர்களிடம் கப்பம் வசூலிப்பதற் காக அனுப்பி வைத்தார். அவரை மக்கள் கல்லால் எறிந்து கொன்று போட்டனர். இவர் 1 அர 4:6–ல் அதோனிராம் என்றும் 12:18–இல் அதோராம் என்றும் அழைக்கப் படுகிறார். அதோராம், அதோனிராம் என்பதின் சுருக்கமாகும்.

**அதோராயிம்** (ADORAIM – இரு குன்றுகள், இரு போர் அடிக்கும் இடங்கள்)

இது யூதா குலத்தைச் சேர்ந்த ஒரு நகரம்; இரகபெயாமாவினால் கோட்டை மதில்கள் பலப்படுத்தப்பட்ட நகரங்களில் இதுவும் ஒன்று (922–915 கி.மு.; 2 நாள் 11:9). இந்நகரம் கெபிரோனுக்கு 8 கி.மீ. தொலைவிலுள்ள மேற்கு, தென்மேற்குத் திசையில் உள்ள இன்றைய தூரா என்று கருதப்படுகிறது. இந்நகரம் பிற்காலத்தில் அதோரா என்றழைக்கப்பட்டது (1 மக் 13:20). அதோராவும், மரிசாவும் இது மேயா நாட்டின் இரண்டு பெரிய நகரங் களாகும். கி.மு. 142–இல் சீமோன் மக்க பேயு திரிபோ முன்னேறுவதை அதோரா வில் தடுத்தார் (1 மக் 13:20–21). கி.மு. 129–ல் ஏழாம் அந்தியோக்கு மரணத் திற்குப்பின் யோவான் இரிக்கானு என்ப வர் அதோராவைக் கைப்பற்றினார். ஏறக்குறைய கி.மு. 79–இல் அலக்சாந்தர் யன்னாயு காலத்திலும் இந்கரம் யூதர் களின் கையில் இருந்தது.

கி.மு. 59–ஆம் ஆண்டில் சீரியாவின் ஆளுநரான கபினியு அதோராயிமைத் திரும்பவும் கட்டியெழுப்ப ஆணையிட் டார். அதைத்தன்னுடைய ஐந்து மாவட்டங் களில் ஒன்றில் ஆட்சி மையமாக்கினார்.

**அதோனாய்** (ADONAI – என் ஆண்டவர்)

இது மதிப்பையும், மாட்சிமையையும் உணர்த்தக்கூடிய இறைவனது பெயர் களில் ஒன்று. பொதுவாக, இப்பெயர் "ஆண்டவர்", "என் ஆண்டவர்" என்று மொழிபெயர்க்கப்படும். இஸ்ராயேல் மக்கள் பாபிலோனிய அடிமைத்தனத்தி னின்று திரும்பியபின், இறைவனது உச்ச ரிக்கப்படக்கூடாத பெயராகிய யாவேக்குப் பதிலாக இப்பெயரைப் பயன்படுத்தினர். மாசோரேடிக் வாசகத்தைத் தயாரித்த வர்கள் இப்பெயரின் உயிரெழுத்துக்களை

யும், யாவே என்ற பெயரின் மெய் எழுத்துக்களையும் சேர்த்து எழுதி, அதோனோய் என்று உச்சரிக்கப்பட வேண்டும் என்ற மரபை உண்டாக்கினார். சில கிறிஸ்துவப் பிரிவினை சபைகளைச் சேர்த்த மொழி பெயர்ப்பாளர்கள் இந்தக் கலப்புச் சொல்லை எகோவா என்று உச்சரித்தனர்.

**அதோனிக்காம்** (ADONIKAM – என் *ஆண்டவர் எழுந்துவிட்டார்)*

பாபிலோனியாவிற்கு நாடு கடத்தப்பட்ட குடும்பங்களிலிருந்து நாடு (எருசலேம்) திரும்பிய குருக்களில், ஒரு குடும்பத் தலைவர் (எஸ் *2:13; 8:13;* நெக *7:18*). இவரும் நெக *10:16*–இல் வரும் அதோனியாவும் ஒரே ஆளைக் குறிக்கலாம்,

**அதோனி–சதேக்கு** (ADONI-ZEDEK – என் *ஆண்டவர் நேர்மையானவர், சதேக் என் ஆண்டவர்)*

யோசுவாவால் கிபயோனில் நடைபெற்ற போரில் தோற்கடிக்கப்பட்ட எருசலேமின் அரசன் (யோசு *10:1.3*). அனேகமாக இவரும் அதோனி– பெசக்கும் ஒரே ஆளாக இருக்கலாம். எருசலேமிற்கு தெற்கேயும், மேற்கேயும் இருந்து கூட்டுச் சேர்ந்த ஐந்து எமோரிய நாடுகளின் அரசர்களுக்குத் தலைவர். இஸ்ராயேல் மக்களின் தாக்கு தலைச் சமாளிக்க முடியாத கிபயோன் நகர் யோசுவாவோடு உடன்படிக்கைச் செய்துகொண்டது. இது அதோனி சதேக்கையும் அவருடைய ஆட்சியையும், பாதித்தது; ஆகவே அவர்கள் அந் நகரைத் தண்டிக்கச் சென்றனர் (*10:1–5*). ஆனால் யோசுவா இரவோடு இரவாக கிபயோனின் உதவிக்குச் சென்றார்; பனிக்கட்டி மழையினால் தாக்கப்பட்டு, கூட்டுச் சேர்ந்த நாடுகள் தோல்வியுற்று, மேற்கு கடற்கரையை நோக்கிச் செல்லும் தாழ் வான வழியில் தப்பி ஓடினர் (*10:12*). ஐந்து எமோரிய அரசர்களும் அவர்கள் தங்கியிருந்த மக்கேதா குகையில் கைது செய்யப்பட்டு கொல்லப்பட்டனர். அவர்களுடைய உடல்கள் சூரியன் மறையும் வரை மரங்களில் தொங்கவிடப்பட்டு பின்பு அதேகுகையில் போடப்பட்டு பெரிய கற்களால் மூடப்பட்டு முத்திரை செய்யப் பட்டன (*10:6–27*).

**அதோனிசு** (ADONIS – *ஆண்டவர்)*

சீரிய நாட்டுத் தாவரத் கடவுள். பாபிலோனின் தாமுஸ் என்று வணங்கப் பட்டது. இது வேனிற்கால வெப்பத்தில் மரித்து, கீழுலகிற்குள் இறங்கி, வசந்த காலத்தில் மீண்டும் உயிர்பெற்று இயற்கைக்கு மீண்டும் உயிர் அளித்ததாக நம்பப்படுகிறது. குறிப்பாக பெய்ரூட்டுக்கு அருகிலுள்ள அதோனிஸ் ஆற்றங்கரையில் (இக்கால நகர் இப்ராயீம்) பெனிசிய நாட்டுப்பெண்கள் இக்கடவுளின் மரணத்தை நினைத்து அழுதார்கள். பிளேடோ, "அதோனிஸ் தோட்டங்கள்" என்று குறிப்பிடுவதால், இந்த வழிபாடு கிரேக்கருக்கும் தெரிந்திருந்தது. இத்தேவதையின் மரணத்தையும் உயிர்ப்பையும் அடையாளமாகக் காட்டும் தோட்டங்கள் வீட்டின் கூரைகளில் நடப்பட்டன. இத்தோடங்களைச் சரியாகக் கவனித்து வருவது, இறப்பு அழிவுக்குப்பின் இயற்கைக்கு உதவியதாகவும், தாவர வளர்ச்சியை ஊக்குவித்ததாகவும் கருதப்பட்டது. இத் தோட்டங்களிலிருந்து பெற்ற மூலிகைகளை, அழல் வெள்ளி மேலெழும் 7 நாட்களில் செய்யும் மந்திர வழிபாட்டில் பயன்படுத்தினர். தானி *11:37*–இல் இத் தேவதை சுட்டப்படலாம். எச *8:14* இத் தேவதையைக் குறித்தல் தேவதையின் வழிபாடு யூதாவிற்குள்ளும் புகுந்து, குறிப்பாக பெண்களிடையே பிரபல்யமாய் இருந்தது என்று தோன்றுகிறது. ஏச *17:10*–இல் இந்த வழிபாடு, "கண்ணுக்கினிய நாற்றுகளை" என்ற பதத்தின்மூலம் குறிப்பிடப் பட்டுள்ளது எனலாம்; இங்கு 'அதோனிஸ்' 'இனிய' என்ற பொருளுடன் பயன்படுத்தப் பட்டுள்ளது.

**அதோனிபெசக்கு** (ADONI BEZEK– *போசேக்கின் தலைவன், போசக்கின் அரசன்)*

இவர் தென் பாலஸ்தீனத்திலுள்ள பெசக்கின் கானானிய அரசர். யூதாவின் படையால் தோற்கடிக்கப்பட்டார். இவர் தன்னுடைய போர் கைதிகளான மற்ற 70 அரசர்களுக்குச் செய்தது போலவே, இவருடைய கைகால், பெருவிரல்கள் வெட்டப்பட்டன (நீதி *1:5–7*). பின்பு, இவருடைய ஆட்களாலேயே எருசலேமிற்குக் கொண்டு செல்லப்பட்டதாகக் கருதப்படுகிறது. அங்கே இவர் காலமானார்.

அதொனிபெசக்கும், இஸ்ராயேலர் கானான் நாட்டைக் கைப்பற்றிய பொழுது எருசலேமின் அரசனாக இருந்த அதோனிசதேக்கும் ஒரே ஆள் என கருதப் படுகின்றனர் (யோசு 10:1–3). அதோனி சதேக்கு என்ற பெயரில் பிற்பகுதியாக இருக்கும் சதேக்கு ஒரு இறை பெயராகும். பெசக்கு அப்படிப்பட்டதன்று.

**அதோனியா** (ADONIJAH – யாவே என் ஆண்டவர்)

*1.* கெபிரோனில் தாவீதுக்குப் பிறந்த நான்காம் மகன். இவரது தாய் காகித்து ஆவாள் (2 சாமு 3:4; 1 நாள் 3:2). அரசர்கள் நூலின் தொடக்க அதிகாரங்களில், தாவீது அரசரின் கடைசி உடல் நலக் குறைவின் போது, இவர் தாவீதுக்கு அடுத்து சிம்மாசனம் ஏறுவதற்குச் செய்த முயற்சியை விவரிக்கின்றன. அதுவே இவருக்கு அழிவாக முடிந்தது. இவருக்கு மூத்தவர்களான அம்மோன், அபிச லோம், கிலயாபு ஆகியோர் இறந்து விட்ட தனால் (1 அர 2:22), அடுத்தவராகிய இவர் அரசு பதவிக்கு வர எதிர்பார்த்த தில் தவறு இல்லை. ஆனால் தாவீது இதை உற்சாகப்படுத்தவில்லை (1:6). இது வரை இஸ்ராயேலில் அரசன் ஆவதற் கான நிலையான சட்டம் ஒன்று செயல் பாட்டில் இல்லை. அரசனால் நியமிக்கப் பட்டு இஸ்ராயேலின் எல்லாக் குலத்தவர் களாலும், கோத்திரங்களாலும் ஏற்றுக் கொள்ளப்பட்டவர்தான் அரசராகலாம். அதோனியாவுக்கு ஒத்துழைத்தவர்களில் யோவாபு, அபியத்தார் என்ற இருவர் இருந்தனர் (1:7). சாலமோனுக்குப் பிர மாணிக்கமானவர்களைத் தவிர, அதோ னியா தான் அரசராவதைக் கொண்டாடத் தன்னுடன் ஒத்துழைத்த அனைவரையும் ஒரு விருந்திற்கு அழைத்தார். அப்போது தான் உண்மையிலேயே அடுத்துச் சிம்மா சனம் ஏறப்போவதாக நம்பினார். இதைக் கேள்வியுற்ற நாத்தான் அதோனியா சிம்மாசனம் ஏறினால் தங்களுடைய உயிர் களுக்கு ஆபத்து என்று சாலமோனின் தாயான பதுசேபாவை எச்சரித்தார். பின்பு பதுசேபா தாவீதிடம் முறையிட தாவீது சாலமோனைக் கீகோனில் அரச னாக முடிசூட்டச் செய்தார் (1 அர 1:11–40). அதோனியாவின் காலந்தவறிய கொண்டாட்டங்கள் அரைகுறையாய் முடித்தன. பாதுகாப்பிற்காகப் பீடத்திற்கு ஓடினார் ( 1 அர 1:50). ஆனால் சாலோ மோன் அவரை அவருடைய வீட்டிலேயே அடைத்து வைத்து அவருக்கு உயிர்பிச்சை கொடுத்தார் (1:50–53). தாவீது அரசரின் மரணத்திறகுப் பின்பு, தாவீது கடைசி உடல் நலக் குறைவின் பொழுது அவரைக் கவனித்துக் கொண்டு வந்த அபிசாகு என்ற அழகிய பெண்ணைத் தனக்குக் கொடுக்கும்படி சாலமானிடம் மன்றாடும் படி பது சேபாவிடம் கேட்டார். இது அரசுரிமையைப்பங்கப்படுத்துவதாக சால மோன் கருதி அதோனியாவை கொலை செய்ய பெனாயாவைக் கட்டளையிட்டார் (1 அர 2:13–25).

*2.* யோசபாத்து ஆட்சியின் மூன்றாம் ஆண்டில், யூதா கோத்திர நகரங்களில் நாட்டுத் தலைவர்களுடனும், குருக்களுட னும் சேர்ந்து மக்களுக்குச் சட்டத்தைப் போதித்த லேவி கோத்திரத்தைச் சேர்ந்த ஒருவர் (2 நாள் 17:8).

3. எஸ்ரா காலத்தில், உடன்படிக்கைச் சீர்திருத்தத்தில் கையொப்பமிட்ட மக்க ளின் தலைவர்களுள் ஒருவர் (நெக 10:16). இவரும் எஸ் 2:13–இல் குறிக்கப்படும் அதோனிக்காமும் ஒரே ஆளாக இருக்க லாம்.

**அதோனிராம்** (ADONIRAM – என் ஆண்டவர் உயர்த்தப்படுகிறார்).

இவர் அபுதாவின் மகன், தாவீது, சாலமோன், இரகபெயாம் ஆகியோரின் ஆட்சிக்காலத்தில் உயர்ந்த பதவி வகித்து, "கட்டாய உழைப்பு" பகுதிக்குப் பொறுப் பாய் இருந்து நீண்ட காலமாக சேவை செயதவர் (2 சாமு 20:24; 1 அர 4:6; 12:18). இஸ்ராயேல் மக்களிலிருந்து சாலமோன் ஒன்று சேர்த்த 30,000 உழைப்பாளர் களுக்கு மேற்பார்வையாளராக இருந்த வர்; இவர்கள் சாலமோனின் கட்டிட வேலைகளுக்குத் தேவையான பொருட் களைச் சேகரிக்கும்படி லெபானோனுக்கு ஒவ்வொரு மாதமும் பத்தாயிரம் பத்தா யிரம் பேராக அனுப்பப்பட்டனர் (1 அர 5:13–14). இரகபெயாம் தன்னுடைய கொடிய திட்டங்களின் மூலம் வடக்குப்

பகுதி கோத்திரங்களை எதிரிகளாக்கிக் கொண்டபொழுது, அவர்களின் மேல் கட்டாய உழைப்பை உடனடியாக புகுத்தும்படி அதோனிராமை அனுப்பி வைத்தார். ஆனால், அவர்களால் கல்லால் எறிந்து கொல்லப்பட்டார் (1 அரச 12:18; 2 நாள் 10:18).

**அதோன்** (ADDON) – காண்க: அதான்

**அத்தனோபி** (ATHENOBIUS)

அத்தனோபி ஏழாவது அந்தியோக்கு சிதேதெஸ் மன்னனின் அவையிலுள்ளவர்களில் ஒருவராவார். அந்தியோக்கு மன்னன் இவரைத் தனது பிரதிநிதியாக யூத மக்களின் தலைமைக்குருவான சீமோனிடம் அனுப்பி வைத்தார் (1 மக் 15:32–36).

**அத்தரா** (ATARAH – பொன்முடி, தோரணம்)

எரகுமேலின் இரண்டாம் மனைவி. இவள் ஓனாம் என்பவரின் தாய் (1 நாள் 2:26).

**அத்தரோத்து** (ATAROTH–பொன்முடி, தோரணம்)

1. யோர்தானுககு அப்பாலுள்ள காத்திலுள்ளது அத்தரோத்து (எண் 32:3 3.34). ரூபன், காது ஆகிய குலத்தைச் சேர்ந்தவர்கள் தங்கள் உடமையாகக் கேட்ட நகரங்களில் இதுவும் ஒன்று (எண் 2:3) ஆனால் காதிற்குக் கொடுக்கப் பட்டது. அவர் இதைப் பாதுகாப்பான அரணாக்கினார் (32:34). தீபோனுக்கு வடக்கே ஏறக்குறைய 13 கி.மீ. தொலைவிலும், சாக்கடலுக்குக் கிழக்கே 16 கி.மீ. தொலைவிலும் உள்ள கிர்பெத் அத்தாரசு என்ற இடமும் இதுவும் ஒன்று என்று கருதப் படுகிறது. மேசா குறிப்புக்களில் இப் பெயர் சேர்க்கப்பட்டுள்ளது. "இஸ்ராயேல் அரசன் தங்களுக்குக் கட்டிக் கொடுத்த அத்தரோத்தில் காது குலத்தவர் எப்பொழுதும் தங்கினர்".

2. எப்பிராயிமிற்கும் பென்யாமினுக்கும் இடையிலுள்ள எப்பிராயிமின் கிழக்கு எல்லையில் இருந்த எல்லை நகரங்களில் ஒன்று (யோசு 16:7). மலைப்பகுதியான பாலஸ்தீனத்திறகு வாடி–எல்–பாரா வழியாகவும் யோர்தானுக்கு அப்பால் வாடி செராக் (யப்போக் ஆறு) செல்கின்ற முக்கிய சாலையிலும் இருக்கும் முக்கிய மண் குற்றான தேல்–ஏல்–மாசார் இது இருந்த இடம் என்று கருதப்படுகிறது. வேறு சிலர் தேல் செயிக் எத்–தியாப் ஆக இருக்கலாம் என்று கருதுகின்றனர்.

3. யோசு 16:2–இல் குறிக்கப்படும் ஒரு நகரம். இதுவும் அத்தரோத்து–அத்தார் என்பதும் ஒரே இடத்தைக் குறிக்கலாம்.

**அத்தரோத்து–அத்தார்** (ATAROTH-ADDAR–மகிமை மிக்க முடி)

எப்பிராயீம், பென்யாமின் ஆகியவற்றுக்கும் இடைப்பட்ட எல்லையிலுள்ள ஒரு நகரம். எப்பிராயிமின் தெற்கு எல்லைக் குறிப்புகளும் (யோசு 16:1–3). பென்யாமின் எல்லைக்குறிப்புகளும் (யோசு. 18:12–13) ஒன்றாக உள்ளன. ஆகவே இரண்டு எல்லைக் குறிப்புகளும் ஒரு மூலத்தைச் சேர்ந்தவை. தேல்–ஏன்–நாஸ்பே குன்றின் அடிவாரத்தில் கிர்பெத்–அத்தாரா என்ற ஊர் உள்ளது. ஆனால் உரோமையர் காலத்திறகு முந்திய பொருட்கள் ஒன்றும் இங்கு காணப்படவில்லை. இந்த இடத்தில் அத்தரோத்து–அத்தாரும், குன்றின் மேல் ஒரு நகரமும் இவ்வளவு நெருங்கி இருக்க வாய்ப்பு இல்லை. ஆசா கோட்டைகள் கட்டிய காலத்தில் மிஸ்பா என்று மாற்றப்பட்ட பழைய பெயர்தான் அத்தரோத்து. அத்தார் என்று சிலர் கூறுகின்றார்கள் (1 அர 15:16–22). இது உண்மையாக இருக்க வாய்ப்பு உண்டு. இது தேல்–ஏன்–நாஸ் பேவுக்கு தெற்கில் பெத்தேலிலிருந்து எருசலேமுக்குச் செல்லும் சாலையிலுள்ளது. வேறுசிலர் தேல்–ஏன்–நாஸ்பே தான் இவ்வூர் என்பர்.

**அத்தரோத்து–சோபான்–**
(ATAROTH-SHOPHAN – சோபானின் முடிவு)

சீகோன் நாட்டிலிருந்து வெல்லப்பட்ட அல்லது கைப்பற்றப்பட்ட பகுதிகளில் காது குலத்தவரால் கட்டப்பட்ட அரணுள்ள நகரம் சோப்பான் நகரமாகும் (எண் 32:35). இப்பெயரானது அத்தரோத்து என்றழைக்கப்படுகின்ற மிகப் பெரிய நகரத்தின் பெயரிலிருந்து எடுக்கப்பட்டது போல் தோன்றுகிறது. அத்தரோத்துக்கு வடகிழக்கே 3 கி.மீ. தொலை

விலுள்ள மிக உயரமான குன்றில் அமைந்துள்ள ருசும் இ அதாரஸ் பகுதியானது அநேகமாக சோபான் நகராக இருக்கலாம் என்றும் அத்தரோத்துக்குப் பாதுகாவலாகவும் அமைக்கப்பட்டிருந்தது என்றும் கருதப்படுகிறது.

**அத்தரோத்–பேத்து–யோவாபு**
(ATAROTH-BETH-JOAB – யோவாப் வீட்டின் முடிகள், யோவாப்பின் வீட்டின் ஆட்டுக்கிடை)

அத்தரோத் – பேத்து – யோவாபு பெத்திலகேமுக்கு அருகிலுள்ள கிராமம் (1 நாள் 25:4). யூதாவின் தலைமுறை அட்டவணையில் யூதா குலத்தில் வழி வந்தவர்களில் ஒரு குழுவினராக அத்தரோத்து–பேத்து–யோவாபு நகர மக்கள் கருதப்படுகின்றனர். இந்நகர் இருந்த இடம் தெரியவில்லை.

**அத்தர்காத்தி** (ATARGATIS – திறப்பு)

அரமேயருடைய பெரிய பெண் தேவதை. இவள் அதாதுவின் மனைவி. கிரேக்கர்களாலும், உரோமையராலும் இவள் அடிக்கடி "சீரியவின் தேவதை" என்று அழைக்கப்படுகின்றாள். இவளுடைய பெயர் இரண்டு பெயர்களின் சேர்ப்பாகும். 'அதார்', 'அதே' அல்லது 'அத்தா என்ற முதல்பகுதி இசிதார், அசித்தார்த்தீ, அசித்தரேத் ஆகியோரைக் குறித்தது. இரண்டாவது பகுதி யாருக்கும் தெரியாத ஒரு ஆண் தேவதையின் பெயர். சில சமயங்களில் இந்த ஆண் தேவதையானது "அத்திஸ்" என்பவராக இருக்லாம் எனச் சொல்லப்படுகிறது. முதன் முதலில் சிறிய ஆசியாவில் இவள் ஒரு தாய்தேவதையாவாள். சிபேலேவிற்கு இருந்தது போல் இவளுக்கும் விதை எடுக்கப்பட்ட குருக்கள் இருந்தனர். இவளுடைய அரியணை சிங்கத்தின் மேல் கட்டப்பட்டிருந்தது. ஆனால் சீரியர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட பிறகு, இவள் பாபிலோனியாவைச் சேர்ந்த 'இசிதர்' தேவதையின் பல பண்புகளைப் பெற்றாள். பெனிசிய அசித்தார்த்தீ அல்லது அசித்தரேத்தின் பண்புகளுக்கு இணையானவை இவளுக்குச் சாற்றிக் கூறப்படுகின்றன. பெரும்பாலும் கையில் கதிர்களைக் கொண்டிருப்பதாக வரையப்படுகிறாள். சீரியாவிலுள்ள அலெப்போவுக்கு வடகிழக்கிலுள்ள கியெராப்போல் இவளுடைய வழிபாட்டின் மையமாக இருந்தது. ஆனால் மேற்காசியாவில், அவளுக்குப் பலஇடங்களில் கோவில்கள் இருந்தன. கிரேக்கநாட்டிற்கும், ஏன் பிரிட்டன் வரைக்கும், இவள் வழிபாடு சென்றது. கிலயாத்தில் கர்னாயீம் என்ற இடத்தில் இருந்த இவள் கோவில் 2 மக் 12:25–இல் (காண்க: 1 மக் 5:43–44) குறிப்பிடப்பட்டுள்ளது. இங்கு பாதுகாப்பிற்காக ஓடிவந்த அவ்விட குடிமக்களில் 25,000 பேரை யூதா மக்கபேயு கொன்றார்.

**அத்தலியா** (ATTALIA)

அத்தலியா என்பது உரோமையரின் பம்பிலியா என்ற மாநிலத்தில் சிறிய ஆசியாவின் தென்மேற்குக் கடற்கரைப் பகுதியிலுள்ள ஒரு துறைமுகநகரமாகும். பெர்காவிற்கு தெற்கில் 13 கி.மீ. தொலைவில் உள்ளது. அத்தலிய நகரானது பெர்கமோன் நாட்டை ஆட்சி செய்த இரண்டாம் அத்தலூசால் (159–138 கி.மு.) தோற்றுவிக்கப்பட்டு, அவரது பெயராலேயே "அத்தலியா" என்று வழங்கப்பட்டன. கத்தார்கத்தேசின் வாயிலில் அமைந்துள்ள இது, இப்பகுதியில் ஒரு முக்கியமான வியாபார மையமாகும். இது பம்பிலியாவிற்கு மேற்கே சிறிய ஆசியா கடற்கரையிலிருந்து வெளிச்செல்லக்கூடிய முக்கிய வழியாகும். அத்தலியா என்று பெயரிடப்பட்ட நகரமும், துறைமுகமும் அப்போஸ்தலர் பணியில் குறிப்பிடப்பட்டுள்ளது (அ.ப.14:25). பவுல் தனது முதல் வேத போதகப் பயணத்தின் முடிவில், பெர்கமோனிலிருந்து வந்து இங்குச் சிறிது காலம் தங்கியபின் சீரியாவைச் சேர்ந்த அந்தியோக்கியாவுக்குக் கப்பல் ஏறினார் (14:25).

இன்றும் அந்தலியா என்றழைக்கப்படும் அத்தலியா சிறப்புமிக்க வகையில் வளர்ந்து அல்லது முன்னேறி வருகிறது. இத்துறை முகமானது இதன் வியக்கத்தக்க பழம் பெரும் அமைப்பினைப் பாதுகாத்து வருகிறது. கிரேக்கர் காலத்தைச் சேர்ந்த பாதுகாப்பு அரண்களின் எஞ்சிய பகுதிகள் இன்றும் காணப்படுகின்றன. அதிரியானால் கட்டப்பட்ட முவ்வாயில்

தான் அனைவரையும் ஈர்க்கின்ற சிறப்பு மிக்க பழமையான குறிப்பிடத்தக்க கட்டடமாகும்.

**அத்தாக்கு** (ATHACH – இடைநிறுத்த இடம்)

அமலேக்கியரைத் தோற்கடித்த பின்பு அங்கிருந்து பெற்ற கொள்ளைப் பொருட்களிலிருந்து ஒருபகதியை தாவீது செப்போலாவிற்குத் தெற்கேயிருந்த இந்த நகரில் இருந்த முதியவர்களுக்குக் கொடையாக அனுப்பினார் (1 சாமு 30:30). அநேகமாக இது யோசு 15:42; 19:7–இல் வரும் எத்தேர் என்பதின் எழுத்துப் பிழை வடிவமாக இருக்கலாம்.

**அத்தாக்கு** (HATHACH)

அரசி எஸ்தருக்குப் பணிசெய்ய நியமிக்கப்பட்ட பாரசீக அண்ணகர். இவர் வழியாகத்தான் மோர்தெக்காயிட மிருந்து யூதர்களுக்கு எதிரான ஆமோனின் சூழ்ச்சியை அவள் அறிந்தாள் (எஸ்த 4:5–6.9–10)

**அத்தாயா** (ATHAIAH – யாவே உதவி செய்கிறார்)

யூதா குலத்தைச் சேர்ந்தவர். ஊசியாவின் மகன். அடிமைத் தளையிலிருந்து நாடு திரும்பியபின் எருசலேமில் குடியேறிய வர்களின் பட்டியலில் இப்பெயர் உள்ளது (நெக 11:4). மேலேயுள்ள விவிலியக்குறிப்பிற்கு இணையாயுள்ள 1 நாள் 9:4–இல் வரும் ஊத்தாய் என்பவரும் அத்தாயாவும் ஒன்று என்று சிலர் கருதுகின்றார்கள். இருவரும் பேரேசுவின் வழி வந்தவர்கள். ஆனால் இடைப்பட்ட தலைமுறைகள் முழுவதுமாக வேறுபடுகின்றன.

**அத்தாய்** (ATTAI – முன்னேற்பாடான, தக்க சமயத்தில்)

*1.* சேசானிடமிருந்த எகிப்திய அடிமையான யரிகாவுக்கு சேசானின் மகள் வழியாகப் பிறந்த மகன். நாத்தானின் தந்தையாவாரென்றும் எரகுமேலின் வழிமரபுப் பட்டியலில் குறிப்பிட்டிருக்கிறது (1 நாள் 2:35–36).

*2.* காத்து என்ற இடத்திலிருந்து வந்து சிக்கிலாகு என்னுமிடத்தில் தலைமறைவாயிருந்த தாவீதிடம் வந்தவர்களாகக் கூறப்படும் ஆற்றலும் திறமையும் வாய்ந்த போர்வீரர்களின் பட்டியலில் ஆறாவது நபராக அத்தாய் இடம் பெறுகிறார் (1 நாள் 12:11)

*3.* இரகபெயாமின் மிக்க அன்புக்குரிய மனைவியாகிய மாக்கா பெற்றெடுத்த புதல்வர்களில் அத்தாய் ஒருவராவார் (2 நாள் 11:20).

**அத்தாரிம்** (ATHARIM – வேவு பார்ப்பவர்கள்)

அடையாளம் காட்ட முடியாத ஓர் இடம். இவ்விடத்தில் இஸ்ராயேலர்கள் மோசேயின் தலைமையின் கீழ் வந்து கொண்டிருந்த சமயத்தில் அரசனாகிய அராது என்பவரால் தாக்கப்பட்டனர் (எண் 21:1).

**அத்தார்** (ADDAR – ஏராளம், மிகுதியான)

*1.* (ஆள்) பெண்யாமின் இனத்தைச் சேர்ந்த பேலாவின் மகன் (1 நாள் 8:3). அரது என்ற சொல்லின் மற்றொரு வடிவமாகும் (ஆதி 46:21).

*2.* (இடம்). சீன் பாலைவனத்தின் மேற்கில் யூதர் நாட்டின் தெற்கு எல்லையில் அமைந்திருந்த நகரமாகும் (யோசு 15:3). இது கதேசு–பார்னேயாவுக்கு வடமேற்கில் 8 கி.மீ. தொலைவிலும் பேயேர்–செபாவுக்குத் தென்மேற்கில் 66 கி.மீ. தொலைவிலும் அமைந்திருக்கலாம். இப்பகுதிக்கு இணையான எண் 34:4–இல் இப்பெயர் கெசிரோனோடு சேர்க்கப்பட்டுக் கசர்–அத்தர் என்றழைக்கப்படுகிறது.

**அத்தாலியா** (ATHALIA – யாவே பெரியவர், யாவே உயர்த்தப்பட்டவர்)

*1.* ஆகபின் மகள் (2அர 9:18) ஓமிரியின் பேத்தி (8:26). ஆகாபின் மனைவி ஈசபேல் இவளது தாயாக இருக்கலாம். யூதாவின் அரசனான யோராமின் மனைவி; அகசியாவின் தாய். திருமணமான எட்டு ஆண்டுகளுக்குப்பின் அவள் கணவன் இறந்தான். அவனது மகன் அரியணை ஏறி ஓராண்டு ஆண்டான் (8:26; காண்க: 2. நாள் 22.2). பின்பு இஸ்ராயேலின் ஏகூவால் கொல்லப்பட்டார் (2 அர 9:27: காண்க: 2 நாள் 22:7–9) அவருடைய புதல்வர்கள் யாவரும் கொல்லப்பட்டுவிட்டனர் என்று கேள்விப்பட்டவுடன் தனது பேரப்பிள்ளைகள் யாவரையும் இவளே கொன்றுவிட்டு, தன்னையே உரிமையுள்ள அரசி

யாக அறிக்கையிட்டாள். இவளதுகொலை பாதகத்திலிருந்து இவளுடைய கடைசிப் பேரன், யோவாசு மட்டும் தப்பினார். இவரை அகசியாவின் சகோதரியும் பெரிய குரு யோயதாவின் மனைவி யுமான யோசபா ஒளித்து வைத்துக் காப் பாற்றினாள் (2 அர 11:1–2; காண்க.2 நாள் 22:10–11). அத்தாலியா யூதாவை 6 ஆண்டு கள் ஆண்டாள் (ஏறக்குறைய கி.மு. 842–837) (2 அர 11; 2 நாள் 22–23). யூதாவில் தாவீதின் மற்றபடி இடைவிடாத குல மரபில் வடக்கிலிருந்து வந்து புகுந்தவள். தென்னரசில் பாகாலின் வழிபாடு இவள் காலத்தில் உச்சநிலை அடைந்தது.

சாமாரியாவில் வளர்க்கப்பட்டுப் பாகால்–மேல்கார்த்தின் வழிபாட்டைப் பரப்புவதில் மிகுந்த ஆர்வம் காட்டினாள். அவளது வெட்கம்கெட்ட தாயைப்போல் மிகுந்த செல்வாக்குச் செலுத்தினாள். யோராமின் மனைவியாகவும் ( 1 அர 8:18; 2 நாள் 21:6; காண்க: 2 நாள் 21: 1 தொ), அக சியாவிற்குமேல் தாய் அரசியாவும் (2 அர 8:26–27; 2 நாள் 22:2–3) இருந்து வெளிப் படையாக இவ்வழிபாட்டைப் பரப்ப தன்னு டைய அதிகாரத்தைப் பயன்படுத்தினாள்.

அவள் இரத்த வெறியோடு 6 ஆண்டு கள் ஆண்டாள். அவளுடன் ஒத்துழைத்த வர்கள் ("அத்தாலியாவின் புதல்வர்கள்") பாகாலின் பெயரால் ஆலயத்தை வியா பாரக் கூடமாக்கினர். இதைத்தவிர அவள் ஆட்சியைப்பற்றி எந்த செய்தியும் பாது காக்கப்படவில்லை (2 அர 11:18; 2 நாள் 24:7).

இப்படி இவள் பாகால்–மெல்கார்தின் வழிபாட்டைப் பரப்பிக் கொண்டிருந்த போது யாவேயின் பிரமாணிக்கமுள்ள குருவான யோயதா தக்க நேரத்திற்காகத் தான் காத்திருந்தார். சிறுவன் யோவா சுவை ஆலயத்தில் ஆறு ஆண்டுகளுக்கு மறைத்து வைத்தபின் (2 அர.11:3) ஏழாவது ஆண்டில் அரசித் தாய்க்கு எதிராகச் சதி செய்தார் கூலிப்படையினரான காரியர் களின் தலைவர்களோடு ஆலயக் காவலர் களோடு உடன்படிக்கை செய்து (11:4 தொ; காண்க.2 நாள் 23:1 தொ) சிறுவன் யோவா சின் பாதுகாப்பை உறுதிசெய்தார். பின்பு ஆலயத்திலிருந்தவர்கள் முன் யோவா சுவை யூதாவின் அடுத்த அரசனாக யோயதா முடி சூட்டினார் (11:12).

இச்சதியை அறிந்த அத்தாலியா அதை அடக்க முயன்றாள். போர்வீரர்கள் முன்தான் ஒன்றும் செய்ய இயலாமையை அறிந்து தப்பியோட முயன்றபோது, அவளது இரத்தத்தால் ஆலயப்பகுதி களைக் கறைபடுத்த விரும்பாத பெரிய குரு, அவளை, அரச அரண்மனைகருகில் கொன்று போடச்செய்தார் (2 அர 11:13–16; 2 நாள் 23:12–15). இந்த விவரிப்பு பெரிய குரு எருசலேமில் பாகாலின் வழிபாட்டை முடிவுக்குக்கொண்டு வந்து, யோவா சுவை அரசனாக்கியதோடு முடிகிறது (2 அர 11:17–20; 2 நாள் 23:16–21).

2 நாள் 22:3, இவள் அகசியாவுக்குத் தீய ஆலோசனை கொடுத்தாள் என்பது பாகால் வழிபாட்டுக்கு இவள் காட்டிய ஆர்வத்தையும் அளித்த ஆதரவையும் குறிக் கிறது.

2. பென்யாமின் தலைமுறைப்பட்டிய லிலுள்ள எருசலேமில் வாழ்ந்த குடும்ப தில் எரோகாமுக்குப் பிறந்த புதல்வருள் ஒருவர் (1 நாள் 8:26).

3. எஸ்ராவுடன் நாடு திரும்பிய ஏலா மின் புதல்வர்களின் தலைவரும், எசாயா தந்தையுமாவார் (எண் 8:7).

**அத்தாலூசு** (ATTALUS)

அத்தாலூசு என்ற பெயரானது பெரு காமோனை ஆண்ட மூன்று மன்னர் களால் உரிமையாக்கிக் கொள்ளப்பட்ட பெயராகும்.உரோமையர்கள் யூதர்களுக்கு நண்பர்களாக இருப்பார்கள் என்ற செய்தியை உரோமையருடைய தூதர் உலூக்கியு பல மன்னர்களுக்கு கடிதங்கள் வழியாக எழுதி அனுப்பினார். அம் மன்னர்களில் இரண்டாம் அத்தாலூசும் ஒருவராவார் (1 மக் 15:22). இரண்டாம் அத்தாலூசினால்தான் (200–138 கி.மு.) பிலதெல்பியா என்ற நகரமானது தோற்று விக்கப்பட்டது.

**அத்திபாசு** (ATHBASH)

எபிரேய மொழியில் உள்ள குழு உக்குறி எழுத்து முறையாகும். இதன்படி முதல் எழுத்து 'ஆலேப்'புக்குப் பதிலாக கடைசி எழுத்தான 'தௌ' எழுதப்படும்,

இரண்டாவது எழுத்து 'பேத்' துக்குப் பதிலாக கடைசியிலிருந்து இரண்டாவது எழுத்து 'சீம்'. எழுதப்படும். இப்படியே மாற்றி எழுதப்படும்.

இவ்வகை எழுது முறைக்கு மூன்று எடுத்துக் காட்டுகள் எரேமியா நூலில் உள்ளன. (எரே 25:26; 51:1.41). அவை எப்படி, எப்பொழுது அதில் வந்தன என்பது புதிராகவே உள்ளது. 51:1–இல் உள்ள வார்த்தை கல்தேயர்கள் என்ற பொருளைத் தருகிறது. 25:26; 51:41–இல் இத்தகையசொல் பாபிலோன் அரசரைக் குறிப்பதாகத் தெரிகிறது. ஆனால் அதி 51–ல் பாபிலோனைப் பற்றிய பல குறிப்புகள் உள்ளதால், இப்படி மறைத்துக் கூறுவதில் பயனில்லை எனத் தோன்றுகிறது. ஆனால் இதன் பொருளை மற்றபடி விளக்க பலமுயற்சிகள் எடுக்கப்பட்டுள்ளன. ஒன்றும் வெற்றியடையவில்லை. இதேமுறை 25:26–லும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

இத்தகைய முறை தால்முத் மித்ராசிலும் கபலா போன்ற நூற்களிலும் காணப்படுகிறது. சாக்கடல் ஏடுகளை விளக்க இந்த முறையைப் பயன்படுத்த முயற்சிகள் நடந்திருக்கின்றன.

### அத்தி மர உவமை:

*(மத் 24:32–34; மாற் 13:28–32; லூக் 21:29–33)*

மழைக்காலம் முடியும் வேளையிலே அத்திமரம் தளிர்விட்டு கோடைக்காலம் அண்மையிலுள்ளது என குறிப்பிடுகிறது. கோடைக்காலமும், அறுவடையும் மெசியா வருகையின் அடையாளங்கள். தண்டனைக்காவும் பரிசுக்காகவும் மக்களைப் பிரிக்கும் தீர்வை நேரமாகும், இங்கே நீதித் தீர்வை மட்டுமின்றி, அத்தி மரத் தளிர்கள் நம்பிக்கையையும் நல்ல அறுவடையையும் குறிக்கின்றன. விவிலிய வல்லுநர் எரேமியா இந்த உவமை இயேசுவின் பணியிலே மெசியா வருகையின் போது இருக்கவேண்டிய அடையாளங்கள் இருக்கின்றன என்று சீடர்களுக்கு உணர்த்த கூறப்பட்டதாக எழுதுகிறார். மனுமகன் வாயிலிலே இருக்கிறார் என்பது அழைப்பையும், அச்சுறுத்தலையும் சேர்த்தே குறிக்கும்.

### அத்தி மரம், கனி

மேற்காசியா முழுவதிலும், மத்திய தரைக்கடல் ஓரங்களிலும் வளரும் ஒரு மரமாகும். இது சிறப்பாக பாலஸ்தீன சீரிய மலைகளிலும் பள்ளத்தாக்குகளிலும் குறிப்பாகத் திபேரியா அருகிலுள்ள பள்ளத்தாக்கில் கலிலேயே கடல் ஓரத்தில் அதிகம் வளர்க்கப்படுவதாகும். இதன் கனிக்காகப் பயிரிடப்படுகிறது. இந்த மரமும் கனியும் விவிலியத்தில் 60 முறைக்கு மேல் குறிக்கப்படுகிறது. ஆதி 3:7; மத் 21:19–மரத்தையும், எண் 13:23; மத் 7:16 கனியையும் குறிக்கின்றன. அதன் வளர்ச்சி பற்றிய பல குறிப்புகள் உள்ளன (ஏச 23:4; உ.ச.2:13; திருவெளி 6:13; 1 சாமு 30:12; 1 அர 25:18).

பாலையில் அத்தி ஒர புதராகவே வளரும். ஆனால் பயிர் செய்தால் 5 முதல் 15 மீட்டர் உயரத்திற்கு வளரக்கூடியது. அதன் கிளைகள் வளைந்து வளைந்து வளரும். அதன் பரந்த இலைகள் நெருக்கமாக அமைந்திருக்கும் (காண்க ஆதி 3:7). ஆகவே விரிவான நிழல் தரக்கூடியது (காண்க. மீக் 4:4; செக் 3:10). இவைகளில் கனத்தால் கிளை தரையை நோக்கி வளர்ந்திருந்தால் இலைகளின் வழியாகப் பார்ப்பது முடியாத காரியமாகும் (யோவா 1:48.50) குளிர்கால மழை காலத்திற்கு முன் இலைகள் உதிர்ந்துவிடும். மார்ச் அல்லது ஏப்ரலில் புதுத்தளிர்கள் தோன்றும். இது கோடைக்காலம், அண்மையில் வருவதை உணர்த்தும் (மத் 24:32). நீண்ட இதழுடைய பூக்களையும், நீண்டுருண்ட அல்லது முத்து வடிவமுடைய கனிகளைத் தரும். மரம் பொருட்கள் செய்வதற்கு உகந்ததன்று, வீட்டிலும் ஆலயத்திலும் எரிப்பதற்குப் பயன்பட்டது.

பாலஸ்தீனத்தில், கானானியர் காலத்தில் இருந்து அத்தி பயிர் செய்யப்பட்டு வந்திருக்கிறது (எண் 13:23). வருடத்தில் பத்து மாதங்களுக்கு கனிகளைத் தரக்கூடியது. மார்ச் ஏப்ரல் மாதங்களில் புதிய இலைகள் தோன்றும். ஆரம்ப அத்திக் காய்கள் முந்திய ஆண்டின் பலனாகும் (திருவெளி 6:13). அவற்றில் சாறு இல்லை என்றாலும் அக்காலத்தில் வேறு பழங்கள்

இல்லாதபோது அது உண்ணப்படும். மீத மிருப்பவை ஜுன் மாதம் பறிக்கப்படும். அதன் சாறுக்காக விரும்பி உண்ணப் படும். வசந்த காலத்தில் பூத்துக் காயாகி பழுத்தவை ஆகஸ்ட் மாதத்தில் பறிக்கப் படும். இதில் அதிகச்சாறு இருக்கும். சுவையும் மிக இனிமையாக இருக்கும் (நீதி *9:11*). பழம் தரையில் விழுந்து, பழுது பட்டு விடாமல் கவனமாய் பறிக்கப்படும் (காண்க. நாகூ *3:12*). பழம் புதிதாக உண்ணப்படலாம் அல்லது காய வைத்து அடையாகச் செய்யப்படலாம் (*1* சாமு *30:12; 1* நாள் *12:40*). கொப்புளங்களுக்கு மருந்தாகவும் பழம் பயன்பட்டதாகத் தெரிகிறது (*2* அர *20:7*; ஏச *38:21*).

முக்கியமான உணவுப் பொருளாக இஸ்ராயேலரிடையே கருதப்பட்டு மதிக்கப் பட்டது. அத்தி பற்றிய ஏறக்குறைய எல் லாக் குறிப்புகளும் அதன் முக்கியத் துவத் தைக் காட்டுகின்றன. இன்றும் பாலஸ் தீனத்தில் இதுமுக்கியமானதாகும். இதன் இலைகள் ஆதாம் ஏவாளுக்கு ஆடையாக வும் (ஆதி *3:7*), நிழலாகவும் (யோவா *1:48.50*) பயன்பட்டது. ஒலிவ மரம், மாதுளம் செடி முதலியவற்றோடு அத்தி மரமும் வாக்களிக்கப்பட்ட நாட்டின் செழு மைக்கு அடையாளமாகியது. இஸ்ராயே லைக் கவர்ந்தது (உப *8:8*; எண் *13:23; 20:5*).

அத்தி பற்றிய பெரும்பாலான குறிப்பு கள் உருவகத்தன்மையுடையன. ஒருவனுக் குச் சொந்தமான திராட்சைச் செடிக்கும் அத்தி மரத்துக்கும் கீழ் வாழ்வது மிகச் சிறந்ததாகக் கருதப்பட்டது (*1* அர *4:25; 2* அர *18:31*; ஏச *36:16*; மீக் *4:4*; செக் *3:10*). அபிமெலக்கைக் கண்டனம் செய்யும் யோத்தாமின் உவமையில் அரசனாக இருக்க மறுத்தவற்றில் அத்திமரமும் வரு கிறது (நீதி *9:10–11*). இஸ்ராயேலின் பாவங் களுக்குத் தண்டனையை அறிவிக்கும் இறைவாக்குகளில் உலர்ந்துபோன அத்தி மரம் நாட்டிற்கு வரும் அழிவை அடை யாளமாக உணர்த்திற்று (எரே *5:17*; ஓசே *2:12*; யோவே *1:7.12*; ஆமோ *4:9*). எரேமியா வின் காட்சியில் வரும் இருகூடை அத்திப் பழங்கள், நல்ல பழங்களால் குறிப்பிடப் பட்ட நாடு கடத்தப்பட்டவர் களையும் கெட்ட பழக்கங்களால் குறிக்கப்பட்ட எகிப்திலும் பாலஸ்தீனத்திலும் தங்கியி ருந்தவர்களையும் வேறுபடுத்துகின்றன. (எரே *24:1–10*). கனி கொடாத மரமாகிய தம் மக்களை பொறுமையாக கவனித்து வரும் தோட்டக்காரனாக இறைவனை இயேசு சித்தரிக்கிறார் (லூக் *13:6–9*). இதற்கு மற்றொரு விளக்கம், இறைவனது தீர்ப்புக்கு மாறாக மக்களுக்காகப் பரிந்து பேசும் தோட்டக்காரன் இயேசுவே தான்.

விளக்குவதற்கு மிகவும் கடினமான விவரிப்பு, கனி கொடாத அத்தி மரத்தை இயேசு சபிக்கும் நிகழ்ச்சியுரையாகும் (மாற் *11:13–14.20–21*; மத் *21:18–21*). இது இயேசுவின் தன்மைக்கு மாறானதாகும். பல விளக்கங்கள் கொடுக்கப்பட்டுள்ளன; ஒன்றும் நிறைவு தரவில்லை. லூக் *13:6–9*– இல் வரும் உவமையை நாடகப் பாணி யில் செயல்படுத்தி, தங்கள் வாழ்வில் எந்தப் பலனையும் கொடாதவர்களின் அவல முடிவை சுட்டிக்காட்டுகிறது என லாம். வசந்த காலத் தொடக்கத்தில் புது தளிர்கள் தோன்றுமுன் கடந்த ஆண்டின் காய்கள் மரத்தில் இருந்திருக்க வேண்டும் (உ.ச.*2:13*). அப்படியில்லாதது இந் நிகழ்ச்சியுரையை விளக்கலாம். ஆனால் இயேசுவின் உணர்ச்சி வசப்பட்ட செயலை விளக்கவில்லை. ஒருவேளை மூலத்தில் இந்நிகழ்ச்சி வெளிப்பாட்டு அடையாள மாக இருந்திருக்கலாம். நிகழ்ச்சியுரை யில் மூலச் சூழ்நிலையும் பொருளும்



மறைந்து போனது அல்லது தவறிப்போய் விட்டது என்பது தெளிவாகுகிறது. லூக்கா இதை விட்டுவிடுகிறார் என்பது இந் நிகழ்சிசியுரையின் கடினத்தைச் சுட்டு கிறது.

**அநீதக் கண்காணிப்பாளன் – உவமை**

பரிசேயருக்கும் மறைநூல் வல்லுநர் களுக்கும் ஊதாரியின் உவமையைக் கூறிய பின். இயேசு தம் சீடர்களுக்கு இந்த அநீதக் கண்காணிப்பாளன் உவமையைக் *(லூக் 16:1–9)* கூறுகிறார். செல்வந்தன் தன் உடமைகளை விரயம் செய்ததாகக் குற்றம் சாட்டப்பட்ட கண்காணிப்பாளனிடம் கணக்குக் கேட்கிறான். கண்காணிப்பா ளன் தன் தலைவனிடம் கடன்பட்டிருப்ப வர்களின் கடனைத் தந்திரமாய் மாற்றி அமைத்து, தன் வருங்காலத்திற்கு ஆதா யம் தேடிக்கொண்டான். இந்தத் தந்தி ரத்தை அறிந்த தலைவன், கண்காணிப் பாளனது விவேகத்தை மெச்சினான். இவ் வுவமையில் இந்த உலகில் நடைபெறும் நீதியற்ற செயல்களை இயேசு வஞ்சப் புகழ்ச்சியோடு சாடுகிறார். உவமையின் முடிவில், "ஒளியின் மக்களைவிட இவ் வுலகின் மக்கள் தம்போன்றவர்களிடத் தில் (அதாவது அவர்களுக்குள்ளேயும் அவர்களது குறுகிய நோக்குடைய போக்கி லும்) மிக்க விவேகமுள்ளவர்களாக இருக் கின்றனர்" என்று இயேசு கூறுகிறார். ஆனால் இவ்வுலகின் மக்கள், விண்ணரசு நிறுப்படுதலுக்கு எதிரான சக்திகளால் வாழ்கின்றனர்; ஒளியின் மக்களாகிய விசு வாசிகள் உயர் சட்டத்தால் வாழ்கின்ற னர்: ஆகவே வஞ்சப்புகழ்ச்சியோடு "அநீதி செல்வத்தைக் கொண்டு நண்பர்களைச் சம்பாதித்துக்கொள்ளுங்கள். அது உங்க ளைக் கைவிடும்போது இவர்கள் உங்களை முடிவில்லாக் கூடாரங்களில் ஏற்றுக் கொள்வர்" *(16:9)*. அதாவது "நீங்கள் உரிமை பேறாக அடையவிருக்கும் ஆன் மீகச் சொத்துக்களைப்பெறத் தகுதிபெறும் பொருட்டு, எந்த உலகச் செல்வத்தையும் இரக்கத்தோடும் தாராளமாகவும் பயன் படுத்துங்கள்" என்று இயேசு தொடர்ந்து கூறுகிறார். "மிகச் சிறிய காரியத்தில் நம்பத்தகுந்தவன் பெரியதிலும் நம்பத்தக்க வனே: *(16:10)* மிகச் சிறியதில் நீதியற்றவன் பெரியதிலும் நீதியற்றவனே என்று சிறு காரியங்களிலும் நேர்மையாக இருக்கப் படிப்பிக்கிறார். முடிவில் உண்மையான விசுவாசம் தோல்வியுறுவதில்லை. நீதி யற்றவர்களின் நண்பர்கள் காணும் "முடி வில்லாக் கூடாரங்கள்" நரகமேயாகும்.

இயேசு தமது காலத்துச் சமயத் தலை வர்களைப் பார்த்துக் கூறியதாக அளிக்கப் படும் விளக்கம் நமது காலச்சமயத் தலை வர்களுக்கும் பொருந்தும். ஆண்டவரின் சொத்துக்களைப் பொறுப்பற்ற முறையில் பயன்படுத்துபவர்கள் உலகோடும் உலகப் போக்கோடும் இணங்கிப் போகின்றனர். பின்பு, அவற்றை ஏற்றுக்கொள்கின்றனர். இக்கருத்தை, "எந்த வேலைக்காரனும் இருதலைவர்களுக்கு ஊழியம் செய்ய முடியாது. கடவுளுக்கும் செல்வத்துக்கும் நீங்கள் ஊழியம் செய்ய முடியாது" *(16:13)* என்ற கூற்றில் வலியுறுத்துகிறார்.

**அநீத நடுவன் – உவமை**

எப்பொழுதும் மனந்தளராமல் செபிக்கவேண்டும் என்பதை உணர்த்த இந்த நீதிக்கதை கூறப்படுகிறது (லூக் *18:1–18)*. யாருக்கும் பணியாத நடுவன் விதவையின் தொந்தரவு காரணமாக அவளுக்கு நன்மை செய்கிறான். இது நள்ளிரவிலே வந்த நண்பன் நீதிக்கதை போன்றது. மனிதன் செய்யும் செபம் கேட்கப்படும் என மொழிகின்றது. இங்கே ஆண்டவர் அந்த மனிதரோடு வேறு படுத்திக்காட்டப்படுகிறார். மேலும் இந்த நீதிக்கதை மனுமகனின் இரண்டாம் வருகைக்கு முக்கியத்துவம் தருகின்றது. அக்காலத்தில் விசுவாசிகள் பல துன்பங் களை ஏற்க வேண்டியிருக்கும். ஆனால் ஆண்டவர் எதிரிகள் மீது வஞ்சம் தீர்க்கப் போவது உறுதி. எளிதில் இன்னல் நேரக் கூடிய நிலையில் விதவைகள் உள்ளனர். இந்த நீதிக்கதையில் வரும் விதவை விசு வாசிகளைக் குறிக்கிறாள்.

**அந்திகோனுஸ்** (ANTIGONUS)

அசமோனிய அரசர்களில் கடைசி யானவர். இரண்டாம் அரித்தோபுலின் மகன். இருவரும் கி.மு. 63–57–இல் உரோ மையில் சிறையில் வைக்கப்பட்டனர். 44–இல் யூலியு சீசெர் இறந்தபின் அந்தி

கோனு கலிலேயாவின் மீது படையெடுத்தார். ஆனால் பெரிய ஏரோதால் தோற்கடிக்கப்பட்டார். நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு யூலியு சீசருக்குப் பின் உரோமையில் ஆட்சிக்கு வந்த மாற்கு அந்தோனி அலக்சாந்திரியாவில் அரசி கிளியோபத்திராவைப் பார்க்கச்சென்றபோது, இதைச் சாதகமாகப் பயன்படுத்திப் பார்த்தியர்கள் துணையுடன் யூத அரசனாகவும், பெரிய குருவாகவும் ஆனார். ஆனால் 37–இல் பெரிய எரோதால் நீக்கப்பட்டார். ஏரோது உரோமையர் உதவியுடன் எருசலேமைக் கைப்பற்றி அந்திகோனுவைக் கொலை செய்தார்.

**அந்திபத்திரி** (AN–TI PATRIS)

*யோப்பாவிற்கு ஏறக்குறைய 16 கி.மீ வடகிழக்காகவும் இலிதாவிற்கு 16 கி.மீ வடக்காகவும் உள்ள ஒரு நகரம். யூலியு சீசர், காலத்தில் யூதேயாவிற்கு ஆளுநராக இருந்த அந்திபாத்தாரின் நினைவாக இவர் மகன் பெரிய ஏரோது அப்பேக்– குவின்மேல் இந்நகரை மறுபடியும் கட்டி இப்பெயரிட்டார்.*

இப்பெயர் விவிலியத்தில் ஒரே ஒரு முறைதான் கூறப்படுகிறது (அ.ப. 23:31). 470 உரோமைப் படைவீரர்கள், பவுலைக் கைதியாக எருசலேமிலிருந்து, செசரியாவிற்கு அழைத்துச் சென்றபொழுது இரவில் இங்கு தங்கினார்கள். எருசலேமுக்கும், அந்திப்பத்திரிக்கும் இடையில் இருந்த தூரம் ஏறக்குறைய 65 கி.மீ.

இந்நகரம் உரோமையரின் படைகள் ஒய்வெடுக்கும் இடமாகவும், யூதேயாவிற்கும், சமாரியாவிற்கும் இடையிலுள்ள எல்லைப்பகுதியாகவும் இருந்தது.

கி.மு. 2000–ல் இருந்த பழைய ஏற்பாட்டு அபேக்கு, இங்கு இருந்ததாக இங்கு நடந்த புதைபொருள் ஆராய்ச்சிகள் நிறுவுகின்றன. உலோத்துக்கு வடக்கில் 16 கி.மீ. தொலைவிலும், எருசலேமுக்கு வடமேற்கில் 65 கி.மீ. தொலைவிலும், செசரியாவுக்குத் தென்மேற்சில் 40கி.மீ தொலைவிலுமுள்ள இக்கால ராஸ்–ஏல் ஆயின் தான் அந்திப்பத்திரி முன்பு இருந்த இடம் என்று அடையாளம் காட்டப்படுகிறது.

கி.பி. 457–இல் நடந்த கால்சீடனில் நடந்த கூட்டத்தில் ஆயர் போலிக்ரோனியுஸ் என்பவர் அந்திப்பத்திரியின் பிரதிநிதியாக வந்தார். ஒம்மியாத்தியர்களோடு கூட்டுச் சேர்ந்த கிறிஸ்தவர்கள் இங்கு 744–இல் கொல்லப்பட்டதாகச் சொல்லப்படுகின்றது.

**அந்திப்பா** (ANTIPAS – தந்தையைப் போன்றவன்)

1. பெரிய எரோது வைத்திருந்த ஒன்பது மனைவிகளில் சமாரிய மனைவியான மால்தாக்கே என்பவளுக்கு பிறந்த மகன். அந்திப்பாவும் அவருடைய சகோதரன் அர்க்கெலாவும் உரோமையில் வாழ்ந்த ஒரு மனிதரால் வளர்க்கப்பட்டதாக யோசிபசின் நூல் கூறுகிறது- இந்த அந்திப்பாதான் லூக் 3:1. 19–இல் நாம் காணும் கலிலேயாவின் சிற்றரசன் என்பவர். இவர் திருமுழுக்கு யோவானையும் இயேசுவையும், நடத்திய விதத்திலிருந்து இவனுடைய காமமும், குரோதமும் தெரியவருகின்றன. இவர்தான் திருமுழுக்கு யோவானைச் சிறைவைத்துப் பின் கொன்றவர் (மத் 14:1–11; மாற் 6:14–28). இயேசுவை அவரது பாடுகளின்போது கேலி செய்தவர் (லூக் 23:7–11) காண்க: எரோது–2.

2. பெருகமோனைச்சேர்ந்த ஒரு கிறிஸ்தவர் தனது விசுவாசத்திற்காக மறைசாட்சியாக மரித்தவர் (திருவெளி 2:12).

3. அலக்சாண்டர் அரசராலும், அவர் மனைவியாலும் இதுமேயா முழுவதற்கும் ஆளுநராக நியமிக்கப்பட்ட ஒரு இதுமேயன் என்று யோசிபஸ் கூறுகிறார். 4–இல் கொடுக்கப்பட்டுள்ளவரின் தந்தை.

4. ஒரு பணக்கார இதுமேயன். சுறுசுறுப்பானவரும், சூழ்ச்சி செய்வதில் ஆர்வமும் உள்ளவர். இரிக்கானுவிடம் தன்எதிரியான அரித்தோபுலின் பெயரைக் கெடுக்க பலமுயற்சிகளைச் செய்தார். இரிக்கானு உயிருக்குப் பயந்து அரேபிய நாட்டு அரசரான அரேத்தாவிடம், ஓடி, பெத்திராவில் தஞ்சம்புகுந்தார். அரேத்தாவின் உதவியுடன் அரித்தோபுலின் மேல் அந்திப்பாவும், இரிக்கானும் படையெடுத்தனர். தற்காலிக வெற்றியும் அடைந்தனர். பாம்ப்பேயிலிருந்து புதிராக வந்த

ஸ்கொளருஸ் என்பவர் அரித்தோபுலுக்கு உதவி செய்து எதிரிகளை பாப்பிரோன் என்னும் இடத்தில் தோற்கடித்தார்.

**அந்திபாத்தர்** (ANTITPATER - *அவன் தந்தைக்குப் பதிலாக)*

*1.* இவர் யாசோனின் மகன். இவர் அந்தியோக்குவின் புதல்வன் நூமேனியுடன், உரோமைகளோடும் இலக்கதேமானியர்களோடும் முன்பு கொண்டிருந்த நட்பையும், கூட்டணியையும் புதுப்பிக்க யூதர்களின் தூதுவராக அனுப்பப்பட்டான் *(மக் 12:16; 14:22).*

*2.* பெரிய ஏரோதுவின் தந்தை. முதலில் பாலஸ்தீனத்தின் அதிகாரப்பூர்வ மற்ற ஆட்சியாளராக இருந்தார் *(63–55 கி.மு.).* சீசருக்கும் தோலமிக்கும் இடையில் நடந்த போரில் இவர் காட்டிய ஆதரவுக்காக கி.மு.47–ல் யூதேயாவின் ஆளுநராக ஆக்கப்பட்டார். பிறகு தன் புதல்வர்கள் பாசாவேல், ஏரோது ஆகியோருக்கு எருசலேம். கலிலேயாமேல் ஆளுநர் பதவியை வாங்கி அளித்தார். இந்த அந்திபாத்தர் அவரது பான அமைச்சனால் 43–இல் நஞ்சுவைத்துக் கொல்லப்பட்டார்.

**அந்தியோக்கி** (ANTIOCHIS)

நான்காம் அந்தியோக்கு எப்பிபானின் வைப்பாட்டி. அந்தியோக்கு சிலிசியாவிலுள்ள தார்சுவையும், மல்லோத்தாவையும் அவளுக்கு அன்பளிப்பாகக் கொடுத்ததின் காரணமாக இந்நகரங்களின் மக்கள் இவர்மேல் கோபப்பட்டனர்.

**அந்தியோத்தியர்** (ANTIOCHIANS)

யாசோன் என்ற தலைமைக் குருவால், எருசலேமில் வாழ்ந்த சில குடி மக்களுக்காகக் கேட்ட மதிப்பும் சலுகையும் நிறைந்த பட்டம்தான் "அந்தியோக்கியர்கள்" என்பது. தீர் நாட்டில் நடைபெற்ற விளையாட்டுப் போட்டிகளில் அவரது பிரதிநிதிகள் இவ்வாறு அழைக்கப்பட்டனர் *(2 மக் 4:9.19).*

எருசலேமில் வாமும் சிலரை "அந்தியோக்கியர்" என்ற பட்டம் அளித்துச் சலுகை செய்யும்படி யாசோன் கேட்டுக் கொண்டது எருசலேமை கிரேக்கமயமாக்க அவரது திட்டத்தின் ஒரு பகுதியாகும் *(2 மக் 4:7–17; 1 மக் 1:11–15).* ஒரு வேளை கிரேக்க மொழிபேசிய யூதர்களுள் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கைதான் "அந்தியோக்கியா குடிமக்கள்" என்று பதிவு செய்யப்பட்டனர். இவர்கள் அரசின் அங்கீகாரம் பெற்று எருசலேமில் கிரேக்க மொழிபேசும் பகுதியை அமைத்தார்கள். யாசோனுடைய திட்டம் ஒருவேளை எருசலேம் என்ற பெயரை அந்தியோக்கியாவாக மாற்றவேண்டும் என்று இருக்கலாம் என்று தோன்றுகிறது. ஆனால் ஐயத்திற்குரியது.

செலூக்கியப் பேரரசில் இருந்த மற்ற நகரங்களில் வாழ்ந்தவர்களும் அந்தியோக்கியர்கள் என அழைக்கப்பட்டதாக நாணயங்களின் மேல் இருக்கும் குறிப்புகள் காட்டுகின்றன. நாணயப் பணத்தை உபயோகிக்கும் முக்கியமான அரசாங்க உரிமையை (சலுகையை) இந்தப் பட்டம் தந்தது.

**அந்தியோக்கியா** (ANTIOCH) – *(சீரியா)*

சீரியாவின் பழமையான நகரங்களில் ஒன்றான அந்தியோக்கியா ஒரு கிரேக்கப் பண்பாட்டுப் நகரம். இன்று துருக்கியில் அன்தாகியா என்னும் பெயருடன் உள்ளது. அன்று உரோமை, அலக்சாந்திரியா இவைகளுடன் இணையாக வைத்துக்கருதப்பட்டு கிரேக்க உரோமை உலகின் மூன்று மிகப்பெரிய நகரங்களில் ஒன்று. கிறிஸ்தவம் தொடக்கத்தில் வளர்ச்சிபெற்ற மையங்களில் இதுவும் ஒன்று. செலூக்கசின் தந்தை அந்தியோக்கின் நினைவாக இப்பெயர் இடப்பட்டது. கி.மு. 300–இல் நிறுவப்பட்ட இந்நகரம் மத்திய தரைக் கடற்கரையிலிருந்து 19 கி.மீ தொலைவு உள்ளது. ஒரோன்டெஸ் ஆற்றின் முகத்துவாரத்தில் அமைந்துள்ள செலூக்கியா பியெரியா இதன் துறைமுக நகரம்.

அந்தியோக்கியச் சமவெளி பலஆயிரம் ஆண்டுகள் விவசாயத்திற்குப் பயன்பட்டிருக்கிறது. கி.மு. 300–ஐ ஒட்டி முதலாம் செலூக்குசு அந்தியோக்கியா நகரை நிறுவினார். செலூக்கிய அரசர்களின் நகரமான இதில் கிரேக்கபடை ஒன்று இருந்தது. பின்னர் பல உள்நாட்டவர் புகுந்து அன்றைய கிரேக்க–உரோம

உலகின் மிகப்பெரிய நகரமாகியது. கி.மு. 2–ஆம் நூற்றாண்டில் இந்நகரில் ஐந்து லட்சத்திற்கு மேல் மக்கள் வசித் திருக்கின்றனர். இங்கு ஒரு யூதக் குடி யிருப்பு செழிப்பாக வாழ்ந்து வந்திருக் கிறது. ஆனால் கி.பி. 37–41–இல் கலி குலாவின் ஆட்சியின் கீழ் குடியேற்றம் பல இழப்புகளைச் சந்தித்தது. மிகப் பெரிய கட்டிடங்களுக்கும், வியாபாரத்திற்கும் பெயர் பெற்ற இந்நகரம் தீய பழக்கங் களுக்கும், தீய இச்சைகளுக்கும் பெயர் பெற்றதென்ற இழிவும் பெற்றிருந்தது.

செலூக்கிய அரசர்களின் வீழ்ச்சிக்குப் பிறகு கி.மு. 83. இல் திக்ரானேசு என்பவ ராலும் கி.மு. 64–க்குப் பிறகு உரோமைய ராலும் ஆளப்பட்டது. பிறகு அவர்கள் சீரியா மாகாணத்தின் தலைநகராக இதனை மாற்றினர். இக்காலத்தில்தான் அந்தியோக்கியா அறிவின் இருப்பிடமா கியது. கி.பி. 4–6 ஆம் நூற்றாண்டுகளில் இறையியல் சிந்தனைகட்கு இது தலை சிறந்த இடமாக இருந்தது. 1932–1939–இல் பிரின்ஸ்டன் பல்கலைக் கழகத்தாலும், பிரான்சின் தேசிய அருங்காட்சியகத்தா லும் இந்நகர் அகழ்ந்தெடுக்கப்பட்டது. எஞ்சியப் பொருட்களெல்லாம் விவிலிய காலத்திற்குப் பிந்தியவைகளாகக் கணிக் கப்பட்டுள்ளன.

*1. பழைய ஏற்பாட்டில் அந்தியோகியா:–*

நகரின் அமைப்பு வியப்புக்குரியதாகும். அதன் கிழக்கு மேற்கு நெடுஞ்சாலை சலவைக் கற்தூண்களால் ஆன நான்கு வரிசைகொண்டது. இவை மூன்று பாதை களை உண்டாக்கியது. நடுப்பாதையில் கனமான ஊர்திகளுக்கும், புற இரு பாதைகளும் கால் நடையாகப் போவோ ருக்கும் குதிரைகளுக்கும் சொகுசு வண்டி களுக்கும் உரியதாகும். தெற்கு வடக்கி லும், இத்தகைய நெடுஞ்சாலை அமைந்தி ருந்தது. இவ்வாறு நகரம் நான்கு பகுதி களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. வளைந்து ஓடும் ஒரோன்டெஸ் நதிக்கு வடக்கில் செலுசித் அரண்மனை இருந்தது. நகரத் தின் வடகிழக்கில் திபேரியுவின் சுவர் உள்ளது. தாபினேயின் கவர்ச்சிமிக்க இயற்கையான இன்பவனம் தெற்கில் இருந்தது. இங்குள்ள அப்பொல்லே கோவிலுக்கு மக்கள் பெருங்கூட்டமாய் கூடினர். அதன் ஊற்றுகள் நகரத்திற்கு போதிய நீரை வழங்கின. மேலும் சலவைக் கல் பாவப்பட்ட நாட்டுப்புற மளிகைகளும், பெயர் தெரியாத தேவர்களுக்கு ஒரு பீடமும் தேவர்களின் சிலைகளும் ஆழ்ந் தெடுக்கப்பட்டுள்ளன. இங்கு கண்டெடுக் கப்பட்ட ஒரு கிண்ணம் இயேசு தன் இறுதி இரவுணவில் பயன்படுத்தியது என்று கருதப்பட்டது. ஆனால் இப்போது அது கி.பி. நான்காம் நூற்றாண்டைச் சேர்ந்த தாக ஏற்றுக் கொள்ளப்படும்.

யூதர்களுக்கு எதிராக செலூக்கியர்கள் இயங்குவதற்கென மையமாகக் கொண்டி ருந்த இடமென மக்கபேயர் ஆகமம் அதனைக் குறிப்பிடுகிறது (*1 மக் 3:37; 4:35*). அந்தியோகியாவை ஆட்சி செய்த பிலிப்பு என்பவரைத் தோற்கடித்து இலீசியா அதனைக் கைப்பற்றியது பற்றியும், நான் காம் தோலமி பிலோமேத்தோர் என்ப வன் அந்தியோகியாவில் புகுந்து எகிப்து ஆசியா ஆகியநாடுகளில் முடியை அணிந்து கொண்டதாகவும், இந்நகர் பற்றிய குறிப்புகள் வருகின்றன (*1 மக் 6:63; 11:13*). பின்பு இரண்டாம் தெமேத்திரியு என்பவரிடமிருந்து துருபோன் நகரைக் கைப்பற்றினார் (*11:56*). தாபினே எனும் இடம் அப்பொல்லோவின் வழிபாட்டு இடமாகவும், ஒனியாசு என்ற தலைமைக் குரு தஞ்சம் புகுந்த இடமாகவும் இருந்தது (*2 மக் 4:33*).

*2. புதிய ஏற்பாட்டில்:–*

அப்போஸ்தலர் பணி *11:19*–இல் முதன் முதலில் இந்நகரம் பற்றிப் பேசப்படு கிறது. ஸ்தேவானின் இறப்புக்குப் பிறகு தப்பிய கிறிஸ்தவர்கள் எருசலேமிலிருந்து இங்கு வந்து அடைக்கலம் புகுந்தனர். இங்கு நற்செய்தி எவ்வளவு விரைவில் பரவியதென்றால் எருசலேமில் உள்ள தலைவர்கள் இங்கு பர்னபாவை அனுப்பு கின்ற அளவுக்கு தேவை ஏற்பட்டது (அ.ப. *11:22*). பார்னபா தார்சு நகரத்திலிருந்து இங்குப் பவுலைக் கொணர்கிறார் (*11:26*). இதுதான் பவுல் பற்றிய முதல் வரலாற் றுக்குறிப்பு. இங்குதான் முதன் முதலில் "கிறிஸ்தவர்கள்" என்ற பெயரை இயேசு வைப் பின்பற்றியவர்கள் பெற்றனர்.

ஆனால் இப்பெயர் எம்முறையில் வந்தது எனத்தெரியவில்லை. புற இனத்த வரால் இழிவான பட்டப் பெயராகப் பயன்படுத் தப்பட்டிருக்கலாம். அல்லது கிறிஸ்தவர் கள் தங்களுக்கு அளித்துக் கொண்டதாக இருக்கலாம். அல்லது, யூதர்களிடமிருந்து வேறுபட்ட இந்தப் பிரிவினைக் குழுவைக் குறிக்க உரோமைக் காவலர்கள் கொடுத்த பெயராக இருக்கலாம்.

கிறிஸ்தவத்தின் தொடக்ககாலத்தில் மிகப் பெரிய எண்ணிக்கையுடன் தழைத்து வளர்ந்த இச்சமூகம் மிகமுக்கியமானதா கவும், முதன் முதல் ஏற்பட்ட புறவினக் கிறிஸ்தவ சமூகமாகவும் இருந்தது. கிறிஸ்தவம் தொடர்ந்து பரவவும் காரண மாக இச்சமூகம் எருசலேம் சமூகத்துக்கு உதவ பணம் வசூலித்து பவுல், பர்னபா வழியாக அனுப்பியுள்ளது (அ.ப.11:27–30). இவ்விரண்டு சமூகத்திற்குமிடையே அன்று இதய பூர்வமான உறவு நிலவி வந்தது. லூக்காவின் சொந்த ஊராக இருந்திருக் கலாம். அந்தியோகியாவில் உள்ள இறை வாக்கினார்கள் பற்றி இருமுறை கூறப் படுவது (11:27; 13:1) எதார்த்தமாக நிகழ்ந்த ஒன்றேயாகும்.

அந்தியோகியத் திருச்சபைக்குரிய அதி காரமும், சுதந்திரமும் அவர்கள் பவுலை யும், பர்னபாவையும் நற்செய்திப் பணிக்கு அவர்களாகவே முடிவு செய்து அனுப்புவதிலே புலனாகிறது. (13:1 தொ). வேறு எந்தத் திருச்சபை அதிகாரிகளை யும் அவர்கள் கலந்து ஆலோசிக்க வில்லை. அதேபோல நற்செய்திப் பயணத் தின் விளைவுகளையும், பவுலும், பர்னா பாவும் அந்தியோகியத் திருச்சபையில் வந்தே தெரிவிக்கின்றனர் (13:1; 14:26 தொ). சிறிய ஆசியாவில் உள்ள இத்தகைய பரந்த மனப்பான்மையுள்ள புற இன அந் தியோக்கியக் கிறிஸ்தவர்களுக்குத்தான் பவுலும், பர்னபாவும் நற்செய்தி அறிவித் தனர். அதேநேரத்தில் புற இனக் கிறிஸ்த வர் யூத பழக்க வழக்கங்களை மேற்கொள் வது பற்றிய பிரச்சனை எழுகிறது. இச் சூழலில்தான் பேதுரு, அந்தியோகியா வில் புறவினக் கிறிஸ்தவர்களோடு நெருங் கிப்பழகியவர், எருசலேமிலிருந்து யூதக் கிறிஸ்தவர்கள் வந்தபோது அவர்களை விட்டு ஒதுங்கியதை மிகக் கடுமையாகப் பவுல் கண்டிக்கிறார் (கலா 2:11).

எருசலேம் சங்கத்தின்போது பவுலும், பர்னபாவும் அந்தியோகியத் திருச்சபை யின் பிரதிநிதிளாக அவர்களது கருத் தைப் பிரதிபலித்து, பிரச்னைகளுக்கு முடிவை எருசலேம் சங்கத்தின் சீலா, யூதா வழியாக அவர்கட்குத் தெரிவிக் கின்றனர். பவுல் தனது இரண்டாம் நற் செய்தி அறிவிப்புப் பயணம் முடிந்த பின்னர் இங்கு வருகிறார் (அ.ப. 18:22). இதுவரை அந்தியோக்கியா பவுலின் திருச்சபையாகவே இருந்து வந்திருக் கிறது. இதற்குப்பிறகு பவுல் இந்நகர் வந்ததாகக் கூறப்படவில்லை. ஆனால் அவர் நிறுவிய பிற சபைகளுக்குச் சென்றது பற்றிக் கூறப்படுகிறது.

**அந்தியோக்கியா** (ANTIOCH) (பிசிதியா)

பிசிதியா எல்லைக்கு அருகிலுள்ள, பிரிகியாவைச் சேர்ந்த நகரமாகும். ஆயினும் அ.ப. 13:13, இந்நகரம் பிசிதியா வைச் சேர்ந்ததென்று கூறுகிறது. இந் நகரம் முதலாம் செலூக்கு அல்லது முத லாம் அந்தியோக்கு என்பவரால் கி.மு. 350–ல் கிரேக்க நகரமாகத் தோற்றுவிக் கப்பட்டது. இது செலூக்கியர்களுக்கு எல்லைக் கோட்டையாகவும் பிசிதியா நாட்டு மலை ஏறும் வீரர்களிடம் இருந்து ஒரு பாதுகாப்பாகவும் அமைந்தது. மூன றாம் அந்தியோக்கு உரோமையரால் தோற்கடிக்கப்பட்ட பிறகு கி.மு. 189–இல் இது ஒரு விடுதலை பெற்ற நகரம் என்று உரோமை அரசரால் அறிவிக்கப்பட்டது. கலாத்திய அரசர் அமின்தாசு ஆண்ட கலாத்திய நாட்டுடன் இதை அந்தோணி கி.மு.36–இல் இணைத்தார்; அரசன் இறந்த பின்பு, இதனை உரோமையைச் சேர்ந்த கலாத்திய மாகாணத்தோடு சேர்த்துவிட்டார். இப்போது எபேசிலி ருந்து சீரியாவுக்குச்செல்லும் நெடுஞ் சாலையிலுள்ள முக்கிய உரோமைக் குடி யிருப்பாகியது. யூதர்களும் சேர்ந்த பல வணிகர்கள் இங்குக் குடியேறினர். யோசி பசின்படி கி.மு. 200–ஐ ஒட்டி 2000 யூத குடும்பங்கள் இங்கு குடியேறினர் என்று அறிகிறோம்.

இந்நகரத்தின் இடிபாடுகள் இன்றைய துருக்கியிலுள்ள யால்வாக்குக்கு அருகில் உள்ளன. கி.மு.1லும், கி.பி.1லும் கட்டப்பட்ட இந்நகர் அமைப்புகளை மிச்சிகன் பல்கலைக்கழகம் நடத்திய புதைபொருள் ஆராய்ச்சி கண்டுபிடித்துள்ளது. அவற்றில் நகர்ச் சுவரின் ஒருபகுதி, மேனே கடவுளின் கோயில், ஒரு நாடக அரங்கம், உரோமையின் நீர்வாய்களின் உடைந்த பகுதி, முந்நகரின் வாயில் முதலியவை அடங்கும்.

பூர்வீக மாநிலங்களான பிசிதியா, பிரிகியா இவைகளுக்கு இடையில் எல்லைப் புறத்தில் இந்நகரம் குறிப்பிடப்பட்டுள்ளது. சில சமயங்களில் இது பிசிதியா நாட்டு அந்தியோக்கியா என்று அழைக்கப்படுகிறது (அ.ப.13:14): ஆனால் ஸ்ட்ராபோ இதை பிசிதியாவிற்கு அருகில் இருந்தது என்று குறிப்பிடுகிறார்.

இதனுடைய பெயர் செசரியா குடியிருப்பு என்று மாற்றப்பட்டது. இருப்பினும் இதனுடைய பழைய பெயர் அகற்றப்படவில்லை. அகுஸ்துவின் வீரச்செயல்களின் அடையாளங்கள் இந்நகரில் வெளிப்படையாகக் காணப்படுகின்றன. அகுஸ்து காலத்தில் இவருக்கு வழிபாடு இந்நகரில் நிறுப்பட்டது. போர், மற்ற தேவைகளுக்காக இரண்டு புதிய சாலைகள் போடப்பட்டன. இவை அந்தியோக்கியாவையும், பிசிதியாவையும் இணைத்தன.

அந்தியோக்கியாவின் செபக் கூட்டத்தில், பவுல் யூதர்களுக்கும், கிரேக்கமொழி பேசிய புறவினத்தார்களுக்கும் போதித்தார் (அ.ப. 13:14–43). பவுலும், பார்னபாவும் தங்களுடைய முதல் அப்போஸ்தலப் பயணத்தின்போது இந்நகரில் வேதம் போதித்தனர். இவர்கள் முதலில் யூதர்களுக்கும் போதித்தனர்; ஆனால் அவர்கள் இவர்களைப் புறக்கணிக்கவே, புறவினத்தாருக்குப் போதித்து வெற்றி கொண்டனர். பொறாமை கொண்ட யூதர்கள் இவர்களை நகரைவிட்டு வெளியேற்றியது மட்டுமன்றி, இலிசித்திரா வரைக்கும் அவர்களைப் பின்சென்று, அவர்களைக் கல்லால் எறியும்படி மக்களைத் தூண்டிவிட்டனர் (அ.ப. 13:14.52; 14:19).

பவுல் தனது இரண்டாவது, மூன்றாவது வேதபோதகப் பயணத்தில் இந்நகருக்கு மீண்டும் வந்திருக்கலாம் 14:21; 16:6; 18:23). ஆனால் யூதர்களின் பகைமையும் தொந்தரவும் இருந்துகொண்டே இருந்தது. இதை திமோ 3:11–இல் சுட்டிக் காட்டுகிறார். இருப்பினும் இங்குதான் முதன்முறையாக கிரேக்கர்களான யூதர்களிடையேயும், புறவினத்தாரிடையேயும் தனது போதகத்தின் தர்க்கத்தை ஏற்படுத்தினார். ஐயப்பாடுடையவர்களாக இருந்தவர்களை ஆதரவாளராக மாற்றினார் (அ.ப. 13:48).

பைசான்டைன் காலத்திலும் இந்நகரம் முக்கியம் வாய்ந்ததாக இருந்தது. கி.பி. 4–ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு பேராலயம், அதன் பல வண்ண ஓவியங்களுக்கும் பைசான்டைன் கல்லறைகளுக்கும் சிறப்புப் பெற்றது. சிலுவைப்போர் காலத்திலும் இந்நகரம் ஒரு கோட்டையாக இருந்தது.

**அந்தியோக்கியாவின் கிண்ணம்**
(CHALIA OF ANTIOCH)

கிறிஸ்தவக் கலைக்குச் சான்றாக விளங்கும் இக்கிண்ணம் கி.பி. 1910–இல் அந்தியோக்கியாவில், அல்லது சீரியாவில் கண்டுபிடிக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. வெள்ளியினால் செய்யப்பட்ட இக்கிண்ணம், உட்பக்கம் சாதாரண கிண்ணம்போல குழிவாகவும், வெளிப்பகுதி பல வேலைப்பாடுகளுடனும், கீழ்ப்பகுதி சமமானஒரு தட்டைப்பகுதியாகவும் உள்ளது. வெளிப்பகுதியில் விலங்குகள், பறவைகள், அமர்ந்திருக்கும் வடிவில் இரு குழுவாகவுள்ள பன்னிருவர் எனப்பல உருவங்கள் இதில் உள்ளன. இக்கிண்ணத்தின் நடுப்பகுதி வளைந்திருப்பதால் அதன்மேல் பகுதி சிறிது வெடித்திருக்கிறது, இப்போது இது நியூயார்க்கில் உள்ள ஒரு துறவறமடத்தில் உள்ளது.

இது செய்யப்பட்ட காலம்பற்றி அதிக சர்ச்சையுண்டு. சிலர், இது முதல் ஆறு நூற்றாண்டுகட்கு உட்பட்டது என்று கருதுகின்றனர். எயிசென் என்பவர் இது இறுதி இராவுணவில் இயேசுவால் பயன்படுத்தப்பட்டிருக்கவேண்டும் எனவே

முதல் நூற்றாண்டைச்சேர்ந்தது என்கிறார். இவற்றில் உள்ள உருவங்கள் இளைஞரான இயேசு, நான்கு நற்செய்தியாளர்களுடனும், யாக்கோபு அவர் சகோதரர் யோவானுடனும், உயிர்த்த இயேசுபேதுரு, பவுல், யாக்கோபு, யூதா, அந்திரேயர் ஆகியோரை இவற்றில் இருப்பதாகக் குறிப்பிடுகிறார். பழங்கலையின் மாணவர்கள் யாவருமே இதனை மறுக்கின்றனர். ஏனெனில் அனைத்து புதிய ஏற்பாட்டு நூல்களும் கி.பி 64–க்குள் முடிக்கப்பட்டதாகக் கொள்ளும் கருத்தின் அடிப்படையில் அவற்றை எழுதி முடித்த ஆசிரியர்கள் இக்கிண்ணத்தில் பொறிக்கப்பட்டுள்ளனர் என்ற கருத்து ஏற்றுக்கொள்ளத்தக்கது அல்ல. இது 4 அல்லது 5–ம் நூற்றாண்டைச்சேர்ந்த கிறிஸ்தவக் கலையின் சிறந்த படைப்புக்குச்சான்றாகும்.

**அந்தியோக்கு** (ANTIOCHUS – *எதிர்ப்பவன்)*

*சீரியாவைச் சேர்ந்த செலூக்கிய அரச மரபின் அரசர்களுக்கு விருப்பமான பெயராகும். கி.மு. 280–65–க்கு இடையில் சீரியாவை ஆண்ட பன்னிரண்டு செலூக்கிய அரசர்கள் இப்பெயரைக் கொண்டுள்ளனர்.*

*1. முதலாம் அந்தியோக்கஸ் (கி.மு. 280–261):–* செலூக்கிய அரசர்கள் இரண்டாவது பெயரைச் சேர்த்துக் கொள்ளும் வழக்கப்படி, இவர் "விடுவிப்பவர்" என்ற பொருளுடைய சோத்தேர் பெயரைச்சேர்த்துக்கொண்டார். இவர் பெரிய அலக்சாந்தரின் தளபதிகளில் ஒருவரான முதலாம் செலூக்கு நிகாட்டோர் என்பவரின் மகனாக கி.பி. 324–ல் பிறந்தவர். இவர் தந்தைக்குப் பின் 280–இல் அரசனானார். சிறிய ஆசியாவிலுள்ள கால்லியர்களுக்கு எதிரான போரில் 261–ல் கொல்லப்பட்டார். இவர்களையும் கெல்தியர்களையும் அடக்குவதில் இவரது பெருங்காலம் செலவிடப்பட்டது. இதில்கொண்ட வெற்றிக்காக, மக்கதோனிய அரியணைக்கு உரிமை கொண்டாடிய போட்டியில் அடைந்த வெற்றிக்காகவும் இவருக்கு சோத்தர் என்ற பெயரைச் சூட்டிக்கொண்டார். பாலஸ்தீனமாகிய சூலே–சீரியாவைப் பொருத்தமட்டும், இவர் எகிப்தின் தோலமி பிலதெல்பூசுடன் போரிட்டார். ஆனால் இந்தப் பகுதிகளை வெற்றி கொள்ளவில்லை (முதல் சீரியப்போர்) மற்றபடி இவரைப்பற்றி ஒன்றும் அறிவதற்கில்லை.

*2. இரண்டாம் அந்தியோக்கு தெயோஸ் (கி.மு. 261–246) :–*

இவரது இரண்டாவது பெயர் "கடவுள்" என்று பொருள்படும். முன்வரின் மகன். இவர் தனது ஒன்றுவிட்ட தங்கையை மணந்தார். இவரைப்பற்றி அவதூறாகப் பலகாரியங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. இவர் ஒழுக்கம் கெட்டவர்; குடிகாரன்; கையாள்கள் வைத்து ஆண்டார். திமார்க்கு என்ற கொடியவரிமிருந்து மிலேசிய மக்களை விடுவித்ததால் அம் மக்களால் கடவுள் என்று பொருள்படும் தெயோஸ் என்ற பெயர் கொடுக்கப்பட்டார். அதன்விளைவாக சிறிய ஆசியாவிலுள்ள பல நகரங்களில் இருந்த யூதர்கள் குடியியுரிமைச் சலுகை பெற்றனர். இவர் அரியணை ஏறிய சிறிது காலத்திற்குப்பின் தோலமி பிலதெல்பூசால் தாக்கப்பட்டு (இரண்டாம் சீரியப்போர்) சிறிய ஆசியாவின் சிலபகுதிகளை இழந்தார். இப்போரைப்பற்றி அதிகமாகத் தெரியவில்லை. ஆனால் 250–இல் இப்போரின் ஒரு நிபந்தனையாக, இவர் தனது முதல் மனைவி இலாவோதிக்கவை நீக்கிவிட்டு தோலமியின் மகள் பெர்னீக்காவை மனைவியாக்கக் கட்டாயப்படுத்தப்பட்டார். இதை மிகவும் வெறுத்த இலாவோதிக்காவை அவளது கணவன் சமாதானப்படுத்த முயன்றபோது, அவருக்கு நஞ்சு வைத்துக் கொன்றதோடு, அவருக்கும் பெர்னீக்காவுக்கும் பிறந்த குழந்தையையும் கொன்றுவிட்டாள். தனது மகன் இரண்டாம் செலூக்குக்கு அரியணையை உரியதாக்கினாள். இதனால் சினம்கொண்ட, பெர்னீக்காவின் சகோதரன் தோலமி யூர்கேத்து பதிலடியாக சீரியாவின் மேல் படையெடுத்தார். பெர்னீக்காவுக்குச் சார்பாக எகிப்தியர் படை எடுத்தது பொய்க் கதையாக இருக்கலாம். ஆனால் உண்மையில் இரண்டாம் அந்தியோக்குவுக்குப் பின் இலாவோதிகாவின் இரண்டாம் செலூக்கு ஆட்சிக்கு வந்தான் (காண்க 2–ஆம் செலூக்கு).

தானி 11:16–18ஐ இந்த அரசனுக்குச் சாற்றிக் கூறுவது மரபாகும். இதன்படி தென் அரசரின் புதல்வி வட அரசனின் மனைவியாவாள். அவளோ, அவள் குழந்தையோ, அவளது கணவனோ உயிரோடு இரார். தானியேல் நூலில், கடந்த கால நிகழ்ச்சிகள் இன்னும் வருங்காலத்தில் நடப்பதாகப் பாவித்துக் கூறப்படுகின்றன.

3. பெரிய மூன்றாம் அந்தியோக்கு (223–187):- இரண்டாம் செலூக்குவின் இளைய மகனும் 2 –ம் அந்தியோக்குவின் பேரனுமாவார். அவரது அண்ணன் மூன்றாம் செலூக்குவுக்குப்பின் அரசனானார். பார்த்தியர்களுக்கு எதிராகக் கொண்ட வெற்றிக்காக "பெரிய" என்ற பட்டம் பெற்றார். 218–இல் எகிப்திய நான்காம் தோலமி பிலோபத்தோரால் தோற்கடிக்கப்பட்டார் (தானி 11:11). ஆனால் அடுத்த எகிப்திய குழந்தை மன்னன் காலத்தில் 198–இல் பாலஸ்தினத்தை வென்று தன் ஆளுகைக்குள் கொண்டு வந்தார் (11:13–16) இது யூதர்களுக்கு ஒரு முக்கிய, ஆனால் வருத்தத்திற்குரிய நிகழ்ச்சியாகும். ஏனெனில், இதுவரை சலுகையோடு யூதர்களை நடத்திய எகிப்திய தோலமியர்களோடு இருந்த தொடர்பு அறுப்பட்டுவிட்டது. இதுவரை யூதர்கள் அனுபவித்திராத கொடுமைமிக்க காலத்திற்குத் தொடக்கமாகும். 5–ஆம் தோலமியோடு செய்து கொண்ட உடன்படிக்கையின்படி, சமாதான அடையாளமான இந்த அந்தியோக்கு தன் மகள் கிளியோபத்திராவை 5–ம் தோலமிக்கு மனைவியாகக் கொடுத்தார் (11:17).

இவரது இறுதிக்காலம் சிறிய ஆசியாவிலும், உரோமையரோடும் போரிடுவதிலே செலவிடப்பட்டது. இருமுறை உரோமையால் அவர் தோற்கடிக்கப்பட்டார் (11:18–19; 1 மக் 3:6–8). 189–இல் தௌரஸ் ஆற்றுக்கு மேற்கான பகுதிகளின் உரிமையை விட்டுக்கொடுக்கும் உடன்படிக்கையில் கையொப்பமிட கட்டாயப்படுத்தப்பட்டார். இரு ஆண்டுகளுக்குப் பின் அர்மேனியர்களின் கிளர்ச்சியை அடக்க முயலும் போது கொல்லப்பட்டார்.

4. நான்காம் அந்தியோக்கு எப்பிபான் (175–164):- முன்னவரது இளைய மகன். இவர் அண்ணன் செலூக்கு பிலோபத்தோருக்குப் பின் முறையான வாரிசு இருந்தாலும் ஆட்சிக்கு வந்தான். புகழ்பெற்ற அல்லது வெளிப்பாடான கடவுள் என்று பொருள்படும் எப்பிபான் என்ற இரண்டாவது பெயரை எடுத்துக் கொண்டார். ஆனால் அவனது எதிரிகள் அவனை கிறுக்கன் என்று பொருள்படும் எப்பிமான் என்றழைத்தனர். ஒருவேளை இப்பெயரே இவருக்கு மிகவும் பொருத்தமானதாகும். வரலாற்றிலேயே மிகக் கொடுங்கோலர்களில் ஒருவர். இவர் தந்தையைப் போல் துணிவுள்ளவர். ஆனால் கிறுக்குப் பிடிக்கும் அளவுக்குத் தான்தோன்றித்தனமாய் நடப்பவர். இவரடியில் எருசலேம் யூதர்களும் மிகவும் துன்பப்பட்டனர். தனது நாட்டின் பகுதிகளை எல்லாம் ஒற்றுமைப்படுத்த கிரேக்க கலாச்சாரத்தைக் கட்டாயமாகக் புகுத்தினார். இது யூதர்களின் தீவிர எதிர்ப்பைக் கிளப்பியது.

எருசலேமயில் உரிமையுள்ள பெரிய குரு ஒனியாவுக்கும், அவரது சகோதரன் யாசோனுக்கும் இடையில் தலையிட அழைக்கப்பட்டார். அந்தியோக்கு, கிரேக்க மயமாக்குவதை ஆதரிக்கும் யாசோனுக்கு ஆதரவாகத் தீர்ப்பளித்தார். ஒனியா ஓட வேண்டியிருந்தது. ஒரு பெருந் தொகைப் பணமும் கொடுத்த யூதர்களிடையே கிரேக்க மயமாக்குவதை விரைவுபடுத்துவதாக வாக்குறுதி கொடுத்து யாசோன் பெரிய குருவானார் (2 மக் 4:7–20) இவர் அரசனுக்கு மட்டுமிஞ்சி செலவிட்டு வரவேற்பளித்தார். விரைவில் இவர் பதவி நீக்கம் செய்யப்பட்டு, இன்னும் அதிகப் பணம் அளிக்க வாக்களித்த மெனெலாவு பெரிய குரு வாக்கப்பட்டார். அரசன் இறந்துவிட்டான் என்ற வதந்தியை நம்பி, யாசோன் எருசலேமை முற்றுகையிட்டார். அப்போதுதான் எகிப்தில் ஒரு வெற்றிப் படையெடுப்பை முடித்திருந்த அரசன் சினம் கொண்டு, எருசலேமுக்குத் திரும்பி அதைக் கொடுமையாகத் தாக்கி ஆலயத்தைப் பங்கப்படுத்தி, அதன் கருவூலத்தில் உள்ளதையெல்லாம் கொள்ளையடித்தார் (1 மக் 1:28–29: 2 மக் 5:11–26). தன்னைப் போன்றே கொடுமையுள்ளம் படைத்த பிலிப்புவை ஆளுநகராக விட்டுச் சென்

றார். யூதர்களுக்கும் இவனுக்குமுள்ள உறவு நிலை 168–இல் புதிய இழிநிலைக் குத் தாழ்ந்தது. எகிப்தை மூன்றாம் முறை யாகத் தாக்கப்போய்க் கொண்டிருக்கும் போது, அலக்சாந்திரியா நகருக்கு வெளியே, இப்படையெடுப்பைக் கைவிட்டு விட்டு, எகிப்திய பகுதிகளை அனைத்தை யும் உரோமையரிடம் விட்டுவிட வேண்டு மென உரோமைத்தளபதி காயுஸ் போப் லியுலோனாஸ் கட்டளையிட்டார் (காண்க: தானி 11:30) இதைக் கேட்டுக் கோப வெறி யோடு பின்தங்கிய அந்தியோக்கு எருச லேமை அழித்து அதில் கிரேக்கர்களைக் குடியேற்ற தீர்மானித்தார். இந்த அலுவலை இருபதாயிரம் பேர் கொண்ட படையோடு அப்பொல்லோனியுவிடம் விட் டார். அப்பொல்லோனியு ஒரு ஓய்வு நாளில் எருசலேமுக்குள் நுழைந்து, ஆண் யூதர்களில் பெரும்பாலோரைக் கொன் றார். மீதிப் பேர் நகரத்திற்குப் புறம்பே யூதா மக்கபேயரோடு சேர்ந்துகொண்ட னர். பெண்களும் குழந்தைகளும் அடிமை களாக்கப்பட்டனர். எருசலேம் பெரிதும் பாழ்படுத்தப்பட்டது. அங்கு ஒரு காவல் படை நிலையம் கட்டுப்பட்டு, சீரியத் துருப்புக்கள் தங்கின. மெனலாவு பெரிய குருவாக இருந்தாலும், சமயப் பழக்க வழக்கங்கள் இல்லை.

தனது கிரேக்க மயமாக்கும் வேலை வெற்றி பெறுவதாக நம்பிக்கைக்கொண்ட அந்தியோக்கு ஒரு கொடிய சட்டதைக் கொண்டு வந்தான் (2 மக் 4:1). அதன்படி நாடு முழுவதும் ஒரே சமயமும், சட்டமும் பழக்க வழக்கங்களும் இருக்க வேண்டும். யூதர்கள் மட்டுமே இதை எதிர்த்தனர். ஆகவே ஓய்வு நாள் அனுசரிப்பு, விருத்த சேதனம், உணவு ஒழுங்குகள் ஆகியவற் றைக் கடைப்பிடித்தல் சாவைத் தண்டனை யாகக்கொண்டுவரும். ஆலயத்தில் தகனப் பலி பீடத்தில் சேயுசுக்குப் பீடம் கட்டி னார். இதுதான் தானியேல் குறிக்கும் "பாழாக்கும் அருவருப்பு" ஆகும் (தானி 11:31; 1 மக் 1:5). யூதர்கள் சட்டப்புத்தகத்தை வைத்திருந்தால் கொல்லப்பட்டனர். புற இனவிழாக்களில் பங்கெடுக்கக்கட்டாயப் படுத்தப்பட்டனர். பல பிரமாணிக்கமுள்ள யூதர்கள் மறைசாட்சிகளாக மரித்தனர். இறுதியாக 167–இல் அரசனை எதிர்த்து யூதர்கள் கிளர்ச்சி செய்ய ஆரம்பித்தனர். சீரிய படைகளுக்கும் யூதக்கிளர்ச்சியாளர் களுக்கும் கொரில்லாப் போர்கள் நடந்தன. 166–இல் மத்தத்தியா இறந்தார். அவர் மகன் யூதா மக்கபேயு கிளர்ச்சிக் கும் தொடர்ந்து தலைமை தாங்கினார். யூதா வெற்றிக்குமேல் வெற்றிகொண்டார். அந்தியோக்குவின் கவனம் பார்த்தியர், அர்மேனியர், கிளர்ச்சிகளில் திரும்பி யிருந்ததால், யூத கிளர்ச்சியை அடக்க தன் தளபதிகளை அனுப்பினார். அப் பொல்லோனியு, சேரோன், தோலமி, நிக்கனோர் கோர்க்கியா இறுதியாக அரச பிரதிநிதி இலிசியா ஆகிய அனைவரை யும் யூதா தோற்கடித்தார். ஆலயத்தை அதன் முந்திய மகிமையில் புதுப்பித்தார் (165–இல் தினப்பலி வழிபாடு மீண்டும் தொடங்கியது).

யூதாவின் வெற்றிகள், அந்தியோக் குவை மேலும் பைத்தியம் பிடித்தவனாக்கி யது. யூதாவை அவர் கட்டுப்படுத்தவே முடியவில்லை. ஏலிமாயிசில் உள்ள நானேயா கோவிலைக் கொள்ளையடிக் கும் முயற்சியில் வெற்றிபெறாது கீழ்த் திசை திரும்பினார். அவர் இறக்கும் முன் சிறிது காலத்திற்கு பாரசீகத்தில் உண்மை யிலேயே பைத்தியக்காரன் ஆனார் என்று கூறுப்படுகிறது (1 மக் 6:1–16).

பக்தியுள்ள யூதர்கள் இவரிடம் காட்டிய பேரச்சத்தை தானியேல் நூலும் மக்கபே யர் நூல்களும் பிரதிபலிக்கின்றன. அவர் பயங்கரமுடையவர். விண்ணகப் படை களுக்குச் சவால்விடும் சிறிய கொம்பா வார். தந்திரமுள்ளவர், ஏமாற்றுபவர், சதி காரர். மிகுந்த பேய்த்தன்மையுடையவர்.

5) ஐந்தாம் அந்தியோக்கு யூபாத்தோர் (164–162):- மேன்மைமிக்க தந்தையையுடைய வர் என்பது இரண்டாவது பெயரின் பொருள். சிறுவராக இருக்கும்போதே பதவிக்கு வந்தார். இவரது காப்பாளராக இலிசியா நியமிக்கப்பட்டார். 162–இல் இலிசியாவின் உதவியுடன், எருசலேமில் முற்றுகையிடப்பட்டிருந்த சீரியப்படைக்கு உதவ, ஒருபெரும்படையை எருசலேமுக்கு அனுப்பினார் (1 மக் 6:18–54). அதிகாரப்

பூர்வமான அதிகாரியும் பாதுகாப்பாளரு மான பிலிப்பு பாரசீகத்திலிருந்து திரும்பி விட்டான் என்று இலிசியா அறிந்தபோது விரைவாக யூதர்களோடு சமாதானம் செய்துகொண்டார் (6:55–60). பின் பிலிப்பு வை அந்தியோக்கியாவில் எதிர்த்துத் தோற்கடித்தார். வெற்றியின் மகிழ்ச்சி வெகுகாலத்திற்கு நீடிக்கவில்லை. இளைய அரசன் யூதர்களுக்குச் செய்து கொடுத்திருந்த சத்தியத்தைக் கடைப் பிடிக்கவில்லை. விரைவில் இலிசியா விடம் இளைய அரசரும் உண்மையான வாரிசும் 4–ஆம் அந்தியோக்குமுன் அரச னாக வேண்டியவனுமான தெமேத்திரியு சோத்தோரிடம் காட்டிக் கொடுக்கப்பட்டு 5–ஆம் அந்தியோக்குவும் இலிசியாவும் 162–இல் கொல்லப்பட்டனர்.

6. 6–ஆம் அந்தியோக்கு எப்பிபான் தியோனிசியு (145–142):- இவர் அலக் சாந்தர் பாலாசின் மகன். சிறுவனாக இருக்கையிலேயே தெமேத்ரியு நீகத்தோ ரின் ஆட்சிக் காலத்தில் தன் தந்தையின் தலைமை அமைச்சர்களில் ஒருவனான திரிபோவால் அரியணை ஏற்றப்பட்டார். தளபதிகள் ஆதரவு அளித்தனர். எருச லேமில் யோனாத்தானும் ஆதரவு அளித் தார். இவர் தன் அதிகாரத்தை உறுதிப் படுத்தத் தேவையான காலத்திற்கு மட்டும் தான் ஆட்சி செய்தார். பின்பு திரிபோ இவரைக்கொன்றுவிட்டு, பதவியைத் தான் எடுத்துக்கொண்டார் (1 மக் 11:39–40. 54;12:39;13:31). இவருடைய ஆட்சி, யூதத் தலைவரும் பெரிய குருவுமான யோனத் தானின் இறுதி ஆண்டுகளோடு ஒன்றித் திருந்தது.

7. 7–ஆம் அந்தியோக்கு சிதெதேஸ் (138–129):- பம்பிலியாவிலுள்ள சீதாவில் பிறந்து வளர்ந்தவர். இவர் புரவலர் உப காரி என்று பொருள்படும் யூர்கெத்து என்ற பெயரையும் கொண்டிருந்தார். முத லாம் தெமேத்திரியுவின் இரண்டாம் மகனும் இரண்டாம் தெமேத்ரியுவின் சகோதரனும் ஆவார். இரண்டாம் தெமேத்ரியுஸ் பார்த்தியர்களால் பிடிபட்ட பின் திரிபோ பதவிக்கு வந்தார். இவனுக்குப் பதிலடி கொடுக்கும் விதத் தில் 7–ஆம் அந்தியோக்கு, யோன தானுக்குப்பின் வந்த சீமோன் என்ற யூத பெரிய குருவுக்குப் பல சலுகைகளை அளித்தார் (1 மக் 15:1–14). தோர் என்ற இடத்தில் திரிபோவை அடைத்து வைத்த பின் இச்சலுகைகளை எல்லாம் நீக்கி விட்டார் (15:25–27). பெரிய குரு அரசனுக்கு எதையும் விட்டுக் கொடுக்கவில்லை. ஆனால் 135–இல் அவர் செலூக்கியர் களுக்குப் பிரமாணிக்கமான அவருடைய மருமகன்களில் ஒருவரால் கொல்லப் பட்டார் (16:11–18).

135–இல் அந்தியோக்கு எருசலேமின் மீது படையெடுத்துப்பிடித்து, அதன் சுவர் களில் ஒரு பகுதியைத் தரமட்டமாக்கி னார். யோவான், இரிக்கானுவை பெரிய குருவாக்கினார். யூதர்களுக்கும் மதச் சுதந்திரச் சலுகைகள் கொடுத்தாலும், பெரிய குருவைத் தன் கட்டுப்பாட்டில் வைத்திருந்தார். யூதாவைத் தன் ஆட்சிக் குள் நிலைப்படுத்திய பின்பு, தனது கவனத்தைப் பார்த்தியர்பால் திருப்பி னார். 130–இல் அவர்கள்மேல் வெற்றியும் கொண்டார். ஆனால் இது வெகு காலத் திற்கு நீடிக்கவில்லை. 129–இல் அவர்கள் 2–ஆம் தெமேத்திரியுவை விடுவித்தனர். அந்தியோக்கு பார்த்தியர்களுக்கு எதி ராகப் போரிட்டபோது மரித்தார்.

8. 8–ஆம் அந்தியோக்கு (125–96):- "கொக்கி மூக்குடையவன்" என்று பொருள் படும் கிரிப்பு என்ற பட்டப்பெயர் பெற்ற வர். இவர் 2–ஆம் தெமேத்திரியுவின் இரண்டாம் மகன். முதலில் அவபெயரு டைய கிளியோபத்திரா தேயா என்ற தன் தாயோடு சேர்ந்து ஆட்சிசெய்தார். சிறிது காலத்திற்குப்பின் இவரது பதவிக்கு இவரது ஒன்றுவிட்ட சகோதரன் 9–ஆம் அந்தியோக்கு சவால்விட்டார்.

9. 9–ஆம் அந்தியோக்கு (116–95):- இவரது இரண்டாவது பெயர் சிசிசேனு ஆகும். ஆனால் நாணயங்கள் பிலோதேத் தோர் என்ற பெயரைக் கொண்டுள்ளன. இவர் 8–ஆம் அந்தியோக்குவின் ஒன்று விட்ட சகோதரன். இருவருக்கும் நடந்த போட்டிகளில் முதலில் 8–ஆம் அந்தி யோக்கு வெற்றி பெற்றார். ஆனால் பின்பு நிலை மாறியது. ஆகவே இரு சகோத ரர்களும் சீரியாவைப் பங்கிட்டுக் கொண்ட

னர். இது உரோமையர் அங்கு காலூன்ற ஒரு வாய்ப்பை அளித்தது. இதுவே யோவான் இரிக்கானு தலைமையில், யூதர்கள் முழுச் சுதந்திரத்தை நோக்கி முன்னேற உதவியது.

*10. 10–ஆம் அந்தியோக்கு (94–83):- 9 – ஆம் அந்தியோக்குவின் மகன். 8–ஆம் அந்தியோக்குவின் மகனான 4–ஆம்* செலூக்குவை நாடு கடத்தினார். இவர் எகிப்திய இளவரசி சேலேனேயின் மூன்றாவது கணவன் ஆவார். இவள் முதலில் 8–ம் அந்தியோக்குவையும், பின்பு 9–ஆம் அந்தியோக்குவையும் மணந்தவள். 10–ஆம் அந்தியோக்கு, 8–ஆம் அந்தியோக்குவின் மற்ற புதல்வர்களிடமிருந்து எதிர்ப்பை எதிர் கொண்டார். இவர்களில் 11–ஆம் அந்தியோக்கும் உள்ளடங்குவார். இறுதியில் 10–ஆம் அந்தியோக்கு நாடு கடத்தப்பட்டு, போரில் கொல்லப்பட்டார். 8–ஆம் அந்தியோக்குவின் கடைசிமகன் 12–ஆம் அந்தியோக்கு ஆனார். செலூக்கியின் அரசமரபின் இறுதிக்காலம் உட்பூசல்கள் நிறைந்ததாக இருந்தது. 83–இல் அர்மேனிய அரசனான திகிரான் சீரியா முழுவதையும் தன் ஆட்சிக்குள் கொண்டு வர முடிந்தது. தனது பிரதிநிதி வழியாக 14 ஆண்டுகளுக்கு இப்பகுதியை ஆண்டார். இவரும் உரோமையரால் தோற்கடிக்கப்பட்டார். செலூக்கிய அரச மரபு கூட ஒரு சிறிது காலத்திற்கு உயிர் பெற்றிருந்தது.

*11. 13–ஆம் அந்தியோக்கு (66–65):-* இவர் பொதுவாக ஆசியத்திகு என்றழைக்கப்பட்டார். 10–ஆம் அந்தியோக்கு – சேலேனே ஆகியவர்களுக்குப் பிறந்தவர். இவர் அரசாள உரோமையர் அனுமதித்தனர். ஆனால் 65–இல் அதே குடும்பத்தைச் சேர்ந்த பிலிப்பு என்பவர் அரச பதவிக்கு உரிமை கொண்டாடினார். அதனால் வெற்றியடையவில்லை. 63–இல் உரோமைத் தளபதி பாம்ப்பே சீரியாவை ஒரு உரோமை மாகாணமாக்கி செலூக்கிய அரச மரபை முடிவுக்குக் கொண்டு வந்தார்.

12. நூமேனியுவின் தந்தை. இவர் 1 மக் 12:16; 14:22–இல் குறிக்கப்பெறுகிறார். இவ்ரைப் பற்றி மற்றெந்த முக்கியமும் இல்லை.

**அந்திரேயா** (ANDREW – *ஆண்மையுடையவர்)*

இவர் யோனாவின் மகன். சீமோன் பேதுருவின் சகோதரன். இது ஒரு கிரேக்கப்பெயர். யூதர்களால் பயன்படுத்தப்பட்டது. இவரது குடும்பம் பெத்துசாயிதாவில் வாழ்ந்து வந்தது (யோவா 1:44).

இவர் ஒரு மீனவர். திருமுழுக்கு யோவான் சீடர்களில் ஒருவர். பின் இயேசுவின் முதல் சீடர்களில் ஒருவரானார் (1:35–40). அப்போஸ்தலர் பட்டியலில் முதல் நால்வரில் ஒருவராக வருகிறார் (மத் 10:2–4; மாற் 3:16–19; லூக் 6:14–16; அ.ப. 1:13). பேருதுவையும், பிறகு பிலிப்புவையும் நத்தனியேலையும், இயேசுவுக்கு அறிமுகப்படுத்தியவரும் இவரே (யோவா 1:41–42). ஒத்தமை நற்செய்திகளின்படி, சீமோன், செபதேயு, அவரது மக்களாகிய யாகோபு, யோவான், ஆகியவர்களுடன் சேர்ந்து அந்திரேயா மீன் பிடிப்பவர் இவர். அவர்களுடன் சேர்ந்து கப்பர்நாகூமுக்கு அருகில் கலிலேயாக் கடலில் மீன் பிடித்துக்கொண்டிருந்தபோது அவருக்கு அழைப்பு வந்தது (மாற் 1:16–20; லூக் 5:10).

ஐயாயிரம் பேருக்கு உணவு அளிக்கப்படுமுன் அப்பமும் மீன்களும் வைத்திருந்த பையனைப்பற்றிக்கூறியவர் இவரே (யோவா 6:3). மற்றொரு சமயம் மெசியாவைப்பற்றி அறிய விரும்பிய கிரேக்கர்களின் விருப்பத்தை இவர்தான் இயேசுவுக்குச் சொன்னார் (12:22). இந்த இரு நிகழ்ச்சியுரைகளிலும் கிரேக்கப் பெயருடைய மற்றொரு சீடரான பிலிப்புவோடு தொடர்புபடுத்தப்படுகிறார். ஒலிவ மலை உரையில் எருசலேமின் அழிவு, இறுதிக் காலம் ஆகியவற்றின் பொருளை இயேசுவிடம் கேட்ட சீடர்களில் இவரும் ஒருவர் (மாற் 13:3). இதற்குப் பின் இவரைப்பற்றி ஒரு செய்தியும் கூறப்படவில்லை.

திருச்சபை பாரம்பரியப்படி சித்தியா இவர் பணிபுரிந்த முக்கிய இடங்களில் ஒன்று ஆகும். இதனால் இவர் உருஸ்யாவின் பாதுகாவலர் என அழைக்கப்படுகிறார். இவர் ஸ்காட்லாந்துக்கும், பாது

காவலர். அக்காயாவில் விசுவாசத்தைச் போதித்தபோது அங்குச் சிலுவையில் அறையப்பட்டு வேத சாட்சியாக இறந் தார் என்று அந்திரேயாவின் பணி என்ற அங்கீகாரம் பெறாத நூல் கூறுகிறது. பிற்காலப் பாரம்பரியப்படி, அவரது உடல் கான்ஸ்டாண்டிநோபுலுக்குக் கொண்டு செல்லப்பட்டது என்றும் பின்பு சிலுவைப்போர் வீரர்களால் இத்தாலியா வில் உள்ள அமால்பிக்கிற்கு மாற்றப் பட்டது என்றும் அறிகிறோம்.

**அந்திரேயாவின் பணி நூல்**
(ACTS OF ANDREW)

அப்போஸ்தலர்கள் பணிபற்றி எழுதப் பட்ட ஐந்து, திருமுறை சேராத நூல்களில் ஒன்று. இது லெயூசியஸ் கரினுஸ் என்பவ ரால் எழுதப்பட்டதாகப் பாரம்பரியமாக ஏற்றுக்கொள்ளப்படும். இது கி.பி. 3–ஆம் நூற்றாண்டிலோ அல்லது சிலர் கருது வதுபோல 190–ஐ ஒட்டியோ கிரிசிலோ அல்லது சிறிய ஆசியாவிலோ கிரேக்க மொழியில் எழுதப்பட்டதாகும். மேற்கூறப் பட்ட ஐந்து நூல்களில் மிக நீண்டது. கிரேக்க மொழியில் சில துணுக்குகளிலும் தூர் ஊரின் கிரெகோரியாரின் (540–594) இலத்தீன் சுருக்கத்திலுமே இப்போது உள்ளது. இது துறவுப் பிரிவினைக்காரர் களாலும் குறிப்பாக மனிகேயர்களாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. மனிக்கேயர், திருமுறைப் பட்டியலில் வரும் அப்போஸ் தலர் பணி நூலுக்குப் பதிலாக இதை ஏற்றுக்கொண்டனர்.

நூல், பேதுருவின் சகோதரர் கிரீஸ் மேற்கு ஆசியா வழியாகச் செய்த பயணங் களையும் அவர் செய்த புதுமைகளையும் வியத்தகு செயல்களையும் விவரிக்கிறது. அக்காயாவில் குருடனுக்குப் பார்வை அளிக்கிறார், இறந்தவனை உயிர்ப்பிக் கிறார், அநியாயத் தீர்ப்பைத் தடுக்கும் பொருட்டு நில நடுக்கத்திற்காக வேண்டு கிறார். பேய்களை ஓட்டுகிறார். நீர்க் கோர்வை நோயுடைய ஒரு பெண்ணைக் குணமாக்கி அவளை மனந்திருப்பிவிடு கிறார். நிசேயாவில் நகரத்தையும் நகர மக்களையும் வழியில் போவோர்களை கல் எறிந்து கொல்லும் பேய்களிடமிருந்து விடு விக்கிறார். நிக்கோமேதியாவில் இறந்து போன மனிதனை உயிர்ப்பிக்கிறார். இந்த விவரிப்பு லூக் 11–17க்கு ஒத்ததாக உள்ளது. திராக்கேயில் அவரும் அவரு டன் சென்ற தோழர்களும், தாக்க வந்த படையின் வாள்களிலிருந்து, வான தூது வர்களால் காப்பாற்றப்படுகின்றனர். துறவு நோக்கு குறிக்கோள், அவர் பிலிப்பையில் ஒரு திருமணத்தை நிறுத்தியதிலிருந்தும், ஆளுநராக இருந்த அகேயுத்தாசின் மனைவியான மக்ஸ்மில்லாவை அவரிட மிருந்து பிரிந்து கற்பு வாழ்வு வாழத் தூண்டியதிலிருந்தும் தெளிவாகிறது. பின் இந்த நிகழ்ச்சியின் தலையீட்டுக்காக அந்திரேயா சிறையிலடிக்கப்படுகிறார். பிறகு சிலுவையில் அறைந்து கொல்லப் படுகிறார். எக்ஸ் (X) வடிவமுள்ள சிலுவை யில் தொங்கிக் கொண்டிருந்தபோது, பல போதக உரைகளை வழங்குகிறார். இவை ஞானவாத இயல்புடையன. இவற்றின்படி மனுக்குலத்தின் உண்மையானதன்மை தூய ஆண் மீகமானதாகும். அதன்பல வீனம் தீமையிலிருந்தும் அமைதியை எதிர்த்து ஏமாற்றும் பகைவனிடமிருந்தும் வருகிறது. பாவத்திலிருந்து விடுதலை ஞான ஒளியூட்டுதலால் வருகிறது.

கிரெகோரியாரின் இலத்தீன் வாசகத் தின் முன்பகுதி அந்திரேய, மத்தியா ஆகி யோரின் பணி பற்றிய ஓர் எகிப்திய கதை யைக் கொண்டுள்ளது. இம்முன்பகுதி அந்திரேய செய்த பல அரும் நிகழ்ச்சி யுரைகளையும், மனிதர்களைச் சாப்பிடுப வர்களிடமிருந்து மத்தியாவைச் (சில வாசகங்களில் மத்தேயுவைக்) காப்பாற்றிய கதையையும் கொண்டுள்ளது.

**அந்திரேயா, பவுல் ஆகியோரின் பணிகள்**

இவ்விரு சீடர்களின் வீரச் செயல் களைக்கூறும் கதைகளுக்குப் பொதுவாகக் கொடுக்கப்படும் தலைப்பு. இப்போது இதன் வாசகம் காப்டிக் மொழியில் மட்டும் உள்ளது. இவற்றில் ஒன்றில் அந்திரேயாவும், பவுலும் இணைந்து காணப்படுகின்றனர். பவுல் கடலினுள் குதித்து கீழ் உலகைப் பார்க்கிறார். திரும்பி வந்து தாம் கண்டவற்றை அந்தி ரேயாவுக்குக் கூறுகிறார். யூதாசைச் சந்தித் ததாகவும், அவரது பரிதாபக் கதையையும்

கூறுகிறார். அவர் கிறிஸ்துவைக் காட்டிக் கொடுத்ததையும், மனம் வருந்தியதையும், சாத்தான் அவரை தவறான நெறியில் செல்லத் தூண்டியதையும், கிறிஸ்து அவரைச் சந்தித்ததையும், அவரது இறுதி முடிவையும் விளக்குகிறார். அதன்பின் இருவரும் ஒரு நகரத்தக்குச் செல்லுகின்றனர். அவர்களுக்கெதிராக அவற்றின் கதவுகள் மூடப்பட்டிருந்தன. பவுல் கீழுலகிலிருந்து கொண்டு வந்திருந்த கைத்தடியால் அடிக்கின்றார். கதவுகள் தரை புகுந்து மறைந்துவிடுகின்றன. அதன்பின் அவர்கள் பொய்த்தன்மைக் கொண்ட யூதர்களோடு போட்டியிடுகின்றனர். பின்பு 27 ஆயிரம் யூதர்களை மனம் திருப்புகின்றனர்.

**அந்திரேயா பற்றிய கதைத் துணுக்கு**
FRAGMENRTARY STORY OF ANDREW)

இப்பகுதி காப்டிக் மொழியில் மட்டும் தான் உள்ளது. அப்போஸ்தலர்களைப் பற்றியது. பாலைவனத்தில் ஒரு பெண் முறைகேடான பிள்ளையைக் கொன்று துண்டு துண்டாக வெட்டி ஒரு நாயைத் தின்னச் செய்கிறாள். அந்திரேயா தன் தோழன் பிலமோனோடு அவ்விடத்திற்கு வந்த போது, அந்த நாய் அப்பெண் செய்ததை எடுத்துக் கூறுகிறது. அவர் மன்றாடுகிறார். அதில் இயேசு கெபால் மலையில் செய்த புதுமையைச் சுட்டிக் காட்டுகிறார். அவர் மன்றாட்டின் பயனாக கொல்லப்பட்டக் குழந்தையின் துண்டுகள் கக்கப்பட்டு, ஒன்று சேர்க்கப்பட்டு உயிர் பெறுகிறது. உயிர்த்த பிள்ளை ஒரே சமயத்தில் அழுகிறது, சிரிக்கிறது.

**அந்திரேயா, மத்தியா, மத்தேயு, ஆகியோரின் பணிகள**

திருமுறை புற நூல்களில் பெயர் பெற்றது. அந்திரேயா மத்தியாவைக் காப்பாற்றியதை விவரிக்கின்றது. மத்தியா மனிதர்களை உண்பவர்களால் சிறையிலடைக்கப்பட்டிருந்தார். அம்மனிதர்கள் தங்கள் கைதிகளை 30–ஆம் நாள் குருடாக்கி தொங்கப்போட்டு உண்பார்கள். 27–ஆம் நாள் கிறிஸ்து அந்திரேயாவுக்குத் தனது நண்பனை மீட்கச் செல்லும்படி கூறுகின்றார். இயேசுவே படகு ஓட்ட அந்திரேயா அப்படகில் பயணம் செய்கிறார். பயணத்தின்போது ஓட்டுநர் கிறிஸ்துவே என்றறியாத அந்திரேயா கிறிஸ்து இதற்குமுன் செய்த வீரச் செயல்களையும் எடுத்து உரைக்கின்றார். தான் புறவினத்தார் கோயிலையும் பேசும் ஸ்பிக்னிக்கைப் பார்த்ததையும், ஆபிரகாம், ஈசாக், யாக்கோபைச் சந்தித்து உரையாடியதையும் கூறுகிறார் அவர்கள் நிலத்தை அடைந்ததும் அந்திரேயா மத்தியாவை மீட்கின்றார். தீயவர்கள் நிறைந்த அவ்விடத்தில் புதுமைகள் பல புரிந்து துன்பத்திற்கு ஆளாகின்றார். கிறிஸ்து அவரைக் காப்பாற்றுகிறார். சிறையிலிருந்த ஒரு கற்சிலையில் இருந்துவந்த நீர் அந்ந கரை அழிக்க இருந்த நிலையில் மக்கள் மனந்திருப்பினர். எனவே அவர் அந்நகரை மீட்கின்றார். அவர்களுக்கு ஞானஸ்தானம் கொடுத்து ஒரு கோயில் கட்டுவதற்கான திட்டத்தையும் வரைந்து கொடுக்கிறார். தூரசு நகர கிரெகோரியார் "அந்திரேயாவின் பணிகள்" என்ற தனது இலத்தீன் மொழி பெயர்ப்பின் தொடக்கத்தில் இக்கதையை வைத்துள்ளார். ஆனால் இது அதைச் சேர்ந்ததன்று. இந்தக் கதை எகிப்திலிருந்து வந்திருக்கலாம். கிரேக்க சீரிய மொழிகளிலும், ஒருபகுதி இலத்தீனிலும் காணப்படுகின்றது. இந்நூல் ஞானவாதிகளால் திருத்தப்பட்டது அல்லது சில பகுதிகள் நீக்கப்பட்டது என்பதற்கு ஆதாரமில்லை. எகிப்திய மடங்களில் கற்பனையாக உருவாக்கப்பட்ட பலவகையான விந்தையூட்டும் கதைகளில் ஒன்று. பலவடிவங்களில் மத்தியா பெயரும், மத்தேயு பெயரும் மாறி மாறி வருகின்றன. அதிகம் தெரியாத மத்தியாவுக்குப் பதிலாக நன்கு தெரிந்த மத்தேயுவைப் புகுந்த முயற்சித்ததின் விளைவாக இருக்கலாம்.

**அந்திரோனிக்கு** (ANDRONICUS – மனிதர்களை வெல்பவன்)

*1.* அந்தியோக்கு எப்பிபான் அரசியல் தூதராக சிலிசியாவுக்குச் சென்றபோது அவனால் அந்தியோக்கியாவிற்குப் பொறுப்பாக நியமிக்கப்பட்ட அதிகாரி *(2 மக் 4:31–38)*. உரிமை பரித்துக்கொண்ட பெரிய குரு மெனலாவுவால் கையூட்டுப் பெற்று இவர் உரிமையுள்ள, ஆனால்

பதவிநீக்கம் செய்யப்பட்ட தலைமைக் குரு, ஒனியாவைக் கொலை செய்தவர். இந்தத் துரோகத்திற்குக் கைமாறாக அந்தி யோக்கு திரும்பியபின் அவனால் கொலை யுண்டார். எகிப்தின்மேல் அந்தியோக்கு எப்பிபான் இரண்டாம்முறை படையெடுத் தபோது அங்கு கொல்லப்பட்டார் என்ற பொய்யான செய்திக்குப்பின், யூதேயாவில் நடந்த கலகங்களை அடக்கியபின், அவ ரால் கெரிசிம் மக்களுக்கு மற்றவர்களைக் காட்டிலும் அதிகத் துன்பம் கொடுக்கும் வண்ணம் நியமிக்கப்பட்டவரே இந்த அந்ரோனிக்கஸ் (2 மக் 5:23). காண்க மெனலாவு.

2. புனித பவுல் உரோமைக்கு எழுதிய நிருப்பத்தில்" என் உறவினரும் உடன் கைதிகளுமான அந்திரோனிக்கஸ், யூனியா ஆகியோருக்கும் எனது வாழ்த்துக் கள். அப்போஸ்தலர்களுள் இவர்கள் பேர் பெற்றவர்கள். இவர்கள் எனக்கு முன் கிறிஸ்தவர்கள் ஆனார்கள்" என்று கூறு கிறார் (உரோ 16:7). இவர்கள் இருவரும் யூதக் கிறிஸ்தவர்கள். ஒருவேளை தார்சு வில் உள்ள யூதச் சமூகத்தைச் சேர்ந்தவர் களாக இருந்திருக்கலாம். யூனியா பெண் பால் பெயராக உள்ளது. அதனால் யூனியா அந்த்ரோனிக்கசின் மனைவி யாகவோ, சகோதரியாகவோ, இருந்தி ருக்கலாம். ஆனால் சூழ்நிலை இருவரும் ஆண்களே என்று காட்டுகிறது.

**அந்துப் பூச்சி** (MOTH)

இது ஒருவகைப் பூச்சி. இது கம்பளி அல்லது மென் மயிரில் முட்டையிடு கின்றது. இதன் புழு அவற்றைத் தின்று வளர்க்கிறது. பெரும்பாலும் அவற்றிற்கு கடும் சேதம் விளைகின்றது. இந்த அழிவு விவிலியத்தில் சங் 39:11; ஏச 50:9; 51:8; ஒசே 5:12; மத் 6:19–20; லூக் 12:33; யோபு 4:19; 27:18 ஆகிய பகுதிகளில் குறிக்கப்படுகிறது.

மறை நூலில் அந்துப் பூச்சி உருவக மாகப் பயன்படுகிறது. அந்துப் பூச்சி பல வீனமானது. ஆனால் அதைவிட மனிதன் பலவீனம் ஆனவன் என்று மிகைப் படுத்திக்கூறப்படுகிறது (யோபு 4:19). அது போல், அந்துப் பூச்சி அரித்த ஆடை மனித வாழ்வின் பலவீனத்தையும், உறுதி யற்ற தன்மையையும் எடுத்துக்காட்டுகிறது (யோபு 13:28; ஏச 50:9; 51:8). இறைவனே அழிக்கும் அந்திப்பூச்சிக்கு ஒப்பிடப்படு கிறார் (சங் 39:11; ஒசே 5:12). அந்துப் பூச்சி யால் அரிக்கப்படும் ஆடை மனித உடமை களின் நிலையாமையைச் சுட்டிக்காட்டு கிறது (மத் 6:19–20; லூக் 12:33; யாக் 5:2).

**அந்தோனியா கோட்டை**

எருசலேம் கோவில் முற்றத்தின் வட மேற்கு மூலையில், அரசன் தங்குமிடமாக வும், வீரர்களின் வீடுகளாகவும், இருப்ப தற்காகப் பெரிய எரோதினால் மீண்டும் கட்டப்பட்ட அரச பாதுகாப்புக் கோபுரம். அந்தோனியா" என்பது விவிலியத்தில் காணப்படவில்லை. ஆனால் அ.ப.யில் மட்டும் "பாசறை" என்று குறிப்பிடப் பட்டுள்ளது (அ.ப. 21:34–37; 22:24; 23:10. 16.32).

1. வரலாறு:- இந்த குறிப்பிட்ட இடத்தி லுள்ள இந்தக் கோபுரமானது சாலமோன் காலத்தில் கட்டப்பட்டதாக இருக்கலாம். இவர் காலத்தில் எருசலேமைச் சுற்றியி ருந்த மதில்களில் வடக்கு மதில் கோவில் கட்டப்பட்ட மேட்டில் திரும்பியது. இந்தத் திருப்பு முனையானது சுற்றுப் புறங்களை விட உயரமான பாறை மேடு, ஆகவே இது கோபுரத்தைக் கட்டுவதற்குத் தகுந்த இடம். எதிரிகள் சாதாரணமாக வடக்கிலி ருந்து நகரத்தைத் தாக்கியதால் இந்தச் சுவர் மற்ற சுவர்களைப்போல அடிக்கடி பழுதுபார்க்கப்பட்டது. நாடு திரும்பிய பிறகு, இந்த இடத்தில் கோட்டை மதில் மறுபடியும் கட்டப்பட்டதென்று நெக 2:8 கூறுகிறது. இரிக்கானு என்பவரால் மறு படியும் கட்டப்பட்டு பெரிய ஏரோது ஆட்சிக்கு வரும்வரை மக்கபேயர்களால் ஆளப்பட்டு வந்தது. கடைசியாக இதை ஏரோது கட்டியபோது, தன்னுடைய நண்ப னும், புரவலனுமான மாற்கு அந்தோணி யின் நினைவாக இதற்கு"அந்தோனியா" என்று பெயரிட்டார். உரோமை ஆளுநர் கள் எருசலேமை ஆண்டபொழுது இது ஆளுநர் இல்லமாக மாறியது. கி.பி. 66–இல் யூதர்களால் செய்யப்பட்ட குழப்பத் தில் தித்துசினால் அழிக்கப்பட்டது.

2. அமைப்பு:- இந்தக் கோபுரமானது 75 அடி உயரமுள்ள செங்குத்தான பாறை

யின் மேல் போர் தந்திர முறையில் கட்டப் பட்டுள்ளது. இந்தப் பாறையின் மேற்புறம் சறுக்கும் கற்களால் பாவப்பட்டுள்ளது. இந்தப் பாறைக்கு மேற்கே தீரோபேயேன் பள்ளத்தாக்கும், வடக்கே பெசெத்தா மலையிலிருந்து இதனைப் பிரிக்கும் ஆழ மான பள்ளமும் உள்ளன. இரண்டையும் ஒரு சுவரும், அகழியும் பிரித்தன. பாறை யின் மேல் 60 அடி உயரத்திற்கு கற்சுவர் கள் இருக்கின்றன. ஒவ்வொரு மூலையி லும் இன்னும் உயரமான 4 கோபுரங்கள் உள்ளன. ஒவ்வொன்றும் 75 அடி உயர முடையது. ஆனால் கோவில் முற்றத்தை நோக்கி நிற்கும் தென்கிழக்கு கோபுர மானது 100 அடி உயரமுள்ளது.

யோசிபஸ் இதனுடைய பரந்த உள் பகுதியை அழகாக விவரிக்கின்றார். இது அரண்மனையாகவும், கோட்டையாகவும் பயன்பட்டது. இங்கிருந்து புறவினத்தா ரின் கோவில் முற்றத்திற்கு படிகள் நேராகச் சென்றன. அதே போல் அவசர காலத்தில் இஸ்ராயேல் முற்றத்திற்கு சுரங்கப்பாதை இருந்தது. இது சதுர மாகக் கட்டப்பட்டது. அநேகமாக மையத் தில் முற்றம் ஒன்று இருந்தது. இந்த முற்றத்தில் ஆளுநர் அரச முடிவுகளை வெளிப்படுத்தியிருக்கலாம். இவ்விடம் இயேசு பிலாத்துவின்முன் தோன்றிய கபத்தா என்ற இடமாக (யோவா 19:13) இருக்கலாம். இப்போதுள்ள சீயோனின் மாதா கன்னியர் மடத்தின் கீழும், கசை யடி கன்னியர் மடத்தின் கீழுள்ள பாவப் பட்ட தளம் இக்கோட்டையின் ஒரு பகுதி யாக இருக்கலாம்.

3. உபயோகம்:– தாவீது முதல் மக்க பேயர்களின் கடைசி அரசரான அந்தி கோனு வரை இந்த கோபுரம் வடக்குத் திசையில் வாழ்ந்த எதிரிகளை நோக்கி வெளி நோக்கியிருந்தது. ஆனால் பெரிய ஏரோது வந்ததிலிருந்து யூதர்களுக்குப் பாதுகாப்பாக உட்பக்கம் நோக்கி இருந் தது. இதன் மிக உயரமான கோபுரம் கோவிலின் முற்றங்களை நோக்கி இருந் தது. அங்கு 500 அல்லது 600 வீரர்கள் தங்கியிருந்தனர். கோவிலின் ஆடைகள் அந்தோனியாவில் வைக்கப்பட வேண்டும் என்று செய்து ஏரோது தலைமைக் குருவின் மேல் ஆதிக்கம் செலுத்தினார் அதே பழக்கம் மற்ற ஆளுநர்களால் பின் பற்றப்பட்டது. பிலாத்துவின் முன் இயேசு நின்றது, அநேகமாக உரோமை ஆட்சிக் குட்பட்ட இந்த இடத்திலிருந்திருக்கலாம்.

பவுல் யூதமதத் தலைவர்களுடன் தர்க் கித்த இடம்கூட இதுவேயாகும் (அ.ப. 21:37 –40). அந்தோனியாவிற்கு செல்லும் படி களில் நின்று, யூதர்களுடன்பேச பவுலுக்கு விசாரணைக்குழு உரிமை அளித்தது. இங்குதான் பவுல், பின்பு நூற்றுவர் தலை வனால் விசாரணைச் செய்யப்பட்டார் (22:23–29). பிறகு அந்தோனியாவிலேயே வைக்கப்பட்டு, மேல்விசாரணைக்கு செச ரியாவிற்கு அனுப்பப்பட்டார் (23:10. 16–24).

**அந்தோதியா** (ANTHOTHIJAH)

பென்யாமின் குலத்தைச் சேர்ந்த சாசாக்கின் புதல்வர்களில் ஒருவர் (1 நாள் 8:24).

**அந்தோனி** (ANTONY)

உரோமை அரசியல்வாதி, அக்டாவி யன், லெப்பிதஸ் ஆகியோரோடு மூவர் குழுவில் ஒருவர். இவர் பெரிய ஏரோ தைப் பாலஸ்தீனத்தின் மேல் சிற்றரச னாக நியமித்தார். அதற்குப் பதிலாக ஏரோது எருசலேமிலுள்ள கோட்டையை அரண் செய்து அதற்கு அந்தோனியாக் கோட்டை என்று பெயரிட்டார். இவர் கி.மு. 31–இல் அக்தியம் என்ற இடத்தில் அக்டாவியனால் தோற்கடிக்கப்பட்டார். ஒரு வருடத்திற்குப்பின் அவருடைய மனைவி கிளியோப்பத்திரா இறந்துவிட் டாள் என்ற பொய்ச் செய்தியைக் கேட்டுத் தற்கொலை செய்துகொண்டார். காண்க: அகுஸ்து சீசர்.

**அபகத்தா** (ABAGTHA – இறைவன் அருளியது, நற்பேற்றின் கொடை)

இவர் பாரசீக மன்னன் அகசுவேரு வால் அல்லது முதலாம் செருசுசால் (கி.மு. 485–465) பேரழகி வஸ்தியை அழைத்து வர அனுப்பப்பட்ட ஏழு அண்ணகர்களில் ஒருவர் (எஸ்த 1:10). இவர்கள் அந்தப் புறத்தின் காப்பாளர் களாகவும், அரசன் முன்னிலையில் ஏவலர்களாகவும் பணிபுரிபவர்கள். இவர் கள் வழக்கமாக வேற்று நாட்டிலிருந்து கொணரப்பட்டவர்கள்.

**அபக்கூக்கின் இறைவாக்கு நூல்**

இந்நூல் சிறிய இறைவாக்கினர் தொகுப்பில் எட்டாவது நூலாகும். 1. இறைவாக்கினர் அபக்கூக்கு: காண்க: அபக்கூக்கு – 1.

2. வரலாற்று, சமயப் பின்னணி:- இறைவாக்கினர் அபக்கூக்கு ஒரு பேரரசின் வீழ்ச்சியையும் அழிவையும், மற்றொரு பேரரசின் எழுச்சியையும் வளர்ச்சியையும் கண்டவர். கி.மு. 612–இல் பாபிலோனியர், மேதியர், சித்தியர் ஆகியோர் கூட்டணியாக அசீரியாவின் தலை நகரான நினிவேயைத் தாக்கி, அழித்து மண்மேடாக்கினர். சில அசீரியர்கள் தப்பி காரானுக்கு ஓடி, அரசை மீண்டும் நிறுவ முயன்றனர். கி.மு. 611–இல் காரானையும் பாபிலோனியர் கைப்பற்றினர். அசீரிய அரசன் சீரியாவுக்குத் தப்பி ஓடினார். இந்நிலையில், இதுவரை அசீரியர்களைப் பகைவர்களாகக் கருதி எகிப்தியர் அசீரியாவுக்கு உதவி செய்ய முன் வந்தனர். வலிமைமிக்க பாபிலோனியப் பேரரசைவிட, சிறு அரசாகிவிட்ட அசீரியா எகிப்துக்கு சாதகமானது என்று பாரவோன் நெக்கோ எண்ணினார். மேலும், சீரிய–பாலஸ்தீனத்தின் மேல் தனது மேலாண்மையை நிறுவத் திட்டமிட்டார். இதற்கு யூதாவின் அரசனான யோசியா எதிர்ப்புத் தெரிவித்தார். இவர் இஸ்ராயேல்–யூதா ஒன்றித்த அரசை நிறுவ எண்ணினார். அசீரிய அடிமைத் தனத்திலிருந்து எகிப்திய அடிமைத்தனத்துக்கு யூதாவும் இஸ்ராயேலும் மாறுவதை இவர் விரும்பவில்லை. ஆகவே, அசீரியாவுக்கு உதவி செய்யப் பாரவோன் வடக்கு நோக்கிப் படையெடுத்தபோது மெகிதோ என்ற இடத்தில் எகிப்தியரை யோசியா எதிர்த்தார். நடந்தபோரில் யோசியா தோற்றார்: கொல்லப்பட்டார். எகிப்தியர் வடக்கு நோக்கிப் படையெடுத்தனர் (2 அர 23:29–30). யோசியாவின் மகனான யோவகாசு யூதாவின் அரசனாகி மூன்று மாதங்களுக்கு ஆண்டான். இவனை எகிப்தியர் பதவி நீக்கம்செய்து, இவரது தம்பி யோயாக்கிமை அரியணையில் அமர்த்தினர்.

அசீரிய மேலாண்மையிலிருந்து எகிப்திய மேலாண்மைக்கு யூதா மாறியது. ஆனால், இந்நிலை வெகுகாலத்திற்கு நீடிக்கவில்லை. அசீரியப் பேரரசைச் சேர்ந்த பகுதிகளையெல்லாம் தங்கள் ஆட்சிக்குள் கொண்டுவரப் பாபிலோனியர் முயன்றனர். கி.மு. 605–இல் கார்க்கேமிசு என்ற இடத்தில் நடந்த போரில், எகிப்தியர் உறுதியாகத் தோற்கடிக்கப்பட்டனர். "எகிப்திய அரசன் இதன்பின் தன் நாட்டிலிருந்து வெளியேறவேயில்லை. ஏனெனில் "எகிப்திய நதிமுதல்" யூப்பிரதிசு நதிவரை எகிப்திய அரசன் கைவசம் இருந்த நாட்டையெல்லாம் பாபிலோனிய அரசன் பிடித்தார் (2 அர 24:7). சீரிய – பாலஸ்தீனம், பாபிலோனியப் பேரரசின் மேலாண்மைக்கு உள்ளாயிற்று, எவ்வித எதிர்ப்பும் இன்றி யூதா பாபிலோனுக்கு அடிமையாயிற்று. யோயாக்கிம் பாபிலோனிய மன்னனான நெபுக்கதுனேசாரின் சிற்றரசன் ஆனார்.

சிறிது காலத்திற்கு யோயாக்கிம் பாபிலோனுக்குப் பணிந்து நடந்தார். இவர், தனது தந்தைக்கு நேர்மாறானவர்; சமயப்பற்று அற்றவர். இவரது தந்தை செய்த சமயத் சீர்திருத்தங்களைத் தலைகீழாக்கினார். இவரது முன்னோர்களான மனாசே, ஆமோன் ஆகியோரைப் போல் நாட்டை ஆண்டார். இறைவாக்கினர் எரேமியாவை அவமதித்தார். அவர் அளித்த செய்தியை நிராகரித்தார். இவர் ஒரு சுயநலவாதி; உலகியல்வாதி; சுகபோகத்தை விரும்பினார். தனது மக்களின் நலத்தைத் தேடுவதைவிட, தனது அரண்மனையைப் பெரிதாக்கி அழகுபடுத்துவதில் கருத்தாக இருந்தார். இக்கொடியவன் மக்களைக் கொடுமைப் படுத்தினார். குற்றமற்றவர்களின் குறிப்பாக, இறைவாக்கினரின் இரத்தத்தைச் சிந்தினார் (எரே 22:13–19; 2 அர 24:4). தான் அரசுக்கு வந்த மூன்று ஆண்டுகளுக்குப் பின் பாபிலோனியர்களுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்தார். பாபிலோனிய வீரர்களும், ஏதோமியரும் மோவாபியரும், அம்மோனியர்களும் யூதாவைத் துன்புறுத்தினர் (2 அர 24:1–2). பின் பாபிலோனியர்படை கி.மு.598–இல் எருசலேமை

முற்றுகையிட்டது. இம்முற்றுகையின் போது யோயாக்கிம் இறந்தார். ஒரு வேளை கொல்லப்பட்டிருக்கலாம். இவருக்கடுத்து, இவனது மகனான யோயாக்கின் மூன்று மாதத்திற்குப்பின், பாபிலோனியரிடம் சரண் அடைந்தார். அவரும், அவரது அரசவையும் ஆற்றல் வாய்ந்த பதினாயிரம் வீரர்களும் பிற கலைவல்லுநர்களும் பாபிலோனுக்கு கைதிகளாகக் கொண்டு செல்லப்பட்டனர் *(24:14)*. எருசலேம் ஆலயம் கொள்ளையிடப் பட்டது. யோசியாவின் மற்றொரு மகனான செதேக்கியா பாபிலோனுக்குச் சார்பாகச் சிற்றரசன் ஆனார். கி.மு. 598–இல் நடந்த நாடு கடத்தல், பாபிலோ னிய நாடு கடத்தலின் தொடக்கமாகும். இந்தக் குழப்பமிக்க சூழ்நிலையில் அபக் கூக்கு தனது இறைவாக்குப் பணியினைச் செய்தார். அவரது கூற்றுக்கள் கி.மு. 605–இல் கார்க்கேமிசின் போருக்குப் பின் யோவாக்கிமின் ஆட்சிக்காலத்தில் அளிக் கப்பட்டிருக்கலாம். அவற்றில் சில கி.மு. 598–இல் எருசலேம் முற்றுகையிடப்பட்ட போது கூறப்பட்டிருக்கலாம். நாகூம், எரேமியா ஆகியோருக்கு அபக்கூக்கு சமகாலத்தவர் ஆவார்.

*3. நூல் தோன்றிய காலம்:–* அபக்கூக்கு எப்போது இறைவாக்கு பணி செய்தார் என்று தெளிவாக அறிவதற்கில்லை. யூதாவுக்கு இழைக்கப்பட்ட கொடுமைகள் *1:2–4; 1:12–17; 2:12–17*–இல் விவரிக்கப்படு கின்றன. இக்கொடுமைகளை யார் செய்த னர் என்று கூறக்கூடுமானால், இந்நூல் தோன்றிய காலத்தையும் நாம் ஓரளவு நிர்ணயிக்கலாம்.

*1:2–4*–இல் விவரிக்கப்படும் கொடுமை களைச் செய்தவர் அசீரியர்கள்தான் என்று வாதித்து, இந்நூல் கி.மு. 615–க்கு முன் தோன்றியிருக்கவேண்டும் என்பர் சில ஆய்வாளர்கள். ஆனால், இக்காலத் தில் அசீரியர்கள் தங்களுக்குள்ளே உள் நாட்டுப் போர்களை நடத்திக் கொண்டி ருந்தனர். பேரரசின் பிறபகுதிகள் மேல் கவனம் செலுத்தும் நிலையில் இவர்கள் இல்லை. கி.மு. 608–இல் மெகிதோவில் யோசியாவைத் தோற்கடித்தபின், எகிப்தி யர் யூதாவின் மேல் மேலாண்மை செலுத் தினர். இவர்கள் காலத்திலும் இந்நூல் தோன்றியிருக்க முடியாது. ஏனெனில் *1:2–4*இல் வரும் கொடுமைகள் ஒரு பேரர சின் கொள்கையாகத் தோன்றவில்லை. அவை சமயத்தையும் சமூகத்தையும் சேர்ந்தவையாகத் தெரிகின்றன. இவற்றை அன்னியர்தான் செய்திருப்பர் என்ற கருத வேண்டியதில்லை. அருவருக்கத்தக்க பழக்கங்களை யூதாவில் புகுத்திய (எரே *28:13–17*) யோயாக்கிமின் ஆட்சிக் காலத் திற்கு (கி.மு. 605–598) ஒத்ததாகத் தெரி கிறது. யூதாவின் தீயவர்களையும், உடன் படிக்கைக்கு எதிரான குற்றங்களையும் கண்டனம் செய்கிறார் இறைவாக்கினர். இக்கொடியவர்களுக்கு எதிராக கல்தேயர் களை எழுப்பப்போவதாக இறைவன் கூறுவதாக *1:6* குறிக்கிறது. தீயவர்களைத் தண்டிக்க இறைவனால் பயன்படுத்தப் பட்ட கருவியே இன்னும் அதிகமாகத் தீய வைகளைச் செய்வது கண்டு, இறைவாக்கி னர் திகைத்து, இறைவனிடம் முறையிடு கிறார். இத்தீமைகளின் விவரிப்பு *1:2–17* லும் அவர்களுக்கு எதிராகக் கேடுகள் *2:6–20* என்ற பகுதியில் கொடுக்கப்படு கின்றன. இவை ஒரு பேரரசின் கொள் கையாகத் தோன்றுகிறது. மேலும், கி.மு. 597–இல் எருசலேம் கைப்பற்றப்பட்டது பற்றிய குறிப்பு இல்லை.

இவற்றையெல்லாம் கருத்தில் கொண் டால், கார்கேமிசில் நெபுகத்துனேசார் அசீரியர்களையும் எகிப்தியரையும் இறுதி யாக வெற்றிகொண்ட கி.மு.605–க்கும் எருசலேம் முற்றுகையிடப்பட்டு பாபிலோ னியரால் முதல் முறையாகத் தோற்கடிக் கப்பட்ட கி.மு. 598–க்கும் இடையிட்ட காலத்தில் இந்நூல் தோன்றயிருக்கலாம். குறிப்பாக பாபிலோனியர் எருசலேமின் மீது படையெடுத்த கி.மு.599–98 ஆண்டு கள் – இந்நூலுக்கு வரலாற்றுப் பின்னனி யாக அமைகிறது. இது அறிவுக்கொத்த தாக இருக்கிறது. இதன்படி *1:2–4*–இல் வரும் கொடுமைகளுக்கு யூத ஆளுநர் களும் *1:12–17*–இல் வரும் கொடுமை களுக்குப் பாபிலோனியரும் காரணமா வர். இவ்வாறு நாகூமுக்குப் பின் அபக் கூக்கு இறைவாக்குரைத்தார், எரேமியா இவரது சமகாலத்தவர் ஆவார்.

*4.* திட்டமும் பொருளடக்கமும்:- அபக்கூக்கு இறைவனோடு உரையாடுதல் *(1:1–24)*:- I. நாட்டில் அநீதியும் கொடுமையும் மிகுந்துவிட்டது என்று முறையிட்டு ஆண்டவர் தலையிடவேண்டும் என்று இறைவாக்கினர் மன்றாடுகிறார் *(1:2–4)*. அதற்கு, தீயவர்களைத் தண்டிக்கக் "கொடுமையும் விரைவும் கொண்ட இனத்தாரான கல்லேயர்களை" அனுப்பப்போவதாக ஆண்டவர் கூறுகிறார் *(1:4–11)*. தீயவர்களைத்தண்டிக்க அவர்களைவிடத் தீயவர்களைப் பயன்படுத்துவதில் என்ன நீதி இருக்கிறது என்று இரண்டாம் முறையாக இறைவாக்கினர் முறையிடுகிறார் *(1:12–17)*. காவற்கோட்டையின்மேல், பதிலுக்கு ஆவலோடு காத்திருக்கும் இறைவாக்கினர், தீயவர்கள் தண்டிக்கப் பெறுவர், நேர்மை வெற்றி பெறும், ஆனால் நீதிமான் தன் விசுவாசத்தினால் வெற்றி பெறுவான் என்று பதில் பெறுகிறார் *(2:1–4)*.

II. கொடியவர்கள் மீதுவரும் அழிவு *(2:5–20)*:-

கல்தேயர்கள் மேல்வரவிருக்கும் அழிவு பற்றி ஐந்து இறைவாக்குகள் கூறப்படுகின்றன. யூதாவையும் அதைச் சுற்றி உள்ள நாடுகளையும் கொடுமைப்படுத்தியதற்காகவும், நேர்மையற்ற முறையில் பொருள் சேர்த்தற்காகவும், வன்முறைக் கொள்கை களைக் கடைப்பிடித்ததற்காகவும் முறை கேடான கொடுமைகளுக்காகவும், சிலை வழிபாட்டுக்காகவும் கல்தேயர்களை இறைவாக்கினர் கண்டனம் செய்கிறார்.

III. அபக்கூக்கின் மன்றாட்டு *(3:1–19)*:-

இச்சங்கீதம் யாவேயின் இறையாறறல் தோற்றத்தை விவரிக்கிறது. வரலாற்றில் யாவே செய்த ஆற்றல் மிகு செயல்களை உயிர்ச்சித்தரமாக விவரித்து, துன்பங்களின்மேல் இறைவன் கொள்ளும் வெற்றியில் தனக்குள்ள தளரா விசுவாசத்தை இறைவாக்கினர் பறைசாற்றுகிறார்.

5. இலக்கிய பண்புகள்:- நூலில் பல வகைப்பொருட்கள் காணப்படுவதிலிருந்து இந்நூலில் ஒன்றியந்த அமைப்பு இல்லை என்பர் சிலர். நூல் முழுவதையும் ஒரே ஆரியர்தான் இயற்றினாரா என்றும் கேள்வி எழுப்பப்படும். குறிப்பாக, மூன்றாம் அதிகாரம் தனிப்பட்ட இலக்கிய வடிவில் அமைந்துள்ளது. மேலும் நூலில் வரும் வழிபாட்டுக் குறிப்புகள், இப்பகுதி பிற்காலத்தில் சேர்க்கப்பட்டது என்று காட்டுகின்றன என்பர் சிலர். இக்குறிப்புகள் பொதுவாக இரண்டாம் தரமுடையவை. ஆசிரியரே இதை இயற்றவில்லை என்றாலும், இப்பகுதி அவர் செய்த அல்லது பயன்படுத்திய தொகுப்பைச் சேர்ந்ததாயிருக்கலாம். கும்ரான் ஏடுகளில் இந்த அதிகாரம் பற்றிய விளக்கவுரையில்லை; ஆகவே, இப்பகுதி அபக்கூக்கின் நூலைச் சேர்ந்ததில்லை என்று சிலர் கருதுவர். இவ்வாறு வாதிட வேண்டியதில்லை. கும்ரான் விளக்கவுரை மிட்ராசிக் இலக்கியத் தன்மையுடையது. தங்களுடைய கால நிகழ்ச்சிகளுக்கேற்றவாறு இந்நூலுக்கு விளக்கம் அளிக்கும் கும்ரான் துறவிகள், இப்பகுதிக்கு விளக்கவுரை அளிக்காமல் வெறுமனே விட்டிருக்கலாம். மேலும் இவ்விளக்கவுரைகளில் சிந்தனைத்தொடர்ச்சியில்லை. இப்பகுதி 2:4–ல் கூறப்பட்டிருக்கும் செய்திக்கு எடுத்துக்காட்டாக அமைந்திருக்கிறது. மேலும், எழுபது நூலிலும் மாசரோட்டிக் வாசகத்திலும் காணப்படுகிறது.

ஆனால் இச்சிறுநூல் மிகவும கவனமாய் திட்டம் செய்யப்பட்டு எழுதப்பட்டுள்ளது என்ற உணர்வை எழுப்பக்கூடியது. இறைவாக்கினருக்கும் இறைவனுக்கும் இடையே நிகழும் உரையாடலுடன் நூல் தொடங்குகிறது. இறைவாக்கினருடைய இருமுறையீடுகளுக்கு இறைவன் இருமுறையும் பதில் அளிக்கிறார். அடுத்து, இறைமக்களைக் கொடுமைப்படுத்துபவர்கள் மேல், ஐந்து கேடுகள் அறிவிக்கப்படுகின்றன. இறைவன் இறுதியில் வெற்றி பெறுவது கொண்டாடப்படுகின்றது. இறுதி அதிகாரத்தை அபக்கூக்குதான் எழுதினாரா என்பது பற்றி கருத்து வேறுபாடு உண்டு. வழிபாட்டுத் தொகுப்பிலிருந்து இப்பகுதி தரப்படுகின்றது எனச் சிலர் கூறுவர்: இப்பகுதி இந்நூலோடு இணைந்ததாகும். இல்லையென்றால், நூல்தனது ஒருங்கிணைந்த பண்பினை இழந்ததாகவே தோன்றும். மேலும், அது நூலின் மையக்கருத்தோடு ஒன்றியுள்ளது.

மொழியிலும் நடையிலும் சிந்தனையின் போக்கிலும் ஒற்றுமை இருக்கிறது. இவற்றைக் கருத்தில்கொண்டு, நூல் முழுவதையும் ஒரே ஆசிரியரே எழுதியுள்ளார் என்று நாம் கருதலாம்.

6. இறையியல் கருத்து: ஒருபிரச்சினையும் பதிலும்:-

வரலாற்றில் இறைவன் செயல்படும் முறைபற்றி அடிப்படைப் பிரச்சினைகளை எழுப்பி அவரோடு வாதிடும் சிலருள் அபக்கூக்கும் ஒருவராவார்.

நீதியும் நேர்மையுமுள்ள எல்லாவல்ல, நல்ல இறைவன், ஏன் தீயவர்களைத் தண்டிப்பதில்லை? ஏன் தீமை செழித்தோங்க விடவேண்டும்? நீதிமான்களை தீயவர்கள் கொடுமைப்படுத்த ஏன் அனுமதிக்க வேண்டும்?

இப்பிரச்சினை, தனி வாழ்விலும், சர்வதேச அளவிலும், எல்லாக் காலங்களிலும் எழும் பிரச்சினையாகும். பலரை குழப்பத்திற்கு உண்டாக்கக்கூடியது. திகைக்க வைக்க கூடியது. இதற்கு அறிவு சார்ந்த முறையில் அளிக்கப்படும் எப்பதிலும் முழுமையானதன்று. இவ்வாழ்வில் நமது அறிவுக்கு அப்பாற்பட்டதாகவே எக்காலத்திற்கும் இருக்கும். யோபு நூல் ஆசிரியர் இப்பிரச்சினையோடு போராடி அழுது புலம்புகிறார். அபக்கூக்கு நயமாக இப்பிரச்சினையை எழுப்பி, பொறுமையோடு பதிலை "எதிர்பார்த்துக் காத்திருக்கிறார்".

பதில், எதிர் நிலையான, நேர் நிலையான கூறுகளைக் கொண்டுள்ளது. தீயவர்கள் தண்டனை பெறுவர் என்பது எதிர் நிலைச் செய்தியாகும் "நேர்மையற்றவன் அழிக்கும் போவான்" (2:4); "தீமைப்பளுவிலிருந்து தப்ப தான் வாழுமிடத்தை மிக உயரத்தில் அமைக்கிறவனுக்கு..... ஐயோ கேடு" (2:9). தீமை, கொடுமை தன்னையே அழிக்கும் தன்மையுடையது. "நேர்மை யுடையவனோ தன் பற்றுறுதியால் வாழ்வு பெறவான்" (2:4) என்பது பதிலின் நேர் நிலைச் செய்தியாகும். உயிருள்ள இறைவன் பாறைபோன்றவர், உறுதியானவர், முழுவதும் நம்பத்தகுந்தவர். பற்றுறுதியானவர். அவரை நம்புகிறவர்களிடமும் இப்பண்புகள் காணப்படவேண்டும். இப்படிப்பட்டவர்கள் நிகழ்ச்சிகளின் பொருளை, எப்போதும் முழுவதும் அறியமுடியாமல் போகலாம். தாங்கள் எதிர்கொள்ளும் பிரச்சினைகளை அறிவார்ந்த முறையில் புரிந்துகொள்ளாமல் போகலாம். இறைவாக்கினரைப்போல் "ஏன்" என்று கேள்வி எழுப்பலாம்; "எவ்வளவு காலத்திற்கு"-என்று புலம்பலாம். குறிப்பிட்ட சூழ்நிலையில் இறைவன் செயல் ஆற்றும் முறையை மனிதருக்கு எண்பிக்க முடியாது போகலாம். ஆனால் அன்புறுதியால், பற்றுறுதியால், பிரமாணிக்கத்தால், வாழ்வர், தற்காலிகமாக, இறைபராமரிப்பு செயல் ஆற்றும் முறையை அவர்கள் கண்டுணர முடியாவிட்டாலும், அவர்கள் இறைவனையே பற்றிக் கொண்டு தொடர்ந்து செயலாற்றுகின்றனர். அவர்கள் பிடிவாதமிக்க விடாமுயற்சியுடன் இறைவனது வார்த்தையையும் வாக்குறுதிகளையும் நம்புகின்றனர். இத்தகையப் பற்றுறுதி அறிவு சார்ந்த ஒப்புதலைக் கொண்டதாயினும், அதைக்கடந்ததும் ஆழமிக்கதும் ஆகும். அந்நிலை ஆழ்ந்த நிலையான வாழ்க்கைப் போக்காகும்; இறைவன்பால் கொண்ட ஆழப்பதிந்த இதய நிலையாகும். அது பற்றுறுதியானவரை முழுவதும் பாதிக்கிறது. அவருக்குத் தனித்தன்மை அளிக்கிறது. எதிர்ப்பும் இன்னலும் எதிர்ப்பட்டுத் திகைப்புறும் போது அது பொறுமையாக மாறுகிறது. எதிர்ப்பார்ப்போடு காத்திருக்கிறது. சோதனைகளில் இறைவனைப் பற்றிக் கொண்டு நிலைத்து நிற்கிறது. "நீங்கள் இறைவனின் திருவுளத்தை நிறைவேற்றி, அவர் வாக்களித்ததைப் பெற்றுக்கொள்ள உங்களுக்கு மனஉறுதி தேவை...நீதி நெறியில் நடக்கும் என் அடியான் விசுவாசத்தால் வாழ்வு பெறுவான்" (எபி 10:36-38). பவுல் விசுவாசத்தால் ஏற்புடமை என்ற தனது போதகத்திற்கு ஆதரவாக அப 2:4 -ஐ எடுத்துக்காட்டுகிறார் (உரோ 1:17; கலா 3:11). அப்படிச் செய்யும்போது "விசுவாசம்" என்ற சொல்லுக்கு மறு விளக்கம் அளிக்கிறார். எபிரேய இறைவாக்கினருக்கும் விசுவாசம் பற்றுதியை, பிரமாணிக்கத்தை உணர்த்துகிறது; ஆனால், பவுலுக்கு அது கிறிஸ்துவில் இறைவனுக்கு

அளிக்கும் நம்பிக்கையையும் அர்ப்பணத்தையும் உணர்த்துகிறது. முன்னது பின்னதைச் சார்ந்துள்ளது. பற்றுறுதிமிக்க இறைவனில் விசுவாசம் கொண்டவன் பற்றுறுதியுள்ளவனாகிறான். நம்பிக்கைக்குரிய கிறிஸ்துவை நம்புபவன், நம்பிக்கைக் குரியவனாகிறான். இவ்வாறு "நேர்மையுள்ளவன் தன் பற்றுறுதியால், விசுவாசத்தால் வாழ்வு பெறுகிறான்".

7. அபக்கூக்கும் விவிலியப் பிற நூல்களும்:–

பிரச்சினையும், இறைவனோடு கொள்ளும் உரையாடல் வடிவமும் அபக்கூக்குக்கும் அவரது சமகாலத்தவராகிய எரேமியாவுக்கும் பொதுவாக உள்ளன. இருவரும் எழுப்பும் பிரச்சினையை யோபு நூல் நீண்டதாகவும் இலக்கிய நயத்தோடும் விவாதிக்கிறது.

காலத்தால் மட்டுமன்று, பொருளடக்கத்திலும், அபக்கூக்கு நாகூமை நெருங்கியவராக உள்ளார். இருவரும் இறைவனது மீட்பை அறிவிக்கும் இறைவாக்கினர் பரம் பரையைச்சேர்ந்தவர்கள். இவருடைய சிந்தனைப் போக்கும் உபாகமப் பாரம்பரிய வரலாற்றுப் போக்கைக் கொண்டுள்ளது: இருவருக்கும் வரலாற்றை சமயநோக்கிலிருந்து புரிந்துகொள்வதில் இறைவனது நீதியை மையப் பிரச்சினையாக அமைக்கிறது. அபக்கூக்கின் செய்தி காட்சி வடிவம் எடுக்கிறது. தனது பிரச்சினைக்கு இறைவனது சர்வவல்லமையில் விடைதேட முயலுகிறார். பழைய ஏற்பாட்டுப் பாரம்பரிய, சீனாய் மலையில் அருளப்பெற்ற இறையாற்றல் வெளிப்பாட்டோடு தொடர்பு காட்டுகிறார். ஆனால், இறைநீதியைத் தனது மக்களுக்கு ஒரு சவாலாகக் காட்டத்தவறுகிறார். இது அவரது இறையியலை வரையறை செய்கிறது. அதனால், பிரச்சினையின் ஆழ்ந்த கூறுகளோடு போராடி, அவற்றிற்குரிய வழி காண்பதைத் தடை செய்கிறது. புகழ்பெற்ற 2:4 என்ற கூற்றும் புதிய ஏற்பாட்டில் எடுத்து மறுவிளக்கம் அளிக்கப்படும் வரை (உரோ 1:17; கலா 3:1) நிறைபொருளையும், நிறைவேறுதலையும்பெறவில்லை எனலாம். அதுவரை, பொறுமையோடும் விசுவாசத்தோடும் நம்பிக்கையோடும் எதிர்பார்ப்போடும் இறைவாக்கினர் காத்திருக்கிறார். பிரச்சினை ஞான நூலிலும் புதிய ஏற்பாட்டிலும் அதற்குரிய பதிலைப் பெறுகிறது.

**அபக்கூக்கு** (HABAKKUK – தழுவுதல், தோட்டத்துச் செடி)

1. நாடு கடத்தலுக்கு முன் யோசியாவின் (640–609) இறுதிக்காலத்திலும் யோயாக்கிமின் (609–598) ஆட்சிக்காலத்திலும் வாழ்ந்த யூதாவைச் சேர்ந்த வழிபாட்டு இறைவாக்கினர். இவரது பெயரைத்தாங்கும் நூல் சிறிய இறைவாக்கினர் நூல்களில் எட்டாவதாக வருகிறது.

இப்பெயரின் தோற்றம் பொருள்பற்றி உறுதியாக ஒன்றும் கூறமுடியாது "தழுவுதல்" என்ற பொருளுடைய சொல்லிலிருந்து இப்பெயர் வரலாம் (2 அர 4:16; திருவுரை 3:5). வுல்கத்தா வடிவம் 'மற்போர்' என்ற பொருளைச்சுட்டுகிறது. நாத் என்பவர், "தோட்டத்துச்செடி" என்ற பொருளுடைய அக்காதியச் சொல்லிலிருந்து இப்பெயர் வந்திருக்கலாம் என்பார்.

இவர் யார், எங்கு வாழ்ந்தார் என்று ஒரு சிறிதே உறுதிசெய்யக்கூடும். இவரது நூலில் காணப்படும் வரலாற்றுச் சுட்டிக்காட்டல்களும் இலக்கியப் பண்புகளும் இவர் யூதாவில் 600–ஐ ஒட்டி பணி செய்திருக்க வேண்டும் என்று சுட்டுகின்றன. ஆகவே இவர் சூனாமியப் பெண்ணின் மகன் என்று கூறும் (காண்க: 2 அர 4:16 தொ) ராபிகளின் பாரம்பரியம் கால மயக்கமானதாகும். எழுபத நூல் வாசகத்தில் "பேல் தெய்வமும் நாகமும்" என்ற பகுதியின் (தானி 14) தலைப்பு லேவியின் இனத்தைச் சேர்ந்த எசுவாவின் மகன் அபக்கூக்கு இந்நூலை எழுதியதாகக் கூறுகிறது. இது அப 3–இல் வரும் சங்கீதத்தை வழிபாட்டில் பயன்படுத்தியதால் வந்த பாரம்பரியமாக இருக்கலாம். ஆனால் காலக்கணிப்புக் கூறுகள் இவரைத் தானியேலின் சமகாலத்தவராக ஆக்கத் தடை செய்கிறது.

2. தானி 14:33–39–இன்படி அபக்கூக்கு என்ற பெயருடைய ஓர் இறைவாக்கினர், சிங்கக் குகையில் இரண்டாம்முறை

அடைப்பட்டிருந்த தானியேலுக்கு உணவளிக்கும்படி, வான தூதனால் யூதேயாவிலிருந்து பாபிலோனுக்குத் தூக்கிச் செல்லப்பட்டார். தியோதோசியனின் மொழிபெயர்ப்பு இவரை இறைவாக்கினர் அபக்கூக்கோடு தெளிவாக ஒன்றுபடுத்தினாலும், எழுபது நூல் இவரை ஓர் இறைவாக்கினர் என்று கூட அடையாளம் காணவில்லை. பெரும்பாலான அறிஞர்கள், இது பிற்காலத்தில் சேர்க்கப்பட்டதாக ஒருவேளை அபகூக்கைப் பற்றி மற்றொரு நூலிலிருந்து சேர்க்கப்பட்டதாகக் கருதுகின்றனர்.

**அபானா** (ABANA – *கற்கள் நிரம்பிய)*

I. இது *சீரியா*நாட்டு ஆறுகளில் ஒன்று. இப்போது பாரதா என்றழைக்கப்படுகிறது. இது எதிர் லெபனோன் அல்லது கிழக்கு லெபனோன் மலைத்தொடரில் தொடங்கி தெற்கு–தென் கிழக்காகத் தமஸ்குவை நோக்கி ஓடுகிறது. பின் ஏழு முக்கிய கிளைகளாகப்பிரிந்து அந்த நிலப் பரப்பைச் செழிப்பாக்குகிறது. இந்தப் பாலைவனச் சோலைப் பகுதியில் தமஸ்கு உள்ளது. *2 அர 5*–இல் இறைவாக்கினர் எலிசா, சீரியா நாட்டு அரசனின் படைத் தலைவனும் தொழுநோயால் வருந்தியவனமான நாகமானுக்கு "நீ போய் யோர்தான் நதியில் ஏழு முறை குளித்தால் உன் உடல்நலம் பெறும், நீயும் தூய்மையாவாய்" என்று செய்தியனுப்பினார் *(5:10)*. அற்கு நாகமான் "நான் குளித்து உடலைத் தூய்மைப்படுத்தும் பொருட்டு இஸ்ராயேலில் உள்ள ஆறுகள் எல்லாவற்றையும் விட நல்ல தண்ணீரை உடைய தமஸ்கு நகர நதிகளான அபானா, பர்பார் என்ற நதிகள் எங்களுக்கு இல்லையா?" *(5:12)* என்று சொல்லி சினத்தோடு திரும்பிச் செல்ல முயன்றதாய் வாசிக்கிறோம். இப்படிக்கூறியபோது, சீரியா ஆறுகளின் தண்ணீர் தெளிவை மட்டுமின்றி, அவை அவனது நாட்டு மக்களுக்குப் புனிதமாக இருந்ததையும் மனதில் கொண்டிருக்கலாம். ஆனால் திரும்பி வந்து, இறைவாக்கினர் கூறியபடி செய்து குணமடைந்தான். காண்க: நாமான்

**அபிடேகம் செய்தல்**

I. இது ஒருவரின் தலைமேலோ உடலிலோ அல்லது ஒரு பொருளின் மேலோ எண்ணெயையோ, தைலத்தையோ பூசுதல் அல்லது ஊற்றுதலாகும். இப்பழக்கத்திற்குச் சமயச் சார்பற்ற முறையிலோ சமயச்சார்புடைய முறையிலோ பொருள் அளிக்கலாம். இப்பழக்கம் விவிலியக் காலம் முழுவதும் இஸ்ராயேலரிடையேயும், அவர்களுக்குப் புறம்பேயும் காணப்படுகிறது. இது இருவகைப்படும்.

*1.* சமயச்சர்பற்ற வழக்கு:- எண்ணெயைப் புத்துணர்ச்சி அளிக்கும் தைலமாகப் பயன்படுத்துவது பழங்கால உலகில் மிகவும் சாதாரணமாக இருந்தது. செல்வந்தர்கள் அன்றாட உடல் ஒப்பனையை வாசனை மிக்க ஒலிவ எண்ணெயையோ மற்ற வாசனைப் பொருள்களையோ தேய்த்துக்கொண்டனர். எபிரேயர் மகிழ்ச்சி விழாக்களின் காலங்களிலும் மகிழ்ச்சிக் கொண்டாட்டங்களிலும், அன்றாட உடல் ஒப்பனையிலும் எண்ணெய் பூசிக்கொண்டனர் *(உப 28:40; ரூத் 3:3; யூதி 16:8)*. எண்ணெய் பூசுதல் மகிழ்ச்சியை உணர்த்திற்று *(சங் 45:7)*. விருந்தாளிகளின் தலையில் தைலம் பூசப்பட்டது *(லூக் 7:46)*. ஆகையால் நோன்பு காலத்திலும் *(2 சாமு 12:20; மத் 6:17)* துக்க காலத்திலும் *(2 சாமு 14:2; தானி 10:3; யூதி 10:3)* இவை பயன்படுத்தப் படவில்லை. தைலம், எண்ணெய் ஆகியவற்றின் குளிர்ச்சி அளிக்கும் வலி போக்கும் விளைவுகள் அவற்றை மருந்துப் பொருளாகப் பயன்படுத்தச் செய்தன *(ஏச 1:6; எச 16:9; மாற் 6:13; திருவெளி 3:10)*.

*2.* சமய, வழிபாட்டுப் பூசுதல்:- இஸ்ராயேலில் எண்ணெய் பூசுதல் எப்படிப் பரிசுத்தப்படுத்தும் சடங்காகத் தோன்றியது, அதன் அடையாளப் பொருள் ஆகியவற்றின் வரலாற்றை உறுதியாகக்கூற முடியாது. பழங்கால மேற்காசியாவிலும், இஸ்ராயேலிலும், எண்ணெய் பூசும் சடங்கு ஆட்களையும் பொருள்களையும் வழிபாட்டுப் பணிக்குத் திருநிலைப்படுத்த பயன்பட்டது. கற்களும், தூண்களும் *(ஆதி.28:18; 31:13 35:14)*, பீடம் *(யாத்.29:36; எண்.7:10)* ஆலயப்

பாத்திரங்கள் (யாத் 40:10; எண் 7:1) இறைவன் உறைவிடம் அதன் பொருட்கள் (லேவி 8:10; எண் 7:1), பெட்டகம் (யாத் 30:26) முதலியவை தைலம் பூசப்பட்டு, சமய வழிபாட்டிற்காகத் திருநிலைப்படுத்தப்பட்டன: சமயச்சார்பு அற்ற காரியங்களிலிருந்து புறம்பாக்கப்பட்டன (யாத் 30:26–29).

குருக்கள் (யாத் 28:41; 29:7; லேவி6:13: 8:12; 21:10; எண் 3:3), இறைவாக்கினர்கள் (1 அர 19:16), அரசர்கள் (நீதி 9:15; 1 சாமு 9:16; 16:3; 10:1; 1 அர 1:39; 2 அர 9:6; 11:12; 19:10; 23:30) ஆகியோர் தைலம் பூசுதலால் அபிடேகம் பெற்றனர். விவிலியத்தில் இச்சடங்கின் பொருள் என்ன?

II எபிரேயர்களின் கருத்துப்படி, எண்ணெய் உடலில் ஊறி ஊடுருவுகின்றது (சங் 108:18); அது உடலுக்கு வலிமையும் நலமும் மகிழச்சியும் வனப்பும் தருகின்றது. எனவே, சமயத்துறையில் எண்ணெய் பூசுதல் மகிழ்ச்சியையோ, மதிப்பையோ காட்டும் அடயாளமாய் இருந்தது, புரிந்து கொள்ளத்தக்கது; மேலும், எண்ணெய் பூசுதல் குணப்படுத்தும் சடங்குமுறைகளிலும் திருநிலைப்படுத்தும் சடங்குமுறைகளிலும் பயன்படுத்தப்பட்டது.

அ. மகிழ்ச்சியை அல்லது மதிப்பை உணர்த்தும் அடையாளமாய் எண்ணெய் பூசுதல்:–

1. எண்ணெய், குறிப்பாக, நறுமணப் பொருள் கலந்த எண்ணெய், மகிழ்ச்சிக்கு ஓர் அடையாளம் (பழ 27:9; திருவுரை 9:8); ஆகவே, எண்ணெய் சிறப்பாக விழாக்களில் பயன்படுத்தப்பட்டது (ஆமோ 6:6). எண்ணெயே பூசிக்கொள்ளமாட்டாத நிலை ஒரு சாபம் (உப 28:40; மீக் 6:15); அந்நிலை உண்ணா நோன்போடு இணைந்து, துயருறுதலுக்கு அடயாளமாயிற்று (தானி 10:3; 2 சாமு 12:20). ஆயினும், இயேசு கட்டளையிட்டபடி, நோன்பு இருப்பவர் ஒரு விருந்துக்குச் செல்பவரைப்போன்று, தலைக்கு எண்ணெய் தடவிக்கொள்ள வேண்டும் (மத் 6:17): இவ்வாறு அவருடைய தவம் மக்கள் முன் வெளிப்படலாகாது.

எண்ணெய் பூசுதல், எருசலேமில் பெரும் விழாக்களுக்காக ஒன்று கூடிய இஸ்ரா்யேல் மக்களின் மகிழ்ச்சியை வெளிப்படுத்தும் அறிகுறியாகப் பயன்பட்டது (சங் 132:2); அல்லது நாடுகடத்தலுக்குப்பின் சீயோனில் அழுதுகொண்டிருந்தவர்களுக்குக் கிடைக்கப்பெற்ற ஆறுதலை உணர்த்தும் அறிகுறியாகப் பயன்பட்டது (ஏச 61:3): அவ்வாறே, எண்ணெய் பூசுதல் மெசியாவின் விருந்துபற்றிய வருணனையிலும் இடம் பெற்றது: இந்த மலை மேலே அவர்கள் மகிழ்ச்சியைப் பருகுவார்கள், அவர்கள் இரசம் அருந்துவார்கள்; இந்த மலைமேலே அவர்கள் நறுமணத் தைலத்தால் பூசப்பெறுவார்கள்" (ஏச 25:6 தொ). குறிப்பாக, மெசியா காலத்துச் சூழவையில் 'மகிழ்ச்சியின் தைலம்' என்ற சொற்றொடர் திரும்பத்திரும்ப இடம் பெறுகிறது (ஏச 61:3; சங் 44:7; எபி 1:9).

2. விருந்தினர் ஒருவர் மீது எண்ணெய் பொழிதல், அவரைச் சிறப்பிக்கும் அடையாளக் குறியாய் இருந்தது. எண்ணெய் பொழிதல் என்ற சொற்றொடர் சங்கீதங்களில் இடம் பெற்று, இறைவன் அளித்த நலன்களின் நிறைவளத்தினை உருவகப்படுத்துவதாய்த் தெரிகிறது: "என் எதிரிகள் காண, நீர் எனக்கு விருந்தொன்றைத் தயாரிக்கின்றீர்: என் தலைக்கு எண்ணெய் பூசுகிறீர்" (சங் 22:5: 91:10). நற்செய்தி ஏடுகள் இருமுறை குறிப்பிடுவதுபோல, பெண் ஒருத்தி இயேசுவுக்குத் தைலம் பூசித் தனிச் சிறப்பு அளித்தாள். இவ்வாறு குறிப்பிடப்படுகிற முதல் பெண், சீமோன் என்ற பரிசேயன் வீட்டில் தோன்றிய பாவியாவாள். இங்கே இயேசு சீமோனின் விருந்தினர்: எனினும் சீமோன் இயேசுவின் தலையில் எண்ணெய் சொரியவில்லை: அவ்வாறிருக்க இந்தப் பெண் இயேசுவின் பாதங்களைப் பரிமளத் தைலத்தால் பூசினாள் (லூக்.7:38.46). இரண்டாம் பெண் லாசரின் சகோதரி மரியாள்: இயேசு எருசலேமில் நுழைவதற்கு முந்தின நாள் இவளும் அவருக்கு விலையுயர்ந்த நல்ல பரிமளத் தைலம் பூசி, அவரைக் கண்ணியப்படுத்தினாள்; இத்தகைய பரிமளத்தைலம் பூசியது சீடர்களுக்கு, குறிப்பாக யூதாசுக்கு இடறலாய் இருந்தது (மத் 26:6–13 தொ; யோவா 12: 1–8). ஆனால் இயேசு மரியாள் செய்ததைப் பாராட்டியதோடு அதே வேளையில் அச்செயலுக்குப் புதியதொரு உட்பொருளை இறைவாக்காக முன்னறிவித்தார்;

இவ்வாறு அவர் முன்னறிவித்தது, இறந்தவர்களின் உடலைப் பரிமளப் பொருட்களால் பூசும் வழக்கத்தோடு தொடர்புடையது (மாற் 16:1); மரியாளின் செயல், இயேசுவின் சடலத்தை அடக்கம் செய்யும் சடங்குமுறைக்கு ஓர் அடயாளமாகவும் முன்னறிகுறியாகவும் அமைந்தது; இயேச சிலுவையில் இறந்த பின்னர் இந்தச் சடங்குமுறை நடைபெறும் (யோவா 19:40).

ஆ.நோயாளிகளையும் பேய்ப் பிடித்தவர்களையும் எண்ணெயால் பூசுதல்:–

1. தவிர, நோயாளிகளைக் குணப்படுத்துவதற்காகவும் எண்ணெய் பயன்பட்டது; சான்றாக, புண்களை ஆற்றுவதற்கு எண்ணெய் பயன்பட்டது (ஏச 1:6); இதை நல்ல சமாரியன் உவமையில் காணலாம் (லூக் 10:34); லேவி 14:10–32–இல் கண்டுள்ளதற்கு ஏற்ப, குணமடைந்த தொழுநோயாளிகளின்மீது எண்ணெய் தடவிச் சுத்திகரிப்புச்சடங்குகள் நடந்தன. கிறிஸ்து தம் சீடர்களை அனுப்பி, கடவுளின் அரசை அறிவிக்கச் செய்தபொழுது, தீய ஆவிகளை ஒட்டவும் நோய் பிணியெல்லாம் குணப்படுத்தவும் அவர்களுக்கு அதிகாரம் அளித்தார் (மத் 10:1; லூக் 9:1 தொ). சீடர்கள் திருப்பணியை மேற்கொண்டவர்களாய்ப் புறப்பட்டுச் சென்று, பிணியாளர் பலரை எண்ணெய் பூசி, புதுமையாய்க் குணப்படுத்தினார்கள் (மாற் 6:13). ஒருவேளை இயேசு கற்பித்தபடி, அப்போஸ்தலர்கள் இவ்வாறு பூசியிருக்கலாம்; எவ்வாறாயினும், அப்போஸ்தலர்கள் இப்படிச் செய்தது, திருச்சபையில் உள்ள நோயாளிகளை எண்ணெயால் பூசுதல் என்னும் சடங்கு முறைக்குத் தொடக்கமாகும். யாக்கோபுவின் திருமுகம் தரும் விதிமுறைப்படி, மூப்பர்கள் ஆண்டவர் பெயரால் நோயாளியின் மீது எண்ணெய் பூசுவார்களாக: "விசுவாசமுள்ள செபம் நோயாளியைக் குணமாக்கும். ஆண்டவர் அவரை எழுப்பிவிடுவார். அவன், பாவம் செய்தவனாயிருந்தால், மன்னிப்புப் பெறுவான்" (யாக் 5:15). நோய் பாவத்தின் விளைவு எனில், "ஆண்டவர் பெயரால்" எண்ணெய் பூசப்பெறுதல், நோயாளி "மீட்பினை"க் கைகூடச் செய்கிறது; இப்பூசுதல், கிறிஸ்து பாவத்தின்மீதும் சாவின்மீதும் பெற்ற வெற்றியில் நோயாளி "பங்கேற்கச் செய்கிறது; இவ்வாறு பங்கேற்பதால், நோயாளி குணமடையலாம் அல்லது சாவை எதிர்ப்படுவதற்காக ஆற்றலைப் பெருக்கிக்கொள்ளலாம்.

2. தீயஆவிகளை ஒட்டுதல், மாற் 6:13–ல் பிணியாளர்களைக் குணப்படுத்துவதோடு நெருங்கிப் பிணைந்துள்ளது; தீயஆவிகளை ஒட்டுதல், பிணியாளர்களைக் குணப்படுத்துதல் ஆகிய இரண்டுமே வியப்புக்குரிய அதிகாரங்களாகும்: இவை கடவுளின் அரசு வந்துவிட்டது என்பதற்கு ஓர் அறிகுறியாகும். இன்னும், காலப்போக்கிலே ஆங்காங்குள்ள பல்வேறு திருச்சபைகள், எண்ணெய் பூசும் சடங்கு முறைகளைத் திருமுழுக்குக்கு முன்னர் அதற்கு ஆயத்தம் செய்கிறவர்கள் மீது பேயோட்டும் சடங்குகளாகப் பயன்படுத்தின.

III. பூசுதல் – திருநிலைப்படுத்துதல்

பழைய ஏற்பாடு குறிப்பிடுகின்ற பூசுதல்கள் பெரும்பாலும் திருநிலைப்படுத்தும் சடங்குமுறைகளாகும்.

1. வழிபாட்டுக்குரிய ஒரு சில பொருட்கள், குறிப்பாக பலிபீடம், எண்ணெய் பூசித்திருநிலைப்படுத்தப்பட்டன (யாத் 29:36 தொ; 30:26–29; லேவி 8:1 தொ); இவ்வாறு எண்ணெய் பூசப்பெற்ற பலிபீடம் "பரிசுத்தத்திலும் பரிசுத்தம்" எய்தியது. இதை ஒத்ததும், மிகப்பழமையானதும், ஒருவேளை கனானியர்வழி வந்ததுமான சடங்குமுறை ஒன்றினை யாக்கோபு பயன்படுத்தியிருந்தார்: அவர் இரவில் கனவு கண்டபின்னர், ஒரு கற்றூணை நினைவுச் சின்னமாக நாட்டி, அதன்மேல் எண்ணெய் வார்த்து, இறைவன் பிரசன்னமாயிருக்கும் இடத்தைக் குறித்து வைத்தார்: இதிலிருந்தே "இறைவனின் இல்லம்" எனப் பொருள்படும் பெத்தேல் என்ற பெயர் தோன்றியது (ஆதி 28:18; 31:13; 35:14).

2. அரசருக்கு எண்ணெய் பூசுதல், திருநிலைப்படுத்தும் சடங்கு முறைகளிலே தனிச்சிறப்பு வாய்ந்தது. கடவுளின் மனிதர் எனப்படும் இறைவாக்கினர் அல்லது குரு ஒருவர் எண்ணெய் பூசினார். சாமுவேல், சவுலின் மீதும் (1 சாமு 10:1) தாவீதின்மீதும் (1 சாமு 16:13) எண்ணெய் ஊற்றி அவர்களை அபிடேகம் செய்தார்; இறைவாக்கினர் எலிசா இன்

னொரு இறைவாக்கினரை அனுப்பி, ஏசூவின் மேல் எண்ணெய் ஊற்றி அபிடேகம் செய்வித்தார் (2 அர 9:6). யூதா நாட்டு அரசர்கள் ஆலயத்தில் திருநிலைப்படுத்தப்பட்டார்கள். குரு ஒருவரால் எண்ணெய் வார்த்து அபிடேகம் செய்யப்பட்டார்கள்; சாலமோன் குரு சாதோக்கு என்பவரிடமிருந்து அபிடேகம் பெற்றார் (1 அர 1:39): யோவாசு, பெரிய குரு யோயதாவினால் அபிடேகம் பெற்றார் (2 அர 11:12). இவ்வாறு நடந்த அபிடேகச் சடங்கின் உட்கருத்து யாதெனில்: இறைவன் இம்மனிதர்களைத் தேர்ந்தெடுத்து, தம் மக்களை ஆள்வதற்கான கருவிகளாக்கிக் கொண்டார் என்பதனை வெளி அடையாளத்தால் சுட்டிக்காட்டுவதாகும். அரசர் கடவுளால் அபிடேகம் பெற்றவர். அபிடேகத்தினால் (எண்ணெய் பூசுதலால்) அரசர் இறைவனின் ஆவியில் பங்காளியானார்; இதற்குத் தாவிது எடுத்துக் காட்டாவார்: "சாமுவேல் கொம்பினால் செய்யப்பட்ட எண்ணெய்க் கிண்ணத்தை எடுத்து அவனுடைய சகோதரர் நடுவில் அவனை அபிடேகம் செய்தார். அன்று முதல் ஆண்டவருடைய ஆவி தாவீதின் மேல் இறங்கி எப்பொழுதும் இருந்தது" (1 சாமு 16:13). அபிடேகம் (எண்ணெய் பூசுதல்) அரசரை அவருடைய பணிக்குத் தகுதிப்படுத்தி, இறைவன் அவரைத் தம் ஊழியனாயிருக்கும்படித் தேர்ந்துகொண்டார் என்பதை வெளிப்டையாக அறிவித்தது. இதனால் புரிந்துகொள்ளக்கூடியது என்னவெனில்: முதன்முதலாக இஸ்ராயேலின் அரசரைப்பற்றி வழங்கப்பட்ட "கடவுளால் அபிடேகம் பெற்றவர்" என்ற பட்டப்பெயர் புறச்சமய அரசரான சைரசுக்கும் உருவகமாக பயன்படக் கூடுமாயிருந்ததாகும் (ஏச 45:1); ஏனெனில் சைரசு தான், தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் பாபிலோனில் நடத்திய அடிமை வாழ்வுக்கு முடிவுகட்டி, அவர்கள் இஸ்ராயேல் நாட்டுக்குத் திரும்பிப்போக ஒப்புதல் அளிக்கிறார்.

அரசருக்கு எண்ணெய் பூசுதல் (அபிடேகம் செய்தல்) என்ற கருத்து , தன் தனிச்சிறப்பு அனைத்தும் பெற்றது எப்பொழுதெனில்: அபிடேகம் பெற்றவர் என்பதை மெசியாவுக்கும் பயன்படுத்திய போதுதான். ஆண்டவரையும் அவர் அபிடேகம் செய்தவரையும் பற்றிக்கூறும் சங் 2 மெசியாவைக் குறித்துப் பேசுவதாய் யூத மரபிலும் கிறிஸ்தவ மரபிலும் விளக்கம் பெற்றது (அ.ப. 4:25 தொ), முதல் கிறிஸ்து வர்களைப் பொறுத்தளவில், மெசியா அல்லது அபிடேகம் பெற்றவர் என்ற பட்டப்பெயர் இன்னம் அரசுரிமை சார்ந்த பொருள் கொண்டிருந்தது. அந்தப் பட்டப் பெயர் மெய்யான பொருள் பெற்றது குறிப்பாக எப்பொழுதெனில்: கடவுளின் வலப்புறத்தில் இயேசு அரியணையில் அமர்த்தப்பெற்று கடவுளிடமிருந்து அக்களிப்புத் தைலத்தால் அபிடேகம் பெற்ற பொழுதுதான் (எபி1:8 தொ: சங் 44:6 தொ). அரசுரிமை சார்ந்த இந்த அபிடேகத்தால் இயேசு அந்தப்பட்டப் பெயருக்குரிய உரிமையோடும், அதன் முழுப் பொருளிலும் ஆண்டவரும் "கிறிஸ்துவும்" (மெசியாவும்) ஆனார் (அ.ப. 2:36; பிலி 2:11). "அபிடேகம் பெற்றவர்" என்ற இந்தப் பட்டப்பெயரைப் பொறுத்தளவில், பிந்திய கிறிஸ்தவ மரபு, கிறிஸ்து, அரசர் –குரு– இறைவாக்கினர் எனறளவில், மூவகை அபிடேகம் பெற்றார் என்று விளக்கம் கூறும்.

3. குருக்களும், மிகச்சிறப்பாகத் தலைமைக்குருவும்கூட, அபிடேகம் பெறுகின்றனர். ஆண்டவர் கட்டளையிட்டிருந்தபடி (யாத் 29:7), மோசே ஆரோனுக்கு அபிடேகம் அளிக்கிறார் (லேவி 8:12); தலைமைக் குருவுக்கென வகுத்தமைக்கப்பெற்ற விதிமுறைகளில், தலைமைக்குரு பல்வேறு சமயங்களில் "எண்ணெய்பூசித் திருநிலைப் படுத்தப்பெற்ற குரு" என அழைக்கப் படுகிறார் (லேவி 4:5; 16:32). இன்னும், மற்ற குருக்களான "ஆரோனின் புதல்வர்களுக்கும்" அபிடேகம் அளிக்கப்படுகிறது (யாத் 28:41; 40:13. 15; எண் 3:3). எனினும், பல்வேறான இந்த உரைப்பகுதிகள், நாடு கடத்தலுக்குப் பின்னர் உருவான குருக்களுக்கரிய சட்டத்தொகுப்பைச் சார்ந்தவை. எனவே, முடியாட்சியின் கீழ் அரசர் மட்டுமே அபிடேகம் பெற்றிருந்தார் என்று நம்பலாம்; (எருசலேமின்) இரண்டாம் ஆலயகாலத்தில் தலைமைக்

குரு மக்களின் தலைவர் ஆகிவிட்டதால், அவர் தம் பணிக்கென அபிடேகம் பெற்றார்: அவ்வாறே, விரைவில் குருக்கள் அனைவருமே அபிடேகம் பெற்றனர். முதல் நூற்றாண்டு நெடுகிலும் 'கும்ரான்' என்ற துறவு சமுதாயத்தினர் ஒரு மெசியாவை (ஓர் அரசரை) மட்டுமல்ல, "அபிடேகம் பெற்றவர்" ஒருவரையும் எதிர்பார்த்திருந்தனர்: இவ்வாறு அவர்கள் எதிர்பார்த்த அபிடேகம் பெற்றவர் லேவியர் குலத்தில் தோன்றிய மெசியா – குரு ஆவார்.

4. இறைவாக்கினர்கள் எண்ணெய் பூசி அபிடேகம் பெறவில்லை: இறைவாக்கினர்களை அபிடேகம் செய்தல் என்பது, சடங்கோடு அவர்களைப் பதவியில் அமர்த்துதலை உருவகமாகக் குறித்துக் காட்டுகிறது: எலியா எலிசாவை அபிடேகம் செய்ய உத்தரவு பெறுகிறார் ( *1 அர 19:16*); ஆனால் எலிசா அழைக்கப்படுகின்ற நேரத்தில் திசுபியரான எலியா எலிசாவின்மேல் தமது போர்வையைப் போட்டு, அவருக்கு தமது ஆவியில் பங்களிப்பதற்குமேல் வேறு எதுவும் செய்யவில்லை (*1 அர 19:19; 2 அர 2:9–15*). இத்தகைய இறைவாக்கினரின் திருப்பணியை விளக்குவதற்காகத்தான், ஏச 61–ஐ ஆக்கியவர் எழுதுகிறார்: 'இறைவனாகிய ஆண்டவரின் ஆவி என் மேலே; ஏனெனில் ஆண்டவர் என்னை அபிடேகம் செய்துள்ளார், அவர் என்னை எளியோர்க்கு நற்செய்தி அறிவிக்க அனுப்பினார்' (ஏச 61:1 காண்).

5. கிறிஸ்துவின் அபிடேகம்:– புதிய ஏற்பாடு, இயேசுவின் மண்ணக வாழ்வில் அவர் பெற்ற ஒரே ஒரு அபிஷேகத்தை மட்டும் குறிப்பிடுகிறது (அவர் விண்ணகத்தில் அரிணையில் அமர்த்தப்பெற்றபோது அவருக்கு நடந்த அரசுரிமை சார்ந்த அபிஷேகம் பற்றி, எபி 1:9); அந்த அபிடேகம் இயேசு திருமுழுக்குப் பெற்றபோது நடந்தது: "கடவுள் அவருக்குப் பரிசுத்த ஆவியையும் வல்லமையையும் அளித்து அபிடேகம் செய்தார்" (அ.ப. 10:38). இயேசுவே தமது திருப்பணியின் தொடக்கத்தில் (லூக் 4.18–21), ஏச 61 :1 என்ற உரைப் பகுதியைத் தம்மோடு தொடர்புபடுத்தி, தமது அபிடேகம் நற்செய்தி அறிவிப்பதற்காக இறைவாக்கினர் பெறும் அபிடேகம் போன்றது எனவிளக்குகின்றார். ஆனால், அப்போஸ்தலர்கள் காலத்துக் கிறிஸ்துவ சமுதாயம் இயேசுவின் வாக்குகளால் தூண்டப்பெற்று (மாற் 10:38; லூக் 12:50), கிறிஸ்து இறந்ததின் கண்ணோட்டத்தில் திருமுழுக்கினுக்குப் பொருள் விளக்கம் தர முற்பட்டது (அ.ப. 4:27; உரோ 6:3 தொ); இயேசு தாம் வெளிப்படையாக நடத்திய வாழ்வின் தொடக்கத்தில் பெற்றுக் கொண்ட திருப்பணி இன்னும் போதிக்கும் திருப்பணி மட்டுந்தான், ஊழியன்–இறைவாக்கினரின் திருப்பணி மட்டுந்தான் (ஏச 42:1–7); ஆனால், இத்திருப்பணி கல்வாரியிலே (1 யோவா 5:6 காண்) நடந்த துன்புறும் ஊழியனின் பலியில் நிறை வெய்த வேண்டுமாய் இருந்தது.

6. கிறிஸ்தவனும்கூட ஓர் அபிஷேகம் பெறுகின்றான் (2 கொரி 1:21; 1 யோவா 2:20.27); இவ்வுரைப்பகுதிகள் (திருமுழுக்கு அல்லது உறுதி பூசுதல் எனும்) ஒரு சடங்குமுறைப் பற்றிப் பேசுவதில்லை; மாறாக, இயேசு பெற்ற இறைவாக்கினர் பணி சேர்ந்த அபிஷேகத்தில் பங்கு பெறுவதைப்பற்றிக் பேசுகின்றன; அவ்வாறு பங்குபெறும் அபிஷேகம், விசுவாசத்தினால் பெறும் ஆன்மீக அபிடேகமாகும். திருமுழுக்குப் பெற ஆயத்தம் செய்கிறவர், திருமுழுக்கின்போது ஆவியின் முத்திரையைப்பெறுவதற்கு முன்னரே இறைவனால் "அபிடேகம்" பெற்றுவிட்டார் (2 கொரி 1:21; எபே 4:30); நற்செய்தியின் போதனை திருமுழுக்குப் பெற ஆயத்தம் செய்கிறவரை ஊடுருவச் செய்தவர் கடவுள்; ஆயத்தம் செய்கிறவர் தமது உள்ளத்தில் உண்மையின் வார்த்தையில் விசுவாசம் கொள்ளத் தூண்டியவரும் கடவுள் (எபே 1:13). ஆகவேதான், யோவான் இந்த உண்மையின் வார்த்தை கிறிஸ்துவிடமிருந்து வருவதை "அபிடேக எண்ணெய்" என்று அழைக்கிறார்; இந்த உண்மையின் வார்த்தை ஆவியின் செயலாதரவில் விசுவாசத்தினால் உள்ளார்ந்த கருவாகின்றது (யோவா 14:26; 16:13); 'அந்த அபிடேகம் நம்மில் நிலைத்திருக்கிறது (1 யோவா 2:27); அந்த அபிடேகம் நமக்கு உண்மையை

உணர்த்துகிறது' (2:20); அந்த அபிடேகம் நமக்கு எல்லாவற்றையும் பற்றிக் கற்பிக் கிறது (2:27). ஆகவே தான் யோவான், கிறிஸ்தவருக்கு ஒருவரும் கற்பிக்கத் தேவையில்லை என்று சொல்லக்கூடும்; இறைவாக்கினர்கள் புதிய ஏற்பாட்டுக் காலத்தில் எதிர்ப்பார்த்திருந்தது கைகூடு கின்றது (எரே 31:34; ஏச 11:9). உள்ளார்ந்த அபிடேகம் பற்றிய இந்தக் கொள்கை விளக்கம் கிறிஸ்தவ மரபிலும் கிறிஸ்தவ ஆன்மீக வாழ்விலும் முக்கியத்துவம் வாய்ந்தது. அலக்சாந்திரியா கிளமெந்து, கிறிஸ்துவைப் பின்வருமாறு புறச்சமயத்தி னருக்கு அழைப்பு விடுத்து வாக்களிக்கச் செய்கிறார்: "நான் விசுவாசத்தைலத் தால் உங்களை அபிடேகம் செய்வேன்;" புனித பெர்நார்தும் பின் வருவதைக்கடவுள் மக்களின் தனிச்சிறப்பாகவும் தனிப் பண் பாகவும் கருதுகிறார்: "அபிடேகம் அவர் களுக்கு எல்லாவற்றையும் கற்பித்து வருகிறது."

**அபிடேகம் பெற்றவர்** (THE ANOINTED)

பழைய ஏற்பாட்டின்படி இச்சொல் இஸ்ராயேலின் அரசனையும், பின் தலை மைக் குருவையும் குறித்தது. இவர்கள் எண்ணெய் பூசி அபிடேகம் செய்யப் பட்டனர். பழைய ஏற்பாட்டு காலத்திற்குப் பின் எல்லாவற்றிற்கும் மேலான நிரந்தர அரசனைக் குறித்தது. இதன் அரமேயிக் சொல்லான மெசியாவும் கிரேக்கச் சொல்லான கிறிஸ்து என்பதும் நன்கு அறியப்பட்டவையாகும்.

**அபதோன்** (ABADDON – கீழ் உலகம், பாதாளம்)

அழிவு, நரக தண்டனை என்று இச் சொல்லுக்குப் பலவாறு பொருள் கூற லாம். இந்த இடம் இறந்தோரின் ஆவிகள் தங்கியிருந்த இடமாகிய செயோல் என்ற பாதாளத்தோடும் (யோபு 26:6) சாவோடும் (28:22) கல்லறையோடும் (சங் 88:11) தொடர்பு உடையது. இவ்விடம் பிறர் மனை நயப்பவர்களையும் (யோபு 31:12) காம இச்சையுடையவர்களையும் (பழ 27:20) தண்டிக்கும், சுட்டெரிக்கும் இடம் ஆகும் (யோபு 31:12). இங்கு இறைவனது இறுதி யான இரக்கம் எடுத்து உரைக்கப்படுவ தில்லை, அவரது பிரமாணிக்கம் போற்றப்படுவதில்லை (சங் 88:11). இறை வன் ஒருவரே அறியும் ஞானத்தின் வழியை இவ்விடம் அறியாது (யோபு 28:22–23). ஆயினும் இந்த இடம் இறை வனது ஆட்சிக்கு உட்பட்டது. மனிதர்கள் இதயங்களில் இறைவன் முன் உள்ளது போல் (பழ 15:11), இந்த இடமும் அவர் கண்முன் பரவிக்கிடக்கிறது; அவரது ஆய்வுக்கு உட்பட்டது (யோபு 26:6).

ராபிகளின் இலக்கியத்தில் இவ்விடம் கேகன்னாவின் ஒரு பகுதியாகும். புதிய ஏற்பாட்டில் இந்த இடம் ஆட்தன்மைப் படுத்தப்பட்டு கிரேக்க மொழியில் அப் பொல்லியோன் என்று ஆட்பெயர் பெறு கிறது. திருவெளி. 9–இல் ஐந்தாம் வான தூதர் எக்காளத்தை ஊதியபின் பாதாளக் குழியின் தூதனான அப்பொல்லியோன் தோன்றுகின்றான் (திருவெளி 9:11). இவன் திய ஆவிகளின் அரன் ஆவான் இந் நூலில் இந்த இடம் கோரமாக விவரிக் கப்படுகிறது. இவ்விடத்திலே ஆவிகள் உலக இறுதிக்காலத்தில் வெட்டுக்கிளி களின் உருவம் எடுத்து இறைவனின் முத்திரை இல்லாதவர்களை மட்டும் சித்திரவதை செய்யும். காண்க: அப்பொல லியோன்.

**அபாரீம்** (ABARIM – அப்பால் உள்ள பகுதி)

இது கிழக்கில் மோவாபு மேட்டுச் சம வெளியும் மேற்கில் சாக்கடலுமாக அமை யும்படி பிரிக்கும் மலைப்பகுதியாகும் (எண் 27:12; 33:47–48; உப 32:49). யோர் தானுக்கு மேற்கிலுள்ள மக்களால் அபா ரீம் என்றழைக்கப்பட்ட இந்த மலைத் தொடர் மோவாபு மேட்டுச் சமவெளியின் செங்குத்தான ஓரமாகும். இது மேட்டுச் சமவெளியிலிருந்து 300–லிருந்து 600– அடி உயரமும் சாக்கடலின் மட்டத்திலி ருந்து 400 அடி உயரமும் உடையது. இதன் பெயர் பெற்ற முக்கிய சிகரங்கள் நெபோ (உப 32:39) பிசுகா (34:1) பேகோர் (எண் 23:28) ஆகியவையாகும்.

பாலைவனத்தில் அலைந்து திரிந்த போது, இஸ்ராயேல் எமோரியர்களைத் தோற்கடிக்கு முன் இந்த மலைப் பகுதி யில் பல இடங்களில் கூடாரம் அடித்துத் தங்கினர் (எண் 21:10–20; 33:34). அலமோன் –திபிலாதயிமிலிருந்து புறப்பட்டு, மோ

வாபு சமவெளியை அடையுமுன் அபாரீம் மலைப்பகுதியில் தங்கினர் (எண் 34:47–48). அதன் முக்கியசிகரங்களில் ஒன்றான நெபோவிலிருந்து மோசே, தான் இறக்கு முன் வாக்களிக்கப்பட்ட கானான் நாட்டைப் பார்த்தார் (எண் 27:12; உப 32:49). கி.மு. 597–க்குச் சிறிது முன் அமைக்கப்பட்ட பாடல் பகுதியில் (22:20–23)–ல் லெபனோன், பாசான், அபாரீம் ஆகிய மலைகளிலிருந்து எருசலேம் தன் அழிவை அறிவிக்கவும், அழுது புலம்பும் படியும் அதை உருவகமாக அழைக்கிறார் எரேமியா.

**அபி** (ABI – *என் தந்தை)*

இது அபியா என்ற பெயரின் சுருக்கமாகும். அபி கி.மு. 8–ஆம் நூற்றாண்டின் சிறப்பு வாய்ந்த அரசியாவாள். இவள் செக்கரியாவின் புதல்வி. ஆகாசின் மனைவி. ஆண்டவர் திருமுன் நேர்மையுடன் நடந்த எசக்கியாவின் தாய் (2 அர 18:2).

**அபி–அலபோன்** (ABI-ALBON – *வலிமை மிக்க தந்தை)*

தாவீதின் பொறுக்கியெடுத்த புகழ் பெற்ற வீரர்களைக் கொண்ட மூன்றாம் துணைப்படையில் முப்பது வீரர்கள் இருந்தனர். இவர்களில் அபி–அலமோன் ஒருவராவார். இவர் வட யூதாவிலுள்ள அராபா அல்லது பேத் – அராபா என்ற சிற்றூரிலிருந்து வந்தவர். அர்பாத்தியன் என்றழைக்கப்பட்டார் (2 சாமு 23:31). இதற்கு இணையான 1 நாள் 11:32–இல் இவன் "அர்பாத்தியனான அபியேல்" என்றழைக்கப்படுகிறார். அபி–அலபோன் என்பது சாலபோன் என்றபெயரின் பிழை வடிவமாக இருக்கலாம் (2 சாமு 23:32). காண்க: அபியேல், சாலபோன்.

**அபிகயில்** (ABIHAIL – *தந்தை வல்லமைமிக்கவர்)*

1. மெராரீ குடும்பத்தைச் சேர்ந்த ஒரு லேவியர். சூரியேலின் தந்தை (எண் 3:35).

2. யூதாவைச் சேர்ந்த, எரகுமேலைச் சேர்ந்த அபிசூரின் மனைவி (1 நாள் 2:29).

3. காது குலத்தைச் சேர்ந்தவர். இவர் ஏழு புதல்வர்களுக்குத் தந்தை (1 நாள் 5:13–14).

4. தாவீதின் சகோதரன் எலியாபுவின் புதல்வி. தாவீதின் மகன் எரிமோத்தின் மனைவியாவாள். இவர்களின் மகள் மகலாத்து யூதாவின் அரசன் இரகபெயாமின் மனைவியானாள் (2 நாள் 11:18). இவ்வாசகம் தெளிவாக இல்லை.

5. அரசி எஸ்தரின் தந்தை மோர்தெக்காயின் சிறிய தகப்பன் (சகோதரன்). (எஸ 2:15; 9:29).

**அபிகாயில்** (ABIGAIL – *என் தந்தை மகிழ்ந்தார்)*

1. மாகோனைச் சேர்ந்த செல்வமிக்க இடையனான நாபாலின் மனைவி பிற்காலத்தில் தாவீதின் மனைவியானார். தாவீது இவருக்கும் இவர் மந்தைக்கும் பாதுகாப்பு அளித்து வந்திருந்தும், கர்மேலைச் சேர்ந்த நாபால் வாழ்த்துக் கூற வந்த தாவீதின் தூதர்களை அவமதித்தது மன்றி, மந்தைக்கு மயிர் கத்தரிக்கும் விழாவுக்கும் தாவீதை அழைக்க மறுத்து விட்டார். ஆகவே, தாவீது அவரைப், பழி வாங்கத் திட்டமிட்டார். அதை அறிந்த நாபாலின் அழகும் விவேகமும் உள்ள மனைவி அபிகாயில், தன் கணவனுக்குத் தெரியாமல் பெரும் காணிக்கை களோடு சென்று தாவீதுக்கு வணக்கம் செலுத்தித் தன் கணவன் முட்டாள்தனமாய் நடந்து கொண்டதற்கு மன்னிப்புக்கேட்டுத் தன் கணவனைத் தாவீது கொல்லக்கூடாது என்றும், அதற்கு மாறாக, தன் காணிக்கைகளை ஏற்றுக் கொள்ளவேண்டும் என்றும் நயமாக கேட்டுக்கொண்டாள். அபிகாயிலின் அழகாலும், விவேகமிக்க பேச்சாலும் அமைதி அடைந்த தாவீது நாபாலின் மீது பழிவாங்கும் எண்ணத்தைக் கைவிட்டார். அவளுடைய காணிக்கையை ஏற்றுக்கொண்டார் (1 சாமு 25:2–35). அடுத்தநாள் காலையில் அபிகாயில் இவற்றை எல்லாம் தன் கணவரிடம் கூற அவர் கல்லாய்ச் சமைந்துபோனார். பத்துநாட்களுக்குப்பின் இறந்து போனார் (25:36–39). பின்பு தாவீது அபிகாயிலைத் தன் மனைவியாக்கிக் கொண்டார் (25:40–43). அவள் அவரோடு காத்தில் வாழ்ந்து வந்தாள். சவுலுக்கு எதிராக போர் செய்யத் தாவீதும் அவரோடு இருந்தவர்களும் பெலிஸ்தியரோடு சேர்ந்தபோது அம

லெக்கியர் அபிகாயில், அகினோவாம் என்ற தாவீதின் இரு மனைவியரையும் சிறைப்பிடித்துச் சென்றனர் (30:5). பின்பு அவர்களைத் தாவீது விடுவித்தார் (30:18). கெபிரோனில் தாவீது அரசனான பின்பு, அவருக்கு அபிகாயில் கிலயபு என்ற மகனைப் பெற்றெடுத்தாள் (2 சாமு 3:3). இவர் 1 நாள் 3:1–இல் தானியேல் என்று அழைக்கப்படுகிறார்.

2. 1 நாள் 2:16 –இன்படி தாவீதின் இரு சகோதரிகளில் ஒருத்தி ஆவாள். 2 சாமு 17:25–ன்படி இரு ஒன்றுவிட்ட சகோதரிகளில் ஒருத்தி ஆவாள். இக் கூற்றின் படி அபிகாயிலின் தந்தை நாகாசு ஆவார். ஈசாய் அல்ல. செரூயா, அபிகாயிலின் சகோதரி என்பதைவிட யோவாபுவின் தாய் ஆவாள். ஒருவேளை ஈசாயை மணக்கும் முன் தாவீதின் தாய் நாகாசுக்கும் பெற்று எடுத்தவர்களாக செரூயாவும், அபிகாயிலும் இருக்கலாம். அப்படியாயின் செரூயா தாவீதுக்கு மிகவும் மூத்தவள் ஆவாள். தாவீதை அவள் தாய் பெற்றெடுத்த சமயத்தில் செரூயாவும் யோவாபுவைப் பெற்றெடுத்திருக்கலாம்.

அபிகாயில், இசுமயேலனான எத்தேர் அல்லது இசுரியை மணந்து அமாசாவுக்குத் தாயானாள் (1 நாள் 2:1617). இவரை அபிசலோம் தாவீதின் படையில் யோவாபுக்குப் பதிலாகப் படைத் தலைவன் ஆக்கினார் (2 சாமு 17:25). 2 சாமு 19:13 தாவீதே இவரைப் படைத்தலைவன் ஆக்கியதாகக் கூறுகிறது. இரண்டாம் சாமுவேல் நூலின் ஆசிரியர் இசுரிக்குப் பாதகம் ஆனவிதத்தில் விவரிக்கிறார். அதன்படி, இசுரி அபிகாயிலைக் கெடுத்தான். அதனால் அமாசா முறையற்ற விதத்தில் பிறந்தவர் ஆவார்.

**அபிகு** (ABIHU – *அவர் என் தந்தை*)

ஆரோனுக்கும் எலிசெபாவுக்கும், பிறந்த இரண்டாம் மகன் (யாத் 6:23). எப்போதும் முதல் மகன் நாதாபுவோடு சேர்த்து அபிகு குறிக்கப்பெறுகிறார். இவர்களுடைய சகோதரர்கள் எலயாசார், இத்தாமார் ஆவர். இஸ்ராயேலின் தலைவர்களைச் சேர்ந்தவர்கள். மோசே, ஆரோன், நாதாபு, அபிகு மற்றும் 70 முதியவர்களும் இறைவனது இறையாற்றல் தோற்றத்தைக்காண சீனாயிமலை ஏறிச்சென்றனர் (24:1.9–11). நாதாப்பும், அபிரூவும் ஆண்டவரின் குருக்களாக்கப் பட்டனர் (28:1). ஆரோன் பெரிய குருவாக்கப்பட்டபின் அவரது முதல்நாள் பணியில் அவருக்கு உதவி செய்தனர் (லேவி 9:9). நாதாபும், அபிகுவும் "தூபக் கலசங்களை எடுத்து அவற்றுள் நெருப்பையும் தூபத்தையும்போட்டு, தங்களுக்குக் கட்டளையிட்டிருந்ததை மீறி ஆண்டவர் திருமுன் அன்னிய நெருப்பைச் சமர்ப்பித்தனர். உடனே ஆண்டவரிடமிருந்து நெருப்பு புறப்பட்டு அவர்களை எரித்தது. அவர்கள் ஆண்டவர் முன்னிலையிலேயே இறந்தனர்" (10:1–2). இவர்களுடைய சகோதரர்களைத் தவிர்த்து, ஆரோனின் சிற்றப்பன் ஊசியேலின் புதல்வர்களை, நாதாபு, அபிகுவை அடக்கம் செய்யக் கட்டளையிட்டார் மோசே (10:4–5).

பிற்கால வரலாற்றில் இந்த நிகழ்ச்சியோடு நாதாபு அபிகு தொடர்புபடுத்தப் படுகின்றனர். கட்டுமீறிய அவர்களது நடத்தை லேவியர் திருநிலைப்படுத்தும் விவரிப்பிலும் (எண் 3:2–4), லேவியர் கணக்கெடுப்பினும் (26:60–61) குறிக்கப்படுகிறது. இக் குற்றத்திற்காக மகப் பேறின்றி இவர்கள் இறந்ததாகக் கூறப்படுகிறது 1 நாள். 24:1–2, இவர்கள் மக்கட்பேறின்றி இறந்துபோயினர் என்று வெறுமனே கூறுகிறது. இவர்கள் இடத்தை, இவர்களுடைய சகோதரர்கள் எலயாசர், இத்தாமார் நிறைவுசெய்து, குருக்களாகப் பணிபுரிந்தனர்.

**அபிகூது** (ABIHUD – *என் தந்தை மாட்சிமை ஆவார், என் தந்தை புகழ் ஆவார்*)

இவர் பென்யாமின் கோத்திரத்தைச் சேர்ந்தவர். பென்யமினின் தலைமகன் பெலாவின் மூன்றாவது மகன் ஆவார் (1 நாள் 8:3).

**அபிசலோம்** (ABSALOM, ABISHALOM – *தந்தை அமைதியாவார்*)

1. வட சீரியாவில் கெசூரின் அரசன் தால்மாயின் மகளான மாக்காவின் வழி தாவீதுக்குப் பிறந்த மூன்றாம் மகன் (2 சாமு 3:3; 1 நாள் 3:2). இவர் கெபிரோனில் பிறந்தவர். அழகுமிக்க இளைஞனாக வளர்ந்தார் (2 சாமு 14;25–26); 1 அர

15:2.10–இல் இவன் அபிசாலோம் என்றழைக்கப்படுகிறார்.

தாவீதின் முதல் மகன் அம்னோன் இவரது அழகிய தங்கை தாமாரை வஞ்சகமாகக் கற்பழித்த கதையுடன் அபிசாலோமைப்பற்றிய குறிப்புகள் தொடங்குகின்றன. அம்னோன் கற்பழிக்குமுன் தாமாரை எவ்வளவு விரும்பினாரோ அவ்வளவு அதற்குப்பின் அவளை வெறுத்தார். அவளை வீட்டைவிட்டுத் துரத்திவிட்டார். அவளும் தன் சகோதரன் வீட்டில் அடைக்கலம் புகுந்தாள் (2 சாமு 3:1–13). தாவீது மன்னன், அப்போது உரியாவின் மனைவி பதுசேபாவோடு வெகுவாக ஈடுபாடுகொண்டிருந்தார். ஆகையால் அம்னோனை நீதி முறைப்படி தண்டிக்கவில்லை. இதன்விளைவாக, நாத்தான் இறைவாக்குப்படி தாவீது குடும்பத்தினருக்கு வரவிருக்கும் அழிவுகளுக்கு அடிப்படை நிறுவப்பட்டது.

அம்னோனிடம் கொண்ட பகையை அபிசலோம் இருவருடங்களுக்கு மறைத்து வைத்திருந்தார் (2 சாமு 13:22–23). பின் ஆட்டு மயிர்வெட்டு விழாவின்போது அம்னோனைக் கொன்றுபோடச் செய்தார். பின் தன் தாய்வழி பாட்டனின் ஊரான கெசூருக்கு ஓடவிட்டார் (13:23–38). தாவீது அபிசலோமை மிகவும் அன்பு செய்திருக்கவேண்டும். அவரை நினைத்து அவர் நாளும் புலம்பிக் கொண்டிருந்தார் (13:37: 14:1). இதை அறிந்த தாவீதின் சகோதரி செரூயாவின் மகனும் படைத்தலைவனுமான யோவாபு, தந்திரமாய் தெக்கோவா ஊரைச் சேர்ந்த அறிவாளியான பெண்ணைக்கொண்டு அபிசலோமுக்காகப் பரிந்து பேசச்செய்து, அவனை கெசூரிலிருந்து எருசலேமுக்கு அழைத்து வந்தார். ஆனால் அரசர் அவனது முகத்தைக் கூடப் பார்க்க விரும்பவில்லை. இருவருடங்களுக்குப் பின்புதான் யோவாபு தந்தைக்கும் மகனுக்கும் ஒப்புறவு ஏற்படுத்த முடிந்தது (14:2–33).

சிறிது காலத்திற்குப்பின், அபிசலோம் அரச வாரிசு உரிமை கொண்டாடத் தொடங்கினார். தனது தந்தைக்கு எதிராகக் கிளர்ச்சி செய்யத் தந்திரமாகத் தயாரிக்கத் தொடங்கினார். எருசலேமிலுள்ள மத்திய அதிகாரிகள் குலங்களின் சலுகைகளை மதிக்காததால் ஏற்பட்ட மக்களின் அதிருப்தியைப் பயன்படுத்தி மக்களின் அன்பைப் பெற முடிந்தது (15:6). பின் பதுசேபாவின் பாட்டனும், தாவீதின் புகழ்பெற்ற ஆலோசகருமான அகித்தோபலின் ஆதரவோடு அபிசலோம் கெபிரோனில் தன்னையே அரசனாக அறிக்கையிட்டார் (15:7–12).

மிகவேகமாக, தாவீது எருசலேமை விட்டு ஓடினார் (15:13–14). ஒலிவ மலையில் ஏறிப்போகும்போது அழுதுகொண்டே சென்றார் (15:30). அகித்தோபல் அபிசலோமோடு சேர்ந்து கொண்டதை அறிந்த அரசன் விவேகத்தோடு நடந்துகொள்ளத் தொடங்கினார். தனது பிரமாணிக்கமான கூசாயை எருசலேமுக்கு அனுப்பி, அபிசலோமின் பணியில் சேர்ந்துகொள்ளச் செய்தார். இப்படிச் செய்வதால், அகித்தோபலின் ஆலோசனை வெற்றியடையாது போகச் செய்ய எதிர்பார்த்தார்.

இதற்கிடையில், அபிசலோம் அகித்தோபலோடு எருசலேமுக்குள் நுழைந்தார் (15:37; 16:15). அகித்தோபலின் முதல் ஆலோசனைப்படி, அரண்மனையைக் கவனித்துக்கொள்ள தாவீதால் விட்டுச் செல்லப்பட்ட அவரது வைப்பாட்டிகளை மக்கள் யாவரும் பார்க்கப் பங்கபடுத்தினார் (16:21–22). இவ்வாறு நாத்தான் தாவீதுக்கு அறிவித்த இறைவாக்கு நிறைவேறிற்று (12:11–12). இச் செயலால் அவர் தந்தையோடு எத்தகைய சமாதானத்திற்கும் இடமில்லாது போயிற்று. அன்று இரவே தாவீதைத் துரத்திச் சென்று அவரைத் தோற்கடிக்க வேண்டுமென்ற அகித்தோபலின் இரண்டாவது ஆலோசனையை அபிசலோம் உடனே ஏற்றுக்கொள்ளாதபடி கூசாய் பார்த்துக்கொண்டார் (17:1–14). தாண் முதல் பேயேர் – செபா வரை உள்ள மக்களை ஒன்று சேர்த்து தாவீதுக்கு எதிராக அவனே போருக்குத் தலைமை தாங்கிச் செல்ல வேண்டும் என்று கூசாய் கூறினார். இதை அவர் ஏற்றுக்கொண்டார். "இவ்வாறு, ஆண்டவர் அபிசலோமுக்குத் தீங்கு நேரிடும்படி, அகித்தோபலின் பயனுள்ள ஆலோசனை எடுபடாது போகச் செய்

தார்" (17:14). இவ்வாறு தொடக்கத்திலேயே அபிசலோமின் வீழ்ச்சி உறுதி செய்யப்பட்டது.

பெரும்படையுடன் தாவீதைத் துரத்தி வர அபிசலோம் திட்டமிட்டுள்ளதை கூசாய் வழியாக அறிந்த தாவீது யோர்தானைக்கடந்து, மகனாயிமில் தங்கியிருந்தார் (17:21–24). தனது ஆலோசனை ஏற்றுக்கொள்ளப்படவில்லை என்று கண்ட அகித்தோபல் தற்கொலை செய்துகொண்டார். (17:23). சிறிது காலத்திற்குப்பின் தந்தைக்கும் மகனுக்கும் நடந்த போரில் அபிசலோம் எப்பிராயீம் காடுகளில் தோற்கடிக்கப்பட்டார் (18:6–8). அங்கு அவரது தலைமுடி ஒரு கருவாலி மரத்தில் சிக்கிக் கொண்டது. அவர் ஏறிவந்த கோவேறு கழுதை, அவரை விண்ணுக்கும் மண்ணுக்கும் இடையில் தொங்கிக்கொண்டிருக்க விட்டுவிட்டு ஓடிப்போயிற்று. இதை அறிந்த யோவாபு, "என் மகனை என்பொருட்டு உயிரோடு காப்பாற்றவேண்டும்" (18:5) என்ற அரச கட்டளையையும் புறக்கணித்துவிட்டு தன் கையாலே மூன்று ஈட்டிகளை அபிசலோமின் இதயத்தில் பாய்ச்சினார். அதன் பின்னும் அபிசலோம் உயிரோடிருப்பதைக் கண்ட யோவாபின் பரிசையர்கள் அவனை வெட்டிக் கொன்று போட்டார்கள் (18:14–15). பின்பு, அவர்கள் அபிசலோமின் உடலைத் தூக்கிச் சென்று மிகவும் ஆழமான ஒரு பள்ளத்தில் எறிந்து அவர் மேல் கற்களைப் பெருமளவில் குவித்தனர் (18:17).

செய்தி அறிந்த தாவீது வெகுவாகப் புலம்பி அழுதார் (18:33). இதனால் அன்று வெற்றி துக்கமானதாக மாறிப்போயிற்று. அரசனது நடத்தை பிரமாணிக்கமுள்ள வீரர்களை ஊக்கமிழக்கச்செய்யும் என்றுணர்ந்த யோவாபு, அரசனைக் கண்டித்து, அவருக்குப் பிரமாணிக்கமாயிருந்தவர்களிடம், அன்பாய்ப் பேசச் செய்தார் (19:1–8).

தனது வாழ்நாளில் அபிசலோம், தன் பெயரையும், நினைவையும் நிலைப்படுத்த புதல்வர்கள் இல்லாததால் எருசலேமுக்கு அருகிலுள்ள அரசரின் பள்ளத்தாக்கில் ஒரு தூணை நிறுத்தி அதற்குத் தன் பெயரை இட்டிருந்தார். அது "அபிசலேமின் கை" என்றழைக்கப்பட்டது (ஒருவேளை 14:27–இல் குறிக்கப்பட்ட அபிசலேமின் மூன்று புதல்வர்களும் அவருக்கு முன்பே இறந்திருக்கவேண்டும்). அவரது மகள் தாமார் பிற்காலத்தில் அபியா அரசனது மாமியாவாள்). அவர் இத் தூணை கித்ரோன் பள்ளத்தாக்கின் கிழக்குச்சரிவில் நிறுவியிருக்கவேண்டும். அங்கு ஓர் எகிப்திய – கிரேக்கப் பாணி நினைவுச் சின்னம் அசமோனியர் அல்லது எரோதியர் காலத்திலிருந்து அபிசலோமின் தூண்" என்றழைக்கப்படுகிறது.

2. யோனத்தான் மக்கபேயுவின் படையில் ஒரு தலைவரான மத்தத்தியாவின் தந்தை ஆவார். சீரியர்களுக்கு எதிரான போரில் படை எல்லாம் ஓடிவிட்ட பின்னும் மத்தத்தியா தன் பேரனுக்குப் பிரமாணிக்கமாயிருந்தார் (1 மக் 11:70). இவர் 1 மக் 13:11–இல் குறிக்கப்படும் தூதுக்கு சீமோன் மக்கபேயுவால் அனுப்பப்பட்ட யோனத்தனின் தந்தையான அபிசலோமாக இருக்கலாம்.

3. கி.மு. 165–இல் பேத்து–சூரில் நிகழ்ந்த தோல்விக்குப்பின் சமாதான உடன்பாடு செய்ய யூதர்களால் இலிசியாவிடம் அனுப்பப்பட்ட இரு தூதுவர்களில் ஒருவராவார் (2 மக் 11:17). இவர் மேலே 2–இல் குறிக்கப்பட்டவராகவும் இருக்கலாம். இதற்கு இணையாக 1 மக்கபேயரில் ஒன்று மில்லை. இந்த நிகழ்ச்சியைப்பற்றி 2 மக்கபேயர் ஆசிரியர் பிழை செய்திருக்கலாம்.

**அபிசாகு** (ABISHAG – என் தந்தை அலைந்து திரிகிறார், என் தந்தை தவறுகிறாா)

சூனாமிய ஊரான். அழகிய இளங்கன்னி. தாவீது அரசனின் முதிர்ந்த வயதில், "அவரது முன்னிலையில் நிற்கவும்", அவருக்குச் சூடு உண்டாக்கும்படி அவரது மார்பின் மீதுபடுத்து உறங்கவும், அழைத்து வரப்பட்ட தாதிப் பெண். ஆனால் அரசன் அவளோடு சிற்றின்ப உறவு கொண்டதில்லை (1 அர 1:1–4).

ஆனால் தாவீதின் மரணத்துக்குபின், சாலமோன் அவளைத் தாவீதின் மனைவி

யாகவே கருதினார். அதோனியா அவளை மணக்க, விரும்பி சாலமோனின் தாய் பதுசேபா வழியாக வேண்டிக் கொண்டபோது, இளைய மன்னன் சால மோன், இது அதோனியா அரசன் ஆவதற்குச் செய்யும் ஒரு முயற்சி என்று கருதி, அவனைக்கொன்று போட்டார் *(2:13–25)*.

***அபிசாய்*** (ABISHAI – என் தந்தை *வாழ்கிறார்)*

தாவீதின் சகோதரி செரூயாவின் மூத்த மகன். யோவாபு, அசாயேல் ஆகியோரின் சகோதரன் *(2 சாமு 2:18; 1 நாள் 2:16; 18:2)*. இவரது தந்தையின் பெயர் கொடுக்கப் படவில்லை.

தாவீது, சவுலால் துரத்தப்பட்டு அலைந்து திரிந்த காலத்தில், தாவீதின் வீரமிக்க தோழனாக, அபிசாய் முதன் முதலாகக் குறிக்கப்பெறுகிறார். சிப்பு பாலைவனத்தில் சவுலின் பாளையத் திற்குத் தாவீதோடு இரவில் சென்றார். சவுலும் மற்றவர்களும் கூடாரத்தில் ஆழ்ந்து உறங்கிக் கிடக்கும் வாய்ப்பைப் பயன்படுத்தி, சவுலை ஈட்டியால் குத்திக் கொல்ல அபிசாய் விருப்பம் தெரிவித்த போது, தாவீது அவரைக் கட்டுப்படுத்தி னார். ஆனால் சவுலின் ஈட்டியையும் தண்ணீர்ப் பாத்திரத்தையும் மட்டும் எடுத்துக்கொள்ளக் கட்டளையிட்டார் *(1 சாமு 26:5–12)*.

சவுல் இறந்தபின், தாவீது வீட்டாருக் கும் இசிபோசத்தின் வீட்டாருக்கும் நடந்த சிறு போர்களின் முடிவில், அடுத்து அபி சாய் குறிக்கப்படுகிறார். அப்படிப்பட்ட ஒரு போரில், அபிசாயின் சகோதரன் அசாயேல் அபினேர் படைத்தலைவர் எச்சரித்தும், அவரைத் துரத்திச் சென் றார். அபினேர் தற்காப்புக்காக அசாயே லை ஈட்டியால் குத்திக்கொன்றார். ஆகவே பழி தீர்க்கும் எண்ணத்துடன் அபிசாயும் யோவாபுவும், அபினேரைத் தொடர்ந்து தாக்கி வந்தனர். தற்காலிகப் போர் நிறுத்த உடன்படிக்கை ஏற்பட்டது. ஆனால் பழி தீர்க்கும் எண்ணத்தை இரு சகோதரர்களும் கைவிட்டு விடவில்லை *(2 சாமு 17–30)*. வாய்ப்புக் கிடைத்தபோது அபிசாயும், யோவாபுவும் அபினேரை வஞ்சகமாகக் கொன்று தங்கள் வழிவாங் கும் எண்ணத்தைத் தீர்த்துக்கொண்டனர்.

அம்மோனியர் சீரியர்களுக்கு எதிரான போரில் அம்மோனிய அரசன் கனூன், தாவீதின் தூதுவர்களை அவமதித்தான். அபிசாய் அம்மோனியர்களையும் யோவாபு சீரியர்களையும் தாக்கி வெற்றி கொண்டனர் *(2 சாமு 10:9–19; 1 நாள் 19:11–19)*. *1 நாள் 18:12–13*-இன் படி அபி சாய் ஏதோமியரைத் தாவீதின் அடிமை களாக்கினார். மற்றொரு சமயம், பெலிஸ் தியனான இசிபி-பெனோபு என்ற அரா பிய குலத்தினன் தாவீதை ஈட்டியால் கொல்ல முயன்றபோது, அவனைக் கொன்று அபிசாய் தாவீதைக்காப்பாற்றி னார் *(2 சாமு 21:10–17)*. மற்றொரு சமயம் முன்னூறு பெலிஸ்தியரை அபிசாய் கொன்றதாகத் தெரிகிறது *(2 சாமு 23:18: 1 நாள்.11:20)*. தாவீதின் மிக வலிமைபெற்ற மூன்று வீரர்களில் ஒருவன் இல்லையென் றாலும், வீரத்திற்குப் புகழ் பெற்ற அவரது முப்பது வீரர்களில் ஒருவராகத் திகழ்ந் தார் அபிசாய் *(2 சாமு 23:19; 1 நாள் 11:21)*.

அபிசாய் தாவீதுக்குப் பிரமாணிக்க மாய் இருந்தாலும், இருமுறை அவருக்கு எதிராகத் தாவீது எரிச்சல்பட்டு "செரூயா வின் புதல்வர்களே உங்களுக்கும் எனக்கும் என்ன?" என்று கூற வேண்டி யிருந்தது *(2 சாமு 16:10; 19:21)*. முதல் தடவை, அபிசலோம் கிளர்ச்சியின்போது, தாவீது தப்பி எருசலேமிலிருந்து ஓடிக் கொண்டிருக்கையில், பென்யாமின் குலத் தவனாகிய சிமயி வசைமொழி கூறி, கல்லால் எறியத் தொடங்கியபோது, அவனைக்கொன்றுவர அபிசாய் அனுமதி கேட்டபோது தாவீது இவ்வாறு கூறினார் *(2 சாமு 16:5–12)*. இரண்டாம்முறை சிமயி தனது முந்திய நடத்தைக்கு வருந்தி தாவீதிடம் மன்னிப்புக்கேட்டபோது, பழி வாங்குதலில் வல்ல அபிசாய் சிமயியைக் கொல்ல விரும்ப தாவீது இவ்வாறு கூறினார் *(19:16–23)*.

***அபிசூர்*** (ABISHUR – என் தந்தை *அரண் ஆவார்)*

கெசிரோன் குடும்பத்தைச் சேர்ந்த யூதா குலத்தைச் சேர்ந்தவர். சம்மாயின்

மகன், நாதாபுவின் சகோதரன். இவர் அபிகயிலை மணந்து இரு புதல்வர் களுக்குத் தந்தையானார் (1 நாள் 2:28–29).

**அபிசூவா** (ABISHUA – தந்தைமீட்பாவார், தந்தை விடுதலை ஆவார்)

1. பென்யாமின் குலத்தைச் சேர்ந்த பெலாவின் புதல்வர்களில் ஒருவர். பென் யாமினின் பேரன் (1 நாள் 3:4).

2. ஆரோனின் கொல்லுப் பேரனும் பெரிய குரு பினகாசின் மகனுமாவார் (1 நாள் 6:4–5). இறைவல்லுநர் எஸ்ராவின் மூதாதையருமாவார் (எஸ் 7:5). லேவியர் மரபு முறைப்பட்டியலில், பீடத்தின் அருகே பணியாற்றி வந்த வழிவந்தவர் களின் பட்டியலில் இவரும் இடம் பெறு கிறார்.

**அபிதாள்** (ABITAL – என் தந்தை பணித் திவலை ஆவார்).

தாவீது அரசரின் மனைவியருள் ஒருத்தியாவாள். அவரது ஐந்தாம் மகன் செப்பத்தியாவின் தாயார் (2 சாமு 3:4. 1 நாள் 3:3).

**அபிதா** (ABIDA – என் தந்தை அறிவார்)

ஆபிரகாம்–கெத்தூரா ஆகியோரின் பேரன். மிதியானின் நான்காவது மகன் (ஆதி 25:4; 1 நாள் 1:33).

**அபிதான்** (ABIDAN – என் தந்தை தீர்ப்பிட்டார்)

கிதயோனின் மகன். பென்யாமின் குலத்தவர். அக்குலத்தின் தலைவன் ஆனார். பாலைவனத்தில், இஸ்ராயேலின் மக்கள் தொகைக்கணக்கெடுப்பிலும் மற்ற அலுவல்களிலும் மோசேக்கு உதவி செய்த பன்னிருகுலத் தலைவர்களுள் ஒருவர் (எண்.1:11; 2:22; 10:24). பலிபீடம் அபிடேக விழாவின் ஒன்பதாம் நாள் இவர் தன் காணிக்கையைச் செலுத்தினார் (7:60.65).

**அபிதி** (ABDI – யாவேயின் ஊழியன் என்பதன் குறுகிய வடிவம்)

1. இவர் மெராரியின் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு லேவியர். இவர் கீசியின் தந்தையும், தாவீது காலத்தில் ஆலயப் பாடகர்களுள் ஒரவரான எத்தானின் பாட்டனும் ஆவார் (1 நாள்.6:44)

2. இவர் எசக்கிய அரசனோடு சம காலத்தவரும் ஒரு லேவியரும் ஆகிய கீசின் தந்தையாவார் (2 நாள் 29:12). ஒரு வேளை ஒன்றில் குறிக்கப்பட்டவராகவே இருக்கலாம்.

3. இவர் எஸ்ராவின் பணிக்காலத் தில், சட்டம் தடுத்ததற்கு மாறாக அன்னியப் பெண்களை மணந்துகொண்ட இஸ்ராயேலர்களில் ஒருவராவார் (எஸ் 10:26). இவர்கள் தங்களது புற இன மனைவியரை அவர்கள் பிள்ளைகளுடன் தள்ளிவிடவும், தங்கள் பாவத்துக்காக ஒரு செம்மறி ஆட்டுக்கிடாவைப் பலியிடவும் ஒப்புக் கொண்டனர் (10:18.44).

**அபிதியேல்** (ABDIEL – இறைவனது ஊழியன்)

இவர் கிலயாத்து அல்லது பாசானில் வாழ்ந்த காது குடும்பத்தைச் சேர்ந்தவர். இவர் கூனியின் மகனும் அக்குடும்பத்தின் தலைவரான அகியின் தந்தையும் ஆவார் (1 நாள் 5:15).

**அபிதூபு** (ABITUB – என் தந்தை நன்மையானவர்)

சாரயிமுக்கும் அவரது முதல் மனைவி கூசிமுக்கும் பிறந்த இரு புதல் வர்களில் ஒருவர் (1 நாள் 8:11). பென்யாமின் குல மரபுப் பட்டியலில் குறிக்கப்பெறுகிறார்.

**அபிதேல்** (ABDEEL – இறை ஊழியன்)

இவர் செலமியாவின் தந்தையாவார். எரேமியாவையும் பாருக்கையும் பிடித்து வர யோயாக்கிமினால் கட்டளையிடப்பட்ட மூன்று ஏவலர்களுள் ஒருவர் (எரே 36:26).

**அபிதோன்** (ABDON – பணி அடிமைத்தனமுள்ள) – ஆள்.

1. எப்பிராயிமிலுள்ள பிராத்தோனைச் சேர்ந்த இல்லேலின் மகனாவார். இவருக்கு நாற்பது புதல்வர்களும் முப்பது பேரன்களும் இருந்தனர். இவர் செல்வ மும் மதிப்பும் உடையவர். எழுபது கழுதைக் குட்டிகளைக் கொண்டிருந்தார் (நீதி 12:13–15). எட்டு ஆண்டுகள் இஸ்ராயே லுக்கு நீதி வழங்கினார். இஸ்ராயேலின் இறுதி நடுவர்களில் ஒருவர். இவர் இறந்தபின் அவர்களது பாவங்களுக்காக ஆண்டவர் இஸ்ராயேலரை நாற்பது ஆண்டுகள் பெலிஸ்தியர் கையில் ஒப்ப டைத்தார் (13:1). முடிவில் இறுதி நடுவ ரான சிம்சோன் தோன்றினார்.

2. பென்யாமின் குலத்தைச்சேர்ந்தவர். எருசலேமில் வாழ்ந்தார். சாசாக்கின் புதல்வர்களில் ஒருவர் (1 நாள் 8:23.28).

3. பென்யாமின் குலத்தைச் சேர்ந்த எயியேலுக்கு அவரின் மனைவி மாக்கவுக்கும் மூத்த புதல்வராவார். சவுலின் மூன்னோர் பட்டியலில் இருமுறை குறிக்கப்பெறுகிறார் (1 நாள் 8:30; 9:35–36). இவர் கிபயோனில் வாழ்ந்தார். அபிதோனின் சகோதரனான நேர் சவுல் அரசனுக்குப் பாட்டனாவார் (9:35–39).

4. யோசியா அரசனது அவையில் ஓர் உறுப்பினர். மீக்காவின் மகன் (2 நாள் 34:20). ஆலயத்தில் கண்டெடுக்கப்பட்ட சட்ட நூல்பற்றி ஆலோசனைகேட்ட இறைவாக்கினி குலிதாவிடம் அனுப்பப்பட்ட குழுவில் ஒருவர் (34:22). ஆனால் 2 அர 22:12–இல் இவர் ஆகிபோர் என்றழைக்கப்படுகிறார்.

**அபிதோன்** (ABDON – இடம்

அ) அப்தோன்– ஆசேர் குலத்துக்குரிய பகுதியில், கெரிசோமின் குடும்பத்திற்குக் குறிக்கப்பட்ட ஒரு லேவியர் நகரமாகும் (யோசு 21:30; 1 நாள் 6:74). ஒருவேளை அகிசீபுவுக்குக் கிழக்கில் 6 கி.மீ. தொலைவிலும் ஆக்கோவுக்கு வடக்கு வடகிழக்கில் 17 கி.மீ தொலைவிலும் உள்ள கிர்பேத் அப்தேவாக இருக்கலாம். யோசு 19:28– ல் வரும் எபிரோன் அபிதோன் என்று திருத்தப்படவேண்டும் என்று சிலர் கருதுவர்.

**அபிமெலக்கு** (ABIMELECH – என் தந்தை அரசன் ஆவார்)

1. கெராரில் பெலஸ்தியர்களின் அரசன். ஆபிரகாமோடு சம காலத்தவர். சில அறிஞர்கள் இது ஓர் ஆளின் பெயர் என்பதைவிட, ஒரு பதவியின் பெயர் என்பது மேல் என்பர். (பதவியின் பெயர் என்ற அடிப்படையில், சங் 34–இல் காத்தின் அரசன் அபிமெலக்கு என்றழைக்கப்படுகிறார். காண்க: அபிமெலேக்கு–4)

சோதோம்–கொமோரா அழிவுக்குப்பின், ஆபிரகாம், கெரார் நாட்டில் சுற்றித் திரிந்தார் (ஆதி 20:1). அவரின் மனைவி சாராளை அவருடைய சகோதரி என்று சொல்லிக் கொண்டதை அரசன் நம்பி அவளைத் தன் வீட்டிற்கு எடுத்துக் கொண்டார். உண்மையில் சாராள் ஆபிரகாமின் மனைவி என்று இறைவனால் எச்சரிக்கப்பட்டார். தான் ஆபிரகாமால் ஏமாற்றப்பட்டுவிட்டதை எடுத்துக் கூறினார். இறைவன் கட்டளைக் கிணங்க, அபிமெலக்கு, தன்னை எமாற்றியதற்காக ஆபிரகாமை அழைத்துக் கடிந்து கொண்டார். சாராளை ஆபிரகாமுக்குத் திருப்பிக்கொடுத்ததோடு பல நன்கொடைகளையும் கொடுத்தார். தன் நாட்டில் தங்க உரிமையும் கொடுத்ததார் (20:2–16). அதன்பின் ஆபிரகாம் இறைவனிடம் மன்றாட, அவரும் இதுவரை மலடிகளாக இருந்த அபிமெலக்கின் மனைவிக்கும் வேலைக்காரிகளுக்கும் பிள்ளைப்பேற்றினை அளித்தார் இறைவன் (20:1.7–18).

சில காலத்திற்குப் பிறகு, அபிமெலக்கின் ஊழியர் வலுக்கட்டாயமாகக் கைப்பற்றியிருந்த ஒரு கிணற்றுக்கு உரிமை அளித்து ஆபிரகாமோடு அபிமெலக்கு உடன்படிக்கை செய்துகொண்டார். ஆபிரகாமும் அவருக்குத் தாராளமாக விலை கொடுத்தார். சத்தியம் செய்து உடன்படிக்கை செய்யப்பட்ட இந்த சர்ச்சைக்குரிய கிணற்றின் பெர் (சத்தியத்தின் கிணறு) பேயேர்–செபா நகரின் பெயராயிற்று (21:22–32).

2. இவர் கெராரில் ஆட்சிசெய்த பெலிஸ்திய அரசன். ஒருவேளை முன்னவரின் மகனாக இருக்கலாம். ஏனெனில் ஆதி 20–21–இல் வரும் நிகழ்ச்சி நடந்து நாற்பது ஆண்டுகள் கடந்துவிட்டன. பிற்காலத்தில் இப்பகுதியில் பிலிஸ்தியர்கள் ஆட்சி செய்ததால், காலமயக்கமாகப் பெலிஸ்திய அரசன் என்று அழைக்கப்படுகிறார். இவர் 26–இல் குறிக்கப்படுகிறார். ஈசாக்கு, பஞ்சத்தின் விளைவாக கெராருக்கு வந்து (26:1–6) தனது மனைவி ரெபோக்காவைத் தன் சகோதரி என்று சொல்லித் திரிகிறார். அபிமெலக்கு, ரெபெக்காவை எடுத்துக்கொள்ளவில்லை. ஆனால் ஏமாற்றித் திரிவதற்காக ஈசாக்கைக் கடிந்துகொண்டார் (26:8–10). சச்சரவு உண்டாக்கிய ஒரு கிணறு பற்றி இருவரும் ஓர் உடன்படிக்கை செய்து கொண்டனர்.

அபிமெலக்கு ஆபிரகாமைப் பற்றிய கதை (20–21) எலோயீம் பாரம்பரியத்தையும், அபிமெலெக்கு ஈசாக்கைப் பற்றிய கதை (20) யாவே பாரம்பரியத்தையும் சார்ந்ததாகும். இரண்டு கதைகளும் இரட்டிப்பு வாசகங்களுக்கு ஓர் எடுத்துக்காட்டாகும்.

3. கிதயோனுக்கும் (எருபாகால்) அவரது செக்கேமைச் சேர்ந்த கானானிய வைப்பாட்டிக்கும் பிறந்தவர் (நீதி 8:31). இவர் தன் தந்தை இறந்தபின் செக்கேமிலிருந்த தன் தாய்வழி உறவினர்களின் உதவி பெற்றார்.சூழ்ச்சி செய்து தனது 70 சகோதரர்களைக் கொல்ல பாகால் பேரீத் கோவிலிருந்து 70 வெள்ளிக் காசுகளைப் பெற்று இவர் ஏழைகளையும் நாடோடிகளையும் வேலைக்கு அமர்த்தி தன் சகோதரர் அனைவரையும் பாறையின் மேல் கொன்றார். கடைசிச் சகோதரனான யோத்தாம் மட்டும் தப்பினார். அதன்பின் செக்கேம் குடிமக்களால் அபிமெலக்கு அரசனாக்கப்பட்டார் (9:1–6). நீதிபதிகளின் நூல் ஆசிரியர் கருத்துப்படி இறைவன் அபிமெலக்கின் இக்குற்றத்தைத் தண்டிக்காமல் விடவில்லை. மூன்று வருட ஆட்சிக்குப் பின் "ஆண்டவர் அபிமெலக்குக்கும் செக்கேம் ஊராருக்குமிடையே கொடும் பகையை மூட்டினார்" (9.23). அவர்கள் அவரைப்பகைத்து காகால் என்பவனைத் தலைவனாக்கினர் (9:26–29). நகரத் தலைவன் செபூல் வழியாக செய்தி அறிந்த அபிமெலக்கு காகாவைத் தோற்கடித்து, செக்கேமைத் தரைமட்டமாக்கினார் (9:30–49). ஆனால் அருகிலிருந்த தேபேசுவைப் பிடிக்க முயன்றபோது, ஒருபெண் எந்திரக்கல்லின் துண்டை அவர் மேல போட்டு மண்டையை உடைத்தாள். ஒரு பெண்ணால் கொல்லப்படுதல் என்ற அவமானத்தைப் போக்க, தன்னைக் கொன்று போடும்படி தன்பரிசையானைக் கேட்டுக்கொண்டார். அவரும் அப்படியே செய்தார் (90:50–55). "அபிமெலக்கு தன் எழுபது சகோதரரைக் கொன்று தன் தந்தைக்குச் செய்த பழிக்குக் கடவுள் அவனைப் பழி வாங்கினார்" (9:56) என்று ஆசிரியர் அபிமெலக் கைப்பற்றிய விவரிப்பை முடிக்கிறார். இத்தியனான உரியாவின் அவல மரணத்தையொட்டி 2 சாமு 11:21–ல் யோவாபு அபிமெலக்கைக் குறிப்பிடுகிறார்.

4.காத்தின் அரசனான ஆக்கீசின் மற்றொரு பெயராகும். இவர்முன் தாவீது பைத்தியக்காரனாக வேடம் போட்டார் (1 சாமு 21:10–5). அபிமெலக்கு என்ற பெயர், பெலிஸ்திய அரசர்களின் பட்டமானால், சங் 34–ன் ஆசிரியர், 1சாமு.21:10–15 –ஐத் தவிர்த்த வேறொரு மூலத்திலிருந்து, ஒரு வேளை தாவீது அரசன் ஆட்சி ஏட்டிலிருந்து, எடுத்து எழுதியிருக்க வேண்டும்.

**அபிமேல்** (ABIMAEL – *என் தந்தை இறைவன் ஆவார்)*

இவர் யோக்கிதானின் மகன் (ஆதி 10:28; 1 நாள் 1:23). இவர் ஒரு தென் அராபிய குலத்தின் குல முதல்வராவார்.

**அபியசாபு** (ABIASAPH – *என் தந்தை ஒன்று சேர்த்தார்)*

இவர் கோராகு குடும்பத்தைச் சேர்ந்த ஒரு லேவியர். ஆரோனின் பேரனான பினகாசோடு சம காலத்தவர். எகிப்திலிருந்து மோசேயோடு புறப்பட்ட லேவியர் குடும்பங்களுள் ஒன்றுக்குத் தலைவர் (யாத் 6:24–25). இவர் 1 நாள் 6:23.37; 9:19– இல் எபியாசாபு என்றழைக்கப்படுகிறார். 1 நாள் 26:1–இல் வரும் ஆசாபு இப் பெயரின் குறுகிய வடிவமாக இருக்கலாம்.

**அபியத்தார்** (ABIATHAR – *செழிப்பின் தந்தை, ஈடெடுப்பற்ற தந்தை முதன்மையுள்ள தந்தை)*

தாவீது ஆட்சியில் ஆரோனுக்குப் பின் பதினோராவது பெரிய குருவாக இருந்தவர். இவரின் தந்தை அகிமெலக்கு ஆவார். இவர் பினகாசு, அகிதூபு, அகிமெலக்கு ஆகியோரின் வழியாக ஏலியின் வழித்தோன்றல் ஆவார். தாவீதுக்கு உதவி செய்ததற்காக, சவுலின் கட்டளைக்கிணங்க நோபுவில் இருந்த 85 குருக்களை ஏதோமியனான தோயேகு கொன்று தீர்த்தபோது, இவர் மட்டும் தப்பினார் (1 சாமு 22:17–20). சவுலிடமிருந்து தப்பி, தாவீது மலைக்காடுகளில் வாழ்ந்து வந்த போது, அபியத்தார் தப்பியோடிச்சேர்ந்து கொண்டார். அபியத்தரின் குடும்பக்கேட்டிற்குத்தாமே ஒரு வகையில் காரணம்

என்று உணர்ந்த தாவீது இவரைத் தன்னு டைய மக்களோடு ஏற்றுக்கொண்டார் (22:20–23). அதிலிருந்து அபியத்தர் தாவீது வாழ்நாள் முழுவதும் அவரது நெருங்கிய நண்பனாகவும் பெரிய குருவாகவும் விளங் கினார். கெயீலா–வில் மட்டுமன்று (23:9) அமலேக்கியர் சிக்கிலாகுவைத் தாக்கிய போதும் தாவீதின் குருவாகப்பணிபுரிந் தார் (30:26). நோபுவிலிருந்து எடுத்து வந்திருந்த ஏபோதின் (23:6) உதவி கொண்டு இறைவாக்குக் கூறி, அதை விளக்கிக் கூறி தாவீதுக்கு ஆலோசனை கூறிவந்தார். சவுலின் சாவுக்குப் பின்னும், தாவீது கெபிரோன்னிலும், எருசலேமிலும் ஆட்சிசெய்தபோது அபியத்தார் அவருக் குப் பணிபுரிந்தார். இதில் அவரது மகன் அகிமெலக்கு அவருக்கு உதவி செய்திருக் கலாம் (2. சாமு 8:17).

எருசலேம் பிடிப்பட்டபின் சாதோக் கோடு சேர்ந்து தாவீதுக்குப் பெரிய குரு வாகத் திகழ்ந்தார். சாதோக்கு பெட்டகத் திற்கும், அபியாத்தார் எபோதுக்கும் பொறுப்பாளர்களாக இருந்தனர் என்று கூறுவர் சிலர். ஆனால் அபிசலோம் கிளர்ச்சியின் விவரிப்பு, இருவருமே பெட்டகத்திற்குப் பாதுகாப்பாளர்களா வார் என்று காட்டுகிறது (2 சாமு 15:24–36). இக்கிளர்ச்சிக் காலம் முழுவதும் இரு வரும் தாவீதுக்குப் பிரமாணிக்கமாக உள்ளனர். தாவீது எருசலேமை விட்டுத் தப்பியோடியபோது இவர்கள் பெட்டகத் தையும் கொண்டு செல்ல முயல்கின்றனர் (15:24). ஆனால் தாவீதால் கட்டளையிடப் பட்டு பெட்டகத்தை எருசலேமுக்கு எடுத் துச்செல்கின்றனர் (15:25.29). அதோடு அவர்கள் ஒடி ஒழிந்து திர்ந்த அரசனுக் குச்செய்திகள் அனுப்பவேண்டும் (15:35–36). இதை இவர்கள் பிரமாணிக்கமாய்ச் செய்தனர் (17:15–21).

தாவீதின் இறுதி நாட்களில் வாரிசுப் போராட்டத்தில், அபியத்தார் அதோனி யாவையும், சாதோக்கு சாலமோனையும் ஆதரித்தனர் (1 அர 1). அபியத்தார் ஆரோ னின் கடைசிப்பிள்ளையான இத்தாமாரின் இன வழித் தோன்றலாவார். சாதோக்கு ஆரோனின் முதல் மகன் எலயாசாரின் இன வழித்தோன்றலாவர். இதனால் அபியத்தார் சாதோக்கின் மேல் பொறா மைப்பட்டிருக்கலாம். சாதாரணமாக அபியத்தாருக்குமுன் சாதோக்கு குறிக்கப் பெறுகிறார் (2 சாமு 15:24–29). சாலமோ னுக்கு ஆதரவு அளித்த கட்சி ஆட்சிக்கு வந்தபின் அதோனியா கொல்லப்பட்டார். ஆனால் அவர் பெட்டகத்தைச்சுமந்து சென்றதாலும் தாவீதின் துன்பங்களில் பங்கு கொண்டதாலும் (1 அர 2:26–27) அபியத்தார் கொல்லப்படவில்லை. அனத் தோத்துக்குத் துரத்தப்பட்டார். இவ்வாறு நாடுகடத்தப்படுதலில் "இறைவன் சீலோ வாவில் ஏலியின் சந்ததியாருக்குச் சொல் லியிருந்த வார்த்தை (1 சாமு 2:27–36) நிறை வேறிற்று" (1 அர 2:27) என்று அரசர் நூல் ஆசிரியர் கருதுகிறார். ஏலி அபியத்தா ரின் மூதாதையருள் ஒருவராவார். அபியத்தார் பெரிய குரு பதவியிலிருந்து விலக்கப்பட்டு, சாலமோனுக்கு ஆதரவு அளித்த சாதோக்கு பெரிய குருவானார் (2:35). அபியத்தார் பெரிய குரு பதவியை இழந்தாலும், பெரிய குருவின் மதிப்பை இழந்துவிடவில்லை என்று 1 அர 4:4 சுட்டுவதாகத் தெரிகிறது. அனத்தோத்து என்னும் ஊரில் இருந்த அர்ச்சகர்களுள் ஒருவரான கிலிக்கியாவின் மகனான எரேமியா" (எரே 1:1) அபியத்தாரின் வழித் தோன்றலாக இருக்கலாம்.

ஒய்வு நாள் பற்றிப் பரிசேயரோடு இயேசு தர்க்கித்தபோது, தாவீது பிர சன்ன அப்பத்தை உண்டது அபியத்தர் காலத்தில் நடந்ததாக மாற்கு கூறுகிறார் (2:26). இது தவறாகும். இந்நிகழ்ச்சி அபி யத்தர் தந்தை அகிமெலக்கு காலத்தைச் சார்ந்ததாகும் (1 சாமு 21:1–6).

**அபியா** (ABIJAH – என் தந்தை யாவே) இப்பெயர் பலரைக் குறிக்கிறது.

1. ஆரோனின் வழித்தோன்றல்களில் ஒருவர். தாவீது ஆரோனின் புதல்வர் களான குருக்களை இருபத்தி நான்கு பிரிவுகளாகப்பிரித்து, முறைப்படி ஒவ் வொரு பிரிவும் ஆலயப் பணிசெய்ய ஒழுங்கு செய்தார். இது சீட்டுப் போட்டு நிர்ணயிக்கப்பட்டது. அபியா குருக்களின் எட்டாவது பிரிவுக்குத் தலைவர் (1 நாள் 24:10). லூக் 1:5–இன்படி திருமுழுக்கு யோவானின் தந்தையான செக்கரியா,

அபியா தலைமை தாங்கிய குருக்களின் பிரிவைச் சேர்ந்தவராவார்.

2. பென்யாமின் குலத்தைச் சேர்ந்த பெக்கரின் ஏழாவது மகன் (1 நாள் 7:8).

3. இறைவாக்கினர் சாமுவேலின் இரண்டாவது மகன் (1 நாள் 6:28). சாமுவேல் முதியவரானபோது யோவேல், அபியா ஆகிய தம் இரு புதல்வர்களையும் பேயேர்–செபாவில் நடுவர்களாக நியமித்தார். ஆனால் அவர்கள் அவர் சென்ற வழியில் செல்லவில்லை. பண ஆசை கொண்டு, கையூட்டுகளைப் பெற்றுக் கொண்டு நியாயத்தைத் திரித்துக்கூறினார்கள். ஆகவே இஸ்ராயேலின் குலத் தலைவர்கள் தங்களுக்கு நீதிவழங்க, மற்ற நாடுகளில் இருப்பதுபோல் ஓர் அரசனை ஏற்படுத்தும்படி சாமுவேலிடம் கேட்டுக் கொண்டனர் (1 சாமு 8:1–5).

4. இஸ்ராயேலின் அரசனான முதலாம் எரொபயாமின் மகனாவார் (1 அர 14:1). இவன் நோயுற்று வருந்தியபோது, தனது வருங்காலத்தை அறிந்துவரும்படி தனது மனைவியை இறைவாக்கினர் அகியாவிடம் எரொபயாம் அனுப்பினார் (14:2–3). அவள் மாறுவேடம் பூண்டிருந்தாலும், முதியவரும் கண்கள் மங்கிப் பார்க்க முடியாதவராய் இருந்த இறைவாக்கினர் அவளை அடையாளம் கண்டுகொண்டார். ஏனெனில் அவளது வருகையைப் பற்றி ஆண்டவர் ஏற்கெனவே இறைவாக்கினருக்கு அறிவித்திருந்தார் (14:4–5). முதியவரான இறைவாக்கினர் எரொபயாமின் வீட்டிற்கு வரவிருக்கும் அழிவை அறிவித்தார். ஆனால் அபியாவின்மேல் ஆண்டவர் கருணைக்கண் கொண்டதினால் அவருக்காக இஸ்ராயேலர் எல்லோரும் துக்கம் கொண்டாடி அவனை அடக்கம் செய்வர் என்று முன்னறிவித்தார் (14:13). எரொபயாமின் மனைவி திரும்பி வந்து தன் வீட்டு வாயிற்படியில் கால் வைத்தவுடனே இறைவாக்கினர் முன்னுரைத்தபடி அபியா இறந்தவிட்டான். அவருக்காக இஸ்ராயேலர் எல்லோரும் துக்கம் கொண்டாடினர். (14:17–18).

5. யூதாவின் அரசனான இரகபெயாமின் மகனும் அவனுக்குப்பின் ஆட்சி செய்தவனுமாவார் (2 நாள் 12:16; 13:1). 1 அர 14:31; 15:1.7–8–இல் இவர் அபியாம் என்றழைக்கப்படுகிறார். இவர் தாய் மாக்கா ஆவாள். இவள் அபிசலேமின் மகள் தாமாருக்கும் அவளது கணவன் உரியேலுக்கும் பிறந்தவள் (2 சாமு 14:27).

அவரது குறுகிய ஆட்சியில் (இரண்டு அல்லது மூன்று ஆண்டுகள் கி.மு.915–913; 1 அர 15:2; 2 நாள் 13:2) அபியா முதலாம் எரொபயாமோடு தன் தந்தை நடத்திய போரைத் தொடர்ந்து நடத்தினார் (1 அர 15:6–7). நாளாகம ஆசிரியர் இந்தப் போர்களை விவரிக்கிறார் (2 நாள் 13:2–20). தனது குடும்பத்தைப் பெருக்கினார். பல பிள்ளைகளைக் கொண்டிருந்தார் (13:21). இரு ஆசிரியர்களும் இவரது மரணத்தையும் அடக்கத்தையும் குறிக்கின்றனர் (2 நாள் 14:1; 1 அர 15:8).

அரசர் நூல் ஆசிரியர் நோக்கில், அபியா தன் தந்தை அவருக்கு முன் செய்திருந்த எல்லாப் பாவங்களையும் செய்தார். ஆண்டவருக்கு முழுவதும் பிரமாணிக்கமாய் இருக்கவில்லை (1 அர 15:3). ஆயினும் தாவீதின் பிரமாணிக்கத்தின் பொருட்டு ஆண்டவர் அபியாவின் உயிரை காத்தார். அவனுக்கு ஒரு மகனைக் கொடுத்தார் (15:4–5). ஆனால் நாளாக ஆசிரியர் அபியாவை இறைவனின் நம்பிக்கைக்கொண்ட சமயப் பற்றுடையவனாக விவரிக்கிறார் (2 நாள் 13:14.18)

கிறிஸ்துவின் மூதாதையர் பட்டியலில் இரகபெயாமுக்கும் ஆசாவுக்குமிடையில் அபியா சேர்க்கப்பட்டுள்ளார் (மத் 1:7).

6. எசக்கியாவின் தாயும் செக்கரியாவின் மகளுமாவாள் (2 நாள் 29:1). 2 அர 18:2–இல் இவள் அபி என்றழைக்கப்படுகிறாள். காண்க: அபி.

7. பாபிலோனுக்கு நாடு கடத்தப்பட்டு செருபாபேலோடு திரும்பிய குருக் கள் குடும்பங்கள் ஒன்றின் தலைவர் (நெக 12:4.7.17). அநேகமாக நெகமியாவின் தலைமையில் புதுப்பிக்கப்பட்ட உடன் படிக்கையில் கையொப்பமிட்டவர்களில் ஒருவராக 10:7 குறிக்கப் பெறுவபவர் இவரேயாகும். இவர் 1–இல் குறிக்கப் படும் எட்டாவது ஆரோன் குருக்கள் பிரிவன் வழித்தோன்றலாக இருக்கலாம்.

ஆனால் எஸ் *2:36–39*–இல் திரும்பி வந்தவர்களாகக் குறிக்கப்படும் குருக்கள் பட்டியலில் இப்பெயர் காணப்படவில்லை.

*8.* கெசிரோனின் மனைவியும் தெக்கோவாவின் பாட்டியுமானவரின் பெயர். சிலமொழி பெயர்ப்புக்கள் (1 நாள் 2:24) அபியா என்ற பெயரை இடு பெயராக ஏற்று "என் தந்தை" என்று மொழி பெயர்க்கின்றன.

**அபியாம்** (ABIJAM – கடலின் தந்தை)

யூதாவின் அரசனான அபியாவின் பெயர்த்திரிபு ஆகும். இத்திரிபு பலவாறு விளக்கப்பட்டுள்ளது. எதுவும் நிறைவளிக்கவில்லை. காண்க அபியா–5

**அபியேசர்** (ABIEZER – என் தந்தை உதவியாக உள்ளார்)

1.மனாசேயின் ஒரு குடும்பம் (1 நாள் *7:18*). எண் *26:30*–இல் இப்பெயரின் குறுகிய வடிவமான இயசேர் காணப்படுகிறது. அபியேசரியர்களுக்கு, யோர்த்தானுக்கு மேற்கிலுள்ள கானானில் மனாசேயின் பகுதியில் ஒரு பகுதி கொடுக்கப்பட்டது (யோசு *17:24*: 1 நாள் *7:18*). அதில் ஒபிரா நகரமும் உள்ளடங்கும். அபியேசர் மனாசே மரபுப் பட்டியலில் ஒரு தனி ஆளாகத் தோன்றுகிறார். ஒரு வேளை கிலயாத்தின் மகனாக இருக்கக்கூடும். ஆனால் வாசகம் தெளிவாக இல்லை. கிதயோன் ஓர் அபியேசர் குடும்பத்தைச் சேர்ந்தவராவார். காண்க: ஒபிரா–2, கிதயோன்.

2. பென்யாமின் குலத்தைச்சேர்ந்தவர். அனத்தோத்தில் குடியிருந்தவர். தாவீதின் வீரமிக்க முப்பது மெய்க்காப் பாளர்களுள் ஒருவர் (2 சாமு *23:27*; 1 நாள் *11:28*; *27:12*). நாளாகம ஆசிரியரின் திட்டப்படி, தாவீது தனது படையை 24,000 வீரர்கள் கொண்ட பன்னிரண்டு பிரிவுகளாகப் பிரித்திருந்தார். அபியேசர் ஒன்பதாவது பிரிவுக்குப் படைத்தலைவராக விளங்கினார். ஒன்பதாவது மாதத்தில் இவருக்குச் சிறப்பு பொறுப்புகள் உண்டு.

**அபியேல்** (ABIEL – என் தந்தை இறைவன் ஆவார்)

1. பென்யாமின் குலத்தைச் சேர்ந்தவர். கீசின் தந்தையும் சவுலின் பாட்டனுமாவார் (சாமு *9:1–2*). மேலும் நேரின் தந்தையும் அபினேரின் பாட்டனும் ஆவார் (*14:51*). 1 நாள் *8:29*–இல் நேரின் தந்தையாகத் தோன்றும் எயியேல் அபியேலாகத்தான் இருக்க வேண்டும்.

2. தாவீதின் பொறுக்கி எடுத்த 30 வீரர்களில் ஒருவராவார். அர்பாத்தியர் என்றழைக்கப்படுகிறார் (1 நாள் *11:32*). 2 சாமு *23:31*–இல் இவர் அர்பாத்தியனான அபி அலபோன் என்றழைக்கப்படுகிறார். காண்க: அபி அலபோன்.

**அபியூது** (ABIUD – என் தந்தை மாட்சிமை ஆவார், என் தந்தை புகழ் ஆவார்)

அபிகூது என்ற பெயரின் மற்றொரு வடிவம் ஆகும். செருபாபேலின் மகன். இயேசுவின் மூதாதையருள் ஒருவர் (மத் *1:13*; லூக் *3:23* தொ).

**அபிராம்** (ABIRAM – தந்தை உயர்ந்தவர்)

1. ரூபன் குலத்தவர், எலியாப்பின் புதல்வர். மோசேக்கும் ஆரோனுக்கும் விரோதமாய் கலகம் விளைவித்த கோராகு கலகத் தலைவர்களில் இவரும் ஒருவர் (எண் *16:1*). இக்கலகக்காரர்களை நிலம் பிளந்து விழுங்கிவிட்டது. மோசேயின் அதிகாரம் எண்பிக்கப்பட்டது (*16:1–34*). இச்சம்பவம் இறைவனது மகிமையை வெளிப்படுத்தும் மறக்கவியலா மாபெரும் சம்பவமாகும். மும்முறை இந்நிகழ்ச்சி நிகழ்ச்சி பழைய ஏற்பாட்டில் குறிப்பிடப் பட்டிருக்கிறது. எண் *26:9*–இல் ஓர் எச்சரிக்கையாகவும் உப *11:6*–இல் இறைவனது ஆற்றலை வலியுறுத்தும் கடந்த காலப்பாடமாகவும், சங் *106:7*–இல் பாலைவனத்தில் அலைந்து திரிந்தபோது இஸ்ராயேலில் செய்த பாவங்களின் ஒரு மாதிரிகையாகவும் குறிக்கப்படுகின்றது.

2. பெத்தேல் ஊரானாகிய கீயேலின் தலைமகன் அபிராம் ஆவார். ஆகாபு ஆட்சிக்காலத்தில் அவரது தந்தை எரிகோவைக் கட்டி எழுப்ப முனைகையில் அடிக்கல் நாட்டும்போது தலைமகனான அபிராமும், வாயில்களை அமைத்தபோது இளைய மகனான சேக்குவும் இறந்து போயினர் (1 அர *16:34*). இந்த மரணங்கள் தொடக்கத்தில் எரிகோவை அழித்த யோசுவாவின் சாபத்தின் விளைவு என

கருதப்படுகிறது (யோசு 6:26). இந்நிகழ்ச்சி இறைப்பற்றின்மை இஸ்ராயேலரிடையே வளர்ச்சியுற்றதை எடுத்துக்காட்டுகிறது. இச்சாவுகளில் அடிக்கல் நாட்டும்போது காவு கொடுக்கும் வழக்கத்தைப் பல ஆய்வாளர்கள் காண்கின்றனர்.

**அபிராம்** (ABRAM)

ஆதி 11:26–17: 4–இல் இடம் பெற்றிருக்கும் ஆபிரகாமின் மூலப்பெயராகும். காண்க: ஆபிரகாம் – பெயர்.

**அபிரு** (APIRU)

கபீருவின் மற்றொரு வடிவம். காண்க. கபிரு

**அபிரோனா** (ABIRONAH – வாயில், பாதைகள் சந்திக்கும் இடம்)

இஸ்ராயேலர் பாலைவனத்தில் அலைந்து திரிந்தபோது, எசியோன்–கெபேரில் பாளையம் இறங்கும்முன் அபிரோனாவில்தான் தங்கியிருந்தனர் (எண் 33:34–35). இவ்விடம் எசீயோங்கேபேருக்கு வடக்கே 12 கி.மீ. தொலைவிலுள்ள ஒரு பாலைவனச் சோலையாகும்.

**அபிரோன்** (ABIRON)

யூப்பிரத்திசு நதியின் ஒரு கிளையாறு. காபுர் என்ற ஆற்றின் மற்றொரு பெயராகும். சிலர், இந்த ஆறு சபோராஸ் ஆறுதான் என்பர் (யூதி 2:24).

**அபிலேன்** (ABILENE – பசும்புல் நிலம்)

எதிர் லெபானோன் அல்லது கிழக்கு லெபானோன் மலைத்தொடரின் கிழக்குப் பகுதியிலுள்ள ஒரு சிறு நாடாகும். அதன் தலைநகரம் அபிலா ஆகும். இது விவிலிய அபானாவான பரதா–என்ற ஆற்றின் தென்கரையில் தமஸ்குவிலிருந்து 27 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது.

புதிய எற்பாட்டில், திருமுழுக்கு யோவானின் பணியின் தொடக்கத்தை விவரிக்கும்போது, அபிலேன் நாட்டிற்கு இலிசானியா சிற்றரசனாக இருந்தார் என்று லூக்கா கூறுகிறார் (3:1). இலிசானியா இறந்தபின் இந்நாடு முதலாம் அகிரிப்பாவுக்கும் (கி.மு.37), பின்பு இரண்டாம் அகிரிப்பாவுக்கும் அளிக்கப்பட்டது.

**அபினதாபு** (ABINADAB–தந்தை பெருந்தன்மையுள்ளவர், தந்தை உயர்தரமானவர்).

1. எலயாசர், அகியோ, ஊசா ஆகியோரின் தந்தை. லேவியராக இருக்கலாம். கிரியத்து–எயாரீம் மலையில் இவர்கள் வசித்து வந்தனர் (யோசு 15:9–10.60; 18:14; 1 நாள் 13:6)

பேத்து–செமேசில் நடந்த பேரழிவுக்குப்பின் ஆண்டவருடைய பேழையை இவர் வீட்டில்தான் நிறுவினர் (1 சாமு 6:19–7:2).

பல ஆண்டுகளுக்குப்பின், ஆண்டவரது பேழைக்கு எருசலேமில் நிலையான இடமளிக்க எண்ணிய தாவீது மன்னன் ஒரு பவனி நடத்தினார், அதில் அபினதாபின் புதல்வர்கள் ஊசா, அகியோ ஆகியோர் மாடுகள் பூட்டிய புதுத்தேரில் பேழையை ஏற்றிக்கொண்டு வந்தனர். பவனி நாக்கோனின் களத்திற்கு வந்தபோது மாடுகள் மிரண்டு பேழையைக் கீழே சாய்த்துப் போட இருந்தன. இதைக் கண்ட ஊசா, அதைத்தன் கையால் தாங்கினார். அப்போது ஆண்டவருக்கு ஊசாவின்மேல் கோபம் மூண்டது. அவருடைய துணிவை முன்னிட்டு ஆண்டவர் அவரை வீழ்த்த, அங்கேயே விழுந்து இறந்தார் (2 சாமு 6:6–7: 1 நாள் 13:6–10).

2. அரசன் சவுலின் மகன் (1 நாள் 8:33; 9:39). அவரின் தந்தை மற்றும் சகோதரர்களோடு கில்போவா மலையில் பெலிஸ்தியர்களால் கொல்லப்பட்டார் (1 சாமு 31:2; 1 நாள் 10:2).

3. ஈசாயின் இரண்டாம் மகன், தாவீதின் அண்ணன் (1 சாமு 16:8; 1 நாள் 2:13). கோலியாத்து, எப்பசு–தம்மிமில் பெலிஸ்தியர்களுக்காகச் சவால் விட்டுக் கொண்டிருந்தபோது, தன் சகோதரர் எலியாபு மற்றும் சம்மாவோடு அபினதாபும் சவுலின் படையில் இருந்தார் (1 சாமு 17:13).

4. சாலமோனின் மருமகன்களில் ஒருவனின் தந்தை. இவர் நாபத்–தோர் பகுதி முழுவதற்கும் அதிகாரியாக இருந்தார் (1 அர 4:11) காண்க: பென் – அபினதாபு.

**அபினேர்** (ABNER – என் தந்தை விளக்காவர்)

இவர் சவுலின் சிற்றப்பன் நேரின் மகன். சவுலின் படைத்தலைவர் (1 சாமு 14:50–51). சவுலின் கீழ் அபினேரின் நீண்ட போர்க்காலப் பணிகளைப் பற்றி அதிகம் கூறப்படவில்லை (14:47). பெலிஸ்தியருக்கு எதிரான போரில் இஸ்ராயேலர் படைக்கு இவர் தலைமை தாங்கினார். தாவீதைச் சவுலின்முன் கொண்டு வந்தவரும் இவரே (17:55–58). அமாவாசை விருந்தில் "அபினேர் சவுலின் பக்கத்தில் உட்கார்ந் திருந்தான்" என்ற கூற்று, அவரது முக்கியத்துவத்தைக் காட்டுகிறது (20:25). சவுல் வெறிகொண்டு தாவீதைக் கொடு மைப்படுத்திபிடிக்க முயன்றபோது, அபி னேரும் பங்குகொண்டார். சிப்பு பாலை யில் சவுலைப்பாதுகாப்பதில் கவனக் குறைவுக்காக, தாவீது அபினேரைக் கடிந்து கொண்டார் (26:5 தொ).

சவுல் இறந்த பின்னும் அவருடைய வீட்டு அரச காரியங்களில் அபினேர் அக்கறைகொண்டார். சவுலின் மகன் இசிபோசத்தை யோர்தானுக்கு அப்பா லுள்ள மகனாயிமுக்கு எடுத்துச்சென்று இஸ்ராயேலின் வடகுலத்தவர்களுக்கு அரசனாக்கினார் (2 சாமு 2:8–10). சவுலின் வீரர்களோடு கிபேயோன் என்ற இடத்தில் தாவீதின் படைத்தலைவர் யோவாபுவுடன் மோதினார். தோற்கடிக் கப்பட்டார் (2:12–17). முடிவில் எச்சரிக்கை களுக்குப்பின் யோவாபு, அபிசாயின் சகோதரனான அசாயேல் அபினேரைத் துரத்திச்சென்றார். தற்காப்பிற்காக அபினேர் அசாயேலைக் கொல்லவேண்டி யிருந்தது (2:18–23). யோவாபும், அபிசா யும் பழி வாங்கச் சமயம் தேடிக்கொண்டி ருந்தபோது, அவர்களோடு அபினேர் இடைக்காலப் பகை நிறுத்த ஒப்பந்தம் செய்துகொண்டார். ஆனால் இது சிறிது காலத்திற்கே நீடித்தது.

இசிபோசத்தின் ஆட்சியில் இரண்டாம் ஆண்டு அரசவையில் இடுக்கண் நிலை ஏற்பட்டது அதன் விளைவாக சவுலின் மரபே அழிந்துபோயிற்று. இசிபோசத் துக்கு அபினேர் தனது ஆதரவைக் குறைக் காவிடினும் சவுலின் வைப்பாட்டிகளுள் ஒருவளான இரிசிப்பா என்பவளோடு நெருங்கிய தொடர்பு வைத்துக் கொள்ள ஆரம்பித்தார். இந்தத் துரோகச் செயலுக் காக அபினேரை அரசன் கடிந்து கொண்டார். இதனால் அபினேர் தனது ஆதரவைத் தாவீதுக்கு மாற்றினார் (3:6–12). வட இனத்தவரைத் தாவீதின் ஆட்சியின் கீழ்கொண்டு வருவதாக வாக்களித்து தூதுவர்களைத் தாவீதிடம் அனுப்பினார் (2:12). இதைத் தாவீது ஏற்றுக்கொண்டா லும் தனது முதல் மனைவி மீக்காள் தனக்குத் திரும்பத் தரவேண்டும் என்று தாவீது வற்புறுத்தினார். அபினேரின் இடையீட்டால் மீக்காள், தாவீதுக்குத் திருப்பித் தரப்பட்டாள் (3:13–16). இது புதிய உடன்படிக்கைக்கு இட்டுச்சென்றது. வாக்களித்தபடி அபினேர் வட குலத்தவர் களைத் தாவீதுவின் ஆட்சிக்குக் கொண்டு வருவதில் வெற்றிகொண்டபின், தாவீது அபினேரைக் கெபிரோனின் ஒரு விருந் துக்கு அழைத்தார் (3:17–20). எல்லாம் சரி செய்யப்பட்டபின், விருந்து முடிந்தபின் அபினேர் தாவீதுவிடம் விடைபெற்றுச் சென்றார். யோவாபுவின் வேண்டு கோளுக்கிணங்கி அபினேர் வந்தபோது, தனித்து பேச விரும்புவதாக நடித்து அபினேரை வாயிலில் சந்தித்து கபடமாய் யோவாபு கொன்றார். இவ்வாறு தனது சகோதரன் அசாயேலின் மரணத்திற்குப் பழிவாங்கினார் (3:23–27). இவ்வாறு, ஆற்றல் மிக்க இந்தப் படைதலைவனின் வாழ்வு எதிர்பாராதவிதமாய் அவலமாய் முடிந்தது.

இச்செய்தி கேட்ட தாவீது, அவருக் காகப்புலம்பினார். அவரது பண்புகளைப் போற்றிப்பேசினார். அவருக்காக உண்ணா நோன்பு இருந்தார். அவருக்கு ஒரு இரங்கற்பாடலும் இயற்றினார். இக் கொலையில் அரசனுக்கு எப்பங்குமில்லை என்று மக்கள் அறிந்துகொண்டனர் (3:31–39). குற்றவாளிக்குத்தகுந்த தண்டனை அளிக்குமாறு தாவீது இறைவனிடம்வேண் டினார் (3:39). கெபிரோனில் அபினேர் அடக்கம் செய்யப்பட்டார். அவரால் வெறுக்கப்பட்ட இசிபோசத்தின் வெட்டப் பட்ட தலையும் பிற்காலத்தில் இக்கல்ல றையிலேயே வைக்கப்பட்டது (4:1–2.12).

*1 நாள் 26:27–28*–இன்படி ஆண்டவரு டைய ஆலயத்தைப் பழுதுபார்க்கவும் அதற்குத்தேவையான பாத்திரங்கள் செய் வதற்கும், போர் கொள்ளைப் பொருட் களின் ஒரு பகுதியைக் காணிக்கையாக அளித்தவர்களுள் அபினேரும் ஒருவரா வார். அவரது மகன் யாசியேல் தாவீது ஆட்சிக்காலத்தில் பென்யாமின் குலத்த வர்க்குத் தலைவனாக விளங்கினார் *(27:21)*.

**அபினோவாம்** (ABINOAM – *தந்தை அற ஆர்வமுள்ளவர்)*

நப்தலி குலத்தைச் சேர்ந்தவர். காதே சில் வாழ்ந்தவர். தெபோராவின் தூண்டு தலால், வட எபிரேயர்களை ஒன்று சேர்த்து, சிசராவின் தலைமையில் வந்த கானானியப் படையைத் தோற்கடித்த பாராக்கின் தந்தையாவார் *(நீதி 4:6.12; 5:1.12)*.

**அபிக்கு** (APHIK)

அபேக்கின் மாற்று வடிவம் *(நீதி 1.31)*. காண்க: *அபேக்கு–3.*

**அபீபு** (ABIB)

இது ஒரு கானானியப் பெயராகும். எபிரேய ஆண்டுக்குறிப்பில் முதல் மாத மாகும். மார்ச், ஏப்ரல் மாதத்தோடும், பங்குனி மாதத்தோடும் இணையானது. கடந்தேகும் பாஸ்கு விழாவோடோ, புளி யாத அப்ப விழாவோடோ குறிப்பிடப்படு கிறது. தானியக் கதிர் மாதம் என்றும், பார்லியின் இளங்கதிரின் மாதம் என்றும் குறிக்கப்படுகிறது. இது அறுவடைக் காலத்தைச் சுட்டலாம் *(யாத் 13:4)*. பாபி லோனுக்கு நாடு கடத்தப்பட்டு திரும்பிய பின் இம்மாதம் நீசான் என்றழைக்கப் பட்டது *(நெக 2:1; எஸ்த 3:7)*.

யோசிபாசின் கருத்துப்படி அபீபு இஸ் ராயேலின் சமய ஆண்டின் முதல் மாத மாகும். சமூக ஆண்டு இலையுதிர் காலத் தில் திசுரி மாதத்தோடு தொடங்கியது. காண்க: ஆண்டுக் கணிப்பு, நீசான்.

**அபு** (AB)

இப்பெயரை பாபிலோனிய *"அபு"* என்ற சொல்லிலிருந்து யூதர்கள் கடன் வாங்கியிருக்க வேண்டும். இது எபிரேய ஆண்டுக் குறிப்பேட்டின் ஐந்தாவது மாத மாகும். இது நமது ஜூலை–ஆகஸ்டு, ஆடி மாதங்களுக்கு இணையானது. இம் மாத்தில் கொடி முந்திரி மற்றும் அத்திப் பழங்கள் அறுவடைசெய்யப்பட்டன. இம் மாதத்தின் ஏழாம் நாளில் நெபுக்கதுனே சாரால் எருசலேம் அழிக்கப்பட்டதை *(கி.மு.587/586)* நினைவு கூறும் விதத்தில் ஒரு பெரும் நோன்பு கடைப்பிடிக்கப் பட்டது.

**அபுதா** (ABDA – *யாவேயின் ஊழியன் என்பதன் சுருக்கம்)*

*1.* இவர் சாலமோன்கீழ் அடிமை களின் மேற்பார்வையாளராக இருந்த அதோனிராமின் தந்தையாவார் *(1 அச 4:6)*

2. இவர் பாபிலோனுக்கு நாடு கடத்தப் பட்டுத் திரும்பியபின் எருசலேமில் வாழ்ந்த ஒர லேவியர் ஆவார், எதுத் தூணின் மகனான காலாலின் புதல்வ ரான சம்மூவாவின் மகனாவார். இவர் *1 நாள் 9:16*–இல் ஒபதியா என்றழைக்கப்படு கிறார்.

**அபூபு** (ABUBUS)

அசமோனியப் பரம்பரையைச் சேர்ந்த சீமோனையும் அவரது புதல்வர்களையும் கபடமாய் கொன்றுவிட்ட தோலமியின் தந்தையாவார். சீமோனின் மருமகன் *(1 மக் 16:15)*. எரிகோவின் ஆளுநர்.

**அபேக்கா** (APHEKAH – *கோட்டை அல்லது தூசி)*

யூதா குலத்திற்கு ஒதுக்கப்பட்ட ஒரு நகரம்; மலைப்பகுதியிலும் பேத்து–தப்பு வாகுக்கு அருகிலும் இருந்தது *(யோசு 15:33)*. இதன் இருப்பிடம் இன்னும் தெரிய வில்லை. செயில்–ஏத்–தில்பேயின் கிழக்கி லுள்ள ஏல்–அதாத்–ஆக இருக்கலாம் என்று சிலர் கூறுவர்.

**அபேக்கு** (APHEK)

*1.* யோசுவாவும், இஸ்ராயேல் படை களும் கானான் நாட்டில் குடியேறிய பொழுது, சாரோனின் சமவெளியில் இருந்த இந்த நகர அரசின் அரசரைக் கொன்றனர் *(யோசு 12:18)*. சாரோன் சமவெளியில் செல்லும் முக்கிய சாலை யின்பகுதி போர் தந்திரமாக நிறுவப் பட்டிருந்தது. இது இந் சமவெளியையும், எப்பிராயிம் மலை நாட்டையும் இணைந்

தது. ஆகவே இவ்விடம் இயற்கையாக பெலிஸ்திய இஸ்ராயேல் படைகள் மோதும் ஒரு இடமாக இருந்தது. ஏலி நடுவராக இருந்தபோது, பெலிஸ்தியர் இங்கு கூடாரம் அடித்து இருமுறை இஸ் ராயேலரைத் தோற்கடித்தனர் (1 சாமு 4:2. 10–17). இங்கு நடந்த இரண்டாவது போரில் உடன்படிக்கையின் பெட்டகம் பெலிஸ்தியர்களால் பிடிபட்டது (கி.மு. 1050). சவுலின் ஆட்சி முடிவில் இங்கு தான் இஸ்ராயேலரும் பெலிஸ்தியரும் போரிட்டனர் (1 சாமு 29:1). அதில் சவுல் உயிர் இழந்தார் (31:1–7).

இவ்விடமானது இன்றைய யார்கோன் ஆறு தொடங்கும் இடமாகிய ராஸ்–ஏல்–ஆயின் என்ற இடத்தில் குறிப்பிடப்படு கிறது. இங்குதான் அந்திப்பத்திரி என்ற ஏரோதிய உரோமை நகரம் இருந்தது. கி.மு.19–ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட எகிப்திய பழிப்புரை வாசகங்களில் காணப்படுகின்ற அபேக்கு இதுவாக இருக்கலாம் எனத்தோன்கிறது. அதோன் என்ற பாலஸ்தீன அரசன் அரமேய மொழியில் தன்னுடைய எகிப்து மேலதிகா ரிக்கு பாபிலோனிய படையின் முன்னேற் றத்தைத் தெரிவித்து எழுதிய கடிதத்தில் இப்பெயர் தோன்றுகிறது (கி.மு.600). தொல்பொருள் ஆய்வுகள் கி.மு.2200 லிருந்து 1200 வரை இவ்விடத்தில் மக்கள் தொடாந்து வாழ்ந்ததற்குச்சான்று காட்டு கின்றன. 1200–இல் பெலிஸ்தியர் இந் நகரை அழித்ததாகத் தெரிகிறது. விவிலிய நகரைச் சுற்றியே பெருமளவுக்கு அகழ்வுகள் செய்யப்பட்டாலும் அதில் ஒரு கானானியகோட்டை அல்லது அரண் மனை, சத்திரம், உரோமையர் கல்லறைக் கூடம் ஆகியவை கண்டெடுக்கப்பட்டுள் ளன. கல்லறைகளும் குப்பைத்தொட்டி களும் பலவகையான பாண்டங்களையும் ஆப்பு எழுத்து வாசகங்களையும் காட்டி யுள்ளன.

2. கானான் நாட்டு வடக்கு எல்லையில் எமோரியர்கள் தங்கியிருந்தஇடம். இது இஸ்ராயேலருடைய உடைமையாக ஒரு போதும் இருந்ததில்லை. ஆயினும், அது அவர்களுடைய பாரம்பரிய சொத்தாகக் கருதப்பட்டது (யோசு 13:14). லெபனோனி லுள்ள எபேயிலுக்குக் கிழக்கில் 24 கி.மீ தொலைவிலும் பெத்தேலுக்கு வடகிழக் கில் 37 கி.மீ. தொலைவிலும் உள்ள இன்றைய அப்காவாக இது இருக்கலாம் எனக் கருதப்படுகிறது. அசித்தார்த்தி அதோனிசின் வழிபாட்டு மையமாகவும், திருத்தலமாகவும் இருந்தது. இங்கு இருக் கின்ற புனித நீரூற்று இன்றைய நாரா இப்ராகிமின் (அன்றைய அதோனிஸ்) என்ற ஆற்றின் மூலமாக இருக்கின்றது.

3. ஆசேர் குலத்துப் பூர்விகச் சொத் தான ஒரு கனானிய நகரம் (யோசு 19:30). இவ்விடத்தின் குடிமக்களை வெளியேற் றவோ, அல்லது அவர்களை கப்பம் கட்டச் செய்யவோ இந்தக் குலத்தவரால் முடியவில்லை. ஆக்கோவிலிருந்து 9 கி.மீ. தென்கிழக்கில் கய்பா வளைகுடா விலிருந்து 5 கி.மீ. உள் நாட்டிலுள்ள தேல்கெர்தானா–அருவாக இவ்விடம் இருக்கலாம் எனக்கருதப்படுகிறது.

4. விவிலிய பாசானிலுள்ள யோர் தானுக்கு அப்பாலுள்ள மாவட்டத்தின் வடக்குத் திசையில் இந்நகரம் உள்ளது. தமஸ்குவை பேத்து–சான்னுடனும் இஸ்ரா யேல் பள்ளத்தாக்குடனும் இணைக்கும் முக்கியசாலையில் இது உள்ளது. இவ் விடத்திற்கு அருகிலுள்ள சமடவெளியில் தான் சீரியாநாட்டு பென்–அதாது ஆகா பின் படைகளால் தோற்கடிக்கப்பட்டு, மீதியிருந்த படைகளுடன் பாதுகாப்பிற் காக அபேக்கு நகருக்குள் ஓடினார். அங்கு நகர எல்லைச் சுவர் இடிந்து விழ, மீதி இருந்த படைகளும் அழிந்துவிட்டன (1 அர 20:26–30). எலிசாவின் இறைவாக் கின்படி இஸ்ராயேலின் அரசன் யோவாசு இவ்விடத்தில்தான் சீரியா படை களை பலமுறை தோற்கடிப்பதாக இருந் தது (2 அர 13:14–19.25).

கலிலேயாக் கடலுக்குக் கிழக்கேயுள்ள பிக் (அபிக் என்றும் அழைக்கப்படுகிறது) என்ற ஊரின் பெயரில் இப்பூர்வீகப் பெயர்ச் சின்னம் உள்ளது.

**அபேய்ரமா** (APHAIREMA)

யோனத்தானின் உதவியைப்பெறும் பொருட்டு முதலாம் தெமேத்திரியு யூதர் களுக்குக் கொடுப்பதாக வாக்களித்த சமா

ரியாவைச் சேர்ந்த மூன்று மாநிலங்களுள் ஒன்று (1 மக் 10:38). இரண்டாம் தெமேத்திரிய இதனைச் உறுதிப்படுத்தினதோடு யோனத்தானுக்கு இன்னும் பல அதிகாரங்களைக் கொடுத்தார். அரச வரியிலிருந்து யூதர்களுக்கு விடுப்பு அளித்தார். இந்த இடம் பெத்தேலுக்கு அருகில் இருந்ததாக யோசீபஸ் கூறுகின்றார். இயேசு கடைசியாக எருசலேமில் நுழைவதற்கு முன்பு தங்கி ஒய்வெடுத்த இடம்தான் இதுவாக இருக்கவேண்டும் (யோவா 11:54). எழுபது நூலில் காணப்படும் இவ்விடத்தின் பெயரானது யோசிபஸ் குறிப்பிடும் பெயரின் திரிபாக இருக்கலாம். இந்த இரண்டு பெயர்களும் எப்பிராயீம் என்ற அரமேய இடப்பெயரைக் குறிப்பிடுகின்றன. இந்த எப்பிராயீம் முன்பு பெத்தேலுக்கு வடகிழக்கிலுள்ள ஒரு மலையில் மேல் இருந்த ஒபிரா எனப்பட்ட இடம். இவ்விடம் இன்று எல்–தையிபே என்று அழைக்கப்படுகிறது.

**அப்கார்** (ABGAR)

இவர் உச்சாமோவின் அரசனும் கி.பி.9–46–ஐ ஒட்டி எதேசாவில் ஆட்சி செய்த உச்சாமோவின் மகனும் ஆவார். இவர் கிறிஸ்துவோடு கடிதப்போக்கு வைத்திருந்ததாகக் கதை உண்டு. இதன் படி இவருடைய ஒரு பயங்கர வியாதியைக் குணப்படுத்தும்படி கிறிஸ்துவை அழைக்கிறார். கிறிஸ்து, தமது சீடர்களில் ஒருவரை அனுப்புவதாக உறுதியளிக்கிறார். அவரது விண்ணேற்றத்திற்குப் பின், அவருடைய எழுபது சீடர்களில் ஒருவரான ததேயு எதேசாவுக்கு வந்து, அரசனைக் குணப்படுத்தி, நாட்டில் கிறிஸ்தவ மறையைப் பரப்புகிறார். காண்க: அப்கார்–கிறிஸ்து ஆகியோருக கிடையே திருமுகங்கள்.

**அப்கார்–கிறிஸ்துவின் திரு முகங்கள்** (EPISTLES OF CHRIST AND ABGAR)

இரு சிறு மடல்கள் அடங்கிய நூலாகும். ஒன்று ஏதேசாவின் அரசன் அப்கார் உச்சாமோவினால் இயேசுவுக்கு எழுதப்பட்டது. மற்றது அதற்குப் பதில் மடல், விண்ணேற்றத்திற்குப்பின் தோமையாரால் எதேசாவிற்கு அனுப்பப்பட்ட எழுபது பேரில் ஒருவரான ததேயுவின் தீரச் செயல்கள் அடங்கிய பணிகளோடு இரண்டு மடல்களும் சேர்க்கப்பட்டுள்ளன. இநநூலை சிரியாக் மொழியிலிருந்து கிரேக்கத்திற்கு மொழி பெயர்த்த யூசேபியஸ், ததேயுவின் தூதுபற்றிய கதையையும் அம்மடல்களையும் ஏதேசாவின் ஆயப்ப வேட்டு நிலையத்தில் கண்டெடுத்தாகக் குறிப்பிடுகிறார்.

கொடிய நோயினால் துன்புற்ற அப்கார், இயேசுவின் புதுமைகளைப் பற்றிக் கேள்விப்பட்டு, இயேசு தன் நாட்டிற்கு வந்து, தன்னைக் குணமாக்கி, தனது அரசின் ஒரு பகுதியைப் பெற்று வாழும் படியும், அதனால் எருசலேம் யூதர்களின் வன்மப்பகையிலிருந்து தப்பிக் கும்படியும் அவரை அழைத்து மடல் அனுப்புகிறார். இந்த வேண்டுகோளை மறுத்த இயேசு, தனது விண்ணேற்பிற்குப்பின் தனது சீடர்களில் ஒருவரை அனுப்புவதாக வாக்களிக்கின்றார். விண்ணேற்றத்திற்குப்பின் ததேயு வந்து அப்காரைக் குணமாக்கி, அந்த சமுதாயத்தை மனந்திருப்புகிறார்.

இதற்கு இணையான ஆனால் சிறிது மாறுபட்ட விளக்கம் அத்தேயின் போதகம் என்ற நூலில் உள்ளது (கி.பி.400). இந்தப் பிற்கால வாசகத்தில் கிறிஸ்துவின் பதில் வாய்மொழியாக அமைகின்றது. கிறிஸ்து எதுவுமே எழுதவில்லை என்பது ஏற்றுக் கொள்ளப்பட்ட நேரம்–மடலுக்குப் பதிலாக அனனியா (அப்காரின் தூதுவன்) கிறிஸ்துவின் உருவமைப்பைத்தானே வரைந்து எடுத்துச்செல்கிறார். அது அப்கார் அரண் மனையில் காட்சிப்பொருளாகின்றது. ததேயுவின் பணி என்ற கிரேக்க நூல், இதே கதையைச் சில வேறுபாடுகளுடன் தருகிறது. அதில் குறிப்பிடத்தக்கது, கிறிஸ்து ஒரு கைத்துணியை அனனியாவுக்குக் கொடுத்ததாகவும், அதில் அவர் முகத்தோற்றம் அருஞ்செயலாக பதிந்ததாகவும் கூறுகின்றது. காண்க: ததேயுவின் பணி.

**அப்தியாவின் அப்போஸ்தலர் வரலாறு** (APOSTOLIC HISTORY OF ABDIAS)

இது ஒரு தொகுப்பு நூலாம் யூலியு ஆப்ரிகானு எழுதியதாகக் கருதப்படும் முன்னுரையில் அப்போஸ்தலர்களைப் பற்றி எபிரேயத்தில் அப்தியா எழுதிய

வற்றை அவரது சீடன் யூட்ரோபியு கிரேகத்தில் மொழி பெயர்த்ததாகவும், அதை யூலியு ஆப்ரிக்கானும் இலத்தீனில் மொழி பெயர்த்ததாகவும் கூறப்படுகிறது. கிரேக்கத்தில், அப்போஸ்தலர்கள் பற்றித் தனித் தனியாக இருந்த கதைகள், இலத்தீனில் வசதியாக தொகுப்படுகின்றன. இதில் பத்து நூல்கள் உண்டு. பேதுரு (1), பவுல் (2), அந்திரேயா (3), பெரிய யாக்கோபு (4), யோவான் (5), சின்ன யாக்கோபு (6:1–6) சீமோன்–யூதா (6:7.தொ), மத்தேயு (7), பார்த்தொலமே (8), தோமா (9), பிலிப்பு (10) ஆகியோரைப் பற்றியவையாகும்.

இவை நற்செய்திகள், அப்போஸ்தலப் பணி, கிளமென்தின் நூல்கள் போன்ற பலவற்றிலிருந்து தொகுக்கப்பட்டவை. கிரேக்க வாசகம் இலத்தீன் வாசகத்திலிருந்து பெரிதும் வேறுபடுகிறது. இந் நூல் தொகுப்பு, கி.மு. 6–ஆம், 7–ஆம் நூற்றாண்டின் பிரான்சில் தொகுக்கப் பட்டு அப்தியா என்ற பெயரோடு தொடர்புபடுத்தப்படுகிறது. இதற்கு எந்த வரலாற்று அடிப்படையும் இல்லை.

**அப்பம், ரொட்டி** (BREAD)

I. தொடக்கக் காலம்முதல் இஸ்ராயேலிலும், பழம் மேற்காசியாவிலும், மனித உணவில் அப்பம் ஒரு முக்கிய பகுதியாகும். நிலையாகக் குடியேறிய விவசாய வாழ்வில் அப்பம் உண்ணுதல் சிறப்பான பண்பாகும். நாடோடி வாழ்க்கைக் காலத்தில் அப்பம் சிறிது அரிதாகவே பயன் பட்டது. ஏனெனில் அந்த வாழ்வில் தானியங்கள் சிறிதளவிலேதான்கொண்டு செல்லக்கூடும். ஆயினும் அப்பம் உணவின் முக்கியபாகமாக அமைந்திருந்தது என்பதை சீராக் நூல் சுட்டிக்காட்டுகிறது. "மனித வாழ்க்கைக்கு வேண்டிய தலையான காரியங்களாவன: தண்ணீர், அப்பம், உடை, மானத்தைக் காப்பாற்ற வீடு" (சீரா 29:28).

1. அப்பம் செய்தல்

செல்வந்தர் வீட்டில் அடிமைகள் அப்பம் செய்தனர். இவ்வாறு, இஸ்ராயேலர் தங்களுக்கென ஓர் அரசரைக் கோரிய போது, அவன் "உன் புதல்வியர்களையோ தனக்கு ரொட்டி செய்கிறவர்களாக வைத்துக்கொள்வான்" என்று சாமுவேல் அவர்களை எச்சரிக்கிறார் (1 சாமு 8–13). இஸ்ராயேலின் பிற்கால வரலாற்றில் அப்பம் செய்தல் ஒரு சிறப்பான தொழிலாக மாறியது. எரேமியா சிறையிலிருந்த போது, அவருக்கு அப்பம் செய்வோர் வீதியிலிருந்து ஒரு அப்பம் கொடுக்கப் பட்டது (எரே 37:21). ஒரு சராசரிக் குடும்பத்தில், விட்டிலேயே அப்பம் செய்யப் பட்டது. தாயோ (ஆதி 18:6), மகளோ (2 சாமு 13:8), அல்லது ஒரு உறவுப் பெண்ணோ (எரே 7:18; 44:19 1 சாமு 28:24), பொதுவாகப் பெண்களே அப்பம் செய்தனர். வழக்கமாக, ஒருதடவையில் மூன்று படி மாவில் (ஆதி 18:6; நீதி 6:19; மத் 13:33; லூக் 13:21), ஒரு நாளைக்கு வேண்டிய அளவு மட்டும் அப்பம் செய்யப்பட்டது.

அ) கலவையில் சேர்க்கப்பட்டபொருள்கள்:– பெரும்பாலும் அப்பம் வாற் கோதுமையிலிருந்து செய்யப்பட்டது. இது முந்தியே முதிர்ச்சி பெறும் (2 அர 4:42; யோவா 6:9;13) விலை அதிகமில்லாதது (2 அர 7:18). ஆகையால் பொதுமக்களுக்குச் சிக்கனமானது. கோதுமை விலை அதிக மானது. ஆகவே வியாபாரத்திற்கும் (1 அர 5:11; எச 27:17), காணிக்கை ஒப்புக் கொடுப்பதற்கும் (லேவி 2) பயன்பட்டது. உயர் குடிவாழ்வின் சொகுசுப் பொருளாக இருந்தது (ஆதி 18:6; எச 16:13.19; சங் 81:16; 147:14). பஞ்சகாலங்களில் திணை, சாமை போன்ற கூல வகைகளும் பயறு வகைகளும் கூட அப்பம் செய்தில் பயன் பட்டன. இவ்வாறு வரவிருக்கும் நாடு கடத்தப்படுதலை அடையாளமாக உணர்த்த "கோதுமை, வாற்கோதுமை, பெரும்பயறு, சிறுபயறு, திணை, சாமை" ஆகியவற்றைக் கொண்டு அப்பம் செய்யுமாறு எசக்கியேல் கட்டளை பெறுகிறார்.

ஆ) மாவு பிசைதல்:– தானியம் மாவரைக்கும் கல்லில் அரைக்கப்டும் அல்லது உரலில் குத்தப்படும் (எண் 11:8). பின் மாவு தண்ணீரோடு சேர்த்து ஒரு பாத்திரத்தில் பிசையப்படும் (யாத் 8:3; உப 28:5.17). பின்பு சிறிது புளிக்காரம் சேர்க்கப்பட்டு, புளிக்க வைக்கப்படும் (மத் 13: 33; லூக் 13:21). இஸ்ராயேல் வரலாற்றின் நாடோடி வாழ்க்கை வாழ்ந்த காலத்தில், புளிக்காரம் சேர்க்கப்

படவில்லை (ஆதி 18:6). இக்கால பெடு யினர்கள் இன்றும் புளியாத அப்பங் களையே பொதுவாக உண்கின்றனர். கானானில் நிலையாகக் குடியேறிய பின் முந்திய நாளின் புளித்த மாவில் ஒரு பகுதியைத் தண்ணீரில் கரைத்து மாவோடு சேர்த்து அதைப் புளிக்கச் செய்வது மரபு. பிசைந்த மாவில் உப்புச் சேர்க்கப்பட்டது.

எகிப்தில் சிலசமயங்களில் சுவைக்காக எண்ணையும் சேர்க்கப்பட்டது. இஸ்ரா யேலர் அவசரமாய் புறப்பட்டதை நினைவு கூரும் பாஸ்குச் சடங்கில் புளியாத அப்பத் தைப் பயன்படுத்தவேண்டும் (யாத் 12:8; லேவி 23:11;உப 16:9). புளிக்காரம் பொங்கச் செய்தது. தூய்மையின்மையை உணர்த் திற்று. ஆலயத்தில் உணவுக் காணிக்கை புளியாத அப்பமாக இருக்கவேண்டும் (லேவி 2:4; 10:12; 7:13; ஆமோ 4:5).

இ) அப்பம் சுடுதல்:- விவிலிய காலத் தில் மூன்று முக்கிய முறைகள் பயன் பட்டன. மிக எளிய முறை, ஒரு பெரிய சமதளமான கல்லின் மேல் நெருப்பு எரிய வைத்து, சாம்பலை நீக்கிவிட்டு, பிசைந்த மாவின் தட்டையான துண்டுகளை சூடு படுத்தப்பட்டக் கல்லின் மேல் வைத்து முழுவதையும் சாம்பலால் மூடுவதாகும். ரொட்டி, பக்கம் மாற்றப்படும்போது, சாம்பல் நீக்கப்பட்டு, மீண்டும் மூடப் படும். ஏச 44:19-இல் வரும் குறிப்பு இம் முறையைக் குறிக்கலாம். எலியாவுக்குத் தணலில் சுட்ட ஓர் உரொட்டி உணவாகக் கொடுக்கப்படுகிறது (1 அர 19:6).

சிறிது வளர்ச்சியடைந்த முறை, தட்டை யான சட்டியில் பொரிக்கப்படுவதாகும் (லேவி 2:5; 6:21; 1 நாள் 23:29; எச 4:3). இச் சட்டி மண்ணாலோ, இரும்பாலோ செய் யப்பட்டிருக்கலாம். ஒரு பள்ளத்தில் நெருப்பு மூட்டப்பட்டு அதன்மேல் சட்டியை வைத்து அதன் மேல் நேரடி யாக அப்பம் சுடப்பட்டது. இதைத் "தட்டை யான உரொட்டி" என்றழைத்தனர்.

சாதாரண பொதுமுறை அடுப்பில் சுடுவதாகும். அடுப்பு குப்புறப் போடப் பட்ட மட்பாண்டத்தைப் போன்றது. இந்த அடுப்பில் நெருப்பு மூட்டப்பட்டு எரியும், காலையில் சாம்பல் நீக்கப்பட்டு சூடாக் கப்பட்ட அடிக்கல்லின் மேல் அப்பம் சுடப்பட்டது.

ஈ) அப்ப வடிவம்:- பெரும்பாலும் தட் டையான வடிவில் இருந்தது. அதன் விட்டம் 7 அங்குலத்திலிருந்து 18 அங்குலம் வரையிருக்கலாம். சில துளையிடப்பட்டி ருக்கும். கிதயோனின் வீரர்களில் ஒருவர், வாற்கோதுமை அப்பம், மதியானியா பாளையத்திற்குள் உருண்டோடியதாகக் கனவு கண்டார் (நீதி 7:13). சில சமயம் அப்பம் இருதய வடிவில் செய்யப்படுவ தும் உண்டு. பிரசன்ன அப்பம் இக்கால உரொட்டியைப்போல் இருந்ததாகத் தெரி கிறது. எகிப்திய புள்தாள் ஏடு முப்பதுக்கு மேற்பட்ட வடிவங்களில் அப்பம் செய்யப் பட்டதாகக் குறிக்கிறது.

2. அப்பத்தை உண்ணுதல்:- அப்பம் உணவின் முக்கியமானது பாகமாததால், சாதாரண உணவில் மட்டுமன்று, வழி பாட்டுச் சடங்குக் காணிக்கைகளிலும் உண்ணப் பட்டது.

அ) அன்றாட வாழ்வில்:- அப்பம் எவ் வளவு முக்கியம் என்றால் "அப்பம் உண்டு தண்ணீர் குடித்தல்" என்ற பதம் உணவு உட்கொள்ளுவதை குறித்தது (1 அர 13:8-9, 16-19:; சீரா 29:28). இதனால், அப்பம் "ஊன்றுகோல்" என்று அழைக்கப்படு கிறது. இறைவன் தீர்ப்பிட வரும்போது, இந்த ஊன்றுகோலை முறித்து விடுவார் (லேவி 26:26; சங் 105:16; எச 4:16; 5:16; 14:13; ஏச 3:1; எசே 12:19). அப்பம் இல்லாமை கொடிய வறுமை அல்லது துன்பத்தின் அடையாளமாகும் (2 அர 25:3; யோவா 15:23). சில இடங்களில் அப்பம் உணவு என்றுமொழி பெயர்க்கப்படுகிறது. சங்கீத ஆசிரியர் உள்ளத்திற்கு உரம் தரும் உணவைத் தரும் (சங் 105:15) இறைவனைப் போற்றுகின்றார்.

அன்னியர்களுக்கும் (ஆதி 14:18), விருந் தினர்களுக்கம் (நீதி 19:19) அப்பம் கொடை யாக அளிக்கப்படுகிறது. போர்க்கோலத் தில் வீரர்களுக்கு அப்பம் சாதரண உண வாகும். பயணத்தின்போது எடுத்துச் செல்லப்பட்டது (ஆதி 21:14; 45:23). ஒரு சாதாரண ஆளுக்கு மூன்று அப்பத்துண்டு கள் ஒரு உணவுக்குப் போதும் (லூக்

*11:5–6)*. சிறைக் கைதிகளுக்கு ஒரு நாளுக்கு ஒரு துண்டுதான் கொடுக்கப்பட்டது (எரே *37:21*). கொடைகொடுக்க ஒரு அப்பத் துண்டு போதும் (1 சாமு *2:36*). உண்ணும் போது அப்பம் ஒரு கரண்டியாகவும் தொட்டுச் சாப்பிட பயன்பட்டது. அது உணவாகவும் கரண்டியாகவும் பயன் பட்டது (மத் *26:23*; யோவா *13:26*; *25:34*; *27:17*).

ஆ) காணிக்கைகள்:- பழங்கால மேற்கு ஆசியாவில் வழிபாட்டுக் காணிக்கைகளில் அப்பம் மிகச் சாதாரணப் பொருளாகும். உணவுக்காணிக்கை மாவு மட்டுமாக இருக்கலாம் அல்லது பலவகை அப்பங் களாக இருக்கலாம். அவை "எண்ணெய் தெளிக்கப்பட்ட புளியாத அப்பங்களாக வும் எண்ணெய் பூசப்பட்ட புளியாத பணி யாரங்களாகவும்" இருக்கலாம் (லேவி *2:4*). அப்பம் சட்டியிலோ அல்லது தட்டிலோ சுடப்படலாம் *(2:5.7)*. அவை புளியாத அப்ப மாயும், உப்புச் சேர்க்கபட்டதாயும் இருக்க வேண்டும் என்ற ஒரே நிபந்தனைதான் உண்டு. காணிக்கையில் ஒரு பகுதி பீடத்தில் எரிக்கப்படும். மீதமிருப்பவை ஆரோனுக்கும் அவரது புதல்வர்களுக்கும் உரியதாகும்.

3) உருவகமுறை:- இயற்கையாகவே முக்கிய உணவாகிய அப்பம், பழைய ஏற் பாட்டிலும், புதிய ஏற்பாட்டிலும் உருவ முறையில் குறிக்கப்படுகிறது.

அ) பழைய ஏற்பாட்டில் மனித வாழ்வுக்கு அப்பம் எவ்வளவு அவசியமா னது என்றால், அது ஒருவன் தன்னையே தாங்கிக் கொள்ளும் ஊன்றுகோலாக விவ ரிக்கப்படுகிறது (லேவி *26:26*; சங் *105:16*; எச *4:16*; *5:16*; *14:13*; காண்க ஏச *3:1*). ஒருவன் வாழ்வின் ஒரு பண்போ, நிலையோ எவ்வளவு உண்மையாகவோ, அவசிமான தாகவோ இருக்கிறதோ அந்த அளவு உணவோடு தொடர்புப்படுத்தி அது விவரிக்கப்படுகிறது. இவ்வாறு "கண்ணீ ரின் உணவு" (சங் *80:5*; காண்க: *42:3*), "அக்கி ரமமாகிய அப்பம்" (பழ *4:17*) "சோம்பலின் அப்பம்" *(31:27)*, "துன்பம் என்கிற அப்பம்" (எச *30:20*; யோபு *3:24*). எதிரிகளுக்கு உருவ கமாக அப்பம் பயன்படுகிறது. யோசுவா வும் காலேபும் இஸ்ராயேலர்கள் கானா னிய மக்களுக்கு அஞ்ச வேண்டியதில்லை. ஏனெனில் "அப்பத் தைப்போல் நாம் அவர்களை விழுங்கி விடலாம்". அதாவது அவர்களை எளிதில் வென்றுவிடலாம் (எண் *14.9*) பல செயல் கள் உணவோடு தொடர்புபடுத்தப்படுகின் றன. நல்ல மனைவி "சோம்பலாய்த் தன் அப்பத்தை உண்ணாள்" (பழ *31:27*). ஆனால் தீயோர் "அக்கிரமமாகிய அப் பத்தை உண்கின்றனர்" *(4:17)*. "வஞ்சகத் தின் அப்பம் மனிதனுக்குச் சுவையுள்ள தாக இருக்கிறது. ஆனால் பின்பு, அவன் வாய் பொடிக் கற்களால் நிறையும்" *(20:17)*. யாவே தம் மக்களிடம் சினம் கொள்ளும் போது அவர்களுக்குத் 'துன்பம் என்கிற அப்பத்தையும் வேதனை என்னும் நிலை யையும்" (ஏச *30:20*; காண்க யோபு *3:24*). அல்லது 'கண்ணீரின் உணவை'யும் (சங் *80:5*; *42:3*) கொடுக்கிறார்.

நேர்நிலையாக அப்பமும் பழச்சாறும் ஞானத்தின் பண்புகளையும் (பழ.*9:5*) இறை வனது உண்மையான வார்த்தையையும் (ஏச *55:2*) குறிக்கின்றன. அப்பம் இறைவ னது கொடையாகும் (யாத் *16:4*; நெக *9:15*; சங் *105:40*; யோவா *6:51*). குல முதியவர்கள் காலமுதலே அப்பம் விருந்தோம்பலின் அடையாளமாகக் கருதப்பட்டது. அது அன்னியரோடும் நண்பர்களோடும் பகிர்ந்து கொள்ளப்படவேண்டும் (ஆதி *14:18*; நெக *13:1–2*; மத் *14:15–21*). சேர்ந்து உண்ணுதல் "அப்பம் பிடுதல்" என்று பொதுவாக அழைக்கப்பட்டது. சிறப்பான உறவை உண்டு பண்ணியது. உடன் படிக்கை அமைப்பை அடையாளமாக்கும் செயலாகியது (1 அர *13:8* தொ).

ஆ) புதிய ஏற்பாட்டில்:- சேர்ந்து உண் ணுதல் என்ற கருத்து "அன்பு உணவு" என்ற கருத்தாக உருவெடுக்கிறது. இவ் வுணவில் சபை முழுவதும் ஒரு பொது உணவிலோ, வழிபாட்டு உணவிலோ பங்கு கொள்கின்றனர் (அ.ப. *2:42.46*; *20:7*). இது இறுதி உணவு கடைப்பிடித்தலோடு தொடர்புபடுத்தப்படுவதாகத் தெரிகிறது (1 கொரி *10:16*; *11:21*; யூதா *12*). நற்கருணை வழிபாட்டின் தொடக்க வடிவம் 'அப்பம் பிடுதலை' உள்ளடக்கியதால், அதே பதத் தால் வழிபாடும், பொதுவில், அழைக்கப் பட்டது (அ.ப.*2:42*; *46*:*20:7*). புதியஏற்பாட்டில் மற்ற இடங்களில் அப்பம் உருவகமாக

இறையரசின் வருகையையோ, அல்லது இயேசுவின் வருகையையோ குறிக்கிறது. இயேசுவோடு உணவருந்திய ஒருவர் "கடவுளின் அரசில் விருந்து (அப்பம்) உண்பவன் 'பேறுபெற்றவன்' என்று கூறும் போது (லூக் 14:15) மெசியாவின் விருந் தைச்சுட்டிக்காட்டுகிறார். நற்கருணையின் அப்பத்திலும், கிண்ணத்திலும் பங்கு பெறும் போதெல்லாம் கிறிஸ்துவன், கிறிஸ்து வரும்வரை ஆண்டவரது மரணத் தை அறிக்கையிடுகிறான் (1 கொரி 11:26). இயேசுவே தம்மை "உண்மையான அப்பம்" என்று அழைத்துக் கொள்வது மிகவும் பொருள் பொதிந்ததாகும். இறை வனால் கொடுக்கப்பட்ட "வானத்தி லிருந்து வந்த உணவாக" மன்னாவைச் (யாத் 16:4; நெக 9:15 தொ) சீடர்கள் குறிப் பிட்டனர். உலகில் உயிர் அளிக்க தம் தந்தை அனுப்பிய வானின்று இறங்கி வந்த உண்மையான அப்பம் தாம்தான் என்று இயேசு கூறுகிறார். இந்த உணவை எப்பொழுதும் தங்களுக்குக் கொடுக் கும்படி சீடர்கள் கேட்கின்றனர் (யோவா 6:31–34). அப்போது தான் உரிமை கொண் டாடியதை இயேசு வலுப்படுத்துகிறார். அவேர "உயிர் தரும் உணவு" ஆவார். அவரைப் பின்பற்றுகிறவருக்குப் பசியே இராது என்றும் தாகம் இராது (6:35). இதைக் கேட்டு யூதர்கள் முணுமுணுத் தனர். பின் அவர் தரும் இந்த அப்பத்தை உண்பவன் என்றுமே வாழ்வான். இந்த அப்பம் அவருடைய தசையே என்று உரிமை கொண்டாடுகிறார் (6:48–51; காண்க: 4:13–15). இந்த நிகழ்ச்சியுரையில் வரவிருக்கும் இறுதி உணவு பற்றிய தவறாத சுட்டிக் காட்டல்கள் உள்ளன. இந்த அடையாளம் இறுதி உணவின் முக்கியமாகிறது (மத் 26:26; மாற்கு 19:22; லூக் 22:19). 6:52–57 இதைத் தெளிவாக்கு கிறது. ஆனால் இயேசு தமது பலி மரணத் தையும் சுட்டிக்காட்டுகிறார். சாதாரண உணவாக மன்னா குறிக்கப்படுதல் சட்டத் திற்கும் மேலானவர் இயேசு என்பதைக் காட்டுவதை நோக்கமாகக் கொண்டது.

II. அப்பம் கடவுளின் ஒரு கொடை. அது மனிதனுக்கு வலிமையின் ஊற்று (சங் 103:14 தொ). எவ்வளவு முக்கியம் மனித வாழ்க்கைக்கு என்றால், அப்பமே தேவை என்றால் எல்லாமே தேவையாகும் (ஆமோ 4:6; காண்க ஆதி 28:20). எனவே கிறிஸ்து தமது சீடருக்குக் கற்பித்த செபத் தில், அவசியமான கொடைகளின் மை யமே அப்பம் என்பது புலனாகிறது (லூக் 11:3); கொடைகளில் எல்லாம் பெரியது அதுவென்பதும் தெளிவாகும் (மாற் 14:22).

1. அன்றாட அப்பம்

அ) எவ்வித வாழக்கைச் சூழ்நிலை, அன்றாட வாழ்க்கையில் உணவுக்குச் சுவையூட்டுகிறது என்பதும் தெளிவாகும். கடவுள் கைநெகிழ்ந்துள்ளதாகத் தோன் றும் துன்புறு மனிதனுக்கு அங்கலாய்ப்புக் 'கண்ணீரோ' 'சாம்பலோ' ஓர் உணவா கிறது (சங் 41:4; 79:6; 102:10; ஏச 30:20); மகிழ்கின்றவன் மகிழ்ச்சியோடு உண்கி றான் (சங் 9:7). பாவியின் உணவு அக்கிர மத்தின் அல்லது பொய்ம்மையின் அப்ப மாகும் (பழ 4:17); சோம்பேறியின் உணவு சோம்பலாய் அப்பம் உட்கொள்வதாகும் (பழ 31:27). அப்பம் வாழ்க்கையின் அத்தி யாவசியமானாலும், அதிலே பகிர்ந் துண்ணும் பாங்குவேண்டும். ஒவ்வோர் உணவும் பிறரோடு சேர்ந்து வருவதையும் அதேபோல் ஒன்றிப்பையும் உணர்த்து கிறது. ஒருவனோடு வழக்கமாய்ச் சேர்ந் துண்பது நண்பனாய் அதுவும் நெருங்கிய நண்பனாய் இருப்பதாகும் (சங் 40:10; யோவா 13:18). விருந்தோம்பும் கடமை யுணர்வு புனிதமானது, கடவுளே அனுப் பும் வழிப்போக்கர்கள் என்று அவர் களோடு சேர்ந்துண்பது மேலானது (ஆதி 18:5; லூக் 11:5:11). குறிப்பான விதத்தில் நாடு கடத்தப்பெற்ற பின்பு பசித்தோருடன் பகிர்ந்துண்பது முக்கியத்துவம் பெறு கிறது. இதிலேதான் யூதரின் பக்தி பிறர் அன்புச் செயலாக முகிழ்க்கிறது (பழ 22:9; எச 18:7:6; யோபு 31:17; ஏச 58:7; தோபி 4:16). "புனிதர்களின்" சார்பில் தண்டல் செய்யக் கோரும்போது, அப்பம் முதல் எல்லாமே கடவுளின் கொடை என்று பவுல் கொரிந் தியருக்கு நினைவூட்டுகிறார் (2 கொரி 9:10). எல்லார் பெயராலும் கிறிஸ்தவ சபையில் 'அப்பம் பிட்கப்படுதல்" நற்கருணையைச் சுட்டுகிறது. ஆண்டவரின் உடல்திருச் சபையை ஒன்றிக்கும் ஊற்றாக அமை கிறது (அ.ப.2:42; 1 கொரி 10:17).

அ) அப்பம், கடவுளின் கொடை. மனிதனைப் படைத்த பின்பும் (ஆதி 1:29) பெரு வெள்ளத்திற்குப் பின்பும் (9:3) அவன் என்ன உண்ணலாம் என்று கடவுள் தெரியப்படுத்துகிறார். பாவியான மனிதனுக்குத் தேவையானதெல்லாம் கடின உழைப்பின் மூலமே கிடைக்கும். "நெற்றி வியர்வை நிலத்தில் விழ உழைத்து உண்பாய்" (3:19). இப்போதிருந்து மிகுதியோ பற்றாமையோ ஒரு பொருளைக் குறிக்கும். மிகுதி கடவுளின் ஆசீரையும் (சங் 36:25; 131:15; பழ 12:11) பற்றாமை பாவத்தின் தண்டனையையும் (எரே 5:17; எச 4:16 தொ; புல 1:11; 2:12) குறிப்பதாகும். எனவே மனிதன் உணவு பெறக் கடவுளைப் பணிவோடு கேட்கவேண்டும்; நம்பிக்கையுடன் காத் திருக்க வேண்டும். இந்த வகையில் அப்பங்களின் பெருக்கம் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். எலிசா நடத்திய (2 அர 4:42 தொ) புதுமை கடவுளின் அபரிமிதமான தெய்வக்கொடையைக் காட்டுகிறது. "இவர்கள் உண்டபின்னும் மீதி இருக்கும்". நற்செய்தி நிகழ்ச்சிகளிலும் பணிவான நம்பிக்கையே முதல் பாடமாகும்; "வேண்டிய அளவுக்கு உணவை அவர்களுக்கு அளித்தார்" (மத் 14:20; 15:37; யோவா 6:12; சங் 77:25) என்னும் உரையில், "வலியோரின் உணவால்" பாலைவனத்தில் கடவுள் தனது மக்களை நிறைவு செய்ததை நினைவு கூர்கின்றனர். இதே எண்ண வடிவில்தான், விண்ணகத் தந்தையிடமிருந்து நம்பிக்கையுடன் எல்லாவற்றையும் எதிர்பார்க்கும் மக்கள் போல், "அன்றாட உணவையும்" (மத் 6:11) கேட்க, தமது சீடரை இயேசு வரவேற்கிறார்.

முடிவாக, இறுதிக்காலத்தின் மாபெரும் கொடை அப்பமாகும். இது குறிப்பிட்ட தனி நபருக்கு (ஏச 30:23), அல்லது தேர்ந்தெடுக்கப்பட்டோருக்கு மெசியாவின் விருந்தில் பங்கேற்கும் பேறாகும் (எரே 31:12). இறுதிக்கால விருந்துக்கு (மத் 11:19 இ) முன்னேற்பாடாகவே தம்மவரோடு இயேசு கொண்ட உணவுகளாகும். குறிப்பாக நன்றித்திருவிருந்தில் தமது சீடருக்கு இயேசு கொடுப்பது அவரின் உடலாகும், கடவுளின் உண்மைக் கொடையாகும் (லூக் 22:19)

2. வழிபாட்டில் அப்பம்:-

அ) காணிக்கை அப்பங்கள்பற்றி குருத்துவச்சட்டம் முக்கியத்துவம் கொடுக்கிறது. அந்த அப்பங்கள் மேசைமீது கழுவுதற்கென்ற கலங்களுடன் இருந்தன (1 அர 7:48; 2 நாள் 13:11; யாத் 25:23–30). அவற்றின் தோற்றம் மிகப் பழமையானதென்றே தோன்றுகிறது (1 சாமு 21:5 தொ). தெய்வீகத்திற்கு ஊட்டம் அளித்த பழைய சமய உணர்வின் சிந்தனையென்றுகூட ஒருவகையில் சொல்லலாம். எந்த விதமான ஊட்டத்தையும் வெறுக்கின்றவர் இஸ்ராயேலின் கடவுள் (நீதி 13:16): இந்த அப்பங்கள் கடவுளுக்கும் அவரின் விசுவாசிகளுக்கும் உள்ள ஒன்றிப்பின் அடையாளமாகும்; அவற்றை குருக்கள் உட்கொள்வர் (லேவி 24:5–9).

ஆ) திருநாட்களின் கொண்டாட்ட காலத்தில் புதுத்தானிய மணியின் அப்பமும் ஒரு காணிக்கையாகும் (லேவி 23:17). காணிக்கைப் பொருளாக என்பதிலிருந்து ஒவ்வொரு முதற்கனி வழிபாட்டில் உள்ளதுபோல் இங்கேயும் ஏற்றுக்கொள்ளப்பட்டதாகவே ஆகிறது (காண்க யாத் 23:16.19). கடவுளின் பிரதிநிதியான குருவிற்கே முழுமையாகச் சேர்கிறது (லேவி 23:20; காண் எச 44:30; எண் 18:13). இதே போல நன்றியுணர்வுதான் அரசனும் குருவுமான மெல்க்கிசதேக்குவை, அப்பமும் இரசமும் உலகைப் படைத்துக் காக்கின்ற கடவுளுக்குச் செலுத்தத்தூண்டுகிறிது (ஆதி 14:18 தொ).

இ) பழைய சட்டத் தொகுப்புகளின்படி பலிகளை ஒட்டியே புளியாத அப்பங்களும் வருகின்றன (யாத் 23:18; 34:25); இவையே வசந்த காலத்தின் ஊட்டமாக இஸ்ராயேலுக்கு அமைகின்றன (23:15; 34:18). புளிப்பு என்பது படைத்தலில் ஏற்றுக்கொள்ளப்படவில்லை (லேவி 2:11); ஒரு வேளை புளிப்பு அழிநிலையைக் குறித்தது போலும். எது எப்படி இருந்தாலும், புளியாத அப்பம் கொண்ட வேளாண்மைத் திருவிழா பாஸ்கு விழாவோடு சேர்க்கப் பட்டபோது, புளியாத அப்பத்தின் பழக்கம் எகிப்தின் புறப்பாட்டோடு இணைக்கப்பட்டது, மாவு புளித்தெழுவதற்குள் விரைவாய்ப் புறப்பட்டதை நினை

வூட்டுவதாகும் (யாத் 12:8.11.39). இந்த வழி பாட்டு முறையின் தொடக்கம் ஒருவேளை நாடோடி வாழ்க்கையின் வழக்கமாக லாம். இந்த வாழ்க்கை கானான் நாட்டில் சுகபோகமாகிறது. பழையது மறையவேண்டும் என்பதால் இது முடி வாக மறுமலர்ச்சியுடன் இணைகிறது (12:15). புது மனிதர்களாக வாழவேண்டும் என்பதற்காகத் திருமுழுக்குப்பெற்றவர் களுக்கு இந்த உருவகத்தைப் பவுல் பயன்படுத்துகிறார் (1 கொரி 5:7 தொ). நன்றிப் பலியில் அப்பம் உபயோகிப்பது இதன் நிறைவேற்றம் ஆகிறது. வழிபாட்டு முறையில் அப்பத்தைப் பலுக வைத்த (மத் 14:19) இயேசு இதே செயலை இரவுணவில் புதுப்பிக்கும் கட்டளையாக்குகிறார்; இந்தச் செயல்மூலம் அப்பத்தைத் தமது பலியான உடலாகவும், விசுவாசிகளின் ஒன்றிப் பின் அருட்சாதனமாகவும் ஆக்குகிறார் (1 கொரி 10:16–22; 11:23–26).

3. வார்த்தையின் அப்பம்:-

கடவுளின் வார்த்தையின் பால் உள்ள பசி பற்றி முழங்கும் இறைவாக்கினர் ஆமோஸ் (8:11) அப்பத்தை வார்த்தையோடு ஒப்பிடுகிறார் (காண்க உப 8:3 மன்னா பற்றியது). மெசியாவின் விருந்து பற்றிப் பேசும் இறைவாக்கினரும் ஞானியரும் வாழ்விக்கும் கடவுள் வார்த்தை அப்ப மென்றும் (ஏச 55:1 தொ) ஆளுருவில் தெய்வஞானம் என்றும் (பழ 9:5 தொ; சீரா 24:19–22: காண்க 15:1 தொ) பேசுகின்றனர். மனிதன் அன்றாடம் கொள்ள வேண்டி யது தெய்வ வார்த்தை என்றே இயேசுவுக் கும் அப்பம் எழுச்சியூட்டுகிறது (மத் 4:4). இறுதிக்கால விண்ணரசில் அப்பம் உட் கொள்ளும் ஆசைபற்றி (லூக் 14:15), விருந்துக்கு அழைக்கப்பட்டோர் உவமை யில் இயேசு பதில் தருகிறார். அவரையும் அவரின் நற்செய்தியையும் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்றே இந்த உவமை தொடக்கத்திலிருந்தே புலப்படுத்துகிறது. முதல் அப்பம் பலுகும் நிகழ்ச்சியில் போத னைப் பகுதியை வலியுறுத்திக் காட்டி அப்பங்கள் இயேசுவின் வார்த்தை என்று காட்ட மாற்கு விரும்புவதாய்த் தோன் றுகிறது; அதே சமயத்தில் நமக்காகக் கையளிக்கப்பட்ட அவரின் உடல் என்றும் காட்ட விரும்புகிறார் (மாற் 6:30.34). அவரே (இயேசுவே) உண்மையான அப்பம் (யோவா 6:32 தொ) என்பதை இந்தப் புதுமையின் பொருள் உறுதிப்படுத்துவ தாக யோவான் காட்டுகிறார். ஒருவன் நம்பவேண்டிய வார்த்தையானவர் தாமே என்று முதலில் இயேசு காட்டுகிறார் (6:35–47). மனுவுருவான வார்த்தையானவர் பலியில் ஒப்புக்கொடுக்கப்படும்போது, நன்றித் திருவிருந்தில் விசுவாசப்பற்றுறுதி தன்னோடு ஒன்றிப்பையும் கொணர் கிறது (6:49–58). அவசியமான, கடவுளின் கொடையான அப்பத்தை விசுவாசமுள்ள மனிதன் அன்றாடம் கேட்கும்போது, விசு வாச வளர்ச்சியுடன் அது தெய்வீக வார்த் தையையும், வானகமிருந்து வந்த அப்பம், வாழ்கின்ற உயிரூட்டுகின்ற வாழ்க்கை அப்பமாகிய (6:32.35.51) தகனப் பலியான அதே மீட்பரான ஆளையும் குறிப்பதாகும்.

## அப்பம் சுடுவோர் வீதி

சிறு தொழில்கள் செய்வோர் தங்கள் கடைகளை ஒரு குறிப்பிட்ட பகுதியில் அமைத்துக்கொள்வது இயல்பு. அது போல் எருசலேமிலும் மற்ற நகரங்களிலும் குறிப்பிட்ட தொழில்களைச் செய்தவர்கள் சில வீதிகளில் தங்கள் கடைகளை ஒருங்கு சேர வைத்திருந்தனர். அப்படிப்பட்டவை களில் அப்பம் சுடுவோர் வீதி ஒன்றாகும். இதை அப்பம் சுடுவோர் வீதி என்பதை விட, அப்பம் சுடுவோரின் பகுதி என்று கூறுவதுமேல். எரேமியா சிறையில் இருந்தபோது இப்பகுதியில் அப்பம் இருக்கும்வரை, அவருக்கு அப்பம் கொடுக்கப் படவேண்டும் என்று அரசன் கட்டளையிட்டிருந்தார் (எரே 37:21).

அப்பம் சுடுதல் தனிச் சிறப்பான தொழிலாகக் கருதப்பட்டது (ஆதி 40:1–41:13; 1 சாமு 8:13; ஒசே 7:4). இவர்களுக் கெனத்தனி வீதிகள் தமஸ்குவிலும் சமாரி யாவிலும் ஒதுக்கப்பட்டிருக்கலாம் (1 அர 30:34). இன்று, தமஸ்கு வாயிலுக்கும் பரி சுத்த கல்லறைக் கோவிலுக்கும் இடையில் பல அப்பம் சுடும் கடைகள் உள்ளன. அப்பம் சுடும் இடமே அத்தொழில் செய் வோரின் உறைவிடமாக இருந்திருக்க லாம். ஆகவே அப்பம் சுடுவோர் தன்

வீட்டிலேயே அப்பம் சுட்டுத் தொழில் செய்து வாழ்ந்தனர்.

**அப்பா** (ABBA – எந்தாய், "ஆப்" என்ற எபிரேயச் சொல்லின் அழுத்தம் பெற்ற வடிவம் ஆகும்).

இச்சொல்லுக்கு அப்பா அல்லது தந்தை என்பது சாதாரண மொழியிலுள்ள பொருள் ஆகும். இது பிற்கால யூதமத ராபிகளின் இலக்கியங்களில் காணப்படும் செபங்களில் பயன்படுத்தப்படுகிறது. இது பொதுவாக செபத்தில் "என்னுடைய தந்தை", "நம்முடைய தந்தை" என்ற பொருளுக்குச் சமானமாகப் பயன்படுத்தப்படுகிறது. இது எபிரேயர்களின் குடும்பங்களில் வழக்கமாய்ப் பயன்படுத்தப் பட்டச்சொல். புதிய ஏற்பாட்டில் மூன்று முறை இது பயன்படுத்தப்படுகிறது. எப்பொழுதும் செபச் சூழ்நிலையிலேயே பயன்படுத்தப்பட்டுள்ளது (மாற் *14:36*; உரோ *3:15*; கலா *4:6*). இவற்றை ஒத்த கிரேக்க மரபில் அரமேக்கு வடிவம் பின்னணியாக இருக்கலாம் (மத் *6:9*; லூக் *11:11*; *23:46*; யோவா *12:27*; சங் *88:26*; ஏச *63:16*; *64:8*; எரே *3:19*; தோபி *13:14*; ஞானம் *14:3*; சீரா *23:1.4*).

யூத மதத்தில் இறைவனை அப்பா என்று உருவகப்படுத்திக் கூறுவதில் தனிப் பொருள் உண்டு. இறைவனுக்கும் இஸ்ராயேலருக்கும் (மக்களுக்கும்) அல்லது இறைவனுக்கும் நீதிமான்களுக்குமிடையே உள்ள ஒரு நெருங்கிய தொடர்பை இது குறிக்கிறது. ஆனால் இவ்வழக்குப் பழங்கால நூல்களில் காணப்படவில்லை. மேலே சுட்டிக்காட்டப்பட்ட இடங்களைத்தவிர இச் சொல் *1* நாள் *17.13*; சங் *68:5*; எரே *31:9*; மலா*1:6*; *2:10*–ஆகிய இடங்களிலும் காணப்படுகிறது.

புதிய ஏற்பாட்டில் இறைவனைக் குறிக்கப் பழக்கப்பட்ட ஒரு பெயராக இயேசு இச்சொல்லைப் பயன்படுத்துகிறார். தந்தை மகன் என்ற உறவிலிருந்து எடுக்கப்பட்ட அடையாளத்தில் இறைவனது நன்மை செய்யும் தன்மையை வலியுறுத்த இச்சொல்லை பயன்படுத்துகிறார். கெதுசமனித் தோட்டத்தில் இயேசு தந்தையிடம் மன்றாடுகையில் மத்தேயுவும், லூக்காவும் தந்தை என்ற சொல்லைமட்டும் பயன்படுத்தும்போது, மாற்கு அப்பா என்ற சொல்லையும் சேர்த்துக்கூறுகிறார். புனித பவுலும் இறை விசுவாசத்தை உணர்த்தும் பொருள் பொதிந்த சொல்லாய் இதைப் பயன்படுத்துகிறார் (உரோமை 8:15). இதில் அன்பும், நம்பிக்கையும் நிறைவாக வெளிப்படுத்தப்படுகிறது. இச்சொல் வழிபாட்டிலும் பயன்படுத்தப்படுகிறது. இறைவனின் சுவிகாரப்பிள்ளைகளானவர்களும், மகனுக்கு உரிய ஆவியைப்பெற்றவர்களும் இறைவனை அப்பா, தந்தை என அழைக்க உரிமை பெற்றவர்கள் (நாம் திருமுழுக்கின் வழியாக இறைவனின் சுவிகாரப்பிள்ளைகள் ஆகிறோம்). காண்க: தந்தை, புதிய ஏற்பாட்டில் இறைவன்.

**அப்பாயிம்** (APPAIM – மூக்குத்தொளை)

யூதாவைச் சேர்ந்த ஏரகுமேலின் வழித்தோன்றல்களில் ஒருவர். இவர் நாதாப் பின்மகன். ஈசியின் தந்தை (*1* நாள் *2:30–31*)

**அப்பிசேசு** (HAPPIZZEZ)

ஆரோனின் வழித்தோன்றல் (*1* நாள் *24:1–6.19*). தாவீது அரசரின் காலத்தில் இருந்த ஆலய குருக்கள் குலத்தின் 18–ஆம் பிரிவின் குலத்தலைவர் (1 நாள் 24:15).

**அப்பியா** (APPHIA – செழிப்பான, உற்பத்தி செய்யக்கூடிய)

பிலமோனுக்கு எழுதிய திருமுகத்தின் ஆரம்பத்தில் பவுல் வாழ்த்துக்கூறும் மூவர்களில் இரண்டாம் நபராகும் (பில *2*). இவள் பவுலால் (திருமுகத்தை எழுதியர்) "சகோதரி" என்று அழைக்கப்படுகிறாள். இவளுடையபெயர் பிலிமோனுக்கு அடுத்தபடியாக வருவதால் சில சமயங்களில் இவள் இவருடைய மனைவி என்று கருதப்பட்டாள். இவளுடைய பெயருக்கு அடுத்து வருகின்ற அர்க்கிப்புவின் மனைவியாக இருக்கலாம் என்று சிலர் கூறுகின்றார்கள். இரண்டிற்கும் ஒரு ஆதாரமும் இல்லை. இவள் ஒரு கிறிஸ்துவள். திருமுகத்தை எழுதியவருடைய நண்பர். கொலோசை அல்லது இலவோதிக்கயா திருச்சபையின் அங்கத்தினர் என்று மட்டும் நாம் திட்டவட்டமாகக் கூறமுடி

யும். இப்பெண்ணைப் பற்றிப் புதிய ஏற்பாட்டில் வேறெந்த குறிப்புமில்லை.

**அப்பியாகு** (APHIAH – ஆண்டவர் புத்துயிர் கொடுத்தார்)

சவுலின் மூதாதையருள் ஒருவரும் பென்யாமின் குலத்தைச் சேர்ந்த பெக்கொராத்தின் தந்தையுமாவார் (1 சாமு 9:1).

**அப்பியு சந்தை** (FORUM OF APPIUS)

இது உரோமையிலிருந்து தென்மேற்கில் அப்பியு சாலையில் 69 கி.மீ. தொலைவிலுள்ள ஒருதங்குமிடம். இக்கால பையித்தாகவாக இருக்கலாம். அப்பியுகிளாதியு சேக்கு கி.மு.312–இல் அப்பியு சாலையைக் கட்டினார். அவர் காலத்தில் இந்த நிலையம் நிறுவப்பட்டிருக்கலாம். கி.மு. முதலாம் நூற்றாண்டில் இது ஒரு முக்கிய நகரமாய் விளங்கியது. இங்கிருந்து, சாலைக்கு இணையாக ஒரு கால்வாய், போந்தைன் சதுப்பு நிலங்களிலிருந்து, 30 கி.மீ. ஓடி, பெரோனியாவை அடைந்தது.

பவுல் புத்தேயோலி துறைமுகத்தை அடைந்தபின் உரோமைக் கிறிஸ்துவர்களில் பலர், அப்பியு சந்தை, மூன்று விடுதி என்னும் இடங்கள் வரையில், பவுலையும் அவருடன் இருந்தவர்களைாயம் எதிர் கொண்டு வந்தனர் (அ.ப.28.15).

**அப்பூசு** (APPHUS)

இது ஒரு பண்பை விளக்கும் சொல். இதன்பொருள் "தந்திரமான" என்பதாகும். மத்தத்தியாவின் ஐந்து புதல்வர்களில் ஒருவரான யோனதானுக்கு இப்பெயர் வழங்கப்பட்டது (1 மக் 2:5).

**அப்பெல்** (APELLES)

உரோ 16:10–இல் "உண்மையான கிறிஸ்தவர்" என்று சொல்லப்பட்டுள்ளவர் தான் இவர். இவருக்குச் புவல் வாழ்த்துக் கூறுகிறார். சினாயிடிக்கு ஏட்டுத் தொகுப்பு அ.ப.18:12; 19:1–இல் வரும் அப்பொல்லோதான் இவர் என்று சொல்கின்றது. ஆனால் இதற்கு அடிப்படை இல்லை.

இந்தப் பெயர் அடிக்கடி பதித்து எழுதப்பட்ட ஏடுகளில் ,காணப்படுகின்றது. இப்பெயர் யூதர்களாலும், புறவினத்தராலும் பயன்படுத்தப்பட்டது.

**அப்பெல் எழுதிய நற்செய்தி** .
(GOSPEL OF APELLES)

கி.பி. 2–ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஞானவாத பிரிவனைக் குழுவை நிறுவியவரான அப்பெல் எழுதிய திருமுறை சேராத நூலாகும். இது அப்பெல்லின் ஆசிரியரான மார்சியன் எழுதிய நூல்களின் திருத்தம் செய்யப்பட்ட நூலாகும். இந்நூல் திருச்சபைத் தந்தையர்களில் சிலர் சுட்டிக் காட்டுவதில் மட்டும்தான் அறியப்படுகிறது.

**அப்போல்லியோன்**: (APPOLLYON – அழிப்பவன்)

பாதாளக்குழியின் தூதனுடைய கிரேக்கப் பெயர்; திருவெளி 9:11–ன்படி இவருடைய எபிரேயப்பெயர் "அபதோன்" என்பது. ஐந்தாவது தூதன் எக்காளம் ஊதியபோது, பாதாளக் குழியின்மூடி திறக்கப்பட்டு, அதிலிருந்து புகையும், அந்தப் புகையிலிருந்து வெட்டுக்கிளிகளும் வந்தன (திருவெளி 9; யோவேல் 1:4). யார் யார் நெற்றியில் கடவுளின் முத்திரையில்லையோ அவர்களைத் தாக்க வல்லவை இந்த வெட்டுக்கிளிகள். இவை தேள்களைப்போல் வால்களும், கொடுக்குகளும் கொண்டிருந்தன (திருவெளி 10:9). இந்த வெட்டுக்கிளிகளின் அரசன் இந்த தூதன்தான். இவருடைய பெயர் வேறெங்கும் சொல்லப்படவில்லை. காண்க: அபதோன்.

**அப்பொல்லோ** (APOLLOS – அப்பொல்லோவிடமிருந்து)

அலக்சாந்தியாவைச் சேர்ந்த ஒரு யூதர். அவர் சொல்வன்மைமிக்கவர், மறைநூல் அறிஞர் (அ.ப.18:24). அவர் திருமுழுக்கு யோவானுடனோ அவரது சீடர்களில் ஒருவருடனோ தொடர்பு கொண்டிருந்ததாகத்தெரிகிறது. ஏனெனில் ஐம்பதாம் நாள் விழாவின்போது பேதுரு போதித்த ஞானஸ்நானத்தை விட (18:25), ஞானஸ்நானம் பற்றிய யோவானுடைய கருத்துக்களை நன்கு அறிந்திருந்ததாகத் தெரிகிறது. இவர் எப்போது கிறிஸ்துவ விசுவாசத்திற்கு மனந்திரும்பினார் என்பதை உறுதியாகக் கூறமுடியாது (18:25).

பவுல் தனது இரண்டாம் வேத போதகப் பயணத்தின் முடிவில், எபேசை விட்டுச் சென்றதற்குப்பின், இந்தச் சொல் வன்மைமிக்க அப்பொல்லோ எபேசுக்கு வந்து யூதச் செப்பக்கூடங்களில் தன் பணியை ஆரம்பித்தார் *(18:26)*. இவர் பேசியதைக் கேட்ட பவுலின் நெருங்கிய கூட்டாளிகளான பிரிஸ்கில்லாவும் அக்கி லாவும் அப்பொல்லோவை தங்களுடன் அழைத்துப்போய், கடவுளின் அருள் நெறியை அவருக்குத் திட்டவட்டமாய் விளக்கினார்.

நற்செய்தியின் தன்மைப்பற்றி நிறை வான அறிவு பெற்றபின், அப்பொல்லோ அக்காயாவிற்குப் போகவிரும்பவே, சகோ தரர் ஊக்குவித்து, வரவேற்கும்படி அங்குள்ள சீடர்களுக்கு எழுதினார். அங்கு சென்று விசுவாசத்தின் அருளைப் பெற்ற வர்களுக்குப் பெரிதும் உதவியாய் இருந் தார். இயேசுவே மெசியா என்று மறை நூலின் வாயிலாக எண்பித்து யூதர்க ளோடு எல்லோருக்குமுன் வாதாடி அவர் களது தவற்றை எடுத்துக்காட்டினார் *(18:27–28)*.

இந்தச் சமயத்தில் கொரிந்திய விசு வாசிகளிடையே ஒரு பிளவு ஏற்பட்டது. ஒரு பகுதியினர் அப்பொல்லோவையும், மற்றவர்கள், பவுலையும், வேறுசிலர் பேது ருவையும், வேறு சிலர் கிறிஸ்துவையும் சேர்ந்து கொண்டவர்கள் என்று கூறிக் கொண்டனர் *(1 கொரி 1:12)*. இது, அப் பொல்லோவும், பவுலும் கேபாவும் இவர் களிடையே கொண்டிருந்த செல்வாக்கைக் காட்டலாம். பவுல் எபேசில் தங்கியதற் கும், அப்பொல்லோவின் பணிக்கும் இரு வருடங்களுக்குப் பின் பவுல் கொரிந்திய ருக்கு எழுதிய முதலாம் திருமுகத்தில் (கி.பி.57), அவர் இந்தச் சண்டைகளுக் காக அவர்களைக் குறை கூறுகிறார். விசு வாசத்தைக்கொண்டு வந்தவர்கள் வெறும் பணியாளர்களே என்றும், "நான் நட்டேன் அப்பொல்லோ நீர் பாய்ச்சினார். ஆனால் விளையச் செய்கிறவர் கடவுள் தாமே....கடவுளுக்கே எல்லாப் பெருமை யும் உரியது...நான் அடித்தளம் இட்டேன் இவ்வடித்தளம் கிறிஸ்துவே" *(1 கொரி 3:5–11)* என்றும் நினைவுபடுத்துகிறார். அவரது வார்த்தைகளின் தொனி அப் பொல்லோவைக் குறை கூறுவதாகக்காட்ட வில்லை. கொரிந்தில்தான் செய்த வேலையை அப்பொல்லோ தொடர்ந்து செய்வதற்கு அவருக்குப் பாராட்டுக் கூறு கிறார் *(3:6)*. பிறகு இத்திருச்சபையைத் திரும்பவும் பார்க்கச் செல்ல அவரைத் தூண்டுகிறார் *(16:12)*. பவுல் கொரிந்தியர் களையே கண்டனம் செய்கிறார் *(3:6–9; 4:6–7)*.

தீத்து *3:13*–இல் "அப்பொல்லோவை யும் வழக்கறிஞரான செனாவையும வழி கூட்டி அனுப்பிவையும். அவர்களுக்கு எவ்விதக்குறையும் ஏற்படாதபடி அக்கறை யோடு பார்த்துக்கொள்ளும்" என்று பவுல் தீத்துவிடம் பரிந்துரைக்கிறார். இச்சமயத் தில் எபேசுக்குத் தென்மேற்கும், அலெக் சாந்திரியாவுக்கு வடமேற்கிலுமுள்ள, கிரேத்தேயில் இருந்தார்.

அப்பொல்லோவின் வேதாகம அறிவும் போதிப்பதில் சொல்வன்மையும், அவருடைய அலக்சாந்திரிய பின்னனி யிலிருந்து கற்றுக்கொண்டதாக இருக்க லாம். இந்த அலக்சாந்திரியாதான் எழுபது நூல் தோன்றிய இடம். பீலோ இங்கிருந்துதான் தோன்றினார். இவரது உருவக விளக்குமுறை அலக்சாந்திரிய யூதர்களை அதிகம் பாதித்தது. இந்தப் பண்புகளால் லூத்தரும் மற்ற சில அறிஞர்களும், எபிரேயருக்கு எழுதப்பட்ட திருமுகத்தை எழுதிய பெயர் தெரியாத ஆசிரியர் அப்பொல்லோவாகத்தான் இருக்கலாம் என்று கருதினர். இது ஒரு வேளை உண்மையாக இருக்கலாம்.

எரோனிமுவின் கூற்றுப்படி அப் பொல்லோ, கிரேத்தேயிலிருந்து கொரிந் துக்குத்திரும்பி அங்கு ஆயராக இருந்தார். இது எந்த அளவுக்கு உண்மையானது என்பது ஐயத்திற்குரியது.

***அப்பொல்லேபான்*** (APOLLOPHANES)

யூதா மக்கபேயுவின் படையைச்சேர்த்த "இருபது இளைஞர்களால்" காசாராவில் கொல்லப்பட்ட மூன்று சீரியர்களில் ஒருவர் (மற்ற இருவரும் மேலே கொலை யுண்டவரின் சகோரர்கள், திமோ த்தேயு வும், கைரேயாவும் ஆவர் (2 மக் 0:37).

**அப்போல்லோனியா** (APOLLONIA – அப்பொல்லோ கடவுளுக்குரியது)

மக்கதோனியாவிலுள்ள ஒரு கிரேக்க நகரம். இதே பேர்கொண்டு அழைக்கப் பட்ட மற்ற நகரங்களிலிருந்து இது மக்க தோனிலுள்ள அப்பொல்லோனியா என்று வேறுப்படுத்தப்பட்டது. போல்பே ஏரிக்குத் தெற்கே உரோமை எக்னேசியன் சாலை யில் தெசலோனிகாவுக்குக் கிழக்கில் 56 கி.மீ. தொலைவிலும் அம்பிப்பொலிக்குத் தென்மேற்கில் 44 கி.மீ. தொலைவிலும் உள்ள இடத்தில் அமைந்திருந்தது. பவுலும் சீலாவும், அவர்களது இரண்டா வது வேத போதகப் பயணத்தில், தெச லோனிக்காவிற்குச் செல்லும் வழியில் இதனைக் கடந்துசென்றார்கள் (அ.ப.17:1). இந் நகரம் இக்கால பொல்லினோவாக அடையாளம் காட்டப்படுகிறது.

**அப்பொல்லோனியு** (APOLLONIUS - அப்பொல்லோவுக்குரியது)

1. தார்சு நகரத்தைச் சேர்ந்தவர் இவர் நான்காம் செலூக்கு பிலோபாத்தோரின் (கி.மு. 187–175) ஆட்சியில் கூலே–சீரியா, பெனிசியா, ஆகிய இடங்களின் ஆளுநர். எருசலேம் ஆலய கருவூலத்தைக் கொள்ளையிடத்திட்டமிட்டார். இக்கொள் கையை நடத்த கெலியோதோர் என்பவர் அனுப்பப்பட்டார். "பயங்கரத்திற்குரிய விண்ணகப் போர்வீரன்" வலிமைமிக்க குதிரையின்மேல் தோன்றி அவரை விழத் தாட்டினார் என்று 2 மக் 3:7–40–ல் உள்ள கதை சொல்லுகிறது. இந்த நிகழ்ச்சி ஓவியர்களுக்கு ஒரு விருப்பமான கருத் தாக இருந்திருக்கிறது-

2. முதலாம் தெமெத்திரியு, அலக்சாந் தர் பாலஸ் ஆகியோரின் ஆட்சியின் கூலே – சீரியாவின் ஆளுநர். இவர் தாவுஸ் என்ற மற்றொரு பெயரும் கொண்டிருந் தாக யோசிபஸ் கூறுகின்றார். இவர் மேலே கூறப்பட்டுள்ள அப்பொல்லோனியு வின் மகன் என்று யோசி பஸ் கருது கின்றார்.

கிளர்ச்சியாளரான 2–ம் தெமேத்திரியு வின் படைக்குத் தலைவனாக நியமிக்கப் பட்டபின் அலக்சாண்டருடைய உத்தரவில் லாமல், அப்பொல்லோனியு யோனத் தானுடைய படைகளுக்கு சவால்விட்டார். அப்பொல்லோனியுவால் நன்கு பாது காக்கப்பட்டிருந்து யோப்பாவை யோனத் தான் வென்றார். அப்பொல்லோனியு யோனத்தானின் படைவீரர்களை சம வெளிக்கு இழுத்து பதுங்கியிருந்து தாக்கி னார். ஆனாலும் யோனத்தானின் ஆட்கள் வென்று (1 மக் 10:69–85), அப்பொல்லோ னியுவின் படைகளை அசுதோது வரைக் குத்துரத்திச்சென்று, அதை தீக்கிரையாக் கினார்.

3. மொனஸ்தெயுவின் மகன். 4–ஆம் அந்தியோக்கு எப்பிபானின் ஆட்சியில் கூலேசீரியா, பெனிசியா ஆகியவற்றுக்கு ஆளுநர் (2 மக் 4:4). தோலமி பிலோமேத் தோரின் முடிசூட்டுவிழாவிற்கு (170 கி.மு.) அந்தியோக்கு எப்பிபானுக்குப் பதிலாக அனுப்பப்பட்டார் (2 மக் 4:21).

4. இஸ்ராயேலை எதிர்த்துப் போரிட (1 மக் 3:10) புறவினத்தாருடைய படைகளை ஒன்று திரட்டிய சமாரியா நாட்டுப் படை களின் தளபதி (1 மக் 3:10) நான்காம் அந்தியோக்கு முன்பு எருசலேமைக் கொள்ளையடிக்க அனுப்பிய அப்பொல் லோனியுவாக இருக்கலாம் எனக் கருதப் படுகின்றது (1 மக் 5:24–26; 1 மக் 1:29–35). இவர் சமாதானமாய் வந்தவர்போல் காட்டிக்கொண்டார். ஆனால் யூதர்கள் ஓய்வு நாளில் வேலை செய்யாமலிருப்ப தைக்கண்டு, அவர்கள் இளைப்பாறி இருக்கையில் "தன் படைகளை ஆயுதங்கள் எடுக்கக்கட்டளையிட்டார். வேடிக்கைப் பார்க்க வந்தவர்கள் எல்லோரையும் கொன்றார்" (2 மக் 5:25:26; 1 மக் 1:29–35). யூதாவோடு செய்த போரில் (கி.மு. 166) அப்பொல்லோனியு தன்னுடைய வாளை இழந்துவிட்டார். அந்த வாளைக் கொண்டே யூதா தன் வாழ்நாளெல்லாம் சண்டை செய்தார் (1 மக் 3:10–12). இப் போரில் அப்பொல்லோனியு யூதாவால் கொல்லப்பட்டார்.

5. கென்னாயுவின் மகன். 5–ஆம் அந்தியோக்கு யூபத்தோரின் கீழ் பாலஸ் தீன மாநிலங்களில் ஒன்றின் ஆளுநர். இவரும் மற்ற ஆளுநர்களும் "அவர்களை (யூதர்களை) அமைதியிலும், சமாதானத் திலும் இருக்கவிடவில்லை" (2 மக் 12:2).

6. தியானாவின் அப்பொல்லோனியு (கி.பி. 100). புதிய பித்தகோரிய தத்துவ இயல்வாதி. ஒரு சமயச் சீர்திருத்தவாதி. தொடக்ககால கிறிஸ்தவர்களுக்கு எதி ரான ஆசிரியர்கள், இவரைக் கிறிஸ்து வுக்கு இணையான போட்டியாளராகக் காட்ட இவரைப்பற்றிய வாழ்க்கை வர லாறுகளை எழுதினர். இவற்றில் இவர் பிறப்பும், ஒரு வான தூதரால் அறிவிக் கப்பட்டதாகவும், அவரது சீடர்களோடு பயணங்கள் செய்து, போதித்துப் புதுமை கள் செய்ததாகவும், இவரது சீடரில் ஒருவரால் உரோமையருக்குக் காட்டிக் கொடுக்கப்பட்டதாகவும், தோமிசியன் முன் விசாரணை செய்யப்பட்டபோது திடீ ரென்று மறைந்துபோய், பின்பு கீழுலகத் திற்கு இறங்கினதாகவும், பின்பு தன் சீடர்களுக்குத் தோன்றியதாகவும், பல கதைகள் உண்டு.

**அப்போஸ்தலர் காலம்**

இயேசு கிறிஸ்துவின் உடனடியான சீடர்கள், குறிப்பாக பன்னிரு அப்போஸ் தலர்கள், வாழ்ந்து போதித்தகாலம் இப் பெயரால் அழைக்கப்படும். அது இயேசு வின் பணியோடு தொடங்கியது எனலாம். அவரது உடனடிச் சீடர்களில் கடைசி யாவரது இறப்போடு, ஏறக்குறைய முதல் நூற்றாண்டின் இறுதியோடு முடிந் தது எனலாம். அப்போஸ்தலர் காலத் திற்கு உடனடியாகப் பின் வந்த காலம், அதாவது அப்போஸ்தலர்களில் ஒருவரை ஆள் முறையில் அறிந்தவர்களின் காலம் துணை – அப்போஸ்தலர் காலம் என்ற ழைக்கப்படும்.

**அப்போஸ்தலச் சங்கம்**
(APOSTOLIC COUNIL)

எருசலேம் திருச்சபையின் பிரதிநிதி களுக்கும் அந்தியோக்கிய திருச்சபையின் (பவுல், பார்னபா உட்பட்ட) பிரதிநிதி களுக்கிடையே எருசலேமில் நடந்த கூட்ட மாகும். மனந்திரும்பிய புறஇனக் கிறிஸ்த வர்களுக்கு விருத்த சேதனம் அவசியம் தான் என்ற பிரச்சினையைத் தீர்க்க இச் சங்கம் கூடியது (அ.ப.15:1–21). லூக்காவின் நிகழ்ச்சியுரைப்படி, . பவுலின் முதல், இரண்டாம் வேதபோதகப் பயணங்களுக் கிடையில் இந்நிகழ்ச்சி நடந்தது.

அந்தியோக்கியாவிலுள்ள சில யூதர் கள், மனந்திரும்பிய புற இனக்கிறிஸ்தவர் கள், மோசேயின் சட்டம் கூறியபடி விருத்த சேதனம் பெறவேண்டும், அதா வது, அவர்கள் கிறிஸ்தவர்களாகக் கருதப்படுமுன் யூதர்களாக மாறவேண்டும் என்று போதித்ததின் விளைவாக இப் பிரச்சினை எழுந்தது (15:1). நீண்ட தர்க் கத்திற்குப் பிறகு இறைவன்முன் யூதர்கள், புற இனக்கிறிஸ்தவர்கள் என்ற வேறு பாடு இல்லை என்றும், கடந்த காலத்தில் யூதர்கள்கூட சுமக்கமுடியாத ஒரு சட்டத் திற்கு மனந்திரும்பிய புறவினத்தாரைக் கட்டாயப்படுத்தக்கூடாது என்றும், மீட்பு புறச்சட்டங்களால் நிறைவேறும் மனிதச் செயல் அன்று என்றும், மீட்பு "ஆண்டவ ராகிய இயேசுவின் அருளால்தான்" என்றும் பேதுரு அறிவித்தார் (15:7–11). பேதுருவின் உரையைக்கேட்டு அனை வரும் அமைதியாயினர். அடுத்துப் பேசிய பவுலும், பார்னபாவும் புற இனத்தா ருக்குச் சார்பாகப் பேசினர் (15:12). இறுதி யில் கூட்டத்தின் நடுவரான யாக்கோபு, பேதுரு கூறியதற்கு ஆதரவாய்ப் பேசி னார். இறைவன் புற இனத்தாருக்கும் இறைவனே. புறவினத்தார் சிலைகளால் தீட்டுப்பட்டதைத் தொடாமல், கெட்ட நடத் தையை விலக்கி மூச்சடைத்து செத்ததின் இறைச்சி, இரத்தம் இவற்றை உண்ணாம லிருத்தல் போன்ற ஒழுக்கங்களைத் தவிர, அவர்களுக்கு வேறு தொல்லை கொடுத்த லாகாது என்று கூறினார் (15:13–22). அவரு டைய பரிந்துரை ஏற்றுக் கொள்ளப்பட்டது. சங்கத்தில் இருவரைத் தேர்ந்தெடுத்து, பவுல் பணிபுரிந்த பகுதியிலுள்ள பலதிருச் சபைகளுக்கு சங்கத்தின் முடிவை அறி விக்கும்படி பவுல், பார்னபாவோடு அனுப்புதலோடு சங்கம் முடிந்தது.

சங்கத்தின் பொருள் அளவிட முடியா ததாகும். இச்சங்கம் திருச்சபைக்குள் வேறுபட்ட குழுக்கள் கருத்தொருமை அடையக்கூடும் என்று காட்டியதோடு, கிறிஸ்துவத்துக்குள் யூதமயமாக்கும் கூறு களை, கொள்கையளவிலாவது, முடிவுக் குக்கொண்டு வந்தது. ஆனால் இம்முடிவு பொது உற்சாகத்துடன் உடனடியாக ஏற்றுக்கொள்ளப்படவில்லை என்று பவுலின் சிலதிருமுகங்கள் காட்டுகின்றன.

கலா 2:1–10, இச்சங்கம் பற்றிய பவுலின் விவரிப்பாக இருக்கலாம். ஆனால் பல திறனாய்வுக் கடினங்கள் எழுகின்றன. 1) அ.ப.யில், லூக்கா, பவுல் மனந்திரும்பிய பின் எருசலேமுக்கு மூன்றுமுறை சென்ற தாகக்கூறுகிறார். முதல் தடவை, அவர் மனந்திரும்பியதற்குப் பின் விரைவில் (அ.ப. 9:26–28), இரண்டாம் தடவை பஞ்சத் தின்போது (11:30; 12:25), மூன்றாம்முறை அவர் அப்போஸ்தலர் சங்கத்தில் பங்கெடுத்தபோது (15:2–4. 12–19). இதற்கு மாறாக இருமுறைதான் எருசலேமுக்குச் சென்றதாகப் பவுல் கூறுகிறார். முதல் முறை: மனந்திருப்பிய மூன்றாண்டு களுக்குப் பின் (கலா 1:8). இரண்டாம் முறை: 14 ஆண்டுகளுக்குப் பிறகு (2:1). இரு ஆசிரியர்களும் குறிப்பிடும் முதல்தடவை குறிக்கும் நிகழ்ச்சிகளும் ஒன்றே என்ப தில் விளக்கவுரையாளர்கள் கருந்தொற் றுமை கொண்டுள்ளனர். ஆனால் பின் வந்த நிகழ்ச்சிகள் பற்றி கருத்து வேறு பாடுகள் கொண்டுள்ளனர் (2) விருத்த சேதனம், கலாத்தியர் விவரிப்புக்கு அவ்வளவு முக்கியத்துவம் உடைய தில்லை. அதில் பவுலின் போதகத்தின் பொருளடக்கம், அவருடைய செயலாற்று முறையின் பொருத்தமுடைமை ஆகியவற் றைப்பற்றிக் கவனம் செலுத்தப்படுகிறது. 3) பவுல், பார்னபாவின் பிற்காலச் செயல் களை, அப்போஸ்தல சங்கத்தின் தீர் மானத்தோடு ஒத்துப்போகச் செய்வது கடினம் (கலா 2:11–21). மேலும் புறவினத் தாருக்கும் மோசேயின் கட்டுப்பாடு களுக்கும் உள்ள உறவு சங்கத்தின் முக்கிய தீர்மானங்களைக் கலாத்தியருக்கு பவுல் எடுத்துக்கூறவில்லை.

### அப்போஸ்தலச்சட்ட அமைப்பும், ஒழுங்குகளும்

(APOSTOLIC CONSTITUTIONS AND CANONS)

திருச்சபையின் சட்டங்களும், திரு வழிபாட்டு ஒழுங்குகளும் எட்டு புத்தகங் களில் தொகுக்கப்பட்டன. இறுதி அதிகா ரத்தில் 85 அப்போஸ்தல ஒழுங்குகள் பின் சேர்க்கப்பட்டுள்ளன. இவை திருத்தொண் டர்களைத் தேர்ந்தெடுக்கும்முறை, திரு நிலைப்படுத்துதல், பணிகள் பற்றிக் கூறு கின்றன. இது பலதொகுப்புகளில் ஒன்று. பெரும் பாலானவை திதாக்கே இப்போ லித்துவின் அப்போஸ்தலிக்க பாரம்பரி யம், திதா ஸ்காலியா போன்ற நூல்களைப் பெரிதும் சாந்திருக்கிறது. இது நான்காம் நூற்றாண்டின் இறுதியில் எழுதப்பட்டிரு க்கலாம். சீரியாவில் தோன்றிருக்கலாம். இது அப்போஸ்தலர்களால் தொகுக்கப் பட்டு உடன் ஊழியர் கிளமெந்துவிடம் கொடுக்கப்பட்டதாக உரிமை கொண்டாடு கிறது. எட்டாம் புத்தகத்தில் பேதுரு தொடங்கி மத்தியா, பவுல், எருசலேம் யாக்கோபு என்று பலரும் ஒருவர்பின் ஒரு வராக அப்போஸ்தலர் சங்கத்தில் பேசு கின்றனர். மாறாக முதல் ஏழு புத்தகங் களில் எல்லோரும் சேர்ந்து முடிவெடுப்ப தாக அமைந்துள்ளது. முதல் ஆறு நூற் களும் திதாஸ்காலியா என்ற நூலையே தழுவியுள்ளதாகத் தெரிகிறது.

ஏழாம் புத்தகம் திதாக்கேயின் தழுவல் அல்லது விரிவு ஆகும். அதில் செபங்கள், ஞானஸ்நானம் பெற இருப்பவர்களுக்குப் போதகம், ஞானஸ்நானம் கொடுக்கும் முறை ஆகியவை உள்ளன. எட்டாம் புத்த கம் இப்போலித்துவின் அப்போஸ்தலிக்க பாரம்பரியத்தைத்தழுவி உள்ளது. ஆயர் கள் குருக்களின் பட்டமளிப்பு பற்றிக் கூறு கின்றது. மேலும் தியாக்கோன்கள், பாவ பொறுத்தல் அளிப்போர், கன்னிகைகள், விதவைகள், பேய் ஓட்டுபவர்கள் பற்றிப் பேசுகின்றது. பின் பலவகையான சட்டங் கள் உள்ளன. கடைசி அதிகாரம் 85 அப் போஸ்தலிக்க ஒழுங்குகளைக் குறிப்பிடு கின்றது. இவற்றில் கடைசிச் சட்டம் ௺ முறை விவிலிப்பட்டியல் பற்றிப் பேசு கிறது. பட்டியல் முடிவில் கிளமெண்டில் இரு மடல்களும் காணப்படுகின்றன.

இந்த முழு நூலின் நடை, சொற்றொ குதி ஆகியவற்றை வைத்துப்பார்க்கும் போது ஒரு தனிப்பட்ட மனிதன் தொகுத் திருக்கலாம் என்று எண்ணத் தோன்று கிறது. அவர் ஓர் ஆரியனாக இருக்கலாம் என்று கூறப்படும். எனினும் இதை நிரு பித்தல் கடினம். இவற்றில் இஞ்ஞாசியா ரின் போலித் திருமுகங்களோடு ஒரு நேரடி தொடர்பு இருப்பதை உணரலாம்.

இது போன்றத் தொடர்புடையனவாக சிலவற்றைக்குறிப்பிடலாம். 1) அவற்றில்

ஒன்று அப்போஸ்தல் ஒழுங்குமுறை ஆகும். இது கிரேக்கத்தில் நான்காம் நூற்றாண்டில் எகிப்தியரால் எழுதப்பட்ட ஒரு சிறு நூல். கிறிஸ்துவின் கட்டளையை ஏற்று 12 அப்போஸ்தலர்களும் "புதல்வர்கள் புதல்வியர்களுக்கு" எழுதியது. பிற்பகுதி ஒழுக்க நெறிகள் பற்றியும், ஆயர், குருக்கள், திருத்தொண்டர்கள், விதவைகள் பற்றியும் பேசுகின்றது. இப்போலித்துவின் அப்போஸ்தலப் பாரம்பரியங்கள் பல நூல்களுக்கு வழிவகுத்தது. அவற்றில் ஒன்று நமது ஆண்டவரின் ஏற்பாடு, இதில் கிறிஸ்து விண்ணேற்றத்துக்கு முன் அப்போஸ்தலர்களுக்கு அளித்த அறிவுரையை முகவுரையாகக்கொண்டுள்ளது. 2) இப்போலித்து எழுதிய திருமுறைகள் கிரேக்கத்தில் எழுதப்பட்டாலும் இன்று எத்தியோப்பிய அரபிக் மொழிகளில் உள்ளன.

3) இப்போலித்துவின் வழியாக வரும் சட்டமுறை, இது, அப்போஸ்தலச் சட்டமுறை நூலிலிருந்து சிலபகுதிகளை எடுத்துக்கூறுகிறது. இது, கோப்டிக் மொழியில்தான் முதலில் அறிஞர்களுக்குக் கிடைத்ததால், எகிப்திய திருச்சபை அமைப்பு என்று அழைக்கப்பட்டது. இப்போது, நெடுங்காலமாய் மறைந்து போயிருந்த அப்போஸ்தலப்பாரம்பரியம் பற்றிய நூல் என்று ஏற்றுக்கொள்ளப்படும்.

**அப்போஸ்தலத் தந்தையர்களின் நூல்**
(APOSTOLIC FATHERS)

புதிய ஏற்பாட்டு கடைசி நூல்களின் காலகட்டத்தில், அப்போஸ்தலர்களோடு நேரடியாக அல்லது அவர்களின் சீடர்களோடு தொடர்புள்ளவர்களால் பல விளக்கங்கள் தரும் நூல்கள் எழுதப்பட்டன. இவ்வாறு நூற்கள் எழுதியவர்களை 17–ஆம் நூற்றாண்டிலிருந்து அப்போஸ்தல தந்தையர் என்று அழைத்தார்கள். இவைகளில் பல நூற்கள், 4,5 –ஆம் நூற்றாண்டுகள் வரை, சில திருச்சபைகளில் திருமுறை அதிகாரம் பெற்றவை போல் விளங்கின. மேலும் இவற்றில் சில பழைய புதிய ஏற்பாட்டு திருமுறைப்பட்டியலோடு இணைக்கப்பட்டிருந்தன. (எ.கா. பர்னபா எழுதிய திருமுகம், கிளமெந்து எழுதிய திருமுகங்கள் 1,2).

இந்த நூல்களை அதிகாரப் பூர்வமாக விவிலிய நூல்களாக திருச்சபை ஏற்றுக் கொள்ளாவிட்டாலும், அவைகளின் தோற்ற இடம், காலம், ஆசிரியர்போன்ற தகவல்கள் சரியாகத் தெரியவில்லை என்றாலும், இவைகள் வரலாறு, இறையியல், கிறிஸ்தவ திருச்சபையின் வளர்ச்சி ஆகிய வற்றைப்பற்றி ஏராளமான தகவல்களைத் தருகின்றன. புதிய ஏற்பாட்டு நூற்களின் சொற்றொகுப்புக்களைச் சரியாகப் புரிந்து கொள்ளவும் அந்நூற்களைப் புதிய ஏற்பாட்டோடு சேர்த்துக்கொள்ளவும், இந்த அப்போஸ்தலத் தந்தையரின் நூல்கள் பெரிதும் உதவியாயிருக்கின்றன. ஆனால் புதிய ஏற்பாடு வாசகத்தைப் பொறுத்த மட்டும் இவைகள் சிறிதளவே உதவுகின்றன. காரணம், அதிகாரப்பூர்வமாக ஏற்றுக்கொள்ளப்பட்ட நூல்களிலிருந்து இந்நூல்களில் காணப்படும் எடுத்துக் காட்டு வாசகங்களும் சுட்டிக்காட்டல்களும் மூல நூல்களிலிருந்து பெரிதும் வேறுபடுகின்றன. எனவே இவர்கள் வாய்மொழிப்பாரம்பரியத்தைச் சார்ந்து எழுதினரா அல்லது பிற நூல்களில் இருந்து எடுத்துக்கையாண்டர்களா என்பது தெளிவாகத் தெரியவில்லை. இவற்றில் திருமுறை சாராத நூல்களின் அடையாளங்களும் உள்ளன.

இந்த நூல்கள் எல்லாம் ஒரே மாதிரியாக இல்லாததால் அவைகளைத் தனித்தனியாக படிப்பதே நல்லது. இவை பார்ணபா எழுதிய போலித் திருமுகம், உரோமை கிளமெந்துவின் இரு திருமுகங்கள், அந்தியோக்கிய இஞ்ஞாசியாரின் திருமுகம், போலிகார்ப்பின் திருமுகமும், மறைசாட்சி வரலாறும் போன்ற பல திருமுகங்களை உள்ளடக்கிய ஏர்மாஸ் ஆயரது நூல் போன்ற பல திருமுகங்கள் உள்ளடக்கிய அப்போஸ்தல தந்தையரின் நூல்களைக்கொண்ட தொகுப்பாகும். 1672–ல் ஜே.பி. கோட்லியர் என்பவர் தணிக்கை செய்துவெளியிட்டார். இக்காலப் பதிப்புக்கள், திகாக்கே போன்ற பல நூல்களையும் இத்தொகுப்பில் சேர்க்கின்றன.

அப்போஸ்தோலிக்க தந்தையர் என்ற தொகுப்பில் சில திருமுறை அதிகாரம் பெற்றதாகக் கருதப்பட்டதோடு, புதிய

ஏற்பாட்டு நூல்களுக்குச் சமமாகவும் கருதப்பட்டன. ஆனால் அத்தனேசியுவும் (397) இறுதியாக கார்த்தேசின் சங்கமும் (397) இந்த முதல் நூற்றாண்டு ஆசிரியர் களின் நூல்களைப் புதிய ஏற்பாட்டு திரு முறை நூல்களிலிருந்து தெளிவாக வேறு படுத்தின.

பல நூற்றாண்டுகளாக, இந்நூல்கள் தொகுப்பு, புறக்கணிக்கப்பட்டன. பிரிவி னைத் திருச்சபை சீர்திருத்தவாதிகளின் கருத்துப்படி, பவுல், யோவான் ஆகியோ ரில் காணப்படும் இறையியல் மேன்மை யும் நயமும் இவற்றில் காணப்படவில்லை. புதிய ஏற்பாட்டு நூல்களிலிருந்து இவை வேறுபட்டவை. ஆனால் இந்த வேறுபாட் டை மிகைப்படுத்தக்கூடாது. புதிய ஏற் பாட்டு நூல்களைவிட இந்நூல்கள் அன் றாடச்செயல் முறையான காரியங்களில் அக்கறை செலுத்தின. இந்நூல்களை எழுதிய ஆசிரியர்கள், பவுலைப்போல் நற் செய்தியை அறிவிக்க கிரேக்க, உரோ மையர் நாடுகள் முழுவதும் பயணம் செய்த அப்போஸ்தலர்களாக இல்லாது போகலாம். இவர்களது அலுவல் கிளர்ச்சியூட்டுபவை அல்ல. அப்போஸ் தலர்கள் தோற்றுவித்த திருச்சபைகளுக்கு பணிபுரியும் சுமையான அலுவலாகும்.

இவற்றில் பொதுவாகக் காணப்படும் கருத்துக்கள்: படைக்கும், ஆட்சி செய்யும், மீட்கும், நீதிவழங்கும் இறைவன், இயேசு கிறிஸ்து, திருச்சபையும் அதன் ஒருமைப் பாடும், பணியும், கிறிஸ்துவ வாழ்வு, இறுதிக்கால இயல் ஆகியவையாகும். ஒவ் வொரு நூலும், இவை பற்றிய அழுத்தத் திலும் பொருளாக்கத்திலும் வேறுபடு கின்றன.

### *அப்போஸ்தலர்*

(APOSTLE – *அனுப்பப்பட்டவர்*)

இப்பெயர் தூதுபெற்ற அதிகாரப் பூர்வமான பிரதிநிதியைக் குறிக்கிறது. தூதின் பொருளடக்கத்தைவிட தூது அனுப்பினவரின் அதிகாரத்தைக் குறிக் கிறது. பல்வேறுபட்ட பொருளில், குறிப் பான பொருளிலும், பொதுவான பொருளிலும், இது புதிய ஏற்பாட்டில் 72 தடவை வருகிறது. கிறிஸ்தவ வழக்கில், இப்பெயர் இரு தெளிவான பொருளில் பயன்படுகிறது அ) திருச்சபை வரலாற் றின் முதல் முறையைச் சேர்ந்த சில குறிப்பிட்ட மனிதர்கள் அப்போஸ்தலர் என்றழைக்கப்படுகின்றனர் ஆ) நற்செய்தி போதகர்கள்.

1. கிரேக்க வழக்கில் கப்பற்படை யெடுப்பையோ, அல்லது குடியேற்றக் குழு வையோ விவரிக்க அப்போஸ்தலர் என்ற சொல் பயன்படுகிறது. எரோதோத்தில் தூதுவரான ஆளைக்குறிக்கிறது. அடை மொழியில் தூதுவரைக் குறிக்கப் பயன்படு கிறது இது அபூர்வமானதாகும். இம் முறையில் இருமுறைதான் புதிய ஏற் பாட்டில் பயன்பட்டுள்து (யோவா 13:16; பிலி 2:25).

2. யூத வழக்கில், அப்போஸ்தலர் என்ற கிரேக்கச் சொல்லுக்கு இணையான எபிரேயச் சொல் "சலியா" ஆகும். தூதர், தனிநபர்களுடைய அல்லது அரசவை, செபக்கூடம் போன்ற குழுக்களின் பிரதி நிதியாக இருக்கலாம். இவர்களின் கடமை தூதின் பொருளடக்கத்தைப் பொறுத்தது. இவை சட்ட ஏடுகளை அளித்தல், பணத்தைப் பெற்று வருதல், செய்திகளை, குறிப்பாக காலக்கணிப்பு, விழாக்கள் பற்றிய செய்திகளை அளித்த லாகும். செபக்கூடத்தில், சலியா குழுச் செபத்தில் தலைமை தாங்குபவராக இருக் கலாம். "ஒருவரின் தூதன் அவனைப் போன்றவனே" என்பது ராபிகளின் மேற் கோளாகும். இது அனுப்பினவரின் கட்டளையை நிறைவேற்றும் பொறுப் புடையவராவார், தூதுவர் என்பதையும், அலுவலையும் விளக்குகிறது. அவரது இடத்தை விளக்கவில்லை. கி.பி. 4–ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கிறிஸ்துத் திருச் சபைத்தந்தையர், யூத ஏடுகள், தியோ தோசியின் சட்டநூல் ஆகியவற்றின் சான்றுகள், எருசலேமின் தலைமைய கதின் அதிகாரம் பெற்ற யூதத் தூதவர் களை அப்போஸ்தலர் என்ற சொல்லால் குறிக்கின்றன. இவர்கள் சிதறிக் கிடந்த யூதர்களிடையே வரி சேர்க்க அனுப்பப் பட்டனர். இவர்கள் இருவர் இருவராக அனுப்பப்பட்டனர். இவர்கள் சில சமயம் செபக் கூடங்களில் போதித்தனர். இவர்

கள் எருசலேமுக்குத் திரும்பியதோடு இவர்கள் தூது முடிந்தது. இத்தூதை மற்றவர்க்கு மாற்ற முடியாது.

புதிய ஏற்பாட்டுக் காலத்தில் சலியா என்ற சொல் மோசே, எலியா, எலிசா, எசக்கியேல் ஆகிய நான்கு முக்கியமான வர்களைக் குறிக்கிறது. இவர்கள் இறைவன் பெயரால் அருஞ்செயல்புரிய ஆற்றல் அளிக்கப்பட்ட 'இறைவனது தூதர்கள்", பகர ஆள் ஆவர். கிறிஸ்து இறைவனின் அப்போஸ்தலராவார் (மாற்கு 9:37). அதோடு "நான் அனுப்புகிறவனை ஏற்றுக் கொள்பவன் என்னை ஏற்றுக் கொள்கிறான்" என்றும் உரிமை கொண்டாடுகிறார் (யோவா 13:20; மத் 10:40). எழுபது நூலில் அப்போஸ்தலர் என்ற சொல் பெயர்ச்சொல்லில் ஒரே ஒரு தரம் 1 அரச 14:6–இல் வருகிறது. அதில் இறைவாக்கினர் அகீயா தம்மை, இறைவனது செய்தியைக் கொண்டு வரும் அவருடைய தூதர் என எரொபயாமின் மனைவிக்கு அறிவிக்கிறார். பாரசீகர் காலத்திய இலக்கியத்தில், ஆட்சி, சமயத்தூதிற்கு அனுப்பப்பட்ட அரச தூதுவர்களைக் அப்போஸ்தலர் என்ற சொல் குறிக்கலாம் என்று சில அறிஞர்கள் கருதுகின்றனர் (எஸ் 7:12 தொ; நெக 2:5; 2 நாள் 17:9; எஸ்த 9:20; 2 மக் 1:1–2). ஆனால் இவற்றில், பிற்கால கிறிஸ்துவ அப்போஸ்தலர் என்ற சொல்லைப்போல், சலியா என்ற சொல் நிறுவ அமைப்பையோ போதக பொறுப்பையோ, உணர்த்தவில்லை. அவரது அதிகாரம் தெளிவாக வரையறை செய்யப்பட்டது. குறிப்பிட்ட காலத்திற்குரியது. அவரது தூதின் தன்மை சமயத் தன்மையைவிடச் சட்டத்தன்மையையே அதிகம் உணர்த்தியது.

*3. இயேசுவும் அப்போஸ்தலரும்:–* அப்போஸ்தலர் என்பது ஒரு பட்டமாக உருவெடுக்குமுன், அப்போஸ்தலத்துவம் ஒரு அலுவலாகும். உண்மையில், படிப்படியான வளர்ச்சியின் முடிவில், அப்போஸ்தலர் என்ற பட்டம் தனிச்சிறப்பான பொருளிலும் பன்னிருவர் குழுவுக்கு உரியதாகப் பயன்பட்டது (மத் 10:2). பிறகு இப்பெயர் இயேசுவுக்கே சாற்றிக் கூறப்பட்டது. இப்பெயர் பன்னிருவருக்கு மட்டுமே உரியதானாலும், அப்போஸ்தல அலுவலில் பிறரும் பங்கெடுத்தனர் என்பது தெளிவு.

*4. பன்னிரு அப்போஸ்தலர்கள்:–* தமது பகிரங்கப் பணியின் தொடக்கத்திலிருந்து, இயேசு, மற்ற மனிதர்கள் வழியாகத் தமது பிரசன்னத்தைப் பெருக்கவும், தமது செய்தியைப் பரப்பவும் விரும்பினார். முதல் நான்கு சீடர்களை "மனிதர்களைப் பிடிப்பவர்களாக" இருக்க அழைக்கிறார் (மத் 4:18–22). அவர், "தம்மோடு இருக்கவும்" அவரைப்போல நற்செய்திகளைப் போதிக்கவும், பேய்களை ஓட்டவும் பன்னிருவரைத் தேர்ந்தெடுக்கிறார் (மாற் 3:14 தொ). அவரது அதிகாரத்தைப் பெற்று அவரது பெயரில் பேச அவர்களை அனுப்புகிறார் (6:6:13). "உங்களை ஏற்றுக் கொள்பவன் என்னை கொள்கிறான்; என்னை ஏற்றுக் கொள்பவனோ என்னை அனுப்பினவரை ஏற்றுக்கொள்கிறான்" (மத் 10:40). அவர்கள் பாலையில, அவர் பெருக்கிய அப்பத்தை பகிர்ந்தளிக்கின்றனர் (14:19). கிறிஸ்தவச் சமூகத்தை நடத்துவதற்காக தனிச்சிறப்பான அதிகாரம் பெறுகின்றனர் (16:18; 18:18). சுருக்கமாக அவர்கள் புதிய இஸ்ராயேலின் அடிப்படையாக அமைகின்றனர். இறுதிக்காலத்தின் அப்புதிய இஸ்ராயேலின் நடுவர்களாக இருப்பர் (19:27 தொ). இதுதான் அப்போஸ்தலர் குழுவில் 12 என்ற எண்ணிக்கையின் பொருளாகும். இந்த மூலப்பன்னிருவர் இயேசுவாலே தேர்ந்தெடுக்கப்பட்டவராவர். அதற்கு அவர்கள் மனு உரு எடுத்த வார்த்தையை ஆள் முறையில் அறிந்திருக்கவேண்டும் என்பது ஒரு நிபந்தனையாகும். அவர்கள் சீடர்களின் பொதுக்குழுவிலிருந்து தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். அவர்கள் இயேசுவின் அலுவலைத் தொடர்ந்து நடத்த வேண்டும். அவர்களிடம்தான் உயிர்த்த இயேசு பாவமன்னிப்பைப் போதிக்கும் (லூக் 24:44–49), எல்லா இனத்தாரையும் சீடராக்கும் ஞானஸ்நானம் கொடுக்கும் (மத் 28:16–20) கடமையை அளிக்கிறார். இந்தக் கடமையை நிறைவேற்றுவதில் அவர் உலக முடிவுவரை எந்நாளும் அவர்களோடு இருப்பார். இயேசு

பன்னிருவருக்கும் பரிசுத்த ஆவியையும், அதிகாரத்தையும் அருள்கிறார் (யோவா 20:21). இப்போதிலிருந்து யூதாசுக்குப் பதிலாகப் பன்னிரண்டாம்வரைத் தேர்ந்தெடுக்க வேண்டியது அவசியமாகிறது. அப்போதுதான், அண்மையில் தோன்றியுள்ள புதிய திருச்சபையின் புதிய இஸ்ராயேலின் உருவம் காணப்படும் (அ.ப. 1:15–26). அவர்கள் கிறிஸ்துவுக்குச் சாட்சியாக இருக்கவேண்டும். அதாவது உயிர்த்த கிறிஸ்து அவர்கள் பழகி வாழ்ந்த அதே இயேசுதான் என்று சான்று கூறவேண்டும் (1:18–21). இந்தத் தனித்தன்மையுடைய சாட்சியளித்தல் அவர்களது அப்போஸ்தலத்துக்கு சிறப்பான பண்பை அளிக்கிறது. இந்தப் பன்னிருவரும் எக்காலத்திற்கும் திருச்சபையின் அடித்தளமாகின்றனர். "நகரின் மதில் பன்னிரு அடிக்கற்கள் மேல்கட்டப்பட்டிருந்தது. அவற்றின்மேல் செம்மறியின் பன்னிரு அப்போஸ்தலர்களின் பெயர்களும் இருந்தன" (திருவெளி 21:14). பன்னிருவரின் தூது அலுவல், இயேசு விண்ணேற்றமானபின் பரிசுத்த ஆவியின் கொடையால் செயல்முறை பெறுகிறது (லூக் 24:49; அ.ப. 1:8; 2).

பன்னிருவர் இயேசுவால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் (அ.ப. 1.2 தொ). அவர்கள் தொடக்க கிறிஸ்தவச்சமூகத்திற்குப் போதிக்கின்றனர். தலைமை தாங்குகின்றனர் (2:42 தொ). உயிர்ப்புக்குச் சாட்சி பகருகின்றனர் (4:33). கிறிஸ்தவச் சமூகத்திற்குப் பொருட்கள் பங்கீடுவதில் தலைமை தாங்குகின்றனர் (4:34–37; 5:2). இயேசுவின் பெயரால் பேசுகின்றனர் (5:40). அவர் பெயரால் அடையாளங்களும் புதுமைகளையும் செய்கின்றனர் (5:12). வார்த்தையின் பணி அவர்களுடையதாகும் (6:2). பொருட்கள் பகிர்ந்தளிக்கப்படுவதைக் கவனிக்க அதிகாரம் அளிக்க எழுவர் (தியாக்கோண்கள்) மீது கைவிரிக்கின்றனர் (6:6). வேதகலாபனையால் எருசலேமிலுள்ள கிறிஸ்தவச் சமூகம் சிதறிப் போன பின்னும், எருசலேம் அவர்களின் உறைவிடமாகிறது. அத்திருச்சபையோடு ஒன்றாகின்றனர் (8:1.14.18; 9:27; 11:1). எருசலேம் சமூக மூப்பர்களோடு அவர்கள் திருசபையின் மேலாண்மையுள்ள சட்டமன்றமாக விளங்குகின்றனர் (15:2.4.22 தொ; 16:4).

ஆதித் திருச்சபையில் பன்னிருவரின் இடம் தெளிவாக உள்ளது. ஆனல் பன்னிருவர் என்பது அப்போஸ்தலப் பதவியின் ஒரு பொருள் பிற சொல்லா என்பது அவ்வளவு தெளிவாக இல்லை. அப்போஸ்தலர் என்ற சொல் ஒருமையில் பவுலின் கடிதங்களில் முதலில் காணப்படுகிறது. அது பேதுரு (1 பேதுரு 1:1;2 பேதுரு 1:1), யாக்கோபு (கலா 1:19) பார்னபா (அ.ப.14:14), மற்றபடி அறியப்படாத அந்திரோனிக்கு, யூனியா (உரோ 16:7) ஆகியோருக்குக் கொடுக்கப்படுகிறது. அப்போஸ்தலர்கள் என்ற சொல் பல இடங்களில் வருகிறது. ஆனால் அனைத்திலும் சூழ்நிலை பன்னிருவரைத்தான் சுட்டுகிறது என்பது தெளிவாக இல்லை (1 கொரி 4:9–13; 9:5; 15:7; 2 பேதுரு 3:2; யூதா 17). பவுல் அப்போஸ்தலத்துவத்தை திருச்சபையின் அருங்கொடைப் பதவிகளில் ஒன்றாகக் குறிக்கிறார் (1 கொரி 12:28 தொ). இறைவாக்கினரும், அப்போஸ்தலர்களும் திருச்சபையின் அடிக்கல்லாவர் (எபே.2:20). பவுல் ஏளனச் செய்யும் "பேர்போன அப்போஸ்தலர்"களின் அடையாளம் தெளிவாயில்லை (2 கொரி 12:11). இவர்கள் 2 கொரி 11:13–இல் வரும் போலி அப்போஸ்தலர்களாக இருக்கலாம். ஆனால் அப்போஸ்தலர்கள் என்ற பட்டம் பன்னிருவருக்கு மட்டுமே உரியதானால், அப்பட்டத்தைப் பெறத்தகுதியுடையவர் வேறுயாரும் இருக்கமுடியாது. தொடக்கத் திருச்சபையின் சில பகுதிகளிலாவது, பன்னிருவரைத் தவிர பிறருக்கு இப்பட்டம் அளிக்கப்பட்டதாகத் தோன்றுகிறது. புதிய ஏற்பாட்டு ஆசிரியர்களில் எல்லாம் லூக்கா இப்பட்டத்தைப் பன்னிருவருக்கும், பவுலுக்கு மட்டுமே வழங்குகிறார். அப்பொல்லோ, திமோத்தே ஆகியோருக்கு இப்பெயர் கொடுக்கப்படுவதேயில்லை. இதற்குக்காரணம், அப்போஸ்தலரின் முன்நிபந்தனையான, இயேசுவோடு வாழ்ந்த சொந்த அனுபவம் இவர்களுக்கு இல்லை என்பதாக இருக்கலாம்.

5. புதிய திருச்சபையில் அப்போஸ்தலத்துவம்:-

பன்னிருவர் மற்ற அப்போஸ்தலர்களுக்கு மேலானவர்கள் என்றாலும், திருச்சபையின் அப்போஸ்தலத்தவம் பரந்த பொருளில் புரிந்து கொள்ளப்படுகிறது. பன்னிருவரின் செயல்களுக்கு மட்டும் வரையறை செய்யப்படவில்லை. "இறைவனால் அனுப்பப்பட்டவர்கள்" ஆக. இயேசு (எபி. 3:1) தனது பிரசன்னத்தையும் வார்த்தையையும் பெருக்க சலுகைபெற்ற ஒரு குழுவை நிறுவ விரும்பியதுபோல், இவர்கள், தங்களது அப்போஸ்தலத்துவத்தைத் தொடர்ந்து நடத்துதலை பிறருக்கு அளித்தனர். எக்காலத்துக்கும் உயிர்த்த இயேசுவுக்கு சாட்சிகளாக அவர்களை எக்காலத்துக்கும் ஆக்கும் சலுகையை அளிப்பதற்கல்ல. ஏனெனில் அதை அவர்கள் மாற்றித்தர முடியாது. ஏற்கெனவே பழைய ஏற்பாட்டில் மேசே, யோசுவாவுக்கு தன் ஆற்றலின் நிறைவை அளித்திருந்தார் (எண். 27:18).அதேபோல் இயேசு பன்னிருவரிடம் ஒப்படைக்கப்பட்ட மேய்ப்புப் பணி காலம் காலமாய்த் தொடர்ந்து நடக்கவிரும்பினார். அவர்களோடு தனிப்பட்ட ஒற்றுமையை முழுவதும் காப்பதுடன், உயிர்த்த இயேசு இக்குழுவுக்கு அப்பாலும் செல்வார்.

இந்த அப்போஸ்தலப் பணி நீட்டிப்பிற்கு, தமது வாழ்நாளிலேயே இயேசு வழிவகுத்தார். பன்னிருவருக்கு அளிக்கப்பட்ட தூது பற்றிய பாரம்பரியத்தைத் தவிர, லூக்கா மற்றொரு பாரம்பரியத்தையும்கொடுக்கிறார். இதன்படி, "ஆண்டவர் வேறு எழுத்திரண்டுபேரை நியமித்து, தாம் போகவிருந்த எல்லா ஊர்களுக்கும், இடங்களுக்கும் அவர்களை இருவர் இருவராகத்தமக்கு முன்னால் அனுப்பினார்" (லூக் 10:1). இவர்களுக்கு அளிக்கப்பட்ட தூதுப்பணியும், பன்னிருவருக்கு அளிக்கப்பட்டதின் பண்புகளையே கொண்டிருக்கிறது (10:1–16). ஆகவே இயேசுவின் கருத்தில், அப்போஸ்தலத்தூது பன்னிருவருக்கு மட்டும் உரியதன்று எனத்தெரிகிறது.

பன்னிருவரும் இதே மன நிலையில் தான் செயல்படுகின்றனர். மத்தியா தேர்விலிருந்து, அப்போஸ்தலர்களாக இருக்கும் தகுதி பலசீடர்களுக்கு உண்டு என்பதை அறிந்திருந்தனர் எனத்தெரிகிறது (அ.ப. 1:21 தொ). மத்தியா சரியான முறையில் அப்போஸ்தலர் அல்லர். ஆனால் இறைவன் தேர்ந்தெடுக்கும் பன்னிரண்டாவது சாட்சியாவார். இதைத் தவிர, பவுலைப்போல் பேர்பெற்ற அப்போஸ்தலரான பார்னபா உள்ளார் (14:4.14). பன்னிருவரால் தேர்ந்தெடுக்கப்பட்ட எழுவர் அப்போஸ்தலர்கள் என்று அழைக்கப்படாவிட்டாலும் அவர்கள் புதுத் திருச்சபையை நிறுவுகின்றனர். இவ்வாறு, பிலிப்பு, அவரது அதிகாரத்தைப் பன்னிருவர் வரையறை செய்தாலும், சமாரியாவில் திருச்சபையை நிறுவுகிறார் (8:14–25). திருச்சபையில் உயிர்த்த இயேசுவுக்கு சாட்சியம் கூறும் அதிகாரப்பூர்வமான பிரதிநிதி அப்போஸ்தலத்துவம் எக்காலத்திற்கும் பன்னிருவரின் "அப்போஸ்தலிக்கக் குழுவை" அடிப்படையாகக்கொண்டுள்ளது. ஆனால், அவர்கள் யாருக்கு அதிகாரம் அளிக்கிறார்களோ, அவர்களால் செயல்படுத்தப்படுகிறது.

6. பவுல் கருத்தில் அப்போஸ்தலர்:-

பவுலின் அப்போஸ்தலத்தன்மை, தனக்கு உரியமுறையில், இவ்வுலகில் இயேசு வாழ்ந்தபோது, பன்னிருவரைத் தவிர எழுபத்திரண்டு பேரை அனுப்பியபோது சுட்டிக்காட்டியதை உறுதிப்படுத்துகிறது. உயிர்த்த இயேசு விண்ணிலிருந்து, பன்னிருவரைத்தவிர, பவுலையும் அனுப்புகிறார். இந்த அப்போஸ்தலத்தூதின் வழியாக, அப்போஸ்தலத்துவத்தின் தன்மை இன்னும் துல்லியமாக்கப்படும்.

பவுல், அப்போஸ்தவராக இருக்க உயிர்த்த இயேசுவின் காட்சியில் (கலா 1:16; 1 கொரி 4:1; 15:8; அ.ப.9:5.27) தாம் அழைக்கப்பட்டதாக மீண்டும் மீண்டும் கூறுகிறார் (உரோ 1:1; கலா 1:15). அப்போஸ்தலன் இருக்கவேண்டிய தகுதியையும் வெளிப்படையாக எடுத்துக்கூறுகிறார். அப்போஸ்தலர் மனிதரால், அவர்கள் அப்போஸ்தலர்களாயிருந்தாலும் கூட, அனுப்பப்பட்டவரல்லர். அவர் இயேசுவாலே அனுப்பப்பட்டிருக்கவேண்டும். பவுலுக்கு அவரது முதல் தூது அந்தி

யோக்கிய திருச்சபையில் கொடுக்கப் பட்டாலும் (அ.ப. 13:2), இதனால் அவர் உரிமை கொண்டாடவில்லை. ஏனெனில் திருச்சபையின் ஆணை ஒருவரை அப், போஸ்தலனாக்குவதில்லை. தான் பன்னிருவருக்கும் சமமான அப்போஸ்தலர்தான் என்று அவர் வெளிப்படையாக உரிமை கொண்டாடாவிட்டாலும், அவரது தொனி அதைச் சுட்டிக்காட்டுகிறது. ஆனால் இந்த உரிமை கொண்டாடுதல் மட்டும் போதாது. கலா 1–2–இல் வரும் விவரிப்பு, பன்னிருவரும் அதை ஏற்றுக்கொண்டனர் என்று காட்டுகிறது. அவரது உரிமை கொண்டாடுதல் பன்னிருவருடைய தகுதிகளை அடிப்படையாகக்கொண்டது. அவை: இயேசுவாலேயே தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கவேண்டும்; உயிருள்ள இயேசுவோடு சொந்த அனுபவம் கொண்டிருக்க வேண்டும். பவுலைப் பொருத்தமட்டும் இந்த அனுபவம் உயிர்த்த இயேசுவோடு கொண்டதாகும். அவரது அப்போஸ்தலத்துவம்பற்றி அவரது உறுதி தமஸ்குவிற்குப் போகும்போது பெற்ற அனுபவத்திலிருந்து எழுகிறது (கலா 1:16). இது மூன்று வடிவங்களில் தரப்படுகின்றது. ஒவ்வொன்றும் அவர் தேர்ந்தெடுக்கப்படுதலை வலியுறுத்துகின்றது. பவுல் புறவினத்தார், அரசர்கள், இஸ்ராயேலர் முன்பு இயேசுவின் பெயரைக் கொண்டு செல்லத் தேர்ந்தெடுக்கப்பட்ட கருவியாவார் (அ.ப. 9:15). எல்லா மனிதருக்குமுன் இயேசுவுக்கு அவர் சாட்சியாக இருக்கிறார் (22:15). "நீ சாட்சியம் பகர வேண்டும். புறவினத்தாரிடையே உன்னை அனுப்புகிறேன். நீ அவர்களுடைய கண்களைத்திறப்பாய். அவர்கள் இருளை விட்டு ஒளிக்கு வந்து பேயின் அதிகாரத்திலிருந்து கடவுள் பக்கம் திரும்பச் செய்வாய். இவ்வாறு அவர்கள் என்னில் கொள்ளும் விசுவாசத்தால் பாவமன்னிப்புப்பெற்று, அர்ச்சிக்கப்பட்டவர்களோடு பங்கு அடைவார்கள் (26:16–18). பன்னிருவருக்கும் இயேசு தோன்றியது போலவே பவுலுக்கும் தோன்றினார். (1 கொரி 15:8). அவருக்கு முன்பே அவர்கள் அப்போஸ்தலர்களாயிருக்கிறார்கள். ஆனால் அவரும் ஒரு அப்போஸ்தலர்தான் (கலா 1:17). எரேமியாவைப்போல் அவர் தாயின் வயிற்றில் இருக்கும்போதே தேர்ந்தெடுக்கப்பட்டு இறை அருளால் அழைக்கப் பட்டார் (கலா 1:15). இறைசித்தத்தால் அப்போஸ்தலராக அழைக்கப்பட்டு (1 கொரி 1:1; 2 கொரி 1:1; எபே 1:1; கொலோ 1:1 ; 2 திமோ 1:1). நற்செய்தியை அறிவிக்கக் குறிக்கப்பட்டவர் (உரோ 1:1–7). மனிதன் வழியாக ஏற்படுத்தப்படாமல் இயேசு கிறிஸ்துவினாலும் அவரது தந்தையாகிய கடவுளாலும் அப்போஸ்தலனாய் ஏற்படுத்தப்பட்டவர் (கலா 1). கடவுளிமிருந்தும், இயேசவிடமிருந்து பெற்றக் கட்டளையால் அப்போஸ்தலராவார் (1 திமோ 1:1). தூதரைப்பவராகவும், அப்போஸ்தலராகவும் விசுவாசத்தையும் உண்மையையும் புறவினத்தாருக்கக் கற்பிக்கும் போதகனாகவும் ஏற்படுத்தப்பட்டவர். (1 திமோ 2:7). யூதர்களின் அப்போஸ்தலத்துவம் பேதுருவுக்கு அளிக்கப்பட்டதுபோல், புறவினத்தாருடைய அப்போஸ்தலத்துவம் பவுலுக்கு அளிக்கப்பட்டது (அ.ப. 9:15; 22:15; உரோ 11:13; கலா 2:8). இந்தப் பணியை இயேசுவிடமிருந்தே பெற்றார் (உரோ 1:5). தான் அழைக்கப்பட்டதை இயேசுவோடு மட்டுமல்ல, தந்தையோடும் பவுல் தொடர்பு படுத்துகிறார்.

அப்போஸ்தலராக இருப்பது அருங்கொடை பதவியாகும். மனிதனுடைய வேலையன்று, இறையருளின் வேலையாகும் என்று பவுல் நன்குணர்ந்திருந்தார் (1 கொரி.15:10). கிறிஸ்துவைப் பற்றிய அறிவையும் மகிமையையும் வெளிப்படுத்தும் இறை ஒளியின் விளைவாக இயேசு ஆண்டவர் என்று போதிக்கிறார் (2 கொரி.4:5–6). உண்மை அப்போஸ்தலரின் அடையாளமான அருங்குறிகள் ஆற்றலைக்கொண்டுள்ளார் (அ.ப.15:12; 2 கொரி. 12:12). ஆனால் அவர் நிறுவிய திருச்சபையே அவரது அப்போஸ்தலத்தின் முத்திரையாகும் (1 கொரி.9:2). அப்போஸ்தலர்கள் கிறிஸ்துவின் பணியாளரும் கடவுளுடைய மறைபொருள்களின் கண்காணிப்பாளரும் ஆவார் (1 கொரி.4:1). அவர் ஒப்புரவின் வார்த்தையாகிய (2 கொரி 5:19) சிலுவையைப் பற்றிய போதனையை போதிக்கிறார் (1 கொரி 1:18). அப்போஸ்தலர்கள் கிறிஸ்துவின் தூதுவர்களும் (2 கொரி. 5:20) இறைவனின் உடனு

ழைப்பாளிகளும் (1 கொரி. 3:9; 2 கொரி.6:1) ஆவர். அப்போஸ்தலர்கள் இயேசுவிடம் இருந்து பெற்றுக்கொண்டதையே மக்களுக்குக் கையளிக்கின்றனர் (1 கொரி 11:23; 15:1 தொ). பவுல் அளிக்கும் செய்தி மனிதர்களுடையதன்று இறைவனுடையதே (1 தெச.2:13). கடவுளின் தூதுவரை ஏற்றுக் கொள்வதுபோல் அவரை ஏற்றுக்கொண்ட வர்கள்பேறு பெற்றவர்களாவர் (கலா 4:14). அப்போஸ்தலர்கள் வழியாக முடிவு கால மகிமையின் பணி நிறைவேறுகிறது (2 கொரி 3:7–11). தூதுவர் இந்த இறை யாற்றலையும், மகிமையையும் தனது ஆதாயத்திற்குப் பயன்படுத்தாமல் இருப்ப தற்கு, அப்போஸ்தலர்கள் உலகத்தவரால் வெறுக்கப்படுவர்; துன்புறுத்தப்படுவர்; மனிதர்களுக்கு வாழ்வு அளிக்கப்படும் பொருட்டு, மரணத்திற்குக் கையளிக்கப் படுவர் (2 கொரி 4:7–6:10; 1 கொரி 4:9–13).

செயல்முறையில், போதனை, பணி மேற்பார்வை ஆகியவற்றில் அப்போஸ் தலிக்க அதிகாரம் செயல்படுகிறது. அடிக்கடி பவுல் தனது போதனை அதி காரத்தை எடுத்துக்கூறுகிறார். ஏனெனில் தான் அறிவித்த நற்செய்திக்கு மாறாக வேறொரு நற்செய்தியை அளிப்பவர் களைச் சபிக்க உரிமை கொண்டாடு கிறார் (கலா 1:8 தொ). தனது சொந்த அதிகாரங்களை மற்றவர்களுக்கு வழங் கக்கூடும் என்று நம்பினார் என்பது அவர் திமோத்தேயுமேல் கைகளை விரித்து திரு நிலைப்படுத்தியதிலிருந்து தெரிகிறது (1 திமோ 4:14; 2 திமோ 1:6). இதே செயலை திமோத்தேயு அவருக்குப் பின்வந்தவர் களுக்குச் செய்யலாம் (1 திமோ 5:22). இறுதியாக அவரது அதிகாரம் அவர் நிறு விய திருச்சபைகள்மேல் அவர் செலுத்திய மேற்பார்வையில் செயல்படுகிறது. தீர்ப் பிடுகிறார். தண்டனை அளிக்கிறார் (1 கொரி 5:3 தொ; 1 திமோ 1:20). அத் திருச்சபைகளைப் பார்க்கச் சென்றபோது எல்லாவற்றையும் ஒழுங்குப்படுத்துகிறார் (1 கொரி 11:34; 2 கொரி 10:13–16; 2 தெச 3:4). சபை ஒற்றுமைக்காக (1 கொரி 5:4) சமூகத் திடமிருந்து கீழ்ப்படிதலைக் கோருவது எப்படி என்றும் அறிவார் (உரோ 15:18; 1 கொரி 14:37; 2 கொரி 13:3). இந்த அதிகாரம் கொடுமைமிக்கதன்று (2 கொரி 1:24) தேவைப்படும்போது தனது உரிமையையும் விட்டுக் கொடுப்பதும் (1 கொரி 9:12) ஆயனுடைய (அ.ப. 20:28; 1 பேதுரு 5:2–5) பணியாகும் (1 கொரி 9:19). விசுவாசிகளுக்குச் சுமையாக இருப்பதை விட தந்தையைப்போல் தாயைப்போல் அவர்களைப் பேணுகிறார் (1 தெச 2:7–12). அவர்களுக்கு விசுவாசத்தின் மாதிரியை அளிக்கிறார் (1 தெச 1:6; 2 தெச 3:9; 1 கொரி 4:16).

திருச்சபையின் அப்போஸ்தலத்தில் பவுலுக்குத் தனி இடம் கொடுக்கப்பட்டது. அது புறவினத்தாருக்கு அப்போஸ்தல ராக இருப்பதாகும். கிறிஸ்து என்னும் மறை உண்மையைத் தனிச் சிறப்பான முறையில் புரிந்துகொள்கிறார். கிறிஸ் துவ மீட்புத் திட்டத்தில் இந்தத்தனிச் சிறப் பான இடம் அவருக்கே சொந்தமானதா கும். அதைப்பிறருக்கு அளிக்கமுடியாது.

நற்சசெய்தியைப் புறவினத்தார்க்கு அளிப்பதில் முதலானவர் பவுல் அல்லர். அவருக்கும் முன் ஏற்கனவே பிலிப்பு சாமாரியர்களுக்கு நற்செய்தி அறிவித் திருந்தார் (அ.ப.8). செசரியாவில் உள்ள புறவினத்தார்மேல் பரிசுத்த ஆவி இறங்கி வந்துள்ளார் (அ.ப.10) திருச்சபையின் தொடக்கத்தில் புறவினத்தாருக்கென ஒரு அப்போஸ்தலரை நியமிக்க இறைவன் விரும்பினார். இதைப் பேதுருவுக்குத் தெரிவிக்க பவுல் பெரிதும் முயன்றார். பேதுருவின் தூதராக இருக்கவேண்டும் என்பதற்கல்ல. ஏனெனில் அவர் நேரடி யாகக் கிறிஸ்துவின் தூதராவார். ஆனால் அவரது உழைப்பு வீணாகாதிருக்கும் படிக்கும் திருச்சபையில் பிளவு உண்டா காதிருக்கவும் பன்னிருவரின் தலைவரு க்குத் தனது பணியை எடுத்துக்கூறுகிறார் (கலா 1–2). புறவினத்தார்பால் கிறிஸ்து வின் மறைபொருளை (எபே.3:4) இறைவன் அருளால் நன்கு அறிந்திருந்தார். அதை அவர்களுக்குக் கையளிக்கக் கட்டளை பெற்றிருந்தார். இந்த மறைபொருளை நிறைவேற்றுவதில் துன்பப்படுத்தப்படு கிறார். வேதனை உறுகிறார். கைதியாகு கிறார் (கொலோ 1:24–29; எபே 3:1–21). இத்தகைய தனிச்சிறப்பான, பிறருக்கு

அளிக்கப்படமுடியாத, அருளை பவுல் பெற்றிருந்தார். ஆனால் கிறிஸ்துவின் தூதரின் பாகமும், அப்போஸ்தலத்துவம் பற்றி அவர் கொண்டிருந்த ஆன்மீக அறிவும் ஒருவகையில் எல்லா அப்போஸ் தலர்களுக்கு ஆவியின் ஆண்டவரால் கொடுக்கப்படலாம் (1 கொரி 2:6–16).

7. விசுவாசிகளின் அப்போஸ்தலத்துவம்:-

இது புதிய ஏற்பாட்டில் வெளிப்படை யாகப் படிப்பிக்கப்படவில்லை. ஆனால் நிகழ்ச்சிகள் இதற்கு அடிப்படையாக அமைகின்றன. அப்போஸ்தலத்துவம் பன்னிருவர், பவுல் ஆகியோரின் ஒப்பற்ற முதன்மையான அலுவல் ஆனாலும் தொடக்கத்திலிருந்து, முழுத்திருச்சபை யும் அதைச் செயல்படுத்தியது. சான்றாக, அந்தியோக்கியா, உரோமை ஆகிய இடங் களில் உள்ள திருச்சபைகள் திருச்சபைத் தலைவர்கள் வரும்போது, ஏற்கெனவே அங்கு இருந்தன. பரந்த பொருளில், அப் போஸ்த்தலத்துவம் கிறிஸ்துவின் ஒவ் வொரு சீடரின் அலுவலாக அவர்கள் உலகிற்கு ஒளியாகவும் உப்பாகவும் இருக்கவேண்டும் (மத் 5:13 தொ.). ஒவ் வொருவரும் தமக்குரிய மட்டத்தில், திருச்சபையின் அப்போஸ்தலத்தில் பங் கேற்கவேண்டும். அவர்களுடைய அப் போஸ்தல ஆர்வத்தில் பவுலையும், பன்னி ருவரையும் பின்பற்ற வேண்டும்.

சுருக்கமாக, இவ்வாறு, அப்போஸ்த லர் உயிர்த்த இயேசுவை அறிவிக்கிறார். அவர் ஒரு பாரம்பரியத்தைத் தாங்கிச் செல்பவராவார். முழுத்திருச்சபையும் சேர்ந்த பதவியைக் கொண்டிருக்கிறார். அவர் மற்ற பணியாளர்களை நியமிக்கி றார். ஆனால் மற்ற அப்போஸ்தலர்களை அல்ல. அவர் திருச்சபையின் அடிப்படை நிர்ணயக் கூறு ஆவார். மேற்கூறப்பட்டவை இச் சுருக்கத்தின் கருத்துக்களை எடுத்துக் காட்டவல்லன. அப்போஸ்தலரின் அதி காரம் எருசலேமில் பன்னிருவரின் செயல்களிலும், பவுல் தான் நிறுவிய திருச்சபைகளை ஆண்ட விதத்திலும் மிகத் தெளிவாக்குகிறது பவுல் நிறுவிய திருச் சபைகள் அவரது பொறுப்பாகவே இருந் தன. அவரது தீர்மானிக்கும் அதிகாரம் கொரிந்தில் மட்டும்தான் வாதத்திற்குரிய தாயிற்று. அது அங்கேயே எண்பிக்கப் பட்டது.

மேற்கூறப்பட்ட அப்போஸ்தலப் பதவி யின் பண்புகள் திருச்சபையின் முதல் தலைமுறைக்குப்பின் தொடர முடியாது என்பதற்குச் சான்றுகளாகும். திருச்சபை யின் நிர்ணயிக்கும் கூறு என்ற அளவில், அப்போஸ்தலப் பணி, திருச்சபை முடி யாமல், முடிவுக்கு வரமுடியாது. ஆகை யால் திருச்சபை மற்ற அதிகாரிகளில், அப்போஸ்தல அதிகாரத்தையும் பாராம் பரியத்தில் அப்போஸ்தலிக்கப் போதகத் தையும் பாதுகாத்து வந்தது.

8. பிற்கால கிறிஸ்துவ இலக்கியத்தில் அப்போஸ்தலர்:–

அப்போஸ்தலர் என்ற பட்டமும், பதவி யும் அதை மூலத்தில் கொண்டிருந்தவர் களோடு முடிந்தது எனலாம். அதைப் பிறருக்கு வழங்கமுடியாது. பிற்கால கிறிஸ்துவ இலக்கியங்களில் இப்பெயர் பயன்படும்போது அது உருவகமாகவே பயன்படுகிறது. முதல் நூற்றாண்டுக்குப் பின் புதிய ஏற்பாட்டுப் பொருளில், திருச் சபை அப்போஸ்தலர்களைக் கொண்டி ருக்கவில்லை.

பவுல், யாக்கோபு, பார்னபாவைப் போன்றவர்களைப் புறம்பாக்க வேண்டும் என்ற நோக்கமின்றி, அப்போஸ்தலர் களுக்குப்பின் வந்த காலத்தில் அப்போஸ் தலர் என்ற பெயரைப் பன்னிருவருக்கு மட்டும் சாற்றிக்கூறும் போக்குத் தெரி கிறது. "பன்னிரு அப்போஸ்தலர்" களைப் பற்றிப் பேசும் போக்கு மத் 10:2; திருவெளி 21:14–இல் ஏற்கெனவே காணப்படுகிறது. திதாக்கேயின் தலைப்பான "பன்னிரு அப்போஸ்தலர்கள் எழுதிய புறவினத்தா ருக்கு இயேசுவின் போதனை" என்பது இதைச் சுட்டிக்காட்டுகிறது. இரண்டாம் தலைமுறையைச் சேர்ந்தவர்களில் சிலர் இப்பெயரால் தங்களை அழைத்துக் கொண்டார்கள் என்பது திருவெளி 2:2–இல் தெளிவாகுகிறது. இதைத் திருச் சபையின் தலைவர்கள் ஏமாற்றுதல் என்று கண்டனம் செய்தனர். பதித எழுச்சி மூல அப்போஸ்தலர்களின் போதனைக்கும் மாதிரிகளுக்கும் தனது போதகத்தை செயல்முறை ஆகியவற்றின் இறுதி அதி

காரத்தை வரையறை செய்வதற்குத் திருச் சபையைத் தூண்டியது (காண்க எபே.2:20; 3:5). ஆகவே இரண்டாம் நூற்றாண்டின் மத்தியில் அப்போஸ்தலர்களின் விசுவாச அறிக்கையும் அப்போஸ்தலர்கள் அல்லது உடனடி சீடர்களால் எழுதப்பட்டதாகக் கருதப்பட்ட நூல்களின் புதிய ஏற்பாட்டு திருமுறைப்பட்டியலும், அப்போஸ்தலர் களிடமிருந்து வரும் வாரிசு உரிமை உடையபடி மரபுடைய பணியும் வளர்ச்சி யடைந்தன.

இந்த வளர்ச்சி புதிய ஏற்பாட்டில் அப்போஸ்தலர் பணி நூலில் மிகத் தெளி வாகச் சுட்டிக்காட்டப்படுகிறது. ஒரே ஒரு இடத்தில் தவிர, இந்நூலில் அப்போஸ் தலர்கள் என்ற சொல் பன்னிருவரையும் அல்லது எருசலேமில் மூப்பர்களோடு சேர்ந்து திருச்சபையை ஆண்டு, அதன் தூது அமைப்பு ஆகியவற்றின் வளர்ச்சி பற்றி அதிகாரப் பூர்வமான தீர்மானம் எடுத்து வந்த ஒரு தனிப்பட்ட குழுவினரை மட்டுமே குறித்தது. அ.ப.14:4.14–இல் பவுலும் பார்பனபாவும், அவர்களுடைய முதல் வேதபோதகப் பயன விவரிப்பில், அப்போஸ்தலர்கள் என்றழைக்கப்படு கிறார்கள்.

அ.பணியின் ஆசிரியர் அப்போஸ்தலர் என்ற பெயரை பவுலுக்கு மறுத்திருக்க மாட்டார். நூலின் பாதியை பவுலின் போதக வாழ்வுக்கு அர்ப்பணிக்கும் அவரது மன நிலை தெளிவாக உள்ளது. நூலின் பெயர் 'அப்போஸ்தலர் பணி' என்பது திருச்சபையின் தொடக்க கால முதல் வருவதாகத் தெரிகிறது. இது அப் போஸ்தலர் பன்னிருவர்தான் என்ற தொடக்கத்திலிருந்து நிறுவப்பட்ட பாரம் பரியத்திற்குச் சான்று பகருகிறது. ஆனால் இப்பன்னிரண்டு எண்ணிக்கை பவுலையும் மற்றும் சிலரைலயும் புறம்பாக்கவில்லை என்பதும் தெளிவு.

**அப்போஸ்தலர்களின் திரு முகம்**

இது இரண்டாம் நூற்றாண்டின் நம் பிக்கையையும், எதிர்பார்ப்புகளையும் பதி னொரு அப்போஸ்தலர்களும் எழுதிய ஒருமடல் வடிவில் காட்டுகிறது. அதோடு கிறிஸ்து தனது உயிர்ப்பின் பிறகு அவர் களுக்கு வெளிப்படுத்தியவற்றைச் சுருக்கிக் கூறுகிறது.

திருமுறை சேராத இலக்கியங்களில் முக்கியமான இந்நூல், கயிரோவில் கோப் டிக் மொழிக் கைபிரதிகள் கண்டுபிடிக் கப்படும்வரை யாரும் அறியப்படா மல் இருந்தது. (இவ்வாசகம் கி.பி.4–5– நூற் றாண்டைச் சேர்ந்தது). மேலும் எத்தி யோப்பிய மொழியல் ஏறத்தாழ முழுமை யான வாசகமும் இலத்தீன் மொழியல் ஒரு துணுக்கும் கிடைத்துள்ளன. கிரேக்க மூல நூல் கிடைக்கவே இல்லை. இந்த மூன்றையும் சேர்த்து 1919–இல் ஸ்கிமிட் ஒரு நூலை பதிப்பித்தார். இந்தத் திரு முகம் இரண்டாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் எழுதப்பட்டிருக்கலாம். இதில் மறையியல் ஞானக் கொள்கைகள் இங்கு மங்குமாகக் காணப்பட்டாலும், அதற்கு மாறானவற்றையே பெரும்பகுதியாகக் கொண்டுள்ளது. சான்றாக சீமோனும் செரின்சும் கடுமையாகக் கண்டனம் செய் யப்படுகின்றனர். உடல் உயிர்ப்பு வலி யுறுத்தப்படுகிறது. பெரும்பாலான திரு முறை சேரா இலக்கியங்கள் கிறிஸ்து உயிர்த்தப்பின் வெளிப்படுத்தியதை அடிப் படையாகக் கொண்டவை. இந்நூல் திரு முறை நற்செய்திகள் அப்போஸ்தலர் பணி, பேதுரு வெளிப்பாட்டு நூல், பார்னபா, எர்மா ஆகியோரின் நூல்கள் இளைஞன் இயேசு கல்வி கற்க அனுப்பப் பட்டது பற்றிய பிரபல்யமான கதை போன்றவற்றைக் கொண்டு எழுதப் பட்டது.

இது ஒரு கடிதம்போலத் தொடங்கு கிறது. பதினொரு அப்போஸ்தலர்களால் கிழக்கிலும், மேற்கிலும், வடக்கிலும், தெற் கிலும் உள்ள திருச்சபைகளுக்கு எழுதுவ தென்று தொடங்கி, உடனடியாக இயற் கையைக் கடந்த கிறிஸ்துவின் பிறப்பு, புதுமைகள், இறப்பு, உயிர்ப்பு ஆகியவற் றைப்பற்றிப் பேசுகின்றது. அதன் பிறகு மடல் வடிவம் மறைந்து கிறிஸ்து அவர் களுக்கு அளிக்கும் வெளிப்பாடாக வடிவம் எடுக்கிறது. அவர்கள் கேள்வி கேட்க அதற்கு இயேசு பதில் கூறும் வடிவில் அமைகின்றது. இரண்டாம் வரு கையின்போது நேரம், தன்மை, கிறிஸ்து

வர்களின் உடலின் உயிர்ப்பு, இறுதித் தீர்ப்பு, வேத போதகப் பணி பற்றிய அறிவுரை, பவுலின் வருகை, விவேகமும், விவேகமும் இல்லாத கன்னியர்களை அடையாளம் காணுதல், போன்ற பல செய்திகள் இடம் பெறுகின்றன. இதன் இறுதி கிறிஸ்து வானகம் செல்வதை விவரிக்கிறது. இதில் குறிப்பிடத்தக்க ஒன்று, கிறிஸ்த தாமே மரியாளுக்கு வான தூதர் கபிரியேல் வடிவில் தோன்றிய தாகவும், மரியாளின் உடலில் தோன்றிய தாகவும் குறிப்பிடுகிறது. இது குறிப்பிட விரும்புவது, கிறிஸ்து யாரும் தனக்கு உதவிச் செய்ய விரும்பவில்லை, பரிசுத்த ஆவியின் வல்லமையால் பிறக்கவில்லை. மாறாக அவர் செய்ய விரும்பியதைச் செய்தார். ஏனெனில் அவர் அவராகவே இருந்தார் என்பதாம்.

## அப்போஸ்தலர் பணி நூல்

(திருமுறை சேர்ந்தது)

1. பெயர்:

அலக்சாந்தர், கன்னிபால் போன்ற புகழ் பெற்ற தலைவர்களின் தீரச் செயல் களை எடுத்துக்கூறும் நூல்களுக்கு செயல் கள், அல்லது பணி நூல், நடபடி என்று பெயர் கொடுப்பது கிரேக்க இலக்கிய மரபாகும். இதைப்பின்பற்றி இந்நூல் ஆசிரியர், பேத்துரு, பவுல் என்ற தனது இருதலைவர்களின் வாழ்க்கையின் ஒரு பகுதியை இந்நூலில் எடுத்துக் கூறுகிறார். அப்போஸ்தலர் பணி என்ற தலைப்பு நூலின் மூலப்பெயராக இல்லாமல் இருக் கலாம். ஆதித் திருச்சபையால், கி.பி. 2-ஆம் நூற்றாண்டின் இறுதியை ஒட்டி, கொடுக்கப்பட்டதாக இருக்கலாம். இப் பெயரும் பொருத்தமுடையதென்று கூற முடியாது. ஏனெனில் இந்நூல் எல்லா அப்போஸ்தலர்களின் பணிகளையும் கூற வில்லை அல்லது முக்கிய தலைவர் களான பேதுரு, பவுல் ஆகியோரின் எல்லாச் செயல்களையும் கூறவில்லை. நூல் யோவானைப்பற்றிக் குறிக்கிறது *(3:1–11; 4:13–19; 8:14)*. மற்ற அப்போஸ்தலர் களின் பட்டியலை மட்டும் கொடுக்கிறது *(1:13)* அல்லது அவர்களை ஒரு குழுவாகக் குறிக்கிறது *(1:2–26; 2:14–37)*. நூல் ஸ்தே வான் (6–7), பிலிப்பு (8), பார்னபா *(4:36–37; 11:22–36; 13–15)* ஆகியோரைப்பற்றி ஓரளவு விரிவாகக்கூறுகிறது. ஆனால் இவர்கள் மூலப்பன்னிரு அப்போஸ்தலர் களைச் சேர்ந்தவர்கள் அல்லர். மேலும் இப்பெயர் நூலின் உண்மையான பொரு ளடக்கத்தையும் நோக்கத்தையும் வெளிப் படுத்தவில்லை எனலாம்.

இந்நூல் ஒரு வரலாற்று நூலின் இரண்டாம் பகுதியாகும். முதற்பகுதி மூன்றாம் நற்செய்தியாகும் *(1:1)*.

2. ஆசிரியர்:-

ஆசிரியரின் பெயர் நூலில் கொடுக்கப் படவில்லை. ஆனால் மூன்றாம் நற்செய்தி யின் ஆசிரியரே இந்நூலின் ஆசிரியர் ஆவார் என்றும், அந்நற்செய்தியின் தொடர்ச்சியே இந்நூல் என்றும் பரவ லாக ஏற்றுக்கொள்ளப்படும். இரண்டு நூல்களும் தியோபிலுவுக்கு அர்ப்பணிக் கப்பட்டுள்ளது என்பது இரண்டும் தொடர்ச்சியானவை என்று சுட்டுவதாக அமைந்துள்ளது *(1:1: லூக்.1:1–4)*. இலக்கிய நடை அடிப்படையில் இருநூல்களையும் பிரிக்கமுடியாது. இருநூல்களுக்கும் பொதுவான ஆசிரியர் அந்தியோக்கியா வைச் சேர்ந்த லூக்காதான் என்பது விலியத்துக்குப் புறம்பான திருச்சபையின் பாரம்பரியமாகும். இதற்குக் காலத்தால் முந்திய சான்று (கி.பி.160–180) மார்சிய னுக்கு எதிராக லூக்கா நற்செய்திக்கு எழுதப்பட்ட முன்னுரையாகும். இரேனேயு காலத்திலிருந்து வரும் இப்பாரம்பரியத் தை நவீன கால ஆய்வும் ஏற்றுக்கொள் கிறது. அதோடு "நாங்கள்" பகுதியை எடுத் துக்கூறுபவர் லூக்காவே என்றும் அடை யாளம் காண்கிறது. மூன்றாம் நற்செய்தி யும் இந்நூலும் ஒரே ஆசிரியரின் படைப்பே என்பது பலரின் உறுதி. இக் கருத்தின் அடிப்டையில் லூக்காவின் வாழ்க்கைக் குறிப்புகளைக் காண்க: லூக்கா நற்செய்தியாளர்.

3. காலமும், இடமும்:- தமது நற்செய்தி நூலுக்குப் பின் அ.ப.நூலை எழுதுவதாக ஆசிரியர் கூறுகிறார் *(1:1)* இதைவிடத் துல்லியமான காலக்குறிப்பு நூலில் கொடுக்கப்படவில்லை. லூக்காவின் நற் செய்தி கி.பி.80–85க்கு இடைப்பட்ட காலத் தில் என்று பொதுவாக ஏற்றுக்கொள்ளப்

படும் கருத்தை ஏற்றுக்கொண்டால், அ.ப. நூல் இக்காலத்தில்தான் தோன்றியிருக்க வேண்டும் என்று கூறலாம்.

அ.ப.நூல் பவுல் உரோமையில் சிறைக் கைதியாக இருந்த நிகழ்ச்சியோடு முடிகிறது ஆகவே இந்நூல் கி.பி.61–63–ஐ ஒட்டித் தோன்றியருக்க வேண்டும் என்பர் சிலர். ஆனால் இது, நூலின் முடிவுரையைத் தவறாகப் புரிந்து கொண்டதின் விளைவாகும். நூல் தோன்றுவதற்கு முன்பே பவுலின் விசாரனை ஏற்கெனவே நடந்திருந்தால், அதன் முடிவை லூக்கா விட்டுவிட்டிருக்க மாட்டார் என்று வாதிடுவர். மேலும் பவுலின் இறப்பைப் பற்றியும், உரோமைத் திருச்சபையைப் பற்றியும் நூல் ஒன்றும் கூறாமையையும் சுட்டிக் காட்டுவர். ஆனால் நூலின் முழு அமைப்பையும் கருத்தில்கொண்டு, அதன் முடிவுரையின் பொருளைச் சரியாகப் புரிந்து கொண்டால், ஆசிரியர் நூலைத் திடீரென்று முடிப்பதற்கு மற்ற காரணங்கள் இருக்கக்கூடும் என்பது புரியும். நூலைப் பற்றிய ஆய்வு, ஆசிரியர் தனது பொருள்களைத் தேர்ந்தெடுத்துத் தொகுக்கிறார் என்று காட்டுகிறது. அ.ப.யில் காணப்படும் எருசலேமிலிருந்து உரோமை வரை என்ற திட்டம், நற்செய்தில் காணப்படும் கலிலேயவிலிருந்து எருசலேம்வரை என்ற திட்டத்தோடு ஒத்துப்போகிறது, இணையாக உள்ளது. அக்கால உலகின் மையமான உரோமையை அ.ப. அடைந்தவுடன் திருச்சபை விரிவடைதல் பற்றிய விவரிப்பில் ஒரு கட்டம் நிறைவெய்துகிறது. அடைய முடியாதது அடையப்பட்டுவிட்டது. நற்செய்தி உலகளாவிய நற்செய்தியாகமாறிவிட்டது.

இந்நூலின் மூலங்களில் உயர்தன்மையும், வாய்மொழிப் பாரம்பரியத்துக்குக் காட்டும் பிரமாணிக்கமும், பழைய ஏற்பாட்டிலிருந்து எடுத்துக்காட்டாகப் பயன்படும் வாசகங்களின் செமித்தியத் தன்மையும், இந்நூல் மிகவும் பிற்காலத்தில் தோன்றியிருக்கமுடியாது என்று காட்டுகின்றன. கி.பி.95–ஐ ஒட்டி உரோமை கிளமெண்து கொரிந்தியத் திருச்சபைக்கு எழுதிய முதல் திருமுகத்திற்கும் இந்நூலுக்குமிடையே சொற்றொடர்களில் ஒற்றுமை உள்ளது. கி.பி 95–க்கும் பின்வரும் தொடக்ககாலத் திருச்சபை மற்ற ஏடுகளிலும் இந்நூல் சுட்டிக்காட்டப்படுகிறது. இவை இந்நூல் முதல் நூற்றாண்டின் முடிவிற்கு முன்பே எழுதப்பட்டிருக்க வேண்டும் என்று சுட்டுகின்றன. மேலும் நூலில், படிமரபுடைய ஆயர் பதவித் தன்மை பற்றிய சுவடுகள் இன்மை (20:28), இந்நூல் மேய்ப்புப் பணித் திருமுகங்களுக்கு முன் தோற்றியிருக்கவேண்டும் என்று காட்டுகிறது (காண்க: *1* திமோ *3:2*; தீத்து *1:7*). ஆனால் இதே திருமுகங்களில் ஆசிரியர் அ.ப. நூலை அறிந்திருக்க வேண்டும் என்று *2* திமோ *3:12* வலுவாகச் சுட்டுகிறது.

இவற்றையெல்லாம் கருத்தில் கொண்டு, இந்நூல் கி.பி.70–90–க்கு இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்டிருக்க வேண்டும் என்று பெரும்பாலான ஆய்வாளர்கள் கருதுவர்.

இந்நூல் எழுதப்பட்ட இடம் பற்றி உறுதியாக ஒன்றும் கூறமுடியாது. கி.பி.60–62–க்கு இடையில் எழுதப்பட்டிருந்தால் உரோமையில் எழுதப்பட்டிருக்கலாம். பிற்காலத்தில் தோன்றியது என்றால் கிரேக்க நாட்டில் அல்லது அக்காயா அல்லது போயேத்தியாவில் தோன்றியிருக்கலாம் என்ற பாரம்பரியம் ஒன்று உண்டு.

*4. மூலங்கள்:–* இந்நூலில் விவரிக்கப்பட்டுள்ளவற்றையெல்லாம் ஆசிரியர் நேரடியாகப் பார்த்தவர் அல்லர் என்பதையும், அவர் சில பகுதிகளைச் சுதந்திரமாகப்படைத்துள்ளார் என்பதையும் நாம் மனதில் கொள்ள வேண்டும். மேலும் நூலை வாசிப்போரின் நன்மைக்காக ஆசிரியர் தனது வரலாற்றுக்குத் தேவையானவற்றைத் தேர்ந்தெடுத்துள்ளார். சில வற்றைச் சுருக்கி வரைந்துள்ளார். சில வற்றை அருகருகே வைத்துள்ளார் சில வற்றைத் தொகுத்துத் தந்துள்ளார். இத்தகைய இலக்கியச் செயல்களுக்கும், "நாங்கள்" என்ற பகுதிகளுக்கும், ஆசிரியர் இந்நூலை எழுதியபோது எத்தகைய மூலங்களைப் பயன்படுத்தினார் என்ற கேள்வி எழும், இந்த மூலங்களைப் பிரித்துக் காட்ட் பலமுயற்சிகள் செய்யப்பட்டுள்ளன.

அவற்றில் சில: 1) பாலஸ்தீன அல்லது எருசலேம் மூலம்: 1:6; 2:40; 3:1–4:31; 4:36; 5:11; 5:17–42; 8:5–40; 9:32–11: 18; 12:1–23. இப்பகுதிகளுக்கு ஆசிரியர் பிற சாட்சிகளைச் சார்ந்திருப்பது தெளிவாக உள்ளது. 2) அந்தியோக்கியா மூலம்: 6:1–6; 6:8–8:4; 11:19–30; 13:3–14:28; 15: 35–28:31. பவுலின் இரண்டாம் பயணத்திற்குமுன் வரும் பொருள்களுக்கு ஆசிரியர் வாய்மொழிப் பாரம்பரியத்தையும், சிறுசிறு நிகழ்ச்சிகளையும் சார்ந்திருக்கவேண்டும். இவை ஒன்றுக்கு மேற்பட்டவைகளாக இருக்க வேண்டும்.

நூலின் இரண்டாம் பகுதியில் "நாங்கள்" என்ற பகுதிகள் முக்கியத்துவம் பெறுகின்றன (16:10–17; 20:5–16; 21:1–18; 27:1–28:6). இவை இப்பகுதிகளை எழுபவர். அந் நிகழ்ச்சிகள் நடந்தபோது அங்கு இருந்தார் என்று சுட்டுகின்றன. இவற்றிலிருந்து எழுதுபவர் துரோவாவில் பவுலோடு இவரது இரண்டாம் பயணத்தில் சேர்ந்து, அவரோடு பிலிப்பைவரை பயணம் செய்தார் என்றும் பவுல் தன் மூன்றாம் பயணத்தில் அங்குத் திரும்பியபோது அவரோடு ஆசிரியர் சேர்ந்து கொண்டார் என்றும், அதிலிருந்து நூலின் முடிவுவரை பவுலோடு இருந்தார் என்றும் அறிகிறோம். இப்பகுதிகளைப் பவுலின் ஒரு தோழன் எழுதியப் பயணக்கையேட்டிலிருந்து எடுக்கப்பட்டது என்பர் சிலர். இந்தத் தோழர் முழு நூலின் ஆசிரியரிலிருந்து வேறுபட்டவர் என்றும் காட்டச் சிலர் முயன்றுள்ளனர். ஆனால் இக் கருத்து பல அறிஞர்களால் ஏற்றுக் கொள்ளப்படுவதில்லை.

நடையில் மட்டுமன்று, தனது பொருள்களையும், மூலங்களையும் பயன்படுத்தும் முறையிலும் ஆசிரியரின் கரம் நூல் முழுவதும் காணப்படுகின்றது. நூல் முழுவதும் சில குறிப்பிட்ட அக்கறையும், செயல்படும் முறைகளும் காணப்படுகின்றன. இவை ஆசிரியரிடமிருந்தே தோன்றியிருக்கவேண்டும். இவை ஆசிரியர் தன் மூலங்களை எப்படிப் பயன்படுத்தியிருக்கக்கூடும் என்றும், மறைமுகமாக மூலங்களைப் பற்றியும் சுட்டிக்காட்டுகின்றன. சான்றாக: பவுல் மனந்திரும்பியது பற்றிய மூன்று உரைகளை (9;22;26) ஒப்பிடும்போது, ஒவ்வொரு தனிப்பட்ட உரையிலும் ஆசிரியர் தனது செய்தியை எடுத்துரைக்க மூலங்களைத் தழுவி அமைப்பதில் போதிய சுதந்திரம் எடுத்துக்கொண்டார் என்று தெரிகிறது. கிறிஸ்துவின் பாலபருவம் பற்றிய நற்செய்தியில் பயன்படுத்திய முறையையே ஐம்பதாம் நாள் விழா நிகழ்ச்சியின் பொருளை வெளிக்கொணர்தலிலும் பயன்படுத்துகிறார். மற்றொரு சான்று: அரேயோப்பாகுவில் பவுலின் பேச்சுக்கு முன்னுரை (17:16–21) சாட்சி மூலத்திலிருந்து எடுக்கப்பட்டதைவிட இலக்கிய ஏட்டிலிருந்து எடுக்கப்பட்டிருக்கிறது என்று கூறலாம். அது வரலாற்றைக் கூறுவதுபோல் தோன்றினாலும், ஒரு சூழ்நிலையை உருவாக்குவதை நோக்கமாகக் கொண்டதாகும். உரோமையில் நிகழும் கடைசிக்காட்சி (28:17–31) வரலாற்றுச்செய்தியை விட இறையியல் செய்தியையே கொண்டுள்ளது எனலாம். இது வரைக்கூறப்பட்ட செய்திகளின் இறுதி உச்சநிலையாக இருக்கவேண்டும் என்று ஆசிரியர் வேண்டுமென்றே இப்பகுதியை அமைப்பதாகத் தெரிகிறது. நூலில் விவரிக்கப்படும் சூழ்நிலைகள் முதல் நூற்றாண்டின் மத்தியில், ஒரு குறுகிய காலத்திற்கு மட்டுமே பொருந்தியது என்பது நூலின் மூலங்களின் நம்பத் தகுந்த தன்மையை உறுதியாக நிறுவுகிறது. இது நேரடிச் சாட்சி விவரிப்பிலிருந்து மட்டுமே கிடைக்கக் கூடியது.

எருசலேமில் தொடக்கக் காலச் சபை பற்றிய நிகழ்ச்சியுரைகளை மதிப்பீடு செய்வது அவ்வளவு எளிதல்ல. இவை பொதுவான விவரிப்புகளே ஆகும். அனானியா, சப்பீரா ஆகியோரைப் பற்றிய நிகழ்ச்சியுரை (5:1–11), பேதுரு தப்பியது (12:6–17) போன்றவற்றை ஆசிரியர் தனிப்பட்டோரிடமிருந்து பெற்றிருக்கவேண்டும். நூலில் இந்தத் தொடக்கப்பகுதிகளில் தான் செமித்தியப் பண்புகள் அதிகம் காணப்படுகின்றன. நடந்திருக்கக் கூடிய உண்மையை, அது கூறப்பட்டிருக்கும் விவிலிய மொழி, உருவங்களிலிருந்து பிரித்தெடுப்பது மிகக்கடினமானதாகும். இந்த செமித்தியப் பண்புகளே, நூலின்

இறுதியான மூலங்கள், சமூகத்தில் நிலவிய பாரம்பரியங்களே என்று சுட்டு கின்றன.

பல்வேறு மூலங்களைப் பயன்படுத்தி லூக்கா அப்போஸ்தலர் பணி நூலை எழுதுகிறார் என்பது தெளிவு. அவற்றை யெல்லாம் ஒன்றித்து நூலுக்குப் பெரிய ஒற்றுமை அளிக்கிறார்.

5. நடையும் இலக்கியக் கூறுகளும்:-

அப்போஸ்தலர் பணி நூலின் நடை மற்ற புதிய ஏற்பாட்டு ஆசிரியர்களைவிட இதன் ஆசிரியர் ஓர் இலக்கிய மனிதனா வார் என்று காட்டுகிறது. அவரது சொற் றொகுதி பரந்தது, செழிப்பானது. பொது வாக நல்ல கிரேக்க நடையில் எழுது கிறார். நடை ஆற்றொழுக்கோடு அமைந் துள்ளது. ஆசிரியர் மொழியைப் பயன் படுத்தும்முறை எளிதில் வளைந்து கொடுக்கக்கூடியது. அக்கால இலக்கிய மரபுக்கேற்ப எத்தவறுமின்றி பேச்சுக்களை அமைக்கிறார். சூழ்நிலைக்கேற்ப நடை யைப் பயன்படுத்தும் அவரது ஆற்றல் பெருமளவு நூலைக் கவர்ச்சி மிக்கதாக்கு கிறது எனலாம். சான்றுகள்: பேதுரு தப்பித்தலில் காணப்படும் நகைச்சுவை (12:6–17), 23:12–35–இல் காணப்படும் எதிர் பார்ப்பு நிலை, பவுலின் பிரியாவிடையில் காணப்படும் உருக்கம் (20:18–38). இந்த வளைந்து கொடுக்கும் தன்மை இருந்தா லும், சொற்றொகுதியிலும் நடையிலும் ஒரு நிலையான தன்மை இருக்கிறது. அது இந்நூலை ஒரே ஆசிரியரின் படைப்பாக்குகிறது எனலாம்.

நிகழ்ச்சியுரை உயிருள்ளதாகவும் உருக்கமானதாகவும் நாடகப்பாணியுடைய தாகவும் உள்ளது. நூலில் காணப்படும் பொதுப்பாணித் தொனி, அவ்வப்போது காணப்படும் கொய்னே மரபையும், செமித்தியப் பண்புகளையும் பிரித்துக் காட்டுகிறது. இது ஆட்களுக்கும், நிகழ்ச்சிகளின் சூழ்நிலைகளுக்கும் எற்ப மொழியைச் சரிசெய்ய ஆசிரியர் செய்யும் முயற்சியின் விளைவாகும். இவை எருச லேம் சமூகம் பற்றி அவருக்குக் கிடைத்த வாய்மொழிப் பாரம்பரியங்களில் காணப் பட்டிருக்கவேண்டும். ஏனெனில் இப் பகுதியில்தான் பெரும்பாலான நடை வேறுபாடுகள் காணப்படுகின்றன. "நாங்கள்" என்ற பகுதிகள் உயிருள்ளதாக வும் கவர்ச்சியுடன் விவரிக்கப்பட்டதாயும் பல துல்லியமான விவரங்களைக் கொண் டதாயும் உள்ளன. அடிக்கடி ஆட்களின் பெயர்களும் காலவரைக் குறிப்புகளும் கூறப்படுகின்றன (18:11; 19:8–10; 20:31; 24:27; 28:30). கோட்பாடுகளை விளக்கும் இறையி யல் வல்லுநரைப் போல் அல்லது ஒரு நாடக ஆசிரியரைப்போல், நூலின் ஆசிரி யர் போதிக்கின்றார். சிறுசிறு காட்சிகளை விவரிக்கிறார். பெரும்பாலும் இவற்றி டையே தொடர்பு இருப்பதாகத் தெரிய வில்லை; ஆனால் இவற்றின் வழியாக வாசகரின் மனதில் தனது செய்தியைப் பதிக்கிறார். இதில் வறட்சியான ஆய்வு களில் தனது செய்தியை எடுத்துக்கூற வில்லை; படங்கள் மூலம் இறையியலைப் போதிக்கிறார். இதில் வரலாற்று, இறை யியல் குறிப்புகள் பின்னிப்பிணைந் துள்ளன. பழக்கப்படாதவர்களுக்கு நேரடி வரலாறாகத் தோன்றுபவற்றை, லூக்கா செயல்படும் முறையில் நோக்கினால் இறையியல் ஒட்டத்தைக் காணலாம்.

நூலின் இலக்கிய அமைப்பின் இரு கூறுகளைப் பற்றி ஒரு சிறிது கூறலாம். 1) சுருக்க விவரிப்புகள்: தொடக்ககாலத் திருச்சபையின் வளர்ச்சி, தன்மை ஆகிய வற்றை விவரிக்க அல்லது குறிப்பிட்ட விவரிப்புகளுக்குப்பின் பொதுவாகக் கூற மூன்று வகையான சுருக்க விவரிப்புகளை ஆசிரியர் அமைத்துள்ளார். இவை ஆசிரி யர் விவரங்களைப்பற்றி அக்கறை கொண் டிருந்தாலும், இறைவார்த்தை பரவுவது அடைந்து கொண்டிருந்த முன்னேற் றத்தை வாசகர்களுக்கு நினைவுபடுத்தவே பயன்படுகின்றன. அவை: அ) பெரியவை. 2:42–47; 4:32–35; 5:11–16... இவை திருச்சபை அதன் வசந்த காலத்தில் வளர்ச்சியுற்றது பற்றி கருத்தியலான நோக்கைக் கொடுக் கின்றன. இவை ஒரு வேளை வேண்டு மென்றே அமைக்கப்பட்டவையாக அல்லது தொகுக்கப்பட்டவையாக இருக்க லாம். ஆ) சிறியவை: 1:14; 6:7; 9:31; 12:24; 16:5; 19:20; 28:30–31; இவை பொதுவாக ஒரு வாக்கியமாகும். இவை நூலை ஆறு வரலாற்றுப் பகுதிகளாகப் பிரிக்கப்பயன்

படுகின்றது என்று சிலர் கருதுவர். இ) எண்ணிக்கை அடிப்படை கொண்டவை: *2:41; 4:4; 5:14; 6:1–7; 11:21.24; 12:24; 14:1; 19:20*. இவற்றில் சில மேலே கூறப்பட்ட இரண்டு வகையில் ஏதாவது ஒன்றைச் சேர்ந்தவை யாக இருக்கலாம். இவை திருச்சபையின் வளர்ச்சியைக் காட்டுகின்றன. 2. உரைகள்: ஏறக்குறைய நூலில் மூன்றில் ஒரு பகுதி உரைகளாக அமைந்துள்ளது. இவற்றை இலக்கிய யுக்தியாக ஆசிரியர் பயன்படுத்தியதாகத் தெரிகிறது. வெறுமனே நிகழ்ச்சியுரைகளைக் கொடுப்பதற்குப் பதிலாக, லூக்கா உரைகளை அடிக்கடிப் பயன்படுத்தியிருக்கிறார். இவை வரலாற்று நிகழ்ச்சிகள் பற்றிய உளவியல் ஆய்வு, அல்லது சிந்தனையின் மையை ஈடுசெய்கின்றன. முக்கிய பாத்திரங்களின் வாயிலிருந்து வரும் உரைகள், அவர்கள் தொடர்புகொண்ட நிகழ்ச்சிகளின் பொருளை வெளிக்கொணர்கின்றன.

இறுதி ஆய்வில், நூலில் வரும் உரைகள் லூக்காவின் படைப்பே ஆகும். அவரது நடை தெளிவாக உள்ளது; நூல் முழுவதும் காணப்படுகிறது. சில உரைகள், வரலாற்று விவரங்களில் கருத்து செலுத்தாமல், சுதந்திரமாக அமைக்கப்பட்டுள்ளன. மற்றவை, முதல் அப்போஸ்தலத் தலைமுறையில் மறைபரப்புப் போதகத்தைப் பிரதிபலிக்கின்றன. செய்தி அளிக்கும் உரைகள் என்றழைக்கப்படும் உரைகள் (பேதுருவுடையவை: *2:14–39; 3:11–26; 4:8–12; 5:29–32; 10:34–43*; அல்லது பவுலினுடையவை: *13:15–41;17:22* தொ; *20:18* தொ; *22:3* தொ; *24:10* தொ; *26:2* தொ). அப்போஸ்தலத் தலைமுறையின் மறைபரப்புப் போதகத்தைச் சேர்ந்தவையாகும். இவை யாவும் பேதுருவோ பவுலோ கூறியதை வார்த்தைக்கு வார்த்தை அப்படியே தரவில்லை. ஏனெனில் அதற்கு இவை மிகக் குறுகியவையாகும். இவை தொடக்கக்கால அப்போஸ்தலச் செய்தியுரையை எதிரொலித்தாலும், இவற்றின் எல்லா விவரங்களையும் பிரதிபலிக்கவேண்டிய அவசியமில்லை. இவற்றின் அமைப்பு ஒரேமாதிரியானவை. இவை லூக்காவின் இறையியலாலும் சொல்லியலாலும் முலாம் பூசப்பட்டுள்ளன எனலாம். இவற்றில் பேதுருவினுடையவை எவை லூக்காவினுடையவை எவை என்று பிரித்துக்காட்டுவது எளிதன்று. பொதுவாக, இவை லூக்காவின் படைப்பாகக் கருதப்படுவதே மேல். அவரது வாசகர்களின் நன்மைக்காகவும், அவரது வரலாற்றை முன்னேறச் செய்வதற்காகவும் இவை அமைக்கப்பட்டவை யாகும். இக்கருத்து பவுலினுடைய மற்ற உரைகளுக்கும் (*17:22–31; 20:18–35; 22:3–21; 24:10–21; 26:1–23; 28:17–20.25–29*), ஸ்தேவானின் உரைக்கும் (*7:2–53*) உண்மையாகப் பொருந்தும். அப்போஸ்தலப் பணி நூலில்வரும் உரைகள் மரபுமுறை கிரேக்க வரலாற்று நூல்களில் முக்கிய பாத்திரங்களின் வாயிலிருந்து வரும் பேச்சுகளோடும், கிரேக்கத் துன்பியல் நாடகங்களில் வரும் கூட்டுப் பாடல்களோடும ஒப்பிடப்பட்டுள்ளன. இவை, மத்தேயு நற்செய்தியில் வரும் இயேசுவின் பெரிய மறை உரைகளுக்கு ஒத்தவையாகும். வார்த்தை பரவுவதின் முக்கிய கட்டங்களைக் குறிக்கின்றன.

6. வாசகங்கள்:– புதிய ஏற்பாட்டு நூல்களில் அப்போஸ்தலர் பணிநூல் இரண்டு கிரேக்க வாசகங்களில் பாதுகாக்கப்பட்டுள்ளது என்ற சிறப்புடையதாகும். ஒன்று அலக்சாந்திரியா அல்லது எகிப்திய வாசகம், மற்றது மேலைநாட்டு வாசகம். பின்னதை இரேனேயு, சிப்ரியன், அகுஸ்தீன, எப்பிரேம் போன்ற திருச்சபைத்தந்தையர் பயன்படுத்தியுள்ளனர். இது முன்னதைப்போல் பழமையானது ஆனாலும், அதைவிட பத்தில் ஒரு மடங்கு நீண்டது. இதில் ஒருவகைப் போக்கைக் கண்டுணர முடிகிறது. நயமற்றவை நயமாக்கப்படுகின்றன. மறைந்திருப்பவை வெளிக் கொணரப்படுகின்றன. சித்திரத் தன்மை கொண்டுள்ளது. பேதுருவுக்கு அளிக்கப்படும் முதன்மையையும், மேன்மையையும் அதிகமாக்கும் போக்கு காணப்படுகிறது. யூத எதிர்ப்புப் போக்கு காணப்படுகிறது. இதில் பல பதங்களும் வாக்குகளும் கூடுதலாகச் சேர்க்கப்பட்டுள்ளன.

இரண்டு வாசகங்களுக்கிடையே காணப்படும் வேறுபாடுகளை ஆராய்ந்து லூக்

காவே இரண்டு பதிப்புகளுக்கும் காரண மாவார் என்ற கருத்துக்களைச் சில அறிஞர்கள் ஒரு காலத்தில் கூறிவந்தனர். மேலைய நாட்டு வாசகம் எகிப்திய வாச கத்தை வேண்டுமென்றே திருத்தி அதைத் பதிப்பாகும் என்று பல ஆய்வாளர்கள் ஏற்றுக்கொள்வர். பொருள் அளவில் இரண்டும் வேறுபடும் பகுதிகள் :*13;27;15:29; 18:27; 19:1; 28:31*. சில இடங்களில் எகிப்திய வாசகத்தைவிட மேல்நாட்டு வாசகம் மேலானதாகக் கருதப்படுகிறது (*12:10; 19:9; 20:15; 28:16*).

இந்த நூலின் மூலமொழி என்ன? அ.ப.*1–15* என்ற பகுதி சிலதவறுகளோ டும், செமித்திய பண்புகளின் சுவடுகளோ டும் ஆசிரியரால் மொழி பெயர்க்கப் பட்டது என்பர் சிலர். ஆனால் இந்தச் செமித்திய பண்புகள் இந்நூலில் காணப் படும் விதத்தில், ஏற்கெனவே கிரேக்கத் தில் மொழிபெயர்க்கப்பட்டு, ஆசிரிய ருக்குக்கிடைததிருக்க வேண்டும் என்பர் வேறு சிலர். யூத மரபுமுறை வாசகத் தையோ எழுபது நூல் வாசகத்தையோ சேராத பழைய ஏற்பாட்டு எடுத்துக் காட்டுகளில் பல, அக்காலத்தில் கிறிஸ்துவப் பாரம்பரியத்தின் ஒரு பகுதி யாக இருந் திருக்கவேண்டும். குறிப்பாகக் கிறிஸ்துவத்தன்மை கொண்ட கலை சொற்களும் பதங்களும் பயன்படுத்தப்படு வதும், எழுபது நூலை அடிப்படையாகக் கொண்டு சொற்றொடர்களை வேண்டு மென்றே அமைப்பதும், இந்நூல் புறமத்தி னருக்காக எழுதப்பட்டதன்று என்று காட்டுகிறது.

**7.** நூலின் நோக்கம்:- லூக்கா எழுதிய நற்செய்தியின் இரண்டாம் பகுதி, இயேசு எருசலேமை நோக்கிச் செய்த பயணத்தை விவரிக்கிறது. அங்கு கிறிஸ்து மீட்பின் மையச் செயலை நிறைவேற்றவேண்டும். அப்போஸ்தலர் பணி நூலின் இயக்கம் எருசலேமிலிருந்து பிரிந்துவிரிந்து செல் லுகிறது; வென்ற மீட்பு எங்கும் பரவ வேண்டும்; *1:8*–இல் பரிசுத்த ஆவியின் ஆற்றலால் தமது சாட்சிகளாக இருக்கும் படி அப்போஸ்தலர்களை கிறிஸ்துவே அனுப்புகிறார். அவர் கட்டளையிட்ட படியே அவர்களும் செயலாற்றுகின்றனர். முதலில் எருசலேமிலும் (*அதி:1–5*) பின்பு யூதேயா சமாரியாவிலும் (*6–8*), பின்பு உலகின் எல்லை வரை அதாவது உரோ மைவரை (*9–28*) அவர்கள் சாட்சி பகர் கின்றனர். குறிப்பாக இறுதிப் பகுதியில் தான் பரிசுத்த ஆவி வழிகாட்டுதல் தெளிவாக உள்ளது. இதுபற்றி இறைியல் போதகத்தில் பார்ப்போம். புறவினத் தார்பால் தூது, இறைவனது தெளிவாக வெளிப்படுத்தப்பட்ட திருவுளமாகும், என்று வாசகர்களின் மனதில் பதிய வைக்க ஆசிரியர் அக்கறை கொள்கிறார்.

இந்த உலகெலாம் அடங்கிய புவியியல் அடிப்படையில் திருச்சபை பரவியதன் முதல் துணை முடிவு, யூதத்துவத்தின் உரிமைச் சொத்து புறவினத்தாருக்கும் அளிக்கப்படுகிறது என்பதாகும். யூதர்கள் நிராகரித்த பின்தான், மறைபரப்புப் பணி யாளர்கள் புறவினத்தாரிடம் செல்லுகின்ற னர். ஒருமுறை ஸ்தேவானாலும் (*7:51–53*) மும்முறை பவுலாலும் (*13:45–47; 18:6–7; 28:24–28*) யூதர்களின் இந்த முரண்டுப்பிடி யான எதிர்ப்பு வெளிப்படையாக அறிவிக் கப்படுகிறது. மும்முறை பவுல் புறவினத்த தாருக்கு மீட்பைத் தொடர்ந்து அறிவிக் கிறார். ஸ்தேவான் மறைக்காகத் துன்பப் பட்டதிலிருந்து முதல் கிறிஸ்துவச் சமூகம் தோன்கிறது (*11:9*). கிறிஸ்துவம் யூதத்தி லிருந்து தவறிப் போனதன்று; அதன் பின் வந்த வாரிசு ஆகும் என்று ஆசிரியர் எப் போதும் வலியுறுத்துகிறார். கிறிஸ்துவம் உயிர்ப்பின் நம்பிக்கையில் மையம்கொண் டுள்ளது. யூதத்துவம் உயிர்ப்பின் நம்பிக் கையில் மறைமுகமாகவேனும் பங்கு கொண்டிருந்தது (*23:6–8; 26:5. 30–31; 28:20*). ஆனால் யூதர்கள் இந்த நம்பிக்கை நிறை வேறுதலை மட்டும் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள்.

உலகமனைத்திற்கும் கிறிஸ்து அளிக் கும் தூதின் மற்றொரு துணை முடிவு, கிறிஸ்துவத்திற்கு எதிர்ப்பு இருக்கமுடி யாது என்பதாகும். அப்படி ஏதாவது இருந்தால் அது அறியாமையின் விளை வாகும் என்றும் விளக்கப்படுகிறது (*23:29; 25:18–19; 26–24*). மனந்திருப்பியவர்களின் மேன்மை கவனமாகச் சுட்டிக்காட்டப்படு கிறது (*17:4*). உரோமைப் பேரரசின் அதி

காரிகளோடு திருச்சபை கொண்ட தொடர்பு சிறப்பான முக்கியத்துவம் உடையதாகும். உரோமையும் அதன் அதி காரிகளும் திருச்சபையை ஏற்றுக்கொள்வ தாகவும் அதற்குப் பாதுகாப்பு அளிப்ப தாகவும் லூக்கா காட்டுகிறார் (10; 13:7–12; 16:19–24; 35–40; 18:12–1 7; 19:23–41; 28:7–10). பவுலின் உரோமைப் பயணம், அன்றைய உலகின் மையமான உரோமையில் நற் செய்தியைப் போதிக்க பவுலுக்கு வாய்ப் பளிக்கும் இறைத் திட்டத்தின் ஒரு சாதன மாகவே காட்டப்படுகிறது.

பவுலும் அவர் போதித்தகிறிஸ்தவமும், உரோமை அதிகாரிகளிடம் கொண்டி ருந்த சலுகையை எடுத்துக் கூறுவதில் லூக்காகாட்டும் அக்கறையையும் எடுத்துக் காட்டி, கிறிஸ்துவத்திற்கு ஒரு காப்புரை நூலைப் படைப்பதே லூக்காவின் நோக் கம் என்று கூறியுள்ளனர் பல ஆய்வாளர் கள். ஆனால் இந்நூல் உரோமையர்களுக் காக அல்ல, மாறாகக் கிறிஸ்தவர்களுக் காக எழுதப்பட்டதாகும். எதுவும் கிறிஸ் தவத்தை எதிர்த்து நிற்கமுடியாது, எதிர் காவும் விரும்பாது என்ற இறையியல் நோக்கு மிகுந்த ஆழமானதாகும். இந்த இறையியல் நோக்கே நூலின் இறுதிப்ப குதியை நிர்ணயிக்கிறது. பவுல் குற்றம் சாட்டப் பெற்று உரோமையில் உள்ளார். எந்த முடிவும் இன்றி நூல் முடிகிறது என்பதைக்கண்டு பலர் திகைப்புறுகின்ற னர். ஆனால் பவுலின் வழக்கு விசார ணையையோ அவரது விடுதலையையோ எடுத்துக்கூறுவது ஆசிரியர் கூற விரும்பிய வற்றில் குழப்ப மட்டுமே பயன்பட்டிருக் கும். நூல் அமைந்திருக்கும் விதத்தில் இறுதிக்காட்சி நூலின் உச்ச நிலையாகும். ஏனெனில் அப்போஸ்தலர் பணிநூல் பரிசுத்த ஆவியின் ஆற்றலில் கிறிஸ்துவம் எல்லா நாடுகளிலும் எல்லா மக்களிடை யேயும் பரவும் வரலாற்றையும் அது எல் லாராலும் ஏற்றுக்கொள்ளப்படுவதின் முன்னறிவிக்கும் வரலாற்றையும் எடுத்துக் கூறுகிறது.

8. நூலின் திட்டமும் பொருளடக்கமும்:-

1:8–ல் அப்போஸ்தலர்களுக்கு ஆண்ட வர் அளித்த கட்டளைக்கு ஏற்ப லூக்கா தன் நூலைத் திட்டம் செய்து பொருளடக் கத்தைத் தருவதாகத் தெரிகிறது. இது திருச்சபையின் தொடர்ச்சியான வளர்ச்சி யையும் அதன் நலனைப் பாதிக்கும் உள்ளார்ந்த ஆபத்துக்களையும், அதன் தனிச்சிறப்பான பணியமைப்புகளையும் விவரிக்கிறது.

I. பாலஸ்தீனத்தில் மறைபரப்புத்தூது (1:1–9:43)
   - அ. மறைபரப்பு யுகத்தின் அடிப் படை (1:1–2:13)
   - ஆ. எருசலேமில் மறைபரப்பும் தூதும் யூத கிறிஸ்தவச் சமூகமும் (2:14–8:3)
   - இ. யூதேயாவிலும் சமாரியாவிலும் மறைபரப்புத்தூது (8:4–9:43)

II. உலக எல்லைவரை மறைபரப்புத்தூது (10:1–28:31)
   - அ) புறவினத்ததாருக்குத் தூது தொடங்குதலும் நிறுவப்படுதலும் (10:1–15:35)
     1) பேதுருவின் பணி (10:1–12:25)
     2) பவுலின் முதல் மறைபரப்புப் பயணம் (13:1–14:28)
     3) அப்போஸ்தல சங்கம் (15:1–35)
   - ஆ) பவுலின் உலகலாவிய மறை பரப்புத்தூது (15:36–28:31)
     1) பவுலின் இரண்டாம் பயணம் (15:36–18:22)
     2) பவுலின் மூன்றாம் பயணம் (18:23–21:14)
     3) எருசலேமில், செசரியாவில் பவுல் (21:15–26:32)
     4) உரோமை நோக்கி (27:1–28:16)
     5) உரோமையில் பவுல் (28:17–31)

ஆட்களின் அடிப்படையிலும் நூலைப் பிரித்துத்திட்டம் செய்யலாம். அதி 1–12–இல் பேதுருவின் பணியும், அதி 13–28–இல் பவுலின் மறைபரப்புப் பணியும் விவரிக்கப்படுகின்றன. இவ்விருவருடைய பணிவிவரிப்புகளுக்கிடையே குறிப்பிடத் தக்கத் தொடர்புகள் இருக்கின்றன. முதல் பகுதி பேதுருவின் பல உரைகளைத் தரு கின்றது (அதி 2–4; 10–11). இரண்டாம் பகுதி பவுலின் உரைகளைத் தருகிறது (அதி 13;17; 20;22; 26;28). இருவரும் முடமான

வர்களைக் குணப்படுத்துகின்றனர் (3:6–7; 14:8–10). இருவரும் சிறையிலிருந்து அருஞ் செயலாக விடுவிக்கப்படுகின்றனர். பேதுருவின் நிழல் கூட குணமளிக்கும் ஆற்றலை கொண்டிருக்கிறது (5:15). பவுலின் உடலைத் தொட்ட கைக்குட்டை கூட நோயாளிகளைக் குணமாக்க வல்லது (19:12). இருவரும் இறந்தவரை உயிர்தெழச் செய்கின்றனர் (9:36–40; 20:9–12). இருவரும் தங்கள் பணியை எதிர்த்த மந்திரவாதி களை எதிர்கொள்ள வேண்டியிருந்தது (8:18–24; 13:6–11). இருவரும் கைகளை விரித்து பரிசுத்த ஆவி இறங்கிவரக் கருவி யாக இருக்கின்றனர் (8:17; 19:6). இந்த இணையமைப்புத் தன்மையை வேண்டு மென்றே லூக்கா தன் நூலில் புகுத்தி யுள்ளார் என்று சில அறிஞர்கள் கருது வர். இதற்கு மாறாக, இரண்டு பேருடைய பணிகளுக்கிடையேயுள்ள வேறுபாடுகளை யும் காணத்தவறக்கூடாது. பேதுரு இரு முறை சிறையிலிருந்து விடுவிக்கப்படு கிறார் (5:19–20; 12:7–11). பவுல் ஒருமுறை தான் சிறையிலிருந்து விடுவிக்கப்படு கிறார் (16:25–35). ஐனேயாவைப் பேதுரு குணமாக்கியதற்கு இணையாக (9:34) பவுல் குணமாக்கியதாக எச்சான்றும் இல்லை. பேதுருவைப் போலல்லாமல், பவுல் கல்லால் எரியப்படுகிறார் (14:19). அவரது பெயர் பேய் ஓட்டுதலில் பயன்படுகிறது (19:13–20). இவ்வாறு இருவருடைய பணி களுக்கிடையே முழுவதும் இணைவுத் தன்மையில்லையாயிலும், அவற்றிடையே யுள்ள தொடர்பை, இரண்டு சாட்சிகளின் சான்று நம்பகமானது என்ற விவிலிய ஒழுங்கின் நோக்கில் (உப 19:15; மத் 18:16) காணவேண்டும்.

9. இறையியல் நோக்கு:-

லூக்காவின் நற்செய்தி, கிறிஸ்து தமது சாட்சிகளையும் பணியாளர்களையும் எப்படி தயாரித்தார் என்று காட்டுகின்றது. லூக்காவின் இரண்டாவது நூலாகிய அப்போஸ்தலப் பணிநூல், அப்பணி யாளர்களின் சொற்களையும் செயல்களை யும் விவரிக்கின்றது. அவர்கள் இயேசு வின் தூதுவர்களாக, கருவிகளாகச் செயல்படுகின்றனர். அவர்களிலும் அவர் கள் வழியாகவும் கிறிஸ்து மீட்புப் பணி யைத் தொடர்ந்து செயல்படுத்துகிறார். இந்தப் பணியை பலகோணங்களில் நோக்கலாம்.

அ) கிறிஸ்து இறையியல் நோக்கு:- உயிர்த்த மீட்பர் விண்ணேற்பின் போது தமது அப்போஸ்தலர்களை தமக்குச் சாட்சிகளாக இருக்கக் கட்டளையிடுகிறார் (1:8).யூதாசுக்குப் பதிலாக மத்தியாவைப் பன்னிரண்டாவது அப்போஸ்தலராகத் தேர்ந்தெடுத்தலில் இயேசு கருவியாக இருக்கிறார் (1:24–26). ஐம்பதாம் நாள் விழாவில் அவர் வானிலிருந்து பரிசுத்த ஆவியைப் பொழிகின்றார் (2:23). பிறவி முடவனைக் குணமாக்குகிறார் (3:6; 12:16). சீடர்கள் செபித்துக் கொண்டிருந்த இடம் அதிரச்செய்கிறார் (4:31). அனனியாவும் சப்பீராவும் ஏமாற்றியதற்காக அவர்கள் மேல் உடனடியாகத் தீர்ப்பைச் செயல் படுத்துகிறார் (5:5.10). அப்போஸ்தலர் களைச் சிறையிலிருந்து விடுவிக்க வான தூதரைப் பயன்படுத்துகிறார் (5:19–21). பேதுரு, யோவான் ஆகியோருடைய வேண்டுதலைக் கேட்டுச் சமாரியார் களுக்குப் பரிசுத்த ஆவியை அளிக்கிறார் (8:15–17). எத்தியோப்பிய அண்ணகரிடம் பிலிப்புவைப் போகச்செய்ய ஒரு வான தூதரை அனுப்புகிறார் (8:26). பவுலை அப் போஸ்தலராக அழைக்கும் பொருட்டு நேரடியாக அவருக்குத் தோன்றுகிறார் (9:3–4). ஐனேயாவைக் குணப்படுத்துகிறார் (9:34). பேதுருவுக்கு தூதர்களை அனுப்பு மாறு அறிவிக்க கொர்னேலியுவிடம் வான தூதரை அனுப்புகிறார் (10:3–6). அதே சமயம் அவர்களோடு போகும்படி காட்சி யில் பேதுருவுக்கு அறிவிக்கிறார் (10:9–20). பின்பு கொர்னேலியுவின் வீட்டார் மேல் பரிசுத்த ஆவியைப்பொழிகிறார் (10:44–45; 11:15–17). பேதுருவைச் சிறையிலிருந்து விடுவிக்கிறார் (12:7–9). பார்னபாவையும் பவுலையும் மறைபரப்பும் தூதுவர்களாக ஒதுக்கும்படி பரிசுத்த ஆவியின் வழி யாகக் கட்டளையிட்டு, அந்தியோக்கியத் திருச்சபையை வழிநடத்துகிறார் (13:2). சைப்ரசில் மறைபரப்புப் பணிக்கு எதிர்ப் புக்காட்டிய எலிமாவைத் தண்டிக்கிறார். (13:11). இலிசித்திராவில் ஒரு முடவனைக் குணமாக்குகிறார் (14:10). ஆசியா, பித்தி

னியா அகிய உரோமை மாநிலங்களில் நற்செய்தியைப் போதிக்காதபடி, பவுல், சீலா திமோத்தேயு ஆகியோரை ஆவி வழியாக ஆண்டவர் தடுக்கிறார் (16:6–7). அதற்கு மாறாக அவர்களை துரோபாவுக்குப் போகச்செய்து, அங்கு ஒரு காட்சியில் மக்கதோனியாவுக்கு அழைக்கிறார் (10:8–10). ஒரு நில நடுக்கம் ஏற்படச் செய்து பவுலையும் சீலாவையும் சிறையிலிருந்து விடுவிக்கிறார். அது சிறைக் காவலரும் அவனது குடும்பம் முழுவதும் மனந்திரும்ப ஒரு வாய்ப்பாக அமைகிறது (16:15–32). கொரிந்தில் ஒரு காட்சியில் பவுலை உற்சாக மூட்டுகிறார் (18:9–10). துரோவாவில் யூத்திக்குவை உயிர்த்தெழச் செய்யப் பவுலுக்கு ஆற்றல் அளிக்கிறார் (20:9–10)). எபேசில் வரவிருக்கும் சிறைவாசத்தை ஆவி வழியாக அவருக்கு அறிவிக்கிறார் (20:23;21:10–11). எருசலேமில் பவுல் கைதியாக இருந்தபோது, ஆண்டவர் அவருக்கு இரவில் தோன்றி, மற்றொருமுறை ஊக்கமூட்டி, பவுல் உரோமையில் சாட்சி கூறவிருப்பதை அறிவிக்கிறார் (23:11). இறுதியாகப் பவுல் பயணம் செய்த கப்பல் புயலால் அலைக் கழிக்கப்பட்டபோது ஒரு வான தூதரைப் பவுலிடம் அனுப்பிகிறார் (27:3).

அ.ப.1:1–இல் தன் நூலின் முதற்பகுதியில் (நற்செய்தியில்) "இயேசு விண்ணேற்படைந்த நாள்வரை, அவர் செய்தவை, போதித்தவை யாவற்றையும்" எழுதியதாக லூக்கா கூறுகிறார். அவரது அப்போஸ்தலர்களின் பணியை எடுத்துக் கூறுவதற்காக, இயேசுவின் பணியினின்று லூக்கா இப்போது விலகுகிறார் என்று இது சுட்டவில்லை. மாறாக இனிமேல் அவர், உலகிலிருந்த தமது அப்போஸ்தலர்கள், பணியாளர்கள் வழியாக, வானிலிருந்து அவர் தொடர்ந்து செய்யும் செயல்களை எடுத்துக்கூற விழைகிறார் லூக்கா.

லூக்கா நூலின் முதல்பகுதியில் இயேசுவின் மெசியாத் தன்மை மையக் கருத்தாக அமைந்திருக்கிறது. வெளிப்படையாக எடுத்துக் கூறப்படுகிறது. பேதுருவின் உரைகள் இதைத்தான் எண்பிக்கின்றன. கிறிஸ்து பாடுபட்டு மகிமையில் புக வேண்டும் என்று மறைநூல் முன்னறிவித்ததாகக் காட்டி, சிலுவை மரணத்தால் வரும் இடறலை அகற்றுவதே அவரது முக்கிய அக்கறையாகும். இதற்காகத் துன்புறும் ஊழியரைப் பற்றிய எசயாவின் இறைவாக்குகளைச் சிறப்பாகப் பயன்படுத்துகிறார் (3:13–26; 4:27–30). ஏசயாவின் பகுதிகளைச் சுட்டிக்காட்டுவது நீதிமான் என்ற பட்டத்திலும் அடங்கியுள்ளது (3:14; 7:52). இயேசுதான் மெசியா என்று காட்ட மட்டுமே கிறிஸ்து என்ற சொல்லை அப்போஸ்தலர் பணிநூல் பயன்படுத்துகிறது. அதுவும் சொந்தப் பெயராக அன்று, ஒரு பட்டமாகவே பயன்படுத்துகிறது. நூலின் தொடக்கப்பகுதிகள் இயேசுவை அவரது பாடுகளும் உயிர்ப்பும் மெசியாவாகக் காட்டும் அறிவிப்பின் மகிழ்ச்சியால் நிறைந்துள்ளன. அது துன்புறுதல் மட்டுமன்று வெற்றியுமாகும் (4:24–30). ஆவியின் புதிய காலத்தைத் தொடங்கி வைக்கிறது. இவ்வாறு இயேசு தந்தையார்களுக்கு அளிக்கப்பட்ட வாக்குறுதிகளை நிறைவேற்றுகிறார் இஸ்ராயேலின் நம்பிக்கை நிறைவு செய்கிறார் (3:21–26; 24:15; 28:20)

இந்த மெசியா இறையியலைத் தவிர, இயேசு இறையாற்றலையும் உயர் உரிமைகளையும் கொண்டிருந்த அனுபவம் உள்ளார்ந்ததாக இருந்தாலும் தெளிவாக உள்ளது. இருமுறை தான் இயேசு "இறைமகன்" என்றும், அதுவும் பவுலால், அழைக்கப்படுகிறார் (9:20; 13:33). பவுலுக்கு இக்கருத்து முக்கியத்துவம் மிக்கதாகும். பழைய ஏற்பாட்டில் இறைவனுக்கு மட்டுமே உரிய "ஆண்டவர்" என்ற பட்டம் இயேசுவுக்கு அளிக்கப்படுகிறது. அப்போஸ்தலர் பணி நூலில், இப்பட்டம் இறைத்தன்மையைவிட இயேசுவையே குறிக்கிறது. அதன் விளைவாக, ஆலயத்தில் பவுல் காணும் காட்சியில் (22:17–19) இயேசுதான் தோன்றுகிறார். இதனால், இயேசு தமக்கே இறைவனது ஆலயத்தை உரிமையாக்கித்கொள்கிறார். பழைய ஏற்பாட்டில் இறைவன் இறைவாக்கினர்களைத் தமது கருவியாக அழைத்தது போல் இயேசு பவுலைத் தமது கருவியாக அழைக்கிறார் (9:3–9). இறைவனது பெயரை அழைப்பதால் மனிதன் மீட்புப் பெறுவர் (2:21). "இயேசுவின் பெயரை

அழைப்பவர்கள்" என்பது கிறிஸ்துவர்களின் பட்டமாகிறது. யாவேயின் பெயரை அழைப்பதால் வரும் பழைய ஏற்பாட்டு ஆசீரை நினைவுபடுத்தி இந்தப்பதம் இயேசுவின் இறைத்தன்மையைச் சுட்டிக் காட்டுகிறது.

பவுலின் கிறிஸ்து இயலிலிருந்து வேறுபடுத்தி, இந்நூல் இயேசு வானகத்தில் இருப்பதாகவும் உயர்த்தப்பட்டவராகக் காட்டுகிறது. திருச்சபையில் பரிசுத்த ஆவி இயேசுவின் பதிலாளி ஆவார். ஆனால் பவுலுக்கு, கிறிஸ்து திருச்சபையில் பிரசன்னமாக இருக்கிறார். ஆவியே அவரது பிரசன்னத்தின் வடிவமாகும்.

ஆ) பரிசுத்த ஆவியும் திருச்சபையும்:- லூக்காவிற்கு "இறுதிகாலத்தின்" தொடக்கம் உலகின் உடனடியான முடிவைக் குறிக்கவில்லை: அது திருச்சபை காலத்தின் தொடக்கமாகும். அதில் திருச்சபை கிறிஸ்துவுக்குச் சாட்சி அளிக்கிறது. அவரது செயலை உலகின் எல்லை வரை செயல்படுத்துகிறது (1:7–8). கிறிஸ்துவின் வாழ்க்கையின் நிகழ்ச்சிகளுக்கும் திருச்சபையின் வாழ்வின் நிகழ்ச்சிகளுக்கும் குறிப்பான, தெளிவான இணையமைப்பு உள்ளது. கிறிஸ்து அளித்த மறைபோதக முறையையே (லூக்.24:18–27) பிலிப்பும் பயன்படுத்துகிறார் (அ.ப. 8:26–39). பேதுருவின் அருஞ்செயல்கள் கிறிஸ்துவினுடையதோடு இணையாக உள்ளன. ஸ்தோவானின் மறைசாட்சி மரணம் பலவிவரங்களில் கிறிஸ்துவினுடயதோடு இணையாக உள்ளது.

இயேசு வாக்களித்த ஆவியால் (1:8) திருச்சபை ஆட்சி செய்யப்படுகிறது, வழி நடத்தப்படுகிறது. ஆவியின் வருகை கூடியிருந்த முழு உலகின் மனிதர்களுக்குத் திருச்சபையின் தூதின் தொடக்கமாகும் (அதி.2). திருச்சபை பரவுதலின் ஒவ்வொரு கட்டத்தையும் ஆவி வழிநடத்துகிறார். இவ்வாறு ஆவியின் பல இடையீடுகள் யூத உணவு ஒழுங்குகளைக் கைவிடப் பேதுருவைக் கட்டாயப்படுத்துகின்றன. முதல் புறவினத்தாரைத் திருச்சபைக்குள் ஏற்றுக் கொள்ளும்படித் தூண்டுகிறார் (அ.ப.10). புறவினத்தாருக்குத் தூது செல்ல பவுலைத் தூண்டுகிறார் (அ.ப.9). அவர் முதல் மறை பரப்புப் பயணத்தை மேற்கொள்ளச் செய்கிறார் (13:2–4). இப்பயணம் புறவினக் கிறிஸ்துவத்தைப் பற்றிய பிரச்சினையை எழுப்பி எருசலேம் சங்கத்தில் தீர்த்து வைக்கிறார் (15:1–39). ஆவிதான் பவுலை கிரிசுக்குப் போகச் செய்கிறார் (16:6–9). இறுதியாக பவுலின் இறுதிப்பயணத்திலும் அவருக்கு வழி காட்டுகிறார் (20:23). கிறிஸ்துவத்தின் இந்த வெற்றிகரமான பரவுதலின் ஒவ்வொரு கட்டத்திலும், ஆவி திருச்சபையை வழி நடத்துகிறார். பழைய ஏற்பாட்டு இறை வாக்கினர்களை நிரப்பியது போல் (1:16; 28:25), ஆவி திருச்சபையின் பணியாளர்களை நிரப்புகிறார் (4:8; 6:5; 7:55; 9:17; 11:24). திருச்சபையைச் சேர்ந்த அனைவரையும் நிரப்புகிறார். ஆவியின் தோற்றமே விசுவாசிகள் குழுவின் மனிதர்கள் ஏற்றுக் கொள்ளப்படுகிறார்கள் என்பதற்கு அடையாளமாகும் (10:44–47; 11:17).

அ.ப. நூல் ஆவியின் தூண்டுதலால் வளர்ச்சியுறும் திருச்சபையின் வரலாற்றைக்கொடுக்கிறது. லூக்காவின் நற்செய்தி நூல் மகனின் நற்செய்தியாக இருப்பதுபோல் அ.ப.நூல் ஆவியின் நற்செய்தியாக உள்ளது எனலாம். ஆவியின் நிறைவு திருச்சபையின் தூது புறஇன உலகின் திருச்சபை பரவுவதில் காணப்படுகிறது.

இ) திருச்சபையும் தலைவர்களும்:- 1) அப்போஸ்தலர்கள்: 1:8–இல் கிறிஸ்து அளித்த கட்டளையில் அப்போஸ்தலர்களின் பங்கு தெளிவாகக் கூறப்படுகிறது. அவர்கள் சாட்சிகளாகத் திகழ்வர். இக்கருத்து மீண்டும் மீண்டும் வருகிறது. (1:22; 2:32; 3:15; 4:33; 5:32; 10:39.41; 13:31). இக்கருத்து பவுலுக்கும் பொருந்தும் (9:15; 22:15; 23:11; 26:16). அவர்களது சாட்சி, சொல், செயல் போதகம், அருஞ்செயல் செய்தல் ஆகியவற்றில் அடங்கியிருந்தாலும், அவர்களது மறை உரைகள் அவர்களின் பணியின் பெரும் பகுதியாக அமைகின்றன. சான்று: 1:15–22; 2:14–41; 3:12–26; 4:8–12; 7:2–53; 10:33–43;... இவ்வுரைகள் அப்போஸ்தலர்கள் இயேசுவுக்கு அளித்த சாட்சியின் தன்மையையும் எருசலேம், யூதேயா,

சமாரியா, சீரியா, சிறிய ஆசியா, கிரிசு, இறுதியாகப் பேரரசின் மையமாகிய உரோமை ஆகிய இடங்கள் அவர்கள் எடுத்துக்கூறிய அறிவிப்பின் தன்மையையும் வெளிப்படுத்துகின்றன. உரோமையில் அங்கு வாழும் யூதர்களுக்கு இயேசுவைப் பற்றி சாட்சி கூறி, பவுல் உலகமனைத்திற்கும் மீட்பு பற்றியும் அறிவிக்கிறார். நூல், பவுல் "மிகத் துணிவோடு, தடை யேதுவுமின்றி இறைவனது அரசைப் பற்றிய செய்தியை அறிவித்து, ஆண்டவராகிய இயேசுக் கிறிஸ்துவைப் பற்றிய உண்மைகளைப் போதித்தலை" *(28:31)* எடுத்துக்கூறுவதோடு முடிகிறது.

அ.ப. நூல் அப்போஸ்தலர்களின் சாட்சியத்தின் விளைவாகிய, புறவினத்தார் பலர் கிறிஸ்துவ விசுவாசத்திற்கு மனந்திரும்புதலையும், சபைகள் நிறுவப்படுதலையும் எடுத்துக்கூறினாலும், இவற்றிற்கு அதிகம் அழுத்தம் தரவில்லை சில பகுதிகளில், சில சபைகளின் அமைப்பு வளர்ச்சி ஆகியவைபற்றி அதிகச்செய்திகள் கொடுத்திருக்கக்கூடும் என்றாலும், இவற்றில் ஆசிரியரது விவரிப்பு குறிப்பிடத்தக்க விதத்தில் சுருக்கமாகவே உள்ளது. சில இடங்களும் சூழ்நிலைகளும் விடப்பட்டுள்ளன. ஆண்டவராகிய இயேசுக்கிறிஸ்துவுக்கு அப்போஸ்தலர்கள் அளித்த சாட்சியத்தை எடுத்துக் கூறுவதே முக்கிய நோக்கமாகக் கொண்டுள்ளது. இந்த சாட்சியம் அறிவிப்பாக எடுத்துக் கூறப்படுகிறது. துன்பங்களால் முத்திரையிடப்படுகிறது. அவர்கள் வழியாக ஆண்டவர் செய்த அடையாளங்களாலும் வியப்புக்குரிய செயல்களாலும் அவராலே உறுதி செய்யப்படுகிறது *(4:29–32)*.

ஆவி, வழக்கமாக, அப்போஸ்தலர்கள் *(8:15)* அல்லது மற்ற பணியாளர்கள் *(8:39; 19:6)* வழியாக அளிக்கப்படுகிறாார். ஏனெனில் திருச்சபையில் பார்க்கக்கூடிய அதிகாரம் இருக்கிறது. அதன் மையத்தில் அப்போஸ்தலர்கள் இருக்கின்றனர். ஒரு குழுவாக, அவர்கள் வரலாற்றின் கிறிஸ்துவுக்கும் புதிய இஸ்ராயேலின் பிதாப்பிதாக்களுக்கும் இடையில் இணைப்பாக உள்ளனர். ஆகவே ஆவியின் வருகைக்கு முன்பே அவர்களின் பன்னிரண்டு என்ற எண்ணிக்கை நிறைவு செய்யப்பட வேண்டும். இதில் அவர்கள் ஒரு குழுவாகச் செயல்படுவதைப் பார்க்கின்றோம். தங்கள் பிரதிநிதிகளை அனுப்புகின்றனர் *(8:15)*: ஸ்தேவானுக்கு அதிகாரம் அளிக்கின்றனர் *(6:6)*: பவுலை ஏற்றுக் கொள்கின்றனர் *(9:27)*. பொதுவாக, சாட்சி பகர்கின்றனர், போதிக்கின்றனர், குணமாக்குகின்றனர், பேதுருவைப்பற்றி மட்டும் தான் தனி நிகழ்ச்சிகள் தரப்படுகின்றன. மூன்று சமயங்களில் யோவான் பேதுருவோடு, அதுவும் துணையாளராக இருக்கிறார். ஐம்பதாம் நாள் விழாவில் பேதுருதான் பேசுகிறார்: அவர் தான் முதல் அருஞ்செயல்கள் செய்கிறார் *(அதி.3)*. கிறிஸ்துவின் பெயருக்காக அவர் தான் முதலாவதாகத் துன்புறுகிறார். அவர்தான் முதல் அருஞ்செயல்கள் செய்கிறார் *(அதி.3)*.கிறிஸ்துவின் பெயருக்காக அவர்தான் முதலாவதாகத் துன்புறுகிறார். அனானியா, சப்பீரா ஆகியோரைத் தீர்ப்பிடுகிறார் (அதி.5). முதல் புறவினத்தாரைத் திருச்சபைக்குள் ஏற்றுக்கொள்வதிலும், அதை எண்பிப்பதிலும், பேதுருதான் பொறுப்பேற்கிறார். இது லூக்காவின் நோக்கில், மிகமுக்கியதானதாகும் (அதி. 10–11), எருசலேம் சங்கத்தில் புறவினக்கிறிஸ்துவர்களின் சுதந்திரத்தை ஆதரித்துப்பேசுகிறார் (அதி.15). இங்கு நாம் அதிகார முதன்மைபற்றி, ஒரு வேளை, பேசமுடியாது. ஆனால் பேதுருவின் அதிகாரம் மறுக்க முடியாத உத்தரவாதம் என்று லூக்கா கருதினார் என்பது உறுதி. ஆனால் சபையும் அதிகாரம் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. ஸ்தேவானையும் அவரது தோழர்களையும் சபைதான் தேர்ந்தெடுத்து அப்போஸ்தலர்கள்முன் நிறுத்துகின்றனர் (6:3–5). எருசலேம் சங்கத்தில் அப்போஸ்தலர்களும் மூப்பர்களும் எடுத்த முடிவுகளைச் சபையோர் உறுதிப்படுத்துகின்றனர்.

**2. மூப்பர்கள்:-** காலப்போக்கில், திருச்சபையின் மூப்பர்கள் என்ற துணை அதிகாரத்தைக் காண்கிறோம். இவர்கள் முதலில் எருசலேமில் தோன்றுகின்றனர் *(11:38)*. அப்போஸ்தலர்கள் மறைந்த பிற்பாடு, யாகோப்பின் தலைமையில்

அங்குள்ள சபையின் பொறுப்பை ஏற்கின்றனர் (21:18). பவுல் தமது மறைப்பரப்பு பயணங்களில் நிறுவிய சபைகளில் எல்லாம் மூப்பர்களை நியமிக்கின்றார் (14:23). எபேசிலுள்ள மூப்பர்களுக்கு தன் மேய்ப்புப்பணியை அளிக்கிறார். இவர்கள்தான் பவுல் இல்லாதபோது வழிகாட்டவும் பாதுகாக்கவும் பரிசுத்த ஆவியால் நியமிக்கப்பட்ட "மந்தையின் காப்பாளர்கள்" (20:28–30). மூப்பர் என்ற பதவி மேய்ப்புப்பணி திருமுகங்களுக்குமுன் கூறப்படவில்லை. இவற்றை பவுல் எழுதினார் என்பது சர்ச்சைக்குரியது. அதனால் லூக்கா தன் காலத்தில் நிலவிய நிலையில் எடுத்துக் கூறுகிறார் என்று கூறுவர் சிலர். ஆனால் சிதறிப்போன யூத சபைகள் கொண்டிருந்த அமைப்புகளையே கிறிஸ்தவச் சபைகளிலும் பவுல் நிறுவினார். இவ்வாறு ஒவ்வொரு யூதச் செபக் கூடமும் ஒரு மூப்பர் குழுவைக் கொண்டிருந்தது. இந்த மூப்பாகள் எப்படி ஒன்றிச் செயல் ஆற்றினர் என்பதைப் பற்றி நாம் ஒன்றும் அறிவதற்கில்லை. எருசலேமில் யாக்கோபு ஒரு தனிச் சிறப்பான அதிகாரம் கொண்டிருந்தார் (12:17; 21:18; கலா 2:12). இதைத் தவிர, பிற்காலத்தில் அரசுமுறை ஆயர் பதவியாக வளரவிருந்த எந்த அமைப்பின் அடையாளமும் இல்லை.

ஈ) திருச்சபையின் கூறுகள்:- இவை அ.ப. நூலின் முன்பகுதியில் வரும் சுருக்கப்பதிப்புக் குறிப்புகளில் கொடுக்கப்படுகின்றன. இவற்றில் புதிய இஸ்ராயேலாகிய மெசியாச் சமூகத்தின் சிறப்புப் பண்புகளாக விளங்கிய அமைதி, எளிமை, மகிழ்ச்சி ஆகியவற்றை லூக்கா சித்தரிக்றார் (2:1–4; 4:32–35; 5: 12–16). இந்த ஓவியப் பட்டிகளோடு, அடிக்கடிவரும் பதிப்புக் குறிப்புகளில் லூக்கா, சகோதரர் ஒருமைப்பாட்டையும், ஒருவருக்கொருவர் காட்டும் தாராள குணத்தையும், சபையின் வளர்ச்சியையும் எடுத்துக்கூறுகிறார். இக் கூறுகள் லூக்காவுக்கு முக்கியம் வாய்ந்தவை என்பது உறுதி. இவையனைத்தும் சேர்ந்து தொடக்கக்காலத் திருச்சபை பற்றிய கருத்தியலான சித்திரத்தை நமக்குத் தருகின்றன.

உ) திருச்சபையும் அருட்சாதனங்களும்:- திருச்சபையின் இடையீடு இல்லாமல் ஆவி கொடுக்கப்படலாம் என்றாலும் (10:44–47), சபைக்குள் ஏற்றுக்கொள்வதற்குரிய வழக்கமான சாதனம் ஞானஸ்தானம் அல்லது திருமுழுக்காகும். அ.ப. நூலில் திருச்சபையின் திருமுழுக்கு முறையை அதன் தொடக்க வடிவில் காண்கிறோம். திருமுழுக்குக்குமுன் போதனை அளிக்கப்பட்டது. இப்போதும், இயேசுவை மறைநூலின் மெசியாவாகக் காட்டி, அவரிலே மட்டுமே மீட்பு உண்டு என்று எடுத்துக் கூறி, மனவருத்தத்தையும் விசுவாசத்தையும் எழுப்பும் மறை உரையாக அமைந்திருந்தது. திருவருட்சாதன வழிபாட்டிலே திருமுழுக்கிற்கு எத்தடையும் இருக்கிறதா (8:36–38) என்ற பிரச்சினையில் விசுவாச அறிக்கையும், நீரினால் திருமுழுக்கு ஆகியவை அடங்கியிருந்ததாகத் தெரிகிறது. திருமுழுக்கு பெற விரும்புவர் இயேசுவின் பெயரைக் கூவி அழைத்தார் அல்லது அவர்மேல் இயேசுவின் பெயர் கூறப்பட்டது. இரண்டிலும் அவர் இயேசுவக்குரியவராக்கப்பட்டார். இருபகுதிகளில் கைகளை விரிக்கும் தனிச் சடங்கு கூறப்படுகிறது. இது உறுதிப்படுத்தும் அருட்சாதனத்தின் விவரிப்பாகக் கருதப்பட்டு வந்துள்ளது. ஆனால் இச் சடங்கின் பொருள் முழுவதும் வேறுபட்டதாகும் (8:14–17; 19:1–7). நற்கருணை பற்றி, அ.ப. நூலில் மிகச் சிறிதே கூறப்பட்டுள்ளது. கிறிஸ்தவர்கள் ஆலய வழிபாட்டில் ஒழுங்காகப் பங்கெடுத்தாலும், நற்கருணை வழிபாடு வாழ்வின் ஒரு பகுதியாகத் தெரிகிறது (2:42.46). ஒரு வேளை, இது பவுல் கப்பல் உடையமுன் சுட்டிக் காட்டப்பட்டிருக்கலாம் (27:35). ஆனால் வாரத்தின் முதல் நாளில், கிறிஸ்தவ நற்கருணைக் கூட்டம் பற்றிய ஒரே காட்சியில் (20:7–11) நற்கருணைக்கு முன் வரும் மறையுரையிலும், அப்போது நடந்த அருஞ்செயலிலும் கவனம் முழுவதும் செலுத்தப்படுகிறது.

10. வரலாற்றுத் தன்மை:- 19–ஆம் நூற்றாண்டின் மத்தியில் இந்நூலின் வரலாற்றுத்தன்மையை மறுத்து, இது ஓர் இறை

யில் ஏடாகும் என்று ஒரு சாரார் கூறி வந்தனர். இக்காலத்தில், ஆய்வாளர்கள், இத்தகைய ஒரு தலையாய ஐயப்பாட்டைத் தவிர்ப்பர். ஆயினும் சிலர் இந்நூலை ஒரு காப்புரையாக மட்டும் கருதுவர். இவர்கள் கருத்துப்படி இந்நூல் கிறிஸ்துவம் யூதத் துவத்தின் நேர்மையான வளர்ச்சி என்று யூதர்களுக்கு எண்பிக்கவும், கிறிஸ்துவம் பொது அமைப்புக்கு ஆபத்தில்லாத ஒரு வழிபாட்டு முறை என்றும் சட்டப்பூர்வ மாக அனுமதிக்கத்தக்க சமயம் என்றும் உரோமை அரசாங்கத்திற்கு எண்பிக்கவும் எழுதப்பட்ட ஒரு காப்புரை நூலாகும். இத்தகைய காப்புரைத் தன்மை நூலில் காணப்படுவதாகத் தோன்றுகிறது. ஆனால் அது நூலின் வரலாற்றுத் தன்மை யை பலவீனப்படுத்தவில்லை. வெறுமனே உண்மையை எடுத்துக்கூறி காப்புரை வழங்கமுடியாது என்று ஏற்றுக்கொண் டால் மட்டுந்தான், நூலின் வரலாற்றுத் தன்மை பலவீனப்படுகிறது என்று கூற லாம். மேலே கூறப்பட்ட காப்புரைத் தன்மையைவிட, கிறிஸ்துவம் பரவுதல், இயேசுவின் தூது, மற்றும் ஆவியின் அலுவல் ஆகியவற்றின் நேர்மையான வளர்ச்சியாகும் என்று எண்பிப்பதே ஆசிரியரது விருப்பமாகும்.

நூல் முழுவதும் பொதுவாக எடுத்துக் கொள்ளும்போது, இந்த வரலாற்றுப்பிரச் சினை எழுவதில்லை. தனிப்பட்ட பகுதி களையும் கேள்விகளையும் பற்றியே இப் பிரச்சினை எழுகிறது. நூலின் வரலாற் றுத்தன்மை நூல் முழுவதும் ஒரே சீராக அமைந்திருக்கவில்லை என்று ஏற்றுக் கொண்டால் இப்பிரச்சினைகளுக்கு ஓரளவு தீர்வு காணலாம். முதல் பகுதிக் கும் இரண்டாம் பகுதிக்கும் இடையே நடை யிலும் பொருளடக்கத்திலும் வேறுபாடுகள் உள்ளன. வியப்புமிக்க செயல்கள் மற்றும் அருங்கொடைச் செயல்களின் சூழ்நிலை இரண்டாம் பகுதியை விட முதல் பகுதியில் தான் முதன்மை பெறுகின்றது. இவைகள் "நாங்கள்" என்ற பகுதியில் காணப்படவே யில்லை. இது, ஆசிரியர் பெற்றுக் கொண்ட விவரிப்புக்களில் தொடக்க சமூகம் பற்றிய வாய்மொழிப்பாரம் பரியம், இக்கூறுகளை ஓரளவு மிகைப் படுத்தியுள்ளது என்று காட்டுகிறது. ஒவ் வொரு தனி நிகழ்ச்சி, மற்றும் அதன் மூலம் பற்றிய விரிவான ஆய்வுக்கு இட மிருக்கிறது.

அ.ப. நூல் ஒரு காலவரையறைத் திட்டத்தை அமைக்கவில்லை. இது முக்கி யமாக முதல் பகுதிக்குப் பொருந்தும். விவிலியத்திற்குப் புறம்பான மூலங்க ளோடு அ.ப. நிகழ்ச்சியுரைகள் தொடர்பு கொள்ளும்போது இந்தக் காலவரைப் பிரச்சினை எழுவதில்லை. இரண்டையும் சேர்த்து ஆராய்ந்து, அந்நிகழ்ச்சிகள் நடந்திருக்கக் கூடிய காலத்தை ஓரளவு உறுதிப்படுத்தலாம். இதன்படி முதல் ஐம்பதாம்நாள் விழா நிகழ்ச்சியிலிருந்து ஸ்தேவான் வரை மூன்ற ஆண்டுகள் எடுத்திருக்கலாம் (கி.பி.30–33). எருசலேம் சமூகம் சிதறியதிலிருந்து பவுல் மனந் திரும்பயது வரையுள்ள காலத்தை நிர்ண யிக்கமுடியாது. அந்தியோக்கியா சபை அநேகமாக கி.பி. 38–40–இல் நிறுவப் பட்டிருக்கவேண்டும். புறவினச்சான்று களிலிருந்து ஏரோது அகிரிப்பா 44–இல் இறந்திருக்கவேண்டும். கிளாதியுவின் ஆட்சிக்காலத்திய பஞ்சம் 49–55–இல் நடந் திருக்கலாம். கல்லியோ கொரிந்தில் 51–52–இல் இருந்தது அங்குப் பவுல் இருந்த காலத்தைக் குறிக்கப்பயன்படு கிறது. பெலிக்சுக்கு அடுத்த ஆளுநராகப் பெஸ்து 59–60–இல் பதவி ஏற்றிருக்க லாம். நூலின் முடிவு 63–இல் நிகழ்ந்தி ருக்கவேண்டும்.

நூலில்வரும் உரைகளின் தன்மையைப் பற்றி ஏற்கனவே கூறியுள்ளோம் அவற் றின் வரலாற்றுத் தன்மை, அவை சூழ் நிலையோடு முழுவதும் ஒத்துள்ளன என் பதைவிட, தொடக்கப் போதனையின் கருத்துக்களைப் பிரமாணிக்கமாகக் காத் துத்தந்துள்ளன என்பதில் அடங்கியிருக் கிறது.

அ.ப. நூலில் காணப்படும் பவுலுக்கும், திருமுகங்களில் காணப்படும் பவுலுக்கு மிடையே போதகத்திலும் வாழ்க்கை நிகழ்ச்சிகளிலும் காணப்படும் வேறுபாடு களை அவ்வளவு சுலபமாய் தீர்த்துவிட முடியாது. அவற்றின் சூழ்நிலையிலும், இறையியல் நோக்கிலும் ஓரளவு தீர்வு காணலாம்.

அ.ப. நூலின் ஆசிரியர் தொடக்கத் திருச்சபையின் வரலாற்றையோ தொடக்கக்கால கிறிஸ்துவக் காப்புரையையோ மட்டும் எழுதவில்லை. புறவினத்தார் அல்லது புறவினக் கிறிஸ்தவ வாசகர்களுக்காகத் தொடக்க கால திருசபையின் தன்மை, வளர்ச்சி, பிரச்சினைகள் ஆகிய வைபற்றி எடுத்துக்காட்டாக விவரிக்கும் ஓர் இறையியல் கட்டுரையை வரைகிறார். இந்நூல் வரலாறும் காப்புரையும் சேர்ந்த படைப்பாகும்.

*11.* மதீப்பீடு: காப்புரையாளர் என்ற அளவில், லூக்கா, திருச்சபை, உரோமை பேரரசின் சட்ட, ஒழுக்க அடிப்படைகளை அழிக்க அச்சுறுத்தும் மற்றொரு கலகம் செய்யும் குழுவன்று என்று தியோபிலுவின் மனதில் பதிய வைக்க முயசிக்கிறார். இந் நோக்கத்திற்காக, யூதத்தலைமைச் சங்கத் தின் முன், பேதுரு, யோவான் ஆகியோ ரின் குற்றமின்மையையும் (அ.ப.*4:23; 5:40*) உரோமை அதிகாரிகள்முன் பவுலின் தூய் மையான வரலாற்றையும் விவரிக்கின் றார். பிலிப்பையில் பவுலை அநியாக மாகச் சிறைவைத்த நீதிபதி அவரிடம் மன்னிப்புக் கேட்கிறார் (*16:39*). கொரிந்தில் உரோமைச் சட்டத்தின் முன் யூதர்களின் குற்றச்சாட்டு பொருத்தமற்றது என்று கல்லியோ கருதினார் (*18:14–16*). எருசலே மில் பவுல் சீசரிடம் தஞ்சம் கோரியிரா விட்டால் பெலிக்சும் பெஸ்துவும் அவரை விடுவித்திருப்பார்கள் (*26:32*).

நற்செய்திகளையும் பவுலின் பெரும் பாலான திருமுகங்களையும் இணைக்கும் பாலமாக அ.ப.நூல் அமைந்துள்ளது என்பதில் அதன் மதீப்பீடும் முக்கியத்து வமும் அடங்கியிருக்கிறது. நற்செய்திகள் உலகில் கிறிஸ்துவின் ஒப்புறவுப் பணியை எடுத்துக்கூறுகின்றன. திருமுகங்கள் கிறிஸ்துவின் உயிர்ப்பு, ஆவி பொழியப் படுதல் ஆகியவற்றுக்குப் பின் நிறுவப்பட்ட திருச்சபையில், பவுல் உழைத்து அல்லது உழைக்க விரும்பிய திருச்சபைகளின் பல் வேறு சூழ்நிலைகளை விவரிக்கின்றன, அந்த் தனிப்பட்ட சபைகளின் தொடக்க காலத்தைச் சேர்ந்த சில முக்கியமான விவரங்களை அ.ப.நூல் விவரிக்கிறது.

**அப்போஸ்தலர் பணி நூல்**
(திருமுறை சேராதது)

இந்நூல் திருமுறை அப்போஸ்தலர் பணியில் விடுபட்ட பல செய்திகளைக் கொடுக்கிறது. பல சிறு செய்திகள் அடங் கிய நூல். முதல்பகுதி மறை உண்மை களை விளக்குவதற்காக எழுதப்பட்டது. பெரும்பாலும் பதிதக் கொள்கைகளைக் கொண்டது. பிற்பகுதி, அயல்நாடுகளில் அப்போஸ்தலர்கள் செய்த வீரச் செயல் களையும், தலைவர்களின் விந்தைமிகு செயல்களையும், வேத சாட்சி மரணத்தின் விரிவான செய்திகளையும் எடுத்துரைக் கின்றது. எழுதப்பட்ட கால வரிசைப்படி, யோவான் பணி, பவுல் பணி, பேதுரு பணி, அந்திரோயா பணி, தோமா பணி என்ற ஐந்து பகுதிகளைக் கொண்டிருக் கிறது.

**அமசாய்** (AMASAI – *சுமையான*)
நாளாகம நூலில் குறிக்கப்படும் லேவியர் பட்டியலில் பலமுறை இப்பெயர் பயன்பட்டுள்ளது.

*1.* லேவியர் வழி மரபுப் பட்டியலில் கெகாத்தியரான எல்கானாவின் மகன் (*1 நாள்.6:25*); பாடகரான ஏமானின் வழி மரபுப் பட்டியலிலும் இவர் தோன்றுகிறார் (*1 நாள் 6:35*).

*2.* நாளாகம ஆசிரியரின்படி தாவீதின் "முப்பது வல்லவர்களின்" தலைவர் (*1 நாள் 12:18*); சிக்கிலாக்கில் தாவீது இருந்த போது பென்யாமின் யூதா குலங்களைச் சேர்ந்த சிலரோடு தாவீதோடு சேர்ந்து கொண்டார் (*1 நாள் 12:16–18*). ஆனால் *2 சாமு 23; 1 நாள் 11*–இல் உள்ள இராணு வப்பட்டியலில் இவருடைய பெயர் காணப் படவில்லை. இவரை அமசாவுடனோ அல்லது அபிசாயுடனோ ஒன்றாகக் முயற்சிகள் செய்யப்பட்டு வருகின்றன. ஆனால் இந்த இருவரும் அமசாயைப் போன்று அவ்வளவு உயர்ந்த பதவியை வகித்ததாகத் தெரியவில்லை.

*3.* தாவீதின் காலத்தில் வாழ்ந்த ஒரு குரு. இறைவனின் பேழை எருசலேமுக்கு எடுத்துச் செல்லப்பட்ட போது அதற்கு முன் எக்காளம் ஊத நியமிக்கப்பட்டவர் (*1 நாள் 15:24*).

4. எசக்கியா அரசன் காலத்தில் கெகாத்தியகுடும்பத்தைச் சேர்ந்த மகாத்தின் தந்தை ( 2 நாள் 29:12). மேலே 1–இல் கூறப்பட்டவரும் இவரும் ஒரே ஆளே என்று காட்ட முயற்சிகள் எடுக்கப்பட்டுள்ளன. ஆனால் இந்த அமசாய் அவருக்குப்பின் நூறு ஆண்டுகளுக்குப் பின் வாழ்ந்தவர்.

**அமசியா** (AMAZIAH யாவே வலிமையுள்ளவர்)

1. யூதாவின் அரசர் (கி.மு.796–767) யோவாசின் மகனும், அரச வாரிசுமாவார்.

இவர் பதவிக்கு வந்தபொழுது இவருக்கு வயது 25. இவர் 29 ஆண்டுகள் ஆண்டதாகச் சொல்லப்படுகிறது (2 அர 14:2; 2 நாள் 25:1). இவருடைய தாய் எருசலேமைச் சேர்ந்த யோயாதின் என்பவள் ஆவாள். (2 அர 14:1; 2 நாள் 25:1–இல் யோயாதான்).

இவர் 29 ஆண்டுகள் ஆண்டார் என்பது தவறு. இதனை விளக்க பல யோசனைகள் கொடுக்கப்பட்டுள்ளன. இதில் ஒன்றும் திருப்திகரமானதாக இல்லை. 2 அர 14:17–இன்படி இவர் 18 அல்லது 10 ஆண்டுகள் ஆட்சி செய்திருக்கலாம் என்று கருதப்படுகின்றது. அப்டியே 29 ஆண்டுகள் ஆண்டிருந்தாலும், சில காலத்திற்குத் தன் மகனோடு கூட்டாச்சி செய்திருக்க வேண்டும்.

இவர் ஆட்சிக்கு வந்த உடன் பல இன்னல்களைச் சந்திக்க வேண்டியிருந்தது. ஏனெனில் இவரது தந்தையைக் கொன்றவர்கள் இன்னும் அரச சேவையில் இருந்தார்கள். இவர் ஆட்சிக்கு வந்ததும் தன் தந்தையைக் கொன்றவர்களைக் கொன்றார்: ஆனால் உப 24:16–இன் கட்டளைப்படி அவர்களுடைய பிள்ளைகளைக் கொல்லவில்லை (2 அர 14:5–6; 2 நாள் 25:3–4).

15 ஆண்டுகளுக்கு முன்பு யோராம் ஆட்சியில் யூதாவிலிருந்து சுதந்திரம் பெற்ற ஏதோமை மறுபடியும் வென்றது இவருடைய ஆட்சியில் குறிப்பிடத்தக்கதாகும் (2 அர 8:20–22). 10,000 இதுமேயர்கள் கொல்லப்பட்ட "உப்புப் பள்ளத்தாக்கும்" அமசியாவால் திடீரென வெல்லப்பட்டு யோக்கிதேல் என்று பெயர் மாற்றம் செய்யப்பட்ட செலா (2 அர 14:7) என்ற இடம் இன்னும் கண்டுபிடிக்கப்படவில்லை. கொல்லப்பட்டதாகக் கொடுக்கப்பட்டிருக்கும் இதுமேயர்களின் எண்ணிக்கை ஒரு முழு எண். பாறைமீது இருந்து தள்ளப்பட்டு கொல்லப்பட்தாக நாளாகமத்தில் கொடுக்கப்ட்டிருக்கும் மற்றுமொரு 10,000 இதுமேயர்கள் தெளிவான சரித்திர அடிப்படைக் கொண்டதன்று (2 நாள் 25:12).

இதுமேயர்களின் மேல்கொண்ட வெற்றியினால் சந்தேகமில்லாமல் இறுமாப்பு கொண்ட அமசியா, இஸ்ராயேல் அரசன் யோவாசுக்கு எதிராக சவால் விட்டார், அதற்குக் காரணம் கொடுக்கப்படவில்லை. ஆனால் பொறாமைதான் இவ்வாறு செய்யத் தூண்டியிருக்கலாம். இதன்விளைவு அவருக்கு அழிவைக் கொண்டு வந்தது (2 அர 14:8–14; 2 நாள் 25:17–24). யூதாவானது இஸ்ராயேலின் சிற்றசராக மாறியது.

தன் தந்தையைப்போல இவரும் அரசவை சதிக்குப் பலியானார். இவர் இலாகிசுக்குத் தப்பி ஓடினார். ஆனால் அங்கு இவர் கொல்லப்பட்டார். இவர் உடல் எருசலேமிற்கு சவப்பவனியில் கொண்டு வரப்பட்டு தாவீதின் நகரில் அடக்கம் செய்ப்பட்டது.

நாளாகம் ஆசிரியர் அமசியாவின் தோல்விக்கு இறையியல் நோக்கம் அளிக்கிறார். அவருடைய ஆட்சித் தொடக்கத்தில் அவர் ஆண்டவர் திருமுன் நேர்மையாய் நடந்தாலும் முழுமனதோடு அவ்வாறு நடக்கவில்லை (2 நாள் 25:2). அவர் ஏதோமியரை முறியடித்துத் திரும்புகையில் அவர்களின் சிலைகளை எருசலேமுக்குக் கொண்டுவந்து தன் தெய்வங்களாக வைத்து அவற்றிற்கு வழிபாடு செய்து தூபம் காட்டினார். இதனால் ஆண்டவர் அவர் மேல் சீற்றம் கொண்டு அவரை அழிக்க முடிவு செய்தார் (25:14–16). யோவாசோடு நடந்தபோரும், அதில் அமசியாவின் தோல்வியும் அவரது சமயப்பதிதத்தின் விளைவுகளாகக் காட்டப்படுகின்றன (25:20).

அமசியா, சாமோனின் வழித்தோன்றல்களில் ஒருவராகக் குறிக்கப்பட்டாலும் (1 நாள் 3:12), இயேசு வழி மரபுப்பட்டியலில் அவர் பெயர் காட்டப்படவில்லை (மத் 1:8).

2. சிமியோன் குலத்தைச் சேர்நதவர். யோசாவின் தந்தை (1 நாள் 4:34)

3. சந்திப்பின் கூடாரப் பேழைமுன் பாடல்கள் பாடும் பொறுப்பிற்கு தாவீது அரசரால் நியமிக்கப்பட்டவர்களில் ஒருவர். அதில் ஒருவரான மெராரியின் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு லேவியர் (1 நாள் 6:31–32.45).

4. இரண்டாம் எரொபயாம் காலத்தில், பெத்தேலிலிருந்த அரச புனித இடத்தில் பணிபுரிந்த ஒரு குரு. ஆமோஸ் அங்கு இறைவாக்கு உரைப்பதைத் தடுக்க இவர் முயற்சி செய்தார். அரசனுக்கு எதிராக ஆமோஸ் சூழ்ச்சி செய்வதாக அரசனுக்குத் தெரிவித்தவர் (ஆமோ 7:10–11). அவர் ஆமோசைப் பெத்தேலிலிருந்து விரட்ட முயற்சித்தபோது, ஆமோஸ் வட அரசுக்கு வரவிருந்த அழிவை அறிவித்தார். அமசியாவுக்கு இழிவான வருங் காலத்தை முன்னறிவித்தார் (7:13–17).

**அமரியா** (AMARIAH – யாவே பேசிவிட்டார், யாவே கூறிவிட்டார்)

பழைய ஏற்பாட்டில் சிறப்பாக பாபிலோனியாவிலிருந்து நாடு திரும்பியவர்கள் பட்டியலில் அடிக்கடி காணப்படும் பெயர்.

1. ஆரோனின் வழித்தோன்றலான மெராயோத்தின் மகன். எலயாசாரின் குடும்பத்தைச் சேர்ந்தவர் (1 நாள் 6:7–52).

2. ஒரு குரு, அசரியாவின் மகன் (1 நாள் 6:11) எஸ்ராவின் மூதாதையர்களில் ஒருவர் (எஸ் 7:3).

3. தாவீது ஆட்சிக்காலத்தில், கெகாத் பிரிவினைச் சேர்ந்த லேவியர். கெபிரோனின் இரண்டாவது மகன் (1 நாள் 23:19;24:23).

4. யோசபாத்து ஆட்சிக்காலத்தில் தலைமைக் குருவானார். "ஆண்டவருக்குக் கொடுத்த எல்லாக் கரியங்களும்" அவர் பொறுப்பில் இருந்தன (2 நாள் 19.11). இவரது தந்தையாரின் பெயர் கொடுக்கப் படவில்லை. 2–இல் குறிக்கப்பட்டவரும் இவரும் ஒரே ஆளாக இருக்கலாம்.

5. எசக்கியாவின் ஆட்சிக்காலத்தில் வாழ்ந்த ஒரு லேவியர் (2 நாள் 31:15). காணிக்கைப் பொருள்களை லேவியர் நகரங்களுக்குப் பகிர்ந்தளிக்க நியமிக்கப் பட்ட ஆறு உதவியாளர்களில் ஒருவர்.

6. பினூயி அல்லது பானியின் புதல்வர்களில் ஒருவர். இவர்கள், எஸ்ராவின் சீர்திருத்த காலத்தில், தாங்கள் மணந்திருந்த புற இன மனைவியரை அனப்பி விடக் கட்டளையிடப்பட்டனர் (எஸ் 10:42).

7. பாவிலோனுக்கு நாடு கடத்தப் பட்டுத் திரும்பியபின், நெகமியாவின் தலைமையில் உடன்படிக்கையைப் புதுப் பித்தபோது கையொப்பமிட்ட ஒரு குரு (நெக 10:3). ஒருவேளை கீழே வரும் 9–இல் குறிக்கப்படுபவரும் இவரும் ஒரே ஆளாக இருக்கலாம்.

8. பாபிலோனுக்கு யூதர்கள் நாடு கடத் தப்பட்டபோது எருசலேமிலேயே தங்க முன்வந்தவர்களில் ஒருவர், யூதா குலத் தையும், பேரேசு குடும்பத்தையும் சேர்ந்த வர் (நெக 11:4).

9. செருபாபேலோடு பாபிலோனிலிருந்து திரும்பி வந்த ஒரு குரு (நெக. 12:2). யோவாக்கிம் பெரிய குருவாக இருந்த போது குருக்கள் குடும்பதைச் சேர்ந்தவர் (12:13).

10. எசக்கியாவின் மகனும் இறைவாக்கினர் செப்பனியாவின்கொள்ளுப் பாட்டனுமாவார் (செப் 1:1).

**அமர்னா கடிதங்கள்** (AMARNA LETTERS)

நைல் நதியின் கிழக்குக் கரையில் கெய்ரோவுக்குத் தெற்கில் 320 கி.மீ. தொலைவிலுள்ளது தேல்–எல்–அமர்னா என்ற இடம். இது அக்கெனத்தோன் பார்வோனின் தலைநகர் இருந்த இடமாகும். இங்கு கி.பி.1887–இல் 379 ஆப்பு எழுத்து வடிவ களிமண் ஏடுகள் கண்டுபிடிக்கப் பட்டன. மேலும் 200 ஏடுகள் கண்டு பிடிக்கப்பட்டவுடன் அழிக்கப்பட்டு விட்டன. இப்போது இவை பல பொருட் காட்சியகங்களில் பாதுகாக்கப்பட்டு வரு

கின்றன. இருநூறுக்கும் மேற்பட்டவை பெர்லின் பொருட்காட்சியகத்திலும் 80–க்கும் மேற்பட்டவை பிரிட்டிஷ் பொருட் காட்சியகத்திலும் மற்றவை கெய்ரோவி லும் அக்ஸ்போர்ட் பொருட்காட்சியகத் திலும் உள்ளன.

ஏடுகள் அக்காதிய மொழியின் ஒரு பிரிவு மொழியான ஆப்பு எழுத்து பாபி லோனிய மொழியில் அக்கால அரசியல் தூது நடையில் எழுதப்பட்டுள்ளன. இம் மொழிதான் அக்கால மேற்காசியாவில் தூது மொழியாகும். ஏறக்குறைய 350 ஏடுகள் கி.மு.1402–1347–க்கு இடையில் ஆட்சி செய்த மூன்றாம் அமென்கோ–தேப், நான்காம் அமென்கோதேப் என்ற பாரவோன்களுக்கும், அவர்களுக்குக் கீழ் சிற்றரசுகளாக இருந்த பாபிலோன், அசீரியா, மித்தானி, காத்தி குறிப்பாக சீரியா, பாலஸ்தீனம் ஆகியவற்றிலிருந்த நகர நாடுகள் ஆகிய பகுதிகளை ஆண்ட வர்களுக்குமிடையே நடந்த கடிதப் போக்குவரத்துக்களைக் கொண்டுள்ளன. இவை, அரசியல், போர், பொருளாதாரக் காரியங்களைப் பற்றியவை. ஆகையால் கி.மு.2–ஆம் ஆயிரமாண்டின் பிற்பகுதி யில் விவிலிய நாடுகள் பற்றிய இடம், வரலாறு சம்பந்தப்பட்ட தொல்பொருள் கண்டுபிடிப்புகளில் இவ்வேடுகள் முதல் இடம் பெறுகின்றன. எகிப்து சிறிய ஆசியாவில் இத்திய அரசு, மேல் குபூர் பகுதியில் மித்தானின்மேல் கூரியர்கள் கொண்டிருந்த கட்டுப்பாடு, அசீரியா அரசன் எழுச்சி, பாபிலோனியாவில் காசியரது ஆதிக்கம் ஆகிய அரசியல் நிலைகளைப் புரிந்துகொள்ள இவ்வேடு கள் மிக முக்கியமானவையாகும்.

இக்கடிதங்களின்படி அக்கெனத் தோன் உள்நாட்டுக் காரியங்களில் ஈடு பட்டிருந்ததால் பேரரசின் காரியங்களில் அவ்வளவு கவனம் செலுத்தவில்லை. அதனால் பாலஸ்தீனத்தில் குழப்ப நிலை நிலவியது. நகர அரசுகளின் சிற்றரசர் களிடையே போராட்டமும், உள்நாட்டுக் குழப்பங்களும் கிளர்ச்சிகளும் எழுந்தன. சிமிர்னாவுக்கு வடக்கிலுள்ள கெபால் (பிப்லோஸ்) பகுதியை ஆண்ட ரிப்–அத்தி மட்டும் ஏறக்குறைய 70 கடிதங்கள் எழுதி யுள்ளார். அவற்றில் எகிப்தின்பால் தனக் குள்ள பிரமாணிக்கத்தை எடுத்துக் கூறு கிறார். அண்டை நாடான அமுரூ பகுதி யின்" அரசனான அப்து–அசிர்தாவும் அவரது மகனுமான அசீரும் தூண்டி விட்ட வளர்ச்சியடைந்து வந்த கிளர்ச்சி யை அடக்க போர்உதவி கேட்கிறார். எகிப்து அப்து–அசிர்தாவுக்கு எதிராக ஓரளவு உதவி அளித்தது. அசீரு காலத் தில் கிளர்ச்சி மீண்டும் தலை தூக்கியது. அவர் கெபாலையும் எகிப்திய மாவட்டத் தலைநகரான சுமேரையும் கைப்பற்றி னார். பிறகு எகிப்துக்குத் தனக்குள்ள பிரமாணிக்கத்தை எடுத்துக்கூறினார். ஆனால் பின்பு இத்தியர்களோடு கூட்டுச் சேர்ந்தார். அதே சமயம் செக்கேம் அரசன் லபாயு எகிப்துக்கு எதிராகக் கிளர்ச்சி செய்து, கபீரூகளின் உதவியுடன் கெசேர், மெகிதோ ஆகிய முக்கிய நகரங் களையும் தோத்தான், இஸ்ராயேல் பள்ளத்தாக்கிலும் சாரோன் சமவெளியிலு முள்ள நகரங்களையும் கைப்பற்றினார். ஒரு கடிதத்தில் ரிப்–ஆத்தீ பிப்லோஸ் மற்ற இரு நகரங்களும் தவிர மற்ற நகரங்கள் எல்லாம் (சா) காஸ் மக்களிடம் வீழ்ந்துவிட்டன என்று எழுதுகிறார். பிறகு அவற்றையும் இழந்து, திருமணத்தால் உறவினரான பெய்ரூட்டின் அரசனான அம்முநிரோவிடம் ஓடி அடைக்கலம் தேட வேண்டியிருந்தது. இப்படி அக்கால மேற்காசியா பற்றிய பல விவரங்கள் இந்த ஏடுகளில் காணப்படுகின்றன. அக் கெனத்தோனுக்குப் பிறகு பாலஸ்தீனத் தில் எகிப்திய அதிகாரம் எவ்வளவு எஞ்சி யது என்பது பற்றி அதிகம் அறிவதற்கில் லை. இப்பகுதியில் நடந்த உள்நாட்டுப் போர்கள் தடுக்கப்படாததால், அரசியல் குழப்பம் மிகுந்திருக்க வேண்டும். முத லாம் சேத்தி (1318–1249) 2–ஆம் இரமா சேசு (1299–1232) ஆகியவர்கள் ஆட்சிக்கு வரும் வரை இந்நிலையே நிலவியது.

பழைய ஏற்பாட்டு ஆய்வுகளைப் பொருத்த மட்டும் கபீரூகளின் பாகம் என்பதுதான் நமக்கு முக்கியம் வாய்ந் தது. இவர்கள் யார்? பெயரளவுக்கு எபி ரேயர்களோடு தொடர்புபடுத்தபடு கின்றனர். ஆனால் இப்பெயர் ஒரு இனத்

தைச் குறிப்பதைவிட, ஒரு அரசியல் இயக்கத்தைக் குறிக்கிறது எனலாம். இவர்கள் பெரும்பாலும் நிலமற்ற நாடோடிகள். விவசாய ஊழியர்களாக வும் போர் வீரர்களாகவும் பிழைப்புத் தேடியவர்கள். தனிப்பட்ட போர் குழுக் கள், ஒரு நகரத்தின் மக்கள் முழுவதும் ஏற்கெனவே இருந்த சார்புடைமைக்கு எதிராக எழுந்து, சலுகைகளையும் கடமை களையும் கைவிட்டுவிட்டு 'முறையற்ற' போர், பொருளாதாரச் சக்திகளை அடிப் படையாகக்கொண்ட புதிய அமைப்புகளை அமைந்தனர். இத்தகைய கபீரு செயல் களைத்தான் பாலஸ்தீனத்தைக் கைப்பற் றிய இஸ்ராயேலர் வரலாற்றோடு அறிஞர் கள் தொடர்புபடுத்துகின்றனர் (காண்க இபிதாகு நீதி *10:17–11:11*; நாடு விட்டு விரட்டப்பட்ட தாவீதின் செயல்கள் *1 சாமு 21–24*: பார்க்க. கபீரு, அபிரு).

***அமலேக்கியர்*** (AMALEKITES – *அமலேக்கின் வழித்தோன்றல்கள்)*

ஏசாவின் சந்ததியினர், குறிப்பாக ஏசாவின் மகன் எலிப்பாசுக்கும் அவர் வைப்பாட்டி திம்னாவுக்கும் பிறந்த வழித் தோன்றல்கள் *(ஆதி 36:12; 1 நாள் 1:36)* எசாவின் பிறப்புக்கு முன்பே, அமலேக் கியர் இருந்தனர் என்பதற்கு ஆதி *14:7* சான்று கூறுவதால், ஏசாவின் சந்ததியி னரில் சிலர் பிற்காலத்தில் அமலேக்கிய ருடன் சேர்ந்திருக்கலாம். இப்பகுதி, பிற் காலத்தில் அமலேக்கியர்கள் குடியேறிய நாட்டைப் பாழாக்கினர் என்று உணர்த் தலாம்.

பாலையில் நாடோடியாக வாழ்ந்த அமலேக்கியர், காதேசைச் சுற்றியும் *(ஆதி 14:7)* பிற்காலத்தில் யூதாவின் எல்லைக்குத் தெற்கிலும் (நெகேபு *எண்: 13:29*) வாழந்து வந்தனர். சவுலின் ஆட்சிக்காலத்தில் கெவிலாவுக்கும் எகிப்துக்குக் கிழக்கி லுள்ள சூருக்கும் இடையிலுள்ள பகுதியில் வாழந்தனர் *(1 சாமு 15:7; 27:8)*. ஒரு தடவையாக காதேஸ்பார்னேயாவுக்கு வடக்கிலுள்ள நகரங்களைக் கொள்ளை யிட்டனர் (சிக்கிலாகு *1 சாமு 30:1*). எப்பிரா யீம் நாட்டின் ஒரு பகுதியையும் இவர்கள் தங்களுடையதாகக் கொண்டிருந்திருக்க லாம் (நீதி *12:15*).

இஸ்ராயேலர் பாலையில் பயணம் செய்தபோது இரபிதிம் என்ற இடத்தில் இஸ்ராயேலர்களுக்கும், அமலேக்கியர் களுக்கும் முதல் சந்திப்பு நிகழ்ந்தது. அப் போது நடந்த போரில், இஸ்ராயேலின் பாளையத்தின் படைவீரர்கள் களைத்து நின்று கொண்டிருந்ததைக் கண்டு, அம லேக்கியர் அவர்களைக்கொன்று வீழ்த்தி னர் *(உப 25:18)*. இருப்பினும் இஸ்ராயேலர் அமலேக்கியரைத் தோற்கடித்தனர். ஏனெனில் ஆரோன், கூர் ஆகியோரால் தாங்கிக்கொள்ளப்பட்டு மோசே ஆண்டவ ரது கோலை உய்த்திப் பிடித்திருந்தார் *(யாத் 17:9–13)*. இந்த வெற்றிகளுக்குப் பின் இறைவன் தன் ஊழியன் மோசேயை இந்த நிகழ்ச்சயையும், காலப்போக்கில் அமலேக்கியர் முழுவதும் அழிக்கப்படு வது பற்றிய முன்னறிவிப்பையும் எழுதி வைக்கும்படி பணித்தார் *(யாத் 17:14–15; எண் 20:20)*.

இதற்குப்பின் இரு இனத்தவர்களுக் கும் சுமுகமான உறவு ஒரு போதும் இருந்ததில்லை. அமலேக்கியர் தந்திர மாகத் திடீரென்று தாக்கியதை இஸ்ரா யேல் எப்போதும் நினைவில் கொண்டி ருந்தது *(உப.25:17; 1 சாமு 15:2)*. மேலும் அமலேக்கியர்கள் இஸ்ராயேல் மேல் சில போர்களில் வெற்றியும் கொண்டனர். ஏகூது, கிதயோன் நடுவர்களாக இருந்த காலத்தில், இஸ்ராயேலர் இறைவனுக்குப் பிரமாணிக்கம் தவறியபோது, அவர்கள் அமலேக்கியரால் துன்புறுத்தப்பட்டனர். முதலில் மோவாபு மன்னன் எகிலோனின் கூட்டாளியாகவும் (நீதி *3:13)* பின்பு மிதி யானியருக்குக் கூட்டாளியாகவும் *(6:3.33. 10:12)* அமலேக்கியர் இஸ்ராயேலரைத் துன்புறுத்தினர். ஒரு சமயம் எப்பிராயி மின் ஒரு பகுதியையும் தங்களுடைய தாக்கிக் கொண்டிருக்கலாம் *(12:15)*.

அமலேக்கியரை முழுவதும் அழித்து விடும்படி சவுல் இறைவனால் கட்டளை யிடப்பட்டார். ஆனால் அதை ஓரளவே நிறைவேற்றினார். ஒரு போரில் வெற்றிக் குப்பின் அமலேக்கியர் அரசன் அகாக் கையும், ஆட்டு மாட்டு மந்தைகளில் நல்ல வற்றையும் தவிர, மற்றவற்றையெல்லாம் அழித்தார் *(1 சாமு 15:9)*. இக்குற்றத்திற்

காக, அரச பதவியிலிருந்து இறைவனால் நீக்கப்பட்டார். இறைவாக்கினர் சாமுவேல் அகாக்கைத் துண்டுதுண்டாய் வெட்டிப்போட்டார் (15:11.33). பெலிஸ்தியரால் காயப்பட்டபோது, சவுல் தன்னைக் கொன்றுவிடும்படி ஓர் அமலேக்கியரைக் கட்டளையிட்டார். அவன் மறுத்துவிட்டான். இது கவனிக்கத் தக்கது (2 சாமு. 1:8–10; ஆனால் காண்க 1 சாமு 31:4–5).

காதுவின் அரசன் ஆக்கீசோடு இருந்தபோது தாவீது அமலேக்கியரைக் கொள்ளையடித்தார் (1 சாமு 27.8–4). ஆனால் அவர்களை முழுவதும் அழிக்க முடியவில்லை. பெலிஸ்தியச் சேனையில் பங்கெடுப்பதிலிருந்து நிராகரிக்கப்பட்டு தாவீது சிக்கிலாகுவிற்குத் திரும்பிய போது, அமலேக்கியர் அந்நகரை எரித்து, அவரது இரு மனைவியரையும் கைது செய்து சென்றனர் என்று அறிந்தார் (30:1–2). ஆண்டவருடைய ஆசிரோடு அவர் கொள்ளைக் கூட்டத்தாரைத் துரத்திச் சென்று, பாலையில் விட்டுச்செல்லப்பட்ட ஒரு அமலேக்கிய அடிமையின் உதவியுடன், அவர்கள் இருந்த அந்த இடத்தைக் கண்டுபிடித்த அவர்கள் அனைவரையும் கொன்று போட்டார். ஆனால் 400 இளைஞர்கள், ஒட்டகத்தில் மேல் தப்பி விட்டனர் (30:7–17). இந்த வெற்றி தாவீது தான் இழந்த உடைமைகளையும், அகினோவாம், அபிகாயில் என்ற இரு மனைவியரையும் திரும்பப் பெற உதவியது.

அரசாட்சி நிறுவப்பட்டபின், இஸ்ராயேல் அமலேக்கியரைக் கட்டுப்படுத்த முடிந்தது (காண்க 2 சாமு 8:11–12). அமலேக்கியர் பற்றிய விவிலியத்தின் கடைசிக் குறிப்பு 1 நாள் 4:42–43 –இல் வருகிறது. இதன்படி சீமோன் குலத்தைச் சேர்ந்த 500 பேர் சேயீர் மலையில் (ஏதோம்) அமலேக்கியரில் மீதியாய் எஞ்சியிருந்தவர்களைக்கொன்றுவிட்டு, அங்கே குடியேறினர். இவ்வாறு அமலேக்கியர் வரலாறு எங்கு தொடங்கியதோ அங்கே அதாவது ஏதோம் நாட்டிலேயே முடிந்தது. பழைய ஏற்பாட்டுக்குப்புறம்பே இவர்களைப் பற்றிய நம்பத்தகுந்த விவரிப்புகள் கிடைக்கவில்லை. தொல்பொருள் புதைபொருள் ஆய்வுகள் இவர்களைப் பற்றி ஏதும் தரவில்லை.

**அமலேக்கு** (AMALEK – பள்ளத்தாக்கில் வாழ்பவர்) –ஆள்

1. எலிப்பாசுக்கும் அவர் வைப்பாட்டி திம்னாவுக்கும் பிறந்தவர். ஏசாவின் பேரன் (ஆதி 36:12; 1 நாள் 1:36) அமலேக்கியரின் குல மூதாதையர். எலிப்பாசின் ஓர் இனத்திற்குத் தலைவர் என்று குறிக்கப்படுகிறார் (ஆதி 36:16).

2. அமலேக்கியருக்கு மற்றொரு பெயர்.

**அமலேக்கு** (AMALEK) – இடம்

எப்பிராயிம் நாட்டின் ஒரு பகுதியாக இருக்கலாம் (யோசு 5:14). சிலர் சில திருத்தங்களின் அடிப்படையில், இதை வெறுமனே பள்ளத்தாக்கு என்று மொழி பெயர்ப்பர்.

**அமாம்** (AMAM – ஒன்று கூடும் இடம்)

யூதாவிற்குத் தென்மேற்குத் திசையிலுள்ள செப்பேலாவிலுள்ள ஒரு நகரம் (யோசு 15:26). இது இருந்த இடம் தெரியவில்லை. ஒரு வேளை இது பேயேர்–செபாவுக்கு அருகில் இருந்திருக்கலாம்.

**அமாசா** (AMASA – சுமை)

1. தாவீதின் மருமகன். இவரது தாய் தாவீதின் ஒன்றுவிட்ட தங்கையும், செரூயாவின் சகோதரியுமான அபிகாயில் ஆவாள். இவருடைய தந்தை இதிரா (2 சாமு 17:25) அல்லது எத்தேர் (1 நாள் 2:17) என்று அழைக்கப்பட்ட இசுமலேயர் ஆவார். இந்த அமாசா அமசாய்–2–இல் குறிக்கப்படுபவராக இருக்கலாம்.

தாவீதின் அரசுக்கு எதிராக அபிசலோம் கிளர்ச்சி செய்த தொடக்கத்தில் அபிசலோம் தன் அத்தை மகன் அமாசாவை தனது படைக்குத் தலைவனாக நியமித்தார் (2 சாமு 17:25). தாவீதின் மற்றொரு மருமகனும் அபிசலோமின் மற்றொரு அத்தை மகனுமான யோவாபு பதவி நீக்கப்பட்ட தாவீது அரசனுக்குப் பிரமாணிக்கமாய் இருந்தார். பின்பு நடந்த போரில் தாவீதின் அதிக ஆற்றல் வாய்ந்த படை அபிசலோமின் படையை வென்றது. ஆனால், யோவாபு, அரசனுடைய தெளிவான கட்டளைக்கு மாறாக அபிசலோமைக் கொன்றார். இதனால்

சினமுற்ற அரசர் தனது படைக்குத் தலைவராக அமாசாவை நியமித்தார். இவ்வாறு செய்து, யூதா குலத்திலிருந்த பல பிரிவுகளையும் மீண்டும் ஒன்றிக்கச் செய்ய ஒரு நல்லெண்ணச் செயலாகப் பயன்படுத்தினார் (19:11–15). யோவாபு பின் கிளர்ச்சியை அடக்கிய முறையும், குறிப்பாக அரசனது மகன் அபிசலோமைக் கொன்ற விதமும், அரசருக்கு வெறுப்பளித்தன என்பதை இச்செயல் தெளிவாகக் காட்டியது.

அபிசலோமின் வெற்றிபெறாத கிளர்ச்சிக்கப் பின் எருசலேமுக்குத் திரும்பிய அரசர் மற்றொரு கிளர்ச்சியைச் சந்திக்க வேண்டியிருந்தது. இச்சமயம் பென்யாமின் குலத்தைச் சேர்ந்த செபா என்பவன் இஸ்ராயேலில் பெரும்பாலோர் அரசரைக் கைவிடத் தூண்டினார். அவர்களும் தாவீதைக் கைவிட்டு செபாவைப் பின்பற்றினர் (20:1–2). தாவீது அமாசாவை அழைத்து, யூதாவின் வீரர்களை ஒன்று சேர்த்து மூன்று நாட்களில் தன்னிடம் வருமாறு கட்டளையிட்டார். அபிசாய் யோவாபுடன், அமாசாவை கிபயோனில் உள்ள பெரும் பாறை அருகில் சந்தித்தபோது, யோவாபு அவரை நம்பிக்கைத் துரோகமாய் கொன்று போட்டார் (20:5–10). படையின் தளபதியாக அமாசா நியமிக்கப்பட்டதைக் கண்டு யோவாபு பொறாமைப் பட்டிருக்கவேண்டும். மேலும் அரசருக்குத் தான் காட்டிய பிரமாணிக்க மிக்க சேவையை அரசர் புறக்கணித்ததை யோவாபு வெறுத்திருக்க வேண்டும். பலர் முன்னிலையில் கொடிய வேதனையோடு அமாசா இறந்தாலும் அவருக்கு உதவி செய்ய ஒருவரும்முன் வரவில்லை; கடைசியில் வீரர்களைத் தாமதிக்கச் செய்யும் விதத்தில் வழியில் கிடந்த அமாசாவின் உடலை ஒருவன் இழுத்து வயலில் கிடத்தி, ஒரு துணியால் அதை மூடினான். அதன்பின், யூதா மக்கள் செபாவைத் துரத்திச் சென்றனர் (20:11–13).

தாவீது அரசன் தனது முதிர்ந்த வயதிலும் இந்நிகழ்ச்சியை மறக்கவில்லை இறக்குமுன் அரசர் தாவீது, சாலமோனுக்கு அமாசா, அபினேர், ஆகியோர் கொலை செய்யப்பட்டதை நினைவுபடுத்தினார் (1 அர 2:5). அதோனியா இரண்டாவது கிளர்ச்சி செய்தபோது, புதிய அரசரான சாலமோன், "அவன் தன்னைவிட நல்லவர்களும் நீதிமான்களுமான அபினேர், அமாசா ஆகிய இருவரையும் என் தந்தை தாவீதுக்குத் தெரியாமல் வாளால் கொன்ற இரத்தப்பழியை ஆண்டவர் அவன் தலைமேல் திரும்பச் செய்வாராக" என்று கூறி (2:32) யோவாபுவைக் கொன்று போடக் கட்டளையிட்டார்.

2. எப்பிராயிமைச் சேர்ந்த கத்லாயின் மகன். பெக்கா, ஆகாஸ் ஆகியோரோடு செய்தபோரில் பிடிப்பட்ட யூதாவைச் சேர்ந்த கைதிகள் சமாரியாவுக்குள் கொண்டு வரப்படுவதை, அறநெறிஅடிப் படையில் எதிர்த்த எப்பிராயிம் தலைவர்களுள் ஒருவர். இவர்கள் யூதாக் கைதிகளுக்கு இரக்கம் காட்டி, அவர்கள் நாட்டிற்குச் செல்ல உதவினர் (2 நாள் 28:12–15).

**அமாசாய்** (AMASHSAI – *சுமத்தல், தாங்குதல்)*

பாபிலோனியவில் இருந்து நாடு திரும்பிய பின்பு நெகமியா காலத்தில் எருசலேமில் வாழ்ந்த ஒரு குரு; ஆசரேலின் மகன் (நெக 11:13). இவரும் மாசாயும் ஒருவரே என்று கருதப்படுகின்றனர் (1 நாள் 9:12).

**அமாசியா** (AMASIAH – *யாவே தாங்கிக்கொண்டார்)*

யூதா கோத்திரத்தைச் சேர்ந்த ஆண்டவருக்குத் தன்னையே அர்ப்பணித்திருந்த சிக்ரியின் மகன். யோசபாத்தின் படையில் இருநூறு ஆயிரம் வீரர்களுக்குத் தளபதி. யாவேயின் பிரமாணிக்கமுள்ள ஊழியன் (2 நாள் 17:16). நம்பிக்கைக்குரிய ஊழியன்.

**அமாது** (AMAD – *நிலைத்திருப்பது)*

ஆசேரின் பகுதியில் உள்ள ஒரு எல்லை நகரம். கர்மேல் மலைக்கு அருகிலுள்ளது (யோசு 19:26). இது இருந்த இடம் தெரியவில்லை.

**அமாவாசை**

புதியதான ஒன்று; மாதம்; மாதத்தின் முதல் நாள் (எண் 10:10; 28:11) அமாவாசை (யூதி 8:6) அதாவது மாதத்தின் முதல் நாள் அன்றுதான் திருவிழாக்கள் ஆரம்பமாகும்

இஸ்ராயேலின் சமுதாய, சமய திரு விழாக்கள் பொதுக்காரியங்கள் எல்லாம் நிலாவின் குறிப்பேட்டைப் பொறுத்துதான் அமைகின்றன. பிற இனத்தவர் சூரியனை வைத்து ஆண்டை கணித்தபோது, இஸ்ரா யேலர் சந்திரனை வைத்துக் கணித்தனர். யாத்.12:2--இல் அமாவாசையே இஸ்ரா யேல் மக்களுக்கு மாதத்தின் தொடக்கமா கும். கடந்து போகுதல் என்ற பாஸ்கா திருவிழா, கூடாரத் திருவிழா அனைத் துமே அவை வரும் மாதங்களின் அமா வாசை தோன்றுவதைப் பொறுத்தே அமை கின்றன. ஐம்பதாம் நாள் திருவிழா பாஸ்கா திருவிழாவைப் பொறுத்துமா றும். இன்றும் கிறிஸ்து உயிர்ப்புத் திரு விழாவும், ஐம்பதாம் நாள் திருவிழாவும் இதே முறையில் தான் பின்பற்றப்படு கின்றன. இதற்கு ஒரே விதிவிலக்கு ஓய்வு நாள் அனுசரிப்பாகும். ஓய்வு நாள் என்பது வாரத்தின் ஒவ்வொரு ஏழாம் நாளிலும் கொண்டாடப்பட்டது.

எவ்வாறு ஓய்வு நாள் கடைப்பிடிக்கப் பட்டதோ அவ்வாறே அமாவாசையும் கடைப்பிடிக்கப்பட்டது. அன்று வேலையி லிருந்து ஓய்வு எடுக்கப்பட்டது. "நாம் தானியங்களை விற்பதற்கு அமாவாசை எப்பொழுது முடியும்" (ஆமோ 8:5); அமா வாசை என்பது ஒரு மகிழ்ச்சி கரமான நாளாகும் (ஓசே 2:11). அமாவாசை அன்று நோன்பும் தவமும் நீக்கப்பட்டிருக்கும் (யூதி 8:6). அன்று ஆலய வழிபாட்டில் சிறப்பான பலிகள் ஒப்புக் கொடுக்கப்பட வேண்டும். அன்று இவை ஓய்வு நாளை விட அதிகமாக இருக்கவேண்டும். சடங்கு கள் எக்காளம் ஊதி அறிவிக்கப்படும் (எண் 10:10; சங் 81:3). விழா உணவு உண்ணுவது இந்த அனுசரிப்பின் ஒரு பகுதியாகக் கருதப்பட்டது. சில மாதங் களில் வரும் அமாவாசை தனிச் சிறப் பான விதத்தில் புனிதமான நாளாகக் கருதப்பட்டது (காண்க 1 சாமு 20:6). அதிலும் ஏழாவது மாதத்தில் கொண் டாடப்படும் அமாவாசை மிகவும் முக்கிய மானது (லேவி 23:24; நெக 8:2). ஏனென் றால் இதுதான் ஒரு காலத்தில் ஆண்டின் தொடக்கமாக இருந்திருக்கலாம். அமா வாசை இறைவாக்கினர்களிடமிருந்து குறிகள் கேட்பதற்கு ஏற்ற நல்ல நாளாகக் கருதப்பட்டது (2 அர 4:23). ஆண்டவரின் காட்சிகள் முதல் மாதத்தின் முதல் நாளில் தமக்கு அருளப்பட்டதாக எசக்கியேல் இறைவாக்கினர் எழுதி வைத் திருக்கின்றார் (26:1; 29:17; 31:1; 32:1; காண்க ஏச 47:13; ஆகாய்1:1)

யூதரின் அடிமை வாழ்வுக்குப் பிறகு அமாவாசைத் திருவிழாவின் முக்கியத் துவம் அதிகரிக்கப்பட்டதாகத் தோன்று கிறது. திருச்சட்ட நூலை குரு எஸ்ரா ஏழாம் மாதம் முதல் நாள் அதாவது அமாவாசையன்று கொண்டு வந்து படித் தார் (நெக 8:2).

ஓய்வு நாள்தோறும் மனிதர் அனை வரும் வந்து இறைவன் திருமுன் வழிபாடு செய்வது பற்றிய இறுதிக்காலம் பற்றிய கூற்றுக்களில் அமாவாசை ஓய்வு நா ளோடிணைக்கப்படுகிறது. (ஏச 16:22–23).

அமாவாசை அறிவிப்புக்கு வேண்டிய எல்லா வரலாற்று யூதச் சடங்குகளும் முந்திய ஓய்வு நாளன்று செய்யப்பட்டன என்பதும், அதோடு இறுதிக்கால பொரு ளுடைய செபமும் சேர்க்கப்பட்டது என்ப தும், பொருள் பொதிந்தாகும். இந்த அனுசரிப்பிற்குக் காரணம், இறைவன் இஸ்ராயேலோடு செய்துகொண்ட முறிக்க முடியாத உடன்படிக்கையின் அடையா ளம் ஆகவும் காலத்தைக் கணிக்கவும் இறைவன் சந்திரனைப் படைத்தார் என்பதே (சங் 109:19; சீரா 43:6–8). உடன் படிக்கைச் சூழ்நிலையில் இந்த இறுதிக் காலப் பொருள் இறைவனே காலங் களைப் படைப்பவர் என்பதோடு இணைக் கப்பட்டுள்ளது என்பது அமாவாசை ஆசீர் களின் வாய்ப்பாட்டில் எடுத்துக் கூறப் படுகிறது "மாதங்களைப் புதுப்பிப்பவ ரான ஆண்டவர் போற்றப்படுவாராக". அமாவாசை அனுசரிப்பு கிறிஸ்துவத் திருச்சபையில் தொடர்பில்லையானாலும் அதற்கு யூதத்துவத்தில் அதன் பலவற்றை உள்ளடக்கிய பொருளை உணராததல்ல (கொலோ 2:16–17; காண்க 1:16–17).

ஒரு நிலையான கால அட்டவணை யால் அமாவாசையின் நாள் குறிக்கப்படு முன், அமாவாசையால் உண்மையிலேயே

காண்பதைக்கொண்டு நிர்ணயிக்கப் பட்டது. இவ்வாறு ஆலய அழிவுக்குப் பின் இந்நாளைக் குறிப்பது, ராபிகளின் உயர் சங்கத்தின் அலுவலாகும். அந்நாளுக் குரிய சிறப்பான தோரா வாசகமாகிய எண் *28:1–15*; சங் 109 வாசிக்கப்பட்டது. அந்நாளின் மகிழ்ச்சிமிக்க தன்மை அல் லேல் சங்கீதத் தொகுப்பைப் பாடுவதால் சுட்டிக்காட்டப்பட்டது. 16–ஆம் நூற்றாண்டி லிருந்து, அமாவாசைக்கு முந்தியநாள் ஒரு நோன்பு நாளாக அனுசரிக்கப்படு கிறது. இது ஒருசிறிய "யோம்இப்பூர்" என்றழைக்கப்படுகிறது.

**அமானா** (AMANA – பற்றுறுதியான, நிலையான)

லெபானோன்னுக்கு எதிரேயுள்ள மலைத் தொடரிலுள்ள ஒரு கிராமம் (உ.ச.4:8). அநேகமாக அமானா அல்லது அபானா ஆறு பாயும் பள்ளத்தாக்கிற்குத் தெற்கேயுள்ளது. இது லெபானோன்னுக்கு மற்றொரு பெயராக இருக்கலாம் (உ.ச.4:8).

**அமித்தர்ய** (AMITTAI – நம்பிக்கைக்குரிய, உண்மையான)

செபுலோன் இனத்தின் காத்து–கேப்பர் என்ற ஊரைச் சேர்ந்தவர். இறை வாக்கினர் யோனாவின் தந்தை (2 அர *14:25*; யோனா *1::1*).

**அமைதி, சமாதானம்** (PEACE)

மனிதன் அமைதியைத்தேடி நாளெல் லாம் அலைகிறான். ஆனால் அதன் தன் மையையும் அதனை அடைய அவன் பின் பற்றும் வழிகள் முறை ஆண்டவருடைய வழிகள் அல்ல என்பதை அறியாதது போகிறான். எனவே, மனிதன் உண்மைச் சாதானம் என்ன என்பதையும், இயேசுவில் அந்தக் கொடை எப்படிக் கிடைத்தது என்பதையும் புனித வரலாற்றி லிருந்து அறிந்து செயல்படவேண்டும். அமைதி முழுமை நலமும் பாதுகாப்பும் அடங்கிய நிலையாகும். இதற்குப் பல பருமன் உண்டு. இது உடல்நலத்தையோ, செல்வச் செழிப்பையோ, பாதுகாப் பையோ ஆன்மீக நிறைவுடைமையையோ சார்ந்ததாக இருக்கலாம். இது ஒரு தனி நபரையோ அல்லது குழுவினரையோ பற்றிக் கூறப்படலாம்.

I. பழைய ஏற்பாடு :-

*1.* இலௌகீக அமைதி:- இலௌகீக அமைதி, சமய அமைதி என்று வேறுபடுத் துவது நமது ஆய்வுக்காக மட்டுமே. பழைய ஏற்பாட்டில் எவ்வகை அமைதியும் இறைவனால் நிர்ணயிக்கப்பட்டு அளிக் கப்படும் முழுமை நலமாகும். இங்கே இலௌகீக அமைதி என்பது, மனிதர் ளிடையே அவர்களுடைய சமூக உறவிலும் தனிப்பட்டோர் வாழ்விலும் காணப்படும் முழுமை நலத்தைக் குறிக்கிறது.

அ.தனிப்பட்டோர் வாழ்வில் அமைதி:– இது முதன்மையாக உடல் நலத்திலும் நல் வாழ்விலும் அடங்கியுள்ளது. இது இறைவ னது ஆதரவான வாக்குறுதியாலோ நம் நலம்தேடும் ஒருவராலோ அளிக்கப்படும் பாதுகாப்பாகும் (நீதி *18:6*; *13:20*). உடல் நலத்தைத்திரும்பப் பெறுவது அமைதி யைத் திரும்ப பெறுவதாகும் (ஏச *38:17*). போரிலிருந்து நலமே திரும்பியவன் அவனது நலத்தைப் பாதுகாத்துள்ளான், அவன் அமைதியுள்ளவனாக உள்ளான் (யோசு *10:21*; 1 அர *22:17*; 2 நாள் *19:1*; சங் *55:18*). ஆபத்தை எதிர்கொள்ளச் செல்பவ னுக்கு அமைதி கூறப்படுகிறது (யாத் *4:18*; 2 சாமு *15:27*). தனி நபரின் அமைதி அவனது நல்வாழ்வுக்குச் சமமானதாகும். அதில் நலமான துயில் (சங் *4:8*), நீண்ட வாழ்வு (பழ *3:2*), செல்வச் செழிப்பு (சங் *37:37*), நிறைந்த வாழ்வுக்குப் பின் அமைதி யான மரணம் (ஆதி *15:15*; நீதி *6:28*; 2 அர *22:20*; 2 நாள் *34:28*; யோபு *21:13*; எரே *34:5*) ஆகியவை அடங்கும்.

ஆ. சமூக வாழ்வில் அமைதி:- தனி நபரின் வாழ்வில் அமைதி நலத்தையும் பாதுகாப்பையும் குறிப்பதுபோல் நாட்டின் அல்லது குடும்பத்தின் அமைதி அதன் செல்வச் செழிப்பையும் பாதுகாப்பையும் குறிக்கும். அடிக்கடி அமைதி பொருளா தாரச் செழிப்பைக்குறிக்கிறது (1 நாள் *4:40*; *22:9*; சங் *37:11*; *147:14*; ஏச *54: 13*; *16:12*; செக் *8:12*). சிலபகுதிகள் சமூகத்திற்கும் இயற்கைக்குமிடையே நிலவும் ஒருங்கி யைந்த உடன்படிக்கை நிலையை அமைதி என்று விவரிக்கின்றன (லேவி *26:6*; யோபு *5:23–24*; எச *34:25*; சங் *72:3*). அரசியல் பாது காப்பும் அமைதியே (2 அர *20:19*; ஏச *32:*

18; ஆகா 2:9). ஆனால் இது சமூகத்தில் நுழையும் "நோய்களாலும்" "காயங்களாலும் கெடுகிறது (எரே 6:4; 8:11; 14:19; எச 13:10.16). இவற்றை யாவே மட்டுமே குணமாக்க முடியும் (ஏச 57:19; எரே 33:6). அமைதி உடன்படிக்கைகளை ஏற்படுத்திக் கொள்ளும்போது (ஆதி 34:21; யோசு 9:15; ஒபா 7) போராட்டத்தின் எதிர்மறையை அமைதி குறிக்கிறது (எரே 12:5; செக் 8:10). அமைதி போரின்மையாகும் (நீதி 21:13; 1 சாமு 16:4–5; 29:7; 1 அர 2:5; 4:24; சங் 120:7; திருவுரை 3:8; எரே 14:13; 28:9). மாறாகப் போரை நிறுத்துவதற்கு அமைதி ஒரு நிபந்தனையாகும். அதற்காக வல்லந்தம் செய்யாதிருக்க உடன்படிக்கை அல்லது ஒப்பந்தம் செய்துகொள்ளப்படும் (உப 2:26; 20:10–12; யோசு 10:1.4; 11:19; நீதி 4:17; 1 சாமு 7:14; 1 அர 5:12; 22:24; 2 அர 9:17–31; 18:31; ஏச 36:16; தானி 11:16). சில சமயம் அமைதி போரில் வெற்றியைக் குறிக்கும் (நீதி 8:9; 2 சாமு 19:24; 30:1; 1 அர 22:27–28; 1 நாள் 22:18; ஏச 9:7; எரே 43:12; மீக் 5:5; செக் 9:10). "அமைதியின் இளவரசன்" பற்றிய ஏசையாவின் கூற்று (ஏச 9:6) வெற்றிமிக்க இளவரசனைக் குறிப்பதாகத் தெரிகிறது. அமைதி சில சமயம் சரண் அடைவதையும் குறிக்கிறது (2 சாமு 10:19; 1 அர 28:18; 1 நாள் 19:19; ஏச 27:5; தானி 11:17).

2. சமய அமைதி:

இது இறைவனிடமிருந்து வருவது (ஏச 45:7) இறைவனது பிரசன்னமே அமைதிக்கு நிபந்தனை (எண் 6:26; 1 நாள் 23:25). ஆகவே உடன்படிக்கையின்கீழ் மனிதனது ஏற்புடைமை நீதியே மனிதனை அமைதியுள்ளவனாக்குகிறது.

அ) அமைதியும் நீதியும்:- "நீதியின் பலன் அமைதி" (ஏச 48:18; 57:2; 60:17) இரு கருத்துக்களும் அடிக்கடி ஒன்று சேர்ந்து வருகின்றன (சங் 72:7; 85:10; ஏச 48:18; 57:2; 60:17). அமைதியாக இருப்பது, நேர்மையோடு நடந்துகொள்ளுதலாகும் (மலா 2:6), பிரமாணிக்கமாக இருத்தலாகும் (2 சாமு 20:19) உண்மையில் நிலைத்து நிற்றலாகும் (எஸ் 9:30; செக் 8:16). இவ்வாறு அமைதி தீமைக்கு எதிர்நிலையானதாகும் (சங் 34:14; பழ 10:10; ஏச 48:22) மனித வாழ்வின் முழுமை இறைவனுக்குக் கீழ்ப்படிதலை உள்ளடக்குகிறது.

ஆ) அமைதியும் உடன்படிக்கையும்:- உடன்படிக்கையானது இறைவனோடு உள்ள உறவின் முழுமையை மீண்டும் அமைக்கும் உறவாகும். ஆகவே அமைதி எக்காலத்துக்கும் நிலைத்து நிற்கும் உடன்படிக்கை அமைதியைக் குறிக்கலாம் (எச.37:26). இது மனிதனுக்கு இறைவனது அன்பைக் கொண்டுவருகிறது (ஏச 54:10). யாவே தமது அமைதியை நீக்குவது உடன்படிக்கையை அகற்றிவிடுவதாகும் (எரே 16:5). உடன்படிக்கை அமைதி பரஸ்பர உறவை உள்ளடக்குகிறது (எண் 25:12; மலா 2:5).

இ) அமைதியும் ஆசீரும்:- ஆசீர் உறவின் முழுமையின் யாவே அருளும் கொடையாகும். அது வலிமையைக் குறிக்கலாம் (சங் 29:11), பாவ மன்னிப்பையோ (2 அர 5:19), மகிழ்ச்சியையோ (ஏச 55:12), மன்றாட்டுக்குப் பதில் கிடைக்கும் என்ற உறுதியையோ (ஆதி 41:16; 1 சாமு 1:17) குறிக்கலாம். எருசலேமின் முழுநலனுக்கும், ஆகவே, இஸ்ராயேலின் சமயத்திற்கும், அமைதி எனும் ஆசீர் அவசியமாகும் (சங் 122:6–8; 125:5). அதோடு தொடர்ந்து வரும் ஆசீர் உறுதி அளிக்கப்படுகிறது (1 அர 2:33; சங் 128:6)

ஈ) அமைதியும் மீட்பும்:- இறைவன் மனிதனின் நற்பேறுகளை ஆட்சி செய்வதால், அவரது அமைதி மீட்பாகும் (ஏச 52:7; நாகூ 2:1). அவரை நம்புபவர்கள் (ஏச 26:3), அவரது மீட்பில் நம்பிக்கை வைப்பவர்கள் (சங் 119:65) அமைதியைக் கொண்டிருப்பர். இறைவனது இறுதிக் காலத்திய வாக்குறுதி அமைதிபற்றிய வாக்குறுதியாகும் (சங் 85:8; ஏச 26:12). இறுதிக்கால அமைதிக்குமுன் தீர்ப்பும் துன்பங்களும் வரலாம் என்றாலும், இஸ்ராயேல் தனது துன்பங்கள் "நலமாக்கும் தண்டனை" என்றும், "குணமளிக்கும் காயங்கள்" என்றும் அறிந்திருக்கிறது (ஏச 53:5).

II. புதிய ஏற்பாடு

புதிய ஏற்பாட்டில் அமைதி என்ற சொல், அதைக் குறிக்கும் கிரேக்கச் சொல்லும், எபிரேயச் சொல்லும் குறிக்கும் பொருளை உள்ளடக்கியதாகும். "சமாதானமாயப்போ" (மாற் 5:34), "உங்களுக்குச் சமாதானம்" (யோவா 20:19.21)

என்ற கூற்றுகள் வெறும் வாழ்த்துக்கள் மட்டுமல்ல, அவை அமைதியைப் பொழி கின்றன. இப்பொருளில்தான் சீடர்கள் பயன்படுத்த எதிர்பார்க்கப்படுகின்றனர். இவ்வாறு கூறி அளிக்கப்பட்ட அமைதி புறக்கணிக்கப்பட்டால், அமைதி அளித்த வரிடமே திரும்பிவிடும் (மத் 10:13; லூக் 10:5–6). பவுலின் திருமுகங்களும் மற்ற திரு முகங்களும் இப்பொருளில்தான் வாழ்த் துக்கூறுகின்றன.

இவ்வாழ்த்துக்களில் அளிக்கப்படும் அமைதி இறைவனிடமிருந்து வருகின்றது (கலா 1:3; எபே.1:2; திருவெளி 1:4). மற்ற இடங்களில் அது "இறைவனது அமைதி" என்று விவரிக்கப்படுகிறது (பிலி 4:7; கொலோ 3:15). மனிதனுக்கு இறைவனிட மிருந்து அமைதி வருவதால், இறைவனே அமைதியில் இறைவனாகிறார் (உரோ 15:33; 2 கொரி 13:11; பிலி 4:9; எபி 13:20). யோவா 14:27–இல் அது கிறிஸ்துவின் கொடையாகுகிறது.

பலவற்றை உள்ளடக்கும் பொருளில் புதிய ஏற்பாட்டில் அமைதி என்ற சொல் தெளிவாக வேறுபட்ட மூன்று முறையில் பயன்படுகிறது.

அ) இது இதன் கிரேக்கச் சொல்லின் பொருளை அடிப்படையாகக் கொண்டது. இது, போர் அல்லது பகைமைக்கு எதிர் நிலையாகும். இந்தச் சமயச் சார்பற்ற பொருளில், இச்சொல் லூக் 14:32; அ.ப. 12:20–இல் காணப்படுகிறது இப்பொரு ளின் விரிவாக, எபே 2:14–17–இல் சாதா ரணமாய் பகைமையுள்ள இரு குழுவினர் களான யூதர்களுக்கும் புறஇனத்தாருக்கும் இடையே கிறிஸ்து கொண்டுவந்த ஒப்புறவை அமைதி குறிக்கும்.

1 கொரி 7:15–இல் கணவன்– மனைவி யருக்கிடையே நிலவும் "குடும்ப அமைதி யையும்", மத் 10:34; லூக் 12:51–இல் குடும்பத் திற்குள் நிலவும் ஒருங்கியைந்த உறவை யும் அமைதி குறிக்கும். பிறரோடு, குறிப் பாகச் சக கிறிஸ்தவர்களோட மகிழ்ச்சி மிக்க உறவு என்ற பொருளில், அமைதி கிறிஸ்துவனின் முயற்சியின் குறிக்கோ ளாக எடுத்துக் கூறப்படுகிறது (உரோ 14:19; எபே 4:3; எபி 12:14; 1 பேதுரு 3:11). இதே பொருளில் கிறிஸ்தவர்கள் ஒருவ ரோடு ஒருவர் அமைதியாக இருக்கும்படி அறிவுரை கூறப்படுகின்றனர் (மாற் 9:50; உரோ 12:18; 2 கொரி 13:11; 1 தெச 5:13). மத் 5:9–இல் இயேசுவும் "சமாதானம் செய வோர்" மேல் ஆசீர் கூறுகிறார். 1 கொரி 14:33–இல் திருச்சபையின் கூட்டங்கள் சரி யான முறையில் நடத்தப்படவேண்டும் என்ற பொருளில், குழப்பத்தின் எதிர் நிலையாக, அமைதி பயன்பட்டுள்ளது.

ஆ) இறைவனுக்கும் மனிதனுக்கு மிடையே சரியான உறவை மீண்டும் அமைப்பதில் புதிய ஏற்பாடு மிகுந்த அக் கறைகொள்வதால், திரும்ப அமைக்கப் பெற்ற அந்த உறவைக் குறிக்க அமைதி பயன்படுகிறது. மனந்திரும்புதலுக்கு முன் மனிதன் இறைவனிடமிருந்து அந்நிய னாக்கப்பட்டான் (எபே 4:18; கொலோ 1:21). இறைவனின் பகைவனாவான் (உரோ 5:10: கொலோ 1:21). இத்தவறான உறவுமுறை, கிறிஸ்துவில் சரி செய்யப்படுகிறது. மனிதன் இறைவனோடு ஒப்புறவாக்கப் படுகிறான் (2 கொரி 5:19; கொலோ 1:22) "விசுவாசத்தினால் ஏற்புடையவனாக" (உரோ 5:1) ஆக்கப்படுகின்றான். இவ் வாறு, "நம் ஆண்டவராகிய இயேசு கிறிஸ் துவின் வழியாய்" இறைவனுடைய அமைதி யைக்கொண்டுள்ளான் (உரோ 5:1). சிலு வையின் இரத்தத்தால் இறைவன் அமைதி உண்டாக்கினார் (கொலோ 1:20). கிறிஸ்து வின் இந்த அலுவல் எவ்வளவு வலி யுறுத்தப்படுகின்ற தென்றால் (எபே 2:15) அவரே "நமது அமைதி" என்றழைக்கப் படுகிறார் (2:14).

இ) மனஅமைதி என்ற பொருளிலும் அமைதி என்ற சொல் புதிய ஏற்பாட்டில் பயன்பட்டுள்ளது. இது தெளிவாகக் கிறிஸ்துவத் தன்மையுடையதாகும். ஏனெனில் அமைதியைக்குறிக்கும் கிரேக்க அல்லது எபிரேயச் சொல் இப்பொருளில் பயன்படவில்லை. உரோ.8:6–இல் "ஆவி யால் தூண்டப்படும் இயல்பின் நாட்டத் தால் வருவது வாழ்வும் அமைதியுமாகும்" என்றும், 15:13–இல் "விசுவாசத்தால் உண் டாகும் எல்லாவகையான மகிழ்ச்சியும் அமைதியும்" என்றும் வாசிக்கிறோம். இவ்வாறே கலாத்.5:22–இல் தேவ ஆவி

விளைவிக்கும் பலன்களில் ஒன்றாக அமைதி விவரிக்கப்படுகிறது. பிலி.4:7–ல் "இறைஅமைதி கிறிஸ்து இயேசுவுக்குள் உங்கள் உள்ளத்துக்கும் மனதுக்கும் அரணாயிருக்கும்" என்றும், கொலோ. 3:15–இல் "கிறிஸ்துவின் சமாதானம் உங்கள் இதயங்களில் ஆட்சி புரிவதாக" என்றும் வாசிக்கிறோம்.

வெவ்வேறு சூழ்நிலைகளில், அமைதி என்ற சொல், மேற்கூறப்பட்ட மூன்று பொருள்களில் ஒன்றைக் குறிக்கலாம். ஆனால் இவற்றில் அநேக இடங்களில் மூன்று பொருளையும் உள்ளடக்கிப் பயன் பட்டுள்ளது. இது, ஒரு கிறிஸ்தவன் மற்றொரு கிறிஸ்தவனுக்கு "இறைவனிடமிருந்து அமைதி"யை வேண்டும்போது நிகழ்கிறது.

III. அமைதி இறைவனின் கொடை:-

சமாதானம் நீதியின் கனியும், அடையாளமுமமாக இருக்கிறதென்றால், தீயவர்கள் எப்படி அதனைப் பெற முடியும் (சங் 73:3)? மீட்பின் முழு வரலாறு இந்தத் துயர்மிக்க கேள்விக்கு விடை அளிக்கிறது. ஆரம்பத்தில் இவ்வுலக இன்பமாக கருதப்பட்ட சமாதானம், வானகத்திலிருந்து அது வருகின்றபடியால் அது ஆன்மீக நலனாகும் என்ற கருத்து வளர்ச்சியடைகிறது.

1. அமைதியின் இறைவன்:-

விவிலிய வரலாற்றின் தொடக்கத்திலே கிதயோன் அமைதியின் ஆண்டவருக்கு பலிபீடம் கட்டினார் (நீதி.6:24). வானத்தை ஆளும் ஆண்டவர் (யோபு 25:2) சமாதானத்தை உருவாக்க இயலும் (ஏச 45:7). அவரிடமிருந்தே இந்த நலன் எதிர்பார்க்கப்படுகிறது. அவரே தம் ஊழியருக்கு சமாதானத்தை அளிப்பார் (சங் 35:27). அவர் இஸ்ராயேலையும் (எண் 6:26), அவர்களது மக்களையும் (சங் 29:11). தாவீதின் வீட்டாரையும் (1 அர 2:33) குருத்துவ திருக்கூட்டத்தையும் (மலா 2:5) அசீர்வதிக்கிறார். எனவே அவரை நம்புபவர் சமாதானத்தோடு உறங்கலாம் (சங் 4:9; காண்க ஏச 26:3).

2. ஆண்டவர் அமைதி தருகிறார்:-

'சமாதானத்தைத் தாரும் ஆண்டவரே' என மனிதன் தொடர்ந்து நம்பிக்கையோடு வேண்டி நீதியான செயல்களைச் செய்தால் அமைதி பெறுவான். ஏனெனில் இறைவன் திட்டப்படி சமாதானத்தை உலகில் நிலவ மனிதன் ஒத்துழைக்கவேண்டும். ஆனால் எப்போதும் பிரசன்னமாயிருக்கும் பாவத்தால் இந்த ஒத்துழைப்பு இருப்பதில்லை. விடுதலை வீரர்களை உருவாக்கி இஸ்ராயேல் தன் பாவங்களால் இழந்த அமைதியை இஸ்ராயேலர் திரும்ப பெறச் செய்கின்றார் இறைவன். எதிரிகளிடமிருந்து நாட்டை மீட்டபோது தாவீது தனது பணியைச் செய்துவிட்டதாக எண்ணினார் (2 சாமு 7:1). சாலமோன் அமைதியின் அரசரென போற்றப்பட்டார் (1 நாள் 22:9). அவரது ஆட்சியில் வட, தென் இஸ்ராயேலைச் சேர்ந்த இருமக்களும் சகோதரப் பண்போடு ஒன்றித்து வாழ்கின்றனர்.

3. அமைதிக்காகப் போராட்டம்:-

அ. இறைவாக்கினரின் போராட்டம்:- இஸ்ராயேலின் அரசர்கள் இறை நீதியின் கனியாக அமைதியை நாடாமல் அந்நிய அரசரோடு அரசியல் கூட்டணியின் விளைவாக அமைதியைத் தேடினர். போலி இறைவாக்கினர்களும் அதனை அமைதி என்றுரைத்தனர் (மீக் 3:5). பாவத்திலே மூழ்கி நிலையான சமாதானத்தை அறிவித்தனர் (எரே 14:13). கி.மு. 850–இல் இமிலாவின் மகனான மீக்காயா இவர்களை எதிர்த்து வாதாடுகின்றார் (1 அர 22:13–28). எருசலேம் முற்றுகையிடப்பட்ட வேளையில் இப்போராட்டம் கடுமையாகிறது. உண்மை மனமாற்றம் தேவையென எரேமியா மொழிகின்றார் (எரே 23:9–40; 6:14) அடிமைத்தனத்திலே வாடிய மக்களுக்கு இறைவன் தாம் அமைதித் திட்டத்தை அவர்களுக்காக வைத்திருப்பதாகக் கூறுகிறார் (எரே 29:17; காண்க 33:9). அமைதியின் உடன்படிக்கை ஏற்படுத்தப்படும் பாதுகாப்பும் ஆசீரும் அருளப்படும் (எரே 34:25–30). ஏனெனில் "நாம் அவர்களோடு இருப்போம்" என்று இறைவன் கூறுகிறார்.

ஆ) இறுதிக்கால அமைதி :-

அமைதிபற்றிய போராட்டமே இறைவாக்குச் செய்தியின் அடிப்படையாகும். இறுதிக்காலம் பற்றிய போதனையில்,

அமைதி, அதன் இவ்வுலகு சார்ந்த வரையறைகளிலிருந்தும் பாவப்போலித்தன்மையிலிருந்தும் விடுவிக்கப்படுகிறது. அச்சுறுத்தும் வாக்குகளை எடுத்துக்கூறும் இறைவாக்கினர்கள் இறுதிக்காலத்திலே சமாதானம் நிறைவாக நிறுவப்படும் என்கின்றனர் (ஓசே 2:20; ஆமோ 9:13). ஏசயா "அமைதியின் இளவரசர்" வந்து முடிவில்லா அமைதியை வழங்குவார் என எண்ணுகிறார் (ஏச 9:5; 9:6). ஏனெனில் அவரே அமைதி ஆவார் (மீக் 5:4). இயற்கை மனிதனுக்கு அடிபணியும், பிரிந்த இரு நாடுகளும் ஒன்று சேரும், நாடுகள் அமைதியில் வாழும் (ஏச 2:2; 11:1; 32:15–20). இந்த அமைதியின் நற்செய்தி (நாகூ 2:1) துன்புறும் இறையடியான் வழியாய் நிறைவேறும் (ஏச 53:5). தனது துன்பத்தின் வழியாய் இந்த அமைதியின் விலையை அவர் காட்டுகிறார். அந்நாளில் தொலைவிலிருப்பவனுக்கும் அருகிலிருப்பவனுக்கும் அமைதி அருளப்படும், காயங்கள் குணமாக்கப்படும் (57:9). நீதி எருசலேமுக்குத் தலைமை தாங்கும் (60:17). "இதோ, ஆற்றுப்பெருக்குப் போல் எருசலேம்மேல் அமைதியை நாம் பொழிந்திடுவோம்" (66:12; காண்க 48:18)

இ) இறுதியாய் ஞான நூல்கள் உண்மை அமைதியைப்பற்றித் தெளிவாய்ப் பேசுகின்றன. ஆண்டவரை அன்பு செய்பவர்கள் மிகுதியான சமாதானத்தைப் பெறுவர் (சங் 119:165). ஆனால் நல்லவன் பல நேரங்களில் துன்பப்படுகிறான். இது செயல்வினைப்பயன் என்ற பிரச்சினையை எழுப்புகிறது. பார்வைக்கு அவர்கள் பரிதாபத்திற்குரியவனாக இருப்பினும் ஆண்டவரது கைகளில் அவர்களது ஆன்மா உள்ளது. இறந்த பின்னும் தனித்தன்மையோடு நிறைவாக வாழ்கின்றனர். அமைதியிலே திளைத்திருக்கின்றனர் (ஞான 3:1 தொ). அவர்களுக்குப் பெரும் பேற்றை அளிப்பவரோடு ஒன்றித்து நிறைநலத்தோடு வாழ்கின்றனர்.

IV. இயேசுவின் சமாதானம்:-

இறைவாக்கினர்களும் ஞானிகளும் அளித்த நம்பிக்கை கிறிஸ்துவில் அளிக்கப்படும் உண்மையாகிறது. ஏனெனில் அவரிலும் அவராலும் பாவம் வெற்றி கொள்ளப்படுகிறது. பாவம் ஒவ்வொரு மனிதனிலும் அழிக்கப்படவில்லையெனில் ஆண்டவர் இறுதி நாளில் வரவில்லையெனில் அமைதி எதிர்காலக் கொடையாகவே நிற்கிறது. எனவே இறைவாக்கினர் கருத்தான, 'சமாதானம் செய்வோர் சமாதானத்தில் விதைக்கும் விதையிலிருந்து இறைவனுக்கு ஏற்புடைய வாழ்வென்னும் கனி விளைகிறது' (யாக் 3:18; காண்க ஏச 32:17) என்பது தொடர்கிறது. இதுவே புதியஏற்பாட்டின் அமைதி பற்றிய நற்செய்தி.

1. லூக்கா:-

லூக்கா தனது நற்செய்தியிலே அமைதியின் அரசரைச் சிறப்பாகச் சித்தரிக்கிறார். கிறிஸ்துவின் பிறப்பின்போது வானதூதர்கள் உலகிலே ஆண்டவர்தம் தயவு பெற்றவர்களுக்கு அமைதி உண்டாகுக என அறிவித்தனர் (லூக் 2:14). இதே அறிவிப்பு இயேசு யெருசலேமில் நுழைந்தபோது அவருடைய சீடர்களால் மகிழ்வுடன் எழுப்பப்பட்டது (19:38). ஆனால் எருசலேம் அவரை ஏற்க மறுத்தது (19:42). அவர் 'சமாதானம்' என மொழிகின்றபோது அதே மீட்பாக மாறி விடுகின்றது. 'சமாதானமாயப் போ' என இயேசுகூறி, பெரும்பாட்டினால் வருந்திய பெண்ணைக் குணமாக்கினார் (8:48). மனம்வருந்திய பெண்ணின் பாவங்களை மன்னித்தார் (7:50). இவற்றின் மூலமாக அவருக்குப் பாவம், நோய்கள் மேலுள்ள அதிகாரத்தைக் காண்பித்தார். இயேசுவைப் போல அவரது சீடரும் சமாதான வாழ்த்தால் மக்களுக்கு மீட்பை அளித்தனர் (10:5–9). ஆனால் இந்த மீட்பு உலக சமாதானத்திற்கு எதிரானது. "சமாதானத்தையல்ல பிரிவையே ஏற்படுத்த வந்தேன்" என்று இயேசு கூறுகிறார். (12:51). இறைவாக்கினர் போல, போலியான பாதுகாப்பை நம்பி ஏமாற வேண்டாமென எச்சரிப்பதோடு அவர் நிறைவடையவில்லை (17:26–36; காண்க 1 தெச 5:3). போர்களை அழிக்க அவர் வரவில்லை, மாறாக இயேசு உண்மைச் சமாதானத்தை ஏற்படுத்தினார் (லூக் 24:36). இந்தச் சமாதானத்தை உலக மனைத்திற்கும் சீடர்கள் எடுத்துச் செல்கின்றனர் (அ.ப.7:26; 9:31; 15:33). ஏனெனில்

இறைவன் "எல்லாவற்றிற்கும் ஆண்டவராகத்" தம்மையே காட்டி கிறிஸ்து வழியாக அமைதியை அறிவிக்கிறார்.

2. பவுல்:-

பவுல் தமது மடல்களில் கூறும் வாழ்த்துக்களில் சமாதானத்தோடு அருளையும் சேர்த்து அதன் மூலத்தையும் நிலைத் தன்மையையும் உறுதிப்படுத்துகின்றார். மேலாக இது மீட்போடு கொண்டிருக்கும் தொடர்பையும் காட்டுகின்றார். கிறிஸ்துவே நம் சமாதானம். அவரே யூத இனத்தையும் புறவினத்தையும் ஒன்றாய் இணைத்தார் (எபே 2:14–22). சிலுவையில் அவர் சிந்திய இரத்தத்தால் சமாதானம் உண்டாக்கி விண்ணிலும் மண்ணிலும் உள்ள யாவற்றையும் அவர் வழியாக ஒப்புரவாக்கினார் (கொலலோ 1:20). எனவே நாம் 'ஒரே உடலின் உறுப்பினராய் அழைக்கப்பட்டிருப்பதால்' நம் இதயங்களில் கிறிஸ்துவின் சமாதானம் ஆட்சி செய்கிறது (கொலே 3:15). தூய ஆவியே நமக்குள் இந்தப் பிணைப்பை ஏற்படுத்துகிறார் (எபே 4:3). ஏற்புடையவன் இறைவனோடும், இயேசுவோடும், சமாதானத்தோடு வாழ்கிறான் "அன்புக்கும் சமாதானத்துக்கும் ஊற்றாகிய இறைவன்" (2 கொரி 13:11) அவனை முழுமையாக அர்ச்சிக்கிறார் (1 தெச 5:23), பிறரன்பு, மகிழ்ச்சி போன்றவைபோல சமாதானம் ஆவியன் கனியாகும் (கலா 5:22). அமைதி நாம் முன்கூட்டியே வாழ்கின்ற முடிவில்லா வாழ்வு (உரோ 8:6). இது அறிவெல்லாம் கடந்தது (பிலி 4:7); துன்பங்களில் பொறுமையாக உள்ளது (உரோ 15:1–5); அடுத்தவர் உறவிலே மிளிர்வது (1 கொரி 7:15; உரோ 12:18; 2 திமோ 2:22). "கிறிஸ்துவை இறந்தோரிடமிருந்து எழுப்பியவரும் சமாதானத்தின் ஊற்றுமாகிய இறைவன்" (எபி 13:20), சாத்தானை அழித்து (உரோ 16:20) எல்லாவற்றையும் மூலநிலையில் திரும்ப அமைக்கும் நாளில் அமைதி மிளிரும்.

3. யோவான்:-

இயேசுவின் தியாகத்தால் விளைந்த கனியே சமாதானம் (யோவா 16:33). ஒத்தமை நற்செய்திகள் கூறுவதுபோல் இயேசு அளிக்கும் சமாதானம் உலக சமாதானம் போன்றதன்று. இறைவன் தங்களோடு இருந்ததால் இஸ்ராயேலர் சமாதானத்தைப்பெற்றனர் (லேவி 26:12; எச 37:26) என்பதைக் கருத்தில் கொண்டு யோவான், யேசுவின் பிரசன்னத்தில் அமைதியின் மூலத்தையும் உண்மையையும் காட்டுகின்றார். இதில் அவரது முன்னோக்கின் சிறப்புப் பண்புகளில் ஒன்று அமைந்துள்ளது, எனவேதான் இயேசு தங்களைவிட்டுப் பிரிகின்றார் என சீடர்கள் வருந்தியபோது "என் சமாதானத்தை உங்களுக்கு விட்டுச் செல்கிறேன்" என இயேசு உறுதிகூறுகின்றார் (யோவா 14:27). இந்தச் சமாதானம் இயேசுவின் பிரசன்னத்தோடல்லாமல் இவ்வுல கின் மேல் கொண்ட வெற்றியோடு இணைக்கப் படுகிறது. சாவை வென்று அவர் சமாதானத்தையும் தூய ஆவியையும் பாவத்தின் மேல் அதிகாரத்தையும் அளிக்கிறார் (20:19–23).

4. அமைதியின் தூயகாட்சி:-

வானக எருசலேமை தியானிக்கச் செய்யும் நம்பிக்கையில் கிறிஸ்துவன் அசையாது நிலைத்து நின்று (திருவெளி 21:2) சமாதானம்செய்பவர் பேறு பெற்றவர் என்ற பேற்றின் மகிழ்ச்சியை அனுபவிக்க அவன் ஆவலோடு எதிர்பார்க்கிறான் (மத். 5:9). ஏனெனில் இது கடவுளைப் போலவும், ஒரே மகனான இயேசுவில் கடவுளின் பிள்ளைகளுமாக வாழ்வதும் ஆகும். எனவே இயேசுவின் சீடன் இவ்வுலகிலே ஒற்றுமையும் அமைதியும் நிலவ முழுவலிமையேடு முயல்கின்றான். இம் முயற்சியில் அவனுக்கு வழிகாட்டுகின்ற மூன்று கொள்கைகள் இங்கே முக்கியமானவை. அவை அ) இயேசுவின் இறுதி வருகையில் எல்லா மக்களும், உலக முழுமையும் இயேசுவை ஆண்டவரென ஏற்றுக் கொள்வதுதான் உறுதியான உலகலாவிய அமைதியை நிறுவும். ஆ) இனம், குலம், பால் ஆகிய பாகுபாடுகளுககு அப்பாற்பட்ட திருச்சபையே உலகில் மக்களிடையே அமைதியின் இடமும், அடையளமும் ஊற்றுமாகும் (கலா 3:28; கொலே 3:11). ஏனெனில் திருச்சபையே கிறிஸ்துவும் ஆவியை அளிப்பவருமானவரின் உடலாகும். இ) கடவுளுக்கும் மனித

னுக்கும் முன்னால் நீதியுடைமையே சமாதானத்தின் அடித்தளம். ஏனெனில் நீதியே பிரிவினைகளுக்குக் காரணமான பாவத்தை அளிக்கிறது. இறைவன் ஒருவர் மட்டுமே அமைதி அளிக்கிறார். கிறிஸ்துவன் அவருக்குச் செவிமடுத்து, சமாதானம் செய்யும் தன் முயற்சியைத் தொடர்ந்து நடத்துகின்றான். ஏனெனில் "இறைவன் பேசுவதோ சமாதானமே. உண்மை பூமியினின்று முளைத்தெழும். நீதி நேர்மை வானத்திலிருந்து எட்டிப் பார்க்கும். நன்மையானதை யாவே அருள்வார். நம் நிலமும் தன் பலனைத் தரும். நீதி அவருக்கு முன் செல்லும், அமைதி அவரைப் பின்தொடரும்" *(சங் 85:8–13).*

**அமோக்கு** (AMOK – *ஆழமான)*

பாபிலோன் அடிமைதளத்தினின்று செருபாபேலோடு உடன் வந்த குழுவில் இருந்த குருக்களில் ஒருவரும், குடும்பங்களில் ஒன்றின் தலைவருமாவார் (நெக *12:7).* யோயாக்கிம் பெரிய குருவாக இருந்த காலத்தில் குருவாக இருந்த ஏபேரின் ஒரு மூதாதையார் *(12:20).*

**அமோனா** (HAMONAH– *கூட்டம். திரள்)*

கோகு கூட்டத்தார், இஸ்ராயேலின் மீது படையெடுத்துத் தோற்கடிக்கப்பட்ட பின் இந்நகரில் அழிக்கப்படுவார்கள் என்று எசக்கியேல் இறைவாக்கினர் முன்னறவித்தார்(எச *39:16).*

அபாரிமுக்கும், யோர்தானின் வாய்க்கும் இடையிலுள்ள பள்ளத்தாக்குப் பகுதியில், பாகால்–ஆமோனுக்கு அருகில் இவ்விடம் இருந்திருக்கலாம். இதற்கு மெகிதோ பள்ளத்தாக்கிலுள்ள ஏல்–லெக்கும் (லெகியோ ஒருவேளை அதாதுரிம்மோன்) –ஐ மற்றொரு இடமாக அடையாளம் காட்டுவர். இது ஒரு நகரமே இல்லை என்பதும் சாத்தியம்.

**"அம்கா அரேசு"** (AMH' AREZ – *மண்ணின் மைந்தர்கள்).*

ஒரு இடத்தின் மக்கள் தொகையைப் பற்றி குறப்பிடும்போது இந்த வார்த்தை பயன்படுத்தப்படுகிறது. விவிலிய காலத்திற்கு பின்பு, சமயத்தைப்பற்றி அறிவில்லாத பொதுமக்கள், பிற தாழ்ந்த குல மக்கள், தொழிலாளர்கள் ஆகியவர்களை தாழ்த்திப் பேச இந்த வார்த்தை பயன்படுத்தப்பட்டது. ஆனால் தீவிர ஆராய்ச்சிக்குப் பின்பு இந்த வார்த்தையானது ஒரு சமூக இனத்தை மட்டுமே குறிக்கப்பயன்படுத்தப்பட்ட கலைச் சொல்லாகத் தெரிகிறது. மேலும் இந்த ஆராய்ச்சியின் முடிவுகள், இந்த வார்த்தையானது, இஸ்ராயேலின் அரசியலில் பிரதிநிதித்துவம் பெற்ற, எல்லாவித உரிமைகளையம் கொண்ட ஒரு மக்களவையைத்தான் குறிப்பிடுகின்றது என்றும் தெரிவிக்கின்றன. இந்த மக்கள் அமைப்பு நாடு கடத்தப்பட்ட பின்பும் செயல்பாட்டில் இருந்திருக்கின்றது. மக்களாட்சி மலர்வதற்கு முன்னால், கிரேக்க நகரங்களில் காணப்பட்டதைப் போன்ற *(2 அர 25:19–20)* குறுநிலத்தில் குறுகிய படையோடு வாழ்ந்த மக்கள் கூட்டம் என்று சமூகவியல் அறிஞர்கள் கருதுகிறார்கள்.

குறுகிய கண்ணோட்டத்தில் இந்தச் சொல்லானது, ஒருகுறிப்பிட்ட பகுதியில் வாழ்ந்த பொறுப்புள்ள ஆண் குடிமகன்களையும், தங்களது சொந்தநிலத்தில் முழு உரிமையோடு வாழ்ந்த திருமணமான ஆண்களையும், விழாக்களின்போதும், அரசியல் பணிகளின்போது நாட்டை பாதுகாக்கும் ஆண்களையும் குறிப்பிடுகின்றது. இவ்வாறு ஒரு குறிப்பிட்ட பகுதியில் வாழ்ந்த மக்களைப்பற்றி பழைய ஏற்பாடு குறிப்பிடுகிறது. அவர்கள், எகிப்தியர்கள் *(ஆதி* **42:6***)* கானானியர்கள் *(எண் 13:28)* இத்தியர்கள் *(ஆதி 23:7. 12.13)* போன்றோர்கள் ஆவர். பொதுவாக நிலம் அல்லது பகுதி அல்லது நாடு என்று சொல்வதைவிட அந்த பகுதியின் பெயரை இணைத்துச் சொல்லும்போது, அப்பகுதியில் வாழ்ந்த மக்களைக் குறித்தது. சான்றாக யூதாவின் மக்கள் யூதாவின் பகுதியில் வாழ்ந்த மக்களைக் குறித்தது.

மண்ணின் மைந்தர்கள் என்று சொல்லப்படுபவர்கள், சமுக அரசியல் முக்கியத்துவம் பெறுகிறார்கள். காரணம் அவர்களைப்பற்றி எங்கெல்லாம் சொல்லப்படுகின்றதோ, அங்கெல்லாம் வரலாற்று உண்மைகளும் காணப்படுகின்றன. யோவாசின் முடிசூடல் நிகழ்ச்சியில் *(2 அர 11:12.18.20)* இது தெளிவாக விளங்கு

கிறது. 21:24–இல் இவர்கள்தான் ஆமோனை பழிவாங்கிவிட்டு அவனது மகன் யோசியாவை அரசனாக்குகிறார்கள். அதுபோல 23:30–இல் யோசியாவின் மரணத்திற்கு பின்பு யோவகாசை அரசனாக்குகிறார்கள். 23:35–இல் மண்ணின் மைந்தர்கள் எகிப்துக்கு கப்பம் கட்டத் தொடங்கினார்கள். எரேமியா இறைவாக்கினரும் எசக்கியல் இறைவாக்கினரும் அரசர், இளவரசர்கள், குருக்கள் ஆகியவர்களுக்குப் பின்பு இந்த மக்களைப் பற்றி குறிப்பிடுகிறார்கள் (எரே 1:18; 34:19; 37:2; 44:21; எச 7:27; 22:25–29). அவர்கள் மன்னன், குருக்கள், இளவரசர்கள் ஆகியோர் கலந்து கொண்ட "ஏழாவது ஆண்டில் கைதிகளை விடுதலை செய்யும்" ஒப்பந்தத்தின்போது இவர்களும் கலந்து கொண்டதாக எரே 34–இல் கூறப்பட்டுள்ளது. எசக்கியேல் (22:29) இவர்கள் ஏழைகளையும் வறியவர்களையும் கொடுமைப்படுத்தியதற்காக அவர்களைப் பழித்துரைக்கிறார். இவை அனைத்திலிருந்து, யூதாவின், அரசியல், பொருளாதார, சமூக வாழ்க்கையில் இவர்களுக்கு பெரும் பங்கு இருந்திருக்கின்றது என்றும், குருக்களுக்கு அடுத்தப்படியான சமூக நிலையை இவர்கள் வகித்தார்கள் என்றும் தெளிவாகத் தெரிகிறது. நெபுக்கதுனே சார் எருசலேமில் விட்டுச்சென்ற மக்களைப் பற்றிக் கூறும் பொழுது மட்டுமே (2 அர 24:14) மண்ணின் ஏழை மக்கள் என்று குறிப்பிடப்படுவதன் மூலம், இந்த வார்த்தையானது தாழ்த்தப்பட்டவர்களையும் குறிப்பிடப் பயன்பட்டிருக்கலாம் என்று தெரிகிறது.

நெபுக்கதுனேசார் தலைமைக்குரு, உதவிக்குரு ஆகியவரோடு அறுபது மண்ணின் மைந்தர்களையும் கைது செய்ததாக கூறுப்படுகிறது. நிச்சயமாக இந்த அறுபதுபேரும், சமூக அரசியல் முக்கியத்துவம் வாய்ந்தவர்களாகவே இருந்திருக்க வேண்டும் இவர்கள் பின்பு இரிபிலாவில் கொல்லப்பட்டார்கள் (2 அர 25:18–21).

நாடுகடத்தப்பட்டு திரும்பி வந்தபின்பு, பொறுப்புடைய குடிமகன் என்ற பொருளை இவ்வார்த்தையானது இழந்தது. நாடுகடத்தலிலிருந்து திரும்பமுடியாத இரண்டாம், மூன்றாம், நான்காம் தலைமுறைகள் தாங்கள் வாழ்ந்த நாட்டில் உள்ள பிற மக்களை மண்ணின் மைந்தர்கள் என்றழைத்தனர். அதுபோல் நாடு கடத்தலிலிருந்து திரும்பியவர்கள் யூதா நாட்டில் வாழ்ந்து கொண்டிருந்தவர்களை மண்ணின் மைந்தர் என்றழைத்தனர். நாடுகடத்தலிலிருந்து திரும்பி வந்தவர்களுக்கும் இவர்களுக்கும் அடிக்கடி சண்டைகள் ஆரம்பமாயின. எஸ் 4:4–இல் இவ்வாறு திரும்பி வந்தவர்கள் 'யூதாவின் மக்கள் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அவர்களுக்கு தொல்லைக் கொடுத்து, சொந்த நாட்டில் இருந்தவர்கள் மண்ணின் மக்கள் என்று குறிப்பிடப்பட்டுள்ளனர். இவர்கள் பிற இனத்தவர்களேடு திருமணம் செய்து கலப்பினமானவர்கள்.

ராபி இலக்கியங்களில், போதகர்கள் யாரையெல்லாம், மதத்திற்கும், அறநெறிக்கும் சட்டத்திற்கும் எதிரானவர்களாக கருதினர்களோ அவர்கள் எல்லாம் மண்ணின் மைந்தர்கள் என்று குறிப்பிட்டுள்ளார்கள். இவ்வாறு, பொது மக்கள், வாழ்க்கைத் தேவைகளை அமைத்துக்கொள்வதில் முழுவதும் ஈடுபட்டிருந்தால், சடங்குச் சுத்திபற்றி இவர்களால் அக்கறை கொள்ள முடியவில்லை என்ற கருத்து நிலவியது. பரிசேயர்களுக்கும், பொதுமக்களுக்கும் இடையேயுள்ள வேறுபாடு தெளிவாகத் தெரிந்ததே. இயேசு, பரிசேயர்களின் செயல்பாட்டிற்கு எதிரான போராட்டத்தில், பொதுமக்களைச் சார்ந்து நின்றார் (மாற் 7:1–5; லூக் 6:1–5; 11:37–41). யோவா 7:49–இல் பரிசேயர்கள் சட்டம் அறியாத கூட்டம் எனக்கண்டித்துப்பேசுவது இந்த மக்களைத்தான். ஆனால் விவிலிய காலத்திற்குப்பின் சமூக நிலையைக் குறிக்க இந்த சொல் பயன்பட்டதா? என்பதை அறிய சரியான சான்றுகள் இல்லை. தொடக்கக்காலதானாக் இலக்கியங்களில் இந்த வார்த்தையானது, மேல் குலத்தவர்களால், உழவர்கள், நிலத்தை தோண்டுபவர்கள், பொதுமக்கள் போன்றோரைக் குறிக்கப் பயன்பட்டது. இவர்கள் தூய்மையற்றவர்களாகக் கருதப்பட்டனர். இப்பேறப்பட்ட மக்களில் பலர் கிறிஸ்துவர்களாக மாறிய போது, யூத கிறிஸ்தவர்களை இழிவு

படுத்த இந்த வார்த்தை பயன்படுத்தப் பட்டது. ஆனால் உண்மையில் இந்த வார்த்தையானது சமூகத்தில் ஒருவரின் இடத்தை குறிப்பிடவும், மதச் சம்மந்த மான அறிவற்ற தன்மையை குறிக்கவும் பயன்படுத்தப்பட்டது.

**அம்சி** (AMZI – என் வலிமை, ஆண்டவர் வலுப்படுத்துகிறார் என்ற பொருள்படும் அமசியா என்ற பெயரின் சுருக்கமாக இருக்கலாம்)

*1.* மெராரி குடும்பத்தைச் சேர்ந்த ஒரு லேவியன், பானியின் மகன். ஆண்டவரின் ஆலயத்தில் திருப்பேழை நிறுவப்பட்ட போது, ஆலயப் பாடர்களுககுப் பொறுப் பாகயிருந்த ஏத்தானின் மூதாதையர் (*1 நாள் 6:46*).

*2.* அடிமைத்தளத்திற்கு பிறகு எருசலே மில் வாழ்ந்த அதாயாவின் மூதாதையர். செக்கரியாவின் மகன் (நெக *11:12*). *1* நாள் *9:12*–இல் கொடுக்கப்பட்டுள்ள வழிமரபுப் பட்டியலில் அம்சியின் பெயர் இடம் பெற வில்லை.

**அம்பட்டன்**

இவர்கள் தலைமுடியை வெட்டுபவர், தாடியை அழகு செய்பவர் ஆவர். விவி லியக் காலங்களில் இவர்கள் எப்போதும் தங்கள் வேலையில் ஈடுபட்டிருந்தனர் (எண் 6:5; எச 5:1). பொதுவாகத் திறந்த வெளியில் வேலை செய்தனர். சவரக் கத்திதான் அவர்களது கருவி. இன்றைய மேற்காசிய நாடுகளில் தலைமுடி வழிப் பது சமய முக்கியத்துவம் வாயந்ததாகக் காணப்படுவதுபோல் விவிலிய காலத்தில் காணப்பட்டதாக சான்று இல்லை.

**அம்பறாத்தூணி** :- (QUIVER)

அம்புகளை வைத்துக் கொள்ள பயன் படும் ஒரு குடுவை போன்ற அமைப்பு உடையது. இது தோலினால் செய்யப்பட் டிருக்கும். அழகு செய்யப்பட்ட உலோகங் களால் சுற்றப்பட்டு, வண்ணங்கள்தீட்டப் பட்டிருக்கும். இதை வழக்கமாக தோளில் சுமந்திருப்பர்.

விவிலியத்தில் அம்பறாத்தூணி உருவ கமாக சங் 127:5–இல் குடும்பச் சூழ்நிலை யிலும், ஏச 49:2–இல் தம் ஊழியனைத் தீட்டிய அம்பாகச் செய்து இறைவன் தமது அம்பறாத்தூணியில் ஒளித்து வைத் திருப்பார் என்றும், புல 3:13–இல் இறைவன் 'தமது அம்பறத்தா தூணியில் உள்ள அம்புகளை என் மார்பில் எய்தார்" என்றும் கூறப்பட்டுள்ளது. மற்ற இடங் களில் இது வீரரின் ஒரு கருவி என்றே கொள்ளலாம்.

**அம்பிப்பொலி** (AMPHIPOLIS – நகரைச் சுற்றி, சூழப்பட்ட நகரம்)

மக்கதோனியாவில் முதல் மாகாணத் தின் தலைநகர். ஸ்டிரிமோன் ஆற்றுப் படுக்கையில் கடலிலிருந்து 4 கி.மீ. தொலைவில் அம்பிப்பொலி அமைந்துள் ளது. திராக்கேயிலிருந்து, மக்கதோனியா வின் தெற்குக் கடற்கரையில், ஏக்னேசியன் பாதையில் அமைந்திருந்த ஒரு முக்கிய இடமாகும். செருசு கி.மு. 480– இல் படை யெடுத்தபோது இவ்விடத்து பாலத்தின் வழியாகத்தான் இந்த ஆற்றைக் கடந்து சென்றார். ஏதோனியின் நகரமாக இருந் தது. அப்போது இவ்விடம் ஒன்பது வழிகள் என்றழைக்கப்பட்டது. திராக்கே யைச் சேர்ந்த கிரேக்கர்கள் அவர்களின் குடியிருப்பை அங்கு ஏற்படுத்த முயன்ற னர். கி.மு. 497–இல் மிலேத்தின் அரிஸ் தோகொரஸ் தாரியு அரசரிடம் இருந்து தப்பிவந்தபோது, இங்கிருந்து விரட்டப் பட்டு கொலை செய்யப்பட்டார். 33 ஆண்டு களுக்குப் பிறகு கி.மு. 437–இல் ஏதன்சியர் இதைக் கைப்பற்றி ஒரு குடியிருப்பை ஏற்படுத்தினர். 424–இல் ஸ்பார்தர்களிடம் சரண் அடைந்தது. 357–இல் மக்கதோனி யாவைச் சேர்ந்த பிலிப்பு இதைக் கைப் பற்றினார். 168–இல் உரோமையர் இதைக் கைப்பற்றி மக்கதோனியாவின் முதல் மாவட்டத்திற்கு தலைநகர் ஆக்கினார். இந் நகரத்தின் வடக்கு, தெற்கு, மேற்கு ஆகிய 3 பகுதிகளும் ஸ்டிரிமோன் ஆற்றால் சூழப்படவே, காக்னோன் என்ற ஏதன்சியர் இந்நகருக்கு அம்பிபொலி என்று பெயரிட்டு, கிழக்குப் பகுதியில் மதிற்சுவர்களை எழுப்பினர். மக்கதோனி யா உரோமையர்களால் நான்கு மாவட்டங் களாக பிரிக்கப்பட்டபோது, கி.மு.167– இல் அம்பிபொலி முக்கியத்துவம் பெற்று விளங்கியது.

பவுல் இரண்டாம் வேத போதகப் பயணத்தில் தெசலோனிக்காவிற்குச் செல்

லுவதற்கு அம்பிப்பொலி வழியாகத்தான் சென்றார் (அ.ப.17:1)

**அம்பிலியாத்து** (AMPLIATUS–பரந்த, பெரிய)
பொதுவாக அடிமைகளுக்கு அளிக்கப் படும் பெயர். இப்பெயர் ஓர் குறிப்பிட்ட நபரைக் குறிப்பதாகக் காணப்படுகிறது (உரோ 16:8). பவுல் தனது திருமுகத்தில் "ஆண்டவருக்குள் என் அன்பார்ந்த" என்று இவரை வாழ்த்துகிறார். இவர் எபேசு நகரில் வாழ்ந்திருக்கலாம் என சூழ்நிலைப் பொருத்தம் காட்டுகிறது. பவுலுக்கும், இவருக்கும் சுமூகமான உறவு இருந்திருப்பதை அவரது வாழ்த்திலிருந்து அறிகிறோம்.

**அம்மதாத்தா** (HAMMEDATHA – இரட்டிப்பு, நிலவால் கொடுக்கப்பட்டது)
எஸ்தர் நூலில் யூதர்களின் முக்கிய எதிரியாகத் திகழும் ஆமானின் தந்தை (எஸ்த 3:1.10; 8::5; 9;:10.24).

**அம்மணம்** (NAKEDENESS)
விவிலியத்தில, சரியான ஆடை அணியாத நிலையிலிருந்து முழுவதும் ஆடையின்றி இருக்கும் பல நிலைகளைக் குறிக்கும் சொல்லாகும்.

எபிரேய சமூகத்தில் அம்மணமாய் இருத்தல் தடை செய்யப்பட்டிருந்தது. இதற்கு விந்து (லேவி 15:2–18), மாதவிடாயில் வடியும் இரத்தம் (15:19–24), மற்றபடி வடியும் இரத்தம் (15:25–30), சில சமயங்களில் துப்பிய எச்சில் (15:8) போன்ற உடலிலிருந்து வடியும் நீர்த்தன்மையுடையவை அசுத்தமானவையாகக் கருதப்பட்டது ஒரளவுக்குக் காரணமாகலாம். ஆடை இவைகளை உறிஞ்சி பொதுவாக பகுதிகளை கறைப்படுத்துவதைத் தடுத்தது.

எபிரேய வழக்கில், அம்மணம், பாலின உறவுகளைக் குறிக்கும். மறைத்துக்கூறும் வழக்காகும் (லேவி 18:6–18). பொது இடங்களில் அம்மணமாய் இருத்தல் வெட்கத்திற்குரியதாகும். இது வேசியின் பண்பாகும் (1 சாமு 20:30; திருவெளி 17:16). இறைவாக்கினர்கள் இஸ்ராயேலரின் பதிதத்தைக் காட்டும் அடையாளமாக காமம்மிக்க அம்மணமான வேசி என்ற உருவத்தைப் அடிக்கடி பயன்படுத்துகின்றனர் (எச 16:15–43; 23; ஓசே 2:1–13). ஆனால் அம்மணம் கொடிய வறுமையின் விளைவாகவும் இருக்கலாம் (உப 28:48; திருவெளி 3:17–18). இந்நிலை நற்செயல் செய்வதற்கு ஒரு வாய்ப்பாகும் (எச 18:7.16; மத் 25:36–44; காண்க யாக் 2:15 –26). அப்போஸ்தலர்கள் அடிக்கடி இத் தகைய கொடிய நிலையில் இருந்தனர் என்று பவுல் கூறுகிறார் (1 கொரி 4:11;2 கொரி 11:27; காண்க யோவா 21:7)

அம்மணமாய் இருத்தல் கனானியரின் வழிபாட்டோடு தொடர்புடையதால் இஸ்ராயேலின் சமயச் சடங்குகளில் இது தடை செய்யப்பட்டிருந்தது (காண்க லேவி 20: 23). ஆகவே குருக்கள் நிர்வாணம் கீழேயுள்ள மக்களுக்குத் தெரியாதபடிக்கு பீடங்கள் படிகள் இல்லாது கட்டப்படவேண்டும் (20:26). இருப்பினும், மோசே மலைமேல் கட்டளைகளைப் பெற்றுக் கொண்டிருந்த போது, ஆரோன் மக்களின் கட்டாயத்தினால் பொற்கன்று செய்ய, அதன் முன் மக்கள் அம்மணமாய் நடனமாடினர் (32:25). சவுல் பகலிலும், இரவிலும் அம்மணமாய் விழுந்து கிடந்து ஆவேசமாய் இறைவாக்குரைத்தார் (1 சாமு 19:24). எகிப்தின் அழிவை எடுத்துக்காட்டும் கண்கூடான இறைவாக்காக மூன்று ஆண்டுகளுக்கு ஏசயா ஆடையின்றி நடனமாடினார் (ஏச 20:2–4). உடன்படிக்கைப் பேழையைக் கொண்டு வரும்போது தாவீது ஆடைகளை உரித்து போட்டு உற்சாகமாக நடனமாடினார் (2 சாமு 6:20).

பொதுவாக ஆடையின்றியிருக்கும் பல நிலைகளையும் எபிரேய அல்லது கிரேக்கச் சொற்கள் வேறுபடுத்தப்படவில்லை. ஆயினும் மூன்று நற்செய்தி நூல்கள், இயேசு சிலுவையில் அறையப்பட்டிருந்த போது, அவரது ஆடைகளை வீரர்கள் பங்கு போட்டனர் என்று கூறுகின்றன (மத் 27:35; மாற் 15:24; யோவா.19:23). வரலாற்றுச் சான்றுகளிலிருந்து நமது படங்களிலும் சுருபங்களில் காட்டுவதுபோல் ஒரளவு ஆடை அணிந்திராமல், இயேசு முழுவதும் அம்மணமாய் சிலுவையில் அறையப்பட்டிருக்கவேண்டும் என்று தெரிகிறது. இதைத்தான் சிலுவையின் அவமானம் அல்லது நிந்தை என (எபி 12:2) சிலர் விளக்குவர்.

சில இடங்களில் அம்மணம் குற்றமின்மையையும் பிறந்த நிலையையும் குறிக்கிறது (யோபு 1:21; திருவுரை 5:15; காண்க: எச 16:7.22). வீழ்ச்சிக்கு முன் ஆதாமும் ஏவாளும் அம்மணமாய் இருந்தாலும் வெட்கப்படவில்லை (ஆதி 2:25). மரத்திலிருந்து பழத்தைத் தின்றபின் தாங்கள் அம்மணமாய் இருப்பதை உணர்ந்து, அத்தி இலைகளைத் தைத்து இடுப்பில் உடுத்திக் கொண்டனர் (3:7).

**அம்மா** (AMMAH – *தலைவனின் தாய்*)

யோர்தான் பள்ளத்தாக்கினுள் பாலைவனத்து சரிவு இறங்கும் ஆரம்பத்திலுள்ள பென்யாமின் பகுதியைச் சேர்ந்த கிபயோன் பாலைவன வழியில் உள்ள கியாகுவுக்கு அருகிலுள்ள ஒரு குன்று (2 சாமு 2:24). இங்குதான் கிபயோன் போருக்குப் பின் தொடர்ந்து முன்னேறித்துரத்திவந்த யோவாபோடு அபினேர் தற்காலிகப் போர் நிறுத்த உடன்படிக்கை செய்து கொண்டார். அதன்படி எதிர்த்து நின்ற படைகள் தத்தம் தலைமையகங்களுககுத் திரும்பிச் சென்றுவிட்டன (2 சாமு 2:24–32).

**அம்மிசதாய்** (AMMISHADDAI – *சதாய் எல்லாம் வல்லவர், என் உறவினர்*)

பாலைவனப் பயணத்தில் தாண் குலத்தின் தலைவராய் இருந்த அகியேசரின் தந்தை (எண் 1:12; 2:25; 7:66; 10:25).

**அம்மிசபாது** (AMMIZABAD–*என் உறவினர் கொடுத்தார்*)

தாவீதின் புகழ் பெற்ற வல்ல வீரர்களுக்குத் தலைவரான பெனாயாவின் மகன் (2 சாமு 23:20–23; 1 நாள் 11:22–25) தாவீதுடைய படைப்பிரிவை அம்மிசபாது கண்காணித்து வந்தார். 1 நாள் 27–6–இன்படி இவர் அப்பிரிவுக்கு மூன்றாம் மாதத்தில் தலைமை தாங்கினார். பெனாயா முப்பது பேருக்குத் தலைவராக உயர்த்தப்பட்டபின், அவரது பிரிவுக்கு அம்மிசபாது தலைமை தாங்கியிருக்க வேண்டும்.

**அம்மியூது** (AMMIHUD–*என் உறவினன் உயர்த்தப்படுகிறான், மேன்மை பெறுகிறான்*)

1. பாலைவனத்தில் பயணம் செய்த போது, எப்பிராயிம் பாதிக் குலத்தில் தலைவராக இருந்த எலிசாமாவின் தந்தை (எண் 1:10; 2:18; 7:48.53; 10:22). இவர் யோசுவாவிற்குக் கொள்ளுப்பாட்டன் ஆவார் (1 நாள் 7:26).

2. கானான் நாட்டை, பங்கீடு செய்த போது சிமியோன் குலப்பிரதிநிதியாக விளங்கிய செமுவேலின் தந்தை (எண் 34:20).

3. கானான் நாட்டைப் பங்கீடு செய்த போது, உதவிய நப்தலி குலத்தைச் சேர்ந்த பெதகேலின் தந்தை (எண்.34:28).

4. கெசூரின் அரசர் தல்மாயின் தந்தை (2 சாமு 13:37). அபிசலோமின் பாட்டன் (3:3). 2 சாமு 13:37–இன்படி அம்மியூதின் மகனான தல்மாயிடம் அபிசலோம் ஓடிச் சென்று தஞ்சம் புகுந்தார்.

5. யூதாவின் மகன் பெரேசுவின் சந்ததியைச் சேர்ந்தவர். நாடுகடத்தப்பட்டுத் திரும்பியவர்களில் ஒருவர். ஓமிரியின் மகன். ஊத்தாயின் தந்தை (1 நாள் 9:4).

**அம்மியேல்** (AMMIEL – *என் உறவினன் இறைவன் ஆவார்*)

1. கெமல்லியின் மகன். கானான் நாட்டைத் துப்பறிய மோயீசனால் அனுப்பப்பட்ட ஆட்களுள், தாண் குலத்தினத்தின் பிரதிநிதி (எண் 13:12).

2. மாக்கிருடைய தந்தை. மனாசே பகுதியிலுள்ள லோ–தபார் என்ற ஊரைச் சேர்ந்தவர். இவர் வீட்டில்தான் யோனத்தானின் மகன், தாவீதிடமிருந்து பதுக்கி வைக்கப்பட்டார் (2 சாமு 9:4–5). அவர் பிறகு தாவீதிற்கு நண்பனானார் (2 சாமு 17:27).

3. உரியாவின் மனைவியான பதுசேபாவின் தந்தை. இவள் பிற்காலத்தில் தாவீதின் மனைவியானாள் (1 நாள் 3:5). 2 சாமு 11:3–இல் மெய்யெழுத்துக்களின் இடம் மாற்றத்தின் விளைவாக எலியாம் என்று அழைக்கப்படுகிறார்.

4. ஒபேது–எதோமின் ஆறாவது மகன். கோவில் வாயில் காக்கும் சேவை செய்தவர்களில் ஒருவர் (1 நாள் 26:5).

**அம்மினதாபு** (AMMINADAB – *என் உறவினர் பெருந்தன்மை உள்ளவர், தாராள மானவர்*)

1. யூதா குலத்தின் தலைவரான (எண் 1:7; 2:3; 7:12.17; 10:14) நகசோனுடையவும் ஆரோனின் மனைவியான எலிசெபாவினு

டையவும் தந்தை (யாத் 6:23) ஆவார். இவருடைய மகனின் வழியாகத் தாவீதின் மூதாதையர் பட்டியலில் இவர் பெயர் வருகிறது (ரூத் 4:19–20). ஆகவே இயேசுவின் மூதாதையர் பட்டியலிலும், புதிய ஏற்பாட்டிலும் வருகிறது (மத் 1:4; லூக் 3:33).

2. ஒரு லேவியர். லேவியர்கள் பற்றிய நாளாகம வழிமரபுப் பட்டியலில் கெகாத்தின் மகனும் கோராக்குவின் தந்தையுமாவார் (1 நாள் 6:22). இப்பட்டியலுக்கு இணையான பட்டியல்களில் (யாத் 6:21; எண் 16:1; 1 நாள் 6:38) இவர் இசார் என்றழைக்கப்படுகிறார்.

3. ஊசியேலின் லேவிய குடும்பத் தலைவர். அவருடைய உறவினர்கள் 112 பேர்களோடு எருசலேமுக்குப் பெட்டகத்தைச் சுமந்து செல்ல தாவீதால் பணிக்கப்பட்டவர் (1 நாள் 15:10).

4. அம்மோனிய அரசர்கள் பலரின் பெயர். காண்க; அம்மோன், அம்மோனியர்.

5. எழுபது நூலின்படி இவர் எஸ்தரின் தந்தையாவர் (எஸ்த 2:15; 9:29). ஆனால் மோசரேட்டிக் வாசகம் எஸ்தரின் தந்தையை அபிகயில் என்றழைக்கிறது. பின்னதுதான் சரியான பெயராக இருக்கலாம்.

**அம்மீ** (AMMI – என் மக்கள்)

கடவுள் இஸ்ராயேலை முடிவாகத் தள்ளி வைத்ததைக் குறிக்கும் "என் மக்கள் அல்லர்" (ஒசே 1:9) என்பதற்கு மாறாக, மீட்பின் நாளில் இஸ்ராயேலை இறைவன் ஏற்றுக்கொண்டதை அடையாளமாகக் குறிக்க வழங்கப்பட்ட ஒரு புதிய பெயர். இதற்கு என் மக்கள் என்று பொருள் (ஒசே 2:1).

**அம்மோ** (AMAW)

பிலயாமை அழைத்து வரும்படி, மேவாபு நாட்டு பாலாக்கு தன்னுடைய ஆட்களை அனுப்பிய நாட்டிற்குப் பெயர் (எண்.22:5). இந்த நாடு "ஆற்றிற்கு அருகிலிருந்த" (யூப்பிரத்திசு) பிலயாமின் நகரமாகிய பெத்தோரை தன்னுள் கொண்டிருந்தது. அசீரியா நாட்டுக் குறிப்புகளின்படி, பித்ரூ (பெத்தோர்), சகூர் ஆற்றங்கரையில் இருந்தது. இது கார்கேமீசுக்குத் தெற்கில் 80 கி.மீ. தொலைவிலும் பிலயாமின் ஊரான பெத்தோருக்குத் தென்மேற்கில் உள்ளது.

இத்ரிமி குறிப்புகளின்படி, அலாலக்கு நாட்டு அரசர், முகிஸ்கே, நீ, மற்றும் அம்மோ ஆகியநாடுகளை, பிலயாம் நிகழ்ச்சிக்கு இருநூறு ஆண்டுகளுக்கு முன் ஆண்டார்.

**அம்மோலகேத்து** (HAMMOLECHETH – அரசி, ஆட்சி செய்பவள்)

அநேகமாக இது முதலில் இறைவனுக்குச் சூட்டப்பெற்ற பெயராக இருக்கலாம். இவள் கிலயாத்தின் சகோதரியும் மனாசே இனத்தின் பல குடும்பங்களைத் தோற்றுவித்தவளுமாவாள் (1 நாள் 7:18).

**அம்மோன், அம்மோனியர்** (AMMON, AMMONITES – எனது இனத்தின் மகன்)

இவர்கள் ஒரு செமித்திய இனத்தவர். லோத்துக்கு அவருடைய இளைய மகள் வழியாகப் பிறந்த (ஆதி 19:38) "எனது மக்களின் மகன்" என்று பொருள்படும் பென்–அம்மீயின் வழித்தோன்றல்களாகப் பாரம்பரியமாகக் கருதப்படுவர். இவர்கள் மோவாபியருக்கும் (19:37) இஸ்ராயேலருக்கும் (உபா 2:19) உறவினர்களாகக் கருதப்படுவர். அம்மோனின் பகுதி சாக்கடலுக்கு வடகிழக்கில் ஆர்னோன் யாப்கோக்கு ஆகிய ஆறுகளுக்கிடையில் அமைந்திருந்தது (சங் 83:7). இதன் தலைநகர் இக்கால அம்மானாகிய ரபாத் –அம்மோன் ஆகும் (காண்க இரபா–2)

1. வரலாறு: வரலாற்றின் தொடக்கத்தில் (கி.மு. 1600 அதற்கு முன்னும் இருக்கலாம்) அம்மோனியர் சாம்சும்மீமின் பகுதியில் வாழ்ந்தனர் (உப 2:20–21). இக் காலத்தில் இவர்கள் ஓரளவு நாடோடிகளாக இருந்தனர். அதனால் எமோரியர் பகுதியிலும் இவர்கள் தங்கியிருக்கக் கூடும். எமோரிய அரசன் சீகோன் காலப்போக்கில் இவர்களின் ஒரு பகுதியைக் கைப்பற்றினார் (எண் 21:26–28; யோசு 12:2; 13:10). கி.மு.13–ஆம் நூற்றாண்டின் மத்தியில் இஸ்ராயேல் அவனது நாட்டின் வழியாகக் கடந்துபோக அனுமதி மறுத்தவர் இவர்தான். பின் இஸ்ராயேலர் இவரைத் தோற்கடித்து, இவரது நாட்டைக் கைப்பற்றினார். ஆனால் அம்மோனியர் நாட்டில் புகவில்லை (எண் 21:21–25; மேலும்

காண்க உப 2:19–37; 3:16; யோசு 13:10. 24–28; எண்.21:24). எண் 22–24 இவர்கள் ஈடு பாட்டைக் குறிக்கவில்லை. என்றாலும் மோவாபியர்களோடு சேர்த்து அம்மோனியர்களும் ஆண்டவரது சபையினுள் வர அனுமதிக்கப்படவில்லை. ஏனெனில் இவர்கள் இஸ்ராயேலைச் சபிக்கும் படி குறிகாரன் பிலயாமுக்குக் கையூட்டுக் கொடுத்து ஏற்பாடு செய்தனர் (உப 23:3–6; நெக 13:1–2)

நடுவர்கள் காலத்தில் அம்மோனியரின் பலம் அதிகரித்திருந்தது. அவர்கள் இருமுறை இஸ்ராயேலுக்கு எதிராக போரில் ஈடுபட்டனர். அவர்கள் மோவாபியருடனும் அமலேக்கியருடனும் சேர்ந்து, இஸ்ராயேலர் யோர்தானுக்குக் கிழக்கில் கொண்டிருந்த நாட்டின் ஒருபகுதியை மோவாபைச் சேர்ந்த எகிலோனுக்குப் பிடித்துக் கொடுத்தனர். இதனால் இஸ்ராயேலில் ஒரு பகுதியினர் மோவா பின் ஆட்சிக்குட்பட்டிருந்தனர் (நீதி 3:12–14). இக்காலத்தில் பாலஸ்தீனத்தில் இவர்களுடைய சமயச் செல்வாக்குப் பரவியிருந்தது (10:6). அம்மோனியர் கிலயாத்தின் பகுதியைக் கைப்பற்றினர். பென்யாமினுடையவும் எப்பிராயிமினுடையவும் பகுதியிலும் போரிட்டனர். பின் நடுவர் இபிதாகு இவர்களை விரட்டியடித்தார் (10:7–11:33).

11–ஆம் நூற்றாண்டின் பிற்காலத்தில் அம்மோனிய அரசன் நாகாசு இஸ்ராயேலுக்குரிய யோர்தானுக்குக் கிழக்கிலுள்ள பகுதிகளைக் கைப்பற்ற முயற்சி செய்து வடக்கில் யாபேசு–கிலயாது வரை முன் னேறினார் (1 சாமு 11:1–2). இவரை தோற் கடித்துச் சவுல் தனது சேனையை அதிகாரத்தில் உறுதியாக நிறுவினார் (11:5–11; 12:12; மேலும் காண்க 14:47–48). நாகாசோடு தாவீதின் உறவு சுமூகமாக இருநதது (2 சாமு 10:12). ஆனால் அவனது மகன் கானூன் பேத்து– ராகோபு, சோபா, மாக்கா மற்றும் தோபு ஆகிய சீரிய நாடுகளோடு சேர்ந்து பகைமையைப் புதுப்பித்தார் (10:6; 1 நாள் 19:6). ஆனால் தாவீதின் படைகள், அபிசாய், யோவாவு ஆகியோரின் தலைமையில் ஆராம் மற்றும் அம்மோன் நாடுகளை வென்று அடக்கி இஸ்ராயேல் பேரரசின் சிற்றரசுகளாக ஆக்கின. இரபா கைப்பற்றப்பட்டு அதன் மக்கள் அடிமை ஊழியத்திற்குட்படுத்தப் பட்டனர் (2 சாமு 10:9–14; 11:1; 12:26–31)

ஒன்றித்த இஸ்ராயேல் அரசு காலம் முழுவதும், இப்பகுதி அம்மோனிய ஆளுநர் ஆட்சியின் கீழிருந்தது. தாவீது அபிசலோமிடமிருந்து தப்பி ஓடியபேது நாகாசின் மகன் சோபியிடமிருந்து உதவி பெற்றார் (17:27–29). அவருடைய முப்பது வல்லவர்களில் செலேக்கு ஒருவராவர் (23:27). சாலமோன் தனது அந்தப்புறத்தில் அம்மோனியப் பெண்களையும் சேர்த்துக் கொண்டார். அவர்களின் ஒருத்திதான், அவருக்குப்பின் அரசுக்கு வந்த இரகபெயாமின் தாயாகிய நாகமா ஆவாள். (1 அர 11:1; 14:21.31; 2 நாள் 12:13). இஸ்ராயேலரிடையே மில்க்கோம் (மோலக்கு) என்ற அம்மோனிய கடவுளின் வழிபாடு பரவ இப்பெண்கள் கருவியாக அமைந்தனர் (2 நாள் 12:5.7.33).

யோசபாத்தின் ஆட்சிக்காலத்தில் அம்மோனியரும் அரமேயரும் சேர்ந்து கர்கார் போரில் அசீரியர்களின் படையெடுப்பைத் தடுக்க முயன்றனர் (கி.மு. 835). பின்பு மோவாபியர், மெயூனியர் ஆகியோரோடு சேர்ந்து, யூதாவின் போர் முயற்சிகளையும் வணிகத்தையும் தடுக்க முயன்றனர். ஆனால் வெற்றி பெறவில்லை (2 நாள் 20:1–30). பிறகு யூதாவின் ஊசா, யோத்தாம் ஆகியோருக்குக் கப்பம் கட்டக் கட்டாயப்படுத்தபட்டனர் (26:8; 27:5).

எட்டாம் நூற்றாண்டில் அசீரிய மீண்டும் எழுச்சிகொண்டு வடக்கிழக்கிலிருந்து வரும் பெரும் ஆபத்தாக உருக் கொண்டது. மூன்றாம் திகிலாத்து–பிலேசர் அம்மோனியர்களை (733) வென்று அடக்கினார். ஆனால் அவர்களுடைய அரசு மரபு தொடர்வதை அனுமதித்தார். அடுத்த நூற்றாண்டு முழுவதும் அசீரியர்களுக்குக் கப்பம் கட்டும் சிற்றரசாக இருந்தாலும் அசூர்பானிப்பாலுக்கும் அர் சகோதரன் சமாஸ்–சும்–ஊகினுக்கும் (652–643) இடையே ஏற்பட்ட போராட்டத்தைப் பயன்படுத்தி தங்கள் சுதந்தரத்தை நிறுவ அம்மோனியர் முயன்றனர். 7–ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அம்மோனியர்

யூதாவுக்கு எதிராக பழித்துரைத்தனர் (செப் 2:8). காத்து நாட்டை கைப்பற்ற முயன்றனர் (49:1; சங் 83:7; ஆமோ 1:13). அசீரியப் பேரரசு உடைந்து அழிந்தபோது அராபியர்கள் குழுக்களின் தாக்குதல் அதிகமானது. அம்மோனியர் பாபிலோனியரின் பாதுகாப்பைப் பெறுவதற்காக அதன் சிற்றரசாக மாறினர் (2 அர 24:2). ஆனால் விரைவில் அண்டை நாடுகளுடன் சேர்ந்து சூழ்ச்சி செய்து பாபிலோனுக்கு எதிராகக் கிளப்பினர் (எரே 27.3). 587–586–இல் எருசலேம் வீழ்ச்சியுற்றபின், அம்மோனியர் மேலும் தொந்தரவு கொடுத்தனர். அதன் அரசன் பாகாலீஸ் பாபிலோனிய ஆளுநன் கெதலியாவைக் கொல்ல இசுமாயேலை அனுப்பினார் (40:14; 41:11–15). நெபுக்கதுனேசார் விரைவாக பதிலடி கொடுத்தார் (எசே 21:19–22). அவர்களை நாடு கடத்தினர். இவ்வாறு அம்மோனியரின் சுதந்திர நாடு இருப்பதை முடிவுக்குக் கொண்டு வந்தார்.

இஸ்ராயேலர் நாடு கடத்தப்பட்டுத் திரும்பியபின் அம்மோனியர் பற்றிய குறிப்புகள் முழுவதும் வேறுபட்ட பகுதியைக் குறிக்கிறது. நெகமியா (440) தோபியாவிடமிருந்து அதிக எதிர்ப்பைச் சமாளிக்க வேண்டியிருந்தது. இவர் ஒரு வேளை அம்மோன் என்ற பாரசீக மாகாணத்தின் ஆளுநராக இருக்கலாம். இவர் எருசலேமின் சுவர்கள் மீண்டும் கட்டப்படும்போது பெரிய இடைஞ்சல் அளித்தார் (நெக 2:10.19;4:3.7;6:1). நாடு கடத்தலுக்குப் பின் யூதர்களில் பலர் அம்மோனியரோடு கலப்புத் திருமணம் செய்து கொண்டனர் (13:23–31; எஸ் 9:1–12).

கிரேக்கர் காலத்தில் அம்மோனியர் தோலமியர் ஆட்சியின்கீழ் இருந்தனர். யூதா மக்கபேயர் திமோத்தேயுசின் படையை விரட்டி அடித்து அம்மோனிய நகராக யாசேரையும் அதன் சுற்றுப்புறங்களையும் கைப்பற்றியபோது (165) அம்மோனியரிடையே வாழ்ந்த யுதர்களில் பெரும்பாலோர் கொன்று அழிக்கப்பட்டனர் (1 மக் 5:6–8. 13). கி.மு. முதல்நூற்றாண்டில் அம்மோன் நபத்தேய அரசோடு சேர்க்கப்பட்டது. சிறிது காலத்திற்குப்பின் அது உரோமைப் பேரரசின் ஒரு பகுதியாக மாறியது.

2. தொல்பொருள் ஆய்வுச் சான்றுகள்:–

அம்மானிலும் மற்ற இடங்களிலும் செய்யப்பட்ட அகழ்வாய்வுகள் கி.மு. 1800–க்கு முன்னேயிருந்து நிலையான வாழ்க்கை முறையுள்ள மக்கள் இருந்ததற்குச் சான்று தருகின்றன. கி.மு. 1600–1200 இடையிட்ட காலம்பற்றிய பழம்பொருள் ஆய்வுகள் ஒரு கோவிலைக் கண்டுள்ளன. இது புதிய அதிகக்கலப்பின மான மக்களைச் சுட்டுகிறது (உப 2:20;21). அதற்குப்பின் வந்த அம்மோனியர் வலுவான ஆட்சிகொண்டிருந்தனர் என்பதற்கு 19 மிகவும் பெரிய எல்லைக் கோட்டைகள் வலுவான சான்று பகர்கின்றன. 7–6 ஆம் நூற்றாண்டை சேர்ந்த கண்டுபிடிப்புகள் அம்மோனியரின் பொற்காலத்தையும் உயர்ந்த பண்பாட்டையும் சுட்டுகின்றன.

எழுத்துச் சான்றுகள் அம்மோனிய மொழி எபிரேயத்தோடு நெருங்கிய தொடர்புடையது என்று சுட்டுகின்றன. 8–ஆம் நூற்றாண்டுக்குப்பின் இம்மொழி தனக்கே உரிய எழுத்து வடிவத்தைக் கொண்டிருந்ததாகத் தெரிகிறது. அம்மான் தலைநகரில் எடுக்கப்பட்ட 9வது நூற்றாண்டைச் சேர்ந்த ஏடு அம்மோனின் முக்கிய கடவுளாகிய மில்க்கோமுக்குக் கோவில் கட்டியதை நினைவு கூறுகிறது. மில்க்கோம் பெயர் இருமுத்திரைகளில் காணப்படுகிறது. தேல்–சீரான என்ற இடத்தில் கண்டெடுக்கப்பட்ட வெண்கலப் புட்டியில் காணப்படும் 5–ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த வாசகம் அமினதாபு அரசனைக் குறிக்கிறது. 7–6–ஆம் நூற்றாண்டு முத்திரைகள் கெனனோல் அரசனது பெயரைக் கொண்டுள்ளன (காண்க கானூன் 2 சாமு 10:2– 4). மற்ற முத்திரைகளில் வரும் பெயர்கள் 6–ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே அங்கு நிலவிய அராபிய செல்வாக்கைக் காட்டுகின்றன. அம்மோனில் கண்டெடுக்கப்பட்ட கிரேக்க இலத்தீன் வாசகங்கள் 2–ஆம் நூற்றாண்டைப்போல் அரபியர்களின் (நபத்தேய) ஆதிக்கத்தைச் சுட்டுகின்றன.

**அம்ராபேல்** (AMRAPHEL கடவுள்களின் காவலாளி)

தெற்கு பால்தீனில் ஐந்து அரசர்களை சித்தீம் பள்ளத்தாக்கில் வென்ற கெதர்லா–

கோமேரின் கூட்டணியைச் சேர்ந்த ஒரு அரசன் (ஆதி 14:1.9). ஆபிரகாமும் அவரது ஆதரவாளர்களும் சேர்ந்து கெதர்லா–கோமோரின்படையைத் தோற்கடித்தனர் (14:13–16 காண்க ஆபிரகாம்). இவர் "சீனாரின் அரசன்". சீனார் வட மெசபொத்தோமியாவிலுள்ள சிங்கார் மாவட்டமாக இருக்கலாம். அம்ராபேல் பாபிலோனிய நாட்டு அரசர் கமுரபியாகத்தர்ன் இருக்க வேண்டும் என்றக் கருத்து ஒரு காலத்திற்கு நிலவியது. ஆனால் மொழியியல் கணிப்பும், காலவரைக் கணிப்பும் இக் கருத்துக்கு அதிக ஆதரவு தருவதில்லை.

***அம்ராமியர்*** (AMRAMITES)

அம்ராம்–1–இன் வழித்தோன்றல்கள்; லேவியர் குடும்பத்தினர். பெட்டகத்திற்கும் (எண் 3:27) ஆலயக் கருவூலத்திற்கும் (1 நாள் 26:23) பொறுப்பானவர்கள்.

***அம்ராம்*** (AMRAM – உயர்த்தப்பட்ட மக்கள்)

1. கெகாத்தின் புதல்வன். இவர்தனது அத்தை யோக்கபேத்தை மணந்தார். அவருக்கு ஆரோன், மோசே என்ற புதல்வர்களும் மிரியாம் என்ற மகளும் இருந்தனர் (யாத் 6:18.20; காண்க எண் 26:59; 1 நாள் 6:3). இவர் லேவியின் பேரன். இவரது பெயர் லேவியரின் பரம்பரைப் பட்டியலில் பலமுறை சொல்லப்படுவதைக் காண்கிறோம் (எண் 3:19; 1 நாள் 6:2–3; 6:18; 23:12– 13; 24:20). இவர் வழிவந்த அம்ராமியர்கள் பாலைவனத்தில் புனித இடங்களைக் காத்துக்கொண்டும், பிறகு கோவில் கருவூலங்களைக் காத்தும் வந்தனர். இவர் 137 ஆண்டுகள் வாழ்ந்தார். புதிய ஏற்பாட்டில் குழந்தை மோசேயைப் பாதுகாத்ததற்காக அம்ராமும் யோக்கபேத்தும் போற்றப்படுகின்றனர் (எபி 11:23; காண்க: யாத் 2:1–2).

2. எஸ்ராவின் காலத்தில் புறவினப் பெண்ணை மணந்து பின்பு அவர்களை அனுப்பி விடும்படி பணிக்கப்பட்டவர்களில் ஒருவர். பானியின் புதல்வர்களில் ஒருவர் (எஸ் 10:34).

***அம்னோன்*** (AMNON – நம்பிக்கைக்குரிய)

1. கெபிரோனில், இஸ்ராயேலைச் சேர்ந்தவளும் தாவீதின் மனைவியுமான அகினோவாமுக்குப் பிறந்த அம்னோன், தாவீதுக்குத் தலைமகன் (2 சாமு 3:2; 1 நாள் 3:1). இவரைப்பற்றி ஒரே ஒரு நிகழ்ச்சிதான் தெரியவருகிறது. தனது ஒன்றுவிட்ட சகோதரியான தாமாரைக் கற்பழித்தார். அவளது தமையன் அபிசலோம் இதற்காக இவரைக் கொலை செய்து பழி தீர்த்தார் (2 சாமு 13). இது தாவீது பதுசேபாவோடு விபசாரம் செய்து, உரியாவைக் கொன்றபின் தாவீதின் குடும்பத்தில் நிகழ்ந்த முதல் கலகமாகும். இதுதான் தாவீதின் குடும்பம் பிளவு படுதலின் முதற்படியாகும்.

2. யூதாவின் தூரவழிவந்த வழித்தோன்றலும் சீமோனின் புதல்வர்களில் ஒருவரும் ஆவார் (1 நாள் 4:20).

***அயலார்*** (NEIGHBOUR)

ஒருவன் மற்றொருவனோடு தொடர்பு படுத்திக் கொள்ளும் போது அவன் மற்றவனுக்கு அயலானாகிறான். இச்சொல் நண்பன், தோழன், உடன்குடியிருப்பவன், உறவினன், ஒரே நாட்டைச்சேர்ந்தவன், அருகில் இருப்பவன் ஆகியோரைக் குறிக்கலாம்.

I. பழைய ஏற்பாடு:-

1. சொல்: அயலான் என்ற சொல் கிரேக்கத்தில் 'பிளேசியோன்' என்பதன் பொருளை சரியாக உணர்த்தினாலும் கூட, மூலமொழியாகிய எபிரேயத்தில் 'ரேயா' என்பதன் முழுப் பொருளையும் எடுத்துக்காட்டுவதில்லை. பல இடங்களில் இவ்வார்த்தையானது சகோதரன் என்றும் பொருள் கொண்டு வந்தாலும் கூட அயலான் என்னும் சொல்லை சகோதரன் என்பதோடு குழப்பிவிடக் கூடாது. இதனையே சொல்லிணக் கணத்தின் அடிப்படையில் நோக்கின் ஒருவன் மற்றொருவனோடு தொடர்பு ஏற்படுத்திக் கொள்வதை காட்டுகிறது. சகோதரன் என்பது உடன்பிறப்பைக் குறிக்கிறது. ஆனால் அயலானோ இவ்வகை உறவினால் இணைக்கப்பட்டவன் அல்லன். மேலும் என் உடன்பிறப்பும் நானும் ஒன்றெனக் கொள்ளுமிடத்து என் அயலானைப் பிரிதொருவன் எனக் கொள்வது பொருத்தமே. அவன் எனக்கு அடுத்தவனாக உள்ளான் எனினும் என் னோடு உறவு கொண்டு என் சகோதரனாக ஆக முடியும். இங்ஙனமாக தற்காலிகமான

(லேவி 19:13.16.18) அல்லது நிலையான உறவு ஏற்பட முடியும். இவ்வுறவு நட்பு (உப 13 7), அன்பு (எரே 3:1.20; உ.ச. 1:9.15) அல்லது தோழமை (யோபு 30:29) என்னும் அடிப்படையில் உருவாகலாம்.

பழைய சட்டத் தொகுப்பின் படி அயலான் என்பது சகோதரர்களைக் குறிக்காது; தம்மைச் சுற்றியுள்ளவர்களைக் (யாத் 20: 16 தொ) குறித்தது. இதன்படி பரந்த மனப்பான்மை விளங்கினும், சட்ட வரம்பு இஸ்ராயேலரைத்தவிர வேறு யாரையும் குறிக்கவில்லை. இறைவனால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் என்ற உணர்வில் ஊறியவர்கள் என்பதால், உப ஆகமமும் பரிசுத்தத்தின் சட்டமும் அயலானையும் சகோதரனையும் (லேவி.19:16 தொ) குழப்பி விடுகிறது. இஸ்ராயேலரை மட்டுமே நோக்குகிறது. இதனால் அயலானுக்கு அன்பு காட்டு எனும் பொழுது சகோதரனுக்கு மாத்திரமே அன்பு காட்டுதல் என பொருள் கொள்ளக்கூடாது. மாறாக, மேற்கூறிய வாக்கியங்களின் உள்நோக்கமானது தம்முடன் வாழும் அன்னியர்களையும் (லேவி 17:8.10.13;19:34) இஸ்ராயேல் கூட்டத்தில் சேர்ந்து அன்புகாட்ட வேண்டுமென்பதே.

2. அயலான் உறவுபற்றிய பழைய ஏற்பாட்டு ஒழுங்குகள் :-

அயலார்களுக்குள்ளே உறவு சட்டத்திற்குட்பட்டதாகும் (யாத் 20:16–17). இந்த உறவு சரியான முறையில் பாதுகாக்கப்பட வேண்டும் (22:5–15.25–27; காண்க லேவி.6:2 தொ; 19:9–18; 25:13–17.25–28.35 தொ). அயலானுக்குத் தீங்கிழைப்பவன் தீமை செய்கிறான். அவன் செய்தபடியே அவனுக்குச் செய்யப்படும்' (லேவி 24:19–20; 22; உப 19:11–13; காண்க உப 27:24; 1 அர 8: 31–32; 2 நாள்.6:22). அது அவனது சகோதரனுக்கே தீங்கிழைத்ததற்கு ஒப்பாகும் (உபா.4:41–43; 19:1–4; யோசு 20). ஒருவனுக்கும் அவன் அயலானுக்குமிடையே உள்ள உறவை இறைவனே ஏற்படுத்துவதால், அது சட்டத்திற்குட்பட்டதாகும். அயலானுக்கு உரிமை வழங்க மக்கள் மறுக்கும்போது ஒருவர்க்கொருவர் பரிமாற்றமான கடமைகளைப் புறக்கணிக்கும் போது, ஒழுக்க சீர்கேடுகளும், நாட்டுப் பேரழிவும் விளைகின்றன. மனிதர் பொய் சொல்லி அயலானை அவதூறாய்ப் பேசும்போது இறை சினத்திற்குள்ளாகின்றனர் (சங் 12:2; 101:5; காண்க பழ 11:9.12; 14: 21; 21: 10; 25:18; 26:18–19). ஆண்டரவது தீர்ப்பு நாளுக்கு முந்திய தீய காலத்தில் இச்சூழ் நிலை பரவலாக இருக்கும் (ஏச 3:5; எரே 9:4–9; மீக் 7:5–6; காண்க எரே 19:9). புதிய உடன்படிக்கையின் காலத்தில், மனிதரின் உள்ளத்தில் சட்டம் எழுதப்பட்டு, அனைவரும் அமைதியாய் வாழ்வர் என்று எரேமியா முன் நோக்குகிறார் (31:34). "ஒவ்வொருவனும் தன் அயலானைத் தன் திராட்சைக் கொடியின் கீழும் அத்திமரத்தின் கீழும் வந்து தங்கி இளைப்பாற அழைப்பார்" என்று எல்லோரும் ஒப்புறவாக வாழும் மகிழ்ச்சிமிக்க காட்சியைச் செக்கரியா சித்தரிக்கிறார் (3:10).

3. பாபிலோனிய அடிமைத்தளையிலிருந்து தாயகம் திரும்பிய பிறகு இருவித போக்குகள் தோன்றுகின்றன. ஒருவகையில் 'தம்மைச் சுற்றியுள்ளவர்கள்' என்னும் வாக்கியம் இஸ்ராயேல் மக்களையே குறிப்பதாக் கொண்டனர். எனவே இஸ்ராயேலரை அல்லது மதம் மாறி யூத மதத்தில் சேர்ந்தவர்களை மட்டுமே அன்பு செய்ய அவர்களுக்குக் கடமை உண்டு. இதற்கு மாறாக எபிரேயச்சொல் 'ரேயாவை மொழி பெயர்த்து கிரேக்கத்தில் பிளேசியோன் என்னும் வார்த்தையை எழுபது நூல் கையாளும்போது சகோதரன் என்னும் அர்த்தத்தில் இருந்து, "பிறர்" என்பதை நீக்கி பொருள் தருகிறது. ஆதலின் சகோதரனோ இல்லையோ நம் அன்புக்குரியவர் அனைவரும் அயலாரே. இருவர் சந்திக்கும் நேரத்திலிருந்து அவர்கள் ஒருவர்க்கொருவர் அயலார் என்று உறவு கொள்ளுகின்றனர். அவர்களிடையே ஏற்பட்ட இந்த உறவானது அவர்களின் தனித்தனி குடும்ப உறவினின்று வேறுபட்டது. மேலும் ஒருவரொருவரைப் பற்றி அவர்கள் கொண்ட கருத்திற்கு அபபாற்பட்டதாக இவ்வுறவு அமைகிறது.

II. புதிய ஏற்பாடு :-

சட்ட வல்லுநர் ஒருவர் இயேசுவிடம் "என் அயலான் யார்" (லூக் 19,29) என்று கேட்டபொழுது, ஒருவேளை அவர்

அயலான் என்றால் இஸ்ராயேலருள் ஒருவனாகிய தன் சகோதரன் என்றே எண்ணினார் போலும். ஆனால் இயேசுவோ அயலான் என்னும் சொல்லின் பொருளைச் சிறப்புற மாற்றிப் புதுக் கருத்தைப் புகுத்த விழைகின்றார்.

முதன் முதலில் "என் அயலானை உன்னைப்போல் அன்பு செய்வாயாக" என்ற கட்டளையைப் புனிதப்படுத்துகிறார். இவ்வாறு அவர் எல்லாக்கட்டளைகளையும் இந்த அன்புக் கட்டளையில் அடக்கிக் கூறுவதோடு அல்லாமல், எல்லாவற்றிற்கும் மேலாக கடவுளை அன்பு செய் என்ற கட்டளையோடு பிரிக்க முடியாதபடி இணைத்துக் கூறுகிறார். *(மத் 22:34–40)*. இயேசுவைப் போல பவுலும் இந்த ஒரே கட்டளையில் திருச்சட்டம் முழுவதும் நிறைவேறுகிறது *(கலா 5:14)* என்றும் இன்னம் சுருங்கக்கூறின், பிற கட்டளைகளின் *'முழுமையும்' (உரோ 13:8 தொ)* இதுவே என்றும் கூறுகிறார். இதையே யாக்கோபும் 'இறையரசின் திருச்சட்டம்' என்று கூறுகிறார் *(யாக் 2.8)*.

அடுத்தபடியாக, இயேசு நமது நண்பர்களையே அன்றி பகைவர்களையும் நேசிக்க வேண்டும் என்று கட்டளையை உலகனைத்திற்கும் பொதுவானதாக ஆக்கி விடுகிறார் *(மத் 5:43–48)*. இதனால் பகைவரிடமிருந்து நம்மைப் பிரித்து வைக்கும் தடைகளை எல்லாம் இதயத்திலிருந்து நாம் எவ்வளவு தூரம் களைந்து விடுகிறோம் என்றால் இந்த அன்புக் குணம் பகைவரையும் நம்மால் தொட முடிகிறது.

இறுதியாக, இயேசு யாவரும் வாழ்க்கையில் கடைபிடிக்கும் வண்ணம் இக் கட்டளையை நல்ல சமாரியன் உவமையின் மூலம் விளக்குகின்றார் *(லூக் 10:29–37)*. என் அயலான் யார் என தீர்மானிப்பது என்கையில் இல்லை. துன்புறுபவன் எவனும் என் உதவி தேவைப்படும் எவனும், அவன் என் பகைவனாக இருப்பினும், அவன் என் அயலான் ஆகிறான். துன்புறுபவனுக்கு உதவி செய்பவன் துன்புற்றவனுக்கு அயலாகிறான். இவ்வுவமையில் கிறிஸ்து தாமே இரக்கமிக்க அயலான் என்று அறிவிக்கிறார். இவ்வாறு கிறிஸ்துவைக் காண்பவன் இறை அன்பைப் பெறுபவனாகிறான். அப்போது இறைவனையும் அயலானையும் அன்பு செய்யக் கூடியவனாகிறான். அப்போது கிறிஸ்துவின் சீடன் மற்றெல்லார்க்கும் இரக்கமிக்க அயலானாகிறான். இவ்வாறு என் வாழ்க்கைப் பாதையில் இறையருளால் குறுக்கிடும் ஒவ்வொரு மனிதனிலும் இப்பரந்த அன்பு வெளிப்படையாகச் செயல்படுகிறது.

**அயின்** (AIN – *கண் ஊற்று – இடம்)*

*1.* "அகண்ட பாலஸ்தீனத்தில், இரிபிலாவுக்கு மேற்கே அமைந்திருந்த நகரமாக இருக்கலாம் *(எண் 34:11*; காண்க எச *47:15* தொ). இதை அடையாளம் காட்ட முடியாது. இது யாரிமுக்கும் யோர்தானும் சந்திக்கும் இடத்திற்கு அருகிலோ, கிர்பெத்–தாப்னே ஆகாவோ இருக்கக் கூடும் என்பர்.

*2.* யோசு *15:32*; *1* நாள் *4:32*–இல் இரிம்மோனுக்கு முன் வரும் நகரமாகும். இரண்டையும் சேர்த்து ஒரே சொல்லாக ஏன்–ரிம்மோன் என்று வாசிப்பது மேலானதாகத் தெரிகிறது (யோசு *19:7*; நெக *11:29*).

*3.* ஆரோனின் வழித்தோன்றல்களுக்கு அளிக்கப்பட்ட ஒரு லேவியர் நகரமாகும் (யோசு *21:16*). ஒருவேளை இது 2–இல் குறிக்கப்பட்ட நகரமாக இருக்கலாம். இப்பெயர், இணைப்பகுதியான *1* நாள் *6: 59*–இல் வருவதுபோல், "ஆசான்" என்று வாசிக்கப்படவேண்டும் என்பர் சில அறிஞர்கள்.

**அயின்** (AIN) – எழுத்து

எபிரேய நெடுங்கணக்கில் *16*–வது எழுத்து. இது சங்கீதம் *118*–இன் *16*–வது பகுதியில் ஒவ்வொருவரியின் தொடக்க எழுத்தாக வருகிறது.

**அயின்–கெரேம்** (AIN KAREM – *திராட்சைத் தோட்ட நீரூற்று)*

செக்கரியா–எலிசபெத்து ஆகியோரின் ஊராகவும், திருமுழுக்கு யோவானின் பிறப்பிடமாகவும், பாரம்பரியமாகக் கருதப்படுகிறது. எருசலேமுக்கு மேற்கே 8 கி.மீ. தூரத்தில் மலைப்பகுதியிலுள்ள சிற்றூர். இங்குதான் மரியாள் தன் உறவினளான எலிசபெத்தைச் சந்தித்தாள் (லூக்

1:39–40). அந்தச் சந்திப்பில் இயேசுவின் பிறப்பு முன்னறிவிக்கப்பட்டது (1:41–56).

**அயின்பெசுக்கா** (AIN FESHKA)

சாக்கடலுக்கு மேற்கில் 2 கி.மீ. தொலைவிலும் எரிகோவுக்குத் தெற்கில் 12 கி.மீ. தொலைவிலும் உள்ள ஓர் உப்பு நீரூற்றாகும். சாக்கடல் ஏடுகள் கண்டு எடுக்கப்பட்ட குகைகளுக்கு அருகில் உள்ளது.

**அய்யலத்து சாகார்** (AIJELETH SHAHAR)

சிலமொழி பெயர்ப்புகளில் சங் 22–க்கு அளிக்கப்படும் மேல் குறிப்பாகும். இது ஒரு இராகத்தையோ அல்லது அது போன்ற இசைக் குறிப்பையோ குறிக்க லாம். இதன் பொருள் "விடியலின் பெண் மான்" என்பதாகும். வறியவர்களுக்கு இறைவனுடைய உதவி எப்போதும் உள்ளது என்ற, சங்கீதங்களில் பொது வாக வரும் கருத்தை இப்பதம் சுட்டிக் காட்டுகிறது.

**அய்யலோன்** (AIJALON – மான் வயல்)

1. இந்த இடம் யோசுவா ஐந்து அரசர்கள் சேர்ந்த எமோரியர் கூட்டணியைத் தோற்கடித்ததால் புகழ்பெற்றது (யோசு 10:12). யோசுவா ஆண்டவரிடம் மன்றாடிக் கட்டளையிட்டதற்கு ஏற்ப "சூரியனும் சந்திரனும் நிலை குலையாமல் இஸ்ராயேலர் தங்கள் எதிரிகள் மேல் பழிவாங்கித் தீரு மட்டும் அசையாது நின்றன" என்று கூறப் பட்டுள்ளது (10:12–13). பேத்துகோரோனுக்குக் கீழே பெலிஸ்தியாவின் எல்லைப் புறத்தில் அமைந்து, யூதா நாட்டு மலைத் தொடர்களுக்குச் செல்லப் பயன்பட்ட முக்கிய கணவாயும், அமர்னா ஏடுகளில் அய்யலூன் என்று அழைக்கப்படுகிறது.

எருசலேமுக்கு 23 கி.மீ வடமேற்கிலும் எம்மாவுக்கு அருகிலும் உள்ள யாலோ என்ற இடத்தில் இந்த நகரம் குறிக்கப் படுகிறது. இங்கு அரண் சூழ்ந்த நகரத்தில் அழிவுகளைக் கொண்ட ஒரு பெரும் குன்று உள்ளது.

அய்யலோன் தாண் குலத்திற்குக் குறிக கப்பட்ட எல்லைப் பகுதியாகும் (யோசு 19:42). அய்யலோன் தாண் குலத்தவர் களுக்கு உரிமையாக்கப்பட்ட பகுதியாக இருந்தாலும் எமோரியர்களும் அங்கு தங்கினார்கள். ஆனால் கட்டாய ஊழியம் செயதனர். எப்பிராயிம் அவர்கள் மேல் ஆதிக்கம் செலுத்தியது (நீதி 1:35). மிக்கிமாசுபோரில் யோனத்தான் பெலிஸ்தியரைத் தோற்கடித்து அய்யலோன் வரை விரட்டியடித்தார் (1 சாமு 14:31).

தாவீதின் ஆட்சி அமைப்பில் அய்யலோன் கெகாத்தியர்களுக்குக் குறிக்கப் பட்ட லேவிய நகரமாகும் (யோசு 21:24). இது அடைக்கல நகரங்களில் ஒன்றாகும் (1 நாள் 6:69). முடியாட்சியில் பிளவு ஏற்பட்டபின், பென்யாமினின் பகுதிக்குள் அடங்கிய இந்நகரம் (1 நாள் 8:13) இரக பெயாமால் (922–915) மேற்கிலிருந்தும் வடக்கிலிருந்தும் வரும் தாக்குதல்களைத் தடுக்க அரண் சூழ்ந்த நகரமாக்கப் பட்டது (2 நாள் 11:10). முதலாம் யோவ காசு (ஆகாசு 735–715) ஆட்சிக் காலத்தில் இந்நகரம் பெலிஸ்தியர்களால் கைப் பற்றப்பட்டது (2 நாள் 28:18). இந்த இடத் தில்தான் யூதா மக்கபேயு கோர்கியாவை கி.மு. 166–இல் தோற்கடித்தார் (1 மக் 3:40; 9:1–5).

2. நீதிபதி ஏலோன் புதைக்கப்பட்ட செபுலோனில் உள்ள ஓர் இடம் (நீதி 12:12). இது எங்கிருந்தது என்ற விவரம் தெரிய வில்லை.

**அய்யா** (AIAH – வேட்டைப் பருந்து)

1. கிபயோனின் மகன். ஆனாவின் சகோதரன். கோரியர்களின் தலைவன் (ஆதி 36:4; 1 நாள் 1:40).

2. சவுலின் வைப்பாட்டியான இரிசிப் பாவின் தந்தையாவார் (2 சாமு 3:7). இவரது இரு புதல்வர்கள் சவுல் கிபயோனியர்களுக்குச் செய்த தீய செயல் களுக்காக அவர்களிடம் கையளிக்கப் பட்டனர் (21:8–11).

**அய்யா** (AYYAH)

எப்பிராயிமுக்கு உடைமையான நகர் களில் அய்யா ஒன்றாகும் (1 நாள் 7:28). பெலிஸ்தியாவிலுள்ள காசாவிலிருந்து இது வேறுபடுத்தப்படவேண்டும். சூழ் நிலையும் பெயர்களுக்கிடையேயுள்ள ஒருமைப் பாடும் இப்பெயர் ஆயி என்ப தோடு தொடர்புடையது போல் தோன்று கிறது. முற்காலத்திலிருந்த ஆயி அல்லது கிர்பெத் கயியான் தான் அய்யா இருந்த

இடமாகச் சில அறிஞர்கள் கருது கின்றனர். வேறுசிலர் நெகமியா 11:31–இல் குறிப்பிடப்பட்டுள்ள 'அய்யா' என்பதுதான் இந்த 'அய்யா'வாக இருக்கலாம் என்று கருதுகின்றனர்.

***அய்யாத்து, அய்யா*** (AIATH, AIJA)

ஆயி என்ற பெயரின் வேறு வடிவங்கள் (நெக *11:31*; ஏச *10:28* ) பார்க்க. ஆயி–*1*.

***அரக்–எல்–எமீர்*** (ARAG EL-EMIR)

பாரசீகர் காலத்தில் செல்வாக்குள்ள செல்வமிகுந்த அம்மோனியக் குடும்பமா கிய தோபியாத் மரபின் இருப்பிடமாகும் (நெக *2:19*; *6:1.12.14.17*; *13:4–8*; செக் *6:9–14*). கி.மு. *3*–ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு செங்குத்தான பாறைக்குள் குடைந்த குகை களில் காணப்படும் வாசகங்களில் "தோபியா" என்ற பெயர் காணப்படுகிறது. கஸ்ர்–ஏல்–அப்த என்ற ஒரு பெரிய கட்டி டத்தின் சிதைவு தோபியாதியரின் கல்ல றைக் கூடமாகக் கருதப்படுகிறது. ஆனால் இது ஓர் அரண்மனையாகவோ கோட்டை யாகவோ இருக்கலாம். இந்த ஊரின் இடம் வாடி–சீர் என்ற ஒடையருகில் எகிகோவுக்குக் கிழக்கில் *29* கி.மீ. தொலைவிலும் அம்மானுக்கு மேற்கில் *16* கி.மீ. தொலைவிலும் கண்டுபிடிக்கப்பட் டுள்ளது.

***அரக்கர்*** (இராட்சதர், பேராற்றல் வாய்ந்தவர்)

மற்ற மக்களைப்போல் எபிரேயரும் அரக்கர் இனம் உண்டு என்று நம்பினர். தொல்பொருள் ஆய்வோ, தொல்கால இயலோ, இப்படிப்பட்ட இனம் இருந்த தற்குச் சான்று தரவில்லை. உயிர் நூல் வல்லுநர்கள் கருத்துப்படி, குள்ளர்களைப் போல் அரக்கர்களும், சாதாரண மனித னின் இயல்புக்கு மாறான பிறப்பாவர். வழக்கமாக அரக்கர்கள் மலடுத் தன்மை யுடையவர்கள். இரண்டு சூழ்நிலைகள் அரக்கர்கள் மேல் நம்பிக்கைக் கொள்ளத் தூண்டின. *1)* அசாதாரண பருமனுடைய வர்கள் வாழ்ந்ததை எபிரேயர்கள் அறிந்தி ருந்தார்கள். பலபேர் விவிலியத்தினால் குறிக்கப்பட்டிருக்கின்றார்கள். பாசான் நாட்டு அரசன் ஒகு ஒரு அரக்கனாகக் கருதப்பட்டார். ஏனெனில் அவர் *4* மீட்டர் நீளமும் *2* மீட்டர் அகலமும் உள்ள இருப்புக் கட்டிலைக் கொண்டிருந்தான் (உப *3:11*). அரக்கர்களில் எல்லோருக்கும் தெரிந்தவர் தாவீதால் கொல்லப்பட்ட பெலிஸ்தியன், கோலியாத்து ஆவார் (*1* சாமு *17:23–54*). மற்ற பல பெலிஸ்திய வீரர்களும் குறிப்பிடப்பட்டிருக்கின்றனர் (*2* சாமு *21:16–22*; *1* நாள் *20:4. 6. 8*). *2)* எபி ரேயர், பாலஸ்தினத்தில் பல பெருங்கற் கால அமைப்புகளைக் கண்டனர். அவற் றை அமைத்தவர்கள் அரக்கர் பலத்தைக் கொண்டிருந்திருக்க வேண்டும் என்று எண்ணினர்.

அரக்கர்களில் இருபெரும் பிரிவுகள் இருந்தன: *1)* தெய்வீகத் தந்தைக்கும் மண்ணகத் தாய்க்கும் பிறந்தவர்களாகக் கருதப்பட்ட அரக்கர்கள். இத்தகைய கதை ஆதி. *6:1–4*–இல் காணப்படுகிறது. *2)* சில நாட்டோடும், குலத்தோடும் தொடர் புற்ற மனிதவர்க்க அரக்கர்கள். எல்லா அரக்கர்களும், தெய்வ–மனித–தொடக்கம் உள்ளவர்கள் என்று எபிரேயர்கள் நம்பிய தற்குச் சரியான சான்றுகள் இல்லை. உடல் பருமனும் நீடிய ஆயுளும் ஆன்மீகப் பொருளுடையதாகக் கருதபபட்டது என்பது குறிப்பிடத்தக்கதாகும். கானா னில் உளவு பார்த்து வர யோசுவாவால் அனுப்பப்பட்டவர்கள், திரும்பி வந்து கானான் நாட்டில் வாழ்ந்தவர்கள் அரக் கினரைப் போல்வர் என்று கூறி மக்களை அச்சமூட்டினர் (எண் *13:32–33*; உப *2:11.20*; *3:11.13*; யோசு *12:4*; *13:12*; *17:15*).

***அரச கட்டளை*** (EDICT)

இது எழுதப்பட்டு, அரச முத்திரை யிடப்பட்ட பொதுவில் வாசிக்கப்படும் அறிக்கையாகும் (எஸ். *6:11*; எஸ்த. *2:8*; *9:1.13*). இது எழுத்து வடிவம் பெறுவதா லும், பொதுவில் அறிவிக்கப்படுவதாலு மே அரச ஆணையினின்று வேறுபடுகிறது (எஸ்த *8:8–9*; *3:12*).

மேதிய–பாரசீக சட்டத்தின் மாற்ற முடி யாத தன்மையை விவிலியம் வலியுறுத்து கிறது (எஸ். *6:11*; எஸ்த *8:8–9*; தானி *6:8*) ஆனால் விவிலியத்திற்கு புறம்பே இதற்குச் சான்றுகள் இல்லை. மூன்றாம் தாரியு கரிதமோஸ் என்பவனைக் கொல்ல கட்ட ளையிட்டதாகவும், பின் தன் தவற்றை அறிந்து ஏற்றுக்கொண்டாலும் அதைத்

தடுக்க அவரால் ஒன்றும் செய்ய முடிய வில்லை என்றும் கூறப்படுகிறது. இக் கதை பாரசீகர்களின் சட்டம் மாற்ற முடி யாது என்பதற்குச் சான்றாகும் என்று கூறப்படுவது வாதத்திற்குரியது. ஏனெ னில் கொல்லப்படுவது ஏற்கெனவே நிகழ்ந்துவிட்டது. இக்கதை நிகழ்ந்துவிட்ட நிகழ்ச்சியை அரசனால் மாற்ற முடிய வில்லை என்பதையே உணர்த்தலாம். எஸ்தர் ஆகமத்தில் முதலில் யூதர்கள் அனைவரும் கொல்லப்பட வேண்டும் என்ற அரசகட்டளை யூதர்கள் தங்கள் பகைவர்களைப் பழிவாங்க அனுமதிக்கும் மற்றொரு அரச கட்டளையால் சரி செய் யப்பட்டு ஈடு செய்யப்படுகிறது (எஸ்த 8:8–13). பாரசீக அரச கட்டளையை மீறு பவர்களுக்குக் கடுமையான தண்டனை வழங்கப்பட்டது (எஸ் 6:11). புதிய ஏற்பாட் டில், ஆண் குழந்தைகள் யாவரும் கொல லப்படவேண்டும் என்ற அரச கட்டளை யை மீறிய மோசேயின் பெற்றோர்கள் விசு வாசத்திற்கு முன் மாதிரிகையாக கூறப் பட்டுள்ளார்கள் (எபி 11:23).

**அரச குளம்** (KING'S POOL)

எருசலேமிற்கு அருகில் உள்ள அரச தோட்டத்தில் இக்குளம் உள்ளது (நெக. 2:14). இது ஒருவேளை செலாது குளமாக இருக்கலாம் என கருதப்படுகிறது (3:15). சிலர் இது சாலமோனின் குளமாக இருக் கலாம் என்று கருதுகின்றனர். இதை யோசிபஸ் சீலோவாம் நீரூற்றுக்கும் ஒப்பேலுக்கும் இடையில் குறிக்கிறார்.

நெக 3:16–இல் குறிக்கப்படும் செயற் கைக்குளம் இதுதானா என்பது தெளி வாக இல்லை.

**அரச தோட்டம்** (KING'S GARDEN)

இது நெகமிய 3:15–இல் குறிக்கப்படு கிறது. இது எருசலேம் சுவற்றுக்கு வெளி யில் சிலோவாம் குளத்துக்கருகில் அமைந் திருந்த அரச தோட்டமாகும். தீரோபோ யோனும் கிதரோனும் சந்திக்கும் இடத்தி லிருந்தது. அரசர்கள் ஆட்சிக் காலத்தில் கிதரோன் ஓடையிலிருந்து நீர் பாய்ச்சப் பட்டது. நகரத்திலிருந்து குளத்திற்கு ஒரு சுரங்கம் இருந்தது. அது பள்ளத்தாக்கிற்கு இட்டுச்சென்றது (நெக.3:15). பாபிலோ னிய முற்றுகையின் போது தப்பிக்க அரசன் செதேக்கியா இந்தச் சுரங்கத் தைப் பயன்படுத்தியிருக்க வேண்டும். நிகழ்ச்சியுரை எருசலேமுக்கு வெளியி லுள்ள தோட்டத்திற்குப் போகும் வழியை விவரிக்கிறது (எரே 39:4; காண்க 52:7; 2 அரச 25:4).

**அரச நெடுஞ்சாலை** (KING'S HIGHWAY)

இந்தப் பாதையானது மறை நூலில் மூன்றுமுறை குறிக்கப்பட்டுள்ளது. மோசே இஸ்ராயேல் மக்களை வழிநடத்திச் செல்லும்போது, இந்த அரச நெடுஞ் சாலை வழியாய்ச் செல்வதாக ஏதோமிய ரிடமும் எமோரியரின் அரசனாகிய சீகோனிடமும் உறுதி அளித்தார் (எண் 20:17–18; 21:22–23; மேலும். உப 2:27– 30). இச்சாலையானது தமஸ்குவிலிருந்து அக்காபா வளைகுடாவரை கிழக்குப் பால ஸ்தீனம் வழியாகச்செல்லும் முக்கியமான நெடுஞ்சாலையாகும். இந்நெடுஞ்சாலை பாசான், கிலயாத்து, அம்மோன், மோவாபு, ஏதோம் ஆகியவை வழியாகச் சென்று, பெனிசியாவையும் எகிப்தையும் இணைக்கும் கடற்கரையோர வழிகளை நோக்கி நெகேபு வழியாகச்செல்லும் சாலைகளோடு இணைந்தது. இந்த நெடுஞ்சாலையின் இரு மருங்கிலும் அரண்கள் எழுப்பப்பட்டிருந்ததாக புதை பொருள் ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்ற னர். இந்த அரண்களில் சிலவற்றை எலா மியரின் அரசன் கெதெர்லா – கோமேர் மற்றும் இவரது கூட்டாளிகளால் அழிக் கப்பட்டன. இச்சாலையைப் பின்பற்றி இவர்கள் ஒன்றன்பின் ஒன்றாக பல நகர் களை கைப்பறிறினர் (ஆதி 14). இப்பகுதி 600 ஆண்டுகளுக்குக் குடியேறப்பட வில்லை. இதன்பின் இப்பகுதியில் ஊடுரு விய மக்கள் இவ்விடத்தைப் பிடித்தனர். புது அரண்கள் கட்டப்பட்டன. இச்சாலை நபத்தேய வணிகர்களால் பயன்படுத்தப் பட்டது. இவர்களிடமிருந்து திரேசான் மன்னன் இச்சாலையைக் கைப்பற்றி (கி.பி. 106) அதைக்கட்டி எழுப்பினார். அதன் பின்னர் இது திரேசன் சாலை யென அழைக்கப்படுகிறது. இப்போது இச்சாலை தரீக்–எஸ்–சுல்தானி என்ற ழைக்கப்படுகிறது. தற்போதைய யோர் தான் சாலை இந்நெடுஞ்சாலையைப் பின்பற்றி அமைக்கப்பட்டதாகும்.

**அரசர்களின் கல்லறை** (TOMBS OF THE KINGS)

தாவீது சந்ததியிலே வந்த யூதா அரசர்களின் கல்லறைகள். தாவீதின் நகரிலே, தாவீது வம்சத்தைச் சார்ந்தவர்கள் தமக்கென கல்லறைகளைக் கொண்டிருந்தனர் (2 நாள் 16:14; 2 அர 9:28). திடீரென்று செயற்கை மரணம் எய்தியவர்கள் இந்தக் கல்லறையில் புதைக்கப்படவில்லை. யோராம் தாவீதின் நகரில் புதைக்கப்பட்டார். ஆயினும் அரசர்களின் கல்லறையில் அவரை அடக்கம் செய்யவில்லை (2 நாள் 21:20). ஊசிய தொழுநோயாளியாய் இருந்ததால் அவர் அரச கல்லறைக்குப் புறம்பே புதைக்கப்பட்டார் (2 நாள் 26:23). மனாசேயும் (2 அர 21:18) ஆமோனும் (21:26) ஊசியாவின் தோட்டத்திலுள்ள கல்லறையில் புதைக்கப்பட்டனர்.

2 நாள் ஆகமம், நெகமியா ஆகமம் ஆகியவை துணைகொண்டு (2 நாள் 32:33; நெக 3:15–16) இந்த அரசர்களின் அமைந்திருந்த இடத்தை நாம் அறியலாம். இதன்படி இந்தக் கல்லறை திரோபேயோன், கிதரோன் சமவெளிக்கு இடையிலுள்ள மலைப்பகுதியில் அமைந்திருக்கவேண்டும் என அறிஞர்கள் கருதுகின்றனர். இதை அகழ்வாய்வுகள் ஒரளவுஉறுதி செய்கின்றன. ஆனால் மற்ற கல்லறைகள் எங்கே இருந்தன எனசொல்வதற்கில்லை. ஊசியாவின் தோட்டம் எங்கிருந்தது என்று கூறமுடியாது.

பிற்கால மரபுகள் தாவீது மன்னனின் கல்லறை பெத்திலகேமில் இருந்ததாகக் குறிப்பிடுகிறது.

**அரசரின் பள்ளத்தாக்கு**
(KING'S VALLEY, VALLEY OF SHAVEH)

எருசலேமுக்கு அருகில் உள்ள ஒரு பள்ளத்தாக்கு. இதுவும் சாவே பள்ளத்தாக்கும் ஒன்றாகத் தோன்றுகிறது. ஆபிரகாம், கெதர்லா – கோமேரையும் அவரது கூட்டணியையும் வெற்றி கொண்டபின், அவரைச் சலேமின் அரசர் மெல்க்கிசதேக்கும் சோதோமின் அரசனும் சந்தித்து வாழ்த்தினர் (ஆதி. 14:17–18; 2 சாமு. 18:18). அரசரின் பள்ளத்தாக்கை அரசரின் தோட்டத்தோடு ஒப்பிடும்போது இந்த இடம் எருசலேமுக்கு வெகு அருகில் உள்ளதைக் குறிக்கிறது. பாரம்பரியப்படி இது கிதரோன் பள்ளத்தாக்கு தாவீதின் நகரத்தின் தெற்கில் இன்னோம் பள்ளத்தாக்கைச் சந்திக்கும் இடத்தைக் குறிக்கிறது. ஆகவே சாவே பள்ளத்தாக்கும் அரசரின் பள்ளத்தாக்கும் ஒரே இடத்தையே குறிக்கின்றன எனக் கருதலாம். யோசிபஸ் இது எருசலேமிலிருந்து 370 மீட்டர் தொலைவில் உள்ளதாகக் குறிக்கிறார். இப்பகுதியில் ஒரு பகுதி அரசரின் சொத்தாகும். இங்குதான் அபிசலோம் தனது பெயருக்காக ஒரு நினைவுச் சின்னத்தை எழுப்பினார் (2 சாமு 18:18).

**அரச வாயில்** (KING'S GATE)

இவ்வாயில் சாலமோன் கட்டிய ஆலயத்தின் கிழக்குப் பக்கத்தில் அமைந்து, ஆலயத்தையும் அரச மாளிகையையும் இணைத்தது. இதை லேவியர் காவல் செய்தனர் (1 நாள் 9:18). இது ஓய்வு நாளிலும் அம்மாவாசை நாளிலும் அரசனுக்கு மட்டும் திறக்கப்பட்டது (எச 46:1–3). அரசன் ஆகாசு இந்த வாயிலை இடித்து, அதிலிருந்து கிடைத்த உலோ கப்பொருட்களை, மூன்றாம் திகிலாத்து – பிலேசருக்குக் கப்பம் கட்டப்பயன்படுத்தியதாகத் தெரிகிறது (2 அர 16:18).

**அரசனுடைய மகனின் திருமண விருந்து – உவமை**

இயேசு எருசலேமை நோக்கி கடைசி முறையாகச் செல்லும் வேளையில் கூறிய உவமைகளுள் இதுவும் ஒன்று (மத். 22:1–14). இது ஆண்டவரின் நீதித் தீர்வை அருகில் உள்ளது என எச்சரிக்கிறது. எனவே விழித்திருந்து விசுவாசத்தோடு அந்நாளுக்காக தயார் செய்ய அழைக்கிறது. லூக்காவின் திருமண விருந்து (லூக். 14:15.24) உவமையும் இந்த உவமையும் ஏறக்குறைய ஒரேவிதமாக உள்ளன. இவையிரண்டில் மத்தேயவின் உவமை சிறிது கடினமாக உள்ளது. அழைக்கப்பட்டவர்கள் வர மறுத்ததால் அழிக்கப்படுகின்றனர். இதன் மூலமாக மத்தேயுவின் தங்களை எதிர்த்த யூதர்களை விட்டு விட்டு புறவினத்தாருக்கு நற்செய்தி அறிவிக்கத் தயாராகிறார். மேலும் தனி மனித மீட்பை வலியுறுத்த திருமண உடை இல்லாதவன் தண்டிக்கப்படுவதை எழுதுகிறார். ஏனெனில் கடவுளின் அருட்

கொடையை ஏற்க அனைவரும் காத்தி ருக்க வேண்டியது கடமை. அழைக்கப் பட்டவரோ பலர் தேர்ந்து கொள்ளப்பட்ட வரோ சிலர் (மத் 20:16).

## அரசர்கள் நூல் 1,2

1. முன்னுரை

இரண்டு நூல்களும் தாவீதின் இறப்பி லிருந்து, நாடு கடத்தப்பட்டது வரை யூதா, இஸ்ராயேல் ஆகிய அரசுகளில் அரசர் களைப் பற்றி கூறுவதால் அரசராகமம் அல்லது அரசர்கள் நூல் என்று பெயர் பெற்றன. இந்த நூல்கள் சுமார் 400 ஆண்டுகளில் வாழ்ந்த அரசர்களைப் பற்றிப் பேசுகின்றன. மூல எபிரேய வாச கத்தில் இரு நூல்களும் ஒரே தொடர்ச்சி யான நூலாகவே இருந்தன. எழுபது நூல் இதற்கு முந்திய சாமுவேல் நூலையும் இதையும் இரண்டாகப் பிரித்து 1–ஆம், 2–ஆம், 3–ஆம், 4–ஆம் அரசராகமங்கள் என்றுப் பெயரிடப்பட்டது. பின் எல்லா விவிலியப் பதிப்புகளும் இதையே பின் பற்றின. எபிரேயப் பதிப்பு இவற்றை 1–ஆம், 2–ஆம் சாமுவேல் ஆகமங்களாக வும், 1ஆம், 2ஆம் அரசராகமங்களாகவும் பெயரிட்டது. குழப்பத்தைத் தவிர்க்க இப் பிரிவே இன்று பயன்படுத்தப்படுகிறது.

2. நூல் தோன்றிய சூழ்நிலை

சாமுவேல் ஆகமத்தின் ஆசிரியர் கூறும் இஸ்ராயேலில் அரச அமைப்பு, தாவீது பரம்பரை என்றும் நிலைத்திருக் கும் என யாவே அளித்த வாக்குறுதி இவையெல்லாம் 400 ஆண்டுகள் கடந்த போது பொய்யானது, அடிப்படையற்றது எனத் தோன்ற ஆரம்பித்தன. வரலாற்று நிகழ்ச்சிகளும் இதை உறுதிப்படுத்துவது போலவே அமைந்தன. கி.மு. 722–இல் சமாரியா வீர்ந்தபோது, இங்கு வாழ்ந்த வர்கள் அசீரியாவுக்கு நாடு கடத்தப்பட்ட னர். கி.மு.587–ல் நெபுக்கதுனேசார் எரு சேலமை முற்றுகையிட்டு, அதன் கோட் டைச்சுவர்களைத் தகர்த்து, நகரத்தை அழித்து ஆலயத்தையும் தீக்கிரையாக்கி னார். யூதேயாவின் தலைச்சிறந்தவர் களைப் பாபிலோனுக்கு நாடுகடத்தினார். இறைவன் சீனாய்மலையில் அளித்த வாக்குறுதிகள் நிறைவேறவே இல்லை. "எனது பெயர் அங்கேயிருக்கும்" என்று அவர் கூறிய ஆலயம் அழிந்துவிட்டது. தாவீதின் அரசு நிலைத்திருக்கும் என இறைவன் அளித்த வாக்குறுதி பொய்த்து விட்டது போல் தோன்றியது. இப்போது இஸ்ராயேல் மக்களின் விசுவாசம் சோத னைக்குள்ளானது. கடவுள் தன்னுடைய வாக்குறுதிகளுக்கு பிரமாணிக்கமாய் இருப்பதாக எப்படிச் சொல்லமுடியும்? தாவீதின் அரசு நிலைக்கும் என்னும் வாக்கை இன்னும் எப்படி நம்பமுடியும்? கி.மு. 587–இல் நாடு கடத்தப்பட்டபின் இஸ்ராயேல் மக்கள் இத்தகைய வினாக் களை எழுப்பினார். இவைகளுக்கு விடை கூறும் முகமாகத்தான் இந்நூல் எழுதப் பட்டது.

3. நூலின் காலமும் இடமும்

இரண்டாம் அரசராகமத்தில் கூறப் படும் பகுதி (2 அர 25:27–30). கி.மு. 562–ல் நடந்திருக்கக் கூடுமெனக் கருதப்படு கிறது. இதற்கு சிறிதுகாலத்திற்கு பிறகு தான் இந்நூல் எழுதப்பட்டிருக்க வேண்டும். மேலும் இந்த இரு நூல்களும் நாடு கடத்தப்பட்டவர்கள் திரும்பி வந்த தைப்பற்றி எதுவும் கூறாததால் கி.மு. 562–539–க்கு இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்டிருக்கலாம். வேறுசில அறிஞர் கள் நாடு கடத்தப்படுமுன், கி.மு. 621–597 –க்கு இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்டி ருக்கலாம் என்று வாதிடுகின்றனர். இன்னும் சிலர் இந்நூலின் முதல்பதிப்பு நாடு கடத்தப்பட்டிருந்தபோது சுமார் கி.மு. 562–க்கு பின் எழுதப்பட்டிருக்க லாம் என்று கருதுகின்றனர்.

இந்நூல் எங்கு எழுதப்பட்டது. நாடு கடத்தப்பட்டபின் பாலஸ்தீனத்தில் எஞ்சி யிருந்த மக்களிடையேயா? அல்லது கி.மு.597–லும். கி.மு.587–லும் நாடு கடத் தப்பட்ட மக்களிடையேயா? என்பது முடிவு செய்யமுடியாத ஒன்றாக உள்ளது. எங்கு எழுதப்பட்டது என்பதைவிட, யாருக்கு, எந்த நோக்கத் திற்காக எழுதப்படடது என ஆராய்வது நலம் பயக்கும்.

4. யாருக்கு? ஏன்? எழுதப்பட்டது

கி.மு. 587–இல் நடந்த கொடுமையான சம்பங்களைக் கண்ட யூதர்களுக்கும், விசு வாசகத்தில் தத்தளித்துக் கொண்டிருந்த அவர்களின் பிள்ளைகளுக்கும் எழுதப்

பட்டது இந்நூல். அவர்களுக்கு அறிவுரை கூறவும், உற்சாகமூட்டவும், அவர்களின் பழைய பாவங்களுக்கு மனத்துயரையும், எதிர்காலத்திற்கு நம்பிக்கையை எழுப்பவும் இந்நூல் எழுதப்பட்டது. சுருங்கச் சொல்லவேண்டுமெனில், கி.மு.587–இல் நடந்த கொடுமையான நிகழ்ச்சிகள் எழுப்பிய வினாக்களுக்கு விடைகூறும் விதத்தில் இந்நூல் எழுதப்பட்டது. எனவே இதில் நூலின் ஆசிரியர் இஸ்ராயேல் தங்களின் அரசர்கள் மூலம் உடன்படிக்கைக்கு பிரமாணிக்கமாய் இல்லையென்றும், ஆனால் இறைவன் எப்போதும் நம்பிக்கைக்குரியவராய இருந்தாரென்றும், அவர்ளின் பாவவாழ்க்கையைக் கண்டும் பொறுமையாக இருந்தார் என்றும் ஆசிரியர் போதிக்கிறார். இவ்வாறு அவர்கள்தான் உடன்படிக்கைக்குப் பிரமாணிக்க மற்றவர்களாய் இருந்தார்கள்; இறைவன் அல்ல என்பதை தெளிவாக அழுத்தந்திருத்தமாக கூறுகிறார். ஆசிரியரின் முக்கிய நோக்கம், அறிவுரை கூற மட்டுமன்ற, அவர்களுக்கு உற்சாகமூட்டவும் விரும்பியதால் தாவீதின் அரசு நிலைபெறும் என்ற வாக்குறுதியையம், அரசுக்கும், ஆலயத்திறகும், எருசலேமுக்கும் உள்ள நிரந்தர பிணைப்பையும் மீண்டும் மீண்டும் வலியுறுத்துகிறார். மேலும் இந்த வாக்குறுதிகள் இன்னும் நிர் மூலமாக்கப்படவில்லை, மாறாக இவற்றில்தான் எதிர்கால நம்பிக்கையே இருக்கிறது.

5. நூலின் தன்மை

முதன் முதலில், ஆசிரியர் வரலாற்று ஆசிரியர் அல்ல என்பதும், அவர் ஒரு இறையியல் வல்லுநர் என்பதையும் நாம் தெளிவாக உணரவேண்டும். பல இறையியல் கருத்துக்களை வாசகர்களின் மனதில் புகுத்த வரலாற்றை பயன்படுத்துகிறார். சுமார் 40 ஆண்டுகள் ஆண்ட இரண்டாம் எரொபயாம் மற்றும், ஓமிரி இவர்களுக்கு ஆசிரியர் 15 வசனங்கள்தான் ஒதுக்கியுள்ளதிலிருந்து இவர் வரலாற்று நிகழ்ச்சிகளை வரலாற்றுக்காக எழுதவில்லை என்பது தெள்ளத்தெளிவாகிறது. மேலும் ஆலயம், உடன்படிக்கையை கடைப்பிடித்தல், சமயம் சீர்திருத்தம், அரசர்களுக்கும் இறைவாக்கினர்களுக்குமுள்ள உறவு இவைகளைப்பற்றி இந்நூலின் ஆசிரியர் அடிக்கடி பேசுவதிலிருந்து அவர் சமயத்தை போதிப்பதையே தன் முதன்மையான நோக்கமாகக் கொண்டார் என்பதும் தெளிவாகிறது. மேலும் ஆசிரியர் பயன்படுத்திய மூலங்களையும் அவற்றை அவர் பயன்படுத்திய முறையையும், அவற்றை அவர் தொடர்புப்படுத்தும் விதமும், அவரின் முதன்மை நோக்கம் வரலாற்றைக் கூற அல்ல, மாறாக இறையியல் கருத்துக்களை வலியுறுத்தவே என்பதையும் எண்பிக்கின்றன.

6. ஆசிரியரது முறை

இந்நூலின் ஆசிரியர், இதை எழுதுவதில் பயன்படுத்தும் முறை நவீன இறையியல் வல்லுநர்களுக்கு முதிர்ச்சி அடையாத ஒன்றாக தோன்றலாம். அவரது முறையை இக்கால அறிவியல் முறையோடு ஒப்பிடும்போதுதான் இவ்வாறு தோன்றுகிறது. ஆனால் ஆசிரியரின் காலத்தில் அவர் இம்முறையை முதன் முதலாக பயன்படுத்தும் புது முயற்சியாளர் அல்லர். மாறாக, இவருக்கும், யாவே, எலோகீம், உபாகம பாரம்பரிய இறையியல் வல்லுனர்களோடு இவருக்கு நெருங்கிய ஒற்றுமை இருப்பதோடல்லாமல், அவர்களின் அடிச்சுவட்டையும் பின்பற்றுவதைக் காணலாம். முதலில் அவர் பயன்படுத்தும் முறையைச் சுட்டிக்காட்டி, அதை எவ்வாறு தன் இறையியல் கருத்துகளைத் தொகுக்க பயன்படுத்துகிறார் என்று காண்பது நலம் பயக்கும்.

முன்பே குறிப்பிட்டபடி, இந்நூலின் ஆசிரியர், வரலாற்றை வரலாற்றுக்காகவே எழுதாமல் தனது இறையியல் நோக்கத்தை நிறைவேற்றவே பயன்படுத்தினார். எனவே இஸ்ராயேலின் வரலாற்றைக் கூறும் மூலங்களிலிருந்து, தன் இறையியல் போதகத்திற்கு ஆதரவு காட்டும் நிகழ்ச்சிகளை மட்டும் பிரித்தெடுத்துப் பயன்படுத்துகிறார். இப்படிப்பட்ட பிரித்தெடுக்கும் முறைதான் அவருடைய படைக்கும் பணிக்கே கருவாகும். சமயத்தைச் சேராத வாசகர்களுக்கு, இஸ்ராயேலின் வரலாற்று நிகழ்ச்சிகளில் இறைவனின் திருக்கரம் செயலாற்றுவது தெளிவாக இல்லாததால், யாவருக்கும் புரியும் வண்ணம்

தேர்தல், வரிசைப்படுத்துதல், தெளிவு படுத்துதல் ஆகிய முறைகளை பயன் படுத்தி ஆசிரியர் விளக்க நினைக்கிறார். இதை அவருடைய விளக்கக் குறிப்பு களிலும் (*1 அர 11; 2 அர 17*) வெளிப்படை யான இறையியல் தீர்ப்புகளிலும் (யூதா, இஸ்ராயேல் அரசர்களின்மேல் சொல் லப்படும் தீர்ப்பு) விளக்கவுரையுடன் கூடிய அறிவுரைகளிலும் (*1 அர 8:23–53; 9:3–9; 11:11–13. 31–39; 14:7–16; 2 அர 20:16–19; 21:11–15; 22:15–19; 23:26–27*) அறியலாம்.

ஆசிரியரது முறைகளை தெரிந்து கொண்டபின் அரசராகமங்களைபின் வரு மாறு ஆய்வு செய்யலாம். முதலில் ஆசிரி யர் பயன்படுத்தும் மூலத்தைமுடிந்த வரை தனியாகப் பிரித்தெடுத்து அவ்வொவ் வொன்றுக்கும் உரிய தனிப் பண்புகளைத் தொகுக்கவேண்டும். அடுத்து ஆசிரி யருக்கே உரிய விளக்கவுரைகள், இறை யியல் தீர்ப்புகள், விளக்கக் குறிப்புகள் இவற்றை முடிந்த மட்டும் பிரித்தெடுக்க வேண்டும். இலக்கிய நடையைக் கொண்டு நாம் இதை முடிவு செய்யமுடியும். ஆசிரி யருக்கே சொந்தமான பகுதிகள் இணைக் கும் பகுதிகளாக இருக்கலாம். அறவுரைப் பகுதிகள் ஆசிரியர் பயன்படுத்தும் இலக் கிய யுக்திகளாக இருக்கலாம் அல்லது தனது தேவைக்கேற்ப இந்நிகழ்ச்சிகளை பெரிதாக்கிப் பயன்படுத்தி இருக்கலாம். பின்னதை, இறைவனோ அல்லது இறை வாக்கினரோ அல்லது அரசர்களோ கூறும் அறவுரைப் பகுதிகளில் காணலாம் (*1 அர 8*).

மேலே குறிப்பிடப்பட்டிருக்கும் செயல் முறை இந்நூலின்பெரும்பாலான பகுதி களுக்கு, விளக்கமளிக்க பயன்படுகிறது. எளிதாக விளக்கமுடியாத பகுதிகள் இருந் தால், ஆசிரியர் இந்நிகழ்ச்சிகளை எடுத் தாண்டபோது சரியாக பதிப்பிக்காததே காரணம்.

7. மூலங்கள்

அரசராகமங்களின் ஆசிரியர் சுமார் பத்துக்கு மேற்பட்ட மூலங்களை பயன் படுத்தியுள்ளார். அவைகளில் மூன்று மட்டுமே பெயருடன் குறிப்பிடப்படு கின்றன. (1) சாலமோனின் பணி நூல் (*1 அர 11:41*); (2) இஸ்ராயேல் அரசர்களின் பணி நூல் (*1 அர 14:19*); (3) யூதாவின் அரசர்களின் பணி நூல் (*1 அர 15:17*). பெயரிட்டு அழைக்கப்படாத மூலங்கள்: (1) தாவீது அரசப்பரம்பரையின் வரலாற்று முடிவு (*1 அர 1–2*); (2) ஆலயம் பற்றிய குரு குலமூலம் (*1 அர 6–7*); (3) எலியாவின் வட்டம் (*1 அர 17–19*); (4) எலிசாவின் வட்டம் (*2 அர 2:1–8:15*); (5) அத்தாலியா வின் வட்டம் (*2 அர 11*); (6) ஏசயாவைப் பற்றி அவருடைய சீடரிடமிருந்து தோன் றிய வட்டம் (*2 அர 18:17–20:19*); (7) இஸ்ரா யேல் அரசர்களோடு பல்வேறு இறை வாக்கினர்கள் கொண்ட உறவு, முன்னறி விப்பு நிறைவேறுதல் போன்ற கதைகள் அடங்கிய பல்வேறு தொகுப்பு; இதில் செமாயாவும், இரகபெயாமும் (*1 அர 12:21–24*); முதலாம் எரொபயாம், யோசியா இவர்களுடன் தொடர்பு கொண்டிருந்த பெயர் குறிப்பிடப்படாத இரண்டு இறை வாக்கினர்கள் (*1 அர 13; 2 அர 23:16–20*); அகியாவும் முதலாம் எரொபயாமும் (*1 அர 14*), ஆகாபும் இரண்டு பெயரிடப் படாத இறைவாக்கினர்களும் (*1 அர 20*); ஏகூவும் பாசாவும் (*1 அர 16:1–12*); மிக்கா யாவும், ஆகாபும் (*1 அர 22*); யோசியாவும், குலிதா என்ற பெண்இறைவாக்கினரும் (*2 அர 22:1–20*).

பெயரிட்டு ஆசிரியர் குறிப்பிடும் மூன்று மூலங்களும், பொதுமக்கள் எளி தாக பார்க்கமுடியாத அதிகாரப்பூர்வ மான ஆயப் பதிவேடுகளாய் இருக்கலாம் அல்லது பொது மக்களுக்குக் கிடைக்கும் விதத்தில் முன்பிருந்த ஆசிரியர்களால் இந்த ஆயப்பதிவேடுகளிலிருந்தும், இறை வாக்கினர்களின் மூலங்களிலிருந்தும் கொடுக்கப்பட்ட தனிதொகுப்புகளாக இருக்கலாம். எலியாவின், எலிசாவின் வட்டங்கள் கலக்கப்பட்டுவிட்ட நிலையும், இறைவாக்கினரின் முன்மொழிதல் நிறை வேறியதைப்பற்றிய பல அறிக்கைகளும் இந்நூலின் ஆசிரியருக்கு முன்பே தொகுக் கப்பட்டுவிட்டன என்பதை எண்பிக் கின்றன.

8. வாசகம்

எபிரேய மசொரோட்டிக் வாசகம், இறைவாக்கினர் நூல்களைவிட இந் நூலின் உண்மை மூலத்தை பாதுகாத்து

வைத்திருக்கிறது. கிரேக்க எழுபதுநூல் வாசகம், மசோரோட்டிக் வாசகத்திலுள்ள கடினமான பகுதிகளை விளக்க பயன் படுத்துவதைவிட, அதில் கலந்துள்ள பல தவறான செய்திகளை நீக்க உதவுகிறது. வாசகத்தில் சிலபகுதிகளை மாற்றியமைத் திருப்பதும், பல பெரிய பகுதிகளை இணைத்திருப்பதும்தான் கிரேக்க எழுபது நூல் வாசகத்தின் தனித்தன்மையாகும். இரண்டு வாசகங்களுக்கிடையே சில வேறுபாடுகளும் உள்ளன. *1 அர 4:20 –28; 7: 16.28* ஆகிய பகுதிகளில் யோசபாத்தின் ஆட்சி, ஆகாபுக்கு முன்கிரேக்க வாசகத் தில் குறிப்பிடப்படுகிறது. ஆனால் மசோ ரோட்டிக் வாசகத்தில் இது மாறியிருக் கிறது. *1 அரச 4:20–28*–இல் கிரேக்க வாச கம் வசனங்களை நல்ல வரிசைப்படுத்தி யுள்ளது. *1 அர 7*–இல் ஆலயத்தில் இருக்க வேண்டிய பொருட்களை விவரிக்கின்றது. *1 அர 16:28*–இல் கிரேக்க வாசகத்தின்படி யோசாபாத் ஒமிரியின் *11*–ஆம் ஆண்டில் ஆட்சிக்கு வந்தார். கிரேக்க வாசகத்தில் *1 அர 2:35; 1 அர 2:46; 1 அர 12:24* ஆகிய பகுதிகள் சேர்க்கப்பட்டுள்ளன.

9. நூலின் ஒற்றுமையும் அமைப்பும்

அரசர்களைப் பற்றிக் கூறும்போது ஆசிரியர் இறையியல் கருத்துக்களையும் எடுத்துரைக்கிறார். ஒவ்வொரு அரச னின் வரலாற்றையும் ஒரே பணிச்சட்டத் தில் கூறுவதால் நூல் முழுவதும் ஒரு ஒற்றுமை காணப்படுகிறது. இதில் ஒரு தொடக்கவுரை வாய்ப்பாட்டையும், முடி வுரை வாய்ப்பாட்டையும் காணமுடிகிறது. யூதாவின் அரசர்களைப் பற்றிய தொடக்க வுரை வாய்பாடு ஐந்து கூறுகளை கொண்டது: (1) பேசப்படும் அரசு: மற்ற அரசுகளோடு கொண்டுள்ள காலத் தன்மை; (2) அரசனின் வயது; (3) ஆட்சிக் காலம்; (4) அரசின் மேல் தீர்ப்பு; (5) அரசனின் தாய்ப் பெயர். உதாரணமாக: "சாலமோனின் மகன் இரகபெயாம் யூதா வில் ஆட்சிசெய்தான். இரகபெயாம் அரசனானபோது அவனுக்கு வயது நாற் பத்தொன்று:.... எருசலேமில் பதினேழு ஆண்டு ஆண்டான். அம்மோனியாளாகிய அவன் தாயின் பெயர் நாகமா... ஆண்டவருக்கு விரோதமாய்ப் பாவம் செய்தான்" (*1 அர 14:21–22*). இஸ்ராயேலில் ஆண்ட அரசர்களைப் பற்றிய தொடக்க வுரையில்: (1) அவன் ஆட்சிக்கு வந்தபோது யூதாவில் ஆண்ட அரசனின் பெயர்; (2) மகன் ஆட்சிக்கு வந்ததால் தந்தையின் பெயர்: (3) ஆண்ட தலைநகரம்;(4) தீர்ப்பு. தாவீது அரசர் வம்சத்தைச் சார்ந்த அரசர்களுக்கு மட்டுமே தாயின் பெயர் தரப்படுகிறது. மேலும் யூதாவின் அரசர் களுக்கு அளிக்கப்படும் தீர்ப்பு மூன்று வகைப்படும்: முழுவதும் கண்டனம் செய் யும் தீர்ப்பு, வரையோடு கூடிய பாராட்டு வழங்கும் தீர்ப்பு, வரையறையற்ற பாராட்டை வழங்கும் தீர்ப்பு.

யூதா அரசர்களின் முடிவுரை வாய்ப் பாடு நான்கு கூறுகளை கொண்டிருக்கும் (1) ஆசிரியரின் மூலம் பற்றிக் குறிப்பு, (2) அரசனின் மரணம், (3) அடக்கம், (4) அதற்குபின் வந்த அரசனின் பெயர்: உதாரணமாக "இரகபெயாமின் மற்ற செயல்களும் அவன் செய்தவையாவும் யூதா அரசர்களின் பணி நூலில் எழுதப் பட்டுள்ளன. இரகபெயாம் தன் முன்னோ ரோடு துயில் கொண்டு தாவீதின் நகரில் தன் முன்னோரோடு அடக்கம் செய் யப்பட்டான்....... அவனுடைய மகன் அபி யாம் அவனுக்குப்பின் அரசுக்கட்டில் ஏறி னான்" (*1 அர 14:29–31*). இஸ்ராயேல் அரசர்களின் முடிவுரை வாய்ப்பாடு: (1) ஆசிரியரின் மூலம் பற்றிய குறிப்பு, (2) இறப்பு, அவனுக்கு பின் ஆட்சிக்கு வந்தவன் பெயர்.

10. இறையியல்

ஆசிரியரின் இறையியலை புரிந்து கொள்ள வேண்டுமெனில் முதலில் உபா கம பாரம்பரிய வரலாற்றில் ஒவ்வொரு அரசனும் கொண்டிருந்த இடத்தையும், தன்னுடைய கருத்துக்களை எடுத்துரைக்க எப்படி அதை பயன்படத்திக் கொண்டார் என்பதையும் முதலில் புரிந்துக் கொள்ள வேண்டும்.

அ) அரசர்களின் பிரமாணிக்க மின்மை:– இஸ்ராயேலின் வீழ்ச்சிக்குக் காரணம் இறைவன் உடன்படிக்கையைக் கடை பிடிக்கத்தவறியது அன்று, மாறாக உடன்படிக்கைக்கு எதிராக அரசர்கள் காட்டிய பற்றுறுதியின்மைதான். யூதா,

இஸ்ராயேல் அரசர்களின் மேல் கூறும் தீர்ப்பினால் ஆசிரியர் இதை மக்கள் மனதில்பதியும்படி போதிக்கிறார். எல்லா அரசர்களும், தாவீது மரபைச்சார்ந்த சில அரசர்களைத்தவிர, உடன்படிக்கைக் கும், ஆலயத்திற்கும் பிரமாணிக்கம் இல்லாமல் நடந்ததாகத் தீர்ப்பிடப்படு கின்றனர்.

*ஆ) முன்னறிவித்தல் நிறைவேறுதல்:-* இறைவார்த்தைதான் மோசே வழியாக இஸ்ராயேலை ஒர தனி இனமாக்கி அவர் களின் வரலாற்றைத் தோற்றுவித்தது. அதே இறைவார்த்தைதான் அவர்கள் வாழ்வில் பங்குகொண்டு தவறாது நிறை வேற்றி கடந்தகாலத்தில் தொடந்து வர லாற்றை அமைத்தது. முதல் அரசராகமத் தில் 25-ம், இரண்டாம் அரசராகமத்தில் 20-ம் ஆக 45 முன்னறிவித்தல்- நிறை வேறுதல் நிகழ்ச்சியுரைகள் குறிப்பிடப் படுகின்றன. இவைகளெல்லாம், இறை வார்த்தை ஒரு முறை கூறப்பட்டுவிட்டால் அது தவறாது நிறைவேறியேத்தீரும் என்பதை வலியுறுத்துகின்றன.

*அ) நாத்தானில். இறைவாக்கு:- 2 சாமு 7-* இல் கூறப்பட்ட, தாவீதின் அரசு என்றும் நிலைபெறும் என்னும் நாத்தா னின் இறைவாக்கு அதன் தன்மையால் எத்தனை இடர்பாடுகள் வந்தாலும் நிறை வேறியேத்தீரும். ஆசிரியர் இந்நூலை எழுதியபோது, நாடு அழிந்து, மக்கள் நாடு கடத்தப்பட்டு மன்னன் பதவியிழந்து இருந்ததால், மற்ற இறைவாக்குகளைப் போல இதுவும் நிறைவேறியுள்ளது என சுட்டிக்காட்ட இயலவில்லை. அவருக்கும் மற்ற இஸ்ராயேல் மக்களுக்கும் இவ்விறை வாக்கு நிறைவேறும் என்பது ஒரு விசு வாச உண்மையாகவே இருக்கவேண்டிய தாயிற்று. ஆனால் இந்த விசுவாசத்திற்கு உறுதியான அடிப்படை உண்டு என்பதை ஆசிரியர் பலவகைகளில் வலியுறுத்து கிறார். இதில் 45 முறை குறிப்பிடப்படும் முன்னறிவித்தல்-நிறைவேறுதல் பகுதிகள், அவ்விதமே நாத்தானின் இறைவாக்கும் நிறைவேறும் என வலியுறுத்துகின்றன. நாத்தானின் இறைவாக்கைவிட அவ் வளவு முக்கியமில்லாத இறைவாக்குகள் நிறைவேறுமாயின், நிச்சயம், தாவீதின் அரசு நிலைபெறும் என்னும் நாத்தானின் வாக்கு நிறைவேறாமல் போகாது. இவ் விறைவாக்கை மக்கள் மறந்துவிடக் கூடாது. என்பதற்காக 40 இடங்களில் தாவீதைச் சுட்டிக்காண்பிப்பதோடு, 7 முறை நேரடியாகவும், 7 முறை மறை முகமாவும், நாத்தானின் இறைவாக்கை யும் சுட்டிக்காட்டுகிறார் *(1 அர 2:4.45; 3:6-7.14; 5:5; 6:12; 11:32.34.36.39; 15:4.5; 2 அர 8:19)*. தாவீதின் மரபைச் சார்ந்த 21 பேரில் 19 பேருக்கு அவர்களின் தாயின் பெயரைக் கொடுத்தும், 12 பேரை "தாவீதின் நகரத் தில்" அடக்கம் செய்யப்பட்டுள்ளனர் எனக் கூறியும், "தாவீதுக்காக தாவீது அரச மரபுக்கு காட்டப்பட்ட சிறப்பான பாதுகாப்பை ஆசிரியர் உயர்த்திக்காட்டு கிறார் *(1 அர 11:12.32. 34.36.39; 15:4; 2 அர 8:19; 11:1 தொ; 19:34)*. ஆனால் வட அரசர் களைப் பற்றி கூறும்போது அவர்களின் தாயின் பெரையோ, அடக்கம் செய்யப் பட்ட இடத்தையோ குறிப்பிடவில்லை.

"நெபாத்தின் மகனான எரொபயா மின்" அடிச்சுவட்டை பின்பற்றியதற்காக கண்டனம் செய்யப்படும் வட அரசர்கள் மேல், அவனுடைய பாவம் "ஜென்மப் பாவம்"போல அழுத்துகிறது *(1 அர 14:7-16)*. மாறாக தென்னாட்டு அரசர்கள் தாவீதோடு ஒப்பிடப்படும்போது அது அவர்களுக்கு சாதகமாக இல்லாவிட்டா லும், அவர்களிலும், ஆசா, யோசபாத்து, எசக்கியா, யோசியா போன்றவர் விதி விலக்குபெறுகின்றனர். முதலாம் எரொப யாமின் பாவத்தால் வட அரசனின் மன்னர்கள் அழிந்தனர். ஆனால் "தாவீ தின் மூல நேர்மையின்" பொருட்டு தாவீ தின் மரபினர் குழுவாக இறைவனின் பாதுகாப்பையும் ஆதரவையும் பெற்றனர். கி.மு.562-இல் நெபுக்கது னேசாருக்குப் பின் பதவியேற்ற எவில் மெரோதாக், தாவீது மரபிலே நாடு கடத்தபட்டிருந்த யோயாக்கினை சிறையிலிருந்து விடு வித்து அவருடன் கனிவுடன் உரையாடி, அவருக்கு பாபிலோனிலிருந்த மற்ற அரசர்களுக்குமேல் அதிகாரம் வழங்கி னார் என்று ஆசிரியர் நூலை முடித்து அவர்களுக்கு உற்சாக மூட்டுகிறார்.

ஈ) எருசலேமும் ஆலயமும்:- எருசலேமையும் ஆலயத்தையும், பரிகாரம் செய்தலையும்பற்றி ஆசிரியர் கூறுகின்ற கருத்துக்களும் குறிப்பிடத்தக்கவை. இங்கு இந்நூலின் ஆசிரியர், நாத்தானின் இறைவாக்கோடு எருசலேமையும், ஆலயத்தையும் தொடர்ப்படுத்தியும், எருசலேம் இறைவனால் தேர்ந்தெடுக்கப்பட்ட நகரம் என்றும் அங்குள்ள ஆலயம் இறைவன் "என்றென்றும்" வாழத் தேர்ந்து கொண்ட இடமென்றும் அடிக்கடி குறிப்பிட்டும், எருசலேமும் ஆலயமும், தாவீதின் அரசும் நிலை பெறும் என்ற நாத்தானின் இறைவாக்கிலே பங்குபெறுகின்றன என்று மறைமுகமாகவும், வெளிப்படையாகவும் சுட்டிக்காட்டுகிறார் (1 அர 6:11–13; 8:12–13; 9:3–9; 11:13.32.36; 14:21; 15:5; 2 அர 19:34; 20:6; 21:7–8). மேலும் ஆலயக் கட்டிடத்தைப் பற்றித் தெளிவாக விளக்கியும் (1 அர 6–7), ஆலயத்தில் கவனம் செலுத்திய அரசர்களைப்பாராட்டியும் (1 அர 3–10; 15:9–15; 2 அர 12:1–2; 18:1–3; 22:1–2; 23:25), ஆலயச் சீர்திருத்தப் பணிகளைச் செய்த ஆசா (1 அர 15), யோவ காசு (1 அர 12), எசக்கியா (2 அர 18), யோசியா (2 அர 22) போன்ற அரசர்களைப் பற்றி விளக்கிக் கூறியும் தன்கருத்தை ஆதரவோடு எண்பிக்கிறார். "பரிகாரம்" செய்தலைப்பற்றி குறிப்பிடும்போது ஆசிரியர், இறைவன் தீய அரசர்களைத் தண்டித்தார் என்பதை கவனமாக எடுத்துரைக்கிறார். ஆனால், அவர்கள் எப்போதோ செய்த நன்மைக்காகவோ அல்லது அவர்களின் மனத் துயரத்தின் பொருட்டோ (1 அர 11:12; 21:29; 2 அர 20:17–19; 22:18–20) தண்டனையைத் தள்ளியும் வைத்திருக்கிறார் என்பதையும் மறக்கவில்லை.

11. நூலின் திட்ட அமைப்பு

1. சாலமோனின் வரலாறு (1 அர 1:1–11:4=2 நாள் 1–9)

அ) தாவீதின் அரியணையில் சாலமோன் அமர்தல் (1:1–2: 46)

1. தாவீதின் அரியணைக்கு அதோனியாவும் சாலமோனும் போட்டியிடுகின்றனர் (1:1–53).
2. தாவீது இறத்தலும், எதிர்ப்புகள் நீக்கப்படுதலும் (2:1–46)

ஆ) சாலமோனின் மேன்மைமிக்க ஆட்சி (3:1–11:41)

1. ஞானியாகிய சாலமோன் (3:1–4:34)
2. கட்டடப்பிரியர் சாலமோன் (5:1–9:14)
3. அனைத்துலக வணிகர் சாலமோன் (9:15–10:29).
4. பாவியான சாலமோன் (11:1–41).

2. பிளவுபட்ட அரசு (1 அர 12:1–2 அர 16:34).

அ. சாலமோன் அரசு பிளவு (12:1–13:34)

1. அரசுபிளவுபடுதல் (12:1–20 = 2 நாள் 10)
2. இறைவாக்கு நிறைவேறுதல் (1 அர 12:21–24)
3. எரொபயாமின் பாவம் பற்றிய உபாகம விளக்கம் (12:25–32)
4. இறைவாக்கு நிறைவேறுதல் (12:33–13:34)

ஆ. எலியா காலம் வரையுள்ள அரசர்களின் ஒத்தமைவு வரலாறு (14:1–16:34)

1. முதலாம் எரொபயாம் (922–901) (14:1–20)
2. இரகபெயாம்(922–915) (14:21–31)
3. அபியாம் (915–913) (15:1–8)
4. ஆசா (913–873) (15:9–24)
5. நாதாபு (901–900) (15:25–31)
6. பாசா (900–877) (15:33–16:7)
7. ஏலா (877–876) (16:8–14)
8. சிமிரி (876) (16:15–20)
9. ஒமிரி (876–869) (16:21–28)
10. ஆகாபு (869–850) (16:29–34; 22:39–40)

இ. எலியா வட்டம் (1 அர 17:1–2 அர 1:18)

1. எலியாவும், ஆகாபும், மூன்றாண்டு பஞ்சமும் (17:1–18:46)
2. எலியா ஓரேபுக்கு ஓடிப் போதல் (19:1–21)
3. ஆகாபும், பென்–அதாத்தும், இறைவாக்கினர்களும் (20:1–43)

4. நாபோத்தை ஈசேபேல் கொல்லுதல் (21:1–29)
5. ஆகாபும் மிக்கேயாவும் (22:1–40)
6. யோசபாத்து (873–849) (22:41–50)
7. அகசியா (859–849) (1 அர 22:51–2 அர 1:18)

ஈ. எலிசாவின் வட்டம் (2 அர 2:1–8:29)

1. எலிசா எலியாவுக்குப்பின் இறைவாக்கினராதல் (2:1–25)
2. யோராம் (849–842), மோவா வியருடன் போர் (3:1–27)
3. எலிசாவின் அருஞ்செயல்கள் (4:1–8:15)
4. எகோராம், யோராம் (849–842) (8:16–24)
5. அகசியா (842) (8:25–29)

உ. ஏகூவிலிருந்து சமாரியாவின் வீழ்ச்சிவரை (9:1–17:41)

1. ஏகூ (842–815) (9:1–10:36)
2. யூதாவின் அத்தாலியா (842–837) (11:1–20)
3. யூதாவின் யோவாசு (837–800) (12:1–21)
4. இஸ்ராயேலின் யோவகாசு (815–801) (13:1–9)
5. இஸ்ராயேலின் யோவசு (801–786) எலிசேயுவின் மரணம் (13:10–25)
6. யூதாவின் அமசியா (800–785) (14:1–22)
7. இரண்டாம் எரொபயாம் (738–746) (14:23–29)
8. அசரியா (783–742) (15:1–7)
9. செக்கரியவும் சல்லூமும் (746–745) 15:8–15)
10. மெனகேம் (745–738) (15:16–22)
11. பெக்காகியாவும் பெக்காவும் (738–732) (15:23–31)
12. யூதாவின் யோத்தாம் (750–735) (15:32–38)
13. யூதாவின் ஆகாசு (735–715) (16:1–20)
14. ஓசேயா (732–724) (சமாரியாவின் வீழ்ச்சி (722) (17:1–41)

3. யூதாவின் இறுதி அரசர்கள் (2 அர 18:1–25:30)

அ. எசக்கியா (715–687) (18:1–20:21)

ஆ. மனாசே (687–642), ஆமோன் (642–640) (21:1–26)

இ. யோசியா (640–609), (22:1–23:30)

ஈ. யோவகாசு (609), யோயாக்கிம் (609–598) (23:31–24:7)

உ. யோயாக்கின் (598–597), செதேக்கியா (597–587) நெபுக்கதுனேசரின் படையெடுப்பு, எருசலேமின் அழிவு (24:8–25:30)

### 12. வரலாற்று மதிப்பீடு

முன்பே கூறியதுபோல் இந்நூல் ஆசிரியர், வரலாற்றை வரலாற்றுக்காக எழுதவில்லை. அவர் எழுதுவது சமய அடிப்படை கொண்ட வரலாறு ஆகும். அது ஒரு விளக்கம் பெற்ற வரலாறு ஆகும். இந்நூல் பல வரலாற்று உண்மைகளைக் கொண்டிருக்கிறது. இவற்றை புற இன வரலாற்றோடு ஒப்பிடும்போது சிறப்பாக அசீரிய, பாபிலோனிய வரலாற்றோடு ஒப்பிடும்போதும், இந்நூல் வரலாற்று மதிப்பீடு மேம்படுகிறது. புதைபொருள் ஆராய்ச்சிகளும் இந்நூலின் வரலாற்றுத் தன்மைக்கு ஆதரவு அளிக்கின்றன.

ஆசிரியர் பயன்படுத்தும் மூலங்களில் பெரும்பாலானவை அவைகூறும் நிகழ்ச்சிகள் நடந்த காலத்தை ஒத்தவை, அல்லது நெருங்கியவை என்று ஆய்வாளர்கள் ஏற்றுக்கொள்வர். இந்நூலின் முதல் இரண்டு அதிகாரங்களைப் பற்றி, இதை எழுதியவர் தான் எழுதுவதை நன்கு அறிந்தவராகவும் நிகழ்ச்சிகள் நடந்ததாகக் கருதப்படும் காலத்திற்கு மிகவும் நெருங்கியவராகவும் இருக்கவேண்டும் என விவிலிய அறிஞர் கருதுவர். சாலமோனைப் பற்றிக்கொடுக்கப்படும் வரலாற்றுக் குறிப்புகள், அவரது ஆட்சிக் காலத்தை துல்லியமாகக் கணிக்க உதவுகின்றன (11:14–25; 9:15–19; 9:26–28; 10:11–28; 9:16–24; 11:7). இப்படியே வரலாற்றைச் சுட்டிக்கொண்டே போகலாம்.

இஸ்ராயேலைச் சுற்றியிருந்த, அவர்களோடு தொடர்புகொண்ட புறஇனத்தவருடைய வரலாற்று சான்றுகளுடன் இந்

நூலை ஒப்பிடும்போது அதன் வரலாற்று மதிப்பீடு நன்கு தெரிகிறது. மெஸ்ஸா வின் கல்வெட்டுகள் இந்நூலில் காணப் படும் விவரங்களுக்கு ஆதரவு அளிக்கின் றன. இரகபெயாமின் 5–ஆம் ஆண்டில் (1 அர 14:25–28) பாரவோன் முதலாம் செசாக் பாலஸ்தீனத்திற்கு எதிராகப்படை யெடுத்ததற்கு கர்னாக் என்னுமிடத்தி லுள்ள அம்மோன் சுவர்களில் காணப் படும் வாசகங்கள் சான்று காட்டுகின்றன. தாமஸ்கு அரசரோடு இஸ்ராயேல் கொண்ட தொடர்பு பற்றிய அராமிய வாசகங்கள் அதிகமில்லை. பாபிலோனிய சான்றுகள் பல உள்ளன. அசீரிய, பாபி லோனிய வாசகச் சான்றுகள் இந்நூலில் காணப்படுவதற்கு ஆதரவு கொடுப்ப தோடு அவற்றை நிறைவுபடுத்தவும், சிறப் பாக இஸ்ராயேல் யூதா அரசர்கள் கால வரையைச் சரியாக் கணிக்கவும் உதவு கின்றன.

அரசர்களின் காலவரைப் பணிச் சட்டம் துல்லியமாக இருப்பதாகத் தோன்றுகிறது. இஸ்ராயேல் யூதா அரசர் களின் தனிக்காலவரையைக் கொடுப்ப துடன் மற்ற அரசனின் ஒத்துமை கால வரையையும் கொடுக்கிறது. ஆனால் தனிக்காலவரை ஒத்தமை காலவரை யோடு ஒத்துப்போகவில்லை. இந்த வேறு பாடுகளுக்குப் பலவிளக்கங்கள் கொடுக் கப்படுகின்றன. ஆனால் ஒன்றும் நிறைவு அளிப்பதாயில்லை. வட, தென் அரசுகள் வெவ்வேறு காலக்கணிப்பை பயன்படுத்தி யிருக்கலாம் என்று கருத இடமிருக்கிறது.

இக்காலவரைப் பிரச்சினையைத் தீர்க்க வரலாற்று ஆசிரியர்கள், அசீரிய, பாபிலோனிய வாசகங்களைப் பயன் படுத்தி சிலமுக்கிய நிகழ்ச்சிகளின் காலத் தைக் கணித்துள்ளனர். இக்கணிப்பில் ஒரு வருடம் முன்னே பின்னே இருக்க லாம்.

*கி.மு.853–ல்* ஒரோன்டேசின் கர்காரில் மூன்றாம் சல்மனாசர் பல சீரியா, பால ஸ்தீன் அரசர்களை வென்றார். இஸ்ரா யேலின் மன்னன் ஆகாபு இவர்களில் ஒருவர்.

*841*–மூன்றாம் சல்மனேசர் ஏகூவிட மிருந்து கப்பம் பெறுகிறார். இது ஏகூ வின் தொடக்கத்தில் நடந்திருக்கவேண் டும். *738*–மூன்றாம் திகிலாத்து–பிலேச ருக்கு மனகேம் கப்பம் கட்டியிருக்கலாம் (2 அர 15:20)

*721*–ஐந்தாம் சல்மனாசர் சமாரியா மேல் படையெடுக்கிறார். நகர் பிடிபடு முன் அசீரியாவில் ஆட்சி மாறுகிறது. இரண்டாம் சர்கோன் அரசுக் கட்டில் ஏறுகிறார். சமாரியா வீழ்கிறது. 27,290 யூதர்கள் நாடு கடத்தப்படுகின்றனர். அவர்களுக்குப் பதிலாக அசீரியரால் வெல்லப்பட்ட மற்ற நாடுகளிலிருந்து மக்கள் இங்கு குடியேற்றப்படுகின்றனர் (2 அர 17:5–6; 18:9.11).

*701*–பெனிசியா பெலிஸ்தியா, யூதா வின் மேல் சனகெரிப்பு படையெடுக்கிறார் (18:13 தொ).

*601*–அசீரிய அரசன் பாபிலோனிய ரிடம் சரண்அடைகிறார். அவருக்கு உதவி செய்ய இரண்டாம் நெக்கோ என்ற பாரவோன் வடக்கு நோக்கிப் படையெடுக் கிறார். அவனைத் தடுத்து நிறுத்திய யோசியாவை மெகிதோவில் தோற் கடித்தார் (23:29).

*605*–நெபுக்கதுனேசார் இரண்டாம் நெக்கோவைத் தோற்கடித்தார். பாபிலோ னுக்கு அரசனாகிறார். இது யோயாக்கிம் ஆட்சியின் நான்காம் ஆண்டாகும் (எரே 25:1).

*மார்ச் 597*–நெபுக்கதுனேசாரிடம் எருச லேம் முதல்முறையாக சரண் அடைந்தது. பலர் பாபிலோனுக்கு கைதிகளாக் கொண்டு செல்லப்பட்டனர்.

மற்ற மூலங்களையும் கொண்டு 587–6 இல் எருசலேம் அழிக்கப்பட்டது எனக் கூறுலாம், யூத மக்கள் இரண்டாம் முறை நாடுகடத்தப்பட்டனர்.

இவ்வாறு அசீரிய–பாபிலோன் வாச கங்கள் புதிய விவரங்களை அளிப்பதோடு, விவிலிய நிகழ்ச்சிகளுக்கு விளக்கம் அளிக்கக்கூடிய அப்பகுதியின் பொது வரலாற்றையும் அளிக்கின்றன. இப்படி யாக, இஸ்ராயேல் யூதர் அரசர்களின் காலக்கணிப்பை ஓர் அளவுக்கு நிறைவு செய்கின்றது. சான்றாக ஓமிரி (885–874)

சமாரியாவைத் தலைநகராக்குகிறார் என் பதைத்தவிர மற்றது எதையும் அவரைப் பற்றிய அரசராகமங்கள் கூறவில்லை அசீரிய வாசகங்கள் குறிக்கும் விதம் ஒமிரியின் மகன்தான் இஸ்ராயேலின் அரசன் என்றும், அவர்தான் அவ்வரசை நிறுவினார் என்பது போன்ற முக்கியத் துவம் கொடுக்கிறது. இதே விதம் ஆகாபு வுக்கும் (874–853) இரண்டாம் எரொபயா முக்கும் (783–743) கூறலாம். சமயக் குற்ற மும், இவ்வுலகு சார்ந்த சிறப்பான போக்கும் வெற்றியும் இணைந்து போவ தாகத் தெரிகிறது.

புதைபொருள் ஆய்வும் தொல்பொருள் ஆய்வும் இந்நூலின் வரலாற்றுத்தன்மை யைச் சிறப்பித்துக் கூறுகிறது. சமாரியா வில் காணப்படும் வாசகங்கள் (கி.மு.8–ம் நூற்றாண்டைச் சேர்ந்தவை) வட அரசின் மைய அமைப்புக்குச் சான்று பகர்கின் றன. எசக்கியாவின் வாசகம் சுரங்கப் பாதை வழியாக கீகோன் ஊற்றை சிலோ வா குளத்தோடு இணைத்ததை எடுத்துக் கூறுகிறது. இலாக்கீசில் காணப்படும் வாசகங்கள் யூதா அரசர்களின் கடைசி மன்னர்களின் வரலாற்றை பிரதிபலிக் கின்றன. சமாரியாவைச் சேர்ந்த மெகி தோ, இலாக்கீசு, டேல்பெயிட் மிர்சீம், டெல் என்நாஸ்பே முதலிய இடங்களில் செய்யப்பட்ட புதைபொருள் ஆய்வு இஸ்ரா யேல் அரண்களுக்கும் தனியார் வீடுகளுக் கும் சான்று கொடுக்கிறது. டேல்–எல்– பராவில் காணப்படும் பாதி முடிந்த கட்ட டங்கள் ஒமிரி சமாரியாவில் புதிய தலை நகரை ஏற்படுத்த, இந்நகரைக் கைவிட்ட தற்கு சான்று காட்டுகின்றன. பல இடங் களில் காணப்படும் அழகு சாதனங்களும் பண்டங்களும் அக்கால மக்களின் வாழ்க் கைத் தரத்தை தொடக்கத்தில் எடுத்துக் காட்டுகின்றன. கி.மு. 6–ஆம் நூற்றாண் டின் தொடக்கத்தில் யூதாவின் நகரங் களுக்கு ஏற்பட்டுள்ள அழிவு பாபிலோனி யரின் படையெடுப்பு எந்த அளவு இஸ்ரா யேலைப் பாதித்தது என்பதைக் காட்டு கிறது. இப்பேரழிவு ஆன்ம சோதனைக் குரிய வாய்ப்பாகும். இதைத்தான் இந் நூலின் ஆசிரியர் செய்ய முயலுகிறார்.

**அரசன்**

ஒரு நாட்டைச் சுதந்திரமாக ஆளும் ஆடவனே அரசனாவான். பொதுவாக அவன் சுதந்திர நாட்டின் அரசனாகவும் சில சமயம் ஒரு பேரரசில் குறுநில மன்ன ராகவும் செயல்பட்டான். பண்டைக் கால மேற்காசிய நாடுகளிலும் பிறவிடங்களி லும் அரச பதவியானது புராணக் கதை களோடு இணைக்கப்பட்டு தெய்வீகத் தன்மை உடையது என்ற கருத்து பரவ லாக இருந்து வந்தது. இவ்வாறு புனிதம் மிகுந்த நிறுவனமாக அரச பதவி பெரும் பாலும் தெய்வத்துக்கரிய காரியங்களில் ஒன்றாய் இருந்திருக்கிறது. எகிப்து நாட் டையாண்ட பாரவோன் அரசன் கோர சின் அவதாரமென ஏற்றுக்கொள்ளப் பட்டார். எனவே அவருடைய செயல்கள் எல்லாம் இயல்பிலேயே புனிதமானவை யாகக் கருதப்பட்டன. வழிபாட்டு நிகழ்ச்சி களெல்லாம் சட்டப்படி அவருக்கு உரிமை யானவை. பாபிலோனிய அரசன் மார் துக்கு என்ற தெய்வத்தால் அரசனாகத் தெரிந்து கொள்ளப்பட்டு எண்திசைக்கும் அரசனாக அமர்த்தப்பட்டவர். அவரே குடிமக்களுக்கும் படைக்கும் தலைவனாக இருப்பதோடு நகரத்தின் தலைமைக் குரு வாகவும் இருந்தார். இவ்விருவகையிலும் அரச பதவியானது அரசரைக் கடவுளுக் கும், மக்களுக்குமிடையே தொடர்பு ஏற் படுத்தும் பாலமாகியது. நேர்மையும், வெற்றியும், அமைதியும் கொண்ட நல்லரசை மக்களுக்குத் தருவது இவரது கடமையாகும். அத்துடன் நிலவிளைச்சல், மனித, விலங்குகளின் பெருக்கம் போன்ற இறைவனின் ஆசீர்கள் அனைத்தும் இவர் மூலமாகவே மக்களுக்குக் கிடைத்தன. ஆகவே அரச பதவி எனும் நிறுவனம், புராணக்கதைகளின் தொகுப்பில் அடங் கிய பல்வேறு தெய்வங்களின் நம்பிக்கை, வழிபாடுகளின் ஒரு கூறாகும். பிற்காலத் தில் கிரேக்க, உரோமைப் பேரரசுகள் தங்களுடைய மன்னர்களைத் தெய்வப் பிறவிகளாக மாற்றும் முயற்சியில் இதே கருத்துக்களை கையாண்டன.

விவிலிய வெளிப்பாடு இத்தகைய பின்னனிக்கு முற்றிலும் மாறுபட்டது. இறையரசு பழைய, புதிய ஏற்பாடுகளில்

தலையாய இடத்தை வகிக்கிறது. அரச னைப்பற்றிய சிந்தனை இஸ்ராயேல் மக்களுடைய அனுபவத்தின் அடிப்படை யில் வளர்ந்து, இறுதியாக இயேசு கிறிஸ் துவின் அரசாட்சியினை வரையறுக்க உதவுகின்றது. அரசுரிமை பற்றிய பொது வாக நிலவி வந்த கருத்து முற்றிலும் மாறி, அது ஒரே இறைவனின் வெளிப் பாட்டினைச் சார்ந்ததாகின்றது. முதலில், அரச நிறுவனம் தற்காலிக அமைப்பு என்பதால் தொடக்கத்திலிருந்தே அது மனித நிறுவனமாகத்தான் கருதப்பட்டு, அதன் தெய்வத்தன்மை மறுக்கப்பட்டது. அதன் பின்னர், சமயக்கொள்கையின் வளர்ச்சி முற்றுப்பெற்ற நிலையில், கிறிஸ்தவின் அரசு இவ்வுலக அரசியல் அமைப்புகளைச் சாராது என்று விளக்கம் பெற்றது.

I. பழைய ஏற்பாட்டில் காணும் அரசன்

*1. பழங்காலத்தில் அரசாட்சி மூன்று* விதமாக இருந்தது 1) வெளியிலிருந்து வந்து இராணுவ ஆதிக்கத்தால் நகர அரசுகளை ஆண்ட சிற்றரசுகள். பாலஸ் தீனம் இவர்களால் ஆட்சி செய்யப்பட்டது 2) அரசர்கள் தங்கள் அரச பதவியை மக்க ளின் நலனுக்காக இறைவனாலேயே அளிக்கப்பட்டது என்று கருதினர். இப் படிப்பட்டவர்கள் எகிப்திய மெசபொத் தாமிய மன்னர்களாவர். 3) இராணுவ வலிமையினால் நாட்டை ஆண்டவர்கள். இவர்கள் நாட்டினைச் சேர்ந்தவர்கள். இவர்கள் யோர்தானுக்கு அப்பாலுள்ள பகுதியில் ஆண்டனர். எபிரேயர்களோடு இன உறவு உடையவர்கள்.

எபிரேயரிடையே உடன்படிக்கையின் அடிப்படையில் ஏறபட்ட இறை மக்களின் சமூக நிர்வாகத்திற்கு அரச பதவி அடிப்படையான ஒன்றன்று. இருப்பினும், இம்முறையானது குல முதியவர்களின் காலத்திலிருந்தே கானான் நாட்டிலும் (ஆதி.20) அடுத்து அண்டை மக்களிடையே யாத்திராகம், நீதிபதிகள் காலத்திலும் வாழ்ந்த மக்களிடத்தும் நிலவியது (ஆதி 35:31–39; எண் 20:14; 21:22.33; 22:4; யோசு 10–11; நீதி 4:2; 8:5). ஆனால் இஸ்ராயேல் மக்கள் தங்களுடைய இறைவனுக்கு அரச மரியாதை செலுத்தும் முறைதனைக் கை யாண்ட போதிலும், அம்முறை அவர் களின் அரசியலமைப்பின் இயல்புகளை மாற்றியதில்லை. யாவே உடன்படிக்கை யின் அடிப்படையில் இஸ்ராயேல் மக்க ளை ஆண்டார் (நீதி 8:23; 1 சாமு 8:7; யாத் 19:6). ஆனால் மனித அரசன் எவனும் அவருடைய பிரசன்னத்தின் அவதாரமாக மக்கள் மத்தியில் தோன்றவில்லை.

*2. அரச பதவி பற்றிய அனுபவம்:- இஸ் ராயேலின் அரசாட்சியின் தொடக்கமும் நிறுவனமும்*

தொடக்க காலத்திலே இஸ்ராயேலர் கள் இனத்தலைவரையோ, குழுத்தலை வரையோ பெற்றிருந்தார்கள். சில நேரங் களில் எதிரிகளிடமிருந்து தங்களைக் காத் துக்கொள்ள அருங்கொடைகள் பெற்ற ஒரே தூதுவனின் அடியில் பல இனத்த வர் சேர்ந்து போரிட்டார்கள். இவர்கள் நீதிபதிகள், நடுவர்கள் என்றழைக்கப் பட்டனர் (காண்க: நீதிபதிகள் நூல்). அரசாட்சி ஏற்படும் முன்பு அவர்களு டைய நாடு தழுவிய அரசியல், இராணுவ அமைப்புகள் இல்லை. அவர்கள் விசு வாசம் ஒன்றிலேயே இணைக்கப்பட்டார் கள். யாவேயைத் தங்களுடைய அரசராக ஏற்றுக்கொண்டு அவருடன் உடன் படிக்கை செய்து கொண்டார்கள் (உப 33:5). இதன்படி முதலில் யாவேயைத் தங்களுடைய தலைவராக சமயம் சார்ந்த முறையில் ஏற்றுக்கொண்டனர். இது சில நேரங்களில் அரசியல் குழப்பத்தை உண் டாக்குவதுண்டு (நீதி 21:25). இஸ்ராயேலர் மிதியானியர்கள்மேல் வெற்றி கொண்ட போது கிதயோன் தங்களுக்கு அரசராக இருக்கும்படி கேட்டுக்கொண்டார்கள். (நீதி 8:22). ஆனால் அவர் ஏற்றுக்கொள்ள வில்லை. இதுவே இஸ்ரயேலில் அர சாட்சியைப்புகுத்தச் செய்த முதல் முயற்சி யாகும்.

அபிமெலக்கு செக்கேம் என்னுமிடத் தில் கானானியரின் அரச பதவியைப் போன்றதொரு நிறுவனத்தைத் தோற்று விக்க முயன்றார் (நீதி 9:1–7). ஆனால் அந்த முயற்சி பெரிதும் எதிர்ப்புக் குள்ளாகி (9:8–20) அழிவுற்றது (9:22–57).

இது இஸ்ராயேல் அரசாட்சியை ஏற்றுக்கொள்வதற்கு ஒரு தயாரிப்பாக

அமைந்தது எனலாம். காலப்போக்கில் இஸ்ரேயலரிடையே அரசியல் ஒற்றுமை மிகவும் தேவையாயிற்று. சாமுவேல் காலத்திலேயே இஸ்ராயேல் மக்கள், பெலிஸ்தியர்களால் ஆட்சி செய்யப்பட்ட பகுதிகளில், பெரும் துன்பப்பட்டனர் (1 சாமு 13:19–21). பெலிஸ்தியரின் கையிலிருந்து தப்பிய இஸ்ராயேலருடைய இடங்களில் அவர்கள் அடிக்கடி கொள்ளையிட்டுப் பாழ்படுத்தினர். அம்மோனியர்களாலும் பெரிதும் துன்பப்பட்டனர் (11:1–2). இந்நிலையில் அரசன் என்பது ஒருமிக முக்கியமான தேவையாக இஸ்ராயேல் மக்களுக்குப்பட்டது. இஸ்ராயேல் மக்களின் முதியவர்கள், "தங்களுக்கு நீதி வழங்கவும் தங்களுக்காக நின்று போரிடவும்" ஓர் அரசனைப் பெற விரும்பினர் (8:19). அத்தகைய அரச பதவி என்னும் நிறுவனம் தெளிவில்லாமல் இருந்ததோடு அது இஸ்ராயேலை 'மற்ற நாடுகள்" போன்று ஆக்கிவிடும் அபாய நிலைக்கு உள்ளாக்கியது (8:5–20): இதுவே சாமுவேலை அவர்களுக்கெதிரான கருத்து கொள்ளச் செய்த காரணங்களில் ஒன்றாகும் (8:6; 10:17 தொ; 12:12). இது ஆண்டவருக்கு எதிரானது என்று சில பகுதிகள் கூறுகின்றன (7:13–14; 8:7). இறுதியில் அரசரால் ஆளப்பட்டாலும், இறையாட்சியின் தொடர்ச்சியாக இருக்கும்படி பார்த்துக்கொள்ளப்பட்டது. இவ்வாறு சவுல் ஆண்டவரால் தேர்ந்து கொள்ளப்பட்டு, இஸ்ராயேல் அரசராக அபிடேகம் செய்யப்பட்டார். அவர் மக்களின் அரசனாகவும், போர்த்தலைவராகவும் இருந்தார் (1 சாமு 10). இவ்வாறாக இஸ்ராயேல் அரசர் செயலளவில் ஒரு அருங்கொடைபெற்ற நீதிபதியே ஆவார் (11:6). இஸ்ராயேல் இனத் தலைமையிலிருந்து, நாட்டின் அரசத் தலைமைக்கு மாறியதில் சவுல் ஒரு நடுக்கட்டமாவார். சவுலை இஸ்ராயேலின் தலைவராக அபிடேகம் செய்து (9:16 தொ: 10:1). அவரைத் தலைவராக அரியணையில் அமர்த்தியதில் (10:20–24; 11:12–15) முழுவதும் சமயச் சார்பு கொண்ட புதியதொரு அரச பதவி எனும் நிறுவனத்தை சாமுவேல் உருவாக்கினார். ஆனால் முடியாட்சி முழுவதும் யோவேயின் உடன்படிக்கைக்கு உட்பட்டதாகவே எப்போதும் கருதப்பட்டது. சவுல் நீதிபதியைப் போன்றும், இறைவனின் அருட்கொடை பெற்ற தலைவனாகவும் இருந்தார் (10:6 தொ). அவர் தூய ஆவியால் நடத்தப்பட்டு ஒரு புனிதப் போரை நடத்தினார் (1 சாமு 11). இவ்வாறே இறைவனது அருட்கொடையை நிறைவாகப் பெற்றதொரு தலைவராகத் தாவீது முதலில் யூதா நாட்டிற்கும் (2 சாமு 2:1–4). பின்னர் இஸ்ராயேல் நாட்டிற்கும் அரசனானார். (2 சாமு 5:1 தொ). தாவீதின் ஆட்சிக்காலத்தில் முடியாட்சி ஒரு படி உயர்ந்தது. முடியரசு அண்டை நாடுகளின் அரசியல் முறைப்படி நெறிப்படுத்தப்பட்டது. அனைத்திற்கும் மேலாக நாத்தானுடைய இறைவாக்கு தாவீதின் அரியணை என்றென்றும். இறைமக்களின் நிறுவனமாகவும், இறைவனின் வாக்குறுதிகளை உள்ளடக்கிய சின்னமாகவும் நிலைத்திருக்கச் செய்தது (7:5–16). அப்போதிலிருந்து இறைமக்கள் தாவீதின் அரச மரபில் மிகுந்த நம்பிக்கைக்கொண்டனர். தென்னாடாகிய யூதாவிலாவது (காண்க எண் 24:17; ஆதி 48:8–12) எப்போதுமே மன்னர் குலத்துக்குப் பெருமதிப்பு வழங்கப்பட்டது.

தெற்கில் அரச நிறுவனம் ஆற்றல் மிக்க வடிவில் எப்போதும் போற்றப்பட்டது. இதற்கு மாறாக நாட்டின் வட பகுதியிலி, சமயச் சூழ்நிலை அரச பதவியைப் அருங்கொடையின் அடிப்படையில் வைத்துப் போற்றியது. இறைவாக்கினர் ஆட்சித்தகுதி வாய்ந்த அரசர்களை உருவாக்குவதில் முனைந்திருந்தனர் (1 அர 11:20–40; 2 அர 9).

### 3. இஸ்ராயேல் அரசர்களின் வழிமரபு உரிமை

தொடக்கத்தில் அரச அதிகாரம் ஒருவரிடமிருந்து அடுத்தவருக்கு மாறுவது பற்றி எந்தவிதமான அமைப்புகளும் விதிமுறைகளும் ஏற்படுத்தப்படவில்லை. தொடக்கத்திலே இஸ்ராயேல் அரசாட்சி இறை ஏவுதலால் நியமிக்கப்பட்டு நீதி வழங்குவதில் சிறப்பாயிருந்தது. சவுலின் காலத்திலே வழித்தோன்றல் குறித்து கருத்து வேறுபாடு காணப்பட்டது. அருங்கொடை முறைக்கும், தலைமுறைக்கும் மோதல் ஏற்பட்டது (1 சாமு 20:31; 20:12–16).

சவுலின் இறப்பிற்குப்பின் இரு முறைகளும் வெளிப்படையாகவே மோதின. யூதா தாவீதை ஏற்றுக்கொண்டது, மற்ற இனங்கள் சவுலின் மகனை அரசனாக ஏற்றுக் கொண்டது.

வழித் தோன்றல்களுக்கு அரசாட்சி கொடுப்பதை ஏற்றுக் கொண்ட போதிலும் அதை ஒரு ஒழுங்காக ஏற்படுத்தவில்லை. அரசனின் தலைமகன்தான் அரசாள வேண்டும் என்ற கட்டாயமும் இல்லை. இதனால் ஆண்பிள்ளைகளிடையே போட்டி எழுந்தது (நீதி 9:2; 1 அர 1–2). யூதாவிலே அரசருடைய தாயின் பெயரும் பாதுகாக்கப்பட்டிருந்தது. இதிலிருந்து, யூத நாட்டிலே அரசனுடையதாயும் அரச வழி மரபு முறையில் ஒரு குறிப்பிட்ட இடம் வகித்தாள் என்று காட்டுகிறது.

4. அரசனின் பண்புகள்

அரசரின் கடமைகள் மூன்று விதமான தன்மையுடையதாய் இருந்தன: 1) அரசர் இராணுவத் தலைவனாகவும் 2) நீதியை நிலைநாட்டுபவராகவும் 3) தொடக்க காலத்திலேயாவது குருவாகவும் இருந்தார்.

அ) இராணுவம்:- அரசன் இராணுவத் தலைவராக இருந்ததால் தன்னுடைய எதிரிகளுக்கு எதிராகப் போர் புரிந்து நாட்டைக்காப்பது அவருடைய கடமையாகும் (1 சாமு 8:20). இவ்வாறே சவுல் அமலேக்கியருக்கு எதிராகவும் (15:4–5) ஆகாபு சீரியர்களுக்கு எதிராகவும் (1 அர 22:29–30) யோராம் மோவாபுக்கு எதிராகவும் (2 அர 3:6.12) போர் புரிந்தனர்.

ஆ) நீதியை நிலைநாட்டுதல்:- பழங் காலத்தில் அரசனுடைய முதல் கடமை நாட்டிலே நீதியை நிலைநாட்டி ஏழைகளுக்கும், விதவைகளுக்கும் பாதுகாப்பாக இருந்தலேயாகும். இஸ்ராயேலின் இரண்டு அரசாட்சியிலும் மக்கள் தங்களுக்குள் தீர்ப்புக் காணமுடியாத பிரச்சினைகள் அரசர்களால் தீர்த்து வைக்கப்பட்டது (2 சாமு 12:1–6; 14:4–7; 15:2; 1 அர. 3:16–28). இதைக்கொண்டு அரசன் ஒரு உச்ச நீதிபதி என்று கருதக் கூடாது. நீதி வழங்குதல் பொதுவாக மூப்பர்களால் கவனிக்கப்பட்டு வந்தது.

இ) சுற்றுப்புற மக்களின் பண்பாடுகளில் காணப்பட்டது போல் இஸ்ராயேல் மக்களின் மன்னன் தெய்வீக உலகைச் சார்ந்தவன் இல்லை. மற்ற எல்லா மனிதர்களையும்போல் அவனும் இறைவனுடைய உடன்படிக்கைக்கும் சட்டத்திற்கும் உட்பட்டவன். இந்த உண்மையை இறைவாக்கினர் அவனுக்கு அடிக்கடி நினைவுபடுத்தத் தவறியதில்லை (காண் 1 சாமு 13:8–15; 15:10–30; 2 சாமு 12:1–12; 1 அர 11:31–39; 21:17–24). இருப்பினும் அரசன் ஆண்டவரால் அபிடேகம் செய்யப்பட்ட காரணத்தால் மிகவும் மரியாதைக்குறியவர் புனிதமிக்கவர் (1 சாமு 24:11; 26:9). தாவீதின் காலத்திலிருந்தே இறைவனுடன் அரசன் கொண்டுள்ள உறவு தெளிவடைகிறது. இறைவன் அரசனைத் தமது சுவிகாரப் பிள்ளையாக ஏற்றுக்கொண்டு (2 சாமு 7:14; சங் 2:7; 89:27 தொ). அவனைத் தமது ஆற்றலின் காப்பிடமாகவும், நிலவுலகின் அரசர்க்கெல்லாம் தலைவனாகவும் நியமிக்கிறார் (சங். 89:28; காண். 2::8–12; 18:44 தொ). அரசன் தமக்கு உண்மையுள்ளவனாக நடந்து கொண்டால், அவனைத் தாம் காப்பதாக இறைவன் வாக்களிக்கின்றார். அயல் நாட்டுப் பகைவர்கள்மீது அவன் கொள்ளும் வெற்றிகளின் மூலம் தன்னுடைய மக்களுக்கு வளத்தையும் (காண்க சங் 20:21). உள் நாட்டு எதிரிகளின்மேல் கொள்ளும் வெற்றிகளின் மூலம் நீதியையும் நிலைநாட்டுவான் (சங் 45:4–8; 72:1–7.12 தொ; பழ 16:12; 25: 4 தொ; 29:4. 14). இவ்வாறு உலகு சார்ந்த அவனது அலுவல்கள், உடன்படிக்கை சட்டம் சார்ந்த அவனது அலுவல்கள், உடன்படிக்கை சட்டம் இவற்றின் குறிக்கோளை நோக்கமாகக் கொண்டுள்ளன. மேலும் இறை மக்களின் தலைவர் என்ற முறையில் அவன் சில சமயங்களில் வழிபாட்டுச் சடங்குகளையும் செய்கின்றான் (2 சாமு 6:17 தொ; 1 அர 8:14. 62 தொ). இதனால் அரச குருத்தவம் சுட்டிக்காட்டப்பட வாய்ப்பு ஏற்படுகிறது (சங் 110:4). இவ்வாறு அமைதி காத்து நீதி வழங்கும் ஓர் அரசனின் பண்புகள் அந்த நாட்டுப் இலக்கியத்திற்கே மணி முடியாய் விளங்குகின்றன (சங் 101). அமைதி நீதி என்பவையே அவனது நாட்டின் குறிக்

கோளாகும். இக்குறிக்கோள்களைச் செய லாக்குவதே அரச அதிகாரத்தின் நோக்க மாகும்.

5. அரச அதிகாரங்களைச் செயல்படுத்துல்

அரச அதிகார வரம்புகள் ஒழுங்கு களால் நிர்ணயிக்கப்பட்டு அதிகாரிகளின் உதவியோடு செயல்பட்டது. வரிகளை வசூலிக்கவும் அரச அதிகாரத்தைப் பாது காக்கவும் அதிகாரிகள் உதவினர்.

*அ) அரசர்கள் பற்றிய சட்டம்:-* இஸ்ரா யேல், அரசாட்சிக்குமுன், 'அரசரைப்பற்றி கொண்டிருந்த கணிப்பானது சாமுவேல் காலத்தில் அரசாட்சியைப் புகுத்துவதற்கு எதிர்ப்பாக இருந்தது. அதற்கான பல காரணங்களில் அரசனது கொடுங்கோல் தன்மை ஒன்றாகும். ஆனால் அரசன் முழுவதும் கட்டுப்பாடற்றவன் அல்லன்.

கானானிய அதிகாரிகளிடமிருந்து பெற்ற கசப்பான அனுபவத்தினால் இஸ் ராயேல் பாதிக்கப்பட்டிருந்தது. இதைத் தான் யோத்தாமின் கதை வெளிப்படுத் தியது. பயன் அற்றவர்கள்தான் நிலை யற்ற அரச பதவியை ஏற்க விரும்புவர் (நீதி 9:7–15).

மூப்பர்கள் புதிய அரசனுடன் உடன் படிக்கை செய்துகொண்டனர் (2 சாமு 5:3: 2 அர 11:17). அரசனுடைய உரிமைகளும், கடமைகளும் தொகுக்கப்பட்டு ஆண்டவ ருக்கு முன் வைக்கப்பட்டன (1 சாமு 10:25). அரசன் விதிமுறைகளிலிருந்து விடு பட்டவன் அல்லன். ஆகாபு நாபோத்தின் உடைமையை விரும்பியபோது நாபோத்து மறுக்க மரபு உரிமையால் விட்டுவிட்டார் (1 அர 21:47). குடிமக்களின் உடமைகளை அரசன் பணம் கொடுத்து வாங்கினான் (2 சாமு 24:24; 1 அரச 16:24). சதி செய்வோர் (2 சாமு 16:4) அரசனையும், இறைவ னையும் சபிப்பவர்கள் (1 அர 2:10) ஆகி யோரின் உடமைகள் எடுத்துக்கொள்ள அரசனுக்கு உரிமை உண்டு.

அரசன் நாட்டின் முதல் குடிமகனாக இருந்தபோதிலும் மக்களின்மேல் எல்லா உரிமைகளையும் பெற்றிருக்கவில்லை. இதைத்தான் உரியாவின் கொலை நினைவுபடுத்துகிறது (2 சாமு 11). நாபோ நாபோத்தின் இறப்பு அநீதியாய் இருந்த போதிலும் அது விதிமுறைகளை பின் பற்றித்தான் நடந்தது (1 அர 21:8–14). அரசர்கள் கடமை தவறிய போது இறை வாக்கினர்கள் அவர்களை எச்சரித்தனர். நாத்தான் தாவீதையும் (2 சாமு 12:1–15), எலியா ஆகாபையும் (1 அர 21:17–24) கண்டித்தனர். அரசர்கள் பற்றிய உபா கமச் சட்டம் (17:14–20) அரசனைச் சட்டத் திற்குக் கட்டுப்படுத்தியது. ஆனால் முழுவ தும் புதியதொன்றன்று. ஏற்கெனவே இருந்த முறைகளின் விரிவேயாகும்.

*ஆ) அரச அதிகாரிகள்:-* இவர்கள் அரசனின் முன் பணிபுரிவோர்களாவார். (எஸ் 1:14). அன்னிய கூலியாட்கள் அடங் கிய மெய்க்காவல்படை அரசனுக்குப் போரில் பாதுகாப்பளித்தது (2 சாமு 15:18). சாலமோன் (1 அர 1:38) யோவாசு (2 அர 11:4) ஆகியோரின் முடிசூட்டுதலில் முக்கிய அங்கம் வகிக்கிறது. மெய்க்காப்பாளர் களின் தலைவரும், இராணுவத்தின் தலைவனும் அரச அவையில் பணி புரிந் தனர் (1 சாமு. 14:50; 2 சாமு 8:16.18). மேலும் ஆவணங்கள் தயாரிப்பாளர்கள் இருந்த னர். இவர்கள் அரச அலுவல்களுக்குத் தலைவர்களாகவும் இருந்தனர் (2 சாமு 8:16; 1 அர 4:3). மேலும் செயலர்களும் (2 சாமு 8:17; 2 அர 8:18) 12 மாநிலங்களுக்குத் தலைமை அதிகாரிகளும இருந்தனர் (1 அர 4:5). மேலும் அரண்மனை பாதுகாவ லன் (1 அர 18:3; 2 அர 18:18) இருந்தான். இவன் கண்காணிப்பாளன் என்றழைக்கப் பட்டான். கட்டாய வேலையை மேற்பார்ப்ப வன் (2 சாமு 20:24; 1 அர 4:6), அரசனது "நண்பன்" (2 சாமு 15:37; 1 அர 4.5; 1 நாள் 27:33), ஆலோசகர்கள் (2 சாமு 15:12), உடை களைக் கவனிப்பவன் (2 அர 22:14–17), அரச பண்ணைகளைக் கவனிப்பவன் (1 நாள் 27:25–31) போன்ற அதிகாரிகள் இருந்தனர். மேலும் குருக்களும் (2 சாமு 8:17; 20:25; 1 அர 4:4) இறைவாக்கினர்களும் (2 சாமு 7:2; 12:25) அரசவையில் இடம் பெற்றிருந்தனர்.

*இ) அரச வருமானம்:-* சவுல் மக்களை வரி செலுத்தச் செய்யவில்லை. மாறாகத் தன்னுடைய முன்னோர்களின் சொத்தி லிருந்து வரும் வருமானத்தைக் கொண்டு

அவர் எளிமையோடு வாழ்ந்தார் (1 சாமு 22:6). அவருடைய நண்பர்கள் அன்பளிப்பு கொடுத்தார்கள் (1 சாமு 10:27; 16:20). தாவீது போரில் கைப்பற்றிய கொள்ளைப் பொருட்கள் இருந்தன (2 சாமு 8:1–14). இதனால் மக்களிடம் வரிசேர்க்கத் தேவை இல்லாமல் இருந்தது. தாவீதினால் செய்யப்பட்ட பொதுவான கணக்கெடுப்பு வரித்திட்டம் கொணர ஒரு முன்னேற் பாடாக அமைந்தது (2 அர 24:1–9). பொது வரித்திட்டம் சாலமோனால் புகுத்தப் பட்டது. சாலமோன் நாட்டை 12 மாவட்டங் களாகக் பிரித்து அதிகாரிகளை நியமித் தல் பின்னர் தொடக்கப்பட்டது (1 அர 4:7–19. 27–28). விவசாயப் பொருட்கள் விலங்குகள் ஆகியவற்றில் 10–இல் ஒரு பங்கானது வரியாக, பணமாகவோ, தானி யமாகவோ, அரண்மனையின் தேவை களுக்குச் செலுத்தப்பட்டது (1 சாமு 8:15.17). எப்பொழுதாவது சிறப்பு வரி வசூலிக்கப் பட்டது (2 அர 23:35). காலப்போக்கில் அரசர்களும் தங்களுக்கென்று அரசாங்க நிலங்கள் பெற்றிருந்தனர் (1 நாள் 27:25–30; 2 நாள் 26:10; 32:27–29). அரச சொத்துக்கள் மக்களைப் பாதிக்கும் அளவுக்குப் பெரு கியது (எச 45:8) கொத்தடிமைப் பணியும் அரசனுக்கு ஒரு வருமானமாக அமைந் தது (2 சாமு 20:24; 1 அர 4:6).

சில முக்கியமான வியாபாரத் தடங்கள் இஸ்ராயேல் நாட்டின் வழியாகச் சென் றன. எனவே சாலமோன் அரசர் வியா பாரிகளிடமிருந்து வரியாகக் குறிப்பிட்ட பணத்தைப் பெற்றார் (1 அர 10:15). சால மோன் அரசர் குதிரை, தேர் வியாபாரம் செய்தார் (1 அர 10:28–29). அரசர் அராபி யா நாட்டுடனும் ஆப்பிரிக்கா நாட்டுடனும் வியாபாரத் தொடர்பு வைத்திருந்தார் (1 அர 9:26–28). அரசனுடைய வியாபாரத் தொடர்பு பற்றிய விவரங்கள் அரசனுடைய பதிவேட்டில் குறிக்கப்பட்டுள்ளன.

ஈ) அரசச் சின்னங்கள்:- அரசனுடைய அதிகாரத்தின் அடையாளமாக மகுடம் (2 சாமு 1:10; 2 அர 11:12) செங்கோல் (எண் 24: 17), அரியணை (2 சாமு 14:9) ஆகிய சின்னங்கள் விளங்கின. இவைகள் அரசருடைய அபிடேகத் தன்மையையும் வெளிப்படுத்தின. சவுலைப் பொறுத்த வரை ஈட்டி (1 சாமு 22:6; 2 சாமு 1:6) கைக் காப்பும் (2 சாமு 1:10) அரச அடையாளங் களாக இருந்தன. ஆனால் முக்கியம் பெற வில்லை. அரசனுடைய வைப்பாட்டிகளை கைப்பற்றுதல். அரச பதவியைக் கைப் பற்றுதலுக்கு அடையாளமாகும் (16:20–22). அரண்மனை (5:11–12), அரச புனித இடம் (7:1–2), தேர் (1 சாமு 8:11) ஆகியவை அரச அதிகாரத்தை எடுத்துக்காட்டியவையாகக் கருதப்படவில்லை. ஆனால் அரசனுக்கு பெருமைச் சேர்த்தன.

6. இஸ்ராயேல் அரசின் சமயப் பண்பு

பழங்கால வழக்கத்திலே அரச நிறு வனம் வெறுமனே சமயச் சார்பற்றதன்று. இஸ்ராயேல் நாட்டின் அரச நிறுவனத் தில் சமயக் கூறுகளும் உண்டு.

அ. ஆண்டவனே இஸ்ராயேலின் முதன்மையான அரசன். துரதிருஷ்டவச மாக இதுபற்றிய வாசகங்கள் (யாத் 15:18; 19:6; எண் 23:21; எரே 33:5; 1 சாமு 8:7; 12:12; நீதி 8: 23) பெரும்பாலும் ஐயத்திற்குள்ளாக் கப்பட்டுள்ளன. எப்படியிருப்பினும் இஸ் ராயேல் ஆண்டவருடன் செய்துகொண்ட உடன்படிக்கை அரச உடன்படிக்கையா கும் என்பதற்குப் போதிய சான்றுகள் உள்ளன (யோசு 24). எனவே இன்னொரு பூவுலக அரசரைத் தேர்ந்தெடுத்துக் கொள்வது இறைவனுக்கு எதிரான பதித மாகக் கருதப்பட்டது (1 சாமு 8:7; ஓசே 8:4). யாவேயை இஸ்ராயேலின் அரசராக ஏற்றுக்கொள்வது அவர்களின் விசுவாச மாகும். எனவே இவ்வுலக அரசருடைய அரசத் தன்மையானது இறைவனிடமி ருந்தே பெறப்பட்டது. இதை 'ஆண்டவரால் அபிடேகம் செய்யப்பட்டவர்' என்ற கூற்று (1 சாமு 16:6; 2 சாமு 1:14;1 சாமு 9:16; 10:1; 13:14) தெளிவாக்குகிறது. அரசன் யாவே யின் பிரதிநிதியாவார்.

ஆ) பதவி ஏற்பு:- ஆண்டவனே இஸ்ரா யேலின் உண்மையான அரசன். மற்ற அரசர்கள் அவருடைய பிரதிநிதி என்ற கருத்து இருந்தபோதிலும் அரசர்கள் குழுத் தலைவர்களாலும், மூப்பர்களாலும் ஏற்றுக் கொள்ளப்பட்டனர் (1 சாமு 11:15; 2 சாமு 5:3). இது இறைவாக்கினால் ஏற் படுத்திக் கொள்ளும் உடன்படிக்கையின் வாயிலாக வெளிப்படுத்தப்பட்டது. பதவி

ஏற்பு பற்றிய விவரங்கள் நமக்குத் தெளிவாகக் கிடைக்கவில்லையெனினும் நாம் சாலமோன் அரசரின் பதவி ஏற்புவிலிருந்து விபரங்கள் புரிந்து கொள்ளலாம் (1அர 1:32–40).

பதவி ஏற்பிலே மிகவும் முக்கியமானது அபிடேகம் செய்தலாகும். சாலமோன் கோவேறு கழுதைமேல் ஏறி கீனோனுக்குச் சென்றார். அங்கே குரு சாதோக்கும், இறைவாக்கினர் நாத்தானும் அவரை இஸ்ராயேலின் அரசனாக அபிடேகம் செய்தார்கள். பின்பு எக்காளம் ஊதி அரசன் சாலமோன் வாழி என்று ஆர்ப்பரித்தார்கள் (1 அர 1:38–39). யோயதா, யோவாசின் தலைமேல் முடியை வைத்து, கையில் திரு சட்ட நூலை அளித்து அபிடேகம் செய்தார். பிறகு எல்லோரும் அரசர் வாழி என்று சொல்லி கைத் தட்டினர் (2 அர 11:12). பின்பு அரசன் ஆண்டவருடனும், மக்களுடனும் உடன்படிக்கை செய்துகொண்டான். பின்பு தன்னுடைய மெய்க்காப்பாளிகள் பின் தொடர அரண்மனைக்குச் சென்று பதவியேற்பான் (2 அர 11:13–14.17). பதவி ஏற்பின்போது புறஇனப்பேரரசர்கள் யூதாவின் அரசர்களுக்குப் புதிய பெயரையும், புதிய செங்கோலையும் அளித்தனர். இவ்வாறு எலியாக்கிம் யோயாக்கீம் என்றும் (2 அர 23:34) மத்தானியா, செதேக்கியா என்றும் (2 அர 24:17) புதிய பெயர் பெற்றனர்.

இ) பழங்கால மேற்காசியாவில் அரசனின் இறைத்தன்மை:-

பழங்கால மேற்காசியாவில் அரசர்கள் இறைத்தன்மை உடையவர்களாகக் கருதப்பட்டனர். அமர்னா கடிதங்களில் எகிப்திய அரசர்களை "என் தெய்வமே என் சூரியனே, நிலத்தின் சூரியனே என் உயிரே" என்று கானான்யச் சிற்றரசர்கள் அழைக்கின்றனர். தெய்வங்களாகிய கோரஸ், சேத், ஓசைசிரிஸ் ஆகிய தெய்வங்களின் வெளிப்பாடாக எகிப்திய அரசன் பார்வோன் விளங்கினான். எகிப்தியர்கள் அரசன் இறைவனால் பெற்றெடுக்கப்பட்டவன் என்று நம்பினார்கள். எனவே அரசனே விதிமுறைகளைக் கொடுத்து, ஆளுகிறவன். எனவே நீதியை நிலை நாட்டுவதோடு அரசனே நீதியின் பிறப்பிடமாவான். எனவே எகிப்திய அரசர்கள் மக்களால் வணங்கப்பட்டனர். மெசபொத்தாமியா மக்களும் இந்தக் கருத்தையே கொண்டிருந்தார்கள். ஆனால் சுமேரியர்கள் அரசனை ஒரு மனிதனாகத்தான் கருதினார்கள். பாபிலோனியர்கள் அரசனை இறைத்தன்மையுடையவன் என்று எண்ணினர். அவர்கள் அரசன் தேவதைகளால் தத்து எடுத்துக் கொள்ளப்பட்டவர்கள் என்று நம்பினர். அவனுடைய இறைத்தன்மையானது அவனுடைய செயல்களில் மட்டுமே. எனவே அவர்கள் அரசனை வழிபடவில்லை. பாபிலோனிய அரசன் கடவுளுக்கும் மக்களுக்கும் இடையாளன் ஆவான். எனவே அவனுடைய கடமையானது சமய நிகழ்ச்சிகளில் பங்குகொள்வதாகும். குறிப்பாகக் புதிய ஆண்டு விழாவில் தவறாமல் கலந்து கொள்ளவேண்டும். அரசன் உலகத்திலே ஒழுங்கினை ஏற்படுத்த கடவுளின் பிரதிநிதியாக செயல்படுகின்றான். இத்தியர்கள், உயிரோடு இருக்கும்வரை, அரசனை தெய்வத் தன்மையுடைவராக கருதினார்கள். இவ்வாறாக வேறுபட்ட கருத்துக்கள் பழங்கால மக்களிடையே நிலவி வந்தது.

ஈ) அரசனது இறைத்தன்மை பற்றிய பிரச்சினை:-

இந்தப் பிரச்சினையை இஸ்ராயேலர்கள் ஒரே கடவுள் மேல் கொண்டிருந்த நம்பிக்கை மேற்காசியாவில் பிற மக்கள் அரசனைப் பற்றிக் கொண்டிருந்த வேறுபட்ட கருத்துக்கள் ஆகியவற்றின் பின்னனியில் நோக்க வேண்டும்.

இஸ்ராயேல் அரசர்கள் அபிடேகத்தால் புனிதராகக் கருதப்பட்டனர் (2 சாமு 1:14.16). சவுல் தாவீதிடம் சிக்கி யிருந்த போதும், அபிசாய் சவுலைக் கொலை செய்வதை தாவீது தடுத்தார் (1 சாமு 26:9). அரசனை சபிப்பவர்கள் சாவுக்குத் தகுதியானவர்கள் (2 சாமு 19: 21–28). அரசனுக்கும், கடவுளுக்கும் கீழ்ப்படியவும் பயப்படவும் வேண்டும். ஏனெனில் அரசனுடைய அறிவானது இறை தூதர்களின் அறிவோடு ஒப்பிடப்படுகிறது (2 சாமு 14:17.20;19:27).

தாவீதோடும் அவருடைய சந்ததியோடும் இறைவன் எப்பொழுதுமே நிலைத்திருக்கும் ஓர் உடன்படிக்கை செய்து கொண்டார் என்பது யூத நாட்டிலே ஓர் விசுவாசமாகும் (2 சாமு 23:5; 7:8–15; சங் 89:19–37), எனவே யூதாவின் அரசர்கள் வாக்குறுதியின் வழித்தோன்றல்கள் (2 சாமு 7:5–16). வாக்குறுதிகளுக்கு உரிமையாளர்கள் ஆவர் (சாமு 7:12). சங் 2:7–இல் "நீரே என் மகன் இன்று நான் உம்மை ஈன்றெடுத்தேன்" என்று கூறப்படுகிறது. எனவேதான் தாவீது இறைவனின் தலைமகன் என்றும் (சங் 89:27), கடவுளின் வலப்பக்கம் அமர்ந்திருப்பவர் என்றும் (110:1) சங்கீதத்திலே குறிப்பிடப்பட்டுள்ளது. புகழ்ச்சியின் உச்சியிலே அவரே கடவுளாகவும், ஆட்சி பீடமே புனிதமாகும் என்று சங்கீத ஆசிரியர் கூறுகின்றார் (45:6).

இறைவனோடு இத்தகைய நெருங்கிய உறவு கொண்டிருந்ததால் மக்களுககுத் தேவையான அமைதி, வளம், செழுமை இவற்றை அரசனால் மக்களுக்குத் தர முடிந்தது. எனவே அரசன் மக்களுககு அரணாகவும் (89:10), உயிரைக் காக்கும் மூச்சாகவும் (புல 4:20) விளங்கினான். ஏனெனில் வளமையானது நிறைய விளைச்சலையும், மக்கள் பெருக்கத்தையும் பொறுத்திருந்தது. இதனால்தான் அரசன் இஸ்ராயேலின் விளக்கு என்று பெயர் பெற்றான் (2 சாமு 21:17). இறைவனால் தத்து எடுத்துக் கொள்ளப்பட்டதால் அரசன் இறைவனுடைய வழித்தோன்றலாகவும், உலகத்தின் ஆட்சியாளராகவும் விளங்குகின்றான் (சங் 2:8). ஆனால் அவன் இறைவனுக்குச் சமமானவன் அல்ல. அவன் வழிபடப்படவில்லை. அவன் இஸ்ராயேலிலும் உலகிலும் ஆண்டவரது பகர ஆட்சியாளனே.

உ) வழிபாட்டுக் கடமைகள்:- அரசனுடைய முக்கியத்துவம் அவனுடைய வழிபாட்டுக் கடமைகளால் பெருமைப்படுத்தப்பட்டது. மெல்க்கிசதேக்கு அரசனும், குருவுமாய் விளங்கியதுபோல, தொடக்கக் காலத்திலாவது அரசர்கள் குருத்துவப் பணியையும் நிறைவேற்றினார்கள். சவுல் (1 சாமு 13:10; 14:35) தாவீது (2 சாமு 6:13.17; 24:25), சாலமோன் (1 அர 3:4.15; 8:62; 9:25) பலி செலுத்தினர். சவுலும் தாவீதும் ஆண்டவருக்குப் பலிபீடம் கட்டினார்கள். (1 சாமு 14:33–34; 2 சாமு 24:21).

முக்கிய நாட்களில் அரசர்கள் நாட்டிற்காக வேண்டினர். சாலமோன் ( 1 அர 8: 22–53), எசக்கியா (2 அர 19:14–19) இதற்கு எடுத்துக்காட்டாவர். தாவீது குருவின் உடையாகிய சணல் நூலால் செய்யப்பட்ட எபோதை அணிந்துகொண்டு ஆண்டவர் திருமுன் நடனமாடினர் (2 சாமு 6:14). பிறகு ஆண்டவர் பெயரால் மக்களை அசீர்வதித்தார் (2 சாமு 6:18). ஆலய அபிடேகத்தின்போது சாலமோன் ஆசீர்வதித்தார் (1 அர 8:14). அரசர்கள் குருக்கள் மீதும் வழிபாட்டின் மீதும் அதிகாரம் கொண்டிருந்தனர். குருக்கள் அரச அதிகாரிகளாகவும் விளங்கினர். வழிபாட்டின் மேற்பார்வையாளர்களாக மட்டுமல்லாமல் அதைத் திருத்துவதற்கும் உரிமையிருந்தது. ஆசா (1 அர 15:12–15) எசக்கியா (1அர 18:1–7) இதற்குச் சான்றாவர். எனவே அரசனுடைய வழிபாட்டுப் பணியானது அவனுடைய கடமைகளுள் மேலானதாக இருந்தது.

7. அரச பதவி பற்றிய அனுபவத்தின் தெளிவின்மை:-

வரலாற்று ஏடுகளும், இறைவாக்கினர்களின் நூல்களும் அரச பதவி பற்றிய அனுபவத்தில் ஒரு தெளிவின்மையைக் காட்டுகின்றன. அரசர்கள் தங்களுக்குக் குறிக்கப்பிட்ட குறிக்கோள்களை நிறைவேற்றும் அளவிற்கு அவர்கள் இறைவாக்கினரின் ஆதரவையும் வரலாற்று ஆசிரியர்களின் புகழுரையையும் பெற்றார்கள்.

இதனை நாம், தாவீது (சங் 78:70; 89:20–24), ஆசா (1 அர 15:11–15), யோசபாத்து (2 அர 18:3–7), எசக்கியா (2 அர 18:3–7) யோசியா (2 அர 23:25) போன்ற அரசர்களின் வாழ்க்கையில் காண்கிறோம். ஆனால் சலமோனுடைய மகிமை, புகழ் ஏற்கெனவே ஐயப்பாடு உடையதாக இருந்தது (1 அர 11:1–13). இறுதியாக பொல்லாத அரசர்கள் வட நாட்டிலும், (1 அர 16:25 தொ; 30–33), யூதா நாட்டிலும் (2 அர 16:2 தொ; 21:1–9) பெருகுகின்றனர். குறிப்பாக வடபகுதியைச் சேர்ந்த அரச குடும்பங்கள் தங்களைச் சுற்றியிருந்த புறவினத்தாரின்

முடியாட்சிகளைப் பின்பற்றத் தொடங்கின. இதனால் அக்குடும்பத்தினர் அப்புறவினத்தாரின் கொடுங் கோன்மையைப் பின்பற்றியதோடன்றி (1 சாமு 8:10–18) அரச பதவி தெய்வீகத் தன்மையுடையதென்று புராணக்கொள்கைப்படிபுறவினத்தாரால் போற்றப்பட்டு வந்த சிலைவழிபாட்டினையும் ஏற்றுக் கொண்டனர். இதன் காரணமாக இறைவாக்கினர், அரசர்கள் தங்கள் பதவியை துர்பிரயோகம் செய்வதைத் தொடர்ந்து கடுமையாகக் கண்டித்தும், அவர்களது செயலால் நாட்டிற்கு விளையும் கேட்டினை வெளிப்படுத்தியும் வந்தார்கள் (காண்: ஏச 7:10 தொ; எரே 21– 22; 36–38; 2 அர 23:26 தொ). ஓசேயா இறைவாக்கினர் அரச (பதவி) நிறுவனத்தையே கண்டனம் செய்தார் (ஓசே 8:4). உப ஆகமம் இதனை ஒழுங்குபடுத்த முயன்று, புறவினத்தரசர்களை இஸ்ராயேல் மன்னர்கள் பின்பற்றக் கூடாதென எச்சரிக்கை செய்தது (உப 17:14–20).

8. புறவினத்தரசர்கள்:-

புறவினத்தரசர்களைப்பற்றி விவிலியம் சற்று மாறுபட்ட போக்குக்கொண்டுள்ளது. இவர்களும் தங்களது அதிகாரங்களைக் கடவுளிடமிருந்தே பெறுகின்றனர். எலிசா இறைவாக்கினர் இறைவன் பெயரால் தலையிட்டு, தமஸ்கில் கசாயேல் நடத்திய கிளர்ச்சிதனைத் தூண்டிவிட்டார் (காண். 1 அர 19:15; 2 அர 8:7–15). அவர்கள் இறை மக்கள்பால் இறைவனது அருட் கட்டளைகளை ஏற்றுப் பணியாற்றக் கூடியவர்கள். இறைவன், இஸ்ராயேல் நாடு உட்பட மேற்காசிய நாடுகளனைத்தையும் ஆளுகின்ற அதிகரத்தை நெபுக்கதுனேசாருக்குக் கொடுத்தார் (எரே 27); அதன்பின் பாபிலோனியரைக் கீழ்ப்படுத்தி யூதர்களை மீட்கும் வண்ணம், அவர் சைரஸ் மன்னனுக்கு வலிமை நல்கினார் (ஏச 41:1–4; 45:1–6). ஆனால் அவர்கள் எல்லோருமே இறைவனுடைய ஆளுகைக்குப் பணிந்திருக்கவேண்டும்; அவர்களது மூர்க்கத்தனமான அடாத செயல்களையும் (ஏச. 14:3–21; எச 28:1–19), இறைநிந்தனைகளையும் (ஏச 37:21–29) தண்டித்து இறைவன் நீதி வழங்கினார். நேரம் வரும்போது அவர்கள் எல்லோரும் இறைவனுடைய ஒப்பற்ற அரசுரிமையின் முன்னும், அவரால் அபிடேகம் பண்ணப்பட்டவரது ஆற்றலுக்கு முன்னும் பணிந்திருப்பார்கள் (சங் 2 ; 72:9 தொ).

II. எதிர்கால அரசுரிமை

1. இறைவாக்கினரின் வாக்குறுதிகள்:

சமயக்கோட்பாடுகளின் அடிப்படையில் அரச முறையின் அனுபவத்தைக் காணும் போது அது ஒரு மாபெரும் தோல்வியே என்று பல இறைவாக்கினர் மதிப்பீடு வழங்கியுள்ளனர். ஓசேயா அரச பதவியின் முடிவை முன்னறிவித்தார் (ஓசே 3:4 தொ). தாவீது அரசரின் பரம்பரை தாழ்நிலைக்குள்ளாகும் என்பதை எரேமியா திட்டவட்டமாக முன்னுரைத்தார் (எரே 21–22). ஆனால் அவருக்கு முந்திய ஏசயா தாவீது பரம்பரையின் மீது மிகுந்த பற்று வைத்திருந்தார். தாவீது மன்னனின் இறையழைப்பிலும், அடையாளமாக விளங்கிய ஒரு சில அரிதான வெற்றிகளாலும் கடவுளின் திட்டம் எவ்வாறு முற்றிலும் நிறைவேறும் என்பதை இறுதிக் காலக்கண்ணோட்டத்தில் இறைவாக்கினர் எடுத்துரைத்தனர் கி.மு.8–ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஏசயா ஒரு எதிர்கால அரசரின் பிறப்பையும் (ஏச 9:1–6), அவர் இறை மக்களுக்கு மகிழ்வும், வெற்றியும், சமாதானமும், நீதியும் வழங்குவார் என்பதையும் முன்னறிவித்தார்.

ஈசாயின் வழித்தோன்றலாகிய இவர் யாவேயின் தூய ஆவியால் நடத்தப்பட்டு, நாடு பூவுலக இன்பவனமாக ஆகும் அளவிற்கு (11:1–10) நீதியினை நிலைநாட்டுவார் (32:1–5). மீக்காவும் இதே நம்பிக்கையில் உறுதியாய் இருந்தார் (மீக் 5:1–5). தாவீதின் பரம்பரை வீழ்ச்சியுற்றபோது, தாவீதின் மரபில் நீதிமிக்க ஒருவரது எதிர்கால ஆட்சி பற்றி எரேமியா முன்னுரைத்தார் (எரே 23:5 தொ). இதே நம்பிக்கை கொண்டிருந்த எசக்கியேல் ஒரு திருப்பத்தை எடுத்தோதினார். இஸ்ராயேலின் ஆயனாகிய புதிய தாவீதை, இஸ்ராயேலின் ஆயனாகக் காண்கிறார். இப்பட்டம் "இளவரசன்" என்ற பட்டத்

திற்கு மட்டும் சிறிது குறைந்தது (எச 34:23 தொ; 45;7 தொ). அரசர்களின் ஆட்சிக் காலத்திற்கு அப்பால் சென்று, மோசே யின் காலத்தில் நிலவிய இறையாட்சியே இஸ்ராயேலுக்கு ஏற்ற எழிலாட்சி என்று இறைவாக்கினர் எண்ணினார் (காண் ஏச 52.7). ஏசயாவின் ஆறுதல் மொழி நூலும் தாவீதுக்கு அளிக்கப்பட்ட வாக்குறுதிகள் நிறைவேறும் என்பதைக் குறைத்துக் கூற வில்லை (ஏச 55:3; சங் 89:35–38).

2. வாக்குறுதிகள் நிறைவேறக் காத்திருத்தல்:-

இஸ்ராயேல் அரச முறையுடன் நடத் திய சோதனைகள் கி.மு.587–இல் முடிந் தன. இஸ்ராயேலின் வரலாற்றில் அரசர் களின் ஆட்சிக்காலம் ஓர் அடைப்புக் குறி போல், ஓர் இடைக்கால அமைப்பாக இருந்தது. ஆனால் அவ்வமைப்பு அம் மக்களின் மனத்தில் என்றும் மறக்க முடி யாத சில கருத்துக்களை விட்டுச் சென் றது. அடிமைகளாய், நாடிழந்த அகதி களாய் அவமானம் அடைந்தபோது (புல 4:20; சங் 89:39–52), அவர்கள் தங்கள் அரச குலத்தின் மறுமலர்ச்சிக்காக வேண்டிக் கொண்டனர் (சங் 80:18). தாவீதின் வழி வருவோர் மீண்டும் முடியாட்சியை நிலை நாட்டுவர் என்ற நம்பிக்கைக்கு (செக் 3:8 தொ; 6:9–14), செருபாபேலின் எழுச்சி சிறிது வாழ்வு கொடுத்தது. ஆனால் அந்த நம்பிக்கை நீண்ட காலம் நிலைக்க வில்லை. அடிமைத்தனத்திலிருந்து நாடு திரும்பிய பின் யூதேயா இறையாட்சி முறை யில் திரும்ப அமைக்கப்பட்டது. அன்னிய மன்னர்களின் ஆணைக்குட்பட்டதாக இருந்தாலும், அம்மன்னர்கள் பெருந்தன் மையுடன் இஸ்ராயேலுக்குத் தன்னாட்சி தந்தனர் (எஸ் 7:1–26). இஸ்ராயேலும் அம் மன்னர்களுக்காக இறைவனிடம் வேண்டு வதை ஒரு கடமையாகக் கொண்டது (6:10; 1 மக் 7:33). நாட்டின் துயரக்காலம் நீண்டு கொண்டே சென்றதால், இறை வாக்கினர் உரைத்த இறுதிக் காலத்தின் மீது மக்களின் கவனம் திரும்பியது. இறை யரசு நிறுவப்படும் என்ற தளராத நம்பிக் கை இறுதிக்கால நம்பிக்கையின் மைய மாக ஆகியது. இந்தச் சூழ்நிலையில் எதிர்கால அரசனின் வருகைபற்றிய நம்பிக்கை முக்கியமானதாயிற்று. பழைய சங்கீதக் கருத்துக்கள் அவர் மீது ஏற்றிக் கூறப்பட்டன (சங் 2;45; 72;110). அவற்றிற் கேற்ப அவருடைய ஆட்சியின் இயல்பு கணிக்கப்பட்டது. இவ்வாறு அவர்கள் சிந்தனையில் எழுந்த அரசன் நீதி, வெற்றி, சமாதானம் இவையெல்லாம் நிறைந்தவனாகக் கருதப்பட்டான் (செக் 9:9 தொ) புற இன அரசர்களைப் பொறுத்த அளவில், சில சமயங்களில் அவர்கள் எதிர்கால அரசனின் ஆளுகை யில் பங்கேற்பவர்களாயும் போற்றப்பட் டார்கள் (ஏச 60:16); வேறு சில சமயங் களில், அவர்கள் யாவேயின் ஆட்சிக்கு எதிராக் கிளம்பினால் (தானி 7:17–27). நீதித் தீர்ப்புக்குள்ளானவர்களாக இகழப் பட்டார்கள் (ஏச 24:21).

3. புதிய ஏற்பாட்டின் நுழைவாயிலில்

யூத மக்கள் இறைவனின் அருஞ்செய லான தலையீட்டினை வெளிப்பாட்டுப் பாரம்பரியம் எதிர்நோக்கி இருந்த வேளை, பழைய பரம்பரை நம்பிக்கை களுக்கு மாறுபட்ட வகையில் அசமோனிய சந்ததியினரால் மீண்டும் முடியாட்சி நிறுவப்பட்டது (தானி 2:44 தொ; 12:1). ஆனால் அது பாரம்பரிய நம்பிக்கைப் போக்கில் அமையவில்லை. யூதாவின் புரட்சி பழைய 'புனிதப் போர்'களின் கோட்பாட்டு அடிப்படையில் நிகழ்ந்த ஒன்றாயினும் (1 மக் 3), சீமோனிடம் எல்லா அதிகாரங்களும் குவிந்துகிடந்தது (1 மக் 14), ஒரு புதிய போக்காகும். மேலும் விரைவில் அசமோனிய மன்னர்கள் புற மத மன்னர்கள் பழக்கங்களையும் ஆட்சி முறையினையும் பின்பற்றத் தொடங்கினர். எனவே மெசியா பிறக்க இருக்கும் தாவீதின் சந்ததியினர் மீதுள்ள பற்றின் காரணமாகப் பரிசேயர்கள் அசமோனிய சந்ததிக்கு ஆதரவு தரமறுத்து விட்டனர். அதே வேளையில் அன்றிருந்த குருத்துவ நிலை முறைகேடானது என்று, அதனை எஸ்ஸேனிய இயக்கத்தார் கடுமையாக எதிர்த்தனர். இவ்வியக்கம் ஆரோன், இஸ்ராயேல் (பெரிய குருவும் அவருக்குட் பட்ட தாவீது மரபு அரசன்) வழியாக வரும் இரு மெசியாக்களை எதிர் பார்த்தது.

அசமோனியருக்குப் பின் உரோமை யருக்குக் கீழிருந்த ஏரோதின் சந்ததிக்கு

அரசுரிமை உரித்தானது. இச்சமயத்தில், காலத்திற்கேற்பத் தங்கள் கருத்துக்களை மாற்றிக்கொண்ட சதுசேயரைத் தவிர, மற்ற யூத மக்கள், அனைவரிடத்திலும் இறுதிக்கால வேந்தனை எதிர்பார்க்கும் நம்பிக்கை மிகவும் உறுதியாக இருந்தது. ஆனால் இந்த எதிர்பார்த்தல் இறைவனே அரசாள்வார் என்ற சமய நம்பிக்கையை உறுதியாய் கைக்கொண்டிருந்தாலும் அவர்களது நம்பிக்கையில் அரசியல் வாசனையும் வீசத்தான் செய்தது. ஏனென்றால் வரவிருக்கும் அரச மெசியா இஸ்ராயேலரை அன்னியரின் ஆதிக்கத்திலிருந்து விடுவிப்பார் என்ற நம்பிக்கை அவர்களிடம் வேரூன்றியது.

III. புதிய ஏற்பாடு

புதிய ஏற்பாட்டின் நற்செய்தியும் இறையரசு பற்றிய சமயக் கொள்கையினை மையமாகக் கொண்டுள்ளது. இஸ்ராயேலின் வாழ்க்கை அனுபவத்தில் பிறந்ததும், இறைவாக்கினரின் முன்னறிவிப்புகளால் வளர்ந்ததுமான அரச மெசியா பற்றிய நம்பிக்கை புதிய அரசின் சிற்பியாக இயே சுவைச் சித்தரிக்க உதவுகிறது. ஆனால் மீட்பின் வரலாற்றில் இந்நம்பிக்கை நிறைவேறியபோது, அதன் அரசியல் தொனி முற்றிலும் நீக்கப்பட்டது.

*1. மண்ணக வாழ்வின்போது இயேசுவின் அரசுரிமை*

*அ.இயேசு ஓர் அரசரா?:-* இயேசு தம் பொதுவாழ்வின்போது உலக நம்பிக்கை நிறைந்த அரச மெசியா பற்றி மக்கள் கொண்டிருந்த பேரார்வத்திற்கு இணக்கமோ, ஆதரவோ அளிக்கவில்லை. தம்மைத் தனக்குப் போட்டியாகக் கிளம்பிய யூத அரசன் என்ற ஐயுற்ற (லூக் 13:31.தொ; 9:7 தொ) ஏரோது அரசனின் அதிகாரத்தை அவர் என்றுமே எதிர்க்கவில்லை. அது போலவே, உரோமையப் பேரரசனின் ஆட்சியையும் எதிர்க்காது, உரோமையர்களுககு வரி செலுத்துவது கடமை என்பதை ஏற்றுக்கொண்டார் (மாற் 12:13–17). ஏனென்றால் அவரது அருட்பணி வேறு துறையைச் சார்ந்தது. "நீரே இஸ்ராயேலின் அரசன்" (யோவா 1: 49) என்று நத்தனியேல் கூறியதை அவர் மறுக்கவில்லை; எனினும், அவர் மனுமகனின் மகிமைமிக்க வரவை எதிர்நோக்கித் தம் கவனத்தைத் திருப்புகிறார். அப்பங்கள் பலுகிய நிகழ்ச்சிக்குப்பின் அவரைப் பிடித்து அரசனாக்க மக்கள் விரும்பியபோது அவர் அவர்களின் நடுவிலிருந்து நழுவிவிட்டார் (6:15). ஒருமுறை எருசலேம் நகருக்குள் எளிய மக்களின் வரவேற்பையும், வாழ்த்துரைகளையும் ஏற்றபோது, செக்கரியா கூறியதற்கொப்ப (மத் 21:5; செக் 9:9), தம்மை மன்னர் என்று அம்மக்கள் அக்களிப்புடன் அறிக்கையிட அனுமதித்தார் (லூக் 19:38; யோவா 12:13). ஆனால் இவ்வெற்றி விழாத்தான் அவரது பாடுகளை விரைவுபடுத்தியது. இறுதியாக அவரது துயரப்பாடுகள் தொடங்கும் வேளையில் இறுதிக் காலவியலின் கண்ணோட்டத்தில், தம் அரசுபற்றித் தம் சீடர்களுக்கு விளக்கினார் (லூக் 22:29 தொ).

ஆ) இயேசுவின் பாடுகளும் அரசுரிமையும்:-

இயேசுவின் சமய விசாரணையின் போது எழுப்பப்பட்ட கேள்விகள் அவரது மெசியா, இறைமகன் பண்புகளை அடிக்கோடிட்டுக் காட்டுகின்றன. ஆனால் அவர் பிலாத்துவின் முன் அரசியல் விசாரணைக்காக நின்றபோது, அவரது அரசுரிமை கேள்விப் பொருளாகிறது. நற்செயதியாளர்கள் இந்த வாய்ப்பை பயன்படுத்தி பாடுகளில் பொதிந்துள்ள முரணான உண்மைகளை வெளியிடுகின்றனர் 'நீர்தான் யூதர்களின் அரசரோ?' (மாற். 15:2; யோவா 18:33.37), என்று பிலாத்து கேட்ட போது இயேசு இச்சிறப்புப் பட்டத்தை மறுக்கவில்லை (யோவா 18:37). மாறாக தம் அரசு இவ்வுலகைச் சார்ந்ததன்று என்பதைத் தெளிவாக்குகிறார் (18:36). இதன் மூலம் தாம் சீசருக்குப் போட்டியாகக் கிளம்பியவரன்று என்பதை விளக்குகிறார் (லூக் 23:2). ஆனால் யூதர்கள் ஆணவ இருளில் அமுந்திய காரணத்தால், இயேசுவை ஒழித்துக் கட்டும் பொருட்டு, சீசரைத் தவிரத் தங்களுக்கு வேறு வேந்தரில்லை என்று ஆர்ப்பரித்தனர் (யோவா 19:12.15). ஆனால் அவரை ஏளனம் செய்யக் கையாண்ட செயல்களே அவரது அரசுரிமையை எடுத்தியம்பின. படைவீரர் அவரைச் சாட்டையால் அடித்த

பிறகு, அவரை யூதர்களின் அரசனென்று கூறி வணக்கம் தெரிவித்தனர் (மாற் 15:18); சிலுவையில் பொருத்தப்பட்ட குற்ற அறிக்கை "நசரேத்தூர் இயேசு, யூதர்களின் அரசர்" என்று முழங்கியது (யோவா 19:19 தொ); அவரை வேடிக்கை பார்த்து நின்றவர்கள் அவரது அரசுரிமையை நிந்தனை செய்வதில் கருத்தாய் இருந்தனர் (மத் 27:42; லூக் 23:37). ஆனால், அவருடன் தொங்கிய நல்ல கள்வன், அவரது உண்மைப் பண்புகளை உணர்ந்தபோது "உம் அரசில் நுழையும்போது என்னையும் நினைந்தருளும்" என்று வேண்டிக்கொண்டான் (லூக் 23:42). உண்மையில் இயேசு மாவேந்தருக்குரிய மகிமையாவையும் பூணுவார். ஆனால், அது அவரது உயிர்ப்பிற்கும் இறுதி நாளின் மாட்சிமிகு வருகைக்கும் பின்னரே நிகழும். அவர் கூறிய, உவமையில் அரசுரிமை பெற வந்த அரசிளங்குமரனைப்போல் அவரது நாட்டினர் அவமதித்து விரட்டியடித்தாலும், அவர் ஒருநாள் அரசனாக முடிசூடி அவர்களின் வாழ்வை மதிப்பீடு செய்து, எதிரிகளைப் பழிவாங்குவார் (லூக் 19:12–15.27). விசவாசக் கண் கொண்டு நோக்கும்போது இயேசுவின் அரச மகிமை சிலுவையில் ஒளி வீசித்திகழ்வதைக் காணலாம்.

"அரசனின் மாட்சி அவனது கொடியில்
சிலுவையின் மாட்சி செறிந்திடும் மறைவில்"
(பாடுகளின் காலத்துப்பாடல்)

2) உயிர்த்தெழுந்த கிறிஸ்துவின் அரசுரிமை

அ) ஆண்டவரின் இன்றைய ஆட்சி:-

உயிர்த்த கிறிஸ்து தமது அரசில் நுழைந்துவிட்டார். ஆனல் யூதர்களின் எதிர்பார்ப்புக்கு மாறான மெசியாவின் ஆட்சி முறையை முதலில் தம் சீடர்களுக்கு விளக்குவது அவருக்கு அவசியமாயிற்று. இஸ்ராயேலின் சொந்த இலாபத்திற்காக முடியாட்சியை அவர் நிலைநாட்டுவார் என்ற எண்ணத்திற்கே இடமில்லை (அ.ப. 1:6). அவரது அரசு அப்போஸ்தலர்களின் போதனையால்தான் நிறுவப்படும் (அப் 1:8). இருப்பினும், அவரே அரசர்; இவ்வுண்மையினை ஆதித்திருச்சபை, இறைவாக்கினரின் கூற்றுக்களை அவருக்குப் பொருத்திகாட்டி அறிக்கையிட்டது. அவர் நீதியின் அரசர் (சங் 45:7; எபி 1:8); அவர் ஓர் அரசகுரு (சங் 110:4; எபி 7:1); நற்செய்தியாளர் வலியுறுத்த விழைவதுபோல், அவரது பிறப்பிலிருந்தே மறைபொருள் மிக்க முறையில் அவர் அரசர் தாம் (லூக். 1:33; மத் 2:2). ஆனால் அவரின் அரசு இவ்வுலகைச் சார்ந்ததன்று (யோவா.18:36); இயேசு தம் அரசுரிமையை உலகின் எந்த அரச குலத்திடமும் ஒப்படைக்கவில்லை. இருப்பினும் உலகின் எந்த அரசாட்சிக்கும் அது போட்டியாக எழுவதில்லை. "கடவுள் அவர்களை இருளின் அதிகாரத்தினின்று விடுவித்துத் தம் அன்பார்ந்த மகனுடைய அரசில் கொண்டு வந்துசேர்க்கும்போது" (கொலோ 1:13) கிறிஸ்துவர்கள் அவ்வரசின் குடிமக்களாவர். இதன் காரணமாகப் புறமத அரசர்களின் ஆட்சிக்கு அடங்கி நடப்பதும், அவர்களுக்கு மதிப்புத் தருவதும் தடை செய்யப்படவில்லை (பேதுரு 2:13,17). ஏனெனில், அவர்கள் இறைவனின் ஆணையை தாங்கியவர்கள்; இயேசுவின் ஆன்மீக அதிகாரத்தை அவர்கள் எதிர்க்காத வரையில் அவர்களுக்குப் பணிவது கடமையாகிறது. ஆனால் அவர்கள் அவருக்கு எதிராகக் கிளம்பும் போதுதான் சங் 2:2–இல் முன்னறிவித்ததுபோல மோதல் ஏற்படுகிறது. பாடுகளின்போது நிகழ்ந்தது இதுதான் (அ.ப.4:25 தொ). உலக மன்னர்கள் பாபிலோனியஅரசுடன் அநாச்சாரங்கள் புரிந்தபோதும் (திருவெளி 17:2). தங்களை ஆளுமாறு பாபிலோனை அனுமதித்தபோதும் (17:18). சாத்தானின் அரசாகிய விலங்கு வழிபாட்டில் கலந்து கொண்டபோதும்(17:12) மேற்கூறிய எதிர்ப்பும் மோதலும் எழுந்தன. பின்னர் அவ்வரசுகள் அதிகார வெறிகொண்டு, பாபிலானிய அரசு அதிகார வெறிகொண்டு கிறிஸ்துவின் சாட்சிகளுடைய செந்நீரைக் குடித்துச் சீரழிந்ததுபோல் திருச்சபையினையும், அவளது பிள்ளைகளையும் அடக்குமுறையால் கொடுமைப்படுத்தினர் (17:6).

ஆ) இரண்டாவது வருகையின்போது இயேசுவின் ஆட்சி:-

இறுதிக்காலத்தில் இறைவனின் செம்மறிக்கு எதிராக மண்ணக மன்னர்கள் யாவரும் ஒன்றாக எழுந்து இடர் விளை

விப்பார்கள் என்பதை உருவக வடிவில் திருவெளிப்பாடு சித்தரிக்கிறது. அவர்கள் அனைவரும், வல்லமை எல்லாம் விலங்கினிடம் ஒப்படைத்துவிட்டு (திருவெளி 17:13), இறுதி நாளுக்கு முன் ஒன்றாகத் திரண்டெழுவார்கள் (16:14). ஆனால் செம்மறி அவர்களை வென்று அடிமைப்படுத்துவார் (19:18 தொ). ஏனெனில், அவரே அரசர்க்கெல்லாம் அரசர் ஆண்டவர்க்கெல்லாம் ஆண்டவர் (17:14; 19:1 தொ; 1:5). அவரது மாட்சிமை மிகுந்த இரண்டாம் வருகை அவரது அரச மகிமையையும், இறையரசின் பெருமையினையும் வியக்குமாறு வெளிப்படுத்தும் (11:15; 2 திமோ 4:1). ஏசயா 11:4–இன் இறைவாக்கைப் பின்பற்றி அவர் தமது மகிமையை விளங்கச் செய்து எதிர்க்கிறிஸ்துவை கொன்றழிப்பார் (2 தெச 2:9). அதன்பின் சங் 110:1–இல் கூறியதற்கொப்ப அவர் தம் அரசை இறைவனிடம் ஒப்படைப்பார். இறைவன் அவரது பகைவர்களையெல்லாம் அவரது காலடியில் வீழ்த்தும் வரையில் அவர் அரசாள்வார் (1 கொரி 15:24 தொ). சங் 2:9 கூறிவதுபோல், ஒரு இரும்புக்கோலுடன் (திருவெளி 19:15) தம் பகைவர்களை ஆளுவதே, அவர் இறைவார்த்தையாக இருந்து நிகழ்த்தும் பெரும் இறுதிக் காலப் போரின் விளைவாக இருக்கும். பின்னர் அவர் தம் ஆட்சியை விலங்கினை வணங்க மறுத்ததற்காக உயிரிழந்த தம் தொண்டர்களோடு பகிர்ந்துகொள்ள, அவர்களும் அவருடனும், இறைவனுடனும் இணைந்து ஆட்சி செலுத்துவர் (1 கொரி 15:24; திருவெளி 20:4 தொ; 5:10). இவ்வாறாக மனுமகனுடன் அவர்களும் முடிவில்லாக்காலத்திற்கு ஆளுவார்கள் என்று தானியேல் இறைவாக்கினர் உரைத்தது நிறைவேறும் (தானி 7:22–27). இதே வாக்குறுதியைத்தான் இயேசு இறுதி இரவு ணவின்போது தம் பன்னிரு சீடருக்கும் அளித்தார். "என் தந்தை எனக்கு அரசுரிமை வழங்கியது போல நானும் உங்களுககு அதை வழங்கப் போகிறேன் எனவே அரசில் என்னுடன் பந்தியில் உண்பீர்கள் குடிப்பீர்கள். இஸ்ராயேலின் பன்னிருகோத்திரங்களுக்கும் நடுவராக அரியணைகளில் வீற்றிருப்பீர்கள்" (லூக் 22:29 தொ; திருவெளி 7:4–8.15)

## அரசி

இஸ்ராயேல் யூதா உட்பட்ட பழங்கால மேற்காசியவில், அரசர்கள் பல மனைவியர்களையும், வைப்பாட்டிகளையும் கொண்டிருந்தனர். அம்மனைவியருள் ஒருத்திக்குச் சிறப்பிடம் கொடுத்து அவளை அரசியென்று அழைப்பது வழக்கம். பொதுவாக அரசி நேரடியாக ஆட்சி செய்பவளாக இருக்கலாம், அரசனின் தாயாகவோ விதவையாகவோ இருக்கலாம்.

1. ஆட்சிசெய்யும் அரசி:- அரசனாக ஆட்சி செய்யும் அரசி, பழங்கால மேற்காசியாவில், அவ்வப்போது இருந்திருக்கின்றனர். விவிலியம் இஸ்ராயேலரைச் சேராத இரு அரசிகளைப் பற்றிக் கூறுகிறது. அவர்கள் சேபா நாட்டு அரசி (1 அர 10; 2 நாள் 9), எத்தியோப்பியர்களின் அரசியான கந்தாக்கு (அ.ப.8:27). எபிரேயர்களிடையே அத்தாலியாவைத் தவிர, உரிமையோடு ஆட்சிசெய்த வேறோரு அரசி காணப்படவில்லை. இவள் தன் மகன் அகசியாவின் மரணத்துக்குப்பின் யூதாவின் ஆட்சியை அபகரித்து ஏழு ஆண்டுகள் ஆட்சி செய்தாள் (2 அர 11:3).

2. அரசனின் மனைவியான அரசி:- இஸ்ராயேலிலும் யூதாவிலும் அரசர்களின் மனைவியர் அதிகாரப் பூர்வமான சிறப்பிடம் வகித்ததாகத் தெரியவில்லை. பாரசீகத்தில் வாஸ்தி (எஸ்த 1:9), எஸ்தர் (1:13–22) போன்ற அரசிகள் முடிசூட்டப் பெற்றிருந்தாலும் அரசனுக்கு முழுவதும் கீழ்ப்படிந்திருக்க வேண்டியிருந்தது. பதுசேபா "நெடுங்கிடையாய் விழுந்து தாவீதுக்கு வணக்கம் செலுத்தினாள் (1 அர 1:16.31). அரசியின் இடம் அரசனின் வலதுபுறத்தில் மதிப்புக்குரிய இடமாகும் (சங் 45:9). சில சமயங்களில் அரசிகள் ஆதிக்கம் செலுத்தியதாகத் தெரிகிறது. வட இஸ்ராயேலில் அரசி ஈசெபேல் இறைவாக்கினர் எலியாவை அச்சுறுத்தும் அளவுக்கும் (1 அர 19:1–3) நாபோத்துக்கு எதிராகச் சதி செய்யும் அளவுக்கும் (21: 15–16) ஆதிக்கம் கொண்டிருந்தாள். கெசூரின் அரசன் தல்மாயின் மகள் மாக்காவைத் தாவீதும் (2 சாமு.3:3) பார்வோனின் மகளை சாலமோனும் (1 அர 3:1) தீரின்

அரசன் எத்துபாகாலின் மகளான ஈசெபேலை ஆகாபும் (16:31) இஸ்ராயேலைச் சேர்ந்த அத்தாலியாவை யூதாவைச் சேர்ந்த யோராமும் (2 அர 8:25 –27) மணந்து கொண்டது அமைதியான உடன் படிக்கைக்காகவும், கூட்டணிகளுக்காவும் செய்யப்பட்டவையாகும். பல கூட்டாளி களையுடைய ஆற்றல்மிக்க அரசன் பல மனைவியரைக் கொண்டிருந்தான். இவ்வாறு சாலமோன் 700 மனைவியரையும், 300 வைப்பாட்டிகளையும் கொண்டிருந் தார் (1 அர 11:3). இவர்களின் எண்ணிக் கை அரசரின் செல்வத்திற்கும் ஆதிக்கத் திற்கும் ஓர் அடையாளமாக விளங்கியது. ஓர் அரசியின் செல்வாக்கு, ஒருவேளை, அவளது உறவினரின் ஆதிக்கத்தைப் பொருத்ததாக அமைந்திருக்கலாம். அரசியைத் தவிர, அரசனுக்கு மற்ற மனைவியர்களும் இருந்தனர். இவர்கள் சில இடங்களில், தெளிவில்லாமல் "அரசியர்" என்றழைக்கப்படுகின்றனர் (உ.ச.6:8–9). இவர்கள் அரசனுடைய வைப் பாட்டிகளைவிட சிறிது உயர்ந்த இடத்தை வகித்தனர் (1 அர.11:3).

3. அரசரின் தாய்:- அரசரின் மனைவி என்ற அளவில் அரசி அவ்வளவு முக்கி யத்துவம் பெறவில்லை என்றால், அரச னின் தாய் என்ற அளவில் அரசியின் இடம் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். எகிப்திய, மெசபொத்தாமியா, இத்தியப் பேரரசுகளில் ஆட்சி செய்யும் அரசனின் தாய் செல்வாக்குக் கொண்டிருந்தாள். யூதாவின் அரசன் ஆசாவின் தாய் மாக்கா செய்த வழிபாட்டின் குற்றத்திற்காக அவளைத் தாய்அரசி என்ற பதவியிலி ருந்து நீக்கினார் (1 அர 15:13). இதிலி ருந்து, தாய் அரசிக்கு யூதாவில் ஒரு சிறப்பிடம் அளிக்கப்பட்டிருந்தாகத் தெரி கிறது. தாய் அரசிக்கு அரசனும் மரி யாதை செலுத்தினார். சாலமோன், தன் தாய் பதுசேபாவுக்கு எழுந்து, அவளை எதிர்கொண்டு வணங்கி அரியணையில் அமர்த்தினார் (1 அர 2:19). தாய் அரசிக் கென ஒரு முடி இருந்திருக்கலாம் (எரே 13:18). அவள் அரசனோடு மீண்டும், மீண்டும் குறிப்பிடப்பெறுகிறாள் (13:18; 22:26; 29:2). யூதாவைச் சேர்ந்த அரச தாய்களின் பெயர்கள் விவிலிய விவரிப்புகளில் காணப்படுவதிலிருந்து யூதாவில் தாய் அரசியின் முக்கியத்துவம் தெரிகிறது (1 அரச 14: 21; 15:2.10...). அத்தாலியா, தன் தந்தை வழி வந்த ஓமிரி அரச மரபு இஸ்ராயேலில் கொலை செய்யப்பட்ட பின்பும் (2 அர 11: 1– 3), யூதாவின் அரிய ணையை அபகரித்து ஏழு ஆண்டுகளுக்கு ஆட்சி செய்தாள். இது தாய் அரசி கொண்டிருந்த செல்வாக்குக்கும், ஆதிக் கத்திற்கும் சான்றாக உள்ளது.

யூதாவைப்போல் வட அரசாகிய இஸ்ராயேலில் தாய் அரசிக்கு அவ்வளவு முக்கியத்துவம் கொடுத்ததாகத் தெரிய வில்லை. ஏகூவின் கிளர்ச்சியின் போது அகசியாவின் உறவினர்கள் 'அரசரின் புதல்வர்களையும் அரசியின் புதல்வர் களையும்' சென்று பார்த்தனர் (2 அர 10:13). செரூயா (1 அர.11:26) ஈசெபேல் ஆகிய இரு அரச தாய்களின் பெயர்கள் மட்டும்தான் கொடுக்கப்பட்டுள்ளன. இது, அரச தாய்களுக்குச் செல்வாக்கு இல்லையென்று காட்டவில்லை (2 அர 9:22). அரசர்கள் நூலின் உபாகமப் பாரம் பரிய ஆசிரியர் வட அரசின்பால் கொண் டிருந்த பாதகமான போக்கு இதற்குக் காரணமாக இருக்கலாம்.

அரசிகள் பற்றிய புதிய ஏற்பாட்டுக் குறிப்புகள் (மத் 12:42; லூக் 11:31;...) அரசி களின் நிலைபற்றிய ஒன்றும் கூற வில்லை.

**அரது** (ARD – தப்பி ஓடியவர், கூனன்)

எகிப்தில் வந்து குடியேறிய யாக்கோ பின் குடும்பத்தைச் சேர்ந்த எழுபது பேர் களில் ஒருவராவார். பென்யாமினின் வழி வந்தவர் (ஆதி 46:27). அரதியர் வம்சத் தின் மூதாதையராக அல்லது தலைவராக இவர் கருதப்படுகிறார் (எண் 26:40).

பெயரும் குடும்ப உறவும் வெவ்வேறு வடிவம் எடுக்கின்றன. மாசாரோட்டிக் வாசகத்தில் ஆதி 46:21; எண் 26:40 கொடுக் கின்ற அரது என்ற பெயரானது, முதல் நாளாகமத்தில் வருகின்ற (8:3) அத்தார் என்ற பெயரைக் குறிக்க முன்னால் பயன் படுத்தப்பட்ட சொல்லாகும். அராதுக்கும் பென்யாமினுக்கும் உள்ள உறவு முறை யானது மகனாகவும் (ஆதி 46:21) பேரனாக

வும் (எண் 26:40) கொள்ளுப்பேரனாகவும் (ஆதி 46:21) காணப்படுகிறது.

**அரண்** (FORTIFICATION, FORTRESS)

நகரை அல்லது பாளையத்தைச் சுற்றி செயற்கை முறையில் அமைக்கப்பட்ட பாதுகாப்பாகும். தொடக்கத்தில் ஓர் இடத்தின் இயற்கையான பலத்தை மேம் படச் செய்வதாக அமைந்தது. காலப் போக்கில் முற்றுகை முறைகள் முன்னேறி யதற்கு ஒப்ப அரண்களும் சிக்கல்மிக்க தாயின. அடிப்படை அரண், கோபுரப் பாதுகாப்போடு கூடிய சுற்றுச் சுவர் களைக் கொண்டதாகும். சுவரைச் சுற்றி அகழி அமைக்கப்பட்டது. இந்த அரண் களில் வாயில்கள் போன்ற பலவீனமான இடங்கள் பிரச்சினைகளை உண்டாக்கின. புறத்திலிருந்து நகருக்கு நீரைக் கொண்டு வருவதற்கு, 'இத்தகைய வாயில்களை அமைக்க வேண்டியிருந்தது. அரணுக்குள் உயர்ந்த இடத்தில் அரசாங்கக் கட்டடங் கள் அமைந்திருந்தன. இவை மேலும் உள் அரண்களால் பாதுகாக்கப்பட்டிருநதன. அரண் சூழ்ந்த இடம் கோட்டை என்ற ழைக்கப்பட்டது. அரண் இறைவனது பாதுகாப்பையும் அடைக்கலத்தையும் அடையாளமாக உணர்த்திற்று. (சங் 59:9. 16–17; 62:2; 94:22; ஏச 33:16).

தானி.11:38–இல் வரும் "அரண்களின் தெய்வம்" இருபொருள் மயக்கமுடையது. இது உரோமையர் தெய்வம் யூபித்தர் காப்பிட்டோலீனசைக் குறித்தது என்பது பொதுவான விளக்கமாகும். இத்தெய்வத் திற்கு ஒரு பெரும் கோவிலைக் கட்டுவ தாக நான்காம் அந்தியோக்கு உறுதி கூறி யிருந்தார். ஆனால் வாசச் சூழ்நிலையில், இது அந்தியோக்குவையே வஞ்சப்புகழ்ச்சி யாகக் குறிக்கிறது எனலாம். ஏனெனில், இவர் "இறைவெளிப்பாடு" என்று பொருள்படும் எப்பிபான் என்ற பட்டத் தைச் சூடிக்கொண்டார். மேலும் இவர் வேகமாக அடைந்த போர் வெற்றிகளால் முற்றுகையிடப்பட்ட அரண்களுக்கு ஒரு பயங்கர எதிரியாகத் திகழ்ந்தார் (தானி 11:24.31.39; 1 மக் 1:19.33).

**அரண்மனை** (PALACE)

1. அரசர்கள் அல்லது மற்ற பெரிய தலைவர்கள் தங்கி வாழ்ந்து வந்த வீடு அரண்மனை என்றழைக்கப்பட்டது. இப் பொருளை உணர்த்த பல சொற்கள் பயன் பட்டுள்ளன (ஆதி 12:15; 1 அர 4:6; 16:18; 2 அர 10:5; 15:25; 2 நாள் 2:1; 9:11; 36:19: எஸ் 6:2; நெக 1:1; 7:2; எஸ்த 1:2.5; 2:3–5; ஏச 23:13; 34:13; 39:7; மத் 26:31.58.69...)

2. அன்னிய அரண்மனைகள்:- விவிலி யத்திலே அன்னிய அரசர்களாகிய பார வோன் (ஆதி.12:15), நெபுக்கதுனேசார் (தானி 1:4), பேல்சாசார் (தானி 5:5), தாரியு (6:18) ஆகியோரது வீட்டைப் பற்றிய குறிப்பு கள் காணக்கிடைக்கின்றன. இஸ்ராயே லும் யூதாவும், மெசபொத்தோமியா எகிப்து ஆகிய நாடுகளோடு கொண்டி ருந்த வர்த்தக அரசியல் உறவுகளோடு அந்நாட்டு அரண்மனைகளைப்பற்றியும் அறிய வந்தன. பாலஸ்தீனத்தில் நடந்த புதைப்பொருள் ஆராய்ச்சிகள் பல பெரிய கட்டடங்களை வெளிக்கொணர்ந்துள்ளன. இவை அரண்மனைகளாக இருந்திருக்க லாம்.

3. எபிரேய அரசர்களின் அரண்மனைகள்:-

தாவீதின் அரண்மனையானது தீரின் அரசனாகிய கீராமினால் அனுப்பி வைக் கப்பட்ட தச்சர்களாலும், கொத்தனார் களாலும் கேதுரு மரங்களால் கட்டப் பட்டது. அதில் தாவீதுவுடைய மனைவி களும் வைப்பாட்டிகளும், வேலையாட் களும் மக்களும் வாழ்ந்தனர் (2 சாமு 5:11). சால மோனுடைய அரண்மனையும் இவர் களால் தான் கட்டப்பட்டது. "லீபானின் வனம்" என்ற மாளிகையானது முழ நீள மும் ஐம்பது முழ அகலமும் முப்பது முழ உயரமும் இருந்தது (1 அர 7:1–12) எருச லேமின் அழிவின்போது (587 கி.மு) சால மோன், தாவீது அரசனுடைய அரண் மனையின் சில பகுதிகள் இருந்ததாக சான்றுகள் கிடைக்கின்றன. அதனுடைய முழுமையான அழிவானது கி.பி.135–க்கு பிறகு நடந்தது. சாலமோன் தன்னுடைய ஆட்சியின்போது தன்னுடைய ஆளுநர் களுக்கும் பெரிய வீடுகள் கட்டிக் கொடுத்தார்.

வட அரசாகிய இஸ்ராயேல் நாட்டில் எரொபயாமும் அவனுடைய வழித் தோன்றல்களும் அரண்மனையில் இருந்

தனர். சிமிரி தன் அரசாட்சியின் 7–ஆம் நாளில் கலகத்தின் விளைவால் அரண் மனைக்குள் புகுந்து அதைத் தீக்கிரையாக் கியதோடு தானும் தீக்குளித்தார் (1 அர 16:18). எனவே அவருக்குப்பிறகு ஆண்ட ஒமிரி சமாரியரின் மலைமேலே அரண் மனைகள் கட்டித் தன் தலைநகராக ஆக்கிக் கொண்டார். பின்பு இது அவரு டைய மகன் ஆகாபால் விரிவாக்கப் பட்டது. புதைபொருள் ஆராய்ச்சி ஆகாபு தந்தத் தால் வீடு கட்டியதற்குச் சான்று காட்டு கிறது (1 அர 22:39). இது ஆமோஸ் இறைவாக்கினராலும் உறுதிப்படுத்தப்படு கிறது (ஆமோ 3:15; 6:4). தேல்–ஏல்–பூல், கிபயா ஆகிய இடங்களில் நடந்த தொல் பொருள். ஆய்வுகள் வலிமையான அரண் களைக் காட்டுகின்றன.

4. கிரேக்கர், உரோமையர் காலத்திய அரண்மனைகள்.

அடிமைத் தனத்திற்குப்பின்பு எருச லேமை ஆண்டவர்கள் தனிப்பட்ட வீடு களில் வாழ்ந்தனர் (நெக 2:8). யாசோன் என்ற பெரிய குரு, அந்தியோக்கு எப்பி பானின் தூண்டுதலால் நகரத்தாரின் ஒழுங்கு முறைகளை நீக்கி, கோட்டைக் கருகிலேயே உடற்பயிற்சிக்கூடத்தை நிறுவி னார் (2 மக் 4:12). ஒனியாவின் மகனான சீமோன் தலைமைக் குருவாக இருந்த போது கடவுளின் ஆலயத்தை உறுதிப் படுத்தினார். ஆலயத்துக்கு அருகில் தனக் கென ஓர் அரண்மனையைக் கட்டிக் கொண்டார் (சீரா 50:1).

ஏரோது யூதர்களுடைய அரசனான போது மிகப்பெரிய கட்டிடங்களை எழுப் பும் திட்டங்களை உருவாக்கினார். எருச லேமின் வடக்கிழக்குப் பகுதியில் மூன்று மிகப்பெரிய கோபுரங்களைக் கொண்ட அரண்மனையைக்கட்டினார். எரிகோவில் கட்டப்பட்ட மற்றுமொரு அரண்மனை அவருடைய சாவின்போது தீக்கிரையாக் கப்பட்டது. 1950–51–இல் ஆராய்ச்சியின் படி இது அரசனுடைய குளிர்கால உறை விடமாக இருந்தது. கி.மு.40–இல் ஏரோது சாக்கடலுக்கு அருகிலிருந்த அரண்மனையிலே தஞ்சம் புகுந்திருந்தார். அப்போது பார்த்தியர்கள் எருசலேமை முற்றுகையிட்டார்கள்.

புதிய ஏற்பாட்டிலே உள்ள குறிப்புகள் (மத் 26:3.58.69; மாற் 14:54.66; யோவா 18:15) இயேசுவின் காலத்திலே தலைமைக் குருக் கள், உரோமைய ஆளுநர்கள் இருந்த போதும், தங்களுக்கென தனியாக அரண் மனைப் பெற்றிருந்தார்கள் என்று காட்டு கின்றன.

**அரண்மனை மேற்பார்வையாளர்** (CHAMBERLAIN)

இவர் அரசனுடைய தனிப்பட்ட காரி யங்களைக் கண்காணிக்க நியமிக்கப்பட்ட அதிகாரிகளில் ஒருவர். அரசன் நம்பு கின்ற அளவிற்கு அவரோடு மிக நெருங் கிய தொடர்பு கொண்டவர். யோசியா அரசன் காலத்தில் நாத்தான்மெலக்கு என்பவர் அரண்மனை மேற்பார்வை யாள ராக இருந்தார் (2 அர 23:11). இந்த அதி காரிகள் அரண்மனைப் பெண்களின் படுக்கையறையில் நுழையக்கூடிய உரிமை பெற்றிருந்த கரணத்தால் பெரும்பாலும் அவர்கள் அண்ணர்களாகவே இருந்தனர் (எஸ் 1:10).

**அரபா** (ARABAH – பாலைவனம், எரிந்துபோன)

அரபா பாலஸ்தீனத்தின் பகுதிகளான கடற்கரைச் சமவெளி, நெகேபு, செப் பேலா மற்றும் மலைப்பகுதிகள் ஆகிய வற்றிலிருந்து வேறுபடுத்தப்பட்ட பகுதியா கும். சில இடங்களில் இது சமவெளி என்று குறிக்கப்பட்டாலும், உண்மையில் இது பாலஸ்தீனத்தின் கிழக்குப் பகுதியி லுள்ள ஒரு பள்ளமாகும்.

அ) இடஅமைப்பு:- பழைய ஏற்பாடு இப்பகுதியைப் போதிய மட்டும் துல்லிய மாக விவரிக்கிறது. இது கின்னெரேத் துக்குத் தெற்கில் உள்ளது. யோர்தானை எல்லையாகக்கொண்டது. அரபா கடலா கிய உப்புக் கடல், கிழக்கில் பிசுகாவின் சரிவுகளையும் இப்பகுதி கொண்டிருந்தது (உப 3:17; யோசு 12:3.8; 2 அர 14:25). இதோடு தொடர்புடைய வாசகப் பகுதிகள் கின்னெ ரோத் (யோசு 11:2) யோர்தானின் கிழக்குப்படுகை (உபா 4:49) சாக்கடல் அல்லது உப்புக் கடல் (4:9: யோசு 3:16) ஆகியவற்றைக் குறிக்கின்றன. ஒரு தடவை யாவது, சாக்கடலிலிருந்து, எசியோன் கெபேர்வரையுள்ள அரபாவின் தென் பகுதி குறிக்கப்படுகிறது (உப 2:8).

இவ்வாறு அரபா 1) யோர்தான் பள்ளத் தாக்கு, 2) சாக்கடல் பகுதி 3) சாக்கடலி லிருந்து அக்காபா வளைகுடாவரை உள்ள பகுதி என்று மூன்று பெரும் பிரிவுகளைக் கொண்டது.

ஆ) வரலாறு:- பாலைவனத்தில் இஸ் ராயேல் செய்த பயணத்தின் முடிவில், அரபா முதல் தடவை குறிக்கப்படுகிறது. இஸ்ராயேலர் எகிப்திலிருந்து கானா னுக்கு வந்தபோது கடந்து வந்தவழிகளில் ஒன்று. உப 2:8-இன்படி ஏதோம், மோவா பைத் தவிர்ப்பதற்காக காதேசுபார்னேயா விலிருந்து ஏசியோன்-கெபேர் வழியாக மோவாபை நோக்கிப் பயணம் செய்தனர். இத்தருணத்தில் அரபாவில் மோவாபியர் களின் பகுதி ஓர் எமோரிய அரசனான சீகோனால் கைப்பற்றப்பட்டு, பின்னர் இஸ்ராயேலர்களால் அவரிடமிருந்து வெற்றிகொண்டு பிடிக்கப்பட்டது. இவ் விடத்தில்தான் மோசே இறைவனது ஆற்றல் மிக்க செயல்களை தம் மக்களுக்கு மீண்டும் எடுத்துக் கூறினார் (எண் 32:36; உப 1:1)

யோசுவா (இங்கிருந்து புறப்பட்டு) சாக் கடலுக்கு வடக்கில் யோர்தானைக் கடந்து எரிகோவின் அரபாவை அடைந்து (யோசு 3:16) அங்கு கில்காலில் வழிபாட்டிடத் தையும் தனது போர்த்தலைமையகத்தை யும் (4:19) நிறுவினார். எரிகோவை வெற்றி கொண்டு (ஆதி 6) அதன்மூலம் யோர் தானின் மேற்குப் பகுதியை வெற்றி கொள்ள வழிவகுத்தார்.

வட அரபா பற்றி பின்னைய வரலாற்று நிகழ்ச்சிகளில் கூறப்படுகிறது. பின்பு அரசன் சவுலால் துரத்தப்பட்ட காலத்தில் தாவீது மாவோன் பாலைவனத்தில் ஒளிந்து வாழ்ந்தார் (1 சாமு 23:24). அபினேர் கிபயோனில் தோற்கடிக்கப் பட்டபின் தாவீதின் தளபதி யோவாபின் வீரர்களிடமிருந்து தப்பிக்க இதன் வழி யாக ஓடியதாகக் கூறப்படுகிறது (2 சாமு 2:29). இசிபோத்தை இரிம்மோனின் புதல் வர்கள் கொன்று அவரது தலையைத் கெபிரோனில் இருந்த தாவீதிடம் கொண்டு செல்ல இரவு முழுவதும் இதன் வழியாகச் சென்றனர் (4:7). பிரிவுபட்ட அரசாட்சி காலத்தில் 2-ஆம் எரொபயாம் தனது அரசின் கிழக்கு எல்லையின் ஒரு பாகமாக அரபாவைக் கருதினார் (2 அர 14:25). பாபிலோனியர்கள் நாட்டைக் கைப்பற்றியபோது செதேக்கியா தப்பி ஓடியபோது இங்குதான் எரிகோவின் சமவெளி அருகில் கல்தேயர்களால் பிடிபட்டார் (2 அர 25:4; எரே 39:4; 52:7). தென் அரபா பற்றி அதிகம் பேசப்படா விட்டாலும், இது யூதா, இஸ்ராயேல் ஆகியோரின் உரிமையாக இருந்தது. பின் ஏதோமியர்களால் மீண்டும் ஆட்கொள்ளப் பட்டது. கி.மு. 3 லிருந்து இப்பகுதி நபத் தேயர்கைவசம் ஆனது.

பின்னைய இறைவாக்கு நூல்களில் இதுபற்றிப் பேசப்படுகிறது. ஆதி.13-19-ல் உள்ளபடி ஐந்து தீய நகரங்களின் முன்னர், அரபாவின் சாக்கடல்பகுதி செழிப்பு மிக்கதாகவும் ஆண்டவரது இன்பவனம் போல் விளங்கியது (13:10). பிற்கால இறைவாக்கு நூல்கள் இப்பகுதி தனது பழைய வளமையைப் பெறுவது இஸ்ராயேல் தன்வளமையைப் பெறுவதன் வாக்குறுதியைக் குறிப்பதாகும் என முன்னறிவிக்கிறது. எசக்கியேல் ஆலயத் தின் கீழ்ப்புறத்தில் இருந்து நீர் ஊற்று புறப்பட்டு அரபா, சாக்கடல்வரை சென்று அவற்றை வளமானதாகவும், பயனுள்ள தாகவும் மாற்றும் எனக் குறிப்பிடுகிறார் (எச 47:1-12). இதே வாக்குறுதிகள் மீண்டும் பலஇறைவாக்குகளில் எதிரொலிக்கின் றன. யோவேல் 3:18; செக் 14:8; ஏச 35:1; 51:3 போன்ற பகுதிகளில் பாலைவனம் என்று குறிப்பிடுவது உண்மையில் அரபாவைக் குறிப்பதாக இருக்கலாம். இப்பகுதி பற்றிய கடைசிக்குறிப்பு அடையாளத் தன்மையுடையது. செக் 14:10-இன்படி கெபாவிலிருந்து இரிம்மோனுக்கு இடைப் பட்ட பகுதி "சமவெளியாக்கப்படும்"., இவ்வாறு அரபா எருசலேமின் மேன்மை யோடு ஒப்பிட்டு வேறுபடுத்தப்படுகிறது.

**அரபாவின் ஓடை** (BROOK OF THE ARABAH)

சாக்கடலுக்குத் தென்புறத்தில், இஸ்ரா யேலின் தென் எல்லையைக் குறிக்கும் விதத்தில் அமைந்த வறண்ட நீரோடை (ஆமோ 6:14). இது ஒருவேளை செரேது என்ற சிற்றோடையாக இருக்கலாம் அல்லது எகிப்திய சிற்றோடையாக

இருக்கலாம். இதுதான் இஸ்ராயேலின் பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட்ட தென் எல்லை. அரபா ஓடையே அலரிகளின் ஓடையாக இருக்கலாம். காண்க. அலரிகளின் ஓடை.

***அரபாக்கடல்***
*(SEA OF THE ARABAH – பாலைவனக்கடல்)*

பழைய ஏற்பாட்டில் உப்புக் கடலோடு இணைத்துப் பேசப்படும் ஒரு ஏரியாகும் (உப 3:17; யோசு 3:16; 12:13; மேலும் காண்க. உப 4:19; 2 அர 14:25). இது இப்போது பொதுவாகச் சாக்கடல் என்றழைக்கப்படுகிறது. அரபா பள்ளத்தில் மிக ஆழ்ந்த பகுதியில் இருப்பதால் இப்பெயர் பெறுகிறது.

***அரபு*** (ARAB – பாலைவனம், பதுங்கி இருத்தல்)

யூதா நாட்டின் மலைப்பகுதியிலுள்ள ஒரு நகர், கெபிரோனின் தென் மேற்கிலுள்ளது (யோசு 15:52). ஒருவேளை 2 சாமு 23:35–இல் குறிக்கப்படும் பாகராயின் பிறப்பிடமாக இருக்கலாம். தூமாவிற்குக் கிழக்கேயும் ஊம்–ஏல்–அமாத்திற்கு அருகேயும் உள்ள இக்கால ஏர்–ராபியே தான் இவ்விடம் என்று கருதப்படுகிறது.

***அரமேயம்*** (ARAMAIC)

செமித்திய மொழியின் திரிபு மொழிகளின் தொகுப்பு இப்பெயரால் அழைக்கப்படுகிறது. இது எபிரேயத்துக்கு நெருங்கிய தொடர்புடையதாக உள்ளது.

1. வரலாறு:- அரமேயர்கள் பேசிய மொழியாததால் அரமேயம் என்று பெயர் பெற்றது. இந்த அரமேயர்கள் கி.மு.2–ஆம் ஆயிரமாண்டின் தொடக்கத்தில் வடமேற்கு மெசபொத்தாமியாவில் வாழ்ந்து வந்தனர். இவர்களது தொடக்க வரலாறு தெளிவாக இல்லை. ஆனால் இவர்கள் எழுதத் தொடங்கியபோது கானானிய திரிபு மொழிகளைப் பயன்படுத்தினர். கி.மு. 12–ஆம் நூற்றாண்டில் அரமேயக் குழுக்கள் திகிரிசு, யூப்பிரத்திசு ஆகிய ஆறுகளை ஒட்டியும் பாலஸ்தீனத்திலும், வட அரேபியாவிலும் குடியேறியதற்குச் சான்றுகள் உள்ளன. அடுத்த நூற்றாண்டில் இவர்கள் சீரியாவில் பல நகர அரசுகளை அமைத்திருந்தனர். காலப்போக்கில் இவர்களது அரசியல் சுதந்திரம் அழிந்து போனது அதன் பின்புதான் அவர்களது மொழியின் ஆதிக்கம் மிகுந்திருந்தது. இவர்களது மொழி, வணிகத்திலும் அரசியலிலும், தூதுக் குழுக்களாலும் பெரிதும் பயன்படுத்தப்பட்டது. அசீரியப் பேரரசில், அக்காதிய மொழியை அகற்றிவிட்டு, இது மக்களின் பொது மொழியாகிறது (கி.மு. 1100–600). பாபிலோனியப் பேரரசிலும் அவ்விதமே பயன்பட்டு (600–540) அது பாரசீகப் பேரசின் அதிகாரப்பூர்வமான மொழியானபோது (500–300) இது தன் உச்சநிலையை அடைந்தது. ஆனால் கிரேக்க மொழியின் வருகையால் இதன் ஆதிக்கம் குறைந்தது. கி.மு. 300–க்குப் பின் கிரேக்க மொழி மக்களின் பொது மொழியாக மாறியது. அரேமேயிக்கின் சில பிரிவு மொழிகள் இங்குமங்குமாக தனிப்பட்ட குழுவினரிடையே பயன்படுத்தப்பட்டது. இன்றும் அரமேயத்தின் ஒரு வகை, மேற்காசியாவின் சில பகுதிகளில் பயன்படுத்தப்படுகிறது.

2 அர 18:26; ஏச 36:11–இல் குறிக்கப்படும் நிகழ்ச்சி, அரேமேய மொழி பாலஸ்தீனத்தில் பரவியிருந்ததைச் சுட்டிக்காட்டுகிறது. கி.மு.701–இல் சனகெரிபு எருசலேமை முற்றுகையிட்டபோது யூத அதிகாரிகள் நடக்கும் விவகாரங்களை எபிரேயா மொழி பேசும் பொதுமக்கள் புரிந்து கொள்ளாதிருக்கும்படி அசீரிய இரபிசாகே தூது மொழியைப் பயன்படுத்தும்படி கேட்டுக்கொள்கின்றனர். நாடு கடத்தப்பட்டு திரும்பியபின் அரமேயம் எவ்வளவு ஆதிக்கம் செலுத்தியதென்றால் எபிரேய வேதவாசகத்திற்குப்பின் அரமேய மொழிபெயர்ப்புக்குக் கொடுக்கப்படுவது அவசியமாயிற்று. இது பிற்காலத்தில் தார்கூமின் நிலையான அமைப்பாயிற்று (காண்க: நெக 8:8).

2. விவிலிய அரமேய்க்கு:-

அ. பழைய ஏற்பாடு:- பழைய ஏற்பாட்டின் சில பகுதிகள் எழுதப்பட்டிருக்கும் மொழி விவிலிய அரமேயம் என்று அழைக்கப்பட்டுள்ளது. இது கல்தேய மொழி என்ற பெயர் பெற்றிருந்தாலும் இது பாரசீகப் பேரரசு முழுவதும் பரவலாகப் பயன்படுத்தப்பட்ட அதிகாரப்

பூர்வமான அரமேய மொழிதான். காலத்தால் முந்திய விவிலிய அரமேயிக்குச் சான்று: லாபான் யாக்கோப்போடு செய்த உடன்படிக்கையில் வரும் எகர்–சகதூத்தா என்ற பெயராகும் (ஆதி 31:47). இதை சில மொழி பெயர்ப்புகள் சாட்சியக் குவியல் என்று மொழி பெயர்க்கின்றன. எரே 10.11–இல் சிலைகள் மேல் யாவே கொண்டிருக்கும் மேலாண்மையை எடுத்துக்கூறும் பாடலில் அரமேய இடை புகுதல் காணப்படுகிறது. எஸ்ரா நூலில் இரு பகுதிகள் அரமேயத்தில் உள்ளன. இவற்றில் ஒன்று அதிகாரிகளுக்கும் பாரசீக அரசர்கள் அர்த்த செருசு, தாரியு ஆகிய வர்களுக்கும் இடையே இருந்த, எருசலேமும் ஆலயமும் மீண்டும் கட்டப் படுவதைப் பற்றிய கடிதப் போக்குவரத்து ஆகும் (4:8–6:18). மற்றது எஸ்ராவின் அலுவலுக்கு அவருக்கு அதிகாரம் அளிக்கும் அர்த்தாசெருசின் கடிதமாகும் (7:12–26).

தானியேலின் ஒரு முக்கிய பெரும் பகுதி அரமேயத்தில் எழுதப்பட்டிருக்கிறது (2:4–7:28). இதில் நெபுக்கதுனேசாரின் கனவு, அவரது பைத்தியம், சதிராக்கு, மேசாக்கு, ஆபதுநெகோ ஆகியோர் பற்றிய கதை, பேல்சாசாரின் விருந்து, சிங்கக் குகையில் தானியேல், அவரது முதல்காட்சி ஆகியவைகள் அடங்கும். தானியேலின் எபிரேயப் பகுதிகள் பிற்காலத்தைச் சேர்ந்ததாகும். சில அறிஞர்களின் கருத்துப்படி இப்பகுதியும் அரமேயத்திலிருந்து எபிரேயத்திற்கு மொழி பெயர்க்கப்பட்டதாக இருக்கலாம்.

ஆ. புதிய ஏற்பாட்டில் பல அரமேயச் சொற்களும், அரேமேயப் பாதிப்பும், காணப்படுகின்றன. "தலித்தாகூம்" (சிறுமியே எழுந்திரு, மாற் 5:41), "எப்பத்தா" (திறக்கப்படு 7:34), "ஏலி, ஏலி லாமா சபக்தானி" (என் இறைவா, என் இறைவா, ஏன் என்னைக்கைவிட்டீர், மத் 27:46; மாற் 15:34), "ரபூனி" (போதகரே, மாற்கு 10:51; யோவா 20:16), மாரனாதா (ஆண்டவரே வருக, 1 கொரி 16:22), "கேபா" (யோவா 1:42; 1 கொரி 1:12), தபித்தா (அ.ப.4:36.40) ஆகிய ஆட்பெயர்களிலும், அக்கலிதமா (அ.ப.1:19), கெதுசமனி (மத் 26:36; மாற் 14:32), கொல்கொத்தா (மாற் 15:27) ஆகிய இடப்பெயர்களிலும் அரமேய மொழியின் பாதிப்பு உள்ளது.

கி.பி முதல்நூற்றாண்டில் பாலஸ்தீனத்தில் அரமேய மொழிதான் பேசப்பட்டது என்பது இப்போது பொதுவாக ஏற்றுக் கொள்ளப்படும். இம்மொழியின் கலிலேய திரிபுமொழியை இயேசுவும் அவரது சீடர்களும் பவுலும் பேசினர். இது எருசலேமில் பயன்படுத்தப்பட்ட திரிபு மொழியிலிருந்து வேறுபட்டதாகும் (மத் 26:73)

3. பிரிவுகள்:– இடம், காலம், இலக்கிய வடிவம் ஆகியவற்றின் அடிப்படையில் அரமேயத்தின் பல பிரிவுகளையும் வேறு படுத்தலாம்.

அ. பழைய அரமேயம்:– இதற்குச் சான்றுகள், சீரியா, பாலஸ்தீனத்தில் கண்டெடுக்கப்பட்டுள்ள கி.மு. 8–ஆம் நூற்றாண்டைச்சேர்ந்த கல்வெட்டுக்களும், வட கலிலேயாவில் காணப்படும் பாண்டங்களின் மேலுள்ள வாசகங்களும் ஆகும்.

ஆ. அதிகாரப்பூர்வமான அரமேய பொது மொழி வடிவம் அரச வட்டாரங்களில் உருவாக்கப்பட்டது. இது 9–ஆம் நூற்றாண்டின் பின்பகுதியில் வளர்ச்சியடைந்து மேற்காசியாவில், அசீரியா, பாபிலோனிய பாரசீகப் பேரரசுகளில் ஆதிக்கம் செலுத்தியது. இதன் கல்வெட்டுக்களும், எலெபென்டைன் ஏடுகளில் காணப்படும் கடிதப்போக்குவரத்துக்களும், வணிக ஏடுகளும், முத்திரைகளும் இவ்வகைக்குச் சான்றுகளாக அமைந்துள்ளன. பாரசீகப் பேரரசின் அழிவோடு இவ்வகை இலக்கிய மொழியாகவும் (சான்றுகள் தானியேல், தோபித், ஏனோக் ஆகிய நூல்கள், பல கும்ரான் ஏடுகள், சில தார்கூம் வாசகங்கள்) சட்ட மொழியாகவும், (நபத்தேய பல்மைரா கல்வெட்டுக்கள், கடிதங்கள்) பயன் பட்டுள்ளது.

இ.கி.மு.300–200–க்கு இடைப்பட்ட காலம். கிரேக்க மொழி அதிகாரப்பூர்வமான மொழியானபின், அரமேய மொழியில் மேற்கு, கிழக்கு அரமேயம் என இரு முக்கிய பிரிவுகள் சிறப்புப் பெற்றன.

1) மேற்கு அரமேயம் எலெவான்டைன் அரமேயம் என்றழைக்கப்பட்டது. இதற்குச்

சான்றுகள்: எருசலேம் பகுதியில் கண்டெடுக்கப்பட்ட கல்வெட்டுக்களும் புதிய ஏற்பாட்டில் காணப்படும் பெயர்களும், பதங்களும், பார்கோப்பாவின் கடிதங்களும் ஆகும். இதன் கீழ் மூன்று துணைப்பிரிவுகள் காலப்போக்கில் (கி.பி. 200–900) தோன்றியதாகத் தெரிகிறது. பாலஸ்தீன யூத அரமேயம், பாலஸ்தீன தால்மூத், மிட்ராசிம், தார்கூம் ஆகிய வற்றில் பயன்பட்டுள்ள அரமேயம், பாலஸ்தீனத்திலும் எகிப்திலும் யூதக் கிறிஸ்துவர்களும், செக்கேம் பகுதியில் சமாரியர்களும் பயன்படுத்திய கிறிஸ்துவப் பாலஸ்தீன அரமேயம் ஆகும்.

2) கிழக்கு அரமேயத்திற்கு கி.பி.2–ஆம் நூற்றாண்டிலிருந்து சான்றுகள் உள்ளன. இது பிற்காலத்தில் மூன்று முக்கிய துணைப்பிரிவு மொழிகளாக வடிவெடுத்தது. அ) சீரியக்மொழி இதில் பலவாரியான இலக்கியங்கள் உள்ளன. பாரசீகத்திலிருந்து சீனாவரைக்கும் உள்ள பகுதிகள் சிறிய ஆசியா, அராபியா, எகிப்து ஆகிய பகுதிகளில் அரமேயம் பேசும் கிறிஸ்துவர்களால் பயனபடுத்தப்பட்டது. ஆ) யூத பாபிலோனிய அரமேயம். இது பாபிலோனிய தால்மூதில் பயன்பட்டுள்ளது. இ) மண்டேயன் ஆமேயிக் இதற்குச் சான்றுகள் கிறிஸ்துவத்தைச் சேராத அறிவியல் வாதிகளான மண்டேயர்களின் சமய இலக்கியங்களிலும், காப்புகளிலும் மந்திரப் பாத்திரங்களிலும் காணப்படுகிறது.

இக்காலத்தில் மேற்கு அரமேயத்தின் ஒருவகை கிழக்கு லெபனோனில் உள்ள சில கிறிஸ்தவப் குடியிருப்புகளில் பயன்படுத்தப்பட்டு வருகிறது. கிழக்கு அரமேயம் இக்கால சீரியக் என்றழைக்கப்படுகிறது. இது வட சீரிய, துருக்கியின் வான்ஏரிப் பகுதி, சோவியத் யூனியனில் அசெர்பாயிபான், ஈராக், ஈரான் ஆகிய நாடுகளின் வடபகுதிகள் ஆகியவற்றில் சில கிறிஸ்துவக் குடியிருப்புகளால் பயன்படுத்தப்படுகிறது.

4. இலக்கியப்பண்புகள்:- உச்சரிப்பில் விவிலிய எபிரேயத்துக்கு ஒத்த, அரமேயம் மொழிக்கு 23 மெய் எழுத்துக்கள் உண்டு. சொற்கள் மூன்று மெய் எழுத்துக்கள்கொண்ட வேர்ச்சொல்பகுதியை அடிப்படையாகக்கொண்டு அமைக்கப்படுகின்றன. இவை முன், இடை, பின் சேர்க்கைகளால் வெவ்வேறு விதமாய் உச்சரிக்கப்படுகின்றன. வினைச்சொல்வேர் அடிப்படையைக் கொண்டு, ஆள், எண் காலம், ஆகியவற்றிற்கேற்ப வேறுபட உச்சரிக்கப்படுகின்றன. பெயர்ச் சொல், ஆண், பெண் பால்வகை, எண் வகையில் பிரிக்கப்படுகின்றன.

இதன் நெடுங்கணக்கு எழுத்துக்கள், கானானியர் எழுத்துக்களிலிருந்து எடுக்கப்பட்டாலும், அதை எழுதுவதற்கு எளிதாக்கியது. அதனால் அக்காதிய மொழியை அகற்றி, அதன் இடத்தை நிறைவு செய்தது.

பெனிசிய எழுத்துக்களினின்று தோன்றி, 9–ஆம் நூற்றாண்டைப்போல் ஒரு தனிப்பட்ட அரமேய எழுதும் முறை வளர்ச்சியடைந்தது. அம்மோனியர், ஏதோமியர் ஆகியோரால் பயன்படுத்தப்பட்டு பல பிரிவு மொழிகள் தோன்றின. அதன் தொடராகச் செல்லும் வடிவிலிருந்து கி.மு.2–ஆம் நூற்றாண்டைப்போல் எபிரேய மொழி ஏற்றுக்கொண்ட சதுர எழுத்துவடிவம் தோன்றியது. பாரசீகப் பேரரசின் வீழ்ச்சிக்குப்பின் இம்மொழி பல வடிவம் எடுத்தது. அவற்றில் சில நாபத்தேய (அதன்வழியே வந்த அராபிக்கும்) சீரியாக், மண்டேயன், பக்லாவி, பார்த்தியன், சொக்தியன், மங்கோல் ஆகிய மொழிகளும் வெவ்வேறான கிழக்கத்திய எழுதும் முறைகளும் தோன்றின.

**அரமேயர்கள்** (ARAMEANS)

ஒரு செமித்திய இனம், சீரியாவுக்கு வட கிழக்கில் அமைந்திருந்த அராமே நாட்டின் பெயரிலிருந்து இவர்கள் இப்பெயர் பெற்றிருக்கலாம். அராம் என்ற பெயர் மக்களையும் (1 நாள் 2:23) அவர்கள் தோன்றிய நாட்டையும் (2 சாமு 15:8; ஒசே 12:12: செக் 9:1) குறிக்கப்பயன் பட்டுள்ளது. விவிலிய வாசகங்களிலும் மொழிபெயர்ப்புகளிலும் இவர்கள் அரமேயர்கள் என்றும், சீரியர்கள் என்றும், ஒரு பொருள் இரு சொற்களாகக் குறிக்கப் பெறுகின்றனர்.

1. இடம்:- அரமேயர்கள் மெசபொத்தோமியா, சீரியா, யோர்தானுக்கு கிழக்கி

லுள்ள பகுதி ஆகியவற்றில் வாழ்ந்து வந்தனர். அவர்கள் தமஸ்குவின் அராமிலும் (2 சாமு 8:6; 1 நாள் 18:6) சோபாவிலும், கூலே-சீரியாவிலும் (லெபானோன்னுக்கும் கீழ்லெபானோன்னுக்கும் இடைப்பட்ட பகுதி) தாணுக்கு அருகில் பேத்துர கோபிலும் அரண்களைக் கொண்டிருந்தனர். இப்பகுதியாவும் இப்போது சீரியா என்றழைக்கப்படுகிறது. மெசபொத்தாமியாவில் இவர்கள் ஆராம் நகராயிமிலும் யோர்தானுக்குக் கிழக்குப் பகுதியில் பாசானுக்கு அருகில் உள்ள மாக்கா (அராம்-மாக்கா)வைச் சுற்றிலும் வாழ்ந்தனர்.

2.வரலாறு:- அரமேயர்கள் வரலாறு கி.மு. 3100-ஐ ஒட்டித் தொடங்கியதாகத் தெரிகிறது. இச்சமயத்தில் இவர்கள் நாடோடி அரமேயர்களாக எகிப்தில் காணப்படுகின்றனர். அமர்னா காலத்தில் (கி.மு.1400-ஒட்டியது) அவர்கள் பெயர் அக்காதியன் ஏடுகளில் காணப்படுகிறது.

அரமேயர்களுக்கு இஸ்ராயேலர்களுக்கு முள்ள உறவு மிகப்பழமையானது, நெருங் கியதுமாகும். விவிலியத்தில் நாடுகளின் பட்டியலில் சேமின் வழித் தோன்றல்களில் ஒருவரான அராம் அராமேயர்களின் மூலகுல மூதாதையராகக் கூறுப்படுகிறது (ஆதி 10:22-23). ஆமோ 9:7-இன்படி இவர்கள் மெசபொத்தாமியாவில் கீரின் சுற்று வட்டாரத்தில் தோன்றியவர்கள் ஆவார். கி.மு.2400-ஐ ஒட்டி இவர்கள் திகிரிசைக் கடந்து சீரியாவுக்குள் புகுந்தனர். நகர அரசுகளை அமைத்து, வளமாக வாழ்ந்தனர். ஆபிரகாமின் சகோதரன் நாகோர் அராமுக்குத் தந்தையாவார் (ஆதி 10:22-23). ரெபெக்கா, லாபான் ஆகியோரின் தந்தையான (10:22-23) பெத்தூவேல் அரமேய இனத்தைச் சேர்ந்தவர். ஆபிரகாம் தனது கண்காணிப்பாளரான எலியேசரை காரானுக்கு (விவிலிய பாதான்-ஆராம்) அனுப்பித் தன் மகன் ஈசாக்குக்கு ஒரு மனைவியைக் கொண்டு வரச் செய்தார்,. அதன் விளைவாக ரெபெக்கா ஈசாக்கின் மனைவியானாள். பிறகு யாக்கோபுவும், அங்கேயே தனது மனைவியரைக் கொண்டார் (28:5). யாக்கோபு தன் தாய்மாமன் லாபானுக்கு 21 ஆண்டுகள் பணிபுரிகிறார் (31:20.24). உப 26:5-இல் யாக்கோபு "அலைந்து திரியும் அராமேயன்" என்றழைக்கப்படுகிறார். இதற்கு லாபானின் புதல்வியர் லேயா, ராக்கேல் ஆகியோரை மணந்த சூழ்நிலை அடிப்படையாக இருக்கலாம். ஆனால் இதைவிட, அரா மேய நாடோடித் தன்மையைப்பற்றிய குறிப்பாகவோ அல்லது கபிரூவின் செயல்களோடு யாக்கோபு கொண்ட தொடர்பு காரணமாகவோ இருக்கலாம்.

அரசாட்சிக் காலத்தில் சவுல், சோபாவில் அராமேயர்களோடு போரிட்டு வென்றார் (1 சாமு 14:47). பிற்காலத்தில் சோபாவின் அரசனான அதாதெசரையும் (2 சாமு 8:3-4) தமஸ்குவின் அரமேயர்களையும் (8:5) தாவீது தோற்கடித்தார். பல அரமேய இனத்தவர்கள் இஸ்ராயேலரின் ஆட்சிக்குட்படுத்தப்பட்டனர். ஆண்டு தோறும் கப்பம் கட்டினர். இவர்கள் அம்மோனியர்களுக்கு உதவி செய்ய முயன்றனர். இந்த அம்மோனியரும் அரமேயர்களே. பாரம்பரியமாக லோத்தோடு உறவுடையவர்கள் (ஆதி 11:26-27; 19:30-38). நாகாசு இறப்புக்குப் பிறகு அம்மோனியர் தாவீதோடு போரிட்டபோது, அரமேயர்கள் அம்மோனியர்களுக்கு உதவினர். ஆனால் தோற்கடிக்கப்பட்டனர் (2 சாமு 10:1-19). அதற்குப் பிறகு அம்மோனியருக்கு உதவத் துணியவில்லை (10:19).

சாலமோன் காலத்திலும், ஒரளவுக்கு வட அரசின் முதல் அரசர்களுக்கும் அரமேயர் அடிமைப்பட்டிருந்தனர் (ஆனால் காண்க 1 அர 15:18-20). ஆகாபின் ஆட்சிக் காலத்தில் தமஸ்குவின் பென்-அதாது சமாரியாவை முற்றுகையிட்டார் (20:1). அரமேயர்களின் தாக்குதல்பற்றி முன்னறிவிக்கப்பட்டு, ஆகாபு அரமேயர்களைத் தனது தலைநகரிலிருந்து விரட்டிய தோடல்லாமல், அநேகரை கொன்று தீர்த்தார் (20:21). இன்னும் சில வெற்றிகளால் ஊக்குவிக்கப்பட்டு, இராமோத்-கிலயாத்தைத் திரும்பக் கைப்பற்ற போரிட்டார். அதில் கடுங்காயம்பட்டு இறந்தார் (22:34-37).

சமாரியாவைக் கைப்பற்ற முடியவில்லையானாலும் (7:10) இஸ்ராயேலர்

அரசர்கள் யோராம், ஏகூ ஆகியோரின் காலத்தில் அராமேயர்கள் வலுவான அரசியல் சக்தியாகத் திகழ்ந்தனர் (2 அர 8:28–29; 9:32–33) இஸ்ராயேலின் பெயர் குறிக்கப்படாத ஓர் அரசன், சீரியனான நாகமான் இஸ்ரா யேல் நாட்டிற்குள் வர அனுமதித்தார் (5:20; 4:2). ஆனால் யூதாவின் அரசன் யோவாசு அரமேயர் களால் இழிவுபடுத்தப்பட்டார். ஏனெனில் அவரும் அவருடைய மக்களும், "அவர் முன்னோரின் இறை வனாகிய ஆண்டவரைக் கைவிட்டனர் (2 நாள் 29:24).

அசீரிய அரசு வலுப்பெற்று படையெடுக்க, அரமேயர்கள் நகரங்களையும் நாட்டின் பகுதிகளையும் படிப்படியாக இழந்தனர். அரமேயர்களின் கொடுமைக் குத் தண்டனையாக (ஆமோ 1:3) ஆமோஸ் முன்னறிவித்தபடி (1:5) 732–இல் சோபா, தமஸ்கு ஆகியவை முதலில் சரண் அடைந்தன. பிறகு 720–இல் கமாத்தும் வீழ்ந்தது. 732–ல் சமாரியாவை வென்றபின், அசீரியர்கள், மெசபொத்தாமியாவில் முன்பு அரமேயர் வாழ்ந்த பகுதிகளுக்கு இஸ்ராயேலரை நாடு கடத்தினர் (2 அர 17:6). அதேசமயம் கமாத்தின் அரமேயர்கள் சமாரியாவில் குடியேற்றப்பட்டனர் (17:24:30). அரமேயர்களின் அரசியல், படைப்பலம் அழிந்து போனாலும், இங்கு மங்குமாகத் தங்கியிருந்த அரமேயர் குழுவினர் இடையிடையே யூதாவோடு இஸ்ராயேலரோடும் போரிட்டனர் (2 அர 24:2; எரே 35:11; ஏச 9:12–இல் குறிக்கப்படும் அரமேயர்கள் அசீரியாவுக்குட்பட்டவர்களாக இருக்கலாம்). தமஸ்கு பிடிபடுமுன் அரமேய அரசன் இரசீன் யூதாவின் ஆகாசுக் குத் தொல்லை கொடுத்தார் (2 அர 6:5). 612–ல் நினிவேயின் அசீரியர்களை பாபிலோனியர் வெற்றி கொண்டபோது கீழ்த் திசை அராமேயர்கள் (கல்தேயர்கள்) பாபிலோனியரோடு சேர்ந்துகொண்டனர். படிப்படியாக இவர்கள் பாபிலோனியர் களோடு ஒன்றித்துப்போயினர். தனித் தன்மை இழந்தனர்.

3. கலாச்சாரம்:- அரமேயர்களின் படைப்பலத்தைவிட, அவர்களது கலாச் சாரம் பழங்கால மேற்காசியாவில் நல்ல விளைவுகளை விட்டுச்சென்றது. அவர்கள் பெனிசிய நெடுங்கணக்கை மாற்றியமைத்து, எபிரேயர் உட்பட்ட பிற மக்களுக்கு அளித்துச்சென்றனர். அவர்கள் மொழி அரமேயம், அக்காதிய மொழியை அகற்றிவிட்டு, அலக்சார்ந்தர் பாரசீகத்தைவென்று கிரேக்கமொழியை அதிகார மொழியாக ஆக்கும்வரை மக்களின் பொதுமொழியாகப் பயன்பட்டது. அதன் திரிபு மொழிகளான யூத அரமேயம் சீரியக், நபத்தேயம், பல்மைரா ஆகியவை கிறிஸ்துவக் காலம் வரை பயன்பட்டு வந்துள்ளன. அராபிக் மொழி வழக்கில் வரும்வரை இவை பயன்பட்டுள்ளன.

இவர்களது இலக்கியங்கள் அதிகம் கிடைக்காததால், இவர்களது சமயம் பற்றி எதையும் தெளிவாகக் கூறமுடியாது. இவர்கள் மெசபொத்தாமியா, கானானியத் தெய்வங்களை கலந்து வழிபட்டதாகத்தெரிகிறது. பாகால், கெதாது, சமாஸ், தாமுஸ், ரெகூப்–ஏல்–சகர், நிக்கால் ஆகிய தெய்வங்களை வணங்கி வந்ததாகத் தெரிகிறது.

**அரமேயள்** (ARAMITESS)

மனாசேயின் வைப்பாட்டியினைக் குறிக்கின்ற பெயர். மாக்கிரின் தாயாவாள். மாக்கிர் கிலயாத்தின் தந்தையாவர் (1 நாள் 7:14). இவ்வாறு கிலயாத்தின் குடி மக்கள் ஒருவிதத்தில் அரமேயர்களின் வரித்தோன்றல்கள்ஆவார்.

**அரயோப்பாகியர்** (AREOPAGITE)

அரயோப்பாகு சங்கத்தின் ஒரு உறுப்பினர் அரயோப்பாகியர் என்றழைக்கப் படுகிறார். ஏதன்சு நகரிலுள்ள அரயோப் பாகு என்ற மலையிலோ அதன் அருகிலோ இந்தச் சங்கம் கூடியதால் அரயோப்பாகு சங்கம் அல்லது மன்றம் என்று அழைக்கப்பட்டது (அ.ப.17:19.22). பவுல் மனந்திருப்பியவர்களுள் ஒருவரான தியொனீசியு ஓர் அரயோப்பாகியர் ஆவார்.

**அரயோப்பாகு** (AREOPAGUS – அரெசின் குன்று, அராயின் (சாபங்களின் குன்று))

அரயோப்பாகு என்பது ஏதன்சு நகரிலுள்ள ஒரு சிறிய மொட்டையான சுண்ணாம்புக்கல் குன்று. கி.மு.5–ஆம் நூற்றாண்டிற்கு முன்னால் ஏதன்சு

நகரத்து முக்கியமான சங்கம், நீதி வழங்க இங்குதான் கூடியது. அரயோப்பாகு குன்றானது 370 அடி உயரத்தில் அக்ரோ போலி, பினிக்ஸ் ஆகிய இரண்டிற்கு மிடையே வடக்குப்பகுதியில் உள்ளது. அர யோப்பாகு என்ற பெயரானது அரெசின் குன்று என்று பொருள்படும். சிலர் இதனை அரெசின் கோவில் என்ற அழைக்கின்றனர்.

முற்காலத்தில் இவ்விடத்தல் நடை பெற்ற சங்கமானது அரயோப்பாகு மன்றம் அல்லது சங்கமென அழைக்கப் பட்டது. அரயோப்பாகில் இரண்டு(கற்கள்) காணப்பட்டன. ஒன்று "மானக்கேட்டின் கல்" என்றும் பிரிதொன்று "கொடுமை யின் கல்" என்றும் அழைக்கப்பட்டன. இக் கற்களின் மேல் குற்றம் சுமத்தப்பட்டவர் களும், குற்றம் சாட்டுபவர்களும் நிற்பார் கள் என்று பவுசானியாஸ் கூறுகிறார். காலீரோத்தியு என்பவரை கொலை செய்த குற்றத்திற்காக அரேஸ்தான் முதன்முதலில் அரயோப்பாகிலுள்ள கல்லின்மேல் நிறுத்தப்பட்டாரென்றும், அதன் பின் கிளிதெம்னெஸ்த்ரா என்ற தன்தாயைக்கொன்ற ஒரேஸ்து நிறுத்தப் பட்டாரென்றும் பாரம்பரியம் கூறுகிறது.

இச்சங்கத்தின் பணியானது காலத் திற்குக் காலம் மாறியிருக்கிறது. சில நேரங்களில் கொலை குற்றங்கள் சம்பந்த மான வழக்குகளை விசாரணைக்கு எடுத் துக்கொண்டது. மற்றும் சில நேரங்களில் அரசியல், சட்டம், சமயம், கல்வி சார்ந்த வழக்குகளையும் விசாரணைக்கு எடுத்துக் கொண்டது. அரேயோப்பாகு குன்றினை தவிர்த்து மற்ற இடங்களிலும் சங்கங்கள் நடைபெற்றன.

பவுலை அரயோப்பாகு மன்றத்திற்கு அழைத்துச் சென்றபோது சங்கம் நடந்து கொண்டிருந்ததா என்பது தெளிவாக இல்லை. பவுல் அரயோப்பாகு மன்றத் தில் நிகழ்த்திய சொற்பொழிவின் பாணி யானது வழக்கமாக அவர் பின்பற்றுகிற பாணியிலிருந்து வேறுபட்டதாக இருந் தது. அவர் கிரேக்கத்தத்துவ இயலார் களின் பாணியிலே கிறிஸ்துவின் நற் செய்தியை வழங்க முயன்றார். ஆனால் அவரது முயற்சி முழுப்பலனை அளிக்க வில்லையென்றாலும் அச்சங்கத்தின் உறுப்பினராகிய தியொனீசியு கிறிஸ்து வில் விசுவாசங் கொள்ள வாய்ப்பளித்தது (அ.ப.17:19.22).

**அரராத்து** (ARARAT – மேட்டு நிலம்)

அர்மோனியாவில் ஏரிப்பகுதியிலுள்ள நாடே இது. இதன் அசீரியப் பெயர் "ஊரார்து" ஆகும். அதன் எபிரேய வடிவம் அரராத்து ஆகும். இந்த நாடு பல குறிப்புகளைத் தந்திருந்தாலும் இந் நாடு பற்றி அதிகமாக அசீரிய வரலாற் றுக்குறிப்புகளிலே காணப்படுகின்றது. இன்று ஊரார்து எங்கிருக்கிறதென்ப தைக் காண துருக்கி, ருஷ்யா, ஈரான் ஆகிய மூன்று நாடுகளில் முயன்று பார்த் திருக்கின்றனர்.

1. வரலாறு:- ஊரார்து ஒரு அரசியல் பிரிவாக கி.மு. 9–ஆம் நூற்றாண்டில் ஆரம்பித்தது என 2–ஆம் அசூர்நாசிர்ப் பால் தனது வரலாற்குக் குறிப்புகளில் தருகிறார். மூன்றாம் சால்மனேசர் எனும் அரசர் ஊரார்து அரசின் பல பகுதிகளில் புகுந்து வெற்றி கண்டார்.

அசீரியர்களின் பலம் குறைந்து பின்னர் ஊரார்து அரசின் பலம் அதிக மாகி சற்று விரிவடைந்தது. இஸ்புயினி, மெனுவா, அர்கிஸ்தி, சாதூரி என்ற அரசர்களின்கீழ் கோட்டைகள், அரண் மனைகள் மற்றும் மிகச் சிறந்த நீர்ப் பாசன வசதி ஆகியவற்றுடன் அரசு சிறந்து விளங்கியது. ஊரார்து அரசின் செல்வாக்கு மேற்கிலும், வடக்கே சீரியா வரையிலும் பரவியது. அசீரியாவுக் ஓர் ஆபத்தாக அமைந்து அதன்பல மாகாணங்களைக் கைப்பற்றியது.

மூன்றாம் திகிலாத்து பிலேசர்(745–727) இரண்டாம் அல்லது மூன்றாம் சார்தூரி என்ற ஊரார்து அரசரைத் தோற்கடித்து ஊரார்தை மீண்டும் தமது அரசின்கீழ் கொண்டு வந்தார். சர்தூரி அசீரியர் களிடமிருந்து தப்பி ஓடினார். ஊரார்து நாட்டின் கிராமப்புறங்கள் அசீரியர் படை யால் சீரழிக்கப்பட்டது. சிம்மேரியாவின் உட்புகுதலால் சிறிய ஆசியாவே பாதிக்கப் பட்டதுபோல் ஊரார்தும் பாதிக்கப் பட்டது. கி.மு ஆறாம் நூற்றாண்டில் மேதி

யர்கள் ஊரார்தின் மேல் படையெடுத்து அதனை வெற்றிகொண்டபின் அது ஒரு தனி அரசியல் உரிமை பெற்ற நாடாக நிலைக்க வாய்ப்பில்லாது போயிற்று.

இவர்கள் கட்டியெழுப்பிய கோட்டைகள், மற்றும் அரண்மனைகள்மூலம் இவர்களது கலைகள் மற்றும் கட்டிடத்திறன் சிறப்பாக வெளிப்படுகிறது. இத்தாலிய கிரேக்க கட்டிடக்கலைப் போலவே இதுவும் சிறந்திருந்ததால் மேற்கில் இதனுடைய பாதிப்பும் அதிகமாக இருந்தது.

2. விவிலியத்தில்:– ஆதி 8:4–இல் அரராத்தின் புகழ் பற்றிப் பேசப்படுகிறது. வடக்கில் உள்ள மலைகள் பெருவெள்ளத்தின்போது மேல்நீர் வற்றி முதலில் வெளிப்பட்டதாகவும் அவற்றிற்கு அரராத்து எனவும் பெயரிட்டனர் இன்றைய அரரார்த்து மலை பழைய ஊரார்து அமைந்திருந்த இடத்தில்தான் உள்ளது. இதன்மேல் நோவாபின் பெட்டகம் தங்கியதாகக் கருதப்பட்டது. பிற்காலக் கிறிஸ்துவப் பாரம்பரியம் துருக்கியிலுள்ள அக்ரீ–தாக் என்ற மலை உச்சிதான், இவ்விடம் என்று கருதியது. 2 அர 19:37; ஏச 37:38–இல் கூறப்டுவது வரலாற்று அடிப்படைக் கொண்டது. சனகெரிபு அரசன் கிமு.681–இல் அவரது புதல்வர்களால் கொல்லப் பட்டார். ஆனால் அவரது இறப்பிற்கான சூழ்நிலைகளைப்பற்றி ஒன்றும் கூறப்படவில்லை. மேலும் அரராத்து கொலையாளிகளின் அடைக்கல இடமாகக் கூறப் படவில்லை. ஆனால் மேற்கூறப்பட்ட விவிலியக் குறிப்புகள் கூறுகின்றன.

அரராத்துடன், மின்னீ, அசுக்கனாசு, மேதியர் ஆகியவர்கள் இணைந்து நின்றது. அன்றைய கி.மு.6–ஆம் நூற்றாண்டின் முற்பகுதியின் படைகளின் சூழ்நிலைபற்றித் தெரிவிக்கிறது (எரே 51:27–28). பாபிலோனின் வீழ்ச்சிக்குமுன் இந்த அரசுகள் எல்லாம் மிகத்துடிப் பாகச் செயல்பட்டன. உண்மையில், ஒரு சுதந்திர இனமாகவும் அரசியல் அமைப் பாகவும் உள்ள அளவில் அரராத்து மேதி யர்களால் 6–ஆம் நூற்றாண்டில் அழிக்கப்பட்டது.

**அரவுனா** (ARAUNAH – பெட்டகம், உயர்ந்த மனிதர்)

தாவீது மன்னன் இஸ்ராயேல் மக்கள் தொகையைக் கணக்கெடுத்ததை இறைவன் விரும்பவில்லை. எனவே அவர்கள் மீது இறைவன் கொள்ளை நோயை அனுப்பியதால் 70 ஆயிரம் மக்கள் உயிரிழுந்தனர் (1 நாள் 21:12.15; இங்கு உயிர்களைப் பறித்துக் கொண்டிருந்த தூதர் அல்லது "ஆண்டவரதுவாள்" என்பது நாட்டில் பரவியுள்ள கொள்ளை நோயோடு ஒன்றுபடுத்தப்படுகிறது). இந்தக் கொள்ளை நோயானது எருசலேமைச் சுற்றியுள்ள பகுதிகளில் பரவியதேயொழிய, தலைநகரில் எவ்விதப் பாதிப்பும் ஏற்படுத்தவில்லை. தாவீது தான் செய்த தவறினால் மக்கள் தண்டிக்கப்படுவதைக் கண்டு மனம் வருந்திக் கொள்ளை நோய் நீங்குவதற்கான வழிகளை மேற்கொண்டார். எனவே பலிகள் ஒப்புக்கொடுக்கச் சிறந்த இடம் எபூசியரான அரவுனாவின் களம் என்ற இறைவாக்கினர் காதின் அறிவுரைப்படி 50 செக்கேல் நிறையுள்ள வெள்ளியை அரவுனாவிடம் கொடுத்து அந்தக் களத்தை தாவீது வாங்கினார். அங்குப் பலிபீடம் எழுப்பி, இறைவனுக்கு பலி ஒப்புக் கொடுத்தார். இறைவன் அவரது பலியை ஏற்றுக் கொள்ளை நோயை நீக்கினார் (2 சாமு 24:15–25; 1 நாள் 21:14 தொ).

அரவுனா நான்கு புதல்வர்களின் தந்தை. இவர்கள் கொள்ளை நோய் பரவிய காலத்தில் களத்தில் தூதரைக் கண்டவுடன் ஒளிந்துகொண்டனர். (1 நாள் 21:20). அரவுனாவின் களம் மோரியா மலையில் இருந்ததாகப் பாரம்பரியமாகக் கருதப்பட்டது. ஆகையால் அங்குதான் சாலமோனும் இறைவனுக்கு ஆலயம் கட்டினார் (2 நாள் 3:1). 1,2 நாளாகம நூல்களில் அரவுனா என்ற பெயருக்குப் பதிலாக ஒரினான் என்ற பெயர் பயன் படுத்தப்பட்டுள்ளது. இரண்டாம் சாமுவேல் ஆகமத்தில் (24:16) பயன்படுத்தப் பட்டுள்ள வார்த்தை "அரவுனாவைக்" குறிக்கவில்லை. மாறாக 'தலைமை ஆட்சியாளர் ' என்று பொருள்படும் "இவிர்னே" என்ற கூரியர் சொல்லாக இருக்கலாம்.

**அராது** (ARAD – காட்டுக்கழுதை) – ஆள்

பென்யாமீன் குலத்தைச் சேர்ந்த பெரியா என்பவரின் புதல்வருள் ஒருவர் (1 நாள் 8:15).

**அராது** (ARAD) – இடம்

மோசேயின் காலத்திலும், கானான் நாட்டை வென்ற பொழுதும் நெகேபிலிருந்த ஒரு கானானிய நகரம். இஸ்ராயேல் மக்கள் பாலைவனப் பயணத்தின் இறுதியில் காதேசு பார்னேயாவிலிருந்து அத்தாரீம் வழியாக கோர் மலைக்குச் சென்று கொண்டிருந்தபொழுது அராத்தின் அரசன் திடீரென்று இஸ்ராயேலரைத் தாக்கித் தோற்கடித்தார் (எண்.21:1). கானானியரைப் பழிவாங்க இஸ்ராயேலர் நேர்ந்துகொண்டு அவர்களுடைய நாடுகளை அழித்தார்கள் (21:2–3). இவ்விடத்தில் நாடோடிகளான கேனியர்கள் இஸ்ராயேலரிடையே குடியேறினர் (யோசு 1:16). இவர்கள் மோசேயின் மாமனின் வழித் தோன்றல்களாவர். யோசுவாவால் வெல்லப்பட்ட நகர்களில் அராதும் சேர்க்கப்பட்டுள்ளது (யோசு 12:14). ஏனெனில் அநேகமாக இந்த வெற்றி யோர்தானுக்கு மேற்கே நடந்த வெற்றிகளின் முடிவு ஆகும்.

கெபிரோனுக்கு ஏறக்குறைய 26 கி.மீ தெற்கேயுள்ள தேல்–அராத் உள்ள இடம் தான் இந்த நகரம் இருந்த இடம் என்று கருதப்பட்டது. ஆனால் அண்மையில் இவ்விடத்தில் நடந்ததொல்பொருள் அகழ்வுகள் இக்கருத்திற்கு ஆதரவுதரவில்லை. அராது என்பது ஒரு நகரைவிட நிலப் பரப்புப் பகுதியையே குறிக்கலாம் அல்லது தேல்–ஏல்–மில்க் (அல்லது மல்கத்தா) ஆக இருந்திருக்கலாம் என்று கருதப்படுகிறது.

**அராதுசு** (ARADUS)

யூதர்களின் நிலைமை பற்றிய கடிதங்கள் அனுப்பப்பட்ட பலஇடங்களின் பெயர் பட்டியலில் இது ஒன்றாக இருக்கின்றது (1 மக் 15:23). காண்க: ஆர்வாது.

**அராத்து** (ARATUS)

சிலிசியா நாட்டிலுள்ள சோலி என்ற ஊரினைச் சேர்ந்த ஸ்தோயிக்கு கவிஞராவார். கி.மு. மூன்றாம் நூற்றாண்டின் இடைக்காலத்தில்தான் இவரது புகழ் ஓங்கியது. இவருடைய வானாராய்ச்சி சார்ந்த பாடலில் இருந்து "நாமும் அவரினமே" என்ற வார்த்தையானது பவுல் அரயோபாகு மன்றத்தில் நிகழ்த்தப்பெற்ற சொற்பொழிவில் மேற்கோளிட்டுக் காட்டப்பட்டது (அ.ப.17:28).

**அராபிய மொழியில் இயேசுவின் பாலபருவம் பற்றிய நற்செய்தி:–**

இது பிற்காலத்தில் குழந்தை இயேசுவைப்பற்றி எழுதப்பட்ட புதுமைக் கதைகளின் தொகுப்பு ஆகும். இயேசுவின் குழந்தைப்பருவம் பற்றி பேசும் பல இரண்டாம் தர நற்செய்தி நூல்களைப் போல இதுவும் யாக்கோபின் மூல நற்செய்தி, தோமாவின் நற்செய்தி ஆகிய இரண்டு நூல்களையும் அதிகமாக தழுவி எழுதப்பட்டிருக்கிறது. இந்த இரண்டு நூல்களின் பகுதிகளும் 1–9; 36–55 ஆகிய அதிகாரங்களில் அதிகமாகக்கையாளப்பட்டுள்ளன. இவற்றில் திருமுறை நற்செய்திகளில் காணப்படும் குறிப்புகள் கற்பனைமிக்க முறையில் விரிவாக்கப்பட்டுள்ளன. இதற்கு இடைப்பட்ட பகுதிகள், இயேசுவின் ஆடை, குளிப்பதற்கு பயன்படுத்தப்பட்ட தண்ணீர் ஆகியவற்றோடு தொடர்புடையன. எகிப்திலும் (20–25) நசரேத்திலும் (26–35) நடந்த புதுமைகள்பற்றி கூறப்பட்டுள்ளன. இந்த நிகழ்ச்சிகளில் எல்லாம் இயேசுவின் தாய் மரியாளே தூண்டு கோலாக இருக்கிறாள். 1967–ல் கென்றிசைக் என்பவர் இதை அச்சாக்கி வெளியிட்டதைத் தழுவி இந்த நூல் அடிக்கடி புதிப்பிக்கப்படுகிறது. முதலில் இது சீரியாக் மொழியில் வெளியிடப்பட்டதாகக் கூறப்படுகிறது. ஆனால் இது எங்கு எப்போது என்று கூறுவது முடியாத காரியம். ஆனால் நூலின் தன்மை இது மேற்காசியாவில் முதலில் தோன்றியிருக்கலாம் என்று காட்ட வல்லது.

**அராம்–சோபா** (ARAM-ZOBAH)

லெபானோனுக்கும் கீழ் லெபானோனுக்கும் இடைப்பட்ட பிக்கா பள்ளத்தாக்கிலுள்ள ஒரு அரமேய நகரம் (சங்.60–இன் மேல் குறிப்பு). சோபாவுக்கு மற்றொரு பெயராகும். காண்க: சோபா.

**அராம்–நகராயிம்**
(ARAM-NAARAIM – ஆறுகளின் அராம்)

அராம் நகராயிம் என்பது வடமேற்கு மெசபொத்தாமியாவில் யூப்பிரத்திசு, திகிரிசுக்கு இடைப்பட்ட பகுதியாகும். இவ்விடம் எபிரேய குடும்பத் தலைவர்கள் தோன்றிய இடமாகும். ஆபிரகாமின் கண்காணிப் பாளர் எலியேசர் ஈசாக்குக்கு ஒரு மனைவி பார்த்துவர இங்குதான் அனுப்பப்பட்டார் (ஆதி 24:10). குறி சொல்பவர் பிலயாமின் ஊராகும் (உப 23:4). ஓதினியேல் நடுவராகுமுன், இப்பகுதியிலிருந்துதான் கூசான்–ரிசத்தாயிம் இஸ்ராயேலைத் தாக்கினார் (நீதி 3:8). சங் 60–இன் தலைப்பு தாவீது மன்னன் அராம்–நகராயிமுக்கு எதிராகக் கொடுத்த தண்டனையை மறைமுகமாக உணர்த்துகிறது. இதற்கு ஆதாரமாக, முதல் நாளாகமத்தில் (19:6) அம்மோனியர்கள் தாவீதுக்கு எதிராக மெசபொத்தாமியாவின் தேர்களையும், குதிரைவீரர்களையும் கூலிக்கு அமர்த்துகின்ற நிகழ்ச்சி காட்டப்படுகிறது.

**அராம் மாக்கா** (ARAM-MAACAH)

ஓர் இடப்பெயர். மாக்காவின் மற்றொரு பெயர் (1 நாள் 19:6). காண்க: மாக்கா (இடம்).

**அராரியர்** (HARARITE – மலைவாசி)

தாவீதிடம் முப்பது பேர் கொண்ட வல்லமை நிறைந்த படை ஒன்று இருந்தது. இவர்களில் மூவர் அராரியர் குலத்தைச் சேர்ந்தவர்கள் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இவர்களின் தந்தையர்களின் பெயர்கள் பின்வருவனவாகும். சம்மாவின் தந்தை ஆகே (2 சாமு 23:11); யோனத்தானின் தந்தை சம்மா (2 சாமு 23:33; 1 நாள் 11:34–ல் சகே என்றுள்ளது); அகியாமின் தந்தை சாரார் (2 சாமு 23:33; 1 நாள் 11:35–இல் சாக்கார் என்றுள்ளது).

அராரியர் ஓர் இனப்பெயராகவும், யூதா அல்லது எப்ராயிமின் மலைப்பகுதிகளில் உள்ள ஒரு இடத்தின் அல்லது பகுதியில் வாழ்ந்த மக்களைக் குறிக்கும் பெயராக இருக்கலாம். அமர்னா ஏடுகளில் காணப்படும் அராரூ என்பதில் இருந்து வந்ததாக இருக்கலாம். அப்படியாயின் இது கெபிரோனுக்கு அருகில் அமைந்திருக்க வேண்டும்.

**அரிசாகு** (ARSACES)

கி.மு. 250–இல் செலூக்கிய அரசன் மூன்றாம் அந்தியோக்கு சோத்தேருக்கு எதிராகக் கிளர்ச்சி செய்து 'அர்சாசிதே' குல மரபை தோற்றுவித்தவரின் ஞாபகமாக இப்பெயர் பார்த்திய அரசர்கள் தங்களுக்கே வழங்கிக்கொண்ட பெயராகும். வரலாற்று ஆசிரியர் "யோசிபஸ்" தன் நூலில் இவரைப்பற்றியும் குறிப்பிடுகிறார்.

இப்பாரம்பரியத்தைச் சேர்ந்த முப்பது பேர் இப்பட்டத்தைப் பயன்படுத்தியுள்ளனர். இவர்களில் சிலர் திதொதெஸ், முதலாம், இரண்டாம் மித்ரதாதெஸ், நான்காம் பாராதெஸ் ஆகியோராவர். 4–ஆம் அரிசாகு (முதலாம் மித்ரதாதெஸ், 171–138) மேதியா, பாரசீகம் அர்மேனியா, பாபிலோனியா ஆகியவை அடங்கிய பெரும்பகுதியை வென்று, பார்த்தியப் பேரரசின் எழுச்சியை வளர்த்தார். சீரியாவைச்சேர்ந்த 2–ஆம் தெமேத்திரியு நிக்கத்தோர் பார்த்தியா நாட்டின் மீது படையெடுத்தபோது, அரிசாகுவின் படைகள் அவரைப்பிடித்து, இர்கானியாவில் அரிசாகுவின் முன் கொண்டு வந்தனர் (1 மக் 14:1–3). பத்து ஆண்டுகளுக்குச் சிறைப்பட்டிருந்தாலும் அரிசாகு இவரை நேர்மையாக நடத்தி, தனது மகளை இவர் மணக்கவும் அனுமதித்தார். 1 மக் 15:22–இல் யூதர்களை எதிர்த்து போர் செய்யாதபடி இருக்கும்படி, உரோமை ஆளுநர் உலூக்கியுவால் கடிதம் எழுதப்பட்ட அரசர்களில் இவரும் ஒருவராவார்.

**அரிசாய்** (ARISAI – சிங்கம் போன்ற)

யூதர்களால் கொலை செய்யப்பட்ட ஆமானின் பத்துப்புதல்வர்களில் அரிசாயும் ஒரவராவார் (எஸ்த 9:9).

**அரிச்சுவடி** (Element)

முதலில் நெடுங்கணக்கின் எழுத்துக்களைக் குறிப்பது. அடுத்து, கலை, அறிவியல் அல்லது எந்தப் பாடத்தின் அடிப்படை கோட்பாடுகளைக்குறிக்கும். இப்பொருளில்தான் எபிரேயருக்குத் திருமுகம் எழுதிய ஆசிரியர் 5:12–இல் இச்சொல்லைப் பயன்படுத்துகிறார். அவரது வாச

கர்கள் இறைவாக்குளில் புலமைபெற்று, பிறருக்கு அவற்றைக் கற்பிக்கவேண்டும். ஆனால் அவர்களே, அறிவு மழுங்கியவர் களாக, அவற்றை அடிப்படையிலே யிருந்து கற்றுக்கொள்பவர்களாக இருக்கி றார்கள்.

**அரிதத்தா** (ARIDATHA – அரியால் கொடுக்கப்பட்டது)

அரிதாத்தா ஆமானின் பத்துப் புதல் வர்களில் ஒருவர். யூதர்கள் தங்கள் பகை வர்களைத்துன்புறுத்திக் கொலை செய்யும் பொழுது இவரும் கொலை செய்யப் பட்டார் (எஸ்த 9:8).

**அரிதாய்** (ARIDAI – வலுவான, அரியின் களிப்பு)

அரிதாய் ஆமானின் பத்துப் புதல்வர் களில் ஒருவர். யூதர்கள் தங்கள் பகைவர் களைக் கொலை செய்த பொழுது இவரும் கொலை செய்யப்பட்டார் (எஸ்த 9:9)

**அரித்தார்க்கு** (ARISTARCHUS – மிகச் சிறந்த ஆட்சியாளர்)

அரித்தார்க்கு தெசலோனியாவிலி ருந்து வந்த மக்கதொனியராவார். (அ.ப. 19:29; 20:4). இவர் பவுலுக்கு துணைவரா யிருந்த புறவினத்தார். பவுல் கிறிஸ்துவை போதிப்பதைக் கண்ட தியானாவின் பக்தர் கள் வெகுண்டெழுந்து அவரை எபேசு நகரில் சிறைப்பிடிக்கும்பொழுது அவருட னிருந்த அரித்தார்க்கையும் சிறைப்பிடித் தனர். பவுலின் பணி மக்கதொனியாவில் ஆரம்பத்திலிருந்து அவரது நான்காம் வேத போதகப் பயணத்திலும் இறுதிவரை அவருடனிருந்த வழித் துணைவராவார் இவர் (27:2). நீரோ மன்னனின்கீழ் உரோம் நகரில் வேத சாட்சியாக இவர் கொலை செய்யப்பட்டார் என்று பாரம்பரியம் கூறு கிறது.

அப்போஸ்தலர் பணியில் குறிப்பிடப் பட்டிருக்கின்ற அதே அரித்தார்க்குதான் உரோம் நகரில் சிறையில் பவுலுடன் சிறைக்கைதியாய் இருந்தவராவர் (2 கொலோ 4:10). இதே பகுதியில் குறிப்பிடப் பட்டிருக்கின்ற மாற்கு, யுஸ்து எனப்படும். இயேசு ஆகியவர்களைப் போன்று அரித் தார்க்கும் யூதனாக இருக்கவேண்டுமே என்பது அவசியமில்லை. இவர் ஒரு யூத னாக எண்ணப்பட்டாரென்றால், இவரை அப்போஸ்தலர் பணியில் வருகின்ற அரித் தார்க்கோடு ஒருவராக்கமுடியாது. பில மோனுக்கு எழுதிய மடலில் குறிக்கப்படும் அரித்தார்க்கு கொலோசேயருக்கு எழுதிய மடலில் காணப்படுகின்ற அரித்தார்க் கோடு ஒருவராக்கப்படுகிறார். அப்போஸ் தலர் பணியிலும், பவுலின் மடல்களிலும் அரித்தார்க்கு பவுலின் நெருங்கிய, சிறந்த வழித்துணைவராகக் காட்டப்படுகின்றார்.

**அரித்தாள் கட்டை, தாளடி** (STUBBLE)

தானியங்கள் அறுவடை செய்யப்பட்ட பின் ஒதுக்கப்பட்ட அரித்தாள். யாத்.5:12–இல் இது வைக்கோலிலிருந்து வேறு படுத்தி காட்டப்படுகிறது. இதைச் சேகரிப் பதற்காக இஸ்ராயேல் மக்கள் எகிப்தின் நான்கு திசைகளிலும் தேடி அலைந்தனர். ஆனால் இதேசொல் சூட்டடிப்பின்போது கிடைத்த வைக்கோலையும் பதரையும் குறிக்கலாம். மற்ற இடங்களில் எல்லாம் இச்சொல் உருவகமாக பயன்படுத்தப்பட் டது. இத்தகைய பொருட்கள் எளிதாக எரிக்கப்பட்டுவிடும் (யாத் 15:7; ஏச 5:24; 47:14; யோவே 2:5; நாகூ 1:10; மலா 4:1) அல்லது காற்றால் அடித்துச் செல்லப் பட்டுவிடும் (ஏச 40:24;41:2; யோபு 13:25; எரே 13:24).

**அரித்தியோன்** (ARISTION)

பப்பியசின் கருத்துப்படி இவர் "ஆண் டவரது சீடராவார்". மூப்பர் யோவானா னுடன் சேர்ந்து, இவர் நற்செய்திப் பாரம் பரியங்களுக்கு முதன்மையான செல் வாக்குடையவராவார். கி.பி.986–ஐ ஒட்டிய ஒரு ஆர்மேனியக் கையெழுத்துப்பிரதி, மாற்கு நற்செய்தியின் முடிவுரைப் பகுதிக்கு (169–20) மூப்பர் அரித்தியோனே பொறுப்பு என்று கூறுகிறது. இவரும் பப்பியசின் அரித்தியோனும் ஒருவராக இருக்கலாம்.

**அரித்தேயாவின் கடிதம்** (ARISTEAS)

இது ஒரு சிறிய புனைப்பெயர் காப் புரை நூலாகும். இந்நூலின் ஆசிரியராக உரிமை கொண்டாடும் அரித்தேயா என்ற யூதர், தனது சகோதரர் பிலோக்ரா தேசுக்கு நூலை அர்ப்பணிக்கிறார். ஆகை யால் இரு கடிதம் என்று தவறாகக் கருதப்பட்டது.

ஆசிரியர்தான், 2–ஆம் தோலமி பிலதெல்பூசின் (285–246 கி.மு) அரசவையைச் சேர்ந்தவராக உரிமை கொண்டாடி தோரா அல்லது ஐந்நூலின் கிரேக்க மொழிபெயர்ப்பு சேர்ந்த பல நிகழ்ச்சிகளை, நேரடிச்சாட்சியாகவும் உதவியாளராகவும் பாவித்துக்கூறுகிறார். ஆகையால், இந்நூல் எழுபது நூல் மொழிபெயர்ப்புத் தோற்றம் பற்றியதாயிருப்பதால் முன் காலத்திலிருந்து இந்நாள் வரை இந்நூல் ஆய்வு செய்யப்பட்டுள்ளது.

1. பொருளடக்கம்:- முன்னுரை நூலைப் பிலோக்ராதேசுக்கு அர்ப்பணம் செய்கிறது (வச 1–8). அலக்சாந்திரியாவின் நூல் நிலையத்தின் தலைவர் பலேரூமின் தெமேத்திரியஸ் என்பவர் "யூத சட்டத்தை" மொழிபெயர்த்து நூல் நிலையத்தில் சேர்த்துக்கொள்ள ஒரு திட்டம் அமைத்து தோலமிக்குக் கூறுகிறார் (வச 9–11). இந்த வாய்ப்பைப் பயன்படுத்தி, எகிப்திய பேரரசில் உள்ள யூத அடிமைகளுக்கு விடுதலை பெற்றுத் தருகிறார் அரித்தேயா (வச 12–22). தெமேத்திரியுவின் விரிவான திட்டம் (வச 28–33) அரசனால் ஏற்றுக் கொள்ளப்படுகிறது. அரசன் ஆற்றலுள்ள 70 (72) மொழிப் பெயர்ப்பாளர்களை அனுப்புமாறு எருசலேம் பெரிய குரு எலயாசாருக்குக் கடிதம் எழுதுகிறார் (34–40). பெரிய குரு இதற்கு இணங்கி, மொழி பெயர்ப்பாளர்களின் பெயரையும் தமது பதிலில் எழுதுகிறார் (41–50).

அரித்தேயாவே எருசலேமுக்குத் தூதராகச் சென்று, பெரிய குருவுக்கு அரசன் அனுப்பிய கொடைகளை விவரிக்கிறார் (51–82). பின், எருசலேமையும் அதன் சுற்று வட்டாரத்தையும் (83–120) மொழி பெயர்ப்பாளர்கள் பற்றி பெரிய குரு கொண்டிருந்த மதிப்பையும் (120–127) விவரிக்கிறார். பின்பு யூதச்சட்டம் பற்றிய ஒரு காப்புரையும் வழங்குகிறார் (128–171).

தோலில் தங்கத்தால் எழுதப்பட்ட தோராவை எகிப்துக்கு மொழி பெயர்ப்பாளர்கள் கொண்டு வருகின்றனர். அரசன் அவர்களை மிகுந்த மதிப்போடும் மகிழ்ச்சியோடும் வரவேற்கிறார் (172–81). அரசன் ஏழு நாட்களுக்கு இரவில் இவர்களுக்கு விருந்தளிக்கிறான். இதில் ஒவ்வொரு மொழி பெயர்ப்பாளரிடமும் அரசனால் கேட்கப்பட்ட 70 (72) கேள்விகளுக்கு அவர்கள் அளித்த பதில்கள் எல்லோரையும் வியக்கச்செய்கிறது. அரசன் அவர்களுக்கு வெகுமானம் அளிக்கிறார் (182–300). இந்நிலையில் ஆசிரியர் தனது அறிக்கையின் உண்மைத் தன்மையை வலியுறுத்திக் கூறுகிறார் (295–300).

பாரோஸ் தீவில் மொழிபெயர்ப்பு 70 (72) நாட்களில் நடைபெறுகிறது (301–307). அலக்சாந்திரிய யூதர்களும் (308–311) அரசனும் (312–317) மொழிபெயர்ப்பை ஏற்று, வாழ்த்துக் கூறுகின்றனர். பின்பு அரசர் மொழிபெயர்ப்பாளர்களுக்கு நன்றி கூறி மேலும் சன்மானம் அளித்து வழி அனுப்புகிறார் (318–321).

ஆகவே முடிவுரை (322) நூல், மொழி பெயர்ப்புச் செயல்களை மட்டும் கூறவில்லை. அவற்றோடு ஆசிரியரது தலையீட்டால் யூத அடிமைகள் விடுதலை பெறுதல், பெரிய குருவுக்கு அளிக்கப்பட்ட கொடைகள், பாலஸ்தீனம், எருசலேம், ஆலய வழிபாடு ஆகியவைபற்றிய விவரிப்புகள், யூதச் சட்டம் பற்றிய பெரிய குருவின் உரை போன்ற பலவற்றையும் கூறுகிறது.

2. ஆசிரியரும், காலமும்:- பலநூற்றாண்டுகளாக இது ஒரு கற்பனை நூலாகக் கருதப்பட்டது. ஆசிரியர், எல்லாத் துறையிலும் யூதர்களின் மேன்மையை எடுத்துக் கூறுவதில் அக்கறை காட்டுகிறார். அவர் நேரடிச் சாட்சியாவார் என்பது ஐயத்திற்குரியதானாலும் அவர் தரும் பல குறிப்புகளின் அடிப்படையில் அவர் கி.மு.2–ஆம் நூற்றாண்டின் முடிவிலோ முதலாம் நூற்றாண்டின் தொடக்கத்திலோ அலக்சாந்திரியாவில் வாழ்ந்த யூதராகத் தெரிகிறது. இந்நூல் தோன்றியிருக்கக்கூடிய காலமாக கி.மு.200–250 இடைப்பட்டக் காலத்தைக் குறிப்பிட்டாலும், இது கி.மு. 2–ஆம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றியிருக்கவேண்டும் என்பது பலரது கருத்து.

3. ஆசிரியரது நோக்கம்:- யூதசமய, சட்டச் சிந்தனைகளின் மேன்மையை எடுத்துக்கூறுவதும், அலக்சாந்திரிய யூதர்களிடையே தன்னம்பிக்கையை வளர்ப்பதும் ஆகும்.

4. இலக்கியத் தன்மை:- இந்நூலின் உள்ளடக்கத்தில் கூறப்பட்டிருக்கும் மொழி பெயர்ப்புப்பற்றிக் காணும் பொழுது, இதன் சிலபகுதிகள் நூலுக்கு எவ்வகையிலும் தேவையற்றதுபோல் தோன்றுவதால் அவை பின்னால் சேர்க் கப்பட்ட பகுதிகள் எனத்தெரிகிறது. நூல் முழுவதும் ஒரே நடையும், அதன் முறை யும் ஒரே முறையில் அமைவதால் நூலின் ஒருமைப்பாடு புலனாகிறது.

யூத அடிமைகளை விடுவிப்பது பற்றி கி.மு.260–ஆம் ஆண்டு நாணல்தாள் ஏடு குறிப்பிடுவதை அப்படியே இந்நூலும் குறிப்பிடுகிறது. இதிலிருந்து எத்தகைய வரலாற்றுக் குறிப்பையும் தன் குறிக் கோளுக்கு ஏற்றவாறு மாற்றியமைக்க ஆசிரியர் தயங்கவில்லை. இக் குறிக்கோள் யூதர்களின் பெருமையை நிலைநாட்டு வதுதான். இந்த ஒரே நோக்கம்தான் தனித்தனியே பிரிந்துகிடக்கும் பல உண்மை களுக்கும் நிகழ்ச்சிகளுக்கும் ஒரு தொடர்பைத் தருகிறது.

எல்.பிவெஸ், ஜே.ஸ்காலிகர் போன்ற அறிஞர்கள், இது அன்றைய காலத்திய நூல்களில் ஒன்று என்பதைப் பொறுத்த வரையில் தனக்கேயுரிய மதிப்பைக் கொண்டிருந்தாலும், ஒருவரலாற்று நூல் என்பதைப் பொறுத்த வரையில் இது சிறந்ததாகாது என்றும் கதைத் தன்மை யுடையது என்றும் கருதுகின்றனர். இந் நூலில் எவ்வளவு தூரம் உண்மை நிகழ்ச்சிகள் அடங்கியுள்ளன, கற்பனை கள் கலந்துள்ளன என்பது ஆய்வுக்கு உரியதொன்றாகும். எழுபது நூல்களின் தொடக்க வரலாறு பற்றியதாக இந்நூலை காண முயல்வது, ஆசிரியது பொது நோக் கையும், சில முக்கியப்பகுதிகளையும் தவ றாகப் புரிந்துகொண்டதின் விளைவாகும்.

பிற்கால யூத, கிறிஸ்துவ பாரம்பரியங் கள், அரித்தேயாவின் நூல் எழுபது நூல் முழுவதையும் பற்றியதாக விளக்கி, அத னால் அந்த வாசகத்தின் உண்மைத் தன் மையையம்அதிகாரத்தையும் எடுத்துக்கூற முயன்றன. இந்நூலில் வரும் கதையின் பிற்கால வடிவங்கள் 70 (72) மொழி பெயர்ப்பாளர்கள் தனித்தனியே தங்கள் அலுவலைச் செய்தாலும், அவர்களி டையே காணப்பட்ட வியத்தகு ஒருமைப் பாட்டை அழுத்திக் காட்டியுள்ளன. ஆனால் இதற்கு இந்நூலில் ஆதாரமே யில்லை. மாறாக, மொழிபெயர்ப்பாளர் களிடையே நிலவிய நெருங்கிய ஒத்துழைப் பால்தான் ஒருமைப்பாடு உண்டானது என்று இந்நூல் கூறுகிறது.

**அரித்தோபுல்**

(ARISTOBULUS – *மிகச்சிறந்த ஆலோசகர்*)

1. இவர் 7–ஆம் தோலமி பிஸ்கோனின் (கி.மு.146–116) யூத ஆசிரியர். இவருக்கு யூதா மக்கபேயர் ஆலயச் சுத்திகரிப்புக் கொண்டாட்டம் பற்றிக் கடிதம் அனுப்பி னார் (2 மக்.1:10). கி.மு. 170–150– இல் வாழ்ந்த கிரேக்க யூத சிந்தனையாளரோ எனவும் நம்பப்படுகிறது. இக்கருத்து கி.பி. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந் தது. யூசேபியு நூலில் காணப்படும் சிந்த னையாளரின் இரு துணுக்குகளை அடிப் படையாகக் கொண்டது.

2. முதலாம் அரித்தோபுல் யூதா:-

யோவான் இரிக்கானின் மூத்த மகன். அசமோனிய குலத்தில் அரசுபட்ட உரிமைக் கொண்டாடியவருள் முதல்வர். கி.மு. 104–103 வரை ஆண்டு, கடும் துன்ப மிக்க நோயினால் இறந்தவர். வரலாற்று ஆசிரியர் யோசிபசின் கருத்துப்படி இரிக் கானின் மறைவிற்குப்பின் தன் சகோதரர் அந்தியோக்கைத் தவிர தன் ஒன்றுவிட்ட தாயையும், ஒன்றுவிட்ட சகோதரரையும் சிறை செய்தவர். தாய் சிறையில் பசியால் சாக, சகோதரர் அந்தியோக்கையும் நியாயமற்ற சந்தேகத்தாலும், பொறாமை யாலும் கொன்றார். இதில் அரித்தோபு லின் சகோதரனும் வாரிசுமான அலக் சாந்தர் யன்னாயுவின் செயல்களை இவர் செய்ததாகக் கூறி குழம்புகிறார் யோசிபஸ் என்பதற்கு நல்ல காரணங்கள் உள.

3. இரண்டாம் அரித்தோபுல்:- இவர் அலெக்சாந்தர் யன்னாயுவுக்கும், சலோமி அலக்சாந்திரவுக்கும் பிறந்த இளைய மகன். பெற்றோரின் மறைவுக்குப் பின் மூத்தவனும் முறைப்படி வாரிசுமான இரண்டாம் இரிக்கானைத் தோற்கடித்து அரசு பதவியைப் பிடித்தவர். இரிக்கானு தனி வாழ்விற்குத் திரும்பினார். ஆனால்

அரித்தோபுலின் எதிரியான அந்திப்பாத்தரின் தூண்டுதலால் இவனுடையவும் மூன்றாம் அரஸ்தாஸ் ஒபோதசுடையவும் உதவியுடன், எருசலேமின் மீது படையெடுத்து அரித்தோபுலைத் தோற்கடித்தனர். அரித்தோபுல் ஆலயத்தற்குள் தஞ்சம் புகுந்தார். அங்கு இவரை இரிக்கானும் அரஸ்தாசும் முற்றுகை இட்டனர். ஆனால் இருவரும் உரோமையரது ஆதரவுக்காக உரோமை தளபதி ஸ்கௌரசுக்கு பெரும் கொடைகளைக் கொடுக்கமுன் வந்தாலும், தளபதி அரித்தோபுலுக்கு ஆதரவு அளித்தார். அவருடைய உதவியுடன் அரித்தோபுல் இரிக்கானையும் அரேத்தாசையும் தோற்கடித்து அரியணை ஏறினார்.

பாம்பே, சீரியாவுக்கு வந்தபோது இரு சகோதரனின் சார்பாகவும் இருவருக்கும் எதிரான யூதர்கள் சார்பாகவும் தூதுக் குழுக்கள் பாம்பேயைச் சந்தித்தன. சிறிது காலம் கடத்தியபின் பாம்ப்பே கி.மு.63–இல் எருசலேமைக் கைப்பற்றி அரித்தோபுலை உரோமைக்குத் கைதியாக அனுப்பினார். இதோடு யூதர்களின் சுதந்திரம் முடிவுக்கு வந்தது. கி.பி. 56–இல் அரித்தோபுல் உரோமையிலிருந்து தப்பித் தனது பதவியை மீண்டும் அடைய முயற்சி செய்தார். தோற்கடிக்கப்பட்டு மீண்டும் கைதியாக்கப்பட்டு உரோமைக்கு அனுப்பப்பட்டார். கி.மு.49–இல் நடந்த உள்நாட்டுப் போரில் யூலியு சீசர், இவரை விடுவித்து யூதேயாவை வென்றுபிடிக்க படையுடன் அனுப்பினார். ஆனால் பாம்பேயின் ஆதர வாளர்கள் அரித்தோபுலை நஞ்சு வைத்துக்கொன்றனர்.

4. இவர் அசமோனிய பரம்பரையில் புகழ் பெற்றவர்களுள் கடைசி நபராக கருதப்படுகிறார். இரண்டாம் அரிதோபுலின் பேரனும் பெரிய எரோதின் மனைவியுமான மரியம்னேயின் சகோதரரும் ஆவார். பெரிய எரோதுவால் 17 அல்லது 18 வயதிலேயே பெரிய குருவாக்கப்பட்டார். மக்களிடையே இவர் கொண்டிருந்த புகழ் எரோதை கோபாவேசம் கொள்ளச் செய்தது. அதன் விளைவாக இவர் கி.மு.35–ல் நீரில் மூழ்கடிக்கப்பட்டார்.

5. இவர் பெரிய எரோதுவுக்கும் அசமோனிய குலத்தைச் சேர்ந்த மரியம்னேயுவுக்கும் பிறந்த இளைய மகன். எரோது அகிரிப்பாவின் தந்தை. மூத்த சகோதரன் அலக்சாந்தருடன் உரோமுக்குக் கல்விப்பயில அனுப்பப்பட்டவர். இருவரும் தன்தகப்பன் எரோதின் பொறாமைக்கும் அரசக் குடும்ப சூழ்ச்சிகளுக்கும் பலியாயினர். இருவரும் கி.மு–7–இல் கழுத்தை நெரித்துக் கொல்லப்பட்டனர்.

6. இவர் உரோ 16:10–இன்படி உரோமையிலுள்ள ஒரு கிறிஸ்துவ குடும்பத்தைச் சேர்ந்தவர். இவரைப்பற்றி அதிகம் தெரியவில்லை. இவர் 5–இல் குறிப்பிடப்பட்டவரின் மகன் என்றும் எரோது அகிரிப்பாவின் சகோதரர் என்றும் பேரரசன் கிளாதியுவோடு நெருங்கிய தொடர்பு கொண்டவர் என்றும் சிலர் கருதி உள்ளனர். வேறு சிலர் பின் வரும் 7–இல் குறிக்கப்படுபவர் இவர்தான் என்று கருதுவர். ஆனால் இக்கால அறிஞர்கள் இக்கருத்தை ஒரு முகமாய் நிராகரிப்பர்.

7. இவர் 5–இல் குறிக்கப்பட்டவரின் மகன். இவர் தன் சகோதரன் ஏரோது அகிரிப்பாவுக்கு எதிராக சதி செய்தார் என்றும், எருசலேம் ஆலயத்தில் கலிகுலாவின் சிலையை அமைப்பதற்கு எதிராக கி.பி.40–இல் சீரிய ஆளுநரான பெத்ரோனியசிடம் மன்றாடினார் என்றம் யோசிபஸ் கூறுகிறார்.

**அரிமத்தியா** (ARIMATHEA – உச்சி)

அரிமத்தியா என்ற பெயரானது ஒவ்வொரு நற்செய்திலும் ஒரே ஒருமுறை ஒரே மாதிரியான சந்தர்ப்பத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. அரிமத்தியா ஊரைச் சேர்ந்த யோசேப்பு என்பவர் இறந்த இயேசுவின் உடலை யாரும் அடக்கம் பணணப்படாத அவரது கல்லறையில் அடக்கம் செய்தார் என்று நற்செய்திகளில் கூறப்படுகிறது (மத் 27:57; மாற் 15:53; லூக் 23:50; யோவா 19:38). அரிமத்தியா யூதர்களுடைய ஊரென்றும், யூதராகிய யோசேப்பு தலைமைச் சங்கத்தின உறுப்பினரென்றம் நற்செய்தியாளர் லூக்கா விரித்துரைக்கிறார்.

எருசலேமுக்கு வடக்கே 10 கி.மீ. தொலைவிலுள்ள பென்யாமினின் ஊராகிய இராமாவோடு அரிமத்தியாவைத் தொடர்புபடுத்துதல் கூடாது. ஆனால் அரிமத்தியாவும், இறைவாக்கினர் சாமுவேல் வாழ்ந்த இராமாத்தாயிம்– சோபீம் என்ற ஊரும் ஒன்றாக இருக்கலாம் (1 சாமு 1:1; 19:19).

அரிமத்தியா ஒரு நகரமாகும். இந் நகரம் இருந்த இடம் சந்தேகத்திற்குரியதாகயிருப்பினும் இலிதாவுக்கு வட கிழக்கே 16 கி.மீ. தொலைவிலும், அந்திப் பாத்திரிசுக்குத் தென்கிழக்கே 16 கி.மீ தொலைவிலும் அரிமத்தியா இருந்ததாகக் கூறப்படுகிறது. இது இலிதாவுக்கு வட கிழக்கில் 14.5 கி.மீ.தொலைவில் உள்ள இக்கால ரென்திஸ் ஆக இருக்கலாம். கர்மாத்தாயீம், ராமதெம், ராமத்தா, ராமா ஏர்–ராம் என்பவை அரிமத்தியாவின் மற்ற வடிவங்களாகும். நான்காம் நூற்றாண்டில் புனித பவுலா அரிமத்தியா ஊரைக் கண்டுச் சென்றதாக எரோனிமு கூறுகின்றார். இதே நூற்றாண்டில் யூசேபியு இந்த ஊரினை ரெம்ப்தீஸ் என்றழைத்தார். இடைக்காலங்களில் அரிமத்தியாவானது சாமுவேலின் உறைவிடமாகக் கொண்டாடப்பட்டது.

**அரியணை** (THRONE)

அரியணை, அரசர்கள் பயன்படுத்திய அலங்காரமான நாற்காலியாகும். அரியணை, அரசரின் மாண்பையும் மகத்துவத்தையும் குறிப்பிடும்படி அமைந்திருந்ததால், மிகவும் சிறப்பாகப் பேணப்பட்டு வந்தது. அரியணை கடவுளின் மகத்துவத்தோடும் இணைத்துப் பேசப்படுகின்றது. பொதுவாக இது ஒரு மரியாதையான இருப்பிடம். குறிப்பாக ஆளுநர்கள் (நெக 3:7), குருக்கள் (1 சாமு 4:13.18), அரசரின் விருந்தினர்கள் (2 அர 4:10) ஆகியோருக்குச்சிறப்பான இருக்கைகள் வழங்கப்பட்டுள்ளன. ஆனால் அரியணை மன்னனுக்கும், இறைவனுக்கும் மட்டுமே வழங்கப்பட்டது. விவிலியத்தில் குறிப்பாக பழைய ஏற்பாட்டில் பல மன்னர்களின் அரியணைகள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன (யாத் 11:5; எரே 43:10; யோனா 3:6). இஸ்ராயேல் மன்னர்களான தாவீது மற்றும் சாலோமோனின் அரியணைகளும் குறிப்பிடப்பட்டுள்ளன (1 அர 10:18–20).

அரியணையின் அமைப்பு:- உயரமான பின்பாகம்கொண்டது. அகன்ற கையிருக்கையாக அமைந்தது. இறக்கைகள் கொண்ட சிங்கத்தின் அமைப்பில் இருந்தது. அரியணையின் பின்புறம் காளையின் முகம் செதுக்கப்பட்டிருந்தது. அரியணையோடு, கால்மனை எப்போதும் இணைத்துக்கூறப்படுகின்றது. அரியணைகள் தங்கத் தகடுகளாலும், தந்தத்தாலும் அழகுப்படுத்தப்பட்டிருந்தன.

கடவுளுடைய அரியணை, எப்போதும் அவருடைய உடன்படிக்கைப் பெட்டகத்தோடு இணைத்துக் கூறப்படுகின்றது. இறைவனின் அரியணை இறைவாக்குகளிலும், திருவெளிப்பாடுகளிலும் காணப்படுகிறது (ஏச 6:1–3; எச 1:4–28; தானி 7:9–10; திருவெளி 4). கடவுளின் அரியணை வானகத்தில் உள்ளது. சில சமயங்களில் கடவுளின் அரியணையே வானகம் என்னும் கருத்தும் உள்ளது (சங் 10:4; ஏச 66:1; மத் 5:34). எருசலேம் (எரே 3:17), தேவாலயம் (ஏச 6:1; எச 43:7), நாடு (எரே 14: 21) ஆகியவைகளும் இறைவனின் அரியணைகளாகக் கூறப்படுகின்றன.

அரசனின் அனைத்து மகத்துவமும் உவமையாக அரியணைக்கு அளிக்கப்படுகின்றது. அரியணை, நீதியின் இருக்கையாக வருணிக்கப்படுகிறது (சங் 8:4; ஏச 16:5). புதிய ஏற்பாட்டிலும் இக்கருத்து வலியுறுத்தப்படுகின்றது (மத் 25:31; லூக் 22:30). தாவீதின் எக்காலமும் நிலைத்திருக்கும் தெய்வ சிம்மாசனம் (2 சாமு 7:16; சங் 45:6), மெசியாவின் அரியணை என்ற கருத்துக்கு வழிகோலுகிறது. இக்கருத்து பழைய ஏற்பாட்டில் அரிதாகக் காணப்படுகிறது (ஏச 9:6–7; எரே 17:25). ஆனால் புதிய ஏற்பாட்டில் அடிக்கடி வருகிறது. புதிய ஏற்பாட்டில் மெசியாவாகிய கிறிஸ்து தாவீதின் வழித்தோன்றலாகிறார் (லூக் 1:32; அ.ப.2:30).

**அரியாரதேசு** (ARIARATHES)

இப்பெயரைக் கொண்ட ஐந்தாவது கப்பதோக்கிய மன்னன். யூதர்களுக்கு உரோமையர்கள் நண்பர்களாக இருப்பார்

கள் என்று உறுதியளித்து, உரோமைத் தூதர் உலூக்கியு கடிதம் எழுதிய பலமன்னர்களில் இவரும் ஒருவர் (1 மக் 15:15–24).

**அரியேல்** (ARIEL – இறைவனின் சிங்கம்–ஆள்)

அரியேல் எஸ்ராவால் தலைவர்களில் ஒருவராகக் குறிப்பிடப்படுகிறார் (எஸ். 8:16). ஆலயப்பணியாளரைக் கொண்டு வரும்படி காசிப்பியாவுக்கு எஸ்ரா அனுப்பியத் தூதுக் குழுவில் ஒருவர்.

2. தாவீதுவின் வலிய வீரர்களில் ஒருவரான பெனாயாவால் கொல்லப்பட்ட இரு மோவாபியர்கள் (2 சாமு 23:20; 1 நாள் 11:22)

**அரியேல்** (ARIEL) – இடம்

எருசலேமின் முற்றுகை மற்றும் பாதுகாப்புப் பற்றிய இறைவாக்கில் (எச 29:1–2.7) எருசலேமைக் குறிக்கப்பயன்படுத்தப்படும் மறைபொருளான பெயர். இப்பகுதியில் வரும் எபிரேயச் சொல் "பீடத்தின் அடுக்களை" என்பதை உணர்த்த வல்லது. இங்கே குறிக்கப்படும் பொருள் நான்கு "கொம்புகள்" கொண்ட சதுர நெருப்புச் சட்டியாகும். இது பீடத்தின் அடித்தளத்தோடு பொருத்தப்பட்டிருந்தது. அதிலிருந்து எடுத்துவிடலாம்.

**அரியை** (ARIEH)

இவர் சமாரியாவிலுள்ள அரச மாளிகையில் நடந்த படுகொலையில் பலியாகவோ, சதியாளராகவோ, அருகோபுடன் குறிக்கப்படுகிறார் (2 அர 15:25). சில மொழி பெயர்ப்புகள் இப்பெயர்களை விட்டுவிடுகின்றன. இவை 3–ஆம் திகிலாத்து – பிலேசரால் பிடிபட்ட இடங்களோடு சேர்க்கப்படவேண்டும் என்று சிலர் கருதுவர் (15:29).

**அரியோக்கு**
(ARIOCH – நன் மதிப்புக்குரிய)

1. ஆதி ஆகமம் 14–1–இல் குறிப்பிடப்பட்டுள்ள நான்கு மன்னர்களில் அரியோக்கு ஒருவராவார். இவர் அம்ராபேல், கெதெர்லா–கோமேர், திதால் ஆகியோரோடு சேர்ந்து (ஆதி 14:1) சிதீம் பள்ளத்தாக்கின் அரசர்களைத் தண்டிக்கப்படையெடுத்தார். ஆனால் இவர்கள் ஆபிரகாமின் படையால் தோற்கடிக்கப்பட்டனர் (14:2–17). அரியோக்கு ஆட்சி செய்த பகுதியானது சந்தேகத்திற்குரிய நிலையில் இருக்கின்றது. பாபிலோனியாவிலுள்ள லார்சா நகரோடு முன்பு அடையாளம் காட்டப்பட்ட எல்லாசர் பகுதியின் மன்னராவார் என்று பழைய ஏற்பாடு கூறுகிறது. மாரி வாசகங்களில் இப்பெயர் காணப்படுகிறது. அதன்படி சமீப கருத்து, இப்பகுதி, பாபிலோனில் கார்க்கேமிஸ், காரான் ஆகியவற்றுக்கு இடையிலுள்ள இலன்சூரா என்ற இடத்தை அடையாளம் காட்டுகிறது.

2. நெபுக்கதுனேசாரின் மெய்க்காவலர்களின் தலைவராக அரியோக்கு கருதப்படுகின்றார் (தானி 2:14–15 தொ). பாபிலோனிய ஞானிகளைக் கொலை செய்ய நியமிக்கப்பட்டவர். தன் கடமையைச் செய்தபோது இவர் தனியேலைச் சந்தித்து, அவரைஅறிமுகப்படுத்தியவர்.

**அரியோசு** (ARIUS)

இவர் ஸ்பார்த்திய மன்னன் ஆவார் (1 மக் 12:20). இவர் பெரிய குரு ஒனியாவுக்கு "நீங்கள் எங்கள் சகோதரர்கள்" என்று வாழ்த்துக்கள் அனுப்பியதை (1 மக் 12:7) நினைவுபடுத்தி யோனத்தான் ஸ்பார்த்தர்களுக்கு ஒரு செய்தியை அனுப்பினார்.

**அரிவாள்** (SICKLE)

வளர்ந்து முதிர்ந்த தானியக் கதிர்ளை அறுவடை செய்வதற்காக பயன்படுத்தப்பட்ட கருவி. தொடக்கக் காலங்களில் சக்கிமுக்கி கற்களால் பற்கள் போன்ற கருவியை செய்து அதை மரக்கட்டை பிடி போட்டு பயன்படுத்தி வந்தனர். பிற்காலத்தில் உலோகங்களால் செய்யப்பட்டு மரக்கட்டை கைப்பிடி போடப்பட்டது (உப 16:9; 23:25; எரே 50:16; மாற் 4:29).

அரிவாள் தீர்ப்பை அடையாளமாக உணர்த்துகிறது (யோவே 3:13; திருவெளி. 14: 14–20).

**அருகோபு** (ARGOB –குன்று, குவியல்) –ஆள்

இரண்டாம் அரசராகமத்தில் (15:25) அருகோபு அரியையுடன் சேர்த்துக் குறிப்பிடப்பட்டுள்ளார். இவர் பெக்காகியாவுடன் பெக்காகின சதிச்செயலுக்குப் பலி

யாயிருக்கலாம் அல்லது பெக்காகினுடன் சேர்ந்து சதி செய்திருக்கலாம் என்று கருதப்படுகிறது. இப்பெயர் சில மொழி பெயர்ப்புகளில் விடப்பட்டுள்ளது.

**அருகோபு** (ARGOB) –இடம்

கெசூர், மாக்கா ஆகிய இடங்களின் எல்லையிலுள்ள பாசானின் ஒருமாவட்டம். வடக்கு கிலயாத்திலுள்ள ஓகினுடைய அரசின் ஒரு பகுதியாகும். அம்மோனிய அரசன் சீகோனை வென்றபின் மனாசேயின் மகனாகிய யாயீர் என்பவரால் இப்பகுதி கைப்பற்றப்பட்டது (உப *3:4.13–14*; *2* அரச *4:13*). பிறகு மோசேயால் மானாசேயின் குலத்திற்கு ஒதுக்கப்பட்டது. அருகோபு 60 நகரங்களை உள்ளடக்கி இருப்பதாகக் கூறப்படுகிறது.

அருகோபு மாவட்டம் இருந்த இடமானது தெளிவாகத் தெரியவில்லை. பாசானிலுள்ள ஒரு பகுதியாக இருக்கலாம் அல்லது பாசானுக்கு வழங்கப்படுகின்ற மற்றொரு பெயராக இருக்கலாம். உப *3:4* –இல் இருந்து இப்பகுதி யாயீரின் கூடார கிராமங்கள் என்று பொருள்படும் கவ்வோத்து–யாயீர் என்ற மற்றொரு பெயரைக் கொண்டிருந்தாகத் தெரிகிறது. ஆனால் *1* அர *4:13* கிலயாத்திலிருந்த ஊர்களை "உயர்ந்த மதில்களாலும், வாயில்களாலும், தாள்ப்பாள்களாலும் அரண் செய்யப்பட்டு" பாசானிலுள்ள அருகோபுபின் 60 ஊர்களிலிருந்து வேறுபடுத்தப்படுகிறது. சாலமோனின் ஆறு மாவட்டங்களில் ஒன்றாக இது கருதப்படுகிறது.

அருகோபு, தமஸ்குவிற்குத் தெற்கில் திராக்கோனித்திசில் இருந்ததாக தார்கூம் என்ற நூலும், கலானித்திலும் (கோலான்) இருந்ததாக யோசிப்பசின் நூலும் இடம் காட்டுகின்றன.

**அருங்குறிகளும் அற்புதங்களும்**
(SIGNS AND WONDERS)

இது ஒரு கூட்டு வார்த்தை, பல முறை விவிலியத்தில் தோன்றுகின்றது. இதை பரம்பரை வாய்பாடு என்று கூறலாம்.

பழைய ஏற்பாட்டில் ஏறக்குறைய முப்பத்தி ஐந்து தடவை அற்புதம் அல்லது வியப்புக்குரியது என்ற வார்த்தை காணப்படுகிறது. அதாவது "அற்புதம்" அவற்றில் பதினெட்டுத் தடவை அருங்குறி அல்லது அடையாளம் என்ற சொல்லோடு இணையாகவும், ஒன்பது தடவை அருங்குறி, அற்புதம் என்ற சொற்கள் ஒரு பொருட் பன்மொழியாகவும் வருகின்றன (உப *28:45–46*; எச *12:6.11*). பழையகால இஸ்ராயேலர்ளுடைய விசுவாச அறிக்கையில் "அடையாளங்களுடனும், அற்புதங்களுடனும்" மக்களை எகிப்திலிருந்து யாவே கூட்டிவந்தார் என்ற விசுவாசம் உள்ளடங்கியுள்ளது (உப *6:20–24*; *26:5–10*; யோசு *24:17*). இந்த விசுவாச வாய்ப்பாடு இஸ்ராயேலர்கள் யாவே வரலாற்றின் ஆண்டவர் என்று அவர்கள் ஏற்றுக் கொண்டார்கள் என்பதற்குச் சான்றாக உள்ளது. மேலும் இது மறுபடியும் மறுபடியும், பல்வேறு நிகழ்ச்சிகளிலும் (உப *4:34*; *7:19*; *11:3*; *29:3*; நெக *9:10*; எரே *32:20–21*; அ.ப *7:36*), யாவே தன் மக்களுடன் வியப்புமிக்க வகையிலே தொடர்புகொண்ட விதத்தைப்பாடும் சங்கீதங்களிலும் காண்கிறோம் (சங் *78:43*; *105:27*; *135:9*).

புதிய ஏற்பாட்டில் "அருங்குறி" என்ற சொல் ஒருமையில் தனித்துத் தென்படுவதில்லை, மாறாக "அற்புதங்களுடன்" இணைந்து பன்மையில்தான் காணப்படுகின்றது. "அருங்குறிகளும் அற்புதங்களும்" என்ற கூட்டுச் சொற்றொடர் (மாற் *13:22*; யோவா *4:48*; அ.ப *2:43*; உரோ *15:19*;...) கிரேக்க இலக்கியப் பாரம் பரியத்திலும் காணப்படுகிறது. இருப்பினும் புதிய ஏற்பாட்டில் இம்மரபு எழுபது நூலோடு கொண்ட தொடர்பின் விளைவாகும்.

1. திருவெளிபாட்டின் வியத்தகு சிறப்பியல்புகள்:–

இறையியல் பாணியில் பேசும்போது வெளிப்பாடும், அற்புதமும் பிரிக்க முடியாத அளவுக்கு இணைந்தவையாகும். எங்கெங்கு எப்பொழுது இறைவன் தம்மையே இவ்வுலகில் வெளிப்படுத்தினாரோ, அப்பொழுதெல்லாம் விசுவாசமுள்ள மனிதன் அவருடைய அற்புதத்தைக் கண்டுணர்ந்தான். வெளிப்பாடு என்பது இயற்கைச் சூழ்நிலையிலிருந்து தோன்றக்கூடிய அல்லது விளக்கிக்காட்டக்கூடிய நிகழ்ச்சி அன்று. இறைவனுடைய பரிசுத்தம் இவ்

வுலகைச் சார்ந்ததன்று. அதாவது சாதாரண உலகில் அறியப்படக்கூடியது அல்ல, சிந்தனைக்குட்பட்ட எதற்கும் அப் பாற்பட்டது ஆகவே மதிப்பச்சத்துடனும், நடுக்கத்துடனும், வியப்புடனும் பதில் எழுப்பும் நிகழ்ச்சிகளில் இறை மறை யுண்மை வெளிப்படுத்தப்படுகிறது (யாத் 3:1–6).

அற்புதங்கள் பற்றியச் சொல் தொகுதி யில் கடவுளுடைய பிரசன்னம் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது (யாத் 15:11; சங் 77:14; 78:12; 88:10.12; 13:89:5; ஏச 25:1). அவருடைய தீர்ப்பு மற்றும் மீட்புச்செயல்கள், வியப்புக் குரியவையும் அசாதாரணமும் ஆனவை யாகும். (யாத் 3:20; 34:10; யோசு 3:5; நீதி 6:13; யோபு 9:10; சங் 78:4.11.32; 105:5; எரே 21:2). யாவேயின் அற்புதங்கள் அச்சத்தை எழுப்பும் அளவில் பயங்கரமும் திகிலும் எழுப்புவதாக விவரிக்கப்படுகின்றன (யாத் 34:10; 2 சாமு 7:23; சங் 66:3.5). அற்புதத்தைக் குறிக்கப்பயன்படுத்தப்பட்ட மற்ற சொற்கள் "செயல்" (உப 3:24; சங் 9:11; 66:5; 77: 12; 86:8; ஏச 12:4), அரிய செயல், "அரிய பெரியன", மகத்தானவை, வலிமைமிக்கவை (2 சாமு.7:23; 2 அர.8:4; யோபு 9:10; சங் 71:19; 136:4), புதுமையைப் "படைப்பு" என்றும் அழைக்கலாம் (யாத் 34:10; எண் 16:30; ஏச 48:7; எரே 31:22). யாவேயின் செயல்கள் பரிசுத்ததனத்தை யும், பெருந்தன்மையையும், (இஸ்ராயேல் களுடைய கடவுளின்) மீட்கும் சக்தியையும் வெளிப்படுத்துகின்றன (சங் 77:11–15). இந்த பகுதி புதுமையைக் குறிக்கப் பல வார்த்தைகளைப் பயன்படுத்துகின்றது.

விவிலிய கண்ணோட்டத்தில், அற்புத மானது சாதாரண நிலைக்கு மேன் பட்டது, வியப்புக்குரியது. அது கடவுளு டைய பிரசன்னத்திற்கு சான்றாக உள்ளது. ஆகவே, அற்புதமானது இயற்கை அமைவதைத் தகர்த்தெறியும் செயல் என்று புரிந்துகொள்ளக்கூடாது. நவீன காலப்புரிந்துகொள்ளும் தன்மை யின்படி இயற்கைஅமைவு காரணகாரியம் என்ற விதியின்படி நடக்கிறது, அது நம்பத்தகுந்தது என்பதற்கு விவிலியம் சான்றுபகருகிறது (ஆதி.8:22). இந்நிலை கடவுளுடைய உடன்படிக்கைப் பிரமாணிக் கத்தையும் உறுதியையும் எடுத்துக்காட்டு கிறது (சங் 148:6; ஏச 45:18; எரே 5:24; 31:36). இறைவன் சட்ட அமைப்புக்கு வெளி யிலுள்ளவரும் அல்லர் சட்டங்களுக்குக் கட்டுப்பட்டவரும் அல்லர். ஆனால்,அவர் எந்த நேரத்திலும் எல்லா இடத்திலும் இருக்கின்றார் (எரே 23:24). இயற்கை உலகின் பொருள்களைப் பயன்படுத்தித் தன்னுடைய இலட்சியத்தை நிறைவேற்று வதற்கு அவர் விரும்பியவாறு செயலாற்ற அவருக்கு எல்லாவிதமான சுதந்திரமும் உண்டு. "கடவுளால் எல்லாம் முடியும்" என்பது திரும்பத் திரும்பத் தென்படு கின்ற சொற்றொடராகும் (ஆதி 18:14; 1 சாமு 14:6; எரே 32:17; மாற் 10:27). ஆனால் இதைக் கொண்டு அவர் தான்தோன்றித் தனமாகச் செயலாற்றுகிறார் என்று பொருள்கொள்ளக்கூடாது.

விவிலிய விசுவாசத்தின் அடிப்படைக் கோட்பாடுகளில் ஒன்று ஆண்டவருடைய பராமரிப்புக் கொள்கையாகும். இதன்படி படைப்பவரும் ஆண்டவருமாகிய இறை வன் வரலாற்று நகிழ்ச்சிகளுக்கு உருவம் அளிக்கிறார். தமது மேலாண்மை நோக் கத்திற்கு ஏற்றவாறு இயற்கையின் வலிமை யைக் கட்டுப்படுத்துகின்றார். இறைவனது செயல்களின் சூழலில் வாழும் மனிதன், மக்களிடையே இறைவனது பிரசன்னத் தைச் சுட்டிக்காட்டும் அடையாளங்களை அன்றாட உலகில் காண விழிப்பாயுள் ளான். உண்மையிலேயே விசுவாசமுள்ள இஸ்ராயேலனும் அல்லது கிறிஸ்தவனும் வியப்புக்குரியவை என்று கருதுபவை, மற் றொரு கோணத்தில் மிகச் சாதாரண மாகவும், முக்கியத்துவம் இல்லாததாக வும் இருக்கலாம். இவ்வாறு செங்கட லைக் கடந்த நிகழ்ச்சி ஒரு பயங்கரமான காற்று நாணல் கடலில் இருந்த தண்ணீ ரை வாரி ஒதுக்கிவிட்டதாக விளக்கப்பட லாம்; மேலும் மன்னாவும் காடை பறவை யும் பாலஸ்தீனத்தின் தென்பகுதியில் உள்ள பாலை நிலத்திற்குப் பழக்கப்பட்ட ஒரு இயற்கையான செயலாக இருக்க லாம்; அல்லது யோர்தான் ஆற்றைக் கடந்த நிகழ்ச்சியானது அண்ட நிகழ்ச்சி யால் நீர் தற்காலிகமாகத் தேக்கப்பட்ட தாக இருக்கலாம். அதேபோல் இயேசு

வின் ஒரு சில அற்புதங்களும் (முடவனைக்குணமாக்குதல் போன்றவை, மாற் 2:1–12) நவீன மனோதத்துவ அறிவைக் கொண்டு விளக்கப்படலாம். ஒருவர், அவர் பழங்காலத்தவரோ, நவீன காலத்தவரோ, இப்படியாக அந்தச் செயலின் வியப்புக் கூறைக் காணத் தவறிவிடலாம். ஆனால், விவிலிய விசுவாச கண்ணோட்டத்தில் அற்புதம் குறிப்பிட்ட விளக்கத்தின் படி நடந்ததா என்பதன்று, மாறாக கடவுள் அங்கிருந்து அதை வியப்புமிக்கதாக மாற்றினாரா என்பதுதான் கேள்வி. கடவுள் வியப்புமிக்க வகையிலே பிரசன்னமாயிருந்தார் என்பது, அதைப் பெரிதுப் படுத்தப்போதுமான காரணமாகும். இதில் மற்ற கூறுகளும் பங்கு கொண்டிருக்கலாம். இவ்வாறு நிலவுக்கும் சூரியனுக்கும் யோசுவாவின் செய்யுள் வடிவமான கட்டளையைச் சொற்பொருளில் தவறாகப் புரிந்துகொள்ளலாம் (யோசுவா 10:12–13). எலிசாவின் சீடர்கள் அவருடைய ஆசிரியரை மகிமைப்படுத்துவதற்காகப் பல அரிய செயல்களைக்கூறுவது; நற்செய்திகளின் பாரம்பரியத்தில், கிரேக்க வியப்புக் கதைகளின் செல்வாக்கு ஆகியவை பிற கூறுகளுக்குச் சான்றாகலாம்.

பொதுவான பொருளில் இறைவனுடைய கரத்தால் தொடப்பட்டதெல்லாம் விசுவாசமுள்ள மனிதனுக்குப் புதுமையானவையே. இயற்கை முழுவதும் கடவுளை மகிமைப்படுத்துகின்றது. அவருடைய செயல்கள் யாவும் வியப்புமிக்கவை (யோபு 38; சங் 139:14). ஆனால் ஒரு சில சூழ்நிலைகளில் கடவுளுடைய செயல், தனிமனிதனுடைய வாழ்க்கையில் அல்லது மக்களுடைய' வாழக்கையில் ஏற்படுகின்ற நெருக்கடி நிலையோடு ஒன்றாகிறது. இது குறிப்பிட்ட புதுமைகளைப்பற்றிப் பேச வாய்ப்பளிக்கிறது.

பழைய ஏற்பாட்டில், வியப்புக்குரியவற்றைக் கூறும்போது "அருஞ்செயல்" என்ற சொல் முக்கியமாக பயன்படுத்தப்பட்டுள்ளது. இந்த வார்த்தையானது "வியப்புக் குரியது" அல்லது "அசாதாரணமான" என்ற கருத்தை நமக்குக் கொடுக்கின்றன (யாத் 4:21; 7:9; 11:9–10; 1 நாள் 16:12; சங் 105:5; யோவேல் 2:30; 2 நாள் 32:24). இருந்த போதிலும் இந்த வார்த்தைகள், காட்சிக்குரிய இயற்கைக்கு மாறான அற்புதம் என்ற கருத்துடன் தொடர்புடையதாகத் தென்படுவதில்லை. இஸ்ராயேல் நாடு கடத்தப்படுவதை எசக்கியேல் செய்து காட்டியதும், அவரது மனைவி இறந்தபோது வருத்தம் கொண்டாடததும் மக்களுக்கு ஓர் அடையாளமாகும் (எச. 12:6; 11:24; 24.27). அற்புதம் என்ற சொல்லானது "அடையாளம்" என்ற சொல்லுடன் பொருளில் மிக நெருக்கமானதாக அமைந்துள்ளது; மேலும் ஒருசில நேரங்களில் அதற்குப் பதிலாக இந்த வார்த்தை பயன்படுத்தப்படுகின்றது (2 அர 20:8; ஏச 38:7); ஒரு சிலநேரங்களில் அதற்கு இணையான பொருளைக்கொடுக்கின்றது (1 அர. 3:3; சங் 71:7; செக் 3:8). பெரும்பாலான சூழ்நிலைகளில் இரண்டு வார்த்தைகளும் இணைந்த ஒன்றாக வருகின்றன (யாத் 7:3; நெக 9:10; சங் 78:43; 105:27; 135:9; எரே 32.20–21; உப 9 முறைகள்). ஏசயா அசுதோத்து முற்றுகையிடப்பட்டபோது, நிர்வாணமாகவும், வெறுங்காலுடனும் சென்றது ஓர் அடையாளமாகும் (ஏச 20:2–4). அவர் தன்னுடைய மக்களுடன் "அடையாளங்களாகவும் முன்னறிகுறிகளாகவும்" உள்ளார். சாதாரண அல்லது அருகதையற்ற பொருட்கள், தெய்வீக வெளிப்பாடு அவற்றின் மீது ஒளிவீசி மாற்றும்போது அசாதாரணமானவையும் பொருள் பொதிந்தவையாகவும் மாறுகின்றன. கடவுளுடைய பிரசன்னத்தைத் தற்செயலான குறிப்புகளிலும் அசாதாணரமான நேரங்களில் நிகழும் நிகழ்ச்சிகளின் மாற்றத்திலும், அகால இறப்பிலும், போருக்குப் பின் நாடு வழக்கமான நிலைக்குத் திரும்புவதிலும் அறிந்து கொள்ள முடியும் (ஆதி 24:10–21; 1 சாமு 2:27–36; 14:10; ஏச 37:30–32)...ஒரு நிகழ்ச்சியின் இயற்கை மீறிய தன்மையைப் பொறுத்ததன்று அற்புதம். அசாதாரணமான அது நடக்கும் நேரத்தைப் பொறுத்ததாகும். அதாவது ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் இறைவனது திட்டத்தில் புரிந்து கொள்ளக் கூடிய குறிப்பிட்ட பொருளுடன் நிகழ்வதைப் பொறுத்தது. எகிப்தியர்களுக்கு செங்கடலைக் கடந்த நிகழ்ச்சியானது, இயற்கைக்கு மாறான நிகழ்ச்சியாகும்

ஆனால், வரலாற்று நெருக்கடி நிலையில் இருந்த இஸ்ராயேலருக்கு இறைவாக்கு விளக்க ஒளியில், இந்த நிகழ்ச்சி கடவுளுடைய ஆற்றலுள்ள பிரசன்னத்தை வெளிப்படுத்தியது. அதேபோல் சிலுவையில் அறையப்பட்டதும், உயிர்த்ததுவம் யூதர்களுக்கு இடறலாகவும் கிரேக்கர்களுக்கு முட்டாள்தனமான செயலாகவும் இருந்தன. ஆனால் திருச்சபைக்கு இது கடவுளின் ஞானத்தின், வல்லமையின் அடையாளமாக விளங்கியது (1 கொரி 1:18–25).

பரந்த கண்ணோட்டத்தில் பார்க்கின்ற போது விவிலியத்தில் எடுத்துக்கூறப்பட்டிருக்கும் இறைவனது செயல்களின் வரலாறு, தொடக்கத்திலிருந்து முடிவு வரை அற்புதமானதாகும். இருந்த போதிலும் கடவுள் மனிதர்களுடன் தொடர்பு கொண்டபோது முடிவுகள் செய்ய வேண்டிய சிலநேரங்கள் இருந்திருக்கின்றன. விவிலியப் பாரம்பரியத்தில் அந்த நேரங்கள் அற்புதங்களின் மிகுதியால் சிறப்பு பெற்றுள்ளன. இப்படியாக இஸ்ராயேலர்களின் தொடக்ககால வரலாறு பல அற்புதங்களைக் கொண்டிருந்ததாக விவரிக்கப்படுகிறது. அதேபோல் இஸ்ராயேலர்கள் இவ்வுலக அரசியல் வாழ்க்கையில் மூழ்கி இருந்தபோது இறைவாக்கினர் வழியாகக் கடவுள் பேசினார், இது இறைவாக்கினர்களுடைய சீடர்களின் கண்ணோட்டத்தில் புதிய அற்புதங்களால் சிறப்புப் பெற்றது. எல்லாவற்றிற்கும் மேலாக, புதிய யுகத்தின் ஆரம்பமானது, அருங்குறிகளாலும், அற்புதங்களாலும், அதாவது கிறிஸ்து நிறைவேற்றிய அற்புதங்களால் மட்டுமல்லாது (அ.ப. 2:2), திருச்சபையும் அப்போஸ்தலர்களும் செய்த அற்புதங்களாலும் (யோவா 14:12; அ.ப.4:16.30; 5:12–6:8; 14:3; 1 கொரி 12:10, 28; 2 கொரி 12:12; கலா 3:5; எபி 1:4) சிறப்புப் பெற்றது என்று புதிய ஏற்பாடு உறுதிப்படுத்துகிறது.

**2. அடையாள நிகழ்ச்சிகளான புதுமைகள்:–**

அடிக்கடி அற்புதத்தையும் அருங்குறியைக் குறிக்கும் விவிலியச் சொற்கள் தொடர்புபடுத்திக் கூறப்படுகின்றன. இது விவிலிய அற்புதங்களின் மற்றொரு தன்மையை எடுத்துக் கூறுகின்றது. அவைகள் கடவுளுடைய செயல்களின் வியப்புக்குரிய தன்மைக்கு மட்டும் சான்று பகர்வதோடல்லாமல் அச்சுறுத்தலாகவோ வாக்குறுதியாகவோ அல்லது ஆதரவாகவோ பாதகமாகவோ பேசப்பட்ட ஆண்டவருடைய வார்த்தையை உறுதிப்படுத்தும் விளைவையும் கொண்டிருக்கிறது. அருங்குறியானது, இறைவாக்கு வார்த்தைக்கு நெருங்கிய உறவுடையது. ஆனால் இரண்டாந்தரமானது. அனுபவச் சான்று அளித்தது. இதனால் மனிதர்கள் கடவுளுடைய வார்த்தையை கேட்பது மட்டுமல்லாமல் அதை செயலிலும் பார்க்கலாம்.

ஓர் அருங்குறியானது புலன்களை, குறிப்பாகப் பார்வையை, பாதிக்கின்றது. பழைய ஏற்பாட்டில் அடையாளம் என்ற சொல் பல பொருட்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது. புதுமையோடு தொடர்புபடுத்தப்படும் போது அருங்குறி கண்ணுக்குத் தென்படக்கூடிய குறி. அது கண்ணால் காணமுடியாத ஆற்றலையும், இந்த உலகில் கடவுளுடைய செயலையும் சுட்டிக் காட்டும் புற அடையாளத்தை உணர்த்துகிறது. அடிக்கடி அருங்குறிகள் தெய்வீகக் கட்டளையுடன் தொடர்புள்ள வகையில் "நான் உங்களோடு இருப்பேன்" என்ற கடவுளுடைய உறுதிமொழியின் சான்றாகக் கொடுக்கப்பட்டது. இப்படியாக யாத் 3:12–இன்படி யாவே மோசேயை நோக்கி "நாமே உன்னோடு இருப்போம். அதுவுமன்றி நீ நம் மக்களை எகிப்தினின்று வெளியேறச் செய்த பின்னர், இம்மலையின் மீதே கடவுளுக்குப் பலி இடுவாய். நாம் உன்னை அனுப்பினோம் என்பதற்கு இதுவே அடையாளமாகும் என்று அருளினார்". அதாவது இஸ்ராயேலர் யாவேக்கு ஊழியம் செய்வதற்காக விடுவிக்கப்பட்ட ஓர் இனமாய் இருப்பது தூதின் வரலாற்றுப் பூர்வமான உறுதிப்பாடாகும். தனி நபர்களுடைய வரலாற்றுப்பூர்வமான நிகழ்ச்சிகளைத் தவிர்த்து, மோசேக்கு நேர்முகமாகவோ (யாத் 4:8–9,17) அல்லது இஸ்ராயேலர்களின் முன்னிலையிலே (4: 28,30) அல்லது பாரவோனின் முன்னிலையிலே (7:3; 8:23; 10:1–2) அளிக்கப்பட்ட அடையாளங்களின் நோக்கம் மோசே யாவேயின் பேராள் என்பதைப் புற அடையாளத்தால் உறுதிப்படுத்துவ

தாகும். இதே மாதிரியான நோக்கம் (மிதியான் நாட்டு மக்களைத் துன்புறுத்திய போது) கிதயோனை நியமித்த கதையிலும் காணப்படுகிறது (நீதி 6:11–24). கிதயோன், வல்லமையுள்ள செயல்கள் எல்லாம் எங்கே? குறிப்பாக கடத்தல் காலத்திலிருந்து செய்யப்பட்டவைகள் எங்கே? என்று கேட்கிறார். யாவே அவரை அழைத்து இஸ்ராயேலை விடுவிப்பதாகக் கூறி, "நான் உன்னோடு இருப்பேன்" என்று அவருக்கு உறுதி அளிக்கின்றார். தன்னுடன் பேசுபவர் யாவே என்பதறகு சான்றாக கிதயோன் அடையாளம் கேட்கின்றார். அவருடைய காணிக்கை சுட்டெரிக்கப்படுவதிலிருந்து ஓர் அடையாளம் பெறுகிறர். அதேபோல் அரசாட்சியின் தொடக்கக்காலத்திலும் (1 சாமு 9–10), சவுலைக் கடவுள் இஸ்ராயேலர்களைப் பகைவர்களின் கையின்று விடுவிப்பதற்காகத்தேர்ந்தெடுத்துள்ளார் என்ற செய்தியைச் சாமுவேல் சவுலுக்கு அளித்து (1 சாமு 9–10) இச்செய்தி அருங்குறிகளால் உறுதிப்படுத்தப்படும் என்று கூறுகிறார் (10:1–13). "இந்த அடையாளங்கள் எல்லாம் உனக்கு நேரிடும்போது உன்னால் செய்ய முடிந்தவற்றை எல்லாம் செய்" (10:7) என்று கூறுகிறார்.

இந்தப் பகுதிகள் அடையாளத்திற்கும் வார்த்தைக்கும் இடையில் உள்ள தொடர்பை மட்டும் காட்டுவதில்லை மாறாக அருங்குறியானது வருவதுரைக்கும் தன்மையுள்ளது என்பதையும் காட்டுகிறது. அவை யாவே நிகழ்காலத்தில் தீர்ப்பாகவோ இரக்கமாகவோ பேசிய சொல்லை உறுதிப்படுத்தச் செய்யப்போவதைச் சுட்டிக்காட்டுகின்றன. இறைவாக்கினர்களுடைய தலையாய பணி "கடவுளுடைய வார்த்தையை" அறிவிப்பதாகும். அது மன வருத்தத்தையும், விசுவாசத்தையும் தூண்டக்கூடியதாகும். அவை அடையாளங்களையும் செயல்படுத்தப்பட்ட அடையாளங்களையும் சுட்டிக்காட்டின அவை வரலாற்றில் இறைவார்த்தையின் ஆற்றல் மிக்க தன்மையை எடுத்துக் காட்டின. ஒரு முக்கியமான எடுத்துக்காட்டு ஏச 7:10–16–ல் உள்ள இம்மானுவேல் அறிகுறியாகும். ஏசயா கடவுளுடைய வார்த்தையை அரசர் ஆகாசுக்கு அறிவித்தார். அதாவது சீரியர்களுடன் இஸ்ராயலர்கள் செய்துள்ள நட்பானது நிலைக்காது என்றும், யூதாவில் பொம்மை அரசனை நியமிக்கும் திட்டம் தோல்வியுறுமென்றும், யாவே தன்னுடைய வார்த்தையை அரசன் தேர்ந்தெடுக்கின்ற எந்த அடையாளத்தைச்செய்தும் உறுதிப்படுத்துவர் என்றும் கூறினார். இதற்கு இறைவனால் எல்லாம் செய்ய முடியும். அரசன் தன்னுடைய பக்தி என்ற போர்வையின் அடியில் அடையாளம் கேட்க மறுத்தாலும், அடையாளம் முன்னறிவிக்கப்படுகிறது. இந்த இறைவாக்குக்குப் பொருள் அளிப்பதில் பலப்பிரச்சினை உண்டு. இவற்றை இம்மானுவேல் என்ற தலைப்பில் காண்க. இந்த அடையாளங்கள் தமது நோக்கத்தை நிறைவேற்றுவதற்காக யாவே வரலாற்றுச் சூழ்நிலையில் பிரசன்னமாக உள்ளார் என்பதைச் சுட்டுகின்றன. இறைவாக்கினரும் அவரது குடும்பமும் (ஏச 8:16–18), விசுவாசச் செழிப்பு மீண்டும் கிடைத்தல் (37:30–32; 2 அர 19:29–31), நிகழ்த்தப்பட்ட மாதிரிச் செயல்கள் (ஏச 20:3; எச 4:1–3) போன்றவை விளக்கிக்காட்டும் அடையாளமாகலாம். அதேபோல் புதுயுகத்தைப் பற்றிய இறுதிக்கால உறுதிமொழிகள், நிகழவிருக்கும் அடையாளங்களின் முன்னறிவிப்போடு தொடர்புடையன (ஏச. 45:1–8; 55:10–13). அப்போது பூமி வியத்தகு முறையில் மாற்றியமைக்கப்படும். உண்மையிலேயே வானத்திலும் பூமியிலும் வியப்புமிக்க நிகழ்ச்சிகளின் முன்னறிவிப்புத் தன்மை வெளிப்பாட்டு இலக்கியங்களில் முக்கிய இடம் பெறுகின்றது. (தானி 4:2–3; 6:27; யோவே 2:30). புதிய ஏற்பாடும் இந்த உலகின் முடிவு அடையாளங்களாலும், அற்புதங்களாலும் அறிவிக்கப்படும் என்பதை அறிவிக்கிறது (லூக் 21:11.25; திருவெளி 12:1.3; 15:1; அ.ப 2:19).

ஒத்தமை நற்செய்திகளில் வரும் புதுமைகள் மெசியா காலத்தில் உதயமாகிய இறையரசின் வருகையை அறிவிக்கும் சூழ்நிலையில் நிகழ்கின்றன. இயேசு அரசின் நற்செய்தியை மட்டும் அறிவிக்கவில்லை; தன்னுடைய செயல்களில், குறிப்பாகப் பேய்களை ஓட்டுவதில், இறைவனு

டைய வாக்குறுதிகள் நிறைவேறுகின்றன என்பதற்குச் சான்றுகளையும் காட்டி னார். நற்செய்தி ஆசிரியர்கள் புதுமை களை மெசியாச் செயல்களாகவும் வல்ல மை மிக்க செயல்களாகவும் நோக்கினர். அவற்றை விசுவாசக் கண்ணோடு நோக் கினதால், அவை மனிதனுடைய மீட்புக் காக இறைவன் ஆற்றியவற்றையும், அவ ரால் நியமிக்கப்பட்ட இயேசுவையும் அடை யாளம் காட்டின. இவ்வாறு அவருடைய போதகத்தோடு அடையாளங்களும் நிகழ்ந் தன. அவை இறைனுடைய வார்த்தையைக் கேட்கமட்டுமல்ல, உலகில் அதன் ஆற்றல் மிக்க தன்மையை மனிதர் காணவும் வாய்ப்பளித்தன (மத் *11:4–5*; லூக் *7:22*; *10:23–24*). அவர் பேய்களை ஓட்டுதல், சாத்தனது ஆட்சி அழிக்கப்பட்டு, இறை யரசு ஆற்றலோடு வந்துகொண்டிருப்ப தற்கு அடையாளமாகும். (மத் *12:28*; மாற் *3:22–30*; லூக்.*11:20*). அவர் குணமாக்குதல், பாவமன்னிப்பில் வெளிக்காட்டப்படும் இறைவனது பிரசன்னமும் ஆற்றலும் அருகில் இருப்பதற்கு அடையாளமாக உள்ளது (மாற் *2:1–12*). கடலில் புயலை அடக்குதல் போன்ற இயற்கை சார்ந்த புதுமைகள் (*4:35–41*). இயேசுவின் வார்த் தைகளிலும் செயல்களிலும் வெளிப்படுத் தப்பட்ட இறைமேலாண்மையின் மகத்து வத்தையும் ஆற்றலையும் உணர்ந்தவர் களிடம் ஏற்பட்ட மதிப்பச்சத்தை எடுத்துக் காட்டுகின்றன. நான்காம் நற்செய்தியில், இயேசுவின் புதுமைகள் தன்மையாலே சிறப்பான அடையாளங்களாகும்; அதா வது, விசுவாசம் உள்ளவர்களுக்கு, இயேசு இறைமகன் என்று அவரது மாட்சிமையை யும் வெளிப்படுத்தும் அடையாளப் படங் களாகும் (யோவா *2:11*; *9:3*; *11:4.40*)

3. அறிகுறிகள்–அற்புதங்களில்– ஐயத்தன்மை:-

விவிலியப் புதுமைகளின் மற்றொரு பண்பு அவற்றின் ஐயத்தன்மையாகும். அச் சுறுத்தலாகவோ வாக்குறுதியாகவோ பேச ப்பட்ட வார்த்தையை உறுதிப்படுத்த அடை யாளம் கொடுக்கப்பட்டாலும், ஐயமின்றி உறுதிப்படுத்தும் ஆற்றல் இந்த அடையா ளங்களுக்கு இல்லை. அடையாளம் விசு வாசத்துக்கு ஆதரவு அளிக்கிறது. அதை உறுதிப்படுத்துகிறது. ஆனால் விசுவாசச் சூழ்நிலைக்குப் புறம்பாக உள்ள மனிதனுக்கு இது உறுதியான அடையாள மாக அமையாது. அதாவது விசுவாசம் தேவையில்லாத அளவுக்கு இதை உறுதி யான சான்று அளிக்கவில்லை. மோசே எகிப்தில் செய்ததாகக் கருதப்படும் பல அறிகுறிகளும் பாரவோன், இஸ்ராயேல ருடைய மனதில் பாதிப்பை ஏற்படுத்திய தாகத் தெரிகிறது. ஆனால் அவற்றின் சான்றுபகரும் ஆற்றல், எகிப்திய மந்திர வாதிகளும் சில அறிகுறிகளைச் செய்த னர் என்பதாலும் பாரவோனின் கடின இதயம், வரலாற்றில் யாவேயின் மேலாண் மையின் சான்றுகளைக் காணத்தவறிய இஸ்ராயேலரின் குருட்டுத்தனம் ஆகிய வற்றாலும், பலவீனப்படுத்தப்பட்டதற்குப் பாரம்பரியம் சாட்சி கூறுகிறது. நடந்த வற்றையெல்லாம் கண்டபின்னும், இஸ்ரா யேலர் "ஆண்டவர் நம்மோடு இருக்கிறா ரா இல்லையா?" என்று முணுமுணுத்தனர் (யாத் *17:7*). அதுபோலவே புதிய ஏற்பாட் டில் இயேசுவின் அறிகுறிகளும் அற்புதங் களும் மறுக்க முடியாதபடி விசுவாசத் திற்கு இட்டுச் செல்லவில்லை (யோவா.*12: 37*). மாறாகப் பெரும்பாலும் அவை மக்க ளின் வேடிக்கை பார்க்கும் தன்மையைத் தூண்டின. இயேசுவை ஒரு வியப்புகள் செய்பவர் என்ற அளவிலேயே மக்கள் இயேசுவைச் சூழ்ந்தனர். அவருடைய எதிரிகள் கூட அவர் புதுமைகள் செய்த தாக ஏற்றுக்கொண்டனர் (மாற் *3:22*). நான் காம் நற்செய்தியின்படி, இயேசுவின் அறிகுறிகள் தவறாகப் புரிந்துகொள்ளப் பட்டன. பகைமையை வளர்த்தன. சாவுக்கு இட்டுச் சென்றன (யோவா *11:47*).

அற்புதங்களின் ஐயத்தன்மைபற்றி உபாகமச் சட்டத்தில் விவாதிக்கப்பட்டுள் ளது (உப.*13:1–5*). ஒரு இறைவாக்கினரோ அல்லது கனவு காண்பவரோ ஒரு அருங் குறி அல்லது வியப்புக்குரிய செயலைச் செய்து, அதன் மூலம் இஸ்ராயேலர்கள் மற்ற கடவுளுக்கு ஊழியம் செய்து நெறி தவறி நடக்கச் செய்தால், அந்த அருங் குறி அல்லது வியப்புச்செயல் உண்மை யானதாக இருந்தாலும்கூட, அவனுக்குச் செவிமடுக்கக்கூடாது; இப்படியாக

கடவுள் தம்மக்களின் பிரமாணிக்கத்தை சோதிக்கின்றார் என்று கூறுப்பட்டுள்ளது. அடையாளமானது, வரலாற்றுப் பூர்வமாக யாத்திரை நிகழ்ச்சியில் வெளிப்படுத்தப் பட்டுள்ள கடவுளுடைய வார்த்தைக்குப் பொருத்தமானதாக இருக்கவேண்டுமென் றும் சொல்லப்படுகிறது. இப்படியாக அறிகுறியானது தானாகவே கடவுளுடைய பிரசன்னத்திற்குச் சான்றாக அமைவ தில்லை (2 அர 3:27); இறைவாக்கினர் களால் விளக்கப்பட்டு யாவேயின் மீட்பு வரலாற்றின் சூழ்நிலையில் நோக்கும் போதுதான் அவை பொருள் பொதிந்த வையாகும். உண்மையிலே விசுவாசம் இயற்கையிலும், வரலாற்றிலும் இறைவ னின் பராமரிப்பிலும் காணக்கூடிய அடை யாளங்களை உணர்ந்துகொள்ளமுடியும். ஆனல் வியப்புகுரியவற்றில் கவர்ச்சி விசு வாசத்திற்கு இட்டு செல்லமுடியாது. அற்புதங்களின்பால் உள்ள ஆர்வம் விசு வாசத்திற்கு மாற்றாக அமையாது. பிற் கால விவிலிய யூத மறை இறைவாக்கு மறைந்து விட்டது என்று நம்பியபோது (சங் 74:9; 1 மக் 4:46; 9:27; 14:41), கண்ணால் பார்க்கக்கூடிய பகட்டான வியப்புகளின் மேல் கவனம் செலுத்தும் மனநிலை இருந்தது (2 நாள் 20:20–30; 32:20–31; தானி 14:31–42; 2 மக் 1:19–23; 3:22–40; 10:29–31).

புதிய ஏற்பாடானது அற்புதத்தின் கண் ணால் பார்க்கக் கூடிய குணத்தை வலி யுறுத்தத் தயங்கியது. ஏற்கனவே பார்த்தது போல அற்புதமும், அருங்குறியும் பெரும் பாலும் இணைந்தே காணப்படுகின்றன. இயேசுவும் தன்னைப்பற்றிய வியப்புகள் செய்பவர் என்ற பாராட்டுப் புகழுரையைப் பெறக்கூடிய சோதனையைத் தொடர்ந்து சந்திக்க வேண்டியதாக இருந்தது. "வானத்திலிருந்து அறிகுறியைத் தேடு வது" கடவுளை தேடுவதற்கு மாற்றாக அமையலாம், ஆகவே சந்தேகக் குணம் படைத்த பரிசேயர்களைக் கடிந்து கொள் கின்றார். "எந்த அறிகுறியும் இந்தத்தலை முறைக்குக் கொடுக்கப்படாது" (மாற் 8:12; மத் 12:39; லூக் 11:24; மத் 16:1–4; யோவா 4:48; 6:30) என்று மறுத்துவிடுகிறார். இவரு டைய வல்லமைமிக்க செயல்கள் மன மாற்றத்தையும் விசுவாசத்தையும் உண் டாக்குவதற்குப் பதிலாக அவர்களின் கடுமையான உள்ளங்களையே எதிர் கொண்டன; ஒருவேளை தீர் சீதோனைச் சேர்ந்த புறவினத்தார் இந்த அற்புதங் களைக் கண்டிருந்தால் அவாகள் மனம் மாறி இருப்பார்கள் என்று கிறிஸ்து கூறினார் (மத் 11:21; லூக் 10:13). மேலும் எல்லாவற்றிற்கும் மேலாகப் புதிய ஏற் பாடு மற்றவர்கள் அற்புதம் என்று கருது கின்ற செயல்களை, அற்புதமான செயல் கள் என்றே கருதவில்லை. ஏனெனில் அவை கடவுளுடைய திட்டத்தை வெளிப் படுத்தவில்லை; மாறாக மனிதர்களை ஏமாற்றுகின்றன. கடைசியில் மாற்குவின் சிறிய வெளிப்பாட்டு உரையின்படி, காலத்தின் இறுதியில் "போலி மெசியாக் களும், போலி இறைவாக்கினர்களும், தீர்க்கதரிசிகளும் தோன்றி, கூடுமானால் தேர்ந்து கொள்ளப்பட்டவர்களையும் ஏமாற்றக் கூடிய அருங்குறிகளும், அற் புதங்களும் செய்து காட்டுவார்கள்" (மாற் 13:22; 2 தெச 2:9). சாத்தானும், அதனுடைய உதவியாளர்களும் கூட அற்புதங்கள் நிகழ்த்த முடியும் என்று சொல்லப் பட்டுள்ளது (திருவெளி 13:13–14; 16:14; 19:20). இயேசு இந்தச் சீர்கெட்ட தலைமுறைக்கு ஐயமற்ற அருங்குறி தர மறுத்த போதிலும், கடவுளுடைய அரசின் அற்புதங்களையும் அருங்குறிகளையும் நிகழ்த்துவதில் அவரு டைய பணி அடங்கி இருந்தது. பார்வை யாளர்களுக்கு இந்த நடவடிக்கைகள் மற்றவர் செய்யக்கூடிய அற்புதங்களி லிருந்து வேறுபட்ட ஒன்றாகத் தென்பட வில்லை; ஆனால், விசுவாசத்துடன் இதைப்பார்த்தவர்களுக்கு இந்த அருங் குறிகள் வரப்போகின்ற கடவுளுடைய அரசைச் சுட்டிக்காட்டின. எல்லாவற்றிற் கும் மேலாகத் திருச்சபையின் விசுவாசக் கண்ணோட்டத்தில் பார்க்கின்றபோது, இயேசுவே அந்தப் புதிய அரசின் அருங் குறியாக அமைகின்றார். ஆகையினாலே சிமி யோன் (லூக் 2:34) குழந்தை இயேசு அடையாளமாகக் கொடுக்கப்பட்டிருக் கின்றார் என்று அறிவிக்கின்றார். மேலும் மத்தேயு நற்செய்தியின் ஆசிரியர் எழுபது நூலின் மொழி பெயர்ப்பைச் சார்ந்த ஏச 7:4–இல் கூறப்பட்ட இம்மானுவேல் அடை யாளம் பற்றிய இறைவாக்கு நிறைவேறுவ தாக அறிவிக்கிறார் (மத் 1: 22–23). திருச்

சபையின் விசுவாசத்தில் கடவுளின் மிக வல்லமையுள்ள செயல் இயேசுவின் உயிர்ப்பாகும். இதனுடைய பின்னனியில் இயேசுவின் வாழக்கையில் நிறைவேற்றிய எல்லா அருங்குறிகளும், வல்லமையுள்ள செயல்களும் புரிந்துகொள்ளப்பட்டன.

அருட்கொடைகள் (CHARISMS)

"அருட்கொடைகள்" என்பது "காரிஸ்மா" என்ற கிரேக்கச் சொல்லின் தமிழாக்கம் ஆகும். இதற்கு, இறைவன் கருணையோடு வழங்கும் "இலவசக் கொடைகள்" என்பது பொருள். இதனை "அருள்" என்ற சொல்லாலும் குறிக்கலாம். இறைவன் தாம் வழங்கும் அருட்கொடைகளைத் திருப்பி எடுத்துக்கொள்வதில்லை (உரோ 11:29). அருள் என்னும் கொடை கிறிஸ்துவின் வழியே நம்மை வந்தடைகின்றது (உரோ 5:15 தொ). இக்கொடை நம் ஆண்டவராகிய கிறிஸ்து இயேசுவில் முடிவில்லா வாழ்வுக்கு இட்டுச்செல்கிறது (உரோ 6:23). இறைவன் நம்மைக் கிறிஸ்துவின் அருளால் நிறைத்துள்ளார் (எபே 1:6); இன்னும் தம் மகனோடு அனைத்தையும் நமக்கு அளிப்பார் (உரோ 8:32). இறைவனளிக்கும் கொடைகளுள் தலைசிறந்தது தூய ஆவியே. நமக்கு அருளப்பட்ட தூய ஆவி வழியாய் இறையன்பு நம் உள்ளங்களில் பொழியப் பெறுகின்றது (உரோ 8:15). தூய ஆவியார் நம் உள்ளத்தில் உறைகினறார்; தாம் விரும்பியளிக்கும் அருட்கொடைகளின் வழியே தம்மையே வெளிப்படுத்துகின்றார் (1 கொரி 12:1-4). தொடக்ககாலத் திருச்சபையில் இக்கொடைகள் நிறைந்து காணப்பட்டன. அவற்றைப் பயன்படுத்துதல் சில பிரச்சினைகளை எழுப்பியது. ஆகவே தம்முடைய திருமுகங்களிலே புனித பவுல் இக்கொடைகளின் பண்பும் பயனும் பற்றித் தெளிவாகக் கூறியுள்ளார்.

I. அருட்கொடை அனுபவம் :-

பழைய ஏற்பாட்டின் காலத்திலேயே இறைவன் ஆவி அடியவரை ஆட்கொண்டு அவர்களைத் தம்கொடைகளால் நிரப்புகிறார். சிலர் இறைவாக்குகளைச்சீர் தூக்கிப்பார்க்கும் திறம் பெற்றிருந்தனர் (1 அர 22:28). சிலர் ஆவியாரால் பரவச நிலைக்கு அழைத்துச் செல்லப் பெற்றனர் (எச 3:12). சிலர் வியக்கத்தக்க வகையில் இடம்விட்டு இடம்மாறும் இடப்பெயர்ச்சித் திறம் பெற்றனர் (1 அர 18:12). வரவிருக்கும் மீட்பருக்கு வாக்களிக்கப்பட்ட கொடைகளைப் பொதுவாக ஆவியாருக்கு உரித்தாக்குகிறார் இறைவாக்கினரான ஏசயா (ஏச 11:2). கல்லான இதயத்தைக் கனிய வைப்பவர் ஆவியார் என உணர்த்துகிறார் எசக்கியேல் (எச 36:26 தொ). ஆவியாரின் கொடைகள் எல்லா இனத்தவர் மேலும் பொழியப்படும் என அருட்கொடைகளின் பொதுமைப்பண்பை விளக்குகிறார் யோவேல் (யோவே 3:1 தொ). தொடக்ககாலத் திருச்சபையில் தூய ஆவியின் கொடைகள் பற்றிய அனுபவத்தைப் புரிந்துகொள்ள, மேற்கூறப்பட்ட இறுதிக்காலம் பற்றிய வாக்குறுதிகளை மனத்தில் கொள்ள வேண்டும். ஏனெனில், இக்கொடைகள் எல்லாம் திருச்சபையின் தொடக்கக் காலத்தில் நிறைவேறின. இளந்திருச்சபை ஆவியாரின் கொடைகளை முழுவதும் பெற்று அனுபவித்தது. ஏனெனில் திருச்சபையே இவ்வாக்குறுதிகளின் நிறைவாகும்.

1. அப்போஸ்தலர் பணிநூலில்:- ஐம்பதாம் நாள் விழாவை அருட்கெடை வழங்கு விழாவின் தொடக்க நாளாகக் கொள்ளலாம். அன்று ஆவியார் தம் கொடைகளின் வழியே தம்மை வெளிப்படுத்துகிறார் (அ.ப. 2:15-21). அன்று அப்போஸ்தலர்கள் இறைவாக்கினரால் முன்னறிவிக்கப்பட்டதற்கேற்ப இறைவனின் இணையற்ற செயல்களைப் பல்வேறு மொழிகளிலே எடுத்தியம்புகின்றனர் (2:4. 8-11). ஆவியாரின் வருகை கிறிஸ்துவின் வெற்றியை அறிவிக்கின்றது. கிறிஸ்து கடவுளின் வல்லமையால் உயர்த்தப்பெற்று, வாக்களிக்கப்பட்ட ஆவியாரைத் தந்தையிடமிருந்து முதல் கொடையாகப் பெற்றுப் பொழிகின்றார் (2:33). அதன் பிறகு ஆவியார் பல்வேறு வழிகளில் தம்மையே வெளிப்படுத்துகிறார். ஐம்பதாம் நாள் விழா நிகழ்ச்சிகள் பல்வேறு விதங்களில், சிறப்பாகத் திருமுழுக்குப் பெற்ற பின், கைகளை விரித்து வேண்டி நிற்கும்போது (8:17 தொ; 19:6) தொடர்ந்து நடைபெறுகின்றன (4:31; 10:44 தொ). இறை

வாக்கினரின் செயல்களிலே (11:27 தொ; 15:32; 21:10), போதகர்களின் பணியிலே (13:1 தொ), நற்செய்தியை அறிவிப்போரின் பணியிலே (6:8 தொ), தம்மை வெளிப் படுத்துகிறார். தொண்டர்கள் ஆற்றிய அருங்குறிகளிலேயும் (6:8; 8:5 தொ), அவர் கள் கண்ட அருங்காட்சிகளிலேயும் (7:55) தம்மை வெளிப்படுத்துகிறார். இந்த அருங்கொடைகள் எல்லாம் முதலில் அப் போஸ்தலர்களுக்கு வழங்கப்படுகின்றன. அவர்களுடன் தொடர்புடைய மற்றவர் களிடத்திலும் இக்கொடைகளைக் காண்கி றோம். சில குறிப்பிட்ட பணிகளுக்காக நியமிக்கப்பட்டவர்களுக்கு அருட்கொடை கள் வழங்கப்படுகின்றன (ஸ்தேவான், பிலிப்பு, பார்னபா). எல்லா அருட் கொடைகளும் தூய ஆவியின் ஏவுதலால் விசுவாசிக்கும் திருச்சமூகத்தின் பொது நலனுக்காகவே தூய ஆவியானவரால் வழங்கப் பெறுகின்றன.

2. பவுல் நிறுவிய திருச்சபையியல்:– பவுல் உருவாக்கிய பழந்திருச்சபையில் அருட்கொடை அனுபவம் அன்றாட நிகழ்ச்சியாக விளங்குகிறது. அவர் அறி வித்த நற்செய்தியை ஆவியாரின் ஆற்ற லும் அருங்குறிகளும் உறுதிப்படுத்துகின் றன (1 தெச 1:5; 1 கொரி 2:4). அவர் பரவ சப்பேச்சு வரம் பெற்றிருக்கிறார் (1 கொரி 14:18), ஆண்டவரின் அருளினால் அரிய காட்சிகளையும் வெளிப்பாடுகளையும் காண்கிறார் (2 கொரி 12:1–4). தங்களுள் நடை பெறும் வியத்தகு செயல்களைக்கண் கூடாகக் கண்ட மக்கள், தாங்கள் ஆவிய ரைப் பெற்றுக்கொள்வதை அறிகின்றனர் (கலா 3:2–5). அத்துடன் அவர்கள் பெற்ற பல திறப்பட்ட கொடைகளும் இவ்வுண் மைக்குச் சான்றாய் விளங்குகின்றன (1 கொரி 1:7). பவுல் தன்னுடைய அப் போஸ்தலப் பணியைத் தொடங்கிய காலத் திலிருந்தே அருட்கொடைகளை அரிய செல்வமாகப் போற்றுகிறார். அவற்றின் தூய்மையைப்பாதுகாக்க அரும்பாடுபடு கின்றார். அனைத்தையும் சீர்தூக்கிப் பார்த்து நல்லவற்றை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று வலியுறுத்துகிறார். "தேவ ஆவியை அணைத்துவிட வேண்டாம். இறைவாக்குகளை புறக்கணிக்க வேண் டாம். அவை அனைத்தையும் சீர்தூக்கிப் பார்த்து நல்லதையே ஏற்றுக்கொள்ளுங் கள். தீமையான எல்லாவற்றையும் விட்டு வி...குங்கள்" (1 தெச 5:19–22). இந்த அருட் கொடைகளினால் நடைமுறையில் சில சிக்கல்கள் எழுகின்றன. பவுல் அவற்றிற் குத் தம்முடைய திருமுகங்களில் தீர்வு காணுகின்றார்.

II திருச்சபையில் அருட்கொடைகள்:-

கொரிந்து நகரிலே வளர்ந்த திருச் சபையில் பரவசப்பேச்சு நிறைந்து காணப் படுகின்றது. இதனால் வேண்டாத விளை வுகள் சில தோன்றுகின்றன (1 கொரி 12–14). மக்களிடையே மிகுந்து காணப்பட்ட மறை ஆர்வம், பரவசப் பேச்சாய் பல மொழிகளில் வெளிப்படுகிறது (காண். அ.ப 2:4). ஆனால் அப்பேச்சு பொருள் புரியா புதிராய் ஒலிக்கிறது. அதனால் சபையிலே சில குழப்பங்கள் முளைக் கின்றன. அவர்கள் ஆவியாரின் நிறை வால் பேசுகின்றனர்; ஆனால் அடுத்து நின்று கேட்பவர்கள் அது மது தந்த மயக்கம் என்றும் (அ.ப. 2:13), ஏன், அவர் களுக்குப்புத்தி பேதலித்துவிட்டது என்றும் கூட முடிவுகட்டுகின்றனர் (1 கொரி 14:23). இந்தப் பரவசப்பேச்சு, புறமறையினரி டையே வெறியாட்ட வழிபாட்டை ஒருவிதத் தில் ஒத்திருப்பதால் தவறான எண்ணங் களுக்கு வழிவகுக்கின்றது. தூய ஆவியா ரின் தூண்டுதலுக்கும் தீய ஆவிகளின் ஆட்டங்களுக்கும் வித்தியாசம் காண இய லாத சிலர் பொறுப்பற்ற விதத்தில் நடக்க வும் ஏதுவாகிறது (1 கொரி 12:1 தொ). இத் தகைய நடைமுறைச் சிக்கல்களுக்கெல் லாம் தீர்வுகாண விழையும் பவுல் தர்க் கத்தை உயர்நிலைக்கு உயர்த்தி மிகவும் பொதுத் தன்மையுடைய கோட்பாட்டை எடுத்துக்கூறுகிறார். அவைபின் வருபவை யாகும்.

1) அருங்கொடைகளின் ஒற்றுமையும் வேறு பாடும்:- திருச்சபையின் திருப்பணி கள் பல; உறுப்பினர்களின் செயல்திறன் கள் பல; அதுபோல ஆவியாரின் அருட் கொடைகள் பல. இந்தப் பன்மையிலும் ஒப்பற்ற ஓர் ஒற்றுமையைக்காண்கிறோம். திருப்பணிகள் ஒரே ஆண்டவரிடமிருந்து வருகின்றன. ஆற்றல் மிகு செயல்கள் ஒரே இறைவனிடமிருந்து வருகின்றன;

அதுபோல் அருட்கொடைகள் அனைத்தும் ஒரே ஆவியாரிடமிருந்து வருகின்றன (1 கொரி 12:4 தொ). வெவ்வேறு அருட்கொடைகளைப் பெற்ற மக்கள் யாவரும் இறைவனது அருளின் சீரிய கண்காணிப்பாளர்கள். இந்த ஒரே அருள் பல பண்புகளைத் தோற்றுவிக்கின்றது (1 பேதுரு 4:10). பல்வேறு உறுப்புகள் ஒரே உடலின் நலனுக்காகச் செயல்படுகின்றன. அதேபோலப் பல்வேறு அருட்கொடைகள் ஒரே நோக்கில் இயங்குகின்றன: திருச்சமூகத்தின் பொது நலனே அவற்றின் இலக்கு (1 கொரி 12:7). உடலின் உறுப்புகள் உடலின் நன்மைக்காக ஒத்துழைப்பது போல் அருங்கொடைகள் யாவும் கிறிஸ்துவின் உடலாகிய திருச்சபையின் பயனுக்காக ஒன்று சேர்ந்து செயல்படுகின்றன (1 கொரி 12:12–27). இக்கொடைகளைத் தூய ஆவியானவர் ஒவ்வொருவருக்கும் பகிர்ந்தளிக்கின்றார் (12:11). அதே நேரத்தில் இது கிறிஸ்துவின் பணியுமாகும். ஒவ்வொருவரின் தகுதியறிந்து அவர் அருள் வழங்குகிறார் (எபே 4:7–10). இக்கொடைகள் நம் ஒவ்வொருவருக்கும் வழங்கப்பட்டாலும், அவை பொது நன்மைக்கே என்பதை நாம் உணரவேண்டும்.

2) அருட்கொடைகளின் வகைகள்:- பவுல் தமது திருமுகங்களில் பல்வேறு அருட் கொடைகளைக்குறிப்பிடுகின்றார் (1 கொரி 12:8 தொ. 28 தொ; உரோ 12:6 தொ; எபே 4:11; காண். 1 பேதுரு 4:11). அவற்றை அவர் தரம் வாரியாகப் பிரித்து வரிசைப் படுத்திக் கூறாவிடினும், அவற்றின் பயன் நோக்கிப் பல வகையாகப் பிரிக்கலாம். சில அருட்கொடைகள் திருப்பணிகளுடன் உறவுகொண்டவை (காண். எபே 4:12); இப்பணிகளில் அப்போஸ்தலப்பணி, இறைவாக்குரைக்கும் பணி, போதிக்கும் பணி, நற்செய்தி விளக்கப்பணி, மேய்ப்புப் பணி ஆகியவை திருப்பணிகளுள் அடங்கும் (1 கொரி 12:28; எபே 4:11). மற்றும் சில அருட்கொடைகள் திருச்சபையின் நலனுக்குத்துணை நிற்கின்றன. ஊழியம் புரிதல், போதித்தல், ஊக்கமூட்டுதல், இரக்கச் செயல்கள் (உரோ 12:7 தொ), ஞானம் நிறைந்த பேச்சு, அறிவு செறிந்த பேச்சு, முனைப்பான விசுவாசம், நோய்களைக் குணமாக்கும் வரம், புதுமை செய்யும் ஆற்றல், பல்வகைப் பரவசப் பேச்சு, ஆவிகளைத் தேர்ந்து தெரியும் திறன் (1 கொரி 12:8 தொ) ஆகியவை இவ்வகையைச்சாரும்

இத்தகைய அருட்பணிகள் ஆவியாரின் தூண்டுதலால் நடைபெறுகின்றன; ஆட்கொள்ளும் ஆவியாரின் ஆற்றலை வெளிப்படுத்துகின்றன. ஆனால் ஒவ்வொரு கொடையும் ஒரு குறிப்பிட்ட திருச்சபை பணிக்கு மட்டும் உரியதன்று. அதுமற்றொரு அலுவல் செய்பவரிடமும் காணப்படலாம். இவ்வாறு பவுல் ஓர் அப்போஸ்தலர். அதேநேரத்தில் அவர் பரவசப் பேச்சு வரம் பெற்றிருக்கிறார்; அருங்குறிகளும் ஆற்றுகிறார். இறைவாக்கு வரம் எல்லோருக்கும் கிடைக்கக்கூடியது எனக் கூறப்படுகிறது (1 கொரி. 14:29 தொ. 39 தொ). அதே நேரத்தில் அது திருச்சபையின் முறைப்பணியாகவும் கருதப்படுகிறது (1 கொரி 12:28; எபே 4:11). கிறிஸ்தவர்களின் குறிப்பிட்ட அழைப்பும் அருட்கொடையையே அடிப்படையாகக் கொண்டு அமைகின்றது. இவ்வாறு ஒருவர் துறவு நிலைக்கு அழைக்கப்படுகின்றார்; மற்றவர் வேறொரு கொடையைப் பெறுகிறார் (1 கொரி 7:7). இறுதியாக, கொடைகளுள் சிறந்த கொடையாகிய அன்பு என்னும் கிறிஸ்தவப் பண்பும் ஆவியாரின் அருட்கொடையையே (1 கொரி 12:31–14:1). கிறிஸ்தவ வாழ்விலே அருங்கொடைகள் தனிச் சிறப்புடையவை அன்று. கிடைத்தற்குரிய இயல்பு கடந்த பொருளன்று. புதுமைகள் புரிதல்போன்ற சிலகொடைகள் நம்முடைய அன்றாட வாழ்விற்கு அப்பாற்பட்ட தனிச்சிறப்புடையனவையாக இருக்கலாம்; இருப்பினும் தனிக்கிறிஸ்தவனின் வாழ்வும், திருச்சபையின் பொதுப்பணிகள் அனைத்தும் இந்த அருட்கொடைகளையே சார்ந்துள்ளன. புதிய இறை மக்கள் மீது இறைவன் தம் ஆவியாரை அளவின்றிப் பொழிகின்றார். ஆவியார் தம் அருட் கொடைகளின் வழியே அவர்களை ஆண்டு நடத்துகிறார். சிலருக்குத் தம் பணிகளைத் திறம்பட ஆற்ற அருளும் ஆற்றலும் நல்குகிறார்; மற்றும் சிலருக்குத் தங்களுடைய அழைத்தலுக்குச் செவிமடுக்கவும், திருச் சமூகத்தின் முன்னேற்றத்திற்காகப் பாடு

படவும் அதனால் கிறிஸ்துவின் உடலாகிய திருச்சபையைக் கட்டி எழுப்பவும், தேவையான வரங்களைப் பொழிகின்றார் (எபே 4:12).

3) அருட்கொடைகளைப் பயன்படுத்தும் முறை:- ஒருவரும் ஆவியை அணைத்து விடக்கூடாது: ஆனால் அருங்கொடைகளையும் (1 தெச 5:19 தொ) ஆவிகளையும் (1 யோவா 4:1) சீர்தூக்கிப் பார்த்து மெய்யானவற்றையே ஏற்றுக்கொள்ளவேண்டும். இவ்வாறு சீர்தூக்கி ஆய்ந்தறியும் திறனும் ஓர் அருட்கொடையாகும் (1 கொரி 12:10). அது அவசியமானதுமாகும். ஒரு கொடை உண்மையானதா அன்றிப் போலியானதா எனக் கண்டறியச் பவுலும் யோவானும் ஒழுங்குகளை வகுத்துத் தருகின்றனர். உண்மையான கொடைபெற்றவன் 'இயேசு ஆண்டவர்" என அறிக்கையிடுகிறார் (1 கொரி 12:3). ஊன் உருவில் வந்த கிறிஸ்துவை ஏற்றுக்கொள்ளச் செய்யும் ஏவுதல் எல்லாமே கடவுளிடமிருந்து வருகின்றது (1 யோவா 4.2). இதைக் கொண்டு எதிர்க் கிறிஸ்துவால் தூண்டப்பெறும் போலித் தீர்க்கதரிசிகளை நாம் அடையாளம் கண்டுகொள்ளலாம் (4:3; காண். 1 கொரி 12:3). மேலும் அருட்கொடைகள் திருச்சமூகத்தின் நலனுக்காகவே, பொது நன்மைக்காகவே அருளப்படுகின்றன (1 கொரி 12:7). இன்னும், இவை திருச்சபை அதிகாரிகளையும் மதிக்கவேண்டும். திருச்சபையின் பணிகளிலே பல தரங்கள் இருக்கின்றன. அவற்றுள் முதன்மையாக அப்போஸ்தலர்கள் விளங்குகின்றனர் (1 கொரி 12:28; எபே 4:11). இப்பணிகளை யாரும் வெளிப்பகட்டுக்காக நாடக் கூடாது. அவற்றால் விளையும் பொது நலன் கருதியே அவற்றை ஏற்கவேண்டும். அன்பை முதலில் தேடவேண்டும்; அதன் பின் ஆவிக்குரிய வரங்களை ஆவலோடு தேடலாம்; இவற்றில் முதலிடம் பெறுவது இறைவாக்குரைத்தலாகும் (1 கொரி. 14:1). இறைவாக்கு வரம் பரவசப் பேச்சுக் கொடையை விட உயர்ந்தது. பொங்கும் உணர்வுகள் பரவசப் பேச்சாக வெளிப்படும்போது, அவற்றின் பொருள் யாருக்கும் புரிவதில்லை; அவை துர்மாதிரியாகவும் அமைந்துவிடுகின்றன. இதனால் திருச்சமூகத்தின் முன்னேற்றமும் பாதிக்கப்படுகின்றது. திருச்சபையின் முன்னேற்றம் முக்கியமானதாகும் (1 கொரி 14:2–25; காண்க. 1 பேதுரு 4:1 தொ). உண்மையான அருங்கொடைகள் நடைமுறைக்கேற்ற சில நடைமுறை ஒழுங்குகளுக்குக் கட்டுப்பட்டிருக்கவேண்டும். அப்போதுதான் வழிபாட்டுக்கூட்டங்களில் கட்டுப்பாடு நிலவும் (1 கொரி 14:33). புவல் கொரிந்தியத் திருச்சபைக்கு கண்டிப்பாகக் கடைபிடிக்க வேண்டிய சில நடைமுறை ஒழுங்குகளையும் வழங்குகிறார் (1 கொரி 14:26–38).

4) அருங்கொடைகளும் திருச்சபை அதிகாரமும்:- இவ்வாறு அப்போஸ்தலர்களின் அதிகாரம் ஆவியாரின் ஆட்சிக்குரிய அருட்கொடைகளின் எல்லைக்குள்ளும் செல்லக் காண்கிறோம். அருட்கொடைகள் திருச்சபையின் அதிகாரத்திற்கு என்றும் கட்டுப்பட்டிருந்திருக்கின்றன (காண் 1 யோவா 4:6). அப்போஸ்தலக் கொடை அருட்கொடைகளுள் உயர்ந்தது. எனவே அப்போஸ்தலர்கள் உயிருடன் இருந்த காலம்வரை அப்போஸ்தலத்துவம் முதன்மையான அருட்கொடை என்பதிலிருந்து அவர்களே அருங்கொடைகள் பற்றிய எல்லா அதிகாரமும் பெற்றிருக்கின்றனர். அவர்கள் மறைவிற்குப்பின் அவர்களுடைய வழிவருவோர் அந்த அதிகாரத்தின் பங்குபெறுகின்றனர். பவுலின் திருமுகங்கள் இவற்றைத் தெளிவுபடுத்துகின்றன (1 திமோ 1:18–4 : 16). அப்போஸ்தலர்களின் வழித்தோன்றல்கள் தலைமேல் கரம் விரித்துவேண்டும் சடங்கின் வழியே ஆவியின் குறிப்பிட்ட கொடையாக இந்த அதிகாரத்தைப் பெறுகின்றனர் (1 திமோ 4:14; 2 திமோ 1:6). அப்போஸ்தலராக இருக்கும் அருங்கொடையை அவர்கள் பெறாவிட்டாலும் ஆட்சிப்பொறுப்பு அருங்கொடையைப் பெற்றிருக்கின்றனர்; இதுவே அவர்களுக்குப் போதிக்கவும், ஆணையிடவும் அதிகாரம் வழங்குகின்றது (1 திமோ 4:11). இந்த அதிகாரத்தை யாரும் அவமதிக்கக்கூடாது (1 திமோ 4:12). திருச்சபையின் ஆட்சிமுறைக்கு மற்றவை எல்லாம் அடங்கியிருக்க வேண்டும். இந்த ஆட்சிமுறையும் அருட்கொடைகளின் அமைப்பைச் சேர்ந்ததுவே.

**அருதோன்** (ARDON – *தப்பி ஓடியவர்*)

யூதாவின் தலைமுறை அட்டவணையில் அருதோன் காலேபு, அசுபா ஆகியாரின் மூன்றாவது புதல்வராவார் (*1 நாள் 2:18*).

**அருபகசாது** (ARPACHSHAD)

சேமின் மூன்றாம் மகனும், ஏபேரின் பாட்டனும், எபிரேயரின் மூதாதையரும் ஆவார் (*ஆதி 10:22; 11:10–13; 1 நாள் 1:17–18*) இப்பெயரின் சொல்லிலக்கணம் பற்றிக் பொதுக்கருத்து ஒருமைப்பாடு இல்லை யென்றாலும், பல அறிஞர்கள் இப் பெயரை அக்காதிய அர்ராபு, வட கிழக்கு இராக்கிலுள்ள இக்கால கிர்குக்கோடு அடையாளம் காட்டுகிறதற்கு ஆதரவு அளிக்கிறார்கள்.

**அருபோத்து** (ARUBBOTH – *பாலைவனம்*)

மாதம் ஒரு மாவட்டமாக சாலமோனின் அரண்மனைக்கு உணவுப் பொருள்கள் அளிக்க வேண்டிய 12 மாவட்டங்களின் ஒன்றின் நகரம் (*1 அர. 4:10*).

தற்போதைய ஆய்வின்படி மனாசேயின் பகுதியில் மெகிதோவுக்கும், சமாரியாவுக்கும் இடையில் உள்ளது அருபோத்து எனக் கருதப்படுகிறது. இந்த மாவட்டம் மனாசேயின் பகுதியோடு ஒன்றானதாக இல்லாவிடினும் சாலமோன் வரி வசூலிப்பிற்காக மாகாணங்களைப் பிரித்து வகைப்படுத்தியபோது பழைய குலப் பெயர் அழிக்காமல் காத்து வந்திருக்கிறார் என்பதைக் காட்டலாம்.

சமாரியாவிற்கு 14 கி.மீ. தொலைவிலும் வடக்காக இன்று காணப்படும் 'அர்ராபே' தான் அன்றைய அருபோத்தாக இருக்கலாம் என சில அறிஞர்கள் கருதுகின்றனர். இவ்விடம் செப்பேலாவுக்குத் தெற்கில் அமைந்திருக்கலாம். *1 மக் 5:23*–இல் இந்நகரம் அர்பத்தா என்றழைக்கப்படுகிறது.

**அருமா** (ARUMAH – *வெட்கம், இழிவு*)

செக்கேமிலிருந்து விரட்டியடிக்கப் பட்ட பிறகு, எருபாகாலின் (கிதயோன்) மகனான அபிமெலக்கு தங்கிய இடமாகும் இது (*நீதி. 9:41*). இதன் சரியான இருப்பிடம் இன்னும் தெளிவாக நிர்ணயிக்கப்படவில்லை. ஆனால் செக்கேமுக்குத் தென்கிழக்கில் 8 கி.மீ. தொலைவிலுள்ள இப்போதைய எபெல்–ஓர்மே என்ற இடமாக இருக்கலாம்.

இவ்விடத்திலிருந்து எடுக்கப்பட்ட உடைந்த பாண்டங்கள், நீதிபதிகள் காலத்தில் இங்கு ஒரு குடியிருப்பு இருந்ததாகக் காட்டுகின்றன. தனித்து நின்ற இந்த செங்குத்தான குன்றிலிருந்து அபிமெலக்கு, தனக்கு எதிராகக் கிளர்ச்சி செய்த செக்கேமை நன்கு பார்க்கக்கூடும்.

**அருவருப்பு** (ABOMINATION)

சடங்கு முறைகளிலும், ஒழுக்கத்திலும் வெறுப்பூட்டுகின்ற, இறைவனும் மனிதனும் விரும்பாத செயல். கீழ்காணும் நான்கு சொற்கள் இந்தத் தலைப்பை தெளிவாக விளக்குகின்றன.

*அ)* வெறுக்கப்படுதல்:– இந்த வார்த்தை உப ஆகமம், பழமொழி, எசக்கியேல் ஆகிய நூல்களில் அடிக்கடி வருகின்றது. இது ஏற்றுக்கொள்ளப்பட்ட பழக்க வழக்கங்களை மீறுதலையும் (*ஆதி 43:32; 46:34*), அசுத்தமென தடை செய்யப்பட்ட உணவையும், குறைபாடான பலிகளையும் (*உப 17:1; 23:18; பழ 15:8;21:27; ஏச 1:13; 44:19*), மந்திரம், குறி கூறுதலையும் (*உப 18:12*), காமவெறியாட்டங்களையும் (*லேவி 18:22; உப 24:4; எச 16:22*), ஒழுக்கக்குறைபாடுகளையும் (*உப 25:14–16; பழ 3:32; ஏச 41:24*), இயற்கைக்குப் புறம்பாக நடப்பதையும் (*உப 22:5; பழ 16:12*), சிலை வழிபாட்டையும் (*லேவி 18:27; உப 12:31*) அருவருக்கப்படவே வேண்டியது எனக்கூறுகிறது. இத்தகைய செயல்களுக்கு பலன் கடவுளின் கோபமும், நீதித் தீர்ப்பும், தண்டனையுமாகும் (*எச 7:3–4; 20:4*).

*ஆ)* அருவருத்தல்:– இந்த வார்த்தை விலங்குகளின் இறைச்சியைச் தொடுவதால் அது தீட்டு உண்டாக்குதலைக் குறிக்கும் (*லேவி 7:21; ஏச 6:17; எச 8:10*).

*இ)* வெறுக்கப்பட வேண்டிய பொருள்கள்: இந்தச்சொல் சிலை வழிபாடு, புறவினத்தார் தெய்வ வழிபாட்டுடன் இணைந்த பொருட்களைக் குறிக்கிறது (*உப 29:17; 1 அர 11:57; 2 அர 23:13; ஏச 66:3*) காண்க. பாழாக்கும் அருவருப்பு, சிலை.

*ஈ)* நாற்றமடைந்த பொருட்கள்:– இச்சொல் முதல் நாள் ஒப்புக் கொடுக்கப்

பட்ட. பலியின் இறைச்சியை மூன்றாம் நாள் உண்ணக்கூடாது. ஏனெனில் அது நாற்ற மடைந்த பொருள் எனக்கூறுகிறது (லேவி 7:18; எச 4:14). இரத்தமுள்ள இறைச் சியிலிருந்து தயாரிக்கப்பட்ட சாறும். அறு வறுக்கப்பட வேண்டியது (ஏச 65:4).

இந்த அருவருப்பு பெரும்பாலும் அறிவு சார்ந்த உணர்வாய் இருந்த தில்லை. இவ்வாறு எகிப்தியர் ஆடு மேய்ப் பவர்களை மிகவும் வெறுத்தனர் (ஆதி 46:34). இவர்கள் எபிரேயரோடு சாப்பிட மாட்டார்கள், அப்படிச் சாப்பிடுவது தீட் டென்று எண்ணினர் (43:32). இஸ்ராயே லரும் சில குழுவினரை வெறுத்தனர். ஆனால் அவர்களது உறவு இனத்தவரான ஏதோமியரை, எகிப்தியரிடையே வாழ்ந்தி ருந்தாலும், அவர்களையும் வெறுக்க வில்லை (உப 23:7). நோயுற்றவரும், (சங் 88:8) துன்புற்றவரும் (யோபு 19:19) அருவருக் கப்படுவார். அவருக்கு முன்பு அளிக்கப் பட்ட மரியாதை அளிக்கப்படாது. எகிப்தி யர் வழிபடுவனவற்றை அவர்கள் முன் இஸ்ராயேலர் பலி செலுத்தமுடியாது. ஏனெனில் எகிப்தியர் அதை வெறுத்தனர் (யாத் 8:26). எபிரேயரின் தடைசெய்யப்பட்ட உணவுப் பட்டியல் அருவருப்பையும், அசுத்தமானவைகளையும் நெருங்கியவிதத் தில் இணைக்கிறது (உப 14:3–20; லேவி 11:2–23). இந்த அருவருப்பு இயற்கையான வெறுப்பை அடிப்படையாகக் கொண்டி ருக்கவில்லை. மதிப்புச்சத்தை அடிப்படை யாகக் கொண்டது. ஏனெனில் அசுத்த விலங்குகள் புற இனத்தவரின் இறைத் தன்மையுள்ளவையாகும். நாடு கடத்தப் பட்ட காலத்தில், உணவு ஒழுங்குகளை அனுசரிப்பது யூதர்களை வேறுபடுத்திக் காட்டும் அடையாளாகியபோது, அரு வருப்பின் மூலப்பொருள் மறைந்து போயிற்று. குருக்கள் பாரம்பரியச் சட்டம், ஏன் சில விலங்குகள் தடைசெய்யப்பட்டன என்று அறிந்திருக்கவில்லை.

இந்த வளர்ச்சியற்ற அறிவு சாராத வெறுப்பு, சிலை வழிபாட்டோடு நெருங் கிய தொடர்பு கொண்டிருப்பதாகத் தெரி கிறது (உப. 32:16 தொ). மக்களை புற இனக் கடவுள்களை வணங்க ஈர்ப்பவர் களை உபாகமம் கண்டனம் செய்கிறது (13:13 தொ). இவர்கள் வாழும் நகரங்கள் முழுவதும் அழிக்கப்படவேண்டும். சபிக் கப்பட்டதாகக் கருதப்படவேண்டும். சிலை வழிபாடு, வாழ்வின் சரியான முறையை மாற்றி அமைக்கிறது. ஆண்டவருக்குரிய வழிபாட்டைப் பாழாக்குகிறது. பிறகடவுள் களையும் சூரியன், சந்திரன், விண்மீன் களையும் வணங்கும் அருவருப்பைச் செய் தவரைக் கல்லால் எறிந்து கொல்ல வேண்டும் (உப 17:4–5). ஏனெனில் அது உடன்படிக்கையை மீறுகிறது. அருவருப்பு என்ற சொல் சிலை வழிபாடுகளைக் குறிக்கும் மரபுச்சொல்லாகியது (2 அர 28:18; 21:2 தொ; எச 8:6 தொ; தானி 9:27; 11:31; 12:11). பலபகுதிகள் சிலை வழி பாட்டை ஒழுக்கப் பொறுப்பற்ற தன்மை யோடு இணைக்கிறது (எச 7:1–15; எரே 6:13–15) பாலினக் குற்றங்களும் ஒழுக்கக் குற்றங்களும் அருவருப்பாகக் கருதப்படு கின்றன. இவ்வாறு பாலினக் குற்றப்பட்டி யல் (லேவி 18:6–23) அவை வெறுக்கத்தக்க தீச்செயல்கள் என்று கூறுகிறது. பழ. 6:16–19 இறைவனுக்கு வெறுப்புத்தரும் ஏழு காரியங்களைக் குறிப்பிடுகிறது. இது குறிப்பாக அகந்தையைக்குறிக்கிறது "குற்ற மற்றவனைக் குற்றவாளி என்றும், குற்ற வாளியைக் குற்றமற்றவன் என்றும் தீர்ப் பிடுகிறவர்கள் இறைவனின் வெறுப்புக் குள்ளாகிறார்கள்" (பழ 17:15). ஏனெனில் இது நீதியின் தன்மை நெறி கோணச் செய்கிறது.

**அருளப்பர்** (JOHN). காண்க யோவான்.

**அருள்** – (GRACE)

மனிதனிடம் எத்தகுதியுமில்லாமல், இறைவன் அவனுக்கு அளிக்கும் கொடை, உதவி, சலுகையே அருளாகும். இது அவர் தம் மக்களுடன் செய்த உடன்படிக் கையால் செயல்படுவது. இறைமகன் இயேசுவிலே நிறைவேறுகிறது– தெய்வீகப் புத்துயிர் அளிப்பது; உந்துதல் அளிக்கும், பலமளிக்கும்ஆற்றலாகும்.

I 'அருள்' என்ற சொல்லின் பொருள்;– இச்சொல், முழுவதும் கிறித்துவ மதத் தால் உருவாக்கப்பட்டதல்ல. பழைய ஏற்பாட்டிலேயே இச்சொல் காணப்படு கிறது. ஆனால் புதிய ஏற்பாடு இதன் பொருளையும், அதன் விரிவாக்க விளக்க

தையும் நிர்ணயம் செய்தது. சட்டங்களால் கட்டுண்ட பழைய வாழ்க்கைக்கு மாறாக ஆண்டவர் அருளினால் இயேசு அமைத்த புதிய அமைப்பை இது குறிக்கிறது (உரோ 6:14 தொ; யோவா 1:17). அருளானது ஆண்டவர் அளித்த அனைத்துக் கொடைகளையும் குறிப்பாக அவர் தம் மகனையும் குறிக்கும் (உரோ 8:32). ஆனால் இது ஒரு கொடை மட்டுமன்று. இதில் கொடுப்பவரின் பெருந்தன்மை மிளிர்கிறது. பெறுபவரும் அதே பெருந்தன்மையால் நிறைவு பெறுகிறார். ஒரே சமயத்தில் கொடையின் மூலத்தையும் பெறுபவரில் ஏற்படும் விளைவுகளையும் குறிக்கிறது.

II. பழைய ஏற்பாட்டில் அருள்:- இறைமகன் இயேசுவிலே பெறவேண்டிய அருள் பழைய ஏற்பாட்டிலே வாக்குறுதி யாகவும், நம்பிக்கையாகவும் எடுத்துக் காட்டப்படுகிறது. பற்பல வடிவங்களிலும், பற்பல பெயர்களிலும் மனிதனையும் இறைவனையும் இணைக்கும் கருவியாக அருள் புதிய ஏற்பாட்டில் தோன்றுகிறது. பழைய ஏற்பாட்டைக் கிறிஸ்துவக் கண்ணோட்டத்தோடு படிக்கும்போது நாம் கடவுளது அருளின் செயல்களையும் பண்புகளையும் காணலாம்.

அருள் என்ற கருத்தை எடுத்துக் கூற மூன்று எபிரேயச் சொற்கள் பயன் பட்டுள்ளன. முதற்சொல், ஆதரவு என்று பொருள்படும் "கேன்" என்பதாகும். தாழ்ந்தோர் மேல் உயர்ந்தோர் (ஆதி 33:8 தொ), குறிப்பாக அரசர்கள், காட்டும் ஆதரவை இச்சொல் குறிக்கும் (1 சாமு 27:5; எஸ்த 5:8; ரூத் 2:2). இச்சொல் இறைவனோடு மனிதன் கொள்ளும் உறவை விவரிக்கப்பயன்பட்டுள்ளது. சாதாரணமாக, நீதிமான் அல்லது நீதிமானாக இருக்க முயல்கிறவன், இறைவனின் தயவைப்பெறுகிறான். அவர்தான் அவனுக்குத்தம் தயவை அளிக்கிறார். இச்சொல் இறையருளின் சுதந்திரத்தை (ஆதி 6:8; யாத் 33:12 தொ; எரே 31:2) அல்லது ஆசீர்பெறுபவரின் பண்புகளாகிய பிரமாணிக்கம் (பழ 3:4), தாழ்ச்சி (3:34; காண்க யாக் 4:6), நல்லறிவு (பழ 13:15) ஆகியவற்றை அழுத்திக் கூறும்.

ஆனால் 'கேன்' என்ற சொல், அருளைக் குறிக்கும் கிரேக்கச் சொல்லான 'காரிஸ்' என்பதின் புதியஏற்பாட்டுப் பொருளை நிறைவாக உணர்த்தவில்லை.

"கேன்" என்ற சொல்லோடு தொடர்புடைய மற்றொரு எபிரேயச் சொல் ("தயவாக இரும்" என்று பொருள்படும்) 'கேனன்' என்பதாகும். இது தேவையின் சூழ்நிலையில் தகுதியில்லாமலே மற்றொருவரிடமிருந்து ஆதரவு பெறும் செயலைக் குறிக்கும் இது அன்பை முன் கொள்கிறது (உப 7:7–8). ஆனால் அதை உரிமையாகக் கோரமுடியாது (யாத் 33:19). சங்கீத ஆசிரியர் தனிமையில் (சங் 25:16), பசியால் (111:4–5), பாவத்தால் (51:1) வருந்தும்போது தன்மீது தயை கூறும்படி கூவி அழைக்கிறார். இறைவன் தீர்ப்பில் இந்தத் தயவை மறுக்கிறார் (உப 7:2; ஏச 27:11). ஆயினும் மனம் வருந்துவோருக்குத் தயவு காட்டுகிறார் (ஆமோ 5:15). தமக்காகக் காத்திருப்போருக்குத் தயவுகாட்டுவதில் ஆண்டவர் பெருமை கொள்கிறார் என ஏசயா அறிவிக்கிறார் (ஏச 30:18). இறைவனின் தயவே நம்பிக்கையின் (ஆதி 43:29; எண் 6:25), போற்றுரையின் (சங் 67) குறிக்கோளாகும்.

கிரேக்க "காரிஸ்" என்ற சொல்லுக்கு நெருங்கிய எபிரேயச் சொல், இரக்கம், நிலையான அன்பு என்று பொருள்படும் "கெசேத்" என்பதாகும். இறைவன் அவ்வப்பொழுதுதான் ஆதரவு காட்டுவதில்லை. அவர் தமது மக்களோடு தொடர்ந்து உறவு கொள்கிறார். மக்களிடையே, இச்சொல், உறுதிசெய்யப்பட்ட பிரமாணக்கத்தை உணர்த்தும் (ஆதி 47: 29). இது அன்புச் செயல்களால் (யோசு. 2: 12; ரூத் 3:10) அல்லது உடன்படிக்கையால் (1 சாமு 20:8) தோன்றுவது. ஒன்று மற்றதை உள்அடக்கும் (ஆதி 21:23; 1 அர 20:3 தொ). இறைவனது இரக்கம், கடமையிலிருந்து வருவதன்று. அவரது அன்பிலிருந்து வருகிறது. அவர் நிலைத்திருக்கும் அன்பில் உலகைப்படைத்தார் (சங் 136:4–9). அவரது அருளால் பூமி நிறைந்துள்ளது (33:5; 119:6:4). ஒன்றுமில்லாமல் இருந்த மக்களோடு அன்பு கூர்ந்து உடன்படிக்கை செய்கிறார் (உப 7:6–9); அவர்

களுக்கு விடுதலை அளிக்கிறார், தமது சட்டத்தை அளிக்கிறார் (யாத் 20:2–6). இந்த அருள், மக்களை உடன்படிக்கைப் பிரமாணிக்கத்திற்கும் (எண் 14: 18–19), ஒருவர்க்கொருவர் இரக்கம் காட்டவும் (மீக் 6:8; சங் 109:16) அழைக்கிறது. இஸ்ரா யேல் தவறிப்போனபோது (ஓசே 6: 4.6), அவர் எப்போதும் இரக்கமுள்ளவராக இருக்கிறார். மனம் வருந்தித் திரும்பு வோரை வரவேற்கிறார் (ஓசே 10:12; சங் 51). இறைவனது "கெசேத்"தை அறிக்கையிடும் சங்கீதங்களில் அருள் நிறைந்திருக்கிறது (சங் 136). அடிக்கடி பிரமாணிக்கத்தோடு இணைந்து அருள் கூறப்படுகிறது. இது வரலாற்றில் அனுபவித்த மீட்பு அருளா கும். இஸ்ராயேல் பாவம் செய்தாலும் இது தொடர்கின்றது (106:1.7). நம்பிக்கை அளிக்கிறது (107:39–43). தேவைகளின் போதும் (31:7), சாவின் முன்கூட (86:13) நம்பிக்கை அளிக்கிறது. விசுவாசிகளின் வாழ்வை அருள் தொடர்கிறது (23:6). அதற்கு முடியாக அமைகிறது (103:4).

யாத் 34–இல் இம் மூன்று சொற்களும் சேர்ந்து வருகின்றன. இறைவன் இஸ்ரா யேலை மீட்டவராக (34:14), உடன்படிக்கை செயபவராக (34:10) தம்மையே அறிவிக் கிறார். தமது மக்களின் துன்பத்தில் தயவு (கேன்) நிறைந்தவர். பேரன்பும் (கெசேத்) பிரமாணிக்கமும் மிக்கவும் (34:6). அவர் தமது உடன்படிக்கைக்குப் பிரமாணிக்கம் உள்ளவர். ஆயிரம் தலைமுறைக்கும் தம் மக்களின் கொடுமையையும் குற்றத்தையும் பாவத்தையும் மன்னிப்பவர். இறைவ னைப் போற்றுவதற்கும் (சங் 86:15; 103:8) மனந்திரும்புதலை எடுத்துக்கூறவும் (யோவேல் 2:13; மீக் 7:18; காண்க. யோனா 4:2) உடன்படிக்கையைப் புதுப்பிக்கவும் (2 நாள் 30:9; நெக 9:17) இதே சொற்களை இஸ்ராயேல் பயன்படுத்துகிறது. இந்த அருளைத்தான் இயேசு நிறைவு செய்கி றார் (யோவா 1:16).

2. கடவுளின் அருள்:- கடவுள் தம்மை அன்பின் கடவுளாக, அருளின் கடவுளாக வர்ணிக்கிறார் (யாத் 34:6). அவரது அருள் துயருறுவோர்க்கு ஆறுதலாகும், அவருடை யவர்களுக்கு அளவற்ற நம்பிக்கையாகும். அவருடைய ஒப்பந்தங்களில் அசைக்க முடியாதஉறுதியாகும். அவர் அன்பு செய் பவர்களுக்குக் காட்டும் இதயபாசமும் பற்றுதலுமாகும். படைப்புகளின் உரிமை களின் நிறைவை உறுதி அளித்து அவர் களில் ஆவல்களை நிறைவு அளிக்கும் வற்றாத நீதியாகும். அவரது அருளின் விளைவாக ஆண்டவர் சமாதானமாகவும் மகிழ்ச்சியாகவும் விளங்குகிறார். அவரது அருள் உயர்மதிப்புள்ளது (சங் 36:7 தொ). அவரது அருள் உயிரைக்காட்டிலும் மேலானது (சங் 63:4). எனவே ஆண்டவ ரின் அருள் நமது அனுபவங்கள் அனைத் தையும் காட்டிலும் மேலானது, நிறை வானது.

3. இறையருளின் வெளிப்பாடு:- ஆண்ட வரின் தாராளம் எல்லாப் படைப்புகளி லும் பரவி இருக்கிறது. அவரது அருள் பாதுகாக்கப்பட்ட புதையலாக இருப்ப தில்லை. இஸ்ராயேல் தேர்ந்தெடுக்கப்படு வதிலே, அழைப்பிலே, ஆண்டவரது அருளின் தாராளத்தின் அடையாளம் வெளிப்படுகிறது. அவர் அவர்களைத் தாமே விரும்பித் தேர்ந்தெடுத்தார். அவர் கள் எண்ணிக்கையில் அதிகமானவர்க ளாகவோ (உப.7:7) நல்ல நடத்தையுள்ளவர் களாகவோ (9:4) புயவலிமையுடையவர்களா கவோ (8:17) இல்லை. இறைவன் அவர் களைத் தேர்ந்தெடுக்கக் காரணம் அவர் அவர்கள் மேல்கொண்ட அன்பும், அவர் களுடைய மூதாதையர்க்குத்கொடுத்த வாக் குறுதியுமே ஆகும் (7:8; 4:37). இஸ்ராயேலின் தோற்றத்திற்கு, தமது உடன்படிக்கைக்கும் அன்புக்கும் அவர் காட்டும் பற்றுறுதி ஒன்றே விளக்கமாகும் (7:9); அருளின் அடையாளம் இந்த ஆண்டவர் அவர் களுக்குத் தந்த பாலும், தேனும் பொழியும் நாடாகும் (8:7; 11:11; 6:10 தொ). இந்தக் கொடை எவ்வித நோக்கமுமில்லாமல் தரப்படுவதல்ல. தேர்ந்தெடுத்தல் உடன் படிக்கைக்கு இட்டுச்செல்கிறது. அரு ளைப் பெறுபவர் அன்பையும் நன்றிக் கட்டுப்பாட்டையும் கொண்டு ஒழுக வேண்டியது அவசியம். இதுதான் உப ஆகமத்தின் போதனையாகும் (உப 6:5; 10:12 தொ). இறைவனின் அருள், பங்காளிகளை யும் ஒரு பரிமாற்றத்தையும் ஒன்றிப்பையும் தேடுகிறது.

*4.* தேர்ந்தெடுக்கப்பட்டவர் மேல் கடவுளருள்:- ஆண்டவரது தாரளத்தால் மனிதனிடம் விளைவதை அவரது ஆசீர் வாதம் என்ற சொல் மிகச்சிறப்பாக விளக்கவல்லது. புறப்பாதுகாப்புத்தருவது மட்டுமல்ல. அருளைப் பெற்றவனிடத்தில் வாழ்வு, மகிழ்ச்சி, பலத்தின் முழுமை நிலவ அது வகை செய்கிறது. இது கடவுளுக்கும் மனிதனுக்கும் நெருங்கிய ஆட் தன்மையுடைய தொடர்பை ஏற்படுத்து கிறது. ஆண்டவரின் திருமுகத்தை அவன் காண வழி செய்யும் (எண் *6:25*). இந்த உறவு உயிருள்ளது. ஏனெனில் இது படைப்பாற்றலைத் தொடுகிறது. ஆசீர் வதிப்பது தந்தைக்குரியதாகும். இஸ்ரா யேல் வரலாறு எல்லா மக்கள் மேலும் ஆசீர்பெற்றுத்தருவதை நோக்கமாகக் கொண்டது என்றால் (ஆதி *12:3*) அது இறைவன் தந்தையாயிருந்து தன் பிள்ளை களின் ஊழியை உருவாக்குவதால்தான் (ஏச *45:10* தொ) இறைவனது அருள் தந் தையின் அன்பாகும். அது பிள்ளைகளை உண்டாக்குகிறது. இந்த அசீர் புனிதமிக்க இறைவனுடையதாகையால் அது அவரது தேர்ந்தெடுக்கப்பட்டவர்களோடு ஏற்படுத் தும் உறவு அர்ப்பணமாகும். தேர்ந்தெடுத் தலானது புனிதத்துக்கும் அர்ப்பணிக்கப் பட்ட வாழ்கை வாக்குறுதிக்கும் விடப்படும் அழைப்பாகும் (யாத் *19:6*; ஏச *6:7*; லேவி *19:2*). இந்தப்பிள்ளைக்குரிய பதிலை அளிப் பதிலிருந்தும், வாழ்வின் அர்ப்பணத்தி லிருந்தும், இஸ்ராயேல் திசைமாறுகிறது. இஸ்ராயேல் (ஒசே *4:1*; தொ; ஏச *1:4*) தீமை யிலே வாழ்நாட்களைக் கழிக்கிறது (எரே *6:7*). இந்நிலையில் இறைவன் மனிதனால் அடிப்படையில் செய்யமுடியாத ஒன்றைச் செய்கிறார். அதற்கும் மனிதனையே பயன் படுத்துகிறார். கடவுள் கெட்டுப்போன எருசலேமை நீதியுடைய நகரமாக்குவார் (எச *1:21–26*). கல்லான இதயத்தை நீக்கி (எரே *5:1* தொ) அவரை அறியக்கூடிய புதிய இதயத்தை அமைப்பார் (ஒசே *2:21*; எரே *31:31*). இது ஆண்டவரது ஆவி யின் செயலாகும் (எச *36:27*). அது அவரது நீதியே உலகிற்குள் வருவ தாகும் (ஏச *45:8.24*; *51:6*).

III. புதிய ஏற்பாடு

*1.* வாசகங்களில்:- புதிய ஏற்பாட்டில் அருளைக் குறிக்கும் கிரேக்கச் சொல் 'காரிஸ்' என்பதாகும். இது மகிழ்தல் என்ற பொருளுடைய 'கயிரோ' என்ற வினைச் சொல்லோடு தொடர்புடையது. சமயச் சார்பற்றவழக்கில், இது மகிழ்ச்சி யையும் இன்பத்தையும்கொண்டு வருபவற் றையோ, ஆதரவைப் பெற்றுத் தருவதை யோ குறிக்கும். இந்தப் பரந்த பொருள் லூக்கா நற்செய்தி, அப்போஸ்தலர் பணி ஆகிய நூல்களில் பிரதிபலிக்கிறது (லூக் *1:30*; *2:40*; அ.ப.*7:10*).

அ) நற்செய்திகள்:- அருள் என்ற சொல்லை நற்செய்திகள் அரிதாகத்தான் பயன்படுத்துகின்றன. ஆனால் இந்தக் கருத்தும் பொருளும் இயேசுவின் வாழ்வி லும் போதனையிலும் பரவிக்கிடக்கிறது. இறைநோக்கோடு (லூக் *4:4*) அன்பில் அனுப்பப்பட்டு (யோவா *3:17*) ஊழியனாகி (மாற் *10:45*) இயேசு இறைவன் தம்மையே அளிப்பதை நற்செயதிகள் பிரதிபலிக் கின்றன. இஸ்ராயேலில் தவறிப் போன வர்கள் (மத் *9:36*; *10:6*; லூக் *15:4*; தொ; யோவா *10*), எளியோர் (மத் *19:21*), சமூகத் தால் ஒதுக்கப்பட்டவர்கள் (லூக் *5:30–32*), பெண்கள் (*8:2*), குழந்தைகள் (மாற் *10: 14–15*) ஆகியோரைத் தேடுவதில் அவரது வாழ்க்கை அருளை வெளிப்படுத்துகிறது. இறைவனைத் தேடுதல் (லூக் *15*), மீட்பு கிட்டக்கூடியதாக்குதல் (மாற் *10:17–31*), புதிய உடன்படிக்கை (லூக் *22:19–22*), பகை வர்களுக்கு அன்பு (மத் *5:43–44*; லூக் *10:27* தொ) ஆகியவற்றில் அவர் அருளைப் போதிக்கிறார். மனிதப் பாவங்களுக்காக இறைவன் இயேசுவை சிலுவைக்குக் கைய ளிப்பதிலும், பின் உயிர்த்தெழச் செய்வதி லும் அருளை எடுத்துக் காட்டுகிறார். இப் போது ஆண்டவராக ஆட்சிசெய்யும் இயேசு கிறிஸ்து அருளின் புதிய யுகத் தைத் தொடங்கி வைக்கிறார்.

ஆ) பவுலின் திருமுகங்கள்:- இவற்றில் இந்தப் புதிய அருள் முக்கிய இடத்தை வகிக்கின்றது. "காரிஸ்" என்ற சொல் பயன்படுத்தப்படுவதில் மூன்றில் இரண்டு

பங்கு இந்தத் திருமுகங்களில் காணப்படு கின்றன.

பவுலின் கருத்துப்படி, இயேசுகிறிஸ்து வில் வெளிப்படுத்தப்படும் இறைவனது அன்பிலிருந்து அவரது அருளைப் பிரிக்க முடியாது (உரோ 1:7; 1 கொரி 1:3). கிறிஸ்து மீட்பின் நடுவர், இடையாளர் ஆவார். செல்வமிக்கவராய் இருந்தும் ஏழையானர் (2 கொரி 8:9); மகிமை மிக்கவராயினும் அடிமையின் தன்மை பூண்டவர் (பிலி 2:7); 'பாவிகளாய் இருந்தபோதே' (உரோ 5:8) மனுக்குலத்தை இறைவன் கிறிஸ்துவில் தம்மோடு ஒப்புரவாக்கினார் (2 கொரி 5:18–21).

இயேசு கிறிஸ்துவின் அருள் சிலுவை வழியாக வருகிறது (கலா 2:20; எபே 1:20; உரோ 5:9). விசுவாசம் மற்றும் அருள் வழி யாக, விசுவாசிக்கும் எல்லாரையும் இறை வன் இலவசமாகத் தமக்கு ஏற்புடைய வராக்குகிறார் (உரோ 3:24–25; காண்க. 5:1). சட்டம் (கலா 5:4), மனித ஞானம் (2 கொரி 1:12), பாவம் (உரோ 6:1) ஆகியவற் றிற்கு அருள் முரணானது, இரக்கத்திலும் அன்பிலும் செல்வந்தராகிய இறைவன் சினத்திற்கு ஆளாகியிருந்த மக்களை உயிர் பெறச் செய்கிறார் (எபே 2:4–5).

இந்த அருள் விசுவாசத்தால் பெறப் படுகிறது (எபே2:8). விசுவாசத்தில் அருளின் வளத்தை ஒருவர் அனுபவிக் கிறார் (உரோ 5:17; எபே 1:7; 2:7). சட்ட மனப்பான்மையாலோ (கலா 2:21; 5:4) அல்லது கடமை தவறுதலாலோ (1 கொரி. 15:2; 2 கொரி.6:1) விசுவாசமின்மையோ இந்த அருளை வீணாக்கக்கூடும். அருளை யாரும் உரிமைகொண்டாட முடியாவிட் டாலும், அதன் வளம் ஒவ்வொரு பாவிக் கும் போதியது என்று நம்பலாம் (1 திமோ 1:15–16).

கிறிஸ்துவில் இறையருள் அவரது மக்கள் வழியாக உலக முழுவதும் பெருகு கிறது (2 கொரி 4:15). புறவினத்தாருக்குப் பவுல் தனது தூதைப் போதிக்க இறைவன் அவருக்குத் தனிப்பட்ட அருள் வழங்கு கிறார் (உரோ 15:15; எபே 3:8; அ.ப 20:24). திருச்சபையும் தனது அலுவல்களையும் பணிகளையும் நிறைவேற்ற அதே அருளைப் பெறுகிறது (உரோ 12:3–8; எபே 4:7.11–12). விசுவாசிகள் தங்கள் அன்புத் தொண்டிலும் (2 கொரி 8:7) இறை பய மிக்க வாழ்விலும் (தீத் 2:1 தொ), அருட் பயன் விளைவிக்கும் பேச்சிலும் (எபே 4:29 தொ; கொலோ.4:6), இறைவனது அருளை எடுத்துக் காட்டுகின்றனர்.

பவுலின் திருமுகங்களில் காணப்படும் வாழ்த்துகளிலும், ஆசீர்களிலும் அருள் என்றசொல், கிரேக்க வாழ்த்துக் கருத்தை எதிரொலிக்கிறது. அமைதி என்ற சொல் லோடு சேர்ந்து, இருசொற்களும் அமைதியின் இறைவன்மேல் கவனத்தை ஈர்க்கின்றன (உரோ 15: 33). இறைவன் கிறிஸ்துவில் மக்களைத் தம்மோடும், ஒருவர்கொருவரோடும், உறவு கொள்ளச் செய்கிறார் (எபே 2:14 தொ). "அருள் உங் களோடு இருப்பதாக" என்ற முடிவுரை (உரோ 16:20; கலா 6:18), கிறிஸ்துவின் மீட்பில் அவர்கள் தொடர்ந்து இருக்கவும், அவர் அளிக்கும் இறைப் பிரசன்னத்திற் காகவும் வேண்டுகிறது. இந்த வளமிக்க மொழி, தொடக்க காலத் திருச்சபையால் அதன் திருமுகங்களிலும் (எ.கா திரு வெளிப்பாடு, கிளமெண்ட்) வழிபாடுமுறை களிலும் (2 கொரி 13:14) பயன்படுத்தப் பட்டது.

இ) பிற வழக்குகள்:– அப்போஸ்தலர் பணி நூலில் அருள் என்ற சொல் பெரும் பாலும் விசுவாசிகளிடையே செயல்படும் மீட்பைக் குறிக்கிறது (அ.ப.11:23; 13:43). சில இடங்களில் பவுலைப்போல் லூக்கா வும் அருளையும் நற்செய்திகளையும் ஒன்றாக்குகிறார் (15:40; 20:24).

எபிரேயருக்கு எழுதப்பட்ட திருமுகத் தில், இச்சொல் எழுபது நூல் வழக்கைப் பின்பற்றி ஆதரவு, தயவு என்ற பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளது. தங்கள் தேவை களில் இறைவனை அணுகுவோருக்கு அவர், கிறிஸ்து வழியாக, தமது அரச தயவைக் கொடுக்கிறார் (எபி 4:16). இந்தத் தயவு விசுவாசத்தைக் கோருகிறது (11:6). விசுவாசகிகள் அருளை அவமதிக்கக் கூடாது (10:29). அசட்டையால் அதைப் புறக்கணிக்கக் கூடாது (12:15). மாறாக, அவர்கள் உள்ளங்களை அருளால் உறுதிப்படுத்தவேண்டும் (13:9).

பேதுருவின் முதல் திருமுகம், பரிசுத்தத்திலும் (1 பேதுரு 1:13தொ), தாழ்ச்சியிலும் (5:5), ஆன்மீக வரங்களைப் பயன்படுத்துவதிலும் (4:10), அருள் செயலாற்றுவதை அடிக்கடிச் சுட்டிக் காட்டுகிறது. துன்புறுவது கூட அருளாகும் (5:10).

படைப்பிலிருந்து முடிவுரை, விவிலியம் இறைவனின் அருள்பற்றிப் பேசுகிறது. பழைய ஏற்பாட்டின் மகிமையை (யாத் 34:6) கிறிஸ்து அகற்றிவிடவில்லை. மாறாக அருளிலும் உண்மையிலும் அதை நிறைவுபடுத்துகிறார் (யோவா 1:16–17; எபி 1:1–27). மனுக்குலம் போற்றுரையோடு தம்மிடம் திரும்ப (எபே 1:6) அவற்றை அதன்மேல் இலவசமாகப் பொழிகிறார்.

2. கடவுளருள் இயேசுவில் வெளிப்படுத்தப்படுகிறது:–

ஆண்டவரின் தாராளம் அவரது மகனையே அளிக்கும் அளவுக்கு கரை கடந்து செல்கிறது (உரோ 8:32). இந்தக் கேட்டறியாச் செயல் இறைவனது அன்பு, கனிவு, பிரமாணிக்கம் ஆகியவற்றின் கலவையாகும். இச்செயலைத்தான் புதிய ஏற்பாடு அருள் என அழகாகக் கூறுகிறது. இந்த அருளைப் பெற வேண்டுமென்ற ஆசையை அப்போஸ்தலர் மடல்கள் அறிமுகப்படுத்துகின்றன. இந்த அருள் கிறிஸ்தவர்களுக்கு, இறைவனின் மேலான கொடையாகும். இறைவனின் செயலினுடையவும் சுருக்கமும், நமது சகோதரர்களுக்கு நாம் விரும்பும் அனைத்தையும் அடக்கிய சுருக்கமாகும். கிறிஸ்து விலே அருளும் உண்மையும் நமக்கு வந்துள்ளன (யோவா 1:17) "அவரது மாட்சி மையை நாங்கள் கண்டோம்" (1:14) "அன்பே கடவுளென உணர்ந்தோம்" (1 யோவா 4:8). ஆகவே இயேசுவின் செயல்கள் அருளென நாம் அறிகிறோம் (தீத் 2:11; 3:4) ஒத்தமை நற்செய்தியாளர்கள் அருளென்ற சொல்லை அறியாவிட்டாலும் அருளை முழுவதும் உணர்ந்திருந்தனர். அவர்களுக்கு இயேசு நமக்காகத் தந்தையால் கையளிக்கப்பட்ட உயர்ந்த கொடையாகும் (மத் 21:37; 26:28). துன்பங்களைக் கண்டு இயேசு இரக்கமும், பரிதாபமும் காட்டுதல் பழைய ஏற்பாட்டில் இறைவனின் தன்மையை எடுத்துக்காட்டும் அன்பையும் இரக்கத்தையும் சுட்டிக் காட்டுகிறது. புனித பவுல் செல்வந்தராயிருந்து ஏழையாக மாறிய இயேசுவின் அருள் தன்மையை எடுத்துக்கூறி கொரிந்தியரும் இவரைப்போல பெருந்தன்மை கொள்ள வேண்டுமெனக் கூறுகிறார் (2 கொரி 8:9).

3. கைம்மாறு கருதாது விரும்பித்தரப்பட்ட அருள்:– கடவுளருள் மனித மீட்பின் இரகசியமென்றால் அதே அருளைத்தான் ஒவ்வொரு கிறிஸ்துவனும் (உரோ 12:6; எபே 6:7) ஒவ்வொரு திருச்சபையும் அதைப் பெற்று வாழும் செயல் முறையின் இரகசியமும் ஆகும். மக்கதோனியா திருச்சபை தாராளத் தன்மையின் அருள்வரத்தையும் (2 கொரி 8:1 தொ), பிலிப்பியர் அப்போஸ்தல அருளையும் பெற்றனர் (பிலி 1:7). இந்த அப்போஸ்தலம் பவுலின் முழுச் செயலையும் விளக்குகிறது (உரோ 5:1; 1 கொரி 3:10; கலா 1:15; எபே 3:2). எல்லா மனிதவிருப்பத்திற்கு முன்னே இறைவனிடமிருந்து வரும் (1 உரோ 1:5; கலா 1:15) தேர்ந்தெடுத்தலில் பலவகைக் கொடைகள் வெளிப்படுத்தப்படுகின்றன. இந்தத் தேர்ந்தெடுத்தல் மீட்புக்கு அறிமுகப்படுத்தப்படுகிறது (கலா 1:6: 2 திமோ 1:9). ஒரு குறிப்பிட்ட பணிக்கு அர்ப்பணிக்கிறது (1 கொரி 3:10). நாம் கிறிஸ்தவர்களாக இருக்கக்காரணம் கடவுள் தாமே முன் வந்து நம்மை அழைத்ததால்தான் என பவுல் கூறுகிறார் (உரோ 11:5). மீட்பு ஆண்டவரின் கொடையே அன்றி நமது செயலின் பரிசு அன்று. அப்படியில்லையென்றால் அருள் அருளாக இருக்க முடியாது (11:6.4:4). மீட்பு திருச்சட்டத்தைப் பின்பற்றுவார்க்கு மட்டுமெனில் விசுவாசம் பொருளற்றதாயும், வாக்குறுதி வெறுமையாயும் ஆகும். வாக்குறுதிகளில் விசுவாசம் மட்டுமே இறைவனது செயலை விளக்குகிறது. அச்செயல் முதன்மையாக அருளாகும். அருள் வழங்கப்படும் செயல் முறையான சூழ்நிலை, இன்னும் கைம்மாறு கருதாததாகச் செய்கிறது. எதிரியை, தீர்ப்பிடப்பட்ட மனிதனைத் தேர்ந்தெடுத்து மீட்பளிக்கிறார். "நாம் பாவத்தால் வலுவற்றிருந்தபோது நாம் பாவிகளாக இருந்தபோதே" பாவத்தின் சக்தியி

லிருந்து நம்மையே விடுவித்துக் கொள்ள முடியாதபோது "அவருடைய மகனது மரணத்தின் வழியாக இறைவனோடு ஒப்புரவாக்கப்பட்டோம்" (5:6–10; 3:24; எபே 2:5) அவரருள் நம்மையே சாவினின்று விடுவிப்பதில் நிறைவடைவதில்லை. மாறாக அவரது அருள் எல்லா எல்லைகளையும் கடந்து செல்கிறது. பாவம் பெருகியிருந்த இடத்தில், அருள் எவ்வளவோ மிகுதியாகப் பெருகியுள்ளது (உரோ 5:15–21). அது இறைதாராளத்தின் அளவற்ற செல்வத்தை வெளிக்கொணர்ந்து (எபே 1:7;2–7) மக்களிடையே பெருகச்செய்கிறது (2 கொரி 4:15; 9:14; 1 கொரி 1:7). தனதருமை மகனையே இவ்வுலகிற்கு அனுப்பியவர் வேறெதை மனிதனுக்கு மறுக்க இயலும்? (உரோ 8:32).

4. அருளின் கனிகள்:– கடவுளருள் வீணாகப்போவதில்லை (1 கொரி 15:10). அது விசுவாசம் தனது செயல்களை ஆற்றவும் நிறைவு செய்யவும் உதவுகிறது. அன்பால் செயலாற்றவும் (கலா 5:6) நற்பயன்களையும் (கொலோ 1:10) "நாம் செய்ய வேண்டுமென்று கடவுள் முன்னேற்பாடு செய்த நற்செயல்களையும்" (எபே 2:10) செய்ய உதவுகிறது (கலா 5:6). அப்போஸ்தலர்கள் தங்கள் பணிகளைச் செய்ய ஊக்கமூட்டியது அந்த அருள்தான் (அ.ப.14:26; 15:40). "நான் இப்பொழுது இருக்கும் நிலையிலிருப்பது கடவுளின் அருளால்தான் என்னோடு இருக்கும் இறை அருள்தான் உழைத்தது" என்று பவுல் கூறுகிறார் (1 கொரி.5:10). அவர் கிறிஸ்தவனாய், அப்போஸ்தலனாய் இருக்கச் செய்வதும் இந்த அருள்தான்.

மாற்றி அமைப்பதற்கும் செயலுக்கும் அருள்தான் ஊற்றாயிருப்பதால் அதோடு ஒத்துழைக்கக்கோருகிறது. அதற்குக் கீழ்ப்படியவும் (2 கொரி 4:1) அதற்குப் பதில் அளிக்கவும் எப்போதும் சுறுசுறுப்பாய் இருக்கவேண்டும். நமது வலுவின்மையில் இறைவனது வல்லமை சிறந்தோங்குவதால் அவரருள் நமக்குப்போதும் (2 கொரி 12:9). அது ஒரு போதும் குறைவுப்படுவதில்லை.

எனவே அருளானது புதிய வாழ்வுக்குப் பிறப்பாகும் (யோவா 3:3தொ). பிள்ளைகளாக்கும் இறை ஆவிக்குள் வாழ்வாகும் (உரோ 8:14–17). பவுல் இவ்வருள் வாழ்க்கையை விளக்கச் சட்டச்சொற்களை அடிக்கடி பயன்படுத்துகிறார். அருள் நிறுவிய ஆட்சியை நிரூபிப்பதுதான் இந்த அருள் வாழ்க்கையின் நோக்கமாகும் (கலா 1:6). அருள் நிலை அடையும் பேறு பெற்றவர்கள் (உரோ 5:2), அருளாட்சியிலே வாழ்பவர்கள் (உரோ 5: 21; 6:14). ஆனால் இந்த வாழ்க்கை சட்ட உரிமை நிலையைப்பெற்ற வாழ்க்கைமட்டுமல்ல. வாழ்வு என்ற சொல்லின் நிறைபொருளைக்கொண்ட வாழ்வாகும். மேலாக இவ்வாழ்க்கை இறந்தோரிடமிருந்து உயிர்த்தெழுந்து உயிர்த்த இயேசுவோடு புதிய வாழ்வு வாழ்வதேயாகும் (6:4.8.11.13). இங்கே பவுல் தனது கருத்தை வேறொரு கோணத்தில் கூறினாலும், அது கிறிஸ்துவின் அருள்வாழ்வெனும் கொடையாகும் என்ற யோவானின் கருத்தை ஒத்திருக்கிறது (யோவா 5:26; 6:33; 17:2).

இவ்வாழ்க்கை அனுபவமானது தூய ஆவியைச்சேர்ந்தது. அருளின் அரசு ஆவியின் அரசாகும் (உரோ 6:14; 7:6). மனிதன் பாவத்திலிருந்து விடுதலை பெற்றுப் புனிதத்தின் கொடைகளைத் தாங்கி நிற்கிறான் (6:22; 7:4). ஆவியானவர் ஆண்டவரின் மேலான கொடையாவார் (அ.ப.8:20; 11:17). அந்தக் கொடையைப் பெற்ற நாம், அருளைப் பெற்ற நாம், அப்பா, தந்தை என ஆண்டவரை அழைக்கிறோம். அப்போது நம் உள்ளத்தோடு உறையும் இறை ஆவியானவரே நாம் இறைவனின் பிள்ளைகள் என்று சான்று பகர்கிறார் (8:15–16). இதுவே அருள் நமக்காகச் செய்து முடித்த ஏற்புடைமையாம் (3:23 தொ). அதாவது தந்தைமுன் அன்பு மக்களாய் நிற்கும் நிலையாகும் (8:14–17). தனது எல்லாச் செயல்களுக்கும் இறை அருளே ஊற்று என்று உணர்ந்து, கிறிஸ்துவில் உண்மையாகவே பெருமை கொள்ளலாம். ஆனால் இது தானாக எதையோ செய்துவிட்டோம் என்ற இறுமாப்பன்று. பவுல் அருளையும் பெருமை பாராட்டுவதையும் சேர்த்துக் கூறப்பெரிதும் விரும்புகிறார் (உரோ 4:2 தொ; 5:2 தொ; 2 கொரி 12:9; எபே 1:6)! இறைவனின் அருளில் மனிதன் தானாக ஆவதில் வெற்றி கொள்கின்றான்.

முடிவாக இறைவனது உறவு படைப்பின் தொடக்க முதல் முடிவுவரை தொடர்ந்து கொண்டேயிருக்கும். மனிதன் மாறலாம். ஆனால் இறைவன் மாறாதவர். அவரது அன்புறவும் அருளும் மாறாதவை.

**அரேத்தா** (ARETAS – நன்னெறியாளர், மகிழ்ச்சி உண்டாக்குகிற)

பெத்திரா, தமஸ்கு போன்ற நகர்களில் ஆட்சி புரிந்த அரேபிய மன்னர்கள் உரிமையாக்கிக் கொண்ட பெயராகும்.

இசுமயேலின் மூத்த புதல்வர் நெபயோத்து ஆவார் (ஆதி 25:13). நெபயோத்தின் சகோதரியாகிய மகலாத்து என்பவள் ஏசாவின் மனைவியரில் ஒருவளாவாள் (ஆதி 28:9). இவள் சில இடங்களில் "பாசமத்து" என்றழைக்கப்படுகின்றாள் (ஆதி 36:3). யோசிபஸ் நபத்தேயர்களை நெபயோத்தின் வழி வந்தவர்களாகக் கருதுகிறார். மேலும் இசுமயேலின் பன்னிரண்டு புதல்வர்களும் யூப்பிரத்திசுக்கும், செங்கடலுக்கும் இடையிலுள்ள பகுதியைத் தங்களது குடியிருப்பிடமாகக் கொண்டு அவ்விடத்தை நபத்தேனே என்றழைத்தனர் என்றும் கூறுகிறார். இவர்கள் அரேபியர்கள்; தங்கள் இனத்தின்பெயரை இவர்களிடமிருந்து பெறுகின்றனர். இதற்கு இவர்களது நன்னெறியோ அல்லது அவர்களது மூதாதையராகிய ஆபிரகாமின் பெருமையோ காரணமாக இருக்கலாம்.

இவர்களின் தலைநகரும், படை வலிமைமிக்க அரணும் செலா ஆகும் (நீதி 1:36; 2 அர 14:7; ஏச 16:1;42:11). இவ்விடம் கிரேக்கத்தில் பெத்திரா என்றழைக்கப்படுகிறது. இவ்விடத்தில் குடியிருந்தவர்கள் அராபிய இனத்தைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும், இவர்கள் அரமேய மொழியைத்தான் எழுதுவதற்கும், கல்வெட்டுக்களில் பொறிப்பதற்கும் பயன்படுத்தினார்கள்.

மக்கபேயர்களுடன் நபத்தேயர்கள் நட்புடன் இருந்ததாகச் சில குறிப்புகள் சுட்டிக்காட்டுகின்றன (1 மக் 5:24–2 5;9:35).

1. முதலாம் அரேத்தா:- இரண்டாம் மக்கபேயர் ஆகமத்தில் (5:8) குறிப்பிட்டுள்ள கொடுங்கோலன்தான் இவர்கள் அறிந்த முதல்லரசராவார். மக்கபேயரின் ஆட்சிக் காலத்தில், அரேத்தா அரேபியர்களின் அரசராக இருந்தார். தலைமைக் குரு யாசோன் என்பவர் நான்காம் அந்தியோக்கு மன்னன் இறந்துவிட்டார் என்றதொரு தவறான செய்தியைக்கேட்டவுடன், ஆட்சிப்பொறுப்பை ஏற்கவேண்டும் என்ற ஆர்வத்தில் வன்முறைகைளைக் கையாண்டார். முயற்சிகள் அனைத்தும் தோல்வியடைந்தன. எனவே அவரது சதித்திட்டங்களனைத்தும் தோல்வியடைந்தவுடன், அரேபியர்கள் ஆண்டுவந்த அரேத்தாவினால் இவர் சிறைப்படுத்தப்பட்டார்.

2. மூன்றாம் அரேத்தா:-

இவரது இரண்டாவது பெயர் ஓபோதாஸ் ஆகும். இவர் செலூக்கிய அரசன் 12–ஆம் அந்தியோக்கு தியோனிசுசைத் தோற்கடித்து கூலேசீரியா, தமஸ்கு ஆகிய பகுதியில் தன் ஆட்சியை நிறுவினார்.

அரித்தோபுல் என்பவர் இரிக்கானுக்கு நல்லெண்ணம் காட்டியதால் பெரிய ஏரோதின் தந்தையாகிய அந்திப்பா, அரித்தோபுலுடன் பகைமை கொண்டார். அந்திப்பா செய்த சதித்திட்டத்தினையறிந்த இரிக்கானு பயமடைந்து, அடைக்கலம் தேடி அரேபிய மன்னராகிய அரேத்தாவிடம் ஓடினார். அரேத்தாவும், பெத்திரா என்ற இடத்தில் அவருக்கு அடைக்கலம் தந்தார். அரேத்தாவின் ஆதரவினால் அந்திப்பா, இரிக்கானு இருவரும் உறவு கொண்டதோடு அல்லாமல், அரித்தோபுலுக்கு எதிராகச் செயல்பட்டதன் விளைவாக தற்காலிகமான வெற்றியை அடைந்தனர். ஆனால் பாம்பேயிடமிருந்து வந்த ஸ்கவுரஸ் அரித்தோபுலுக்கு ஆதரவு அளித்தார். அதன் விளைவாக இரிக்கானு ஆகியவர்களின் படை பாப்பிரோன் என்ற இடத்தில் தோற்கடிக்கப்பட்டது (கி.மு. 65).

3. நான்காம் அரேத்தா ஜனேயா (கி.மு.9–கி.பி.40):-

தமஸ்கு நகரில் நபத்தேயர்களின் செல்வாக்கு, அதிகாரம் ஓங்கியிருந்ததாக புதிய ஏற்பாட்டில் காண்கிறோம். இதற்குச் சான்றாக பவுல் தமஸ்கு நகரில் இருந்தபொழுது நான்காம் அரேத்தா அரசன் கீழ் இருந்த ஆளுநன் அவரைச் சிறை

பிடிக்க விரும்பி தமஸ்கு நகர வாயில் களில் காவல் வைத்தான். ஆனால் அவர் கூடையினுள் வைத்து மதில் சுவரின் வழி யாக கீழிறக்கப்பட்டு காப்பாற்றப்பட்டார் என்று நிகழ்ச்சி விளங்குகிறது (2 கொரி 11:32–33). இந்த நான்காம் அரேத்தாதான் தனது மகளை விவாகரத்து செய்த ஏரோது அந்திப்பாவைத் தாக்கித் தோற் கடித்தார்.

**அரேபியர்** (ARABIANS)

அரேபியாவில் வசிக்கும் மக்கள், முக்கியமாக வடஅரேபியாவில் வசிப்பவர் கள் அரேபியர்கள் எனப்படுவர். இவர்கள் பாலஸ்தீனத்தில் வாழ்ந்தவர்களுடன் மிகப் பழமையான காலத்திலிருந்தே தொடர்பு கொண்டிருக்க வேண்டும். முற் காலத்தில் இப்பகுதி முழுவதற்குமான தனிப் பெயர் எதுவுமில்லை. அத்துடன் இப்பகுதியில் வாழ்ந்திட்ட மக்களுக்குத் தனி இனப்பெயர் எதுவும் இருக்க வில்லை எனவும் தெரிகிறது. அந்தந்தப் பகுதியை வைத்துப் பெயரும் கொடுக்கப் பட்டது. எனவே பழைய ஏற்பாட்டில் இவர்கள் இசுமயேலர், மிதியானியர், கெத்தானியர், சபேயர், எனப் பல பெயர் களால் அழைக்கப்பட்டனரே ஒழிய அரேபியர் என அழைக்கப்படவில்லை.

1. பெயர்:- இதற்கு நாடோடிகள் என்பது பொருள் 2 மக் 12:10–12–இல் யூதா வைத்தாக்கிய அரேபியர்கள் நாடோடி கள் என்றே அழைக்கப்படுகின்றனர். நாடோடிகள் பாலைவனத்தில் அலைந்து திரிந்தனர் என்பதில் சந்தேகமில்லை. ஆப்பு எழுத்து வாசகங்களில் "அருபு" அல்லது "அரிபி" என்பது மேதிய நாடோ டிகளையும், அரேபிய நாடோடி களையும் குறித்தது. ஏச 13:20; எரே 3:2 என்பன இவர்கள் நாடோடிகள் என்றும், 1 அர 10:15; ஏச 21:13; எரே 25:24; எச 30:5 என்பன அரேபியர் என மொழி பெயர்க் கப்பட்டாலும், நாடோடி என்பதையே குறிக்கும்.

எச. 27:21–இல் அரேபியா என்பது ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியையும், அங்கு வாழும் மக்களையும் குறிக்கும் பொருளில் உள்ளது. இதே பொருளில்தான் 2 நாள். 21:16; நெக. 4:7–லும் வருகிறது அரேபியா என்ற பெயர். நெமாரா கல்வெட்டுக்களில் ஆள்பவன் எல்லா அரேபியர்களின் அரசன் எனக்குறிப்பிடப்பட்டுள்ளது.

2. வரலாறு:- வட, தென் அரேபியப் பகுதிகள் இரண்டிலுமே பழைய கற்கால இடங்கள் காணப்படுகின்றன. எனவே வரலாற்றில் முதன் முதல் இவர்கள் எப் பொழுது தோன்றினார்கள் என்பது தெளி வாக இல்லை. தலைமுறை அட்டவணை யில் அரேபியரின் கூசுவின் மக்களாகவும் (ஆதி 10:7), ஆராமின் (10:23) எபேரின் (10:25–30) சந்ததிகளாகவும், கெத்தூர வழி யாகவும் (25:1–4) ஆகார் வழியாகவும் (25:13–16) ஆபிரகாமின் வழித்தோன்றல் களாகவும் கருதப்படுகின்றனர். இந்தத் தலைமுறை அட்டவணை ஒரு சீரான தொடர்போடு மக்களைக் குறிப்பதாக இல்லாவிடினும் இதில் வரும் பெயர்கள் அரேபியரின் பல இடப்பெயர்களாகவும் மக்களின் பெயர்களாகவும் உள்ளதைக் காணலாம்.

இஸ்ராயேலின் குல மூதாதையார் காலத்தில், ஆபிரகாம் பென்–கேத்திட மிருந்து ஒரு குடும்பக் கல்லறை நிலம் வாங்கியதாகவும் (ஆதி 23) ஏசா இவர்களி டமிருந்து தன் மனைவியரைக் கொண்ட தாகவும் (26:34; 27:46; 36:2) வாசிக்கிறோம். இக்கால இத்தியர் பிற்கால இத்தியரி லிருந்து வேறுபட்டவர்களாக இருக்க லாம். யோசேப்பின் கதையில் இவர்கள் ஒட்டங்கங்களை வாகனமாகக் கொண்ட வர்களாகவும், எகிப்தோடு வணிகத் தொடர்புடையவர்களாகவும் தோன்று கின்றனர். ஆதி 16:12–இல் வரும் "அவன் கொடும் குணமுள்ள மனிதனாய் வளர் வான். அவருடைய கை, எல்லோருக்கும் விரோதமாயும் எல்லோருடையகையும் அவனுக்கு விரோதமாயும் ஓங்கியிருக்கும்" என்ற இசுமயேலைப் பற்றிய விவரிப்பு, வட அரேபிய பெடூயீனர்களுக்குப் பொருந் தும். இவர்கள் நிலையாகக் குடியேறிய வர்களைக் கொள்ளையடித்து தங்களைப் பற்றிய அச்சம் மேற்காசியப் பகுதியில் பரவச் செய்தனர். ஆதி 21:20, இவர்கள் பாலைவனத்தில் வாழ்ந்ததாகக் குறிக் கிறது. இவர்கள் மிதியான் நாட்டுக்கும் மெசபொத்தோமியாவின் எல்லைக்கும்

இடைப்பட்ட பகுதியிலுள்ள பாலையில் வாழ்ந்தனர். இது ஆப்பு எழுத்து வாசக விவரிப்புகளில் குறிக்கப்பட்டு அரேபியர் களோடு ஒத்துப்போகிறது.

கி.மு. 854–ஐச் சேர்ந்த கல்வெட்டுக் களில் (மூன்றாம் சால்மனேசர்) அரேபியர் கள் ஒரு ஒட்டகப் படையைத் திரட்டி அசீரியர்களை எதிர்த்ததாகக் குறிப்பிடப் படுகிறது. இவை குறிப்பிடும் பல பெயர் கள் விவிலிய இடங்களோடு தொடர்புடை யனவாக உள்ளன. கி.மு. 1200–ஐ ஒட்டி தென் அரேபியாவில் கலாச்சாரம் வளர்ந் திருக்க வேண்டும். இவர்கள் அரசியல் அமைப்பைக்கட்டி எழுப்புவதிலும், வேளாண்மை செய்வதிலும், வணிகம் செய்வதிலும், சிறந்து விளங்கினர் எனத் தெரியவருகிறது. வணிகத் தொடர்பிற் காக வட, அரேபியாவில் பல இடங்களில் இவர்கள் குடியேறி இருக்கின்றனர். இவர் களிடமிருந்து மொழியையும், எழுத்தையும் வட அரேபியர்கள் கற்றிருக்கவேண்டும். கிரேக்கர்கள் தென்அரேபியாவின் நான்கு அரசுகளான மினேயர், சபேயர், கட்டபா னியர், கத்ராமாவுத்தியர் ஆகியவற்றைத் தெரிந்து வைத்துள்ளனர். ஆதி 10:26–30 குறிப்பிடும் பல பெயர்கள் தென் அரேபி யாவோடு தொடர்புடையனவே.

செபா, சேபா இவை இரண்டுக்கும் உள்ள வேறுபாடு ஆதி 10:7; சங் 7:10லும் அப்படியே வைக்கப்பட்டுள்ளது. ஏனெ னில் செபா என்பது தென் அரேபியாவில் உள்ள சபேயர்களையும் சேபா, என்பது வட அரேபியாவில் உள்ளவர்களையும் குறிப்பதாகும். எனவே மன்னன் சால மோனைச் சந்திக்க வந்த சேபா நாட்டு அரசி வட அரேபியாவைச் சேர்ந்தவளா கவே இருக்கவேண்டும். ஏனெனில் தென் னாட்டில் தனியாக அரசிகள் யாரும் இருக்கவில்லை.

பழைய ஏற்பாடு வடக்கு அரேபியர்கள் குலமுதுவர்கள் காலத்திலிருந்தே பாலஸ் தீனத்துடன் தொடர்பு கொண்டிருந்த தாகக் குறிப்பிடுகிறது. கிதயோன் பற்றிய கதையில் (நீதி 6–7 ஆதி), மேதியர்கள், அமலேக்கியர்கள் பொருட்களைக் கொள் ளையடித்துப் பாலைவனத்துக்கு ஓடி விடு வதாகக் கூறப்படுகிறது. சிக்கிலாகுவை அமலேக்கியர் பிடித்தது பற்றியும் (1 சாமு 30), யோராமின் குடும்பத்தையும் பொருட் களையும் தூக்கிச்சென்றது பற்றியும் கூறப்படுவது வட அரேபியர்கள் பற்றியே (2 நாள் 21:16–17;22:1). எசக்கியா அரசன் காலத்தில் (1 நாள் 4:43) சிமியோனியர் களின் கூட்டத்தினர் அமலேக்கியர்கள் பெருங்குழுவையே அழித்தொழித்தனர் (யாத் 17:8–16; உப 25:17–19). ஏனெனில் இந்த அமலேக்கியர் இஸ்ராயேலர் பாலை வனத்தைக் கடந்து சென்றபோது அவர் களைத் தாக்கிக் கொள்ளையடித்தனர். சவுல், தாவீது ஆகியோர் காலத்திலும் தொல்லை கொடுத்தவர்கள் இவர்கள் (1 சாமு 15:30). இந்நிகழ்ச்சிகளின் வர லாற்றுத் தன்மை எவ்வளவு தூரம் உண்மையாக இருக்கும் என்ற சந்தேகம் இருந்தாலும் இஸ்ராயேலரின் வரலாற் றில் இந்த அரேபியர்கள் என்ன பங்கு வகித்தனர் என்பதை துல்லியமாக எழுதி வைத்துள்ளனர் விவலிய ஆசிரியர்கள். அதேநேரத்தில் இஸ்ராயேலின் அமைதி யான வாழ்வுக்கு அரேபியர்கள் துணை நின்றதாகவும் சில இடங்களில் குறிப்பிடு கின்றனர். மேதியர்கள் சிலர் எகிப்துக்கு வியாபாரநிமித்தமாகச் சென்றதாக ஆதி 37:28, 36–இல் குறிப்பிடப்படுகிறது. மோசே யின் வாழ்க்கையில் (உப 2–3) இந்த அரேபியர்கள் ஆடுமேய்ப்பவர்கள் என்றும் மோசே அவர்களிடையே தனது மனைவி யைத் தெரிந்தெடுத்தார் என்றும், அந்த நாட்டுக்கே பின்னர் எகிப்தினின்று இஸ் ராயேலை இட்டுச்சென்றார் என்றும் (யாத் 17) கூறப்படுகிறது. மேலும் அவர்கள்தான் மோவாபு வழியாக வாக்களிக்கப்பட்ட நாட்டை அடைய இஸ்ராயேலுக்கு வழி காட்டியைத் தந்து உதவியதாகவும் குறிப்பு உள்ளது (எண் 10:29–32). தாவீதின் ஒட்டகங்களைக் கவனிக்க ஏற்பாடு செய் யப்பட்ட தலைவன் ஒரு இசுமயேலியன் ஆவான் (எண் 10:29–32). அரேபியர்களின் செல்வம்பற்றி எச 38:10–13–ல் குறிப் புள்ளது. அவர்கள் இஸ்ராயலுக்கு பொன், விலையுயர்ந்த கற்கள், நறுமணப் பொருட்கள் முதலியவற்றை அளித்ததாக 2 நாள் 9:14; ஏச 60:6; எரே 6:20; எச 27:22–இல் காண்கிறோம்.

நாடு கடத்தல் முடிந்து எருசலேமுக்கு வந்து நெகமியாவின் தலைமையில் எருச லேமைத் திரும்ப கட்டியெழுப்பத் தடை செய்தவர்களுள் அரேபியர்களும் ஒருவ ராவர் (நெக 2:19; 4:7; 6:1–6). நபத்தேயர்கள் மட்டுமே, வட அரேபியர்களுள் தென் அராபியர்கள்போல, ஒரு கலாச்சாரத்தை வளர்த்து வாழ்ந்தவர்கள்.

அவர்களது முதல் அரசன் கி.மு. 169–ஐ ஒட்டி வாழ்ந்த முதலாம் கரே தாத்து (அரேத்தா) என்பவர் ஆவார். இவர் அந்தியோக்கு, எப்பிப்பான், யூத பெரிய குரு யாசோன் ஆகியவரோடு சம காலத்தவர் (2 மக் 5:8). அதனை அடுத்து மூன்றாம் அரேத்தா, நான்காம் அரேத்தா ஆகியோர் அரேபியாவை ஆண்டுள்ளனர். கி.மு. 9–கி.பி. 40–வரை ஆண்ட நான் காம் அரேத்தா பவுல் காலத்தைச் சேர்ந் தவர் (1 கொரி 11:32). அவர்களோடு மக்க பேயர்கள் சுமூகமான உறவுகொண்டிருந் தனர் (1 மக் 5:25; 9:35). ஆனால் அசமோனி யர் அவர்களோடு சண்டை போட்டனர். மூன்றாவது அரேத்தா காலத்தில் அவர் களது அரசு மிகுந்த பரப்பைக் கொண்டி ருந்தது. அவர்களது கலாச்சாரம், கிரேக்க மயமாக்கப்பட்டது. இவர் யூத காரியங்களில் தலையிட்டார். இக்காலத் தில் உரோமையரால் தாக்கப்பட்டார். கி.பி. 106–இல் கொர்னேலியஸ் பால்மா அவர்களது அரசை முடிவுக்குக் கொண்டு வந்தார். திரேசன் இப்பகுதியை அரேபிய உரோமை மாகாணத்துடன் இணைத்து விட்டார்.

ஐம்பதாம் நாள் விழாவில் எருசலே மில் தங்கியிருந்ததாகக் கூறப்படும் அரேபியர்கள் (அ.ப. 2:11) நபத்தேயப் பகுதி யில் குடியேறி வாழ்ந்த யூதர்களாக இருக்கவேண்டும்.

3: வாழ்க்கைமுறை:- அரேபியர்கள் பொதுவாக நாடோடிகளாகத் திரிந்தா லும் அவர்களுள் சில இடங்களில் நிலை யாகத் தங்கியும் வாழ்ந்த குழுவினர் இருந் திருக்கின்றனர். இவர்கள் பாலைவனத் தில் இனம் இனமாகச் சேர்ந்து வாழ்ந் தனர். இன முதல்வர் பெயரைத் தமக்கு இட்டுக் கொண்டனர். மேலும் குலத்தின் தலைவர் சொன்னபடி நடந்தனர். கொள் ளையடித்து வாழ்வது இவர்களது தொழில். பழிவாங்குவதில் கை தேர்ந்த வர்களாக இருந்தனர். இத்தகைய பண்பு களிலே வளர்ந்ததால் அரேபியர் ஆண்மை யும், வீரமும் கொண்டவர்களாகவும் விருந் தோம்பலில் தலைசிறந்தவர்களாகவும் இருந்தனர். இவர்களுடைய முக்கிய வாக னம் தொடக்கத்தில் கழுதைகளும், பிற் காலத்தில் ஒட்டகங்களுமாகும். இவர்கள் வாழ்க்கையில் அடிமைகளும் இவர் களோடு இருந்திருக்கின்றனர். இனத் தலைவர்களுக்குப் பெருமதிப்புக் கொடுத் தனர். இவர்கள் கூடாரம் அமைத்து வாழ்ந்தனர் என்பதற்கு நீதி 5:6; 8:11; 83:6; 120:5; எரே 49:29.31; எச 38:11; சான்று கூறு கின்றன. கலை, சிற்பம், மண்பான்டங்கள் செய்வதில் தலைசிறந்து விளங்கினர். இலக்கியம் பற்றி ஒன்றும் தெரியவில்லை. சாலமோனின் ஞானம் அரேபியனான பென–கெதம்மின் ஞானத்தைவிட சிறந்து விளங்கியதாகவும், (1 அர 4:30; 5:10), யோபின் அறிவில் சிறந்த நண்பர்கள் வட அரேபியாவில் இருந்து வந்ததாகவும் கூறப்படுகிறது.

4.சமயம்:- தென்அரேபியாவின் சமயம் பற்றிய செய்திகள் நமக்குத் கிடைத்துள்ள அளவுக்கு வட அரேபியர்களின் சமயம் பற்றிய செய்திகள் நமக்குக் கிடைக்க வில்லை. பிற்கால இஸ்லாமியரின் வெறி யால் யாவும் அழிக்கப்பட்டு விட்டதாகத் தெரிகிறது. வட அரேபியாவில் பல வழி பாட்டு மையங்கள் இருப்பதைக் காண்கி றோம். விழாக்காலங்களில் இத்தகைய மையங்களுக்கு நாடோடிகள் கூட்டம் கூட்ட மாகத் திருயாத்திரை சென்றனர். இத்த கைய வழிபாட்டிடங்களில் ஒரு தூய்மை யான கல்நடப்பட்டு, அருகே ஒருகிணறும், மரமும் அமைந்திருந்தன. இக்கல் ஆண், அல்லது பெண் தெய்வத்தைக் குறிக்கும் அடையாளமாக இருந்தது. நாடோடி களாகத் திரிந்தபோது புனிதப் பொருட் களைத் தங்களுடன் எடுத்துச் சென்றனர். வழிபாட்டு மையங்களில் தெய்வதைச்சுற்றி வருதல், விலங்கு, மனிதர்களைப் பலியிடு தல், காணிக்கை செலுத்துதல், குறி சொல்லுதல், விழாச் சடங்குகள் செய்தல் அனைத்தும் இருந்தன. குருக்கள் இருந்

தாலும் அவ்வளவு முக்கியத்துவம் அளிக்கப்படவில்லை யெனத்தெரிகிறது. சூரிய, சந்திர, விண்மீன் கடவுள்களையும் வழிபட்டதாகத் தெரிகிறது. மெக்காவில் "அன்னை கடவுள்" வழிபாடு சிறப்புற இருந்ததாகக் குறிப்பு உள்ளது. பழைய அரேபிய நாட்காட்டி சமயத் தொடர்புடையதாக இருந்ததெனத் தெரிகிறது. தென், வட அரேபியாவில் சிறிதளவாவது "இறையொருமைக் கோட்பாடு" இருந்திருக்கும் என அறிஞர்கள் கருதுகின்றனர்.

**அரேபியா** (ARABIA – பாலைவனம், மேட்டு நிலம்)

தென்மேற்கு ஆசியாவில் பாரசீக வளைகுடாவுக்கும், செங்கடலுக்கும் இடைப்பட்ட ஒரு பெரிய தீபகற்பமாகும்.

I. *1)* இடம், அமைப்பு:- இது உலகிலேயே மிகப் பெரிய தீபகற்பம், ஏறக்குறைய ஒரு லட்சம் சதுர மைல் பரப்புடையது. தீப கற்பம் ஒரு நீண்ட சதுரம் போன்றது. *2900* கி.மீ. மைல் நீள கடற்கரைக் கொண்டது. செங்கடலுக்கும் பாரசீக வளைகுடா வுக்குமிடையேயுள்ள தூரம் ஏறக்குறைய *1000* கி.மீ நீளமாகும். மேற்கில் செங்கடலையும், தெற்கில் ஆதன் வளைகுடா மற்றும் இந்துமாக்கடலையும், கிழக்கில் ஓமான் வளைகுடாவையும், பாரசீக வளைகுடாவையும் எல்லையாகக் கொண்டது. வடக்கு எல்லை தெளிவாக இல்லை. வடக்கு எல்லையாக சீரிய பாலைவனத்தை இக்கால யோர்தான், சீரியா, இராக் ஆகிய பகுதிகளைக் கூறலாம். அரேபியா மூன்று பக்கங்களில் கடலையும் வடக்கில் யூப்பிரத்திசு நதியையும் எல்லையாகக் கொண்டிருப்பதால் "அரேபியர் தீவு" என்று அழைக்கப்படுவதுண்டு.

*2)* பிரிவுகள்:- பாரம்பரிய புவியியல் வல்லுநர்கள் அரேபியாவை மூன்று பகுதிகளாகப் பிரிப்பர். முதல்பகுதி பாறை அரேபியாவாகும். இதில் சீனாயி, மோவாபு, ஏதோம், யோர்தானுக்குக் கிழக்கில் உள்ள பகுதி, அராபா ஆகியவை அடங்கும். அதன் முக்கிய நகரம் பெத்திராவாகும். இரண்டாம் பகுதி பாலைவன அரேபியாவாகும். இதில் சீரியாப் பாலைவனமும் மத்திய அரேபியாவும் அடங்கும். மூன்றாம் பகுதி நற்பேறுடைய அரேபியாவாகும். இதில் தென் பகுதி, குறிப்பாகக் கடற்கரைப் பகுதிகள் அடங்கும். விவிலியம் அரேபியா என்று கூறும்போது, அரேபியாவின் பாறைப் பகுதியையும், பாலைப் பகுதியையும் உணர்த்துகிறது (ஏச *21:13*; எரே *25:24*). *2* நாள் *9:4*; எச *27:21*; வட தென் பகுதிகளிரண்டையும் குறிக்கலாம். பவுல் அரேபியாவில் சீனாய் மலை இருப்பதாகக் கூறுகிறார் (கலா *4:25*).

அரேபியாவில் வாழ்ந்தவர்கள் "பாலைவன மக்கள்" அல்லது பெடுயீனர் என்றழைக்கப்பட்டனர். பின்னது ஆளின் பெயராகி அரேபியர் என்றாயிற்று. பாலைவனத்தில் வாழ்ந்த (எரே *25:24*; *3:2*) இந்த நாடோடி மக்கள் கிழக்கில் பாபிலோனியா வரையும் (ஏச *13:20*) மேற்கில் எத்தியோப்பியா வரையும் (*2* நாள் *21:16*) வாழ்ந்தனர். ஆதி *37:28*–இல் வரும் மிதியானியர் வட அரேபியாவில் வாழ்ந்தவர்கள். நீதி *6:3*–இல் குறிக்கப்படும் கீழ்த்திசை மக்கள்" பாறை அரேபியாவில் வாழ்ந்த வர்கள் ஆவார்கள்.

II. விவிலியக் குறிப்புக்கள்:- *1)* பழைய ஏற்பாட்டு நாடுகளின் பட்டியலில் பல அரேபிய இனத்தவர் அல்லது நகரங்கள் குறிக்கப்பெறுகின்றன. இவை கசர்–மாவேத்து, சேபா, ஒப்பீர், கெவீலா மற்றும் யோபாபு ஆகியவையாகும். இவை யாவும் சேம்மின் வழித்தோன்றல்களும் யொக்கிதானின் புதல்வர்களின் பெயர்களுமாகும் (ஆதி *10:26–29*). இசுமாயேல் பல அரேபிய இனத்தவர்களுக்கு குலமூதாதையாவார் (*25:12–18*).

இஸ்ராயேலின் அரசாட்சி காலத்தில், இஸ்ராயேலர்களும், அரேபியர்களும் முக்கியமாக வணிகத் தொடர்பே கொண்டிருந்தனர். அரேபியர்கள் ஒரு விதத்தில் ஆன்மீக முறையிலும் இஸ்ராயேலரைப் பாதித்திருக்கலாம் (பழ *30:1*; *31:1* இங்கு மாசா என்பது வட அரேபியாவிலுள்ள ஒரு நகரைக் குறிக்கிறது). தங்கம் (*1* அர *9:27–28*), வாசனை மரங்கள், விலை உயர்ந்த கற்கள் (*10:11*; *2* நாள் *9:10*) முதலியவை ஒப்பீரிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டன. வாசனைப் பொருட்கள் சேபாவி

லிருந்து வாங்கப்பட்டன (ஏச 60: 6; எரே 6:20). வட அரேபியாவைச் சேர்ந்த சேபா வின் அரசி, சாலமோனின் ஞானத்தை சோதித்தறிய அவரைப் பார்க்க வந்தாள் (1 அர 10:1–13; 2 நாள் 9:1–12). "அரேபியா வின் அரசர்கள்" தங்கமும் வெள்ளியும் அரசன் சாலமோனுக்குக் கொண்டு வந்த னர். இவை ஒருவேளை ஆண்டுக் கப்ப மாக இருக்கலாம் (2 நாள் 9:14; 1 அர 10:15). யூதாவின் யோசபாத்து ஆட்சிக் காலத்தில் அரேபியர் பெரும் கப்பத்தை கால்நடைகளாகக் கட்டினர் என்பது உறுதி (2 நாள் 17:11). யூதாவின் இட அமைப்பையும், பெலிஸ்தியரைப் பற்றிய குறிப்பையும் மனதில் கொண்டால், இவர் கள் பாறை அரேபியாவில் வாழ்ந்தவர் களாவார்கள்.

விரைவில் நிலை மாறியது. யோசபாத் தின் தீய புதல்வன் இறைவனது சினத் தைத் தூண்டினான். அதற்குத் தண்டனை யாக பெலிஸ்தியரையும், அரேபியர்களை யும் யூதாவுக்குப் பகைவர்களாக ஆண்டவர் எழுப்பினார் (21:16–17). எத்தியோப்பியா வுக்கு அருகிலுள்ள இடத்திலிருந்து வந்த இந்த நாடோடிகள் பெருங்கூட்டமாக யூதாவில் நுழைந்தனர். தலைநகருக் குள்ளும் புகுந்து, அரச உடைமைகளையும் புதல்வர்களையம் எடுத்துச் சென்றனர். இவர்களுடைய ஆதிக்கம் யூதாவில் சிறிது காலத்திற்காவது நிலவியது என்பது கூர்பாகால் (ஒருவேளை ஏதோமில் இருக்கலாம்) போரிலிருந்து தெரிகிறது. இப்போரை யூதாவின் பக்தியுள்ள ஊசியா யூதர்களுக்குச் சாதகமாக மாற்ற முடிந் தது (26:7). நாடுகளுக்கு எதிரான தீர்ப்பில் எரேமியா, ஒருவேளை கி.மு. 604–இல் நடந்த நெபுக்கதுனேசாரின் வெற்றிகளை மனதிற்கொண்டு, அரேபிய அரசர்களை யும் உள்ளடக்குகிறார் (எரே 25:24). தீருக்கு எதிரான தனது இறைவாக்கில், அரேபி யர்களுக்கும் பெனிசிய நகருக்குமிடையே யுள்ள வணிகத் தொடர்பு முடிவுக்கு வரும் என்று எசக்கியேல் முன்னறிவிக்கிறார் (எச 27:20–22). 572–ல் தீரின் வீழ்ச்சியோடு, அரேபியர்களுக்கும் பெனிசியர்களுக்கும் இடையே இருந்த பரந்த வாணிகத்தை நெபுக்கதுனேசார் கடுமையாகக் கட்டுப் படுத்தினார்.

பாபிலோனுக்கு நாடு கடத்தப்பட்டுத் திரும்பிய பின்னும் யூதர்கள் அரேபியர் களின் எதிர்ப்பையும், பகைமையையும் எதிர்கொள்ள வேண்டியிருந்தது. யூதர்கள் கிளர்ச்சி செய்யப்போவதாக எண்ணி கெசம் என்ற ஒரு அரேபியன் யூதர்கள் எருசலேமின் சுவர்களைக் கட்டும் முயற்சி யைப் பார்த்து எள்ளி நகையாடினான் (நெக. 2:19). சுவர் எழுப்பும் வேலை முன் னேறிக் கொண்டிருக்கும்போது, மற்ற அண்டை மக்களோடு சேர்ந்து அரேபி யரும் எருசலேமின் அழிவிற்குச் சதித் திட்டம் செய்தனர் (4:7). யூதி 2:25–இல் அரேபியா, தமஸ்குவிற்கருகில் இருப்ப தாகச் சூழ்நிலை காட்டுகிறது.

யூதா மக்கபேயர் தன்னைச் சுற்றியி ருந்த "எல்லா இனத்தாரோடும்" போர் புரிந்த போது, அவர் அரேபியக் கூலிப் படையையும் சந்திக்க வேண்டியிருந்தது (1 மக் 5:39–39). அவருக்குப் பின் வந்த யோனத்தான் சில நபத்தேயர்களோடு நட்புறவு கொண்டிருந்தார் (9:35). 1 மக்க பேயர் நூல் ஆசிரியருக்கு அரேபியரும் நபத்தேயர்களும் ஒருவரே.

2) புதிய ஏற்பாட்டில்:- ஐம்பதாம் நாள் விழாவிற்கு எருசலேமில் வழிபட வந்த பக்தியுள்ள யூதர்களில் அரேபியாவிலி ருந்து வந்தவர்களும் இருந்தனர் (அ.ப. 2:11). நபத்தேய அரசின் மக்கள் அரசன் அரெத்தாவால் ஆளப்பட்டனர். முதலில் கலிலேயா சிற்றரசனான எரோது அந்தி பாவுக்கும் அரசன் அரேத்தாவுக்கும் சுமூகமான உறவு நிலவியது. நபத்தேய அரசனது மகளை எரோது அந்திபா விவாகரத்து செய்தபின், அரேத்தா பகைமை கொண்டார். பவுல் தமஸ்கு வுக்குப்போகும் வழியில் மனந்திரும்பிய பின், இந்த அரேபியாவில் தான் தங்கி னார் (கலா 1:17).

III. 1. முக்கியத்துவம்:- அரேபிய நாட்டின் முக்கியத்துவம் இருவகைப்படும் அ) ஆதி 25:12–18–இல் இஸ்ராயேல் பழங் காலப்பல அரேபியா இனங்களுக்கு மூதா தையராகக் குறிக்கப்படுகிறார். ஆனால் தென் பகுதி அரேபியர்களின்படி ஒக்தா (ஒருவேளை விவிலிய யோக்கிதான் (10:25–26) ஆக இருக்கலாம்). அவர்களின்

மூல மூதாதையர் என்று கருதப்படுகிறார். ஆ) மோசே 40 ஆண்டுகள் மிதியானில் வாழ்ந்தது அரேபியா இனத்தவர் வாழ்ந்த வடமேற்கு கோடிப்பகுதியாகும். இதே பகுதியில் இஸ்ராயேலர், தங்களுடைய பாலைவனப் பயணத்தில் பல ஆண்டுகள் செலவழித்தனர்.

2. தொல்பொருள் ஆய்வு:- இதன்படி பூசு, தெதான், தூமா, ஏப்பா, கெவீலா, கெசர் – மாவேத், காசோர் (எரே 49:28). மாசா, மிதியான், ஒப்பிர், பரிவாயிம், இராமா, சபிதா, செபா, தேமா, ஊசு ஆகிய விவிலிய இடங்களை அரேபியா வில் அடையாளம் காட்டலாம். பழைய ஏற்பாட்டில் காணப்படும் அரேபியாவின் விரிவான புவியியல் விவரங்கள் குறிப் பிடத்தக்கவையாகும்.

3. பிற்காலத்தில்:- கி.பி. 7–ஆம் நூற் றாண்டில் இஸ்லாம் அதிகாரப்பூர்வமான சமயமாக ஏற்றுக்கொள்ளப்பட்ட பின், அரேபியர்கள் உலக வரலாற்றில் முக்கிய இடம் பெற்றனர். அவர்களது தென் செமித்தியா மொழி, அதன் பல திரிபு மொழிகளுடன் சேர்ந்து, 50 மில்லியன் மக்களால், இப்போது பேசப்படுகிறது. அதில் இயலிலும், சந்தமுடைய உரை நடையிலும் செழிப்புள்ள இலக்கியங்கள் பல உள்ளன.

**அரேலி** (ARELI – *வீரமிக்க*)

அரேலி காதின் மகனும் யாக்கோபின் பேரனும் ஆவார். அரேலி குடும்பத்தின் குலத் தலைவருமாவார் (ஆதி 46:16; எண் 26:17).

**அரைத்தல், மாவரைத்தல்**: (GRINDERS)

தானியங்களை மாவாக்கும் செயலைக் குறித்தது. இரண்டு கற்களுக்கிடையில் தானியங்களை வைத்து கையாலோ, விலங்குகளின் உதவியோடோ, தேய்த்துப் பொடியாக்குவதாகும். பழங்கால மேற் காசியாவில், இவ்வேலையைப் பொது வாகப் பெண்களும், ஊழியர்களும், அடிமைகளும் செய்தனர் (யாத் 11:15). சில சமயம் கைதிகளும் (நீதி 16:21) வெல்லப் பட்டவர்களை இழிவு படுத்தும்பொருட்டு அவர்களும் (புல 5:13; ஏச 42:7) இவ்வேலை யை செய்யக் கட்டாயப்படுத்தப்பட்டனர்.

கிறிஸ்து, தாம் மகிமையில் வரும் போது விழிப்பாய் இருக்கவேண்டும் என்று போதிக்கும்போது, இந்தவீட்டு வேலையை உவமையாகப் பயன்படுத்து கிறார் (மத் 24:41). மாவரைக்கும் இயந்தி ரங்களின் ஓசை நிறுத்தப்படுவது இறை வனது தீர்ப்பைச் சுட்டிக்காட்டியது (எரே 25:10).

திருவுரை 12:1–7–இல் வரும் மூப்படை வது பற்றிய உருவகத்தில் "அரைப்போர்" கடவாய்ப் பற்களைக் குறிக்கிறது. இவை தேய்ந்துபோய், எண்ணிக்கையில் குறைந் தும்போய் இருப்பதால், மெதுவான உணவுகளை அரைப்பதற்கே பயன்படும்.

**அரோதியர்** (ARODI, ARODITES)

அரோதின் வழித்தோன்றல்கள் (ஆதி 46:16).

**அரோது** (AROD – *கூனன்*)

காதின் ஆறாவது மகன். அரோதியர் குடும்ப மூதாதையரும் தலைவனும் ஆவார் (எண் 26:17).

**அரோயர்** (AROER)

1. ஆர்னோனின் கெவிமலைப் பள்ளத் தின் வட ஓரத்திலுள்ள நன்கு அறியப்பட்ட நகரம் (உப 2:36; 3:12; 4:48). சீகோனின் எமோரிய அரசின் தென்கோடி எல்லை யாக அமைந்திருந்தது (உப 4:4–5; 4:48; யோசு 12:12). பிற்பாடு இஸ்ராயேலர் யோர் தானுக்குக் கிழக்கில் கைப்பற்றிய பகுதி யின் எல்லையாக அமைந்தது (உப 2:36; யோசு 13:9). இது தொடக்கத்தில் ரூபன் இனத்தவருக்குப் பங்கீடு செய்யப்பட்டி ருந்தாலும் காது இனத்தவர்தான் இதைப் பலப்படுத்தினர் (எண் 32:34). அவர்களுக் குத் தெற்கு காவல் நிலமாகியது (யோசு 18:16). பிற்காலத்தில் இது தாவீதின் கணக் கெடுப்பு எடுக்கப்பட்ட முதலிடமாகும் (2 சாமு 24:5). கி.மு. 9–ஆம் நூற்றாண்டின் சீரியா அரசன் கைப்பற்றிய இஸ்ராயே லின் பகுதியின் எல்லையைக் குறித்தது (2 அர 10:33). மோவாபியக் கல்லின் மோ வாவு அரசன் மேசா இஸ்ராயேலின் தாக்குதலுக்கு எதிராக இந்நகரைப் பலப் படுத்தினார். பழைய ஏற்பாட்டில் இந் நகரம் பற்றிய குறிப்பு, எரேமியா காலத் தில் இந்நகரம் மோவாபியரின்

ஆட்சிக்குட்பட்டிருந்தது (எரே 48:19) எனத் தெரிவிக்கிறது.

இதன் இடம் இன்றைய தீபானுக்குக் கிழக்கில் 5 கி.மீ. தொலைவில் உள்ள கிர்பெத்து அராயீர் என்று அடையாளம் காட்டப்படுகிறது. அர்னோன் ஆறு மகீப் கெவிமலைப் பள்ளத்தில் புகும் இடத் தில் அமைந்துள்ள கூராவைச் சுற்றியுள்ள செழிப்பான சமவெளியின் தென் எல்லையில் அமைந்து நன்கு பாதுகாக்கப்பட்ட இப்பழம் பெரும் நகரம் வடக்கு தெற்கு வழியிலும் ஆர்னோனின் ஆற்றுத்துறையிலும் முக்கிய இடம் வகித்தது. தொல் பொருள் அகழ்வுகள், வெண்கல, இரும்புக் காலங்களைச் சேர்ந்த பருமனான சுவர்களைக்கொண்ட கட்டடங்களை வெளிக் கொண்டு வந்தன. இவை மேசாவால் கட்டப்பட்டதாக இருக்கலாம். கி.மு. 6–ஆம் நூற்றாண்டிலிருந்து கைவிடப் பட்டது. கி.மு. 2–ஆம் நூற்றாண்டில் நபத் தேயர்கள் ஆக்கிரமித்துக் குடியேறினர்.

2. காத்தின் எல்லையில் உள்ள கிலெயாத்தில் உள்ள நகரமாகும். இரபா (இன்றைய அம்மான்) என்ற அம்மோனிய தலைநகருக்கு அருகில் இருந்தது. இஸ்ராயேலுக்கும் அம்மோனியருக்கும் இடைப் பட்ட எல்லையைக் குறித்தது (யோசு 13:25). இரபாவுக்குத் தெற்கில் எஸ்–ஸ்வேய்வினா என்ற ஊர் அருகிலுள்ள இடமாக இந்த நகர் அடையாளம் காட்டப்படும்.

3. யூதாவின் தென் செப்பேலாவிலுள்ள ஒருநகரம் (1 சாமு 30:28). இவ்வூரைச் சேர்ந்தவர்களோடு, தாவீது சிக்கிலாகுக்குத் திரும்பியபின் அமலேக்கியரிடமிருந்து எடுத்த கொள்ளைப் பொருட்களைப் பங்கிட்டுக்கொண்டார். பெயேர் செபாவுக்குத் தென் கிழக்கில் 19 கி.மீ. தொலைவிலுள்ள கிர்பெத்து அராரா என்பது இந்நகரம் என்று அடையாளம் காட்டப்படுகிறது. யோசு 15:22–இல் வரும் அதாதா என்பது இப்பெயரின் திரிபாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது தாவீதின் விவிலிய வீரர்களில் இருவரின் தந்தையான அரோயேராகிய கோத்தாம் (1 நாள் 11:44). இந்நகரத்தைச் சேர்ந்தவராக இருக்கலாம்.

**அரோயரியர்** (AROERITE)

அரோயர் 1 அல்லது 3 – இல் குறிக்கப்பட்ட இடத்தைச் சேர்ந்தவர் (1 நாள் 11:44) தாவீதின் வலிமைமிக்க வீரர்கள் இரு வரின் தந்தையான கோத்தாம் ஓர் அரோயரியரராவார்.

**ஆரோயே** (HAROEH – காட்சியாளர்)

யூதாவின் வழித்தோன்றல். சோபாலின் மகன் (1 நாள் 2:52). 1 நாள் 4:2–இல் காணப்படும் இரயாயாவும் இவரும் ஒரே ஆளாக இருக்கலாம்.

**அர்க்கிப்பு** (ARCHIPPUS – குதிரை இலாயம் காவலாளி)

புதிய ஏற்பாட்டில் பவுல் பிலமோனுக்கு எழுதிய கடிதத்தின் தொடக்கத்தில் பலரைக் குறிப்பிட்டு அவர்களுக்காக இம் மடலை எழுதுவதாகக் குறிப்பிடுகின்ற ஆட்களில் இவரும் ஒருவராவார். இவர் இம்மடலில் பவுலின் உடன் உழைப்பாளியாக குறிப்பிடப்படுகின்றார். மேலும் பவுல் கொலேசையருக்கு எழுதிய மடலில் "ஆண்டவருக்குள் நீர் பெற்றுக்கொண்ட திருப்பணியை நிறைவேற்றக் கருத்தாயிரும்" (4:17) என்பதை அர்க்கிப்புவிடம் கூற கொலோசைய மக்களுக்குக் கட்டளை பிறப்பிக்கப்படுகிறது. இங்கே திருப்பணி என்பது எதைக்குறிக்கிறது என்பது முக்கியமான கேள்விக்குறியாகும்.

பிலமோன், அப்பியா ஆகிய இருவரின் புதல்வராக அர்க்கிப்பு பொதுவாகக் கருதப்படுகின்றார். ஆனால் இவ்வாறு கருதுவதற்கு எவ்வித ஆதாரங்களும் இல்லை. ஒருவேளை அவர்கள் வீட்டில் இருந்த திருச்சபையின் ஒரு அங்கத்தினராக இருந்திருக்கலாம். மேலும் ஒனேசிமு என்ற அடிமைக்குச் சுதந்திரமளித்து வீட்டில் ஏற்றுக்கொள்வதோடு மட்டுமல்லாமல், அவரைக் கிறிஸ்தவ சபையின் ஒரு நற்செய்திப் பணியாளராய் ஆக்க வேண்டும் என்பதுதான் அர்க்கிப்புவுக்கு கொடுக்கப்பட்ட பணியாகும் என்பது சிலரது கருத்து.

இலிக்கு பள்ளத்தாக்கிலுள்ள மிக முக்கிய நகரமாகிய இலவோதிக்கயாவில் பிலமோன் வசித்திருந்தால், அவர் அந்தப் பகுதியைச் சேர்ந்த கிறிஸ்தவ

சபைகளைத் தலைமையேற்று பொறுப்புடன் நடத்தும் மூப்பராக இருந்திருப்பார் என்கின்ற செய்தியானது இம்மடல் ஏன் பிலமோனுக்கும், அர்க்கிப்புவுக்கும் எழுதப்பட்டது என்பதற்கு விளக்கமளிக்கிறது. இம்மடலானது முதன் முதலில் பிலமோனைச் சென்றடைந்திருக்க வேண்டும். அதன்பின் கிறிஸ்துவ சபையின் உறுப்பினராகிய ஒனேசிமுவும் (கொலோ *4:9*) அர்க்கிப்புவும் தங்கியிருந்த நகராகிய கொலோசையை அடைந்திருக்கும் என்று எண்ணப்படுகிறது. பவுலின் இம்மடல் இல்வோதிக்கயாவை சென்றடைய வேண்டும் என்பது அவரது திட்டம் என்பதை கொலோசையருக்கு எழுதிய மடல் (*4:16*) விளக்குவதாகத்தெரிகிறது. "இக்கடிதத்தை நீங்கள் வாசிக்கக் கேட்ட பின் இலவோதிக்கயா திருச்சபையிலும் வாசிக்கச் செய்யுங்கள். அவ்வாறே இலவோதிக்கயாவிலிருந்து வரும் கடிதத்தை நீங்களும் வாசியுங்கள்" என்று எழுதுகிறார்.

பவுல் கொலோசையருக்கும், பிலமோனுக்கும் எழுதியுள்ள இந்த இரு மடல்களுக்குமிடையே உள்ள உறவுகளைப் பார்க்கும்பொழுது பிலமோனுக்கு என்று குறிப்பிடப்பட்டிருக்கிற மடலை அர்க்கிப்பு தான் பெற்றிருக்க வேண்டுமென்றும், அவர்தான் ஒனேசிமு அடிமையின் தலைவராக இருந்திருக்க வேண்டுமென்றும் தோன்றுகிறது. எனவே அர்க்கிப்பு தான் நற்செய்திப் பணிக்காக அடிமையை உரிமைக் குடிமகனாக்க வேண்டும். மேலும் கோலோசைச் சபையில் நல்ல விளைவுகளை ஏற்படுத்தத் தேவையானவைகளை நிறைவு செய்யவேண்டும். பவுலின் இம்மடலை முதன் முதலில் பெறுபவராக பிலமோன் குறிக்கப்படுவதால் (பில *1:1*) இம்மடலுக்கு பிலமோனுக்கு எழுதிய மடல் என்று பெயரிடப்பட்டிருக்கிறது. கிறிஸ்துவச் சபைகளைக் கண்காணிக்கும் உறுப்பினராக பிலமோன் இருந்திருப்பதால், இம்மடலில் முதன் முதலில் அவரைக் குறிப்பிடுவதில் எந்த வித வியப்புமில்லை.

**அர்க்கியர்** (ARCHITE)

பெத்தேலுக்கு தென்மேற்கில் உள்ள பகுதியில் நிறுவப்பட்ட பென்யாமின் குலத்தின் ஒரு பிரிவினர். முதலில் தாவீதிற்கும், பின் அபிசலோமுக்கும், ஆலோசகராயும், நண்பனுமாகவும் பணிபுரிந்த கூசாய் அர்க்கியர் குலத்தின் முக்கிய உறுப்பினராவர் (2 சாமு *15:32*; *16:16*; *17:5. 14*; 2 நாள் *27:33*). எப்பிராயிம், பென்யாமினுக்கும் இடைப்பட்டிருந்த எல்லைப் பகுதியின் விவரிப்பில் (யோசு *16:2,5*) அர்க்கியர்களின் நிலப்பகுதி அத்தரோத்தில் (ஒருவேளை அத்தரோத்து – அத்தாரில்) இருந்திருக்கலாம்.

**அர்க்கியர்** (ARKITE)

அர்க்காத்து நகரில் வாழ்பவர் அல்லது அந்நகரிலிருந்து வருபவர். ஆதி *10:17*; 1 நாள் *1:15*–இல் அர்க்கியர் கானானின் வழித்தோன்றல்களாகக் குறிக்கப்பெறுகின்றனர். அர்க்காத்து சீரிய நாட்டிலுள்ள திரிப்போலியின் வட மேற்கில் அமைந்துள்ள நகரம். அமர்னா கடிதங்களில் இந்நகரம் இர்க்காத்தா என்று அழைக்கப்படுகிறது. மூன்றாம் துத்மோசால் குறிக்கப்படும் அர்க்காத்து இதே இடமாக இருக்கலாம். இக்காலத்தில் இது திரிப்போலிக்கு வடக்கில் 18 கி.மீ தொலைவிலுள்ள தேல்–அர்க்காவாக இருக்கலாம். உரோமையர் காலத்தில் இந்நகரம் செசரியா லிமானி என்றழைக்கப்பட்டது. அப்போது இவ்விடம் அசித்தார்த்தித் தேவதையின் வழிபாட்டுக்குப்புகழ் பெற்றிருந்தது.

**அர்க்கெலா** (ARCHELAUS – மக்களின் இளவரசன்)

இவர் பெரிய எரோது, மால்தாக்கே ஆகிய இருவர்களின் மகனாவார் (மத் *2:22*). கி.மு. 4–ல் பெரிய ஏரோது இறந்த பின், அவரது ஆட்சிப் பகுதியானது அவர் எழுதி வைத்த உயிலின்படி பிரித்து வழங்கப்பட்டது. ஏரோது அந்திப்பா, பிலிப்பு ஆகிய இருவரும் மண்டல ஆளுநர்களாகவும், அர்க்கெலா வாரிசு அரசராகவும் நியமிக்கப்பட்டனர்.

ஆனால் அர்க்கெலா உடனே அரியணையேற முயலவில்லை. ஏனென்றால், யூதர்கள் தன் குடும்பத்தோடு பகைமை கொண்டுள்ளனர் என்பதை நன்கறிந்திருந்ததினால் அவர்களது ஆதரவையும், முழுமையான விருப்பத்தையும் பெற பல

வழிகளைக் கையாண்டார். அரச பொறுப்பை ஏற்கும் உரிமை தனக்கு வழங்கப்பட்டிருக்கிறது என்று உரோம் நகரால் உறுதி செய்யப்பட வேண்டும் என்றும் விரும்பினார்.

யூதர்களின் ஆதரவைப் பெற வேண்டுமென்று அவர் கையாண்ட வழிமுறைகள் பயனளிக்கவில்லை. அவர்கள் என்றும் ஓர் எதிர்ப்புச் சக்தியாகத்தான் விளங்கினர். எனவே யூதர்கள் விடாமல் பிடித்துக் கொண்டிருந்த பகை உணர்வு, எதிர்ப்பு மனப்பாங்கு போன்றவைகளால் ஏற்பட்ட சீர்கேடுகளைத் தவிர்க்க படைவலிமையைப் பெருக்கவேண்டுமென்று உணர்ந்தார். ஆனால் யூதர்களிடமிருந்து வந்த எதிர்ப்புகள் அவரது தந்தையின் காலத்தில் இருந்தபோல் இவரது காலத்தில் அவ்வளவு தீவிரமாக இல்லை. முதலில் அர்க்கெலா கட்டுப்பாட்டோடு நடந்து கொண்டாலும் பாஸ்கு விழாவின்போது ஆலயத்தில் இரத்தக் களரி எதிர்ப்பை அடக்க, இவர் படையைப் பயன்படுத்துவதை அவசியமாக்கியது.

ஏரோதின் இறப்பிற்குப்பின் அர்க்கெலா மன்னராக முடிசூட்டப்படப் போவதையறிந்த அவரது சகோதரர் ஏரோது அந்திப்பா தான்தான் அரசராக்கப்பட வேண்டுமென்ற பிரச்சினையை உருவாக்கினார். எனவே இருவரும் தங்களது உரிமைக் கோரிக்கைகளை அகுஸ்துமுன் வைக்க உரோமைக்குப் பயணமானார்கள். அர்க்கெலாவின் தாயும் அவருக்குச் சார்பாகச் சான்று பகர உரோம் நகருக்கு வந்தாள். ஆனால் இடையிலே அந்திப்பா பிரிவினரால் ஈர்க்கப்பட்டுவிட்டாள்.

வழக்கு முடிவதற்கு முன்னால் மால்தாக்கே இறந்துவிட்டாள். அதேநேரத்தில் யூதேயாவில் கிளர்ச்சி எழுந்தது. அவற்றை உரோமை வீரர்கள் அடக்கினர். அப்பாது யூதர்களின் தூதுக்குழு உரோமைக்கு வந்து, ஏரோதின் குடும்பத்தினர் யாரையும் அரசனாக்காது, யூதர்களை அவர்கள் சட்டப்படி வாழ அனுமதிக்கும்படி அகுஸ்துவிடம் வேண்டியது.

அகுஸ்து வழக்கை ஆராய்ந்து பார்த்து, ஏரோதின் ஆட்சிப்பகுதியில் பாதியை (யூதேயா) அர்க்கெலாவுக்கும் மற்றொரு பகுதியை சரிசமமாகப் பங்கிட்டு பிலிப்பு, அந்திப்பா ஆகிய இருவருக்கும் கொடுக்குமாறு தீர்மானித்தார். மேலும் அர்க்கெலாவுக்குச் சிற்றரசன் என்பதுதான் பதவிப் பெயராக வழங்கப்பட்டது. அவர் திறம்பட ஆட்சி செலுத்தினாரென்றால் 'மன்னன்' என்ற சிறப்புப் பட்டம் வழங்கப்படும் என்று உறுதியளிக்கப்பட்டது.

அர்க்கெலா யூதேயாவிற்கு திரும்பி வந்தவுடன் தலைமைக் குருவாக இருந்த யோயெசேரை நீக்கிவிட்டு, அவருக்குப் பதிலாக அவரது சகோதரர் எலயாசரை தலைமைக் குருவாக்கினார். அர்க்கெலா தனது ஒன்றுவிட்ட சகோதரரின் மனைவி கிளப்ரியாவை மணம் செய்ய விரும்பியதால் மரியம்மனே என்ற தனது முதல் மனைவியை விவாகரத்து செய்தார். இவர் அவளுக்கு மூன்றாவது கணவனாவார். இவ்வாறு அர்க்கெலா கைம்பெண்ணாகிய தனது சகோதரரின் மனைவியை மணந்ததால் "தந்தையர்களின் சட்டத்திற்கெதிரான தீச்செயல் புரிந்திருக்கிறார்" என்று யோசிபஸ் கூறுகிறார் (லேவி *18:16; 20:21*). இது யூதர்களின் சமய உணர்வை வெகுவாக அவமதித்ததாயிற்று.

மேலும் இவர் தலைமைக் குருவாகிய எலயாசரை நீக்கிவிட்டு சீயேவின் மகனாகிய இயேசு என்பவரை தலைமைக் குருவாக்கினார். அர்க்கெலா சமாரியர்கள், யூதர்களுக்கு இழைத்த கொடுமைகள் பற்றிய விவரங்களை யோசிபஸ் சரிவரத் தரவில்லை. ஆனால் யூதர்களை மிருகத்தனமாக நடத்தியதைச் சுருக்கமாகத் தருகின்றார். இக்கொடுமைகள் அர்க்கெலாவைப் பதவி நீக்கம் செய்யுமாறு கோரி சீசரிடம் தூதுக்குழு அனுப்ப யூதர்களைத் தூண்டியது. கி.பி. 6–இல் அர்க்கெலா இப்பொழுது வியன்னா என்றழைக்கப்படுகின்ற கலாத்தை நாட்டிற்கு நாடு கடத்தப்பட்டார். யூதேயாவை ஆட்சி செய்ய ஆளுநர் கோப்போனியஸ் அனுப்பப்பட்டார்.

அர்க்கெலா புதிய ஏற்பாட்டில் ஒரே ஒரு தரம்தான் குறிக்கப்பெறுகிறார் (மத் *2:22*).

**அர்க்கேவியர்** (ARCHEVITES)

அர்க்கேவியர்கள் பாபிலோனியாவிலுள்ள எரேக்கு என்ற நகரத்தில் வாழ்ந்தவர்கள். பாரசீகர்கள், பாபிலோனியர்கள், ஏலாமியர்கள், போன்றவர்களோடு எரேக்கு நகர மக்களும், அசூர்பானிப்பால் என்பவரால் சமாரியாவின் நகரங்களிலும், நதியின் அக்கரையிலுள்ள மற்ற மாகாணங்களிலும் குடியேற்றப்பட்டனர். அசூர்பானிப்பால் எஸ்.4:10–இல் ஒசினப்பர் என்றழைக்கப்படுகிறார்.

**அர்ச்சிக்கப்படுதல்** (SANCTIFICATION)

இது இறைவனுக்கு அல்லது அவருடைய திருவுளத்துக்கு ஒத்த நிலையைக் கொண்டிருத்தல் அல்லது படிப்படியாக முன்னேறி இதை அடைதலாகும். இது இறை அருளால் வழங்கப்பட்ட நிலையாகவும் அடையவேண்டிய ஓர் இலட்சியமாகவும் இருக்கலாம். விவிலியக் கோட்பாடு என்ற அளவில் இது பழைய ஏற்பாட்டைவிட புதிய ஏற்பாட்டை அதிகம் சார்ந்தாகும். ஆயினும் புனிதம் பற்றிய பழைய ஏற்பாட்டு அடிப்படைக் கருத்துக்களை முன் கொள்கிறது.

1. பழைய ஏற்பாட்டுபின்னணி:- பழைய ஏற்பாட்டில் புனிதம் என்பது, பிறமதப் புத்தகங்களில் உள்ளது போலவே, மனிதனுடைய சாதாரண அனுபவத்திற்கும், கட்டுப்பாட்டுக்கும் அப்பால் உள்ளவற்றிற்கும் அவன் அளிக்கும் பதிலாகும். ஆனால் இப்பதிலை அறிவு சார்ந்த, ஒழுக்கத்தைச் சார்ந்த, கலைச்சுவை சார்ந்த வகையிலிருந்து வேறுபடுத்தும் ஒரு தனி வகையாகக் காட்டவேண்டும். மனிதன் வளர வளர இந்தப் பண்பும் வளர வேண்டும் என்றால் அது ஒழுக்கத்தைச் சார்ந்ததாக, அறிவைச் சார்ந்ததாக ஆக்கப்படவேண்டும். எபிரேய மதத்தின் முக்கியமான பங்கு இதுதான்.

எபிரேய மொழியில் புனிதத்தைக் குறிக்கும் "கதோஸ்" என்ற சொல்லின் அடிப்படைப் பொருள், சாதாரண வழக்கிலிருந்து பிரிந்திருப்பது, வேறுபட்டிருப்பதாகும். கடவுளைப் பொறுத்த வரையில் மற்றதிலிருந்து பிரிப்பது என்ற பொருளில் "மற்ற–தன்மை" என்ற சொற்றொடர் அதிகமாக பயன்படுத்தப்பட்டுள்ளது. இறைவன் உள்ளியல்பால் மனிதனிடமிருந்து வேறுபட்டிருக்கிறார் என்பதைவிட அவர் இறைவனாக இருக்கிறார் என்பதை நாம் மனதில் முதன்மையாகக் கொள்ள வேண்டும். இறைவனாய் இருப்பது நேர் இயல்புடைய கருத்தாகும். எதிர் இயல்புடையதன்று.

நவீன காலக் கருத்து, விவிலியத்திற்கு மாறானது அது மனிதனை மையமாக கொண்டதாக இருக்கின்றது. கடவுளைப் பற்றிப் பேசும்போது அவரைப்பற்றி எதிர் மறையாக விவரிக்கிறோம்; மனிதனைச் சேராத சொற்களைப் பயன்படுத்தி விவரிக்கின்றோம். ஆனால் விவிலியம் ஆதி மனிதன் புனிதத்தைப் பற்றி கொண்டிருந்த கருத்தைத்தான் கொண்டிருக்கிறது. அவனுக்கு கடவுள்தன்மை என்பது ஒரு தற்காலிகக் கோட்பாடு அன்று. மாறாக அது எவ்வளவு தான் விளக்க முடியாதது என்றாலும், முதன்மை உண்மையாகும். புனிதத்தைக் குறிக்கும் "காதோஸ்" என்ற சொல் உண்மை பற்றிய இப்பொருளைக் கொண்டுள்ளது. அது எதிர்மறையான விவரிப்பன்று. அது ஒதுக்கி வைக்கப்பட்டதன்று, தீண்டத்தகாததன்று. ஆனால் மனிதனுக்கு அப்பாற்பட்ட ஆற்றலாகும். மிகச் சரியாக, அது இரண்டும் சேர்ந்ததாகும்.

இது முதிர்ச்சியடையாத கருத்தாகும். இறைவனைத் தவிர்த்த உயிரினங்களுக்கும், பொருட்களுக்கும் பயன்படுத்தப்பட்டுள்ளது. இந்தப் பொருளில் பழைய ஏற்பாட்டில் நல்ல சான்று உடன்டிக்கைப் பேழை பற்றிய விவரிப்புகளாகும் (1 சாமு 6:19–7:1; 2 சாமு 6:6–11; லேவி 17:26; எச 42:1–44:44). புனிதம் ஆட் தன்மையற்ற சூழ்நிலைக்கு வெளியே எடுத்துக் கொள்ளப்படும்போது அது பற்றிய சமயக் கருத்தில் வளர்ச்சி எழுகிறது. பழைய ஏற்பாட்டில் வேறுபட்ட இரண்டு வளர்ச்சிகள் உள்ளன. (அ) புனிதத்தன்மையது முதன்மையாகவும் மிக மேலாகவும் யாவேயிற்கு உரியது என்று கருதப்பட்டது (யோபு 6:10; ஏச 6:1–5; ஒசே 11:9). மற்ற எல்லா மனிதர்களும், பொருட்களும் குறிப்பாகக் குருக்களும் ஆலயமும் இறைவனோடு

கொண்டிருக்கும் தொடர்பை மட்டும் அடிப்படையாகக் கொண்டு புனிதமுள்ளவர்களாவர் (யாத் 19:6; 29:42–44; லேவி 19:2; 1 அர 9:3; எரே 1:5). ஏசயா எசக்கியேலின் நூல்கள் இங்குப் பொருள் மிக்கவையாகும் (ஏச 5:16; 40:25). இறைவாக்கினரும் குருவுமான எசக்கியேல் இறைவன் தமது புனிதம் பற்றிய அக்கறையால் செயலாற்றுவதாகக் காண்கிறார் (எச 20:41; 28:22.25; 36:23; 38:16; 39:27). (ஆ) அடிமைத்தனத்திற்கு முன்னால் இருந்த இறைவாக்கினர்கள் இறை புனிதத்தை அறநெறி சார்ந்ததாக்கினர்; அதாவது இறைவனது திருவுளம் அறநெறி விளைவுகள் உடையதாகக் கருதினர். இதைச் சார்ந்த முக்கியமான பகுதிகள் ஏச 5; எரே 5–7; ஆமோ 4–5; ஓசே 11: எச 18) ஆகும்.

2. புதிய ஏற்பாட்டு வளர்ச்சி :-

(அ) தொடக்க காலத் திருச்சபை:- அப்போஸ்தலர் பணியிலிருந்து, புனிதப்படுத்துதல் பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொள்வதைப் பொருத்தது என்று அறிந்து கொள்கின்றோம். இது உலகத்தை விட்டு விலகுவதையம் (அ.ப. 2:40), பாவமன்னிப்பையும் உள்ளடக்கியது (2:38;26:18). நேர் நிலையாகப் பரிசுத்த ஆவியைப் பெறுதல், புதுமைகள் செய்வதற்கான வரத்தையும் (2:43; 3:6; 4:12–16) ஒழுக்க ஆற்றலையும் (4:31–37), பொதுவாக கிறிஸ்துவுக்குச் சான்று பகர்வதற்கான துணிவையும் கொடுக்கிறது (2: 32–36; 4:31; 5:32).

கிறிஸ்தவர் வெறுமனே "புனிதர்கள்" என்று அழைக்கப்பட்டனர் (9:13.32; 26:10). புனித பவுல் தன்னுடைய கடிதங்களில் தொடர்ந்து இதைப் பயன்படுத்துகின்றார் (உரோ 1:7; 12:13; 1 கொரி 6:1; 16:1). அதே போல் திருவெளிப்பாட்டிலும் பதிநான்கு முறை இந்த வார்த்தை பயன்படுத்தப்பட்டுள்ளது. 1 கொரி 7:34; எபே 1:4;5:27; கொலோ 3:12–17 ஆகிய பகுதிகள் இன்னும் அதிகமாக இதை வலியுறுத்துகின்றன (1 கொரி 1:2; எபி 2:11; 10:14). இப்பகுதிகளின் பொருள் இங்கு ஒழுக்க முழுமையன்று. மாறாகக் கிறிஸ்துவுக்கு அர்ப்பணிப்பதைக் குறிக்கின்றது. இந்த வார்த்தை யானது, தூய்மையைக் காட்டுகின்ற அல்லது சுத்திகரிப்பைக் காட்டுகின்ற வார்த்தைகளைத் தழுவியதாக உள்ளது. பின்னதின் அடிப்படைபொருள் சடங்குத் தூய்மையாகும். இதுவும், புனிதத்தைப் போல் ஒழுக்கப் பொருளுடையதாக மாறுகிறது. காண்க. அ.ப. 10:14–15.28. இது யூதர்கள் புறவினத்தாரை விடத் தூய்மையானவர்கள் அல்ல என்றும், ஆனால் எல்லோரும் கடவுளால் ஏற்றுக்கொள்ளப்படும் தகுதியுடையவர்கள் (10:34–35.45; 11: 17–18; 15:9; 28:28) என்றும் காட்டுகிறது. பரிசுத்தமும், சுத்திகரிப்பும் பற்றிய பகுதிகளுக்கு எபே. 1:4;5:26; கொலோ 1:22; 1 தெச 4:7; 2 தீமோ 22:21; எபி. 9:13–4 ஆகியவற்றைக் காண்க. இந்த வழக்கு இரு பொருள்கள் உடையது. (அ) திருச்சபை பரிசுத்தமானது என்ற கருத்துக்கு இது அடிப்படையானதாகும். புனிதமடைய மிகவும் குறுகிய மனப்பான்மையுடைய தனி நபர் பண்புடைய முயற்சிகள் தவிர்க்கப்பட வேண்டுமென்றால், இந்தக் கூட்டு இலட்சியத்தையும் தேவையையும் கருத்தில் கொள்ள வேண்டும். பிரிந்திருத்தல் என்ற மூலக்கருத்து முழுவதும் ஆட் தன்மை பெறுகிறது. ஒவ்வொரு கிறிஸ்தவனும் புனிதத்தின் ஊற்றும் ஒழுக்க ஆற்றலுமான ஆண்டவரை வழிபடுவதில் சக கிறிஸ்தவர்களுடன் ஒன்றித்திருக்கும் போது புனிதத்தின் எல்லைக்குள் நுழைகிறான். (ஆ) புதிய ஏற்பாட்டில் அர்ச்சிக்கப்படுதல் என்றசொல் திருச்சபை கடவுளால் கட்டுப்படுத்தப்பட்ட சமூகமாகும் என்பதைக் குறிக்கிறது. இறைவனுடைய பண்பான புனிதம் புதிய ஏற்பாட்டில் கிறிஸ்துவுக்கும் சாற்றிக் கூறப்படுகிறது (மாற் 1:24; யோவா 6:69; அ.ப. 3:14; 4:27; திருவெளி 3:7; 1 பேதுரு 1:16;2:9).

திருச்சபையின் அனுபவம் "அர்ச்சிக்கப்பட்டவர்களோடு பங்கு அடைவார்கள்" என்று விவரிக்கப்படுகிறது (அ.ப. 20:32; 26:18). பரிசுத்தப்படுத்துதல் ஏற்கெனவே நிகழ்ந்து கொண்டிருக்கிறது. ஆனால் அது குறிப்பாக ஒருவன் ஒரு திருச்சபையில் நுழையும்போது நிறைவடைவதாக யில்லை. புனிதமாதல் இறைவனது பாவ மன்னிப்புக் கொடையோடு ஒரே சமயத்தில் நிகழ்கிறது. அ.ப. 26:18–இல் இது தெளிவாக்கப்பட்டுள்ளது. கிறிஸ்தவர்கள் பெறும் வாரிசுச் சொத்து வருங்காலத்தை

யும், இறப்பையும் தாண்டிச் செல்லக் கூடியதாக பலருக்குத் தோன்றலாம். கிறிஸ்துவின் அர்ச்சிப்பை ஏற்கெனவே அனுபவிக்கின்ற கிறிஸ்தவர்களுக்கு, ஏற்றுக்கொள்ளப்பட்ட வேறுபாடுகள், குறிப்பாக, இம்மை மறுமை, பூலோகம், விண்ணுலுகம் போன்றவை அவ்வளவு முக்கியமானவையல்ல. ஏன், இறப்பு என்பது அதனுடைய முக்கியத்துவத்தை இழந்துவிடுகிறது.

ஆ) ஒத்தமை நற்செய்திகளில் :- புனித மாற்கு நற்செய்தியின்படி "இயேசு கடவுளின் பரிசுத்தர்" (1:24). அவர் அசுத்தமானது அனைத்தையும் விரட்டி அடிக்கிறார் (1: 23–26; 34). புனித ஆலயமும் கூட, தூய்மைப்படுத்தப்பட வேண்டியிருந்தது (மத் 12:6; மாற் 11:15–17; 14:58); பாவிகளுடன் தொடர்பு கொள்வதால் தாம் தீட்டுப்பட்டு விடுவோமோ என்று அவர் அஞ்சவில்லை, அவருடைய பரிசுத்த தன்மை உண்மையானது, மேலாண்மையுடையது, பரிசேயர்களுடையதைப் போன்ற தன்று (மாற் 2:15–17; லூக் 19:5–10); இயேசு அவர்கள் பரிசுத்தம், அசுத்தம் ஆகியவை பற்றி அளித்த விளக்கத்தை நிராகரித்தார். மனிதனின் உண்மையான தேவைகளை எடுத்துக் கூறினார் (மாற் 7:1–23). மனிதனுடைய தலையாய தேவை என்னெவெனில் பாவச் செயல்களைப் பற்றிய எச்சரிக்கைகள் அல்ல, மாறாக அவனு டைய உள்ளம் பாவத்திலிருந்து விடுபட்ட தூய்மையான உள்ளமாக இருக்க வேண்டும். ஏனெனில் அங்கிருந்துதான் பாவம் தோன்றுகிறது (மத் 5:21–32; 6:22–23; 7:17–18; 12:34–35). மனிதர்களுடைய உள்ளத்தைத் தூய்மை படுத்துவதே தன்னுடைய பணி என்பதைக் கிறிஸ்து உணர்ந்து திருந்தார். ஏனெனில் உள்ளத் தூய்மையின்மைதான் அவர்களுடைய வாழ்க்கையைத்திசை திருப்பி விடுகின்றது. தவறான செயல்களில் வெளிப்படுத்துகிறது. கடவுளுடன் உறவு கொள்வதற்கு அவர்களைத் தகுதியற்றவர்கள் ஆக்கி விடுகின்றது. இந்த நோக்கத்திற்காகத் தன்னுடைய வாழ்க்கையையே அர்ப்பணித்தார். இது அவரை மரணப் பலிக்கு இட்டுச் சென்றது. மனிதனுக்குத் தேவையான விடுதலையையும் அர்ச்சிப்பையும் அளிக்கும் சக்திவாய்ந்த பலியாக இறைவன் தம் மரணப்பலியை மாற்றுவார் என்ற நம்பிக்கையில் தம்மையே அர்ப்பணித்தார் (மத் 26:38; மாற் 10:45; 14:21–24).

இ) எபிரேயேருக்கு எழுதிய திருமுகத்தில்:- குருவான கிறிஸ்து தன்னையே எப்படி பலியாக்கியுள்ளார் என்பதுதான் இத்திரு முகத்தின் மையக்கருத்தாகும். இது மக்களைப் பாவங்களிலிருந்து தூய்மைப் படுத்தலின் (1:3) அவசியத்தை பலி உருவகத்திலும் (2:17; 5:1) மையவாதத்திலும் (அதி. 5–10) எடுத்துக் கூறுகிறது. கிறிஸ்துவை அர்ச்சிப்பவராக விவரிக்கும் போது, உருவகம் அர்ச்சித்தலைப் பற்றியதாக மாறுகிறது (2:11; 7:26–27; 13:12). இந்த உருவகங்கள் ஒன்றுக்கு ஒன்றாக மாற்றிப் பயன்படுத்தப்படுகின்றன. இதை 9:11–14; 9:22–23–ல் காணலாம். யூத இடையீட்டுச் சடங்கு புறப்புனிதத்தை உண்டாக்கியது, கிறிஸ்து உள்ளார்ந்த புனிதத்தை உண்டாக்குகிறார். கிறிஸ்து அளிக்கும் பரிசுத்தமானது, மனிதனை இறைவனுடைய பணிக்கு தகுதியுள்ளவனாக்குகிறது. இதைவிட மேலாக அவனைக் கடவுளுடைய பரிசுத்ததனத்தில் பங்காளி ஆக்குகின்றது (12:10), இதுதான் மனிதனுடைய மிகமுக்கியமான தேவையாகும். கடவுளுடைய தரிசனமானது தூய்மையற்றவனுக்குக் கிடைக்காது. "அர்ச்சிப்பு" என்பது ஒருபொருள் பன்மொழியாக "நிறைவு" என்ற வார்த்தையோடு பயன்படுகிறது. நிறைவு என்றசொல் இத்திருமுகத்தில் ஒரு முக்கியமான சொல்லாகும் (2:10; 10:14; 11:39; 12:2). இந்த அர்ச்சிப்பு அல்லது நிறைவு அடைதல் ஏற்படக் காரணம் கிறிஸ்துவே, அவர் மனிதருடன் ஒப்பானார்; மனிதனைக் கடவுளுடைய பிரசன்னத்திற்குத் தகுதியுடையவனாக்கினார்; அவரே நமக்கு முன்னோடியாகி அதற்கு வழியும் வகுத்தார் (6:20; 10:19 தொ).

ஈ) யோவான் :- இவரது நற்செய்தியில் புனிதப்படுத்துதல் ஒரு முக்கிய இடத்தைக் கொண்டிருக்கிவில்லை; இருந்த போதிலும் அதை யோவானுடைய கருத்துடன் தொடர்புப்படுத்திக் காட்டலாம். உலகின் பாவத்தை நீக்குகின்றவர் கிறிஸ்துவே (யோவா 1:24). பாவத்தைப் பற்றியும்

அதிகமாக இந்த நற்செய்தியில் குறிப்பி டப்படவில்லை. அதேபோல் அர்ச்சிப்புப் பற்றிய சொற்கள் பயன்படுத்தப்பட வில்லை. ஆனால் அது பற்றிய கருத்துக் களை எடுத்துக் கூறலாம். கிறிஸ்து மனு மகன் என்றளவில், வானிலிருந்து அதா வது புனிதத்தின் ஊற்றிலிருந்து வருபவர் (3:12; 6:33–51; 8:13). அவரே "இறைவனின் பரிசுத்தர்" (6:69). கிறிஸ்து மற்ற எல்லாச் சாதனங்களையும் விட ஆற்றலோடு புனிதத்தை வழங்குகிறார். அவரில் விசு வாசம் கொள்கிறவர்கள் இறைவனோடு உறவு கொள்கின்றார்கள் என்ற பொரு ளில் புனிதப்படுத்தப்படுவார்கள் (17:20–26; 14:9–10; 16:15. 25–28). அவர்கள் வெறுமனே வாழ்வதில்லை, மாறாக அவர்கள், உயர்ந்த மட்டத்தில் எல்லாக் காலத்திற் கும், கடவுளுடைய மீட்பு ஆற்றல் தொடாத உலகத்தைச் சேராதவர்களாக வாழ்கின்ற னர். அவர்கள் உண்மையை கொண்டிருக் கின்றார்கள், அது அவர்களைத் தூய்மை ப்படுத்தும் (17:17). கிறிஸ்துவின் சொந்தப் புனிதத்தன்மை அவர்களுக்குக் கொடுக் கப்படுகிறது (17:19). யோவானின் முதல் கடிதத்தின்படி அவர்கள் கடவுளுடைய பிள்ளைகளாவர்; கிறிஸ்துவைப்போல் ஆக்கப்பட வேண்டியவர்கள். இந்த நம் பிக்கையே அவர்களைத் தூய்மைப்படுத் தும் என்று கூறப்படுகிறது (1 யோவா 3:3)

2) பேதுரு:- 1 பேதுரு 1:2–இல் ஆவியி னால்தான் அர்ச்சிப்பு நிகழ்கிறது. மேலும் இது கடவுளுடைய காலங்கடந்த நோக்கத்துடனும், கிறிஸ்துவால் செய்யப் பட்ட பரிகாரத்தோடும் இணைந்ததாகும் (1:19; 3:18). இது கடவுளுடைய தூய்மையின் மறு படைப்பாகும் (1:15–16). இது கிறிஸ்த வர்களையும் மற்றவர்களையும் வேறு படுத்திக் காட்டுகின்றது. அவர்களை ஒரே குருத்துவமாக அமைக்கின்றது (2:5). அதா வது, இறைவனை அணுகக் கூடியவர் களாகும், பிறரும் அவரை அணுக உதவக் கூடியவர்களாகவும் ஆக்குகிறது (3:15). அது, கிறிஸ்துவின் பரிசுத்தத்தை ஏற்று, அது நமது நடத்தையை நிர்ணயிக்கும் விதத்தில் கிறிஸ்துவின் பரிசுத்தத்தை நம்முடையதாக்கிக் கொள்வதில் அடங்கி யுள்ளது.

ஊ) பவுல்:- கிறிஸ்துவ அனுபவத்திலே பாவியைக் கடவுள் ஏற்றுக்கொள்கின்றார். பாவத்தினாலும், சாவினாலும், மனிதன் மீது சுமத்தப்பட்ட தடை உடைத்தெறியப் படுகிறது. பாவமானது ஆற்றல் வாய்ந்த எதிரிதான் என்றாலும் மேலாண்மை உள்ளதன்று. ஏனெனில் இறைவன் அதை விட மிகுந்த ஆற்றல் வாயந்தவர் (உரோ 5:20). இதுதான் பவுலின் கடிதங்களில் மீட்பு, ஏற்புடைமை என்பவற்றின் பொருள். பழைய வாழ்க்கையிலிருந்து விடுபட்ட கிறிஸ்துவின் "புதிய வாழ்விலே நடக்கின்றான்" (உரோ 6:4). எதிர்மறை யாக இது பழைய பாவ வாழ்க்கையை விட்டுவிடுவதையும் உள்ளடக்குகிறது, குறிக்கின்றது (உரோ 6:12–19). இதன் நேர் பயன்களைப் பற்றிப் பேசும்போது பவுல் "அர்ச்சிப்பு" என்ற சொல்லைப் பயன் படுத்துகின்றார் (உரோ 6:19. 22), இது இந்தச் சூழ்நிலையில் பாவத்தோடு ஒப்பிட்டு வேறுபடுத்தி "நேர்மை"யையும், இச்சைக்கு அடிமை ஆவதைவிட கடவு ளுக்கு பணிவதையும் உணர்த்துகிறது. 1 தெச 4:3.7–இல் இது கெட்ட நடத்தை, அசுத்த வாழ்க்கை ஆகியவற்றிலிருந்து வேறுபடுத்திக் காட்டப்பட்டுள்ளது.

புதிய ஒழுக்க அழுத்தம் ஆவியின் பெய ரால் விவரிக்கப்படுகிறது. அதற்குக் கொடுக்கப்பட்ட இறைத்தன்மையை வலி யுறுத்துகிறது (உரோ 7:6; 8:2–4, 11–13; கலா 5:16–25). கிறிஸ்தவர்களின் வளர்ச்சியைப் பற்றிக்கூறும்போது, பவுல் அர்ச்சிப்பைப் பற்றிய சொற்களைவிட ஆவியைப் பற்றிய சொற்களையே அதிகம் பயன்படுத்து கிறார். இரு கருத்துக்களும் சேர்ந்து 1 கொரி 3:16–17–இல் வருகின்றன.

அர்ச்சிப்பை, "அறநெறி வளர்ச்சிக்கு" ஒரு பொருட்பன்மொழியாகக் கொள்வது போதுமானதாக இருக்க முடியாது. சில வேளைகளில் "அர்ச்சிப்பு" என்பது விசு வாசி பாவ வாழ்க்கையை விட்டுவிட்ட கிறிஸ்துவனாகப் புதிய சூழ்நிலையில் மூலநிலையில் நிறுவப்படுவதைக் குறிக் கிறது. அதாவது ஓட்டப் பந்தயத்தில் தொடக்கத்தில் இருப்பதையேயன்றி. ஓட்டத்தில் முன்னேற்றத்தைக் குறிக்க வில்லை. இவ்வாறு ஏற்புடைமைக்கு

அர்ச்சிப்பை ஒரு பொருள் மறு சொல்லாகப் பயன்படுத்தலாம். "புனிதராயிருக்கும்படி அழைக்கப்பட்டு.... கிறிஸ்து இயேசுவுக்குள் பரிசுத்தராக்கப்பட்டவர்கள்" என்று கிறிஸ்தவர்கள் விவரிக்கப்படுகின்றனர் (1 கொரி 1:2) "இறைவனுக்கு நாம் ஏற்புடையவர்களும் பரிசுத்தவர்களும் ஆவதற்கு வழியானார்" (1:30) என்ற கூற்றின் நிறைவான விளக்கம் நமது அர்ச்சிப்பை மட்டும் குறிக்கவில்லை. திருச்சபையின் எல்லா வளர்ச்சியையும் குறிக்கிறது.

கிறிஸ்தவ அனுபவத் தொடக்கத்தை அர்ச்சிப்பாகச் சுட்டும் கூற்றுகளுக்கு மாறாகக் கிறிஸ்துவனின் முழுவாழ்வின் ஒருகூறாக அர்ச்சிப்பைக் காட்டும் அல்லது, திருச்சபை தனது பணிவாழ்வில் கொணரும் ஒன்றாக அர்ச்சிப்பைக் காட்டும் வாக்குகளும் உள்ளன. (உரோ 12:1; 15:16; 2 கொரி 7:1; எபே 2:19–22). மேலும் 1 கொரி 6:11 என்ற பகுதி கூட அறநெறி சூழ்நிலையைக் கொண்டது. 1 தெச 3:13–4:7–இல் அர்ச்சிப்பு என்பது பெரும் பாவத்தைத் தவிர்ப்பதைக் குறிக்கின்றது. 1 தெச 5:23–24ல் இது இறுதியில் இரண்டாம் வருகையில் நிறைவுபெறும் வளர்ச்சியைக் குறிக்கிறது. அர்ச்சிப்பு பரிசுத்த ஆவியோடு கொண்டுள்ள தொடர்பு 2 தெச 2:13–14–இல் காணப்படுகிறது. இது திருச்சபைக்கு இறைவன் கொண்டுள்ள மூல குறிக்கோளின் ஒரு பகுதியாகும். திருச்சபை பரிசுத்தமும் மாசற்றதுமாய்த் துலங்குவது, அதன் அமைப்பால் வருவதன்று; கிறிஸ்துவ வாழ்க்கை தொடக்கத்திலேயே இது நிறைவுடையதன்று: படிப்படியாக வளர்வதாகும்; கிறிஸ்து அன்பு கூர்வதால் வருவது (எபே 4:12–13. 22–5:2; பிலி 1:9–11;2:12–16).

சுருக்கமாக புனித பவுலுக்கு அர்ச்சிப்பு பற்றி இருக்கின்ற அனுபவத்தை கிறிஸ்தவ வாழ்வில் ஒரு கட்டத்தைச் சுட்டிக் காட்டி இதுதான் அந்தக் கட்டம் என்று சொல்லமுடியாது. அது மிகுந்த பொருள் வளம் பொதிந்ததாகும். ஏற்புடமை என்பது ஒரு மனிதனுடைய வாழ்வில் கடவுள் அவனுடைய மீட்பு வாழ்வை தொடங்கி வைப்பது என்றால், அர்ச்சிப்பு என்பது இன்னும் பரந்த பரப்பைக் கொண்டிருக்கின்றது. இந்த வளர்ச்சி பரிசுத்த ஆவியினால் ஆரம்பிக்கப்படுகிறது. அவரே அதை முன்னின்று நடத்தி அதை முழு வளர்ச்சி அடையச் செய்து, கிறிஸ்துவினுடைய நிறைவிலே அது நிறைவு அடையும்படி செய்கின்றார் (எபே 4:16). கிறிஸ்துவின் கடைசி வருகையின் போது அர்ச்சிப்பு முழுமை அடையும் (1 தெச 5:23).

**அர்த்தாசெருசு** (ARTAXERES) – வீரம் உள்ளவர்)

1. முதலாம் அர்த்தாசெருசு லோன்கிமான்:- இவர் (465–424) முதலாம் செருசின் மகனும் வாரிசுமாவார். கி.மு. 460–இல் எகிப்தில் ஏதன்சியர் ஆதரவோடு தொடங்கி 454 வரை நீடித்த கலவரத்தை வென்று அமைதி கண்டவர். பாரசீகப் பேரரசில் நடந்த மற்ற கிளர்ச்சிகளையும் அடக்கினர். கி.மு. 458–இல் எஸ்ரா இறைவாக்கினர் அதிகாரப் பூர்வமான தூதுக்குழுவின் தலைவராகப் போக இஸ்ராயேலருக்கு அனுமதி அளித்தவர் (அல்லது) கட்டளைக் கடிதம் கொடுத்தவர் (எஸ் 7–26;8:1) ஆனால் இவர் எருசலேம் புதுப்பிக்கப்படுவதை, மீண்டும் கட்டப்படுவதைத் தற்காலிகமாக நிறுத்தி வைத்தார் (4:7–23). 445–இல் எருசலேம் மீண்டும் கட்டப்படுவதில் உதவி செய்ய நெகமியாவை அனுப்பினார் (நெக 2:1–7). 432–இல் மீண்டும் எருசலேமுக்குத் திரும்ப அவருக்கு அனுமதி அளித்தார் (13:6).

2. இரண்டாம் அர்த்தாசெருசு (404–359):- இரண்டாம் தாரியுசின் மகனும், முதலாம் அர்த்தாசெருசின் பேரனும் ஆவார். மனேமோன் என்றழைக்கப்பட்டார். இவர் இவரது சகோதரன் சைரஸ் மூலமாக ஏற்பட்ட கலவரத்தை அடக்கினார். ஏறக்குறைய 402–இல் அல்லது 401–இல் இவர் எகிப்தை இழந்திருக்கலாம் எனக்கருதப்படுகிறது. இவரது பல கல்வெட்டுக்கள் இவரது கட்டிடத்திறனை வெளிப்படுத்துகின்றன. சூசாவில் இவர் கட்டிய அரண்மனைதான் எஸ்த 1:5–6–இல் குறிக்கப்படுவதாகும் என்று சிலர் கருதுகின்றனர்.

*3.* மூன்றாம் *அர்த்தாசெருசு (359–338):–* இரண்டாம் அர்த்தாசெருசின் மகன். ஒக்கஸ் எனவும் அழைக்கப்படுகிறார். தனது சாதுர்யத்தாலும், படை பலத்தினாலும் மேலெழுந்தவரான பலம் படைத்த பேரரசைக் கட்டிக்காத்தார். பாகோவால் என்பவரது சூழ்ச்சியின் விளைவாகக் கொல்லப்பட்டார்.

***அர்பத்தா*** (ARATTA)

அர்பத்தா என்பது யோர்தான் பள்ளத்தாக்கின் தாழ்வான பகுதிகளைக்குறிக்கும் என்று சிலர் கருதுகின்றனர். ஆனால் கலிலேயாவின் ஒரப்பகுதியை எல்லையாகக் கொண்ட சமாரியாவின் மேற்கு மாவட்டம்தான் அர்ப்பாத்தா என்று ஏற்றுக் கொள்ளப்படுகிறது. யோசிபசினால் இப்பகுதி நார்பத்தேனே என்றழைக்கப்படுகிறது. முதல் மக்கபேயர் நூலின் சிரியாக் மொழி பெயர்ப்பில் இதே எழுத்துக்கள்தான் பயன்படுத்தப் பட்டுள்ளன. கி.பி. 66–70–இல் ஏற்பட்ட யூதப் போரில் செசரியாவிலிருந்து ஓடி வந்த யூதர்களுக்கு அடைக்கலம் தருகின்ற இடமாக விளங்கியது. சீமோன் மக்கபேயு கலிலேயா, அர்பத்தா போன்ற நாடுகளுக்கு எதிராகப் போரிட்டு புற இனப் படைகளைத் தோல்வியடையச் செய்து யூத மக்களை விடுவித்தார். விடுவிக்கப்பட்டவர்களில் பலர் அவரைப் பின்பற்றி யூதேயாவிற்குச் சென்றனர் (1 மக் 5:23).

***அர்பா*** (ARBA – நான்கு)

பாலஸ்தீனத்தை வெற்றி கொண்ட காலத்தில் கெபிரோன் அல்லது கிரியத்து அர்பாவில் தங்கி வாழ்ந்த முக்கிய நபராகக் காட்டப்படுகிறார் (யோசு 15:13; 21:11). இவர் அனாக்கின மூதாதையராகக்கருதப் படுகிறார். இவல் அனாக்கியர் அல்லது "அரக்கர்கள் இனத்தில்" மிகப்பெரியவராவார் (14:15). கிரியத்து அர்பா அனாக்கியரின் பணி இருப்பிடமாகும் என்ற 70 நூல்களின் வாசகத்தின்படி கெபிரோனின் பழைய பெயராகிய கிரியத்து அர்பா என்பதிலிருந்து, 'அர்பா' என்ற பெயர் எடுக்கப்பட்டது என்று கணிக்கப்படுகிறது. எபிரேய வாசகமும் கிரியத்து அர்பாவை அனாக்கியரின் தாய்நகரெனக் குறிப்பிடுகிறது. காண்க. கிரியத்து – அர்பா:

***அர்பாத்தியர்*** (ARBATHITE – பாலையிலிருந்து வந்தவர்)

யூதா, பென்யாமின் பகுதிகளுக்கிடைப்பட்ட எல்லையிலுள்ள நகரமாகிய பேத்து – அராபாவின் குடிமகன். தாவீதின் திறமையும் ஆற்றலும்மிக்க வீரர்களில் ஒருவராகிய அபி–அலபோனின் உறைவிடமாக பேத்து–அராபா கருதப்படுகிறது (2 சாமு 23:3; 1 நாள் 11:32).

***அர்பியர்*** (ARBITE)

தாவீதின் சிறந்த வீரர்களில் ஒருவராகிய பாகராயின் இடுபெயராகும். இது அவரது தந்தையையோ அவர் வாழ்ந்த இடத்தையோ குறிக்கலாம் (2 சாமு 23:35). முதலாம் நாளாகமத்தில் (11:37) எசிபாயின் மகன் நாகராய் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது.

***அர்பேலா*** (ARBELA)

சீரியாவைச் சேர்ந்த பாக்கிதால் தாக்கப்பட்ட பகுதிகளில் அர்பேலாவும் ஒன்றாகும். இந்நகரம் கிலயாத்தில் உள்ள பேத்து–அர்பேலாவோடு ஒப்புமைப்படுத்தப்படுகிறது. ஆனால் கலிலேயாக் கடலுக்கு மேற்கே உள்ள வாதி–ஏல்–கமாம் என்ற ஓடைக்கு மேலே உள்ள கலிலேய கிர்பெத்து–இர்பித் என்ற இடம் தான் அர்பேலாவாக இருக்கலாம். மேலும் பாறைகளிலே செதுக்கப்பட்டபடிகளால் இணைக்கப்பட்ட குகைகளைக் கொண்ட புகழ்பெற்ற இந்நகரம் கலகக்காரர்களுக்கும், கொள்ளைக்காரர்களுக்கும் புகலிடம் தருகின்ற இடமாக விளங்கியது என்று யோசிபஸ் விவிரிக்கிறார்.

கி.மு. 161–இல் யூத மக்கபேயருக்கு எதிராகப் பாக்கிதின் படைஎடுப்பில், அவரது படைகள் இங்கிருந்த பல யூதர்களைக் கொன்றனர் (1 மக் 9:2). இந்தக் குகைப் பகுதிகளிலிருந்துதான் யூதக் கிளர்ச்சியாளர்கள் பெரிய ஏரோதை கி.மு. 39–இல் எதிர்த்தனர்.

***அர்ப்பண விழா*** (FEAST OF DEDICATION)

பொதுவாக இறைவனுக்கு அர்ப்பணமாகக் கொடுக்கப்படும் ஒரு விழாவைக் குறிக்கும் சொல். இது இறைவனுக்கு

பாலைவனக் கூடாரத்தில் பீடங்களை அர்ப்பணித்ததையோ (எண் 7:10. 84.88) அல்லது சாலமோன் மன்னன்போல் ஆலயப் பலிப்பீடம் அர்ப்பணித்ததையோ (2 நாள் 7:9) அல்லது எருசலேம் மதில் சுவரை அர்ப்பணிப்பதையோ (நெக 12:27) அல்லது ஆலயம் அர்ப்பணிப்பதையோ (சங் 30:1) குறிக்கும். சிறப்பாக இது யூதா மக்கபேயரால் எருசலேம் ஆலயம் தூய் மைப்படுத்தப்பட்டு புதுப்பிக்கப்பட்டதை யும் புதிய பீடத்தை அர்ப்பணித்ததையும் நினைவு கூறும் விழாவைக் குறிக்கும் (1 மக் 4:56; 2 மக் 10:5). இவ்விழாவின்போது தான் இயேசு தம்மையே மெசியா என்றும் இறைமகன் என்றும் அறிவித்தார் (யோவா 10:22–38). சாலமோன் மன்னன் காலத்திலேயே ஆலய அர்ப்பண விழாத் தொடங்கியது (1 அர 8). ஆனால், கிரேக் கர்களால் பங்கப்படுத்தப்பட்ட எருசலேம் ஆலயம் யூதா மக்கபேயுவால் கி.மு.165–இல் புதிதாகக்கட்டப்பட்டு அர்ப்பணிக்கப் பட்டதை யொட்டி (1 மக் 4:53) இவ்விழா வருடந்தோறும் அர்ப்பண விழா என்ற பெயரில் கொண்டாடப்பட்டது. தற்போது இது "கனுக்கா" என்று பொதுவாக அழைக்கப்படுகிறது (1 மக் 4:59).

இந்த விழா எட்டு நாட்கள் கொண்டா டப்பட்டது. ஒருவேளை இது எசக்கியா அரசனின் ஆலயத் தூய்மைப்படுத்தும் நிகழ்ச்சியோடு தொடர்புடையதாக இருக் கலாம் (2 நாள் 29:17). இவ்விழா குளிர் காலத்தில் தொடங்குகிறது. கிசிலேவு மாதத்தின் 25–ஆம் நாள் தொடங்கும் (யோவா 10:22–23). குளிர்காலத்தில் கொண்டாடப்படுவதால் இது அன்னிய தெய்வங்களின் வழிபாட்டிலிருந்து எழுந்ததா என்ற ஐயம் உள்ளது. ஆனால் யூத மரபானது இவ்விழாக் கொண்டாடப் படும் நாள் மக்கபேயர் காலத்தில் இருந்த படி அதே நாள் என்று மிகத்தெளிவாக அழுத்திக் கூறுகிறது (1 மக் 4:54; 2 மக் 10:3).

ஆலயம் இருந்த காலத்தில் மகிழ்ச்சி மிக்க இந்தக் கொண்டாட்ட நாட்களில் மக்கள் நன்றி பாடல்களை, குறிப்பாக அல்லேலல் சங்கீதங்களை (சங் 113–118) அடிக்கடி பாடிக்கொண்டு மரக்கிளை களை ஏந்திக்கொண்டு வலம் வருவர் (1 மக் 10:7). கூடார விழாவைப் போல் கொண்டாடப்பட்டது. ஆகையால் இவ் விழா "கிசிலேவு மாதத்தில் கொண்டாடப் படும் கூடார விழா" என்று அழைக்கப் பட்டது.

கி.பி.70–இல் ஆலயம் அழிக்கப்பட்ட பின் இந்த வழிபாடானது ஒளி விழா என்றும் அழைக்கப்பட்டது. ஏனெனில் இக் கொண்டாட்டங்களின் போது தனிப் பட்ட வீடுகளில் வைக்கப்படும் எட்டு விளக்குகளை ஏற்றுவதையும், ஒவ்வொரு திரு நாளுக்கும் கூடுதலாக ஒரு விளக்கு ஏற்றுவதும் முக்கியத்துவம் பெற்றதால் இப்பெயர் வந்தது எனலாம். பாபிலோ னிய தால்மூதுப்படி ஆலயத்தில் சிறிதள வே இருந்த எண்ணெயானது ஓர் அற்புதச் சக்தியால் புதிய எண்ணெய் திருநிலைப்படுத்தும் வரைக்கும் எரிந்து கொண்டிருந்தது என்று ஒரு கதையும் உண்டு. நாளா வட்டத்தில் இக்கதை இப் பழக்கத்திற்கு உத்தரவாதமாயிற்று. இவ் விழாவைக் கொண்டாட வேண்டும் என்று சட்டம் கூறவில்லையானாலும் தற்போது ஆண்டுதோறும் தொடர்ந்து கொண்டாடப் பட்டு வந்துள்ளது. மேலும் அண்மைக் காலத்தில் இது அதிகச் சமய முக்கியத்து வம் பெற்றுள்ளது.

**அர்ப்பணிக்கப்பட்ட** (DEVOTED)

இக்கருத்து 'புனிதத் தன்மை', ஒதுக்கப் படுதல், பிரிக்கப்படுதல், தடுக்கப்படுதல் ஆகிய கருத்தோடு தொடர்புடையது. எல்லா மொழிகளிலும் இந்தக் கருத்து சாதாரண வாழ்க்கைக்கு பயன்படுத்தக் கூடாதப் பொருட்களைக் குறிக்கின்றன. இது "கேரேம்" என்றழைக்கப்பட்டது. லேவி 27:28–ல் கடவுளுக்காக அர்ப்பணிக் கப்பட்ட மனிதனோ மிருகமோ அல்லது வேறெதுவோ அவைகள் பரிசுத்தமான வை என்று கூறப்படுகின்றது. போரில் வெற்றி வாகை பெறுவதற்காக, வெற்றி பெற்ற பின், அந்நாட்டில் உள்ள பொருட் களையும் உயிர் வாழ்பவற்றையும் கடவுளுக்கு அர்ப்பணிப்பதாக இஸ்ராயே லர்கள் நேர்ந்து கொண்டார்கள் (எண் 21: 2–4). அர்ப்பணிக்கப்பட்ட பொருட்களில் எதுவும் தனிப்பட்ட காரியங்களுக்கு பயன் படுத்தக்கூடாது (உப 13:17). எனவே கடவு

ளுக்காக ஒதுக்கப்பட்ட எதுவும் குருக்களுக்கு உரியதாயின (லேவி 27:21; எண் 18:14; எச 44:29). அர்ப்பணிக்கப்பட்ட பொருட்கள் மட்டில் ஆக்கான் கட்டிக் கொண்ட பாவமானது, இஸ்ராயேலரின் மீது, அர்ச்சிக்கப்பட்ட பொருட்களின் சாபத்தை விழ வைத்தது. இந்தச் சாபம் நீங்க குற்றம் புரிந்தவரையும் அவரது வீட்டாரையும் விலக்கி அழிக்க வேண்டியிருந்தது (யோசு 7:11–15.25), கடவுளுக்காக ஒப்புக் கொடுக்கப்பட்ட எதுவும் காப்பாற்றப்பட முடியாது அல்லது மீட்கப்படக் கூடாது (லேவி 27:29). எரிகோவின் அழிவு ஓர் அர்ப்பணிக்கப்பட்ட நகரின் நிலைக்கு எடுத்துக்காட்டே (யோசு 6:18 தொ). அர்ப்பணப்போர் என்ற கருத்து கடுமையாகக் கடைப்பிடிக்கப்பட்டால் உயிருள்ளவையெல்லாம் கொல்லப்பட வேண்டும் (உப 20:16). அழிக்கப்படக்கூடியதெல்லாம் அழிக்கப்படவேண்டும் எரிக்கப்படக்கூடியவை எரிக்கப்படவேண்டும் (7:25–26). எரிக்கப்பட முடியதவை ஆண்டவரின் கருவூலத்தில் சேர்க்கப்படவேண்டும் (யோசு 6:24). போரின்போது எதிரி அரசனை நேர்ச்சைக் கடனாக அளிப்பதே சாலச் சிறந்தது. அப்படி நேர்ச்சை நிறைவேறவில்லை என்றால் அவன்மீது தேவ சாபம் விழும் (1 சாமு 15:24–33; 1 அர 20:42).

இந்த "கேரேம்" கொடுமையிலிருந்து பெண்களும், குழந்தைகளும் (எண் 31:7–12; 17:12; உப 21:10–14) குறிப்பாக இளம் கன்னிப் பெண்களும் (யோசு 21:11–12) விதிவிலக்குப் பெற்றிருந்தனர். விலங்குகள் காப்பாற்றப்படலாம் (உப 2:35). ஆனால் தீவிரவாதிகள் இவற்றையும் ஆண்டவருக்குப் பலிசெலுத்தக்கூட அனுமதிக்கவில்லை (1 சாமு 15:9–21).

இஸ்ராயேலர்கள் சிலை வழிபாட்டில் விழுந்துவிடாமல் இருக்க கானானியர் அழிவுக்காக அர்ப்பணிக்கப்பட்டனர் (உப 7:1–3; 20:16–18; யோசு 2:10; 6:17). யோசுவா அவர்களை முழுவதும் அழித்ததாகக் கருதப்படுகிறது (யோசு 10:1.28–40; 11:1–21). இது எதிரிகளை அழிக்கவேண்டும் என்ற பிற்காலத்திய இஸ்ராயேலரின் விருப்பத்தை இங்கு வெளிப்படுத்துகிறதே தவிர, இஸ்ராயேலர்களால் அவர்களை அழிக்க முடியவில்லை (1 அர 9:21). சிலை வழிபாட்டில் ஈடுபட்டுள்ள இஸ்ராயேல் நகரம் எதுவும் கானானிய நகரங்களைப் போலவே அழிக்கப்படும் (உப 13:12–18). ஆண்டவர் ஒருவருக்கன்றி வேறு தேவருக்குப் பலி கொடுப்பவன் கொல்லப்படுவான் (யாத் 22:20). ஆனால் இவ்வாறு எப்போதும் நடந்ததா என்பது ஐயத்திற்குரியது.

நாடு கடத்தலுக்கு பின்பு இக்கருத்து போரைச் சார்ந்ததாகச் செயல்படவில்லை. சமூகத்தில் உள்ள வேண்டாதவற்றை பிடுங்கி எறிவதை குறிக்க இந்தக் கருத்து பயன்பட்டது. நாடு கடத்தப்பட்டவர்களில் எவனாவது மூன்று நாட்களில் எருசலேமுக்குள் வந்து சேராவிட்டால் அவனது உடைமைகள் பிடுங்கப்பட்டு அவன் கூட்டத்தில் இருந்து விலக்கப்படுவான் (எஸ் 10:8). எனவே இக்கருத்து 'விலக்கி வைத்தல்' என்ற பொருளையும் பெற்றது. சபை ஒழுங்கு முறையாயிற்று.

இக்கருத்து வெளிப்பாட்டு இலக்கியங்களிலும் இடம் பெற்றது. இஸ்ராயேலரின் எதிரிகளான புற இன நாடுகளைக் குழுவாகக் குறித்த ஏதோம் கொல்லப்படுவதற்குத் தீர்ப்பளிக்கப் பெற்றவர்கள் (ஏச 34:2.5) சீயோன் அழிக்கப்பட்டு அதன் சொத்துக்கள் ஆண்டவருக்கு அளிக்கப்படும் (மீக் 4:13; ஆகாய் 2:6–7). மலாக் 4:6–இல் கடவுளின் சாபம் பற்றிய அச்சமும் வெறுப்பும் காணப்படுகிறது. புதிய எருசலேமிலும் (செக் 14:1), வானக எருசலேமிலும் (திருவெளி 22:3) இந்த அழிவுக்கு ஒதுக்கப்படுதலும் சாபமும் இராது.

### அர்மேனிய மொழியில் இயேசுவின் பால பருவம் பற்றிய நற்செய்தி
(ARMENIAN GOSPEL OF THE INFANCY)

இந்நூல் இயேசுவின் பாலபருவம் பற்றிய பல இரண்டாம் தர நிகழ்ச்சிகளைக் கூறும் பல நூற்களைப் போல, யாக்கோபின் மூல நற்செய்தி என்ற நூலையும், தோமாவின் நற்செய்தியையும் அதிகமாகத் தழுவி அமைந்துள்ளது. இதில் மிகைப்படுத்தப்பட்ட கதைகளும், அதிகமான முடிவற்ற உரையாடலும் காணப்படுகின்றன. இதற்கு முந்திய மற்ற பாரம்பரியங்களில் காணப்படாத ஒன்றும்

இந்நூலில் இல்லை. இந்நூல் சீரியக் மொழியிலிருந்து அர்மேனியமொழிக்கு வந்திருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

**அர்மோன் மரம்** (PLANE TREE)

அகன்ற இலைகளையும், விரிந்து பரவும் கிளைகளையும் முள் தோலுடைய வட்ட வடிப்பழங்களையும் கொண்ட ஒரு வகை மரம். ஆண்டுக்கு ஒருமுறை இலைகள் யாவும் உதிர்ந்துவிடும். காரானில் தன் மாமன் லாபானுககு எதிராகச் செய்த ஏமாற்றும் திட்டத்தில் யாக்கோபு அர்மோன் கிளைகளையும் பயன்படுத்தினார் (ஆதி *30: 37*). எச *31:8*–இல் பாரவோனுக்கு ஒப்பிடப்படும் கேதுரு மரத்தோடு ஒப்பிட்டு வேறுப்படுத்தப்படும். இறைவனது சோலையிலுள்ள மற்ற மரங்களில் இதுவும் ஒன்றாகும். ஞானம் "அர்மோமரத்தைப் போல் உயர்த்தப்பட்டது" (சீரா *24:14*). மேற்காசியாவில், நீர்நிலைகளுக் கருகில் இம் மரங்கள் வளர்கின்றன.

**அலகை, பேய்** (DEVIL)

பழைய ஏற்பாட்டிலும், யூத சமயத்தில் பிற்காலத்தில் எழுந்த நூல்களிலும், புதிய ஏற்பாட்டிலும் அடிக்கடி தோன்றும் வார்த்தை, கிரேக்க விவிலியத்தில் அலகை (தியாபோலோஸ்) என்றுள்ளது. புதிய ஏற்பாட்டில் சாத்தான், அலகை என்று வேறுபாடு ஏதுமின்றி உபயோகப் படுத்தப்பட்டிருக்கிறது. பவுல் எழுதிய திருமுகங்களில் சாத்தான் என்றும் யோவான் நற்செய்தியிலும், திருமுகங்களிலும் அலகை என்றும் உள்ளது.

இந்தப் பழைய ஏற்பாட்டுச் சொல் எபிரேயர்களின் சட்ட வழக்கில் 'எதிரி' அல்லது 'பழித்துக் கூறுபவன்' என்ற பொருளில் உள்ளது (செக் *3:1*). இஸ்ராயேலின் பகைவர்களைக் கடவுள் இஸ்ராயேலருககு எதிராக எழுப்பச் செய்தார் (1 அர *1:14*). யோபு *1:6–12*–இல் சாத்தான் யோபுவுக்கு எதிராக கடவுளின் முன்னின்று பேசுவதாக உள்ளது. ஆனால் இங்கு சாத்தான் யோபுவுக்கு துன்பங்கள் செய்பவனாக காட்டப்படுகின்றான். 1 நாள் *21:1*–இல் தீமைகளைத் தூண்டுபவனாகத் தோன்றுகின்றான்.

யூத சமயத்துப் பிற்கால நூல்களில் இவ்வார்த்தை பல பொருளில் கையாளப் பட்டிருக்கிறது. தீய ஆசை, வீழ்ச்சியடைந்த வான தூதர்கள், கசாவின் தூதன் ஆகிய பொருளில் உள்ளது. ஆனால் இந்தப் பொருள்கள் முக்கியமானவை அல்ல. முக்கியமான பொருள் எதுவென்றால் கடவுளுக்கும், மனிதருக்கும் இடையே உள்ள உறவை அழிப்பவன்; இஸ்ராயேல் மக்களைப் பாவத்தில் விழத் தாட்டச் செய்பவன்; அவர்களைக் கடவுளின் முன்னிலையில் பழித்துக் கூறுபவன்; அவர்கள் கடவுளை பழித்துப் பேசச் செய்பவன்; இறைவனது திட்டத்தைக் குறுக்கிட்டுக் கெடுப்பவன், இவ்வுலக அரசனோடு இவ்வார்த்தை ஒன்றாக்கப் படவில்லை.

புதிய ஏற்பாட்டில் கீழ்வரும் பகுதிகளில் அலகை கடவுளுக்கு எதிரான இயற்கைக்கு அப்பாற்பட்ட ஒரு எதிரி என்றும், மனிதர்களைச் சோதனைக்கு உட்படுத்துபவன் என்றும் கூறப்படுகிறது (மத் *4:1* தொ; *13:39*; லூக் *4:1* தொ; *8:12*; யோவா *13:2*; அ.ப *10:38*; எபே *4:27*; *6:11*; 1 திமோ *3:6–7*; 2 திமோ *2:26*; யாக் *4:7*; 1 பேதுரு *5:8*). அலகையின் அதிகாரத்திற்கு (சோதனைக்கு) உட்பட்டவனும் அலகை என்றோ அல்லது அலகையின் மக்கள் என்றோ அழைக்கப்பட்டனர் (யோவா *6:70*; *8:44*; 1 யோவா *3:8.10*). சாவு அவன் கையில் உள்ளது (எபி.*2:14*). அலகை இவ்வுலகை ஆட்சி செய்வது போல் இருப்பினும் கிறிஸ்து அவனைத் தோற்கடித்து வெற்றி காண்கிறார் (மத் *25:31*; யூதா 9; திருவெளி *2:10*; *12:9.12*; *20:2.10*; யோவா *12:3*; *14:30*; *16:11*; 2 கொரி *4:4*). இவற்றைத் தவிர்த்து பழைய ஏற்பாட்டுப் பொருளான குற்றம் கூறுபவன் என்ற பொருளில் திருவெளி *12:10*–இல் வருகிறது. உரோமை *8:33–34*–ல் இது முன்கருத்தாகக் கையாளப்பட்டிருக்கிறது. அலகை ஒரு பெயர் தழுவுச் சொல்லாக 2 திமோ *3:3.11*; தீத்து *2:3* ஆகிய பகுதிகளிலும், வினைச் சொல்லாக லூக் *6:1*–லும் இது வருகிறது.

புதிய ஏற்பாட்டில் சில வான தூதர்கள் தங்களது விண்ணக மேன்மையிலிருந்து வீழ்ந்து, அலகையின் ஆட்சியை ஏற்றுக் கொண்டதாகக் கூறப்படுகிறது. பேய்களின் தலைவன் (மத் *9:34*) என்ற

அளவில் அலகை "பொய்யனும், பொய்க் குத் தந்தையும்" 'தொடக்கத்திலிருந்தே கொலைக்காரனும்" (யோவா8:44) ஆவான். பேய்களை மனிதருள் அனுப்பி, அவர் களைப் பேய் பிடித்தவர்களாக்கி கிறிஸ்து வின் மீட்பு அலுவலை எதிர்ப்பவன்.

பாலைவனத்தில் இயேசுவைச் சோதித்து அவரது பணியை ஒன்று மில்லாமல் ஆக்க முயற்சித்தான். இந்த முயற்சியைத் தற்காலிகமாகக் கைவிட்டா லும் (மத் 4:1–11; லூக் 4:2–13) குறித்தகாலம் வரை காத்திருந்தான் (லூக் 4:13). அந்த நேரம், அவரது பாடுகளின்போது பன்னி ருவரில் ஒருவரான யூதா இசுகாரியோத்து அவரைக் காட்டிக் கொடுத்தபோது வந்தது (லூக் 22:3; யோவா 6:70; 13:2). அலகையின் மேல் இயேசு வெற்றி கொண் டதை லூக்கா சுட்டிக் காட்டினாலும், இயேசு அலகையின் ஆற்றலை (லூக் 8:12; மத் 13:39), குறிப்பாக மக்களைப் பேய் பிடிக்கச் செய்து இறையரசு விரிவாவ தைத் தடுப்பதில் அலகையின் ஆற்றலை அறிந்திருந்தார் என்றும் சுட்டிக்காட்டு கிறார். அ.ப.13:10–11–இல், அலகையோடு கொண்டிருந்த தொடர்புக்காக எலிமா சைக் பவுல் குருடன் ஆக்குகிறார்.

தமது உயிர்ப்பின் வழியாக, கிறிஸ்து சாவின் ஆதிக்கத்தையும், கொள்கையள வில் அலகையின் ஆதிக்கத்தையும் தகர்த் தெறிகிறார் (எபி 2:14; காண்க. அ.ப. 10:38:1 யோவா 3:8). இறைவனின் எதிரியான அலகை "கர்ச்சிக்கும் சிங்கம்போல் யாரை விழுங்கலாம்" எனத் தேடித் திரிகிறான் (1 பேதுரு 5:8). இறுதித் துன்ப காலத்தில் நடக்கும் பெரும் போரில் (திருவெளி 20:10) அல்லது தீர்ப்பின் நாளில் (மத் 25:41) அலகையின் ஆட்சி முடிவுறும்.

இதற்கிடையில், விசுவாசிகள் அலகைக்கு இடம் கொடாதிருக்கவும் (எபே 4:27) அதன் வஞ்சகத்தை எதிர்க்க வும் (6:11; காண்க 1 பேதுரு 5:9) எச்சரிக்கப் படுகின்றனர் திருச்சபை அதிகாரிகள், அவிசுவாசிகளைச் சாந்தத்தோடு கடிந்து கொள்ளவேண்டும் என அறிவுரை கூறப் படுகிறது. ஏனெனில் அதன் விளைவாக "கடவுள் அவர்களுக்கு மனம் திரும்பும் அருளைத்தந்து அவர்கள் உண்மையைக் காணச் செய்யக்கூடும். பேயின் வலையில் சிக்குண்டு அதன் விருப்பத்திற்கு அடிமை களாக இருந்த அவர்கள் இவ்வாறு தெளி வடைந்து அவ்வலையினின்று விடுதலை பெறக்கூடும்" (2 திமோ 2:25–26).

**அலக்சாந்தர்** (ALEXANDER – மனிதனின் காப்பாளன், மனிதனின் ஆதரவாளர்)

பழைய ஏற்பாட்டில் இருவருக்கும், புதிய ஏற்பாட்டில் ஐவருக்கும் கொடுக்கப் பட்டுள்ள ஒரு கிரேக்கப் பெயர்.

1. மக்கதோனியாவின் அரசனான மூன்றாம் அலக்சாந்தர் இவர். பூர்வீக உலகத்தின் மாவீரர் மாமன்னர் அலக் சாந்தர் என அழைக்கப்படுகிறார். மக்க தோனியாவின் அரசனான இரண்டாம் பிலிப்புவின் மகன் கி.மு.356–இல் பிறந்து, அரிஸ்டாடிலிடம் கல்வி பயின்று, கி.மு. 336–இல் அரியணை ஏறினார். பாரசீக நாடு கிரேக்க நாட்டிற்குக் கொடுத்து வந்த தொல்லைகளுக்கு ஒரு முடிவு காண தீர்மானித்து, 334–ல் கீழ்த்திசை நாடுகளின் மீது போரை ஆரம்பித்தார். அதிலிருந்து அவர் மக்கதோனியாவுக்குத் திரும்பவேயில்லை. பாரசீகம் (கி.மு.334, 333) சிறிய ஆசியா, சீரியா, பாலஸ்தீனம், எகிப்து (331) ஆகியவைகளை வென்றார். கௌகமேலாவில் தாரியுவைத் தோற் கடித்துவிட்டு, மெசபொத் தாமியாவை யும், பாரசீகப் பேரரசையும் வென்று சிந்து வரை வந்துவிட்டார் (326). எட்டு ஆண்டு களாகத் தங்கள் வீடுகளை விட்டு வந்த போர் வீரர்கள் வீடு திரும்பவேண்டும் என்று அலக்சாந்தரைக் கட்டாயப்படுத்தி னர். ஆகவே இந்தியாவை வெல்ல வேண்டும் என்ற நம்பிக்கை இவருக்குத் தடைப்பட்டது. கி.மு.323–இல் சுரம் கண்டு 33 வயதில் பாபிலோனில் காலமானார். 1 மக் 1:1–இல் உள்ளது போல் இவர் உண்மையிலேயே தாரியுசைவென்று ஆட்சி யைக் கைப்பற்றினார்.

பழைய ஏற்பாட்டில் 1 மக் 1:1–8; 6:2–இல் மாவீரர் அலக்சாந்தரின் அரசியல், போர்ச் செயல்களின் சுருக்கம் கொடுக் கப்படுகிறது. "மாமன்னர் இறந்த பின் அவர் அரசு பிளவுபட்டது" என்று தானி 7;11:3–4–இல் உள்ளது. சிலையும் தானி 8:5–உம் அலக்சாந்தரை மறைமுகமாகக்

குறிக்கின்றன. செக் 9:1–8–இல் அலக்சாந்தர் பாலஸ்தீனத்தை வென்றதற்குக்குறிப்பு உண்டு என்று வல்லுநர்கள் கருதுகிறார்கள்.

அலெக்சாந்தர் பாலஸ்தீனத்தைத் தன்னுடைய அரசுடன் இணைத்துக் கொண்டார். இவர் யூதர்களுக்குப் பல சலுகைளைக் கொடுத்தார். இதைச் சமாரியர் கடுமையாக எதிர்த்தனர்.

331–இல் அலக்சாந்திரியா நகரை எகிப்தில் கட்டினார். யூதர்களுக்கு பல சலுகைகள் கொடுத்து அங்குக் குடியேற்றினார்.

இவருடைய வெற்றிகள் கிரேக்க நாகரீகத்தை மேற்கு ஆசிய நாடுகளுக்குக் கொண்டுச் சென்றன. யூதர்களுடைய வாழ்க்கையிலும், சிந்தனையிலும் பல மாறுதல்களைக் கொண்டு வந்தன. தனது பேரரசு முழுவதிலும் கிரேக்க மொழியை ஆட்சி மொழியாக்கினார். இது அலக்சாந்திரியாவில் பழைய ஏற்பாட்டை எபிரேய மொழியிலிருந்து கிரேக்கமொழிக்கு மொழிபெயர்க்கவும், புதிய ஏற்பாடு அம் மொழியில் எழுதப்படவும் வழிகோலியது. இதனால் பல மக்கள் யூத, கிறிஸ் தவச் சமயங்களை அறிய வாய்ப்பு ஏற்பட்டது. அதேசமயம் கிரேக்க அறிவியல் வாதிகளின் பாதிப்பு இவ்விரு சமயங்களையும் பாதிக்கச் செய்தது. அவற்றிற்குச் சவாலாக அமைந்தது.

2. அலெக்சாந்தர் பாலாசு என்பவர், அந்தியோக்கு எப்பிபானின் மகன் போல பாவனை செய்தார். இவர் உண்மையில் கிரேக்க நாட்டுக் கீழ்ச்சாதியினர். இவருடைய உண்மையான பெயர் "தெரியாதவன்" என்று பொருள்படும் பாவாஸ் என்பதாகும். எகிப்து, பெர்காமும், கப்பதோக்கியா ஆகியவற்றின் மன்னர்கள், சீரியாவில் குழப்பம் விளைவிக்க விரும்பிய உரோமையர் ஆகியோருடைய உதவியுடன் கி.மு. 153–இல் தெமேத்திரியுவின் ஆட்சியைக் கைப்பற்றத் தயாரானார். 152–ல் யோனத்தான் மக்கபேயுவை எருசலேமில் தலைமைக் குருவாக நியமித்து அவருடைய உதவியையும் பெற்றார். கடைசியில் தெமேத்திரியவைத் தோற்கடித்து 150–இல் சீரியாவின் அரியணை ஏறினார். தோலமி பிலோமெத்தரின் மகள் கிளியோப்பத்திராவை மணந்தார். 150–145 வரை ஆண்டார். ஆனால் நல்ல முறையில் ஆட்சி செய்யவில்லை.

இரண்டாம் தெமேத்திரியுவுக்காக அவருடைய மாமன் அவரை கைவிட்டார். தன்னுடைய மகள் கிளியோபத்திராவை அலக்சாந்தரிடமிருந்து எடுத்துத் தெமேத்திரியாவுககுக் கொடுத்தான். யோனாத்தான் அலக்சாந்தருக்குப் பிரமாணிக்கமாய் இருந்து அப்பொல்லொனியுவின் தலைமையில் வந்த தெமேத்திரியுவின் படைகளைத் தோற்கடித்தார். சீரிய நாட்டின் மீதப்பகுதிகள் தெமேத்திரியு ஆட்சியை ஏற்றுக் கொண்டன. கடைசியில் அலக்சாந்தர் தோற்று அரேபியாவிற்குத் தப்பி ஓடினார் அங்கு அரேபியாவின் தலைவன் தீயேல் என்பவரால் 145–இல் கொல்லப்பட்டார் (1 மக் 10:1–11:19).

3. அலக்சாந்தர், யன்னாயு யோவான் இரிக்கானின் மகன். மக்கபேயர் குடும்பத்தைச் சேர்ந்த அரசன் முதலாம் அரித்தோபுலின் ஒன்றுவிட்ட சகோதரனும் அவனுக்குப்பின் அரசனும் ஆவார். யூதேயாவின் போர் விருப்பமுள்ள அரசனும் பெரிய குருவுமான இவர் (கி.மு.103–76), யூதேயாவின் பரப்பை விரிவாக்கினாலும் பல போர்களில் தோல்வியுற்றார். அவர் சதுசேயர்களுக்கும், கிரேக்கப் பிரியர்களுக்கும் காட்டிய ஆதரவால், மக்களில் அதிருப்தியை எதிர் கொள்ள வேண்டியிருந்தது. அவரது ஆட்சியின் கடைசி மூன்று ஆண்டுகளில் நோயால் வருந்தி இறந்தார். அவரது மனைவியும், முதலாம் அரித்தோபுலின் விதவையுமான சலோமே அலக்சாந்திரா அரியணை ஏறினாள். தன் கணவன் கொள்கைகளை மாற்றி இவள் பரிசேயர்களுக்கு ஆதரவு காட்டினாள்.

4. இயேசுவின் சிலுவையைச் சுமந்து சென்ற (மாற் 15:21) வட ஆப்பிரிக்கனான சீரேனே ஊரரான சீமோனின் மகன். உரூபு என்பவரின் சகோதரர் (உரோ 16:13). மாற்கு தன்னுடைய நற்செய்தியில், திருச்சபையால் நன்கு அறியப்பட்டவர்களைப் பற்றி எழுதுவது போல் தற்செய

லாக இந்த சகோதரர்களைப் பற்றி எழுது கிறார் (மாற் 15:21). மத்தேயு இதை விட்டு விடுகின்றார். இவர்கள் மனம் திருப்பப் பட்ட யூதர்களாக இருக்கலாம்.

5. தலைமைக் குரு அன்னாசின் உறவி னர் (அ.ப. 4:6). இவர் தன் உறவினர்கள் கயாபா, யோவான் ஆகியோருடன் யூத சபையின் தலைமைச் சங்கத்தின் முன் பேதுருவும், யோவானும், ஆலயவாயலில் முடமான ஒருவனைக் குணப்படுத்தியது பற்றி விசாரிக்கப்பட்டபோது, இவரும் அங்கு இருந்தார் (அ.ப.4:6). இவரைப் பற்றி சிறிதுதான் தெரியவிருக்கின்றது. இவர் அலக்சாந்திரியாவிலிருந்த யூதர் களின் ஆளுநர் என்றும் பிலோவின் சகோதரர் என்றும் சில வல்லுநர்கள் கருதுகிறார்கள். அன்னாசின் மூன்றாம் மகனான எலயாசர் என்றும் சிலர் கருது கிறார்கள்.

6. வெள்ளி வேலையாள் தெமேத்திரியு வினால் பவுலுக்கு எதிராக எபேசில் உண்டாக்கிய கலகத்தில் யூதர்களுக்குச் சார்பாக பேசினவர் (அ.ப.19:33–34). இவரும் ஒருவேளை ஒரு வெள்ளி வேலை யாளாக இருந்திருக்கக்கூடும். இவர் யூதன் எனக் கண்ட மக்கள் கூட்டம் அவரைப் பேச விடவில்லை.

7. திருச்சபையில் போலிப் போதகர், விசுவாசத்தைக் கைவிட்டதால் பவுலால் மதவிலக்குச் செய்யப்பட்ட இரு கிறிஸ்த வர்களில் ஒருவர் (1 திமோ 1:19–20). இவரும் இமனேயுவும் புறக்கணித்தவர்கள் அறிவு நெறிக்கோட்பாட்டைப் போதித்த வர்கள். இவர் "வெறும் சொற்களைப் பற்றி சண்டையிடுபவர்", "கடவுள் பயம் அற்றவர்" வீண் பேச்சுடையவர் என்று பவுல் கூறுகின்றார் (2 திமோ 2:14.16).

8. இவர் பித்தளைக் கொல்லன். இவர் பவுலுக்குக் கொடிய தீமை செய்ததாகவும் (2 திமோ 4:14) அவரின் நற்செய்தியைக் கடுமையாக எதிர்த்தவராகவும் 2 திமோ 4:15–இல் பவுல் கூறுகிறார். பவுல் உரோ மையில் விசாரிக்கப்பட்டபொழுது அவ ருக்கு எதிராகச் சாட்சியம் கூறியவர். இவர் 6 அல்லது 7–இல் குறிக்கப்பட்ட வர்களாக இருக்கலாம் என்று சிலர் கருதுவர். ஆனால் போதிய சான்றுகள் இதுவரை இல்லை.

**அலக்சாந்திரா** (ALEXANDRA)

ஒரு யூத அரசி. அசமோனியா பரம் பரையைச் சேர்ந்த முதல் யூத அரசனான முதல் அரித்தோபுலின் மனைவிதான் சலோமே அலக்சாந்திரா என்ற இவள். அரசன் இறந்த பின்பு, இவள் அரசனின் ஒன்றுவிட்ட சகோதரன் யன்னாயுவை மணந்தாள். இரண்டாம் சங்கீதம் (2) இந்தத் திருமணத்தின்போதுதான் பாடப் பட்டது என்று சிலர் கருதுகிறார்கள். இது இன்னும் நிரூபிக்கப்படாவிட்டாலும் சங்கீதம் புறவினத்தாரை அடக்கி அவர் களைத் "தவிடுபொடியாக்க வேண்டும். தாவீதின் அரசை நிறுவ வேண்டும்" (சங் 2:9) என்ற அலக்சாந்திராவின் கணவர் களின் ஆவல் இதில் வெளிப்படுகின்றது. அவளுடைய இரண்டாம் கணவன் இறந்த பின்பு அவளே அரியணை ஏறினாள் (கி.மு.76–77). அயல்நாட்டுக் கொள்கையை நயத்தோடும் விவேகத்தோடும் நடத்தி னாள். யூதர்களின் பல பிரிவினர்களி டையே அமைதி நிலவச்செய்தாள். அவளு டைய அமைதியான ஆட்சியில் பரிசேயர் கள் பல அதிகாரங்களைப் பெற்றார்கள். முதல்முறையாக அவர்கள் யூத தலை மைச் சங்கத்திற்கு அனுமதிக்கப்பட்டார் கள். இவள் புகழ்பெற்ற சீமோன்–பென்– செட்டாக் என்ற பரிசேயருடைய சகோதரி.

**அலக்சாந்திரியா** (ALEXANDRIA)

எகிப்திலுள்ள ஒரு நகரம். அ.ப.யில் அடிக்கடி குறிக்கப்படுகிறது. பவுலின் நண்பரான அப்போல்லோ பிறந்த ஊர் (அ.ப.18:24). மால்தா தீவில் உடைந்த கப்ப லும் (அ.ப.27:6), மால்தாவிலிருந்து உரோ மைக்குச் சென்ற கப்பலும் (அ.ப.28:11) இத் துறைமுகத்தைச் சேர்ந்தவை. ஸ்தேவனு டன் தர்க்கம் செய்த யூதர்களில் சிலர் இந்த இடத்தைச் சேர்ந்தவர்கள் (அ.ப.6:9). பிற்காலப் பாரம்பரியப்படி யோவான் மாற்கு அலக்சாந்திரியாவுக்கும் எகிப்துக் கும் முதன்முதல் நற்செய்தியைக்கொண்டு வந்தவராவர்.

இந்நகரம் அலக்சாந்தரால் நிறுவப் பட்டது (கி.மு.332–331). பாரசீகப் பேரர சின் மேற்குப் பகுதியை வென்றபின், பார வோனின் பேரரசையும் கிரேக்கப் பேரர சையும், அரசியல் கலாச்சார அடிப்படை யில் ஒன்றிணைக்கும் அவருடைய பெய

ரால் அழைக்கப்பட்டது. மத்திய தரைக் கடலுக்கும், மெரெயோடிஸ் ஏரிக்கும் இடையில், நைல் நதியின் முகத்துவாரத்தில் உள்ள குறுகிய நிலப்பரப்பில் இது கட்டப்பட்டுள்ளது. இது ஒரு செயற்கைத் துறைமுகம். இந்நகரையும், பாரோஸ் தீவையும் இணைக்கும் அணைக்கரை தான் இதன் சிறப்பு. இந்த அணைக் கரையில்தான் பூர்வீக உலகின் ஏழு அதிசயங்களில் ஒன்றான கலங்கரை விளக்கம் அமைந்துள்ளது. இது தோலமியர்களுடைய ஆட்சிக் காலத்திலும் உரோமையர் காலத்திலும் நிர்வாகத் திறனுடைய தலை நகரமாகும். பூர்வீக எழுத்தாளர்கள் இதன் அழகையும், பூங்காக்களையும் புகழ்ந்தார்கள். இது உரோமை, அந்தியோக்கியா ஆகிய நகரங்களுடன் இது உரோமை அரசின் மிகவும் முக்கியமான நகரமாகும். இது 5,00,000 மக்களைக் கொண்டிருந்தது. மற்ற இரண்டு நகரங்களுக்கும் சென்ற பவுல், புகழ்வாய்ந்த மக்கள் நிறைந்த இந்த நகருக்குப் போவதாக நினைத்ததாகக் கூடத் தெரியவில்லை. யூதர்கள் இதன் ஐந்து மாவட்டங்களில் ஒன்றில் குடியேறியிருந்தனர். பூர்வீக உலகில் யூதர்கள் அதிகமாக வாழ்ந்த, செல்வம் நிறைந்த, செல்வாக்கு மிகுந்த சிதறிக்கிடந்த யூதர்கள் இங்குதான் அதிகம் குடியேறியிருந்தனர். இங்கு யூதர்களுக்கு எதிராகக் கலகங்கள் பல நடைபெறுவதுண்டு. கி.மு.88–இல் நடந்தது மிகவும் மோசமானது. நூலகங்கள், வல்லுநர்கள் நிறைந்த கிரேக்க அறிஞர்களின் மையமாகத் திகழ்ந்தன. இங்கு யூதர்கள் கிரேக்க நாகரீகத்தையும், சிந்தனையையும், வாழ்க்கை முறைகளையும், தங்களுடையதாக்கிக் கொண்டார்கள். இங்கு தான் பழைய ஏற்பாடு கிரேக்க மொழியில் எழுபது நூலாக மொழி பெயர்க்கப்பட்டது. யூத அறிஞர்கள் தங்களுடைய ஞானத்தையும், சட்டத்தையும், கிரேக்க தத்துவ இயலோடு ஒன்று படுத்த முயற்சி செய்தனர்; இதில் புகழ்மிக்க அறிஞர்களில் ஒருவர் பிலோ என்பவராவார். இங்கு தோன்றிய சிந்தனைக் கதிர்கள் புதிய ஏற்பாட்டில் சிறப்பாக பவுலின் மடல்களிலும், எபிரேயருக்கு எழுதப்பட்ட மடலிலும் காணப்படுகின்றன.

## அலக்சாந்திரியா சுவடி
(CODEX ALEXANDRINUS)

கி.பி. ஐந்தாம் நூற்றாண்டின் ஆரம்ப ஆண்டுகளில் எழுதப்பட்டது இச்சுவடி. இதில் கிரேக்க விவிலியமும் புதிய ஏற்பாடும் முழுவதுமாக படிகம் செய்யப்பட்டிருக்கிறது. இதில் பழைய ஏற்பாடு, புதிய ஏற்பாடு இவைகளின் புத்தகங்களுடன் கிளமெண்ட் என்பவர் எழுதிய இரண்டு திருமுகங்களும் சாலமோனின் சங்கீதங்கள் என்ற புத்தகங்களும் சேர்த்து எழுதப்பட்டுள்ளன.

இப்பழம் ஏட்டில் எழுதப்பட்டுள்ள பழைய ஏற்பாட்டுப் புத்தகங்கள் பெரிதும் சேதத்திற்கு உள்ளாகியிருக்கின்றன. புதிய ஏற்பாட்டில் கீழ்க்காணும் பகுதிகள் சிதைவிற்குள்ளாகி, அவைகளை இப்பழம் சுவடியில் நாம் காண முடியவில்லை. மத் 1:1 முதல் 25:6 வரை; யோவா 6:50 முதல் 8:52 வரை; 1 கொரி 4:13 முதல் 12:6 வரை. இச்சுவடியில் இணைக்கப்பட்டிருந்த சாலமோனின் சங்கீதங்கள் என்ற புத்தகத்தை சுத்தமாகவே இச்சுவடியில் இப்போது காண முடியவில்லை.

இச்சுவடியில் மொத்தம் 773 தோல் தாள்கள் அடங்கியுள்ளன. இவைகளில் 630 தாள்கள் பழைய ஏற்பாட்டையும், மீதமுள்ள 143 தாள்கள் புதிய ஏற்பாட்டையும் தாங்கியுள்ளன. இவ்வேட்டுச் சுவடி தொகுப்பில், பழைய ஏற்பாட்டு புத்தகங்களை இரண்டு எழுத்தாளர்களும், புதிய ஏற்பாட்டு புத்தகங்களை மூன்று எழுத்தாளர்களும் எழுதியிருக்கவேண்டும் என்று இவ்வேடுகளில் காணும் எழுத்து அமைப்புகள் நமக்கு வெளிப்படுத்துகின்றன. இவ்வேட்டில் உள்ள தாள்கள் 12.75 அங்கு நீளம் 10.25 அங்குல அகலம் என்ற அளவில் அமைந்துள்ளன. ஒவ்வொரு பக்கத்திற்கு இரண்டு பத்திகள் வைத்து எழுதப்பட்டுள்ளன. ஒவ்வொரு பத்தியும் 46 முதல் 52 வரிகள் எழுதப்பட்டுள்ளன.

இப்பழம் சுவடி முதலில் கான்ஸ்டான்டின் நோபிளில் காப்பாற்றப்பட்டு வந்தது. 1624 ஆண்டு கான்ஸ்டான்டி நோபிள் சமய மூதுவர் சிரில் லூகார் இச்

சுவடியை ஆங்கிலேய மன்னர் முதலாம் ஜேம்ஸ் என்பவருக்கு அன்பளிப்பாக அளிக்க விரும்பினார். இதற்காக துருக்கியின் ஆங்கில தூதுவரிடம் இதனை ஒப்படைத்தார். இச்சுவடி இங்கிலாந்துசென்று சேர்வதற்கு முன்பே முதலாம் ஜேம்ஸ் இறந்துவிட்டார். எனவே புதிய மன்னனாகிய முதலாம் சார்லஸிடம் இச்சுவடி 1624 ஆம் ஆண்டு ஒப்படைக்கப்பட்டது. பிறகு இச்சுவடி ஆங்கிலேய அரசு நூலகத்தில் பாதுகாக்கப்பட்டு வந்தது. 1757–லிருந்து பிரிட்டிஷ் பொருட்காட்சி சாலையில் வைக்கப்பட்டுள்ளது.

**அலமா** (ALEMA)

கிரேக்க மொழி பேசிய யூதர் வாழ்ந்த கிலயாத்தில் இருந்து ஆறு நகரங்களில் ஒன்று. புறவினத்தார் யூதர்களைச் சிறைப் படுத்தினர் என்ற நபத்தேய பழங்குடியினர் யூதா மக்கபேயுவிடம் அறிவித்தனர் (1 மக் 5:26). மற்ற யூதர்கள் தப்பிவிட்டனர். ஆனால் தாத்தமா கோட்டையில் முற்றுகையிடப்பட்டனர் (5:9). அலமா இருந்த இடம் சரியாகத் தெரியவில்லை. ஆனால் கவுரான் சம வெளியிலுள்ள புஸ்ர்–ஏல்–கரிரிக்குத் (போசோர்) தென் மேற்கில் 14 கி.மீ. தூரத்திலுள்ள இன்றைய அல்மா தான் இவ்விடம் என்று கருதப்படுகிறது. அநேகாக 2 சாமு 10:16இல் வரும் கேலாம் தான் இவ்விடம் என்ற இன்னொரு கருத்தும் நிலவுகிறது.

**அலமெலக்கு** (ALLAMMELECH)

ஆசேரிலுள்ள ஒரு நகரம் (யோசு 19:26). இதனுடைய இடம் இன்னும் கண்டுபிடிக்கப்படவில்லை. ஆனால் அநேகமாக ஆக்கோ சமவெளியின் தென்திசையில் இது குறிக்கப்படலாம். வாடி–எல்–மெலேக் என்ற ஓடை, கர்மேல் மலையில் அருகில் கீசோன் ஆறோடு சேருமிடத்திற்கு இப்பெயர் வழங்குகிறது.

**அலமேத்து** (ALEMETH – மறைத்து வைத்தல்) – ஆள்

1. பெக்கரின் மகன். பெஞ்யாமினின் பேரன் (1 நாள் 7:8)

2. ஆறாவது சந்ததியில் யோனத்தான் மெரிபாகால் வழியாக சவுலின் வாரிசு. 1 நாள் 8:36–இல் இவர் தந்தை யோயாதா என்றும், 9:42–இல் யாரா என்றும் கொடுக்கப்பட்டுள்ளது.

**அலமேத்து** (ALEMETH) – இடம்

பென்யாமின் குலத்து குருக்கள் வாழ்ந்த நகரம் (1 நாள் 6:60). அடைக்கல நகரங்களில் ஒன்று. அலமோனும் இதுவும் ஒன்று தான்.

**அலமோத்து** (ALAMOTH)

பொருள் தெளிவில்லாத சொல். 1 நாள் 15:20–இலும் சங்.46–இன் தலைப்பிலும் காணப்படுகிறது. இச்சொல் 'மங்கை' என்ற இசை மெட்டைக் குறிக்கலாம், அல்லது இளம் பெண்களால் பாடல் பாடப்படவேண்டும் என்ற குறிப்பும் கூடிய இசைக்கருவிகளைக் குறிக்கலாம்.

**அலமோன்** (ALMON)

அனத்தேத்திற்கு அருகில் உள்ள பென்யாமின் குலத்தைச் சேர்ந்த திருப்பணியாளர்களின் ஒரு நகரம். இது அடைக்கல நகரமும் ஆகும் (யோசு 21:18); 1 நாள் 6:60–இல் உள்ள அலமேத்தும் இதுவும் ஒன்று தான். இந்த இரண்டு பெயர்களில் ஒன்று கூட யோசு 18:21–28–இல் உள்ள பென்யாமினின் குலம், நகர்ப்பட்டியலில் காணப்படவில்லை. அயின்–பாராவிற்குச் செல்லும் வழியிலுள்ள அனாதாவிற்கு வடகிழக்கில் இரண்டு கி.மீ.தொலைவில் உள்ள பாழடைந்த ஊரான கிர்போத்து அல்மித் இருக்கும் இடத்தில் இந்த நகரம் இருந்தது.

**அலமோன்–திபிலாதயிம்** (ALMON-IBLATHAIM – இரு அத்திப்பழ அப்பம்)

இஸ்ராயேலர் பாலைவனத்தில் அலைந்து திரிந்தபோது தீபோன்–காதைக் கடந்து அபாரிம் மலைகளுக்கு முன்பாகப் பாளையம் இறங்கிய இடம் (எண் 33:46–47). இலிப்புவிற்கு வடகிழக்குத் திசையில் 4 கி.மீ. தொலைவில் மூன்று சாலைகள் கூடுமிடமாகிய தெலெய்லாத்–ஏல்–கார்பியே என்ற இடத்தில் இது இருந்திருக்கலாம் என கருதப்டுகின்றது. ஆனால் பொதுவாக இது யாராலும் ஏற்றுக் கொள்ளப்படவில்லை. இது எரே

48:22–ல் வரும் பேத்து–திபிலாதயிமாக இருக்கலாம். மோவாபிய கல்வெட்டுக்களில் மேதெபு, பாகால்–மெயோன் என்ற பெயர் களோடு இதுவும் காணப்படுகிறது.

**அலக்கா** (HALAKHAH – வாழ்க்கை முறை)

அலக்கா அடிப்படையில் வாழ்க்கைக்குச் செயல் முறையாகப் பயன்படும் போதகம் அல்லது கட்டளையாகும். நாடு கடத்தலுக்குப்பின் வந்த யூதத்துவத்தில் அலக்கா என்பது மோசேயின் சட்டத்திற்கு ராபிகளும் சட்ட வல்லுநர்களும் அளித்த விளக்கங்களையும், வாழ்க்கைக்குச் சாற்றிக் கூறுதல்களையும் கொண்ட தொகுப்பாகும். இது எஸ்ராவிலிருந்து தொடங்கி இடைவிடாது தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்து நடந்தது.

பழைய ஏற்பாட்டின் நிகழ்ச்சியுரைகளுக்கு விளக்கம் அளிக்கும் அக்கதா முறையோடு அலாக்காவை ஒப்பிடும் போது, இது, விவிலியத்திலுள்ள சட்டப் பகுதிகளுக்கு அளிக்கப்படும் விளக்கமாகும். மோசேயின் சட்டம் பரந்தது. பொதுத்தன்மையுடையது. அதை அரசியல், சமூக, பொருளாதார மாற்றங்களுக்கு ஏற்பவும், மாறிய சூழ்நிலைகளுக்கேற்பவும், ஒரு குறிப்பிட்ட நிகழச்சிக்கேற்பவும் விளக்கிக் காட்டப்பட்டு, வாழ்க்கைக்குப் பொருத்திக் கூறப்பட்டது. இது சிறு ராபிகளின் குழுவில் நடந்த தர்க்கங்களில் விவாதிக்கப்பட்டது. அதிகப்படியான வாக்குரிமை இந்தக் குழுவின் முடிவை மாற்ற முடியாத அதிகாரப்பூர்வமான சட்டமாக்கியது.

இவை மனித வாழ்க்கையின் ஒவ்வொரு பகுதியையும் அலுவலையும் பாதித்தது. இவையாவற்றையும் இறைவனது திருவுளத்தின் மேலாண்மையோடு இணைப்பதும், அதையே எல்லாவற்றிற்கும் அளவுகோலாகச் செய்வதும் இம்முறையின் நோக்கமாகும். இம்முறை முடிவுகள் முதலில் வாய்மொழிப் பாரம்பரியமாகவே பாதுகாக்கப்பட்டது. அவை பெருகியபோது, அவற்றை வாய் மொழியாகச் சேர்த்துப் பாதுகாப்பது முடியாத காரியமாகியது. ஆகவே, கி.பி.2–ஆம் நூற்றாண்டின் முடிவில் இவையெல்லாம் ஒன்று சேர்த்து எழுதி வைக்கப்பட்டன. இவ்வாறு மிஸ்னா தொகுப்புத் தோன்றியது. இத்தொகுப்புக்கு அளிக்கப்பட்ட விளக்கங்களின் தொகுப்பு. கெமாரா தொகுப்பாக உருவெடுத்தது. இவ்வாறு, அலக்கா தால்மூதின் பெரும்பகுதியாக இடம் பெற்றது.

புதிய ஏற்பாட்டின் காலத்திய சதுசேயர்கள், மோசேயின் சட்டத்தை மட்டுமே அதிகாரப்பூர்வமானது என்று ஏற்றுக் கொண்டனர். ஆனால் பரியேர்கள், மேசேயின் சட்டத்தைப்போல், அலக்காவின் சட்டங்களும் அதிகாரப்பூர்வமானவை, கட்டுப்படுத்தக்கூடியவை என்று ஏற்றுக் கொண்டனர். கி.பி. 70 வரை எருசலேமில் இத்தகைய விளக்க முறைகள் நடந்தன. பிறகு யாம்னியா, திபேரியா, பாபிலோன் ஆகிய இடங்களில் நடந்தன.

**அலரி** (WILLOW)

நீரோடையின் ஒரங்களில் வளரும் ஒரு வகைச் சடி அல்லது மரம். இதுவும் புன்னை மரமும் ஒரே தன்மையில் உள்ள நிலத்தில் வளர்வதாலும், ஒரளவு ஒரே அமைப்பைக் கொண்டிருப்பதாலும் ஒன்று மற்றதாக விவிலியத்தில் சில இடங்களில் காணப்படுகிறது (லேவி *23:40*; யோபு *40:22*; சங் *137:2*; எச *17:5*).

எசக்கியேலில் இரு கழுகுகள் பற்றிய உவமையில், விரைவில் எளிதாக வேரூன்றும் அலரியின் நுனிக்கிளையை உருவகமாகப் பயன்படுத்துகிறார் *(17:5)*. அதன் கிளைகளும் கூடார விழாவில் பயன்பட்டன (லேவி *23:40*). பாபிலோனுக்கு நாடு கடத்தப்பட்ட யூதர்கள் தங்கள் யாழ்களை அலரிச் செடிகள் மீது தொங்க வைத்தனர் (சங் *137:2*). மேலும் காண்க. அலரி ஒடை.

**அலரிகள் ஓடை** (BROOK OF THE WILLOWS)

மோவாப்பின் எல்லையிலிருந்த ஓர் ஒடை. மோவாபு அகதிகள் தங்களுடைய சொத்துக்களை எடுத்துக்கொண்டு இதன் குறுக்கே சென்றார்கள் (ஏச.*15:7*). இவர்கள் தெற்கு நோக்கிச் சென்றிருந்தால் (அவ்வாறுதான் தோன்றுகிறது) இந்த ஒடை, அநேகமாக விவிலியத்தில் செரேது

ஓடை என்று குறிக்கப்படும் வாடி ஏல்–கெசாவின் பின்பகுதியான செயில்–ஏல்–கூராகி என்பதாக இருக்கலாம். இங்கு அலரிச்செடிகள் வளர ஏதுவாக ஒரு சிறிய சதுப்புச் சமவெளியுள்ளது.

செரேது ஓடையை இஸ்ராயேல் கடந்த நிகழ்ச்சி, அவர்களது பாலைவனப் பயணத்தை முடிவுக்குக் கொண்டுவந்தது (எண் *21:22*; உப *2:13–14)* அலரி ஓடையும், இஸ்ராயேலின் தென் எல்லையான அரபா ஓடையும் ஒன்றையே குறிக்கலாம் (ஆமோ *6:14)*.

**அலிக்கார்னசு** (HALI CARNASSUS)

சிறிய ஆசியாவின், காரியாவில் உள்ள தோரியன் குடியிருப்பாகக் கண்டுபிடிக்கப்பட்ட ஒரு கிரேக்க நகரம். செரமிக் வளைகுடாவின் கரையின் வடமேற்கில் எபேசுக்குத் தெற்கில் *90* கி.மீ. தொலைவில் இது அமைந்துள்ளது. இது ஒரு சிறந்த துறைமுகம். அந்த இடத்தில் உயரமான கோட்டைகள் உள்ளன. இது காரியாவிலேயே மிக உயர்ந்த, வலிமை வாய்ந்த நகரமாக இருந்தது. இது பாரசீகர்களுக்கு அளித்த ஆதரவுக்குப் பதிலடியாக இதை மகா அலக்சாந்தர் அழித்து விட்டார். கி.மு.*334*–இல் இது அழிக்கப்பட்டதற்குப் பின்பு, பழைய நிலையை, உயர்ந்த நிலையை இது ஒருக்காலும் பெற்றதில்லை. ஆனால் வணிகத்திலும், கலையிலும் தொடர்ந்து முக்கியத்துவம் பெற்றதாக விளங்கியது. பழங்கால உலகில் ஏழு அதிசயங்களில் ஒன்றான மௌசோலுசு (கி.மு. *377–353)* அரசரின் கல்லறை இங்கிருப்பதாகக் குறிக்கப்பட்டிருக்கிறது. அவருடைய சகோதரியும் மனைவியுமான அர்தேமிசியாவால் இந்த நினைவுச் சின்னம் எழுப்பப்பட்டது. அது பழங்காலத்தின் உலக வியப்புக்குரிய எழில்களில் ஒன்றாகத் திகழ்ந்தது. இப்பொழுது போதுரம் என்ற ஊரானது அந்த நகர் இருந்த ஒருபகுதியில் அமைந்திருக்கிறது. இவ்விடம் எரோதோத்தஸ், தியேனிசியு போன்ற வரலாற்று ஆசிரியர்களின் பிறப்பிடமாகும்.

கிரேக்கப் பண்பாடும், வாழ்க்கை முறையும் இவ்விடத்தில் சிறப்புற்று இருந்தது. ஆனால் இங்கு அதிக அளவில் வாணிகம் நடந்ததாலும் பல மக்களும் அங்கு வந்து போவதாலும் அங்குள்ள மக்களினம் கலப்பினமாகிவிட்டது. கி.மு. இரண்டு நூற்றாண்டுகளிலிருந்து யூதர்கள் அங்கு அதிகமாக வாழ்ந்தனர் என்பதற்குத் தெளிவான சான்றுகள் உள்ளன. *(1* மக் *15:23)*. அங்கு வாழ்ந்த யூதர்கள் வாழ்க்கை முறைக்கும் வழிபாட்டிற்கும் பாதுகாப்பு அளிக்க உரோமையர் மூப்பர் சபை கி.மு.*139*–ஐயொட்டி எழுதிய கடிதத்தில் வலியுறுத்துகிறது.

ஒரு நூற்றாண்டுக்குப்பின் இந்நகர் யூதர்களுக்கு மதச் சுதந்திரம் அளித்தது என்று யோசீபஸ் கூறுகிறார்.

**அலியா** (ALIAH)

அலிவாவின் மற்றொரு பெயர். காண்க அலிவா

**அலியான்** (ALIAN)

அலிவானின் மற்றொரு பெயர். காண்க அலிவான்.

**அலிவா** (ALIVAH – கொடியவன்)

இப்பெயரின் மற்றொரு வடிவம் அலியா ஆகும் *(1* நாள் *1:51)*. ஏதோமில் தங்கியிருந்த ஏசா இனத்தவர் வழிவந்தவர்களுடைய பதினொன்று குலத்தலைவர்களில் இரண்டாமவர் (ஆதி *36:40)*. அநேகமாக ஆதி *36:23*–இல் உள்ள அலிவானும், *1* நாள் *1:40*–இல் உள்ள அலியானும் இங்கு வரும் அலிவாவும் ஒரே ஆளாக இருக்கலாம்.

**அலிவான்** (ALIVAN)

இப்பெயரின் மற்றொரு வடிவம் அலியான் *(1* நாள் *1:40)* ஆகும். ஏதோமிலிருந்து கோரியர் என்ற துணை குலத்தின் மூதாதையரும், இனத் தலைவருமான சோபாலின் முதல் மகன் (ஆதி *36:23)*.

**அலூசு** (ALUSH – கூட்டம்)

இஸ்ராயேல் மக்கள் பாலைவனத்தில் பயணம் செய்தபோது தொபிகாவிற்கும் இரபிதிமிற்கும் இடையில் பாளையம் இறங்கிய இடம்தான் இது. இது இருந்த இடம் இன்னும் கண்டுபிடிக்கப்படவில்லை. ஒருவேளை இக்கால வாடி–ஏல்–எசால் என்ற ஓடையாக இருக்கலாம்.

**அலைந்து திரிதல்** (WANDER)

பழைய ஏற்பாட்டில், ஒருவரோ ஒரு குழுவினரோ இடம் விட்டு இடம் பெயர்ந்து பயணம் செய்வதை இச்சொல் குறிக்கிறது. இவ்வாறு, காயின் "நாடோடியாக அலைந்து திரிவார்" (ஆதி 4:12.14). இஸ்ராயேல் மக்கள் பாலைநிலத்தில் நாற்பது ஆண்டுகள் அலைந்து திரிந்தனர் (எண். 23:13; எபி 11:38). சில இடங்களில் வழி தவறிப் போதலையும், எந்நோக்கமும் இன்றி திரிவதையும் இச்சொல் குறித்தது (ஆதி 37:15; யோபு 12::24–25; சங் 107:4.40).

இச்சொல், சிறப்பான முறையில், இறைவனிடமிருந்து விலகுவதையும், அவரது கற்பனைகளை விட்டுத் தவறிச் செல்வதையும் குறிக்கிறது (சங் 119:10.21; பழ 5:6; 21:16; எரே 14:10). புதிய ஏற்பாட்டில் இப்பொருள் முக்கியத்துவம் பெறுகிறது. அப்படி உண்மையிலிருந்து தவறிப் போகும்போது பேராபத்து நிலவியது (1 திமோ 1:6; 6:10; 2 திமோ 4:4; யாக் 5:19; யூதா 13).

**அல்மோதாது** (ALMODAD – அன்புக்குரியவர், அளப்பரியது)

யொக்கிதானின் பதிமூன்று புதல்வர்களில் முதல்வர். ஏபேரின் பேரன். தெற்கு அரேபிய நாட்டு மக்களின் மூதாதை என்று கருதப்படுகின்றார் (ஆதி.10:26; 1 நாள் 1:20). எழுபது நூலில் இருப்பது போல இந்தப் பெயரானது அநேகமாக "எல்மோதாத்" என்று வாசிக்கப்பட வேண்டியிருக்கலாம். இதன் பொருள் "கடவுள் ஒரு நண்பர்" என்பது.

**அல்லேலூயா** (ALLELUJAH – ஆண்டவர் போற்றி)

புகழ்தலின் ஒரு கட்டளை அறை கூவலாகும். யூதப் பாரம்பரியப்படி, அறியப்படாத சொல்லிலக்கணத்தோடு கூடிய, மிகப் பழைய வழிபாட்டு அறைகூவலாகும். எபிரேய வாசகத்தில், இச்சொல் இறைபெயரான "யாவே" என்பதன் சுருக்கமான 'யா' வைக்கொண்ட கட்டளையைச் சுட்டுகிறது. "யாவேயைப் போற்று" என்று பொருள் கொடுக்கப்படும்.

சங்கீதங்களில் 5–ம் புத்தகத்தில் பயன்படுத்தப்பட்டிருக்கின்ற இறை புகழுரை அமைப்பு இது. அதோடு நாள் ஆகம நூலிலும் பயன்படுகிறது.

1. மொழி ஆராய்ச்சி வினாக்கள்:-

"புகழ்தல், புகழப்படுதல்" என்று பொருள்படும் வேர்ச் சொல்லில் இருந்து இச்சொல் சாதாரணமாகவும், மத உணர்விலும் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. பாரவோனின் பிரபுக்கள் சாராள் அழகாய் இருந்தது கண்டு அவளைப் புகழ்ந்து பேசினார்கள் [ஆதி 12:15; 2 சாமு 14:25 (அபிசலோம்)] கன்னியர்கள் அவர்களுடைய மணநாளின்போது புகழப்படுகிறார்கள் (சங் 78:63). அல்லது நகரின் அரண் சக்திக்கு (எண் 26:17). ஆயுதங்கள் அணிந்து கொள்வதற்கு அரசன் தன்னையே புகழ்ந்துகொள்ளலாம் (1 அர 20:11; பழ 27:2; எரே 9:22–23). மக்கள் அரசரைப் புகழ்கிறார்கள் (2 நாள் 23:12). அதைப் போலப் பெலிஸ்தியர்கள் தங்கள் கடவுளான தாகோனைப் புகழ்ந்தார்கள் (நீதி 16:24). இஸ்ராயேலர்கள் தங்கள் கடவுளையும் (யாவே) அவருடைய வார்த்தையையும், பெயரையும் புகழ்ந்தார்கள் (1 நாள் 23:5; எரே 20:13; சங் 56:4).

2. சமயத்தில் வழக்கு : (அ) சங்கீதங்களில்:-

"அல்லெலூயாவைக்" கொண்டிருக்கும் சங்கீதங்கள், உலகைப் படைப்பதில் (சங். 104) அல்லது இஸ்ராயேல் வரலாற்றில் குறிப்பாக எகிப்தில் இருந்து அடைந்த விடுதலையில் (சங் 105; 106; 135). ஆண்டவருடைய ஆற்றலையும் ஞானத்தையும் போற்றுகின்றன. சிலைகளை விட ஆண்டவருடைய வலிமைமிக்க கரங்களின் ஆசீர் மேன்மையானது (115). அதனால் புறவினத்தாரும் அதைப் புகழ்ந்து பாடுவர் (117). ஒரு தனி மனிதனுடைய வாழ்வில் ஆண்டவரின் வாழ்வு கொடுக்கும் சக்தி காணக்கூடியது, ஆராதிக்கக் கூடியது (116). அல்லேலூயா சங்கீதங்கள் (146–150) என்று சொல்லப்படுகின்ற இந்த சங்கீதங்கள், ஆண்டவர் இதுவரை செய்த எல்லா நன்மைகளுக்கும் செய்துகொண்டிருப்பதற்கும், செய்யப்போகிற செயல்களுக்கும் பொதுவாக நன்றி கூறிப் புகழ்ச்சிக் கீதம் பாடுகின்றன. நாளாகமம், இவை பாடப்படுவதை, குறிப்பாக எருசலேம் வழிபாட்டில் பாடப்படும் முறையை எடுத்துக் கூறு

கிறது. வெவ்வேறுபட்ட பாடற் குழுவின ரால் அல்லது சபையினரால் அல்லே லூயா மாறிமாறிப் பாடப்பட்டு வந்தது (சங் 135:19 தொ; காண்க 1 நாள் 16:36). இந்தப் பாடுதல்தான் தாவீதால் நிறுவப் பட்ட நியமனப்படி லேவியர்களின் முக்கியக் கடமையாகும் (காண்க. 1 நாள் 23:5; நெக 12:24). சில காலத்தில் அல்லே லின் ஒவ்வொரு வரிக்குப்பின் அல்லே லூயா என்று சொல்லப்பட்டு வந்தது.

சங்கீத நூலில் இச்சொல் 24 தடவை காணப்படுகிறது (சங் 104–106; 111–114; 115–117; 135; 146–150). பொதுவாக இது சங்கீதத்தின் தொடக்கத்திலோ (106:1; 111:1; 112:1) அல்லது சங்கீதத்தின் முடிவிலோ (104:35; 105:45; 115–17) அல்லது இரண்டு இடத்திலுமோ (113:135; 146–150) வருகிறது. 135:3; 147:1–இல் இது பொருளுக்கு அவசிய மாகிறது. இவற்றைத் தவிர, இச்சொல் வழிபாட்டு வாய்ப்பாடாகத் தெரிகிறது. இத்தகைய "அல்லேலூயா" சங்கீதங்கள் ஆலயப்பணியில் பயன்பட்ட பாடல்களில் இருந்து தொகுக்கப்பட்டிருக்கலாம் (காண்க: 106:48). அங்கு இவை மாறி மாறிப் பாடப்பட்டிருக்க வேண்டும் (காண்க 1 நாள் 16:4.36).

(ஆ) எருசலேமிற்கு வெளியே உள்ள சடங்கு முறை:-

எகிப்திய யூதர்கள், அரசனின் யானை களிடமிருந்து தப்புவிக்கப்பட்டதால், அலக்சாந்திரியாவிற்கு வீட்டிற்குச் செல்லும் வழியில் புகழ்ந்து அல்லேலூயா என்று பாடிச் சென்றார்கள். இறுதி நாட் களில் மீட்கப்பட்ட எருசலேம் வீதிகளே பாடும் (தோபி 13:18). திருவெளி 19:1.3–4. 6–இல் விண்ணகப் பாடற்குழு அல்லே லூயா பாடுகிறது. இதில் வான தூதரின் பாடற்குழுவும், 24 முதியவர்களும், நான்கு உயிர்களும் இறைவனது மீட்பையும், மகி மையையும், ஆற்றலையும், செம்மறியின் திருமணத்தையும் இந்த அறை கூவலால் கொண்டாடுகின்றனர்.

(இ) கிறிஸ்தவ சபைகளில்:-

கிறிஸ்தவ சபைகளின் வழிபாட்டில் பயன்படுத்துகின்ற முறை பலவகைப் பட்டது. கிழக்கிந்திய திருச்சபைகளில் இசை மேன்மையோடு கூடிய நீண்ட உயி ரோட்டமான மரபு இருக்கிறது. பெத்தில கேமில் ஏரோனிமு வாசகங்களுக்குப் பின் சபையினர் இதைப்பாடுவதைக் கண்டார். அவர் பாப்பு தமசுசிடம் சொல்லி உரோ மையில் உயிர்ப்பு விழாச்சடங்கில் அறி முகப்படுத்தச் செய்தார். இந்தப் பழக்க மானது மேலும் மேலும் பெருகி முதலாம் கிரேகோரியார் எல்லாச் சடங்கிலும் இதைச் சேர்த்தார். இறுதி அசை 'யா' வைப்பாடுவதில் ஏற்படும் தவறுகளைத் தவிர்ப்பதற்காக அவர் அதைக் குறுகிய வரிகளோடு இணைத்து வைத்தார் (எ.கா. சங் 5:2; 7:12; 85:8; 95:1; 98:1; 147:12).

லூத்தர் (1523–ல்) அல்லேலூயா சொல்லைத் 'திருச்சபையின் நித்திய குர லாக" வாசகங்களின் முடிவில் ஏற்றுக் கொண்டார். ஆனால் 1526–இல் அதை அகற்றினர். வெற்றி பெறவில்லை. உரோ மன் பூசைப் புத்தகத்திலும் பிரிவினைச் சகோதரர்களின் திருச்சடங்குகளிலும், உயிர்ப்பு விழாவிற்கும், ஐம்பதாம் விழா விற்கும் இடைப்பட்ட நாட்களில் இரு முறை அல்லேலூயா வருகிறது. தபசு கால நாட்களில் அல்லேலூயா பாடப்படு வதில்லை.

**அல்லேல்** (HALLEL – போற்று நீ ஆண்டவரை)

ஆண்டவருக்குப் புகழ்ச்சிப் பாடல். இறைவனைப் போற்றுதல் லேவியரின் கடமையில் ஒன்றும் (2 நாள் 7:6; எஸ் 3:11) அன்றாட காலை செபத்தைச் சேர்ந்தது மாகும் (சங் 145–50). இப்பெயர் யூதப் பாரம்பரியப்படி விழாக்காலங்களிலும், அன்றாட காலைச் செபத்திலும் பயன் பட்ட சில குறிப்பிட்ட சங்கீதங்களுக்குக் கொடுக்கப்படுகிறது.

கி.மு. முதல் நூற்றாண்டு மரபின்படி "எகிப்திய" அல்லேல் (சங் 113–118; காண்க 114–1). மோசேயால் எழுதப்பட்டவையா கும். இவை இஸ்ராயேல் வரலாற்றில் இறைவனது செயல்களை யாத்திரையி லிருந்து எடுத்துக்கூறுவதால் இப்பெயர் பெற்றன. இவை முக்கிய வருடாந்திர விழாக்களிலும், அமாவாசைக் கொண் டாடத்திலும் பாடப்பட்டன. பாஸ்கா விருந்தின்போது வீடுகளில் சொல்லப் பட்டு வந்தது (மத் 26:30). பாஸ்காவின்

இரண்டாவது கிண்ணத்திற்கும் உணவுக்கும் முன் சங் 113–114–உம் உணவுக்குப் பின்னும், ஆனால் நான்காவது கிண்ணத்திற்கு முன்னும் சங் 115–118–உம் பாடப்பட்டன. மிஸ்னாவின்படி பாஸ்கு செம்மறி கொல்லப்பட்டபோது லேவியர் இச் சங்கீகதங்களைப் பாடினர். ஒருவேளை, இந்த அல்லேலின் ஒரு பகுதியைத்தான், இயேசுவும் அவரது சீடர்களும் இறுதி உணவின் முடிவில் பாடியிருக்க வேண்டும் (மத் 26:30; மாற் 14:26).

தால்மூது, மிஸ்னா ஆகிய பாரம்பரியங்கள் சங் 136–ஐயும், மற்ற பாரம்பரியங்கள் சங் 135–136 அல்லது 120–136யும் 'பெரிய அல்லேல்' என்றழைக்கின்றன. இது மழை அளித்ததற்கும் (135:1). எல்லா உயிர்களுக்கு உணவு அளிப்பதற்கும் (136:25) இறைவனைப் போற்றுகிறது. இது அன்றாடக் காலைச் செபத்தில் பாடப்பட்டது.

இறைவனது ஆற்றல்மிக்க செயல்களுக்காக அவரைப் போற்றுகிறது. சங் 136 மாறிமாறி பாடும் அமைப்பைக் கொண்டுள்ளது.

சங் 146–150 என்ற தொகுப்பும் அல்லேல் தொகுப்பு என்றழைக்கப்படுகிறது. இதுவும் காலைச்செபத்தில் பயன்பட்டது.

**அல்லோகசு** (HALLOHESH - தணிந்த குரலில் பேசுபவர், மந்திரக்காரர்)

நெகமியாவின் தலைமையில், எருசலேமின் சுவர்களைப் பழுதுபார்ப்பதற்குத் தன்னுடைய புதல்வியரோடு உதவி செய்த சல்லூமின் தந்தையாவார். எஸ்ராவின் உடன்படிக்கையில் கையொப்பமிட்டவர்களில் இவரும் ஒருவர் (நெக 10:24).

**அல்லோகனஸ் சுப்ரீம்**
(ALLO GENES SUPREME)

பண்டை எகிப்திய மொழியின் திரிபு மொழியில் அமைந்த ஓர் அறிவு நெறிக் கோட்பாட்டு நூல். கெனோபோஸ்கியோனால் 1946–இல் கண்டுபிடிக்கப்பட்டது. போர்பிரியின் சான்றுப்படி பிலோத்தினஸ் எதிர்த்து போராடிய ஐந்து வெளிப்பாட்டு நூல்களில் ஒன்றாகும். மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இயற்றப்பட்ட செத்தியன் நூல் தொகுப்பாகத் தெரிகிறது.

**அல்லோன்** (ALLON – ஓக் மரம், எருது)

சிமியோன் கோத்திரத்தின் ஒரு இளவரசன். எதாயாவின் மகன், செமாயாமவின் வழித்தோன்றல் (1 நாள் 4:37).

**அல்லோன் – பாக்கூத்து**
ALLON - BACUTH – அழுகையின் ஓக்)

ரெபெக்காளின் தாதியான தெபோரா அடக்கம் செய்யப்பட்ட இடம். பெத்தேலுக்கு அருகில் உள்ளது (ஆதி 35:8). இவ்விடம் இறைவாக்கினி தெபோரா நீதி வழங்கிய பேரீச்ச மரம் இருந்த இடமாக இருந்தால், இது இருந்த இடம் பெத்தேலுக்கும் இராமாவிற்கும் இடையில் குறிக்கப்படலாம் (நீதி 4:5). இரண்டிலும், புனித மரத்தடியில் வழிபாடு குறிப்பிடப்பட்டுள்ளது. 1 சாமு 10:3–இல் உள்ள அழுகைக் கருவாலியும் தாபோர் மலையிலுள்ள கருவாலியும் ஒன்றுதான் என்று சில அறிஞர்கள் கருதுகின்றார்கள்.

**அவதூறு, பழி** (SLANDER)

பழைய ஏற்பாட்டில் மற்றவருடைய பெயரைக் கெடுப்பதற்காக அல்லது அவரை அழிப்பதற்காகப் பேசப்படும் தீய பேச்சுக்களைக் குறிக்கப் பல எபிரேய சொற்கள் பயன்பட்டிருக்கின்றன (2 சாமு 16:1–4; 19:24–30; 1 அர 21:8–14). இந்த வார்த்தைக்கும், ஒன்பதாவது கட்டளைக்கும் தொடர்பு லேவி 19:16–இல் காணப்படுகிறது. பிறருடைய பெயரைக் கெடுப்பவன் இறைவனுடைய சட்டத்தை வெறுத்து ஒதுக்கிவிட்டான், தீர்ப்புக்குள்ளாயிருக்கிறான் என்று காட்டுகிறது (சங் 50:20; 101:5; எரே 6:28; 9:4; எச 22:9). பெரும்கேடு விளைவிக்கக் கூடிய கருவியாக நாவு கருதப்பட்டது (சங் 57:4; பழ 17:4–11; எரே 9:8; காண்க: யாக் 3:1–12).

புதிய ஏற்பாட்டிலே சகோதரனுக்கு எதிராக பேசுவது (1 பேதுரு 2:1) வாய்மையில்லாதது மட்டுமல்ல, அது முதலாவதாக அன்பின்மையை உள்ளடக்குகிறது. புற இனத்தாரின் தனித்தன்மை வாய்ந்த குணமாக இது கருதப்பட்டது (1 பேதுரு 2:12; 3:16), விசுவாசிகளின் குடும்பங்களிலே

இந்தப் பழக்கத்தைப் பொறுத்துக்கொள்ள முடியாது (யாக் 4:11–12). புறணி பேசுதல் (1 தீமோ 3:11; 2 தீமோ 3:3. தீத் 2:3). பழிச் சொல் (மத் 15:19; மாற் 7:21–22; எபே 4:31; கொலோ 3:8–9) ஆகியவை தவிர்த்து ஒதுக்கப்பட வேண்டும்.

**அவரான்** (AVARAN – வெளிறிய)

மத்தத்தியாவின் நான்காவது புதல்வராகிய எலயாசரின் பட்டப்பெயர் 'அவரன்' எனப்படும். இவ் வீரனுக்கு உகந்த முறையில் பேத்து செக்கரியா என்ற இடத்தில் இறந்தார் (1 மக் 6:43–46).

**அவரை** (BEANS)

ஒரு காராமணி வகையைச் சேர்ந்த ஒரு பருப்பு வகைச் செடி. சில சமயம் பெரும்பயறு என்றழைக்கப்படுகிறது. இச் செடி சத்துள்ள உணவைக் கொடுப்பதால் இது பூர்வீக காலத்திலிருந்தே பயிரிடப்பட்டது. தாவீது மகனாயிமில் இருந்தபொழுது அவருக்கு கொண்டு வரப்பட்ட உணவுப்பொருட்களில் இதுவும் ஒன்றாக இருந்தது (2 சாமு 17:28). இது மற்ற தானியங்களோடு சேர்க்கப்பட்டு, எருசலேமின் முற்றுகையைக் குறிக்கும் பொருட்டு, மட்டமான ரொட்டி செய்யப் பட்டது (எச 4:9).

அறுவடைக்குப் பிறகு கோதுமை சுத்தம் செய்யப்பட்டதுபோல இவையும் சுத்தம் செய்யப்பட்டன. மேலும் பச்சைக் காயானது காய்கறிகள் போல் சமைக்கப் பட்டது.

**அவிசுவாசம்** (UNBELIEF)

அவிசுவாசமானது இறைமக்களைப் பற்றியது என்பதால், புறவினத்தாருடைய சிலை வழிபாட்டினின்று மாறுபட்டு, இறைவிசுவாசத்திற்கு மனம் மாறு தலைக் கோருகிறது. இறைமக்களிடையே அவிசுவாசிகள் இருப்பது விசுவாசிகளுக்கு எப்போதுமே ஓர் இடறலாக உள்ளது. இயேசு கிறிஸ்துவோடு முரண்பட்ட ஓர் இஸ்ராயேலனின் அவிசுவாச மானது ஒவ்வொரு கிறிஸ்தவனின் இதயத்திலும் "இடைவிடாது வேதனையை" (உரோ 9:2) ஏற்படுத்த வேண்டும்.

அவிசுவாசம் என்பது இறைவன் இருப்பதை மறுப்பதோ, அல்லது கிறிஸ்துவின் இறைத் தன்மையை நிராகரிப்பதோ மட்டுமல்ல. இறைவார்த்தையின் அடையாளங்களையும் சாட்சியங்களையும் அறிந்து கொள்ள தவறுவதும், அதற்கு கீழ்ப்படிய மறுக்கின்ற நிலையினையும் இது குறிக்கின்றது. விசுவசித்தல் என்பதனுடைய எபிரேயச் சொல்லின் சொல்லிணக்கப்படி விசுவாசியாமை என்பது இறைவனுக்கு 'ஆமென்' என்று சொல்லாமலிருப்பதாகும். இது, இறைவன் மனிதனுடன் ஏற்படுத்தி நிலைப்படுத்த விரும்புகிற உறவினை மறுப்பதாகும். இம்மறுப்பானது பல்வேறு வழிகளில் தன்னை வெளிப்படுத்துகிறது. இறைபற்றற்ற மனிதன் இறைவன் இருப்பதைப்பற்றி கேள்வி எழுப்புகிறான் (சங் 4:1); ஏளனம் புரிபவன் வரலாற்றில் இறைவனுடைய செயல்படும் பிரசன்னத்தைப் பற்றியும் கேள்வி எழுப்புகிறான் (ஏச 5:19); வலுவற்ற இதயத்தை உடையவன் அவருடைய அன்பு மற்றும் ஆற்றலைப் பற்றி கேள்வி கேட்கிறான்; கலகக்காரன் அவருடைய மேலாண்மை, விருப்பம் போன்றவற்றைப் பற்றி கேள்வி கேட்கிறான். இப்படி கூறிக் கொண்டே போகலாம். அவிசுவாசம் சிலை வழிபாட்டினின்று முற்றிலும் மாறுபட்டதாகும்; அடிப்படைத் தன்மை கொண்டது. இதிலே பலதரத்தைக் காணலாம். ஓரளவு விசுவாசத்துடன் இணைந்தும் காணப்படும். விசுவாசத்தை எளிதில் நம்ப முடியாமலிருப்பது ஆகியவற்றிற் கிடையேயுள்ள வரையறை எல்லையானது வெவ்வேறு மனிதர்களிடையே காணப்படுகிறது என்பதைவிட, ஒவ்வொரு மனிதனுடைய இதயத்திலும் உய்த்துணரப்படுகிறது (மாற் 9:24).

I. இஸ்ராயேலில் அவிசுவாசம்

விசுவாசத்தின் தெளிவற்ற எதிர்நிலை அவிசுவாசமாகும். விசுவாசத்தின் முழு வரலாற்றையும் இங்கு எடுத்துக்கூறப் போவதில்லை. தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களின் இரு முக்கிய சூழ்நிலைகளை எடுத்துக்காட்டினால் போதுமானது. இவை, அவிசுவாசம் நிகழக்கூடிய இரு வகை வழியின் பண்புகளை எடுத்துக் காட்ட வல்லன. ஒன்று அவர்களிடையே விசுவாசக் குறைவைக்காட்டிய பாலைவன

வாழ்க்கை. மற்றது வாக்களிக்கப்பட்ட நாட்டில் வாழ்க்கை. அங்கு விசுவாசத்தின் முன்னுருவங்களை அவர்கள் ஏற்கனவே கொண்டிருந்தனர்.

*1. எபிரேயரின் முணுமுணுப்பு:-* பாலைவனத்தில் மக்களுடைய நம்பிக்கையற்ற நிலையினைக் குறிப்பிட வரலாற்று ஆசிரியர்கள் பல்வேறு சொற்றொடர்களைப் பயன்படுத்துகின்றனர். தடை செய்பவர்களாகவும் கீழ்படிய மறுப்பவர்களாகவும் உள்ள (எண் 14:9; உப 32:15) குழப்பக்காரர்கள் (எண் 20:10; உப 9:24); வணங்கா கழுத்துடைய மக்கள் (யாத் 32:9; 33:3; உப 9:23; எரே 7:26; ஏச 48:4); மற்றும் குறிப்பாக முணுமுணுப்பவர்கள். இயேசுவை விசுவாசிக்க மறுக்கின்ற சீடர்களையும் யூதர்களையும் குறிப்பிடுவதற்கு யோவான் கடைசி சொற்றொடரைப் பயன்படுத்துகிறார் (யோவா 6:41. 43. 61). இதை யாத் 15–17 மற்றும் எண் 14–17 ஆகிய இரு பகுதிகள் விளக்குகின்றன. எகிப்தில் தாங்கள் உண்ட நல்ல இறைச்சியை இப்போது இழந்து நிற்கும் மக்கள், பாலைவனத்தில் தாங்கள் பசியினாலும் (யாத் 16:2; எண் 11:4–5), தாகத்தினாலும் (யாத் 15:24; 17:3; எண் 20:2–3) இறந்து விடுவோமோ என்று அஞ்சுகின்றனர். அல்லது மன்னாவினால் வெறுப்புற்று பொறுமையற்றவர்களாகின்றனர் (எண் 21:4–5). அல்லது வாக்களிக்கப்பட்ட நாட்டில் தாங்கள் நுழைவதை தடுக்கின்ற எதிரிகளுக்கு அவர்கள் அஞ்சுகின்றனர் (எண் 14:1; யாத் 14:11). அவர்கள் கண்ட அரும் பெருஞ் செயல்களை மறந்துவிடுகின்றனர் (சங் 77:105). மோசேக்கும் ஆரோனுக்கும் எதிராக முணுமுணுப்பதன் மூலம், உண்மையில் இறைவனுக்கு விரோதமாக முணுமுணுத்து (யாத் 16:7–8; எண் 14:27; 16:11) அவரது நன்மைத்தனம் மற்றும் வல்லமை மீது கேள்வி எழுப்புகின்றனர் (உப 8:2). அச்சத்தின் ஒருவகையாகிய நம்பிக்கையற்ற நிலையானது, தமது வாக்குறுதிகளை உடனே நிறைவேற்றுமாறு இறைவனை கோருவதில் அடங்கியுள்ளது. இது, உடன்படிக்கையை உருவாக்கிய இறைவனுக்கு விரோதமாக மிரட்டுதலின் ஒரு வடிவாகும். இது அவரில் விசுவாசம் கொள்ளாமையாகும் (எண் 14:11); அவரது குரலுக்கு கீழ்ப்படியாமையாகும் (14:22); அவரை சோதித்து அவருடன் சச்சரவு செய்வதாகும் (யாத் 17:7); இறைவனை ஏளனம் செய்வதும் ஆகும்.

இறைவனுக்கு எதிராக முணுமுணுப்பதன் மற்றொரு வழி "பொன் கன்றுக்குட்டியின்" உருவத்தைச் செய்து அவருக்கு உருவம் அளிப்பதாகும் (யாத் 32; உப 9:12–21). அவர்களுடைய நிலைக்கு இறங்கி, அவர்களது இரக்கத்திற்கு உட்பட்டவராக இருக்க விரும்பாத இறைவன் மேல் எபிரேயர்கள் ஆதிக்கம் செலுத்த விரும்பினர். 'எரோபயாமின் பாவம்' எனப்படும் அவிசுவாசத்தில் அதே போன்ற பாவம் வட அரசின் தனித்தன்மையாக உள்ளது (1 அர 12:28 தொ; 16:21.31). இறைவன் மேல் ஆதிக்கம் கொள்ளவிரும்பியதால், அவர்கள் நாடு கடத்தப்படும் வரை குறிகூறுதல், மந்திரம் மற்றம் சூனியம் ஆகியவற்றை கடைபிடித்தனர் (1 சாமு 18:3–25; 2 அர 9:22; 17:17; யாத் 22:17; ஏச 2:6; மீக் 3:87; எரே 27:9; எச 12:24; உப 18:10 தொ). இதனாலேயே அவர்கள் போலி இறைவாக்கினர்களின் துணையையும் நாடினர் (எரே 4:10).

*2. பிளவுப்பட்ட இதயத்தையுடைய இஸ்ராயேல்:-* உண்மையில் மக்கள் பாலஸ்தீனத்தில் அவிசுவாசம் மற்றொரு வடிவம் எடுத்தது. ஆனால் குற்றத்தன்மையில் அது குறையவில்லை. அவர்கள் குடியேறிய நாடு அல்லது சூழ்ந்துள்ள நாட்டு கடவுள்களுடன் ஒப்பந்தம் செய்துக் கொண்டனர். யாவே எந்த பிளவையும் ஏற்பவராக இல்லை. எலியா போதிப்பது போல "எத்தனை நாள் இருமனத்தோராய்த் தத்தளித்துக் கொண்டிருக்கப் போகிறீர்கள்? ஆண்டவர்தாம் இறைவன் என்றால் அவரைப் பின்பற்றுங்கள்: பாகால் கடவுளானால் அவனைப் பின்பற்றுங்கள்" (1 அர 18:21). அவ்வாறே, யாவே மட்டுமே அளிக்கக்கூடிய உதவிக்காகப் புறவினத்தாரை நோக்குகின்ற (ஓசே 7:11–12) பிளவுபட்ட இதயத்திற்கும் (ஓசே 10:2) எதிராக இறைவாக்கினர்கள் போராடுகின்றனர். விளைச்சலையும் மந்தையையும் தங்களது தலைவர் மற்றும்

துணையாளரின் கொடைகளாக பார்ப்பதற்குப் பதிலாக, இனப்பெருக்க வளமைச் சடங்குகளில் இஸ்ராயேல், தங்களது அன்பர்களாகிய கானானிய கடவுளர்களிடமிருந்து உடன்படிக்கையின் பொருட்களை தேடிச் செல்கிறது (2:7–15). அவிசுவாசமானது, தவறாமல் இறைவனைப் பின்பற்றி (உப 1:36; எண்.14:24; 32:11), முழுவதும் இறைவனுக்கே உரிய (1 அர 8:23; 11:4) நிறைவான பிரமாணிக்க மிக்க இதயத்தை கொண்டிருக்க வேண்டிய (உப 18:13; சங் 17:23) அபிடேகம் செய்யப்பட்ட மணமகளின் விபச்சாரம் ஆகும் (ஒசே 2:1–6; எரே 2–4; யாத் 16)

மனித சக்திகளால் நிறைவேற்றப்பட முடியாவிடினும், இக்குறிக்கோளானது என்றும் நிலைத்துள்ளது. "உங்களிடம் விசுவாசம் இல்லாவிட்டால், நீங்கள் நிலை பெற்றிருக்க மாட்டீர்கள்" என்று ஏசயா மக்களுக்கு தெளிவாக காட்டுகிறார் (ஏச 7:9). இறைமக்களுக்கு இயலக் கூடிய ஒரே வாழ்வாக விசுவாசம் மட்டுமே உள்ளது; மற்ற எல்லா முறைகளையும் அது ஒதுக்கி விடுகிறது (28:14–15; 30:15–16). எரேமியாமின் கூற்றுப்படி அவிசுவாசமானது படைக்கப்பட்டவைகளைச் சார்ந்திருப்பதிலும், அவற்றின் மீது ஒருவரது நம்பிக்கையை கொண்டிருப்பதிலும் அடங்கியுள்ளது (எரே 5:17; 7:4; 8:14; 17:5; 46:25; 49:4). "நீங்கள் இறக்கும்போது நாமே உங்கள் ஆண்டவர் என்பதை நீங்கள் அறிவீர்கள்" என்று எசக்கியேல் நம்ப மறுப்பதன் விளைவை சுட்டிக்காட்டுகின்றார் (எச 6:7; 7:4; 11:10). அவிசுவாசமானது, ஏசயா இறைவாக்கு உரைத்தபோது இதயத்தைக் கடினப்படுத்துதலாக மாற்றுகிறது (ஏச 6:9–10). நாடு கடத்தப்பட்டதால் மக்கள் செவிடராகவும் குருடராகவும் ஆயினர் (ஏச 42:19; 43:8) நாடோறும் காலையில் இறைவன் எழுப்பக் கூடிய செவிப்புலனை உடைய ஓர் உழியனை யாவே எழுப்பவேண்டும் (50:4–5). அவர் மூலமாக, இறைவாக்கினர்களின் உயர்ந்த நம்பிக்கை நிறைவு செய்யப்படும். இறைவனால் அனைவரும் கற்பிக்கப்படும் நாளில் அவிசுவாசம் நின்றுவிடும் (எரே 31:33–34: ஏச 34:13: யோவா 6:45). அப்போது யாவேதான் ஒரே இறைவன் என்று எல்லோரும் காண்பர் (ஏச 43:10).

II. இயேசு கிறிஸ்துவால் எதிர்க்கப்படும் நிலையில் அவிசுவாசம்

"நாங்கள் அறிவித்ததை நம்பியது யார்?" (ஏச 53:1; யோவா 12:38; உரோ 10:16) என்று ஊழியனைப் பற்றிய இறைவாக்குகளை இயேசு ஏற்கனவே நிறைவேற்றியிருக்க வேண்டும். இறைமகன் மனிதன் ஆனதையும் மற்றும் அவரது மீட்புப் பணியையும் ஏற்றுக்கொள்ள மறுக்கின்ற இதயங்களில் அவிசுவாசமானது வெற்றி பெறுகிறதாகத் தோன்றலாம்.

1. நாசரேத்தூர் இயேசுவால் எதிர்கொள்ளப்படுதல்:- முற்காலத்தில் யாவேயின் பெயரால் பேசிய இறைவாக்கினர்களை விசுவசிக்க வேண்டியிருந்தது. இயேசு இறைவார்த்தையின் அதே நிலையில் தன்னுடைய வார்த்தையையும் கூறுகிறார். அவரது வார்த்தையை செயல்படுத்தாமலிருப்பதென்பது, எவ்வித ஆதாரமும் இல்லாமல் மணலின்மீது வீட்டை கட்டுவதற்கு ஒப்பாகும் (மத் 7:24–27). இத்தகைய உரிமையானது மிகைபடுத்தப்பட்டதாகத் தோன்றுகிறது. "என்னைப் பற்றி இடறல்படாதவன் பேறுபெற்றவன்" (மத் 11:6). உண்மையில் அவரது படிப்பினைக்கும் புதுமைகளுக்கும் ஒரு பதிலாக இருப்பது பரிசேயரின் வெளிவேடமும் (15:7, 23:13...) ஏரிக்கரை நகரங்கள் (11:20–24), எருசலேம் (23:37–39), மற்றும் அனைத்து யூதர்களின் (8:10) அவிசுவாசமுமேயாகும். அவர்களது விசுவாசமற்ற நிலையைக் கண்டு இயேசுவே வியப்புறும் அளவிற்கு (மாற் :6), இயேசுவின் ஆற்றல் இத்தகைய அவிசுவாசத்தினால் கட்டுப்படுத்தப்பட்டுள்ளது (மத் 13:58). ஆயினும் இந்த விசுவாசமின்மை, விசுவாசத்தின் ஊற்றான தந்தையால் வெல்லப்படக் கூடும். இயேசுவைபற்றிய மறைபொருளை அவர் ஞானிகளின் கண்களுக்கு மறைத்து (மத் 11:25–26), அவரது விருப்பத்தை நிறைவேற்றி, இஸ்ராயேலில் எஞ்சியோராகிய இயேசுவின் குடும்பத்தைச் சேர்ந்த சிறியவர்களுக்கு அளிக்கின்றார் (12:46–50).

ஆயினும், விசுவாசிகளிடத்தில், அவிசுவாசமானது பல்வேறு படிகளை கொண்

டுள்ளது. சிலர் சிறிதளவு விசுவாசமே கொண்டவர்களாக உள்ளனர். சீடர்கள் புயலைக்கண்டு *(8:26)* அல்லது எழும் அலைகளைக்கண்டு *(14:31)* அஞ்சும் போதும், புதுமை செய்யும் ஆற்றல் பெற்றிருந்தும் அவ்வாறு செய்ய இயலாதபோதும் *(17:17.20; 10:8)* தங்களிடம் அப்பம் இல்லாதபோது அவர்கள் கவலைப்படுவதிலும் *(16:8; 6:24)* இந்நிலை காணப்படுகின்றது. இத்தோல்விகளைச் செபம் தீர்த்து வைக்கும் *(மாற் 9:24)*. இதன் வழியாக, இயேசு பேதுருவின் விசுவாசத்திற்கும் உத்திரவாதம் அளிக்கின்றார் *(லூக் 22:32)*.

*2. பாஸ்கா மறைபொருளின் பிரசன்னத்தில்:-* மகிமைக்கான பாதையாக சிலுவையை தேர்ந்தெடுக்கின்ற இறை ஞானத்தை மனமானது கண்டிப்பாக ஏற்றுக் கொள்ளவேண்டிய தருணத்தில், அவிசுவாசமானது தனது சிகரத்தை அடைகிறது *(1 கொரி 1:21–24)*. இயேசுவினுடைய முடிவு அறிவிக்கப்படும்போது, இயேசுவிற்கு இடறலாக இருக்கும் அளவிற்கு பேதுரு தன் தலைவரை பின்தொடர்வதை தவறிவிடுகிறார் *(மத் 16:23)*. குறித்த காலம் வந்தவுடன் பேதுரு இடறல்படுகிறார். இயேசு முன்னர் கூறியவாறே, இயேசுவை மறுதலிக்கிறார் *(26:31–35.69–75)*. ஆயினும், நீதிமன்றத்திற்கு முன்னர் இயேசுவின் சாட்சியாக இருக்க விரும்பினால் *(10:32–33)*, சீடன் அதே சிலுவையை சுமக்க வேண்டும் *(16:24)*. அவருடைய சான்றுரையானது மிக அரிதாக நம்பப்படுகின்ற உயிர்ப்பினையே உண்மையில் குறிப்பிடுகின்றது *(அ.ப.26:8)*. மனிதனுடைய இதயத்தில் அவிசுவாசமானது எவ்வளவு ஆழமாக வேரூன்றியுள்ளதென்றால், உயிர்த்த காட்சிகளின் நேரத்திலும் சீடர்களே அதை நம்புவதில் மிக மந்தமாக இருந்தனர் *(லூக் 24:25.37.41; மத் 28:17; மாற் 16:11.13.14)*.

III. இஸ்ராயேலின் அவிசுவாசம்

கட்டுவோர் மூலைக்கல்லை விலக்குவர் என்று இயேசு அறிவித்திருந்தார் *(மத் 21:42)*. இக்கூற்றை ஆதித்திருச்சபை ஆற்றலுடன் நினைவு கூறுகிறது *(அ.ப.4:43; 1 பேதுரு 2:4.7)*. இஸ்ராயேலின் மறுப்பிற்கு ஒரு சமயம் அவர்களின் அறியாமையையும் *(அ.ப. 3:17; 13:27–28)*, மற்றசமயங்களில் அவர்களின் குற்றத்தையும் *(2:23; 3:13; 10:34)*, காரணம் காட்டுகிறது. தனது போதனை இஸ்ராயேலை மனந்திருப்பவில்லை என்பதை மட்டுமன்று பெரும்பாலான யூதர்களால் அது ஏற்றுக்கொள்ளப்படவில்லை என்று விரைவிலேயே அறிகிறது. இந்த புதியநிலை மறைபொருள் மிக்கதாகவுள்ளது. இறையியலார்களான பவுலும் யோவானும் அதை எண்பிக்க முயல்வார்கள்.

*1. புனித பவுலும் விசுவசியாத மக்களும்:-* தீவிரமிக்க ஸ்தேவானின் *(அ.ப.7:51–52)* வாரிசாக தோன்றிய பவுல், தனது பணியின் ஆரம்பத்தில், விசுவசியாது, கொடுமைப்படுத்தும் யூதர்களை, இறைசினத்திற்குக் கையளிக்கின்றார் *(1 தெச 2:16)*. அவர் அவர்களை பிரமாணிக்கமுள்ள எஞ்சியுள்ள விசுவாசிகளாக இனி கருதவில்லை. பின்னர், போராட்டங்கள் தளர்ந்து புறவினத்தார் அனைவரும் ஒட்டுமொத்தமாக விசுவாசத்தை தழுவிய நிலையில் பவுல் தனது மக்களுடைய அவிசுவாசத்தின் மறை உண்மையை ஆராய்கிறார். அது அவரை ஆழமாக துன்புறச்செய்கிறது *(உரோ 9:2; 11:13–14)*. முக்கியமாக, தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களின் ஒட்டு மொத்தமான மறுப்பானது, இறைவனையும் அவரது வாக்குறுதிகளையும் கேள்விக்குரியதாக்கி *(3:3)*, விசுவாசத்திற்கு ஆபத்து உண்டு பண்ணுவதாக உள்ளது. மனித நிலையில் அல்லாமல் இறைஞானத்தின் மறை பொருளில் உரோ 9:11–இல் அவர் இப்பிரச்சினைக்குத் தீர்வு காண்கிறார். இறைவன் தனது மக்களை ஒதுக்கிவிடவில்லை; தனது வாக்குறுதிகளுக்குப் பிரமாணிக்கமாய் உள்ளார் *(9:6–29)*. அப்போஸ்தலிக்க போதனையின் வாயிலாக கீழ்ப்படியாமல் எதிர்த்து நிற்கிற மக்கள்பால் கைகளை நீட்டி அழைப்பதை *(10:21)* இறைவன் விட்டுவிடவில்லை. எதிர்த்தெழுந்து, சட்டத்தின் மூலம் நீதியை பெற முயன்ற யூதர்களே இவர்கள் *(9:30–10:21)*. இஸ்ராயேலினுடைய இதயத்தின் கடினத்தன்மை ஒரு நாள் நீங்கும் என்பதால், இறைவனே இறுதியில் வெற்றி பெறுவார். இவ்வழியாக இறைவனின் அளவிளாத இரக்கத்தை அவர்களின் கீழ்ப்படியாமை எல்லாருக்கும் வெளிப்படுத்தும்.

2. புனித யோவானும் விசுவசியாத யூதனும்:- ஏற்கனவே பவுலும் முழு திருச்சபையும் 'விசுவாசிகள்' அல்லது 'விசுவாசமற்றவர்கள்' என்னும் பெயரை புறவினத்தாருக்கு மட்டுமன்றி, கிறிஸ்துவின் விசுவாசத்தில் பங்குபெறாத யூதருக்கும் அளித்திருந்தனர் (1 கொரி 6:6; 7:12–13; 10:27; 14:22–23). இவ்வுலகின் கடவுளால் குருடாக்கப்பட்ட இவர்களுடன் (2 கொரி 4:4) எந்தவித உறவையும் கொள்வது இயலாது (6:14–15). ஆயினும், தனது விசுவாசத்தை மறுப்பதன் மூலம் ஒரு கிறிஸ்தவன் 'அவிசுவாசியைவிட கேடுகெட்ட நிலைக்கு' (1 திமோ 5:8) ஆளாவான் என்பதற்கு உயிருள்ள சாட்சிகளாக அவர்கள் விளங்குவார்கள். பவுல் விசுவாசியாத இஸ்ராயேலை இறைவனின் கண்டிப்பிற்கும் (உரோ 11:21–22) முதல் தேர்விற்கும் (11:16) சாட்சியாக காட்டும்போது, யோவான் இயேசுவை நிராகரிக்கும் யூதனை அவிசுவாசியின் மாதிரிகையாகவும், தீய உலகின் முன்னோடியாகவும் காண்பார். அவிசுவாசப் பாவம் என்பது இயேசுவே கிறிஸ்து என்பதை ஏற்றுக்கொள்ளாமல் இருப்பதாகும் (1 யோவா 2:22–23; 4:2–3; 5:1–5). இது இறைவனை ஒரு பொய்யர் ஆக்குவதாகும் (5:10). நான்காவது நற்செய்தி, மனு உருவெடுத்த வார்த்தையையும் (யோவா 1:11; 6:36) மக்களின் மீட்பரையும் (6:53) நாசரேத்தூர் இயேசுவில் ஏற்றுக்கொள்ள மறுப்பதில், அவிசுவாசத்தை மையப்படுத்துகின்றது. விசுவாசியாமல் இருப்பதானது தீர்ப்பிடப்படுவதற்கும் (3:18) பொய்மைக்கும் கொலைக்கும் ஒருவன் தன்னைக் கையளிப்பதாகும் (8:44), மரணத்திற்கு தீர்ப்பிடபடுவதாகும் (8:24). இவ்வாறு தனது செயல்கள் தீயவையாக இருப்பதால் விசுவாசமற்றவன் ஒளியினின்று ஒடிச்சென்று (3:20), சாத்தானிடம் தன்னை அளித்து இருளில் மூழ்குகிறான். இது இதயத்தைக் கடினமாக்கும் நிலைக்கு இட்டுச்செல்கிறது. இயேசுவின் வார்த்தைகளை அவன் ஒருபோதும் கேட்க இயலாமல் போகின்றது. அவன் தீயவனின் இனத்தைச் சேர்ந்தவனாகிறான் (8:43–44). மற்றொரு'புறம், இவ்விசுவாசமற்ற நிலையின் வெளிப்படையான அழிவினை சமப்படுத்தும் விதமாக, இயேசு தந்தையினுடைய ஈர்ப்பின் மறைபொருளை வெளிப்படுத்துகின்றார் (6:44). "உலகினின்று உயர்த்தப் பெற்றபின் அனைவரையும் தன்பால் ஈர்த்துக்கொள்ளக்கூடியவராய்" (12:32) அவரே இதை வெற்றிகரமாக செயல்படுத்துவார். பவுலின்கூற்றுப்படி, அவிசுவாசமும் ஒருநாள் வெற்றிக்கொள்ளப்படும். "நாம் அவருக்கு உண்மையாயில்லாவிடினும், அவர் உண்மையாயிருப்பார்" (2 திமோ 2:13). கிறிஸ்தவ வாழ்வானது எப்போதுமே உயிர்த்த இயேசுவின் மறைபொருளின் புதிய கண்டுபிடிப்பேயாகும். "விசுவாசமற்றவனாயிராதே விசுவாசங்கொள்" (யோவா 20:27)

**அவிது** (AVITH – அழிவு, சிதைவு)

அவிது என்ற நகரம், ஏதோம் நாட்டின் அரசராகிய பெதாதின் மகனாகிய அதாதின் தலைநகராகும் (ஆதி 36:35; 1 நாள் 1:46). மோவாபிலிருந்த மிதியானியர்களை இவரது தந்தை தோல்வியுறச் செய்ததின் விளைவாக அதாது அரசரானார் (காண்க: கிதயோனின் மகன் அபிமெலக்கு நீதி 9). மான் என்ற இடத்திற்கும் கிர்பெத்து – ஏல் – பஸ்தவிற்கும் இடையிலுள்ள கிர்பெத்து–ஏல்–கித்தே என்ற நகரம் தான் அவிது நகரம் இருந்த இடமாகக் கருதப்படுகிறது.

**அவுரான்** (AURANUS)

மக்கபேயர்களின் காலத்தில் எருசலேமில் ஆட்சியை எதிர்த்து கிளர்ச்சி எழும்பியபொழுது அக்கிளர்ச்சியை முன்னின்று நடத்தியவரும். அதன் தலைவராக விளங்கியவரும் அவுரான் ஆவார் (2 மக் 4:40).

**அவை** (COUNCIL)

நகராட்சி, சட்ட சமயகாரியங்களில் இது ஆராய்ந்து தீர்மானிக்கும் குழுவாகும். ஆலோசனை சபையாகும். இச்சொல் பல எபிரேய அரமேயக் கிரேக்கச் சொற்களை மொழி பெயர்க்கப் பயன்படுகிறது. இச்சொல் இறைவனது ஆலோசனை சபைக்குப் பொருந்தும் (காண்க எரே15:17; 23:18.22; யோபு 15:8; சங் 89:7).

புதிய ஏற்பாட்டில் இச்சொல் மனித சபையைத்தான் குறிக்கிறது. இதைக் குறிக்கும் கிரேக்கச்சொல் "சினெதரியோன்" ஆகும். இது சாதாரணமாக யூத

தலைமை சங்கமான சனேதிரினைக் குறிக்கும் (அ.ப.22:5; மத் 5:22; 26:59 இ). மத் 10:17; மாற் 13:9–இல் இது அவ்விடத்திலுள்ள யூத அவையைக் குறிக்கிறது. கொள்கையளவில் 120க்கு மேற்பட்ட யூதர்களைக் கொண்ட எந்த ஊரிலும் 23 நபர்களைக் கொண்ட அவை செயல்பட்டது. இது ஆன்மீகக் காரியங்களில் நீதிமன்றமாகத் திகழ்ந்தது. அந்த இடத்திலிருந்து செபக் கூட்டத்தோடு நெருங்கிய தொடர்பு கொண்டு, இந்த அவை செபக் கூடத்திலிருந்து ஒருவரைப் புறம்பாக்கவும், உடல் தண்டனை அளிக்கவும் அதிகாரம் கொண்டிருந்தது. இத்தண்டனை செபக் கூடத்திற்குள்ளே செயல்படுத்தப்பட வேண்டும் (காண்க: அ.ப.22:19; 26:11). உரோமையர்கள், யூதர்கள் அவர்கள் காரியங்களை அவர்கள் சட்டப்படியே கவனித்துக் கொள்ளவும் சாவுக்குத் தீர்ப்புச் செய்யவும் ஒரளவு சுதந்திரம் அளித்திருந்தனர். இயேசு சட்டத்திற்கு விளக்கம் அளித்த போது இத்தகைய அவை ஒன்றை மனதில் கொண்டிருக்கவேண்டும் (மத் 5:22). இப்படிப்பட்ட உரோமை அவை அ.ப.25:12–இல் குறிக்கப்படுகிறது.

**அவைத் தலைவர்** (TOWN CLERK)

எபேசு நகரத்தின் உயர்ந்த அதிகாரியை அவைத்தலைவர் என்று புனித லூக்கா குறப்பிடுகிறார் (அ.ப.19:35). இவர் அதிகாரம் நிறைந்தவராக இருப்பதை விவிலியத்தில் நாம் காண்கிறோம். இவரின் பணிகள் என்னவெனில்: அ) நகரத்தின் கணக்கு வழக்குகளை பொறுப்பாய் கவனிப்பது. அவையின் திட்டங்களையும், நடைமுறைகளையும் குறித்து வைப்பது. ஆணைகள், வாக்குறுதிகள் ஆகியவற்றின் பிரதிகளை பத்திரப்படுத்துவது. ஆ) நகர அவையிலிருந்து நாட்டின் பேரவைக்கு அறிக்கைகள் அளிப்பது. மக்களுக்கு அன்பளிப்புகள் வழங்குவது. ஆகவே காலப்போக்கில் மிக முக்கியத்துவம் வாய்ந்தவராக ஆனார். இ) நகர ஆட்சிக்கும் உரோமை மாநில ஆட்சிக்கும் இடையில் இடையாளராக இருப்பது. நகரத்தில் நடக்கும் எந்த ஒரு வன்முறைச் செயலுக்கும் பொறுப்பேற்பது.

அ.ப. 19:35–41–ல் இத்தகைய அவைத் தலைவரைக் காண்கிறோம். எபேசில் பவுலின் போதகத்தால் தங்கள் தொழில் பாதிக்கப்பட்டதைக் கண்டு தெமேத்திரியுவும் அவர் கூட்டாளிகளும் பவுலுக்கு எதிராகக் கலகம் செய்தபோது இந்த அவைத் தலைவர், பவுலும் அவரோடு இருந்தவர்களும் ஒரு குற்றமும் செய்யவில்லை என்றும் வழக்குகளை நீதி மன்றத்தில் தீர்த்துக் கொள்ளவேண்டும் என்றும் கிளர்ச்சியின் விளைவுகளையும் எடுத்துக் கூறி கலகத்தை அடக்கினார்.

**அவ்வா** (AVVA – அழிவு, சிதைவு)

அவ்வா என்பது ஓர் அசீரிய அல்லது சீரிய நகரமாகும். ஐந்தாம் சால்மனேசர் (கி.பி.722) என்ற அசீரிய மன்னன் இந்நகரிலிருந்து மக்களை நாடுகடத்தப்பட்ட இஸ்ராயேல் மக்களுக்குப் பதிலாக சமாரியாவின் நகர்களில் குடியேறச்செய்தார். இதேபோன்று பாபிலோன், கூத்தா, கமாத்து, செப்பர்வயிம் போன்ற நகரங்களிலிருந்து மக்களை அழைத்து வந்து சமாரியாவின் நகர்களில் குடியேறச் செய்தார் (2 அர 17:24). இது ஒருவேளை இவ்வா என்பதாக இருக்கலாம்.

**அவ்விம்** (AVVIM – அழிவு, சிதைவு) – ஆள்

தொடக்ககாலத்தில் அல்லது தொன்று தொட்டு கானானியர்களாக இருந்த அவ்வியர்கள் காசாவிற்கு அருகிலுள்ள ஊர்களில் குடியிருந்தார்கள். இவர்களை கப்தோரியர் (பெலிஸ்தியர்) அழித்து, இப்பகுதியில் குடியேறினர். இப்பகுதி பிற்காலத்தில் பெலிஸ்தியர் சமவெளி என்று அழைக்கப்பட்டது (உ.ப.2:23; யோசு 13:3).

**அவ்விம்** (AVVIM) – இடம்

பெத்தேலுக்கு அருகிலுள்ள பென்யாமின் இனத்தவருக்குரிய பகுதியிலுள்ள ஒரு நகரம் (யோசு 18:23). இதுவும் ஆயி என்ற இடமும் ஒன்றையே குறிக்கலாம்.

**அவ்வியர்** (AVVITES)

அவ்வாவின் குடிமக்கள். இவர்களை ஐந்தாம் அசீரிய மன்னன் சால்மனேசர் குடிபெயர்த்து சமாரிய நகரங்களில் குடியேற்றினார் (2 அர 17:24–31). இவர்கள் நிப்காஸ், தர்தாக் ஆகிய தெய்வங்களை வழிபட்டனர்.

**அழகு** (BEAUTY)

அழகு என்பதைக் குறிக்க பலசொற்கள் விவிலியத்தில் பயன்பட்டுள்ளன. பழைய ஏற்பாட்டிலோ, புதிய ஏற்பாட்டிலோ அழகைக் குறிக்க எந்தவிதக் கோட்பாடும் இல்லை. ஆனால் இரண்டிலும் அழகான பொருட்களைப்பற்றி விவரிப்புகள் காணப்படுகின்றன. பழ *11:22*; எரே *4:30*;எச *16:9–14* போன்ற பகுதிகளில் பெண்களின் அழகு வர்ணிக்கப்படுகின்றது. ஏச *3:18–24*; எச *23:40* ஆகிய பகுதிகளில் அழகிற்கு பயன்படுத்திய வழி முறைகள் பற்றி கூறப்படுகின்றன. சாராய் (ஆதி *12:11.14*), ரெபேக்கா (ஆதி *24:16*; *26:7*), ராக்கோல், அபிகாயில் (*1* சாமு *25:3*) அபிசாகு (*1* அர *1:34*), பதுசேபா, அபிசலோமின் சகோதரி தாமார் (*2* சாமு *13:1*), அபிசலோமின் மகள் தாமார் (*14:27*), தெலீலாவின் இளைய சகோதரி (நீதி *15:2*), எஸ்தர் (எஸ் *1:11*; *2:7*), உன்னத சங்கீதத்தின் மணவாட்டி (*4:1–6*) ஆகியோர் அழகுடன் விளங்கினார்கள்.

பெண்கள் மட்டும் அழகானவர்கள் அல்லர். அபிசலோம் (*2* சாமு *14:25*), அதோனியா (*1* அர *1:6*), பெனாயாவின் எகிப்திய வீரன் (*2* சாமு *23:21*), தானியேல் (தானி *1:4,15*), தாவீது (*1* சாமு *16:12*), யோசேப்பு (ஆதி *39:6*), சவுல் (*1* சாமு *9:2*), யோனத்தான் (*2* சாமு *1:23*) இவர்கள் எல்லோரும் வெவ்வேறு அளவில் அழகுடன் விளங்கினர். குழந்தை மோசேயின் அழகும் (யாத் *2:2*), சங் 45, உன்னத சங்கீதம் ஆகியவற்றிலும் வரும் மணச்சோடிகளின் அழகும் சற்று வித்தியாசமாகக் கூறப்படுகிறது. ஆதி *6:2*–இல் வரும் பெண்களும், ஆமோஸ் *8:13*–இல் வரும் கன்னியர்கள், யோபின் புதல்விகள் (*42:15*) அழகுள்ளவர்களே.

உடலுறுப்புக்களின் அழகையும், சிறப்பையும் பற்றிக்கூற, அவைகள் தனிப்படுத்தப்படுகின்றன. பொதுவாக உன்னத சங்கீதத்தில்தான் இவ்வாறு உள்ளன. குரல் (எச *33:32*) எப்பிராயிமினின் கழுத்து (ஓசே *10:11*) இறையரசுப்பற்றித் தூதுரைப்பவர்களின் காலடிகள் (ஏச *52:7*: உரோ *10:15*) போன்றவை, தனிப்படுத்தலுக்கான சில எடுத்துக்காட்டுகள். உன் இதழ்கள் செம்பட்டு நூலிழைப் போன்ற அழகுடையது (உ.ச. *4:3*) என்று வருணிப்பது மனதை கவர வல்லது.

பெண்ணின் கூந்தல் உ.ச. *4:1*; ஏச *3:24*, லூக் *7:38*; யோவா *11:2*; *12:3* ஆகிய பகுதிகளிலும் ஆண்களின் தாடி *2* சாமு *10:5*; *14:25–27*; பழ *20:29*–லும் வர்ணிக்கப்படுகின்றன. ஆனால் புதிய ஏற்பாட்டில் உடல் உறுப்புக்கள் வித்தியாசமான கருத்தைச் சொல்ல பயன்படுத்தப்படுகின்றன (உரோ *9:21*).

ஆரோனின் ஆடைகள் அழகுக்கும், மாட்சிமைக்கும் உரியன (யாத் *28:2.40*; திருவெளி *1:4*). சீனாரிலிருந்து கொண்டு வரப்பட்ட சால்வை (யோசு *7:21*; ஆதி *41:42*; எஸ் *8:15*). விழாக்கால ஆடைகள் (ஆதி *45:22*; நீதி *14:12–13*; *2* அர *5:5*), பூவேலைப் பாட்டோடுகூடிய போர்வைகள் (யாத் *26:36*; நீதி *5:30*; எச *16:18*; *26:16*), வெள்ளை ஆடைகள் (திருவுரை *9:8*; தானி *7:9*; மத் *17:2*; திருவெளி *3:4–5*) ஆகியவை அழகுள்ள பொருட்களாகக் குறிக்கப்படுகின்றன "அழகிய மாலை" "அழகின் சிகரம்" "அழகிய கிரீடம்" (பழ *4:9*; ஏச *62:3*; எரே *13:18*; எச *23:47*) போன்று அழகோடு தொடர்புப்படுத்தப்பட்ட பலபதங்கள் விவிலியத்தில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

பாலஸ்தீனத்தில் 'இயற்கைக் காட்சி' அழகியது என விவரிக்கப்படுகிறது. அந்த நிலமே அழகு வாய்ந்திருப்பது அதன் மரபுரிமையாகும் (எரே*3:19*; சங் *16:6*). எருசலேம், சியோன் மலை, ஆலயம், அங்குள்ள வீடுகள் ஆகியவற்றின் அழகும் விளக்கப்படுகிறது (காண்க எஸ் *7:27*; சங் *48:1* தொ; *50:2*; *93:5*; ஏச *5:9*; *64:11*; எரே *6:2*; புல *2:15*; அ.ப.*3:2.10*). சங் *50:2*; புல *2:15* ஆகிய பகுதிகளில் சியோன் மலை எழில் மிக்கது என்று அழைக்கப்படுகிறது. இஸ்ராயேல் கடவுளின் 'அழகிய மந்தை' (எரே *13:20*; ஓசே *14;6*) என்று அழைக்கப்படுகிறது. சமாரிய நகரின் (ஏச *28:7–14*) அழகும், எகிப்திய பாரவோனின் அழகும் (எச *31:1–32:21*), தீர் நகரும் அதன் இளவரசர்களின் அழகும் (எச *27–28*) விவரிக்கப்படுகின்றன. எகிப்தின் அழகு லெபானோனின் தேவதாரு மரத்திற்கும், தீர் நகரத்தின் அழகு விலைமதிப்பற்ற கற்களுக்கும்

ஒப்பிடப்படுகின்றது. எரேமியா இறை வாக்கினர் எகிப்தை அழகிய இளம் பசு என்கிறார் (எரே 46:20). பாலஸ்தீனத்தில் வானம் வெளிச்சமாகவும், அழகானதாக வும் இருந்தது (யாத் 24:10; யோபு 26:13; சங் 19:1; உ..ச.6:10).

பழைய ஏற்பாடு பொதுவாக, கடவு ளின் அழகையும், மாட்சியையும் இயற்கை யில் காண்கிறது. எல்லாம், அதற்குரிய காலத்தில் நன்றாய் இருக்கின்றன (திரு வுரை 3:11). இயேசுவும் சாலமோன் தன் மாட்சிமையில் என்ற பதத்தால் இயற்கை யின் அழகை சிறப்பித்துக் கூறுகிறார் (மத் 6:29). "அழகான" என்ற சொல் வீண் புகழ்ச்சிக்கும் (சங் 45:2) தவறான பேச்சுக் கும் (எரே 12:6; உரோ 16:18) பயன்படுத்தப் படுகிறது. ஆனால் ஞானத்தின் வார்த்தை கள் அழகானவை (பழ 1:9; 4:9).

இஸ்ராயேலின் இசை, சமய கலைப் பொருட்கள், அவற்றின் அலங்காரம், நடனத்தோடு ஊர்வலம் போகும் வழி பாட்டுக் கொண்டாட்டங்கள் ஆகியவற்றில் வெளிப்பட்டாலும், அவர்களின் மொழி அது உரைநடை விவரிப்போ, போதனை யோ, வழிபாட்டுப் பாடல்களோ எல்லா வற்றிலும் அழகுணர்வை வெளிப்படுத்தும் விதத்தில் இஸ்ராயேலின் அழகுபால் கொண்டிருந்த மனப்பான்மை மேலும் வெளிப்படுகிறது. இயேசுவின் உவமை யில் பேசும் திறன் ஒரு தனி அழகை வெளிப்படுத்துகின்றது. அழகு பற்றிய கோட்பாட்டை பிலி 4:8–இல் காணலாம்.

பொதுவாகவே முடிவு கால இயல் பகுதிகள் அழகைப் பற்றிய குறிப்புகளை அதிகம் கொண்டுள்ளன. வருங்கால எருசலேமின் அழகும் (ஏச 52:1; 62:3; செக் 9:17) மெசியாவின் மகிமையும் (ஏச 33:17; காண்க: 4:2) கூறப்படுகின்றன. ஆனால் ஆண்டவரின் ஊழியன் அழகுள்ளவராக விவரிக்கப்படவில்லை. இறுதியில் கடவுளே அவருடைய மக்களுக்கு ஒரு அழகிய மணி மகுடமாக மாறுவார் (ஏச 28:5). திருவெளிப்பாட்டில் 'அழகு' என்ற சொல் மனிதர்களுக்கும், இடங்களுக்கும், ஆபரணங்களுக்கும் பயன்படுத்தப்படு கின்றது.

கிறிஸ்துவின் அடக்கத்திற்குத் தயாரிப் பாக அவரது பாதங்களைத் தைலத்தால் பூசியபெண்மணியின் அழகுச் செயல் போற்றத்தக்கதாகும் (மத் 26:6–13).

**அழகுவாயில்** (BEAUTIFUL GATE)
பேதுருவும், யோவானும் கோயிலுக்கு வந்து கொண்டிருந்தபோது பிறவி யிலேயே முடவனாயிருந்த ஒருவன் கோயிலின் "அழகு வாயில்" என்னும் வாசலருகே அமர்ந்திருந்தான் (அ.ப.3:2). அவன் அவர்களைப் பார்த்துப் பிச்சைக கேட்டான். பேதுருவோ "என்னிடம் உள்ளதை உனக்குக் கொடுக்கிறேன்" எனக் கூறி அவனைக் குணப்படுத்தினார்.

இத்தகைய வாயில் இருந்ததாக யூத மூலங்கள் குறிக்கவில்லை. ஆனால் யோசி பஸ், பெண்கள் முற்றத்தில் வாயிலாக இருந்த கிழக்கு வாயிலின் அழகை விவ ரிக்கிறார். இது கொரிந்திய வெண்கலத் தால் செய்யப்பட்டிருந்தது. இந்த வாயில், கிறிஸ்தவப் பாரம்பரியம் கருதியதுபோல் சூசா அல்லது பொன்வாயிலாக இல்லா மல், நிக்கனோர் வாயிலாக இருந்திருக்க லாம்.

**அழிந்து போதல்** (CORRUPTION)
இச்சொல்லால் விவிலியம் இந்த உலகம் அதில் உள்ள அனைத்தும் கடந்து செல்லும் தன்மையைக் குறிக்கின்றது. விசு வாசிகளின் அழியாத உரிமைப் பேற் றோடு ஒப்பிட்டு வேறுபடுத்தி (1 பேதுரு 1:4), படைப்பு முழுவதும் பயனற்ற நிலைக்கு உட்பட்டுள்ளது. படைப்பு அனைத்துமே அழிவுக்கு அடிமைப்பட்டி ருக்கிறது (உரோ 8:20–21) என்று விவிலியம் படிப்பிக்கிறது.

இந்த இயற்கை 'உடலானது' அழிவிற் குரியது, அதாவது சாவிற்கும் சிதைந்து போவதற்கும் ஆளாகக் கூடியது என்று 1 கொரி 15:42 கூறுகின்றது. "அழியக்கூடி யது" இறக்கக்கூடியது ஆகியவை ஒரே பொருளுடையவை; அதேபோல 'அழி வற்றது' சாகாத் தன்மையடையது ஆகிய வை ஒரு பொருள் பலசொற்களாகும். உயிர்த்த யேசுவின் உடல் இனி அழிவுக் குள்ளாகாது (அ.ப.13:37). அ.ப.2:27 தொ; 13:35 தொ–இல் உள்ள அழிவு வார்த்தை சிதைந்து போகும் பொருளுடையது.

**அழிப்பவன்** (DESTROYER)

சாவுப் பழிவாங்கும் தூதன். இஸ்ராயேலர் எகிப்திலிருந்து விடுதலை அடைந்து புறப்பட்ட இரவில் இந்த அழிவின் மனித இயல்பு கடந்த தூதன் நாடு முழுவதும் கடந்து சென்று, கதவு நிலையின் மேற்சட்டத்திலும் நிலை கால்கள் இரண்டிலும் செம்மறியின் இரத்தம் பூசப்படாத வீடுகளில் புகுந்து அதிலுள்ள தலைபேற்றாண்களைக் கொன்றார் (யாத் 12:23). பழைய ஏற்பாட்டில் இந்த உருவம் இறைவன் தம் திருவுளத்தை நிறைவேற்ற பயன்படுத்திய இறை தூதுவராகத் திகழ்கிறார் (காண்க. 11:4–8). 2 சாமு 24:16–17; 1 நாள் 21:15–இல் இத்தகைய தூதன் ஒருவர், தாவீதின் கணக்கெடுப்புக்காக இஸ்ராயேலைத் தண்டிக்கிறார். 2 அர 19:35–இல் 'ஆண்டவரின் தூதர்' எருசலேமுக்கு எதிராக முற்றுகையிட்டிருந்த சனகெரிபின் படைகளைக் கொன்றழிக்கிறார். ராபீகளின் சிந்தையில் அழிப்போன் என்ற பெயர் ஓர் ஆள் பெயராகி, ஒரு தனிப்பட்ட தூதரை உணர்த்திற்று. இப்பொருளில் தான், பாலைவனத்தில் செய்த கிளர்ச்சிக்காக இஸ்ராயேலைத் தண்டித்த அழிவின் தூதரை பவுல் குறிப்பிடுகிறார் (1 கொரி 10:10; காண்க எண் 14:2.36–37; 16:30–31• 41–45). அவர் சாத்தானையோ அவனது தூதரையோ மனதில் கொண்டிருந்திருக்கலாம் (காண்க 2 கொரி 12:7; 1 தெச 2:18; ஞான 18:20–25). ஏனெனில், நாடு கடத்தப்பட்டப் பின் காலத்தில் சாத்தான், இறைவனின் கட்டுப்பாட்டுக்குள் உள்ள அழிவின் தூதனாகச் சித்தரிக்கப்படுகிறான். 1 கொரி 5:5–சாத்தானை அழிவோடு இணைக்கிறது (காண்க.1 தெச 5:3; 2 யோவா1:9; 1 திமோ 6:9).

இந்தத் தனிப்பட்ட பொருளைத் தவிர, பொதுவான பொருளிலும் அழிப்போன் என்ற சொல் பயன்பட்டிருக்கிறது (யோபு 15:21; ஏச 49:17; எரே 4:7; 22:7).

**அழியாமை, இறத்தல் இல்லாமை** (IMMORTALITY)

I. பழைய ஏற்பாடு

யாவேக்கும் மரணத்திற்கும் இடையிலுள்ள உறவு உறுதிப்படுத்தப்பட்டபின் மரணத்தின் மீதான வெற்றி பற்றிய நம்பிக்கைக்கு இடமுள்ளது. ஏனெனில் யாவே எங்கு ஆட்சி செய்கிறாரோ, அங்கு வாழ்வு ஆதிக்கம் பெறவேண்டும். நோயினால் இறக்கின்ற மனிதர்களை குணமாக்க யாவேயால் முடியும்போது, மரணத்தின் பணி முடிவடைந்த பிறகு, மரணத்தின் மீதும் அவர் தனது வல்லமையினை வெளிப்படுத்த முடியும். யாவே உயிருள்ள கடவுள் என்று உறுதியாகக் கூறுவது பழைய ஏற்பாட்டின் மையக்கருத்தாகும் (சங் 18:46; 42:3; 84:2; எரே 23:36; ஓசே 1:10). அவரது நித்தியம் பற்றிய உறுதிப்பாடு, அவர் இருத்தலின் விளைவேயாகும். இறந்துவிட்ட சிலையாகிய பிற கடவுள்களுக்கும் (2 அர 19:4.16; சங் 106:28: எரே 10:11), இறக்கும் தன்மையுடைய மனிதருக்கும் முற்றிலும் மாறான நிலையில் உயிருள்ள கடவுள் இருக்கின்றார்.

யாவே கொண்டுள்ள வாழ்வு, வாழ்வின் உற்றாகிறது. அந்த வாழ்வை, தமது மக்களுக்கு, அவர்களோடு கொண்டுள்ள உடன்படிக்கைக்கு அவர்காட்டும் பிரமாணிக்கத்தின் சேவைக்கு அளிக்கிறார். இவ்வாறு யாவே நோயினாலும் பாவத்தாலும் பலவீனப்படும் வாழ்வை மீண்டும் அளிக்கிறார். இது புத்துயிர் அளிக்கும் செயலாகும் (யோபு 33:19–26; சங் 30:2–3; 56:1–3; 71:20; 143:11). மரணம் தனது பணியினை முடித்தபின்னர், புத்துயிர் அளிக்கும் செயலைச் செய்ய யாவேயை தடுக்க எதுவுமே இல்லை. சரெப்தா நகர விதவையின் மகன் (1 அர 17:17–21), சுனாமிய பெண்ணின் மகன் (2 அர 4:18–37) ஆகியோர் எலியா மற்றும் எலிசாவால் மீண்டும் உயிர்ப்பெறுகின்றனர். பெயர் தெரியாத ஒருவனின் பிணம் எலிசாவின் எலும்புகளின் மேல்பட்டவுடனே, அம்மனிதன் உயிர்த்து எழுந்தான் (2 அர 13:20–21). இத்தகைய நிகழ்ச்சிகளில் உயிர்த்தெழுதல் என்பது கடைசி உயிர்த்தெழுதலைவிட, அச்சமயத்தில் நோய்களினின்று விடுபடுதலையே குறிப்பிடுகிறது. இத்தகைய செயல்கள் இறந்தவுடனே, மண்ணோடு மண்ணாவதற்கு முன்னர் நிகழ்கின்றன. இவை வாழ்வினை நீட்டிப்பதற்கே செயல்படுத்தப்படுகின்றன. இறப்பின் மேல் இன்னும் உறுதியான வெற்றி,

சில சலுகை பெற்றவர்கள் இறைவனிடம் எடுத்துக்கொள்வதில் நிகழ்கிறது. இவ்வாறு, ஏனோக்கு (ஆதி 5:24) மற்றும் எலியா (2 அர 2:10–11) ஆகியோர் இறவாமலே கடவுளால் விண்ணகத்திற்கு எடுத்துக்கொள்ளப்பட்டனர். பழைய ஏற்பாட்டுப் புனைப்பெயர் நூல்கள் உப.34:5க்கு எடுத்துக்கொள்ளல் என்று பொருள் கொடுத்து மோசேயும் இறவாமல் இறைவனால் எடுத்துக்கொள்ளப்பட்டார் என்று கூறுகின்றன. இன்னும் பொதுவான உண்மை நிலையின் முன்னறிவிப்பாக இத்தகைய நிகழ்ச்சிகள் கருதப்படுகின்றன.

அழியாமை அல்லது இறத்தல் இல்லாமையில் விசுவாசம் என்பது இரு திசைகளில் வளர்ந்தது.

அ) வாழ்வுக்கு மீண்டும் திரும்பக்கூடும் என்ற கருத்து மேலும் பரந்த அளவில் ஏற்றுக்கொள்ளப்படலாயிற்று. இயற்கையின் வாழ்வின் அடையாளமான தேவதையின் இறப்பு, உயிர்ப்பில் கானானியர் கொண்டிருந்த நம்பிக்கையினால் இஸ்ராயேலர் பாதிக்கப்படாதவர்களாய் இருக்கமுடியவில்லை. விசுவாசிகள் தமது சமய சடங்குகளுக்குள், மரணம் மற்றும் உயிர்தெழுத்தல் பற்றிய கருத்துக்களுடன் தங்களை இணைத்துக்கொண்டனர். இஸ்ராயேலரால் தமது சமயத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்ட சில குறிப்பிட்ட சொற்றொடர்கள் கானானியரின் விசுவாசக் கோட்பாடுகளிலிருந்து எடுத்தாளப்பட்டிருக்கலாம். இவ்வாறு கடவுளின் இறப்பையும் உயிர்ப்பையும் கொண்டாடும் ஒரு சமயச்சடங்கினை ஓசே 6:1 பின்பற்றியிருக்கலாம். அரசன் யோயா கிமிற்கான புலம்பல் கானானிய சடங்கிலிருந்து கடன் வாங்கப்பட்டிருக்கலாம் (எரே 22:18). மிகவும் எச்சரிக்கையாக நோக்கப்பட வேண்டிய கருத்தாக இருப்பினும், அரசனுக்கும் இறப்பு என்பது இல்லை என்ற நம்பிக்கையினை இஸ்ராயேலும் மற்ற அயலாருடன் சேர்ந்து கொண்டிருந்தது என்பதை மறுக்க முடியாது (எச 34:24; 37:24). ஆயினும், இயற்கையினைப் பற்றிய கானானேய சமயத்தின் அடிப்படையான இந்த மீபௌதீகக் கருத்து முடிவில்லா வாழ்வுபற்றி சிந்திப்பதில் இஸ்ராயேலர் எச்சரிக்கையாக இருக்க வேண்டியதை உணர்த்திற்று.

இறத்தலிலிருந்து உயிர்த்தெழுதல் என்ற கருத்து இஸ்ராயேல் மக்களின் எதிர்காலநிலையை ஓர் உயிர்ப்பாக எடுத்துக்காட்டும் உருவகங்களின் அடிப்படையாக இருந்திருக்கலாம். மேலே குறிப்பிடப்பட்ட ஓசேயின் கருத்துடன், எசக்கியேல் இறைவாக்கினரின் காட்சியினையும் (எச 37) குறிப்பிடலாம். இறந்தவரின் எலும்புகள் ஒன்று சேர்தல், கல்லறைகளிலிருந்து வெளிவருதல் போன்றவற்றைத் துல்லியமாக விவரிப்பதால், இந்த உருவங்களுக்குப் பின்னணியில் சாவுப்பற்றிய சில துல்லியமான கருத்துக்கள் இருந்திருக்க வேண்டும். யாவேயின் ஊழியனைப் பற்றிய நான்காவது பாடலில், நீண்ட, முடிவற்ற வாழ்வு குறிப்பிடப்பட்டுள்ளது எனக்கருதலாம். பிறரின் பாவங்களின் பரிகாரமாக அவர் ஏற்றுக்கொண்ட துன்பம் மற்றும் சாவு ஆகியவற்றுக்கு ஈடாக இவ்வாழ்வு அவருக்கு அளிக்கப்படுகிறது (ஏச 53:8.10). தானி 12:2–இன்படி உயிர்த்தெழுதல் மேலும் பலருக்கு விரிவாக்கப்படுகிறது. இந்த உயிர்தெழுதல் பலருக்கு அளிக்கப்படுகிறது. எல்லாருக்குமன்று. உயிர்த்தெழுதலானது சிலருக்கு வெகுமதியாகவும், மற்றவர்களுக்கு தண்டனையாகவும் தன்மையால் இருவடிவம் எடுக்கிறது. மக்கபேயரின் போர்களிலிருந்து மறைசாட்சிகளாக மரித்த பல நீதிமான்களின் முடிவு பற்றிய பிரச்சினையிலிருந்தும் உயிர்த்தெழுதல் உருவெடுக்கின்றது. இவர்கள் இவ்வாழ்வின் ஆசீர்களைச் சன்மானமாக பெறுவது பொருத்தமே. உயிர்த்தெழுதல் செயல்வினைப் பயனின் ஒருவடிவாகக் கருதப்பட்டது என்பது உறுதி. ஏச 26:19–இல் 'இறந்துபோன உம்மக்கள்' என்று கூறும்போது மறைசாட்சிகளைக் குறிப்பிடலாம்.

செய்வினைப்பயனின் எடுத்துக்கூறலாக இருப்பதுடன், உயிர்ப்பானது அனைத்து உலகின் மீதும் பரவியுள்ள இறைவனுடைய ஆட்சியின் அறிவுப்பூர்வமானதும் அவசியமானதுமான விளைவாகத் தோன்றுகிறது. யாவே அரசனாகும் பொழுது என்றென்றைக்கும் சாவு

அழிக்கப்படும் (ஏச 25:8). இறந்தோரை பாதாளத்தில் அடைத்து வைத்திருக்கும் இலவியத்தானும், மற்ற சகாக்களோடு சேர்த்து வான்படையும் தண்டிக்கப்படும் (24:21; 27:1 தொ). அதே சமயம் யாவே, உலகின் மேல் "ஒளிவீசும் பனியைப் பெய்வார்" (26:19). இவ்வாறு உயிர்த்தெழுதலானது முதல் படைப்பைவிட முழுமையான புதுப்படைப்போடு ஒன்றாக்கப்படுகிறது. சங் 22:29–39–இன்படி உயிர்த்தெழுதலானது அவ்வாறே யாவே அரசினுடைய வெற்றியில் ஒரு பாகமாகிறது. செயல் வினைப் பயன் மற்றும் மெசியாவைப் பற்றிய நம்பிக்கையோடு உயிர்ப்பை தொடர்புபடுத்துவதில் உயிர்த்தெழுதலின் சில கூறுகளில் ஈரானிய சமயத்தால் இஸ்ராயேலின் விசுவாசம் பாதிக்கப் பட்டது எனலாம். மறுபுறத்தில் ஆன்மாவின் இறப்பு இல்லாமையை அடிப்படையாகக் கொண்ட முடிவில்லா வாழ்வைப் பற்றிய நம்பிக்கையானது, பழைய ஏற்பாட்டிற்கு முற்றிலும் அன்னியமானதாகும். ஈரானின் அடிப்படையாக விளங்கும் உலகின் அழிவு மற்றும் புதுப்பித்தல் பற்றிய அண்டவியல் கதைகள், கடவுளின் வல்லமை மற்றும் நீதி மீது இஸ்ராயேல் கொண்டிருந்த விசுவாசத்தை விட பெருமளவு முக்கியத்துவம் குறைந்தவையாகவே இருந்தன.

ஆ) உயிர்ப்புப் பற்றிய இரண்டாவது சிந்தனைப்போக்கு உயிர்த்தெழுதலைப் பற்றிய வாய்ப்புகள் மற்றும் முறைமைகளைப் பற்றியதன்று. அது தீர்வுகளை காண்பதில் கடவுளை நம்பி, இறைவனோடு ஒன்றுபடுதலைத்தவிர வேறு உறுதியை வேண்டாத விசுவாசமாகும். ஆன்மீகம் அல்லது இறை அனுபவம் எனப்படும் இந்த மனநிலை பல சங்கீதங்களில் காணப்படுகிறது. சங் 6–ன் ஆசிரியர் மரணத்திற்குபின் நடக்கவிருப்பதைப் பற்றி கவலைப்படாமல். யாவேயுடன் உள்ள ஐக்கியமானது மரணத்தினால் அழிக்கப்பட முடியாதவாறு உறுதியானது என்று கூறுகிறார். யாவே மட்டுமே உயிருள்ள கடவுளாய் இருப்பதால், சங்கீத ஆசிரியரை பொறுத்தவரை இந்த ஐக்கியமானது மரணத்திற்கு பின்னும் வாழ்வாகும். உயிர்த்தெழுதலின் சுட்டிக்காட்டல் வெளிப்படையாக இல்லாவிடினும் சங் 17:5–ல் இதேபோன்ற நம்பிக்கை வெளிப்படுகிறது. சில குறிப்பிட்ட சலுகை பெற்ற மனிதர்கள் கடவுளிடம் எடுத்து செல்லப் படுகின்றனர் என்று கூறுவதன்மூலம், சங் 49 மற்றும் 73 மரணம் என்ற பிரச்சினைக்கு ஒரு தீர்வு காண்பதாக தெரிகிறது (சங் 49:15 மற்றும் 73:24–இல் எடுத்தல் என்னும் சொல்). நேர்மையுடனும் விசுவாசம் குறையாமலும் வாழ்ந்ததினால், இறைப்பற்றற்றவர்களுக்கு அழிவினை மாற்றமுடியாத முறையில் கொண்டு வருவதுபோல, மரணம் தனக்கு இருக்காது என்பதில் சங் 49–இன் ஆசிரியர் உறுதியாக உள்ளார். சங் 73–ன் ஆசிரியர், நேர்மையற்ற காலத்திற்கு முந்திய மரணம் தன்னை எதிர்நோக்கியிருந்தாலும், அம் மரணமானது எந்த வல்லமையினாலும் அழிக்கமுடியாத, இறைவனோடு கொண்டுள்ள ஐக்கியத்தை முடிவுக்கு கொண்டு வர முடியாது என உறுதியாக நம்புகிறார். உரோ 8–ன் இறுதியில் பவுல் கூறுவதுபோல இறைவனால் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளோம் என்று அறியும் மனிதனை இறைவனின் அன்பினின்று பிரிக்க முடியாது என்று எடுத்துரைப்பது வெற்றிகரமாக விசுவாசத்தின் வெளிப்படையாகும். இதே மனப்பாங்கு யோபு 19:26–லும் கூறப்படுகிறது. அதில் உலகில் செயல் வினைப்பயனோ அல்லது உயிர்ப்போ முதன்மையாக வலியுறுத்தப்படவில்லை. பொதுவாகச் சடங்குகளின்மூலம் இறைவனுடன் ஐக்கியமாகும் நிலையினை குறிப்பிடும், கடவுளை நேரிடையாக "காணும்" உறுதியே வலியுறுத்தப்படுகிறது. காட்சியும் அறிவுக் காரணமும் முற்றிலும் மாறாக விளங்கும் நிலையில் என்ன நிகழ்ந்தாலும் கடவுளுடன் கொண்டுள்ள ஐக்கிய நிலை எப்போதுமே இருக்கும் என்று அறிந்து கொள்வதில் யோபுவின் விசுவாசம் அடங்கியுள்ளது.

இத்தகைய சமய நிலைமையே உயிர்த்தெழுதல் பற்றிய கருத்தை உயிருள்ள விசுவாசமாக மாற்றியதில் முக்கிய பங்கு வகிக்கின்றது. தனிநபர் செயல் வினைப் பயன் கோட்பாட்டின் வெற்றியின் விளை

வாக, யூதத்துவத்தில் அழியாமை அல்லது இறத்தல் இல்லாமை மற்றும் உயிர்த் தெழுதல் பற்றிய கருத்துக்கள் வளர்ச்சியு டைய முக்கிய இடத்தை பெற்றன. ஆனால் இக்கருத்துக்கள் இன்னும் ஒரு மித்தவிதத் தில் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. இத்த கைய கருத்துக்கள் திருவுரை, யூதித், தோபியா, பாரூக்கு மற்றும் 1 மக்க பேயர் (1 மக் 2:49,70) ஆகிய நூல்களால் தெளி வாக நிராகரிக்கப்பட்டன. சதுசேய கட்சி யினரும் இந்நிலைக்கு ஆதரவுதரவில்லை. 2 மக் 7:9 தொ, ஏனோக்கின் உவமை, பாரூக்கின் நூல் மற்றும் பன்னிரண்டு குலத்தந்தையரின் ஏற்பாடுகள் (குறிப்பாக யூதா) ஆகியவை இந்நிலைக்கு உறுதியாக ஆதரவு அளித்தன. உயிர்த்தெழும் இடம், முறை, உயிர்த்தெழுந்தோரின் நிலைமைப் பற்றி பல்வேறு வேறுபாடுகளை கொண்டி ருந்தாலும், ஏச 26:19 மற்றும் தானி 12:2-இன் கருத்துக்கள் மீண்டும் கையாளப் பட்டு வெளிப்படையாக எடுத்துக்கூறப்படு கின்றன.

கும்ரான் நூல்கள், நேர்மையாளர் களின் உயிர்த்தெழுதலைப் பற்றியும், கடவுள் மற்றும் அவரது வான தூதர்களி னுடைய ஒளிமயமான உலகில் உள்ள முடிவற்ற வாழ்வில் நிலவும் நீடித்த மகிழ்ச்சியை பற்றியும் விவரிக்கின்றன. அலக்சாந்திரியா யூதத்துவத்தின் ஏடு களில் கடவுளின் அருகில் உள்ள ஆன்மா க்களின் இறவாநிலைமை என்ற கருத்து உயிர்த்தெழுதல் என்ற கருத்தின் இடத் தை எடுத்துள்ளது (ஞான 3:1 தொ; 9:15; 4 மக்.). பொதுப் பாணி யூதத்துவம் பழைய ஏற் பாட்டு நம்பிக்கைகளையும், கிரேக்க அல்லது கிரேக்க-ஈரானிய கருத்துக்களை யும் இணைத்து சமரச நிலைக் கொண் டுள்ளது. உயிர்த்தெழும் நாளில் உட லோடு எழுந்திருக்கும் வரையில் இறந்த வர்களுடைய ஆன்மாக்களுடைய ஆவிகள், ஒருவித தீர்ப்பாகப் பாதாளத்தில் (செ யோல்) நான்கு பகுதிகளில் பிரித்து வைக் கப்பட்டு உயிர்ப்பு நாளில் உடல் வடிவம் மீண்டும் பெற காத்திருக்கும்போது சுதந் திரமான வாழ்வு அளிக்கப்பட்டுள்ளன என்று ஏனோக் 22-ல் கூறப்பட்டுள்ளது. ஆன்மாவின் இறத்தல் இல்லாத நிலை பற்றிய கோட்பாடு, உயிர்த்தெழுதல் பற்றிய கோட்பாட்டுடன் மீண்டும் அதே போல் இணைக்கப்பட்டு 2 எஸ்திராஸ் (4-எஸ்ரா)-இல் குறிப்பாக 7-ஆம் அதிகா ரத்தில் மீண்டும் தோன்றுகிறது. இதை யொத்த மனப்போக்கு புதிய ஏற்பாட்டி லும் காணப்படலாம். அதில் உடலோடு கூடிய உயிர்த்தெழுதலைப் பற்றிய உறுதி யான எண்ணத்துடன், இறத்தல் இல்லாத நிலையிலும், மரணத்திற்குப்பின் உடனே கடவுளின் அருகிலிருக்கும் வாழ்க்கை (லூக் 16:24) பற்றிய நம்பிக்கையும் காணப் படுகிறது. ஆனால் இயேசு, மரணத்திற்கு பிந்திய வாழ்வு பற்றி பேசும்போது அவர் காலத்து யூத விசுவாசத்தைக் கடந்து சென்று உயிருள்ள கடவுளின் எல்லாம் வல்ல நிலையினையும், உண்மையான நிலையினையும் வலியுறுத்துவதன் மூலம், பழமையான பழைய ஏற்பாட்டு உறுதிப் பாட்டை மீண்டும் வலியுறுத்துகிறார் (மத் 22:23; மாற் 2:26).

II. புதிய ஏற்பாடு

அழியாமை பற்றிய புதிய ஏற்பாட்டுக் கோட்பாடு, இறைவனைப்பற்றியும் மனித னைப் பற்றியும் பழைய ஏற்பாட்டில் காணப்படும் கருத்துக்களை அடிப்படை யாகக் கொண்டு அமைக்கப்படுகிறது. அவை: இறைவன், தம்மிலேயே உயிர் கொண்டிருப்பவர், உயிர் அளிப்பவர். மனுக்குலம், ஒரு தொகுப்பென்ற அளவில் உயிர்த்தெழுதலின் நம்பிக்கையை இறுதி யாகக் கொண்டுள்ளது. இந்த இரு கருத்துக்களும் கிறிஸ்துவிலும் அவரது உயிர்ப்பிலும் ஒன்றிணைகின்றன. முனைப்புப்பெறுகின்றன. நிறைவு பெறு கின்றன. இவ்வாறு புதிய ஏற்பாடு எப் போதும் கிறிஸ்துவில் மையம்கொண்டது. சாகாமை என்ற எதிர்முறைக் கருத்தை விட, உயிர்ப்பு அல்லது மறுபடைப்பு வழியாக முடிவில்லா வாழ்வு என்னும் நேர்முறை செழிப்புமிக்கக் கருத்தில் அக்கறை கொள்கிறது.

முடிவிலா வாழ்வு கிறிஸ்துவில் வெளிப்படுகிறது (1 யோவா 1:2). அவருக் குத் தம்மிலே உயிர் கொண்டிருக்கத் தந்தை அளித்துள்ளார் (யோவா 5:26). இறைவாழ்வைத் தம்மையாலே கொண்டி

ருப்பவர் என்ற முறையில், இயேசு தம் உடலிலும் ஆன்மாவிலும் "இறுதிப் பகைவனாகிய" சாவை (1 கொரி 15:26) எதிர் கொண்டு, அனுபவித்தார். ஆயினும் உயிர்ப்பில் வெற்றி வீரராக வெளிவந்தார். ஆகவே அவர் சாவை வென்றார். "இறுதி ஆதாம்" என்ற அளவில் முதல் ஆதாம் விட்டுச் சென்ற பாவம் என்னும் மரபுரிமைச் சொத்தை மாற்றி அமைத்தவர் (உரோ 6:23; 1 கொரி 15:22.45–49). அதன் விளைவாக "துஞ்சினோரின் முதற்கனியாகவும்" (15:20) "உயிர்தரும் ஆவியாகவும்" (15:45) ஆனார். இவ்வாறு மனுக்குலத்திற்கு முடிவில்லாத வாழ்வு கிறிஸ்துவிடமிருந்து வருகிறது (1 யோவா 5:11.20). அவர் சாவை அழித்து "சாவே அறியா வாழ்வை நற்செய்தியின் வழியாய் ஒளிரச் செய்தார்" (2 திமோ 1:10). கிறிஸ்துவில் உள்ள வாழ்வில் பங்குபெற மக்களை இறைவன் அழைக்கிறார். இறைவனால் குறிக்கப்பட்டவர்களுக்கு முடிவில்லாத வாழ்வு கிறிஸ்து வழியாக அளிக்கப்படும் கொடையாகும் (யோவா 17:2; அ.ப.13:48; 1 கொரி 15:23). நற்செய்தியாளர் யோவான் இதை உயிருள்ள நீரும் உணவும் என்று உணவு, பானம் என்ற உருவங்களில் எடுத்துக்கூறுகிறார். மேலும் இயேசுவின் வார்த்தைகளையும் (6:68; 10:28) கிறிஸ்துவைச் சுட்டும் பழைய ஏற்பாட்டையும் எடுத்துக்காட்டி இதைப் போதிக்கிறார்.

"ஒருவன் கிறிஸ்துவுக்குள் வாழ்தல் புதியதொரு படைப்பாகும்" (2 கொரி 5:17). இவ்வாறு, அழியாமை பழைய படைப்பின் உள்ளார்ந்த பண்பன்று. ஆனால் கிறிஸ்து உயிர்ப்பின் முதற்கனியாக இருப்பதால், கிறிஸ்தவனும் இறுதி ஆதாமாகிய ஆன்மீக வித்தாகிய அழிவில்லாத வித்திலிருந்து புதியதாய்ப் பிறக்கிறான் (1 பேதுரு 1:23). புதிய படைப்பின் வாழ்வு கிறிஸ்துவிலிருந்து வரும் வாழ்வாகும். அது இறைஇயல்பில் பங்குகொள்வதாகும் (2 பேதுரு 1:4; 1 கொரி 15): அழியாத உரிமைப்பேற்றில் உடன் பங்காளிகளாக கிறிஸ்துவோடு பங்குபெறுவதாகும் (1 பேதுரு 1:4; 1 கொரி 9:25; எபி 9:15); மண்ணைச்சாரந்தவனின் சாயலுக்குப் பதிலாக விண்ணைச் சார்ந்தவரின் சாயலாக மாற்றிக்கொள்வதாகும் (1 கொரி. 15:49). அது "அளவிடமுடியாத நித்திய மாட்சிமையை ஒப்புயர்வற்ற முறையில் விளைவிக்கிறது" (2 கொரி 4:17). ஆனால் கிறிஸ்து தமது சிலுவை மரணத்தின் வழியாகத்தான் புதுவாழ்வை அடைந்தார். அதனால் அந்த வாழ்வை பழைய வாழ்வுக்குச் சாவதின் வழியாகத்தான் பிறர் அடையமுடியும். விசுவாசிகள் "புத்துயிர் பெற்றவர்களாய் வாழும்படி ஞானஸ்நானத்தின் வழியாக கிறிஸ்துவோடு புதைக்கப்படவேண்டும்" (உரோ 6:4; கொலோ 2:12), புதிய வாழ்வை இயக்குபவரான பரிசுத்த ஆவி ஆன்மீக வாழ்வை முதலில் உள் மனதினில் நாடுகிறார். புதுப்படைப்பு உள்ளிலிருந்து வளர்கிறது: நாளுக்கு நாள் புதுப்பிக்கப்படுகிறது (2 கொரி 4:16; எபே 3:16). இதனால், சாவு, உடலின் மேல் இன்னும் ஆட்சி செய்தாலும், கிறிஸ்து இயேசுவில் வெளிப்பட்ட இறை அன்பிலிருந்து மனுக்குலத்தைப் பிரிக்க முடியாது (உரோ 8:39).

முடிவில்லாத வாழ்வு என்பது, இப்போது வாழ்வின் வெறும் பண்பு மட்டுமன்று. இந்த வாழ்வோடு தொடர்பில்லாத வருங்காலக் குறிக்கோள் மட்டுமன்று. "இப்போதுள்ளது" ஆனால் "இன்னும் இல்லை" என்று இறுதிக்கால இடுக்கண் நிலை, இத்தலைப்புப் பற்றிய புதிய ஏற்பாட்டு அறிவிப்புகளில் காணப்படும். ஆனால் அழுத்தத்தில் வேறுபாடு இருக்கலாம். பவுலின் போதனைப்படி மீட்கப்பட்டோர் இப்போது ஆவியானவரில் உயிருள்ளவர்களாக உள்ளனர். புதிய வாழ்வைக் கொண்டிருக்கின்றனர். வரவிருக்கும் வாழ்வில் உடல் அளவிலும் உயிருள்ளவர்களாக இருப்பர். இதுவே உயிர்ப்பாகும் (உரோ 8:9–11). முடிவில்லா வாழ்வின் கூறு, கிறிஸ்துவோடு புதைக்கப்படுவதில் (6:4), ஊன் சார்ந்தவற்றைத் துறத்தலில் (மத் 19:29; யோவா 12:25), இப்போது தொடங்குகிறது. ஆனால் ஊனுக்குச் செத்தவர்களாக இருப்பது இறைவனது திருவுளத்துக்கு உயிருள்ளவர்களாக இருத்தலாகும். ஆகவே கட்டளைகளைக் கடைப்பிடிப்பது வாழ்வதாகும் என்ற பழைய ஏற்பாட்டுக் கருத்தை (லேவி 18:5; உப 5:33) புதிய ஏற்பாடு எதிரொலிக்கிறது (மத் 19:16 இ; 25:46; யோவா 12:50; 1

திமோ 6:12). இத்தகைய வேலை கிறிஸ்துவில் நிகழ்கிறது அல்லது பவுல் கூறுவது போல், இது முடிவில்லா வாழ்வெனும் கனியை அறுவடை செய்யும் பொருட்டு "ஆவியில் விதைப்பதாகும்" (கலா 6:8; யோவா 4:36). இவ்வாறு யோவான் கிறிஸ்துவில் விசுவாசத்தை முடிவில்லாத வாழ்வோடு அடிக்கடி இணைத்துக் கூறுகிறார் (யோவா 3:15–16; 5:24; 17:3; 1 யோவா 5:13; 1 திமோ 1:16). முடிவில்லா வாழ்வு புனிதப்படுத்தப்படுதலின் முடிவாகும். இது ஏற்கெனவே பரிசுத்த ஆவியால் தொடங்கப்பட்டுவிட்டது (உரோ 6:22).

முடிவில்லா வாழ்வின் இருகூறுகளாகிய நிகழ்காலத்தையும் வருங்காலத்தையும் கிறிஸ்துவோடு பிரிக்கமுடியாதபடி இணைத்துக்கூறும் கூற்று யோவான் நற்செய்தியில் வருகிறது. "என் தசையைத் தின்று என் இரத்தத்தைக் குடிப்பவன் (இப்போது) முடிவிலா வாழ்வைக் கொண்டுள்ளான். நானும் அவனைக் (வரவிருக்கும்) கடைசி நாளில் உயிர்ப்பிப்பேன்" (யோவா 6:54). முடிவில்லா வாழ்வு, விசுவாசியும் கிறிஸ்துவும் ஒருவர் மற்றவரில் வாழ்வதால், இப்போது வருகிறது (6:56–57). பவுல் அப்பம், இரசத்தைப்பற்றி பேசும்போது, இதையே கிறிஸ்துவின் உடலிலும் இரத்தத்திலும் பங்குகொள்ளுதல் அல்லது ஒன்றிப்பு கொள்ளுதல் என்று நற்கருணை நோக்கில் சொல்லுகிறார் (1 கொரி 6:16). இவ்வாறு ஆண்டவரது உணவுப்பந்தி, முடிவில்லாத வாழ்வின் "இப்போது" என்ற கூறை ஆன்மீக, உடல் அளவில் ஒருமுகப்படுத்தும் இடமாகுகிறது.

இத்தகைய ஆன்மீக வாழ்வு கிறிஸ்துவ அழியாமையின் மையம் என்றால் உயிர்ப்பு இல்லாமல் அது நிறைவற்றதாகும், முடியாததும்கூட (மாற் 12:27). இயேசுவின் குணமாக்கும் பணி, மீட்பின் இறுதி நிறைவின், உடலையும் ஆன்மாவையும் புதுப்பித்தலின், முன் சுவையாகக் கருதப்படலாம். ஆண்டவரின் இறுதி உணவு பற்றிய பருப்பொருள் தன்மை அதே நிறைவைச் சுட்டுகிறது. அதனால் தான் பவுல் உயிர்ப்போடு தொடர்புப்படுத்தி மட்டும் தான், அழியாமையைப் பற்றிப்பேசுகிறார்.

விசுவாசியில், இப்போது ஆவி பிரசன்னமாக இருப்பது, உடல் உயிர்ப்பு என்னும் இறுதி மேலுடை அணிய அச்சாரமாகும் (2 கொரி 5:5). பவுல் உயிர்ப்பு உடலைக் கிறிஸ்துவின் "மாட்சிமைக்குரிய உடலின்" சாயலாக்குகிறார் (பிலி 3:21; 2 கொரி 3:18). இந்த "ஆன்மீக உடல் (1 கொரி 15:44) பாவத்திற்கும் சாவுக்கும் அடிமைப்பட்டிருப்பதற்குப் பதிலாக பரிசுத்த ஆவியின் ஆற்றலால் உயிர்கொள்கிறது. அழிவுக்குரியதாய் விதைக்கப்படுவது, அழிவற்றதாய், மாட்சிகைக்குரியதாய், வலிமையுள்ளதாய், இறை ஆவிக்குரியதாய், சாகாமையுடையதாய், உயிர்த்தெழுப்பப்படும் (15:42–44.53). சாவு, விடப்படும் என்று சொல்வதைவிட வாழ்வில் ஆழ்ந்து கலந்துவிடும் (2 கொரி 5:4).

இவ்வாறு உண்மையான அழியாமை, ஆன்மாவைத்தடை செய்யும் உடல் சார்ந்த கீழ்த்தரப் பண்புகளிலிருந்து விடுவித்தலாகும். இதைவிட, வீழ்ச்சியுற்ற படைப்பு என்ற அளவில் மனுக்குலத்தின், ஆன்மீக, ஊன்சார்ந்த தன்மை இப்போது போதுமான மட்டும் அம்மணமாகவும் வெட்கத்திற்குரியதுமாக உள்ளது. இது மனிதர்கள் இன்னும் போதியமட்டும் உடல் பெறாதது போன்றதாகும். மனுக்குலம் நிறைவாகப் புனிதப்படுத்தப்படுமுன், மேலும் ஆடை அணிவிக்கப்பட வேண்டும் (2 கொரி 5:4). அழியாமை பற்றிய வாக்குறுதி, கிறிஸ்துவின் மகிமையில் பங்கெடுத்தல் வழியாக ஆன்மாவும் உடலும் புதுப்பிக்கப்பட நிறைவுடைமை பற்றிய வாக்குறுதியாகும்.

**அழைப்பு** (CALLING, VOCATION)

விவிலியத்தில் ஒருவரை மிகக் கவர்ந்திழுக்கும் பக்கங்களில் அமைந்துள்ளவை, அழைப்பினைக் கொண்ட காட்சிகள். எரிகின்ற புதர் (யாத் 3) மூலம் மோசேக்கு வரும் அழைப்பு; ஆலயத்தில் ஏசயாவிற்கு வரும் அழைப்பு (ஏசை 6); யாவே, இளம் எரேமியா இவர்களிடையே நடைபெறும் உரையாடல் (எரே 1) இவை அனைத்தும் இறைவனை அவரது மாட்சிமையிலும் மறையுண்மையிலும், மனிதனை அவனது உண்மை நிலையிலும் அவனது அச்சத்திலும் ஈகைத் தன்மையிலும், எதிர்த்து மறுக்கும் அல்லது இணங்கிப் பதிலிறுக்கும்

சக்தியிலும் காட்டுகின்றன. மறை நூலில் இறையழைப்பின் விவரங்கள் எத்துணை யளவு முக்கியத்துவம் பெற்றவை என்றால் இறைவெளிப்பாட்டிலும் மனித மீட்பிலும் இறைவன் விடுக்கும் அழைப்பு தனித்துவ மும் முக்கியத்துவமும் வாய்ந்த ஒரு தருணமாக அமைந்துள்ளது.

1. பழைய ஏற்பாட்டில் அழைப்பும் திருப்பணியும்

தனிப்பட்ட நபர்கள் குறிப்பிட்ட அலுவல்களுக்கு அழைக்கப்படுகின்றனர். இவ்வாறு மோசே இஸ்ராயேல் மக்களை எகிப்திலிருந்து நடத்திச்செல்லவும் (யாத். *3:4–10)* சாமுவேல் அவருடைய ஊழிய னாக இருக்கவும் *(1 சாமு 3:1–14)* இறை வாக்கினர்கள் அவருடைய செய்தியை மக்களுக்கு எடுத்துக்கூறவும் (காண்க: ஆமோ *7:15*; எரே *1:4–19)* இறைவனால் அழைக்கப்படுகின்றனர். அதேபோல் ஒய்வு நாளை அனுசரிக்கவும் (லேவி *23:2–3)* பாஸ்கு விழாவின் இறுதியிலும் (எண் *28:25)* வாரங்களின் விழாவிலும் *(28:26)* பரி சுத்த கூட்டமாகக் கூடும்படி இஸ்ராயேல் இறைவனால் அழைக்கப்படுகிறது. ஏசயா நூல் இறைவனது அழைப்பின் விளை வாக இஸ்ராயேல் இறைவனது தேர்ந் தெடுக்கப்பட்ட மக்களாகச் சிறப்பிடம் பெறுவதை விவரிக்கிறது. இஸ்ராயேலை உலகில் கடைசிப் பகுதிகளிலிருந்து (ஏச *41:9*). அறத்தை நிலைநாட்ட *(42:9)* பெய ரிட்டு *(43:1)* இறைவன் அழைக்க மட்டும் செய்யவில்லை, இறைவனால் அழைக்கப் பட்டு ஆசீர்வதிக்கப்பட்ட ஆபிரகாமைத் தங்கள் குல முதியவராக நோக்கச் சமய காரியங்களில் உறுதியற்றவர்களை உற்சா கப்படுத்துகிறார் *(51:2*; காண்க ஆதி *12:1–2)*. உண்மையில் இறைவனால் பெயரிட்டு, அழைக்கப்பட்டு *(43:1)* படைக்கப்படும் வரை இஸ்ராயேல் நிறுவப்படவில்லை.

இவ்வாறு பழைய ஏற்பாட்டில் உள்ள ஒவ்வொரு அழைப்பும் ஒரு தூது கலந்த திருப்பணியை உள்ளடக்கியது. எவ்வெப் போது யாரேனும் ஒரு மனிதனை இறை வன் ஆணையிட்டு அழைக்கின்றாரோ அப்போதெல்லாம் அம்மனிதனை அவர் அனுப்புகிறார். ஆபிரகாமிடமும் (ஆதி *12:1)*, மோசேயிடமும் (யாத் *3:10.16)*, ஆமோ சிடமும் (ஆமோ *7:15)*, ஏசயாவிடமும் (ஏச *6:9)* எரேமியாவிடமும் (எரே *1:7)*, எசக்கி யேலிடமும் (எச *3:1.4)* ஒரே வகையான ஆணையையே தருகின்றார். தமது மீட்பின் திட்டத்திலும் தம் மக்களின் நிர்ணயிக்கப் பட்ட முடிவைப் பொறுத்த அளவிலும் ஒரு மனிதனை இறைவன் தெரிந்தெடுத்து குறிப்பிட்ட ஒரு பணிக்காக நிர்ணயித்தி ருப்பதைத் தெளிவுபடுத்தி அவனை இறைவன் ஆணையிட்டு நேரிடையாகக் கூப்பிடுவதே அழைப்பு ஆகும். எனவே இறைவன் தெரிந்தெடுப்பது ஓர் அழைப் பின் அடிப்படையாக அமைகிறது. அழைப் பின் நோக்கம் இறைவனின் திருவுளத்தை முழுமையுறச் செய்துமுடிப்பது. எனினும், அழைப்பு எனும் கருத்து ஒருவரின் அற வழிப்பட்ட பொறுப்புணர்ச்சியின் மிக ஆழ்ந்த நிலையை நோக்கித் தனிப்பட்ட முறையில் சவால் விடுக்கும் ஒரு தொனி யைத் தந்து, தெரிந்தெடுத்தல், திருப்பணி என்னும் கருத்துக்களைத் தெளிவுபடுத்தி அவற்றின் பொருளை நிறைவு செய்கிறது. இந்த அழைப்பு வெளிப்புற அமைப்பில் மட்டு மன்றி உள்ளுயிரின் மிக ஆழ்ந்த பகுதியையும் தொட்டு மனிதனின் வாழ்க் கை நிலையை மாறுபடச்செய்து அவனை வேறொரு மனிதனாக மாற்றுகிறது.

இறை அழைப்பில் உள்ள தனிப்பட்ட இந்த நோக்கு விவிலியத்தின் மூலச்சொற் றொடர்களாலே நிரூபணமாகின்றது. இறைவன் தாம் அழைக்கும் மனிதனின் பெயரை உச்சரிக்கின்றார் (ஆதி *15:1*; *22:1*; யாத் *3:4*; எரே *1:11*; ஆமோ *7:8*; *8:2)*. ஒரு மனிதனை ஆட்கொண்டு அவனது வாழ்க் கையை மாறுபடச் செய்கின்ற உண்மையை நல்லவிதமாக எடுத்துக்காட்டும் வகை யில், இறைவன் தெரிந்தெடுக்கப்படும் நபருக்கு புதியதொரு பெயர் தருகின்றார் (ஆதி *17:1*; *32:29*; காண்க ஏச *62:2)*. அத்து டன், தாம் விடுத்த விண்ணப்பத்திற்கு விசு வாசத்திலும், கீழ்ப்படிதலிலும் இயைந்த, மனமுவந்த ஒப்புதலை எதிர் நோக்கு கின்றார். சிலவேளைகளில் நொடிப் பொழுதிலே ஒப்புதல் கிடைக்கிறது (ஆதி *12:4*; ஏச *6:8)*. ஆனால் இந்த அழைப்பு அழைக்கப்பட்ட நபரை மற்ற மனிதரிட மிருந்து வேறுபடுத்தித் தனது நண்பர்கள்

மத்தியில் அவரை விசித்திரமானதோர் கோலத்திற்கு மாற்றிவிடுவதால் (ஆதி 12:1; ஏச 8:11; எரே 12:6; 15:10; 16:1–9; 1 அர 19:4) அந்த மனிதன் அச்சத்தாலே பீடிக்கப் பட்டு அழைப்பைக் கண்டு ஒதுங்க முயலும் நிலையே அடிக்கடி நடப்பதாகும் (யாத் 4:10 தொ; எரே 1:6; 20:7).

இறைவனது கருவியாகத் தேர்ந் தெடுக்கப்பட்ட ஒவ்வொருவரும் அவரது அழைப்பை பெறுவதில்லை. எடுத்துக் காட்டாக, அரசர்கள் ஆண்டவரின் அபிடேகம் பெற்றவர்கள்தாம். ஆனால், அவர்கள் இறைவனிடமிருந்து எந்தவித அழைப்பையும் பெறவில்லை. சவுலிற்கும் (1 சாமு 10:1), தாவீதுக்கும் (16:12) செய்தி யறிவிப்பதே சாமுவேல்தான். மற்றக் குருக்களும் பிறப்பின் காரணமாக அன்றி தமது குருத்துவ நிலையை இறை அழைப்பால் பெறுவதில்லை. எபி 5:4–ல் சொல்லப்பட்டபடி ஆரோன் "கடவுளால் அழைக்கப்பட்டிருந்தாலும்", ஆரோனுக்கு அழைப்பு மோசே வழியாக வருகின்றது. அதே வேளை, ஆரோன் அழைப்பை உள்ளார்ந்து ஏற்றுக் கொண்டதாக நூலில் ஒன்றும் சொல்லப்படவில்லை. எபிரேய ருக்கு எழுதப்பட்ட திருமுகத்திலும் விளக்கம் தரும் சொற்றொடர் ஒன்றும் இல்லை என்றாலும் "நீரே என் மகன்... மெல்க்கிசதேக்கின் முறைமைப்படி... குரு வாயிருக்கிறீர்" (எபி 5:5 தொ) என்ற இறை வனின் சொற்களால் குறிப்பிடப் பெறும் குருத்துவத்தைவிட லேவியர் குருத்துவம் தாழ்ந்தது என்பதை ஆரோனின் மறை முகமான நிலைகொண்ட அழைப்பே ஒரு குறிப்பென நின்று காட்டுவது திருமுகத் தின் தொனிக்கு முரண்பட்டது அன்று.

2. இஸ்ராயேலின் அழைப்பும் கிறிஸ்து இயேசுவின் அழைப்பும்

இஸ்ராயேலுக்கு அழைப்பு ஒன்று கிடைத்ததா என்ற வினாவிற்கு இப் பொழுது நாம் கொள்ளும் பொருளில் பதில் தெளிவாகக் கிடைக்கிறது. விவிலி யத்தின் மிகச்சரியான மொழியில் சொல்ல விழைந்தால் மக்கள் தனிப்பட்ட ஒரு நபரைப்போல நடத்தப்படவில்லை யென்றாலும் அல்லது அவர்கள் தனி மனிதன் கொள்ளும் எதிர்ப்புணர்ச்சியை அனுபவிக்காவிட்டாலும் இறைவன் தாம் அழைக்கின்றவர்களிடம் எப்படி நடந்து கொள்கிறாரோ அப்படியே இஸ்ராயேலி டமும் நடந்து கொள்கிறார். உறுதியாக வே இறைவன் தமது சொந்தப் பிரதிநிதி கள் மூலம் இஸ்ராயேலிடம் பேசுகின்றார்; அவர்களுள் மோசே சிறப்பான முறையில் ஓர் இணைப்பாளர். சம்பந்தப்பட்டவை களில் இயல்பால் வலிந்து புகுத்தப்பட்ட மேற்கண்டவொரு வேறுபாட்டைத் தவிர, அழைப்பு ஒன்றுக்குத் தேவையான குணங்களத்தனையும் இஸ்ராயேல் கொண் டுள்ளது. உடன்படிக்கை முதன்மையாக இறைவனிடமிருந்து வரும் ஓர் அழைப்பா கும். அது இதயத்திற்கு நேர்முகமாகத் தரப்பட்ட ஒரு வார்த்தை "இஸ்ராயேலை, கேள்" (உப 4:1; 5:1; 6:4; 9:1; சங் 50:7; ஏச 1:10; 7:13; எரே 2:4; காண்க ஓசே 2:16; 4:1). என்னும் அழைப்பின் பொருளை முற்றி லும் கொள்பவர்கள் சட்டமும் இறைவாக் கினர்களும். இந்தச் சொற்கள் இறைவ னையே உறுதிச் சான்றாகக் கொண்ட ஒரு தனிவகையான வாழ்க்கையில் மக்களை உறுதிப்படுத்துகின்றன (யாத் 19:4 தொ; உப 7:6). எனவே தான் தம்மைத் தவிர வேறு எதன் மேலும் மக்கள் சார்ந்தி ருப்பதை இறைவன் தடை செய்கிறார் (ஏச 7:4–9; காண்க: எரே 2:11 தொ). இஸ் ராயேலுக்கு இறைவனிடமிருந்து வரும் அழைப்பு தன்னுள்ளத்தையும் (யாத் 19:8; யோசு 24:24) தனது முழு வாழ்க்கையை யும் அர்ப்பணிக்கவல்ல ஒரு பதிலை எதிர் நோக்கி நிற்கிறது. இப்பண்புகள் அனைத் தும் அழைப்புக்குரியவையாகும்.

ஒரு கோணத்தில், கிறிஸ்து இயேசு வின் ஆளுமையில் அழைப்பின் குணங்கள் முழுமையுறக்காணக்கிடக்கின்றன என்பது உண்மை. தந்தையின் குரலுக்கு என்றும் செவி கொடுத்துக் கீழ்ப்படியும் மிகச் சிறந்த இறைவனின் ஊழியன் அவர். ஆனால் புதிய ஏற்பாடு கிறிஸ்துவைப் பற்றிப் பேசும்போது அழைப்பு ஒன்றுக் குரிய கலைச்சொற்களைப் பயன்படுத்துவ தில்லை. இயேசு தந்தையிடமிருந்து தாம் பெற்ற திருப்பணியைப்பற்றி இடையறாது பேசினாலும் இறைவன் அவருக்கு அழைப்பு விடுத்ததாக ஓரிடத்திலும்

காணப்படவில்லை. இது கவனிக்கத்தக்க ஒருநீக்கம் ஆகும். இறைவனின் அழைப்பு ஒரு மனிதனைச் சாதாரணப் பணி செய்யும் நேரத்தில் தழுவுகிறது; அவனது நண்பர்கள் மத்தியிலே அவனை வழி மறிக்கிறது; நாம் உனக்குக் காட்டவிருக்கிற நாட்டிற்கு"ச் (ஆதி 12:1) சென்று இறைவனுக்கு மட்டுமே தெரிந்த ஒரு அலுவலில் ஈடுபடும்படி செய்கிறது. எனவே அழைப்பு உள்ளுயிரில் மாற்றத்தை முன்னரே எதிர்பார்க்கிறது. கிறிஸ்து இயேசுவின் வாழ்வில் அவருடைய திருமுழுக்குக்கு ஒரு பொருளுண்டு; ஒன்று, "நீரே என் அன்பார்ந்த மகன்" (மாற் 1:11) என்ற அரசுப்பட்டம் சூட்டும் நிகழ்ச்சி, மற்றது. தாம் முழுமையாகத் திருப்தி கொள்ளும் ஊழியனை இறைவன் அறிமுகப்படுத்துவது. ஆனால் இந்த இடத்திலோ நற்செய்தியில் வேறு எந்த இடத்திலோ அழைப்பிற்கேயுரிய காட்சிகளைக் காட்டும் குறிப்பு ஒன்றுகூட இல்லை. நற்செய்தி முழுவதிலும் இயேசு தமது தொடக்கத்தையும் முடிவு நிலையையும் பற்றிச் சிறப்பான முறையில் உணர்ந்து நிற்கிறார் (யோவா 8:14). யாருமே பின்பற்றி வரமுடியாத ஒரு நிலைக்கு அவர் செல்கிறார்; மேலும் அவரது முடிவுநிலை சிறப்பாகத் தனிப்பட்டதும் ஒப்பற்றதும் ஆகும். அது அழைப்பினால் ஏற்படுவது அன்று. மாறாக அவரது உள்ளுயிரினின்று தொடங்குவதே.

*3. சீடர்களின் அழைப்பும் கிறிஸ்துவர்களின் அழைப்பும்*

இயேசுவுக்கு அழைப்பு விடுக்கும் இறைவனின் குரல் எங்கேயும் காணப்படவில்லை. ஆனால் இயேசுவோ தன்னைப் பின்செல்லும்படி பற்பல அழைப்புக்களை விடுக்கின்றார். அழைப்பு ஒன்றின் மூலமே இயேசு பன்னிரண்டு பேரைத் தன்னருகே கொள்கின்றார் (மாற் 3:13). இதே வகையான ஓர் அழைப்பு மற்றவர்களுக்குக் கிடைக்கிறது (மாற் 10:21; லூக் 9:59 தொ.62). அவரது போதனை அனைத்தும் அழைப்பின் கருத்தைச் சுற்றியே எழுகின்றது. "என்னைப் பின்செல்ல விரும்புகிறவன் தன்னையே மறுத்து..." (மத் 16:24; யோவா 7:17) என்று அவர் மட்டுமே அறிந்த புதிய பாதை ஒன்றின் வழியாக அவரைப் பின்தொடர அந்த அழைப்பு வருகிறது. "அழைக்கப்பட்டவர் பலராயிருக்கையில் தெரிந்து கொள்ளப்பட்டவர்களோ சிலரே". ஏனெனில் அரசுக்கு வரவேற்கும் அழைப்பு தனிப்பட்ட அழைப்பாகும்; அதற்குச் சிலர் செவி கொடாது இருந்து விடுகின்றனர்.

கிறிஸ்துவன் என்பவன் அழைப்புப் பெற்ற ஒருவன் என்பதை இளம் திருச்சபை தொடக்கத்திலே கண்டுணர்ந்தது. பேதுரு எருசலேமில் இஸ்ராயேலுக்குச் செய்த முதற்சொற்பொழிவு இறைவாக்கினர்களால் விடுக்கப்பெற்ற அழைப்பைப் போன்றது. பேதுரு தனிபட்டவொரு விருப்பத்தைத் தூண்டிவிட முயல்கின்றார்; "நெறிகெட்ட இந்தத் தலைமுறையிலிருந்து நீங்கி, உங்களை மீட்டுக் கொள்ளுங்கள்" (அ.ப. 2:40). பவுலைப் பொறுத்தவரையில் "அழைப்புப் பெற்ற புனிதர்"களாய் உரோமை, கொரிந்தியக் கிறிஸ்துவர்களுக்கும் "அழைப்புப் பெற்ற அப்போஸ்தலர்" ஆகிய தனக்கும் இடையே உண்மையான ஒப்புமையைக் காண்கின்றார் (உரோ 1:1–7; 1 கொரி 1:1 தொ....). கொரிந்தியர்கள் எப்படி இருக்க வேண்டுமோ அப்படி அவர்களை மாற்ற, பவுல் "சகோதரர்களே, நீங்கள் அழைக்கப்பட்ட போது என்ன நிகழ்ந்தது என்பதை எண்ணிப்பாருங்கள். மனிதர் மதிப்பின் படி உங்களுள் ஞானிகள் எத்தனைபேர்?" (1 கொரி 1:26) என்று சொல்லி அவர்களுடைய அழைப்பை நினைவூட்டுகிறார். அந்த அழைப்பே கொரிந்திய சமூகத்திற்கு அது கொண்ட மதிப்பினை வழங்குகிறது. இறைவன் விசுவாசிகளைக் கிறிஸ்துவோடு நட்புறவு கொள்ளவும் (1 கொரி 1:9) அமைதியாக வாழவும் (7:15), கிறிஸ்துவில் ஒரே நம்பிக்கையில் பங்கு கொள்ளவும் (எபே 4:4) முடிவில்லா வாழ்வுக்கும் (1 திமோ 6:12) அழைக்கிறார். விசுவாசிகள் ஒவ்வொரு நாளும் தங்கள் கடமைக்கு அழைக்கப்படுகின்றனர். அவர்கள் ஒவ்வொரு நாளும் அதற்குப் பதில் அளிக்க வேண்டும் (பிலி 3:13–14). இக்காரணத்திற்காக அவர்கள் "பெற்றுக்கொண்ட அழைப்புக்கேற்ற வாழ்க்கை நடத்த" உந்தப்படுகின்றனர் (எபே 4:1). கடந்து செல்லும் இயல்பைக் கொண்ட இவ்வுலகில் ஒழுக்

கத்தின் விதியாக, "ஒருவன் எந்த நிலையில் அழைக்கப்பட்டானோ அந்த நிலையிலேயே அவன் கடவுள் திருமுன் நிலைத்திருக்கட்டும்" (1 கொரி 7:24) என்று கூறிப் பவுல் ஒவ்வொருவரையும் தூண்டுகிறார். கிறிஸ்துவின் வாழ்க்கை ஓர் அழைப்பு. ஏனெனில் அது ஆவியின் வழிப்பட்ட வாழ்க்கை. அதேவேளை ஆவியோ முழுவதும் புதியதோர் உலகத்தின் ஊற்று. தந்தையின் வார்த்தைக்கு நாம் பதில் அளிக்கவும், மகன்களுக்குரிய முறையில் நடக்க நம்மை எழுச்சியூட்டவும் "நம் ஆவியோடு அதே ஆவி இணைந்திருக்கிறது" (உரோ 8:16).

கிறிஸ்தவனின் அழைத்தல் ஆவியால் பிறந்திருப்பதாலும் கிறிஸ்துவின் முழு உடலுக்கும் ஆவியே வாழ்வின் ஒரே ஊற்றாக இருப்பதாலும் ஒன்றென இருக்கும் கிறிஸ்துவ அழைத்தலின் மையத்தில் "பலவகைக் கொடைகள்.... திருப்பணிகள் ........ஆற்றல்மிக்க செயல்கள்" உள்ளன. இருந்தபோதிலும், பல திறப்பட்ட இந்த அருட்கொடைகளில் இறுதியில் ஒருடலே, ஒராவியே இருக்கின்றது (1 கொரி 12:4–13), அழைப்புப் பெற்றவர்களைக் கொண்ட சமூகமான திருச்சபை தானும் "அழைத்தல் பெற்றதும்" "தேர்ந்தெடுக்கப்பட்டதும்" ஆகும் (2 யோவா 1). எனவே, திருச்சபையில் இறைவனின் அழைப்பைப் கேட்டுத் தன் அழைப்பிற்கேற்ப பதில் கூறிடும் அனைத்துக் கிறிஸ்தவர்களும் மணவாளனின் குரல்கேட்டு "ஆண்டவராகிய இயேசுவே வாரும்" (திருவெளி. 22:20) என்று பதில் உரைக்கும் முழுத் திருச்சபையின் அழைப்பிற்கே உண்மையில் பதில் கூறுகின்றார்கள். புனிதர்களுக்குத் தகுதியான பரிசுத்த வாழ்க்கை முறையால் இறை அழைப்புக்குப் பதில் அளிக்கின்றனர் (உரோ 1:7; 1 கொரி 1:2; காண்க 2 திமோ 1:9).

**அறிகுறி** (SIGN)

இன்னொருவருடைய எண்ணத்தையோ, விருப்பத்தையோ அறிந்து கொள்ள உதவுவது குறியாகும். அவ்வாறு ஒரு பொருளின் இருப்பை, அதன் உண்மையைத் தெரிந்து கொள்ள உதவுவதும் குறியாகும். இத்தகைய குறிக்கும் குறியால் தெரிந்து கொள்வதற்கும் உள்ள தொடர்பு இயல்பானதாக இருக்கலாம் அல்லது மக்கள் தங்களுக்குள் ஏற்பாடு செய்து கொண்டதாய் இருக்கலாம். மக்கள் தங்களுக்குள் உறவாடுவதில் பயன்படுத்திய பல்வேறு குறிகளையும் வேதாகமத்தில் காணலாம். போர்வீரர்கள் பயன்படுத்திய குறிகள் (யோசு 2:18; நீதி 20:38; ஏச 13:2; 18:3), எக்காளத்தைக் கொண்டு எழுப்பிய வழிபாட்டுக்குறிகள் (1 மக் 4:40), ஒருவரை அடையாளம் கண்டுகொள்ள முன்பே ஒப்புக்கொள்ளப்பட்டகுறி (தோபி. 5:2), அறிவிப்புக்குறி (எச 39:15), தனிப்பட்ட ஒருவரின் கையெழுத்து (2 தெச 3:17) அல்லது நற்பண்பின் அடையாளம் (ஞான 5:11.13) முதலியன.

மக்களின் மீட்புக்காக இறைவனும் அவர்களின் இயல்புக்கு ஏற்ற குறிகளைப் பயன்படுத்துகிறார். அக்குறிகளை அடையாள அதிசயமென்றும் அருங்குறிகளென்றும் அழைக்கிறோம். ஏனெனில் முதன் முதலாக இறைவன் தம் மீட்புச் செயலில் அனைத்தும் கடந்தவராகக் காணப்படுகிறார். இவ்வாறு தம் ஆற்றலையும் அன்பையும் குறிப்பாய் உணர்த்துகிறார். எனவே புதுமைகள் விரும்பிய பயன் அளித்துத் தனிச் சிறப்புடன் விளங்குகின்றன. அவை மீட்பு வரலாற்றில் இறைவன் காட்டிய அருங்குறிகளில் தனிச்சிறப்பிடம் பெறுகின்றன. இவைகளைப் பற்றித்தான் நாம் இங்குப் பார்க்கப்போகிறோம். ஆயினும் புதுமைகள் மட்டும் இறைவன் காட்டும் குறிகள் அல்ல. ஏனெனில் இறுதியாக இயேசுவே மாபெரும் குறியாக இருந்து தந்தையின் அன்புக்குத் தலைசிறந்த சான்றாய் விளங்குவார்.

I பழைய ஏற்பாடு

கடந்த காலக் குறிகளின் நினைவாலும் நிகழ்காலக் குறிகளின் கொடையாலும் இறைவன் தம் மக்களின் விசுவாசத்திற்கு உயிரூட்டுகின்றார். வரவிருக்கும் குறிகளின் அறிவிப்பால் அவர்களிடம் நம்பிக்கையை உருவாக்குகின்றார்.

1. உடல் அடையாளம், சில சமயங்களில் முன் குறிப்பவை :-

ஆதி 1:14–இல் வானத்தின் கோள்கள் அடையாளங்களாக பயன்பட வேண்டு

மென்று சொல்லப்பட்டுள்ளது. எ.கா. திசைகளையும், நாட்களையும், தட்பவெப்ப நிலையையும் சுட்டிக்காட்டுபவைகளாக உள்ளன. எரே 10:2–இல் "வானத்தின் அடையாளங்கள்" அசாதாரணமான வான கம் சம்பந்தமான காட்சியை முன் வைக் கின்றன. சங் 65:8 'உம் அருங்குறிகள்" என்பது கடவுளுடைய படைப்பாற்றல் செயல்களையும், இயற்கையில் அவருடைய வெளிப்பாடுகளையும் காட்டுவதாக தெரி விக்கின்றது. யோசு 4:6; 39:15 குறியானது காலநேரம் அல்லது அடுக்கப்பட்ட கற் களைக் குறிக்கும். சங் 74:4– இங்குப் போர் குறிகளைக் கொண்டிருக்கலாம். யோ வேல் 2:30 "இன்னும் விண்ணிலும், மண்ணிலும், அற்புதங்களை காட்டு வோம்" என்பது ஆண்டவரது நாளின் வருகையைக் குறிக்கிறது.

2. ஓர் அடையாளம் காட்டும் அறிகுறி :-

எபிரேயர்களின் வீட்டின் மீதுள்ள இரத்தம் அது அவர்களுடைய இல்லம் என்பதை அடையாளம் காட்டியது (யாத் 12:13)

3. ஓர் அறிவிப்பு :-

வானவில், நோவாவுடன் கடவுள் செய்து கொண்ட உடன்படிக்கையை அறிவிக்கின்றது. அதேபோல் எல்லா உலகத்தின் மீதும் (ஆதி 9:12–13.17); விருத்த சேதனம் அபிரகாமுடன் செய்து கொண்ட உடன்படிக்கையைச் சுட்டிக் காட்டு கின்றது (ஆதி 17:11).

4. ஓர் எச்சரிக்கை:-

பலிப்பீடத்தின் மீதுள்ள தட்டையான தகடானது பாவிகளின் மரணத்தால் செய்யப்பட்டது என்ற இடைவிடாத எச்ச ரிக்கையாக இஸ்ராயேலுக்கு இருக்கட்டும் (எண். 16:38), அப்போது கோராக்கின் இறப்பும், அவருடைய துணைவர்களின் இறப்பும், அதே நோக்கத்திற்காகப் பயன் படுத்தப்பட வேண்டும் (எண். 26:10). ஆண்டவருடைய பேழைக்கு முன்னால் வைக்கப்பட்டுள்ள ஆரோனின் கோல், கலகம் உண்டாக்கக் கூடியவர்களைப் பய முறுத்தக்கூடியவையாக இருக்கும்படியாக வைக்கப்பட்டுள்ளது. எச 4:3–ல் செங் கல்லின் மேல் வரையப்பட்ட முற்றுகை யிடப்பட்ட எருசலேமின் படம், என்ன விரைவாக நடக்கவேண்டும் என்பதை எச்சரிப்பதற்காக வைக்கப்பட்டுள்ளது. எச 12:1–16; 24:15–27–இல் உள்ள அடை யாள செயல்கள், மேற்குறிப்பிட்ட பொரு ளில் குறிகளாகும்.

5. ஓர் உறுதிமொழி அல்லது நிரூபணம் :-

யோசு 2:12–ல் இராகாபு, அவளும் அவளுடைய குடும்பமும் பாதுகாக்கப் படும் என்பதற்கு "ஒரு நம்பத் தகுந்த அடையாளம்" கொடுக்குமாறு கேட்கின் றாள். கடவுளுடைய வார்த்தையும், இறைவாக்கினர்களுடைய வார்த்தையும் உண்மை என்பதைக் காட்டும் பொருளி லும் குறி பயன்பட்டுள்ளது (யாத் 3:12; 1 சாமு 10:7.9; 14:10; 1 அர 13:3.5; 2 அர 19:29; ஏச 37:30; 20:8–9; 2 நாள் 32:24.31; ஏச 38:7; 7:11.14; 38:22; எரே 44:29). சங் 86:17இல் அடையாளம் என்பது இறைவன் தம் தயவைக் காட்டுவதைக் குறிக்கிறது.

6. ஒரு ஞாபகமூட்டும் அறிகுறி :-

யாத். 13:9, பாஸ்கா என்பது மக்களு டைய முன்னிலையில் எப்போது அவர்கள் எகிப்திலிருந்து விடுதலை பெற்று வந்ததை குறிக்கின்றது. அதேபோல் வச 16–இஸ்ராயேலில் தலைச்சன் பிள்ளை களின் பலி அல்லது மீட்பு நினைவுகூரும் நோக்கைக் கொண்டுள்ளது. யாத் 31:17– இல் குறிப்பிடப்பட்டுள்ள ஒய்வு நாள் சட்டங்கள், கடவுளுடைய படைப்பு வேலை யையும், அவருடைய ஒய்வையும் நினை வூட்டுவதாகும் (எச 20:12.20).

உப. 6:8–இல் கடவுளுடைய வார்த்தை களை ஒருபோதும் மறவாதிருக்க, அவற்றை கையில் அடையாளம் போல் கட்டவேண்டும். இப்பகுதியும் 11:18–20–உம் சேர்ந்து சீட்டுப் பட்டயங்கள் அணிவதற்கு அடிப்படையாகின.

7. முன் அறிகுறி அல்லது படிப்பினை:–

சங். 71:7–சங்கீத ஆசிரியர் தன்னுடைய காலத்து மக்களுக்குத் தான் ஒரு முன் அறிகுறியாக உள்ளதாகக் கூறுகிறார். ஏசயாவும் இவ்வாறே தானும் தன்னு டைய மக்களுக்கும் இருப்பதாக உரிமை கோருகிறார் (ஏச 8:18; 20:3). இந்த உருவம்

சிலைவழிபாடு செய்கிறவரைப் பற்றியும் பயன்படுத்தப்பட்டுள்ளது (எச 14:8).

8. ஒரு சகுணம்:-

குறி சொல்பவர்களின் சகுணங்களைப் பற்றி ஏச 44:25-ல் குறிப்பிடப்பட்டுள்ளது. ஒரு சிலர் சங் 74:9-ல் வரும் அறிகுறிகள் குருத்துவ சகுணங்களைக் குறிப்பதாகக் கருதுவர். 'அடையாள மனிதர்கள்' என்ற சொற்றொடர் (செக் 3:8) "நல்ல சகுண முடையவர்கள்" என்று கருதப்படுகின்றது.

9. ஒரு சாட்சி அல்லது சான்று:-

ஏச 19:19-இல் எகிப்தில் உள்ள ஒரு பீடம் ஆண்டவருக்கு ஒரு அயலான் நாட்டிலே சான்றாக உள்ளது. ஏச 55:13 -இல் உள்ள 'முடிவில்லா அடையா ளம்' எதிர்காலத்தின் புனிதம் ஆண்டவ ருடைய வார்த்தைக்கும், நோக்கத்திற்கும் சாட்சி யாக இருக்கும் என்பதை உணர்த்துகிறது (காண் 66:19). சான்று என்ற பொருளில் யோபு 21:29-ல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

10. கடந்த கால அறிகுறிகள்:-

மோசே நிகழ்த்திய அதிசயங்களும் (யாத் 3:20; 15:11;34:10; நீதி 6:13; சங் 77:12. 15;78: 11 தொ. 32: எரே 21:2; நெக 9:17) வாக்களிக் கப்பட்ட நாடு உரிமையாகும் வரை (எ.கா. சங் 78:4; 105:2.5), யோசுவாவின் வரலாற் றில் (யோசு 3:5) நிகழ்ந்த புதுமைகளும் இறைவனின் அரும்பெருங்குறிகளென பழைய ஏற்பாடு கருதுகின்றது (யாத் 4:9. 17.28.40; 10:1 தொ; எண் 14:11. 22; யோசு 24:17); எகிப்தில் நிகழ்ந்த புதுமைகளாலும் (யாத் 11:9) அதைத் தொடர்ந்த நிகழ்ச்சி களாலும் (சங் 105:5) இறைவன் தம்முடைய தூதர்களின் பணியை இஸ்ராயேலரி டையே உறுதிப்படுத்தினதுமன்றி (யாத் 4:1-9.29.31;14:31), தம்மக்களை விடுவிப்ப தில் தம் வலிமையையும் அன்பையும் சிறந்த முறையில் வெளிப்படுத்துகின்றார் (சங் 86:10; 106:7;107:8).

உபாகமும் (4:34; 6:22; 7:19....) அதைத் தொடர்ந்து மற்ற ஆகமங்களும் (யாத் 7:3; சங் 78:43; 105:27;135:9; எரே 32:20 தொ; நெக 9:10; எஸ் 10:3; பாரூ 2:11; ஞான 10:16) "அருங் குறிகளும் அதிசயங்களும்" என்ற இரட் டைக்கிளவியை அடிக்கடி பயன்படுத்து கின்றன. இவற்றின் வாசகர்கள் இந் நிகழ்ச்சிகளைக் கண்டவர் அல்லர். ஆனால் தொடக்க காலத்தில் நிகழ்ந்த குறி-நிகழ்ச்சிகள் இஸ்ராயேலின் நினை வில் நீங்காதிருக்கவேண்டும். ஏனெனில் இறைவனோடு செய்த உடன்படிக்கை யைப் பிரமாணிக்கமாய்க் காப்பாற்ற அவற்றை அடிக்கடி நினைவுகூர்தல் வேண்டும் (உப 4:9; 8:14 தொ; சங் 105:5).

11 நிகழ்காலக் குறிகள்:-

அ. இஸ்ராயேலின் திருவிழாக்கள் யாவேயின் அதிசயங்களை நினைவு கூர்கின்றன (சங் 114:4). இவ்விழாக்களின் வழிபாட்டு முறைகள், குறிப்பாக சில சடங்குகளும் (யாத் 13:9.16; காண் உப் 6:8; 11:18) சில பொருட்களும் (எண் 17:3.25; காண்க யோசு 4:6), இஸ்ராயேலின் ஞாபகத்தைப் பசுமையாகக் காத்து அதன் விசுவாசத்தை வளர்க்கின்றன.

ஆ. விசுவாசத்தின் நினைவு மோசே, அவர் முன் ஆபிரகாமின் தேர்வு, அதற் கும் முன் உலகப் படைப்பு வரை எட்டு கின்றது. ஓய்வுநாள் (யாத் 31:16 தொ; எச. 20:12), வானவில் (ஆதி 9:8-17), விருத்த சேதனம் (17:9-13) ஆகியவை இறைவன் முறையே ஆதாம், நோவா, ஆபிரகாம் இவர்களோடு செய்த உடன்படிக்கை களை ஞாபகமூட்டுகின்றன. இவற்றையே இறைவனின் நிரந்தரமான குறிகளாக குருக்கள் மரபு கருதுகின்றது.

ஏனெனில் புறப்பாட்டை ஒட்டிய அதி சயங்களை நிகழ்த்திய அதே இறைவன் தான் உலக அதிசயங்களையும் தோற்று வித்தார் (சங் 89:6;136:4; யோபு 37:14). விண் வெளிக் குறிகளாகிய விண்மீன்கள் காலத் தைக் கணக்கிட உதவுதல் மட்டுமன்றி படைத்தவரையம் இடையறாது ஞாபகப் படுத்துகின்றன. மோசேயின் வரலாற்று நிகழ்ச்சிகளை நினைவாக்கும் திருவிழாக் களும் காலத்தைக் கணிக்கின்றன (ஆதி 1:14; சங் 65:9; எரே 10:2; சீரா 42:18 தொ; காண் 43:1-10)

இ. ஆனால் வாக்களிக்கப்பட்ட நாட் டில் நுழைந்ததோடு புனித வரலாறு முடிவு பெறவில்லை. அங்கும் தொடர்ந்து யாவே மீட்பதில் தன் வலிமையை அவ்வப் பொழுது அருங்குறிகளால் காட்டுகின்

றார் (1 அர 13:3.5; 2 அர 19:29; 28: 8 தொ; எலியா, எலிசா, ஏசயா இவர்களின் வரலாறுகள்). இவற்றுள் இறைவன் தாமாகவே முன்வந்து செய்வன சில (ஏச 7:11); பிறர் வேண்டுதலுக்கிணங்க நிகழ்த்துவன சில (நீதி 6:17.37; 2 அர 20:8 தொ; 2 நாள் 32:24). போலியான இறைவாக்கினர்கூட மாயவித்தையால் உண்மையாகவே அதிசயிக்கத்தக்க அருங்குறிகளை முன்னறிவிப்போடு நிகழ்த்தலாம்; உண்மையான அல்லது பொய்யான கனவுகளின் பொருள் உணர்ந்துரைக்கலாம் (எரே 23:26 தொ). அதனால்தான் யாவேயை விசுவசித்து அதற்கேற்பப் போதிக்கின்றவர்கள் நிகழ்த்துவன மட்டுமே இறைவனின் அருங்குறிகள் என்று நாம் ஏற்றுக் கொள்கின்றோம் (யாத் 13:2–6).

ஈ) சில வேளைகளில் எதிர்பாராத சூழ்நிலைகள் கூட இறையுளத்தின் வெளிப்பாடாக கொள்ளப்படுகின்றன (1 சாமு 14:10; ஆதி 24:12 தொ). முன்னறிய முடியாத இயற்கையான நிகழ்ச்சிகளைக்கூட இறைவனுடைய செயல்கள் என்று பலமுறை இறைவாக்கினர் அறிவித்து விடுகின்றனர். இவை உண்மையாகும்பொழுது முன்பே அறிவித்திருந்த ஒரு பணிக்கு ஆதாரமென்றோ (1 சாமு 10:1.7) அல்லது வருங்காலத்தில் இன்னும் தெளிவாக வரலாற்றில் இறைவன் தலையிடுவார் என்று காட்டும் ஒரு அருங்குறியென்றோ (2:34; எரே 44:29 தொ; 20:6;28:15 தொ) இவற்றை ஏற்றுக்கொள்கின்றோம். அப்பொழுது நம்பிக்கையோ (யாத் 14:13; ஏச 7:1–9), மனமாற்றமோ (2 சாமு 12:13 தொ; எரே 36:3 தொ) தோன்றுகின்றது. மேலும் இது போன்று குறுகிய காலத்தில் நிறைவேறக் கூடிய முன்னறிவிப்பு இறைவாக்கினர் உண்மையானவரா போலியா என்று பிரித்துணர ஒரு குறிப்பாகவும் பயன்படுகின்றது (உப 18:22).

உ. இறைவாக்கினரின் செயற்குறிகள்:-

வருவனவற்றை செயல்கள் மூலமாக முன்னறிவிக்கின்றன (ஏச 20:3; எச 4:3; 12:6.11; 24:27; ஓசே 1–3). அவர்கள் கூறும் இறைவார்த்தை விரைவில் செயலாகக் கூடியது என்று காட்டுகின்றன. ஓசேயா, ஏசயா இவர்களின் குழந்தைகள் கூட இவை போன்ற குறிகள்தாம்; அவர்களுடைய பிறப்பும், குறிப்பான பெயரும், இறைவனுடைய செயல்கள் சிலவற்றின் முன்னறிவிப்பாகவே உள்ளன. அரசுரிமையின் வாரிசான இம்மானுவேல் (இறைவன் நம்மோடு) முன்னறிவித்தபடி பிறக்கும்பொழுது, அப்பிறப்பே மீட்பின் குறியாகின்றது (ஏச 7:14).

ஊ) யாவேயின் ஆதரவைக் காட்டும் வெளி அடையாளங்கள் சிலவும் இக்குறிகளைப் போன்றனவே (ஆதி 4:15; யாத் 12:13; எச 9:4.6). அவை யாவேயின் வாக்குப்படி அவருடைய உரிமையையும் சித்தத்தையும் அறிவிக்கின்றன, உண்மையாக்குகின்றன.

இறைவனுடைய அன்பையும் இயல்பு கடந்த தன்மையையும் ஏதாவது ஒரு வழியில் வெளிப்படுத்துவதே நிகழ்காலக் குறிகளின் பண்பாகும். இறைவார்த்தையைத் திறந்த உள்ளத்தோடு ஏற்றுக்கொள்பவர்கள் (காண் யாத் 7:13; ஏச 7:10 தொ) விசுவாசிகளாய் வாழ இக்குறிகள் உதவுகின்றன.

12. வருங்கலக் குறிகள்:-

இறைவன் நம்மைவிட்டு அகன்றுவிட்டார் என்று கோவில் பாழடைந்தபோது தோன்றிய இழப்புணர்வு, புதுமைகள், இறைவாக்கினரின் முன்னறிவிப்புகள் (சங் 74:9) போன்ற குறிகளும் மறைந்தபொழுது அதிகமாகின்றது. ஆனால் அகதிகளாய் வாழும்பொழுது விரைவில் தாய்நாடு திரும்பும் நிகழ்ச்சி ஒரு புதிய புறப்பாடாக (ஏச 43:16–20) உருவகிக்கப்பட்டு 'நிலையான தகர்த்தமுடியாத ஒரு குறியாக' அறிவிக்கப்படுகின்றது (55:13). ஆனல் அவ்வாறு நடக்காதபொழுதுகூட யாவே। ஐயம் இன்றி மீட்பார் என்ற நம்பிக்கை தளரவில்லை: "குறிகளை மீண்டும் செய்யும், அதிசயங்களை நிகழ்த்துங்கள்" (சீரா 36:5 தொ). இறைவாக்கினருள் சிலர் இம்மீட்புச்செயல் இஸ்ராயேலை மட்டுமன்றி எல்லோரையும் பாதிக்கும் என்று எதிர்பார்க்கின்றனர். யாவே பிறரைப் பழி வாங்கினாலும், அவர்களையும் மனந்திருப்பக்கூடிய குறியொன்று தருவார் (ஏச 66:19). இம்முன்னறிவிப்பாலும் நம்பிக்கையினாலும்தான் எஞ்சினோர் மீட்பரின் வருகைக்கும் தயாராய் இருக்கின்றனர்.

II புதிய ஏற்பாடு

மெசியா வரும்பொழுது யாத்திரை காலத்தில் நிகழ்ந்ததையொத்த அதிசயங் கள் நிகழும் என யூதர்கள் எதிர் நோக்கி யிருந்தார்கள். புறவினத்தார்மேல் அடை யப்போகின்ற வெற்றியைப் பற்றியும் கனவு கண்டார்கள் (காண்க 1 கொரி 1:22). இவ் வுலகைச்சார்ந்த நிலையில் இந்நம்பிக்கை பொய்யானாலும் மறுவுலகைச் சார்ந்த நிலையில் அது நிறைவேறுகின்றது. இயேசு மீட்புச்செயலைத் தமது புதுமை யால் ஆரம்பிக்கின்றார். சிலுவையிலும் மகிமையிலும் உயர்த்தப்படுதலாகிய பெருங்குறியான (யோவா 12:33) தமது 'புறப்பாட்டினால்' (லூக் 9:31) முழுமை யாக்குகின்றார். சிலரால் எதிர்க்கப்பட்டா லும்கூட, நம்முடைய பிணிகளைத் தன்மீது சுமக்கும் ஊழியனாகப் பணிபுரியம் இயேசு (மத் 8:17= ஏச 53:4) மக்கள் கூட்டத்திற்கு விடுதலை அளிக்கும் ஆற்றலு டைய குறியாகவும் (லூக் 2:34), சிதறிக் கிடந்தோரை ஒன்று கூட்டும் சின்னமாக வும் விளங்குகின்றார்.

1. மெசியாவின் வரவிற்கான அடையாளக் குறிகள்:-

விவிலியக் காலங்களில் ஒர் இறை வாக்கினர் தன்னுடைய செய்தியை நிச்ச யப்படுத்துவதற்காக குறிகளை காட்டுவார் என்பது இயற்கையாக எதிர்பார்க்கப்பட்ட தாகும். ஆனால் திருமுழுக்கு யோவான் எந்தவித குறியையும் காட்டவில்லை என்பது ஒரு குறையாகும் (யோவா 10:41). மெசியா 'இறைவாக்கினர்' தம்மை அறிமுகப்படுத்துவதற்கான அடையாளங் களைக் கொடுப்பார் என்பது எதிர்பார்க் கப்பட்டது (யோவா 1:21; 6:14; உப 18:15), மெசியாவின் தோற்றம் குறிப்பிட்ட அளவுக்கு ஒரு தெளிவற்றதாக இருப்பத னால், அதுபோல அதுசம்பந்தமான அறிகுறிகளும் உண்மையானவையா என்ற சந்தேகம் எழுகின்றது. பரிசேயர்கள் இயேசுவிடம் அவர் உண்மையாகவே இறைவாக்கினரா அல்லது மெசியாவா என்பதை நிரூபிப்பதற்கு அடையாளத்தைக் கேட்பது என்பது காலத்திற்கு ஏற்ற ஒன்றாக இருந்தது (மத் 12:38; மாற் 8:11; லூக் 11:16; யோவா 2:18). இப்படியாக பவுலைக் கொரிந்தியர்கள் அவர் அப் போஸ்தலர் என்பதற்கான அடையாளம் காட்டு என்று கேட்டதில் அவர்களுடைய உரிமையாக தென்படுகின்றது (2 கொரி 12:12). பத்தொன்பதாம் நூற்றாண்டுவரை இது ஒரு தன்னிலே வெளிப்படுத்தக் கூடிய அடையாளமாக கடைபிடிக்கப் பட்டு வந்தது. மேலும் மறு உலகைச் சார்ந்த அறிகுறி கொண்டுதான் வெளிப் படவேண்டும். ஆனால் அது அற்புதமான தாக இருக்க வேண்டியதில்லை. இயேசு பிறந்தபோது வானதூதர்கள் மாட்டுக் குடிலில் கிடத்தியிருந்த குழந்தையைப் பற்றிய அடையாளத்தை கொடுத்தனர் (லூக் 2:12). சீமோன் குழந்தை இயேசுவைப் பற்றி "எதிர்க்கப்படும் அறிகுறியாக இருப் பான்" (லூக் 2:34) என்று கூறி இருக் கின்றார். இயேசுவைப் பற்றிப் புரிந்தவர் களுக்கு, இது கடவுள் தாமே முன்வந்து மனிதனுடைய மீட்பை வெளிப்படுத்தும் உண்மையை வெளிப்படுத்துகின்றது. மேலும் அவருடைய உயிர்ப்பு அவருடைய வார்த்தையையும், பணியையும் உண்மை யானவையாக ஆக்குகின்றது (அ.ப. 2:22). அப்போஸ்தலிக்க திருச்சபை இயேசுவின் கருத்தரிப்பிலிருந்து விண்ணுலகிற்கு எழுந்து சென்றது வரை கடவுளால் நல்ல உள்ளம் படைத்தவர்களுக்குக் கொடுக்கப் பட்ட அடையாளம் என்று விசுவசித்தனர், இது நான்காம் நற்செய்தியின் பின்னணி யில் உள்ளது.

2. இயேசுவின் வாழ்விலே அறிகுறிகள்:-

அ) கடந்த கால அதிசயங்களெல்லாம் மீண்டும் புதுப்பிக்கப்பெறும் என்ற இறை வாக்கிற்கிணங்க (மத் 11: 4 தொ= ஏச 35: 5 தொ; 26:19), இயேசு புதுமைகளைச் செய் கின்றார். இப்புதுமைகள் இயேசுவின் போதனை உண்மையானது என்று காட்டு கின்றன. மீட்பை முன்னறிவித்துச் செயல் படுத்துகின்றன (மாற் 8:23 தொ). அவரு டைய அதிகாரம் அவருடைய செயல்கள் இவற்றோடு இப்புதுமைகளும் 'காலத்தின் அறிகுறிகளாக' (மத் 16:3), அதாவது மெசியா வந்துவிட்டார் என்று காட்டும் அடையாளங்களாக விளங்குகின்றன. ஆனால் இஸ்ராயேல் பாலைவனத்தில் செய்ததற்கு மாறாக (யாத் 17:2.7; எண்

*14:22)*, தமக்குச் சாதகமான அறிகுறிகளை இறைவனிடமிருந்து கேட்டு அவரைச் சோதிக்க இயேசு மறுக்கிறார் (மத் *4:7*=உப *6:16*). கண்கவரும் அதிசயங்களுக்கு ஆசைப்பட்டு, அருங்குறி ஒன்றைக் கேட்டு அவரைச் சோதிப்போரையும் திருப்தி படுத்த மறுக்கின்றார் (மத் *16:1* தொ). ஒத்தமை நற்செய்திகள்கூட இயேசுவின் இத்தயக்கத்தை எதிரொலிப்பதுபோல, புதுமைகளை, அவரது எதிரிகளின் சொல் வழக்கில், "அறிகுறிகள்" என்று அழைக்கவில்லை (மத் *12:38*; லூக் *23:8*). மரியாள் (லூக் *1:36* தொ), இடையர் (*2:12*) போன்ற எளியோருக்கு மீட்பின் வருகையைப் பற்றிய அறிகுறிகளை இறைவன் தருகிறார் என்பதில் ஐயமில்லை. ஆனால் யூதர்கள் எதிர்நோக்கியிருக்கும் குறிகளை அவர்களுக்குத் தருவது அவருடைய திருப்பணிக்கே மாறாகும். இக்குருடர்கள் முதன் முதலில் 'யோனாவின் அறிகுறியை' (லூக் *11:29–32*) கவனிக்கவேண்டும். அதாவது தபசுக்கழைக்கும் இயேசுவின் போதனையைக் கேட்கவேண்டும். அப்பொழுது தான் தங்களுடைய வசதிக்கேற்பக் குறிகளைத்தேடிக்கொண்டிருக்காமல் 'காலத்தின் குறிகளை' அவர்களால் கணிக்க இயலும். அவற்றில் முக்கியமானதான 'யோனாவின் அறிகுறியை' (மத் *12:40*) அதாவது கிறிஸ்துவின் உயிர்ப்பைக் கொள்வார்கள்.

ஆ) யோவானின் நற்செய்தியிலும் (யோவா *4:48* தவிர), அப்போஸ்தலர் பணி மற்றும் மடல்களிலும் "அறிகுறி" என்ற சொல்லைப் பயன்படுத்துவதுபற்றி ஒரு விதமான தயக்கமும் இல்லை. இயேசுவின் காலத்தில் வாழ்ந்தோர் அவருடைய அறிகுறிகளால் அவரை விசுவசித்திருக்க வேண்டும் என்று யோவான் கருதுகின்றார் (யோவா *9:35–38*...). யாவே தம் மக்களைப் பாலையில் சோதனைக்குட் படுத்தி (உப. *8:2*) தம்மை வெளியிட்டதைப் போல (எண் *14:22*), சோதனைக்குட்பட்டவருக்கு (யோவா *6:6*) இயேசுவின் குறிகள் அவரது மகிமையை வெளிப்படுத்துகின்றன (*2:11*). மோசே எகிப்தைவிட்டுப் புறப்பட்ட மக்களுடைய மீட்புக்காக உயர்த்திய நலந்தரும் சர்ப்புத்தின் சின்னத்தைப் போல (எண் *21:8*; யோவா *3:14*) வாழ்வின் ஊற்றாக (யோவா *12:10*) சிலுவையிலே ஊடுருவப்பட்டுத் தொங்கும் அறிகுறியை விசுவாசக் கண்களால் காண (யோவா *19:37*= செக் *12:10*) இக்குறிகள் மக்களைத் தயார் செய்கின்றன.

கிறிஸ்துவைக் காண வேண்டும் என்று கேட்ட கிரேக்கர்களைப் போன்று (யோவா *12:21.32* தொ) இவ்விசுவாச நோக்கினால் கிறிஸ்துவர்கள் மனந்திரும்புகின்றார்கள் (*20:29*). இவர்கள் ஊடுருவப்பட்டவரிடமிருந்து வழிந்தோடும் இரத்தத்தையும் நீரையும் (*19:34*) திருமுழுக்கு, ஒப்புரவு, நற்கருணை என்ற அருட்குறிகளால் நாம் பங்குபெறும் திருப்பலி, ஆவியின் வாழ்வு இவற்றின் அடையாளங்களாகக் காண்கின்றனர். தம் உயிர்ப்பினால் இயேசு உயிருள்ள நீரூற்றாகும் ஆலயமாகிறார் (*2:19*; *7:37* தொ; *19:34*; சங் *14:8*; எச *47:1* தொ); அவரின் மீட்புச் செயல்களாகிய இவ்வருட்குறிகளை நோக்கும்பொழுது, இயேசுவின் அறிகுறிகளெல்லாம் (யோவா *5:14*; *6:9*; *13:1–10*) முன்னறிவிக்கும் அடையாளங்களாகவே உணரப்படும்.

3. இயேசுவே ஓர் அடையாளம்:–

வானகத்தில் ஓர் அடையாளம் கேட்கும் எண்ணத்தையுடையவர்களின் மனநிலையை இயேசு கண்டித்தார் (மத் *12:39*; மாற் *8:12*; லூக் *11:29*; *1* கொரி *1:2*). மேலும் அடையாளம் காட்டுவதற்கு மறுத்துவிட்டார். அவருடைய கருத்தும் பொதுவாக விவிலியத்தைச் சார்ந்ததாகத்தான் இருந்தது. அடையாளம் கேட்பது விசுவாசக்குறைவைக் காட்டுகின்றது (யோவா *20:24–30*), இப்படியாக பழைய இஸ்ராயேல் மக்கள் ஓர் அடையாளம் காட்டும்படியாக கடவுளை பாலைவனத்தில் சோதித்தார்கள் என்று சொல்லப்பட்டுள்ளது (எண் *11*). மேலும் பவுல், அவர்களுடைய தலைவிதியானது நம்முடைய வாழ்க்கைக்கு எச்சரிக்கையாக உள்ளது என்று கூறுகிறார். "அவர்களுள் சிலர் ஆண்டவரைச் சோதித்துப் பாம்புகளால் கடியுண்டு அழிந்து போயினர்" (*1* கொரி *10:9–11*). சோதிக்கும் கதையில் இன்னும் இது தெளிவாக உள்ளது (மத் *4:1–11*; லூக் *4:1–13*), புதிய இஸ்ராயேல் சாத்தானின்

கருத்தை மறுத்து, கடவுளிடம் அடையாளம் வேண்டமாட்டேன் என்று கூறுகின்றார். "உன் கடவுளாகிய ஆண்டவரை சோதியாதே" (மத் 4:7; லூக் 4:12). மாசாவின் காலத்தில் இருந்ததுபோல், பழைய இஸ்ராயேல் நாற்பது ஆண்டு அளவாக உள்ளத்தை கடினப்படுத்திக் கொண்டது, மேலும் கடவுளை சோதித்தது (சங் 95:8–10); ஆனால் புதிய இஸ்ராயேலான கிறிஸ்து, நாற்பது நாட்கள் பாலைவனத்தில் உண்ணா நோன்பிருந்த பிறகு, கடவுளிடம் ஒரு அடையாளம் கேட்கும்படி சோதிக்கப்பட்டபோது மறுத்துவிட்டார். இப்படியாக கிறிஸ்து அடையாளம் கேட்பதற்கும், கொடுப்பதற்கும் மறுத்துவிட்டார். ஏனெனில் விசுவாசமற்ற மனிதர்களுடைய வாயிலிருந்து இந்த வேண்டுகோள் வந்தது. அவர் கடவுளில் நம்புகிறார், அவருடைய சீடர்கள் அவரில் நம்பிக்கைக் கொள்ளவேண்டும். அது முழுவதும் மறு உலக அடையாளங்களைச் சார்ந்ததாக இருக்க வேண்டும்.

இருந்தபோதிலும் கடவுள் இஸ்ராயேலருக்கு அவர் அவர்களை எகிப்திலிருந்து நடத்தி வந்தபோதும், செங்கடலைக் கடக்கச்செய்தபோதும், பாலைவனத்தில் இருந்தபோதும், அடையாளங்கள் கொடுத்துள்ளார். அதேபோல், இப்பொழுதும் கடவுள் முன்குறித்த மீட்பைவிட வலிமையுள்ள மீட்பு அண்மையில் உள்ளது என்று காட்ட அடையாளங்கள் கொடுத்துள்ளார். இந்த அடையாளங்கள் அனைத்தும் கடவுளால் தேர்ந்து கொள்ளப்பட்டவைகள். அவை மனிதனுடையவை அல்ல. இயேசு தம்மையும், அதேபோல திருமுழுக்கு யோவானையும் இயேசுவின் போதனைகளையும், அற்புத பணிகளையும், காலங்களுக்கேற்ற குறிகள் என்று கருதினார். பரிசேயர்களும் இதை உணர்ந்திருக்க வேண்டும் (மத் 16:3). பழைய ஏற்பாட்டு இறைவாக்கினர்கள் கொடுத்ததுபோல செக் 9:9, (மத் 21:5)–இல் முன்னறிவிக்கப்பட்ட விதத்தில் மிகப் பெரிய அடையாளமான கோவேறு கழுதையின்மீது அமர்ந்து எருசலேம் தேவாலயத்திற்குச் செல்வது போன்ற அடையாளங்களைக் கிறிஸ்து செய்கிறார். நினிவேயின் புறவினத்தார் யோனாவின் அருங்குறி கேட்டு மனந்திரும்பினர், தென்னாட்டு அரசி சாலமோனின் அடையாளத்தைக் கண்டு கொண்டாள் (மத் 12:39.42; லூக் 11:29–32), ஆனால், இயேசு காட்டிய அடையாளங்கள், இந்தக் காலத்து கடவுளுடைய மீட்புச் செயலின் அடையாளங்கள், கீழ்ப்படியாத இஸ்ராயேலர்கள் எதிர்பார்த்த அடையாளங்கள் அல்ல. கோராசின், பேத்து–சயிதாவில் நிகழ்த்தப்பட்ட அறிகுறிகள் புறவின தீர், சீதோனில் நிகழ்த்தப்பட்டிருந்தால் அவர்கள் அதை ஏற்றுக் கொண்டு மனந்திரும்பி இருப்பார்கள் (மத் 11:20–24; லூக் 10:13). இயேசு தம்மைவிட தன்னுடைய செயல்களைக் கடவுளுடைய மீட்பு செயல்களின் அடையாளங்களாகக் கருதவில்லை. கடவுள் மகனே கடவுளால் உறுதியளிக்கப்பட்ட அண்மையிலுள்ள மீட்பின் அடையாளமாவார். இந்தக் காரணத்தால்தான் கிறிஸ்து தாம் கடவுளின் மகன் என்ற தலைப்பு தம்மை விவரிப்பதாக ஏற்றுக்கொள்கின்றார். மற்ற இறைவாக்கினர்களைப்போல (ஏச 8:18) எசக்கியேல் தனதுகால மக்களுக்குத் தன்னையே அடையாளமாகக் கருதினார் (எச 12:6; 24:24). அவர்கள் அவரது வார்த்தையைக் கேட்கிறார்களோ இல்லையோ, ஆனால் அவர் கடவுளுடைய வார்த்தையை எடுத்துக்கூறுவதற்காகக் கடவுளால் அனுப்பப்பட்டவர். அவர் ஓர் அடையாளம் (3:4.11). எனவே மனுமகனான இயேசு கடவுளுடைய வார்த்தையை போதிப்பதற்கும், கீழ்ப்படியாத மக்களுக்கு அடையாளமாக இருக்கும் படியும் அனுப்பப்பட்டார் (எச 3:27; கேட்க செவி உள்ளவன் கேட்கட்டும். மாற் 4:9).

4. திருச்சபைக் காலத்து அறிகுறிகள்:-

அ. இறுதிக் காலத்தைத் தொடங்கும் அறிகுறிகள்:- கிறிஸ்துவின் உயிர்ப்போடு இவ்வுலகிலே இறுதிக்காலம் தொடங்குகின்றது (அ.ப. 2:17). இவ்விறுதிக் காலத்தில் விருத்த சேதனம் (கொலோ 2:11 தொ) என்ற அறிகுறிக்குப் பதில் திருமுழுக்கு உயிர்ப்பின் மீட்பாற்றலை மக்களுக்கு அளிக்கின்றது. ஓய்வு நாள் (காண். எபி 4:1–11; கொலோ 2:16) என்ற அறிகுறிக்குப் பதில் ஞாயிறு, ஆண்டவரின் நாள்,

உயிர்ப்பின் நினைவு நாள் ஆகின்றது. ஐம்பதாம் நாளன்று ஆவியின் கொடையே இறுதிக் காலத்தைத் தொடங்குகின்றது: பாஸ்குக் காலம் முடிய, அப்போஸ்தலர்கள் போதிக்க ஆரம்பிக்கின்றனர். இவ்வைம்பதாம் நாள் விழா நிகழ்ச்சிகளோடு இவ்வுலகில் மீட்பின் வரலாற்றின் திட்ட வட்டமான இறுதிப்பகுதி (அப் 2:19) தொடங்குகின்றது என்று காட்ட, புனித லூக்கா, யோவேல் இறைவாக்கினர் இறுதிக்காலத்தைப்பற்றி முன்னறிவித்த வானிலை அதிசயங்களோடு (யோவே 3:1–5) அவற்றையொத்த மண்ணக அறிகுறிகளையும் நினைவுபடுத்துகின்றார்.

ஆ) உண்மையான அப்போஸ்தலரைக் காட்டும் அறிகுறிகள்:- ஐம்பதாம் நாள் விழாவை அடுத்து "அறிகுறிகளும் அதிசயங்களும்" மீண்டும் தொடர்கின்றன (அ.ப. 2:43; 4:30; 5:12; 6:8; 14:3; 15:12; எபி 2:4). இவை, இயேசுவின் புதுமைகளைப் போல (அ.ப. 2:22), அப்போஸ்தலர்களின் 'வார்த்தையை உறுதிப்படுத்துகின்றன" (மாற் 16:20). எடுத்துக்காட்டாக, 'அருங்குறிகள் அற்புதங்களின் வல்லமையாலும், தேவ ஆவியின் வல்லமையாலும்" (உரோ 15:19) பவுலின் வார்த்தை தேவ வார்த்தையாக ஏற்றுக்கொள்ளப்படுவது மட்டுமன்றி (1 தெச 2:13) மக்கள் இதயங்களில் இறைவனுடைய வலிமையால் விசுவாசம் வேரூன்றவும் செய்கின்றது (1 கொரி 2:4 தொ).

இவ்வப்போஸ்தலிக்கக் குறிகள் பன்மொழி பேசுதல் போன்ற அருட்கொடையிலிருந்து முற்றிலும் மாறுபட்டன. இது சில கிறிஸ்தவர்களுக்கு மட்டுமே தரப் பட்டது; விசுவசியாதவர்களுக்கென முன்பு ஏற்பட்ட புரியாத மொழி போன்றது (1 கொரி 14:21 தொ; காண் ஏச 28:11 தொ).

உண்மையான அப்போஸ்தலரை போலியானவரிடமிருந்து பிரித்துணரப் புதுமைகள் மட்டும் போதா; 'தளரா மன வுறுதி' (2 கொரி 12:12), பற்றற்ற பண்பு (1 தெச 2:2 –12; காண். 2 பேதுரு 2:3.14; தீத் 1:11; 2 திமோ 3:2) போன்ற ஆவியின் கொடைகளும் வேண்டும். இவற்றோடு அவரது போதனை நெறிபிறழாதிருத்தல் தான் விசுவாசிகளுக்குத் திட்டவட்டமான அறிகுறியாகும் (காண்க கலா 1:8; 2 கொரி 11:13 தொ; 1 யோவா 4:1–6; அ.ப. 13:6 தொ).

இ. சூரியனை ஆடையாக அணிந்த பெண்ணாகிய அறிகுறி:- இறைமக்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகளுக்கும், போலி மெசியாக்களும், இறைவாக்கினரும் தவறான அறிகுறிகளால் அவர்களை வழி தவறச் செய்யும் முயற்சிகளுக்கு (திருவெளி 13:13 தொ; 16:14; 19:20) மூல காரணமாக இருப்பவன் சாத்தான். சோதனைக்குட்பட்டவர்களை ஊக்குவிக்க தான் கண்ட விண்ணகத்தில் மற்ற விண் மீன்களுக்கிடையே ஒரு 'பெரும் அறி குறியை" (திருவெளி 12:1) திருவெளிப் பாட்டின் ஆசிரியர் உருவாக்கின்றார். திருச்சபையைக் குறிக்கும் ஒரு பெண்: அவளுக்கு எதிராக ஊறு விளைவிக்க ஆற்றல் இல்லாத 'வேறொரு அறிகுறி' (12:3) பறவை நாகமாகிய சாத்தான். மெசியாவை ஈன்றெடுத்த சீயோனின் மகளின் (12:5) அடிச்சுவட்டில் வரும் திருச் சபையும், இஸ்ராயேலைப் போன்று, பாலையில் சோதிக்கப்பட்டு (12:6.14; காண் யாத் 19:4; உப 3:12; ஏச 40:30), விசுவாசத்தால் மட்டுமே பெறக்கூடிய மன்னாவை (திருவெளி 12:6; காண் 2:17; யோவா 6:34 தொ. 47–51) உண்டு வளர் கின்றது. உண்மையான கடவுளைப் பணிந்து வாழ்வு பெற மனிதரை அது அழைத்துச் செல்கின்றது (திருவெளி 22:1 தொ).

5. காலமுடிவின் அறிகுறிகள்:- கால இறுதியைப்பற்றி அறியும் பெருவிருப் போடு யூதர்களிடையே எழுப்பப்பட்ட கணக்கற்ற வெளிப்பாட்டு நூற்களோடு ஒப்பிடும் பொழுது புதிய ஏற்பாட்டில் ஒரு நிதானம் தென்படுகின்றது. மொழியளவில் வேறுபாடு இல்லாவிட்டாலும் கிறிஸ்துவின் இறப்பு, உயிர்ப்பினால் வெளிப்பட்ட இறுதி உண்மைகளே அதில் முதலிடம் பெறுகின்றன. உண்மையான அப்போஸ்தலர்களைப் போன்று பாவனை செய்யும் (மத் 24:24) மாயவித்தைக்காரரும் போலி இறைவாக்கினரும் "போலி அருங்குறிகளையும், அற்புதங்களையும்" (2 தெச 2:9) செய்வார்கள் எனக்கூறப்படுவது உண்மை தான்; மத்தேயு "இயேசுவின்

இரண்டாம் வருகையையும் உலக முடிவை யும்" (மத் 24:3) அடுத்த அறிகுறிகளைப் பற்றிக் கூறும்பொழுது அண்டத்தில் நிகழப் போகின்றவற்றைப் பற்றியும் பேசுவது உண்மைதான் (24:29 தொ; லூக் 21:25); ஆனால் இக்குறிகள் எல்லாம் மனு மகனின் அறிகுறியின்முன் (மத் 24:30), அதாவது அவருடைய வெற்றியின்முன், தங்களது முக்கியத்தை இழக்கின்றன.

**அறியப்படாத தெய்வம்** (UNKNOWN GOD)

பவுல் ஏதன்சு நகர் சென்றபோது அங்கிருந்த அரயோபாகு மன்றத்திற்கு வந்து ஆற்றிய உரையில் "அறியப்படாத தெய்வத்து" அல்லது "நாம் அறியாத தெய்வத்திற்கு" என்று எழுதியிருந்த பீடம் ஒன்றைக் கண்டதாகக் தறிப்பிடுகின்றார். இதனைப் பற்றி வேறு எந்த இடத்திலும் குறிப்புகள் இல்லை.

கி.பி. 4–ஆம் நூற்றாண்டு முடிவில் எரோனிமு, இவ்வாசகம், "ஆசிய, ஐரோப்பிய, ஆப்பிரிக்க கடவுள்களுக்கும் அறியாத அன்னிய கடவுள்களுக்கும்" என்று அமைந்திருந்தது என்று கூறு கிறார். பவுலின் உரை அவருடையது தானா என்று கேள்வி எழுப்பும் பலர் இதுபோன்ற பீடங்கள் இருந்தன என்று கூறுவதோடு வழக்கமாக இப்பீடங்கள் 'நாம் அறியாத தெய்வங்களுக்கு' என்று பன்மையில் இருந்தது என்றும், ஆசிரியர் தனது ஒரே கடவுள் கொள்கைக்கு ஏற்ப இதனை 'நாம் அறியாத தெய்வத்திற்கு' என்று ஒருமையில் மாற்றி அமைத்திருக்க வேண்டும் என்பர். கி.பி. 2–ஆம் நூற் றாண்டு குறிப்புகளில் பாலேரும் துறை முகத்திலிருந்து ஏதன்சுக்குப் போகும் வழியில் பலபீடங்கள் இதுபோல் இருந்த தாகத் தெரிகிறது. இதன்மூலம் நாம் புரிந்துகொள்ள வேண்டியது மனிதன், தான் அடைந்த நன்மைகளுக்கு தனது இயல்பிலேயே இறைவனுக்கு நன்றி கூற விரும்புகிறான். அவரது பெயரை அவ னால் தீர்மானிக்க முடிவதில்லை. ஆனால் இதற்கு கடவுளே அறிய முடியா தவர் அல்லர் என்று பொருள் இல்லை. அப்போஸ்தலப் பணி ஆசிரியர், இப்பீடக் குறிப்புக்கு விளக்கம் அளிக்க முயல வில்லை; கிறிஸ்துவில் இறைவனது வெளிப்பாட்டை விளக்க இக்குறிப்பைப் பயன்படுத்துகிறார்.

**அறியாமை** (IGNORANCE)

பழைய ஏற்பாட்டில்:– அறியாமை எனும் இச்சொல் தெரியாமல் ஒருவன் செய்த தவற்றைக் குறிக்கிறது. அறிந்து செய்யப்படும் தவற்றைவிட அறியாமை யால் செய்யப்படும் தவறு அற்பமானதே என்றாலும் பரிகாரம் செய்யப்பட வேண்டியதாகும்; (திருவுரை 5:6; 10:5; லேவி 4:2; 5:5–18; எண் 15:24–29; 35:11). அறியாமை யால் ஏற்படும் தவறு குருடன் வழிதப்பு வதாகவும் (உப 27:18; எச 34:6) குடியில் தள்ளாடுவதாகவும் (ஏச 28:7), உணர்ச்சி களின் தடுமாற்றமாகவும் (பழ 5:19–20) அறிவு மற்றும் ஒழுக்கத்தவறாகவும் (ஆதி 43:12; யோபு 12:16; பழ 19:27) இருக்கலாம். விவிலியக் கண்ணோட்டப்படி ஒருவன் அறியாமையாலும் தவறு இழைக்கக் கூடாது. அறியாமை ஒருவனை பாவத் தின் விளைவிலிருந்து தப்பிவிக்காது (லேவி 4:13–14; 22:14; எண் 15:24). பாவத்தின் விளைவு எப்போதும் பாவச்செயலுடன் சேர்ந்துவருகிறது. எனவே அறியாமையி னால் செய்யப்பட்ட தவறுக்கும் பரிகாரம் செய்யப்பட வேண்டும் (லேவி 4:3; 5:14–16; 22:14). அறிந்து செய்த பாவத்திற்கு சடங்குப் பரிகாரமே இல்லை (எண் 15:30; சங் 19:13).

புதிய ஏற்பாட்டில்:– அறியாமை என்ற கருத்து கிரேக்க மனப்பான்மையால் பாதிக்கப்பட்டிருந்தது. அது உண்மை யான அறிவு அற்ற நிலை அல்லது குறைந்த அறிவு உடைய நிலை என்பதா கும் (2 கொரி 6:9; கலா 1:22). அறியாமை என்பது மயக்கமான நிலையினையும், குறிக்கோளற்ற நிலையையும் (அ.ப.17:23; உரோ 2:4; 2 கொரி 2:11) புரிந்துகொள்ளா நிலையையும் (மாற் 9:32; லூக் 9:45; உரோ 6:3: 7:1; 1 பேதுரு 2:15; 2 பேதுரு 2:12) குறிக் கும். அறியாமை இருள் அகல ஒருவன் புரிந்துகொள்ளும் தன்மை பெறவேண்டும் (உரோ 1:13; 11:25; 1 கொரி 10:1; 12:1; 2 கொரி 1:8; 1 தெச 4:13). அறியாமை பாவத்திற்கு இட்டுச்செல்லலாம். கடவுளைப் பற்றியும், நற்செய்தியைப் பற்றியும் ஒருவன் அறி யாமல் இருப்பது பிரிந்திருப்பதற்கும்

பதிதத்திற்கும் சமமாகக் கருதப்பட்டது. இவ்வாறு, இயேசுவைச் சிலுவையில் அறைந்ததில் யுதர்கள் அறியாமையும் (அ.ப.3:17) கிறிஸ்துவர்களைத் துன்புறுத்தியதில் பவுலின் அறியாமையும் (1 திமோ 1:13) குற்றத்தன்மையிலும் மன்னிக்கப்படுதலிலும் பழைய ஏற்பாட்டின் பாவம் என்ற கருத்துக்கொத்தாகும். யூதர்கள் கிறிஸ்துவை அறிந்து ஏற்றுக்கொள்ளத் தவறியதும் (அ.ப.13:27) இறைவனது அருட்செயல்முறையை அறியத் தவறியதும் (உரோ 10:13) புற இனத்தார் உண்மையான இறைவனை அறியத் தவறியதும் (அ.ப. 17:30; 1 கொரி 15:34; எபே 4:18; 1 பேதுரு 1:14) குறிப்பாக இவர்கள் இயற்கை அறிவின் ஒளியைப் புறக்கணித்ததும் (உரோ 1:21; 2 பேதுரு 3:5) பாவத் தன்மையுடையதாகும்.

**அறிவற்ற செல்வன்**–(உவமை லூக் 12:16–21)

எவ்வகைப் பொருளாசையும் கொள்ளாமல் கவனமாயிருங்கள் (லூக் 12:15) என இயேசு கூறி, பொருளாசை கொண்டால் என்ன விளைவு ஏற்படும் என்பதை விளக்க இந்த உவமையைக் கூறுகிறார். அதிகமாசப் பொருள் சேர்க்க நினைத்தால் அது அழிவிற்கு வழிகோலும் என்கிறார். இந்த உவமையிலே வரும் பணக்காரன் தன்னை நிறைவு செய்து கொள்ள விரும்புகிற தன்னலக்காரன். தன் செல்வத்தை பத்திரப்படுத்தவேண்டும், உடல் தேவையை நிறைவேற்றவேண்டும் என எண்ணுகிறான். ஆனால் அவன் தன் ஆன்மத் தேவையை நினைக்கவில்லை. எனவேதான் இயேசு உங்கள் செல்வம் எங்குள்ளதோ அங்கே உங்கள் உள்ளமும் இருக்குமென்கிறார் (12:34). ஆண்டவர், எதிர்பாராத நேரத்திலே அவனை அழைக்க, அவன் அதற்குத் தயாராய் இல்லை.

**அறிவித்தல்** (CONFESSION)

அறிக்கையிடுதல் என்ற சொல் பொதுவாகப் பாவத்தை அறிக்கையிடுதல் அதாவது பாவமன்னிப்பு என்ற திருவருட் சாதனத்தைக் குறிக்கிறது. ஆனால் இவ்வார்த்தை வேதாகமத்தில் இரண்டாந்தரமாகத்தான் இப்பொருளில் கூறப்பட்டுள்ளது. பழைய புதிய ஏற்பாடுகளிலும் கிறிஸ்தவப் பாரம்பரியத்திலும் இறைவனின் மாட்சிமையையும், அவரது மீட்புச் செயல்களையும் வெளிப்படையாக அறிக்கையிடுபவர்களைத்தான் புனிதர்கள் என அழைக்கிறார்கள். பாவத்தை ஏற்றுக் கொள்வது உண்மையாய் இருக்க வேண்டுமானால் இறைவனின் புனிதத் தன்மையையும் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

இறைவனை அறிக்கையிடுதல் தெய்வ நம்பிக்கையுள்ளவனுக்கு இன்றியமையாதது. இதற்கு இறைவனின் செயல்கள் அனைத்தையும் அறிந்திருக்கவேண்டும் என்பது அவசியமில்லை. ஆனால் இறைவனின் செயல்களை ஏற்றுக்கொள்ளக் கூடிய மனப்பக்குவம் வேண்டும். இத்தகைய மனப்பக்குவத்தைக் குரு ஏலி தன் மக்களின் பாவ அறிக்கையிட்டும் இறைவனின் மேன்மையை எடுத்துரைத்தும் வெளிப்படுத்துகிறார் (1 சாமு 3:18). இறைவனைப்பற்றிய அறிவானது அவரது புகழ்பாட ஏதுவாகிறது. இறைவன்பால் காட்டும் திறந்த உள்ளமானது அவருக்கு நன்றியறிதல் கூறுவதற்கும் அவரது புகழ் பாடுவதற்கும் காரணமாகிறது (சங் 22:23). நன்றியறிதல், வாழ்த்துரைத்தல் போன்று விசுவாச அறிக்கையிடுதலும் இறைவனுக்கு நேரடியாகச் செலுத்தப்படுகிறது. இறைவனுக்குச் சாட்சி பகர்தல் என்பது இறைவனின் செயலை எடுத்துரைப்பதாக இருந்தாலும் அது பொதுவாகப் பிற மனிதர்களின் பொருட்டு அறிக்கையிடப்படுகிறது.

இது இறைவழிபாட்டோடு தொடர்புடையதாகும். இது ஒருவன் தன் பாவத்தையும் ஒன்றும் இயலாமையையும் ஏற்றுக் கொள்ளுதலையும், மனிதனது துன்பங்களிலிருந்து விடுவிக்கும் இறைவனது செயல்களை அறிக்கையிடுதலையும், இறைவன் தம் மக்களுக்குக் காட்டும் இரக்கத்திற்காக வல்லவரான இறைவனைப் போற்றி நன்றி கூறுதலையும் உள்ளடக்குகிறது. இது விசுவாச அறிக்கையாகும். இது புதியஏற்பாட்டில் இயேசு இறைவனது அபிடேகம் பெற்றவர் என்றும் இயேசு ஆண்டவர் என்றும் வழிபாட்டு முறையிலும் இறையியல் முறையிலும் அறிவித்தலாகும். கிறிஸ்தவ மறை கிரேக்க உலகில் பரவியபோது நற்செய்தி

பலவாறு தவறாக விளக்கப்பட்டது. இதை எதிர்த்த போராட்டத்தில், வழிபாட்டு அறிக்கை மிகவும் சிக்கலானதாயிற்று. இறுதியில் 2–ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த திருமுழுக்கு விசுவாச அறிக்கைகளில் இறையியல் வாய்பாடாக உருவெடுத்தது.

பறைசாற்றுதல், பாவங்களை ஏற்றுக் கொள்ளுதல், இறைவனைப் போற்றி நன்றி கூறுதல் ஆகியவை அடங்கிய அறிக்கையிடுதல் விவிலியத்தில் பல சொற்களால் உணர்த்தப்படுகிறது.

I. பழைய ஏற்பாடு:– *1.* அறிக்கையிடுதல் வழிபாட்டில் வேரூன்றியுள்ளது. முதலில் இது இறைவன் அளித்த விடுதலையைப் பறைசாற்றுதலாகும். இந்த விடுதலை எகிப்திய அடிமைத்தனத்திலிருந்து இஸ்ராயேல் அடைந்த மீட்பாக இருக்கலாம் அல்லது தனி நபர் தன் எதிரியின் கொடுமையிலிருந்தோ, பேரழிவுகளால் நசுக்கப்படுவதிலிருந்தோ அல்லது குற்றச் சுமையிலிருந்தோ அடைந்த விடுதலையாக இருக்கலாம் (சங் 40:1–2).

*2.* இரண்டாவது அறிவித்தல், பாவத்தையும் ஒன்றும் இயலாமையையும் ஏற்றுக் கொள்ளுதலாகும். இறைவன் தண்டித்துத் திருத்துதலில் இஸ்ராயேல் தனது பாவத்தை அடையாளம் கண்டது. வழிபடுபவர் தனது அவல நிலையையும் தப்பிக்க இயலாமையையும் சிந்தித்துப் பார்க்கிறார். பாவ அறிக்கை இறைவன் மனிதனைத் தீர்ப்பிடும்போது நீதியுள்ளவராக இருக்கிறார் என்று அவரை மகிமைப்படுத்துகிறது. (சங் 51:4).

மோசேயின் சட்டம் இஸ்ராயேல் தங்கள் பாவங்களை அறிக்கையிடக் கட்டளையிடுகிறது (லேவி 26:40). சில சமயம் பாவத்திற்குப் பரிகாரமாக ஆண்டவருக்குக் காணிக்கை செலுத்தக்கோருகிறது (5:5 தொ). மற்ற சமயங்களில் யாருக்குத் தீங்கிழைத்தார்களோ அவர்களுக்கு ஈடு செய்யவும் கட்டளையிடுகிறது (எண் 5:7). மக்களின் பிரதிநிதி என்ற அளவில் பெரிய குருவான ஆரோன், பரிகார நாளில் இஸ்ராயேலின் பாவங்களை அறிக்கையிட வேண்டும் (லேவி 16:21). இஸ்ராயேலின் பெயரால் தனி நபர்களின் பாவ அறிக்கைக்குச் சான்றுகள்: சாலமோன் (1 அர 8:31 தொ), எஸ்ரா (10:1), நெகமியா (1:6), தானியேல் (9:4–20) ஆகியோருடைய பாவ அறிக்கைகளாகும். நாடு கடத்தப்பட்டுத் திரும்பியபின் தனிப்பட்டோரின் பாவ அறிக்கை, சமய வாழ்வில் அதிகமான முதன்மை பெறுகிறது.

எல்லாப் பாவங்களும் யாவேக்கு எதிரானவை (லேவி 26:40) என்ற அடிப்படையில்தான் பாவ அறிக்கையிடுதல் எழுந்துள்ளது. இறைவன் மனிதனோடு உறவு கொள்வதற்குத் தடையாக உள்ளது பாவம். தனிப்பட்ட முறையிலோ (பழ 28:13) அல்லது ஓரினமாகவோ (நெக 9:2; சங் 106) இறைவனுக்கு எதிராகச் செய்த காரியத்தை ஏற்றுக்கொள்வது மனிதன்பால் இறைவனுக்குள்ள முழு உரிமையை மீண்டும் வலியுறுத்துவதாகும். இறைவனின் தூண்டுதலால் ஏற்பட்ட உடன்படிக்கையால் எழும் இறைவனின் உரிமைகளை வலியுறுத்தும்போது பாவ மன்னிப்பு கிடைக்கிறது (2 சாமு 12:13; சங் 32:5).

இஸ்ராயேலர் பாவங்களை அறிக்கையிட்டபோது இறைவன் மன்னிப்பார் என்று எதிர் பார்த்தனர் (சங் 32:5). பாவ அறிக்கைக்கும் இறைவனைப் போற்றும் விசுவாச அறிக்கைக்கும் உள்ள தொடர்பு கவனிக்கத்தக்கதாகும். இதை சங் 32–இல் காணலாம். இது தவச் சங்கீதமாகவும் நன்றிப்பாடலாகவும் அமைந்துள்ளது.

*3.* மூன்றாவது மக்களை விடுவிக்கும் இறைவனைப் போற்றுதலும் அறிவித்தலுமாகும். இவ்வாறு இக்கருத்து போற்றுதல் சங்கீத நூலில், குறிப்பாகச் சங் 22; 30; 34; 40; 51; 116 –இல் பரவிக்கிடக்கிறது. இத்தகைய பாடல்கள் 1 சாமு 2:–1–10; ஏச 38:10 –12; யோனா 2:2–9 இலும் காணக்கிடக்கின்றன.

*4.* இறைவனின் நாமத்தை அறிக்கையிடுதல்:– அறிக்கையிடுதல், புகழ் பாடுதல், நன்றியறிதல், வாழ்த்துரைத்தல் போன்ற இவையனைத்தும் ஒன்றோடொன்று தொடர்பு உடையன. இறைவனின் செயல்கள் இவ்வனைத்திற்கும் அடிப்படையாகும். அவரது செயற்கரிய செயல்கள் (சங் 26:7) விசுவாச அறிக்கையின் மையமாக விளங்குகின்றன. உதாரணமாக 'ஆண்டவர்' வாழ்த்தப்படுவா

ராக' (யாத் 18:10; 1 யோவா 1:48; சங் 28:6; 31:22...) என்ற எளிய விசுவாச அறிக்கை வேதாகமத்தில் பலவிடங்களில் காணப் படுகின்றன. "நான் உமக்கு நன்றி கூறு கிறேன்", "நான் உம்மை வாழ்த்துகிறேன்", "நான் உமது புகழ்பாடுகிறேன்" என்ற வாக்கியங்களும் இவ்வுண்மையை எடுத்து ரைக்கின்றன.

கிறிஸ்துவத்திற்கு முந்திய யூத மரபின் படி வழிப்பட்ட கிறிஸ்தவர்கள் திருச் சட்டப் பகுதியிலிருந்து எடுக்கப்பட்ட மூன்று வசனங்களால் தொடுக்கப்பட்ட செபத்தை விசுவாச அறிக்கையாகத் தினந்தோறும் சொல்லி வந்தனர். முதல் வசனமானது இஸ்ராயேல் மக்களோடு உடன்படிக்கை செய்து கொண்ட ஒரே கடவுளின் மேல் கொண்ட விசுவாசத்தை (உப 6:4) அறிக்கையிடுகிறது.

II புதிய ஏற்பாடு:

பழைய ஏற்பாடு அறிக்கை முறை புதிய ஏற்பாட்டு முறைக்கு வழிகாட்டியது. பாவ அறிக்கை, இறைவனால் வரும் விடுதலையைப் பறைசாற்றுதல், நன்றியோடு போற்றுதல் ஆகிய மூன்று கூறுகளும் புதிய ஏற்பாட்டு முறையில் காணக்கிடக் கின்றன. ஆனால் இவை இயேசுவை மையமாகக் கொண்டிருப்பதும், தொடக்க காலத் திருச்சபையின் வளர்ச்சியும், இவற்றைப் பொருள் பொதிந்த முறையில் மாற்றி அமைத்தன. விசுவாச அறிக்கை உண்மையான மாற்றம் பெறுகிறது.

அ) பாவ அறிக்கை:- திருமுழுக்கு யோவான் தன்னிடம் ஞானஸ்நானம் பெற வந்தவர் பாவ அறிக்கை செய்வதை வலியுறுத்தினார். ஏனெனில் அது அவர்களது மனத்துக்கத்தை எடுத்துக்காட்டியது. அதோடு, மெசியாவின் வருகைக்கு இஸ்ராயேல் சுத்திசெய்யப்பட பயன்பட்ட ஞானஸ்நானத்தின் ஒரு பகுதியாகியது (மத் 3:6; மாற் 1:5). மேலும் இயேசுவும் ஊதாரியின் மகன் உவமையிலும் (லூக் 15:18), பரிசேயன் ஆயக்காரன் உவமையிலும் (18:10), அவர் கற்பித்த செபத்திலும் (மத்6:12; லூக் 11:4) பாவ அறிக்கையை மையப்படுத்தி அதனை வலியுறுத்தினார்.

புதிய ஏற்பாட்டு மக்கள் பொதுவாக இறைவனிடம் பாவஅறிக்கை செய்தாலும் (1 யோவா 1:9) இரு நிகழ்ச்சிகளில் ஒருவர் மற்றவரிடம் செய்துகொள்கின்றனர். லூக் 17:4-இல் குற்றம் செய்தவன் மனம் வருந்தினால் அவனை மன்னிக்கும்படி தம் சீடர்களைத் தூண்டுகிறார் யாக்கோபு 5:16-இல் "ஒருவருக்கொருவர் பாவ அறிக்கை செய்துகொள்ளுங்கள்" என்று போதிக்கப்படுகிறது.

பாவமன்னிப்பு என்ற திருவருட்சாதனம் நடைமுறையில் இருந்ததாக புதிய ஏற்பாட்டில் குறிப்பு ஒன்றுமில்லை. ஒருவன் தன் வெளியரங்கமான குற்றங்களை ஏற்றுக்கொள்ளும்படி செய்வது சகோதரனைத் திருத்துதலின் நோக்கமாகும் (மத் 18:15). யாக்கோபு எழுதிய திருமுகத்தில் (5:16) குறிப்பிட்டுள்ள ஒருவர்க்கொருவர் பாவ அறிக்கை செய்துகொள்ளுவது யூதர்களின் மரபினை அடிப்படையாகக் கொண்டது.

ஆயினும் ஒருவன் தன் பாவத்தை அறிக்கையிடுவது அவன் மனந்திருந்தி மன்னிப்புப் பெறுவதற்குத் தகுதி பெற்றுவிட்டான் என்பதற்கு அடையாளமாகும். யூதர்கள் திருமுழுக்கு யோவானிடம் தங்கள் பாவங்களை அறிக்கையிட்டார்கள் (மத் 3:6). பேதுரு தான் இயேசுவை நெருங்குவதற்குத் தகுதியற்ற பாவி என்று ஏற்றுக்கொண்டார் (லூக் 5:8). இயேசுவும் ஊதாரிப்பிள்ளை தன் பாவத்தை ஏற்றுக்கொண்டான் (லூக் 15:21) என எடுத்துரைக்கிறார். சக்கேயுவின் வார்த்தைகளும் (லூக் 19:8) பாவி ஒருத்தியின் செயலும் (லூக் 7:31-50) விபசாரத்தில் பிடிப்பட்ட பெண்ணின் மௌன நிலையும் (யோவா 8:9-11) மன்னிப்பு பெறுவதற்கு ஒருவன் தன் பாவத்தை ஏற்றுக்கொள்ளுவது அவசியம் என உணர்த்துகின்றன. இத்தகைய நிகழ்ச்சிகள் பாவமன்னிப்பு என்ற திருவருட்சாதனம் தோன்றுவதற்கு ஆதாரமாயிருந்தன. ஒவ்வொரு மனிதனும் பாவியாயிருக்கிறான்; அவனது பாவங்கள் கழுவப்படவேண்டுமென்றால் பாவ அறிக்கையிடவேண்டும் (1 யோவா 1:9). இவ்வறிக்கை உண்மையானதாய் இருக்க வேண்டுமென்றால் அது உதட்டளவிலன்றி உள்ளத்திலிருந்து பிறக்கவேண்டும். ஆகையால் யூதாசின் பாவ அறிக்கை பயன் அற்றது (மத் 27:4).

ஆ. இயேசுவை அறிவித்தல்:- பழைய ஏற்பாடு இஸ்ராயேலுக்கு இறைவன் செய்த மீட்புச் செயல்களை அறிக்கை யிடும்போது, புதிய ஏற்பாட்டில் இறைவ னின் மீட்புச் செயல் இயேசுவே என்று அறிவிக்கிறது. அறிவித்தலுக்கு இயேசுவே மிகச்சிறந்த எடுத்துக்காட்டு: "அனைத் திற்கும் உயிரளிக்கும் கடவுள் முன்னிலை யிலும் போன்சியு பிலாத்தின்முன் நின்று சிறந்த விசுவாச அறிக்கை செய்த இயேசு" (1 திமோ 6:13). இத்தகைய மொழி திரு வெளி 1:5; 3:14–இல் பயன்பட்டுள்ளது. போ லிச்சாட்சிகள் அவருக்கெதிராக சாட்சி கூறினர் (மாற் 14:56). அவரது சீடர்கள் அவரை மறுதலித்தனர் (14:68). ஆனால் அவரே, பெரிய குரு முன்னும் (14::62) பிலாத்தின் முன்னும் (15:2) தனது மெசியா அழைப்புக்குச் சாட்சி கூறுகிறார்.

சீடர்களும் விசுவாச அறிக்கை செய்ய வேண்டும். அது "பல சாட்சிகள் முன்னி லையில் செய்யப்படும்" பகிரங்கச் செயலா கும் (1 திமோ 6:12). இது ஒருவேளை ஞான ஸ்நானத்தோடு தொடர்புடையதாக இருக் கலாம். திருமுழுக்கு யோவான், அவர் தான் வாக்குறுதி அளிக்கப்பட்ட மெசி யாவா என்று கேட்கப்பட்டபோது விசுவாச அறிக்கை செய்கிறார் (யோவா 1:20.29–34; 3:25–30). செசரியா பிலிப்பியில் இயேசு மெசியா என்று சீமோன் பேதுரு அறிக் கை செய்கிறார் (மத் 16:13–20; மாற் 8:27–30; லூக் 9:18–21). குருடனாகப் பிறந்தவரும் (மத் 9:15 தொ), இலாசர் இறப்புக் குப்பின் மரியாளும் (யோவா 11:27), பவுல் பெலிக்ஸ் முன்னும் (அ.ப.24:14 தொ) விசுவாச அறிக்கை செய்கின்றனர். பவுலின் கருத் துப்படி இயேசு ஆண்டவர் என்று விசு வாச அறிக்கையிடுவது மீட்புக்கு அவசிய மாகும் (உரோ 10:9–10; 2 கொரி 4:3). யோ வானின் போதகப்படி கிறிஸ்து மனித உருவெடுத்ததுப்பற்றிய உண்மையான அறிக்கை உண்மையான விசுவாசத்தின் அடையாளமாகும் (1 யோவா 4:2–3). பிலி. 2:5–10–இல் பவுல் தனது சொந்த விசுவாச அறிக்கையைக் கொடுக்கிறார். அதோடு கிறிஸ்து உயர்த்தப்பட்டிருப்பது அவர் ஆண்டவர் என்ற அறிக்கையை ஒவ்வொரு வரிடமிருந்தும் கோருகிறது என்று கூறு கிறார் (2:11).

இத்தகைய விசுவாச அறிக்கையை புதிய ஏற்பாட்டுச் சமூகம் உற்சாகப் படுத்துவதற்குப் பல காரணங்கள் உண்டு. 1) விசுவாச அறிக்கை ஞானஸ்நானத் திற்குத் தயாரித்தபோது போதகத்திற்குப் பயன்பட்டது 2) திருச்சபையின் வழிபாடு விசுவாச அறிக்கையைப் பாதித்தது. 1 திமோ 3:6 காலத்தால் முந்திய கிறிஸ்து இயல் பாடலாகக் கருதப்படுகிறது. மற்ற வழிபாட்டு அறிக்கைகள் பிலி 2:6–11; 1 கொரி 15:3–7–இல் காணப்படுகின்றன. யூத வழிபாட்டு விசுவாச அறிக்கையான செமா 1 கொரி 8:6; எபே 4:4–6 போன்ற அறிக்கைகளைப் பாதித்திருக்கவேண்டும். 3) சமயத்திற்காகக் கொடுமைப்படுத்தப் பட்டதும் விசுவாச அறிக்கைக்கு ஒரு காரணமாயிற்று. உரோமை அரசர்களை வழிபடுதல் பேரரசனுக்கும் தூபம் காட்ட வும், சீசர் ஆண்டவர் என்று அறிக்கை யிடவும் கோரியது.

தொடக்கக் காலக் கிறிஸ்தவர்கள் தங்களுக்கு வெளிப்படுத்தப்பட்ட ஒரே ஆண்டவர் மெசியாவாகிய இயேசுதான் என்று உறுதியாக விசுவசித்தனர். ஆகவே பேரரசன் வழிபாடு ஒரு சிலை வழிபாடா கும் என்று கருதினர். இயேசுவே பிலாத் தின்முன் சிறந்த விசுவாச அறிக்கை செய் தார். கிறிஸ்தவர்களும் உரோமை அதிகா ரிகள்முன் இயேசுவின் பெயரை அறிக்கை யிட்டனர். இந்த அனுபவத்திலிருந்து இயேசுவே அறிக்கையிடுவதற்கும், மறை சாட்சிக் கருத்துக்கும் இடையே நெருங்கிய தொடர்பு வளர்ந்தது. 4) பதிதத்தின் வளர்ச்சியும் விசுவாச அறிக்கையை அவ சியமாக்கிற்று. சில போலிப் போதனை களுக்குத் திருச்சபை காட்டிய கடினமான பதிலை சில புதிய ஏற்பாட்டு விசுவாச அறிக்கைகள் காட்டுகின்றன (1 யோவா 2:22; 4:2–3; 4:15; 2 யோவா 7). விசுவாச அறிக் கைகள் இயேசுக்கிறிஸ்துவில் இறைவன் ஆற்றிய மீட்புச் செயலின் வரலாற்றுத் தன்மையைப் பறைசாற்றின. இயேசுவின் ஆண்டவர்பால் கொண்ட பற்றுறு தியை எடுத்துக் கூறின. கிறிஸ்து நிகழ்ச்சி பற்றிய அறிவு, ஒழுக்க இயல், கட்டுக் கதைகள் ஆகியவை சார்ந்த தவறான விளக்கங்களை நிராகரித்தது.

இ) போற்றுரையும் நன்றியுரையும். புதிய ஏற்பாட்டில் கிறிஸ்துவை அறிக்கை யிடுதல் அதன் வாத எதிர்வாதச் சூழ் நிலையில், முதன்மை பெற்றாலும், போற் றுதல் நன்றி கூறுதல் என்ற பொருளில் அறிவித்தல் புதிய ஏற்பாட்டில் இல்லாம லில்லை. இறைவாக்கினி அன்னா குழந்தை இயேசுவைப் பார்த்தபின் இறை வனைப் போற்றுகிறாள் (லூக் *2:38*). இயேசு, தந்தையின் அருள்கூர்ந்த வெளிப் பாட்டுக்காக அவரைப் போற்றுகிறார் (மத் *11:25*; லூக் *10:21*). எபிரேயருக்கு எழுதப்பட்ட திருமுகத்தின் ஆசிரியர் கிறிஸ்துவ வாழ்வை ஒரு போற்றுரை அறிக்கையாகக் காண்கிறார் (எபி. *13:15*). புறவினத்தார் இறைவனை மகிமைப்படுத்தும்படி இயேசு விருத்தசேதனமுள்ளோருக்குப் பணியாளர் ஆனார் என்று உரோ 15:9 உறுதியாகக் கூறுகிறது. பிலி *2:9–11*, கிறிஸ்து ஆண்டவர் என்ற அறிக்கை தந்தையாகிய இறைவனுக்கு மகிமையாகும் என்கிறது.

இவ்வாறு பழைய, புதிய உடன்படிக் கைகள் இரண்டிலும் மீட்பளிக்கும் இறை வனை அறிக்கையிடுபவர்களும், தங்கள் பாவங்களை அறிக்கையிடுபவர்களும் *(கலா 3:22)* "உன் விசுவாசம் உன்னை மீட்டது" (லூக் *7:50*) என்ற இயேசுவின் வார்த்தையின் நிறைவேறுதலாக விசுவா சத்தினால் விடுதலை அடைகிறார்கள் *(கலா 3:22)*.

**அறிவிப்பவர், கட்டியங்காரன்** (HERALD)

நாட்டு அல்லது அரச செய்திகளைப் பொதுவில் எடுத்துரைப்பவன். அரசர் களுக்கிடையே சடங்கு முறைச் செய்தி களை எடுத்துச் செல்பவன்.

தானி *3:4*–இல் இவர் கட்டியங்காரன் என்று குறிப்பிடப்படுகிறார். புதிய ஏற்பாட் டில் உருவகமாக போதிப்பவரை குறிக் கிறது. போதகர் என்றும் மொழி பெயர்க் கப்படுகிறது *(1 திமோ 2:7; 2 திமோ 1:11; 2 பேதுரு 2:5)*. நோவாவின் எச்சரிக்கையை ஓர் அறிவிப்பாகப் பேதுரு கருதுகிறார் *(2 பேதுரு 2:5)*. நற்செய்தி அறிவிப்பவர் என்ற பதம் எச *40:9*; *41:27*–இல் வருகிறது. இந்தப்பதத்தில் பழைய ஏற்பாட்டு நற் செய்தி அடங்கியுள்ளது. "சியோனுக்கு நற் செய்தி அறிவிப்பவனே, உயர்ந்தமலை மேல் நீ ஏறிப்போய் நில்: எருசலேமுக்கு நற்செய்தி அறிவிப்பவனே, உன் குரலை எழுப்பி முழங்கு". இதில் உள்ள உருவகம் போதிப்பவர் வானகத் தந்தையால் அவருக்கு அளிக்கப்படும் செய்தியைப் பெற்று அறிவிக்கிறார் என்பதாகும்.

**அறிவுக் கூர்மையும், விவேகமும்**
(DISCRETION AND PRUDENCE)

குறிப்பிட்ட நேரத்தில் செய்யத்தக்கது என்ன அல்லது தேவையான முடிவை எது அடையும் என தீர்மானிக்கும் ஆற்ற லாகும். இவ்வார்த்தைகள் இணைந்து மூன்று முறையும் *(பழ 1:4; 8:12; தானி 2:14)* தனித்தனியாக ஞான இலக்கியத்தில் பல முறையும் தோன்றுகின்றன. இவை கடவுளைப்பற்றிய அறிவிற்கு மிக நெருங் கியவையாகவும், போதனைக் கனிகளான செயல் நயம், விவேகம், நற்சுவை, சாது ரியம் ஆகியனவற்றை குறிப்பிடுவனவாக வும், நல்வாழ்வு வாழவும் தீயவற்றை விலக்கவும் அவசியமானவையாகவும் உள்ளன.

அறிவுக்கூர்மை என்பது நேரடியாக ருசிப்பதன்மூலம் சோதிப்பது; உருவக மாகதக்கது மற்றும் நற்சுவையுடன் உள்ளது எது என தேர்ந்து தெளிதல் *(1 சாமு 25:33; பழ 11:22; தானி 2:14)*, சம யோசிதமாய் நடத்தல் *(1 நாள் 22:12; 2 நாள் 2:12; எஸ் 8:18; பழ 19:11)*, மற்றும் ஒருவரது செயலை நல்லவித்தில் தீர்மானிக்கும் ஆற்றல் *(பழ 1:4; 2:11; 3:21; 5:2; பன்மையில் 8:12; 14:17)* ஆகியவற்றை உணர்த்தவல்லது.

அறிவுக் கூர்மை பெரும்பாலும் 'ஞானம்' *(பழ 3:21; 5:2)*, "புரிந்துகொள்ளு தல்" *(1 நாள் 22:12; 2 நாள் 2:12; பழ 2:11)* மற்றும் "கற்றறிந்த சிந்தனை" *(பழ 1:4; 5:2; 8:12)* ஆகியவற்றுடன் இணைந்துகாணப் படுகிறது. இது சாமர்த்தியத்தையும் குறிப் பிடலாம் (அபிகாயில், தாவீதின் கோபத் தைச் சமாதானம் செய்வதுபோல *1 சாமு 25:33*). இது யாவேயின் சட்டத்தை கடை பிடிக்கவும் *(1 நாள் 22:12)* தீயவழியை விலக் கவும் *(பழ 2:11)*, பாதுகாப்பாக நடத்தவும் *(பழ 3:21)* ஒருவரை தூண்டுகிறது. பன்மை யில் உபயோகிக்கும்போது (யோபு *21:27*; சங் *9:2*; பழ *12:2*; *24:8*) இவை நகைச்சுவை

யான கண்டுபிடிப்புகளையும் (பழ 8:12) அல்லது தீய உபாயங்களையும் (பழ 14:17) குறிப்பிடுகின்றன (காண்க யோபு 21:27; சங் 10:2.4; பழ 12:2; 24:8).

விவேகம் என்னும் சொல்லானது தந்திரமாய் இருப்பதிலிருந்து வருகிறது. ஆனால் இது ஞான இலக்கியத்தில், நல்ல பொருளில், தவறானபடி சொல்லாமல் ஒருவரை நிலை நிறுத்தும் திறனான 'கூரிய அறிவைக்குறிப்பிட்டு பயன்படுத்தப் படுகிறது. இச்சொல்லானது ஆதி.3:1–இல் பாம்பிற்குச் சாற்றிக் கூறப்படுகிறது. யாத் 21:14; யோசு.9:4 ஆகியவற்றில் தீயபொருளில் பயன்படுத்தப்படுகிறது. புதிய ஏற்பாட்டில் விவேகம் (புரிந்துகொள்ளுதல்), குறிப்பாக இறைவனது சித்தத்தை அறிதலையும் அதை அன்பு செய்தலையும் (எபே 1:8) மற்றும் ஞானத்தோடு செயல்படு தலையும் (லூக் 16:8) மொழி பெயர்க்க உதவுகிறது. இச்சொல் அதன் சொல்லியல் பொருளான முன்னறிவு, முன்நோக்கு என்ற பொருளில் புதிய ஏற்பாட்டில் காணப்படவில்லை: ஆயினும் இது பற்றிய பிரதிபலிப்பு லூக் 16:8–இல் காணப்படுகிறது.

திறந்த மனதுடைய ஆனால் வழி நடத்த யாருமின்றி எளிதில் தவறான வழியில் செல்லக்கூடியவர்களான எளியோர், கற்றறிவில்லாதவர் ஆகியோருக்கு விவேகம் கற்பிக்கப்படுகிறது. கூரிய அறிவு என்ற பொருளில் விவேகம் "பாம்பின் விவேகத்தையும் புறாவின் கபடமற்ற தன்மையையும்" (மத் 10:16) இணைப்பதாகத் தெரிகிறது.

## அறிவு நெறிக்கோட்பாடு (GNOSTICISM)

1. கி.பி.இரண்டாம் நூற்றாண்டில் தோன்றியதாகக் கருதப்படும் இம்மறை பலமதக் கூறுகளைத் தன்னகத்தே கொண்டதாகும். அறிவு நெறிக்கோட்பாடு சம்பந்தப்பட்ட இம்முறையின் கருத்துக்களும், கோட்பாடுகளும் யூத மறையின் கருத்துக்கள் பலவற்றோடு ஒத்திருக்கின்றன. பவுல் மற்றும் பேதுரு தங்கள் மடல்களில் குறிப்பிடும் கருத்துக்கள் சிலவற்றையும் இக்கோட்பாடு தன்னுடையதாக ஏற்றுக்கொண்டுள்ளது.

இதன் மையக்கோட்பாடு, மேலாண்மையும் எடுத்தியம்ப முடியாதவருமான அன்பின் இறைவனுக்கும், தீமையான பருப்பொருள் உலகுக்குமிடையேயுள்ள இருபொருள் வாதமாகும். இறைவனுக்கும் பருப்பொருளுக்கும் இடையில் ஆன்மீக ஆற்றல்களின் கூட்டம் உள்ளது. இது இறைவனின் "முழுமை" என்று அழைக்கப் படுகிறது. இவற்றில் மிகத் தாழ்ந்ததிலிருந்து படைப்பவர் தோன்றுகிறார். இவர் பழைய ஏற்பாட்டில் யாவேயோடு அடையாளம் காட்டப்பெறுகிறார். வீழ்ச்சியடைந்த ஆன்மீக ஆற்றல்கள், இப்போது உலகை ஆள்கின்றன.

சில மனிதர்கள் (அறிவு நெறிக்கோட்பாளர்கள்) இறைத்தன்மையுடைய ஒளிச் சிதறலைக் கொண்டிருக்கின்றனர். இது உடல் ஆன்மாவிலிருந்து வேறுபட்ட உள்ளார்ந்த உள்ளுயிராகும். உடலில் சிறைப் படுத்தப்பட்டிருந்தாலும், அதன் உண்மையான இல்லம் "முழுமையாகும்". வெளிப்பாட்டின் வழி இந்த அவல நிலையை உணரவேண்டும். இந்த அறிவு ஒருமுறை மீட்பரால் கொணரப்படுகிறது. இந்த அறிவின் துணையால் அவர்கள் அவர்களுடைய இல்லத்திற்கு எழும்பவேண்டும். இந்த அறிவு புத்தியால் வருவதன்று. மறை மெய்மை சார்ந்ததாகும். உண்மையான பார்ப்பதும் கேட்பதுமாகும்.

கோட்பாட்டில் மீட்பு இறைவனில் மையம் கொள்ளவில்லை. மாறாக இறுதியில் ஒரு நபரின் சுய அறிவும், அதனால் விளையும் சுதந்திரமும் ஆகும்.

இக்கோட்பாட்டு இயக்கம் பற்றிய செய்திகள் பெரும்பாலும் திருச்சபைத் தந்தையரின் நூல்களிலிருந்து கிடைத்தவையே. 20–ஆம் நூற்றாண்டுக்குமுன் இக் கோட்பாடு அடங்கிய வாசகங்கள் சிலவே அறியப்பட்டிருந்தன. 1946–இல் எகிப்தில் நாக் கம்மாத் என்ற இடத்துக்கு அருகில் 13 கோப்டிக் வாசகத் தொகுப்புகள் கண்டு பிடிக்கப்பட்டன. இவற்றில் மிகவும் சிக்கலான, ஆனால் கிறிஸ்தவ பாதிப்பு குறைந்த, இயக்கத்தைக் காண்கிறோம். இவ்வியக்கம் பிளேட்டோவின் தத்துவ இயலிலும், கீழைய சமயங்களிலும், யூதத் துவத்திலும், கிறிஸ்துவத்திலும் தன் வேர்களைக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது.

2. புதிய ஏற்பாடும், இந்த இயக்கமும்:-

கி.பி. முதல் நூற்றாண்டின் பின் பகுதியில் இந்த இயக்கத்தின் பல வடிவங்களும் ஒன்று சேர்ந்தபோது, புதிய ஏற்பாட்டுத் திருச்சபை இவ்வியக்கப் பாதிப்புடைய பல பொய் போதகங்களை எதிர்கொள்ள வேண்டியிருந்தது.

பவுல், இவ்வியக்கத்தின் கூறுகளால் பாதிக்கப்பட்ட கலாச்சாரத்தாடு மோத வேண்டியிருந்தது. கொரிந்திலுள்ள தனது எதிரிகளை 'அறிவு இறுமாப்பு" கொண்டவர்கள் என்று கூறுகிறார் (1 கொரி 8:1). இவர்கள் மறைமைத் தன்மையுடைய அறிவை வலியுறுத்தி தங்களை முதிர்ந்தவராகக் கற்பனை செய்துகொண்டு, ஒரு உயர்குழுவினராகக் கருதுகின்றனர் (2:6). கட்டியெழுப்புவது அறிவல்ல, அன்பே (8:1; 13:8); இரகசிய ஞானமன்று, சிலுவையின் மடமையேயாகும் (1:8; 2:7–8); ஆன்மீக உயர்வுக்குழுத்தன்மையன்று, கிறிஸ்துவின் மனமே (2:16; பிலி 2:5 தொ) என்று பவுல் வாதாடுகிறார்.

கொலோசையருக்கு எழுதும்போது பவுல், கிரேக்கச் சிந்தனையும் கலப்பு யூதமும் இணைந்து அறிவியல் கோட்பாட்டுத் தொடக்கமான போதகத்திற்குச் சவால் விடுகிறார். கிறிஸ்து இறை முழுமையில் ஒரு பகுதியேயாகும் என்று இந்தக் கோட்பாடு கூறியது. இதற்கு மாறாக கிறிஸ்து இறைவனின் சாயலாகும் என்றும், எல்லா ஆன்மீகச் சக்திகளை யும் ஆள்பவராவார் என்று பவுல் வலியுறுத்துகிறார் (கொலோ 1:15). பூதங்களின் ஆட்சியிலிருந்து தப்ப, துறத்தலை இப்பதிதம் போதித்தபோது (2:21–இதைத் தொடாதே, அதைச்சுவைக்காதே, இதில் கைவைக்காதே" என்று தடுக்கிறார்கள்), பவுல் கிறிஸ்துவின் விடுதலை அளிக்கும் ஆற்றலைப் பறைசாற்றுகிறார் (2:11–15; 3:10).

மேய்ப்புப் பணி திருமுகங்கள் அறிவு நெறிக்கோட்பாட்டின் வளர்ச்சி பற்றிய தெளிவானபடம் அளிக்கின்றன. 1 திமோத்தேயுவில் ஆசிரியர் யூதப்புராணங்களிலும் தலைமுறைப் பட்டியலிலும் கவனம் செலுத்தும் (1:4; 4:7; காண்க: தீத் 1:14) ஞானத்தைப் (1 திமோ 6:20) போதிக்கும், தங்களையே சட்டத்தின் போதகர்கள் என்று கூறிக்கொண்டவர்களை கண்டனம் செய்கிறார் (6:4). அவர்கள் ஏற்கனவே நிகழ்ந்துவிட்ட ஒரு ஆன்மீக உயிர்த்தெழுதலை அறிவிக்கின்றனர் (2 திமோ 2:18). மேலும் உணவு (1 திமோ 4:3) திருமணம் (2:15;5:14; தீத் 2:4) ஆகியவற்றில் துறத்தலைப் போதிக்கின்றனர். இதை பிற்கால அறிவு நெறிக்கோட்பாடு மாற்றி கொண்டது.

1 யோவானில் ஆசிரியர் தனது ஒழுக்க இருபொருள் வாதத்தை (ஒளி/இருள் 1 யோவா 1:5–65: இறைவன்/ தீயவன் 5:19) உயிர் தத்துவமாக எடுத்துக்கொண்டு போதித்த போலிப் போதகர்களை எதிர்க்கிறார். இப்படித் தவறாக எடுத்துக் கொண்டதின் விளைவாக மனிதவதாரத்துக்குப் பதிலாக முழுவதும் ஆன்மீகக் கிறிஸ்துவையும் விசுவாசத்திற்குப் பதிலாக அறிவையும் போதித்தனர்.

பரிகாரத்திலிருந்து தொடர்பற்ற (2:2; 5:6–10) பாவமற்ற மிக உயர்ந்த ஆன்மீக நிலையைக் கொண்டிருப்பதாக (1:7–8) போலி உரிமை கொண்டாடினர். கொரிந்தியர்களைப்போல, இவர்களும் ஒழுக்கவியலுக்குப் புறம்பான ஒரு ஆன்மீகத்தைப் போதித்தனர் (2:3.10–11). இயேசு கிறிஸ்துவில் வெளிப்படுத்தப்பட்ட அன்பின் இறைவனை மறுக்கும் (4:8) இவர்கள் உண்மையில் 'எதிர்க் கிறிஸ்துவை ஏவும் ஆவியைக்' கொண்டிருக்கின்றனர் (4:3). இவர்கள் வஞ்சகர்களும் ஏமாற்றுகிறவர்களுமாவர் (2 யோவா 7).

"ஆழ்ந்த ஞானம்" என்பது அறிவு நெறிக் கோட்பாட்டின் ஒரு பதமாகும். இப்படிப்பட்ட ஞானத்தைக் கொண்டிருப்பதாக பெருமைபட்டுக்கொள்ளும் நிக்கொலாயர் (திருவெளி 2:6.15.24) தொடக்க கால அறிவு நெறிக் கோட்பாட்டாளர்களாக இருக்கலாம் என்று அறிஞர்கள் கருதுகின்றனர். இந்த ஆன்மீக விபச்சாரத்திற்கும் ஒழுக்கக் கேட்டிற்கும் (2:20) எதிராக விசுவாசிகள் மனவுறுதியோடு நிலை நிற்க வேண்டும் (2:3.25).

3. அப்போஸ்தலர்களின் காலத்துக்குப் பின் அறிவு நெறிக்கோட்பாடு :-

இந்த இயக்கம் முதல் நூற்றாண்டின் பிற்பகுதியில் நிலையான வடிவம் எடுக்கத் தொடங்கியது. இவ்வியக்கத்தில்

சீமோன் மாகஸ் (அ.ப. 8:9–24) செரிந்தஸ், மாச்சியோன், வலென்தீனூஸ், பாசிலிதெஸ் ஆகியோர் முக்கியமானவர்கள்.

கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் இந்த இயக்கம் விரைவாக வீழ்ச்சியுற்றது. இதை கிறிஸ்துவம் காப்புரைத் தாக்குதல்களாலும் திட்டமிட்ட விவிலிய இறையியல் நூல்களாலும் எதிர்த்தது. 4–ஆம் நூற்றாண்டில் அறிவு நெறிக்கோட்பாடு மனிக்கேயித்துவத்தில் புத்துயிர் பெற்றதாக தெரிகிறது. அடிப்படையான இருள் பொருள் வாதத்தைக்கொண்ட மனிக்கேயித்துவம் பலருடைய கவனத்தைக் கவர்ந்தது. அகுஸ்தினார் இளைஞனாக இருந்த போது இதனால் பாதிக்கப்பட்டார். அறிவு நெறிக்கோட்பாடு, ஓர் இயக்கம் என்ற அளவில் அழிந்து போயிற்று.

4. மதிப்பீடு:- இவ்வியக்கம் கிறிஸ்துவத்தை அமிழ்த்தி அழித்துவிட அச்சுறுத்தியது. அதன் கற்பனைமிக்க புராணங்களும் அடிப்படை அகவியலும் பலரைக் கவர்ந்தது. இந்த இடுக்கண் நிலையிலிருந்து தன்னைப் பாதுகாத்துக்கொள்ள, தொடக்க காலத்திருச்சபை அதிகார அமைப்புகளை (ஆயர்குழு, சட்டங்கள்) வளர்த்துக்கொண்டது. விவிலிய விளக்கவுரைகளையும் திட்டமிட்ட இறையியலையும் வளர்த்தது. அறிவு நெறிக்கோட்பாட்டை நிராகரித்ததில் பழைய, புதிய ஏற்பாடுகளுக்கிடையில் உள்ள ஒற்றுமை, படைப்பவர், மீட்பர், அன்பின் முதன்மை ஆகியவற்றை திருச்சபை வலியுறுத்தியது. திருச்சபையின் தந்தையர் இந்த இயக்கத்தின் சில கூறுகளைப் பயன்படுத்தினாலும் திருச்சபையில் யூஸ்தீன இரனேயு, தெல்துல்லியன், கிப்போலித்தஸ், எப்பிபானியஸ்' போன்றவர்களின் காப்புரை நூல்கள் இவ்வியக்கத்தை மறுத்துப் போராடின. இவ்வியக்கம் எழுப்பிய "நாம் யாராய் இருந்தோம், என்னவாக இருக்கிறோம், எதனால் மீட்கப்பட்டோம் எதை நோக்கிப் போகிறோம்" போன்ற கேள்விகளுக்கு கிறிஸ்தவப் பதில் போதியது என்று காட்டுகின்றன.

**அறிவுரை கூறுதல்** (EXHORT)

தூண்டுதல் உரை (கிரேக்க மொழியில் பாராகிளேசிஸ்) என்பது அருட்கொடைகளின் பட்டியலில் (உரோ 12:8) ஒரு முறை தான் இடம்பெறுகிறது. இருப்பினும் அது அப்போஸ்தலர், இறைவாக்கினர், மூப்பர் ஆகியோரின் முக்கிய அலுவல்களில் ஒன்றாகும். இத்திருப்பணி பழைய ஏற்பாட்டுச் சமய வாழ்விலும் யூதமதத்திலும் வேரூன்றியது. அப்பணி இன்றும் திருச்சபையில் தொடர்கிறது.

1. பழைய ஏற்பாடு :-

இறைவனுக்குச் சான்று பகர்ந்தவர்கள் அவரது மீட்புத்திட்டத்தை உள்ளார்வமின்றி வெறுமனே எடுத்துரைத்து மன நிறைவு கொள்ளவில்லை. குருக்கள் (உப 4–11), இறைவாக்கினர் (ஏச 1:16...) ஞானிகள் (பழ 1–9) ஆகியோர் ஆற்றிய பேருரைகள் கேட்போரின் அறிவை மட்டுமன்றி உள்ளத்தையும் தொட்டன. இவர்கள் தங்கள் பேருரைகளால் மக்களைத் தம்பால் ஈர்த்து உற்சாகப்படுத்துகிறார்கள்: தொடர்ந்து இறைவனின் பெயரால் பேசி, மக்கள் அவருக்குச் செவிமடுக்கவும், மனந்திரும்பவும் அவரைத் தேடவும் தூண்டுகிறார்கள். மிகப் பழக்காலந் தொடங்கி மக்கபேயர் காலமட்டும் இத்தகைய தூண்டுதலையும் வேண்டுகோளையும் காண்கிறோம்: ஆண்டவருக்கும் அவரது திருச்சட்டத்திற்கும் துணிவோடு பிரமாணிக்கமாய் இருப்பதற்குத் தூண்டுதல் தராத போதனையே இல்லை (உப 5:32; 6:4 தொ; 32:45 தொ). இவ்வாறு, குறிப்பாகச் சமயத்திற்காகத் துன்புறுத்தப்பட்ட காலத்திலும் (2 மக் 7:5), புனிதமான போர் மூண்ட காலத்திலும் (2 மக் 8:16; 13:12.14), இருந்தது.

2. புதிய ஏற்பாடு :-

புதிய ஏற்பாட்டின் தொடக்கத்தில் திருமுழுக்கு யோவான் இப்பாரம்பரியத்தைத் தொடர்கிறார்: "பல அறிவுரைகள் கூறி மக்களுக்கு நற்செய்தி அறிவித்தார்" (லூக் 3,18). இயேசுவும் தம்மில் தோன்றிய இறையரசின் நற்செய்தியை அறிவித்து, அவ்வரசின் மறையுண்மைகளை வெளிப்படுத்தியதோடு மனநிறைவு கொண்டாரல்லர். அவ்வரசில் மக்கள் நுழைய வேண்டுமென்று வருந்தி அழைக்கிறார்; எவ்வாறெனில் மக்கள் மனந்திரும்பவும், நற்செய்தியை விசுவசிக்கவும், தம்மைப் பின்பற்ற

வும், தம் போதனையைக் கடைப் பிடிக்க வும் அவர்களை ஆர்வத்துடன் அழைக்கி றார். அவ்வாறே அப்போஸ் தலர்களும், தம் போதனையைக் கேட்டுத் திருமுழுக்குப் பெற (அ.ப. 2:40) மக்களை வருந்தி அறி வுறுத்தி வேண்டுகிறார்கள். கிறிஸ்துவ சமுதாயங்களில் பவுல் தம் உரைகளால் மக்களுக்கு ஞான வளர்ச்சி தருகிறார்; ஊக்கம் ஊட்டுகிறார்; ஆறுதல் அளிக்கி றார் (1 கொரி 14,3); இவ்வாறு தான் திமோத்தேயுவும் தீத்துவும் செய்திருக்க வேண்டும் (2 திமோ 4:2; தீத் 1:9). இவை யாவும் அப்போஸ்தலிக்கத் திருப்பணி யின் முக்கிய பொறுப்புக்களில் ஒன்றை நிலைத்திருக்கச் செய்கின்றன (அ.ப. 11:23; 14:22; 15:32;16:40; 1 தெச 3:2). இப்பொறுப்புப் பற்றி பவுலும் விளக்கிக் கூறுகிறார்: "நாங்கள் பேசுவது கடவுளே அறிவுறுத்து வது போலாகும்" (2 கொரி 5:20; 1 தெச 2:13). இவ்வாறு புதிய ஏற்பாட்டு நூல்களும் பல்வேறு தூண்டுதல் உரைகளைக் கொண் டுள்ளன. எபிரேய ருக்கு எழுதிய திருமுகம் (எபி 13:22), பேதுருவின் முதல் திருமுகம் (1 பேதுரு 5:12) ஆகியவற்றின் முக்கிய குறிக் கோள் தூண்டுதல் உரை தருவதே. மேலும் சாதாரணக் கிறிஸ்தவர்களும் திருச்சபை யின் வளர்ச்சியைக் கண்முன் கொண்டு தூண்டுதல் உரை தந்து ஒருவர் ஒருவரை ஊக்கமூட்ட வேண்டும் (2 கொரி 13:11; எபி 3:13; 10:25).

### அறுநூற்று அறுபத்தாறு

திருவெளிப்பாட்டு நூலில் வரும் விலங் கின் பெயரைக் குறிக்கும் எண்ணாகும் (13:18). இந்த எண் 13:1–இல் வரும் விலங் கைக் குறிக்கிறது. இந்த விலங்கின் பெய ரையோ அல்லது பெயரின் எண்ணையோ கொண்டிராதவர்கள் வியாபாரத்தில் ஈடு படமுடியாது. ஆசிரியர், வாசகர்களின் புத்திக்கூர்மைக்கு இந்த எண்ணைக் கணிக்க ஒரு சவாலாக விட்டுவிடுகிறார்.

அராபிய எண்கள் வழக்கில் வருமுன், எழுத்துக்கள் ஒலியையும், எண்ணையும் குறித்தன. "அது ஒரு மனிதனைக் குறிக் கும் எண்" என்பதற்கேற்ப, விலங்கின் எண் ஒரு குழுஉக்குறியல் அடையாள மாகக் கருதப்பட்டது. இதன்படி ஒரு வரின் பெயர் அப்பெயரில் காணப்படும் எழுத்துக்களின் எண்களின் கூட்டுமதிப் பாகக் கருதப்பட்டது.

இரேனேயு காலத்திலிருந்து, எபிரேய, கிரேக்க எழுத்துக்களின் எண் மதிப்பை வைத்து இந்த எண் குறிப்பது யார் என்று கண்டுபிடிக்க முயற்சிகள் எடுக்கப்பட் டுள்ளன. அவற்றின் விளைவாக, நீரோ சீசர், தோமிசியன் சீசர் போன்றவர்கள் அடையாளம் காட்டப்பட்டுள்ளனர்.

சில விளக்கவுரையாளர்கள் கருத்துப் படி விலங்கின் எண், திருவெளிப்பாட்டு நூலுக்குப் பிந்திய காலத்தை சேர்ந்த ஒருவரைச் சுட்டிக்காட்டுகிறது. ஆகை யால் நூலின் முதல் வாசகர்கள், இங்கே சுட்டிக்காட்டப்படும் ஆளையோ (நிறுவ னத்தையோ) அறிந்திருக்கமாட்டார்கள். இந்த அள், சாதாரணமாய் காலமுடிவில் வரும் "எதிர்க் கிறிஸ்து" என்று புரிந்துக் கொள்ளப்பட்டார். ஆனால் இந்தப்பதம் இந்நூலில் காணப்படவில்லை. இந்த அடிப்படையில் இக்காலம்வரை வரலாற் றில் இருந்திருக்கிற அரசியல், சமய, படைத்தலைவர்கள், நிறுவனங்களில் இந்த விலங்கை அடையாளம் காட்ட முயற்சிகள் எடுக்கப்பட்டுள்ளன. ஒரு வேளை திருவெளி – 13, உரோமைப் பேரர சின் படைப்பலத்தையும் சமயச்சடங்கு முறைகளையும் இந்நூல் எழுதியபோது இப்பேரரசு கிறிஸ்தவர்களைக் கொடு மைப்படுத்தியதையும் விவரிக்கலாம்.

இந்த எண் "ஒரு மனித எண்" அல்லது "மனுக்குலத்தின் எண்" என்றும் "ஒரு ஆளின் எண்" அல்ல, ஆகையால் இது பெயரோடே தொடர்புடையதல்ல என்றும் எடுத்துக்கொள்ளலாம். இதன்படி, திரு வெளிப்பாட்டு நூலில் வரும் மற்ற எண் களுக்கு விளக்கம் அளிக்கு முறையிலேயே இதற்கு விளக்கம் அளிக்கலாம். இந் நூலில் எண் ஏழு முழுமையை நிறைவைக் குறிப்பதாகக் கருதப்படுகிறது. ஆறு ஏழி லிருந்து ஒன்று குறைந்தது. அதனால் 666 குறைபாடுகளின் கூட்டமைப்பைக் குறிக் கிறது. இதை விலங்கின் அடையாளத்தை நெற்றியிலோ கையிலோ கொண்டிராத இறைமக்களைத்தவிர மற்றவர்கள் எல் லாம் அடையாளமாகப் பெற்றிருந்தனர்.

**அறுவடை** (HARVEST)

இது விவசாய விளைச்சலை அறுத்து ஒன்று சேர்த்தலைக் குறிப்பிடுகிறது. கெசேர் ஆண்டுக்குறிப்பு பழங்கால இஸ்ராயேல் அறுவடை நாட்களுக்கு ஒரு குறிப்பு தருகிறது. செப்டம்பர் மத்தியிலிருந்து நவம்பர் மத்திவரை உட்பட்ட வருடத் தொடக்கத்தில் ஆலிவப் பழங்கள், தொரட்டிகளால் அறுவடை செய்யப்பட்டன. மார்ச் ஏப்ரலில் சணல் அறுவடை செய்யப்பட்டிருக்கிறது (யோசு *2:6*). பார்லியின் அறுவடை ஏப்ரல்–மே மாதங்களில், கோதுமை அறுவடை மே–ஜூன் மாதங்களில் நடந்திருக்கிறது. ஆகஸ்ட்–செப்டம்பர் மாதங்களில் கோடை கால பழங்களான அத்தி, திராட்சை, மாதுளை போன்றவை அறுவடை செய்யப்பட்டன.

அறுவடையில் குடும்பம் முழுவதும், கூலியாட்களும் ஈடுபட்டனர். எல்லா இஸ்ராயேலரும் பங்கெடுக்க வேண்டுமென்று எதிர்ப்பார்க்கப்பட்டது (பழ *16:5*; *20:4*). தானியங்களும் மற்ற பொருட்களும் கையால் சேர்க்கப்பட்டன. பெரும்பாலும் அரிவாள் பயன்பட்டது (யோவே *3:13*; மாற் *4:29*). மற்ற விளைச்சல்களை அறுவடை செய்ய தொரட்டி போன்ற கருவிகள் பயன்பட்டன (ஏச *17:6*).

பழங்கால இஸ்ராயேல் முதன்மையாக விவசாய சமூகமாகும். அதன் முக்கிய அறுவடைக்காலங்கள் மூன்று முதன்மையான பெரும் விழாக்காலங்களைக் கொண்டிருந்தன. பார்லி அறுவடைத் தொடக்கத்தில் (ஏப்ரல் மாதம்) பாஸ்கு விழாவும் (யாத் *34:18–20*) கோதுமை அறுவடைச் சமயத்தில் (மே–ஜூன்) ஐம்பதாம்) நாள் விழாவும் (லேவி *23:15–21*; யாத் *23:16* : இது அறுவடை விழா என்றழைக்கப்பட்டது) திராட்சை அறுவடை முடிவில் (செப்டம்பர், அக்டோபர்) கூடார விழாவும் (உப *16:13–16*; யாத் *23:16*) கொண்டாடப்பட்டன.

எல்லா விளைச்சலும் இறைவனுடைய கொடையாகக் கருதப்பட்டதால், முதற்பலன்களின் ஒரு பகுதி காணிக்கையாக ஒப்புக்கொடுக்கப்பட்டது (லேவி *19:23– 25*; *23:10*; யாத் *22:29*). அன்னியர், அனாதைகள், விதவைகள் ஆகியோர்பால் கொண்ட அக்கறையினால் அவர்கள் பொறுக்கிக் கொள்ளும்படி விளைச்சலில் ஒரு பகுதி அறுவடை செய்யாமல் விடப்பட்டது (லேவி *19:9*; *23:22*; உப *24:19–20*; ரூத் *2*).

உருவக முறையில் இறையரசுக்காகத் தங்களை அர்ப்பணிப்பதை அறுவடைக்கு இயேசு ஒப்பிடுகிறார் (மத் *9:37*; *13:30*; யோவா *4:35*). மற்ற இடங்களில் அறுவடை காலமுடிவை அடையாளமாகக் குறிக்கிறது (மத் *13:39*; திருவெளி *14:15*). அழிந்துபோன அறுவடையின் பயங்கர விளைவுகள் இறை தண்டனையையும் (ஏச *16:9*; *17:11*; எரே *5:17*), ஆண்டவரின் பயங்கர நாளையும் (எரே *51:33*; யோவே *3:13*) சித்தரிக்கிறது.

**அனகராத்து** (ANAHARATH – *அழிக்காதே, விரைவாக விழுங்காதே)*

இசிரியேல் பள்ளத்தாக்கிலுள்ள ஒரு நகர், இசக்காரின் பாகமாகக் கொடுக்கப்பட்டது (யோசு *19:19*). மூன்றாம் துத்மேசேயால் பிடிக்கப்பட்ட நகரங்களின் பட்டியலில் காணப்படுகிறது. இது ஏந்தோருக்குத் தெற்கே 3 கி.மீ. தொலைவிலுள்ள நா–ஊரா என்று அடையாளம் காட்டப்படுகிறது.

**அனத்தோத்து** (ANATOTH – *பதிலான)*

பென்யாமினைச் சேர்ந்த ஒரு லேவிய நகரம் (யோசு *21:18*; *1* நாள் *6:60*). எருசலேமுக்கு வடக்கில் இருந்தது. அனத்தோத்து என்பது பேத் – அனத்தோத்து என்பதின் சுருக்கமாக இருக்கலாம். இதிலிருந்து கானானியர்கள் வணங்கி வந்த அனாத்து என்ற தேவதையின் புனித இடம் இது எனத் தெரிகிறது. தேவதையின் இரு வீரர்களான அபியேசர், ஏகூ ஆகிய இருவரின் பிறப்பிடம் இதுவே (*2* சாமு *23:27*; *1* நாள் *11:28*; *12:3*). ஏலியின் வழிவந்த இறுதி தலைமைக் குருவான அபியத்தார், அனத்தோத்தில் உடைமைகள் கொண்டிருந்தார். அவர் பதவியிலிருந்து நீக்கப்பட்டபோது இவ்வூருக்கே செல்லும்படி சாலமோன் கட்டளையிட்டார் (*1* அர *2:26*).

இந்நகரம் இறைவாக்கினர் எரேமியாவின் பிறப்பிடம் ஆகும் (எரே *1:1*). இவர் முதன் முதலில் இறைவாக்குரைப்பு

எதிர்ப்பைக் கண்டதும் இந்நகரிலேதான். இவ்வூர் மக்கள்மேல் வர இருக்கும் தண்டனையை முன்னறிவித்தார் (எரே 11:21–23). ஆயினும் இந்நகரில் அவருடைய பெரியப்பாவின் மகனது நிலத்துச் "சொத்துரிமையையும் மீட்கும் உரிமையையும்" விரும்பி வாங்கிக்கொண்டார் (32:7–9). பாபிலோனியர் எருசலேம் மீது படையெடுத்தபோது இந்நகரம் பாழாக்கப்பட்டது (ஏச 10:30). ஆனால் நாடு கடத்தப்பட்டு திரும்பியபின் நெகமியா காலத்தில் பென்யாமின் குலத்தவர்கள் மீண்டும் இங்கு குடியேறினர் (நெக 11:32). அனாத்தோத்தின் மக்கள் என்பது ஒரு குடும்ப குழுவா அல்லது புவியியல் பட்டமா என்பது பற்றி நாடு கடத்தப்பட்டு திரும்பியவர்களின் பட்டியலில் தெளிவாக இல்லை (எஸ் 2:23; நெக 727; 10:19). அனாத்தா என்ற இக்கால நகரம் எருசலேமுக்கு வடகிழக்கில் 5 கி.மீ. தொலைவில் உள்ளது. பழங்கால லேவியர் நகரத்தை நினைவுபடுத்துகிறது. ஆனால் விவிலிய நகரின் இடம் அனாத்தாவுக்கு தென்மேற்கில் ஒரு கி.மீ. தொலைவிலுள்ள ராஸ்–ஏல்–கரூபேயாக இருக்கலாம்.

**அனம்மெலேக்கு** (ANAMMELECH – *அனு அரசன் ஆவார்)*

கி.மு. 722–க்குப் பிறகு சமாரியாவில் குடியேற்றப்பட்ட செப்பர்வாயிம் மக்களால் வணங்கப்பட்டு வந்த தெய்வங்களுள் ஒன்று இந்தத் தேவதையாக இருக்கலாம் (2 அர 17:31). செப்பர்வாயிம் சீரியாவில் உள்ள சப்ராயிம் ஆக இருக்கலாம். இம் மக்கள் தங்கள் பிள்ளைகளையே அத்தெய்வங்களுக்கு எரிபலியாக ஒப்புக் கொடுத்ததாகத் தெரிகிறது. எனினும் மெசபொத்தாமியாவில் இந்த வழிபாட்டில் இத்தகைய பழக்கம் இருந்தது என்பதற்கு ஆதாரம் எதுவும் இல்லை.

**அனயேல்** (ANAEL)

தோபியின் சகோதரர். இவரது மகன் அகிக்கார் சனகெரிபின் விருந்தில் பானம் பரிமாறுபவனாகவும், கணக்குப் பிள்ளையாகவும், தலைமை ஆளுநராகவும் இருந்தவர் (தோபி 1:21–22).

**அனனியா** (ANANIAH – *யாவே தம்மை வெளிப்படுத்தியுள்ளார்)* – ஆள்

மாசேயாவின் தந்தை. மாசேயாவின் மகன் அசரியா, நெகமியாவின் தலைமையில் எருசலேம் மதிற்சுவர் கட்டி எழுப்புவதற்கு உதவினார் (நெக 3:23).

**அனனியா** (ANANIAH)–இடம்

பாபிலோனின் அடிமைத்தனத்திலிருந்து திரும்பியபின் பென்யாமின் குலத்தவர் குடியேறி வாழ்ந்த இடம் (நெக 11:32). இவ்விடம் எருசலேமிற்குக் கிழக்கில் 3 கி.மீ அப்பாலுள்ள இக்கால ஏல்–அசரியாவாக (புதிய ஏற்பாட்டில் பெத்தானியாவாக) இருக்கலாம் என யூகிக்கப்படுகிறது. இவ்விடத்தில் அனனியாவின் குடும்பத்தினர் குடியேறி வாழ்ந்ததால், இவ்விடம் இப்பெயர் பெற்றிருக்கலாம். இது அனனியா வீடு என்று பொருள்படும் பெத்தானியா என்ற புதிய ஏற்பாட்டுப் பெயரை விளக்கலாம்.

**அனனியா** (ANANIAS - *யாவே பெருந்தன்மை உடையவர்)*

*1.* எருசலேமில் வாழ்ந்த கிறிஸ்தவனும், சப்பீராவின் கணவனுமாவார் (அ.ப. 5:1. 3.5). இவர் தனது உடைமைகளை விற்று தனது சகோதரரோடு பகிர்ந்துகொள்ள முன்வந்தவர். ஆனால் தனது மனைவியின் தூண்டுதலால் தனக்கென ஒரு பகுதியை ஒதுக்கியபிறகே அப்போஸ்தலர்களுக்கு முழுமையாக அளிப்பது போல் அளிக்கவே, பேதுரு அவர்களுடைய கபடத்தை எடுத்துச் சொல்லவே அதே இடத்தில் இருவரும் இறந்தனர் (அ.ப. 5:1–11). அனனியாவின் கொடை பரிசுத்த ஆவியால் துண்டப்படவில்லை. பிறர்முன் நற்பெயர் பெற பாவலாச் செய்த பாவமாகும். இந்த நிகழ்ச்சியுரை எரிகோவின் கொள்ளைப் பொருட்களில் ஒருபகுதியைத் திருடி வைத்துக் கொண்ட ஆக்கானின் நிகழ்ச்சி யுரைக்கு ஒத்ததாகக் காட்டப்படுகிறது (யோசு–7). அனனியா–சப்பீராவின் மரணம் அதிர்ச்சியால் ஏற்பட்டிருக்கலாம். ஆனால் அவர்களுடைய ஏமாற்றும் எண்ணத்திற்கு அளிக்கப்பட்ட இறை தண்டனையாகக் காட்டப்படுகிறது.

*2.* தமஸ்குவில் வாழ்ந்த ஓர் கிறிஸ் தவச் சீடர் (அ.ப. 9:10.12–13.17; 22:12). சவுல் மனந்திரும்பிய அனுபவத்தைக் காட்சியில் கண்டவர். குருடான சவுல் மீண்டும் கண் பார்வை பெற உதவி, பவுலை தமஸ்குவி லுள்ள கிறிஸ்துவ சமூகத்திற்கு அறிமுகம் செய்தவர் (9:10–18). இந்தப் பக்திமானைப் பற்றி பவுலே போற்றிப் பேசுகிறார் (22:12–16). இவரைப்பற்றி புதிய ஏற்பாட் டில் வேறொரு செய்தியும் தரப்பட வில்லை. இவர் பவுல் மனந்திரும்பியது பற்றிய மூன்றாம் விவரிப்பில் குறிக்கப்படு கிறார் (அ.ப. 26). பிற்காலப் பாரம்பரியம் இவர் தமஸ்குவில் ஆயரானதாகவும் மறை சாட்சியாக மரித்ததாகவும் கூறுகிறது.

*3.* நெபெதேயுவின் மகனாகிய இவர் கி.பி. 48–ம் வருடத்திலிருந்து தலைமைக் குருவாக இரண்டாம் ஏரோது அகிரிப்பா வால் நியமிக்கப்பட்டவர். அ.ப. 23:2–இன் படி இவர் பவுலுக்கு எதிராக யூதர்கள் கொண்டு வந்த குற்றச்சாட்டை உறுதி செய்யும் பொருட்டு அவரைத் தன் முன் கொண்டுவர கிளவுதியு இலிசியா என்ற உரோமை நூற்றுவர் தலைவனைக் கட்ட ளையிட்டார் (22:30). பவுல் தனது காப்பு ரையை வழங்கியபோது அவரது வயலில் அடிக்கும்படி அனனியா கட்டளையிட் டார். இதைப் பவுல் வன்மையாகக் கண்டித்தார். ஆனால் அவர் பெரிய குரு விடம் பேசுகிறார் என்பது நினைவு படுத்தப்பட்டபோது, தனது பேச்சிற்காக மன்னிப்புக் கேட்டுக்கொண்டார் (23:2–5). ஐந்து நாட்களுக்குப் பின் பவுல் ஏற் கெனவே கொண்டு செல்லப்பட்டிருந்த செசரியாவுக்கு அனனியா ஆளுநன் பெலிக்சிடம் பவுலுக்கு எதிராகத் தானே குற்றம் சாட்டிச்சென்றார் (24:1). உரோமை யரசின் கீழ் பணியாற்றிய இவர், அதிகார ஆணவமும், பேராசைமிக்கவராயும், உரோமையருக்கு ஆதரவாளராகவும் இருந்ததால் யூதர்களின் சண்டையின் போது (67–70) கொல்லப்பட்டார்.

*4.* அசரியாவின் தந்தை. இரபேல் தூதர், இப்பெயரை தனதாக்கி, தோபியா வின் தந்தைமுன் உண்மைக்கு மாறாக அடையாளம் காட்டினார் (தோபி 5:12).

5. யூதித்தின் மூதாதையரில் ஒருவர் (யூதி 8:1).

**அனனியேல்** (ANANIEL)

தோபித்தின் பாட்டனாவார். நப்தலி குலத்தில் தோன்றி அசியேலின் வழிவந்த வர் (தோபி 1:1).

**அனாக்கியர்** (ANAKIM–கழுத்து, கழுத்தணி)

அர்பாவின் புதல்வர்கள் அனாக்கின் வழித்தோன்றல்கள். இந்த அர்பா இவர் களில் மிகப்பெரியவராகக் கருதப்பட்டார் (யோசு. 14:15; 15:13). பாலஸ்தீன நாட்டில் இஸ்ராயேல் மக்கள் குடியேறுவதற்கு முன் யோர்தானுக்கு மேற்கேயுள்ள மலைப்பகுதி யில் (11:21) குறிப்பாக கெபிரோன் பகுதி யில் (14:12–15), வாழ்ந்து கொண்டிருந்த ஓர் இனம். எபிரேய பாரம்பரியப்படி இவர் கள் "வலுத்த இனம்" "நெடிய ஆட்கள்" ஆவர் (உப 2:2; 9:2). எண் 13:33–இன்படி இவர்கள் "தெய்வப் புதல்வர்கள் மனித ரின் புதல்வியர்களுக்குப் பிறந்த" (ஆதி 6:4) நெப்பிலிமின் வழிவந்தவர்கள் என்றும் கருதப்படுகின்றனர். பாலஸ்தீனநாட்டின் வட பகுதியில் பெரும்பகுதி இவர்களின் ஆதிக்கத்தின் கீழ் இருந்தது. யோசுவா வால் அனுப்பப்பட்ட 12 வேவுக்காரர்கள் இவர்களைப்பற்றி பயங்கர செய்திகள் கொண்டு வந்தனர் (எண் 13:28; 31–33; உப 1:28). ஆனால் இஸ்ராயேலர் யோர் தானைக் கடந்தபின் அவர்கள் இந்தப் பயங்கர மக்களை வெல்வர் என்று யோசுவா இறைவாக்குரைத்தார் (உப 9:2). காலப் போக்கில் யோசுவா வந்து அனாக் கின் புதல்வர்களைக் கொன்று குவித்தார். அவர்களின் நகரங்களை எல்லாம் அழித்தபோதிலும் பெலிஸ்திய நகரங் களான காசா, காத்து, அசுதோத்து, என்ற நகர்களைச் சார்ந்த மக்களை உயி ரோடு விட்டுவிட்டார் (யோசு 11:21–23). காலேபுதான் அனாக்கின் புதல்வர் களான அகிமான், சேசாய், தால்மாய் ஆகியோரை கெபிரோனிலிருந்து விரட்டி அடித்தார் (14:12–15; 15:13–14; நீதி 1:10) காத் தைச்சேர்ந்த கோலியாத்தும் (1 சாமு 17:4) 2 சாமு 21:16–22; 1 நாள் 20:4–8–இல் குறிக் கப்படும் இராட்சதர்களும்தான் அனாக் கியரில் கடைசியானவர்கள். 2:10.20–21– இல் வரும் ஏமியர், சம்சூம்மியர் ஆகிய வர்கள் அனாக்கியர்களோடு ஒப்பிடப்படு கின்றனர். இந்த அனாக்கு வம்ச

அரசர்கள் செமித்தியப் பெயர்களை கொண்டிருந்தது எகிப்திய பழித்துரை வாசகங்களிலிருந்து தெரிகிறது. இது கி.மு. 2000–ஐ ஒட்டி அனாக்கியரின் ஒரு பிரிவினர் பாலஸ்தீனத்தில் இருந்ததைச் சுட்டுகிறது.

**அனாக்கு** (ANAK – கழுத்து, கழுத்தணி)

அர்பாவின் மகன். அகீமான், சூசாய், தால்மாய் ஆகியோரின் மூதாதையர் (எண் *13:22*; யோசு *15:13–14*; *21:11*; நீதி *1:12*). இப்பெயர் அனாக்கின் வழித்தோன்றல்களான அனாக்கியர்களின் இனப்பெயராகவும், அனாக்கியர் என்ற பெயருக்குச் சமமானதாகவும் பயன்பட்டுள்ளது.

**அனாதைகள், திக்கற்றவர்கள்**
(FATHERLESS, ORPHANS)

இச்சொல் தாய் தந்தையர் இருவரையும் இழந்தவரைக் குறிக்கிறது. ஆனால் மறை நூலில் இருபெற்றோரையும் இழந்தவரா அல்லது தந்தையை மட்டும் இழந்தவரா என்பது தெளிவாகக் குறிப்பிடப்படவில்லை. ஆயினும் மறைநூலில் இவர்கள் பொதுவாக அனாதைகள் என்றே குறிக்கப்படுகின்றனர். கைம்பெண்களும், அனாதைகளும் சேர்த்துக் கூறப்படுகின்றனர். இஸ்ராயேலில் சொத்துரிமை ஆண்களின் வழியாக வந்தது. இவர்கள் போரில் மடிந்துபோகும் வாய்ப்பு அதிகம் இருந்தது. அப்படிப்பட்ட நிலையில் குடும்பத்திற்கு ஊதியம் தேட ஒருவருமின்றியும், குடும்பத்தார் தங்கள் உரிமையைப் பிற குலத்தவர் முன் பாதுகாக்க முடியாதவர்களுமாய் இருந்தனர்; குடும்பத் தலைவனை இழந்த குடும்பத்தைச் சேர்ந்த அனைவரும் அனாதைகளாகின்றனர். ஆகவே விதவைகளும் அனாதைகளும் சேர்த்தே குறிப்பிடப்பட்டிருக்கலாம்.

அனாதைகளைக் காப்பாற்றும்படியான வேண்டுகோள் மறைநூலில் பல இடங்களில் காணப்படுகின்றது. (யாத் *22:22*; உப *10:18*; *24:17*; ஏச *1:17*; *10:12*; எரே *22:3*; செக் *7:10*; சீரா *4:10*; யாக் *1:27*). எபிரேய சட்டப்படி ஒவ்வொரு மூன்றாண்டு முடிவிலும் அளிக்கப்பட்ட பத்தில் ஒரு பங்கு வரியில் அனாதைகளுக்குத் தனிக் கவனம் செலுத்தப்பட்டது. அறுவடையின் போது தவறிவிடப்பட்ட அரிக்கட்டையையும் பழங்களையும் அனாதைகளுக்கு விட்டுவிட வேண்டும். ஏனெனில் இவர்களுக்கு உரிமையான நிலமில்லை (உப *14:29*; *24:19–21* *26:12*; *27:19*; ரூத் *2*). கடன் கொடுத்தவன் அனாதைகளிடமிருந்து அவர்களது மேலாடையை அடமானமாக எடுக்கக் கூடாது (உப *24:17*). இவர்கள் பெரும்பாலும் சமூகத்தில் ஏழைகளும் பலவீனமானவர்களுமாய் இருந்தனர். ஆகையால் நீதி கோரமுடியாத நிலையில் இருந்தனர். அனாதைகளையும், விதவைகளையும் காப்பாற்றியது தனது நேர்மைக்குச் சான்றாகும் என்று யோபு கூறுகிறார் (யோபு *6:27*; *22:9*; *24:3*; உப *27:19*; சங் *94:6*). இறைவாக்கினர்கள் அடிக்கடி அனாதைகளுக்கும் விதவைகளுக்காகவும் பரிந்து பேசுகின்றனர் (ஏச *1:17.23*; *10:2*; எரே *5:28*; *22:3*; எச *22:7*; செக் *7:10*; மலா *3:5*; சீரா *4:10*). தாமே இவர்களுக்குப் பாதுகாப்பாளராக இருப்பதாய் இறைவன் வாக்குறுதி அளிக்கிறார் (யாத் *22:23–24*; உப *10:18*; சங் *10:14.15*; பழ *23:10–11*; ஏச *9:17*). நிக்கானோரை வெற்றி கொண்டபின் யூதர்கள் கொள்ளைப் பொருளில் ஒரு பகுதியை அனாதைகளுக்கும் விதவைகளுக்கும் கொடுத்தனர் (2 மக் *8:28*). யாக்கோபின் போதனைப்படி 'தந்தையாகிய இறைவன் முன்னிலையில் புனிதமும் மாசற்றதுமான தொண்டு' அனாதைகளையும், விதவைகளையும் ஆதரிப்பதாகும் (யாக் *1:17*).

இஸ்ராயேலரிடையே புதல்வர்கள் இல்லாதபோதுதான் புதல்விகள் சொத்துரிமை பெற்றனர் (எண் *27:8*). ஆகவே தந்தையை இழந்த புதல்விகளுக்கு சமூகத்தில் தனிக்கவனம் செலுத்தப்பட்டது. சிலரின் கருத்துப்படி அனாதைப் பெண்கள் என்பவர்கள், புனித இடங்களைச் சேர்ந்த தாசிகளின் புதல்வியர்களாவர். ஏனெனில் அவர்களின் தந்தை யாரென்று எவரும் அறியார். அவர்களுடைய வாழ்க்கை புனித இடங்களோடு அடங்கியிருந்தது. இந்த நிலை யோசியாவின் சீர்திருத்தத்தின்போது நீக்கப்பட்டது (கி.மு. *621*). சில மலடிப் பெண்கள் இந்தத் தாசிகளின் குழந்தைகளை சுவீகாரம் எடுத்துக் கொண்டனர் (ஒசே *1*).

***அனாத்து*** (ANATH – *சினம்*) – ஆள்

இஸ்ராயேலுக்கு நீதி வழங்கி வந்த நடுவர்களில் ஒருவரான இவர் சங்காரின் தந்தை (*நீதி 3:31; 5:6*).

***அனாத்து*** (ANATH) – தேவதை

அனாத்து என்பது பண்டைய மேற்காசிய நாடுகளில் புகழ்பெற்று விளங்கிய செமித்திய தேவதையின் பெயர். உகரிட்டிக் இலக்கியத்தில் அனாத்து போரின், காதலின் தேவதையாகும். அனாத்து பாகாலுக்குச் சகோதரியும் வாழ்க்கைத் துணைவியும் ஆவாள். இஸ்ராயேலில் பேத்து–அனாத்து, அனத்தோத்து ஆகிய இடங்களில் வழிபடப்பட்டிருக்கலாம்.

***அனாபு*** (ANAB – *முந்திரிப்பழம்*)

தெபீரின் அருகேயுள்ள யூதேயாவின் மலைப்பகுதியில் உள்ள ஒரு நகரம். இங்கிருந்துதான் அனாக்கியர்கள் யோசுவாவினால் விரட்டியடிக்கப்பட்டார்கள் (*யோசு 11:21; 15:50*). பத்தொன்பதாவது அரச மரபைச் சேர்ந்த எகிப்திய ஏடுகளிலிருந்து இதன் ஆரம்பக்காலப் பெயர் கார்த் – நாபு எனத்தெரிகிறது. கெபிரோனிலிருந்து தென்மேற்குப் பகுதியில் 24 கி.மீ. தொலைவிலுள்ள இன்றைய கிர்பேத்து–அனாபு என்ற கிராமமே அன்றைய அனாப்பின் இருப்பிடமாக இருந்திருக்கலாம்.

***அனாமிம்*** (ANAMIM)

எகிப்து வழிவந்தவர்களின் இனப் பட்டியலில் வரும் ஓர் இனம் அல்லது நாடு (*ஆதி 10:13; 1 நாள் 1:11*). இது எவருக்கும் அதிகமாகத் தெரியப்படாத பெயர். ஆல்ப்ரைட் கூறுவதுபோல சிரேனேயில் வாழ்ந்தவர்களாக இருக்கலாம். அசீரிய நாட்டைச் சேர்ந்த இரண்டாம் சார்கோன் காலத்தவர்களாக இருக்கலாம். மேற்கு எகிப்திலுள்ள கின்மித் என்ற பாலைவனச் சோலையைச் சேர்ந்த கேனெமியராக இருக்கலாம்.

***அனாயா*** (ANAIAH – *ஆண்டவர் பதில் அளித்து விட்டார்*)

*1.* மோசே திருச்சட்ட நூலை, மரத்தால் செய்யப்பட்ட ஒரு மேடையின் மீது நின்று எஸ்ரா வாசித்துக்கொண்டிருக்கும் போது அவரது வலப்புறத்தில் நின்று கொண்டிருந்த ஆறுபேர்களில் ஒருவர். ஒருவேளை ஒரு குருவாக இருக்கலாம் (*நெக 8:4*).

*2.* நெகமியாவின் கீழ் உடன்படிக்கை புதுப்பிக்கப்பட்டபோது தனது மக்கள் பெயரில் கையொப்பமிட்ட தலைவர்களில் ஒருவர் (*நெக 10:22*). இவர் *1*–இல் கூறப்பட்டவராகவே இருக்கக்கூடும்.

***அனான்*** (ANAN – *மேகம்*)

நெகமியா தலைமையில் உடன்படிக்கை புதுப்பிக்கப்பட்டபோது, கையொப்பம் இட்ட தலைவர்களில் ஒருவர். ஆண்டவர் ஆலயத்தின் பாடகர்களின் பெயர் பட்டியலில் இவரும் இடம் பெறுகிறார் (*நெக 10:26*).

***அனானி*** (ANANI – *யாவே தம்மை வெளிப்படுத்தியுள்ளார்*)

தாவீது வழி வந்தோரின் வம்சத்தில் ஒருவரான செருபாபேலின் வழிவந்த எலியோனாயின் ஏழாவது புதல்வர் (*1 நாள் 3:24*).

***அனியாம்*** (ANIAM – *மக்களின் புலம்பல்*)

மனாசே பரம்பரையில் வந்த செமிதாவின் நான்காவது புதல்வர் (*1 நாள் 7:19*).

***அனுபு*** (ANUB – *பழுத்த, முதிர்ந்த*)

யூதா குலத்தைச் சேர்ந்த கோசு என்பவருடைய மகன் (*1 நாள் 4:8*).

***அன்பிற்குரியவர்*** (BELOVED)

'அன்பிற்குரியவர்' என்ற இவ்வார்த்தை விவிலியத்தில் பலமுறைகளில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

*1.* பழைய ஏற்பாட்டில் பென்யாமின் அன்பிற்குரியவராகக் கருதப்படுகின்றார் (*உப 38: 21*). தேர்ந்தெடுக்கப்பட்ட இஸ்ராயேல் மக்கள் 'அன்பிற்குரியவர்கள்' என அழைக்கப்படுகின்றனர் (*சங் 60:5; 108: 6; 127:2; எரே 11:15*). உன்னத சங்கீதத்தில் பால் உணர்வு சார்ந்த அன்பினைக் குறிக்க இவ்வார்த்தைப் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஏச *5:1*–இல் இவ்வார்த்தை இறை அன்பைக்குறிக்கின்றது. பல இடங்களில் இவ்வார்த்தையானது வினைச் சொல்லாகப் பயன்படுத்தப்பட்டிருக்கின்

றது (உப 21:15–16; 2 சாமு 1:23; நெக 13:26; ஓசே 3:1). இவ்வார்த்தையானது ஓசே 9:16–இல் குழந்தைகள் மேல் உள்ள அன்பைக் குறிக்கின்றது. தானியேல் மிகுதியான அன்புக்குரியவர் (தானி 9:23; 10:11.19)

2. புதிய ஏற்பாட்டில் தந்தையின் மகனும், பணியாளருமாகிய இயேசு அன்பார்ந்த மகனாவார் (மாற் 1:11; 9:7; 2 பேதுரு 1:17; காண் மாற் 12:6). எபே 1:6–இல் அன்பிற்குரியவர் என்ற வார்த்தைத் தேர்ந்தெடுக்கப்பட்டப் பணியாளரையும் தந்தையின் ஒரே மகனையும் சேர்த்து (மத் 12:18; ஏச 42:1) குறிக்கின்ற மெசியாவிற்குரிய பெயராக விளங்குவதுபோல் தோன்றுகிறது (காண்க ஆதி 22:2; கலா 3:16; 4:4.28–29).

இஸ்ராயேல் மக்களின் பின் வருபவர்களும், கிறிஸ்துவின் உடலுமாகிய திருச்சபையும் அன்பு செய்யப்படுகின்றது [உரோ 1:7; 9:25 (காண் ஓசே 2:1.16 தொ) கொலோ 3:12; 1 தெச 1:4 (காண் உப 33:12); 2 தெச 2:13]. திருச்சபையின் உறுப்பினர்கள் கிறிஸ்துவினால் மீட்கப்பட்டவர்களாதலாலும் ஒருவரை ஒருவர் அன்பு செய்ய வேண்டும் என்று கட்டளையிடப்பட்டதாலும், அவர்களும் அன்பிற்குரியவர்கள் (யோவா 13:34; பிலி 4:1; எபி 6:9; 1 பேதுரு 2:11; 2 பேதுரு 3:1; யோவா 3:2; 3 யோவா 1 யூதா 1.3.7.20). கிறிஸ்தவர்கள் அனைவரும் அன்பினால் இணைக்கப்பட்ட சகோதரத்துவத்தை உருவாக்குகின்றனர் (1 கொரி 15:58; எபே 6:21; கொலோ 4:7–9; யாக் 1:16–19; 2:5; 1 திமோ 6:2; பிலோ 16). ஆண் பெண்களுக்கிடையே குறிக்கப்படும் அன்பித்தொணி குறிப்பிடத்தக்க தொன்றாகும். இது வெறும் ஆசாரம் அன்று (உரோ 16:5–16; 2 திமோ 1:2; 3 யோவா 1.2.5.11; காண்க பிலி 2:22 தொ).

**அன்பு** (LOVE)

I. முன்னுரை:-

"இறைவன் அன்பானவர், "ஒருவரையொருவர் அன்பு செய்யுங்கள்" புதிய ஏற்பாடு வெளிப்பாட்டின் இந்த உச்சி நிலையை அடைவதற்கு முன்னர் இறைவன்பால் மறைபொருளை உணர்ந்து கொள்வதற்கென அன்பைப்பற்றி தனக்கென உருவாக்கிய முழுமையும் மனித இயல்பு சார்ந்த கருத்துக்களை மனிதன் தூய்மைப்படுத்த வேண்டும். இச்செயலானது சிலுவையின் மூலமாக நடைபெறுகிறது. அன்பு என்ற சொல்லானது உண்மையில் ஊனியல்பான அல்லது ஆன்மீக பற்றார்வமிக்க அல்லது சிந்தனையுடனான, உன்னிப்பான அல்லது இலேசான, விரிவுபடுத்தக்கூடிய அல்லது அழிக்கப்படக்கூடிய பல்வேறுபட்ட கருத்துக்களின் கலப்பினை குறிப்பிடுகிறது. இனிய ஒன்றை ஒருவர் அன்பு செய்கிறார். உதாரணமாக விலங்கு, உழைப்பில் தோழன், நண்பன், உறவினர்கள், பிள்ளைகள், இறுதியாக ஒரு பெண். விவிலிய மனிதன் இவை அனைத்தையும் அறிந்துள்ளான். ஆதியாகமம் (ஆதி 2:23–24; 3:16; 12:10–19; 22:24;34), தாவீதின் வரலாறு (1 சாமு 8:1 தொ; 2 சாமு 3:16; 12:15–25; 19:1–5), உன்னத சங்கீதம் முதலியன எல்லாவிதமான உணர்வுகளுக்கும் சான்றுகளாக உள்ளன. ஆனால் பாவமானது பெரும்பாலும் இவற்றில் கலந்திருக்கிறது. ஆனால் அடக்கமான நேர்மை, ஆழ்ந்த நிலை மற்றும் வாய்மை ஆகியவை எளிய அடக்கமான வார்த்தைகளில் எடுத்துக் கூறப்படுவதைக் காணலாம்.

இஸ்ராயேல் அறிவார்ந்த கருத்தியலான போக்கிற்குச் சிறிதளவே முக்கியத்துவம் அளிக்கிறது. இஸ்ராயேலுக்கு இவ்வார்த்தைகள் பெரும்பாலும் உணர்ச்சிகளை எடுத்துக்காட்டுகின்றன. அவர்கள் வாழ்வில் அறிதலென்பது ஏற்கெனவே அன்பு செய்வதாகும். சமூக மற்றும் குடும்ப உறவுகளுக்கு இஸ்ராயேல் காட்டும் அன்புறுதியானது, முற்றிலுமாக ஆவியுடனும் சுதந்திரத் தன்னியல்புடனும் வளப்படுத்தப்பட்டுள்ளது (ஆதி 24:49; யோசு 2:12–14; ரூத் 3:10; செக் 7:9).

சுருக்கமாக, விவிலிய மனிதன் அன்பின் அபாயங்களை அறிந்திருந்தாலும் (பழ 5; சீரா 6:5–17) அதனுடைய மதிப்பையும் அறிந்துள்ளான் (பழ 15:17). அன்பெனும் கருத்து அவனது சமய மன நிலையை ஊடுருவிச்செல்லும்போது, அது வளமான செயல்பாடான மனித

அனுபவத்தினால் முழுவதும் தாக்கம் பெறுகிறது. அதே நேரத்தில் அன்பானது எண்ணற்ற வினாக்களையும் எழுப்புகிறது. உயரிய தூய இறைவன், சிறிய, பாவம் நிறைந்த மனிதனை அன்பு செய்வதற்காக தம்மைத் தாழ்த்துவாரா? இறைவன் அன்பு செய்வதற்காக இறங்கி வந்தாலும், அந்த அன்பிற்கு பதிலன்பாக மனிதன் எவ்வாறு பதிலளிக்க முடியும்? இறையன்பிற்கும் மனித அன்பிற்கும் இடையில் எத்தகைய உறவு நிலவுகிறது? இந்த இரு எதிர்முனைகளில் ஒன்றை சார்வதன் மூலம் வழக்கமாக எல்லா சமயங்களும் தங்களுக்கேயுரிய முறையில் இந்த வினாக்களுக்கு பதிலளிக்க முயல்கின்றன. இறைவனுக்கும் மனிதனுக்கும் இடையிலான தொலைவை நீடிக்கச்செய்ய இறையன்பை அவை அடையமுடியாத நிலைக்கு ஒதுக்குகின்றன அல்லது இறைவனை மனிதரிடையில் தோற்றுவிப்பதற்கென இறையன்பினை முற்றிலும் மனித அன்பாக தாழ்த்துகின்றன. மனித அளவிலான இந்த சமய குழப்பத்திற்கு விவிலியமானது ஒரு தெளிவான பதிலை அளிக்கின்றது. மனிதருடனான அன்பின் உரையாடல் மூலம் இறைவன் முதல் முயற்சியை எடுத்துள்ளார். இந்த அன்பின் பெயரால் அவர் அவர்களை பிணைக்கிறார். ஒருவரையொருவர் அன்பு செய்ய அவர்களுக்கு கற்பிக்கிறார்.

II. பழைய ஏற்பாட்டில் அன்பு:-

*1.* மனித அன்பு:- பழைய ஏற்பாட்டிலே மனித உறவுகள் அன்பினால் உருவாகின்றன. இதிலே வெவ்வேறு வடிவங்கள் உண்டு.

அ) பாலின அன்பு:- ஒரு புதிரானது. படைப்பின் ஓர் அங்கமாகும் (பழ *30:18–19*). சாவைப் போல் வலிமையுள்ளது (*2* சாமு *8:6*). ஆகையால் எச்சரிக்கையாகக் கையாள வேண்டும் (*2:7*). ஒருவருக்கொருவர் வழங்குவது. இன்பம் அளிப்பது. எல்லாப் புலன்களையும் ஈடுபடுத்துவது (*2:3.14.16*; *3:1–5*). அதன் மேலான நிலை திருமணத்தில் எய்தப்படுகிறது (திருவுரை *9:9*). ஆனால் அது தவறாகப் பயன்படும் போது, காமத்திற்கும் விபசாரத்திற்கும் இட்டுச்சென்று இழிநிலை அடைகிறது. இது பதிதத்திற்கு உருவகமாகிறது (எரே *2:25*; ஓசே *3*; *2* சாமு *13:15*). காதலையும் காமத்தையும் பழைய ஏற்பாடு மறைப்பதில்லை. இந்தக் காதல் காமத்தைச் சார்ந்ததாயிருப்பினும் காலமெல்லாம் நிலைத்திருப்பதாகவும் உள்ளது (உப *21:15–16*; *1* சாமு *1:5*; திருவுரை *9:9*). உண்மை அன்பாகவும் மாறுகிறது.

ஆ. குடும்ப அன்பு:- இஸ்ராயேலரிடையே குடும்ப குல உறவுகள் வலுப்பெற்றிருந்தன. தந்தையும் மகனும் (ஆதி *22:2*; *37:3*; பழ *13:24*) பெற்றோரும் பிள்ளைகளும் (பழ. *15:17*; ஓசே *9:6*), மாமியாரும் மருமகளும் (ரூத் *4:15*) அன்பு செய்து வாழ்கின்றனர். இவ்வன்பு ஒரு சிலருக்கே காட்டப்படும் போது பிரச்சினைகள் எழுகின்றன. பொறாமையும் பகைமையும் தோன்றுகின்றன (ஆதி *25:28*; *37:3–4*).

இ. சமுதாயத்திலே அன்பு:- சமுதாய வாழ்க்கை மனிதனுக்கு முக்கிய உறவாகும். மனிதன் மனிதனை அன்பு செய்ய வேண்டும். மனிதனை மதித்தல் (*1* அர *5:1*; பழ *16:13*), நண்பனைத் தொடர்ந்து அன்பு செய்தல் (*2* சாமு *1:26*; பழ *10:12*; *17:9*; *18:24*), அடிமை தலைவன்மேல் பக்தி கொள்ளல் (யாத் *21:5*), ஏழைகளுக்கு இரக்கம் காட்டுதல் (பழ *14:21.31*) போன்றவை வெவ்வேறு அன்பு நிலைகளாகும்.

கலைச் சொல்லாக அன்பு, உடன்படிக்கை உறவையும் (உப *5:10*; *7:7–9*; ஓசே *11:1*) தலைவருக்குக் காட்டும் பிரமாணிக்கத்தையும் கீழ்ப்படிதலையும் (*1* சாமு *18:16*; *20:13–17*; தானி *9:4*) தலைவன் காட்டும் ஆதரவையும் (*1* சாமு *16:21*; *2* சாமு *9:1*) குறிக்கப்பயன்படுகிறது.

நேர்மை (சங் *45:7*), ஞானம் (பழ *4:6*; *8:36*), வேளாண்மை (*2* நாள் *26:10*), மடமை (பழ *1:22*), செல்வம் (திருவுரை *5:10*), போன்றவற்றில் ஆர்வம் காட்டுவதும் அன்பு எனக் குறிக்கப்படுகிறது.

*2.* இறையன்பு:- இறைவனின் அன்பு மனிதனை மீட்பதற்காக அவன் மீது செலுத்தப்பட்ட அன்பு. இந்த அன்பு ஆழமான இறை–மனித உறவை ஏற்படுத்துகிறது. இஸ்ராயேலர்தம் வரலாற்றிலே ஆண்டவரின் அன்பு வெள்ளிடைமலை.

அ) தேர்ந்தெடுத்தலில் அன்பு:- இஸ்ராயேல் தான் இறைவனால் தேர்ந்தெடுக்கப் பட்டதை நன்றாக உணர்ந்திருந்தது. ஒரு ஆண் தன் மனைவியை தேர்ந்தெடுப்பது போல் இறைவன் இஸ்ராயேலைத் தேர்ந் தெடுத்தார் (ஓசே 3:1). இந்த அன்புறவு தந்தை–மகன் உறவு என ஓசேயா இறை வாக்கினர் கூறுகின்றார் (ஓசே 11:1). எகிப்திலிருந்து இஸ்ராயேல் விடுதலை அடைந்தது இறையன்பின் அடையாள மென அடிக்கடி குறிப்பிடப்படுகிறது (யாத் 15:13; உப 4:37). அவர் தம் அன்பி னால் தகுதியில்லாத இஸ்ராயேலைத் தேர்ந்தெடுத்தார் (உப 7:8).

இந்தத் தேர்ந்தெடுக்கப்படும் அன்பை விளக்குவது கடினம். இஸ்ராயேலை யாவே தேர்ந்தெடுத்து அன்பு செய்வ தற்குக் காரணம் "யாவே உன்னை அன்பு செய்தார்" (உப 7:8) என்பதுதான். அவர் தம் விருப்பம்போல் தேர்ந்தெடுத்து அன்பு செய்கிறார். அதற்கு இஸ்ராயேல் பதில் அன்பால் பதிலளிக்க வேண்டும்.

ஆ) உடன்படிக்கை அன்பு:- அழைப் பின் அன்பும், உடன்படிக்கையின் அன்பும் ஒன்றையொன்று பின்னிப் பிணைந்துள்ளன. இவையிரண்டும் ஒரே அன்புறவின் இரு பக்கங்களாகும். ஆரா ய்ச்சிக்காக இவ்விரண்டையும் பிரித்தால் அன்பினால் ஆண்டவர் அழைக்கிறார். அந்த அன்பு தொடர்ந்து உடன்படிக்கை யாகிறது எனக்கொள்ளலாம். இந்த உடன்படிக்கை ஆண்டவரின் அன்பு தொடர்வதை உறுதிப்படுத்துகிறது (ஏச 54:10; 55:3). ஆண்டவரின் உடன்படிக்கை யன்பு மாறாத மங்காத உடன்படிக்கை உறவு. இத்தகைய அன்பு உடன்படிக்கை உறவு அவர் செய்த அன்புச் செயல் களிலே தெளிவாகிறது (ஆதி 24:27; 32:10). உடன்படிக்கைக்கு உண்மையாய் இருப்ப வர்களை அண்டவர் தொடர்ந்து அன்பு செய்வார். இந்த அன்புக்காக, இஸ்ரா யேல் யாவேக்கு நன்றி செலுத்துகிறது (சங் 138:2). அவரைப் போற்றுகிறது (115:1).

இ) அன்பும் இறுதிக்காலயியலும்:- ஆண்டவரின் உடன்படிக்கை அன்பு மாறாத காரணத்தால் அது தொடர வேண்டுமென இஸ்ராயேல் எதிர்பார்த் தது. எனவேதான் அவரது அன்பு என் றென்றும் நிலைத்திருக்கிறது எனப் பாடப் பட்டது (சங் 136). எனவே ஆண்டவரை இஸ்ராயேல் நம்பலாம் (சங் 147:11). ஆண்ட வரும் தம்மை நம்புவோரைக் கண் நோக் குகிறார் (சங் 33:18.22). இந்த அன்பிலே பாவமன்னிப்பும் அடங்கியுள்ளது (ஓசே 14:4). எனவே உலகச் செல்வங்களை நாடாது இறையன்பை நம்புவது நலம் பயக்கும் (சங் 52:8). நம்புபவரை இறுதி நாளில் இறைவன் மீட்பார். அவரது இறுதிக்கால மீட்பு, அன்பில் இஸ்ரா யேலைப் புதுப்பிப்பதாகும் (செப் 3:17). "ஏற்புடைய காலத்தில்" உடன்படிக்கை நிறைவுறும் போது மீட்பும் நிறைவேறும் (சங் 69:13).

3. மனிதனின் இறையன்பு:- இறை மனித உறவிலே பிறந்ததுதான் இறைவ னின் உடன்படிக்கையன்பு. இறைவன் மனிதனோடு உடன்படிக்கை செய்து கொண்ட காரணத்தால் மனிதன் இறை வனை அன்பு செய்யவேண்டும். மனிதர் களை அன்பு செய்து அவர்களது தேவை யை இறைவன் நிறைவு செய்வதால் மனிதர்கள் இறைவனை அன்பு செய்ய வேண்டும் (சங் 32:23; 116:1). "உன் முழு இதயத்தோடும் உன் முழு ஆன்மாவோ டும் உன் முழு ஆற்றலோடும், உன் இறை வனாகிய யாவேக்கு அன்பு செய்வாயாக" (உப 6:5). என்ற கட்டளை இஸ்ராயேல் காட்டவேண்டிய பதிலன்பின் ஆழத்தை யும் மேன்மையையும் எடுத்தியம்புகிறது.

அ) அன்பும் உடன்படிக்கையும்:- ஆண்டவனை அன்பு செய்ய உப ஆகமம் கட்டளையிடுகிறது (உப 11:13–22; 19:9). அன்பினால் இஸ்ராயேலரோடு உடன் படிக்கை செய்துகொண்ட இறைவன் அவர்களிடம் அன்பையே திரும்ப எதிர் பார்க்கிறார். ஆண்டவனை அன்பு செய் தல் உடன்படிக்கையால் வந்த கடமையா கும். அவரை அன்பு செய்வதே வாழ்வா கும் (உப 30:20). தம்மை அன்பு செய்ப வர்கள் மேல் ஆண்டவர் தம் அன்பைப் பொழிகின்றார். அவர்களை விடுவிக் கிறார். அவர்களுக்கு இரக்கம் காட்டு கிறார்; உடன்படிக்கையைக் காக்கின்றார்.

(யாத் 20:6; உப 5:10; 17:9). எனவே இஸ்ரா யேலரின் அன்பு ஆண்டவர் உடன்படிக் கையின் வழியாகத் தமது அன்பை எண்பித்ததன் விளைவேயாகும். ஆனால் இஸ்ராயேலரின் இந்த அன்பு நெடுங் காலம் நிலைக்கவில்லை (எரே 2:5–37).

ஆ) அன்பும் வழிபாடும்:- இஸ்ராயே லர்தம் வழிபாடு ஆண்டவர்மீது அவர்கள் கொண்ட அன்பின்பால் மேற்கொள்ளப் பட்டது. ஆண்டவனை அன்பு செய்பவர் மீண்டும் அமைக்கப்பட்ட சீயோனில் குடி யிருப்பர் (சங். 69:36). சீயோனில் குடி யிருப்பது அவரைத் தொடர்ந்து வழிபடு வதைக் குறிக்கும். பக்திமான் ஆண்டவரை அன்பு செய்கிறான். ஏனெனில் அவன் மன்றாட்டு கேட்கப்படுகின்றது (116:1). அவரை அன்பு செய்பவர் அவர் உறையும் ஆலயத்தையும் அன்பு செய்வர் (26:8). வேற் றாரும் இந்த வழிபாட்டிலே கலந்து கொள்ளலாம் (ஏச 56:6–7). ஆனால் இஸ் ராயேல் தவறான வழிபாட்டை மேற் கொண்டு வேற்றுத்தெய்வங்களை வழி பட்டது (எரே 2:5). ஓசேயா இறைவாக்கினர் இஸ்ராயேல் பாகாலை வழிபட்டதாகக் குறிப்பிடுகிறார் (2:13). இறைவாக்கினர் பலர் இந்த இழிநிலையைக் கண்டிக் கின்றனர்.

இ) அன்பும் ஒழுக்க வாழ்வும்:- ஆண்ட வர் மீதுள்ள அன்பு நமது பொறுப்புள்ள வாழ்க்கையிலே வெளிப்படவேண்டும். ஆண்டவர் பலியை விரும்பவில்லை. மாறாக நல்லொழுக்கத்தை விரும்புகிறார் (ஓசே 6:6; மீக் 6:8). நேர்மையின் விதையை விதைத்து உடன்படிக்கை அன்பு எனும் அறுவடை செய்யவேண்டும் (ஓசே 10:12). உண்மை இறை அன்போடு நீதியோடு வாழ்தல் மனந்திரும்புதலின் அடையாள மாகும் (ஓசே 12:6). ஒழுக்க வாழ்வு உடன் படிக்கைக்குள் நிகழ்கின்றது. யாவேயை அன்பு செய்வது, அவரது வழிகளில் நடப்பதாகும் (உப 10:12; 11:22; 19:9; 30:16). அவரது கட்டளைகளைக் கடைப்பிடிப்ப தாகும் (யாத் 20:6; உப 5:10; 7:9; 11:1; நெக 1:5; தானி 9:4).

ஆகவே அன்புக்கும், சட்டத்திற்கும் முரண்பாடு இல்லை. இறைவனின் அன்பு முதன்மையானது. இந்த அன்புக்கு மனிதன் காட்டும் பதில், இறைவனுக்கு மனிதன் காட்டும் அன்பாகும். சட்டம் இறைவனது அன்பின் கொடையாகும். ஆகவே சங்கீத ஆசிரியர் யாவேயின் சட்டத்தை, கட்டளைகளை, அன்பு செய கிறார் (சங். 119). யாவேயை அன்பு செய் வது அவரது முதன்மையான அன்பை அறிவதும், மனிதரோடும் இறைவனோ டும் பொறுப்புள்ள பற்றுறுதியோடு வாழ்வ தும் ஆகும். அது யாவேயின் திருவுள்ளத் துக்கு அமைந்து அவரைப் பற்றிக் கொள் வதாகும் (உப 30:20).

இறுதியாக இஸ்ராயேலர் வாழ்க்கை யின் உயிர் நாடியாக இருந்த இறைவன் அம்மக்கள் மீட்புப் பெறத் தம் அன்பின் மிகுதியால் தம் மகனையே அளிக்கின் றார். அன்பே உருவாக அவர் உலகிலே உதித்தார்.

4) இறைவனுக்கும் மனிதனுக்கும் இடை யில் அன்பு உரையாடல்:- அன்பு என்ற சொல் இங்கு தோன்றாவிடினும் படைப் புப்பற்றிய நிகழ்ச்சியுரை (ஆதி 1:2–3) ஆதாம் மற்றும் ஏவாள் பெற்றுக்கொள் ளும் நன்மைத் தனத்தின் வழியாக இறை யன்பைச் சுட்டிக்காட்டுகிறது. வாழ்வை அதனுடைய முழுமையில் அவர்களுக்கு அளிக்க இறைவன் விரும்புகிறார். ஆனால் இக்கொடையைப் பெற அவரு டைய சித்தத்திற்குத் தங்களையே சுதந்திர மாகக் கையளிக்கவேண்டும். கட்டளை அளிப்பதன் வழியாக இறைவன் அன்பின் உரையாடலில் ஈடுபடுகிறார். தனக்கு கொடையாக அளிக்கப்பட்டவற்றின்மேல் தலைவராக தம்மை அமைத்துக்கொள்ள ஆதாம் விரும்புகிறார்; ஆதனால் பாவம் புரிகிறார். பின்னர் நன்மைத்தனத்தின் மறைபொருளானது மீட்பின் வாக்குறுதியி னால் பாவிக்குக் காட்டும் இரக்கத்தி னால் ஆழப்படுத்தப்படுகிறது. காலப் போக்கில் இறைவனையும் மனிதனையும் பிணைக்கும் அன்புறவு மீண்டும் படிப்படி யாக அமைக்கப்படும். இன்பவனம் பற்றிய கதையானது ஏற்கனவே புனித வரலாறு முழுவதையும் குறிப்பாகச் சுட்டு கிறது.

அ) இறைவனுடைய நண்பர்களும் நம்பிக்கைக்குரியவர்களும்:- புறவினத்தாரி

லிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட (யோசு 24:2–3) ஆபிரகாமைத் தமது நண்பனாக இருக்குமாறு அழைப்பதில் (எச 41:8) இறைவன் தமது அன்பினை நட்பின் வடிவில் வெளிப்படுத்துகிறார். ஆபிரகாம் இறைவனுடைய இரகசியங்களுக்கு நம்பிக்கைக்குரியவராகிறார் (ஆதி 18:17). இந்நிலை இவ்வாறுள்ளதெனில், இறை அன்பினுடைய கோரிக்கைகளுக்கு ஆபிரகாம் பதிலளித்ததே இதற்கு காரணமாகும். இறைவனுடைய வேண்டுகோளின் படி அவர் தனது நாட்டைவிட்டு விலகிச் சென்றார் (12:1). ஆனால் விரைவிலேயே அன்பாகிய இறைபயத்தின் மறை பொருளில் அவர் ஈடுபடவேண்டும். ஏனெனில் அவர் தனது மகனையும் அவனுடன் அவரது மனித அன்பையும் பலியிடுமாறு அழைக்கப்படுகிறார். "நீ அதிகம் அன்பு செய்யும் உன் ஒரே புதல்வனை கூட்டிக் கொண்டு போ" (ஆதி 22:2).

மோசே தனது மகனை பலியிடத் தேவையில்லை, ஆனால் அவரது அனைத்து மக்களும் இறைபுனிதத்தன்மை மற்றும் பாவத்திற்கு இடையிலான போராட்டத்தில் ஈடுபடுகின்றனர். தன்னை பிரதிநிதியாக கொண்டுள்ள இறைவனுக்கும் தன்னைப் பகரஆளாகக் கொண்டிருக்கும் மக்களுக்கும் இடையில் அவர் அலைக்கழிக்கப்படுகிறனர் (யாத் 32:9–13). அவர் விசுவாசமுள்ளவராக உள்ளாரெனில் மரணத்திற்கென அழைக்கப்பட்டது முதல் (3:4) இறைவனுடன் ஒரு நண்பனுடன் பழகுவதுபோல அவர் இறைவனோடு கொண்ட நெருக்கத்தில் பின் வாங்காததே இதற்கு காரணம் (33:11). இறைவனது அளவற்ற இரக்கத்தின் வெளிப்பாட்டை அவர் பெற்றிருந்தார். தன்னுடைய புனிதத் தன்மையில் எதனையும் இழக்காமலே இரக்கம் காட்டும் இந்த அன்பு (34:6–7).

ஆ) இறைவாக்கு வெளிப்பாடு:- இறைவனுடைய நம்பிக்கைக்குரியவர்களும் (ஆமோ 3:7) இறைவனால் அன்பு செய்யப்பட்டனர். இறைவன் தமது தேர்வினால் அவர்களை ஆட்கொண்டார் (7:15). சில நேரங்களில் அவர்களைத் துண்டு துண்டாக கிழித்தார் (எரே 20:7–9). அவர்களை மகிழ்ச்சியால் நிரப்பினார் (20:11–13). இறைவாக்கினர்கள், ஆண்டவருடைய அன்பு மற்றும் கோபத்தின் நாடகத்திற்கு சான்றுகளாக உள்ளனர் (ஆமோ 3:2). எப்போதும் பிரமாணிக்கமற்ற இஸ்ராயேலின் மணமகனாக இருக்கிறார் இறைவன் என்று முதலில் ஓசேயாவும் பின்னர் எரேமியாவும் எசக்கியேலும் வெளிப்படுத்துகின்றனர். இந்த உணர்ச்சிமிக்க பொறாமைகொள்ளும் அன்புக்குக் கிடைத்த வெகுமதி நன்றியின்மையும் கைவிடப்பட்டதுமேயாகும். ஆனால் அன்பானது பாவத்தைவிட வலிமையானது. அது துன்புறவேண்டும் (ஓசே 11:8). அது மன்னித்து அன்பு செய்யக்கூடிய ஒரு புதிய இதயத்தை இஸ்ராயேலில் மீண்டும் படைக்கிறது (ஓசே 2:21–22; எரே 31:3. 20.22; எச 15:60–63; 36:26–27). ஆயன் (எச 34) அல்லது திராட்சைக்கொடி (எச 5; 17:6–10) முதலிய மற்ற உருவகங்களும் அதே இறை ஆர்வத்தையும் அதே நாடகத்தையும் வெளிப்படுத்துகின்றன.

மக்கள் இறை அன்பைவிட சிலை வழிபாட்டையே உறுதியாக விரும்புவதாக தோன்றுகின்ற தருணத்தில் சந்தேகத்திற்கிடமின்றி பிரகடனப்படுத்தப்பட்ட (2 அர 22) இஸ்ராயேலுக்கான இறையன்பானது கைமாறு கருதாதது என்றும் (உப 7:7–8), மற்றும் இஸ்ராயேல் இறைவனை தனது முழு இதயத்துடன் அன்பு செய்ய வேண்டும் என்றும் (6:5) அயராது நினைவுபடுத்துகிறது உபாகமம். இந்த அன்பு ஆராதனையிலும் கீழ்ப்படிதலிலும் (11:13; 19:9) எடுத்துக்காட்டப்பட வேண்டும். இவை அடிப்படைத் தேர்வினையும் கடினமான வேருடன் பிடுங்கப்படுவதையும் கோருகின்றன. கீழ்ப்படிதலின் செயல்களில் வெளிப்படுத்தப்படுகிறது. ஆனால் இறைவனே நேரடியாக இஸ்ராயேலின் இதயத்தை தூய்மைப்படுத்தி அன்பு செய்ய தகுதியுடையதாக அதனை மாற்றும் போது மட்டுமே இது இயலக்கூடியதாகும் (30:6).

இ) தனிப்பட்ட உரையாடலைநோக்கி:- நாடு கடத்தப்பட்ட பின்னர் சோதனை

யால் தூய்மைப்படுத்தப்பட்ட இஸ்ராயேலானது இறைவனுடனான வாழ்வு அன்பின் உரையாடல் என்பதை மேலும் மேலும் கண்டுபிடிக்கிறது. இந்த மன நிலையோடு அவர்கள் உன்னத சங்கீதத்தை மீண்டும் வாசிக்கின்றனர் என்பதில் எவ்வித சந்தேகமுமில்லை. உரிமையாக்குதல் மற்றும் நாடுதல் என்னும் மாறுபட்ட கருத்துக்களுடன், மணமகனும் மணகளும் மரணமளவு வலுவுடைய அன்பினால் ஒருவரையொருவர் அன்பு செய்வதாக காட்டப்படுகின்றனர் (உ.ச *8:6*).

நாடு கடத்தப்பட்டதற்குப் பின் ஒவ்வொரு மனிதனுடைய இதயத்துடனும் இறைவனே பேசுகிறார் என்ற உயரிய உணர்வும் அங்கு உள்ளது. அவர் குழுவையோ (உ.ப *4:7*) அல்லது அதனுடைய தலைவர்களையோ மட்டுமின்றி (2 சாமு *12:24*) ஒவ்வொரு தனிப்பட்ட யூதனையும், எல்லோருக்கும் மேலாக நீதிமானையும் (சங் *37:25–29*; *146:8*), ஏழைகளையும், எளியோரையும் அன்பு செய்கிறார் (சங் *113:5–9*). யாவேயின் அன்பானது யூதரை மட்டுமின்றி புறவினத்தாரையும் (யோனா *4:10–11*), உண்மையில் ஒவ்வொரு படைப்பையும் தழுவுகிறது (ஞான *11:23–26*) என்னும் எண்ண எழுச்சியை நாம் படிப் படியாக காண்கிறோம்.

இவ்வாறு கிறிஸ்துவின் வருகைக்கான காலம் நெருங்குகிற நிலையில் பக்திமிக்க யூதர் (சங் *4:4*; *134:9.16*) விவிலியத்தை தியானித்து தான் இறைவனால் அன்பு செய்யப்படுவதை உணர்கிறார். அவர் உடன்படிக்கைக்குக் காட்டும் இரக்க மிக்கப் பிரமாணிக்கத்தையும் (சங் *136*; யோவே *2:13*), அவரது நன்மைத்தனத்தையும் (சங் *34:9*; *100:5*), அருளையும் (ஆதி *6:8*; ஏச *30:18*), பரிவையும் (சங் *86:15*; ஞான *15:1*) பாடுகிறார். அதற்கு பதிலாக இறைவனுக்கும் (சங் *31:24*; *73:25*; *116:1*) அவரது பெயர், சட்டம் ஞானம் முதலிய அவருக்குரிய அனைத்திற்கும் (சங் *34:13*; *119:127*; ஏச *56:6*; சீரா *1:10*; *4:14*) அவர் தனது அன்பை இடைவிடாது எடுத்துக் கூறுகிறார். இந்த அன்பானது இறை பற்றற்றவர்களின் மாதிரிகை மற்றும் தாக்கம் ஆகியவற்றின் முன் தன்னையே அடிக்கடி நிரூபிக்க வேண்டும் (சங் *10*; *40:14–17*; *73*; சீரா *2:11–17*). மக்கபேயரின் காலத்தில் நிகழ்ந்தது போல, வேதசாட்சி மரணம்வரை இது செல்லலாம் (2 மக் *6–7*). கி.பி. 135–இல் தனது விசுவாசத்திற்காக மரித்த ராபி அக்கிபா செயலிலும் இதே நிலை உள்ளது. "எனது முழு இதயத்தோடும் நற்பேறுடனும் நான் அவரை அன்பு செய்தேன்; ஆனால் எனது முழு ஆன்மாவுடனும் அவரை அன்பு செய்யும் வாய்ப்பை நான் இதுவரை பெற்றதில்லை. ஆனால் இப்போது அந்தத் தருணம் வந்துள்ளது", என்று அவர் கூறுவார். இந்த சிறப்பு வாய்ந்த கூற்று அறிவிக்கப்பட்டபோது மனிதருக்கு முழு வெளிப்பாடு இயேசு கிறிஸ்துவால் ஏற்கனவே அளிக்கப்பட்டு விட்டது என்று கூறலாம்.

III. புதிய ஏற்பாட்டில் அன்பு

*1.* சொல்லின் பொருள்:- அன்பு மொழியானது நாம் எதிர்பார்ப்பதை விட குறைந்த அளவிலேயே புதிய ஏற்பாட்டில் பயன்பட்டுள்ளது (அப்போஸ்தலர் பணி ஒரு எடுத்துகாட்டை கொண்டுள்ளது, தீத்துவில் ஒன்றுமில்லை). பெயர் சொல்லை விட வினைச்சொல்லே அதிகமாக உள்ளது. அன்பு என்னும் பெயர்ச் சொல் மாற்கு, அப்போஸ்தலர் பணி, தீத்து, யாக்கோபு அல்லது *1* மற்றும் *2* பேதுரு ஆகியவற்றில் சுத்தமாக இல்லை. அன்பு என்னும் பெயர்ச்சொல்லை இயேசு பத்து சதவிகிதமும், பவுல் இருபத்தெட்டு சதவிகிதமும் யோவான் (நற்செய்தியும் மூன்று திருமுகங்களும்) முப்பத்து மூன்று சதவிகிதமும், எபேசியர் மற்றும் மேய்ப்புப் பணி மடல்கள் பதி மூன்று சதவிகிதமும், மற்றவர்கள் பதினாறு சதவிகிதமும் பயன்படுத்துகின்றனர். புதிய ஏற்பாட்டில் பத்தில் ஒரு பகுதிக்கு உரியவராகிய யோவான் அன்பிற்கான குறிப்புகளில் மூன்றில் ஒரு பங்கு இடம் பெறுவது குறிப்பிடத்தக்கது.

கிரேக்க மொழியில் அன்பைக் குறிக்க எரோஸ் (Eros), பிலியா (Philia), அகபே (Agape) ஆகிய மூன்று சொற்களும்

அவற்றைச் சார்ந்த சொற்களும் பயன்படுகின்றன. இவற்றை மோகம், நேசம், அன்பு என்றும் மொழி பெயர்க்கலாம். "அகபே" என்ற சொல் மூலப்பொருளில் மனநிறைவு, ஒத்துணர்வு, ஈகைப்பண்பு ஆகியவற்றை உணர்த்தவல்லது. பொதுவாக நேசம் என்ற சொல்லானது நண்பனுடைய அல்லது உறவினருடைய பாசத்தை குறிப்பிடுகிறது. இவை இரண்டும் காமவெறியற்ற அன்பினை குறிப்பிடுகின்றன. இவ்விரண்டிற்கும் முரண்பாடானது சிற்றின்ப ஆசை, காம நாட்டம், உடலின்ப இச்சை முதலியவற்றை குறிப்பிடும் மோகமானது (Eros) மெய்யியல் விவாதங்களில் "முடிவில்லாத இறை தன்மைக்கான மேலோங்கிய நாட்டம்" என்பதைக் குறிக்கப்பயன்பட்டாலும் புதிய ஏற்பாட்டு ஆசிரியர்கள் இந்தச் சொல்லை தவிர்க்கின்றனர்.

இவ்வாறு மோகமானது சிற்றின்ப ஆசையின் இச்சையை குறிப்பிடுகிறது. அது புதிய ஏற்பாட்டில் தோன்றுவதில்லை. நேசம் என்ற சொல்லானது முதன்மையாக நட்புணர்வின் அன்பை குறிப்பிடுகிறது. சமய சார்பற்ற கிரேக்க மொழியில் அன்பு என்ற சொல்லானது அடிக்கடிக் காணப்படுவதில்லை. இக்காரணத்திற்காகவே புதிய ஏற்பாட்டில் அன்பினுடைய தனித்துவமிக்க மூலக் கிறிஸ்தவ கருத்தினை எடுத்துக் கூற இச்சொல் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கலாம் என்று தோன்றுகிறது.

2. ஒத்தமை நற்செய்திகள்:- இவற்றில் அன்பும் மற்றும் ஒருவரது அயலாருடைய அன்பும் உப 6:5; லேவி 19:18-ஐ எடுத்துக் காட்டுகின்றன. இயேசுவால் சட்டத்தின் மிகப்பெரிய கட்டளையென அழைக்கப்படுகின்றன (மத் 22:34–40; மாற் 12:28–34; லூக் 10:25–28). இரு கட்டளைகளும் சமமாகக் கருதப்படுகின்றன. அன்பு பற்றிய கிறிஸ்துவப் புரட்சி துல்லியமாக இதில் தான் அடங்கியுள்ளது. ஆயினும் "யார் அயலான்"? என்ற அடுத்த வினாவினை லூக்கா மட்டுமே எடுத்து விளக்குகிறார். நல்ல சமாரியன் உவமையில் இயேசு அதற்கு பதிலளிக்கிறார் (லூக் 10:29–37). யூதருக்கும் சமாரியருக்கும் இடையிலான பகைமையானது ஆழமானது. தங்களுக்கு மிகவும் அந்நியர்கள் என யூதர்கள் எண்ணிய குழுவுடன் இயேசு அயலாரை அடையாளப்படுத்துகிறார். ஒருவரது பகைவரை அன்பு செய்தல் பற்றிய வண்ணமிக்க விளக்கமாக இந்த உவமை உள்ளது (மத் 5:43–48; லூக் 6:27–28. 32–36). மனிதருடன் இறைவன் கொண்டுள்ள மனப்பான்மையை தன்னை வெறுப்பவருடன் கிறிஸ்தவன் கொள்ள வேண்டிய மனப்பான்மைக்கு மாதிரியாக இயேசு இங்கு அளிக்கிறார். ஒருவரது அயலானை அன்பு செய்வதென்பது கிறிஸ்தவன் வெளிப்படுத்துகின்ற பொதுவான அன்றாட மனப்பான்மையாகும். பாவிகள் பாலும் நீதிமான்கள் பாலும் இயற்கையில் இறைவன் கடைப் பிடிக்கின்ற போக்கை விட அதிகமாக ஒருவரது அயலாரின் நடத்தையை இந்த அன்பு இனிமேல் சார்ந்திருப்பதில்லை. இதில் கிறிஸ்தவ அன்பானது புறவின ஒழுக்கத்தினின்று மாறுபட்டதாக அமைய வேண்டும். ஒருவரது நண்பரை அன்பு செய்வதைப் பற்றி எவரும் வினா எழுப்புவதில்லை. ஆனால் இயேசு, அதைவிட அதிகமாக கோருகிறார்.

லூக் 7:37–50-இல் இறையன்பின் வளர்ச்சியைப் பாவ மன்னிப்பிற்கான நன்றியுணர்வின் விளைவாக இயேசு எடுத்துக் காட்டுகிறார். உண்மையான இறையன்பு ஒருவர் தனது பாவநிலையை உணர்வதினின்றே எழுகிறது; மற்றும் பரிசேயருடையதைப் போன்ற சுய நேர்மை அன்புடன் ஒத்துப் போக முடியாது என்பதை இது தெளிவுப்படுத்துகிறது. 7:47-இல் உள்ள வாக்கியமானது அதற்கு முந்திய மற்றும் பிந்திய சூழ்நிலையில் "அவள் அதிக அன்பு காட்டியதனால் அவளுக்கு அதிக பாவங்கள் மன்னிக்கப்பட்டன" என்று பொருள்படுகிறது, அதாவது அவளுடைய அசாதாரணமான அன்புச் செயல் பெரும் மன்னிப்பு பற்றிய அவளின் உணர்வினை வெளிப்படுத்துகிறது. இத்தகைய உணர்வு இல்லாதவர்கள் அன்பினை காட்ட முடியாது.

இறைவனுடைய அன்பானது சொந்தம் பாரட்டக்கூடியது. ஒருவன் இரு தலைவர்

களை கொண்டிருக்க முடியாது (மத் 6:24; லூக் 16:13). இவ்வார்த்தையில் அன்பு சார்ந்த விருப்பு வெறுப்பு தெளிவாக தோன்றுகிறது.

இயேசுவை "அன்பார்ந்த மகன்" என்று குறிப்பிடுவதில் மட்டுமே ஒத்தமை நற்செய்திகளில் இயேசு மற்றும் தந்தையினுடைய அன்பானது தோன்றுகிறது (மத் 3:17; 12:18;17:5; மாற் 1:11; 9:7; 12:6;லூக் 3:22; 9:35; 20:13). இச்சொற்றொடரின் செமித்திய மூலமானது "ஒரே மகன்" என்று பொருள்படுகிறது. ஆனால்,கிரேக்க சொல்லமைப்பானது துல்லியமாக உள்ளது; ஒரே மகனே அன்பு மகனுமாவார். இந்த உறவானது யோவானிலும் பவுலிலும் முழுமையாக வளர்க்கப்படுகிறது.

பெற்றோருக்கு அல்லது பிள்ளைகளுக்கு ஒருவன் அளிப்பதைவிட உயரிய அன்பினை கோருவதன் மூலம் தம்பால் தமது சீடர்கள் கொள்ளவேண்டிய மனப்பான்மையை நேசம் என்ற சொல்லால், இயேசு குறிக்கிறார் (மத் 10:37). எவ்வாறு நிறைவு பெறுவது என்று கேட்ட வாலிபன் மீது இயேசு காட்டிய உணர்வினையும் (மாற் 10:21) யூத நூற்றுவர் தலைவன் காட்டிய பரிவையும் (லூக் 7:5) அன்பு என்ற சொல் விவரிக்கிறது.

3. பவுலின் திருமுகங்கள்:- இவற்றில் அன்பு என்ற சொல்லானது மனிதன்பால் இறைவன் மற்றும் கிறிஸ்துவின்பால் மனிதன் காட்டும் அன்பையும் மற்றும் மனிதர் ஒருவருக்கொருவர் காட்டும் அன்பையும் குறிப்பிடுகிறது. இறையன்பின் அடையாளமாகவும் விளைவாகவும் உள்ள தூய ஆவியின் மூலமாக இறைவனுடைய அன்பானது மனிதனுடைய இதயத்தில் பொழியப்படுகிறது (உரோ 5:5). அன்பின்மூலம் தந்தை, கிறிஸ்தவனை முன் குறித்து வைத்து (எபே 1:4) அவனுக்கு வாழ்வளிக்கிறார் (2:4). மனிதன்பால் இறைவன் கொண்டுள்ள அன்புக்குச் சான்று பாவத்தினின்று மனிதனை விடுவிப்பதற்கான கிறிஸ்துவின் மரணமாகும் (உரோ 5:8). கிறிஸ்தவனுக்கு வெற்றியை உறுதிப்படுத்துகின்ற இத்தகைய நிலையான அன்பினின்று எந்த வல்லமையும் கிறிஸ்தவனை பிரிக்க முடியாது (உரோ 8:35–39). கிறிஸ்தவனை அன்பு செய்கிற இறைவன் அவனுக்கு ஊக்கத்தையும் நம்பிக்கையையும் அளிக்கிறார் (2 தெச 2:16). மனிதருக்கான கிறிஸ்துவின் அன்பானது பாவியின் சார்பாக அவர் தன்னையே பணயமாக்குவதில் காட்டப்படுகிறது (கலா 2:20; எபே 5:2.25). கிறிஸ்து தனது திருச்சபைக்கு காட்டுகின்ற அன்பானது கணவர்கள் தமது மனைவியருக்கு காட்டவேண்டிய அன்பிற்கு மாதிரியாக உள்ளது (எபே 5:25). ஓசேயிலும் எரேமியாவிலும் காணப்படும் அன்பு பற்றிய பழைய ஏற்பாட்டு கருத்தானது இங்கே தோன்றுகிறது.

அன்பின் பலனாக மனிதன் பெறுகின்ற ஆசிகளைப் பற்றி அறிவிக்கவே சாதாரணமாக இறைவன்பால் மனிதன் கொள்ளும் அன்பைப் பற்றி பவுல் பேசுகிறார். இறைவன்பால் அன்பு என்பது கிறிஸ்தவனுடைய இதயத்தை இறைவனே அதனை நோக்கி நடத்திச் செல்வதாகும் (2 தெச 3:5). இறைவனை அன்பு செய்பவருக்கென அனைத்தும் நன்மைக்காக ஒன்றுபட்டு பணிபுரியும் (உரோ 8:28). தம்மை அன்பு செய்பவர்களுக்கென இறைவன் என்ன தயாரித்திருக்கிறார் என்ற எண்ணத்தினால் கிறிஸ்தவன் மகிழ்ச்சிப்படுத்தப்பட்டு ஊக்கப்படுத்தப் படவேண்டும் (1 கொரி 2:9). இறைவனை அன்பு செய்பவர்கள் அவரால் அங்கீகரிக்கப்படுகின்றனர் (1 கொரி 8). கிறிஸ்துவின்பால் பவுல் கொண்டுள்ள அன்பானது அப்போஸ்தலத்துவத்தின் உழைப்பிற்கு அவரை தூண்டுகிறது (2 கொரி 5:14).

ஒருவருக்கொருவர் காட்ட வேண்டிய அன்பு பற்றிய அறிவுரைகள் எண்ணற்றவையாகவும் கிறிஸ்தவ வாழ்வுக்கும் புண்ணியத்திற்கும் பவுலின் ஊக்குரைகளில் ஒரு நிலையான பகுதியாகவும் உள்ளன. பவுல் தனக்கேயுரிய சொற்களில் ஒத்தமை நற்செய்திகளின் படிப்பினைகளை மீண்டும் எடுத்துரைக்கிறார்; தமது அயலானை அன்பு செய்பவன் முழுச் சட்டத்தையும் நிறைவேற்றுகிறான்

ஏனெனில் இக்கட்டளையானது மற்ற கட்டளைகள் அனைத்தையும் தன்னுள் கொண் டுள்ளது (உரோ 13:8–10; கலா 5:13–14). கணவனுக்கும் மனைவிக்கும் இடையில் அமையவேண்டிய அன்பானது ஒப்புயர்வற்ற விதத்தில் தோன்ற வேண் டும். கிறிஸ்துவும் திருச்சபையும் ஒருவரை யொருவர் அன்பு செய்வதுபோல அவர் களும் ஒருவரையொருவர் அன்பு செய்ய வேண்டும் (எபே 5:25–33). ஒரு சகோத ரனை இடறலால் புண்படுத்தாமல் இருப் பதற்கென அசௌகரியத்தை ஏற்றுக் கொள்வதிலும் (உரோ 14:15), தேவையில் இருப்போருக்கு உதவி அளிப்பதிலும் (2 கொரி 8:7.9) அன்பு காட்டப்படவேண்டும். அன்பானது திருந்திய பாவியையும் வரவேற்கிறது (2 கொரி 2:8). உண்மையில் சகோதர அன்பு என்னும் பவுலின் கருத் தானது கிறிஸ்தவரல்லாதவர்களுக்கு இடம் கொண்டிராதது போலத் தோன்று கிறது ஒரு விதத்தில் உண்மையே. ஏனெ னில் சமுதாயத்தை உருவாக்கக் கூடிய இதயங்களின் ஒன்றிப்பும் அன்பினுடைய கடமைகளின் பரிமாற்றமும் சமுதாயத் தின் உறுப்பினராக இல்லாதவர்களுக்கு அறிவிக்கப்பட முடியாது. ஆயினும் பவுல் கிறிஸ்தவரல்லாதோரை கிறிஸ்தவருடைய இரக்கத்தினின்று விலக்கிவிடவில்லை. ஆனாலும் "அகபே" என்பது பவுலின் திருச்சபைக்கு ஒரு பொருள் பிற சொல் லாகிறது. ஆகவே அன்பின் முழுமையில் பங்குபெறுவதற்கு ஒருவன் இத்திருச்சபை யில் உறுப்பினராக இருக்கவேண்டும். பவுல் திருச்சபையின் உறுப்பினர்களை "அன்புக்குரியவர்களே" என அடிக்கடி அழைக்கிறார். பவுல் அவர்கள் மீது கொண்டுள்ள பாசத்தையும் அவர்கள் ஒருவரோடொருவர் கொண்டுள்ள பாசத் தையும் இது முதன்மையாக குறிப்பிடு கிறது. ஒருவருக்கொருவரிடையில் உள்ள உறவில் "அகபே" கிறிஸ்தவருக்கிடையில் மட்டுமே நிலவ முடியும்.

பவுலின் நூல்களில் அடிக்கடி உப யோகிக்கப்படும் அன்பு என்ற சொல் வெளிப்படையாக கூறப்படும் எந்த செயப் படுபொருளும் இல்லாமல் அடிக்கடி பயன்படுகிறது. இது குறிப்பிடத்தகுந்த தொன்றாகும். இதன் காரணமாக இச் சொல்லானது முறைப்படி இறைவனது அன்பையா அல்லது கிறிஸ்தவர்கள் ஒருவருக்கொருவர் காட்டும் அன்பையா குறிப்பிடுகின்றது என்று உறுதிப்படுத்து வது சில நேரங்களில் இயலாததாகிறது. மேய்ப்புப்பணி திருமுகங்களிலும் இலக் கிய தோற்றத்தைவிட தூண்டுதலிலும் ஊக்கத்திலும் பவுலினுடையவை என்று கருதப்படும் மற்ற திருமுகங்களிலும் இந்த சொல் அடிக்கடி பயன்படுகிறது. இவ் வாறு அன்பானது இறைவனும் கிறிஸ்த வரும் ஒன்றுபட்டு வாழ்கின்ற ஒருவித சூழ்நிலையாக உருவாகின்றது. இறை வனிடமிருந்து அளிக்கப்பட்ட நிலையில் அன்பானது, கிறிஸ்தவ சமுதாயத்திலும் தனிப்பட்ட கிறிஸ்தவனிலும் ஊடுருவிப் பரவியுள்ளது. அன்பு கிறிஸ்தவனைக் கட்டியெழுப்புகிறது (1 கொரி 8:1). கிறிஸ் தவன் அன்பில் ஊன்றப்பட்டு நடப் பட்டுள்ளான் (எபே 3:17). அன்பு அவனது நடத்தையின் வழிகாட்டியாக உள்ளது (எபே 5:2). இது அனைத்துக் குணங்களை யும் ஒன்று சேர்க்கின்ற பிணைப்பாகவும் (கொலோ 3:14), விசுவாசத்தின் செயலாக வும் உள்ளது (கலா 5:6). உழைக்குமாறு அது கிறிஸ்தவனை தூண்டுகிறது (1 தெச 1:3). உண்மைக்குக் காட்டும் பிரமாணிக்கத் தால் அவன் அன்பில் வளர்கிறான் (எபே 4:15–16). இந்த முழுமையான பொருளில் அன்பானது 1 கொரி 13:1–13–இன் பாடலில் புகழப்படுகிறது. இதுவே, பல மொழிகள் பேசுதல், அறிவு, புதுமைகள் செய்தல், வேதசாட்சி மரணம் ஆகிய வற்றைவிட உயர்வான, ஒப்புயர்வற்ற அருட்கொடையாகும் (13:1–4). இது இல்லா மல் மற்றவற்றிற்கு எந்த மதிப்பும் இல்லை. அனைத்துப் புண்ணியங்களை யும் இது வெளிப்படுத்துகிறது (13:4–7). மற்ற அருட்கொடைகளையும் குணங்களை யும் போலன்றி இது நீடித்துள்ளது. விசு வாசமும் நம்பிக்கையும் கூட இறுதி மெய்ம்மைக்கு இடமளிக்கலாம்; ஆனால் கிறிஸ்தவன் என்றென்றைக்கும் அன்பில் தங்கியிருப்பான் (13:8–13).

4. யோவானின் நூல்கள்:- இவற்றில் அன்பானது தந்தை, மகன் மற்றும்

சீடர்கள் ஆகியவர்களுக்கிடையே நிகழும் பரிமாற்றத்தை உணர்த்திய மூன்று சொற்களால் விளக்குகிறது. சீடர்கள்பால் தந்தையின் அன்பானது அவர்களை தனது பிள்ளைகளாக ஏற்றுக்கொள்ளுமாறு தூண்டுகிறது (1 யோவா 3:1). இயேசு தனது சீடரை இறுதிவரை அன்பு செய்து (யோவா 13:1) தனது வாழ்வையே அவர்களுக்காக அளிக்கிறார் (1 யோவா 3:16). அன்பினுடைய பெரிய நிரூபணம் இதுவே (யோவா 15:13). இறைவனே அன்பு (1 யோவா 4:8.16). அன்பில்லாமல் ஒருவன் இறைவனை அறிய முடியாது.

மனிதன்பால் இறைவனுடைய மற்றும் கிறிஸ்துவினுடைய அன்பு ஒரு பதிலை கோருகிறது. இறைவனை அன்பு செய்யாததற்காக யூதர்கள் குறைகூறப்படுகின்றனர் (யோவா 5:42). இந்த அன்பானது அன்பினை அறிக்கையிடுவதில் மட்டும் அடங்கியிருப்பதன்று. உண்மையான செயல்களிலும் எடுத்துக் காட்டப்பட வேண்டும் (1 யோவா 3:18). அன்பின் தலையாய பணியானது இறைவனுடைய வார்த்தையையும் இயேசுவின் கட்டளைகளையும் கடைபிடிப்பதாகும் (யோவா 14:15.21.23; 15:10; 1 யோவா 2:5; 5:3). உலகை அன்பு செய்பவன் இறைவனை அன்பு செய்வதில்லை (1 யோவ 2:15–16). தேவைப்படுகின்றவனுக்கு தனது கொடைகளை கொடுக்க மறுப்பவனும் இறைவனை அன்பு செய்வதில்லை (3:17). இயேசுவை அன்பு செய்பவர்கள் அவர் தந்தையிடம் திரும்பி வருவதில் பெரு மகிழ்ச்சி கொள்கின்றனர். ஏனெனில் இச்செயலானது அவரது பணி முற்றுப்பெற்று, அவரது மகிமை நிறைவு பெறுவதாகும் (யோவா 14:28).

கட்டளைகளில் தலையானதாகியதும், இயேசுவின் புதியதுமான கட்டளையானது, சீடர்கள் ஒருவரையொருவர் அன்பு செய்ய வேண்டும் என்பதாகும் (யோவா 13:34–35; 15:17). இயேசு அவர்களை அன்பு செய்த அதே தன்னலமற்ற முழுமையான அன்பினால் அவர்கள் ஒருவரையொருவர் அன்பு செய்யவேண்டும் (15:12–13). கிறிஸ்தவர்கள் ஒருவருக்கொருவர் காட்டும் அன்பு பற்றிய யோவானுடைய கருத்தின் தனிப்பட்ட தாக்கம் தந்தையால் மகனின் மூலமாக, சீடர்களுக்கு அளிக்கப்படும் அன்பின் மெய்ம்மையாக இருப்பதாகும். அதை சீடர்கள் தங்களுக்குள் பகிர்ந்து கொள்கின்றனர். தந்தை தம்மை நோக்கி வெளிப்படுத்திய அதே அன்பினால் இயேசு சீடர்களை அன்பு செய்கிறார் (15:9). தந்தை மகனை அன்பு செய்து, அனைத்தையும் அவர் கையில் ஒப்படைத்துள்ளார் (3:35). மகன் தனது வாழ்வையே கையளிப்பதன் காரணமாக அவர் மகனை அன்பு செய்கிறார் (10:17). இயேசுவை அன்பு செய்பவர் தந்தையாலும் அன்பு செய்யப்படுகிறார்; மகன் அவருக்கு தம்மையே வெளிப்படுத்துவார். இயேசுவை அன்பு செய்து, அவரது வார்த்தையை கடைபிடிப்பவனில் தந்தையும் மகனும் குடிகொள்வர் (14:21.23). மகன் தந்தையின் மீதான தனது அன்பை தனது கீழ்ப்படிதலால் காட்டுகிறார் (14:31). சீடர்களுடைய ஒன்றிப்பானது தந்தை அவர்கள் மீது பொழிகின்ற அன்பினால் முத்திரையிடப்படுகின்றது. அதே அன்பினால் அவர் மகனையும் அன்பு செய்கிறார். இந்த அன்பின் மூலமாகத் தந்தையும் மகனும் சீடரில் தங்கியுள்ளனர் (17:23.26). இறைவனிடமிருந்து தோன்றி திருச்சபையின் மூலமாகப் பரவுகின்ற அன்பினுடைய ஒன்றுபடுத்தும் ஆற்றலே 1 யோவா 4:7– 21– இல் உள்ள உயரிய பேருரையின் மையக்கருத்தாகும். இறைவனே அன்பு வாழ்வினை அறிவிப்பதற்கென அன்பினால் தனது மகனை அனுப்புகிறார். இறைவனுடைய அன்பானது அவரை அன்பு செய்வதிலன்றி, அவரால் அன்பு செய்யப்படுவதில் அடங்கியுள்ளது. இறைவன் துவக்குகிறார், மனிதன் பதிலளிக்கிறான். உறுப்பினர்களிடையே நிலவும் அன்பின் வாயிலாக இறைவன் சமுதாயத்தில் தங்குகிறார். அதே போன்று கிறிஸ்தவனுடைய அன்பின் மூலமாகத் தனிப்பட்ட கிறிஸ்தவனிலும் அவர் தங்குகிறார். அன்பு முழுமையாக இருக்கும் போது அச்சத்திற்கே இடமில்லை. அச்சம் வெளிப்படுத்துகின்ற உள்ளார்ந்த விரோத மனப்பான்மையானது முழுமையாக ஒன்றுப்படுத்துகின்ற நிறைவான அன்பில் அழிக்கப்படுகின்றது. இறைவன்

பால் கிறிஸ்தவன்கொள்ளும் அன்பின் முழு நிறைவானது, தனது சகோதரர்பால் கொண்டுள்ள அவனது அன்பினால் சோதித்து அறியப்படுகிறது.

புதிய ஏற்பாட்டில் பிற நூல்களைப் போல, அன்பிற்கும் நேசத்திற்கும் இடையிலான வேறுபாட்டினை யோவான் வேறுபடுத்திக் கொண்டிருப்பதில்லை. நேசம் என்பது சாதாரணமாக நட்புறவின் அன்பைக் குறிக்கிறது. இயேசு லாசரையும், மார்த்தாளையும் மரியாளையும் நேசித்தார் (யோவா *11:3.36*). ஆனால் அன்புச் சீடனுக்கான இயேசுவினுடைய அன்பானது "அகப்பான்" என்ற சொல்லால் குறிக்கப்படுகிறது (*13:23; 19:26; 21:7.20*). பிற இடங்களில் அன்பு என்ற சொல்லால் குறிப்பிடப்படுகின்ற தந்தை மகனுக்குமிடையே உள்ள அன்பிற்கும் (*5:20*) சீடரின் பால் தந்தையின் அன்பிற்கும், இயேசுவின் சீடரின் அன்பிற்கும் நேசம் என்ற சொல் பயன்படுகிறது (*16:27*). யோவா *21:15–17*–இல் காணப்படும் மூன்று கேள்விகளுக்குப் பேதுரு அளிக்கும் பதிலில் இவ்விரு சொற்களினுடைய வேறுபாட்டில் எவ்வித தனிப்பட்ட சிறப்பியல்பும் இல்லையென இப்பகுதிகள் காட்டுகின்றன. இந்த மூன்று கேள்விகளில் முதல் இரண்டில் அன்பு என்ற சொல்லும் மூன்றாவதில் நேசம் என்ற சொல்லும் பயன்படுகின்றன. பேதுருவின் மூன்று பதில்களிலும் நேசம் என்ற சொல் பயன்பட்டுள்ளது.

5. புதிய ஏற்பாட்டின் மற்ற நூல்கள்:– புதிய ஏற்பாட்டின் மற்ற நூல்கள் அன்பு பற்றிய தங்களுடைய கருத்தில் எவ்வித வேறுபட்ட சிறப்பியல்பையும் வெளிப்படுத்துவதில்லை. இச்சொல் பெரும்பாலும் அன்பு முழுமையானது என்னும் பவுலின் கருத்தையும் அனைத்தையும் தழுவிய ஒன்றுபடுத்தும் பரிமாற்ற சக்தி என்னும் யோவானின் கருத்தையும் வெளிப்படுத்துகின்றன. யூதா 12–இல் மட்டுமே நற்கருணைச் சடங்கினை "அகபே" குறிக்கிறது. இந்த உபயோகமானது அப்போஸ்தலிக்க காலத்திற்கு பிற்பட்ட கிறிஸ்தவ இலக்கியத்தில் மிகவும் பொதுவானதாக உள்ளது.

6. அன்பின் உரையாடல்:– பழைய ஏற்பாட்டில் இறைவனுக்கும் மனிதருக்குமிடையேயான அன்பானது, இறை முன் முயற்சிகள், மனிதனின் மறுப்புகள், புறக்கணிக்கப்பட்ட அன்பின் துன்பம், மற்றும் அன்பின் அளவில் இருந்து அன்பின் அருளை ஏற்றுக்கொண்டிருந்தவனுக்கான பரிதாபமான மிகையாடுகள் முதலிய நிகழ்ச்சிகளின் தொடரால் வெளிப்படுத்தப்பட்டது. புதிய ஏற்பாட்டில் இறை அன்பானது சூழ்நிலையில் உண்மைகளையே மாற்றியமைக்கின்ற இயல்பினையுடைய தனித்துவமிக்க நிகழ்ச்சியில் வெளிப்படுத்தப்படுகிறது. இறைவனுக்கும் மனிதனுக்கும் இடையிலான அன்பின் நாடக உரையாடலாக இறைவனாகவும் மனிதனாகவும் வாழ இயேசு வந்தார்.

அ) தந்தையின் கொடை:– இயேசுவின் வருகையானது முதலாவதாக தந்தையின் செயலாகும். இறைவாக்கினர்கள் மற்றும் பழைய ஏற்பாட்டு வாக்குறுதிகளின்படி "தமது இரக்கத்தை நினைவு கூர்ந்தவராய்" (லூக் *1:54–55*; எபி *1:1*) இறைவன் தம்மை அறியச் செய்தார் (யோவா *1:18*). எதிர்பார்க்கப்பட்ட மெசியா மீட்பராக மட்டுமின்றி (லூக் *2:11*) தாம் அன்பு செய்கிற (யோவா *3:35; 10:17; 15:9*; கொலோ *1:13*) தம்முடைய சொந்த மகனாகவும் உள்ளவரில் (மாற் *1:11; 9:7; 12:6*) அவர் தனது அன்பை வெளிப்படுத்துகிறார் (உரோ *8:39*; யோவா *3:1; 4:9*).

எதுவுமே விஞ்ச முடியாத முறையில் தந்தையின் அன்பு தன்னையே வெளிப்படுத்துகிறது. புதிய உடன்படிக்கையின் நிறைவேறுதல் செயல்படுகிறது. மனித இனத்துடனான மணமகனின் முடிவில்லா திருமணமும் இங்கே நடக்கிறது. இஸ்ராயேலின் தொடக்கத்திலிருந்து தெற்றெனத் துவங்கும் இறை தாராள மனப்பான்மையானது (உப *7:7–8*) அதன் உச்ச நிலையை அடைகிறது. மகனை வரவேற்கின்ற நிலையில் தன்னுடைய தகுதிகளை அடிப்படையாக்கி கொண்ட அனைத்து இறுமாப்பு, ஆணவம் ஆகிய வற்றைத் துறப்பதை மனிதன் தவிர்க்க

முடியாது. இறைவனால் அமைக்கப்பட்ட அன்பின் கொடையானது முற்றிலும் சுதந்திரமானது (உரோ 5:6–7; தீத் 3:5; 1 யோவா 4:10–19). இக்கொடையானது இயேசுவின் உலக வாழ்விற்கும் அப்பாற் பட்டு செல்கின்ற உறுதியானதாகும் (மத் 28:20; யோவா 14:18–19). உலகம் வாழ்வை அடைவதற்காகவும் (உரோ 5:8; 8:32) நாம் இறைவனுடைய பிள்ளைகளாக இருப்பதற் காவும் (1 யோவா 3:1; கலா 4:4–7) மகனுடைய மரணத்திற்கு இணக்கம் அளிக்கும் இந்த கொடை உச்சநிலை அடைகிறது. "தனது ஒரே மகனை அளிக்கும் அளவிற்கு இறை வன் உலகை அன்பு செய்தாரெனில்" (யோவா 3:4) அது மனிதர் முடிவில்லா வாழ்வை அடைய வேண்டும் என்பதற்காகவே. அனுப்பப் பட்டவரை விசுவாசிக்க மறுக்கின்றவர் களும், ஒளியைவிட இருளை அதிகமாய் அன்பு செய்கின்றவர்களும் (3:19) தங் களைத் தாங்களே தண்டனை தீர்ப்பிட்டுக் கொள்கிறார்கள். மகனில் விசுவாசத்தின் மூலம் அன்பு செய்தல் அல்லது விசுவா சத்தை மறுப்பதன்மூலம் இறை சீற்றத் தைப் பெறுதல் ஆகிய தேர்வை தவிர்க்க முடியாது.

ஆ) இயேசுவில் வெளிப்படுத்தப்பட்ட நிறைவான அன்பு:– இயேசுவுடனான தொடர்பின் சமயத்தில் மட்டுமின்றி அவரின் மூலமாகவும் இனிமேல் அன் பின் நாடகம் செயல்படுத்தப்படுகிறது. தமது வாழ்வின் மூலமே இயேசு அன்பினு டைய செயல்முறையான வெளிப்பாடாக உள்ளார். இறைவனுடனான மகனுக்குரிய உரையாடலை முழுமைப்படுத்தி, மனித ருக்கு அதற்கென சான்று பகர்கின்ற மனிதர் இயேசுவே மனித இனத்தின் முழுமையில் தமது அன்பை வாழ்ந்து காட்ட வந்தவரும், அன்பினுடைய ஆர்வ மிக்க வேண்டுகோளை நாம் புரிந்து கொள்ளச்செய்ய வந்தவருமான இறை வன் இயேசுவே அவரது ஆள் தன்மையில் மனிதன் இறைவனை அன்பு செய்து அவரால் அன்பு செய்யப்படுகிறான் .

1) இயேசுவில் வாழ்வு:– இயேசுவினு டைய முழு வாழ்வும் இருவடிவ உரையாட லுக்கு சான்று பகர்கிறது. தொடக்கத்தி லிருந்தே தந்தையிடம் ஒப்படைக்கப்பட்டு (லூக் 2:49; எபி 10:5–7) செபத்திலும் நன்றி செலுத்துதலிலும் (மாற் 1:35; மத் 11:25) எல்லாவற்றிற்கும் மேலாக இறை சித்தத் திற்கு முழுவதும் ஒத்த விதத்தில் வாழ்ந்து கொண்டு (யோவா 4:34; 6:38) இறைவனுக்கு செவிமடுப்பதில் அவர் சோர்வடைவ தில்லை. இது தந்தையால் கேட்கப்படு வதற்கு அவருக்கு உறுதியளிக்கிறது (11:41–42; 5:30; 8:36.40).

மனிதரைப் பொறுத்தவரை அவரு டைய வாழ்வானது சில குறிப்பிட்ட நண்பர்களுக்கு மட்டுமின்றி (மாற் 10:21; லூக் 8:1–3; யோவா 11:3.5.36) அனைவருக் கும் முழுமையாக அளிக்கப்படுகிறது (மாற் 10:45). மிகவும் இழிவுபடுத்தப்பட்ட வர்கள் மற்றும் தகுதியற்றவர்கள் முதற் கொண்டு (லூக் 7:36–50; 19:1–10; மத் 21:31–32). அனைவருக்கும் கவனம் செலுத்தி முழுமையான பற்றற்ற தன்மை யோடு (லூக் 9:58) தம்முடைய நண்பர் களாக இருப்பதற்கென (யோவா 15:15–16) தாம் விரும்பியவர்களை அவர் சுதந்திர மாக தேர்ந்தெடுத்தார் (மாற் 3:13).

இந்த அன்பானது கொடுத்து வாங்கும் பரிமாற்றத்தைக் கேட்கிறது. உப ஆகமத்தின் கட்டளை இன்னும் வழக்கில் இருந்தாலும் (மத் 22:37; உரோ 8:28; 1 கொரி 8:3; 1 யோவா 5:2) இயேசுவின் வழியாகவே ஒருவன் அதற்குக் கீழ்ப்படிகிறான். அவரை அன்பு செய்வதில் மனிதன் தந்தையை அன்பு செய்கிறான் (மத் 10:40; யோவா 8:42; 14:21–24). இறுதியாக இயேசுவை அன்பு செய்வதென்பது அவரது வார்த்தையை முழுமையாக கடை பிடிப்பதிலும் (யோவா 14:15.21.23) அனைத் தையும் துறந்து அவரை பின் செல்வதி லும் அடங்கியுள்ளது (மாற் 10:17–21; லூக் 14:25–27). இது முதல் இந்த அன்பை ஏற்ப வர்களுக்கும் மறுப்பவர்களுக்கும் இடை யில் நற்செய்தி முழுதும் ஒரு பிளவு செயல்படுகிறது (லூக் 2:34). இந்த அன்பிற்குமுன் எப்பக்கமும் சாராத நடு நிலைமை வகிக்க முடியாது (யோவா 6:60–71; 3:18–19; 8:13.59; 12:48).

2) சிலுவை:- சிலுவையில் அன்பானது தனது உச்ச அளவையும் நடைமுறையையும் உறுதியான முறையில் வெளிப்படுத்துகிறது. தமது தந்தைக்குரிய தமது கீழ்ப்படிதலையும் (பிலி 2:8) தமக்குரியவர்களுக்குத் தமது அன்பையும் (யோவா 13:1) முழுமையாக வெளிப்படுத்த இயேசு துன்புற வேண்டியிருந்தது (லூக் 9:22; 17:25; 24:7.26; எபி 2:8). கடுமையான மனித தனிமையில் (மாற் 14:50; 15:29-32) சோதனை முழுவதிலும் இறைவன் மௌனம் சாதிப்பதாகத் தோன்றியபோதும் (மாற் 14:32-41; 15:34; எபி 4:15) முற்றிலும் சுதந்திரமாக இருந்தாலும் (மத் 26:53; யோவா 10:18) அவர் மன்னித்து அனைவரையும் ஏற்பவராக உள்ளார் (லூக் 23:28; 24:43; யோவா 19:26). இதில் மிக உயரிய அன்பின் ஈடற்ற கட்டத்தை இயேசு வந்தடைகிறார் (யோவா 15:13). எதையும் ஒதுக்காமல் அவர் இங்கு அனைத்தையும் இறைவனுக்கும் (லூக் 23:46), விதி விலக்கின்றி அனைத்து மனிதருக்கும் அளிக்கின்றார் (மாற் 10:45; 14:24; 2 கொரி 5:14-15; 1 திமோ 2:5-6). சிலுவையினால் இறைவன் முழுமையாக மகிமைப்படுத்தப்படுகிறார் (யோவா 17:4). மனிதனாகிய இயேசுவும் (1 திமோ 2:5) அவருடன் அனைத்து மனுக்குலமும் எவ்வித ஒதுக்கீடுமின்றி இறைவனால் அன்பு செய்யப்படும் தகுதியை அடைகின்றனர் (யோவா 10:17; பிலி 2:9-11). இயேசுவினுடைய இறுதி செபத்திற்கேற்ப இறைவனும் மனிதனும் ஓர் ஒன்றிப்பில் ஒருங்கிணைக்கப்படுகின்றனர் (யோவா 17). கிறிஸ்துவின் மாதிரியைத் தொடர்கின்ற சுய தியாகத்திற்கு அவனை நடத்திச் செல்லவிருக்கின்ற இத்தகைய முழுமையான மற்றும் உரிமைகோரும் அன்பை மனிதன் எவ்வித தடையுமின்றி சுதந்திரமாக ஏற்க வேண்டியது இன்னும் அவசியமாகிறது (17:19). அன்பின் இடறலன்றி வேறில்லாத சிலுவையின் இடறலை அவன் தனது பாதையில் எதிர்கொள்கிறான். அங்குதான் மணமகளுக்கான மணமகனின் கொடையானது முழுமையாக வெளிப்படுத்தப்படுகின்றது (எபே 5:25-27; கலா 2:20). ஆனால் அங்குதான் பிரமாணிக்கமுள்ளமைக்கு இட்டுச் செல்லும் சோதனையும் எல்லா மனிதரையும் எதிர் கொள்கிறது.

இ) ஆவியில் உலகளாவிய அன்பு:- கல்வாரியானது நிறைவான அன்பிற்குரிய இடம் என்றால் அதன் வெளிப்பாட்டு முறை ஒரு முடிவான சோதனையாகும். சிலுவையில் அறையப்பட்டவரின் நண்பர்கள் அவரை கை விட்டு விடுகின்றனர் (மாற் 14:50; லூக் 23:13-24). இறையன்பிற்குப் பிரமாணிக்கமாயிருப்பது உடலியல் சந்திப்பையோ, மனித அறிவையோ, சுருக்கமாகக் கூறினால், "ஊனியல்பின் படியான அறிவையோ" சார்ந்ததன்று (2 கொரி 5:16). புதிய இதயத்தை உருவாக்குகின்ற ஆவியில் கொடை இங்கு தேவைப்படுகிறது (எரே 31:33-34; எச 36:25-27). கிறிஸ்து வாக்களித்தபடி (யோவா 14:16-18; லூக் 24: 49) ஐம்பதாம் நாளில் அனுப்பப்பட்ட ஆவியானவர் அன்று முதல் திருச்சபையின் மூலமாக (எபே 2:21-22) உலகில் பிரசன்னமாகியுள்ளார் (யோவா 14:16). இயேசு அவர்களுக்கு கூறியதை ஆவியானவர் மனிதருக்கு கற்பித்து (14:26) உண்மையான சமய அறிவின்மூலம், உள்ளார்ந்த முறையில் புரிந்து கொள்ளச் செய்கிறார். இயேசுவின் உலக வாழ்வுக்கு அவர்கள் சாட்சிகளாக இருக்கிறார்களோ இல்லையோ இங்கு மனிதர்கள், காலம் அல்லது இனம் முதலிய வேறுபாடுகளின்றி சமமாக உள்ளனர் 'தந்தாய்' (உரோ 8:15) என்று கூறுவதற்கும, கிறிஸ்துவ மகிமைப்படுத்துவதற்கும் யோவா 16:14) ஒவ்வொரு மனிதனுக்கும் ஆவியானவர் தேவையாக உள்ளார். நம்மைக் கட்டுப்படுத்துகின்ற (2 கொரி 5:1) அன்பு நம்பிடையே பரவி நிலவுகிறது (உரோ 5:5). அதிலிருந்து நம்மை எதுவும் பிரிக்க முடியாது (8:35-39). அது "நாம் அறியப்படுகிறவாறே அறிந்து கொள்கிற" அன்பின் உறுதியான சந்திப்பிற்கு நம்மைத் தயாரிக்கின்றது (1 கொரி 13:12).

ஈ) இறைவனே அன்பு: அன்பின் உரையாடலில் தமது ஆண்டவருடன் வாழ்வதற்கென ஆவியால் நடத்தப்படும் நிலையில் கிறிஸ்தவன், இறைவனுடைய மறை பொருளுக்கே நெருங்கி வருகிறான். ஏனெனில் தாம் இருக்கும் வித்தில் தம்து முதல் சந்திப்பிலேயே இறைவன் வெளிப்படுத்துவதில்லை. அவர் பேசுகிறார்,

அழைக்கிறார், செயல்படுகிறார்; இவ்வாறாக, மனிதன் ஆழமாகப் புரிந்து கொள்கிறான்; இறைவன் தம்முடைய மகனையே அளிக்கும்போது அன்பில் தம்மையே அளிப்பவராக வெளிப்படுத்துகிறார் (உரோ 8:32). முழுமையான அன்பின் உரையாடலில் தம் தந்தையோடு வாழ்ந்து அதன்விளைவாக தொடக்கத்தினின்றே தாமும் தந்தையும் ஒன்று என்றும் (யோவா 10:30; 17:11.21–22) அவரே இறைவன் என்றும் (யோவா 1:1; 10:33.38; மாற் 11:27) வெளிப்படுத்தி, "தந்தையின் இதயத்திற்கு மிக அருகிலுள்ள ஒரே மகன்" "யாருமே என்றுமே கண்டிராத இறைவனைப் பற்றி அறிய நமக்கு உதவுகிறார் (யோவா 1:18). இந்த இறைவன் ஆவியின் ஒன்றிப்பில் அவருடைய தந்தையும் அவருமே ஆவார். அன்பு மற்றும் விசுவாசத்தின் உண்மையான பொருள் என்ன என்பதை அனுபவித்தள்ள "அன்புச் சீடர்" இக்கருத்தைப் பற்றி இறுதி முடிவான கூற்றாக "இறைவனே அன்பு" (1 யோவா 4:8.16) என்று கூற முடியும், வளமையும் வரையறைகளும் கொண்ட மனிதச் சொற்கள் அனைத்திலும் "அன்பு" என்னும் இச்சொல் மட்டுமே தந்தை, தம் மகன் மற்றும் ஆவியினுடைய முடிவில்லாத பரிமாற்றக் கொடையாகிய மூவொரு இறைவனின் மறைபொருளை சிறந்த முறையில் விவரிக்கிறது.

IV. சகோதரத்துவ அன்பு, பிறர் அன்பு

1. பழைய ஏற்பாடு:–

பழைய ஏற்பாட்டில் இறைவனுடைய அன்பின் கட்டளையானது "உனக்கு அன்பு செய்வது போல் உன் அயலானுக்கும் அன்பு செய்" (லேவி 19:18) என்ற இரண்டாவது கட்டளையால் நிறைவு செய்யப்படுகிறது. உண்மையில் இந்த கட்டளையானது மற்றதைவிட சற்று குறைந்த ஆடம்பர முறையிலேயே அளிக்கப்படுகிறது (ஒப்பிடுக லேவி 19:1–37 மற்றும் உப 6:4–13). அயலான் என்ற சொல்லானது அங்கு உண்மையில் ஒரு குறுகிய பொருளைக் கொண்டுள்ளது. ஆனால் கவனத்தை மற்றவைகளை நோக்கி திருப்பச்சொல்லி இஸ்ராயேலன் ஏற்கனவே கோரப்பட்டுள்ளான். ஒருவரது அயலாருக்கு விரோதமாகவோ அல்லது அவருக்குக் கவனம் செலுத்தாமலோ இருப்பது பண்டைய நூல்பகுதிகளின் படி இறைவனுக்கெதிரான குற்றமாகும் (ஆதி 3:12; 4:9–10). சட்டமானது இறைவனுடன் கொள்ளும் உறவுகள் பற்றிய கோரிக்கைகளுடன் மனிதரிடையிலான உறவுகளைப்பற்றிய கோரிக்கைகளையும் சேர்க்கின்றது. இவ்வாறு "பத்து கட்டளைகளும்" (யாத் 20:12–17) "உடன்படிக்கை நூலும்" அமைந்துள்ளன. பின்னதில் ஏழைகளுக்கும் எளியோருக்குமான கவனம் பற்றிய குறிப்புகள் அதிகம் உள்ளன (யாத் 22:20–26; 23:4–12). இறைவாக்கு மரபு முழுவதும் (ஆமோ 1–2; ஏச 1:14–17; எரே 9:2–5; எச 19:5–9; மலா 3:5) ஞான மரபும் முழுவதும் (பழ 14:21; 1:8–19; சீரா 25:1; ஞான 2:10–12) ஒரே கருத்தை வலியுறுத்துகின்றன. அக்கருத்து மற்ற மனிதருக்கு, குறிப்பாக மிகவும் கைவிடப்பட்டோருக்கும், குறைந்த கவனத்தை ஈர்க்கக் கூடியவர்களுக்கும், மரியாதை அளிக்காமல் இறைவனை பிரியப்படுத்த முடியாது என்பதாகும். மனிதரில் விருப்பமில்லாமல் இறைவனை அன்பு செய்ய முடியுமென எவரும் நம்ப முடியாது. "அவர் நீதியும் நேர்மையாயும் நடந்தார்... ஏழையின் வழக்கையும் எளியவனின் வழக்கையும் அவர் தீர்த்தார். இதெல்லாம் செய்வதே நம்மை அறிதல் அன்றோ?" (எரே 22:15–16). இந்த இறைக்கூற்று யோசியாவை பற்றியதாயினும் எல்லா இஸ்ராயேலுக்கும் பொருந்தும் (எரே 9:4)

இக்கடமையானது அன்பு என அழைக்கப்பட வேண்டுமென்பது அடிக்கடி குறிப்பிடப்படவில்லை (லேவி 19:18; 19:34; உப 10:19). ஆயினும் அன்னியருக்குக் காட்ட வேண்டிய அன்பினைப்பற்றி பேசும்போது யாத்திரையின்போது யாவே செய்ததுபோன்று செயல்பட வேண்டிய கடமையின் கட்டளையானது ஏற்கெனவே நிறுவப்படுகிறது. "ஆண்டவர் அகதியை நேசித்து அவனுக்கு உணவும் உடையும் தந்தருளுபவருமாய் இருக்கிறார். நீங்களும் எகிப்து நாட்டில் அந்நியராய் இருந்தீர்கள் அல்லவா? ஆகையால் அகதிகளுக்கு அன்பு செய்யுங்கள்" (உப 10:18–19),

இதற்குரிய உந்து காரணம் சாதாரண இயல்பான கூட்டுணர்வல்ல மாறாக மீட்பின் வரலாறு ஆகும்.

இயேசுவின் வருகைக்கு முன்னா சகோதர அன்பின் இயல்பை யூதத்துவம் ஆழப் படுத்தியது அயலாரின் அன்பில் யூதஎதிரிகளும் புறவின பகைவனும் கூட சேர்த்துக் கொள்ளப்பட்டனர். இஸ்ராயேலானது தனது மையப்பங்கை கொண்டிருந்தாலும் அன்பானது உலகளாவியதாயிற்று. "சமாதானத்தை அன்பு செய்", "சமாதானத்திற்காக ஆர்வம் கொள். உயிரினங்களை அன்புசெய்து, அவற்றை சட்டத்திற்கு நடத்திச்செல்" என்று இல்லேல் கூறினார். அன்பானது இறை செயலை நீட்டிப்பது என்ற கண்டுபிடிப்பும் அங்கே உள்ளது. "போற்றப்பட வேண்டிய பரிசுத்தர் நிர்வாணியை உடுத்துவதுபோல, துன்புற்றவர்களைத் தேற்றுவதுபோல, இறந்தவரை அடக்கம் செய்வதுபோல, நீயும் நிர்வாணியை உடுத்து, நோயாளியை சந்தி". அக்கால முதல் இறைவனுக்கும் அயலாருக்குமான அன்பின் இரு கட்டளைகளுக்கிடையில் இணைப்பை ஏற்படுத்துவது எளிது. ஒருநாள் இயேசுவை அணுகும போது சட்ட வல்லுநர் இதையே செய்வார் (லூக் 10:26–27).

2. புதிய ஏற்பாடு:–

சகோதர அன்பானது மற்ற கட்டளைகளுடன் சமத்தவ நிலையில் அமைக்கப் பட்டுள்ளது என விசுவாசிக்குமாறு யூத கருத்தானது ஒருவரை நடத்திச் செல்லக் கூடுமாயின் கிறிஸ்தவ காட்சியானது அதற்கு மையமான அதற்கு மேலாகத் தனித்துவமிக்க நிலையை அளிக்கிறது..

அ) இருஅன்புகள்:

புதிய ஏற்பாட்டின் தொடக்க முதல் இறுதிவரை அயலாருக்கான அன்பு இறை அன்பினின்று பிரிக்கப்பட முடியாததாகத் தோன்றுகிறது. இவ்விரு கட்டளைகளும் சட்டத்தின் உச்ச நிலையாகவும் திறவுகோலாகவும் உள்ளன (மாற் 12:28–33). சகோதர அன்பே அனைத்து ஒழுக்கக் கோரிக்கைகளின் நிறைவேறுதலாகும் (கலா 5:22; 6:2; உரோ 13:8–9; கொலோ 3:14). உண்மையில் இது மட்டுமே ஒரே கட்டளை (யோவா 15:12; 2 யோவா 5), அனைத்து உயிருள்ள விசுவாசத்தின் தனித்தன்மையுடையதும் பல பருமனுடையதும் ஆகும் (கலா 5:6.23). "கண்ணால் கண்ட சகோதரனுக்கு அன்பு செய்யாதவன் தான் கண்டிராத கடவுளுக்கு அன்பு செய்ய இயலாது.... நாம் கடவுளுக்கு அன்பு செய்யும் போது கடவுளுடைய மக்களுக்கும் அன்பு செய்கிறோம்" (1 யோவா 4:20–21; 5:2). அடிப்படையில் ஒரேயொரு அன்பு மட்டுமே உள்ளது என்ற கூற்றை உயர்த்துவதென்பது இயலாதது.

எனவே அயலாரின் அன்பு என்பது சமயத்தைச் சார்ந்தது. இது வெறும் மனித நேயம் மட்டுமல்ல. மேலும் இறைவனுடைய அன்பே இதற்கு மாதிரியாக இருப்பதாலும் இது சமயம் சார்ந்ததாகும் (மத் 5:44–45; எபே 5:1–2.25; 1 யோவா 4:11–12). எல்லாவற்றிற்கும் மேலாக இறுதியாக இதனுடைய மூல ஆதாரமும் இதற்கு காரணமாகும். ஏனெனில் இது நம்மில் இறைவன் ஆற்றும் வேலையாகும். ஆண்டவர் நமக்கு கற்பிக்காவிடின் (1 தெச 4:9), ஆவியானவர் அதனை நமது இதயங்களில் பரவச் செய்யாவிடின் (உரோ 5:5; 15:30), விண்ணகத் தந்தையை போன்று நாமும் எவ்வாறு இரக்கமிக்கவர்களாக இருப்போம்? (லூக் 6:36). இந்த அன்பு இறைவனிடமிருந்து வருகிறது. இறைவன் நம்மை தமது மக்களாக ஏற்றுக் கொண்டார் என்ற உண்மையிலிருந்தே இந்த அன்பு நம்மில் வாழ்வது தெரிகிறது (1 யோவா 4:7). இறைவனிடமிருந்து வந்ததனால் இந்த அன்பானது இறைவனிடமே திரும்பிச்செல்கிறது. ஏனெனில் நாம் அனைவரும் ஒன்றுபட்டு கிறிஸ்துவின் உடலை உருவாக்குகிறோம் (உரோ 12:5–10; 1 கொரி 12:12–27). நமது சகோதரர்களை அன்பு செய்வதில் நாம் இறைவனையே அன்பு செய்கிறோம் (மத். 25:40). இவ்வாறாக இறைவன் முதலில் நமக்கு காட்டிய அன்பிற்கு நாம் பதிலளிக்கலாம் (1 யோவா 3:16; 4:19–20).

ஆண்டவருடைய வருகையை எதிர் நோக்கியுள்ள வேளையில் அன்பானது இயேசுவின் சீடர்களுடைய முக்கிய செயலாக உள்ளது. அதன்படியே அவர்களும்

தீர்ப்பிடப்படுவர் (மத் 25:31–46). இயேசுவால் விடப்பட்ட தந்தை வழிச் செல்வம் இத்தகையதே: "நாம் உங்களுக்கு அன்பு செய்தது போல நீங்களும் ஒருவருக்கொருவர் அன்பு செய்யுங்கள்" என்பதுவே இயேசு நமக்கு விட்டுச்சென்ற உரிமைச் சொத்தாகும். கிறிஸ்துவினுடைய அன்புச் செயலானது அவரது சீடர்களுடைய செயல்களின் மூலமாகத் தொடர்ந்து செயலாற்றுகிறது. இக்கட்டளையானது பழமையானதாக இருந்தாலும், வெளிப்பாட்டின் ஊற்றுகளோடு கொண்டுள்ள தொடர்பின் காரணமாக பழைமையானதாக இருந்தாலும் (1 யோவா 2:7–8), புதியதாக உள்ளது. உண்மையில் தனது பலியின் மூலமாக இறைவாக்கினர் அறிவித்திருந்த புதிய சமுதாயத்தை தோற்றுவித்ததன் மூலம் ஒரு புதிய காலகட்டத்தை இயேசு துவக்கியுள்ளார். புதிய இதயங்களைப் படைக்கக் கூடிய ஆவியை அவர் மனிதனுக்கு அளித்துள்ளார். இவ்விரு கட்டளைகளும் ஒன்றிணைக்கப்பட்டுள்ளன. ஏனெனில் கிறிஸ்துவைப் பின்செல்வோர் தம்மில் வெளிப்படுத்துகின்ற அன்பின் மூலமாக கிறிஸ்துவின் அன்பு தொடர்ந்து வெளிப்படுத்தப்படுவதே இதற்கு காரணம்.

ஆ) அன்பு ஒரு கொடை:–

முன் கூறியதுபோல் கிறிஸ்தவ அன்பானது, சிறப்பாக ஒத்தமை நற்செய்தியாளர்களாலும் பவுலாலும் எத்தகுதியும் இல்லாத நிலையிலும் எல்லா பாவ மனிதருடைய மீட்பிற்காகவும் தமது மகனையே இலவசமாக அளிக்கின்ற இறைவனின் சாயலில் பார்க்கப்படுகிறது (மாற் 10:45; உரோ 5:6–8). எனவே இது எவ்விதச் சமூக அல்லது இனத்தடையினையும் அனுமதிக்காமல் (கலா 3:28), எவரையும் வெறுத்து ஒதுக்காமல் (லூக் 14:13; 7:39) யாவரையும் உள்ளடக்குகிறது. மேலும் பகைவரையும் அன்பு செய்தலை இது கோருகிறது (மத் 5:43–47; லூக் 10:29–37). அன்பினைத் தளர்வடையச் செய்ய முடியாது. எல்லையற்ற மன்னிப்பிலும் (மத் 18:21–22; 6:12.14–15) எதிரியை குறித்த செயலிலும் (மத் 5:23–26), பொறுமையிலும், தீமைக்கு நன்மை செய்வதிலும் (உரோ 12:14–21; எபே 4:25–5:2) அது தன்னை வெளிப்படுத்துகிறது. திருமணத்தில் கிறிஸ்துவின் பலியை பின்பற்றி, முழுமையான கொடையாக அளிக்கப்படுவதில் அது வெளிப்படுகிறது (எபே 5:25–32). அனைவருக்கும் சிலுவையில் அறையப்பட்ட கிறிஸ்துவுடன் மனிதன் தம்மையே துறக்கின்ற (பிலி 2:1–11) ஒருவருக்கொருவர் அளிக்கின்ற அடிமைத்தனமாக அது அமைகிறது (கலா 5:13). தன்னுடைய "அன்பின் பாடலில்" (1 கொரி 13) அன்பினுடைய இயல்பையும் மாண்பையும் பவுல் வெளிப்படுத்துகின்றார். அதனுடைய அனுதின தேவைகளைச் சிறிதும் புறக்கணியாமல் (13:4–6), அன்பில்லாமல் எதற்கும் மதிப்பில்லை (13:1–3) என்றும், மற்றும் அது மட்டுமே எதனையும் கடந்து இருக்கக் கூடியது என்றும் உறுதிப்பட அவர் எடுத்துக்கூறுகிறார். கிறிஸ்து அன்பு செய்ததுபோல அன்பு செய்வதன் மூலம் இறைவனுடைய முடிவில்லா உண்மையை நாம் ஏற்கெனவே வாழ்கிறோம் (13:8–13). அன்பினால் திருச்சபையானது கட்டியெழுப்பப்படுகிறது (1 கொரி 8:1; எபே 4:16). இதன்மூலமாக மனிதன் ஆண்டவருடைய நாளுக்கு நிறைவுள்ளவனாகிறான் (பிலி 1:9–11).

இ. அன்பானது ஒன்றிப்பாகும்:– அன்பினுடைய உலகளாவிய நிலை மற்றும் இலவசத்தன்மை பற்றியும் யோவான் குறிப்பிடுகிறார் (யோவா 3:16; 15:16; 1 யோவா 4:10). ஆனால், ஆவியில் தந்தை மற்றும் மகனுடைய ஒன்றிப்பைப் பெரிதும் உணர்ந்தவராய், ஒருவருக்கொருவர் கிறிஸ்தவர்கள் கொள்ளும் அன்பின் விளைவுகளை அவர் வலியுறுத்துகிறார். இந்த சகோதரத்துவமானது முழுமையான ஒன்றிப்பாக இருக்க வேண்டும். இதனில் அன்பு மற்றும் விசுவாசத்திற்கான தனது திறமைக்கேற்ப ஒவ்வொருவனும் பங்கேற்கிறான். இவ்வுலகில் அவன் தீயோனுடைய அரசினை அன்பு செய்ய முடியாது (1 யோவா 2:14–15; யோவா 17:19). ஆனால் கிறிஸ்தவன் தனது சகோதரர்களை வலிந்து பெறும், செயல்முறையான அன்போடு அன்பு செய்வான் (1 யோவா

3:11–18). அதிலே துறவு மற்றும் மரணத்தின் சட்டம் தடையின்றி இயங்குகின்றன. அது இல்லாமல் உண்மையான பலனே இல்லை (யோவா 12:24–25). இந்த அன்பினால் விசுவாசி இறைவனோடு ஒன்றித்து வாழ்கிறான் ( 1 யோவா 4:7–5:4). "நீர் என் மீது கொண்டிருந்த அன்பு அவர் ளுள் இருக்கவும் நானும் அவர்களுள் இருக்கவும்" என்பதுவே இயேசுவின் இறுதிச் செபம் ஆகும் (யோவா 17:26). தாங்கள் சேராத உலகின் நடுவில் சீடர்களால் வாழ்கின்ற நிலையில் (17:11. 15–16). இயேசு தந்தையால் அனுப்பப்பட்டவர் என்பதை உலகம் அறிந்து கொள்வதற்குச் சான்றாக இந்த சகோதர அன்பு உள்ளது (17:21); "நீங்கள் ஒருவர் மீதொருவர் அன்பு கொண்டிருந்தால் தான் நீங்கள் என் சீடர் என்பதை எல்லாரும் அறிந்து கொள்வார்கள்" (13:35).

**அன்புச் சீடர்** (BELOVED DISCIPLE)

அருளப்பர் நற்செய்தியின் இறுதியில் பெயர் ஒன்றும் கூறப்படாமல் அன்புச் சீடர் என்று மட்டுமே கூறப்பட்டுள்ள இயேசுவின் சீடரே இவர். மாற்கு 10:21–இல் குறிப்பிடப்படும் பணக்கார மனிதன் இவராக இருக்க முடியாது. இயேசு அன்பு செய்ததாகக் கூறப்படும் அந்த மனிதனும் இயேசுவின் சீடனாகவில்லை.

இறுதி இராவுணவின்போது இயேசுவின் மார்பில் சாய்ந்துகொண்டிருந்த இச்சீடர் பேதுரு கேட்டுக்கொண்டதின் பேரில் இயேசுவைக் காட்டிக் கொடுக்கப் போவது யார் எனக்கேட்கிறார் என யோவான் 13:23–ல் குறிப்பிடுகிறார். சிலுவையினடியில் 'தாம் அன்பு செய்த சீடரிடம்" தன் தாயை ஒப்படைக்கிறார் இயேசு. அவரும் அந்நேரம் முதல் அவளைத் தன் வீட்டில் ஏற்றுக்கொண்டார் (யோவா 19:26–27). மரிய மத்தலேனே காலியான கல்லறையைப் பார்த்ததும் விரைந்து வந்து பேதுருவிடமும் இயேசு அன்பு செய்த சீடரிடமும் வந்து கூறினாள். உடனே அவர்களிருவரும் ஓடிச்சென்றபொழுது அன்புச் சீடர் பேதுருவுக்கு முன்னர் ஓடினாலும் பேதுருவே முதலில் கல்லறைக்குள் நுழைந்தார். பின்புதான் மற்ற சீடர் உள்ளே நுழைந்து பார்த்து விசுவசித்தார் (20:1–8). யோவான் நற்செய்தியின் பிற்சேர்க்கையான 21–ஆம் அதிகாரத்தில் இயேசுவின் அன்புச் சீடர் திபேரியாக் கடற்கரையில் ஆண்டவரை முதன்முதலில் அடையாளம் கண்டு கொண்டார் (21:7). இதே அதிகாரத்தில் இயேசுவின் வார்த்தை தவறாகப் புரிந்து கொள்ளப்பட்டது. "நான் வரும்வரை இவன் இப்படியே இருக்க வேண்டுமென்பது எனது விருப்பமானால் அதைப்பற்றி உனக்கு என்ன" என்று பேதுருவிடம் இயேசு கூறியதை நான் வரும்வரை அவன் இறக்கமாட்டான் எனக் கூறியதாகப் புரிந்துகொண்டனர். அச்சீடர் இறந்து விட்டதாகத் தோன்றுகிறது. ஆகவே "நான் வருமளவும் இவன் இப்படியே இருக்க வேண்டும் என்பது எனக்கு விருப்பமாயிருந்தல் உனக்கென்ன" என்று இயேசு கூறினாரே அன்றி இறக்கமாட்டான் என்று கூறவில்லை என்று விளக்கப்படுகிறது. யோவா 21:24–இல் சில கிறிஸ்தவர்கள் இந்தச்சீடர் கூறும் சாட்சியம் உண்மையானதே எனச்சான்று பகர்கின்றனர்.

யோவான் 1:41; 18:15; 19:35 ஆகிய மூன்றும் இச்சீடரைப் பற்றியே குறிப்பிடுவதாகச் சிலர் கருதுகின்றனர். மற்ற சீடர், பெயரிடப்படாதவர் இவரே என்றும், அவரது விலாவினின்று இரத்தமும் நீரும் வரக் கண்டவர் அன்புச் சீடர்தான் எனக் கூறினாலும் இவை நிச்சயமானதாக இல்லை. இவர் யார்? இவரை அடையாளம் காண இருமுறைகளில் ஒன்று பின்பற்றப்படுகிறது. ஒரு சாரார் இவ்வளவு முக்கியத்துவம் பெற்றவர் இயேசுவின் சீடர்களுள் ஒருவராகவே இருந்திருக்க வேண்டும். அவர் பேதுருவாகவோ யாக்கோபுவாகவோ இருந்திருக்க முடியாது, ஏனெனில் அவர்களிருவரும் இவருடன் வருகின்றனர், எனவே யாக்கோபுவின் சகோதரரான யோவானாகத் தான் இருக்கவேண்டும் இந்த அன்புச் சீடர் என்று கருதுகின்றனர். யோவான் நற்செய்தியைப் போலவே லூக் 22:8; அ.ப.3:1; 8:14–இல் பேதுருவும் யோவானும் இணைந்தே வருகின்றனர். இதுவும் யோவான்தான் அன்புச்சீடர் என்பதைக்

குறித்துக்காட்டுகிறது. யோவா 21:2 திபேரியாக் கடற்கரையில் செபதேயுவின் மக்கள் இருந்தனர் என்றும், 21:7 அன்புச் சீடரும் அங்கு இருந்தார் எனவும் குறிப்பி டுவதால் இவ்வன்புச் சீடர் நிச்சயமாக யோவானாகத்தான் இருக்க வேண்டு மென்பதற்குப் புறச்சான்றாக இது அமை கிறது. பழைய திருச்சபை மரபு அன்புச் சீடர் யோவான்தான் என வலியுறுத்திக் கூறுகிறது. ஆகவே புறச்சான்றுகள், யோவான்தான் இயேசுவால் அன்பு செய் யப்பட்ட சீடர் என்ற கருத்துக்கு பெரிதும் ஆதரவு தரும் வாதமாக அமைகின்றன.

மற்றொரு அணுகுமுறை யோவானின் நற்செய்தியை ஆராய்ந்து அது அன்பு செய்யப்பட்ட சீடரை அடையாளம் காட்டு கிறதா என்று காண முயலுதலாகும். யோவானின் பெயர் அவரது நற்செய்தி யில் வரவில்லை என்பதற்காக அன்புச் சீடர் யோவானாகத்தான் இருக்க வேண்டு மென்பதில்லை. இந்நற்செய்தியின் அகச் சான்றுகளை அடிப்படையாகக் கொண்ட மூன்று கருத்துக்கள் கவனிக்கத்தக்கவை யாகும்.

அ) இயேசுவைப் பின்பற்றும் உண்மை யான சீடர் எப்படி இருக்கவேண்டுமென் பதே அன்புச் சீடர் என்ற பெயரில் காட்டப்பட்டுள்ளது. அது ஒரு இலட்சியச் சீடன் பாத்திரம். அதை வைத்து அன்புச் சீடர் என்று தனி மனிதரைக் குறிப்பது, தேடுவது தவறு என்கின்றனர்.

ஆ) அன்புச் சீடர் எருசலேமைச் சேர்ந்த ஒரு குருவின் குடும்பத்தாராக வோ அல்லது தொடர்புடையவராகவோ இருக்க வேண்டும். இக்கருத்து யோவா. 18:15 அன்பு செய்யப்பட்டச் சீடரைக் குறிக் கிறது என்று ஏற்றுக்கொள்ளும். இவர் உயிர்ப்பிற்குப்பின் வரும் பிற்சேர்க்கை பகுதியைத் தவிர மற்றபடி எருசலேமில் மட்டும்தான் தோன்றுகிறார். நற்செய்தி யைக் கூட எருசலேமை மையமாகக் கொண்டுள்ள இந்நற்செய்தியின் ஆசிரியர் அல்லது அடிப்படை சாட்சி ஒரு கலிலேயே மீன் பிடிப்பவராக இருந்தால் எருசலேமை மையமாக வைப்பதை விளக்குவது கடினம். இவர் பெரிய குருவை அணுக முடிகிறது.

போலிகிரேத்தஸ் என்ற ஏதெசாவின் ஆயர் யோவான் குருக்கள் அணியும் மார்புத் தகட்டை அணிந்து இருந்ததைக் குறிப்பிடுகிறார். இது 18:15–ஐ அடிப்படை யாகக் கொண்டதாக இருக்கலாம். அன்பு செய்யப்பட்ட சீடர் குருகுலத்தைச் சேர்ந்த வர் என்ற கருத்தைப் பிரதிபலிக்கலாம்.

இ) அன்புச் சீடர் இலாசர்தான் என்ற கருத்தும் உண்டு; ஏனெனில் இயேசு இவரை அன்பு செய்வதை வலியுறுத்துவ தாக யோவா 11:3.5. 11.36–ம் இயேசுவுடன் இலாசர் உணவைப் பகிர்ந்து கொள்வ தாக 12:2–உம் கூறுகின்றன. பின்பு, 13:23–இல் அன்புச் சீடர் இயேசுவோடு உணவைப் பகிர்ந்து கொள்வதாகக் கூறு கிறது. இலாசர் எருசலேமுக்கு அருகே பெத்தானியாவில் வசிப்பதாக கூறப்படு கிறது. மேலும் இது கல்வாரிக்கு அருகில் இருப்பதால் இயேசுவின் தாயை விரை வில் தன் வீட்டுக்கு அழைத்துச் செல்ல முடியும். மேலும் இயேசுவால் உயிர்ப்பிக் கப்பட்ட இலாசரால் உயிர்த்த இயேசுவை அடையாளம் கண்டுகொள்வதும், அவரில் அவரால் மட்டுமே வாழ்வு உண்டு என்று சான்று பகர்வதும் எளிது, பொருத்தமு டையது. ஆனால் நற்செய்தியை இலாசர் எழுதினார் என்று ஒப்புக்கொண்டால் அது அவர் முக்கிய சீடர்கள் கூட்டத்திற்கு வெளியே உள்ளவர் என்று கருதப்படும் போது உண்டாகும் ஒற்றுமையின்மையை நீக்கி, நற்செய்திக்கு அந்த ஒற்றுமையை அளிக்கிறது. அதே நேரத்தில் இலாசர், இறந்து உயிர்த்தது உண்மை என்பதால் அவர் மீண்டும் இறக்கமாட்டார் என்ற வதந்தி எளிதாக எழுந்திருக்கக்கூடுவதாக உள்ளது.

அகச் சான்றுகள் இலாசர்தான் அன்புச் சீடர் எனவும், புறச் சான்றுகள் செபதேயுவின் மகனான யோவான்தான் அன்புச் சீடர் எனவும் உறுதிப்படுத்து கின்றன. ஆனால் இலாசர் ஒரு உருவக, உவமைப் படைப்பே, ஒரு தனி ஆள் அல்ல என்ற கருத்தும் உண்டு (லூக் 16:31). இது இலாசர் ஒரு உண்மையான ஆள்

என்று நற்செய்திச் சுட்டிக்காட்டு வதை எண்பிக்கவில்லை. அன்புச் சீடர் என்று நற்செய்தியின் மூலப்பிரதியில் பெயர் குறிப்பிடப்படாத அவர், பின்னர் யோவான் என்ற பெயருடைய ஒரு தலைவ ரோடு தொடர்புபடுத்தப்பட்டு பின்னர் அது சீடர்களில் ஒருவரான அப்போஸ் தலர் யோவானைக் குறித்திருக்கலாம்; யோவா *21:24* இந்த வளர்ச்சியின் ஒரு கூட்டத்தைப் பிரதிபலிக்கலாம். ஆனால் உறுதியாக அறுதியிட்டு 'அன்புச் சீடர்' யார் என்று கூறமுடியாது.

**அன்பு பெறாதவள்**

இது ஓசேயின் இரண்டாவது குழந்தை யாகிய மகளுக்கு அளிக்கப்பட்ட அடை யாளப் பெயராகும்; ஆண்டவர் இஸ்ராயேல் வீட்டை இனி ஒருபோதும் மன்னிக்க மாட் டார் என்பதை குறிப்பிடுகின்றது (ஓசே *1:6*). உடன்படிக்கையானது பின்னர் மீண்டும் அமைக்கப்படும்போது, இறைவன் மீண் டும் இஸ்ராயேல் மீது "அன்பு கூறுவார்" (*2:22*).

**அன்பு விருந்து** (AGAPE)

அகபே என்ற கிரேக்கச் சொல், அதன் அடிப்படைப் பொருளில் அன்பு செய்யப்பட்டவரின் நலனுக்காக எதையும் செய்யும் இறைத் தன்மையுடைய தன்னல மற்ற அன்பைக் குறித்தது. புதிய ஏற்பாட் டில் இது கலைச்சொல்லாக அன்பு விருந்தைக் குறிக்கிறது. இந்த விருந்துகள் கிறிஸ்தவர்கள் தங்களுக்குள்ளே சமயத் தோழமையை வளர்க்கவும் குறிப்பாகக் கிறிஸ்தவச் சமூகத்திலிருந்து ஏழைகள், அநாதைகள், விதவைகளுக்கு அன்பு செய்யவும் பயன்பட்டன. இது கிறிஸ்தவம் தோன்றிய காலத்திலிருந்து அதாவது இயேசு தம் சீடர்களோடு உண்ட காலத்தி லிருந்து வழக்கத்தில் இருந்து அல்லது அவர் பெருங்கூட்டத்தினருக்கு உணவ ளித்த பணி நிகழ்ச்சிகளிலிருந்து (மாற் *6:34–44*; *8:1–9*) வரலாம். இதற்கு அ.ப. *2:42. 46*; *6:1–2*–ல் சான்றுகளைக் காண்கி றோம். இவற்றில் குறிக்கப்படுவது அன்பு விருந்தா, அல்லது ஆண்டவரின் இரா வுணவா என்ற சந்தேகம் நிலவுகிறது (*1* கொரி *11:20*; அ.ப. *20:11*)

இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த ஆதிக்கிறிஸ்தவர்களுக்கு அன்பு விருந்தை பற்றிய சில அறிவுரைகள் திதாக்கே என்ற ஆதி கிறிஸ்தவர்களின் சட்ட நூலில் *9–10* அதிகாரங்களில் கூறப்பட்டுள்ளன. அந்தி யோக்கிய நகர இன்னாசியாரும் இதைப் பற்றிக் கூறுகிறார். பித்துனியாவில் கி.பி. *11*–ல் ஆளுநராய் இருந்த சிறிய பிளினி என்பவர் கிறிஸ்தவர்கள் உண்ட அன்பு விருந்தைப் பற்றிக் குறிப்பிடுகிறார்.

இரண்டாம் நூற்றாண்டின் நடுப்பகுதி யில் இந்த அன்புவிருந்து ஆண்டவர் இரவு உணவு அல்லது நற்கருணை என்ற திருவருட்சாதனச் சடங்கின் தொடர்பி லிருந்து தெளிவாக வேறுபடுத்தப்பட்டது. இது பிற்பகலில் அல்லது மாலை வேளை யில் நடைபெற்றது. இந்த வேறுபட்ட பொருளில் யூதா *12*–இல் ஒன்றில்தான் புதிய ஏற்பாட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது. அலெக்சாந்திரியா நகர கிளமெந்தும் இதற்குச் சான்று பகர்கிறார்.

இவ்வாறு அன்பு விருந்து உண்ணும் பழக்கம் யூத குடும்பங்களில் திருவிழா நாட்களில் கூடி உண்ணும் பழக்கத்தி லிருந்து தோன்றியது. யூத சட்ட ஒழுங்கு முறை நூல்களான மிஸ்னா, தால்மூது ஆகியவற்றில் குடும்பங்களில் விருந்தை எப்படி உண்ணவேண்டும் என்று கூறப் பட்டுள்ளது. ஒரு குடும்பமோ அல்லது நண்பர்களின் கூட்டமோ சூரியன் மறைவ தற்கு முன் அந்த வீட்டில் கூடும். அவர்கள் எல்லோரும் ரசம் பருகியபின் உணவு ஆரம்பமாகும். முதலில் அந்த குழுவின் தலைவர் உணவை அசீர்வதித்து கடவுளுக்கு நன்றி கூறி ரொட்டியைப்பிட்டு எல்லோருக்கும் அளிப்பார். உணவின் போது சமய போதனைகள் பற்றியே பேசப்படும். உணவு முடிந்தபின் கைகள் கழுவியபின் தலைவர் இறைவனுக்கு நன்றி கூறுவார். அது ஒய்வு நாளாகவோ அல்லது விழாவாகவோ இருந்தால் திராட்சை ரசம் உள்ள கிண்ணம் ஆசீர்வ திக்கப்படும். இதையே ஆசீர்களின் கிண்ணம் என்றனர் (*1* கொரி *10:16*). இறை வனின் அரசு வருவதையும், அவர் சித்தம் நிறைவேறுவதையும் இது சிறப்பாக

நினைவு கூறும். பிற்காலத்தில் செபக்கூட வழிபாட்டின் முடிவில் இவ்வுணவுச் சடங்கு அமைந்ததால் உணவிற்கு முன்ன மே கிண்ணம் ஆசீர்வதிக்கப்பட்டது. இப் பழக்கம் யூதர்களின் சமுதாய வாழ்விற்கு அடிப்படையாக விளங்கிற்று. இது எஸ் ஸேனியர்கள் சமூகத்திலும் வழக்கத்தில் இருந்த ஓர் சடங்காகும். இது கும்ரான் சுவடிகளிலிருந்து தெரியவருகிறது. இந்த எஸ்ஸேனியர்கள் சட்டத்தைப் படிக்க, ஆலோசனை கேட்க, வழிபாட்டுக்குக் கூடும் வேளைகளில் அதன் தலைவர் மேசைக்கு வந்து அதன்மேல் உள்ள ரொட்டியையும், ரசத்தையும் ஆசீர் வதிப்பார்.

பிலோ என்பவரும், அலெக்சாந் திரியா நகரில் உள்ள ஓர் யூத பிரிவினர் மாலைவேளையிலே இவ்வாறு கூடினர் என்று கூறுகிறார். அப்பிரிவின் தலைவ ரோடு சேர்ந்து புகழ்பாடல்கள் பாடிய பின் உப்புக்கலந்த புளித்த அப்பங்கள் மேசைக்கு கொண்டுவரப்படும். இரவுண வை உண்டபின் விடியும்வரை பாடிக் கொண்டும் ஆடிக்கொண்டும் இருப்பர். இறுதியாக செபித்தபின் கலைந்து செல்வர். ஆதிக் கிறிஸ்தவர்கள் ஒன்று கூடினர் என்று அப்போஸ்தலர் பணி யிலும், பவுலின் திருமுகங்களிலும் கூறப் பட்டிருப்பது மேற்கூறப்பட்ட பழக்கங் களோடு ஒத்துள்ளதாகவே காணப்படு கிறது. இவ்வாறு உண்ணக்கூடும்போது, போதித்தல், இறைவாக்குரைத்தல், பல மொழிகளில் பேசுதல் ஆகிய பணிகளும் நடந்தன (1 கொரி 12:14). இறை பாடல் களும் பாடப்பட்டன (கொலோ 3:16–17; எபே 5:19–20; 1 கொரி 14:16). இவ்வாறு உண்ணும் பழக்கத்தோடு ஏழைகளுக்கும் விதவைகளுக்கும் உதவ நன்கொடை வழங்கும் பழக்கமும் கிறிஸ்தவர்களி டையே காணப்பட்டது (அ.ப. 6:1; 1 கொரி. 11:21). கிறிஸ்தவர்களுக்கான அன்பு உணவு ஒழுங்கு முறைபற்றி பழங்கால கிறிஸ்தவ சட்ட நூலான திதாக்கேயில் கூறப்பட்டுள்ளது. இதன்படி நன்றி கூறி ஆசீர்வதிக்கப்பட்ட கிண்ணமும், அப்ப முமே நற்கருணை எனப்பட்டது. இதைத் திருமுழுக்கு பெற்றவர் மட்டுமே உட் கொள்ள வேண்டும். இந்த உணவிற்குப் பின் நன்றி கூறியபின் கடவுளின் அரசின் வருகைக்காக மன்றாடப்பட்டது. இதிலே ஆண்டவரின் பாடுகள், மரணம் பற்றி சிந்திக்கும் பகுதி இல்லை. இதில் கூறப்பட்டுள்ள ஒழுங்குகள் பொதுமக்க ளுக்கானவை. அதிகாரம் 14;15–ல் ஆயர் திருத்தொண்டருக்கான ஞாயிறு நற் கருணை வழிபாட்டைப் பற்றிக் கூறப் பட்டுள்ளது. இந்த திதாக்கேயில் காணப் படும் குறிப்புகள் அன்பு விருந்து, நற் கருணை விருந்து இரண்டும் கலந்த சடங்கிற்கான ஒழுங்குகளாகத் தெரிகிறது.

இரண்டாம் நூற்றாண்டின் இறுதியில் தான் (தெர்துல்லியனின் நூலில்) அன்பு விருந்து நற்கருணை வழிபாட்டிலிருந்து வேறுபடுத்தப்பட்டபின் அதுபற்றிய தனித் தனி குறிப்புகள் தெர்துல்லியனின் காப் புரை நூலில் காணப்படுகின்றன. இப்போ லித்தஸ் என்பவரின் நூலும் இதுபற்றிக் கூறுகிறது. இதிலே இந்தப் பழக்கம் மேலே கூறப்பட்ட யூதப் பழக்கத்திலிருந்து எவ்வாறு தோன்றியது எனக்கூறப் பட்டுள்ளது. இப்போலித்தஸ் என்பவரின் குறிப்பில், விருந்துண்ண வந்த விருந்தி னர் சில ரொட்டித் துண்டுகளைத் தங்க ளோடு வீட்டிற்கு எடுத்துச்செல்லலாம் என்றும், விதவைகளுக்கென தனிப்பகுதி உணவு ஒதுக்கப்பட்டது எனவும் கூறப் பட்டுள்ளது.

இரண்டாம் நூற்றாண்டில் மற்றொரு சிறப்பு அன்பு விருந்து வடிவம் தோன்றி யது. ஆண்டுதோறும் இறந்தோரை நினைவு கூறும் முறையில் அன்பு விருந்து நடைபெற்றது. இது புறமதப்பழக்கங்களி லிருந்து தோன்றியிருக்கலாம். உரோமை நகரிலே மிகவும் பழமையான கல்லறை ஒன்றில் (பிரிஸ்கிலா, தொமித்திலா ஆகிய புனிதைகளின் கல்லறை) அதன் அருகே உண்ணுவதற்கு வசதியாக இருக்கைகள் பொருத்தப்பட்ட கூடங்கள் காணப்படுகின்றன. பழங்காலக் கிறிஸ் தவ சித்திரங்களிலும் இவ்வாறான விருந்து நடப்பது தெளிவாகத் தீட்டப் பட்டுள்ளது (காண்க. புதிய ஏற்பாட்டில் கிறிஸ்தவ வழிபாடு, கலை)

**அன்னம்** (SWAN)

அன்னப் பறவையைத் தீட்டான பறவைகளோடு சேர்ப்பதற்கு எந்த வகையான வெளிப்படையான காரணமும் இல்லை (லேவி 11:18; உப 14:16). அன்னப் பறவை திரிஸ்த்ராம் என்பவரால் மிகவும் அரிதான பறவை என்று கூறப்படுகின்றது. இவையும் இன்னும் பல ஆதாரங்களும் 'அன்னம்' என்பது புரியாத எபிரேயச் சொல்லின் மொழி பெயர்ப்பு என்று காட்டுகின்றன.

**அன்னா** (ANNA - அருள், கிருபை)

1. தோபித்தின் மனைவி. தோபியாவின் தாய் (தோபி 1:9.20). தோபித் குருடனாய் இருந்தபோது தனக்காகவும் தன் கணவனுக்காகவும் உழைத்துப் பொருள் தேடியவள் (2:11).

2. ஆசேர் குலத்தைச் சேர்ந்த பானுவேலின் மகளாகிய இவள் வயதில் முதிர்ந்த ஓர் இறைவாக்கினி (லூக் 2:36). நீண்ட நாட்களாக விதவையாக இருந்தவள். ஆலயத்தில், நோன்பாலும் செபத்தாலும் அல்லும் பகலும் பணிபுரிந்தவள். இயேசு ஆலயத்தில் காணிக்கையாக ஒப்புக் கொடுக்கப்பட்டபோது இவள் அங்கு வந்து கடவுளைப் புகழ்ந்து, எருசலேமின் விடுதலையை எதிர்பார்த்திருந்த அனைவருக்கும் குழந்தையைப் பற்றி எடுத்துரைத்தாள் (2:37–38).

3. இயேசுவுக்குப் பாட்டியும் மரியாளுக்குத் தாயுமான இவள் யாக்கோபின் மூல நற்செய்தி என்ற நூலில் குறிக்கப்படுகிறாள். இவளின் கணவன் யோவாக்கின் என அழைக்கப்படுகிறார். நீண்ட நாட்களாக குழந்தைப்பேறு இல்லாமல், இறைவனை மன்றாடித் தனது முதிர்ந்த வயதில் குழந்தையைப் பெற்றதால் அதைக் கடவுளுக்கு ஒப்புக்கொடுத்தாள். பலவிதத்தில், இவள் பழைய ஏற்பாட்டில் சாமுவேலின் தாயான அன்னாவை ஒத்திருக்கிறாள்.

**அன்னா** (HANNA – அருள்)

இவர் எப்பிராயிம் ஊரைச் சேர்ந்த எல்கானாவின் மனைவியும், சாமுவேலின் தாயுமாவாள் (1 சாமு 1:2–20). பல வருடங்களாக இவள் ஒரு மலடியாக இருந்தாள். ஒருமுறை சீலோவில் உள்ள புனித இடத்திற்குச் சென்றபோது, அவளுக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தால் அவனை வாழ்நாள் முழுவதும் ஆண்டவனுக்கு ஒப்புக்கொடுப்பதாகப் பொருத்தனை செய்துகொண்டாள் (1 சாமு 1:11). இதன் பிறகு அவளுக்கு சாமு வேல் பிறந்தார். உடனே "இவன் வாழ் நாளெல்லாம் ஆண்டவருக்குச் சொந்தமாயிருப்பான்" என்று சொல்லி சீலோவில் உள்ள புனித இடத்தில் ஆண்டவருக்குப் பணிவிடை புரிய தன் மகனை அர்ப்பணித்தாள் (1 சாமு 1:24–27). இதன் பிறகு அன்னாவுக்குப் புதல்வரும் புதல்வியரும் பிறந்தனர் (1 சாமு 2:21). 1 சாமு 2:1–10 இல் அன்னா வேண்டிக்கொண்ட செபமாகக் குறிப்பிடப்பட்டிருப்பது வேறொரு சூழ்நிலையிருந்து எடுக்கப்பட்டதாகத் தெரிகிறது.

**அன்னாசு** (ANNAS – ஆண்டவர் அருள் உடையவர்)

ஒரு யூத பெரிய குரு. சேத்து என்பவரின் மகன். இவர், சீரியாவின் ஆளுநன் கிரேணியாவால் கி.பி. 6 அல்லது 7 –இல் நியமிக்கப்பட்டு, வலேரியஸ் கிராதுசால் கி.பி. 15–இல் பதவி நீக்கம் செய்யப்பட்டவர். ஆயினும் அவருடைய பெரும் செல்வத்தின் விளைவாக, பதவி இழந்த பின்னும் தலைமைக்குரு கயாபாவின் மாமனாகவும் இருந்ததாலும் (யோவா 18:13) செல்வாக்குக் கொண்டிருந்தார் இவருடைய தொடர்ந்த செல்வாக்குக்குட் புதிய ஏற்பாட்டில் போதிய சான்றுகள் உள்ளன. திருமுழுக்கு யோவானின் பணியின் தொடக்கத்தில் ''அன்னாசு, கயாபா தலைமைக் குருக்களாக இருக்க" (லூக் 3:2 என்று குறிக்கப்படுகிறது. இயேசுவின் பாடுகளின் வரலாற்றில், இயேசு பெரிய குரு கயாபாவிடம் கொண்டுபோகப்படு முன், அன்னாசிடம் கொண்டு வரப்படுகிறார் (யோவா 18:13.24). பேதுரு, யோவான் விசாரணையிலும் இவர் பங்கெடுக்கிறார் (அ.ப. 4:6). யோவா 18:19.22–இல் குறிக்கப்படும் தலைமைக் குரு அன்னாசாக இருக்கலாம். ஏனெனில் யூத சட்டப்

படி இவர்தான் இந்தப் பதவியின் அதி காரப் பூர்வமானவராக இன்னும் கருதப் பட்டிருக்கலாம்.

இவருடைய மருமகன் கயாபாவைப் போல் இவருடைய ஐந்து புதல்வர்களும் தலைமைக் குருவாக இருந்துள்ளனர்.

**அன்னியன்**-(ALIEN, FOREIGNER, STRANGER, SOJOURNER)

விவிலியத்தில் அன்னியன் என்னும் சொல் ஒரு கூட்டத்தை சாராதவனைக் குறிக்கும். குல முதியவர் வழிவந்த முற் கால யூத சமுதாயத்தில் எந்த ஒரு குலத் தையும் சாராதவன் அன்னியன் என்று அழைக்கப்பட்டான். யூதர்கள் கானான் நாட்டில் குடியேறி அரசாட்சி நிலவிய போது, அன்னியன் என்ற சொல் இஸ்ரா யேல் அல்லாத ஒருவரைக் குறித்தது. எல்லா சமூகங்களிலும், அன்னியன் ஓரளவு சந்தேகத்துடன் நோக்கப்பட்டான். முற்கால யூதரிடையே இந்த அன்னியன் ஒரு எதிரியாகவே கருதப்பட்டான். ஆனால் அவன் இஸ்ராயேல் மக்களிடம் விருந்தினராக வரும்போது அவன் உப சரிக்கப்படவேண்டும். பழைய ஏற்பாட்டில் கொள்கை அளவில் அன்னியரிடம் பகைமையும், செயல்முறையில் தோழமை யும் அவனை ஏற்றுக்கொள்ளுதலும் சேர்ந்த முரண்பாடு காணப்படுகிறது.

'அன்னியன்' எனக் கருதப்படுபவர் களுக்கும் இஸ்ராயேல் மக்களுக்குமி டையே நெருங்கிய தொடர்பு இருந்தது. ஆனால் அவர்களிடையே கொள்கையள வில் நிலவி வந்த பகைமை உப *7:1–7; 9:1–5; 12:1–3* ஆகிய பகுதிகளில் குறிப்பிடப் படுகின்றது. இவற்றில் இஸ்ராயேல் மக்கள் கானானியர்களை அழிக்க வேண்டும் என்று கூறப்படுகிறது. ஆனால் அப்படி நடந்ததாக வரலாற்றில் எந்த ஆதாரமும் இல்லை. இது வெறும் கொள்கையளவில் இஸ்ராயேலர்களுக்கும் அண்டை இனத்தவருக்குமிடையே நிலவிய மத வேறுபாட்டைக் குறித்தது. யூதர்கள், புறவினத்தாரின் மத கோட்பாட்டையும், பழக்க வழக்கங்களையும், பின்பற்றுவ தையே உபஆகமப் போதகம் மிகப் பெரிய ஆபத்தாக கருதியது. புறவினத்தாருக்கும் யூதருக்குமிடையே தேவைக்கு அதிகமான தொடர்பு மறுக்கப்பட்டது.

யூதரிடையே, 'அன்னியன்' என்னும் சொல் புறவினத்தாரையும் பொய்த் தேவர் களை வழிபடுபவர்களையும் குறித்தது *(2 மக் 10:2.5)*. விவிலியத்தின் சில பகுதிகள் அன்னியர்களைச் சபித்து, அவர்கள் அழிவை முன்னுரைக்கின்றன *(ஏச 13–23; எரே 46–51; எச 29–32)*. இவற்றை நம்மால் புரிந்துகொள்வது கடினம். இந்தப் பகுதி கள், புறவினத்தார் யாவேயை எல்லாம் வல்லவராக ஏற்றுக்கொண்டு அவருக்கு அடிபணிய வேண்டும் என்னும் கருத்தை அடிப்படையாக கொண்டுள்ளன. அப்ப டிச்செய்ய மறுத்தால், அவர்கள் முழுவ தும் அழிக்கப்படவேண்டும். உப ஆகம மரபு புறவினத்தாருடன் திருமணம் செய் வதை தடை செய்தது. இது பிற்காலத்தில் தோன்றியதாகத் தெரிகிறது. பழைய ஏற்பாட்டில் இஸ்ராயேலருக்கும் அன்னி யர்களுக்கும் நடந்த திருமணங்கள் பல கூறப்படுகின்றன.

அன்னியன் இஸ்ராயேல் மக்கள் நடுவே தற்காலிக விருந்தினராகவோ அல்லது நிரந்தரமாகவோ வாழலாம். இஸ்ராயேலரின் சட்டம் அன்னியருக்கு உரிமையையும், கடமையையும் கொடுத்து, அவரை அன்பு செய்யும்படியும், துன் புறுத்தாமல் இருக்கும்படியும் கூறுகின் றது. *(உப 10:18; 14:29; யாத் 22:20; 23:9)*. இவையும் சங் *94:6*–உம் அன்னியர் அடிக் கடி துன்புறுத்தப்பட்டனர் என்று காட்டு கிறது. இஸ்ராயேல் மக்களைப்போன்றே அன்னியருக்கும் சம உரிமை வழங்கப் பட்டது *(உப 1:16)*. கொலைக் குற்றத்திற்கு அடைக்கலம் புக உரிமையுண்டு *(எண். 35:15; யோசு 20:9)*. சவுலிடமிருந்து தப்பித்து ஓடும்படி தாவீது தன் வீட்டாரை அனுப்பிய போது அவர்கள் மோவாபு அரசரிடம் தஞ்சம் புகுந்தனர் *(1 சாமு 22:3)*. அன்னியர் இராணுவத்தில் பணி புரிய வேண்டிய அவசியம் இல்லை. ஆனால் கூலிக்குப் போர் வீரனாக இருக்கலாம் *(1 சாமு 27:1 தொ; 29:1 தொ; 2 சாமு 15:19)*. ஆனால் மற்ற விவிலியப்

பகுதிகளில் அவர்கள் நிலச்சொந்தக் காரர்களாக இருக்கலாம் என்று கூறப் படுகிறது. தன் குடும்பத்தாரைப் புதைக்க ஆபிரகாம் ஒரு நிலத்தை வாங்கியபோது நிலத்தை வாங் கும் உரிமை, சபையால் வழங்கப்பட்டது (ஆதி 23:4 தொ). தெவோ என்பவர் முற்காலத்தில் யூத சமுதாயத் தில் அன்னியர்கள் நிலச் சொந்தக் காரர்களாக இல்லை என்றும், தங்கள் வாழ்க்கைக்குத் தேவையானதை மற்றவர் களுக்கு வேலை செய்து சம்பாதித்தனர் என்றும் கூறுகிறார் (உப 24:14). ஆனால் பிற்காலத்தில் வந்த எசக்கியேல் நாட்டை உரிமைச் சொத்தாகப் பிரித்துக்கொள்ள அன்னியருக்கும் உரிமை உண்டு என்று கூறுகிறார் (எச 44:22–23). ஆனால் அன்னியன் குல மற்றும் நகர சபை தீர்மானங்களில் பங்கெடுக்க முடியாது. அவர்கள் இஸ்ராயேலரின் மதத்தைப் பின்பற்றுபவர்கள் அல்ல. ஆனால் பிற் கால யூத சமுதாயத்தில் அவர்கள் விருத்த சேதனம் பெற்று யூத மதத்தில் சேர்ந்தார் கள் (யாத் 12:43–45.48). அவர்கள் இறைச்சியை இரத்தத்தோடு உண்ணக் கூடாது (லேவி 17:10 தொ). இஸ்ராயேலின் பாலின ஒழுங்கு சட்டங்களை கடைபிடிக்க வேண்டும் (லேவி 18:26). ஓய்வு நாளையும், விழாக்களையும் அவர்கள் அனுசரிக்க வேண்டும் (யாத் 20:10; உப 5:14). லேவி 17:8 அவர்கள் பலி ஒப்புக் கொடுக்கலாம் என்று சுட்டுகிறது (காண்க லேவி 22:18; எண். 15:15). இது பிற்காலத்தைச் சேர்ந் தது. இஸ்ராயேலர்களுக்கும் அன்னியர் களுக்கும் ஒரே சட்ட அமைப்பு இருந்ததை எடுத்துக்காட்டுகிறது. இஸ்ராயேல் மக்கள் நாடு கடத்தப்படும் முன் அன்னி யர் என்ற சொல் திருமணத்தாலோ தத்து எடுப்பதாலோ இஸ்ராயேலுக்குள் ஏற்றுக் கொள்ளப்படாத கானானியர்களை குறித்தது (2 சாமு 4:3). இவர்கள் போன்ற பிறரும் இருந்திருக்கலாம். இவர்களில் சமாரியர்களும் அடங்குவர் (லூக் 17:18). அன்னியர் என்ற ஒரு சொல் தனிப்பட்ட குழுவினைரையன்றி, தனிப்பட்ட நபரை யோ குடும்பத்தையோ குறிக்கிறது.

ஒரு செல்வமிக்க அன்னியருக்கு ஓர் இஸ்ராயேலர் வேலைக்காரனாவது அவ பேறாகக் கருதப்பட்டது (காண்க. உப 28:43). இவற்றிற்குரிய தனிப்பட்ட சட்டங் கள் உண்டு (லேவி 25:47–55). மற்றபடி இஸ்ராயேரும் அன்னியரும் சமமாகக் கருதப்படவேண்டும். ஆனால் செயலள வில் இக்கருத்து கடைப்பிடிக்கவில்லை என்று சில நிகழ்ச்சிகள் எடுத்துக்காட்டு கின்றன (1 நாள் 22:2; 2 நாள் 2:17–18).

இஸ்ராயேல் ஓர் 'அன்னிய நாடு' என்ற கருத்து பழைய ஏற்பாட்டில் இறையியல் முக்கியத்துவம் உடையதாகும். இஸ்ராயே லின் குல முதியவர்கள் குடியேறிய கானான் நாடு, இறைவனுடைய வாக்குறு திக்கேற்ப, இஸ்ராயேலின் உடமையானா லும் (ஆதி 17:8; யாத் 6:4), இறுதியில் அது இறைவனுக்கே உரிமையானதாகும். இஸ் ராயேல் அதில் ஓர் அன்னியராகவே குடி யிருந்தார் (லேவி 25:23; 1 நாள் 29:15; காண்க. எபி 11:8–16). அதுபோலவே ஆலயத்தில் வழிபடுவோர், இறைவனுக்கு உரிமையான இடத்தில் அன்னியரே (சங் 15:1; காண்க. 61:4). வழிபடுவோரும், தங்கள் வாழ்வு தற்காலிகமானது, விரை வில் கடந்துபோக வேண்டியது என்ற பொருளில் தாங்கள் அன்னியரே என்றும் அறிவர் (39:12). இஸ்ராயேலின் இறுதிக் கால இயல் பற்றிய போதகம் அன்னியரை ஏற்றுக் கொள்வதில் அக்கறை காட்டு கிறது (எச 47:22–23; ஏச 56:3. 6–7). இந்த நம்பிக்கை நிறைவேறுதல் எபே 2:11–13.19–இல் குறிக்கப்படுகிறது.

புதிய ஏற்பாட்டில் ஆதித்திருச்சபை அன்னியர்பால் கொண்ட உறவு புரட்சி கரமானது. கிறிஸ்தவ சமூகத்தில் அன்னியர் பெரும் எண்ணிக்கையில் சேர்ந்தனர். காலப்போக்கில் அவர்கள் எண்ணிக்கையில் யூத கிறிஸ்தவர்களையும் மிஞ்சினர். அன்னியர் பற்றிய பழைய ஏற்பாட்டு கருத்து புதிய ஏற்பாட்டிலும் காணப்படுகிறது. ஆனால் கிறிஸ்தவன் அன்னியன் அல்லன். அவன் இறையர சின் குடிமகனாவான் (எபே 2:19; கொ லோ 1:21). விண்ணரசின் குடிமகனான கிறிஸ்தவன், இவ்வுலகத்தைப் பொருத்த மட்டும் ஓர் அன்னியனே (1 பேதுரு 1:1.17; 2:11; காண்க. எபி 13:14).

# ஆ

**ஆகாசு** (AHAZ - யாவே பற்றிக் கொண்டார்; யோவகாசு என்ற பெயரின் சுருக்கமாக இருக்கலாம்)

*1.* யோத்தாமின் மகனும், அவருக்குப்பின் தன் 21-ஆம் வயதில் அரியணை ஏறிய யூதாவின் 12-வது அரசர் *(2 அர 16:2; 2 நாள் 28:1)* ஆவார். தன் தகப்பனோடு சேர்ந்து கூட்டு அரசனாக கி.மு. 735-இல் தன் ஆட்சியைத் துவக்கினார். அவரது தந்தை இறந்த பின் 732-இல் யூதாவின் ஒரே அரசனானார். 716 வரை ஆட்சி செய்தார் *(2 அர 16:2; 2 நாள் 28:1)*. இவர் தன் மூதாதையர் தாவீதைப் போல் ஆண்டவர் திருமுன் நல்லவராக நடந்துகொள்ளவில்லை. வட இஸ்ராயேலின் அரசர்களைப் பின்பற்றினார். புறவினத்தாரின் இழிவான பழக்கவழக்கங்களில், தன் மகனையும் தீமையில் நடக்கச் செய்து பொய்த்தேவர்களுக்கு அவனைக் காணிக்கையாகச் செலுத்தினார். மேலும் மேடுகளிலும், குன்றுகளிலும், தோப்புகளிலும், பலியிட்டுத் தூபவழிபாடு நடத்தி வந்தார் *(2 அர 16:2-4; 2 நாள் 28:1-4)*. இதன் விளைவாக இறைவன் யூதாவைச் சிறுமைப்படுத்தினார் *(28:19)*.

அவரது தந்தையோடு கூட்டாட்சி செய்த போதோ ஆகாசு அரசியல் குழப்பங்களை எதிர்கொள்ள வேண்டியிருந்தது. சீரிய அரசனான இரசீனும் இஸ்ராயேலின் அரசன் இரமலியாவின் மகன் பெக்காவும் சேர்ந்து, அசீரியாவுக்கு எதிரான தங்களின் கூட்டணியில் யூதாவைச் சேர்க்க, யூதாவைத் தாக்கத் தலைப்பட்டனர். யூதாவில் பெரும் சேதம் விளைவித்தபின் *(2 நாள் 28:5-5)*, எருசலேமை முற்றுகையிட்டனர் *(2 அர 16:5; ஏச 7:1)*. இவர்களது எண்ணம், ஒரு வேளை யூதாவின் மற்றொரு இளவரசனான தாபெயேலின் மகனை எருசலேமின் அரசனாக்குவதாகும் *(ஏச 7:6)*. இதற்கிடையில் ஏதோமின் அரசன் ஏலாத்தை (எசியோன் கெபேர்) மீண்டும் கைப்பற்றி இந்த முக்கிய துறைமுகத்தை ஒரு எதோமிய நகரமாக்கினார் *(அர 16:5; 2 நாள் 28:18)*. மேலும் பெலிஸ்தியர் செப்பேலாவிலுள்ள நகரங்களைக் கொள்ளை அடித்தனர். அங்கு குடியேறினர்.

இந்த இக்கட்டான நிலையில் ஆகாசு அச்சத்தால் மேற்கொள்ளப்பட்டு, யூதாவை ஊக்கமூட்டவந்த இறைவாக்கினர் ஏசயாவின் வார்த்தைகளுக்குச் செவிமடுக்க மறுத்துவிட்டார் *(ஏச. 7:2-9)*. இறைவாக்கினர் வார்த்தைக்கு உறுதிச் சான்றாக ஏதாவது ஒரு அடையாளத்தைக் கேட்க இறைவாக்கினர் அழைத்தபோது அதற்கும் ஆகாசு மீண்டும் மறுத்துவிட்டார். இருப்பினும் இறைவன் இம்மானுவேலின் பிறப்பை அடையாளமாக அளித்தார். யூதா சீரிய- இஸ்ராயேலின் படையெடுப்பிலிருந்து விடுவிக்கப்படும் *(ஏச 7:10-17)*.

வெற்றியை முன்னறிவித்த இறைவன் தூதரைப் புறக்கணித்துவிட்டு, ஆகாசு அசீரிய மன்னன் திகிலாத்து-பிலேசரிடம் தூதுவர்களை அனுப்பித் தான் அசீரியர்களுக்குச் சிற்றரசராக இருப்பதாகக் கூறி, அசீரியர்களின் உதவியை நாடினார் *(2 அர 16:7; 2 நாள் 28:16)*. ஆலயத்திலிருந்தும் அரண்மனையிலிருந்தும் தங்கமுமம் வெள்ளியும் கப்பமாக அனுப்பினார் *(2 அர 16:8)*. கி.மு. 734-ஐச் சேர்ந்த அசீரிய ஏடுகளில் யூதாவின் யாகசீ அசீரியாவுக்குக் கப்பம் கட்டுபவர்களில் ஒருவனாகத் தோன்றுகிறார். ஆகாசின் வேண்டுதலுக்கு இணங்கி திகிலாத்து-பிலேசர் தமஸ்கு என்ற சீரியா நகரைக் கைப்பற்றி அதன் மக்களை கிருக்கு நாடுகடத்தினார் *(ஆமோ 1:5; 9:7)*. அதன் அரசன் இரசீனைக் கொன்றார் *(2 அர 16:9)*. அடுத்து இஸ்ராயேல்மேல் படையெடுத்துப் பல நகரங்களைக் கைப்பற்றினார். அங்கிருந்த மக்களை அசீரியாவுக்கு அடிமைகளாகக் கொண்டுச் சென்றார் *(2 அர 15:29)*.

*2 அர 16:10*-இன் படி ஆகாசு தமஸ்குவிலிருந்து திகிலாத்து-பிலேசரைச் சந்திக்கச் சென்றார். இது அசீரியர்கள் இஸ்ராயேலின் நகரங்

களைப் பிடித்தபின் அநேகமாக கி.பி. 732-இல் நடந்திருக்கலாம். அங்கே அவர் ஒரு பீடத்தைக் கண்டார். இது ஒருவேளை இரிம்மோன் தேவதைக்குரியதாக இருக்க லாம். அதன் மாதிரி ஒன்றை அனுப்பி எருசலேமில் அதைப்போன்று ஒரு பீடத் தைக் கட்ட குரு ஊரியாவுக்குக் கட்டளை யிட்டார். ஊரியாவும், ஆகாசு தமஸ்குவிலி ருந்து திரும்பி வருவதற்குள் அப்படியே செய்திருந்தார். யாவேக்கு பலியிடப்பட்ட வெண்கலப் பீடத்திற்குப் பதிலாக, இப்பீ டத்தை ஆகாசு பயன்படுத்தி, தகனப்பலிக ளையும் மற்ற பலிகளையும் செலுத்தினார் *(16:10-6)*. அசீரியாவுக்குக் கப்பம் கட்டும் பொருட்டு ஆலயத்திலிருந்து பல விலையு யர்ந்த உலோகப் பொருட்களை அனுப்பி னார். இதனால் ஆலயம் எவ்வளவு வெறு மையாக்கப்பட்டதென்றால், அதன் கதவுக ளைப் பூட்டி விட்டார் *(16:17-18; 2 நாள் 28:24)*. மூலைக்கு மூலை சிறிய தெய்வங்க ளுக்குப் பீடங்கள் கட்டினார்.

அரசர்கள் நூல் ஆசிரியரைவிட, நாளாகம ஆசிரியர் ஆகாசைக் கடுமையாக விமர்சிக்கி றார். அசீரியர்களின் உதவியை நாடியது யூதாவுக்குப் பெரும் சுமையாயிற்று *(2 நாள் 28:20-21)*. அவருடைய சமயச் செயல்களும் அவரது பதிதத்தை அதிகமாக்கியது *(23:22)*.

ஆகாசின் கடைசிக் காலத்தைப் பற்றி அதிகம் தெரியவில்லை *(2 அர 16:19; 2 நாள் 28:26; ஏச 14:28)*. அவர் எருசலேம் நகரில் புதைக்கப்பட்டாலும் *(2 அர 16:20)* அரசர்கள் கல்லறையில் புதைக்கப்படவில்லை *(2 நாள் 28:27)* எனத் தெரிகிறது. ஆகாசு, அரசமரபுப் பட்டியலிலும் *(1 நாள் 3:13)* இயேசுவின் மூதாதையர் பட்டியலிலும் *(மத் 1:9)* குறிக் கப்படுகிறார்.

2. இவர் சவுலின் மகன் யோனத்தானின் கொள்ளுப் பேரனாவார். இவர் மீக்காவின் மகனும் யோயதா, யாரா ஆகியோரின் தந் தையுமாவார் *(1 நாள் 8:35-36; 9:42)*.

**ஆகாசின் கடிகாரம் அல்லது நிழற்கடிகை**

சில மொழிபெயர்ப்புகளின்படி, நேரத் தைக்காட்டும் ஒரு கருவி; இது சூரிய கடிகார மாக இருக்கலாம். அல்லது பாபிலோனியர் கள், எகிப்தியர் பயன்படுத்திய மணியறியும் கருவியாக இருக்கலாம் *(ஏச 38:8)*. ஆனால் எபிரேயச் சொல் வெறுமனே ''படிகள்'' என்று பொருள்படும். இது ஒரு படிகட் டைக் குறிக்கலாம்; அதன்மேல் விழும் நிழ லைக் கொண்டு, சூரியனின் இயக்கத்தை அறியலாம். அப்படியாயின், ஆகாசு அரண்ம னையைப் புதுப்பித்தபோது அமைத்த கட் டட அமைப்பாக இருக்கலாம் *(2 அர 6:18)*. ஆகாசின் கடிகாரம்பற்றிய நிகழ்ச்சியுரை எபி ரேயத்தில் தெளிவாக இல்லை *(2 அர 20:4-11; ஏச 38:4-8)*. இதில் நோயற்ற எசக் கியா தான் நலம் பெறுவதற்கு ஓர் அடையா ளம் காட்ட வேண்டுமென்று ஏசயாவைக் கேட்கிறார். அந்த அடையாளம், சூரிய நிழல் பத்துப்படிகள் அல்லது கோடுகள் அல்லது பாகை பின் செல்ல வேண்டும் என்பதாகும். ஏசயா ஆண்டவரிடம் மன்றாட அவ்வாறே நிகழ்ந்தது.

**ஆகாபு** (AHAB - *தந்தயின் சகோதரன்)*

*1.* ஓமிரீயின் மகனும் அவருக்குப் பின் வந்த இஸ்ராயேலின் ஏழாவது அரசனும் ஆவார் *(கி.மு. 875-854; 1 அர 16:29)*.

*அ. அரசியல் பின்னணி:-* இவர் இஸ்ரா யேலைச் சமாரியாவில் 22 ஆண்டுகள் ஆண் டதாகக் கூறப்பட்டாலும், அதே காலத்தில் நடந்த சம்பவங்களோடு ஒப்பிட்டுப் பார்க் கும்போது இவர் 20 ஆண்டுகள்தான் ஆண் டார் எனத் தெரிகிறது *(1 அர 16:29; 15:10; 22:51)*. யூதாவின் அரசன் ஆசாவின் 38-வது ஆண்டு ஆட்சிக் காலத்தில் ஆகாபு அரி யணை ஏறினார். ஆசா 41 ஆண்டுகள் ஆண் டார். ஆகாப்பின் மகன் அகசியா யூதாவின் அரசன் யோசபாத்தின் 17-வது ஆண்டு ஆட்சி யின்போது அரியணை ஏறினார்.

ஆகாபு தீர் நாட்டு அரசன் எத்துபாகாவின் மகள் ஈசபேலை மணந்தார் *(16:31)*. இதன் உறவின் விளைவாக, சீரியர்களுக்கு எதிரான அவர் நிலை வலுவுற்றது. நாட்டின் பொரு ளாதாரமும் வளர்ச்சியுற்றது. இரு நாடுகளுக்

குமிடையே வணிகம் பெருகி, செல்வம் மிகுதியாயிற்று (22:39). ஆனால் பணக்கார வணிகர்களுக்கும் நிலத்தை நம்பிய சாதாரண மக்களுக்குமிடையே பெரும் பிளவு ஏற்பட்டது. இந்த ஆதாயத்தோடு பாகால் தேவதையின் வழிபாடும் புகுத்தப்பட்டது. ஆகாபு தன் மகள் அத்தலியாவை, யூதா அரசனின் மகனுக்குத் திருமணம் செய்து, தனது அரசியல் பலத்தைப் பெருக்கிக்கொண்டார் (2 அர 8:18; 2 நாள் 18:1). மோவாலியரிடமிருந்து தனது அரசின் கிழக்கிலிருந்து அடிக்கடி வந்த தாக்குதலைத் தடுத்து நிறுத்த பல காலம் அழிந்து கிடந்த எரிகோவை மீண்டும் கட்டியெழுப்பினார்.

ஆ. பதிதமும் போராட்டமும்:- ஆகாபு ''நொபாத்தின் மகன் எரொபயமின் பாவ'' வழியில் நடந்தார். தனது மனைவி ஈசபேலின் தூண்டுதலால் பெனிசியா பாகாலை (மெல் கார்ட்) வழிபட்டார் (1 அர 16:31). இந்தத் தேவதைக்குச் சமாரியாவில் ஒரு ஆலயமும், பீடமும் கட்டினார் (16:32). ஈசபேலின் சமயத் தீவிரம் பாகாலின் வழிபாட்டை நாடு முழுவதும் பரப்ப ஏதுவானது. இறைவனது இறைவாக்கினர் கொல்லப்பட்டனர். இதை அரசன் கண்டுகொள்ளவில்லை. யாவே என்ற பெயரோடு தொடர்புடைய அகசியா, யோரம், அத்தலியா என்ற பெயர்களைத் தன் பிள்ளைகளுக்கு இட்டாலும், இஸ்ரயேலின் இறைவன் வழிபாட்டில் சிறிதும் அக்கறை கொள்ளவில்லை. எரிகோ நகரம் கட்டும்போது சிசுக்களைப் பலியிட்டார் (16:34).

ஆகாபின் இந்தப் பதிதம் இறைவனது சீற்றத்தைப் பெருக்கியது. இப்பதிதத்தை எதிர்த்துப் போராட அவர் உண்மையான இறைவாக்கினர்களை அனுப்பினார். அவர்களின் சிறப்பானவர் திசுபியரான எலியாவாகும். இவர் இறைவனுக்கப் பிரமாணிக்கமானவர். ஆற்றல் மிக்கவர். அரசனுக்கும் இறைவாக்கினருக்கும் பல சமயங்களில் போராட்டங்கள் ஏற்பட்டன. எலியா வரவிருக்கும் பஞ்சத்தை முன்னறிவித்தார் (17:1). வறட்சி எவ்வளவு கொடுமையாக இருந்ததென்றால், வீட்டு விலங்குகளைக் காப்பாற்ற அரசனே புல்தேட வேண்டியிருந்தது (18:5). எலியாவுக்காக எங்கும் தேடினார். இறுதியில் எலியாவே அரசனை எதிர்கொண்டபோது, அவர் அவரைக் கலகக்காரன் என்று அழைத்தார். அதற்கு இஸ்ராயேலில் உண்மையான கலகக்காரன் அரசன்தான் என்று கூறி, கர்மேல் மலையில் தனக்கும், ஈசபேலின் போலித்தீர்க்கத் தரிசிகளுக்கும் இடையே ஒரு போட்டி வைக்க அரசனைத் தூண்டுகிறார். அரசன் இதற்கிசைந்து, போட்டி அமைக்க, போலித் தீர்க்கத்தரிசிகளின் காணிக்கை எரிக்கப்படவில்லை; எலியாவின் பலி ஏற்கப்பட்டு எரிக்கப்பட்டது (17:17-45). அதன் முடிவில் எலியா, ஈசபேலின் 850 போலித் தீர்க்க தரிசிகளைக் கொன்று போட்டார். அதன்பின் மழை பெய்து, பஞ்சம் தீர்ந்தது. இது ஆகாபைப் பெரிதும் பாதித்தது. ஆனால் ஈசபேல் பலி வாங்க எலியாவைத் தேடினாள். அதிலிருந்து எலியா தப்பி ஓட வேண்டியிருந்தது.

எலியா யாவே வழிபாட்டுக்காக மட்டும் போராடவில்லை. ஏழை எளியவர்களின் உரிமைக்காகவும் போராடினார். இதை நாபோத்தின் நிலம் பற்றிய கதையை அதி.21-இல் வாசித்தறியலாம். முடிவில் ஆகாபுக்கும் அவன் மனைவி ஈசபேலுக்கும் இறைவனது தீர்ப்பை அறிவிக்கிறார்.

இ. ஆராமோடு (சீரியாவோடு) போர்கள்:-

சீரியாவுக்கும் இஸ்ராயேலர்களுக்குமிடையே போர்கள் அடிக்கடி நடந்தன. சீரியாவின் அரசன் முதலாம் பென்-அதாதின் காலத்தில் சீரியர்களின் கை ஓங்கியிருந்தது. கர்மேல் மலைப் போட்டிக்குப் பின் சீரிய அரசன் இஸ்ராயேல்மேல் போர்தொடுத்து (கி.மு. 853) சமாரியாவை முற்றுகையிட்டார் (1 அர 20:1). மக்களிடமிருந்து அதிகமான கப்பம் கேட்டார் (20:21). இதை ஆகாபு மறுக்க பென்-அதாது போருக்கு ஆயத்தமானார். பெயர் தெரியாத ஒரு இறைவாக்கினரின் உதவியுடன் ஆகாபு சீரியர்களை வென்றார் (20:13-21). அடுத்த ஆண்டும் படை

எடுத்து வந்த சீரியர்களை அபேக்கு என்ற இடத்தில் வென்றார் (20:26-30). ஆனால் சீரிய மன்னனுக்கு உயிர்ப்பிச்சை அளித்து அவனோடு உடன்படிக்கை செய்து கொண்டார் (20:30-34). இதைக் கண்டித்து அவனது உயிரும் அவனது மக்களின் உயிரும் பழி வாங்கப்படும் என்று இறைவாக்கினர் அறிவிக்க (20:35-43) அரசன் இதைக் கேட்க விரும்பாது கோபவெறியுடன் சமாரியா திரும்பினார் (20:43).

மூன்று ஆண்டு சமாதானத்திற்குப்பின் (857-854) இஸ்ரேயலுக்குச் சொந்தமான இராமோத்து-கிலயாதைத் திரும்பக் கைப்பற்ற சீரியர்களோடு போராடத் தொடங்கினார். அப்போது யூதாவின் அரசன் யோசபாத்தும் சேர்ந்து கொண்டார். ஆனால் இவர் யாவேயின் உண்மையான இறைவாக்கினருடைய ஆலோசனையைத் தேடினார். அப்படிப்பட்ட இறைவாக்கினர் மீக்காயா கூறிய ஆலோசனையைப் புறக்கணித்து ஆகாபு படை எடுத்தார் (22:1-29). ஆகாபு சாதாரண வீரனைப் போல் உடை உடுத்துப் போரிட்டார். யோசபாத்து அரசஉடையில் போரிடச் செய்து அவரைச் சீரியர்களின் இலக்காக்கினார் (22:31-33). ஆனால் ஒரு சீரியா வீரன் எய்த அம்பு, தற்செயலாக ஆகாபை, அவர் வயிற்றுக்கும் நுரையீரலுக்கும் இடையில் பாய்ந்தது. போர்க்களத்தை விட்டுப் போக விரும்பினாலும், முடியாமல் நாள் முழுதும் போரிட்டு மாண்டார். அவர் உடல் சமாரியாவுக்கு எடுத்துச் செல்லப்பட்டு அடக்கம் செய்யப்பட்டது (2 2:34-37).

ஈ. சமய மதிப்பீடு:- ஆகாபின் பெரிய பாவம் பாகாலின் வழிபாட்டை இஸ்ராயேலில் புகுத்தி அதை அதிகாரப் பூர்வமான சமயமாக்கி, மக்கள் யாவே வழிபாட்டைக் கைவிடச் செய்ததாகும். இதில் பாலினப்புணர்ச்சிச் சடங்குகளும், சிசுக்களைப் பலியிடும் சடங்குகளும் உண்டு. நாபோத்தைக் கொன்று அவனுடைய நிலத்தை அரசனுடையதாக ஈசபேல் செய்தபோது அவர் ஒன்றும் செய்யாமை அவரது பலவீனத்தையும் கொடுந்தன்மையையும் காட்கிறது (21:2-26). எலியாவின் வாயிலாகக் கூறப்பட்ட இறைவனது பயங்கரத் தீர்ப்பு (21:19) செயல்படுத்தப்பட்டது. அவரது தேரையும் கடிவாளத்தையும் சாமாரியாவின் குளத்தில் கழுவிய போது நாய்கள் அவரது இரத்தத்தை நக்கின (22:38). ஆயினும் ஒரு தடவை அவன் உண்மையாகவே மனத்துக்கம் படுவதாகக் காட்டப்படுகிறார் (21:27). அது அவர் வீட்டிற்கு வரவிருந்த அழிவை இறைவன் தள்ளிப் போடச் செய்கிறது (21:28-29).

அரசர்கள் நூல் ஆசிரியர் ஆகாபை மிகக் கடுமையாக விமர்சிக்கிறார். ''ஆண்டவர் திருமுன் தீயன புரியத் துணிந்த ஆகாபைப் போல் கெட்டவன் ஒருவருமில்லை''. ஏனெனில் அவருடய மனைவி ஈசபேல் அவரை ஏவி விட்டாள். அவர் எவ்வளவு வெறுப்புக்குரியவர் என்றால், இஸ்ராயேல் மக்கள் முன்னிலையில் ஆண்டவர் அழித்தொழித்த எமோரியரின் விக்கிரகங்களை அவர் தொழுது வந்தார் (21:25:26). அவர் ஆற்றல் வாய்ந்த அரசனாக இருந்திருக்கலாம். அவர் அடைந்த சில வெற்றிகளும் ஆண்டவருடைய உதவியால் கிடைத்தவையாகும் (20:13-38). தனது மக்களுக்கு நகரங்களைக் கட்டினாலும் தனக்கென ''தந்தத்தால் வீடு'' கட்டிக் கொண்டார் (22:39). உண்மையில் தாவீது, சாலமோன் போன்ற இறையாட்சி அரசர்களின் கேலிச் சித்திரமாவார். உணர்ச்சி வசப்படக் கூடியவர் நீதி, இறையன்பு ஆகியவற்றால் தூண்டப்படுவதற்குப் பதிலாக அவரது கட்டாயப்படுத்தும் மனைவியால் தூண்டப்பட்டுச் செயல்பட்டார். நாளாகம ஆசிரியர் இவரை இவ்வளவு கடுமையாக விமர்சிக்கவில்லை (2 நாள் 18).

உ. தொல்பொருள் ஆய்வுகள்:- ஆகாபு சாமாரியாவிலும் மற்ற இடங்களிலும் கட்டிய கட்டடங்களுக்குப் பல சான்றுகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. சமாரியாவுக்கு மூன்று சுவர்களைக் கொண்ட கோட்டை கட்டினார். இது மிகவும் வலுவானதாகும். பல முற்றுகைகளைத் தாங்கி நின்றது. இறுதியின் மூன்று வருட முள்றுகைக்குப் பின்தான் வீழ்ந்தது (2 அர 17:5). அதன் வேலைப்பாடு

பாலஸ்தீனத்தில் இதுவரை கண்டுபிடிக்கப் பட்டவைகளில் மிகச் சிறந்ததாகும். மூன் றாம் சால்மனேசரின் ஒற்றைக்கல்லாலான ஏடு ''இஸ்ராயேலனான ஆகாபைக்'' குறிப் பிடுகிறது. இவர் இரண்டாயிரம் தேர்களோ டும், பதினாயிரம் காலாட்படைகளோடும் வந்து சால்மனேசருக்கு எதிராக கர்கார் என்ற இடத்தில் (854) போரிட்டதாகக் குறிக்கிறது. மோவாபிய கல் ஏடு, ஆகாபு நெடுங்காலத் திற்கு மோவாபியரைக் கொடுமைப்படுத்தி யதாகக் கூறுகிறது.

2. கோலாயாவின் மகன் .பாபிலோனுக்கு நாடு கடத்தப்பட்டவர்களில் இருந்த இரு போலி இறைவாக்கினர்களில் ஒருவர். இரு வரையும் எரேமியா கண்டனம் செய்தார். ஏனெனில் அவர்கள் இஸ்ராயேலுக்கு மதி கேடானதைச் செய்தனர். அயலாருடைய மனைவியரோடு விபச்சாரம் செய்தனர். போலி இறைவாக்குரைத்தனர். அவர்கள் பெற்ற தண்டனை பிற இஸ்ராயேலருக்கு ஓர் எடுத்துக்காட்டாக இருக்கும் (எரே 29:21-22).

**ஆகாயின் இறைவாக்கு நூல்**

இது, சிறிய இறைவாக்கினர் தொகுப்பில் பத்தாவது நூலாகும்.

1. இறைவாக்கினரின் பெயரும் வாழ்க்கை யும்: காண்க: ஆகாய்.

2. வரலாற்று, சமய, சமூகப் பின்னணிகள்:- பாரசீக மன்னன் சைரஸ் கி.மு. 539-இல் பாபிலோனியப் பேரரசை வென்று அழித் தார். இதுவரை பாபிலோனியர் தாங்கள் வென்ற மக்கள் அனைவரையும் நாடு கடத்தி னர். இக்கொள்கையை சைரஸ் மாற்றிய மைத்தார். சைரஸ் தான் வென்ற மக்களை நாடு கடத்தவில்லை. முன்பே நாடுகடத்தப் பட்டவர்கள், தங்கள் தாயகம் திரும்பி தாங் கள் பாரம்பரிய வழிபாட்டு முறைகளைப் புதுப்பித்துப் பின்பற்ற அனுமதி அளித்தார்; ஊக்குவித்தார். இதற்கு ஏற்றவாறு சட்டம் இயற்றினார். இச்சட்டம் எபிரேய, அரமெ யிக்கு மொழிகளில் பாதுகாக்கப்பட்டுள்ளது (2 நாள் 36:22; எஸ் 1:1-4; 6:3-5). இச்சட் டத்தை சாதகமாகப் பயன்படுத்தி, சில யூத அகதிகள் பாபிலோனிலிருந்து எருசலேமுக் குத் திரும்பினர். இவர்களுக்கு நாடு கடத்தப் பட்ட யூத அரசனான எயோயாக்கினின் மகன் சேசிபசார் தலைமை தாங்கினார்; இவர் நெபுக்கதுனேசார் எருசலேம் ஆலயத் திலிருந்து அபகரித்துச் சென்ற பரிசுத்த பாத் திரங்களையும் தன்னோடு திரும்ப எருசலே முக்கு எடுத்து வந்தார். சேசிபசாரை யூதா வுக்கு ஆளுநராக சைரஸ் நியமித்தார். எருச லேமுக்குத் திரும்பிய அகதிகள் தகனப்பலி பீடத்தை மீண்டும் கட்டியெழுப்பினர். இரண்டாம் ஆலயத்திற்கு அடிக்கல் நாட்டி னர் (எஸ் 8:1-4;5).

இந்தத் தொக்கத்திற்குப் பிறகு, ஆலயம் கட்டும் வேலை தடைப்பட்டது; பதி னெட்டு ஆண்டுகளுக்குத் தள்ளிப் போடப் பட்டது. இதற்குப் பல காரணங்களைச் சுட் டிக் காட்டலாம். 1. பாபிலோனியப் படை யெடுப்பால் யூதா மிகவும் பாழ்பட்டுப் போய் இருந்தது. எருசலேமும் மற்ற நகரங்க ளும் இன்னும் அழிவுற்ற நிலையிலேயே இருந்தன. நாட்டில் பரப்பளவு இருபது மைல் நீளமும் இருபது மைல் அகலமுள்ள தாகக் குறுகியது. வலிமைமிக்கப் பாரசீகப் பேரரசின் ஐந்தாம் மாகாணத்தின் ஒரு சிறிய பகுதியாக விளங்கியது. 2. உயர்குடி மக்க ளும், வீரர்களும் கலை விற்பன்னர்களும் நாடு கடத்தப்பட்டு விட்டனர். எருசலே மைச் சுற்றி 20,000 யூதர்களே வாழ்ந்தனர். பகைமை கொண்டு, அண்டை நாடுகளும் மக்களும் தொடர்ந்து தொல்லை கொடுத்து வந்தனர். 3. வட அரசில் வாழ்ந்த இஸ்ராயே லர், அசீரியர்களால் பிறநாடுகளிலிருந்து குடியேற்றப்பட்ட அந்நியர்களோடு திரும ணம் செய்தனர். அதன் விளைவாகக் கலப் பின மக்கள் தோன்றினர். இவர்கள் சமாரியர் கள் என்றழைக்கப்பட்டனர். இவர்கள் யூதா அரசியல் அதிகாரம் பெறுவதையும், பொரு ளாதார வளர்ச்சியடைவதையும், சமயச் செல்வாக்குப் பெறுவதையும் ஐயத்தோடு நோக்கினர். முடிந்தபோதெல்லாம் யூதர்க ளுக்குத் தொல்லை கொடுத்து வந்தனர். தெற்கில், ஏதோமியரை யூதர்கள் உண்மை யாகவே வெறுத்து ஒதுக்கினர் (மலா 1:3).

ஆகையால் அவர்களும் யூதர்களுக்குப் பல வாறு இடைஞ்சல் செய்தனர். 4. பொருளா தாரத்தில் யூதா தாழ்ந்த நிலையில் இருந்தது. நிலம் களைமண்டி இருந்தது. செய்த விவசா யம் நோயால் பாதிக்கப்பட்டது *(1:9:11; 2:15-17)*. நீண்டகால வறட்சியும், தொடர்ந்து அறுவடை இன்மையும், உணவு உடைப்பற் றாக்குறையை ஏற்படுத்தின. பண வீக்கம் எழுந்தது. பணத்தின் மதிப்பு குறைந்தது. வாங்கும் சக்தியும் குறைந்தது *(1:6)*. வறுமை எவ்வளவு கொடுமையாய் இருந்ததென்றால் யூதர்கள் கடனுக்காகச் சகயூதர்களையே விற் றனர் *(நெக 5; மலா 3-5)*. உயிர் வாழ்வ தற்கே போராட வேண்டியிருந்தது. இந்நி லையில் ஆலயத்தைக் கட்டும் மாபெரும் வேலையைத் தொடர்ந்து நடத்த உற்சா கமோ சக்தியோ மக்களிடம் இல்லை. 5. மேலும் ஆலயத்தை மீண்டும் கட்யெழுப் பும் வேலை மிக அவசரமானதாக இவர் களுக்குத் தோன்றவில்லை. ஏனெனில் பாபி லோனியர் சாலமோன் கட்டிய ஆலயத்தை அழித்து விட்டதால் வழிபாடு நின்று விட வில்லை. நாடு கடத்தப்பட்ட காலத்தில் யூதாவில் தங்கியோர் பலி ஒப்புக் கொடுக்க வும் செபிக்கவும் நெருப்பால் எரியூட்டப் பட்ட ஆலயத்தைச் சுற்றிக் கூடினர் *(எரே 41:4-5)*. இக்காரணங்களுக்காக சைரஸ் அவனது மகன் கம்பீசு ஆகியோரின் ஆட்சிக் காலத்தில் ஆலயம் மீண்டும் கட்டப்படும் வேலையில் ஒரு முன்னேற்றமும் ஏற்பட வில்லை.

கம்பீசு எகிப்தை வென்று அடிமைப்படுத் தியபின் வாரிசு இல்லாது இறந்தார். அவருக் குப்பின் ஆட்சிக்கு வந்த தாரியு தன் பதவிக் காக உள்நாட்டுப் போரில் ஈடுபட வேண்டி யிருந்தது. இதனால் பாரசீகப் பேரரசு பெரும் ஆட்டம் கண்டது. அழிந்து போகும் நிலை யில் இருந்தது. இந்த வரலாற்று நிகழ்ச்சிக ளின் முழக்கத்தை இந்நூல் விவரிக்கிறது *(2:6-7; 21-22)*. இந்த குழப்பமிக்க வரலாற்றுச் சூழ்நிலை-இறைவாக்கினர்கள் முன்னறி வித்த வரலாற்றில் வரும் இறுதியான தீர்மா னமான ஓர் இக்கட்டான நிலை ஏற்படும் என்பதை எதிர்பார்க்க இஸ்ராயேலரைத் தூண்டியது. இந்தப் பின்னணியில் ஆகாயும் செக்கரியாவும் தங்கள் இறைவாக்குப் பணி யைச் செய்தனர். இந்தப் பின்னணியில் அவர் களுடைய செய்தியைப் புரிந்து கொள்ள வேண்டும். சேசிபசாரும் அடுத்து அவரது மருமகன் செருபாபேலும் யூதாவுக்கு ஆளு நர் ஆனார்கள். இவர் பாபிலோனில் பிறந்து வளர்ந்த யூதர். தாரியூவின் ஆட்சிக்காலத்தில் பாலஸ்தீனத்திற்கு திரும்பிய யூதர்களில் ஒரு வர். அரசன் யோயாக்கினின் பேரன் ஆன தால் இவர் தாவீதின் வழித்தோன்றல் ஆவார். பாரசீகப் பேரரசில் ஏற்பட்ட உள் நாட்டுக் கலகங்களால் உந்தப்பட்டு, மேற் சொன்ன இறைவாக்கினர்களும் செருபா பேல் வழியாகத் தாவீது அரசு மரபு மீண்டும் நிறுவப்படும் என்று நம்பினர். யாவே தாவீது அரசை மீண்டு அமைத்து எருசலே முக்குத் திரும்ப இருப்பதால் அவரது உறை விடமான ஆலயத்தை மீண்டும் கட்டுதல் முக்கியத்துவம் பெற்றது. ஆகாயின் உணர்ச் சிமிக்க நேரடிப் போதகங்களால் தூண்டப் பெற்று மக்கள் ஆலயம் கட்டும் வேலை யைத் தொடர்ந்தனர். சமாரியர்கள் உதவ முன் வந்தனர். ஆனால் அவர்கள் சிலை வழிபாட்டில் ஈடுபட்டிருந்ததால், அவர்கள் உதவியைச் செருபாபேல் நிராகரித்தார் *(2:10.14)*. ஆகவே அவர்களது நேசக்கரம் பகை பூண்டது. அவர்கள் யூதர்களுக்குத் தொல்லை கொடுக்கத் தொடங்கினர். அவர் களால் தூண்டப்பெற்று பாரசீக அதிகாரிகள் எந்த அதிகாரத்தைக் கொண்டு யூதர்கள் ஆல யத்தை மீண்டு கட்டுகின்றனர் என்று கேட்ட னர். *(எஸ் 5:3)*. இந்தப் பிரச்சினையைத் தாரியு மன்னனிடம் கொணர்ந்தனர். அவர் ஆலயம் கட்ட அனுமதித்த மூலச்சட்டத்தை உறுதிப்படுத்தி ஆலயம் கட்டும் வேலை யைத் தொடர்ந்து நடத்த யூதர்களுக்கு அனு மதி அளித்தார் *(எஸ் 6:1-15)*. நான்கு ஆண்டு களில் வேலை முடிந்தது *(கி.மு.520-16)*. இந்த வேலைக்கு ஆளுநன் செருபாபேலும் தலைமைக்குரு யோசதாக்கின் மகனான யோசுவாவும் தலைமை தாங்கினர். ஆகா யும், செக்கரியாவும் மக்களைத் தூண்டி உற் சாகப்படுத்தினர். மக்கள் உழைப்பைத் தானம் செய்தனர். அவர்களுடைய ஒத்து

மைப்பால் ஆலயம் கட்டி முடிக்கப்பட்டது. இந்த இரண்டாம் ஆலயம், பெரிய ஏரோது கி.மு.20-இல் புதியதொரு ஆலயத்தைக் கட்டும்வரை, ஐந்து நூற்றாண்டுகளுக்கு யூதமக்களின் வழிபாட்டு, பக்தி முயற்சிகளின் மையமாக திகழ்ந்தது.

*3. நூலின் தோற்றம்:-* ஆகாய் குறுகிய காலத்திற்கே இறைவாக்குப் பணி செய்ததாகத் தெரிகிறது. இவரது நான்கு இறைவாக்குகள் கி.மு.520-இல் ஆகஸ்ட்-செப்டம்பர் (நமது ஆவணி மாதம்) மாதங்களில் தொடங்கி அதே வருடம் நவம்பர்-டிசம்பர் (கார்த்திகை) மாதங்களில் முடிந்ததாகத் தெரிகிறது. நூலில் காணப்படும் காலக் கணிப்பு பாபிலோனிய முறைப்படி தரப்படுகிறது.

ஆகாயின் இறைவாக்குகளை அவருடைய சீடருள் ஒருவர் தொகுத்துப் பதிப்பித்தார். இவர், நூலுக்குப் பெருமிதமான, புறநிலை மெய்மைத் தொனி அளிக்கும் நோக்கத்தோடு இறைவாக்கினரைப் படர்க்கையில் குறிப்பிடுகிறார். இவர்தான் நூலுக்குக் கால கணிப்பையும் திட்ட அமைப்பையும் அளிக்கிறார். இவர் இறைவாக்கினரது செய்திகளோடும், அவை மக்களிடையே ஏற்படுத்தும் விளைவையும் குறிக்கின்றார். நூல் இறைவாக்கினரது பணிபற்றிய சுதந்திரமான அறிக்கையாகத் தோன்றுகிறது. இறைவாக்கினர் படர்க்கையில் குறிக்கப்பட்டாலும் நூலுக்கு அவரே பொறுப்பாவார். நூல் அவரது உண்மையான வாக்குகளைக் கொண்டிருக்கிறது என்பது உறுதி.

*4. இலக்கிய சிறப்பு:-* இறைவாக்கினர் நூல்கள் பொதுவாகப் பாடல் வடிவில் இருக்கும். ஆனால் இந்நூல் இதைத் தவிர்த்து எளிய உரைநடையை விரும்பிப் பயன்படுத்துவதாகத் தெரிகிறது. இந்நூலில் பரவசத்தையோ, காட்சிகளையோ, காரணகாரிய வாதத்தையோ, நுட்பமான அறிவாராய்ச்சியையோ, காவியக் கழி வகையையோ காண முடியாது. ஆசிரியர் செயலார்வம் உடையவர். மக்களை இடித்துரைக்கும்போதும், அவர்களைத் தூண்டி உற்சாகப்படுத்தும்போதும் அவர் தனது குறிக்கோளிலிருந்து சிறிதும் விலகவில்லை. ஆலயம் மீண்டும் கட்டப்பட வேண்டும்; மக்கள் மீட்படைய வேண்டும். இச்செய்தியை அறிவிக்க அனுப்பப்பட்ட தூதனாகத் திகழ்கிறார். தனது தூதில் பெரிதும் வெற்றி பெறுகிறார்.

நூலின் எபிரேய வாசகம் மிகவும் சிதைந்துள்ளது. இதை திருத்த எழுபது நூலின் கிரேக்க வாசகம் உதவுகிறது. ஆனால் கிரேக்க வாசகம் விளக்கமாக உரைக்கும் போக்குடையது.

*5. திட்டமும் பொருளடக்கமும்:-*

அ. முதல் இறைவாக்கும் விளைவும் *(11-15).*

யூதாவின் ஆளுநர் செருபாபேலுக்கும் பெரிய குரு யோசுவாவுக்கும் இந்த வாக்கு அருளப்படுகிறது. மக்கள் தங்களது சொந்தக் காரியங்களிலேயே அக்கறை கொண்டு, ஆலயம் கட்டுவதைத் தள்ளிப் போட்டனர். புறக்கணித்தனர். இதை இறைவாக்கினர் கண்டனம் செய்கிறார். இப்புறக்கணிப்புதான் விவசாயத்திலும், பொருளாதாரத்திலும் வீழ்ச்சியடைந்ததற்குக் காரணமாயிற்று. ஆகவே மக்கள் ஆலயம் கட்டுவதை இறைவாக்கினர் ஊக்குவிக்கிறார். மக்களும் அவரது போதகத்துக்குப் பணிந்து, ஆலயத்தை மீண்டும் கட்டத் தொடங்குகின்றனர்.

ஆ. இரண்டாம் இறைவாக்கு *(2:1-9)*

புதிய ஆலயத்தின் வருங்கால மகிமையை விவரித்து, ஆலயம் தொடர்ந்து கட்டப்படுவதை இறைவாக்கினர் உற்சாகப்படுத்துகிறார்.

இ. மூன்றாம் இறைவாக்கு: *(2:10-19)*

வழிபாட்டுச் சடங்குகள் பற்றி, குருக்களோடு ஆலோசித்தபின், இறைவாக்கினர் தீர்ப்புக் கூறுகிறார். தீட்டுடையோரின், ஒரு வேளை சமாரியர்களின், காணிக்கைகள் நிராகரிக்கப்படுகின்றன. ஆலயம் கட்ட அடிக்கல் இட்டபின் ஆண்டவர் மக்களுக்கு அறுவடை மிகுதியையும் செல்வச் செழிப்பினையும் தந்து ஆசீர்வதிப்பார் என்று உறுதி கூறப்படுகிறது.

ஈ. நான்காம் இறைவாக்கு: *(2:20-23)*

இவ்வாக்கு ஆளுநர் செருபாபேலுக்கு அருளப்படுகிறது. வரலாற்றில் தலையிட்டு, இறைவன் பிறநாடுகளின் சக்தியை அழிக்கப் போகிறார். அதன்பின் தாவீது அரசமரபை மீண்டும் அமைப்பார் என்று இறைவாக்கினர் மிகத் தூரக்காலத்தை நோக்குகிறார்.

6. சிறப்புச் கருத்துக்கள்:- ஆகாய், தனக்கு முன் வந்த இறைவாக்கினர்கள் போல், ஆன்மீக ஒழுக்கப் போதகத்தை அளிக்கவில்லை. வெறும் ஆலயம் கட்டுவதையே ஊக்குவித்தார். ஆகவே அவரது போதகம் எபிரேய விசுவாசம் வளர்வதற்கு அவ்வளவு உதவவில்லை என்பர் சிலர். ஆனால் வரலாற்றுச் சூழ்நிலையில் பார்க்கும்போது, ஆலயத்தை மீண்டும் கட்டுவது, யூத இனமும் சமயமும் அழிவிலிருந்து தப்பி உயிர் வாழ்வதற்கு, அவசியமான அடிப்படையாயிற்று. இதனால், ஆகாயும் அவரது சமகாலத்தவராகிய செக்கரியாவும் யூத இனம் அழிவிலிருந்து தப்பி, நீடித்திருப்பதற்கு பொறுப்பாளர்களாக விளங்கினர். மேலும் இறைவனது காரியங்களுக்கு எப்போதும் முதன்மை அளிக்க வேண்டும் என்பது ஆகாயின் அடிப்படைப் போதகமாகும். குறிப்பிட்ட சூழ்நிலையில் ஆலயம் கட்டுவது, இந்த முதன்மைக்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

மேலும், வரவிருக்கும் மெசியாக் காலம் பற்றிய காட்சி, பின்வரும் கருத்துக்களில் எடுத்துக் கூறப்படுகிறது. ஆலயத்தை மீண்டும் கட்டுதல்; செருபாபேல் உருவில் தோன்றும் தாவீது மரபு சார்ந்த மெசியா *(2:23)*; பிறநாடுகளுக்கும் மீட்பளிக்கும் சேவை *(2:7-9)*; யூதச் சமூகத்தைக் குறிக்க ''எஞ்சியோர்'' என்ற சொல் பயன்படுத்தப்படுதல் *(1:12)*; மெசியாக் காலத்திற்கு முன்னோடியாக வரும் அண்ட அதிர்ச்சிகள், வானமும் பூமியும் அழிந்து போவது போன்றவை- அக்கால முறைப்படி ''காட்சி இலக்கிய முறையில் விவரிக்கப்படுகின்றன *(2:6-7.21-22; ஏச 51:6; 66:22)*.

7. வரலாற்று முக்கியத்துவம்:- இந்நூல் வரலாற்று முக்கியத்துவம் உடையது. நாடு கடத்தப்பட்ட யூதர்களின் முதற்குழு கி.மு.537-இல் தாயகம் திரும்பியது. இருபது ஆண்டுகளுக்குப்பின், தாயகம் திரும்பிய யூத சமூகத்தின் சமய, சமூக நிலையை இந்நூலும், செக் *1:8* என்ற பகுதியும் விவரிக்கின்றன. இச்சான்றுகள் எஸ்ரா திருநூலின் தொடக்க அதிகாரங்களைப் புரிந்துக் கொள்ள உதவுகின்றன.

**ஆகாய்** *(HAGGAI - விழாக் கோலம், விழா நாளில் பிறந்த)*

இவர் பாபிலோன் அடிமைத்தனத்திற்குப் பின் வந்த ஓர் இறைவாக்கினர். இவரது கூற்றுக்கள் ஆகாய் நூலில் தொகுக்கப்பட்டுள்ளன. இவரைப் பற்றி அதிகம் தெரியவில்லை. முன் மரபு வரலாறு இன்றி வெறுமனே இறைவாக்கினர் என்று அழைக்கப்படுகிறார் *(ஆகா 1:1; எஸ் 5:1; 6:14)* இதிலிருந்து இவர் பலராலும் அறியப்பட்டவராகத் தெரிகிறார். யூதப் பாரம்பரியப்படி பாபிலோனில் நாடுகடத்தப்பட்ட நிலையிலேயே இவர் இறைவாக்கினராகத் திகழ்ந்தார்.

ஆகா *1:1*-இலிருந்து இவர் *520*-இல் எருசலேமில் செயலாற்றியதாகத் தெரிகிறது. இது இவர் இதற்கு முன்னே எருசலேமிற்குத் திரும்பியிருக்க வேண்டும் என்று சுட்டுகிறது. குரு குலத்தைச் சேர்ந்தவராகத் தெரியவில்லை. ஏனெனில் லேவியர் பழக்கவழக்கங்கள் பற்றி குருக்களின் ஆலோசனையைக் கேட்கிறார் *(2:11-13)*. *2:3*-இல் இருந்து எருசலேம் ஆலயம் *586*-இல் அழிக்கப்படுமுன், அதைப் பார்த்திருக்கிறார் என்று தெரிகிறது. *520*-இல் ஆலயம் மீண்டும் கட்டப்படுவதைத் தூண்டியவர்களில் முக்கியப் பங்கெடுத்த இவர், அப்போது மிக முதியவராக இருந்திருக்க வேண்டும். ஆனால் மற்றொரு பாரம்பரியம், இவர் இளைஞனாக சேசிபசாரோடு நாடு கடத்தலிலிருந்து *538*-இல் திரும்பினார் என்று கூறுகிறது.

இவரது சமகாலத்தவரான செக்கரியாவோடு சேர்ந்து இவரும் *(எஸ் 4:24-5:1; 6:14; செக் 1:16)* எருசலேம் மக்களையும் அவர்களது தலைவர்களான செருபாபேல்

யோசுவா ஆகியோர்களையும் ஆலயத்தை மீண்டும் கட்டத் தூண்டியெழுப்பினார். இவருடைய ஆற்றலாலும், உற்சாகத்தாலும், முதல் வேண்டுதலுக்குப்பின் உடனடியாக ஆலயம் மீண்டும் அமைக்கப்படுதல் தொடங்கப்பட்டு நான்கு ஆண்டுகளில் முடிக்கப்பெற்றது *(எஸ் 6:15)*. செக்கரியாவும் இவரும், ஆலயம் மீண்டும் கட்டப்பட்டதற்குப் பொறுப்பானவர்கள். ஆனாலும், இவரும் சேர்ந்து பணி செய்ததற்கான சான்றுகள் எதுவும் இல்லை *(காண்க எஸ் 5:1-2; 6:14)*. பிற்கால தால்மூத் பாரம்பரியம் ஆகாய், செக்கரிய, மலாக்கி ஆகியமூவர்களும் சேர்ந்து ''பெரிய செபக்கூடத்தை'' தோற்றுவித்தார்கள் என்று கூறுகிறது. இறைவாக்கினர்களில் இறுதியான இவர்களின் இறப்போடு இறைவாக்கு பரிசுத்த ஆவி இஸ்ராயேலை விட்டகன்றார் என்று கருதப்பட்டது. சில விவிலிய வாசகங்கள் (எழுபது நூல், வுல்கத்தா, பெசித்தா) சில சங்கீதங்களை செக்கரியாவும், ஆகாயும் எழுதியதாகக் குறிக்கின்றன *(சங் 138; 146-149)* இது, இவர் குருகுலத்தவர் என்ற கிறிஸ்தவப் பாரம்பரியத்திற்கு அடிப்படையாக இருக்கலாம். ஆனால் இது யூத பாரம்பரியத்திற்கு மாறானது *(காண்க. ஆகா 2:11-13)*.

**ஆகார்** (HAGAR - *தப்பி ஓடிய, அலைந்து திரிகின்ற)*

ஆபிரகாமின் மனைவி சாரா தனக்குப் பிள்ளை இல்லாததால் தன்னிடம் வேலை செய்து வந்த எகிப்து நாட்டு வேலைக்காரி ஆகாரைத் தன் கணவனுக்கு வைப்பாட்டியாக இருக்கச் செய்தாள். அவர் கருவுற்று இசுமயேல் என்ற மகனுக்குத் தாயானாள்.

இந்த ஆகாரின் கதைகள் எல்லாம் யாவே, எலோகிம், பாரம்பரியங்களில் பாதுகாக்கப் பட்டுள்ளன *(யாவே. ஆதி 16:1-2. 4-14; எலோகிம் 21:8-21)*. சில வசனங்கள் மட்டும் குருக்கள் பாரம்பரியத்திலிருந்து எடுக்கப் பட்டிருக்கின்றன *(16:3.15-16)*. அநேக அறிஞர்கள் யாவே, எலோகிம், பாரம்பரியங்கள் இணை விவரிப்பாக இருந்திருக்கலாம் என்று கருதுகின்றனர். இரண்டும் ஆபிரகாமின் குடும்பத்திலிருந்து ஆகாரையும், இசுமயேலையும் துரத்துவதை விவரிக்கின்றன. ஆதி 16:9 இந்த இரண்டு பாரம்பரியங்களையும் இணைத்து வைக்கிறது.

முதல் கதையில் *(ஆதி 16:1-16)* ஆகார் என்பவள், மலடியாய் இருந்த சாராளிடம் வேலை பார்த்த எகிப்திய நாட்டு வேலைக்காரி; சாரா ஆபிரகாமின் மனைவி; யாவே கொடுத்த வாக்குறுதி சாராளின் மலட்டுத் தன்மையால் அழிந்து போய்விடுமோ என்றெண்ணி சாரா ஆகாரைத் தன் கணவன் ஆபிரகாமுக்கு மனைவியாக ஆக்கினாள். இது அக்காலத்திய பழக்கம் *(30:3.9)* என்பதை நூசீ வாசகத்தால் உறுதிப்படுத்துகிறது. ஆகார் கருவுற்றிருக்கும் பொழுது தன் தலைவி சாராளை அலட்சியப்படுத்தினாள். அதனால் சாராய் தன் கணவன் ஆபிரகாமின் உத்தரவோடு ஆகாரைக் கண்டிப்புடன் நடத்தினாள்.

கண்டிப்புடன் நடத்தியது கண்டு ஆகார் பெயேர்-செபாவிற்கும் எகிப்திற்கும் இடைப்பட்ட பகுதியாகிய சூர் பாலைவனத்திற்கு ஓடிப்போனாள். அவர் செல்லுகின்ற பொழுது ஒரு நீருற்றுக்கருகில் ஆண்டவருடைய தூதர் அவளுக்குத் தோன்றி ''நீ ஒரு மகனைப் பெற்றெடுப்பாய்; அவனுக்கு இசுமயேல் என்று பெயரிடுவாய். அவனிலிருந்து உன் சந்ததியை எண்ண முடியாத அளவில் விருத்தி அடையச் செய்வோம்'' என்றார். ஏனென்றால் ஆண்டவர் ''அவளைக் கண்டுகொண்டார்''. இசுமயேல் கொடும் குணமுள்ள மனிதராய் வளர்வார். அவருடைய கை எல்லாருக்கும் விரோதமாகவும், எல்லோருடைய கையும் அவருக்கு விரோதமாகவும் ஓங்கியிருக்கும். ஆண்டவர் அவளுக்கு மனமிரங்கிச் சொன்னதால் அந்த ஊற்றை 'காண்கிற இறைவன் நீர்'' என்று அழைத்தாள் ஆகார்.

இரண்டாவது கதை *(ஆதி 21:8-21)* இசுமயேல் பிறந்து பல வருடம் கழிந்தபின் நடந்து இருக்கிறது. ஆபிரகாம் தன்னுடைய குழந்தை ஈசாக்கு வளர்ந்த நிலையில் மகிழ்ச்சியோடு விருந்தொன்றை நடத்தினார். அன்று சாரா தன் முதிர்ந்த வயதில் பெற்ற

தன் குழந்தை ஈசாக்கும், வேலைக்காரி ஆகாரின் மகன் இசுமயேலும் விளையாடிக் கொண்டிருந்ததைச் சாரா பார்த்தாள். ஆகாரின் மகனும், தன்னுடைய மகனுக்குப் பங்காளியாக வந்துவிடுவானோ என்ற பயம் சாராவுக்கு வந்தது. இதை ஆபிரகாமிடம் முறையிட்டு இருவரையும் துரத்திவிடக் கோரினாள். இதைக் கண்ணுற்ற ஆபிரகாம் மன வருத்தம் கொண்டார். ஆயினும் இறைவன் கட்டளைக்கேற்ப இருவரையும் அனுப்பிவிட்டார். பெயேர்-செபா பாலைவனத்தில் அலைந்து திரிந்து தண்ணீர் தாகத்தால் துன்பப்பட்ட பொழுது குழந்தையைத் தனியே விட்டுத் தானும் அழுதுகொண்டு நின்றாள். அப்பொழுது வான தூதர் தோன்றி, ''குழந்தையின் குரல் ஆண்டவரை எட்டியது. இசுமயேல் இறக்க மாட்டான்'' என்று கூறினார். அவள் கண்களைத் திறந்து பார்த்ததும் முன்னால் கிணறு ஒன்று இருப்பதைக் கண்ணுற்றாள். இசுமயேல் அந்தப் பாலைவனத்தில் வாழ்ந்து வில் வித்தையில் வீரனானார். ஆகார் எகிப்திலிருந்து ஒரு பெண்ணைக் கூட்டி வந்து இசுமயேலுக்குத் திருமணம் முடித்து வைத்தாள்.

பாலஸ்தீனத்தில் தெற்கில் வாழ்ந்த போர் வீரர்கள் பெடுயீனர்கள் எபிரேயர்களோடு உறவு கொண்டவர்கள் என்று ஆகார் பாரம்பரியம் கூறுகிறது. ஏனென்றால் இசுமயேல் தான் அவர்களுக்குக் குலத்தலைவர். எபிரேயர்களைப் போலவே அவர்களுக்கும் ஆபிரகாம்தான் குலத்தந்தை. ஆனால் அவர்களுடைய தாய்தான் எகிப்தின் வேலைக்காரி ஆகார். சவுலின் ஆட்சிக் காலத்தில் இஸ்ராயேலர்கள் அகிரியர்களோடு போரிட்டு அவர்களைக் கொன்றுபோட்டார்கள் *(1 நாள் 5:10)*. சாராளின் ஊழியக் காரியம், எகிப்து நாட்டினருமான ஆகார் ஆபிரகாமுக்குப் பெற்ற இசுமயேலின் தலைமுறை பெருகியது. அவரின் புதல்வர்கள் பன்னிருவரும் தத்தம் குலத்தவர்களுக்குத் தலைவர்களாய் இருந்தனர்.

கலா 4:21-31: புதிய ஏற்பாட்டில் பவுல் ஆகாரின் கதையை ஒரு உருவகமாகப் பயன்படுத்துகிறார். ஆபிரகாமின் புதல்வர் இருவரில் இசுமயேல் அடிமைப்பெண்ணிடம் பிறந்தவர். ஈசாக்கு அடிமையல்லாத சுதந்திரப் பெண்ணிடம் வாக்குறுதியின்படி பிறந்தவர். இந்தப் பெண்கள் இருவரும் இரு உடன்படிக்கையைக் குறிக்கின்றனர்.

சீனாய் மலையில் செய்யப்பட்ட உடன்படிக்கையின் விளைவாக அடிமைத்தனத்தில் பிள்ளைகள் பிறக்கின்றனர். ஆகாரால் குறிக்கப்படுவது இதுவே. ஈசாக்கின் புதல்வர்கள் வாக்குறுதியின் புதல்வர்கள். இயல்பு முறைப்படி உரிமை மக்கள். அடிமை அல்லாத மனைவி சாராளின் மக்கள் ஆவார். இவர்கள் புதிய உடன்படிக்கையின் மக்களைக் குறிக்கின்றனர்.

**ஆகிபோர்** (ACHBOR -சுண்டெலி)

1. ஏதோம் நாட்டின் அரசன் பாகால்-கனானின் தந்தை *(ஆதி 36:38-39; 1 நாள் 1:49)*.

2. மீக்காயாவின் மகன். யோசியாவின் அரசவை அலுவலர்களில் ஒருவர். புதிதாகக் கண்டெடுக்கப்பட்ட சட்ட நூலைக் குறித்து ஆண்டவரது திருவுளத்தை அறிந்து வரக்கட்டளை பெற்றவர்களில் ஒருவர் *(2 அர 22:12.19)*. *2 நாள் 34:20*-இல் இவர் மீக்காவின் மகன் அபிதோன் என்றழைக்கப்படுகிறார் *(காண்க. அபிதோன்-4)*. *எரே 26:22; 36:12*-இன்படி யோயாக்கிமின் அலுவலரான எல்நாத்தானின் தந்தையாகவும் இருக்கலாம் இவர்.

**ஆகூர்** (AGUR - ஞானத்தை ஒன்று கூட்டுபவன்)

மாசாவைச் சேர்ந்த யாக்கே என்பவரின் மகன். *பழ 30:1-33*-இல் உள்ள நீதி மொழிகளை இந்த அறிஞர் எழுதியவராகவோ, தொகுத்தவராகவோ கருதப்படுகிறார். இவரைப் பற்றிப் பல ஊகங்கள் உண்டு. அ. மாசாவின் அரசியின் மகன். மாசாவின் அரசனான இலமுவேலின் சகோதரன் அல்லது நாட்டைச் சேர்ந்தவராக இருக்கலாம். ஆ. அரேபிய பாலைவனம், ஏதோம், யோர்தானுக்கு அப்பாலுள்ள பகுதி அல்லது சேயி

ருக்கு அப்பாலுள்ள பகுதி ஆகிய பகுதிகளில் பலவாறு குறிக்கப்படும் மாசாவில் வாழ்ந்தவராகக் கருதப்படுகிறார்.

**ஆகே** *(AGEE - தப்பி ஓடுகிற)*

தாவீதின் மூன்று வல்லவர்களுள் ஒருவரான சம்மாவின் தந்தையாவார். அராரிய குடும்பத்தைச் சேர்ந்தவர் *(2 சாமு 23:11)*. ''அராரிய ஊரானாகிய ஆகே'' என்று அழைக்கப்பட்டார்.

**ஆக்கார்** *(ACHAR - தொந்தரவு கொடுப்பவன்)*

ஆக்கானின் மற்றொரு பெயர் *(1 நாள் 2:7)*

**ஆக்கான்** *(ACHAN - தொந்தரவு)*

யூதா் குலத்தைச் சேர்ந்த கர்மியின் மகன். இவர் எரிகோவிலிருந்து ஆண்டவர் கட்டளையை மீறி விலக்கப்பட்ட சில கொள்ளைப் பொருட்களைக் கவர்ந்து ஒளித்து வைத்துக் கொண்டார் *(யோசு 6:17-19)*. அதனால் ஆண்டவர் சினம் கொண்டார். அதன் விளைவாக ஆயி என்ற சிறு கிராமத்தைத் தாக்கியபோது இஸ்ராயேலர் தோற்கடிக்கப் பட்டனர் *(7:2-5)*.

ஆயிக்கு எதிராக நடந்த போரில் தோல்வியுற்ற காரணம் அறிய கடவுளை விசாரித்தபோது, இஸ்ராயேல் சமூகத்தில் பாவம் நிலவியிருந்தது தெரியவந்தது. ஆண்டவருக்கே உரிமையான பொருட்கள், இஸ்ராயேலனால் களவாடப்பட்டு பாளையத்தில் மறைத்து வைத்திருப்பதாகத் தெரியவே சீட்டுக் குழுக்களின் மூலம் குற்றவாளி ஆக்கான் எனத் தெரியவர, அவரும் அவர் குடும்பமும் ஆக்கோர் பள்ளத்தாக்கில் கல்லால் எறியப் பட்டனர் *(7:6-24; 22:20)*.

இந்த நிகழ்ச்சியுரை தொடக்க காலத்தில் இஸ்ராயேலரிடையே நிலவிய கூட்டு ஒருமைப்பாட்டை எடுத்துக் காட்டுகிறது. ஒருவனுடைய குற்றம் எல்லோருடைய பாதுகாப்பையும் பாதிக்கும். ஆகவே ஆக்கானும் அவனது குடும்பமும் தண்டிக்கப்பட வேண்டும். ஆயினும் இது ஆக்கான் தனது குற்றத்தை ஏற்று அறிக்கையிட வாய்ப்பளிக்கிறது.

அவரது மறுபெயர் தொந்தரவு செய்பவன் என்ற பொருளுடைய ஆக்கார் ஆகும். ஆக்கான் என்பது ஆக்கோர் என்பதன் மங்கல வழக்காகும். *1 நாள் 2:7*-லும் அவர் கல்லால் எறியப்பட்ட ஆக்கோர் பள்ளத்தாக்கும் இக் கருத்துக்கு ஆதரவு அளிக்கின்றன.

**ஆக்கிசு** *(ACHIS - அரசன் கொடுக்கிறார், மகுடி ஊதுவார்)*

*1.* மாவோக்கின் மகன். காத்து என்ற பெலிஸ்திய நகரின் அரசனிடம் *(1 சாமு 21:10)* இருமுறை தாவீது தஞ்சம் புகுந்தார், பாதுகாப்புத் தேடினார். நேபுபிலிருந்து தப்பியோடியபோது, தாவீது காத்து நாட்டில் வாழ்ந்து வந்தார். அங்கு அவர் பைத்தியமாய் நடித்தது, பாதுகாப்புப் பெறுவதை விட, அவருடைய நாட்டிலிருந்து விரைவில் விடுதலை பெறுவதையே நோக்கமாகக் கொண்டதாகும் *(21:13-15)*. சவுல் தாவீதைத் தேடித் துரத்தியபோது, தாவீது ஆக்கிசிடம் தஞ்சம் புகுந்தார். அவர் தாவீது தங்க எல்லை நகரமாக சிக்கிலாகுவை அளித்தார் *(27:6)*. மேலும் அவரைத் தன் மெய்க்காப்பாளர்களின் தலைவராக ஆக்கினார் *(28:2)*. தாவீதின் பிரமாணிக்கத்தில் ஆக்கிசு முழு நம்பிக்கைக் கொண்டிருந்தார். அவர் சவுலுக்கு எதிராக கில்போவா என்ற இடத்தில் படை எடுத்தபோது, தாவீதையும் அவரது வீரர்களையும் சேர்த்துக்கொண்டார். ஆனால் மற்ற பெலிஸ்தியர் தாவீதிடம் அவ்வளவு நம்பிக்கை கொள்ளவில்லை. அவர்கள் தாவீதைச் சிக்கிலாகுக்கு அனுப்பிவிட ஆக்கிசைக் கட்டாயப்படுத்தினர் *(29:2-6)*.

*1 அர 2:39-40* குறிப்பிடும் ஆக்கிசுதான் தாவீது சந்தித்தவர் என்றால் அவர் அப்போது மிகவும் இளைஞனாக இருந்திருக்க வேண்டும். இக் குறிப்பில் அவர் மாக்காவின் மகன் என்று அழைக்கப்படுகிறார். காண்க: *மாக்க-3*.

*சங் 34*-ன் தலைப்பு, *1 சாமு 21:10-15*-இல் வரும் நிகழ்ச்சியைச் சுட்டுகிறது. அதில் ஆக்கிசு அபிமெலக்கு என்றழைக்கப்படுகிறார். காண்க *அபிமெலக்கு-4*.

2. இவர் காத்தின் அரசன், சாலமோன் காலத்தில் வாழ்ந்தவர். மாக்காவின் மகன். சிமெயியின் இரு ஊழியர்கள் காத்துக்கு ஓடிப் போகவே, அவர் தன் காவலை மீறி ஆக்கிசிடம் சென்று தன் ஊழியர்களைக் கூட்டி வந்தார் *(1 அர 2:39-40).*

**ஆக்கோ** *(ACCO - வெப்பான மணல் சூடான மணல்)*

கர்மேல் மலைக்கு வடக்கில் மத்தியதரைக் கடற்கரையில் அமைந்திருந்த ஒரு துறைமுகமாகும். கிழக்கிலும் தெற்கிலும் கர்மேல் மலையையும், வடக்கில் பேலஸ் ஆற்றில் ஒரு கிளையையும் பாதுகாப்பாகக் கொண்ட போர் முக்கியத்துவம் வாய்ந்த இயற்கையான துறைமுகம். இந்த இடம் இன்றைய கைப்பாவின் வடக்கில் இருந்திருக்க வேண்டும். இவ்விடத்தைச் சுற்றிய கடற்கரைச் சமவெளியும் ஆக்கோ சமவெளியென்றே அழைக்கப்பட்டது.

தொல்பொருள் ஆய்வுகளின்படி இரண்டாம் மத்திய வெண்கல காலத்தில் இந்நகரம் நிறுவப்பட்டதாகத் தெரிகிறது. கானானியர்கள் காலத்தில் இது ஒரு சிறந்த வணிக மையமாகத் திகழ்ந்தது. இந்நகர் எகிப்திய ஏடுகளிலும், அமர்னா ஏடுகளிலும் குறிக்கப்படுகிறது. எகிப்திய பாரவோன் முதலாம் சேத்தி கி.மு. 1320-ஐ ஒட்டி இந்நகரைக் கைப்பற்றினார். பிறகு கடல்வாழ் மக்களின் ஆட்சியின் கீழ் இருந்தது. ஆனால் விரைவில் போதிய பலம் பெற்றுத் திகழ்ந்தது. அதனால் இஸ்ராயேல் இனத்தைச் சேர்ந்த ஆசேர் குலத்தவர். ஆக்கோ நகரைத்தாரைக் கொல்லாது அங்கு வாழ்ந்த கானானியர் மத்தியில் வாழ்ந்தனர். ''ஏனெனில் ஆசேரால் ஆக்கோவிலும் அதைச் சுற்றியிருந்த நகரங்களிலும் வாழ்ந்த மக்களை விரட்டியடிக்க முடியவில்லை *(நீதி 1:31-32).*

பிற்காலத்தில் கி.மு. 733-இல் மூன்றாம் திகிலாத்து-பிலேசர் இந்நகரை அசீரிய ஆட்சிக்குட்படுத்தினார். ஏறக்குறைய 100 ஆண்டுகளுக்குபின், அசூர்பானிப்பால் இந்நகர் மக்களில் பெரும்பாலோரை நாடு கடத்தினார். மற்றவர்களைக் கொன்று அழித்தார். சில காலத்திற்கு அழிந்து கிடந்தபின் கி.மு. 4-ஆம் நூற்றாண்டில் இந்நகரில் அத்தீனிய கிரேக்கர்கள் குடியேறினர். இரண்டாம் தோலமி என்பவர் துறைமுகத்தை விரிவாக்கி, அதற்கு தோலமாயிசு என்று பெயரிட்டார். தோலமியர், செலூக்கியர் காலத்தில் இந்நகர் முக்கியம் பெற்று, மக்கபேயர்களின் எதிரிகளின் மையமாக விளங்கியது *(1 மக் 5:15).* இங்குதான் மக்கபேயர் தலைமையில் யூதர்கள் போரிட்டனர். இங்கு வந்து சந்திக்குமாறு யோனத்தான் முதலில் அலெக்சாந்தர் பாலாசாலும் பின்பு இரண்டாம் தெமேத்திரியுவாலும் கட்டளையிடப்பட்டார் *(1 மக் 10:51-66; 11:21-74).* மூன்றாம் முறையாக, வரும்படி யோனாத்தானைத் திரிபோ கட்டளையிட்டார். தந்திரமாய், அவரின் படையின் பெரும்பகுதியை அனுப்பிவிடச் செய்தார். அவர் வந்தபோது அவரை இந்நகரில் சிறைப்பிடித்து வைத்தார் *(1 மக் 12:39-49).*

கி.மு. 65-இல் ஆக்கோ அல்லது தோலமாயிசு என்ற இந்நகரம் உரோமை ஆட்சிக்குள் வந்தது. கிளாதியு காலத்தில் இது ஒரு உரோமையர் குடியிருப்பாக மாறியது. இங்குதான் பவுல் தனது மூன்றாவது வேதபோதகப் பயணத்தில், இங்குள்ள திருச்சபையைப் பார்ப்பதற்காக, கப்பல் இறங்கினார் *(அ.ப. 21:17).*

மத்திய காலத்தில் இந்நகரம் சிலுவைப் போர் வீரர்களின் ஆட்சியில் இருநூறு ஆண்டுகளுக்கு இருந்தது. இதற்கு புனித யோன் தார்க்கு என்று பெயர் கொடுத்தனர். அதனால் இன்றும் இது ஆக்ரே என்ற பெயரைக் கொண்டுள்ளது. கி.பி.1187-இல் சலாதீன் தாக்குதலுக்கு விழுந்தது.

இக்கால வரலாற்றில் பல தடவை பலரால் கைப்பற்றப்பட்டு; கி.பி. 1948-லிருந்து இந்நகர் இஸ்ராயேல் நாட்டைச் சேர்ந்ததாக உள்ளது. இந்நகரின் பழங்காலப் பகுதியில் அராபியர்கள் மட்டுமே குடியிருக்கின்றனர்; செலூக்கியர் காலத்தில் விரிவாக்கப்பட்ட

துறைமுகப் பகுதியில் யூதர்கள் வாழ்கின்றனர். அருகிலுள்ள கைப்பா இன்று முக்கியம் வாய்ந்து திகழ்கிறது.

**ஆக்கோர்** (ACHOR - தொந்தரவு, துயரம், கவலை)

எரிகோவுக்கு அருகிலுள்ள பள்ளத்தாக்கு. யூதர் நாட்டின் வட எல்லையின் ஒரு பகுதியாகும் (யோசு 15:7). இங்குதான் எரிகோவின் கொள்ளைப் பொருட்களை எடுத்துக் கொள்ளக் கூடாது என்ற கட்டளையை மீறியதற்காக ஆக்கானும் அவர் குடும்பமும் கல்லால் எறியப்பட்டு கொல்லப்பட்டனர் (7:24-26). சாக்கடல் ஏடுகள் கண்டுபிடிக்கப்பட்டபின், இது ஏல்-புக்கெய்யா என்று அடையாளம் காட்டப்படுகிறது. இது கும்ரான் ஓடைக்கரையில் வடக்குத் தெற்கில் 6 கி.மீ. பரவியுள்ள ஒரு சமவெளியாகும்.

இறுதிக்கால இறைவாக்குகளில் உருவகமாகப் பயன்படுகிறது ஆக்கோர் என்ற பெயர். கி.மு. 8-ஆம் நூற்றாண்டில், பிரமாணிக்கமற்ற இஸ்ராயேலுக்கு நம்பிக்கை அளிக்கும் உருவகமாக, ''ஆக்கோர் என்கிற பள்ளத்தாக்கை நம்பிக்கையின் வாயிலாக்குவோம்'' என்று இறைவாக்கு கூறுகிறது (ஓசே 2:15). இஸ்ராயேல் திரும்ப அமைக்கப்படும் போது வறண்ட பாலைவனப் பள்ளத்தாக்கு செழிப்பானதாக மாறி மந்தைகளுக்கு மேய்ச்சல் நிலமாக மாறும். மெசியாக்காலத்தில் ''ஆக்கோர் பள்ளத்தாக்கு கூட மாட்டுத் தொழுவமாக இருக்கும்'' என ஏசயா கூறுகிறார் (ஏச 65:10).

**ஆசரேல்** (AZAREL - யாவே உதவினார்)

1. சிக்கிலாகு என்னுமிடத்தில் தலைமறைவாயிருந்த தாவீதிடம் வந்து சேர்ந்த படை வீரர்களில் ஆசரேலும் ஒருவர். இவர் கோராகியர் ஆவார் (1 நாள் 12:6).

2. ஒரு லேவியர். ஆசரேல் ஏமானின் புதல்வர்களில் ஒருவர். தாவீதின் காலத்தில் இவர் ஓர் இசைவல்லுநராக இருந்தார் (1 நாள் 25:18). 25:4-இல் ஊசியேல் என்றழைக்கப்படுகிறார்.

3. இவர் எரொகாமின் மகன். தாவீதின் கீழ் தாண் குலத்தைச் சேர்ந்தவர்களுக்கு இவர் தலைவராய் இருந்தார் (1 நாள் 27:22).

4. பினுயி என்பவரின் புதல்வர்களில் இவரும் ஒருவர். பினுயி புறவினப் பெண்ணை மனைவியாகக் கொண்டிருந்தார். எஸ்ராவின் ஆட்சியின்கீழ் அவர்களை அனுப்பிவிட வேண்டியிருந்தது (எஸ் 10:41).

5. இவர் ஒரு குரு. அகிசாயின் மகன், இம்மேரின் வழித்தோன்றல். அடிமைத் தளையிலிருந்து வந்தபின் எருசலேமில் தங்க வந்த அமாசாயின் தந்தை (நெக 11:13). நெக 12:36-இல் வரும் ஆசரேலும் இவரும் ஒருவராக இருக்கலாம்.

6. இவர் ஒரு குரு. எருசலேம் மதிலின் அர்ப்பணிப்பு நாளன்று நடந்த பவணியில் எக்காளம் இசைப்பவராக இருந்தார் (நெக. 12:36).

**ஆசா** (ASA - குணமளிப்பவர்)

1. யூதாவின் அரசர் (913-813). அபியாவுக்கு அடுத்து ஆட்சிப் பொறுப்பேற்ற அவரது மகன். இவர் நாற்பத்தோர் ஆண்டுகள் எருசலேமில் ஆண்டார். அபிசலோமின் மகள் மாக்கா என்பவளே இவருடைய தாய் (1 அர 15:10). ஆனால் இவள் அபியாவின் தாயாக இருக்கலாம். அவர் இறந்தபின்னும் அரசித் தாய் என்ற பட்டத்தைக்கொண்டிருக்க வேண்டும்.

பழைய ஏற்பாடு இவரை, இவர் தந்தையிடமிருந்து வேறுபட்டவராகவும், அவருக்குச் சாதகமாகவும் விவரிக்கிறது (1 அர 15:11; 2 நாள் 14:2).

ஆசாவின் முதல் பத்தாண்டு ஆட்சி அமைதியாக இருந்தது (2 நாள் 14:1). இது ஓரளவு இவரது தந்தை இஸ்ராயேலரின் அரசன் எரொபயாமின்மேல் கொண்ட வெற்றியின் பலனாகும். இஸ்ராயேல் அரசன் பாசாவோடு (910-887) எல்லை பற்றிய சண்டைகளை, ஒருவகை கொரில்லாச் சண்டை, கட்டுப்படுத்த இவரால் முடிந்தது (காண்க.1

*அர 15:16).* இவர் இக்காலத்தைத் தனது மக்களின் சமயப் பழக்கங்களைச் சீர்திருத்து வதிலும் *(2 நாள் 14:2-5; 1 அர 15:12)* பல நகரங்களைப் பலப்படுத்துவதிலும் *(2 நாள் 14:6-8)* செலவிட்டார்.

இவரது நல்லாட்சி, எகிப்தியனான செரா குவின் படையெடுப்பால் தடைப்பட்டது. எதிரியின் பெருஞ்சேனையைக் கண்டு அஞ்சி, ஆசா இறைவனிடம் வேண்ட அவ ரும் அவருக்கு எதிரிகளின் படைமேல் ஒரு வெற்றியைத் தந்தார் *(14:9-15).*

இறைவாக்கினர் அசரியாவால் ஊக்குவிக் கப்பட்டு, ஆசா தனது சீர்திருத்தத்தைத் தொடர்ந்து நடத்தினார். எருசலேமில் ஓர் ஆடம்பரச் சடங்கினில் ஆண்டவரோடு உடன்படிக்கையைப் புதுப்பிக்க மக்களைத் தூண்டினார் *(15:1-15).* அவரது பாட்டி மாக்கா பாலின வளர்ச்சித் தேவதையான அசேராவின் சிலையை வைத்திருந்ததால், அவளை அவளது பதவியிலிருந்து நீக்கி னார். சிலையை எரித்தார் *(15:16; 1 அர 15:13).* ஆசா தன் சீர்திருத்தத்தை முழுமையா கச் செய்தார். ஆனால் மேட்டு நில புனித இடங்களை அகற்றவில்லை. இதற்காக இவர் குறை கூறப்படவில்லை *(2 நாள் 17; 1 அர 15:14).*

அவரது ஆட்சியின் 16-வது ஆண்டில் *(2 நாள் 16:1-இல் வருவதுபோல் 36-ஆம் ஆண் டில் அன்று)* பாசா யூதாவின் மேல் படையெ டுத்து, பேத்தேலுக்கும் எருசலேமுக்குமிடை யிலுள்ள இராமா நகரைப் பலப்படுத்தினார். அதனால் தென் அரசை முற்றுகையிட்டார் *(2 நாள் 16:1; 1 அர 15:17).* இவர் ஒருவேளை பேத்தேல், எசானால், எப்பிரோன் ஆகிய நகரங்களையும் அவற்றைச் சுற்றிய ஊர்க ளையும் கைப்பற்றியிருக்கலாம். இவற்றை அவர் தந்தையிடமிருந்து முன்பு அபியா கைப்பற்றியிருந்தார் *(2 நாள் 13:19).* எகிப்தி யர் தாக்கியபோது ஆண்டவரிடம் காட்டிய விசுவாசத்தை இப்போது ஆசா காட்ட வில்லை. மாறாக சீரியாவிடம் உதவி நாடி னார். ஆலயத்திலும் அவர் அரண்மனையி லும் எஞ்சியிருந்த வெள்ளியையும் தங்கத் தையும் சீரியா பென்-அதாதுக்கு கொடை யாக அனுப்பினார். அவரும் இந்த அரசியல் நட்பு அடையாளத்தை ஏற்றுக்கொண்டார். அவர் பாசாவின் தந்தையோடு யூதாவுக்கு எதிராகக் கூட்டணியில் சேர்ந்திருந்தார். இப் போது அக்கூட்டணியை முறித்தார். அவர் வட அரசின் வட பகுதியிலுள்ள நகர்களைக் கைப்பற்றத் தொடங்கினார். அதனால் இரா மாவைப் பலப்படுத்துவதை பாசா கைவிட் டார். ஆசா, இராமாவில் பாசா பயன்படுத் திய கற்களையும் மரங்களையும் அகற்றி அவற்றைக் கொண்டு பென்யாமின் பகுதி யில் கெபா, மிசுப்பா ஆகியவற்றைக் கட்டி னார் *(2 நாள் 16:10; 1 அர 15:22). 2 நாள் 17:2*-இன்படி ஆசா சில எப்பிராயிமியர் நகரங்களையும் கைப்பற்றியிருக்க வேண் டும்.

சீரியாவின் உதவியை நாடியதை அரசரா கம ஆசிரியர் தீர்ப்பிடவில்லை. ஆனால் நாளாகமம் காட்சியாளர் கனானியின் கண்ட னத்தை எடுத்துக் கூறுகிறது *(2 நாள் 16:7-10).* செராகுவிடமிருந்து காப்பாற்றிய ஆண்ட வரை நம்பாததைக் கண்டனம் செய்வ தோடு, ஆசா சீரியர்களை நம்பி பென்-அதாதைத் தப்ப விட்டார், ஆகையால் யூதா வுக்கும் சீரியாவுக்கும் வருங்காலத்தில் இடைவிடாத போராட்டம் இருக்கும் எனக் காட்சியாளர் அறிவித்தார். ஆசாவின் செயல் அவருக்குப்பின் வந்த யூதாவின் அரசன் ஆகா சுக்கு ஒரு மாதிரிகையாயிற்று. ஆகாசு, பிற் காலத்தில், சீரியா, இஸ்ராயேல் சேர்ந்து செய்த படையெடுப்பைத் தடுக்க அசீரியா கள் உதவியை நாடுவார் *(2 அர 16:5-9).* காட்சியாளர் கூற்றைக் கேட்ட ஆசா கோபா வேசம் கொண்டு கனானியைச் சிறையிலிட் டார். தம் மக்களுள் பலரைக் கொன்று குவித்தார் *(2 நாள் 16:10).*

*20* ஆண்டுகளுக்குப்பிறகு *(873)* ஆசாவுக்கு கால்களில் ஒரு கொடிய வியாதி உண்டாகி யது *(16:12; 1 அர 15:23).* இது அவர் மரிப்பதற்கு இரு ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்தது. ஆண்டவரது உதவியை நாடப்

போதிய காலம் இருந்தும், மருத்துவர்களின் உதவியை நாடினார். இவர்கள் ஒருவேளை குறி சொல்பவர்களாக இருக்கலாம். ஆசா *871*-இல் மரித்தார். அரசர்கள் கல்லறையில் ஆடம்பரத்துடன் அடக்கம் செய்யப்பட்டார் *(2 நாள் 16:12-14; 1 அர 15:24)*.

எருசலேமுக்குத் திருயாத்திரை செய்த இஸ்ராயேலரை இசுமயேல் கொலை செய்து அவர்களின் உடலை தற்காப்பிற்காக ஆசா வெட்டிய பள்ளத்தில் போட்டார் என்று எரே *41:9* கூறுகிறது. இயேசுவின் மரபு முறைப் பட்டியலில் அபியாவுக்குப் பின் னும் யோசபாத்துக்கு முன்னும் ஆசா இடம் பெறுகிறார் *(மத் 1:7-8)*.

*2.* ஒரு லேவியர், எல்கானாவின் மகன், ஒபதியாவின் மூதாதையர். இவர் நெத்தோ பாவியர் ஊர்கள் ஒன்றில் வாழ்ந்து வந்தார் *(2 நாள் 9:16)*.

**ஆசாபு** (ASAPH - ஒன்று கூட்டுபவர்)

*1.* ஆசாபு கெரிசோம் குடும்பத்தைச் சேர்ந்த பெரக்கியாவின் மகனாவார் *(1 நாள் 6:39)*. எருசலேமுக்குப் பெட்டகம் கொண்டு வரப்பட்ட போது ''பாடல் பணிக்கு''ப் பொறுப்பாக ஏமான், எதுத்தூன் ஆகியோ ரோடு நியமிக்கப்பட்டவர் *(1 நாள் 6:39;15: 19)*. பேழை எருசலேமில் நிறுவப்பட்டபின் ''ஆண்டவரின் செயல்களை நினைவு கூர்ந்து '' அவரைச் சரியான முறையில் வாழ்த்திப் போற்றிவர நியமிக்கப்பட்ட லேவியரில் ஒருவர் *(16:4-6)*. ஆசாபு முதன்மையாக ஒரு இளைஞன், பாணன் *(15:19; 16:5)*. அவர் சங் *50;73-83*-ஆகியவற்றை இயற்றியதாகக் கரு தப்படுகிறது. (இச்சங்கீதங்களில் மேல் குறிப் புகளைக் காண்க). *2 நாள் 29:30*-இல் வரும் காட்சியாளும் இவரும் ஒரே ஆளாக இருக்க லாம் *(காண்க நெக 12:46)*.

தாவீதின் ஆட்சிக் காலத்தில் ஆசாபின் புதல்வர்கள் தங்கள் இசையால் ''இறைவாக் குரைத்தனர்'' *(1 நாள் 25:1-2)*. பிற்காலத்தில் அரசன் யோசியா காலத்தில் இவரது வழித் தோன்றல்கள் பாடகர்களாகத் தோன்றுகின்ற னர் *(2 நாள் 35:15)*. அவர்களில் பலர் (எஸ் *2:41*-இன்படி *128* பேரும், நெக *7:44* இன்படி *148* பேரும்) பாபிலோன் அடிமைத்தனத்திலி ருந்து திரும்பி வந்து பாடகர்களாகவோ, இசைஞர்களாகவோ, எருசலேமில் குடியே றினர். ஆலய அடிக்கல் திருநிலைப்படுத்தப் பட்டபோது தங்களுக்குரிய அலுவல்களைச் செய்தனர் *(எஸ் 3:10)*. பிற்காலத்தில் இவர் கள் ஆண்டவரது ஆலயத்தில் லேவியரின் மேற்பார்வையாளர்களாகவும் *(நெக 11:22)* நகரச் சுவர்கள் திருநிலைப்படுத்தப்பட்ட போது எக்காளம் ஊதவும் நியமிக்கப்பட்ட னர் *(12:35)*.

*2.* அரசர் எசக்கியாவின் பதிவாளர், யோவாசின் தந்தை அல்லது மூதாதையராக இருக்கலாம் *(2 அர 18:18.37; ஏச 36:3.22)*.

*3.* அர்த்தாசெருசுக்குச் சொந்தமான காடுக ளைப் பாதுகாப்பவர். எருசலேமில் ஆலய மும் நகரச் சுவர்களும் கட்டி எழுப்பப்பட வேண்டிய மரங்களை அனுப்பும்படி இவர் அரசனால் கேட்டுக் கொள்ளப்பட்டார் *(நெக 2:8)*.

*4. 1 நாள் 26:1*-இல் குறிக்கப்படும் ஒருவர். இப்பெயர் அபியசாபின் மற்றொரு பெயராக இருக்கலாம். இவரும் *1*-இல் குறிக்கப்பெறு பவரும் ஒரே ஆளாக இருக்கலாம்.

**ஆசால்** *(AZAL - அருகிலுள்ள)*

ஆசால் என்ற நகரான முற்காலங்களில் அடையாளங் கண்டுணரப்படாத நகரம் என்று கருப்பட்டது. போர்க் காலத்தில் ஆண் டவர் தம் மக்களுக்கு அளித்து வந்த பாது காப்பின் சூழ்நிலையில் இப்பெயர் செக் *14:5*-இல் குறிக்கப்படுகின்றது. சில மொழி பெயர்ப்புகளில் இவ்வார்த்தையானது 'பக் கத்தில்' என்று மொழி பெயர்க்கப்பட்டது. வாசகம் குறிப்பது ஒரு ஓடையையா அல் லது இடத்தையா என்பது தெளிவாக இல்லை.

**ஆசான்** (ASHAN - புகை)

செப்பேலாவில் உள்ள ஒரு நகரம். தொடக்கத்தில் இது யூதாவுக்குப் பங்கு செய் யப்பட்டாலும் (யோசு 15:12), பிறகு இது

மிகப் பெரியதாக்கப்பட்டதால் (19:9), யூதாவினுள் சிமியோனுக்குக் கொடுக்கப்பட்டது (19:7; 1 நாள் 4:32). தாவீது தனது ஆட்சி அமைப்பைத் திருத்தி அமைத்தபோது, இந்நகரம் யூதாவில் ஒரு லேவியர் நகரமாக்கப்பட்டு, ஆரோனியர் வாழ்ந்த இடமாகியது (1 நாள் 6:59).

1 நாள் 6:59-இல் காணப்படும் விவரிப்பின் அடிப்படையில் யோசு 21:16-இல் வரும் அயின் என்பதை ஆசான் என்று வாசிக்க அறிஞர்கள் ஆதரவு தருகின்றனர். அநேகமாக 1 சாமு 30:30-இல் வரும் போரசான் என்பதும் ஆசான் என்பதும் ஒரே இடத்தையே குறிக்கின்றன. ஆசான் பெயேர்-செபாவுக்கு மேற்கு வடமேற்கில் 8 கி.மீ தொலைவிலுள்ள இக்கால கிர்பெத்து-ஆசான் என்பதாக இருக்கலாம் என்று அடையாளம் காட்டப்படுகிறது.

**ஆசியா** (ASIA)

ஆசியாக் கண்டத்தின் ஒரு சிறிய பகுதி. புதிய ஏற்பாட்டில் சிறிய ஆசியாவின் ஒரு மாநிலமாகும்.

இதன் உண்மையான பரப்பளவு, அதன் எல்லைகள் ஏதுவென்று ஒவ்வொருவரும் ஒரு கருத்துக் கொண்டுள்ளனர். ஏனெனில் பல்வேறு காலக் கட்டங்களில் இது வெவ்வேறு பகுதிகளாக அமைந்திருந்தது. வெவ்வேறு பகுதியை இது குறித்தது. கிரேக்கப் புவியியல் அறிஞர்களுக்கு ஆசியா என்றால் ஆசியாக் கண்டத்தையோ அல்லது அதன் பெரும்பகுதியையோ குறித்தது. உரோமையர் இவ்வாறு குறிக்கவில்லை.

வெளிப்பாட்டு இலக்கியங்களில் இது செலூக்கிய அரசாங்கத்தையும், அவர்கள் நாட்டையும் குறிப்பதாகக் கொள்ளலாம். ஏனெனில் அதன் அரசர்கள் 'ஆசியாவின் அரசன்'' என்றே குறிக்கப்பட்டனர் (1 மக் 8:6; 2 மக் 3:3; 1 மக் 11:13; 12:39; 13:32). புதிய ஏற்பாட்டில் இது உரோமையின் ஆட்சிப்பகுதியில் ஒன்றாக அமைந்திருந்தது (அ.ப. 2:9; 19:10). ஒரு சில இடங்களில் மட்டும் இது வேறுசில இடங்களைக் குறித்தது.

உரோமையரின் ஆட்சியின் கீழ்: இது அத்தாலியர்களுள் ஒருவரான மூன்றாம் அத்தாலுசு என்பவரால் ஆளப்பட்டது. பிறகு ஒரு உரோமையர் மாகாணமாகியது. இது மிசியா, இலிதியா, காரியா கடற்கரைப் பகுதிகளையும் கொண்டது. கி.மு. 116-இல் பித்தினியா, இலிசியா, கலாத்தியா, ஏஜியக் கடல் இவற்றிற்கிடையே அமைந்த விரிந்த பகுதியாக இருந்தது.

இந்த உரோமை மாநிலத்தின் முதல் தலைநகரமாகப் 'பெர்கமோன்' இருந்தது. அகுஸ்து சீசர் ஆண்டபோது எபேசு தலைநகராக்கப்பட்டது. ஏனெனில் எபேசு நகரம் துறைமுக நகரமாகவும் செய்தித் தொடர்பு மையமாகவும் முக்கியத்துவம் பெற்றதே அதற்குக் காரணம்.

உரோமை மூப்பர் அவைப் பொறுப்பில் அமர்த்தப்பட்ட ஆளுநர்கள் பலவகைகளில் இதனைச் சுரண்டியதால் மக்கள் அகுஸ்து சீசரின் ஆட்சியைக் கண்காணிப்பை வரவேற்றனர். ஏனெனில் அவர் அமைதியையும் வளமையையும் பொறுப்புள்ள நிலையான அரசாட்சி அமைப்பையும் அங்கு நிலவச் செய்தார். எனவே ஆசியாவும் பேரரசருக்கு மிகவும் விசுவாசமுள்ள ஒரு பகுதியாகத் திகழ்ந்தது. உரோமைய மாநிலங்களிலேயே மிகுந்த செல்வமிக்கது ஆசியா என்பதை சிசெரோகூட மிகச் சிறப்பாகக் குறிப்பிடுகிறார்.

அலக்சாந்தரின் காலத்திற்கு முன்பே கிரேக்கக் கலாச்சாரத்தில் வளர்ச்சிப் பெற்று கி.பி. முதலாம் நூற்றாண்டில் கிரேக்கப் பண்பாட்டின் சிகரமாகத் துலங்கிய சிறிய ஆசியாவின் ஒரு பகுதி இது. அலக்சாந்திரியா, அந்தியோக்கியா போன்று எந்த ஒரு பெரிய நகரமும் இப்பகுதியில் ஆதிக்கம் செலுத்தவில்லை. ஆனால் பல நடுத்தரமான நகரங்கள் இருந்தன. அவையும் தன்னகத்தே நன்கு வளர்ச்சி பெற்றுத் திகழ்ந்தன. அவற்றுள் எபேசு, சிமிர்னா, சார்தை, பெர்க

மோன், லேம்சாகுஸ், சிகிகுஸ் போன்றவை யும் சிறந்து விளங்கின.

ஆசியாவின் சமயங்களுள் பலவகையான வழிபாடும், சடங்குகளும் இருந்தன. அனத்தோலிய சமயங்களுள் மகா அன்னையை வழிபடுதலும் ஒன்றாகும். உரோமைத் தெய்வங்களான அர்தெமிஸ் தயானா (எபேசு நகர்) போன்றவற்றையும், அஸ்க்லேபியு (பெர்கமோன்) ஆகிய தெய்வங்களையும் வழிபட்டனர். தொடக்க காலத்தில் கிறிஸ்தவம் இங்கு வளர்வதற்கு பேரரசர் வழிபாடும் ஒரு முக்கிய காரணமாகும். முக்கியமாக, அமைதியை நிலைநாட்டிய அகுஸ்து சீசரின் வழிபாடு பெரிதும் ஆசியாவில் இருந்து வந்தது. இப்பகுதியினரே கி.மு. 29-இல் பேரரசரை வழிபட உத்தரவு கேட்டனர். பின்னர் பேரரசரை வழிபட மறுத்த கிறிஸ்தவர்கள்மேல் வெறுப்புத் தோன்ற ஆரம்பித்தது.

*புதிய ஏற்பாட்டில்:-* ஒரு சில இடங்களைத் தவிர ஆசியா என்பது உரோமையின் ஒரு மாநிலத்தையே குறிக்கும். ஐம்பதாம் நாள் விழாவின்போது இப்பகுதியில் இருந்தும் யூதர்கள் வந்திருந்தனர், ஆனால் பிரிகியாவையும் இது உள்ளடக்கும் *(அ.ப.2:9-10)*. அங்குள்ள யூதர்களின் எண்ணிக்கையும் ஸ்தோவனுடன் சிலர் விவாதம் செய்தது பற்றியும் கூறப்படுகிறது *(6:9)*.

பவுலின் இரண்டாவது நற்செய்திப் பயணத்தின்போது இப்பகுதிக்குப்போக வேண்டாமென நற்செய்தி அறிவிக்க வேண்டாமென ஆவியால் அறிவுறுத்தப்பட்டாலும் துரோவா என்ற நகருக்குச் சென்றனர் *(அ.ப. 16:6-8)*. கிரேக்கத்திலிருந்து திரும்பியபொழுது பவுல் எபேசு நகரில் சிறிது தங்கினார் *(18:19-21)*. பவுல் தமது மூன்றாவது நற்செய்திப் பயணத்தின்போது எபேசும் அதைச் சுற்றியுள்ள பகுதிகளும் இறைவார்த்தையை நன்கு கேட்க வேண்டுமென்ற நோக்குடன் இரண்டு ஆண்டுகளை இப்பகுதியில் கழித்தார் *(19:10)*. தனது இறுதிப் பயணத்தின் போது ஆசியா வழியாக செல்ல விரைந்தார். ஆனால் மிலேத்து துறைமுகத்தை மட்டுமே தொட்டுச் சென்றார் *(20:16-17)*. எபேசு நகரில் அவர் நீண்ட காலம் தங்கினார் என்பது அவரது பல மடல்களில் குறிப்பிடப்பட்டுள்ளது *(உரோ 16:5; 1 கொரி 15:32; 16:8; 2 கொரி 1:8)*.

திருவெளிப்பாட்டு நூலின் ஆசிரியருக்கு ஆசியாவே மிகுந்த ஈடுபாட்டு மையமாக இருந்தது. அவர் குறிப்பிடும் ஏழு திருச்சபைகளும் ஆசியாவின் மேற்குப் பகுதியில் உள்ள இடங்களே. ஒருசில திருச்சபைகளையே அவர் தேர்ந்தெடுத்துப் பேசுவதிலிருந்து அவற்றை அவர் நன்கு அறிந்திருந்தார் எனத் தெரிகிறது. அவர் குறிப்பிட்டுப் பேசும் முக்கியமான மூன்று நகரங்கள் எபேசு, சிமிர்னா, பெர்கமோன் ஆகியவையே *(திருவெளி 1:4)*. பிறகே இந்த வரிசையில் தியத்திரா, சார்தை, பிலதெல்பியா, இலவோதிக்கயா ஆகியவை வருகின்றன *(1:11)*. ஆசியாவின் பிற நகரங்களாக புதிய ஏற்பாட்டில் கொலோசை, எராப்போலி, அதிராமித்தியம், ஆசோ ஆகியவை குறிப்பிடப்படுகின்றன.

கி.பி. 2-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கிறிஸ்துவத்திற்கேற்பட்ட எதிர்ப்பிலிருந்து ஆசியத் திருச்சபைகள் தப்பின. 5-ஆம் 6-ஆம் நூற்றாண்டுகளில் கிறிஸ்துஇயல் போதக வளர்ச்சியில் இத்திருச்சபைகள் முக்கியப் பங்கு வகித்தன.

**ஆசியார்க்கு** *(ASIARCH - ஆசிய நாட்டைச் சேர்ந்தவர்)*

இன்னும் தகுந்த ஆதாரங்கள் கிடைக்காததால் இந்த வார்த்தையின் சரியான தோற்றத்தையும், பொருளையும், விளக்கத்தையும் அளிக்க இயலவில்லை. இந்த வார்த்தை ஸ்த்ராபோவால் பயன்படுத்தப்பட்டுள்ளது. போலிகார்ப்பின் வேத சாட்சியம் என்ற நூலிலும் ஆசியா நகரங்களில் காணப்படும் கற்களிலும், நாணயங்களிலும் உள்ள பல குறிப்புகளில் இது காணப்படுகிறது.

ஆசியார்க்குகள் என்பவர்கள் ஆசியாவிலுள்ள உரோமை மாநிலங்களில் தாங்கள்

பிரதிநிதிகளாக இருந்த அல்லது தாங்கள் பணி செய்த நகரங்களில் செல்வந்தர்களாக வும், அதிகாரம் உடையவர்களாகவும் இருந் தார்கள் என்று உறுதியாகச் சொல்ல முடியும். இவர்கள் உரோமைய ஆட்சி அமைப்பைச் சேர்ந்தவர்களல்ல; ஆனால் மாமன்னரு டைய வழிபாட்டையும், உரோமைத் தேவ தையின் வணக்கத்தையும் பாதுகாத்து, வளர்ச்சியடையச் செய்ததால் இவர்கள் உரோமையராலே மதிப்பு மிக்கவர்களாகக் கருதப்பட்டனர். இப்படிப்பட்ட ஒரு சேவை திருவிழாக்கள், அதனுடன் சேர்ந்த விளை பாட்டுக்களுக்காக ஆகும் செலவுகளையும் ஏற்றுக் கொள்ள வேண்டும். இவ்வாறு ஒரு ஆசியார்க்கு தனது சொந்தச் செலவில் பொது குளிப்பிடத்தைச் சீர் செய்யலாம், அல்லது பரிசு அளிக்கப்படும் சண்டைப் போட்டிகளை நடத்தலாம். ஆசியார்க்குகள் சில சமயங்களில் தாங்கள் உள்ள ஊரில் உள்ள மாமன்னரின் வழிபாட்டை நடத்தும் கோவிலுக்குள் தலைமைக் குருவாகவும் அல்லது இன்னும் சிறப்பாக 'ஆசியாவின் தலைமைக் குரு' என்றும் அழைக்கப்பட்ட னர். இப்பதவி ஓர் ஆண்டுக்குத்தான் உரியதா னாலும், மீண்டும் தேர்ந்தெடுக்கப்படலாம். பதவி போனபின்னும் பட்டம் நிலவலாம். இப்படிப்பட்டவர்கள் எபேசு போன்ற நக ரங்களில் பலர் இருந்திருக்க வேண்டும்.

ஆசியார்க்குகள் மேற்சொன்ன வேலைக ளைச் செய்தார்கள் என்றால், அவர்கள் அப் போஸ்தலர் பணியில் சொல்லப்பட்டிருப்ப தின் முக்கியத்துவம் தெரிகின்றது. பவுலுக்கு எதிராக எபேசில் செய்த கலகத்தில், ஆசி யார்க்குகள் பவுலுக்குத் துணை செய்ததாக லூக்காஸ் கூறுகின்றார். எபேசின் கல்வியு டைய மக்கள் நகரில் பவுல் போதிப்பதைத் தடுக்கவில்லை *(அ.ப.19:23-41)*.

**ஆசிரியேல்** *(AZRIEL - இறைவன் என் உதவி ஆவார்)*

*1.* யோர்தானுக்கு அப்பால் வாழ்ந்த மனா சேயின் பாதிக் குலத்தைச் சேர்ந்த குடும்பத் தலைவர்களில் ஆசிரியேலும் ஒருவராவார் *(1 நாள் 5:24)*.

*2.* இவர் தாவீது காலத்தில், நப்தலியருக் குத் தலைவனாகிய எரேமோத்தின் தந்தை *(1 நாள் 27:19)*.

*3.* எரேமியாவின் இறைவாக்குப் பணிக்கா லத்தில் அரசர் யோயாக்கிமின் ஊழியர்க ளுள் ஒருவராகிய செராயாவின் தந்தை *(எரே 36;26)*.

**ஆசேம்** *(HASHEM - கொழுத்த, பருத்த)*

கிசோனிய குலத்தைச் சேர்ந்தவர். தாவீ தின் ''முப்பதின்மர்'' என்ற ஆற்றல்மிக்க படைவீரர்களுள் ஒருவர். 2 சாமு *23:32*-இல் வரும் இணையான பகுதியில் இவர் யாசே னின் மகன் என்றழைக்கப்படுகிறார்.

**ஆசேரியர்** (ASHERITES)

ஆசேரின் இனத்தவர். ஆசேரின் ஐந்து பிள்ளைகளின் வழித் தோன்றல்கள் *(ஆதி 46:17; 1 நாள் 7:30)*. காண்க. ஆசேர்.

**ஆசேர்** *(ASHER - மகிழ்ச்சியான)*

யாக்கோபின் எட்டாவது மகனும் பன்னி ரண்டு இனங்களில் ஒன்றின் மூதாதையரும் ஆவார். இவர் லேயாவின் வேலைக்காரி சிலிப்பாவுக்கு *(ஆதி 30:12-13)* பாதான்-ஆராமில் பிறந்தவர் *(35;26)*. இவர் காது என்பவரோடு கூடப் பிறந்த சகோதரர். ஆகையால் இவர் பெயர் மரபு முறைப் பட்டியலில் எப்பொழுதும் காதிற்கு அடுத்து வருகிறது *(ஆதி 35:26; 46:17; யாத் 1:4; 1 நாள் 2:2)*. ஆசேரின் வழித் தோன்றல்கள் செழிப்பான பகுதியில் வாழ்வர் என்று யாக் கோபின் ஆசிரில் முன்னறிவிக்கப்பட்டது *(ஆதி.49:20)*. மோசேயின் ஆசிர்களில் இது மீண்டும் புதுப்பிக்கப்பட்டது *(உப 33:24)*.

பாலஸ்தீனம் கைப்பற்றப்பட்டபின் ஆசே ரின் ஐந்து பிள்ளைகளின் வழித்தோன்றல்கள் ஆகிய *(ஆதி 46:17; 1 நாள் 7:30)* ஆசேரின் மக்கள் தொகை இரண்டாவது கணக்கெடுப் பின்படி 53,400 ஆகும் *(எண் 26:47)*. இவர்க ளுக்கு கர்மேல் மலையிலிருந்து வடக்கே சீதோன் வரையிலும், கிழக்கில் செபுலோன், நப்தலி ஆகிய பகுதிகளைக் கொண்ட நாடு

பங்கிடு செய்யப்பட்டது (யோசு 19:24-31). நீதி 1:31-32-இன்படி அவர்களால் ஆக்கோ, சீதோன் போன்ற நகரங்களைக் கைப்பற்ற முடியவில்லை. ஆகையால் கானானியரு டன் வாழ வேண்டியிருந்தது. இந்த நிலையே மற்ற இஸ்ராயேல் இனத்தவர்க ளுக்கும் வாய்த்தது. கானானியர்களின் சில நகரங்களை மானாசே கைப்பற்றினார் (யோசு 17:11).

இதன் புவியியல் அமைப்பால், ஆசேர் நாடு கடல் வாணிபத்தில் தீர் நாட்டுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தது. மிகச் சிறந்த இடத்தில் குடியேறியிருந்த ஆசேரியர் கள் இஸ்ராயேல் நாட்டு வாழ்வில் மற்ற இனத்தவரைப் போல் அவ்வளவு பங்கு கொள்ளவில்லை. இஸ்ராயேலர் கானானிய நாட்டு அரசர்களது கூட்டணியை எதிர்த்துப் போரிட்டபோது கடற்கரையில் வெறுமனே தனித்து நின்றதாக ஆசேரியரை தெபோரா குறை கூறியதைக் கண்டு வியப்பு அடைய வேண்டியதில்லை (நீதி 5:17). கானானியர் களை வெல்லச் செய்த முயற்சிகள் வீணான தும் (நீதி 1:31.தொ) ஆசேர் இவர்களிடம் கொண்டிருந்த வாடிக்கையான வியாபார மும் இப்போரில் பங்கு எடுப்பதிலிருந்து ஆசேரியர்களைத் தடுத்து இருக்கவேண்டும் (நீதி 13:1தொ). மற்ற காலங்களில் இவர்கள் இஸ்ராயேலரோடு ஒத்துழைத்தனர். சான் றாக கிதயோன் மிதியானியர்களை இசிரி யேல் என்ற சமவெளியில் தோற்கடிக்க உத வியதுமல்லாமல் (6:35) அவர்களை விரட்டி யும் அடித்தனர் (7:23).

அரசாட்சிக் காலத்தில் ஆசேரின் நகரங்க ளில் நான்கு (யோசு 19:30) லேவியர்களுக் குக் கொடுக்கப்படுகின்றன (21.30-31; 1 நாள் 6:74-75).தீரின் கீராம் ஆலயம் கட்டுவ தற்குப் பொருள்கள் வழங்கியதிற்குப் பதி லாக, காபூல் பகுதியைச் சேர்ந்த ஆசேரின் பல நகரங்கள் சாலமோனால் கீராமுக்கு அளிக்கப்பட்டன (1 அர 9:11-13).

அசீரிய மன்னர் 2-ஆம் சார்கோன் சமாரி யாவைக் கைப்பற்றியபின், மற்ற வட இனத் தவர்களைச் சேர்ந்தவர்கள் போல், ஆசேரிய ரில் பெரும்பாலோர் நாடு கடத்தப்பட்டனர் (2 அர 17:6). விடப்பட்டவர்களில் சிலர், எருசலேமுக்கு வந்து பாஸ்கு விழாவில் பங்கெடுக்க எசக்கியா கொடுத்த அழைப்பை ஏற்றனர் (2 நாள் 30:11). யூதாவின் அரசன் யோசியா செய்த சீர்திருத்தத் திட்டத்தில் ஆசேரின் பகுதியும் உள்ளடங்கியிருக்கலாம். அரசன் வட பகுதியில் கானானிய வழி பாட்டை ஒழிக்க 622-இல் நப்தலி வரை சென்றார் (2 நாள் 34:6:33). எசக்கியேலின் இறைவாக்குப்படி நாட்டைப் பங்கீடு செய்த லில் ஆசேரியர்களும் சேர்க்கப்பட்டுள்ளனர் (எச 48:2-3).

பின்னால் வந்த நூல்களில் ஆசேரின் பெயர் பட்டியல்களிலும், பட்டியல்களைப் போன்ற இடங்களிலும் காணப்படுகின்றது. சில பட்டியல்களில் ஆசேர், காதிலிருந்து பிரிந்திருந்ததாகத் தாண் நப்தலிக்கு இடை யில் இடம் பெறுகிறது (எண் 1:40; 2:27; 7:72; 10:26; 13:13; 26:44-47). வேறு சில இடங்க ளில் ஆசேர், இசக்காருக்கும் நெப்தலிக்கும் இடையில் வருகிறது (எண் 34:27). எபால் மலைமீது சாபமிட இருந்தவர்களில் காது டன் ஆசேரும் இருக்கின்றார் (உப 27:13). லேவியர் நகரங்களில் ஆசேர் வடக்குக் குழு வில் இசக்காருக்கும், நெப்தலிக்கும் இடை யில் வருகின்றார் (யோசு 21:6;30-31;1 நாள் 6:6 2;74-75).

புதிய ஏற்பாட்டில், இறைவாக்கினி அன்னா ''ஆசேர் குலத்தைச் சேர்ந்த பானு வேலின் மகள்'' என்று குறிக்கப்படுகிறார் (லூக் 2:36). இறைவனுடைய பாதுகாப்பு முத்திரைப் பெற்றவர்களில் காது குலத்தை அடுத்து அசேர் குலத்தைச் சேர்ந்தவர்கள் பன்னீராயிரம் என்று குறிக்கப்படுகிறது (திரு வெளி 7:6).

**ஆசேல்** *(AZEL - மேன்மையான)*

ஆசேல் என்பவர் எலயாசாவின் மகனா வார். சவுலின் மகனாகிய யோனத்தானின் வழிவந்தவர்களில் ஒருவராவார். இவர் ஆறு ஆண் மக்களுக்குத் தந்தையாவார் (1 நாள் 8:37-38; 9:43-44).

**ஆசோ** (ASSOS - நெருங்குதல்)

ஆசியாவைச் சேர்ந்த உரோமை மாநிலத்திலுள்ள மிசியாவின் துறைமுகம் (அ.ப. 20:13-14). அதிராமித்தியம் வளைகுடாவின் மேல், இன்றைய பெக்ரும்கோய் என்ற கிராமமிருக்கிற இடத்தில் இது இருந்தது. இது முதன் முதலாக லெஸ்போசைச் சேர்ந்த எயோலிக் (கி.மு.900) குடியிருப்பாக இருந்தது. இது பெர்கமோன் அரசர்களால் மீண்டும் கட்டப்பட்டு இதற்கு அப்பொல்லோனியா என்று பெயரிடப்பட்டது.

இது செங்குத்தான எரிமலை மேல் அழகான தோற்றத்துடன் அமைக்கப்பட்டு இருந்தது. ஏறக்குறைய கடலுக்கு ஒரு கிலோ மீட்டர் தொலைவிலும் செங்குத்தான அமைப்பினாலும் பாதுகாக்கப்பட்டது. இதனைச் சுற்றி இரண்டு மைல் நீளத்திற்கு 65 அடி உயரத்திற்கு பாதுகாப்புச் சுவர் உள்ளது. செயற்கை அகழியால் இதன் துறைமுகம் அமைந்துள்ளது. கடற்கரைக் கப்பல் போக்குவரத்துக்குப் போதியது. தொல்பொருள் ஆய்வுகள் பலவற்றைக் கண்டுபிடித்துள்ளன. இவற்றில், அத்தீனாவுக்கு அர்ப்பணிக்கப்பட்ட பல கலைப்பண்புகளையுடைய ஒரு தோரிக் ஆலயம், சுவர்கள், சந்தைக்கூடம், விளையாட்டு அரங்கம், குளியல் அறைகள், நாடக அரங்கம் ஆகியவையாகும்.

இங்கு தத்துவ அறிஞர் அரிஸ்தாத்தில் 3 ஆண்டுகள் படிப்பித்தார் (348-345). கிளெயான்தெஸ் என்ற ஸ்தோயிக் தத்துவ அறிஞர் வாழ்ந்த இடம் இது. இது பரந்த வேளாண்மை நிலத்தைக் கொண்டிருந்தது. இது ஏற்றுமதி செய்த கோதுமை தன்மைக்குப் புகழ்வாய்ந்தது.

பவுல் தனது தோழர்களைப், படகில் லெக்தும் முனையைச் சுற்றிச் செல்ல அனுப்பிவிட்டு (காண்க அ.ப.27:2) துரோவாவிலிருந்து ஏறக்குறைய 32 கி.மீ தொலைவிலிருந்த ஆசோவிற்கு தரை மார்க்கமாகச் சென்றார். இந்தப் பயணம் கடற் பயணத்தைவிடக் குறைந்த நேரம் எடுத்ததால், தன் தோழர்கள் ஆசோவிற்கு வந்து சேருமுன், பவுல் துரோவாவில் நீண்ட காலம் தங்க முடிந்தது (அ.ப.20:13-14).

**ஆசோர்** (AZOR - உதவி, உதவியாளர்)

இவர், யோசேப்பு, இயேசு ஆகியோரின், நாடு கடத்தப்பட்டதற்குப் பிற்காலத்திய மூதாதையரில் ஒருவர் (மத் 1:13-14).

**ஆசீரும் சாபமும்**

1. சமய சமுதாயத்தின் முழுமையானது பாதுகாக்கப்படவும், உறுதிப்படுத்தப்படவும், தீய சக்திகள் அடக்கப்படவும் அல்லது அழிக்கப்படவும், சடங்குகள் அல்லது மற்ற சந்தர்ப்பங்களில் பெரும்பாலும் சைகைகளோடும் அடையாளச் செயல்களோடும் சேர்த்துக் கூறப்படுகின்ற வலிமைமிக்க வார்த்தைகளே இவை. பழங்கால மேற்காசிய நாடுகளில், பெரும்பாலான கடந்து போன மற்றும் இன்றைய சமய சமுதாயங்களில் இருப்பது போன்று, ஆசீர்களும் சாபங்களும் கலாச்சாரத்தின் ஒரு நிலையான பகுதியாகவும் இருந்தன. அனுதின வாழ்விலும் ஒரு முதன்மையான இடத்தை பெற்றிருந்தன. ஆசீரும் சாபமும் அளிக்கின்றவனுடைய செயல்களும் வார்த்தைகளும் அவனுடைய கட்டுப்பாட்டிலேயே இருந்து, அவனுடைய ஏவுதலின் மூலம் அவனுடைய நோக்கங்களை நிறைவேற்றுவனவாக உள்ள மாந்திரீக நிலையிலிருந்து தெய்வத்தின் (தெய்வீக அல்லது பேயின் உயிர்கள்) ஆற்றலிலும் குறிக்கோளிலும் இருந்து தங்களது தோற்றத்தையும் விளைவுகளையும் பெறுகிறதாகக் கருதப்படும். ஆசீர்கள், சாபங்களை வேறுபடுத்துவது பெரும்பாலும் கடிமானதாகும். இன்றைய வடிவில் பெரும்பாலான ஆசீர் மற்றும் சாப வாய்ப்பாடுகள் அவற்றிலிருந்து வெளிப்படும் ஆற்றலை இஸ்ராயேலின் இறைவனுக்கே சாற்றிக் கூறினாலும் ஆசீர் மற்றும் சாபம் பற்றிய பழைய ஏற்பாட்டுக்கருத்தில் மாந்திரீகக் கூறுகள் காணப்படுகின்றன (ஆதி 48:14-15; 1 சாமு 14:24; 1 கொரி 12:1-3; கலா 1:8).

ஆசீர்வதிக்கவோ சபிக்கவோ கூறப்பட்ட வார்த்தையின் மாயவித்தை ஆற்றலில், நாக

ரீக முதிர்ச்சியற்றப் பண்டைக்கால விசுவாசம் பற்றிச் சில சுவடுகளே பழைய ஏற்பாட்டில் உள்ளன. சில பழைய நிகழ்ச்சியுரைகள், மூடநம்பிக்கைகளின் சுவடுகளைக் கொண்டுள்ளன. ஆனால் அவற்றின் இறுதிப்பதிப்பில், ஆசீர்கள் இறுதியில் ஆண்டவரிடமிருந்தே வருகின்றன என்று இவை தெளிவாக்குகின்றன. இவ்வாறு யாக்கோபுக்கு ஈசாக் அளித்த ஆசீர், முதிர்ச்சியற்றப் பண்டைக்கால விசுவாசப்படி தள்ளுபடி செய்ய முடியாதெனினும், அது யாக்கோபை இறைவன் தேர்ந்தெடுத்ததின் விளைவே ஆகும் என்று யாவே பாரம்பரியம் சுட்டிக்காட்டுகிறது *(ஆதி 25:23; 27:33-38)*. ஆசீரின் உண்மையான வடிவம் ஆண்டவரை நோக்கிய ஒரு மன்றாட்டாகும். இதில் மாயவித்தை ஆற்றல் பற்றிய எந்தச் சுவடுமில்லை *(27:28)*. இறைவனோடு யாக்கோபு போராடிய நிகழ்ச்சியுரை *(32:24-30)* பழங்காலப் பாரம்பரியத்தை அடிப்படையாகக் கொண்டது. இது ஒருவேளை ஒரு தெய்வத்திடமிருந்து ஆசீர் வல்வந்தமாக பறிக்கப்பட்டது என்று சுட்டலாம். ஆனால் இதைத் திருப்பி அமைக்கும் யாவே பாராம்பரியம் இறைவன் தமது ஆசீரைச் சுதந்திரமாகவே அளித்தார் என்று தெளிவாகக் காட்டுகிறது *(32:29)*.

எல்லா ஆசீர்களுக்கும் ஆண்டவரே ஊற்று என்று ஆழ்ந்த சமய உணர்வு கொண்டிருந்தனர் இஸ்ராயேலர். ஒருவரைச் சந்திக்கும் போது முகமன் கூறுவது, ஆண்டவரை நோக்கிய ஒரு மன்றாட்டாக அமைந்திருந்தது *(ஆதி 24:31; ரூத் 2:4)*. அதன் விளைவு ஆசீர்வதிக்கும் வழக்கு முகமன் கூறி வாழ்த்துதலைக் குறித்தது *(ஆதி 47:7-10; 1 சாமு 13:10)*. உயிருள்ளவற்றை எல்லாவற்றிற்கும் பலுகிப்பெரும் சிறப்பான ஆற்றல் அளித்து இறைவன் அவற்றை ஆசீர்வதித்தார் *(ஆதி 1:22.28)*. அவர் ஆபிரகாமுக்கு அளித்த ஆசீரும் பலுகிப்பெருகுவதோடு தொடர்புடையது *(12:2-3)*. சில குறிப்பிட்ட நபர்கள் பிறர்மேல் இறைவனது ஆசீர்களை கூறச் சிறப்பான அதிகாரம் பெற்றிருந்தனர். இவ்வாறு தந்தை தன் பிள்ளைகள் மேலும் *(9:26; 27:28; 49:25-26.28)*, அரசன் தன் குடிமக்கள் மேலும் *(2 சாமு 6:18; 2 அர 8:14.55-61)*, குரு மக்கள் மேலும் *(எண் 6:22-27)* ஆசீர் கூறுவர். ஆசீர் கூறுதல் இஸ்ராயேல் வழிபாட்டின் முக்கியப் பகுதியாகும். பெரும்பாலும் சாபங்களோடு சேர்த்துக் கூறப்பட்டது *(உப 11:29; யோசு 8:34)*. பிரமாணிக்கமாக வாழத் தவறுவது ஆசீரைச் சாபமாக மாற்றலாம் *(மலா 2:2)*. அதேபோல் நல்ல வாழ்வு சாபத்தை ஆசீராக மாற்றலாம் *(உப 23:5; நீதி 17:2; நெக 13:12)*.

ஒருவன் தன் தெய்வத்தைப் போற்றுவதால் அல்லது ஆசீர்வதிப்பதால் அதைப் பலப்படுத்தக் கூடும் என்ற கருத்து இஸ்ராயேலில் நிலவியதே இல்லை. யாவேயைப் போற்றுதலில் அல்லது ஆசீர்வதித்தலில் இஸ்ராயேலர் அவரைத் தங்கள் ஆண்டவராகவும் அரசராகவும் எல்லா ஆசீர்களின் ஊற்றாகவும் வெளிப்படையாக ஏற்று அறிக்கையிட்டனர். இச்சூழ்நிலையில் ''பராக்'' என்ற எபிரேய வினைச் சொல் போற்றுதலை அல்லது நன்றி கூறுதலை உணர்த்திற்று *(ஆதி 24:48; உப 8:10; சங் 66:8; 103:1-2)*.

2. ஆசீயளித்தல் மற்றும் சபித்தலின் வடிவங்கள்:- ஆசி கூறுதல் மற்றும் ஆசீரை வேண்டுதல் என்னும் இருவித முக்கிய வடிவங்கள் பழைய ஏற்பாட்டில் காணப்படுகின்றன. முதல் வடிவம் கட்டளை வடிவிலும் *(ஆதி 1:28; 24:60)* சுட்டிக்காட்டுகிற வடிவிலும் *(ஆதி 27:29; 1 சாமு 25:33)* காணப்படுகின்றன. இவை இரண்டுமே, ஆசீரில் கூறப்படும் வார்த்தையில் அடங்கியுள்ள ஆற்றலைப்பற்றி இஸ்ராயேலின் கருத்தை வெளிப்படுத்துகின்றன. இரண்டாவது வடிவம் பிற்கால இஸ்ராயேலின் வழிபாட்டில் முக்கியமானதாக உருவாகி, ஆசீரின் ஆற்றலானது எவ்வாறு தெய்வ நோக்குடன் பிரிக்க முடியாத அளவிற்கு இணைக்கப்பட்டுள்ளது என்பதைச் சுட்டிக்காட்டுகிறது.

அநேகமாக, உடன்படிக்கை புதுப்பித்தல் சமய சடங்கில் பயன்படுத்தப்பட்டிருக்கக் கூடிய பழமையான ஆசியுரை வாய்ப்பாடு உப 28:3-6-இல் காணப்படுகின்றது. ஒவ்

வொரு ஆசீரும் 'ஆசீர் பெற்றிருப்பாய் என்னும் தொடரோடு தொடங்குகிறது. ஆசீர் பெறுபவர் இஸ்ராயேலாகவும் அல்லது பிள்ளைகள், மண், விலங்குகள் மற்றும் மண்ணின் விளைச்சல் முதலிய இஸ்ராயேலின் வாழ்வு சார்ந்துள்ள' அடிப்படை ஆதாரங்களாகவும் உள்ளன. மற்ற நிகழ்ச்சிகளில் ஆசீர் பெறுபவரின் பெயரும் கூறப்பட்டுள்ளது: ''உன்னத் இறைவனால் ஆபிரகாம் ஆசீர்வதிக்கப்படக்கடவானாக... உன்னத இறைவன் வாழ்த்தப்படுவாராக'' (ஆதி 14:19-20). ''யாவே அல்லது இறைவன் வாழ்த்தப்படுவாராக'' என்னும் வாய்ப்பாடே இஸ்ராயேலின் வாழ்த்தினுடைய மிகப்பொதுவான வடிவமாகும். அவர் புகழப்படுவதற்கான தெய்வசெயல் அதனைத் தொடர்ந்து காணப்படுகிறது (சங் 1:1; 84:12; எரே 17:7). ''மனிதன் ஆசீர்வதிக்கப்படுவானாக'' என்பதும் அடிக்கடி பயன்படும் ஆசி முறையாகும்.

பழைய ஏற்பாட்டின் முழுமையான சாப உரையானது உப 27:15-26 (மற்றும் 28:16-19)-இல் காணப்படுகிறது. இதில் சாபத்திற்கு உட்பட்ட செயல் புரிபவர்களும் குறிக்கப்படுகின்றனர். உ.ம். தனது தந்தையையும், தாயையும் அவமதிப்பவன், தனது அயலானுடய நிலத்தின் எல்லைக்கல்லை அகற்றுபவன், போன்றவர்கள் ''....மனிதன் சபிக்கப்படக் கடவானாக'' என்னும் கூற்றும் அங்கு தோன்றுகிறது (உப 27:15; எரே 17:5).

பழைய ஏற்பாட்டிலுள்ள சாபங்கள் பெரும்பாலும் சபதம் (1 சாமு 14:24), சோதனைகள் (எண் 5:16-28), அல்லது தடைக்குட்பட்டவைபால் மக்கள் அல்லது நகரோ காட்டும் பிரமாணிக்கம் (யோசு 6:26) ஆகியவற்றுடன் தொடர்புடையன. இத்தகைய சாபங்கள் அரிதாகவே இறைவனுக்கு சாற்றிக் கூறப்படுகின்றன. மனிதனுடைய பாவத்தின் விளைவாக பாம்பு (ஆதி 3:14) மற்றும் நிலம் மீதான சாபம் (ஆதி 3:17) போன்றவை இறைவனுக்கே சாற்றிக் கூறப்பட்டுள்ளன. இரண்டு சமயங்களில் சாபங்கள் யாவே முன்னிலையில் உரைக்கப் பட்டுள்ளன (யோசு 6:26; 1 சாமு 26:19). உடன்படிக்கையை கடைபிடிக்காத விசுவாசமற்ற மக்கள்மீது சாபங்களை அனுப்பவிருப்பதாக இறைவன் மிரட்டுகிறார் (உப 28:29).

தெய்வத்தை சபிப்பதானது கண்டிப்பாக தடை செய்யப்பட்டுள்ளது (யாத் 22:27; லேவி 24:23; யோபு 2:9). இக்குற்றம் எவ்வளவு பயங்கரமானதெனில், சாதாரணமாக சாபத்தைக் குறிக்கும் வினைச்சொற்களை யாவேயோடு சேர்த்துக் கூறப்படுவதில்லை (யாத் 22:27; 1 சாமு 3:13 எழுத்தர்கள் மூல வாசகத்தை மாற்றியமைத்துள்ள இடம்; யோபு 2:9). இறை பெயரை வீணாகப் பயன்படுத்துவதற்கு எதிரான தடையானது (யாத் 20:7; உப 5:11), ஒருவரது விரோதிகளின்மீது சாபமிடுவதற்கு இறைநாமத்தை உபயோகிக்கக்கூடாது, அல்லது அப்பெயரில் உள்ள வலிமையை பயன்படுத்தக் கூடாது என்பதை குறிப்பிடலாம்.

3. வழிபாட்டில் ஆசிகளும் சாபங்களும்:- இஸ்ராயேலின் வழிபாட்டில் ஆசிகளும் சாபங்களும் முக்கிய இடத்தை பெற்றிருந்தன. குலமுதியவர்களின் காலத்தில், இறக்கின்ற தந்தையின் ஆசி வாரிசுக்கு அளிக்கப்பட்டது (ஆதி 27:1-45; 49; உப 33). இச்சடங்கின் மூலம், உடல்நலன், சந்ததி, வளமை, போரில் வெற்றி, ஞானம் முதலிய அமைதிக்கான அனைத்து ஆற்றல்களும் குலத்தலைவருடைய மரணத்திற்கு பிறகும் தொடரப்பட்டன அல்லது மேம்படுத்தப்பட்டன. ஒருமுறை உரைக்கப்பட்ட இத்தகைய ஆசிகள் திரும்பப் பெற முடியாதவை (ஆதி 27:30-38). அரசாட்சி ஏற்படுவதற்கு முன்னர், இஸ்ராயேலின் பன்னிரு கோத்திரங்களுக்குள், உடன்படிக்கை புதுப்பித்தல் விழாவின் சாதாரண அங்கமாக ஆசிகளும் சாபங்களும் இருந்தன (யோசு 24; உப 11:26-32; 27:9). எருசலேம் வழிபாடு நிறுவப்பட்டபின் (2 சாமு 6), ஆசி மற்றும் சாபங்களின் ஆற்றல்கள், அரசன், அரச வழிபாட்டின் குருத்துவம் மற்றும் வழிபாட்டு இறைவாக்கினர்கள் ஆகியோர் மீது மையம் கொண்டிருந்தன.

மோவாபின் அரசனாகிய பாலாக்கின் சார்பாக இஸ்ராயேலை சபிக்குமாறு பிலயாமிற்கு அளிக்கப்பட்ட பணிக்கு இணையான நிகழ்ச்சிகள் இஸ்ராயேல் *(1 அர 22)* மற்றும் யூதா *(எரே 23)* அரசர்களுடைய அரச வழிபாட்டு முறையிலும் காணப்படுகின்றன.

இஸ்ராயேலின் வழிபாட்டு முறையில், ஆசீர்பற்றிய அடிப்படை உணர்வு வளர்ச்சியடைந்தது. எல்லா ஆசிகளுக்கும் ஊற்று யாவேதான். தகுதியுடைவர்மேல் அவர் ஆசி வழங்கினாலும், ''எருசலேமின் அமைதிக்காக செபிக்க'' *(சங் 122:6)*, அவரது மக்கள் அவருடைய ஆசீரை இறைஞ்சுமாறு அறிவுறுத்தப்பட்டனர். ஆரோனின் ஆசீருரையில் *(எண் 6:24-26)* ஆசீருரைத்தலும் ஆசீருக்காக வேண்டுதலும் ஒரே உரையில் இணைக்கப்பட்டிருந்தன. குரு, யாவேயின் பெயரால் மட்டும், இஸ்ராயேல் மீது ஆசீர் வழங்க அனுமதிக்கப்பட்டார், ஆசீருக்காக இறைவனிடம் வேண்டுவோரில் தலைமையானவராகவும் அவர் இருந்தார். பழைய ஏற்பாட்டில் ஆசீருக்கும், வரலாற்று அனுபவத்திற்கும் இடையில் உள்ள இணைப்பு ஆசிரின் தனிப்பட்ட பண்பாகும். இறைவனுடைய ஆசீரானது, தன்னுடைய மக்களுடனான வரலாற்று செயல் தொடர்புகளில் முதன்மையான வெளிப்பாட்டினை கொண்டிருந்தது. கடந்த காலத்தில் அவர் நிறைவேற்றிய அருட் செயல்களுக்காகப் புகழப்பட்டு, அவருடைய தொடர்ந்த ஆதரவு நாடப்பட்டது *(சங் 34:103)*.

அவ்வாறே, சாபங்களும் அதிகாரபூர்வ வழிபாட்டு முறைகளுக்குள் கொண்டுவரப்பட்டன. தொடர்ந்து அச்சுறுத்தி வந்த பழைய பேய் சக்திகள் விலக்கப்பட வேண்டும். இது, இனி மேலும், அவற்றினுடைய சக்திகளை விலக்கவோ அல்லது அழிக்கவோ சரியான சாப உரைகளைக் கண்டுபிடிக்க வேண்டிய செயலாக இல்லை. மாறாக, தனி நபர் அல்லது சமுதாயத்தின் மீது இத்தகைய சக்திகளின் பிடிப்பை முறியடிக்க யாவேயின் தலையீடு கோரப்பட்டது *(சங் 4:58-59; 91; 141....)*, நேர்மையானவர்களை அழிக்க தீய சக்திகள் யாரிடமெல்லாம் செயல்பட்டனவோ, அவர்கள் எல்லாம் அநீதியின், தீமையின் ஊழியர்களாகக் கருதப்பட்டனர். மரணம் மற்றும் பாதாளம் (செயோல்) ஆகியவற்றுடன் 'அழிவு மற்றும் கொள்ளை நோய்' போன்றவையும் *(ஓசே 13:14; சங் 91:6)* அவ்வப்பொழுது சுதந்தரமான உண்மைகளாகப் பேசப்பட்டன. ஆயினும், இச்சக்திகளில் ஒன்றுகூட யாவேயின் பாதுகாப்பு மற்றும் ஆசீர் போன்ற சக்திகளின் முன் நிற்க முடியாது. மேலும், இஸ்ராயேல் மீது நேரிட்ட சாபமானது, பாவம் மற்றும் கீழ்ப்படியாமையின் சாபமாகும். வாழ்வு மற்றும் மரணம், ஆசீர் மற்றும் சாபம் என்னும் இரண்டு உண்மைகளும் இஸ்ராயேல் முன் தொடர்ந்து நிறுத்தப்பட்டிருந்தன. தமது மக்களுக்கான இறைவனின் அழைப்பானது அவர்கள் வாழ்வை தேர்ந்தெடுக்க வேண்டும் என்பதே *(உப 30:19)*.

4. யூத மதம் மற்றும் புதிய ஏற்பாட்டில் ஆசீர்களும் சாபங்களும்:- யூத மதத்தில் ஆரோனுடைய ஆசிரை உரைப்பது குருவிற்கு மட்டுமே ஒதுக்கப்பட்டிருந்தது *(எண் 6:24-26)*. பதினெட்டு ஆசீர்கள் போன்ற பிற ஆசீர்கள் செபக்கூட வழிபாடுகளின் சாதாரண பகுதியாக இருந்தன. உணவிற்கு முன்னும் பின்னும் இறைவனுக்கு ஆசிர் கூறப்பட்டது; ஆசிர்வதிக்கப்படுவதற்கு முன்னர் எந்த உணவுமே உண்ணப்படக் கூடாது. சாபங்கள் முக்கியத்துவம் பெறவில்லை மேலும் தடை செய்யப்பட்டிருந்தன *(யோபு 31:30)*.

ஆசீருரைகள் புதிய ஏற்பாட்டிலும் காணப்படுகின்றன. பிற்காலத்திய புதிய உடன்படிக்கையின் அமைப்போடு இணைந்துள்ள ஆசீர்களின் புதிய தொகுப்பாகப் ''பேறுகள்'' *(மத் 5:3-12)* கருதப்பட்டிருக்கலாம் *(எரே 31:31-34; லூக் 6:20-26* ஆசீர்களையும் சாபங்களையும் ஒன்றாக கொண்டுள்ளது*)*. பவுலின் திருமுகங்களின் முன்னுரை, மற்றும் முடிவுரைகளிலும் மற்றும் திருவெளிப்பாட்டு நூலில் வரும் போற்றுரைகள், ஆசீர்கள் மற்றும் கேடுகளிலும் *(1:3; 4:8. 11; 5:9-10. 13-14;*

*8:13; 11:17-18; 14:13; 18:2-8; 19:9; 22:7.14.18-19)* புதிய ஏற்பாட்டில், ஆசீர், சாபங்கள் பற்றிய அதிகக் கூற்றுக்களைக் கொண்டுள்ளன. சாபங்கள் மிக அரிதாகவே தோன்றுகின்றன *(மாற் 11:12-14. 20-25).* இயேசுவை பின்பற்றிச் செல்பவர்கள் சபிக்கப்படும்போது அவர்கள் ஆசீர் கூற வேண்டும் *(லூக் 6:28; உரோ 12:14; யாக் 3:8-10).* இம்முறையிலேயேதான் இயேசு, சிலுவையின் சாபத்தை எதிர் கொண்டார் என்று கூறப்படுகிறது; ''தந்தையே, இவர்களை மன்னியும்; ஏனெனில் தாங்கள் செய்கிறது இன்னதென்று இவர்களுக்கு தெரியவில்லை" *(லூக் 23:34).* இயேசுவின் மரணத்திலும் உயிர்ப்பிலும், பாவம் மற்றும் மரணத்தினுடைய சாபமானது ஒரேயடியாக ஒழித்துக் கட்டப்பட்டது *(உரோ 5-8; கலா 3:14).* இறையாசியானது விருச்சசேதனம் செய்தோர் மீதும், செய்யாதவர் மீதும் ஒரே மாதிரியாக இறங்கியதாகக் கருதப்படுகிறது *(உரோ 4:6-9).* புதிய ஏற்பாட்டில், மனித குலத்தின் மீதான உறுதியான ஆசீர் இயேசு கிறிஸ்துவில் பொழியப்படுகிறது.

புதிய ஏற்பாட்டில், ஆசீர்வதித்தலின் இடம், லூக்காவின் நற்செய்தியில் எடுத்துக் காட்டப்படுகிறது. அதில் உயிர்த்த இயேசு ''கைகளை உயர்த்தி வானகத்திற்கு எடுத்துக் கொள்ளப்பட்டார்.... கோயிலில் கடவுளை இடைவிடாமல் போற்றிப் புகழ்ந்துகொண்டிருந்தனர்'' *(லூக் 24:50-53).* பழைய ஏற்பாட்டு ஆசீரின் இரு கூறுகளான இறைவனது கொடைகளை மனிதர்மேல் கூவி அழைத்தலும் இறைவனுக்கு நன்றி கூறுதலும் நற்கருணைச் சடங்கில் நிறைவான முறையில் செயல்படுகின்றன. இறுதி இரவுணவில் கிறிஸ்துவின் ஆசீர் இயேசு தந்தைக்கு நன்றிகூறும் செபமாகவும், தமது அர்ச்சிக்கும் ஆற்றலை அளிப்பதாகவும் அமைந்திருக்கிறது *(மத் 26:6; லூக் 24:30).* ''எயலோகேயோ'' என்ற புதிய ஏற்பாட்டுச் சொல் பெரும்பாலும் இறைவனது ஆசீரை அழைப்பதை உணர்த்திற்று. சில சமயங்களில் நன்றி கூறுதலையும் உணர்த்திற்று *(லூக் 1:64; 1 கொரி 14:16).* ''எயுகரிஸ்தேயோ'' என்ற சொல் நன்றி கூறுதலை மட்டும் உணர்த்தியது ''பராக்'' என்ற எபிரேயச் சொல் நன்றி குறிப்பதையெல்லாம் உணர்த்தவில்லை. உரோமை நற்கருணை மன்றாட்டில் வரும் ''நன்றி செலுத்தி வாழ்த்துரைத்து '' என்ற பதம் மாற்கு *14:22*-உம் *1* கொரி *11:24*-உம் சேர்த்த கூட்டமைப்பாகும். இது கிறிஸ்துவ ஆசீரின் இரு கூறுகளையும் துல்லியமாக எடுத்துக்காட்டுகிறது.

**ஆசீர் (**Blessing**)**

I. ஆசீரின் சிறப்புகள்:- ஆசீர் என்னும் சொல்லானது பெரும்பாலும் சமயத்தின் மேலெழுந்தவாறான வடிவங்களையே நமது மனக்கண்முன் கொண்டுவருகின்றது. ஆசீரின் வாய்பாடுகள் முணுமுணுக்கப்படும். பெரும்பாலும் பொருளுள்ள விதத்தில் கையாளப்படுவதில்லை. விசுவாசம் குறைவாக உள்ளவர்கள் இதைவிடாப் பிடியாகப் பற்றிக்கொள்வர். மற்றொருபுறத்தில், இன்றைய கிறிஸ்தவ உயிருள்ள பாரம்பரியமும் அதிமுக்கியமானவற்றை அருள் மற்றும் நன்றியுரைத்தல் ஆகிய பகுதிகளின்கீழ் தொகுத்துவிட்டு, விவிலிய வழக்கில் பொருள் குறைந்த ஆசீரின் வடிவங்களை மட்டுமே கொண்டுள்ளது. எனவே, ஆசீரளிக்கும் சொற்களுக்கும், அவை குறிப்பிடும் உண்மைக்கும் எதிராக ஒரு உண்மையான அக்கறையின்மை எழும்புகிறது.

ஆயினும், கிறிஸ்து தமது திருச்சபைக்கு அளித்த, உலகின் மீதான இறுதியான வெளிப்படையான செயல் அவருடைய ஆசீரே ஆகும் (லூக் *24:50* தொ). விவிலிய ஆசீரின் சிறப்புகளை விளக்குவதென்பது இறைதயாளக் குணத்தின் அற்புதங்களையும், இத்தயாளக் குணம் படைப்பின் மேல் ஏழச்செய்கின்ற அதிசயத்தின் சமயப் பண்பையும் உண்மையில் ஒளியூட்டுகிறது.

ஆசீர் என்பது வாழ்வையும் அதன் மறைபொருளையும் தொடுகின்ற கொடையாகும். அது வார்த்தையாலும் அதன் மறைபொருளாலும் வெளிப்படுத்தப்படுகின்ற அன்பளிப்பாகும். ஆசீர் என்பது எந்த அளவு

ஒரு நன்மையாக உள்ளதோ அந்த அளவிற்கு வார்த்தையாகவும் உள்ளது. அது கொண்டு செல்கின்ற ஒரு நன்மையானது ஒரு குறிப்பிட்ட பொருளாக இல்லாததாலும், கொண்டிருக்கின்ற அமைப்பை சார்ந்திராமல், அதாகவே இருத்தல் நிலையில் அமைந்திருப்பதாலும், இது மனிதனுடைய செயலைத் தவிர்த்துக் கடவுளின் படைப்பையே அழுத்திக் கூறுவதாலும், அது உண்மையான கொடையாக உள்ளது. ஆசீர்வதித்தல் என்பது ஆக்கவும் உயிரூட்டவும் கூடிய ஒரு கொடையைக் கூறுதலாகும். இது அந்த அன்பளிப்பு அளிக்கப்படுமுன் மன்றாட்டாகவும், அல்லது அது நிகழ்ந்தபின் நன்றியறிதலாகவும் வடிவெடுக்கும். ஆசீர் செபமானது இறைதயாளத்தினை முன் குறிப்பிட்டுக் காட்டுகிறது, நன்றியுரைத்தலானது அது வெளிப்படுத்தப்பட்டதைக் காட்டுகின்றது.

II. ஆசீர் பற்றிய சொற்றொகுதிகள்:- எபிரேய மொழியில் ''ப்ரெக்'' என்ற ஒரே வேர்ச் சொல் (மூலச் சொல்) ஆசீரின் எல்லா வடிவங்களையும் எல்லா மட்டத்திலும் குறிக்கப் பயன்பட்டுள்ளது. ஆசீர் என்பது ஒரே நேரத்தில் அளிக்கப்பட்ட பொருளாகவும், அன்பளிப்பாகவும், அதை எடுத்துக்கூறும் வாய்ப்பாடாகவும் உள்ள நிலையை மூன்று சொற்கள் எடுத்துக் கூறுகின்றன. பெயர் சொல்லாக ''பெரக்கா'' என்ற சொல்லும் வினைச் சொல்லாக ''பரக்'' என்ற சொல்லும், பெயருரிச் சொல்லாக ''பரூக்'' என்ற சொல்லும் பயன்பட்டுள்ளது.

1. ஆசீர் - ''பெரக்கா'':- கொடை என்னும் மிகச் சமயச் சார்பற்ற இயற்பொருளிலும், இச்சொல் மனித சந்திப்பின் புலன்சார்ந்த நுட்ப வேறுபாட்டினைக் கொண்டுள்ளது. அபிகாயில் தாவீதுக்கும் *(1 சாமு 25:14-27)*, தாவீதினால் யூதா கோத்திரத்திற்கும் *(1 சாமு 30:26-31)*, குணமாக்கப்பட்ட நாமானால் எலிசாவுக்கும் *(2 அர 5:15)*, யாக்கோபினால் ஏசாவுக்கும் *(ஆதி 33:11)* அளிக்கப்பட்ட அன்பளிப்புகள் அனைத்தும் ஓர் ஒன்றிப்பினையோ அல்லது ஒப்புரவையோ உறுதிப்படுத்தும் நோக்கத்துடனேயே அளிக்கப்பட்டன. ஆனால் இச்சொல்லானது சமயச் சூழ்நிலையிலேயே, பெருமளவு பயன்பட்டுள்ளது; ஆசீர் என்னும் சொல்லானது, இயற்பொருட்களின் செழிப்பினைக் குறிப்பதற்காகவே தேர்ந்தெடுக்கப்பட்டாலும் அவை இறைவனிடமிருந்தும் அவரது தயாளக் குணத்திலிருந்தும் வருகின்றன என்பதைக் குறித்துக்காட்டவே பயன்படுகிறது *(பழ 10:6.22; சீரா 33:17)*, அல்லது ஆசீரை ஒரு நன்மையெனக் கொண்டுள்ள மக்களை மேம்படுத்திக்காட்டவும் பயன்படுகிறது *(பழ 11:11; 28:20; சீரா 2:8)*. ஆசீரானது புனித செழிப்பையும் அதிர்ஷ்டம் மற்றவர் பால் காட்டும் தயாளக் குணத்தையும் *(சீரா 7:32; பழ 11:26)* இறைவனுடைய நற்செயல் ஆர்வத்தையும் வெளிப்படுத்துகின்றது.

இந்தச் செழிப்பையும் இந்த ஆறுதலையுமே எபிரேயர்கள் சமாதானம் என்று அழைத்தனர். ஆசீர் மற்றும் அமைதி ஆகிய இருசொற்களும் பெரும்பாலும் ஒன்றோடொன்று தொடர்புடையன. ஆனால், இரு சொற்களும் அதே செல்வச் செழிப்பை உணர்த்தும்போது, ஆசீரின் முக்கிய செல்வமானது வாழ்வு மற்றும் இனப்பெருக்க வளத்தையும் குறிக்கும்; ஆசீரானது ஏதோனைப் போன்று *(சீரா 40:17)* பூத்துக் குலுங்குகிறது *(11:22)*. அதைக் குறிக்கும் சிறப்பான அடையாளம் நீராகும் *(ஆதி 49:25; சீரா 39:22)*; நீர் ஒரு அத்தியாவசியமான ஒதுக்கமுடியாத ஆசீராகும் *(எச 34:26; மலா 3:10)*; பூமியில் அது பேணிகாக்கின்ற வாழ்க்கையோடு, தனது விண்ணக தோற்றத்தின் மூலமாக இறைவனின் தாராளக் குணத்தையும் வள்ளன்மை மற்றும் உயிரூட்டும் வலிமையையும் வெளிப்படச்செய்கிறது. யோசேப்பின்மேல் யாக்கோபு கூறும் இறைகூற்று இனப்பெருக்கமுள்ள வாழ்வு, நீர், ஆகாயம் ஆகிய அனைத்து உருவங்களையும் ஒன்றாக சேர்க்கின்றது. ''மேலே வானத்திலிருந்து வரும் ஆசியாலும் கீழ் ஆழத்திலிருந்து வரும் ஆசியாலும் கொங்கைகளுக்கும் கர்ப்பத்துக்கும் உரிய ஆசியாலும் அவர் உனக்கு ஆசி வழங்குவார்'' *(ஆதி 49:25)*. இயற்கையின் கொடைகளில் இறைவனது தாராளக்

குணத்தை உய்த்தறிதல் அவரது அருளின் தயாளத்தை ஏற்றுக்கொள்ள இஸ்ராயேலைத் தயாரித்தது.

2. ஆசீர்வதித்தல்:- இவ்வினைச் சொல்லானது, தெருவில் புதிய நபருக்கு கூறப்படுகின்ற பொதுவிட வாழ்த்து *(2 அர 4:29)* அல்லது வழக்கமான நாகரிக முறையில் வாழ்த்துக்கூறுதல் *(ஆதி 47:7.10; 1 சாமு 13:10)* ஆகியவற்றிலிருந்து இறை உதவியின் உயரிய கொடைகளை எடுத்துக் கூறுவது வரை பல்வேறு வகையில் பயன்பட்டுள்ளது. பெரும்பாலும் ஆசியளிப்பவர் இறைவனே ஆவார்; அவரது ஆசீர் வாழ்க்கையை எப்போதும் பொங்கி வழியச் செய்கிறது *(சங் 65:11; ஆதி 24:35; யோபு 1:10)*. மேலும், உயிரினங்கள் மட்டுமே அதனைப் பெற தகுதியுள்ளவை. உயிரற்ற பொருட்கள் கடவுளின் பணிக்கென அர்ப்பனிக்கப்பட்டவையாகவும், அவரது பிரசன்னத்தால் புனிதப்படுத்தப்பட்டனவாகவும் உள்ளனவேயன்றி ஆசீர்வதிக்கப்பட்டவையாக இல்லை.

இறைவனுக்குப் பிறகு, வாழ்க்கையின் ஊற்றாக தந்தை இருப்பதால், ஆசீர்வதிக்கும் செயல் அவர்பால் விழுகின்றது. எல்லாவற்றிற்கும் மேலாக, அவரது சாபம் அச்சமூட்டுவதாய் இருப்பது போன்று அவரது ஆசீரும் பயனுள்ளதாக உள்ளது *(சீரா 3:8)*. தனது தந்தையிடம் அவருக்கு ஒரு மகன் பிறந்துள்ளான் என்று அறிவிக்க வந்த மனிதனைச் சபிக்கும் நிலையிலுள்ள எரேமியா தனது துன்பத்தின் உச்சநிலையில் இருந்திருக்க வேண்டும் *(எரே 20:15; யோபு 3:3)*.

விநோதமான புதிராக எளியோர் வலியோரை ஆசீர்வதித்தல் *(யோபு 29:13; சங் 72:13-16; சீரா 4:5)* மற்றும் மனிதன் இறைவனை ஆசீர்வதிக்கத் துணிதல் என்பது அடிக்கடி நிகழ்கின்றது. ஏனெனில், செல்வந்தனுக்கு அளிக்க ஏழையிடம் ஒன்றுமில்லாததாலும், இறைவனுக்கு அளிக்க மனிதனிடம் ஒன்றுமில்லாததாலும், ஆசீரளிப்பதானது உயிரினங்களிடையே அடிப்படையான மற்றும் பரஸ்பரமான உறவினை ஏற்படுத்தி, அதன்மூலம் வலியவரின் தாராள மனப்பான்மை எளியவர் மீது பொழியப்படுவதை எளியவர் காணச்செய்கின்றது. ''எல்லா ஆசீருக்கும் மேலாக உள்ள'' *(நெக 9:5)* இறைவனை ஆசீர்வதிப்பதென்பது பொருளற்ற செயலல்ல; இது அவரது தயாளக் குணத்தை வெளிப்படுத்தி, அவருக்கு நன்றி கூறுவதேயாகும்; படைப்பினுடைய முதல் கடமை இதுவேயாகும் *(உரோ 1:21)*.

3. ஆசீர்வதிக்கப்பட்ட:- ஆசீர் பற்றிய அனைத்துச் சொற்களிலும் இந்த ''பரூக்'' என்ற பெயருரிச்சொல்லே மிக்க வலிமையுடையதாகும். 'இவர் ஆசீர்வதிக்கப்படுவாராக' என்னும் இஸ்ராயேலுடைய ஆசீரின் எடுத்துக்காட்டான வாய்ப்பாட்டின் மையக் கருத்தினை இது கொண்டிருக்கிறது. சாதாரண வாக்கியமாகவோ அல்லது வெறும் வாழ்த்தாகவோ இல்லாமல், பேறுகளை விட ஆர்வமிக்கதாக உள்ள இவ்வாய்ப்பாடானது, எல்லோரினின்றும் தேர்ந்தெடுக்கப்பட்டு இறைவன் தனது வல்லமையையும் தயாளத்தையும் இப்போதுதான் வெளிப்படுத்திய மனிதனுக்குமுன் கூக்குரலைப் போன்று முழக்கம் செய்கிறது. நாடோடி மக்களில் யாவேலும் *(நீதி 5:24)*, நாடுகளில் இஸ்ராயேலும் *(உப 33:24)*, பெண்களில் மரியாளும் *(லூக் 1:24; யூதி 13:18)* இப்படிப்பட்டவர்கள். தாம் தேர்ந்தெடுத்தவர்களில் இறைவன் செய்யக்கூடியது வியப்புக்குரியது. ஆசீர்வதிக்கப்பட்ட ஆள், உலகில் இறைவனின் வெளிப்பாடாக உள்ளார். சில ஆட்கள் ''யாவேக்குப் புனிதமானவர்கள்'' என்று அழைக்கப்படுவது போல் ''யாவேயால் ஆசீர்வதிக்கப்பட்டவர்'' என்னும் சிறப்பு பட்டத்தின் மூலம் இறைவனுக்கு உரியவராக இருக்கிறார். இறைவனுக்கென அபிடேகம் செய்கின்ற புனித நிலையானது சமயச்சார்பற்ற உலகத்தினின்று பிரிப்பது போல, ஆசீரானது இறைவன் குறிப்பிட்ட ஆளை ஒன்று கூட்டும் முனையாகவும், ஒளிபரப்பும் ஊற்றாகவும் உருவாக்குகிறது. 'புனிதர்' மற்றும் 'ஆசீர்வதிக்கப்பட்டவர்' ஆகிய இரண்டு சொற்களுமே இறைவனைக்

குறிப்பவையாயிருந்தாலும், 'புனிதர்' என்பது அவருடைய அடைய முடியாத மேன்மையையும் 'ஆசீர்வதிக்கப்பட்டவர்' என்பது அவரது வற்றாத தயாளக் குணத்தையும் குறிப்பிடுகின்றது.

'அவர் ஆசீர்வதிக்கப்படுவாராக' என்ற அடிக்கடி தன்னிச்சையாக வரக்கூடிய கூக்குரலுக்கு இணையாக 'கடவுள் ஆசீர்வதிக்கப்படுவாராக' என்னும் சொற்றொடரும் விளங்குகின்றது. கடவுள் தனது வல்லமையை வெளிப்படுத்த வருகின்ற செயலில் அனுபவிக்கின்ற அதிர்ச்சியினின்றே இது தோன்றுகின்றது. இது செயலின் முக்கியத்தைவிட, அதன் வியப்புத்தன்மையையும் அடையாளப் பொருளையுமே அதிகமாக வலியுறுத்துகிறது. ஆசீரானது, மீண்டும் ஒருமுறை, இறைவனின் வெளிப்பாட்டுக்கு மனிதனின் பதில் செயலாகவே உள்ளது (ஆதி *14:20*- மெல்க்கிசதேக்கு; ஆதி *15:2*- எலியேசர்; யாத் *18:10*- இத்திரோ; ரூத் *4:14*- ரூத்திற்கு போவாசு).

இறுதியாக, ஒரு முறைக்கும் மேலாக 'அவர் ஆசீர்வதிக்கப்படுவாராக' மற்றும் கடவுள் ஆசீர்வதிக்கப்படுவாராக என்னும் இரு கூக்குரல்களும் ஒன்றிணைந்து ஒன்றையொன்று எதிரொலிக்கின்றன; ''விண்ணையும் மண்ணையும் படைத்த உன்னதக் கடவுள் ஆபிரகாமிற்கு ஆசீ வழங்குவாராக! உன் எதிரிகளை உன்னிடம் கையளித்த உன்னதக் கடவுள் போற்றி! போற்றி!'' (ஆதி *14:19-20*; *1* சாமு *25:32* தொ; யூதி *13:17* தொ). இந்த முழுமையான இலயத்தில் ஆசீரின் உண்மையான இயல்பு தோன்றுகின்றது. இது இறைவனால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்முன் எழும் ஆனந்த பரவசத்தின் வெளிப்பாடாகும். ஆனால், இது தேர்ந்தெடுக்கப்பட்டவருடன் நின்றுவிடாமல் இந்த அடையாளத்தினால் தம்மையே வெளிப்படுத்திய இறைவனை நோக்கி மேலேறிச் செல்கிறது. அவரே, மற்றெல்லார்றிலும் ஆசீர்வதிக்கப்பட்டவர் (பரூக்). அவர் எல்லா ஆசீரையும் முழுமையாகக் கொண்டுள்ளார். அவரை ஆசீர்வதிப்பதென்பது, அவரது சிறப்புகளில் புதிதாக ஒன்றை சேர்ப்பதல்ல; மாறாக, இந்த வெளிப்பாட்டினால் ஒருவன் தன்னையே அடித்துச்செல்ல அனுமதித்து, அவரைப் போற்றுவதற்காக உலகையே அழைப்பதாகும். ஆசீர் என்பது எப்போதும் இறை வல்லமையின் பொது வெளிப்பாடாகவும், அவரின் தயாளகுணத்திற்கு நன்றியளித்தலாகவும் உள்ளது.

III. ஆசீரின் வரலாறு:- இஸ்ராயேலின் முழுவரலாறும் ஆபிரகாமுக்கு வாக்களிக்கப்பட்டு (ஆதி *12:3*), மரியாளின் ஆசீர்வதிக்கப்பட்ட திருஉதரத்தின் ஆசீர்வதிக்கப்பட்ட திருக்கனியாகிய இயேசுவின் (லூக் *1:42*) வழியாக உலகிற்கு அளிக்கப்பட்ட ஆசீரின் வரலாறு ஆகும். அதே சமயம், பழைய ஏற்பாட்டு நூல்களில் ஆசீரின் பரிமானங்கள் பல்வேறு நுண்ணிய வேறுபாடுகளைக் கொண்டுள்ளன; ஆசீரானது மாறுபட்ட வடிவங்களையும் ஏற்றுள்ளது.

*1.* ஆபிரகாம் வரை:- ஆதியிலே படைத்தவரால் ஆசீர்வதிக்கப்பட்ட ஆணும், பெண்ணும் (ஆதி *1:28*), தங்களது பாவத்தினால் இறைவனுடைய சாபத்தினை அவிழ்த்து விட்டனர். ஆயினும், பாம்பும் *(3:14)*, நிலமும் *(3:17)* சபிக்கப்பட்டிருப்பினும், ஆணோ, பெண்ணோ சபிக்கப்படவில்லை. அவர்களது உழைப்பினாலும், துன்பத்தினாலும், பெரும்பாலும் அங்கலாயப்பை விலையாகக் கொடுத்து வாழ்வானது பொங்கியெழுவது தொடரும் *(3:16-19)*. வெள்ளப் பெருக்கிற்குப் பின்னர், ஒரு புதிய ஆசீரானது மனித குலத்திற்கு வல்லமையையும் இனப்பெருக்க வளத்தையும் அளித்தது *(9:1)*. ஆயினும், பாவமானது மனித குலத்தைப் பிரிப்பதையும் அழிப்பதையும் விட்டுவிடவில்லை; சேமின் மீதான கடவுளின் ஆசீருக்கு எதிரிணையாக கானான் மீதான சாபம் உள்ளது *(9:26)*.

*2.* குலத்தந்தையரின் ஆசீர்:- ஆபிரகாமின் ஆசீரானது புதுவகையில் அமைந்துள்ளது. பிளவுபட்ட உலகில் ஆபிரகாம் சந்தேகத்திற்கிடமின்றி எதிரிகளைக் கொண்டிருப்பினும்,

அவரைச் சபிக்கின்ற எந்த தனிநபரையும் சபிப்பதன் மூலம் இறைவன் தம்முடைய பிரமாணிக்கத்தைக் காட்டுகிறார். ஆனால் இது ஒரு விதிவிலக்காகவே இருக்கும். ஏனெனில், உலகின் அனைத்து நாடுகளை யும் ஆசீர்வதிக்கவேண்டும் என்பதே இறை வனின் எண்ணமாகும் (ஆதி *12:3*). ஆதியாக மத்தின் அனைத்து நிகழ்ச்சியுரைகளும் இந்த ஆசீரின் வரலாறாகும்.

*அ)* தந்தையாரால் அறிவிக்கப்பட்ட ஆசீர் கள்:- தொன்மையான நடைமுறை காட்டு வது போன்று, பொதுவாக மரண சமயத்தில் தங்களது மக்களை அழைத்து அவர்கள் மீது, வாழ்வு மற்றும் இனவிருத்தி வளத்தில் வல் லமை, வானத்துப் பனி மற்றும் பூமியின் செழுமை (ஆதி *27:28*), பாலாறு மற்றும் திராட்சை இரசம் (*49:11-12*), பகைவர்களை நசுக்கும் வலிமை (*27:39; 49:8-9*), தாங்கள் வாழ்வதற்கும் (*27:28; 27:39; 49:9*) தங்களது பெயரையும் ஆண்மையையும் நிலைத்து நிற் கச் செய்ய ஒரு நிலத்தையும் (*48:16; 49:8..*) தங்குமாறு அழைப்பார்கள். இத்தகைய இள யமிக்க துணுக்குகளிலும் நிகழ்ச்சியுரைகளி லும், தங்களது சுதந்திரத்தைப் பாதுகாக்கப் பேரார்வம் உள்ளவர்களாக ஒரு தாய் நாட் டைத் தேடும் நாடோடி இனங்களின் கன வைக் காண்கிறோம். ஆனால் இவர்கள் சில தலைவர்களையும் சலுகைபெற்ற குலங்க ளைச் சுற்றி ஏற்கெனவே ஒரு சமுதாயமாக இருப்பதை உணருகின்றனர் (ஆதி *49*). எல்லாவற்றிற்கும் மேலாக ஆசீர்பற்றிய கன வாக உள்ளது. அதை அடைய எல்லா மக்க ளும் தன்னிச்சையாய் விரும்புகின்றனர். அதை அடைய வன்முறை அல்லது தந்திரம் முதலிய எந்த வழியையும் பயன்படுத்தத் தயாராக உள்ளனர் (*27:18-19*).

*ஆ)* இத்தகைய வர்ணனைகள் மற்றும் பொதுப்பாணி நிகழ்ச்சியுரைகள் மீது, இறை வனே கூறும் வாக்குறுதிகளையும் ஆசீர்க ளையும் ஆதியாகமம் அமைக்கிறது. இப்ப டிச் செய்வதால் அந்நிகழ்ச்சியுரைகளை ஏற்க மறுக்கவில்லை; மாறாக இறைவனுடைய செயல்களில், அவற்றிற்குரிய இடத்தை அளிக்கிறது. ஆற்றல் மிக்க பெயர் (ஆதி *12:2*) எண்ணமுடியாத வழிமரபினர் (*15:5*) நிலையாகக் குடியேறவிருக்கும் நாடு (*13:14-17*) முதலிய கருத்துக்களும் இதில் அடங்கியுள்ளன; ஆனால் இங்கு இறைவன் தம்முடையவர்களின் எதிர்காலத்தைத் தமது கையிலேயே எடுத்துக் கொள்கிறார்; அவர்க ளது பெயரை மாற்றுகிறார் (*17:5-15*), சோதனை (*22:1*) மற்றும் விசுவாசத்தில் (*15:6*) அவர்களை உட்படுத்துகிறார்; மற்றும் ஏற்கனவே அவர்கள் மீது ஒரு கட்டளையை சுமத்துகின்றார் (*12:1; 17:10*). விசுவாசத்திற்கு ஏற்றவாறு இருக்கும் நிலையில் மனிதனு டைய ஆசையை எவ்வாறு நிறைவேற்றுவ தென்பதையும் அவர் அறிந்திருக்கிறார்.

*3.* ஆசீரும் உடன்படிக்கையும்:- ஆசீருக் கும் கட்டளைக்கும் இடையில் உள்ள பிணைப்பே, உடன்படிக்கையின் கோட்பா டாகவும் உள்ளது: இறைவனுக்கு தூய்மை யானதாகவும் அதன் விளைவாக இறைவ னின் ஆசீருக்கு உட்பட்டதாகவும் உள்ள வாழ்வினை மக்கள் வாழ, சட்டம் ஒரு சாதனமாகிறது. உடன்படிக்கைச் சடங்குக ளும் இதனையே எடுத்துக்கூறுகின்றன. அக் கால சமய மனநிலையின்படி வழிபாடு என்பது, இறை ஆசீரை உறுதி அளிக்கும், புனித இடங்கள், காலங்கள் மற்றும் சடங்கு களோடு கொண்டுள்ள தொடர்பால், மனித னுடையவும் உலகினுடையவும் மிகக்குறு கிய வலுவற்ற உயிராற்றலைப் புதுப்பிக்கும் சிறப்பான சாதனமாக அமைந்துள்ளது. யாவேயின் சமயத்தில், உடன்படிக்கையி லும், சட்டத்திற்கு உறுதியாக இருப்பதிலும் மட்டுமே வழிபாடு உண்மையாக உள்ளது. உடன்படிக்கை சட்டத்தின் ஆசீர்கள் (யாத் *23:25*), யோசுவாவின் தலைமையில் சிக்கே மில் சபைக்கான எச்சரிக்கைகள் (யோசு *24:19*), உப ஆகமத்தின் பெரும் ஆசீர்கள் (உப *28:1-14*) ஆகிய அனைத்தும், இறை விருப்பத்தை வெளிப்படுத்தும் ஒன்றிப்பு, ஒப்பந்தம், மக்களின் பிரமாணிக்கம், ஒப்பந் தத்தை முத்திரையிட்டு அதன் புனித மதிப் பீட்டை அளிக்கும் வழிபாட்டுச் சடங்கு ஆகியவற்றை உட்கொண்டுள்ளன.

*4.* இறைவாக்கினர்களும் ஆசீரும்:- இறைவாக்கினர்கள் ஆசீரின் மொழியினை அரிதாகவே அறிந்திருந்தனர். வார்த்தை மற்றும் அதனை செயல்படுத்தும் திறனின் மனிதர்களாக இருந்தாலும் (*ஏச 55:10-11*), இறைவனின் செயலின் அடையாளங்களாக அவரால் அழைக்கப்பட்டு தேர்ந்தெடுக்கப்ப்ட்டவர்கள் என்பதை அறிந்திருந்தாலும் (*ஏச 8:18*) அவர்களில் இறைவனது செயல் மிகவும் உள்ளார்ந்ததாகவும், மிக கனமானதாகவும் சிறிதளவே காணக்கூடியதாகவும் அறிவிக்கக்கூடியதாகவும் உள்ளதாயும் இருந்ததால் அவர்களிலும் அவர்களைச் சுற்றிலும் ஆசீரின் குரலைத் தூண்டவில்லை. உடன்படிக்கையின் கருத்துக்களை நினைவுறுத்துவதாகவும், அவற்றை மீறுவதைக் கண்டிப்பதாகவும் உள்ள அவர்களது செய்தியானது, ஆசீர்வதிக்குமாறு மிக அரிதாகவே தூண்டுகிறது. அவர்கள் பயன்படுத்தும் இலக்கிய அமைப்புகளில், சபித்தலானது நன்கு அறிமுகமானதாகவும், ஆசீர்வதித்தலானது அறியப்படாததாகவும் உள்ளது.

ஆனால், சபித்தலின் மையத்திலும், ஆசீரைப்பற்றிய வாக்குறுதி நிலைத்துள்ளது என்றும், ஒரு பரிசுத்த வித்தினைப் போன்று (*ஏச 6:13*) பாழ்நிலையினின்று வாழ்க்கை தோன்றும் என்றும் அறிவிக்கின்ற உருவகம் அல்லது உறுதிப்படுத்தும் அறிவிப்பு மிகவும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். இவ்வாறாக, நகரானது யாராலும் வெல்ல முடியாதது என்று நம்பிய புத்தியற்ற ஆட்சியாளர்களுக்கு (*ஏச 28:14-19*) எதிரான சாபத்தின் நடுவிலும், சீயோனில் மூலைக்கல் பற்றி வாக்குறுதிச் சுடர் வீசி வெளிப்படுகிறது; எசக்கியேலில், நீர், பூமி மற்றும் விளைச்சல் என்று ஆசீரின் உருவகங்களை முழுமையாக கொண்டுள்ள, ஆவியைப் பொழிதலைப் பற்றிய பெரும் இறைவாக்கு, இஸ்ராயேலைக் கண்டனம் செய்வதை இறை வாதமுறையுடன் முடிகின்றது (*எச 36:16-38*).

*5.* ஆசீரின் பாடல்கள்:- இஸ்ராயேலின் செபத்தினுடைய முக்கிய மையக் கருத்துக்களில் ஆசீரும் ஒன்றாகும்; இதுவே, இறை வெளிப்பாடாகிய இறைவனின் செயல்களுக்கான பதிலுரையாகும். இது நன்றியுரைத்தல், புகழ்தல் அல்லது அறிக்கையிடுதல் ஆகியவற்றிற்கு மிக நெருக்கமாக அமைந்து, அதே முறையில் வளர்ச்சியை உண்டாக்குகிறது. ஆனால், இவை எல்லாவற்றையும்விட இறைவன் தம்மையே வெளிப்படுத்த வரும் நிகழ்ச்சியோடு இது மிக நெருங்கியுள்ளது. இது பொதுவாக எளிய தொனியைக் கொண்டுள்ளது: ''யாவே வாழ்த்தப்பெறுவாராக, ஏனெனில் என் மீது வியப்புக்குரிய இரக்கத்தைக் காட்டியுள்ளார்'' (*சங் 31:21*); ''அவர் நம்மை எதிரியின் பற்களுக்கு இரையாகத்தரவில்லை'' (*சங் 124:6*), ''அவர் உன் பாவங்களை எல்லாம் மன்னிக்கிறார்'' (*103:3*). ஆண்டவரின் புகழைப் பாடுமாறு உலகை அழைத்து, தீச்சுவாலையில் மூன்று சிறுவர்கள் பாடிய பாடல்கூட இறைவன் அச்சமயம் நிறைவேற்றிய செயலை, தமது பார்வையிலிருந்து இழந்துவிடவில்லை; ''ஏனெனில், நெருப்பின் நடுவிலிருந்து நம்மைக்காத்தார்'' (*தானி 3:88*).

IV. கிறிஸ்துவின் ஆசீர்வதிக்கப்பட்டவர்:-

தமது மகனையே நமக்காகக் கையளித்த தந்தை எவ்வாறு நமக்கு எதையாவது மறுக்க முடியும் (*உரோ 8:32*)? அவர் நமக்கு அனைத்தையும் அவரில் அளித்துள்ளார்; நமக்கு அருட்கொடை எதிலும் குறையில்லை (*1 கொரி 1:7*); மற்றும் விசுவாசமுள்ள ஆபிரகாமுடன் சேர்ந்துள்ளோம் (*கலா 3:9-14*); தந்தை கொடைகள் அனைத்தும் பொழிந்து நமக்கு ஆசி அளித்துள்ளார் (*எபே 1:3*). அவரிலே நாம் தந்தைக்கு அவரது கொடைகளுக்காக நன்றி செலுத்துகிறோம் (*உரோ 1:8; எபே 5:20; கொலோ 3:17*). நம்மீது இறங்கும் அருளும், மேலெழும்பும் நன்றியுமாகிய ஆசீரின் இரு இயக்கங்களும் இயேசு கிறிஸ்துவில் ஒன்றிணைகின்றன. இந்த ஆசீருக்கு மேற்பட்டது எதுவுமில்லை; தங்களது இறுதி வெற்றியை இசைப்பதற்காக செம்மறிக்கும் அரியணைக்கும் முன்பாக குழுமியுள்ள தேர்ந்து கொள்ளப்பட்டவர்களின் திருக்கூட்டமானது ''போற்றியும் மகிமையும் ஞானமும் நன்றி

யும்... என்றென்றும் உரியனவாகுக'' (திரு வெளி 7:12) என்று இறைவனை நோக்கி அறிவிக்கின்றனர்.

புதிய ஏற்பாடு முழுவதும் இறைவனிடமிருந்து பெறப்பட்டு, அவருக்கே திரும்ப அ;ளிக்கப்படும் நிறைவான ஆசீராக இருந்தாலும், அந்நூலானது ஆசீரின் வார்த்தைகளை நிரம்பக் கொண்டதாக இல்லை. இவை அரிதாகவும், குறிப்பிட்ட சூழ்நிலைகளிலுமே பயன்பட்டுள்ளது. இது விவிலிய ஆசீரின் பொருளைத் துல்லியமாகக் கணிக்க உதவுகிறது.

1. வருபவர் ஆசி பெற்றவர்:- நற்செய்தி நூல்கள் இயேசுவை நோக்கி கூறப்பட்ட ஆசீராக ஒரேயொரு நிகழ்ச்சியுரையையே குறிப்பிடுகின்றன: பாடுகளுக்கு முன்னதாக அவர் எருசலேமிற்குள் நுழையும்போது மக்கள் கூட்டம் எழுப்பிய குரலொலி: ''வருகிறவர் ஆசி பெற்றவர்'' (மத் 21:9 இ). இறைவன் தமது வல்லமையையும் வள்ளன்மையையும் (அ.ப. 10:38) சுடர்விடும் அடையாளங்களால் வெளிப்படுத்துகின்ற இயேசுவைப் போன்ற ஆசீர்வதிக்கப்பட்ட ஆள்பற்றிய விவரிப்பிற்கு, உறுதியாக யாருமே எப்போதுமே விடை கூறமுடியாது. உலகில் அவருடைய வருகையானது, எலிசபெத்து (லூக் 1:42), செக்கரியா (1:68), சிமியோன் (2:28) மற்றும் மரியாள் (குறிப்பிட்ட வார்த்தையை உபயோகிக்காமலே 1:46-47) ஆகியோர் மீது ஆசீர்களைக் கொண்டு வருகிறது. ஆசியின் மையமாக அவரே விளங்குகிறார். ''உமது திருவயிற்றின் கனியும் ஆசீர்வதிக்கப்பட்டதே'' என்று எலிசபெத்து அறிவிக்கிறாள் (1:42). குருத்து ஞாயிறைத் தவிர்த்து வேறு ஒருபோதும் அவர் நேரடியாக ஆசீர்வதிக்கப்பட்டதில்லை. இந்நிலை தற்செயலானதாக இருக்க முடியாது. ஒருவரை ஆசீர்வதிப்பதென்பது ஒரு குறிப்பிட்ட பொருளில் அவரோடு இணைந்திருக்க வேண்டியிருப்பதால், இயேசுவிற்கும் மற்ற மனிதருக்கும் இடையில் தானாகவே உருவாக்கப்பட்ட இடைவெளியை இது வெளிப்படுத்துவதாக இருக்கலாம். அவரது பணி நிறைவுபெறாத வரையில், கிறிஸ்துவைப் பற்றிய வெளிப்பாட்டின் நிறைவுபெறாத பண்பையும் அவரது மரணம் மற்றும் உயிர்ப்புவரை அவரது ஆட்தன்மை பற்றிய தெளிவில்லாப் பண்பையும் குறிப்பதாகவும் இது இருக்கலாம். மறுபுறம், திருவெளிப்பாட்டு நூலில், பலியிடப்பட்ட செம்மறியானது உலகின் முடிவானது முத்திரையிடப் பட்டுள்ள நூலை பெறுவதன்மூலம், உலகின்மீதான தனது வல்லமையை உரிமையாக்கிக் கொள்ள வரும்போது, ''பலியான செம்மறி வல்லமையும், மகிமையும், போற்றியும் பெறத் தகுதியுள்ளவர்'' என்று விண்ணகம் முழுவதும் பாடுகின்றது (திருவெளி 5:12-13). இத்தகைய சூழ்நிலையில் ஆசீரானது இறைவனின் மகிமையைப் போன்று அதே அளவையும் அதே முக்கியத்துவத்தையும் கொண்டுள்ளது.

2. ஆசீரின் கிண்ணம்:- அப்பங்களை பலுகச் செய்வதற்கு முன்னரும் (மத் 14:19 இ), தமது உடலாக மாறிய அப்பத்தைப் பகிர்வதற்கு முன்னரும் (மத் 26:26 இ) எம்மாவூரில் அப்பத்தை பிடுவதற்கு முன்னரும் (லூக் 24:30) இயேசு ஒரு ஆசிர் கூறுகிறார். ''நாமும் திருக்கிண்ணத்தை ஏந்தி ஆசீர் கூறுகிறோம்'' (1 கொரி 10:16). இப்பகுதிகளில் உள்ள ஆசீரானது தனிப்பட்ட செயலையோ அல்லது நற்கருணை வார்த்தைகள் என்று தனிப்பட்ட விதமாக அழைக்கப்படுவனவற்றினின்று மாறுபட்ட குறிப்பிட்ட வாய்ப்பாட்டையோ அல்லது தொடர்ந்து வரும் வார்த்தைகளுக்கான தலைப்பையோ குறிப்பிடுகிறதா? என்று பார்ப்பது அவ்வளவு முக்கியமானதல்ல. நற்கருணை வர்ணனையானது ஆசீரையும் நன்றியுரையையும் நெருக்கமாக இணைக்கிறது என்பதே உண்மை. இந்த இணைப்பில் ஆசீரானது சடங்கு மற்றும் பார்க்கக்கூடிய கூறு, செயல் மற்றும் வாய்ப்பாடு ஆகியவற்றைக் குறிப்பதாகவும், நன்றியுரையானது, செயல்கள் மற்றும் சொற்களின் உட்பொருளை வெளிப்படுத்துவதாகவும் அமைந்துள்ளன. புதிய உடன்படிக்கையின் சடங்காக இருப்பதனால், ஆண்டவர் தமது வாழ்நாளில் நிறைவேற்றியிருக்கக்கூடிய அனைத்திலும் இச்ச

டங்கு மட்டுமே நமக்கெனப் பாதுகாக்கப் பட்டுள்ளது (லூக் 22:20). இதிலே ஆசீரானது தனது இறுதியான நிறைவேறுதலை கண்டடைகின்றது. இது உடனடியாக செயலாற்றக் கூடிய வார்த்தையில் வெளிப்படுத்தப்பட்ட ஒரு கொடையாகும். தமது பிள்ளைகளுக்கு தந்தை அளிக்கும் எல்லா அருளையும் கொண்ட நிறைவான கொடையாகவும், நமது நன்றிகள் அனைத்தையும் தம்மோடு இணைத்து, தனது வாழ்வையே தந்தைக்குக் காணிக்கையாக அளிக்கின்ற மகனின் நிறைவான கொடையாகவும் இது உள்ளது. இது இனப்பெருக்க வளத்தின் கொடையாகவும், வாழ்க்கை மற்றும் ஒன்றிப்பின் மறைபொருளாகவும் உள்ளது.

*3.* தூய ஆவியின் ஆசீர்:- நற்கருணை கொடையானது இறைவனின் முழு ஆசீரையும் கிறிஸ்துவில் கொண்டிருந்தாலும், அவரது இறுதிச் செயல் திருச்சபைக்காக அவர் விட்டுச் செல்லும் ஆசீராகவும் (லூக் *24:51*), அவளில் கிளர்ந்தெழச் செய்கிற ஆசீராக (*24:53*) இருந்த போதிலும், இயேசு கிறிஸ்துவே தந்தையின் ஆசீர் என்று புதிய ஏற்பாடு எங்குமே கூறவில்லை. உண்மையில் ஆசீரானது எப்போதும் ஒரு கொடையாகவும், பெறப்பட்டு ஒன்றுபடுத்தப்பட்ட வாழ்வாகவும் உள்ளது. இப்போது, எல்லாவற்றிற்கும் மேலான கொடையானது தூய ஆவியே. தூய ஆவியைவிட இயேசு கிறிஸ்து நமக்குக் குறைவாக அளிக்கப்பட்டார் என்றல்ல, மாறாக இறைவனிடமிருந்து பெறப்பட்ட கொடை நம்மில் இருப்பதற்காக ஆவியானவர் அளிக்கப்படுகிறார். புதிய ஏற்பாட்டுச் சொற்றொகுதி பொருள் பொதிந்தது. கிறிஸ்து நமக்குரியவர் என்பது உண்மையே. ஆனால் நாம் கிறிஸ்துவிற்குரியவர்கள் என்பது அதைவிட மேலான உண்மையாகும் (*1* கொரி *3:23* இ; *2* கொரி *10:7*). மறுபுறம் பல இடங்களில் ''ஆவியின் கொடை'' பற்றி ஒருவன் தன்னிச்சையாகப் பேசுகின்ற அளவுக்கு (அ.ப. *2:38; 10:45; 11:17*), நாம் அவரைப் பெறுகிறோம் (யோவா *7:39*; அ.ப. *1:8*; உரோ *8:15*); அவர் நமக்கு அளிக்கப்படுகிறார் (மாற் *13:11*; யோவா *3:34*; அ.ப. *5:32*; உரோ *5:5*); அவரை உரிமையாக்கிக் கொள்கிறோம் (உரோ *8:9*; திருவெளி *3:1*) என்று தூய ஆவியைப்பற்றி கூறப்படுகின்றது. இறைவனின் ஆசீர் என்பது, அவ்வார்த்தையின் முழுப்பொருளில், அவரது தூய ஆவியே ஆவார். இறைவனே இந்த இறைகொடையாவார். இக்கொடை ஆசீரின் எல்லாக் கூறுகளையும் வெளிப்படுத்துகின்றது. புத்துயிர் அளிக்கும் நீர், பிறப்பு மற்றும் இதயங்களின் ஒற்றுமை முதலான ஆசீரின் முக்கிய மையக் கருத்துக்கள் அனைத்தும் ஆவியின் கனிகளாக உள்ளன.

**ஆசிர் அளித்தல்** (BENEDICTION)

கடவுளின் ஆசீர் வேண்டி செபம் அல்லது கடவுளின் ஆசீர் அருகில் உள்ளது என உறுதி கூறுதல். பழைய ஏற்பாட்டில் ஆசீர் அளித்தலுக்குச் சிறந்த எடுத்துக்காட்டு ஆரோனின் ஆசீராகும் (எண் *6:24-26*). அதே வேளையில் செபம் அல்லது ஆசீரோடு புதிய ஏற்பாட்டுத் திருமுகங்கள் முடிவடைவது, புதிய ஏற்பாட்டு ஆசீர் அளிக்கும் முறையைக் காட்டுகின்றது (உரோ *15:13; 2* கொரி *13:14*; எபி *13:20-21*).

**ஆசை** (DESIRE)

விவிலியத்திலே மனிதனின் பலவித விருப்பங்களையும், ஆவல்களையும், வேட்கையையும் கூற இந்த வார்த்தைப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

*1.* பழைய ஏற்பாட்டில் ஆசை:- ஆசைகள் மனிதனுக்கு இயற்கையானவை என பழைய ஏற்பாடு கருதுகிறது (உப *18:6; 1* அர *10:13*; சங் *107:30*). இந்த ஆசைகளில், சிற்றின்ப ஆசை (உப *21:11*; சங் *45:11*; உ.ச. *7:10*; ஆதி *3:16*), உணவு உண்ண ஆசை (சங் *145:16*; மீக் *7:1*), அழகான பொருளின் மேல் ஆசை, நல்லவற்றின்மேல் ஆசை (*1* சாமு *9:20*; பழ *3:15; 8:11; 19:22*; ஏச *53:2*; எச *23:6; 12:23*) போன்றவை அடங்கும். எபிரேயர் தபசு வாழ்க்கையைச் சிறந்ததாகக் கருதவில்லை. வாழ்க்கையை முழுமையாக அனுபவிக்க ஆசைப்பட்டனர். அழகியவற்

றில், நீண்டவாழ்வில் (சங் 34:12), நண்பர்களின் தோழமையில் (சங் 133; பழ 19:22), செல்வச் செழிப்பில் (சங் 19:10), நல்ல மனைவியின் அன்பில் (சங் 128; எச 24:16), பிள்ளைகள் நிறைந்த குடும்ப வாழ்வில் (சங் 128) களிப்படைந்தனர். அவர்களுக்கு இறைவன் படைத்தவை யாவும் நல்லவை (ஆதி 1:31). ஆகவே அவற்றில் மகிழ்ச்சி கொண்டனர் (திருவுரை 2:10).

ஆயினும் ஆசைகள் இறைவனது தீர்ப்புக் குட்பட்டவையாகும். தொடக்கத்திலிருந்து ஆசைகள் யாவேயின் திருவுளத்துக்குப் பணிந்திருக்க வேண்டும் (ஆதி 3). ஆண்டவரை நம்பியவனே, தன் ஆசைகளின் உண்மையான நிறைவை அறிந்தவனாவான் (2 சாமு 23:5; 2 நாள் 15:15; சங் 21:2; 34:12 தொ; 37:4; 145:19; பழ 10:24; 11:23; 13:12.19). சாந்தமுள்ளோர் அவரிடம் நீதிகோருவர் (10:17). அவரில்மட்டும் தான் அவர்கள் நிறைவைக் காண முடியும் (யோபு 13:3). இவ்வாறு, எபிரேயனது ஆசையின் இறுதிநோக்கம் யாவேதான் (ஏச 26:9). சீயோனில் உள்ள ஆலயம் அவர்கள் கண்களுக்கு இன்பம் தருவதாகும் (எச 24:21.25). யாவேயின் பெயர் அவர்கள் ஆன்மாவின் ஆவலாகும் (ஏச 26:8; நெக 1:11). அவரது கட்டளைகள் பொன்னையும்விட மேலானவையாகும் (சங் 19:10). அவரோடு வாழ்தல் அவர்களின் இறுதி நன்மையாகும் (சங் 73:25). எல்லா ஆசைகளையும் விட ஞானம் மேலானது (பழ 3:15; 8:11). ஞானத்தின் தொடக்கம் இறை அச்சமாகும் (பழ 1:7).

இதற்குமாறாக, தீயோர்களின் ஆசை தீமையைக் குறிக்கோளாகக் கொண்டது (பழ 2:10; மீக் 7:3). தீயோரின் ஆசை கட்டுப்பாடற்றது, பேராசைமிக்கது, காமத்தன்மையுடையது (உப 5:21; 7:25). தீயவன் யாவேயைச் சபிக்கிறான் (சங் 10:3). அவரைப் பற்றிய அறிவைப் புறக்கணிக்கிறான் (யோபு 21:14). அவன் பக்தியுள்ளோரைக் கொள்ளையடிக்கிறான் (சங் 140:8). தன்னலத்தை மட்டுமே தேடுகிறான் (பழ 13:4; 21:25; 23:6-8) அவனது தோழமையைத் தவிர்க்க வேண்டும் (24:1). அவனுடைய ஆசையெல்லாம் அழியும் (சங் 112:10). உண்மையில் அவன் ஆசையையும் வாழ்வையும் கூட இழந்துவிடுவான் (திருவுரை 12:5).

ஆயினும் சமயம் சார்ந்த ஆசைகளுக்கும் வரையறையுண்டு. ஆண்டவரின் இறுதி வெற்றி மற்றும் தீர்ப்பின் நாளைப் பக்தியோடு எதிர்பார்ப்பவர்கள், அவர்களுடைய சுயநேர்மையுடைய பாதுகாப்பு யாவேயால் அழிக்கப்படும் என்று எச்சரிக்கப்படுகின்றனர் (ஆமோ 5:18; எரே 17:16). யாவேக்கும் விருப்பு வெறுப்புகள் உண்டு. அவர் புறவெளிச் சடங்குகளை விரும்பவில்லை (சங் 40:6; 51:16; ஓசே 6:6). அவர் தமது திருவுளத்திற்கு உள்ளார்ந்த கீழ்ப்படிதலையும், நிலையான அன்பையும் (ஓசே 6:6), உண்மையையும் (சங் 51:6) அவரது உடன்படிக்கைக்குப் பிரமாணிக்கத்தையும் விரும்புகிறார். நன்றி, போற்றுரையோடு கூடிய கீழ்ப்படிதல் எபிரேயன ஆசையின் சூழ்நிலையாக அமைந்தது.

2. புதிய ஏற்பாட்டில்:- புதிய ஏற்பாட்டில், ஆசைபற்றிய கருத்துக்கள் பழைய ஏற்பாட்டுக் கருத்துகளுக்கு ஒத்தே அமைந்திருந்தன. மனிதனின் ஆசைகள் ஒழுக்கச் சார்பற்றவையாக அரிதாகவே கருதப்பட்டது (லூக் 5:39; 8:20; 15:16; 16:21; 23:8; கலா 4:20; 6:13; 1 திமோ 1:7). ஆசைகள் இருபிரிவாகப் பிரிக்கப்படுகின்றன. முதலாவது, தீய, காமத்தன்மையுடைய, பேராசைமிக்க கட்டுப்பாடற்ற ஆசைகள். இதில் பொருள்கள் மீது ஆசை (யாக் 4:2), காம இச்சை (மத் 5:28; உரோ 1:24; கலா 5:24; 1 தெச 4:5; 2 பேதுரு 2:10) ஆகியவை அடங்கும். ஆயினும் எல்லாத் தீய ஆசைகளும் பட்டியல் செய்யப்படவில்லை. புதிய ஏற்பாடு பாவங்களைப் பற்றி அதிகம் பேசாது, பாவத்தைப் பற்றி கிறிஸ்துவுக்குப் புறம்பான பழைய இயற்கை வாழ்வையும் ஆவிக்குப் புறம்பான, ஆகவே இறைவனது திருவுளத்துக்கு எதிரான, வாழ்வைப் பற்றியும் பேசுகிறது. (உரோ 6:12; 13:14; கலா 5:16; எபே 4:22; 1 பேதுரு 1:14; 4:2). ஊனின்

இச்சைகளால், பழைய ஆதாமின் ஆசைக ளால் முழுவதும் ஆளப்படும் இத்தகைய வாழ்வைக் (உரோ 6:12; எபே 2:3; 4:22; தீத்து 3:3) கிறிஸ்துவில் புது வாழ்வுக்குள் புகும் கிறிஸ்துவன் கைவிட வேண்டும். இரண்டாவது வகை, கிறிஸ்துவில் புதுவாழ் வுக்கு ஒத்த ஆசைகளாகும். கிறிஸ்துவில் அளிக்கப்படும் அருளால், கிறிஸ்தவன் புதுப்பிறவியாகுகிறான் (தீத்து 2:12). உல கின் ஆசைகள் அவனை இனி ஒரு போதும் அடிமைப்படுத்துவதில்லை (2 பேதுரு 1:4). அவன் ஆசைகளுக்கு அடிமைப்படுவ தில்லை. ஆண்டவருக்கு அடிமையாகிறான்.

ஆகவே கிறிஸ்தவன், தன் புதிய வாழ்வுக் கேற்ப புதிய ஆசைகளைக் கொண்டிருக்க வேண்டும். அவன் இறைவாக்கு, போதகம், குணமாக்குதல், எல்லாவற்றையும் விட விசு வாசம், நம்பிக்கை, அன்பு போன்ற மேலான வரங்களையே ஆர்வமாகத் தேட வேண்டும் (1 தெச 12:31; 13; 27-31; எபி 6:11). முழுக் கிறிஸ்தவத் தோழமையையும் (1 தெச 2:8:17) கிறிஸ்துவையும் பெரிதும் ஆசைப் பட வேண்டும். உண்மையில் கிறிஸ்தவ னுக்கு உண்மையான வீடு பூமியன்று, விண் ணகமே ஆகும் (எபி 11:6; 1 பேதுரு 2:11). அவனது ஆண்டவரோடு இருப்பதுவே அவ னது இறுதி ஆசையாகும் (பிலி 1:23). அவரே அவனது ஆசைகள் எல்லாவற்றை யும் நிறைவு செய்கிறார். அவற்றின் முடிவா கவும் உள்ளார்.

**ஆடு (SHEEP)**

விவிலியத்தில் ஆட்டைப்பற்றி ஐந்நூறுக் கும் மேற்பட்ட இடத்தில் குறிக்கப்பட்டுள் ளது. ஆதி 4-ஆம் அதிகாரத்திலுள்ள காயின், ஆபேல் கதை பாலஸ்தீனத்தில் ஆடுகள் வீட்டுவிலங்குகளாக வளர்க்கப்பட்டதாக இயம்புகின்றது. ஆடுகள் அவர்களுடைய முதன்மையான சொத்துக்களாகவும், உணவ ளிக்கும் பொருளாகவும் கருதப்பட்டன (1 சாமு 14:32); குடிப்பதற்கு பாலும் (ஏச 7:21-22), ஆடை நெய்வதற்கு மயிரும் (லேவி 13:47-48; யோபு 31:20; எச 34:3) தோலாடை (எபி 11:37; செக். 13:43; மத் 7:15) கூடார போர்வைகள் செய்வதற்குத் தோலும் (யாத் 26:14) கொடுத்தன. பண்டம் மாற்றுவதற்கு சாதகமாக இருந்தது (1 அர 3:4; எச 27:18-19). ஆடுகள் பலிகளில் முக்கி யத்துவம் கொடுக்கப்பட்டன (யாத் 20:24; எண் 22:40; யோவா 2:14). தனப்பலிக்கும் (லேவி 1:10) பாவப் பரிகாரப் பலிக்கும் (4:32) குற்றப் பரிகாரப் பலிக்கும் (5:15) சமாதானப் பலிக்கும் (22:21) பயன்பட்டன.

இயற்கையிலேயே இந்த ஆடுகள் மிகவும் அன்புள்ளவை (2 சாமு 12:3). தாழ்மையாக துன்பத்தை ஏற்றுக் கொள்ளும் (ஏச 53:7; எரே 11:19; யோவா 10:3-4). அதே போல் தற்காப்பற்றவை (மீக் 5:8; மத் 10:16). அவற்றிற்கு எப்பொழுதும் கவனிப்பும், மேற்பார்வையும் தேவை (எண் 27:17; எச 34:5; மத் 9:36; 26:37). விவிலியத்தில் ஆட் டையும், ஆட்டு இடையனையும் சேர்த்தே இறையியல் கண்ணோட்டத்தில் திரும்பத் திரும்பக் கூறப்பட்டுள்ளன. ஒருவர் பழைய ஏற்பாட்டைப் படித்தவுடனே பின்வரும் வாக்கியங்கள் அவரது கவனத்தை ஈர்க்கும். ''என் ஆயன் ஆண்டவர், எனக்கென்ன குறை'' அல்லது ''அவர்கள் அனைவருக்கும் ஒரே ஆயன் இருப்பானாக..... நம் தந்தை யின் நிலத்தில் வாழ்வார்களாக.... உங்களு டன் சமாதான உடன்படிக்கை செய்து கொள் வேன்.... நான் அவர்களை ஆசீர்வதிப் பேன்'' (எச 37:24 தொ.). ''நாம் நமது மந்தையில் மீதியிருக்கும் ஆடுகளை, அவை சிதறியுள்ள நாடுகளினின்று ஒன்று சேர்த்து, அவற்றின் கழனிகளுக்குத் திரும்ப அழைத்து வருவோம் .... இவற்றைக் கண்காணிக்க புதிய ஆயர்களை ஏற்படுத்துவோம். அவை இனி பயப்படுவதுமில்லை, திகிலடைவது மில்லை, காணாமற் போவதுமில்லை என்கி றார் ஆண்டவர்'' (எரே 23:3-4), அல்லது இரண்டாம் ஏசயா கடவுளை ஆயராக மீட் பின் நிகழ்ச்சியிலே பார்க்கின்றார்.

''ஆயனைப் போல் தன் மந்தையைக்
காப்பார்,
செம்மறியை தன்னிடத்தில் சேர்ப்பார்
அவைகளை தன் தோள்மீது சுமந்து
செல்வார்

''அவற்றை அமைதியுடன் நடத்திச் செல்வார்''

புதிய ஏற்பாட்டிலே ஆயனும் ஆடுகளும் என்ற கருத்து ஓர் உயர்ந்த இடத்தை பிடித்துள்ளது. கிறிஸ்துவுக்கு நல்லாயன் என்ற பெயரளித்து கிறிஸ்துவ விசுவாசம் மகிழ்கிறது.

எபிரேயர்களுக்கு எழுதப்பட்ட திருமுகத்தின் முடிவில் வரும் ஆசிரில் ''ஆடுகளின் மகத்துவமிக்க மேய்ப்பரான நம் ஆண்டவராகிய இயேசு'' *(13:20)* என்று இந்த விசுவாசம் துணிவாக வெளிப்படுத்தப்படுகிறது. ஆடுகளுக்கும் ஆயனுக்குமுள்ள உறவு மாற் *6:34*-இல் ''இயேசு கரையில் இறங்கியபோது பெருங்கூட்டத்தைக் கண்டார் ஆயனில்லா ஆடுகள்போல் இருந்ததால் அவர்கள் மீது மனமிரங்கி நெடுநேரம் போதிக்கலானார்'' என்று சுருக்கமாக ஆனால் அழுத்தமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

ஆயன்பற்றி விவிலியத்தில் உள்ள இரண்டு நீண்ட உருவகங்கள் எச *34;* யோவா *10*-இல் வருகின்றன. பழைய ஏற்பாட்டுப்பகுதி ஆயர்களைச் சாபமிட்டுக் கொண்டு ஆரம்பிக்கின்றது. காரணம் அவர்கள் ஆடுகளை மேய்க்காமல் தங்களுடைய நலன்களைக் கவனித்து வந்தார்கள். எனவே ஆண்டவர், இஸ்ராயேல்மேல் இரக்கமும் அன்பும் கொண்ட ஆயரானார் என்று சொல்கின்றது. ''இதோ, நாமே இனி நம்முடைய ஆடுகளைத் தேடிப்போவோம்; ஆர்வத்தோடு தேடுவோம். மேய்ப்பன் தன் ஆடுகளுள் சில சிதறுண்டு போனால் எவ்வாறு அவற்றைத் தேடுவானோ, அவ்வாறு நாமும் நம்முடைய ஆடுகளைத் தேடுவோம். வேற்றினத்தாரிடமிருந்து கூட்டிவந்து தங்களுடைய சொந்த நாட்டுக்கு அவற்றைத் திரும்பக் கொண்டு வருவோம்'' *(எச 34:11-12)*. இந்த நிகழ்ச்சி காணாமற்போன ஆட்டு உவமையை நம்முடைய ஞாபகத்திற்குக் கொண்டுவருகின்றது. காணாமற்போன ஓர் ஆட்டையும் சேமமாய் இருந்த தொண்ணூற்றொன்பது ஆட்டையும் நல்லாயன் என்ற கிறிஸ்துவின் பாகத்தையும் நினைவுபடுத்துகிறது *(மத் 18:10-14; லூக் 15:3-6)*.

எசக்கியேலின் உருவகம் தொடர்கிறது ''இஸ்ரேயேலின் மலைகளிலும், நீரூற்றுகளின் ஓரத்திலும்.... வளமான புல் வெளியில் அவற்றை மேய்ப்போம். செழிப்பான புல்தரையில் அவை படுத்திருக்கும். இஸ்ரயேலின் மலைகளில் உள்ள வளமான புல்லை அவை மேயும். நம்முடைய ஆடுகளுக்கு நாமே மேய்ப்பனாய் இருப்போம். அவற்றை நாமே இளைப்பாறச் செய்வோம். காணாமற்போனதைத் தேடுவோம், வழி தவறியதைத் திரும்பக் கொண்டு வருவோம்; எலும்பு முறிந்ததற்குக் கட்டுப் போடுவோம்; வலுவில்லாததைத் தேறும்படிச் செய்வோம்; கொழுத்ததையும் வலிமையுள்ளதையும் கண்காணிப்போம்; நமது நீதி விளங்கும் வகையில் அவற்றை மேய்ப்போம்'' *(எச 34:13-16)*.

புதிய ஏற்பாட்டில் தன்னுடைய மந்தையை அவரே பாதுகாக்கிறார், வழி நடத்துகிறார், மீட்கின்றார். ''ஆட்டு மந்தைக்கு வாயில் நானே... நானே வாயில் என் வழியாக நுழைபவன் மீட்புப் பெறுவான், உள்ளே போவான் வெளியே வருவான், மேய்ச்சலைக் கண்டடைவான்'' *(யோவா 10:7-9)*.

ஆனால் இதைத் தொடர்ந்து வரும் ஒரு சொற்றொடருக்கு பழைய ஏற்பாட்டில் முன்னறிவிப்பு ஏதுமில்லை. ஆனால் இறைவாக்கினர்கள் இறைவனது அறிவும் அரசும் உலகில் ஏற்பட மரிக்கும் இஸ்ராயேலை அல்லது ஆண்டவரின் ஊழியனை எண்ணிப் பார்த்தனர். ஆனால் இறைவனோ அல்லது இறைவனது மகனோ அப்படி மரிப்பார் என்று எண்ணிப் பார்க்கவில்லை. இறைவாக்கு உருவகம் ஆயன் தன் மந்தைக்காக இறப்பதாக ஒருபோதும் கருதியதில்லை. ஆனால் புதிய ஏற்பாட்டில் யோவானில் வரும் உருவகம் இதுபற்றி ஐயத்திற்கிடமற்ற தெளிவோடு பேசுகிறது. ''நல்ல ஆயன் நானே, நல்ல ஆயன் ஆடுகளுக்காகத் தன்னுயிரையே கொடுப்பான்.. ஆகவே ஒரே ஆய

னும் ஒரே மந்தையும் உண்டாகும்'' *(10:11-18)*.

**ஆடை, உடை** (CLOTHING, DRESS)

*1.* தொடக்கத்தில், பாலுணர்வால் உண்டான வெட்கத்தை மறைக்க ஆடை கண்டுபிடிக்கப்பட்டதாகவும், ஆகவே மானத்தை மறைக்கப் பயன்படும் ஒன்றாகவும் அது கருதப்பட்டது *(ஆதி 3:7.21)*. எபிரேயர்கள் நிர்வானத்தை மிகவும் இழிவுக்குரியதாகக் கருதினர். போர் காலத்தின்போதும் நாடுகடத்தப்பட்டபோதும் ஏற்படும் துன்பங்களில் ''ஆடையின்றி இழுத்துச் செல்லப்படுதல்'' மிகவும் கொடுமையானதாகக் கருதப்பட்டது *(ஏச 20:4; ஆமோ 2:16)*. கைது செய்பவர்கள் கைதிகளின் ஆடைகளை உரித்து அவற்றைத் தங்கள் கொள்ளைப் பொருளாகக் கருதியதாகத் தெரிகிறது. உள்ளாடைமட்டும் அணிந்திருப்பவனை ''நிர்வாணி'' என்றழைப்பது வழக்கம். ஆடைகளைக் குறிக்கப் பல எபிரேய சொற்கள் பயன்பட்டுள்ளன. அவை உள்ளாடை, மேலாடை, அங்கி, சட்டை, கச்சை போன்ற சொற்களால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. ஆனால் இவற்றைத் துல்லியமாய் வேறுபடுத்துவது கடினம். ஆடைகளின் வடிவங்கள் பற்றியும் நெய்தல் முறைகள் பற்றியும் ஆங்காங்கே விவிலியத்தில் குறிப்புகள் உள்ளன. இவற்றை வேறுபடுத்த பழங்காலத்து ஓவியங்கள் ஓரளவு உதவியுள்ளன.

பாலஸ்தீன மக்களிடையேயும் பழம் மேற்காசிய மக்களிடையேயும் ஆடைகள் எளிமையாயிருந்துள்ளன. ஆடைப்பாணியும் ஓரளவு மாறாமல் நெடுங்காலத்திற்கு அமைந்திருந்தது. தொடக்க காலத்தில் மக்களிடையே ஆடைகள் தோலால் செய்யப்பட்டதாகத் தெரிகிறது *(ஆதி 3:7; யாத் 25:5)* காலப்போக்கில் கலாச்சாரம் வளர்ந்த நிலையில் கம்பளி ஆடையும் மெல்லிய சணல்நூல் ஆடையும் வழக்கில் வந்தது *(லேவி 13:47)*. முரட்டு கம்பளி ஆடை, துக்கத்திற்கும் தபசிற்கும் அடையாளமாக அணியப்பட்டது *(2 சாமு 3:31; மத் 3:4)*. எச 16:13-இல் பட்டு என்ற சொல் வந்தாலும், பழங்காலப் பாலஸ்தீனத்தில் பட்டு இருந்ததா என்பது ஐயத்திற்குரியது. அது ஒருவகை மெல்லிய துணியாய் இருந்திருக்கலாம் *(நீதி 31:22)*. புதிய ஏற்பாட்டு காலத்தில் பட்டு உடைபற்றி நன்கு அறியப்பட்டதாகத் தெரிகிறது *(திருவெளி 18:11)*.

*2.* ஆண்கள் ஆடை:-

அ. இடைக்கச்சை:- இடுப்பைச் சுற்றிச்சுற்றிக் கட்டப்படும் முண்டுபோன்ற பாவாடை. இது தோற்கச்சையாகவோ,



இடைக்கச்சை

துணிக்கச்சையாகவோ இருக்கலாம் *(2 அர 1:8; ஏச 5:27; எரே 13:1 தொ; எச 23:15; மத் 3:4)*. இதைப் பெரும்பாலும் படைவீரர்களும் இறைவாக்கினர்களும் பயன்படுத்தினர். மெசியா அரசன் உண்மையை இடைக்கச்சையாக அணிவார் *(ஏச 11:5)* என்று குறிக்கப்படும்போது இவ்வகை ஆடையே சுட்டிக் காட்டப்படுகிறது. பழங்கால எகிப்தியர் உடுத்திய இடைக் கச்சை முழங்கால் வரை நீண்டிருந்தது. பாரவோன் மன்னர்கள் விழாக்காலங்களில் இத்தகைய ஆடையை அணிந்திருந்தனர் என்று தெரிகிறது. பிற்காலத்தில் படைவீரர்கள், அடிமைகள், கடின உழைப்பில் ஈடுபட்டவர்களும் தவிர மற்றவர்கள் இதன்மேல் உட்சட்டை அணிந்தனர்.

ஆ. உட்சட்டை அல்லது அங்கி:- இது கம்பளத்தாலோ, சணல் துணியாலோ செய்யப்பட்டது; கணுக்கால் வரை நீண்டு இருக்கும். இது கையுடனோ கையில்லாமலோ செய்யப்பட்டிருக்கும். நிர்வாணம் உடல்

மேல் அணியப்பட்டது. வேலையின் போதோ பயணத்தின்போதே இது இடைக் கச்சையோடு இணைத்துச் சுருக்கிக் கட்டப் பட்டது (யாத் 12:11; 2 அர 4:29; 9:1).


உட்சட்டை அல்லது அங்கி


சால்வை அல்லது போர்வை

யோசேப்பு சகோதரர்களிடையே பொறாமை எழுப்பிய ஆடை கையுடைய தாக இருக்கலாம் (ஆதி 37:3). இது பல அழகு வேலைப்பாடுடையதாக இருக்க லாம்; சீரியர்களும் கானானியர்களும் பல நிற ஆடைகளையும், எகிப்தியர் எப்போதும் வெண்ணிற ஆடைகளையும் பயன்படுத்திய தாக எகிப்திய ஓவியங்கள் காட்டுகின்றன. அங்கிமேல் பட்டையிட்ட ஆடை சுருள்வடி வில் அணியப்பட்டதாகத் தெரிகிறது. இது விழாக்காலங்களில் அணியப்பட்டது. இத்த கைய நார்ப்பட்டாடைகளைத்தான் சிம் சோன் பெலிஸ்தியர்களுக்குப் பந்தயத்தில் அளிப்பதாகக் கூறினார் (நீதி 14:12 தொ).

இ. சால்வை அல்லது போர்வை:- உள்ளா டைமேல் போர்வை அல்லது சால்வை அணியப்பட்டது. இதைக் குறிக்கப் பல எபிரேயச் சொற்கள் பயன்பட்டுள்ளன. ஒவ் வொரு சொல்லும் ஒருவேளை வேறுபட்ட ஆடைகளைக் குறிக்கலாம். வேறுபாடுகளை விளக்குவது கடினம். சால்வை சாதாரண மாய் சதுரவடிவமானது. இது இரு தோள்க ளைச் சுற்றியோ அல்லது ஒரு தோளிலோ போடப்பட்டிருக்கும். சால்வை இரவு நேரத் தில் போர்வையாகப் பயன்பட்டது. எபிரே யச் சட்டம் ஏழைகளிடமிருந்து சால்வையை அடமானமாகப் பெறுவதைக் கண்டித்தது (யாத் 22:25 தொ; உப 24:13). சால்வை வேலை நேரங்களில் அணியப்படவில்லை. பல்வேறு பொருள்களைக் கட்டி எடுத்துச் செல்லவும் இது பயன்பட்டது (யாத் 12:34; 2 அர 4:39; ஆகா 2:12). இது சிலசமயம் தலைமட்டும் நுழைவதற்கு துவரத்தோடு வட்டவடிவாய் அமைந்திருக்கும். குஞ்சங்க ளால் அணிய செய்யப்பட்டிருக்கும்.

ஈ. பட்டைவார்:- எல்லாவற்றிற்கு மேலாக தோலாலோ துணியாலோ செய்யப் பட்ட பட்டைவார் அல்லது கச்சை அணியப் பட்டது. இது 5 அங்குல அகலமிருக்கலாம். இதிலிருந்து பட்டை உறையும் பணப்பை யும் தொங்கவிடப்படலாம். குருக்களின் பட் டைவார் அணிசெய்யப்பட்டிருக்கும். சிலர் பொற்கச்சையைக் கட்டுவார்கள் (யாத் 28:8; திருவெளி 15:6). ஏழைகள் பட்டைவாருக் குப் பதிலாகக் கயிறு கட்டுவார்கள் (ஏச 3:24).

உ. மற்ற ஆடைகள்:- அரசர்கள் (1 சாமு 18:4; 24:5:11), பெரிய குரு(யாத் 28:31 தொ; லேவி 8:7), சாமுவேல் (1 சாமு 2:19; 15:27;

28:14) போன்றோர் தங்களின் பதவிக்கேற்ற சிறப்பான மேலாடை அணிந்திருந்ததாகத் தெரிகிறது. குருக்கள் இடுப்பு முதல் தொடை வரை நீண்டிருக்கும் அளவில் மெல்லிய நார்பட்டால் செய்யப்பட்ட கால் சட்டைகள் அணிவர் (யாத் 28:42; தானி 3:21). இறைவாக்கினர் ஒட்டகமயிரால் செய்யப் பட்ட ஆடை அணிந்தனர் (செக் 13:4; மாற்கு 1:6). விழாக்கால ஆடைகள் பழைய ஏற்பாட் டிலும் புதிய ஏற்பாட்டிலும் அடிக்கடி குறிக் கப்படுகின்றன (ஆதி 27:15; நீதி 14:12; மத் 22:11 தொ; லூக் 15:22 தொ). இவை விலையு யர்ந்த பொருட்களால் செய்யப்பட்டன. பகட்டான நிறங்களைக் கொண்டிருந்தன.

புதிய ஏற்பாட்டில் மேலாடையைக் கேட் பவனுக்கு உள்ளாடையையும் கொடுத்துவி டும்படி இயேசு கூறுகிறார் (மத் 5:40; லூக் 6:24). இவையிரண்டும் சால்வையையும் அங்கியையும் குறிப்பதாகத் தெரிகிறது. இரண்டு அங்கிகளைக் கொண்டிருப்பது செல்வத்திற்கு அடையாளமாகும். தம் சீடர் கள் இரு அங்கிகளைக் கொண்டிருப்பதைத் தடுக்கிறார் (மத் 10:10; மாற் 6:9; லூக் 9:3). இயேசு சிலுவையில் அறையப்பட்டபோது, படை வீரர்கள் அவருடைய ஆடைகளை பங்கிட்டுக் கொண்டனர். அவரது அங்கி மேலிருந்து அடிவரை தையலில்லாமல் நெய்யப்பட்டிருந்ததால், அதைச் சீட்டுப் போட்டு எடுத்துக் கொண்டனர் (யோவா 19:23).

ஊ. தலைப்பாகை:- தலையில் பாகை அல்லது குல்லா தரிப்பது வழக்கம். இது, முக்கோண வடிவமாக மடிக்கப்பட்ட சதுரத் துணியை தலையில் சுற்றி கட்டப்பட்டிருக் கும் (யோபு 29:14; எச 24:17).

எ. காலணி:- காலில் செருப்புகள் அணிந் திருப்பர் (ஆதி 13:23; எச 16:10). எபிரேயர் காலணிகளை வீட்டுக்கு வெளியே போடு வார்கள். துக்க காலத்திலும், நண்பர்கள் வீட்டுக்குப்போகும்போதும் ஆலயத்திலும் காலணி அணிந்திருக்கமாட்டார்கள். இவை பல நிறங்களில் கவர்ச்சியாக அமைந்திருக் கும்.


காலணி

ஏ. பெண்கள் உடை:- பெண்களும், பொதுவாக, ஒரு அங்கியையும் சால்வையை யும் அணிந்திருந்தனர். இரு பாலினர்களுக் குள்ளே ஆடைகளை மாற்றிக் கொள்வது தடுக்கப்பட்டிருந்தது (உப 22:5). இது இரு வகை ஆடைகளுக்கும் வெட்டுவதிலும் பாணியிலும் வேறுபாடுகள் இருந்தன என்ப தைச் சுட்டுகிறது. பெண்களின் ஆடை ஆண் களின் ஆடையைவிட நீண்டதாயும் மெல் லிய பொருட்களால் செய்யப்பட்டதாயும் இருந்தது. பெண்கள் முக்காடு இட்டுக் கொண்டனர். இது, உடல் முழுவதையும் மூடக்கூடிய மெல்லிய சால்வையாகும். செல்வமிக்க பெண்கள் பல கவர்ச்சிகரமான

ஆடைகளையும் அணிவர். இவை ஏச 3:19-20; எச 16:10-12-இல் கொடுக்கப்பட்டுள்ளன. இவற்றின் வடிவங்களை உறுதியாகக் கூறமுடியாது.



பெண்கள் முக்காடு

**ஆடை அணிதல்** (CLOTHING)

மனித வாழ்வின் அத்தியாவசியத் தேவைகளில் உணவு, இருப்பிடம் ஆகியவற்றுடன் உடையும் ஒன்றாகும் (சீரா 29:21). உணவும் உடையும் இறைவனுடைய ஆசீராகவும் (உப 10:18; ஆதி 28:20), பசியும் நிர்வாணமும் தண்டனையாக உள்ளன (உப 28:48). உடையானது பருவ காலங்களின் கடுமையிலிருந்து பாதுகாப்பதற்கென இருப்பதால், இரவின் குளிரானது ஏழையின் மீது படரும்போது அவனுடைய மேற்போர்வையானது அடகுக் கடையில் வைக்கப்பட்டிருக்கக் கூடாது. இத்தகைய அடிப்படை நோக்கிற்கு அப்பாற்பட்டு, ஆடை அணிதலின் அடையாளமானது மேலும் இரு பரிமாணங்களில் வளர்ச்சியடைகிறது: படைத்தவரிடமிருந்து வரும் திட்டமான அமைப்பின் அடையாளமாகவும் இன்பவனத்தில் இழந்த மகிமை பற்றி உறுதி மொழியினை நினைவுறுத்தும் அடையாளமாகவும் இது உள்ளது.

I. ஆடை அணிதல்:- உலகில் இறை அமைப்பின் பிரதிபலிப்பு

படைத்தவர் அண்டம் முழுவதையும் முதலில் நிலவிய வெறுமையினின்று உருவாக்கித் திட்டத்துடன் அமைக்கப்பட்ட உலகில் ஒவ்வொன்றிற்கும் அதற்குரிய இடத்தை அளித்தார். இவ்வாறு ஆடை அணிதலானது மனிதனுடைய ஆள் அடையாளத்திற்கும், தனித்தன்மைக்கும் அடையாளமாகத் தோன்றுகிறது.

1. ஆடை அணிதலும் மனித ஆளும்:- முதல் நிலையில் ஆடையணிதலானது உடலை தட்பவெப்ப நிலையினின்றும், மனிதனை காம இச்சைப் பொருளாக தாழ்த்தக்கூடிய பார்வையினின்றும் பாதுகாக்கிறது; இப்படிப்பட்ட பார்வைகள், கடவுள் மனிதனைக் கொண்டுவந்த குழப்பமான தனித்தன்மையற்ற நிலைக்கே மீண்டும் மனிதனைக் கொண்டு சேர்க்கும். குடும்பச் சூழலுக்கும் இந்த அடிப்படையிலேயே ''ஆடை நீக்குதல்'' தடுக்கப்பட்டிருக்கிறது. இது குடும்பச் சூழலுக்கும் (ஆதி 9:20-27) அதன் தாய்மை (ஆதி 34; 2 சாமு 3) மற்றும் மணஉறவு (உப 22:13-24) ஆகிய கூறுகளுக்கும் பாதுகாப்பாகும். ஆடையணிதலானது இங்கு ஒவ்வொரு நபரின் தனிப்பட்ட சொந்த வாழ்வையும் பாதுகாக்கிறது.

ஆடையணிதல் பாலினங்களின் வேறுபாட்டை உறுதிப்படுத்தி, அவர்களின் உறவிற்கும் அடையாளமாக விளங்குகிறது. ஆணும் பெண்ணும் மாறுபட்ட ஆடைகளை அணிய வேண்டும் (உப 22:5; லேவி 19:19). திருமணத்திற்குமுன் ஆண் பெண் சந்திப்பு போன்ற குறிப்பிட்ட காரணங்களுக்காக, பெண் தன் முகத்தை மூடிக்கொள்ள வேண்டும். இப்படிச் செய்வது, ஒருத்தியைத் தேர்ந்தெடுத்தவனுக்குக் காட்டும் சடங்கு அடையாளமாகும் (ஆதி 24:65). திரையிட்டு மறைப்பதானது, மணமகன் தனது போர்வையினை அவள் மீது போர்த்துவதன் மூலம் (ரூத் 3:9; உப 23:1) தனக்குரியதை அவளுடன் பகிர்ந்து கொள்ளுகிற செயலுக்கு ஒத்ததாகும். ஆனால் இதன் மூலம் அவன் அவளைத் தனக்கு உரிமையாக்கிக் கொள்ளவில்லை (ரூத் 4:7; உப 25:9; சங் 60:10).

மாறாக தேர்ந்தெடுக்கப்பட்டவள்மீது தனது சொந்தச் சிறப்பினை அளிப்பதாகும்.

ஆடையணிதலானது சமூகத்தில் வாழ்கின்ற வாழ்க்கைத் தரத்தினைப் பிரதிபலிக்கின்றது. சமுதாயத்தின் ஒவ்வொரு பகுதிக்கும் ஆடையணிதலானது, இணைந்து உழைப்பதால் உருவாகும் ஒற்றுமையான வாழ்விற்கும் (ஆடுகளுக்கு மயிர் கத்தரித்தல்: *1 சாமு 25:4-8*; நெய்தல்: *பழ 31:10-31*; தைத்தல்: *அ.ப. 9:39*), திறமையான ஆட்சிமுறைக்கும் (*பழ 31:30*) மற்றும் ஒருவர்க்கொருவர் உதவி செய்வதற்கும் அடையாளமாக செயல்படுகிறது. ஒருவருடைய போர்வையைத் தருவதானது சகோதரத்துவத்தின் அடையாளமாகும். யோனத்தான் தாவீதுடனான உடன்படிக்கையை இவ்வாறே முத்திரையிடுகிறார் (*1 சாமு 18:3 தொ*). ஏனெனில், ஆடையணிதல் அந்த ஆளோடு நெருங்கிய தொடர்புடையது. அன்பு செய்யப்படுபவர்க்கு அந்த தொடர்பைத் தெளிவாக்குகிறது (*ஆதி 37:33*); சில சமயங்களில் இந்த இணைப்பானது ஆடைகளின் மணத்தினின்று தெளிவாகுகிறது (*ஆதி 27:15.27*). சமூக சமத்துவமற்ற நிலையினை வெட்கமின்றி குறிப்பிட்டு, அந்த வேறுபாட்டைத் தீர்க்க ஒன்றுமே செய்யாத பகட்டான ஆடம்பரமானது (*சீரா 40:4; யாக் 2;2*). இறைவாக்கினர் மற்றும் அப்போஸ்தலர்களின் சாபத்தை பெற்றுக் கொள்கிறது. ஆடையற்றவனை உடுத்துவதானது சமுதாய வாழ்வை சார்ந்துள்ள நீதியின் கட்டளையாகும் (*எச 18:7*); இதனை ஒதுக்குதலானது சமுதாய பிரிவினையை வரவேற்பதாகும். தனது உறுப்பினர்களின் குளிரை போக்குவதற்கும் மேலாக (*யோபு 31:20*). இக்கட்டளையானது ஒரு மனிதனைச் சமுதாய வாழிவில் புதிதாக நுழையச் செய்கிறது (*ஏச 58:7*). நிர்வாண மனிதனின் நிலையில் இச்செயலானது, குழப்பநிலையினின்று மனிதனை மீட்கின்ற, அனைத்து மனிதருக்காக இறைவனின் செயலின் மறுபதிப்பாக விளங்குகிறது (*உப 10:18*). இத்தகைய நீதியான செயல் இல்லாவிடில் அன்பு தன்னிலே உயிரற்றதாகும் (*யாக் 2:15*). ''உன் மேலாடையையும் கொடுத்து விடு'' என்று கிறிஸ்து கூறும் போது (*மத் 5:40*), மற்றவன் கேட்கும் போது தன்னையே கொடுத்துவிட வேண்டும் என்று பொருள்படும்.

2. ஆடையணிதலும் மனித செயல்களும்:- எல்லா காலங்களிலும் ஒரே விதமான ஆடை அணியப்படுவதில்லை. சமயச் சார்பற்ற மற்றும் புனிதம், வேலை மற்றும் விழாக்காலம் என காலங்களுக்கேற்ப ஆடை மாறுபடும். சில வேலைகளுக்காக ஆடைகளைக் கலைவது (*யோவா 21:7*) அவசியமாக இருக்கும். அதே சமயத்தில், பல்வேறு விழாக்கால ஆடைகளும் காணப்படுகின்றன. கடவுளின் காட்சிக்காக மக்கள் காத்திருத்தல் (*யாத் 19:10; ஆதி 35:2*) மற்றும் குருக்கள் உள்சந்நிதானத்தில் நுழைதல் மற்றும் வெளியேறுதல் (*யாத் 28:2 தொ; லேவி 16:4; எச 44:17-18; செப் 3*) போன்ற காலங்களில் ஆடை மாற்றுதல் சமயச்சார்பற்ற நிலையிலிருந்து புனிதத்திற்கு மாறுவதைக் குறிப்பிடுகின்றது. பல்வேறு சுத்தம் மற்றும் அசுத்தம் ஆகிய பிரிவுகளுக்கும் இது பொருந்தும் (*லேவி 13-15*). அரச உடைகளில் (*1 அர 22:30; அ.ப. 12:21*) பொன் கொக்கியுடன் கூடிய கருஞ்சிவப்பு மேலாடையும் உண்டு (*1 மக் 10:20.62.64; 11;58; 14:44*). அபிடேகம் செய்யப்பட்ட அரசனுக்கு அங்கீகாரம் காட்டும் விதமாக மக்கள் தமது ஆடைகளை அவரது பாதங்களின் கீழ் விரிப்பர் (*2 அர 9:13; மத் 21:8*), ஏனெனில் அவர்களை மாட்சியால் நிரப்புவது அவரது பணியாகும் (*2 சாமு 1:24*). எலியா எலிசாவிற்கு இறைவாக்கு அழைப்பை அளிப்பதற்காக எறிந்த போர்வையைப்போன்ற (*1 அர 19:19*) மேலாடையை, தோலாடையின்மேல் இறைவாக்கினர் அணிவர் (*செக் 13:14; மத் 3:4*). இத்தகைய ஆடையணிதல் இறைவாக்கு உரைக்கும் அருங்கொடையை குறிக்கவல்லது (*2 அர 2:13-14*). புனித ஆடைகளை அணிவிப்பதன் மூலம் தலைமைக்குரு பதவி ஏற்கிறார் (*லேவி 21:10*). இத்தகைய அடையாள உடைகளோடு (*யாத் 28-29; லேவி 16; எச 44; சீரா 45:7-12*) பழிகளுக்கு அப்பாற்பட்ட மனிதன் இறைசீற்றத்தை எதிர்

கொள்ள முடியும், அழிப்பவன் பணிந்து போவான் (ஞான 18:23-24; 1 மக் 3:49).

II. ஆடையணிதலும் நிர்வாணமும்: ஆன்மீக அடையாளங்கள்

இன்பவன நிகழ்ச்சியுரையிலும், புனித வரலாற்று விவரிப்புகளிலும் குறிப்பிடப்பட்டிருப்பது போன்று, ஆடையணிதலானது மனிதனுடைய ஆன்மீகக் கூறின் அடையாளமாகவும் உள்ளது.

1. *இன்பவனத்தில்:-* தடை செய்யப்பட்ட அறிவானது ஆதாம், ஏவாளின் கண்களைத் திறந்ததால் தாங்கள் நிர்வாணமாய் இருப்பதை அவர்கள் அறிந்தனர் (ஆதி 3:7). அந்நேரம்வரை, ஒரு வித அருளினால் உடையாக போர்த்தப்பட்டு, இறைசூழ்நிலையில் ஒன்றித்திருப்பதாகதங்களைக்கருதினர்.இனிமேலிருந்து, அவர்களது பாலினம் மட்டுமின்றி முழு உடலுமே இறைவனது பிரசன்னத்திற்குமுன் தேவையால் குறிக்கப்பட்டிருக்கும். அத்தி இலை ஆடை மட்டுமே இனி போதுமானதாக இல்லை. இறை மாட்சிமைக்கு முன் அவர்களது வெட்கம் உருவாவதால் தோட்டத்து மரங்களுக்கு இடையில் பாவிகள் தங்களை மறைத்துக்கொள்கின்றனர்: ''நிர்வாணியாய் இருந்ததால் நான் பயந்து ஒளிந்து கொண்டேன்''. ஆண்டவருக்கு உரியவர்கள் என்னும் உணர்வை இழந்துவிட்டதால், இறைவனை உரிமையோடு நெருங்குவதை நியாயப்படுத்தக்கூடிய எந்த அடையாளமும் அவர்களிடம் இல்லை. இறைவனின் உருவத்தை பிரதிபலிக்காத கண்ணாடியைப் போன்று, தங்களது நிர்வாணத்தினால் அவர்கள் என்றென்றும் திடுக்கிடுகின்றனர்.

ஆயினும், இறைவன் அவர்களைத் தோல் ஆடைகளால் உடுத்தாமல் துரத்தவில்லை (ஆதி 3:21); இவ்வுடையானது அவர்களின் நிர்வாணத்தை வெளியிடாதிருக்கவில்லை. ஆனால் அவர்கள் இழந்துவிட்ட மேன்மைக்கு இடைவிடாமல் அழைக்கும் அடையாளமாக உள்ளது. வீழ்ச்சியடைந்த மனிதனுடைய சிறப்பை உறுதிப்படுத்துவதாகவும், இழந்த மாட்சிமையால் மீண்டும் உடுத்திக் கொள்ளக்கூடிய வாய்ப்பினையும் குறிக்கிற இருபொருள் நிலையை, ஆடையணிதலானது இப்போது சுட்டிக்காட்டுகிறது.

2. *உடன்படிக்கையின் வரலாறு:-* இது ஆடையணிதலின் உதவியால் அடையாளமாக குறிப்பிடப்படுகிறது. ஆடை அணிதல் இழந்துவிட்ட அல்லது வாக்களிக்கப்பட்ட மாட்சிமையினையே குறிப்பிடுகிறது. இறைவன் உடன்படிக்கையின் மூலம் தனது மாட்சிமையை நெருங்கிய விதத்தில் அளிக்கத் துவங்குகிறார். ஒரு ஆயனாக, பரந்த இடத்தில் கண்டுபிடிக்கப்பட்ட அநாதைக் குழந்தையை உடுத்துகின்றார் (உப 32:10). ஒரு அரசனாக அவரது தொங்கலாடை கோயிலை நிரப்புகிறது (ஏச 6:1), ஒரு கணவனாக அவர் தனது ஆடையை மக்கள் மீது பரப்பி (எச 16:8-9), விலங்குகளின் தோல் ஆடையினால் அன்றி, அவர்களைக் குருக்களாக்குவது போல மெல்லிய பட்டு மற்றும் சணல் நூல் ஆடைகளால் அணிவித்தார் (யாத் 28:5.39.42). யாவே தம்முடைய மகிமையையே தமது மக்களுக்கு அளித்தாலும் (எச 16:13 தொ) அரச மணப்பெண் பிரமாணிக்கமாக நடக்கவில்லை. மேட்டுப் பகுதிகளில் சிலை வழிபாட்டுப் பழக்கங்களை எசக்கியேல் குறிப்பிடுகின்றார். அவர் அந்த உருவகத்தை வெளிப்படையாகப் பின்பற்றி, மணப்பெண் தனது நிர்வாணத்தை வெளிக்காட்டி, அனைவருக்கும் தன்னை அளிப்பதை சுட்டிக்காட்டுகின்றார். தனது ஆடைகளால் அவள் தனக்குப் பலவர்ண மேடைகளைச் செய்து போவோர் வருவோருடனெல்லாம் வேசித்தனம் புரிகின்றாள் (16:15-16; ஓசே 2:9-10). ஒருமுறை நீண்ட பாலைவனப் பயணத்தின்போது ஏற்பட்டது போன்று அவளுடைய ஆடைகள் பழைமையாகி கிழியாதிருக்க வேண்டும் (உப 8:4); ஆனால் இப்போது அது சிதைவதையும், கந்தலாவதையும் (ஏச 50:9), பூச்சிகளும் அரிபுழுக்களும் தின்பதையும் (51:8) இறைவன் பார்க்கிறார்.

ஆயினும், தீமையிலிருந்து அதனுடைய பரிகாரத்தை எடுக்கின்ற மாற்றுச் செயலால் இறைவனின் திட்டம் நிறைவேற்றப்படும்.

முதலாவதாக, அவளது காதலர்களின் காமத்தை அழிவின் சினத்திற்கு மாற்றி இஸ் ராயேலின் நாட்டை நிர்வாணமாக்குகிறார். எஞ்சியவர்கள் மட்டுமே மீட்பின் பலனை இறுதியில் அடைகின்றனர் (எச 16:37; எரே 13:26). பின்னர், அழகோ அல்லது சிறப்போ இல்லாத ஒரு ஊழியனை மரணம் வரை தாழ்த்தி, மக்களை அவர்களது இச்சைகளி னின்று குணமாக்குவார் (ஏச 53:12). இவ் வாறு, சீயோன் அவளை அழித்தவர்களா லும், மீண்டும் கட்டியவர்களாலும் ஒரு மணமகளாக உருவாக்கப்படுவாள் (49:17 தொ). பின்னர், ஆண்டவர் நேர்மையை மார்க்கவசமாகவும், பழி வாங்குதலை ஆடையாகவும், பொறாமைத்தன்மையை மேலாடையாகவும் போர்த்திக்கொண்டு (59:17), தனது மணமகளை நீதியின் மேலா டையால் போர்த்த வருவார் (61:10).

*3. கிறிஸ்துவிற்கு மகிமையை ஆடையாய் அணிவித்தல்:-* இஸ்ராயேல் இவ்வாறு அழகு செய்யப்படுவதற்காக உண்மையான ஊழியனாகிய கிறிஸ்து, அவரது ஆடைகள் உரிக்கப்பட்டு (மத் 27:35; யோவா 19:23). நகைப்பிற்கிடமான அரச ஆடைகள் அணி விக்கப்பட்டு (யோவா 19:2 தொ) நியாய மான தகுதி மறுக்கப்பட்டவராய், பிரித்தறிய முடியாத மனிதனாக வேண்டும். ஆனால், இம்மனிதனே அழிக்கமுடியாத மாட்சிமை யுடைய இறைமகனாவார். ஏற்கனவே உரு மாற்ற நிகழ்ச்சியில், அவரது உடைகளின் வெண்மையில் அவரது உடலின் மகிமை காட்டப்படுகிறது (மத் 17:2). கெராசா நாட் டில் பேய் பிடித்தவனுக்கு மீண்டும் ஆடை களை அணிவிக்க அவரால் முடிந்தது (மாற் 5:15; அ.ப. 19:16). உயிர்ப்பிற்கு பின்னர், அறிவிக்கின்ற வானதூதர்களைப் போன்று (மத் 28:3) அவரது மகிமையின் அடையாள மாகிய பேரொளியை மட்டுமே அத்தியாவ சிய ஆடையாக ஆண்டவர் கொண்டிருந்தார் (அ.ப. 22:6-11; 10:30; 12:7). மரிய மகதலே னாள் மற்றும் எம்மாவு சீடர்களின் திறக்கப்ப டாத கண்கள் தோட்டக்காரரையும், உடன் பயணம் செய்பவரையும் தவிர மேலான எவரையும் முதலில் பார்க்கவில்லை (யோவா 20:15; லூக் 24:15 தொ); ஏனெனில் இம்மகிமையானது உயரிய விசுவாசத்திற்கு மட்டுமே வெளிப்படும். விசுவாசிப்பவ ருக்கு கிறிஸ்து, 'ஆண்டவர்கெல்லாம் ஆண் டவர், அரசர்க்கெல்லாம் அரசர்' என்று (திரு வெளி 19:16) எழுதப்பட்ட ஆடையால் உடுத்தப்பட்டு எரிகின்ற, உணர்ச்சிமிக்க அன்பின் அழைப்பை விடுவிக்கிறார்.

*4. தேர்ந்தெடுக்கப்பட்டவர்களின் ஆடை:-* படைக்கப்பட்ட உலகின் முறையான அமைப்பானது விசுவாச கண்களுக்கு இப் போது தெளிவாகத் தெரிகின்றது. பவுல் கூறுவது போல், தூதர்கள் முழுமையான அமைப்பையும் காண்கின்றனர் (1 கொரி 11:10); மற்றும் தலையாகிய கிறிஸ்து செய்வ தைப் போன்று (1 கொரி 11:13 தொ), தனது திரையிடப்படாத முகத்தில் ஆதாம் இறைவ னின் மகிமையை வெளிப்படுத்துகிறான் (2 கொரி 3:18). ஏவாள் ஆதாமின் பதிப்பாக இல்லாமல் துணையாகப் படைக்கப்பட்ட தால் (1 கொரி 11:8), தன்னுடைய துணை யான பங்கில் தன்னாண்மைத்திறத்தின் அடையாளத்தினை கொண்டிருக்க வேண் டும். இவ்வாறாக தனது திரையின் மூலம் குழப்பமான தாறுமாறான பார்வைகளுக்கு (1 கொரி 11:5-13; 1 திமோ 2:9-14) தனது மகிமையைக் கீழ்படுத்த அவள் மறுக்கிறாள் (1 கொரி 11:6, 10:15). இத்திரையானது, தான் எனும் தன்மையிலிருந்து பிரிதலுக்கு எதிரான, அவளது அபிடேகம் செய்யப் பட்ட நிலைமையின் முழுதான தன்னடக்க அமைதியினைக் குறிப்பிடுகின்றது. உயிர்த் தெழுந்த நாளில் மட்டுமே அவளின் மகிமை தெளிவுபடுத்தப்படும்.

உண்மையில், ஒவ்வொரு மனிதனும் கிறிஸ்துவால் ஆரம்பிக்கப்பட்ட மகி மையை நோக்கிய இயக்கத்தில் நுழையு மாறு அழைக்கப்படுகின்றான். உலகில் விதைக்கப்பட்ட சிறிய, ஒன்றுமில்லாத விதையினின்று பெரும்விளைச்சலைக் கொண்டுவர இறைவனால் முடியும்பொ ழுது, ஒவ்வொரு மனிதனின் உடலையும் அழிவற்றதாக அவரால் மாற்ற முடியும் (1

கொரி 15:37-42); அழியக்கூடிய மனித உட லின் மீது, அழியாமையினால் உடுத்த அவ ரால் முடியும் (2 கொரி 5:3-4). இது நிகழும் போது, மனித இனமானது கிறிஸ்துவை அணிந்துக்கொண்டு விடுதலை, மகன் என் னும் உரிமை, மற்றும் இறைமரபுரிமை ஆகி யவற்றை அடைவதற்காக, தனது நிர்வாண நிலையினை விட்டுவிடும். பின்னர் இறை வன் விசுவாசத்தினாலும் ஞானஸ்நானத்தி னாலும் (கலா 3:25-26), பழைய மனிதனைக் கலைந்துவிட்டு, புதிய மனிதனை அணிந்து கொண்டவர்களைக் கொண்டு (கொலோ 3:10; எபே 4:24) முழுமையான ஒரே சமுதா யத்தை உருவாக்குவார். ஆவியாகிய புதிய கோட்பாட்டின்படி வாழ்வதன்மூலம் அவர் கள் கிறிஸ்துவில் ஒன்றாக உள்ளார்கள். இச்சமுதாயத்தின் உறுப்பினர்கள், நிர்வாண நிலையும் தங்களைக் கிறிஸ்துவிடமிருந்து பிரிக்காமலிருப்பதற்காக (உரோ 8:35), ஒளி யின் கவசத்தை உபயோகித்து (உரோ 13:12) இன்னும் போராட வேண்டியுள்ளது.

வெற்றி பெற்றவர்கள் ''தங்களுடைய ஆடைகளை செம்மறியின் இரத்தத்தில் தோய்த்து வெண்மையாக்கிக் கொண்டார் கள்'' (திருவெளி 7:14; 22:14). பின்னர், மணமகள் எவ்வழியிலும் குறைவுள்ளவ ளாக இருக்கவே முடியாது; ஏனெனில், வரலாற்றின் நீண்ட காலமானது திருமணத் திற்கு அழகுபடுத்தும் செயல்முறையாகும். ''பகட்டான வெண்ணாடை அணிய அவள் அனுமதிக்கப் பட்டாள்'' (19:7). இறைவன் ஒருநாள் தனது காலத்திற்காகப் பணியினை புரிந்த வானத்தையும் பூமியையும் துணியா கச் சுருட்டி (எபி 1:11 தொ), அவ்விடத்தைப் புதிய வானம் புதிய பூமியால் நிரப்புவார். முக்கிய உறுப்பினர்கள் பெருமளவு வெண் மையான உடைகளில், தங்களுடைய இடங் களில் இருப்பர். பின்னர், புதிய யெருசலேம் மணமகளைப் போல ஆடை அணிந்து (திரு வெளி 21:2) தனது மணமகனை எதிர்கொள் ளச் செல்லும். பின்னர், ''இறைவனின் மகிமை அதனை ஒளியால் நிரப்பியிருப்பதா லும், செம்மறியே அதன் விளக்காக இருப்ப தாலும், நகரமானது சூரியன் மற்றும் சந்திர னுடைய ஒளியின்றியே செயல்பட முடியும் '' (2:23).

**ஆடையக மேற்பார்வையாளர்** (KEEPER OF THE WARDROBE)

இவர் அரசன், குருக்கள் அணியும் ஆடைக ளைப் பொறுப்பாய்க் கண்காணிப்பவர் ஆவார். இத்தகைய ஒருவருடைய பெயர் கர்காசு என்று 2 அர 22:14-இல் குறிக்கப்ப டுகிறது. இவர் 2 நாள் 34:22-இல் கசுரா என்ற பெயரைக் கொண்டுள்ளார். 2 அர 10:22-இல் பாகாலை வழிபடுவோர், ஆடை களைக் கண்கானிப்பவரால், சிறப்பான ஆடைகள் அளிக்கப்பட்டனர். இவை வழி பாட்டு ஆடையாக இருக்கலாம். இவற்றை வைத்திருப்பதற்கு தனிப்பட்ட அறைகள் இருந்திருக்கலாம்.

**ஆட்சி அமைப்பு** (GOVERNMENT)

விவிலியத்தில் பல்வகைப்பட்ட அரசியல் அமைப்புகள் காணப்பட்டாலும், அவை பற் றிய செய்திகள் துணுக்குகளாகவும் ஊகித்துத் தீர்மானிக்கப்படக் கூடியவையாயும் உள் ளன. ஆனால் ஆட்சி அமைப்பு எப்போதும் இறைவனோடு செய்து கொண்ட உடன்ப டிக்கை, அவர் உலகின் மேல் கொண்டுள்ள மேலாண்மை அதிகாரம் ஆகியவற்றின் அடிப்படையிலேயே புரிந்து கொள்ளப்படு கிறது.

இறையாட்சி, வழக்கமாக, இறைவனால் ஆட்சிஅமைப்பு நடத்தப்படுதல் அல்லது அவரது வெளிப்பாட்டு வழியாக, அல்லது குருக்கள் வழியாக நடத்தப்படும் ஆட்சி அமைப்பு என்று ஏற்றுக் கொள்ளப்பட்டது. இது ஆட்சி அமைப்புப் பற்றிய விவிலியக் கருத்தை வலியுறுத்துகிறது.

இஸ்ராயேல், அவர்கள் மேல் மேலாண்மை அதிகாரமுடைய யாவே யோடு செய்து கொண்ட உடன்படிக்கை யால் உருவான சமூகமாகும் (யாத் 19:4-6). அவரே அவர்களுக்குச் சட்டம் அளிப்பவர், நடுவர், ஆட்சி செய்பவர். இந்த உடன்ப டிக்கை ஒவ்வொரு அரசியல் அமைப்புக்கும்

சூழ்நிலையையும் மதிப்பீட்டளவையும் கொடுக்கிறது. ஆட்சி அமைப்புக்கள் வேறுபட்டாலும், யாவேயே இஸ்ராயேலின் உண்மையான அரசரும் ஆண்டவருமாவார் (நீதி 8:23; 1 சாமு 12:14-15; சங் 93-100).

குல அமைப்பு ஆட்சிக்காலத்தில் இறையாட்சி சிறப்பாக அழைக்கப்பட்ட தலைவர்கள் வழியாக நடந்தது. இவர்கள் ஆண்டவர் காரியங்களுக்காக மக்களை ஒன்று கூட்டிச் செயலாற்றச் செய்தனர். அப்படிப்பட்ட தலைவர்கள் இல்லாதபோது, மக்கள் இறைவனது நெறியை விட்டு விரைவில் விலகி நடந்தனர் (நீதி 2:17). அரசர்கள் ஆட்சிக் காலத்தில் இறையாட்சி அரசனை மையமாகக் கொண்டு திகழ்ந்தது. ஆனால் அரசன் இறைவனது சட்டத்திற்கும் திருவுளத்திற்கும் பணிந்து நடந்த அளவுக்குத்தான் இறையாட்சி நிலவியது (உப 17:14-20). இப்படி நடக்க மறுத்தல் இறுதியில் அரசின் அழிவிற்கு இட்டுச்சென்றது. நாடுகடத்தப்பட்டுத் திரும்பியபின், இஸ்ராயேலின் ஆட்சி அமைப்பு தெளிவாக இறையாட்சியாகத் திகழ்ந்தது. பெரிய குரு, குருக்கள், சட்ட வல்லுநர்கள் ஆகியோரின் தலைமையில் நடந்தது.

புதிய ஏற்பாட்டில், விசுவாசிகள் இறைவன் நேரடியாக ஆட்சி செய்யும் நாளை எதிர்பார்த்திருந்தனர் (திருவெளி 21:3). இதற்கிடையில் உலக ஆளுநர்களோடு கொண்ட செயல்முறையான உறவு இறையாட்சி பற்றி பழைய ஏற்பாட்டில் நிலவும் கருத்துக்களையே அடிப்படையாகக் கொண்டிருந்தது. ஆனால் ''இயேசுக் கிறிஸ்து ஆண்டவர்'' என்ற விசுவாச அறிக்கையால் (பிலி 2:11) மாற்றி அமைக்கப்பட்டிருக்கிறது. கிறிஸ்தவர்கள் அரசியல்களால் அல்லாமல் இறைவனால் நிறுவப்பட்ட மற்றொரு அரசின் குடிமக்களாக உலகில் வாழ்கின்றனர் (யோவா 18:36). அரசும் அதன் நிறுவனங்களும் இறைவனால் நிறுவப்பட்டுள்ளன (உரோ 13:1; யோவா 19:11). ஆகவே ஆட்சி அமைப்புகளின் அதிகாரங்கள் இறைவனது மேலாண்மைக்குக் கீழ்ப்பட்டவையாகும் (லூக் 20:25). இக்கருத்தைக் கிளர்ச்சி மிக்க விதத்தில் மறுப்பது ஆணவமிக்க வல்லாட்சியாக உருவெடுக்கிறது. அது ஓர் அருவருப்பாகும் (திருவெளி 13; காண்க. தானி 6:6-18; 11:31-32). நீதி வழங்கல், நல்லவற்றை ஆதரித்தல், தீமையைக் கண்டனம் செய்தல், தண்டித்தல் போன்ற சில பொறுப்புக்களை இறைவன் அரசுகளுக்கு அளித்துள்ளார் (உரோ 13:4). அவை, எல்லாரும் அமைதியாக வாழ்க்கை நடத்துமாறு பொதுநலனைத் தேடிப் பேண வேண்டும் (1 திமோ 2:2; காண்க. சங் 72:1-4). இத்தகைய பொறுப்புடைய அதிகாரத்தின்முன் கிறிஸ்துவக் குடியுரிமை, கீழ்ப்படிதல், வரிகளைச் செலுத்துதல், அதிகாரிகளுக்காக மன்றாடுதல் போன்றவற்றை உள்ளடக்கும் (உரோ 13:1-6; 1 திமோ 2:1-2; 1 பேதுரு 2:13-16). ஆயினும் கிறிஸ்தவப் பிரமாணிக்கம் நிபந்தனையற்றதாக ஒருபோதும் இருக்க முடியாது. ஏனெனில் அது முதலில் இறைவனுக்கே உரியது (அ.ப. 5:29).

I. பழைய ஏற்பாடு

1. குல அமைப்புக் கொண்ட இஸ்ராயேல்:- குலமூலவர்களிலிருந்து சவுலின் ஆட்சிவரை, இஸ்ராயேலின் ஆட்சி அமைப்பு குல அமைப்புக் கூட்டாட்சி கொண்டதாகும். இது அப்பகுதியிலுள்ள மற்ற மக்களிடையேயும் காணப்பட்டது (ஆதி 25:13-16). இந்தவடிவம் உறவினர் அமைப்பு அடிப்படையில் சித்தரிக்கப்படுகிறது. இந்த உறவு இரத்தம், திருமணம் (நீதி 1:16), உடன்படிக்கை (யோசு 14:14), பணி (ஆதி 17:27) ஆகியவற்றால் எடுத்துரைக்கப்படுகிறது.

குல அல்லது கோத்திர அமைப்புக் கொண்ட இஸ்ராயேலில் நான்கு படிகளை வேறுபடுத்தலாம் (யோசு 7:16-18). குடும்பம் அல்லது ''தந்தையின் வீட்டில்'' பெற்றோர், குழந்தைகள், பேரக் குழந்தைகள், திருமணமாகாத உறவினர்கள், அடிமைகள், அன்னியர் ஆகியோர் அடங்குவர். இவர்கள் ஒன்றாய்க் கூடி வாழ்ந்தனர். உறவுடைய பல குடும்பங்கள் அருகருகில் வாழ்ந்து குடும்பக்

குழுக்கள் தோன்றின. இவை பிற்காலத்தில் மாவட்டமாக அல்லது கிராமமாக உருவெடுத்தன. இந்தக் குடும்பக் குழுக்கள் விழாக்கள் கொண்டாடுவதற்கும் *(1 சாமு 20:6-29)* பிரச்சினைகளைத் தீர்த்துக்கொள்வதற்கும் மையமாகத் திகழ்ந்தன. இவை போர்ச் சேவைக்கு அடிப்படைத் தலைக்கட்டாக விளங்கின *(நீதி 6:15)*. ஒரே மூதாதையரிடமிருந்து தோன்றியதாக உரிமைகொண்டாடிய பல குடும்பக் குழுக்கள் ஒரு குலமாகும். இதற்கு ஒரு பொதுத் தலைவர் இருந்தார். அவரது தலைமையின்கீழ் ஒன்று கூடி செயல்பட்டனர். கானானில் குலம் இனப்பிரிவுகளைக் குறிப்பதைவிட, ஒரு நிலப்பரப்புப் பகுதியைக் காலப்போக்கில் குறித்தது. இஸ்ராயேலில் பன்னிரண்டு குலங்கள் இருந்தன. இவை அனைத்தும் ஒன்று சேர்ந்து இஸ்ராயேல் மக்களாவர் *(ஆதி 35:23-26; எண் 1:20-47)*. இவர்கள் இறைவனை மையமாகக் கொண்ட உடன்படிக்கையால் நிறுவப்பட்டவர்கள் *(யாத் 19-23; யோசு 24)*. அதே விழாக்களையும் அதே சட்டத்தையும், பிற இனமக்களின் பழக்க வழக்கங்களைப்பற்றி அதே வெறுப்பையும் கொண்டிருந்தனர் *(நீதி 19:30)*. இந்தக் குலங்கள் கருத்தளவில் வேறுபட்டிருந்தாலும், செயல் முறையில் வேறுபட்ட அரசியல் மட்டங்களிடையேயுள்ள வரையறைகள் தெளிவாக இல்லை *(காண் 17:7; 18:1)*.

உடன்படிக்கையின் கீழ், போர்ச் சேவை செய்யத் தகுதிபெற்ற வயது வந்த ஆண்கள் அனைவரும் சபையின் அங்கத்தினராவர். இந்தச் சபை உடன்படிக்கையை அங்கீகரித்தது *(யாத் 24:1-8)*; வழிபாட்டுச் சடங்குகளில் பங்கு பெற்றது *(லேவி 8:3; எண் 8:9-10)*; அறிக்கைகளைக் கேட்டது *(13:26 தொ)*; கொள்ளைப் பொருட்களை பங்கிட்டுக் கொண்டது *(31:26-27)*.

குடும்பக் குழுக்களில், குலங்களில் அன்றாட ஆட்சியை மூப்பர்கள் நடத்தினர். இவர்கள் தலைவர்களும் நடுவர்களும் *(யாத் 2:14; காண்க 4:29)* பெருமக்களும் *(யோபு 29:10)*, ஆயிரத்தலைவர்களும் *(யோசு 22:14)* வீட்டுத் தலைவர்களும், பொருளாதாரத்திலும் போர்ப்பணியிலும் சிறந்தவர்களும் *(நீதி 6:12; ரூத் 2:1)* ஆவார். செயல் அளவில், சமூகத்தின் பெயரால் உயர் குடிமக்கள் ஆட்சி செய்தனர் *(நீதி 11:5)*. இவர்களுடைய பட்டம் சுட்டிக்காட்டுவது போல் இவர்கள் போரில் தலைமை தாங்கினர். பிரச்சினைகளில் தீர்ப்பளித்தனர், சட்டத்திற்கு விளக்கம் அளித்தனர். அன்றாடச் சமூகக் காரியங்களில் விவேகம் அளித்தனர். இவர்களிலிருந்து மோசே தனது தலைவர்களையும் நடுவர்களையும் நியமித்தார் *(யாத் 18:13-26; உப 1:15)*.

மூப்பர்கள் சபையோடு இஸ்ராயேலின் குல அமைப்பில் பல பதவிகள் இருந்தன. சில இறைவனால் கட்டளையிடப்பட்டவை; மற்றவை மக்களால் நியமிக்கப்பட்டவை. இவர்களிடம் போதிய ஞானமும் ஆற்றலும் இருந்தன. தலைவர் குடும்பக் குழுவின் அல்லது குலத்தின் முக்கிய அரசியல் அதிகாரியாவார் *(எண் 7:2)*. வழிபாட்டுக் காரியங்களில் மக்களின் பிரதிநிதியாகச் செயல்பட்டார் *(11:16 தொ)* போரில் தலைமை தாங்கினார் *(1:1-16)*. யாவேயால் நியமிக்கப்பட்ட தலைவர் என்ற முறையில் *(யாத் 3:10)* மோசே, தலைவர்களின் பல பொறுப்புகளை ஏற்றுக் கொண்டிருந்தார். அவரே நடுவர் *(18:13)*. சமய வாழ்வில் இணைப்பாளர். போரில் தலைவர் *(17:8-11)*. இத்தகைய அமைப்பு யோசுவா காலத்திலும் நிலவியது *(உப 34:9)*. இஸ்ராயேல் மக்களும் போர்த் தலைவர்களையும் நடுவர்களையும் நியமித்தனர் *(யாத் 18:25-26; உப 1:13; நீதி 11:11)*. இப்பதவிகள் அரசர்கள் ஆட்சிக் கால முழுவதும் நீடித்தது *(16:18; காண்க. 1 நாள் 23:4)*. நீதிபதிகள் நூலில் கூறப்பட்டிருப்பது போல், சில குலங்களுக்கு அருங்கொடை பெற்ற தலைவர்களையும் *(நீதி 2:16)* நடுவர்களையும் இறைவன் தோன்றச் செய்தார். இந்தத் தனித் தன்மையுடைய பதவிகள் மரபுரிமையாக வருவதல்ல. ஏனெனில் யாவே ஒருவரே இஸ்ராயேலின் அரசர் *(8:23)*.

*2. அரசர்கள் ஆட்சி அமைப்பு:-* தங்களுக்குள்ளே நிலவிய குழப்பங்களாலும் (*நீதி 21:25*) புறத்திலிருந்து வந்த அச்சுறுத்தல்களாலும் (*1 சாமு 4:1-10; 11:1-2*) தூண்டப்பெற்று இஸ்ராயேல் மக்கள் ஓர் அரசனைக் கோரினர். இத்தகைய நிலையை எதிர்பார்த்து, மோசே அரசாட்சி பற்றி இறையாட்சி முறைப்படி வழிகாட்டுதல் அளித்திருந்தார் (*உப 17:14-20*). ஆனால் அரசாட்சி பற்றிய இந்த வரையறைகளை இஸ்ராயேல் நிராகரித்தது. ''மற்ற நாடுகளுக்கெல்லாம் இருப்பது போல்'' ஓர் அரசனைத் தேடினர். இது சர்வாதிகாரத்திற்கும், போலி மகிமைக்கும், தவிர்க்க முடியாத சிலை வழிபாட்டுக்கும் இட்டுச் சென்றது (*1 சாமு 8:5-18*). வெகு அரிதாகத்தான், இறைவன் கூறியவாறு அரசர்கள் ஆட்சி அமைந்தது (*2 அர 12:2; 18:3; 13:14*).

அரசர்கள் ஆட்சி அமைப்பு, நடுவர்கள் என்ற முந்திய பதவியின் பல கூறுகளை நிலைப்படுத்தியது. அரசர் இறைவனின் அபிடேகம் பெற்றவர் (*1 சாமு 9:16; 1 அர 1:39*). ஆகவே அவரை மீறக்கூடாது (*1 சாமு 24:6*). அபிடேகத்தோடு அரசனுக்கு முடிசூட்டுதலோடு யாவேயின் பிரதிநிதி அரசர் என்ற அளவில் சட்டத்தின் நிபந்தனைகளும் அளிக்கப்பட்டன (*2 அர 11:12; உப 17:18-20*). திடீர் புரட்சிகள் நடந்தாலும் யூதாவில் அரச பதவி, தாவீதின் வழித்தோன்றல்களுக்கு மட்டும் உரிய மரபுரிமையாகத் திகழ்ந்தது (*2 அர. 7:8-16*). இஸ்ராயேலில் அரச பதவி பெரும்பாலும் அருங்கொடைத் தன்மையுடையதாக இருந்தது. வலிமைமிக்க தலைவர்கள் இறைவனால் அழைக்கப்பட்டு குருக்களால் அபிடேகம் செய்யப்பட்டனர் (*1 அர 11:31; 14:7; 19:6; ஓசே 8:4*).

அரசனின் கீழ், தளஆட்சி, முன்போலவே, மூப்பர்களின் கையிலிருந்து (*1 அர 21:8*). பெரிய ஊர்களிலும் நகரங்களிலும் அரசனுக்குரிய காரியங்களைக் கவனிக்கவும் வரிகளைச் சேகரிக்கவும் (*22:26*) அரசன் தனது பிரதிநிதியை நியமித்தான். நடுவர்களும், மற்ற அதிகாரிகளும் அரசனின் அதிகாரத்திற்கு உட்பட்டவர்களாயினர் (*1 நாள் 23:4; 26:29*).

ஆட்சி செய்வதற்கும் வரிகளைச் சேகரிப்பதற்கும் வசதியாக, சாலமோன் நாட்டை மாவட்டங்களாகப் பிரித்தார். வடபகுதிகளில் பன்னிரண்டு மாவட்டங்களாகவும், யூதா ஒரு தனிப்பட்ட மாவட்டமாகவும் அமைந்தன. ஒவ்வொன்றிற்கும் ஒரு தலைவர் இருந்தார் (*1 அர 4:7-28*).

பலவகையான அரசவை அலுவலர்கள் இருந்தனர். இவர்கள் அரச ஊழியர்கள் அல்லது அதிகாரிகள் என்றழைக்கப்பட்டனர். இவர்கள் ஆட்சி அமைப்பை நடத்தினர். சாலமோன் காலத்திய முக்கிய அதிகாரிகளின் பட்டியல் 1 அர 4-இல் கொடுக்கப்பட்டுள்ளது. இவர்களில் சிலர் அரசனின் சொத்துக்களைக் கண்காணித்தவர். இவர் பிற்காலத்தில் பிரதம அமைச்சர் என்றழைக்கப்பட்டார். இவரது அதிகாரம் அரசனுடையதுக்கு மட்டும் அடுத்ததாகும் (*2 அர 19:2; ஏச 22:15. 20-22; காண்க. ஆதி 41:40*). *பதிவாளர்:* இவர் அரசனுக்குச் செய்திகளைக் கொண்டு வருபவர். அரசனின் பெயரில் பேசுபவர். அரசை மேற்பார்த்தார். *அரசச்செயலர்:* அரண்மனையின் மேலாளனுக்கு அடுத்த படியில் உள்ளவர் (*2 அர 18:18*). இவரின்கீழ் ஒரு பெரிய எழுத்தர்கள் குழு செயல்பட்டது. இவர்கள் அதிகார ஏடுகளையும், பட்டியல்களையும், கடிதங்களையும் கவனித்துக் கொண்டனர். (*எரே 36:10-12*). கட்டாய வேலைத் திட்டத்தைச் செயல்படுத்துபவர் (*1 அர 12:18*); முக்கிய வருவாய்த் துறை அதிகாரி (*4:5*): வரிகளைச் சேகரிப்பதும் அரசனது தேவைக்கான பொருட்களையும் கவனித்துக் கொள்வது இவரது கடமையாகும். ஆலோசகர் (*2 சாமு 16:23*), அரசனது குரு (*20:26*) அரசனது நண்பன் (*1 அர 16:23*) போன்ற பதவிகளும் விவிலியத்தில் குறிக்கப்படுகின்றன.

*3. நாடு கடத்தலுக்குப்பின் வந்த காலம்:-* பாரசீகர்கள் காலத்தில் யூதர்கள் கலாச்சார, சமயத் தன்னாட்சி கொண்டிருந்தனர்; போர்,

அரசியல், அதிகாரம், பேரரசின் ஆளுநர்களையும் அவர்களது அதிகாரிகளையும் சேர்ந்ததாகும். ஆற்றுக்கு அப்பாலுள்ள சிற்றரசின் ஒரு மாநிலமாக யூதா இருந்தது (எஸ் 5:6). வரிகளைச் சேகரிப்பதற்கு ஏதுவாக யூதா பல மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு மாவட்டமும் ஒரு ஆட்சியாளனைக் கொண்டிருந்தது (நெக 3:9-18). இந்த அடிப்படை அமைப்பு, எல்லைகள் வேறுபட்டாலும், உரோமையர் காலத்திலும் நீடித்தது.

மக்களின் சமய, கலாச்சார வாழ்வு பற்றிய காரியங்கள் பெரிய குரு (எஸ் 3:2) குருக்கள், லேவியர், மூப்பர்கள் ஆகியோரின் பொறுப்பில் இருந்தன. இவர்கள் சட்டத்தைப் போதித்தனர். அதற்கு விளக்கம் அளித்தனர் (7:6; 10). நீதி வழங்கினர். தண்டித்தனர் (10:8). ஆலயத்தை மீண்டும் கட்டி எழுப்பினர் (6:7) உரோமையர் காலத்தில் எழுபத்திரண்டு மூப்பர்கள், குருக்கள், சட்ட வல்லுநர்கள் அடங்கிய 'சனேதிரின்' என்ற பொது சங்கம் பாலஸ்தீனத்தில் யூதகாரியங்களைக் கவனித்துக் கொண்டது.

சிற்றூர்களில், முன்பு இருந்தது போலவே, மூப்பர்கள் அவை கூடி ஊரின் காரியங்களைக் கவனித்துக் கொண்டது (எஸ் 10:14; யூதி 7:23).

2. புதிய ஏற்பாடு:- கி.பி. முதலாம் நூற்றாண்டில் பாலஸ்தீனத்தில் ஆட்சி அமைப்பு உரோமையரின் நேரடி ஆட்சியும் துணை அரசர்களின் ஆட்சியும் சேர்ந்த ஒட்டுமானமாய் இருந்தது. நூற்றாண்டு பெரிய ஏரோதன் பாலஸ்தீனத்தைக் கொடுமையாக ஆட்சி செய்தலோடு தொடங்கியது (மத் 2:16). அவரை அடுத்து அவருடைய மூன்று பிள்ளைகள் அரசுக்கு வந்தனர். அர்க்கெலா இதுமேயா, யூதேயா, சாமாரியா ஆகிய பகுதிகளை ஆண்டனர். அவரது இரத்த வெறி அவரது தகப்பனுடையதைப் போன்றே மோசமானதாக இருந்தது (2:22). ஆகவே கி.பி. 6-இல் உரோமையர் அவரை நாடு கடத்தினர். பிலிப்பு யோர்தானுக்கு அப்பாலுள்ள வடபகுதிக்குச் சிற்றரசனாக இருந்தார் (லூக் 3:1). ஏரோது அந்திப்பா கலிலேயாவுக்கும் பெரெயாவுக்கும் சிற்றரசனாக இருந்தார். இவர் திருமுழுக்கு யோவானின் தலையை வெட்டச் செய்தார். இயேசுவின் செயல்களை கண்காணித்தார். அவரது விசாரணையின் போது அவரை இழிவுபடுத்தினார் (9:7-9; 23:6-12). இவர்கள் மூவருக்குப்பின் ஏரோது அகிரிப்பா ஆட்சிக்கு வந்தார். ஒன்றித்த பாலஸ்தீனத்தை ஆட்சி செய்தார். ஆனால் செசாரியாவில் திடீரென்று இறந்தார் (அ.ப. 12). அர்க்கெலா நாடுகடத்தப்பட்டபின், பேரரசன் திபேரியு, போந்தியு பிலாத்தை யூதேயாவின் ஆளுநராக நியமித்தார். ஆளுநர்கள் போர்த் தலைவர்கள். கிளர்ச்சி செய்யும் அல்லது புதிதாகச் சேர்க்கப்பட்ட பகுதிகளை ஆட்சி செய்ய நியமிக்கப்பட்டவர்கள். பிற்காலத்தில் அந்தோனியு பெலிக்சு (23:24), போர்கியு பெஸ்து (24:27) யூதேயாவின் மேல் ஆளுநர்களாக ஆட்சி செய்தனர்.

வரிகளைச் சேகரிப்பவர்கள், (லூக் 19:2-10), நூற்றுவர் தலைவன் (7:1-10; அ.ப. 10:1; 27:1), காவலர்கள் (16:35) போன்ற சிறிய அதிகாரிகளும் இருந்தனர்.

**ஆட்சி புரியும் அதிகாரம்** (DOMINION)

1. இது பல சொற்களில் மொழிபெயர்ப்பு; ''ஆதிக்கம்'' என்ற பொருளையே கொண்டுள்ளது: மிதி, ஆட்சி செய்; மேல் ஆதிக்கம் செலுத்து, மேலாளராக இரு; அதிகாரம்; அரசுரிமை. இச்சொல் கடவுளின் அரசாட்சியையும், அரசியல் அதிகாரத்தையும், இயற்கையின்மீது மனிதனுக்குள்ள அதிகாரத்தையும், பாவம் மனிதன்மீது கொண்டுள்ள ஆதிக்கத்தையும் எடுத்துரைக்கின்றது. எபிரேயர்களுக்கு எல்லா ஆட்சி அதிகாரமும் கடவுளுக்குரியது (யோபு 25:2; சங் 22:28). சிலசமயம் இது மனிதன் இயற்கையின் மீது கொண்டுள்ள அதிகாரத்தினால் அவனால் பகிர்ந்து கொள்ளப்படுகின்றது (ஆதி 1:26; சங் 8:6); ஆண்டவரால் தேர்ந்துக்கொள்ளப்பட்ட அரசனால் நாடுகளின் மேல் பகிர்ந்து கொள்ளப்படுகின்றது (சங் 2:7). இறுதிக் காலத்தில்

உன்னதரின் பரிசுத்த இனத்தார்க்கு அரசும் அரசுரிமையும் வானத்தின்கீழ் எங்கணுமுள்ள அரசுகளின் மகிமை பெருமையும் அளிக்கப்படும் (தானி 7:14-27). அடிக்கடி இச்சொல் போரில் பெறுகின்ற வெற்றியினால் கிடைக்கும் அதிகாரத்தையும், வல்லமையையும் குறிக்கின்றது (எண் 24:19; நீதி 14:4; 1 அர 4:24; நெக 9:28; சங் 19:13; 119:133). பழைய ஏற்பாடு, புதிய ஏற்பாடு ஆசிரியர்கள் கடவுளின் முடிவில்லா அரசாட்சியைக் குறிப்பிடுகின்றனர் (சங் 72:8; தானி 4:3; செக் 9:10; 1 தீமோ 6:16; 1 பேதுரு 4:11; 5:11; யூதா 25; திருவெளி 1:6).

2. மற்றொரு இடத்தில் ''அரியணை சூழ்வோர்; அதிகாரம் தாங்குவோர் தலைமை ஏற்போர்; ஆட்சிபுரிவோர்'' ஆகிய வானதூதர்களின் வரிசைகளைக் குறிக்கின்றது (எபே 1:21; கொலோ 1:16). ஆட்சி புரிவோர் மேலாதிக்கம் என்பது வானத்தூதர்கள் வகித்த பதவிகளிலேயே அரியணை சூழ்வோரோடு மிகவும் சேர்ந்து உயர்ந்ததாகத் தோன்றுகிறது. ஒருவேளை இவர்கள் மூலத்தில் புறஇனத் தேவர்களாக இருக்கலாம். இவர்களை, இறைவனது அவையில் அங்கத்தினர்களாகவும் நாடுகளை மேற்பார்ப்பவர்களாகவும் எபிரேயர் கருதியிருக்கலாம் (உப 32:8; ஏச 24:21; தானி 10:13; சீரா 17:17). கொலோ 1:16-இல் இச்சொல் நல்ல பொருளில் பயன்படுகிறது. ஆனால் அவர்கள் வெற்றி கொள்ளப்படவேண்டும். ''தலைமை ஏற்போர், ஆட்சிபுரிவோர், வலிமை மிக்கோர் அனைவரையும் தகர்த்துவிட்டு கடவுளும் தந்தையுமானவரிடம் அரசை ஒப்படைப்பார்'' (உரோ 8:38; 1 கொரி 15:24; எபே 6:12; கொலோ 2:15).

## ஆட்டுக் குட்டி (KID)

இது பெரும்பாலும் வெள்ளாட்டுக் குட்டியைக் குறித்தது. பழம் இஸ்ராயேலில், வெள்ளாட்டின் தாயைவிடவோ, செம்மறிக் குட்டியைவிடவோ ஆண் வெள்ளாட்டுக் குட்டி மிகவும் கழித்துகட்டக் கூடியதாகவும், விலை குறைந்ததாகவும் கருதப்பட்டது. ஆகவே, விருந்தில், கறியாகவும், சிறிய பரிசாக அளிக்கவும் பயன்பட்டது (ஆதி 27:9; 38:17; நீதி 6:19; 13:15; 15:1; 1 சாமு 10:3; 16:20; லூக் 15:29). சடங்கு உணவில் பயன்பட்டது (எண் 11:15; நீதி 6:19; 2 நாள் 35:7). ஒருவயது நிரம்பிய ஆட்டுக்குட்டியே பாஸ்கா உணவுக்குச் சரியானதாகும் (யாத் 12:5; 2 நாள் 35:7); ஆட்டுக்கட்டிகளைப் பலியிடுவதற்கான விதிமுறைகள் பற்றி எண் 15:11-16-இல் காண்க; வருங்கால அமைதி பற்றி ஏசயா காணும் காட்சியில் வெள்ளாட்டுக் குட்டியோடு சிறுத்தைப் புலி படுத்துறங்கும் என்கிறார் (ஏச 11:6).

ஆட்டுக் குட்டியை அதன் தாயின் பாலிலே சமைக்காதிருப்பாய் என மீண்டும், மீண்டும் வலியுறுத்தப்படுகிறது (யாத் 23:19; 34:26; உ ப 14:21); இது அன்றைய கானானியர்களின் சடங்குக்கு எதிராகக் கூறப்பட்டதாக இருக்கலாம். இவ்வாறு செய்வது ஏன் தடை செய்யப்பட்டதென்பது தெளிவாக இல்லை. இச்செயல் சிலைவழிபாட்டோடு தொடர்புடையதாக இருந்ததாலோ என்னவோ இது தடை செய்யப்பட்டிருக்கலாம். உகரிட்டிக் நாடகத்தில் 'கடவுளின் பிறப்பு' என்பதில் ஒரு வெள்ளாட்டுக் குட்டி அதன் தாயின் பாலில் சமைக்கப்பட்டதாகக் காட்டப்படுகிறது. இது தொடர்ந்துவரும் ஏழு வருடங்களிலும் நல்ல விளைச்சல் விளைய வேண்டுமென்பதை நிச்சயப்படுத்த வேண்டுமென்பதற்காகவே. இது பின்னர் யூதர்களது உணவு முறையில் ஒதுக்க வேண்டிய ஒன்றாக மாறிவிட்டது.

## ஆட்டுத் தோல்

விவிலிய பாலஸ்தீனத்தில் ஆட்டுத் தோல்கள்தான் பொதுவாக பயன்படுத்தப்பட்ட தோல்களாகும். இதைப் பற்றிய விவிலிய குறிப்புக்கள் சிலவே உள்ளன (யாத் 25:5; 26:14; 35:7.23; 36:19; 39:34).

எபி 11:37-இல் வரும் ''ஆட்டுத்தோலையும் செம்மறியின் தோலையும் போர்த்தி அலைந்தனர்'' என்ற விவரிப்பு கடந்தகால புனிதர்கள் அனுபவித்த வறுமையை எடுத்துக் கூறுகிறது.

**ஆட்டுப்பட்டி** (SHEEPFOLD)

ஆட்டு மந்தையைச் சுற்றி, ஆடுகளை இரவுநேர ஆபத்துக்களான, திருடர்கள், கொடிய மிருகங்கள், கால சூழ்நிலை இவற்றிலிருந்து காப்பாற்றுவதற்காக கட்டப்பட்டுள்ள பட்டி (ஆதி *31:39; 1* சாமு *17:34)* சில நேரங்களில் பல இடையர்கள் ஒன்று சேர்ந்து எல்லா ஆடுகளையும் ஒரே பட்டியில் அடைத்துவிட்டு ஒரு வேலையாளை இரவு நேரத்தில் மேற்பார்வை செய்யும்படி அமைத்து விடுவார்கள். காலையில் அந்தந்த இடையர்கள் தங்களுடைய ஆடுகளை கூவி அழைத்துக் கொள்வார்கள் (யோவா *10:1* தொ). நிரந்தரமான இந்த மாதிரியான பட்டியில் கதவு இருக்கும் *(10:2).* அல்லது கல்லால் கட்டப்பட்ட சுவரைக் கொண்டிருக்கும் (எண் *32:16).*

**ஆட்டு வாயில், மந்தை வாயில்** (SHEEP GATE)

எருசலேமின் வடகிழக்கு மூலையில் உள்ள ஒரு வாயில். நெகமியாவால் திரும்பக் கட்டப்பட்டது (நெக *3:1.32; 12:39).* பெத்தசுதா குளத்துக்கருகில் இருந்தது (யோவா *5:2).*

**ஆணி** (NAIL)

*1.* தச்சர்கள் பயன்படுத்தும் ஆணிகள். குலதெய்வங்களையும் பொருள்களையும் சுவரில் அசையாதபடி ஆணிக்கொண்டு அடித்து நிலைப்படுத்துவர் (ஏச *41:7;* எரே *10:4). 1* நாள் *22:3* தாவீது எவ்வாறு கோவிலின் கதவிற்கு ஆணிகள் செய்வதற்காக இரும்பை சேகரித்து வைத்திருந்தார் என்று கூறுகிறது. *2* நாள் *3:9* சந்நிதானத்திற்குத் தேவையானத் தங்க ஆணிகளைப் பற்றிக் கூறுகின்றது.

விவிலியத்தோடு தொடர்புள்ள இடங்களைத் தோண்டி ஆராய்ச்சி செய்தபோது சில ஆணிகள் கிடைத்தன. பழைய ஆணிகள் பெரும்பாலும் வெண்கலத்தால் செய்யப்பட்டிருந்தன. பிற்காலத்தில்தான் ஆணிகள் இரும்பினால் செய்யப்பட்டிருக்கின்றன. அதிலும் சிறிய ஆணிகள் வெண்கலத்திலேயே உள்ளன. கண்டெடுக்கப்பட்ட ஆணிகள் இப்போது தயாரிக்கப்படும் ஆணிகளோடு சற்று ஒத்திருக்கிறது. சில ஆணிகள் நீளமாக உள்ளது. சதாரனமாக சமாரியாவில் கண்டெடுக்கப்பட்ட ஆணிகள் 7-9 அங்குலம் நீளம் இருந்தன; சிறிய ஆணிகள் 1-1.5 அங்குலம் நீளம் இருந்தன. சில ஆணிகளில் தலைகள் அகலமாகவும் கூம்பின் வடிவம் போன்றும் இருந்தன. ஆணியின் காம்புகள் சதுரவடிவில் கூராக இருந்தன. இப்போதுள்ள ஆணிகள் போன்று வட்ட வடிவில் கூராக அப்போது இல்லை.

இயேசுவின் கைகளை ஆணியால் சிலுவையில் அடித்து நிறுத்தினார்கள் என்று யோவா. *20:25*-லிருந்து அறிகின்றோம். எருசலேமைச் சுற்றிய புதைபொருள் ஆராய்ச்சியில் *5-7* அங்குலம் உள்ள பல ஆணிகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இவை உரோமையர் காலத்தைச் சேர்ந்தவை.

*2.* கொலோ *2:14*-இல் ''நமக்கு எதிரான விதிகள் பலகொண்ட கடன் பத்திரம் ஒன்று இருந்தது; அதை அழித்துவிட்டார். சிலுவையில் அதை அறைந்து ஒழித்துவிட்டார்'' என்று பார்க்கின்றோம். இதைவிளக்கச் சட்டங்கள் செல்லுபடியில்லை என்று அறிவிக்க அச்சட்டங்கள் அடங்கிய பிரதியை பொது இடங்களில் வைத்து ஆணியால் அறைவார்கள் என்ற பழக்கம் சுட்டிக் காட்டப்படும். இதற்கான ஆதாரம் ஒன்றும் கிடைக்கவில்லை.

**ஆணை, ஆணையிடல்** (OATH)

இறைவனை (தேவர்களை)ச் சாட்சியாகக் கூப்பிட்டு அறிக்கையிடுவது அல்லது வெளிப்படையாக வாக்குறுதி அளித்தல், சமயச் சார்பற்ற வியப்புரை; இறைவனது பெயரைக் கவனமில்லாது பயன்படுத்துதல், அதனால் இறைநிந்தை.

*1.* பழைய ஏற்பாடு:- ஆணையிடுதல் இஸ்ராயேலின் சமூகத்திலும் பழம் மேற்காசியாவிலும் வாக்குறுதிக்கு உறுதிப்பாடு அளிக்கும் ஒரு முறையாகும். உடன்படிக்கையில் ஈடுபடும் கட்சியினர், தங்கள் உடன்பாட்டிற்குச் சாட்சியாக இருக்கும்படித் தங்

கள் தெய்வத்தை (தெய்வங்களை)க் கூப்பிட்டு, ஆசீர், சாபங்கள் போன்ற குறிப்பிட்ட தண்டங்களால் தங்களையே கட்டுப்படுத்திக் கொண்டனர். இது உருகும் மெழுகு உருவங்களால் அல்லது இரு பகுதியாக வெட்டப்பட்ட விலங்குகளால் அடையாளமாக உணர்த்தப்பட்டது (1 சாமு 11:7). ஆணையிடுபவர் சாதாரணமாய், தனது வலக்கரத்தை வானத்தை நோக்கி உயர்த்துவார் (உப 32:40; ஆதி 14:22; தானி 12:7). இந்தச் சைகையை இறைவன் பயன்படுத்துவதாகச் சித்தரிக்கப்படுகிறார் (ஏச 62:8; யாத் 6:8; எச 20:5). இறைவன் (அல்லது தெய்வங்கள்) உடன்படிக்கையை முறிக்கும் கட்சியினர்மேல் தண்டமாகக் குறிப்பிட்ட சாபங்களை நிறைவேற்றி, உடன்பாட்டைச் செயல்படுத்துவார் என்று எதிர் பார்க்கப்பட்டது (யோசு 9; 2 சாமு 21:1-9).

இஸ்ராயேலர் யாவேயின் பெயரால் ஆணையிட அனுமதிக்கப்பட்டிருந்தனர். ஆகவே அவரது பெயரை அடிக்கடி கூவியழைத்தனர். எ.கா. ''கடவுள் எனக்குத் தகுந்த கைம்மாறு அளிப்பாராக (1 சாமு 14:44), ''இது உயிருள்ள ஆண்டவர் மீது ஆணை'' (நீதி 8:19; 1 சாமு 19:6; 2 அர 5:16-20). பழம் மேற்காசிய நாடுகளிடையே ஏற்பட்ட உடன் படிக்கைகளில் இருபக்கத்தினரும் தங்களது தேவர்களின் பெயரால் ஆணையிட வேண்டும். ஒரு கடவுளின் பெயரால் ஆணையிடுதல், அக்கடவுளையும் அவரது ஆற்றலையும் ஏற்றுக் கொள்வதாகும். இது, இறையொருமைக்கோப்புடைய இஸ்ராயேலர்களுக்குப் பிரச்சினை உண்டாக்கியது. பிற தேவதைகளின் பெயரால் ஆணையிடுபவர்களை, இறைவாக்கினர் கடுமையாகக் கண்டனம் செய்கின்றனர் (எரே 5:7; 12:16; ஆமோ 8:14; செப் 1:4-6).

ஆணைகள் முழுப்பற்றுடன் ஒருவர் தன்னையே கட்டுப்படுத்திக் கொள்ளுதலாகும். ஆகையால் எளிதில் ஆணையிடக் கூடாது. பத்துக் கட்டளைகளில் மூன்றாவது வீணாக ஆணையிடுவதைத் தடை செய்கிறது (யாத் 20:7; உப 5:11). ஒன்பதாவது பொய்ச் சாட்சி சொல்வதைத் தடை செய்கிறது (யாத் 20:16; உப 5:20; காண்க. 7:9). ஓர் ஆணை, செய்தபின், அது நிறைவேற்றப்பட வேண்டும் (நீதி 11:30-32; திருவுரை 5:4-5). ஆனால் சில நிபந்தனைகளுக்கேற்ப நீக்கப்படலாம் (எண் 30:1-15). ஆணை, அதைச் செய்தவரின் வழித்தோன்றல்களையும் கட்டுப்படுத்தக் கூடும் (ஆதி 50:25-26; யோசு 9). இதுவே, ஆணையிடுமுன், தொடையின் கீழ் (பிறப்புறுப்புகள் மேல்) கை வைக்கும் செயலின் அடையாளப் பொருளாகும் (ஆதி 24:9; 47:29-31).

இரு ஏற்பாடுகளுக்கும் இடைப்பட்ட காலத்தில் ஆணையிடுதல் மிகவும் சிக்கல் மிக்கதாகியது. கும்ரான் சபையினருக்கு ஆணையிடுதல் முக்கியமானதாகும். மிஸ்னா இதுபற்றி ஒரு சிறு நூலையே கொண்டுள்ளது.

2. புதிய ஏற்பாடு:- யூதச்சட்டத்தின் மற்ற பிரச்சினைகள்மேல் காட்டுவதுபோல ஆணையிடுதலைப் பற்றி மத்தேயு நற்செய்தி ஒன்றே மிகவும் அக்கறை காட்டுகிறது. படிமரபுடைய ஆணைபற்றிய பரிசேயர்களின் சிக்கல் மிக்க முறையை மத்தேயு மட்டுமே குறிப்பிடுகிறார் (மத் 23:16-22). சட்டத்தை நிறைவேற்றுவதைப்பற்றிய உரையில் (5:17-48) ஆணையிடவே வேண்டாம் என்று தம்சீடர்களுக்குக் கற்பிக்கிறார் இயேசு (5:33-34 ; காண்க யாக் 5:12). மாறாக அவர்களது பேச்சு எவ்வளவு நம்பிக்கைக்குரியதாய் இருக்க வேண்டும் என்றால் எளிய ''ஆம்'' அல்லது ''இல்லை'' என்பதே போதும் (5:36-37). ஆயினும், பேதுரு, இயேசுவைத் தெரியாது என்று மும்முறை ஆணையிட்டு மறுதலிக்கிறார் (மத் 26:69-75; மாற் 14:66-72; லூக் 22:54-62).

ஒத்தமை நற்செய்திகளில் ''உறுதியாக உங்களுக்குச் சொல்லுகிறேன்'' என்று இயேசு கூறுவது (மத் 5:18; 6:2; மாற் 3:28; 8:12; லூக் 4:24; 12:37) மென்மையான முறையில் ஆணையிடுவதாகும். இது மத்தேயுவால் தரப்படும் வழிகாட்டுமுறைக்கு ஒத்துப்

போகிறது. யோவான் தன் நற்செய்தில், அதிக அழுத்தமுடைய ''உண்மையிலும் உண்மையாக உங்களுக்குச் சொல்லுகிறேன் '' என்ற வாக்கைப் பயன்படுத்துகிறார் *(யோவா 1:51; 3:3; 6:26)*. பவுலும் தனது அக்கறையையும் ஈடுபாட்டையும் காட்ட மென்மையான ஆணை வாய்பாடுகளைப் பயன்படுத்துகிறார். எ.க. ''கடவுளைச் சாட் சியாகக் கூப்பிட்டு...'' *(2 கொரி 1:23*; ''கடவுள் சாட்சி'' *(கலா 1:20)*; ''இதற்குக் கடவுளே சாட்சி'' *(பிலி 1:8)*.

**ஆண்டவரின் இரவுணவு, ஆண்டவரின் விருந்து - நற்கருணை**

திருச்சபையின் பொதுவான புனித உண விற்குப் பவுலால் அளிக்கப்பட்ட இத்த லைப்பு *(1 கொரி 11:20)*, இறுதி உணவின் போது, தன்னுடைய இரண்டாவது வருகை வரை தன்னுடைய நீடித்த நினைவுச்சின்ன மாக இருக்க இயேசுவால் ஏற்படுத்தப்பட்டு, இயேசு தன்னுடைய சீடருடன் கொண்டி ருந்த விருந்துத் தோழமையின் தொடர்ச்சியி னைக் குறிப்பிடுகின்றது.

*1. சடங்கின் பெயர்கள்:-* 'ஆண்டவரின் இரவுணவு அல்லது விருந்து' என்னும் சொற் றொடர் புதிய ஏற்பாட்டில் பவுலைத் தவிர வேறு எவராலும் பயன்படுத்தப்படாவிடி னும் திருவெளி *19:9*-இல் உள்ள 'செம்மறி யின் மணவிருந்து' இதனுடன் தொடர்புடை யதாக இருக்கலாம். கிரேக்க ஆசிரியர்களி லும் கடவுள்களுக்கும் மனிதர்களுக்கும் இடையிலான ஒன்றிப்பை எடுத்துக்காட்டும் உணவுச் சடங்குகள் பற்றிய சுவடிகள் மற் றும் கல்வெட்டுகளிலும், இச்சொல் காணப் படுகிறது. ஆதித்திருச்சபையின் தந்தையர் இச்சொல்லை ஏன் மிக அரிதாக உபயோகித் தனர் என்று இச்சூழ்நிலை விளக்கலாம். அருட்சாதனச் சடங்காக் கருதப்படாத தோழமை மற்றும் அன்பு போன்ற நோக்கங் களுக்கான திருச்சபை கொண்டிருந்த தனிப் பட்ட இரவுணவான அன்பு உணவைக் (அகபே) குறிக்க அலக்சாந்திரிய கிளமெந்து வும், இப்போலித்துவும் இச் சொல்லைப் பயன்படுத்துகின்றனர்.

லூக்கா நற்செய்தி, அப்போஸ்தலர் பணி ஆகியவற்றின் ஆசிரியர், திருவருட்சாதன மற்றும் சமூக பண்புகளைத் தெளிவாக வேறுபடுத்தாமல், திருச்சபையின் பொது உணவை குறிப்பிட, அப்பத்தை பிட்குதல் என்றும் சொற்றொடரைப் பயன்படுத்துகி றார் *(அ.ப. 2:42-46; 20:11; லூக் 24:35)*. செபங்களுடன் சேர்ந்து இச்செயலானது, அப்போஸ்தலர்களுடன் திருச்சபை கொண் டிருந்த தோழமை அல்லது ஒன்றிப்பின் சிறப்பு அடையாளமாக இருந்தது. கிறிஸ்து வினுடைய அருட்சாதன உடல் மற்றும் இரத் தத்திற்குத் தெளிவான சுட்டுக் குறிப்புடன் 'பங்கு கொள்ளுதல்' என்னும் சொல்லைப் பவுல் ஓரிடத்தில் பயன்படுத்துகிறார் *(1 கொரி 10:16)*. மற்ற இடங்களில் கிறிஸ்துவு டனும், தூய ஆவியுடனும், ஒருவர் ஒருவரு டனும், மேலும் குறிப்பாக நற்செய்தியை பரப்புவதில் பங்கு பெறுவதிலும் மற்றும் ஏழைகளுக்கு உதவுவதிலும் கிறிஸ்தவரின் தோழமையின் பரந்த சூழ்நிலைகளில் ''பங் குகொள்ளுதலை'' அவர் பயன்படுத்துகிறார்.

இரண்டாம் நூற்றாண்டுமுதல் கிறிஸ்தவ ஆசிரியர்கள் (உ-ம்: திதாக்கே, இஞ்ஞாசி யார், யுஸ்தின், இரேனேயஸ்) ஆண்டவரது இரவுணவின் முக்கிய சடங்கு முறையான, அப்பத்தின் மீதும் இரசத்தின்மீதும் கூறப்ப டும் நன்றியறிதலின்று பெறப்பட்ட 'நற்கரு ணை' என்னும் சொல்லையே பயன்படுத்தி னர். *1* கொரி *14:16*-யை தவிர்த்து, நற்க ருணை என்னும் சொல் நிறைவான பொரு ளில் பயன் படுத்தப்படுவது புதிய ஏற்பாட் டில் காணப்படவில்லை. சில விளக்கவுரை கள் 'புகழ்ச்சி பலி'-யில் *(எபி 13:15)* இந்த அருட்சாதனத்திற்கு மறைவான ஒரு குறிப் பைக் கண்டாலும் கொலோ *3:16-17*; எபே *5:19-20*-ன் சுருக்கத்துடன் ஒப்பிடப்படக்கூ டிய, கிறிஸ்தவ வாழ்வு மற்றும் வழிபாட் டின் விளக்கமே இதுவென சூழ்நிலையா னது காட்டுகிறது.

*2. கடைப்பிடிக்கப்படும் நேரங்கள்:-* ஆண் டவருடைய இரவுணவின் அமைப்பும்

பொருளும், தனது பாடுகளுக்கு முன்னர் சீடர்களுடன் உண்ட இறுதி இரவுணவின் போது தமது சொற்களிலும் செயல்களிலும் இயேசுவால் திருச்சபைக்கு அளிக்கப்பட்டது. உயிர்ப்பைப் பற்றிய பாரம்பரியத்தில் வரும் விருந்துத் தோழமை மற்றும் பொது உணவுச் சூழ்நிலையில் உயிர்த்த இயேசு சீடர்களுக்கு அளித்த காட்சிகளில் வரும் பழமையான மீண்டும் மீண்டும் காணப்படும் கூறையும் நாம் கவனிக்கத் தவறக்கூடாது (லூக் 24:30-43; யோவா 20:19; 21:9-14; அ.ப. 10:41; எரோனிமு குறிப்பிடுவது போன்று, எபிரேயருடைய நற்செய்தியில் குறிப்பிடப்பட்டுள்ள யாக்கோபின் காட்சி). 'அப்பம் பிட்குதலுடனான' உயிர்ப்பின் விசுவாசத்தினுடைய நெருங்கிய இணைப்பானது, அ.ப. 2:46-47-இல் சுருக்கி அளிக்கப்பட்டிருப்பது போல, திருச்சபையினுடைய தொடக்கத்திலிருந்தே ஆண்டவருடைய இரவுணவினுடைய கொண்டாட்டத்தின் சிறப்பியல்பு மற்றும் களிப்பான பண்பு ஆகியவற்றை விளக்குகிறது: ''நாடோறும் தவறாமல் ஒரே மனதாய் கோயிலில் கூடினர்; வீடுகளில் அப்பத்தைப் பிட்டு, மனமகிழ்வோடும் கபடற்ற உள்ளத்தோடும் உணவைப் பகிர்ந்து கொண்டனர். இங்ஙனம் கடவுளைப் புகழ்ந்து வந்தனர்; மக்கள் அனைவருக்கும் வேண்டியவர்களாய் விளங்கினர்''.

இப்பகுதி ஆதி யூத கிறிஸ்தவர்களின் இரவுணவு தோழமையானது அன்றாடப் பழக்கமாக இருந்ததைக் குறிப்பிடுகிறது. இரண்டாவது வருகையில் வானகத்தினின்று இயேசு திரும்பி வருவது உடனடியாக நிகழக்கூடியதென அவர்கள் கொண்டிருந்த உயிருள்ள எதிர்பார்ப்பின் நோக்கில், இத்தகைய நிலை இருந்திருக்கக் கூடும். இத்தகைய இறுதி உணவில் வரும் இயேசுவின் கூற்றுக்கள் அவரது அரசை வெளிப்படுத்துதல் பற்றிய இறைவனின் வாக்குறுதி உடனடியாக நிறைவேறுதலைச் சுட்டிக்காட்டுகின்றன. இந்தத் தொடக்க காலத்தில், திருச்சபையானது, தூய ஆவியின் வெளிப்படையான பொழிவின் மூலம், இறுதிக்காலங்களில் பங்கெடுக்கிறோம் என்ற மன நிலையால் மீண்டும் வலியுறுத்தப்பட்டு இருந்தமையால், மீட்பினுடைய தொடர் பாஸ்கா அனுபவத்தில் வாழ்ந்து வந்தது. ஆயினும், இயேசுவினுடைய வருகையின் தாமதமும், எருசலேம் சமூகத்தின் குறிப்பிட்ட எல்லைகளுக்கு அப்பாலும் திருச்சபை பரவியதும், அடிக்கடி பொதுக் கூட்டங்களில் பங்கு பெறுவது குறைந்த அவசரமானதாகவும், செயல்முறையானதாகவும் தோன்றச் செய்தன. கிறிஸ்தவர்கள் கூடும்பழக்கத்தின் வளர்ச்சியினை நாம் விரிவாக எடுத்துக்கூற இயலாவிட்டாலும், அப்போஸ்தலிக்க காலமுடிவிற்கு முன்னரே, அக்கூட்டங்களின் வழக்கமான நேரமானது, 'ஆண்டவரின் நாள்' என்று கிறிஸ்தவர்கள் அழைக்கின்ற 'வாரத்தின் முதல் நாளாகிய' ஞாயிற்றுக் கிழமையாகும் (அ.ப. 20:7; 1 கொரி 16:2; திருவெளி 1:10) என்பது தெளிவாக உள்ளது.

திருச்சபையினுடைய கூட்டான வழிபாட்டிற்குத் தனிப்பட்ட நாளாக ஞாயிறு உருவான வழிமுறையினை நாம் ஊகிக்க மட்டுமே முடியும். திருச்சபையின் பெரும்பாலான உறுப்பினர்கள் யூதர்களாக இருந்து இயேசுவைப் பற்றிய யூத மற்றும் கிறிஸ்தவ விசுவாசங்களுக்கு இடையே விளங்கிய நெருக்கடிநிலை, தோழமையை வெளிப்படையான முறிக்கத் தூண்டாத வரையில், யூதக் கிறிஸ்தவர்கள் ஓய்வு நாளில் ஆலயத்திலும், செபக்கூடத்திலும் தொடர்ந்து வழிபாடு புரிந்தனர் என்று நாம் ஊகிக்கலாம். யூதர்களுக்கு ஏழாவது நாளின் முடிவையும், வாரத்தின் முதல் நாளின் துவக்கத்தையும் குறிப்பிடுகின்ற ஓய்வுநாளின் சூரியன் மறையும் நேரத்தில், கிறிஸ்தவச் சீடர்கள் 'அப்பம் பிட்குதலையும்' உள்ளடக்கிய தங்களுக்கே உரிய தனிப்பட்ட சடங்குகளுக்காக ஒன்றுகூடுவர். திருச்சபையானது உறுப்பினர் தொகையில் அதிக அளவு புறவினத்தாரைக் கொண்டதாக உருவானதாலும், யூதருடைய சமுகக் கூட்டங்களில் பங்கு பெறுவதிலிருந்து யூதக் கிறிஸ்தவர்கள் புறம்பாக்கப்பட்டதாலும் சனிக்கிழமை மாலை தொடங்கி பெரும்பாலும் விடியற்காலை வரை நீடித்த

கூட்டங்கள் (அ.ப. 20:7-11) கிறிஸ்தவ வழிபாட்டின் முதன்மை பெற்றன. திருச்சபையின் வழிபாட்டிற்காக வாரத்தின் முதல் நாளை தேர்வு செய்தமையானது தற்செயலானதாகவோ, அல்லது கிறிஸ்தவர்களுடைய திட்டமிட்ட தேர்வாகவோ இருப்பினும், அது இயேசுவின் உயிர்ப்பைப்பற்றிய கிறிஸ்தவ விசுவாசத்தைச் சுட்டிக்காட்டும் இறைவழிகாட்டுதலாக விரைவிலேயே புரிந்து கொள்ளப்பட்டது. திருச்சபையினுடைய வரலாற்றின் ஆரம்ப நூற்றாண்டுகள் முழுவதும், ஞாயிற்றுக் கிழமையில் ஆண்டவரது இரவுணவு பொதுவாகக் கடைப்பிடிக்கப் பட்டது. நற்கருணைச் சடங்குகளுடனான ஞாயிற்றுக்கிழமையின் ஒருமனதான இணைப்பானது, ஆண்டவரது இரவுணவை அவரது மரணத்தின் நினைவு கூறுதலாக மட்டுமில்லாமல், வருங்காலத்தில் முடிவில்லா வாழ்வின் அச்சாரமான அவரது உயிர்ப்பையும் புரிந்து கொள்வதற்கு, மற்ற எல்லாவற்றையும் விட, சிறப்பான முறையில் சாட்சியாக அமைந்துள்ளது.

3. சடங்கு முறை:- அப்போஸ்தலிக்கக் காலத்தில், ஆண்டவருடைய இரவுணவைப் பற்றி அதிக அளவில் விவாதிக்கப்பட்ட பிரச்சினை அது கடைபிடிக்கப்பட்ட முறையையாகும். இறுதி இரவுணவைப் போன்று, இக்கொண்டாட்டமும், ஒரு முழுதான இரவுணவையோ அல்லது உணவையோ கொண்டுள்ளதாக ஒருமனதாக ஏற்றுக்கொள்ளப்படும். ஆனால், ஆதிக்கிறிஸ்தவர்கள் ஆண்டவருடைய சிறப்பான ஏற்பாட்டின் தெளிவான நினைவு கூர்தலாகப் பெறப்பட்ட அப்பம் மற்றும் திராட்சை இரசம் ஆசீர்வதிக்கப்பட்ட மூலம் பொருட்களை, மற்ற உணவு மற்றும் அதனுடன் இணைந்த வழிபாடுகளைவிட, அவை அதிக புனிதமானவையாகவும், அருட்சாதன குணத்தைக் கொண்டவையாகவும் இருந்தன என்று வேறுபடுத்தியிருந்தனர், என்பதைச் சில திறனாய்வாளர்கள் ஏற்க மறுக்கிறார்கள். அதாவது, ஆதிதிருச்சபையானது நற்கருணைக்கும் அன்பு விருந்திற்கும் இடையே தெளிவான வேறுபாட்டைக் கடைபிடித்ததா?

அ. பொது உணவாக:- நற்கருணை மற்றும் அன்பு விருந்து என்னும் இருவித வழக்கங்களும் பிரிக்கப்பட்டிருந்தன என்றில்லாமல், வேறுபடுத்தப்பட்டிருந்தன என்று வேதசாட்சியான யுஸ்தின் (கி.பி. 150) காலத்திலிருந்தே தெளிவாக உள்ளது. அதற்குள்ளாக, நற்கருணையானது அப்ப, இரச பொருட்களை ஆசீர்வதித்துப் பகிர்ந்து கொள்ளுதலைக் கொண்ட காணிக்கையைக் கொண்ட சடங்கு உணவை மட்டுமே குறித்தது. அதனுடைய அருட்சாதன பண்பினால், அன்பு விருந்து இறந்த கிறிஸ்தவர்களின் நினைவாக அளிக்கப்பட்ட விருந்து, மற்றும் இழவு விருந்து ஆகியவற்றின் தோழமை மற்றும் பிறர் உதவித் தன்மையிலிருந்து தெளிவாக வேறுபடுத்தப்பட்டிருந்தது. துணை அப்போஸ்தலிக்க காலத்து ஆசிரியர்களின் குறிப்புகள் இச்சடங்கின் தொடக்க கால வளர்ச்சியில் இப்பிரச்சினையைத் தீர்க்க வேண்டிய சான்றுகளை அளிக்கவில்லை. முன்பே சொன்னபடி ''அப்பம் பிடுதல்'' என்ற குறிப்பும் இதில் அடங்கும். 'திதாக்கே' 9-10. 14-இல் உள்ள முழுமையான கட்டளைகளும் சர்ச்சைக்குரியவையே. இந்நூலின் காலம், இடம் மற்றும் பொருள் முதலானவை பற்றிய பிரச்சினைகளினால், இந்நூலை உறுதியான வழிகாட்டியாக எடுத்துக்கொள்ளமுடியாது. எனவே, நாம் இவ்வாறு பவுலின் கூற்றாகிய 1 கொரி 11:17-34-யை மட்டுமே முழுவதும் சார்ந்திருக்க வேண்டியிருக்கிறது.

யூதர்களிடையே மிகச்சாதாரண உணவும், குடும்பத்தலைவரால், உணவிற்கு முன்னும் பின்னும் இறைவனுக்கு அளிக்கப்பட்ட நன்றியாகிய ஆசீர்களால் புனிதப்படுத்தப்பட்டது. இந்த ஆசீர்களில் முன்பகுதி அப்பத்தை பிட்கும் போது உரைக்கப்பட்டது. மிகவும் பொதுவான, சமயச் சடங்குகளில் உணவிற்குப்பின், நீர் கலந்த இரசம் கொண்ட 'ஆசீரின் கிண்ணத்தின்' மேல் நன்றியுரை கூறப்பட்டு விருந்தில் பங்கு கொண்ட அனைவருக்கும் அளிக்கப்பட்டது. இவ்வாறு பொதுவில் பகிர்ந்து கொள்ளப்பட்ட சிறப்பான அருளானது, உணவின் புனிதப்படுத்தப்

பட்ட உட்பொருட்களுக்குப் பதிலாக, ஒரே ஆசியில் பங்கு பெறுதலில் மிகக்குறிப்பாக இணைந்திருந்தது. உணவும், பானமும் இறைவனின் கொடைகளாக ஏற்றுக்கொள் ளப்பட்டு போற்றப்பட்டன. கிண்ணத்தின் மீதான சிறப்பு நன்றியுரை இறைவனின் அருட்செயலின் நினைவை, மீட்பைப்பற் றிய பழைய செயல்களை நினைவு கூர்வதனு டனும், வரவிருக்கும் அவரது அரசைப்பற் றிய வாக்குறுதியுடனும் இணைக்கின்றது. இத்தகைய பின்னனியில் ஆதிக்கிறிஸ்தவ வேதபோதக பணியாளர்கள், கிறிஸ்துவின் மீட்புப் பணியை நினைவிற்கு கொண்டுவரு தல், ஆவியினால் அவரது திருச்சபையை நிறைவேற்றுதல், அவரது அரசை நிறுவ அவர் உடனடியாக வருவிருப்பதைப் பற்றிய உறுதியான நம்பிக்கை மற்றும் எதிர்பார்ப்பு ஆகியவையாக பழைய யூத விருந்து ஆசீர் களை மாற்றியமைத்து இறுதி இரவுணவின் பாரம்பரியத்தை மனம் மாறியவர்களுக்கு அளித்தனர்.

மனந்திரும்பிய புறவினத்தாரும், தங்களு டைய பழைய பின்னனியில் உணவு சடங்கு முறைகளை அறிந்திருந்தனர். இத்தகைய சடங்குக் கொண்டாட்டங்கள் அசாதாரண இரகசியமாக வைக்கப்பட்டிருந்ததால் உணவு முறைகளைப் பற்றிய விளக்கங் களை வெகு சிறிதே அறிந்திருக்கிறோம். அதற்கு மேலும், சமயப் பலிகளுக்குப்பின் வந்த விருந்துகள் இருந்தன. வியாபாரிகளின் கூட்டுறவு குழுக்கள் மற்றும் இழவுவி னைக்கு ஏற்ற அமைப்புகள் தனிப்பட்ட காப்புத் தெய்வங்களுக்கு ஆராதனைச் செலுத்தும் விதமாக, அவற்றின் ஆதரவில் பொது விருந்துகளை நடத்தின. இத்தகைய உணவு கடவுளுக்குப் படைப்பட்ட பானங்க ளுடன் துவக்கப்பட்டன. பல நேரங்களில் பக்தர்களிடையே ஒருவராக பிரசன்னமாகக் கூடிய தெய்வத்திற்காக, சிறப்பான உணவுப் பொருட்கள் தனியாக காணிக்கையாக்கப்பட் டிருந்தன. பெரும்பாலும் யூதரல்லாதோரின் உணவுச் சடங்குகள், மிதமிஞ்சிய முறையில் உண்டு குடித்தல் முக்கிய இடம் பெற்று, அநாகரிக முறையில் நடந்தன.

ஆ. உணவின் பிரச்சினைகள்:- பவுலால் கொரிந்துவில் ஏற்படுத்தப்பட்ட திருச்சபை யானது, கிறிஸ்தவ சபைகளுக்கு முன்னுதார ணமாக இல்லாமல் இருக்கலாம்; ஆனால், ஆண்டவரது இரவுணவின்போது அவர்க ளால் எழுப்பப்பட்ட பிரச்சினைகள், புற வின பின்னனியிலிருந்து மனம்மாறியவர்க ளிடையே, சமய உணவின் போது யூத பாரம்பரியத்தினுடைய ஒழுங்கான, புனித சூழ்நிலையை பாதுகாப்பதில் உள்ள கடினத் தைக் குறித்துக்காட்டுகின்றன என்பதில் சந் தேகமேயில்லை. பவுல் தன்னுடைய உரை யில் ஆற்றல் மிக்க விதத்தில் எடுத்துக்கூறும் கொரிந்துவின் தனிப்பட்ட தவறுகள் மூன்றா கும். (1) இரவுணவை கொண்டாடுவதில் கொரிந்தியரிடையே உள்ள வெளிப்படை யான பிளவுகள் (2) சில குறிப்பிட்ட உறுப்பி னர்கள், ஒருவேளை செல்வாக்குடைய மற் றும் ஓய்வு உடையோர், திருச்சபையின் எல்லா உறுப்பினர்களும் வந்து சேருவதற்கு முன்னர் இரவுணவை கடைபிடிக்க ஆரம் பிப்பதன்மூலம் மற்றவர்களுக்குக் காட்டிய அசட்டை மனப்பான்மை மற்றும் (3) உண்ப திலும் குடிப்பதிலும் சில உறுப்பினர்களின் மிதமிஞ்சிய நிலை. கொரிந்திய திருச்சபை யின் பிளவுகள் சமூக மற்றும் பொருளாதார நிலையில் மட்டுமின்றி, மொழி மற்றும் சமய நிலைகளிலும் காணப்பட்டன. ஏனெ னில், அதே திருமுகத்தில் பவுல், பிற கடவு ளுக்குப் படைக்கப்பட்ட இறைச்சியை உண் பது தொடர்பாக யூதர்-யூதரல்லாதோருக்கு இடையில் ஏற்பட்ட பிரச்சினையைக் குறித் தும், பல்வேறு இறைபணியாளருக்கு பிரமா னிக்கம் காட்டுவதில் மையம் கொண்ட பிரிவினை சச்சரவு பற்றியும் குறிப்பிடுகின் றார்.

ஆண்டவர் இறுதி இரவுணவை கொண் டாடிய மரபை நினைவுப்படுத்துவதன் மூலம், கொரிந்தியருடைய பழக்கமானது அதை நையாண்டி செய்வதாக அமைகிறது என்று பவுல் கடுமையாகக் கண்டிக்கிறார். உணவிற்கு உணவுப்பொருள் மற்றும் பானம் முதலியவைகளை அதிகமாக அளிக்க இயலாத ஏழை கிறிஸ்தவர்களுக்

கும், கிறிஸ்தவ அன்பின் முழு மரியாதையை அளித்து, அனைவரும் இரவுணவை ஒன்றாக இணைந்து ஆரம்பித்து, ஒன்றாக பகிர்ந்து கொள்ள வேண்டும் என்று அவர் வலியுறுத்துகிறார். சமூகப் பண்புகளுக்கு மேலாக அமைந்துள்ள, நிகழ்ச்சியின் சமய சிறப்பிற்கு அவர் அவர்களைத் திரும்ப அழைக்கிறார். நாகரீகமற்ற நிலையில் அதிகமாக உண்ண சோதனைக்குட்படுவர்களை அவர்கள் வீட்டிலேயேஉண்டு குடிக்குமாறு கேட்டுக்கொள்கிறார்.

இரவுணவானது, அப்பம் மற்றும் இரசத்தின் மீதான வெறும் சடங்கு முறை உணவுதான் என்று பவுலின் கட்டளைகளில் எந்தவிதக் குறிப்பும் இல்லை. இறுதி இரவுணவில் இருந்தது போல், அப்பத்தை ஆசீர்வதிப்பதற்கும் இரவுணவிற்குப் பின்னர் கிண்ணத்தை ஆசீர்வதிப்பதற்கும் இடையில் பொதுவான உணவைத் தொடர பவுல் அனுமதித்தார் என்பதை எல்லா விளக்கவுரையாளர்களும் பொதுவாக ஏற்றுக் கொள்கின்றனர். அவரது ஒரே கவனம், ஆண்டவரைப் பற்றிய பக்திமிக்க அடக்கமான நினைவுடன் அனைவரும் ஒன்று சேர்ந்து இவ்வுணவு செய்யப்படவேண்டும் என்பதாகும். பல திறனாய்வாளர்கள் செய்வது போன்று, உணவின் மற்ற பகுதியினின்று அப்பத்தையும் கிண்ணத்தையும் ஆசீர்வதித்துப் பகிர்கின்ற இருசெயல்களையும் உறுதியாக வேறுபடுத்திக் காட்டலாம். இச் செயல்களை அருட்சாதனமாகவும், சடங்காகவும் குறிப்பிடலாம். இக்கருத்துக்கு ஆதரவு *1 கொரி 10:16*-இல் காணப்படுகின்றது ''திருக்கிண்ணத்தை ஏந்தி நாம் இறைபுகழ் கூறுகிறோமே அது கிறிஸ்துவின் இரத்தத்தில் பங்கு கொள்ளுதல் அன்றோ? நாம் அப்பத்தை பிட்கிறோமே; அது கிறிஸ்துவின் உடலில் பங்கு கொள்ளுதல் அன்றோ?'' இறுதி இரவுணவில் ஆண்டவர் கூறிய வார்த்தைகளின் மூலம், விருந்தின் மற்ற எந்த பகுதியையும் விட ஆசீர்வதிக்கப்பட்ட அப்பமும் இரசக் கிண்ணமும் உண்மையாகவே உயர்ந்த சிறப்பைக் கொண்டிருந்தன. இதை மறுக்க முடியாது. ஆனால் *1 கொரி 11:20*-இல் உச்சரிக்கும் போது 'ஆண்டவரின் விருந்து' என்னும் தலைப்பு, அப்பத்துடனும் கிண்ணத்துடனும் இணைந்துள்ள சொற்களையும் செயல்களையும் மட்டுமே குறிப்பதாகவும், உணவை முழுவதையும் அல்ல என்பது எம்முறையிலும் தெளிவாக இல்லை.

இ.உணவிலிருந்துவேறுபடுத்தப்படுதல்:- இறுதி இரவுணவிலிருந்து உணவு பிரிக்கப்பட்டு அருட்சாதன நற்கருணைக்கும் அன்பு விருந்தின் தோழமை உணவிற்கும் இடையே தெளிவான வேறுபாடு, எப்போது எங்கு ஏற்பட்டது என்பதற்கான சான்றுக் குறிப்பு எதுவுமே இல்லை. இரண்டாம் நூற்றாண்டின் இடைக்காலத்திற்குள், அதற்கு முன்பு இல்லாவிட்டாலும், திருச்சபை முழுவதும் இவ்வளர்ச்சியின் உலகளாவிய ஒரே மாதிரியான வளர்ச்சியின் காரணமாக, அப்போஸ்தலர்களுடைய அதிகாரத்தின் மூலம் இந்த அமைப்பு ஏற்பட்டதெனக் கருதப்படுகிறது. இப்படியிருந்திருக்கலாம். ஆனால் இது ஒரு நிருபனமாக அமையவில்லை. ஆயினும், அது நிகழக்கூடியதற்கான காரணங்களை நாம் ஊகிக்கலாம். கொரிந்துவில் ஏற்பட்டது போன்ற தவறுகளினின்று திருச்சபையின் மிகப்புனிதமான சடங்கு முறைகளைப் பாதுகாக்க வேண்டும் என்ற அவசியம் ஒரு காரணமாகலாம். ஏனெனில் திருச்சபையின் அங்கத்தினரின் எண்ணிக்கையானது யூதரல்லாத பின்னனியைக் கொண்டுள்ள புறவினத்தாரையே அதிகமாகக் கொண்டிருக்கும்போது, இத்தகைய தவறுகள் மீண்டும் நிகழும் வாய்ப்புகள் அதிகமாயின.

இடநெருக்கடியானது கவனிக்கப்படவேண்டிய ஒன்றாக அமைந்தது. சபையின் எண்ணிக்கை பெருகப் பெருக. கிறிஸ்தவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து சந்திக்கக் கூடிய செல்வர்களுடைய வீடு முதற்கொண்டு, எங்குமே அனைவரும் ஒரே நேரத்தில் முறையாக உணவு கொள்வது இயலாத ஒன்றாக இருந்தது. துரதிருஷ்டமாக, ஆதிகாலத்தின் வீட்டுக்கோவில் பற்றி ஒன்றும் அறியப்படவில்லை. மிகப்பழமை

யானது என்று கண்டுபிடிக்கப்பட்டு 'தூரா'-வில் உள்ள 242-ம் ஆண்டின் கட்டிடமானது, உள்ளூர் கோவிலாக உபயோகத்திற்காக எடுத்துக் கொள்ளப்பட்ட உடனேயே, தனிப்பட்ட உறைவிடமாகப் பயன்படுவது நிறுத்தப்பட்டது. நற்கருணையின் போது திருச்சபை கூடுவதற்குத் தேவையான இடத்தை அளிக்கும் விதமாக, பல அறைகளை இணைத்து ஒரு பெரிய சந்திப்பு அறையினை உருவாக்குவதில், உட்புற ஒழுங்கு முறைகளில் உள்ள மாற்றங்களை அது வெளிப்படுத்துகின்றது.

பொதுவிருந்தினின்று நற்கருணையை பிரித்ததானது, சடங்கிலும் அதனை நிறைவேற்றும் முறையிலும் முக்கிய மாற்றத்திற்கு இட்டுச் சென்றது. விருந்திலிருந்து விடுவிக்கப்பட்டபின்னர், அப்பம் மற்றும் கிண்ணத்தின் மீதான பழைய தனிப்பட்ட நன்றியுரைகள், ஒன்றினைக்கப்பட்ட இரு பொருட்களின் மீதான ஒரே நன்றிச் செபமாக வடிவம் எடுத்தன. அது முதல், அப்பமும் இரசமும் ஒன்றாக காணிக்கையாக்கப்பட்டு, ஆசிர்வதிக்கப்பட்டு, இரு வடிவங்களிலுமான திருவிருந்து தொடரப்பட்டது. ஞாயிற்றுக் கிழமைகளிலாவது, இந்த ஆடம்பர திருவிருந்திற்கு முன்னர் வாசகங்கள் மறையுரை, செபங்கள், சமாதான முத்தம் ஆகியவை அடங்கிய கூட்டு வழிபாடு நடந்தது. இவை யூத செபக்கூடத்தினின்று எடுக்கப்பட்டு வளர்ச்சியடைந்திருக்கலாம். பாதுகாப்பு காரணங்களுக்காக ஞானஸ்நானம் பெறாதோர் அழைப்பின்பேரின் மட்டுமே அனுமதிக்கப்பட்டிருந்தாலும், ஒருவர் திருச்சபையின் உறுப்பினராக இருந்தாலும் இல்லாவிட்டாலும், அனைவரும் வாசகங்கள் மறையுரையும் ஆகியவற்றில் பங்கெடுக்கலாம். புனித மறைபொருளை அவசங்கைபடுத்துவதைத் தவிர்ப்பதற்காக, செபங்களுக்கு முன்னர், கிறிஸ்தவரல்லாதோறும் ஞானஸ்நானம் பெறாத தயாரிப்புக்கு உட்பட்டோரும் வெளியேற்றப்பட்டு, கதவுகள் மூடப்பட்டு விசுவாசிகளால் மட்டும் எஞ்சியுள்ள சடங்கு அனுசரிக்கப்பட்டது. இதில், திருச்சபையினுடைய அருட்சாதன சடங்கானது, இரகசிய சமயங்களின் வழிபாட்டு மரபுகளோடு சில குறிப்பிட்ட ஒப்புமைகளைக் கொண்டிருந்தது. இத்தகைய விழாவைப்பற்றி நாம் கொண்டுள்ள பழமையான விரிவான விளக்கமானது வேதசாட்சியான புனித யுஸ்தீனுடைய முதல் நூல் 65-67-ல் தரப்பட்டுள்ளது.

*4. சடங்கின் பணியாளர்கள்:-* இஞ்ஞாசியாரின் காலம் முதற்கொண்டு *(110)*, ஆயர் மட்டுமே சடங்கிற்கு தலைமை ஏற்று, அப்பம் மற்றும் இரசத்தின் மீது நன்றியுரையின் அபிடேக செபத்தைக் கூறுவது பொதுவான வழக்கமாக இருந்தது. அவர் இல்லாத போது, தனது பணியினை மூத்த குரு ஒருவருக்கு அவர் அளிக்கலாம். தியாக்கோன்கள் மக்களுடைய காணிக்கையைப் பெறுவதிலும், வருகை புரிந்தோருக்கும், வராதோருக்கும் (நோயாளிகள் மற்றும் சிறைப்பட்டோர்) நற்கருணையை அளிப்பதிலும் சடங்கை நிறைவேற்றுபவருக்கு துணை புரிந்தனர். இக்கருத்தைப்பற்றி பவுலோ அப்போஸ்தலர் பணியோ துல்லியமான விவரம் எதுவும் தராமையால் இவ்வமைப்பானது அப்போஸ்தலிக்க காலத்திலேயே உருவானதா, இல்லையா என்று உறுதியாகத் தீர்மானிக்கமுடியாது. ஆனாலும் அப்போஸ்தலர் ஒருவர் அங்கு இருந்தால், சடங்கின் போது வருகை புரிந்துள்ள மற்ற எல்லா பணியாளரையும் விட தலைமை தாங்க முன்னுரிமை அவர் எடுத்துக்கொள்வது பற்றி எச்சந்தேகமும் இருக்க முடியாது. ஓர் இறைவாக்கினர் தான் விரும்பியவாறு நன்றியுரை அளிக்க திதாக்கே 10:7 அனுமதிக்கின்றது. ஆனால் இப்பகுதியானது நற்கருணை மன்றாட்டை குறிப்பிடுகிறதா? அல்லது அன்பு விருந்தின் விருந்து ஆசீர்களை குறிப்பிடுகிறதா என்பது விளக்கவுரையாளர்களால் விவாதிக்கப்படுகிறது. ஆயினும் நற்கருணைப் பற்றி துல்லியமாக குறிப்பிட்ட பின்னர், திதாக்கே ஆசிரியர், 15-ஆம் அதிகாரத்தில், இறைவாக்கினர் மற்றும் போதகர்களுடைய சடங்குகளையும், நிறைவேற்றுகின்ற 'ஆயர்களையும் தியாக்கோன்களையும்' நியமிப்பது பற்றியும் குறிப்பிடுகின்றார். இக்கட்டளையா

னது, அந்தியோக்கியாவில் உள்ள இறை வாக்கினர்களும் போதகர்களும் அங்குள்ள திருச்சபைக்காக வழிபாடு புரிவதை விவரிக்கும் அ.ப. 13:1-3-ன் மீதான விளக்கவுரையாக இருக்கலாம். 1 கிளமெ 44:4-இல், ஆயர் நற்கருணையின் பொருட்களாகிய கொடைகளை அளிப்பவர்களில் ஒருவர் என்று விவரிக்கப்படுகிறார். ஆயர் பதவியின் உண்மையான, முதன்மையான பணியானது நற்கருணைச் சடங்கை மேற்பார்வையிடுவதாகும் என்று பல அறிஞர்கள் நம்புகின்றனர்.

5. கோட்பாடு:- ஆண்டவருடைய இரவுணவைப்பற்றி இறையியல் பொருளானது, ஆதிக் கிறிஸ்தவர்கள் இயேசுவின் ஆட்தன்மை மற்றும் பரிகாரம், அவர் தம் திருச்சபையுடன் கொண்டுள்ள உறவின் பண்பு ஆகிய இயல்புகளுக்கு மரியாதை அளிக்கின்ற அவர்களுடைய அனுமானம் மற்றும் நம்பிக்கைகளால் பாதிக்கப்பட்டாலும், இறுதி உணவின் போதான அவரது சொல் மற்றும் செயல்களில் உள்ள இயேசுவின் எண்ணத்தையே சார்ந்துள்ளது. இயேசுவிற்கு, இந்த இரவுணவானது அவரது மரணத்திலும் உயிர்ப்பிலும் முத்திரையிடப்பட்ட புதிய உடன்படிக்கையின் அடையாளமாகும். இவ்வுடன்படிக்கை உடனடியாக வரவிருக்கும் அரசின் வாரிசாக கடவுளுடைய புதிய இஸ்ராயேலை உருவாக்குகிறது. அவரது மீட்புச் செயலின் பயன்களில் அவரது சீடர்கள் பங்குபெறுவர் என்பதன் உறுதிமொழியாக இது இருப்பதால், விண்ணக மீட்பின் பெருவிருந்தில் அவருடன் பங்கு கொள்வர் என்பதற்கு அச்சாரமாகவும் உள்ளது. முடிவில்லா வாழ்விற்கு வழியாக உள்ள தந்தையின் விருப்பத்திற்குத் தன்னையே அளிக்கின்ற முழுமையான காணிக்கைப் பலியில், இயேசுவுக்கு உரியவர்கள், அவரோடு சேர்வதற்கு உரிய சாதனமாக இரவுணவு உள்ளது.

ஆண்டவரின் இரவுணவின் (நற்கருணை) கொண்டாட்டம் பற்றிக் கத்தோலிக்கர்களும் பிரினைச் சகோதரரும் வேறுபட்ட விளக்கம் அளிப்பர். ''இது என் சரீரம், இது என் இரத்தம்'' என்ற வாக்குகளைக் கத்தோலிக்கர்கள் அவற்றின் இயற்பொருளில் எடுத்துக் கொள்வர். இந்த விளக்கத்தில், அப்பமும் இரசமும், ஒவ்வொரு திருப்பலியிலும், கிறிஸ்துவின் உண்மையான உடலாகவும் இரத்தமாகவும் வியத்தகு முறையில் மாறுகின்றன. பின் கிறிஸ்துவின் புதிய பலியாக இறைவனுக்கு ஒப்புக் கொடுக்கப்படுகின்றன. கத்தோலிக்க இறையியலில், நற்கருணை என்ற அருட்சாதனம் ஒன்றை நிகழ்த்தும் காணிக்கையாகும். அது ஓர் அருள் அளிக்கும் சாதனமாகும். பிரிவினைச் சபையோரின் இறையியலில், கிறிஸ்தவின் உடல் சிலுவையில் ஒரே ஒருமுறை இறைவனுக்கு ஒப்புக் கொடுக்கப்படுகிறது. வரலாற்றில் மீண்டும் செய்யப்படக்கூடாத பலியாகும். ஆகவே ஆண்டவரது இரவு உணவு ஒரு பலியன்று, அடையாளக் கொண்டாட்டமே. அது, கிறிஸ்து உலக மீட்பை சிலுவையில் நிறைவேற்றிவிட்டார் என்ற நிகழ்ச்சியை வெறுமனே நினைவு படுத்துகிறது.

அ. ஒருவகையான திருவருட்சாதன உணவு:-

1. உணவு, சமய அறிகுறி:- உணவு அருந்தும்பொழுது நிறுவப்பெற்ற நற்கருணை உணவளிக்கும் ஒரு சடங்குமுறையாகும். மிகப் பழங்காலத்திலிருந்து, சிறப்பாக, செமித்திய இனத்தார் வாழ்ந்த பகுதியில், மக்கள் உணவுக்குப் புனிதமான மதிப்பு அளித்து வந்திருக்கிறார்கள்; காரணம், உணவு வள்ளன்மையுள்ள இறைவனின் கொடை என்றும், அது வாழ்வுக்கு ஆதாரம் என்றும் உணர்ந்திருக்கிறார்கள். அப்பம், நீர், இரசம், பழம் முதலியன எல்லாம் நலன்கள்; அவைகளுக்காக மனிதன் இறைபுகழ் கூறுகிறான். உணவு அருந்துதல் தன்னிலேயே சமயப் பொருள் உள்ளது; ஏனெனில், கூடி உணவு அருந்துதல், பந்தியில் அமர்ந்திருப்பவர்களுக்கு இடையிலும், அவர்களுக்கும் இறைவனுக்கும் இடையிலும் புனிதமான உறவுகளை நிலைநாட்டுகிறது.

2. முன்னடையாளங்களிலிருந்து மெய்ம்மைக்கு:- எனவே, விவிலியத்தில் கண்டுள்ள இறை வெளிப்பாட்டில், உணவும்

உணவருந்துதலும், இறைவன் தம் மக்களோடு வாழ்வைப் பகிர்ந்து கொள்வதை உணர்த்த உதவுகின்றன. யாத்திராகமத்தில் காணப்படும் மன்னாவும் காடைகளும், மேலும் ஒரேபு என்னும் பாறையிலிருந்து வெள்ளம்போல் ஓடிய நீரும் (சங 77:20-29) முன்னடையாளமாயிருந்த நலன்கள் (1 கொரி 10:3...); முன்னடையாளங்கள் என்றளவில் அவை உண்மையான கொடையை உருவகமாய் முன்னுணர்த்துகின்றன; அக்கொடை கடவுளின் திருவாயினின்று வருவதாகும் (உப 8:3; மத் 4:4); அது வானத்தினின்று வரும் (யாத் 16:4) உண்மை அப்பமாகிய (இறைவனின்) வாக்கு ஆகும்.

இந்த முன்னடையாளங்கள் எல்லாம் இப்பொழுது இயேசுவிடம் நிறைவு பெறுகின்றன. அவர்தாம் 'உயிர்தரும் உணவு'; எவ்வாறெனில், முதலாவதாக அவர் தமது வாக்கினால் உணவாகின்றார்; அவ்வாக்கு விசுவாசங்கொள்பவர்களுக்கு முடிவில்லா வாழ்வின் வாயிலைத் திறந்துவிடுகிறது (யோவா 6:26-51); அடுத்து, அவர் தமது தசையைத் தின்னவும், தமது இரத்தத்தைக் குடிக்கவும் (6:51-58) கொடுத்து உணவாகின்றார். நற்கருணை பற்றி இவ்வாறு வாக்குறுதி அளிக்கும் சொற்களை இயேசு பாலைவனத்தில் மக்கட் கூட்டத்திற்குப் புதுமையாக உணவு அளித்த பின்னர் (6:1-15) கூறுகிறார். இயேசு வாக்களிப்பதும், மன்னா போன்றது அன்று என அவராலேயே வேறுபடுத்தப் பெறுவதுமான கொடை (6:31...49....), இங்கு யாத்திராகமத்தில் கண்டுள்ள வியத்தகு செயல்களோடு தொடர்புப்படுத்தப் பெறுகிறது; அதேபொழுது, அக்கொடை, மெசியா திருவிருந்தின் முன்சுவை என்றளவில்தான் வழங்கப்பெறுகிறது; திருவிருந்து என்பது விண்ணகப் பேரின்பத்திற்கு ஓர் உருவகமாகும்; இது, யூத மறையினருக்கும் (ஏச 25:6; யூதச் சட்ட வித்தகர்களின் ஏடுகள்), புதிய ஏற்பாட்டினருக்கும் (மத் 8:11; 22:2-14; லூக் 14:15; திருவெளி 3:20; 19:9) நான்கு தெரிந்த உருவகம்.

*3. ஆண்டவரின் உணவும் நினைவு கூர்தலும் வாக்குறுதியும்:-* இறுதி இராவுணவு, மெசியா திருவிருந்தினுக்கு இறுதியான முன்னேற்பாடுபோல் அமைந்துள்ளது; அவ்விருந்தினில் இயேசு, அடுத்து நிற்கும் சோதனைக் காலத்திற்குப் பின்னர் தம்மவர்களை மீண்டும் கண்டு கொள்வார். கடவுளின் அரசில் இயேசு அவர்களோடு 'நிறைவேறிய பாஸ்கா உணவை'யும் (லூக் 22:15..) 'புதிய இரசத்தை'யும் (மாற் 14:25) சுவைப்பார்; இறுதி இராவுணவின்போது இரசத்தையும் தம்மவர்களுக்காக ஆயத்தம் செய்கிறார்; எவ்வாறெனில், அப்பமும் இரசமும் புதியதொரு மெய்மையை, அதாவது, தமது உடலும் இரத்தமும் என்பதனைக் குறித்துக்காட்டச் செய்கிறார்.

இவ்வாறு செய்வதற்குப் பொருத்தமானதும் விரும்பத்தக்கதுமான ஒரு வாய்ப்பினை இயேசுவுக்குப் பாஸ்கா உணவு அருந்தும் சடங்குமுறை அளிக்கிறது. இவ்வேளையில், குடும்பத்தின் தந்தை பல்வேறு உணவுப் பொருட்களின் மீது, மிகச் சிறப்பாக, அப்பத்தின் மீதும் மூன்றாம் கிண்ணத்தின்மீதும் முறைப்படி கூறிய சொற்கள் அந்த உணவுப் பொருட்களுக்கு ஒருவகையான ஆற்றலை அளித்தன; அந்த ஆற்றலால், கடந்த காலம் நினைவுகூரப்பட்டது, வருங்காலத்திற்கான நம்பிக்கை தூண்டப்பெற்றது; இவ்வாறு பந்தியில் இருந்தோர் இந்த உணவுப் பொருட்களைப் பெற்றுக் கொண்டவராய், யாத்திராகம காலத்துச் சோதனைகளுக்கு உண்மையில் திரும்பவும் ஆளாயினர்; அத்தோடு, மெசியாவின் வாக்குறுதிகளை எதிர் பார்த்தவராய் வாழ்ந்தனர். சொற்களில் அடங்கிய இத்தகைய படைக்கும் ஆற்றலைச் செமித்திய மக்களின் உள்ளம் உணர்ந்திருந்தது; இயேசுவும் இந்த ஆற்றலைப் பயன்படுத்தி, தமக்குரிய தலைமைத்துவ அதிகாரத்தால் அந்த ஆற்றலை இன்னும் வளர்த்துக் கொள்கிறார். அப்பத்திற்கும் இரசத்திற்கும் புதிய பொருளைக் கொடுக்கிறபொழுது இயேசு அதற்குக் காரணம் காட்டக் காணோம்; ஆனால் அவர் அவைகளில் பொருள் மாற்றம் விளைவிக்கிறார். இயேசு விளக்கம் தரக் காணோம்; ஆனால் அவர் தீர்மானிக்கிறார், கட்டளையிடுகிறார்; இது என் உடல் (அதா

வது, இது முதற் கொண்டு, இது என் உடல்தான்). 'இருக்கிறது' என்ற இணைப்பு வினைச்சொல் அரமெக் மொழியில் உள்ள மூலவாசகத்தில் தவறியுள்ளது தான் - அந்த வினைச்சொல் தானாகமட்டும் இந்த இயல் வாய்மையை (இந்த அப்பம் உடல்தான் என்று) எண்பித்திடாது; ஏனெனில், அந்த இணைப்பு வினைச்சொல் உருவகப்பொருளை மட்டும்கூட உணர்த்தக்கூடும்; இதற்கு எடுத்துக்காட்டாக 'அறுவடை, உலகின் முடிவு (முடிவாய் இருக்கும்); அறுப்போர் வான தூதர் (வானதூதராய் இருப்பர்)' (மத் 13:39) என்று உள்ளதைக் காணலாம். இறுதி இராவுணவுச் சூழ்நிலை வளம் நிறைந்த பொருள் ஒன்றினை வலியுறுத்துகிறது. இங்கு இயேசு ஓர் உவமையை எடுத்துரைப்பதில்லை; உவமையில் திட்டவட்டமான பருப்பொருட்கள் புலனாகாதப் பொருளைக் கண்டுக்கொள்ள உதவும். இங்கோ இயேசு ஓர் உணவுப் பந்தியில் தலைமை தாங்குகிறார்; இவ்வேளையில் சடங்கு முறைப்படி இறைபுகழ் கூறுதல் உணவுப் பொருட்களுக்கு மற்றொரு நிலைக்குரிய தகைமை வழங்குகிறது. தவிர, இயேசுவைப் பொருத்தளவில், இவ்வாறு வழங்கும் தகைமை இது மட்டும் கேட்டிராத அளவுக்கு நிறைவும் மெய்ம்மையும் கொண்டுள்ளது; இதற்குக் காரணம் வாக்குறுதி செய்யப்பட்ட அர்ப்பணமாகும்; அதுதான் மீட்பளிக்கும் சாவு; அச்சாவு உயிர்ப்பின் வழியாக இறுதிக் கால வாழ்வுக்கு இட்டுச்செல்கிறது.

ஆ. நற்கருணை: ஒருவகையான திருவருட்சாதனப் பலி:-

*1. மீட்பளிக்கும் சாவை அறிக்கையிடல்:-* சாவு மீட்பு அளிப்பதாகும்; ஏனெனில், இந்த உடல் 'உங்களுக்காக அளிக்கப்படும்' (லூக், 1 கொரி-இல் 'உங்களுக்காக' என்று மட்டும் உள்ளது; அத்தோடு இந்த வாசகத்தில் முக்கியமில்லா வேறுபாடுகளும் கண்டுள்ளன); இந்த இரத்தம் 'உங்களுக்காகச் சிந்தப்படும்' (லூக்) அல்லது 'பலருக்காகச் சிந்தப்படும்' (மாற்; மத்). பந்தியில் அப்பம் இரசம் என்று வகைப்படுத்துவதே உடலும் இரத்தமும் வன்முறையில் கூறுபடுத்தப்படுவதை உணர்த்துகின்றது; இயேசு, நெருங்கிக் கொண்டிருக்கும் தமது சாவைத் தெளிவாக அறிவிக்கிறார். அச்சாவு ஒரு பலி என அறிமுகப்படுத்துகிறார்; அப்பலி, பலி உயிர்களான ஆடுமாடுகளைப் பலியிடுவதோடு ஒப்பிடப்படக்கூடியது; பலி உயிர்களின் இரத்தம் சீனாய் மலையில் செய்த முதல் உடன்படிக்கைக்கு முத்திரையிடப்பட்டது (யாத் 24:5-8); இயேசுவின் பலி பாஸ்காச் செம்மறியோடும் ஒப்பிடத்தக்கது, இவ்வாறு ஒப்பிடுவது எந்த அளவுக்கு எனில், இயேசுவின் காலத்து யூத மறை பாஸ்காச் செம்மறியையும் ஒரு பலியாகக் கருதிய அளவுக்கு எனலாம் (1 கொரி 5:7 காண்).

இயேசுவோ 'புதிய உடன்படிக்கைக்கெனப் பலருக்காகச் சிந்தப்படும்' இரத்தம் எனக் கூறுகிறார்; இவ்வாறு அவர் கூறுகிற பொழுது, அவர் இறை ஊழியன் என்பதனைப்பற்றியும் சிந்திக்கவேண்டும்: அந்த இறை ஊழியன் 'சாவுக்குத் தம் ஆன்மாவைக் கையளித்தார்'; 'பலருடைய பாவத்தைத் தாமே சுமந்து கொண்டார்' (ஏச 53:12); அந்த ஊழியனை இறைவன் 'மக்களுக்கு உடன்படிக்கையாகவும், புறவினத்தாருக்கு ஒளியாகவும்' (42:7; 49:8) ஏற்படுத்தினார். இதற்கெல்லாம் முன்னரே, இயேசு இறை ஊழியனின் பணியைத் தமக்கே உரித்தாக்கியிருந்தார் (லூக் 4:17-21); இன்னும், இறை ஊழியனைப் போல, 'பலருடைய மீட்புக்கு விலையாகத் தம் உயிரை அளிக்கும்' (மாற் 10:45 இ;ஏச 53) பணிவிடையை மேற்கொண்டதாகவும் உரிமை கொண்டாடியிருந்தார். இக்கட்டத்தில் இயேசு நாம் அறிந்து கொள்ளச் செய்வது என்னவெனில்: நெருங்கி வந்து கொண்டிருக்கும் அவருடைய சாவு பழைய உடன்படிக்கைப் பலிகளின் இடத்தை நிரப்பப்போகிறது. மக்களை இம்மைக்குரிய அடிமைத்தனத்திலிருந்து மட்டுமன்று, பாவத்தளையிலிருந்தும் விடுவிக்கப் போகிறது. இத்தகையப் பணிகளைத் தான் தேவை என இறைவன் தம் ஊழியனிடமிருந்து கேட்டிருந்தார், ஆகியனவாகும். எரேமியா முன்னறிவித்திருந்த இந்தப் 'புதிய

உடன்படிக்கையை' (எரே 31:31-34) இயேசு நிறுவப்போகின்றார்.

2. பலியில் பங்குகொண்டு உறவாடுதல்:- இங்கு மிகப் புதியது யாதெனில்: இயேசு தமது பலியின்பயனை உணவினுள் உள்ளடக்கினார் என்பதாகும். மற்ற எல்லாப் பழங்கால மக்களையும் போல், இஸ்ராயேல் மக்களும் பலிப்பொருளை உண்டு பலியின் பயனைப் பெறுதல் வழக்கம். இவ்வாறு, மக்கள் பலிப்பொருளோடும், அதை ஏற்றுக்கொண்ட இறைவனோடும் உறவு கொண்டு ஒன்றித்திடப் பார்த்தார்கள் (1 கொரி 10:18-21). விசுவாசிகள் பலியாக்கப்பட்ட இயேசுவின் உடலை உண்டும், அவர் தம் இரத்தத்தைப் பருகியும் அவருடைய பலியில் பங்குக் கொண்டு உறவாடுகிறார்கள். இவ்வண்ணம் அவர்கள், இயேசு அன்பினால் அளித்த பலிப்பொருளைத் தமதாக்குகிறார்கள், இயேசுவின் பலி திரும்பவும் கொணரும் அருள்வாழ்வினால் பயன் அடைகிறார்கள். மக்கள் இவ்வாறெல்லாம் எங்கு எப்பொழுதும் செய்யக் கூடுமாய் இருக்க வேண்டும் என்றுதான், இயேசு மிகச் சாதாரண உணவுப் பொருட்களைத் தேர்ந்து கொண்டு, அவைகளைப் பலிப் பொருளுக்குரிய நிலையில் தமது உடலாகவும் இரத்தமாகவும் ஆக்கினார்; அவர் தம் சீடர்களுக்கு கொடுத்த கட்டளைப்படி, அவருக்குப் பின்னர், சீடர்கள் அவருடைய அதிகாரத்தைக் கொண்டு, அவர் சொன்ன வார்த்தைகளை மறுபடியும் சொல்வார்கள்; அவ்வார்த்தைகள் மேற்படி மாற்றத்தை விளைவிக்கும். இவ்வாறு இயேசு தமது குருத்துவத்தில் சீடர்கள் பேராளர்களாய் (பிரதிநிதிகளாய்)ப் பங்கு கொள்ளச் செய்கிறார்.

இது முதற்கொண்டு கிறிஸ்வார்கள் இந்நிகழ்ச்சியைத் திரும்ப நிகழ்த்தும் ஒவ்வொரு முறையும் அல்லது அதில் பங்குகொள்ளும் ஒவ்வொரு முறையும், அவர்கள் 'ஆண்டவருடைய மரணத்தை அவர் வரும்பரையில் அறிக்கையிடுகிறார்கள்'' (1 கொரி.1:26); ஏனெனில், அவர்கள் உருவாக்கும் திருவருட்சாதனப் பிரசன்னம் கிறிஸ்துவின் பிரசன்னமாகும்; இங்குக் கிறிஸ்து தாம் பலியான நிலையில் பிரசன்னமாகிறார். இவ்வாறெல்லாம் கிறிஸ்தவர்கள் 'அவருடைய நினைவாகச்' (1 கொரி 11:25; லூக் 22:19) செய்கிறார்கள்; அதாவது, அவர்கள் இயேசு மீட்புக்காகச் செய்ததைத் தங்கள் விசுவாசத்தைக் கொண்டு நினைவுகூர்கிறார்கள்; அல்லது, ஒரு வேளை, இயேசு மீட்புக்காகச் செய்ததை விசுவாசிகள் இறைவனுக்கு நினைவுபடுத்துகிறார்கள் என்றால் இன்னும் பொருத்தமாயிருக்கும் (லேவி 24:7; எண் 10:9.. சீரா 50:18; அ.ப.10:4.31); இங்ஙனம் இயேசு செய்ததை இடையறாது புதுப்பிக்கப்படும் காணிக்கையாக விசுவாசிகள் நினைவுறுத்துகிறார்கள்; அக்காணிக்கை இறைவனின் அருளை வேண்டுகிறது. 'நினைவுகூர்தல்' என்பது இறைவன் ஆற்றிய வல்ல செயல்களை வியந்து பாராட்டும் வகையில் நினைவுகூர்ந்து, அவைகளை வியத்தகு செயல்கள் என ஏற்றுக்கொள்ளுதலாகும். அவற்றில் எல்லாம் தலைசிறந்தது. மக்களின் மீட்புக்காக இறைவனின் திருமகன் ஒப்புக்கொடுத்த பலியாகும். இப்பலி அன்பின் அதிசயம்; இப்பலியில் கிறிஸ்தவர்கள் பங்குகொண்டு, திருவிருந்தின்போது ஆண்டவரின் உடலோடும், அவரிடத்தில் அவர்தம் உறுப்பினர் அனைவரோடும் இணைந்து ஒன்றுபடுகிறார்கள் (1 கொரி 10:14-22). கிறிஸ்து செலுத்திய பலியின் திருவருட்சாதனமான நற்கருணை அன்பின் திருவருட்சாதனமும், கிறிஸ்துவின் உடலில் கொள்ளும் ஒன்றிப்பின் திருவருட்சாதனமும் ஆகும்.

இ. நற்கருணை: இறுதிக்காலத் திருவருட்சாதனம்:-

1. புதிய உலகில் கிறிஸ்துவின் பலி தொடர்ந் நிலைத்திருத்தல்:- புதிய உலகு ஒன்று உண்டு என்ற உண்மைதான், இத்தகைய அடையாளச் செயல்களுக்கும் சொற்களுக்கும் முழுப்பொருளைத் தருவதாகும்; இச்செயல், சொற்கள் எல்லாம் அவ்வுலகினுக்கு நுழைவாயிலாய் அமைந்துள்ளன. கிறிஸ்துவின் சாவு, உண்மையான வாழ்வில் மலருகின்றது; இந்த வாழ்வுக்கு முடிவு என்பது கிடையாது (உரோ 6:9..); இத்தகைய

வாழ்வுதான் இறுதிக்காலம், 'வரப்போகும் நன்மைகளின்' காலம்; அதனோடு ஒப்பிட்டால் நிகழ்காலம் 'நிழல்' தான் (எபி 10:1; 8:5; கொலோ 2:17). கிறிஸ்து தமது பலியை 'ஒரே முறையில் எக்காலத்திற்குமே' நிறைவேற்றி விட்டார் (எபி 7:27; 9:11. 26; 10:10; 1 பேதுரு 3:18); முடிவானதாக அவருடைய இரத்தம் பழைய உடன்படிக்கைப் பலி உயிர்களின் ஆற்றலற்ற இரத்தத்தின் இடத்தைப் பிடித்துக் கொண்டது (எபி 9:12.18-26; 10:1-10); இயேசு இணைப்பாளராக இருக்கும் புதிய உடன்படிக்கை (12:2; 13:20) பழைய உடன்படிக்கைக்கு முற்றுப் புள்ளி வைத்து (8:13), 'முடிவில்லா உரிமையைப்' பெற்று விட்டது (9:15); இது முதற்கொண்டு, நம்முடைய தலைமைக் குரு 'கடவுளின் வலப்புறத்தில் அமர்ந்துள்ளார்' (8:1; 10:12); நாம் முடிவில்லா மீட்பைக் கண்டடையச்' செய்துவிட்டார் (9:12; 5:9); அவர் 'மாறாத குருத்துவத்தைப்' பெற்றுள்ளதால் (7:24). நமக்காகப் 'பரிந்து பேசுவதற்கென என்றுமே வாழ்கிறார்' (7:25; 9:24). கிறிஸ்துவின் பலி, நிலையற்ற நமது உலகின் கால வரையறையோடு தொடர்பு கொண்டு நிறைவேறியதளவில் கடந்த காலத்தியது என்றாலும், அப்பலி, கிறிஸ்து நுழைந்துள்ள புதிய உலகில் என்றென்றைக்கும் பிரசன்னமாக உள்ளது; எவ்வாறெனில், தம்மையே பலியாய் ஒப்புக்கொடுத்துப் புதிய உலகில் நுழைந்த கிறிஸ்து அங்குத் தொடர்ந்து தம் தந்தையிடம் தம்மையே காணிக்கையாக்கிக் கொண்டிருக்கிறார்.

2. நற்கருணை வழியாகக் கிறிஸ்தவன் இப்புதிய உலகத்தோடு ஒன்றித்து உறவாடுகிறான்:- பலிப்பொருளான நிலைமையில் நம் தலைமைக் குரு என்றென்றைக்கும் வாழ்ந்து கொண்டிருக்கிறார். நற்கருணையோ விசுவாசியை இக்குருவோட தொடர்பு கொள்ளச் செய்கின்றது. அப்பம் உடலாகவும், இரசம் இரத்தமாகவும் ஆகும்பொழுது நிகழும் நிலைமாற்றம் (கடந்து செல்லுதல்) தனக்குரிய திருவருட்சாதன முறையில், பழைய உலகம் மாறிப் புதிய உலகம் ஆகும்படி கடந்து செல்லச் செய்கிறது. தமது சாவின் வழியாக வாழ்வுக்குக் கடந்து சென்ற கிறிஸ்து இந்தப் புதிய உலகினுள் நுழையலானார். பாஸ்காச் சடங்குமுறை, யாத்திராகமத்தில் கண்டுள்ள திருப்பயணத்தின் (கடந்து சென்றதின்) நினைவு விழாவாகும்; இவ்வாறு, அந்த யாத்திரையைப்போல, பாஸ்காச் சடங்குமுறையும் ஏற்கனவே, கடந்து செல்வது பற்றிய ஒரு சடங்குமுறையாக இருந்தது; எப்படியெனில், அது எகிப்தின் அடிமைத்தனத்திலிருந்து வாக்குறுதி அளிக்கப்பட்ட நாட்டில் கிடைக்க இருந்த விடுதலைக்குக் கடந்து சென்றது பற்றிய சடங்குமுறையாகும்; அடுத்து, மேலும் மேலும் அது, துன்பம், பாவம், சாவு ஆகியவற்றை உள்ளடக்கிய அடிமைத்தனத்திலிருந்து, இன்பம், நீதி வாழ்வு ஆகியவை அடங்கிய விடுதலைக்குக் கடந்து செல்வது பற்றிய சடங்குமுறை ஆனது. ஆனால், இந்தப் பாஸ்காச் சடங்குமுறையில், மெசியா காலத்து ஆசிகள் (நலன்கள்) நம்பிக்கையளவில் இருந்து வந்தன; மேலும், அப்பொழுது மக்கள், தாங்கள் ஆசி கூறிய உணவுப் பொருட்களைக் கொண்டு உருவகமாகத்தான் மெசியாவின் ஆசிகளைத் துய்த்திடக் கூடுமாயிருந்தது. இந்நிலை, கிறிஸ்துபாஸ்காவில் மாறியுள்ளது; எவ்வாறெனில், மெசியாவின் உயிர்ப்பினால், அவருடைய காலம் உள்ளபடியே வந்துவிட்டது; எனவே, வாக்குறுதி அளிக்கப்பட்ட மெசியாவின் ஆசிகள் கிடைத்து விட்டன. வருங்கால ஆசிகளை முன்னர் உருவகமாய் மட்டும் உணர்த்திய சொற்களும் சைகைகளும் இனி அவைகளை நிகழ்காலத்திய ஆசிகளாக நடைமுறைப்படுத்தக்கூடும்.

ஆகவே, நற்கருணையில் வழங்கப்படும் உடலும் இரத்தமும், நிறைவு கண்டுவிட்ட, ஒரு நிகழ்ச்சியின் உருவக நினைவுச் சின்னங்கள் மட்டுமல்ல; அவை, கிறிஸ்து வாழ்ந்து கொண்டிருக்கும் இறுதிக்கால உலகத்தின் முழுப்பொருளுமாகும். திருவருட்சாதன அமைப்பு அனைத்தின் மையமாக இருப்பது, நற்கருணை. பழைய உலகிலேயே இன்னும் மூழ்கிக்கிடக்கும் விசுவாசியை திருவருட்சாதன அமைப்பு அனைத்தையும்

போல், நற்கருணையும் கிறிஸ்துவோடு உடல்சார்ந்த வகையில் இணைக்கிறது; இக் கிறிஸ்து புதிய, உயிர்த்தெழுந்த, ஆவி நிலையில் *(யோவா 6:63)* கொண்டுள்ள தமது இருப்பின் முழுநிறைவோடு உள்ளவர். நற்கருணையில் கையாளப்படுகின்ற உணவுப் பொருட்கள் தங்கள் இருப்பில் மாற்றமடைந்து, உண்மையான 'விண்ணோரின் உணவு' ஆகின்றன *(சங் 78:25;, ஞான 16:2)*. இதுவே புது யுகத்தின் உணவு. இந்த உணவு பொருட்கள் பலிபீடத்தின் மீது பிரசன்னமாய் இருப்பதைக் கொண்டு, மரித்து உயிர்த்த கிறிஸ்து பலிக்குரிய தமது நித்திய மனநிலையில் மெய்யாகவே பிரசன்னமாயிருக்கிறார். இதனால்தான், திருபலி என்பது ஒரு பலியாகும்; இப்பலியும், வரலாற்றில் சிலுவைமீது நிறைவேறிய பலியும் ஒன்றே; இத்தகைய பலியில் கிறிஸ்து தமது அன்பு அனைத்தையும் கொண்டு காணிக்கையாகின்றார்; கிறிஸ்துவே திருப்பலியை ஏற்படுத்தியவர். வரலாற்றுப் பலியிலிருந்து திருப்பலி, தான் நிகழுகின்ற காலம், இடம் எனும் இன்றியமையக் கூடிய சூழ்நிலைகளால் மட்டுமே வேறுபடுகின்றது. உலகம் முடியும் மட்டும், எல்லா இடங்களிலும் திருப்பலியைக் கொண்டு திருச்சபை மக்களின் புகழ்ச்சிப்பலிகளையும் காணிக்கைகளையும், புகழ்ச்சியும் காணிக்கையும் நிறைவுபெற்ற கிறிஸ்தவின் பலியோடு ஒன்றாகச் சேர்த்து இணைக்கிறது. சுருங்கக் கூறின் , இதுதான் 'நற்கருணை'; இது மட்டுமே இறைவன் திருமுன் ஏற்புடையதாகும்; இது மட்டுமே மக்களின் புகழ்ச்சிப் பலிகளுக்கும் காணிக்கைகளுக்கும் மதிப்பு அளிப்பதாகும் *(எபி 13:10.15)*.

**ஆண்டவரின் ஊழியன்** *(*SERVANT OF GOD*)*

'இறை ஊழியன்' என்ற பெயர் விவிலியத்தில் ஒரு பெருமைமிகு பட்டமாகும். ''யாவேயின் ஊழியன்'' என்ற சொல் விவிலியத்தில் எங்கும் காணப்படவில்லை. ஆனால் தம் திருத் திட்டத்தில் உடனுழைக்க தாம் அன்புடன் தேர்ந்து கொண்டவரை எல்லாம், ''என் ஊழியன்'', என்று யாவே அழைக்கின்றார்.

தமது திட்டத்தை முற்றிலும் நிறைவேற்ற அவர் தம் ஒரே மைந்தனை உலகிற்கு அனுப்பி வைக்கிறார். அவரே தொண்டர் குலத் திலகமாக விளங்கும் ''இறைவனின் ஊழியர்'' ஆவார். இப்பெயர் மீட்புப் பணியின் ஒரு புதிரான பண்பினை எடுத்துக் கூறுகிறது: கடவுளுக்குத் தொண்டு புரிய மறுத்த மனிதரின் பாவத்தைத் தமது உயிர்ப் பலியின்மூலம் நீக்கித் தூய்மை செய்து, அவர்களையெல்லாம் ஒரே இறைத்தொண்டினில் கிறிஸ்து இணைக்கின்றார்.

I. இறைத் தொண்டர்களும் உடன்படிக்கையின் மக்களும்.

இறைத் தொண்டர்கள் என்ற பட்டம், தேர்ந்துகொள்ளப்பட்ட மக்களுக்குப் பணிபுரியச் சென்றோர்க்கெல்லாம் வழங்கப்பட்டது. உடன்படிக்கையின் இணைப்பாளராகிய மோசே அடிக்கடி இப்பெயரால் குறிக்கப் பெறுகிறார் *(யாத் 14:31; எண 12:7; உப 34:5; 1 அர 8:56)*, அடுத்து, அரச மெசியாவை முன்னுணர்த்தும் அடையாளமாக விளங்கிய தாவீதுக்கும் *(2 சாமு 7:8; 1 அர 8:24* தொ*; சங் 78:70; எரே 33:26)*, இப்பெயர் சூட்டப்பட்டது. மூதாதையாகிய ஆபிரகாம் *(ஆதி 26:24)*, ஈசாக்கு *(ஆதி 24:14)*, யாக்கோபு *(யாத் 32:13; எசக் 37:25)*, யோசுவா *(யோசு 24:29)* ஆகியோருக்கும் இப்பெயர் வழங்கப்பட்டது. உடன்படிக்கையின் நியதிகளைச் செயலாக்கும் பொறுப்பைப் பெற்ற இறைவாக்கினர்க்கும் இப்பெயர் உரியதாயிற்று (எ.கா.எலியா,1 அர 18:36; ''என் ஊழியர்களாகிய இறைவாக்கினர்'': ஆமோ 3:7; எரே 7:25; 2 அர 17:23). குருகுலமான இஸ்ராயேல் மக்களின் பெயரால் திருவழிபாட்டுச் சடங்குகள் நிறைவேற்றி வைக்கும் குருக்களும் இப்பெயரால் அழைக்கப்பட்டனர் *(சங் 134:1; காண் யாத் 19:5* தொ*)*. இறைவனின் தொண்டில் என்றுமே வழுவாதிருக்கும் வானதூதர்களைப் போல *(சங் 103:20* தொ*)*, மக்களையும் வழுவாது இறைவனுக்குத் தொண்டு செய்யும் தொண்டர் குலமாக மாற்றுவதே இறைவன் தேர்ந்தெடுத்த இத்தனை ''இறை ஊழி

யரின்'' ஒரே கடமையாகும் (சங் 105:6 தொ. 26:45).

II. கடமை தவறிய ஊழியரும் கடமை தவறாத ஊழியரும்.

தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் தொடக்கத்திலிருந்தே இறைவனின் ஊழியர்களாய் இருக்கும் அழைப்பிற்கு உண்மையுள்ளவர்களாய் நடந்து கொள்ளவில்லை; அத்துடன் அவர்களை நல்லவழியில் திருப்ப அவர்களிடம் அனுப்பப்பட்ட ஊழியர்களுக்கும் பணிய மறுத்தனர் (உப 9:24; எரே 7:25). ஆதலால் புறமதத்து அரசனாகிய நெபுக்கதுனேசார் மூலம் அவர்கள் நாடு கடத்தப்பட்டுத் தண்டனைக்கு உள்ளாயினர். இதன்மூலம் நெபுக்கதுனேசாரும் இறையூழியன் ஆகிறார். ஆனால், ''பாவியின் சாவை விரும்பாது, அவனது வாழ்வையே விரும்பும்'' இறைவன், தமக்கென்று கடமை வழுவாத எஞ்சிய சிலரைத் தேர்ந்து கொள்கிறார். அவர்கள் புதிய தாவீதாகிய இறை ஊழியனின் ஆட்சியில் வாக்குறுதி வழுவாது வாழ்வார்கள் (எச 34:23 தொ; 37:24 தொ.). எஞ்சிய இச்சிறு தொகுதி மக்களுக்கே ஏசயாவின் ஆறுதல் செய்தி கூறப்பட்டது (ஏச 40-50).

1. கடமை தவிறய ஊழியன்:- ஆறுதல் நூலினை எழுதிய இறைவாக்கினர், 'இஸ்ராயேல்-இறைவனின் ஊழியன்' என்பதை விரித்துரைத்து, அதனைச் 'சீயோன்-இறைவனின் துணைவி' என்பதோடு தொடர்புபடுத்திக் காட்டுகிறார். இத்துணைவி இறைவனால் கைவிடப்பட்டதற்கு, அவளுடைய மக்கள் வாய்மையிலிருந்து வழுவியதே காரணம் ஆகும் (ஏச 50:1). இஸ்ராயேல், கருவிலிருந்தே பணிய மறுக்கிறான் (48:8); தன் சொந்தத் தவற்றினாலேயே சோம்பேறி ஊழியனாகவும் செவிடனாகவும் குருடனாகவும் இருக்கிறான் (42:18 தொ. 24; 43:8-22 தொ; 30:9 தொ). இத்தகைய ஊழியனை மறந்துவிடாமல் அவனை இறைவன் மன்னிக்கிறார் (44:21 தொ), மீட்க விரும்புகிறார் (41:8 தொ). இதற்குப் புறச் சமயத்தைச் சேர்ந்த சைரஸ் மன்னனைப் பயன்படுத்துகிறார். ஏனெனில் அவனும் அவர் அமர்த்திய ஆயனே; அவரிடம் அபிடேகம் பெற்றவனே; அவருடைய நண்பனே (44:28; 45:1; 48:14). இவ்வாறு மீட்பளிக்கும் மன்னனே 42:1-7-இல் புகழப்பட்ட ஊழியனாகத் தோன்றுகிறான். ஆனால் சூழ்நிலையைக் கவனத்தில் கொள்ளாமல் மேலோட்டமாக இப்பாடலைப் படிக்கும்போது, இது, 'ஊழியன் இஸ்ராயேலை'ப் பற்றியதாகத்தான் தோன்றுகிறது. இறைவனுடைய அழைப்பு, தூது, பலி என்பனபற்றி இன்னும் மூன்று பாடல்கள் எடுத்துரைக்கின்றன (49:1-6; 50:4-9; 52:13-53:12). இத்தகைய பொருள் விளக்கம் எழுபது நூல் கிரேக்க மொழி பெயர்ப்பில் காணப்படுகிறது. பிறகு இது நற்செய்தியாளர் மத்தேயுவினால் எடுத்தாளப்படுகிறது (மத் 12:18-21). இது எப்படியாயினும், சைரஸ் மன்னன் செய்த செயல்களின் காரணமாகத்தான், உண்மை வழுவிய ஊழியனாகிய இஸ்ராயேல் விடுதலையடைந்து, புறமதத்தினருக்கு முன்னர் அவர்களின் ஊமைச்சிலகைள், தன் கடவுளும் மீட்பருமான யாவேயின் முன் ஆற்றலற்றவைகளாக இருக்கின்ற தன்மைக்குச் சான்றாக விளங்கியது (40:10 தொ. 45).

2. உண்மையுள்ள ஊழியன்:- தானே விரும்பிச் செயலாற்றாது, பிறரது உந்துதலால் செயலாற்றும் மந்தமான ஊழியனை, செயலூக்கம் கொண்ட பிரமாணிக்கமுள்ள ஊழியனாக மாற்றவும், அவர் மூலம் மீட்பின் ஒளியைப் பிற நாடுகளுக்குக் கொண்டு வரவும் இறைவன் விரும்புகிறார். ஆறுதல் நூலின் இரண்டாவது பகுதியில் (ஏச 49-55), இறைவன் ''எனது ஊழியன்'' என்றழைக்கும் புதிர் மிகுந்த இறைவாக்கினர் ஒருவரின் உருவத்தோற்றம் மேம்பட்டு நிற்கிறது (49:3-6; 52:13). அவர் பெயரைக் கொண்டவர்களும், அவர்களில் தொடர்ந்து வாழ்ந்து கொண்டிருப்பவருமான யாக்கோபை அவருடைய மக்களிடமிருந்து எவ்வாறு பிரிக்க இயலாதோ, அவ்வாறே எரேமியாவின் தன்

மைகளைக் கொண்ட இந்த ஊழியனையும் (49:1; 50:7; 53:7; காண் எரே 1:5; 15:20; 11:19), அவர் பெயர் கொண்டிருக்கும் இந்த இஸ்ராயேல் இனத்திலிருந்து, இறைவன் மகிமையடையும் இந்த எஞ்சியோரிடமிருந் தும் பிரிப்பது இயலாத செயலாகும். இருப் பினும் இஸ்ராயேல் பெற்ற அருட்கட்டளை யினையே இவர் பெற்றிருப்பதாலும் (49:5 தொ), இஸ்ராயேலுக்கு அதை வலியுறுத்தி உணரச் செய்வதாலும் (50:4-10), இவ்வூழி யரை இஸ்ராயேலிலிருந்து வேறுபடுத்திக் காட்டலாம். அவருடைய பொறுமை (50:6), தாழ்மை (53:7) என்பன, அவருடைய வாழ் வைப் பலியாக ஒப்புக்கொடுக்கவும், தாம் படும் பாடுகளின் மூலம் அனைத்து நாடுகளி லுமுள்ள பாவிகளை நெறிப்படுத்தவும் (53:8-11 தொ), இறைவனின் திட்டத்தை (53:4 தொ. 10) நிறைவேற்றவும் ஆற்றல் தருகின்றன. அவருடைய பலியின் மூலம் சீயோன் ஆறுதல் பெறுகிறது. குழந்தைப் பேறு இல்லாத மலட்டு மனைவி மறுபடி யும் ஒரு நித்திய உடன்படிக்கையின் மூலம் இறைவனுடன் இணைந்து இறைத் தொண டர் அனைவர்க்கும் தாயாகிறாள் (ஏச 54:1-55:4).

இறைவனின் ஊழியன் தன் பாடுகளினால் சாதிக்கவிருந்த மீட்பு அகில உலகுக்கும் பொதுவானது என்பதை அடிமைத் தளையி லிருந்து மீண்டு, தாயகம் திரும்பிய இஸ்ரா யேல் மறந்துவிட்டது என்று நினைக்கத் தோன்றுகிறது. இந்தச் சமயத்தில் ஒரு புதிய இறைவாக்கினர் தோன்றுகிறார்; அவர் நாடு கடத்தப்பட்ட அடிமை மக்களுக்குப் புதிய எருசலேமின் மாட்சியினை வியந்துரைக்கி றார். பிறகு 'ஊழியன்' என்ற இந்தப் பட்டம் இறைவனால் செருபாபேலுக்குத் தரப்படுகி றது (ஆகா 2:23). அவர் தாவீதின் வழியில் ஆண்டவர் எழுப்பும் நீதியின் ''தளிர்'' ஆவார் (செக் 3:8; காண் எரே 3:5). இறைவனின் ஊழியர்களைப் பொறுத்த அளவில், அவர்கள் எதிர்பார்க்கும் பேரின் பம் கைகூடும்போது (ஏச 65:13 தொ. 17 தொ.) அவர்களின் துயரங்கள் எல்லாம் முற் றிலும் அகலும். ஆனால் முன்போல தகனப் பலிகளின் விளைவாக அவ்வின்பம் இனி மேல் இருக்காது. மாறாக இறைஊழியன் பாவிகளுக்காகத் தன்னையே பலியாக்கும் தியாகத்தின் விளைவாக இருக்கும் (காண் 53:10 தொ.).

III. யாவேயின் துன்புறும் ஊழியன்:-

1. ஏசயாவின் பாடல்கள்:- ஏச 42:1-4; 49:1-6; 50:4-9; 52:13-53: 12 ஆகிய பகுதிகள் யாவேயின் ஊழியன் பற்றிய பாடல்கள் என்றழைக்கப்படும்; இவற்றைத் தம் என்ற சொர்மன் அறிஞர் முதலில் பிரித்துக் காட்டி னார். இப்பாடல்களில் 2-ஆம் ஏசயாவின் போதகம் உச்சநிலை அடைகிறது. இங்கு இப்பாடல்களின் பகுப்பாய்வும், அவைபற் றிய இலக்கியச் சிக்கல்கள், இந்த ஊழியர் யார் என்பனவற்றையும் இனிக் காண்போம்.

முதல் பாடலில் (42:1-4) இறைவனே பேசுகிறார். தாமே தேர்ந்தெடுத்து ''உள்ளம் பூரிக்கும்'' ஊழியனை அறிமுகப்படுத்துகி றார். இது நீதிபதிகளை இறைவன் அழைத்த தற்கு இணையாக உள்ளது. இறை ஆவியால் ஆட்கொள்ளப்பட்டு மக்களினங்களுக்கு நீதி வழங்குவது, உண்மையான சமயத்தை அளிப்பது, ஊழியனது அலுவலாகும். இதை எப்படிச் செய்யப் போகிறார்? நீதிபதிகள் போலவோ, வெற்றி வீரன் சைரசைப் போல படையெடுப்புகளாலோ அன்று. இங்கே போர்க்கோலமோ இரச்சலோ இல்லை. முற் றிலும் மாறுபட்ட விதத்தில் ஊழியன் தோன் றுகிறார். அமைதியாகவும் வன்முறை இல் லாமலும், இரக்கமிக்க, ஊக்கமூட்டும் தம் பணியைச் செய்கிறார். ''நெறிந்த நாணலை முறியார், புகையும் திரியை அணையார்''. உண்மையுள்ளவராய் உலகில் அறத்தை நிலைநாட்டும் வரை, அவர் மனந்தளர மாட் டார், ஊக்கம் குறைய மாட்டார். அவரு டைய வருகைக்காகவும் சட்டத்திற்காகவும் நாடுகளும் தீவுகளும் காத்திருக்கும். அவர் உலகம் முழுவதிலும் நீதியை நிறுவுவார். சைரஸ் பெரும் புயல்போன்று உலக வர

லாற்றில் புகுந்தார். அவருக்குப்பின் இந்த ஊழியன் அமைதியோடு புகுகிறார். அதை ஒருவரும் காணவில்லை. ஆயினும் வரலாற்றில் பெரும் மாற்றங்களைச் செய்யப்போகிறவர் அவர்தான்.

இரண்டாவது பாடல் (49:1-6) ஊழியனுக்கும் இறைவனுக்கும் நடக்கும் உரையாடலாக அமைந்துள்ளது. ஊழியன் நாடுகளுக்குத் தன் அழைப்பைப்பற்றி எடுத்துக் கூறுவதோடு தொடங்குகிறது. அவர் உண்மையிலேயே யாவேயின் சித்தத்திற்குப் பணிந்திருக்கும் ஊழியன். அவர் தனது தூதைத் தேர்ந்தெடுக்கவில்லை; அது அவருக்கு அளிக்கப்படுகிறது. அதற்குப் பணிவதே அவரது கடமை. கருப்பையில் இருக்கும் போதே அவருக்கு ஆண்டவர் பெயரிட்டார். ''கூரிய வாளாகவும், தீட்டிய அம்பாகவும்'' இறை வார்த்தையை ஆண்டவர் அவருக்குக் கருவியாக அளித்தார். குறித்த காலம் வரை அவரைத் ''தமது அம்பறாத் தூணியில் ஒளித்து வைத்தார்''. ஊழியனைப் பார்த்து, ஆண்டவர் ''இஸ்ராயேலே, நீ நம் ஊழியன், உன்னில் நாம் மகிமை அடைவோம்'' என்று கூறுகிறார். ஆண்டவரே தன்னை அழைத்திருந்தாலும், தனது வாழ்வில் பொருளில்லை; அது பயனற்ற, வீணான வாழ்வாகும் என்று ஊழியன் முறையிடுகிறார்; ஆயினும் தமது வாழ்வின் விளைவுகளை இறைவன் பொறுப்பில் விட்டு விடுவதில் நிறைவடைகிறார். இந்த வலிமையற்ற மனிதனின் வல்லமை இறைவனே. இந்த மனிதன் வழியாக, இறைவன் இஸ்ராயேலை ஒன்று கூட்டுவார்; யாக்கோபின் மனத் திரும்புதலை நிறைவேற்றுவார். இதைவிட மிகப் பெரிய அலுவலை ஊழியனுக்கு வைத்திருப்பதாகக் கூறி இறைவன் அவரைப் பலப்படுத்துகிறார்; ஊக்குவிக்கிறார். அவரது உழைப்பு உலகிற்கெல்லாம் உரியதாகும். ''உலகின் எல்லைவரையில் நமது மீட்பு எட்டும்படி பிற இனத்தார்க்கு ஒளியாக உன்னை ஏற்படுத்தினேன்''. இப்பாடலில் ஊழியன் இஸ்ராயேல் நாடுதான் என்று அடையாளம் காட்டப்பட்டு, அதிலிருந்து வேறுபடுத்தப்படுகிறார்.

மூன்றாவது பாடலில் (50:4-9) ஊழியனே பேசுகிறார். ''களைத்தவனை ஊக்குவிக்கவும்'', ''கற்றதை உணர்த்தவும்'' வேண்டிய நாவன்மையை இறைவன் அவருக்கு அளித்துள்ளார்; அவர் இறைவனுக்கு எப்போதும் செவிசாய்ப்பதால், ஆற்றலோடு பேசமுடிகிறது. பெரும் துன்பங்கள் ஏற்பட்டாலும் அவர் தனக்கு அளிக்கப்பட்ட அலுவலிலிருந்து சிறிதும் விலகவில்லை. அந்த அலுவல் அவருக்குப் பகைமையையே கொண்டு வந்தது. அவரது பகைவர்கள் அவரை அடித்துத் துன்புறுத்தினர்; காறி உமிழ்ந்தனர்; எள்ளி நகையாடினர்; தாடியைப் பிய்த்தனர்; அவரை இறைப் பற்றற்றவன் என்று நிந்தித்தனர். இவற்றையெல்லாம் பொறுமையோடு ஏற்றுக் கொண்டார். இறைவன் தனக்குத் துணை புரிவார்; தன்னை மெய்ப்பிப்பார் என்ற நம்பிக்கையில் தன் முகத்தைக் கருங் கல்லைப்போல் வைத்துக் கொண்டார். நீதி மன்ற உருவகத்தைப் பயன்படுத்தி, மூன்று பெரும் கேள்விகளை எழுப்புகிறார். தீர்ப்பு வழங்குகிறவரே அவருக்காக வழக்காடி எண்பிப்பதால், யாரும் அவரை வெல்ல முடியாது. அவரது எதிரிகள் அழிந்துபோவர். மனிதரிடமிருந்து வரும் மகிமை நைந்து போகும் ஆடை போன்றது. ஆண்டவரிடமிருந்து வரும் மகிமையே என்றும் நிலைத்திருக்கும்.

நான்காம் பாடலில் (52:13-53:12) தொடக்கத்திலும் முடிவிலும் இறைவன் பேசுகிறார். இடையில் மக்களும் தலைவர்களும் உரையாடலில் பங்கெடுக்கின்றனர். தொடக்கத்தில் இறைவன் தமது ஊழியனின் வெற்றியையும் உயர்வையும் அறிவிக்கிறார். ஊழியன் துன்பங்களால் விகாரம் அடைந்திருந்தால் மக்களும் அரசர்களும் வெறுப்பால் அவரைப் பார்ப்பதைக்கூடத் தவிர்த்தனர். ஆனால் அவரது வெற்றியைக் கண்டு வியப்படைவர். இந்தப் பெரிய திருப்பத்தால் திகைத்துப்போய் பேரச்சத்தால் ஆட்கொள்ளப்பட்டு யாவரும் அவர் முன் வாய்பொத்தி நிற்பர். அவர்கள் வெறுத்து ஒதுக்கிய ஒருவர் வழியாக இறைவன் தமது திட்டத்தை நிறைவேறச் செய்தது கண்டு, யாவரும் அப்போது

தங்கள் வியப்பை எடுத்துக் கூறுவர். ஏனெனில் பாலைவனச் செடிபோன்று அவரது புறத்தோற்றம் கவர்ச்சியில்லாது அருவருக்கத்தக்கதாயிருந்தது. அவர் மக்களால் வெறுத்து ஒதுக்கப்பட்டார். தொழு நோயாளியிடமிருந்து தூர அகல்வதுபோல், இந்தத் துன்பமும் நோயும் நிறைந்த மனிதனிடமிருந்து மக்கள் வெறுப்போடு அகன்றனர். ஊழியன் அனுபவித்த துன்பங்கள் அவரது பாவங்களுக்குரிய தண்டனையே என்று நம்பினார்கள். ஆனால் அவரது துன்பங்கள் பகரத்தன்மையுடையன; அதாவது பதிலாகத் துய்க்கப்பட்டவை என்று இப்போது உணர்கின்றனர். அவர் அவர்களுடைய பாவங்களைச் சுமந்தார்; அவற்றிற்காகக் காயப்பட்டார். அவர்களைக் குணமாக்கத் தண்டனையை ஏற்றுக்கொண்டார். அவர்கள் யாவரும் ஆடுகள் போல் வழி தவறிப்போயினர். அவர்களது பாவங்களை ஊழியன்மீது ஆண்டவர் சுமத்தினார். ஊழியன் கொடுமையாக நடத்தப்பட்டாலும், தாழ்ச்சியோடு தாங்கிக் கொண்டார்; எதிர்க்கவில்லை; பழிக்குப்பழி கோரவில்லை. அநியாயமாய்த் தீர்ப்பிடப்பட்டார். அவரைப் பற்றி எவரும் அக்கறை கொள்ளவில்லை. பிறரது பாவங்களுக்காகக் கொல்லப்பட்டார். சொல்லிலும் செயலிலும் குற்றமற்றவராயினும் குற்றவாளிகளோடு அடக்கம் செய்யப்பட்டார்.

உரையாடலைத் தொடங்கிய இறைவனே அதை முடிக்கிறார். ஊழியனது வாழ்வின் இறைவனே செயலாற்றினார். மக்கள் விவரித்த யாவும் இறைவனது திட்டத்திற்கு ஏற்றவாறே நடந்தன. ஊழியனது துன்பங்கள் மக்களின் குற்றங்களைப் போக்கும், அவரது சொந்த வாழ்வு மகிமையோடு மீண்டும் அமைக்கப்படும். பெரியதொரு சந்ததியைப் பெற்று நீடு வாழ்வார். தனது துன்பத்தால் பலர் நீதிமான்களாக ஆக்கப்பட்டதை அறிந்து நிறைவு கொள்வார். இறந்தோரிடமிருந்து உயிர்ப்பிக்கப்பட்டு, பெரும் சன்மானம் பெறுவார். ஏனெனில், அவர் தனது இரத்தத்தைச் சிந்தி, கொடியவர்களுள் ஒருவனாகக் கருதப்பட்டு, பலரின் பாவங்களைச் சுமந்து, பாவிகளுக்காகப் பரிந்து பேசினார்.

இப்பாடல்களில் வரும் ஊழியன் யார்? இக்கேள்விக்குப் பதில் அளிப்பதில் பலத்த வேறுபாடுகள் உள்ளன. முதல் கருத்து; இஸ்ராயேல்தான் ஊழியன். இத்தகைய நேரடியான குறிப்பு உள்ளது *(49:3)*. இதைக் குழுப் பொருள் விளக்கம் என்போம். இப்பாடல்களில் வரும் ஊழியனைப் பற்றிய விவரிப்புகளுக்கும், ஏசயாவின் மற்றப்பகுதியில் வரும் ஊழியனாகிய இஸ்ராயேலைப் பற்றிய விவரிப்புகளுக்கும் இடையேயுள்ள ஒற்றுமை, இக்குழுப் பொருள் விளக்கத்திற்கு உறுதி அளிக்கிறது. இரண்டு பகுதிகளிலும் இறைவன் ஊழியனைத் தேர்ந்தெடுக்கிறார்; உருவாக்குகிறார்; ''தாங்குகிறார்'', தமது கையில் ஒளித்து வைக்கிறார்; ஆவியால் அவரை நிரப்புகிறார்; நாடுகளுக்கு அவரே ஒளியாக உள்ளார். அவரில் இறைவன் மகிமை பெறுகிறார். நூல் முழுவதிலும் ஊழியன் என்பவர் இஸ்ராயேல் நாட்டையே குறிக்கிறார் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. ஆகவே இப்பாடல்களிலும் ஊழியன் இஸ்ராயேலையே குறிக்கிறார் என்று நாம் கூறலாம். மேலும் அவரது தூதின் முக்கியபண்பு பகரத்தன்மையாகும்; அதாவது ஒருவருக்குப் பதிலாகச் செய்யும் அத்தூது எல்லாருக்கும் உரியது. இதை ஒரு தனி நபர், அவர் எவ்வளவு பெரியவரானாலும் செய்து முடிக்க முடியாது. ஆனால் இறைவாக்கினர் ஒரு தனிநபரைப்பற்றிய ஓவியத்தை வரைவதாகத் தோன்றுகிறது. ஆனால் நாடுகளையும் நகரங்களையும் தனி நபராக உருவகப்படுத்துதலும், குழுவுக்கு ஆள்தன்மை அளித்தலும் இந்த இறைவாக்கினரது சிறப்பாகும் *(47:1-4; 54:1-8)*. அதே போல் இஸ்ராயேல் நாட்டிற்குக் குறிப்பிட்ட பண்புகளை அளித்து அதை ஒரு தனிநபராக இறைவாக்கினர் உருவாக்குகிறார்.

இந்தக் குழுப்பொருள் விளக்கத்திற்கு மாறாகப் பல எதிர்ப்புகள் உண்டு. பாடல்களில் வரும் தூதன் விரும்பித் துன்பப்படுகிறார். ஆனால் இஸ்ராயேலாகிய ஊழியன் விருப்பமின்றித் துன்புறுகிறார். பாடலின் ஊழியன் 'இஸ்ராயேலுக்கே தூது செய்கிறார்; இஸ்ராயேலிலிருந்து வேறுபடுத்தப்ப

டுகிறார் *(49:5-6)*. மேலும் நாம் வரலாற்றில் அறிவதிலிருந்து இஸ்ராயேல் பிறநாடுக ளுக்கு ஒளியாக விளங்கவில்லை. அதன் துன்பங்கள், மனுக்குலத்தின் மனந்திரும்புத லையும், மீட்பையும் விளைவிக்கவில்லை. ஆகவே பாடல்களில் வரும் ஊழியன் இஸ் ராயேல் மக்களினமே என்ற குழுப் பொருள் விளக்கத்தைப் பலர் மறுப்பர்.

பாடலில் வரும் ஊழியன், இஸ்ராயே லின் வரலாற்றில் வரும் சில ஆட்கள்தான் என்று அடையாளம் காட்டச் சில ஆய்வாளர் கள் முயன்றுள்ளனர், நாடுகளுக்கெல்லாம் ஆசீர் கொண்டு வரும் ஆபிரகாம் *(46:6 பின்; 49:6)*, உடன்படிக்கை அமைத்துக் கொடுத்த மோசே *(42:6)*, ஊஸ்ஸா, எசக்கியா, யோசியா போன்ற அரசர்கள், முதலாம் ஏசயா, துன்புற்று மன்றாடும் ஊழியனான எரேமியா, 2-ஆம் ஏசயா போன்ற இறைவாக் கினர்கள் ஆகியோரில் ஊழியனை அடையா ளம் காண முயன்றுள்ளனர்.

ஆனால் இப்பாடல்கள் கடந்த காலத் தையோ நிகழ் காலத்தையோ சேர்ந்த எந்த வரலாற்றுத் தனி நபரையும் சுட்டிக் காட்டுவ தாகத் தோன்றவில்லை. ஏனெனில் நமக்குத் தெரிந்த எந்த ஒரு தனிநபரும், பாடல்களின் ஊழியன் செய்ததாகக் கூறப்படுபவைகளைச் செய்திருக்க முடியாது, செய்யவும் முடி யாது. மாறாக எடுத்துக் காட்டான ஓர் இஸ்ராயேலையே இப்பாடல்கள் சுட்டுகின் றன. இவர் யாவேயை உண்மையாக வணங்கி அவருக்குத் தன்னை முழுவதும் அர்ப்பணித்தவர். இஸ்ராயேலுக்கு மீட்பரா கத் திகழ்கிறார்; அதே சமயம் மக்கள் அனை வருக்கும் மீட்பைக் கொண்டு வருகிறார். இந்த ஊழியன் தன்னிலேயே பலருடைய ஆள்தன்மையையும் பணியையும் கொண் டுள்ளார்.

இப்பாடல்களுக்கு விளக்கம் அளிக்கும் போது இரண்டு கருத்துக்களை நாம் மனத் தில் கொள்வது நன்று. *1)* குழுப்பொருள் விளக்கம், தனி நபர் விளக்கம் ஆகிய இரண் டில் ஏதாவது ஒன்றைத்தான் நாம் எடுத்துக் கொள்ள வேண்டும் என்பதில்லை. இரண்டு முறைகளிலும் விளக்கம் அளிக்கலாம். ஒன் றிலிருந்து மற்றதற்கு விரைவாக மாறுவ தற்கு எபிரேய சிந்தனை இடம் அளிக்கிறது. இந்த மாற்றம் எளிதாகவும் இயல்பாகவும் நடைபெறும். இறைவாக்கினரது எண்ணப் போக்கு இரண்டு உருவக முறைகளுக்கிடை யிலும் ஊசலாடுகிறது. இப்போது ஒரு முறையையும், பின்பு மற்ற முறையையும் இறைவாக்கினர் சிறப்பித்துக் கூறுவார். *2)* இந்த நான்கு பாடல்களுக்கும் ஒரே பொரு ளில் விளக்கம் அளிக்க வேண்டிய கட்டாயம் இல்லை. இறைவாக்கினரது சிந்தனை முக் காலங்களையும் கடந்து நிற்கிறது. மேலும் அது குழுவுக்கும் தனிநபருக்கும் இடையில் ஊசலாடுகிறது. இவை ஊழியன் தூது பற் றிய இறைவாக்கினரின் கருத்தில் ஒரு வளர்ச் சியாக இருந்திருக்க வேண்டும் என்றும் குழுவிற்கு ஆட்தன்மை கொடுக்கத் தொடங் கிய முயற்சி தனிநபரில் முடிந்தது என்றும் சுட்டிக்காட்டுகின்றன. இவ்வாறு முதல்பா டல் ஐயமின்றி குழுப்பொருளைக் கொண் டுள்ளது. அதிலிருந்து 2-வது பாடலில் பிர மாணிக்கமுள்ள ''எஞ்சியோர்க்கு'' சிந் தனை மாறுகிறது. மூன்றாவது பாடலுக்குக் குழுப்பொருளிலும், தனிநபர் பொருளிலும் விளக்கம் அளிக்கலாம். 4-வது பாடல் ஐய மின்றி தனிநபர் பொருளைக் கொண்டுள் ளது. இந்தக் கருத்து வளர்ச்சி எது வலியுறுத் தப்படுகிறது என்பதைப் பொறுத்தது. ஏனெ னில் பலவாசகங்கள் ஐயமற இஸ்ராயே லைக் குறிக்கின்றன *(49:3-5)*. ஆகையால் குழுப்பொருளை நாம் புறக்கணிக்க முடி யாது. ஆனால் ஆண்டவரின் ஊழியனைப் பற்றி இறைவாக்கினரின் காட்சி பலரை உள்ளடக்கும் ஒருவரைப் பற்றியதாகும். இந்த ஒருவர் தனது மூதாதையரோடு முழுவ தும் ஒன்றித்தவராகவும், அதே சமயம் அவர் களிடமிருந்து வேறுபட்டவராகவும் இருக்கி றார். இந்த ஒருவர் இஸ்ராயேலாகவும் அதில் எஞ்சியவராகவும் இருக்கிறார்.

கிறிஸ்துவப் பாரம்பரியம், ஊழியனுக்கு மெசியாப் பொருளில் விளக்கம் அளித்து, இயேசுக் கிறிஸ்துவே இந்த எதிர்கால எடுத்

துக்காட்டானவர் என்று அடையாளம் காண்கிறது. இதற்கு இயேசுவே வழிகாட்டுகிறார். இதைப் பின்பு பார்ப்போம். கிறிஸ்துவுக்கு முந்திய யூத ராபிகள் இப்பாடல்களுக்கு மெசியாப் பொருள் அளித்தனர். ஆனால் கிறிஸ்துவச் சமூகம் இப்பாடல்களை இயேசுவைப் பற்றியதாக விளக்கம் கூறத் தொடங்கியபின், யூத விளக்கவுரையாளர்கள் தங்கள் கருத்தை மாற்றி, இந்த ஊழியன் யூத நாட்டைக் குறிப்பதாகக் குழுப்பொருளில் விளக்கம் அளித்தனர். நான்காவது பாடல் இறைவனது எதிரியை விவரிப்பதாகக்கூட விளக்கம் அளித்தனர்.

2. நிறைவேறுதலும் புதிய ஏற்பாட்டு விளக்கமும்:- பாபிலோனின்வீழ்ச்சி, பாரசீகத்தின் எழுச்சி ஆகிய நிகழ்ச்சிகளுக்குப் பின் வந்த காலத்தில் 2-ஆம் ஏசயா முன்னறிவித்தவை எந்த அளவுக்கு நிறைவேறின? இறைவாக்கினர் ஆண்டவரின் வருகையையும் அவரது அரசு நிறுவப்படுவதையும் எதிர்பார்த்தார். சைரசிடம் பாபிலோன் வீழ்ச்சி அடையும்; நாடு கடத்தப்பட்ட இஸ்ராயேலர்கள் விடுவிக்கப்பட்டுத் தாயகம் திரும்புவர். விடுதலை பெற்றவர்களை பாபிலோனிலிருந்து பாலஸ்தீனத்திற்குப் பாலை வழியாகத் தயாரிக்கப்பட்ட நேரடிப் பாதையில் இறைவனே இட்டுச் செல்வார். பள்ளத்தாக்குகள் மேவப்படும்; குன்றுகள் மட்டமாக்கப்படும். பாதைகள் செம்மையாக்கப்படும். பாலையில் ஆறுகள் ஓடும்; மரங்கள் வளரும். இந்தப் புதிய யாத்திரைக்காக இயற்கையே மாற்றி அமைக்கப்படும். ஆண்டவரது மகிமையையும் அவருடைய ஊழியனது நற்காலத்தையும் கண்ட பிற நாடுகள் மனந்திரும்பும். ஒரே உண்மையான இறைவனாகிய யாவேயை ஏற்று வழிபடும். இறைவாக்கினரது முன்னறிவிப்பின் சுருக்கம் இதுதான்.

ஆனால் உண்மையில் நடந்தது என்ன? பாபிலோன் வீழ்ந்தது. ஆனால் சைரஸ் தனது வெற்றியை மார்டக் கடவுள் தந்ததாகக் கூறினார். இந்த வெற்றியை ''விண்ணக இறைவனாகிய ஆண்டவர்'' அளித்ததாக எஸ்ரா திருநூல் கூறுகிறது (எஸ் 1:2). சைரஸ் ஏற்றுக் கொண்ட மேலாண்மையுடைய இறைவன் இஸ்ராயேலின் இறைவனாக இருந்தால்தான் இருகூற்றுகளும் ஒத்துப்போகும். நாடு கடத்தப்பட்ட யூதர்கள் அவர்களது தாயகம் செல்ல சைரஸ் அனுமதித்தார். ஆனால் அவர்கள் செய்த பயணத்துக்கும் இறைவாக்கினரது உணர்ச்சிமிக்க பாடல்களில் விவரிக்கப்படும் பயணத்திற்கும் இணைவுத் தன்மையே இல்லை. உண்மையில் நடந்த பயணத்தில் ஆண்டவர் வெளிப்படையாகத் தோன்றிச் செயலாற்றவில்லை. பாலைவழி செம்மைப்படுத்தப்பட்ட பெரும் பாதையாக அமையவில்லை. இயற்கை மாற்றப்படவில்லை. விடுதலை பெற்ற அகதிகள் பெருங் கூட்டமாகத் திரும்பவில்லை. பல்வேறு சிறு குழுக்களாகத் திரும்பினர். அவ்வாறு திரும்பி வருவதற்குப் பல ஆண்டுகள் ஆகின. திரும்பியவர்கள் பல இன்னல்களைச் சந்தித்தனர். வறட்சி, மோசமான அறுவடை, ஏழ்மை, சுற்றியிருந்த மக்களின் எதிர்ப்பு, யூத மக்களிடையே நிலவிய அவநம்பிக்கை, ஐயப்பாடு ஆகிய துன்பங்களை அனுபவித்தனர். ஆலயம், எருசலேம் நகர்ச் சுவர்கள் ஆகியவை கட்டப்படுவதற்கும் தடைகள் எழுந்தன; ஆகவே அவற்றைத் தள்ளிப் போட்டனர். இறையரசு நிறுவப்படவில்லை; பூமி செழிப்படையவில்லை; பிறமக்கள் மனந்திரும்பவில்லை. இவ்வாறு 2-ஆம் ஏசயாவுக்குப் பின் வந்த காலத்தில் அவரது பெரும் முன்னறிவிப்புகள் நிறைவேறவில்லை. தமது மக்களின் விடுதலைக்காக இறைவன் உறுதியாகத் தலையிடுவார் என்ற அறிவிப்பு, காலம் கடத்தப்பட்ட, வருங்காலத்திற்குரிய நம்பிக்கையாயிற்று. இறைவாக்கினரின் உன்னத காட்சியில் காலம் கடந்த முறையில் காணப்பட்ட நிகழ்ச்சிகள், உலக வரலாற்றில் நீண்ட கால இடைவெளிகளால் பிரிக்கப்பட்டன.

2-ஆம் ஏசயா முன்னறிவித்த மீட்பரான இறைவனின் வருகை புதிய ஏற்பாட்டில் விவரிக்கப்படுகிறது. இந்நூலின் இறைவாக்குகள் இயேசுவிலும் அவரது சீடர்களிலும் வியத்தகு முறையில் நிறைவேறுவதாகப் புதிய ஏற்பாடு தெளிவாகக் குறிக்கிறது.

கத்தோலிக்க ஆய்வாளர்களும், பல கத்தோலிக்கரல்லாத ஆய்வாளர்களும் இந்நூலில் வரும் ஊழியன் நேரடியாகவோ எடுத்துக் காட்டாகவோ வருங்கால மெசியாவைச் சுட்டுவதாகக் கருத்தொற்றுமை கொண்டுள்ளனர். இக்கருத்துக்கு, கிறிஸ்துவுக்கு முந்திய யூதப் பாரம்பரியங்களும், திருச்சபைத் தந்தையரின் கருத்தொற்றுமை மிக்க ஒரே சீரான பாரம்பரியங்களும் பெரும் ஆதரவு அளிக்கின்றன.

இயேசுக் கிறிஸ்துவின் பணிபற்றிய நற்செய்தி விவரிப்புகள் யாவும் 2-ஆம் ஏசயாவிலிருந்து மேற்கோள் காட்டித் தொடங்குகின்றன (*மத் 3:3; மாற் 1:2; லூக் 3:4-6; யோவா 1:23; ஏச 40:3*). பாலைவனத்தில் ஒலிக்கும் கூக்குரலாகிய திருமுழுக்கு அருளப்பர், ஆண்டவரின் வருகைக்காகப் பாதையைத் தயாரித்தார். மக்களின் விடுதலைக்காக இறைவன் ஆற்றும் உறுதியான தலையீடு, கிறிஸ்துவின் பணி, இறப்பு, உயிர்ப்பு ஆகியவற்றில் நிறைவேறுகிறது. இயேசுவின் திருமுழுக்கின் போது, ''நீரே! என் அன்பார்ந்த மகன்: உம்மிடம் பூரிப்பு அடைகிறேன்'' (*மாற் 1:11; ஏச 42:1*) என்ற குரலில் ஆவியானவர் இறங்கி வருதல் நிறைவேறுகிறது. இயேசுதான், ஆவியால் நிரப்பப்பட்ட ஆண்டவரின் ஊழியன். அவர் தமது குணமாக்கும் பணியில் ''நம் பிணிகளை ஏற்றுக் கொண்டார்; நம் நோய்களைச் சுமந்து கொண்டார்'' (*மத் 8:17; ஏச 53:4*). இவர்தான் பலருடைய மீட்புக்கு விலையாகத் தம் உயிரை அளிக்கவும்'' (*மாற் 10:45*) ''உடன்படிக்கைக்கெனப் பலருக்காகத் தம் இரத்தத்தைச் சிந்தவும் '' (*மாற் 14:24*) வந்தார். இக்கூற்றுகளில் வரும் ''பலர்'' என்ற சொல் ஊழியனைப் பற்றிய 4-ஆம் பாடலைச் சுட்டுகிறது. இப்பாடலுக்கு ஏற்றவாறுதான் இயேசு தமது பாடுகள், சிலுவை மரணம் ஆகியவற்றுக்கு விளக்கம் அளித்தார்.

இந்த நான்கு பாடல்களில் வரும் சிந்தனைப் போக்கு, இயேசுவின் பணி, மரணம், உயிர்ப்பு ஆகியவற்றில், எடுத்துக்காட்டப்படுகிறது. முதல் பாடலில் வரும் சாந்தமிக்க ஊழியனைப்போல் நற்செய்தியின் போதகராய் இயேசு தமது பணியைத் தொடங்குகிறார். 2-வது பாடலில் ஊழியன் பிறநாடுகளுக்குத் தூது செல்லுமுன், இஸ்ராயேலுக்குத் தூது செல்கிறார். இயேசு ''சிதறிப்போன இஸ்ராயேல் குலத்து ஆடுகளுக்கே'' (*மத் 10:6*) தமது பணியை முதலில் செய்கிறார். உயிர்ப்புக்குப்பின் அவரது பணி யாவருக்கும் விரிவாக்கப்படுகிறது. அவரது சீடர்கள் ''எல்லா இனத்தாருக்கும்'' (*மத் 28:19*) ''மண்ணுலகின் இறுதி எல்லைவரைக்கும்'' (*அ.ப.1:8*) அனுப்பப்படுவர். 3-ஆம் பாடலில் ஊழியனது பாடுகள் முதன்முறையாக எடுத்துக்கூறப்படுகின்றன. பிலிப்பை செசரியாவில் பேதுரு விசுவாச அறிக்கை செய்தபின், இயேசு தமது பாடுகளையும் மரணத்தையும் முன்னறிவிக்கத் தொடங்குகிறார் (*மத் 16:21-23*). சிலுவையின் நிழல் அவரது பணியின் பின்பகுதி முழுவதும் பரவி நிற்கிறது. 4-வது பாடலில் ஊழியனது துன்பங்கள், அவரது வெற்றியை ஒட்டி விவரிக்கப்படுகின்றன. இயேசு தமது பகரத்தன்மையுடைய துன்பங்களால் - அதாவது-பிறருக்குப் பதிலாகத் துய்க்கிற தற்பலியால், பாவம், சாவு ஆகியவற்றை வெற்றி கொள்கிறார். அவரது வெற்றி, உயிர்ப்பு, உயர்த்தப்படுதல் ஆகியவற்றில் நிலை நிறுத்தப்படுகின்றன.

இயேசுதான் இறைவனின் ஊழியன். இயேசுவின் சீடர்கள், இந்த நான்கு பாடல்களின் பின்னணியில், அவரது செயல்களுக்கு விளக்கம் அளித்தனர். அப்போஸ்தலர் பணி என்ற திருநூலில் காணப்படும் தொடக்ககாலத் திருச்சபையின் போதகம், துன்புறும் ஊழியனைப் பற்றியச் சிந்தனைப் போக்கில் தான் இயேசுவைச் சித்தரிக்கிறது (*அ.ப. 3:13-26; 4:27-30*). பிலிப்புவின் போதகம் இதற்கு ஒரு சிறந்த எடுத்துக் காட்டாகும். எருசலேமிலிருந்து திரும்பிக் கொண்டிருந்த ஓர் எத்தியோப்பிய அமைச்சன் தன் தேரில் அமர்ந்து நான்காவது பாடலை வாசித்துக் கொண்டிருந்தான். இப்பகுதியை விளக்கிக் காட்ட அழைக்கப்பட்டபோது, ''பிலிப்பு மேற்சொன்ன மறைநூல் வாக்கை வைத்துக்

கொண்டு, இயேசுவைப் பற்றிய நற்செய்தியை அறிவித்தார்'' *(8:26-35)*. ஊழியனது அலுவலை இயேசு நிறைவேற்றினார். நிறைவான கீழ்ப்படிதலுள்ள பலியை அவர் ஒருவரே அளித்தார். மனுக்குலம் அனைத்தின் நன்மைக்காகவும் மீட்புக்காகவும் தமது பரிசுத்த வாழ்வை விரும்பிக் கையளித்தார். அவருடைய துன்பங்கள், வெற்றி ஆகியவற்றால் மனிதர் இறைவனுக்கு ஏற்புடைவர்களாகி நின்றனர்; முழுமை பெறுகின்றனர்; மனத்துக்கம் கொள்கின்றனர். அவர்களுக்காக அவர் துன்பப்பட்டார் என்று நன்றியுணர்வோடு ஏற்றுக் கொள்கின்றனர். பாடுகள்பட்டு, மகிமை அடைந்தவர் அவர்தான். அரசர்களும் அவர் முன் ''வாய்பொத்தி நிற்பர்.'' இயேசுக்கிறிஸ்து என்ற அந்த ஒரு மனிதரில்தான்'' ஊழியனது அழைப்பு நிறைவேறுகிறது.

மேலும், இஸ்ராயேலே ஊழியன். தமது மீட்பு அலுவலில் கிறிஸ்து ஒரு பிரதிநிதியாவார். தம்மிலே பலரை உள்ளடக்குகிறார். புதிய இஸ்ராயேலை நிறுவியவரான ''கிறிஸ்துவில்'' கிறிஸ்துவர்கள் உள்ளனர். அவர்கள் விண்ணகத் திராட்சையின் கிளைகளாவர்; அவரைத் தலையாகக் கொண்ட உடலின் அங்கங்கள் ஆவர். கிறிஸ்துவும் திருச்சபையும் இறைவனின் ஊழியராவர். அவரது ''துன்பங்களில் பங்கு கொண்டு தோழமை கொள்பவர்கள்'' வழியாகவும், ''திருச்சபையாகிய அவருடைய உடலின் பொருட்டு, கிறிஸ்து படவேண்டிய வேதனைகளில் இன்னும் குறைவாய் இருப்பதை'' நிறைவு செய்பவர்கள் வழியாகவும், (கொலோ *1:24*), அவரது பாடுகளின் தனிச்சிறப்பான நன்மைகள் மனுக்குலம் முழுவதற்கும் அளிக்கப்படுகின்றன. மனுக்குலத்திற்கு அவர் மட்டுமே செய்யக்கூடியது (இது முடிந்துவிட்ட அலுவலாகும்). இவரைத் தலையாகக் கொண்ட உடலின் மற்ற அங்கத்தினர்களின் துன்பங்களாலும் பணியாலும் மனுக்குலத்திற்கு அளிக்கப்படுகிறது (இது முடிவு பெறாத தொடர்ந்து நடக்கும் அலுவலாகும்). ஊழியன் பற்றிய கருத்து மீண்டும் குழுவுக்கும் தனிநபருக்கும் இடையில் ஊசலாடுகிறது. பழைய ஏற்பாட்டில் குழுவிலிருந்து ஒருவருக்கும் இஸ்ராயேலிலிருந்து ''எஞ்சியவர்க்கும்'', கிறிஸ்துவுக்கும்'' செல்கிறது. புதிய ஏற்பாட்டில் ஒருவரிலிருந்து குழுவாகிய திருச்சபைக்கும் செல்கிறது. திருச்சபையின் வழியாக, உயிர்த்த உயர்த்தப்பட்ட கிறிஸ்து இப்போது, உலகிற்கெல்லாம் பணி செய்கிறார். 2-ஆம் ஏசயா முன்னோக்கி மொழிந்தது போல், இஸ்ராயேலின் தூது எல்லாருக்கும் உரியதாகும். இறைவனது ஒளி, அவரது ஊழியன் கிறிஸ்து வழியாக, இப்போது உலகெங்கும் ஒளி வீசுகிறது. அவரது மீட்பு உலகின் இறுதி எல்லை வரை எட்டுகிறது. ஆனால் இறைவாக்கினரது முன்னறிவிப்புகளும் எதிர்பார்ப்புகளும், இன்னும் முழுமையாக நிறைவேறவில்லை. ஆண்டவராகிய கிறிஸ்து மகிமையோடும் ஆற்றலோடும் திரும்பி வரும் போதுதான் இறைவாக்கினரின் நம்பிக்கைகள் எல்லாம் நிறைவேறும். அப்போது ஆண்டவரால் மீட்கப்பட்டவர்கள் நித்தியத்திற்கும் நிலைத்திருக்கும் மகிழ்ச்சியோடு, ''சீயோனுக்குத்'' திரும்புவர். ''படைப்பு அனைத்துமே அழிவுக்கு அடிமைப்பட்டிருக்கும் நிலையிலிருந்து விடுபட்டு இறைவனின் பிள்ளைகளுக்குரிய மகிமையையும் விடுதலையையும் பெற்றுக் கொள்ளும்'' *(உரோ 8:21)*. அப்போது இறைவாக்கினருக்கு வெளிப்படுத்தப்பட்ட இறைவனது திட்டம் நிறைவேறும். ''எல்லா முழந்தாளும் நமக்கு மண்டியிடும்; எல்லா நாவும் நம் பெயரால் ஆணையிடும் (எச *45:24*; பிலி *2:10-11*).

IV. உண்மை ஊழியன் மனிதரின் மீட்பர்.

*1.* ஊழியனின் பணியை இயேசு தமதாக ஏற்றுக் கொள்கிறார்: அவர் இதயத்தில் சாந்தமும், மனத்தில் தாழ்ச்சியும் உள்ள தலைவர் (மத் *11:29*); அவர் நற்செய்தியை ஏழைகளுக்கு அறிவிக்கிறார் (லூக் *4:18* தொ). அவர் தம் சீடர்களுக்கு நடுவில் ஊழியம் செய்பவராகத்தான் இருக்கிறார் (லூக் *22:27*); ஆனால் அவரே உண்மையில் அவர்களின் ஆண்டவரும் தலைவருமாவார் *(யோவா 13:12-15)*; இவ்வுலகில் தம்மவர்

மீது அன்புகூர்ந்த அவர், அந்த அன்பின் எல்லையைத் தமது தொண்டின் மூலமும் (13:1; 15:13) உலக மீட்புக்காகத் தமது உயிரையே கொடுத்த தியாகத்தின் மூலமும் மெய்ப்பித்தார் (மாற் 10:43 தொ ;மத் 20:26 தொ.). இதற்காகத்தான் அவர் ஒரு குற்றவாளியைப் போலக் கொடுமைக்குள்ளாகி (லூக் 22:37) சிலுவையில் இறக்கிறார் (மாற் 14:24; மத் 26:28); ஆனால் மனுமகனைப் பற்றி எழுதியுள்ளபடி, 'நான் உயிர்த்தெழுவேன்' என்ற நிச்சயம் அவருக்கிருந்தது (மாற் 8:31; 9:31; லூக் 18:3 தொ; 24:44; காண்.எச 53:10 தொ). அவர்தாம் மக்கள் எதிர்பார்த்த மெசியா என்பது உண்மையானால், அந்த 'மனுமகன்' தற்காலிகமான ஓர் உலகியல் அரசை நிலை நாட்ட வரவில்லை; மாறாக ஊழியனாகிய தம் இறப்பின் மூலம் தம் மகிமையில் நுழையவும், தம் மக்களையும் அம்மகிமைக்கு அழைத்துச் செல்லவுமே அவர் வருகிறார்.

2. இயேசுவின் மரணத்தின் மறைபொருளை அறிக்கையிடவும் (அ.ப. 3:13 தொ. 18; 4:27 தொ), அவரே பேறுகளின் ஊற்றாகவும், நானிலத்திற்கும் ஒளியாகவும் இருப்பதை எடுத்துரைக்கவும் (3:25 தொ; 26:23) அப்போஸ்தலர்களின் போதனைகள் இயேசுவுக்கு ஊழியன் என்ற பட்டத்தை வழங்குகின்றன. ஊழியனைப் போலவே அவரும் அநியாயமாகக் கொலையுண்ட ஒரு செம்மறி ஆவார் (8:32 தொ); அதன் மூலம் அவர் வழிதவறிய ஆடுகளையெல்லாம் மீட்டுள்ளார்; அவருடைய உடம்பில் ஏற்பட்ட காயங்கள், பாவிகளின் ஆன்மாக்களைக் குணப்படுத்தின (1 பேதுரு 2:21-25). மத்தேயுவின் கருத்துப்படி இயேசுதான் உலகிற்கு நீதியை அறிவிக்கும் ஊழியன் ஆவார். அவரது பெயரில்தான் அவர்களின் நம்பிக்கை நிலை கொண்டுள்ளது (மத் 12:18-21= எச 42:1-4). இறுதியாக, பவுல் ஒரு பாடலின் மூலம் கிறிஸ்துவின் மறைபொருளையும், அவரது அன்பையும் மிகச் சுருக்கமாகவும் ஆழமாகவும் எடுத்துரைக்கிறார்: அதன்படி கிறிஸ்து தமது தந்தைக்குக் கீழ்ப்படியும்பொருட்டு ஓர் அடிமையின் உருவினை எடுத்தன் மூலமும், சிலுவையில் மரித்ததன் மூலமும் தமது மகிமையுள் நுழைந்துள்ளார் (பிலி 2:5-11). மனிதனாகிய இறைமகனின் மீட்புத்தரும் பலியைப் பற்றி இறைவாக்குகள் முன்னறிவித்தன. இதன் காரணமாகத்தான் இறைவனின் ஊழியனும், சிலுவையில் இறந்து உயிர்த்தவருமான இயேசுவின் பெயரே மீட்பின் அடிப்படையாகிறது (அ.ப. 4:14 தொ. 29 தொ).

3. இனிமேல், இறைவனின் ஊழியர்களெல்லாம் கிறிஸ்துவின் உழியர்களாவர் (உரோ 1:1; கலா 1:10; பிலி 1:1; காண் தீத் 1:1). ''இதோ ஆண்டவரின் அடிமை'' என்று கூறிய மரியாளை அவர் தமக்குத் தாயாகக் கொண்டதுபோல (லூக் 1:38. 43. 48), தமக்குத் தொண்டர்களாய் இருப்போரை எல்லாம் தம் நண்பராகவும் (யோவா 15:15), தம் தந்தையின் மைந்தராகவும் ஆக்குகிறார் (20:17). அவர்களும், தங்கள் தலைவரைப் போல, துன்ப துயரங்களின் வழியே நடக்க வேண்டும் (15:20). இவ்வுலகச் சோதனைகளில் வெற்றி காண்பதன் மூலமே, இறைவனின் ஊழியர்கள் இறையரசின் மாட்சியுள் நுழைவார்கள் (திருவெளி 7:3.14 தொ ; 22:3 தொ ).

**ஆண்டவரின் சகோதரர்கள்** (BROTHERS OF THE LORD)

இவர்கள் பொதுவாக இயேசுவின் சகோதரர்களாகக் கருதப்பட்டவர்கள். இப்பதம் 1 கொரி 9:5-இல் வருகிறது. கலா 1:19-யாக்கோபை ''ஆண்டவரது சகோதரர்'' என்று குறிக்கிறது.

இயேசுவின் உறவினர்களைப் பற்றி பல குறிப்புக்கள் புதிய ஏற்பாட்டில் காணப்படுகின்றன. மாற் 6:3-இல் ''இவர் தச்சன் அல்லரோ மரியாளின் மகன்தானே! யாக்கோபு, யோசேசு, யூதா, சீமோன் இவர்களுடைய சகோதரர்தானே! இவர் சகோதரிகளும் இங்கு நம்மோடு இல்லையா?'' என்ற கூற்று வருகிறது. இதற்கு இணையான மத் 13:55-இல் யோசேசுக்குப் பதிலாக, யோசேப்பு வருகிறது. இரண்டும் ஒரே பெய

ரின் இருவடிவங்களாகத் தெரிகிறது. இயேசு வின் சகோதரர்களைப் பற்றி மற்ற புதிய ஏற்பாட்டுக் கூற்றுகள்: மத் 12:46-50; மாற் 3:31-35; லூக் 8:4:21; யோவா 2:12; 7:3.5.10; அ.ப.1:14; 1 கொரி 9:5; கலா 1:19 ஆகிய வையாகும்.

இவ்வாசகங்களை அடிப்படையாகக் கொண்டு, ஆண்டவரின் சகோதரர்கள் என் பது பற்றி மூன்று கருத்துக்கள் கூறப்படும். 1. சகோதரர் என்பது உடன் பிறந்த ஆண் களை மட்டும்தான் குறிக்கும் என்ற பொரு ளில், இயேசுவுக்கு உடன் பிறந்த சகோதரர் கள் இருந்தனர். இவர்கள் யோசேப்புக்கும், மரியாளுக்கும் பிறந்தவர்கள். இக்கருத்துக்கு மாற் 6:3; மத் 13:5 பெரிதும் ஆதரவு அளிப்பதாகத் தெரிகிறது. இக்கருத்தைக் கெல்விடியஸ் என்பவர் கொண்டிருந்தார். இவரது நூல் கிடைக்கவில்லை. ஆனால் அதிலிருந்து எடுத்துக்காட்டுக் கூறி ஏரோ னிமு அவரைக் கண்டனம் செய்கிறார். ஆனால் பிரிவினைச் சகோதரர்கள் சபைகள் இக்கருத்தை விடாப் பிடியாகக் கொண்டிருக் கின்றனர். 2. இயேசுவின் சகோதரர்கள் என்ற ழைக்கப்படுபவர்கள், மரியாளுக்குப் பிறந்த வர்கள் அல்லர். யோசேப்பின் முந்தைய திருமணத்தில் பிறந்தவர்கள் ஆவர். இவர் கள் மரியாளின் குழந்தைகளானால் இவர்கள் இயேசுவுக்கு இளையவர்களாக இருக்க வேண்டும். ஆனால், மாற் 3:31-இல் இவர் கள் இயேசுவைக் கட்டுப்படுத்த முயல்வதா கத் தெரிகிறது. யோவா 7.3-4 இவர்களை இயேசுவுக்கு முதியவர்களாகக் காட்டுகிறது. இயேசுவுக்கு உடன்பிறந்த சகோதரர்கள் இருந்திருந்தால், இயேசு தாம் மரிக்குமுன், தம்தாய் மரியாளை ஏன் தாம் அன்பு செய்த சீடரிடம் ஒப்படைக்க வேண்டும் (யோவா 19:26-27)? ஆகவே இவர்கள் இயேசுவின் சகோதரர்களாக இருக்க முடியாது. பெரியன் னையின் மக்களாக இருக்கலாம். இது எப்பி பானியஸ் என்பவரின் கருத்தாகும். இக்க ருத்து கி.பி. 3-ஆம் 4-ஆம் நூற்றாண்டுகளில் பிற்காலத்திலும் பரவலாக ஏற்றுக் கொள்ளப் பட்டது. கிரேக்கத் திருச்சபையும் மற்ற கிழக் கத்திய திருச்சபைகளும் சில பிரிவினைச் சபைகளும் ஏற்றுக் கொள்ளுவார்கள். 3. ஆண்டவரின் சகோதரர்கள் என்று கூறப்படு வோர் இயேசுவின் நெருங்கிய உறவினர் களே ஒழிய, அவரது உடன் பிறந்த சகோதரர் கள் அல்லர். கலா 1:19-இல் வரும் ''ஆண்ட வரின் சகோதரரான யாக்கோபு, ''அல்பேயு வின் மகன் யாக்கோபு (மாற் 3:18), அல்லது யோசேசின் சகோதரரான ''சின்ன யாக்கோ பு'' (15:40) ஆவார். யாக்கோபும் யோசேசும் ''இயேசுவின் சகோதரர்கள் என்றடழக்கப்ப டுகின்றனர் (6:3). மரியாள் என்றழைக்கப்ப டும். அவர்களுடைய தாய் (மத் 27:56; மாற் 15:40). ''கிளோப்பாவின் மனைவியாகிய மரியாள்'' ஆவாள். இவர் இயேசுவின் தாயா கிய மரியாளின் சகோதரி ஆவாள் (யோவா 19:25). இது யாக்கோபையும் யோசேசையும் இயேசுவின் உறவினர்களாக்கும். இப்ப டியே யூதா, சீமோன் என்பவர்களுக்கும் விளக்கம் அளிக்கலாம். ஆகையால் இயேசு வுக்கு இவர்கள் உடன்பிறந்த சகோதரர்கள் அல்லர். உறவினராக, நெருங்கிய உறவின ராக இருந்திருக்கலாம். இயேசு ஒருவரே மரியாளின் ஒரே மகன். மரியாள் என்றும் கன்னியாவாள். இவ்விளக்கம் எரோனிமுவி னுடையதாகும். இக்கருத்தைக் கத்தோலிக்க திருச்சபை ஏற்றுப் போற்றி வந்துள்ளது.

இனி சகோதரர் என்பது எப்பொருட்களில் விவிலியத்தில் வருகிறதென்று சிறிது பார்ப் போம். சகோதரன் என்ற சொல் அதன் மிகக் குறுகிய பொருளில் ஒரே தாய் தந்தையருக் குப் பிறந்த ஆண்களின் உறவை எடுத்துக்கூ றப் பயன்படுகிறது. சான்று: ஆபேலும் காயின் (ஆதி 4:2. 8) அல்லது ஒரே தகப்ப னுக்குப் பிறந்த ஆண்களை (யோசேப்பு, பென்யாமீன் 35:24; 42:15) அல்லது ஒரே தாய்க்குப் பிறந்த ஆண்களை (சிமேயா, சோபாபு, நாத்தான், சாலமோன் 1 நாள் 3:5)க் குறிக்கலாம். மேலும் சகோதரன் என்ற சொல் மற்ற உறவுகளையும் குறிக்கலாம். பழைய ஏற்பாட்டில் பொதுவாக எந்த இரத்த உறவையும் (ஆபிரகாமும் அவரது தம்பி மகன் லோத்தும் சகோதரர் என்று குறிக்கப்படுகின்றனர் ஆதி 14:16), நண்ப னையும் (2 சாமு 1:26), கூட்டாளியையும்

*1 அர 20:32)*, தோழனையும் *(யோபு 30:29; பழ. 18:9)* ஒரே குலத்தைச் சேர்ந்தவர்களையும் *(எண் 8:26)* மற்றொரு நாட்டைச் சேர்ந்தவனையும் *(உப 23:7)* குறிக்க, சகோதரன் என்ற சொல் பயன்பட்டுள்ளது.

புதிய ஏற்பாட்டில், ''இறைவனது வார்த்தையைக் கேட்டு அதன்படி நடப்பவர்களை'' தம் சகோதர்களாக இயேசு பாவிக்கிறார் *(மத் 12:50; மாற் 3:35; லூக் 8:21)*. பவுல் தன் சக விசுவாசிகளைச் சகோதரர்கள் என்றழைக்கிறார் *(உரோ 1:13)*. எபிரேயருக்குத் திருமுகம் எழுதியவரின் கருத்துப்படி, இயேசு, உடன்படிக்கையின் உறுப்பினர்களைச் சகோதரர்கள் என்றழைக்க வெட்கப்படவில்லை. ஏனெனில் அவர்கள் அனைவருக்கும் உயிர்முதல் ஒன்றேயாகும் *(எபி 2:11)*. மத் 7:3-4-இல் இயேசு சகோதரனையும் அயலானையும் ஒன்றாக்குகிறார். சீடர்கள் தங்களுக்குள்ளே ஒருவர் ஒருவரைச் சகோதரர் என்று குறிப்பிடுகின்றனர் *(கொலோ 4:7.9.15; 2 பேதுரு 3: 15)*. ஆனால் இயேசுவைச் சகோதரன் என்று ஒருபோதும் குறிப்பிட்டதில்லை.

பெரும்பாலான மொழிகளில் சகோதரன் சகோதரி என்ற சொற்கள் குறுகிய பொருளில் உடன்பிறந்தவர்களைக் குறிக்கவும், பரந்த பொருளில் எந்த உறவையும் குறிக்கப் பயன்பட்டுள்ளது. இம்மரபு எபிரேயர்களிடமும் பழக்கத்தில் இருந்தது. சகோதர உறவையும், பிற உறவுகளையும் குறிக்க வெவ்வேறு சொற்களுடைய மொழிகளில், பரந்த பொருளில் சகோதர உறவைப் புரிந்து கொள்வது கடினம். பெரியப்பா, பெரியம்மா, சின்னம்மா, சித்தப்பா ஆகியோரின் பிள்ளைகளை சகோதரன் சகோதரி என்றழைக்கும் நமது இந்திய மரபில் இது கடினமாக இருக்கக் கூடாது.

ஆகவே, 1. மத்தேயுவும், லூக்காவும் இயேசுவின் பிறப்பிற்குமுன் மரியாள் கன்னியாய் இருந்தாள் என்றும், இயேசு தலைப்பேறான மகன் என்றும் கூறுவதால் *(லூக் 2:7, 23; மத் 1:18-24)*. மாற் 6:3-இல் வருவோர் இயேசுவுக்கு மூத்த சகோதரர்களாக இருக்க முடியாது. இயேசுவைப் பிடிக்கப் புறப்பட்ட உறவினர்களில் *(மாற் 3:21)* அவருடைய சகோதரர்கள் இருந்திருந்தால் அவர்கள் அவருக்கு மூத்தவர்களாக இருக்க வேண்டும். ஏனெனில் அவ்வாறு செய்ய இளையவர்களுக்கு அதிகாரமில்லை.

2. யோசேப்புக்கு முந்திய திருமணத்தில் பிறந்த பிள்ளைகளே இங்குக் குறிக்கப்படும் சகோதரர்கள் என்பதற்கு ஆதாரமில்லை. எகிப்துக்கு ஓடியபோது, பிற பிள்ளைகள் சூசையோடு இருந்ததாகத் தெரியவில்லை. அவ்வாறு இருந்திருந்தால் நான்கு ஆண்களும் இரண்டு அல்லது மூன்று பெண்களுமாவது இருந்திருக்க வேண்டும் *(மத் 2:13-21; 12:46-47; 13:55)*.

3. ஆலயத்தில் மீண்டும் இயேசுவைக் கண்டுபிடிக்கும் நிகழ்ச்சியுரையில் *(லூக் 2:41-52)* பிற குழந்தைகளைப் பற்றிய குறிப்பு ஒன்றுமில்லை.

4. நசரேத்தூரில் யோசேப்பு-மரியாளின் குடும்பத்தில் வேறெந்தச் சமயத்திலும் வேறெந்தக் குழந்தைகளும் தோன்றவில்லை.

5. தனிப்பட்ட பெயர்களுடன் இருவாசகங்கள் உள்ளன *(மாற் 6:3; மத் 13:55; கலா 1:19; காண்க லூக் 4:22 தொ)*. மாற். 6:3-இல் இயேசு சிறப்பான முறையில் மரியாளின் மகன் எனப்படுகிறார். ஆனால் யாக்கோபு, யோசேசு, யூதா, சீமோன் ஆகியோருடைய சகோதரன் என்று பொதுவாகக் கூறப்படுகிறார். சகோதரிகளின் பெயர்கள் கொடுக்கப்படவில்லை. இந்த நான்கு பெயர்களில் மூன்று அப்போஸ்தலர் பட்டியலிலும் வருகின்றன *(மத் 10:2-4; மாற் 3:14-19; லூக் 6:12-16; அ.ப.1:13)*. இவற்றில் யாக்கோபு என்ற பெயர் இருமுறை வருகின்றது. ''அல்பேயுவின் மகன் யாக்கோபு, தீவிரவாதி எனப்படும் சீமோன், யாக்கோபின் சகோதரர் யூதா'' *(லூக் 6:14-16)* ஆகியோர் தான் ஆண்டவரின் சகோதரர்களின் என்றழைக்கப்படுபவர்கள் ஆவார் என்பதில் ஐயமில்லை. ''ஆண்டவரின் சகோதரர் யாக்கோபு'' என்று பவுல் குறிப்பிடுபவர் *(கலா 1:19)*

அநேகமாக அல்பேயுவின் மகன் யாக்கோபா கத்தான் இருக்க வேண்டும்.

மாற் *15:40;* மத் *27:26,* யாக்கோபு, யோசேப்பு ஆகியவர்களின் தாயார் மரியாளைப் பற்றிக் கூறுகின்றன. இந்த மரியாள் இயேசுவின் தாயல்லள். இவர் கிளோப்பாவின் மனைவியாக இருக்கலாம். கிளோப்பா அல்பேயுவின் வேறொரு வடிவமாகும். மாற் *3:18;* லூக் *6:15;* அப்போஸ்தலர் யாக்கோபை அல்பேயுவின் மகன் என்கின்றன. இந்த மரியாள் இயேசு கலிலேயாவிலிருந்த போது அவரைப் பின்தொடர்ந்து அவருக்குப் பணி புரிந்தவர்களுள் ஒருத்தியாவாள். யோவா *14:25*-இல் இயேசுவின் தாயின் சகோதரி எனப்படுகிறாள். இவள் யாக்கோபு, யோசேப்பு ஆகியோரின் தாய் எனப்படுகிறாள். சீமோன், யூதா ஆகியோரின் தாய் எனப்படவில்லை. ஆகையால் மாற் *6:3*-இல் வரும் பெயர்களுள் இருபிரிவுகள் உண்டு. யாக்கோபும் யோசேப்பும் ஒரு பிரிவினர். சீமோனும் யூதாவும் மற்றொரு பிரிவினர். ஆனால் இரு பிரிவினரும் இயேசுவின் சகோதர்கள் எனப்படுகின்றனர். ஆகையால் இருபிரிவினரும் இயேசுவின் உறவினர்களாக இருந்திருக்க வேண்டும். அவரின் உடன்பிறந்த சகோதரரர்கள் அல்லர். சீமோன், யூதா ஆகியோரைப் பற்றி இவ்விதமே கூறலாம். ஆனால் இவர்களைப் பற்றிய குறிப்புகள் புதிய ஏற்பாட்டில் அதிகம் இல்லை.

**இயேசுவின் சகோதரர்கள் பற்றி வாசகங்களுக்கு அளிக்கப்படும் பல்வேறுபட்ட கருத்துக்கள், இந்த உறவைத் துல்லயமாகச் சுட்டிக் காட்டுவது கடினம் என்று காட்டுகின்றன.**

**6. இயேசுவுக்குப் பிற சகோதரர்கள் இருந்திருந்தால், அவர் தம் தாயை ஏன் யோவானிடம் ஒப்படைக்க வேண்டும்? (யோவா *19:26*).**

***7. சமய உணர்வு:*** **மீட்புத் திட்டத்தில், இறைவன் தமது மகனுக்கு தாயாக இருக்க வேண்டியவள் கன்னியாக இருக்க வேண்டும் என்று விரும்பிச் செயல்பட்டதாக மத்தேயு, லூக்கா நற்செய்திகள் தெளிவாகக் காட்டுகின்றன.** பாவமில்லா கிறிஸ்துவின் இப்படிப்பட்ட தாய், பிறகு பாவ நிலையில் உள்ள பிற மக்களுக்குத் தாயானாள் என்பது நினைத்துப் பார்க்கக் கூடியதன்று. கிறிஸ்து நிறுவிய திருச்சபையின் முதல் அங்கத்தினர்களால் எழுதப்பட்டவையாகும் புதிய ஏற்பாட்டு நூல்கள். இவை தங்கள் நூல்களிலும், போதகத்திலும் இறையூக்கம் பெற்றவை. தொடக்க காலத்திருச்சபை விசுவாசத்தைப் பிரதிபலிக்கிறது. திருச்சபையின் பின்னனியில் வைத்து இவற்றை நோக்கும் போது தான் இவற்றைப் புரிந்து கொள்ளவும் விளக்கவும் முடியும். இந்தப் பின்னணியில்தான் ''இயேசுவின் சகோதரர்கள்'' என்பதுபற்றிய புதிய ஏற்பாட்டு வாசகங்களைப் புரிந்து கொள்ள முடியும். மரியாள் எக்காலமும் கன்னி என்பது பாரம்பரியமாகும். திருச்சபையின் விசுவாச சத்தியமாகும். நற்செய்தி வாசகங்கள் இதனை நேரடியாக எடுத்துக் காட்டவில்லையாயினும், இவ்விசுவாசத்திற்கு மாறாக ஒன்றும் கூறவில்லை. மீட்பு வரலாற்றின் உண்மைத் தன்மையையும், இதில் இயேசு, மரியாள் ஆகியோரின் தனிச் சிறப்பான பாகத்தையும் கருத்தில் கொண்டால், மரியாளுக்கு வேறு குழந்தைகள் இல்லை; ஆண்டவருக்கும் உடன் பிறந்த சகோதரர்கள் இல்லை; இவர்கள் உறவினர்களே ஆவர் என்று ஏற்றுக் கொள்வதே சிறந்தது எனத் தெரியும். இதற்கு மாறாக, வாசகங்களின் வெறும் வார்த்தைகளை எடுத்துக் கொண்டு, அவற்றின் குறுகிய ஒரே பொருளில் விளக்கம் அளிக்க முயன்றால் தவறான முடிவுக்கே வரவேண்டியிருக்கும்.

**ஆண்டவரின் நாள்** *(*DAY OF THE LORD*)*

**எதிர்காலம் பற்றிய இறைவாக்கு எதிர்பார்ப்பில் இறைவனின் உறுதியான குறுக்கீடு பற்றிய குறிப்பீடாகும். வரலாற்றில் திட்டவட்டமான செயல்களை 'நாட்கள்' எனக்குறிப்பிடும் எபிரேய நடைமுறையானது, இச்சொற்றொடருக்குத் தக்க விளக்கத்தை அளிக்கலாம் (உ.ம். எச *9:4* மாதியானின் நாள்; நீதி *7:25*).**

பழைய ஏற்பாட்டில் ஆண்டவரின் நாளை குறிப்பிடும் மிகப் பழமையான பகுதி *ஆமோ 5:18-20.*

''ஆண்டவரின் நாளை பார்க்க
விரும்புகிறவர்களே,
உங்களுக்கு ஐயோ கேடு!
ஆண்டவரின் நாளுக்காக நீங்கள்
ஏங்குவதேன்?
அது ஒளிமிக்க நாளன்று, இருள் சூழ்நசத
நாள்தான்.
......... ......... ..........
ஆண்டவரின் நாள் இருள் கவிந்தது
அல்லவா?
அது ஒளியின் நாளில்லையே!
வெளிச்சமில்லாத காரிருள்
அல்லவா?''

இப்பகுதியின் மூலம், ஆமோஸ் ஏற்கெனவே இருந்த ஒரு நம்பிக்கையை'த் திரும்பக் கூறினாரேயன்றி, புதியதாக எதையும் குறிப்பிடவில்லை எனத் தெளிவாகிறது. இந்நாளை இஸ்ராயேலுக்கு மீட்பைக்கொள்ளும் வெளிச்சத்தின் நாள், எனக் கருதப்பட்ட எண்ணத்தை அவர் எதிர்க்கிறார். அவரது இறைவாக்கின்படி அது இஸ்ராயேலுக்கு ஆபத்தான, இருளான நாளாக இருக்கும். இதுமட்டுமே, ஆண்டவரின் நாள் என்பதன் பொருளில் உறுதியான மாற்றத்தை ஏற்படுத்திவிடவில்லை. ஏனெனில் தொடக்கத்திலிருந்தே ஆண்டவரது வருகையின் நாள் என்பது அவரது விரோதிகளுக்கு அழிவு மற்றும் தண்டனையினையும், விசுவாசிகளுக்கு மீட்பு மற்றும் விடுதலையினையும் கொண்டுள்ளது. எத்தன்மையுடைய ஆண்டவரின் நாள் அவர்களின்மீது வரும் என்ற கருத்திலே ஆமோஸ் தன் காலத்தவரிடமிருந்து வேறுபடுகின்றார். தங்களது பதிதத்தால் இறைவனுக்கு விரோதமாக மாறிய அவர்கள், இறைவனது விரோதிகளின் நிலையிலேயே உள்ளனர் (*ஆமோ 1-2*). ஆனால், மற்ற நேரங்களில் அவர்கள், இறைவனது தண்டனை மற்ற நாடுகளின் மீது மட்டுமே விழவேண்டும் என எதிர்பார்த்தனர். இவ்வாறு, ஆமோசின் இறைவாக்கு (*6:3; 8:9*) இஸ்ராயேலின் சராசரி பக்தியிலிருந்து வேறுபடுகிறது. சுயஉறுதியுடைய இந்தப் பக்தி இறைவன் தன் பக்கமிருப்பதாகக் கற்பனை செய்தது. 'அந் நாள்' என்பதில் மீட்பின் பொருளை ஆமோசும் அறிந்திருந்தார் என்பதை *ஆமோ 9:11* உணர்த்துகிறது.

அடிமைத்தனத்திற்கு முந்தைய இறைவாக்குகளில் ஆண்டவரின் நாள் என்பது அழிவின் இறைவாக்காகவே அமைந்திருக்கிறது. ஆண்டவரது பயங்கர நாளின் உலகளாவிய பண்பை ஏச 2:9 வெளிப்படுத்துகிறது.

''அந்த நாள் சேனைகளின் ஆண்டவரது
நாள்;
பெருமையும் செருக்குமுடைய யாவற்றின்
மேலும்
அந்த நாள் வரும்
.... .... .... ....
மனிதனின் அகந்தையெல்லாம் அடங்கும்
.... .... .... ....
ஆண்டவர் உலகைத் தண்டிக்க
வரும்போது
அவருடைய அச்சந்தரும் திருமுன்னிருந்து
விலகி
அவருடைய மாண்புறு மகிமையினின்று
ஒதுங்கி,
மனிதர்கள் கற்குகைகளில் நுழைந்து
கொள்வார்கள்,
பூமியின் குழிகளில் புகுந்து
கொள்வார்கள்'' *(ஏச 2:12.17.19)*,

உலகளாவிய மற்றும் கொடுமையாக நெருங்கி வரும் ஆண்டவரின் நாள் செப்பனியாவால் பெரிதும் விளக்கப்படுகிறது; எனவே அவர் ஆண்டவருடைய நாளின் இறைவாக்கினர் எனப்படுகிறார் *(1:7. 14;2:2-3; 3:8)*. அண்ட மற்றும் அரசியல் விபரீதங்கள், இயற்கைப் பெருங்கேடுகள் மற்றும் போர் நிகழ்ச்சிகள் ஆகியவை ஒன்றாக இணைந்து அச்சுறுத்தும் வகையில் அமைந்துள்ளன.

''ஆண்டவரின் மாபெரும் நாள்
அண்மையில் உள்ளது;
அண்மையில் விரைந்து வந்து
கொண்டிருக்கிறது;

ஆண்டவரது நாளின் பேரொலி கசப்பை
உண்டாக்கும்,
மாவீரனையும் கலங்கி அலறும்படி
செய்யும்,
அந்தநாள் கடுஞ்சினத்தின் நாள்,
துன்பமும் துயரமும் நிறைந்த நாள்;
பேரழிவும் பெருநாசமும் கொணரும்
நாள்,
இருட்டும் காரிருளும் கவிந்த நாள்
கார்முகிலும் அடரிருளும் படரும் நாள்,
அரண்சூழ் நகர்களுக்கும் உயரமான
கொத்தளங்களுக்கும்,
எதிராக எக்காளமும் போர்முரசும்
கேட்கும் நாள் *(1:14-16)*.

திரும்பத் திரும்பக் கறப்படும் சலிப்பைத்த ரும் இவ்வாக்கியங்கள், அசல் பகுதியில் உடனடி விளைவைக் கொண்டுள்ளது. இப் பகுதியே பிற்கால ''தீயஸ் ஈரே தீயஸ் இல்லா'' என்ற பாடலுக்கு மாதிரியாக அமைந்தது.

587-இல் ஏற்பட்ட பெருங்கேட்டிற்கு முன் னர், இஸ்ராயேலுக்கு எதிராகக் கூறப்பட்ட அழிவின் இறைவாக்கில் எச *7:7.10.12*-இல் மீளவும் ஆண்டவரின் நாள் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. 'முடிவு' பற்றிய அறிவிப் புடன் இங்கு அது இணைந்துள்ளது.

587-ஆம் ஆண்டின் பெருங்கேட்டை நோக் கும்போது, ஆண்டவரின் நாள் வந்துவிட் டது என்றும் கூறலாம் (புல *1-21*; எச *34:12*). ஆனால் மீண்டும் இறுதிக்காலப் பொருளில் ஆண்டவரின் நாள் குறிப்பிடப்ப டுகிறது; ஆனால் இப்போது பொதுவான இறைவாக்கின் வழியிலேயே, அழிவின் இறைவாக்கிலிருந்து மீட்பின் இறைவாக் காக மாறுகிறது. எழுதப்பட்ட பகுதிகளின் கருத்து மற்றும் நேரத்திற்கேற்ப, ஆண்டவ ரது நாளின் உலகளாவிய எச்சரிக்கைகள், தனிப்பட்ட பகை நாடுகளுக்கு விரோதமா கக் கூறப்படும் பகுதிகள் அவற்றின் பொரு ளும் நேரமும் மாறுபடுகின்றன. உம். எச *13:6.9.12* (பாபிலோன்); *34:8; 63:4* (ஏதோம்); எரே *46:10* (எகிப்து); *47:4* (பெலிஸ்தியர்); எச *30:3* (எகிப்தும் அதன் கூட்டணியும்); ஒப *15* (ஏதோம்). நம் ''ஆண்டவருடைய பழிவாங்கும் நாள்'' ''அழுகிறவர்கள் அனை வர்க்கும் ஆறுதல் அளிக்கும்'' (எச *61:2*). இது கடவுள் பற்று அற்றவர்களுக்கு அழி வையும், கடவுளுக்கு அஞ்சுவோருக்கு புனி தத்தையும் மீட்பையும் அளிக்கிறது: ஏனெ னில் இவர்கள் எலியா இறைவாக்கினர் மூலம் ஆண்டவரது பயங்கர நாளுக்காகத் தயாரிக்கப்படுவர் *(மலா 3:2; 4:1.5)*. யோவேல் 1-2-இல் கூறப்படும் வெட்டுக் கிளி வாதனை, மனந்திரும்புமாறு அழைக் கின்ற ஆண்டவரின் நாள் அண்மையிலிருப் பதைக் குறிக்கும் ஓர் அடையாளமாய் உள் ளது *(1:15; 2:1-2.11)*. இறுதிக் காலம் பற்றிய விவரிப்பும் மேலும்மேலும் விரிவாகிறது. நாடுகளின்மீது இறுதித் தண்டனைக்குரிய காலம்வரும்போது வான்கோள்கள் இருள் அடைகின்றன *(3:14-15)*. ஆனால் எருசலே மில் ஆண்டவரின் பெயரைக் கூவி அழைப்ப வர்களுக்கு மீட்பு உண்டு *(3:5; 4:18)*. செக் *12-14* காட்டும் வடிவம் இணையானதும், அதிக விரிவானதும் கூட. இதில் ''அந்த நாளில்'' என்னும் சொற்றொடரைப் பலமு றையும், ஆண்டவரின் நாள் என்பதனை ஒரு முறையும் *(14:1)* காண்கிறோம். யாவே என் னும் இறைவன் பெயரை உபயோகிக்காத பிற்கால யூத இலக்கியத்தில் ஆண்டவரின் நாள் என்னும் சொற்றொடர் மறைந்து விடு கிறது; ஆனால், உலக காலத்தின் முடிவில் பெரும் பெரிய இறுதித் தீர்ப்புப் பற்றிய கருத்து மறையவில்லை. அசாதாரணமா கவே பழைய சொற்களின் வழியில் கடவு ளின் நாள் மற்றும் 'மெசியாவின் நாள்' என்னும் சொற்கள் காணப்படுகின்றன.

புதிய ஏற்பாட்டில், பழைய ஏற்பாட்டு சொற்கள் ஆழ்ந்த பின் விளைவுகளைக் கொண்டுள்ளன. உலகின் முடிவானது ஆண் டவரது நாள் என்றும் கடவுளின் நாள் என் றும் அழைக்கப்படுகிறது; திருவெளி *16:14*-இல் கூறப்பட்டுள்ள கடைசிப் பேரா னது வல்லமைமிக்க கடவுளின் பெருநாள் எனப்படுகிறது. அந்நாள் லூக் *17:24*-இல் மெசியாவின் இரண்டாவது வருகையாக மாறுகிறது. ''மின்னல் வானத்தின் ஒரு

முனையில் மின்னி எதிர்முனைக்குப் பாய்வது போலவே, மனுமகனும் தாம் வரும் நாளில் தோன்றுவார்''. புதிய ஏற்பாட்டின் இறுதிக் கால இயலுக்கு ஏற்ப, பவுலின் கருத்துப்படி இறுதித் தீர்ப்பின் நாள் என்பது கிறிஸ்துவின் இரண்டாவது வருகையோடு இணைந்து காணப்படுகின்றது. ஆண்டவரின் நாள் (1 தெச 5:2; 2 தெச 2:2); ''ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவின் நாள்'' (1:6.10; 2:16) பற்றி அவர் பேசுகின்றார். அப்போது கிறிஸ்து வாழ்வோரையும் மரித்தோரையும் தீர்ப்பிட வானகத்திலிருந்து இறங்கிவருவார் (அ.ப. 1:11). அவர் மீண்டும் வருவதற்காக ஆவலோடு காத்திருப்போருக்கு முடிவில்லா வாழ்வையும் (உரோ 2:7) மீட்பையும் (அ.ப. 2:21) அளிப்பார்.

விசுவாசிகளுக்குப் புதிய ஏற்பாடு நம்பிக்கையின் ஆறுதல் அளிக்கும் செய்தியை அளித்தாலும், மனந்திரும்பாதவர்களுக்கு அழிவைப்பற்றிய தெளிவான அச்சுறுத்தல் அதில் அடங்கியுள்ளது. ''கட்சி மனப்பான்மையுள்ளவர்களாய், உண்மைக்குப் பணியாமல், அநியாயத்திற்குப் பணிபவர்கள்மேல் இறைவனது சினமும் வெகுளியும் வந்து விழும்'' என்று பவுல் பேசுகிறார் (உரோ 2:8). தீர்ப்பின் நாளில் ஒவ்வொருவனுடைய செயல்களும் கடுமையாகச் சோதித்தறியப்படும் என்று 1 கொரி 3:13-15-இல் பவுல் அறிவிக்கிறார். யூதா, தன்திருமுகத்தில், தீயவர்களுக்கு எதிராக தீர்ப்பின் நாளைப்பற்றி பேசுகிறார். பேதுரு யோவேல் 2:30-31-ஐ எடுத்துக்கூறி இறுதிக்காலத்திய அண்ட மாற்றங்களை வலியுறுத்துகிறார் (அ.ப. 2:19-20).

**ஆண்டவருடைய நாள்** (LORD'S DAYS)

தொடக்ககால கிறிஸ்தவர்களால் வழிபாட்டு நாளாக ஏற்றுக்கொள்ளப்பட்ட வாரத்தின் முதல்நாள், ஞாயிற்றுக்கிழமை ''ஆண்டவருடைய நாள்'' என்ற பதம் புதிய ஏற்பாட்டில் ஒரே ஒருதரம் திருவெளி 1:10-இல் வருகிறது. விரைவில் கிறிஸ்தவர்கள் நற்கருணையைக் கொண்டாடிய நாளைக் குறிக்கும் கலைச் சொல்லாகியது. தொடக்க காலத் திருச்சபையின் வாழ்வில், ஓய்வுநாளில் வேலை செய்வதற்குள்ள தடை ஆன்மீகப்படுத்தப்பட்டது. கி.பி. நான்காம் நூற்றாண்டுவரை, ஓய்வுநாள் பற்றிய கட்டளை, கிறிஸ்தவர்களால் ஞாயிற்றுக் கிழமைக்கு உரியதாகக் கருதப்படவில்லை. தெல்துல்லியன் ஞாயிற்றுக்கிழமையில் தொழில் செய்யாமையை ஓரளவு தூண்டினார். ஆனால் ஓய்வுநாள் அனுசரிப்பை அவர் மனதில் கொண்டிருக்கவில்லை.

காலத்தை ஏழுநாள் பிரிவாகக் கடைப்பிடித்தல், யூதத்துவத்திலிருந்து உரோமையர் உலகில் ஏற்றுக்கொள்ளப்பட்டது. அதன்விளைவாக ஏழாவதுநாள், அது ஓய்வுநாளன்றி ஞாயிற்றுக்கிழமையானாலும், வழிபாட்டு நாளாகக் கடைபிடிக்கும் வழக்கமாயிற்று. யூதவழக்கப்படி ஒருநாள் மாலையில் தொடங்கி அடுத்த நாள் மாலை முடிந்தது. உரோமையர் வழக்கப்படி நாள் இரவு 12-மணிக்குத் தொடங்கி அடுத்த இரவு 12-மணிக்கு முடிந்தது.

வாரத்தின் முதல் நாளாகிய (அ.ப. 20:7; 1 கொரி 16:2) ஞாயிற்றுக் கிழமையில் கிறிஸ்தவர்கள் வழிபாடு செய்வதற்கு, ஒரு ஞாயிற்றுக்கிழமை அதிகாலையில் இயேசு உயிர்த்தெழுந்தது (மத் 28:1; மாற் 16:2.9; லூக் 24:1; யோவா 20:1.19) அடிப்படையாகியது. ஞாயிற்றுக்கிழமை ஆண்டவருடைய இறுதி உணவு நினைவு கூர்தல் கொண்டாடப்பட்டது (அ.ப. 20:7). இது, யூதக் கணிப்புப்படி, ஞாயிற்றுக்கிழமையின் தொடக்கமான சனிக்கிழமை மாலையாக இருக்கலாம் அல்லது உரோமையர் கணிப்புப்படி, ஞாயிற்றுக்கிழமையின் ஒரு பகுதியான ஞாயிறு மாலையாக இருக்கலாம் (காண்க லூக் 24:30). இந்த வழிபாட்டில் ''அப்பம் பிட்கப்பட்டது''. மறைநூலிருந்து வாசகங்கள் வாசிக்கப்பட்டன. மறைவிளக்கங்கள் அளிக்கப்பட்டன (காண்க அ.ப. 20:7.9). அவ்வழிபாட்டில் பிறரது நன்மைக்காகக் காணிக்கை எடுக்கப்பட்டது (1 கொரி 16:2), இதிலிருந்து வழிபடுவோரிடமிருந்து காணிக்கை சேர்க்கும் வழக்கு பிற்காலத்தில் தோன்றியது.

**ஆண்டவருடைய போர்களின் நூல்** (BOOK OF THE WARS OF THE LORD)

''ஆண்டவருடைய போர்கள்'' என்ற நூல் எண் 21:14 -இல் குறிப்பிடப்படுகிறது. இந்நூலிலிருந்து பாடல் வடிவில் ஒரு எடுத்துக் காட்டு கூறப்படுகிறது (21:14-15). இது மோவாபியர்களுக்கும் எமோரியர்களுக்குமிடையேயிருந்த எல்லையைப் பற்றிக் கூறுகிறது. இதை வாசகர்கள் அறிந்திருந்ததாக எடுத்துக் கூறப்படுகிறது. 21:17-18.27-30-இல் காணப்படும் எடுத்துக் காட்டுகளும் இந்நூலிலிருந்து எடுக்கப்பட்டதாக இருக்கலாம். ஆனால் இவற்றைக் கொண்டு, இந்நூலின் தன்மையைப் பற்றியோ, அதன் பொருளடக்கத்தைப் பற்றியோ ஒன்றும் கூறமுடியாது. ஏனெனில், இந்த எடுத்துக் காட்டுகள் புவியியல் குறிப்புகளாகத்தான் இருக்கின்றன. இந்நூல் யோசுவா, சவுல், தாவீது வாயிலாக கடவுள் நிகழ்த்திய போர்களைப் பற்றிக் கவிதை வடிவில் கூறும் ஒரு நூலாக இருக்கலாம், ஆண்டவருடைய போர்கள், ஆண்டவருக்காகவே ஆண்டவராலேயே நிகழ்த்தப்பட்டன என்ற உண்மையை இந்நூல் எடுத்துக்கூறலாம். இஸ்ராயேல் மக்கள், போருக்கும் ஆண்டவருக்கும் இடையே நிறைய தொடர்பு இருந்ததாகக் கருதினர். ஆண்டவரைச் ''சேனைகளின் கடவுளாக'' வருணிக்கிறார் சங்கீத ஆசிரியர் (சங் 24:10).

இந்நூல் குறிக்கப்படுவது, விவிலியம், கடந்தகால எழுதப்பட்ட, வாய் மொழியான பாரம்பரியங்களிலிருந்து எடுத்துப் பயன்படுத்தியுள்ளன என்பதற்கு ஒரு சான்றாகும். இந்நூல் யோசுவா நூலில் குறிக்கப்படும் ''யாசாரின் நூல்'' என்பதைப் போன்றதாக இருக்கலாம் (யோசு 10:12; 2 சாமு 1:18).

**ஆண்டவர்** (LORD)

திருவழிபாட்டில் திருச்சபை தனது ஒவ்வொரு மன்றாட்டையும் ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவின் வழியாகத் தந்தைக்குச் சமர்ப்பிக்கின்றது. ஆதித் திருச் சபையின் மூல விசுவாசத்தை நினைவுறுத்தும் வகையில் ''இயேசுவே ஆண்டவர்'' (உரோ 10:9) என்ற பவுல் குறிப்பிடுவதிலிருந்து, தொடக்கத்திலிருந்தே இயேசுவுக்கு ஆண்டவர் என்ற சிறப்புப் பெயர் வழங்கப்பட்டது என்பது தெளிவாகிறது. ஆண்டவர் என்ற திருப்பெயர் கிறிஸ்து, மணமகன், இறைமகன் என்னும் பிற சிறப்புப் பெயர்களின் மறைபொருளையும் வெளியிடுகிறது. அத்துடன், ஆண்டவர் என்ற பெயர் [அதோனே(எபிரேயச் சொல்)- கூரியோஸ் (கிரேக்கச்சொல்)] ஒரு அரச பட்டமாக மட்டும் இல்லாது இறைவனுக்கே உரிய ஒரு திருப்பெயராகவும் இருந்தது என்பதைப் பழைய ஏற்பாடு பன்முறைக் காட்டுகிறது.

I. சொற்கள்:-

ஆண்டவர் என்ற பொருளுடைய எபிரேய அடிப்படைச்சொல் ''ஆதோன்'' என்பதாகும். மரியாதையும் மதிப்பும் காட்ட உயர்ந்தோருக்கு அளிக்கும் பட்டமாகும். சான்றாக அடிமை தன் தலைவனையும், குடிமகன் அரசனையும் அழைக்கப் பயன்பட்டது. இறைவன் ''உலகனைத்தையும் ஆளும் ஆண்டவர்'' என்றழைக்கப்படுகிறார் (சங் 97:5). அரசனைக்குறிக்க ஆதோன் என்று ஒருமையிலும் இறைவனுக்குச் சாற்றிக் கூறப்படும்போது பன்மையில் ''ஆதோனாய்'' என்றும் பயன்படுத்தப்பட்டது. பங்கப்படுத்திவிடுமோ என்ற அச்சத்தில் இறைவனது சொந்தப்பெயரான யாவே என்பதைப் பயன்படுத்த மக்கள் தவிர்த்தபோது, அதற்குப் பதிலாக ஆதோனாய் என்ற சொல்லைப் பொதுவழிபாட்டில் பயன்படுத்தினர்.

இறைவனைக் குறிக்கும் மற்றொரு சொல் பாகால் என்பதாகும். இது சிலசமயம் மனித தலைவர்களையும் குறிக்கிறது (எண் 21:28; ஏச 16:8; 1:3). கானானியரின் கடவுள் பாகாலோடு தொடர்புடையது என்பதால், இஸ்ராயேலின் இறைவனுக்கு இப்பெயர் சாற்றிக் கூறப்படவில்லை (காண்க ஓசே 2:16).

ஆண்டவரைக் குறிக்கும் கிரேக்கச் சொல் ''கூரியோஸ்'' என்பதாகும். இது ''ஆதோன்'' என்ற சொல்லை மொழிபெயர்க்கப் பயன்படுகிறது. பெரும்பாலும் யாவே என்ற பெய

ருக்குப் பதிலாகப் பயன்பட்டுள்ளது. தலைவர் என்ற பொருளுடைய ''தெஸ்போட்டெஸ்'' என்ற கிரேக்கச் சொல்லும் பயன்பட்டுள்ளது.

II. பழைய ஏற்பாடு:-

யாவேயின் ஆட்சி, அவரால் தேர்ந்தெடுக்கப்பட்டவரும், அவரையே அரசராகப் பெற்றவருமான இஸ்ராயேல் மக்கள் மட்டும் உரியவராகக் கருதப்படவில்லை *(1 சாமு 8:7 தொ; 12:12)*, யாவேதான் ''ஆண்டவருக்கு ஆண்டவர்'' ஏனெனில் அவரே ''கடவுளுக்குக் கடவுள்'' *(உப 10:17; சங் 136:3)*. கானானியரின் தெய்வமான பாகால் நிலத்திற்கு மட்டும் உரிமையுடையவனாக அவர்களால் கருதப்பட்டான்; (பாகால் என்ற சொல் முதலில் உடையவனையும், கணவனையும் குறித்தது). ஆனால் யாவேயின் ஆட்சி பாகாலின் ஆட்சிபோன்று நிலவுலகைமட்டும் சார்ந்ததன்று; ஆதலால் பாகால் என்னும் பெயர் யாவேக்குச் சிறிதும் பொருந்தாது *(ஓசே 2:18)*. இருப்பினும் ஏச *54:5*-இல் இச்சொல் யாவேயே தம் மக்களின் தலையான நாயகன் என்ற பொருளில் அவரைக் குறிக்கப் பயன்பட்டுள்ளதாகத் தெரிகிறது.

உலகம் முழுமைக்கும் ஆண்டவர் என்பதால், கடவுள் தம் மக்களின் நன்மைக்காக எல்லாவிடங்களிலும் செங்கோல் ஓச்சுகின்றார் *(உப 10:14-18)*. அவருடைய மேலான்மையை 'மெலக்கு' (அரசன்) ''ஆதோன்'' (ஆண்டவர்) என்னும் இரு சொற்கள் எடுத்தியம்புகின்றன. அரசன் என்னும் முதல்சொல் *(ஏச 6:5; சங் 97:5)*, கடவுளின் ஆட்சி இஸ்ராயேல்மீது மட்டுமல்லாது உலகனைத்தின் மீதும் பரவிநிற்பதையும் *(சங் 95:3)*, புறச் சமயத்து மன்னர்கள் மீதும் பரவிநிற்பதையும் *(சங் 96:10)*, எடுத்துக் காட்டுகிறது. ஆதோன் என்னும் அடுத்த சொல், அனைத்துலகுக்கும் இறைவனே ஆண்டவர் என்பதைச் சுட்டிக் காட்டுகிறது *(யோசு 3:11 மீக் 4:13, சங் 97:5)*. இவ்வாறு 'ஆண்டவர்' என்று இறைவனை விளிக்கும் வழக்கம் பழங்காலத்திலேயே இருந்தது என்பதை ஆதி *15:2,8* போன்ற வசனங்களின் வாயிலாக அறிகிறோம். அத்துடன் இத்தகைய வழக்கு இறைவனின் ஆதிக்கத்தின்மீது அவருடைய ஊழியர்கள் வைத்திருந்த உறுதியான நம்பிக்கையும் வெளியிடுகின்றது *(ஆமோ 7:2; உப 9:26; யோசு 7:7; சங் 140:8)*. ஆண்டவர் என்ற சிறப்புப்பெயர் காலப்போக்கில் கடவுளுக்கே உரிய சொந்தப் பெயராகவும் பொருள் மாற்றம் கண்டது.

மரியாதையின் காரணமாக வழிபாட்டில் யாவேயின் திருப்பெயர் சொல்லப்படாத போது, அதன் இடத்தை 'ஆண்டவர்' (ஆதோனே) என்ற பெயர் பெற்றது. இதன் காரணமாகத்தான் எழுபதுநூல் கிரேக்க மொழிபெயர்ப்பு 'அதோனே' என்ற சொல்லை ''கூரியோஸ்'' (ஆண்டவர், தலைவர், அண்ணல்) என்ற சொல்லாலேயே குறித்துள்ளது. ஆதலால் கூரியோஸ் என்ற கிரேக்கச் சொல்லுக்கு இருபொருள் கூறலாம். சில சமயங்களில் இச்சொல் யாவேயின் தன்னாட்சித் தலைமையையும், வேறு சமயங்களில் சொல்லுக்குள் அடங்காத இறைவனின் சொந்தப் பெயரையும் சுட்டி நிற்கிறது.

III. புதிய ஏற்பாடு

புதிய ஏற்பாடு 'ஆண்டவர்' (கூரியோஸ்) என்ற பட்டத்தைக் கிறிஸ்துவுக்குச் சூட்டுகிறது. இந்தப்பெயர் மாற்றத்தை விளக்குவது என்பது கிறிஸ்துவ விசுவாசத்திற்கு ஓர் இலக்கணம் வகுப்பதாகும்.

*1. தொடக்கத் திருச்சபையின் விசுவாசம்:-* சங்கீதம் 110:1-இல் காணப்படும் சொல்வழக்கைப் பயன்படுத்தி, தாம் தாவீதின் மகனாக இருந்தபோதிலும், அவரைவிடப் பெரியவரும், அவருக்கும் முந்தியவருமாக இருக்கும் உண்மையை இயேசு மக்களுக்கு விளக்க விரும்பினார் *(மத் 22:43 தொ; காண் லூக் 1:48; 2:11)*. இந்தச் சங்கீதத்தின் அடிப்படையில்தான், உயிர்ப்பின் மூலம் உண்மையாகிய இயேசுவின் ஆண்டகைத்துவத்தைத் தொடக்கத் திருச்சபை அறிக்கையிடுகிறது *(அ.ப. 2:34 தொ.)*.அத்துடன் தன்னுடைய

செபத்திலும் பழைய அரமேயச் சொற்றொட ரான ''மாரனா தா'' (எங்கள் ஆண்டவரே வாரும்) என்பதை நெடுங்காலமாகப் போற்றி வந்தது (1 கொரி 16:22; திருவெளி 22:20). இயேசுவின் உயிர்ப்பும் மறைநூலின் ஆய்வுமே, ''இயேசுவே ஆண்டவர்'' என்ற விசுவாச அறிக்கைக்குக் காரணமாயின (உரோ 10:9; 1 கொரி 12:3; கொலோ 2:6). இயேசுவுக்கு ஆண்டவர் என்ற பெயரை லூக்கா நற்செய்தியும் அப்போஸ்தலர் பணியும் பயன்படுத்துகின்றன (லூக் 17:5-6; அ.ப. 9:10-11.15.17). அப்போஸ்தல்பணிநூல் 'ஆண்டவர் இயேசு' என்ற பதத்தை அடிக்கடி பயன்படுத்துகிறது (4:13); ஆண்டவர் இயேசுவில் கொள்ள வேண்டிய விசுவாசத்தையும் (16:31), ஆண்டவர் இயேசுவின் பெயரில் திருமுழுக்கையும் (8:16; 19:5), பற்றிப்பேசுகிறது. ''இயேசு ஆண்டவர்'' என்பது தொடக்கக் கால விசுவாச அறிக்கைகளில் ஒன்று என்பது தெளிவு. அ.ப. 2:36-இல் ''இந்த இயேசுவையே இறைவன் ஆண்டவரும் மெசியாவுமாக ஆக்கினார்'' என்று பேதுரு பறைசாற்றுகிறார். இயேசு மெசியாவாக, விண்ணகத்தில் வீற்றிருந்து, தூய ஆவியின் அருட்கொடைகளால் இறையரசை நிலைநாட்டுவதாலும், (அ.ப. 2:33), இறுதிநாளை எதிர்நோக்கியிருக்கும் திருச்சபை கண்டுணரும்படியாக, நற்கருணை வழிபாட்டுச் சபையில் பிரசன்னமாக இருப்பதாலும் அவருக்கு ஆண்டவர் (மாரனா, கூரியோஸ்) என்ற மிக உயர்ந்த பட்டம் ஏற்றதாக இருக்கிறது. ஆதலால் இறைவனுக்கே உரிய திருப்பெயரான ஆண்டவர் (கூரியோஸ்) என்பது, இயேசுவை அழைக்கும் பெயராகக் கொள்ளப்பட்டது (2:20; தொ). அடுத்து இறைவன் வணங்கி வாழ்த்தும் செயல்களும், சொல் தொடர்களும் (பிலி 2:10=ஏச 45:23; யோவா 9:38; திருவெளி 15:4) 'அனைவருக்கும் ஆண்டவராகிய' (அ.ப. 10:36) இயேசுவின்மேல் ஏற்றிக்கூறப்பட்டன.

2. பவுல்:- ''ஆண்டவர் இயேசுக் கிறிஸ்து '' என்ற நிறைவான பதத்தைச் பவுல் அடிக்கடி பயன்படுத்துகிறார். அவர் ''ஆண்டவர் இயேசு'' (2 தெச 1:7) ''நம் ஆண்டவர் இயேசு'' (1 தெச 3:13) என்ற சுருக்கமான பதங்களையும் பயன்படுத்துகிறார். கடவுள்கள், ஆண்டவர்கள் என்று அழைக்கப்படும் பலரோடு ஒப்பிடும்போது, கிறிஸ்தவர்களுக்குத் தந்தையாகிய ஒரே இறைவனும், இயேசு கிறிஸ்துவான ஒரே ஆண்டவருமே உள்ளனர் (1 கொரி 8:5-6). அப்போஸ்தலர் பணிநூலின் ஆசிரியரைப்போல், பவுல் ''இயேசு ஆண்டவர்'' என்ற விசுவாச அறிக்கையை அறிந்திருக்கிறார். ''பரிசுத்த ஆவியின் ஏவுதலாலன்றி, 'இயேசு ஆண்டவர்' என்று யாரும் சொல்ல முடியாது'' என்று அறிவிக்கிறார் (1 கொரி 12:3). பவுல் ''எம் ஆண்டவரே வாரும்'' (மாரனா தா) என்பதைக் கொரிந்தில் குறிப்பிட்டு, தாம் ஆண்டவர்-இயேசுவைப்பற்றிக் கொண்டுள்ள கருத்துக்களைக் கிரேக்கர்களிடமிருந்து பெறவில்லை என்றும், மாறாக பாலஸ்தீனக் கிறிஸ்தவர்களிடமிருந்து பெற்றதாகவும் கூறுகிறார் (அ.ப. 25:26). பேதுருவைப் போலவே இவரும் சங் 110-ஐக் கையாண்டு (1 கொரி 15:25; கொலோ 3:1; எபே 1:20) ஆண்டவர் என்ற சொல்லுக்கு மானிட, தெய்வீகப் பொருள்களைத் தருகின்றார். வேந்தன் என்ற முறையில், இயேசுவே அனைத்து மனிதருக்கும் (உரோ 14:9), அவருடைய பகைவர்களுக்கும், அதிகாரங்களுக்கும் (கொலோ 2:10,25), சாவுக்கும் (1 கொரி 15:24 தொ. 57; காண் 1 பேதுரு 3:22), அடிமைகளுக்கு ஆண்டவனின் தானத்தில் உள்ள முதலாளிகளுக்கும் (கொலோ 3:22; 4:1; எபே 6:5-9) ஆண்டவராக இருப்பதாகக் காட்டுகிறார். இறுதியாக அவர் ஆட்சி செய்து பேணும் அவரது உடலாகிய திருச்சபைக்கும் ஆண்டவர் ஆவார். அதை ஆட்சி செய்கிறார்; பேணி வளர்க்கிறார் (கொலோ 3:18; எபே 1:20 தொ; 4:15; 5:22-32). அத்துடன் வானும், நிலமும் நரகும் ஆகியவை அடங்கிய படைப்புக்கள் அனைத்துமே அவரையே ஆண்டவர் என்று போற்றுகின்றன (பிலி 2:10 தொ.) இந்த வசனம் இயேசுவின் தெய்வீகப் பண்பினை வலியுறுத்துகிறது; கடவுள் தன்மையிலிருந்து அவர் தம்மையே தாழ்த்தி ஓர் அடிமையின் உருவெடுத்தார்;

சாவை ஏற்கும் அளவுக்குக் கீழ்ப்படிந்தார்; அதனால் கடவுள் அவரை உயர்த்தி அனைத்திற்கும் மேலான ஒரு பெயரை அவருக்குச் சூட்டினார்; அவருடைய மாட்சி பெற்ற மானிடத்திலிருந்து ஒளிவீசும் தெய்வீகத் தன்மையையே இப்பெயர் குறிக்கிறது. இதுவே அவருடைய தன்னேரில்லாத உலகளாவிய மேலாண்மைக்கு அடிப்படையாக இருக்கிறது.

இவ்வாறு ''ஆண்டவர்'' என்ற சொல்லை மானிடம்-தெய்வீகம் என்ற இரண்டு கோணங்களிலும் இருந்து நோக்கும்போது, ''இயேசுவே ஆண்டவர்'' என்னும் வாய்பாடு, தெய்வத்தன்மைக்குச் சொந்தம் கொண்டாடும் மன்னர்களுக்கு எதிராக விடுக்கும் கண்டனக்குரலாகவும் தொனிக்கிறது. பொய்யான 'போலி ஆண்டவன்கள்' பலர் இருக்கலாம்; ஆனால் இயேசுவே உண்மையான அசல் ஆண்டவர் *(1 கொரி 8:5;* தொ.); மற்றவர் எல்லாம் அவரது ஆட்சிக்குப் பணிந்தவரேயாவர். ''ஆண்டவர்களுக்கு ஆண்டவர்'' என்ற பட்டம், கீழை நாடுகளில் ஏறக்குறைய கி.மு. *1100*-இல் இருந்தே மன்னர்களுக்குச் சூட்டப்பட்டதாக இருந்தாலும், இயேசுவுக்கும், அவரது தந்தைக்குமே முற்றிலும் பொருந்தும் என்பதைத் திருவெளிப்பாடு தெளிவாக உரைக்கிறது (திருவெளி *17:14; 19:16;* காண் உப *10:17; 1* தீமோ *6:16)*.

உயிர்ப்பின் ஒளியில் இயேசுவின் வாழ்க்கை நிகழ்ச்சிகளை நோக்கும்போது, அவரை 'ஆண்டவர்' என்ற சிறப்புப்பட்டத்தால் அழைப்பதையே லூக்கா விரும்புகிறார் (லூக் *7:13; 10:39. 41...)*. யோவான் இப்பட்டத்தை மிகக் குறைந்த அளவே பயன்படுத்துகிறார். ஆனால் அவர் அன்பு செய்த சீடர் கடற்கரையில் நின்றுகொண்டிருந்த ஆண்டவரை உடனே அடையாளம் கண்டுகொண்டதையும் (யோவா 21:7), தோமா இயேசுவை இனங்கண்டு அனைத்து விசுவாசிகளின் பெயராலும் 'என் ஆண்டவரே என் தேவனே' *(20:28)* என்று விளம்பியதையும் யோவான்தான் நினைவுக்குக் கொண்டுவருகிறார்.

**ஆண்டவர் கற்பித்த செபம்**

மத்தேயுவிலும், லூக்காவிலும் இயேசு கற்பித்ததாகக் கூறப்படும் வேண்டுதல்களின் இத்தொகுப்பானது, புதிய ஏற்பாட்டில் எந்த இடத்திலும் இத்தலைப்பின் கீழ் குறிப்பிடப்படவில்லை. ''அப்பா! பிதாவே!'' என்ற இரட்டைச்சொல்லால் இது குறிப்பிடப்பட்டிருக்கலாம்.

*1.* செபத்தின் வாசகம்*:* மத்தேயுவிலும் லூக்காவிலும் வரும் இரு விவரிப்புகளையும் சொல்லுக்குச்சொல் மொழிபெயர்த்து பின்வரும் வரிசையில் ஒப்பிடப்படலாம்.

முக்கிய வேறுபாடுகள் லூக்காவில் காணப்படுகின்றன: உ.ம். *11:2* முக்கிய ஏடுகளில் நீண்டதாகக் காணப்படுகிறது; ஆனால், மற்றவற்றில் மத்தேயுவில் விரிவாக்கம் காணப்படுகிறது. இந்த வேறுபாடுகள் மத்தேயு வாசகத்திற்குள் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கலாம் லூக்காவிற்கு மட்டுமே சிறிய பகுதியானது மூலவாசகமாக உள்ளது.

2. இரட்டை மரபின் தோற்றமும் பின்னணியும்:- இச்செபத்தின் இரட்டை வடிவங்களையும் இயேசு வேறுபட்ட சூழ்நிலைகளில் வெளியிட்டார் என்ற கருத்து ஆய்வுக்கு அவ்வளவு உதவியாக இல்லை. ஒவ்வொரு நற்செய்தியாளரும் தனது வட்டார ஆலய சடங்குகளில் பிரபலமாயிருந்த அமைப்பை எடுத்துரைக்கின்றனர். இரண்டு அமைப்புகளுமே சுதந்திர மூலங்களிலிருந்து நம்மை வந்தடைகின்றன என்பதே ஏற்புடையதாக இருக்கலாம். முக்கியமான கூறுகள் அனைத்தும் குறுகிய அமைப்பிலேயே காணப்படுகின்றன. இவ்விரண்டு பதிப்புகளுக்குமான சடங்குமுறை தோற்றமானது பல்வேறு வழிகளில் சுட்டிக்காட்டப்படுகிறது. சில வாசகங்களில் காணப்படும் போற்றுரை மத்தேயுவின் வாசகம் நிலையான வடிவம் எடுப்பதற்கு முன்னர் வழிபாட்டு வளர்ச்சி இன்னும் தொடர்ந்து கொண்டிருந்தது என்பதை காட்டுகிறது. இந்த வேறுபாடுகள், குறிப்பாக மார்சியோன் மற்றும் நீசா கிரகோரியில் காணப்படும் லூக் *11:2*-இன் அமைப்பு,

மத் 6

9.அ. ஆதலால் நீங்கள் இவ்வாறு செபியுங்கள்
ஆ. வானகத்திலுள்ள
இ. எங்கள் தந்தாய்
ஈ. உமது பெயர் பரிசுத்தம் எனப் போற்றப்படுக
10.அ. உமது அரசு வருக
ஆ. உமது திருவுளம்... நிறைவேறுக...
இ. விண்ணுலகில் நிறைவேறுவது போல் மண்ணுலகிலும் நிறைவேறுக.
11.அ. எங்கள் அன்றாட உணவை
ஆ. எங்களுக்கு இன்று அளித்தருளும்
12. எங்களுக்கு எதிராக குற்றம் செய்தவர்களை நாங்கள் மன்னித்துள்ளது போல எங்கள் குற்றங்களை மன்னித்தருளும்.
13.அ. எங்களை சோதனைக்கு உட்படுத்தாதேயும்
ஆ. தீயோனிடமிருந்து எங்களை விடுவித்தருளும்.
இ. சில பகுதிகள் கீழ்வரும் முடிவுரையையும் கொண்டிருக்கும்: ''ஏனெனில் அரசும், வல்லமையும், மாட்சியும் என்றென்றும் உமதே''.

லூக் 11

2.அ. நீங்கள் செபிக்கும்பொழுது இவ்வாறு சொல்லுங்கள்
ஆ. தந்தாய்
இ. உமது பெயர் பரிசுத்தம் எனப் போற்றப்படுக
ஈ. உமது அரசு வருக
3. அ. எங்கள் அன்றாட உணவை
ஆ. எங்களுக்கு நாள்தோறும் அறித்தருளும்
4.அ. எங்கள் பாவங்களை மன்னித்தருளும். ஏனெனில் எங்களுக்கு எதிராக குற்றம் செய்பவர் அனைவரையும் நாங்களும் மன்னிக்கிறோம்.
ஆ. எங்களைச் சோதனைக்கு உட்படுத்தாதேயும்.

---

வழிபாட்டு மரபுகளால் மேலாக விளக்கப்படலாம். மத்தேயுவுடன் ஒப்பிடும்போது நான்காவது வேண்டுதலின் லூக்காவின் வடிவம் வழிபாட்டுக்கு ஏற்ற தழுவுதலைக் காட்டுகிறது. உரோ 8:15 (1 பேதுரு 1:17) மற்றும் கலா 4:6-ல் பயன்பட்டுள்ள ''அப்பா பிதாவே'' என்ற சொற்றொடரானது படிப்பவர் உணரக்கூடிய வழிபாட்டு உபயோகத்தைச் சுட்டுகிறது. அரமேயிக்கு மற்றும் கிரேக்க சொற்களின் இணைப்பானது இவ்விரண்டு மொழிகளுமே பயன்படுத்தப்பட்ட வழிவாட்டு சூழ்நிலைக்குச் சான்று பகர்கிறது. எருசலேமைத்தவிர பல இடங்களிலும் இவ்விதமே அமைந்திருக்கக்கூடும். யூத மரபுகளோடு ஒப்பிடுதலும், நற்செய்திகளின் பதிப்புப் பின்னணிகளும் இதையே சுட்டிக் காட்டுகின்றன.

சமய பழக்கவழக்கங்கள் பற்றி இணையமைப்புப்பகுதியின் ஓட்டத்தை ஒரு தடைசெய்யுமுறையில் மலைப் பொழிவினுள் மத்தேயு இச்செபத்தை நுழைக்கிறார் (மத் 6:1-4. 5-6. 16-18). லூக்காவும் அவ்வாறே பதிப்புக்குறிப்புடன் செபம்பற்றிய பகுதியு

டன் அதனை இணைக்கிறார் (11:5-13). ஆயினும் இது மத்தேயுவைப்போல் அவ்வளவு செயற்கையாகத் தோன்றவில்லை. லூக்காவின் உடனடி அறிமுகம் திருமுழுக்கு யோவானின் பழக்கத்தையும் ராபிகளின் பழக்கத்தையும் சுட்டிக்காட்டுகிறது (5:33). சுருக்கமான செபத் தொகுப்பை அளிப்பதென்பது அசாதாரணமானதல்ல. இயேசு அவ்வாறு செய்தாராயின், அதனுடைய வழிபாட்டு வரலாறானது தொடக்க கிறிஸ்தவ கூட்டங்களினின்று தொடங்கியிருக்கவேண்டும்.

எனவே, வாய்மொழி மரபில் இருந்திருக்கக் கூடிய சுருக்கமான மூல ஆதாரத்தை நாம் உறுதியாக சுட்டிக்காட்ட முடியாது. நற்செய்தி நூல்களில் இறுதியாக நுழைந்த வடிவங்களுக்குப் பின்னால் குறிப்பிடத்தக்க வரலாறு உள்ளது. அரமேயிக்கு மூலத்தை மீண்டும் அமைப்பதை பல்வேறு வழிபாட்டு தோற்றங்கள் பிரச்சினைக்குரியதாக்குகின்றன. இப்படி மீண்டும் அமைப்பது கூடுமான அளவில், இயேசுவினுடைய போதனையின் பெரும்பகுதியைப் போன்று, செபமானது நினைவினில் எளியதாக இருப்பதற்கு ஏதுவான அழுத்தம், எதுகை, செய்யுள் அமைப்பு ஆகியவற்றோடு கவிதையை நினைவுபடுத்தும் முறையில் சந்த வடிவில் இருப்பதை ஒவ்வொரு நற்செய்தியும் சுட்டிக்காட்டுகின்றன. சொற்களின் வடிவத்தை தீர்மானிப்பதில் இத்தகைய கருத்துக்கள் எச்சரிக்கையுடன் பயன்படுத்தப்படவேண்டும். அதேசமயத்தில் வாய்மொழிப்பாரம் பரியத்தைப் பாதுகாத்துக் கையளிக்கும் மேற்காசியர்களின் திறமை, இத்தகைய அமைப்பை இயலக்கூடியதாக்குகிறது.

3. செபத்தின் நோக்கமும் திட்டமும்:- செபிப்பதற்கு வழிகாட்டியாகவும், கூட்டாகவோ அல்லது தனியாகவோ, செபிப்பதற்கு வேண்டிய குறிப்பிட்ட அமைப்பை அளிப்பதாகவும் இரு வாசகங்களும் அமைந்துள்ளன. வழிபாட்டுப் பொருளாக மட்டுமே இதனை எடுத்துக் கொள்வதானது, உண்மையிலேயே நற்செய்தியாளர்களின் எண்ணத்தையும், இயேசுவின் எண்ணத்தையும் தவறாக புரிந்து கொள்வதாகும். நற்செய்தி நூல்கள் தொகுக்கப்பட்டபோது அது இந்த நோக்கத்தை தெளிவாக நிறைவுசெய்தது. கிறிஸ்தவ வழிபாடுகளில் தொடர்ந்து உச்ச இடத்தை வகிக்கலாயிற்று. அனைத்து செபத்திற்கும் அடிப்படையாகக் கொள்ள வேண்டிய, ஆண்டவர் கற்பித்த செபத்தின் மதிப்பை ஒவ்வொரு நற்செய்தியாளரும் சுட்டிக்காட்டுகின்றனர். தவறானவகை செபத்திற்கு பதிலாக இதனை அளிக்கின்ற மத்தேயு, இறைவன் மற்றும் அவருடைய அரசுக்கு முதன்மை அளிக்கிறார். இதில் அவ்வாறே லூக்காவும் இதனை ஒரு செபமாக கற்றுக் கொடுப்பதற்குப் பதிலாக, எவ்வாறு செபிக்க வேண்டும் என்ற வேண்டுகோளுக்குப் பதிலாக அளிக்கின்றார். இச்செபத்திற்கும் யூத வடிவங்களுக்கும் இடையிலான ஒப்பீடானது இதையே சுட்டுகிறது. செபத்தினுடைய உட்பொருளின் தொகுப்பாக அமைகிறது. யூத போதகர்கள் இத்தகைய தொகுப்புகளை அளித்துள்ளனர். பெராகோத்தினுடைய ஆய்வுக்கட்டுரை (290) பின்வருமாறு கூறுகிறது. ''பதினெட்டு ஆசிர்களின் சுருக்கம் என்ன? 'ஒவ்வொரு ஆசிரின் சுருக்கமே' என்று ராபி கூறுகிறார். 'உமது வழிகளை அறிந்து கொள்ள அறிவைத் தாரும் ஆண்டவரே என் இறைவனே' என்று சாமுவேல் கூறுகிறார். பதினெட்டு ஆசிகளையும் தொகுக்கின்ற சுருக்கமான செபம் பின்னர் தொடர்கிறது. இது இயேசுவின் காலத்திற்குப் பிற்பட்டதாக இருந்தாலும், இவ்வழக்கமானது தால்முத்திற்கு முற்பட்டது அல்ல என்று கூறுவதற்கு எவ்வித காரணமும் இல்லை. இயேசுவின் செபமானது பலவிதங்களில் செமோனே எஸ்ரே (பதினெட்டு ஆசிகள்)யின் சுருக்கமாக உள்ளது. மேலும் இது செபத்தின் உட்பொருளுக்கான திட்டத்தையும் அமைப்பையும் உள்ளடக்கும் சுருக்கமாகக் கொண்டுள்ளது.

திதாக்கேயில உள்ள ஆண்டவரது செபமானது ஆண்டவரால் கட்டளையிடப்பட்டதாகவும் ''வெளிவேடக்காரர்களைப் போல செபிப்பதற்கு'' பதிலாக அவர் அளித்ததாக

வும் கூறுகிறது. இந்நூல் மத்தேயுவின் சூழ்நிலையையும் வாசகத்தையும் அறிந்திருப்பதாகக் காட்டுகிறது. இச்செபம் ஒவ்வொருநாளும் மும்முறை சொல்லப்பட வேண்டும்.

*4. ஆய்வு:-*

அ. முகவுரை (மத் *6:9* ஆ,இ; லூக் *11:2* ஆ): இறைவனை தந்தையென விளிப்பது யூத செபங்களில் காணப்பட்டது. செபக்கூட வழிபாட்டில் அடிக்கடிப் பயன்பட்டது ''எம் தந்தாய், எம் அரசரே'' என்பதாகும். எனது தந்தாய் என்ற சொல்லானது ஐந்தாம் ஆசிரில் காணப்படுகிறது. ராபிகளின் ஏடுகளில் ''என் தந்தையே'' என்பது சில சமயம் காணப்படுகிறது. பழைய ஏற்பாடு இறைவனைத் தந்தையாக எண்ணி (படைப்பாளர்; உப *32:6*; மலா *2:10*), அவரை அவ்வாறே விளிக்கிறது (ஏச *63:16*; *64:8*; எரே *3:4.19*). பிற்கால இலக்கியங்கள் இறைவனை இஸ்ராயேலுக்குள் ஒரே சிறு குழுவினரின் தந்தையாகக் கருதுவதாகத் தெரிகிறது.

ஆண்டவரது செபமானது இறைவனை அழைக்கும் இயேசுவின் முறையைப் பற்றி ஒன்றும் கூறவில்லை. ஆனால் தந்தை என்ற சொல்லை இயேசு பயன்படுத்தும் இரு நிகழ்ச்சிகளை நற்செய்தி நூல்கள் குறிப்பிடுகின்றன [மத் *11:25-26* (லூக் *10:21*); மாற் *14:36* (மத் *26:39*; என் தந்தையே); லூக் *22:42*]. மாற் *14:36* அப்பா தந்தையே என்ற சொற்களை கொண்டுள்ளது. மாற்கு தனது வழக்கமான மொழிபெயர்ப்பை இடைபுகுத்தாதது நினைவுகூர்ந்தலுக்குப் பதிலாக வழிபாட்டுப் பயன்பாட்டையே இது பிரதிபலிப்பதாக இருக்கக்கூடும். ''அப்பா'' என்ற அரபேபிக்குச் சொல் ''என் எங்கள்'' என்ற முன்சொற்களோடு வரலாம், அல்லது லூக்காவில் வருவதுபோல் வெறுமனே தந்தை என்று மொழிபெயர்க்கப்படலாம். இது லூக்காவின் புறஇன சூழ்நிலையால் விளக்கப்படலாம்.

யூத பக்தியானது, மத் *6:9*-இல் உள்ளது போன்று ''வானகத்திலுள்ள'' என்பதை சேர்கலாம் (''உங்கள் விண்ணகத் தந்தை'' மத் *5:48*; *6:14.26*; ''வானகத்திலுள்ள'' மத் *5:16.45*; *7:21*). இப்பதம் லூக்காவில் இல்லாமை, அது மிகப் பழமையான வடிவம் என்பதின் அடையாளமாக இல்லாமல் யூதரல்லாதோரின் பயன்பாட்டின் அடையாளமாக உள்ளது. யூத நடைமுறைகளுக்கு அப்பாற்பட்டு இறைவனை தந்தையென அழைக்கும் இயேசுவின் ''பேச்சுத் தைரியத்தை'' ஓரிசன் குறிப்பிடுகிறார். மகனாகிய கிறிஸ்துவின்மூலம் இறைவனை அறிகின்ற கிறிஸ்தவ திருச்சபையில் இது தனிச்சிறப்பான முறையில் பயன்படுகிறது.

ஆ. முதல் வேண்டுதல் (மத் *6:9* ஈ; லூக் *11:2* இ):- முதல் மூன்று வேண்டுதல்களும் (லூக்காவில் இரண்டு) ஒத்த பொருளையே கொண்டுள்ளன. இறைவனின் பெயரைப் புகழ்தல் அரசிற்காகவும், அவரது சித்தத்தை நிறைவேற்றவும் செபித்தல், இவையனைத்தையும் இறுதிக்கால நம்பிக்கையால் இறைவனுடைய மேலாண்மையை உறுதியாக அறிவிப்பதாகும். இது இறுதிக்கால சூழ்நிலையில் வாழ்கின்ற ஒரு சமுதாயத்தின் செபம். இச்செபத்தை செபிக்கும் போது திருச்சபையும் இதே நிலையில்தான் உள்ளது.

மூன்று வேண்டுதல்களும் செயற்பாட்டு வினைச்சொல் வடிவங்களை பொதுவாக கொண்டுள்ளன. பிந்தைய வேண்டுதல்களில் மத்தேயுவினின்று லூக்காவின் வினைச்சொற்கள் வேறுபட்டிருந்தாலும் இங்கு மாறுபடுவதில்லை. செயற்பாட்டு ஏவல் வடிவங்களே செபத்தின் மொழி அமைப்பாகும். செயற்பாட்டு அமைப்பு மரியாதையின் வடிவமாகும். இறைவனைப்பற்றிய கூற்றுக்களிலும் செபங்களிலும் இவ்வடிவம் பரவலாகப் பயன்படுகின்றது (மத் *5:5.7.9*; *7:1*; லூக் *14:14*). இறைவன் முதற்பொருளாகவும் இறைசூழ்நிலையானது புறப்பொருளாகவும் இல்லாத பிந்தைய வேண்டுதல்களில் செய்வினை வடிவம் பயன்படுகிறது.

இறைவனின் பெயரானது அவரது இயல்பையும் வல்லமையையும் உணர்த்துகிறது.

அபாயத்திற்கு எதிராக மன்றாட்டு உரோ. 2:24-25-இல் காணப்படுகிறது (சங் 74:10.18; ஏச 29:23; எச 36:22-23). ''இறைபெயரை குறிப்பிடாத ஆசிர் ஆசீரே அல்ல'' என பெரோகாத்து வலியுறுத்துகிறது. செபக்கூட வழிபாடு பின்வரும் வேண்டுதல்களை கொண்டுள்ளது. ''உமது பெயரைப் புனிதப் படுத்துகின்ற அவர்கள்மேல் உமது பெயரைப் புனிதப்படுத்தும், ஆம், உலக முழுவதும் உமது பெயரைப் புனிதப்படுத்தும்.. பலரிடையே உமது பெயரைப் புனிதப்படுத்தும் ஆண்டரே, நீர் ஆசீர்வதிக்கப்பட்டவர்''. ''அவரது உயரிய நாமம் மகிமைப்படுத்தப் பட்டு புனிதப்படுத்தப்படுவதாக'' என்று செபக்கூடக் ''காதிசு'' தொடங்குகிறது. இறைவனின் பெயரைப் போற்றுவது அவரது இயல்பையும் கோரிக்கைகளையும் அறிந்து ஏற்றுக்கொள்வதாகும். இந்த வேண்டுதலுக்கான முழு பதிலானது இறுதிக்கால முழு நிறைவேறுதலைக் கருத்தில் கொண்டுள்ளது. இடைக்காலத்தில் எப்பொருளிலும் அது வேதபோதகச் செபமாக உள்ளது. ஏனெனில், அனைத்து மனிதரும் அதனைப் புனிதமானதாக பற்றிக் கொள்ளும்வரை இறைவனுடைய பெயரின் அறிவைப் பறைசாற்றுதலை அது ,உள்ளடக்கியுள்ளது (உரோ 10:12-15).

இ. இரண்டாம் வேண்டுதல் (மத் 6:10 அ; லூக் 11:2 ஈ):- இதுவும் முழுவதும் யூதசெபமாகும். ஆனால் கிறிஸ்துவனின் வாயில், இது கிறிஸ்துவின் சிறப்பான போதனையையும், அரசுடன் அவருக்கே உரிய தொடர்பையும் உள்ளடக்கியுள்ளது. ''அரசன்'' என்பது இறைவனுக்கு, அளிக்கப்படும் விருப்பமான பட்டமாகும். ''உமது வாழ்விலும், உமது நாட்களிலும், இஸ்ராயேலின் அனைத்து வீட்டாரின் வாழ்விலும் அவர் தனது அரசை அமைப்பாராக'' என்று செபக்கூட காதிசு கொண்டுள்ளது. இறைபெயர் பற்றிய கூற்றுக்கு யோகனானுடைய பதிலில் ''இறை அரசுத்தன்மையைப்பற்றி எவ்வித குறிப்பும் கொண்டிராத ஆசீர். அசீரே அல்ல'' என்று பேராகோத்து குறிப்பிடுகிறது.

லூக்காவில் இந்த வேண்டுதலுக்குப் பதிலாக, சில தந்தையரின் நூல்கள் ''உமது தூய ஆவி எம்மேல் இறங்கி, எம்மைத் தூய்மையாக்கட்டும்'' என்பதைக் கொண்டுள்ளன. தூயஆவி மீதான லூக்காவின் வலியுறுத்தலுக்கு இது பொருந்தினாலும் இது மூல வாசகமாக இல்லாமல் கிறிஸ்தவப் பாடபேதமாகத் தெரிகிறது.

இதுவும் ஒரு இறுதிக்கால செபமாகும். அரசானது வரவிருப்பது. ஆனால் ஏற்கனவே செயல்படுகிறது என்கின்ற இயேசுவினுடைய போதனையில் காணப்படும் நெருக்கடிநிலை மத்தேயுவின் மூன்றாவது வேண்டுதலில் மிகவும் வெளிப்படையாக உள்ளது.

ஈ. மூன்றாவது வேண்டுதல் (மத் 6:10 ஆ,இ):- மற்ற அனைத்து விருப்பங்களையும் புறம்பாக்கி இறைவனுடைய சித்தமானது முழுமையாக நிறைவேற்றப்படும்போது இறைவனது மேலாண்மை அவரது அரசில் அனைவருக்கும் வெளிப்படையாவதன் காரணமாக இறைவனுடைய சித்தம் நிறைவேறட்டும் என்பது அரசினுடைய வருகையின் விளக்கமேயாகும். இது முந்தைய வேண்டுதலின் விரிவாக்கமேயாகும்.

''விண்ணகத்திலுள்ள உங்கள் தந்தையின் சித்தத்தை நிறைவேற்ற சிறுத்தையைப் போல வலிமையுடனும் கழுகைப்போல துடிப்பாகவும், கலைமான் போல விரைவாகவும் சிங்கத்தைப்போன்ற தைரியத்துடனும் இரு'' என்றும் ஒரு யூதநூல் கூறுகிறது. ''உனது சித்தத்தை தமது சித்தமாக அவர் நிறைவேற்றுவதற்காக, அவர் சித்தத்தை உனது சித்தமாக செய். உனது சித்தத்திற்குமுன் மற்றவரின் சித்தத்தை அவர் அழித்துவிடுவதற்காக, அவரது சித்தத்திற்குமுன் உனது சித்தத்தை அழித்துவிடு'' என்று கமாலியேல் கூறுகிறார். இவ்வேண்டுதலை சேர்ப்பதற்கு ஆதரவளிக்கின்ற மாற் 14:36-இல் உள்ள இயேசுவின் செபத்துடன் இதனை ஒப்பிடலாம்.

விண்ணகத்தில் நடைமுறையிலுள்ள அதே சூழ்நிலை மண்ணுலகிலும் நிலவ

வேண்டும் என்னும் முழுமையான பொரு ளில் (கொலோ 1:20) இறைவனது சித்தத் தினை செயல்படுத்த வேண்டும் என்று இம் மன்றாட்டின் இரண்டாம் பகுதி (மத் 6:10 இ) கூறுகிறது. கிறிஸ்தவனுக்கு இந்த நிறை வேறுதல் நான்காம் நற்செய்தியில் விவரிக் கப்பட்டிதுப்போல, கிறிஸ்து தந்தைக்கு அளிக்கும் பதிலுக்கு ஒத்ததாக இருக்க வேண்டும். இதன் விளைவாக இறையரசு வருகைக்காகச் செபிப்பது கிறிஸ்துவின் வரு கைக்காகச் செபிப்பதாகும்.

உ. நான்காவது வேண்டுதல் (மத் 6:11; லூக் 11:3):- எஞ்சிய வேண்டுதல்களில் வினைச்சொற்கள் செயற்பாட்டு நிலையிலி ருந்து செய்வினை நிலைக்கு மாறுகின்றன. மத் 6:11 அ, மற்றும் லூக் 11:3 ஆ ஒன்றாய் உள்ளன. ''அன்றாட'' என்ற சொல்லைப் பற்றி பலதர்க்கங்கள் உண்டு. இதற்கு அவசி யமான என்ற பொருளும் அளிக்கப்படும்,

ஊ. ஐந்தாவது வேண்டுதல் (மத் 6:12; லூக் 11:4 அ):- முதல் சொற்றொடரில் காணப்பட்ட வேறுபாடு மத்தேயுவின் குற் றங்களுக்குப் பதிலான லூக்காவின் பாவங்க ளாகும். ஆனால் இணையொத்த சொற்றொ டரில் லூக்கா மத்தேயுவைப் பின்பற்றுவ தால் இது அவ்வளவு பொருள் பொதிந்த தன்று. இயன்ற இடத்திலெல்லாம் லூக்கா ஒருபொருள் பிற சொற்களையே பயன்படுத் துகிறார். இரண்டிலும் பாவம் என்று மொழி பெயர்ப்பதே நன்று.

செமோனே எஸ்ரேயின் ஐந்தாவது மற் றும் ஆறாவது ஆசீர்கள் இறைவனை ஆசீர்வ திக்கின்றன. மனமாற்றத்தில் பெருமகிழ்வு கொள்கின்ற அவர் அருளுடையவராகவும், அளவற்ற விதத்தில் மன்னிப்பவராகவும் உள்ளார். ஆனால் யூத செபங்களில் இம்மன் றாட்டுக்கு உண்மையாகவே இணையாக ஏதுமில்லை. மத்தேயுவில் (6:14-15-இல் மீண்டும் வலியுறுத்தப்படுகிறது) உள்ளது போன்ற மனிதனுடைய மன்னித்தலை இறைவனுடைய மன்னிப்பிற்கு நிபந்தனை யாக்குவது செவிகளுக்கு விநோதமாகத் தோன்றலாம். மத்தேயுவின் இறந்த காலமா னது (மன்னிக்கப்பட்டது) மனிதனுடைய செயலைச் சார்ந்து ஒரு கட்டுப்பாட்டை வெளிப்படுத்துவதாகத் தெரிகிறது. லூக்கா வில் உடன் இயங்குகின்ற செயல்திறனை குறிப்பிடும் விதமாக நிகழ்காலம் பயன்படு கிறது. ஆயினும் காலமானது தீர்மானிக்கப்ப டாத அரமேயிக் வினைச்சொல்லைச் சுட்டிக் காட்டி நிகழ்காலமாக அல்லது எதிர்கால மாக வாசிக்கப்படலாம். புதிய ஏற்பாட்டு நிகழ்காலமானது சில நேரங்களில் எதிர்கால பொருளில் பயன்படுகிறது. லூக்காவின் பதிப்பை நிறைவேற்றப்பட்ட செயலாக இல்லாமல் குறிக்கோளாக வாசிக்கலாம். ''எங்கள் பாவங்களை மன்னியும் ஏனெனில் நாங்களும் மன்னிக்கிறோம்''. இப்போ துள்ள வாசகச் சூழ்நிலையில் இருப்பது போல, ஆண்டவரது செபத்தின் ஒரு பகு தியை மட்டும் விளக்குவதற்காக மத் 9:14-15-ஐப் புகுத்துவது, ஏற்புடையதாக அமையவில்லை. எதிர்காலப் பொருள் உணர்வானது இருநற்செய்திகளின் சீரியக் பதிப்புகளில் காணப்படுகிறது.

எ. ஆறாவது வேண்டுதல் (மத் 6:13 அ,ஆ; லூக் 11:4 ஆ):- யாக் 1:13-இன் நோக்கில் இவ்வேண்டுகோளானது விநோதமாகத் தெரியலாம். மேலும், ஒரு சில மொழிபெ யர்ப்புகளிலும் பண்டைய வழிபாட்டு சடங் குகளிலும் ''சோதனைக்கு உட்படும்படி எங் களை விடாதேயும்'' என்று கூறப்படுகிறது. ''சோதனைக்குக் கீழ் எங்களை செல்ல விடா தேயும்'' என்று மொழிபெயர்த்து பொருள் கொள்ள முயற்சிகள் எடுக்க மேற்கொள் ளப்பட்டுள்ளன. காரணவினைச்சொல்லா னது அனுமதிக்கும் உணர்வை கொண்டிருக் கக் கூடுமாயினும் எபிரேயம் காரண-காரியங்களை அவ்வளவு வேறுபடுத்துவ தில்லை மற்றும் நிகழ்வது அனைத்தும் இறைவனின் ஆதிக்கத்தின் கீழ் வருவதாகக் கருதப்பட்டது. பெராகோத்தில் தூங்கப்போ குமுன் சொல்லப்படும், ஒரு செபமானது, ''பாவம், குற்றம், சோதனை அல்லது அவம திப்பு ஆகியவற்றின் வல்லமைக்கு என்னை கொணராதேயும்; தீய தூண்டுதல்கள்

தவிர்த்து, நல்ல தூண்டுதல்கள் என்மீது ஆதிக்கும் கொண்டிருக்கக்கடவன'' என்று கூறுகிறது. இதனையொத்த சொற்கள் யூத செபநூலிலும் காணப்படுகின்றன. ''பாவத்திற்கோ அல்லது சோதனைக்கோ எங்களை நடத்திச் செல்லாதேயும்; தீய விருப்பங்கள் எம்மீது ஆட்சி செலுத்த விடாதேயும்''. மாற் 14:38-இல் இயேசு இத்தகையதொரு செபத்தையே அளிக்கிறார். இங்கு சோதனை என்ற சொல்லானது தேர்வாக அமையக்கூடிய உடனடி அபாயங்களைக் குறிப்பிடுகின்றன.

சோதனை என்பது முதன்மையாகத் தேர்வு என்று பொருள்படுமேயன்றி பாவத்திற்கு ஈர்ப்பதன்று. எழுபது நூல் வினைச்சொல்லையும் இடப்பெயரான மாசா என்பதையும் மொழிபெயர்க்கிறது (இறைவன் சோதனைக்குட்படுத்தப்பட்ட இடம்: யாத் 17:7; உப 6:16; சங் 94:6). வினைச்சொல்லானது 'அல்லலுறுதல்' என்றும் மொழிபெயர்க்கப்படுகிறது. இச்சொல்லை விவிலியம் சிறப்பான முறையில் பயன்படுத்தும்போது, அது அதனுடைய சிறப்புரிமையான விவிலிய உபயோகமானது, மனிதரைச் சோதித்து அறிதலைக் குறிக்கிறது (ஆதி 22:1; யாத் 20:22; நீதி 2:22; தானி 1:14; எபி 11:17). இத்தகைய சோதனையானது இயேசுவிற்கும் (லூக் 22:28) எதிர்பார்க்கப்படவேண்டும் (சீரா 2:1-2). 1 கொரி 10:13-இன் நோக்கில் மீட்பிற்கான செபமானது, கடினமானதாகத் தோன்றலாம் (மாற் 14:35-36). இந்த வேண்டுதலானது, மெசியா காலக் கேடுகளாகிய சோதனையின் இறுதிக் காலத்தையே முதன்மையாக குறிக்கின்றன (மத் 24:21-29; மாற் 13:24; 1 பேதுரு 4:12). இறுதிக்காலப் பொருள் செபத்தில் பயன்படும் நோக்கத்திற்காக, சிறிது மாற்றப்பட்டிருக்கலாம் இச்செபம் சோதித்து அறியப்படுவதிலிருந்து விடுதலையைத் தேடுகிறது.

இறுதியாக, மத்தேயுவில் சேர்க்கப்பட்டுள்ள பகுதியைச் சேர்ப்பதாவது ''தீயோனிடமிருந்து (அதாவது சாத்தான், எதிர் கிறிஸ்து), எங்களை மீட்டருளும்'' என்று வாசிக்கப்பட வேண்டும். இச்சொற்கள் ஆண் பாலாகவோ அல்லது அஃறினையாகவோ இக்கலாம். ''தீயோன், தீமை'' என்ற இரண்டுமே புதிய ஏற்பாட்டில் காணப்படுகின்றன. திதாக்கேயும் இத்தகைய வாசகத்தையே கொண்டுள்ளது. ஆனால் 10:5-இல் ''எல்லா தீமைகளினின்றும்'' என்று அஃறினையில் திருச்சபைக்குச் சாற்றிக்கூறப்படுகிறது. மேலே குறிப்பிட்ட யூத செபத்தில், தீமையானது தீயதூண்டுதலைக் குறிக்கிறது. தீமையானது மற்ற மனிதர், உட்தூண்டுதல், சூழ்நிலைகள், அல்லது இறுதியாக வெளிப்படுத்தப்படும் பகைவன் ஆகிய எவரிடமிருந்து வந்தாலும், மீட்பிற்கான செபம் பொருத்தமானதே. மேலும், இறுதியான, மூழ்கடிக்கும் சோதனையின்று விலக்கப்படுமாறு நாம் வேண்டலாம்.

ஏ. போற்றுரை (சில மொழிபெயர்ப்புகளில் மத் 6:13 இ):- திதாக்கே காட்டுவது போன்று இது ஒரு தெளிவான பிற்சேர்க்கை மற்றும் திருவழிபாட்டு வளர்ச்சி ஆகும். இது ''வல்லமையும் மாட்சியும் உமதே'' என்ற குறுகிய வடிவில் இது செபத்துடன் சேர்க்கப்பட்டுள்ளது. இது பதிலுரையாக மக்களால் கூறப்பட்டது என்பது தெளிவு. ஆண்டவரது செபத்திற்கு பின்னர் இது கூறப்பட்டிருக்கலாம். திதாக்கே 9-10-இல் இது மும்முறை மீண்டும் மீண்டும் கூறப்படுகிறது. முதல் இரண்டு பதிலுரைகள் ''மாட்சியானது என்றென்றும் உமதே'' (9:2-3; 10:2.4) என்றும் மூன்றாவது பதில் இயேசு கிறிஸ்துவின் வழியாக மாட்சியும் வல்லமையும் என்றென்றும் உமதே'' (9:4) அல்லது ''வல்லமை மற்றும் மாட்சிமை'' (10:5) என்றும் அமைந்துள்ளது. இவை அப்பம் மற்றும் திராட்சை இரசத்தின் மீதான ஆசிகள் மற்றும் செபங்களுக்கான பதிலுரைகளாகும் (9) மற்றும் அவற்றிற்கான நன்றியுரையும், திருச்சபைக்கான செபமுமாகும்(10).

போற்றுரையைச் சேர்ப்பது, ஆண்டவரது செபத்தை மிக முழுமையான வழிபாட்டு செயலாக்குகிறது. பதிலுரை என்ற அளவில் ஒவ்வொரு வேண்டுதலின் பொருளையும்

அது தெளிவாக்கி வெளிப்படுத்தப்பட்ட நம்பிக்கைக்கு உட்பொருளை அளிக்கலாம். நிறைவேறுதலானது இறுதி நாளை எதிர் நோக்கியிருக்க வேண்டி இருந்தாலும் அரசு, வல்லமை மற்றும் மாட்சிமை முதலியன ஏற்கெனவே இறைவனின் கரங்களில் உள்ளன. அரசு அவருடையதென்பதற்காக இறைவனுடைய அரசிற்காகவும், மாட்சிமை அவருடையதென்பதற்காக அவரது திருப்பெயரைப் புனிதப்படுத்தவும், வல்லமை அவருடையதென்பதற்காக அவரது சித்தத்தைச், செயல்படுத்தவும் நாம் செபிக்கலாம். அப்பம், மன்னிப்பு, மற்றும் மீட்பு ஆகியவற்றிலும் நாம் பங்கேற்கலாம்; ஏனெனில், இவை அரவது அரசுடன் வருகின்ற கொடைகள். அவை அவரது வல்லமையை எடுத்துக்கூறி அவரது மாட்சிமையை வெளிப்படுத்துகின்றன.

*4.* இறுதிக்காலமும் நிகழ் வாழ்வும்:- வாக்களிக்கப்பட்டு ஆனால் நிறைவேற்றப்படாத நிகழ்ச்சி நிலையைப்பற்றி போற்றுரை கூறுகின்றது. செபத்தை செபிக்க காரணமாக உள்ள விசுவாசத்திற்கு அடிப்படையாக இது உள்ளது. ஒவ்வொரு வேண்டுதலிலும் இறுதிக்கால உண்மை மற்றும் நம்பிக்கை குறித்த முதன்மையான குறிப்பு இருப்பதை காணலாம். இது பெருமளவில் இப்போதுள்ள வாசகத்தில் காணப்படும் கடினத்தை விளக்குகிறது. முதல் மூன்று வேண்டுதல்களுக்கும் பதிலாக இறுதி உண்மை அமைய வேண்டும் என்பதை நாம் அறிந்துள்ளோம். ஏனெனில் அவை இறைவன் எதை இறுதியாக முடிக்க வேண்டுமோ அதைப்பற்றிப் பேசுகின்றன.ஆயினும் ''விண்ணுலகில் நிறைவேறுவதுபோல் மண்ணுலகிலும்'' என்ற சொற்களின் மூலம், நமது சூழ்நிலையுடன் தொடர்பு கொள்ளுகின்றது. இறுதியான வேண்டுதல்கள் அரசினுடைய இந்த இறுதிக் கொடையுடன் நமது உறவைப் பற்றிப் பேசுகின்றன. அருகே வரவிருக்கும் அரசினுடைய நிறைவேறக்கூடிய கொடைகளை நமது இன்றைய நிலையுடன் ஈடுபடுத்துவதற்காக வாசகம் ஏற்கெனவே மாற்றியமைக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் இறுதிக்கால உணர்வு, முன்னேற்றபாடு, மன்னிப்பு மற்றும் மீட்பு ஆகியவற்றிற்காக மட்டுமின்றி இன்றைய அனுபவத்தின் எதிர் பார்ப்புக்களுக்காகவும் நாம் செபிக்கலாம். இவ்வாறு இறுதிக்கால அளவில் வரையறுக்கப்பட்ட ஒரு சமுதாயத்தின் செபமானது வழக்கில் நிகழ்காலத்திற்குரியதாகிறது.

*5.* இயேசுவினுடைய போதனையின் சுருக்கம்:- இந்த இடுக்கண்நிலையை வெளிப்படுத்துகின்றபோது ஆண்டவரது செபமானது, அருகில் உள்ள அரசு மற்றும் இனி வரவிருக்கும் அரசு ஆகிய இரண்டிற்கும் இடையில் இயேசுவின் படிப்பினை(மற்றும் அனுபவம்)யில் இவ்விடுக்கண் நிலையிருப்பதை பிரதிபலிக்கிறது. இது, அவர் வலியுறுத்திய முதன்மைகளைப் பிரதிபலித்து, அவற்றை செபிக்கும் செயல்முறைக்குச் சாற்றிக் கூறுகிறது. கிறிஸ்துவுக்கு இருந்தது போல், இறைவனைச் சேர்ந்தவை நமது முதல் அக்கரையாக இருக்க வேண்டும். இந்த முன்னோக்கில் நமது தேவைகள் தங்களுக்குரிய இடத்தைப்பெறும் ஆண்டவர் கற்பித்த செபம் ''கடவுளின் அரசையும் அவருக்கு ஏற்புடையதையும் முதலில் தேடுங்கள்; இவையனைத்தும் உங்களுக்குச் சேர்த்துக் கொடுக்கப்படும்'' (மத் 6:33) என்னும் கட்டளையைச் செயல்படுத்துகிறது. நமது உண்மையான செல்வம் எங்குள்ளது என்பதை உறுதியாக எடுத்துக் கூறுவதால் நமது காரியங்களின் சரியான இயல்பை இம் மன்றாட்டுக்கள் நிர்ணயிக்கின்றன *(6:9-21)*.

*6.* திருவழிப்பாட்டு மற்றும் தனிப்பட்ட வழக்கு:- வாசகங்களாலும், குறிப்பாக போற்றுரையாலும் வெளிப்படுத்தப்பட்ட வளர்ச்சியுற்ற வடிவங்கள், தனிப்பட்ட மற்றும் குழு (வழிபாடு) வழக்கின் தகுதியைச், சுட்டிக்காட்டுகின்றன. எது எப்படியிருந்தாலும் ஆண்டவருடைய செபமானது, தனிப்பட்ட வழக்கமுறையும் பொது வழிபாட்டு அல்லது திருவழிபாட்டு அமைப்பில் செயல்பட வேண்டிய முன்னுரிமைகளும் அடிப்படையாகக் கொள்ளவேண்டிய ஒருதிட்டத்தை அளிக்கிறது. ஒவ்வொருவழிபாட்டுச்

செயலிலும் செபத்தின் வேறுபாடற்ற உபயோகம் அவ்வழிபாட்டை ஒரு உச்சநிலைக்கு கொண்டு வரவும் அதே சமயத்தில் ''இவ்வாறு செபிக்க வேண்டும்'' என்று வழிபடுவோர் ஒவ்வொருவருக்கும் நினைவு படுத்தவும் துணைபுரிகிறது.

**ஆண்டவர் முன் தடைப்பட்டிருத்தல்** *(DETAINED BEFORE THE LORD)*

இப்பதம் ஏதோ ஒரு சமய நோக்கிற்காக குருக்களின் பாதுகாவலில் புனித இடங்களில் அடைபட்டிருப்பதை விவரிக்கிறது. ஆனால் அதன் பொருள் தெளிவாக இல்லை. சவுலிடமிருந்து தப்பியோடும்போது, நோபு என்ற இடத்தில் உள்ள புனித இடத்தில், தாவீது சந்தித்த ஏதோமியானான தோயேகுவைப் பற்றி இது கூறப்படுகிறது. சமயக் காரியங்களுக்காகத் தடை விதித்தலை உணர்த்தும் சொல்லும் (நெக 6:10; எரே 36:5) இப்பதமும் ஒரே வேரிலிருந்து வருவதாகத் தெரிகிறது. ஒருவேளை தோயேகு ஏதோ ஒரு சுத்திகரச் சடங்கை அனுசரித்துக் கொண்டிருந்திருக்கலாம் அல்லது நேர்ச்சிக் கடனைச் செலுத்திக் கொண்டிருந்திருக்கலாம் அல்லது ஒரு வேளை வழக்கமாக வழிபட வந்தவர்களில் ஒருவராக இருக்கலாம். தொழுநோயுடையோர் என்று ஐயப்பட்டோரும் புனித இடத்தில் அடைபட்டிருந்தனர் (காண்க லேவி 13:4.11.31).

**ஆண்டு** *(YEAR)*

விவிலிய காலத்தில், இஸ்ராயேல் மக்கள், தங்கள் அரசியல், பொருளாதார, சமூக, சமய வளர்ச்சியில் வேறுபட்ட காலக்கணிப்புகளைப் பயன்படுத்தியுள்ளனர். ஒவ்வொன்றிலும் ஆண்டு வெவ்வேறு விதத்தில் கணிக்கப்பட்டது.

மிகத்தொன்மையான ஆண்டுக் கணிப்பு கானானியர்களிடமிருந்து கடன் வாங்கப்பட்டது. இது, ஐம்பதுநாள் காலக் கணிப்பு என்று அழைக்கப்பட்டது. இது சாலமோன் காலம் வரைப் பின்பற்றப்பட்டது. இது விவசாயப் பண்புடையது; அறுவடையை முதன்மையாகக் கொண்டு கணிக்கப்பட்டது. இதன்படி முதல் கதிர்களை அறுவடை செய்யும் நாள் புத்தாண்டு நாளாகும். இதன்படி, ஆண்டு 50 நாட்கள் கொண்ட எழு வாரங்களும் ஒரு நாளும் அடங்கியிருந்து, முடிவில் வரும் நாள் புனித நாளாகும். இந்த ஏழு காலப் பிரிவுகளோடு, ஏழுநாட்கள் கொண்ட இரு விழாக் காலங்கள் சேர்க்கப்பட்டன. ஒன்று நான்காவது பிரிவுக்குப்பின் கொண்டாடப்பட்டது. இது கூடார விழாவாகும். மற்றது ஏழாவது பிரிவுக்குப்பின், ஆண்டு முடிவாகக் கொண்டாடப்பட்டது. இது பாஸ்கு - புளியாத அப்ப விழாவாகும். இதை அடுத்து ஒருநாள், புத்தாண்டு நாளாகச் சேர்க்கப்பட்டது. மிகவும் முக்கியமான நாளாகும். இவ்வாறு ஓர் ஆண்டில் 365 நாட்கள் அடங்கியிருந்தன. இக்கணிப்பு செயலளவில் சூரியனை அடிப்படையாகக் கொண்டதாகும்.

இக்காலக் கணிப்பு சந்திரனையும், மாதங்களையும் கவனத்தில் கொள்ளவில்லை. அறுவடைக் காலம் இடத்திற்கு இடமாறியதால், இத்தகைய காலக் கணிப்பு அந்தந்த இடத்தைப் பொறுத்தது. ஆகவே நாடு முழுவதற்கும் ஒரே காலக் கணிப்பு முறை இருந்திருக்க முடியாது. ஆனால், இஸ்ராயேலர்களுக்கு முந்திய கானானியர் காலத்தில் நகர அரசுகள் விளங்கின. இஸ்ராயேலரிடையே இனம் அடிப்படையாக இருந்தது. இரண்டிற்கும் விவசாயம் முக்கியத்துவம் வாய்ந்திருந்தது. ஆகவே இத்தகைய காலக் கணிப்பு அன்றாட வாழ்வுக்கும் போதியதாக இருந்தது.

பல யூத இனங்களும் ஒன்றாக இணைந்து, தாவீது, சாலமோன் காலத்தில் இஸ்ராயேல் பேரரசாக உருவெடுத்து, அதன் விளைவாக சர்வதேச உறவுகளும் வாணிபமும் தொடங்கின. இந்நிலையில், ஐம்பதுநாள் காலப்பிரிவு ஆண்டுக் கணிப்பு போதிய பயனை அளிக்கவில்லை. எல்லா யூத இனத்தவர்களுக்குப் பொதுவான மட்டுமல்ல, அயலாரோடும் பொதுவான ஆண்டுக்குறிப்பேடு, அதாவது சர்வதேச ஆண்டுக் குறிப்பேடு தேவைப்பட்டது. கி.மு. 10-ஆம் நூற்றாண்

டைப் போல் தீரியர்கள் குடியேறுவதிலும், வாணிபத்திலும் முதன்மைபெற்று விளங்கினர். அவர்களிடம் ஒரு சர்வதேச ஆண்டுக் குறிப்பேடு வழக்கில் இருந்தது. இது சூரியனை அடிப்படையாகக் கொண்டது. இதைச் சாலமோன் தனது தீரிய கூட்டாளிகளிடமிருந்து கடன்வாங்கி, இஸ்ராயேலர்களுக்கு அதிகாரப் பூர்வமானதாக்கினார். இலையுதிர் காலத்தில் இரவும் பகலும் சமமான நாளில் புத்தாண்டு நாளைக் குறித்தார் சாலமோன். இதோடு ஆண்டுகாலத்தைத் துல்லியமாகக் கணிக்க முடிந்தது. சூரியனை அடிப்படையாகக் கொண்ட இந்த ஆண்டில் வழக்கமாக 365 நாட்கள் இருந்தன. அவசியம் ஏற்படும்போது லீப் ஆண்டு கடைப்பிடிக்கப்பட்டது. இந்த ஆண்டுக் கணிப்பு முப்பது நாட்களைக் கொண்ட பன்னிரண்டு மாதங்களையும் கொண்டது. ஆண்டு முடிவில் 5 நாட்கள் அல்லது லீப் ஆண்டில் 6 நாட்களும் சேர்க்கப்பட்டன. தொடக்கத்தில் மாதங்கள் தீரியப் பெயர்களாலேயே அழைக்கப்பட்டன. அவற்றில் மூன்று பெயர்கள் விவிலியத்தில் காணப்படுகின்றன: சீவ் (1 அர 6:1.37), ஏத்தானிம் (8:2), பூல் (6:38). ஒருவேளை அபீபு (யாத் 13:4; 33:15; 34:18; உப 16:1) என்ற பெயரும் இதில் சேர்ந்ததாக இருக்கலாம். பிற்காலத்தில் அசீரிய காலாச்சாரத்தால் பாதிக்கப்பட்டு, மாதங்கள் எண்களால் குறிக்கப்பட்டன. ஆண்டு, வசந்தகால பகல்-இரவுச் சம நாளிலிருந்து கணிக்கப்பட்டது.

சூரியனை அடிப்படையாகக் கொண்ட இந்த ஆண்டுக் குறிப்பேடு, ஆலயம் இருந்த மட்டும், யூதாவில் அதிகாரப்பூர்வமானதாகக் கடைப்பிடிக்கப்பட்டது. ஆனால் இது பழைய ஆண்டுக் குறிப்பேட்டை முழுவதும் அகற்றிவிடவில்லை. விவசாயிகளும் இடையர்களும் பழையதையே போற்றிக் கடைப்பிடித்ததாகத் தெரிகிறது. கி.மு. 586-இல் பாபிலோனியர் யூதாவை வென்று அழித்தபோது, நாட்டில் எஞ்சியிருந்தோரிடையே விவசாயம் முக்கியத்துவம் பெற்றது (2 அர 25:12). அதன் விளைவாக பழைய ஆண்டுக் குறிப்பேடு முதன்மைபெற்றது. ஆனால் கி.மு. 516-இல் இரண்டாவது ஆலயம் அர்ப்பணிக்கப்பட்டபோது, சூரியனை அடிப்படையாகக் கொண்டு ஆண்டுக் குறிப்பேடு, பாலஸ்தீனத்திலிருந்த யூதர்களிடையே கி.மு. 485-இல் 2வது ஆலயம் அழிக்கப்படும்வரை, அதிகாரப்பூர்வமானதாக இருந்தது. இக்காலத்திலும், பழைய ஆண்டுக் குறிப்பேடு கிராமப்புறங்களில் சிறப்புப் பெற்று விளங்கியது. இரண்டாவது ஆலயம் அழிக்கப்பட்டபின், இதுவே பாலஸ்தீன யூத மக்களிடையே பொதுவாகப் பயன்பட்டது. ஆனால் இதில், சூரியனை அடிப்படையாகக் கொண்ட காலக்கணிப்பிலிருந்து சில மாற்றங்கள் புகுத்தப்பட்டன. அவற்றில் ஒன்று ஆண்டை மாதங்களாகக் கணிப்பதாகும். இந்த மாற்றியமைக்கப்பட்ட ஆண்டில் 52 வாரங்கள் அல்லது 364 நாட்கள் அடங்கும். மேலும் மூன்றாவது, 6-வது, 9-வது, 12-வது மாத முடிவில் ஒருநாள் சேர்க்கப்பட்டது. இத்தகைய ஆண்டுக் குறிப்பேடு பெரும்பாலும் கிராம மக்களைக் கொண்ட பல யூதப்பிரிவுகளாலும், காலப்போக்கில் கி.மு. 5ஆம் நூற்றாண்டிலிருந்து, தங்கள் உள்நாட்டுக் காரியங்களிலும் சமய வழக்கிலும் பயன்படுத்தப்பட்டது. இந்த ஆண்டுக் குறிப்பேடு, யூபிலிநூல், ஏனோக்நூல், கும்ரான் ஏடுகள் ஆகியவற்றிலும் ஓரளவு புதிய ஏற்பாட்டிலும் இடம் பெற்றுள்ளது.

கி.மு. 450-ஐ ஒட்டி சந்திரனை அடிப்படையாகக் கொண்ட முழுவதும் புதியதோர் ஆண்டுக் குறிப்பேடு புகுத்தப்பட்டது. ஆனால் இதுபற்றி, விவிலியக் காலத்தைச் சேர்ந்த செய்திகள் வெகுசிலவே கிடைத்துள்ளன. குருக்கள் சட்டம் பற்றிய செய்திகளிலிருந்து இதுபற்றி சிறிது அறிகிறோம். இதன்படி சந்திரனை அடிப்படையாகக் கொண்ட இந்த ஆண்டுக்குறிப்பேட்டில் 354 நாட்கள் உண்டு; மாறிமாறி 30 அல்லது 29 நாட்கள் கொண்ட 13-வது மாதம், சந்திரன், சூரியன் அடிப்படையில் தேவைப்பட்டபோது, இடைமாதமாகச் சேர்க்கப்பட்டது.

மூன்றாவது ஆலயம் இருந்தமட்டும், இம்முறைக் கணிப்பு குருக்களால் ஒழுங்கு செய்

யப்பட்டது. இதில் எண்ணிக்கையால் மாதங்களைக் குறிக்கும் பழக்கம் ஒரு காலத்திற்கு நீடித்தது. காலப்போக்கில் கி.மு. 4-ஆம் நூற்றாண்டிலிருந்து இந்த ஆண்டுக்குறிப்பேட்டில் மாதங்கள் பாபிலோனியப் பெயர்களால் குறிக்கப்பட்டன. ஒருவேளை இந்தக் காலத்தில்தான். சூரிய உதயத்திலிருந்து நாளைக் கணிக்கும் பழக்கம் கைவிடப்பட்டு, சூரிய மறைவிலிருந்து நாளைக் கணிக்கும் பழக்கம் வழக்கில் வந்தது. இந்த மாற்றங்களோடு, பாஸ்குவிழா, கூடார விழா ஆகிய இரு ஏழுநாட்கள் விழாக்கள் முதல், 7வது மாதங்களில் பௌர்ணமி நாட்களின் சூரிய மறைவோடு தொடங்கின. சந்திரனை அடிப்படையாகக் கொண்ட இத்தகைய ஆண்டுக் குறிப்பேடு விவிலியக் கால முடிவுரை யூதர்களால் கடைப்பிடிக்கப்பட்டது.

கி.பி. 70-ல் யூதநாடு வீழ்ச்சி, ஏரோது கட்டிய ஆலயம் உரோமையரால் அழிக்கப்பட்டது ஆகியவற்றுக்குப்பின் குருக்களின் அதிகாரம் விரைவில் மறைந்து போயிற்று. காலக்கணிப்பு ராபிகளின் பொறுப்பில் வந்தது. இவர்களால் அடுத்த மூன்று நூற்றாண்டுகளில், சந்திரனை அடிப்படையாகக் கொண்ட இந்த ஆண்டுக் குறிப்பேடு மேலும் வளர்ச்சியடைந்தது. இவர்கள் அம்மாவாசை நாளைத் துல்லியமாகக் கணித்தனர். இந்த ஆண்டுக் குறிப்பேட்டை, சூரியனை அடிப்படையாகக் கொண்ட காலக் கணிப்போடு ஒத்துப்போகச் செய்தனர். இத்தகைய ஆண்டுக் குறிப்பேடு இன்றுவரை யூத சமயக் காலக்கணிப்பில் பயன்படுகிறது.

**ஆண்டுக் குறிப்பேடு** (CALENDAR)

எல்லா பழங்கால மக்களைப்போல் எபிரேயரும் ஆண்டைக் கணிக்க ஒரு அமைப்பைப் பயன்படுத்தியுள்ளனர். இதில் இக்கால அறிவியல் துல்லியத்தைக் காண முடியாது. இஸ்ராயேலர் பயன்படுத்திய ஆண்டுக் குறிப்பேடுபற்றி முழுமையான விளக்கமும் அளிக்க முடியாது. ஆயினும் விவிலியத்திலும் பிற பழங்கால மேற்காசிய ஏடுகளிலிருந்தும் கிடைக்கும் செய்திகளைக் கொண்டு ஓரளவு போதிய தெளிவோடு இந்த ஆண்டுக் குறிப்பேட்டை பற்றிக் கூறலாம். ஆனால் ஒரு குறிப்பிட்ட காலத்தில் எந்த ஆண்டுக் குறிப்பேட்டு முறையைப் பயன்படுத்தினார்கள் என்று உறுதியாகக் கூறுவது கடினம். அதோடு, விவிலியக் காலத்தில் ஆண்டுக் கணிப்பு முறை மாறிக்கொண்டே இருந்தது என்பதை மனதில் கொண்டிருப்பது நன்று.

இஸ்ராயேலிலும், பழங்கால மேற்காசியாவிலும் காலக்கணிப்பு, சூரியன், சந்திரன், விண்மீன்கள் போன்ற வான்கோள்களின் இயக்கங்களை அடிப்படையாகக் கொண்டதாகும். அடுத்து இந்தக் காலக் கணிப்பை, விவசாயப் பருவங்கள், வழிபாட்டு விழாக்கள், வரலாற்றில் யாவேயின் செயல்கள் போன்றவையும் பாதித்தன. இஸ்ராயேலின் இறையாட்சி முறையில் அரசியல் கருத்துக்கள் அவ்வளவு முக்கியத்துவம் பெறவில்லை. காலக்கணிப்பு அடிப்படைஅளவு ஆண்டு ஆகும். ஆனால் அது அளக்கப்பட்ட முறைகள் வேறுபட்டன.

ஆண்டு, சூரியன் சந்திரன் ஆகியவற்றின் இயக்கங்களைக் கொண்டு அளக்கப்பட்டது. சூரிய ஆண்டின் தொடக்கம் ஆண்டுதோரும் வரும் இரண்டு பகலிராச் சம நாட்களில் ஒன்றாகும். இது வசந்த காலத்தையோ, இலையுதிர் காலத்தையோ சார்ந்ததாக இருக்கலாம். சூரிய ஆண்டு சாதாரணமாக 364 அல்லது 365 நாட்களையும், முப்பது நாட்களைக் கொண்ட பன்னிரண்டு மாதங்களையும் கொண்டது. ஒவ்வொரு காலாண்டு முடிவிலும், ஆண்டின் தொடக்கத்திலும் ஒரு நாள் சேர்க்கப்பட்டது. இத்தகைய காலக்கணிப்பு யூபிலிநூல், 1 ஏனோக் நூலிலும், கும்ரான் இலக்கியங்களிலும் காணப்படுகிறது.

சந்திர ஆண்டுக்கணிப்பின் அடிப்படை அளவு மாதமாகும். மாதம், அம்மாவாசைக்குப்பின் பிறை காணப்பட்ட மாலையோடு தொடங்கியது. அம்மாவாசை புனிதமான நாளாகக் கருதப்பட்டது (எண் 10:10; 28:11; சங் 81:3; ஏச 66:23; ஓசே 2:11; ஆமோ

8:5). விழாக்கள் மாத மத்திய பௌர்ணமி யன்று கொண்டாடப்பட்டன (சங் 81:3). சந்திர ஆண்டில் 29.5 நாட்கள் கொண்ட பன்னிரண்டு மாதங்கள் இருந்தன. இதன்படி ஆண்டு 354 நாட்களைக் கொண்டிருந்தது. அதாவது சூரிய ஆண்டிலிருந்து 11 நாட்க ளைக் குறைவாகக் கொண்டிருந்தது. இரண்டு ஆண்டுக் கணிப்பையும் ஒத்துப் போகச் செய்ய அவ்வப்போது 13ஆம் மாதம் இடையில் செருகப்பட்டது. இதுவும் காலத் திற்கேற்ப மாறுபட்டது. பிற்கால யூதத்துவத் தில் ஒவ்வொரு 19 ஆண்டுகளில் ஏழு ஆண்டு களில் 13ஆம் மாதமான இரண்டாம் அதார் இடைச் செருகலாக அமைந்தது.

இஸ்ராயேலின் ஆண்டுக்கணிப்பில், சூரிய, சந்திரக் கூறுகளும் இடம் பெற்றன. இதற்குச் சான்றுகள்: யாத் 23:14-17; 34:18-26. விழாக்கள் சூரியக் கணிப்பைச் சேர்ந்தவை. அவை பகலிராச் சமநாட்களில் கொண்டா டப்பட்டன. ஆனால் மாதங்கள் சந்திரக் கணிப்பைச் சேர்ந்தன; புதிய ஆண்டு, வசந்த காலத்திய பகலிராச் சமநாளை ஒட்டிய பௌர்ணமியன்று தொடங்கியது. ஆகவே இஸ்ராயேலின் ஆண்டுக் குறிப்பேட்டை சூரிய-சந்திரக் காலக் கணிப்பென்று கூற லாம். இது, காலப்போக்கில் வேறுபட்டா லும், இஸ்ராயேல் வரலாறு முழுவதும் பயன்பட்டது.

மாதங்கள், சந்திரனின் இயக்கத்தின் அடிப் படையில், கணிக்கப்பட்டன. இஸ்ராயேலர் சந்திரனைப் பற்றி முழுதும் அறிந்திருக்க வில்லையென்றாலும் 29.5 நாட்களில் முழுநி லவு வரும் என்று அறிந்திருந்தனர். இடைச் செருகலாக இரண்டாம் ஆதார் என்ற 13ஆம் மாதம் எவ்வாறு கணிக்கப்பட்டது என்ப தற்கு எந்தச் சான்றும் காணப்படவில்லை. தொடக்கத்தில் மாதங்களைக் குறிக்க எண் களே பயன்பட்டதாகத் தெரிகிறது. பிறகு கானானியப் பெயர்களை இஸ்ராயேலர் ஏற் றுக் கொண்டனர். அப்பெயர்களில் நான்கு விவிலியத்தில் இடம் பெறுகின்றன (யாத் 13:4; 1 அர 6:1.37; 8:2). நாடுகடத்தப்பட்டுத் திரும்பிய காலத்தில் பாபிலோனியப் பெயர் கள் ஏற்றுக்கொள்ளப்பட்டன (நெக 1:1; 6:15; எஸ்த 2:16; 3:7; 8:9; எச 1:7). ஆயினும் மாதங்களைக் குறிக்கும் எண்க ளைப் பயன்படுத்தும் முறை தொடர்ந்து இருந்து வந்தது (1 அர 6:1; எஸ்த 3:7; யாத். 12:2; 13:4; ஆதி 7:11; யாத் 19:1; உப 1:3; எஸ் 10:9). மூன்று கணிப்புகளும், வசந்தகா லத்தில் தொடங்கிய ஆண்டையும், 12 மாத அமைப்பையும் கொண்டிருந்தன.

விவிலியத்தில் காணப்படும் மாதங்களின் பெயர்கள்

| இஸ்ராயேல் (எண்கள்) | கானானியர் | பாபிலோனியர் | இக்காலம் | தமிழ் |
|---|---|---|---|---|
| 1 | அபீபு | நீசான் | மார்ச்-ஏப்ரல் | பங்குனி |
| 2 | சீவ் | இயார் | ஏப்ரல்-மே | சித்திரை |
| 3 | — | சிவான் | மே-ஜூன் | வைகாசி |
| 4 | — | தம்முசு | ஜூன்-ஜூலை | ஆனி |
| 5 | — | அபு | ஜூலை-ஆகஸ்ட் | ஆடி |
| 6 | — | எலூல் | ஆகஸ்ட்-செப்டம்பர் | ஆவணி |
| 7 | ஏத்தானிம் | திசுரி | செப்டம்பர்-அக்டோபர் | புரட்டாசி |
| 8 | பூல் | மர்கேஸ்வன் | அக்டோபர்-நவம்பர் | ஐப்பசி |
| 9 | — | கிஸ்லூ | நவம்பர்-டிசம்பர் | கார்த்திகை |
| 10 | — | தெபேத்து | டிசம்பர்-ஜனவரி | மார்கழி |
| 11 | — | செபாத்து | ஜனவரி-பெப்ரவரி | தை |
| 12 | — | அதார் | பெப்ரவரி-மார்ச் | மாசி |

வாரங்கள் (யாத் 3:22; லேவி 12:5), ஓய்வு நாட்கள் (லேவி 23:3.15; எண் 28:9), நாட்கள் (எண் 28:3.16-18) ஆகியவை மற்ற கால அளவைகளாகும். விவசாயப் பருவங்கள் (யாத் 34:21; எண் 13:20; ரூத் 1:22), வரலாற்று நிகழ்ச்சிகள் (யாத் 12:40-42; 1 அர 6:1; எச 33:21), வழிபாட்டு விழாக்கள் ஆகியவையும் காலம் கணிக்கப்பயன்பட்டன. விழாக்கள் விவசாய வட்டத்தோடும் பகலிராச் சமநாட்களோடும் தொடர்புபடுத்தப்பட்டன. மூன்று முக்கிய விழாக்களான பாஸ்கு புளியாத அப்ப விழா (யாத் 23:15; லேவி 23:5-6) முதற்கனிகளின் அல்லது வாரங்களின் விழா (யாத் 23:16; லேவி 23:15-22) ஒன்று சேர்த்தலின் அல்லது கூடாரங்களின் விழா (யாத் 23:16; லேவி 23:33-36) ஆகியவை முறையே வசந்தகாலத்திலும், கோடைக்காலத்தின் தொடக்கத்திலும், இலையுதிர் காலத்திலும் நடைபெற்றன.

ஆண்டு வசந்த காலத்தில், நீசான் மாதத்தோடு தொடங்கியது என்பதற்கு பலத்த விவிலியச் சான்றுகள் உண்டு. இது மோசேயோடு தொடர்புடையது. பாபிலோனியக் காலக்கணிப்பும், எபிரேயக் காலக் கணிப்பும் வசந்த காலத்தில் தொடங்கின. ஆயினும் ஆண்டு இறையுதிர் காலத்தில் திசுரி மாதத்தோடு தொடங்கியது என்ற வாசகங்களும் உள்ளன (யாத் 34:22; லேவி 25:9; நெக 1:1; 2:1). இது மெசப்பொத்தாமிய கானானிய கலாச்சாரங்களின் பாதிப்பாக இருக்கலாம். மேலும் இது, விவசாய, பருவ காலக் கணிப்போடு தொடர்புடையது. அதிகாரப்பூர்வமானதன்று. நமது கால கல்வி ஆண்டு, நிதி ஆண்டு போன்றது. மேலும், பழயஏற்பாட்டில் புத்தாண்டு கொண்டாட்டம் பற்றி எந்த உறுதியான குறிப்பும் இல்லை.

புதிய ஏற்பாட்டில் சிலசமயம் ஆட்சி செய்யும் உரோமை அல்லது யூத அதிகாரிகள் (லூக் 2:1-2; 3:1-2) அல்லது பொதுவாக, யூதவழிபாட்டுக் கணிப்பு (யோவா 2:13; 7:2; அ.ப. 2:1; 1 கொரி 16:8) ஆகியவற்றோடு தொடர்புபடுத்திக் காலம் கணிக்கப்படுகிறது. கி.பி. 70க்கு முன் யூதர்கள் சதுசேயரின் கணிப்பைப் பின்பற்றினர். ஏனெனில் அப்போது இவர்கள்தான் ஆலயப் பணியை முறைப்படுத்தினர். அதற்குப்பின் பரிசேயர் கணிப்பு வழக்கில் வந்தது. யூதத் தலைவர்கள் பயன்படுத்திய ஆண்டுக்குறிப்பேடும், இயேசுவும் அவரது சீடர்களும் பயன்படுத்திய ஆண்டுக்குறிப்பேடும் வெவ்வேறானது என்பது யோவா. 18:20-இலிருந்து தெளிவாகுகிறது. ஏனெனில் பாஸ்குவிழா இரு குழுவினராலும் வெவ்வேறு நாட்களில் கொண்டாடப்படுகிறது. ஒருவேளை இயேசு யூபிலி நூலிலும், கும்ரான் குழுவிலும் பயன்பட்ட காலக் கணிப்பைப் பின்பற்றியிருக்கலாம்.

**ஆதா** (ADAH - அணிகலன், ஆபரணம்)

1. இலாமேக்கின் இரண்டு மனைவியருள் முதல் மனைவியின் பெயரே ஆதா. இவள் யாபாலுக்கும், யூபாலுக்கும் தாய் (ஆதி 4:19-21.23).

2. ஏசாவின் மனைவியருள் ஒருத்தி. இத்தியனான எலோனின் மகளும் எலிப்பாசின் தாயும் ஆவாள் (ஆதி 36:2.4.10.12.16). ஏசா, ஆதா இவர்களது திருமணம், கானானிய பண்பாடு ஏதோமில் கலந்ததைக் குறிக்கிறது.

**ஆதாது** (ATAD - முட்புதர்)

யாக்கோபு அடக்கம் செய்யப்பட்டதை விவரிக்கும் பகுதியில் சொல்லப்பட்டுள்ள ஒரு கானானிய ஊர். மரண ஊர்வலம், கெபிரோனுக்கு செல்லும் வழியில் ஆதாத்திலுள்ள தானிய சாகுபடி நிலத்தில் நின்றது. இங்கு எகிப்தியர்கள் இறந்த குலமுதியவர்க்கு 7 நாள் துக்கம் அனுசரித்தனர். ஆகவே இவ்விடம் ஆபேல்-மிசுராயிம் என்ற பெயரையும் பெற்றது. இதன் பொருள் ''எகிப்தியர்களின் புலம்பல்'' என்தாகும் (ஆதி 50:10-14). இது ஆபேல்மிசுராயிம் என்ற பெயரின் ஒரு பொதுப்பணி விளக்கமாக இருக்கலாம்.

ஆதாது யோர்தானுக்குக் கிழக்கேயுள்ளது என்பது சிறிது குழப்பத்தை உண்டாக்குகி

றது. ஏனெனில் எகிப்திலிருந்து கெபிரோனுக்குச் செல்லும் நேர்வழியானது முழுவதுமாக யோர்தானுக்கு மேற்கேயிருக்கும். மரண ஊர்வலமானது சீனாய் தீபகற்பம் வழியாக பழைய வணிகப் பாதையில் சென்றது என்பது ஒருவகையான விளக்கமாக இருக்கலாம். யோர்தானுக்குக் கிழக்கே இருந்து கொண்டு ''யோர்தானுக்கு அப்பால்'' என்று சொல்லும்பொழுது அது ''யோர்தானுக்கு மேற்கே'' என்றாகிவிடுகிறது.

மேதேபாவிலுள்ள கி.பி. 6-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பல வண்ண வரைபடம் எரிகோவுக்கும், சாக்கடலுக்குமிடையில் பேத்-அக்லாவுக்கு (விவிலிய பேத்து-கொகிலா) அருகில் ஆலோன் ஆதாது என்ற ஓர் இடத்தைச் சுட்டிக் காட்டுகிறது.

**ஆதாமின் நூல்கள்** (BOOKS OF ADAM)

இது, ஆதாம் ஏவாள் கதையை விவரிக்கும் திருமுறை சேராத புறநூல்களுக்குப் பொதுவான பெயர். இவற்றுள் மிக முக்கியமானவை ''மேசேயின் காட்சிகள்'' என அதன் முதல் பதிப்பாசிரியரால் தவறாகப் பெயரிடப்பட்ட கிரேக்க நூலும், ''ஆதாம் ஏவாளின் வாழ்க்கை'' என்ற இலத்தீன் நூலும் ஆகும். இரண்டும் நெருங்கிய தொடர்புடையன. ஆனால் ஒரே நூல் அல்ல. முதலில் ஒரே ஒரு எபிரேய அல்லது அரமேயிக் நூல் இருந்தது, அதிலிருந்து இவை இரண்டும் எழுதப்பட்டன, என்ற கருத்தை ஏற்பதோ, மறுப்பதோ மிகக்கடினம்.

மோசேயின் காட்சிகள் என்ற நூல் இன்ப வனத்திலிருந்து விரட்டப்படுவதாகத் தொடங்குகிறது. ஆபேலின் கொலைபற்றி ஏவாள் கனவு காண்கிறாள். சேத்தின் பிறப்பு வர்ணிக்கப்பட்டபின், ஆதாமின் வாழ்க்கை பற்றிய மற்ற காரியங்களை விட்டுவிட்டு ஆதாமின் இறப்பு விவரிக்கப்படுகிறது. வாழ்வில் முதல் முறையாக ஆதாம் நோயுற்று வேதனை அனுபவிக்கிறார். அதைக்கண்டு அவரது பிள்ளைகள் வியப்புறுகின்றனர். சேத்துவும், ஏவாளும் ஆதாமின் துன்பத்தைப் போக்க, வாழ்வின் மரத்திலிருந்து எண்ணெய் பெற்று வரலாமென்று இன்ப வனத்திற்கு ஓடி வருகின்றனர். வழியில் சேத் ஒரு விலங்கால் தாக்கப்படுகிறார். அவ்விலங்கு மனித வீழ்ச்சிக்குப் பின் ''கடவுளின் சாயலான'' மனிதனை மதிப்பதில்லை. ஆதாம் குணமடைய முடியாது. இறந்தே ஆக வேண்டுமென்பதை மிக்கேல் விளக்குகிறார். திரும்பி வந்து ஆதாம் இறந்து கொண்டிருப்பதைக் காண்கின்றனர். ஆதாமின் வேண்டுகோளுக்கிணங்க ஏவாள், சாத்தான் பாம்பு வடிவில் வந்து தங்களை ஏமாற்றியதையும் அதன் சோதனைக்கு உட்பட்டதையும் கூறுகிறாள். ஆதாம் இறக்கிறார். அவரது ஆன்மா தூய்மையாக்கப்பட்டபின் மூன்றாம் வானத்திற்கு எடுத்துச் செல்லப்படுகிறது என்பதை ஏவாளும் சேத்தும் காண்கின்றனர். வான தூதர்கள் ஆதாம், ஆபேல் உடல்களுக்குள் நுழைவதை சேத் மட்டும் பார்க்கிறார். ஏனெனில் அவ்வுடல்களை ஏற்றுக் கொள்ள பூமி மறுத்துவிட்டது. ஒரு வாரம் கழித்து ஏவாள் இறக்கிறாள். அவளை எவ்வாறு அடக்கம் செய்ய வேண்டுமென்று மிக்கேல் கற்றுக் கொடுக்கிறார். ஆறு நாட்களுக்கு மேல் துக்கம் அனுபவிக்கக் கூடாதென்றும், ஏழாம் நாள் ஓய்வு நாளாதலின் மகிழ்ச்சியாக இருக்க வேண்டும் என்றும் கூறுகிறார்:

இலத்தீன் படிவம், ஏவாள் தங்களது வீழ்ச்சி பற்றிக்கூறுவது பற்றிய நிகழ்ச்சியுரையைத் தவிர மற்றவற்றில் மோசேயின் காட்சிகளைவிடப் பொதுவாகச் சுருக்கமாக உள்ளது. ஆயினும் அதில் இல்லாத பின்வரும் பல நிகழ்ச்சிகளைக் கொண்டுள்ளது.

இன்ப வானத்திலிருந்து விரட்டப்பட்டபோது ஆதாமும் ஏவாளும் மனமுடைகின்றனர். துன்பங்களுக்கெல்லாம் தானே காரணமென்று கூறி தன்னைக் கொன்று விடும்படி ஏவாள் கேட்கிறாள். தங்கள் பாவங்களுக்குப் பரிகாரமாக பல நாட்கள் தண்ணீரிலேயே நிற்கலாமென்கிறார் ஆதாம். அவர் யோர்தான் நதியிலும், அவள் திகிரிசு நதியிலும் நிற்கின்றனர். பதினெட்டு நாட்களுக்குப்பின் சாத்தான், ஒளி மயமான வானதூதர் வடிவில்

ஏவாளுக்குத் தோன்றி, அவளுடைய பாவப் பரிகாரங்கள் ஏற்றுக் கொள்ளப்பட்டதால் நீரை விட்டு வெளிவரலாம் என்று கூறியது. ஆனால் ஆதாம் சாத்தானை அடையாளம் கண்டு கொண்டார். உடனே சாத்தான் தான் அவர்களை வெறுத்ததற்கான காரணத்தைக் கூறியது. ஆதாம் ''கடவுளின் சாயலாகப்'' படைக்கப்பட்டபோது, அவரை வணங்கும் படி வான தூதர்கள் கேட்டுக் கொள்ளப்பட்டனர். சாத்தான் தனது கௌரவத்தால், தன்னைவிடத் தாழ்ந்த படைப்புக்குத் தலை வணங்க மறுத்தான். எனவே இந்நிகழ்ச்சியின் விளைவாக அவன் வீழ்ச்சியடைந்து பாதாளத்திற்குத் தள்ளப் பட்டான் (முகமது பேயின் வீழ்ச்சி பற்றிய இந்த விவரிப்பை ஏற்றுக் கொள்கிறார்; கும்ரான் *7:1* தொ). மேலும் இலத்தீன் வடிவம் காயினின் பிறப்பையும், தான் கண்ட காட்சியை ஆதாம் சேத்திடம் கூறுவதையும் விவரிக்கின்றது.

இந்நூல்களில், ஆலயம் இருப்பது மறைமுகமாக ஏற்றுக் கொள்ளப் படுகிறது. ஒரு வேளை கிறிஸ்தவ சகாப்தத்தின் தொடக்கத்தில் எழுதப்பட்டிருக்கலாம். கடவுளுக்கு எதிராகப் புரட்சி செய்து வீழ்ச்சியடைந்த வானதூதரான சாத்தான் பற்றி விரிவடைந்த கருத்து இக்காலத்தோடு ஒத்துப்போகிறது. ஆயினும் இன்ப வனத்துப் பாம்போடு சாத்தான் ஒன்றாக்கப்படவில்லை. இந்நூல் இறுதித்தீர்வு பற்றியும், உயிர்ப்புப் பற்றியும் பலமுறை கூறுகின்றன. ஆயினும் மெசியா பற்றி எதுவும் இல்லை. ஒரு சில இடங்களில் காணப்படும் சில கிரேக்கச் சுவடுகள் தெரிகின்றன. அவை மொழி பெயர்ப்பாளர்களால் ஏற்பட்டதாகும். மற்றபடி இது பாலஸ்தீன, அக்கதா இலக்கியப் பாரம்பரியங்களோடு அதிகம் ஒத்துப் போகிறது.

தற்போது உள்ள நூல்கள் சில கிறிஸ்தவ பிற்சேர்க்கைகளைக் கொண்டுள்ளன. சில இடங்களில் மொழி பெயர்ப்பாளர்கள் கிறிஸ்தவ எண்ணங்களை யூதக் கருத்துக்கள் மீது திணித்துள்ளனர். இன்னும் பல ஆதாமின் நூற்கள் உள்ளன. அவை இந்நூற்களை மூலமாகக் கொண்டவை. இவற்றில் பாரம்பரியத்தைச் சேர்ந்த அல்லது அறிவியல் வாதத்தைச் சேர்ந்த கிறிஸ்தவக் கொள்கைகள் இன்னும் அதிகமாகக் காணப்படுகின்றன. ஆயினும் யூத நூல்களோடு உள்ள தொடர்பு தெளிவாகத் தெரிகின்றது. சீரியா, எத்தியோப்பியா, அரபியா, அரமேய கிறிஸ்தவர்கள் பழைய கதையை மீண்டும் முழுவதும் திருத்தி எழுதியுள்ளனர். எடுத்து இயம்பியுள்ளனர். இவை கி.பி. நான்காம் நூற்றாண்டைச் சார்ந்தவை. இவற்றில், கற்பைப் பாராட்டியும், திருமண வாழ்வை வெறுத்தும் கருத்துக்கள் காணப்படுகின்றன.

**ஆதாம்** (ADAM - மனுக்குலம்) - ஆள்

I. ஆதாமும் ஆதாமின் மக்களும்

1. சொல்லின் பொருள்:- ஆதாம் என்ற சொல் பரவலாகப் பயன்படுத்தப்படுகிறது. இச்சொல்லுக்குப் பலபொருள் கொடுக்கலாம். இது விவிலிய மொழிபெயர்ப்புகளில் மறைமுகமாகக் குறிப்பிடுவதற்கு மாறாக உள்ளது. ஒரு யூதன் இச்சொல்லைப் பயன்படுத்தும்போது முதல் மனிதனை மட்டும் முதன் முதலாகக் கருத்தில் கொள்வதில்லை. படைப்பு நிகழ்ச்சியுரையில் இச்சொல் இரு பொருள் மயக்கமுடையது. இந்நிகழ்ச்சியுரைக்குப் புறம்பே, ஆதாம் என்ற சொல், நான்கு இடங்களில்தான் முதல் மனிதனைத் தெளிவாகக் குறிக்கின்றது (ஆதி *4:1.25; 5:1-3* தொ; தோபி *8:6*). சாதாரணமாக ஆதாம் என்ற சொல் சூழ்நிலைக்கேற்றாற்போல் மனிதனைப் பொதுவாகவோ (யோபு *14:1*) ஒரு இனத்தையோ (எச *6:12*) பலருள் யாரேனும் ஒருவரையோ (திருவுரை *2:12*) பலரில் ஒரு ஆளையோ (*1* அர *8:46*; சங் *105:14*), குறிப்பிட்ட ஒருவரையோ (செக் *13:5*) ஒரு மனித இனத்தையோ குறிக்கலாம். (ஓசே *1:4*; சங் *94:11*). இவற்றில் எல்லாம் குழுப் பொருளே சிறப்புப்பெறுகிறது.

இதுவே ''ஆதாமின் மக்கள்'' என்ற சொற்றொடருக்கும் பொருந்தும். இது ஆதாம் என்ற தனிப்பட்ட ஒருவரின் வழித்தோன்றல்களைக் கருத்தில் கொண்டிருக்கவில்லை. இது மனிதன் என்ற சொல்லுக்கு இணையானது (யோபு *25:6*; சங் *8:5*). ஓர் ஆளையோ

(எரே 49:18.13; எ.கா. எசக்கியேல்), அல்லது குழுவையோ சுட்டுகிறது (பழ 8:31; சங் 45:3; 1 அர 8:39.42). இறைவனோடு ஒப்பிட்டுப் பயன்படுத்தப்படும்போது, இச்சொல், ''ஊன்'' என்கிற சொல்லைப் போன்று, மனிதத் தன்மையின் அழிந்து போகும் பலவீனமான நிலையைக் குறிக்கும். ''வானுலகிலிருந்து ஆண்டவர் பார்க்கிறார். ஆதாமின் மக்கள் எல்லாரையும் பார்க்கிறார்'' (சங் 33:13; ஆதி 11:5; சங் 36:8; எரே 32:19). ''ஆதாமின் மக்கள்'' என்ற சொற்றொடர், மனிதர்களை அவர்களுடைய இவ்வுலகு சார்ந்த நிலையில் குறிக்கின்றது. இது, பூமியைக் குறிக்கும் ''ஆதாமா'' என்ற சொல்லிலிருந்து ஆதாம் என்ற சொல் வந்தது என்ற பொதுவான சொல்லிலக்கணத்திற்கு ஒத்ததாயிருக்கிறது. ஆதாம் பூமியைச் சார்ந்தவன். பூமியின் களிமண்ணிலிருந்து உருவாக்கப் பட்டவன்.

இந்தச் சொற்பொருள் இறையியல் சிறப்புப் பொருளைக் கொண்டுள்ளது. நாம் முதல் ஆதாம் என்று குறிப்பிடும்பொழுது பலரில் ஒருவரை மட்டும் குறிப்பிடுவதாக நாம் கருத முடியாது. இதை ''நமது உருவிலும் நம் சாயலிலும் மனிதனைப் படைப்போமாக. அவர்கள் ஆளுவார்கள்'' (ஆதி 1:26) என்ற வாசகத்தில் ஒருமையிலிருந்து பன்மையாக இறைவன் மாற்றிக் கூறுவதிலிருந்து காணலாம். ஆகவே ஆதியாகத் தொடக்க அதிகாரங்களில் ஆசிரியரது நோக்கம் என்ன?

2. படைப்பு நிகழ்ச்சியும் ஆதாமின் பாவமும்:- ஆதியாகமத்தின் முதல் மூன்று அதிகாரங்களும் ஐந்நூல் முழுவதற்குமே முன்னுரையாக அமைகிறது எனலாம். ஆனால் அவை ஒரே மூலத்திலிருந்து அமையவில்லை. குருக்கள் பாரம்பரியத்திலும் (ஆதி 1); யாவே பாரம் பரியத்திலும் (ஆதி 2-3) இருந்து வந்த இரு ஆசிரியர்களால் இரு காலங்களில் எழுதப்பட்டுள்ளன. ஆனால் இவர்களைப் பற்றி கிறிஸ்துவுக்கு இரண்டு நூற்றாண்டுகளுக்கு முன் உள்ள இலக்கியத்தில் எவ்விதத் தடயமும் இல்லாதது நமக்கு வியப்பளிக்கலாம். கி.மு.2 ஆம் நூற்றாண்டில்தான், மனிதரின் சாவுக்குக் காரணமாகச் சீராக்கு நூல் பெண்ணையும் (சீரா 25:24), ஞானாகமம் பேயையும் (ஞான 2:24) பழித்துக் கூறுகின்றன. இதே நிகழ்ச்சியுரைகள் 2-ஆம் நூற்றாண்டுக்கு முன்பிருந்தே சிறிது சிறிதாக வளர்ந்துள்ள ஒரு பொது அனுபவத்தைச் சுருக்கிக் கூறுகின்றன. இவற்றில் சில கூறுகளை இறைவாக்கு, ஞானாகமப் பாரம்பரியங்களில் காணலாம்.

அ. பாவம் அனைவரையும் சாரும் என்பதில் விசுவாசம்:- இது இப்பாரம்பரியங்களில், மேலும் மேலும் அழுத்திக் கூறப்படுகின்றது. இது ஒரு வகையில் ஆதாமைச் சார்ந்த நிலையாகும். இதைச் சங்கீத ஆசிரியர் நினைத்து அழுகிறார்: ''பாவ நிலையிலேயே என் அன்னை என்னைக் கருத்தரித்தாள்'' (சங் 51:7). மற்ற இடங்களில், மனிதன் வான தூதரைப் போன்ற வியத்தகு படைப்பாகவும், இன்ப வனத்தில் இறைவனால் படைக்கப்பட்டவனாகவும், அகந்தை என்னும் பாவத்தினால் வீழ்ச்சியுற்றவனாகவும் மனிதனின் பாவம் குறிப்பிடப்படுகிறது. (எச 28:13-19; ஆதி 2:10-15; 3:22 தொ).

ஆ. அதே சமயத்தில் படைத்தவரும் மீட்பருமான இறைவனில் விசுவாசம் உயிருள்ளதாக இருக்கிறது. இக்கடவுள் மனிதனை உருவாக்கும் குயவனாவார் (எரே 1:5; ஏச 45:9; ஆதி 2:7). அவனை மீளவும் மண்ணாகப் போகச் செய்பவரும் அவரேதான் (சங் 90:3; ஆதி 3:19). ''மனிதனை நீர் ஒரு பொருட்டாக நினைக்க அவன் யார்? அவனைப்பற்றி அக்கறை கொள்ள அவன் யார்? வானதூதரைவிட அவனைச் சிறிது தாழ்ந்தவனாகப் படைத்தீர்; மாண்பையும் பெருமையையும் அவனுக்கு முடியாகச் சூட்டினீர். உமது, படைப்புகள் அனைத்தின் மீதும் அவனுக்கு அதிகாரம் தந்தீர்: அனைத்தையும் அவனுக்குக் கீழ்ப்படுத்தினீர்'' (சங் 8:5 தொ; ஆதி 1:26 தொ; 2:19 தொ). பாவத்திற்குப் பின் அகந்தை மிக்கவர்களை அரியணையிலிருந்து வீழ்த்தி அவர்களுடைய எளிய தொடக்க நிலைக்குத் திரும்ப அனுப்பும்

(எச 28:16-19; ஆதி 3:23 தொ) புகழ்மிக்க ஆண்டவராக மட்டும் தோன்றவில்லை (எச 28:13 தொ; ஆதி 2:10-14) அவர் பொறுமை மிக்க இறைவனுமாவார். தம் குழந்தைக்கு மெதுவாகக் கற்றுக் கொடுக்கிறார் (ஓசே 11:3 தொ; எச 16; ஆதி 2:8-3:21). அதே போல் இறைவாக்கினர் பழங்கால இன்பவனத்துக்கு ஒத்த இறுதிக் காலத்தையும் அறிவித்துச் சென்றுள்ளனர் (ஓசே 2:20; எச 11:6-9). சாவு அழிக்கப்படும் (எச 25:8; தானி 12:2; ஆதி 3:15). வானுலகத் தன்மையுடைய மறைபொருள் மிக்க ஒரு மனுமகன் வெற்றி வீரராக மேகங்களின் மேல் தோன்றுவார் என்றும் அறிவித்தனர் (தானி 7:13 தொ).

3. நம் முன்னோரான ஆதாம்:- இதுவரை நாம் தந்த பாரம்பரிய விவரிப்பில், படைப்பு நிகழ்ச்சியுரையின் போதகம் பொதுவாகக் குறிப்பிடப்பட்டிருப்பதை நாம் காணலாம். மனித நிலைபற்றி எதிரொலிக்கும் முதல் முயற்சியில், யாவே பாரம்பரிய ஆசிரியர், முன்னோரில் அவரின் வழித்தோன்றல் உள்ளடங்கியுள்ளனர் என்று உறுதிகொண்டிருப்பதாகத் தெரிகிறது. இதன்விளைவாக, எப்படி மனிதன் நன்மையுள்ளவனாக இறைவனால் படைக்கப்பட்டு, பாவம் செய்தான், ஒரு நாள் அவன் மீட்கப்பட வேண்டும் என்று ஒவ்வொரு மனிதனுக்கும் அறிவிக்கிறார். குருக்கள் பாரம்பரியம், மனிதன் இறைவனின் சாயலாகப் படைக்கப்பட்டான் (ஆதி 1) என்று வெளிப்படுத்துகிறது. குல மரபுக் கொடிகளைக் கொண்டு இஸ்ரவேல் மட்டுமன்று (ஆதி 5:10) எல்லா மனிதர்களும், ஒரு குழுவாக, மனுக்குலமாக ஆகின்றனர், என்று காட்டுகிறது.

II. புதிய ஆதாம்

1. புதிய ஆதாம் பற்றிய இறையியல் நோக்கு:- எல்லோரும் ஒரே மனிதனிடமிருந்தே தோன்றியதாகப் புதிய ஏற்பாடு கூறுகிறது (அ.ப. 17:26). முதல் பெற்றோர் திருமண ஒன்றிப்பின் மூலஎடுத்துக்காட்டாவர் (மத் 19:4 தொ; 1 திமோ 2:13 தொ). இவ்வொன்றிப்பு புதிய மனுக்குலத்தில் மீண்டும் நிறுவப்படும். அதன் செய்தியின் புதுமை இயேசுக் கிறிஸ்துவைப் புதிய ஆதாமாகக் காட்டுவதில் அடங்கியுள்ளது. போலி விவிலிய நூல்கள், ஆதாமில் பாவிகள் யாவரும் ஒருங்கிணைகின்றனர் என்பதில் கவனம் செலுத்தின; சிறப்பாக, இயேசு மனுமகனாகவும், அதே சமயத்தில் உண்மையான மனிதனாகவும் தானியேலின் மகிமைமிக்க இறைவாக்கை நிறைவேற்றுபவராகவும் காட்டப் பெறுகிறார். ஒத்தமை நற்செய்திகள் இயேசுவையும் ஆதாமையும் ஓரளவு வெளிப்படையாக ஒப்பிடுகின்றன. இயேசு எப்படிக் காட்டு விலங்குகளோடு வாழ்ந்தார் என்று மாற்கு விவரிக்கிறார் (மாற் 1:13). மத்தேயு, ''இயேசுவின் தலைமுறை நூலில்'' ஆதி 5:1-ஐ நினைவூட்டுகிறார் (மத் 1:1). லூக்காவுக்கு, இப்போதுதான் சோதனைகளில் வெற்றி கொண்டவர் ''ஆதாமின் மகன், இறைவனின் மகன்'' ஆவார் (லூக் 3:38); சோதிப்பவனையே எதிர்த்த உண்மையான ஆதாம். பவுல் பாடலிலும் (பிலி 2:6-11), தன்னையே இறை நிலைக்கு உயர்த்தத் தேடிய ஆதாமுக்கும், கடவுளுக்கு இணையாய் இருக்கும் நிலையை விடாமல் பிடித்துக் கொண்டிருக்க வேண்டாத இயேசுவுக்கும் உள்ள வேறுபாட்டை நாம் கண்டுணரலாம். இந்த மறைமுகக் குறிப்புக்களோடு, நேர் முக ஒப்புமைகளையும் எடுத்துக் கூறலாம்.

2. இரண்டாவது உண்மையான ஆதாம்:- பவுல் 1 கொரி 15:45-49-இல் ஒவ்வொரு மனிதனின் அமைப்பிலும் இரு மாதிரிப் படிவங்கள் இருப்பதை ஒன்றை இன்னொன்றிலிருந்து வேறுபடுத்திக் காட்டுகிறார். ஆதாமாகிய முதல் மனிதன் உயிருள்ள ஆன்மாவாக உலகைச் சேர்ந்தவனாக, ஆன்மீகச் செயல்கள் கொண்டவனாகப் படைக்கப்பட்டிருக்கிறான். இரண்டாம் ஆதாமோ உயிரளிக்கும் ஆவியானார். ஏனெனில் அவர் விண்ணகத்தைச் சேர்ந்தவர், ஆன்மீகமானவர். தொடக்க கால நிகழ்ச்சி இறுதிக்கால நிகழ்ச்சியோடு ஒத்துப்போகிறது. எனினும் ஒரு பெரும் அகழி, இரண்டாவதை முதலாவதிலிருந்தும், ஆன்மீகமானதை ஊனைச் சார்ந்ததிலிருந்தும், பிரிக்கிறது.

*உரோ 5:12-21:* ஆதாம் வரவிருப்பவரின் முன் உருவம் ஆவார் என்று பவுல் வெளிப்ப டையாகக் கூறுகிறார். எல்லாரையும் பாதிக் கும் முதல் ஆதாமின் செயலின் விளைவு சாவைக் கொண்டு வந்தது என்று உறுதியாக நம்புகிறார் *(1 கொரி 15:21* தொ). அதே போல், இரண்டாம் ஆதாமாகிய கிறிஸ்து வின் மீட்புச் செயலும் யாவரையும் பாதிக் கும் தன்மையுடையது என்று உறுதியோடு அறிவிக்கிறார். ஆனால் இருவருக்கும் இடையேயுள்ள வேறுபாடுகளையும் தெளி வாக எடுத்துக் காட்டுகிறார். கிறிஸ்துவிலி ருந்து கீழ்ப்படிதல்; மீட்பு, வாழ்வு முதலி யன வந்தன. பாவம் ஆதாமினால் உலகில் நுழைந்தது. இறையருளோ அதன் ஊற்றான கிறிஸ்துவிலிருந்து மிகுதியாக அருளப்பட் டது. இறுதியாக ஆதாம் ஏவாள் ஆகியோ ருக்கு இடையேயுள்ள வளமுள்ள ஒன்றிப்பு கிறிஸ்துவிற்கும் திருச்சபைக்கும் உள்ள ஒன் றிப்புக்கு முன் உருவம் ஆகும். இது கிறிஸ்த வத் திருமணத்தை நிறுவும் மறை பொருளா கிறது (எபே *5:25-33; 1* கொரி *6:16).*

*3.* கிறிஸ்தவனும் இரு ஆதாம்களும்: பிறப்பால் ஆதாமின் மகனான கிறிஸ்தவன் விசுவாசத்தால் கிறிஸ்துவில் திரும்பப்பி றந்து முதலாம் இரண்டாம் ஆதாம்களோடு இரு உறவு கொண்டுள்ளான். இருப்பினும் இவ்வுறவுகள் தன்மையால், நோக்கத்தால், வேறுபட்டவை. தொடக்கக்கால விவரிப் பின் உண்மையான பொருளுக்குப் பிரமா ணிக்கமாய் இருக்கிறான் கிறிஸ்தவன். கண் டனத்திலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ள முதல் மனிதனின் பாவத்தை ஒரு சாக்காகப் பயன்படுத்தமாட்டான். அவன் தான் பலவீனமும் பாவமும் சேர்ந்த ஆதாம் என்றும் பவுல் கூற்றுப்படி, பழைய மனித னைக் களைய வேண்டியது தனது கடமையா கும் என்று உணர்வான் (எபே *4:22* தொ; கொலோ *3:9* தொ). இப்படிச் செய்வது ''புதிய மனிதனான இயேசுக் கிறிஸ்துவை அணிந்து கொள்வதற்காகும்''; ஆகவே அவ னுடைய வாழ்க்கை விதி முழுவதும் இரு ஆதாம்களின் வாழ்க்கைகளில் அடங்கியுள் ளது. சங் *8:3* தொ என்ற பகுதி பற்றிய விளக்கவுரையாகிய எபி *2:5-9*-இன்படி கிறிஸ்தவன் இயேசுக் கிறிஸ்துவில் எவரா லும் மிஞ்ச முடியாத மனிதரைக் காண்கி றான். எல்லா மனிதரையும் மீட்கும் தகுதி பெறும் பொருட்டு, சிறிது காலத்திற்கு வான தூதர்களுக்கும் கீழானவர், விரைவில் உண் மையான ஆதாமுக்கு வாக்களிக்கப்பட்ட மகிமையை பெற்றுவிட்டார்.

**ஆதாம்** *(ADAM - இடம்)*

மோவாபு சமவெளியில் உள்ள யோர்தா னுக்குக் கிழக்கே அமைந்துள்ள நகரம். இந்த இடம் எரிகோவிற்கு வெகு தொலைவில் இல்லை. இங்குதான் யோசுவாவும், உடன்ப டிக்கைப் பெட்டியைச் சுமந்து வந்த குருக்க ளும், ஆற்றில் நீர் கரை புரண்டு ஓடிக் கொண்டிருந்தபோதிலும் ஆண்டவரின் புது மையால் ஆற்றின் நடுவே உலர்ந்த தரையில் கால் ஊன்றி நின்றார்கள். மக்கள் அனைவ ரும் அந்த வறண்டு போயிருந்த ஆற்றின் வழியாக அக்கரைக்குக் கடந்து சென்றனர் *(யோசு 9:3-17).*

இவ்விடம் இக்கால தேல்-எத்-தம்மிசே ஆகும். இது, யப்போக்கு ஆறு யோர்தா னோடு சேருமிடத்திற்கு இரண்டு கிலோ மீட்டர் தெற்கிலும், எரிகோவுக்கு எதிராக வும் அமைந்து, இஸ்ராயேல் யோர்தானைக் கடந்த இடத்திற்கும் வடக்கே *30* கி.மீ. தொலைவிலும் உள்ள இடம் ஆகும்.

**ஆதார்** *(HADAR )*

அதாது-3-இன் மற்றொரு வடிவம் (ஆதி *36:39).*

**ஆதியாகமம்** *(BOOK OF GENESIS )*

காண்க, தொடக்கநூல்.

**ஆத்தேர்** *(ATER - இடக்கைப் பழக்கம் உடை யவன், முடவன்)*

*1.* அடிமைத் தளையிலிருந்த செருபாபே லின் தலைமையில் பாலஸ்தீனத்திற்குத் திரும்பிய குடும்பங்களில் ஒன்றின் தலைவர் *(எஸ் 2:16;* நெக *7:21).*

*2.* ஒரு லேவியர். செருபாபேலின் தலை மையில் எருசலேம் திரும்பியவர்களில்

ஆலய வாயில்காப்போர் குடும்பத்தின் தலைவர் (எஸ் 2:42; நெக 7:45).

3. நெகமியாவின் தலைமையில் உடன்படிக்கை புதுப்பிக்கப்பட்ட போது அதில் கையொப்பமிட்ட இஸ்ராயேலர் தலைவர்களில் ஒருவர் (நெக 10:7).

**ஆந்தை, கோட்டான் (OWL)**

இரவில் இரைதேடும் ஒரு பறவை. அசுத்த பறவைகளில் ஒன்றாகக் கூறப்படுகிறது (லேவி 11:17; உப 14:16). பாலஸ்தீனத்தில் இருநூறுக்கு மேற்பட்டவகை ஆந்தைகள் காணப்படுகின்றன. இவற்றை தெளிவாக அடையாளம் காட்டுவது கடினம்.

**ஆபதுநெகோ (ABEDNEGO)**

தானியேலின் மூன்று தோழர்களில் ஒருவர். இப்பெயருக்கு சொல்லிலக்கணம் கூறுவது கடினம். ஒரு வேளை ''நாபுவின் ஊழியன்'' எனப் பொருள்படும் ஆபது நெபோ என்ற சொல்லிலிருந்து வந்திருக்கலாம். அப்படியாயின், இது, ''யாவே உதவி செய்தார்'' எனப் பொருள்படும் அசரியா என்பதற்கு நேர்மாறானதாகும். இப்பெயர், இவரது தோழர்களின் பெயரோடு சேர்ந்து எப்போதும் சதிரக்கு, மேசாக்கு, ஆபது நெகோ என்ற வரிசையில் வருகின்றது (தானி 1:7; 2:49; 3:12-13). இவர்களைப் பற்றி சதிரக்கு, மேசாக்கு, ஆபதுநெகோ என்ற தலைப்பின் கீழ் காண்க.

**ஆபிரகாமின் அருகில் (BOSOM OF ABRAHAM)**

ஆபிரகாம் அருகில், ஆபிரகாமின் நெஞ்சம், மடி என்று பலவாறு கூறலாம். நல்லோர் இறக்கும் நேரத்தில் அவர்கள் செல்லும் இடமாகும். அங்குத் தொடக்க நிலையாகவும், ஒரு வேளை கால முடிவில் வரும் இறுதித் தீர்ப்புக்குமுன் உள்ள ஆய்வு நிலையாகவும் தீர்ப்பு செய்யப்படும். பணக்காரனும், இலாசரும் என்ற உவமையில் (லூக் 16:19-31) இலாசரை அவரது இறக்குப்பின் வான தூதர்கள் தூக்கிச் சென்ற இடம் இதுவே (லூக் 16:22). இவ்விடம் வானுலகில், நீதிமான்களுக்கு அளிக்கப்படும் விருந்தில் ஆபிரகாமுக்கு அடுத்த இடத்தைக் குறிக்கலாம் (மத் 8:11; இத்தகைய பதங்கள் யோவா 13:23; 21:20-இல் காணப்படுகின்றன), அல்லது ஆபிரகாமோடு நெருங்கிய உறவு கொண்டுள்ள மகிழ்ச்சியான ஓர் இடத்தைக் குறிக்கலாம் (யோவா 1:18). இந்த இடம் எங்குள்ளதென்று அடையாளம் காட்டுவது முடியாத காரியம். அதைப்பற்றி நற்செய்தியிலிருந்து சிறிது கூறலாம். இது கீழுலகத்திற்கு அருகிலுள்ளது. ஆனால் அதைச் சேர்ந்ததன்று. இரண்டும் கூப்பிடு தொலைவில் இருக்கிறது. இரண்டையும் பெரும் பாதாளம் பிரிக்கிறது (லூக் 16:23-26).

இக்கருத்துப் பற்றி யூத இலக்கியங்களில் பல குறிப்புகள் உள்ளன. ஆனால் அவற்றில் சீரான கருத்து வளர்ச்சியோ, தெளிவோ இல்லை.

**ஆபிரகாமின் ஏற்பாடு (TESTAMENT OF ABRAHAM)**

இது ஒரு யூத புனைப் பெயர் நூலாகும். கி.பி. முதல் நூற்றாண்டைச் சேர்ந்ததாகும். இது மூலத்தில் எந்த மொழியில் எழுதப்பட்டது என்பது உறுதியாகத் தெரியவில்லையானாலும், இதன் வாசகம் பல மொழிகளில் உள்ளது.

இந்நூல் ஆபிரகாமின் இறப்பைச் சுற்றி எழுதப்பட்டுள்ளது. அதி 1-9-இல் அதிதூதர் மிக்கேல், ஆபிரகாமின் ஆன்மாவை எடுத்துச்செல்ல முயலுகிறார்; ஆனால் ஆபிரகாம் படைக்கப்பட்ட உலகம் முழுவதையும் பார்க்குமுன் மரிக்க மறுத்து விடுகிறது. இதற்கு மிக்கேல் இணங்குகிறார். அதி 10-14-இல் ஆபிரகாம் உலகைப் பார்க்கும் அனுபவம் வெளிப்பாட்டு உருவகத்தில் விவரிக்கப்படுகிறது. அதி 15-20-இல் ஆபிரகாம் வீட்டுக்குத் திரும்பியபின் மரிக்க மறுத்து விடுகிறார். இறுதியில் மரணம், வானதூதனாக மாறு வேடம் பூண்டு ஏமாற்றி அவரது ஆன்மாவை எடுத்துச் செல்கிறது. இந்நூலின் ஆசிரியர் எந்த இறையியல் கருத்தையும் எடுத்துக் கூறுவதைவிட, ஒரு உருக்கமான கதையை எடுத்துக் கூறுவதையே நோக்கமாகக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது.

**ஆபிரகாமின் வெளிப்பாடு** *(REVELATION OF ABRAHAM)*

இது ஒரு யூத புனைப்பெயர் நூலாகும். ஒரு வேளை கி.பி. *80-100*-க்கு இடையில் எழுதப்பட்டிருக்கலாம். மூலத்தில் எபிரேயத்திலோ, அரமேயிக்கிலோ எழுதப்பட்டிருந்தாலும், இப்போது பழைய ஸ்லாவிக் வாசகமே வழக்கில் உள்ளது. இந்நூல் ஆதி *15:9-17*-ஐப், பற்றிய ''மிட்ராஸ்'' ஆகும்.

முதல் எட்டு அதிகாரங்கள், ஆபிரகாம் சிலை வழிபாட்டிலிருந்து இறையொருமைக் கோட்பாட்டிற்கு மனந்திரும்பியதை விவரிக்கிறது. அதற்குப்பின் வெளிப்பாட்டுப் பகுதி வருகிறது. இப்பகுதியில் ஆபிரகாம் தமது வழித் தோன்றல்களின் வருங்காலத்தைப் பற்றி வெளிப்பாட்டுக் காட்சிகள் பெறுகிறார் *(அதி 9-32)*. இறைவனோடு நன்மை தீமை பற்றித் துணிவாக உறையாடுகிறார். அதன் முடிவு தெளிவற்றதாக இருக்கிறது. இறுதி அதிகாரங்கள் கிறிஸ்தவ இடைச்செறுகல்கள் உள்ளதாகத் தெரிகிறது. குறிப்பாக அதி 29, புதிய ஏற்பாட்டு நிலையிலிருந்து பெரிதும் வேறுபடுவதால், சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

**ஆபிரகாம்** *(ABRAHAM)*

I. விவிலியத்தில் ஆபிரகாம்

*1. பெயர்:-* தொடக்கத்தில் இக்குலத்தலைவரின் பெயர் அபிராம் ஆகும் *(ஆதி 11:26; 12:1)*. பிறகு இறைவன் இப்பெயரை ஆபிரகாமாக மாற்றினார் *(17:5)*. இச்சொல்லைப் பலவாறு பிரித்துப் பொருள் கூறுவர். இப்பெயருக்குப் பொதுப்பாணி முறையில் ''பல இனத்தவருடைய தந்தை'' என்று பொருள் கூறுவர் *(17:5-6)*. ''தந்தையின் அன்பு'', ''நல்ல முன்மரபுடையவர்'', ''என் தந்தை உயர்ந்தவர்'', ''இறைத் தந்தை உயர்ந்தவர்'' அல்லது வெறுமனே ''தந்தை உயர்ந்தவர்'' என்று பலவாறு பொருள் கூறலாம்.

சொல்லிலக்கணம் எதுவானாலும், உடன்படிக்கை புதுப்பிக்கப்பட்டபோது *(17:5)* குலத் தலைவரின் பெயர் மாற்றப்பட்டது. அப்போது, அவருக்கு வேலைக்காரியின் வழியாகப் பிறந்த ஒரே மகன் இருந்தான். ஈசாக்கு இன்னும் பிறக்கவில்லை.

*2. வாழ்க்கை வரலாறு:-* அபிராம் எமோரியர் இனத்தைச் சேர்ந்தவர். இவ்வினம் ஒரு வகை நாடோடி இனமாகும். இவரது தந்தை தெராகு, சேமின் வழித் தோன்றல்களில் ஒருவராவார். நாகோர், ஆரான் ஆகியோர் இவரது சகோதரர்கள் ஆவர். லோத்து ஆரானின் மகனாவார் *(11:27)*. ஆரான் தன் தந்தை தெராகு இறக்கு முன்பே, ஊர் என்ற கல்தேய நகரில் இறந்தார் *(11:28)*. அபிராம் தன் ஒன்றுவிட்ட சகோதரியான சாராயியை *(20:12)* மணந்தார் *(11:29)*. இருவருக்கும் பிள்ளைகள் பிறக்கவில்லை. சாராய் மலடியாக இருந்தாள். குருக்கள் பாரம்பரியப்படி தென் மெசபொத்தாமியாவின் கல்தேயத்தைச் சேர்ந்த ''ஊர்'' நகரம் அபிராமின் ஊராகும். யாவே பாரம்பரியப்படி வட மெசபொத்தாமியாவாகிய ''ஆராம் நகராயிமைச்'' சேர்ந்த காரான் அவரது ஊராகும். ஆய்வாளர்கள் கருத்துப்படி எமோரியர் படையெடுப்பின் விளைவாக, தெராகு தன் குடும்பத்துடன் ஊரிலிருந்து புறப்பட்டு 300 கி.மீ. வடக்கிலுள்ள காரான் நகரை அடுத்த பகுதியில் குடியேறினார் *(11:31)*. அங்கு தெராகு தனது 205 வயதில் இறந்தார்.

காரானில் அபிராமுக்கு இறைவன் அழைப்பு வருகிறது. அதற்கு இணங்கிப் புறப்பட்டுக் கானானில் குடியேறினர் *(12:1-5)*. அரசியல் பொருளாதாரக் காரணங்கள் குடியேற்றத்தைத் தூண்டியிருக்கலாம். ஆனால் விவிலிய உரைப்படி மறை காரணத்திற்காக இவ்வாறு குடியேறினார் என்று தெரிகிறது. அபிராம் தம் எழுபத்தைந்து வயதில் தம் நாட்டையும் இனத்தையும் விட்டுப் புறப்பட்டு இறைவன் காட்டவிருந்த நாட்டிற்குப் *(எபி 11:8)* புறப்பட்டார். *100* ஆண்டுகள் அலைந்து திரிந்தபின் தம் *175*-ஆம் வயதில் இறந்தார். *100*-ஆவது வயதில் அவருக்கு வாக்களிக்கப்பட்ட மகனான ஈசாக்கு பிறக்கிறான். இங்கே குறிக்கப்படும் ஆண்டுகளின் எண்ணிக்கை வெறும் கால அளவு மட்டுமன்று. அடையாளப் பொரு

ளையும் உணர்த்துவதாகத் தெரிகிறது. 100 நிறைவேறுதலின் எண்ணிக்கையாகத் தெரிகிறது.

அபிராம் தம் 75-வது வயதில் தன் மனைவி சாராயோடும், தன் சகோதரன் மகன் லோத்தோடும், மந்தைகளோடும் கானானில் குடியேறினார் *(12:5)*. அங்கு மகிமையின் பள்ளத்தாக்கு எனப்படும் செக்கேம் வந்தடைந்தார். அங்கு இறைவன் தமது வாக்குறுதியை மீளவும் புதுப்பிக்கிறார் *(12:6-7)*. அங்கிருந்து புறப்பட்டு பெத்தேலுக்குச் சென்று சிறிது காலம் தங்கினார். இரு இடங்களிலும் பீடம் எழுப்பி இறைவனைத் தொழுதார். அதன்பின் தெற்கே நேகேபு வரைச் சுற்றித் திரிந்தார் *(12:4-9)*. அப்போது நாட்டில் பஞ்சம் ஏற்பட்டதனால் எகிப்துக்குச் சென்றார். அழகியான தம் மனைவியைக் கவர்ந்து கொள்ளும் பொருட்டு எகிப்திய மன்னன் தம்மைக் கொல்லக் கூடும் என்று அஞ்சிய அபிராம் சாராயைத் தம் சகோதரி என்று கூறித் திரிந்தார். சாராய் பாரவோனின் அந்தப்புரத்திற்குக் கட்டாயமாகக் கொண்டு செல்லப்பட்டாள். ஆனால் அவள் பொருட்டு அபிராம் அரசனுடையவும், பிறருடையவும் தயவைப் பெறுகிறார். அபிராமுக்குச் செய்யப்பட்ட அவமரியாதையைக் கண்டு இறைவன் தம் வாக்குறுதியை நினைவு கூர்ந்து, பாரவோனின் வீட்டைக் கொடிய துன்பங்களால் தண்டிக்கிறார். உண்மையை அறிந்த பாரவோன் அபிராமைக் கடிந்து, சாராயை அபிராமிடம் திருப்பி அனுப்பிவிடுகிறான் *(12:9-20)*.

அபிராம் திரும்பி வந்து மீண்டும் பெத்தேலில் தங்கினார். இதற்கிடையில் அவருக்கும், லோத்துக்கும் சொத்துகளும் மந்தைகளும் பெருகின. இருவருடைய வேலையாட்களுக்குள்ளே பிணக்குகள் உண்டாயின. அதன்விளைவாக, சமவெளியை இருவரும் இருபகுதியாகப் பிரித்துக் கொண்டனர். லோத் யோர்தான் பள்ளத்தாக்கை, அதாவது தீயவர்கள் வாழ்ந்த, செழிப்பான தெற்குக் கானானைத் தேர்ந்து கொண்டார் *(12:2-13)*. அபிராம் பெத்தேலிலேயே தங்கினார். அங்கு ஆண்டவர் மீண்டும் தோன்றி, தம் வாக்குறுதியைப் புதுப்பித்தார் *(13:14-17)*. அதன்பின் கெபிரோனில் உள்ள மமிரேயில் அபிராம் குடியேறினார். இந்நிலையில் சோதோம் கெமோராவுக்கு எதிராகப் போரிட்ட நான்கு அரசர்கள் கூட்டுப் படையைத் தாக்கி லோத்தை மீட்ட கதை வருகிறது *(14:1-17)*. இக்கதை ஆபிராம் காலத்தையும் மேற்காசியாவில் நிலவிய வாழ்க்கைச் சூழ்நிலையையும் அரசியல் நிலையையும் எடுத்துக் காட்டுகிறது. அபிராம் இதில் ஒரு போர்த்தலைவராகத் தோன்றுகிறார். இக்கதை வெறும் வீர காவியம் மட்டுமன்று. அபிராமின் வாழ்க்கைக் காலத்தை வரையறை செய்ய ஓர் உதவியுமாகும். லோத்தை மீட்டுத் திரும்பும்போது மறைபொருள் மிக்க மனிதர் ஒருவர் அபிராமை எதிர்கொள்கிறார். ''சாலேமின் அரசனும் உன்னத கடவுளின் குருவுமாய் இருந்த மெல்க்கிசதேக்கு கைகளில் அப்பத்தையும் திராட்சை ரசத்தையும் ஏந்தி வந்து *(14:18)* அபிராமை ஆசிர்வதிக்கிறார். அபிராம் தாம் கைப்பற்றிய பொருட்களில் பத்தில் ஒரு பங்கை இக்குருவுக்குக் கொடுக்கிறார். இப்பொருள்களில் பிறருக்குச் சேர வேண்டியதை அவர்களிடம் ஒப்படைக்கிறார் *(13:18-24)*. இக்கதை குருவும் அரசனுமானவருக்கு ஓர் எடுத்துக் காட்டானவரைக் காட்டுகிறது. பிற்காலப் பாரம்பரியத்தில் முக்கியம் வாய்ந்ததாகும் *(சங் 110:4; எபி 7)*.

இந்த நிகழ்ச்சிக்குப்பின் இறைவன் தம் வாக்குறுதியை மீண்டும் புதுப்பிக்கிறார். அபிராமுக்கு ஒரு புதல்வன் பிறப்பான் என்று வாக்களிக்கிறார். இறைவனது இவ் வாக்கை அபிராம் விசுவாசிக்கிறார். இறைவன்பால் கொண்ட இந்த விசுவாசத்தால் அபிராம் விசுவாசிகளின் தந்தையென உயர்ந்து நிற்கிறார் *(15:1-6)*. இறைவனே அபிராமோடு ஓர் உடன்படிக்கை செய்து கொள்கிறார் *(15:8-21)*. இதன்விளைவாக இந்த உடன்படிக்கை விருத்த சேதனக் கட்டளைக்கு இட்டுச் செல்கிறது. இதன்படி அபிராமின் வழித்தோன்றல்களில் ஆண்மகன் ஒவ்வொருவனும் விருத்தசேதனத்தை தன்

உடலில் ஏற்று, இவ்வுடன்படிக்கையைத் தொடர்ச்சியாக எக்காலத்தும் புதுப்பிக்க வேண்டும்.

சாராய் மலடியாக இருந்தாள். புதல்வன் பற்றிய இறைவாக்கை நிறைவேற்ற அபிராம் தன் மனைவி சாராயால் உந்தப்பட்டு, குறுக்கு வழியில் முயல்கின்றனர். இருவரும் தங்கள் அடிமை ஆகார் வழியாகப் பிள்ளைப் பேறு அடைய முயல்கின்றனர். இது அக்கா லச் சட்ட முறைக்கு ஒத்ததே. ஆனால் இறை வன் இதை ஏற்க மறுத்து, சாராய் வழியாகப் பிறக்கும் மகனே வாக்குறுதியின் மகனா வான் என்று கூறுகிறார் *(16-1-3)*. தான் கருவுற்றிருப்பதைக் கண்டு ஆகார் சாராயை அலட்சியம் செய்யவும், பழிக்கவும் தொடங் கினாள். அதனால் அபிராமின் அனுமதி யோடு சாராய் கண்டிப்பாக நடத்தியது கண்டு ஆகார் ஓடிப்போனாள் *(16:4-6)*. ஆண் டவரது தூதர் அவளுக்குத் தோன்றி அவளு டைய சந்ததியினரும் பலுக்கிப் பெருகுவர் என்ற வாக்குறுதியுடன் அவளது தலைவியி டம் திரும்பப் போகச் செய்தார். ஆகார் வழியாக அபிராமுக்கு இசுமயேல் பிறந்தார் *(16:7-16)*. அபிராமின் 99-ஆம் வயதில் இறை வன் மீண்டும் அபிராமுக்குத் தோன்றி வாக் குறுதியைப் புதுப்பிக்கிறார். அபிராம் இனி ஆபிரகாம் என்றும், சாராய் சாரா என்றும் அழைக்கப்படுவர். சாராய், சாரா, என்ற இரு சொல்லுக்கும் இளவரசி என்று பொருள் கூறலாம் *(17:1-22)*. அதன்பின் ஆபிரகாம் இறைவன் கட்டளைப்படி தன் குடும்பத் தைச் சேர்ந்த ஆண்கள் அனைவருக்கும் விருத்தசேதனச் சடங்கை நிறைவேற்றுகிறார் *(17:23-27)*.

இதற்குப் பின் இறைவன் மூன்று மனிதர் விடிவில் தோன்றி ஆபிரகாம் அளித்த விருந்தை உண்டபின் விரைவில் சாரா வழி யாக மகன் பிறப்பான் என்று அறிவிக்கிறார் *(18:1-5)*. அங்கிருந்து பிரிந்து செல்லும் போது சோதோம் கொமோராவின் அழிவை முன்னறிவிக்கிறார். ஆபிரகாம் சோதமுக்கா கப் பரிந்து பேசுகிறார் *(18:16-33)*. அடுத்த நாள் காலையில் ஆபிரகாம் சோதோம் கொமோரா இருந்த திசையை நோக்கிப் பார்த்தபோது சூளையில் எழும்பும் புகை போலப் பூமியிலிருந்து தீப்பொறி கிளம்பிக் கொண்டிருந்தது. அந்நகரங்கள் அழிந்தன. ஆனால் ஆபிரகாமின் பொருட்டு லோத்தும் அவன் குடும்பத்தாரும் காப்பாற்றப்பட்ட னர். ஓடிப் போகும்போது லோத்தின் மனைவி திரும்பிப் பார்த்தாள். உடனே உப்புச் சிலையாக மாறினாள் *(19:1-29)*. இந் நிகழ்ச்சியில் ஆபிரகாம் ஓர் இறைவாக்கின ராகக் காட்டப்படுகிறார்.

இதற்குப்பின் ஆபிரகாம் கெபிரோனிலி ருந்து புறப்பட்டு நெகேபை நோக்கிப் போய் காதேசுக்கும் சூருக்கும் இடையில் குடியேறி னார். பின் கெரார் நாட்டில் சுற்றித் திரிந்தார் *(20:1)*. இங்கும், ஆபிரகாம், தம் மனைவி சாராவை தம் சகோதரி என்று சொல்லிக் கொண்டமையால் கெராரின் மன்னனாகிய அபிமெலக்கு அவளைப் பிடித்துக் கொண்டு வரும்படிச் செய்தான். ஆண்டவரால் எச்சரிக் கப்பட்டு, அபிமெலக்கு ஆபிரகாமை அழைத்துக் கண்டித்து, சாராயைத் திரும்ப அவரிடம் அளித்தார். அதோடு பெருங்கொ டைகளையும் அளித்தார். ஆபிரகாம் அபிமெ லக்குக்காக இறைவனிடம் மன்றாட, இது வரை மலடிகளாக இருந்த அவனது மனைவி யும் வேலைக்-காரிகளும் பிள்ளைப் பேறு பெற்றனர் *(20:2-18)*.

இதற்குப்பின் நிறைவை அடையாளமாக உணர்த்தும் 100-ஆவது வயதில் ஆபிரகா முக்கு வாக்குறுதியின் மகனான ஈசாக்கு பிறந்தார். பிறந்த எட்டாவது நாள் குழந் தைக்கு விருந்தசேதனம் செய்யப்பட்டது *(21:1-7)*. குழந்தை பால்குடி மறந்த நாளன்று, ஆகாரின் மகன் இசுமயேல் ஈசாக் கைக் கேலி செய்ததைக் கண்டு, சினந்து, இசுமயேல் தனது மகன் ஈசாக்கோடு உடை மையுரிமைக்குப் போட்டியிடுவானோ என்று பயந்த சாரா, ஆபிரகாம் ஆகாரரையும் அவளது புதல்வன் இசுமயேலையும் துரத்தி விடச் செய்கிறாள் ஆகார் தன்னுரிமைபெற் றுத் தன் மக்களினத்தவரிடம் செல்கிறாள். இசுமயேலுக்கும் ஆசிர் அளிக்கப்படுகிறது.

''அவனையும் ஒரு பெரிய இனத்துக்குத் தலைவனாக்குவோம்'' (21:8-21). ஆதி 16; 21-இல் ஆகாரிடம் சாரா நடந்து கொள்ளும் விதம் பொறாமையும் கொடுமையும் மிக்க தாகத் தோன்றலாம். ஆனால் சாராவின் ஒவ்வொரு செயலும் அக்கால வாரிசுச் சட்டத்திற்கு முற்றிலும் ஒத்ததாகும். சாராவின் இச் செயல்கள் வழியாக இறைவனது திட்டம் தன் குறிக்கோளை நோக்கி முன்னேறுகிறது. இதற்குப்பின் இறைவன் ஆபிரகாமோடு இருப்பதை உணர்ந்த அபிமெலக்கு பெயேர்-செபாவிலுள்ள ஒரு கிணறின் பொருட்டு ஆபிரகாமோடு உடன்படிக்கை செய்து கொள்கிறார்; ஆபிரகாம் பெலிஸ்தியர் நாட்டில் நெடுங்காலம் குடியிருந்தார் (21:22-34).

பெயேர்-செபாவில் தங்கியிருந்தபோது தான், இதுவரை எதிர் கொண்ட சோதனைகளைவிட கடுமையான சோதனையை அவரது விசுவாசம் எதிர் கொள்கிறது. ஆபிரகாம் தன் மகனைப் பலியிட வேண்டுமென்று இறைவன் கட்டளையிடுகிறார். ஆபிரகாமும் கீழ்ப்படிகிறார் (22:1-3). ஆண்டவர் காட்டிய இடத்திற்குச் சென்று ஈசாக்கைப் பலியிடப் போகும் இறுதி நேரத்தில் இறைவன் தூதர் தோன்றி பலியைத் தடுத்து விடுகிறார் (22:4-12). அருகில் முட்செடியில் கொம்பு மாட்டிக் கொண்டு நின்ற ஓர் ஆட்டுக்கிடாய் பலியாக ஒப்புக் கொடுக்கப்படுகிறது. ஆபிரகாம் அந்த இடத்திற்குப் பொருத்தமாக ''யாவே கொடுப்பார்'' என்று பொருள்படும் யாவே ஈரே என்ற பெயர் கொடுத்தார். (22:13-14). பின்பு ஆண்டவர் ஆபிரகாமை ஆசிர்வதித்து அவரது சந்ததியினர் பலுகிப் பெருகுவர் என்று வாக்களித்தார் (22:15-18). இந்நிகழ்ச்சியின் உரையைச் சரியான விதத்தில் புரிந்து கொள்ள வேண்டும். அதற்கு ''நீ தெய்வ பயம் உடையவனாய் நம் பொருட்டு உன் ஒரே மகனையும் பலியிடத் தயங்கவில்லை'' (22:12) என்ற வாக்கு வழிகாட்டும்.

பின்பு பெயேர் - செபாவுக்கு ஆபிரகாம் திரும்பினார். சாரா தனது 127-ஆம் வயதில் கானானிலுள்ள கெபிரோனில் மரித்தாள். இத்தியனான எபரோனிடமிருந்து இரட்டைக் குகை என்ற மக்கபேலாவை வாங்கி அதில் சாராவை அடக்கம் செய்தார் (23:1-20). இந்த நிகழ்ச்சி பற்றிய பகுதி அக்காலத்தில் எப்படி ஓர் இடம் வாங்கப்பட்டது என்பதை விவரிக்கிறது. சாரா இறந்து மூன்று ஆண்டுகளுக்குப்பிறகு, ஈசாக்கு, நாகோரின் மகனான பெத்தூவேலின் மகள் ரெபேக்காவை மணந்தார் (ஆதி. 24).

ஆபிரகாம் கெத்தூரா என்ற பெண்ணை மணந்து, பல பிள்ளைகளுக்குத் தந்தையானார் (25:1-6). ஆபிரகாம் தமது 175-ஆம் வயதில் இறந்தார். அவரது புதல்வர்கள் ஈசாக்கும், இசுமயேலும், மக்கபேலாக்குகையில் அவரது மனைவி சாராவோடு அடக்கம் செய்தனர் (25:7-10).

3. பழைய ஏற்பாட்டு பிற நூல்களில் ஆபிரகாம்:- இறைவன் ஆபிரகாமுக்கு அளித்த வாக்குறுதியும் அவரோடு செய்து கொண்ட உடன்படிக்கையும் பற்றிய குறிப்புகள் பழைய ஏற்பாட்டில் பல இடங்களில் வருகின்றன (யாத் 32:13; எண் 32:1; உப 1:8; 2 அர 13:23; 1 நாள் 16:16; சங் 105:9.42). ஆபிரகாம் இறைவனுடைய ஊழியன் மட்டுமன்று (ஆதி 36:24; சங் 105:42), அவரது நண்பருமாவார் (2 நாள் 20:7; ஏச 41:8). யாவே ஆபிரகாமை மீட்டார் (ஏச 29:22). இஸ்ராயேலர் ஆபிரகாம் என்ற பாறையினின்று செதுக்கப்பட்டவர்கள். ஆபிரகாம் என்ற குழியினின்று வெட்டியெடுக்கப்பட்டவர்கள் (51:1-2). ஆபிரகாமின் விசுவாசத்தையும் அவர் இறைவனோடு கொண்டிருந்த நெருங்கிய உறவையும் எடுத்துக் கூறி, இறைவனிடம் இஸ்ராயேலர் மன்றாடினர் (யாத் 32:13; 2 மக் 1:2). ஆபிரகாமின் பொருட்டுத் தங்களது மன்றாட்டு கேட்கப்படும் என்று நம்பினர் (லேவி 26:42; உப 4:27; 29:13; 2 அர. 13:23; 1 நாள் 16:16; சங் 105:9-11).

4. புதிய ஏற்பாட்டில் ஆபிரகாம்:- பழைய ஏற்பாட்டுப் பெயர்களில் மோசேக்கு அடுத்தபடி அடிக்கடி வரும் பெயர் ஆபிரகாம்தான்.

கிறிஸ்து மனித உருவெடுத்ததை, இயேசுவின் தாய் மரியாள், ஆபிரகாமுக்கு இறைவன் அளித்த உறுதிமொழியின் நிறைவேறுதலாகக் கண்டு களிக்கிறாள். ''நம் முன்னோருக்கு அவர் சொன்னது போல் ஆபிரகாமும் அவர் தம் வழிவந்தோர்க்கும் என்றென்றும் இரக்கம் காட்ட நினைவு கூர்ந்து தம் அடியனாகிய இஸ்ராயேலை ஆதரித்தார்'' (லூக் 1:54-55). திரு முழுக்கு யோவானின் பிறப்பின்போது, செக்கரியா இறைவனது இரக்கத்தை ''நம் தந்தையாம் ஆபிரகாமுக்கு அளித்த உறுதிமொழியையும் தமது பரிசுத்த உடன்படிக்கையையும் நினைவு கூர்ந்தருளினார்'' (லூக் 1:75) என்று பாடுகிறார். ஆபிரகாம் யூதர்களின் தந்தையாவார் (மத் 3:9). அவர்கள் அவர் வழி வந்தவர்கள் (யோவா 8:33), யோவா 8-ல் வரும் தர்க்கம் யூதர்கள் தாங்கள் ஆபிரகாமின் வழி வந்தோர் என்று பாராட்டிய பெருமையை அடிப்படையாகக் கொண்டதாகும். ஆபிரகாமின் பிள்ளைகளாக இருப்பதற்கு உடல் சார்ந்த விதத்தில் வழித் தோற்றல்களாக இருப்பது மட்டும் போதாது என்று இயேசு சுட்டிக் காட்டுகிறார். தாம் ஆபிரகாமையும்விடப் பெரியவர் என்றும் ஆபிரகாமுக்கு முன்பே தாம் இருப்பதாகவும் இயேசு உரிமை கொண்டாடுவதில் சொற்போர் உச்ச நிலை அடைகிறது. பவுல் ஆதி 16:6-ஐ எடுத்துக் கூறி (உரோ 4:3; 9:8) ஆபிரகாமின் உண்மையான பிள்ளைகளாக இருப்பது உடலுறவால் வருவது அன்று; விருத்தசேதனத்தால் வரும் மரபுமுறையும் அன்று. ஆபிரகாமுடையது போன்ற விசுவாசத்தால் வருவதாகும் (உரோ 4; எபி 11:17-19) என்று கூறுகிறார். கிறிஸ்துவில் விசுவாசம் கொள்வது ஒருவனை ஆபிரகாமின் உண்மையான பிள்ளையாக்குகிறது (கலா 3.29). நல்லோர் ஆபிரகாமின் மரபினரானதால், இறப்புக்குப் பின், மெசியாவின் விருந்தில் ''ஆபிரகாமின் அருகில்'' இளைப்பாறுவர் (லூக் 16:22-23). பவுல் போதகப்படி ஆபிரகாமின் இரு மனைவியரும் இரு உடன்படிக்கைகளைக் குறிக்கின்றனர். ஒன்று மோசேயால் சீனாய் மனையில் செய்யப்பட்டதாகும். இது அடிமைத்தனத்தின் உடன்படிக்கையாகும். ஆகார் இதைக் குறித்தாள். மற்றது இயேசுவில் செய்யப்படும் விடுதலை உடன்படிக்கையாகும். திருச்சபையேக் தன்னுரிமையுள்ள மனைவி சாராவால் குறிக்கப்படும், உறுதிமொழிகளுக்கு உரிமையான வாரிசு ஆகும் (கலா 4:4-31). இப்போதனையைக் கேட்ட யூதர்கள் பவுலை நகருக்குப் புறம்பே தள்ளி, கல்லால் எறிந்து கசையால் அடித்ததில் வியப்பில்லை (அ.ப. 14:5).

மெல்க்கிசதேக்கு கிறிஸ்துவின் அடையாளமாவார். இது கிறிஸ்துவின் உயர்தன்மையைக் காட்டுகிறது. ஏனெனில் ஆரோன் குருத்துவத்தின் முன்னோராகிய ஆபிரகாமிடமிருந்து மெல்க்கிசதேக்கு பத்தில் ஒரு பங்கைக் காணிக்கையாகப் பெற்றார் (எபி 7:1 தொ). திருச்சபையில் இது நற்கருணைப் பொருளோடு நோக்கப்பட்டது. கிறிஸ்துவின் பலிக்கு ஈசாக்கின் பலி ஒரு முன் எடுத்துக்காட்டாகக் கருதப்பட்டது. இப்பலி நற்கருணைப் பலிக்கு அடையாளமாகக் கருதப்பட்டது. நற்கருணை வழிபாட்டில் ''எங்கள் முதுபெருந்தந்தை ஆபிரகாமின் பலியையும் ஏற்றுக் கொண்டதுபோல் இவற்றையும் ஏற்றுக் கொள்ளும்'' என்று திருச்சபை வேண்டுகிறது.

ஆபிரகாமின் விசுவாசம் அவருக்கு நீதியாகக் கருதப்பட்டது (உரோ 4:3; கலா 3:6) அவர் விசுவாசிகளுக்கு எல்லாம் தந்தையாவார் (உரோ 4:16 தொ; எபே 2:14). ஆபிரகாமின் விருத்தசேதனம் அவரது விசுவாசத்திற்குப்பின் வந்தது என்று பவுல் குறிப்பிடுகிறார் (உரோ 4:9-13). இதற்கு மாறாக யாக்கோபின் கருத்துப்படி ஆபிரகாமின் விசுவாசம் செயல்களால் இறைவனுக்கு ஏற்புடையதாயிற்று, செயல்களால் நிறைவு பெற்றது (யாக் 2:21-22). எபிரேயர் திருமுகத்தின்படி, ஆபிரகாம் விசுவாசிகளில் எல்லாம் சிறந்தவர். ஏனெனில் தனது வாழ்க்கை முழுவதும், அவர் அசையாத அடித்தளமுள்ளதொரு (அதாவது விண்ணக வீட்டை) எதிர் நோக்கியிருந்தார் (எபி 11:10). ஆனால் யாக்கோபில், ஆபிரகாமின் விசுவாசம் உயிருள்ளது. ஏனெனில் அது ஈசாக்கைப் பலி

பீடத்தின் மேல் பலியிடச் சோதிக்கப்பட்டு வெற்றி கொண்டது (யாக். 2:17).

5. காலமும் வரலாற்றுப் பின்னிலையும்:- ஆபிரகாமின் காலம் பற்றிப் பெரிதும் வேறுபட்ட கருத்துக்கள் உண்டு. சிலர், அவர் கி.மு. 2000-1800-க்கு இடைப்பட்ட காலத்திலும், வேறுசிலர் கி.மு. 1400-1300-க்கு இடைப்பட்ட காலத்திலும் வாழ்ந்தார் என்பர். பெரும்பான்மையான அறிஞர்கள் கி.மு. இரண்டாயிரமாண்டு காலத்தின் தொடக்கத்தில் அவர் வாழ்ந்ததாகக் கூறுவர். அவர்கள் அளிக்கும் காரணங்கள்: 1. யோர்தானுக்கு அப்பாலுள்ள பகுதியில் கி.மு. 1900-1800-க்கு இடையில் மக்கள் தொகைக் குறைந்திருப்பது ஆதி 14-இல் குறிக்கப்படும் அழிவுகளின் படையெடுப்போடு ஒத்துப் போகிறது. இது ஆபிரகாம் கி.மு.1800-ஐ. ஒட்டி வாழ்ந்தார் என்று சுட்டுகிறது. 2. ஆதி 14-இல் குறிக்கப்படும் நான்கு அரசர்களில் மூன்று பேரை அடையாளம் காட்டலாம். இவர்கள் கி.மு.2000-1700-க்கு இடையில் வாழ்ந்தவர்கள். 3. இவ் வதிகாரத்தில் குறிக்கப்படும் மெசபொத்தாமிய அரசுகளின் கூட்டணி கி.மு.2000-1750-இல் சாதாரணமான வழக்காயிருந்திருக்கிறது. 4. குல மூதுவர்களுக்கு இணையான பெயர்கள் எகிப்திலும் மெசபொத்தாமியாவிலும் கி.மு.2000-1800-காலத்தில் காணப்படும். 5. நெகேபின் தென்மேற்குப் பகுதியில் 2100-1900-க்கு இடைப்பட்ட காலத்துக் குடியேற்றங்கள் ஆபிரகாம் ஈசாக்கு ஆகியோரின் மேய்த்தல், பயிர் செய்தல் போன்ற தொழில்களோடு ஒத்துப் போகின்றன. 6. ''எந்தையரின் இறைவன்'' என்ற பதம் குல முதியவர்களின் கருத்துக்கு இணையானது கி.மு.19-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கப்பதோசியா ஆப்பு எழுத்து வடிவ வாசகங்களில் காணப்படுகிறது. 7. வேலைக்காரனை வாரிசாகத் தத்து எடுத்தல் (ஆதி 15:13), உரிமையை எடுத்துக்காட்ட வீட்டு விக்கிரகங்களை எடுத்து வைத்துக்கொள்ளல் (31:19) ஆகியவை குல முதியவர்களின் நிகழ்ச்சியுரைகளில் வரும் பல வழக்கங்களுக்கு இணையானவை. இவை மாரி (19 நூ) நூசி (15 நூ) வாசகங்களில் காணப்படுகின்றன.

ஆபிரகாம் ஒரு கற்பனைப் படைப்பு என்றோ, ஒரு இனத்தின் ஆட் தன்மையாக் கப்பட்டவர் என்றோ இப்போது ஒருவரும் கூறார். அவர் ஒரு வரலாற்று ஆள் ஆவார். யூதர்கள், கிறிஸ்தவர்கள், முகமதியர்கள் ஆகியோரிடையே பெரிதும் மதிக்கப்படுகிறார். யூதர்களுக்கு அவர் அவர்களது இஸ்ராயேல் இனத்தைத் தோற்றுவித்தவராவார் (சங் 105:6; 2 நாள் 20:7, ஏச 41:8). அவர் இறைவனது நண்பர் (ஏச 41:8). முகமதியர்களுக்கு அவர், இறையொருமை வழிபாட்டைத் தோற்றியவர் அல்லது சீர்திருத்தியவர். அவர் கொரானின் 25-ஆம் சூராவில் பல விவரங்களுடன் குறிக்கப் பெறுகிறார்.

6. ஆபிரகாமின் சமயம்:- ஆபிரகாமோடு விவிலியத் திருவெளிப்பாடு தொடங்குகிறது. ஆபிரகாமின் சிறப்பும் முதன்மையும் இதில் அடங்கியிருக்கின்றன. ஆபிரகாம் இன்னும் மக்களால் நினைவு கூறப்படுகிறார் என்பதற்கு, அவரோடு இறைவன் பேசினார், அவரில் மீட்பு வரலாறு புதியதொரு தொடக்கம் எடுக்கிறது என்பதைத் தவிர வேறு காரணம் இருப்பதாகத் தெரியவில்லை. இதை ஐயுற்றால், யூத, கிறிஸ்துவ விசுவாச மரபையே ஐயுறுவதாகும். ஆபிரகாமுக்குக் காட்சியளித்த இறைவன் முதலில் ஒரு குடும்பக் கடவுளாகத் தோன்றுகிறார். இவரை ஆபிரகாம் யாவேய் என்ற பெயரில் அறியவில்லை; ''ஏல் சடாய்'' என்ற பெயரில் அறிந்திருந்தார். இப்பெயருக்கு ''யாவும் வல்லவர்'' என்றும், ''மலையில் வாழ்பவர்'' என்றும் பொருள் கொள்ளலாம். இவ்விறைவன் நீதியுள்ளவர், நேர்மையுள்ளவர், தீமைகளைத் தண்டிப்பவர், உலகின் அனைத்தின் மேலும் வல்லமையுள்ளவர்; ஆபிரகாமுக்குக் கானானை உடைமையாகக் கொடுப்பவர். வழிபடுவோர் அவரை எளிதில் அணுகலாம். அவர்களின் மன்றாட்டுக்குச் செவிமடுத்து அருளுவார். பலிக் காணிக்கைகளை ஏற்றுக் கொள்வார். தமது ஆற்றலி

லும் வாக்குறுதியிலும் மக்கள் நிபந்தனையற்ற விசுவாசம் கொள்ளவேண்டும்; அவருக்கு வழுவாப் பிரமாணிக்கமாய் இருக்க வேண்டும் என்று கோருவார், அவரும் பிரமாணிக்கம் தவறார். தாம் வாக்களித்ததை உறுதியாக நிறைவேற்றுவார். அவருக்குத் துணைவரோ, துணைவியரோ இல்லை. அவர் தானாகவுள்ளவர். தனிச்சிறப்புடையவர். ஒப்புவமையில்லாதவர். இப்படிப் பட்ட இறைவனை ஆபிரகாம் பல இடங்களில் பீடம் எழுப்பி வழிபட்டார். அவற்றில் சில, செக்கேம், பெத்தேல், கெபிரோன், மாமிரே, பெயேர்-செபா முதலியவையாகும்.

II. இறையியல் சிந்தனை

ஆபிரகாம் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களின் குலத்தலைவர். மீட்பு வரலாற்றில் சிறப்பிடம் வசிக்கிறார். இறைவன் இவரை அழைத்தது இறைத்திட்டத்தின் முதற்படியை மட்டும் தொடங்கி வைப்பதற்காக அன்று. அத்திட்டத்தின் அடிப்படைப் போக்கையே இவ்வழைப்பு தீர்மானிக்கிறது.

*1. ஆபிரகாம் அழைக்கப்படுதல்:-* ஆதியாகமம் ஆபிரகாம் வரலாறு பற்றிய வெறும் காலவரிசை முறையை மட்டும் தரவில்லை; ஒரு சமய நிகழ்ச்சியுரையையே வரைகிறது. அதில் முப்பெரும் மரபுகளின் அடிச்சுவடுகளைக் காணலாம். ''யாவே'' மரபு இறைவனுடைய ஆசீர்களையும், உறுதிமொழிகளையும் அழுத்திக் கூறுகிறது. ''எலோகீம்'' மரபு முழுவதும் சோதித்து அறியப்பட்ட குலத்தலைவர்கள் விசுவாசத்தையும், குருக்கள் மரபு உடன்படிக்கையையும், விருத்த சேதனத்தையும் அழுத்திக் கூறுகின்றன. இவற்றிலிருந்து ஆபிரகாம், இறைவனால் தேர்ந்தெடுக்கப்பட்டு, அவரால் ஈர்க்கப்பட்ட ஒரு பெரும் மனிதராகவும், எண்ணிக்கை கடந்த மக்களின் ஆசி பெற்ற தந்தையாகும்படி சோதனைகளை வென்றவராகவும் தோன்றுகிறார்.

*அ. ஆபிரகாம் இறைவனால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்:-* இறைவன் சுதந்திரமாய்த் தொடங்கும் செயலின் கீழ் ஆபிரகாமின் வரலாறு விரிகிறது. இறைவனே முதலில் தலையிடுகிறார். பல தெய்வங்களை வணங்கிய இனத்திலிருந்து (யோசு *24:2*) ஆபிரகாமை அவர் தேர்ந்தெடுக்கிறார்; அவரை ''ஊர்'' என்ற ஓர் ஊரிலிருந்து வெளியேறும் படிச் செய்கிறார் (ஆதி *11:30-31*). ஆபிரகாம் அறியாத நாட்டிற்கு அவரை இறைவன் இட்டுச் செல்கிறார் (எபி *11:8*). இறைவனின் இத்தொடக்கச் செயல் அன்பு நிறைந்தது. திகைக்கச் செய்யும் முறையில் தமது தாராளத்தை இறைவன் ஆபிரகாமிடம் தொடக்கத்திலிருந்தே காட்டுகிறார். ''நாம் உனக்களிப்போம்'' என்ற வாக்கு பல்லவி போல் மீண்டும் மீண்டும் வருவது இங்கு கவனிக்கத்தக்கது. இறைவன் ஆபிரகாமுக்கு நாடளிப்பார் (ஆதி *12:7; 13:15* தொ; *15:18; 17:8*); அவரை ஆசீர்வதிப்பார்; அவரது சந்ததியைப் பெருக்குவார் (*12:2; 16:10; 22:17*). ஆனால் சூழ்நிலையோ இவற்றிற்கு மாறாக உள்ளது. ஆபிரகாமோ ஒரு நாடோடி. சாரா பிள்ளைபெறும் காலத்தைக் கடந்தவளாக இருக்கிறாள். இச்சூழ்நிலைகள் இறைவாக்குறுதியின் கைம்மாறு கருதாக் கொடைத் தன்மையை மேலும் எடுத்துக் காட்டுகின்றன. ஆபிரகாமின் வருங்காலம் முழுவதும் இறைவனுடைய ஆற்றலையும் நன்மைத் தன்மையையும் சார்ந்து இருக்கிறது. இவ்வாறு எந்த முன் தகுதியுமின்றித் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களினத்தைத் தம்முள்ளே அடக்கியுள்ளார் ஆபிரகாம். கடவுள் அவரிடமிருந்து அச்சத்திற்கு அப்பாற்பட்ட ஆழ்ந்த விசுவாசத்தையும், தம்முடைய திட்டத்தைத் தயக்கமின்றி ஏற்றுக் கொள்ளும் தன்மையையும் எதிர்பார்க்கிறார்.

*ஆ. ஆபிரகாம் சோதிக்கப்படுதல்:-* இவ்விசுவாசம் சோதனைகளால் புடம்போட்டுத் தூய்மையாக்கப்பட்டு உறுதிப்படுத்தப்பட வேண்டியிருந்தது. இறைவனின் வாக்குறுதி ஈசாக்கின் வழியாகத்தான் செயல்பட வேண்டும். ஆனால் அவனையே பலியாக ஒப்புக் கொடுக்கும்படி கேட்டு ஆபிரகாமைத் தேர்ந்து தெளிகிறார் இறைவன். ஆபிரகாம் தம் ''ஒரே மகனையும் பலியிடத்'' தயங்க

வில்லை; மறுக்கவில்லை (ஆதி 22:1 தொ; 22:12.16) (கானானியர் வழிபாட்டில் குழந்தைகளைப் பலியிடுதல் வழக்கில் இருந்தது என்று அறிகிறோம்). ஆனால் இறைவனே ஈசாக்கைப் பாதுகாக்கிறார்; அவரே தகனப் பலிக்கு ஓர் ஆட்டுக் கிடாயையும் அளிக்கிறார் (ஆதி 22:8.13 தொ.). இவ்வாறு ஆபிரகாமின் ''தெய்வ பயமும்'' இறைப்பற்றும் வெளிப்படுகின்றன (22:12). அதே சமயத்தில் இறைவன், தம் திட்டம் சாவை நோக்கியதன்று, மாறாக வாழ்வை நோக்கியதென்று வெளிப்படுத்துகிறார். ''அவர் வாழ்வோரின் அழிவைக் கண்டு மகிழ்பவரல்லர்'' (ஞான 1:13; உப 12:31; எரே 7:31). சாவும் ஒரு நாள் வெல்லப்படும். அப்போது ''ஈசாக்கின் பலி'' ஓர் இறைவாக்குக் காட்சியாகத் தோன்றும் (எபி 11:19; 2:14-17; உரோ 8:32).

இ. ஆசீர் பெற்ற தந்தை ஆபிரகாம்:- ஆபிரகாமின் கீழ்ப்படிதலால் இறைவாக்கு மேலும் உறுதி செய்யப்படுகிறது (ஆதி 22:16 தொ). அதை எய்துதல் அப்போது அவருக்கு அரைகுறைப் படிவமாகத் தோன்றியது. ''ஆபிரகாம் எல்லாக் காரியங்களிலும் ஆண்டவரால் ஆசீர்வதிக்கப்பட்டார்'' (ஆதி 24:1). ''மகிமையில் அவருக்குச் சரியொத்தவர் ஒருவரையும் கண்டதில்லை'' (சீரா 44:20). தந்தையாக ஆபிரகாம் அழைக்கப்பட்டது அவரது தனிப்பட்ட நலனுக்கன்று; அவரது மகிமை அவரது சந்ததியாகும். குருக்கள் மரபுப்படி அபிராமிலிருந்து ஆபிரகாமாகப் பெயர் மாற்றப்படுதல் இக்கருத்தைத் தெளிவுபடுத்துகிறது. ஏனெனில் புதுப் பெயர்'' அனேக மக்களின் தந்தை'' என்று மொழி பெயர்க்கப்படுகிறது (ஆதி 17:5) ஆபிரகாமின் ஊழ் பெரும் விளைவுகளைக் கொண்டதாகும். இறைவன் தாம் செய்யப் போகிறதை அவருக்கு மறைக்காததால், அழிவுக்கு அளிக்கப்பட்ட நகரங்களுக்காகப் பரிந்து பேசுவதை ஏற்கெனவே தமது கடமையாக ஏற்றுக் கொள்கிறார் (18:16-33) குலத் தலைவர். இக்குலத் தலைமை தனதாற்றலை இன்னும் விரிவுபடுத்தும்; அது எல்லா மனிதரையும் ஆதரிக்கும்: ''எல்லா இனத்தாரும் உன் சந்ததிக்குள் ஆசிர்வதிக்கப்படுவர்'' (22:18). இவ்விறைவாக்கைத் தியானித்து, யூத மரபு அதிலே ஆழ்ந்த பொருளைக் கண்டது: ''அவரது சந்ததிக்குள் எல்லா இனத்தாரையும் ஆசிர்வதிப்பதாக வாக்குறுதி கொடுத்தார்'' (சீரா 44:23).

இவ்வாறு பாவம் செய்த மனுக்குலத்தின் ஊழ் ஆதாமில் வரையப்பட்டால், மீட்கப்பட்ட மனுக்குலத்தின் ஊழ் ஆபிரகாமில் வரையப்படுகிறது.

2. ஆபிரகாமின் வழித்தோன்றல்கள்:-

அ. இறைவனின் பிரமாணிக்கம்:- ஆபிரகாமுக்கு அளிக்கப்பட்ட வாக்குறுதிகள் அவரது வழித் தோன்றல்களுக்கும் அளிக்கப்படுகின்றன (ஆதி 13:15; 17:7 தொ). இவ்வுறுதிகளை இசுமயேலுக்கல்லாமல் ஈசாக்குக்கும், ஏசாவுக்கல்லாமல் யாக்கோபுக்கும் (17:5-22; 21:8-14:27; காண் உரோ 9) இறைவன் புதுப்பிக்கிறார் (ஆதி 26:3 தொ; 28:13 தொ). அவர்களும் அவ்வாக்குறுதிகளை ஒரு குடும்பச் சொத்தாக, அவர்கள் வழித்தோன்றல்களுக்கு அளிக்கின்றனர் (28:4; 48:15 தொ; 50:24). ஆபிரகாமின் புதல்வர்கள் எகிப்தில் துன்புற்றுப் புலம்பிய போது, அவர்களின் கூக்குரலுக்கு இறைவன் செவி சாய்த்தார். ஏனெனில் அவர், ''ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு என்பவர்களுடன் செய்திருந்த உடன்படிக்கையை நினைவு கூர்ந்தார்'' (யாத் 2:23 தொ; காண் உப 1:8). ''தம் திருவாக்கை அவர் நினைவு கூர்ந்தார். தம் ஊழியன் ஆபிரகாமுக்குச் சொன்னதை அவர் மறக்கவில்லை. பெரும் மகிழ்ச்சியிடையே தம் மக்களை வெளியேற்றினார்'' (சங் 105:42 தொ). அவர்கள் நாடு கடத்தப்பட்டு அவதியுற்ற காலத்தில் ''நம் அன்பன் ஆபிரகாமின் வழித்தோன்றல்'' என்று அவர்களை அழைத்து அவர்களுக்கு ஆறுதல் கூறுகிறார் ஆண்டவர் (ஏச 41:8).

இன்னல்கள் மிகுந்து இஸ்ராயேல் அழிந்து போகும் நிலையில் இருந்தபோதும் இறைவாக்கினர் ஆபிரகாமின் அழைப்பை மக்களுக்கு நினைவுபடுத்தி அவர்களிடையே நம்பிக்கையை ஏற்படுத்துகின்றனர்,

ஊக்குவிக்கின்றனர். ''நீங்கள் எந்தப் பாறை யினின்று செதுக்கப்பட்டீர்களோ, எந்தக் குழியினின்று வெட்டி எடுக்கப்பட்டீர்களோ அவற்றைச் சிந்தித்துப் பாருங்கள். உங்கள் தந்தை ஆபிரகாமையும், உங்களைப் பெற்ற சாராவையும் நினைத்துப்பாருங்கள்'' (*ஏச 51:1 தொ; காண் 29:22; நெக 9:7 தொ*). இறைவனிடம் நன்மை பெற, ஆபிரகாமின் பெயரால் அதைக் கேட்பது உயர்ந்த மன் றாட்டாகக் கருதப்பட்டது: ''நீர் ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு ஆகிய உம் ஊழியர் களை நினைத்தருளும்'' (*யாத் 32:13; உப 9:27; 1 அர 18:36*). ''ஆபிரகாமுக்கு நிலை யான அன்பையும் காட்டியருளும்'' (*மீக் 7:20*).

ஆ. ஊன் வழி மகனாதல்:- குலத்தலை வர்க்கு உண்மையான வாரிசாக இருப்பதற்கு அவருடைய உடல்வழி வாரிசாக இருப்பது மட்டும் போதாது; அது பயன் தராது. ஆன் மீக முறையில் அவரைச் சார்ந்திருத்தல் மிகத் தேவை. இவ்வாரிசுகள் இறைவனுக்குச் சீரிய முறையில் பணிந்திருக்காவிடில் அவர் கள் கொள்ளும் நம்பிக்கை போலித்தன்மை மிக்கதாகும்; பயனற்றதாகும். எசக்கியேல் தமது கால மக்களுக்கு இதை எடுத்துக் கூறுகிறார் (*எச 33:24-29*). இறைத் தீர்ப்பைப் பறைசாற்றும்போது திரு முழுக்க யோவான். உடலால் வரும் உறவாகிய தவ றான கருத்தைக் கடுமையாகக் கண்டிக்கி றார்: ''ஆபிரகாமே எங்களுக்குத் தந்தை'' என்று சொல்லிக் கொள்ளத் துணிய வேண் டாம். இக்கற்களிலிருந்தும் ஆபிரகாமுக்கு மக்களை எழுப்பக் கடவுள் வல்லவர் என்று உங்களுக்குக் கூறுகிறேன்'' (*மத் 3:9*). உவ மையில் வரும், தன்னையே மையமாகக் கொண்டு வாழ்ந்த பணக்காரன் ''தந்தை ஆபிரகாமே'' என்றழைத்தலில் பயனே யில்லை (*லூக் 16:24 தொ*). அவர்களிடையே ஒரு பெரிய பாதாளம் இருக்கிறது. இதே முறையில் நான்காம் நற்செய்தியும் சான்று கூறுகிறது: யூதர்கள் ஆபிரகாமுக்குச் சந்ததி வழி மக்களாயிருப்பினும், உண்மையில் அலகையின் மக்களாக மாறிவிட்டனர் என் பதை அவர்கள் செய்யும் கொலைத் திட் டத்தை வெட்ட வெளிச்சமாக்கும்பொழுது இயேசு தெளிவாக எடுத்துக் காட்டுகிறார் (*யோவா 8:37-44*); பிரமாணிக்கம் இல்லை யேல் உடல் அளவில் மகனாயிருப்பதால் பயனேயில்லை.

இ. விசுவாசமும் செயல்களும்:- இப்பிர மாணிக்கம் உண்மையானதாய் இருக்க வேண்டும் என்றால், மற்றொரு தவறான போக்குத் தவிர்க்கப்பட வேண்டும். ஆபிரகா மின் கீழ்ப்படிதலும் (*நெக 9:8; சீரா 44:20*), சோதனையில் அவரது வீரமும் (*1 மக் 2:52; ஞான 10:5-6*) காலம் காலமாய் அவரது சிறப்புக்களாய்க் கூறப்படுகின்றன. இதைப் பின்பற்றிச் சில யூத குழுக்கள் இப்பண்பு களை மிகுதியாய் மதிப்பீடு செய்தனர். மனித செயல்களில் மிக நம்பிக்கை கொண்ட னர். சட்டத்தை நுணுநுணுக்கமாகக் கடைப் பிடிப்பதை அழுத்திக் கூறினர். இறைவ னைச் சார்ந்திருப்பதுதான் மிகத் தேவை என்பதை மறந்தனர்.

தன் செயல்களிலே நம்பிக்கை கொள்ளும் இந்த அகந்தை மிக்க போலித்தனம் பரிசே யன், ஆயக்காரன் உவமையில்சிறப்பாக எடுத்துக் காட்டப்பட்டு மறுத்துக் கூறப்படு கிறது (*லூக் 18:9-14*); பவுலால் முழுவதும் தகர்த்தெறியப்படுகிறது. ''ஆபிரகாம் கட வுளை விசுவாசித்தார், அது அவருக்கு நீதி யாக எண்ணப்பட்டது'' என்ற ஆதி 15:6-இல் உள்ள கூற்றை அடிப்படையாகக் கொண்டு பவுல் மீட்பின் அடிப்படை, செயல்கள் அல்ல, விசுவாசமே என்று எண்பிக்கிறார் (*கலா 3:6; உரோ 4:3*). மனிதன் தன்னையே மகிமைப்படுத்தக் கூடாது; தன்னிலே பெருமை பாராட்டக் கூடாது. ஏனெனில் எல்லாம் தகுதிபெறாமலே, நன்கொடையாக இறைவனிடமிருந்து மனிதனுக்கு வருகின் றன (*உரோ 3:26-29; 4:1-4*). நாம் செய்யும் எச்செயலும் இறைவனின் நன்கொடையை முந்துவதில்லை. எல்லாச் செயல்களும் இறைவனது நன்கொடையின் விளைவேயா கும். ஆபிரகாமின் வாழ்வில் இவ்வருள் பயன்பெறாமல் போகவில்லை. அதுபோல் இவ்வருள் ஒருபோதும் நமக்கும் பயன்

இல்லாமற்போகாது என்று நாம் உறுதி கொள்ளலாம் (கலா 5:6; காண் 1 கொரி 15:10). இதையே யாக்கோபும் எடுத்துக் கூறுகிறார் (யாக் 2:20-24; காண் எபி 11:8-19).

ஈ. உண்மையான வழித்தோன்றல்கள்:- ஆகவே தீர்மானமாக, ஆபிரகாமின் உண்மை யான பிள்ளையாய் இருப்பது யார்? அவரு டைய மகனான (மத் 1:1), அவரிலும் மேலான இயேசு கிறிஸ்துவே (யோவா 8:53). குலத்தலைவரின் வழித் தோன்றல்க ளில் எல்லாம் இவருக்கு மட்டும்தான் இறை வாக்குறுதி அளிக்கும் மரபுரிமை நிறையள வில் வந்து சேர்கிறது. மற்றெல்லாரையும் விட இவர்தான் ஆபிரகாமின் உண்மையான வழித் தோன்றல் (கலா 3:16). உண்மையில் இயேசுவின் வருகைக்காகவே தான் அழைக் கப்பட்டது முதல் ஆபிரகாம் உழைத்தார். அவருக்கு அளிக்கப்பட்ட பேற்றின் வழி யாக அவ்வருகை நாளைக் காண்பதுவே அவருடைய பெரும் மகிழ்ச்சி (யோவா 8:56; காண் லூக் 1:54 தொ. 73).

இந்த ஒரே வழித் தோன்றலின் மேல் வாக்குறுதியை முழுவதும் ஒருங்கு குவித் தல், அதை வரையறை செய்வதற்கு அன்று. மாறாக அதை யாவர்க்கும், எல்லாவற்றிற் கும் உண்மையான முறையில் இறைவனின் திட்டப்படி உரியதாக்குவதற்கு அது ஒரு நிபந்தனையாகும் (கலா 4:21-31; உரோ 9-11). விருத்த சேதனம் பெற்றவரோ, பெறா தவரோ, இஸ்ராயேலரோ புற இனத்தவரோ, கிறிஸ்துவில் விசுவாசம் கொள்பவர்கள் யாவரும் ஆபிரகாமின் ஆசீர்களில் பங்கு கொள்ளலாம் (கலா 3:14). அவர் விசுவாசித் தார்; அப்போதிலிருந்து ''விசுவாசிக்கிற யாவர்க்கும் அவர் தந்தையானார்'' (உரோ 4:11 தொ). கிறிஸ்துவில் விசுவசிப்போரின் விசுவாசம் அவர்களை அவருடைய ஆன்மீக வழித்தோன்றல்களாக ஆக்குகிறது. ''கிறிஸ்து இயேசுவுக்குள் நீங்கள் அனைவ ரும் ஒருவரே. நீங்கள் கிறிஸ்துவுக்கு உரிய வர்களாயின், ஆபிரகாமின் வழிவந்தவர்க ளாய் இருக்கிறீர்கள். வாக்குறுதியின்படி உரி மையாளர்களாய் இருக்கிறீர்கள்'' (கலா 3:28 தொ).

விவிலிய வெளிப்பாடு இவ்வாறு உச்ச நிலை அடைகிறது. இறை ஆவியின் சொல் லாக உருவெடுக்கிறது. இதுவே குலத்தலை வராகிய ஆபிரகாமுக்கு அறிவிக்கப்பட்ட ''மிகச் சிறந்த பரிசு'' (ஆதி 15:1) பற்றிய இறுதிச் சொல்லுமாகும். அவருடைய தந் தைத் தன்மை விண்ணகத்துக்குத் தேர்ந்தெ டுக்கப்பட்ட அனைவருக்கும் உரியதாக விரி வடைகிறது. விசுவாசிகளின் இறுதியான இல்லம் ''ஆபிரகாமின் அருகாமையாகும்'' (லூக் 16:22). ஆன்மாக்கள் அங்கு செல்லத் தான் இறந்தோர்க்கான திருவழிபாட்டில் ஏங்கி வேண்டுகிறோம்.

ஆபேல் (ABEL - மூச்சு நிலையில்லாதது, வீணாவது) - ஆள்

ஆதாம் ஏவாளின் இரண்டாம் புதல்வர். இப்பெயருக்கு மூச்சு நிலையற்றது, வீணா னது என்று பலவாறு பொருள் கூறலாம். ஏவாள் தன் முதல் மகன் காயினின் பெய ருக்கு விளக்கம் அளிக்கிறாள். ஆனால் இரண்டாம் மகன் பெயருக்கு விளக்கம் அளிக்கவில்லை. இப்பெயர் மகன் என்று பொருள்படும் அப்லு என்ற அக்கேதியப் பெயரிலிருந்து வந்திருக்கலாம்.

ஆதியாகம விவரிப்புப்படி (4:1-16) காயின் நிலத்தைப் பயிரிட்டார். ஆபேல் ஆடு மேய்ப்பவர் ஆனார். காயின் தன் விளைச்சலின் பலனையும், ஆபேல் தன் மந்தையின் தலையீற்றுக்களில் மிகக் கொழுத்த ஆடுகளையும் ஆண்டவருக்குக் காணிக்கையாகச் செலுத்தினர். ஆண்டவர் ஆபேலையும் அவரது காணிக்கைகளையும் ஏற்றுக் கொண்டார். காயினையோ அவர் காணிக்கையையோ அவர் கண்ணோக்க வில்லை. இது காணிக்கைகளில் அடிப்படை வேறுபாடு இருந்தது என்றோ, அக்காலத் தில், விலங்குப்பலி, தானியப் பலியைவிட ஆண்டவருக்கு அதிக ஏற்புடையதாக இருந் ததாகவோ காட்டவில்லை. ஆண்டவர் தனது காணிக்கையை ஏற்காததைக் கண்ட

காயின் சினமுற்றார். பொறாமை கொண்டார். ஆண்டவர் எச்சரித்திருந்தும் (4:6-7) திட்டமிட்டு ஆபேலை வயல் வெளியில் கொன்றார். அதற்குரிய தண்டனை பெறுகிறார். ஆயினும் காயினுக்குப் பாதுகாப்பு அளித்து, அவரை யாரும் கொல்லாதபடிக்கு ஓர் அடையாளம் அளிக்கிறார் (4:15).

முதல் கொலை பற்றிய இந்தக் கதை, முதல் பெற்றோரின் வீழ்ச்சிக்குப்பின் மனுக்குலம் படிப்படியாக ஒழுக்கத்தில் சீர்கெட்டது என்ற விவரிப்பைத் தொடங்கி வைக்கிறது. இச்சீர்கேடு பெரு வெள்ளத்திற்கு இட்டுச் செல்கிறது. இக்கதை உழவர்களுக்கும் நாடோடித்தன்மையுடைய இடையர்களுக்கு மிடையே நிலவிய பகைமைப் போக்கைப் பிரதிபலிக்கிறது. இக்கதை இடையர்களுக்குச் சார்பாக இருக்கிறது. ஆபேல்தான் முதற் பலி செலுத்துகிறவர் ஆகிறார்.

நீதிமான் ஆபேல் துன்புறுகிறார் என்ற கருத்தை அடிப்படையாய்க் கொண்டு இக்கதை மனித இனத்தின் முதல் தலைமுறையிலேயே நடந்ததாகக் கூறப்படுகிறது. மனிதர்களின் சில அடிப்படைக் குணங்களை ஆதாரமாகக் கொண்டு, நீதி புகட்டும் பாணியில் இக்கதை அன்றாடச் சூழ்நிலையில் புனையப்பட்டிருக்கிறது. ஒரே தாயின் பிள்ளைகள் என்றாலும் காயினின் உள்ளத்துப் புகைந்து கொண்டிருந்த பகை ஆபேலைக் கொல்லச் செய்கிறது. இங்குப் பலியிடப்பட்ட பொருள்கள் முக்கியமல்ல, பலியின் நோக்கமும் முறையுமே முக்கியம். உள்ளத்தூய்மையை இக்கதை வலியுறுத்துகிறது. ஆபேல் நீதிமான்களின் மாதிரிப் படிவமாய் உள்ளார். இறைவனுக்கு ஏற்ற முறையில் நடக்கிறார். ஆனால் தீயோனாகிய காயினோ நீதிமானுக்கு விரோதமாக எழுந்து அவரைக் கொன்று போடுகிறார். அதனால் ஒதுக்கித் தள்ளப்படுகிறார் (சங் 10:9-11). இது ஒரு பொது விதி. ஆதியிலிருந்தே ஆபேல் முதல் அனைத்து நீதிமான்களின் இரத்தம் நீதி வேண்டி இறைவனை நோக்கிக் கூக்குரலிடுகிறது (ஆதி 4:10).

ஆதியாகமத்திற்குப் புறம்பே, பழைய ஏற்பாட்டில் ஆபேலின் பெயர் குறிக்கப்படவில்லை. புதிய ஏற்பாட்டில் ஆபேல் முதல் வேத சாட்சியாகவும் கிறிஸ்துவுக்கு மாதிரியாகவும் விளங்குகிறார் (மத் 23:35; லூக் 11:51; 1 யோவா 3:12) அவரது சாவு பாவத்திற்குச் சாட்சியாகவும், விசுவாசத்திற்குச் சான்றாகவும் உள்ளது (எபி 11:4). கிறிஸ்துவின் மரணத்திற்கு ஆபேலின் மரணம் ஒரு முன் மாதிரிகையாகும் (12:24).

நீதிமான்களை வாழவிடாத இந்தப் பாழுலகின் பொதுவிதிக்கு இயேசு விலக்கன்று. அவரும் இவ்விதிக்குப் பலியானார். தூயவரும் 'நீதிமானுமாகிய' (அ.ப. 3:14) அவரை அவர் இனத்தாரே கொன்றார்கள். இதுதான் உலகின் மிகப் பெரிய குற்றம். ''இவ்வாறு குற்றமற்ற ஆபேலுடைய இரத்தம் முதல், ஆலயத்திற்கும் பீடத்திற்கும் இடையே கொல்லப்பட்ட செக்கரியாவின் இரத்தம் வரை சிந்திய மாசற்ற இரத்தத்தின் பழி எல்லாம் இந்தச் சந்ததியின் மேல் விழும்'' (மத் 23:35 தொ). இப்படிப்பட்ட இருள் கவிந்த சூழ்நிலையில் இயேசுவின் சாவுக்கு யூதத்தலைவர்கள் மட்டுமல்ல, உலக மாந்தர் அனைவருமே பொறுப்பு. ஏனெனில் எட்டுத்திக்குகளிலும் குற்றமற்றவர்கள் கொல்லப்படுகின்றனர். அவர்களது இரத்தம் இரத்தப்பழிக்காகக் கதறுகிறது (திருவெளி 16:16; 18:24). என்றாலும் ஆபேலின் இரத்தத்தைவிட உயர்ந்த உன்னதமான மற்றொருவரின் இரத்தம் இறைவனின் மன்னிப்புக்காக மன்றாடுகிறது (எபி 12:24). அதுதான் கிறிஸ்துவின் புனிதப்படுத்தும் இரத்தம். ''தந்தையே அவர்களை மன்னியும், ஏனெனில் தாங்கள் செய்கிறது இன்னதென்று அவர்களுக்குத் தெரியவில்லை'' (லூக் 23:24). ஆக, ஆபேல் என்ற நீதிமானின் சாவினால் உருவான சூழ்நிலையைத் துன்புறும் நீதிமானாகிய இயேசு முற்றிலும் மாற்றுகிறார். ஆனால் ஈரமும், அன்புமில்லாத இதயம் கொண்ட காயினைப் போலன்றி (1 யோவா 3:12), ஆபேல் நேர்மைக்கும் நீதிக்கும் இட்டுச் செல்லும் விசுவாசத்தின் கலங்கரை விளக்கமாகத் திகழ்கிறார். அதனால்தான் இறந்தும்

ஆபேல் இன்னும் நம்மோடு உரையாடுகிறார் (எபி 11:4).

**ஆபேல்** (ABEL) - இடம்

1. இது பேத்து-செமேசுக்கு அருகிலுள்ள இடம். இங்குதான், இஸ்ராயேலரிடமிருந்து கைப்பற்றிய பெட்டகத்தைப் பெலிஸ்தியர்கள், அதை அவர்களிடம் திருப்பிக் கொடுத்தனர். இந்த இடம் பெரிய ஆபேல் என்று அழைக்கப்படுகிறது (1 சாமு 6:18).

2. ஆபேல் பேத்துமாக்காவின் மற்றொரு பெயர் (2 சாமு. 20:18).

**ஆபேல்-கெராமிம்** (ABEL-KERAMIM - திராட்சைத் தோட்ட நிலம்)

இந்த இடம் அம்மோனியருக்கு எதிராக நடத்தப்பட்ட போரில் இபிதாகால் கைப்பற்றப்பட்ட நகரங்களில் ஒன்று (நீதி 11:29-33). சில அறிஞர்களின் கருத்துப்படி இது அம்மானிலிருந்து 14 கி.மீ. தொலவில் உள்ள நாகூர் என்ற இக்கால நகரமாகும்.

**ஆபேல் சித்திம்** (ABEL-SHITTIM - புல்வெளி, வேலமர ஓடை)

இது பாலைவனத்தில் அலைந்து திரிந்து முடிவில், இஸ்ராயேலர் கூடாரம் அடித்துத் தங்கிய இடமாகும் (எண் 33:49). இது யோர்தானுக்குக் கிழக்கில், மோவாப் நாட்டில் உள்ளது. இந்த இடம் சாதாரணமாக சித்திம் என்றழைக்கப்படும். காண்க: சித்திம்-1.

**ஆபேல்-பேத்து-மாக்கா** (ABEL-BETH-MAACAH - மாக்கா வீட்டின் புல்வெளி, கொடுமை வீட்டின் புல்வெளி)

இது வட அரசாகிய இஸ்ராயேல் நாட்டில் மிகவும் உறுதியான மதிற்சுவர்களால் பாதுகாக்கப்பட்ட நகர் ஆகும். இங்குதான் பிக்கிரியின் மகன் சேபா அடைக்கலம் புகுந்து பின்னர் தாவீதுக்கு எதிராக நடைபெற்ற கலகத்தில் வெட்டப்பட்டார் (2 சாமு 20:14-18). பாசா ஆட்சி காலத்தில் (கி.மு. 9-ம் நூற்றான்டின் தொடக்கம்) தமஸ்குநாட்டின் பென் - அதாத்தினால் கைப்பற்றப்பட்டது (1 அர 15:20; 2 நாள் 16:4). 2 அர 15:20-இன் படி 3-ம் தெகிலாத்து பிலேசர், பெக்கா காலத்தில் இந்நகரை கைப்பற்றினார் (கி.மு. 733). இந்த இடம் அசீரிய வாசகத்தின் அபிலாக்கா எனப்படுகிறது.

இந்நகரை தேல்-அபில் என்ற திட்டை அடையாளமாகக் காட்டலாம். இந்தத் திட்டு கூலே ஏரிக்கு வடக்கே 18 கி.மீ. தொலைவில் உள்ளது. யோர்தானின் தோற்றுவாய்களில் ஒன்றான நகர்-கஸ்பானியின் கிளையாறான நகர்-பரேய்கித்தை ஒட்டியுள்ளது. மிகச் செழிப்பான இடம் ஆகும். ''நீர் நிலைப் புல் வெளி'' என்று பொருளுள்ள ஆபேல் மாயீம் என்ற இவ்விடத்தின் மற்றொரு பெயர் இதற்குப் பொருத்தமானதாகும். 2 சாமு 20:19-இல் வரும் ''இஸ்ராயேலின் தலைநகர்'' என்ற சிறப்புப் பெயர் அதன் அதிகாரத்தின் கீழ் மற்ற சிற்றூர்கள் அல்லது நகர்கள் இருந்தன என்பதைச் சுட்டுகிறது.

யூதித் 7:3-இல் வரும் பால்பாயிம் என்ற பெயரும் இவ்விடத்தைக் குறிக்கும்.

**ஆபேல் மாயிம்** (ABEL-MAIM - நீர்நிலைப் புல்வெளி)

ஆபேல்-பேத்து-மாக்காவின் மற்றொரு பெயர் (2 நாள் 16:4).

**ஆபேல் மிசுராயிம்** (ABEL-MIZRAIM - எகிப்தின் புல்வெளி)

ஆதாது என்னும் பெயருடைய இடத்திற்கு மற்றொரு பெயராகும். யோர்தான் கரையிலுள்ள இடமாகும். எகிப்திய மேலாளர்கள், பெரியோர் ஆகியோருடன், இங்கு வந்து, யோசேப்பு தனது தந்தை யாக்கோபுக்கு இழவு கொண்டாடினார் (ஆதி 50:7-11). ''யோர்தானுக்கு அக்கரையில்'' (50:10), ''கானான் நாட்டிற்குள் கொண்டு போய்'' (50:13) என்ற குறிப்புகளை வைத்து சில அறிஞர்கள் இந்த இடம் யோர்தானுக்குக் கிழக்கில் சாக்கடலுக்கு வடக்கில் இருந்தது என்பர். காண்க: ஆதாது.

**ஆபேல்-மெகோலா:** (ABEL-MEHOLAH - நடனமாடும் புல்வெளி)

யோர்தானுக்குக் கிழக்கேயுள்ள ஒரு நகர். பழைய ஏற்பாட்டில் இந்நகர் மூன்று முறை நேரடியாகக் குறிப்பிடப்படுகிறது. நீதிபதிகள் வாழ்ந்த காலத்தில்தான் முதன் முறையாய், இப்பெயர் குறிப்பிடப்படுகிறது. மிதியான் நாட்டினர் இசிரியேல் பள்ளத்தாக்கில் கிதையோனால் இரவில் திடீரென்று தாக்கப்பட்டு செரேரா வழியாக ஆபேல் மெகோலா மேட்டுப் பீடபூமிக்கரை வரை தப்பி ஓடினர் *(நீதி 7:22).*

சாலமோன் ஆட்சிக் காலத்தில், ஆபேல்-மெகோலா ஐந்தாவது அரச மாவட்டத்தின் கிழக்கு ஓரத்தில் இருந்தது. இந்த மாவட்டம் பேத்துசானை ஒட்டி யோர்தானின் இருபக்கமும் பரவியிருந்தது. இந்த மாவட்டம் பானாவுக்கு உரிமையாக்கப்பட்டிருந்தது *(1 அர 4:12).*

இந்த இடம் எலிசாவும், அவரது தந்தையும் வாழ்ந்த இடமாகும். எலியா ஓரேபு மலையிலிருந்து திரும்பியபோது உழுது கொண்டிருந்த எலிசாவையும் அவரது ஊழிர்களையும் கண்டார். எலியா எலிசாவிடம் சென்று தம் போர்வையை அவர்மேல் போட்டார். எலிசாவும் இந்த அடையாளத்தை இறைவாக்குரைக்க ஓர் அழைப்பாக ஏற்றுக் கொண்டார் *(1 அர 19:16.19-20).*

*1 சாமு 18:19; 2 சாமு 21:8*-இன்படி, சவுலின் புதல்வியருள் ஒருத்தியும், மேராபின் இரண்டாம் மனைவியுமான அதிரியேல் ஆபேல்-மெகோலாவில் வாழ்ந்து வந்தாள்.

இந்த இடத்தை இப்போது அடையாளங் காட்டுவதில் அறிஞர்களிடையே கருத்து வேறுபாடு உண்டு. எரோனிமு மற்றும் யூசேபியு ஆகியோரைப் பின்பற்றி கெனசரேத்து கடலுக்கும், சாக்கடலுக்கும் நடுவிலுள்ள தேல் அபுசிப்ரியை இந்த இடத்திற்கு அடையாளம் காட்டுவர். இது யோர்தானுக்கு மேற்கிலுள்ள இடமாகும். வேறு சிலர் யோர்தானுக்குக் கிழக்கில் ஏல்யாபிஸ் என்ற ஓடையின் கரையிலுள்ள தேல்-ஏல்-மக்லப்-ஐ அடையாளம் காட்டுவர்.

**ஆப்பிஸ்** *(APIS)*

பூர்வீக வரலாற்றுக் காலத்திலிருந்து எகிப்தியர்களால் மெம்பிசு என்னும் இடத்தில், இனப்பெருக்க வளமையின் பொது கடவுளாக வணங்கப்பட்ட புனித எருது ஆகும். இது முதன்மையாக தா என்ற கடவுளின் வெளிப்பாடாக இருந்தாலும், இது தன்னுடைய இனப்பெருக்கச் செயலால், கிரேக்க-உரோமையர் காலத்தில் ஓசைரிஸ் என்ற கடவுளுடன் நெருங்கிய தொடர்புடையதாகவும், ஓசைரிஸ்-ஆப்பிஸ் அல்லது செராப்பிஸ் என்ற பெயருடன் ஓசைரிசின் உரு என்றும் கருதப்பட்டது. இந்த அடையாள எருதானது இந்த வழிபாட்டை நடத்திய குருவால் மிகுந்த கவனத்துடன் தேர்ந்தெடுக்கப்பட்டது. அது உயிரோடு இருந்தபோது இறைவணக்கத்துக்குரிய மரியாதையுடன் நடத்தப்பட்டது. அது இறந்த பிறகு கெடாமல் பதப்படுத்தப்பட்டு இதன் அடக்கத்திற்காக எகிப்தில் ஒதுக்கப்பட்டிருந்த பல இடங்களில் தேர்ந்தெடுக்கப்பட்ட ஓர் இடத்தில் புதைக்கப்பட்டது.

**ஆப்பியன் வழி; சாலை** *(APPIAN WAY)*

உரோமையிலிருந்து காப்புவா வழியாக பிரன்திசியத்திற்குச் சென்ற ஒரு உரோமை நெடுஞ்சாலை; இரண்டாவது மிகப் பழைய சாலை.

இந்த வழி அப்பியு கிளாதியு சேக்குஸ் என்ற தணிக்கை அதிகாரியால் கி.மு. 312-இல் கட்டப்பட்டது. அதனால் இப்பெயர் பெற்றது. இது முதலில் காப்புவா வரையில்தான் போடப்பட்டது. ஆனால் அதற்கு அடுத்த நூற்றாண்டில் அதிரியாக் கடலில் உள்ள துறைமுகமான பிரண்திசியம்வரை நீட்டிவிடப்பட்டது. இங்கிருந்து எக்னேசியன் சாலையின் மேற்கு முடிவான எப்பிராசுக்குக் கப்பல்கள் செல்லலாம். 536 கிலோ மீட்டர் நீளமுள்ள ஆப்பியன் சாலை இத்தாலியின் இரு கரைகளையும் இணைத்தது. இத்தாலியின் ஒருமைப்பாட்டிற்கு அவசியமானதாய் விளங்கியது. கிழக்குத் திசை வணிகத்திற்கும் பெரிதும் உதவியது. பிரண்திசியம் ஆப்பியன் சாலையின் முடிவு என்றும்,

அந்த வழியின்மேல் காப்புவா உள்ளது என்றும் ஸ்ட்ரபோ அடிக்கடி சொல்கின்றார். ஸ்தேசியஸ் இதை நன்கு பயன்பட்ட சாலை என்றும் ''நீண்ட சாலைகளின் அரசி'' என்றும் அழைக்கின்றார்.

நெயாப்போலிஸ் வளைகுடாவிலுள்ள புத்தயோலி துறைமுகத்தை அடைந்த பவுல் (அ.ப.28:13) அங்கிருந்து 32 கிலோ மீட்டர் தொலைவிலிருந்த காப்புவாவில் அப்பியன் சாலையை அடைந்திருக்கவேண்டும். அங்கிருந்து 212 கி.மீ. தொலைவிலிருந்த உரோமைக்கு இச்சாலைவழியாகச் சென்றிருக்க வேண்டும். இது, அப்பியன் சந்தை, மூன்று விடுதி வழியாகச் சென்றது. இந்த வழியாகச் பவுல் பயணம் செய்தபோது, உரோமைத் திருச்சபையின் தூதுக் குழுக்கள் முதலில் உரோமைக்குத் தெற்கில் 48 கி.மீ. தொலைவிலுள்ள மூன்று விடுதி என்ற இடத்திலும், பின் தலைநகரிலிருந்து தெற்கில் 64 கி.மீ. தொலைவிலுள்ள அப்பியன் சந்தையிலும் பவுலைச் சந்தித்தனர் (அ.ப. 28:15)

### ஆப்பிரிக்கா (AFRICA)

ஆப்பிரிக்காக் கண்டம் விவிலியத்தில் குறிக்கப்படவில்லையென்றாலும் வட ஆப்பிரிக்க இடங்களும் மக்களும் பழைய ஏற்பாட்டில், புதிய ஏற்பாட்டில் நிகழ்ச்சிகளிலும் உருவகங்களிலும் இடம் பெறுகின்றன.

ஆதி 10-இல் நாடுகளின் பட்டியல், கூஸ், எகிப்து (மிசுராயிம்) பூத்து ஆகியோரை காமின் மக்களாகக் குறிக்கிறது. 10:13-இல், எகிப்து (மிசுராயிம்), உலூதிம் மற்றும் இலகாபிம் ஆகியோரின் தந்தையெனக் குறிக்கப் பெறுகிறது. பின்னால் உள்ள இருபெயர்களும் லிபியா மக்களைக் குறிப்பதாகப் பொதுவாகக் கருதப்படும். இலக்கியக் கலைச் சொல்லில் பல வட ஆப்பிரிக்க மொழிகள் காமிய மொழியாக பகுக்கப்படுகின்றன.

ஆப்பிரிக்காவில் இஸ்ராயேலரின் முதன்மையான அக்கறை, தங்களது பலம் வாய்ந்த எதிரியான எகிப்தியரைப் பற்றியதானாலும் பழைய ஏற்பாடு மற்ற ஆப்பிரிக்க மக்களையும், குறிப்பாகக் கூசியர் அல்லது எத்தியோப்பியர் பற்றிப் பேசுகிறது. கூஸ் மற்றும் எத்தியோப்பியா, சில சமயங்களில் எகிப்துக்கு அப்பாலுள்ள நாட்டைக் குறிக்கும் பொதுப் பெயராகப் பயன்பட்டுள்ளன (சங் 8:9). ஆனால் குறிப்பாக எகிப்துக்குத் தெற்கிலுள்ள பகுதியைக் குறித்தன (எச 29:10; எஸ்த 1:1; 8:9). இது வளம் செறிந்த நாடாகும் (யோபு 28:19). அதன் செல்வம், வணிகத்தால் மேலும் அதிகரித்தது (ஏச 45:14) எத்தியோப்பியா வலுவான நாடாக இருந்தது; எகிப்தையும் திர்காக்காவின் ஆட்சிக் காலத்தில் (கி.மு. 689-644; 25-வது அரச மரபு; 2 அர 19:9; ஏச 37:9) ஆண்டுள்ளது. இம்மக்களின் உடற் பண்புகள் யாவரும் அறிந்ததாகும் (ஏச 18:2; எரே 13:23). கூசா பெண்ணாகிய மிரியாமை மோசே மணந்தார் (எண் 12:1). எரேமியா, தன் மக்களால் பாழ்கிணற்றில் தள்ளப்பட்டபோது, அரசவை அதிகாரியான எத்தியோப்பிய எபெது-மெலக்கால் காப்பாற்றப்பட்டார் (எரே 38:7:13).

புதிய ஏற்பாட்டில் இயேசுவும் அவரது குடும்பமும் எகிப்தில் அடைக்கலம் புகுந்தனர் (மத் 2:13; தொ.). சிலுவையைச் சுமக்க இயேசுவுக்கு உதவி செய்த சீமோன் (மாற் 15:21) தொடக்க காலத் திருச்சபையின் முக்கிய மையங்களில் ஒன்றான சீரேனே ஊரைச் சேர்ந்த கிறிஸ்தவராக இருக்கக்கூடும் (அ.ப. 2:10; 11:19-20). நற்செய்தியாளர், பிலிப்பு, பரிசுத்த ஆவியால் ஏவப்பட்டு, எத்தியோப்பிய அரசவையின் அண்ணகனுக்கு போதகம் அளித்து, பின் ஞானஸ்நானம் கொடுத்தார் (அ.ப. 8:26-39). இவன் ஒருவேளை ஒரு நுபியராக இருக்கலாம்.

### ஆப்பிள், கிச்லிப்பழம் (APPLE)

ஒரு மரம் (சங் 2:3:8:5; யோவே 1:12); அதன் பழம் (பழ 25:11; உ.ச. 2:3.5; 7:8). கவிதை நயத்தில் அதன் நிழல், அழகு, மணம், இனிமையான பழம் இவற்றிற்காகப் பயன்படுத்தப்படுகிறது. உன்னத சங்கீதத்தில் காதலன் இம்மரத்திற்கு ஒப்பிடப்படுகிறான். இம்மரம் இன்பமிக்க நிழலையும்

இனிமையான கனியையும் தருகிறது (2:3). அதன் பழத்தைக் காதல் நோய் கொண்ட காதலி தேடுகிறாள் (2:5). அவள் மூச்சு கிச்சிலிப்பழங்கள் போல இனிய மணமுள் ளது (7:8). பழ 25:11-இல் சில வாசகங்கள் கிச்சிலிப் பழத்தையும் மற்றும் சில மாது ளைப் பழங்களையும் கொண்டுள்ளன. இது தங்க நிறமுடையது, அழகுடையது. யோவேல் 1:12-இல், அத்தி, மாதுளை, பேரிந்து, பேரிலந்தை முதலிய மரங்களோடு குறிக்கப்படுகிறது. இவை உழவர்களுக்கு முக்கியமானவையாகும். ''ஆண்டவரின் பயங்கர நாளில்'' இவையாவும் வதங்கிப் போய்விடும்.

அன்றைய பாலஸ்தினத்தில் ஆப்பிள் பழம் பயிரிடப்பட்டதா என்பது சந்தேகத் திற்குரியதாக உள்ளது. இதனை எலுமிச்சம்ப ழம், ஆரஞ்சு என மொழி பெயர்த்திருக்க லாம் எனக் கூறப்படுகிறது. கிவின்ஸ் என்ற பழம் மேலானது என்று சிலர் கருதுவர். எழுபது நூல் பழங்கொடுக்கும் ஒரு மரத்தின் பொதுப்பெயரைக் கொடுக்கிறது. ஆதி. 3:6-இல் வரும் ''விலக்கப்பட்ட பழம்'' ஆப்பிள் பழம்தான் என்பது அடிப்படையில் லாது கூறப்பட்ட ஒரு கருத்தாகும். உ.ச. 8:5-இல் வரும் மரத்தோடு தவறாக ஒன்றாக் கப்படுவதால் விளைந்த தவறாகும்.

**ஆப்பு எழுத்துக்கள்** (CUNEIFORM)

கி.மு. 500 ஆண்டு காலத்தில், கீழை நாடுகளில் பயன்படுத்தப்பட்ட முக்கிய மான எழுத்துமுறை இந்த ஆப்பு எழுத்துக்க ளாகும். இதற்கு ஆப்பு எழுத்துக்கள் என்று கி.பி. 1712-இல்தான் பெயர் கொடுக்கப்பட் டது. ஏனென்றால், இவ்வெழுத்துக்கள் முத லில் ஈரமான களிமண் தட்டில் எழுதப்பட் டன. இதில் எழுதுவதற்குப் பயன்படுத்தப் பட்ட எழுதுகோலில் ஆப்பைப் போன்ற அச்சு பயன்படுத்தப்பட்டது. இந்த அச்சு ஒரு முனையில் கூர்மையாகவும் மறு முனையில் அகலமாகவும் அமைந்திருந்தது. இந்த அச் சைக்கொண்டு உருவங்கள் அமைத்து எழுது வர். பச்சைக் களிமண்ணில் எழுதப்பட் டவை சூரிய ஒளியில் காயவைக்கப்படும், அல்லது நெருப்பு சூலையில் வைத்து சுடப் படும். இதுதான் மனிதன், தான் எழுதிய தைக் காப்பாற்றிவைக்க ஆரம்பத்தில் கண்டு பிடித்த ஒரு முக்கியமான முறையாகும்.

இம்முறையை சுமேரியர்கள்தான் முதன் முதலில் கண்டுபிடித்தார்கள். கி.மு, 3000 ஆண்டிற்கு முன்பே இம்முறையைக் கண்டு பிடித்து விட்டனர். ஊருகு என்றயிடத்தில் மிகப் பழமையான இந்த ஆப்பு எழுத்துத் தட்டுகள் கண்டுபிடிக்கப்பட்டன. இவைக ளில் இவ்வெழுத்துமுறை படவடிவ முறை யில் அமைந்திருந்தது. இதை எளிதாக புரிந் துக் கொள்ள முடிகிறது. ஆனால் காலப் போக்கில் பொருள் வடிவை விட்டுவிட்டு, அடையாள எழுத்துக்களைப் பின்பற்றினர். உதாரணமாக கி என்ற எழுத்து பூமி என்ற வார்த்தைக்கு அடையாளமாய் நின்றது.

பிறகு அக்காதியர்கள், சுமேரியர்களின் இந்த ஆப்பெழுத்தைத் தங்கள் மொழியை எழுதப் பயன்படுத்தினர். அவர்கள் அவ் வாறு பயன்படுத்தியபோது அதில் ஒரு முக் கியமாற்றம் செய்தனர். சுமேரியர்களின் முறைப்படி ஒரு எழுத்துப் ஒரு வார்த்தை யைக் குறித்துக் காட்டும். ஆனால் அக்காதி யர்கள், ஒரு எழுத்து, ஒரு தொனியினை மட்டும் குறிப்பதாய் நிர்ணயித்தனர். ஒரு வார்த்தையில் பல தொனிகள் இணைந்துவ ரும். இதனால் அக்காதியர்கள் பல புதிய எழுத்துக்களையும் கண்டுபிடித்தனர். இவ் வாறு மொத்தத்தில் நூற்றுக் கணக்கான எழுத் துக்கள் பயன்படுத்தப்பட்டன.

அக்காதியர்கள், சுமேரியர்களின் எழுத் திற்கு மேலும் பல மேம்பாட்டினை செய்த னர். பெயர் சொற்களுக்கும் வினைச் சொற்க ளுக்கும், வேற்றுமை உருபு, விகுதிகள் அமைத்துத் தெளிவுபடுத்தினர். இவ்வாறு திருத்தம் செய்யப்பட்ட அக்காதியர்களின், எழுத்துத் தட்டுகள் கி.மு. 2350 ஆண்டைச் சார்ந்தவைகளும், கி.மு. 2000 ஆண்டைச் சார்ந்தவைகளும் நமக்குக் கிடைத்திருக்கின் றன. கி.மு. 2350-இல் சார்கோன் என்ற அரசன் அக்காது நகரில் ஆட்சி செய்தார்.

கி.மு. 2000- ஆம் ஆண்டு ஊர் என்ற இடத்தி லிருந்து பிறந்த 3வது தலைமுறை அக்காதிய நாட்டை ஆட்சி செய்தது.

சுமேரியர்களிடமிருந்து அக்காதியர் பெற்றுக் கொண்ட இந்த எழுத்துமுறை மேலும் இரண்டு இடங்களுக்குப் பரவியது. பாபிலோனியர்களும் இவ்வெழுத்து முறையைப் பின்பற்றினார்கள். ஆனால் இவர்கள் நெபுக்கதுனேசார் காலத்திய பழைய எழுத்துமுறையுடன், இந்த அக்காதிய எழுத்துக்களையும் இணைத்துக் கொண்டனர். இதனால் இங்கு நிறைய அடையாள எழுத்துக்கள் பயன்படுத்தப்பட்டன.

அசிரியர்களும் இந்த அக்காதிய எழுத்துமுறையைப் பின்பற்றினர். இவர்கள் எழுத்துக்களின் அடையாள முறையை சீர்படுத்தினர். மேலும் இத்தித்தையர்களும் இந்த ஆப்பெழுத்து முறையைப் பின்பற்ற ஆரம்பித்தனர். பொகாஸ்கோய் என்றயிடத்தில், ஆப்பெழுத்துக்களால் எழுதப்பட்ட பல தட்டுகள் கண்டுபிடிக்கப்பட்டன. இவ்விடம் அக்காலத்தில் கித்தித்தியர்களுக்கு, சிறிய ஆசியாவின் தலைநகரம். இந்த தட்டுச்சுவடிகள், பலமொழிகளில் எழுதப்பட்டன. இத்தித்தியம், அக்காலத்தில் அரசியல் தொடர்பு மொழியாக விளங்கிய அக்காதியம், லுவியானியம், குரியானியம் ஆகிய மொழிகளில் அந்தத் தட்டுச் சுவடிகள் எழுதப்பட்டுள்ளன.

எலாமியர்களும் இந்த ஆப்பெழுத்து முறையைப் பின்பற்ற ஆரம்பித்தனர். ஆனால் அவர்களின் மொழியைப் பற்றி முழுமையாகத் தெரிந்துக்கொள்ள வாய்ப்பில்லை.

எகிப்து நாட்டில் அமர்னா என்றவிடத்தில் கண்டுபிடிக்கப்பட்ட கடிதங்களில், கானான் நாட்டு அரசர் எழுதியக் கடிதமும் காணப்படுகிறது. இக்கடிதம் எகிப்து பாரவோன் மன்னனுக்கு எழுதப்பட்டது. கானான் நாட்டு குறுநில மன்னன், பாரவோன் மன்னனுக்கு எழுதுகிறார். இக்கடிதத்தை அக்காதியம் மொழியில், ஆப்பெழுத்துகளைப் பயன்படுத்தி எழுதியுள்ளார். இந்நிகழ்ச்சி எவ்வாறு அக்காதியமும் ஆப்பெழுத்தும், நாடுகளுக்கிடையில் பயன்படுத்தப்பட்ட தொடர்பு கருவிகளாக விளங்கின என்பதை எடுத்துக் காட்டுகின்றது. உகரித்து மொழியிலும் இவ்வாப்பெழுத்து முறையைப் பின்பற்றியுள்ளனர். உகரித்து என்ற இடத்தில் கண்டுபிடிக்கப்பட்ட தட்டுச் சுவடிகளில்கூட அக்காத்தியம் மொழியில் எழுதப்பட்டவை நிறைந்துக் காணப்படுகின்றன. இவை உகரித்து மொழியில் எழுதப்பட்டுள்ளதைவிட அதிகமானவை.

உகரித்து மொழியில் நாம் தற்போது பயன்படுத்தும் அகரவரிசை எழுத்துக்களைப் போல பயன்படுத்தியுள்ளனர். 31 மெய் எழுத்துக்களை அவர்கள் பயன்படுத்தினர். ஆனால் இந்த எழுத்துமுறை உகாரித்து மொழியினர் கண்டுபிடிக்குமுன்பே நடைமுறையில் வந்திருக்கிறது.

பாரசீகர்களும் இந்த ஆப்பெழுத்து முறையைப் பயன்படுத்த ஆரம்பித்தனர். இவர்கள் மொழியில் 36 எழுத்துக்கள் பயன்படுத்தப்பட்டன. இவ்வாறு ஆப்பெழுத்துமுறை கி.மு. 75வரை பயன்படுத்தப்பட்டுள்ளது.

பாபிலோனிய அரசன் முதலாம் தாரியு பெகிஸ்டன் என்றவிடத்தில் மூன்று மொழிகளில் ஒரு சாசனம் அச்சடித்து வைத்தான். அதேபோல பெர்சபோலிஸ் என்றவிடத்தில் காணப்படும் அரண்மனையிலும் இதே போன்று மூன்று மொழிகளில் ஒரே வாசகம் எழுதப்பட்டுள்ளது. இவைகள்தான் இவ்வாப்பெழுத்து முறையை புரிந்துக்கொள்ள மிக உதவின. கி.பி. 1850-இலிருந்துதான் இவ்வாப்பெழுத்துக்களை சரியாக புரிந்துக் கொள்ள முடிந்தது. இவ்வாப்பெழுத்தைப் பற்றி அதிகமாக ஆராய்ச்சி நடத்தியவர்கள் கென்றி ராவில்சன், எட்வர்ட் கின்க்ஸ், ஜூல்ஸ் ஓப்பர்த்து என்பவர்கள் ஆவர் இவர்கள், அரசர்களின் பெயர்கள் ஒரேமாதிரியாக பழைய பாரசீகம், எலாமித்தியம், பாபிலோனியம் ஆகிய மொழிகளில் காணப்படுவதைக் கண்டுபிடித்தனர். இவர்களின் கண்டுபிடிப்பு சரியானதுதானா என்பதற்கு கி.பி.

1857-இல் ஒரு சோதனை நடத்தப்பட்டது. நால்வர் தனித்தனியாக, ஒரே பாபிலோனியப் பழம் ஏட்டை மொழிபெயர்த்தனர். பிறகு அந்த நான்கு மொழிபெயர்ப்பையும் ஒன்றிணைத்து பார்க்கிறபோது, மாறுபாடில்லாமல் ஒரே மாதிரியாக இருந்தன. இவ்வாறு ஆப்பெழுத்துமுறையை முழுமையாகப் புரிந்துக்கொள்ள வாய்ப்பேற்பட்டிருக்கிறது.

**ஆமணக்குச் செடி** *(CASTOR PLANT)*

இறைவனாகிய ஆண்டவரின் ஏற்பாட்டின்படி, இறைவாக்கினர் யோனாவுக்கு நிழல் அளித்த செடி இதுவாக இருக்கலாம் *(யோனா 4:6-10)*. இது ஒரே இரவில் வளர்ந்து யோனாவுக்கு நிழல் அளித்தது. ஆனால் அடுத்த நாள் காலையில் உலர்ந்து போக, அவர் கடுவெயிலிலில் வாட வேண்டியிருந்தது. இந்நிகழ்ச்சியுரையின் நோக்கம் கிளர்ச்சிமிக்க இறைவாக்கினருக்கு ஒரு செயல்முறையான பாடம் கற்பிப்பதாகும். அவர் தனது சுகத்தை மட்டும் தேடக்கூடாது. அவர் போதிக்க மறுத்த நினிவேயின் மக்களின் நலனையும் தேடவேண்டும் *(4:10-11)*. யோனா, தான் நட்டுவளர்க்காத செடிக்கு இரக்கம் காட்டும்போது, ''வலக்கை எது இடக்கை எது என்று கூடச் சொல்லத் தெரியாத'' பல்லாயிரம் மக்களுக்கு இறைவன் இரக்கம் காட்டக் கூடாதா?

**ஆமால்** *(AMAL - உழைப்பு, தொந்தரவு)*

ஆசேரின் வழி மரபுப் பட்டியலில் வருபவரும் ஒரு குடும்பத்தின் தலைவருமான ஏலமின் புதல்வர்களில் ஒருவர் *(1 நாள் 7:35)*.

**ஆமான்** *(HAMAN - புகழ் பெற்றவன்)*

அகசுவேரு (செருசு) என்ற பாரசீக அரசரின் முதல் மந்திரி. எஸ்தர் புத்தகத்தில் இவர் யூதர்களின் எதிரி என்று சொல்லப்பட்டிருக்கிறது.

அகாகியர் குலத்தைச் சேர்ந்த அம்மெதாத்தாவின் மகன் ஆவார் *(எஸ்த 3:1.10; 8:3.5; 9:24)*. இந்தக் குறிப்பு *1 சாமு 15*-இல் வரும் கீசின் மகன் சவுலின் அமலேக்கிய எதிரியான ஆகாக்கோடு இவரைத் தொடர்பு படுத்துவதற்காக இருக்கலாம். இவரை, எஸ்தரின் சிற்றப்பனும் கீசு குடும்பத்தைச் சேர்ந்தவருமான மோர்தெக்காய் என்ற யூத ஊழியன் மட்டும் மற்றவர்களைப்போல் மண்டியிட்டு வணங்குவதில்லை. மோர்தெக்காய் வணங்காததைக் கண்டு, அவர் ஒரு யூதன் என்பதை அறிந்து, அகசுவேரின் நாடெங்குமிருந்த யூதர்களை அழிக்க எண்ணினார் ஆமான். ஆனால் அகசுவேரின் மனைவி எஸ்தரால் அது தடைபட்டது. அதுமட்டுமல்லாமல் யூதர்களால் ஆமோனின் பத்துப் புதல்வர்களும் கொல்லப்பட்டார்கள்.

எஸ்தரின் கதை பாபிலோனின் கடவுள், ஏலாமின் கடவுள் ஆகியவர்களுக்கு இடையே நடந்த போராட்டம் பற்றிய இதிகாசக் கதையின் பிரதிபலிப்பாக இருப்பதாகச் சில ஆய்வாளர்கள் கருதுகின்றனர். ஆகவே ஆமோனை ஏலாமியரின் கடவுளான கும்மானாக அடையாளம் காண்கின்றனர். மற்றவர்கள் இதை பூரிம் விழாவோடு தொடர்புள்ள காதல் புதினம் என்கின்றனர். இன்னும் சிலர் இது 5-ஆம் நூற்றாண்டில் நடந்த உண்மையான நிகழ்ச்சியை எடுத்துக் கூறுகிறது என்பர். இதில் யூதர்கள், ஒரு கொடிய துன்புறுத்தலிலிருந்து தப்பினர். அப்படியானால் ஆமோன் என்பவர் ஒரு வரலாற்று ஆளாக இருக்கலாம்.

**ஆமீ** *(AMI - கட்டுகிறவன்)*

''சாலோமோனின் ஊழியர்களின்'' ஒரு குடும்பத்தின் மூதாதையர் *(எஸ் 2:57)*. ஒரு வேளை இவரும் ஆமோன்-3-இல் குறிக்கப்படுபவரும் ஒரே ஆளாக இருக்கலாம்.

**ஆமென்** *(AMEN - உண்மையாகவே, அது உண்மையானது)*

அப்படியே ஆகட்டும்; முன்சொல்லப்பட்டதை அப்படியே ஏற்றுக் கொள்ளுதல் உறுதியை, அல்லது ஏற்றுக் கொள்ளுதலை வெளிப்படுத்தும் வியப்புரை. பெரும்பாலும் வழிபாட்டுச் சூழ்நிலையில் பயன்பட்டுள்ளது.

பழைய ஏற்பாட்டில் ஏச 65:16-இல் இச்சொல் உண்மை என்ற பொருளில் பெயர்ச்சொல்லாகப் பயன்பட்டுள்ளது. இதைத் தவிர மற்ற இடங்களில் அப்படியே ஆகட்டும் என்ற பொருளில் பயன்பட்டுள்ளது. மற்றவர் கூறியதற்குப் பதிலாக அமைகிறது. மற்றவர் கூறிய வாக்கையோ, கட்டளையையோ ஏற்பதையோ, ஒத்துக் கொள்வதையோ சுட்டிக் காட்டுகிறது. இவ்வாறு சாலமோனின் வருங்கால ஆட்சிபற்றிய தாவீதின் வாக்குறுதியை பெனாயா உறுதிப்படுத்துகிறார் (1 அர 1:36). கனனியாவின் இறைவாக்கு நிறைவேறுதல்பற்றி ஐயம் கொண்டிருந்தாலும், அது நிறைவேறும் என்ற தனது விருப்பத்தை எரேமியா எடுத்துக் கூறுகிறார் (எரே 28:6). உடன்படிக்கையை ஏற்றுக் கொள்வதில் 'ஆமென்' என்ற சொல் அடிக்கடிப் பயன்படுகிறது (காண்க எரே 11:5). இந்த உடன்படிக்கை உறவை ஏற்றுக் கொள்பவர்கள் அதன் கட்டளைக்குக் கீழ்படிவதைப் பொறுத்து, ஆசீரையோ, சாபத்தையோ ஏற்றுக் கொள்கின்றனர் (காண்க உப 27:15-26; நெக 5:13; எண் 5:22). புகழ்பாடல்களிலும் (சங் 41:14; 72:19; 89:53; 106:48), வழிபாட்டில் மக்கள் கூட்டத்தின் பதிலுரை செபமாகவும் (1 நாள் 16:36; நெக 8:6) சங்கீதங்களின் முடிவிலும் (சங் 106:48), சங்கீத நூலின் ஐந்து பகுதிகளில் நான்கின் முடிவிலும் (41:13; 72:19; 89:53; 106:48) ஆமென் வருவது கவனிக்கத் தக்கதாகும். ஆசீர்களின் முடிவிலும் (யூதி 13:26) தனிப்பட்டோரின் செபத்தின் முடிவிலும் (தோபி 8:8) வருகிறது.

புதிய ஏற்பாட்டில், நற்செய்திகளுக்குப் புறம்பே புகழ்பாடல்களிலேயே பெரும்பாலும் பயன்பட்டுள்ளது. உயிர்த்த இயேசுவின் வாக்குறுதிக்கும் (திருவெளி 22:20), தீர்ப்புக் காட்சிக்கும் (1:7) புகழ் பாடலுக்கும் (1:6; 5:14) பதிலாக ஆமென் வருகிறது. திருமுகங்களில் செபங்களின் முடிவிலும் (உரோ 15:33; 1 தெச 3:13) பெரும்பாலும் புகழ்பாடல்களின் முடிவிலும் (உரோ 1:25; 9:5; 11:36; 16:27; கலா 1:5; பிலி 4:20; 1 திமோ 1:17; 6:16; 2 தெச 4:18; 1 பேதுரு 4:11; 5:11) திருமுகங்களின் முடிவில் இறுதி ஆசீராகவும் (எபி 13:21; 2 பேதுரு 3:18; யூதா 25) ஆமென் வருகிறது. வழிபாட்டில், இயேசுவின் பெயரால் கூறப்படும் பதிலாக ஆமென் வருவது நிலையான வடிவமாகியது (காண்க 2 கொரி 1:20).

நற்செய்திகளில் இயேசு ஆமென் என்ற சொல்லை அடிக்கடி பயன்படுத்துகிறார். இவற்றிற்கு இணையாக வேறெங்கும் ஆமென் பயன்படுத்தப்படவில்லை. உறுதியை எடுத்துக்கூற பயன்படுகிறது. (உண்மையிலும் உண்மையாகச் சொல்லுகிறேன் ஆமென், ஆமென்...மத். 5:18.26; 6:2; யோவா 1:51). இக் கூற்றுக்களில் உறுதியோடு அதிகாரக் குறிப்பும் சேர்ந்துள்ளது. திருவெளி 3:14-இல் இயேசு தம்மையே ''ஆமென் எனும் பெயருள்ளவர், உண்மையான, நம்பத் தக்க சாட்சியரவார்'' எனன்று அழைக்கிறார் (காண்க ஏச 65:16).

**ஆமோசின் இறைவாக்கு நூல்** (BOOK OF AMOS)

1. இறைவாக்குகள் அடங்கிய நூல்களை பின்வரும் தலைமுறைகளுக்கு விட்டுச் சென்ற ''எழுதும் இறைவாக்கினர்களின்'' வரிசையில் காலவரைப்படி முதலாவது வருபவர் ஆமோஸ் என்ற இறைவாக்கினர் ஆவார். இவரது நூல் ''சிறிய இறைவாக்கினர்'' தொகுப்பில் மூன்றாவது நூலாக வருகிறது.

2. காலம்:- ஆமோ 1:1-இன்படி யூதாவை ஊசியாவும் (கி.மு.783-742) இஸ்ராயேலை இரண்டாம் எரொபயாமும், ஆட்சி செய்த காலத்தில் (786-46) ஆமோசின் இறைவாக்குப் பணி நடந்ததாகத் தெரிகிறது. இஸ்ராயேல் செல்வச் செழிப்பில் மிதந்து கொண்டிருந்த காலத்தில் இவர் இறைவாக்குரைத்ததாகத் தெரிகிறது. ஆகவே எரொபயாமின் ஆட்சியின் பின் பகுதியில் இறைவாக்குரைத்திருக்கலாம். ஊசியா தொழு நோயால் வருந்தியதால் அவனது மகன் யோத்தாம் 750-ஐ ஒட்டி தன் தகப்பனுடன் இணைந்து ஆட்சி செய்யத் தொடங்கினார். ''நில நடுக்கம்

உண்டாவதற்கு இரண்டாண்டுகளுக்கு முன் '' ஆமோஸ் இறைவாக்குரைக்கத் தொடங்கினார் (ஆமோ *1:1*). இந்நில நடுக்கத்தை ஆமோஸ் முன்னறிவித்தார் *(8:8; 9:5)*. புதைப்பொருள் ஆய்வுகள் இரண்டாம் எரொபயாம் காலத்தில் ஒரு பெரும் நிலநடுக்கம் நடந்திருக்க வேண்டும் என்பதற்குச் சான்று கூறுகின்றன. பாலஸ்தீன வரலாற்றில் இந்த நிலநடுக்கம் எவ்வளவு பயங்கரமானதென்றால், இரண்டரை நூற்றாண்டுகளுக்குப் பின்னும், இதைச் செக்கரியா தமது இறைவாக்கு நூலில் சுட்டிக் காட்டுகிறார் (செக் *14:5*). ஊசியா தானே ஆலயத்தில் தூபக் காணிக்கை ஒப்புக்கொடுக்க முயன்றார். அதைச் செய்வதிலிருந்து குரு அசரியாவால் தடுக்கப்பட்டார். இத்தீயசசெயலின் விளைவாக நிலநடுக்கம் ஏற்பட்டதாக யோசீபசு கூறுகிறார். இவற்றையெல்லாம் கருத்தில் கொண்டு, அசீரியாவில் மூன்றாம் திகிலாத்து பிலேசரின் எழுச்சிக்கு முன் கி.மு.*760-745*-க்கு இடைப்பட்ட காலத்தில், ஒரு வேளை *750*-ஐ ஒட்டி ஆமோஸ் இறைவாக்குரைத்திருக்க வேண்டும் எனக் கருதுவர் ஆய்வாளர்கள். அதற்குப்பின் ஆமோசோ அவரது சீடர்களோ இந்நூலை எழுதி வைத்தனர் என்று ஏற்றுக் கொள்ளலாம்.

*3. பின்னணிகள்:-*

*அ) வரலாற்று அரசியல் பின்னணி:-* இரண்டாம் எரொபயாம் இஸ்ராயேலை நாற்பது ஆண்டுகள் ஆண்டார். அண்டை நாட்டவரது வீழ்ச்சியைப் பயன்படுத்தித் தனது நாட்டை மேன்மைப்படுத்தினார். இவர் காலத்தில் இஸ்ராயேல் தனது பெருமையின் செழிப்பின் உச்சநிலையை அடைந்தது. போர் வெற்றிகளால் வடக்கிலும் தெற்கிலும் தனது நாட்டின் பரப்பை விரிவாக்கினார். வணிகப் பெருஞ்சாலைகளைத் தனது ஆதிக்கத்தின் கீழ் கொண்டு வந்தார். அதன் விளைவாக வணிகம் வளர்ந்தது. நாட்டில் செல்வம் பெருகியது; ஆனால் சிலரிடமே சிக்கித் தேங்கிப் போயிற்று. வறுமையில் வாடிய ஏழைகளின் எண்ணிக்கையும் பன்மடங்கு கூடிற்று.

இக்காலத்தில் அசீரியர்களிடையே உள்நாட்டுப் பூசல்கள் நடந்து கொண்டிருந்தன. மூன்றாம் திகிலாத்து பிலேசா இன்னும் அரியணை ஏறவில்லை. அசீரியர்களிடமிருந்து தங்களுக்கு வரவிருக்கும் பேராபத்தை இஸ்ராயேல் எதிர் பார்க்கவில்லை. யூதாவும் பலவழிகளில் வளம் பெற்றிருந்தது. இரு அரசுகளும் ஒன்றொடொன்று சமாதானமாய் இருந்தன. இத்தகைய வரலாற்று அரசியல் பின்னணியில் அமைதி, பொருள் வளம் ஆகிய ஏமாற்றும் பாதுகாப்பில் சுகம் அனுபவித்துக் கொண்டிருந்த வடஅரசுக்கு ஆமோஸ் இறைவாக்குரைத்தார்.

*ஆ) சமூகப் பின்னணி:-* இக்காலத்தில் நாடு விரிவடைந்தது, வணிகம் பெருகியது. செல்வம்கொழித்தது. வாழ்க்கைத் தரம் உயர்ந்தது. ஆனால் இந்நலன்கள் எல்லாம் சிலருக்கே பயன்பட்டது பணக்காரன் ஏழை என்ற பாகுபாடு ஏற்பட்டது ஏழைகள் நசுக்கப்பட்டனர். அவர்களுக்கு நீதி மறுக்கப்பட்டது *(2:6-12; 3:9-10.15; 4:1-15; 5:11-12; 6:4-6; 8:4-6)*. செல்வந்தர்கள் ஏழைகளைச் சுரண்டினர். கடனுக்காக ஏழைகளை அடிமைகளாக்கினர்; அடிமைகளாக விற்றனர் *(2:6-7)*. வியாபாரங்களில் ஏமாற்றுதல் சர்வ சாதாரணம் *(5:11-12; 8:5-6)*. நடத்தை கெட்ட பெண்களுக்குக் குறைவேயில்லை *(4:1)*. இவ்வாறு பேராசையும் சொகுசும், விரும்பிய அந்நீதிமிக்க மக்களுக்கு எதிராக ஆமோஸ் இறைவாக்குரைத்தார்.

*இ) சமயப்பின்னணி:-* இத்தகைய அநீதியும் கொடுமையுமிக்க மக்களின் சமயவாழ்வில் புறச்சடங்குகளே சிறப்புப் பெற்றன. பெத்தேல், கில்கால் *(4:4; 5:5)*, பெயேர்-செபா *(5:5; 8:14)*, தாண் *(8:14)* போன்ற புனித இடங்களுக்குத் திருயாத்திரைகள் நடந்தன. பகட்டோடு வழிபாடுகள் நடந்தன *(5:22-28)*. உண்மையான சமயப்பற்றின்மை பகட்டான வழிபாட்டுச் சடங்குகளால் மூடி மறைக்கப்பட்டது *(2:8; 4:4-5; 5:21-24)*. புனித இடங்களில் நடந்த சடங்கு விபச்சாரங்கள் வழிபாட்டின் இழிநிலையைச் சுட்டுகின்றன. சிலை வழிபாடு புகுத்தப்பட்டது

*(8:14)*. உண்மையான இறைவழிபாட்டுக்கு ரிய மனப்பக்குவம் மக்களிடம் இல்லை.

அரசியல் வெற்றிகள், பாதுகாப்பான நாடு, பொருளாதார வளர்ச்சி, சொகுசு மிக்க வாழ்க்கை ஆகியவை மக்களை சுயநிறைவு டையவர்களாக்கின. இவர்களின் இழிவான வாழ்க்கையையும் சமூக அநீதிகளையும். வெற்று வழிபாட்டுச் சடங்குகளில் ஆறுதல் கண்டு ஏமாறுவதையும் ஆமோஸ் கண்ட னம் செய்து இறைவாக்குரைத்தார்.

4. திட்டமும் பொருளடக்கமும்:-
அ. தலைப்பு *(1:1-2)*.

ஆ. நாடுகள் மீது தீர்ப்பு *(1:3; 2:16)*. இத்தீர்ப்பு தமஸ்கு, காசா, தீர், ஏதோம், அம்மோன், மோவாபு ஆகிய நாட்டினர் மேல் மட்டுமன்று *(1:3; 2:3)*, யூதாவின் மேலும் *(2:4-5)*, இஸ்ராயேல் மேலும் *(2:6-6)* வரும்.

இ. இஸ்ராயேலுக்கு அளிக்கப்பட்ட அச்சு றுத்தல்களும் எச்சரிக்கைகளும் *(3:1-6:14)*. ''இந்த வாக்கைக் கேளுங்கள்'' *(3:1; 4:1; 5:1)* என்று தொடங்கும் மூன்று அறவுரைகள் *(8:1-5:17)*. இஸ்ராயேலின் வழிபாடு, சமூகம் சார்ந்த பாவங்கள் கண்டனம் செய்யப்படு கின்றன. ''ஆயினும் நீங்கள் என்பக்கம் திரும்பவில்லை'' என்ற கூற்று *(4:6; 8-11)* ஐந்து முறைவருகிறது. பின் ''உங்களுக்கு ஐயோ கேடு'' *(5:18; 6:1-4)* என்று தொடங் கும் மூன்று சாபங்கள் *(5:18-6:14)*.

ஈ. மனம் வருந்தித் திருந்தாத இஸ்ராயேல் மேல் வரவிருக்கும் அழிவுகள் பற்றிய ஐந்து அடையாளக் காட்சிகள் *(7:1-9:8)*. வெட்டுக் கிளி *(7:1-3)*; விழுங்கும் நெருப்பு *(7:4-6)*; தூக்கு நூற்கண்டு *(7:7-9)*; பழக்கூடை *(8:1-14)*; பீடமும் புனித இடமும் அழிக்கப்ப டுதல் *(9:1-10)*. இப்பகுதியின் இடையில் பெத்தேலில் நடந்த ஆமோசின் வாழ்க்கைக் குறிப்பு *(7:10-17)* இடைச் செருகல் செய்யப் பட்டுள்ளது.

உ. முடிவுரை: மெசியாவை முன்னோக் கல் *(9:11-15)*. தாவீதின் கூடாரம் அழிக்கப் பட்டு மீண்டு அமைக்கப்படும்; மீட்பு முன் னறிவிக்கப்படுகிறது.

5. இலக்கியச் சிறப்பு:- முழு நூலும் பாடல் வடிவில் உள்ளது நூல் முழுவதும் இலக்கிய நயம் மிளிர்கிறது. ஆசிரியர் பாலை ஓரத்தில் வாழ்ந்த கிராமவாசி ஆவார். பாலையின் தன்மை அவரது இலக் கிய நடையையும் பாதித்தது. அவரது நடை கடுமையும் வெடுவெடுப்பையும் கொண் டது. ஏளனமும் பழிப்பும் மிக்கது. அவரது வாழ்க்கையில் கண்டவற்றை உயிர்ச்சித்திர மான உருவகங்களாக வர்ணிக்கிறார் *(2:13; 3:4.5.12; 4:2.9; 5:19; 7:1-2; 8:1-2)*.

நாம் கொண்டிருக்கும் வடிவில் உள்ள ஆமோஸ் நூலில் தெளிவான ஒன்றிணைந்த ஒற்றுமை இல்லை என்பார். இதற்குச் சான் றாக நாடுகளுக்கு எதிரான வாக்குகள் *(1:3-2; 16)*, ஆமோசைப் பற்றிய வாழ்க்கைக் குறிப்பு *(7:10-17)*, மெசியா பற்றி முன் னோக்கு *(9:9-15)* ஆகிய பகுதிகளைச் சுட்டிக் காட்டுவர். ஆனால் இந்நூலில் காணப்படும் இறைவாக்குகள் பல சூழ்நிலைகளில் கூறப் பட்டிருக்க வேண்டும். சிலவற்றை ஆமோசே எழுதியிருக்க வேண்டும். அவற் றின் தொகுப்பு மக்களிடையே வழக்கில் இருந்திருக்கலாம். வழிபாட்டில் பயன்பட் டிக்கலாம். அதன் விளைவாக நூல் விரிவ டைந்திருக்கலாம். இந்நிலை ஆமோசின் சீடர்களோ, இறைவாக்கினர் குழுவோ, ஆமோசின் கூற்றுகளைத் தொகுத்து, பின்வ ரும் தலைமுறைகளுக்குப் பயன்படும்படி, நாம் கொண்டிருக்கும் வடிவில் வழங்கியி ருக்க வேண்டும்.

6. சிறப்புக் கருத்துக்கள்:- இந்நூல் கருத்தா ழும் மிக்கது. பல்வேறுபட்ட கருத்துகளையு டையது. அவற்றில் சில: அ) யாவையும் கட்டுப்படுத்தும் ''இயற்கைச் சட்டம்'' :-யாவே இஸ்ராயேலர்களுக்குமன்று யாவ ருக்கும் இறைவனாவார். எல்லா மக்கள் மேலும், எல்லா நாடுகளின் மேலும் ஆட்சி புரிகிறார். அவர் வரலாற்றின் ஆண்டவர். அவரது சட்டத்திற்கு யாவரும் பணிய வேண்

டும். அதற்கு எதிராகக் கிளர்ச்சி செய்தால் யாவே அக்கிளர்ச்சியைத் தண்டிக்கிறார். அவருடைய தீர்ப்பிலிருந்து எவரும் எதுவும் தப்ப முடியாது. இதை ஆமோஸ் ஆற்றலோடும் கடுமையாகவும் பறைசாற்றுகிறார்.

*ஆ) சமூக நீதி:-* ஆமோஸ் இறைவனின் நீதியை, அவரது உடன்படிக்கையின் அடிப்படையில் போதிக்கிறார். நாட்டில் பரவியிருந்த ஒழுக்கச் சீர் கேட்டைச் சிறிதும் இரக்கமில்லாமல் கண்டிக்கிறார். அயலானுக்குச் செய்யும் கொடுமை வெறும் சட்டத்தை மீறுவது மட்டுமன்றி, யாவேக்கும் எதிராகச் செய்யும் கிளர்ச்சியாகும்; அவரது உடன்படிக்கை உறவை முறிப்பதாகும். மக்களிடையே நிலவிய வகுப்பு வேறுபாடுகள், பலர் வறுமையில் வாட சிலர் மட்டுமே சொகுசாக வாழ்தல், ஏழைகளுக்கும் எளியவர்களுக்கும் நீதி மறுக்கப்படுதல் முதலிய சமூகக் கேடுகளை ஆமோஸ் வன்மையாகக் கண்டிக்கிறார்.

*இ) வழிபாட்டில் கேடு:-* சமயக்கடைப்பிடிப்பு வெறும்புறச்சடங்குகளிலேயே அடங்கியிருந்தது. இவற்றில் தற்பெருமையும், சுயநேர்மையுமே மேலோங்கியிருந்தன. சிலை வழிபாடும், பாலினப் பெருக்கச் சடங்குகளும் வழிபாட்டில் புகுந்தன. உண்மையான உள்ளார்ந்த சமயத்தின் பண்புகளாகிய யாவேயின் மேலாண்மையை ஏற்று, அவரிடம் சரண் அடைந்து, பணிவுள்ள உள்ளம் இச்சடங்குகளில் காணப்படவில்லை. இவற்றையெல்லாம் கண்டித்து, ஆமோஸ் உண்மையான சமயத்தைப் பெத்தேலில் போதிக்கிறார் *(5:14-15)*.

*ஈ) ஆண்டவரின் நாள்:-* விவிலியத்திலேயே முதல் தடவையாக இச்சொல் இந்நூலில்தான் பயன்படுகிறது. பிற்கால இறைவாக்கினர் இச்சொல்லைப் பெரிதும் பயன்படுத்துவர். இது, சாதாரணமாய் எதிர்பார்க்கக் கூடிய வருங்காலத்தில் இறைவன் செய்யவிருக்கும் இடையீட்டையும், அவர் உறுதியாகத் தலையிட்டுத் தீமையைத் தண்டித்து நன்மைக்குச் சன்மானம் அளிக்கும் தீர்ப்புக் கூறும் நாளையும் உணர்த்தியது. இத்தீர்ப்பு யாவர் மேலும் வரும். எல்லாரும் தங்கள் செயல்களுக்குக் கணக்குக் கொடுக்க வேண்டும். இந்நாள் இறைவனின் அஞ்சத்தக்க தண்டனை நாளாகும்; இருளின் நாளாகும் *(5:18-20; 2:16; 8:9-10-13)*. ஆனால் இத்தண்டனை மக்கள் இறைவனிடம் திரும்ப வர வேண்டும் என்பதற்காகவே பயன்படுத்தப் பட்டது. அது முடிவன்று.

*உ) எஞ்சியோர்-ஒளிமிக்க எதிர்காலம்:-* கேடுகளை வருவிக்கும் இறைவனே, அவற்றிலிருந்து தப்பிக்க வழியையும் காட்டுகிறார். பாவிகளை மட்டுமே அவர் அழிக்கிறார். எஞ்சியோர் சுத்தி செய்யப்பட்டுக் கேடுகளிலிருந்து தப்பிப்பிழைப்பர். யாவே மீது பற்றுறுதியாக இருப்பவர்கள் மட்டுமே எஞ்சியிருப்பர். தாவீதின் கூடாரம் மீண்டும் கட்டி எழுப்பப்படும். நாடும், இதுவரை கண்டிராத முறையில் செழிப்புறும். மக்கள் அமைதியோடு வாழ்வார்கள் *(9:11-15)*. அழிவைக் கொண்டு வந்த யாவேயே மீட்பையும் கொணர்வார். அவரே புதிய யுகத்தையும் படைப்பார். அதில் அவரது அரசு எதிர்ப்பின்றி சுதந்திரமாய்ச் செயல்படும். எஞ்சியோர் என்ற கலைச் சொல்லை ஆமோசுதான் முதல் தடவையாகப் பயன்படுத்துகிறார்.

7. பழைய ஏற்பாட்டில் ஆமோஸ்:- இறைவாக்குரைக்கும் பாரம்பரியத்தில் ஆமோசின் நூல் பலபெரும் இறையியல் கருத்துக்களைத் தொடங்கி வைக்கிறது. ஆமோஸ் தனது போதகத்தில் புதிதாய் எதையும் படைத்து விடவில்லை. மாறாக, இஸ்ராயேலின் பாரம்பரியத்தில் நிலை கொண்டு, சட்டநூலில் வரும் போதகத்தையே, தனது காலத்திற்கு ஏற்றவாறு புதிய அழுத்தத்தோடும் ஆற்றலோடும் எடுத்துக் கூறுகிறார். அவரைப்பின்பற்றி, அவருக்குப்பின்வந்த இறைவாக்கினர்கள், அவர் தொடங்கிவைத்த கருத்துக்களை விரிவாக்குவர்; வளமிக்கதாக்குவர்; ஆழ்ந்து சிந்தித்து, நயத்தோடு எடுத்தியம்புவர். ஆனால் ஒவ்வொருவரும் தனக்கே உரிய கோணத்திலும், தன் கால மக்களுக்கு என்றவாறும் எடுத்துக் கூறுவர்.

*8.* ஆமோசுவும் புதிய ஏற்பாடும்:- திருமுழுக்கு யோவான் போதகத்தில் ஆமோசின் தொனியையும், மலைப் பொழிவில் ஆமோசின் போதகத்தையும் காணலாம். பேறுகளின் கருத்தையும் ஆன்மீக சமயத்தையும், இறைவனது அரசையும் அவரது நீதியையும் முதலாவதாகவும் முதன்மையாகவும் தேட வேண்டிய அவசியத்தையும் ஆமோஸ் போதித்தார். அ.ப. 7:42-43-இல் ஆமோ *5:25-27* எடுத்துக் கூறப்படுகிறது. திருவெளி *10:7*, ஆமோ *3:7*-ஐ எதிரொலிக்கிறது. ''எஞ்சியோர்'' பற்றிய கடைசிக் காட்சியைத் திருவெளி 20:5-8-இல் காண்கிறோம்.

ஆமோஸ் (AMOS - சுமை தூக்குபவர், ஆண்டவர் வலுப்படுத்துகிறார்)

*1.* கி.மு.8-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு இறைவாக்கினர் இவரது இறைவாக்கு நூல் சிறிய இறைவாக்கினர் நூல்களில் எபிரேய, இலத்தின் வாசகங்களில் மூன்றாவதாகவும், கிரேக்க வாசகத்தில் இரண்டாவதாகவும் இடம் பெறுகிறது.

இவரது ஊர் தெக்கோவா ஆகும் (ஆமோ *1:1*). இச்சிற்றூர் பெத்லகேமுக்குத் தெற்கில் 10 கி.மீ. தொலைவில் யூதாவின் பாலைவனப்பகுதியை நோக்கி உள்ளது. இவர் இறைவாக்குரைத்தலைத் தொழிலாகக் கொண்ட இறைவாக்கினர் குழுவைச் சேர்ந்தவரல்லர் *(7:14)*. ஆடு மேய்ப்பவர், இதனால் ஆடுகளையும், மயிரையும் சந்தையில் விற்பதற்கு எருசலேம், சமாரியா போன்ற நகரங்களுக்குச் சென்றிருக்க வேண்டும். மேலும் ஆமோஸ், காட்டு அத்தி மரங்களைக் கண்காணிப்பவர் *(7:14)*. இம் மரங்களின் பழங்கள், பழுப்பதற்குமுன், குத்திவிட வேண்டும் அல்லது கீரி விடவேண்டும். அப்போதுதான் அவை உணவாகக்கூடும். காட்டு அத்தி மரங்கள் தெக்கோவாவில் அருகில் வளரவில்லை. இவை பயிர் செய்யப்பட்ட மேற்கு யூதாவில் இவருக்கு ஓரளவு நிலம் இருந்திருக்க வேண்டும் *(1 அர 10:27)*. ஆகவே நாட்டுப்புறத்தில் வாழ்ந்த ஒரு நிலக் கிழாராக இருந்திருக்கக் கூடும். இது அவர் தன் நூலில் பயன்படுத்தும் நாட்டுப்புற உருவகங்களில் பிரதிபிலிக்கிறது *(3:4.8.12; 4:1; 5:8.19)*. ஆடுகளை ஓட்டிக் கொண்டு போனவரைத் தெரிந்தெடுத்து வட அரசுக்கு இறைவாக்குரைக்க இறைவன் அனுப்பினார். இறைவனின் நியாயத்தையும், நேர்மையையும், நீதியையும் நிலை நாட்டுபவராக ஆமோஸ் திகழ்ந்தார். இவரது இறைவாக்குப் பணி பாலஸ்தீனத்தின் வட அரசாகிய இஸ்ராயேலில் பெத்தேலில் தொடங்கியது. அங்கிருந்து அவரது சாபத்தையும், கோபத்தையும் பொறுக்க முடியாமல் அதிகாரிகளால் துரத்தப்பட்டவர். ஆமோசைப் பொறுத்த மட்டில் யூதேயாவும், இஸ்ராயேலும் இறைவனின் பிள்ளைகள் எனக் கருதியதால், அவரது பணியை ஓர் குறிப்பிட்ட நாட்டுக்கும், பகுதிக்கும் அப்பாற்பட்டதாய், பரந்த மனப்பான்மையோடு எங்கும் இறைவாக்குரைக்கத் துணிந்தவர். அவரது போதனைக்கு குறுக்கீடாக இஸ்ராயேலைக் காட்டிலும் சமாரியாவில்தான் அதிகார வர்க்கம் இருந்தது. பண்பாடும், விசுவாசமும் ஏழை எளியவர்களிடத்தே தீவிரமாகக் காக்கப்படுகின்றன, வளர்க்கப்படுகின்றன என்கிறார். ஆமோஸ் எதையும் ஆழமாக உற்றுநோக்கி, இறைவனின் சித்தம் நிறைவேற்றப்படுகின்றதா என்பதில் கருத்தாயிருந்தார். வழிவழியாய் உதித்த இறைவாக்கினர்கள்கூட அநியாயத்தைத் கண்டிக்கத் தயங்கியபோது சாதாரண ஓர் இடையர் குலத்தில் பிறந்த ஆமோஸ் துணிவுடன் நீதியை நிலை நாட்டத் துணிந்தார்.

ஆமோஸ் பெத்தேலினின்று துரத்தப்பட்டபின் அவரது முடிவும், சாவும் பற்றியவை புதிராகவே இருக்கிறது; ஒன்றும் அறிவதற்கில்லை.

*2.* இயேசுவின் மூதாதையருள் ஒருவர் *(மத் 1:10; லூக் 3:25)*. காண்க ஆமோன்-1.

ஆமோதிசு (AMOZ - வலுவான)

ஏசயா இறைவாக்கினரின் தந்தை *(2 அர 19:2; ஏச 1:1)*. ஒரு பாலஸ்தீன நாட்டு முத்திரையில் காணப்படும் ஆமோதிசு என்ற இப்பெயர் இறைவாக்கினர் ஆமோசினின்று வேறுபட்டது.

**ஆமோன்** (AMON - நம்பிக்கைக்குரிய, பிரமா ணிக்கமுள்ள) - ஆள்.

*1.* யூதாவின் அரசனான மனாசேயின் *(641-639)* மகனும், அரசு வாரிசுமாவார். இவர் 22 வயதில் அரசனானார். இருவருடங் கள் ஆட்சி செய்தார் *(2 அர 21:19;2 நாள் 18:25-27).* இவரது தாய், யோத்திபாவைச் சேர்ந்த காருசின் மகளான மெசுல்லமேத்து ஆவாள். யோத்திபா என்ற நகரம் கலிலேயா வில் உள்ளதாகும். (இதைத்தவிர அசீரிய கிரேக்க யோத்தபத்தா என்ற நகரமும் உண்டு). இந்தப் பெயர் வட நாடுகளோடு யூதா கொண்டிருந்த நெருங்கிய உறவைச் சுட்டுகின்றது. இந்த உறவு, யூதாவின் அக் கால வரலாற்றைப் புரிந்து கொள்ளப் பெரி தும் உதவும்.

ஆமோன் தன் தந்தையின் அடிச்சுவடுக ளைப் பின்பற்றினார். அசீரியாவோடு நெருங்கிய உறவு கொண்டிருந்தார். அதன் தெய்வங்களை வழிபட்டார். யாவேயின் வழிபாட்டைக் கைவிட்டார் *(2 அர 21:20-22; 2 நாள் 33:22-23).*

இவருக்கு *24* வயதாகியபோது, இவரு டைய ஊழியர்கள் சதி செய்து இவரைக் கொன்று போட்டனர் *(2 அர 21:28; 2 நாள் 33:24).* இச்சதிக்கு மக்களின் ஆதரவு கிடைக்க வில்லை. இச்சதிக்காரர்களை மக்களே கொன்று போட்டனர் *(2 அர 21:23-26;2நாள் 33:25).* அதற்குப் பின் ஆமோனின் எட்டு வயது மகனான யோசியாவை அரியனை ஏற்றினர்.

புதிய ஏற்பாட்டில், இயேசுவின் மரபு வழிப்பட்டியலில் இவர் ஆமோஸ் என்ற ழைக்கப்படுகிறார் *(மத் 1:10; லூக் 3:25).*

*2.* அரசர் ஆகாபு ஆட்சியில் சமாரியா நகரின் ஆளுநராக இருந்தவர். இமிலாவின் மகன் இறைவாக்கினர் மீக்காயா, ஆகாபு இராமோத்து-கிலயாதுக்கு எதிராகச் செய் யப்போகும் போர் தோல்வியில் முடியும் என்று எச்சரித்தார். இதற்காகத் தான் போரிலி ருந்து திரும்பி வரும்வரை மீக்காயாவைச் சிறையில் வைத்திருக்கும் பொறுப்பை இந்த ஆமோனிடமும் தன் மகன் யோவாசிடம் ஆகாபு விட்டுச் சென்றார் *(1 அர 22:26-28; 2 நாள் 18:25-27).*

*3.* சாலமோனின் ஊழியர்களின் வழித் தோன்றல்களில் ஒருவர். பாபிலோனுக்கு நாடு கடத்தப்பட்டுத் தாயகம் திரும்பியவ ருள் ஒருவர் *(நெக 7:59).* எஸ் *2:57*-இல் இவர் ஆமீ என்றழைக்கப்படுகிறார்.

ஆமோன் (AMON) - தேவதை

ஆமோன் - ரா என்பது எகிப்தியப் பேரர சின் மிக உயர்ந்த கடவுளின் பெயராகும். காற்றின் கடவுள் *(எரே 46:25).* இக்கடவு ளுக்கு வழிபாடு அளிக்கப்பட்ட முக்கிய மையம் திபிசுவிலுள்ள கர்னாக் கோவிலா கும்.

**ஆமோன்** (AMON) - இடம்

திபிசுவின் எபிரேயப் பெயரின் ஒரு பகுதி யாகும்.

**ஆயக்காரன்** (TAX COLLECTOR)

புதிய ஏற்பாட்டுக் காலத்தில் பாலஸ்தினத் தில் இருந்த உரோமை ஆளுகைத் தலைவரி மற்றும் நிலவரியை வசூலிக்கும் பொறுப் பைக் கொண்டிருந்தார். பொருள்களை ஓரி டத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு ஏற்றிச் செல்பவர்கள்மேல் சுங்கவரி வசூலிக்கப்பட் டது. இது தனிப்பட்ட குத்தகைக் காரர்க ளுக்கு விடப்பட்டிருந்தது. இவர்கள் ஒரு குறிப்பிட்ட இடத்தில் வரி வசூலிக்கும் உரிமையைப் பெற ஒரு குறிப்பிட்ட அளவு பணத்தை அரசாங்கத்திற்கு செலுத்தியபின், அவர்கள் லாபம் ஈட்டினர். இவர்கள் ஆயக் காரர்கள் என்று அழைக்கப்பட்டனர். இவர் கள் பெரும்பாலும் உரோமையர்களாக இருந்தனர். ஆனால் பிறரும் இதில் பயன்ப டுத்தப்பட்டனர். அனேகமாக யூதன் சக்கேயு *(லூக் 19:2-10)* இவ்வாறுதான் செல்வம் சேர்த்திருக்க வேண்டும். அவர் எரிகோ பகுதி யில் வசூலித்தார்.

ரோமை அதிகாரிகளும், யூதர்களும் தங்க ளுக்குக் கீழ் வேலையாட்களை அமர்த்தி வரி வசூலித்தனர். சுதந்திர நாடுகளிலும் வரி

வசூலிப்போன் புகழ் பெறுவதில்லை. இதைப் போலவே பாலஸ்தீனத்திலும் இவர்கள் மிகவும் இழிந்தவர்களாகக் கருதப்பட்டனர்.

கிறிஸ்தவ வரலாற்றின் தொடக்கத்தில், பாலஸ்தீனத்தில் வாழ்ந்த யூதர்கள், உரோமையர்கள் செய்த நன்மைகளில் சிலவற்றை ஏற்றுக்கொண்ட போதிலும், உரோமையர் ஆட்சியை வெறுத்தனர். அவர்கள் தங்களையே நசுக்கப்பட்டவர்களாகக் கருதியதால் விரைவில் தங்களுக்கு விடுதலை கிடைக்கும் என எதிர்பார்த்தனர். ஆளுநர்களின் கொடுமை அவர்களது வெறுப்பை அதிகரித்தது. புரட்சிக் குழுக்கள் மறைந்திருந்தாலும், சில சமயங்களில் கொந்தளித்து வெளிப்பட்டன. தீவிர வாதிகள் செசாருக்கு வரி செலுத்துவது கடவுளுக்கு எதிராக செய்யும் குற்றம் என்றுரைத்தனர். பல சமயங்களில் மக்களிடமிருந்து வசூலிக்கப்பட்ட வரி அதிகமாகவும், உரோமை அதிகாரிகளின் பணப்பைகளை நிரப்பவும், வரி வசூலிப்போருக்கு லாபம் தரவுமே பயன்பட்டது.

வரி வசூலிக்கும் பணியில் ஈடுபட்டிருந்த யூதர்கள் மிக மிக இழிந்தவர்களாகக் கருதப்பட்டு வெறுத்து ஒதுக்கப்பட்டனர். அவர்கள் தங்கள் இனத்துக்கு எதிராகவே அந்நியரோடு ஒத்துழைத்தனர். அவர்கள் உரோமையருக்கு வரியைச் செலுத்தினாலும் அவர்கள் வசூலித்ததன் ஒரு பகுதியை அவர்களே வைத்துக் கொண்டனர். ஆயக்காரர்கள் திருடர்களாக கருதப்பட்டனர். அவர்களும், அவர்களுடைய குடும்பமும் பொதுப்பணி புரிவதிலிருந்தும், யூத நீதிமன்றத்தில் சாட்சி கூறுவதிலிருந்தும் ஒதுக்கி வைக்கப்பட்டனர். நான்கு நற்செய்திகளும், ''ஆயக்காரர், பாவிகள்'' என்று இணைத்து கூறுகின்றன (*மத் 9:10-11; 11:19; மாற் 2:15-16; லூக் 5:30*). ஆயக்காரர்கள் விபச்சாரிகள் கூட்டத்தோடு சேர்க்கப்படுகின்றனர் (*மத் 21:31*). திருச்சபையின் அதிகாரத்துக்கு கீழ்ப்படியாதவன் ''புறவினத்தானாகவும், ஆயக்காரனாகவும் நடத்தப்பட வேண்டும்'' என்று கூறப்படுகிறது (*மத் 18:17*).

இயேசு ஆயக்காரருடன் உணவு கொள்ள இணங்கியதற்கு, அவர் அவர்களது தொழிலை ஏற்றுக் கொண்டார் என்றோ, பொறுத்துக் கொண்டார் என்றோ பொருஎல்ல. மாறாக, இந்த ஒதுக்கப்பட்ட மக்களுக்குக் காட்டிய இரக்கத்தால் அவர்களுக்கு நல்வாழ்விற்குரிய வழி காட்டினார். விபச்சாரிகளுக்குக் காட்டிய இரக்கத்தால், அவர்கள் மனந்திரும்பி நல்ல ஒழுக்க வாழ்வு வாழ்வதற்கு இயேசு வாய்ப்பளித்தார். அதுபோல ஆயக்காரர்களுக்கும் மனந்திருந்தவும் சீர்திருத்தம் அடையவும் வாய்ப்பளித்தார். லேவி என்ற மத்தேயு, தனது ஆயக்காரத் தொழிலைக் கைவிட்டு, இயேசுவின் சீடரானார். செல்வந்தனான சக்கேயு, மனந்திரும்பி, ''தன் உடைமையில் பாதியை ஏழைகளுக்கும், எவனையாவது ஏமாற்றி எதையாவது கவர்ந்திருந்தால், நான்கு மடங்காகக் திருப்பிக் கொடுப்பதாகவும்'' (*லூக் 19:8*) உறுதி கூறுகிறார்.

**ஆயத்த நாள்** (DAY OF PREPARATION)

ஒய்வு நாளுக்கு முந்தியநாள் ஆயத்த நாளாகும். ஓய்வுநாளை மிகச் சரியாக அனுசரிக்க வேண்டும் எனும் யூதமத ஒழுங்கின்படி ஓய்வு நாளுக்கு முந்திய நாளே தங்களையே தயாரித்துக் கொள்ளத் தொடங்கினர். அன்று உணவைத் தயாரித்து, வியாபார காரியங்கறை நிறுத்தி வைத்து ஓய்வு நிலைக்குச் சென்றனர். ஓய்வு நாளை அனுசரிப்பதில் சிறிதும் தவறக் கூடாது என்பதற்காக, அன்று சூரிய உதயத்துக்குப்பிறகு தொடங்கும் ஓய்வுநாளை அதற்கு முன்பே, கடைப்பிடிக்கத் தொடங்கினர். யூத, கிறிஸ்தவ செல்வாக்கினால் இப்பெயரே இந்நாளுக்கு நிலைத்து விட்டது.

நற்செய்திகளின்படி இயேசு சிலுவையில் அறையப்பட்டது ஆயத்த நாளில்தான். இதனை ஒத்தமை நற்செய்திகள் ஓய்வு நாளுக்கு முந்திய நாள் என்கின்றன (*மாற் 15:42; லூக் 23:54*). இயேசுவின் இறுதி இராவுணவை (*மத் 26:17; மாற் 14:12; லூக் 22:7*) முந்திய இரவில் நடந்த யூதப் பாஸ்கு உணவாகக் கருதுகின்றனர். இப்படி அது

புளியாத அப்பத்திருவிழாவின் முதல்நாளாகும். ஆனால் நான்காவது நற்செய்தி இறுதி இரவு உணவை பாஸ்கா உணவுவிழா என்று கூறவில்லை (*யோவா 13:1 தொ*). *யோவா 19:14* சிலுவையில் அறையப்பட்ட நாள் பாஸ்காவுக்கு ஆயத்த நாளாகும் என்று கூறுகிறது. பாஸ்காவுக்கு முந்திய நாள் மிக முக்கியத் தயாரிப்புக்கான நாள் ஆகும். மேலும் ''அடுத்தநாள் ஓய்வுநாளாகவும் பெரு விழாவாகவும் இருந்தது'', (*யோவா 19:31*) என்ற குறிப்பு புளியாத அப்பத்திருவிழாவின் முதல்நாளைக் குறிப்பதாக அமையலாம். சதுசேயர்களைத்தவிர முதல் நூற்றாண்டைச் சேர்ந்த மற்ற யூதர்களனைவரும் மிகச் சிறப்பானதும், பரிசுத்தமானதுமான பெருவிழாநாளை (*லேவி 23:7*) ஓய்வுநாளாகக் கருதினர். அதைவைத்தே, வாரங்களின் விழாவைக் கணித்தார்கள். எனவே இறுதி இராவுணவுக்கும், பாஸ்கா விழாவுக்குமுள்ள தொடர்பு, பின்னரே ஏற்பட்ட ஓர் இரண்டாந்தர வளர்ச்சியெனக் கொண்டால், ஆயத்தநாள் பற்றிக் கூறப்படும் குறிப்புகள் சரியெனலாம்.

**ஆயப்பதிவேடுகள் நிலையம்** (HOUSE OF ARCHIVES)

பொது ஆவணங்கள், வரலாற்றுப் பத்திரங்கள், சட்டங்கள் ஆகியவை சேர்த்துவைக்கப்பட்டு பாதுகாக்கப்பட்ட இடமாகும். இந்த இடமானது கோவில் வளாகத்திலோ அல்லது அரச கருவூலத்திலோ அமைந்திருக்கலாம். எரேமியா தந்த ஓலைச் சுருளை இத்தகைய இடத்தில் அநேகமாக வைத்திருக்கலாம் (*எரே 36:20*). யோசியா காலத்தில் ஆலயத்திலிருந்த இத்தகைய இடத்தில்தான் சட்டச் சுருள் கண்டுபிடிக்கப்பட்டிருக்க வேண்டும் (*2 அர 22:8 தொ*). சாலமோன் வரலாற்றுக் குறிப்பேடுகளை இதுபோன்ற சுவடிக் கூடங்களில் பாதுகாத்து வைத்திருந்தார். சாலமோன் மன்னனின் சில வரலாற்றுக் குறிப்பேடுகள் பழைய ஏற்பாட்டு வரலாற்று நூல்களில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன. பிற்காலத்தில் தலைமுறை அட்டவணைகள் இச்சுவடிக் கூடத்தில் வைக்கப்பட்டிருந்திருக்கலாம் (*எஸ் 4:15*). நாடுகடத்தப்படுதலின் முடிவு பற்றி அறிய அரச பத்திரங்கள் இருக்கிறதா என்று பாரசீகச் சுவடிக் கூடங்களில் தேடிப்பார்த்தனர் (*எஸ் 5:17; 6:1*). ஆயப்பதிவேடுகள் நிலையத்தைக் குறிக்கும் அரமேயிக் பதத்திற்கு ''நூல்நிலையம் அல்லது சுருள்களின் நிலையம்'' என்று பொருள் கொள்ளப்படுகிறது. *எஸ் 5:17*-இல் வருகின்ற கெனிசா என்ற அரமேயச் சொல்லானது, சிதைந்துபோன விவிலியச் சுருள்களைச் சேர்த்துவைக்கின்ற இடத்தைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டது. தொல்பொருள் ஆராய்ச்சியாளர்கள் பெர்சபோலிஸ், நினிவே, இராஸ்சம்ரா, கெயிரோ போன்ற இடங்களில் ஓலைச்சுருள்கள் அடங்கிய கருவூலங்களையும், சுவடிக் கூடங்களையும் கண்டு பிடித்துள்ளனர்.

**ஆயர், மேற்பார்வையாளர்** (BISHOP, PASTOR)

அப்போஸ்தலர்கள் காலத்திற்குப்பின், தளத்திருச்சபையின் படிமுறை பணியாளர்களின் தலைவர் அல்லது அதிகாரியாவார். எபேசு மற்றும் பிலிப்பை ஆகிய திருச்சபைகளின் ஆளுங்குழுக்களில் ஆயர்கள் இருந்திருக்கலாம் (*அ.ப. 20:28; பிலி 1:1*). பவுல் சிறைப்படுத்தப்பட்டபின் இப்பதவியை ஏற்றுக் கொண்டார் (*1 திமோ 3:2; தீத்து 1:7*).

''ஆயரும் மூப்பரும்'' திருச்சபையின் பணியாளரையும் மூப்பரையும் குறிக்கின்றன என்பது பொதுவாக ஏற்றுக்கொள்ளப்படும் கருத்தாகும். புதிய ஏற்பாட்டில் இருவரும் ஒரே மாதிரியானவரே. ஆனால் கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் அரச படிமுறை திருச்சபையில் எழுந்தது. மந்தையை மேற்பார்ப்பது ஆயர்களின் கடமையாகும் (*அ.ப. 20:28*). இது போதிப்பதையும் உள்ளடக்கும். இப்பதவிக்குரிய தகுதிகளும் கடமைகளும் *1 திமோ 3:1-7; தீத்து 1:7-9*-இல் எடுத்துக் கூறப்படுகிறது.

பேதுரு கிறிஸ்துவை சிறிய ஆசிய கிறிஸ்தவர்களின் ''ஆயரும் காவலருமாவார்'' என்று கூறுகிறார் (*1 பேதுரு 2:25*). மூப்பர்களும் திருச்சபையின் ஆட்சிப் பணியில் ஈடுபட்டிருக்கலாம். ஆனால் கிறிஸ்துவின் திருச்

சபை உண்மையில் அவராலேயே ஆட்சி செய்யப்படுகிறது. பாதுகாக்கப்படுகிறது (2:4-8). அ.ப. 1:20-இல் அலுவல் அல்லது பதவி இறந்து போன யூதாசின் இடத்தை நிரப்பும் முறையான அப்போஸ்தல மரபைக் குறிக்கிறது. 1 பேதுரு 5:2 மூப்பர்களின் மேய்ப்புப் பணி மேற்பார்வையை விவரிக்கிறது. 1 பேதுரு 5:4, கிறிஸ்துவைத் தலைமை ஆயர் என்றழைக்கிறது.

**ஆயலபு, ஆ-ஏலேப்** (HA-ELEPH - எருது).

பெஞ்யாமீன் பகுதியைச் சேர்ந்த எருசலேமின் வட்டாரத்தில் உள்ள ஒரு நகரம். இந்தப் பெயர் அநேகமாக அதற்கு முந்திய சேலா என்ற சொல்லோடு சேர்த்து சேலா-ஆ-ஏலேப் என்று வாசிக்கப்பட வேண்டும். ஒரு வேளை இவ்விடம் எருசலேமிற்கும் கிபயோனுக்கும் இடையில் இருக்கின்ற இக்கால சாலாவாக இருக்கலாம்.

**ஆயனும் மந்தையும்** (SHEPHERD AND SHEEP)

இறைவனால் தேர்ந்தெடுக்கப்பட்ட இஸ்ராயேல் குலத்தினர் அரமேயரின் நாடோடிப் பண்பாட்டில் ஆழ்ந்தவர்; மேய்ப்புப் பணியில் ஆர்வமுள்ளவர். எனவே, ''ஆடுகளை நடத்திச் செல்லும் ஆயன்'' என்ற உருவகம், அவர்களுக்கு ஒரு பழக்கப்பட்ட உருவகம்; இது நமக்குப் பழைய ஏற்பாட்டிலிருந்து தெரியவருகிறது. கொடிய மிருகத்திடமிருந்து மந்தையைக் காக்கும் வலிமையும் ஆடுகளைத் தன் குழந்தைகளாகக் கருதிக் கண்காணித்து, கரங்களில் ஏந்தி, தோள்களில் சுமந்து, அவைகளின் தேவைகளைத் தீர்த்து வைக்கும் கண்ணியமிகு இனிய தன்மையும் ஆயனுக்குண்டு (பழ 27:23; ஆதி 33:13; ஏச 20:11). ஆடுகளின்மேல் அவனுக்கிருக்கும் அதிகாரம், அன்பு பராமரிப்பின் அடிப்படையில் எழுந்தது. எனவேதான் ஆயன் என்பவன் ஆடுகளின் தலைவனெனவும், துணைவனெனவும் எண்ணப்பட்டான்.

பாபிலோனியாவிலும், அசீரியாவிலும் இருந்த அரசர்கள் தங்களை மேய்ப்பர்கள் என்று அழைப்பதிலே பெருமை அடைந்தார்கள்; இதையும் வரலாறு கூறும். ஏனென்றால் ஆயர்களாகிய தங்களிடம் மக்களாகிய ஆடுகளைக் காத்துக் கண்காணிக்கும் பொறுப்பு இறைவனால் அளிக்கப்பட்டது என்பது அவர்கள் எண்ணம். பாபிலோனியாவிலும் அசீரியாவிலும் வேரூன்றி நின்ற இந்த எண்ணச் சூழலில், எவ்வாறு இஸ்ராயேல் மக்கள் ''நல்லாயன்'' என்று அழைக்கப்படும் இறைமகன் கிறிஸ்துவழியாக இறைவனோடு தொடர்பு கொண்டுள்ளனர் என்பதை விவிலியம் நன்கு எடுத்துரைக்கிறது.

I. பழைய ஏற்பாடு

1. இறைவன் மந்தையின் தந்தை:- வரப்போகிற கிறிஸ்துவுக்கே ''நல்லாயன்'' என்ற சிறப்புப் பெயர் பேரளவில் வழங்கப்பட்டது; ஓரிரு இடங்களில் மட்டுமே (ஆதி 49:24; 48:15; சங் 23:1; 80:2) இறைவன் யாவேக்கு அப்பெயர் அளிக்கப்பட்டது. யாவேக்கென்று தனியாக இப்பெயர் அளிக்கப்படாதிருந்தாலும், அவர் இஸ்ராயேல் மக்களோடு கொண்டிருந்த தொடர்பை எண்ணும்போது அப்பெயர் அவருக்குத் தகும் என்பதை உணர்வோம். யாத்திரை ஆகமத்தில் இஸ்ராயேல் மக்களை ஆடுகளைப் போல யாவே வழிநடத்துகிறார் (சங் 95:7; 78:52 தொ; ஏச 40:11). பணிந்து நடக்கும் ஆடுகளாக இஸ்ராயேல் நடக்காததால், இஸ்ராயேல் குலம் துன்பத்திற்குள்ளாகிறது, அடிமைப்படுத்தப்படுகிறது (ஓசே 4:16; எரே 13:1). யாவே திரும்பவும் அவர்களை நீரூற்றுகளுக்கு அழைத்துச் செல்கிறார் (ஏச 49:10). சிதறிப்போனவைகளை மீண்டும் ஒன்று சேர்க்கிறார் (56:8); குரல் கொடுத்து அழைக்கிறார்; தூய உள்ளமுள்ளோர் அனைவரிடத்தும் தம் கருணையையும், அருளையும் பொழிகிறார்.

2. ஆயனும் ஆட்டு மந்தையும்:- தாமே ஆடுகளை மேய்ச்சலுக்கு நடத்திச் செல்ல வேண்டும் என்ற எண்ணத்தில் யாவே, ஆடுகளை நடத்திச் செல்லும் பொறுப்பைத் தம் ஊழியர்களிடம் ஒப்படைக்கின்றார் (சங் 100:3;79:13;74:1;மீக் 7:14). மோசேயின் கைகளினால் அவர்களைக் காத்து வருகின்றார் (சங் 77:21). ஆயனில்லாக் குலமாக

இஸ்ராயேல் விளங்கக்கூடாது என்பதற்காக மோசேக்குப் பிறகு அந்தப் பொறுப்பை யோசுவாவிற்கு அளிக்கிறார் (எண் 27:15-20). அவரது ஆடுகளாகிய இஸ்ராயேலரை ஆள் வதற்கு ஆயர்குலச்சிறுவன் தாவீதைத் தெரிந் தெடுக்கிறார் (சங். 78:70தொ; 2 சாமு 7:8; 5:2; 24:17). நீதிபதிகள் (7:7), மக்களின் தலைவர்கள் (எரே 2:8), பிறநாடுகளின் அரசர்கள் (25:34தொ; நாகூ 3:8; ஏச 44:28) ஆகியோர்களுக்கு ஆயர் என்ற பட்டம் கொடுக்கப்படுகிறது. ஆனால் ஆயனது பணி களை இஸ்ராயேல் மன்னர்கள் செய்தாலும் (1அர 22:17; எரே 23:1-2; எச 34:1-10) அவர்களுக்கு ''ஆயர்கள்'' என்ற சிறப்புப் பெயர் அளிக்கப்படவில்லை. அந்தக் கடமை அவர்களுக்கு அளிக்கப்படுகிறது, அந்தப் பெயர் வரப்போகிற புதிய தாவீதா கிய ''மீட்பருக்கே'' ஒதுக்கி வைக்கப்பட் டது. இது இறுதிக்கால நம்பிக்கையின் ஒரு கூறு ஆகும். இதுவே எசக்கியேல், எரேமியா போன்ற இறைவாக்கினரின் போதனையாக இருந்தது. தம் மக்களை வழிநடத்தும் அலு வலை யாவே மீண்டும் ஏற்று, அதை மெசி யாவிடம் ஒப்படைப்பார்.

இஸ்ராயேல் மக்களைக் கண்காணிக்கத் தலைமைப் பொறுப்பேற்று ''ஆயர்கள்'' என அழைக்கப்பட்டவர்கள், பொறுப்பற்ற வர்களாய், இறைவனுக்கு எதிராகவே கல கம் செய்தார்கள் (எரே 10:21; 2:8); தங்க ளைப் பற்றியே கண்ணும் கருத்துமாய் இருந் தார்கள்; ஆடுகள் சிதறுண்டுபோவதுபற் றியோ, மந்தையை விட்டு விலகிப்போவது பற்றியோ அவர்கள் கவலைப்படவில்லை, (எரே 23:1தொ; 50:6; எச 34:1-10; எரே 22:22). இறைவாக்கினரின் கூற்றுக்களைப் படித்தோமென்றால் (மீக் 7:14தொ) இறை வனே தமது கரத்தால் ஆடுகளை எடுத்து, ஒன்று சேர்த்து அரவணைப்பார் என்றும் (எரே 23:3; மீக் 4:6; எரே 50:19; 31:10; எச 34:11-22), அதன் பிறகு ஆடுகளைப் பரிவோடும் பாசத்தோடும் காக்க தம் விருப் பத்திற்கிணைந்து வரும் ஆயர்களை அவர்க ளுக்குத் தலைவராக்குவார் என்றும் உணர்கி றோம் (எரே 3:15;23:4). எசக்கியல் என்ற இறைவாக்கினரின் கூற்றுப்படி, இறுதியில் ஆடுகளெல்லாம் புதிய தாவீதென்னும் ஒரே ஒரு நல்லாயனால் வழிநடத்தப்படும் (எச 34:23தொ; 36:37தொ); அவரது ஆட்சியின் போது யூதாவும் இஸ்ராயேலரும் ஒன்று சேர்க்கப்படுவர் (எச 37:22-24; மீக் 2:12தொ).

அடிமைப்படுத்தப்பட்டு விடுதலைய டைந்த இஸ்ராயேலரை வழிநடத்தும் தலை வர்கள் உயர்குணம் உள்ளவர்களாக விளங் காததால் இறைவன் அவர்களைத் தண்டிப் பார் என்று செக்கரியா கூறுகிறார் (செக் 10:3; 11:4-17;13:7). இப்படியாகத் துன்பத்தினால் தூய்மைப்படுத்தப்பட்ட குலத்தில் ஒருசிறு பகுதியே எச்சமாக எஞ்சிநின்றது (எச 13:8தொ). இந்தக் கண்ணோட்டத்தில்தான் துன்புறுத்தப்பட்ட ஆயனை (13:7) ஓர் அறி விலியாகக் காணாது (11:15தொ), ஒரு வீரத் தியாகியாகக் கண்டு, வாள் ஊடுருப்பட்ட ஆயனின் (12:10) இறப்பு இறைவாக்கினரால் போற்றப்படுகிறது (13:1-6). இந்த ஆயன் தான் ஓர் ஊமைச் செம்மறிபோலக் கொலைக்களத்துக்கு இழுக்கப்பட்டுத் தம் பலியால் சிதறுண்டோரை ஒன்று சேர்க்கும் யாவேயின் தொண்டனுடன் ஒப்பிட்டுப் பேசப்படுகிறார் (ஏச 58:6 தொ. 11தொ).

II. புதிய ஏற்பாடு

இயேசுகிறிஸ்துவின் காலத்தில், இடையர் களைக் கள்ளர்களென்றும், கொலை புரிப வர்களென்றும், சட்டம் கருதியது. இருப்பி னும் வரப்போகும் ''நல்லாயன்'' பற்றி இறைவாக்கு மறைந்திடவுமில்லை; மங்கிட வுமில்லை; இயேசு கிறிஸ்து வந்தார்; அதை நிறைவேற்றினார். இடையர்களைத் தம் ''சின்னஞ்சிறியோருள்'' அடங்கியவர்களா கக் கருதினர்ர். ஆயக்காரர்களைப் போல வும், விபச்சாரிகளைப் போலவும், சில ஆயர்களும் விருப்புடன் நற்செய்தியைக் கேட்டுணர்ந்தார்கள். மாடடைக் குடிலில் பிறந்த இயேசுவுக்கு இடையர்கள் செலுத் தும் மரியாதையை இந்தக் கண்ணோட்டத் தில் கவனிப்பது நல்லது (லூக் 2:8-20). விவிலியப் பாரம்பரியத்தைப் பின்பற்றி

இறைவனின் இரக்கப் பெருக்கைக் காணாமல்போன ஆட்டினைத் தேடிக் கண்டுபிடிக்கும் நல்லாயன் உருவில் இயேசு விவரிக்கிறார் (லூக் *15:4-7*). நல்லாயனுக்காக ஆவலோடு எதிர்பார்த்ததை இயேசுகிறிஸ்துவே நிறைவேற்றுகின்றார். திருச்சபையைக் கண்காணிக்கும் ஆயர்பணியையும் அவரே ஒருசிலருக்கு வழங்குகிறார்.

1. நல்லாயன் கிறிஸ்து:-

அ) ஒத்தமை நற்செய்திகளும் நல்லாயனின் நற்குணங்களை நன்கு எடுத்துரைக்கின்றன; இதில் யோவான் உருவகத்துக்கு முன்னோடியாக அமைகின்றன. பெத்லகேமில் இயேசு பிறப்பது மீக்கா என்பவரின் இறைவாக்கை நிறைவேற்றுகிறது (மத் *2:6*; மீக் *5:1*). ஆயனில்லா ஆடுகளை அழைத்து ஆறுதலளிக்கும் இயேசுவின் இரக்கத்தன்மை (மத் *9:36*; மாற் *6:34*), நல்லாயன் எப்படியிருக்கவேண்டுமென்று மோசே விரும்பினாரோ அதை மெய்ப்பிக்கிறது (எண் *27:17*). இஸ்ராயேலில் தவறிப்போன ஆடுகளிடம் அனுப்பப்பட்டவராகத் தம்மையே காண்கிறார் இயேசு (மத் *15:24*; *10:6*; லூக் *19:10*) இயேசுவின் அன்பின் அரவணைப்பிலிருக்கும் அவரது சீடர்களின் சிறிய கூட்டம் (லூக் *12:32*), புனிதர்களுக்கென்று வாக்களிக்கப்பட்ட இறுதிக்கால விண்ணரசைக் குறித்துக் காட்டுகின்றது (தானி *7:27*). மந்தைக்குள்ளேயே ஆட்டுத் தோல் போர்த்திய ஓநாய்களாலும் (மத் *7:15*) புறத்திலிருந்து ஓநாய்களாலும் (மத் *10:16*; உரோ *8:36*) ஆட்டு மந்தை சிதறடிக்கப்படும். ஆனால் துன்புறுத்தப்பட்ட நல்லாயனே சிதறுண்ட ஆடுகளை ஒன்று சேர்ப்பார் என்று செக்கரியாவின் இறைவாக்கு கூறுகிறது (மத் *26:31* தொ; செக் *13:7*). கடைசியாக உலக முடிவில் ஆடுகளில் ஆண்டவனே, நல்ல ஆடுகளைத் தீய ஆடுகளினின்று பிரித்தெடுப்பார் (மத் *25:31* தொ).

ஆ) இந்த மூன்று நற்செய்திகளைப் பின்பற்றி, மற்றப் புதிய ஏற்பாட்டு எழுத்தாளர்களும், இயேசுவை, மகத்துவமிக்க மேய்ப்பனென்றும் (எபி *13:20*), மோசேயைவிட பெரியவரென்றும், ஆயர்களுக்கெல்லாம் தலைவர் என்றும் (1 பேதுரு *5:4*), சிதறுண்ட ஆடுகளைக் காக்கச் சிலுவையில் மரித்த மாபெரும் ''ஆயரும் காவலரும்'' என்றும் (*2:24*) புகழ்கின்றனர். செம்மறியான இயேசு, வாழ்வில் ஊற்றுக்கு அழைத்துச் செல்லும் ஆயனாக மாறுவார் (திருவெளி *7:17*).

இ) நான்காம் நற்செய்தி:- ஒரே ஆயனின் தலைமையில் விளங்கும் திருச்சபையின் தன்மையை, முன்பு கூறிய ஆயனின் குணங்கள் எல்லாம் ஒன்றிணைந்த நிலையாக நான்காவது நற்செய்தி நன்கு எடுத்துரைக்கின்றது (யோவா *10*). மேலும் நான்காம் நற்செய்திக்கென்று தனிக்குணங்களும் இருக்கின்றன. அதாவது, இயேசுவை அரசரென்றோ மந்தையின் தலைவரேன்றோ அதிகம் விவரிக்காமல், அவர் மக்களுக்கு இறைத்தந்தையின் அன்பை அளிக்க வந்த இறைமகன் என்பதற்கே சிறப்பிடம் கொடுக்கிறது. இயேசுவின் சொற்பொழிவுகள் பழைய கருத்துக்களை நினைவுபடுத்தி, அவற்றிற்கு வளர்ச்சியும் தருகின்றன. எசக்கியேல் சொல்வது போல் (எச *34:17*), இயேசுவின் போதனை ஒரு தீர்ப்பு ஆகும் (யோவா *9:39*). கள்வர்களாலும் கொள்ளைக் கூட்டத்தாலும் அடித்துத் துரத்திச் சிதறடிக்கப்பட்ட மந்தைபோன்றதே இஸ்ராயேல் மக்கள் (எச *34:3*; *34:5* தொ; யோவா *10:1.10.12*). யாவே போன்று இயேசுவும் அவர்களுக்கு விடுதலை அளித்து, பசும்புல் தரைக்கு அழைத்துச் செல்கிறார் (எச *34:10-14*; யோவா *10:11.3.9.16*). அதனால் அவர்கள் இயேசுவைத் தங்களுக்கு மீட்பளித்த ஆண்டவர் என அறிவார்கள், (எச *34:22*; யோவா *10:9*). அவரும் முன்னறிவிக்கப்பட்ட, 'நல்லாயன் நானே' என்று மொழிவார் (எச *34:24*; யோவா *10:11*).

இயேசு இன்னும் தெளிவாக எடுத்துரைக்கிறார். இயேசுவே இணைப்பாளராகவும், மந்தைக்கும் புல்வெளிக்கும் வாயிலாகவும், அமைகிறார் (யோவா *10:7*; *10:9* தொ.); அவரே வாழ்வளிக்கிறார், தமக்குப் பதிலாகப் பிறரையும் ஆயராக நியமிக்கிறார் (*21:15*

தொ.). இறைத்தந்தைக்கும் இறைமகனுக்கும் உள்ள அன்பின் பிணைப்பை அடிப்படையாகக் கொண்டு, ஆயனுக்கும் ஆட்டு மந்தைக்கும் இடையே உள்ள உறவு அமைகிறது *(10:3 தொ. 14 தொ; 14:20; 15:10; 17:8 தொ. 18-23)*. கடைசியாக இயேசுவே நிறைவான நல்லாயன் ஆவார். ஏனென்றால் தம் ஆடுகளுக்காகத் தம் உயிரையே அளிக்கிறார் *(10:15.17 தொ.)*; அவர் ''வெட்டப்படுதல்'' மட்டுமன்றி அவராகவே தம் வாழ்வைக் கையளிக்கிறார் *(மத் 26:31; செக் 13:7; யோவா 10:18)*. சிதறுண்ட ஆடுகள் அவர் குரலுக்குச் செவிமடுத்து இஸ்ராயேல் குலத்திலிருந்தும், மற்ற மக்கள் இனங்களிலிருந்தும் வருகின்றன *(யோவா 10:16; 11:52)*. இப்படி அழைக்கப்பட்ட மந்தையானது என்றென்றும் ஒன்றித்திருக்கும்; ஏனென்றால் இது இறைத்தந்தையின் அன்பின் காவலில் முடிவில்லா வாழ்வு பெறுகிறது *(10:27-30)*.

2. திருச்சபையும் அதன் ஆயர்களும்:- யோவான் எழுதிய நற்செய்தியின்படி, 'நல்லாயன் சொற்பொழிவு' திருச்சபையின் தொடக்கமாக அமைகிறது. ஆண்டவரால் குணமாக்கப்பட்ட பிறவிக் குருடனை யூதத் தலைவர்கள் வெறுத்து ஒதுக்க, ஆண்டவர் அவனை அன்புடன் வரவேற்கின்றார். ஆண்டவர் உயிர்த்த பிறகு, திருச்சபையைக் கவனிக்கும் பொறுப்பைப் பேதுரு பெறுகிறார் *(21:16)*; மற்ற ஆயர்களும் *(எபே 4:11)* திருச்சபையைக் காத்துவரும் திருக்கட்டளையை ஏற்கின்றனர் *(1 பேதுரு 5:1 தொ; அ.ப. 20:28)*. ஆண்டவரின் முன்மாதிரியைப் பின்பற்றி, அவர்களும் சிதறுண்ட ஆடுகளை ஒன்றுசேர்க்க வேண்டும் *(மத் 18:12 தொ.)* போலிப் போதகர்களான ஓநாய்களின் வாயினின்று அவைகளை விடுவிக்கவேண்டும்; தவறான போதனைக்கு அவர்கள் செவிமடுக்காது அவைகளைக் காத்துவர வேண்டும் *(அ.ப. 20:28 தொ.)* ''நல்லாயன்'' என்ற பெயரே, ஆயனின் நற்குணங்களையும் *(பழைய ஏற்பாட்டில் பார்த்ததுபோல்)*, யாவேயின் அன்பின் ஏவுதலையும் கண்முன் கொண்டுவர வேண்டும். புதிய ஏற்பாடும் இந்தக் குணங்களை எடுத்துரைக்கின்றது. அன்புடனும் ஆர்வமுடனும் தன்னலமின்றித் திருச்சபையைக் காத்து அவர்களுக்கு முன்மாதிரியாக ஆயர்கள் விளங்க வேண்டும், அப்போதுதான்'' தலைமை ஆயர் தோன்றும் நாளில், மகிமையின் வாடாத வெற்றிவாகை சூட்டப் பெறுவீர்கள்'' *(1 பேதுரு 5:4 தொ.)* எனும் வாக்குறுதிக்கு உரியவர் ஆவார்கள்.

**ஆயி** (AI - குவியல், அழிவு)

*1.* ஆயி பெத்தேலுக்குக் கிழக்கே எப்பிராயிமிலுள்ள நகரம்.

*அ)* விவிலிய ஆதாரக் கூறுகள்:- ஆபிரகாம் ஆயிக்கும், பெத்தேலுக்கும் இடையில் கூடாரம் அமைத்ததாக இரண்டு முறை கூறப்படுகிறது *(ஆதி 12:8; 13:8)* இஸ்ராயேலர் எரிகோவிற்கு அடுத்து தாக்க வேண்டிய நகரம் ஆயி ஆகும் என்று யோசுவா ஆகமத்தில் 7-8 அதிகாரங்களில் குறிப்பிடப்படுகிறது. இந்த சிறிய நகரத்தைத் தாக்குவதற்கு இஸ்ராயேலர் எண்ணிக்கையில் குறைந்த மக்களை அனுப்பியதால், எதிர்பாராத தோல்வியைச் சந்தித்து நம்பிக்கை இழந்தனர் *(யோசு 7:2-5)*. உடனே யோசுவா இறைவனிடம் முறையிட, எரிகோவிலிருந்த எல்லா கொள்ளைப் பொருட்களையும் அழிக்காமல் விட்டுவிட்ட குற்றத்தினால் தான் இந்தத் தோல்வி ஏற்பட்டது என்று கடவுளின் வாக்கு அருளப்பட்டது. எனவே இந்தக் குற்றத்தைச் செய்தவர் யார் என்று கண்டுபிடிக்கச் சீட்டுப் போட்டுப் பார்த்தனர். இறுதியாக ''ஆக்கான்'' குற்றவாளியாகத் தீர்ப்பிடப்பட்டு கல்லால் எறிந்து கொல்லப்பட்டார் *(7:6-26)*. பின் ஆயியைக் கைப்பற்றுவதற்குப் படைகளைத் திரட்டிச் சென்றனர். அவர்கள் வெற்றி பெற்றனர். ஆயி நகரமானது எரித்து சாம்பலாக்கப்பட்டது *(யோசு 8:28-29)*.

ஆயி என்ற நகரத்திற்கருகில், அதே பெயரில் புதிய இஸ்ராயேலர் நகரம் ஏற்படுத்தப்பட்டது. அசீரியர்கள் எருசலேம் நோக்கிப் பயணம் சென்றபோது ''அய்யாத்து'' என்ற நகரத்தை முதன் முதல் உடைமையாக்கிக்

கொண்டனர் என்று ஏசயா ஆகமம் உரைக்கிறது (ஏச 10:28). செருபாபேலோடு திரும்பி வந்த நாடு கடத்தப்பட்ட மக்களில் 223 ஆட்கள் பெத்தேல், ஆயி நகரத்தைச் சேர்ந்தவர்கள் (எஸ் 2:28). இதற்கு இணையான வாசகமாகிய நெக 7:32, 123 ஆட்கள் என்று கூறுகிறது. அடுத்த நூற்றாண்டில் பெத்தேலுக்கு அருகிலுள்ள அய்யாவில் பெஞ்யாமீனின் மக்கள் குடியேறியதாகக் கூறப்படுகிறது (நெக 11:31).

ஆ. புதைபொருள் ஆதாரங்கள்:- பழமையான ஆயி நகரமானது பெத்தேலுக்குக் கிழக்காகவும், பெத்தேலின் இக்கால இடமான தேல்பெயிட்டின் தென்கிழக்காகவும் 3 கி.மீ தொலைவிலுள்ள எத்-தேல் என்ற இடத்தில் இருந்ததாகக் கூறப்படுகிறது.

இதன்படி கி.மு. 3100-ஐ ஒட்டி, சுற்றுப் பாதுகாப்புச் சுவரற்ற ஒரு சிற்றூராக ஆயி ஆரம்பிக்கப்பட்டது. பின்பு 3000-ஐ ஒட்டி விரிவான பாதுகாப்புச் சுவர்களுடைய நகரம் எழும்பியது. இதில் எகிப்தியருடைய செல்வாக்குத் தெரிகிறது, பொது மாளிகைகளும் ஒரு கோவிலும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. கோவிலில் தந்தத்தால் செய்யப்பட்ட பாத்திரங்களும் கற்கள் பாவப்பட்ட நீர் தேக்கமும் கண்டுபிடிக்கப்பட்டன. இந்த நகரம் 2400-ஐ ஒட்டி மூர்க்கத்தனமாக அழிக்கப்பட்டதாகத் தெரிகிறது. ஒருவேளை இது எமோரியா படைஎடுப்பாலோ எகிப்தியர் படையெடுப்பாலோ நடந்திருக்க வேண்டும். பின் 1200 வரை கைவிடப்பட்டு அழிந்த நிலையிலேயே கிடந்தது. 1200-ஐ ஒட்டி மலை நாட்டிலிருந்து வந்த உழவர்கள் இவ்விடத்தில் குடியேறினர். ஊர் பாதுகாக்கப்படவில்லை. 1050-ஐ ஒட்டி ஒரு சிறு போருக்குப் பின் இந்த ஊர் முழுவதும் கைவிடப்பட்டது.

இவை யோசு 7-8-இல் வரும் நிகழ்ச்சியுரையோடு ஒத்துப் போகவில்லை. யோசுவாவின் தலைமையில் கி.மு. 13-ஆம் நூற்றாண்டில் பாலஸ்தீனம் கைப்பற்றப்பட்டது. ஆல்ப்ரைட்டின் கருத்துப்படி இந்நிகழ்ச்சியுரை பெத்தேல் நகரை வென்றது பற்றியதாக இருக்கலாம். ஆயி பெத்தேல் நகரின் பாதுகாக்கப்பட்ட புறக்காவல் நிலையமாக இருந்திருக்கலாம் (8:17). சில அறிஞர்கள், எரிகோவுக்கு நிகழ்ந்ததுபோல், அக்காலத்தைப் சேர்ந்த ஆயி நகரின் மட்டம் அரிக்கப்பட்டு அழிந்து போயிருக்கலாம் என்று கருதுகின்றனர். இந்த வேறுபாடுகள், புதைபொருள் ஆய்வுகளையும், பாலஸ்தீனம் கைப்பற்றப்பட்ட முறையையும், காலத்தையும் மீண்டும் ஆய்வு செய்ய வேண்டிய அவசியத்தைச் சுட்டுகின்றன.

நாடு கடத்தப்பட்டுத் திரும்பியபின் எஸ்ரா (2:28), நேகமியாவில் (11:31) குறிக்கப்படும் அய்யா நகரம் எத்-தேல்லுக்குத் தென்கிழக்கில் 2 கி.மீ. தொலைவிலுள்ள இக்கால கிர்பேத்-அய்யான்-ஆக இருக்கலாம்.

2. அம்மோனியாவில் உள்ள ஒரு நகரம் (எரே 49:3). இது எங்கிருந்தது என்று அடையாளம் காட்ட முடியாது.

**ஆயிரம்** (THOUSAND)

விவிலிய மொழிப்பெயர்ப்புகளில் பல இடங்களில் போர்வீரர்கள், மக்கள் ஆகியோரின் எண்ணிக்கை மிகைப்படுத்தப்பட்டுள்ளதாகத் தெரிகிறது. ஆயிரத்தைக் குறிக்கப்பயன்படும் ''எலேப்'' என்ற சொல், தொடக்கத்தில் எண்ணிக்கையைக் குறிக்கவில்லை. மாறாக ஒரு குறிப்பிட்ட அளவுடைய சமூகம், படை ஆகியவற்றில் மூல அளவைக் குறித்ததாகத் தெரிகிறது. நாம் பயன்படுத்தும் ''தலைக்கட்டு'' என்ற சொல்லைப் போன்றது (யாத் 18:21; உப 33:17; யோசு 6:15; 1 சாமு 10:19; 23:23; 1 நாள் 12:14). ஆனால் காலப்போக்கில் ''எலேப்'' என்ற சொல் ஆயிரம் என்ற எண்ணிக்கையைக் குறிக்கப் பயன்பட்டது. அதன் விளைவாக, வெவ்வேறு காலத்தைச் சேர்ந்த வாசகங்களை விளக்கும் போது குழப்பம் ஏற்படுவதுண்டு.

எண்ணிக்கை கூட செய்யப்படாத பெருங் கூட்டத்தைக் குறிக்க முழு எண்ணாக ஆயி

ரம் என்ற சொல் பயன்பட்டது. மிகைப்படுத்திக் கூறவும், எண்ணமுடியாதவற்றைக் குறிக்கவும் இச்சொல் பயன்பட்டது (யாத் 20:6; உப 7:9; சங் 68:17; 84:10; 90:4; தானி 7:10; மாற்கு 5:13; அ.ப. 2:41).

**ஆயிரம் ஆண்டுக்காலம் (MILLENISM)**

இது கிறிஸ்துவின் இறுதிக்கால ஆட்சி நிலவும் ஆயிரம் ஆண்டுக் காலத்தைக் குறிக்கும் (திருவெளி 20:2-7). இதற்குப் பலவிளக்கங்கள் அளிக்கப்பட்டுள்ளன.

திருவெளி 20-இன்படி ''ஆதியில் தோன்றிய பாம்பாகிய பறவை நாகத்தை அவர் பிடித்தார். அலகை என்றும், சாத்தான் என்றும் அழைக்கப்படும் அப்பாம்பைப் பிடித்து ஆயிரம் ஆண்டளவு கட்டிவைத்தார். பின் அதைப் பாதாளத்தில் எறிந்து குழியை அடைத்து, அதற்கு முத்திரையிட்டு, ஆயிரம் ஆண்டுகள் முடியும் வரை அது நாடுகளை வஞ்சிக்காமல் தடுத்தார்'' (20:2-3). தீர்ப்பிடும் அதிகாரம் பெற்றவர்கள் அரியணையில் அமர்ந்தனர் (20:4). ''இயேசுவுக்குச் சான்று பகர்ந்து கடவுளது வார்த்தையை அறிவித்ததற்காக தலை வெட்டுண்ட கிறிஸ்தவர்கள்'', ''மீண்டும் உயிர்பெற்று, கிறிஸ்துவோடு ஆயிரம் ஆண்டுகள் முடியும் வரை ஆட்சி புரிந்தார்கள்'' (20:4-6). இந்நிகழ்ச்சிகளோடு ஆயிரம் ஆண்டுக்காலம் தொடங்கி செயல்படுகிறது. இக்காலம் முடிந்ததும் சாத்தான் சிறையிலிருந்து விடுவிக்கப்படுகிறான். அவன் இறைவனுடைய விரோதிகளைப் போருக்கு ஒன்று சேர்க்கிறான். அவர்கள் தோற்கடிக்கப்படுகின்றனர். அவனது முடிவில்லாத் தண்டனை தொடங்குகிறது (20:7-10). அதற்குப்பின் இறந்தோரின் எஞ்சியோரின் பொது உயிர்ப்பு நிகழ்கிறது. அவர்கள் தீர்ப்பிடப்படுகின்றனர் (20:5.11-15) பின்பு ''புதிய வானகமும் புதிய வையகமும்'' தோன்றுகிறது.

வையகத்தில் அமைதியும் நேர்மையுமிக்க இடைக்காலம் பற்றிய கருத்து திருமறை சேராத யூத வெளிப்பாட்டு இலக்கியங்களில் காணப்படுகிறது. இது, ''புதிய வானத்தையும் புதிய பூமியையும்'' (ஏச 65:17) மையமாகக் கொண்ட உயர்ந்த நம்பிக்கைகளோடு, வருங்காலத்தைப்பற்றிய உலகு சார்ந்த மெசியா நம்பிக்கைகளை ஒத்துபோகச் செய்ய உதவியது. சில ராபிகளின் தர்க்கங்களில், இத்தகைய இடைக்காலம் ஏற்படுமா என்ற பிரச்சினை அல்லது, அது எவ்வளவு காலத்திற்கு நீடிக்கும் என்ற பிரச்சினையே இடம் பெற்றது.

திருவெளி 20, சாவின்மேலும், தீய சக்திகளின்மேலும் இருகட்ட வெற்றியை விவரிக்கிறது. இருகட்டங்களிலும் சாத்தான் தோற்கடிக்கப்படுகிறான். உயிர்ப்பு நிகழ்கிறது. தீர்ப்பு அளிக்கப்படுகிறது. இரு கட்டங்களும் ஆயிரம் ஆண்டுக் காலத்தால் பிரிக்கப்படுகின்றன. இந்த இடைக் காலத்தில் ''விலங்கையோ அதன் சிலையையோ தொழாதவர்களும், அதன் அடையாளத்தை நெற்றியிலோ கையிலோ பெற்றுக்கொள்ளாதவர்களும்'' கிறிஸ்துவோடு வெற்றியடைந்து ஆட்சி செய்கின்றனர் (20:4-6). இரண்டாம் கட்டத்தில், தீயசக்திகள், நித்திய தண்டனையாக ''நெருப்புக்கடலில்'' எறியப்படுவதற்காகவே விடுவிக்கப்படுகின்றன (20:5-14-15).

1. கிறிஸ்தவ மறை சாட்சிகளுடைய அரசின் தன்மை என்ன? இடம் எது? 2. எந்தப் பொருளில் சாத்தான் கட்டப்பட்டுள்ளான்? எந்த அளவுக்குச் செயலாற்றத் தடுக்கப்பட்டிருந்தான்? 3. ஆயிரம் ஆண்டுக்காலம், நிகழ்காலத்தோடும் இயேசுவின் இறுதிக் கால வருகையோடும் கொண்டுள்ள தொடர்பு என்ன? 4. ஆயிரம் என்ற எண்ணை அப்படியே எடுத்துக்கொள்ள வேண்டுமா? அல்லது திருவெளிப்பாட்டு நூலில் வரும் மற்ற எண்களைப்போல் அதை அடையாளமாக எடுத்துக்கொள்ள வேண்டுமா? 5. திருவெளி 20-இல் விவரிக்கப்படும் நிகழ்ச்சிகளுக்கும் 19:11-21-இலும் நூலின் மற்ற பகுதிகளிலும் விவரிக்கப்படும் நிகழ்ச்சிகளுக்கும் உள்ள தொடர்பு என்ன? இக்கேள்விகளுக்கு அளிக்கும் பதிலைப் பொறுத்து ஆயிரம்

ஆண்டுக்காலம் பற்றிய வெவ்வேறு விளக்கங்கள் அமையும்.

''ஆயிரம் ஆண்டுக் காலத்திற்கு'' எதிரான விளக்கம், திருவெளி 20-ஐ அப்படியே எடுத்துக்கொள்ளாமல் அடையாளமாக விளக்குகிறது. இதன்படி சாத்தான் ஏற்கெனவே இக்காலத்தில் பாதாளத்தில் கட்டப்பட்டுள்ளான். ஏனெனில் எல்லா நாடுகளுக்கும் நற்செய்தியை திருச்சபை போதிப்பதை சாத்தானால் தடுக்க முடியவில்லை (காண்க யோவா 12:31). வாழ்வை அடைந்து ஆட்சி செய்யும் கிறிஸ்தவர்கள், இப்போது கிறிஸ்துவில் வெற்றியடைந்து அவரது வருகைக்காகக் காத்திருப்பவர்கள் ஆவர். அல்லது, கிறிஸ்துவில் விசுவாசத்தினால் புதிய பிறப்பின் உயிர்ப்பையும், இக்காலத்தில் அவரது அரசின் செயலையும் அனுபவிப்பவர்களுமாவர் (காண்க. திருவெளி 1:6.9). திருவெளிப்பாட்டு நூலில் வரும் மற்ற எண்களைப்போலும், திருவெளி 20-இல் உள்ள மற்ற பகுதிகளைப் போலும், ஓர் ஆயிரம் என்பது அடையாளமானது உருவகமானது. அதை அப்படியே எடுத்துக் கொள்ளக் கூடாது.

இயேசுவின் இரண்டாம் வருகைக்கு முந்திய காலத்தில் அவரது ஆட்சியில் உலகம் நிலையாக மாற்றியமைக்கப்படும் (காண்க மத் 13:31-33). இக்காலம் சாத்தானின் சிறைவாசம் என்று கருதப்பட போதிய நீண்ட காலமாக இருக்கும். உலகம் தன்மையிலே கிறிஸ்தவமயமாக்கப்படும். அதற்குப்பின் கிறிஸ்துவின் இரண்டாம் வருகை நிகழும். இது ஒருசாராரின் கருத்தாகும்.

மற்றொரு சாரார் திருவெளி 20-ஐ அதன் சொற்பொருளில் அப்படியே ஏற்று விளக்கமளிக்கின்றனர். இவர்கள், சாத்தான் இக்காலத்தில் மிகுந்த ஆற்றலோடு செயல்படுவதாகக் கருதுகின்றனர் (காண்க 1 பேதுரு 5:8). ஆனால் அவன் திருவெளி 20:1-3-இல் விவரிக்கப்பட்டிருப்பதுபோல், முழுவதும் செயலற்றவனாக ஆக்கப்படவேண்டும். ஆகவே ''ஆயிரம் ஆண்டுக்காலம்'' இன்னும் வரவிருக்கிறது. அது இயேசுவின் இரண்டாம் வருகைக்குப்பின் நிகழும். கிறிஸ்துவும் அவரைப் பின்பற்றுவோரும் உலகளாவிய நீதியும் அமைதியும் மிக்க ஆயிரமாண்டுக் காலத்திற்கு உலகை நேரடியாக ஆட்சி செய்வர். மெசியாவின் இந்த வரைக்கும்பட்ட ஆட்சிதான் 1 கொரி 15:23-26-இல் குறிக்கப்படுவது என்று இவர்கள் கருதுவார்கள்.

திருவெளிப்பாடு பற்றிய இந்தக் கற்பனை மிக்க கருத்து, உயிர்ப்புப் பற்றிய புதிய ஏற்பாட்டின் போதனையோடு ஒத்துப்போகவில்லை. அதன் அடையாளப் பொருளில் ஒருவேளை அதற்கு மதிப்பு அளிக்கலாம். ஆயினும் ஆயிரமாண்டுக் காலத்தை அதன் சொற்பொருளில் எடுத்துக் கொண்ட சில பதிதக் குழுக்கள் இருந்துள்ளன. திருச்சபைத் தந்தையர் சிலர் கூட இவ்வாறு கருதியதாகத் தெரிகிறது.

**ஆரகு** (ARAH - பயணி, வழிப்போக்கர்)

1. ஆசேரின் குலத்தைச் சேர்ந்த உல்லாவின் மூத்த மகன் (1 நாள் 7:39).

2. செருபாபேல் காலத்தில் பாபிலோனியாவிலிருந்து நாடு திரும்பியவர்களில் சிலரின் மூதாதையர் (எஸ் 2:5; நெக 7:10). மேலும் இணை வாசகங்களிலும், பழைய வாசகங்களிலும் கொடுக்கப்பட்டிருக்கும் எண்ணிக்கைகள் வேறுபடுகின்றன (எஸ் 6:5-இன்படி 775 பேர்; நெக 7:10-இன் படி 652 பேர்). இந்தக் குடும்பத்தின் ஒரு அங்கத்தினரான செக்கனியாவின் பெயர் நெக 6:18-ல் சொல்லப்பட்டுள்ளது. செக்கனியா, அம்மோனிய தோபியாவின் மாமன் ஆவார்.

**ஆரம் - தொங்கணி** (PENDANT)

தொங்கட்டம் போன்ற அணிகலன், மிதியானியரிடமிருந்து கைப்பற்றப்பட்டு, கிதயோனுடைய எபோத்தில் சேர்க்கப்பட்ட பொருட்களில் இதுவும் ஒன்று (நீதி 8:26). யெருசலேம் பெண்களின் ஆடம்பர பொருட்களில் ஒன்று (ஏச 3:19). இந்த அணிகலன்கள் பல்வேறுபட்டவை. சில காதணிகளாக அணியப்பட்டன. நீதிபதி நூலில் குறிப்பிட்டுள்ளது போல சில சங்கி

லிகளில் கோர்க்கப்பட்டு, கழுத்திலிருந்து தொங்கவிடப்பட்டன. இது கழுத்து ஆரமாக இருக்கலாம் (*பழ 1:9; உ. ச. 4:9*). அகழ்வாராய்ச்சியில் கிடைத்தவற்றை நோக்கும்போது இவை மிக சிறப்பு வாய்ந்தவையாக காணப்பட்டன. பொன், வெண்கலம், எலும்பு, இரும்பு அல்லது பல்வேறு கற்கனால் அவை செய்யப்பட்டிருந்தன.

**ஆரா** (ARA - சிங்கம்)

ஆசேரின் வழிமரபுப் பட்டியலில் எத்தேரின் புதல்வருள் ஒருவர் (*1 நாள் 7:38*).

**ஆரா** (HARA - குன்றுகள், மலைநாடு)

ரூபன், காது, மனாசேயின் பாதிக்குலம் ஆகியவற்றைச் சேர்ந்தவர்கள், அசீரிய அரசரால் இந்த இடத்திற்கு நாடு கடத்தப்பட்டனர் (*1 நாள் 5:26*). கோசானுக்கு (இக்கால தேல் கலாப்) அருகில், வடக்கு மெசபொத்தாமியாவின் நகர்களோடு இந்நகர் குறிப்பிடப்பட்டுள்ளது. எனவே, கோசான், குசானாவுக்கு வடக்கேயுள்ள மலைப் பகுதியின் பெயரே ஆரா என்று அழைக்கப்பட்டது என்று சிலர் கருதுகிறார்கள். இப்பெயர் எழுபது நூலில் இல்லை. மேலும் *2 அர 17:6*-லும் *18:11*-லும் ஆராவுக்குப் பதிலாக ''மேதியாவின் நகர்கள்'' என்று எபிரேய விவிலியத்திலும் ''மேதியா நாட்டின் மலைகள்'' என்று கிரேக்க விவிலியத்திலும் காணப்படுகிறது. எனவே மேற்குறிப்பிட்டவையே பழுதுபட்டு ஆரா என்றழைக்கப்பட்டிருக்கும் என்று சிலர் கூறுகின்றனர். அப்படியானால் இந்த இடம் திகிரிசு நதிப்பள்ளத்தாக்கிற்கு மேற்கே இருக்கும் மலைப் பிரதேசத்தையே குறிக்கும். உயரமான இப்பகுதியை அராபியர்கள் ஏல்கெபால் அதாவது 'மலை' என்றே அழைத்தனர்.

அசீரிய அரசன் சார்கோனால் கைப்பற்றப்பட்ட மேதியா நாட்டு நகரான கர்கார் மருகி ஆரா ஆனது என்னும் சிலர் கருதுகிறார்கள். அசீரிய அரசன் இந்த நகரில் வெளிநாடுகளிலிருந்து சிறைப்படுத்தப்பட்டவர்களைக் குடியேறி இருக்கச் செய்தார். அசீரியாவுக்கு நாடு கடத்தப்பட்ட தோபித் மேதியா நாட்டிற்குக் கொண்டுச் செல்லப்பட்ட தன் இனத்தாரான யூதர்களோடு தொடர்பு கொண்டிருந்தார் (*தோபி 1:14 -15*).

ஆரா என்ற ஊர் அதன் கிராமங்களோடு மூன்றாம் திகிலாத்து-பிலேசரால் குறிக்கப்படும் சுமாத்தின் 19 மாவட்டங்களில் ஒன்றாகும்.

**ஆராதனை** (ADORATION )

யாவேயின் மகிமையை உணரும் எசக்கியேலும் (*எச 1:28*) உயிர்த்த கிறிஸ்துவைச் சந்திக்கும் சவுலும் (*அ. ப. 9:4*) தரையில் குப்புற விழுவதைக் காண்கிறோம். ஆம், எந்த ஆளையும் இறைவனின் புனிதமும் மேதகைமையும் திணறடிக்கின்றன. அவனது ஒன்றுமிலா இயல்பிலே அவனை அமிழ்ந்து போகச் செய்கின்றன.

இவ்விதம் ஒருவன் நேரடியாகக் கடவுளைச் சந்திப்பது விதிவிலக்கே. ஆனால், அண்டத்திலும், அன்றாட வாழ்விலும் இறைவனது பிரசன்னத்தையும், செயல்களையும் மகிமையையும் புனிதத்தையும் புரிந்துகொள்வது எளிது. அவ்வாறாக இறைவன் மிக அருகேதான் உள்ளார் என்ற உணர்வின் விளைவாக மனிதனிடம் பக்தி பிறக்கிறது. இது அவனது இயல்புக்கும் அறிவுக்கும் தனி விழைவுக்கும் சமய விதிகட்கும் ஏற்ப வெளி உரு எடுக்கிறது. இவ்விதம் எழும் பக்தியின் புறவெளிப்பாடே ஆராதனை ஆகும். மனிதன் தன் ஏழ்மையையும் பாவத்தையும் உணரும் நிலை, மௌனம், மனக்குழப்பம் (*யோபு 42:1-6*). வணக்கம், பயபக்தி (*சங் 5:8*) நன்றியுடமை (*ஆதி 24:48*) களிப்புமிக்க வழிபாடு (*சங் 95:1-6*) எனப்பல வழிகளில் வெளிப்படும்.

இறைவனைச் சந்தித்தல் மனிதனை முழுவதும் ஊடுருவுவதால் அவனது விசுவாசத்தின் பதில் வெளிச் செயல்களாயும் திண்ணமாய் உருவெடுக்கும். படைப்பின்மேலும் தன்மேலும் ஆண்டவர் கொண்டிருக்கும் மேலாண்மையை உணரும்போது மனிதன் தன் உடம்பையும் வளைத்து அதாவது ஒரு விதத்தில் தன் பணிவு வணக்கத்தை உள்ளும்

புறமும் காட்டுகிறான்; இதுவே மெய்யான ஆராதனை. இதயத்திலிருந்து எழும் இவ்வித ஆராதனையே இறைவனுக்கு உகந்த ஒரே ஆராதனை. ஆனால் பாவநாட்டமுள்ள மனிதன் இறைவனது அரவணைப்பிலிருந்து நழுவிவிடவும் வெறும் புறச்சடங்குகளோடு நின்றுவிடவும் முயலுகின்றான்.

I. ஆராதனைச் செயல்கள்

ஆராதனைச் செயல்களை விழுந்து வணங்குதல், முத்தமிடல் என இரு வகைப்படுத்தலாம். இவை பலவித வழிபாட்டிலே பல்வேறு தொழுகை வடிவங்களைப் பெறும். எனினும் இறைவன் திருமுன், அச்சம், மருட்சி, வியப்பு, கவர்ச்சி இவற்றிற்கு இடையே ஊசலாடும் மனித இயல்பினை ஆராதனைச் செயல்கள் இணைத்து வெளிப்படுத்தும்.

*1. குப்புற விழுந்து வணங்குதல்:-* தன்னிச்சையான செயலாகுமுன் இது வலிமிக்க எதிரி ஒருவன் எளியோர் மனத்தில் ஏற்படுத்தும் ஒரு அச்சுறுத்தும் மனநிலையாய் உள்ளது. எ.கா. சிசெரா என்பவன் யாயேலின் காலடியில் உருண்டு புரண்டு உயிரிழந்து கிடக்கிறான் (நீதி 5:27); பாபிலோன் இஸ்ராயேல் கைதிகளைக் குப்புற விழச் செய்து ஒடுக்குகிறது (ஏச 51:23). பிறகு, இப்படிக் கட்டாயமாய் விழவைக்கப்படும் முன்பே, வலுக்குறைந்தவன் வலியோன்முன் தானாகத் தன்னைத் தாழ்த்திக்கொண்டு இரக்கம் கோர முற்படுகிறான் (1 அர 1:13). இதனால்தான் அரசன்முன் குடிமக்கள் நெற்றி தரையில்பட மண்டியிட்டிருப்பதாக, அசீரியச் செதுக்கோவியங்கள் பொதுவாய்க் காட்டுகின்றன. இறுதியில்தான் இது வழிபாட்டுச் செய்கையாக மாறுகிறது. அனைத்துக்கும் மேலாக உயர்த்தப்பட்ட (1 நாள் 29:11) ஆண்டவராகிய யாவேக்கு எல்லா மக்களும் (சங் 99:1-5), ஏன் உலகம் அனைத்துமே (சங் 96:9) ஆராதனை செலுத்துவது தகுதியும் நீதியுமானதே..

*2. முத்தமிடுதல்:-* மதிப்பும் மரியாதையும், தொடுதலை விழையும் அன்பும் ஆர்வமும் சேரும்போது முத்தம் எழுகிறது (யாத் 18:7; 1 சாமு 10:1...). புற இனத்தார் தம் தெய்வச் சிலைகளைத் தொட்டு முத்தமிட்டனர் (1 அர 19:18). ஆனால் தான் தொடமுடியாத உன்னத கடவுளை வணங்கி முத்தமிட விரும்பும் விசுவாசி தன் கையைத் தன் வாய்முன் வைக்கிறான் (யோபு 31:26 தொ.); அக்கடவுளைத் தொடத் தனக்கிருக்கும் ஆவல் பெருக்கையும் அவர் இருக்கும் எட்டாத தொலைவையும் இச்செய்கையால் நன்கு விளக்குகிறான். உரோமைச் சுரங்கக் கோவிலில் மன்றாடுவதையோ, வாழ்த்துவதையோ குறிக்கும் பாவனையில் ஆராதிப்பவன் விரித்த கைகளோடு காட்டப்படுகிறான். இந்நிலையே இன்னும் கிறிஸ்துவ வழிபாட்டு முறையில் உள்ளது. இந்த நிலை நேரடியாகவும் தெளிவாகவும் முத்தத்தைக் காட்டாவிடிலும், அதன் உள்ளார்ந்த செம்பொருளைச் சுட்டுகிறது.

*3. திருவழிபாட்டுச் சைகைகள் எல்லாம் ஆராதனையே:-* யாவே முன்னிலையில் (உப 26:10; சங் 22:28 தொ.) அல்லது பெட்டகத்தின் முன்னே (சங் 99:5), சடங்கு ஆசாரப்படி நெடுஞ்சான் கிடையாக விழுவது ஆராதனை என்பது தெளிவு. இதே போல், பலியிடுதல் உட்பட (ஆதி 22:5; 2 அர 17:36). பீடத்தின்முன்போ (2 அர 18:22) யாவேயின் ஆலயத்திலோ (2 சாமு 12:20) நிகழும் செய்கைகள் அனைத்துமே அதாவது இறைவழிபாட்டுக்குரிய செய்கைகள் எல்லாமே, ''யாவேயை ஆராதித்தல்'' (1 சாமு 1:3; 2 சாமு 15:32) என்பதில் அடங்கும். கடவுளின் பிரசன்னத்தில் வானவர் விழுந்து வணங்குகின்றனர் (நெக 9:6); பொய்த் தேவர்கள் மாயமாய் மறைகின்றனர் (செப் 2:11), தெய்வீகப் பிரசன்னத்துக்குக் காட்டும் இவ்வணக்கமே ஆராதனை ஆகும்.

II. உன் கடவுளாகிய ஆண்டவரை ஆராதிப்பாயாக

*1. யாவே ஒருவரே மெய்யான ஆராதனைக்கு உரித்தானவர்:-* பழைய ஏற்பாட்டிலே, சில பெரியார் முன்பாகவும் மக்கள் விழுந்து வணங்குவதைத் தெளிவாய்க் காண்

கிறோம், (*ஆதி 23:7. 12;2 சாமு 24:20; 2 அர 2:15; 4:37*). பன்முறை அப்பெரியாரில் தெய்வீக மகத்துவம் சிறிது மிளிர்வதை இவர்கள் உணர்வதால் இவ்விதம் செய்யத் தூண்டப்படுகின்றனர் (*1 சாமு 28:14.20; ஆதி 18:2; 19:1;* எண் *22:31;* யோசு *5:14*). ஆயினும் சிலைகள், விண்மீன்கள் (உப *4:19*) புறமதத் தேவர்கள் (*யாத் 34:14;* எண் *25:2*) போன்ற யாவேக்குப் போட்டியாக வைக்கக்கூடிய எதற்கும், ஆராதனை என்று கருதக்கூடிய எவ்விதச் செய்கையையும் பழைய ஏற்பாடு கடுமையாய்க் கண்டிக்கிறது, தடுக்கிறது. சிலைவழிபாடு இவ்விதம் தடை செய்யப்பட்டிருந்ததால்தான் உண்மை ஆராதனை உணர்வு இஸ்ராயேலரிடையே வெகு ஆழமாய் ஊன்றியிருந்தது; மெய்யான ஆராதனை தனிப்பட்ட சமய மதிப்பும் பெற்றிருந்தது. இதனால்தான், மோர்தொக்காய் ஆமானை மண்டியிட்டு வணங்க மறுத்தார் (*எஸ்த 3:2.5*); இவையாவும் ''உன் இறைவனாகிய ஆண்டவரை வணங்கி அவரைமட்டுமே ஆராதிப்பாயாக'' என்று (மத் *4:10* தொ.) இயேசு சோதிக்கும் அலகைக்கு அளிக்கும் பதிலில் அடங்கியுள்ளது. யூத இளவல்கள் நெபுக்கதுனேசார் அமைத்த பொற்சிலையைப் பணிந்து வணங்க மறுத்தனர் (*தானி 3:18*).

*2. இயேசு கிறிஸ்து ஆண்டவர்:-* கடவுள் ஒருவருக்கே என இருந்த ஆராதனை சிலுவையில் அறையுண்டு, கிறிஸ்துவும் ஆண்டவருமாக ஏற்றுக்கொள்ளப்பட்ட (அ.ப. *2:36*) இயேசுவுக்கு உரித்தானது என்றும், திருச்சபை தோன்றிய முதல் நாளிலிருந்தே பறைசாற்றப்படுகிறது. ''அவருடைய பெயருக்கு விண்ணவர், மண்ணவர், கீழுலகோர் அனைவரும் மண்டியிடுகின்றனர் (பிலி *2:9* தொ. திருவெளி *15:4*). இவ்வித வழிபாட்டுக்கு இலக்கானவர் உயிர்த்து மகிமை பெற்ற கிறிஸ்துவே (மத் *28:9.17;* லூக் *24:52*). இன்னும் மரிக்க இருக்கின்ற மணமகனில், ஏன், புதிதாய்ப் பிறந்த பாலன் இயேசுவிலேயே (மத் *2:2.11;* காண் ஏச *49:7*) இறைமைந்தனைத் தம் விசுவாச ஒளியில் காண்கின்றனர், கண்டு ஆராதிக்கின்றனர் (மத் *14:33;* யோவா *9:38*). ஆம், கிறிஸ்தவர்கள் ஆண்டவராகிய இயேசுவை ஆராதிக்கின்றனர். ஆனால், வானதூதர்களுக்கோ (அ.ப. *9:10; 22:9*) அப்போஸ்தலர்களுக்கோ (அ.ப. *10:25* தொ. *14:11-18*) ஆராதனை எனக் கருதக்கூடிய எவ்வித வெளிச்செயலும் காட்டாது விழிப்பாயும் உறுதியாயும் அதை ஒதுக்குகின்றனர். மனிதனான கடவுளும் மீட்பருமான மெசியாவுக்கு ஆராதனை சாற்றுகின்றனர்; ஆனால், மிருகத்தால் குறிக்கப்படும் சீசெர் மன்னர்களை (திருவெளி *13:4-15; 14:9*தொ) ஆராதிக்கப் பகிரங்கமாய் மறுக்கின்றனர்; அவர்களில் ஆதிக்க அட்டூழித்தையும் வீரமுடன் எதிர்த்து நின்றனர்.

*3. ஆவியிலும் உண்மையிலும் ஆராதனை செலுத்தல்:-* கிறிஸ்தவ ஆராதனையின் புதுமைப்பண்பு ஒரே கடவுள் தந்தை, மகன், ஆவி என மூன்று ஆட்களாகக் காண்பதில் மட்டுமன்று. இக்கடவுள் ஆவியானவர்; அவருக்கு உள்ளத்தால் செலுத்தப்படும் உயர்ந்த ஆராதனையே அவரே உவந்தேற்று நிறைவுறச் செய்கிறார் என்பதிலும் அடங்கியுள்ளது. எனவே, இக்காலத்தில் ஆவியானவரில் பிறந்தவர்கள் (யோவா *3:8*) ''ஆவியிலும் உண்மையிலும்'' (*4:24*) இறைவனை ஆராதிக்கக்கூடும். வெளிச்செயல்களோ உருவப் படிவங்களோ இல்லாமல் மனத்தால் மட்டும் ஆராதிக்கும் நிலை என்று இதற்குப் பொருளன்று. இது ஆவி, ஆன்மா, உடல் (*1* தெச *5:23*) இவை கூடிய முழு மனிதனின் அர்ப்பணத்திலிருந்து எழும் மனநிலையாகும். இவ்வண்ணம், உள்ளியல்பார்ந்த முறையில் புனிதம் பெற்று உண்மையில் ஆராதிப்போருக்கு, எருசலேமோ கெரிசீமோ (யோவா *4:20-23*) அல்லது தேசீய சமயமோ எதுவும் தேவையில்லை, எல்லாம் அவர்கட்கு உரியவை; ஏனெனில், அவர்கள் கிறிஸ்துவுக்கு உரியவர்கள், கிறிஸ்துவோ கடவுளுக்கு உரியவர் (*1* கொரி *3:22* தொ).

ஆவியில் அளிக்கப் பெறும் ஆராதனை, இறைத்தந்தைக்கு உகந்த ஒரே கோவிலான, உயிர்த்த கிறிஸ்துவின் உடலிலேதான் (யோவா *2:19-22*) இப்பொழுது நடக்கின்

றது. ஆவியினால் பிறந்தவர்கள் (3:8) தந்தை பூரிப்படையும் (மத் 3:17) இந்த ஒரே ஆராதனையில் இணைகின்றனர்; அவர் தம் அன்பார்ந்த மகன் எழுப்பும் 'அப்பா, தந்தாய்' (கலா 4:4-9) எனும் கூக்குரலை இந்த இறைமக்கள் எதிரொலிக்கவும் செய்கின்றனர். இறுதியாக, விண்ணக எருசலேமில் ஆலயம் எதுவும் இராது; அதனிடத்திலே கடவுளும் செம்மறியும் இருப்பர் (திருவெளி 21:22). அங்கு இரவும் பகலும் ஓய்வின்றி ஆராதனை நடக்கும் (4:8); என்றென்றும் வாழும் இறைவனுக்கு மகிமையும் மாட்சியும் செலுத்தி உயிர்கள் அனைவரும் வழிபடுவர் (4:10; 15:3 தொ).

**ஆராத்திப் படையல், பலி, காணிக்கை** (WAVE OFFERING)

வழிபாட்டுக்கு வந்திருக்கின்ற இஸ்ராயேல் மக்கள் விவசாயத்தின் பயனாக கிடைத்த கனிகளை ஆண்டவனுக்கு காணிக்கையாகக் கொடுக்கும் போது செய்யப்படுகின்ற வழிபாட்டுச் செயலைத்தான் மேற்சொன்ன வார்த்தை குறிக்கின்றது. பெரும் பகுதிகளைக் கொண்ட பலியில் இது ஒரு சிறு சடங்காகும், பிற்காலத்தில் வளர்ச்சியடைந்ததாகும். இந்தச் சொல் அந்த சடங்கின் நோக்கத்தைப் பற்றியோ அல்லது பொருளைப் பற்றியோ ஒன்றும் தெரிவிக்கவில்லை. ஆனால், யாவேயின் பலி பீடத்தின் முன் நின்று கையசைப்பதைச் சுட்டிக் காட்டுகின்றது. பலி பீடத்தை நோக்கி கையசைக்கும் போது, பலி பொருட்கள் ஆண்டவனுக்கு என்று சுட்டிக் காட்டுகின்றது. ஒரு வேளை இப்படி ஒப்புக் கொடுக்கப்பட்ட காணிக்கை, அளிப்பவர்க்கே திரும்பக் கொடுக்கப்பட்டிருக்கலாம். இச்சடங்கு பற்றி ஒன்றும் உறுதியாகச் சொல்ல முடியாது. பல்வேறு பொருட்கள் இப்படி ஆராத்தி செய்து ஒப்புக் கொடுக்கப்பட்டன. (உ-ம்) வெள்ளாட்டுக் குட்டியின் வெவ்வேறு பகுதிகள்; மேலும் பல்வகையான அப்பங்களும் (யாத் 29:22-26; லேவி 8:25-29). அறுவடையின் முதற்கனிகளும் (லேவி 23:11-14) அளிக்கப்படும். தொடக்க காலத்தில் இது ஒரு அடையாள செயலாக இருந்திருக்கலாம். ஆனால் காலப் போக்கில் அவை உண்மையான பலியாக மாறி இப்பொழுது அந்தப் பலி பொருட்கள் குருக்களுக்கு அளிக்கப்படுகின்றன. இதே மாதிரி மிருகங்களும், தானியங்களும் வெவ்வேறு சூழ்நிலைகளில் அளிக்கப்பட்டன. ஆட்டின் மார்புகள் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது (யாத் 29:26; லேவி 7:30; 19:14). ஆரோன், ''இஸ்ராயேல் மக்களிடமிருந்து ஆராத்திக் காணிக்கையாக'' லேவியர்களை அடையாளமாக ஒப்புக் கொடுக்கிறார் (எண் 8:11.15.21).

இந்த நிகழ்ச்சியானது மற்ற முதன்மையான பலிச் சடங்குகளுடன் நெருங்கிய தொடர்புள்ளது; எனவே இந்த ஆராத்தி சடங்கு பலிகளில் முக்கிய இடம் பெற்றதாகத் தெரிகின்றது. குரு பீடத்திற்கு முன்பாக பின்வரும் பலிப் பொருட்களை ஆராத்தி செய்து ஒப்புக் கொடுக்க வேண்டும். (அ) அறுவடையின் முதற் கனி (ஆ) புதிதாக கிடைத்த தானியத்தால் செய்யப்பட்ட அப்பம் (இ) தகனப்பலியாக ஒப்புக் கொடுக்கப்பட்ட வெள்ளாடுகளும், ஒரு எருதும், இரண்டு செம்மறி ஆடுகளும், (ஈ) குடிப்பதற்காக அளிக்கப்படும் பானம் (உ) பாவப்பலிக்கான ஓர் ஆட்டுக் கிடாயும், சமாதானப் பலிக்கான இரண்டு ஆண் செம்மறிகளும் (லேவி 23:15-20).

குழப்பமான பலிசெலுத்தும் முறைகளைக் கொண்ட லேவிய குருத்துவத்தில் மேற்கூறிய செயல் குருக்களால் செய்யப்பட வேண்டும் (யாத் 29:24). ''ஆரோனும் அவனுடைய மக்களும்'' என்ற சொற்றொடருக்கேற்ப இருந்த போதிலும், மோசேயும் இந்தச் சடங்கைச் செய்தார் (லேவி 8:29). லேவி 7:28-34 குறிப்பவை அவ்வளவு தெளிவாக இதைப்பற்றிக் குறிப்பிடுவதில்லை. ஆனால் குரு சட்டப் பூர்வமாக சமாதானபலியில் பங்கு கொண்டதால், குரு இந்த சூழ்நிலையில் இப்படி நடந்து கொண்டார் என்று ஊகிக்கப்பட்டது. மேற் கூறப்பட்ட பொருட்கள் வழிபடுவோரால் கொண்டு வரப்பட்டது. ஆனால், குரு அவருடன் இணைந்து அல்லது அவர் குருவுடன் இணைந்து இந்தக்

காணிக்கையை செலுத்துகின்றார் (யாத் 29:24-25). குரு காணிக்கைகளைக் கொண்டு வந்துள்ளவர்கள் மீது தன் கரத்தை நீட்டி அவர்கள் தலை மீது வைத்து வழிபடுவோர் ஆராத்தி செய்து இந்தப் பலியை செலுத்தி னர் என்று கருத இடமிருக்கிறது (எண் 6:19-20).

இந்தப் பலியானது, பலிப்பீடத்தின்முன் யாவேயின் முன் நடைபெற்றது. ஆகவே இது புனிதமானது; எந்த இழிவான (அசுத்த) நோக்கத்திற்கும் பயன்படுத்த முடியாது. இவை சுத்த செயல்களுக்காகப் பயன்படுத்து வதில், குருக்களுக்கும் அவர்களுடைய தடும்பத்தை நடத்துவதற்கு உதவியாக இருக்கும்படி அளிப்பது முதன்மை இடத்தை பெறுகின்றது. மற்றொரு வகை யான சடங்கில், குரு ஆராத்தி செய்தபின், காணிக்கைப் பொருட்களைக் கொண்டு வந்து பலி பீடத்தின் மீது வைத்து எரித்து விடுவார்கள் (யாத் 29:25; லேவி 8:28).

**ஆராம்** (ARAM - உயர்ந்த) - ஆள்

1. சேமின் ஐந்தாவது மகனாவார். கோவா வின் பேரன். ஊசு, கூல், கெத்தேர், மாசு போன்றவர்கள் ஆராமின் புதல்வர்களாவார் (ஆதி 10:22-25). ஆராமின் புதல்வர்களை ஒரு குறிப்பிட்ட ஆட்சிப் பகுதியோடு தொடர்புபடுத்த இயலாது. முதலாம் நாளாக மத்தில் (1:17) ஆராமின் புதல்வர்களாகக் கருதப்பட்டவர்கள் அவரது சகோதரர்களாக எண்ணப்படுகின்றார்கள். சேமின் புதல்வர் கள் செமித்திய மக்களின் பிரிவுகளை (வகை யினரைக்) குறித்துக் காட்டுகின்றனர். அவை மக்களையும், மொழியையும், நிலப்பரப் பையும் குறிக்கும். இந்த ஆராம் அரமேயர்க ளின் குல மூதாதையராகக் கருதப்படுவார் (ஆதி 10:22-28; 1 நாள் 1:17).

2. இவர் ஆபிரகாமின் சகோதரனாகிய நாக்கோரின் பேரனாகவும் (ஆதி 22:20-21) கெமூவேலின் மகனாகவும் கருதப்படுகின் றார். மேலே குறிப்பிடப்பட்டுள்ள பெயர் கள் காரான் பகுதியைக் குறிப்பால் உணர்த்து கின்றன. இந்த தலைமுறைக் குறிப்பானது ஆராமின் மக்களுக்கும், இஸ்ராயேலரின் குல தலைவர்களுக்கும் இடையே உள்ள நெருங்கிய உறவைச் சுட்டிக் காட்டுகின்றது.

3. ஆசோரின் தலைமுறை அட்டவணை யில் செமேரின் மூன்றாவது மகனாக ஆராம் இடம் பெறுகிறார் (1 நாள் 7:34).

**ஆராம்** (ARAM) - இடம்

ஆராம் என்பது மெசபொத்தாமியா, சீரியா போன்ற பகுதிகளில் வாழ்ந்து வந்த ஒரு முக்கிய செமித்திய மக்களான அரமே யர்களை ஒருமையில் குறிக்க பயன்படுத்தப் பட்ட வார்த்தையாகும் (2 சாமு 8:5-6; 1 அர 20:20-21; 1 நாள் 2:23; 17:10.12). மேலும் சாமுவேல் நூல், அரசர்கள் நூல், நாளாகம நூல் போன்ற வகைகளில் 64 தடவைகள் பயன்படுத்தப்பட்டுள்ளது. (ஆமோ 1:5; 9:7; ஏச 7:2.4-5.8; 9:12; 17:3; எரே 35:11; எச 16:57; 27:16). அரமேயர்களில் நிலப்பகு தியைக் குறிக்க ஒரு சில முறைகள் இவ் வார்த்தைப் பயன்படுத்தப்பட்டுள்ளது (எண் 23:7; 2 சாமு 15:8; ஓசே 12:12; செக் 9:1). சில இடங்களில் மக்களையும், நாட் டையும் ஒருங்கே குறிக்கப் பயன்பட்டுள் ளது (நீதி 10:16; ஏச 7:1; அரசர்கள், நாளாக மம் நூல்களில் 43 தடவை).

ஆராம் நிலப்பகுதியானது யோர்தான் நதிக்கு அப்பால், வளமைமிக்க யூப்பிரதிசு, திகிரிசு பகுதிகளால் சூழப்பட்ட பாலஸ்தீ னத்திற்கு வடகிழக்கில் உள்ளது. அசீரியக் கல்வெட்டுக்களில் யூப்பிரதிசு நதிக்குக் கிழக்கே உள்ளதுதான் ஆராம் நிலப்பகுதியா கவும், மேற்குப் பகுதி இத்தியர்கள், எமோரி யர்கள் வாழ்கின்ற பகுதியாகவும் குறிக்கப் பட்டிருக்கிறது. குலத் தலைவர்களின் வர லாற்றினைப் பார்க்கும்பொழுது ஆராம் என்ற வார்த்தை மெசபொத்தாமியா பகுதிக ளைக் குறிக்கிறது.

இஸ்ராயேலின் அரசாட்சி தழைக்கத் துவங்கியபொழுது, அரமேயர்களின் ஆதிக் கம் தமஸ்கு நகரில் வேரூன்றியது. பின் அண்டை நாடுகளாகிய தமஸ்கும் இஸ்ரா யேலும் அடிக்கடி போரிட்டுக் கொண்டிருந்

தன. அசீரியா நாடானது தமஸ்கு, இஸ்ரா யேல் போன்ற நாடுகளை அழிக்கும் வரை இருவரிடையேயும் போர் தொடர்ந்து நடை பெற்றது. இலக்கியத்தில் அரசாட்சி கால இலக்கியத்தில் ஆராம் என்பது தமஸ்கும், அதைச் சூழ்ந்துள்ள பகுதிகளையும்தான் குறிப்பதாகத் தோன்றுகிறது. காண்க: அரமே யர்கள்.

**ஆரான்** (ARAN - காட்டு வெள்ளாடு)

கோரியர் குலத்தின் தலைவரான தீசான னின் இரண்டாவது மகனாவார் (ஆதி 36:28; 1 நாள் 1:42).

**ஆரான்** (HARAN - மலைப் பாங்கான)

1. தெராகின் மகனும், அபிராம், நாகோர் ஆகியவர்களின் சகோதரனுமாவார். லோத்து, மில்க்கா, இசிக்கா ஆகியோரின் தந்தையும் இவரே. இவர் தன் தந்தையாகிய தெராகு இறக்குமுன்பே கல்தேய நகரான ஊர் என்னும் நகரில் இறந்தார் (ஆதி 11:26-31).

2. காலேப்புக்கும், அவருடைய வைப் பாட்டி ஏப்பாவுக்கும் பிறந்த மகன். யூத குலத்தைச் சேர்ந்தவர் (1 நாள் 2:46).

3. கெரிசோம் குலத்தைச் சேர்ந்த சிமயி யின் புதல்வர். இவர் ஒரு லேவியர் (1 நாள் 23:9). தாவீது அரசன் காலத்தில் இலாதான் குடும்பத்தின் தலைவர்களில் ஒருவராக இருந்தார் (1 நாள் 23:9).

**ஆரும்** (HARUM - உயர்த்தப்பட்ட)

யூதாவின் குலத்தில் ஒரு குடும்பத்தலைவ ரின் பெயர். அகரேலின், தந்தையாவார் (1 நாள் 4:8).

**ஆரோனியர்** (AARUNITES)

இவர்கள் ஆரோன் வழி வந்தவர்கள் (1 நாள் 12-27), ஆரோனின் குலத்தவர், ஆரோ னின் வீட்டார் (சங் 118:3; 115:10.12), ஆரோ னின் இனத்தவர் (சங் 135:19) என்று பல வாறு அழைக்கப்படுவர். பழைய ஏற்பாட் டில் குருத்துவத்தை நிறுவியரும் அதன் தலைவருமான ஆரோனின் ஆண் வழித் தோன்றல்களுக்குக் கூட்டுப் பெயர் ஆகும். இவர்களும் குருக்கள் ஆக பணிபுரிய இறை வனால் அழைக்கப் பெற்றவர்கள். காண்க. குருக்கள், லேவியர்கள்.

**ஆரோனின் கோல்** (AARON'S ROD)

ஆரோனின் கோல் பயன்பட்ட விதம் பற்றிப் பல இடங்களில் பேசப்படுகிறது. இஸ்ராயேலை மீட்கப் பாரவோனின் ஆற்ற லுக்கும் யாவேயின் நோக்கத்திற்கும் இடையே நடக்கும் போராட்டத்தில் மோசே யின் கட்டளைக்கு இணங்க, 1) ஆரோன் தனது கோலைக் கீழே போடுகிறார். அது பாம்பாகி எகிப்திய மந்திரவாதிகள் செய்த பாம்புகளை எல்லாம் விழுங்கிவிட்டது (யாத் 7:8-13). 2) ஆரோன் தனது கோலைப் பயன்படுத்தி முதல் மூன்று வாதைகளை வரவழைத்தார் (யாத் 7:19-20; 8:5-7.16-19). குருக்கள் பாரம்பரியப்படி இவை இஸ்ரா யேலரை விடுவிக்கும் முயற்சியில் மோசே யின் உதவியாளரான ஆரோன் செயல்பட்ட தைக் குறிக்கும் நிகழ்ச்சி உரைகள் ஆகும். மற்ற இடங்களில் இது ''மோசேயின்'' கோல் என்றே காட்டப்படுகிறது (யாத் 4:2-14.16; 17:5.9)

எகிப்தில் நடந்த வாதைகள் உண்மையி லேயே யாவேயால் நிகழ்கின்றன என்பதை மோசே தன் இறைவாக்கால் விளக்குகிறார். இவற்றில் பயன்படும் கோல் மாய வித்தைக் காரரின் கோல் அன்று. அது மோசேயின் இறை வாக்குரைக்கும் அலுவலின் அடையா ளமாகும். இக் கோலுக்குத் தன்னிலேயே எந்த அருஞ்செயல் ஆற்றலும் இல்லை. இறைவனுடைய அருஞ்செயல் புரியும் ஆற் றலே செயல்படுகின்றது என்பதற்கு அடை யாளமாய்ப் பயன்படுகிறது. அது எகிப்திய மந்திரவாதத்தின் மேல் இறைவனது வெற் றியை அடையாளமாய் உணர்த்திற்று.

ஒவ்வொரு குலத்தவரின் பெயர் எழுதப் பட்ட பன்னிரண்டு கோல்களுடன் ஆரோ னின் பெயர் எழுதப்பட்ட கோலையும் சேர்த்து, அவற்றைச் சாட்சியக் கூடாரத்தில் ஆண்டவர் முன்னிலையில் மோசே வைத்

தார். மறு நாள் வந்து பார்த்த போது ஆரோனுடைய கோல் மட்டும் துளிர் விட்டுப் பூத்து மலர்ந்து இருப்பதைக் கண்டார் (எண் *17:16-26*). இந்த நிகழ்ச்சி ஆரோனுடைய குருத்துவ அதிகாரத்தையும் மோசேயின் அதிகாரத்தையும் உறுதிப்படுத்தியது. இவர்களுக்கு எதிராய்க் கிளர்ச்சி செய்தவர்களுக்கு ஓர் எச்சரிக்கையாய் அமைந்தது. இறைவனின் கட்டளைப்படி இக்கோல் உடன்படிக்கைப் பேழை முன் வைக்கப்பட்டது (*17:25*). ஆனால் எபிரேயருக்கு எழுதப்பட்ட திருமுகம் இக்கோல் பேழைக்கு உள்ளே வைக்கப் பட்டதாய்க் கூறுகிறது (எபி *9:4*; காண்க *1* அர. *8:9*).

ஆரோன் (AARON - இறைமொழி அளிப்பவர் என்று பொருள் கூறலாம். உறுதியாகக் கூற முடியாது. இப்பெயர் எகிப்தியர் மூலம் கொண்டிருக்கலாம்)

*1.* ஐந்நூல் அல்லது தோராவில் ஆரோன்:- இவர் லேவி குலத்தைச் சேர்ந்தவர். அம்ராம் - யோக்கபேது ஆகியோருக்கு யாத்திரை நிகழ்ச்சிக்கு *83* வருடங்களுக்கு முன் பிறந்தவர் (யாத் *6:20*, எண் *26-59*, *1* நாள் *6-3*). மோசேக்கு மூன்று ஆண்டு மூத்தவர் (யாத் *7:7*) ஆனால் மிரியம்முக்கு இளையவர்.

இஸ்ராயேலரை எகிப்திலிருந்து மீட்க ஆண்டவர் மோசேயை அழைத்தபோது, மோசே, தான் பேச்சுத்திறன் அற்றவனும், திக்குவாயனும் மந்த நாவும் உள்ளவன் என்று கூறித் தப்பிக்க முயன்றபோது, அவருக்குப் பதிலாகப் பேசவும் இறைவாக்கு உரைக்கவும், அவரது மூத்த சகோதரன் ஆரோனை நியமித்தார் ஆண்டவர் (யாத் *4:10-16; 7:1-2*). இஸ்ராயேலருக்கு விடுதலை அளிக்க மோசேயும் ஆரோனும் என்ன செய்ய வேண்டும் என்று ஆண்டவர் கட்டளையிட்டார் (*7:8;9:8*). பாரவோனை இருவரும் முதல் முறை சந்தித்தபோது, மோசே சொல்ல ஆரோன் தனது கோலால் முதல் அடையாளச் செயலையும் (*7:8-12*) முதல் மூன்று வாதைகளைய்ம் நிகழச் செய்தார் (*7:19-20; 8:5-6; 16-17*). இந்நிகழ்ச்சியுரையில் ஆரோனின் பாகம் விளக்கப்பட்டுள்ளது. கடந்தேகும் நிகழ்ச்சியின் சடங்கு முறையை ஆண்டவர் மோசேக்கும், ஆரோனுக்கும் வெளிப்படுத்தினார் (*12:1*), இஸ்ராயேல் மக்களை எகிப்திலிருந்து வெளிநடத்திச் சென்ற போதும் (*12:31*) பாலைவனம் வழியாகப் பயணம் செய்தபோதும் (அதி. *16*) ஆரோன் மோசேயோடு உடன் இருந்தார். மக்கள் மோசே, ஆரோனுக்கு எதிராக முணு முணுத்தனர் (*16:2.6*; எண் *14:2.26; 20:2*) அமலேக்கியருக்கு எதிரான போரில் வெற்றி பெற மோசே ஒரு பாறையின் மேல் இறைவன் கொடுத்த கோலைக் கையிலேந்தி நிற்கையில், அவரது கைகள் அசந்துபோனபோது ஆரோனும், கூரும் அளித்த கல்லின்மேல் மோசே அமர, இருவரும் மோசேயின் கைகளைத் தாங்கிக் கொண்டனர் (யாத் *17:8-13*).

இறையாற்றல் தோற்றத்தில் இறைவன் மக்களுக்குத் தம்மைக் காட்டிக் கொண்டபின் (*19:16-19*), ஆரோன் மோசேயோடு சீனாய் மலையில் ஏறிச் செல்ல இறைவன் அழைத்தார் (*19:24*). மீண்டும், இறைவன் மக்களுக்குச் சட்டத்தை அளித்தபின், மோசே, ஆரோன், நாதாபு, அபிகு மற்றும் இஸ்ராயேல் பெரியவர்களுள் எழுபதுபேரும் சீனாய் மலைக்கு ஏறிவர அழைக்கப்பட்டனர் (*24-1*). அங்கு இவர்கள் ஆண்டவரைக் கண்டபின் உண்டு குடித்தனர் (*24:11*). மோசே சீனாய் மலையில் ஏறிப்போய் அங்கு நாற்பது இரவும், நாற்பது நாளும் தங்கியிருந்தபோது, ஆரோனையும் கூரையும் மக்களுக்குத் தலைவர்களாக நியமித்துச் சென்றார் மோசே. அவர் மலையில் இருந்தபோது, பொறுமையிழந்து கிளர்ச்சி செய்யும் மக்கள் வழிபடுவதற்காய் பொற்கன்றுக்குட்டியை ஆரோன் செய்து கொடுத்தார் (*32:1-6*). இந்தப் பாவத்திற்கு மோசே விளக்கம் கேட்ட போது, சாக்குப் போக்கே கூறினார் (*32:21-24*). இப்பாவத்தினால் ஆண்டவர் சினமுற்றிருந்தாலும், மோசே மன்றாடியதால், ஆரோனைக் காப்பாற்றினார் (உப *9:20*). பொற்கன்றை வழிபட்டவர்கள் மேல் மோசே கட்டளையிட்ட தண்டனையை நிறைவேற்றியதால், லேவியினர் முன் மாதிரியாகத் திகழ்ந்தனர் (யாத் *32:25-29*).

இறைவன் கட்டளையிட்டவாறு உடன்படிக்கைப் பேழையை மோசே செய்த பின்னும் *(35:30-39:43)* வழிபாடுபற்றி இறைவனது போதகத்தைப் பெற்றனர் (லேவி *1-7*). அதன்பின் ஆரோனும் அவரது புதல்வர்களான நதாபு, அபிகு, எலயாசர், இத்தாமார் ஆகியோரும் இறைவனது குருக்களாக அபிடேகம் செய்யப்பட்டனர் (லேவி *8*; காண்க யாத் *29*). ஆரோன் மட்டுமே அபிடேகத் தைலம் பெற்றார் (லேவி *8:12*). இதிலிருந்து இவர் இஸ்ராயேலின் பெரிய குருவாகவும், நடுவராகவும் விளங்கினார். அவர் மட்டும், பரிகார நாளில் திருத்தூயகத்துள் செல்லலாம் *(16:11-14)*. சந்திப்பின் கூடாரமும் பேழையும் அவருடைய பொறுப்பில் விடப்பட்டன (எண் *18*). ஆரோனே முதல் பெரிய குருவும், குருத்துவக் குலத் தலைவருமாவார்.

ஆனால் அவரது குருத்துவப் பணியின் முதல் நாள் துன்பியலாக முடிந்தது. அவர் ஆண்டவருக்குத் தன் முதற் பலியை ஒப்புக் கொடுத்தபோது (லேவி *9:1-24*) அவரது புதல்வர்கள் நாதாபும், அபிகுவும் தங்களுக்குக் கட்டளையிட்டிருந்ததை மீறி, ஆண்டவர் திருமுன் அன்னிய நெருப்பைச் சமர்ப்பித்தனர். அதனால் உடனே ஆண்டவரிடமிருந்து நெருப்புப் புறப்பட்டு அவர்களை எரித்து, அவர்கள் ஆண்டவர் முன்னிலேயே இறந்தனர் *(10:1-2)*. மோசேக்குக் கீழ்ப்படிய ஆரோன் மனத்திடன் கொண்டிருந்ததாலும், தன் புதல்வர்களின் மரணத்தால் ஏற்பட்ட தந்தைக்குரிய துக்கத்தை அடக்கிக் கொண்டதாலும் *(10:3)*, ஆரோனுடையவும் மற்ற இரு புதல்வர்களுடையுவும் குருத்துவத்தை ஆண்டவர் உறுதிப்படுத்தினார். மோசே வழியாக, ஆரோனும் அவரின் புதல்வர்களும் புனிதமாய் இருக்க வேண்டிய கடமையை ஆண்டவர் வலியுறுத்தினார் *(10:6-7)*. பின், பெரிய குரு என்ற அளவில், ஆரோனுக்கு அவரது சமயக் கடமைகளை நேரடியாக எடுத்துக் கூறினார் *(10:8-11)*.

சீனாயைவிட்டு இஸ்ராயேலர் புறப்பட்ட பின், ஆரோன் தனது ஒழுக்கப் பலவீனத்தை மீண்டும் ஒருமுறை காட்டினார். தன் சகோதரி மிரியாமால் தூண்டப்பெற்று, மோசே எத்தியோப்பியப் பெண்ணை மணந்ததற்காக, இருவரும் அவருக்கு எதிராகப் பேசினர். இறைவாக்கு அலுவல் மோசேக்கு மட்டும் உரியதன்று என்று முறையீடு செய்தனர் (எண் *12:1-2*). மிரியாம் மட்டும் தொழுநோயால் தண்டிக்கப் பட்டாலும் *(12:10)* இரண்டு பேர் மேலும் இரக்கம் காட்டும்படி மோசேயிடம் ஆரோன் வேண்டினார் *(12:9-12)*. இக் கதையிலும் பொற்கன்றுக் கதையிலும் ஆரோனின் குற்றத்தை எபிரேயப் பொதுப்பணிப் பாரம்பரியம் குறைத்துக் கூறுகிறது.

சில காலத்திற்குப் பின் கோராகு, தாத்தான், அபிராம் ஆகியோர் மோசேக்கு எதிராக மட்டுமன்றி ஆரோனுக்கு எதிராகவும் கலகம் செய்தனர். இதற்குத் தண்டனையாக நிலம் பிளந்து அவர்களையும் அவர்களுக்கு உரியவற்றையும் விழுங்கிற்று *(16:1-40)*. இதைக் கண்ட மக்கள், மோசேக்கும் ஆரோனுக்கும் எதிராக முணுமுணுத்துக் கலகம் செய்தனர். இதற்குத் தண்டனையாக, ஆண்டவர் முன்னிலிருந்து கோபத் தீ புறப்பட்டு மக்களை வதைத்தது. அவர்களுக்காக மன்றாடுமாறு ஆரோனிடம் மோசே கூற, அவரும் இறந்தோருக்கும் உயிரோடிருந்தோருக்கும் இடையே நின்று மக்கள் பெயரால் மன்றாடினார். வாதையும் நின்று போயிற்று *(16:41-50)*. ஆண்டவர் கட்டளைப்படி, ஒவ்வொரு குலத்தலைவரும் அவரவர் பெயர் எழுதப்பட்ட ஒரு கோலைக் கொண்டு கூடாரத்தில் பேழையின் முன்வைத்தனர். லேவியின் குலக் கோலில் ஆரோனின் பெயர் எழுதப்பட்டது. மறுநாள் வந்து பார்த்த போது, ஆரோனின் கோல் மட்டும் துளிர்த்துப் பூத்திருந்தது. இந்நிகழ்ச்சியால், ஆரோனின் குருத்துவத்தை ஆண்டவர் மீண்டும் உறுதிப்படுத்தினார் *(17:16-26)*. இக்கதை, குருக்களுக்கும் லேவியர்களுக்குமிடையே நிலவிய பூசல்களைப் பிரதிபலிக்கிறது.

பாலைவனப் பயணத்தின் முடிவில் பாறையிலிருந்து நீர் வரச் செய்யும் நிகழ்ச்சி

யில் விசுவாசமற்ற, தாகமுள்ள இஸ்ராயேலர்முன், ஆண்டவரது புனிதத்தைப் பேணாமல் நடந்து கொண்டதால், மோசேயும், ஆரோனும் வாக்களிக்கப்பட்ட நாட்டிற்கு மக்களை நடத்திச் செல்ல மாட்டார்கள் என்று ஆண்டவர் தண்டித்தார் *(20:7-13)*. இதற்குச் சிறிது காலத்திற்குப் பின் ஆண்டவர் அறிவித்தபடி ஆரோன் கோர் மலையில் தனது 123-வது வயதில் இறந்தார் *(20:28)*. மோசே அவருடைய ஆடையைக் கழற்றி எலயாசருக்கு அணிவித்து அவரைப் பெரிய குருவாக்கினார். உ.ப. 10:6, ஆரோன் மோசேராவில் இறந்தார் என்று கூறகிறது. ஒரு வேளை இவ்விடம் கோர் மலைச் சுற்றுப்புறத்தில் இருந்திருக்க வேண்டும். ஆரோனைப் பற்றிய ஐந்நூலில் காணப்படும் கடைசிக் குறிப்பு உப 32:50-இல் வருகிறது. அதில் ஆரோனைப் போல் மோசேயும் இறப்பார் என்று ஆண்டவர் அவரிடம் கூறுகிறார்.

2. விவிலியத்தின் பழைய ஏற்பாட்டுப் பிற நூல்களில் ஆரோன்:- ஆரோனின் பலவகைப்பட்ட பணி பழைய ஏற்பாட்டில் பல இடங்களில் குறிக்கப்பட்டுள்ளது. எகிப்திய வாதைகளிலும், இஸ்ராலேயரின் விடுதலையிலும், ஆரோனுடைய பாகத்தை யோசுவா நூல் எடுத்துக் கூறுகிறது *(24:5-6; காண்க 1 சாமு. 12:6.8)*.

நாளாகம ஆசிரியர், பலிகளாலும் காணிக்கைகளாலும் இஸ்ராயேல் மக்களுக்குப் பரிகாரம் செய்த குருவாக ஆரோனைச் சித்தரிக்கிறார் *(1 நாள். 6:49)*. அவருடைய வழித்தோன்றல்கள் அவரது இந்த அலுவலைத் தொடர்ந்து நடத்தினர் *(23:13)*.

சங்கீத நூல் ஆரோனுடைய கடமைகளைப் பற்றிய ஓரளவு முழுமையான காட்சியை அளிக்கிறது. ஆரோன் எகிப்தை வாதைகளால் துன்பறுத்துகிறார் *(சங். 105:26)*. பாலைவனத்தில் மக்களை நடத்திச் செல்கிறார் *(77:20)*. அவரது தலைமைக்கு எதிராகக் கலகம் செய்யப்படுகிறது. *106:16*-இல் மோசேயிடமிருந்து பிரித்தும், *133:2*-இல் அவரது அபிடேகம் பற்றிய குறிப்போடும் அவரது பெரிய குரு என்ற பதவி குறிக்கப்படுகிறது. *சங். 106)* மட்டும்தான் அவரது மக்கள் தலைமைப் பதவியையும் சடங்குக் கடமைகளையும் பிரித்துக் கூறுகிறது.

ஆரோனைப் பற்றிய குறிப்புகள் இறைவாக்கினர் நூல்களில் அரிதாகவே வருகிறது. இது சிறிது வியப்பளிக்கலாம். இவை அவரது ஒழுக்கப் பலவீனத்தையோ அவரது எடுத்துக் காட்டான நடத்தையையோ, குறிக்கவில்லை. *மீக். 6:4*, மோசே, மிரியாம் ஆகியோரோடு சம பதவியுடைய தலைவராக ஆரோனைக் குறிக்கிறது *(காண்க யோசு 24; 1 சாமு 12)*. திரும்ப அமைக்கப்பட்ட ஆலயம்பற்றிய விவரிப்பில் ஆரோனின் பெயர் காணப்படவில்லை. எசக்கியேல் ஆரோனைக் குறிக்கவில்லை. குருக்கள் சாதோக்கின் புதல்வர்கள் என்றழைக்கப்படுகின்றனர் *(எச. 40-48)*.

3. புதிய ஏற்பாட்டில் ஆரோன்:- புதிய ஏற்பாட்டில், ஆரோன் மோசேயைவிட முக்கியத்துவம் குறைந்தவரே ஆவார். குரு செக்கரியாவின் மனைவியான எலிசபெத்து ஆரோனின் வழித்தோன்றல்களில் ஒருத்தி என்று லூக்கா குறிப்பிடுகிறார் *(லூக் 1-5)*. பொற்கன்றைச் செய்து கொடுக்கும்படி இஸ்ராயேலரால் ஆரோன் கட்டாயப்படுத்தப்பட்டார் என்று *அ.ப. 7:40* கூறுகிறது. ஆரோனின் பெரிய குரு என்ற பதவியைப் புதிய கோணத்தில் எபிரேயர் திருமுகம் நோக்குகிறது. இதன் ஆசிரியர் இறைவன் ஆரோனை அழைத்ததை ஏற்றுக் கொண்டாலும் *(எபி 5:4)* ஆரோனின் குருத்துவப் பதவி கிறிஸ்துவின் குருத்துவப் பதவிக்குத் தாழ்ந்ததே என்றும், மேலும் பழைய ஏற்பாட்டிலேயே மெல்க்கிசதேக்கின் குருத்துவ முறைக்கு ஆரோனின் குருத்துவம் கீழ்ப்பட்டதே என்றும் கூறுகிறார் *(7:11 தொ)*. கிறிஸ்து குருத்துவப் பதவியைத் தானாகவே எடுத்துக் கொள்ளவில்லை. ஆரோனைப் போன்று கடவுளிடமிருந்து அழைப்புப் பெற்றார் *(5:2-5)*. ஆரோனின் குருத்துவம் தலைமுறை தலைமுறையாக வருவதாகும். மாறாக, குல மர

புக் கொடி அறியப்படாத மெல்க்கிசதேக்கின் குருத்துவம் கிறிஸ்துவினுடையதை முன் அடையாளமாக உணர்த்திற்று (7:3.15-21). இறுதியாக கிறிஸ்துவின் குருத்துவத்தின் பண்பாகிய நிறைவுத் தன்மையை ஆரோனின் குருத்துவம் உரிமை கொண்டாட முடியாது (7:11.23-27).

**ஆர்** (AR - நகர்)

இப்பெயர் மோவாப் நாட்டின் ஒரு நகரையோ (எண். 21:28) அல்லது ஒரு பகுதியையோ அல்லது முழு நாட்டையோ (உப 2:9) குறிக்கலாம்.

ஒரு நகரம் என்றால், இஸ்ராயேல் மக்கள் யாத்திரையின் பொழுது, ஆர்னோன் ஆற்றின் தெற்குக்கரையிலும் (எண் 21:28; 22:36), மோவாபின் வடக்கு எல்லையிலும் இருந்த மோவாபியரின் ஒரு நகரம் (எண் 21:15; உப. 2:18). உப 2:9-இல் 'ஆர்' என்பது மோவாபிற்கு ஒரு பொருள் பிற சொல்லாகும். மோவாபியர்கள் ஆரிலும், ஏசாவின் புதல்வர்கள் சேயிரிலும் வாழ்ந்ததாக உப 2:29 கூறுகின்றது. ஏச 15:1-இல் 'ஆர்' என்பது கீருக்கு இணைவார்த்தையாகும். மோவாபுக்கு எதிரான இறைவாக்கில் (15:1) அழிக்கப்பட வேண்டிய மோவாபின் இரு முக்கிய நகரங்களில் இதுவும் ஒன்று.

தலைநகரம் எல்லையில் இருப்பது கடினமாக இருந்தாலும் 'ஆர்' மோவாப்பின் தலைநகரமாக இருந்திருக்கலாம். பின்னால் அரெயோபோலி என்று அழைக்கப்பட்ட நாடுதான் ''ஆர்'' என்று கருதப்பட்டது (அநேகமாக கிரேக்கர்கள் போர்க்கடவுளான ஆரெஸ் என்பதை ''ஆர்''-உடன் தொடர்புபடுத்தினர்). இரப்பாத் மோவாபும் ஆரும் ஒன்று என்று கருதினர். ஆனால் இந்நகரம் ஆர்னோன் ஆற்றிலிருந்து தெற்கே 22 கி.மீ. தொலைவில் உள்ளது. ஆகவே இது விவிலிய ஆர் ஆக் இருக்கமுடியாது. இக்கால ஏல்மிஸ்னா ஆர் நகரமாகும் என்று அடையாளம் காட்ட முயற்சிகள் நடந்துள்ளன.

**ஆர்சா** (ARZA - பெருந்தன்மையுள்ள)

இஸ்ராயேலின் அரசனான ஏலாவின் திரிசாவிலுள்ள வீட்டுக் கண்காணிப்பாளர். இவர் வீட்டில் அரசன் குடிபோதையிலிருந்த போது சிமிரியால் கொல்லப்பட்டார் (1 அர 16:9).

**ஆர்தமா** (ARTEMAS)

இவர் முதல் கிறிஸ்துவர்களில் ஒருவர். பவுலின் தோழன். தீத்து நிக்கொப்போலின் நகருக்கு பவுலிடம் வந்து சேர்வதற்காக பவுலால் கிரேத்துக்கு அனுப்பப்பட விருந்தவர் (தீத் 3:12).

**ஆர்தமி** (ARTEMIS)

பல மாறுபட்ட குணங்களைக் கொண்ட ஒரு தேவதை. சந்திரத் தேவதை. கிரேக்க சமூகத்தினரால் வணங்கப்பட்டு வந்த எல்லாப் பெண் தேவதைகளைக் காட்டிலும் மிகவும் பலமும், புகழும் வாய்ந்த ஒன்றாகக் கருதப்படுகிறது.

உரோமையின் பெண் தெய்வம் தயானவோடு ஒன்றுபடுத்தியும் பார்க்கப்படுகிறது. கிரேக்க இதிகாசங்களில் இவள் அப்பொல்லோவின் சகோதரி; லேத்தோ, செயூஸ் ஆகியோருக்குப் பிறந்தவள். அவளது பக்தர்களின் கற்புக்குப் பாதுகாவலியாகவும், கல்யாண வயதுப் பெண்களுக்குத் துணையாகவும், பெண்களின் பேறுகால வேதனையின் போது உதவுபவளாகவும், பெண்களுக்கு அமைதியான மரணம் அளிப்பவளாகவும் கருதப்படுகிறாள்.

இவள் எபேசில் பாலின வளர்ச்சித் தெய்வமாக வழிபடப்பட்டாள். இங்கு இவளுக்கு எழுப்பப்பட்ட கோவில் பழங்கால ஏழு வியப்புகளுக்குரியவற்றில் ஒன்றாகும். இது கி.மு.356-இல் அழிக்கப்பட்டது.

எபேசில் பவுலின் பணி, அ.ப. 19:23-41-இல் விவரிக்கப்படும் நிகழ்ச்சியோடு முடிவடைகிறது. அவரது மூன்றாம் வேதபோதகப் பயணத்தில் பவுலின் போதகத்தால் இந்நகர மக்கள் பலர் மனந்திரும்பினர். இவர்கள் இவள் உருவம் கொண்ட சிலைகளை வாங்கவில்லை. இதனால் பாதிக்கப்பட்ட தெமேத்திரியு என்ற வெள்ளி

ஆசாரி தன் தொழில்செய்பவர்களை ஒன்று கூட்டிப் பவுலைக் குற்றம் சாட்ட, பெரும் கலவரம் நிகழ்ந்தது. நகர அவைத்தலைவன் மக்களை அமைதிப்படுத்தி கலகக் கூட்டத் தைக் கலைத்துவிட்டார்.

**ஆர்பகசாது** (ARPHAXAD)

*1.* மேதியருடைய அரசன். இவர் தன் படை வலிமையினாலும், தேர்களின் சிறப்பி னாலும் தான் ஆற்றல் படைத்தவர் என்று பெருமை பாராட்டி வந்தவர் (யூதி 1:1-5. 13-15). நெபுக்கதுனேசாரால் கொல்லப்பட் டார்.

*2.* அருபகசாது என்ற பெயரின் புதிய ஏற்பாட்டு வடிவம் (லூக் 3:36).

**ஆர்பாது** (ARPAD - வலிய)

சீரியாவின் வட பகுதியில் அமைந்திருந்த சிறுமாகாணமும், தலைநகரும் ஆகும். அலேப்போவுக்கு வடகிழக்கில் 30 கி.மீ. தொலைவிலுள்ள குன்றாகிய தேல்-ரிப்காட் என்ற இடத்தை இதற்கு அடையாளம் காட் டுவர். பழைய ஏற்பாட்டில், எப்போதும் கெமாத்தோடு சேர்ந்தே, ஆர்பாது குறிக்கப்ப டுகிறது (2 அர 18:34; 19:13; ஏச 10:9; 36:19; 37:13; எரே 49:23). இரு நகரங்களும் அசீரியர் களால் அழிக்கப்பட்ட நகரங்களுக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்கின. இந்த அழிவு கி.மு.740-இலும் 720-இலும் நிகழ்ந்திருக்க லாம் என்று யூகிக்கப்படுகிறது.

ஒரு காலத்தில் அமனா மலைகளுக்கும் யூப்பிரத்திசு நதிக்கும் இடையிலுள்ள முக் கிய நகரமாகத் திகழ்ந்தது. மூன்றாம் திகி லாத்து பிலேசர் என்ற அசீரிய மன்னன் மூன்று வருட முற்றுகைக்குப்பின் அதைக் கைப்பற்றினார் (740). இந்த வெற்றியின் எதிரொலி 701-இல் முற்றுகையிடப்பட்ட எருசலேமின் மக்களிடம் இரபிசகே பெருமை பாராட்டிய உரையில் இன்னும் கேட்கப்பட்டது (2 அர 18:34; ஏச 36:19; காண்க 10:9). தமஸ்குவுக்கு எதிராக எரேமி யாவின் இறைவாக்கும் இந்நிகழ்ச்சியைச் சுட்டிக் காட்டுகிறது. (எரே 49:23).

**ஆர்போனா** (HARBONA - கழுதை ஓட்டுபவர்)

அகசுவேரு அரசரின் ஏவலர்களாகப் பணி புரிந்து வந்த ஏழு அண்ணகர்களில் ஒருவர் (எஸ்த 1:10). மோர்தெக்காயைத் தூக்கிலிடு வதற்காக ஆமான் தயாரித்திருந்த தூக்கு மரத்திலேயே ஆமானைக் கட்டித் தொங்க விட வேண்டும் என்று ஆலோசனை கூறிய வர் இவரே (எஸ்த 7:9).

**ஆர்மகதோன்** (ARMAGEDOON)

எபிரேயத்திலே இச்சொல் பயன்படுத்தப் பட்டதாகத் தெரியவில்லை. கிரேக்க மொழி யைச் சார்ந்ததாக இருக்குமோ என்று யூகிக் கப்படுகிறது. திருவெளி 16:14-16-இன்படி நல்ல சக்திகள், தீய சக்திகளுக்கிடையே உலக இறுதி நாட்களில் வரவிருக்கும் இறு திப்போராட்டம் நடக்கும் இடமாகும்.

இங்குதான் ''எல்லாம்வல்ல கடவுளின் பெருநாளிலே போர் செய்யுமாறு உலக னைத்திலுமுள்ள அரசர்கள் ஒன்று சேர்வார் கள்''. இங்குதான் காலத்தின் இறுதியில் இறைவன் வல்லமையாலும் ஆற்றலாலும் எல்லாத் தீய சக்திகளும் இறுதியாக வெல் லப்பட்டு அழிந்துபோகும்.

இப்பெயர் கார்மேலுக்கு தென்கிழக்கி லுள்ள வரலாற்று மெகிதோ சமவெளியைக் குறிக்கும் என்று பொதுவாகக் கருதப்படும். மெகிதோவில்தான் பாராக்கும் தேபாராவும் சேர்ந்து கானானியரைத் தோற்கடித்தனர் (நீதி 5:19) இங்குதான் பாரவோன் நெக்கோ யூதாவின் அரசன் யோசியாவைக் காயப்ப டுத்தி சாவுக்குள்ளாக்கினார் (2 அர 23:29-30; 2 நாள் 35:22-24). செக் 12:1, மெகிதோ சமவெளியில் அதாதுரிம்மோனுக்காக புலம் புவதைக் குறிக்கிறது. சில வாசகங்கள் மெகிதோ நகரத்தில் அகசியா இறந்ததாகக் குறிக்கிறது (2 அர 9:27).

**ஆர்மோனி** (ARMONI)

அய்யாவின் மகளான இரிசிப்பா, சவுலுக் குப் பெற்ற இரு புதல்வர்களில் ஒருவர் ஆர்மோனி ஆவார். தாவீது அரசர் ஆர்மோ னியையும் அவரது சகோதரர் மேபிபெசேத்

தையும் மற்றும் சவுலின் வழிவந்தவர்கள் நால்வரையும் பிடித்துக் கிபயோனியர் கையில் இரத்தக் குற்றக் கட்டணமாக ஒப்ப டைத்தார். கிபயோனியர் அவர்களை ஆண் டவர் திருமுன் மலையின் மேல் சிலுவை யில் அறைந்தார்கள். இவ்வாறு அவர்கள் சவுல் வீட்டார் மேல் இருந்த இரத்தக் குற்றப் பழியைத் தீர்த்துக் கொண்டனர் *(2 சாமு 21:8-9)*.

**ஆர்மோன்** (HARMON)

விவிலியத்திலேயே ஒரே ஒரு தடவை காணப்படும் சொற்களில் ஒன்று. பொருள் தெளிவாக இல்லை. உறுதியாக ஒன்றும் கூற முடியாது. இது சமாரியாவின் குற்றம் செய்த பெண்கள் அனுப்பப்பட்ட இடமாக இருக்க லாம் *(ஆமோ 4:3)*. அவ்வாறாயின் இது தமஸ்குவிற்கு அப்பால் உள்ள கைதிகள் நாடுகடத்தப்பட்ட இடமாக இருக்கலாம் *(காண்க ஆமோ 5:27)*.

**ஆர்வம்** (ZEAL)

ஆர்வம் எனும் பொருள்படும் கிரேக்கச் சொல்லான Zelos மிகவும் வெப்பமான அல் லது கொதித்தெழும் நிலையில் உள்ள ஒன் றைக் குறிக்கும். Qinah என்ற எபிரேயச் சொல்லை, கிரேக்கம் அதன் பொருள் சிதை யாது மொழிபெயர்த்துள்ளது. உணர்ச்சிமிகு தியால் தூண்டப்பட்டு அதனால் முகம் சிவப்படைவதை எபிரேயச் சொல் குறிக் கும். இவ்வாறு சீறியெழும் உணர்ச்சி வயப் பட்ட நிலை பொதுவாகக் கடுஞ்சினத்தை ஒத்திருக்கும் *(உப. 29:19)*. சுடர்விட்டெரியும் தீப்பிழம்பையும் ஒத்திருக்கும் *(செப் 1:18; ஏச 26:11)*. இவ்வுணர்ச்சி வேகம் பலதரப் பட்ட உளப்பாங்கிலிருந்து தோன்றலாம். தன்னலமற்ற அன்பு, பொறாமை *(திருவுரை 9:6)*, பெரும்பகை, கோபம் *(சீரா 40:4)*, கலக்கம் *(30:24)* மக்கள் நலன்பால் கொண்ட *(2 சாமு 21:2)* அல்லது கடவுளின் மகிமை பால் கொண்ட *(எண் 25:11)* ஆவல் போன் றவை மனித உள்ளத்தைக் கிளறிக் கடுஞ்சி னத்தைத் தோற்றுவிக்கலாம் *(பழ 27:4)* அல்லது சாவிலே முடியலாம் *(ஆதி 4:5.8; எண் 25:7 தொ)*. இவ்வுணர்ச்சிகளால் எழும் உளப்பாங்கைத் தவறு என்று தன்னிலே அறுதியிட்டுக் கூற இயலாது. இவ்வுணர்வு அலைகளால் ஒருவனுக்கு நன்மை விளை கின்றதா அல்லது தீமை விளைகின்றதா அல்லது இவை ஒருவனது சுயநலத்திலி ருந்து வருகின்றனவா என்று பார்த்தபின் தான் உணர்வெழுச்சியைப் பற்றி நாம் தக்க முறையில் கணிக்க இயலும். பொதுவாக உணர்வுகளில் தன்னலத்தின் சாயல் இருப் பதை மறக்கலாகாது. பொறாமை எலும்பு ருக்கியாகும் *(பழ 14:30)* என்று அறிஞர் கூறுவதும் முறையானதெனத் தோன்றுகின் றது. சகோதரர்களிடத்தும் *(ஆதி 4:5-11; 37:11)* பெண்களிடத்தும் *(30:1)*, காதலர்களி டத்தும் *(பழ 6:24; எண் 5)* இனங்களிடத்தும் *(ஆதி 26:14; ஏச 11:13)* ஏன் நீதிமான்களிடத் தும் பாவிகளிடத்துமே பொறாமை வளர் கின்றது *(சங் 37:1; 73:3; பழ 3:31; 23:17)*. அழுக்காறு கிறிஸ்தவ சமுதாயங்களிடம் சண்டையும் *(உரோ 13:13)*, சச்சரவையும் *(1 கொரி 3:3; 2 கொரி 12:20)*, மனக்கசப்பை யும், கட்சிமனப்பான்மையும் தோற்றுவித்து அவற்றின் ஒற்றுமையைக் குலைக்கின்றது *(யாக் 3:14.16)*. இதுகாறும் கூறியவற்றால், திருவுரை ஆகமம் கருதுவதுபோல் ஒவ் வொரு மனிதச் செயலும் உணர்ச்சிப் பெருக் கும் பொறாமையிலிருந்து தோன்றுவதாக முடிவு கொள்ளலாகாது *(திருவுரை 4:4)*. நல்மனத்துடன் எழுகின்ற ஆர்வத்திலும், சிலசமயம் குறுகிய மனப்பான்மை இருந்தா லும் *(எண் 11:29)*, தூய்மையான அன்பின் அம்சமும் உள்ளது *(உ.ச. 8:6)*. இறைவன் நம்மீது தனியுரிமையுடன் பாராட்டும் அன்பி லும் இதைக் காணுகின்றோம்.

I. தனி உரிமை பாராட்டும் கடவுளின் அன்பார்வம்

*1. ஏக கடவுளின் பற்று:-* மனிதர்களிடம் உள்ள பல உணர்ச்சிகளைப் பழங்கதைகளில் காணப்படும் தெய்வங்கள் கொண்டிருப்ப தைக் காண்கின்றோம். தெய்வங்கள் மனிதர் களின் இன்ப நிலையைக் கண்டு பொறாமை கொண்டு, தங்கள் சலுகைகளைக் கவன மாய்ப் பாதுகாக்கின்றனர். இதனால் மனிதர் களும் அவர்களைத் தம் வயப்படுத்த வேண்

டிய நோக்குடன் பற்பல வழிபாடுகள் நடத்துகின்றனர். இஸ்ராயேல் மக்களும், கடவுளின் உரிமை மக்களாய்த் திகழ்ந்தபோதிலும் (உப 18:13) இந்தக் கலப்புமதப் பழக்கத்தை வழக்கில் கொண்டிருந்தனர் (2 அர 23:4-14).

மனிதர்களிடையே காணப்படும் தாழ்ந்த குறுகிய மனப்பாங்கு கடவுளிடம் உள்ள பேரார்வத்தில் நாம் காணமுடியாது. கடவுள் உரிமை பாராட்டுகின்றார் என்றால் அவர் போட்டி உணர்வுடன் பிறிதொருவர் தமக்கு நிகராவார் என்ற எண்ணத்துடன் காட்டும் உரிமையன்று. மாறாகத் தமது சாயலாகப் படைத்த மனிதனிடமிருந்து தமக்கே உரிய வணக்கமும் ஆராதனையும் எதிர்பார்க்கின்றார். மனித முறைப்படி நாம் நோக்குமிடத்து, கடவுளின் இப்பண்பு, பிறதெய்வங்கள்பால் பொறாமை என்று விவரிக்கப்படுகின்றது. எனவே, பத்துக் கட்டளைகளில் முதற்கட்டளையான ''அவைகளை வணங்கித் தொழவும் வேண்டாம், உன் கடவுளாகிய ஆண்டவராய் இருக்கின்ற நாம் வல்லவரும் எரிச்சல் உள்ளவருமாய் இருக்கின்றோம்'' (யாத் 20:5; 34:14; உப 6:14..) என்று பழைய வாசகங்கள் உறுதியுடன் கூறுகின்றன. இவ்வாறு தனித்துவம் விரும்பும் கடவுளின் பண்பு மற்ற மதங்களில் நாம் காணாதவொன்று. இவை மிகவும் முந்திய அல்லது பிற்காலத்து வாசகங்களில் காணக்கிடக்கின்றன. எடுத்துக்காட்டாக, இறைவனின் இத்தன்மை ''எரித்து உண்கின்ற நெருப்புக்கு'' ஒப்பிடப்படும் (உப 4:24). சிலைவழிபாட்டிற்கு எதிராகக் கடவுள் சினந்தெழுகின்றார் (சங் 78:58; உப 32:16.21;1 அர 14:22). கோபமூட்டும் சிலைகள் என்று இவை விவரிக்கப்படுகின்றன (எச 8:3.5; 2 அர 21:7). இறுதியாக, இவ்வாறு இறைவன் உரிமை பாராட்டிக் கோபமுறுகின்றார் என்றால், இது, அவர் தூய்மையே உருவானவர், ஆதலால் தூய்மைக்குக் களங்கம் தரும் எதையும் அவர் வெறுக்கின்றார் என்பதைக் காட்டுகிறது.

2. சேனைகளின் ஆண்டவரது பேரார்வம்:- இஸ்ராயேலுடன் செய்துகொண்ட உடன்பாட்டின் வரலாற்றிலே, கடவுள் ஒடுக்கப்பட்டோரை ஆதரிப்பதையும், தீயோரைத் தண்டிப்பதையும் நாம் காண்கின்றோம். இச்செயல்களின் அடிப்படைக் காரணமாய் விளங்குவது கடவுள் தம் மக்கள் மீது தனி உரிமை பாராட்டுவதால் எழும் கோபமாகும். திருமண உறவுக்கு உடன்படிக்கையை ஒப்பிட்ட ஓசேயா, எரேமியா போன்ற இறைவாக்கினர் 'பொறாமை' என்ற சொல்லைப் பயன்படுத்தாது இறைவனின் அன்பின் ஆழத்தைக் காட்ட எரிச்சல் அல்லது சினம் போன்ற சொற்களைக் கையாளுகின்றனர். பழைய வாசகங்களிலும் (யாத் 20:3-6. 34:14), நாடு கடத்தலின்போது எழுதப்பட்டவற்றிலும் (உப 6:15; 29:19; எச 5:13; 16:38.42; 23:25) கடவுளின் தனி உரிமை பாராட்டும் பண்பு, இஸ்ராயேலும் கடவுளும் கொண்டிருந்த தனிஉறவை மையமாகக் கொண்டிருந்தது. கடவுளின் பரிசுத்தம் களங்கப்பட்டதால் எழுந்த உணர்ச்சி பேரெழுச்சியாகவும் தோன்றுகின்றது (நீதி 24:19; உப 4:23 தொ). கடவுளின் பரிசுத்தத்தை நிலைநாட்டும் சாதனமாகக் கொடூரமும் கோபமும் ஆத்திரமும் அமைகின்றன (எச 16:38.42; 23:25). ஆனால் கடவுளின் பெயரைத் தாங்கி நிற்கும் அவரது உரிமை மக்கள், நாடு கடத்தலில் இழிவுற்றபோது, இந்த இழிநிலை, கடவுளின் திருப்பெயர்க்கே விளைந்த இழுக்காய்க் கருதப்படுகின்றது (39:25; காண் 36:23). தமது திருப்பெயரின் மாண்பை நிலைநாட்ட, இறைவனின் சினம், அவமரியாதைக்குக் காரணமாய் அமைந்த புறவினத்தார் மீது பாய்கின்றது (35:11; 36:3-6). அதே சமயத்தில், இஸ்ராயேலுக்கு இது மீட்பு அளிக்கின்றது (ஏச 42:13; 59:17; 26:11). எனவேதான் இஸ்ராயேல் மனம்நொந்து, உள்ளம் உருக, மகனுக்குரிய வாஞ்சையோடு கடவுளது கருணைப் பெருக்கையும் உரிமை பாராட்டும் பண்பையும் உள்ளத்தில் கொண்டு கடவுளை இறைஞ்சும் வேளையில் (63:15) அவர் அவர்களுக்கு மீட்பின் காலம் மிக அண்மையில் உள்ளது என உறுதி கூறுகின்றார் (9:6). இதனால் தம் மக்கள் மத்தியில் வாழும் (உப 6:15) கடவுளின் உள்ளத்திலே உள்ள

பேரார்வம் அவரது பேரன்பின் விட்டுக்கொடாத் தன்மையின் அடையாளமாய் விளங்குகின்றது. இப்பெரு உணர்வு கடவுளின் இரக்கத்துடன் ஒப்பிடப்படுகின்றது (யோவே 2:18; காண் செப் 1:14 தொ; 8:2). கடவுளுக்கும் இஸ்ராயேலுக்குமிடையே துலங்கும் அன்பானது என்றும் வலிமையானது, பிரிக்க முடியாதது (உ.ச. 8:6).

II. கடவுளின் பேரார்வம்

*1. கடவுளின் தீவிரவாதிகள்:-* தம்மிடம் விளங்குகின்ற பேரார்வம் இஸ்ராயேலிடத்தும் தோன்ற கடவுள் வழிவகுக்கின்றார். பிற இனத்தாருக்குப் பரிவு காட்டுவதன் மூலம் தமது சொந்த மக்களுக்குச் எரிச்சலூட்டுகின்றார் (உப 32:21). பொதுவாகத் தமது உணர்வெழுச்சியைத் தேர்ந்தெடுக்கப்பட்ட சிலருக்கு அளிக்கின்றார். பினகாசு அவரைப் போல் கோபங்கொள்கின்றார் (எண் 25:11) கடவுளும் இதை ஏற்றுக் கொள்கின்றார். இதைப்போன்றே எலியாவும் தவறுதலாகத் தாம் ஒருவரே, எஞ்சியிருப்பதாக எண்ணும் போதும், மிகுந்த ஆர்வத்தால் தூண்டப்படுகின்றார் (1 அர 19:14; சீரா 48:2). இவ்வாறே சங்கீத ஆசிரியரும் ''உமது திருத்தலத்தின் மீது கொண்ட பேரார்வம் என்னைச் சுட்டெரித்தது'' (சங் 69:10; 119:139) என்று பெருமிதம் கொள்கின்றார். மக்கபேயரான மத்தத்தியாவும் தம் முன்னோரின் அடிச்சுவட்டிலே, கடவுள் மீது பேரார்வத்துடனும் பற்றுதலுடனும் விளங்குகின்றார் (1 மக் 2:54.58). சிலைவழிபடுவோர் கடவுளின் திருப்பெயருக்கு இழைத்த அவமரியாதையைக் அறிந்து மிகவும் மனங்கசிந்து துடித்தார் (2:24.27).

சிலை வழிபாட்டுக்கு இட்டுச் செல்லும், பிறமதப் பழக்க வழக்கங்களை எதிர்த்து (2 மக் 4:14) பக்தியுள்ள மக்கள் (1 மக் 2:42) கடவுளின் திருச்சட்டத்தையும் ஞானத்தையும் ஆர்வமுடன் தேடுகின்றனர் (சீரா 51:18). 'தீவிரவாதிகள்' எனப்பட்டோர், புறச்சமய மன்னருக்கு எதிராக் கிளர்ச்சி செய்யத் தூண்டுவது தமது கடமையெனக் கருதுகின்றனர் (அ.ப. 5:35 தொ). பவுல் போன்ற அப்போஸ்தலர்களுக்குத் தீங்கிழைப்பதைக் கடமையென எண்ணிச் செயலாற்றுகின்றனர் (23:12 தொ). ஏனெனில் அவரை அவர்கள் ஒரு புதிராகக் கருதினர்.

*2. கிறிஸ்தவப் பேரார்வம்:-* யூதமதத்தினரின் ஆர்வத்தால், கிறிஸ்துவைப் பின்பற்றியோர் கொடுந்துன்பத்திற்கு ஆளாகின்றனர் (அ.ப. 5:17; 13:45; 17:5). உண்மையான அறிவுக்கு ஏற்காத இந்த மறையார்வத்தால் தான் (உரோ 10:2) சவுல் ஆதித்திருச்சபையைத் துன்புறுத்தினார் (பிலி 3:6; கலா 1:14; அ.ப. 22:3). கிறிஸ்தவர்கள் இத்தகைய தவறான பேரார்வத்தில் ஈடுபடலாகாது (அ.ப. 21,20).

தீவிரவாதியின் பண்புகள் இயேசுவிடம் விளங்கவில்லை. செசாருக்கு எதிரான கிளர்ச்சியைச் சரியெனக் காட்ட இயேசு மறுக்கின்றார் (மத் 22:15-21). அவருடைய சீடர்களில் ஒருவரான சீமோன் தீவிரவாதி என்றழைக்கப்பட்டாலும் (மாற் 3:18), இடியின் மக்களின் கோப வெறியை இயேசு கண்டிக்கத் தவறவில்லை (3:17; லூக் 9:54). எனினும் அவருக்காகத் தங்கள் உயிரையும் அளிப்போம் என்று கூறும் சீடர்களின் உறுதிமொழிகளை மனமார ஏற்றுக்கொள்கிறார் (மத் 20:22). தம் பகைவர்களால் சிறைப்படுத்தப்பட்டவுடன் அவர்களுடன் எதிர்த்துப் போரிட மறுக்கின்றார் (மத் 26:51). ஒரு கொள்ளைக் கூட்ட மனப்பான்மையோ, அக்குழுவின் தலைவன் என்ற எண்ணமோ அவரிடம் இல்லை (26:55).

தீவிரவாதியின் பண்புகளை இயேசு உதறித் தள்ளியபோதும், பலவந்தத்திற்கு உள்ளாகும் (மத் 11:12) விண்ணரசு மீது அவர் பேராவல் கொண்டிருந்தார். அவரைப் பின் செல்ல விரும்பும் எவனும் அனைத்தையும், ஏன் உயிரையே, துறக்க முன்வர வேண்டும் (16:24 தொ). வியாபாரிகளைத் தேவாலயத்திலிருந்து விரட்டும் செயலையும் ஒரு நீதிமானின் ஆர்வமாகவே அவரது சீடர்கள் காண்கின்றனர் (யோவா 2:17).

இதுகாறும் கூறியதிலிருந்து, கிறிஸ்தவன் கொண்டுள்ள அல்லது கொள்ள வேண்டிய

பேரார்வம் நன்கு எளிதில் புலப்படும். இப் பேரார்வம் என்ன என்பது, மணவாளரான கிறிஸ்துவின் அன்பர் என்ற முறையில் தன்னிடம் ஒப்படைக்கப்பட்ட திருச்சபைகளிடம் பவுல் காட்டிய ஆர்வத்தில் வெளிப்படுகிறது *(2 கொரி 11:2)*. பழைய ஏற்பாட்டுக் காலத்தில் வாழ்ந்த மக்கள் எவ்வாறு கடவுள் மீது கொண்ட பற்றார்வத்தால் சிலைவழிபாட்டை வெறுத்தனரோ அவ்வாறே கிறிஸ்தவர்கள் தவறான போதனைகளிலிருந்து விலகியிருக்க வேண்டுமென்று பவுல் ஆர்வத்துடன் வலியுறுத்துகின்றார். யூத மக்கள்பால் பவுல் கொண்ட அன்பார்வம், கடவுள் புறவினத்தாருக்கு நன்மைகள் பல செய்து இஸ்ராயேலின் உணர்ச்சியைத் தட்டியெழுப்பியதை ஒத்திருக்கின்றது *(உரோ 11:11.14; 10:19)*.

பேரார்வம் பல முறைகளில் காட்டப்படலாம். எடுத்துக்காட்டாக பிற சபைக்கு உதவும் நோக்குடன் பணம் திரட்டுவதில் காட்டும் ஆர்வம் *(2 கொரி 9:2)*. மேலான வரங்களைத் தேடுவதிலேயே எப்போதும் ஆர்வம் காட்டப்பட வேண்டும் *(1 கொரி 12:31; 14:1.12.39)*. ஏனெனில், கிறிஸ்துவில் அளிக்கப்படும் மீட்பு நற்செயல்களில் ஆர்வமிக்கதோர் இனத்தைத் தோற்றுவிக்கிறது *(தீத் 2:14; 1 பேதுரு 3:13)*

**ஆர்வாதியர்** (ARVADITES)

வட சீரியாவைச் சேர்ந்த ஆர்வாது என்ற நகர மக்கள். இவர்கள் கானானியர்களுள் அடங்குவர் *(ஆதி 18:18; 1 நாள் 1:16)*.

**ஆர்வாது** (ARVAD - *அலைந்து திரிதல்*)

வட சீரியாவின் சிறுமாகாணமும், நகரும் ஆகும். இது இதே பெயரைக் கொண்டுள்ள தீவில் காணப்படும் ஓர் நகரம்.

இத்தீவு இன்று ரூவாத் என அழைக்கப்படும். இத்தீவானது திரிப்பொலிக்கும் வடக்கில் 48 கி.மீ. தொலைவில் உள்ளது. இத்தீவு ஒடுக்கமானதாகும். 730 மீட்டர் நீளமும் 460 மீட்டர் அகலமும் கொண்டது. ஆகையால் பல அடுக்கு மாடி வீடுகள் கட்ட வேண்டியது அவசியமாயிற்று. எகிப்திய ஆதிக்கம் வீழ்ச்சியுற்றபின் *(கி.மு.1164)* ஆர்வாது ஆறு பெனிசிய நகரங்கள்மேல் ஆதிக்கம் பெற்றது. அசீரிய ஆட்சியில் தப்பினாலும் ஆர்வாதியர் பெரிய அலக்சாந்தரிடம் சரண் அடைந்தனர். அவர் தங்கள் கப்பற்படையைத் தீரைக் கைப்பற்றப் பயன்படுத்த அனுமதித்தனர். இவ்வினத்தினர் நேவாவின் சந்ததியின் பெயர் பட்டியலில் கானானின் புதல்வர்களாகக் குறிப்பிடப்படுகின்றனர் *(ஆதி 10:18)*. *1 நாள் 1:16; எச 27:8.11*-இன்படி இவர்கள் சிறந்த கப்பலோட்டிகள், போர் வீரர்கள் எனத் தெரிகிறது.

கிரேக்கர், உரோமையர் ஆட்சிக் காலங்களிலும், இந்நகரம் இருந்ததாகக் கூறப்படுகிறது. இது *1 மக் 15:23*-இல் அராதுசு என்ற கிரேக்க வடிவப் பெயரில் காணப்படுகிறது. யூதர்களை ஆதரித்து ஆளுநன் லூக்கியோவிடமிருந்து கடிதம் பெற்ற நகர்களில் இதுவும் ஒன்று.

**ஆர்னான்** (ARNAN - *இரைச்சலான, கூச்சலிடுகின்ற*)

செருபாபேலின் குலத்தைச் சேர்ந்தவர், இவர் தாவீது குலத்தின் நீண்ட மரபு முறைப் பட்டியலில் இடம் பெறுகிறார். இரப்பாயாவின் மகனும், ஒபதியாவின் தந்தையுமாவார் *(1 நாள் 3:21)*.

**ஆர்னி** (ARNI)

லூக் *3:33*-இன்படி இயேசுவின் தலைமுறைப் பெயர் பட்டியலில் இடம் பெறுவதால் இவர் இயேசுவின் மூதாதையர் என்றும் அழைக்கப்படுகிறார். மத் *1:3-4*-இல் இப்பெயர் ஆராம் என்று குறிப்பிடப்படுகிறது.

**ஆர்னோன்** (ARNON - *கூச்சலிடுகிற*)

யோர்தானுக்கு அப்பால் எல்லைப்புற சமவெளியிலிருந்து பாய்ந்து ஓடி ஏங்கேதிக்கு எதிர்ப்புறத்தில் கலக்கின்ற ஓர் வற்றாத ஓடை. இதன் இன்றையப் பெயர் வாடிமோகீப் ஆகும். பல சிற்றாறுகளும் ஓடைகளும் சாக்கடலுக்குக் கிழக்கில் 21 கி.மீ. தொலைவில் ஒன்று கூடி ஆர்னோன் ஆறாக மாறுகின்

றன. ஆறு ஒரு அருவி பாய்ந்து உண்டான கெவிமலைப் பள்ளம் வழியாக 3 கி.மீ. ஓடுகிறது. இப்பள்ளத்தின் மேல் அகலம் 31 மீட்டர் ஆகும். அடி அகலம் 37 மீட்டராகும். சில இடங்களில் இப்பள்ளத்தின் ஆழம் 700 மீட்டர் கூட இருக்கும். இதுவே மோவாபிய ருக்கும் எமோரியருக்கும் இடையிலுள்ள மோவாபின் எல்லை (எண் 21:13.26; உப 2:24). இதுவே பிறகு ரூபன் குலத்தெற்கு எல்லையாக அமைந்தது (உப 3:8.16; யோசு 13:16).

மேசா ஆர்னோன் பள்ளத்தாக்கில் ஒரு நெடுஞ்சாலை அமைத்ததாகக் கூறப்படுகிறது. இந்த இஸ்ராயேலின் தொடக்க கால வரலாற்றைத் தவிர, இது மீண்டும் மூன்றே இடங்களில் பழைய ஏற்பாட்டில் குறிக்கப்படுகின்றது. 2 அர 10:33-இல் சீரிய அரசான கசாயேல், ஏகூவின் ஆட்சிக் காலத்தில் இஸ்ராயேலின் பகுதியைக் குறுக்கினார். மோவாபுக்கு எதிரான இறைவாக்கில், ஆர்னோனின் ஆற்றுத்துறை அந்தக் கைவிடப்பட்ட இனம் பாதுகாப்புக்குச் செல்லும் வழியாக அமையலாம் என்று ஏசயா கூறுகிறார் (16:2). பின் வந்த இறைவாக்கினர் எரேமியா (48:20). ஆர்னோனில் நின்று மோவாபின் அழிவு அறிவிக்கப்படுவதை முன்னுரைக்கிறார். இந்த அழிவு கி.மு.582-இல் நடந்த நெபுக்கதுனேசாரின் படையெடுப்பைக் குறிக்கலாம்.

## ஆலபு (ALEPH)

எபிரேய நெடுங்கணக்கில் முதல் எழுத்து இது. சங்கீதம் 119-இன் முதல் பகுதியில் உள்ள எல்லாவரிகளும் இவ்வெழுத்துடன் தொடங்குவதாக அமைக்கப்பட்டுள்ளன.

## ஆலய ஊழியர்கள் (TEMPLE SERVANTS)

எஸ்ரா-நெகமியா, 1 நாள் 9:2-இலிருந்து ஆலயப் பணிகளைக் கவனிக்க பணியாளர்கள் குழுக்கள் இருந்தன என்பது தெளிவு. இவர்கள் பதவி உயர்வுப்படி, குருக்கள், லேவியர், பாடகர்கள், வாயிற்காவலர்கள், ஆலய ஊழியர் என வரிசைப்படுத்தப்படுகின்றனர் (எஸ் 2:70; 7:7; நெ 10:28). அநேகமாக இந்த ஆலய ஊழியர்கள், ஆலயப்பணியில் கீழ்தரவேலைகளைச் செய்திருக்க வேண்டும்.

ஆலய ஊழியர் குழு எப்படித் தோன்றியது என்பது தெளிவாக இல்லை. லேவியர் குழுவுக்கு உதவிசெய்ய ஆலய ஊழியர் தாவீதால் நிறுவப்பட்டதாகத் தெரிகிறது (எஸ் 8:20). லேவியர்களோ குருக்களுக்குக் உதவியாகக் கொடுக்கப்பட்டனர் (எண் 3:9). ''ஆண்டவரின் ஆலயத்தில் இருந்த கூடாரத்தின் பணிகளைக் கவனிக்க நியமிக்கப்பட்டிருந்தனர்'' (1 நாள் 6:48). மோசே, மிதியானியப் போர்க் கைதிகளில் சிலரை லேவியர்களுக்குக் கொடுத்ததாக எண் 30:30-உம், யோசுவா கிபயோனியர்களை ''மரம் வெட்பவர்களாகவும் சபைக்கும் ஆண்டவரின் பீடத்திற்கும் தண்ணீர் எடுப்பவர்களாகவும்'' நியமித்ததாக யோசு 9:27-உம் கூறுகின்றன. இதிலிருந்தும், ஆலய ஊழியர்கள் குடும்பத் தலைவர்களின் அன்னியப் பெயர்களிலிருந்தும் (எஸ் 2:43-54; நெக 7:46-56) ஆலய ஊழியர்கள், பிற இன மக்களைச் சேர்ந்தவர்கள், ஒருவேளை தாவீதின் காலத்திலிருந்து, போர்கைதிகளின் வழித் தோன்றல்களாவர் என்று சில அறிஞர்கள் கருதுகின்றனர். ஆனால் வேறு சிலர் இந்த ஊழியர்கள் இஸ்ராயேல் இனத்தைச் சேர்ந்தவர்கள்தான் என்று கருதுகின்றனர். எது எப்படியிருந்தாலும் எஸ்ரா-நெகமியா காலத்திலிருந்து ஆலய ஊழியர்கள் இஸ்ராயேல் சபையின் முழு உறுப்பினராவர் (நெக 10:28-29). ஆகையால் எசக்கியேலின் எதிர்ப்பு இவர்களைக் குறிக்கவில்லை எனலாம் (எச 44:6-8).

நாடுகடத்தப்பட்டு செருபாபேலோடு எருசலேமுக்குத் திரும்பியவர்களுள் ஆலய ஊழியர்களும் சாலமோனின் ஊழியர்களின் சந்ததியினர்களும் சேர்ந்து 392 பேர் இருந்தனர் (எஸ் 2:58; நெக 7:60). ஏஸ்ரா எருசலேமுக்கு வந்தபோது தன்னோடு 200 ஆலய ஊழியர்களையும் கொண்டு வந்தார் (எஸ் 8:15-20). இவர்கள்தான் அவர்களுக்குரிய இருநகரங்களில் மீண்டும் குடியேறியவர்களில் முதலானவர்கள் (1 நாள் 9:2). ஆலயப்

பணியில் ஈடுபட்டிருநத மற்ற நான்கு குழுக் களைப் போல் இவர்களும் வரிவிடுப்புப் பெற்றிருந்தனர் (எஸ் 7:24).

**ஆலயக் காவலர்த் தலைவன்** *(CAPTAIN OF THE TEMPLE)*

ஆலயத்தில் தலைமைக் குருவிற்கு அடுத்த படியாக அதிகாரத்தில் உள்ளவர். இவர் நெக 11:11-இல் ''கடவுளின் ஆலய மேற் பார்வையாளார்'' என்றும், எரே 20:1-இல் ''ஆண்டவரின் கோயிலில் தலைவர்'' என் றும் மிஸ்னாவில் ''குருத்துவத்தின் தலைவர்'' என்றும் குறிக்கப்பட்டுள்ளார்.

தலைமக்குரு ஆலயத்தில் முதல் அதிகாரி ஆவார். ஆலயக் காவலர்த்தலைவனும் ஒரு குரு ஆவார். இவர் ஆலய வழிபாட்டையும் அங்கு பணிபுரியும் லேவியர், குருக்கள் ஆகியோரையும் மேற்பார்வையிட்டு பெரிய குருவுக்கு உதவியாளனாக விளங்கினார். லேவியர்கள் பல குழுக்களாகப் பிரிக்கப் பட்டு, அவர்களுக்குரிய இடைநிலைத் தலைவர்களின்கீழ், வாயிலைக் காப்பது, கரு வூலங்களைக் காப்பது, ஆலயத்தில் ஒழுங்கு நிலையைச் செயல்படுத்துவது போன்ற அலு வல்களைச் செய்து வந்தனர். இவர்களும், அவர்களது தலைவர்களும் ஆலயக் காவ லர்த் தலைவனின் கீழ் செயலாற்றினர்.

இப்படிப்பட்ட தலைவர்தான் பேதுருவை யும் யோவானையும் கைது செய்தவர் (அ.ப. 1:1-3; 5:24-26). லூக்கா தமது நற்செய்தியில் ''காவல் தலைவர்கள்'' என்று பன்மையில் இரு இடங்களில் குறிப்பிடுகிறார். இது லூக் 22:4-இல் ஆலயக் காவலர்த் தலைவரையும் 22:52-இல் இடைநிலைக் காவலர்த் தலைவர் களையும் குறிக்கலாம்.

**ஆலயத் திரை** *(VEIL OF THE TEMPLE)*

இத்திரை, உடன்படிக்கை, கூடாரத்தில் பேழையையும் இரக்கத்தின் அரியணையை யும் (யாத் 26:33; 35:12; 39:34; லேவி 24:3) கொண்டிருந்து அறைக்கு முன்னாலும், ஆல யத்தில் திருத்தூயகத்தின் வாயிலிலும் (2 நாள் 3:14) தொங்கவிடப்பட்டிருந்த திரைச் சீலை ஆகும். இத்திரை தூயகத்தையும் திருத் தூயகத்தையும் பிரிக்கும். அது ''நீலம், கருஞ் சிவப்பு, சிவப்புநிற நூலாலும், முறுக்கேற்றி நெய்த, மெல்லிய நார்ப்பட்டாலும் செய்யப் பட வேண்டும்''. அதில் கெருபுகள் கலைத் திறனுடன் அமைக்கப்பட்டிருக்கும் (யாத் 26:31; 36:35; 2 நாள் 3:14). இத்திரை சித்தீம் மரத்தால் செய்யப்பட்ட நான்கு தூண்களின் முன்புறத்தில் தொங்கவிடப்பட்டது (யாத் 26:32). தொடக்க காலத்தில் லேவிய குருக்க ளைத் தவிர யாரும் திரைக்குள் செல்ல இயலாது (எண் 18:7). பிற்காலத்தில் பரிகார நாளில் மட்டும் தலைமைகுரு மட்டுமே உள் செல்லலாம் (லேவி 16:2). கூடாரம் மற் றொரு இடத்திற்கு எடுத்துச் செல்லப்பட்ட போது திரை இறக்கப்பட்டு பேழையை மூடப்பயன்பட்டது.

இயேசு இறந்தபோது (மத் 27:51; மாற் 15:28) அல்லது சிலுவையில் அறையப்பட்ட போது (லூக் 23:45) ஆலயத்தின் திரை மேலிருந்து கீழ்வரை இரண்டாக கிழிந்து திருத்தூயகத்தை எல்லாரும் காண வெளிப்ப டுத்தியது. இப்போது கடவுளும் மனிதனும் சந்திக்கும் இடம் (யாத் 30:6) எல்லோருக் கும் பொதுவாக ஆனது. எபிரேயருக்கு எழு தப்பட்ட திருமுகத்தில், கிறிஸ்துவின் உட லுக்குத் திரைச்சீலை அடையாளமாகக் பயன்பட்டுள்ளது (எபி 10:20) அதன் வழி யாக விசுவாசிகள் நம்பிக்கையின் உள் ளார்ந்த புனித இடத்துக்குள் நுழைகின்றனர் (6:19; 9:3).

**ஆலோசனை** *(COUNSEL)*

இறைவன் அளிக்கும் ஆலோசனை யையோ, மனிதன் அளிக்கும் ஆலோசனை யையோ இச்சொல் குறிக்கும். இஸ்ராயே லில் ஞானிகளும் மூப்பர்களும் ஆலோ சனை அளிக்கும் பொறுப்புடையவர்களா வர் (எரே 18:18; 2 சாமு 15:31-34; பழ 1:25-30; 8:14). யாவேயின் ஆலோசனை, அரசர்கள், இறைவாக்கினர் வழியாகவும் சமூக வழிபாட்டில் பங்கெடுப்பதாலும் கிடைக்கிறது (1 அர 1:12; எரே 19:7; சங் 73:24). அடிமைத்தனத்திலிருந்து திரும்பிய

பின், இச்சொல், இறைவனிடமிருந்து வரும் ஆலோசனையைவிட, அரச காரியங்களில் அளிக்கப்படும் அறிவுரையையே குறித்தது (தானி 3:2-3; 4:24; 7:7; 2:14; 3:24-27).

ப.ஏ-இல் யாவேயின் அவையில், இறைவாக்கினர், அரசர்கள் அல்லது வழிபடுவோர் அனுமதிக்கப்படுவதோடு, உண்மையான, நிறைவான ஆலோசனை கொண்டிருப்பதை நேரடியாகத் தொடர்புபடுத்தாவிடினும், உண்மையான ஆலோசனையின் மூலம் யாவேயில் மட்டுமே உள்ளது என்பது தெளிவாகுகிறது. ஏச 11:1-9-இல் வரும் இறுதிக்கால அரசர் மீட்பரின் ஒருபண்பு, ''ஆலோசனையும் வல்லமையும் தரும் ஆவி'' யாகும்.

புதிய ஏற்பாட்டில் இயேசுவை அழிக்கத் திட்டம் செய்யும் அவரது எதிரிகள் அடிக்கடி ஆலோசனை செய்கின்றனர் (மத் 12:14; 22:15; 26:4;....). இஸ்ராயேலின் ஞானப் பாரம்பரியத்திற்கோ, ஞானமிக்க ஆலோசகர்களுக்கோ புதிய ஏற்பாட்டில் இடம் அளிக்கப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும். ஆனால் தொடக்ககாலத் திருச்சபையில், மூப்பர்கள், ஓரளவு இப்பாரம்பரியத்தைத் தொடரச் செய்தனர் என்று கூறலாம். பவுல் குறிப்பிடும் ''மறைபொருளான ஞானம்'' (1 கொரி 2:7) பழைய ஏற்பாட்டில் இறைவனது தீர்ப்பும் சட்டமும் முதலில் அறிவிக்கப்பட்ட விண்ணக அவையோடு நெருங்கிய தொடர்புடையதாகத் தெரிகிறது.

## ஆலோசனையாளர் (COUNSELLOR)

ஆலோசனை சொல்பவர் அல்லது அறிவுரை கூறுகின்றவர். இஸ்ராயேல் அரச அவையில் ஆலோசனை கூறுகின்றவர்கள் சாதாரணமாக இருந்தார்கள் (2 நாள் 25:16; ஏச 1:26; 3:3). ஆலோசனை கூறுபவர் அரசனுக்கு அடுத்தபடியாக அதிக அதிகாரம் கொண்டிருந்திருக்கலாம் (மீக் 4:9; 3:14; 12:17). தாவீதின் ஆலோசகரான அகித்தோபல் சிறப்பான முறையில் இப்பெயர் பெற்றிருந்தார் (2 சாமு 16:23). அவர் கட்சிமாறி தற்கொலை செய்துகொண்ட பிறகு யோயதாவும் அபியத்தாரும் ஆலோசகர்களானார்கள் (1 நாள் 27:34). இக்காலத்தில் செலமியாவின் மகனான செக்கரியாவும், தாவீதின் உறவினனான யோனத்தானும் ஆலோசகர்களாக இருந்ததாக சொல்லப்பட்டிருக்கிறது. இவர்கள் நாட்டின் பாதுகாப்பு (பழ 11:14) போரைத் திட்டமிடுதல் (2 நாள் 22:5) போன்ற முக்கிய காரியங்களில் ஆலோசனை அளித்தனர் (1 நாள் 26:14; 27:32). இரகபெயாம் தவறான ஆலோசகர்களின் பேச்சைக் கேட்டதால் இஸ்ராயேலுக்கும், யூதாவிற்கும் இடையில் பிளவு ஏற்பட்டது (1 அர 12:6-14). எகிப்தின் பாரவோன் (ஏச 19:11), பபிலோன்யாவின் நெபுக்கதுனேசார் (தானி 3:2), பாரசீக அரசன் அர்த்தாசெருசு போன்ற சுற்றியிருந்த அரசர்களுக்கும் ஆலோசகர்கள் இருந்ததாகக் கூறப்பட்டுள்ளது. பாரசீக அரசன் அகசுவேரு, பாரசீக, மேதியா ஆகிய பகுதிகளில் நியமித்த எழு அமைச்சர்களுக்கேற்ப (எஸ் 1:14), அர்த்தாசெருசு ஏழு ஆலோசர்களைக் கொண்டிருந்தார் (எஸ் 7:14). சிலசமயம் தாய் அரசிக்கும் இப்பதவி அளிக்கப்பட்டது (2 நாள் 22:3).

பொதுவாகக் பெற்றோர்கள் (பழ 1:8), முதியோர் (எச 7:26), ஞானிகள் (எரே. 18:18; 49:7), இறைவாக்கினர்கள் (2 நாள் 25:16; எரே. 38:15) ஆலோசகர்களாகச் செயல்பட்டனர். விவேகமுள்ளவன் ஒரு முக்கியமான படியெடுக்கும் முன்பு நிறைய பேரை கலந்தாலோசிப்பான் (பழ 11:14; 15:22; 20:18; 24:6). ஆனால் முட்டாள் ஆலோசனையை வெறுக்கின்றான் (பழ 1:25-30). நேர்மையுள்ளவரும், செல்வந்தருமான தன்னுடைய ஆலோசனையை மக்கள் மதித்த மகிழ்ச்சிமிக்க காலத்தை யோவு நினைவு கூறுகிறார் (யோபு 20:21). ஆனால் சிலர் தவறான ஆலோசனையால் தவறான வழியில் இட்டுச் செல்லப்படுகின்றனர் (2 நாள் 22:3; சங் 1:1; பழ 12:5; நெக 1:11).

உருவகமாக இறைவனே ஒரு ஆலோசகர் ஆவார் (சங் 16:7; 32:8; 33:11; 73:24). ஒருவரும் இறைவனுக்கு ஆலோசனை கூற

முடியாது (ஏச 40:13; உரோ 11:34). கடவுளின் சட்டமும், நியமனங்களும் மக்களின் ஆலோசகர்கள் ஆவர் (சங் 119:24). மெசியா தான் உண்மையான அரசன்; அவர் ''வியத்தகு ஆலோசகர்'' ஆவார் (ஏச 9:6). ''ஆலோசனையும் வல்லமையும் தரும் ஆவி'' அவர் மேல் தங்கும் (11:2). பரிசுத்த ஆவியும் ஆலோசகர் ஆவார் (யோவா 14:16).

**ஆல்கிமு** (ALCIMUS)

தான் இழந்த தலைமைக் குரு பதவியை மீண்டும் அடைய, மக்கபேயர் காலத்தில் தெமேத்திரியு மன்னனுடன் சேர்ந்து (கி.மு. 162-150) திட்டம் தீட்டிய ஒரு கிரேக்கக் கட்சிக்கு மாறிய யூதர் (2 மக் 14:3). தெமேத்திரியு ஆட்சிப் பீடம் ஏறியவுடன், ஆல்கிமு, பல அதிருப்தியாளர்களைச் சேர்த்துக் கொண்டு அரசன்முன் ''யூதா மக்கபேயு அரசனுடைய எல்லா நண்பர்களையும் கொன்று நாட்டின் மீது அழிவைக் கொண்டு வந்ததாகப்'', பொய் சாட்சிகளை உருவாக்கினார். தெமேத்திரியு, ஆல்கிமுவை அவர் அடைய விரும்பிய பதவிக்கு உயர்த்தி, யூதாவைத் தண்டிக்க பாக்கிது தலைமையில் படைகளை அனுப்பினார் (1 மக் 7:8). சில யூதர்கள் சமாதானத்தை விரும்பினர். தலைமைக் குரு படையுடன் இருப்பதால், தங்களுக்குப் பாதுகாப்பு உண்டு என்று நம்பி வந்த 60 கசிதேயர்கள் ஏமாற்றப் பட்டு, துரோகமாய் கொல்லப்பட்டனர். யூதா ஆல்கிமுவை எதிர்த்தார்.

ஆல்கிமு மேலும் பல குற்றச் சாட்டுக்களை (1 மக் 7:25) யூதாவின்மீது சுமத்தினார். ஆகவே யூதாவைத் தண்டிக்க நிக்கானோர் படைகளுடன் அனுப்பப்பட்டார். ஆனால் கபர்ச்சாலாம் என்ற இடத்தில் தோற்றார். மீண்டும் தெமேத்திரியு பாக்கிதையும், ஆல்கிமுவையும் யூதாவிற்கு எதிராக அனுப்பினார். இதில் யூதா, எலசா என்ற இடத்தில் கொல்லப்பட்டார் (9:18). ''புறவினத்தார் செய்ததைவிட இஸ்ராயேல் மக்களுக்கு ஆல்கிமு கொடுந்துன்பங்களைச் செய்தார்'' என்று 1 மக் 7:23 கூறுகிறது.

ஆல்கிமு, இறைவாக்கினர் செய்தவற்றை அழிக்கும் நோக்கோடு இறைவனது ஆலயத்தின் உட்சுவர்களை இடிக்கவும் கட்டளையிட்டார் (1 மக் 9:54). யூதர்களும், புறவினத்தாரும் வணங்கும் இடங்கள் ஒன்றாக்கப்பட வேண்டும் என்ற எண்ணத்துடன்தான் இவைகள் செய்யப்பட்டனபோல் தோன்றுகிறது. இது யூதத்தைக் கிரேக்க மயமாக்குவதின் ஒருபடியாகும். இந்த வேலையை ஆரம்பித்த சிறிது காலத்திற்கெல்லாம் ''ஆல்கிமு இறைவனால் தண்டிக்கப்பட்டார். அவர் துவக்கிய அலுவல்கள் நின்று போயின. அவர் வாய் அடைபட்டது. பாரிச வாயுவினால் பீடிக்கப்பட்டு ஒன்றும் பேச முடியாமல் மிகவும் துன்பப்பட்டு இறந்தார்'' (1 மக் 9:54-57; அ.ப. 12:23).

சங். 74:79-80 ஆல்கிமுவின் பெரிய குருத்துவ காலத்தில் பக்தியுள்ள யூதர்களின் மன நிலையைப் பிரதிபிலிக்கிறது என்று சிலர் கருதுவர்.

**ஆல்தாசித்து** (ALTASCHITH - அழிக்காதே)

இது சங். 53-59-இன் தலைப்பில் வரும் ஒரு இசைக் குறிப்பாக இருக்கலாம். இது இச்சங்கீதங்கள் பாடப்பட வேண்டிய மெட்டின் தொடக்கச் சொற்களாக இருக்கலாம். மற்றொரு விளக்கம் இவை வழிபாட்டுக் குறிப்பைக் குறிக்கலாம்.

**ஆல்பாவும், ஓமேகாவும்** (ALPHA and OMEGA - தொடக்கமும், முடிவும், அகரமும் னகரமும்)

இந்த ஆல்பா, ஓமேகா என்ற இரு எழுத்துக்களும் கிரேக்க நெடுங்கணக்கில் முதல் எழுத்தும் கடைசி எழுத்தும் ஆகும். தமிழில் அ, ''ன'', போன்றனவாகும். இது அகரமும் னகரமும் என்றும், தொடக்கமும் முடிவும் என்றும் (திருவெளி 21:6) ஆதியும் அந்தமும் (22:13) என்றும் தமிழில் கூறப்படும். புதிய ஏற்பாட்டில் இது இறைவனை (1:8) அல்லது கிறிஸ்துவைக் (22:13) குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதே கருத்தை வேறு வடிவில் ''ஆதியிலே இருந்தவர், இருக்கின்றவர், இனி வருபவர் அவரே'' என்றும்,

''அவரிடமிருந்தும் அவருக்காகவும் எல்லாம் இருக்கின்றன'' என்றும் கூறப்படும்.

யூத வழக்கப்படி ஒரு கவிஞன் எபிரேய நெடுங்கணக்கிலுள்ள முதல் எழுத்து ஆன ஆலேப்பிலிருந்து கடைசி எழுத்தான ''தௌ'' வரை எல்லாவற்றையும் கூறி விட்டால் ஒரு தலைப்பைப் பற்றிச் சொல்லக் கூடியதை எல்லாம் முழுமையாகச் சொல்லிவிட்டதாக கருதப்படும் (லேவி *26:3-13*). எந்த ஒரு கருத்தும் தொடக்கமும் முடிவும் கருத்தில் கொண்டுதான் கூறப்படும். ''யாவும் இவரிடமிருந்து வந்தன, அவராலேயே உண்டாயின, அவருக்காகவே இருக்கின்றன'' ''(உரோ *11:36*)'' ''இருந்தவர், இருக்கின்றவர், இனி வருபவர்'' (திருவெளி *1:8*) என்ற மரபைக் காண்க. இதற்கு அடிப்படையான வாய்ப்பாடு ஏச *44:6; 48:12*-இல் வருகிறது. படைப்பவரும் மீட்பவருமான ஒரே இறைவனின் தனித்தன்மையை இவை வலியுறுத்துகின்றன. இருப்பவற்றிற்கு எல்லாம் அவரே மூலமும் ஆதாரமும் ஆவார். ''நம்மையன்றி, வேறு தெய்வம் இல்லை'' *(44:6)*. அவர் ஆல்பாவாக (தொடக்கமாக) இருப்பதால் விண்ணின் மேலும், மண்ணின் மேலும் நிறைவான மேலதிகாரத்தைக் கொண்டுள்ளார். அவர் ஒருவரே எல்லாவற்றையும் புதியதாகப் படைக்க வல்லவர். அவர் ஓமேகாவாக (முடிவாக) இருப்பதால் அவர் ஒருவரே ''இனி வரப்போவதை அறிவிக்கமுடியும்'' *(44:7)*. அவரே உயிர். ஆகவே அவர் ஒருவரே ''வாழ்வின் ஊற்றிலிருந்து இலவசமாய் நீர் கொடுக்கக் கூடும்'' (திருவெளி *21:6*). இவர் சாவையும், பாதாளத்தையும் அழிக்கக் கூடும். அவருடைய சன்மானமே இறுதியானது. இந்தப் பதங்கள் இயேசுவுக்குச் சாற்றி கூறப்படுவதால் அவரது தனித்தன்மை வாய்ந்த தலைமை உரிமையை இவை தெளிவாகக் காட்டுகின்றன. இது வெளிப்படையானதும், முக்கியமானதுமாகும் *(21:6)*.

''முதலும் இறுதியும் நானே, வாழ்பவரும் நானே.....'' *(1:17)* என்ற கூற்று கிறிஸ்துவுக்குப் பொருந்தும். இதன் அடிப்படைப் பொருளில், கிறிஸ்து படைப்பில் கொண்டிருக்கும் முதன்மையை எடுத்துக் கூறும் பிற புதிய ஏற்பாட்டு வாசங்களுக்கு இது இணையானது (யோவா *1:1* தொ; கொலோ *1:18* தொ; எபி *1:1-3; 1* யோவா *1:1*). அவரது வர விருப்பவர் என்ற பாகத்தையும் எல்லாவற்றிற்கும் இறுதிக்கால மீட்பர் என்பதையும் எடுத்துக் கூறுகிறது. எனவே கிறிஸ்துவின் செயல்களுக்குத் தொடக்கமும் முடிவும் இல்லை என்பதை உணர்த்துகிறது (எபி *7:3*). ஏனெனில் அவர் வழியாக, அவரால், அவருக்காகவே எல்லாம் உண்டாக்கப்பட்டன. அவரது முதன்மையும், முடிவுத் தன்மையும், எல்லாவற்றையும்விட அவரது மரணம் உயிர்பால் எண்பிக்கப்படுகின்றன. இவ்வாறு எழுத்துக்களை வைத்து இறைவனக் குறிப்பது கிரேக்கர்களிடையே காணப்படுகின்றது. ஆனால் அதன் அடிப்படை அடையாளத்தன்மை பழைய ஏற்பாட்டில் இருந்து எடுக்கப்பட்டதாகத் தெரிகிறது. இரு ஏற்பாடுகளுக்கும் இடையே உள்ள வேறுபாடு, கிறிஸ்துவே ஆல்பாவும், ஓமேகாவும் ஆவார் என்று முழுமையாக அடையாளம் காட்டுவதிலும், அவரது முதன்மையும், இறுதித்தன்மையும் உயிர்ப்பிற்கு மூலமாகக், காட்டுவதிலும் அடங்கியுள்ளது.

**ஆல்பேயு** (ALPHAEUS - *மாறுகின்ற)*

இது முழுக்க கிரேக்கப் பெயர். முதல் நூற்றாண்டில் பாலஸ்தீனத்தில் வாழ்ந்த யூதர்களால் பொதுவாக உபயோகப் படுத்தப்பட்ட பல பெயர்களில் இதுவும் ஒன்று. இது பழைய ஏற்பாட்டில் வரவில்லை. ஆனால் புதிய ஏற்பாட்டில் ஐந்து முறை வருகின்றது. மறைமுகமாகக் குறிக்கப்படும் இரண்டு ஆட்களைக் குறிக்கும் அடிப்படையில் இந்த ஐந்து பெயர்களும் பிரிக்கப்படுகின்றன.

*1.* அப்போஸ்தலரான யாக்கோபின் தந்தையின் பெயர் (மத் *10:3*; மாற் *3:18*; லூக் *6:15*; அ.ப. *1:13*). முதல் மூன்று குறிப்புகள் ஒத்தமைப் பகுதிகளாகும். இவை ஆல்பேயு என்பவர் யாக்கோபின் தந்தை என்பதைத் தவிர வேறு எதையும் குறிப்பிடவில்லை. இந்த யாக்கோபு செபதேயுவின் மகன் யாக்

கோபு அல்லர் என்று மத்தேயு, மாற்கு நற்செய்தி குறிப்புகளும் அ.ப. 1:13-ம் காட்டு கின்றன. ஒருவேளை இவர் மரியாளின் கணவனும், யாக்கோபு, யோசேப்பு ஆகி யோரின் தந்தையுமான (மத் 27:56; மாற் 15:40; யோவா 19:25) கிளோப்பாவாக இருக் கலாம். லூக். 24:18-இல் வரும் கிளயோப்பா வும் ஒரே ஆளைக் குறிக்கலாம். இக்கருத்து உண்மையான சான்றுகள் அடிப்படையில் அல்லது, பாரம்பரியத்தை அடிப்படையாகக் கொண்டது ஆகும்.

2. மத்தேயு (மத் 9:9) என்றும் அழைக்கப்ப டும் லேவி என்பவருடைய தந்தை (மாற் 2:14). மத் 9:9; மாற். 2:14; லூக் 5:27 ஆகிய குறிப்புகளை ஒப்பிட்டுப் பார்க்கும்போது லேவியும், மத்தேயுவும் ஒன்று என்று தோன் றுகின்றது. ஆகவே இந்த ஆல்பேயு யாக்கோ பின் தந்தையான ஆல்பேயுவாக இருக்க முடியாது. புதிய ஏற்பாடு இந்த ஆல்பேயு வைப் பற்றி வேறொன்றும் சொல்லவில்லை

**ஆவி** (SPIRIT)

பண்டைக்கால உயர்தனிச் செம்மொழிக ளிலும் விவிலிய மொழிகளிலும் ஆவி எனும் சொல் பல்வேறு பொருள்களைக் குறிப்பதாய் உள்ளது. 'ஆவியின் மனிதன்' என்றால் தெய்வத்திறம் வாய்ந்தவன் ஆகும்; 'ஆவியை நீத்தல்' என்றால் இறத்தல் ஆகும்; 'ஆவிக்கேற்ப வாழ்தல்' என்றால் புனித நிறை வாழ்வு வாழ்தல் ஆகும். இவை போன்ற பொருள் வேறுபாடுகளிடையே ஒரு சில ஒப்புமைகளும் உள. எப்பொழுதும் ஒரு பொருளின் புலனாகாத அடிப்படைக் கூற்றை ஆவி என்பது சுட்டிக்காட்டுகிறது. ஆவியே அப்பொருளை வாழச் செய்வது; அப்பொருளில் இயல்பாகவே அரும்புவது; மிகவும் தன்வயத்தனாய் இருப்பது; வலுவந் தமாய் எவருக்கும் அடிமையாக்கப்பெற இயலாதது.

I. பழைய ஏற்பாடு

1. காற்று அலை:- ஆவி (எபிரேயத்தில் ரூஆக்) என்பது வீச்சு, குறிப்பாய்க் காற்று வீச்சு ஆகும். காற்று ஒரு புதிராகும்; சில வேளைகளில், தடுக்க முடியா வலுவந்தத் தோடு கடுங்காற்றாய் வீசி வீடுகளையும் ஆல மரங்களையும் ஆழ்கடலில் மிதந்தோ டும் பெருங்கப்பல்களையும் தகர்க்கிறது (எச 13:13; 27:26); சிலவேளைகளில், தென் றலின் தழுவலாய் மிதந்து வந்து உள்ளே நுழைகிறது (1 அர 19:12); சிலவேளைளில், மிகக் கொடிய வெப்பக்காற்றாய் வீசிக் கட லைக் கட்டாந்தரை ஆக்குகிறது. கந்தக மழையாய்ப் பெய்து எதிரிகளை எரியவைக் கிறது (யாத் 14:21; காண் எச 30:27-33); சிலவேளைகளில், கார்முகில் திரள்கூட்டிப் பெருமழை பெய்வித்து வளநிலம் நல்விளச் சல் தரச்செய்கிறது (1 அர 18:45).

2. வாங்கிவிடும் மூச்சு:- உயிரற்ற நிலவுல குக்கு (உயிர்கொடுக்கும்) காற்றைப்போல் காண்பதற்கரிய முறையில் ஊசலாடும் மனித மூச்சு, மனித உடலுக்கு அவனது மூச்சு உயிர்ப்பூட்டி அதன் பெரும் பகுதியை இயக் குவிக்கும் ஆற்றலாய் உள்ளது. இம்மூச்சு காண்பதற்கரிய முறையில் ஊசலாடும் ஒன் றாகும். சிறிதும் மூச்சுவிடாமல் நீண்டகா லம் மனிதனால் இருக்கமுடியாது; ஆயினும் அவன் அந்த மூச்சுக்கு மேலுரிமையாளன் அல்லன், மூச்சு, குறிப்பாக, மனித உயிர் மூச்சு, காற்றைவிட இன்னும் அதிக நேரடிமு றையில், கடவுளிடமிருந்து வருகிறது (ஆதி 2:2; 6:3; யோபு 33:4); சாவு வேளையில் அவரிட்மே அது திரும்பிப் போகிறது (யோபு 34:14தொ; திருவுரை 12:7; ஞான 15:11).

3. மனிதனின் ஆவி:- இந்தத் தெய்வீக உயிர்மூச்சு மனிதனில் இருக்கும்வரை உண் மையில் அது அம்மனிதனுக்குச் சொந்தமான தாய் உள்ளது. சடமான அவனது ஊனுடலை உயிருள்ளதாகவும் செயலாக்கவல்லதாகவும் ஆக்குகிறது (ஆதி 2:7). மேலும், ஆன்மா வின் உணர்ச்சிகள், எழுச்சிகள் போன்றவை எல்லாம் மனித மூச்சில் வெளிக்காட்டப்படு கின்றன; அச்சம் (ஆதி 41:8), சினம் (நீதி 8:3), மகிழ்ச்சி (ஆதி 45:27) ஆணவம் இவை எல்லாமே மனிதனின் மூச்சைப் பாதிக்கின்

றன. எனவே, 'ரூஆக்' எனும் சொல் மனித சுயஉணர்வு நிலையையும் மனித ஆவியையும் குறிப்பிடும் சொல் ஆகிறது. கடவுளின் கையில் இந்த ஆவியை ஒப்படைத்தல் *(சங்.31:5=லூக். 23:46)* என்பது கடைசி மூச்சு விடுவது ஆகும்; அதேவேளையில், ஒருவன் தன் உள்ளிருப்பையே அதாவது தன்னிடமுள்ள உயர்தனிச் சொத்தையே கடவுளுக்குக் கையளிப்பதும் ஆகும்.

*4. மனிதனின் ஆவிகள்:-* மனிதன் சிலவேளைகளில் தனக்குரியதல்லாத வேறொரு வியத்தகு ஆற்றலால் தான் ஆட்கொள்ளப்படுவதை உணர்கிறான். இந்த ஆற்றல் அவனில் வாழ்கிறது. இது ஓர் ஆவியாகத்தான் இருக்க வேண்டும். இது எரிச்சல் *(எண் 5:14-30)*, பகை *(நீதி 9:23)*, விபசாரம் *(ஓசே 4:12)*, தூய்மைக்கேடு *(செக் 13:2)* போன்ற ஒரு தீய ஆற்றலாக இருக்கலாம்; நீதி *(ஏச 28:6)*; மன்றாட்டு *(செக் 12:10)* போன்ற ஒரு நன்மை பயக்கும் ஆவியாகவும் இருக்கலாம். மீட்பு இன்னும் நிறைவுறாத காரணத்தால், சாத்தானின் மூடு மறைவுகளைச் சரியாய் மனிதன் பகுத்துணர முடிவதில்லை; எனவே, பழைய ஏற்பாட்டு ஆசிரியர்கள் நெறிதவறிய ஆவிகளின் செயல்களுக்கும் கடவுள்தான் கர்த்தா என்று கூறுவதைத் தவிர வேறேதும் அறிந்திலர் *(காண் நீதி 9:23; 1 சாமு 19:9; 1 அர 22:23...)*. எனினும் நல்ல ஆவிகள் எப்போதும் நேரடியாகக் கடவுளிடமிருந்து வருகின்றன எனத் தெளிவாய் எடுத்துரைக்கின்றனர். மேலும், எல்லா அகநிலை மாற்றங்களுக்கும் ஊற்றாய் உள்ள தூயவரையும் அர்ச்சிப்பு அளிப்பவராயும் உள்ள ஆவியானர் ஒருவர் இருப்பதையும், பழைய ஏற்பாடு வலியுறுத்துத்துகிறது *(காண். ஏச 11:2; எச 36:26தொ)*.

II. புதிய ஏற்பாடு

பழைய ஏற்பாட்டில் போலவே புதிய ஏற்பாட்டிலும் ஆவி எனும் சொல்லுக்குப் பொருள் வேறுபாடு காணக்கிடக்கிறது. அஃதோடு, இயேசு கிறிஸ்துவில் தூய ஆவியின் அருட்கொடை அரும்புகிறது; மனித ஆவியினுடையவும் அவனைச் செயலாற்றவைக்கும் ஆவிகளினுடையவும் மெய்யான அளவு இயல்புகளை அது தெளிவுபடுத்துகிறது.

*1. ஆவிகளின் ஆய்வுணர்வு:-* சாத்தானின் முகமூடியைக் கிழித்தெறிந்து அவனுடைய தந்திரங்களையும் அவற்றின் பலவீனங்களையும் தெளிவாக்கும்போது இயேசு கிறிஸ்து தீய ஆவிகள்மேல் தமக்கிருக்கும் வல்லமையை வெளிப்படுத்துகிறார். கடவுளின் பரிசுத்தர் என அவரை அறிந்து அலறும் பேய்களைக் கடவுளின் ஆவியினால் ஓட்டுகிறார் *(மத் 8:16; 12:28; மாற் 1:23-27; 9:27)*. தம் சீடர்களுக்கும் பேயோட்டும் அதே வல்லமையைக் கொடுக்கிறார் *(மாற் 6:7; 16:17)*.

தூய ஆவியின் அருங்கொடைகளில் ஆவிகளின் ஆய்வுணர்வு *(1 கொரி 12:10)* முக்கியமானதொன்று; இறைவாக்கு உரைப்பது என்ற மதிக்கமுடியாத கொடையோடு இந்த அருங்கொடையும் மெய்யாகவே தொடர்பு கொண்டிருப்பதுபோல் உள்ளது; தூய ஆவியானவரால் கற்பிக்கப்பட்டு, ஆன்மீக வாழ்வு வாழ்வோரே, கடவுளின் கொடைகளை உணர்ந்து மதிப்பிடவும் *(1 கொரி 2:11 தொ)* மேலான வரங்களைத் தேடவும் *(12:31; காண் 14:12)* கூடிய தனிப்பண்பு கொண்டிருப்பர்.

*2. தூய ஆவி நம் ஆவியோடு இணைந்து கொள்கிறார்:-* கடவுளின் ஆவியைக் கண்டுணர்வது என்பது நம் சொந்த ஆளுமையைத் துறந்துவிடுவது ஆகாது; இதை அடக்கி ஆள்வதே ஆகும். பழைய ஏற்பாட்டுக் கருத்துக்கேற்ப, புதிய ஏற்பாடும் மனிதனிலே, ஒரே சமயத்தில் உடல், ஆன்மா, ஆவி எனும் மூன்றும் கூடிய பல்கூட்டான தொகுதி ஒன்றையே காண்கிறது *(காண் 1 தெச 5:23)*. மூச்சு மற்றும் உயிரிலிருந்து பிரிக்க இயலாத ஆற்றல் ஒன்று *(லூக் 8:55; 23:46)*, மன எழுச்சிகளைக் கூர்ந்து உணரக்கூடிய ஆற்றல் ஒன்று *(லூக் 1:47; யோவா 11:33; 13:21; 2 கொரி 2:13; 7:13)*, ஊனியல்புக்கு எதிராய் அடிக்கடி எழுகின்ற ஆற்றல் ஒன்று *(மத் 26:41; கலா 5:17)* இருப்பதை உணர்கிறது. ஆனால் கடவுளின் ஆவியானவர் விசுவாசி

யின் ஆவியில் குடிகொண்டுள்ளார். அந்த ஆவியானவர் மனிதனைப் புதுப்பிக்கிறார் (எபே 4:23); அவனது ஆவியோடு ஒன்றாகிக் கொள்கிறார் (உரோ 8:16); இறைமக்களுக்கேற்ப அவர்களைச் செபிக்கத் தூண்டித் தாமே சொல்லொணா பெருமூச்சோடு பரிந்து பேசுகிறார் (8:26 தெ); ஆண்டவரோடு மனிதன் ஒன்றி ஒரே ஆவியாகும்படிச் செய்கிறார் (1 கொரி 6:17) என்பது புதிய ஏற்பாட்டின் தலையாய அனுபவமாகும்.

பல இடங்களில், சிறப்பாக, பவுல் நூல்களில், ஆவி என்ற சொல் மனித ஆவியைக் குறிப்பிடுகிறதா அல்லது கடவுள் ஆவியைக் குறிப்பிடுகிறதா என்று அறுதியிடுவது சற்றுக் கடினமாய் உள்ளது. எ.கா. ''ஊக்கம் தளராது, ஆவியின் ஆர்வம் தணியாது ஆண்டவருக்கு ஊழியம் செய்யுங்கள்'' என்கிறார் (உரோ 12:11); ''பரிசுத்த ஆவிக்குரிய செயல்கள், கள்ளமில்லா அன்பு'' என இரண்டையும் இணைத்துவைக்கிறார் (2 கொரி 6:6.....). மொழிபெயர்ப்பாளருக்குச் சிக்கலாயுள்ள இந்த இருபொருள் வழக்கு விசுவாசத்துக்கு ஓர் ஒளிக்கதிராய் உள்ளது; கடவுளின் ஆவியானவர் மனித ஆவியை ஊடுருவி உருமாற்றம் கொள்ளச் செய்கிறார்; எனினும், அவனது ஆளுமை நிறைவைச் சிறிதும் அவர் குலைப்பதில்லை என்பதற்கு இது ஒரு சான்று; தம் முன்னிலையில் தம் படைப்பை இருக்க வைத்துத் தம்முடைய தாக்கிக் கொள்ள வல்ல இறைவன் ஆவியாக இருக்கிறார் என்பதை (யோவா 4:24) இது சுட்டிக் காட்டுகிறது.

கடவுள் ஆவியானவர்; எனவே, கடவுளால் பிறப்பவர்கள் ஆவியால் பிறக்கின்றனர், ஆவியாய் உள்ளனர் (3:6); ஆவியிலும் உண்மையிலும் இறைவனுக்கு ஊழியம் புரியவும் (4:24) ஊனையும் சாவுக்குரிய செயல்களையும் (எபி 6:2) துறக்கவும் திறன் கொண்டவர் ஆகின்றனர். இங்ஙனம், உயிர் அளிக்கும் (யோவா 6:63) ஆவியானவரின் கனிகளைக் கொடுப்பவர் ஆகின்றனர் (கலா 5:22).

**ஆவிகளை ஆய்ந்துணர்தல்**

பவுலின் கருத்துப்படி ஆவிக்குரிய கொடைகளுள் இதுவும் ஒன்று *(1 கொரி 12:10)*. தொடக்கக் காலக் கிறிஸ்தவ விசுவாசம் இதற்குப் பின்னணியாக உள்ளது. நல்ல ஆவி. தீய ஆவி என இருவகைகள் பேசப்பட்டுள்ளது *(1 கொரி 12:3-11; 2 தெச 2:11; எபே 6:12)*. ஏவுதல் பெற்ற செய்திகள் இரண்டிலுமிருந்து வரலாம். எனவே ஏவுதல் எங்கிருந்து வருகிறது என்பதை தீர ஆராய வேண்டும் *(1 யோவா 4:11)*. ஆவிகளையும், ஆவியின் ஏவுதல்களையும் பிரித்து அறியலாம் *(1 கொரி 12:3; 14:32; 1 யோவா 4:2-3; காண்க 1 கொரி 2:12-15)*. இந்த ஆவிகளைத் தேர்ந்துதெளிதல் கிறிஸ்தவ உண்மையைப் பாதுகாக்க அவசியமானதாகும் *(1 தெச 5:18-21)*. ''உண்மையின் ஆவி எது, ஏமாற்றும் ஆவி எது என்று'' பிரித்தரிய வேண்டும் *(1 யோவா 4:6)*. இதற்குரிய சோதனைகள் அ) இறையியல் சார்ந்தது. இயேசு ஆண்டவர் என்றும், அப்போஸ்தல சாட்சியையும் உறுதியுடன் ஏற்றுக் கொள்ளுதல் *(1 கொரி 12:3; 1 யோவா 1:1; 2:24; 4:2)*. ஆ) ஒழுக்க, செயல்முறை சார்ந்தது; தேவ ஆவிக்குரிய பலன்களால் சான்று பகர்தல் *(மத் 7:15; கலா. 5:22-23; உரோ. 8:9; 1 கொரி. 13)*. அது திருச்சபைக்கு வளர்ச்சி தருவதாய் அமைந்திருக்க வேண்டும் *(1 கொரி 14:14-26)*.

**ஆவிக்குரிய உயிர்கொண்ட உடல்** (SPIRITUAL BODY)

இது உயிர்ப்பின் உடல். இவ்வுலக வாழ்க்கையிலே மனிதனின் ஆன்மா மனித உடலை இயக்குகிறது. ஆனால் கிறிஸ்துவில் புதுவாழ்வு பெறும் கிறிஸ்தவனில் பரிசுத்த ஆவி வாழ்கிறார். அந்த அளவில் அவன் ஊனைமட்டும் சார்ந்தவன் அல்லன். அவன் ஓர் ஆவி ஆவான். மனிதனைப் பற்றி ஆவி என்ற சொல் பயன்படும்போது அது இறைவனோடு மனிதன் கொள்ளும் உறவை, அதாவது பரிசுத்த ஆவியால் செயலாற்றப்படுவதைக் குறிக்கிறது. மனிதன் இப்போதுள்ள ஊன் நிலைக்கேற்றபடி உடலைக் கொண்டிருக்கிறான். அதே போன்று உயிர்ப்

பில், முழுவதும் மீட்படைந்த நிலைக்கேற்ற ஆன்மீகப் பொருளால் ஆன உடலைக் கொண்டிருப்பான் என்பதைக் குறிக்க வில்லை. மாறாக, பரிசுத்த ஆவியில் முழுவதும் ஆட்கொள்ளப்பட்ட, அவருக்குகந்த கருவியாக முழுவதும் மாறிய, கிறிஸ்துவுக்குள் உயிர்ப்பு வாழ்க்கைக்கு ஏற்றவாறு முழுவதும் மாற்றியமைக்கப்பட்ட உடலைக் கொண்டிருப்பான் *(1 கொரி 15:45-49).*

**ஆவியின் கொடைகள்** *(SPIRITUAL GIFTS)*

திருச்சபையினுடைய பணிக்கான அதனுடைய உறுப்பினர்களுக்கு சிறப்பாக அளிக்கப்படும் கொடைகளைக் குறிக்க புதிய ஏற்பாட்டில் இச்சொல் பயன்படுகிறது. தொடக்க நாட்களிலிருந்தான திருச்சபையை ஆவியினுடைய இயக்கத்தின் கீழுள்ள சமூகமாகப் புதிய ஏற்பாடு சித்தரிக்கிறது. திருச்சபையில் இருப்பதால் கிறிஸ்தவர்கள் ''ஆவியிலுமிருந்து'', ''ஆவியினுடைய முதற் கனிகளையும்'' சுவைத்துள்ளனர் *(உரோ 8:9.23).* ஆவியினுடைய பிரசன்னம் மற்றும் வல்லமையினுடைய அசாதாரணமான அறிகுறிகள் எங்கும் தெளிவாக உள்ளன. முதலில் இயேசுவால் அறிவிக்கப்பட்டு, பின்னர் அதனை பெற்றவர்களால் போதிக்கப்பட்ட மீட்பின் நற்செய்தியானது ''அருங்குறிகளாலும் அற்புதங்களாலும் பல்வேறு புதுமைகளிலும், தம் விருப்பத்தின்படி அளித்த பரிசுத்த ஆவியின் கொடைகளிலும் '' இறைவனால் உறுதிப்படுத்தப்படுகிறது *(எபி 2:4).* இத்தகைய சிறப்பு நிகழ்ச்சிகள் ''ஆவியின் கொடைகள்'' என்று அழைக்கப்படுகின்றன. மெய்மறந்த நிலையினுடைய வலிமையான உணர்ச்சிவசப்பட்ட வெளிப்பாடுகள் முதல் சாதாரண, அன்றாட இறை சித்தத்தை நிறைவேற்றுதல் வரையிலும், வழிபடுவதற்கு துணைபுரிகின்ற திறமைகள் மற்றும் செயல்கள் முதல் அதற்கு சம அளவில் கிறிஸ்தவ சமுதாயத்தினுடைய பொதுவான தேவைகளை எதிர்கொள்ள அவசியமானவை வரையிலும் இக்கொடைகள் பலவகைப்படும். இத்தகைய வல்லமைகள் மற்றும் செயல்கள் அனைத்தும் இறைவனால் அளிக்கப்பட்டவை. அவற்றின் மதிப்பானது திருச்சபையினுடைய நலனை எந்த அளவிற்கு உயர்த்துகிறதோ அந்த அளவிற்கு கணிக்கப்படவேண்டும்.

*1. இயல்பும் வேற்றுமையும்:-* ஆவியின் கொடைகளை குறிப்பிடுவதற்கு ''ஆவிக்குரிய வரங்கள்'' *(1 கொரி 12:1; 14:1)* என்ற சொல்லானது சில நேரங்களில் உபயோகிக்கப்பட்டாலும் சிறப்பாக அடிக்கடி உபயோகிக்கப்படும் சொல்லானது 'இலவச கொடைகள்' என்பதாகும். புதிய ஏற்பாட்டிற்கு புறம்பே இது அரிதாகவே காணப்படுகிறது. 'ஆவிக்குரிய' என்ற சொல்லானது ஒருமுறை மட்டுமே அதனுடன் இணைக்கப்படுகிறது *(உரோ 1:11)* இருவகைகளில் இது உபயோகிக்கப்படுகிறது. பொதுவாக, இறை இரக்கம் அல்லது அருள் மூலமாக தனி நபரால் பங்கேற்கப்படும் குறிப்பிட்ட வரம் *(2 கொரி 1:11),* அல்லது திறன் *(1 கொரி 7:7)* அல்லது உண்மை *(உரோ 1:11)* அல்லது கொடை *(கொரி 1:7)* முதலியவை இச்சொல்லால் குறிக்கப்படுகின்றன. மற்றும் குறிப்பிட்ட முறையில் குழு ஒருமைப்பாட்டின் நலன் மற்றும் வளர்ச்சிக்காக ஏற்றுக்கொள்ளப்படும் குறிப்பிட்ட திறமைகள் அல்லது பொறுப்புகள் முதலியவற்றைக் குறிக்கின்றது *(உரோ 12:3-8; 1 கொரி 12:14; எபே. 4:17-13; 1 பேதுரு 4:10-11; 1 திமோ 4:13).* இவையாவும் இறைவனால் அளிக்கப்படுகின்றன. புதிய ஏற்பாட்டு ஆசிரியர்கள், குறிப்பாக பவுல், வேறுபட்ட முழுமையின் அளவுகளில் ஒவ்வொரு கிறிஸ்தவனும் அவற்றில் சிலவற்றை கொண்டுள்ளான் என்ற நம்பிக்கையுடன், இத்தகைய கொடைகளைப்பற்றி பரந்த கருத்தைக் கொண்டுள்ளனர் *(உரோ 12:6).*

*அ) பொதுவான வழக்கு:-* ஆவியின் கொடைகள், அருளினுடைய ''அருட் கொடைகளாகும்.'' தனது பாவத்தின்காரணமாக மனிதன் தண்டனையையும் மரணத்தையும் மட்டுமே பெற்றபோது இறைவன் தனது இலவச கொடையின் மூலம் ஏற்புடைமையையும் வாழ்வையும் அளித்தார் *(உரோ 5:15-17).* மரணம், பாவத்தினுடைய சம்ப

ளம் ஆகும். ஆனால் முடிவில்லா வாழ்வானது ''இறைவன் அளிக்கும் இலவச அருட் கொடையாகும்'' (*உரோ 6:23*). ஆபத்தினின்று விடுவிக்கப்படுதல் நன்றி கோரும் கொடையாகும் (*2 கொரி 1:11*). ஒருவரது அனைத்து திறமைகளையும் வல்லமைகளையும் அழைப்பிற்கென அளிப்பதன் மூலம் மணமாகாத வாழ்வு வாழ்வதற்கான வல்லமையானது ஒரு கொடையாகும் (*1 கொரி 7:7*). ஒருவன் தன்னிலுள்ள கொடையையும் திறமையையும் புறக்கணிக்கக் கூடாது (*1 திமோ 4:13-14*). மனித இயல்பானது உண்மையில் முன்னேறக்கூடிய தன்மை உடையதால், மனிதன் 'மேலான வரங்களை' ஆர்வமாய்த் தேட வேண்டும் (*1 கொரி 12:31; மத் 25:14-30*). பிறருக்கும் செய்யும் ஊழியமானது ஒவ்வொருவரும் பெற்ற கொடைக்கு ஏற்ற விகிதத்தில் இருக்க வேண்டும் (*உரோ 12:6; 1 பேதுரு 4:10*). திருச்சபையினுடைய ஆசிகளும், சலுகைகளும், வல்லமைகளும் ஆவியின் கொடைகள். அவை என்றுமே திரும்ப எடுத்துக் கொள்ளப்படுவதில்லை (*உரோ 11:29; 1 கொரி 1:7*). நற்செய்தியின் உண்மையை தெரிவிக்க அப்போஸ்தலர் விரும்புவதுபோல, கொடையை ஒருவன் மற்றவருக்கும் அளிக்கலாம் (*உரோ 1:11*).

''அருட்கொடை'' என்னும் சொல்லைப் பயன்படுத்தும் வழக்கு தனி நபருக்கோ அல்லது திருச்சபைக்கோ இறைவனால் அளிக்கப்பட்ட சலுகையைக் குறிப்பிடுகிறது. தங்களுடைய கொடைகளைத் தனி நபர்கள் செயல்படுத்த வேண்டிய முறையை இரண்டாம் தரமாகவே குறிப்பிடுகிறது.

ஆ) குறிப்பிட்ட அல்லது சிறப்பு வழக்குகள்:- திருச்சபையும், ''இயேசுக்கிறிஸ்துவில் உள்ளவர்களின்'' தோழமையும் இங்கு முனைப்பான அக்கறை பெறுகின்றன. திருச்சபையின் நலனும் வளர்ச்சியும் முதன்மை அழுத்தம் பெறுகின்றன. ஒருவரது கொடைகளைப் பயன்படுத்தும்போது சுய முக்கியத்துவத்தைச் சிறிதும் காட்டக்கூடாது. ஆனால் ஒவ்வொருவரும் கிறிஸ்துவின் உடலுக்குப் பணிசெய்யும்போது உண்மையான தாழ்ச்சி வெளிப்படவேண்டும். ஒவ்வொருவரும் அந்த உடலின் அங்கங்களாவர். அதன் நலனுக்காக, தனக்குரிய குறிப்பிட்ட அலுவலை நிறைவேற்ற வேண்டும் (*உரோ 12:3-5; 1 கொரி 12*).

''ஆவியின் கொடைகளுடைய'' ஓர் அட்டவனையானது கீழ்கண்ட வரிசையில் உள்ளது: ஞானம், அறிவு, விசுவாசம், குணமாக்குதல், புதுமை செய்யும் ஆற்றல், இறைவாக்குரைத்தல், ஆவிகளைத் தேர்ந்து தெளியும் திறன், பல்வகை பரவசப் பேச்சு, மற்றும் அதனை விளக்கும் திறன் (*1 கொரி 12:8-10*). இதே வரிசையில் இல்லாவிடினும் பிற அட்டவணைகள் (*உரோ 12:6-8; 1 கொரி. 12:28-30; எபே 4:11*), திருச்சபையினுடைய பல்வேறுபட்ட பணிகளுக்கான சில சிறப்பான குறிப்புடன் அதே பொதுவான அமைப்பை வலியுறுத்துகின்றன. இந்த கொடைகளை இயல்பானவை அல்லது இயற்கைக்கு அப்பாற்பட்டவை, புதுமையானவை அல்லது புதுமையற்றவை என வகைப்படுத்துவதற்கான முயற்சிகள் அதிகம் வெற்றிபெறவில்லை. ஏனெனில் அத்தகைய வேறுபாடு எதையும் புதிய ஏற்பாடு வெளிக்கொணரவில்லை. இது அனைத்தையும் ஆவியினுடைய இயக்கத்திற்குச் சாற்றிக் கூறுகிறது. ஆவியைத் தந்தையுடனும் கிறிஸ்துவுடனும் ஒன்றிணைக்கிறது (*1 கொரி 12:4-6; எபே 4:4-6*) வழிபாட்டில் மிகவும் உபயோகமாக உள்ளவற்றை (இறைவாக்குரைத்தல், போதித்தல்) மிகவும் செயல் முறையான அல்லது பணிபுரிகின்ற கொடைகளினின்று (குணமாக்குதல், நடத்திச் செல்லுதல், ஊழியம்; *1 பேதுரு 4:10-11*) பிரித்துக் காட்டச் சிலர் விரும்பலாம். பரவசப் பேச்சுகளில் அளிக்கப்படுவதுபோன்று (*1 கொரி 14:13-19*) தாராளநிலையை நோக்கி இயங்குகின்ற (*உரோ 12:8*) அனைத்து கொடைகளும் ஒன்றுபட்ட உடலாகிய திருச்சபையுடன் இணைந்துள்ளன. அதனுடைய தேவைகள் பல்வகையாக இருப்பதனாலும் அந்த உடல் சரியாகச் செயல்படுவதற்கு இக்கொ

டைகள் அளிக்கும் பங்கைப்பொறுத்து, இவை மதிப்பீடு செய்யப்படுகின்றன (1 கொரி 12:14-26)

மற்ற அனைத்திற்கும் ஊற்றாகிய முதன்மையான கொடை ஆவியாகும். அவரது மெய்யான தன்மையானது இயேசுவை ஆண்டவர் என்று அறிவிப்பதில் அடங்கியுள்ளது (1 கொரி 12:3). உயர்த்தப்பட்ட ஆண்டவராகிய ஆவி, தனது திருச்சபையின்மேல் கொடைகளை பொழிகிறார் (2 கொரி 3:17; எபே 4:9-11; பிலி 2:9-11). பன்னிரு அப்போஸ்தலர்களையும் அவர்களைப்போலவே நற்செய்திக்கு சான்று பகரவும், திருச்சபையைப் பெருமளவில் நடத்திச்செல்லவும் அனுப்பப்பட்டவர்களையும் அவர் அளிக்கிறார் (உரோ 16:7; 1 கொரி 9:5; 2 கொரி 8:23; கலா 1:19).

ஞானம் நிறைந்த பேச்சுடைய இறைவாக்கினர்களை அவர் அளிக்கிறார். இவர்கள் தாங்கள் கண்டதையும் கேட்டதையும் திடமாகவும், சுதந்திரமாகவும் புரிந்துகொள்ளும் விதத்திலும் இறைசித்தத்தினுடைய தன்மை மற்றும் செயல்முறையின் உட்கருத்தை (ஞானம் மற்றும் அறிவு) வெளிப்படுத்துகின்றனர் (அ.ப. 4:20.31; 1 கொரி. 1:5; 12:8; 14:29; 2 கொரி. 8:7; எபே. 1:8-9.17; கொலோ. 1:9-10). மேலும் திருச்சபையை அதனுடைய அலுவலிலும் வழிபாட்டிலும் தேற்றவும், வலிமைப்படுத்தவும் வழிகாட்டவும் செய்கின்றனர் (அ.ப. 13:1-3; 1 கொரி. 14:3)

மனம் திரும்பியவர்களுக்கும், பொதுவாகத் திருச்சபைக்கும், விசுவாசம் மற்றும் செயல் பாட்டிலும் நற்செய்திமரபிலும் மறைநூலிலும் கற்பிக்கிறபோதகர்களை அவர் அளிக்கிறார். உண்மையான மற்றும் போலியான போதனைகளுக்கு இடையிலான வேறுபாடு இன்றியமையாததாக ஆகும்போது, இவர்கள் மேலும் மேலும் முக்கியத்துவம் அடைகின்றனர். ஆயர்கள் இக்கொடையை மேலான விதத்தில் கொண்டிருக்குமாறு எதிர்பார்க்கப்படுகின்றனர் (அ.ப. 20:28-31; உரோ 12:7; கொலோ 3:18-4:1; 1 திமோ 5:17; எபி 5:12; யாக் 3:1; 1 பேதுரு 2:18-3:7). மேய்ப்புப்பணியானது சில நேரங்களில் போதனையுடன் இணைக்கப்படுகிறது (எபே 4:1); இது அனேகமாக இவை இரண்டிற்கும் இடையிலான நெருக்கிய உறவினைச் சுட்டிக்காட்டலாம்.

நற்செய்தியாளர்களையும், பயணம் புரியும் போதகர்களையும் அவர் அளிக்கிறார். அப்போஸ்தலர்களையும் இறைவாக்கினரையும்விட இவர்கள் இருக்கும் நிலையில் சற்று குறைந்தவர்களாக இருந்தாலும், எங்கெங்கு வாய்ப்பு அளிக்கப்படுகிறதோ அங்கெல்லாம் நற்செய்தியைப் போதிப்பது சிறப்பான அழுத்தம் பெறுகிறது (அ.ப. 21:8; 2 திமோ 4:5).

இதுவரை கூறப்பட்ட கொடைகள் அனைத்தும், தனிப்பட்ட விதத்தில் இல்லாவிடினும் ஆதித்திருச்சபையினுடைய பணியுடன் தொடர்புடையவையாக உள்ளன. பல்வேறுபட்ட அலுவல்களைக்கொண்ட இப்பணியானது ஒன்றுபட்ட உடலின் நன்மைக்கென ஆவியால் தூண்டப்பட்டுள்ளது. ஆயினும், திறனுள்ள வழக்கமான செயல்முறையால் இடம்பெறுகின்ற பணிகள் ஒழுங்குமுறைப்படி அங்கிகரிக்கப்படுகின்றன (1 கொரி 16:15; எபே 4:7-16; 1 தெச 5:12). முதலிலிருந்து ''கைகளை விரிப்பதானது'' நபர்களை குறிப்பிட்ட பணிக்கென ஒதுக்கி வைக்கிறது (அ.ப. 6:6; 13:3). ஆனால் பின்னர் இச்செயல் மேய்ப்புப்பணி திருமுகங்களில் நற்செய்தியாளர் பணிபுரியும் அதிகாரத்தை திமோத்தேயுவிற்கு அளிப்பதுபோல, மிகவும் அதிகாரப்பூர்வச் செயலாக உருவாகிறது. இச்செயலானது கொடையை பொழிவதில்லை. ஆனால் திமோத்தேயு ஏற்கனவே காட்டிய ஆர்வத்திற்கும் திறமைக்கும் அதிகாரத்தையும் உறுதியையும் அளிக்கிறது. அதை அவர் தீயெனப் பற்றியெரியச் செய்ய வேண்டும் என்று எச்சரிக்கப்படுகிறார் (1 திமோ 4:14; 2 திமோ 1:6).

பணியில் பயன்படும் மற்றகொடைகளும் உள்ளன. ஆனால் அவை குறிப்பிடும் முறை

யில் அதற்குரியவை அல்ல. விசுவாசம் ஒரு கொடையாகும் (1 கொரி 12:9; பிலி 1:29). ஆவியானவர் அப்பா என்று கூக்குரலிடு மாறு விசுவாசியை தூண்டுவதனால், ''ஆவி யிலான'' செபமும் ஒரு கொடையே (உரோ 8:16; 1 கொரி 14:14; எபே 6:18-19). நற்செய் தியின் கிறிஸ்துவில் பிரசன்னமாகி, அவரது சீடர்களுக்கு அளிக்கப்பட்டுள்ள (மாற் 6:7; லூக் 9:1; 10:19) ''இறைவனுடைய வல்ல மையானது'' (மாற் 12:24) புதுமைகள் மற் றும் குணப்படுத்துதலின் கொடைகளைப் பொழிவதற்கென திருச்சபையில் இன்னும் செயல்படுகிறதென கிறிஸ்தவர்கள் விசுவ சிக்கின்றனர் (உரோ 15:18; 1 கொரி 12:28; கலா 3:5; எபி 2:4; யாக் 5:13-16). இரக்க செயல்களைப் புரிவோரும், கிறிஸ்தவ சமூ கத்தில் தாராளமாக உதவி புரிவோரும் ஊழி யத்தின் கொடையைக் கொண்டுள்ளனர் (1 கொரி 12:28; உரோ 12:8). அதே வேளை யில் பிற்கால ஆயர்களின் (அ.ப. 14:23; 20:17) முன்னோடிகளான திருச்சபைக் காரியங்க ளில் தலைவர்களும் மேற்பார்வையாளர்க ளும் ஆட்சிபுரிதலின் கொடையினைக் கொண்டுள்ளனர். அனைத்திலும், குறிப்பாக பரவசப்பேச்சுகளில், கிறிஸ்தவர்கள் தவறி னின்று உண்மையை வேறுபடுத்த வேண்டி யிருப்பதனால், தேர்ந்து தெளியும் திறன் சிலருக்கு அளிக்கப்பட்டுள்ளது (1 கொரி 12:10; 1 யோவா 4:1). பெருமளவில் ஆசிக் கப்பட்டாலும், மதிப்பிலும், அட்டவணை யிலும் பவுலால் இறுதியில் வைக்கப்படும் கொடையானது (1 கொரி 12:28) பல்வகை பரவசப்பேச்சுக்கள் ஆகும். இவை புரியாத பரவசக்கூற்றுக்களாகும். விளக்கம் அளிக் கும் கொடையும் இதனுடன் சேர்க்கப்படா விடின் இவற்றால் எப்பயனும் இல்லை. மேலும் இவை பொது நன்மையைப் பாதிக் கலாம் (14:18.23).

இவ்வாறு புதிய ஏற்பாடானது கிறிஸ்து வில் இறைவனின் அருளினுடைய ஆதாரங் களை முற்றிலும் சார்ந்துள்ள, ஆவியில் படைக்கப்பட்ட, ஆவியைக் கொண்ட சமூ கத்தை நம்முன் சித்தரிக்கிறது. அனேகமாக முதலில் பல்வகை பரவசப்பேச்சும், அதோடு தொடர்புடைய செயல்களும் அசா தாரணமான கொடைகள் மட்டுமே ஆவிக் குச் சாற்றிக் கூறப்பட்டிருக்கலாம். விரை வில் கிறிஸ்தவ இயக்கத்தின் ஒவ்வொரு தன்மையிலும் ஆவியானவர் செயல்படுபவ ராக உள்ளார் என்பது விசுவசிக்கப்பட்டது. வழிபாட்டிற்கு ''பாடல், போதனை, வெளிப்பாடு, பரவசப்பேச்சு அல்லது விளக் கம் அளித்தல்'' (1 கொரி 14:26) போன்ற கொடைகளை விசுவாசிகள் கொண்டு வந்த னர். மற்றவர்கள் திருச்சபையினுடைய நடைமுறை காரியங்களில் தங்களுடைய கொடைகளைச் செயல்படுத்தினர். கிறிஸ் தவ தோழமை வளர்ந்து, அதனுடைய தேவைகளைத் தெளிவாகப் புரிந்துகொண்ட நிலையில் அவற்றை நிறைவுசெய்ய புதிய ஆற்றல்கள் தேவைப்பட்டன; கண்டுபிடிக் கப்பட்டன. இது ஆவியினுடைய தொடர்ந்த முன்னேற்பாட்டினைத் தெளிவாகச் சுட்டிக் காட்டுகின்றது. எனவே, ''பல்வேறு கொடைகள்'', ''பல்வேறு ஊழியம்'' பல் வேறு பணிகள் பற்றி பவுல் பேசுகிறார். ஆனால் அவர் அவற்றை வகைப்படுத்துவ தில் அவ்வளவு அக்கறை கொள்ளவில்லை, மாறாக ஆவியினுடைய செல்வாக்குமிக்க பலவித செயல்பாடுகள் சரிநிகரான செல் வாக்குமிக்க பலவித வேறுபட்ட விளைவுக ளில் தங்களை வெளிப்படுத்துகின்றன என்று சுட்டிக்காட்டுவதில் அக்கறை கொள்கிறார் (1 கொரி 12:4-6). ''கிறிஸ்து இயேசுவிலான '' வாழ்வினுடைய ஊற்றாகிய அதே ஆவியா னவர், அதே ஆண்டவர், அதே இறைவனிலி ருந்து அனைத்தும் தோன்றுகின்றன (1 கொரி 1:30; 2 கொரி 12:14).

2. இறுதிக்காலப் பின்னணி:- புதிய ஏற் பாட்டின் ஆவிக்குரிய கொடைகள் இறைவ னுடைய புதிய இஸ்ராயேலராகிய மெசியா சமுதாயத்தைக் கருத்தில் கொண்டுள்ளது. இச்சமூகம் ஆவியானவருடைய ஒவ்வொரு நல்ல, அவசியமான செயலிலும் அமைக்கப் பட்டு, காக்கப்படுகிறது. ஆவியின் வருகை யைப்பற்றிய பழைய இஸ்ராயேலுக்கு அளிக்கப்பட்ட வாக்குறுதிகளை உரிமைச் சொத்தாகப் பெற்று அவை நிறைவேற்றப்ப

டுதலுக்குச் சான்று பகர்கின்றது (அ.ப. 2:16-17; 3:25-26; கலா 6:15-16; 1 பேதுரு 2:9-10). வல்லமைமிக்க ஆவியின் பிரசன்னத்தையும் மனிதர்கள் ''இறுதிநாட்களில் வாழ்கிறார்கள்'' என்பதையும் வியத்தகு அறிகுறிகள் எடுத்துக்காட்டுகின்றன. எனவே, ஆவியினுடைய செயலை புரிந்துகொள்வதற்கான திறவுகோலானது இறுதி காலப்பண்புடையதாகும். ஆண்டவருடைய நாள் தொடங்கியுள்ளது; இறைவனுடைய அரசு வந்துள்ளது. கிறிஸ்துவினுடைய பணி, மரணம் மற்றும் உயிர்ப்பின் மூலமாக இஸ்ராயேலின் வரலாற்றில் எதிர்பார்க்கப்பட்ட அனைத்தும் இப்போது நிறைவேறுகிறது என்பதே முதன்மையான போதனையாகும் (அ.ப. 2:17-21; 3:21.24; 10:43; மாற் 1:14-15). திருச்சபையாகிய கிறிஸ்துவின் உடலின் அங்கத்தினர்கள் என்ற நிலையில் எதிர்கால முழுநிறைவிற்காகக் காத்திருக்கும் வேளையில், கிறிஸ்தவர்கள் புதிய காலத்தின் ஆசீர்களால் தொடர்ந்து நிரப்பப்படுகின்றனர் (1 கொரி 1:7; 10:11; எபி 6:5). ஆவியானவரால் படைக்கப்பட்டு ஆவியால் நிரப்பப்பட்ட ஒப்புறவில் அவர்கள் வாழ்கின்றனர். ஆண்டவராகிய ஆவி அதன்மேல் ஆட்சி செலுத்துகிறார். அதற்கென அதனுடைய கூட்டுறவு வாழ்விற்கு இன்றியமையா அனைத்துக் கொடைகளையும் அருளையும் அவர் பொழிகிறார் (அ.ப. 2:33; உரோ 5:8; 1 கொரி 1:9; 2 கொரி 3:17; கலா 5:22-23). இவ்வாறாக, ஆவியானவர் கிறிஸ்தவர்கள் ஏற்கெனவே முன் சுவைத்துப் பங்கேற்கின்ற எதிர்கால உரிமைச்சொத்தினுடைய (எபி 6:4; 1 பேதுரு 4:14) ''முதற் கனிகளாகவும்'' (உரோ 8:23) அச்சாரமாகவும் உள்ளார் (2 கொரி 1:22; 5:5; எபே 1:14). இன்னும் முழுமைப்பெறாத இறைவனுடைய ஆட்சியானது 'நீதியிலும் அமைதியிலும் தூய ஆவிதுய்க்கும் மகிழ்ச்சியிலும்'' இப்போது வெளிப்படுகிறது (உரோ 14:17).

3. மதிப்பீடும் கட்டுப்பாடும்:- ஆவியின் கொடைகள் அனைத்துமே ஏற்புடையவையே. ஆனால் அனைத்தும் சம அளவில் நல்லவையல்ல. திருச்சபைக்கு அவை அளிக்கும் பயன் அவற்றின் மதிப்பை தீர்மானிக்கிறது. பரவச வல்லமைகள் குறிப்பாக பேச்சுகள் ஆகியவற்றுக்குத் தகுதியற்ற இடமும் முதன்மையும் அளிக்கப்பட்ட கொரிந்திய திருச்சபையின் பின்னணியில் பவுல் ஆவியின் கொடைகளை ஒழுக்க மற்றும் அறிவு சார்ந்த வழிகளில் நடத்திச் செல்வதன் அவசியத்தை காண்கிறார். அவர் உடலை ஓர் ஒப்புமையாகப் பயன்படுத்துகிறார். உடல் ஒன்றே; ஆனால் அதன் அங்கங்கள் வேறுபட்டவை அவற்றின் அலுவல்களும் வேறுபட்டவை; ஆனால் ஒன்றையொன்று சார்ந்தவை, ஒரே உடலாய் உள்ளன. அதுபோல் ஆவியின்கொடைகள் பல்வேறுபட்டவை; ஆனால் ஒன்றையொன்று சார்ந்தவை; ஆனால் யாவும் கிறிஸ்தவத் தோழமையின் ஒன்றிப்பு, கூட்டுறவு, நலமிக்க வளர்ச்சி ஆகியவற்றுக்கு எற்றவாறு அமைக்கப்பட்டுள்ளன (1 கொரி 12:12-26). எனவே அனைத்துக் கொடைகளும் இந்த நோக்கத்திற்குக் கீழ்ப்படுத்தப்பட்டு அதற்குப் பயனுள்ள அளவுக்கு மதிப்பும் பெறுகின்றன. இப்பணியானது முதிர்ச்சியடைந்த மனித நிலைக்கும் கிறிஸ்துவின் முழுமையினுடைய தோற்றத்தின் அளவிற்கும் திருச்சபையைக் கொண்டு வர அன்புடன் அளிக்கப்படுகின்றது (எபே 4:7-8). இறைவாக்கானது ஞான வளர்ச்சிக்காகவும் ஊக்கத்திற்காகவும் ஆறுதலுக்காகவும் அளிக்கப்படுகிறது (1 கொரி 14:3). ஒவ்வொரு கொடையும் திருச்சபையினுடைய விசுவாசம் மற்றும் அறிவு, அமைதி மற்றும் ஒழுங்கு ஆகியவற்றிற்குப் பயனுள்ள அளவிற்கேற்ப எண்பிக்கப்படுகிறது. தனது பல்வேறுபட்ட அருளினுடைய நல்ல கண்காணிப்பாளராக இருப்பதற்கென கிறிஸ்தவர்களை அழைத்த இறைவனுக்கு ஆழ்ந்த பொறுப்புணர்வுடன் இக்கொடைகள் செயல்படுத்தப்படவேண்டும் (1 கொரி 14:33.36; 1 பேதுரு 4:10-11).

அனைத்து கொடைகளும் திருச்சபையினுடைய பணிக்கென இருப்பதால் அவை எபபடிப் பயன்படுத்தப்படவேண்டும்? ஆவியின் கொடைகள் அனைத்திலும் மிகப் பெரிய கொடையாகிய அன்பினுடைய மேலான

வழியில் பவுல் விடை காண்கிறார் (உரோ 5:5; 1 கொரி 12:31-13:1). தான் தகுதியில்லாது இலவசமாகப் பெற்ற அருளினை மனிதன் முழுமையாகத் தன்னையே அளிப்பதின் மூலம் தனது அயலாரின்மேல் பொழிய வேண்டும். அன்பின் குறிக்கோள் முன்னேறுவதற்குப் பயன்படுவதற்கேற்ப கொடைகள் சார்புடைய முக்கியத்துவம் பெறுவதால், அன்பே அவற்றின் ஒப்புறவாகவும் கட்டுப்பாடாகவும் அமைகிறது. அன்பால் கட்டுப்படுத்துவதே பவுலின் ஒழுக்க நெறியியலின் அடிப்படையாகும். இந்த அடிப்படையில் கொரிந்திய திருச்சபையில் நிலவிய குழப்பத்தையும் ஒழுங்கின்மையையும் பவுல் திருத்துகிறார். இவ்வாறு கிறிஸ்தவ இயல்பினுடைய குறியீடுகளாக உள்ள ''ஆவியின் கனிகளில்'' ஆவியின் செயலை ஒழுக்க நெறிமுறையில் புரிந்துகொள்வதற்கு வழிவகுக்கிறார் (கலா 5:22; எபே 5:9).

**ஆவென்** (AVEN - பாவம், கொடுமை)

''ஆவென்'' என்ற வார்த்தை 'ஒழுக்கக்கேடான' அல்லது 'பழிபாவத்திற்கு அஞ்சாத' என்று பொருள்படும்.

1. ''ஆவென்'' என்பது ஒசே 10:8-இல் காணப்படுகின்ற சிலைவழிபாட்டின் உயர்ந்த இடங்களிலெல்லாம்'' என்ற வாக்கியத்தில் குறிப்பிடப்பட்டுள்ள ஒரு இடத்தைக் குறிக்கிறது. உயர்ந்த இடங்கள் என்பது தாண், பெத்தேல், சமாரியா போன்ற இடங்களிலுள்ள புறவினத்தாரின் பலிபீடங்களை அல்லது புனித இடங்களை அநேகமாகக் குறிக்கலாம்.

ஒசேயா நூலில் (4:15; 5:8; 10:5) இடம் பெறுகின்ற பேத்து-ஆவேன் என்பது பெத்தேலைக் குறித்துக் காட்டுவதற்காகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஒசேயா இவ்வார்த்தையைப் பயன்படுத்துவதின் மூலம் புனித இடங்களிலெல்லாம் ஒழுக்கக் கேடுகள் நிறைந்துள்ளன என்பதை உணர்த்துகிறார். அதற்காக ஓர் ஏளன, இழிவான குறிப்பாகப் பயன்படுத்துகிறார்.

2. ஓன் என்ற எகிப்தியப் பெயரைக் குறிக்கும் மற்றொரு பெயர். எசக்கியேல் நூலில் 30:17 என்ற பகுதியில் மட்டும் குறிப்பிடப் பட்டுள்ளது.

3. கானானியர்களின் வழிபாட்டைச் சாடுகின்றபொழுது ஏல், பாகல் போன்ற கானானியத் தெய்வங்களின் பெயர்களுக்குப் பதிலாக 'ஆவென்' என்ற வார்த்தை பயன்படுத்தப்பட்டுள்ளது. இதைப் போன்றுதான் பெத்தேலுக்குப் பதிலாக 'பேத்தாவேன்' என்ற வார்த்தை பயன்படுத்தப்பட்டது (யோசு 7:2; 18:12; 1 சாமு 13:5). குறிப்பாக ஆவென் என்பது கூலே-சீரியா பள்ளத்தாக்கைக் குறிக்கிறது. இங்கு பெனிசிய தேவர்களின் வழிபாடு நிலவியிருந்தது. அறிஞர்கள் இச்சொல் பாகால்பெக் நகரத்திலிருந்த ஒரு ஆலயத்தைக் குறிப்பதாகக் கருதுகின்றனர். ஆமோ 1:5-இல் சீரியாவுக்கு எதிரான அழிவு பற்றிய இறைவாக்கில் குறிக்கப்படுகிறது.

**ஆவே மரியா** (AVE MARIA - வாழ்க மரியே)

ஆண்டவரின் தாயாகிய மரியாளை புகழ்ந்து எழுதப்பட்ட பாடல். அதிதூதர் கபிரியேலும், எலிசபெத்தும் மரியாளைப் புகழ்ந்த வார்த்தைகளைக் கொண்டது (லூக் 1:28:42). இது ஐந்தாம் நூற்றாண்டில் புனித யாக்கோபு (எருசலேம்), புனித மாற்கு (அலக்சாந்திரியா) ஆகியோரின் வழிபாட்டு முறையில் பயன்படுத்தப்பட்டது. இவற்றில் நற்கருணை செபத்தில், புனிதர்களை நினைவு கூறுவதற்கு முன்னதாக வைக்கப் பட்டது. உரோமைத் திருப்பலியில், கிறிஸ்து பிறப்பு அறிவிக்கப்பட்ட திருவிழா அன்று காணிக்கைப் பாடலாகப் பாடப்பட்டது. அதிலிருந்து இவ்வாழ்த்துப்பாடல் மரியாளை நினைவு கூறும் மற்ற திருப்பலியிலும், வருகை காலத்தின் நான்காவது ஞாயிறன்றும் பயன்படுத்தப்பட்டது. ஒரு சாதாரண பக்தி முயற்சியாக பன்னிரெண்டாம் நூற்றாண்டின் இறுதிவரை வரவில்லை. இதோடு விவிலியத்தில் இல்லாத ஒரு மன்றாட்டுப் பகுதியும் இணைக்கப்பட்டு ''அருள் நிறைந்த மரியே'' என்ற செபம் ஐந்தாம் பத்திநாதரின் திருச்சபையின் கட்டளைச் செபத்தில் கி.மு. 1568-இல் அதிகாரப் பூர்வமாகச் சேர்க்கப்பட்டது.

**ஆழம்** (THE DEEP)

படைப்புக் கதைகளைப் பின்னணியாகக் கொண்ட, தொடக்க காலப் பெருங்கடலா கும்.

1. மெசபொத்தாமிய இலக்கியம்:- இந்த எபிரேயசொல்லானது எனூமா ஏலிஸ் என் னும் படைப்பு இலக்கியத்தில் மார்துக்-கினால் கொல்லப்பட்ட ஆழத்தின் பறவை நாகமாகிய 'தியாமாத்' என்னும் அக்காதிய தேவதையோடு தொடர்புடையது.

அப்சு (சுத்தமான நீர்) மற்றும் தியாமாத் திற்கும் (உப்புநீர்) அவர்களது வாரிசுகளா கிய கடவுள்களுக்கும் இடையில் சண்டை ஏற்பட்டது. 'எயா' என்னும் கடவுள் அப்சு வைக் கொன்று, தியாமாத்தை பதவியி னின்று வெளியேற்றியது. தியாமாத் பல அரக்கர்களைத் தனக்குதவ கருவீன்றது (யோபு 9:13); விதியின் பலவகைகளை 'கிங்கு' என்னும் காதலனுக்குக் கொடுத்து விட்டு (திருவெளி 5:1-5) கடவுள்களுடன் போருக்குத் தயார் செய்தது. அவளோடு போரிட 'எயா' வின் மகன் மார்துக் முன்வ ரும்வரை கடவுள்கள் கிலியடைந்திருந்தனர். அவனை விழுங்குவதற்குத் தியாமாத் வாயை திறந்தவுடன் அவளின் வயிற்றினுள் நான்கு காற்றுகளை நுழைத்து, ஒரு அம்பினால் அவளைக் கொன்றான். அந்த பெரிய உடலை, சிப்பியைபோன்று இரண்டாகப் பிளந்து, அதில் பாதியை வானத்தை படைக் கவும், விண்மீண் நட்சத்திரம், நிலா போன்ற வற்றை அமைக்கவும் உபயோகித்தான். இதற்கு வெகுமதியாக பிற கடவுள்கள் விதி யின் பலவகைகளை அவனுக்கு அளித்து பாபிலோனையும், எசாகிலா என்ற கோயி லையும் மார்துக்குக் கட்டினார்.

2. உகாரித்திய இலக்கியம்:- ஆழம் என் பது ஏலின் உறைவிடமாகும். அங்கு பற்பல கடவுள்கள் போய்ச் சேர்ந்தனர்.

3. பழைய ஏற்பாடு:- இச்சொல் குறிப்பி டும் பகுதிகள்:-

அ) கட்டுக்கதை பின்னனி இல்லாமலோ, அல்லது முதன்மை பெறாமலோ உள்ள படைப்பின் தொடக்ககால நீர் தொகுப்பா கும் (ஆதி 1:2). யோபு 38:16.30; சங் 104:6; பழ 8:24.27-28 ஆகியவற்றில் இச்சொல் பயன்படுவது குறிக்கத்தக்கது. சங் 33:7; 36:6; 78:15; ஆமோ 7:4-இல் காணப்படும் வழக்கு அவ்வளவு தெளிவாக இல்லை.

ஆ) யாத்திரையின்போது கடவுளால் இஸ் ராயேலருக்காகக் கட்டுப்படுத்தப்பட்ட நீர் (யாத் 15:5.8; கடல் நடுவில் ஆழங்கள் உரைந்துபோயின; சங். 106:9; ஏச 63:13)

இ) படைப்பின் திருப்பமான பெருவெள் ளம் (ஆதி 7:11; 8:2; பழ 3:20)

ஈ) சில இடங்களில் மனிதராலும் குதிரை களாலும் கடக்க இயலாத ஆழமான நீர் நிலைகளும் (சங் 135:6), நல்ல பொருளில் நிலத்தை வளப்படுத்தும் நீரையும் (உப 8:7; எச 31:4; 34:18), கடலில் புயல்காற்றையும் (சங் 107:26), தீர் தீவினை மூடப்போகும் ஆழமான பரந்த நீர்ப் பரப்பையும் (எச 26:19; 27:34) குறிக்கிறது.

உ) நீருடன் தொடர்பே அற்ற நிலத்தின் பள்ளத்தாக்குகள் (சங் 71:20; 95:4); கீழு லகை அடைய ஒருவன் கடக்க வேண்டிய நீரினைப் பற்றிய தனிப்பட்டவர்களால் புலம்பலிலும் பயன்பட்டுள்ளது (சங் 42:7; யோனா 2:5; சங் 69:2. 14-15; 88:6; 130:1; யோனா 2:3).

ஊ) யாவேய்க்கும் குழப்பத்தின் செயல்க ளுக்கும் இடையில் ஏற்பட்ட போராட்டத் தைப் பற்றி இதிகாசத்தின் எஞ்சியுள்ளவை யாகும்; ஆயினும், இவற்றில் அடக்கப்பட்ட மிருகத்தைப் பற்றிக் குறிக்க 'நாகாப்', 'லேவியாத்தான்', 'பறவை நாகம்' என்னும் பெயர்கள் பயன்பட்டுள்ளன (ஆதி 49:23; உப 33:13; சங் 77:16; அப 3:10; யோபு 28:14; சங் 148:7; யோபு 41:31; ஏச 51:9-10).

ஏரிடு மற்றும் பாபிலோனியாவிலுள்ள முக்கிய கடவுள்களின் கோவில்களைப் போலவே, எருசலேம் கோவிலும் படைப்பு கதையுடன் இணைக்கப்பட்டிருக்கலாம்.

சீயோன் மலையில் உள்ள கோவில், உலகின் உச்சமும் மையமுமாக கருதப்பட்டது; மேலும் கோவிலின் அடித்தளமாக இருந்த பாறை, ஆழத்துடன் தொடர்புபடுத்தப்படுகிறது. கோவில் ஆழத்திற்கு எதிராக நின்றதாக மிஸ்னாவும், கோவிலின் பாறை பாதாளத்தின் வாயை மூடியதாக தார்கூமும், கூறுகின்றன. தொடக்கக் கால நீரின்மீது இறைவன் கொண்ட வெற்றியும், படைப்பின்பொழுது அவற்றைக் கோவிலின் அடியிலுள்ள பாறைக்கு உட்படுத்தியது பற்றி சங் 29-இல் பிறபகுதிகளும் குறிக்கலாம்.

**ஆழம் பார்த்தல் (FATHOM)**

கரங்கள் விரிக்கப்பட்ட நிலையில் ஒரு கரத்தின் முனையிலிருந்து அடுத்தக் கரத்தின் மறுமுனைவரை உள்ள நீளத்தை அடிப்படையாக வைத்து உருவான ஓர் அளவு ஆகும். ஒரு ஆழம் நான்கு முழம் அல்லது ஆறு அடி நீளமாகும். பவுல் அதிரியாக் கடலில் கப்பல் பயணம் செய்தபோது, மாலுமிகள் விழுதுவிட்டு ஆழம் பார்த்ததாகக் கூறப்படுகிறது (அ.ப. 27:28).

**ஆளுநர் (GOVERNOR)**

ஒரு குறிப்பிட்ட பகுதியையோ மாநிலத்தையோ கண்காணித்துக் கொள்வதற்கு அரசர்களால் நியமனம் செய்யப்படும் ஒரு ஆட்சியாளர். இவர் தனது அதிகாரத்தினால் அல்லாமல் அரசரின் அதிகாரத்தால் அவ்விடத்தை ஆள்கின்றார். யேசேப்பு எகிப்தில் ஆளுநராக பாரவோனின் கீழ் ஆட்சிசெய்தார் (ஆதி 42:6; காண் திருவுரை 7:19; 10:5; ஆதி 45:26; அ.ப. 7:10). கெதலியா பாபிலோன் நாட்டு மன்னரால் ஆளுநராக நியமிக்கப்பட்டார் (எரே 40:5). பாபிலோனில் இருந்த ஞானிகளுக்கு தானியேல் ஆளுநராக இருந்தார் (தானி 2:48). தத்தனாய், சேசிபசாரி, செருபாபேல், நெகமியா ஆகியோர் யூதாவின் மேல் ஆட்சி செய்த பாரசீக ஆளுநர்களாவர் (எஸ் 5:3.14; நெக 5:4; ஆகா 1:1). எரேமியா 30:21-இல் பயன்படுத்தப்பட்ட எபிரேயச் சொல் எத்தகைய ஆட்சியாளரையும் குறிக்கும் (யோசு 12:2; சங் 105:20). உரோமைப் பேரரசின் மாகாணக் கருவூல அதிகாரிகளும், தூதர்களும் ஆளுநர்களாவர் (லூக் 2:2; 3:1; அ.ப. 23:24; 24:27).

ஆலயம், அதன் சுற்றுப்புறம், ஆகிய பகுதிகளின் அதிகாரம் கொண்ட தலைமை அதிகாரி ஆளுநர் என்றழைக்கப்பட்டார். இத்தகைய ஒருவரான பசிகூர் எரேமியாவை சிறையில் அடைத்தார் (எரே 20:1).

நாடுகடத்தப்படுதலுக்கு முந்திய காலத்தில் ஆளுநர் என்ற சொல் அரிதாகவும் தெளிவில்லாமலும் பயன்பட்டுள்ளது. ஆளுநர்கள் சிலசமயம் மக்கள் தலைவர்கள் என்று குறிக்கப்பெறுகின்றனர். மாவட்ட ஆளுநர்கள் ஆட்சிக் கடமைகளுடன் போர் அலுவல்களையும் செய்து வந்தனர் (1 அர 24:14 தொ ). நகரத் தலைவனும் ஆளுநர் என்றழைக்கப்படலாம் (22:26).

புதிய ஏற்பாட்டில் உரோமை மாநிலங்களை ஆட்சி செய்தவர்களுக்கு ஆளுநர் என்ற பட்டம் அளிக்கப்படுகிறது (மத் 10:13; 1 பேதுரு 2:14). லூக்கா மூன்றுவகை உரோமை அதிகாரிகளுக்கு இப்பெயர் அளிக்கிறார்.

1) உரோமை மூப்பர் அவையின் கீழ் ஆட்சி செய்யப்பட்ட மாநிலங்களின் தலைவர்கள் (செருகியு பவுல் அ.ப. 13:7; அக்காயாவின் கல்லியோ 18:12-13). 2) பேரரசின் மாநிலத்தை ஆட்சி செய்த படைத்தலைவன் (சீரியாவின் கிரேனியு லூக் 2:2). 3) பேரரசரின் பெயரால் படையின் உதவி கொண்டு ஒருநாட்டை ஆண்ட தலைவன் (போந்தியு பிலாத்து லூக் 8:1; பெலிக்சு அ.ப. 23:4; பெஸ்து 24:27). தொடக்கத்தில் நிதி சம்பந்தப்பட்டவைகளிலும், பின்னர் இராணுவ அதிகாரிகளாகவும், உரோமையிலும் மாநிலங்களிலும் பேரரசரின் பிரதிநிதிகளாகப் பணியாற்றிய அரசு அதிகாரிகளே இவர்கள். பேரரசர் அகஸ்துவின் ஆட்சியில் குதிரைப் படையில் சிறந்தவர்கட்கு இராணுவம் அல்லாத, சமுதாய நிர்வாகங்களில் பெரும் பங்கு அளிக்கப்பட்டது. உணவு தானியங்கள் அளிப்பது, காவற்படையின் பொறுப்பாளர்களாக இருப்பது போன்றவைகளும் இவர்

கள் கடமைகளாகும். அகஸ்து, திபேரியு காலத்தில் இவர்கள் முக்கியமாக வரிவசூலிப்பவர்களாகவே இருந்தனர். பின்னர் அரசரின் பிரதிநிதிகளாக இராணுவத் தொடர்பான காரியங்களில் ஈடுபட்டவர்களும் இதே பெயரில் அழைக்கப்பட்டனர்.

இத்தகைய நிர்வாகிகள் கிமு. 66-க்குள் பன்னிரண்டுபேர் பாலஸ்தீனத்தில் பதவி வகித்தனர். அவர்களில் போந்தியு பிலாத்து, அந்தோனியு, பெலிக்சு, போர்கியு பெஸ்து ஆகியோரின் பெயர்கள் புதிய ஏற்பாட்டில் காணப்படுகின்றன. பிலாத்து ஐந்தாவது ஆளுநர் ஆவார். இவர்கள் தங்கள் அதிகாரத்தின்கீழே பல நாணயங்கள் வெளியிட்டதற்கான சான்றுகள் பல இன்றும் உள்ளன. பாலஸ்தீனத்தில் மக்களைத் திருப்திப்படுத்துவதற்காக விலங்குகள், மனிதர்கள் தலையை அதில் பொறிப்பதைத் தவிர்த்தனர். தங்கள் அதிகாரத்தின் கீழுள்ள பகுதியில் அமைதியை நிலைநாட்ட வேண்டியது இவர்களது கடமை. யோசீபசின் கூற்றுப்படி கோபோனியவிடம் மரண தண்டனைக்குரிய அதிகாரம் வழங்கப்பட்டிருந்தது. இது குறிப்பிடுவது யூத அதிகாரிகளிடமிருந்து மரணதண்டனைக்குரிய அதிகாரம் பறிக்கப்பட்டிருந்தது என்பதையா என்பது தெளிவாக இல்லை. அரசன் அரேத்தாவின் ஆளுநன், அரசனது பிரதிநிதி அல்லது அவ்விடத்துத் தலைவனாவான் *(2 கொரி 11:32).*

**ஆளும் வரம்** *(GOVERNMENTS)*

கடவுள் திருச்சபைக்கு கிடைத்துள்ள பரிசுத்த ஆவியின் அருட் கொடைகளில் ஒன்றாகும் இது. இச்சொல் குறிப்பிட்ட பதவியையோ பணி முறையையோ குறித்துக்காட்டும் சொல் அல்ல. இது பிறர் சேவையோடு நெருங்கிய தொடர்பு கொண்டு இருப்பதால் ஆயர்களாலும், மூப்பர்களாலும், தியாக்கோன்களாலும் அல்லது 'தலைவர்களாலும் செய்யப்படும் பணியையே சுட்டிக் காட்டும் மறைமுக சான்று ஆகும் என்று சிலர் கருதுகின்றனர் *(உரோ 12:18; 1 தெச 5:12).* கிரேக்கச் சொல்லில் அடங்கியுள்ள உருவகம் கப்பலில் சுக்கானை இயக்குபவரை நினைவுபடுத்துகிறது.

**ஆறு, நதி** *(RIVER)*

நீரோட்டங்களைக் குறிக்க ஆறு, நதி என்று பொருள்படும் நான்கு எபிரேயச் சொற்கள் பயன்பட்டுள்ளன. யூப்பிரதிசைக் குறிக்க ஆறு என்ற சொல்லும் பயன்படுத்தப்பட்டுள்ளன *(ஆதி 2:10; 15:18; எண் 24:6; உப 1:7).* நைலைக் குறிக்க நதி என்ற சொல்லும் *(ஆதி 41:1; யாத் 1:22)* பொதுவாகப் பயன்பட்டுள்ளன. யோர்தான் ஆறு என்று குறிக்கப்படுகிறது *(மாற் 1:5).*

விவிலியத்தில் கூறப்படும் ஆறுகள் அபானா; அகவா; கெபார், கீகோன்; கோசேன்; கிதக்கேல்; யாபோக்கு; கீசோன்; பர்ப்பார்; பீசோன்; எகிப்தின் ஆறு, ஊலாய் ஆகியவையாகும்.

பொதுவாக ஆறுகள் புவியியல் எல்லைகளைக் குறிப்பதற்காக வருகின்றன *(யோசு 1:4; நீதி 4:13; 1 அர 4:21).* இந்த ஆறுகள் வேளாண்மைக்கும், குளிப்பதற்கும் *(யாத் 2:5),* போக்குவரத்திற்கும் *(ஏச 18:2),* பாதுகாப்பிற்கும் *(நாகூ 3:8),* குடிப்பதற்கும் *(யாத் 7:8),* மீன் பிடிப்பதற்கும் *(லேவி 11:9),* குணப்படுத்துவதற்கும் *(2 அர 5:10)* பயன்படுகின்றன. இறை ஆற்றல் தோற்றத்திற்குரிய இடங்களாகவும் *(யாத் 32:22-23),* திருமுழுக்கு நடக்கும் இடங்களாகவும் *(மத் 3:6)* காட்டப்படுகின்றன.

உருவக முறையில் ஆறுகள் ஒரு நாட்டின் வளமையைக் குறிக்கவருகின்றன *(எண் 24:6; சங் 65:9; ஏச 66:12).* இவ்வாறு வளமையாக இருப்பது கடவுளின் ஆற்றலின் சக்தி வெளிப்பாடாகவும், ஆறுகள் வற்றிப்போவது துக்ககரமானதாகவும் கருதப்பட்டது *(யோபு 14:11; ஏச 19:5).* நீதியுடைமை (அல்லது) ஏற்புடைமை என்பது எப்பொழுதும் வற்றாத நீரூற்றுக்கு ஒப்பிடப்படுகிறது *(ஆமோ 5:24).* கடவுளின் அருள், ஆசீர் வாழ்வுதரும் நீரையுடைய ஆறாக உருவகப்படுத்தப்படுகிறது *(திருவெளி 22:1).* இன்பவனத்திலிருந்து ஓடிவரும் ஆறுபற்றியும் *(ஆதி 2:10)* புதிய யுகத்தில் ஆலயத்திலிருந்து ஓடிவரும் ஆறுபற்றியும் மிக விரிவா

கக் கூறப்படுகிறது (எச 47:1-12; சங் 14:8; திருவெளி 22:1-2; யோவா 7:38; திருவெளி 12:15)

**ஆறுதல், தேற்றுதல்** (COMFORT, CONSOLATION)

இப்பொருளுடைய கிரேக்கச் சொல்லான ''பராக்கலேயு''வுக்கு உதவிக்கு ஒருவரை தன் பக்கம் அழைப்பது என்ற பொருளோடு, ஆறுதல், ஊக்குவித்தல், கெஞ்சிக்கேட்டல், அறவுரைக் கூறுதல் என்று பலவாறு பொருள் கூறலாம். இது புதிய ஏற்பாட்டில் முக்கிய மையக் கருத்துகளில் ஒன்றாகும். மற்ற நற்செய்தி மையக் கருத்துக்களைப் போல் இதுவும் ஏசயாவின் நற்செய்திமுன்னுரையிலிருந்து (ஏச 40) தோன்றுகிறது. ''ஆறுதல் கொடுங்கள், நம்மக்களைத் தேற்றுங்கள் என்கிறார் உங்கள் கடவுள்'' (40:1). ''நாமே உங்களைத் தேற்றுவோம்'' (51:12; 49:13; 51:3.19; 61:2; 66:13).

புதிய ஏற்பாட்டில் கடவுள் ''ஆறுதல் அனைத்திற்கும் ஊற்றான கடவுள்'' (2 கொரி 1:3) என்று அழைக்கப்படுகின்றார். பவுல் கொரிந்தியருக்கு எழுதிய இரண்டாம் திருமுகத்தை 'ஆறுதலின் திருமுகம்' என்று அழைக்கலாம். ஏனெனில் இதைப்பற்றி பவுல் மீண்டும், மீண்டும், சிறப்பாக 1:3-7; 7:4-13-ல் எடுத்துக் கூறுகின்றார். கடவுளின் ஆறுதலை அனுபவித்தவர்கள்தான் மற்றவர்களுக்கு ஆறுதல் கூறமுடியும். கொரிந்திலிருந்து தீத்து கொண்டுவந்த உறுதியளிக்கும் செய்தியால் ஆறுதல் அடைந்த பவுல், தன் கடிதத்தால் துயர் அடைந்த கொரிந்தியர்களுக்கு, ஆறுதலை நிறைவாக அளிக்க ஆர்வம் காட்டுகிறார்.

''துயருறுவோர் பேறு பெற்றோர், ஏனெனில் அவர்கள் ஆறுதல் பெறுவர்'' என்று இயேசு போதிக்கிறார் (மத் 5:4). உலகிலே துன்ப துயரே பெற்ற இலாசர், மறுஉலகில் ஆறுதல் அடைகிறார் (லூக் 16:25). லூக். 2:25-இல் கிறிஸ்துவின் வருகையோடு, ''இஸ்ராயேலுக்கு வாக்களிக்கப்பட்ட ஆறுதல்'' நிறைவேறுகிறது. அ.ப. 4:36-இல் பார்னபா என்ற பெயருக்கு ''ஆறுதலின் புதல்வன்'' என்ற பொருள் அளிக்கப்படுகிறது.

**ஆற்றல்** (POWER)

ஒவ்வொரு சமயத்திலும் இறைத்தன்மையின் முக்கிய இயற்பண்பாக ஆற்றல் உள்ளது. கிறிஸ்தவ விசுவாசமானது விவிலிய இறைவெளிப்பாட்டின் முதல் கூற்றைப் பின்வருமாறு எடுத்துரைக்கிறது: ''பரலோகத்தையும் பூலோகத்தையும் படைத்த எல்லாம் வல்ல பிதாவாகிய சர்வேசுரனை விசுவாசிக்கிறேன்''. இந்த வாய்பாடு உண்மையான இறைவனுடைய எல்லாம் வல்ல தன்மையின் மூன்று பண்புகளைச் சுட்டிக்காட்டுகிறது. இறைவனே அனைத்தையும் படைத்ததால், அவரது ஆற்றல் உலகளாவியதாக உள்ளது (ஆதி 1:1; யோவா 1:3). இறைவன் வானகத்திலுள்ள தந்தையாக இருப்பதால், இது அன்பானது (மத் 6:9); சில நேரங்களில் மனஉலைவு தரக்கூடிய தோற்றங்களில் விசுவாசம் மட்டுமே உய்த்துணரக்கூடியதாக இருப்பதால், இது மறை பொருளானது, மீட்புச் செயலுக்கு இட்டுச் செல்கிறது (1 கொரி 1:18; 2 கொரி 12:9-10). ஏனெனில், இந்த ஆற்றலானது மீட்பின் வரலாற்றினுடைய சூழ்நிலையில் செயல்படுகிறது.

I. இஸ்ராயேலின் இறைவனாகிய யாவேயின் ஆற்றல்

1. பூவுலகில் தமது தலையீடுகளின் மூலம் இறைவன் தமது பேராற்றலை வெளிப்படுத்துகின்றார். குலமுதியவர்களின் வாழ்க்கை வரலாற்றுக் குறிப்புகளில் இப்பேராற்றல் பொங்கி வழிகின்றது; ஏனெனில் இறைவனுக்கு முடியாதது ஒன்றுமே இல்லை (ஆதி 18:14). ஒவ்வொரு சூழ்நிலையிலும் அவரால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களைப் பாதுகாத்து, அவர்களது நலனுக்காக தாம் விரும்பியதை நிறைவேற்ற அவரால் முடியும் (ஆதி 12:2-3; 28:13 தொ). இத்தகைய எல்லாம் வல்ல இறைவனுடன் யாக்கோபு போராட வேண்டியிருந்தது; அப்போராட்டத்தின் முடிவில் இறைவன் அவரை ஆசீர்வதித்து, இஸ்ராயேல் என்னும் பெயரை அவனுக்கு அளித்தார் (ஆதி 32:27-30). இப்பெ

யரே தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களைக் குறிப்பிட்டு, ''கடவுள் தன்னை வலியவராக காட்டுவாராக'' என்னும் அவர்களது விருப்பத்தையும் வெளிப்படுத்துகிறது. எனவே, இஸ்ராயேலின் வல்லமையானது அவர்களை தேர்ந்தெடுத்தவரும் (சங் 29:2-8 தொ; 44:5-9; 105:3-4; 124:8), யாக்கோபின் வல்லவருமாகிய (ஆதி 49:24; ஏச 1:24; 49:26; 60:16; சங் 132:2) இறைவனின் வேண்டுதலிலும் பாதுகாப்பிலுந் தங்கியுள்ளது. இந்த இறைவன் தமது வலிய கரத்தினாலும் (யாத் 3:19), ஓங்கிய கையாலும் (உப 4:34) யாத்திரைச் செயலை நிறைவேற்றி தமது மக்களை விடுவிக்கிறார். இத்தகைய வரலாறு காணாத மீட்பின் மூலம், இஸ்ராயேலின் இறைவனாகிய யாவே, வானகத்திலும் பூமியிலும் தாம் மட்டுமே எல்லாம் வல்லவராக இருப்பதை வெளிப்படுத்துகிறார் (உப 4:32-39).

இஸ்ராயேலின் படைகளுக்குத் தலைவராக இருந்து (யாத் 12:41) யாவே தமது மக்களுக்கு வெற்றியை பெற்றுத்தருகிற போர் வீரராக உள்ளார். ''சேனைகளின் ஆண்டவர்'' என்ற அவருடைய பெயரின் முதற் பொருள் இத்தகையதே (சங் 24:8 தொ; யாத் 15:2 தொ; 1 சாமு 17:45; 2 சாமு 5:10; ஆமோ 5:14-15). உடன்படிக்கைப் பேழையின் மூலமாக, எல்லாம் வல்லவர் தமது பிரசன்னத்தைத் தனது மக்களுக்கு உறுதிப்படுத்துகின்றார் (2 சாமு 6:2; சங் 132:8).

2. சில சமயங்களில் தமது மக்களையும் (உப 8:17-18) அவர்களது தலைவர்களான கிதயோன் (நீதி 6:12 தொ) போன்ற நீதிபதிகளையும், தாவீது போன்ற அரசர்களையும் (2 சாமு 7:9; 22:30 தொ; 1 சாமு 2:10) வலிமைபடுத்துவதற்காக இறைவனும் தலையிடுகிறார். கடவுளிடமிருந்து வந்து தங்களை வெல்லமுடியாதவர்களாக்குகின்ற வலிமையின்மீதே மக்கபேயரும் நம்பிக்கை கொண்டுள்ளனர் (1 மக் 3:18-19; 2 மக் 8:18). மற்ற சமயங்களில், மக்களுடைய வேண்டுதலுக்குப் பதிலாக அவர்கள் செய்வதற்கு ஒன்றுமே இல்லாதவாறு கடவுள் தலையிடுகிறார் (2 அர 19:35; 2 நாள் 20:15 தொ. 24). யோசுவாவின் தலைமையின் கீழ் நடைபெற்ற கிபயோன் போரில். இத்தகைய இருவித தலையீடுகளும் இணைக்கப்பட்டுள்ளன (யோசு 10:8-11).

ஆயினும், ஒவ்வொரு சூழ்நிலையிலும், இறைவனே தமது மக்களின் வலிமையாக உள்ளார். சங்கீதங்கள், தங்களது போற்றுரைப் பாடல்களில் (144:1-2; 28:7-8; 45:2; 67:34 தொ), உதவிக்கான வேண்டுதல்களிலும் (29:11) இதனையே பாடுகின்றன. இஸ்ராயேல் காப்பாற்றப்படுவதிலிருந்து தோல்வியடையாது. ஏனெனில், இஸ்ராயேலை அன்பு செய்து (சங் 59;17-18; 86:15 தொ) தாம் விரும்பிய எதையுமே செய்யக்கூடிய (சங் 114:3; ஏச 46:10) இறைவனின் வலிமையையே அது தனதாகக் கொண்டுள்ளது.

II. படைத்தவர், மற்றும் அவரது சாயலாகிய மனிதனின் ஆற்றல்

1. இஸ்ராயேலின் கடவுள் வானத்திலும் பூமியிலும் எல்லாம் வல்லவராக இருக்கிறாரெனில், அதற்கு காரணம் அவற்றைப் படைத்தவர் அவரே (ஆதி 2:4). அவரால் இயலாதது ஒன்றுமேயில்லை (எரே 32:17). தமது வார்த்தையினாலும் வாய்மூச்சினாலும் படைத்தபிறகு (சங் 33:6-9; ஆதி 1), தமது கைவேலையை தாம் விரும்பியவாறு அவர் ஒழுங்கு படுத்துகிறார் (எரே 27:5). உலகிற்கு நிலையான தன்மையை அளித்து (சங் 119:90), பயங்கர கடல்போன்று (சங் 65:7; 89:10-11) அதன் ஒழுங்கைக் கலைக்கக் கூடிய ஆற்றல்களை கட்டுப்படுத்துகிறார். அவரே இவ்வொழுங்கை தீர்மானித்திருப்பதால் (யோபு 28:25-26; பழ 8:27 தொ; சீரா 43), விருப்பம்போல அதை மாற்றவும் அவரால் முடியும். இவ்வாறு, அவரது வல்லமையால் மலைகள் துள்ளிக் குதிக்கவும், புகைபோல் கரையவும் செய்யவும் (சங் 114:4; 144:5). அவர் வறண்ட நிலத்தை நீருற்றாகவும் கடலை கட்டாந்தரையாகவும் மாற்றுகிறார் (சங் 106:33-35; ஏச 50:2). அவர் முன்னிலையில் அனைத்து பொருட்களும் நடுங்குகின்றன (சீரா 16:18-19).

2. எனவே, கடவுளுடைய ஆற்றலானது அவரது படைப்புகளில் வெளிப்படுத்தப்படுகிறது (சங் 19:2; 104; ஞான 13:4; உரோ 1:20). அவரது பேராற்றலில் நிறைவான விசுவாசம் கொண்டுள்ளவர்கள் சார்பாக இது செயல்படுத்தப்படுகிறது. இவ்வாறே, ஒன்றுமில்லாமையினின்று உலகைப் படைத்தவர் இறந்தோரையும் உயிர்ப்பிக்கக் கூடும் என ஆபிரகாம் விசுவாசித்தார் (உரோ 4:16-21; எபி 11:19). அதனால்தான், கணக்கற்ற விசுவாசிகளைக் கொண்ட மக்களினத்தின் தந்தை என்னும் உரிமையை இறைவன் அவருக்கு அளித்தார் (ஆதி 22:16 தொ). இது யூதித்துக்கும் பொருந்தும், ஏனெனில் உறுதியான நம்பிக்கை மற்றும் கேள்வி கேட்காத நம்பிக்கை ஆகியவற்றிற்கு எடுத்துக்காட்டாக தன்னையே இஸ்ராயேலுக்கு அளித்ததால் (யூதி 8:11-27; 13:19), அவளது கரத்தினால் இறைவன் தம்மை விண்ணிற்கும் மண்ணிற்கும் தலைவராக வெளிப்படுத்துகிறார் (9:12 தொ; 16:1-17).

தமது வார்த்தையால் அனைத்தையும் நிறைவேற்றக்கூடிய (எஸ் 4:17; ஞான 18:15), எல்லா இதயங்களையும் தனது விருப்பத்திற்கேற்ப வளைக்கக்கூடிய (பழ 21:1), அவரது கையிலிருந்து எவருமே தப்பிக்க முடியாத ஆற்றலையுடைய (தோபி 13:2; ஞான 11:17; 16:15) அவரிடம், ஏன் ஒருவன் தன்மையே ஒப்படைக்கக் கூடாது? இந்த ஆற்றலானது தனது படைப்பின் செயலிலும் உலகை இயக்குவதிலும் எல்லையற்ற ஞானத்தைக் கொண்டுள்ளது (ஞான 7:21.25; 8:1). ஆனால் படைப்பானது, இந்த எல்லையற்ற ஞானம் மற்றும் அதன் இடி போன்ற ஆற்றல் ஆகியவற்றின் மங்கலான எதிரொலியாகவே உள்ளது (யோபு 26:7-14). ஆனால் மிகவும் துன்பமான அனுபவங்களிலும் நேர்மையான மனிதன் இடறல் படாமல் எல்லாம் வல்லவரிடத்தில் அமைதியான ஆராதனை மூலம் தன்னையே ஒப்படைப்பதற்குப் போதிய தூண்டுதலாக உள்ளது (யோபு 38:1-42:6).

3. இறைவன் மீது விசுவாசம் கொண்டுள்ள மனிதன், அவருடைய படைப்பாக மட்டும் இல்லாமல் அவரது சாயலாகவும் இருப்பதால் (ஆதி 1:26 தொ) எல்லாம் வல்லவருடன் உடனுழைப்பாளனாகவும் உருவாகிறான். நிலம் மற்றும் விலங்குகள் மீது செலுத்துகின்ற ஆதிக்கத்தில், குறிப்பாக, மனிதன் தனது உடனுழைப்பிற்குச் சான்று பகர்கிறான் (சீரா 17:2 தொ). இயற்கைச் சக்திகளுக்கு அடிபணிந்து போவதற்குப் பதிலாக, மனிதன் அவற்றை தனக்கு அடிபணியச் செய்ய வேண்டும். தாழ்மையான நம்பிக்கையுடன் தனது தலைவருக்குப் பணிந்து இருப்பதன்மூலம் மனிதன் இதைச் செய்துமுடிக்க முடியும். சுதந்தரத்தின்மீது பேரார்வம் கொண்டு ஆதாம் சாவுக்குரிய பாவத்தினைப் புரிந்து, இறைவனின் அன்புக்குரிய பேராற்றலின் மறைபொருளைத் தவறாகப் புரிந்து கொண்டார் (ஆதி 2:17; 3:5; உரோ 1:20-21). அதன் விளைவாக, உலகின் மீதான தனது ஆதிக்கத்தையும் அவர் இழந்துவிட்டார் (ஆதி 3:17-18).

III. மனிதனை அடிமைப்படுத்தும் தீய ஆற்றல்கள்

மனிதனை இறைவனுக்கு விரோதமாக்குகின்ற ஆற்றல் செயல்படுவதின் விளைவுகளை ஆதியாகமத்தின் தொடக்கம் வெளிக்கொணர்கிறது. காயின் தனது சகோதரனைக் கொல்ல தனது உடல் வலிமையைப் பயன்படுத்துகிறான்; இலாமேக்கும் தன்னைக் காயப்படுத்திய ஒருவனைக் கட்டுபாடற்றுப் பழிவாங்குகிறான் (ஆதி 4:8.23-24). வன்முறை உலகை நிரப்புகிறது (6:11). பாபேலில் நிகழ்ந்த கூட்டுப் பாவமானது ஆதாமின் பாவத்தைப் போன்ற தன்மையுடையதே. மனிதர்கள் தங்கள் சுய சக்தியாலே விண்ணகத்தை அடைய விரும்புகின்றனர். இறைவன் சிறிது வஞ்சப் புகழ்ச்சியோடு, ''அவர்களுக்கு இயலாதது எதுவுமில்லை'' (11:4 தொ) என்று அவர்களது வரம்புமீறிய நடத்தையைப் பற்றிக் கருத்துரைக்கின்றார். இத்தகைய வரம்புமீறிய நடத்தையானது மனிதர்களை இருவித அடிமைத்தனத்திற்கு நடத்திச்செல்கிறது. வலியோர் எளியோரை அடிமையாக்குகின்றனர்; மற்றும், தங்களைத் தாங்களே பேய்கள் போன்ற தீய

சக்திகளுக்கு அடிமைகளாக்கிக் கொள்கின்றனர்.

1. மனிதனை மனிதன் ஒடுக்குகின்ற நிலையானது, பூமியில் வலிமை மிக்கவர்கள் தங்களது வலிமை இறைவனிடமிருந்தே வருகிறது (உரோ 13:1; 1 பேதுரு 2:13; யோவா 19:11), மற்றும் ஒவ்வொரு மனிதனிலும் எல்லாம் வல்லவருடைய சாயலை தாங்கள் மதிக்க வேண்டும் (ஆதி 9:6) என்பதை மறந்த பிறகே, தோன்றுகிறது. யாவேக்கு மரியாதை தராத பார்வோன், இறைவனின் மக்களை அடிமைத்தளைக்கு உட்படுத்தியும், அவர்கள்மீது கடினமான வேலைகளை மேலும் மேலும் சுமத்தியும், ஒரு காட்சியை உருவாக்குகிறான் (யாத் 5:2; 6-18). தங்களது அரியணையை விண்ணகத்தில் அமைத்து, இறைவனுக்குப் போட்டியாக விளங்க முயலும் கொடுங்கோலர்கள் மற்ற நாடுகளைத் தங்களுக்குக் கீழ்ப்படுத்த முயல்பவர் (ஏச 14:12 தொ). செருக்குடையோர் இந்த ஆற்றலை வன்முறைச் செயல்களில் தவறாகப் பயன்படுத்துகின்றனர். இது இஸ்ராயேலிலோ அல்லது புறவினத்தாரிடையிலோ நிகழ்ந்தாலும் இறைவாக்கினர்கள் கண்டனம் செய்கின்றனர் (ஆமோ 1:3-2:7). தமது மக்களைத் தூய்மைப் படுத்த ஆண்டவர் புறவினத்தாரின் நாடுகளை உபயோகிக்கிறார் என்பது, அவர்களது வன்முறையின் நேர்மையற்ற நிலையை குறைக்கவில்லை (ஏச 47:6). ஏழைகள் மீது நெருக்கடியைச் சுமத்தி, அவர்களோடு நேர்மையாகச் செயல்பட மறுத்து, தங்களது அதிகாரத்தைத் தவறாக உபயோகிக்கும் இஸ்ராயேலில் உள்ள அதிகார வர்க்கத்தினர், இன்னும் அதிக அளவு குற்றம் உடையவர்கள் ஆவர் (ஏச 3:14-15; 10:1-2; மீக் 3:9 தொ; சங் 58:2-3). தங்களைக் கடுமையாகத் தீர்ப்பிடக் கூடியவரை, உலகிலுள்ள வலிமை மிக்கோர் நினைவு கூர வேண்டும். அவர் எல்லோருக்கும் ஆண்டவர். அவரது விருப்பத்தை நீதியாக அவர்கள் போற்ற வேண்டும்.

2. மேலும், தங்களைப் படைத்த எல்லாம் வல்லவரை அறிந்து ஏற்றுக் கொள்ளாதவர்கள், தங்களது விருப்பத்திற்கேற்றவாறு அமைத்துக் கொண்ட ஆற்றலே இல்லாத கடவுள்களையே போற்றுவர். இறைவாக்கினர்களும் ஞானிகளும் ஆற்றலற்ற சிலைகளைப் பழிப்பதில், ஒருவரோடொருவர் போட்டியிடுவர் (ஏச 44:17 தொ; எரே 10:3 தொ; சங் 115:4-7; தானி 14:3-27; ஞான 13:10-19). விண் மீண்களையோ அல்லது மற்ற பல படைப்புகளையோ வணங்குவதில், தாங்களே தெய்வீகப்படுத்திய இயற்கை சக்திகளைத் திருப்திப்படுத்தவே புறவினத்தார் முயற்சிப்பதால், அவற்றின் காரணராக உள்ள இயற்கையின் தலைவரைக் காண அவர்கள் தவறிவிடுகின்றனர் (ஞான 13:1-8). எனவே, புறவினத்தாரின் இத்தகைய பொய்க்கடவுளர்களுக்கு பின்னால், பேய்களின் ஆற்றல் மறைந்துள்ளது (சங் 106:36-37; உப 32:17; 1 கொரி 8:4; 10:19). அலகை மனிதரை பாவம் செய்வதற்கு மயக்கிய பின்னர் (ஆதி 3:5; ஞான 2:24), அவர்களது ஆராதனையை பல்வேறு வடிவங்களில் விரும்புகிறது. இறைவனால் ஒரு குறிப்பிட்ட காலம்வரை அனுமதித்திருந்த ஆற்றலை வெளிப்படுத்துவதன் மூலம், அலகை அவர்களைத் தவறானவழிக்கு இழுக்கின்றது (2 தெச 2:9; திருவெளி 12:2-8; மத் 4:8-9). இறைவனை எதிர்ப்போரில் அலகையின் ஆற்றல் தீவிரமாக செயல்படுகிறது (எபே 2:2); மரணம் பற்றிய பயத்தினால் அவன் மனிதரைத் தனக்கு அடிமையாக்கியிருப்பதால், அது இறந்தோருடைய ஆற்றலேயாகும் (எபி 2:14-15).

பொய்க் கடவுள்களின் முன்னிலையில் ''சேனைகளின் ஆண்டவர்'' என்ற இறைவனின் பெயரானது ஒரு புதிய பொருளை வெளிப்படுத்துகிறது. உண்மையான இறைவன் சேனைகளின் இறைவனாவார். அதாவது, விண்மீன்களின் பெரும் எண்ணிக்கை (ஏச 40:26; சங் 147:4), வானதூதர்களின் சேனை (சங் 103:20-21; 148:2; லூக் 2:13-14) முதலிய உலகின் எல்லாச் சக்திகளுக்கும் இறைவனாக உள்ளார். இறைவன் மனிதனை விடுவிக்கத் தலையிடுவார்.

IV. *மீட்பர் மற்றும் அவரது ஊழியனின் ஆற்றல்கள்*

*1. ஒடுக்கப்பட்டவர்களின் சமூக அடிமைத்த* னத்திற்கும், பாவிகளின் ஆன்மீக அடிமைத்த னத்திற்கும் எல்லாம் வல்லவர் எவ்வாறு முடிவு கட்டுகிறார் என்பது யாத்திராகமத்தி லேயே வெளிப்படுத்தப்பட்டுள்ளது. யாத் திரை விடுதலை, மற்ற விடுதலைகளின் எடுத்துக்காட்டான மாதிரிகை ஆகும். அதன் நினைவுச் சின்னமாக இஸ்ராயேலில் பாஸ்கு விழா எக்காலத்திற்கும் விளங்குகி றது *(யாத் 13:3)*. கொடுங்கோலனாகிய பாரவோனின் எதிர்ப்பே, அசாதரண வியப் புக்குரிய நிகழ்ச்சிகளால் படைப்பு அனைத் தின் மீதான தமது ஆற்றலை வெளிப்படுத்த இறைவனுக்கு ஒரு வாய்ப்பாக அமைந்தது *(யாத் 9:14-15)*. இத்தகைய வியப்புகளுக்கும் இஸ்ராயேலின் விடுதலைக்குமான மனிதக் கருவியாக, மனிதரில் மிகவும் சாந்தமிக்கவ ராகவும் தனது குறைகளை அறிந்தவராகவும் உள்ள மோசே விளங்குகிறார் *(எண் 12:3; யாத் 4:10-13)*. ஆயினும், அவரை இறைவன் ஒப்புவமையில்லா இறைவாக்கினராக ஆக் குகிறார் *(உப 34:10 தொ)*.

விடுவிக்கப்பட்ட மக்களே தங்களை விடு வித்தவரை எதிர்க்கின்றனர். பல்வேறு புது மைகளுக்குப் பின்னரும் தமது ஆற்றலை விசுவாசிக்காதவர்களை இறைவன் தண்டிக் கிறார். நாற்பதாண்டுகள் சுற்றித்திரிந்த பிறகு அவர்கள் பாலைவனத்தில் மடிவார்கள் *(எண் 14:22-23)*. ஆனால், தமது மக்களைப் பாதுகாக்கக்கூடிய தமது திறனைப் பற் றியோ *(எண் 14:16)*, அல்லது தமது ஆற்றல் அளிக்கவிருக்கின்ற மீட்பின் செயல் திற னைப்பற்றியோ *(யாத் 32:12)* புறவினத்தா ருக்குச் சந்தேகம் எழக்கூடாது என்பதற்காக, மோசேயின் வேண்டுகோளுக்கிணங்கி, கட வுள் தம்மை எதிர்க்கிற மக்களை முழுமை யாக அழிக்கவில்லை. மேலும், மன்னிப்பதி லும் அவர் தமது ஆற்றலை செயல்படுத்து கின்றார் *(எண் 14:17 தொ)*.

*2.* வரலாறு முழுவதும் இறைவனின் வழிகள் ஒரே மாதிரியாகவே உள்ளன. தமது திட்டத்தை நிறைவேற்றி முடிக்க, உலகி லுள்ள வலிமை மிக்கவர்களை அவர் கிளர்ந் தெழச் செய்கிறார். நாடு கடத்தலின் மூலமா கத் தமது மக்களைத் தண்டிக்க அவர் விரும் பியபோது, நெபுக்கதுனேசார் அவரது ஊழி யனாக உள்ளார் *(எரே 25:9)*. துன்பக்காலம் முடிந்த பின்னர், சீயோனுக்கு திரும்புவதற் கான ஏற்பாட்டிற்கான உலகலாவிய ஆற் றலை யாவேயிடமிருந்து சைரஸ் பெறுகி றார் *(ஏச 44:28-45:4; 2 நாள் 36:22-23)*. அவரில் தங்களது நம்பிக்கையை வைப்போ ருக்குப் புதிய வலிமையை அளிக்கக்கூடிய எல்லாம் வல்லவருடைய செயலாக இந்த இரண்டாம் யாத்திரை உள்ளது *(ஏச 40:10-11.29 தொ)*.

''ஊனாகிய'' மனிதனின் பலவீனத்தை, இறையாற்றலாகிய அவருடைய ஆவி யோடு ஒப்பிட்டு வேறுபடுத்துகின்றனர் இறைவாக்கினர்கள் *(ஏச 31:3; செக் 4:6)*. இறையாற்றலாகிய அவரது ஆவியாலும், அவரது எப்போதும் ஆற்றல் மிக்க வார்த்தை யாலும் *(ஏச 55:11)*, கடவுள் தாம் தேர்ந்தெ டுத்த வலுக்குறைவான கருவிகளை உறுதிப் படுத்துகிறார். முடிசூட்டு தைலத்திலிருந்து ஆவியால் நிரப்பப்பட்ட ஆடு மேய்க்கும் சிறுவனாகிய தாவீது *(1 சாமு 16:13)*, இஸ்ரா யேலை அதனுடைய எல்லா பகைவர்களிட மிருந்து விடுவிக்கிறார் *(2 சாமு 7:8-11)*. ''வல்லமை மிக்க கடவுள்'' என்னும் பெயரு டைய மெசியா அவருடைய குடும்பத்தில் பிறப்பார்; ஆண்டவருடைய ஆவி அவர் மேல் தங்கும் *(ஏச 9:5-6; 11:1-2)*; மற்றும் அவர் இறைவனையே தமக்குத் தந்தையாக கொண்டிருப்பார் *(2 சாமு 7:14; சங் 89:27 தொ)*. சாதாரணமாக பேச இயலாத எரே மியா, இறைவனின் கரம் தனது வாயில் வைத்த வார்த்தைகளை எதிர்க்கமுடியாத சக்தியுடன் போதிக்கிறார் *(எரே 1:6-10. 18-19)*. நாடு கடத்தப்பட்ட நிகழ்ச்சியால் தங்களது எல்லா நம்பிக்கையையும் இழந் துவிட்ட இஸ்ராயேல் மக்களும், ஆண்டவரு டைய ஆவியால் புதுப்பிக்கப்படுவர் *(எச 37:11-14)*. தங்களது பலத்திற்காக அவரைச் சார்ந்திருந்து, அவருக்கு பணி செய்யும் இந்த

மக்களை மீட்கும் நிலையிலும் (ஏச 49:3-7), மீட்பிற்கு ஆற்றலற்ற சிலைகளுக்கு எதிரான நிலையிலும், எல்லா நாடுகளும் ஆராதிக்க வேண்டிய எல்லாம் வல்ல ஒரே தனிச்சிறப்பான மீட்பர் என்று யாவே தம்மையே வெளிப்படுத்துகிறார் (ஏச 45:14-15, 20-24).

3. பாவத்திலிருந்து அனைவரையும் மீட்கவே இறைவன் விரும்புகிறார். யாவேயின் ஆற்றல் அவரது மறைபொருள்மிக்க ஊழியன் மூலமாக இந்த மீட்புத் திட்டத்தை நிறைவேற்றுகிறது. துன்பம் மற்றும் அவதூறு ஆகியவற்றைத் தாங்கியவாறு அவர் இறக்கிறார் (ஏச 53). இறைவல்லமை. அவரது மரணத்தின் மூலமாக, எண்ணற்றவர்களுக்கு வாழ்வளிக்கிறது. இது உண்மையில் உயிர்த்தலின் ஆற்றலாகும். பாவத்தின் விளைவாக மரணம் இருப்பதால், பாவத்தினின்று தாம் மீட்பவர்களை இறைவன் மரணத்தினின்றும் மீட்பார். நீதிமான் முடிவில்லாத வாழ்விற்கு உயிர்த்தெழுவான். நீதிமான்கள் தங்களது விசுவாசத்திற்காக மரணமடைய வேண்டிய நேரத்தில், ஞானிகளின் படிப்பினையாக இக்கருத்து நிலவியது (தானி 12:2-3). படைத்தவருடைய வலிமையின் மூலமாக வரும் உயிர்ப்பைபற்றிய நம்பிக்கையானது, துன்புற்றவர்களைத் திடப்படுத்துகின்றது (2 மக் 7:9. 14.23). ஒரு முன்குறிக்கப்பட்ட நேரத்தில், ஒடுக்கியாளுபவர்களுடைய வலிமை முடிவுக்குக் கொண்டு வரப்படும்; பின்னர், வானக மேகங்களின்மீது வரும் மனுமகனுக்கு அளிக்கப்பட்டிருக்கின்ற முடிவில்லா ஆதிக்கத்தை புனிதர்கள் திருக்கூட்டம் பகிர்ந்து கொள்ளும் (தானி 7:12. 18.27)

4. பழைய உடன்படிக்கையின் இறுதியில், மீட்பின் வரலாற்றைப் பற்றி தியானித்த ஞானி, அதனை இயக்கிய எல்லாம் வல்லவரைப் பற்றி இவ்வாறு சித்திரிக்கிறார். அதன்படி, அவர் தாம் படைத்த அனைத்தையும் அன்பு செய்கிறார் (ஞான 11:24 தொ). நீதியும் இரக்கமும் நிறைந்த அவர், மனந்திரும்புதலை அங்கீகரித்து, மனிதர்களுடைய இதயங்களிலும் அதனை எழுப்புகிறார் (11:23; 12:2. 10-18). நீதிமான்கள் இறைவனது பாதுகாப்பிலிருக்கிறார்கள்; அவர் அவர்களுக்குத் தந்தையாக இருக்கிறார்; ஆகவே அவர்களைப் பாதுகாத்து முடிவில்லா வாழ்வை அவர் அளிப்பார் (2:16 தொ; 3:1; 5:15-16; மத் 22:29-32). ஆயினும் அவர்கள் இறப்பதைக் காணுமாறு விசுவாச மற்றவர்களை அனுமதித்து அதன்மூலம் அவர்களது நம்பிக்கையைச் சோதிக்கிறார். அவர்களது மணிமுடி அவர்களின் தகனப்பலிக்குத் தக்க கைம்மாறாக இருப்பதற்காக இவ்வாறு நிகழ்கிறது (ஞான 3:2-9).

V. கிறிஸ்துவை விசுவாசிப்பவர்களில் ஆவியின் ஆற்றல்

1. உண்மையில் புதிய உடன்படிக்கையை முத்திரையிடுவது ஒரு தகனப்பலியே. இயேசுவின் தகனப்பலியில் எல்லாம் வல்லவர் தம்மை முழுமையாக வெளிப்படுத்தி, அதன்மூலம் தமது திட்டத்தையும் நிறைவேற்றுகிறார். தாழ்மையான கன்னியின் உதரத்தில் ஊனுடலெடுத்த எல்லாம் வல்ல வார்த்தை இயேசுவே (லூக் 1:27. 48-49; யோவா 1:14; எபி 1:2-3). இவ்வருகையானது, இயலாதது எதுவுமற்ற மிக உன்னதரின் ஆற்றலாகிய தூய ஆவியின் பணியே ஆகும் (லூக் 3:22; யோவா 1:32; 3:34-35; ஏச 11:2; 42:1; 61:1). இயேசு தனது ஆற்றலை புதுமைகளால் காண்பிக்கிறார். இப்புதுமைகள் அவரது பணிக்கு சான்று பகர்வதோடல்லாமல் (அ.ப. 2:22), இறைவன் அவரோடு உள்ளார் (யோவா 3:2; 9:33) மற்றும் அவர் தந்தையால் அனுப்பப்பட்டவர் என்பதை நிரூபிப்பதோடு (5:36), 'நம்மோடு கடவுள்' எனப்படும் இம்மானுவேல் இவரே (மத் 1:23) என்பதையும் நிரூபிக்கிறது.

2. இவ்வுலகைச்சார்ந்த மெசியா பற்றிய யூத எதிர்ப்பார்ப்புகளுக்கு ஒத்துப்போகும் முறையில் (மத் 4:3-7; யோவா 8:50) தனது ஆற்றலை தனது மகிமைக்காக செயல்படுத்தாமல் இயேசு, தந்தையின் மகிமையையும் அவரது திட்டம் நிறைவேற்றப்படுவதையுமே தேடுகிறார் (யோவா 5:30; 17:4). இந்த தாழ்ச்சியே அவருடைய ஆற்றலின் மூலமா

கும். படைப்பு அவருக்கு அடிபணிகிறது (மத் 8:27; 14:19 தொ. இ). அவர் பாவங்களை மன்னித்து (மத் 9:6 தொ. இ) தூய ஆவியின் ஆற்றலால் பேய்களை ஓட்டுகிறார் (மத் 12:28 இ). தனது உயிரைக் கையளித்து விட்டு மீண்டும் அதனை எடுத்துக் கொள்ளும் தனது ஆற்றலை அவர் அறிவிக்கிறார் (யோவா 10:18); அதாவது, சிலுவையில் தனது உயிரைச் சுதந்தரமாகக் கையளித்து, உயிர்த்தெழுதலில் மீண்டும் எழுவதைப் பற்றி அவர் குறிப்பிடுகிறார். இறுதியாக, இறுதிநாளில் ஒரு மேலாண்மையுடைய நீதிபதியாக தனது ஆற்றலைச் செயல்படுத்தவிருக்கும் தனது வருகையைப்பற்றி அவர் அறிவிக்கிறார் (மாற் 13:26; யோவா 5:21-29). ''மனுமகன் வல்லமையுள்ள இறைவனின் வலப்பக்கத்தில் அமர்ந்து, வானமேகங்கள் மீது வருவதை நீங்கள் இனிக் காண்பீர்கள்'' (மத் 26:64). இந்த உறுதிமொழியானது, இருளின் வலிமை வெற்றியடைவதாகத் தோன்றிய நேரத்தில், தலைமைச்சங்கத்தின் முன்னிலையில் அளிக்கப்படுகிறது (லூக் 22:53).

ஆனால், அவர் ஏற்கனவே அறிவித்தபடி ஒருமுறை உயர்த்தப்பட்ட உடனே, இயேசு தமது ஆட்தன்மையையும் (யோவா 8:28), வலிமையையும் வெளிப்படுத்துகின்றார். அதே நேரத்தில் உலகின் தலைவனாக தலைமை ஏற்போர் யாவரையும் கீழிறக்கி (கொலோ 2:15), அனைத்தையும் தம்பால் ஈர்த்துக்கொள்கிறார் (யோவா 12:31-32). இந்த நோக்கத்திற்காகவே, அவர் தனது ஆன்மீக அரசிற்கு, விசுவாசத்திலும் கீழ்படிதலிலும் எல்லா நாடுகளையும் கீழ்படுத்த, வானத்திலும் பூமியிலும் எல்லா அதிகாரமும் கொண்டுள்ளார் என்று சான்று பகருமாறு, அவர் தமது சீடர்களை அனுப்புகிறார் (மத். 28:18 தொ). அவர்கள் தங்களுடைய பணியை நிறைவேற்றுவதற்காக, அவர்களது போதனையைப் புதுமைகளால் உறுதிப்படுத்துவதோடல்லாமல் (மாற் 16:20), உலக முடியுமட்டும் எந்நாளும் அவர் அவர்களோடு இருப்பார். மேலிருந்து அவர்களுக்கு அனுப்புவதாக வாக்களித்த ஆற்றலாகிய அவரது ஆவியின் மூலம் அவர் அவர்களோடு இருப்பார் (லூக் 24:49; அ.ப. 1:8).

3. ஐம்பதாம்நாள் விழாவன்று அப்போஸ்தலர்களை நிரப்பிய ஆவியானது (அ.ப. 2:4) உயிர்த்த கிறிஸ்துவால் அவர்களுக்கு அளிக்கப்படுகிறது; அது அவரது ஆற்றலை மீட்பராக வெளிப்படுத்தும் கொடையாக வெளிப்படுகிறது (அ.ப. 2:32-36; 4:7-12). அவர்களது ஆற்றல்மிக்க போதனை மனிதர்களின் இதயங்களை மாற்றிய பின்னர் (2:37. 43; 4:4.33), அப்போஸ்தலர்கள் பாவங்களை மன்னிக்கவும் (யோவா 20:21 தொ), ஆவியை அளிக்கவும் (அ.ப. 8:17) தங்களுடைய ஆற்றலைச் செயல்படுத்தினர். திருச்சபை விரிவடைதலானது தமது சீடர்களுக்கு இயேசு அளித்த உறுதிமொழியை உறுதிப்படுத்துகிறது; அவரது செயல்களைவிட உயர்ந்தவற்றை அவர்கள் நிறைவேற்றுவர்; அவருடைய மகனின் பெயரால் கேட்பவை அனைத்தையும் தந்தை அவர்களுக்கு அருளுவார் (யோவா 14:12 தொ; 16:23-24). எனவே, விசுவாசமானது செபத்தை எல்லாம் வல்லதாகச் செய்கிறது (மாற் 9:23; 10:27; 11:22 தொ).

விசுவாசத்தினால் மனிதன் நற்செய்தியில் மீட்பின் ஆற்றலுக்குத் தன்னையே ஆளாக்குகிறான் என்னும் பவுலின் போதனை இயேசுவை எதிரொலிக்கிறது (உரோ 1:16). விசுவாசமானது ''கிறிஸ்துவின் அறிவையும் அவருடைய உயிர்த்தெழுதலின் வல்லமையையும், அவருடைய பாடுகளில் பங்கு பெறுவதையும் அடைகிறது (பிலி 3:9-10). சிலுவையில் அறையுண்ட இயேசு நம்பிக்கையுள்ள விசுவாசிகளைக் காப்பாற்றுகிறார். ஏனெனில் அவர்களுக்கு இறைவனின் வல்லமை அவரே (1 கொரி 1:18. 23-24). இறைவனுடைய வலுவற்ற நிலையோ மனிதர்களைவிட வலுவானதாக உள்ளது; மற்றும், அவருடைய வல்லமையானது சாட்சிகளின் வலுமின்மையில் வெளிப்படுகிறது (1:25; 2 கொரி 12:9). பின்னர் இவர்கள் இயேசுவுக்காக உயிரையே இழக்குமாறு கொலைகாரர்களிடம் கையளிக்கப்படும் போது இயேசுவின் வாழ்வானது அவர்களில்

தெளிவுபடுத்தப்படுகிறது *(4:10 தொ)*. ஏனெனில், இறந்தோரிடமிருந்து கிறிஸ்துவை உயிர்ப்பித்த இறைவனின் வல்லமைமீது அவர்கள் தங்களது நம்பிக்கையைக் கொண்டிருந்தனர் *(கொலோ 2:12; 2 கொரி 13:4)*. அவர்களுடைய வார்த்தைகளை இறைவார்த்தையாக்கி, இறைவார்த்தையின் வல்லமையை அவர்களுக்கு அளிக்கும் *(1 தெச 1:5; 2:13)* ஆவியால் அவர்கள் வலிமையும் ஆற்றலும் பெறுகின்றனர் *(எபே 3:16)*. ஒவ்வொரு சிந்தனையையும் எதிர்பார்ப்பையும் கடந்துள்ள இறைவல்லமையின் எல்லையற்ற பேராற்றல் அவர்களில் செயல்படுகிறது *(2 கொரி 4:7; எபே 1:19 தொ; 3:20)*.

*4.* இறுதி நாட்களில் வெளிப்படவுள்ள மீட்பிற்கும் இதே வல்லமை அவர்களை பாதுகாக்கிறது *(1 பேதுரு 1:5)*. அவருடைய எல்லாம் வல்ல கரத்தின் கீழ் தங்களைத் தாழ்த்துகிறவர்களையும், விசுவாசத்தினால் பேயை எதிர்க்கிறவர்களையும், அசைக்க முடியாதவாறு இறைவன் பாதுகாக்கிறார் *(5:5-10)*. மற்றொருபுறம், விசுவாசமற்றவர்கள் பேயிடமிருந்து வருகின்ற வல்லமையை கொண்டவர்களால் தவறான வழிக்கு இழுத்துச் செல்லப்படுவர் *(2 தெச 2:9-12; திருவெளி 13:2-7)*. இவர்களை, ஆண்டவர் தமது வருகையின் நாளில், தமது வாய்மூச்சினால் அழித்துவிடுவார் *(2 தெச 2:8)*. அந்நாளில், எல்லா விரோதமான வல்லமையுடன் சேர்த்து, மரணமும் அழிக்கப்படும் *(1 கொரி 15:24 தொ.)* ஆவியானவர் தங்கியுள்ள உடல்களுக்கு உரியவர்களை இறைவன் தம்முடைய ஆற்றலால் உயிர்ப்பிப்பார் *(6:14; உரோ 8:11)*. அவர் அனைத்திலும் அனைத்துமாய் இருப்பார் *(1 கொரி 15:28)*. செம்மறியானவர் பகிர்ந்து கொள்கிற அரியணைக்கு உரிய எல்லாம் வல்ல ஆண்டவராகிய இறைவனைத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் புகழ்ந்து பாடுவதை நாம் திருவெளிப்பாட்டில் கேட்கிறோம். ஒழுங்கற்ற நிலையில் ஆற்றலைக் குறிக்கும் துயரம் என்பதே இனி இல்லை என்ற நிலை நிலவக்கூடிய புதிய உலகை இறைவன் படைப்பார் *(திருவெளி 21:1.5)*. ''அல்லேலூயா! எல்லாம் வல்ல கடவுளாகிய ஆண்டவர் ஆட்சி செலுத்தலானார்'' *(19:6)*. அது அன்பின் அரசு. இதற்கு எல்லாம் வல்லவராக இருப்பவர், ''நமக்கு அன்பு செய்து தமது இரத்தத்தினால் நம்முடைய பாவங்களினின்று நம்மை விடுவித்தவருடைய தந்தையே. இவருக்கே மகிமையும் வல்லமையும் என்றென்றும் உரியனவாகுக ஆமென்'' *(1:5-6)*.

**ஆனா** (ANAH - *பதில் சொல்லி)*

*1.* கோரியரான சிபயோனின் மகன். ஏசாவின் மனைவி ஒகலிபாமாவின் தந்தை *(ஆதி 36:2.4.18; 1 நாள் 1:40)*. ஆதி *36:24*-இன்படி இவர் பாலைவனத்தில் வெப்ப நீரூற்றுக்களைக் கண்டுபிடித்தார். ஆதி *36:2.14* மகள் என்று உள்ளது. மகன் என்று எடுத்துக்கொள்வதே மேல்.

*2.* ஏதோமில் குடியிருந்தவர்களான கோரியர்களின் தலைவரான சேயிரின் நான்காம் புதல்வர் *(ஆதி 36:20.25.29; 1 நாள் 1:38.41)* ஆனா 1-2க்கும் இடையிலுள்ள உறவு என்ன என்று வாசகங்கள் தெளிவுபடுத்தவில்லை.

**ஆனிம்** *(*ANIM *- - ஊற்றுக்கள்)*

யூதாவின் தென்மேற்கு மலைப்பகுதியில் கிரியத்து-சேபர், எசுத்தமோவா ஆகிய நகரங்களுடன் சேர்ந்த ஓர் எல்லை நகரம் *(யோசு 15:50)*. தென் கெபிரோனிலிருந்து *18* கி.மீ. அப்பால் இருக்கும் கிர்பேத்-கூவேயின் ஆக இருக்குமோ எனவும் யூகிக்கப்படுகிறது. யூசேபியு இந்த ஆனிமை அனாயாவோடு ஒப்பிட்டுச் சந்தேகிக்கிறார். அமர்னா ஏடுகளில் இது காவினா என்றழைக்கப்படுகிறது.

**ஆனேம்** (ANEM - *இர ஊற்றுக்கள்)*

இசக்கார் பகுதியிலுள்ள ஒரு லேவியர் நகரம். கெரிசோனியர்களுக்குக் கொடுக்கப்பட்டது *(1 நாள் 6:73)*. யோசு *19:21; 21:29*-இல் இது ஏன்-கன்னீம் என்றழைக்கப்படுகிறது. இது இக்கால எனீன் என்று அடையாளம் காட்டப்படுகிறது. இந்த இடம் தாபோர் மலைக்குக் கிழக்கில் *11* கி.மீ. தொலைவில் உள்ள ஓலாம் ஆகவோ,

ஓலாமுக்கு வடகிழக்கில் 3 கி.மீ. தொலைவிலுள்ள கிர்பேத் ஆனிம் ஆகவோ இருக்கலாம்.

**ஆனேர்** (ANER - பையன்) - ஆள்.

ஓர் எமோரியர். தன் சகோதரர்கள் மமிரே, எசுக்கோல், ஆகியோருடன், நான்கு கிழக்கு அரசர்களுடன் ஆபிரகாம் நடத்தியபோரில் அவருக்கு உதவியவர் (ஆதி 14:13-24). இந்த மூன்று பெயர்களும் இடங்களின் பெயராகவும் இருக்கலாம்.

**ஆனேர்** (ANER - இடம்.

மனாசேக்கு அளிக்கப்பட்ட பகுதியின் மேற்குப் பாகத்தின் ஒரு லேவியர் நகர் (1 நாள் 6:70). இது இருந்த இடம் தெரியவில்லை. யோசு 21:25-இன்படி இந்த இடம் இசிரியேல் சமவெளியின் தெற்குப் பகுதியிலிருந்த ஒரு நகரமாகும். இது தானாக் என்று வாசிக்கப்பட வேண்டும்.

**ஆன்மா** (SOUL)

மனிதன், உடல்பாதி ஆன்மா பாதி என்னும் கூட்டால் உண்டாவனன் என்று நினைப்பது தவறு. ஆன்மா, உயிர் மூச்சால் இயக்கப்படும் முழு மனிதனைக் குறிக்கிறது. உண்மையில், ஆன்மா, உடலில் வாழ்வதில்லை. ஆனால் உடலின் வழியாக ஆன்மா தன்னையே வெளிப்படுத்துகிறது. ஊனைப்போல் அது முழுமையான மனிதனைச் சுட்டிக் காட்டுகிறது. ஆன்மா ஆவியினுடைய தொடர்பால் ஆவிக்குரிய தொடக்கத்தை உடையது என்று விளக்குகிறது. ஆனாலும் இந்த ஆவிக்குரிய தன்மைக்கு இந்த உலகத்தோடு ஆழ்ந்த பற்றுக்கோடுள்ளது. இந்தச் சொல் பலவித விளக்கத்திற்குப் பயன்படுத்தப்படுவதிலிருந்தே இதை அறியலாம்.

I. ஆன்மாவும் உயிருள்ள ஆளும்

விவிலிய மொழிகளிலும் ஆன்மாவைக் குறிக்கும் நெப்பெஸ் (எபிரேய மொழி), சுயுக்கே (கிரேக்கம்) அனிமா (இலத்தீன்) என்ற சொற்கள் உயிர் நாடியான மூச்சு என்ற கருத்தோடு தொடர்பு கொண்டுள்ளன.

*1. உயிருள்ள மனிதன்:-* மூச்சு அல்லது சுவாசித்தல் உயிர் உள்ளது என்பதைக் காட்டுகிறது. மூச்சு உள்ளவரை ஒருவன் உயிரோடு இருக்றான் (2 சாமு 1:9; அ.ப. 20:10). இறக்கும்பொழுது ஆன்மா பிரிந்து செல்கின்றது (ஆதி 35:18); வெளியே போகின்றது (எரே 15:9); அல்லது திரவத்தைப் போல் வெளியில் கொட்டப்படுகிறது (ஏச 53:12). உயிர் திரும்பினால் ஆன்மா மறுபடியும் அவனிடம் திரும்பி வருகிறது (1 அர 17:21).

கிரேக்கர்களுக்கும், செமித்திய மக்களுக்கும் இவ்விதம் தங்கள் கருத்துக்களைக் கூற முடியும். இந்த வகையான விளக்கத்திற்குள் பலவகைக் கண்ணோட்டங்கள் மறைந்திருக்கின்றன. கிரேக்கத் தத்துவஇயலில் ஆன்மா உடலின் தொடர்பின்றித் தனித்து இருக்கக்கூடிய கூறு என்றும், அது உடலில் காணப்படுகிறது மற்றும் அதிலிருந்து பிரிந்து செல்கிறது என்றும் பொதுவாகக் கருதப்பட்டது. இதற்குமாறாக, செமித்தியர் கருத்துப்படி உயிர் மூச்சு உயிரளிக்கும்; உடலிருந்து அதைப்பிரிக்க முடியாது. குறிப்பாக மனித செயல்முறை வாழ்க்கை வாழும் வகையை மூச்சு காட்டுகிறது. மேலும் மனிதன் அசையாது உறங்கும்போதும் சுவாசித்தல் நடைபெறுகிறது. ஒருவேளை இரத்தத்தையும் ஆன்மாவையும் ஒன்றாக்ககுவதற்கு இது ஆழ்ந்த காரணமாக இருந்திருக்கலாம் (சங் 72:14). ஆன்மா இரத்தத்தில் உள்ளது (லேவி 17:11), ஆன்மா இரத்தமேயாகும் (லேவி 17:14; உப 13:23), அதுவே உயிருள்ள மனிதன்.

*2. உயிர்:-* உயிருடன் இருத்தல் என்ற கருத்திலிருந்து வாழ்வின் பொருளுக்கு எளிதாகச் போகலாம். இவை இரண்டும் இணையாகப் பயன்படுவதிலிருந்து அறியலாம். ''உமக்குச் சொந்தமான புறாவின் உயிரைப் பருந்துக்கு இரையாக விட்டுவிடாதேயும்; உம்முடைய எளிய மக்களின் வாழ்வை ஒரு நாளும் மறவாதேயும்'' (சங் 74:19). பதிலுக்குப்பதில் என்ற சட்டப்படி ''ஆன்மாவுக்கு ஆன்மா'' என்பதை ''உயிருக்கு உயிர்'' என்று பொழிபெயர்க்கலாம் (யாத் 21:23).

ஆன்மாவும் உயிரும் இணைத்துக் கருதப்படு கின்றன. உடல் சார்ந்த வாழ்விற்கு மாறாக இருக்கும் ஆன்மீக வாழ்வோடு மட்டும் இங்குக் கருத்தில் கொள்ளப்படவில்லை. ஆனால் வெகுகாலமாய் இந்த உயிர் பூவுல கத்தைச் சேர்ந்ததாகவே கருதப்பட்டது. காலப்போக்கில், இறுதியாக அழியாத விண் ணுலக வாழ்வோடு தொடர்புள்ளது என்று வெளிப்படுத்தப்படுகிறது. ஆகையால் இந் தச் சொல் ஒவ்வொரு முறையும் எந்த இடத் தில் எதற்காகப் பயன்படுத்தப்பட்டது என் பதை அறிவது அவசியம்.

சில வழக்குமுறைகளில், ஆன்மா (உயிர்) இம்மை வாழ்வின் கூறாகக் கருதப்பட்டது. இதை இழப்பதற்கு ஒருவன் அஞ்சலாம் *(யோசு 9:24; அ.ப. 27:34)* அல்லது சாவின் பிடியிலிருந்து காப்பற்ற விரும்பலாம் *(1 சாமு 19:11; சங் 6:5)*; அது ஆபத்திலதருப் பதை உணரும்போது அதைக் காக்கப் பாது காப்பான இடத்தில் வைக்க நினைக்கலாம் *(லூக் 21: 19; உரோ 11:3=1 அர 19:10; மத் 2:20=யாத் 4:19; சங் 35:2; 37:12)*. இதற்குமா றாக அதைப்பற்றி அதிகம் கவலைப்படத் தேவையில்லை *(மத் 2:30)* தன்னுடைய மக்களுக்காக உயிரைக் (ஆன்மாவை) கைய ளிக்கத் தயாராய் இருக்கவேண்டும் *(பிலி 2:30; 2:8)*. இந்த உயிரைத்தான் இயேசு மனிதர்களுக்காகக் கையளித்தார் *(மத் 20:18; யோவா 10:11. 15. 17)*. அவரைப் பின்பற்றி நம்முடைய உயிரை மற்றவர்களுக்காக அளிக்க வேண்டும் *(யோவா 13:17; 15:13; 1 யோவா 3:16)*.

ஒருவன் இவ்வுளவு பெரிய தியாகத்தைச் செய்வது இறைவன் (யாவே) உயிரைத் திரும்பக் கொடுப்பார் என்று அறிந்ததினால் மட்டுமன்று *(சங் 34:22; 72:14)*; மாறாக இயேசு அதே வார்த்தை வழியாக அரும்பெ ரும் கொடையாகிய அழியாத வாழ்வைப் பற்றி அறிவித்திருப்பதால்தான். அவரே இச் சொல்லைப் பலவகையில் பயன்படுத்தியுள் ளார். ''ஏனெனில், தன் உயிரைத் காத்துக் கொள்ள விரும்புகிறவன் அதை இழந்துவிடு வான். என்பொருட்டுத் தன் உயிரை இழப்ப வனோ அதைக் கண்டடைவான் *(மத் 16:25 இ; 10:39; லூக் 14:26; 17:33; யோவா 12:25)*. இந்தக் காரணங்களால், ஆன்மாவில் உறை யும் முடிவில்லாத அழியா வாழ்வின் வெற் றியே ஆன்மாவின் மீட்பு ஆகும் *(யாக் 1:21; 5:20; 1 பேதுரு 1:9; எபி 10:39)*.

3. மனித ஆள்:- உண்மையில் உயிர் மனிதனின் மிகச் சிறந்த பொருளாயிருப்பின் *(1 சாமு 26:24)* ஆன்மாவைக்காப்பது தன் னைக் காப்பது போன்றதாகும். சுருங்கக் கூறின் ஆன்மா மனிதனைக் குறிக்கிறது.

முதன் முதலாக உயிருடன் இருக்கக்கூடிய உயிரினங்கள் அனைத்தையும் விலங்குகளை யும் கூடச் சேர்த்து ஆன்மா என்று குறிப்பிட லாம் *(ஆதி 1:20. 24;2:29)*; ஆனால் பொது வாக இது மனிதர்களைக் குறிப்பிடுகிறது; ஆகையால் ''எழுபதுபேர் (ஆன்மா) கொண்ட கூட்டம்'' என்று சொல்லப்படுகி றது *(ஆதி 46:27 = அ.ப. 7:14; உப 10:22; அ.ப. 2:41; 27:37)*. ஆன்மாதான் மனிதன். அது ஓர் ஆளாகும் *(லேவி 5:1...; 24:17; மாற் 3:4; அ.ப. 2:43; 1 பேதுரு 3:20; திருவெளி 8:9)*. எடுத்துக்காட்டாக இது கப்பலிலுள்ள சரக்குக்கு மாறானது *(அ.ப. 27:10)*. ஓர் இறந்த பிணத்தைக்கூட, அது முன்பு இருந்த நிலையை மனதிற்கொண்டு, ''இறந்த ஆன் மா'' என்று அழைப்பதில் புறநிலைப்படுத்து தல் உச்சநிலை அடைகிறது *(எண் 6:6)*.

ஆன்மா, அகப்பொருளில், நான் என்ப தற்கு ஒப்பாகும். ஆனால் உள்ளார்ந்த, உயி ராற்றல் பொருளுடையது. ''நாம் நித்திய காலமாய் வாழ்கிறவர்'' என்பது *(உப. 32:40; ஆமோ 6:8; 2 கொரி 1:23)* ஒருவன் தான் எடுக்கிற சூளுரையில் எவ்வளவுக்குக் கடைப்பிடிக்கப் போகிறார் என்பதைக் காட் டும். தாவீது யோனத்தானைத் ''தன் உயிர் போல்'' அன்பு செய்தார் *(1 சாமு 18:1,3)*. இறுதியாக இந்த நான் (ஆன்மா) என்ற சொல் ஆன்மீக செயல்களைத் தவிர, மற்றக் கருத்துக்களுக்காப் பயன்படுத்தப்பட்டிருக்கி றது. ஆகவே பெரிய செல்வந்தன் ''நெஞ்சே (ஆன்மாவே) பல்லாண்டுகளுக்கு வேண் டிய பொருள் உனக்கு ஏராளமாய் உள்ளது. இளைப்பாறு, உண்டு குடித்து விருந்தாடு

என்று சொல்லிக் கொள்வேன் என்றான். ஆனால் கடவுள், அறிவிலியே, இன்றிரவே உன் உயிரை (ஆன்மா) வாங்கப்போகிறார் கள்'' (லூக் 12:19, 20). ஆன்மாவைக் குறிப்பி டுவது வாழவிரும்புவதையும் தீர்மானத்தை யும் அழுத்திக்கூறுகிறது. ''நீரின்றி வரண்டு கிடக்கும் நிலம் நீரை நோக்கியிருப்பது போல இதயமும் (ஆன்மாவும்) ஆண்டவ ரில் வாழ விரும்பி ஏங்கியிருக்கிறது'' (சங் 63:2). ''பசியுற்றவனுக்கு அவர் நிறைவளித் தார்,... நன்மையால் வாழ விரும்பி ஏங்கியி ருக்கிறது'' (சங் 63:2); ''அவர் நிறைவளித் தார்,...நன்மையால் நிரப்பினார்'' (சங் 107:9; எரே 31:14). ஆன்மாவின் உணர்ச்சி கள் மகிழ்ச்சியிலிருந்து (சங் 86:4) கலக்கத் திற்கும் (யோவா 12:27) துன்பத்திற்கும் (மத் 26:38 = சங் 42:6) உற்சாகத்திலிருந்து (பிலி 2:19) சோர்வுக்கும் செல்கின்றன (எபி 12:3). தந்தையின் ஆசிரை எடுத்துரைக்கும் உறுதி பெறவும் (ஆதி 27:4), துன்பங்களைத் தாங்க வலிமை பெறவும் ஆன்மா விரும்புகிறது (அ.ப. 14:22). இந்த ஆன்மா அன்பு செய்வ தற்கும் (ஆதி 34:3), வெறுப்பதற்கும் (சங் 11:5), சிலரிடம் அன்பால் பூரிப்படைவதற் கும் (மத் 12:18 = ஏச 42:2; எபி. 10:38 = அப. 2:4),கடவுளை முழுமனத்தோடு தேடு வதற்கும் (மத் 22:37 = உப 6:5;எபே 6:6; கொலோ 3:33) மேலும் ஆண்டவரை எப் போதும் வாழ்த்துவதற்கும் (சங் 103:1) உண் டாக்கப்பட்டிருக்கிறது.

இத்தகைய பொருள் நிறைவில்தான் நாம் ''ஆன்மாக்களைப் புனிதப்படுத்துதல்'' (1 பேதுரு 1:22) போன்ற சொற்றொடர்களை மூலப்பொருளில் உய்த்துணர வேண்டும். இவர்களுக்காய்ப் பவுல் தம்மை முழுவதும் தியாகம் செய்கிறார் (2 கொரி 12:15); ஆன்மீ கத் தலைவர்கள் இவர்களுக்காக விழிப்பாய் இருந்து கவனிக்கின்றனர்கள் (எபி 11:29). இவர்கள் தசை இரத்தத்திலான உயிரினங் கள். ஆனால் இவர்களில் உயிரின் விதையும் மறுஉலக வாழ்வின் கருவும் பொதிந்திருக் கின்றன.

II. வாழ்வின் ஆன்மாவும் ஆவியும்.

1. வாழ்வின் ஆன்மாவும் மூலமெய்மை யும்:- ஆன்மா உயிரின் அடையாளம் என் றால் உயிரின் மூலகாரணம் ஆன்மா அன்று. இதுதான் இரண்டாவது வேறுபாட்டின் அடிப்படை. இது பிளேட்டோ, செமித்திய ஆகிய இருமனப் போக்குகளைப் பிரித்துக் காட்டுகிறது. பிளேட்டோ ஆன்மாவையும் ஆவியையும் ஒன்றாக்குகிறார். மேலும் ஆன்மா ஆவியிலிருந்து வந்தது, மனிதனுக் குத் தனித்து இயக்கும் உரிமையை அளிக் கின்றது. ஆனால் செமித்திய மக்களுக்கு ஆன்மா வாழ்வின் மூலகாரணமன்று, இறை வன் தம் ஆவியினால் உயிரை அளிக்கிறார். ''ஆண்டவராகிய கடவுள் மனிதன் முகத்தில் உயிர் மூசசை ஊத, மனிதன் உயிருள்ளவன் ஆனான்'' (ஆதி 2:7). உயிரினங்கள் அனைத் திலும் உயிர்மூச்சு உள்ளது (ஆதி 7:22). இது இல்லையென்றால் அவை இறந்து விடுகின் றன. இந்த மூச்சு (உயிர்) மனிதனது இவ்வு லக வாழ்வுமுழுவதும் அளிக்கப்படுகிறது. ''அவற்றின் மூச்சை நீர் நிறுத்திவிட்டால் அவை மடிந்து மண்ணாகிவிடும். உமது ஆவியை நீர் அனுப்பினால் அவை படைக் கப்படும்'' (சங் 104:29.30). மனிதனின் உள் ளாழத்தில் உயிரின் கூறாகிய ஆன்மாவை யும், உயிரின் மூலக்காரணமான ஆவியை யும் ஒன்றிலிருந்து மற்றதைப் பிரித்துக் காட்ட முடியும். இந்த மனிதனின் உள்ளா ழத்தைக் கடவுள் வார்த்தைதான் ஊடுருவ முடியும் (எபி 4:12). இதைக் கிறிஸ்துவர்க ளின் கருத்திற்கு மாற்றினால், இந்த வேறு பாடு பற்றி ''ஆவியில்லாத இயல்புணர்ச்சி யைப் பற்றி'' (யூதா 19) நாம் பேசமுடியும். ஞானஸ்தானத்தால் 'ஆன்மீக' நெறிக்கு மாற் றப்பட்ட சில விசுவாசிகள், அவற்றிலிருந்து தவறி, தம் 'இயல்புணர்ச்சிப்படி' 'இவ்வுல கிற்கேற்றபடி' நடப்பதை அறியலாம். (1 கொரி 2:14; 15:44; யாக் 3:15).

2. ஆன்மாவும் தொடர்ந்து வாழ்வதும்:- முன்பு கூறியவைகளின் விளைவாகப் பின்வ ரும் கருத்துக்களை ஊகிக்க முடிகிறது. ஆவி யும் ஆன்மாவும் வேறுபட்டவை. ஆவி இறப்பதில்லை. அது யாவேயிடம் திரும்பும் என்று உறுதியுடன் கூறலாம் (யோபு 34:14; சங் 31:6; திருவுரை 12:7). இதிலிருந்து வேறுபட்டு ஆன்மா இறக்கலாம் (எண்

*23:10;* நீதி *16:30;* எச *13:19)*, ஆன்மா, எலும்பு *(எச 37:1-14)*, ஊன். *(சங் 63:2; 16:9)* போன்று சாவிற்குக் கையளிக்கப்படலாம் *(சங் 78:50)*. ஆன்மா வாழ்வோரின் நாட்டிற்கு வெகுதூரத்திலுள்ள செயோல் என்ற இறந்நதவர் உலகிற்குச் சென்று, நிழல் தன்மையான உயிரற்ற வாழ்வு நடத்துகிறது. மேலும் இது ''வாழ்வோரின் நாட்டைப் பற்றி'' ஒன்றும் தெரியாது தனித்து வாழ்கின்றது (யோபு *14:21;* திருவுரை *9:5.10)*. கடவுளைவிட்டுப் பிரிந்தும் அவர் புகழ் பாட முடியாமலும் இருக்கின்றது *(சங் 88:11)*; ஏனெனில் இறந்தோர் மௌனத்தில் வாழ்கின்றனர் *(சங் 94:17; 115:25)*. சுருங்கக்கூறின் ஆன்மா இறந்தபின் இருப்பதில்லை (யோபு *7:8.21;* சங் *39:14)*. இருப்பினும் எல்லாம் வல்ல இறைவன், இந்தக் கீழ் உலகத்திற்கு இறங்கிய ஆன்மாவை *(சங் 30:3; 49:19;* பழ *23:14)* மீட்டு உயிருடன் எழுப்புவார் *(2* மக் *7:19.14.23)*; பிரிந்த எலும்புகளை மீண்டும் கூட்டி உயிர் அளிப்பார். இதுபற்றிய விசுவாசம் உறுயானது. இந்த முழுமையான மனிதன் ஒரு ''உயிருடன் உள்ள'' ஆன்மாவாகவும், பவுல் கூற்றுப்படி ''ஆன்மீக உடம்புடனும்'', முழுமையாக உயிர்பெற்று எழுவான் *(1* கொரி *15:45 =* ஆதி *2:7)*.

3. ஆன்மாவும் உடலும்:- ஆன்மாக்கள் கீழ் உலகத்திற்குப் (செயோலுக்கு) போவதினால், அங்கு அவை உடலின்றி வாழ்கின்றன, என்பது பொருள் அன்று. அவைகளின் 'வாழ்வு' உண்மையான வாழ்வன்று; ஏனெனில் உடலின்றி ஆன்மாக்கள் தங்களையே வெளிப்படுத்த முடியாது. ஆகையால் மனிதனின் அழியாத்தன்மைக் கொள்கை ஆன்மாவின் ஆன்மீகத்தன்மையுடன் சேர்த்து ஒன்றாக்கப்படுவதில்லை. மேலும் ஞான நூல், விவிலிய நூலில் அறிவிக்கப்பட்ட பாரம்பரியத்தில், இந்தக் கொள்கையைப் புகுத்தவில்லை. கிரேக்கர்களின் எண்ணத்தில் ஊதிய ஞானநூலின் ஆசிரியர் சில சொற்களைக் கிரேக்க மக்களின் மனிதவியல் நூல்களிலிருந்து எடுத்து, தன் காலத்திற்கேற்றபடி பயன்படுத்தியுள்ளார். அவரது மனநோக்கு எப்போதும் கிரேக்கர்களிடமிருந்து மாறுபட்டது. உறுதியான, ''அழியக் கூடிய உடல் ஆன்மாவைப் பளுவாக்குகிறது இந்த மண் குடிசை சிந்தனை நிறைந்த மனத்தை அழுத்துகிறது'' (ஞான *9:15)*. ஆனால் இங்கு ஆன்மா மனிதனின் அறிவாற்றலைப்பற்றியேயன்றி வாழ்வின் ஆவியைப் பற்றிக் குறிப்பிடவில்லை. மேலும் இங்கு இவ்வுலகின் பொருளையோ *(13:3)* அல்லது உடலைப் பற்றியோ தாழ்வுபடுத்திப் பேசவில்லை; ''நல்லவனாய் இருந்ததால், மாசற்ற உடலுக்குள் புகுந்தேன்'' *(8:19)* என்று கூறுகிறார் ஆசிரியர்.

உடலுக்கும் உயிருக்கும் (ஆன்மாவுக்கும்) வேறுபாடு இருப்பது, ஆன்மா உண்மையிலே தனித்து இயங்கும் என்ற கருத்தினாலன்று. அக்கால யூத வெளிப்பாட்டு இலக்கியங்களில் காணப்படுவதுபோல் ஆன்மாக்கள் கீழ் உலகத்திற்குச் செல்கின்றன *(16:13)*. ''ஆன்மாக்கள் கடவுளின் கையிலுள்ளன *(3:1; 4:14)*. அவர் அவைகளை அழியா வாழ்வுக்காகப் படைத்ததால் அவைகளை மீண்டும் உயிர் பெற்று எழச் செய்யக்கூடியவர் *(2:23)*.

உடல், ஆன்மா என்ற வேறுபாடு எழுந்ததின் காரணபாக, ஆன்மாக்களுக்காக கூறப்பட்டதையெல்லாம் விவிலியம் முழு மனிதனுக்குச் சாற்றிக் கூறுகிறது. இருப்பினும் விவிலியம் அழியாமையில்லாத விசுவாசத்தைக் கூறவில்லை. பீடத்தின் கீழேத் தங்களுடைய கைமாறுக்காகக் (ஞான *2:22)* காத்திருக்கும் ஆன்மாக்கள் (திருவெளி *6:9; 20:4)* திரும்ப உயிர்த்தெழும்படி கடவுளின் குரலுக்காகக் காத்திருக்கின்றன. உயிர்த்தெழுதல், ஆன்மாவில் உள்ள வலிமையின் செயலன்று; உயிர் ஆவியின் செயலாகும். இறைவன் முடிவில்லா வாழ்வின் விதையை ஆன்மாவில் விதைத்துள்ளார். அது உரிய காலத்தில் மலராக மாறும் (யாக் *1:21; 4:20; 1* பேதுரு *1:9)*. முழுமையான மனிதனும் மீண்டும் ''உயிருள்ள ஆன்மா'' (உயிருள்ளவன்) ஆவான். பவுல் கூறுவதுபோல், ''ஆவிக்குரிய உயிர் கொண்ட உடல்'' ஆவான். மீண்டும் அவன் முழுமையில் உயிர்த்தெழுவான் *(1* கொரி *15:45 =* ஆதி *2:7)*.



**இகாயோன்** (HIGGAION)

எபிரேய வாசகத்தில் வரும் தெளிவில்லாத பொருளுடைய ஓர் இசைக் குறிப்பாகும். இசைக் கருவிகள் திடீரென்று ஒலிப்பதையோ அல்லது அமைதியாக ஒலிப்பதையோ குறிக்கலாம் *(சங் 9:16)*. மற்ற இடங்களில் இந்த எபிரேயச் சொல் இசை ஒலி, பண் இசைத்து என்று மொழி பெயர்க்கப்படுகிறது *(சங் 92:3)*. இது தியானத்தையும் சிந்தனையையும் குறிக்கலாம் *(சங் 19:14; புல 3:62)*.

**இகால்** (IGAL - இறைவன் மீட்கிறார்)

*1.* இவர் மோசேயால் கானான் நாட்டைச் சுற்றிப் பார்த்துச் செய்தி கொண்டுவர அனுப்பப்பட்ட 12 ஒற்றர்களில் ஒருவர். இசக்கார் இனத்தைச் சேர்ந்த யோசேப்பின் புதல்வர் *(எண் 13:7)*.

*2.* தாவீதின் வலிமை வாய்ந்த படைவீரர்களுள் ஒருவன், சோலாவிலிருந்த நாத்தானின் மகனாவார் *(2 சாமு 23:36)*. 1 நாள் 11:38-இல் இப்பெயருக்குப் பதிலாக நாத்தானின் சகோதரன் யோவேலின் பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது.

*3.* தாவீதின் வழித் தோன்றல்களில் அரசன் யோயாக்கினின் வழி வந்தவர். செமாயாவின் புதல்வர்களில் ஒருவர். செருபாபேலின் வழித்தோன்றல் *(1 நாள். 3:22)*.

**இகிதலியா** (IGDALIA - யாவே பெரியவர்)

யூதா நாட்டைச் சேர்ந்த அதிகம் அறியப்படாத ஓர் இறைவாக்கினர், ஒரு இரக்காப்பியர். கானானின் தந்தை. இவருடைய பேரப்பிள்ளைகளோ சீடர்களோ, யோசியாவின் காலத்தில் ஆலயக் கருவூல அறைகளில் ஒன்றைப் பெற்றிருந்தனர் *(எரே 35:4)*.

**இக்காபோது** (ICHABOD - மகிமை எங்கே?)

இவர் பினகாசின் மகனும் ஏலியின் பேரனும் ஆவார். இஸ்ராயேலிடமிருந்து உடன்படிக்கைப் பெட்டகத்தைப் பெலிஸ்தியர் கைப்பற்றினர். (இப்பெட்டகம் இஸ்ராயேலின் மகிமையும் பெருமையுமாகக் கருதப்பட்டது). இவரது தாய் இந்தப் பேரிழப்பின் நினைவாகவும், தன் மாமனாரும் கணவனும் இறந்து போனதாலும் ''இஸ்ராயேலரை விட்டுப் புகழ் நீங்கினது'' என்று சொல்லி தன் குழந்தைக்கு இக்காபோது என்று பெயரிட்டாள் *(1 சாமு 4:21)*. இவர் பிறந்தவுடன் அவளும் இறந்து போனாள்.

இவர் பெயர் அகீயாவின் மரபுப்பட்டியலில் வருகிறது. அகீயா சவுல் காலத்தில் ஏபோது அணிந்திருந்தார். ஆனால் அகீயா இக்காபோத்தின் நேரடி வழித்தோன்றல் அல்ல *(1 சாமு 14:3)*.

**இக்கேசு** (IKKESH - வளைந்த, கோணலான, கொடிய)

தெக்கோவாவைச் சேர்ந்த இவரது மகன், ஈர், வலிமை மிக்க தாவீதின் படைவீரர்களுள் ஒருவராக இருந்தார் *(2 சாமு 23:26; 1 நாள் 11:28)*. ஆறாவது மாதத்தில் தாவீதின் படைகளுக்கு தெக்கோவா ஊரானாகிய இக்கேசின் மகன், ஈர், தலைவனாய் இருந்தார் *(1 நாள் 27:9)*.

**இக்கோனியா** (ICONIUM - உருவம், சிலை)

சிறிய ஆசியாவின் தென் மத்தியப் பகுதியிலுள்ள இலிக்கவோனியாவின் தலைநகரமாகும். பிரிகிய எல்லைக்கருகில் இலிசித்திராவுக்கு வடக்கில் அமைந்திருந்தது. தற்பொழுது இவ்விடத்தில் கொனியா என்ற துருக்கிய நகரம் அமைந்துள்ளது.

பழங்காலப் பாரம்பரியப்படி, இந்நகரம் பெரு வெள்ளத்திற்கு முன்னே இருந்தது. அதற்குப்பின் மீண்டும் கட்டப்பட்டது. கி.மு.7-ஆம் நூற்றாண்டிலிருந்து பிரிகியர்கள் இந்நகரில் குடியிருந்தனர் எனத் தெரிகிறது. இந்நகரம் இலீதியர்களாலும் பாரசீகர்களாலும், செலூக்கியர்களாலும், பெருகாமோன் அரசாலும் ஆட்சி செய்யப்பட்டது.

மூன்றாம் அத்தாலுசு, கி.மு.133-இல் உரோமையர்களுக்குக் கொடுத்த சொத்தில் ஒரு பகுதியாக அமைந்தது.

புதிய ஏற்பாட்டில், பவுலும் பார்னபாவும் தங்கள் முதல் மறைபரப்புப் பயணத்தில் இந்நகரை அடைந்தனர் (அ.ப. 13:51-14:6). அந்தியோக்கியாவில் நிகழ்ந்தது போலவே இங்குள்ள யூதர்கள் எதிராக எழுந்ததால் (2 திமோ 3:11), இவர்கள் இந்நகரை விட்டு ஓடவேண்டியிருந்தது. திரும்ப வரும்போது, மீண்டும் இந்நகர் வழியாக வந்ததாகத் தெரிகிறது (அ.ப.14:21). பவுல் தனது இரண்டாம் மறைபரப்புப் பயணத்தில் இங்கு வந்திருக்க வேண்டும். ஏனெனில் இதன் அருகிலுள்ள தெருபை, இலிசித்திரா போன்ற அருகிலுள்ள நகரங்களையெல்லாம் சுற்றியிருக்கிறார் (அ.ப. 16:1). திமோத்தேயுவும் (16:2) தேக்கிலாவும் இக்கோனியாவைச் சேர்ந்தவர்களாவர்.

**இக்துசு** *(ICHTHUS - மீன்)*

மீன் அடையாளம். இது இரகசிய கிறிஸ்துவ அடையாளமாகவும் இலக்கியத்திலும் ஓவியங்களில் கிறிஸ்துவையும் நற்கருணையையும் எடுத்துக்காட்டு அடையாளமாகவும் தொடக்கக்காலத் திருச்சபையால் பயன்படுத்தப்பபட்டது. இயேசு தம் சீடர்களுக்கு ''மனிதர்களைப் பிடிப்பவர்கள்'' என்ற பட்டம் அளித்ததிலிருந்தோ (லூக் 5:10), இயேசு ஐயாயிரம் பேருக்கு அருஞ்செயலாக உணவளித்த நிகழ்ச்சியிலிருந்தோ (மத் 4:13 இ) இந்த அடையாளம் தோன்றியிருக்க வேண்டும்.

இச்சொல், சொற்களின் முதல் எழுத்துக்களைத் தொகுத்து உருவாக்கப்படும் புதுச் சொல்லாகக் கருதப்படும். இதன்படி, I (Iesous), CH (Christos, TH (Theou) Y (Yios), S(Soter) ''இயேசு கிறிஸ்து இறைமகன் மீட்பர்'' என்று பொருள் கொடுக்கப்படும்.

**இசக்கார்** *(ISSACHAR - கடவுள் இரக்கம் காட்டுவாராக, கூலி ஆள், ஈடுசெய்யப்பட்டடும்)*

யாக்கோபின் ஒன்பதாவது புதல்வனும், இஸ்ராயேலின் 12 கோத்திரங்களில் ஒரு கோத்திரத்தின் இனப்பெயர் முதல்வருமாவார். லேயாளுக்குப் பிறந்த ஐந்தாம் மகன் ஆவார் (ஆதி 30:18). இதனால்தான் யாக்கோபின் இனத்தாரைப் பற்றிய பட்டியலில் இசாக்கார் செபுலோனுக்கு முன்னும் சிமெயோன், லேவி என்ற சகோதரர்களுக்குப் பின்னும் கூறப்பட்டுள்ளார் (ஆதி 35:23; 46:13; யாத் 1:3; 1 நாள் 3:1).

மனாசே இனத்தாரும் எப்பிராயிம் இனத்தாரும் நெருங்கியிருந்தது போலவே இசக்கார் இனத்தார் செபுலோன் இனத்தாரோடு உறவாடி நெருங்கி, வாழ்ந்தனர். இருவரும் ஒரே தொகுப்பாகக் கருதப்பட்டனர். இசக்கார் குலத்தினர் வாழ்ந்த நாட்டின் எல்லையே செபுலோன் குலத்தவரின் எல்லையாக இருந்தது. அந்த எல்லையில் தாபோர் மலையில் இரு குலத்தினருக்கும் பொதுவான புனித இடம் ஒன்று இருந்தது. இக்காரணத்தினால்தான் மோசே இவ்விரு குலத்தவரையும் சேர்த்தே ஆசீர் வழங்குகிறார்.

''செபுலோனே, உன் ஏற்றுத் துறைகளிலும், இசக்காரே, உன் கூடாரங்களிலும் மகிழக்கடவீர்கள். இவர்கள் மக்களை மலைகளிடம் அழைப்பார்கள். அங்கே நீதியின் பலிகளை இடுவார்கள்'' (உப 33:18-19). இங்கு ''மலைகள்'' 'தாபோர்' மலையையும், ''மக்கள்'' இவ்விரு குலத்தாரையும் குறிக்கின்றது. இங்கு செபுலோனும் இசக்காரும் சேர்த்துக் கூறப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. மேலும் ஆதி 30:18-இல் உள்ளதற்கு மாறாக, இளையவனான செபுலோன் மூத்தவனான இசக்காருக்கு முன்னதாகக் குறிப்பிடப்பட்டுள்ளான். எனவே, மனாசேயையும் எப்பிராயிமையும்போல, இசக்காரும் சேபலோனும் நில அமைப்பின் அடிப்படையில் தனியாக வளர்ச்சியுற்றனர் என்றும் முதலில் தங்கள் நாட்டில் குடியேறியபோது மிகவும் ஒற்றுமையாக இருந்தார்கள் என்றும் தெரிகிறது.

யாக்கோபின் இறுதி ஆசியுரையிலும் செபுலோனுக்குப் பிறகே இசக்கார் குறிப்பிடப்பட்டுள்ளார் (ஆதி 49:14-15). இது இசாக்கார் தன் முதன்மையை இழந்துவிட்டதை சுட்டுகிறது. இங்கு இசக்கார் குலத்தார் சொத்துக்கள் நடுவே படுத்துக் கொண்டிருக்கிற வலிமையுள்ள கழுதைக்கு ஒப்பிடப்படுகின்

றனர். வசதியான நாட்டில் அவர்கள் அடிமைகளாக இருப்பதாகக் கூறப்படுகின்றனர். தாபோர் மலைக்கும் வடக்கில் கின்னரோத்து ஏரியின் தென் எல்லைக்கும், தெற்கில் யாலூது நதிப் பள்ளத்தாக்கிற்கும் இடையில் உள்ள நாட்டில் (யோசு 19:17-23) கானானியர்கள் வாழ்ந்த நகரங்கள் பல இருந்தன. இசக்கார் குலத்தனர் இக்கானானியர்களோடு தொடர்பு கொண்டு வாழ்ந்ததால் மற்ற குலத்தினர் அவர்களைக் கண்டித்தனர்.

துரேயோ-தாங்கின் என்பவரால், 1922-ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட அமர்னா எடுகள் ஒன்றில், மெகிதோ நாட்டின் இளவரசன் அழிக்கப்பட்ட சூனேம் நாட்டிற்கு தானே பொறுப்பு என்றும், அங்கு குடியிருக்க வெளி நாட்டிலிருந்து மக்களைக் கொண்டு வரவேண்டும் என்றும் குறிப்பிடுகின்றார். சூனேம் பிற்காலத்தில் இசக்கார் குலத்தினரின் நாட்டில் இருந்தது. எனவே இந்தச் சூழ்நிலையில் இசக்கார் அல்லது இசக்கார் குலத்தினரில் பலர் அடிமைகளாக்கப்பட்டிருக்கலாம் என்று ஆல்ட் என்பவர் கூறுகிறார். இதைப் பற்றியே ''சுமைதூக்கத் தோள் சாய்ப்பான், அடிமை வேலைக்கு இணங்கிடுவான்'' (ஆதி 49:15) என்று கூறப்பட்டுள்ளது என்றும் அவர் கருதுகிறார்.

ஆனால் இஸ்ராயேலின் அரசாட்சி காலத்திற்கு முன்பே இசக்கார் குலத்தினர் மீண்டும் புத்துயிர் பெற்று எழுந்தனர். தெபோரா தொடுத்த போரில் இசக்கார் குலத்தினர் செய்த வீரச் செயல்களே இவ்வெழுச்சிக்குக் காரணமாக இருக்கலாம். தெபோராவின் பாடலில் இசக்கார் குலம் புகழப்பட்டுள்ளது (நீதி 5:15). ஆனால் அதற்கு இணையான உரைநடைப் பகுதியில் இசக்காரின் பெயர் காணப்படவில்லை. இசக்கார் குலத்தினனான தோலா இருபத்திமூன்று ஆண்டுகள் இஸ்ராயேலுக்கு நீதி வழங்கினார் (நீதி 10:1). சாலமோன் ஆட்சியின் போது இசக்காரின் நாடு தனி மாகாணமாக இருந்தது (1 அர 4:17). இசக்கார் குலத்தைச் சேர்ந்த பாசா வட அரசை ஆண்டார் (1 அர 15:27). அதிலிருந்து, இஸ்ராயேல் அரச குலத்தினர் தங்கியிருந்த இடமான இசிரியேல் இசக்காரின் நாட்டில் இருந்தது. இசிரியேல் சமவெளி கானானியரின் ஆளுகைக்கு உட்பட்டிருந்தபோது வட நாட்டிற்கும் தென் நாட்டிற்கும் இடையில் இசக்கார் குலத்தினரே பாலமாக செயல்பட்டு வந்தனர். பழைய கானானிய நகரங்களில் முதலிலிருந்தே குடியேறிய ஒரே இஸ்ராயேல் குலத்தினர் இசக்கார் குலத்தினரேயாவர்.

குருக்கள் பாரம்பரியத்தில் இசக்கார் குலம் செபுலோனுக்கு முன்னும் லேயா குலத்தினரோடும் குறிப்பிடப்பட்டிருக்கிறது (எண் 1:8. 28-29; 13:7; 26:23-25). சில இடங்களில், யூதாவை அடுத்து அதன்பின் உடனே இசக்கார் கூறப்பட்டுள்ளது (எண் 2:5; 7:18; 10:15). எண் 34:26-இல் இசக்காருக்கு முன்னால் செபுலோன் கூறப்பட்டுள்ளது. உப 27:12-இல் மக்களுக்கு இசக்கார் குலத்தினரும் ஆசீர் அளிக்கின்றனர். யோசு 19-இல் திருவுளச்சீட்டின் மூலம் கிடைத்த நாடுகளில் செபுலோனுக்குப் பிறகே இசக்கார் குலம் குறிப்பிடப்பட்டுள்ளது. லேவியருக்கு நகரங்கள் அளிக்கப்படும் போது, ஒரு முறை இசக்கார் குலம் மூன்றாவது குழுவுக்கு தலைமையாகவும் (யோசு 21:6; 1 நாள் 6:62), மற்றொரு முறை இசாக்காருக்கு முன்னால் மனோசேயின் பாதிக் கோத்திரம் தலைமை தாங்குகிறது (யோசு 21:28; 1 நாள் 6:72), செபுலோன் நான்காவது குழுவில் கூறப்பட்டுள்ளது. எச 48:25லும் செபுலோனுக்கு முன்னதாக இசக்கார் குலம் முதன்மை பெறுகிறது சிறப்பாகப் போற்றப்படுகிறது (1 நாள் 12:32; 27:18; 12:40; 2 நாள் 30:18). நாள் 4-7-இல் வரும் குலமரபுப்பட்டியலில், இசக்காரின் தலைமுறைப் பட்டியல் 1 நாள் 7:1-5ல் காணப்படுகிறது. ஆனால் செபுலோனின் தலைமுறைப் பட்டியல் காணப்படவில்லை. அரசாட்சி காலத்தில் இசக்கார் ஆழ்ந்தறிவுக்கும் (1 நாள் 12: 32), செல்வத்திற்கும் (12:40), தொடர்ந்த பிரமாணிக்கத்திற்கும் (2 நாள் 30:18) பெயர் பெற்றிருந்தார். புதிய ஏற்பாட்டிலும் முத்திரை இடப்பட்டவர்கள் பட்டியலில் இசக்கார் குலம் செபுலோன் குலத்துக்கு முன்னால் காணப்படுகிறது (திருவெளி 7:7).

2. தாவீதின் காலத்தில் லேவிய வாயிற் காவலராக இருந்த இவர் ஓபேது-ஏதோம் என்பவரின் மகன் (1 நாள் 26:5).

**இசார்** (IZHAR - *இறைவன் ஒளிர்வாராக)*

1. ஒரு லேவியர், கெகாத்தின் மகனும் கோராகின் தந்தையுமாவர் (யாத் 6:18.21; எண் 3:19.27; 16:1; 1 நாள் 6:2.18.38; 23:12.18). இவர் இசாரியரின் குலப்பெயர் முதியவராவார் (எண் 3:19; 1 நாள் 26:23). 1 நாள் 6:22-இல் இவர் அம்மினதாபு (2) என்றழைக்கப்படுகிறார்.

2. 1 நாள் 4:7-இல் சோகார் என்ற பெயரின் மறுவடிவமாகும். யூதாவைச் சேர்ந்தவர். இவரது தாய் கேலா என்பவள் ஆவாள்.

**இசிகாய்** (ISH-HAI - *வலிமை மிக்கவன்)*

2சாமு 23:20-இன்படிஇவர்பெனாயா(1)-வின் தந்தையாவார். ஆனால் சில வாசகங்கள் இந்தச் சொல்லுக்குப் பதிலாக ''ஆற்றல் வாய்ந்தவன்'', அல்லது ''வலிமைமிக்கவன்'' என்று கொண்டுள்ளன. இதுவே மேலான வாசகம் என்று கருதுவோர் உளர்.

**இசிகோது** (ISHHOD - *வீரமிக்க மனிதன், ஆற்றலுள்ள மனிதன்)*

மனாசேயின் குலத்தைச் சேர்ந்த கிலயாதின் சகோதரியான அம்மோலெகேத்து என்பவரின் மகனாவார் (1 நாள் 7:18). இவை இனப் பெயர். முதல்வர்களின் பெயர்களாகும்.

**இசிக்கா** (ISCAH)

ஆரானின் மகளும், மில்க்கா (ஆதி 11:29) லோத்து (11:31) ஆகியோரின் சகோதரியுமாவாள்.

**இசிதார்** (ISHTAR - *தலைவி)*

பாபிலோனிய இனப்பெருக்க தேவதையான அத்தார் என்ற வீனஸ் விண்மீனின் பெயர். மூலத்தில் ஆண் தன்மையடையது. இனப்பெருக்க வழிபாட்டில், இராஸ் சம்ராவிலுள்ள ஆனத்தைப் போலவும், பாலஸ்தீன நாட்டிலுள்ள அசித்தோரேத்து போலவும், மெசபொத்தாமியாவிலுள்ள சமயத்தில் இசிதார் மிகவும் சக்தி வாய்ந்த தேவதையாகும். மேற்கூறிய தேவதைகளைப் போன்றும், எகிப்திலுள்ள ஐசீஸ் போன்றும், கிரேக்க நாட்டிலுள்ள தெமெத்தேர் போன்றும், இசிதாரும், தாவர இயல் வளர்ச்சி தெய்வமான தாமுசு என்ற தெய்வத்துடன் தொடர்பு படுத்தப்படுகிறாள். தொடக்க காலத்திலிருந்தே இத்தேவதை போரின் தேவதையாகக் கருதப்பட்டு வருகிறாள். அசீரியர்கள் ஆண்ட காலத்தில் அவர்களின் தேசியக் கடவுளான அசூரோடு இசிதாரும் போரின் தேவதையாக வணங்கப்பட்டு வந்தாள்; இவளது அடையாளம் 8 முனைகள் கொண்ட விண்மீனாகும். எல்லோரிலும் மேலான தலைவி என்று பொருள்படும் 'பேலித்' என்ற பெயரால் அழைக்கப்பட்டாள். இவளது வழிபாட்டில் சில சமயம் சடங்கு விபச்சாரமும் ஆவேச வாக்கு உரைத்தலும் இடம் பெற்றன. யூதாவின் பிற்காலத்தில் வழிபடப்பட்ட ''விண்ணக அரசி'' இசிதாரின் வடிவமாக இருக்கலாம். இது மனாசேயால் புகுத்தப்பட்டது (2 அர 21).

**இசிபா** (ISHBAH - *இறைவனின் கோபம் தணிக்கப்படுவதாக)*

யூதாவின் வழித்தோன்றல்களில் ஒருவர். மெரேது என்பவருக்கும், பாரவோனின் மகளாகிய பித்தியாவுக்கும் பிறந்தவர் (1 நாள் 4:17). எசுத்தமோவா நகரை நிறுவியவர் என்ற பொருளில், எசுத்தமோவாவின் தந்தை என்றழைக்கப்படுகிறார்.

**இசிபாகால்** (ISHBAAL - *பாகாலின் மனிதன்)*

இது சவுல் அரசனின் மகன் இசிபோசத்தின் மூலப்பெயராகும் (1 நாள் 8:33; 9:39). இதன் மற்றொரு வடிவம் எசுபாகால் ஆகும். இசிபாகால் என்ற பெயர் விவிலியத்தில் காணப்படவில்லை. பாகால் என்ற பெயரை உச்சரிக்கத் தயங்கியதால் அதற்குப் பதிலாக இசிபோசத்து என்ற பெயர் பயன்படுத்தப் பட்டது.

சவுலின் மரணத்துக்கப் பிறகு வட பகுதியிலுள்ள இஸ்ராயேல் மக்களை இசிபாகால்

- இசிபோசத்து என்பவர் ஆண்டார். எல்லா இஸ்ராயேல் மக்களுக்கும் தலைமை தாங்க விரும்பி தாவீதோடு சண்டையிட்டார். ஆனால் வெற்றி பெறவில்லை. தாவீதின் சட்டபூர்வமான அரசுக்கு ஊறு விளைவிக்கக் கூடாது என்ற நோக்கோடு நாளாகமத்தின் ஆசிரியர் இதைப் பற்றிக் கூறவில்லை.

கில்போவா மலையில் இஸ்ராயேலர்கள் தோற்கடிக்கப்பட்டனர்; சவுலும் அவனது மூத்த புதல்வர்களும் இறந்தனர் *(1 சாமு 31)*. இதன்பின் பேராசை கொண்ட அபினேர், சவுலின் மகனான இசிபோசத்து என்பவனை அரசனாக ஏற்படுத்தினார் *(2 சாமு 2:8)*. யோர்தானுக்கு அப்பாலுள்ள மகனாயிம் என்ற இடத்தில்தான் முடிசூட்டு விழா நடை பெற்றது. ஏனெனில் யோர்தானுக்கு மேற்கி லுள்ள பகுதி பெலிஸ்தியரின் ஆளுகைக்குட் பட்டு இருந்தது *(1 சாமு 31:7)*. இசிபோசத்து கிலயாது, ஆசேர், இசிரியேல், எப்பிராயிம், பென்யாமின் மேலும் இஸ்ராயேல் அனைத் தின் மீதும் அரசராக இருந்தார் *(2 சாமு 2:9)*. ஆனால் யூதா கோத்திரத்தார் மட்டும் தாவீ தைப் பின்பற்றினர் *(2:10)*. தாவீதின் அரசுக் கும் இசிபோசத்தின் அரசுக்கும் இடையில் உள்ள எல்லைப் பகுதி அய்யாலோன் பள் ளத்தாக்காகும் *(2:12-13)*. பெலிஸ்தியருக்கு அடிபணிந்திருந்ததால்தான் இசிபோசத்தால் யோர்தானுக்கு மேற்கேயுள்ள பகுதியில் ஆட்சி செய்ய முடிந்தது. உண்மையில் தாவீ தும் இசிபாகாலும் பெலிஸ்தியரின் சிற்றரசர் களாகத்தான் முதலில் ஆட்சி செய்திருப்பார் கள். இஸ்ராயேல் நாட்டில் இவ்விரு மன்னர் களுக்கிடையே ஏற்படும் போர் பாலஸ்தீனத் தில் ஒரு வல்லமை வாய்ந்த அரசு ஏற்படுவ தைத் தடுக்கும் என்று பெலிஸ்தியர்கள் நம் பியிருந்தனர்.

தாவீதுக்கும் இசிபோசத்துக்குமிடையே கடும் போர் மூண்டது *(2:12-17)*. இப்போரில் தாவீது முன்னேறி மேன்மேலும் வலிமை வாய்ந்தவரானார் *(3:1)*.

வல்லமை மிகுந்த தலைமை இல்லாமை யால் வடக்குப் பகுதியிலுள்ள இஸ்ராயேல் குலத்தாரின் பலம் குன்றியது. அபினேரின் அதிகாரத்தை இசிபோசத்தால் தடுக்க முடிய வில்லை *(3:6)*. அபினேர் சவுலின் வைப் பாட்டிகளில் ஒருத்தியான இரிசிப்பாவை வைத்துக் கொண்டிருந்தார். இச்செயல் அவர் அரியணை மீது ஆவல் கொண்டிருந்தார் என்பதைக் காட்டியிருக்கலாம் *(16:22; 1 அர. 2:22)*. இசிபோசத்து இதை எதிர்த்தார். அபி னேர் தான் இசிபோசத்துக்க பிரமாணிக்க மாக இருப்பதாகக் கூறிவிட்டு, உடனே வடபகுதியிலுள்ள இஸ்ராயேல் குலத்தின ரையும் தாவீதின் ஆட்சிக்கு உட்படுத்த சதி செய்தார் *(2 சாமு 3:7-19)*.

ஆனால் யோவாபு அபினேரைக் கொன்ற தால் இம்முயற்சி முறியடிக்கப்பட்டது *(3:26-27)*. அபினேர் இறந்தபின் இசிபோசத்து அரசைப் பற்றியிருக்கும் தனது நம்பிக் கையை இழந்தார்; இஸ்ரோயேலர்கள் தலை வனின்றித் தவித்தனர் *(4:1)*. விரைவில் இசி போசத்து தூங்கிக் கொண்டிருந்தபோது அவ னது இரு படைத்தலைவர்கள் அவரைக் கொன்றனர் *(4:5-12)*. தாவீது இவரை அபி னேரின் கல்லறையிலேயே அடக்கம் செய் தார் *(4:5-12)*. இதன்பின் தாவீது இஸ்ராயேல் அனைவருக்கும் அரசராக அபிடேகம் பெற் றார்.

**இசிபாக்கு** (ISHBAK - *அவர் வெற்றி பெறுவா ராக)*

ஆபிரகாமுக்கும், அவரது வைப்பாட்டி கெத்தூராவுக்கும் பிறந்த ஐந்தாவது மகன் *(ஆதி 25:27; 1 நாள் 1:32)*. ஒரு அரேபிய நாட்டினரின் குடும்ப மூதாதையர் ஆவார்.

**இசிபி-பெனோபு** (ISHBI-BENOB - *நோபின் குடிமகன்)*

இவர் பெலிஸ்திய அரக்க குலத்தினர். இவர் தாவீதைக் கொல்ல முயன்ற போது, அபிசாய் அவரைக் கொன்றார் *(2 சாமு 12:16-17)*. இவர் பெலிஸ்தியர்களின் படை யைச் சேர்ந்தவர். எனினும் இவ்விடத்தில் வாசகம் பழுதுபட்டுத் தெளிவாக இல்லை. பலரும் பலவாறு விளக்கம் அளிக்க முயன் றுள்ளனர்.

***இசிபோசத்து*** *(ISHBOSHETH - வெட்கத்தின் மனிதன்)*

சவுலின் புதல்வர்களில் ஒருவர். சவுலுக்குப்பின் இஸ்ராயேலுக்கு அரசனானவர். இவனது மூலப்பெயர் ''பாகாலின் மனிதன்'' என்று பொருளுள்ள இசிபாகால் ஆகும் *(1 நாள் 8:33; 9:39)*. பாகால் என்றால் ''ஆண்டவர்'', ''தலைவர்'' என்று பொருள் படும். யாவேக்கும் சாற்றிக் கூறப்பட்டது. நீதிபதிகள் காலத்திலும், இஸ்ராயேலின் முடியாட்சி காலத்தின் தொடக்கத்திலும் இப்பெயரோடு சேர்ந்து எபிரேயப் பெயர்கள் அமைக்கப்பட்டன. அப்போது, கானானியப் பாலினக் கடவுளோடு எத்தொடர்பும் கொண்டதாகக் கருதப்படவில்லை. தாவீதின் காலத்திற்குள் இத்தகைய தொடர்பு ஏற்பட்டு, பாகாலோடு சேர்த்துப் பெயர்கள் அமைக்கும் வழக்கு முடிந்து விட்டது. பாகால் வழிபாட்டுக்கு எதிரான இறைவாக்குக் கூற்றுக்கள், இப்பெயரைப் பயன்படுத்துவதைத் தடைசெய்தது *(காண் ஓசே 2:16)*. இச்சொல்லுக்குப் பதிலாக ''வெட்கம்'' என்று பொருள்படும் போசத்து என்ற சொல் பயன்பட்டது.

இசிபோசத்தைப் பற்றிய மற்ற விவரங்களுக்குக் காண்க: இசிபாகால்.

***இசிமா*** *(ISHMA - இறைவன் கேட்பாராக)*

யூதா, குலத்தைச் சேர்ந்த ஏதாமின் புதல்வர்களில் ஒருவர் *(1 நாள் 4:3)*.

***இசியா*** *(ISSIAH - யாவே என் பாவங்களை மறப்பாராக)*

*1.* இசக்கார் குலத்தைச் சேர்ந்த ஊசியின் வழித்தோன்றல், இசுராகியாவின் மகன் *(1 நாள் 7:33)*.

*2.* சிக்கிலாகில் தாவீதோடு சேர்ந்து கொண்ட வலிமை மிகுந்த படை வீரர்களில் ஒருவர் *(1 நாள் 12:6)*.

*3.* ஊசியேலின் இரண்டாவது புதல்வனான இவர் ஒரு லேவியர் *(1 நாள் 23:20; 24:25)*.

*4.* ஒரு லேவியர். இரகபியாவின் குடும்பத் தலைவனான இவர், மோசேயின் வழித்தோன்றலாவார் *(1 நாள் 24:21; 23:14-17)*.

***இசியா*** *(IZZIAH - யாவே தூய்மையாக்குவாராக)*

பரோசின் மகன். எஸ்ரா காலத்தில் புறவின மனைவியரை அனுப்பிவிடக் கட்டாயப்படுத்தப்பட்டவர்களில் ஒருவர் *(எஸ் 10:25)*.

***இசிரியேலர்*** *(JEZREELITE)*

ஓர் இனப் பெயர், இசக்கார் பகுதியிலுள்ள இசிரியேலில் (இடம்) வாழ்ந்த நாபோத்தைக் குறிக்கும் *(1 அர 21; 2 அர 9:21-25)*.

***இசிரியேலப்பெண்*** *(JEZREELITESS)*

இது தாவீதின் மனைவி அகினோவாமின் இனப்பெயராகும். இவள் யூதாவிலுள்ள இசிரியேலிலிருந்து (1) வந்தவள் *(1 நாள் 3:1; 2 சாமு 2:2; 3:2)*.

***இசிரியேல்*** *(JEZREEL - இறைவன் பயனுள்ள தாக்குவாராக, இறைவன் விதைக்கிறார்)* - ஆள்.

*1.* யூதாவின் வழித்தோன்றல்களில் ஒருவராகிய இவர் ஏதாமின் மகனாவார் *(1 நாள் 4:3)*. இப்பெயரில் ஒரு நகரமும் யூதாவில் உள்ளது. ஆனால் அது அமைந்த இடம் எதுவென்பது தெளிவாக இல்லை *(யோசு 15:56)*. இவர் இந்நகரத்தின் இனப்பெயர் முதல்வரா அல்லது இப்பெயர் நகரமாக உருவகப்படுத்தப்பட்டதா (நகரமே ஒரு ஆளாக) என்பது தெளிவாக இல்லை.

*2.* இறைவாக்கினர் ஓசேயாவின் மனைவி கோமேருக்குப் பிறந்த தலைமகன் இவர். இஸ்ரேயேல் பள்ளத்தாக்கில் ஏகூ அரசன் இரத்தம் சிந்தி அதிகாரத்தைக் கைப்பற்றியதை நினைவூட்டுவதாக இடப்பட்ட அடையாளப் பெயர் இது *(காண்க. 2 அர 9:17-26; 10:1-11)*. மேலும் ஏகூ சிந்திய இரத்தத்திற்கு கடவுள் பழிவாங்கப் போவதை முன்னறிவிப்பதாகவும் *(ஓசே 1:4-5)* இஸ்ராயேல்

வருங்காலத்தில் மீண்டும் அமைப்பதையும் அடையாளமாக எடுத்துக் கூறப் பயன்பட்டுள்ளது *(2:2)*.

**இசிரியேல்** (JEZREEL - இறைவன் பயனுள்ள தாக்குவாராக, இறைவன் விதைக்கிறார்) இடம்

*1.* யூதாவின் நாட்டில் உள்ள ஒரு நகரம் *(1 சாமு 15:56)*. தாவீதின் மனைவியரில் ஒருவளான அகினோவாமின் ஊராகும் *(1 சாமு 25:43; 27:3; 30:5; 2 சாமு 2:2; 3:2)*. யோசு 15:56 கர்மேல், சிப்பு, யுத்தா ஆகிய நகர்களுக்கு அண்மையில் இந்நகரம் உள்ளதெனக் குறிப்பிடுகிறது. கெபிரோனுக்குத் தென்மேற்கே 9 கி.மீ. தொலைவில் உள்ள கிர்பெத் தறாமா என்பதே இது அமைந்த இடமாக இருக்க வேண்டுமெனக் கூறினாலும் உண்மையான இடத்தைக் குறிப்பிடமுடியவில்லை.

*2.* கலிலேயாவைச் சமாரியாவிலிருந்து பிரிக்கும் (முழுப்) பள்ளத்தாக்கின் பழைய ஏற்பாட்டுப் பெயரே இது. இப்பள்ளத்தாக்கின் கிழக்குப் பகுதி மட்டுமே தற்பொழுது இசிரியேல் எனப்படுகிறது. மேற்குப் பகுதி எசுதிரலோன் பள்ளத்தாக்கு அல்லது மெகிதோ சமவெளி என்று அழைக்கப்படுகிறது. எனவே இப்பள்ளத்தாக்கு இருபெரும் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது என்பது பாலஸ்தீன வரைபடத்தைப் பார்த்தாலே தெளிவாகும்.

இசிரியேல் பள்ளத்தாக்கு நீரைச் சேகரித்து வைக்கும் தொட்டிபோல் இருப்பதால் இங்கு நீர் நிறைய வந்து சேர்கிறது. எனவே இப்பகுதி மிகுந்த வளமுடையதாய் உள்ளது *(ஓசே 2:22)*. இப்பகுதியில் மத்தியதரைக் கடலோரத்திலுள்ள ஆக்கோவிலிருந்து பேத்துசான், யோர்தான் பள்ளத்தாக்கு, யோர்தானின் அக்கரைப் பகுதியில் உள்ள பீடபூமி ஆகிய பகுதிகளுக்குச் செல்லும் சாலைகளும், தெற்கேயுள்ள எகிப்து, மலைப்பாங்கான நாடு ஆகியவற்றிலிருந்து கலிலேயா. சீரியா, பெனிசியா ஆகிய வடக்கிலுள்ள நாடுகளுக்குச் செல்லும் வழிகளும் பின்னிப் பரவிக் கிடக்கின்றன.

தொடக்க காலத்திலிருந்தே இசிரியேல் கானானியர் கைகளிலிருந்தது. இஸ்ராயேல் கானானை வெற்றி கொண்ட காலத்தில் இவர்களிடமிருந்த இரும்புத் தேர்களினாலும், ஆயுதங்களினாலும் மனாசேயும் எப்பிரயிமும் இவர்களை விரட்ட முடியாது போயிற்று *(யோசு 17:6)*. மெகிதோ சமவெளிபோலவே இதுவும் பல போர்களைக் கண்டுள்ளது. நீதிபதிகள் காலத்தில் அமலேக்கியர்கள், மிதியானியர்கள், அப்பள்ளத்தாக்கில் வாழ்ந்தவர்கள் முதலியோர் இணைந்து போரிட்ட போது அவர்களை கிதயோனும், நாட்டின் வடபக்கத்தில் வாழ்ந்த இஸ்ராயேல் இனத்தினர் அனைவரும் இணைந்து தோற்கடித்தனர் *(நீதி 6:33; 7:23)*. பெலிஸ்தியரோடு அருகிலுள்ள கில்போவா மலையில் போரிட்ட சவுலும், அவனுடைய புதல்வர்களும் யோனத்தான் உட்பட பலர் இறந்த செய்தி இங்கிருந்து தான் வெளியிடப்பட்டது *(2 சாமு 4:4)*. அரியணைக்காக சவுலின் மகன் இசிபோசத்தும் தாவீதும் போட்டியிட்டுக் கொண்டிருந்த போது, இசிரியேல் இஸ்ராயேலின் ஒரு பகுதியாக இசிபோசத்தால் ஆளப்பட்டது *(2 சாமு 2:9)*. இந்தப் பள்ளத்தாக்கில்தான் ஏகூவின் புரட்சிக்காலத்தில் இசிரியேல் நகரத்தில் கொலைகளைச் செய்த இஸ்ராயேலரின் வலிமையை ஆண்டவர் உடைத்தெறிவார் என ஓசே *1:5*-இல் குறிப்பிடப்படுகிறது.

*3.* இசக்காரின் எல்லையில் அமைந்து நகரம் இது *(யோசு 19:18)*. எனினும் வடக்கே 11 கி.மீ. தொலைவில் கில்போவா மலை அடிவாரத்தில் அமைந்துள்ள இன்றைய செரீன்தான் இந்த ஊர் எனக் கூறப்படுகிறது. இங்கிருந்து இசிரியேல் சமவெளியை முழுவதுமாகப் பார்க்க முடியும். இது மத்திய தரைக் கடல் ஓரத்திலிருந்து யோர்தான் பள்ளத்தாக்கை அடையும் வழியிலும் பாலஸ்தீனத்தின் தெற்கு வடக்கு செல்லும் வழியிலும் அமைந்திருந்தது. சாலோமோ

னது ஆட்சியில் பானாவின் தலைமையில் அமைந்த ஐந்தாவது பிரிவைச் சேர்ந்த ஒரு நகரமாக இருந்தது இது *(1 அர 4:12)*. ஆனால் விவிலியத்தில் இது முக்கிய இடம் பெற்றது நாடு இரண்டாகப் பிரிக்கப்பட்ட பின்புதான். ஆகாபு ஆட்சி செய்தபோது இது அரசன் வசிக்கும் இடமாகியது *(1 அர 18:45-46)*. ஒருவேளை குளிர்கால வாசம் செய்யும் இடமாக இருந்திருக்கலாம் *(காண்க ஆமோ 3:15)* எலியா மிகவும் வன்மையாகக் கண்டித்த நாபோத்தின் திராட்சைத் தோட்டம் பற்றிய நிகழ்ச்சி நடைபெற்றது இங்குதான் *(1 அர 21)*. ஆகாபின் மகன் யோராம் அசீரிய அரசனான கசாயேலிடம் தான்பெற்ற காயங்களைக் குணப்படுத்த இங்கு தான் வந்தான் *(2 அர 8:29; 2 நாள் 22:6)*. ஏகூவின் கிளர்ச்சியின் போது இஸ்ராயேலில் வேறு எந்த நகரத்தையும்விட அதிகம் இரத்தம் சிந்தப்பட்ட நகரம் இதுவே. யோராம், ஈசபேல் மற்றும் இஸ்ராயேலின் அதிகாரிகள் கொல்லப்பட்டதும், யூதா நாட்டு அகசியா காயமடைந்ததும், ஆகாபின் புதல்வர்களது தலைகள் சமாரியாவிலிருந்து அனுப்பப்பட்டதும் இவ்விடம்தான் *(2 அர 9:1; 10:11)*.

**இசியா** *(ISSHIJAH - யாவே மறப்பாராக)*

புறவின மனைவியை விலக்கி விடுமாறு எஸ்ராவால் வற்புறுத்தப்பட்ட ஒரு லேவியர் *(எஸ் 10:31)*.

**இசுபா** *(ISHPAH - இறைவன் நீதி வழங்குவாராக)*

பென்யாமின் இனத்தைச் சேர்ந்த பெரியாவின் மகன் *(1 நாள் 8:16)*.

**இசுபான்** *(ISHPAN - இறைவன் நீதி வழங்குவாராக)*

பென்யாமின் இனத்தைச் சேர்ந்த சாசாக்கின் மகன் *(1 நாள் 8:22)*.

**இசுமயேலர்** *(ISHMAELITES)*

நில அமைப்பு இனக் குறிப்பு எதுவுமின்றி வட அராபியாவில் கெவிலா எகிப்து, யூப்பிரத்திசு இவைகளுக்கிடையே உள்ள பாலைவனப்பகுதியில் கி.மு. 8-ம் நூற்றாண்டு வரை வாழ்ந்த ஒரு குலத்தினரைக் குறிக்கும் பெயர். இவர்கள் சுற்றித் திரியும் வியாபாரிகளாகவும், கூடாரத்தில் வாழ்பவர்களாகவும், ஒட்டகம் வளர்ப்பவர்களாகவும் இருந்தனர் *(ஆதி 25:18)*.

*1. தோற்றம்:-* இவர்கள் ஆபிரகாமுக்கும் ஆகாருக்கும் பிறந்த இசுமயேலின் வழித் தோன்றல்கள் *(ஆதி 25:18-19)*. இசுமயேலின் தாய் எகிப்து நாட்டைச் சேர்ந்தவளாகையால் அவர்களின் நாளங்களில் சிறிது எகிப்திய இரத்தம் ஓடியது *(ஆதி 16:1)*. இசுமயேலின் மனைவியும் எகிப்து நாட்டைச் சேர்ந்தவளே என்று ஒரு பிற்கால மரபுகூறுகிறது *(ஆதி 21:8-21)*.

*2. இசுமயேல்குலத்தினரும்யோசேப்பும்:-* இசுமயேல் குலத்தினரைப் பற்றிய குறிப்பு விவிலியத்தில் சில இடங்களில் மட்டுமே காணப்படுகிறது. முதன் முதலில், எகிப்துக்கு வாசனைப் பொருட்களை ஒட்டகத்தின் மேல் ஏற்றிச் சென்ற இசுமயேலரிடம் யோசேப்பை விற்றதாகக் கூறப்பட்டுள்ளது *(ஆதி 37:25.27.28; 39:1)*. இஸ்மாயேலர் என்ற சொல் இங்கு பயன்படுத்தப்பட்டிருப்பது காலமயக்கமானது என்று பல வல்லுநர்கள் கருதுகிறார்கள். ஏனெனில், மூதாதையரின் தலைமுறை அட்டவணையின்-படி, இசுமயேல் யோசேப்பின் காலத்தைச் சேர்ந்தவராக இருக்க வேண்டும். எனினும் மேலே கூறப்பட்டது போல இசுமயேலர்கள் குறிப்பிட்ட நில அமைப்போ இனக் குறிப்போ இல்லாத நாடோடி வியாபாரிகளாதலால், தெளிவான காலக்கணிப்பு இங்கு இல்லை எனலாம்.

*3. இசுமயேலர்களும் மிதியானியர்களும்:-* நீதிபதிகளின் காலத்தில் இசுமயேலர்களும் மிதியானியர்களும் மிகவும் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தனர். கிதயோன் மிதியானியர்களைத் தோற்கடித்தபோது, இஸ்ராயேல் மக்கள் மிதியானியர்களிடமிருந்து கொள்ளையடித்த கடுக்கண்களை அவரிடம் கொடுக்க வேண்டுமென்று வேண்டுகோள்

விடுத்தார். ''அவர்களிடம் கடுக்கன் இருந்தது. ஏனெனில் அவர்கள் (மிதியானியர்கள்) இசுமயேலர்களாவர்'' (நீதி 8:24) என்று கூறப்பட்டுள்ளது. இசுமயேலர்களும் மிதியானியர்களும் நாடோடிகளாக இருந்ததால் ''இசுமயேலர்கள்'' என்ற சொல்லும் ''நாடோடி வியாபாரிகள்'' என்ற சொல்லும் ஒரே பொருளைத் தருவனவாக இருக்கலாம்.

*4.* இசுமயேலரைப் பற்றிய மற்ற குறிப்புகள்:- சங் 83:6-இல் இசுமயேலர்கள், இஸ்ராயேலுக்கு எதிராக சதி செய்யும் ஏதோமியரோடு குறிப்பிடப்பட்டுள்ளனர். 83-ம் சங்கீதம் பிற்காலத்தைச் சேர்ந்தது என்று பல வல்லுநர்கள் கருதுகிறார்கள். சிலர் அது மக்கபேயர் காலத்தைச் சேர்ந்தது என்றும் கூறுகிறார்கள். ஆனால் அது பிற்காலத்தைச் சேர்ந்தது என்பதற்கு சங்கீதத்திலே ஒரு சான்றும் இல்லை. இச்சங்கீதத்தில் குறிப்பிடப்பட்டிருக்கும் பெயர்களிலிருந்து (83:6-8) எட்டாம் நூற்றாண்டின் வரலாற்றுச் சூழ்நிலையில் இது எழுதப்பட்டது போன்று தெரிகிறது.

தாவீதின் சகோதரியான அபிகயில் இசுமயேல் குலத்தைச் சேர்ந்த எத்தேர் என்பவரை மணந்தாள் என்றும் (1 நாள் 2:17), தாவீதின் ஒட்டகங்களை இசுமயேல் குலத்தினனான ஒபில் கண்காணித்து வந்தான் என்றும் (1 நாள் 27:30) நாளாகமம் கூறுகிறது.

*5.* இசுமயேலர்களின் வழித்தோன்றல்கள்:- இசுமயேலிடமிருந்து 12 தலைவர்கள் உதித்ததாகக் கூறப்பட்டுள்ளது (ஆதி 17:20; 25:12-16). இதன்மூலம் இசுமயேல் குலத்தார் ஒரு ''பெரிய இனமாக'' உருவானார்கள் என்பதை எபிரேயர்கள் அறிந்து கொண்டனர் (ஆதி 21:18). விவிலியத்திற்குப் புறம்பே உள்ள பல வரலாற்று ஏடுகளில் இசுமயேலயர் பலரின் பெயர் காணப்படுகிறது. 7-8 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பல அசீரிய இலக்கியங்களில் நெபயோத்து, கேதார், தூமா, அபிதேல், மாசா, தேமா போன்ற இசுமயேலர்களின் பெயர்கள் காணப்படுகின்றன. மிபிசாம், மிசிமா, அதாது ஆகியவர்கள் இன்னும் யாரென்று கூறமுடியவில்லை. முதல் இருவரும் சிமெயோனுடைய புதல்வர்கள் என்று 1 நாள் 4:24-25 கூறுகிறது. ஒருவேளை இவர்கள் அராபிய இனத்தைச் சேர்ந்தவர்களாக இருக்கலாம். எத்தூர் என்பவர் அசீரிய ஆவணங்களில் காணப்படும் அகரியர் என்ற குலத்தோடு தொடர்புடையவர்; கேதமா என்பவர் பெனேகெதேம் என்பவரின் வழித்தோன்றல் எனத் தெரிகிறது. இந்த இசுமயேலர்கள் எல்லோரும் பாலஸ்தீன் நாட்டிற்கு கிழக்கேயுள்ள சீரியா பாலைவனத்தில் கி.மு. முதலாம் ஆயிரம் ஆண்டுக் காலத்தின் முதலாம் நூற்றாண்டுகளில், செழிப்போடு வாழ்ந்து வந்தார்கள். கி.பி. முதலாம் நூற்றாண்டில் யோசிபஸ் இசுமாயேலர்களை அராபியாவோடு தொடர்புபடுத்தினார். ஆனால் பழைய ஏற்பாடு முழுவதிலும் இசுமயேலர்கள், அரபா தீபகற்பத்தில் குடியேறிய யோக்கிதான் இனத்தாரினின்று வேறுபடுத்தப்படுகிறார்கள்.

**இசுமயேல்** (ISHMAEL - இறைவன் கேட்டருளினார்)

முதலிலேயே இசுமயேல் என்ற பெயரின் பொருள் பற்றிய குறிப்பு விவிலியத்தில் தெளிவாக காணப்படுகிறது; ''''உன் இன்னலைக் கண்டு ஆண்டவர் இரங்கினதாலே'' அவனுக்கு இசுமயேல் என்று பெயரிடுவாயாக'' (ஆதி 16:11). இப்பகுதி யாவே மரபில் இருந்தாலும் மூலத்தில், இது ''எலோகிம்'' பாரம்பரியத்தில் இருந்திருக்க வேண்டும். இதைப் பெயரே சுட்டுகிறது.

விவிலியத்தில் மேலும் இரு பகுதிகளில் இதன் பொருள் பற்றிக் கூறப்பட்டுள்ளது; அவை எலோகிம் மரபிலிருந்து ஒன்றும் (ஆதி 21:17), குருக்கள் மரபிலிருந்து மற்றொன்றும் (17:20) ஆகும். இரண்டுமே 'கேட்டல்' என்றதன் முற்றுப்பெற்ற வினைச் சொல்லையே பயன்படுத்துகின்றன. ''கடவுள் கேட்கிறார்'', ''கடவுள் கேட்பார்'' என்று இதை மொழி பெயர்க்கலாம் என்றாலும் ''கடவுள் கேட்பாராக'' என்ற வியங்கோளில் மொழி பெயர்த்தலே நல்லது. மாரி

ஏடுகளில் இப்பழைய ஏற்பாட்டுப் பெய ருக்கு இணையாக யா-அஸ்-மா-அக்-அன் என்ற பெயர் காணப்படுகிறது.

*1.* ஆபிரகாமுக்கும் ஆகாருக்கும் பிறந்த வர். ஈசாக்கின் ஒன்று விட்ட சகோதரன் *(ஆதி 25:12; 1 நாள் 1:28)*. ஆதியாகமத்தில் வரும் மூன்று மரபுகளிலும் இசுமயேலைப் பற்றிய மரபு காணப்பட்டாலும், இசுமயேல் என்ற நபரைப் பற்றி சிறு குறிப்புதான் காணப்படுகிறது.

யாவே மரபின் ஆசிரியர், இசுமயேல் என்ற சொல்லின் பொருளை விளக்கி விட்டு, ''அவன் கொடும் குணமுள்ள மனித னாய் வளர்வான். அவனுடைய கை எல் லோருக்கும் விரோதமாகவும், எல்லோரு டைய கையும் அவனுக்கு விரோதமாகவும் ஓங்கியிருக்கும். தன் சகோதரர் அனைவரும் வாழ்ந்து வரும் இடத்தில் அவர்களுக்கெதி ராக அவன் குடியிருப்பான்'' என்றும் கூறுகி றார் *(ஆதி 16:12)*. ஆனால் இது இசுமயேலர் கள் என்னும் குலத்தைப் பற்றிக் கூறப்பட்ட தாகும்.

'எலோகிம்' மரபின்படி, இசுமயேல் சாரா வின் புதல்வனான ஈசாக்கோடு கேலி பண்ணி விளையாடுவதை சாரா கண்டு, பொறாமை கொண்டு, ஆகாரையும் இசும யேலையும் துரத்திவிட வேண்டுமென்று ஆபிரகாமை வற்புறுத்தினாள். பெயேர்-செபா என்னும் பாலைவனத்திலே ''கடவுள் குழந்தையின் குரலைக் கேட்டு'', தண்ணீர்க் கிணறு ஒன்றை ஆகார் காணச் செய்தார். கடவுளின் துணையோடு இசுமயேல் பரான் என்னும் பாலைவனத்தில் வாழ்ந்தான். அப் போது அவனுடைய தாய் எகிப்து நாட்டி னின்று ஒரு பெண்ணைக் கொண்டு வந்து அவனுக்கு மணமுடித்து வைத்தாள் *(ஆதி 21:8-21)*. ''வில் வித்தையில் கைதேர்ந்தவனா னான்'' *(21:20)* என்ற குறிப்பு இசுமயேல ரைப் பற்றியதாகும். ஈசாக்கு, இசுமயேல் இவர்களின் பிரிவு பற்றி விவரிப்பு, இவர்க ளைப் பற்றியதைவிட இவர்களின் குலத்தின ரைப் பற்றியதேயாகும்.

குருக்கள் மரபு, இசுமயேலைப் பற்றி சில குறிப்புகளைத் தருகிறது. ஆகார் இசுமயே லைப் பெற்றபோது ஆபிரகாமுக்கு வயது எண்பத்தாறு என்றும், ஆபிரகாமால் அவன் பெயரிடப்பெற்றான் என்றும் *(16:15-16)* குருக்கள் மரபு ஆசிரியர் கூறுகிறார். 13-ம் வயதில் இசுமயேலுக்கு விருத்தசேதனம் செய்யப்பட்டது *(17:22-27)*; ஆபிரகாம் இறந்த போது ஈசாக்கும் இசுமயேலும் சேர்ந்து அவரை அடக்கம் செய்தார்கள் *(25:9)*; இசுமயேல் 137 வயது வரை வாழ்ந் தார் *(25:17)* என்ற செய்திகளையும் அவர் குறிப்பிடுகின்றார். மேலும், இசுமயேலின் வழித்தோன்றல்களாகிய அவரது 12 புதல்வர் களையும் *(ஆதி 25:12-16; 1 நாள் 1:29-31)*, மகலாத்து என்ற புதல்வியையும் *(ஆதி.28:9)* குறிப்பிடுகின்றார். ஆனால் இப்பட்டியல் கள் இசுமயேலைவிட இசுமயேலர்களுக்கே மிகவும் பொருந்தும்.

இசுமயேலைப் பற்றி சிறிதளவே கூறப் பட்டிருப்பினும் இசுமயேல் என்ற குழந்தை மனிதனின் அவநம்பிக்கைக்கும் இறைவ னின் நன்மைத்தனத்திற்கும் சான்றாக விளங் குகிறது.

கடவுள் ஆபிரகாமுக்கும் சாராவுக்கும் ஒரு மகன் பிறப்பான் என்று உறுதியளித்திருந்தார் *(ஆதி 15:4; 17:16.19.21; 18:10.14)*. இருந்தா லும், இறைவன் இவ்வாக்குறுதியை நிறை வேற்ற முடியுமா என அவர்கள் ஐயம் கொண்டனர் *(17:17; 18:12-15; 15:2-3)*. விரக் தியடைந்த நிலையில், ஆகாரோடு சேர்ந்து ஆபிரகாமுக்குக் குழந்தை ஒன்று பிறந்தது *(16:1-6)*. ஈசாக்கு பிறந்த பிறகு இசுமயேல் ஈசாக்கோடு பங்காளியாக இருக்கக் கூடாது என்பதற்காக சாரா ஆபிரகாமிடம் சொல்லி ஆகாரையும் இசுமயேலையும் துரத்தி விட் டாள் *(21:8-10; கலா 4:21-31)*. ஆதி 21 மனிதனிடம் சந்தேகம் எவ்வாறு வளர்கிறது என்று காட்டுகிறது. சாரா அவநம்பிக்கை யுற்ற நிலையில் பிறந்த குழந்தையாகிய இசுமயேல் இறைவனின் நன்மைத்தனத்தை அவர்களுக்கு உணர்த்துவதற்கு தடையாக இருப்பதாக ஆபிரகாமும் சாராவும் நினைத்

தார்கள். இந்நிலையின் கொடுமையைக் குறைத்துக்காட்ட வல்ல, பத்து வருடங்கள் காத்திருத்தல் (*ஆதி 16:3*), வேலைக்காரியின் அலட்சியம் (*16:4*), சாராவின் வருத்தம் (*16:5*), ஆகார், இசுமயேல் இவர்கள்மேல் ஆபிரகாம் கொண்டிருந்த அன்பு (*21:11,14*) போன்ற சூழ்நிலைகள் இருந்தபோதிலும், இசுமயேலின் வரலாறு விசுவாசத்திற்கும் சந்தேகத்துக்கும் இடையே நிகழும் இடுக்கண் நிலையை படம் பிடித்துக் காட்டுகிறது. இக்கண்ணோட்டத்தில் பார்த்தோமென்றால், ஆபிரகாம், சாரா, ஆகார் எல்லாருமே விசுவாசம் குறைந்தவர்களென குற்றம் சாட்டப்படலாம்.

இசுமயேலின் வழியாக இறைவன் தாம் நம்பிக்கைக்குரியவர் என்றும், கருணை மிகுந்தவர் என்றும் நிரூபிக்கிறார். ஒவ்வொருவருக்கும் தாம் அளித்த வாக்குறுதியை நிறைவு செய்வதில் இறைவன் விசுவாசத்துக் குரியவர். இறைவன் ஆபிரகாமுக்கும் சாராவுக்கும் ஈசாக்கைக் கொடுத்ததோடு மட்டுமல்லாமல், ஆகாரின் குரலைக் கேட்டு இசுமயேலைக் காப்பாற்றி, அவனை மாபெரும் இனமாக விருத்தியடையச் செய்து, பன்னிரண்டு தலைவர்களைப் பெறச் செய்தார் (*ஆதி 16:01; 17:20; 21:13; 25:16*). யூத, மகமதியப் பாரம்பரியங்களில் இசுமயேல் பாலைவனத்தில் வாழும் இனத்தின் மூதாதையராகக் கருதப்படுகிறார். அராபியர்கள் இவரைத் தங்கள் மூதாதையராக வணங்குகின்றனர். மகமதியப் பாரம்பரியப்படி இவரும் ஆகாரும் மெக்காவிலுள்ள புனித காபாவில் அடக்கம் செய்யப்பட்டிருக்கின்றனர்.

*2.* நெத்தனியாவின் மகன். யூதாவின் அரச குலத்தில் பிறந்த இவர் நெபுக்கதுனேசார் கி.மு.586-இல் ஏற்படுத்திய யூதேய பொம்மை அரசாட்சியை வீழ்ச்சியடையச் செய்தார் (*2 அர 25:25*). அம்மோனிய அரசனின் தூண்டுதலால் (*எரே 40:14; காண்க 41:10, 15*), இசுமயேல் தன்னோடு பத்து பேரைச் சேர்த்துக் கொண்டு மிசுப்பாவுக்கு வந்து கெதலியாவையும் அவரோடிருந்த யூதரையும் கல்தேயர்களையும் வெட்டி வீழ்த்தினார் (*எரே 40:7-10. 13-16; 41:1-3*). பிறகு நம்பிக்கைத் துரோகம் செய்து மிசுப்பாவிற்குத் தொழ வந்த எழுபது இஸ்ராயேலர்களையும் கொன்றார் (*எரே 41:4-9*). மிசுப்பா நகரின் மற்ற குடிமக்களை அம்மோனியர்களிடம் ஒப்படைத்து அடிமைகளாக்கினார். இவர்களை யோகனான் மீட்டார். ஆனால் இசுமயேலும் அவனது எட்டுக் கூட்டாளிகளும் தப்பியோடிவிட்டார்கள்.

*3.* பென்யாமின் குலத்தைச் சேர்ந்த சவுலின் வழித்தோன்றலான ஆசேல் என்பவரின் மூன்றாவது புதல்வர் (*1 நாள் 8:38; 9:44*).

*4.* கி.மு. ஒன்பதாம் நூற்றாண்டில் யோசாபாத்து அரசனின் காலத்தில் யூதாவில் ஆளுநராக இருந்த செபதியாவின் தந்தை (*2 நாள் 19:11*).

*5.* யோகானானின் மகன். யோவாசை அரசனாக்க உதவி செய்த ஐந்து ''நூற்றுவர் தலைவர்களில்'' ஒருவர் (*2 நாள் 23:1*).

*6.* எஸ்ராவின் காலத்தில் தங்களது புறவின மனைவிகளை விலக்கியவர்களில் ஒருவரான இவர், பசிகூரின் புதல்வராவார் (*எஸ்ரா 10:22*).

**இசுமாக்கியா** (ISMACHIA - *யாவே ஆதரவு அளிக்கிறார்*)

அரசன் எசக்கியா காலத்திய ஒரு லேவியர். ஆலய வரிகளுக்கு மேற்பார்வையாளராக இருந்தார் (*2 நாள் 31:13*).

***இசுமாயா*** (ISHMAIAH - *யாவே கேட்கிறார்*)

*1.* கிபயோனைச் சேர்ந்தவர். தாவீது சிக்கிலாகு நகரில் இருந்தபோது அவருடைய படையில் சேர்ந்த பென்யாமின் குலத்தினரான படைவீரர்களில் ஒருவர் (*1 நாள் 12:4*). தாவீதின் படையில் திறமை வாய்ந்த முப்பதின்மருக்கு இவர் தலைவர் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. தாவீதின் ஆரம்ப காலத்தில் இருந்த இந்த முப்பது பேரும் பென்யமின் குலத்தைச் சேர்ந்தவர்களாக இருந்திருக்கலாம். பிற்காலத்தில் தாவீதின் வலிமைமிக்க

''முப்பது பேரிலிருந்து'' இவர்கள் வேறுபட்டவர்கள்.

2. தாவீது அரசனின் காலத்தில் செபுலோனியருக்குத் தலைவனாகத் திகழ்ந்தவர். ஒபதியாவின் மகனாவார் (1 நாள். 27:19).

**இசுமெராய்** (ISHMERA' - யாவே பாதுகாப்பாராக)

பென்யாமின் குலத்தைச் சேர்ந்த ஒரு குடும்பத் தலைவர். ஏல்பாலின் புதல்வர்களில் ஒருவர் (1 நாள். 8:18).

**இசுரகியர்** (IZRAHITE (தேவன்) ஒளிர்வாராக)

தாவீதின் படையில் 5-ஆம் பிரிவுக்குத் தளபதியான சங்கூத்துக்குச் சாற்றிக் கூறப்படும் ஓர் இனப்பெயராகும் (1 நாள் 27:8) இசுர என்ற குடும்பத்திலிருந்தோ நகரிலிருந்தோ வந்தவர். இப்பெயர் விவிலியத்தில் ஒரு தடவைதான் வருகிறது. இப்பெயர் இசுரகியா என்ற பெயரிலிருந்து வருவதாகச் சில அறிஞர்கள் கருதினாலும், இது அநேகமாக 1 நாள் 27:11-இல் வரும் செராகியரோடு தொடர்புடையதாக இருக்கலாம்.

**இசுரகியா** (IZRAHIAH - யாவே ஒளிர்வாராக, யாவே எழுவாராக)

இசக்காரின் இனத்தைச் சேர்ந்த தோலாவின் வழித்தோன்றலும் ஊசியின் மகனுமாவார் (1 நாள் 7:3).

**இசுரகியா** (JEZRAHIAHI 'P, )

நெகமியா ஆலயத்தில் லேவியர் பாடர் குழுவின் தலைவர் (நெக 12:42). 1 நாள் 7:3-இல் இசுரகியா (முபுமுபு)என்றழைக்கப்படுகிறார்.

**இசுரி** (IZRI - யாவே உருவாக்கினார்)

தாவீதின் காலத்தில் ஆலயப்பாடகர்களின் ஐந்தாம் குழுவின் தலைவர் (1 நாள் 25:11). ஒருவேளை எசுத்தூனின் மகனாக இருக்கலாம். 1 நாள் 25:3-இல் வரும் செரியும் இவரும் ஒரே ஆளாக இருக்கலாம்.

**இசுலியா** (IZLIAH - முடிவில்லாத)

பென்யாமின் குலத்தைச் சேர்ந்த சாரயிமின் வழித்தோன்றலும் ஏல்பாலின் மகனுமாவார் (1 நாள் 8:18).

**இசுவா** (ISHVAH - ஒத்திரு, போன்றிரு)

யாக்கோபு, சிலிப்பா இவர்களின் வழி வந்த ஆசேரின் இரண்டாவது மகன் (ஆதி 46:17; 1 நாள் 7:30). இதற்கு இணையான எண் 26:44-இல் காணப்படும் பட்டியலில் இப்பெயர் குறிப்பிடப்படாததால், இப்பெயர் இசுவி என்ற பெயரின் வேறொரு வடிவமாக இருக்கலாம்.

**இசுவி** (ISHVI - கை முடமானவன்)

1. ஓர் இனப் பெயர் முதல்வரின் பெயர். ஆசேரின் மூன்றாவது புதல்வர் (ஆதி 46:17; எண் 26:44; 1 நாள் 7:30). இவரது வழித்தோன்றல்கள் இசுவியர் என்றழைக்கப்பட்டனர் (எண் 26:44).

2. சவுல் அரசனின் புதல்வர்களில் ஒருவர் (1 சாமு 14:49). சில அறிஞர்கள் இவன் இசிபோசத்துதான் எனக்கருதுகின்றனர்.

**இசை** (MUSIC)

யூதர்களின் கலாச்சாரத்தில் இசை என்பது ஒரு முக்கிய பங்கை வகித்துள்ளது என்பதை பழைய ஏற்பாட்டுக் குறிப்புகளிலிருந்து நாம் அறிகின்றோம். இலாமேக்கின் மகன் யூபால் ''யாழ் மீட்டுவோர், குழல் ஊதுவோர் அனைவரின் தந்தை'' என அழைக்கப்படுகின்றார் (ஆதி 4:21).

தொடக்க காலத்தில் இசை வெளி உலகக் காரியங்களுக்குத்தான் பயன்படுத்தப்பட்டது. பிறகுதான் இசை ஆலய வழிபாடுகளில் பயன்படுத்தப்பட்டது. இசையைப் பற்றி முதல் குறிப்பு லாபான் தன் மருமகன் யாக்கோபு இரகசியமாக ஓடியதைக் கேட்டு, அவனிடம் ''எனக்கு ஒன்று அறிவிக்காமல் என்னை ஏமாற்றிவிட்டு, ஏன் இரகசியமாய் ஓடிவந்தாய்? நான் மேளதாள வாத்தியங்களுடன் மகிழ்ச்சியாய் உங்களை வழியனுப்பி வைத்திருப்பேனே'' என்று கூறுவதாகக்

காணப்படுகின்றது (31:27). மகிழ்ச்சியான நேரங்களில் பாடலுடன் ஆடலும் ஆடி நேரத்தைக் கழித்தார்கள். போருக்குப்பின் வெற்றியின்பாடல் பாடப்பட்டது (யாத் 15:1 தொ; நீதி 5:1 தொ.). பாரவோன் மன்னனும் அவன் குதிரைப்படையும் வீழ்ச்சியுற்றதைக் கேட்டு மோசேயின் தங்கை மிரியாமும் மற்றுமுள்ள பெண்களும் கஞ்சிராக் கொட்டிக் கொண்டு பாடியும், ஆடியும் கொண்டாடினர் (யாத் 15:20 தொ.). யோசபாத்தும் அவனுடைய மக்களும் இறைவன் தங்களுக்கு கொடுத்த வெற்றியைக் கண்டு, எருசலேமுக்கு வந்து தம்புருகளையும், சுரமண்டலங்களையும் எக்காளங்களையும் ஒலித்து ஆண்டவரின் ஆலயத்திற்குள் நுழைந்தனர் (2 நாள் 20:28). வழக்கமாக திருவிழாக்களில் இசை, பாடல், ஆடல் அனைத்தும் இருக்கும் (ஏச 5:12; ஆமோ 6:5), அறுவடையின் போது திராட்சைத் தோட்டங்களிலே பாடல்கள் பாடுவார்கள் (ஏச 16:10). திருமண விழாக்களிலும் (1 மக் 9:37.39) இவைகள் இருக்கும். அரசர்கள் தங்களுக்கு என தனியாக பாடகர் குழுவினரையும் இசைக்கலைஞர்களையும் வைத்திருந்தார்கள் (2 சாமு 19:35; திருவுரை 2:8). ஆடு மேய்க்கும் சிறுவன் கூட கையில் யாழ் வைத்திருந்தான் (1 சாமு 16:18). இளைஞர்கள் வாயினின்று இசையைக் கேட்டு மகிழ்ந்தார்கள் (புல 5:14). விலைமாதர்கள் வீணையைக் கையிலெடுத்து இசையை எழுப்பி தங்களை நினைக்கச் செய்தார்கள் (ஏச 23:16)

துக்கத்திலும் மகிழ்ச்சியிலும் இசையை எழுப்பினார்கள். இதற்கு புலம்பல் ஆகமமும், சவுல், யோனத்தான் மீது தாவீது பாடிய புலம்பலும் எடுத்துக்காட்டாக உள்ளன (2 சாமு 1:18-27). அடக்கத்தின் போது புலம்புவதற்காக புலம்புதலையே தொழிலாகக் கொண்டவர்களை வாடகைக்கு அமர்த்தினார்கள். இவர்களில் தாரை ஊதுவோரும் சேர்த்துக் கொள்ளப்பட்டனர் (மத் 9:23). ஒரு ஏழையின் மனைவியின் அடக்கத்திற்கு கண்டிப்பாக இரண்டு புல்லாங்குழல் வாசிப்பவர்களும் ஒரு ஒப்பாரி வைக்கும் பெண்ணும் இருப்பார்கள் என்று பழம் ஏடுகளிலிருந்து அறிகிறோம்.

இசை யூதர்களின் கலாச்சாரத்தில் மட்டுமன்று அவர்களின் சமயத்திலும் முக்கிய பங்கை வகித்தது. 1 நாள் 15:16-24-இல் தாவீது எவ்வாறு லேவியர் பாடகர் குழுவை அமைத்தார் என்பது தெளிவாகக் கொடுக்கப்பட்டுள்ளது. இவைகளைத் தவிர இன்னும் பல குறிப்புகள் மறைமுகமாக இசை ஆலய வழிபாட்டிற்குப் பயன்படுத்தப்பட்டதாகக் கூறுகின்றன.

யூத இசைக்கலைஞர்கள் எந்த வகையைச் சார்ந்து இசையை இசைத்தார்கள்? ஏதாவது ஒரு முறையைக் கைப்பற்றினார்களா? என்பது நமக்கு தெளிவாகப் புலப்படவில்லை. யூதர்களின் இசைக்குறிமானத்தை வெளியிடுவதற்கு முயற்சி செய்கின்றார்கள். ஆனால் இவ்விசைக்குறிமானங்கள்ஒப்பிக்கும்முறையில்தான் உள்ளதே தவிர அவை இசைக்குறிப்பாகக் காணப்படவில்லை. இசைக்கருவிகளோடு இசைக்கப்பட்ட இசை (ஆலய வழிபாட்டில்) நமக்கு தெளிவாகத் தெரியவில்லை என்றாலும் சங்கீதங்களின் அமைப்பைக் கொண்டு, இது இருபாடகர் குழுவினால் பாடப்பட்டதா (சங் 13:20;38) அல்லது ஒரே பாடகர் குழுவினால் பாடப்பட்டதா (சங் 86:88) அல்லது பொதுநிலையினர் அனைவராலும் பாடப்பட்டதா என்பதைப் புரிந்து கொள்ளலாம். நாடு கடத்தப்பட்ட பின் வந்த காலத்தில் பாடகர்குழுவானது ஆண்பாடகர்களையும் பெண்பாடகர்களையும் சமமாகக் கொண்டிருந்தது. அவர்கள் பாடினார்கள் என்று கூறுவதைக் காட்டிலும் ஓதினார்கள் என்று கூறலாம். ஆனால் எப்படி ஓதினார்கள் என்பது நன்கு தெரியவில்லை. கண்டிப்பாக இப்போதுள்ள முறையை விடுத்து வேறு விதமாகத்தான் இருந்திருக்க வேண்டும்.

## இசைக்கருவிகள் (MUSICAL INSTRUMENTS)

ஏடுகளிலிருந்தும் தொல்பொருள் கண்டுபிடிப்புகளிலிருந்தும் விவிலியத்தில் வரும் இசைக் கருவிகளைப் பற்றி அறிகிறோம்.

இக்கருவிகளைப் பாகுபடுத்துவதும் தமிழில் மொழி பெயர்ப்பதும் கடினம். அவற்றிற்குரிய எபிரேயச் சொற்களைக் கொண்டே பாகுபடுத்திப் புரிந்து கொள்வது அவசியம்.

எபிரேயர்கள் தாங்கள் பயன்படுத்திய இசைக்கருவிகளை நரம்பிசைக் கருவிகள், குழல் இசைக் கருவிகள், தாளக்கருவிகள் என மூன்று பெரும் வகைகளாகப் பிரித்தனர் என்று கூறலாம்.

I. நரம்பிசை அல்லது தந்திக் கருவிகள்:- இவை கைவிரல்களால் அல்லது கம்பியினால் வருடி இசைக்கப்படும். மூன்று முதல் பன்னிரண்டு நரம்புகள் இருக்கும். பெரும்பாலும் செல்வந்தர்களால் பயன்படுத்தப்பட்டதால் வெள்ளியாலும் தந்தத்தாலும் செய்யப்பட்டிருக்கும். இவற்றில் குறிப்பிடத்தக்கவை:-


நரம்பிசை அல்லது தந்திக் கருவிகள்

1. ''கின்னோர்'' எனப்படும் யாழ் *(ஆதி 4:21; 1 சாமு 10:5; 16:16; 2 சாமு 6:5; யோபு 21:12; சங் 150:4; ஏச 5:12).*

2. ''நேபெல்'' எனப்படும் வீணை. கின்னோரைவிடப் பெரியது. பல நரம்புகளையுடையது *(1 சாமு 10:5; 2 சாமு 6:5; சங் 150:3; ஏச 5:12; 14:11; ஆமோ 5:23; 6:5).*

3. முக்கோணவடிவமுடைய நான்கு நரம்புகளைக் கொண்ட கருவி *(தானி. 3:5.7.10.15).*

II. குழலிசை அல்லது ஊது கருவிகள்:-

1. ''கலீல்'' எனப்படும் நாகசுரம். இது பலவகைப்பட்டது. சில சமயம் இரட்டைக் குழல் கொண்டதாக இருக்கும் *(1 சாமு 10:5; 1 அர 1:40; ஏச 5:12; 30:29; தானி 3:5.7.10.15).*



குழலிசை அல்லது ஊது கருவிகள்

2. ''ஊகாபு'' எனப்படும் பல குழல்கள் கொண்ட பல ஒலி எழுப்பக் கூடிய கருவி *(ஆதி 4:21; யோபு 21:12; 30:31).*

3. பைக்குழல் *(தானி 3:5.7.10.15).*

*4.* எக்காளம், கொம்பு: எபிரேயர்களி டையே இக்கருவிகள் ஆட்டுக்கொம்பாலும் மாட்டுக்கொம்பாலும் செய்யப்பட்டிருக்கும் *(யோசு 6:4; தானி 3:5.7.10.15; நீதி 3:27; சங் 150:3)*. சில சமயம் வெள்ளியினாலும் *(எண் 10:1)* வெண்கலத்தினாலும் செய்யப் பட்ட எக்காளங்கள் பயன்பட்டன.

III. தாளக்கருவிகள்:-

*1)* ''தோபு'' எனப்படும் கஞ்சீரா, சிறுமு ரசு அல்லது கை முரசு. இது மேளம் என்றும் *(1 சாமு 18:5; 2 சாமு 6:5; 18:1; ஏச 5:12)* தம்புரு என்றும் *(யாத் 15:20; யோபு 21:12; சங் 68:23; 150:4)* கூறப்படுகிறது. இவற்றுள் தமுக்கு சதங்கை போன்றவை உள்ளடங்கும்.



தாளக்கருவிகள்

*2)* கைத்தாளம்: இது பலவகைப்பட்டது *(2 சாமு. 6:5; 1 நாள் 16:5)* சிங்கி, அல்லது சால்ரா போன்றவை இதனுள் அடங்கும்.

*3)* முக்கோணக்கருவி *(1 சாமு 18:6)*

IV. ஒவ்வொருகருவியும் எபிரேயக் கலாச் சாரத்தின் வெவ்வேறு கூறுகளோடு தொடர் புடையது. இவை வேறுபட்ட சூழ்நிலை யில் பயன்பட்டன. இவ்வாறு கின்னோர், நேபெல் போன்றவைக் கைத்தாளக் கருவிக ளுடன் ஆலய வழிபாட்டில் பயன்பட்டதா கத் தெரிகிறது *(1 அர 10:12; 1 நாள் 25:1; 2 நாள் 29:25)*. குழலிசைக் கருவிகள் பொழு துபோக்கிற்கும் சிற்றின்பச் சூழ்நிலையிலும் பயன்பட்டன *(ஏச 5:12)*. ஆகையால் ஆலய வழிபாட்டில் பயன்படவில்லை. புனித மேட்டு இடங்களுக்குப் போய் வரும் ஊர்வ லத்தில் பயன்பட்டன *(1 சாமு 10:5; 1 அர 1:40)*. திருப்பயணிகள் விழா ஊர்வலத்தில் இவற்றைப் பயன்படுத்தினர் *(ஏச 30:29)*. மரணதுக்க காலத்தில் இவை சிறப்பாக பயன்பட்டதாகத் தெரிகிறது *(எரே 48:36; மத் 9:23)*. தோபு போன்ற கருவிகள் கொண் டாட்டங்களிலும் வரவேற்புகளிலும் பயன் பட்டன; இவற்றை பெரும்பாலும் பெண் களே கையாண்டனர் *(ஆதி 31:27; யாத் 15:20; நீதி 11:34; 1 சாமு 18:6)*. முறையான சடங்குக் கொண்டாட்டங்களில் தவிர, இவை குழுக் கொண்டாட்டங்களிலோ இறைவாக்குப் பரவசநிலையிலோ பயன் பட்டிருக்கலாம் *(2 அர 3:15)*.

எக்காளங்களும் கொம்புகளும் முறை யான இசைக்கருவிகள் அன்று. பேரொலி எழுப்பி அடையாளம் காட்டப் பயன்பட் டன *(1 நாள் 15:28; 2 நாள் 15:14; சங் 98:6; ஓசே 5:8)*. போரை அறிவிக்க எக்கா ளம் பயன்பட்டது *(எண் 31:6; நீதி 7:19-20; 2 நாள் 13:12.14; 1 கொரி 14:8)*. எக்காளங் கள் முக்கிய நிகழ்ச்சிகளையும் *(1 அர 1:34.39)* ஆலயச்சடங்குகளில் முக்கியகட்டங் களையும் *(எண் 10:2.7-8)* அறிவித்தன. பெரும் விழாக்களில் இன்றும் யூதர்கள் இதைப் பயன்படுத்துகின்றனர். இறுதிக்கா லத்தை முன்னறிவிக்கும் கருவியாக இது குறிக்கப்படுகின்றது *(மத் 24:31; 1 கொரி 15:52; 1 தெச 4:16)*. ஆட்டுக்கொம்புகள், எருசலேமுக்குள் பெட்டகத்தைக் கொண்டு போதல் *(2 சாமு 6:15)* உடன்படிக்கையைப் புதுப்பிக்கும் சடங்கு *(2 நாள் 15:14)* போன்ற சிறப்புப் பொருள் பொதிந்த நிகழ்ச்சிகளில் பயன்பட்டுள்ளன. இதன் சடங்குப் பொருள்

எத்தகையதென்றால் பழைய ஏற்பாட்டு இசைக் கருவிகளில் இது மட்டுமே யூதச்சமயச்சடங்குகளில் இன்றும் பயன்படுகிறது.

**இச்சை (LUST)**

'இச்சை' என்ற வார்த்தையால் மொழிபெயர்க்கப்படும் விவிலிய வார்த்தைகள், ''உணர்ச்சி மிகுந்த ஆசை'' குறிப்பாக ''பாலுணர்வு சம்மந்தப்பட்ட ஆசைகள் '' அல்லது ''உலக இன்பங்களின் மீதான ஆசைகள்'' என்ற பொருளினை கொண்டதாக அமைந்துள்ளன.

பழைய ஏற்பாட்டில், இந்த வார்த்தை, மட்டுமீறிய புலனுணர்வு கொண்ட அன்பினைக் குறிப்பிடுவதற்காக பயன்படுத்தப்பட்டுள்ளது. இத்தகைய உணர்ச்சி, மத விபச்சாரம் மற்றும் பாலுணர்வு இழிவு ஆகியவற்றின் பின்னணியில் முழு இஸ்ராயேல் மக்களுக்கும், மற்ற நாட்டினருக்கும் சாற்றிக் கூறப்படுகிறது. இச்சையை குறிப்பிடுவதற்கு வேறு பல உருவகங்களும் பயன்படுத்தப்பட்டுள்ளன. பாபிலோன் ''மேய்ச்சலுக்குப் போன காளைகள் கும்மாளம் அடிப்பதாகவும், வலிமைமிக்க வரிக்குதிரைகள் கனைப்பதாகவும்'' விவரிக்கப்பட்டுள்ளது *(எரே 50:11)*. இது நாட்டினுடைய நிலையைப்பற்றி குறிப்பிடுவதாக அமைந்தாலும் தனிப்பட்டவரின் இச்சைபற்றிய அநுபவங்களையும் பிரதிபலிக்கிறது.

புதிய ஏற்பாடு பாலுணர்வு ஆசையுடன் கூடிய ''இச்சை'', உணர்ச்சி பெருக்கு, ''பற்றியெரியும் காம ஆசை'' போன்ற சொற்களைக் கொண்டுள்ளது. ஒருவன் ஒரு பெண்ணை இச்சையுடன் நோக்க கூடாது *(மத் 5:28)*. உடல் இச்சையில் மூழ்கும் பாவிகள், அவர்களுடைய உள்ளத்து இச்சைகளின்படி தங்களையே அசுத்தத்திற்குக் கையளித்து ஒருவரோடொருவர் தங்கள் உடல்களை இழிவு படுத்தினர் *(உரோ 1:24)*. உலகிற்கடுத்தவைகளான தீய உணர்ச்சி, தீய விருப்பம் ஆகியவற்றை சாகச் செய்ய வேண்டும் *(கொலோ 3:5)*; விசுவாசி, கடவுளை அறியாத புறவினத்தார் காம இச்சைகளுக்கு இடங்கொடுப்பதுபோல் செய்யாமல், தன் உடலை அடக்கி ஆண்டு மரியாதையாய் நடத்தி, பரிசுத்தமாய் காப்பாற்ற அறிந்திருக்க வேண்டும் *(1 தெச 4:4-5)*. இளமைக்குரிய இச்சைகளைத் தவிர்த்து விடவேண்டுமென்று திமோத்தேயுவிற்கு அறிவுரை கொடுக்கப்பட்டுள்ளது *(2 திமோ 2:22)*. ஏனென்றால் ஒருவன் சோதனைக்குட்படுவது, தன் சொந்த இச்சையாலேதான். இதுவே பாவமாக வளர்ந்து சாவை ஈன்றெடுக்கிறது *(யாக் 1:14-15)*.

விசுவாசிகள் அனைவரும், ஆன்மாவிற்கு எதிராகப் போர்புரியும் ஊனியல்புக்குரிய இச்சைகளினின்று விலகி, புறஇனத்தாருக்கும் முன்மாதிரிகையாக நன்னடத்தையில் சிறந்து விளங்க வேண்டுமென அறிவுறுத்தப்படுகிறார்கள் *(1 பேதுரு 2:11-12)*. இனி அவர்கள் மனித இச்சைகளின்படி வாழாமல், கடவுளின் திருவுளப்படி வாழ்பவர் ஆகின்றனர் *(4:2)*. இச்சையும், தீய உணர்ச்சிகளுமே இவ்வுலகில் ஊழல்களையும், தீமையினையும் உருவாக்குகின்றன *(2 பேதுரு 1:4; 2:10; 2:13-14. 18.20-22)*.

**இஸ்ராயேலின் பெயர்களும் தொடர்புகளும்**

*1.* முதுபெரும் தந்தை யாக்கோபுவின் பெயர்:- எலோகிம் (இறைவன்) யாக்கோபுடன் செய்த மற்போரைப்பற்றியும் அதன் விளைவாக யாக்கோபின் பெயர் இஸ்ராயேல் என மாற்றப்பட்டதையும் ஆதி *32:22* தொ குறிப்பிடுகின்றது. இந்நிகழ்ச்சி இப்பெயரின் பொதுப்பாணி சொல்லிலக்கத்தைக் கொடுக்கிறது. இதன்படி, இச்சொல் 'ஏல் மற்போரிடுகிறார்' என்று பொருள்படும். ஆனால், இவ்விளக்கமானது இப்பெயரின் உண்மையான பொருளை அளிக்கவில்லை என்பது பொதுவாக ஏற்றுக் கொள்ளப்படக் கூடிய கருத்தாகும். ஆனால், இஸ்ராயேல் போன்ற பெயருக்கு முடிவான சொல்லிலக்கணம் கூறுவதும் இயலாத ஒன்றாகும். ஆயினும் இப்பெயரை 'நம்பிக்கைகுரிய, வெற்றிகரமான, மகிழ்ச்சிகரமான' என பொருள்படும் 'இஸ்ர்' என்னும் அடிப்படை சொல்லுடன் இணைத்து கூறப்படும் விளக்கம்

பொதுவாக ஏற்றுக்கொள்ளபடக் கூடியதாக உள்ளது. ஆப்பு வடிவ எழுத்து முறையிலும் 'இஸ்ர்-யில், அஸ்ரி-இலிசு' என்ற ஒத்த பெயர்கள் இருப்பது குறிப்பிடத்தக்கது. இஸ்ராயேலை தவிர்த்து பிற வழிகளில் இச்சொற்களை விளக்குவதென்பது செய்யக் கூடியதன்று. சொல்லிலக்கணமுறையில் இஸ்ராயேலை 'அசெர்' என்னும் சொல்லுடன் தொடர்புபடுத்தினால், இஸ்ராயேலானது மூலத்தில் கானானிய இனவிருத்தி தெய்வங்களுடன் தொடர்புடையதாய் கருத வேண்டியிருக்கிறது. ஏனெனில், 'அசெர்' என்னும் சொல்லானது அசேரா' என்னும் கானானிய பெண் தெய்வத்தின் ஆண் இணையினை குறிப்பிடுகின்றது. இப்படியாயின் 'இஸ்ராயேல்' என்னும் பெயர் பழைய ஏற்பாட்டு சமயத்தின் கானானிய அடிப்படையினை குறிப்பிடுகின்றது. மேலும், யாக்கோபின் பெயர் மாற்றமானது, கிழக்கிலிருந்து வந்த பல்வேறு இனத்தவரையும் கானானேய சமயத்தவருடன் இணைப்பதை குறிப்பிடுவதாய் உள்ளது. இத்தகைய நிலையில், 'இஸ்ராயேலின் பாறை' (ஆதி 49:24)-யானது வழிபாட்டு கல்லைச் சுட்டிக் காட்டுவதாகவும், ''யாக்கோபின் வலிமை மிக்க ஒருவர்'' என்பதற்கு இணையாகவும் உள்ளது. இறுதியில் காணும் சொற்றொடர் இன விருத்தி கடவுளுக்கு அடையாளமாக காளை மாட்டை குறிப்பிடுகிறது.

2. இஸ்ராயேல் மக்களை ஓரினமாக குறிப்பிடும் பெயர்:- இஸ்ராயேல் நாட்டின் வளர்ச்சியைப்பற்றி பழைய ஏற்பாட்டு மரபுகளின்படி, குலமுதியவர்களே மக்களுடைய தொடக்க மூதாதையராக இருந்தனர். இவர்களைப்பற்றிய ஆராய்ச்சியில் பல்வேறு கருதுகோள்கள் கூறப்பட்டுள்ளன. ஒன்று அவர்கள் உண்மையான ஆட்கள் என்றும், மற்றொன்று அவர்கள் வழிபாட்டு நாயகர்களாவார் என்றும் கருதுகின்றன. குலத்தந்தையரைப்பற்றிய பல்வேறு மரபுச்செய்திகளும், அவை குறிப்பிடும் கால கட்டத்திற்கு பிற்பட்ட காலத்தில் உருவாக்கப்பட்டமையால், பிற்காலக் கருத்துக்களையும் பெரிதும் தம்முள் கொண்டுள்ளன. எனவே, அவற்றை உண்மையான வரலாற்று ஆதாரங்களாக ஏற்றுக் கொள்ள முடியாது. பொதுவாக, இவை பல்வேறு இனத்தவரின் தொடக்கக்கால குடியேற்றங்களைப் பிரதிபலிக்கின்றன. பிற்காலத்தில் அவற்றில் பல குழுக்கள் ஒன்றாக இணைந்திருக்கலாம். உண்மையில் அவை வழிபாட்டு மையங்களுடன் தொடர்பு கொண்டுள்ளன. ஆபிரகாம் கெபிரோனுடனும், ஈசாக்கு பெயேர்செபாவுடனும், யாக்கோபு பெத்தேலுடனும் தொடர்புப்படுத்தப் படுகின்றனர். அவை வழிபாட்டுத்தலங்கள் தொடர்புடையவனவாக உள்ளன.

எகிப்திய அடிமை வாழ்வு, எகிப்திலிருந்து வெளியேறுதல், பாலைவன வாழ்வு, யோசுவாவின் தலைமையில் கானான் நாட்டில் நுழைதல் போன்ற நிகழ்ச்சிகளைக் கொண்ட பாரம்பரியங்களில் இஸ்ராயேல் அல்லது இஸ்ராயேல் மக்கள் என்னும் சொல் பொதுவாக இஸ்ராயேல் மக்கள் அனைவரையும் ஒட்டுமொத்தமாகவே குறிப்பிடுகின்றது. இப்பாரம்பரியங்களில் இஸ்ராயேலின் பன்னிரு கோத்திரங்களும் அவ்வாறே அழைக்கப்படுகின்றன. பல பகுதிகளில் 'எபிரேயர்' என்ற சொல் உபயோகிக்கப்பட்டிருப்பதும் உண்மையே. கானான் நாட்டை வென்றபின்னர் கூறப்படும் பழைய ஏற்பாட்டு நிகழ்ச்சிகளில், 'இஸ்ராயேல்' என்னும் சொல் பன்னிரு கோத்திரங்களையும் ஒன்றாகக்கொண்ட மக்களை ஒன்றாக குறிப்பிடும் சொல்லாகவே உள்ளது (உப ஆகமம்; சாமுவேல்). பன்னிரு கோத்திரங்களின் அட்டவணைகளையும் ஒப்பிட்டு நோக்கும்போது சில வேறுபாடுகளையும் நாம் காணலாம். ஆதி. 49-ல் யாக்கோபின் 12 மகன்களைக்காணும் நாம், உப 33-ல் சிமியோனின் கோத்திரம் விடுபட்டிருப்பதையும், யோசேப்பின் கோத்திரம் எப்பிராயிம், மனாசே என்று இரண்டாக பிரிக்கப்பட்டுள்ளதையும் காணலாம். பன்னிரு கோத்திர அமைப்பானது பாலஸ்தீனத்தில் உருவானது என்று இப்போது ஏற்றுக்கொள்ளப்படுவதால், முற்காலத்திற்கு குறிப்பிடப்பட்ட இந்த அமைப்பு, வரலாற்று பூர்வமான ஒன்று அல்ல என்பது தெரிகிறது. ஆரம்ப

கால நிகழ்ச்சிகள் அனைத்தும், பல நூற்றாண்டுகால வரலாற்று நிகழ்ச்சிகளின் திட்டமிடப்பட்ட சுருக்கமாக இருக்கலாம்.

*3.* வடக்கு அரசில் வாழ்ந்த மக்களைக் குறிப்பிடும் பெயர்:- *2 சாமு 2:9.17; 3:10; 19:41; 20:1; 1 அர 12:16* ஆகிய பகுதிகளில் இஸ்ராயேல் என்ற சொல், எப்பிராயிமை மையமாகக் கொண்ட வடக்கு கோத்திரங்களைப்பற்றி குறிப்பிடுகின்றது. இஸ்ராயேலின் மலையானது யோசு *11:16.21*-இல் காணப்படுகிறது. ஒன்றுபட்டு இருந்த அரசானது இரண்டாக பிரிந்த பின்னர் வடக்கு அரசு இஸ்ராயேல் என்றும் *(1 அர 14:19)* இஸ்ராயேலின் வீடு *(1 அர 12:21; ஓசே 5:1; ஆமோ 5:1; மீக் 1:5)* என்றும் அழைக்கப்பட்டது.

*4.* தெற்கு அரசில் வாழ்ந்த மக்களை குறிப்பிடும் பெயர்:- வடக்கு அரசின் வீழ்ச்சிக்கு பின்னர் சில பகுதிகளில் *(ஏச 5:7; மீக் 3:1)* தெற்கு அரசு இஸ்ராயேல் என்று அழைக்கப்பட்டது.

*5.* சமய வழிபாட்டுச் சமுதாயத்தைக் குறிப்பிடும் பெயர்:- பழமையான காலத்திலிருந்து இஸ்ராயேல் என்ற சொல்லானது இஸ்ராயேல் மக்களை, குறிப்பாக கானான் நாட்டில் வாழ்ந்த வடக்கு கோத்திரங்களை குறிப்பிடுவதாக இருந்தது. பெரும்பாலான இஸ்ராயேல் கோத்திரங்கள் கானானியராக அல்லது மற்ற இனக் கோத்திரங்களை சேர்ந்தவர்களாய் இருந்தமையால், இவ்வளர்ச்சியில் கானானியக் கூறுகள் முக்கிய பங்கு வகித்தன. ஆனால் இஸ்ராயேல் அரசு தனது தனிப்பட்ட அரச சிறப்பினை உணர்ந்த பின்னர். 'யாவே' மட்டுமே தேசிய தெய்வம் என்னும் விசுவாசமே இஸ்ராயேல் அரசின் அடிப்படையாக அமைந்தது. இத்தகைய விசுவாசத்தின் விளைவாக இஸ்ராயேல் என்னும் பெயர் யாவே வழிபாட்டோடு இணைந்த வழிபாட்டு ஒற்றுமையைக் குறிக்கும் பெயராக இருந்ததோடு, இஸ்ராயேல் என்ற உருவம் சமயக்குறிக்கோளும் ஆயிற்று *(ஏச 1:3; 4:2; 49:3)*. சமய அடிப்படையுடன் கூடிய இத்தகைய நாட்டு உணர்வானது இஸ்ராயேல் மக்கள் கடவுளால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் கருத்திலும், உடன்படிக்கைக் கருத்திலும் குறிப்பாகக் காணப்படவேண்டும். இஸ்ராயேல் மக்களைப்பற்றிய பழைய ஏற்பாட்டு வரலாறு முழுவதிலும் இவையே மீண்டும் மீண்டும் காணப்படும் கருத்துக்களாகும். இஸ்ராயேலர் கடவுளால் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் என்ற கருத்தானது, எருசலேம் ஆலயம் ஒன்று மட்டும்தான் உரிமையான வழிபாட்டு இடமான காலத்திலிருந்து, அதோடு தொடர்புபடுத்தப்படுவதால், இச்சமயக் கருத்துக்கள் காலந்தோறும் யூதர்களின் நாட்டுணர்வின் அடிப்படையாயின. எடுத்துக்காட்டாக, மக்கபேயர்கள், யூதர்களின் அரசினை குறிப்பிட, இஸ்ராயேல் என்னும் பெயரையே உபயோகித்தனர். இக்காலத்திலும், பாலஸ்தீனத்தில் உள்ள யூதஅரசு, இஸ்ராயேல் என்றே அழைக்கப்படுகிறது.

**இஸ்ராயேல்** *(ISRAEL)*

இஸ்ராயேல் என்னும் சொல்லுக்கு ''கடவுள் போராடுகிறார்'' ''கடவுள் வலிமையானவர்'' என்பது பொருள். பழைய ஏற்பாட்டில் இது ஒரு குறிப்பிட்ட இனத்தையோ முதுபெரும் தந்தையான யாக்கோபுவின் வழிவந்த பரம்பரையையோ குறிக்கிறது *(ஆதி 35:10.20 தொ; 43:8; 50:2)*. யாக்கோபு ''கடவுளோடு போராடினார்'' என்னும் கதையிலிருந்து அவருக்கு இஸ்ராயேல் என்னும் பெயர் வழங்கப்பட்டதாய்த் தெரிகிறது *(ஆதி 32:29; ஓசே 12:4)*.

I. பழைய ஏற்பாடு

*1.* இஸ்ராயேல், உடன்படிக்கையின் மக்கள்:-

*அ)* இஸ்ராயேல், ஒரு புனிதமான பெயர்:- இஸ்ராயேல் என்பது, ஏதோம், ஆரம், மோவாபு என்னும் மற்ற இனமக்களின் பெயர்போன்று வெறும் பெயர் மட்டுமன்று. அது புனித பெயராகும். உடன்படிக்கை மக்களின் பெயராகும். உடன்படிக்கை மக்கள் ஒன்றுகூடி 'இஸ்ராயேல் இனம்' என்று உருவாகிறார்கள் *(யாத் 12:*

*3.6)* இந்தப் பட்டப்பெயரின் உரிமையில் தான் அவர்கள் உபாகமத்தில் வாக்குறுதிகளைக் கேட்கிறார்கள் ('இஸ்ராயேலே, கேள்'... உப *5:1; 6:4; 9:1;* காண் சங் *50:7; 81:9).* இந்த வாக்கானது அவர்களுக்குத் தனிப்பட்ட இறைவாக்குறுதியாக அமைகிறது (ஏச *41:8; 43:1; 44:1; 48:1).*

ஆ) இஸ்ராயேல், பன்னிரு கோத்திரங்கள் கொண்ட மக்களாவர்:- யாக்கோபின் பன்னிரு மகன்களின் வழிவந்த பன்னிரு கோத்திரங்களையும் ஒன்று கூட்டிய ஓர் அமைப்பாக, உடன்படிக்கை நாளிலிருந்து இருந்து வந்திருக்கிறது (யாத் *24:1).* அத்தகைய கோத்திரங்கள் பட்டியலில் சிற்சில மாற்றங்களே ஏற்பட்டாலும் (காண் ஆதி *49;* உப *33;* நீதி *5;* திருவெளி *7:5)* பன்னிரண்டு என்னும் எண் புனிதம் குலைந்துவிடாமல் பாதுகாக்கப்பட்டு வந்தது; மேலும் பன்னிரு மாதங்களுக்குரிய வழிபாட்டு முறைகளோடு தொடர்பு கொண்டதாய் இருந்தது. இறைவனின் மக்கள் உலகில் ஏற்ற முதல் வரலாற்று அமைப்பு முறை இத்தகையது ஆகும்.

இ) யாவே இஸ்ராயேலின் கடவுள்; இஸ்ராயேல் யாவேயின் மக்கள்:- உடன்படிக்கை மூலம் கடவுள் இஸ்ராயேலோடு ஒருவிதத்தில் நெருங்கிய உறவு கொண்டுவிட்டார். அவர் அவர்களின் கடவுள் (ஏச *17:6;* எரே *7:3;* எச *8:4);* அவர்களின் பரிசுத்தர் (ஏச *1:4; 44:14;* சங் *89:19);* அவர்களின் வல்லவர், மாமன்னர் (ஏச *43:15);* அவர்களின் மீட்பர் (ஏச *44:6).* தம்மையே வெளிப்படுத்தும் இறைவன், இவ்வாறு மனித வரலாற்றில், இஸ்ராயேலின் கடவுளாக நுழைகிறார். மேலும், இஸ்ராயேல் மக்கள்தான் கடவுள் விழையும் மீட்பின் வெளிப்பாட்டுத் திட்டத்தை நிறைவேற்றுதற்குரிய உடன் ஊழியராக ஆகிவிடுகிறார்கள். இந்த வகையில் இஸ்ராயேலுக்குக் கொடுக்கப்படும் பெயர்கள் பொருள் பொதிந்தவை. இஸ்ராயேல் யாவேயின் மக்கள் (ஏச *1:3;* ஆமோ *7:8;* ஏரே *12:14;* எச *14:9;* சங் *50:7),* அவரின் ஊழியன் (ஏச *44:21),* அவரின் தேர்ந்தெடுக்கப்பட்டவர் (ஏச *45:4),* அவரின் தலைப் பேற்றாண் (யாத் *4:22;* ஓசே *11:1),* அவரின் புனிதமானவர் (எரே *2:3),* அவரால் சுதந்தரிக்கப்பட்டவர் (ஏச *18:25),* அவருடைய மந்தை (சங் *95:7),* அவருடைய திராட்சைத் தோட்டம் (ஏச *5:7),* அவருடைய ஆட்சிக் களம்'' (சங் *114:2),* அவருடைய மனைவி (ஓசே *2:4).* இவ்வாறு, இஸ்ராயேல் மனிதனின் அரசியல் வரலாற்றோடுமட்டும் நின்று விடவில்லை. கடவுளின் தனிப்பட்ட அழைப்பின் காரணமாக அது சமயவரலாற்றின் மையமாக அமைந்திருக்கிறது.

2. இஸ்ராயேலும் யூதாவும்:-

அ. இஸ்ராயேலும் இருமுக அரசியலும்:- புனித குழுவாக இருந்துவந்த பன்னிரு கோத்திரங்களுக்கு அடியிலே ஒருவித அரசியல் பிரிவு நிலவி வந்ததென்பது, முக்கியமாக அரசர்களின் காலத்தில், தெளிவாகிறது. தாவீது முதலில் தெற்கிலிருந்து யூதாவிற்கு அரசராகவும், அதன் பின்னர் வடக்கேயிருந்த இஸ்ராயேலுக்கு அரசராகவும் ஆனார் (2 சாமு *2:4; 5:3).* சாலமோன் இறந்தபோது இஸ்ராயேல் தாவீதின் வீட்டாரிடமிருந்து பிரிந்து *(1* அர *12:19)* ''உன் கூடாரங்களுக்கே செல்க, இஸ்ராயேல்'' என்று குரலெழுப்பிச் சென்றனர் (2 அர *12:16;* காண்க. 2 சாமு *20:1).* இவ்விதமாக இறைவனின் மக்கள் பிளவுபட்டனர். உடன்படிக்கைக்கு ஒவ்வாத முறையில், இத்தகைய பிளவுபட்ட நிலைக்கு ஏற்ப இறைவாக்குகளும் யூதாவுக்கும், இஸ்ராயேலுக்கும் உரைக்கப்பட்டன. வடதிசையில் மிகுந்த வலிமையோடு விளங்கிய எப்பிராயிம் கோத்திரத்தோடு இஸ்ராயேல், பேச்சில், ஒருங்குபடுத்தி வழங்கப்பட்டது (ஆமோ *2:4;* ஓசே *4:15* தொ; ஏச *9:7* தொ; ... மீக் *1:5;* எரே *3:6* தொ).

ஆ. இஸ்ராயேலும், யூத குலமும்:- சமாரியாவில் வீழ்ச்சிக்குப் பிறகு யூதா இஸ்ராயேலை ஒருங்கிணைக்கும் நிலைக்களனாக மாறிற்று (2 அர *23:19;* .. 2 நாள் *30:1* தொ). எருசலேம் வீழ்ந்த பிறகு பின்னிரு கோத்திரங்களும் ஒன்றிணைந்த முந்தைய குழு அமைப்பை மீண்டும் அமைப்பதில் தங்க

ளது அடையாளத்தைத் தேடினர் இஸ்ராயேலர். இதில் யூதா எடுத்துக்கொண்ட முக்கிய பங்கின் காரணமாக அப்போதிலிருந்து, பல்வேறு இடங்களில் சிதறி வாழ்ந்து வந்த இவ்வின மக்கள் யூதர் என அழைக்கப்பட்டனர். ஒரே அமைப்பாக பின்னர் ஒன்று சேர்ந்த இவ்வின மக்களுக்கு யூதகுலம் என்னும் பெயர் வழங்கப்பட்டது (*கலாத் 1:13 தொ*). ஆனால் அதே நேரத்தில் இஸ்ராயேல் என்ற பெயர் தன்னுடைய புனிதத்தன்மையை மீண்டும் பெறுகிறது (*நெக 9:1 தொ; சீரா 36:11; காண் மத் 2:20 தொ; அ.ப. 13:17; யோவா 3:10*).

*3.* புதிய இஸ்ராயேலைப் பற்றி வாக்குறுதி:- இறுதிக்காலம் பற்றிய இறைவாக்கினரின் அறிவிப்புகள் பிரிந்துபட்ட இனம் மீண்டும் ஒன்றுகூடும், இஸ்ராயேலும் யூதாவும் ஒன்றுபடுவர் என்று கூறி வந்தன (*எச 37:15*). பல்வேறு இடங்களில் பிரிந்துகிடந்த பன்னிரு கோத்திரங்களின் வழிவந்த இஸ்ராயேல் மக்களனைவரும் ஒரே சபையாக மீண்டும் சேருவர் என உரைத்தன (*எரே 3:18; 31:1; எச 36:24; 37:21;.. ஏச 27:12*). இது யூதர் நம்பிக்கையின் அடிப்படைக் கருத்தாகும். இத்தகைய வாக்குறுதிகளால் எழும் நன்மைகள் உண்மையாகவே இஸ்ராயேலில் நன்னெறி நின்ற ''எஞ்சினோர்க்கே'' கிடைக்கும் (*ஏச 10:20; 46:3; மீக் 2:12; எரே 31:7*). இவ்வாறு யாவே எஞ்சி நின்றோரைப் புதிய இஸ்ராயேலாக ஆக்குவார். அவர் அதை விடுவித்து (*எரே 30:10*) அதன் நாட்டில் உறுதியாக மீண்டும் நிலைப்படுத்துவார் (*31: 31*). பல்வேறு நாடுகளும் இஸ்ராயேல் இனத்தில் உண்மையான இறைவனின் சந்நிதியைக் கண்டு உணர்ந்து (*45:15*) அவரை நோக்கித் திரும்ப வருவர்; அவர்களின் மனமாற்றம் இஸ்ராயேலின் மீட்போடும் (*45:17*) மகிமையோடும் (*45:25*) ஒன்றாகும்.

II. புதிய ஏற்பாடு

*1.* நற்செய்தியும் தொன்மை இஸ்ராயேலும்:- உலகின் மீட்பு இஸ்ராயேலின் வழியாகத் தோன்றவேண்டுமென்பதும், இஸ்ராயேல் உடன்படிக்கை மக்களாக வாழ்ந்து, மீட்புச் செய்தியை முதலில் பெறவேண்டுமென்பதும், இறைப்பராமரிப்பின் திட்டமாக இருந்துள்ளது. திருமுழுக்கு யோவானின் திருமுழுக்கின் குறிக்கோளும் அதுவே (*யோவா 1:31*). தாம் வாழ்ந்த காலத்தில், நம்மீட்பரும், அவருடைய சீடர்களும் முதலில் இஸ்ராயேல் மக்களிடம் மட்டுமே மீட்பினை அறிவித்தனர் (*மத் 10:6.23; 15:24*). அவருடைய உயிர்த்தெழுதலுக்குப் பிறகும் இஸ்ராயேலுக்கு மட்டுமே முதலில் நற்செய்தி அறிவிக்கப்பட்டது (*அ.ப. 2:36; 4:10*). அவருடைய பாடுகளில் ஈடுபட்ட இஸ்ராயேலும், மற்ற நாடுகளும் (*4:27*) விசுவாசத்திற்கு அழைக்கப்பட்டார்கள் (*9:15*). இருவரும் சமமாக அழைக்கப்பட்டாலும், முதலில் பிறப்பினால் இஸ்ராயேல் குலத்தைச் சார்ந்த யூதர்களாய் இருந்தவர்களுக்கும் (*உரோ 9:4*) அதன் பின்னரே மற்றவர்களுக்கும் (*காண் உரோ 1:16; 2:9 தொ; அ.ப. 13:46*), அது வழங்கப்பட்டது. இஸ்ராயேலுக்கு வாக்களிக்கப்பட்ட ஆறுதலை எதிர் பார்த்திருந்தவர்களுக்காகவும் (*லூக் 2:2-5*), இஸ்ராயேலின் மீட்புக்காகவும் (*24: 21*) இஸ்ராயேல் அரசின் மறுமலர்ச்சிக்காகவும் (*அ.ப. 1:6*) ஆவலோடு காத்திருந்த மக்களின் நம்பிக்கையை நற்செய்தி வழங்கிய மீட்பு நிறைவேற்றி வைக்கிறது. கிறிஸ்துவின் வழியாக இஸ்ராயேலுக்கு உதவியும் (*லூக் 1:54*), இரக்கமும் (*1:68*), மனம் திரும்பி பாவப்பரிகாரம் பெற அருளும் (*அ.ப. 5:31*) பெறும்படி கடவுள் வழிவகுத்திருக்கிறார். இயேசுதான் இஸ்ராயேலின் மகிமை (*லூக் 2:32*); அதன் அரசர் (*மத் 27:42; யோவா 1:50; 12:13*); அதன் மீட்பர் (*அ.ப. 13:23 தொ*). உயிர்த்தெழுதலின் மீதுள்ள புதிய நம்பிக்கையின் அடிப்படையில்தான் இஸ்ராயேலின் நம்பிக்கையும் அமைந்துள்ளது (*அ.ப. 28:20*). சுருங்கக்கூறின், மனித வரலாறு பெறுகின்ற மீட்பின் உறவுப் பாலமாக இஸ்ராயேல் அமைந்திருக்கிறது.

*2.* புதிய இஸ்ராயேல்:- இயேசுவின் காலத்திற்குப் பிறகு, இறைவாக்கினரால் உரைக்கப்பட்ட வாக்குறுதியான புதிய இஸ்ரா

யேல் இவ்வுலகில் தோன்றியுள்ளது. இதை ஒரு வளரும் அமைப்பாக ஆக்கவேண்டு மென்று, இயேசு பன்னிரு சீடர்களை அழைத்து, இஸ்ராயேலின் பன்னிரு கோத்தி ரங்களின் அடிப்படையில் தம் திருச்சபையை அமைத்தார். மேலும் அவரின் பன்னிரு அப்போஸ்தலர்களையும், இஸ்ராயேலின் பன்னிரு கோத்திரங்களுக்குந் நடுவராக நிய மித்தார் (மத் 19:28). இந்தத் திருச்சபைதான், இறுதிக்காலத்தில் தோன்றும் இஸ்ராயேல்; இதற்காகவே கடவுள் புதிய உடன்படிக் கையை ஒதுக்கி வைத்தார் (எபி 8:8 தொ). இதன் வழியாகப் பன்னிரு கோத்திரங்களில் தேர்ந்தெடுக்கப்பட்ட அத்தனை பேரும் மீண்டு ஒன்று சேர்க்கப்படுவர் (திருவெளி 7:4). இது பன்னிரு அப்போஸ்தலர்களையும் அடிவாரமாகக் கொண்ட ஒரு புனித நகர்; இதன் கதவுகளில் பன்னிரு கோத்திரங்களின் பெயர்களும் பொறிக்கப்பட்டுள்ள (திரு வெளி 21:12; காண் எச 40:30).

3. தொன்மை இஸ்ராயேலும், புதிய இஸ் ராயேலும்:- இவ்வாறு, புதிய இஸ்ராயே லான திருச்சபை பழைய இஸ்ராயேலின் நிறைவேற்றமேயாகும். பழைய இஸ்ராயே லில் பிறப்பின் அடிப்படையில் அங்கத்தின ராயினர் (பிலி 3:5); புறமதத்தினர் அதிலி ருந்து விலக்கி வைக்கப்பட்டனர் (எபே 2:12). அது ஊனின் அடிப்படையில் எழுந்த இஸ்ராயேல் இனம். ''இறைவனின் இஸ்ரா யேலாவதற்கு'' இதுமட்டும் போதாது (1 கொரி 10:18). ஏனெனில் ''இஸ்ராயேலின்'' வழிவந்தோரனைவரும் இஸ்ராயேலரல்லர் (உரோ 9:6). கிறிஸ்துவோடும், அவரு டைய நற்செய்தியோடும் எதிர்ப்பட்ட அவ் வினத்திலே பிரித்தெடுத்தல் நடைபெறுகி றது (காண் லூக் 2:34 தொ); திருச்சட்டங்க ளின் வன்நிலை நீதியை எதிர்பார்த்து, விசு வாசத்தின் வழி மீட்பு பெறுவர் என்னும் அறிவிப்பை வெறுத்து, கேட்டபோது தங் கள் இதயத்தைக் கடினப்படுத்திக் கொண்ட வர்கள் வீழ்ச்சியுறுகிறார்கள் (உரோ 9:31; 11:7); அதே நேரத்தில் ''உண்மையான இஸ் ராயேலருக்கு'' (யோவா 1:48) மீட்பு வழங் கப்படுகிறது; இவர்கள் வேதாகமம் கூறி வந்துள்ள எஞ்சினோராவர் (உரோ 9:27 தொ). இவர்கள் மனந்திரும்பிய புறவினத்தா ரின் வழியாகப் புதியஇஸ்ராயேலில் இணை கிறார்கள். பழைய இஸ்ராயேல் முற்றும் ஒதுக்கப்பட்டுவிட்டார்கள் என்று சொல்வ தற்கில்லை. அவர்கள் தங்களுக்கு அறிவிக் கப்பட்ட நற்செய்தியைப் புரிந்து கொள்ளா தது கடவுள் அவர்களிடையே ஒருவிதப் பொறாமையைத் தூண்டிவிட விழைந்தார் எனத் தெரிகிறது (உரோ 10:9). புறவினத்தார் அனைவரும் ஒருங்கே மனந்திரும்பும் போது, இஸ்ராயேலின் ஒருவிதக் கடினத் தன்மை நீங்கும். இவ்வாறு ''இஸ்ராயேல் இனம் முழுவதும் மீட்புப் பெறும்'' (உரோ 11:26). அப்போது மீட்பு வழியில் நடந்து செல்லும் ஆன்மீக இஸ்ராயேலோடு மீண் டும் சேர்ந்துகொள்ளும்.

**இஸ்ராயேல்: சமூக, பொருளாதார முன்னேற் றம்**

பாலஸ்தீனத்தில் வாழ்ந்த இஸ்ராயேல் மக்கள், பலதரப்பட்ட கலாச்சார வளர்ச்சி நிலைகளில், நீண்ட, சிக்கலான சமூக பொரு ளாதார முன்னேற்றம் கண்டனர்.

1. நாடோடி நிலை:- பழங்கால செமித்திய மக்களைப்போன்று இஸ்ராயேலரும் தங்க ளது பூர்வீகத்தை அரேபிய பாலைவனத்தில், குறிப்பாக வடசமவெளிகளில் கொண்டிருந் தனர். விவிலிய மரபுகளுக்கு முற்றிலும் மாறுபட்ட நிலையில் பாலைவனத்தில் தோன்றிய இஸ்ராயேல் ஓரினமாக இல்லா மல், தனிப்பட்ட, சுதந்திரமான நிலையற்ற குழுக்களாகவும் கோத்திரங்களாகவும் அமைந்திருந்தது. பாலஸ்தீனத்திற்குள் குடி யேறுவதற்கு முற்பட்ட பாலைவன வாழ்க் கையில் அதற்கு ஏற்ற நாடோடி வாழ்க்கையி னையே இஸ்ராயேல் மக்கள் வாழ்ந்தனர். செம்மறியாடுகளும் வெள்ளாடுகளுமே அவர்களது சொத்தாக இருந்தன. தங்களுக் கும் தங்கள் விலங்குகளுக்கும் உணவைத்தே டுவது அவர்களுக்கு எப்போதும் ஒரு பிரச்சி னையாக இருந்தது.

சமய நம்பிக்கையும், பழக்கங்களும் பழ மையானவையாகவும் திருந்தா நிலையிலும்

இருந்தன. இயற்கைக்கு மேற்பட்ட சக்திகளை தெய்வங்களாக கருதிய அவர்கள், தங்களது தனித்துவ, குழு, கோத்திர வாழ்விற்கு பொறுப்பாக அவற்றை கருதினர். தமது உடல் தேவைகளை நிறைவேற்றுதல், பெண்களையும் விலங்குகளையும் இனவிருத்தியடையச் செய்தல், பாலைவன வாழ்வில் தங்களது பாதுகாப்பை உறுதியாக்குதல், எதிரிகள் அனைவர்மேலும் வெற்றி கொள்ளுதல் ஆகியவற்றை கடவுளின் உடனடி தெய்வீகக் கடமைகளாக கருதினர். எல்லா விதங்களிலும் தனிப்பட்ட சமூக அமைப்பாக விளங்கிய ஒவ்வொரு கோத்திரமும், தமது கோட்பாடுகளுக்கு ஏற்றவாறு தனிப்பட்ட தெய்வங்களைக் கொண்டிருந்தன. தெய்வம் ஒரு மனிதரிலோ, மலை அல்லது வாழ்வளிக்கும் நீர்ச்சுனை போன்ற ஒரு குறிப்பிட்ட இடத்திலோ இருப்பதாய்க் கருதினர்.

இத்தகைய செமித்திய, பாலைவன வம்சத்தினர் பெண்வழி திருமணத்தை பின் பற்றினர். அதற்கேற்றவாறு, தாய்வழி உறவுமுறையினை மட்டுமே கொண்டிருந்தனர். ஒரே இனத்துக்குள் திருமணம், உறவு தடைசெய்யப்பட்டிருந்தது. ஒரு வம்ச பெண்கள், வேறு வம்ச ஆண்களுடைய குறுகிய, அல்லது நீண்டகால உறவினை ஏற்றுக் கொண்டனர். இத்தகைய இணை புணர்ச்சியால் பிறக்கும் குழந்தை தாயின் வம்சத்தை சேர்ந்ததாகக் கருதப்பட்டது. தந்தை யாரென்பது பலசமயங்களில், பெரும்பாலும் வழக்கமாகத் தெரியாமலிருந்ததால், முக்கியமுடையதாகத் தெரியவில்லை. ஆராய்ச்சியாளர் கருத்துப்படி பழமையான செமித்திய சமூகமானது குலமுதியவரின் வழியில் அமைந்திருந்தது. அல்லது, சகோதர மற்றும் தாய்வழி அமைப்புகளுடன் தந்தை வழிக்கு முன்னுரிமை கொடுத்து அமைந்திருந்தது.

ஒவ்வொரு வம்சத்தினுள்ளும் முழுமையான சமூக சமத்துவமும், மக்களாட்சியும் நிலைபெற்றிருந்தன. எல்லாரும் எல்லாக்காரியங்களிலும் சமமானவர்கள். ஆண்கள், குறிப்பாக வயதில் மூத்த, அனுபவமிக்க, புத்திசாலித்தனமான பெரியவர்களின் தீர்மானங்களுக்கு ஏற்ப, இனம்சார்ந்த செயல்கள் செயல்படுத்தப்பட்டன. நல்லது கெட்டது அனைத்தும் மரபு மற்றும் பழக்க வழக்கங்களின்படி தீர்மானிக்கப்பட்டன. காலங்காலமாக உள்ள மரபு மற்றும் பழக்க வழக்கங்களைக் காக்க உரிமைப்பெற்றவர்களாய்க் கருதப்பட்ட ஆண்கள் நீதிபதிகளாய்ப் பணிபுரிந்தனர். பழமையான மரபுகள் மற்றும் பழக்கங்களுக்கு ஏற்ப தீர்ப்பு வழங்கப்பட்டது. தீர்ப்புகளை அமல்படுத்தும் உரிமையினை நீதிபதிகளிடமிருந்தும் இனத்திலிருந்தும் கூட முழுமையான மக்களாட்சியின் அடிப்படை கோட்பாடு விலக்கி வைத்திருந்தது. இனத்தின் மக்களின் பொது எண்ணமே இவ்வுரிமை செயல்படுத்தியது. எந்த உறுப்பினரும், விரும்பினால், நீதிபதிகளின் முடிவை ஏற்காமல் இருக்கலாம். ஆனால், இப்படிப்பட்ட சமயங்களில் மக்களின் தீர்மானம் அவனை இனத்திலிருந்து விலக்கி வைத்து, குலதெய்வம் மற்றும் இனத்தவரின் பாதுகாப்பு போன்ற சலுகைகளை அவனுக்கு மறுத்து, தனித்தவனாக ஆக்கியது. இந்நிலை பாலைவன வாழ்விற்கு இடறல் மிக்கதாகும் (ஆதி 4:14).

2. வேளாண்மை நிலை:- இயற்கையிலேயே பாலஸ்தீன நாடு இரு பிரிவுகளாக காணப்படுகின்றது. எருசலேமிற்கு வடக்கில், கிழக்கு மேற்காக ஒரு கற்பனைகோடு வரைந்தாலே பிரிவு தெளிவாகும். வடபகுதி முழுவதும் வளமையாகவும் நீர்வசதி மிக்கதாயும் உள்ளது. அதற்கேற்ப இம்மக்களின் அடிப்படை தொழில் விவசாயம். தென்பகுதியானது வறண்டதாகவும், நீர்பாசன வசதி குறைந்ததும், சில இடங்களில் தரிசாகவும் காணப்படுகின்றது. விவிலிய காலத்தில் அவர்களது முக்கிய தொழிலாக செம்மறி ஆடு வளர்த்தல் இருந்தது.

இத்தகைய தென்பகுதியானது ஏறக்குறை கி.மு.பதின்மூன்றாம் நூற்றாண்டின் மத்தியில் யூதவம்சத்தினரால் கைப்பற்றப்பட்டு, அவர்களின் ஆளுகைக்கு உட்பட்டது. லேவியரான மோசேயின் தலைமையில் தென்ப

குதி வழியாக அவர்கள் பாலஸ்தீனத்துக்குள் நுழைந்தனர். பாலஸ்தீனத்தின் தென்கோடிப் பகுதியில் அவர்களது நிலை உறுதிபடுத்தப் பட்டு, வாழ்க்கைமுறை மாறினாலும் பழமையிலிருந்து சிறிதளவே மாறுபட்டதாய் இருந்தது. தாவீது, இத்தகைய அனைத்து வம்சங்களையும் இணைத்து யூதாவின் கோத்திரமாக்கி, அதனுடன் தென் பகுதியிலிருந்த பிற நாடோடி வம்சங்களையும், கோத்திரங்களையும் சேர்த்து யூத அரசினை உருவாக்கி, துவக்க கட்டத்தில் தன்னையே அதன் அரசனாக ஆக்கிக் கொண்டார்.

இயற்கை வளத்தினாலும், மக்கள் தொகைக்கு உதவக்கூடிய நிலையினாலும் இஸ்ராயேலரின் வருகை ஏற்கனவே நிகழ்ந்திருந்ததினாலும், வடபகுதியானது முற்றிலும் மாறுபட்டதாகவே இருந்தது. இசிரியேல் பள்ளதாக்கிற்கு வடக்கிலுள்ள மாநிலத்தில், இஸ்ராயேலர் தங்களை நிரந்தரமாக உறுதிபடுத்திக் கொண்டனர். வடபகுதியை முழுமையாக கைப்பற்றும் பணியானது மற்ற இஸ்ராயேலரின் நாடோடி குழுக்களால் *1300*-ஆம் ஆண்டிற்குள் முடிவு பெற்றது. இத்தோடு நில்லாமல், வம்சத்திலிருந்து இனச்சமுதாய அமைப்புகளாக மாறும் நிலையானது, இந்நாட்டிற்குள் நுழைவதற்கு முன்பே தொடங்கியிருக்கக்கூடும். மதியானிய நாடோடி கொள்ளைக்காரர்களின் தாக்குதல்களினாலும், அவர்கள்மேல் கிதயோனின் வெற்றியினாலும், மாக்கீர், யாயீர், அபியேசர் மற்றும் எஞ்சியிருந்த பிற வம்ச இனத்தவரையும் இணைத்து, மனாசே இனம் பாலஸ்தீனத்தில் தோன்றியது. தனக்கு அளிக்கப்பட்ட அரச பதவியை கிதயோன் மறுப்பதன்மூலம் (நீதி *8:22-23*) இவ்வம்சங்களின் எண்ணத்திலும் கலாச்சாரத்திலும் நிலவிவந்த மக்களாட்சியின் நாடோடித்தன்மை தெளிவாகிறது. மேலும், தனது இனத்தவரின் மீது செலுத்தக்கூடிய அதிகாரத்தோடு கூடிய அரசுரிமை என்ற எண்ணமே அவருக்கு அருவருப்பை தந்தது என்பதும் தெளிவாகிறது.

படையெடுத்து வந்த இந்த இஸ்ராயேலரின் இரண்டாவது பிரிவினர் யோர்தான் பள்ளதாக்கினை ஒட்டியுள்ள மத்திய பாலஸ்தீனத்தின் மலைப்பகுதிகளில் தங்களை நிலைப்படுத்திக் கொண்டதாக தெரிகிறது. அப்பகுதியில் ஏற்கெனவே வாழ்ந்து வந்த கானானியரின் எதிர்ப்பு, பொதுவான பாலைவன பின்னணி, சமயம் மற்றும் கலாச்சாரம் ஆகியவை வடக்கு இஸ்ராயேல் குலங்களையும் இனங்களையும் நெருக்கமில்லாத இனக்கூட்டாட்சியாக இணைத்தன. முக்கியத்துவம் வாய்ந்த தானாக்குப் போரின் போது (நீதி *4-5*) இந்த நிலையே நிலவியது. இசிரியேல், பள்ளத்தாக்கோடு ஒட்டியிருந்த இனத்தவர் கானானிய நகர அரச அமைப்புகளால் தொல்லைக்குட்பட்டனர். ஆகவே இவர்கள்தான் இப்போரிலும் பங்கு கொண்டனர். இவ்வெற்றியானது, வடபகுதி முழுவதின் மேலும் இஸ்ராயேலரின் ஆதிக்கத்தை உறுதிப்படுத்தியது.

தங்களை உறுதியாக நிலைப்படுத்திக் கொண்ட பின்னர் வடஇஸ்ராயேல் வம்சத்தினரும், கோத்திரத்தினரும், கானானிய வாழ்க்கை முறை, வேளாண்மை முறைமைகள், அமைப்புகள், மொழி மற்றும் சமயங்களை வெகுவிரைவில் ஏற்றுக் கொண்டனர். காலப்போக்கில், எஞ்சியிருந்த கானானியருடன் ஏற்பட்ட உறவின் முறைமைகளினாலும், முன்னர் நிலவிய கானானிய ஆபத்து ஒழிந்தபடியினாலும், கோத்திரங்களுக்கிடையே வளர்ந்து வந்த ஒன்றுபட்ட அமைப்பு குறைந்துவிட்டது. இசிரியேல் பள்ளத்தாக்கிற்கு வடக்கில் வாழ்ந்த கோத்திரங்களும், ஒரளவிற்கு யோர்தானின் கிழக்கு பகுதியில் வாழ்ந்தவர்களும், தென்மேற்கு பகுதியில் கடற்கரை ஓரமாக வாழ்ந்த ''தாண்'' கோத்திரத்தினரும், கோத்திரங்களுக்கு இடையில் நிலவிய கடமைகளை சிறிது சிறிதாக விலக்கிக்கொண்டு, தத்தம் பாதையில் செல்லத் தொடங்கினர். இதன் விளைவாக, மத்திய பாலஸ்தீனத்தில் வாழ்ந்த எப்பிராயிம், மனாசே மற்றும் பென்யாமின் கோத்திரத்தார், தங்களுக்கிடையில் ஒன்றுபட்ட அமைப்பினை உருவாக்கிக் கொண்டனர். இவ்வமைப்பு உறுதியான ஒன்றாக இல்லாவிட்டாலும், வட இஸ்ரா

யேலரிடையே இது நாள்வரை நிலவிவந்த வற்றை விட, நெருக்கமான ஒன்றாக இருந்தது. இக்காலம் அவர்களுக்கு, குறிப்பாக மத்திய பாலஸ்தீனத்தில் வாழ்ந்த கோத்திரத் தாருக்கு தங்களது வாழ்க்கை, கலாச்சாரம், வளர்கின்ற வளமை, பாதுகாப்பு, நாட்டுப் பற்று ஆகியவற்றில் சீரான வளர்ச்சியை கொண்ட காலமாக இருந்தது.

ஆனால், 12-ஆம் நூற்றாண்டில் துவங்கிய பெலிஸ்தியரின் வருகை இவை அனைத்தையும் மாற்றிவிட்டது. கிரேத்துத் தீவிலிருந்து குடியேறிய அவர்கள், தென் பாலஸ்தீனக் கடற்கரைப் பகுதிகளில் தங்களை நிலைப்படுத்திக் கொண்டனர். இரும்பு உற்பத்தி செய்தல், இரும்பினாலான ஆயுதங்கள், கருவிகள் செய்தல் போன்றவற்றை மேற்காசிய கலாச்சாரத்திற்கு அவர்கள் அறிமுகப்படுத்தினர். காலப்போக்கில் தங்களது ஆட்சிப்பரப்பினை பெரிதுபடுத்த ஆரம்பித்தனர். 12-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பென்யாமினுடைய வடஎல்லையிலிருந்து இசிரியேல் பள்ளத்தாக்கின் வடவிளிம்பு வரையில் உள்ள மத்திய பாலஸ்தீனம் முழுவதும் பெலிஸ்தியரின் கொடுமைமிக்க ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவரப்பட்டது.

ஆயினும், அரை நூற்றாண்டிற்குப் பின்னர், தன்னுடைய எப்பிராயிம் கோத்திரத்திலிருந்தோ, அல்லது நசுக்கப்பட்ட நிலையிலிருந்த மனாசே கோத்திரத்திலிருந்தோ ஒரு மீட்பளிக்கக் கூடிய தலைவன் தோன்றுவது கடினம் என்பதை உணர்ந்த சாமுவேல் இறைவாக்கினர், மிகச் சிறியதாய், ஆனால் இன்னும் வெல்லப்படாமல் இருந்த பென்யாமின் கோத்திரத்தின்மீது தனது பார்வையைத் திரும்பினார். இக்குறிக்கோளை அடைய, முன்னர் நிலவிய உறுதியற்ற கோத்திரங்களுக்கிடையிலான இனக்கூட்டாட்சி அமைப்பைவிட, மிக நெருங்கிய, சிறப்பான உறுதியான கோத்திரங்களுக்கிடையிலான அமைப்பு தேவை என்பதை அவர் உணர்ந்திருந்தார். ஆதலின், நல்ல நாளான புத்தாண்டு நாளில், பென்யாமின் குலத்தைச் சார்ந்த சவுல் தன்னிடம் வந்தபொழுது, கடவுளே அவனைத் தேர்ந்தெடுத்துத் தன்னிடம் அனுப்பியுள்ளார் என்று உணர்ந்த சாமுவேல், உடனே அவனை அரசனாக அபிடேகம் செய்தார் *(1 சாமு 9:1-10:1)*. ஒன்றுபட்ட இஸ்ராயேலுக்கு அரசனாக நியமிக்கப்பட்டாலும், இஸ்ராயேல் என்பது பென்யாமின் கோத்திரத்தையும் எஞ்சியிருந்த எப்பிராயிம் மற்றும் மனாசே கோத்திரத்தாரையும் மட்டுமே கொண்டிருந்தது. இவ்வாறு, இஸ்ராயேலில் முடியாட்சி ஏற்படுத்தப்பட்டது.

சவுலின்ஆட்சி முழுவதும் பெலிஸ்தியருக்கு எதிராக, இடைவிடாத ஆனால் பயன் அற்ற போரிலேயே கழிந்தது. எப்பிராயிம் இனத்தாரும், மனாசே இனத்தாரும் அவரோடும் இணையாமையால், நாட்டைப் பாதுகாக்கும் பணியிலேயே முழுதாய் ஈடுபட வேண்டியிருந்தது. சாமுவேல் அவருக்கு அளித்த பணியில் முழுதாக தோல்வியடைந்ததைப்பற்றி ஒரு சிலரே ஆச்சரியப்படுவர். அவரது மரணத்திற்கு பின்னர் பென்யாமின் கோத்திரமும் பெலிஸ்தியரின் ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவரப்பட்டது.

சவுலுக்கு பின்வந்த தாவீது தலைசிறந்த நிர்வாகியாக விளங்கினார். சவுலின் மருமகன் என்ற நிலையினை இரண்டாம் பட்சமாக்கி, யூதாவின் அரசன் என்னும் உறுதியான நிலையிலேயே அவர் செயல்பட்டார். அதன் மூலம் தொடக்ககாலத்தில் மேற்கு நாடுகளில் நிலவிய ஒரே வாரிசுமுறைக்கு ஏற்பவும், அதே சமயம், பென்யாமின் மற்றும் வடக்கு கோத்திரங்களுக்கும் அரசராக விளங்கினார். இதுவரை வெல்லப்படாமல் இருந்த கானானிய நகராக-அரசாகிய எருசலேமையும் அவர் கைப்பற்றினார். மிக முக்கிய வியாபார வழிகளான தெற்கு அரேபியாவிலிருந்து அக்காபா வளைகுடாவின் வடக்கு முனையிலுள்ள எசியோன்- கெபேர் வழியாகவும், கீழ் அராபா, யூதா, இஸ்ராயேல் ஆகிய பகுதிகளின் வழியாக 'தீர்' பகுதி வரை செல்லும் அனைத்து மார்க்கங்களும் எருசலேம் வழியாகவே சென்றன. வட, தென் பகுதிகளோடு இணைந்து விளங்கிய எருசலேமைக் கைப்பற்றியதன் மூலம்

தாவீது, யூதா மற்றும் இஸ்ராயேல் அரசுகளை ஒன்றாக இணைத்து, ஒன்றுபட்ட அரசினை உருவாக்கினார். சவுலின் மகள் மீக்காளைத் தனது மனைவியாக்கிக் கொண்டு, சவுலினுடைய அரச வாரிசாக தன்னை ஏற்படுத்திக்கொண்டு, தனது அரச உரிமையினை உறுதிப்படுத்திக் கொண்டார் *(2 சாமு 3:12-16)*. பெலிஸ்தியர்கள் அடிமை நிலைக்கு தாழ்த்தப்பட்டனர். தனது நாட்டைச் சுற்றியுள்ள எகிப்து, இத்தியர், அசீரியா மற்றும் பாபிலோனிய ஆகிய நாடுகளின் வலிமையற்ற நிலையினைத் தனக்குச் சாதகமாக்கிக்கொண்டு, தாவீது தெற்கில் எசியோன்-கெபேரிலிருந்து, வடக்கில் காதேசு வரையும் மத்தியதரை கடற்கரைப்பகுதியில் உள்ள கர்மேல் மலையிலிருந்து கிழக்கில் லெபனோன் மலைப்பகுதி வரையுள்ள பகுதியில் தாவீது இஸ்ராயேல் பேரரசை நிறுவினார். இயற்கையாகவே, இஸ்ராயேலின் ஒன்றுபட்ட அரசில், தாவீதினுடைய திறமையான, உறுதியான நிர்வாகத்தின்கீழ், அவருடைய யூதா கோத்திரமே முதன்மை பெற்று இருக்கிறது.

*3.* பன்னாட்டு - வணிக நிலை:- *11*-ஆம் நூற்றாண்டின் இறுதியில், 'தீர்' பகுதி உலக முழுமைக்கும் ஒரு வியாபாரத்தலமாக உருவாயிற்று. ஒன்று பட்ட இஸ்ராயேல் எருசலேம் வழியாக செல்லும் எசியோன்-கெபேர் வணிக மார்க்கத்தின்மூலம், தீருக்கு நெருங்கிய, அண்டை நாடாக விளங்கிற்று. நட்பு மற்றும் உடன்பாட்டு உறவுகள் துரிதமாக ஏற்படுத்தப்பட்டன. தீர் நாட்டு வியாபாரிகள் இஸ்ராயலில், வெளிநாட்டுப் பொருட்களைக் கொண்டு பண்டமாற்று வியாபாரம்மூலம் இஸ்ராயேல் பொருட்களை வாங்கினர். தாவீதின் பேரரசு கிட்டதட்ட அரை நூற்றாண்டு காலம் நிலைத்திருக்கக் கூடிய அமைதியை மேற்காசியா முழுவதும் ஏற்படுத்திற்று. பாலஸ்தீன மக்கள் தங்களது அன்றாட அலுவல்களை எந்தவித தொல்லையுமின்றி நிறைவேற்ற முடிந்தது. வடக்குப் பகுதி இஸ்ராயேல் விவசாயிகள் தேவைக்கும் அதிகமான விளைச்சலை பெற ஆரம்பித்தனர். அதிக விளைச்சலைப் பெனிசிய வியாபாரிகளுக்கு விற்றனர். இந்நிலை சீரான வளர்ச்சியடைய ஆரம்பித்தது. வெளிநாட்டுப் பொருட்கள் அதிக அளவில் பெருகவே, வாழ்க்கைத் தரமும் அதனுடன் சேர்ந்து உயரலாயிற்று. குறிப்பிட்ட கால அளவில், வியாபாரிகளின் வர்க்கம் உருவாயிற்று. அவர்களது செயல்கள் சீராகப் பெருகுவதற்கு ஏற்ப, அவர்களின் செல்வமும், செல்வாக்கும் பெருகலாயிற்று. காலப்போக்கில் தங்களது வியாபாரத்தை பரந்த அளவிலும், இலாபகரமாகவும் செயல்படுத்த, அவர்கள் தங்களது வியாபார செயல்களையும் இருப்பிடத்தையும் நகரங்களிலேயே ஏற்படுத்திக் கொண்டனர். ஆடம்பர வீடுகளை கட்டி பணியாட்களையும், அடிமைகளையும் அமர்த்தினர். தங்களது பல்வேறு வியாபார பணிகளுக்காகக் குதிரைகள் பூட்டிய இரதங்களில் பயணம் செய்தனர். வெளிநாட்டுப் பொருட்களே அவர்களது தினசரி தேவைகளை நிவர்த்தி செய்தன. நகரங்கள், முக்கியமான தலைநகரான எருசலேம், பரப்பிலும், செல்வத்திலும், பொருளாதார நிலையிலும் பெரும் வளர்ச்சியடைந்தன. வகுப்புவேறுபாடுகள் தோன்றின. ஒருபுறம் நகரில் வசிக்கும் ஆட்சியாளர்களாகிய அரசவை அலுவலர்கள், படைத்தலைவர்கள், நீதிமன்ற அலுவலர்கள் மற்றும் செல்வமிக்க வியாபாரிகளைக் கொண்ட வகுப்பும், மறுபுறம் அதற்கு முற்றிலும் மாறுபட்ட பெருவாரியான மக்களைக் கொண்ட வடபகுதி விவசாயிகள், தென்பகுதி மேய்ப்பர் மற்றும் சிறுவிவசாயிகளை கொண்ட வகுப்பும் தோன்றின. பண்டமாற்று வியாபாரத்திற்கு அதிக பொருட்களையும் விவசாயப்பொருட்களையும் கொண்ட வடபகுதி, மேய்ப்புத் தொழிலைக் கொண்ட தென்பகுதியைவிட பொருளாதாரம் மற்றும் கலாச்சாரத்திலும் பெரிதும் முன்னேறி இருந்தது.

தாவீதினால் ஆரம்பிக்கப்பட்ட இத்திட்டம், அவருக்கு பின்வந்த அவரது மகன் சாலமோனின் திறமையினால் பெரிதும் விரிவுபடுத்தப்பட்டது. 'தீர்'-நாட்டுடன் உறவு நெருக்கமடைந்தாலும், மற்ற அண்டை நாடுகளுடனும் இஸ்ராயேல் நேரடி வியாபாரத்

A

தொடர்புகளைத் தொடங்கியது. குதிரைகளிலும், இரதங்களிலும் வாணிகம் குறிப்பாக வளர்ச்சி அடைந்தது (*1 அர 10:14-29*). அடிமை ஊழியர்களின் மூலமாக நாட்டினுடைய கனிப்பொருட்கள், சிறப்பாக அராபாவிலுள்ள தாமிரச் சுரங்கங்களிலிருந்து பெருமளவில் எடுக்கப்பட்டன. சாலமோன், எசியோன்-கெபேரைத் துறைமுகமாக்கித் தனது கப்பற்படையின் துணையுடன் செங்கடல் மற்றும் இந்திய பெருங்கடல் பகுதியில் நிலவிய செல்வாக்கு மிக்க வாணிபத்தைத் தனக்குச் சாதகமாக மாற்றலானார் (*1 அர 9:21-29*). நாட்டின் செல்வம் சீராகப் பெருக ஆரம்பித்தது; அதன் பன்னாட்டுத் தொடர்பு விரிவடைந்தது. அதன் வாழ்க்கை முறை, சமூகஅமைப்பு மற்றும் கலாச்சாரம் போன்றவை குறிப்பாக நகரவாசிகளிடையே மாற்றம் காணத் தொடங்கின. அவ்வாறே, பேரரசின் நிர்வாகம் மற்றும் பன்னாட்டு வணிக வளர்ச்சி ஆகியவற்றின் தேவைக்கேற்ப இக்காலத்தில் எழுத்துப் பணியில் வளர்ச்சியும், எபிரேய இலக்கியமும் தொடங்கப் பெற்றன.

இப்புதிய இஸ்ராயேலின் கலாச்சாரம், தலைநகராகிய எருசலேமில் உறுதியான நிலையான இடத்தைப் பிடித்திருந்தது. மற்ற நகரங்கள், குறிப்பாக விவசாய வடபகுதி இத்தகைய மாற்றங்களை கொண்டிருந்தாலும், எருசலேமைவிடத் தாழ்ந்த நிலையிலேயே இருந்தன. இந்நிலையில் முன்னேற்றமும் வகுப்புவாத நோக்கும் கொண்ட நகரவாசிகளுக்கும், குறிப்பாக எருசலேம் வாசிகளுக்கும், பழமை வாத எண்ணம் கொண்ட வடபகுதி விவசாயிகள் மற்றும் தென்பகுதி மேய்ப்பர்களுக்கும் இடையே, கலாச்சார மற்றும் சமய நோக்கிலும் பழக்க வழக்கங்களிலும் பிரிவும் மறைமுகமான எதிர்ப்பும் உருவாயின.

சாலமோனின் மரணத்துடன் இஸ்ராயேல் பேரரசு கலைந்துவிட்டது. ஒன்றுபட்ட பேரரசு இருபிரிவுகளாக, விவசாய வடபகுதி மற்றும் மேய்ச்சல் தென்பகுதி என்ற நிலையில், இஸ்ராயேல் மற்றும் யூதா என்ற பெயரில் இரு அரசுகளாகப் பிரிந்தன. சிலசமயங்களில் பலதரப்பட்ட விரோத மனப்பான்மை அவர்களை தனித்தனியாகப் பிரித்திருந்தது. பெரும்பாலும் எசியோன்-கெபேரிலிருந்து தீர் வரையிலான வணிக மார்க்கத்தின் மீதான உரிமை போன்ற தன்னிறைவிற்கான அடிப்படைத்தேவைகளுக்காக இணைந்து சார்ந்திருக்க வேண்டிய அவசியமானது, இருவரையும் 'தீர்'-பகுதியுடன் இணைப்பதற்காகவும், ஆராமிற்கு எதிராக போட்டியிடவும் சமாதானத்தையும் கூட்டுறவையும் அவர்களிடையே ஏற்படுத்தியிருந்தது.

அரசின் பிளவினாலும், பன்னாட்டு உறவு துண்டிக்கப்பட்டதனாலும், வடக்கு அரசாகிய இஸ்ராயேல் மீண்டும் வேளாண்மைப் பொருளாதாரத்திற்கே திரும்பியது. ஆயினும், ஆகாபு மற்றும் 2-ஆம் எரொபயாம் ஆகியோரது ஆட்சியின் கீழ், யூதா மற்றும் தீர் நாடுகளுடன் ஏற்பட்ட நெருங்கிய, ஒன்றுபட்ட கூட்டுறவின் விளைவாக, பன்னாட்டு வியாபாரம் மீண்டும் புத்துயிர் பெற்றது. சமூகப் பாகுபாடுகளுடன் கூடிய நகர வாழ்க்கை, குறிப்பாக வட பகுதியில், மீண்டும் பெருமளவில் பரவியது. கடவுளால் ஏற்படுத்தப்பட்ட மக்களாட்சி வாழ்க்கை முறைக்கும் கடவுளுடன் ஏற்படுத்தப்பட்ட உடன்படிக்கைக்கு அடிப்படையாக அதனை ஏற்றுக்கொண்ட மக்களுக்கும் விரோதமாக, செல்வந்தர்களின் செல்வம் மற்றும் அதிகாரத்தில் மட்டுமே வளர்ச்சி, ஆடம்பர மற்றும் சுகபோக வாழ்க்கை, அநியாயமான வியாபார நெறிகள், ஏழைகளை அடிமையாக்கி கொடுமைப்படுத்துதல் போன்ற சமூக, பொருளாதாரத் தீமைகள் பெருகின. இந்நிலையே, ஆகாபின் காலத்தில் எலியா மற்றும் 2-ஆம் எரொபயாமின் காலத்தில் ஆமோஸ் என்னும் மேய்ப்பர் ஆகிய இறைவாக்கினர்களைச் செயல்படத் தூண்டியது.

யூதாவின் நிலைமை முன்பிருந்ததைப் போலவே இருந்தது. எருசலேமின் நகர கலாச்சார மற்றும் சமூக நிலைமைக்கு முற்றிலும் மாறுபட்ட ''அம்கா அரேஸ்'' என்று

''மண்ணின் மக்கள்'' எனப்படும் யூதாவின் கிராம மேய்த்தல் பணிபுரியும் மக்களைப் பெருமளவில் கொண்ட நிலை காணப்படுகிறது (2 அர 11:14. 18-20). இத்தகைய சமூக, பொருளாதார, கலாச்சார நிலையானது இஸ்ராயேல் 721-இல் ஆசிரியர்களால் வெல்லப்படும் வரையிலும், யூதா 586-இல் பாபிலோனியர்களால் வெல்லப்படும் வரையிலும் நிலவியது.

4. நாடு கடத்தப்பட்டதற்கு பிந்திய காலம்:- பாபிலோனிய அரசனாகிய நெபுக்கதுனேசார், எருசலேம் மற்றும் யூதாவின் மதில் சூழ்ந்த பிற நகரங்களைக் கைப்பற்றி, அழித்து நாட்டு மக்களைப் பாபிலோனியாவிற்கு நாடு கடத்திக் கொண்டு சென்றார் (2 அர 24:11-16; 25:22). இதனுடன் நகர வாழ்க்கையும் அத்துடன் சேர்ந்திருந்த சமூக பொருளாதார நிலைகளும் ஒரு முடிவிற்கு வந்தன. சமூகத்தில் பின்தங்கிய குறிப்பாக கிராம மக்கள் மட்டுமே நாட்டில் தங்கியிருந்தனர். விவசாயமும் ஆடு மேய்த்தலும் முக்கிய தொழில்களாகின. விவசாய தொழிலிலும் அத்துடன் இணைந்த மற்ற செயல்களிலும் ஏற்பட்ட மாறுதல்களின் விளைவாக, யூதேய சமூதாயமானது கடந்தகால விவசாய நிலைக்கு மாறியது. நாடு கடத்தப்பட்ட காலத்தின் தொடக்கத்தில், யூத விவசாயிகளுக்கு, அவர்கள் நாட்டிலே வாழ்வு கடினமானதாக இருந்தது. நாளாவட்டத்தில் சிலமயம் குறைந்த விளைச்சலே இருந்தாலும் சிலர் மாட மாளிகைகளில் வசிக்கவும், ஆலயத்தைத் திரும்ப கட்டக்கூடிய அளவிற்கும் வாழ்க்கையில் உயர்ந்தனர் (ஆகா 1:2-11). கோவில் இடிந்து கிடந்த இந்த எழுபதாண்டு காலத்தில் (586-516), யூதேய விவசாயிகள் தங்களது சமய வழிபாட்டிற்கு மையமாகச் செபக்கூடத்திற்கு முக்கியத்துவம் கொடுக்க ஆரம்பித்தனர். இதன் விளைவாக, கோவிலை திரும்பக்க கட்ட வேண்டும் என்னும் ஆகாயின் வேண்டுகோளுக்கு முதலில் அக்கறை செலுத்தாமலே இருந்தனர்.

பாபிலோனியாவிற்கு கொண்டுசெல்லப்பட்ட யூதேயருக்கு 2-ஆம் ஏசயா இறைவாக்கினரால் கூறப்பட்ட செய்தியானது, அவர்களைவிட, யூதேயாவில் தங்கியிருந்த சமுதாயத்தினையே பெரிதும் கவர்ந்திருந்தது. யாவேயின் ஒன்றுபட்ட உலகளாவிய பண்பு மற்றும் வல்லமை, அவரே உலகின் ஒரே கடவுள், உலகின் ஒற்றுமை, கடவுளின் திட்டப்படி மனிதகுலத்தின் ஒற்றுமை, உலகத்தின் அரசனாகவும், மீட்பராகவும் இருக்க கடவுளால் தேர்ந்தெடுக்கப்பட்ட பாரசீக மன்னனாகிய சைரஸ் மூலம் நிறுவப்பட இருக்கும் உலகளாவிய அரசு ஆகியவை பற்றிய செய்தியை அவர் அறிவித்தார் (ஏச 45:1). இஸ்ராயேல் என்பது இனி ஒரு அரசியல் அமைப்போ, நாடோ அல்ல; மாறாக, கடவுளின் மக்கள், அவரது ஊழியராக இருக்கத் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள், அனைத்து மக்களினத்தாருக்கும் அளிக்கப்படவுள்ள மீட்பின் பிரதிநிதி, பாபிலோனிய அடிமைத்தளையினின்று சைரசின் மூலம் விடுவிக்கப்படப்போகின்ற பணியினை நிறைவேற்ற வேண்டியவர்கள் என்றும் 2-ஆம் ஏசயா கூறுகிறார்.

பாபிலோனிய அடிமைத்தளையின் இறுதிக்கட்டத்தில், பாலஸ்தீன யூதேயசமுதாயமானது தேசியவாதிகள் என்றும், உலகளாவிய மனப்பான்மை உடையவர்கள் என்றும் இரண்டாகப் பிளவுபட்டிருந்தது. உப ஏசயாவின் செய்திக்கு பதிலளிக்கும் செயலில் மட்டும், இரு குழுவினரும், தமது கோட்பாட்டிலும் செயல்திட்டத்திலும் உலகளாவியவர்களாகவே இருந்தனர். திரும்ப பெறவுள்ள யூதேய அரசியல் சுதந்திரம், தாவீதின் சந்ததியினர் வழியில் கடவுளால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசர்களால் நிறுவப்பட உள்ள யூதேய அரசைப்பபற்றிய நம்பிக்கையைத் தேசியவாதிகள் போற்றிக்காத்து வந்தனர். கி.மு.522-ல் 'கேம்பிசசின் தற்கொலை, நிகழ்ந்த குறுகிய ஆயுள்கால சைரஸ் அரசின் வீழ்ச்சி, அத்துடன் விளைந்த குழப்பங்கள், பாரசீகப் பேரரசை எதிர்நோக்கியிருந்த வீழ்ச்சி ஆகியவை தேசியவாதிகளின் நம்பிக்கையையும், திட்டங்களையும் ஊக்குவித்தன. இறைவனால் ஏற்படுத்தப்படவுள்ள அரசைப்பற்றிய ஏசயாவின் செய்தியை ஒருப

குதியை ஏற்றுக்கொண்ட அவர்கள் மற்றொரு பகுதியை ஏற்க மறுத்தனர். இஸ்ராயேலரை தவிர்த்து மற்றவர்களும் ஆட்சிபுரிவர், தாவீதின் சந்ததியினர் மட்டுமல்ல, பிறரும் அரசராக இருப்பர் என்ற எண்ணம் இஸ்ராயேலரின் ஒரே கடவுளாகிய 'யாவே'-க்கு இருக்கும் என்பதனை ஏற்றுக்கொள்ள மறுத்தனர். யாவேயை ஒரே ஒரு கடவுளாகவும் உலகமனைத்திற்கும் கடவுளாகவும் ஏற்றுக்கொண்டாலும் அவர் முதன்மையாக தங்கள் கடவுளே என்று கருதினர். தங்களது திட்டம் நிறைவேறுவதற்கு காலமும் கனிந்துள்ளது என்று அவர்கள் நம்பினர். இதன்விளைவு, 520-519-ல் நிகழ்ந்த செருபாபேலின் பயனற்ற கிளர்ச்சியில் முடிவடைந்தது (ஆகா 2:20-23; செக் 4:6-7).

செருபாபேல் கிளர்ச்சியின் வீழ்ச்சிக்குப் பின்னர், உலகளாவியவர்கள் முன்னிலைக்கு வந்தனர். இக்குழு 2-ம் ஏசயாவின் செய்தியையும், திட்டத்தையும் கிட்டதட்ட முழுமையாக ஏற்றுக்கொண்டது. பாரசீக அரசின் உதவியுடன் இரண்டாவது கோவில் எழுப்பப்பட்டு 516-ம் ஆண்டின் புத்தாண்டு நாளில் அர்ப்பணிக்கப்பட்டது. இந்நிகழ்ச்சி ஒரு பொருள் பொதிந்த முக்கிய கட்டமாகும். யாவே, இஸ்ராயேலை ஒரு நாடாக தாவீதின் சந்ததியினரால் ஆளப்பட வேண்டிய ஒன்றாக இல்லாமல், தமது மக்களாக, ஊழியராக மனுக்குல மீட்பிற்கு பிரதிநிதியாக தேர்ந்தெடுத்தார் என்பதை அவர்கள் ஏற்றுக் கொண்டனர். இதன் விளைவாக, அவர்கள் தங்கள் யூத நாட்டை, இறைவனை மட்டுமே ஒரே அரசராகவும், அவரது உலக நிர்வாகி மற்றும் பிரதிநிதியாக ஆலயத்தின் தலைமைக்குருவையும் கொண்ட ''யாவேயின் சமூகம்'' எனப்படும் சமய மக்களைக் கொண்ட இறை ஆட்சியாக மாற்றி அமைத்தனர். மேலும், இஸ்ராயேலை யாவே-யின் ஊழியனாகவும், உலக மீட்பின் பிரதிநிதியாகவும் நிபந்தனையின்றி ஏற்றுக் கொண்ட இவர்கள், மதமாற்றத் திட்டத்தை துவக்கினர். அதன் விளைவாக, பலரும் யூத மதத்தில் சேர்ந்து, யாவே சமூகத்தின் உறுப்பினரானார்கள். இரண்டாம் ஆலயம் இருந்தவரை, உலகளாவியவர்களின் குழு முன்னனியில் இருந்தவரை இத்திட்டம் தொடர்ந்தது. ஆனால், இது முப்பதாண்டுகள் மட்டுமே நிலைத்தது.

486-ஆம் ஆண்டின் இறுதியில் முதலாம் தாரியுசின் மரணத்திற்கு பின்னர், பாரசீகத்திலிருந்து தேசிய வாதிகளால் இரண்டாம் முறை தொடங்கப்பட்ட கிளர்ச்சியின் விளைவாக, திடீரென, அழிவுக்குரிய இம்முடிவு ஏற்பட்டது. யூதாவிற்கு நெருங்கியிருந்த பகைவர்களான ஏதோம், மோவாபு, அமோன் மற்றும் பெலிஸ்தியரை யூதாவின் மேல் படையெடுக்க அனுமதித்துத் துணை புரிந்ததன் மூலம் முதலாம் தாரியுசிற்கு பின்னர் வந்த 'செருசு' இக்கிளர்ச்சியை விரைவிலும் கடுமையாகவும் அடக்கினார். யாவே அனைத்து நாடுகளையும் தனக்குக் கீழ்ப்படுத்தி யூத உலக பேரரசை நிறுவுவார் (உப 20:10-20) என்ற யாவேயின் உறுதிமொழி மீது மட்டுமே தேசியவாதிகள் நம்பிக்கை கொண்டிருந்ததால் அவர்களிடமிருந்து எதிர்ப்பு எதுவும் எழவில்லை. நாடு முழுதும் சூறையாடப்பட்டது; எருசலேம் கைப்பற்றப்பட்டு அதனுடைய சுவர்களும் கதவுகளும் அழிக்கப்பட்டன. இரண்டாவது ஆலயம் அடியோடு எரிக்கப்பட்டது. பெரும்பாலான மக்கள் ஈவு இரக்கமின்றி படுகொலை செய்யப்பட்டனர். மற்றவர்கள் சிறைபிடிக்கப்பட்டு, தீர் மற்றும் காசாவிலுள்ள அடிமை சந்தையில், உலகின் எல்லையில் உள்ள பகுதிகளுக்கெல்லாம் விற்கப்பட்டனர் (யோவேல் 3:1-8). யூதேயாவின் முன்பிருந்த நிலையில், பரிதாபகரமாக எஞ்சியிருந்த யூதே சமுதாயத்தினரின் ஒரு சிறு பகுதியினர் மட்டுமே உயிரோடு விடப்பட்டனர் (நெக 1:2-3).

பாபிலோனிய அடிமைத்தனத்தினின்று 458-ல் திரும்பிய பிறகு, பாரசீக ஆதிகாரம் மற்றும் உதவியுடன், எஸ்ரா மற்றும் அவரது உதவியாளர்களால் ஆலயம் மூன்றாவது முறையாக கட்டியெழுப்பட்ட பின்னர், பாஸ்தீனத்திலிருந்து யூதேய சமுதாயத்தினரின் நிலையானது, மீண்டும் மெதுவாக

ஆனால் சீராக ஒரு உறுதியான நிலையினை அடைந்தது. எருசலேமில் நகர வாழ்வு மீண்டும் புத்துயிர் பெற்றது. **444**-ல் நகர சுவர்களை கட்டியெழுப்பும் பணியினை நெகமியா தொடங்கியவுடன், இந்நிலை வளரத் தொடங்கியது. பாபிலோனியாவில் எஸ்ராவையும் அவரை பின்பற்றியவர்களையும் பிரதிநிதியாக கொண்டிருந்த பாபிலோனில் இருந்த யூத சமுதாயத்தினர் பல்வேறு சவால்களை சமாளிக்க வேண்டியிருந்த்து. நாடு கடத்தப்பட்ட இஸ்ராயேலர் அனைவரும் மீண்டும் தமது தாயகத்திற்கு கொண்டுவரப் பட்டு, எல்லா பாவங்களையும் நீக்கி புதியதொரு இதயத்தினை அதற்கு அளித்து (எச *36:16-36*), புதிய முடிவில்லா உடன்படிக்கை ஒன்றை அமைப்போம் (எரே *24:4-7; 31:30-33*) என்ற எரேமியாஸின் செய்தியை ஏற்று அவர்களுடன் இருந்த சாதேக்கின் மரபைச் சேர்ந்த எசக்கியேல் மறுவிளக்கம் அளித்ததை ஏற்றுக்கொண்டனர் அம்மக்கள். அன்னிய நாட்டில் புதிய மக்கள், புதிய உயர்ந்த கலாச்சாரம் ஆகியவற்றினிடையே, யாவே அறிவித்த நோக்கம் தங்களிடையே நிறைவேறும் காலம் வரையில், தமது யூத அடையாளத்தை எவ்வாறு நிலையாகத் கொண்டிருப்பது, என்னும் பிரச்சினை அவர்களிடையே பெரிதாக உருவெடுத்தது. இதற்குத் தீர்வாக, யூதர்கள், பிறமக்களிலிருந்து பிரிந்து தனித்து வாழ்வதுதான் என்று கருதப் பட்டது. இது உலகளாவியக் கருத்துடையவர்களின் போக்கிற்கு நேர்மாறாகவும், பெருமளவு தேசியவாதிகளின் நிலை போன்றதாகவும் அமைந்தது.

பாபிலோனில் பிறரிடமிருந்து பிரிந்து தனித்து வாழும் யூதமரபை பாலஸ்தீன யூத சமுதாயத்தின் மீதும் எஸ்ரா செயல்படுத்தத் தொடங்கினார். யூத மதத்திற்குப் பிறரை மதம் மாற்றுதல் முழுமையாக நிறுத்தப்பட்டது. அன்னியருடன் திருமணம் புரிதல் தடைசெய்யப்பட்டது. அரசியல் நாட்டமைப்பிற்கு முற்றிலும் எதிரானதான இஸ்ராயேலர் ஒரு சமயம் சார்ந்த மக்களே என்ற முந்தைய உலகளாவிய கோட்டாட்டை எஸ்ராவும் அவரைச் சேர்ந்தவர்களும் முழுமையாக ஏற்றுக்கொண்டாலும், அது எல்லாரையும் உள்ளடக்கும் ஒன்றல்ல, யூதர்களை மட்டும் உள்ளடக்கும் தனித்தன்மையுடையதாகும். இஸ்ராயேல், பிறமக்களிலிருந்து பிரித்து வைக்கப்பட்டு, யாவேயின் மக்களாவர். அவருக்கு மட்டுமே உரியவர்களாவார். எஸ்ரா மற்றும் நெகமியா ஆகியார் மரபுப் பெயரான ''ககால் யாவே'' அதாவது 'யாவே-யின் சமூகம்' என்ற பெயரிலேயே யூத மக்களை அழைக்கலாயினர் (எஸ் *10:2. 14*; நெக *7:66; 8:17*). ஆனால் ஐந்தாம் நூற்றாண்டின் இறுதிக்குள் 'இஸ்ராயேலின் சபை' என்று பொருள்படும் 'அதாத் இஸ்ராயேல்' என்ற சொல், பழைய வார்த்தைக்குப் பதிலாக உபயோகிக்கப்படலாயிற்று (யாத் *12:3.6.47*; *2* நாள் *5:6*). பழைய வார்த்தையுடன் ஒப்பிட்டு நோக்கும்போது, இவ் வார்த்தை கொண்டுள்ள முற்றிலும் மாறுபட்ட தனித்து ஒதுங்கியிருக்கும் பொருள் தெளிவாக புலனாகிறது. எஸ்ராவின் அமைப்பினால் உண்டான கடுமையாக ஒதுங்கியிருக்கும் பண்பு முக்கியத்துவம் பெற்றது. இது சபையின் ஒற்றுமைக்கு எதிராக நடப்பவர்களையும், யாவே-யுடனான உறவை துண்டிக்க வழிகோலுபவர்களையும் வெளியேற்றுதல், அதாவது வெட்டிவிடுதல், இஸ்ராயேல் சபையினின்றே ஒதுக்குதல், வெட்டிவிடுதல் போன்ற தண்டனைகளில் தெளிவாகிறது. யூதரல்லாதோருடன் திருமணம் புரிந்ததாக கருதப்பட்ட சமாரியரும், அக்கால எகிப்திய யூத சமுதாயத்தினரும் யூதரே அல்லர் என்று கூறப்பட்டு, இஸ்ராயேல் சபையினின்று வெளியேற்றப் பட்டது, அவர்கள் பின்பற்றிய யூத தனித்துவத்தைத் தெளிவுபடுத்துகின்றது.

எஸ்ராவினால் மூன்றாவது கோவில் கட்டி முடிக்கப்பட்டபின், இரண்டாம் ஆலயத்தைச் சேர்ந்த லேவிய குருக்களுடன் ஏற்பட்ட, முந்திய குருப்பணியாளர்கள் ஆரோன் குருக்களா? அல்லது சதோக்கிய குருக்களா? (எச *44:10-16*) என்ற விவாதத்தினை முடித்தது. கி.மு.5-ம் நூற்றாண்டின் இறுதிக்குள் குருக்களைப் பற்றிய விதிமுறைகள் தொகுக்கப்பட்டது, புதிய சந்திர-சூரிய

நாட்காட்டி மூலம் திருவிழா மற்றும் சமயச்சடங்குகளை முறைப்படுத்தியது ஆகியவற்றோடு, அதிகாரபூர்வமான யூதரின் பண்புகள் மற்றும் யூதமக்களின் வாழ்க்கை முறை போன்றவை அடுத்து ஐந்து நூற்றாண்டுகளுக்கு நிலைப்படுத்தப்பட்டது எனலாம்.

சீரிய அரசன் 4-ஆம் அந்தியோக்கு யூதமக்களின் சமயத்தின் மீது செலுத்த விரும்பிய தீவிரமான மாற்றங்களுக்கு யூதர்கள் காட்டிய எதிர்ப்பின் விளைவாக 'அசமோனிய' அரசு உருவாயிற்று. 'அசமோனியர்' தாவீதின் பரம்பரையைச் சேர்ந்தவர்களல்லர். பழங்காலத்தில் எதிர்பார்க்கப்பட்டது போலும், இன்னும் சிலர் கருதியதுபோலும் அவர்களுடைய அரசு மீண்டு எழுந்த யூதா அரசு அல்ல. முதல் அசமோனிய ஆட்சியாளர்கள் அரசை பொறுப்புடனும், ஜனநாயக முறையிலும் நடத்திச் சென்றனர். பிற்கால அரசர்களோ ஏகாதிபத்திய வழியில் செல்லத் தொடங்கினர். அவர்களுக்குக் கீழாக அரசவை கட்சியினரும், அதன் விளைவாக அதிகாரவர்க்கத்தினரும் தோன்றினர். அதன் பயனாக சமூக வேறுபாடுகள் தோன்றத் தொடங்கின. இந்நிலையைப் பரிசேயர், சதுசேயருக்கு இடையிலான போராட்டங்கள் பெருமளவு பிரதிபலிக்கின்றன. ஏரோது மற்றும் அவரது பரம்பரையின் கீழ், இந்நிலை குறிப்பிடத்தக்க அளவு பரவலாயிற்று. அதிகார வர்க்க அமைப்பு யூத மக்களின் உண்மையான ஜனநாயக முறைமைக்கு எப்போதுமே ஏதோ ஒருவிதத்தில் அந்நியமாக இருந்தது. தங்கள்மீது கண்டிப்பாகத் திணிக்கப்பட்ட இந்த அமைப்பை, யூதமக்கள் மனப்பூர்வமாய் வெறுத்தனர். கி.பி.70-ல் எருசலேம் ஆலயம் உரோமையரால் முற்றிலும் அழிக்கப்பட்டு, யூத அரசு முடிவிற்கு கொண்டுவரப்பட்டது வரையிலான ஏரோதியர்களின் காலம் முழுவதிலும், ஏகாதிபத்திய மேல்குடியாட்சிக்கும், பொது மக்களின் ஜனநாயக எண்ணத்திற்கும் இடையே நிலவிய வேறுபாடுகள் தெளிவாகப் புலப்பட்டன. அதன் விளைவாக, யூத மக்களிடம் நிலவிய ஜனநாயக நோக்கு உறுதிப்படுத்தப்பட்டது.

**இஸ்ராயலின் வரலாறு -** I - ஆபிரகாமுக்கு முன்வரலாறு

1. வரலாற்றிற்கு ஆதாரங்கள் வேண்டும். இஸ்ராயல் மக்களின் வரலாற்றிற்குத் தற்போது பல ஆதாரங்கள் வகையாய் கிடைக்கின்றன. தொல் பொருள் ஆராய்ச்சி, அதோடு தொடர்புடைய ஆய்விலக்கியங்கள் ஆகியவை இஸ்ராயல் மக்களின் வரலாற்றை மட்டுமல்ல, இஸ்ராயல் மக்களின் முன்னோர்களின் வரலாற்றினையும், தெரிந்துக் கொள்ளப் பாலமாக அமைந்துள்ளன. இத்துடன் இஸ்ராயல் மக்களைச் சுற்றி வாழ்ந்த மற்ற மக்களின் வரலாறும் மேற்கண்ட ஆராய்ச்சிகளால் வெளிச்சத்திற்கு வந்துள்ளன. ஆனால் சுமார் 150 வருடங்களுக்கு முன்பாக, இவ்வித ஆய்வு பூர்வமான இஸ்ராயல் வரலாற்றை நாம் காண வாய்ப்பில்லை. முன்பெல்லாம் இஸ்ராயல் வரலாற்றை நிலைநிறுத்த, இரண்டுவித ஆதாரங்கள் மட்டுமேத் துணையாய் நின்றன. ஒன்று விவிலியம், மற்றொன்று எரோதோதுசு என்பவரின் எழுத்துப்படைப்பு. ஆனால் மேற்கண்ட இரண்டு ஆதாரங்களும் அறிவியல் பூர்வமான ஆதாரங்கள் என்று சொல்ல முடியாது. ஏனென்றால் விவிலியம் ஒரு குறிப்பிட்ட நோக்கத்தை மனதில் வைத்து எழுதப்பட்டது. எரோதோதுசுவின் எழுத்துப்படைப்பும் முழுமையாக அறிவியல் பூர்வமானது என்று சொல்ல முடியாது. ஆகவே தற்போதுக் கிடைத்திருக்கும் ஆதாரங்களின் அடிப்படையில் இஸ்ராயலின் வரலாற்றை இங்கு பகுத்துப் பார்க்கலாம். ஒருவிதத்தில் புதிய வரலாற்றுக் கண்டுபிடிப்புகள், விவிலியத்தில் கூறப்படுவைகளுக்கு மாறுபாடுகளைத் தருகின்றன. இதனால் விவிலிய அறிஞர்கள் ஆழ்ந்த ஆராய்ச்சியில் நுழைந்திட, இந்நவீன வரலாற்றுக் கண்டுப் பிடிப்புகள் காரணமாக அமைந்தன. மற்றொரு வகையில் இப்புதிய வரலாற்று ஆதாரங்கள் மிகுந்த பயனுள்ளவையாய் அமைந்துள்ளன. ஏனென்றால் விவிலியத்தில் காணப்படும் நிகழ்ச்சிகளை உலகின் ஒட்டு மொத்த வரலாற்றுடன் இணைத்துப் பார்ப்பதற்கு இப்புதிய வரலாற்றுக் கண்டுபிடிப்புகள் உதவியுள்ளன. இன்னும் விவிலியப்பகுதிகளை

விளக்கிப் பார்க்கவும் இவ்வாய்வுகள் துணை செய்துள்ளன. உதாரணமாக ஆதியாகமத்தின் முதல் பதினொரு அதிகாரங்களின் இலக்கிய அமைப்பைப் புரிந்துக் கொள்ள இவ்வாய்வுகள் பெரிதும் உதவியுள்ளன.

மனிதன் தோன்றியது முதல், அவனின் வரலாற்றை பல படிகளாகப் பிரித்துப் பார்த்தனர் அறிஞர்கள். காலபோக்கில் மனிதன் கருவிகளையும், ஆயுதங்களையும், உருவாக்கிப் பயன்படுத்தினான். இக்கருவிகளைச் செய்ய பலவித மூலப் பொருள்களைப் பலவிதக் காலக்கட்டங்களில் பயன்படுத்தியுள்ளான். அவ்வாறு கருவிகளைச் செய்ய அவன் பயன்படுத்திய மூலப்பொருள்களையே, அக்காலத்திற்குரிய பெயராக அறிஞர்கள் பொருத்திக் கூறியுள்ளனர். இவ் வடிப்படையில்தான் கற்காலமென்றும், செம்புக் காலமென்றும் வகுத்துக் கூறுவர். இவ்வாறு குறிப்பிட்ட மூலப் பொருட்கள், கருவிகள் செய்ய பயன்படுத்தப்பட்டது ஒரு குறிப்பிட்ட காலத்தோடு தொடர்புடையனவையாகும். இம்மூலப் பொருட்கள் மாற்றப்பட்டது பல்லாண்டுகள் இடைவெளிக்குப் பின்பாகும். கீழேக் கொடுக்கப்படும் கால வரையரை தோராயமாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

2. கற்காலம்:- கி.மு.*3200*க்கு முற்பட்டக் காலத்தைக் கற்காலம் என்றழைப்பர். இக்கற்காலத்தை பழைய கற்காலம், இடைக்கற்காலம், புதிய கற்காலம் என்று பிரித்துக் கூறுவர்.

அ. பழைய கற்காலம்:- விஞ்ஞானிகளின் ஆராய்ச்சியின்படி, நமது உலகம் 3 லட்சம் கோடி வருடத்திற்கு முன் தோன்றியிருக்க வேண்டும் என்று கணிக்கின்றனர். இதில் 50 கோடி வருடத்திற்கு முன்தான் உயிரினங்கள் தோன்றியிருக்க வேண்டும் என்றும் கருதுகின்றனர். நமக்குக் கிடைத்திருக்கும் தொல் பொருட் ஆராய்ச்சியின்படி, 6 லட்சம் வருடத்திற்கு முன்பாக வாழ்ந்த மனிதனின் மண்டை ஓடுகள் நமக்குக் கிடைத்துள்ளன. இவை சாவா, ஓல்டுவாயு என்றஇடங்களில் கண்டுபிடிக்கப்பட்டவை. இப்பழைய மனிதனுக்கு 'செல்லயன்' மனிதன் என்று பெயர் வைத்துள்ளனர். மேலும் கிழக்குத் தெற்கு ஆப்பிரிக்காவிலும் இதைப் போன்ற பழங் காலத்து மண்டை ஓடுகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இம்மண்டையோடுகள் மேற் கண்ட 'செல்லயன்' மனிதனை விட சுமார் 10 லட்சம் ஆண்டுகளுக்கு முன்பானக் காலத்தைச் சார்ந்தவை. ஆனால் அவர்கள் மனித இனத்தைச் சார்ந்தவர்கள்தானா? என்பதில் அறிஞர்கள் மத்தியில் கருத்து வேறுபாடுகள் உண்டு. இந்த 'செல்லயனை' ஆரம்ப மனிதன் என்றழைக்கலாம். இந்த 'செல்லயனை' யொத்த மனிதர்கள் உலகில் பலப் பகுதிகளில் வாழ்ந்து வந்துள்ளார்கள் என்பதற்கும் நமக்குச் சான்றுகள் கிடைத்துள்ளன. செர்மனியில் கைடல்பர்கு என்றவிடத்தில் கண்டுபிடிக்கப்பட்ட மண்டையோடு 5 இலட்சம் வருடங்களுக்கு முந்திய காலத்தைச் சேர்ந்தது. சீனாவைச் சேர்ந்த பீகிங் நகரில் கண்டுபிடிக்கப்பட்ட மண்டையோடு 4 லட்சம் வருடங்களுக்கு முந்தியது. இங்கிலாந்தைச் சேர்ந்த சுவான்ஸகோம்பு என்றவிடத்தில் கண்டுபிடிக்கப்பட்ட மண்டையோடும், செர்மனி நாட்டைச் சேர்ந்த ஸ்டெயின் கெயிம் என்ற விடத்தில் கண்டுபிடிக்கப்பட்ட மண்டையோடும் இரண்டு இலட்சத்து ஐம்பதாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டவை. இவ்வாறாக நாற்பதாயிரம் ஆண்டுகளுக்கு முன்பாக ஒருவித முன்மனிதன் வாழ்ந்திருக்கிறான். இந்தப் பிரிவின் கடைசியில் நெயான்தெர்த்தால் என்ற வகை மனிதனும் வாழ்ந்து வந்திருக்கிறான். மேற்கண்ட மனிதவர்க்கத்தைத்தான் குகை மனிதன் என்றும் அழைப்பர். கி.மு.*40,000* ஆண்டுவாக்கிலிருந்துதான் தற்காலத்து நாகரீக மனிதர்களைப் போன்று முழுவளர்ச்சியடைந்த மனிதன் வாழ்ந்து வந்துள்ளான். இவர்களை ''அறிவுடைய மனிதர்கள்'' (Homo Sapiens) என்று அழைக்கிறோம். இந்த மெய்யறிவு மனிதர்கள் ஐரோப்பாவில்தான் முதலில் தோன்றியிருப்பதாகத் தெரிகிறது. அதே சமயத்தில் தென் மேற்கு ஆசியாக் கண்டத்திலும் இம்மெய்யறிவு மனிதர்கள் சற்று காலத்தால் முற்பட்டே தோன்றியுள்ளதாகத் தெரிகி

றது. இதற்குக் கர்மேல் மலையில் கண்டெடுக்கப்பட்ட மண்டையோடுகள் சான்றாக உள்ளன. இவர்கள் கி.மு.75,000 ஆண்டிலிருந்து வாழ்ந்து வந்திருக்கிறார்கள்.

இப்பழையக் கற்காலத்தில் மனிதன் நாடோடியாகத்திரிந்து வாழ்ந்து வந்திருக்கிறான். பலவிடங்களுக்குத் திரிந்தே வாழ்ந்திருக்கிறான். இக்காலத்தில் மனிதன், கோடைக் காலங்களில் திறந்த வெளியிலும், குளிர் காலங்களில் குகைகளிலும், பொந்துகளிலும் தங்கி வாழ்ந்திருக்கிறான். இக்காலத்தில் அவனுக்கு முக்கியமான வேலை தனக்குரிய உணவைத் தேடுவதாகும். மிருகங்களை வேட்டையாடியும், மற்ற உணவுப் பொருட்களைத் தேடிச் சேர்ப்பதிலும் தன் நாட்களைக் கழித்து வந்தான். இப்போது தீயைக் கட்டுப்படுத்தவும் தெரிந்து வைத்திருந்தான்.

கி.மு.40,000 ஆண்டிற்குப் பிறகுதான் தன் நாடோடி வாழ்க்கையை விட்டுவிட்டு ஓரிடத்திலேயேத் தங்கி வாழ மனிதன் முற்பட்டான் என்பதை ஆதாரங்கள் எடுத்துக் கூறுகின்றன. இப்போது உணவை தேடுவதோடு மட்டுமல்லாமல், உணவைச் சேமித்து வைக்கவும் தலைப்பட்டான். இச்சூழ்நிலையில் தான் சுமார் கி.மு.20,000 ஆண்டின்வாக்கில் மங்கோலிய இனத்தைச் சார்ந்தவர் பேரிங் என்ற இரு கடல் நீர் நிலைகளின் இடைக்கழியைத் தாண்டி அமெரிக்கக் கண்டத்தில் குடியேறியிருக்கின்றனர்.

ஆ. இடைக் கற்காலம்:- இக்காலத்தில், மனிதன் உணவைத் தேடிச் சேர்த்து வைக்கும் முயற்சியில் அதிக வளர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. அதே சமயத்தில் தானே உணவுத் தானியங்களை விளைவிப்பதிலும் முற்பட்டான் மனிதன். மிருகங்களைப் பிடித்து பழக்கியும், அவைகளைத் தனக்குப் பயன்படுத்திக் கொண்டான். இவ்வாறு மனிதனின் வாழ்க்கை முறையில் அடிப்படையான புதுத் திருப்பம் ஒன்று உண்டாகியது. இந்த அடிப்படை முன்னேற்றம் மேற்காசிய நாடுகளில்தான் கி.மு.10,000-7,000-திற்கும் இடைப்பட்டக் காலத்தில் உண்டாகியிருக்கிறது. இங்கிருந்துதான், இம்முன்னேற்றம் ஐரோப்பிய நாடுகளுக்கும் இந்தியாவிற்கும் பரவி சென்றிருக்கிறது. இத்தகைய வாழ்க்கை முன்னேற்ற முயற்சி, தொடர்ந்து மற்றொரு முறை இக்காலத்திலேயே, கிழக்காசிய நாடுகளிலும், மத்திய அமெரிக்காவிலும் உண்டாகியிருக்கிறது. அன்று உண்டாகிய அதே முன்னேற்றப் படியில், இன்னும் உலகின் பல உட் கண்டங்களில் மனிதனின் வாழ்க்கைநிலை தேங்கி நிற்பதையும் நாம் காணமுடிகிறது.

இந்த இடைக் கற்காலம் தோன்றியது மேற்காசிய நாடுகளில் என்று சொன்னோம், ஈரான், ஈராக், துருக்கி, சீரியா, பாலஸ்தீனம் ஆகிய இந்நாடுகளிலுள்ள, மழைவளம் பெற்ற மலைப் பகுதிகளில் தான் இந்நாகரிக வளர்ச்சி ஆரம்பமாகியிருக்கிறது. இப்பகுதிகள் 2,000 அடிமுதல் 5,000 அடி வரையிலான உணர்ந்த மலைகளுக்கிடைப்பட்ட சமவெளிப் பகுதிகளாகும். துருக்கியில் பெல்டிபி, ஈராக்கில் காரிம் சாகிர், மெலேபாத், சாவி செமி என்றவிடங்களிலும், கர்மேல் மலையிலும் தொல்பொருட் ஆராய்ச்சிகள் நடந்துள்ளன. இவ்விடங்களில் இடைக் கற்கால நாகரீக வளர்ச்சியின் தடையங்கள் கிடைத்துள்ளன. இங்கு மனிதர்கள் பயிர்செய்து உணவுப் பெற்றதையும், மிருகங்களைப் பழக்கிப் பயன்படுத்திக் கொண்டதையும் பார்க்கிறோம்.

இ. புதிய கற்காலம்:- கி.மு.7000 முதல் 4000 வரையுள்ள காலப்பகுதி புதிய கற்காலம் என்றழைக்கப்படும். இக்காலத்தில், மனிதன் உணவை உண்டாக்கிச் சேர்ப்பதில் முழுக்கவனத்தையும் செலுத்தியிருக்கிறான். இப்போது வேட்டையாடுவோர், மீன் பிடிப்போர், பழங்கள், கனிகள் சேர்ப்போர் இவர்கள் தனிதனிச் சிறு குழுக்களாகச் சேர்ந்து வாழ முனைந்தனர். இச்சிறு குழுக்கள், தாங்கள் தங்கியவிடத்தில வேண்டிய உணவு கிடைக்காதபோது வேறுவிடத்திற்கு இடம் பெயர்ந்து சென்றனர். இக்குழுக்கள் உணவுப் பொருட்களை சேமித்து வைக்க வாய்ப்

பில்லை. ஏனென்றால் அவ்வளவு அதிகமான உணவு பொருட்கள் அவர்களுக்கு கிடைக்கவில்லை. அத்துடன் சில உணவு வகைகளை சேர்த்து வைக்கவும் அவைகள் முடியாத வகையிலிருந்தன. இப்போது தங்கள் ஆடையாக, மிருங்களின் தோல்களை உடுத்திக் கொண்டனர். இக்காலத்தில், பாத்திரங்களைச் செய்து பயன்படுத்தியதாகவும் தெரியவில்லை. மண்பாத்திரங்களெல்லாம் இன்னும் தோன்றவில்லை. ஏனென்றால் பொருட்களை உண்டாக்குவதும் பாதுகாப்பதும்தான் அவர்களுக்கு முழுமையான வேலைகளாயிருந்தன. ஆனால் இப்போது பலவிடங்களுக்குத் திரிந்து வாழ்ந்த மனிதன் ஓரிடத்தில் தங்கி வாழ வேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஏனென்றால் ஓரிடத்தில் அவன் பயிர் செய்தபோது, விளைந்த கனிகளை அறுவடையாக்க அதேயிடத்தில் தங்க வேண்டி அவசியம் உண்டாகியது. இதனால் தனக்கு வேண்டிய வீட்டினையும் கட்டிக் கொள்ளத் தொடங்கினான் மனிதன். ஒரேயிடத்தில் பலருக்குத் தேவையான உணவை பயிரிடவும் முடியும் என்னும் தெரிந்துக் கொண்டான். இத்தகைய சமூகக் கூட்டு வாழ்க்கையினால் கிராமங்கள் உருவாகின. அந்த சமுதாயத்தில், எல்லோரும் பின்பற்ற வேண்டிய ஒழுங்குகளும், பொதுவான பழக்கங்களும் அங்குப் பிறந்தன. அடுத்து இயற்கையில் கிடைத்தப் பொருட்களைத் தனக்குப் பொருத்தமான முறையில் மாற்றியமைத்துப் பயன்படுத்தவும் முற்பட்டான் மனிதன். ஏனென்றால் அந்த அளவிற்கு சமுதாய வாழ்வு அவனுக்கு புதுவசதிகளைத் தந்திருந்தது. இப்போது தான் மட்பாண்டங்கள் செய்யத் தலைப்பட்டான். துணிகளை நெய்தலில் ஒரு சிலர் திறமையை இயற்கையாகப் பெற்றிருக்கலாம். அவர்கள் தங்கள் வாழ்க்கை தொழிலாகவே அவைகளை மேற்கொண்டு, அத்தொழிலின் பொருள்களை விற்று, அதனால் தங்கள் உணவை பெற்றிருப்பர். கி.மு. 7000 ஆண்டில் இத்தகைய கிராம வாழ்க்கை நடைமுறையில் இருந்து வந்திருக்கிறது. இதனை தொல் பொருள் ஆராய்ச்சி கண்டுபிடித்திருக்கிறது. ஈராக் நாட்டில் யார்மோ, கசுனா, என்றவிடங்களிலும் எரிகோ நகரிலும் நடத்தப்பட்ட தொல்பொருட் ஆராய்ச்சி, கி.மு. ஏழாயிரம் ஆண்டுகளில் நடைமுறையிலிருந்த கிராம வாழ்க்கை முறைக்குச் சான்றுபகர்கின்றது. அதேபோன்று எகிப்து நாட்டில் பயூம், தாசா, என்றயிடங்களிலும் மேற்கு ஆசியாவில் பிப்லோஸ், இராஸ் சம்ரா, நினிவே முதலிய நகரங்களில் நடந்த தொல் பொருள் ஆராய்ச்சிகள் கி.மு. ஐந்தாயிரம் ஆண்டுகளில் அவ்விடங்களில் நடந்து வந்த கிராம கூட்டு வாழ்விற்கு சான்றுகளாய் அமைந்துள்ளன.

3. செப்புக் கற்காலம்:- கி.மு.4000-3200-க்கு இடைப் பட்டக்காலம் செப்புக்கற்காலம் என்றழைக்கப்படும். இக்காலத்தில் புதிய கற்காலத்திலிருந்ததை விட, விவசாயம் மிகவும் முன்னேற்றம் கண்டது. இதனால், பெருகி வந்த மக்கள் தொகைக்கு ஈடுகொடுக்கும் வகையில் உணவு பொருட்கள் உற்பத்தில் பெருகின. அத்துடன் மக்களின் கலாச்சாரமும் உயர்ந்து வளரத் தொடங்கியது. வடமெசபொத்தாமியாவின் மலைப் பகுதிகளில் வாழ்ந்த மக்கள், சிறிது சிறிதாய் மலையடிவாரத்திலிருந்து சமவெளிகளுக்கு இறங்கி வந்து குடியேற ஆரம்பித்தனர். மலையடிவாரத்தில், ஆறுகளின் கரையோரங்களில் மண் வளமுள்ளயிடங்களில் அவ்வாறு குடியமர்ந்தனர். உதாரணமாக பாக்குசு, சமாரா என்ற இடங்களில் இவ்வாறு குடியமர்ந்தனர். இங்கு விவசாயிகள் சேர்ந்து வாழ்ந்த சிறு கிராமங்கள் தோன்றின. இக்கிராமங்களில் மட்பாண்டம் செய்தல், துணி நெய்தல் போன்ற தொழில்களும் வளரத் தொடங்கின. அதாவது இத் தொழில்களையே வாழ்வாக்கிக் கொண்டவர்களின் எண்ணிக்கை பெருகியது. இக்காலத்தில் ஒரு புதிய பழக்கம் உண்டாகியிருக்கிறது. அதாவது மட்பாண்டங்களில் வர்ணங்களைக் கொண்டுப் படங்கள் வரைந்து அழகுப்படுத்தினர். மெசபொத்தாமியாவின் வடப்பகுதி இவ்வாறு மக்கள் நிறைந்தயிடமாக மாறியது. இதே காலத்தில் பாலஸ்தீனத்திலும், கிராமச் சமுதாயங்கள் பலயிடங்களில் அமைந்து வளர்ந்தன.

வடக்கு பெசபொத்தாமியாவிலிருந்து பரவ ஆரம்பித்த இக்கிராம கூட்டு வாழ்க்கை முறை தென் மெசபொத்தாமியாவிற்கு பரவ ஆரம்பித்தது என்று மேலே கண்டோம். இந்தத் தெற்கு மெசபொத்தாமியாவிற்கு இறங்கி வந்த இந்த கிராம நாகரீகம், மற்றொரு புது வளர்ச்சியையும் இங்கு கண்டது. இங்குதான் கிராம அமைப்பிலிருந்து நகர்புற நாகரீகத்திற்கு வளர்ச்சி உண்டாகியது. இந்நகர அமைப்பில் பலவிதங்களில் புது அம்சங்கள் புகுத்தப்பட்டன. உதாரணமாக அரசரோ குழுக்களோ தலைமையாயிருந்த அரசியல் நிர்வாக முறை அறிமுகப் படுத்தப்பட்டது. சட்டங்கள் அரசால் இயற்றப்பட்டன. சாலைகள், துறைமுகங்கள், கன்மாய்கள் போன்ற பொதுத் துறைப் பணிகள் செய்யப்பட்டன. காவலர்கள், இராணுவ அமைப்புகள் இவைகள் எல்லாம் கொண்டுவரப்பட்டன. பலவிதக் கலை நுணுக்கங்களும் வளர்ச்சி கண்டன. இவ்வாறு, நகர் கலாச்சாரம் தென் மெசபொத்தாமியாவில், அதாவது திகிரிசு, யூப்பிரத்திசு ஆகிய நதிகள் பாய்ந்த, வண்டல் மண் நிறைந்த தென்பகுதியில் வளர்ச்சிப் பெற்று வந்தது. இவ் வளர்ச்சி நடந்து வந்தக் காலம் கி.மு.4000 ஆண்டின் வாக்கில், குறிப்பாக எரிது, ஆல் உபாயிது, வார்க்கா, ஊர், சூசா ஆகியவிடங்கள் நகர்கலாச்சாரம் வளர்ந்து வந்தவிடங்களாகும்.

இவ்வாறு ஆறுகளின் கரைகளில் குடியேறிய மக்களிடையே மற்றுமொரு முன்னேற்றம் தோன்றியது. ஆற்றின் நீரை கன்மாய்கள் செய்து, தூரத்து பகுதிகளுக்கு கொண்டு சென்றனர். இதனால் மழையில்லாவிட்டாலும், ஆற்று நீரின் உதவியால் வளமுள்ள நிலங்கள் பயிர் செய்ய விளைநிலங்களாகின. இப்போது மக்கள் இப்பகுதிகளிலும் விரைந்துக் குடியேறினர். இந்த கன்மாய்கள் அமைத்துத் தண்ணீரைப் பயன்படுத்தும் முறைக்கு மக்களின் ஒற்றுமை, சேர்ந்து திட்டமிடல் இவைகள் மிகவும் அவசியமாயின. இந்த கூட்டு வாழ்வினால், மக்களின் அரசாங்க நிர்வாக முறையிலும், தொழிற் துறையிலும், சமுதாய ஒழுக்க முறைகளிலும் பெரிதும் முன்னேற்றங்கள் உண்டாயின. இவ்வளர்ச்சிகளின் நடுவே முனைத்து வந்ததுதான், எழுத்து முறையின் புதிய கண்டுபிடிப்பு. மொழியை எழுத்து வடிவமாக்கியது கி.மு. 3200-ஐ ஒட்டித் தொடங்கியிருக்கிறது. இதன் நடுவே நாடுகளுக்கு நாடு வர்த்தகத் தொடர்பும் ஆரம்பமானது, இதனால் கலாச்சாரப் பரிமாற்றமும் இடம் பெற்றது- முக்கியமாக மெசபொத்தாமியா, பாலஸ்தீனம், எகிப்து ஆகிய நாடுகளுக்குள் இத்தகைய பரிவர்த்தனம் ஏற்பட்டிருக்கிறது.

இவ்வாறு தென் மெசபொத்தாமியாவில் புதிய கலாச்சார வளர்ச்சியைத் தோற்றுவித்த மக்களின் பெயர் சுமேரியர்கள். இவர்களைப் பற்றி விரிவாக இன்னும் தெரிந்துக் கொள்ள வாய்ப்பில்லை. இவர்கள் எவ்வினத்தைச் சேர்ந்தவர்கள், எங்கிருந்து வந்தவர்கள் என்பதெல்லாம் தெரிந்துக் கொள்ள முடியவில்லை. ஆனால் இவர்கள் தென் மெசபொத்தாமியாவில் கி.மு. 4000 ஆண்டு வாக்கில் வாழ்ந்தார்கள் என்பது உறுதியாகத் தெரிகிறது. ஆனால் அவர்களின் மொழி, எம்மொழியுடனும் தொடர்பில்லாத தனித்த மொழியாக, விளங்கியது. நமக்குக் கிடைத்திருக்கும் மிகப் பழமையான எழுத்துச் சுவடிகள், இந்த சுமேரிய எழுத்துச் சுவடிகள்தான். அனேகமாக இச்சுமேரியர்கள்தான் ஆப்பெழுத்து முறையை உருவாக்கியிருக்க வேண்டும்.

இதே சமயத்தில் எகிப்திலும் இக்கலாச்சாரம் முன்னேறியும் இடம் பெற்றிருக்கிறது. இங்கும் இம்முன்னேற்றத்திற்குக் காரணமாயிருந்தது, ஆற்று நீரை கன்மாய்கள் வழியாக கொண்டு செல்ல மக்கள் செய்த வழியாகும். இவ்வாறு பெற்ற வளர்ச்சியில் நோம்ஸ் என்ற அரசியல் நிர்வாக அமைப்பை அவர்கள் ஏற்படுத்தியிருந்தனர். இந்த நோம்ஸ்கள் சிறு கிராமம் போன்றவை என்று சொல்லலாம். பல நோம்ஸ்களைப் ஒன்றித்து ஓர் அரசாக அமைத்தனர். வடக்கு எகிப்து, தென் எகிப்து என்ற இருபெரும் அரசுகள் இங்கு தோன்றியிருக்கின்றன. எகிப்தில் செம்பு உலோகத்தைப் பயன்படுத்தியதாகத் தெரிகிறது. இவர்கள் படவடிவ எழுத்துமுறை

யைக் கண்டுபிடித்தனர். இவர்கள் மெசபொத்தாமியா, பாலஸ்தீனம், முதலிய நாடுகளுடன் வர்த்தகத் தொடர்பு கொண்டிருந்தனர்.

4. வெண்கலக் காலம்:- கி.மு. 3200 முதல் 1550 வரையிலான இடைப்பட்டக் காலத்தை வெண்கலக் காலம் என்றழைப்பர். இக்காலத்தின் உண்மையான வரலாற்றை அறிவியல் பூர்வமாக நாம் அறிந்துக் கொள்ள முடிகிறது. ஏனென்றால் பல கல்வெட்டுகளும், பல ஆவணங்களும் இக்காலத்தில் நடந்த நிகழ்ச்சிகளுக்கு ஆதாரமாக உள்ளன. இக்காலத்திலிருந்து தான் உண்மையான வரலாறு ஆரம்பமாகிறது என்று கூடக் கூறலாம். இக்காலத்தில் மெசபொத்தாமியா, எகிப்து, பாலஸ்தீனம் ஆகியநாடுகள் ஒவ்வொன்றிலும் வேறுபட்ட காலக்கணிப்புகள் பயன்பட்டிருக்கின்றன. எனவே ஒவ்வொரு நாட்டிலும் நடந்த நிகழ்ச்சிகளை நாம் தனித் தனியாகத்தான் காண முடியும். இவ்வெண்கலக் காலத்தை ஆரம்ப வெண்கலக் காலமென்றும், மத்திய வெண்கலக் காலமென்றும், பிந்திய வெண்கலக் காலமென்றும் பிரிக்கலாம்.

அ) ஆரம்ப வெண்கலக் காலம்:- கி.மு. 3200 முதல் 2050 வரையுள்ளக் காலத்தை ஆரம்ப வெண்கலக்காலம் என்று அழைப்பர்.

1) மெசபொத்தாமியாவில் ஆரம்ப வெண்கலக் காலம்:- சுமேரியர்கள் இங்கு வாழ்ந்த வந்த காலத்தில் (2800-2360) நகர அரசுமுறை அமைப்பு இங்கு நிலவி வந்தது. அதாவது சிறு சிறு நகரங்கள் தன்னாட்சிப் பெற்று அமைந்திருந்தன. ஒரு சில நகரங்கள் மட்டும் மற்ற நகரங்களை விட சற்று வலிமையில் உயர்ந்து விளங்கின. ஆனால் இந்நகரங்களில் இறையாட்சி என்ற கொள்கையை மக்கள் பின்பற்றினர். நகரங்கள் கடவுளின் காணிநிலம், ஆலயம் தலைவனாகியக் கடவுளின் வீடு, மக்கள் கடவுளின் வயலில் வேலை செய்யும் பணியாளர்கள், என்ற விளக்கம் அவர்களிடம் காணப்பட்டது. ஆனால் தொடக்கத்தில் நகரின் நிர்வாக வேலைகளை நகரின் பொது மக்களே கவனித்துக் கொண்டனர். இதன்பிறகுதான் அரசர்கள், முதலில் அவசரக்கால நடவடிக்கையாகவும், பின்பு நிலையான நிறுவனமாகவும் அங்குத் தோன்றினார்கள். ஆனால் அரசர்கள் கடவுளின் பிரதிநிதிகள் மட்டுமே என்று கருதினர். இக்காலத்தில் அதிகமாகச் சண்டையோ போர்களோ நடக்கவில்லை, பொதுவாக அமைதியும் சமாதானமும் இப்போது நிலவியது. அதனால் பொருளாதார முன்னேற்றமும் அங்கு வளர்ந்தது. கலையும் தொழிலும் உயர்ந்தன. ஆலயங்களில் பள்ளிகள் நடந்தன. பள்ளிகளில் சமய சம்மந்தமான பல நூல்கள் புதிதாக எழுதப்பட்டன.

இவ்வாறு சுமேரியர்கள் சுமுகமாக வாழ்ந்து உயர்ந்து வந்த காலத்தில், மெசபொத்தாமியாவின் மேற்கு எல்லையின் வழியாக, சில நாடோடி கும்பல்கள், உள்ளே நுழைந்துக் கொண்டிருந்தன. இது நடக்கத் தொடங்கியது கி.மு. 2500 ஆண்டுவாக்கில் ஆகும். இந்த நாடோடிக் கும்பல் செமித்தியர் என்ற இனத்தைச் சார்ந்தவர்கள். இவர்களுக்குப் பெயர் அக்காதியர்கள் என்பதாகும். இந்த அக்காதியர்கள், மெசபொத்தாமியாவில் முன்பிருந்து வாழ்ந்த சுமேரியர்களுடன் ஒன்றிணைந்து வாழத்தலைப்பட்டனர். அவர்களின் கலாச்சாரத்தோடு இணைந்து வாழ்ந்தனர். ஒரு சில நகர்களின் தலைவர்களாக விளங்கும் அளவிற்கு அக்காதியர்கள் அங்கு அந்நாட்டு மக்களுடன் இரண்டற ஒன்றித்தனர்.

இவ்வாறு ஒன்றித்து வாழ்ந்த அக்காதியர் உச்சநிலைக்கு, உயர்ந்தனர். கி.மு. 24ஆம் நூற்றாண்டில், மெசபொத்தாமியா முழுவதும் அக்காதியர் அதிகாரத்திற்குள் உட்பட்டது. வரலாற்றிலேயே முதன்முதலாக ஓர் உண்மையான பேரரசை ஏற்படுத்தியவர்கள் என்ற பெருமை அக்காதியரையே சாரும். இவ்வக்காதியர் அரசைத் தோற்றுவித்தவன் சார்கோன் என்பவனாவார். இவர் சிஸ் என்ற விடத்தில் தன் வெற்றி வரலாற்றைத் தொடங்கினார். தொடர்ந்து பாரசீக வளை

குடா வரையிலுமுள்ள பகுதிகளையெல்லாம் கைப்பற்றினார். இதில் சுமேரியர்களையெல்லாம் தனக்கு அடிபணியச் செய்தார். அக்காது என்ற நகரை இவர் தன் தலைநகராக்கிக் கொண்டார். இந்த அக்காது நகரம் பிற்கால பாபிலோனுக்கு அருகில் இருந்தது. பிறகு சார்கோனின் மகன்களும் அவனுடன் சேர்ந்து, அரசை விரிவுபடுத்துவதில் வேகத்துடன் செயல்பட்டனர். இதனால் மத்தியத் தரைக்கடல் வரையிலுள்ள மெசபொத்தாமியாவின் வடபகுதியும், சிறிய ஆசியாவும், தென் கிழக்கு அரபியப் பகுதியும் இந்த அக்காதியர் ஆட்சிக்குள் உட்பட்டன.

இந்த அக்காதியர் ஆட்சியும் பல நாட்களுக்கு நீடிக்க வில்லை. ஏனென்றால் சக்ரோசு என்ற மலையில் வாழ்ந்து வந்த பழங்குடியினர் மெசபொத்தாமியாமீது தொடர்ந்து 100 ஆண்டுகளுக்குப் படையெடுத்து வந்து அக்காதியரின் ஆட்சியை அலைக்கழித்து சிதறடித்தனர்.

*2) எகிப்தில் ஆரம்ப வெண்கலக் காலம்:-* கி.மு. 29-ஆம் நூற்றாண்டில் வடக்கு எகிப்தின் அரசர்கள், இரு பிரிவாக நின்ற எகிப்தை ஒன்றாகயிணைத்தனர். இப்புதிய ஒன்றிணைந்த அரசிற்கு மெம்பிசு தலைநகராக விளங்கியது. இவ்வரசு பழைய பேரரசு என்றழைக்கப்பட்டது. இப்பழைய பேரரசு கி.மு. 29-ஆம் நூற்றாண்டு முதல் கி.மு. 23-ஆம் நூற்றாண்டு வரை நீடித்தது. இப்பழைய பேரரசின் காலத்தில்தான் பெரும் வளர்ச்சி எல்லாத் துறைகளிலும் தோன்றியது. முக்கியமாக எகிப்து அரசர்களின் மூன்றாவது அரச மரபின் தோற்றத்துடன் இவ்வளர்ச்சி விரிந்து வளர்ந்தது. புதிய கண்டுபிடிப்புகள் பலுகிப் பெருகின. கலாச்சாரம் உச்சநிலை எட்டியது. பிரமிடுகள் பிரமாண்டமாக உயர்ந்துக் கட்டப்பட்டன. கட்டிடக் கலையும், இலக்கியத் துறையும், சித்திரம், சிலை வடிப்பு கலைகளும் இக்காலத்தில் வானுயர வளர்ந்தன.

அரசாட்சி அமைப்பு முறையில் எகிப்து, மெசபொத்தாமியர்களிடமிருந்து மாறுபட்டு விளங்கினர். அரசர்கள் இறைவனின் பிரதிநிதியல்ல. மாறாக அரசர்கள் இறைவனின் அவதாரங்கள் என்றே ஏற்றுக் கொண்டனர். எகிப்து நாடு முழுவதும் இறைவனாகிய அரசனின் உடமை. இவ்வுடமை ஓர் அமைச்சரைத் தலைமையாகக் கொண்ட நிர்வாக அமைப்பு முறையால் நிர்வகிக்கப்படும். இங்கு நாட்டில் சட்டத் தொகுப்புகள் செய்யப்படவில்லை. ஏனென்றால் கடவுளின் அவதாரமான அரசரின் வார்த்தைகளே சட்டமாக அமைந்தன.

ஆனால் கி.மு. 22ம் நூற்றாண்டிலிருந்து இந்த எகிப்தின் பழைய பேரரசு சரிவடையத் தொடங்கியது. அக்காதிய ஆதிக்கத்தைக் குத்தி என்ற பழங்குடியினர் தாக்கி அரசைத் சிதைத்தார்கள். ஆனால் எகிப்தில் உள்நாட்டுக் குழப்பங்களால் அரசு பலத்தையிழந்தது. பல போட்டி மன்னர்கள், அரசாட்சி தங்களுக்கு வேண்டுமென்று போட்டியிட்டனர். சில அரசு அலுவலர்கள் குறுநிலப் பகுதிகளைத் தங்களுக்கென்று பிடித்துக் கொண்டனர். அத்துடன் சில நாடோடி வகுப்பினரும் எகிப்தைத் தொடர்ந்துத் தாக்கிக் கொண்டிருந்தனர். இதனால் குழப்பங்கள் உண்டாகி அமைதியற்ற நிலை உண்டாகியது. இக்குழப்பங்களினால் நாட்டில் ஏற்பட்ட முன்னேற்றங்களெல்லாம் முடங்கவும் ஆரம்பித்தன.

*3. பாலஸ்தீனத்தில் ஆரம்ப வெண்கலக் காலம்:-* இக்காலத்தில். பாலஸ்தீனத்தில் பலபுதிய நகர அரசுகள் தோன்றின. எரிகோ, பெத்துசான், ஆயி, செக்கேம், கெசர், இலாக்கிசு முதலிய நகரங்கள் புதியதாகவே உண்டாயின. யோர்தான் ஆற்றை அடுத்துள்ள கிழக்குப் பகுதிக்கும் கி.மு. 2500ம் ஆண்டு வாக்கில் இத்தகைய நகர அரசு அமைப்பு முறை பரவியிருக்கிறது.

ஆனால் பாலஸ்தீனம், மெசபொத்தாமியா மற்றும், எகிப்தைப்போல, கலாச்சாரத்திலும் பொருளாதாரத்திலும் அவ்வளவு முன்னேற்றம் காணவில்லை. அரசியல் அமைப்பிலும் பாலஸ்தீனத்தில் ஒன்றுபட்ட, வலி

மைமிக்க ஆட்சி தோன்றவில்லை. இக்காலத்தில் இங்கு வாழ்ந்த மக்கள் கானானியர் ஆவர். இவர்கள் செமித்திய இனத்தை சேர்ந்தவர்கள். இக்கானானியர்கள் கி.மு. 4000 ஆண்டுவாக்கில் பாலஸ்தீனத்தில் குடியேறியிருக்க வேண்டும் என்று கருதப்படுகிறது.

கி.மு. 2250க்கு பிறகு பாலஸ்தீனம் பெரும் அழிவுகளுக்கு உள்ளாகியிருக்கிறது. அதாவது ஒரு வகை நாடோடி மக்கள் தொடர்ந்து பாலஸ்தீனத்தைத் தாக்கினர். இதனால் பல நகர்கள் அடியோடு அழிந்தன. இதனால் நகர்களும் குடியேற்ற பகுதிகளும் மக்களின்றி பாலைவனங்கள் போல் கைவிடப்பட்டன. யோர்தான் ஆற்று கிழக்குப் பகுதி அதிகமாக மக்களில்லா பகுதியாக மாறியது. இவ்வாறு படையெடுத்து அழிவைக் கொண்டு வந்த மக்கள், எமோரியர்களின் வழிவந்தவர்கள், இவர்கள்தான் எகிப்தையும் முதலில் சீரழிவதற்கு ஆளாக்கியவர்கள்.

*ஆ) மத்திய வெண்கலக் காலம்:-* கி.மு. 2050 முதல் 1550 வரையுள்ளக் காலத்திற்கு இப்பெயர் வழங்கப்படுகிறது.

*1) மெசபொத்தாமியாவில் மத்திய வெண்கலக் காலம்:-* ஆரம்ப வெண்கலக் காலத்தின் கடைசியில் மெசபொத்தாமியாவை குத்தி என்ற பழங்குடியினர் கைப்பற்றினர் என்று மேலே பார்த்தோம். ஆனால் இந்த மத்திய வெண்கலக் காலத்தில் பலவித ஏற்ற யிறக்கங்களை நாம் காணமுடிகிறது. இந்த மத்திய வெண்கலக் காலத்தின் தொடக்கதில் எரேக்கு என்ற இடத்தின் அரசன் குத்தி என்ற பழங்குடியினர் மீதுத் தாக்கி அவர்களின் மெசபொத்தாமிய ஆக்கிரமிப்பை முற்றிலுமாக முறியடித்தான். ஆனால் எரேக்கு அரசனின் செல்வாக்கு அதிக நாட்கள் நீடிக்க வாய்ப்பில்லை. ஆபிரகாமின் பிறந்தகமாகிய ஊர் நகரின் அரசன் ஊர்-நம்மு என்பவர் எரேக்கு அரசனை முறியடித்தார். ஊர்-நம்மு சுமேரியயினத்தைச் சேர்ந்தவர். அவரைத் தொடர்ந்த ஊர் நகரின் மூன்றாம் அரசமரபு, மெசபொத்தாமியாவில் சுமேரியரின் ஆட்சியை மீண்டும்கொண்டு வந்தது. இதனால் சுமேரியரின் கலாச்சாரம் மெசபொத்தாமியாவில் மீண்டும் மலரத் தொடங்கியது. ஆனால் குறுகிய காலத்திற்கே நீடித்தது. இப்புதிய சகாப்தத்தைத் தோற்றிவித்த ஊர்-நம்மு அழகிய கட்டிடங்களைக் கட்டி, கட்டிடக் கலையை வளர்த்தார். அத்துடன் இலக்கிய வளர்ச்சியிலும் அதிக ஆர்வம் காட்டினார். அனைத்திற்கும் மேலாக சட்டத் தொகுப்பு ஒன்றை இயற்ற செய்தார். இத் தொகுப்புதான் இன்றைக்கு நமக்குக் கிடைக்கும் மிகப் பழமையான சட்டத் தொகுப்பாகும்.

இவ்வாறு ஊர்-நம்மு புது மறுமலர்ச்சியைக் கொடுத்தாலும் சுமேரியர்களின் தனிப்பட்ட கலாச்சாரம் மறைந்து போகின்ற நிலைக்குத் தள்ளப்பட்டது. ஏனென்றால் ஆரம்ப வெண்கலக் காலத்தில் நுழைந்த அக்காதியர் மொழி, சுமேரிய மொழி மீண்டும் தலையெடுக்காத வகையில் அதனை அகற்றிவிட்டது. சுமேரியர்களும் செமித்தியர்களும் கலந்த ஒரு புது இனம் புதுக் கலாச்சாரம் தோன்றியது. இந்த கலப்பட கலாச்சாரம்தான், இஸ்ராயல் மக்கள் தோன்றுவதற்கு முன்னமே அப்பகுதியில் அரசாட்சி செய்தது. ஆனால் சுமேரியர்கள், பலவித புது கலாச்சார அம்சங்களை உலகிற்கு அளித்திருப்பதை யாராலும் மறுக்க முடியாது. குறிப்பாக அவர்கள் இயற்றிய சட்டத்தொகுப்பு, ஆப்பெழுத்து முறை, சந்திரனை அடிப்படையாகக் கொண்ட காலக்கணிப்பு, நீரினால் இயங்கிய கடிகை, சூரியன் தரும் நிழலினால் அளவிடப்படும் கடிகை, தேர், படை வீரர் அணியும் கவசம், கோபுர அமைப்புகள், வளைவுகள் இவைகளெல்லாம் சுமேரியர்கள் புதிதாகக் கண்டுபிடித்தவை. அனைத்திற்கும் மேலாக அவர்கள் பின்பற்றிய பல தெய்வங்களின் சமய முறை, பண்டைய நாளில் உலகின் பலபாகங்களில் பின்பற்றப்பட்டிருக்கிறது.

ஊர்-நம்முவால் ஆரம்பிக்கப்பட்ட இப் புது மறுமலர்ச்சியும் ஆட்டம் கண்டது. ஊர் நகரின் மைய அதிகாரம் சீர் குலைந்தது. இதனால் மெசபொத்தாமியாவிலிருந்த நகர்

ஆட்சிகள், தாங்கள் தனி தனியே அதிகாரம் பெற்றன.

இச்சமயத்தில்தான் அதாவது கி.மு. 2250 ஆண்டிற்குப் பிறகு எமோரியர்கள், பாலஸ்தீனத்தையும் அதைச் சுற்றியிருந்த நாடுகளையும் தாக்கி அவைகளைப் பிடித்துக்கொண்டு வந்தனர். மெசபொத்தாமியாவும் வலிமைக் குன்றி நின்றதால் முதலில் வடக்கு மெசபொத்தாமியாவைத் தாக்கி அதனைப் பிடித்தனர். பிறகு மெசபொத்தாமியா முழுவதையும் இவர்கள் வளைத்துப் பிடித்தனர். இவ்வாறு கி.மு. 18-ஆம் நூற்றாண்டில் மெசபொத்தாமியா முழுவதும் எமோரியர்களின் கையிலிருந்து.

இதன் பிறகு, மெல்ல மெல்ல மூன்று வல்லரசுகள் மெபொத்தோமியாவிற்காக மோதிக் கொள்ளும் சூழ்நிலை உருவாகியது. அசீரியா, மாரி, பாபிலோன் என்பவைதான் அப்போது தோன்றிய புதிய மூன்று வல்லரசுகள்.

அசீரியாவின் ஆதிக்கம் கி.மு. 18-ஆம் நூற்றாண்டில் ஆரம்பித்தது. முதலில் இவர்கள் வியாபாரத்தின் மூலமாக பலவிடங்களுக்கு பரவினார்கள். இவர்கள் மற்ற நாடுகளுடன் வியாபாரத் தொடர்புகள் வைத்திருந்தனர் என்பதற்கு கப்பதோகியா ஏடுகள் போன்ற பல தொன்மையான ஏடுகள் ஆதாரமாய் நிற்கின்றன. ஆனால் அசீரியாவே எமோரியர்களின் பிடியில் ஒரு சில காலம் இருந்தது. எமோரியர்களை அகற்றி அசீரியர்கள் கி.மு. 1748-1730 ஆண்டுகளில் வெற்றி பெற்றனர்.

ஆனால் முன்னுக்க வந்துக் கொண்டிருந்த அசீரியரை மாரி நாட்டினர் பின்னுக்குத் தள்ளினர். கி.மு. 1730-1697-இல் மாரி நாட்டினர், அசீரியர்களை வென்று மெசபொத்தாமியாவில் ஆட்சி நடத்தினர். இக்காலத்தில் எழுதப்பட்ட பல ஆவணங்கள் நமக்குக் கிடைத்துள்ளன. இவ்வாவணங்களில் வியாபார சமந்தப்பட்டவைகளும். அரசு வைத்திருந்த தொடர்புக் கடிதங்களும் அடங்கும்.

அசீரியாவை வென்ற மாரியை மற்றொரு நாடு அடக்கியது. அதுதான் பாபிலோனியா. கமுராபி என்ற பாபிலோனிய அரசன், அசீரியா, மாரி ஆகிய நாட்டு மன்னர்களைத் தோற்கடித்து, மெசபொத்தாமியாவைத் தன் ஆட்சிக்குட்படுத்தினார். இவர் காலத்தில் செல்வமும் அமைதியும், மெசபொத்தாமியாவில் கொழித்தது. இந்த பழைய பாபிலோனிய பேரரசு காலத்தில் எழுதப்பட்ட பல நூல்கள் இன்றும் நமக்கு கிடைக்கின்றன. இவ்வேடுகளில்தான், பாபிலோனியாவில் வழங்கி வந்த, உலகப் படைப்பைப் பற்றிய புராணம், வெள்ளம் அழிவைக் கொண்டு வந்த கதை இவைகளெல்லாம் காணப்படுகின்றன. இந்த பழைய ஏடுகளில் மற்றுமொரு முக்கிய தொகுப்பு நமக்குக் கிடைக்கிறது. அதுதான் கமுராபி அரசன் இயற்றிய சட்டத் தொகுப்பாகும். இச்சட்டத் தொகுப்பு அக்காலத்திய சமுதாய வாழ்க்கை முறையை அறிந்துக் கொள்ள பெரிதும் உதவுகிறது. இச்சட்டத்தொகுப்பு விவிலிய ஐந்நூலில் காணப்படும் சட்ட முறைகளுடன் நிறைய ஒத்துக் காணப்படுகிறது.

இதன் பிறகு இன்னும் அதிகமாக குழப்பங்களுக்கும், பல பல இனத்தவரின் படையெடுப்பும் தொடர்ந்து மெசபொத்தாமியாவில் உண்டாகின. பாபிலோனியர் மெசபொத்தாமியாவை ஆண்டு வந்த போது பல திசைகளிலிருந்தும், பல இனத்தார் வழியாகத் தாக்குதல் உண்டானது. பல புதிய இனத்தவர் புதிய பலம் பெற்று தாக்குதலில் ஈடுபட்டனர்.

ஆர்மேனிய மலைப்பகுதியில் வாழ்ந்து வந்தவர்கள் கூரியர் என்றயினத்தவர். இவர்கள் மெசபொத்தாமியாவின் வட பகுதியில் நுழைந்து கி.மு. 24-ஆம் நூற்றாண்டில் எண்ணிக்கையில் குறைந்தவராய் பரவியிருந்தனர். ஆனால் கி.மு. 17-16 நூற்றாண்டுகளில் கூரியர் இனத்தவர் திடீரென்று, எண்ணிக்கையில் பெருகி வெட்டுக்கிளிகளைப் போல, மெசபொத்தாமியாவின் வடபகுதியிலும், சிறிய ஆசியாவிலும், சீரியா, பாலஸ்தீனத்திலும் பறந்து வந்துக் குடியேற தொடங்கினர்.

இத்தோடு மெசபொத்தாமியாவை அடுத்து மித்தானி என்ற அரசு இருந்து வந்தது. இதன் அரசர்கள் இந்திய-ஆரியயினத்தைச் சேர்ந்த வர்கள். ஆனால் அடிப்படையில் அவர்க ளும் கூரியர் இனத்தைச் சார்ந்தவர்கள்தான். இந்த மித்தானி அரசுதான் அருகிலிருந்த அசீரிய அரசினை அடக்கி வைத்து, அவர் களை சிற்றரசைப் போல வாழச் செய்தது. இந்த கூரியர்கள் சில நல்ல பணிகளையும் செய்தனர். இவர்கள்தான் மெசபொத்தாமி யாவில் தொடங்கிய சுமேரிய, அக்காதிய கலாச்சாரத்தை மற்ற இடங்களுக்கும் பரப்பி யவர்கள். முக்கியமாக சிறிய ஆசியா நாட்டி லும் இத்திதயர் நடுவிலும் சுமேரியர் அக் காத்தியர் கலாச்சாரம் பரவிட, கருவிகளாக விளங்கினார்கள்.

நூசியென்ற இடத்தில் பல மண் தட்டு ஏடுகள் கண்டுபிடிக்கப்பட்டன. இவை கி.மு.15-14 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை. இந்த மண் தட்டுகள் கூரியர்கள் காலத்தைச் சார்ந்தவை. ஏனென்றால் மேற்கூறப்பட்ட நூசி நகரம் கூரியர்களின் நகரம். இந்த மண் தட்டுகளில் எழுதப்பட்டுள்ள செய்திகள், விவிலியத்தில் கூறப்படும் ஆபிரகாம் காலத் தின் பல பழக்க வழக்கங்களைப் புரிந்துக் கொள்ள மிகவும் உதவியாய் நிற்கின்றன.

இவ்வாறு வடக்கிலிருந்து கூரியர்கள் மெசபொத்தாமியாவில் நுழைந்துக் கொண் டிருக்க, மெசபொத்தாமியாவின் கிழக்குப் பகுதியிலிருந்து காசித்தையர்களும் மெச பொத்தாமியாவில் நுழைந்துக் கொண்டிருந் தனர்.

இத்துடன் மெசபொத்தாமியாவிற்கு மேலேயிருந்த சிறிய ஆசியா நாட்டில் இத்தி யர்கள் என்பவர்கள் வலிமை பெற்று வந்தார் கள். இவர்கள் கி.மு.2500-ஆம் ஆண்டின் வாக்கில், சிறிய ஆசியாவில் மற்ற மக்களு டன் நுழைந்தவர்கள். ஆனால் இத்தியர்கள் மெல்ல மெல்ல வலிமைப் பெற்று கி.மு.1 6ம் நூற்றாண்டில் தனித்த ஒரு வல்லரசைச் சிறிய ஆசியாவில் ஆரம்பித்தார்கள். இவர் கள் இத்துடன் நில்லாது, சிறிய ஆசியாவுக்கு தென்பகுதியிலிருந்து சீரியா மீது படையெ டுத்தனர். அடுத்து கி.மு.1530-இல் யூப்பிரத் திசு நதி வரையிலும் படையெடுத்து அங்கு ஆட்சி செய்த பாபிலோனியரை வென்றனர். இவ்வாறு பரவி வந்த இத்தியர்களின் வெற்றி பல நாட்கள் நிலைக்கவில்லை. ஏனென்றால் மெசபொத்தாமியாவின் கிழக் குப் பகுதியிலிருந்து கூரியர்கள் இத்தியர்க ளைத் தடுத்து நிறுத்தினர். அத்துடன் இத்தி யர்களிடையே நிலவிய உட்பூசல்களும், இத் தியர் திரும்பவும் தங்களின் சொந்த நாடான சிறிய ஆசியாவுக்குத் திரும்பிப் போகச் செய் தன.

இந்தக் காலத்தில் மேலே கூறப்பட்ட காசித்தையர்கள், மெசபொத்தாமியாவில் அதிகாரத்தைப் பிடித்து ஆட்சி நடத்த ஆரம் பித்தனர். இவர்கள் சுமார் 400 ஆண்டுகள் ஆட்சி செய்தனர். இவர்கள் ஆட்சி செய்தக் காலம், இருண்டக் காலமென்ற முறையில் எவ்வித முன்னேற்றமுமின்றி முடங்கிக் கிடந்தது.

2) எகிப்தில் மத்திய வெண்கலக் காலம்:- கி.மு.2000 தொடக்கத்திலிருந்து, எகிப்து மற் றொரு புதிய முன்னேற்ற சகாப்தத்தை ஆரம் பித்தது. இம்முன்னேற்ற வலிமை கி.மு.21 நூற்றாண்டு முதல் 18 ஆம் நூற்றாண்டு வரை மூன்று நூற்றாண்டுகளுக்கு நீடித்தது. இக்கா லத்தை எகிப்தின் மத்திய பேரரசு என்றழைப் பர். இக்காலத்தில் எகிப்து முழுவதும் மீண் டும் ஒன்றாகயிணைந்தது. பொருளாதாரம் பெருகியது. கலாச்சாரம் உயர்ந்தது. அரசி யல் அளவிலும், எகிப்து வலிமையுடன் விளங்கியது. இதனால் அண்டை நாடுக ளான நுபியா, லிபியா, பாலஸ்தீனம் ஆகிய நாடுகளைத் தன் பிடியில் வைத்திருந்தது எகிப்து. இவ்வாறு எகிப்தின் பொற்கால மாக விளங்கியது இக்காலம்.

ஆனால் கி.மு.18ம் நூற்றாண்டிலிருந்து கி.மு.16 ஆம் நூற்றாண்டு வரை எகிப்தின் முன்னேற்றமும் வலிமையும் தாழ்வடைய ஆரம்பித்து. இதற்கு முக்கியமான காரணம் எகிப்திலிருந்த ஒற்றுமையற்ற நிலையாகும்.

இக்குழப்பமான நிலையை இன்னும் மோசமாக்குகின்ற அளவில் கைக்சோசு என்ற ஓரினத்தினர் எகிப்து மீதுத் தொடர்ந்துத் தாக்குதல் நடத்த ஆரம்பித்தனர். இந்த கைக்சோசு இனத்தவர் பாலஸ்தீனத்திலிருந்தும், தெற்குச் சீரியாவிலிருந்தும் வந்தவர்கள். இவர்கள் கனானியர் அல்லது எமோரியர் இனத்தைச் சேர்ந்தவர்களாக இருக்க வேண்டும். இந்த கைக்சோசு இனத்தவர் சிறிது சிறிதாக எகிப்தைப் பிடித்தனர். முதலில் எகிப்தின் வடக்குப் பகுதியையும், பின்பு எகிப்து முழுவதையும் தங்களின் பிடியில் கொண்டு வந்தனர். தொடர்ந்து பாலஸ்தீனத்திற்கு வடக்கேயுள்ள சீரியா நாடு வரையிலும் அவர்களின் ஆதிக்கம் அதிகரித்தது. இந்த கைக்சோசு இனத்தவரின் ஆட்சி சுமார் நூறு ஆண்டுகளுக்கு எகிப்தில் நிலவியது. அரக்கராக தங்கள் தலையில் அமர்ந்து விட்ட கைக்சோசு மக்களை விரட்டியடித்து, உண்மையான சுதந்திரத்தைப் பெறுவதுதான் எகிப்தியரின் பெரிய போராட்டமாக மாறியது. இப்போராட்டத்தில் எகிப்தியர் கி.மு.1580-1550 என்ற காலக் கட்டத்தில் வெற்றியும் பெற்றனர். இந்த வெற்றிக்குப் பிறகு எகிப்தின் காலம் புதிய பேரரசு என்ற புதியசகாப்தத்தில் அடியெடுத்து வைத்தது.

*3. பாலஸ்தீனத்தில் மத்திய வெண்கலக் காலம்:-* ஆரம்ப வெண்கலக் காலத்தில், எமோரியர்களின் ஆக்கிரமிப்பால், பாலஸ்தீனம் பாலைவனத்தைப் போல ஆனது என்று பார்த்தோம். ஆனால் கி.மு.19-ஆம் நூற்றாண்டிலிருந்து, ஒரு புது மறுமலர்ச்சி பாலஸ்தீனத்தின் உண்டாகியது. முக்கியமாக மேற்கு பாலஸ்தீனத்திலும், யோர்தானின் கிழக்குப் பகுதியின் வடக்குப் பாகமும் முன்னேற்றங்களை வெகுவாகக் கண்டன. இங்குப் புதிய நகரங்கள் உதயமாயின. ஆக்கிரமித்து, கலாச்சார அழிவைக் கொண்டு வந்த எமோரியர்களும், பாலஸ்தீனமக்களுடன் ஒன்றிணைந்து, பாலஸ்தீனத்தின் மொழி, கலாச்சாரம் இவைகளை ஏற்றுக் கொண்டு ஒன்றித்த வாழ்வு வாழத் தொடங்கினர். இருப்பினும் இம்மறுமலர்ச்சி, முழுமையான முன்னேற்றத்தைக் கொண்டு வந்தது என்று சொல்வதற்கில்லை. ஏனென்றால் பாலஸ்தீனத்தின் மையப்பகுதிகள் இன்னும் வளர்ச்சிக் குன்றியே நின்றன. இம்மையப் பகுதியில் மக்கள் சென்று குடியேற்றம் செய்யவேயில்லை. இச்சூழ்நிலைகளின் நடுவில் தான் பாலஸ்தீனத்தில் நகர் ஆட்சி முறை நடைமுறைக்கு வந்தது. கைக்சோசு இனத்தவரின் ஆட்சியின் காலத்தில்தான் பாலஸ்தீனம் என்றுமில்லா வளர்ச்சியையும் முன்னேற்றத்தையும் கண்டது.

இம்மத்திய வெண்கலக் காலத்தின் பின்னணியில்தான் ஆபிரகாம் முதல் யோசேப்பு வரையுள்ள, இஸ்ராயலின் மூதாதையர்களின் வரலாற்றை நாம் நோக்க வேண்டும். அதாவது ஆதிஆகமம் *12* முதல் *50* வரையுள்ள அதிகாரங்களுக்கு மத்திய வெண்கலக் காலம் பின்னணியாக அமைந்துள்ளது. பின் வெண்கலக் காலம் நமக்கு உடனடி தொடர்பைத் தராததால் பின் வெண்கலக் காலத்தின் விளக்கங்கள் இங்கு விடப்பட்டுள்ளது.

**இஸ்ராயேல் வரலாறு - II - குலமூதாதையர்களின் காலம்**

கி.மு.*2000* முதல் கி.மு.*1700* வரையிலான காலத்தில் இஸ்ராயேலரின் குலமூதாதையரின் காலம் இடம் பெறுகிறது.

*1. ஆபிரகாம், ஈசாக்கு, யாகோபு:-* இந்த மூதாதையர்களைப்பற்றி விவிலியம்மட்டும் தான் நமக்கு விபரம் தெரிவிக்கிறது. மற்றெந்த நூற்களிலும், பழம் ஆதாரங்களிலும் இவர்களைப் பற்றிய குறிப்புகள் காணப்படவில்லை. அத்தோடு இந்த மூதாதையர்களின் காலத்தையும் சரியாகக் கணித்துக் கூறவும் வழியில்லை. பொதுவாக இவர்கள் வாழ்ந்த காலம் கி.மு.*2000* முதல் *1700* வரையென்று கூறுவதுவழக்கு.இதனால் இம்மூதாதையர்களெல்லாம் கற்பனையால் கொண்டுவரப்பட்டவர்கள் என்றும் சொல்ல முடியாது. ஆனால் ஒரு சில அறிஞர்கள், இம்மூதாதையர்கள் புராணப் பாத்திரங்கள் என்று கூட முடிவுக் கட்டினார்கள். ஆனால் தொல்பொருள் ஆராய்ச்சி, விவிலியம், மூதாதையர்களைப் பற்றி கூறும் விபரங்கள் துள்ளியமா

னவை என்று நிரூபித்துக் காட்டியுள்ளது. இவ்வாறு இஸ்ராயேல் மக்கள் மத்தியில், வரலாற்று அடிப்படையில் நிலவிவந்த பராம்பரியத்தை வைத்துத்தான், மூதாதையர் களின் வாழ்க்கை விவிலியத்தில் விளக்கப் பட்டிருக்கிறது என்பது இதனால் தெளிவாகிறது

அதே நேரத்தில் இந்த மூதாதையர்களின் பராம்பரியச் செய்தி, செம்மையான ஒரு வரலாறு என்றும் கூற முடியாது. ஏனென்றால் அவைகள் வழிவழிவந்த பராம்பரியங்கள் என்பதை மறந்துவிடக் கூடாது. வரலாற்று நிகழ்ச்சியிலிருந்து பிறந்த இந்த பராம்பரியங்கள் காலப்போக்கில், ஒரு குறிப்பிட்ட நோக்கத்தை தன்னுள் பின்னிக் கொண்டன. எனவே என்னதான் அப்போது வரலாற்று பூர்வமாக நடந்தது என்பதை நாம் கணக்கிட முடிவதில்லை. ஆனால் தற்போதுக் கிடைக்கும் ஆதாரங்களை வைத்து, அவர்கள் வாழ்க்கையின் ஒட்டுமொத்த வரலாற்று சூழ்நிலையை நாம்கண்டுக் கொள்ள வாய்ப்பிருக்கிறது.

ஆபிரகாம், மெசபொத்தாமியாவிலிருந்து கானான் நாட்டிற்குச் சென்று குடியேறுகிறார் என்று ஆதி ஆகமம் கூறுகிறது (ஆதி 12:5). ஆபிரகாம் இவ்வாறு பாலஸ்தீனத்தில் குடியேறிய காலம், அனேகமாக எமோரியர்கள் மெசபொத்தாமியாவிலும் பாலஸ்தீனத்திலும் மெல்ல மெல்ல ஆக்ரமித்துக் கொண்டிருந்த நேரம் என்று சொல்லலாம். ஆபிரகாம் ஆடுகள் மேய்த்துக் கொண்டு ஒரு அரை குறை நாடோடியைப் போல வாழ்ந்து வந்தார். புல்லிருக்குமிடமெல்லாம் ஆடுகளை ஓட்டிச் சென்று பிழைப்பை நடத்தி வந்தார். ஆனால் அவர் பாலஸ்தீனத்தில் குடியிருந்த ஊராக மமிரே-கெபிரோன் பகுதி குறிப்பிடப்படுகிறது. இவ்வாறு ஆபிரகாமைப் பற்றி சித்தரிக்கப்படும் வாழ்க்கை நிகழ்ச்சிகள் கி.மு.2000 ஆண்டுகளில் இருந்த உண்மையான வரலாற்று பின்னனியை நன்கு படம் பிடித்துக் காண்பிக்கின்றன. அதாவது கி.மு.2000 ஆண்டுகளில் பாலஸ்தீனப் பகுதியில் மக்கள் பொதுவாக ஒரு நாடோடி வாழ்க்கையை வாழ்ந்து வந்தார்கள். அதே பாணியில்தான் ஆபிரகாமின் வாழ்க்கை அமைந்திருப்பதை விவிலியம் கூறுகிறது. ஆபிரகாமின் ஆடுமேய்த்து நாடோடியாக வாழ்ந்த வாழ்க்கை முறை அக்காலத்தில் எழுதப்பட்ட சில எழுத்தோவியங்களுடன் ஒத்திருக்கிறது. உதாரணமாக சினுகே என்பவரின் கதையும், மாரியெனுமிடத்தில் கிடைத்த ஆவணங்களும், பெனிகசான் என்றவிடத்தில் காணப்படும் கல்லறையொன்றில் 19- ஆம் நூற்றாண்டில் வரையப்பட்ட சித்திரமும், ஆபிரகாமின் வாழ்க்கை முறையை அப்படியே ஒத்திருக்கின்றன.

அத்துடன் ஆபிராகம் என்றபெயர், கி.மு. 16-ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட பாபிலோனியாவின் சுவடிகளில் பலயிடங்களில் காணப்படுகிறது. நாகோர் என்பது ஆதிஆகமத்தில் ஓர் ஆளின் பெயராகவும் (ஆதி 11: 22), ஓர் நகரின் பெயராகவும் (ஆதி 24:10) வருகிறது. இந்த நாக்கோர் என்ற பெயர் மாரியென்ற இடத்தில் கண்டுபிடிக்கப்பட்ட பழம் ஏடுகளில் காணப்படுகிறது. இப்பழம் ஏடுகள் கி.மு.16-ஆம் நூற்றாண்டில் எழுதப் பட்டவை. அதே போன்று யாக்கோபு என்ற பெயரும் கி.மு.18-ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட மெசபொத்தாமிய சுவடிகளில் காணப்படுகிறது. யாக்கோபு-கார் என்பது கைக்சோசு அரசன் ஒருவனின் பெயராக அங்குக் குறிப்பிடப்படுகிறது. யாக்கோபின் மகன்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள பல பெயர்கள், பென்யாமின், லேவி போன்றவை கி.மு.16 ஆம் நூற்றாண்டில் எழுதப் பட்ட மாரி சுவடிகளிலும் காணப்படுகின்றன.

இன்னும் மூதாதையர்கள் வாழ்க்கையில் குறிப்பிடப்படுகின்ற சில பழக்கங்கள், கி.மு.16-ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டு நூசி, மாரி முதலிய இடங்களில் கண்டுபிடிக்கப்பட்ட பழம் சுவடிகளிலும் அப்படியே காணப்படுகின்றன. ஆதி 15:1-4-இல் ஆபிரகாம், தனக்குப் பிள்ளையில்லாததால், தன்னிடம் வேலை செய்து வந்த எலியேசர் தனது வாரிசாக ஆவான் என்ற வழக்கத்தைக்

குறிப்பிடுகிறார். இவ்வாறு தன் அடிமையையே வாரிசாக வைத்துக் கொள்ளும் பழக்கம் நூசி என்றவிடத்தில் இருந்து வந்திருக்கிறது. அதேபோன்று ஆதி 16:3-4-இல் ஆபிராம் தன் வேலைக்காரி ஆகாரை மனைவியாகப் பெற்று, குழந்தை பெறுகிறார். ஆனால் தன் சொந்த மனைவிக்குக் குழந்தைப் பிறந்ததும் ஆகாரையும், மகன் இசுமயேலையும் வெளியே அனுப்பிவிடுகிறார். நூசி என்றவிடத்தில் வழங்கி வந்த ஒழுங்கின்படி, தன் காமக்கிழத்தி ஒருவளை, ஒருவன் மணம் செய்துக் கொள்வதற்கு அனுமதியிருந்தது. ஆனால் அவர்களை ஆபிரகாம் செய்தது போல், விரட்டி விடும் வழக்கமில்லை. இவ்வாறு ஆதியாகமத்தில் காணப்படும் மற்றொரு பழக்கமும், கி.மு.16- ஆம் நூற்றாண்டில் காணப்பட்ட பழக்கத்திலொன்றாக விளங்குகிறது.

ஆதி 31:50ல் காணப்படுகின்ற, லாபானின் மகள்களைத் தவிர மற்றவர்களை யாக்கோப் மணக்கக் கூடாது என்று லாபான் போட்டத் தடையும், லாபானின் மகள் ராக்கேல் தன் தந்தையின் சிலைகளை திருடி வைத்துக் கொண்ட நிகழ்ச்சியும் (ஆதி 31:19; 34-35), நூசி நகரில் வழங்கிய பழக்கங்களால் விளக்கங்களைப் பெறுகின்றன. அதாவது தந்தையின் வீட்டுச் சிலைகளை ஒருவர் தக்க வைத்திருந்தால் அது தந்தையின் சொத்துக்களில் பங்குக் கொள்வதற்கு ஓர் அடையாளமாகும். ஆதி. 23 ஆம் அதிகாரத்தில் காணப்படும் மமிரேயில் ஆபிரகாம், தன் மனைவியைப் புதைக்க, குகைகளை வாங்கிய நிகழ்ச்சியில் காணப்படும் சடங்குகள், அதற்காக இத்தியர் கூறும் சட்ட ஒழுங்குக்கு ஒத்து நிகழ்ந்திருப்பதையும் நாம் காண முடிகிறது.

மூதாதையர்கள், அவர்களின் தந்தையர்களின் கடவுளை வழிபட்டார்கள் என்று படிக்கிறோம். ஆதி 31:42-இல் ''என் தந்தையாகிய ஆபிரகாமின் கடவுளும், ஈசாக்கின் அச்சமும் என்னை மீட்டுக் காப்பாற்றின'' என்று வருகிறது. ஆதி 49:24-இல் ''யாக்கோபின் வல்லபக் (கடவுளால்) அவன் கையிலும் புயத்திலும் இருந்த சங்கிலிகள் உடைக்கப்பட்டன'' என்று வருகிறது. ஆக, 'தந்தையரின் கடவுள்', 'அச்சம்', 'வல்லமை' முதலிய சொற்கள் கடவுளைக் குறிப்பதற்காக பயன்படுத்தப்பட்டன. தந்தையரின் கடவுள் என்று சொல்லும்போது, அவர்களின் மூதாதையர்களோடு தனிப்பட்ட உறவு கொண்ட கடவுள் என்பது பொருளாகிறது. அக்கடவுள் ஓர் இடத்தின் கடவுளல்ல. மாறாக மூதாதையர்களோடு உடன்படிக்கை செய்துக் கொண்டக் கடவுள். அக்கடவுள் அவர்களின் தலைமுறையையே எல்லாக் காலங்களிலும் காப்பாற்றுகிறவர். இறைவனுக்கு, 'என்றுமுள்ளவர்', (எபிரேயத்தில், ஓலாம்), 'அனைத்திலும் உயர்ந்தவர்' (எபிரேயத்தில் எலியோன்), என்ற புனைப் பெயர்களையும் ஆதியாகமத்தில் பார்க்கிறோம். இப்பட்டங்களையெல்லாம் கானானிய தெய்வங்களுக்கு அப்போது மற்ற மக்கள் கொடுத்திருந்தார்கள். அதே பட்டங்களைத் தங்களின் யாவேயாகிய இறைவனுக்கு மக்கள் அளித்து மகிழ்ந்தனர். இவையெல்லாம் மூதாதையர்களைப் பற்றி விவிலியத்தில் கூறப்படுபவை. கி.மு.16-ஆம் நூற்றாண்டில் விளங்கிய சூழ்நிலையை அப்படியே பிரதிபலிக்கின்றன என்பதைத் தான் காட்டுகின்றன. எனவே மூதாதையர்களின் வரலாறு, உண்மையான வரலாற்றை பின்னணியாகக் கொண்டவை என்பது விளங்குகிறது.

2. யோசேப்பின் வரலாறு:- யோசேப்பின் வரலாறு அதனைப் படிப்போரின் உள்ளத்தை தவறாது கவர்ந்திழுக்கிறது. அம்முறையில்தான் இவ்வரலாறு, படிப்போரின் ஆவலைக் கடைசிவரை நீடிக்கச் செய்யும் வகையில் எழுதப்பட்டுள்ளது. இவ்வரலாற்றின்பின்னே மறைந்திருக்கும் மையக் கருத்து, கடவுளின் பராமரிப்பு என்பதாகும் (ஆதி. 45:5-8; 50:20). யோசேப்பு, எகிப்தில் இளவரசனான காலம், கைக்சோசு மக்கள் எகிப்தை ஆட்சி செய்த காலமாகத்தானிருக்க வேண்டும். அதாவது 1720-1550 என்ற கால வேளையில் இது இடம் பெற்றிருக்க வேண்டும். இக்கதைக்கு இருவகை விளங்கங்கள் கொடுக்கப்படும். ஒன்று போன்-ராடு என்பவர், யோசேப்புக்கதையை விளக்க அநேக

மாக சாலமோன் அரசரின் காலத்தில் இது எழுதப்பட்ட படைப்புப்பற்றிய ஞானப் பாரம்பரியக் கதையைக் கொடுக்கிறார். ஆனால் அவரது விளக்கத்தில் வரலாற்றுத் தன்மை ஒதுக்கிவிடப்படுகிறது. மற்றது பெர்கோட்டு என்பவர் யோசேப்புக்கதையில் வரும் எகிப்தியக் கூறுகளைக் கவனமாய் ஆராய்ந்தபின், இக்கதையில் வரலாற்றுச் சுவடுகள் பதிந்துள்ளன என்று வாதிடுகிறார். அவரின் கருத்தின்படி, இஸ்ராயல் மக்கள் எகிப்தில் பெற்ற அனுபவங்களின் நினைவுச் சாயல் இந்நிகழ்ச்சிகளில் பதிந்திருக்கிறது என்கிறார். இதன்படி, மூதாதையர்களின் வரலாற்றைப் போலவே யோசேப்பின் வரலாற்றிலும் எகிப்தின் அன்றைய வாழ்க்கைச் சூழ்நிலை பிரதிப்பலிப்பதை நாம் காண முடிகிறது. நிகழ்ச்சிகளும் தெளிவாகத் தரப்பட்டுள்ளன. எனவே யோசேப்பின் வரலாறு, அப்பட்டமாகக் கட்டப்பட்டக் கதையென்று கூறுவதை நாம் ஏற்றுக் கொள்ள முடியாது. ஆனால் யாக்கோபின் பிள்ளைகளைப் பற்றிய முழு வரலாற்றையும் ஆதியாகமத்தில் நாம் காண முடியவில்லை. எத்துணைப் பேர் எகிப்து சென்றார்கள்; எத்துணைப் பேர் பாலஸ்தீனத்திலேயேத் தங்கிவிட்டனர், என்று துல்லிய விளக்கங்களையும் நாம் காணமுடியவில்லை. யோசேப்பின் வரலாற்றில் மறைந்திருக்கும் வரலாற்று நிகழ்ச்சியென்னவென்றால், எகிப்தில் இஸ்ராயல் சென்று குடியேறினார்கள். அதைத் தொடர்ந்து அவர்கள் அடிமைகளாக வதைக்கப்பட்டார்கள். இவ் வரலாற்று செய்தியினைத்தான் யோசேப்பின் வரலாறு நமக்குத் தருகிறது.

**இஸ்ராயேல் வரலாறு - III - விடுதலைப் பயணமும் விடுதலை வீரர்களும்**

*1. இஸ்ராயலின் அடிமை விலங்கு:-* கைக்சோசு அரசர்கள் எகிப்தைப் பிடித்து ஆட்சி செய்தக் காலத்தில்தான், யாகோபின் மைந்தர்கள் எகிப்தில் நுழைந்திருக்க வேண்டும். அதாவது கி.மு.1720-1550 என்ற காலக்கட்டத்தில் இது நிகழ்ந்திருக்க வேண்டும். கைக்சோசு என்றாலே அன்னிய ஆட்சியாளர்கள் என்று பொருள். இவர்கள் ஆசியாவிலிருந்து படையெடுத்து வந்து, எகிப்தையும் பாலஸ்தீனத்தையும் ஆண்டு வந்தார்கள் என்று ஏற்கனவே பார்த்திருக்கிறோம். இவர்கள் ஆவாரிசு (தானிசு சோவான்) என்ற நகரைத் தலைநகராகக் கொண்டிருந்தனர். இவ்வாறு அன்னியர்கள் எகிப்தை ஆட்சி செய்தபோது, இஸ்ராயேல் மக்கள் எளிதாக எகிப்தில் நுழைவதற்கு ஏற்ற வாய்ப்பாக இருந்தது. அத்தோடு கைக்சோசு இனத்தவர், இஸ்ராயேல் இனத்தவருடன், செமித்தியர் என்ற முறையில் உறவு கொண்டவர்கள். இவ்வாறு அன்னிய அரசர்கள், அதிலும் உறவு தொடர்புள்ளவர்கள் ஆட்சி செய்ததால் யோசேப்பும் பதவி உயர்வு பெற வாய்ப்பு உண்டானது. அத்துடன் பாலஸ்தீனம் அக்காலத்தில் எகிப்தின் ஒரு பகுதியாகக் கருதப்பட்டது. இதனால் எகிப்திற்கும் பாலஸ்தீனத்திற்கும் எளிதான போக்குவரத்தும் நடைபெற்றிருக்கிறது. யாத் *1:8*-இல் ''புதிய அரசன் எகிப்தை ஆள எழுந்தான், இவனோ யோசேப்பை அறியாதவன்'' என்ற குறிப்பினைப் பார்க்கிறோம். இக்குறிப்பு, கைக்சோசு அரசர்களுக்குள்ளேயே நடந்த ஒரு மாற்றத்தைக் கூறவில்லை. மாறாக கைக்சோசு அரசர்களை எகிப்தியர்கள் தோற்கடித்து மீண்டும் எகிப்து அரசர்களின் ஆட்சி அங்கு மலர்ந்ததைத்தான் இது சுட்டிக் காட்டுகிறது. எகிப்தின் *18*-வது தலைமுறையைச் சார்ந்த அமோசிசு என்பவன்தான், கைக்சோசு அரசர்களைத் தோற்கடித்து, எகிப்தின் புதிய சகாப்தத்தைத் தொடங்கியவன். இவ்வாறு இஸ்ராயேல் மக்கள் எகிப்து மன்னனின் வெறுப்பிற்கு ஆளானது வரலாற்று உண்மையாகும்.

இஸ்ராயேல் மக்கள் எகிப்து மன்னனால் வதைக்கப்பட்ட நிகழ்ச்சி, அப்போது அங்கு நடந்ததைப் போலவே அப்படியேத் தரப்படவில்லை. இஸ்ராயேல் மக்கள் நசுக்கப்பட்ட வரலாறு, மோசேயின் பிறப்பிற்கு முன்னோடி முன்னுரையாக வைக்கப்பட்டுள்ளது. யாத்திரையாகமம் முதல் அதிகாரத்தில் இந்த வதைப்பு நிகழ்ச்சியைப் பற்றிய விவரிப்பு ஆரம்பமாகிறது. இதனை யாவே பாரம்பரியம் வர்ணிக்கிறது. இதில் கூறப்ப

டுகின்ற கட்டிடம் கட்டும் பணிகள் கி.மு.1290-1224 ஆண்டுகளில் அரசாண்ட இரண்டாம் இராம்சேசு காலத்தில் பித்தோம், இரமசேசு ஆகிய இடங்களில், அவன் கட்டி வந்த கட்டிட பணியின் போது நடந்திருக்க வேண்டும். அக்காலத்தில் வரையப்பட்ட படங்களில் ஆசியாவிலிருந்து எகிப்து வந்த மக்கள் அடிமை வேலைகள் செய்வதாகச் சித்தரிக்கப்பட்டிருக்கிறது. அத்தகையப் படங்கள் இன்னும் அழியாமல் நமக்குச்சான்று கூறி நிற்கின்றன.

எகிப்தில் கி.மு.15-ஆம் நூற்றாண்டு முதல் கி.மு.12ஆம் நூற்றாண்டு வரை எழுதப்பட்ட ஏடுகளில் அபிரூ அல்லது கபிரூ என்பவர்களைப் பற்றி அடிக்கடி குறிப்புகள் காணப்படுகின்றன. ஒருவேளை இந்த அபிரூ மக்கள் தான் இஸ்ராயேல் மக்களோ என்ற எண்ணமும் நமக்குத் தோன்றலாம். ஆனால் அவ்வளவு சுலபமாக இஸ்ராயேல் மக்களை அபிரூ மக்களுடன் இணைத்துப் பார்க்க முடியாது. அபிரூ என்ற வார்த்தை ஒரு குறிப்பிட்ட இனத்தைச் சுட்டிக் காட்டும் பெயராக அல்லாமல், பல இனத்தையும் உள்ளடக்கிய ஒரு வகுப்பினரைக் குறிப்பதாகத் தெரிகிறது.

இஸ்ராயேல் மக்களை அடியோடு அழிக்கும் திட்டத்தில், கடுமையான வேலைகளைச் சுமத்தியதோடு, பிறக்கும் ஆண்பிள்ளைகளைக் கொன்றிடவும், இரண்டு தாதிகளை மன்னன் நியமிக்கிறான். அந்தத் தாதிகளின் பெயர்களும், சிப்பிரா, பூகா என்று அங்குத் தரப்படுகிறது (யாத் 1:15). மேற்கூறிய பெயர்கள் எகிப்தில் எழுதப்பட்ட மற்ற மிகப்பழைய நூல்களிலும் காணப்படுகின்றன. அடுத்து, இத்தாதியர்களின் கைக்குத் தப்பும் குழந்தைகளை ஆற்றில் தூக்கியெறிய வேண்டுமென்று மன்னன் கட்டளைப் பிறப்பிக்கிறான். இந்த மன்னனின் கட்டளை, மோசே தண்ணீரிலிருந்து கண்டெடுக்கப்படுவதற்குத் தயார் செய்யும் நிகழ்ச்சியாக அமைந்துள்ளது. மோசே நாணல்கள் நடுவேயிருந்து கண்டெடுக்கப்பட்ட நிகழ்ச்சியைப் போலவே, கி.மு.2300-இல் வாழ்ந்த அக்காது நாட்டின் சார்கோன் என்பவனுடைய வாழ்க்கையிலும் நடந்ததாக, நாம் பழம் ஏடுகளில் படிக்கிறோம். இவ்வாறு இஸ்ராயேல் மக்கள் எகிப்தில் அடிமைகளாகத் துன்புறுத்தப் பட்டதை விவிலியம் கூறுவதை, மற்ற ஆதாரங்களும் உறுதி செய்கின்றன.

2. மோசே:- மோசேயின் பணிகளை யாத்.3- ஆம் அதிகாரத்திலிருந்துப் பார்க்கிறோம். யாத் 3:1-4:7-என்ற பகுதியை யாவே பாரம்பரியமும், யாத் 6:2-7:13-என்ற பகுதியைக் குருக்கள் பாரம்பரியமும் நமக்குத் தருகின்றன. மோசே செய்த பணிகளுக்கு முக்கிய காரணம் யாத் 2:24-இல் கூறப்படுகின்றது. இறைவன் இஸ்ராயேலின் மூதாதையர்களுடன் செய்து கொண்ட உடன்படிக்கையாகும். ''இஸ்ராயேல் மக்கள், வேலைகளின் பொருட்டுத் துயரப்பட்டுப் பெரும் கூக்குரலிட்டனர். அவர்கள் முறைப்பாடு அவர்கள் வேலை செய்த இடத்தினின்று இறைவனுக்கு எட்டியது. கடவுள் அவர்களுடைய புலம்பலைக் கேட்டு, தாம் ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு என்பவர்களுடன் செய்திருந்த உடன்படிக்கையை நினைவு கூர்ந்தார்''. தனது உடன்படிக்கையை நிறைவேற்றவே மோசேயைத் தம் கருவியாகத் தேர்ந்தெடுக்கிறார் இறைவன். எகிப்தியன் ஒருவனைக் கொன்ற காரணத்திற்காக மோசே எகிப்து நாட்டினின்று வெளியேறும் அவசியம் ஏற்படுகிறது. இதனால் மிதியான் நாட்டிற்கு தப்பிச் செல்கிறார் மோசே. அங்கு மிதியான் நாட்டு மங்கையொருவளை மனைவியாகப் பெறுகிறார். மிதியான் நாட்டில் வாழ்ந்த நாட்களில்தான் ஆண்டவரின் அழைப்பை ஏற்கிறார் மோசே. மோசே மிதியான் நாட்டில் இறைவனின் காட்சியைக் கண்டதால், இஸ்ராயேல் மக்கள் வணங்கும் யாவே இறைவன், மிதியான் நாட்டினர் வழிபட்ட தெய்வம்தான் என்று வாதிடுவர் சில அறிஞர்கள். மற்றொரு வகையில் பார்க்கும் போது மோசே காலத்திலிருந்து இஸ்ராயேல் மக்கள் மத்தியில் ஒரே கடவுள் கொள்கை வளர்ச்சி கண்டது. இந்த ஒரே கடவுள் கொள்கை எகிப்தில் அக்கெனாதோன் என்ற அரசன் காலத்தில், மக்களால் பின்பற்றப்பட்டது. இந்த அக்கெனாதோன்

கி.மு.1370-1383 என்ற காலக் கட்டத்தில் வாழ்ந்தவர். எனவே எகிப்தில் பின்பற்றப் பட்ட அதே ஒரே கடவுள் கொள்கைதான் மோசே துவங்கி வைத்த சமயக் கொள்கையில் காணப்படுகிறது என்று சிலர் வாதிடுவர். ஆனால் ''நாமேயிருக்கிறவர்'' என்று தன்னையே மோசேக்கு வெளியிடும் கடவுள் (யாத் 3:14), அவர்களின் மூதாதையரின் கடவுளான ஏல்சத்தாய் (மலைக்கடவுள்) என்பதை வலியுறுத்திக் கூறுகிறார் (யாத் 3: 16). இவ்வாறு இஸ்ராயேல் மக்கள் கொண்டிருந்த சமயக் கோட்பாடு தனித்தன்மை வாய்ந்தது, தொடர்ச்சியானது. அதுவே மோசேயின் அழைப்பு நிகழ்ச்சியிலும் காணப்படுகிறது. மோசேயின் இறையழைப் பையடுத்து, பாரவோனுடன் மோசே மோதும் காட்சி தொடர்கிறது.

*3.* எகிப்தியரைத் தாக்கிய கொள்ளை நோய்கள்:- பாரவோன் இஸ்ராயேல் மக்களை விடுவிக்க மறுக்கிறான். இதனால் மோசே வழியாக எகிப்தியர்மீது பல தண்டனைகளால் புதுமையாகத் தாக்குகிறார் இறைவன். இந்நிகழ்ச்சிகள் யாத் 7-11-இல் வர்ணித்துக் கூறப்படுகின்றன. ஒருசில அறிஞர்கள் யாத்திராகமத்தில் கூறப்படும் இந்தப் பத்துக் கொள்ளை நோய்களும் வழக்கமாக எகிப்தில் நடைபெறும் இயற்கைச் சீற்ற நிகழ்ச்சிகள் என்று விளக்கம் தருவர். உதாரணமாக தண்ணீர் இரத்தமாக மாறும் நிகழ்ச்சி, ஆண்டுதோறும் நைல் நதியில் சிகப்பு நிறம் கொண்ட தண்ணீர் வெள்ளப் பெருக்காக வருவது என்பர். ஆனால் விவிலிய ஆசிரியர் இவைகளை இயற்கையின் சீற்ற நிகழ்ச்சிகள் என்று கருதவில்லை. அவைகளை நாம் கருதுவது போல நடக்கமுடியாதது நடக்கும் புதுமைகள் என்றும் கருதவில்லை. மாறாக அவைகள் ''அருங்குறிகளும் அற்புதங்களும்'' என்றே கருதுகிறார். யாத்திரையாகமத்தில் கூறப்பட்டிருக்கின்ற இந்த பத்துக் கொள்ளை நோய்களின் வர்ணனையில், பல பாரம்பரியங்கள் கொடுத்த தகவல்கள் சேர்த்திணைக்கப்பட்டிருக்கின்றன என்பதையும் நாம் மனதில் கொள்ள வேண்டும். குறிப்பாக எலோகீம் பாரம்பரியமும், குருக்களின் பாரம்பரியமும் சேர்த்து இணைக்கப்பட்டு, இப்பகுதி எழுதப்பட்டிருக்கிறது.

இக்கொள்ளை நோய்கள் ஒரு குறிப்பிட்டக் கருத்தை உணர்த்திக் காட்டத்தான், எகிப்திய மக்களைத் தாக்குவதாக இங்குக் கொடுக்கப்பட்டுள்ளது. அதாவது இறைவனுக்கும் பாரவோனுக்கும் இடையில் நடக்கும் போட்டியில் காணப்படும் உணர்ச்சி வசமானப் போராட்டத்தைத்தான் நாம் இங்குக் காண்கிறோம். கடைசியில் பாரவோனின் மந்திரவாதிகள், மோசே, ஆரோன் ஆகியோர் செய்யும் அதிசயங்களைச் செய்ய முடியாமல் தோற்றுப்போகின்றனர்.

இந்த பத்துக் கொள்ளை நோய்களும், கடைசியில் வருகின்ற பாஸ்கா விழாக் கொண்டாட்டத்திற்கு முன்தயாரிப்பைப் போல் அமைந்துள்ளன. எனவே இந்தக் கொள்ளை நோய்களின் வர்ணனைகள், பிற் காலத்தில், பாஸ்கா விழாக் கொண்டாட்டத்தினை மையமாக வைத்து எழுதப்பட்டுள்ளன. எனவே யாத்திரையாகமத்தில் கூறப்பட்டிருப்பது, அந்நிகழ்ச்சிகள் அன்றைய நாளில் நடந்ததை அப்படியே தருவதாக யில்லை. அதற்கு மேல், அந்நிகழ்ச்சிகள் எப்படித்தான் நடந்தன என்பதையும் நாம் கண்டறிய வாய்ப்பில்லை. இவ்வாறு பாஸ்கா விழாவினையும், புளியாத அப்பத்திருவிழாவையும், வரலாற்று நிகழ்ச்சியில் வைத்துக் காட்டத்தான், இக்கொள்ளை நோய் பகுதி முன்னுரையாக எழுதப்பட்டுள்ளது என்பது நன்குத் தெரிகிறது. ஆனால் இம்முக்கிய விழாவின் பொருள், இஸ்ராயேல் மக்கள் எகிப்திலிருந்து விடுதலைப் பெற்ற நிகழ்ச்சியாகும் என்பதையும் நம் நினைவில் நிறுத்த வேண்டும்.

*4. செங்கடலா அல்லது நாணல் கடலா?:-* இஸ்ராயேல் மக்கள் செங்கடலைக் கடந்து சென்றார்கள் என்பது வழக்கமாகும். இஸ்ராயேல் மக்கள் கடலைக் கடந்த நிகழ்ச்சி யாத்திராகமம் 14-ஆம் அதிகாரத்தில் கூறப்படுகிறது. ஆனால் இங்கு கடல் என்று மட்டும்

கூறப்படுகிறது (யாத் 14:16. 21-27). எபிரேய மொழியில் அதாவது விவிலியமூலத்தில் யாம்சுப் என்று இக்கடலைக் குறிப்பிடுகிறார்கள். யம்சுப் என்றால் நாணல் கடல் என்பது பொருள். எனவே இஸ்ராயேல் மக்கள் கடலைக் கடந்தது செங்கடலில் அல்ல. மாறாக சுக்கோத்து என்ற இடத்திற்கு அருகிலுள்ள கசப்பு ஏரி என்றவிடமென்று எல்லோராலும் இப்போது ஏற்றுக் கொள்ளப்படுகிறது. இப்பகுதி சதுப்பு நிலமான பகுதியாகும். இந்நிகழ்ச்சி யாத் 15:1-20-இல் மிரியாமின் பாடலில் கொண்டாடப்படுகிறது. இப்பாடல் விவிலியத்தில் காணக் கிடக்கின்ற காலத்தால் மிகப் பழமையான பாடலாகும். இப்பாடல் முழுவதும், இஸ்ராயேல் மக்கள் அற்புதமாகக் கடலைக் கடந்து வந்த நிகழ்ச்சியைப் புகழ்ந்து பாடுகிறது. எனவே இஸ்ராயேல் மக்கள் அற்புதமாகக் கடந்து வந்ததும் வரலாற்றில் இடம் பெற்ற நிகழ்ச்சி என்பது தெளிவாகிறது.

யாத் 12:37-இல் ஆறு இலட்சம் மக்கள் எகிப்தை விட்டு வெளியேறினார்கள் என்று கூறப்படுகிறது. எண்ணாகமம் 1-ஆம் அதிகாரத்திலும் 26-ஆம் அதிகாரத்திலும் பெரிய மக்கள் தொகைக் கணக்கு எடுக்கப்படுவதையும் பார்க்கிறோம். இவ்வளவு பெரியத் தொகையுள்ள மக்கள், இவ்விடுதலைப் பயணத்தில் பங்குப் பெற்றனரா என்பதும் கேள்விப் குறியாக உள்ளது. ஏனென்றால் 6 இலட்சம் மக்கள் அவர்கள் என்றால் அவர்கள் எல்லோரும் எப்படி ஒரேயிரவில் கடலை கடந்திருக்க முடியும்? எவ்வாறு இவ்வளவு பெரிய மக்களுக்கு இரண்டுதாதியர் மட்டும் பணி செய்ய முடிந்தது என்பதெல்லாம் வரும் சந்தேகக் கேள்விகள். எனவே ஒரு சில ஆயிர மக்கள் மட்டுமே இப்பணயத்தில் பங்குப் பெற்றிருக்க முடியும் என்று அறிஞர்கள் கணிக்கின்றனர்.

அடுத்து, எந்தெந்த கோத்திரங்கள் இப்பயணத்தில் பங்குப் பெற்றார்கள்? என்பதும் சர்ச்சைக்குரிய கேள்வியாகும். எப்பிராயிம், யோசேப்பு குலத்தைச் சார்ந்த மனாசே, பென்யாமின், லேவி, யூதா, சிமியோன் இவர்களின் மக்களெல்லாம் நிச்சயமாக இப்பயணத்தில் பங்குப் பெற்றனர் என்பது தெளிவாகத் தெரிகிறது.

இஸ்ராயேல் மக்களின் இந்த விடுதலைப் பயணத்தைப் பற்றி, விவிலியத்தை விடுத்து மற்றெந்த நூல்களிலும் இதைப்பற்றிய குறிப்புகளை நாம் காணமுடியவில்லை. கி.மு.1220-இல் வடிக்கப்பட்ட மெர்நெப்தா என்ற கல்வெட்டில் இஸ்ராயேல் என்ற பெயர் காணப்படுகிறது. இஸ்ராயேல் என்று அம்மக்களைத்தான் குறிப்பிடுகிறது. அவர்களின் நாட்டை குறிப்பிடுவதாயில்லை. இவ்விஸ்ராயேல் மக்கள் கைவிடப்பட்ட நிலையில் வாழ்ந்தார்கள் என்று அக்கல்வெட்டு கூறுகிறது. ஆகவே இக்கல்வெட்டு, யோசுவா காலத்திலிருந்த நிலைமையைத்தான் சுட்டிக் காட்டுகிறது, விதலைப் பயணத்தைப் பற்றிய குறிப்பு அல்ல அது என்று அறிஞர்கள் கருதுகிறார்கள். அதே நேரத்தில், அக்கல்வெட்டில், அக்கால முறைக்கொத்த மிகைப் படுத்திக் கூறுதலும் இணைந்துள்ளது என்பதை மனதில் வைத்துக் கொள்ள வேண்டும். எனவேதான் இஸ்ராயலை மிகத்தரம் தாழ்த்தி, எழுதி வைத்துள்ளனர்.

அடுத்து இந்த விடுதலைப் பயணம் எவ்வாண்டுகளில் நடைப்பெற்றது என்பதையும் அறிஞர்கள் கணிக்க முயற்சிக்கிறார்கள். 1 அரச 6:1-இல் சாலமோன் கட்டிய ஆலய வேலை தொடங்கும் காலத்தைக் குறிப்பிட, ''இஸ்ராயேல் மக்கள் எகிப்து நாட்டிலிருந்து வெளியேறின நானூற்று எண்பதாம் ஆண்டிலும்......'' என்று வருகிறது. சாலமோன் அரசரின் காலம் கி.மு.10 ஆம் நூற்றாண்டு. அத்தோடு மேற்கண்ட 480 ஆண்டுகளையும் சேர்த்துப் பார்த்தால் விடுதலைப் பயணம் நடந்தக் காலம் கி.மு.15 ஆம் நூற்றாண்டு என்று கணக்கு வருகிறது. ஆனால் தொல் பொருள் ஆராய்ச்சியின் முடிவுகளை வைத்துப் பார்க்கிற போது, இவ்விடுதலைப் பயணம் கி.மு. 13 ஆம் நூற்றாண்டில் நடைபெற்றிருக்க வேண்டும் என்று தெரிகிறது. தொல் பொருள் ஆராய்ச்சியில் கீழ்காணும் தடயங்கள் நமக்கு கிடைத்

துள்ளன. பாலஸ்தீனத்திலுள்ள பல நகரங்கள் கி.மு. 13-ஆம் நூற்றாண்டில் பலத்த சேதத்திற்கு ஆளாகியுள்ளன. குளூவெக்கு என்பவர் யோர்தான் நகரில் நடத்திய தொல்பொருள் ஆராய்ச்சியும் 13-ஆம் நூற்றாண்டையே விடுதலைப் பயணத்தின் ஆண்டுகளாகச் சுட்டிக் காட்டுவதாக அமைந்துள்ளது. மேற்கூறப்பட்ட மெரிநெப்த்தா கல்வெட்டும் இந்த 13-ஆம் நூற்றாண்டையே குறித்துக் காட்டுகின்றது. இவைகளையெல்லாம் நோக்கும்போது கி.மு.13-ஆம் நூற்றாண்டே, விடுதலைப் பயணம் நடந்த காலம் என்ற முடிவை நாம் ஏற்றுக் கொள்ளலாம். ஆனால் 1 அர 6:1-இல் கூறப்படும் 480 ஆண்டுகள் குறிப்பு ஓர் அடையாள எண்ணாக நாம் எடுத்துக் கொள்ள வேண்டும். 13-ஆம் நூற்றாண்டில், இஸ்ராயேல் மக்களை வதைத்து வாட்டிய எகிப்தின் மன்னன் இரண்டாம் இராம்சேசுதான் என்பதும் தெளிவாகத் தெரிகிறது.

5. பாலைவனத்தில் அலைச்சல்:- யாத் 13:17-18-இல் எவ்வாறு இஸ்ராயேல் மக்கள், தங்கள் சொந்த நாட்டிற்குச் செல்ல ஒரு சுற்றுப் பாதையை எடுத்துக் கொண்டார்கள் என்ற குறிப்பைப் பார்க்கிறோம். ''பாரவோன் மக்களைப் போகவிட்டபின் போரைக் கண்டால் அவர்கள் மனமுடைந்து எகிப்துக்குத் திரும்புவார்கள் என்று கடவுள் எண்ண, அவர்களைப் பெலஸ்தியரின் நாட்டுக்குறுக்கு வழியாய்க் கொண்டு போகாமல், செங்கடல் ஓரத்திலிருக்கும் பாலைநிலம் வழியே சுற்றிச் சுற்றிப் போகச் செய்தார்'' எண்ணாகமம் 33-ஆம் அதிகாரம் இஸ்ராயேல் மக்கள் தங்கி பாளையமிறங்கின 40 இடங்களைக் கூறுகிறது. இத்தனைக் குறிப்புகள் இருந்தாலும், எந்த வழியாகச் சென்றார்கள் என்பதைப் பற்றி தின்னமாகத் தெரிந்துக் கொள்ள வழியில்லை.

இஸ்ராயேல் மக்கள் பாலைவனத்தில் வழிநடந்த நிகழ்ச்சியை யாத்திரையாகமம் விவரிக்கிற போக்கில் பலமுக்கியமான நிகழ்ச்சிகளையும் நாம் காணமுடிகிறது. இறைவனுக்கெதிராக மக்கள் முணுமுணுத்தல், மேகத்தூண், மன்னா, காடை, 40 ஆண்டுகளாக அலைதல், அமலேக்கியருடன் போர் முதலிய மற்ற நிகழ்ச்சிகளையும் நாம் காண முடிகிறது. இப்பாலைவன அலைச்சலின்போது நடந்த மிக முக்கியமான நிகழ்ச்சியென்னவென்றால், சீனாய் மலையில் ஏற்பட்ட உடன்படிக்கை நிகழ்ச்சியாகும். இவ்வுடன்பாட்டை மணி சுருக்கமாக இங்குக் குறிப்பிடலாம். ''நீங்கள் எமது மக்கள், நாம் உனது கடவுள்''. சீனாய் மலை உடன்படிக்கையில் பல சடங்குகள் இடம் பெறுவதைப் பார்க்கின்றோம். இவைகள் இத்தித்யர்களின் மத்தியில், பேரரசன் ஒருவனுக்கும் அவனுக்குக் கீழிருக்கும் சிற்றரசர்களுக்கும் இடையில் ஏற்படுத்திக் கொள்ளும் ஒப்பந்தத்தை மாதிரியாக வைத்து அமைக்கப்பட்டுள்ளன. இந்த ஒப்பந்தத்தை மாதிரிகையாக வைத்து, இறைவனுக்கும் இஸ்ராயலுக்கும் உள்ள தனித்த உறவை விளக்கியுள்ளார்கள்.

யாத்திரையாகமம் 25-ஆம் அதிகாரம் கூடாரம், உடன்படிக்கைப் பேழை ஆகியவைகள் செய்வதைப் பற்றி விளக்கிக் கூறுகிறது. நடமாடும் கோவிலாக இக்கூடாரமும் உடன்படிக்கைப் பேழையும் அமைந்திருந்தன. ஏனென்றால் பயணத்தில், அவர்கள் சென்றவிடங்களிலெல்லாம் அதனை எடுத்துச் சென்றார்கள். இஸ்ராயேல் மக்கள் பயணம் செய்து தாயகம் வந்தார்கள் என்பதற்கு, இந்த நடமாடும் கூடாரத் தயாரிப்பும் ஓர் ஆதாரமாகும்.

பாலைவனத்தில் 40 ஆண்டுகளாய் அவர்கள் பயணம் செய்தார்கள் என்பது கணக்காகும் (சங் 94:10). 40 என்பது ஒரு தலைமுறையின் வருட எண்ணிக்கையாகும். இவர்கள் காதேசு பார்னேயாவிலிருந்து எளிதாக பாலஸ்தீனத்தில் நுழைய வாய்ப்பிருந்தாலும், அவ்வழியில் எதிர்ப்பிருந்ததால் (எண் 14:39) அவ்வழியே நுழையவில்லை. மாறாக. ஏதோம், மோவாப் அம்மோன் ஆகிய நாடுகளைச் சுற்றிக் கொண்டு, யோர்தான் ஆற்றின் கிழக்குப் பகுதியிலிருந்து, யோர்தானைக் கடந்து பிறகு பாலஸ்தீனத்தில் நுழைகிறார்கள். ஆனால் எண் 21:1-3;

*நீதி 1:9-16* ஆகிய பகுதிகள் இஸ்ராயேல் மக்கள் தென்பகுதி வழியாகவும் பாலஸ்தீனத்தில் நுழைந்தார்கள் என்று கூறும் முகமாக அமைந்துள்ளன.

சிகோன், ஒகு இந்நகரங்கள் மீது இஸ்ராயல் மக்கள் வெற்றி கொள்கின்றனர். இவ்வெற்றிதான் அவர்கள் பெற்ற முதல் வெற்றியாகும். இதனையே அவர்களின் தலைமுறைகளெல்லாம் மறக்காமல் புகழ்ந்துப் பாடுவதைப் பார்க்கிறோம் (*எண் 21:21-35; சங் 135: 19-20*). மோசே நேபோ மலையில் மரிக்கிறார். வாக்களிக்கப்பட்ட நாட்டினுள் புகாமல் அவர் இறந்ததற்கும் காரணங்களைத் தருகிறது விவிலியம் (*எண் 20:12; உப 1:37*).

*6. கி.மு. 13-ஆம் நூற்றாண்டில் கானான் நாடு:-* கி.மு. 13-ஆம் நூற்றாண்டில், கானான் நாடு பலயினமக்களைத் தன்னுள் கொண்டிருந்தது. கானானிய இனத்தவர் கடலோரப் பகுதிகளிலும், தெற்கு மற்றும் மத்திய பாலஸ்தீனிய பகுதிகளிலும் பெரும்பாலும் வாழ்ந்து வந்தனர். அதே சமயத்தில் இத்தித்தியர், கோரியர் போன்றோரும் கானான் நாட்டில் வாழ்ந்து வந்துள்ளனர்.

இக்காலத்தில் அரசியல் நிர்வாக அமைப்பைப் பொருத்தவரை, நகர ஆட்சி முறை பரவலாக பாலஸ்தீனத்தில் பழக்கத்திலிருந்தது. அதே நேரத்தில் பல நூற்றாண்டுகளுக்குப் பாலஸ்தீனம் எகிப்தின் கண்காணிப்பின் கீழேயே இருந்து வந்துள்ளது. பாலஸ்தீனத்திலிருந்த சிற்றரசர்கள், எகிப்திற்கு விசுவாசமாகவே வாழ்ந்து வந்துள்ளனர். தவறாது கப்பங்களைக் கட்டி எகிப்தின் நம்பிக்கைக்குரியவர்களாக அவர்கள் விளங்கினர். கி.மு. 14-ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட அமர்னா கடிதங்கள் பாலஸ்தீனத்தில் அபிரூ என்பவர்களின் அக்கிரமம் அதிகரித்து வருவதாக, அங்குள்ள அரசர்கள் எகிப்திற்குத் தெரிவிப்பதாகக் கூறுகின்றன. .

கி.மு. 13-ஆம் நூற்றாண்டில் நகர ஆட்சிகள், பாலஸ்தீனத்தில் பெருகின. ஆனால் அவைகள் ஒன்றிணைந்து, பாலஸ்தீனத்தைத் தங்கள் வசமாக்கிக் கொள்ள முன்வரவில்லை. ஆனால் யோர்தானுக்குக் கிழக்குப் பகுதிகள், எகிப்திற்குக் கட்டுப்படாமல், தாங்களே ஏதோம், மோவாப், அம்மோன் என்ற தனித்தனி நாடுகளை உண்டாக்கிக் கொண்டன.

பாலஸ்தீனத்தின் கலாச்சாரம் இந்நாட்களில், எகிப்தின் கலாச்சாரத்தின் தாக்கத்தைப் பெற்றிருந்தது. ஆனால் கானானியரின் சமயம், மற்ற சமயங்களின் சாயல்களைப் பெறாமல் தனித் தன்மையைக் காப்பாற்றிக் கொண்டது. பல கடவுளின் பேராலயம் பாலஸ்தீனத்தின் வடக்கிலிருந்த மலையின் மீது அமைந்திருந்தது. அவ்விடத்தின் பெயர் செப்போன் என்பதாகும். கடவுள்களின் தலைவர் எல் என்பவர்; அவரின் மற்றொரு பெயர் பாகால்.

பெண் தேவதைகளில் மூவர் முக்கியமானவர் ஆவர். 1, அசேரா (கடவுள்களைப் படைக்கும் தேவதை) 2. அசித்தார்த்தி (அசித்தரேத்து) 3. அனாத்து இவர் ஒரு கன்னிப் பெண். ஆனால் வீரமிக்கவள். கானானியர்களின் வழிபாட்டில் தேவதாசி முறையிருந்தது. நிலத்தின் வளத்தை இறைவனிடம் வேண்டி, திருத்தலங்களில் உடலுறவு செய்து வழிபட்டனர்.

7. கானான் நாடு யோசுவாவின் கையில்:- யோசுவா ஆகமத்தில், யோசுவா பாலஸ்தீனத்தைச் சண்டையிட்டுப் பிடித்த நிகழ்ச்சிகளைப் பார்க்கின்றோம். ஆனால், இப்புத்தகத்தில் நிகழ்ச்சிகள் தரப்பட்டிருக்கின்ற முறை, வரலாற்று நிகழ்ச்சிகளை யெல்லாம், ஒரு வீரக் காவியமாக்கித் தரப்பட்டிருக்கின்றது. ஏனென்றால் யோசுவாவை கதாநாயகனாக்கி, அவரது கைகளால் அனைத்து வெற்றியும் கிடைப்பதாக அமைத்திருக்கிறார்கள். யோசுவா ஆகமத்தை நுணுகிப் படித்தால், பாலஸ்தீனத்தின்மீது அவர் ஒரு திட்டமிட்ட, தீர்க்கமான, தொடர்ந்த போரினை யோசுவா மேற்கொள்ளவில்லை என்பது தெளிவாகும். சிற்சில இடங்களை ஆங்காங்குத் தாக்கி அவைகளைப் பிடித்திருப்பது

விளங்குகிறது. முதலில் பாலஸ்தீனத்தின் மையப் பகுதியிலுள்ள எரிகோ, ஆயி என்ற இடங்களைப் பிடிக்கிறார்கள். பிறகு கிப யோனியரின் உதவியுடன் பாலஸ்தீனத்தின் தென்பகுதிகளுக்கு படையெடுக்கின்றனர். அதன்பிறகு பாலஸ்தீனத்தின் வட பகுதிக் குப் போர் தொடுத்துச் செல்கின்றனர். அங்கு காசோர் நகரைப் பிடிக்கின்றனர். இவைக ளேயல்லாமல், வேறுசில தனித்த போர்க ளையும் யோசுவா நடத்தியதாகவும் பார்க் கின்றோம். உதாரணமாக யோசு *13:2-6; 15:13-19; 23:7-13;* நீதி *1;* ஆகிய பகுதிகளில் அத்தகையப் போர்கள் நடந்ததாகப் பார்க் கின்றோம்.

யோசுவா நடத்தியப் போர்களில் கேரம் (அர்ப்பணப்போர்) என்ற வழக்கம் பின்பற் றப்பட்டது. இவ்வழக்கின்படி, போரில் பிடிப்பவைகளையெல்லாம் சுத்தமாக அழித் துவிட வேண்டும். கொள்ளைப் பொருட்கள் என்று எதனையும் அள்ளிவரக் கூடாது. யோசுவா பலபோர்களைத் தொடுத்து வெற் றிகளைப் பெற்றிருந்தாலும், அங்கிருந்த கானானேயர் அனைவரையும் அவர் முற்றி லுமாக அழித்துவிட்டதாக நாம் கூறமுடி யாது. பல கானானியரை இஸ்ராயேல் மக் கள் அழித்துவிடாமல் அவர்களை விட்டுவி டுவதையும் பார்க்கின்றோம் (யோசு *2:21-23; 3:2*)

யோசுவா ஆகமத்தில், முதலில் ஒற்றர் களை அனுப்பி யோசுவா பாலஸ்தீன நாட்டை வேவுப் பார்த்து வர அனுப்புகி றார். அதன்பிறகு யோர்தான் ஆற்றை, ஆற் றில் தண்ணீர் வற்ற அற்புதமான முறையில் அதனைப் கடக்கின்றார்கள். பிறகு எரிகோ நகரை முதலில் பிடிக்கிறார்கள் (யோசு *3-4*). ஏழு நாட்கள் யெரிக்கோவைச் சுற்றி வந்து, ஏழாம் நாளில் எக்காளம் ஊதி, சுவர்கள்விழ அதனைப் பிடித்துக் கொள்கிறார்கள். இது ஒரு போர் முறையாகத் தெரியவில்லை; மாறாக ஒரு வழிபாட்டு ஊர்வலத்தைப் போல் அங்கு நடைபெறுகிறது. எரிகோவில் பல தொல்பொருள் ஆராய்ச்சிகளை நடத்தி னார்கள். ஆனால் கி.மு. *13*-ஆம் நூற்றாண் டில் இந்நகரம் வீழ்ச்சியடைந்தது என்பதற் கானத் தடையங்கள் அங்கு கிடைக்க வில்லை. ஆனால் யோசுவா ஆகமத்தில் கொடுக்கப்பட்டிருக்கின்ற வழிகளைப் பார்க்கும்போது, எரிகோ நகரை அவர்கள் நிச்சயம் முதலில் பிடித்திருக்க வேண்டும் என்பது அவசியமாகியது.

அடுத்து ஆயி நகரைப் பிடிக்கின்றார்கள் (யோசு *8*). ஆயி அழிவு என்று பொருள்ப டும். ஆயி நகரத்திலும் தொல் பொருள் ஆராய்ச்சி நடந்துள்ளது ஆனால், இந்நகர மும் கி.மு. *13*-ஆம் நூற்றாண்டில் அழிவைக் கண்டதற்கான அடையாளங்கள் ஒன்றையும் இங்குக் காணமுடியவில்லை. ஆனால் ஆயி நகரின் அருகிலுள்ள பெத்தேல் நகர் *13*-ஆம் நூற்றாண்டில் அழிக்கப்பட்டுள்ளது என்பதற் குத் தடையங்கள் கிடைத்துள்ளன. எனவே பெத்தேல் என்பதற்குப்பதிலாக ஆயி என்று குறிப்பிட்டுவிட்டார்கள் என்று ஒரு சில அறிஞர்கள் கருத்துத் தெரிவிக்கின்றனர். அதே போல யோசு. *9*-இல் வருகின்ற கிபயோன் நகரில் நடந்த தொல்பொருள் ஆராய்ச்சியும், கி.மு. *13*-ஆம் நூற்றாண்டில் இந்நகரம் அழிக்கப்பட்டது என்பதற்குத் தட யங்களைத் தருவதாயில்லை.

ஆனால் இலாக்கிசு, தெபீர், காசோர் ஆகிய இடங்களில், கி.மு. *13*-ஆம் நூற்றாண் டில் அந்நகரங்கள் அழிக்கப்பட்டன என்ப தற்கு, தொல் பொருள் ஆராய்ச்சியின் முடிவு கள் சான்று பகர்கின்றன. யோசுவா *10-11* அதிகாரங்கள் மேற்கண்ட நகரங்களின் அழி வைத் தெரிவிக்கின்றன. அதில் கூறப்படுவ தற்கும், தொல் பொருள் ஆராய்ச்சியின் ஆதா ரங்களும் ஒத்திருக்கின்றன.

செக்கேம் நகர் எவ்வித போராட்டமில்லா மல் இஸ்ராயலரின் கைகளில் விழுந்ததாகப் பார்க்கிறோம். செக்கேம் நகரில் நடத்தப் பட்ட தொல் பொருள் ஆராய்ச்சியில், இந்நக ரம் கி.மு. *13*-ஆம் நூற்றாண்டில் எவ்வித சேதத்திற்கும் ஆளாகவில்லையென்று கண் டுபிடிக்கப்பட்டுள்ளது.

எனவே இஸ்ராயேல் மக்கள், தங்களின் நாட்டிற்கு வந்தபோது, எகிப்திற்கு செல்

லாது அங்கேயே தங்கயிருந்த அவர்களின் மூதாதையரின் வாரிசுகள் இஸ்ராயேல் மக்களை இனம் கண்டு கொண்டு, அவர்கள் குடியமர உதவி செய்திருப்பதற்கு வாய்ப்புகள் இருந்திருக்கின்றன.

அடுத்து யாத் 12:38-இலும், எண் 11:4-இலும் இஸ்ராயேல் மக்களுடன் மற்றயினத்தவரும் சேர்ந்து இந்த விடுதலைப் பயணத்தில் பங்குக் கொண்டார்கள் என்று பார்க்கிறோம். ''இஸ்ராயேலரோடு கூட வந்திருந்த பலயின மக்கள் இறைச்சி உண்ணவேண்டுமென்று பேராசைக் கொண்டனர்''. எனவே எகிப்திலிருந்து பாலஸ்தீனத்திற்கு, கால போக்கில் மக்கள் வருவதும் போவதுமாகயிருந்திருக்கிறார்கள் என்பதையும் நாம் நினைத்துப் பார்க்கயிடமிருக்கிறது.

இவ்வாறு இஸ்ராயேல் மக்கள் பெரும்பாலும் சமாதான முறையிலும், ஒரு சில இடங்களில் போராடியும் பாலஸ்தீனத்தில் குடியமர்ந்தார்கள். யோசுவா ஆகமத்தில் கூறப்பட்டிருப்பதுபோல தொடர்ந்த பெரிய போர்கள் அங்கு நடைபெறவில்லை என்பதையே ஆகமம் காப்பிய நடையில், பலயிடங்களில் மிகைப்படுத்தியும் அழகுப்படுத்தியும் கூறுகிறது.

இவ்வாறு எகிப்திலிருந்து விடுதலைப் பெற்றுவந்து, பாலஸ்தீனத்தில் குடியேறிய மக்கள், எப்போது ஓரினமாக இணைந்தார்கள் என்ற கேள்வியும் எழுகிறது. பிரைட், ஆல்பிரைட் என்ற அறிஞர்கள், எகிப்திலிருந்து விடுதலைப் பெற்ற மக்கள் சீனாய் மலையில் நடைபெற்ற உடன்படிக்கை நிகழ்ச்சியின் வழியாகத்தான், தாங்கள் ஒரே மக்கள், ஒரேயினம் என்று இணைந்தார்கள் என்று கருத்து தெரிவிக்கிறார்கள். ஆனால் நோத்து என்ற அறிஞர், மக்கள் பாலஸ்தீனத்தில் வந்து குடியமர்ந்தபிறகுதான் இந்த ஒரேயினம் என்ற எண்ணம் உண்டானது. ஏனென்றால் பாலஸ்தீனத்தில், எகிப்திலிருந்து வந்தவர்கள் அனைவரும் ஒரு திருத்தலத்தில் கூடி வழிபடுவார்கள். அத்திருத்தலத்தை ஒவ்வொரு குலத்தவரும் சுற்றுமுறை வைத்துக் கொண்டு கண்காணித்து வந்தனர். இவ்வாறு பாலஸ்தீனம் வந்தடைந்த பிறகுதான், இத்தகைய கூட்டங்கள் வழியாக, தாங்கள் ஒரேயினம் என்ற எண்ணத்தைப் பெற்றார்கள் என்கிறார் நோத்து.

யோசுவா 13-ஆம் அதிகாரத்திலிருந்து, பிடிக்கப்பட்ட பாலஸ்தீன நாடு, கோத்திரம் வாரியாகப் பகிர்ந்துக் கொடுக்கப்படுவதைப் பார்க்கிறோம். இந்த 12 கோத்திரங்கள் எனப்படுபவை, யாகோபின் பிள்ளைகளின் நேரடி வாரிசுகளா? என்ற கேள்வியையும் அறிஞர்கள் எழுப்புகின்றனர். அவ்வாறு இவர்களை யாக்கோபு பிள்ளைகளின் வாரிசுகள் என்று சொல்ல முடியாது என்கின்றனர். ஏனென்றால், மக்கள் அவர்களின் சமய நம்பிக்கையின் அடிப்படையில்தான் ஒன்றித்திருந்தனர். இரத்த உறவு அடிப்படையில் அவர்கள் பிரிந்து நின்றதாக குறிப்புகள் காணப்படவில்லை. அதனால்தான் யூதாவின் குலத்தவரோடு சிமியோன் குலத்தவர் சேர்க்கப்பட்டிருக்கின்றனர். காது குலத்தவருடன் ரூபன் குலத்தவரும் இணைக்கப்பட்டனர். எப்பிராயிம், மனாசே இரு குலத்தவரும், யோசேப்பு குலத்தவராக இணைத்துக் கூறப்படுகின்றனர் (ஆதி 49:1-27). எனவே யோசுவா 13-ஆம் அதிகாரத்தில் கூறப்படுகின்ற 12 கோத்திரங்களின் எல்லைகள் என்றும் நிலைத்து நின்ற எல்லைகள் அல்ல என்பது தெளிவாகிறது. இவ்வாறு யோசுவாவின் காலத்தில் இஸ்ராயேல் மக்கள் பாலஸ்தீனத்தில் குடியேறிய வரலாற்று நிகழ்ச்சியை, யோசுவா ஆகமம் காப்பிய வடிவில் கூறுகிறது.

8. விடுதலை வீரர்களின் காலம்:- யோசுவாவின் காலத்தையடுத்து, பாலஸ்தீனத்தில் இஸ்ராயேல் மக்களிடத்தில் ஒரு புதுவித சூழ்நிலை உண்டாகிறது. நாட்டில் குடியேறிய மக்கள் தங்கள் வாழ்க்கையை வளப்படுத்தும் வழிகளைத் தேட ஆரம்பித்தார்கள். நாடோடியாக வாழ்ந்தவர்கள் வீட்டில் தங்கி வாழத் தலைப்பட்டனர். அந்நாட்டில் நடந்த தொழிலைக் கைக்கொண்டு அதனால் தங்கள் வயிற்றிற்கு வழிதேடினர். அப்போது

பாலஸ்தீன நாட்டில் விவசாயம்தான் முக்கியத் தொழில். எனவே பயிர் தொழிலைப் பாங்காகச் செய்ய முற்பட்டனர். உழவு தொழிலிற்கு வானைப் பார்க்க வேண்டும். வான் பொய்த்தால் வாழ்க்கைப் பொய்த்து விடும். தேவையான மழையை, தேவையான நேரத்தில் பெற்றிட பாலஸ்தீனத்தில் அப்போது வாழ்ந்த கானானியர் பாகால் என்ற கடவுளை வழிபட்டனர். இவ்வழிபாட்டில், ஆலயத்தில் உடலுறவு கொள்ளும் வழக்கம் இருந்தது. விவசாயம் செய்த இஸ்ராயேலர், கானானியர் நிலத்தின் வளத்திற்காகச் செய்து வந்த அதே வழிபாட்டில் பங்கு பெறவும் தலைப்பட்டனர். ஓரிடத்தில் நிலைத்து வாழத் தலைப்பட்டவர்கள் தங்கள் சமுதாய ஒற்றுமையை மறந்து வாழவும் தலைப்பட்டனர். அத்தோடு அருகிலிருந்த பிறமக்கள் இஸ்ராயேல் மக்களின் இடங்களை ஆக்கிரமித்து தொந்தரவு அளிக்கவும் ஆரம்பித்தனர். குறிப்பாக, முதலில் கடல் மக்கள் என்று அழைக்கப்பட்ட பெலிஸ்தியர்கள், எகிப்தைத் தாக்கிக் கொண்டிருந்தனர். இவர்களை எகிப்து முறியடித்து திருப்பி அனுப்பிவிட்டது. இவர்கள் இஸ்ராயேல் அருகில் தனிநாட்டை உருவாக்கி வாழ்ந்து வந்தனர். இவர்கள் அடிக்கடி இஸ்ராயேலில் நுழைந்து துன்புறுத்தி வந்தனர். இச்சமயத்தில் தான், கடவுளின் அழைப்பை உணர்ந்த வீரர்கள் வெளிவந்து மக்களுக்கு விடுதலை வாங்கித் தந்தனர். இத்தகைய விடுதலை வீரர்கள் இஸ்ராயேலை சுமார் 150 ஆண்டுகள் வழிநடத்தி வந்தனர். இவர்கள் இவ்வாறு மக்களை வழிநடத்தி வந்தக் காலம் *கி.மு. 1200* முதல் *கி.மு. 1050* என்றும் நாம் கணக்கிடலாம். இவ்விடுதலை வீரர்கள் மொத்தம் பன்னிருவர். அறுவர் பெரிய நீதிபதிகள் என்றும், அறுவர் சிறிய நீதிபதிகள் என்றும் அழைக்கப்படுகின்றனர். இப்பாகுபாடு அவர்களின் சிறப்பினை வைத்துக் கொடுக்கப்பட்டதல்ல. மாறாக, பெரியவர்கள் அறுவரின் வாழ்வைப் பற்றிச் சற்று அதிகமாக நீதிபதி ஆகமத்தில் எழுதியுள்ளார்கள். சிறியவர்களைப் பற்றி ஒரு சில வாக்கியங்களில் கூறிவிடுகின்றனர்.

இந்த விடுதலை வீரர்களைச் சரியாகக் காலவாரியாக வரிசைப்படுத்திக் கூறவில்லை நீதிபதியாகமம்; மாறாக பலயிடங்களில் தோன்றி பணியாற்றிய இவ்வீரர்களைப் பற்றி, ஒரு குறிப்பிட்ட வாய்ப்பாட்டைப் பின்பற்றிக் கூறியிருப்பதாகத் தெரிகிறது. இதை *நீதி 2:10-3:6* என்ற பகுதி எடுத்துக் கூறுகிறது. முதலில் இஸ்ராயேல் மக்கள் யாவேயை மறந்து பாவம் செய்வது குறிப்பிடப்படும். பிறகு அதற்குத் தண்டனையாகக் கடவுள், அன்னிய அரசர்களை அவர்கள் மீது படையெடுக்கச் செய்வார். அன்னியர்களின் பிடியில் சிக்கிய மக்கள் இறைவனைப் பார்த்து முறையிடுவர், மனந்திரும்புவர். இப்போது இறைவன் அவர்களை மீட்க ஓர் விடுதலை வீரரை அனுப்பி வைப்பார். இந்த நான்கு படி கொண்ட வாய்ப்பாட்டைத்தான் ஒவ்வொரு விடுதலை வீரரின் வாழ்க்கையை வடித்து எழுதும்போது, நீதிபதியாகமம் பின்பற்றுகிறது.

இவ்விடுதலை வீரர்கள் எந்தெந்த எதிரிகளை எதிர்த்து வெற்றிக் கொண்டனர் என்பதைப் பற்றியும் நீதிபதியாகமம் குறிப்பிட்டுக் கூறுகிறது. முதலில் கூறப்பட்ட பெலிஸ்தியர் மட்டுமல்ல, பல திசைகளிலிருந்து இஸ்ராயேல் மக்கள் தாக்கப்பட்டிருக்கிறார்கள். தங்களின் ஒற்றுமையை மறந்திருந்த மக்கள் எதிரிகளின் தாக்குதலுக்கு எளிதாக இரையானார்கள். கடவுள் அனுப்பியவிடுதலை வீரர்களின் மற்றொரு முக்கியமானப் பணி, மக்களை ஒன்று சேர்ப்பதாகும். இவ்வாறு மக்களை ஒற்றுமைப்படுத்தி, எதிரியை எதிர்க்கச் சென்றனர்.

ஒதினியேல் என்ற விடுதலை வீரர் கிரியத்து-சேபர் நகரைப் பிடிக்க யூதாவிற்கு உதவுகிறார் *(நீதி 1:11-16)*. இடக்கையன் ஏகூது, மோவாப் அரசன் எகிலோனைத் தந்திரத்தால் கொல்லுகிறார் *(நீதி 3:15-25)*. இதனால் மோவாபு மக்கள் யோர்தான் ஆற்றினைத் தாண்டி இஸ்ராயேல் மக்களைத் தாக்கத் துணியாது, அவர்கள் நாட்டோடு அடங்கிப்போய் இருந்தார்கள். இறைவாக்கினள் தெபோரா, பாராக்கு என்ற வீரரைத்

தூண்டியெழுப்புகிறாள். இருவரும் சேர்ந்து, பாலஸ்தீனத்தின் வடபகுதியிலிருந்த மக்களையெல்லாம் ஒன்று திரட்டுகின்றனர். தங்களைத் தாக்கி வந்த கானானிய அரசன் யாபீனை எதிர்த்துப் போரிட செல்கின்றனர். இப்போர் எசுதிரலோன் என்ற சமவெளியில் நடக்கிறது. யாபீன் அரசனின் தளபதி சிசாரச இஸ்ராயலுக்கு எதிராக தலைமையேற்றுப் போரை நடத்துகிறான். சிசாரா கெபேரின் மனைவி யாயேலால் கொல்லப்படுகிறான், இப்போரில், கானானேயர்கள் தேர்ப்படையைப் பயன்படுத்துகின்றனர். ஆனால் அப்போது பெய்த மழையினால் கீசோன் நதி வெள்ளப்பெருக்கெடுத்தது. இதனால் தேரெல்லாம் சகதியில் மாட்டிக்கொண்டு பயன்படாது போகின்றன (நீதி 5:20-21). இந்நிகழ்ச்சி கி.மு.. 1125-ஆம் ஆண்டு நடந்திருக்க வேண்டும் என்று ஆல்பரைட் என்ற அறிஞர் கருதுகிறார். அதற்கு அவர் மெக்கிதோ, தானாக்கு முதலிய இடங்களில் நடந்த தொல்பொருள் ஆராய்ச்சியின் சான்றுகளை அங்குக் காட்டுகிறார். இவ்வெற்றியை மையமாக வைத்து இயற்றப்பட்ட தெபோராவின் பாடல் (நீதி 5) காலத்தால் மிகப்பழமையான பாடல்களில் ஒன்றாகும்.

மிதியானியரும், அமலேக்கியரும் ஒட்டகங்கள் மீது வந்து, இஸ்ராயல் மக்களைச் சூறையடித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களை கிதேயோன் சந்தித்து விரட்டியடித்து வெற்றி கொள்கிறார் (நீதி 6-8). பிறகு கிதயோனின் மகன் அபிமெலக்கு இஸ்ராயலுக்கு அரசனாக முயற்சி செய்கிறான். செக்கேமில் சிலகாலம் அரசனாகவும் ஆட்சி செய்கிறான் (நீதி 9). கிதயோன் செய்த மற்றொரு முக்கிய பணி, பாகாலின் ஆலயங்களை இடித்து அழித்ததாகும் (நீதி 6:25-32).

இபிதாகு ஒருவிலைமாதின் மகன். மக்களால் விரட்டப்பட்டு, கொள்ளைக்காரர்களுடன் சேர்ந்து வாழ்ந்து வந்தார். அம்மோனியர் கிலயாத்தைக் கைப்பற்றியபோது கிலயாத்தின் மக்கள் இபிதாகின் உதவியை நாடுகின்றனர். இபிதாகு போரிட்டு அம்மோனியர்களைத் தோற்கடிக்கிறார். இச்சமயத்தில் மிக வருத்தமான நிகழ்ச்சி நடை பெறுகிறது. தனது வெற்றிக்கு நன்றியாக, யாரை முதலில் காண்பாரோ அவரை பலியிடுவதாக வேண்டுதல் செய்திருந்தார். அவர் மகளை, அவர் வெற்றிக் கொண்டு திரும்பி வரும்போது முதலில் சந்திக்கிறார். அதனால் பலிக்கொடுக்க நேருகிறது (நீதி 10-11).

சிம்சோன் பெலிஸ்தியர்களுடன் போராடி, இஸ்ராயேல் மக்களைக் காப்பாற்றுகிறார். இஸ்ராயல் மக்கள் பெலிஸ்தியர்களால் எவ்வளவு வாதையுற்றனர் என்றால் தாங்கள் தப்பித்துக் கொள்ள தங்களின் வீரனையே, கட்டி, பெலிஸ்தியர்களிடம் அனுப்பிவைக்க முன்வருகின்றனர் (நீதி 15:12-14). சிம்சோனின் அலாதியான வீரமும் பலமும் இஸ்ராயேலின் நம்பிக்கை நட்சத்திரமாக விளங்கின.

சமானிய விடுதலை வீரர்கள், போர்களில் ஈடுபடுவதைவிட, மக்களையிணைக்கும் பாலங்களாக விளங்கியுள்ளார்கள். இவ்வகுப்பைச் சேர்ந்த சில வீரர்கள், இஸ்ராயல் இனத்தைச் சார்ந்தவர்களாக கூட இல்லை.

**இஸ்ராயேல் வரலாறு** - IV மன்னர் ஆட்சிக்காலம்

விடுதலை வீரர்களின் காலத்தையடுத்து, கி.மு. 11-ஆம் நூற்றாண்டில் மன்னர் ஆட்சிமுறை பாலஸ்தீனத்தில் அடியெடுத்து வைத்தது. இந்த நூற்றாண்டின் துவக்கத்தில், இஸ்ராயேல் மக்களின் பெரும் தலைவலியாக விளங்கியவர்கள் பெலிஸ்தியர்கள். இப்பெலிஸ்தியர்கள், பாலஸ்தீனத்தின் தென்பகுதியில் கடற்கரை ஓரங்களில் காசா, காத்து அசுக்கலோன், அசுதோது, எக்கரோன் என்ற நகரங்களைப் பிடித்து அவைகளில் தனித்து அரசாட்சியை நடத்தி வந்தனர். இவர்கள் இஸ்ராயேல் மக்களை விட அதிக வலிமை வாய்ந்தவர்களாக அக்காலத்தில் விளங்கியிருக்கிறார்கள் என்பது தெளிவாகத் தெரிகிறது. சிம்சோன் பெலிஸ்தியர்களுடன் கொண்ட போராட்டத்தை நீதி 13-16 என்ற பகுதி விவரிக்கிறது. பெலிஸ்தியர்கள், இரும்பினை உருக்கும் இரகசியத்தைத்

தெரிந்து வைத்திருந்திருந்தார்கள். எனவே தான் இஸ்ராயேல் மக்கள் கொல்லர்களைத் தேடி பெலிஸ்தியர் நாட்டிற்குச் சென்றார்கள் என்று 1 சாமு 13:19தொ- தெரிவிக்கின்றது. இப்பெலிஸ்தியர் அபேக்கு என்ற இஸ்ராயேலின் நகரைப் பிடித்து பாலஸ்தீனத்தின் வட பகுதியில் நுழைந்தனர் என்று 1 சாமு 4 தெரிவிக்கின்றது. அபேக்கு என்ற ஊரில் நடந்தபோர், வரலாற்றில் முக்கியம் வாய்ந்தது. ஏனென்றால், இஸ்ராயேலின் பலகுலத்தவரும் ஒன்றிணைந்து பெலிஸ்தியரை எதிர்த்துப் போராடியுள்ளார்கள்.

1. முதல் அரசன் சவுல் (கி.மு. 1020):- பெலிஸ்தியர்கள் இஸ்ராயேலை விழுங்கிவிடத் தருணம்பார்த்துக் கொண்டிருந்தனர், இச் சூழ்நிலையில் இரண்டு முக்கிய மனிதர்கள் இஸ்ராயேலில் தோன்றினார்கள். சாமுவேல் என்பாரும் சவுல் என்பவரும்தான் இக்காலத்தில் தோன்றிய மனிதர்கள்.

சாமுவேல்பற்றி தகவல்கள் பலவித மொழிநடைகளில் வடிவம் பெற்று உலாவி வந்தன. அவருடைய பிறப்பு, அழைப்பு, பணிகள் இவைகள் ஒவ்வொன்றும் தனித் தனி பாணியில் மக்கள் மத்தியில் செய்திகளாக நிலவிவந்தன. எனவேதான், அவரைப் பற்றிய தெளிவானக் குறிப்புகளை நாம் காணமுடியவில்லை. இளமையில் சிலோவா திருத்தலத்தில் ஏலியின் ஏவலனாக விளங்குகிறார். இத்திருத்தலத்தில் இவ் வாறு பணிபுரிந்தது அவருடைய தாய் எடுத்துக்கொண்ட நேர்ச்சியின் காரணமாகத்தான் (1 சாமு 1:11; எண் 6). இதையடுத்து, சாமுவேல் ஓர், இறைவாக்கினராகவும் காட்சியாளராகவும் சித்தரிக்கப்படுகிறார். இவர் இஸ்ராயேல் மக்களின் பழைய பாரம்பரியங்களைத் தின்மையுடன் கட்டிக் காப்பவராக நிற்கிறார். எனவேதான், சவுல் முதல் அரசனாக ஆவதற்குமுன் அரசமுறை நுழைவதை எதிர்த்து நிற்கிறார். சாமுவேல் இறைவாக்கினராகச் செயற்படுங்கால், அவரைச் சுற்றி ஒரு சீடர் கூட்டம் சேர்ந்து வாழ்ந்து வந்திருக்கிறது. இச்சீடர்கள் பரவச நிலையில் ஆடுபவர்களாகவும் குறிசொல்பவர்களாகவும் விளங்கியுள்ளனர். இச்சீடர்களின் செயல்வமுக்கங்கள் கானானியர்களின் இறைவாக்குப் பூசாரிகளின் வழக்கங்களை ஒத்திருந்தன.

இதையடுத்து சாமுவேல் ஓர் விடுதலை வீரராகவும் விளங்கினார் (1 சாமு 7:2-17). அதிலும் இவர் இஸ்ராயேலின் வரலாற்றில் கடைசி விடுதலை வீரராக விளங்கியிருக்கிறார். இவ்வாறு இவர் பெத்தேல், கில்கால், மிசுபா என்ற நகரங்களில் விடுதலை வீரர்களின் பணியை செய்துவந்திருப்பதும் நமக்குத் தெரிகிறது. விடுதலை வீரர்களின் பணியில் இவர் இடம் பெறுவதால்தான் பெலிஸ்தியருடன் இவர் பேர்ரிட்டு அவர்கள் மீது அவர் வெற்றிக் கொண்டதாக 1 சாமு 7:10-இல் பார்க்கிறோம்.

விடுதலைவீரர் கிதயோனின் மகன் அபிமெலக்குதான் அரசனாக முயற்சி செய்தார் அவரது நோக்கம் என்னவென்றால் ஒருமன்னனின் குடையின் கீழ் எல்லா இஸ்ராயேலின் குலங்களையும் இணைப்பதாகும். ஆனால் அவரின் முயற்சி பயனளிக்காது தோல்விக் கண்டது. அபிமெலக்கு அப்போது ஏற்றிய விளக்கு பெலிஸ்தியர்களின் தொல்லைகளால் பற்றி எரிய ஆரம்பித்தது. எதிரிகளான பெலிஸ்தியரை அழிக்க இஸ்ராயல் அனைவரும் அரசன் என்ற தலைமையை வைத்து அவன் கீழ் ஒன்று கூட ஏதுவாயிற்று.

மன்னர் ஆட்சிமுறை, இஸ்ராயேலில் எவ்வாறு தோற்றம் கண்டது என்பது பற்றி இரண்டு வகையான பாரம்பரியங்களைச் சாமுவேல் ஆகமத்தில் நாம் காண முடிகிறது. 1 சாமு 9:1-10; 16:11 ஆகிய பகுதிகள் மன்னர் ஆட்சி முறை தோன்றியதை ஆதரிப்பதைப் போலத் தெரிகிறது. ஆனால் 1 சாமு 8;10: 17-27; 12 ஆகிய பகுதிகள் மன்னர் ஆட்சி முறைக்கு எதிராக அமைந்துள்ளன.

1 சாமு 9:1-10; 16:11 என்ற பகுதியில் நாம் காண்பது: சவுல், தன் வீட்டிலிருந்து காணமற்போன கழுதைகளைத் தேடிச்செல்கிறார். அப்போது இராமாவில் சாமுவேலால் அபிடேகம் செய்யப்படுகிறார். இந்நிகழ்ச்சியைத்

தருகின்ற பாரம்பரியம் மிகவும் தொன்மையானதாகும் என்று அறிஞர்கள் கருதுகின்றனர்.

*1 சாமு 8;10:17-27; 12-* என்ற பகுதியில் சவுல் முதல் மன்னனாக ஆக்கப்படுவது வேறு விதத்தில் அமைந்துள்ளது, அதாவது, சாமுவேல் விருப்பமில்லாமல் மக்களின் வற்புறுத்தலுக்காகவே சவுலை முதல் அரசனாக ஆக்குவதாக உள்ளது. இதில் சாமுவேல் கடைசி விடுதலை வீரராகவும், அவரைத் தொடர்ந்து சவுலும் அந்த விடுதலை வீரர் பாணியிலேயே பணி செய்ததாகவும் இப்பகுதி விளக்குகிறது. எனவேதான் அவர் மன்னராக அபிடேகம் செய்யப்பட்டார் என்பதில் *1 சாமு 10:1* ''நாகித்'' என்ற எபிரேய வார்த்தை அரசனைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளது. நாகிது என்றால் தலைவன் இளவரசன் என்றுதான் பொருள் (*2 சாமு 7:8*), அதனைப் படைத்தலைவன் என்று கூட மொழிபெயர்க்கலாம் என்கிறார் ஆல்பிரைட் என்ற அறிஞர்.

எனவே மன்னர்களின் சரியான அமைப்பு ஆட்சிமுறை ஒரே காலக் கட்டத்தில் திடீரென உண்டாகாமல் படிப்படியாக வளர்ந்திருக்கிறது என்பதைத்தான் இந்த இரு பாரம்பரியங்கள் சுட்டிக் காட்டுகின்றன. ஆல்பிரைட் என்ற அறிஞர் கிபயா என்ற இடத்தில் தொல் பொருள் ஆராய்ச்சி நடத்தினார். அவ்விடத்தில் சவுல் அரசனில் அரண்மனையைக் கண்டு பிடித்தார். இவ்வரண்மனை எளிமையான முறையில் கட்டப்பட்டுள்ளது. ஏனென்றால் சவுலின் காலத்தில் முழுமையான நிர்வாக அமைப்பு முறைகளும் அரச ஆடம்பரங்களும் ஆரம்பத்திலேயே தோன்றவில்லை.

சவுல் தனது பணியின் துவக்கத்திலேயே பல வெற்றிகளைக் கண்டார்; அவை அவருக்குப் பெரும் ஆர்வத்தை அளித்தன. சான்றாக யபேசு-கிலயாதை ஆம்மோனியர்கள் முற்றுகையிட்டபோது அவர்களை முறியடித்தார் சவுல் (*1 சாமு 11*). இப்போரில் பெலிஸ்தியர் தலையிடாமல் ஒதுங்கியே நின்றுள்ளனர். அடுத்து அவர்களின் பயங்கர எதிரியாக விளங்கிய பெலிஸ்தியரையும் எதிர்த்து ஒருமுறை வெற்றி கொண்டார் சவுல். பெலிஸ்தியரை தோற்கடித்த இப்பெரும்போரில் சவுலின் மகன் யோனத்தான் தலைமையேற்று இவ்வெற்றிக்குக் காரணமாக விளங்கினார் (*1 சாமு 14*).

முதல் அரசனான சவுல் சிலதவறான வழிகளிலும் சென்றார். தன்னை திருநிலைப்படுத்திய சாமுவேலுடனேயே மோதினார். இத்தகைய இருமோதல்களை *1 சாமு 13; 15;* நமக்குத் தெரிவிக்கின்றன. அதாவது பெலிஸ்தியருடன் போர் துவங்குமுன் இறைவாக்கினர் சாமுவேலுக்குப் பதிலாகத் தானே பலியை நிறைவேற்றுகிறார் சவுல். அமலேக்கியரைச் சவுல் தோற்கடித்தபோது அவர்களின் சட்டப்படி கொள்ளைப் பொருட்களை முழுவதுமாக அழிக்காமல் சிலவற்றை தன்னுடன் தக்க வைத்துக் கொள்கிறார் சவுல். இவை சவுல் இறைவனின் வழிகளை விடுத்துச் சென்றதைக் காட்டுகின்றன. இதனால் சவுலுக்கும் சாமுவேலுக்கும் சச்சரவு உண்டானது. இதையடுத்து அவர் இறைவனால் கைவிடப்பட்டதாக நினைத்து வெதும்பி மனம் உடைந்து போய் மன நோய்க்கு ஆளாகிறார். இச்சூழ்நிலையில் தான் தாவீது சவுல் முன் தோன்றுவதாக சில பகுதிகளில் காண்கிறோம். அடுத்து சவுல் செய்த பெரிய தவறான செயல் நோபில் குருக்களைக் கொலைசெய்தது. இச்செயல் சவுலின் வீழ்ச்சியை முத்திரையிட்டது. பல விதத் தோல்விகளின் மத்தியில் செய்வதறியாது எந்தோர் என்ற இடத்தில் குறிசொல்பவளிடம் சென்று சாமுவேலின் ஆவியை அழைத்து வரச்சொல்லி பேசமுயற்சிக்கும் நிகழ்ச்சி சவுலின் முற்றிலும் இயலா நிலையை விளக்கிக் காட்டுவதாக உள்ளது.

கடைசியில் பெலிஸ்தியர்களின் நெருக்குப்பிடி அதிகரிக்கிறது. கில்போவா மலையில் நடந்தபோரில் யோனத்தான் பெலிஸ்தியர்களால் கொல்லப்படுகின்றார். சவுல் மனமுடைந்து தற்கொலை செய்துகொள்கிறார். இவ்வாறு முதல் மன்னர் சவுலின் ஆட்சி பரிதாப நிலையில் முற்றுப் பெற்றது.

2. தாவீது அரசன் (கி.மு.1000-962):-

தாவீது மன்னர், சவுலின்முன் முதன் முதலாக கொண்டு வரப்படும் நிகழ்ச்சி, இரண்டு விதங்களில் கூறப்படுவதை சாமுவேல் ஆகமத்தில் பார்க்கிறோம். 1 சாமு 16:14-23; 17:1-11.32-53-என்ற பகுதியில் சவுல் தீய ஆவியால் அலைக்கழிக்கப்படும்போது அவருக்குமுன் யாழ்வாசிக்க, தாவீது சவுல் முன் அழைத்து வரப்படுகிறார். ஆனால் 1 சாமு 17:12-30; 17:55-18:2 என்ற பகுதியில் தாவீது தன்மூத்த சகோதரர்களைப் போர்க்களத்தில் சந்திக்கிறார். அங்கு கோலியாத்தின் அட்டகாசத்தைப் பார்த்து, பிறகு அவனைக் கொன்று வெற்றிபெற சவுல் அரசனிடம் சென்று அனுமதி வேண்டுகிறார். இந்நிகழ்ச்சியிலும் தாவீது சவுல்முன் முதன்முதலாக தோன்றுவதாகக் கூறப்பட்டுள்ளது.

தாவீது, சவுல் அரசனின் அரசவையில் தோன்றும் நிகழ்ச்சிகளும், பிறகு சவுல் அவரைக் கொல்லத் தேடுகிற நிகழ்ச்சிகளிலும் இரட்டிப்பு நிகழ்ச்சயுரைகளைக் காண்கிறோம் உதாரணமாக தாவீது சவுலின் உயிரைக் காப்பாற்றும் நிகழ்ச்சி இரண்டுமுறைக் கூறப்பட்டுள்ளது. தாவீதை சவுல் அம்பால் குத்திக் கொலை செய்ய முயற்சிக்கும் நிகழ்ச்சியும் இரண்டு முறை கூறப்பட்டுள்ளது.

தாவீதுத் தனது போரிடும் திறமையால், படிப்படியாக முன்னுக்கு வருகிறார். எந்த அளவிற்கு என்றால் சவுல் அரசனின் மகளான மீக்காளையே மணமுடித்துக் கொள்கிறார் தாவீது. ஆனால் உயர்ந்து வந்த தாவீதிற்கு, ஆபத்தும் தாழ்வும் அடுத்தாற்போல் காத்துக் கொண்டிருந்தன. சவுல் தாவீதைச் சுத்தமாகத் தொலைத்துவிடுவதற்கு பேயாய்ச் செயல்பட்டார். சவுலின் சாவுப்பிடியிலிருந்துத் தப்பித்துக் கொள்வதற்காக பாலைவனத்தில் பதுங்குகிறார் தாவீது. அங்கு தன்னுடன் நானூறு பேர் கொண்ட ஒரு சிறிய படையை ஏற்படுத்திக் கொள்கிறார். இப்படையின் வீரர்களெல்லாம் சவுலிடமிருந்து தப்பித்து வந்தவர்கள். பாலைவனத்தில் பதுங்கி வாழ்ந்த காலத்தில் தந்திரமாகத் தங்களின் பகைவரான பெலிஸ்தியர்களுடன்கூட இரகசிய உறவை உண்டாக்கிக் கொள்கிறார். காத்து நகர பெலிஸ்திய அரசனுடன் நல்லுறவு கொண்டு சவுல் அரசன் இறக்கும் முன்னமே சிக்கிலாகு நகரின் சிற்றரசன் ஆனார் தாவீது.

சவுல் இறந்தபின், இஸ்ராயேல் நாட்டின் தென்பகுதியான யூதாவிற்கு அரசனாகிறார் தாவீது. கெபிரோன் அவரது தலைநகரமாகிறது. இவ்வாறு தாவீது சவுலை அடுத்து அரசனாகுவதற்கு, பலவித சாதகமான சூழ்நிலைகள் அப்போது நிலவின. யூதாவில் குடியிருந்த மக்கள் தாவீதின் குலத்தைச் சார்ந்தவர்கள். எனவே, தங்கள் இனத்தானாகிய தாவீதைத் தங்கள் அரசனாக ஏற்றுக்கொள்ள அவர்கள் தயங்கவில்லை. மேலும் அபிகாயில் அகினோவாம் என்ற யூதா குலத்தைச் சேர்ந்த பெண்களைத் தாவீது மணந்திருந்தார். ஆனால் யோர்தானையடுத்த மகனாயிம் என்ற பகுதியில் சவுலின் மகன் இசிபாகால் (இசிபோசத்து) அரசனாக அரசாட்சி செய்தார். இசிபாகாலுக்கு சவுலின் படைத் தலைவன் அபினேர் பக்கபலமாய் நின்று, இசிபாகாலை அரசனாக்கினார். இசிபாகாலுக்கும் தாவீதிற்கும் சில சிறு சண்டைகள் நடந்தன (2 சாமு 2:10). ஆனால் இசிபாகாலின் ஆதரவாக விளங்கிய அபினேர், தாவீது பக்கம், கட்சிமாறினார்.

தாவீது அரசியல் தந்திரத்தில் மிகச் சிறந்து விளங்கியிருக்கிறார். இசிபாகால் பயங்கரமாகக் கொல்லப்பட்டார். தாவீதின் படைத்தலைவர் யோவாபு. இசிபாகாலின் படைத்தலைவராகிய அபினேரை வஞ்சகமாகக் கொலை செய்தார். இவ்விரு கொலைகளிலும், தனக்கு எவ்விதத் தொடர்புமில்லை என்ற விதத்தில் நிகழ்ச்சிகளை அமையச் செய்தார் தாவீது. இவ்வாறு அவருடைய எதிரிகள் மறைந்தது, தாவீது இஸ்ராயேலின் ஒரே மன்னன் என்று பட்டம் தரித்துக் கொள்வதற்கு தகுந்த வழிவகுத்தது. கெபிரோனின் பெரியவர்கள், ஒன்றுகூடித் தாவீதுக்கு மகுடம் சூட்டினர் (2 சாமு 5:1-5). இதே கெபிரோனில்தான் தாவீது ஏழு ஆண்டுகள் இதற்கு முன்பாக யூதாவின் அரசனாக ஆண்

டுவந்தார். தாவீது ஒரே அரசனாக நாட்டை ஆண்டு வந்தாலும், யூதா இஸ்ராயேல் என்று இரண்டு பகுதிகளாகவே பிரித்து, அப்போதும் கூறப்பட்டது (2 சாமு. 5:5).

அடுத்து, தாவீது, தன் அரசை விரைவாக விரிவாக்கம் செய்தார். வடக்கில் எமோரியரை வென்றார். தாவீது அரமேய அரசன் அதாதெசரைத் தோற்கடித்து சோபா நாட்டினைக் கைப்பற்றினார். அதேபோல் தமஸ்குவைச் சேர்ந்த சிலபகுதிகளையும் வென்று, தன் அரசில் இணைத்தார். கமாத்து, தீர் அரசுகளுடன் ஒப்பந்தங்களையும் செய்தார். எனவே, தாவீதின் அரசு யூப்பிரத்திசு வரையிலும் பரவி நின்றது என்று கூறும் அளவிற்கு (2 சாமு 8:3) அவரது அரசு விரிவடைந்தது. யோர்தானையடுத்த கிழக்கு எல்லையிலும் பல நாடுகளையும் கைப்பற்றினார் தாவீது. அம்மோன், ஏதோம் .... நாடுகளைத் தோற்கடித்தார். மோவாபில் தனக்குக் கட்டுப்பட்ட சிற்றரசனை நியமித்து, மோவாபும் தன் ஆட்சிக்குள் வரச் செய்தார். இவ்வாறு தாவீதின் பேரரசு தெற்கில் எசியோன் - கெபேர் வளைகுடாவிலிருந்து வடக்கில் கோம்சு வரையிலும் மேற்கில் மத்திய தரைக்கடல் முதல் கிழக்கில் யூப்பிரத்திசு நதி வரையிலும் பரவிநின்றது.

பழைய கனானியரின் கோட்டைகளும் மெதுவாக, தாவீதின் கைவசமாக்கப்பட்டன. உதாரணமாக மெகிதோ கோட்டை தாவீதின் வசமாகியது. இவ்வாறு பாலஸ்தீனத்தில் அரசியலில் ஒருபுதிய திருப்பத்தையே கொண்டுவந்தார் தாவீது. ஏனென்றால் இதற்கு முன்பாக பாலஸ்தீனம் எகிப்தியர்களின் காலடியிலேயே வீழ்ந்து கிடந்தது.

இவ்வாறு தாவீது தலையெடுத்து வருவதற்கு, அகில உலக அரசியல் சூழ்நிலைகள் அவருக்குச் சாதகமாக விளங்கின. அக்காலத்தில் வல்லரசாக விளங்கிய எகிப்து தனது பலத்தில் மங்கிக் கொண்டே வந்தது. பிற்காலத்தில் மற்றொரு வல்லரசாக விளங்கிய அசீரியாவும் அப்போது வல்லரசாக இன்னும் எழுச்சிபெறவில்லை. இஸ்ராயேலை அச்சுருத்தி வந்த பெலிஸ்தியரின் பற்களையும் தாவீது பிடிங்கியிருக்க வேண்டும். சாமுவேல் ஆகமத்தில் இதற்கான விரிவான தகவல்களை நாம் காண முடியவில்லை. ஒருசிலயிடங்களில் காணப்படும் குறிப்புகளை வைத்து (2 சாமு 5:17; 21:15 தொ.) தாவீது பெலிஸ்தியர்களையும் வென்று அவர்கள் தனக்குக் கப்பம் கட்டும் சிற்றரசர்களாகத் தன் காலடியில் வைத்திருந்தார் என்பதை நன்றாக நாம் யூகிக்கலாம்.

தாவீது செய்த சீர்திருத்தங்களின் கோபுரமாக விளங்குவது எருசலேமைத் தனது தலைநகராக மாற்றியதாகும். எபூசியரிடமிருந்து இவ்விடத்தைப் பிடித்து இதனைத் தன் அரசின் தலைநகரமாக மாற்றினார் தாவீது. இந்த நகரம் அமைந்துள்ள வகையில் இது இஸ்ராயேலின் வடபகுதிக்கும் தென்பகுதிக்கும் நடுநாயகமாக விளங்கியது. இதனால் தலைநகர் வடக்கைச் சார்ந்தது அல்லது தெற்கைச் சார்ந்தது என்ற போட்டி உணர்வுகளுக்கு இடமில்லாமல் போயிற்று. இந்நகரம் குன்றுகளால் சூழப்பட்டிருந்தது. வடக்கில் மட்டும் வழி கொண்டு சுற்றிலும் குன்றுகளால் சூழப்பட்டிருந்தது இந்நகரம். எனவே எதிரிகளிடமிருந்து பாதுகாத்துக் கொள்வதற்கு இந்நகரின் அமைப்பு பொருத்தமாக அமைந்திருந்தது. இந்நகர் ஒப்பேல் என்று அழைக்கப்பட்டது. பிறகு தாவீதின் நகர் என்றும் அழைக்கப்பட்டது. இந்நகருக்கு உடன்படிக்கையின் பேழை கொண்டு வரப்பட்ட பிறகு, சமய வழியிலும் இந்நகரம் முக்கியத்துவத்தைப் பெற்றது. எபூசியர்களிடமிருந்து பெறப் பெற்ற இந்நகரத்தில் நடந்துவந்த இஸ்ராயலின் வழிபாட்டுச் சடங்குகளில், எபூசியர்களின் வழிபாட்டுத் தடையங்களும் நிச்சயமாக இடம் பெற்றிருக்க வேண்டும் என்று தின்னமாக யூகிக்கலாம். ''மெல்க்கிசதேக்கு முறைமைப்படியான குரு'' என்பது (சங் 10:4) எபூசியர்களின்வழி இஸ்ராயேலுக்கு கிடைத்த சொற்றொடர்களில் ஒன்று.

*தாவீதின் அரசுமுறையிலிருந்த குறைகள்:-* தாவீது, தனது அரசுநிர்வாகத்தை எகிப்தியர்

களின் நிர்வாக முறையைப் பின்பற்றி அமைத்திருந்தார். தாவீது தனக்காக, பலவித மெய்காப்பாளர்களை தந்திரத்துடன் அமைத்திருந்தார். கெரேத்தியர் பிலேத்தியர் என்ற வெளிநாட்டு அடியாட்களைத் தன் மெய்க் காப்பாளர்களாக வைத்திருந்தார் தாவீது.

இவ்வாறு தாவீது, இஸ்ராயேல் மக்கள் மத்தியில், ஒரு புதிய உலகத்தையே உருவாக்கினார் என்று சொல்லலாம். இராணுவம், ஆட்சிசெய்ய சிறந்த நிர்வாக அமைப்பு இவைகளின் செலவுகளைச் சமாளிக்க மக்கள் மேல் சுமத்தப்பட்ட வரிப்பளு மக்கள் மத்தியில் ஒரு புதிய பயத்தையே உண்டாக்கியது என்று சொல்லலாம். பழைய கோத்திரங்களின் கூட்டாட்சி முறையில் மக்கள் சுவைத்து வந்த தனிச்சுதந்திரம் இவ்வரச நிர்வாக முறையால் முற்றிலும் மாறிப்போயிற்று *(2 சாமு 8:15-18; 20:23-26).*

*2 சாமு 9:20; 1 அர. 1-2* என்ற பகுதிகள் தனிமதிப்பைப் பெற்றவை. ஏனென்றால் அவை தாவீது அரசரின் அரசவை குறிப்புகளிலிருந்து எடுக்கப்பட்டு தகுந்த ஆதாரத்துடன் எழுதப்பட்டவையாக விளங்குகின்றன. இப்பகுதியில் தாவீதிற்குப் பிறகு எவ்வாறு, அரசபதவியைப் பிடிக்க பெரும் போட்டி நடந்தது என்று தத்ரூபமாகத் தரப்பட்டிருக்கிறது. இப்போட்டிகளைத் தவிர்க்க தாவீதாலேயே முடியாமல் திணறுவதும் அங்குதரப்பட்டுள்ளது. தாவீது எல்லோரும் பெருமைப்படக்கூடிய ஒரு புதிய சகாப்தத்தையே உண்டாக்கினார். எனவே அப்புகழ்மிக்க பதவியை யார்பெறுவார்கள் என்பதில்தான் போட்டியும் பொறாமைகளும் தோன்றின.

தாவீது மூத்தமகன் அம்மோன் அரியணை ஏறமுடியவில்லை. ஏனென்றால் அம்மோன் தன் சகோதரன் அபிசலோமின் சகோதரியைக் கற்பழித்து விட்டார். எனவே அபிசலோம் ஆள்வைத்து அம்மோனைக் கொல்கிறார். அடுத்து அபிசலோம் தன் தந்தை தாவீதிற்கு எதிராகப் போர்க்கொடி பிடிக்கிறார். ஆனால் அவர் எழுப்பிய கலகத்திலேயே அவர் கொலை செய்யப்படுகிறார். கடைசியில் அதோனியாவுக்கும் சாலமோனுக்கும் போட்டி தோன்றுகிறது. இப்போட்டியில் சாலமோன் வெற்றி பெற்று அரியணை ஏறுகிறார்.

இவ்வாறு தாவீதின் அரசவாரிசுகளின் போராட்டத்தை பல அதிகாரங்கள் கவனமுடன் விளக்கி எழுதுகின்றன. இப்பதவி போராட்டத்தை விளக்கும் பகுதியில் பலவித குணசித்திரங்களையும் நாம் காண முடிகிறது. ஒருபக்கத்தில் தன் பிள்ளைகளின் பாசத்தால் பற்றியெரிந்த மன்னன் தாவீது; மற்றொருபுறத்தில் யோவாபு, அமாசா என்ற படைத்தளபதிகள்; சாதோக்கு, அபியத்தர் என்ற குருக்கள்; சீபா, பர்சில்வாய் என்ற சாதாரணமக்கள்; தாமார், பதுசேபா என்ற பெண்டீர், தெக்கோவா என்ற ஊரைச் சேர்ந்த விதவை ஆகியவர்களைப் பற்றியும் ஆதாரபூர்வமாகச் செய்திகளைத் தருவதாக உள்ளது இப்பகுதி.

அம்மோன், அபிசலோம், தாவீது இவர்களின் வரலாற்றைக் கூறும் நிகழ்ச்சிகளில், தீமைகளும் அதனால் கிடைத்த தண்டனை என்ற கருத்தும் இழையோடி வருவதை நாம் காணலாம் *(2 சாமு 11:27; 12:24; 17:14)* இறைவனின் கரம் எல்லா நிகழ்ச்சிகளிலும் பின் நிற்கிறது என்ற இறையியல் கருத்தை நாம் காண முடிகிறது. நேரடியான இறையியல் தீர்ப்பு அரிதாகவே கூறப்படுகிறது.

தாவீதிற்கு எதிராக அவர் மகன் அபிசலோம் என்பவரும் பிறகு இஸ்ராயலின் வடபகுதியைச் சேர்ந்த சேபா என்பவரும் *(2 சாமு 20)* போர்க்கொடிபிடித்தனர். ஆனால் சேபா செய்த கலகம் பிற்காலத்திலும் புறையோடக் கூடியதாய் விளங்கியது. *(2 சாமு 20).* தாவீது இஸ்ராயேலின் தென்பகுதியான யூதாவின் பெரியவர்களுக்கு தனித்த மதிப்புக்காட்டி வந்தார் என்பது இஸ்ராயேலின் வடபகுதியினருக்கு இருந்து வந்த ஆதங்கமாகும். இதனால் சேபா எழுப்பிய எதிர்ப்புக் குரலுக்கு இஸ்ராயேலின் வடபகுதி மக்களும் ஆதரவு தந்தனர்.

A

ஆனால் இந்தக்கலகம் யோவாபு என்ற வலிமைவாய்ந்த தாவீதின் படைத்தலைவனின் தலைமையில் அடியோடு அடக்கி ஒடுக்கப்பட்டது. ஆனால் சேபா மூட்டிய பிரிவினைத் தீ பிற்காலத்தில் நன்றாகப் பற்றிக் கொண்டு எறிந்தது.

இஸ்ராயேலின் அரசை நிலையான அரசாக ஆக்கிய பெருமை தாவீது அரசனையே சாரும். சாலமோன் அரசன் காலத்தில்தான் இஸ்ராயேல் எல்லாவிதத்திலும் வளமையையும் பெருமையையும் பெற்றது. ஆனால் அதற்கு அசையாத ஆழ்ந்த அடிதளமிட்டவர் தாவீது அரசன் தான். இஸ்ராயேலின் முதல் அரசன் சவுலைப் போல தாவீது மக்களுடன் நெருங்கிய தொடர்புக் கொண்டிருக்கவில்லை என்பது போலத் தோன்றுகிறது. ஆனால் தாவீது அளவற்றத் திறமைகளின் பெட்டகமாக விளங்குகிறார். எனவேதான், இறைவன் தாவீதுடன் இருந்தார் என்று பிறகு மக்கள் அவரைப் புகழ்ந்துப்பாடினர்.

அத்துடன் தாவீது பல பரந்த மனிதாபிமான நற்குணங்களைப் பெற்றிருக்க வேண்டும். எனவேதான் அவைகளில் ஒருசில சாமுவேல் ஆகமத்தில் கொடுக்கப்பட்டுள்ளதை நாம் காணமுடிகிறது. உதாரணமாக வெளிநாட்டிலிருந்து கொண்டுவரப்பட்ட மெய்க்காப்பாளன்கூட ''வாழ்ந்தாலும், இறந்தாலும் தாவீதோடே இருப்பேன்'' என்று சபதம் செய்கிறார் (2 சாமு 15:18-22). பெலிஸ்தியருடன் சண்டையிடும் போது தண்ணீர் தாகம் கொள்கிறார் தாவீது. எதிரிகள் பிடித்திருந்த இடமாகிய பெத்திலகேமுக்குச் சென்று தாவீதின் வீரர்கள் தண்ணீர் கொண்டு வருகின்றனர். தன் வீரர்களுக்கே தண்ணீர் இல்லாதபோது, தனக்கு ஏன் தண்ணீர் என்று அவர்கள் கொணர்ந்த தண்ணீரைக் கீழே ஊற்றி விடுகிறார் தாவீது (2 சாமு 23:13-17). இவ்வாறு மற்றவர்களின் அன்பை பற்றியிழுக்கக்கூடிய பல நற்குணங்களைப் பெற்றிருந்தார் தாவீது.

ஆனால் அனைத்திற்கும் மேலாக தாவீதைத் தனிப்பட்ட பெருமைக்கு உயர்த்தியது இறைவாக்கினர் நாத்தான் உரைத்த இறைவாக்காகும் (2 சாமு 7). தாவீதின் குலம் என்றென்றும் நிலைக்கும் என்று கூறிய நாத்தானின் இறைவாக்கு தாவீதின் குலத்தைச் சேர்ந்தவர் பலநூற்றாண்டுகளுக்கு ஆட்சியில் அமர வழிவகுத்தது. இதனால்தான் இஸ்ராயேலின் தென்பகுதியான யூதாவில் அரசர்களின் ஆட்சி வடநாட்டை விட பல காலம் நீடித்து நின்றது.

*3. சாலமோன் (961-922):-*

இஸ்ராயேலில் சாலமோனின் ஆட்சி ஒரு ஒப்பற்ற காலமாகக் கருதப்படுகிறது. சாலமோன் முதலில் தன்னைச் சுற்றியிருந்த வெளிநாடுகளுடன் சமாதான உடன்படிக்கை செய்துகொள்கிறார். இவ்வொப்பந்தம் பல வழிகளில் நடைபெற்றுள்ளது. உதாரணமாக எகிப்து மன்னனின் மகளை மணந்து கொண்டதன் மூலம் அவனின் ஆதரவு சாலமோனுக்குக் கிடைக்கிறது. கெசர் என்ற நகரே திருமண சீதனமாக எகிப்து அரசனால் அளிக்கப்பட்டது. தீர் அரசன் கிராம் என்பவருடன் வர்த்தக ஒப்பந்தம் செய்து கொண்டதால் அவனின் நட்பும் உதவியும் சாலமோனுக்குக் கிடைத்தது.

அடுத்து சாலமோனின் காலத்தில் வர்த்தகத்தையும் விரிவுப்படுத்தி, இதனால் வெளிநாட்டுச் செல்வங்கள் இஸ்ராயேலில் வந்து குவிய வழிவகுத்தார் சாலமோன். எசியோன்கெபேர் என்றவிடத்தில் கப்பல் தளமொன்றுக் கட்டினார். இதனால் அக்காபா வளைகுடாவழியாக வணிகம் செழித்தது. அரபிய நாடுகளுடனும் ஆப்பிரிக்க நாடுகளுடனும் இஸ்ராயேல் வாணிபத்தில் நுழைந்தது. எனவேதான் அரபிய நாட்டைச் சேர்ந்த சேபா நாட்டு அரசி சாலமோனிடம் வருகிறாள் (1 அர 10:1-10). ஆப்பிரிக்க நாட்டைச் சேர்ந்த ஒபிர் நாட்டைப் பற்றியும் சாலமோனின் வரலாற்றில் குறிப்பிடப்படுவதை பார்க்கிறோம்.

எகிப்து நாட்டிலிருந்து குதிரைகளையும் தேர்களையும் வாங்கி சிலிசியாவிற்கு அவைகளை விற்று இலாபம் சம்பாதித்தார் சால

மோன் (1 அர 10:28). பலஇடங்களில் இராணுவமுகாம் அமைத்து அவைகள் தேர் படைகளுக்கும் இராணுவத்திற்கும் உதவி யாக அமைய ஏற்பாடு செய்தார். அடுத்து சாலமோன் பல கட்டடங்களைக் கட்டி எழுப்பிய கலைஞராகவும் விளங்கினார். அவர் கட்டிய கட்டிடங்களின் முடியாக விளங்குவது எருசலேம் நகர ஆலயம். இதனை பெனிசிய கட்டடக் கலைமாதிரி யைப் பின்பற்றி கட்டி அமைத்தார். அடுத்து அரண்மனை அரச அலுவலகங்களையும் ஆடம்பரமான முறையில் கட்டி முடித்தார்.

சாலமோன் மெய்யறிவு போதனைகளி லும் மற்ற கலைகளிலும் கருத்தார்வம் காட் டினார். அனேகமாக பழைய ஏற்பாட்டின் முதல் ஐந்து புத்தகங்களில் காணப்படும் யாவே பாரம்பரியமும் எலோகீம் பாரம்பரி யமும் சாலமோன் காலத்தில்தான் எழுத்து வடிவத்தைப் பெற்றது என்று கூறலாம். போன் நாடு என்ற அறிஞர் சாலமோனின் காலம் மெய்யறிவின் காலம் என்று வர்ணிக் கிறார்.

அரசராகம ஆசிரியர் உபஆகம பராம்பரி யத்தோடுத் தொடர்பு கொண்டவர். அவர் சாலமோனைச் சிலயிடங்களில் சாடிக் குறிப் பிடுகிறார். குறிப்பாகச் சாலமோன் தனது வெளிநாட்டு மனைவியருக்கு அவர்களின் தெய்வ வழிபாட்டிற்கு ஏற்ற கோவில்க ளைக் கட்டிக் கொடுத்ததைக் கோபத்துடன் நோக்குகிறார் (1 அர 11:1-8). தன் மனைவி களை மகிழ்ச்சிப்படுத்த சாலமோன் செய்த செயல் இஸ்ராயேலில் கலப்பு மதத்தையும் சிலைவழிபாட்டையும் ஏற்படச் செய்தது. இஸ்ராயேல் மதத்தில் வேற்றுமதத்தின் அம் சங்களும் இணைந்திட வழிவகுத்தது. இஸ் ராயேலின் வழிபாட்டு மையமாக எருசலே மிலேயே சிலைவழிபாடும் நடைபெறுவ தற்கு இடம் உண்டாயிற்று. இது சால மோனை அடுத்து வந்த சில அரசர்களாலும் பின்பற்றப்பட்டது. இரண்டு அரசராகமங்க ளும் அரசர்கள் ஒவ்வொருவரும் எவ்வாறு சாலமோன் ஆரம்பித்து வைத்த சிலை வழி பாட்டைப் பின்பற்றினர் என்று குறிப்பாக சுட்டிக் காட்டுகின்றன.

சாலமோன் அரச நிர்வாக முறையில் பல நல்ல மாறுதல்களைச் செய்தார். தனது அரசு முழுவதையும் பன்னிரண்டு மாவட்டங்களா கப் பிரித்தார். இப்புதிய எல்லைப் பிரிவு பழைய கோத்திரங்களின் பிரிவு அமைப்பு முறையைச் சார்ந்ததாக அமையவில்லை. சாலமோன் அரசு அதிகாரங்கள் அனைத்தும் தன்னிடமிருந்து புறப்பட்டுச் சென்று செயல் படுவதாகச் செய்தார். இதனால் நிர்வாகம் மிகத்திறமையாக நடந்தது. இவ்வாறு ஏற் பட்ட அரச ஆடம்பரங்களுக்கு, மக்கள் தான் பலிக்கிடாக்கள் ஆனார்கள். ஏனென்றால் ஆடம்பரச் செலவுகளைச் சமாளிக்க மக்கள் மீது பளுவான வரிசுமத்தப்பட்டது.

இவ்வாறு தாவீது, சாலமோன் காலங்க ளில் இஸ்ராயேல் மக்கள் நடுவில் அவர்க ளின் வாழ்க்கை முறையில் பெரியமாறுதல் உண்டானது. இதற்குமுன் அவர்கள் மத்தி யில் நிலவிய கோத்திரங்களின் நிர்வாக அமைப்புச் சிதைந்து அரசு என்ற அமைப்பு தின்னமாக இங்கு நிலைபெற்றது. மக்களின் விவசாய வாழ்க்கை முறையும் ஆடுகள் மேய்த்து ஊர் ஊராக சுற்றிவரும் வாழ்க்கை முறையும் மாறி நகர நாகரிகம் அங்குப் பிறந்தது. இந்நகர வாழ்வு மக்களுக்குத் தந்த பாதகமானநிலையாதெனில், மக்களிடையே உண்டான ஏற்றத் தாழ்வுள்ள சமுதாயம். சாலமோன் காலத்தில் சுமார் எட்டு இலட் சம் மக்கள் குடிமக்களாகயிருந்தனர் என்று ஆல்பிரைட் என்ற அறிஞர் கூறுகிறார்.

சாலமோனின் காலத்தில் எல்லாமே சுமுக மாக நடந்துவிடவில்லை. ஏதோமின் சிலப் பகுதிகளையும் தமாஸ்குவின் சிலப் பகுதிக ளையும் சாலமோன் இழந்தார் (2 அர 11:14 தொ.) எரொபயாம் என்பவன் சாலமோனை எதிர்த்துக் கலகம் செய்தான். ஆனால் அவ னின் முயற்சி வெற்றியளிக்கவில்லை. அவன் எகிப்திற்குச் சென்று எகிப்து மன்ன னிடம் தஞ்சம் புகுந்தான். எகிப்து மன்ன னும் எரொபயாமிற்கு ஆதரவு தந்தான். சால

மோன் இறந்த பிறகு அவன் மகன் இரகபெயாம் ஆட்சிப் பொறுப்பையேற்றபோது எரொபயாம் எகிப்திலிருந்து திரும்பி வந்து, இஸ்ராயலின் வடபகுதியைத் தனிநாடாகப் பிரகடனம் செய்தான். சாலமோன் செய்த மற்றொரு தீங்கானச் செயல் மக்களை அரசிற்காக பலவிதத்தில் உடலுழைப்பால் பாடுபடசெய்ததாகும். ஏழைமக்கள் அரைவயிற்றுடன் பலத்திட்டங்களில் கடினப்பட்டு உழைத்தனர். இதனால் மக்கள் மத்தியில் அரசனைப் பற்றிய மதிப்பு குறைந்தது. இவ்வாறு வளர்ந்து வந்த மக்களின் மனவெறுப்பினைப்பற்றி சற்றும் கவலையின்றி செயல்பட்டார் சாலமோன் அரசனின் மகன் இரகபெயாம். எனவே இஸ்ராயேல் நாடு இரண்டாக எளிதில் உடைந்தது.

*4. பிளவுபட்ட நாடு: இஸ்ராயேல்-யூதா (கி.மு. 922-842)*

விடுதலை வீரர்களின் காலத்தில் வழிபாட்டுமையமாக விளங்கிய செக்கேம் நகரமே (யோசு 24) இஸ்ராயேல், யூதா என்று இரண்டு நாடுகளாக பிரியும் புரட்சிக்கு ஆரம்ப இடமாக விளங்கியது. இந்தச் செக்கேம் நகரில்தான் சாலமோன் மகன் இரகபெயாம் (கி.மு. 922-915) இஸ்ராயேலின் ஒரே அரசன் என்று மக்களால் ஒரே குரலாக ஏற்றுக் கொள்ளப்படவில்லை. ஆனால் இரகபெயாம் பெரியோர்களின் வார்த்தைகளுக்கு மதிப்பளிக்காமல் நடந்ததாலும் சாலமோனைவிட அதிகக் கொடூரமாக மக்களை இரும்புக் கரம் கொண்டு அடக்க முயன்றதாலும் மக்களின் பிரிவினைப் புரட்சி வெடித்தது. ''இஸ்ராயேலே உன் கூடாரத்திற்கு போய் விடு'' *(1 அர 12:16)* என்பது புரட்சியின் தாரக மந்திரமாய் அமைந்தது. இப்புரட்சியை அடக்கியொடுக்க பெருமுயற்சி செய்தார் இரகபெயாம். ஆனால் மக்கள் ஒன்றுபட்டு வரவில்லை. பென்யாமின் குலத்தவர் மட்டும் யூதாவுடன் சேர்ந்துக் கொண்டனர். ஏனென்றால் இரகபெயாம் பென்யாமின் குலத்தவர் வாழ்ந்தபகுதியினை உடனடியாக தன் ஆட்சியின் கீழ் கொண்டு வந்தார் *(2 நாள் 11:12)*.

இஸ்ராயேல், யூதா என்ற இப்பிரிவினை புரட்சியுடன் மற்றும் பல பிரச்சினைகளையும் இரகபெயாம் சந்திக்க வேண்டியிருந்தது. இந்நேரத்தில்தான் எகிப்திய மன்னன் சீசாக்கு பாலஸ்தினத்தின் மீது படையெடுத்து வந்தார். இப்போது சாலமோன் உருவாக்கிய எருசலேம் நகரின் செல்வங்களையெல்லாம் அவர் கொள்கையிட்டு எடுத்துச் சென்றார். இவ்வாறு சீசாக்கு பாலஸ்தீனத்தில் படையெடுத்து பெற்றுக்கொண்டுவந்த வெற்றியினைப் பற்றி கார்னாக்கு என்றவிடத்தில் உள்ள அமான் என்ற ஆலயத்தின் சுவர்களில் பொறித்து வைக்கப்பட்டுள்ளது. எகிப்திலிருந்து புறப்பட்டுவந்த சீசாக்கு பாலஸ்தீனத்தின் தென்பகுதியை முதலில் தாக்கிவிட்டு பிறகு வடபகுதிக்கும் முன்னேறி சென்றுள்ளார். அங்கு புரட்சிக் கொடிப்பிடித்த இஸ்ராயேல் என்ற புதிய நாடும் பாலஸ்தினத்தின் அண்டைநாடான ஏதோமும் எகிப்தின் தாக்குதலுக்கு ஆளாயிருக்கின்றன இச்செய்திகளையெல்லாம் தருகிறது கார்னாக் ஆலயத்தின் கல்வெட்டுகள்.

இக்குழப்பக்காலத்தில் சாலமோனின் மகன் இரகபெயாம் தன் நாட்டின் வடபகுதியில் கிபயா, இராமா போன்றயிடங்களில் கோட்டைத்தளங்களைக் கட்டினார். இதனால் எளிதாக உள்நாட்டுப் புரட்சிகளை தடுத்து நிறுத்தலாம் என்பது அவரின் கணிப்பு. அத்துடன் தன்நாட்டின் தென்பகுதியிலும் கோட்டைக் கொத்தலங்களைக் கட்டினார். இரகபெயாம் தென் பகுதியில் கட்டப்பட்ட கோட்டைக் கொத்தலங்கள் எகிப்தின் படையெடுப்புகளைத் தடுக்கும் எண்ணத்தில் எழுப்பப்பட்டவை. இலாக்கிசு போன்றயிடங்களில் இத்தகைய பாதுகாப்பு இடங்கள் இரகபெயாமால் எழுப்பப்பட்டன என்று 2 நாள் 11:5; தொ. தெரிவிக்கிறது. இக்குழப்ப நேரத்தில் தாவீது சாலமோன் இவர்களால் இஸ்ராயேலின் ஆளுகைக்குள் வைக்கப்பட்டிருந்த அண்டைநாடுகளும் தங்களின் சுதந்திரத்திற்காகக் கொடிபிடித்தன. முதலில் பெலிஸ்திய நாடு இஸ்ராயேலிலிருந்து பிரிந்துச்சென்றது. அதைத் தொடர்ந்து அரமேயர்களும் மோவாபியர்களும், அம்

மோனியர்களும் இஸ்ராயேலின் ஆட்சியிலிருந்து அகன்றுச் சென்றனர்.

5. வடபகுதி, இஸ்ராயேல் நாடாக வளர்ந்த கதை:-

எரொபயம் வடபகுதியில் தனிநாடுக் கேட்ட புரட்சித் தலைவனாக விளங்கினார். அவரது புரட்சிக் குரலிற்கு இறைவாக்கினர் அகீயா என்பவரும் வழி மொழிந்தார். இந்தப் புரட்சித் தலைவனே பிறகு வடபகுதியின் மக்களின் அரசனானார். இவர் விடுதலை வீரர்களைப் போல அரச ஆடம்பரங்களின்றி மக்களோடு நின்று போராடி வந்தார். இவர் முதலில் செக்கேமைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்தார். பிறகு பெனுவேல் என்றவிடத்தைத் தன் தலைநகராகக் கொண்டார். கடைசியாக திரிசா என்ற இடத்தில் தன் தலைநகரை அமைத்தார். வடபகுதியின் மக்கள் எருசலேமிற்கு வழிபாட்டிற்காகச் சென்று திரும்புவதால் தென்பகுதியில் இணைத்துக் கொள்ளாமலிருக்க சமய அடிப்படையிலிலும் எரொபயாம் சில ஏற்பாடுகளைச் செய்தார். அதாவது தாண், பெத்தேல் ஆகிய இடங்களில் புதிய வழிபாட்டு மையங்களை உண்டாக்கினார். இம்மையங்கள் ஏற்கனவே விடுதலை வீரர்களின் காலத்திலேயே வழிபாட்டு மையங்களாகத் திகழ்ந்தன. இவ்வாறு வடநாட்டு மக்கள் இப்புதிய திருத்தலங்களுக்குத் திருப்பி விடப்பட்டனர். அதனால் மக்கள் எருசலேம் செல்லாமலிருக்க மறைமுகமாக ஏற்பாடு செய்தார்.

எரொப்பயாம் புதுவிதமான வழிபாட்டுச் சின்னத்தையும் புதியத் திருத்தலங்களில் நிறுவினார். அதாவது பொன்னால் செய்யப்பட்ட காளை வாகனத்தைத் தன் புதிய வழிபாட்டு மையங்களில் அமைத்து வைத்தார். இக்காளை மாட்டு வாகனத்தின்மீது அமர்ந்து யாவே மறைவாக நிற்கிறார் என்று எரொபயாமின் விளக்கம் தந்தார். ஆனால் பிற்காலத்தில் மக்கள் இதனைத் தவறாகப் புரிந்துக் கொண்டு செயல்பட்டனர். அதாவது காளை வாகனமே யாவேயின் பிரசன்னமாகக் கருதினர். இதனால் யாவே மட்டும் இறைவன் என்ற கொள்கையில் தளர்வு உண்டாகி, மற்ற சமய கொள்கைகளையும் ஏற்றுக்கொண்ட ஒரு நிலை உண்டானது. இதைத்தான் அரசராகமம் ஆசிரியரும் உபஆகம ஆசிரியரும், ''எரொபயாமின் பாவம்'' என்று பலயிடங்களில் ஒரு உரிச்சொல்லாக வேப் பயன்படுத்துகிறார்கள்.

அரசராகம புத்தகங்களை எழுதிய உபஆகமபாரம்பரிய ஆசிரியர் அரசர்களின் வரலாற்றைத் தனது கொள்கையின் பின்னணியில் எடைப்போட்டுப் பார்த்து எழுதுகிறார். அதாவது அரசர்கள் எருசலேம் ஆலய வழிபாட்டிற்கு பிரமாணிக்கமாய் இருந்தார்களா? என்ற கேள்வியின் அடிப்படையில் தான் அரசர்களின் வரலாறு தீட்டப்பட்டுள்ளது. எனவே அரசர்கள் ஆண்ட வருடங்கள் அரசர்களின் நிர்வாகத் திறமைகள் இவைகளெல்லாம் இவ்வரலாற்றில் இடம் பிடிக்கவில்லை. கி.மு. 721-இல் அசீரியர்கள், கி.மு. 587-இல் பாபிலோனியர்கள் இஸ்ராயேல்மீது படையெடுத்து வந்து இஸ்ராயேலை அடிமைப்படுத்திய அவமான நிகழ்ச்சிகளுக்கு விளக்கம் அளிப்பதாகத்தான் அரசராகமம வரலாறு வரையப்பட்டுள்ளது. அன்னியர்கள் இஸ்ராயேலை அடிமைப்படுத்தியதற்குக் காரணம், இஸ்ராயேல் மக்கள் உண்மை இறைவனாகிய யாவேயைப் பிரிந்து சென்றதாகும் என்பதுதான் அரசராகமஆசிரியர் தனது நூலின் வழியாக நமக்குக் கூறவிரும்பும் பாடமாகும். ஆனால் அரசராகம ஆசிரியர் பல்வேறு ஆதாரங்களோடும் தொடர்பு கொண்டு அவைகளிலிருந்து செய்திகளைப் பெற்று தன் நூலை எழுதியுள்ளார் என்பதும் தெரிகிறது. ஏனென்றால் 'இஸ்ராயல் அரசர்களின் நாளாகமம்' என்ற நூலை பதினாறு முறையும் 'யூதேயா அரசர்களின் நாளாகமம்' என்ற நூலை பதினான்கு முறையும் தனது நூலில் மேற்கோள்காட்டி எழுதுகிறார் அரசராகம ஆசிரியர். அத்துடன் எலியா, எலிசா என்ற இறைவாக்கினர்களைப் பற்றி விளக்கி வந்த பாரம்பரிய கதைகளையும் தன் புத்தகத்தில் இணைத்து எழுதியுள்ளார் அரசராகம ஆசிரியர்.

6. முதலாம் எரொபயாம் கி.மு. 922-இல் இஸ்ராயேல் என்ற வடநாட்டை உண்டாக்கி அதன் முதல் அரசனானார். அவர் காலத்திற்

குப் பின் சுமார் ஐம்பது ஆண்டுகள் அரச வாரிசு ஏற்பதில் பல குழப்பங்கள் உண்டாயின. எரொபயாமை அடுத்து அவன் மகன் நாதாபு இரண்டாண்டுகள் அரசாட்சியை ஏற்று நடத்தினார். ஆனால் நாதாபு, பாசா என்பவரால் கொலை செய்யப்பட்டார். பாசாவைத் தொடர்ந்து பாசாவின் மகன் ஏலா அரியணையேறினார். ஆனால் சிமிலி என்பவர் ஏலாவைக் கொன்று அரசனாகப் பதவியேற்றார். ஆனால் சிமிரியும் சோகமான முடிவுக்குள்ளானார். ஏனென்றால் ஒமிரி என்ற படைத்தளபதி இராணுவ புரட்சி செய்து இஸ்ராயேல் நாட்டை தன் அதிகாரத்தில் கொண்டு வந்தார். இதைக் கண்ட சிமிரி தானே தன்னுயிரை மாய்த்துக் கொண்டார்.

இதற்கிடையில் இஸ்ராயேல் என்று பிரிந்த வடநாட்டிற்கும் யூதா என்ற தென்பகுதிக்கும் தொடர்ந்து மோதல்கள் நடந்து வந்தன. முக்கியமாக யூதாவின் ஆசா என்ற அரசனும் (கி.மு. 913-873) இஸ்ராயேல் அரசன் பாசாவும் (கி.மு. 900-877) அடிக்கடி போரிட்டுக்கொண்டனர். இதில் யூதாவின் ஆசா, தமாஸ்கு அரசனான பென்அதாது என்பவருடன் தனக்குப் போரில் உதவும்படி உடன்படிக்கை செய்து கொண்டார். இதனால் தாமாஸ்கு அரசன் பென்அதாது இஸ்ராயேல் மீது போர்தொடுத்து கலிலேயாவின் வடபகுதியைக் கைப்பற்றினார் (1 அர 15:18). இவ்வாறு யூதா அரசன் சீரியாவின் உதவியைப் பெற்ற காரணத்தால் இஸ்ராயேல் தன் பலமின்மையை உணர்ந்து, எதிர்த்து நிற்காமல் அமைதியானது.

7. இஸ்ராயேலில் சிமிரிக்குப் பின் ஒமரி அரசனானார். ஒமிரி ஓர் திறமை வாய்ந்த அரசன். ஆனால் அரசராகமம் அவரைப் பற்றி விரிவாக எழுதவில்லை. ஏனென்றால் அரசராக ஆசிரியர் சமயத் தொடர்பானவைகளை மட்டும் குறித்து வைப்பதிலேயே கவனம் செலுத்துகிறார். ஆனால் ஒமிரி எவ்வளவு பெயர் பெற்றவனாய் விளங்கினார் என்றால் ஒமிரி காலத்திற்குப் பிறகு அசீரிய அரசன் இரண்டாம் சார்கோன் அரசாண்ட கி.மு. 700 ஆண்டு காலவாக்கில் இஸ்ராயேல் நாடு ஒமிரி நாடு அல்லது ஒமிரியின் வீடு என்றழைக்கப்பட்டது. 1 அர 20:34-இல் ஒமிரி அரமேயர்கரிடம் தோற்று பல நகரங்களை இழந்தது குறிப்பிடப்படுகிறது. ஆனால் மோவாபு அரசனைத் தோற்கடித்து அவனை இஸ்ராயேலுக்குக் கப்பம் கட்ட செய்தார். இது மேசா கற்றூனில் பொறிக்கப்பட்டுள்ளது. தென் நாடான யூதாவுடன் போர்தொடுக்காமல் சமாதானமாக வாழ்ந்து வந்தார். இவர் இஸ்ராயேலின் வடபகுதியிலுள்ள பெனிசியாவுடனும் சமாதான ஒப்பந்தம் செய்துக் கொண்டார். இச்சமாதான ஒப்பந்தம் தன்மகன் ஆகாபுக்கு பெனிசியா மன்னன் எத்துபாகாலின் மகள் ஈசபேல் என்பவளை மணமுடிப்பதில் மலர்ந்தது. இவ்வாறு பெனிசியா நாட்டைத் தனக்கு உறவுகொண்ட சம்மந்திநாடாக மாற்றினார். இத்துடன் புதிய தலைநகராகச் சமாரியாவை ஆக்கினார். இந்நகரம் உயர்ந்த மலையில் அமைந்து அவரது அரசநிர்வாகத்திற்குப் பெரிதும் உதவியது. இவ்வாறு ஒமிரி இஸ்ராயேலின் ஒருசிறந்த அரசனாக விளங்கினார்.

8. ஆகாபு (869-850):-

ஒமிரியின் மகனான ஆகாபு தமஸ்கு நகரைத் தலைநகராகக் கொண்ட அரமேயர்களுடன் மோதிப் போர் தொடுப்பதிலேயே இவன் காலமெல்லாம் செலவானது என்று சொல்லலாம். ஆனால் கி.மு. 853-இல் இவ்விரு எதிரிகளும் புதிதாகத் தோன்றிய பெரிய எதிரி ஒருவனை எதிர்த்து நிற்பதற்காக ஒன்று சேர்ந்தனர். அதாவது அசீரியநாட்டு அரசன் மூன்றாவது சால்மனேசர் தன் படையுடன் பாலஸ்தீனத்தை நோக்கி வந்தபோது இஸ்ராயேலும் அரமேயர்களும் ஒன்று சேர்ந்து அவரை எதிர்த்து நின்றனர். இவ்வாறு அசீரிய படைகளும் இஸ்ராயேல் அரமேயர் இணைந்த படைகளும் கார்கார் என்றவிடத்தில் மோதின. இப்போரில் அசீரியப் படைகள் தற்காலிகமாகப் பின்வாங்கிக் கொண்டன. இப்போரைப்பற்றி அசீரிய அரசன் குறிப்பொன்றை எழுதிவைத்துள்ளார்.

இதில் ஆகாபு மட்டும் இரண்டாயிரம் தேர்களையும் பத்தாயிரம் காலாட்படை வீரர்களையும் அனுப்பி வைத்ததாக எழுதிவைத்துள்ளார். மோவாபு நாட்டு மன்னரும் ஆகாபை எதிர்த்துப் போரிட்டுத் தங்கள் நாட்டைத் தனிசுதந்திர நாடாக ஆக்கிக் கொண்டனர். மோவாபின் வெற்றியைப் பற்றி மேசா என்றவிடத்தில் காணப்படும் கற்றூணின் கல்வெட்டு எடுத்துக் கூறுகிறது. இதில் இஸ்ராயேல் அடியோடு நசுக்கப்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது. அது தற்புகழ்ச்சிக்காக மிகைப்படுத்தி அவ்வாறு எழுதப்பட்டது எனலாம் ஆனால் உண்மை அதுவல்ல. மோவாபு இஸ்ராயேலின் ஆட்சியிலிருந்தும் பிரிந்து தனி சுதந்திரம் பெற்றது என்பதுதான் உண்மை.

ஆகாபின் சமய வாழ்வைப் பற்றி *1 அர 17-19; 21* என்ற நான்கு அதிகாரங்களில் நாம் தெளிவாகப் பார்க்கமுடிகிறது. இந்நான்கு அதிகாரங்களும் எலியா இறைவாக்கினரின் பணியினைப் பற்றிக் கூறுகின்றன. ஆகாபு 'யாவே ஒருவரே உண்மைக் கடவுள்' என்ற கொள்கையில் பற்றின்றி ஏனோதானோ வென்று வாழ்ந்தது வெள்ளிடைமலையாகிறது. இந்நிலை அவனது மனைவி வேற்று நாட்டைச் சேர்ந்த ஈசபேலால்தான் ஏற்பட்டது என்று சொல்லலாம். ஈசபேல் தான் பிறந்த தீர்நாட்டில் விளங்கிய பாகால் கடவுளின் வழிபாட்டை இஸ்ராயேலில் பரப்புவதில் மிகத் தீவிரம்காட்டிவந்தாள். இஸ்ராயேலின் தலை நகராகிய சமாரியாவிலேயே பாகாலின் கோவில் கட்டப்பட்டக் குறிப்பை *1 அர 16:32*-இல் பார்க்கிறோம். இவ்வாறு பாகாலின் வழிபாடு தீவிரமாக பரவுவதைத் தடுக்க இறைவாக்கினர் ஏலியா மிகவும் பாடுபட்டார். இவரது எதிர்ப்புப் பணிதான் கர்மேல் மலையில் 450 பாகாலின் பூசாரிகளும் 400 அசேராவின் பூசாரிகளும், இணைந்து நடத்திய பலிப்போட்டியில் வெளிப்படுகிறது. இதில் எலியா இறைவாக்கினர் வெற்றி பெறுகிறார். மற்ற 850 பூசாரிகளும் கொலை செய்யப்படுகின்றனர். இவ்வாறு இஸ்ராயேலின் பாரம்பரிய சமய வழிபாடுஎலியாவால் இஸ்ராயேலில்நிலைநிறுத்தப் படுகிறது. பாகாலின் வழிபாட்டை இஸ்ராயேலில் புகுத்துவதைத் தன் நோக்கமாகக் கொண்டிருந்த ஈசபேல் அரசி எலியாவைத் தீர்த்துக் கட்ட முயற்சிக்கிறான். கடைசியில் ஆகாபு அரமேயர்களுடன் நடந்த போர் ஒன்றில் இராமோத்து-கிலயாது என்றவிடத்தில் இறக்கிறார்.

9. ஆகாபின் காலத்தில் யூதா:-

ஒமிரியும் அவர் மகன் ஆகாபும் வடநாடாகிய இஸ்ராயேலில் அரசர்களாக ஆட்சி செய்த காலத்தில் தென் நாடாகிய யூதா வலிமையற்றுக் கிடந்தது. ஒரு விதத்தில் இஸ்ராயேலின் அடிமைநாடாகவே யூதா இக்காலத்தில் விளங்கியது. *2 நாள் 19:4-11* என்றபகுதி, யூதா அரசன் யோசபாத்து நீதித் துறையில் புதிய மறுமலர்ச்சியை ஏற்படுத்தியதாகக் கூறுகிறது. இந்த யோசபாத்து, இஸ்ராயேலின் அரசன் ஆகாபின் சமகாலத்தவர். இவர் ஆகாபுடன் இராமோத்து-கிலாயாது என்ற இடத்தில் ஒப்பந்தம் செய்து கொண்டான். அத்தோடு ஆகாபிற்கு அடுத்து வந்த யோராம் என்பவனுடனும் ஒப்பந்தம் செய்துகொண்டு மோவாபு அரசனுக்கு எதிராக இருவரும் சேர்ந்து போர்த்தொடுத்தனர் *(1 அர 22; 2 நாள் 20)*.

யோசாபாத்து ஏதோமையும் தன் அடியில் கொண்டு வந்தார், நாளாகமம் மோவாபு மீதும் யோசபாத்து படையெடுத்து வெற்றியெய்தினார் என்று கூறுகிறது. ஆனால் ஒபீர் நாட்டுடனிருந்த வியாபார ஒப்பந்தத்தை மீண்டும் புதுபித்துக் கொள்ளத் தவறியிருக்கிறார் யோசபாத்து.

யூதாவில் யோசபாத்தை அடுத்து யோராம் *(கி.மு. 949-842)* என்பவரும் அகாசியா என்பவரும் *(கி.மு. 842)* அரசர்களாகப் பதவியேற்றனர். இவர்கள் இருவரும் அத்தாலியா என்ற அரசியின் புதல்வர்கள். அத்தாலியா அரசி இஸ்ராயேல் அரசன் ஆகாபின் சொந்த மகள். இவள் யூதாவின் அரசர்களாக பதவியேற்ற தன்பிள்ளைகள் யோராம், அகசியா என்பவர்களைத் தன் கைப்பொம்மைகளாக வைத்துச், செயலாற்றி வந்தாள். தாயின்

அடிமைத் தமையர்களாக விளங்கினர். இவ்விருவரும் கி.மு. 842-இல் இஸ்ராயேல் நாட்டில் ஓர் திடீர் புரட்சி நடந்தது. அப்புரட்சியை உண்டாக்கியவர் ஏகூ என்பவர். இவர் வடபகுதியில் செய்த புரட்சி தென்நாடாகிய யூதாவிலும் பிரதிபலித்தது. இப்புரட்சியின் குழப்பத்தில் தென்நாட்டில் அரசன் அகசியா கொல்லப்பட்டார். இத்தருணத்தைப் பயன்படுத்தி அகாசியாவின் அன்னையான அத்தாலியாவே ஆட்சியை தன் கைக்குள் கொண்டுவந்தாள். இவள் கி.மு. 342-முதல் 837 வரை அரசாண்டாள். இவள் அறியணை ஏறியவுடன் அரச வாரிசுகள் எல்லோரையும் அடியோடு தீர்த்துக்கட்டினாள். இவள் ஆடிய காளிவேட்டைக்குத் தப்பிய ஒரே அரச வாரிசு யோவாசு என்பவர் மட்டும்தான். இக்காலத்தில் யாவேதான் ஒரேக்கடவுள் என்ற சமயக் கொள்கை மிகவும் சேதப்பட்ட நிலையை அடைந்தது. எவ்வளவு தூரம் என்றால் மத்தான் என்ற பாகாலின் பூசாரி அரசவையிலேயே இடம் பெற்றிருந்ததாக 2 அர. 11:18 தெரிவிக்கிறது. இவ்வாறு யாவேயின்மீது உண்மைப் பற்றுதலின்றி ஆட்சி செய்து வந்த அத்தாலியா அரசியும் அரசாட்சியிலிருந்து அகற்றப்பட்டாள். யோயதா என்ற குரு திடீர் புரட்சி செய்து அத்தாலியாவை அகற்றி யோவாசை அரசனாக நியமித்தார்.

இஸ்ராயேலில் ஆகாகபை அடுத்த அரசர்கள்:- இஸ்ராயேலில் ஆகாபையடுத்து ஆகாபின் மகன் அகாசியா ஓராண்டு ஆட்சி செய்தார் (கி.மு. 850-849). இவர் காலத்தில்தான் எலியா இறந்தார் (2 அர 1). அகசியாவையடுத்து யோராம் அரசரானார். இவரும் ஆகாபின் மற்றொருமகன். இவர் கி.மு. 849 முதல் 842 வரை ஏழு ஆண்டுகள் இஸ்ராயேலை அரசாண்டார். இவர் காலத்தில்தான் எலிசா தன் பணிகளைச் செய்தார் (2 அர 2-9). யோராமின் காலத்தில் இஸ்ராயேலின் பிடியிலிருந்த மோவாப்பு விடுதலையைப் பெற்றுக் கொண்டது. அரமேயர்களும் இஸ்ராயேல் நாட்டிலிருந்து பிரிந்து தனி நாடாக அறிவித்துக் கொண்டனர். எலிசாவைச் சுற்றி பரவசநிலை இறைவாக்கினர் கூட்டங்கள் உருவாகின. இக்கூட்டத்தினர்தான் ஒமிரி வாரிசு வளர்ந்து நீடிப்பதைத் தடுத்து, புதிய அரசவாரிசை ஏற்படுத்தினர். அதாவது இந்த பரவச நிலை இறைவாக்கினர் கூட்டத்தின் ஓர் அங்கத்தினர் ஏகூ என்பவரை அபிடேகம் செய்து அவர் அரச பதவியை ஏற்கவும் அவர் புதுபுரட்சியை உண்டாக்கவும் வழிவகுத்தார்.

*10. ஏகூவின் வாரிசுகள் (842-746):-*

பரவசநிலை இறைவாக்கினர் ஒருவரால் அபிடேகம் செய்யப்பட்ட ஏகூ இரத்தக்களரியை உண்டாக்கி அரியணையைப் பிடித்தார். முதன் முதலில் சீரிய அரசன் கசயேல் என்பவனுடன், போர் தொடுத்துக் காயப்பட்டுக் கிடந்த இஸ்ராயேலின் அரசன் யோராமைத் தீர்த்துக் கட்டினார் ஏகூ. தொடர்ந்து, இஸ்ராயேலின் அரசனுடன் நல்லுறவு கொண்டு இஸ்ராயேல் அரசனை அப்போது காணவந்திருந்த அகசியா என்ற யூதேயாவின் அரசனையும் தன் வாளிற்கு இறையாக்கினார் ஏகூ. தலையலங்காரம் செய்து கொண்டிருந்த ஈசபேலைக் கீழேத்தள்ளச் சொல்லி அவளையும் கொன்றார். சமாரியாவில் வாழ்ந்துவந்த ஆகாபின் எழுபது புதல்வர்களின் தலைகளை அந்நகர பெரியோர்கள் வழியாக கொய்து எடுத்துவர ஏற்பாடு செய்தார். ஏகூ யூதா அரசன் அகசியாவின் சகோதரர் நாற்பத்திரண்டு பேரை ஒரு குழியில் வெட்டிக் கொன்றார். கடைசியாக சமாரியாவில் பாகாலின் ஆலயத்தில் பாகாலின் பூசாரிகளையும் பக்தர்களையும் ஒன்றாகக் கூட்டி அவர்கள் அனைவரையும் ஒருவரைக் கூட விடாமல் தீர்த்துக் கட்டினார் ஏகூ. இவ்வாறு இரத்தக்களரி கொண்டு பாகாலின் வழிபாட்டை அழித்து யாவேயின் பக்தியினைத் திரும்பவும் நிமிரச் செய்தார். இவரது இக்கொடியச் செயல்களைக் குறிப்பிட்டு ஒசேயா இறைவாக்கினர் பிறகு இறைவாக்கு உரைப்பார் (ஒசே 1:4).

இவ்வாறு பலவுயிர்களைக் குடித்து அரசனாக அரியனையேறிய ஏகூ அரசியல் தளத்தில் அவ்வளவு திறமையுள்ளவராகத் திகழவில்லை. ஆசீரிய அரசன் மூன்றாம் சாலப

னேசர் என்பவன் பொறித்து வைத்த கல் வெட்டில் ஏகூவின் திறமையில்லா நிலையை நன்கு விளக்கி சித்திரம் ஒன்று வரைந்துள்ளார். அதில் அசீரிய அரசனுக்கு ஏகூ முழந்தாற்படியிட்டு தங்கமும் வெள்ளி யுமாக கப்பம் கட்டுவதைச் சித்தரித்துள்ளார். இங்கு ஏகூ ஓமிரியின் மகன் என்றே கூறப் பட்டுள்ளான். ஏகூ, தமஸ்கு அரசன் கசயேல் என்பவனிடமும் படுதோல்வி கண்டுள்ளார். இந்த தமஸ்கு அரசனை அசீரிய அரசனே அடக்க முடியாமல் திண்டாடினார். இத்த கையப் பலம் வாய்ந்த கசயேல் ஏகூவைத் தோற்கடித்து யோர்தானின் மேற்குப் பகு தியை தன் வசப்படுத்திக் கொண்டார். இதனை 2 அரச 10:32 தெரிவிக்கிறது. இவன் யூதாவின் அரசன் யோவாசையும் கப்பம் கட்ட கட்டாயப்படுத்தியுள்ளார் *(2 அர 12:18)*.

இவ்வாறு கட்டுக்கடங்காது துள்ளிக் கொண்டிருந்த கசயேலை அடக்கியவர்கள் அசீரிய அரசர்கள்தான். அசீரிய அரசர்களை கடவுளால் அனுப்பப்பட்ட ''மீட்பர்கள்'' என்றே அரசராகமம் வர்ணிக்கிறது *(2 அர 13:5)*. அசீரிய அரசன் அதாவது நிரார் *(810-783)* என்பவர் அரமேயர்கள் மீது பலமு றைப் போர்தொடுத்து, கடைசியாக தமஸ்கு அரசனை கி.மு. *802* தோல்வி காணச் செய் தார். ஏகூவின் மகன் யோவகாசுதான் *(801-786)* அசீரியர்கள் செய்த பழித் தீர்ப்பிற்குப் பலியாடாக மாறினான் (2 அர 13:7). ஆனால் யோவகாசின் மகன் யோவாசு *(801-786)* தன்தந்தையிழந்ததை மீண்டும் மீட்டுக் கொண்டான். தமஸ்கு அரசன் கசாயேலிற் குப் பிறகு அரசனாக வந்த பென்அதாது அவ்வளவு திறமை மிக்கவர் அல்லர். என வேதான் தன் தந்தையிழந்ததை யோவாசு மீண்டும் எடுத்துக் கொள்ள முடிந்தது.

*11.* இரண்டாம் எரொபயாம் என்பவர் இஸ்ராயேலின் அரசனாக கி.மு. 786-இல் பதவியேற்றார். இவர் கி.மு. 746 வரை நாற்பதாண்டுகள் அரசாட்சிச்செய்தார் இவர் இஸ்ராயேலை ஒரு பெருமைக்குரிய நிலைக்கு உயர்த்தினார். இவர் காலத்தில் இஸ்ராயேல் கமாத்து முதல் அராபா கடல் வரை பரவி நின்றதாக 2 அர 14:25 கூறுகி றது. தொல்பொருள் ஆராய்ச்சி கூட இவர் சமாரியாவில் கட்டிய கோட்டைக் கொத்த ளங்களை அடையாளம் கண்டுள்ளது. இவர் காலத்தில் மக்கள் மத்தியில் செல்வம் செழித் தது. இதனால் ஏழை, செல்வந்தர் என்ற வகுப்பு பேதகம் தோன்றியது. சமய வாழ்வி லும் மக்கள் முறையாக வாழவில்லை. என வேதான் ஆமோஸ், ஓசேயா இறைவாக்கி னர்கள் அங்கு தோன்றி நாட்டில் நிலவிய அநீதியைத் தட்டிக் கேட்டனர். ஆமோஸ், ஓசேயா என்ற இரு இறைவாக்கினர்களும் எலியா, எலிசா இவர்களைச் சார்ந்த பரவச நிலை இறைவாக்கினர்களின் குழுக்களைச் சார்ந்தவர்கள் அல்லர் *(ஆமோ 7:14)*. ஆனால் இறைவனிடமிருந்து நேரடியாக அழைப்பினைப் பெற்றவர்கள். இவர்கள் அரசன், குருக்கள் என்ற எவ்வித தயக்கமு மின்றி எங்கெல்லாம் அநீதி நடந்ததோ அங் கெல்லாம் கொதித்தெழுந்து இறை நீதியை சுட்டிக்காட்டிப் பேசினார்கள். இவர் கள் முக்கியமாக மக்கள் மத்தியில் நிலவிய சமுக அநீதி, மக்களின் சொகுசு மோகம், கட்டுப்பாடற்ற காமக் களியாட்டங்கள் , உண்மையற்ற வழிபாடுகள், சிலைவழிபாடு ஆகியவைகளைக் கடுமையாகக் கண்டித்த னர். இவர்கள் எதையும் புதிதாகப் போதிக்க வில்லை மாறாக அவர்கள் சூழ்நிலையைப் பராம்பரிய விசுவாச வெளிச்சத்தில் சோதித் துப் பார்த்து தவறானதைப் போக்குவதற்குக் குரல் கொடுத்தனர்.

ஆமோஸ் தென்நாடான யூதாவைச் சார்ந்த வர். இவர் இஸ்ராயல் மக்கள் எதிர்பார்த்து வந்த ஆண்டவரின்நாள், சோகத்தின் நாளாக வும் இருளின் நாளாகவும் விடியும் என்று ரைத்தார். ஓசேயா தனது பிரமாணிக்கமற்ற மனைவியுடன் போராடிய அதேநிலைதான் இஸ்ராயேலுக்கும் இறைவனுக்கும் நிலவிய உறவு என்று உணர்ந்து விளக்கிக் காட்டி னார். கட்டிய கணவனை விட்டு விட்டு கண்டவரோடும் ஓடிய மனைவியைப் போலவே இஸ்ராயேல் மக்கள் யாவேயிடம் பிரமாணிக்கமின்றி நடந்துக்கொண்டனர்

என்று சுட்டிக் காட்டினார் ஒசேயா (ஒசே. *15:4.8*).

சற்று வேகமாக வல்லமையில் வளர்ந்த வடநாடு இஸ்ராயேல் விரைவிலேயே வீழ்ச்சியைக் கண்டது. அதற்கு இரண்டுக் காரணங்களைக் காட்டலாம். ஒன்று இஸ்ராயேல் மக்கள் யாவேக்கு ஏற்ற மக்களாக நடக்கவில்லை. எனவேதான் ஒசேயா, ஆமோஸ் இறைவாக்கினர்கள் கடிந்து தாக்கிப் பேசினர். அத்தோடு இச் சமயத்தில்தான் மூன்றாம் திகிலாத்து-பிலேசர் என்ற அசீரிய அரசன் மேற்கு நோக்கி நாடுகளைப் பிடிக்கும் திட்டத்துடன் வேகமாக முன்னேறிக் கொண்டிருந்தார்.

*12.* ஏகூ ஏற்படுத்திய கலகத்தால் தென்னாட்டில் உண்டான மாற்றங்கள்:-

இஸ்ராயேலில் ஏகூ செய்தப் புரட்சி யூதாவிலும் பலவித மாற்றங்களைக் கொண்டு வந்தது. பலபேரைக் கொன்று பதவியேறிய அத்தாலிய அரசியலை அவளின் அரண்மனைச் சகாக்களே சதிச்செய்து அவளைக் கீழே தள்ளினர். அவளுக்குப் பதிலாக யோவாசு என்ற ஏழுவயது சிறுவனை அரிபணை ஏற்றினர். இவர் 37 ஆண்டுகள் ஆட்சி செய்தார் (கி.மு. *837-800*). இவர் சிறுவயதிலேயே அரசனாகப் பதவியேற்றதால் யோயாதா என்ற குரு இவரின் ஆலோசகராக விளங்கினார். அண்டை நாட்டினரான கசாயேல் என்ற சீரிய அரசன் யூதாவிடமிருந்து கப்பம் வசூலித்தான். ஆனால் யோவாசு ஆலயத்தைப் புதுப்பிக்கும் பணியைச் செய்தார். யோவாசின் நீண்டக் கால ஆட்சியும் அவர் கொலை செய்யப்பட்டதுடன் முடிவடைந்தது. யோவாசைச் சதிசெய்து கொலை செய்தவர்கள் யோவாசின் பணியாளர்கள். யோவாசுக்குப்பிறகு அவர் மகன் அமசியா தன் தகப்பனைக் கொன்றவர்களைப் பழி வாங்கி அரியணையேறினார். இவரும் சுமார் பதினேழு ஆண்டுகள் அரசாட்சி செய்தார் (கி.மு. *800-783*). அமசியா ஏதோமையரைத் தோற்கடித்து, மூடப்பட்டிருந்த பழைய வர்த்தகச்சாலையைத் திறந்து விட்டார் ஆனால் அமசியா செய்த யூகமற்ற செயல் எதுவென்றால் இஸ்ராயேல் அரசன் யோவாசை சண்டைக்கிழுத்ததாகும் (2 நாள் *25*). இஸ்ராயேலின் அரசன் யோவாசு, தன்னை எதிர்க்கும் அமசியா, ஏற்க வேண்டியிருக்கும் பிற்காலப்பாதிப்புகளைப் பற்றி எச்சரித்தும் அமசியா கவனிப்பதாயில்லை. யோவாசு ஓர் விடுகதை மூலமாக தன் எச்சரிக்கையைச் சொல்லியனுப்பினார். லீபானின் நெருஞ்சிமுள் லீபானின் கேதுருமரத்திடம் பெண் கேட்டதாம் என்று எச்சரிக்சை செய்தார் (*1* அர *14:9-10*). எச்சரிக்கையைத் துச்சமாக நினைத்தார் அமசியா. எனவே யோவாசு தென்நாடான யூதா மீது படையெடுத்து அமசியாசைத் தோற்கடித்து, எருசலேம் பேராலயத்தையும் கொள்ளையடித்துச் சென்றார். கடைசியில் அமசியாவும் அவனின் தந்தை யோவாசைப் போலவே அரண்மனை அதிகாரிகளின் சதியால் கொல்லப்பட்டார். அமசியாவையடுத்து அவனின் மகன் ஊசியா என்றழைக்கப்பட்ட அசரியா அரியணையேறினார்.

அசரியா யூதேயாவில் அரசாண்டபோது (*783-742*) இரண்டாம் எரொபயாம் என்பவர் இஸ்ராயேலில் அரசனாக ஆட்சிசெய்தார். இவ்விருவரும் சம காலத்தவர்; திறமையான முறையில் அரசநிர்வாகத்தை நடத்திவந்தனர். இவர் பல சீர்திருத்தங்களைச் சிறப்பான முறையில் கொண்டு வந்தார். சாலமோன் அரசன் காலத்தில் சிறப்பாக நடைபெற்ற ஏலாத் வியாபாரச் சந்தையை மீண்டும் திறந்து விட்டார். எருசலேமைச் சுற்றிலும் காவல் கோட்டைகளைக் கட்டினார். கிழக்கு, தெற்கு, மேற்கு என்ற தனது நாட்டின் எல்லைகளில் இராணுவத்தை நிறுத்தி எதிரிகளைக் கண்காணித்து விழிப்பாக நிற்கச் செய்தார் (2 நாள் *26:6* தொ). இவ்வளவு திறமையாகப் பணியாற்றி வந்த அசரியா தொழுநோயினால் பாதிக்கப்பட்டுத் தன் ஆட்சிப் பொறுப்பை மற்றவர்களுக்கு மாற்றிக் கொடுக்க வேண்டிய நிலையேற்பட்டது. எனவே தன்மகன் யோத்தாம் என்பவனிடம் தன் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைத்தார்.

யோத்தாம் சுமார் பதினைந்து ஆண்டுகள் யூதாவை ஆட்சிச்செய்தார் (கி.மு. 750 - 735). இவர்கட்டிய கட்டடங்கள், போர்கள் பற்றி 2 நாள் 27:1-9-இல் தெளிவுப்படக் கூறுகிறது. அசீரிய அரசர்களின் ஆண்டுக்குறிப்பேட்டில் அஸ்ரியோ என்பவரைப் பற்றி ஒரு தகவல் எழுதப்பட்டுள்ளது. பல அறிஞர்கள் இந்த அஸ்ரியோ என்பவர் வேறு யாருமல்ல இந்த அசரியவேதான் அவ்வாறு குறிப்பிடப்படுகிறார் என்று கருத்துத் தெரிவிக்கிறார்கள். இந்த அஸ்ரியோ என்பவர், அசீரிய அரசர்களின் குறிப்பின்படி மூன்றாம் திகிலாத்து பிலேசர் என்ற அசீரிய அரசனை சுமார் கி.மு. 743-இல் எதிர்த்து நிற்கிறார் என்று எழுதப்பட்டுள்ளது.

*1931*-ஆம் ஆண்டு ஒலிவ மலையில் அமைந்துள்ள உருஸ்ய பொருட்காட்சிச் சாலையில் கண்டுபிடிக்கப்பட்ட சுண்ணாம்புக்கல் கல்வெட்டொன்றில் கீழ்கண்டவாறு எழுதப்பட்டுள்ளது. ''யூதேயாவில் அரசன் ஊசியாவின் எலும்புகள் இங்குக் கொண்டு வரப்பட்டு புதைக்கப்பட்டுள்ளன. இதனை யாரும் திறக்க வேண்டாம்'' என்று எழுதப்பட்டுள்ளது.

*13. வடநாடான இஸ்ராயேலின் அழிவு:-*

இஸ்ராயேல் நாட்டை இரண்டாம் எரொபயாம் என்ற அரசன் நீண்ட காலமாகத் திறமையுடன் ஆண்டுவந்தான். அவனின் மறைவிற்குப் பிறகு இஸ்ராயேல் நாடு தகுந்த தலைவனின்றி பலகுழப்பங்களுக்கு ஆளானது (ஓசே 7:3-16). அத்தோடு அசீரிய மன்னன் மூன்றாம் திகிலாத்து பிலேசர், புதிதாக வளர்ந்த பலமுள்ள பாயும் புலியாக மேற்கு நாடுகளை நோக்கிப் போர் தொடுத்தார். அவரின் எண்ணம் மற்ற நாடுகளைத் தாக்கி அவைகளை தனக்குக் கப்பம் கட்டும் நாடுகளாக மாற்ற வேண்டும் என்ற எண்ணமல்ல. மாறாக, மற்ற நாடுகளைப் பிடித்து, அவைகளைத் தன் பேரரசின் ஓர் பகுதியாக மாற்ற வேண்டுமென்பது அவரது பேராசை. எனவே பலமற்றுப்போன இஸ்ராயேல் பாய்ந்து வந்த புலியின் பற்களுக்கு எளிதில் இரையானது.

இரண்டாம் எரொபயாமையடுத்து அவர் மகன் செக்கரியா ஆட்சிக்கு வந்தார். அவர் ஆறுமாதங்களே நீடிக்க முடிந்தது. ஏனென்றால் செக்கரியா சல்லூம் என்பவரால் கொலை செய்யப்பட்டார். ஆனால் இந்த சல்லூமின் அரச வாழ்வும் ஒரு மாதமே தாக்குப் பிடித்தது. ஏனென்றால் மெனகேம் என்பவர் சல்லூமைக் கொலை செய்து ஆட்சியைப் பிடித்தார். இந்த மெனகேம் ஏழு ஆண்டுகள் ஆட்சி செய்தார் (*745-738*). ஆனால் இவர் அசீரிய அரசன் மூன்றாம் திகிலாத்து பிலேசருக்கு மடிநிறையக் கப்பம் கட்டித்தான் தன் ஆட்சியை நீடிக்கச் செய்ய முடிந்தது.

மெனகேமைத் தொடர்ந்து அவரது மகன் பெக்காசியா அரசனானார். ஆனால் அவர் ஒருவருடமே (*738-737*) ஆட்சியில் நீடிக்க முடிந்தது. ஏனென்றால் அவர் பெக்கா என்பவரால் கொலைச் செய்யப்பட்டார். இந்தப் பெக்கா ஐந்து ஆண்டுகள் (*737-732*) வரை ஆட்சிசெய்தார். இவரை ஏசயா இரமலியாவின் மகன் என்று அழைக்கிறார் (ஏச 7:4)

இந்தப் பெக்கா என்பவர் தங்களை அடிமையாக வைத்திருந்த அசீரியரின் அடக்குமுறையைத் தூக்கியெறியும் திட்டத்தில்தான் பெக்காசியா என்ற அரசனைக் கொலை செய்து ஆட்சியைப் பிடித்தார். அத்தோடு தமஸ்குவைத் தலைநகராகக் கொண்ட சீரியர்களையும் தன் எதிர்ப்புக் கூட்டணியில் அணி சேர்த்துக் கொண்டார். இக்கூட்டணியில் யூதாவையும் சேர்த்துக் கொள்ள அழைப்புக் கொடுத்தார் பெக்கா. ஆனால் யூதா கூட்டணியில் சேர்ந்துக்கொள்ளும் அழைப்பிற்கு மறுப்பு சொல்லி விட்டது. ஏனென்றால் இந்நேரத்தில் யூதா ஏதோமையர்களுடன் போரிட்டு எதிர்த்து நிற்க வேண்டியிருந்தது (2 அர 16:6). தங்களுடன் சேர்ந்துக் கொள்ள முன்வராத யூதாவை இஸ்ராயேலும் சீரியாவும் இணைந்துத் தாக்கியது. இப்போரில் யூதா தோல்வியடைந்தால் தாவீதின் வாரிசு அரியணையிலிருந்து இறக்கப்பட்டு பெந்தபயேல் என்பவன் நியமிக்கப்படுவார் என்று அச்சுறுத்தினார் இஸ்ராயேல் அரசன் பெக்கா.

ஏசயா ஏழாம் அதிகாரத்தின் தகவலின் படி, ஆகாசு யாவே மீது நம்பிக்கை வைக் காது அசீரிய அரசர்களின் துணையை நாடி ஓடினார். இவ்வாறு ஆகாசிற்குத் துணையாக வந்த அசீரிய அரசன் மூன்றாம் திகிலாத்து பிலேசர் சீரியா மீதும் இஸ்ராயேல் மீதும் பெரும் தாக்குதல் ஒன்றை கி.மு. 734-732 ஆண்டுகளில் மேற்கொண்டார். இதில் சீரி யாவின் தலைநகரான தமஸ்குவைத் தரை மட்டமாக்கினார். இஸ்ராயேலைத்தாக்கி, கலிலேயா, யோர்தானின் மேற்குப் பகுதி என்ற பகுதிகளைத் தன் அரசுடன் இணைத் துக் கொன்டார். அத்துடன் ஓசியா என்பவனை இஸ்ராயேலின் அரசனாக்கி, இஸ்ரா யேல் தனக்குக் கப்பம் கட்டும் அடிமை நாடாக ஆக்கிக் கொண்டார்.

இப்போருக்குப் பிறகு, அசீரிய அரசன், மூன்றாம் திகிலாத்து பிலேசர் இறந்தார். இச்சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி, இஸ்ரா யேலின் அரசன் எகிப்தின் உதவியை நாடி அவர்களுடன் உடன்படிக்கை செய்துக் கொள்ள, எகிப்தின் சாயிஸ் என்றவிடத்தில் செயல்பட்ட அரச சபைக்கு தூதனுப்பினார். இவ்வாறு தங்களுக்குக் கப்பம் கட்டாது புதிய கட்சிக்குத் தாவிய இஸ்ராயேலைப் பற்றி கேள்வியுற்ற, அசீரியாவின் புதிய அர சன் நான்காம் சால்மனேசர் மிக்க கோபமுற் றான். எனவே இஸ்ராயேல் மீதுப் படையெ டுத்து தங்களது கட்டுப்பாட்டிற்கு அடங் காது வெளியே தள்ள முயன்ற ஓசியாவை பிடித்துச் சிறையில் வைத்தார். ஓசியா எவ் வாறு இறந்தான் என்று அரசராகம ஆசிரியர் தெரிவிக்கவில்லை.

அசீரிய அரசன் நடத்திய இப்போர் இரண்டு ஆண்டுகள் நீடித்தது (734-732). இதில் நான்காம் சால்மனேசரைத் தொடர்ந்து இரண்டாம் சார்கோன் என்ற அசீரிய மன்னன் போரை நடத்தி வெற்றி வாகைச் சூடினார். இப்போரில் இஸ்ராயே லின் தலைநகர் சமாரியா முற்றுகையிடப் பட்டு தகர்க்கப்பட்டது. இவ்வெற்றியைப் பற்றி இரண்டாம் சார்கோன், தனது ஆண்டுக் குறிப்பில் எழுதிவைத்திருக்கிறார். துர்சருக் கின் என்ற தனது புதிய தலைநகரிலும் கல்வெட்டில் இவ்வெற்றியைப் பற்றி பொறித்து வைத்திருக்கிறார். சார்கோன் அர சன் அக்கல்வெட்டில் கீழ்கண்டவாறு எழு தப்பட்டுள்ளது. ''நான் சமாரியாவை முற்று கையிட்டு வெற்றியடைந்தேன். அதில் 27,290 பேரைப் ·போர் பணயமாகக் கொண்டுச் சென்றேன்'' என்று எழுதப்பட்டுள்ளது. அக் காலத்தில் போர்நடந்து ஓர் அரசன் வெற்றிக் கொள்ளும் போது அவன் தோல்வி கண்ட நாட்டின் மக்களை தன் நாட்டிற்குக் கடத்திச் சென்று தோல்வி கண்ட நாட்டில் தனது நாட்டு மக்களைக் கொண்டு வந்து குடி அமர்த்துவான். வெற்றி பெற்ற அரசனுக்கு எதிரான புரட்சி வெடிப்பதற்கு வழியில்லா மல் செல்வதற்குத் தான் இவ்வாறு செய்வர். அதே வழக்கத்தைப் பின்பற்றிதான் இஸ்ரா யேல் மக்கள் ஆயிரக்கணக்கானோர் அசீரிய நாட்டுக்கு அடிமைகளாக எடுத்துச் செல்லப் பட்டனர். அசீரிய மக்களும் பாலஸ்தீனத்தில் குடியமர்த்தப்பட்டனர். இஸ்ராயேல் அசீரி யாவின் ஒருபுதிய மாநிலமாக ஆக்கப்பட் டது. இவ்வாறு அசீரிய இஸ்ராயேலை அழித்து அடிமைப்படுத்திய நிகழ்ச்சியைத் தான் 2 அர 17-ஆம் அதிகாரம் தனக்குரிய இறையியல் கருத்துக்களை அதில் பொதித்து அதன் முறையில் கூறுகிறது.

*14. யூதேயா அரசர்கள் ஆகாசும் எசக்கியா வும்:-*

*அ) ஆகாசு:-* அரசராகமத்தை எழுதிய உபாகமப்பாரம்பரிய ஆசிரியர் ஆகாசைப் பற்றி வன்மையாகக் கண்டித்து எழுதியிருக் கிறார். இவர் தன் மகனையே பொய்தேவர்க ளுக்கு பலியிடத்தயங்கவில்லை *(2 அர 16:3)* என்று இவனது உறுதியற்ற விசுவாசத்தை சுட்டிக்காட்டுகிறது அரசராகமம். ஏசயா இறைவாக்கினரின் அறிவுரையையும் இவன் பொருட்படுத்தாது நடந்ததும், இவனது சமய பற்றின்மையைத் தெரிவிக்கிறது (ஏச 7:1தொ)

சீரியாவும் இஸ்ராயேலும் தங்களின் கூட் டணிக்கு ஆகாசை அழைத்தபோது ஆகாசு அவர்களுடன் சேராமல் அசீரிய அரசன் மூன்

றாம் திகிலாத்து பிலேசரின் உதவியை நாடுகிறான் அதனால் அசீரிய மன்னனுக்கு அடிபணிந்து, அதற்குரிய நிறைந்த கப்பத்தையும் இவன் கட்டுகிறான். இவன் அசீரியர்களுக்கு அடிபணிந்து வாழ்ந்தபோக்கு, இவனது சமய வாழ்விலும் அது பிரதிபலித்தது. தமஸ்கு நகரில் தான் பார்த்த பீடத்தைப் போன்று, புதிய பீடம் ஒன்றை எருசலேம் ஆலயத்தில் நிறுவினான் ஆகாசு (2 அரச 16:10-16). இவன் ஆட்சியில் அநீதத்திற்கும் குறைவில்லை. எனவேதான் இறைவாக்கினர் ஏசயாவும் மீக்காவும் ஆகாசு யூதாவை ஆட்சி செய்தக் காலத்தில் அங்கு நடந்து வந்த அநீதிகளைச் சுட்டிக்காட்டி கண்டிக்கிறார்கள் (ஏச 3:13-15; 5:8-13; மீக் 2:1-10).

ஆ. எசக்கியா:- எசக்கியா உபாகமப்பாரம்பரிய ஆசிரியரால் வானளாவப் புகழப்படுகிறார். இதற்குக் காரணம் இவர் மக்களின் சமய வாழ்வில் கொண்டு வந்த புது மறுமலர்ச்சிதான். மக்கள் அனைவரும் எருசலேம் ஆலயத்தைத் தங்களின் மைய வழிபாட்டுத் தலமாகக் கொள்ள வேண்டும் என்று வலியுறுத்தினார் எசக்கியா. எல்லா கோத்திரங்களும் ஒன்று கூடி வழிபட்டு ஒன்றித்திருந்த யோசுவா காலத்து பழக்கத்தை (யாத் 20:24) மீண்டும் கொண்டு வந்து அதை நிலை நாட்ட ஏற்பாடு செய்தார். இவ்வாறு மக்கள் ஒன்றுபட்டு ஒரே திருத்தலத்தில் வழிபடும் முறை தங்கள் சமயத்தில் புகுந்துவிட்ட மற்றைய மதத்தினரின் கொள்கைகள் சடங்குமுறைகள் இவைகளை அகற்றுவதற்கு நல்வழியாகவும் அமைந்திருந்தது.

2 நாள் 30:1 தொ என்ற பகுதியில் எசக்கியா அசீரியர்களின் அடியில் வாழ்ந்து வந்த எப்பிராயிம் மனாசே என்ற கோத்திரத்தைச் சார்ந்த மக்களையும் எருசலேம் வந்து பாஸ்காவிழாவைக் கொண்டாட அழைத்ததைக் கூறுகிறது. வடக்கில் வாழ்ந்த தங்கள் மக்களையும் ஒன்றிணைக்க எசக்கியா கொடுத்த அறைகூவலின் அபாயத்தை அசீரியர்கள் உணர்ந்து, எசக்கியாவை எச்சரித்தார்களா? என்பது பற்றி நமக்குத் தகவல் இல்லை. ஆனால் எசக்கியா கொண்டு வந்த சமய மறுமலர்ச்சி ஒருதாய் மக்கள் என்ற நாட்டுப் பற்றையும் அரசியல் விழிப்புணர்வையும் மக்கள் மத்தியில் தூண்டிவிட்டது.

வடநாடான இஸ்ராயேலை பிடித்துவிட்ட அசீரியாவோடு எசக்கியா எத்தகைய உறவை வைத்திருந்தார் என்று தெளிவாகச் சொல்ல முடியவில்லை. நிச்சயமாக இவர் அசீரியருக்கு எதிராகப் போர் கொடி பிடித்திருக்கத்தான் வேண்டும். குறிப்பாக கி.மு. 713-711 ஆண்டுகளில் பெலிஸ்தியரின் அசுதோது மற்ற நகர அரசுகள் அசீரியரை எதிர்த்து எழுந்தபோது அவர்களோடு எசக்கியாவும் இணைந்து எதிர்ப்புக் குரல் கொடுத்திருக்க வேண்டும். இவர்களோடு ஏதோம் மோவாபியர்களும் இணைந்து அசீரியர்களுக்கு எதிராக எழுந்திருக்க வேண்டும். அசீரியர்களின் எதிர்ப்பாளர்கள் அனைவருக்கும் எகிப்து பேரரசு ஆதரவுக்கரம் கொடுத்தது.

இவ்வாறு எகிப்தின் துணையை நம்பி பல நாடுகள் அசீரியாவை எதிர்த்து எழுந்த நேரத்தில்தான் ஏசயா யூதாவை எச்சரிக்கிறார். ஏச. 20-இல் ஏசயா ஆடையின்றி வெறும் காலோடு நடக்கும் அடையாள செயல்கள் எகிப்தின் துணையை நம்பியிருக்க வேண்டாம், அது விரைவில் வீழ்ச்சியடைய இருக்கிறது, என்ற கருத்தை அறிவுறுத்தித்தான் அவ்வாறு செய்தார்.

எசக்கியா பலவிதக் கட்டிடங்களையும் கட்டினார். இவைகளைப் போர்மூண்டால் நாட்டைக் காப்பாற்றும் திட்டத்தில் செய்தார். 2 அர 20:20; 2 நாள். 32:3-5. 30 ஆகிவற்றில் குறிப்பிடப்படும் எசக்கியா கட்டிய குடிநீர்கால்வாய் போர் சூழ்நிலையை மனதில் வைத்தே கட்டப்பட்டது. போர் மூண்டால், நகர அரணுக்குள் வாழ்ந்து வரும் மக்களுக்கு அருகேயிருந்த அருவியிலிருந்து ஆழமுள்ள கால்வாய் வழியாக, எருசலேமிற்குத் தண்ணீர் பெறத்தான் இக்கால்வாயை வெட்டினார் எசக்கியா. இக்கால்வாயில்தான் சிலோவாம் கல்வெட்டு என்ற பழங்கால தடையம் இடம் பெற்றுள்ளது.

வலிமை குன்றியிருந்த அசீரியாவை பாலஸ்தீனமும் மற்ற சிறு அண்டை நாடுகளும் சேர்ந்து எதிர்த்து நிற்க திட்டமிட்ட வேளையில் அசீரியா தன் சுய வடிவை இவ்வெதிர்ப்பாளர்க்குக்காட்டிடத் திண்ணம் கொண்டது. கி.மு. 705 இல் பெலிஸ்தியர்களின் நகர்களான அசுக்கலோன், எக்கரோன் என்ற நகரங்கள் அசீரியர்களை எதிர்க்க வெளிப்படையாய் கொடிப்பிடித்தன. இவர்கள் எகிப்துப் பேரரசு தங்களுக்குத் துணைநிற்கிறது என்ற துணிச்சலில்தான் அவ்வாறு வெளிவந்தனர். இந்நிகழ்ச்சி சீறிக் கொண்டிருந்த சிங்கத்திற்கு வாய்ப்பளித்தது போல் ஆகிவிட்டது. அசீரியர்கள் உடனே படையெடுத்து புரட்சிக் கொடிப்பிடித்த அசுக்கலோன், எக்கரோன் என்ற இரு பெலிஸ்தியர் நகரங்களை அழித்தனர் இதை ஏச 30-31 அதிகாரங்களில் நாம் காண்கிறோம்.

கி.மு. 704-இல் சனகெரிபு என்பவர் அசீரியாவில் அரச பதவியேற்றார். அவர் தன் அரசுக்கு அடங்காதவர்களையெல்லாம் அடக்கி ஒடுக்கத் திட்டமிட்டார். முதன் முதலாக பாபிலோனியாவில் பணியாது குரல் கொடுத்த மெரொதாக்கு பலதானின் புரட்சியை அடக்கினார் (704). அசீரியர்களுக்கு எதிராக எழுந்த இந்த பாபிலோனியர்கள் எருசலேமையும் தங்கள் அணியில் இணைத்துக் கொள்ள முயற்சித்திருக்கிறார்கள். எனவேதான், இப்பாபிலோனியர்கள் தாங்கள் அசீரியர்களால் நசுக்கப்படுவதற்குச் சற்று முன்பாக எருசலேமிற்கு தூதனுப்பியிருக்கவேண்டும் (2 அர 20:12-19; ஏச 39).

பாபிலோனியர்களைப் பணியச் செய்த அசீரிய மன்னன் அடுத்து பெனிசியாவிற்குப் பாய்ந்து சென்றார். ஏனென்றால் பெனிசியாவும் அசீரியாவிற்கு எதிராக எழுந்த கூட்டணியில் இடம் பெற்றிருந்தது, பெனிசியர்களையும் கொடுமைப்படுத்தினார் அசீரிய மன்னன். அடுத்து அங்கிருந்து தெற்கு நோக்கி வந்து பெலிஸ்த்தியர்களையும் அடுத்து தாக்கினார். அடுத்து எருசலேமை நோக்கி தன் அனல்பார்வையைத் திருப்பினார் சனகெரிபு. எருசலேமின் அரசனான எசக்கியா அசீரியாவின் எதிர்ப்பு அணியில் முக்கிய நபராக விளங்கியதால், அசீரிய அரசன் அவனுக்கு சரியான படிப்பினையும் அடியும் கொடுக்க விரும்பினார். பெலிஸ்தியர் நகர் எக்கரோனின் அரசன் பாடி என்பவர் அசீரியர்களுக்கு ஆதரவாகப் பேசி வந்தார். எனவே ஆத்திரமடைந்த அந்நகர் மக்கள் அவரை எருசலேம் அரசன் எசக்கியவிடம் கையளித்தனர். அவ்வாறு அசீரியர்களுக்கு எதிரான அணியில் தீவிரமாக செயல்பட்ட எசக்கியா அசீரியர்களின் ஆத்திரத்திற்கு ஆளானதில் வியப்பில்லை.

அசீரிய அரசன் சனகெரிபு யூதேயாவை முற்றுகையிட்டு வெற்றி பெற்றதைப் பற்றி தனது ஆண்டுக்குறிப்பில் எழுதிவைத்துள்ளார். அதில் யூதேயாவின் 46 நகரங்களைத் தான் கைப்பற்றியதாகவும் எசக்கியாவை எருசலேமில் ஒரு கூட்டுப் பறவையைப் போல அடைத்து வைத்திருந்ததாகவும் எழுதிவைத்துள்ளார். அசீரிய அரசனின் இப்படையெடுப்பைப் பற்றியும் அதைத் தொடர்ந்து நடந்த நிகழ்ச்சிகள்பற்றியும் 2 அர 18:13-19:34 என்ற பகுதியில் தத்ரூபமாக விளக்கப்பட்டுள்ளது. ஏசயா 36-37 அதிகாரங்களிலும் இதைப் பற்றிய குறிப்பைக் காணலாம். மேற்கண்ட அரசராகமம் பகுதியில் இரண்டுவித வர்ணிப்புகள் இடம் பெறுவதைப் பார்க்கின்றோம்.

அசீரியர்களின் இராணுவம் கொள்ளை நோய்க்கு உள்ளாவதை அரசராகமம் குறிப்பிட்டு இதனால் அசீரிய அரசன் பாலஸ்தீனத்தைத் தொடர்ந்துத் தாக்காது, தன்நாடு திரும்பினான் என்று அரசராகமம் கூறுகிறது. அசீரியர்களைக் கொள்ளைநோய் தாக்கியது இறைவனின் கரமென்றாலும் அசீரியர்கள் பலமாகவே யூதேயாவிற்கு அடிக்கொடுத்திருக்கிறார்கள். இதை ஏச 1:7 தொ என்ற பகுதி குறிப்பிடுகிறது. இதையடுத்து அசீரியவின் அடிமை நாடாகவே பல்லாண்டுகள் யூதா வாழ்ந்து வந்தது.

15. மனாசே (607-642):- இவரது நாற்பத்தைந்து ஆண்டுகள் அரசாட்சியில் இவர்

அசீரியர்களின் அடிமை அரசராகவேயிருந்து யூதாவை ஆட்சி செய்து வந்தார். 2 நாள் 33:11தொ என்ற குறிப்பு மனாசே பாபிலோனியாவில் சிறிதுகாலம் சிறையில் வைக்கப் பட்டிருந்தார் என்று கூறுகிறது. இது அசீரியர் அரசர் அசூர்பானிப்பாலின் சகோதரன், அசூர்பானிபாலிற்கு எதிராகப் புரட்சி செய்த காலத்தில் நடந்திருக்கலாம். மனாசேயின் செபம் என்ற போலியான வேதாகமநூல் ஒன்று காணக்கிடைக்கிறது. இந்நூல் மனாசே மனந்திரும்பியதை மையமாக வைத்துப் பிற்காலத்தில் எழுதப்பட்ட நூலாக இருக்கலாம். மனாசே மனந்திரும்பி வாழ்ந்தாரோ இல்லையோ தெளிவாகத் தெரிந்துக்கொள்ள நமக்குச் சான்றுகள் இல்லை. ஆனால் அவரின் ஆட்சிக் காலம் முழுவதும் சிலை வழிபாட்டு பழக்கங்கள் செழித்தோங்கி வளர்ந்து வந்தன என்பது நிச்சயமாகத் தெரிகிறது. மனாசேயின் காலத்தில் எசக்கியா ஏற்படுத்திய சமய மறுமலர்ச்சி மீண்டும் காய்ந்து சருகாகி விட்டது என்று சொல்லலாம் ஏனென்றால் எருசலேம் ஒரே வழிபாட்டு மையம் என்று எசக்கியா நிலைநிறுத்தியது இவரின் காலத்தில் தளர்ச்சியடைந்தது. மண்வளத்திற்காக மனிதர்கள் சடங்கு உடலுறவுகொள்ளும் அன்னிய வழிபாட்டு முறை மனாசேயின் காலத்தில் மீண்டும் யூதாவில் செயல்படத் தொடங்கியது.

எருசலேம் பேராலயத்தில் அசீரியர்கள் வழிபட்ட தேவதைகளுக்கும் பீடங்கள் கட்டப்பட்டன. தேவதாசி முறையும் ஆலயத்தில் அறிமுகப்படுத்தப்பட்டது. இவ்வாறு யாவேயை விட்டுப்பிரிந்து சென்ற மன்னனாகவே மனாசே வாழ்ந்து வந்தார். மனாசேயை அடுத்து அவரின் மகன் ஆமோன் ஆட்சிக்கு வந்தார். அவர் ஆட்சி இரண்டாண்டுகளே நீடித்தது (642-640). ஏனென்றால் அவர் ஆட்சி செய்த இரண்டாவது ஆண்டில் சதியினால் கொலை செய்யப்பட்டார். இதனால் எட்டே வயது நிரம்பிய சிறுவனான யோசியா அரசனாக ஆக்கப்பட்டார்.

16. யோசியா ஆட்சியை ஏற்ற போது அவருக்குச் சாதகமான அரசியல் சூழ்நிலைகள் உருவாகின. பேரரசாக அண்டை நாட்டாரையெல்லாம் உருட்டிக் கொண்டிருந்த அசீரிய பேரரசு சரிய ஆரம்பித்தது. மேதியர்களும் பாபிலோனியர்களும் வல்லமையில் வளர ஆரம்பித்தார்கள். கி.மு. 626 முதல் 612 வரை பாபிலோனியாவின் நபுபோலாசார் அசீரியர்களை எதிர்த்துப் புரட்சிக்குரல் கொடுத்துவந்தார். கி.மு. 612-இல் நபுபோலாசார் அசீரியாவின் தலைநகரான நினிவேயை வீழ்த்தினார். இப்போது அசீரியா வீழ்ச்சியடைந்தது. இவ்வாறு தன்னை மிதித்து அடக்கிக் கொண்டிருந்த அசீரியர் ஆட்டம் காண தொடங்கியதும் இச்சந்தர்ப்பத்தை யோசியா நன்றாகப் பயன்படுத்திக் கொண்டார். யோசியா அசீரியர்களிடமிருந்து விடுதலை பெற்று தன்நாடு தனி சுதந்திரநாடு என்று பிரகடனமும் செய்தார் அரசியல் ரீதியில் மட்டுமல்ல சமய வாழ்விலும் தங்களது சுதந்திரத்தை உரிமையுடன் அறிக்கையிட்டார்.

எசக்கியாசைவிடவும் சமய அளவில் முழுமையான மறுமலர்ச்சியைக் கொண்டு வந்தார் யோசியா. இவர் இவ்வாறு செய்த சமய மறுமலர்ச்சியை உபகாகம பாரம்பரிய ஆசிரியர் புரட்சி என்பர் ஏனென்றால் உபாகமத்தில் கூறப்பட்டுள்ள திட்டங்களின் வழியில் இம்மறுமலற்சி நடைப்பெற்றது. யோசியா 621-இல் எருசலேம் ஆலயத்தை சீர்திருத்திய போது பழைய சட்டபுத்தகம் ஒன்று கண்டெடுக்கப்பட்டது. இக்கண்டெடுக்கப்பட்ட புத்தகத்தில் இருந்தவைகளைத்தான் உபாகமம் 12-26 அதிகாரங்களில் நாம் பார்க்கிறோம். எருசலேமே வழிபாட்டின் ஒரே மையம் என்ற கருத்தும், சிலைவழிபாட்டினை அழிக்க வேண்டும் என்ற கருத்தும் யோசியா கொண்டுவந்த மறுமலர்ச்சியின் முக்கிய அம்சங்களாகவிளங்கின. மக்கள் கடவுளின் உடன்படிக்கையை உய்த்துணர்ந்து வாழ வேண்டும் என்று வலியுறுத்திக் கூறினார் யோசியா இம்மறுமலர்ச்சி மக்களைப் பார்த்து குறை கூறி கண்டிக்காமல் அவர்களுக்கு உற்சாகமளித்துத் தட்டிக் கொடுக்கும் முறையில் அமைந்திருந்தது.

பாஸ்காவிழாவைச் சிறப்பாகக் கொண்டாட ஏற்பாடு செய்தார் யோசியா இவ்விழாவில் பங்கேற்க வடநாடான இஸ்ராயேலுக்கும் அழைப்புக் கொடுத்தார். இவ்வாறு இஸ்ராயேல் மக்களை அரசியல் தளத்திலும் சமய அளவிலும் ஒன்றுசேர்க்க வழிவகுத்தார் யோசியா.

இவ்வாறு நல்லெண்ணத்துடன் மறுமலர்ச்சியைத் தோற்றுவித்தார் யோசியா, ஆனால் இம்மறுமலர்ச்சி வாழ்வோடிணைந்த புரட்சியாக அமையாமல் வெறும் சமய சம்பிரதாயமாகவே மாறிவிட்டது. இதைத்தான் எரேமியா இறைவாக்கினர் சுட்டிக் காட்டி யோசியா காலத்தில் கண்டிக்கிறார்.

இவ்வாறு மறுமலர்ச்சியைத் தோற்றுவித்த யோசியாசு மெகிதோவில் எகிப்தியரின் வாளிற்கு இரையாகி மடிகிறார். இவர் மறைவினால், இவர் துவங்கி வைத்த மறுமலர்ச்சியும் விரைவில் புதைந்துப்போகத் தலைப்பட்டது. யோசியாவை அடுத்து அவரது மகன் யோவாகாசு அரசனானார். ஆனால் அப்போது ஏற்பட்ட உலக அரசியல் சூழ்நிலை யூதா அரசை அடியோடு அழிக்கும் நிலைக்குக் கொண்டுவந்தது.

கி.மு. 612-இல், படையெடுத்து வந்த பாபிலோனியர்களுடன் மோதி அசீரிய பேரரசு தோல்வி கண்டதை முதலிலேயே கண்டோம். இத்தோல்வியில் அசீரியாவின் தலைநகரான நினிவே பாபிலோனிய கைக்குச் சென்றது. தங்கள் தலைநகரைப் பறிகொடுத்து விட்டு தப்பித்துக் கொள்ள காரான் என்றவிடத்திற்கு பின் வாங்கினர் அசீரியர். ஆனால் பாபிலோனியர் விடுவதாயில்லை. காரனுக்கும் அசீரியர்களைத் துரத்திச் சென்று அந்நகரையும் தன் கைவசமாக்கினர் பாபிலோனியர்.

இதற்கிடையில் மற்றொரு பேரரசான எகிப்து பாபிலோனியாவின் படையெடுப்புகளைக் கண்டு விழித்தெழுந்தது. புதிதாக முளைத் தெழுந்த முரட்டுப் பாபிலோனியாவைத் தடுக்காவிட்டால் தனக்கும் பாதகம் ஏற்படும் என்ற உணர்வில் எதிர்த்துச் செயல்பட ஆரம்பித்தது. ஏற்கெனவே அசீரியா எகிப்திற்கு எதிரி. இருப்பினும் கொடிய பாபிலோனியாவைத் தடுக்க வேறுவழியில்லாது, தன் எதிரியான அசீரியாவுடன் சேர்ந்துக் கொண்டு அது புது எதிரியைத் தாக்கப் புறப்பட்டது. அப்போது எகிப்தின் வேந்தனாக விளங்கியவர் இரண்டாம் நேக்கோ கி.மு. 609 முதல் 593 வரை எகிப்தை அரசாண்டவன். இவன் அசீரியர்களுடன் சேர்ந்துக் கொண்டு பாபிலோனியர்களைத் தாக்க, அசீரியர்கள் பின்வாங்கிய காரான் நகரை நோக்கி எகிப்திலிருந்து சென்றுக் கொண்டிருந்தான். வழியில் பாலஸ்தீனத்தைக் கடந்து தான் செல்ல வேண்டும். அவ்வாறு நேக்கோ செல்கையில் யோசியா எகிப்து அரசனை எதிர்த்து தடுத்து நிறுத்தினார். இதனால் எகிப்திய பெரும் படைக்கும் பாலஸ்தீனப் படைக்கும் போர் மூண்டது. இப்போர் மெகிதோ என்றவிடத்தில் கி.மு. 609-இல் நடந்தது. இப்போரில்தான் யோசியா படுகொலைச் செய்யப்பட்டார். இடையில் தடுத்த பாலஸ்தீனத்தை அடித்து நொறுக்கிவிட்டு எகிப்து மன்னன் யூப்பிரத்திசு நதியை நோக்கி தன் இராணுவத்தை நகர்த்திச் சென்றான். அசீரியாவும் எகிப்தும் சேர்ந்து போரிட்டும் பாபிலோனியர்களைச் சாய்க்க முடியவில்லை. எனவே தோல்வியுடன் தன் நாடு நோக்கித் திரும்பிக் கொண்டிருந்தான் எகிப்து மன்னன். இதற்கிடையில் பாலஸ்தீனத்தில் யோசியாவையடுத்து யோவகாசு அரசனாக நியமிக்கப் பட்டிருந்தார். ஆனால் தன்நாடு செல்லும் வழியில் யோவகாசை அகற்றிவிட்டு எலியாக்கிம் என்ற யோசியாவின் மற்றொரு மகனை யூதாவின் மன்னனாக ஆக்கினார் எகிப்து மன்னன். புதிதாக தான் நியமித்த எலியாகிம் என்பவனின் பெயரை யோயாக்கிம் என்றும் மாற்றியமைத்தார் எகிப்து அரசன். யூதா அரசன் தனது அடிமையரசன் என்று காட்டவே அப்படி இப்பெயர் மாற்றம் செய்தார்.

*17. யூதாவின் வீழ்ச்சி (609-587):-* எகிப்தால் ஏற்படுத்தப்பட்ட யோயாக்கிம் என்ற யூதா அரசன் திறமையற்றவன். சமய பற்றும்

குறைந்தவன். அவன் காலத்தில்தான் இறைவாக்கினர் எரேமியா பணி புரிந்தார் யோயாக்கிமின் திறைமையில்லா நிலையை எரேமியா பலவிடங்களில் சுட்டிக் காட்டிக் கண்டித்தார். உதாரணமாக எரே 3-ஆம் அதிகாரம் இதைச் சித்தரிக்கிறது. அரசன் யோசியா செய்த உபாகமப்பாரம்பரிய மறு மலர்ச்சிகளை யெல்லாம் சருகுகளாக்கினான். எரே 7:16-20; எச 8 ஆகிய பகுதிகள் யோவாக்கிம் காலத்தில் எவ்வளவு தூரம் யூதா மக்கள் யாவே இறைவனின் வழிபாட்டிலிருந்து வெகுவாக விலகியிருந்தனர் என்பதை எடுத்துக் கூறுகின்றன.

இந்நேரத்தில் பாபிலோனியாவும் எகிப்தும் மோதிக் கொண்டிருக்க யூதா அவர்கள் மத்தியில் உருட்டப்பட்ட ஓர் பகடைக் காயைப் போல விளங்கியது. ஆனால் பாபிலோனியா உண்மையிலேயே பெரும் வல்லரசாக உருப்பெற்றுக் கொண்டிருந்தது. இக் காலங்களில்தான். பாபிலோனியாவின் இத்தகைய வளர்ச்சியைப் பற்றி பாபிலோனியர்களின் ஆண்டுக்குறிப்புகள் தெளிவாகக் கூறுகின்றன.

கி.மு. 605-இல் பாபிலோனியாவும் எகிப்தும் கார்கெமிசு என்ற விடத்தில் சந்தித்து போர் செய்தன. இதில் பாபிலோனியா எகிப்தியர்களை விரட்டியடித்து வெற்றி கொடி நாட்டியது. இப்போது பாபிலோனியாவின் மன்னனாக விளங்கி இவ்வெற்றியைப் பெற்றவன் மன்னன் நெபுக்கதுனேசார். இதனை எரேமியா 46:2-12 என்ற பகுதியில் குறிப்பிட்டு எழுதியுள்ளார்.

எகிப்தின் மன்னன் நெக்கோ இத்தோல்வியைச் சந்தித்ததும் அடிப்பட்ட பாம்பைப் போல ஆனார். எனவே கி.மு. 601-இல் மீண்டும் பாபிலோனியர்களை எதிர்த்துத் தாக்கினார். இம்முறை எகிப்திய அரசன் வெற்றி பெற்றார். இவ்வெற்றியில் தன் மனதைப் பறிகொடுத்த யூதா அரசன் யோயாக்கிம் எகிப்தியர்கள் பாபிலோனியர்களைவிடப் பலம்வாய்ந்தவர்கள் என எண்ண ஆரம்பித்தார். இதனால் பாபிலோனியாவை புறக்கணிக்கவும், ஆரம்பித்தார் யோவாக்கிம். ஆனால் யூதாவில் எகிப்தியரைச் சார்ந்திருப்பதா அல்லது பாபிலோனியரைச் சார்ந்திருப்பதா? என்பதில் மக்களிடையே கருத்து வேறுபாடுகள் உண்டாக ஆரம்பித்தன. யோயாகிம் பாபிலோனியர்களைப் பகைத்துக் கொள்வது என்று தீர்மானித்து எதிர்ப்புக் குரல் கொடுத்தபோது, பாபிலோனியா உடனடியான எதிர் நவடிக்கை எடுக்கத் தொடங்கியது.

பாபிலோனிய அரசர்களின் நாட்குறிப்பு எவ்வாறு எருசலேம் பாபிலோனியாவிற்கு இப்போது அடிபணிந்தது என்பதை விவரிக்கிறது. அதார் மாதத்தின் இரண்டாம் நாள் அதாவது கி.மு. 597 மார்ச் மாதத்தின் மத்தியில் யெருசலேம், பாபிலோனியர்களுக்கு அடிபணிந்தது என்று அக்குறிப்பு கூறுகிறது. இத்தோல்வியில் யோயாக்கிம் ஏற்கனவே சதியினால் கொலை செய்யப்பட்டுவிட்டார். பாபிலோனியர்கள் தாக்கியபோது யூதாவின் அரசனாக விளங்கியவர் யோயாக்கிமின் மகன் யோயாக்கின். இவர் அரியணையேறிய ஒரு சில மாதங்களிலேயேதான் இத்தாக்குதல் நடந்தது. பாபிலோனியர்கள் குறிப்பின்படி யோயாக்கினும் மற்றும் நிறைய மக்களும் பாபிலோனியாவிற்குப் போர் கைதிகளாக நாடு கடத்தப்பட்டனர். வைட்னர் ஏடுகளில் யோயாக்கின் எவ்வாறு கொடுமையாகத் தண்டிக்கப்படாமல் அரசனுக்குரிய மதிப்புடன் பாபிலோனியர்களால் நடத்தப்பட்டார் என்று எழுதிவைக்கப்பட்டுள்ளது.

செதேக்கியாதான் யூதாவின் கடைசி அரசன். இவர் கி.மு. 597 முதல் 587 வரை அரசாண்டார். இவர் காலத்தில் நடந்துவந்த பேரரசுகளின் போராட்டத்தில் அரசியல் தந்திரத்துடன் விழிப்புடன் தப்பித்துக் கொள்ளத் தெரியாதவர். சுருக்கமாகச் சொன்னால் செதேக்கியா திறமையற்றவர்; நிலையாக எதையும் சிந்தித்துச் செயல்படத் தெரியாதவர். இதனைத்தான் எரேமியாவின் 32-38 அதிகாரங்களில் நாம் காண்கிறோம். பாபிலோனியா, எகிப்து என்ற இரண்டு பேரரசுக

லில் எகிப்தையே தேர்ந்துக் கொண்டார் செதேக்கியா. இப்பேகது எகிப்தில் மன்னர்க ளாக விளங்கியவர்கள் இரண்டாம் காமட் டிக்குஸ் என்பவரும் ஒபிரா என்பவரும் ஆவர்.

இவ்வாறு செதேக்கியா எகிப்தின் பக்கம் சேர்ந்ததால் பாபிலோனியா பாய்ந்தெழுந் தது. பாபிலோனியாவின் அரசன் நெபுக்கது னேசார் கி.மு. 589-இல் எருசலேமை முற்று கையிட்டார். இதே நேரத்தில் யூதாவிலிருந்த நகரங்கள் இராணுவமையங்கள் அனைத்தை யும் தரைமட்டமாக்கினார். அசேக்கா, இலாக்கிசு என்ற இரண்டு நகரங்கள் மட் டுமே அவரின் தாக்குதலிலிருந்து தெய்வாதி னமாகத் தப்பி நின்றன.

இவ்வாறு பாபிலோனிய அரசன் எருச லேமை முற்றுகையிட்டிருப்பதைக் கேள்வி யுற்று, தன் அணியில் நின்ற யூதாவிற்கு உதவி செய்ய விரைந்தான் எகிப்தின் மன் னன். இதனால், முற்றுகையிட்ட பாபிலோ னியா எருசலேமிலிருந்து சற்று விலகி நின் றது. ஆனால் பாபிலோனியா தளர்ச்சியடை யாமல் தங்களை எதிர்க்கத் துணிவுக் கொண்ட எருசலேமை அழித்தது. எருசலே மின் மதில் சுவர்களையெல்லாம் கல்மேல் கல்லில்லாமல் அழித்தது. இவ்வாறு எருச லேம் நகரம் கி.மு. 587-இல் பாபிலோனியா வால் முழுவதும் அழிக்கப்பட்டது. இக் கோர நிகழ்ச்சியைக் காணப்பொறுக்காது ஒட்டம் பிடித்தான் யூதாவின் அரசன் செதேக் கியா. ஓடியவனை விடாது வளைத்துப் பிடித்தனர் பாபிலோனியர். முதலில் அவ ரின் கண்முன்னாலேயே அவனின் பிள்ளை கள் வெட்டிக் கொள்ளப்பட்டனர். பிறகு செதேக்கியாவின் கண்கள் பிடுங்கப்பட்டன. நெபுக்கதுனேசார் எருசலேமை அடியோடு அழிக்கக் கட்டளையிட்டார். எருசலேமின் குடிமக்கள் பெரும்பாலானோர் பாபிலோனி யாவிற்குக் கைதிகளாக நாடு கடத்தப்பட்ட னர். இப்போது அகிக்காமின் மகன் கெதலி யாவை யூதாவின் ஆளுநராக நியமித்தார் நெபுக்கதுனேசார். இந்த கெதலியாதான் இறைவாக்கினர் எரேமியாவை ஆதரித்தவர். இப்புது ஆளுநன் மிசுப்பா என்ற இடத்தைத் தலைமையிடமாகக் கொண்டு, நாட்டை நிர் வகித்தார்.

கெதலியா இசுமயேல் என்பவனால் கொலைச் செய்யப்பட்டார். இசுமயேல் யூதா அரச வழியைச் சேர்ந்தவர். தான் ஏற்படுத்திய ஆளுநன் கொலை செய்யப்பட் டது தனக்கு வெளிப்படையாகக் கொடுக்கப் பட்ட எதிர்ப்பின் குரல் என்று நெபுக்கதுனே சார் மீண்டும் யூதா மக்களை அடக்க அவர்க ளைப் பலவாதனைகளுக்கு ஆளாக்கினார். இம்முறையிலும் சுமார் கி.மு. 582-இல் பல யூதா மக்கள் நாடுக்கடத்தப்பட்டனர். இத னைத் தான் எரே 52:30 என்ற பகுதி குறித்துக் காண்பிக்கிறது.

கெதலியாவின் ஆதரவாளர்களால் அவ ரைக் கொலை செய்தவனை ஒன்றும் செய்ய முடியவில்லை. இதனால் இவர்கள் அச்சம் கொண்டு இறைவாக்கினர் எரேமியாவைத் தங்களுடன் அழைத்துக் கொண்டு எகிப்திற் குத் தப்பிச் சென்றார்கள். இது எரே 42-இல் கொடுக்கப்படுகிறது.

**இஸ்ராயோல் வரலாறு** - V - பாபிலோனில் அடிமை வாழ்வும் மீளுதலும்

1. பாபிலோனில் யூதா மக்களின் அடிமை வாழ்வு (கி.மு.587-539):- யூதா பாபிலோ னிய அரசின் ஒரு மாநிலமாக மாற்றப்பட் டது. இம்மாநிலத்தின் தலைநகர் சமாரியா வாக விளங்குகிறது. யூதாவிலிருந்து பாபி லோனியாவிற்கு மக்கள் நாடுக் கடத்தப்பட் டார்களேயன்றி வெளிமக்கள் யூதேயாவிற்கு கொண்டுவந்து குடியமர்த்தப்படவில்லை. நெபுக்கதுனேசார் கடுமையாகத் தாக்கிய தால் யூதா பாலைவனம் போல் காட்சியளித் தது. ஒரு சில மக்களே அங்கு வாழ்ந்து வந்தனர். நெபுக்கதுனேசாரின் படையெடுப் பைப் பயன்படுத்திக் கொண்டு, யூதாவின் அண்டை நாடுகள் யூதாவைக் கொள்ளைய டித்தன. இவ்வாறு யூதாவைக் கொள்ளைய டித்தவர்களில் குறிப்பிடப்படக்கூடியவர்கள் அதன் தென்பகுதியில் வாழ்ந்த ஏதோமியர். இவர்களைக் குறிப்பிட்டுக் கூறுகிற ஒபா.11;

எச 25:1-4 என்ற பகுதிகள் அம்மோனியர்களும் இவ்வாறு இந்த நேரத்தில் கொள்ளையடித்ததைக் கூறுகிறது.

யூதாவின் மக்கள் கூட்டம் முக்கியமாக பாபிலோனியாவில் அடிமைகளாக வாழ்ந்தனர். எரே 52:28-30 என்ற பகுதி நாடுகடத்தப்பட்ட யூதா மக்கள் எண்ணிக்கையில் 4600 என்று கூறுகிறது. இந்த 4600 பேர், பெண்கள் குழந்தைகள் இவர்களைத் தவிர்த்த ஆண்களின் எண்ணிக்கை மட்டுமேயாகும். எசக்கியேல் இறைவாக்கினர் பாபிலோனியாவில் தெல்-அபில் என்ற விடத்தில் எவ்வாறு யூதா மக்கள் வாழ்ந்தார்கள் என்று விளக்கிக் கூறுவதை அவர் நூலில் நாம் காண்கிறோம்.

பாபிலோனியாவிற்கு நாடுகடத்தப்பட்ட யூதா மக்கள் சிறைகளில் அடைக்கப்படவில்லை. மாறாக அவர்கள் அந்நாட்டில் சுதந்திரமாக நடமாட அனுமதிக்கப்பட்டனர். யூதாமக்கள் தாங்கள் கொண்டுவரப்பட்டப் புதிய சூழ்நிலைக்கு ஏற்றவாறு அனுசரித்து நடந்துக் கொண்டனர். அவர்களின் சமயச் சடங்குகளையும் முறைப்படிப் பின்பற்றவும் அவர்கள் சுதந்திரம் பெற்றிருந்தனர். அவர்களின் முக்கியச் சடங்குகளான விருத்தசேதனம், ஓய்வுநாள் அனுசரிப்பு ஆகியவை இவர்களை ஒருகுலமக்களாக ஒன்றிணைக்கும் கருவிகளாகத் திகழ்ந்தன.

தாங்கள் தாங்கமுடியாத வேதனைகளுக்கும் அவமானங்களுக்கும் ஆளாக்கப்பட்டிருந்தாலும் மக்கள் தங்களின் கடவுள்பற்று தலை விட்டுக் கொடுக்கவில்லை. எருசலேம் அசைக்க முடியாது, இறைவனின் தனி உடன்படிக்கைக்குத் தாங்கள் உரிமைக் கொண்டவர்கள் என்ற நம்பிக்கையெல்லாம் தவிடுபொடியானாலும் அவர்களின் சமய பற்று வைரமாக உறுதிப்பட்டது. சமய வழிபாடுகளிலும் சமய வாழ்க்கையிலும் இப்போது அதிக ஈடுபாடு காட்டினர்.

இஸ்ராயேல் மக்களின் வாய்மொழிப் பாரம்பரியங்கள் இக்காலத்தில்தான் ஒன்று சேர்க்கப்பட்டு எழுத்துவடிவில் பதிப்பிக்கப்பட்டன. குறிப்பாகக் குருக்களின் வழிவந்தோர் இஸ்ராயல் மக்கள் பாலைவனத்தில் வழிநடத்ததுமுதல் யெருசலேம் ஆலயத்தில் வழிபாட்டு சடங்குகளின் ஒழுங்குமுறை வரையுள்ள பாரம்பரியங்களைச் சட்டத் தொகுப்பாக ஒன்று சேர்த்தனர். இத்தோடு, தாங்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள், தங்களுக்கென்று தனி ஒழுங்குகள் உண்டு என்ற புது சட்டத்தொகுப்பையும் செய்யும் முயற்சி இப்போது நடந்து வந்தது. யோசுவாமுதல் அரசர்கள் காலம் வரையுள்ள வரலாற்றை இந்நேரத்தில் தான் வகுத்து தொகுத்து எழுதினார்கள். இறைவாக்கினர்கள் எழுதிவைத்தவைகளையும் இச்சமயத்தில்தான் தொகுத்துச் சேர்த்தார்கள்.

எசக்கியேல் இறைவாக்கினர் இவ்வடிமைத் தனத்தில் வாழ்ந்த மக்கள் மத்தியில் நின்று பணிபுரிந்தனர். அவர் இஸ்ராயேல் புதிய நாடாக உயிர்த்தெழும் என்ற நம்பிக்கைச் சங்கை ஊதினார். ஆனால் ஏசயா ஆகமத்தின் 40 முதல் 55 வரையுள்ள அதிகாரங்களை எழுதிவைத்த இறைவாக்கினர்தான் இந்த இஸ்ராயல் மக்கள் மனந்திரும்பிடக் கருவியாக விளங்கியவர். இவர் இரண்டாவது ஏசயா என்றழைக்கப்படுகிறார். இவர் தான் இறைவனைப் பற்றிய உண்மைக் கருத்துக்களை மக்களுக்குக் கூறி இந்தச் சிக்கலான நேரத்தில் மக்களை வழிநடத்தினார். இந்த இரண்டாவது ஏசயாதான் பாரசீக அரசன் சைரசை இறைவன் அபிடேகம் செய்து இஸ்ராயல் மக்களை விடுவிக்க நியமித்துள்ளார் என்று மக்களுக்கு அடித்துக் கூறினார். யாவே ஒருவரே உண்மையான கடவுள்; அவரே மக்களை விடுவிக்கும் வல்லமை பெற்றவர்; அவர் புதிய பாஸ்காவை செய்து மக்களை விடுவிப்பார் என்றும் விடுதலை நாதத்தை மக்களுக்கு ஓதினார். இக்கருத்துக்களை ஏச 43:14-21; 48:20-21; 52:11-12 என்ற பகுதிகளில் நாம் காணலாம்.

இரண்டாம் ஏசயா முன்னுரைத்தவாரே பாரசீக மன்னன் சைரஸ் தனது வெற்றி பயணத்தைத் தொடங்கினார். இந்த சைரஸ் பாரசீகத்தைச் சேர்ந்த அன்சான் என்ற இடத்தின் அரசன். இவர் கி.மு.553-இல் மேதியா

களை வென்றார். அதைத் தொடர்ந்து கி.மு.546-இல் குரோசயர்களின் நாடான இலிதியாவைப் பிடித்தார். கி.மு.550-இல் பாபிலோனியரைமிரட்ட ஆரம்பித்தார். இப்புதிய அரசன் தங்களை அடிமைப்படுத்தியர்களை அழிக்கப் போகிறார் என்று அவனின் வெற்றிக்காக ஆவலுடன் காத்திருந்தனர் இஸ்ராயேல் மக்கள். கடைசியாக கி.மு.539-இல் பாபிலோனிய அரசன் நபோனிது என்பவரை திகிரிசு என்றவிடத்தில் தோற்கடித்தார் சைரஸ். இந்த அரசன் எழுதிபுதைத்து வைத்த பெட்டகம் ஒன்று அண்மையில் கண்டுபிடிக்கப்பட்டது. அதில் அவர் எம்மதமும் சம்மதம் என்ற கொள்கையைப் பின்பற்றியது பற்றி தெளிவான குறிப்பு காணக்கிடக்கிறது. சைரஸ் அரசன் கி.மு.538-இல் அடிமைகளாக வைக்கப்பட்டிருந்த பாலஸ்தீன மக்கள் தங்கள் நாட்டிற்குச் திரும்பிச் செல்லலாம் என்று கட்டளையை பிரகடனம் செய்தார்.

2. பாபிலோனியாவிலிருந்து விடுதலை (கி.மு.539-333):-

யூதாவிற்கு மக்கள் திரும்புதல்; புதிய ஆலயம் அமைக்கும் பணி ஆரம்பமாதல்:-

யூதாவின் மக்கள் பாபிலோனியாவிலிருந்து தங்கள் சொந்த நாடு போய்ச் சேரலாம் என்று சைரஸ் அரசன் அரசு ஆணையைப் பிறப்பித்தார். இவ்வாணையைப் பற்றி எஸ்ரா 1:2-4; 6:3-5 என்ற பகுதிகளில் பார்க்கிறோம். யூதா மக்களை விடுவிக்கும் ஆணையுடன் அவர்களின் இடிக்கப்பட்ட ஆலயத்தைத் திரும்பவும் அரசு உதவியுடன் கட்டியெழுப்பவும் அனுமதியளித்தார். அத்துடன் நெபுக்கதுநேசார் எருசலேம் ஆலயத்திலிருந்து எடுத்துச் சென்ற புனிதப்பாத்திரங்களையும் அவர்கள் திரும்பவும் பெற்றுக் கொள்ளலாம் என்ற உத்திரவையும் கொடுத்தார்.

சைரசால் விடுதலை பெற்ற யூதர்கள் மகிழ்வுடன் யூதாவின் தலைவனான சேசிபசார் தலைமையில் ஒரு குழுவினர் புறப்பட்டு வந்தனர் (எஸ் 1:9). இந்த சேசிபசார் அநேகமாக யோகக்கிமின் மைந்தர்களில் ஒருவனாயிருக்கவேண்டும். இந்த யூதாவின் தலைவன் யூதாவின் ஆளுனராக பொறுப்பேற்றுக் கொண்டார். ஆனால் பாரசீக அரசர்களின் மேற்பார்வையின் கீழ் செயல்பட வேண்டும்.

இவ்வாறு பாபிலோனியாவிலிருந்து விடுதலைபெற்று வந்த மக்களைப்பற்றி விரிவாகச் செய்திகள் நமக்குக் கிடைப்பதற்கில்லை. ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். பாபிலோனியாவிலிருந்து நாடுத்திரும்பியர்களில் பெரும்பாலோர் யூதா, பென்யாமின் குலத்தைச் சார்ந்தவர்கள்.

எஸ்ரா ஆகமம் மூன்று முதல் ஆறு அதிகாரங்கள் செருபாபேல் என்பவர் மக்களுக்கும் தலைமைத் தாங்கி பணியாற்றுவதைப் பற்றி ஆர்வத்துடன் எடுத்துக் கூறுகின்றன. அடிமை விலங்கிலிருந்து விடுபட்டு, தங்கள் நாடு வந்து சேர்ந்த யூதா மக்கள் ஆர்வம் மிகுந்து விளங்கினர். எனவே தங்களின் கனவான ஆலயத்தை மீண்டும் கட்டிக் எழுப்பத் திட்டம் தீட்டினர். அதற்காக முதன் முதலில் எளிய பீடமொன்றை எழுப்பினர். பிறகு ஆலயத்திற்கான அடிதளத்தையிட்டனர். இவ்வாறு ஆர்வத்தோடு இவர்கள் செயல்பட்டாலும் உண்மையாகவே ஆலயம் கட்டும்பணி கி.மு.520-இல்தான் முழு மூச்சுடன் ஆரம்பித்தது. இச்சமயத்தில் ஆகாய், செக்கரியா என்ற இறைவாக்கினர்கள் தோன்றி மக்களின் ஆலயம் கட்டும் ஆர்வம் அணையாது தூண்டிவிட்டுக் கொண்டேயிருந்தனர். இவ்வாறு கி.மு.515-இல் செருபாபேலும் யோசுவா என்ற பெரியகுருவும் இணைந்து செயல்பட்டு மக்களின் மகத்தான முயற்சியுடன் புதிய ஆலயத்தைக் கட்டி முடித்தனர். ஆகாய், செக்கரியா என்ற இறைவாக்கினர்கள் இக்காலத்தில் பணி புரிந்தபோது தாவீதின் குலத்தில் மெசியாத் தோன்றுவார் என்ற நம்பிக்கைத் தென்றலையும் வீசச் செய்தனர்.

யூதாவின் தலைவனாக விளங்கிய செருபாபேல்மீது பாரசீகர்கள் நம்பிக்கையிழந்து சந்தேகப்படவும் தொடங்கினர். இதனால்

அவர்மீது என்ன நடவெடிக்கையெடுத்தனர் என்று அறிந்துக்கொள்ள நமக்கு வாய்ப் பில்லை. ஆனால் செருபாபேல் யூதாவின் வரலாற்றில் மீண்டும் தோன்றாமல் அடை யாளமின்றியே மறைந்துவிட்டார்.

இதற்கிடையில் கி.மு.522-இல் காம்பி சேஸ் என்ற பாரசீக அரசன் இறந்த நேரத்தில் பாரசீக அரசில் ஓர் தடுமாற்றம், குழப்பம் ஏற்பட்டது. இத்தடுமாற்ற நேரத்தில் யூதா வுக்கும் பாரசீகத்தின் அடிமையிலிருந்து முற் றிலுமாக ஓர் விடுதலை கிடைக்கலாம் என்று எதிர்பார்த்தனர் யூதமக்கள். ஆனால் பெரிய தாரியு என்ற அரசன் காம்பிசேசை அடுத்து அரியணையேறியபோது நிலவிய குழப்பங்களுக்கெல்லாம் முற்றுப்புள்ளி வைத்தார். இந்தத் தாரியு கி.மு.522 முதல் 486 வரை அரசாண்டார்.

ஆனால் தாரியு அரசன் யூத மக்களிடம் கடுமையாக நடந்து கொள்ளவில்லை. மாறாக அவர்களுக்குச் சாதாகமாகவே நடந் துக் கொண்டார். உதாரணமாக யூத மக்கள் எருசலேமில் புதிய ஆலயம் கட்டத்துவக்கிய போது சமாரிய நாட்டில் குடியிருந்த யூதமக் கள் அதை விரும்பவில்லை. எனவே சமாரி யாவில் பாரசீக அரசனின் பதிலாளியான ஆளுநன் தாத்தேனாய் என்பவனிடம் சமாரி யர்கள் முறையிட்டனர். எருசலேம் ஆலயம் எழுப்பப்படுவதைத் தடுத்து நிறுத்த ஆணை யிடும்படிக் கேட்டுக் கொண்டனர். அதை ஆளுநன் தாத்தேனாய் தாரியு அரசனிடம் தெரிவித்தபோது, தாரியு ஆலயப்பணியைக் கைவிட வேண்டியதில்லை; ஏனென்றால் அது சைரஸ் அரசனால் முறையான வகை யில் அனுமதிக்கப்பட்ட பணி என்று யூத மக்களின் சார்பாகவே எடுத்துச் சொன்னார் (எஸ் 6-7).

இவ்வாறு புதிய வாழ்வைத் துவக்கிய யூதா கி.மு.520 வாக்கில் சுமார் 20,000 குடிமக் களைத் தன்னுள் கொண்டிருந்தது. இப்புதிய மக்களுக்கு பலப்பிரச்சனைகள் அவர்களின் வளர்ச்சிக்குத் தடையாக நின்றன. இவைக ளில் முக்கியமானவை அவர்களின் கருத்து வேற்றுமைகள், பொருளாதாரப் பிரச்சினை கள், எருக்கு முளைத்தயிடத்திலே மீண்டும் பயிர்செய்து பலன்காண வேண்டிய சவா லான சூழ்நிலை, இவற்றிற்கு மேலாக தங் கள் நாட்டின் வடக்குப் பகுதியில் வாழ்ந்த சமாரியர்களின் தொந்தரவு ஆகியவையாகும் இவற்றைப் புதிய உலகம் காண வந்த யூதமக் கள் சந்திக்க வேண்டியிருந்தது. சமாரியர்கள் இவர்களுக்கு மிகுந்த தொந்தரவு கொடுத்து வந்தனர். ஏனென்றால் சமாரியர்களும் யாவேயே தங்களின் கடவுள் என்று வழிபட் டனர். இதனால் யூதாவும் இவர்களைச் சார்ந் தது என்று வாதிட்டனர்.

செருபாபேல் ஆலயம் அமைக்க ஆரம்பித் தபோது சமாரியர்களும் இப்பணியில் கலந் துக்கொள்ள முன்வந்தனர். ஆனால் செருபா பேல் அவர்களைத் தங்களுடன் சேர்த்துக் கொள்ள முடியாது என்று தெரிவித்து விட் டார். எனவே சமாரியாவிற்கும் யூதேயாவிற் கும்மிடையே பகையுணர்வு வளரத்தொடங் கியது. இப்பகையுணர்வு குறைய வழியில் லாமல் காலப்போக்கில் வளர்ந்து கொண்டே சென்றது. இதனை பின் வரலாற் றிலும் காணலாம். கி.மு.515 முதல் 450 வரை நடந்த நிகழ்ச்சிகளைப் பற்றி விரிவாக ஒன் றும் தெரியவில்லை. எஸ்ரா நான்காம் அதி காரத்திலும் நெகமியா ஆகமத்திலும் மலாக் கியா ஆகமத்திலும் மேற்கண்ட காலத்தில் மக்கள் பெற்றனுபவித்தத் துன்பங்களைப் பற்றி சிறிதளவு பார்க்கிறோம் இக்காலத்தில் யூத மக்கள் பெரும் அல்லல்களுக்கு ஆளா னார்கள் என்று தயங்காமல் கூறலாம்.

3. நெகமியா, எஸ்ரா ஆகியவர்களின் பணிகள்:-

நெகமியா பாபிலோனியாவில் அடிமை யாக வாழ்ந்த யூதர்களில் ஒருவர். இவர் முதலாம் அர்த்தாசெருசு என்ற பாரசீக அரச னுக்கு உணவுப் பரிமாறும் பணியைச் செய் துவந்தார். இவர் இவ்வாறு பணி செய்து வாழ்ந்து வந்த இடம் சூசா என்பது. இவர் சுமார் கி.மு.445-இல் எருசலேம் எவ்வாறு இழிவான நிலையில் இருந்தது என்பதை கேள்விவாயிலாகத் தெரியவந்தார். எனவே

அவர் மனம் கொதித்தெழுந்தது. இழிவில் மூழ்கிவிட்ட எருசலேமை சீருடன் அமைக்க ஆவன செய்ய வேண்டும் என்று உறுதி கொண்டார்.

எனவேதான் பணி செய்த மன்னனிடம் மன்றாடி யூதாவின் ஆளுநராகத் தன்னை நியமித்து அதனின் அதிகாரத்தைப் பெற்றுக் கொண்டு யூதா வந்து சேர்ந்தார். இவர் தன் முதல்பணியாக எருசலேமைச் சுற்றி மதில் சுவர் எழுப்பவேண்டும் என்று திட்டம் தீட்டினார். இச்சுவர் பற்றி எவ்வாறு கவனமாக திட்டம் தீட்டப்பட்டுக் கட்டப்பட்டது என்பது பற்றி நெக 2-4-இல் காணலாம்.

நெகமியாவின் பணிகளுக்கு நிறையத் தடைகளும் எதிர்ப்புக்களும் தோன்றின. முக்கியமாக உணர்வற்று ஊக்கமற்று நின்ற யூத மக்களைத் தட்டியெழுப்பி அவர்களின் ஒத்துழைப்பைப் பெறுவதே நெகமியாவிற்கு பெரியச் சாதனையாக இருந்தது. அத்துடன் யூதாவைச் சுற்றியிருந்த ஆளுநர்கள் நெகமியாவின் புதுமறுமலர்ச்சி முயற்சிகளுக்கு எதிர்ப்பாக நின்றனர். குறிப்பாக சமாரியாவின் ஆளுநனாக விளங்கிய சம்பல்லாத்து என்பவரும் யோர்தானில் மேற்குப் பகுதியின் ஆளுநன் அம்மானில் வாழ்ந்த தோபியா என்பவரும் அராபிய பகுதியின் ஆளுநனாக விளங்கிய கெசம் என்பவரும், நெகமியா செய்து வந்த பணிகளுக்குப் பெரும் எதிர்ப்பு கொடுத்து வந்தனர். இதில் சமாரியாவின் ஆளுநன் சாம்பல்லாத்து அநேகமாக யூத இனத்தைச் சார்ந்தவனாயிருந்திருக்க வேண்டும். ஏனென்றால் அவருடைய மகன்களின் பெயர்கள் அதனைக் குறித்துக் காட்டுகின்றன. அவருடைய மக்களின் பெயர்கள் தெலாயா, செலமியா என்பவையாகும். இவ்வாளுனர்கள் யூதாவிலேயே நெகமியா வின்பணிகளுக்கு எதிர்ப்பு தெரிவித்தவர்களை பயன்படுத்தி நெகமியா தான் நினைத்த மறுபலர்ச்சியைக் கொண்டுவருவதில் தடையாய் நின்றனர். உதாரணமாக யூதாவில் அக்காலத்தில் பெரிய குருவாகயிருந்தவர் யோயதா என்பவர். இவர் எலியாசிபு என்பவரின் மகன். இவர் நெகமியாவின் எதிர்ப்பாளர்களில் முக்கியமான ஒருவர். இவரையும் பயன்படுத்திக் கொண்டுதான் சுற்றிலும் வாழ்ந்த மேற்குறிப்பிட்ட ஆளுநர்கள் நெகமியாவை எதிர்த்து வந்தார்கள். ஆனால் நெகமியா அஞ்சாநெஞ்சம் கொண்டவராய் வந்த தடைகளையெல்லாம் பற்றிப் பொருட்படுத்தாது தான் எடுத்துக் கொண்டத் திட்டத்தைத் தொடர்ந்து நிறைவேற்றி வந்தார் (*நெக 5-6:14*).

நெகமியா யூதாவுக்கு வந்த நாட்களில் யூதா ஒரு சிறிய மாநிலமாகவே திகழ்ந்தது; தெற்கே பெத்தேல் முதல் வடக்கே பேத்சசூர் வரை பரவியிருந்தது. நெக 7 அம்மாநிலத்தில் வாழ்ந்த மக்களின் விவரங்களைக் கூறுகிறது. இம்மக்களின் குறிப்புகளைப் பார்க்கின்றபோது, இவர்கள் பலவிடங்களின் தோன்றியவர்களாகவும் பல குலத்தைச் சார்ந்தவர்களாகவும் இருப்பது தெரிகிறது. ஆல்பிரைட் என்ற அறிஞரின் ஆராய்ச்சியின் படி, நெக 7, எஸ் 2-இல் குறிப்பிட்டுள்ள மக்கள் இரண்டு வகுப்பினராகப் பிரிக்கப்படலாம் என்கிறார். அதாவது ஒரு பிரிவினர் பாபிலோனியாவிலிருந்து சைரஸ் மன்னன் விடுதலை வழங்கியபோது யூதயாவிற்கு வந்து சேர்ந்தவர்கள். இவர்களின் பெயர்கள் வெளிநாட்டு வாடையுடன் விளங்குவதைக் காணமுடிகிறது. உதாரணமாக பிகிவாய், ஏலாம் என்ற பெயர்கள். மற்றொரு பிரிவினர் முதலிலிருந்தே யூதாவில் வாழ்ந்தவர்கள் அல்லது சைரஸ் அரசன் விடுதலை வழங்குதவற்கு முன்னமே யூதாவிற்கு வந்து சேர்ந்தவர்கள்.

நெகமியா கண்டிப்புடன் நிர்வாகத்தை நடத்தி வந்தார். அத்தகைய கண்டிப்பினால் தான் அப்போது மக்களை அரசியல் பொருளாதார நெருக்கடிகளின் மத்தியில் வளர்க்க முடிந்தது. இவ்வாறு யூதாவைத் தனிமாநிலமாக அமைத்து இதனைத் தனிநாட்டைப் போல உருவாக்கியப் பெருமை நெகமியாவையேச் சாரும். இவ்வாறு தன் பணிகளை யூதாவில் செய்த பிறகு நெகமியா மீண்டும் கி.மு.433-இல் பாரசீகம் திரும்பினார். தான் யூதாவில் தங்கியிருந்த பன்னிரண்டு ஆண்டு

களில் தான் திட்டமிட்டதையெல்லாம் செய்ய முடிவில்லையே என்ற மனப்பாரத்து டன் தான் பாரசீகம் திரும்பினார். எனவே பாரசீகத்தில் அவர் அதிகக் காலம் தங்கியிருக்க அவருக்கே பிடிக்கவில்லை. எனவே மீண்டும் யெருசலேமிற்கு தனது மறுமலர்ச்சித் திட்டங்களை நிறைவேற்றத் திரும்பினார்.

இவர் எருசலேமைவிட்டு நீங்கியிருந்த சில காலத்திலேயே பலவிதத்தில் மக்களின் வாழ்க்கைப் பாழ்பட்டிருந்தது. எனவே முழுமையான சமய சீர்திருத்தம் செய்தாக வேண்டும் என்று உணர்ந்தார் நெகமியா. எனவே அவர்களின் சமயக் கொள்கைகளில் நுழைந்து கொண்ட பல அன்னிய சடங்குமுறைகளையெல்லாம் கவனமாக அகற்ற ஆரம்பித்தார் நெகமியா. உதாரணமாக அம்மோனிய மனிதன் தோபியாசு என்பவருக்கு ஆலயத்திலேயே ஒரு தனி அறையை அமர்த்திக் கொடுத்திருந்தார் எலியாசிபு என்ற பெரிய குரு (நெக 13:4 தொ). நெகமியா இந்த தோபியாவின் அறையை ஆலயத்திலிருந்து அகற்றினார். லேவியர்களுக்குச் சேரவேண்டிய வருமானத்தின் பத்தில் ஒரு பங்கை சரியாக அவர்களுக்குக் கொடுக்கும்படி ஏற்பாடு செய்தார். ஓய்வு நாட்களில் வியாபாரம் செய்யக் கூடாது என்ற பழக்கத்தை மீண்டும் மக்கள் மத்தியில் நிலவிடச் செய்தார். யூதாவைச் சார்ந்த யூதர்கள் மற்றயினத்தவரோடு எந்தவித திருமணஉறவும் வைத்துக் கொள்ளக் கூடாது என்று ஒரு புதுச் சட்டத்தையும் கொண்டு வந்தார். இவ்வாறு இரண்டாவது முறையாக யூதாவின் ஆளுநராக வந்த நெகமியா விளங்கினார். ஆனால் எத்தனையாண்டுகள் இந்த இரண்டாவது தவணையில் ஆளுநராக விளங்கினார் என்பதை அறிந்துக் கொள்ள முடியவில்லை. இவர் இவ்வாறு தன்னையேத் தியாகம் செய்துகொண்டு யூதாவின் ஒரு புது வாழ்வை உயிர்ப்பித்தார் என்று சொல்லலாம் இவர் மக்களிடம் கண்டிப்பாக நடந்து கொண்ட அதே வேளையில் மக்களின் நலனே தன் ஒரே நோக்கம் என்பதற்காக தன் சுகங்களையும் வசதிகளையும் மிகக் குறைத்து வாழ்ந்து வந்துள்ளார் (நெக 5:14-19).

பாபிலோனிய அடிமைத்தனத்திலிருந்து திரும்பி வந்த யூதேயா மக்கள் மத்தியில் பணிபுரிந்த மற்றொருவர் எஸ்ரா என்பவர். அவர் எவ்வாண்டில் யூதாவிற்கு வந்து பணிபுரிந்தார் என்பதில் சில சிக்கல்களைப் பார்க்கிறோம். எஸ் 7:7, எஸ்ரா அர்த்தாசெருசு ஆட்சியின் ஏழாம் ஆண்டில் யூதாவுக்கு வந்தார் என்று கூறுகிறது. அர்த்த செருசு என்பவர் முதலாம் அர்த்தாசெருசு என்று எடுத்துக் கொண்டால் இங்குக் குறிப்பிடப்படுகிற ஆண்டு கி.மு.458 ஆகும். அப்படிபார்த்தால் நெகமியா யூதாவிற்கு வந்த கி.மு.455ஆம் ஆண்டிற்கு முன்பே எஸ்ரா அங்கு வந்துவிட்டார் என்று கணக்காகிறது. நெகமியாவிற்கு முன்பாக எஸ்ரா யூதேயாவிற்கு வந்து விட்டார் என்பது சரியான உண்மையல்ல.

வேறுவழியில் எஸ் 7:7-இல் குறிப்பிட்டுள்ள அர்த்தாசெருசு இரண்டாம் அர்த்தாசெருசு என்று வைத்து கணக்கிட்டுப் பார்த்தால் இங்கே குறிப்பிடப்படும் ஏழாம் ஆண்டு கி.மு.398-ஆம் ஆண்டு பாபிலோனியாவிலிருந்து யூதமக்கள் திரும்பி வந்த காலத்திற்கு மிகவும் பின்பாக காலத்தைக் குறைத்து பொருத்தமில்லா காலத்தைக் குறித்துக் காண்பிக்கிறது.

ஒருசிலர் கீழ் காணும் முறையில் எஸ் 7:7க்கு விளக்கம் கூறுவர். அதாவது எஸ் 7:7-இல் கூறப்பட்டுள்ளது முதலாம் அர்த்தாசெருசின் ஏழாமாண்டு அல்ல. மாறாக முதலாம் அர்த்தாசெருசின் முப்பத்திஏழாம் ஆண்டு என்று கூறுவர். இக்கணக்கின்படி பார்த்தால் எஸ்ரா யூதாவுக்கு வந்த ஆண்டு கி.மு.428 ஆகும். இவ்வாண்டு நெகமியா இரண்டாம் முறை யூதாவில் பணியாற்றிய போது எஸ்ராவும் யூதாவில் பணிசெய்திருக்க வேண்டும் என்பதைக் குறிக்கிறது. இந்தக்கருத்தை 37-ஆம் ஆண்டு என்பதை தன் ஒரு யூகமாவே ஆல்பிரைட் என்ற அறிஞர் கூறுகிறார். இந்த யூகத்திற்கு சான்று பகர எஸ்ராவின் புத்தகத்தில் எவ்வித ஆதாரமும் இல்லை.

எஸ்ரா, நெகமியா ஆகியோருடைய சீர்திருத்தங்களைப் பற்றிய காலவரையறைபற்றிய பிரச்சினைக்குக் கருத்தொருமைமிக்க விடைகாண்பது எளிதன்று. எஸ்ராவும் நெகமியாவும் தனித்தனியே வேறுபட்ட காலங்களில் பாபிலோனியாவிலிருந்து திரும்பி வந்து யூதர்கள் மத்தியில் பணிபுரிந்தனர் என்று சில அறிஞர்கள் கூறுவர். வேறுபலர் இருவரும் ஒரே காலத்தில் உழைத்தனர் என்று கூறுவர். இது வரலாற்று நிகழ்ச்சிகளுக்கு மிக நெருங்கியதாகத் தெரிகிறது. இதன்படி, நெகமியாவின் இருதூதுகளுக்கிடையில் எஸ்ராவின் தூது அமைகிறது. தனது தூதின் முதற்பகுதியின் முடிவில் சமய வழி பாட்டுக் காரியங்களில் நிலவிய அமைதியற்ற நிலையைக் குருவல்லாத ஒருவரால் சமாளிக்க முடியாது என்பதை நெகமியா ஏற்றுக் கொள்ள வேண்டியிருந்தது. இதன்படி, எஸ்ரா, ''விண்ணக இறைவனின் திருச்சட்ட நூலில் வல்லுநர்'' (எஸ் *7:12*) என்றபட்டத்தோடு எருசலேமுக்கு அனுப்பப்படுகிறார். சில அறிஞரது கருத்துப்படி நெகமியாவோடு எஸ்ராவும் உண்மையான நிலையை அறிய எருசலேமுக்குப் பயணமானார். அங்கு நிலவிய அவலநிலையை அறிந்த பின், அவர் பாபிலோனுக்குத் திரும்பிவந்து வேண்டிய அதிகாரத்தைப் பெற்றுக் கொண்டு புதியதோர் நாடு திரும்பும் குழுவினரோடு எருசலேமுக்கு வந்தார். இக்கருதுகோளுக்கு ஏற்றபடி எஸ் *7:7*-இல் ஒருதிருத்தம் அவசியமாகிறது. ஏழாம் ஆண்டு என்பதற்குப் பதிலாக இருபத்தேழாம் அல்லது முப்பத்தேழாம் ஆண்டு என்று வாசிக்க வேண்டும். 27-ஆம் ஆண்டைத் தேர்ந்து கொண்டால், சட்டம் பகிரங்கமாக வாசிக்கப்படும்போது நெகமியாவோடு எஸ்ரா இருப்பதையும், சட்ட வல்லுநரின் செயல் ஆளுநரின் செயலோடு இணைக்கப்பட்டால் எஸ்ராவின் அறிக்கை ஏன் இடம் பெயர்ந்தது என்பதையும் எளிதில் விளக்க முடியும் (நெக *7:73-8:9*). இக்கருத்தின்படி எஸ்ராவும் நெகமியாவும் ஒருவரையொருவர் சார்ந்து செயல்பட்டனர்.

*4.* எஸ்ரா:- எஸ்ரா ஒரு குரு, இவருக்கு ''விண்ணகக் கடவுளின் திருச்சட்ட நூலில் வல்லுநரான குரு'' என்ற அதிகாரப் பூர்வமானப் பட்டமும் கொடுக்கப்பட்டிருந்தது (எஸ் *7:12-26*). இவ்வாறு இவர் நெகமியாவைப் போல் அரசியல் தலைவராக இல்லாமல் சமயத் துறைக்கு மட்டும் பொறுப்பாளராகத் திகழ்ந்தார். இவருடையபணி யூதர்கள் சமயச் சட்டங்களை யூதர்களுக்குப் போதித்தலும் அதனை மக்கள் கடைப்பிடிப்பதை மேற்பார்வை செய்தலுமாகும் இதற்காக இவர் பாரசீக அரசர்களின் அதிகாரத்தைப் பெற்றிருந்தார்.

எஸ் *7*; செக் *8*-இன்படி எஸ்ரா ஒரு குழுவினரை அழைத்துக் கொண்டு, பாபிலோனியாவிலிருந்து பாலஸ்தீனம் வருகிறார். அவர் யூதா வந்து சேர்ந்ததும் தன் முதல் பணியாக எருசலேமில் மக்களையெல்லாம் கூட்டி அவர்கள் நடுவில் சட்டங்களை வாசிக்கிறார். அவ்வாறு அவர் வாசித்த நாள் புதுவருட திருவிழா. வாசிக்கப்பட்டச் சட்டங்கள் ஐந்நூல்கள் என்ற புத்தகத்திலிருந்து எடுக்கப்பட்டவை. இச்சட்ட வாசிப்பைத் தொடர்ந்து மனஸ்தாப வழிபாடு ஒன்றை நடத்துகிறார் எஸ்ரா (எஸ் *10*). இவ்வழிபாட்டில் தங்கள் இனத்தைச் சாராத மற்ற இனப் பெண்ணை யாரும் மனைவியாக்கியிருந்தால் அவர்களை விவாகரத்து செய்வதென்று உறுதியெடுத்துக் கொண்டனர் மக்கள். நெக.*9-10*-என்ற பகுதி எஸ்ரா தலைமையில் மக்கள் உடன்படிக்கையை புதுப்பித்த சடங்கை நிறைவேற்றியதையும் தங்களின் விசுவாசத்தை உள்ளம் நெகிழ அறிக்கையிட்டதையும் தெரிவிக்கின்றது. தங்களின் உடன்படிக்கையைப் புதுப்பித்துக் கொண்ட உறுதியில் கீழ்கண்டவைகளைக் கடுமையாகக் கடைப்பிடித்து வாழத் தீர்மானம் கொண்டனர். இனிமேல் எவ்விதத்திலும் தங்கள் இனத்தைச் சாராதப் பெண்களை மணமுடித்துக் கொள்வதில்லை; இரண்டாவதாக ஒய்வு நாள் கடமைகளை ஒருபிசகில்லாமல் பின்பற்றுவது; மூன்றாவதாக புதியதாகக் கட்டப்பட்ட எருசலேம் ஆலயத்தை உயிரைக் கொடுத்தாவது காப்பாற்றுவது. மேற்கண்டத் தீர்மானங்களில் முக்கியமானது வேற்றினப் பெண்களுடன் திருமணம் செய்வது சட்ட

விரோதமானது என்பதாகும். அதனால் அத்திருமணம் செல்லுபடியாகாது என்றும் அனைவரும் ஏற்றுக் கொண்டனர். இவ்வாறு கலப்புத் திருமணங்களுக்கு எஸ்ரா தடைவித்தது போலவே நெகமியாவும் கலப்புத் திருமணங்கள் யூதேயாவில் நடைபெறுவதை நிறுத்தி வைத்திருந்தார்.

இந்த எஸ்ராவைப் பற்றிப் பிற்காலத்தில் பலவித கட்டுக் கதைகள் பிறக்க ஆரம்பித்தன. எஸ்ராவை புகழ்ந்துக் கூறும் வகையில் தான் இக்கதைகள் ஏற்பட்டன. இவர் இரண்டாவது மோசே என்றழைக்கப்பட்டார். இவரே பழைய ஏற்பாட்டின் புத்தகங்களைத் தொகுத்து, அவைகளே அனைவரும் வாசிக்க வேண்டிய அதிகாரம் பெற்ற புத்தகங்கள் என்று ஏற்பாடு செய்தவர் என்றும் சில பாரம்பரியங்கள் கூறுகின்றன. இவைகள் இப்படியிருப்பினும், சட்டமே வாழ்வின் உயிர் என்ற முறையில் யூத மக்கள் வாழ்வதற்கு முக்கியக் காரணமாக விளங்கியவர் எஸ்ரா. சட்டத்தின் மீது அளவுக்கு மீறிய பற்றுதல் இதனால் மக்கள் மத்தியில் ஏற்பட்டது. இதனால் மக்கள் சட்டங்களுக்கு அடிமையாகும் நிலையேற்பட்டது. இம்மன நிலைத்தான் இயேசுபிறந்த காலத்திலும் மக்கள் மத்தியில் நிலவி வந்தது. இதனைத்தான் இயேசு கடுமையாகச் சாடினார்.

எஸ்ராவின் காலத்தில் புத்தகங்கள் எழுதப்பட்டு, அப்புத்தகங்களை மக்கள் படித்துப் பயன்பெறும் பழக்கம் பரவலாகயிருந்தது. ஆனால் எஸ்ரா நூற்களைத் தொகுத்தார் என்பதற்கு எவ்வித ஆதாரமுமில்லை. எஸ்ரா நாளாகமங்களில் ஆசிரியர் என்றும் ஒருசிலர் கூறுவர். இக்கூற்றிற்கும் எவ்வித ஆதாரமுமில்லை.

நாளாகம ஆசிரியர் நடந்த வரலாற்று நிகழ்ச்சிகளையெல்லாம் சிந்தித்துப் பார்க்கிறார். அவர் சிந்தனையின் கனிகளைத் தனது புத்தகத்தில் வரிவடிவமாக்குகிறார். நாளாக ஆசிரியர், பாபிலோனிய அடிமைத்தனத்தின் காலத்தை விட மிகவும் பிற்பட்டவர் அவரின் முக்கிய இறையியல் கருத்து என்னவென்றால், அவர்களின் மக்கள் பின்பற்றி வந்த சடங்குகள் ஒழுங்குகள் முறையானவை; முற்காலத்தில் மோசே, தாவீது ஆகியவர்களால் எவ்வாறு தோற்றுவிக்கப்பட்டதோ அதே முறையில் பழுதில்லாமல் பாதுகாக்கப்பட்டு வருகின்றன என்ற கருத்தை சொல்வதற்குத்தான் சிரத்தையெடுத்துக் கொள்கிறார் நாளாகம ஆசிரியர். உருடால்ப் என்ற அறிஞர் நாளாகம ஆசிரியரின் நோக்கம் மேற் குறிப்பிட்டிருப்பதுதான் என்று தனது ஆராய்ச்சியின் முடிவாகக் கூறுகிறார். அதாவது இறைவனின் திட்டம் இஸ்ராயேயலில் நிறைவேறியது என்பதுதான் அவர் கூறவிரும்பும் முக்கியக் கருத்தாகும்.

இவ்வாறு இறையியல் கருத்துக்கள் நாளாகம புத்தகத்தில் நிரம்பி நின்றாலும், கி.மு. நான்காம் நூற்றாண்டின் யூதாவின் வரலாற்றினை அறிந்துக் கொள்வதற்கு ஓர் ஆதார நூலாக இந்நாளகமம் விளங்குகிறது இல்லையென்றால் யூதாவின் கி.மு. நான்காம் நூற்றாண்டு வரலாற்றைப் பற்றி விவரித்துக் கூறும் ஆதாரபுத்தகங்கள் நமக்கு வேறு கிடைக்கவில்லை. இவ்வாறு தனிப்பட்ட தன்மைக் கொண்ட நாளகமத்தை எஸ்ரா எழுதினார் என்பதற்கு முடிவான ஆதாரமில்லை.

பாபிலோனிய அடிமை நிலையிலிருந்து விடுபட்டு வந்த யூதா மக்களும் எருசலேம் குடிவாழ்வோரும் தாங்கள் மற்ற நாடுகளிலிருந்து வேறுபட்டவர்கள், அவர்களை விட்டு பிரிக்கப்பட்டவர்கள் என்ற கொள்கையுடன் வாழ்ந்தவர்கள். இவ்வாறு இவர்கள் மற்றவர்களைவிட வேறுபடுவதற்குக் காரணம், இவர்கள் இறைவனால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் என்பதாகும். இதனால்தான் பாபிலோனிய அடிமைத்தனத்தில் மிதிபடும் விதியேற்பட்டாலும், அதிலிருந்து அற்புதமாக மீட்டுக் கொண்டு வரப்பட்டனர். மேலும் யூதாவில் வந்து குடியேறிய மக்களைத்தான் நெகமியாவும் எஸ்ராவும் ஆலயத்தில் இறைவனுக்கு அர்ப்பணித்தனர். இவர்களைத் தான் மதில்சுவர்களைக் கட்டி, மற்றவர்களுடன் கலந்து களங்கப்படுத்திக் கொள்ளாமல் காப்பாற்றினர்.

**5. பாரசீகர்களின் ஆட்சி:-** யூதா பாரசீகர்களின் ஆட்சிக்குட்பட்டிருந்த காலத்தைப் பற்றி நாம் அதிகமாகக் கூற முடியாது. எஸ்ரா, நெகமியா ஆகமங்கள் தரும் தகவல்கள்தான் நாம் இக்காலத்தை பற்றி அறிந்துக் கொள்ளும் செய்திகளாகும். யூதாவின் வரலாற்றில் இக்காலத்தில் நடந்த நிகழ்ச்சிகளைப் பற்றி தெளிவாகத் தெரிந்துக் கொள்ள வாய்ப்பில்லை என்றாலும், இக்காலத்தில் யூத மக்களிடம் நிலவிய சமயச் சூழ்நிலையைப் பற்றி ஓரளவிற்கு ஊகித்துக் கூறலாம்.

இக்காலத்தில் யூத மக்களுக்கு தங்களின் பாரம்பரிய சட்டங்கள்மீது தனிப்பற்றுதல் ஏற்பட்டிருக்கிறது. எருசலேம் ஆலயத்தில், தலைமைக்குருக்கள், லேவியர்கள் ஆகியவர்களைத் தலைமையாக வைத்துப் பாரம்பரிய வழிபாடு ஊக்கமுடன் நடத்தப்பட்டிருக்கிறது. இதைத்தான் நாளாகம ஆசிரியர் தன் நூலில் தொட்டுக் காட்டி எழுதியுள்ளார். இவர்கள் வழக்கமான மூன்று முக்கிய திருவிழாக்களுடன் பாவங்களுக்குப் பரிகாரம் செய்யும் விழாவையும் சிறப்பாக கொண்டாடியுள்ளனர். இவர்களுடைய சமுதாய வாழ்வில், தலைமைக்குரு மக்களின் தலைவராக பணியாற்றியிருக்கிறார். இத்தலைமைக் குருக்கள், தாவீதின் குரு சாதோக்கின் வழித் தோன்றல்களாக விளக்கவேண்டும் என்ற நியதியையும் வைத்திருந்தனர்.

தொல்பொருள் ஆராய்ச்சியின் மூலமாகவும், இக்காலத்தைப் பற்றி அதிகம் தெரிந்துக் கொள்ள வாய்ப்பில்லை. இக்காலத்தில் யூத மக்கள் தங்களுக்கு வேண்டிய நாணயங்களை அச்சடித்துக் கொள்ளும் உரிமையைப் பாரசீக அரசன் அவர்களுக்குத் தந்திருந்தார் என்று தெரிகிறது. இதனை தொல்பொருள் ஆராய்ச்சியில் கண்டெடுக்கப்பட்ட நாணயங்கள் தெரிவிக்கின்றன. பல நாணயங்களில் 'யூதா' என்று எபிரேய எழுத்துக்களால் பொறிக்கப்பட்டுள்ளது.

இலாக்கிசு என்ற நகரில் நடத்தப்பட்ட தொல்பொருள் ஆராய்ச்சியில், அங்கு கி.மு. 400-ஆம் ஆண்டுக் காலத்தின் பாரசீகர்களின் அரண்மனையொன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. அநேகமாக அவ்வரண்மனைக் கட்டிடம், பாரசீக ஆளுநர் வாழ்வதற்காகக் கட்டப்பட்டிருக்க வேண்டும். இந்த ஆளுநர் பாரசீக அரசின் தென்பகுதியான ஏதோமைக் கண்காணித்திருக்க வேண்டும்.

எகிப்து நாட்டின் எலபன்டைன் என்றவிடத்தில் அண்மையில் கண்டுபிடிக்கப்பட்ட புல்தாள் சுவடிகள் இக்காலத்தில் வெளிநாடுகளில் வாழ்ந்த யூதர்களின் சமய வாழ்க்கை எம்முறையில் அமைந்திருந்தது என்பதைக் கண்டுகொள்ள மிகவும் உதவுகின்றன. இச்சுவடிகள் கி.மு.ஐந்தாம் நூற்றாண்டைச் சார்ந்தவையாகும். எகிப்து அரசன் பல யூதர்களை படை வீரர்களாக வைத்திருந்தான். அவர்கள் எலபன்டைன் நகரில் குடியமர்த்தப்பட்டிருந்தனர். இந்த யூத வீரர்கள் முக்கியமாக எத்தியோப்பியர்களை எதிர்த்து நிற்க ''சீன்'' என்ற நகரில் நிறுத்தப்பட்டிருந்தனர்.

இவர்கள் மேற்சொன்ன, எலபன்டைன் தீவில் ஒரு நூற்றாண்டிற்கு மேலாக வாழ்ந்து வந்திருக்கின்றனர். இந்த எலபன்டைன் தீவு நைல் நதியில் உள்ளது. இவர்கள், யூதாவைச் சேர்ந்த யூதர் மரபுகளிலிருந்து மாறிய ஒரு புது விதமான முறையில் யாவேயின் வழிபாட்டை தங்களுக்கென்று தனித்த வகையில் அமைத்துக் கொண்டனர். இவர்கள் உப ஆகமம் கூறும் ஒழுங்கினை மீறி, தங்களுக்கென்று ஒரு தனி ஆலயத்தைக் கட்டிக் கொண்டனர். (யூதர்களுக்கு எருசலேம் ஆலயம் ஒன்றுதான் உண்மையான ஆலயம் என்று உப ஆகமம் கூறுகிறது). இவர்கள் தங்கள் வழிபாட்டைக் கானானியர் வழிபாட்டு சடங்குமுறைகளையும் பின்பற்றி அமைத்திருந்தனர். கனானியரின் அனத் என்ற தெய்வம் யூதர்கள் வழிபட்ட ஆண்டவர் என்பவருடன் உறவு கொண்டவர் என்று விளக்கம் கொடுத்தனர்.

எலபன்டைனில் கிடைத்தச் சுவடிகளில் எசம்பெத்தேல், ஏரம்பெத்தேல் அனத் பெத்தேல் என்ற பெயர்கள் காணப்படுகின்றன. ஆல்பிரைட் என்ற அறிஞர், இவை 'இறைவ

னின் வீட்டின் பெயர்', 'இறைவன் வீட்டின் தூய்மை', 'இறைவன் வீட்டின் அடையாளம்' என்ற எபிரேயப் பெயர்கள் தழுவிய பெயர்கள் என்று விளக்கம் தருகிறார்.

கி.மு.525-இல் காம்பிசேஸ் என்ற பாரசீக அரசன் எகிப்தின் மீது படையெடுத்து அதை வெற்றி கொண்டார். அப்போது எலபன்டைனில் வாழ்ந்த யூதர்களை அவன் தாக்கவேயில்லை. அதற்கு மாறாக அவர்களுக்கு சாதகமாகவே பாரசீக அரசர்கள் நடந்து வந்துள்ளார்கள். உதாரணமாக கி.மு.419-இல் இரண்டாம் தாரியு அரசன் அர்சாமெஸ் என்றவிடத்தின் ஆளுனனுக்கு அரச ஆணைகள் அனுப்பியபோது, யூதர்களின் புளியாத அப்பத்திரு விழாவைப் பற்றி அறிவுறுத்தி எழுதியனுப்பினார்.

கி.மு.410-இல் எலபன்டைனில் சூழ்நிலை மாறியது. அர்சாமெஸ் என்ற ஆளுநனுக்குப் பதிலாக விட்ரேங்கு என்ற பாரசீக அலுவலன் ஆளுநனாக நியமிக்கப்பட்டான். அவனின் காலத்தில் எலபன்டைனிலிருந்த யூதர்களின் ஆலயத்தை எகிப்தியர்கள் இடித்து விட்டனர். எலபன்டைனில் கண்டெடுக்கப்பட்ட சில கடித சுவடிகள், இச்சூழ்நிலையில் தங்களின் ஆலயத்தை மீண்டும் கட்டி எழுப்பும் முயற்சியில் ஈடுபட்டனர் எலிபன்டைன் யூதர்கள் என்று கூறுகிறது.

எலிபன்டைன் யூதர்கள், அப்போது எருசலேமில் பெரிய குருவாக விளங்கின எலியாசிபு மகன் யோகனானுக்குப், புதிய ஆலயம் கட்ட உதவி வேண்டிக் கடிதம் எழுதினர். இக்கடிதத்திற்குப் பெரிய குரு பதில் எழுதவேயில்லை. ஏனென்றால் யூதர்களுக்கு, எருசலேம் ஆலயத்தைத் தவிர்த்து மற்றொரு ஆலயத்தை நினைத்துக் கூட பார்க்க முடியாது. பெரியகுருவிடமிருந்து மறுமொழி வராத காரணத்தால் பகோவா என்ற யூதேயாவின் ஆளுநனுக்கு உதவிக் கேட்டுக் கடிதம் எழுதினர். இத்துடன் சமாரியாவின் ஆளுநர்களுக்கும் புதிய ஆலயம் கட்ட உதவிக் கேட்டு எலபன்டைன் யூதர்கள் கடிதம் எழுதினர். சம்பல்லாத்து தெலாயா, செலமியா என்பவர்களின் புதல்வர்கள் அப்போது சமாரியாவின் ஆளுநர்களாக விளங்கினார்கள். இவ்வாளுநர்கள், தங்களால் இயன்ற உதவிகளை எல்பன்டைனில் எழுப்பப்பட்டுக் கொண்டிருந்த புதிய ஆலயத்திற்காக அனுப்பிவைத்தனர். இவ்வாலயம் கட்டும் பணிக்கு பாரசீகர்களின் உதவி தொடர்ந்து கிடைத்திருக்க வாய்ப்பில்லை. ஏனென்றால் பாரசீகர்களின் ஆட்சி கி.மு.400 முதல் எகிப்தில் இல்லாமல் எகிப்தியர் பாரசீகர்களைத் தோற்கடித்து அவர்களை நாட்டிலிருந்து விரட்டியடித்தனர்.

விவிலியத்தில் இக்காலத்தைப் பற்றி விரிவாக கொடுக்கப்படாததைப் போலவே, யோசிபசின் வரலாற்றுக் குறிப்பிலும் பாரசீகர்களின் காலத்தைப் பற்றி சுருக்கமாகவே கூறப்பட்டுள்ளது. இவர் கூறும் நிகழ்ச்சிகள், உண்மையாகவே நடத்திருக்க முடியாது என்று சில அறிஞர்கள் கருத்துத் தெரிவிக்கிறார்கள். உதாரணமாக, யோகனான், யோசுவா என்ற இரு சகோதரர்களைப் பற்றி எழுதிவைத்திருக்கிறார் யோசிபஸ். யோசுவா எருசலேமின் பெரிய குருவாக, பாரசீக ஆளுநர் பகோவா என்பவனால் நியமிக்கப்பட்டிருந்தார். ஆனால் அவருடைய சகோதரன் யோகனான் யோசுவாவை எருசுலேம் ஆலயத்திலேயே வைத்து வெட்டிக் கொலை செய்து விட்டான். இதையறிந்த பாரசீக ஆளுநன் பகோவா தானே ஆலயத்திற்குள் நுழைந்து, யோசுவானின் கொலையால் உண்டானக் குழப்பத்தைத் தீர்த்து வைத்தான். தவறு செய்தவர்களுக்கு உரிய தண்டனையும் விதித்தான் பகோவா. இந்நிகழ்ச்சியை ஒரு குறிப்பிட்ட நோக்கத்திற்காக யோசிபஸ் உருவாக்கி சொல்லியிருக்க வேண்டும் என்கின்றார்கள் சில அறிஞர்கள். அதாவது எஸ்ராவை, முதலாம் அர்த்தாசெருசு கி.மு.400-இல் எருசலேமிற்கு அனுப்பிவைத்தார். எருசலேமில் குழப்பங்கள் நிலவிவந்ததால் அதை அமைதி செய்யும் முகத்தான் எஸ்ரா அனுப்பி வைக்கப்பட்டார் என்று கூறுவதற்காகவே யோசுவா, யோக

னான் ஆகியவர்களின் கதையை யோசிபஸ் எழுதினார் என்பர் ஒரு சில அறிஞர்கள்.

இஸ்ராயேல் வரலாறு - VI - கிரேக்கர் காலம் *(கி.மு.333-63)*

*1.* அலெக்ஸாண்டர் முதல் செலுக்கியர்களின் ஆக்கிரமிப்பு வரை *(333-175):-*

பாரசீக அரசர்கள் கிரேக்க நாட்டில் படையெடுத்துச் சென்றதைப் பற்றி எரதோத்துசு, லிவி என்ற ஆசிரியர்கள் தங்களது நூல்களில் குறிப்பிட்டு எழுதியுள்ளனர். கிரேக்க நாடுகளின்மீது படையெடுத்த பாரசீகர்கள், அப்போர்களினாலேயே தோல்வி கண்டு மண்ணைக் கவ்வினர்.

மக்கதோனியாவின் அரசன் பிலிப்பு என்பவர், கிரேக்க நாடுகள் எல்லாம் ஒன்று சேர்ந்து ஒரே நாடாக விளங்க ஏற்பாடு செய்தார். பிலிப்புவின் மகன் அலக்சாந்தர் கிரேக்கப் பேரரசு, அடுத்து கிரேக்க நாட்டையும் தாண்டி மற்ற நாடுகளையும் கைப்பற்ற தன் இராணுவத்தை இயக்கினார். தன் நாட்டின்மீது படையெடுத்து வந்து அதைப்படித்திருந்த, பாரசீகர்களைக் கிரானிகுஸ் என்ற ஆற்றில் தோற்கடித்தார் அலக்சாந்தர். இவ்வாறு பாரசீகர்களை முறியடித்து சிறிய ஆசியாவைக் கைப்பற்றினார். கி.மு.333-இல் ஈசுஸ் என்ற இடத்தில் நடந்த போரிலும் அலக்சாந்தர் வெற்றிமாலைசூடி சீரியா நாட்டில் அடியெடுத்துவைத்தார்.

யூதேய எழுத்தாளர் யோசிபஸ் அலக்சாந்தர் எருசலேம் வழியாக எகிப்திற்குப் படையுடன் சென்றதைத் தனது நூலில் குறிப்பிட்டுள்ளார். கி.மு.331-இல் எகிப்தியநாட்டில் தனது பெயரில் அலக்சாந்திரியா என்ற புதிய பொழிவான நகரை உருவாக்கி அமைத்துவிட்டு மீண்டும் வடக்கு நோக்கி தனது நாடுகள் பிடிக்கும் பயணத்தை ஆரம்பித்தார் அலக்சாந்தர். இப்பயணத்தில் திகிரிசு நதியின் அடுத்த கரையில் அரபெலா பாரசீகர்களைச் சந்தித்தார் அலக்சாந்தர். அப்போரில் பாரசீகர்களை அடியோடு தோற்கடித்தார். அவர் வெற்றிபயணம் அத்துடன் நிற்கவில்லை. இந்தியாவின் சிந்து நதிவரை படையெடுத்துச் சென்றார். அங்கு தன் முன்னேற்றத்திற்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டு, தன் நாடு நோக்கித் திரும்பிக் கொண்டிருந்தபோது கி.மு. 323-இல் பாபிலோனியாவில் அவர் இறந்தார்.

வரலாற்று ஆசிரியர் யோசிபஸ் தனது நூலில் எருசலேம் நகரின்வழியாக அலெக்சாந்தர் எகிப்திற்குச் சென்றதாகக் குறிப்பிடுகிறார். இக்கூற்றைப் பற்றி வரலாற்று ஆசிரியர்கள் நடுவில் பெருத்த விவாதம் உண்டு. ஆனால் இவற்றைவிட அதிகமாக, சமாரியர்கள் எப்போது தனியாகப் பிரிந்தார்கள்? அவர்கள் கெராசிம் நகரில் எப்போது தங்களின் ஆலயத்தை எழுப்பினார்கள்? என்ற கேள்விகள் சரியான பதிலைப் பெற முடியாதக் கேள்விகளாகவே நிற்கின்றன.

சமாரியர்கள், யூதர்கள் இவர்களுக்கிடையான விரோதம் நாடு மீண்டும் அமைக்கப்படுவதற்கு முன்பிருந்தே வலுக்க ஆரம்பித்தது. கி.மு. 539-இல் யூதேயமக்கள் பாபிலோனியாவிலிருந்துத் திரும்பி வந்து, புதிய ஆலயம் கட்ட ஆரம்பித்தபோது இந்த விரோதம், பகைவெறியாக மாறியது. ஆனால் சமாரியாவில் கெராசிம் நகரில் எப்போது தங்களின் ஆலயத்தை சமாரியர்கள் கட்டினார்கள் என்பதைத் துல்லியமாகக் கூற முடியாத நிலையில் உள்ளோம். ஏனென்றால் சமாரியர்கள் தங்களின் வேதநூலாக தற்போது ஐந்நூல்களை மட்டும் தான் ஏற்றுக்கொள்கின்றனர். ஆனால் பாரசீகர்களின் காலத்திலும் அதற்கு முன்பாகவும் ஐந்நூல்களை மட்டும் வரையறுத்துத் தங்களின் வேதநூலாகப் பயன்படுத்திய பழக்கம் இல்லை. எனவே கிரேக்கர்கள் பாலஸ்தீனத்தைத் தங்களின் ஆட்சியின் கீழ் வைத்திருந்தக் காலத்தில்தான் சமாரியா யூதேயா என்ற தெளிவான பிரிவும், இதனால் சமாரியர்கள் தங்களுக்கென்று தனியாக கெராசிம் நகரில் ஆலயம் கட்டிய சூழ்நிலையும் உண்டானது. தற்போது கெராசிம் நகரின் ஆலயம் அமைந்திருந்தயிடத்தில் தொல்பொருள் ஆராய்ச்சி நடந்து வருகிறது. ஒருசில அறிஞர்கள் கி.மு. இரண்டாம் நூற்றாண்டில்தான் இத்தகைய பிரிவினை உண்டானது என்பர்.

1962-ஆம் ஆண்டில் வாடி எத்தவியா என்ற குகையில் சமாரியா புல்தான் பழம் சுவடியினைக் கண்டுபிடித்தனர். அதில் காணப்படும் வசனங்கள் சமாரியர்களுக்கும் அலக்சாந்தர் அரசனுக்கும் தொடர்புயிருந்திருக்க வேண்டும் என்பதைச் சுட்டிக் காட்டுகின்றன.

வரலாற்று ஆசிரியர் யோசிபசின் கூற்றுப்படி சமாரியர்கள் அலக்சாந்தருக்கு எதிர்ப்பு தெரிவிக்காமல் அவருக்கு அப்படியே அடிபணிந்தனர். ஆனால் இப்பணிவு வெகுநாட்கள் நீடிக்கவில்லை. அலக்சாந்தர் சமாரியாவை ஆளுவதற்கு நியமித்துச் சென்ற ஆளுநருக்கு எதிராகப் புரட்சிக்குரல்கள் வெடித்தன. இதைக் கேள்வியுற்ற அலக்சாந்தர் தான் எகிப்தை வெற்றிக்கொண்டு திரும்பி வரும் வேளையில் தனக்கு எதிர்ப்பு தெரிவித்த சமாரியர்களுக்குச் சரியான பாடம் புகட்டினார். புரட்சியாளர்களைச் சுத்தமாக அடக்கி வைத்துச் சமாரிய நகரைச் சுத்தமாகத் தரைமட்டமாக்கினார். தொல்பொருள் ஆராய்ச்சியில் சமாரியா நகரம் கிரேக்க மரபுப்படி பிறகு கட்டியெழுப்பப்பட்டுள்ளது தெரியவருகிறது. அத்தோடு அந்நகரில் கிரேக்க நாட்டைச் சேர்ந்த மக்கதோனியர்கள் குடியமர்த்தப்பட்டதும் தெரியவந்துள்ளது.

இதேவேளையில் அலக்சாந்தரின் படையெடுப்பிற்குப் பயந்து ஓடியவர்கள் செக்கேம் நகரில் தஞ்சம் புகுந்தனர். அவ்வாறு அங்குக் குடியேறிய சமாரிய மக்கள் செக்கேம் நகரைச் சிறப்பாகக் கட்டியெழுப்பினார்கள். அலெக்சாந்தருக்கு அஞ்சி ஓடியவர்களில் பலர் செக்கேம் நகருக்குச் செல்லும் வழியிலேயே தடுத்து நிறுத்தப்பட்டனர். அவ்வாறு நிறுத்தப்பட்டவர்கள் வாடிதாலியா என்றவிடத்தில் வெட்டிக் கொலை செய்யப்பட்டனர். இதற்கெல்லாம் தொல்பொருள் ஆராய்ச்சி சான்று பகர்கின்றது. அலக்சாந்தரின் இறப்பிற்குப்பிறகு திறமையற்றவர் பலர், அவர் அமைந்த பேரரசை ஆண்டு வந்தனர். வல்லமையற்றவர்களால் அப்பேரரசை கட்டிக் காக்க முடியவில்லை. எனவே அலக்சாந்தர் சேர்த்து வைத்த பரந்த பேரரசு நான்கு பாகங்களாக உடைந்தது. இந்நான்கில் இரண்டு பாகங்களில் நடந்து வந்த அரசுகள்தான் விவிலிய வரலாற்றுடன் தொடர்பு கொண்டவை. எனவே அலக்சாந்தர் உருவாக்கிய பேரரசிலிருந்து பிரிந்த இந்த இரண்டு அரசுகள், பாலஸ்தீன வரலாற்றுடன் எவ்வாறு தொடர்புக் கொண்டிருந்தன என்பது மட்டும் இங்குக் காண்பிக்கப்படும். லாகுஸ் என்பவரின் மகன் தோலமி என்ற அலக்சாந்தரின் தளபதி எகிப்து நாட்டினை வளைத்துக் கொண்டு, அதன் அரசனாகத் தன்னை அறிவித்துக் கொண்டார். அதே போல செலூக்கு என்ற தளபதி ஆசிய நாடுகளைப் பிடித்துக்கொண்டு அதன் அரசனாகத் தன்னை அறிவித்துக் கொண்டார். இந்த தோலமி, செலூக்கு அரசுகள்தான் பாலஸ்தீனப்பகுதியைத் தங்கள் நாட்டின் பகுதியாக மாற்றிக் கொள்ள போட்டியிட்டன. 1,2 மக்கபேயர் ஆகமங்கள் செலூக்கஸ் மன்னர்களின் ஆட்சியில் நடந்த நிகழ்ச்சிகளைதான் குறித்துக் கூறுகின்றன. கி.மு. 312-311-ஆம் ஆண்டுகளில்தான் செலூக்கஸ் அரசர்களின் ஆட்சி ஆரம்பமானது.

கி.மு. 300 முதல் 200 வரை தோலமி வழிவந்த அரசர்களின் அடியில் யூதர்கள் குடிமக்களாக வாழ்ந்தனர். தானியேல் ஆகமம் 11-ஆம் அதிகாரத்தில் காணப்படுபவை, இக்காலத்தில் நடந்த நிகழ்ச்சிகளின் கருத்துச் சுருக்கம் என்று சொல்லலாம். இச்சமயத்தில்தான், யூதேயாவை விட்டு வெளிநாடுகளில் வாழ்ந்து வந்த யூதர்கள், குறிப்பாக அலக்சாந்திரியாவில் வாழ்ந்து வந்த யூதர்கள் எபிரேய மொழியிலிருந்த பழைய ஏற்பாட்டினை கிரேக்க மொழியில் மொழிபெயர்த்திட வேண்டும் என்ற அவசியத்தை உணர்ந்தனர்.

பாலஸ்தீனத்தில், யூதர்களின் வாழ்க்கை பழைய மாமூல் வாழ்வாகவே இந்நாட்களில் அமைந்திருந்தது. இப்போது யூதர்கள், சமயத்தை மையமாக வைத்து வாழ்ந்த ஒரு சமதாயமாக விளங்கினார்கள். இச்சிறுசமுதாயத்திற்கு பெரிய குரு என்பவர் தலைவராக விளங்கினார். இவர் சமய ஒழுங்குகளுக்கும், வழிபாட்டுச் சடங்குகளுக்கும், மற்ற

சமுதாய வாழ்விற்கும், மக்களை வழிநடத்தும் அதிகாரம் கொண்ட தலைவராக விளங்கினார். கெருசியா என்ற பெரியவர்களின் குழு பெரிய குருவிற்கு நிர்வாகங்களில் உதவிச் செய்யும் அமைப்பாக விளங்கியது. இவ்வாறு யூதேயா ஒரு சிறு சமுதாயமாக விளங்கியது. இப்போது மற்ற சுற்று வட்டார நாடுகளுடன் அது அதிக தொடர்பு வைத்துக் கொள்ளாது வாழ்ந்து வந்தது. ஆனால் கிரேக்கக் கலாச்சாரம் யூத மக்களின் மத்தியில் அதிகமாக வேரூன்றி வளர ஆரம்பித்தது.

கிரேக்கக் கலாச்சாரம் பாலஸ்தீனத்தில் படரத் தொடங்கியதன் முக்கிய அடையாளம் பாலஸ்தீனத்தில் நகரங்களில் சுய ஆட்சி முறை பல இடங்களில் தோன்றியதாகும். உதாரணமாக பெலிஸ்த்தியர் நாட்டில் காசா, அசுதோது, அசுக்கலோன் என்ற நகரங்கள் கிரேக்கரின் நகர சுய ஆட்சி முறையைப் பின்பற்றி அமைக்கப்பட்டன. மேற்குக் கடலோரப்பகுதியில் யோப்பா, தோலமாயிஸ் என்ற நகரங்களும் சமாரியா, ஸ்கூத்தா பொலி என்ற உள்நாட்டில் அமைந்திருந்த நகரங்களும் கிரேக்கர்களின் நகர சுய ஆட்சி முறையைப் பின்பற்றி தங்களின் நிர்வாகங்களைச் செய்தன.

*1. மக் 1:13-15* என்ற பகுதியிலும் *2. மக் 4:10-15* என்ற பகுதியிலும் கிரேக்கர்களின் பழக்கவழக்கங்கள் எருசலேமிலேயே பரவி ஆரம்பித்ததைப் பற்றிக் குறிப்புகளைப் பார்க்கிறோம். இதனால் யூதர்களின் பாரம்பரியமான சமய கோட்பாடுகள், பழக்கங்கள் பெரிதும் பாதிக்கப்பட்டன. இதை, யூதர்கள் விரும்பவில்லை. எனவே கிரேக்கக் கலாச்சாரத்தை ஏற்றுக்கொண்டவர்கள் என்றும், யூதர்களின் பழைய பாரம்பரியத்தைக் காப்பாற்றுகின்ற கசிதிம் என்ற பிரிவினர் என்றும் மக்களிடையே பிளவுகள் உண்டாயின *(1 மக் 2:42)*.

தோயியாது என்ற குடும்பத்தைச் சார்ந்தவர்கள் கிரேக்கக் கலாச்சாரம் கலந்த புதிய கலப்படமான யூத முறைக்கு முன் மாதிரியாக விளங்கினர். பாபிலோனியாவிலிருந்து திரும்பி வந்த யூதமக்களைத் தலைமையேற்று நடத்தி வந்த நெகேமியாவிற்குப் பல எதிரிகள் இருந்தனர். அவர்கள் அனைவரும் அராக்கு எல்எமிர் என்ற பழைய அம்மோனியர் நகரில் சேர்ந்து வாழ்ந்தனர். சீனோ என்ற பழங்காலப் புல்தாள் சுவடியில் இக்காலத்தின் சூழ்நிலையைப் பற்றிய ஓர் தகவல் நமக்குக் கிடைக்கிறது. அதாவது கி.மு. மூன்றாம் நூற்றாண்டிலேயே ஆளுநர்கள் இப்பகுதிகளுக்கு நியமிக்கப்பட்டு அவர்கள் மூலமாக நிர்வாகம் நடத்தப்பட்டிருக்கிறது. வரலாற்று ஆசிரியர் யோசிபசின் கூற்றுப்படி, யோசேப்பு என்ற ஒருவர் கி.மு. *245-221* ஆண்டுகளில் அரசாண்ட மூன்றாம் தோலமி என்ற அரசனுடன் மிக்க நட்புறவுக்கொண்டு வாழ்ந்து வந்துள்ளார். அதனால் அவ்வரசன் யோசப்புக்கு பாலஸ்தீனத்தில் வரிவசூலிக்கும் உரிமையை அளித்தார். இந்த யோசேப்பு, தனக்குக் கிடைத்த நல்ல தருணத்தைச் சரியாகப் பயன்படுத்திக்கொண்டார். இதனால் நிறைய செல்வத்தைச் சேர்த்துக்கொண்டார். வரிவசூலித்து செல்வந்தனாகிய யோசேப்பின் மகன் இரிக்கானு,- ஒருவேளை யோசேப்பின் பேரனாகவும் இருந்திருக்கலாம்-எஸ்போன் என்றவிடத்திற்கு வடகிழக்கிலுள்ள அராக்கு எல்-எமிர் என்ற கோட்டைக் கொத்தளத்தைச் சரி செய்து மீண்டும் கட்டியெழுப்பியுள்ளான். எழுத்தாளர்யோசிபஸ், இரிக்கானு அராக்கு-. ஏல்-எமிர் என்ற கோட்டையைப் புதிதாகவே கட்டியெழுப்பினார் என்று கூறுகிறார். *2. மக் 3:11*-இல் வரும் குறிப்பு இரிக்கானு எருசலேம் ஆலயத்தின் சொத்துக்களையெல்லாம் தன்னிடம் பாதுகாத்து வந்தார் என்று கூறுகிறது. மக்கபேயர்கள் கிரேக்க கலாச்சார கலப்படத்திற்கு எதிராகப் புரட்சி செய்ததால், தோயியாது குடும்பத்தினர் செல்வாக்கெல்லாம் இல்லாது போனது. தொடர்ந்து அந்தியோக்கு எப்பிபான் என்ற கிரேக்க அரசன் அரியணையேறியபோது தோபியது குடும்பத்தின் சொத்துக்களை எல்லாம் பறிமுதல் செய்தான்.

கி.மு. 200-ஆம் ஆண்டில, செலூக்கியப் பிரிவைச் சேர்ந்த கிரேக்க அரசன் மூன்றாம்

அந்தியோகுஸ் என்பவன் ஐந்தாம் தோலமி என்ற அரசனை, யோர்தான் ஆறு ஆரம்பமாகும் இடத்திற்கு அருகிலுள்ள பணியோன் என்றவிடத்தில் தோற்கடித்தான். இதனால் பாலஸ்தீனம் தோலமியர் கைகளினின்று, செலுக்கியரின் ஆட்சிக்கு மாறியது. செலூக்கிய குடும்பத்தைச் சேர்ந்த அந்தியோக்கு. பாலஸ்தீனத்தைத் தன் கைக்குள் பெற்றவுடன் யூதேயாவிற்கும், எருசலேமிக்கும் பலவித நன்மைகளைச் செய்துள்ளான். எருசலேம் ஆலயத்தைப் பழுதுபார்த்து புதுப்பிக்க நிதியைத் தந்து உதவினான். அத்தோடு ஆலயத்தின் செலவினங்களுக்கு உதவித் தொகையும் அளித்தான். யூதேயாவில் அப்போது நடைமுறையிலிருந்த பெரிய குருவைத் தலைமையாக வைத்து நடந்துவந்த நிர்வாக முறையைத் தொடர்ந்து நடக்க அனுமதி அளித்தான். அந்தியோக்கு அத்துடன் யூதத் தலைவர்களுக்கு வரிவிலக்குச் சலுகையையும் அளித்தான். இச்செய்திகளையெல்லாம் நமக்குத் தருகிறார் வரலாற்று ஆசிரியர் யோசிபஸ்.

அந்தியோக்கு அரசன் பாலஸ்தீனத்தில் அடியெடுத்து வைத்த போது, அப்போது பேரரசாக முனைத்து வந்துக்கொண்டிருந்த உரோமைய பேரரசுடன் மோத வேண்டியிருந்தது. கி.மு. 188-இல் அபாமேயா என்றவிடத்தில் உரோமையர்களுக்கு அடிபணிந்து, அந்தியோக்கு ஓர் ஒப்பந்தத்தில் கையொப்பமிட்டான். அவ்வொப்பந்தப்படி, சிறிய ஆசியா பகுதியை அந்தியோக்கு, உரோமையர் கையில் ஒப்புவித்து, அவ்விடத்திலிருந்து அவன் அகன்றுக் கொள்ள வேண்டியிருந்தது. அத்துடன் ஒருபெருந்தொகையைக் கப்பமாக உரோமையர்களுக்குக் கட்டவும் வேண்டியதாயிற்று. இப்பெருந்தொகையைச் சேர்ப்பதற்காக பலயிடங்களுக்குப் படையெடுத்துச் சென்றான் அந்தியோக்கு. அவன் கி.மு. 187-ஆம் ஆண்டு ஏலாம் என்றவிடத்தில் இறந்தான். அவனைத் தொடர்ந்து அவன் மகன் நான்காம் செலூக்கு அரசனாக அரியணையேறினான். அவன் கி.மு. 187 முதல் 175 வரை பன்னிரண்டு ஆண்டுகள் ஆட்சி செய்தான். செலூக்கஸ் அரியணையேறியதும், உரோமைய அரசு அவனின் தகப்பன் அந்தியோக்கு செலுத்த வேண்டிய பாக்கிக் கப்பத்தொகையை உடனடியாகக் கட்ட வற்புறுத்தியது. அத்துடன் நிற்காது நான்காம் செலுக்கசின் தம்பி அந்தியேக்குவைக் கப்பத்திற்குப் பணயமாக உரோமையில் பிடித்து வைத்திருந்தது. இதனால் நான்காம் செலூக்கஸ் அரசன் தனது அமைச்சர்களில் ஒருவரான எலியேதோரசு என்பவனை எருசலேமிற்குச் சென்று எருசலேம் ஆலயநிதியிலிருந்து தான் கப்பம் கட்டுவதற்காக பணம் வசூலித்து வர விரும்பினான். இதனை 2 மக். மூன்றாம் அதிகாரத்தில் பார்க்கிறோம்.

ஆனால் நான்காம் செலூக்கசின் அந்தரங்க அமைச்சனாக விளங்கிய எலியதோரசு தன் அரசன் செலுக்கஸைச் சதிசெய்து கொலை செய்தான். இந்த சதிக்குப் பின்னால் செலூக்குவின் தம்பி அந்தியோக்கு. தன் அண்ணன் கொலை செய்யப்பட்டவேளையில் உரோமையிலிருந்து விடுதலைப் பெற்று நான்காம் அந்தியோக்கு என்ற பெயருடன் அரியணையில் அமர்ந்தான். இந்த நான்காம் அந்தியோக்கு எப்பிபான் என்ற புனைப்பெயரையும் தன் பெயருடன் சேர்த்துக் கொண்டான். எப்பிபான் என்றால் வெளிப்பாடு என்பது பொருள். ஒலிம்பிய சேயுஸ் என்ற கிரேக்க தேவதையின் வெளிப்பாடு என்று அப்பெயருக்கு நான்காம் அந்தியோக்கு விளக்கம் தந்தான். தற்பெருமைப்பிடித்த இவனுக்கு மக்கள் வேறுபட்டபெயர் வைத்தார்கள். அவன் தன்னை எப்பிபான் என்று அழைக்கச் சொன்னான், ஆனால் மக்கள் அவனை எப்பிமான் என்று அழைத்தனர். எப்பிமான் என்றால் பைத்தியம்பிடித்தவன் என்று பொருள். இந்த அந்தியோக்கு எப்பிபான் இரண்டு கொள்கைகளை தீவிரமாகச் செயலாக்க விரும்பினான். ஒன்று தனது ஆட்சிக்குட்பட்ட மக்களை எல்லாம் ஒற்றுமைப்படுத்துவது. இரண்டாவது தன் அரசை விரிவுபடுத்துவது. தன் ஆட்சியின் கீழுள்ள மக்கள் ஒற்றுமையுடன் வாழ வேண்டுமென்றால் அவர்கள் தங்களின் பாரம்பரிய கலாச்சாரத்தைக் கலைத்துவிட்டு, கிரேக்கக் கலாச்சாரத்

தையே பின்பற்ற வேண்டும். அதுவே நாட்டின் ஒற்றுமையைக் கொண்டு வரும் என்று வலியுறுத்தினான் அந்தியோக்கு எப்பிபான்.

இவ்வாறு தன் அரசைப் பரப்பிடவும் மக்களிடையே ஒற்றுமையை நிலைநாட்டவும், இத்திட்டங்களுக்கு நிறைய நிதித் தேவைப்பட்டது.

*2. மக்கபேயரின் புரட்சி (கி.மு. 175-135):-*

அந்தியோக்கு எம்பிபானின் பேராசை மிக்க திட்டங்களுக்கு யூதேயாவின் உள்நாட்டுச் சிக்கல்கள் அவனுக்கு உதவிசெய்வதாய் விளங்கின. மூன்றாம் ஒனியா என்பவர் எபிபானஸ் அரியணையேறியபோது எருசலேமில் பெரிய குருவாக விளங்கினார். இதற்காக செலூக்கிய அரசர்களுக்கு கையூட்டுக் கொடுக்கவும் தயாராகயிருந்தார். இவ்வாறு ஒனியாவும், யாசோனும் போட்டி போட்டுக் கொண்டு அந்தியோக்கு எப்பிபான் முன்பாக நின்றனர். எப்பிபான் அரசன் அப்போது பெரியக் குரு பதவியிலிருந்து ஒனியாவை நீக்கிவிட்டு, யாசோனை தலைமைக் குருவாக நியமித்தான். இந்த யாசோன் கி.மு. 174 முதல் 171 வரை மூன்றாண்டுகள் தலைமைக்குருவாக விளங்கினார். இவர் கிரேக்கக் கலாச்சாரத்தை யூதர்களிடம் பரப்புவதில் மிகத் தீவிரம் காட்டினார். இச்சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி எப்பிபான் யூதேயா மக்கள் அனைவரும் கிரேக்கக் கலாச்சாரத்தை முழுமையாகப் பின்பற்ற வற்புறுத்தினான். யூதேயாவின் தலைநகரான எருசலேம் கிரேக்கக் கலாச்சாரத்தால் புது வடிவம் பெற்றது. எருசலேம் மக்கள் அந்தியோக்கிய நகரின் குடிமக்களாகவும் மாறிட மக்களுக்கு வசதிசெய்துத் தரப்பட்டது. இதனை 2. மக் 4:9-16 என்ற பகுதியில் பார்க்கிறோம்.

அதே நேரத்தில் யூதேயாவின் யூதர்களில் பெரும்பாலானோர் தங்களின் பாரம்பரியக் கொள்கைகளைத் தவறாமல் கடைபிடித்து வந்தனர். குறிப்பாக கசிதியர் தங்களின் பாரம்பரியங்களைக் கடைபிடித்து வாழ்வதில் மிகத் தீவிரம் காட்டினார். (காண் 1 மக் 2:42; 7:13).

இதற்கிடையில் எப்பிபான் அரசனுக்கு லஞ்சம் கொடுத்து தலைமைக்குருவான யாசோனுக்கு ஆபத்து ஏற்பட்டது. அரசன் எப்பிபான் தலைமைக் குருவாக விளங்கிய யாசோனுக்குத் தெரியாமலேயே மெனலாவு என்பவரைப் புதிய தலைமைக் குருவாக நியமித்தான். இதையறிந்த யாசோன் பயந்துக் கொண்டு யோர்தானின் அக்கரைப் பகுதிக்குத் தப்பித்து ஓடினார். புதிதாக வந்த மெனலாவு என்ற தலைமைக்குரு கிரேக்கக் கலாச்சாரத்தை எருசலேமிலும் யூதேயாவிலும் முழுவீச்சுடன் பரப்புவதில் ஆர்வம் காட்டினார். அத்துடன் யாசோனுக்கு முன் பாகத் தலைமைக் குருவாயிருந்த மூன்றாம் ஒனியாவையும் கொலை செய்வதற்கு ஏற்பாடு செய்தார்.

மூன்றாம் ஒனியாவைக் கொலை செய்தவன் அந்திரோனி என்பவன் ஆவான். இவனை எப்பிபான் அரசன் அடையாளம் கண்டுபிடித்து அவனைக் கொலைத் தண்டனைக்கு ஆளாக்கினான். ஆனால் எப்பிபானின் கொடுமையான ஆட்சியால் மக்கள் மத்தியில் வெறுப்பு தலை தூக்கி நின்றது. இந்த வெறுப்பு புரட்சிவெடிப்பதற்கு வேண்டிய சூழ்நிலையைத் தயாரித்துத் தந்தது.

எப்பிபான் எகிப்தின் மீது கி.மு. 169-ஆம் ஆண்டு படையெடுத்துச் சென்றான். அவன் அங்கிருந்து திரும்புகையில், எருசலேமின் தலைமைக் குரு மெனலாவின் அனுமதியுடன் எருசலேம் ஆலயத்திலிருந்த பொருட்களையும் அணிகலன்களையும் அபகரித்துச் சென்றான். இதற்கிடையில் தலைமைக் குரு பதவியை இழந்துவிட்ட யாசோன் எருசலேம் நகரைப் பிடித்து தன்னாட்சியில் வைக்க முயற்சித்தார். இதனால் மக்கள் மத்தியில் நிறைய குழப்பங்கள் நிலவி வந்தன. எனவே எருசலேம் கோட்டையில் சீரிய நாட்டு துருப்புக்களின் ஒருபகுதி அங்கு நிறுத்தி வைக்கப்பட்டது.

கி.மு. 168-இல் எப்பிபான் இரண்டாம் முறையாக எகிப்திற்கு படையெடுத்துச் சென்றான். இச்சமயத்தில் உரோமைத் தள

பதி போப்பிலியு என்பவன் எபிபானஸ் உடனடியாக எகிப்தை விட்டு வெளியேற வேண்டும், இல்லையென்றால் பின் விளைவுகளை ஏற்க வேண்டியிருக்கும் என கடுமையான எச்சரிக்கை கொடுத்தார். இதனால் எப்பிபான் உடனடியாக பாலஸ்தீனத்திற்குத் திரும்பி வந்தான். இச்சமயத்தில் யூதேயமக்களை அடக்கிவைப்பதற்கு கடுமையான நடவடிக்கையெடுத்தான்.

இப்போதுதான் யூதமக்கள் தங்களின் சமயத்தின் பெயரால் பெருத்த வாதனைகளுக்கு ஆளானார்கள். யாவே இறைவனுக்கு பலி செலுத்துதல், விருத்தசேதனம் முதலிய சடங்குகளை யூதமக்கள் செய்யக் கூடாதென்று சட்டபூர்வமாக தடைசெய்யப்பட்டது. இதை மீறி தங்களின் பாரம்பரியச் சமய பழக்கங்களைப் பின்பற்றுகிறவர்கள் மரண தண்டனைக்கு ஆளாவார்கள் என்றும் எச்சரிக்கப்பட்டது. இதற்கெல்லாம் முடிவைத் தாற்போல எருசலேம் ஆலயத்தில் கிரேக்கக் கடவுள் சேயுஸ் என்பவருக்கு ஒரு பீடம் அமைக்கப்பட்டது.

இவ்வாறு எப்பிபான் யூதர்களின் மறையை அழிக்க முயன்றபோது, யூதர்களில் பலர் தங்களின் சமயத்தைக் காத்திட தங்கள் உயிரையும் இழக்கத் தயாராக இருந்தனர். இச்சூழ்நிலையில்தான் எலயாசர் மற்றும் ஏழுபிள்ளைகளின் தாய் எவ்வாறு மரணத்தின் பிடியிலும் தங்கள் விசுவாசத்தை சற்றும் விட்டுக்கொடுக்காது, உறுதியாக நின்றனர் என்று இரண்டாம் மக்கபேயர் ஆகமம் கூறுகிறது *(2 மக் 18-7; 42)*. பாரம்பரியத்தை தங்கள் உயிரெனக் கருதிய கசிதியர்கள் இவ் வாதனை நேரத்திலும் தளர்ந்திடவில்லை. சனிக்கிழமை ஓய்வுநாளில் அவர்கள் போருக்குச் செல்லமாட்டோம் என்று பிடிவாதமாய் நின்றதை முதல் மக்கபேயர் ஆகமம் தெரிவிக்கிறது *(1 மக் 2:29-38)*.

இக்காலத்தில் தான் மக்கபேயர் குடும்பத்தினர் புரட்சிச் சங்கு ஊதினர். இச்சங்கிற்கு யூதர்களில் உறுதிக்கொண்ட உள்ளத்தினர் பலர் பதில் கொடுத்தனர். மக்கபேயர் குடும்பத்தின் தந்தை மத்தத்தியா ஆவார். அவர் இப்புரட்சி இயக்கத்தைத் துவக்கி வைத்து விட்டு கி.மு. 166-இல் இறந்தார். அவருக்குப் பிறகு யூதா மக்கபேயர் அப்புரட்சி இயக்கத்தின் தலைவரானார். மக்கபேயர் என்றால் சுத்தியல் என்று பொருள். மக்கபேயர் என்பதற்கு சுத்தியல் என்பது சரியான பொருளல்ல என்று வாதிக்கும் அறிஞர்களும் உண்டு. இம்மக்கபேயர் குடும்பத்தினர் யோவரிபு என்ற குருக்களின் குடும்ப வழியில் வந்தவர்கள் *(1 மக் 2:1)*.

தற்போது தலைவராக விளங்கிய யூதாவை ஒழித்துக் கட்டுவதற்கு கிரேக்க அரசன் பெரிதும் முயன்றான். ஆனால் யூதா மறைந்திருந்து தாக்கும் கொரில்லாப்போர் முறையைப் பின்பற்றிக் கிரேக்க படையினரோடு போர் புரிந்தார். யூதா, பலமிகுந்த கிரேக்கப் படையைப் பல இடங்களில் தோற்கடித்தார். *1 மக் 3:12* யூதா அப்பொல்லோனியு என்பவரைத் தோற்கடித்த நிகழ்ச்சியைக் குறிப்பிடுகிறது. இதனால் யூதா பயன்படுத்திய ஒரு வாளைக் கூட புகழ்ந்து பாடுகின்ற ஒரு பாரம்பரியம் உண்டாகிறது. பேத்து-கோரன் என்றவிடத்தில் சேரோன் என்பவர் தலைமையில் வந்த கிரேக்கப் படையை முறியடிக்கிறார் யூதா. இவ்வாறு கிரேக்கர்களைத் தகர்க்கின்ற வலிமை கொண்ட யூதாவைச் சுற்றி பல யூத இளைஞர்கள் ஒன்றிணைந்தனர். தலைமையேற்று நடத்தும் அரியப் பண்பினை நிறைவாகப் பெற்றிருந்தார் யூதா *(1 மக் 3:4)*. இவ்வேளையில்தான் தானியேல் ஆகமம் எழுதப் பட்டது. குறிப்பாகத் தானி. 7-12 அதிகாரங்கள் தங்களை அழிக்க வரும் அரசுகளை இறுதியில், இறைவனின் மக்கள் தோற்கடித்து வெற்றி பெறுவதை எடுத்துக் கூறுகின்றன. அத்தோடு இறைவனுக்குத் தங்களையே அர்ப்பணித்து, அதனால் அரசர்களை எதிர்த்துப் போராடியவர்களின் வீரக் காவியம் சிலவற்றையும் மேற்கண்ட அதிகாரங்களில் பார்க்கலாம்.

இறுதியாக கிழக்கில் பார்த்தியருடன் போரிட வேண்டிய அந்தியோக்கு புரட்

A

சியை அடக்குவதற்கென இலிசியாவை ஆளுநராக நியமித்தார். இலிசியாவோ தோலமி, நிக்கானோர் மற்றும் கோர்க்கியா என்னும் மூன்று தளபதிகளை அனுப்பினார். ஆனால், எருசலேமுக்கு வடக்கே மிசுபா வில் ஒரு பிரமாணிக்கமுள்ள குழுவை யூதா பலப்படுத்திக்கொண்டார். எனவே மீண்டும் கோர்க்கியாவின் படைகளுக்கு எதிராக எம் மாவுவிலும், அடுத்த ஆண்டில் பேத்தசூரில் இலிசியாவிற்கு எதிராகவும், யூதா வெற்றி கொண்டார். இலிசியா அந்தியோக்கியா விற்கே திரும்பிச் செல்ல வேண்டியிருந்தது. கிரேக்கர்களின் இந்தப் பலவீனத்தைப் பயன் படுத்தி, அக்ரா கோட்டை காவற்படை பார்த்துக் கொண்டிருக்க, ஆலயத்தின் ''பா ழாக்கும் அருவருப்பைத்'' தூய்மைப்படுத்த 164-இல் யூதா தீவிரமாக முனைந்தார். கனுக்கா விழாவானது மூன்றாண்டு கால அவதூறினை துடைத்து விட்டது.

இந்நிலையில் மக்கபேய புரட்சியின் முழுத்தாக்கம் வெளிப்படையாயிற்று. ஆல யத்தை மீண்டும் அடைந்ததானது மேலும் சுதந்திரத்தையும் அடையத் தூண்டியது. பாலஸ்தீனம் மற்றும் யோர்தானுக்கு அப் பாற்பட்ட பகுதிகள் முழுவதும், சிறப்பாக கிரேக்க நகரங்களிலும், யூத சிறுபான்மை குழுக்கள் எஞ்சியிருந்தன. இதுமேயா, அம் மோன், கிலயாது, கலிலேயா மற்றும் பெலிஸ்திய சமவெளி முதலிய இடங்களில் பிறமதத்தினருடன் நடத்திய தொடர்ச்சி யான போராட்டங்களால் சக யூதர்களுக்கு யூதா உதவினார். அவர்களில் பலரை எருச லேமுக்கு மீட்டுக் கொண்டு வந்தார். அதே வேளையில் அவரது சகோதரர் சீமோன் கலிலேயாவில் அவ்வாறே செயலாற்றினார். இதன் நோக்கமானது மக்கபேய வல்லமை யைப் பலப்படுத்தி பரவச் செய்வதாகும்.

அந்தியோக்கு எப்பிபானின் மரணத்துடன் இலிசியா செயலளவில் தலைவராகவும் இளைய ஆட்சியாளர் 5-ஆம் அந்தியோக்குக ளின் பகர ஆளுநராகவும் ஆனார். 163-இல் எருசலேம் அக்ராவை யூதா தைரியமாக முற்றுகையிட்டபோது பேத்து செக்கரியா வில் இலிசியா யூதாவைத் தோற்கடித்தார் (எலயாசரின் வீர மரணம் *1 மக் 6:43-46*). தன்னுடைய அரசியல் அதிகாரத்தைக் காப் பாற்றிக் கொள்வதற்காக அந்தியோக்கியா விற்கு திரும்புமாறு வற்புறுத்தப்படாமலி ருந்தால், இலிசியா எருசலேமை கைப்பற்றி யிருப்பார். ''தங்களுடைய சட்டங்களேயே பின்பற்றும்'' விடுதலையை யூதர்களுக்கு அளிக்கும் உடன்பாட்டிற்கு அவர் உட்பட வேண்டியிருந்தது (*1 மக் 6:59*). மக்கபேயரு டைய புரட்சியின் நோக்கம் நிறைவேறிவிட் டதாகத் தோன்றியது. ஏனெனில் 4-ஆம் அந்தியோக்குவால் துவக்கப்பட்ட அடக்க முறை முடிந்துவிட்டது. ஆனால் அதிக சுதந் திரம் மற்றும் அரசியல் வலிமைபெற வேண் டிய முன்னோக்கு மக்கபேயரைத் தூண்டிக் கொண்டே இருந்தது.

கிரேக்க மரபைச்சார்ந்த யூதர்கள் யூதாவை எதிர்த்தனர். அவருக்கெதிராக பாதுகாப்பிற் காக புதிய அரசன் முதலாம் தெமேத்திரியவி டம் (சோதெர்) புகலிடம் தேடினர். அவர்க ளது பிரதிநிதி ஆல்கிமுவை தலைமைக் குரவாக அரசன் நியமித்தார். இக்காலத்தில் யூதர்களிடையே நிலவிய பிளவு எப்போ துமே தெளிவாக இருந்ததில்லை. ஆல்கிமு கிரேக்கரல்லாத யூதரால் ஆதரிக்கப்பட்டிருந் தாலும், அவர் குருத்துவ சந்ததியைச் சேர்ந்த வராய் இருந்ததால் கசிதேயரும் சட்ட வல்லு நரும் அவருக்கு ஆதரவளித்தனர். ஆனால் யூதா அவரை எதிர்த்தார். கசிதேயரை ஆல் கிமு கொலை செய்தது யூதாவின் நிலையைச் சரியென நிரூபித்தது. இறுதியாக ஒரு பெரிய படையின் தலைவராக நிக்கானோர் அந்தி யோக்கியாவிலிருந்து அனுப்பப்பட்டார். யூதர் அவரை கபர்ச்சலாமாவில் தோற்கடித் தார். பின்னர், அதார்மாதம் 13-ஆம் நாளில் (மார்ச் 28, 160) பேத்து-கோரோனிலும் அத சாவிலும் நடந்த போர்களில் அவரை முழு மையாகத் தோற்கடித்தார். இதன் விளை வாக ''நிக்கனோரின் நாளானது'' அடிக்கடி நிகழும் விழாவாயிற்று (*1 மக் 7:49*). ஆனால் இந்த வெற்றியினை தனக்கு ஆதாய மாக்கிக் கொள்ள யூதாவால் இயலவில்லை. ஏனெனில் அதற்கு பதிலடியாக பாக்கிதின்

தலைமையில் தெமேத்திரியு ஒரு பெரிய படையை அனுப்பினார். எருசலேமிற்கு வடக்கிலுள்ள பெரோயா மற்றும் எலசா பரப்பில் அவர்கள் யூதர்களைத் தோற்கடித்த னர் *(1 மக் 9:4-5)*. இப்போரில் யூதா கொல்லப்பட்டார். மக்கபேயர் குழுவிற்கு எதிரான பழிவாங்கும் நடவடிக்கைகள் தொடங்கின.

அவருடைய இடத்தை ஏற்ற அவரது சகோதரர் யோனத்தானினால் *(160-143)* 159-இல் பெத்பாசியில் பாக்கிதை எதிர்த்து நிற்க வாவது முடிந்தது. ஆனால் யோனத்தானு டைய தாக்குதல்கள் அளவானவையாக இருந்தன. சமாதான காலத்தின்போது மிக்கி மாசுவில் *(159-152)* பண்டைக்கால நீதிபதிக ளைப் போன்ற ஒருவராகத் தன்னை நிலை நிறுத்துவதில் திருப்தியடைபவராக இருந் தார் *(1 மக் 9:73)*. வளர்ச்சி வாய்ப்புக்காக அவர் காத்திருந்தார். அலக்சாந்தர் பாலா என்பவர் தோலமேயில் வந்திறங்கி முதலாம் தெமேத்திரியுவை எதிர்த்தபோது அது அவ ருக்கு நல்லதொரு வாய்ப்பாய் அமைந்தது. ஒரு படையை உருவாக்கும் பொறுப்பை தெமேத்திரியு யோனத்தானுக்கு அளித்தார். ஆனால் அலக்சாந்தரோ ஆல்கிமுவின் மர ணத்திற்குப் பின் காலியமாக உள்ள தலைமை குருத்துவப் பதவியை அளிப்பதா கக் கூறினார். யோனத்தான் இரு கோரிக்கை களை ஏற்றுச் செயல்புரிந்தாலும் முடிவாக அலக்சாந்தருக்கு ஆதரவளித்தார். அலக்சாந் தர் தெமேத்திரியுவை வென்று 150-இல் அரசனானார். அலக்சாந்தர் மற்றும் தோலமி யின் மகள் கிளியோப்பத்திராவின் திருமணத் திற்கு வருகை புரிந்ததன் மூலம் யோனத் தான் மேலும் பெருமைகளைப் பெற்றார். அவர் அரச உடையில் உடுத்தப்பட்டு யூதே யாவிற்கு தளபதியாகவும் ஆளுநராகவும் நியமிக்கப்பட்டார் *(1 மக் 10:65)*.

மக்கபேயருடைய வல்லமையின் வளர்ச் சியில் ஒரு புதிய காலம் தொடங்கிற்று. செலூக்கிய அரசர்களை ஒருவருக்கொருவர் எதிராக தூண்டிவிட யூத தலைவரால் முடிந் தது. 148-இல் இரண்டாம் தெமேத்திரியு அரியணையை அடைய முயன்றார். கூலே-சிரியாவின் ஆளுநராகிய அப்பொல்லோ னியு அவருக்கு ஆதரவளித்தார். அலக்சாந்த ருக்குப் பிரமாணிக்கமாய் இருந்த யோனத்தா னால் அப்பொல்லோனியு தோற்கடிக்கப்பட் டார். அதற்கு வெகுமதியாக எக்கரோன் நகரம் யூதருக்கு அளிக்கப்பட்டது. 145-இல் அலக்சாந்தரைக் கொன்று தெமேத்திரியு அரி யணைக்கு வந்த பின்னரும், வரிவிலக்கு கோரும் அளவிற்கு வலிமையுள்ளவராக யோனத்தான் இருந்தார். எப்பிராயிம், இலிதா மற்றும் இரமத்தாயிம் முதலியவை யூதேயாவிற்கு அளிக்கப்பட்டன. 141-ஆம் ஆண்டில் அந்தியோக்கியாவில் ஒரு புரட் சியை கட்டுப்படுத்த யோனத்தான் துணைபு ரிந்தால் எருசலமேலிருந்த சீரிய ஆதிக்கத்தி லுள்ள கோட்டையையும் அளிப்பதாக தெமேத்திரியு வாக்களித்தார். இந்த வாக்குறு தியில் தெமேத்திரியு தொடர்ந்து நிலைத்தி ருக்க தவறினாலும், அவரது காலம் முடிவை நெருங்கிக்கொண்டிருந்தது. திரிபோ என்பவ ரால் ஆதரிக்கப்பட்ட ஆறாம் அந்தியோக்கு அரியணைக்கு உரிமை கோரினார். யோனத் தான் தனது ஆதரவையும் அவர்களுக்கு அளித்தது, பல போர்களில் ஈடுபட்டார். இதன் விளைவாக அவர் வலிமைமிக்கவரா னார். மேலும் உரோமை மற்றும் ஸ்போர்க் தாவுடன் அவர் அரசியல் தொடர்பும் கொண்டார் *(1 மக் 12:1-23)*. இவையனைத் தும் கவனிக்கப்படாமலில்லை. யோனத் தான் மிகவும் அபாயமானவர் என திரிபோ தீர்மானித்தார். அவர் யோனத்தானை தந்திர மாக தோலமேயில் சிறைப்படுத்தினார் *(143)*.

யூதர்களுடைய எதிர்ச்செயல் உடனடியாக எழுந்தது. யோப்பா நகரை கைப்பற்றியதன் மூலம் மூன்றாவது மக்கபேய சகோதரனா கிய சீமோன் *(143-134)* தாக்குதலுக்கு தயாரா னார். ஆனால் யோனத்தானுடைய மர ணத்தை அவரால் தடுக்க முடிவதில்லை. யோனத்தான் மக்கபேய சொந்த நகராகிய மோதினில் அடக்கம் செய்யப்பட்டார். யூத சுதந்திரத்தின் அங்கீகாரத்திற்கு ஈடாக, இப் போது சீமோன் 2-ஆம் தெமேத்திரியுவை ஆதரிக்கலானார். 142-இல் சீமோன் தலை

மைக் குருவாகவும் ஆளுநராகவும் தளபதியாகவும் அங்கீகரிக்கப்பட்ட பின்னர் ''இஸ்ராயேல் மக்கள் புறவினத்தாரின் அடிமைத்தளையினின்று நீங்கினார்கள்'' *(1 மக் 13:41)*. உண்மையானதொரு இறைவாக்கினர் தோன்றும்வரை ஆட்சியாளர் மற்றும் தலைமை குருத்துவத்திற்காக மக்கபேய உரிமைகள் யூதராலேயே சட்டநெறிபடுத்தப்பட்டன *(14:41)*. அடுத்த ஆண்டில் கசாராவினருடைய செலூக்கியப் பாதுகாப்பு அரணைக் கைப்பற்றி எருசலேமிலுள்ள அக்ராவை சரணடைய வற்புறுத்துவதில் வெற்றி பெற்றார். மக்கள் சில ஆண்டுகள் அமைதியாகக் கழித்தனர். செலூக்கிய அரியணைக்கு அந்தியோக்கு சிதேத்தெசு என்னும் புதிய வாரிசு தோன்றினார். அவரது கோரிக்கைகளை மதிக்க சீமோன் மறுத்துவிட்டார். அதனைத் தொடர்ந்து போரில் அந்தியோக்குவினுடைய தளபதி கெந்தபேயுவை *138*-இல் சீமோனின் புதல்வர்கள் வென்றனர் *(1 மக் 16)*. ஆனால் எரிகோவிற்கு அருகாமையிலுள்ள தோக்கு கோட்டையில் சீமோன் தனது மருமகன் தோல்மியால் தந்திரமாக வெட்டிக் கொல்லப்பட்டார். சீமோனின் மகன் யோவான் இரிக்கானு அவரைத் தொடர்ந்து பதவியேற்றார். இங்கே 1 மக்கபேயர் நூலின் குறிப்பு முடிவடைகிறது. இரிக்கானு மற்றும் அவரது வாரிசுகளின் ஆட்சிபற்றிய விவரங்களுக்கு நாம் பெருமளவில் யோசிபசைச் சார்ந்திருக்க வேண்டும். கிறிஸ்தவ ஆசிரியர்கள் இரிக்கானுவிடைய சந்ததியின் வரிசையை விவரிக்க ''அசமோனியர்'' என்னும் பெயரை உபயோகிக்கின்றனர். ஆனால் யூத ஆசிரியர்களோ யோசிபஸ் மற்றும் தால்மூதினுடைய அமைப்பைப் பின்பற்றி இரிக்கானுவின் முன்னோராகிய மக்கயேயு சகோதர்களையும் இதே பெயரின் கீழ் குறிப்பிட்டனர். அசமோனியப்பெயரின் உண்மையான மூலத்தைப்பற்றி நாம் ஒன்றும் உறுதியாகக் கூறமுடியாது. ஆனால் பாராம்பரியப்படி மத்தாத்தியாசினுடைய (யூதா மக்கபேயுவினுடைய தந்தை) கொள்ளு தாத்தாவுடன் யோசிபஸ் அடையாளப்படுத்துகின்ற அசமோனையோயுடன் இது தொடர்புபடுத்தப்படுகிறது.

*3. அசமோனிய ஆட்சியாளர்கள் (134-63):-* சீமோனுடைய மகன் முதலாம் யோவான் இரிக்கானு *(134-104)* படுகொலை நேரத்தில் காசாராவில் இருந்தாலும் தோலமியின் கொலை திட்டங்களினின்று தப்பித்து விட்டார். தனது தந்தையைத் தொடர்ந்து தலைமை குருவாகவும் ஆட்சியாளராகவும் ஆன இவர் தோலமியை தண்டிக்க முயன்றார். ஆனால் அவர் யோர்தானுக்கு அப்பாலுள்ள பகுதிக்கு தப்பியோடி விட்டார். இரிக்கானுவின் ஆட்சியில் முதல் சில ஆண்டுகள் மகிழ்ச்சியற்றவையாக இருந்தன. உடனடியாக ஏழாவது அந்தியோக்கு சிதெதெசு யூதேயாவை அழித்த பின்னர் எருசலேமை முற்றுகையிட்டார். ஆனால் எதிர்பாராதவிதமாக உரோமையிலிருந்து நெருக்கடியால் அவர் இரிக்கானுவுடன் பேச்சுவார்த்தைக்கு உடன்பட்டு முற்றுகையை நீக்கினார். இழப்பீடுகள் இலேசானவையாகவே இருந்தன. ஆனால் அடுத்த சில ஆண்டுகளில் பார்த்தியருக்கு எதிரான போரில் உதவி, இரிக்கான அந்தியோக்குவிற்கு ஊழியம் புரிந்தார். நிகழ்ச்சிகள் இப்போது சாதகமான திருப்பத்தை அடைந்தன. *128*-இல் போரில் அந்தியோக்கு கொல்லப்பட்டபோது இரண்டாம் தெமேத்திரியு அரியணை ஏறினார். அதனால் உள்நாட்டுப் போரில் ஈடுபட வேண்டியவரானார். யூதேயாவிலும் அதற்கு அப்பாலுள்ள நகர்களையும் கைப்பற்ற இரிக்கானுவிற்கு இது உதவியாக இருந்தது. நீண்ட முற்றுகைக்கு பின்னர் யோர்தானுக்கு அப்பாலுள்ள மேதபாவை அவர் கைப்பற்றினார். நெகேபிலுள்ள இதுமேரரைக் கீழ்படுத்தி விருத்தசேதரத்தையும் யூதச் சட்டத்தையும் அவர்கள் மேல் திணித்தார். கெரிசிம் மலை மீதிருந்த சமாரிய கோவிலையும் அவர் அழித்தார். அந்நிய கடற் படையினரின் உதவியுடன் இந்த இராணுவம் வெற்றி அடைந்தன. இக்காலத்தில் செலூக்கியருடைய வல்லமையானது உள்நாட்டு பிரச்சினைகளின் காரணமாக சீர்குலைந்து. இரிக்கானு தனது ஆதாயங்களை உறுதிப்படுத்த எந்த தடையும் இல்லாது போயிற்று. *107*-க்குள் செலூக்கிய அரசன் ஒன்பதாம் அந்தியோக்குவின் (சிசிசென) தலையிட்டாலும்,

இரிக்கானவின் மக்களாகிய அரித்தோபுல் மற்றும் அந்திக்கோனு ஆகியோரின் தலைமையில் யூதப்படைகளால் சமாரியா கைப்பற்றப்பட்டது. இக்காலத்தில் யூத இனத்தில் மிகவும் சிறப்பான வளர்ச்சியானது பரிசேயர் மற்றும் சதுசேயர் எண்ணம் இரு குழக்களின் தோற்றமாகும்.

யோவானுடைய மூத்த மகன் அரித்தோபுல் *(104-103)* ஆட்சி செய்து கொண்டிருந்திருக்கூடிய) தனது தாயையும் மூன்று சகோதரர்களையும் சிறைப்படுத்திவிட்டு வன்முறையால் அரியணை ஏறினார். (தன்னையறியாமலே தான் மரணத்திற்குட்படுத்திய) அந்திகோனுவுடன் சேர்ந்து அவர் வெற்றிகளைத் தொடர்ந்தார். வடக்கு கலிலேயா வரை தனது வல்லமையைப் பாரவச்செய்து அதனை யூதமயமாக்கினார். (கலிலேயாவை யூத மயமாக்கியது கிறிஸ்தவ காலம் வரை நிலைத்திருந்தது) நாணயங்களில் ''யூதா'' என்று அறியப்பட்டாலும், அவரது கிரேக்கப் பெயரும் 63-வரை அவரும் அவரது வாரிசுகளும் உரிமை கொண்டாடிய அரசன் என்ற பதவியும் கிரேக்க மயமாதலின் பாதிப்பிற்குச் சான்றுகளாய் உள்ளன. ஆனால் அசமோனிய மரபின் பொதுவான ஒழுக்கச் சீர்குலைவு தொடர்ந்தது என்று கூறலாம். அரித்தோபுல் ஒராண்டு மட்டுமே ஆட்சிபுரிந்தார். சிறப்புமிக்க பெண்ணாகிய அவரது விதவை சலோமி அலக்சாந்திரா அவருடைய சகோதரர்களை விடுவித்து அவர்களுள் ஒருராகிய அலெக்சாந்தர் யன்னாயுவை மணம் புரிந்து கொண்டாள். அவர் தலைமைத் குருபதவியையும் அரியணையையும் ஏற்றுக்கொண்டார். அலக்சாந்தர் யன்னாய பலபோர்களின் விளைவாகப் பாலஸ்தீனம் முழுவதையும் அவரது ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவந்தார். தோலமேயிசிற்காக ஒன்பதாம் தோலமி இலத்திருவுடன் அவர் மேற்கொண்ட போரில் தோல்விடைந்தார். துரத்தப்பட்டு, சைப்ரசிற்குத் திரும்புமாறு எகிப்தினால் வற்புறுத்தப்படாமலிருந்ததால், தோலமி பாலஸ்தீனத்தையும் கைப்பற்றியிருப்பார். மத்திய யோர்தானக்கு அப்பாற்பட்ட பகுதியில் காதாராவையும் யோர்தானில் அமாதுவையையும் யன்னாயு முன்றுகையிட்டு கைப்பற்றினார். கடற்கரையில் யன்னாய காசாவை சூறையாடி எரித்தழித்தார். அமாதுவை மீண்டும் வெல்வதற்காகத் திரும்ப வேண்டியதாயிற்று. மேலும் வடக்கு நோக்கி நபத்தேயருடன் அவர் போராட வேண்டியிருந்தது. நபத்தேய அரசன் ஒபேதசு கிட்டதட்ட அவரைப் பிடித்துவிட்டார். ஆனால் அவர் தப்பி எருசலேமுக்குத் திரும்பினார். ஆனால் எருசலேமும் அவருக்கெதிராக கிளர்ச்சியில் ஈடுபட்டது. கூலிப்படையினரின் துணையுடன் அவர் புரட்சியாளர்களை அடக்கினார். ஆனால் பரிசேயர்கள் செலூக்கிய அரசன் மூன்றாம் தெமேத்திரகயு யுகைரோசை அவருக்கெதிராக செக்கேமில் கொண்டுவந்தபோது அவர் கிட்டதட்ட அரியணையினின்று நீக்கப்பட்டார் (ஏறக்குறைய கி.மு.*88*). யூத தேசபக்கர்களில் சிலர் *(6000* பேர்) அவரை ஆதரித்தனர். பின்னர், அவர் தனக்கெதிராக எழுந்த யூதரைப் பழி வாங்கத் தொடங்கினார். கும்ரான் நூலில் குறிப்பிடப்படுவதாகத் தோன்றும் புகழ் பெற்ற சிலுவையிலறையப்படும் காட்சி இதுவாக இருக்கலாம். அரேத்தா நபாத்தேயரின் அரசனான பின்னர் யூதேயாவிற்குள் நுழைந்து யனனாயுவைத் தோற்கடித்தார். உரிய சலுகைகளை பெற்ற பின்னரே அவர் வெறியேறினார். யன்னாயு இப்போது தனது கவனத்தை யோர்தானுக்கு அப்பாலுள்ள பகுதிகளை நோக்கி திருப்பினார். கி.மு. *84-81*-இல் நடந்த போர்களில் அவர் பெல்லா, கெராசா, கோலான் மற்றும் பல நகரங்களைக் கைப்பற்றினார். அவருடைய நெறிதவறிய வாழ்வு ஒரு முடிவுக்கு வந்த போது யோர்தானுக்கு அப்பால் இராகாபாவை முற்றுகையிடுவதில் ஈடுபட்டிருந்தார். அக்காலத்திற்குள் யூதேயா நிலப்பரப்பானது குறிப்பிடத்தக்க அளவிற்கு விரிவடைந்திருந்தது. அதாவது தாவீதின் அரசினுடைய பழைய எல்லைகள் இப்போது நிறைவடைந்தன. கிரேக்க நகரங்கள் யூத மயமாக்கப்பட்டன.

யன்னாயுவின் விதவையாகிய சலோமி அலக்சாந்திரா *(76-69)* அவரது மரணத்திற்கு

பின் தலைமைக்குரு பதவியை பயனற்ற மூத்த மகன் இரண்டாம் இரிக்கானுவிற்கு அளித்துவிட்டு, ஆட்சிபுரியக் துவங்கினாள். போர்களின்றி நாட்டை காப்பதில் அவள் வெற்றி பெற்றாள். ஆனால் அவளது மரணத் திற்கு பின்னர் யூதேயா அரியணைக்கு இரகக் கானும் அவரின் மிக்க பேராசை இளைய மகன் அரித்தோபுலும் போரிட்டனர்.

சதுசேயரின் ஆதரவைப்பெற்ற இரண் டாம் அரித்தோபுல் *(69-63)* எரிகோவில் இரிக்கானுவை விரைவிலேயே வென்று அவரை எருசலேமில் சிறைப்படுத்தினார். எனவே அரித்தோபுல் அரசராகவும் தலை மைக்குருவாகவும் ஆனார். ஆயினும் இது மேயாவின் ஆளுநராகிய அந்திபாத்தர் இரிக் கானுக்கு ஆதராவாக சூழ்ச்சி செய்தார். தைரி யமாக ஒரு முயற்சியில் நபாத்தேயரின் அரச னாகிய அரேத்தாவிடம் அடைக்கலம் நாடு மாறு அவர் இரிக்கானுவை தூண்டினார். பெத்திராவிலுள்ள அரச நகருக்கு அவரும் உடன் சென்றார் ஒரு ஒப்பந்தம் உருவாக்கப் பட்டது. மோவாபிலுள்ள சில குறிப்பிட்ட நகர்களை நபத்தேயருக்கு அளித்தால், இரிக் கானு மீண்டும் அரியணையில் அமர்த்தப்ப டுவார். நபத்தேயர்கள் யூதயோவிற்குள் புகுந்து அரித்தோபுலுவை எருசலேமில் பூட்டி வைத்தனர். உரோமையர் தலையிடா மலிந்தால் இரிக்கானுவை மீண்டும் அரிய ணையில் ஏற்றுவதில் அவர்கள் வெற்றி பெற்றிருப்பர். இரு பிரிவினரும் சீரியாவி லுள்ள பாம்பேயின் பிரதிநிதியாகிய எமிலி யுஸ்காருவின் ஆதரவை நாடினர். உரோமை யர் முற்றுகையை நீக்கக் கட்டளையிட்டனர். பூசலிடும் இரு சகோதரர்களுடைய விதியை தீர்மானிப்பது பாம்பேயின் கையில் இருந் தது. 63-இல் அவர் தமஸ்குவில் நுழைந்து, இறுதியாக எருசலேமிற்குள் நுழைந்தார். அரித்தோபுலு ஆலயத்தை அவரிடம் ஒப்ப டைக்கத் தவறியதால் அங்கு அவர் ஆல யத்தை முற்றுகையிட வேண்டியதாயிற்று. எறக்குறைய 1200 யூதர்கள் கொல்லப்பட்ட தாகக் கூறப்படுகிறது. பின்னர் இரண்டாம் இரிக்கானுவை தலைமைக்குருவாக ஏற்றுக் கொண்டு அரிஸ்தோபுலுவைச் சிறைப்படுத் தினார். ஸ்தாருவினால் ஆதிக்கம் செலுத்தப் பட்ட சீரியாவின் உரோமை மாநிலத்தில் ஒரு பகுதியாக பாலஸ்தீனம் ஆயிற்று. யூத ருக்கென மக்கபேய குடும்பத்தினரால் வெல் லப்பட்ட சுதந்திரமானது ஒரு முடிவிற்கு வந்தது.

**இஸ்ராயேல் வரலாறு** - VII - உரோமையர் காலம்

I. பாலஸ்தீனத்தில் யூத இயக்கங்கள்:- புதிய ஏற்பாட்டு காலமும் பாலஸ்தீனத்தை உரோம் கைப்பற்றியிருந்த காலமும் பெரும ளவில் ஒத்த காலமானவையாகும். யூதர் களை அடக்கிவென்று அவர்களது ஆலயத் தில் கால்வைத்த முதல் உரோமையர் பாம்பே ஆவார். இது உரோமையரின் ஆதிக் கத் தொடக்கத்தின் அடையாளச் செயலா கும். இந்த ஆதிக்கம் புதிய ஏற்பாட்டுக் காலம் முழுவதும் நீடித்தது. அச்சமயத்தில் பாலஸ்தீன யூதர்கள் தங்களுடைய தேசிய மற்றும் சமய ஒருமைப்பாட்டிற்கு, ஒன்று பட்ட மக்களாக இருக்கவில்லை. சட்டம் மற்றும் ஆலயம் பற்றிய அவர்களுடைய நோக்கில் அவர்களிடையே வேறுபாடுகள் நிலவின. இவை பெரும்பாலும் பல்வேறு பட்ட அரசியல் சார்புடையமையாலும் உட் கிளர்ச்சிகளாலும் மோசமாயின. இக்காலத் தில் அவர்களிடையே ''பரிசேயர், சதுசேயர், எஸ்ஸேனியர்'' என்னும் மூன்று பிரிவுக ளைப்பற்றி யோசிபஸ் குறிப்பிடுகிறார். இப் பிரிவினர்களைப் பற்றி பரிசேயர், சதுசேயர், எஸ்ஸேனியர் ஆகிய தலைப்புகள் பற்றிய காட்டுரைகளில் காண்க.

II. இயேசுவின் வாழ்நாளுக்கு முன் உரோமை பாலஸ்தீனம் *(கி.மு. 64-4):-*

*63-37* வரையிலான காலத்தில் பாலஸ்தீ னத்தில் உரோமை வல்லமை உறுதியாக நிலைப்படுத்தப்பட்டது. அசமோனிய சந் ததி முடிவைக் கண்டது. இந்த ஆளும் குடும்பத்தின் வீழ்ச்சியும் அதன் இடத்தில் ஏரோதியர் ஆட்சி தோன்றியதும் பற்றிய வரலாறு சிக்கல்மிக்கது, சூழ்ச்சிகள் நிறைந் தது. அதைச் சுருக்கமாக இங்குத் தருகிறோம்.

*1. பாம்பே, யூலியு சீசர், மாற்கு அந்தோணி:-* பாம்பே எருசலேமைக் கைப்பற்றியபின்னர் மாற்றியமைக்கப்பட்ட சீரியா மாநிலத்தில் அவர் பாலஸ்தீனத்தை சேர்த்தார். அது உரோமைப் பிரதிநிதி ஒருவரால் ஆளப்பட வேண்டியிருந்தது. நாம் ஏற்கனவே கண்டவாறு வலுவற்ற இரண்டாம் இரிக்கானுவை தலைமைக் குருவாக நியமிக்க பாம்பே தீர்மானித்தார். ஆனால் இரிக்கானுவின் வழிபாட்டு மரபை உண்மையிலேயே அங்கீகரித்த யூதர்கள் வாழுமிடத்திற்கு மட்டும் இரிக்கானுவின் சமயஅதிகாரத்தை பாம்பே கட்டுப்படுத்தினார் (எருசலேம் மற்றும் யூதேயா, பெரேயா, கலிலேயா, சமாரியாவின் தென் பகுதி, மற்றும் வடக்கு இதுமேயா). கடற்கரைப் பகுதிகளும் சமாரியாவின் பிற பகுதிகளும் சீரியாவின் உரோமை ஆளுநரின் நேரடி ஆட்சிக்குட்படுத்தப்பட்டிருந்தன. இந்த மாற்று அமைப்பு யூதருக்கு சமாதானத்தையும் புதுப்பிக்கப்பட்ட நலனையும் கொண்டு வந்தது. உரோமை ஆதிக்கத்தினுடைய அடுத்த சில ஆண்டுகளின் ஒரே களங்கம் கி.மு. 60-இல் மூவர் குழுவில் ஒருவரான இலிசினியு கிராசுவினால் மாநிலமானது சூறையாடப்பட்டதாகும். 53-இல் அவர் எருசலேம் ஆலயத்தின் கருவூலத்தைக் கொள்ளையடித்தார். யூத சமுதாயம் இதனை எதிர்த்து போராடியது. ஆனால் இந்த எதிர்ப்பைப் பண்டாகராகிய காசியு இலொங்கினு உடனடியாக அடக்கினான்.

49-ஆம் ஆண்டில் யூலியு சீசர் உரூபிகோனை கடந்தார். உரோமை வரலாற்றின் தொடரும் வளர்ச்சிக்கு இச்செயலானது குறிப்பிடத்தக்க விளைவுகளைக் கொண்டிருந்தது. அவருடைய எதிரியாகிய பாம்பே தன்னைப் பின்செல்பவர்களுடன் கிழக்கு நோக்கிப் பின்வாங்கினார். முதலில் இரண்டாம் இரிக்கானுவும் அவரது இதுமேய நண்பர் அந்திப்பாத்தரும் கிழக்கின் ஆட்சியாளராக வருவார் என்று எண்ணிய பாம்பேயின் ஆதரவை நாடினர். ஆனால், எகிப்திய முகத்துவாரத்திலுள்ள பர்சாலுவில் பாம்பே தோற்கடிக்கப்பட்டவுடன் அவர்கள் தங்களுடைய பற்றுறுதியை விரைவாக சீசருக்கு மாற்றிக்கொண்டனர். அந்திப்பாத்தரின் தலைமையில் சீசருக்கு உதவிபுரிய இரிக்கானு படைகளையும் அனுப்பினார். அவருக்காக பெலுசியுவை அவர்கள் வென்றனர். சீசருக்கு ஆதரவளிக்குமாறு அலக்சாந்திரிய யூதர்களை இணங்கவைப்பதில் இரிக்கானு வெற்றி பெற்றார். 47-இல் சீசர் சீரியாவை அடைந்த பின்னர் இரிக்கானுவிற்கு மாகாண ஆட்சியாளர் (ஒரு மாநிலத்தில் ஒரு இனத்தினுடைய ஆட்சியாளர்) என்னும் பட்டத்தை அளித்தார். அவரது தலைமை குருத்துவமானது உறுதியாக்கப்பட்டது. அவரும் அவரது சந்ததியினரும் உரோமை குடிமக்களின் தோழர்கள் என்று அறிவிக்கப்பட்டனர். சூழ்ச்சிமிக்க அந்திபாத்தருக்கு உரோமை குடியுரிமை அளிக்கப்பட்டு, யூதேயாவின் அதிகாரி என்னும் பதவியும் தரப்பட்டது. அவரது மகன்களில் இருவராகிய பாசேல் மற்றும் ஏரோது ஆகியோர் முறையே எருசலேமிற்கும் கலிலேயாவிற்கும் ஆளுநராக நியமிக்கப்பட்டனர். அடுத்த சில ஆண்டுகள் உரோமை ஆளுநர்களுடைய ஆதரவை வெல்வதற்கு அல்லது தக்கவைத்துக் கொள்வதற்கான யூத தலைவர்களுடைய முயற்சிகளின் தொடர்ச்சியான சூழ்ச்சிகள் மிகுந்து காணப்பட்டன.

கி.மு. 44-ஆம் ஆண்டு மார்ச் 15-ஆம் நாளில் யூலியு சீசர் படுகொலை செய்யப்பட்டார். அவருக்காக யூதர்கள் புலம்பியதைப் போல் எந்த உரோமை குடிமகனும் புலம்பவில்லை, கொலையாளிகள் கிழக்கு நோக்கி தப்பிய பின்னர், காசியு சீரியாவிற்கு வந்து, மாநிலம் மற்றும் அதனுடைய படைகளின் மேல் ஆதிக்கத்தைக் கைப்பற்றினார். அவருக்கு துணைபுரிய யூதேயாவிலும் கலிலேயாவிலும் 700 தாலந்துகளைச் சேர்த்து அளிப்பதில் இரண்டாம் அந்திபாத்தரும் அவரது மகன் ஏரோதும் சிறப்பாகச் செயல்பட்டனர். ஆனால் 43-இல் அந்திப்பாத்தர் இரிக்கானுவினுடைய ஊழியனால் நஞ்சு கொடுக்கப்பட்டு கொல்லப்பட்டார். தனது அசுமோனிய குடும்பத்திற்கும் அதற்கு எதிரான இதுமேயருக்கும் இடையிலுள்ள உறவுகளை

பலப்படுத்துவதற்கென இரண்டாம் இரிக்கானு தனது பேத்தி மரியம்மேயை அந்திப்பாத்தரின் மகன் ஏரோதிற்குத் திருமணம் செய்து வைத்தார். திருமண நிச்சயம் 42-இலும் திருமணம் 37-இலும் நடைபெற்றன.

மாநிலத்தை சூறையாடியபின் காசியு 42-இல் மாநிலத்திலிருந்து பின்வாங்கினார். இறுதியாக பிலிப்பியில் மாற்கு அந்தோணி மற்றும் ஆக்டேவியன் ஆகியோரால் தோற்கடிக்கப்பட்டார். அச்சமயத்தில் சீரியா மாநிலத்தில் உரோமை ஆதிக்கமானது பலவீனமாய் இருந்ததால் பழைய பாரசீக பேரரசினுடைய வாரிசுகளாகிய பார்த்தியர்கள் அதன் மேல் 40-இல் படையெடுத்துப் புகுந்தனர். தலைமை குருத்துவத்தை விரும்பியவரும் இரண்டாம் இரிக்கானுவின் மகன் இரண்டாம் அரித்தோபுலின் மகனுமான அந்திகோனுவின் ஆட்சியை அவர்கள் ஆதரித்தனர். பார்த்தியருடைய உதவியுடன் அவர் மூன்று ஆண்டுகள் (40-37) அரசனாகவும் தலைமைக் குருவாகவும் இருந்தார். பாசேலையும் (ஏரோதுவின் சகோதரன்) இரண்டாம் இரிக்கானுவையும் அவர் சூழ்ச்சியால் கைப்பற்றினார். பாசேல் தற்கொலை செய்து கொண்டார். இரிக்கானுவின் காதுகளை அந்திகோனு வெட்டச் செய்தார். (இவ்வாறு அது முதல் அவரைத் தலைமைக்குருவாக பணியாற்ற தகுதியற்றவனாக்கினார் லேவி 21:17-23). இரிக்கானு பாபிலோனுக்கு நாடு கடத்தப்பட்டார். ஆனால் ஏரோது தப்பித்து உரோமைக்குச் சென்று அங்கு முதலில் அந்தோணியின் ஆதரவையும் பின்னர் ஆக்டேவியனுடைய ஆதரவையும் பெற்றார். அங்கு ஆலோசனைக்குழுவின் அறிக்கைப்படி (டிசம்பர் கி.மு. 40) அவர் ''யூதேயாவின் அரசன்'' என்று அறிவிக்கப்பட்டார், ஆனால் அவரது அரசை அவர் இன்னும் வெல்ல வேண்டியிருந்தது. மூன்றாண்டுகளுக்குப் பின்னர், அந்தியோக்கியாவில் உரோமையரால் அந்திகோனு தூக்கிலிடப்பட்ட பிறகு, உரோமைப்படைகளின் ஆதரவுடன் அவர் அரசுக்கு வந்தார்.

2. பெரிய ஏரோது (கி.மு. 37-4):- 37-இல் சுறுசுறுப்புமிக்க விளையாட்டு வீரனும், பழிக்கஞ்சாத சூழ்ச்சியாளனும் உணர்ச்சிக்கு ஆட்பட்ட ஏகாதிபதியுமான ஏரோது பாலஸ்தீனத்தினுடைய எவ்வித எதிர்ப்புமில்லாத தலைவனானார். உரோமைக்கு உட்பட்ட சிற்றரசன் என்ற முறையில் அவர் அருகிலுள்ள சீரியா மாநிலத்தின் பிரதிநிதியை சார்ந்திராமல் நேரடியாக உரோமிற்கு பொறுப்புடையவராக இருந்தார். திறமையுள்ள அரசியல்வாதி என்ற நிலையில் அவர் முதலில் மாற்கு அந்தோணியை ஆதரித்தார். ஆனால் 31-இல் அக்தியுமில் அவரது தோல்விக்குப்பின் உரோது தீவில் ஏரோது ஆக்டேவியனை சந்தித்து வெற்றியாளரின் முன்னிலையில் தனது கிரீடத்தை அகற்றித் தனது நிலையினை விளக்கினார். ஆக்டேவியன் அவரது கிரீடத்தை மீண்டும் அளித்து அவரது அரசுரிமையை உறுதிப்படுத்தி அறிவித்தார். ஏரோது உரோமையின் தோழமை அரசனானான். முழுமையான உள்ளார்ந்த தன்னாட்சியையும் கப்பம் கட்டுவதிலிருந்து சுதந்திரத்தையும் அவர் அனுபவித்தாலும் போர் மற்றும் வெளிநாட்டுக் கொள்கை முதலியவற்றில் உரோமைத் தலைமைக்கு உட்பட்டிருந்தார். ஏரோதுவின் ஆட்சியை மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம்.

அ. கி.மு. 37-25:- இந்தத் தொடக்க ஆண்டுகள் அவரது வல்லமையை நிலைப்படுத்தவே முதன்மையாக பயன்பட்டன. தனது அதிகாரத்துடன் போட்டியிடும் எவனையும் இரத்தம் சிந்தி, திட்டமிட்டு ஒழித்துக்கட்டுவதில் இந்த ஆண்டுகள் கழிந்தன. (முன்னர் அவர் தலைமைக்குருவாக ஏற்படுத்தியிருந்த மூன்றாம் அரிஸ்தோபுல், அவர் சகோதரி சலோமியின் கணவர் யோசேப்பு, இரண்டாம் இரிக்கானு, அவருடைய மனைவி முதலாம் மரியம்மே, மாமியார் அலக்சாந்திரா ஆகிய சிலர் முக்கியமானவர்கள் ஆவர்). திருப்தி செய்ய முடியாதபோது பேராசையில் வேரூன்றியிருந்த அவரது கொடூரமானது நாடறிந்த ஓர் அவபெயராகும். ஆயினும் அவர் தனது வாழ்விற்காகவே போராடவேண்டியிருந்தது. ஏனெனில் சூழ்ச்சியும் சதியும் அவரைச் சூழ்ந்திருந்தன

ஆ. கி.மு. 25-13:- அவரது அதிகாரத்துக்கு எதிர்ப்புகள் நீங்கிய பின்னர் வரிப்பணத்தை உபயோகித்துத் தனது அதிகார எல்லையில் ஆடம்பர வள்ளல்தன்மையுடைய கலாச்சார முன்னேற்றங்களில் ஏரோது காலத்தை கழித்தார். பேரரசன் வழிபாட்டை அவர் ஆதரித்தார். அதனுடைய நான்காண்டுகளுக்கு ஒரு முறை நிகழும் கொண்டாட்டத்தை உயர்த்துவதற்கென பேரரசனுக்குக் கோவில்கள், அரங்கங்கள், களியரங்குகள், உடற்பயிற்சிக் கூடம், குளியலறைகள் மற்றும் புதிய நகர்கள் முதலியவற்றை கட்டுவித்தார். எருசலேமில் அவர் ஓர் அரங்கத்தையும் வட்டரங்கத்தையும் பூங்கா மற்றும் தோட்டங்களையும் நீர்ச்சுனைகளையும் அரச அரண்மனையையும் அந்தோனியா கோட்டையையும் உருவாக்கினார். தன்னுடைய ஆட்சியின் 18-ஆம் ஆண்டில் (கி.மு. 20) எருசலேமில் இரண்டாம் ஆலயத்தைப் புதுப்பிக்கத் தொடங்கினார். ஆலயம் மட்டும் விரைவிலேயே முடிக்கப்பட்டாலும் அதன் சுற்றுப் புறப் பகுதிகளைப் புதுப்பிக்கும் பணி அவருக்கு பின்னர் நீண்ட காலம் தொடர்ந்தது. அது மீண்டும் அழிக்கப்படுவதற்கு எழு ஆண்டுகளுக்கு முன்னர் கி.பி. 63-இல் அப்பணி முழுமை பெற்றது. எருசலேமிற்கு வெளியிலும் அதையொத்த கட்டுமானப்பணிகளை அவர் செயல் படுத்தினார். சமாரியாவானது மீண்டும் கட்டப்பட்டு அரசனுக்கு மதிப்பளிக்கும் விதமான செபஸ்தே (அகுஸ்துவிற்கு இணையான கிரேக்கச் சொல்) என்று அழைக்கப்பட்டது. அதில் அகுஸ்துவிற்கு ஒரு கோவில் கட்டப்பட்டது. கடற்கரையிலிருந்த ஸ்த்ராத்தோவினுடைய கோபுரமானது செசரியா மார்திமா என்னும் முக்கிய துறைமுக நகராக மாற்றியமைக்கப்பட்டது. ஆபிரகாமின் நினைவிற்கு புனிதமாக இருந்த மமிரேயைச் சுற்றி பிரமாண்டமான ஏரோதினுடைய கட்டுமான வேலைகள் நடந்தன. நாடு முழுவதும் (சைப்ரசு, அலக்சாந்திரியும், ஏரோதியும், இரிக்கானியா, மக்கேரு, மசாதா) கோட்டைகள் கட்டப்பட்டன, அல்லது புதுப்பிக்கப்பட்டன. அவற்றில் சில இடங்களில் அரசப் பகுதிகளும் கட்டப்பட்டன. எரிகோவானது ஏரோதினுடைய விருப்பமான உறைவிடமாயிற்று. அவர் அதனை அரங்கம், குதிரைப் பந்தய மைதானம், உடற்பயிற்சிக் கூடம் மற்றும் கோபுரம் ஆகியவற்றால் அழகு படுத்தினார்.

இவை அனைத்திலும் அகுஸ்துவின் காலத்தினுடைய கலாச்சார முன்னேற்றங்களால் ஏரோது தூண்டப்பட்டார். ஏனெனில் அவர் தன்னைச் சுற்றிலும் கிரேக்க மெய்யியல் அறிஞர்களையும் பேச்சாளர்களையும் ஆலோசகர்களாக கொண்டிருந்தார். இவர்களில் மிகவும் புகழ் பெற்றவர் அரிஸ்டாட்டில் வழி வந்த விஞ்ஞானியும் மெய்யியல் அறிஞரும் வரலாற்று ஆசிரியருமான தமஸ்குவைச் சேர்ந்த நிக்கோலாஸ் ஆவார். ஆனால் உள்ளத்தளவில் கிரேக்கனாய் இருந்தமையால் ஏரோது யூதத்துவத்தின் மேல் ஆர்வமற்றவனாக இருந்தார். யூதர்களுக்கு அரசனாக இருந்தாலும் அவர் யூத அரசனாக இருக்கவில்லை. உண்மையில் அவரை வெறுத்த யூதர்களுடைய ஆதரவை பெறுவதில் அவர் என்றுமே வெற்றி பெறவில்லை. இதுமேயனானதால் அவர் அவர்களுக்கு ஒரு பாதி யூதனாகவே இருந்தார். தங்களுடைய அசுமோனிய சார்பின் காரணமாக, சதுசேயரல்லாதவர்களை விருப்பம்போல் தலைக்குருவாக நியமித்தார். இவர்கள் கிரேக்கக் கலாச்சாரத்திலும் மெய்யியலிலும் பயிற்சி பெற்றவர்கள். ஆகவே பரிசேயர்கள் இவர்களை ஏற்றுக்கொள்ள மறுத்தனர். அவர்கள் இருமுறை ஏரோதுவிற்கும் பேரரசனுக்கும் பற்றுறுதியை அளிக்க மறுத்தனர். இதன் விளைவாக யூத மக்களைக் கட்டுபடுத்த ஏரோது சில சமயங்களில் வன்முறைகளைப் பயன்படுத்தினார். அதன் விளைவாக நாடு முழுவதும் கோட்டைகளைக் கட்டுவித்தார்.

இ. கி.மு. 13-4:- ஏரோதுவினுடைய ஆட்சியின் இறுதிக் காலம் அவரது குடும்பப்பூசல்களில் கழிந்தது. அவர் பத்து மனைவியரை மணந்திருந்தார். சில நேரங்களில் அவர்களையும் அவர்களது பிள்ளைகளையும் ஏற்கவும் மறுத்தார். அவருக்கு உண்மையான தொந்தரவு மரியம்மேவிற்கு பிறந்த (இறுதியாக அவரால் கி.மு. 7-ல் கொல்லப்

பட்ட) அலக்சாந்தர் மற்றும் அரித்தோபுல் என்னும் மூத்த மகன்களிடமிருந்தும் அவரது மரணத்திற்கு ஐந்து நாட்கள் முன்னதாக தூக்கிலிட்ட மூன்றாம் அந்திபாத்தரிடமிருந் தும் வந்தது. அவருடைய இறுதி சுகவீனத் தின்போது அவர் இறந்து விட்டார் என ஒரு பொய் வதந்தி பரவியது. உடனடியாக எருச லேமில் ஏரோதினுடைய ஆலய வாசலி னின்று பொன் கழுகினைப் பிடுங்கியெறியு மாறு மக்களைப் தூண்டிவிட இரு சட்ட வல்லுநர்கள் இந்த சந்தர்ப்பத்தைப் பயன்ப டுத்திக் கொண்டனர். இதனை அறிந்தவுடன் ஏரோது அவர்களை உயிரோடு எரிக்குமாறு கட்டளையிட்டு பழிதீர்த்துக் கொண்டார். பாஸ்காவிற்கு சற்று முன்னதாக கி.மு. 4-இல் எரிகோவில் அவர் இறந்தார். பெத்திலகே மிற்கு சில மைல் தென்கிழக்கே எரிகோவிலி ருந்து ஏரோதியும் வரை அவரது உடலுடன் பெரும் இறுதி ஊர்வலம் சென்றது. அங்கு அவர் புதைக்கப்பட்டார்.

III. இயேசுவின் காலத்தில் உரோமானிய பாலஸ்தீனம் (கி.மு. 4- கி.பி. 30)

*1. இயேசுவின் பிறப்பு (லூக் 1:5; 2:1; மத் 2:1)* - ஏரோது மற்றும் அகுஸ்து பேரரசரு டைய நாட்களில் இயேசுவின் பிறப்பை லூக்கா குறிப்பிடுகிறார். இந்த ஆண்டு உறுதி யாக கணிக்கப்படமுடியாவிட்டாலும் பிறப் பானது கண்டிப்பாக கி.பி. 1-இல் நிகழ வில்லை. கிறிஸ்தவக்காலம் அல்லது ''பொ துக் காலம்'' இயேசுவினுடைய பிறப்பு ஆண்டில் தொடக்கப்பட்டதாகக் கருதப்பட் டது. தியோக்ளேசியனுடைய காலக்கணிப் பிற்கு எதிர்ப்பளித்த உரோமை துறவற மடத் தின் மடாதிபதியும் ஸ்கித்திய துறவியுமான தியோனிசியு எக்கிகுயுவினால் கி.பி. 525-இல் அறிமுகப்படுத்தப்பட்ட ஒரு தவறான கணிப்பினை இது உண்மையில் அடிப்படை யாகக் கொண்டது. ஆண்டவரது ஆண்டை, உரோமை நகர்கட்டப்பட்ட 754-உடன் சமப் படுத்துவதன் மூலம் அவர் கிட்டதட்ட நான் காண்டுகளைத் தவறவிடுகிறார். இதை எவ் வாறு செய்தார் என்று உறுதியாகக் கூற முடியாது. அலக்சாந்திரிய கிளமெந்துவால் பாதுகாக்கப்பட்ட ஒரு மரபினை தியோனி சியு அறிந்திருந்தார் என்று கருதப்படுகிறது. அதன்படி அகுஸ்து 43 ஆண்டுகள் ஆட்சிபு ரிந்தார். லூக் 3:1.23-ஐ அடிப்படையாகக் கொண்டு இயேசுவின் பொதுப் பணியின் ஆண்டான அவரது முப்பதாம் ஆண்டு திபேரியசின் ஆட்சியின் 15-ஆம் ஆண்டு டன் சமன்படுத்தப்படுகிறது. எனவே இயேசு, அகுஸ்துவின் ஆட்சியில் 15 ஆண்டு கள் வாழ்ந்திருக்க வேண்டும்; மேலும் அவ ருடைய 28-வது ஆண்டைக் கணக்கிடுவதன் மூலம் 754-ஆம் ஆண்டு கி.மு. 1 ஆக உருவாகியது. ஆயினும் ஏரோது 750-இல் இறந்தார். ஏனெனில் ''உரோமையரால் அர சனாக நியமிக்கப்பட்டதற்கு'' 37 ஆண்டுக ளுக்கு பின்னும் (714) ''நாட்டின் ஆதிக் கத்தை ஏற்றதற்கு'' 34 ஆண்டுகள் பின்னரும் (717) அவர் இறந்ததாக யோசிபஸ் குறிப்பிடு கிறார். தியோனிசியுவினுடைய கணிப்பா னது ஏரோதுவினுடைய இறப்பிற்கு நான்கு ஆண்டுகளுக்கு பின்னர் இயேசு பிறந்தார் என்று பொருள் படும்.

பாம்பேயின் காலம் முதல் சீரியா மாகாண மானது உரோமைப் பிரதிநிதிகளால் ஆளப் பட்டு வந்தது. லூக் 2:2-இல் சுல்பிசியு கிரேனியு பற்றிக் குறிப்பிட்டிருப்பதன் கார ணமாக இங்கு விவாதத்திற்கு உரியவர்கள் இயேசுவினுடைய பிறப்பை ஒட்டிய காலத் திற்கு உட்பட்ட பிரதிநிதிகளில் வரிசை பின் வருமாறு தோன்றுகிறது: அகிரிப்பா (கி.மு. 25-13); தித்தியு (கி.மு. 10); சென்கியு சதுர் னினு (கி.மு. 9-6); குவின்திலியு வாரு (கி.மு. 6-4) சீசர் (கி.மு. 1 - கி.பி. 4); வொலுசியு சதுர்னினு (கி.பி. 4-5); சுல்பிசியு கிரேனியு (கி.பி. 6-7); சேசிலியு கிரேதிகுசி லான (கி.பி. 12-17).

கி.பி. 6-7-இல் (759) கிரேனியு பிரதிநிதி யாக இருந்தார்; அந்த ஆண்டில் (ஆக்தியும் போருக்கு (கி.மு. 31; 723) 37 ஆண்டுகளுக்கு பின்னர்) குடிக்கணக்கு எடுத்தார் என்பதும் உறுதி. முதல் குடிக்கணக்குப்பற்றிய லூக்கா வின் குறிப்பானது குறிப்பிடத்தக்கதெனின் கி.பி. 6-7-ஐச் சேர்ந்த குடிக்கணக்கானது இரண்டாவது என்பது இயலாத ஒன்றல்ல.

ஆனால் முதல் குடிக்கணக்கு எப்போது எடுக்கப்பட்டது? ஏரோதுவினுடைய வாழ்வின் இறுதி ஆண்டுகளில் (கி.மு. 9-4) உள்ள பிரதிநிதிகள் உறுதியாக அடையாளப்படுத்தப்படக் கூடியவர்களாகத் தெரிகின்றனர். கிரேனியு கி.மு. 12-இல் ஆட்சியாளராக இருந்ததாக அறியப்படுகிறது. மேலும் அதற்கு சில காலம் கழித்து தாசித்துவினாலும் ஸ்திராபோவினாலும் குறிப்பிடப்படுகின்ற சிலிசியொவைச் சேர்ந்த ஓமோனதென்சியருக்கு எதிராக போரிட்டபோது கிரேனியு பிரதிநிதியாக இருந்திருக்கக்கூடும். அதே சமயத்தில் சென்சியு சதுர்னினு சீரியாவின் பிரதிநியாக இருந்தவேளையில் குடிக்கணக்கு எடுப்பதற்கான அதிகாரத்தை கிரேனியு கொண்டிருக்கக் கூடும். அவரால் எடுக்கப்பட்ட குடிக்கணக்கோடு இயேசுவின் பிறப்பை தெர்துல்லியன் தொடர்புபடுத்துகிறார். ஆனால் இவை அனைத்தும் பிரச்சினைக்குரியதாகவும் இயேசுவினுடைய பிறப்பை மிக முந்தையதாக ஆக்குவதாகவும் உள்ளன. அனேகமாக உலகளாவிய பட்டியலின் ஆணையை ஏரோது மற்றும் அகுஸ்துவின் நாட்களில் தோராயமாக அமைந்தவாறு காலத்தினுடைய பொதுவான சுட்டுக்குறிப்பினை மட்டுமே லூக்கா அளிக்கலாம் (அதே போன்ற பொது அமைப்பிற்குக் காண்க. அ.ப. 11:28)

*2. அகுஸ்து சீசர் (கி.மு. 27-கி.பி. 14):-* புதிய ஏற்பாட்டுக் காலம் துவங்கிய போது அகுஸ்து உரோமைப் பேரரசராக இருந்தார். யூலியு சீசரின் மரணத்திற்குப் பின்னர் மாற்கு அந்தோணி மற்றும் ஆக்டேவியன் என்னும் இருவர் அதிகாரத்திற்காக போட்டியிட்டனர். கி.மு. 31 செப்டம்பரில் அக்தியுமில் அந்தோணியை தோற்கடித்ததன் மூலம் ஆக்டேவியன் இறுதியாக வெற்றி பெற்றார். விரைவிலேயே அவர் உரோமானிய உலகின் ஒரே தலைவராக உருவானார். இரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர் அவரது வெற்றியின்போது அவர் மீட்டளித்த சமாதானத்தை அடையாளப்படுத்தும் விதமாக 200 ஆண்டுகளில் முதன் முறையாக யானுவினுடைய உரோமைக் கோவிலின் கதவுகள் மூடப்பட்டன. கி.மு. 27-இல் உரோமைக்கு அவர் செய்த சிறப்பான ஊழியத்தை அங்கீகரிக்கும் விதமாக ஆட்சிப்பேரவையானது அகுஸ்து (வணக்கத்துக்குரிய) என்னும் பட்டம் ஆக்டேவியனுக்கு அளித்தது. இவ்வாறு இப்பட்டத்தைப் பயன்படுத்தும் உரோமைப் பேரரசர்களின் மரபு துவங்கியது (அ.ப. 25:21.25; நீரோ). ஆனால் உரோமைப் பேரரசினுடைய தொடக்கத்தினை இக்காலத்திலிருந்து துவக்குவது மரபாகும். அகுஸ்துவினுடைய ஆட்சியானது உண்மையில் நலம்பேணும் சர்வாதிகாரமாகவே இருந்தது. ஆயினும் நீண்டகாலத்திற்குப் பெரும்பாலான மத்திய தரை உலகில் சமாதானமும் வளமையும் நிலவியதன் மூலம் உரோமைச் சமாதானம் ஆட்சி புரிந்தது.

*3. ஏரோதுவின் வாரிசுகள்:-* ஏரோதுவின் உயில் அவரது அரசை அவரது மூன்று புதல்வர்கள் அர்க்கெலா, ஏரோது அந்திப்பா, மற்றும் பிலிப்பு ஆகியோருக்கிடையே பிரித்தளித்தது. பெரிய ஏரோதுவின் பேரில் யூதர்களின் வெறுப்பு ஆட்சியாளர்களாக அவரது மகன்களின் வாரிசுரிமைக்கு எதிர்ப்பை உருவாக்கிய வேளையில், குடும்ப உட்பூசலும் தொடர்ந்தது. அனைத்து பிரிவினராலும் தூதுக்குழுக்கள் உரோமைக்கு அனுப்பட்டன. இறுதியில் அகுஸ்து ஏரோதினுடைய விருப்ப ஆவணத்திற்கு மதிப்பளித்தார்.

*அ. அர்க்கெலா (கி.மு. 4-கி.பி.6):-* மால்தேக்கேயின் மூத்த மகனான இவர் அரசில் பாதியை (யூதேயா, சமாரியா, இதுமேயா) அடைந்தார். அரச பதவியை இவர் அடைய வேண்டுமென ஏரோது விரும்பினார். ஆனால் உரோமையர் சிற்றரசப் பதவியை மட்டுமே அளித்தனர். அவருடைய தான் தோன்றித்தனமான சர்வாதிகாரவழிகளின் காரணமாக ஏரோதினுடைய பிள்ளைகளிலேயே இவரை மக்கள் அதிகம் வெறுத்தனர். அர்க்கெலா தலைமைக் குருக்களைப் பதவியினின்று விருப்பம்போல் நீக்கினார். பரந்த அளவிலான கட்டுமாணப்பணிகள் செய்தார். வள்ளன்மையான பல திட்டங்

களை நிறைவேற்றினார். ஆனால் அவரது முறையற்ற அரசிற்கு எதிராக முறையிடுமாறு உரோமைக்கு எருசலேமிலிருந்தும் சமாரியாவிலிருந்தும் முக்கிய மனிதர்களைக் கொண்ட தூதுக்குழுவை அனுப்புமளவிற்கு அவர் யூதரைக் கிளர்ந்தெழுமாறு செய்தார். இது அவருடைய ஒன்பதாண்டு கால ஆட்சிக்கு ஒரு முடிவைக் கொணர்ந்தது. கி.பி.6-இல் தெற்கு காலில் உள்ள வியன்னாவிற்கு அவர் நாடு கடத்தப்பட்டார். யூதேயா, சமாரியா மற்றும் இதுமேயா ஆகியவற்றை உரோமை மாநிலமாக மாற்றுவதற்கு உரோமை இச்சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டது.

ஆ. ஏரோது அந்திப்பா (கி.மு. 4-39):- மால்தேக்கின் இளைய மகனாகிய இவர் கலிலேயா மற்றும் பெரேயாவிற்கு மண்டல ஆளுநராக ஆனார் (நிலப்பரப்பின் நான்கில் ஒரு பகுதியை ஆண்டு வந்த ஒரு சிற்றரசன் லூக் *3:2.19*; மத் *14:1*. ஆனால் மாற் *6:14* அவரை ''அரசன்'' என அழைக்கிறது). கலிலேயக் கடலின் மேற்கு கரையில் திபேரியாவில் அவர் தனக்கென ஒரு அழகிய தலைநகரைக்கட்டிப் பேரரசரின் பெயரை அதற்கு இட்டார். ஆனால் ஏரோது அந்திப்பா தனது தந்தையின் குணங்கள் சிலவற்றைக் கொண்டிருந்தார். அவர் வீண்பெருமையுடையவராகவும் சோம்பேறியாகவும் பகைமையுடையவராகவும், சூழ்ச்சியுடையவராகவும் இருந்தார் (லூக் *13:32* ''அந்தக் குள்ளநரி''). உரோமையின் ஆதரவை எவ்வாறு பெறுவதென அவர் அறிந்திருந்தார். நபத்தேய அரசன் நான்காம் அரேத்தாவின் மகளை திருமணம் செய்துகொண்டபின் அவளை நீக்கிவிட்டு இரண்டாம் மரியம்மேயின் மகனும் தனது ஒன்றுவிட்ட சகோதரனுமான ஏரோதுவின் மனைவி ஏரோதியாளை மணந்து கொண்டார் (லூக் *3:19*; மத் *14:3*; மற்றும் மாற். *6:17*-இல் ஏரோதியாள் பிலிப்புவின் மனைவியாக தோன்றுகிறாள். ஏரோது மற்றும் ஏரோதியாளின் மகள் மூன்றாம் சலோமியின் கணவனாகிய மண்டல ஆளுநனாகிய பிலிப்புவாக அவன் இருக்க முடியாததாகையால் ஏரோதியாளின் கணவனாகிய ஏரோது பிலிப்பு என்னும் பட்டப்பெயரைத் கொண்டிருக்கக் கூடுமென விளக்கவுரையாளர்கள் யூகிக்கின்றனர். ஆனால் இந்த யூகத்திற்கு மற்றபடி எந்த ஆதாரமுமில்லை). இச்சம்பவத்தின் காரணமாக திருமுழுக்கு யோவான் ஏரோது அந்திப்பாவினால் கொலை செய்யப்பட்டார் (மாற் *6:17-29*; மத் *14:3-12*). அரேத்தா அரசனுடைய மகளை விலக்கியதானது ஏரோது அந்திப்பாவினுடைய நாட்டில் கொரில்லா போர்முறையைக் கொண்டு வந்தது. சீரியாவிலுள்ள உரோமைப்பிரதிநிதியாகிய விதேல்லியு (கி.பி. *35-39*) அவனுக்கு உதவத் தவறியபோது ஏரோது கி.பி. 37-இல் அரேத்தாவினால் தோற்கடிக்கப்பட்டார். இறுதியாக பேரரசராகிய கலிகுலா அவரை *42* ஆண்டுகால ஆட்சிக்குப் பின்னர் இலயன்சுக்கு நாடு கடத்தினார் (கி.பி. *39*).

இ. பிலிப்பு (கி.மு. *4-34*) எருசலேமைச் சேர்ந்த கிளியோபத்திராவின் மகனாகிய பிலிப்பு கலிலேயா கடலுக்கு கிழக்கிலும் வடக்கிலும் உள்ள அவுரானிதிசு, பதனேயா, திரக்கோனித்து முதலிய பகுதிகளுக்கு மண்டல ஆளுநன் ஆனார். ஆனால் திரக்கோனித்து மற்றும் இத்துரேயா பற்றிமட்டும் லூக். *3:2* குறிப்பிடுகிறது. இவை யூதரல்லாதோர் பெருமளவில் குடியிருந்த பகுதியாகும். நபத்தேயர் மற்றும் பார்த்தியரின் தாக்குதல் தடுக்கும் பகுதிகளாகும். மூன்றாம் சலோமியின் கணவராகிய பிலிப்பு நல்ல ஆட்சியாளர். அவருடைய தயாள மனப்பான்மைக்காகவும் நீதிக்காகவும் அவர் அடிக்கடி புகழப்பட்டார். கி.மு. 2-விற்கு சற்று முன்னர் மீனவக் கிராமமாகிய (கலிலேயக் கடலின் வட கரையில் உள்ள) பெத்துசயிதாவை தனது தலைநகராக்கி, அகுஸ்துவின் மகள் யூலியாவின் பெயரால் அதனை அழைத்தார். யோர்தான் நதியின் ஊற்றுகளில் பழைய கிரேக்க நகராகிய பனேயாவை மீண்டும் கட்டியெழுப்பி அதற்கு செசரியா பிலிப்பி என்று மறு பெயரிட்டார் (மாற் *8:27*; மத் *16:13*). *37* ஆண்டுகால ஆட்சிக்கு பின்னர், ஒரு வாரிசின்றி, கி.பி. 37-இல் அவர் இறந்தார். அவரது நிலப்பரப்பானது முறையாக சீரியாவின் உரோமை மாநிலமாயிற்று.

*4.* கருவூல அதிகாரிகள் அல்லது ஆளுநர்கள்:- அர்க்கெலாவின் வீழ்ச்சிக்கு பின்னர் *(கி.பி. 6)* யூதேயா, சமாரியா மற்றும் இதுமேயா ஆகியவை அடங்கிய அவரது நிலப்பரப்பானது ஒரு மாகாணமாக அமைக்கப்பட்டு, குதிரைப் படை அமைப்பைச் சேர்ந்த கொப்போனியு என்பவர் அதற்கு ஆளுநராக அனுப்பப்பட்டார். மரண தண்டனை விதிக்குமளவிற்கு அவருக்கு எல்லா அதிகாரமும் பேரரசரால் அளிக்கப்பட்டது. இவ்வாறு பெரிய ஏரோதுவினுடைய பரந்த அரசின் முக்கிய பகுதியானது இனியும் மண்டலச் சிற்றரசர்களால் ஆளப்படாமல் *(கி.பி. 41-44-ஐ தவிர்த்து)* உரோமை ஆளுநர்களாலேயே ஆளப்பட்டது. இவர்கள் செசரியாவிலோ அல்லது எருசலேமில் ஏரோதுவினுடைய அரண்மனையிலோ தங்கியிருந்து அரச மாகாணத்தை ஆண்ட கருவூல மற்றும் படை ஆட்சியாளர்களாவர். தேவையானபோது சீரியாவிலுள்ள பிரதிநிதியை உதவிக்கு அழைக்கலாம். பேரரசருக்கான வரி வசூலிப்பதையும் பொது ஒழுங்கு கடைபிடிக்கப்படுவதையும் அவர்கள் கண்காணித்தனர். புதிய மாகாணமானது உருவாக்கப்பட்டபோது சீரியாவின் பிரதிநிதியாகிய சுல்பிசியு கிரேனியு குடிக்கணக்கு எடுக்குமாறு கட்டளையிடப்பட்டார். உரோமைக்கெதிரான ஒரு சிறுகிளர்ச்சி செய்ய இது பாலஸ்தீன யூதருக்கு ஒரு சந்தர்ப்பமளித்தது. உண்மையில் யாவே அவர்களுடைய ஆண்டவராக இருக்கின்ற வேளையில் கோழைத்தனத்தால் உலகத் தலைவர்களை ஏற்றுக் கொண்டதற்காகத் தனது நாட்டினரைக் கடிந்து கொண்ட கலிலேயனாகிய யூதாவினால் இது தூண்டிவிடப்பட்டது *(அ.ப. 5:37)*. பெரும்பாலான கருவூல அல்லது படை அதிகாரிகளைப் பற்றி அவர்களது பெயர்களைத்தவிர சிறிதளவே அறியப்படுகிறது: கொப்போனியு *(கி.பி. 6-9)*; அம்பிவியு *(9-12)*; அன்னியு உரூபு *(12-15)*; வலேரியு கிராத்து *(15-26)*; போந்தியு பிலாத்து *(26-36)*; மார்செல்லு *(36-37)*; மருல்லூ *(37-41)*; குசுபியு பாது *(44-46)*; திபேரியு யூலியு அலக்சாந்தர் *(46-48)*; வெந்திதியு குமானு *(48-52)*; அந்தோனியு பெலிக்சு *(52-60)*; போர்க்கியு பெஸ்து *(60-62)*; லூக்கேயு ஆல்பினு *(62-64)*; கெசியு புலோரு *(64-66)*.

*5.* போந்தியு பிலாத்து *(கி.பி. 26-36)*:- யூதேயாவின் ஆளுநர்களில் நன்கு அறியப்பட்டவர் இவர் *(லூக் 3:1)*. பேரரசரின் நினைவாக கட்டியெழுப்பப்பட்ட திபேரியும் என்று அழைக்கப்படும் கட்டிடத்தைச் சேர்ந்த அர்ப்பணிப்பு கல்வெட்டானது செசரியா மரித்திமாவில் கண்டெடுக்கப்பட்டது. திபேரியுவின் காலத்தில் பிலாத்துவினுடைய பிரசன்னத்திற்கு அது சான்றளித்து, யூதேயாவின் ஆளுநர் என்ற பெயரையும் அவருக்கு அளிக்கின்றது. திபேரியுவினுடைய யூத எதிர்ப்பு ஆலோசகராகிய செயானவினால் பதவியிலமர்த்தப்பட்ட பிலாத்து வலிமை வாய்ந்த கண்டிப்பான ஆட்சியாளராக இருந்ததோடு யூதர்களுக்குத் தன்னை உகந்தவராக்கிக் கொள்வதற்கென முயற்சி எடுக்கவில்லை. பேரரசர் கலிகுலாவிற்கு எழுதிய கடிதத்தில் ''முரண்டுப்பிடியாய் இயற்கையாய் வளைந்து கொடுக்காத கொடூரமான'' மனிதன் என பிலாத்துவைப்பற்றி முதலாம் ஏரோது அகிரிப்பா விவரிக்கிறார். ''சுரண்டல், அவமதிப்பு, திருட்டு, தாக்குதல், பழிப்புரை, விசாரணையற்ற மரண தண்டனைகள், முடிவில்லா பயங்கர கொடூரம்'' ஆகிய குற்றங்களை பிலாத்துமேல் சாற்றுகின்றார். பிலாத்து முதலில் யூதேயாவை வந்தடைந்தபோது பேரரசருடைய முத்திரை பதித்த இராணுவப் பட்டயங்களை இரவில் எருசலேமிற்குள் கடத்தி வந்தார். இத்தகைய உருவங்களைத் தடுக்கின்ற வழக்கங்களையடைய யூதர்களுடைய உணர்வுகளை இது பாதித்தது. அவற்றை நீக்குமாறு அவர்கள் பிலாத்துவை மன்றாடினர். ஆனால், பிலாத்து அதற்கு உடன்பட மறுத்தபோது செசரியாவில் அவனது வீட்டைச் சுற்றி மௌனப் போராட்டமாக ஐந்து நாட்கள் நின்றனர். அவர்கள் போராட்டத்தை தொடர்ந்ததால் அவர்களை உடனே கொல்லுமாறு உருவிய வாட்களுடன் போர்வீரர்களை யூதரைச்சுற்றிப் பிலாத்து நிற்கச் செய்தார். ஆனால் யூதர்களோ பத்து கட்டளைகளை மீறுவதற்கு பதிலாக தங்களது உயிரை

இழக்கவும் தயாராயிருந்தனர். இதைக்கண்டு வியப்படைந்தவராய் பட்டயங்களை நீக்குமாறு பிலாத்து கட்டளையிட்டார். ஆனால் மற்றொருமுறை மிக அவசியமான ஆனால் சமயம் சாராத கால்வாய் கட்டுவதற்கென புனிதக் கருவூலத்தின் பணத்தை பிலாத்து உபயோகித்ததை யூதர்கள் எதிர்த்தபோது கிளர்ச்சியாளர்களுடன் தனது போர் வீரர்களையும் பிலாத்து கலக்கச் செய்து அவர்களைத் (மத் 27:6) தடியால் அடிக்கச் செய்தார். அடிகளாலும் கூட்டத்தின் மிதிபாடுகளாலும் பல யூதர்கள் இறந்தனர். கலிலேயருக்கு எதிராக பிலாத்து நிறைவேற்றிய வன்முறைச் செயலுக்கான மறைமுகமான குறிப்பை லூக் 13:1 பாதுகாத்துள்ளது; அவர்கள் எருசலேமிற்கு காணிக்கைகளை கொண்டு வந்த போது, ''அவர்களது பலிகளுடன் அவர்களது இரத்தத்தை அவன் கலந்தான்''.

ஆயினும், மாகாண மக்கள்பால் பிலாத்து காட்டிய தான்தோன்றித்தனம் அவரது அழிவிற்கு இட்டுச் சென்றது. கி.பி.35-இல் தங்களுடைய புனித மலையில் மோசேயால் புதைக்கப்பட்டதாக கருதப்பட்ட புனித கலன்களின் கண்டுபிடிப்பைக் காணுவதற்கு கெரிசிம் மலையில் ஒன்று கூடிய சில அப்பாவியான சமாரியரை பிலாத்து தாக்கிச் சிறைப்படுத்திக் கொன்றார். எவ்வித போராட்ட எண்ணமுமின்றி கெரிசிம் மலைக்கு திருப்பயணம் மேற் கொண்ட சமாரியர்கள் இத்தாக்குதலைப்பற்றி சீரியாவின் பிரதிநிதியாகிய விரெல்லியுவிடம் முறையிட்டனர். அவர் உடனடியாக பேரரசரின்முன் தனது செயல்களுக்கு விளக்கம் தருமாறு பிலாத்துவை உரோமைக்கே அனுப்பி விட்டார். இதற்குபின் பிலாத்துவிற்கு என்ன நிகழ்ந்தது என்பது பற்றி தெரியவில்லை. கலிகுலாவின்கீழ் அவர் தற்கொலை செய்து கொண்டதாக அல்லது நீரோவின்கீழ் மரணதண்டனை அடைந்ததாகப் பிற்கால கதைகள் கூறுகின்றன. மனதளவில் அவன் ஒரு கிறிஸ்தவன் என தெர்துல்லியன் நம்பினார். பிலாத்துவின் காலத்தில்தான் திருமுழுக்கு யோவானும் இயேசுவும் தங்கள் பணியைச் செய்தனர். இவர் காலத்தில்தான் இயேசுவின் இயக்கத்தால் கிறிஸ்துவத்திருச்சபை தோன்றியது.

IV. இயேசுவின் காலத்திற்கு பின் உரோமைப் பாலஸ்தீனம் (கி.பி.30-135).

*1.* கிறிஸ்தவ திருச்சபை பரவுதல்:- தொடக்க கால கிறிஸ்தவ சமுதாயம் ''இயேசு கிறிஸ்துவினுடைய நற்செய்தியை'' (மாற் 1:1) அறிவிக்க வேண்டிய தனது கடமையைப் பற்றி மேலும் மேலும் உணரலாயிற்று. பாலஸ்தீன யூதர்களை மனந்திருப்பிய ஆரம்ப கட்ட வெற்றிக்கு பின்னர் (அ.ப. 2:47; 6:7) அப்போஸ்தலிக்க போதகர்கள் உரோமைப் பேரரசின் நகராட்சி மையங்களை நோக்கித் திரும்பினர். படிப்படியாக நற்செய்தியானது எருசலேமிலிருந்து ''மண்ணுலகின் கடை எல்லைவரை'' (1:18), முதலில் சிதறிப்போன யூதருக்கும் பின்னர் புறவினத்தாருக்கும் அறிவிக்கப்பட்டு பரவியது.

அனேகமாக கி.பி.36-இல் போந்தியு பிலாத்து உரோமைக்குத் திருப்பி அனுப்பப்பட்டு மர்செல்லு ஆளுநராக அறிவிக்கப்பட்டபோது (36-37), ''திருச்சபையினுடைய பெரும் கலாபனை'' (8:1) நிகழ்ந்தது. புதிய ஆளுநரை நியமிப்பதானது இத்தகைய எதிர்பாராக் கிளர்ச்சிக்கு பொருத்தமானதாக தோன்றுகிறது. எவ்வாறாயினும் இளைய பாலஸ்தீனிய கிறிஸ்தவ சமுதாயத்தின்மீதான கலாபனையில் ஸ்தேவான் கொல்லப்பட்டதும் தார்சு நகரச் சவுல் தனது கொலைத் திட்டங்களை வெளிப்படுத்தியதும் நிகழ்ந்தன (9:1-2). துல்லியமாக கணிக்க முடியாத சவுலின் மனமாற்றமானது இக்காலத்துக்குரியதாக இருக்கலாம்.

*2.* முதலாம் ஏரோது அகிரிப்பா (கி.பி.37-44):- கி.பி.37-ஆம் ஆண்டு மார்ச் 16 ஆம் நாள் திபேரியு பேரரசர் மரணமடைந்தார். புதிய பேரரசர் கயுகலிகுலா (37-41) பற்றிய செய்தி எருசலேமை எட்டியபோது பிலாத்துவினால் கோபமூட்டபட்ட பாலஸ்தினயூதரின் உணர்வுகளை திருப்திபடுத்த முயல்பவராய் சீரியாவின் பிரதிநிதி விதேல்லியு அங்

கேயே இருந்தார். புதிய பேரரசருக்கு தங்களது பற்றுறுதியை முதலில் வாக்களித்த அவரது ஆட்சியை புகழ்ந்தவர்கள் சீரியாவின் குடிமக்களில் யூதர்களேயாவர். அவரது ஆட்சி முதல் 18 மாதங்களுக்கு சமாதானம் நிறைந்ததாகவும் அமைதியானதாகவும் இருந்தது. ஏனெனில் திபேரியு பேரரசர் வழிபாட்டினை விலக்கியிருந்தார். ஆனால் கலிகுலா இப்போது அதனை வலியுறுத்த ஆரம்பித்தார். பேரரசில் உள்ள அனைத்து ஆலயங்களிலும் கோவில்களிலும் (செபக்கூடங்களிலும்) தனது உருவத்தை தெய்வமாக நிறுவ விரும்பினார்.

பெரிய ஏரோதுவின் பேரனும் ஏரோதியாளின் சகோதரனுமான தனது நண்பன் முதலாம் ஏரோது அகிரிப்பாவிற்கு வடக்கு யோர்தானுக்கு அப்பாலுள்ள பிலிப்புவின் ஆளுகைக்குட்பட்ட பகுதிகளை கலிகுலா விரைவில் அளித்தார். இந்த சலுகையுடன் அரசபட்டமும் கிடைத்தது. பாலஸ்தீனத்திற்குத் திரும்பிச் செல்லும் வழியில் ஏரோது அரசன் அலக்சாந்திரியாவில் சிறிதுகாலம் தங்கினார். அங்கே அவருக்கும் அங்குக் குடியேறியிருந்த யூதர்களுக்கும் எதிராக அவதூறான கிளர்ச்சி எழுந்தது. உரோமை படையதிகாரியாகிய அவில்லியு பிளாக்கு இதனை அனுமதித்தார். யூதருக்கு எதிரான வன்மையான கலாபனை ஒன்று அங்கே தொடங்கியது (கி.பி.38). அதற்கு எதிர்ப்பாகத் தங்களுடைய நிலையை பரிந்துரைப்பதற்கென, இறுதியாக கி.பி.40ல் அலக்சாந்திரிய யூதர்கள் பேரரசரிடம் ஒரு குழுவை அனுப்பினர். அதில் குறிப்பிடத்தக்க ஒரு உறுப்பினர் மெய்யியலறிஞர் பிலோ ஆவார். ஆனால் தூதுவர்கள் எதிர் பார்த்த வெற்றியை அடையவில்லை.

39-இல் எரோது அந்திப்பா நாடு கடத்தப்பட்டபோது அவருடைய நிலப்பரப்பானது (கலிலேயா மற்றும் பெரேயா) முதலாவது ஏரோது அகிரிப்பாவின் ஆட்சிப்பரப்புடன் சேர்க்கப்பட்டது. எகிப்திலுள்ள உரோமை படை அதிகாரியால் அவமானப்படுத்தப்பட்ட ஏரோது அகிரிப்பா 39-இல் கலிகுலாவினால் வெளியேற்றப்பட்ட சீரியாவின் பிரதிநிதி பெத்ரோனியுவின் மேல் செல்வாக்குச் கொண்டிருந்தார். பேரரசர் வழிபாட்டை வலியுறுத்த வேண்டாமென எரோது அரசன் அவனை வற்புறுத்தினார். இதன் விளைவாக எருசலேமைப் பொறுத்த மட்டில் பெத்ரோனியு இவ்வழிபாட்டைத் தாமதப்படுத்தினார். ஆனால் கடற்கரை நகராகிய யாம்னியாவின் புறவின குடிமக்கள் பேரரசருக்கென ஒரு கொடூரமான பீடத்தை கட்டியபோது அவ்வூர் யூதரால் அது தரைமட்டமாக்கப்பட்டது. இச்சம்பவம் பற்றி பேரரசரிடம் கூறப்பட்டது. அதற்கு பதிலடியாக எருசலேம் ஆலயத்தில் தன்னுடைய பிரம்மாண்டமான ஒரு சிலையினை அமைக்குமாறு அவர் கட்டளையிட்டார். ஆனால் இந்த ஆணையை நல்அருளுடன் ஏற்குமாறு யூதத் தலைவர்களை இணங்கச்செய்ய பெத்ரோனியு முயன்றார். ஆனால் காலந்தாழ்த்திக் கொண்டேயிருந்தார். இதனால் அச்சமுற்றவர்களாய் பெத்ரோனியு தங்கியிருந்த தோலமேயியில் யூதர்கள் அனைவரும் ஒன்றுகூடி சிலையை ஏற்படுத்த வேண்டாமென அவரை இறைஞ்சினர். இதைப்பற்றி பெத்ரோனியு கலிகுலாவிற்கு கடிதம் எழுதினார். அது அவர் மீது கலிகுலாவைச் சினமுறச் செய்தது. இந்த கட்டளையை திரும்பப் பெறச் செய்யும் நம்பிக்கையுடன் ஏரோது அகிரிப்பா கலிகுலாவை சந்தித்தார். பெத்ரோனியுவின்மீது ஆத்திரமுற்றவராய் அவரை தற்கொலை செய்து கொள்ளுமாறு பேரரசர் கட்டளையிட்டார். மேலும் கி.பி.41 ஜனவரி 24-இல் கலிகுலா கொலை செய்யப்பட்டதுடன் முழுப்பிரச்சினையும் தீர்க்கப்பட்டுவிட்டது.

உரோமைப் படைகளின் ஆரவாரத்துடன் கிளாதியு (41-54) அரியணை ஏறிய போது யூதருக்கு ஆதரவான சகிப்புத்தன்மையின் கட்டளையுடன் அவரது ஆட்சி தொடங்கியது. உரோமை ஆட்சிக்கு முதலாம் ஏரோது அகிரிப்பா அளித்த ஆதரவிற்கு வெகுமதியாக அன்று முதல் அர்க்கெலாவின் பரப்பு (யூதேயா, சமாரியா, இதுமேயா) அவருக்கு அளிக்கப்பட்டது. அன்று முதல் அவரது

மரணம் வரை பெரிய ஏரோதுவின் ஆட்சிப் பரப்புக்கு ஒத்த பகுதியை ஆட்சி செய்தார். எருசலேமினுடைய மூன்றாவது வடக்கு சுவரை கட்டும் பணியை ஏரோது அகிரிப்பா ஏற்றுக்கொண்டார். இப்பணியானது முடிக் கப்பட்டிருப்பின் நகரானது அசைக்க முடி யாத அரண்மிக்கதாயிருந்திருக்கும். ஆனால் அது கட்டி முடிக்கப்படுவதற்கு முன்னதா கவே சீரியாவின் பிரதிநிதியாகிய மவுருசி னால் எச்சரிக்கப்பட்ட கிளாதியு அப்ப ணியை அத்துடன் நிறுத்திவிட்டார். இச்சுவர் அமைந்த இடம் தொல்பொருள் ஆராய்ச்சி யாளர்களின் விவாதத்திற்கு உட்பட்டதாக உள்ளது. தோராயமாக இன்றைய பழைய நகரின் வடக்கு சுவருடன் ஒத்திருக்க வேண் டும். அல்லது பழைய நகரின் வடக்கிலுள்ள பண்டைய சுவரின் வரிசையில் அமைந்திருக் கவேண்டும். ஆயினும் காத்லின் கெனி யோன் என்பரால் 1965-இல் மேற்கொள்ளப் பட்ட அகழ்வாராய்ச்சியானது சுகேனிக்கி யின் சுவருக்கு அறுபதுகளுக்கு முற்படாத ஒரு தேதியை பரிந்துரைக்கிறது. இது அகி ரிப்பாவினால் கட்டப்படாமலிருக்கப்பட வேண்டும் அல்லது மூன்றாவது சுவருக்கு அடிப்படை மட்டும் அகிரிப்பாவினால் இடப்பட்டு உண்மையான கட்டுமானப் பணியானது முதல் யூதப் புரட்சியின் போதோ அல்லது பார் கோக்பாவின் காலத் திலோ நிறைவேற்றப்பட்டிருக்க வேண்டும்.

ஏரோது அகிரிப்பா குறிப்பிடத்தக்கவராய் இல்லாவிடினும் பக்தியுள்ள அரசராய் இருந் தார். அன்னிய நாட்டில் கிரேக்க கலாச்சாரத் திற்கு தாராளமாக பரிந்துரை செய்தும் பெரித்தின் (இன்றைய பெய்ரூட்) புறவின அமைப்புகளுக்கு தாராளமாக உதவிபுரிந்தி ருந்ததாலும் சொந்த நாட்டில் பரிசேயத்தன் மைக்கு ஆதரவளித்ததால் அவரது மரணத் தின்போது மக்கள் துக்கம் கடைபிடித்தனர். பரிசேய இயக்கத்திற்கு அவர் ஆதரவு அளித் ததால் அப்போது தோன்றி வளர்ச்சி அடைந்து கொண்டிருந்த கிறிஸ்தவ திருச்ச பையை அவர் துன்புறுத்தியதைக் கண்டு வியப்படைய வேண்டியதில்லை (அ.ப.12:1-19). அவர் கி.பி.44-இல் செபதேயுவின் மக னான யாக்கோபுவைக் கொலை செய்தார். கி.பி.44-இல் பேரரசருக்கு மதிப்பளிக்கும் விளையாட்டுக்களுக்கு வருகை புரிந்த போது செசரியாவில் ஏரோது அகிரிப்பா திடீரென மரணமடைந்தார் (12:20-23).

3. இரண்டாம் அகிரிப்பாவிலிருந்து முதல் கிளர்ச்சிவரை:- முதலாம் ஏரோது அகிரிப்பா வின் மரணத்தின்போது நாடானது கருவூல அதிகாரிகளால் ஆளப்படும் விதமாக கிளா தியு பேரரசர் மீண்டும் நாட்டை உரோமை மாநிலமாக மாற்றியமைத்தார். ஆயினும் அப்பகுதியில் ஒரளவு ஆட்சிசெய்த ஏரோது வின் குடும்பத்தைச் சேர்ந்த கடைசி ஆட்சி யாளர் ஏரோது ஆகிரிப்பாவின் மகனாகிய இரண்டாம் மாற்கு யூலியு அகிரிப்பா ஆவார். தனது குடும்பத்தின் பெரும்பாலா னோரைப் போன்று இவரும் உரோமையி லேயே வளர்க்கப்பட்டார். இவருடைய தந்தை இறந்த போது இவருடைய வயது 17 மட்டுமே. இவர் தனது தந்தையின் உரி மையை உடனடியாக பெறவில்லை. ஆனால் அவரது தாய் மாமன் கால்கிசினு டைய ஏரோது இறந்த பின்னர் (48) எதிர்லெ பனோனின் சரிவுகளில் அமைந்திருந்த சிறு பகுதிக்கு இவர் ஆட்சியாளரானார். பின்னர் இவர் அதனையும் விட்டு விட்டு (52) பிலிப் புவினுடைய பழைய ஆட்சி மண்டலத்தை கிளாதியுவிடமிருந்து பெற்றார். அப்பகுதியு டன் பிற்காலத்தில் கலிலேயா பெரேயா ஆகியவற்றை நீரோ சேர்த்தார். தனது சகோ தரி பெர்னீக்காவுடன் கொண்டிருந்த (தகாத) உறவுமுறைகள் உரோமையில் அவதூற்றை உருவாக்கின. செசரியாவில், இந்த அகி ரிப்பா மற்றும் பெர்னீக்காவின் முன்னிலை யில் கைதியாகிய பவுல் தனது வழக்கை விளக்க வேண்டியதாயிற்று (அ.ப. 25:23-25). எருசலேமின் வீழ்ச்சிக்குப் பின்னர், இரண் டாம் அகிரிப்பா உரோமைக்குச் சென்று பெர்னீக்கவுடன் அங்கு வாழ்ந்தார். சிலகா லம் அவர் குற்றவியல் நடுவராக இருந்து, 93-100க்கு இடைப்பட்ட காலத்தில் இறந் தார். பாலஸ்தீனத்தை ஆண்ட காலத்தில், யூத மக்கள் மீது சிறிதளவே செல்வாக்கு கொண்டிருந்தார். அவர் குருக்களால்

தொடர்ந்து எதிர்க்கப்பட்டார். தன் விருப்பப் படி அவர் தலைமை குருக்களைத் தொடர்ந்து நியமித்தும் நீக்கியும் வந்தார். ஏரோது மரபினுடைய முடிவானது மகிமைக்குரியதாக இல்லை.

இக்காலத்தில் மிகக்குறிப்பாக திபேரியு யூலியு அலக்சாந்தருடைய ஆட்சிக்காலத்தில் *(46-48)*, யூதேயாவும் கிழக்கு மத்திய தரைஉலகின் மற்ற பகுதிகளும் கொடிய பஞ்சத்தினால் பாதிக்கப்பட்டன. அது முழு உலகையும் பாதிக்கும் என்ற முன்னறிவிப்பு அ.ப. *11:28*-இல் குறிப்பிடப்பட்டுள்ளது. பஞ்சத்தில் சிக்கிய பாலஸ்தீன மக்களுக்கு, அதிபேனுடைய அரசியாகிய ஏலன் என்னும் யூத சமயம் மாறியவருடைய உதவியால் எகிப்திலிருந்து கொணரப்பட்ட தானியம் உதவியது. அநேகமாக இப்பஞ்சமானது பார்னபா மற்றும் பவுல் ஆகியோர் எருசலேமுக்குச் செல்ல ஒரு வாய்ப்பாய் இருந்திருக்கக்கூடும் *(11:29-30; 12:25)*. காலம் துல்லியமாகக் குறிக்கப்பட முடியாததாயினும், அப்போஸ்தலர்கள் மற்றும் மூப்பர்களின் கூட்டம் எருசலேமில் 49-இன் கோடை காலத்தில் நடைபெற்றிருக்கக்கூடும். புறவின கிறிஸ்தவரின் விருத்தசேதனம் மற்றும் மோசேயின் சட்டத்தை கடைபிடிக்க வேண்டிய கடமை ஆகியவற்றிற்கு எதிராக எருசலேம் சபை தீர்மானித்தது*(அ.ப.15:2-12)*. கிறிஸ்தவ திருச்சபையை அதனுடைய யூத தோற்றத்தினின்று விடுவித்த முடிவு இதுவே.

இக்காலத்தில் பாலஸ்தீனத்தின் உண்மையான ஆட்சியாளர்கள் கருவூல அதிகாரிகளே. யூத மக்களை புரிந்து கொள்வதற்கு எவ்வித முயற்சியையும் அவர்கள் மேற்கொள்ளவில்லை. பொதுமக்களின் உணர்ச்சிகளுக்குச் சிறிதளவே ஆதரவு அளித்தனர்; மேலும், அவர்களை தொல்லைப்படுத்துவதற்கான வாய்ப்பையே எதிர்நோக்கியிருந்தனர். இக்காலத்தில் அடுத்தடுத்த சிறு கிளர்ச்சிகள் எழுந்தன. இக்காலத்தில் மிக அவப்பெயருடைய கருவூல அதிகாரி அந்தோனியு பெலிக்சு என்பவராவார் *(52-60)*. இரண்டாம் அகிரிப்பாவின் சகோதரி துருசில்லாவின் இரண்டாவது கணவனாவார். அதன் மூலம் இவர் ஏரோதுவின் குடும்பத்தைச் சேர்ந்தவனானார். இவர் ஆட்சியில் கிளர்ச்சிகள் வெளிப்படையான போராட்டங்களாகின. உரோமையில் வாழ்ந்து வந்த பதவி நீக்கம் செய்யப்பட்ட ஒரு தலைமைக்குருவின் (யோனத்தான்) வேண்டுகோளின்படி பேரரசரால் அவர் பாலஸ்தீனத்திற்கு அனுப்பப்பட்டார். ''அடிமையின் தன்மையுடன் எல்லாவித கொடூரம் மற்றும் இச்சைகளுடன் அவன் அரச கடமைகளைச் செயல்படுத்தினான்'' என பெலிக்சைப் பற்றி தசித்து எழுதியுள்ளார் *(காண்க அ.ப. 24:24-26)*. பாலஸ்தீனத்தில் அவரது வருகைக்கு முற்பட்ட காலங்கள் உரோமை ஆக்கிரமிப்பைக் கடுமையாக எதிர்க்கின்ற யூத தீவிரவாதிகளின் வளர்ச்சியைக் கண்டன. யோசிபஸ் அவர்களைக் கொள்ளையர் என்று குறிப்பிடுகிறார். நாட்டை அவர்களிடமிருந்து விடுவிப்பதற்கென பெலிக்சு எண்ணற்றோரை சிலுவையிலறைந்தார் என அவர் குறிப்பிடுகிறார். சிகாரியி என்ற குழுவினர் அப்பொழுது தோன்றினர். இவர்கள் குருவாள் கொண்ட தேசிய வாதிகள்; தங்களுடைய அரசியல் எதிரிகளைக் பெரும்பாலும் பொது நிகழ்ச்சிகளில் கொலைசெய்து அழிப்பதற்கெனத் தங்களையே அர்ப்பணித்துக் கொண்டவர்கள். அரசியல் கொலைகள் கிட்டதட்ட தினசரி நிகழ்ந்தன. அவர்களுடைய முதல் பலி தலைமைக்குருவாகிய யோனத்தான் ஆவார். அவரை நீக்கியதில் பெலிக்சும் பெருமகிழ்வு கொண்டார். மேலும் தூய கரங்களுடனும் மிகக் கொடிய எண்ணங்களுடனுமான பாதகர்களின் மற்றொரு குழுவும் அங்கே எழுந்தது. உரோமைக்கு எதிராக மக்களிடைய பெரும் ஆர்வத்தை அவர்கள் உருவாக்கினர். அவர்கள் இதை ஓர் இறைபணியாக உரிமை கொண்டாடினர். அப *21-38*-இல் குறிக்கப்படும் எகிப்திய வஞ்சகனுடைய குழப்பமானது இக்காலத்திற்குரியதாக இருக்கலாம். தன்னுடைய சொல்லால் எருசலேமின் சுவர்கள் இடிந்து விழும்; உடனே அவர்கள் நகருக்குள் நுழைந்து உரோமையரிடமிருந்து அதனை கைப்பற்றலாம் என்று உறுதிமொழியளித்த இந்த யூத

போலி இறைவாக்கினர், ஒரு மக்கட் கூட்டத்தை ஒலிவ மலைக்கு நடத்திச் சென்றார். பெரும்படையுடன் பெலிக்சு அவர்களை எதிர்கொள்ளச் சென்றார். எகிப்தியன் தப்பிவிட்டாலும் அவனுடைய படையின் பெரும் பகுதி கைப்பற்றப்பட்டது அல்லது கொல்லப்பட்டது. பெலிக்சின் ஆட்சியின் இறுதி இரண்டு ஆண்டுகளில் பவுல் செசரியாவில் சிறையிலிருந்தார் (அ.ப. 23:23-26:32). பெலிக்சினுடைய ஆட்சிக் காலத்தில் பேரரசர் கிளாதியு இறந்து (13 அக்டோபர் 54) நீரோ அரியணை ஏறினார்.

பெலிக்சை தொடர்ந்து ஆட்சிபுரிய போர்கியு பெஸ்துவை (60-62) நீரோ அனுப்பினார். இவர் நேர்மையான ஆட்சியாளராக இருக்க உண்மையாக முயன்றார் (யூதருக்கும் தயவு காட்டினார் அ.ப. 24:27). ஆனால் பெலிக்சின் கீழ் வளர்ச்சியுற்ற கிளர்ச்சியானது எவ்வித நீடித்த தீர்விற்கும் அப்பாற்பட்டதாக இருந்தது. பெஸ்து வந்தவுடனே, செசரியாவில் தங்கியிருந்த யூதருக்கும் சீரியருக்குமிடையே ஒரு பிரச்சினை எழுந்தது. பேரரச கட்டளையின் மூலமாக சீரியருக்கு ஆதரவாக அது தீர்மானிக்கப்பட்டது. இது யூதருக்கு மேலும் வெறுப்பூட்டியது. உரோமைக் குடிமகன் என்ற அளவில் நீதிக்காக பேரரசரிடம் வேண்டும் தனது உரிமையைப் பயன்படுத்தியபோது பவுலை இறுதியாக உரோமைக்கு அனுப்பியவர் பெஸ்துவே (25:11-13). அடுத்த கருவூல அதிகாரியான அல்பினுவின் கீழ் சூழ்நிலையானது முன்னேறவேயில்லை. அவனுடைய அட்டூழியமானது அளவற்றதாக இருந்தது. அவன் நிறைவேற்றத் தவறிய குற்றம் என்று எதுவுமே இல்லை என்று கூறப்படுகிறது.

4. முதல் புரட்சி (66-70):- உரோமை கருவூல அதிகாரிகளில் இறுதியானவர் கெசியு புலோரு ஆவார் (74-66). இவருடன் ஒப்பிடும்போது இவருக்கு முந்தைய அதிகாரி நற்குணத்தில் சிறந்தவராகத் தெரிகிறார். இவர் வெளிப்படையாகவே நாட்டை சூறையாடினார்; கொள்ளையடித்தார்; நகரங்களை அழித்தார்; மேலும் கொள்ளையரிடமிருந்து இலஞ்சம் வாங்கினார். புறவினத்தாருக்கு மேலான குடிமக்கள் உரிமைகளை அளிக்க நீரோ தீர்மானித்தபோதும் கிரேக்க இனத்தவர் செபக்கூட வாசல்முன் கடைகளை கட்டி நுழைவுரிமையை தடுத்த போதும் செசரியாவில் யூதர்கள் பெரிதும் இழிவுபடுத்தப்பட்டனர். கெசியு புலோரிடம் அவர்கள் கோரிக்கை விடுத்தாலும், சூழ்நிலையைச் சீர்படுத்த அவர் எதையும் செய்யவில்லை. பின்னர், கோவில் கருவூலத்திலிருந்து அவன் 17 தாலந்துகளை எடுத்தபோது எருசலேம் யூதரால் இனியும் தங்களை கட்டுப்படுத்திக் கொண்டிருக்க முடியவில்லை. வஞ்சப்புகழ்ச்சியுடனும் இகழ்ச்சியுடனும் வறுமைப்பட்ட புலோருக்கு அளிப்பதற்கென உதவி சேகரிப்பதற்கு தங்களுடைய சமுதாயத்தைச் சுற்றி ஒரு கூடையை அனுப்பினர். இந்த அவமானத்திற்காக அவன் அவர்களை இரத்தப்பழி வாங்கி நகரின் ஒரு பகுதியை சூறையாடுவதற்கென தனது போர்வீரர்களுக்கு அளித்தான். இச்சம்பவங்களின்போது குருக்கள் யூதர்களைக் கட்டுபடுத்த முயன்றதாலும் பொறுமையாயிருக்க அவர்களுக்கு ஆலோசனை அளித்ததாலும், போர்வீரர்களுக்கு எதிராக செயல் படாத மக்களின் பொறுமையை வீரர்கள் வெறுப்பாக எடுத்துக் கொண்டனர். ஆகவே படுகொலை நிகழ்ந்தது. யூதர்கள் கோவில் எல்லைக்குள் பின்வாங்கி விரைவிலேயே கோவிலுக்கும் அந்தோனியா கோட்டைக்கும் இடையிலான தாழ்வாரப் பாதையைத் துண்டித்தனர். இத்தருணத்தில் கிளர்ச்சியாளரை தடுக்கும் வலிமையற்றிருந்த புலோரு செசரியாவிற்கு பின்வாங்குமாறு வற்புறுத்தப்பட்டார். உரோமைக்கு எதிரான புரட்சியானது முறையானதாயிற்று.

இப்போது எலயாசர் யூதர்களின் தலைவராக இருந்தார். தீவிரவாத தலைவராகிய கலிலேய யூதாசின் மகன் மெனகேம் இவருக்குத் துணைபுரிந்தார். நாடானது போருக்குத் தயார் செய்யப்பட்டது. சனேதிரின் சங்கம் கலிலேயாவை மத்தியாவின் மகனும் குருவும் பரிசேயருமா

கிய யோசேப்புவிடம் ஒப்படைத்தது. ஆயினும் அவர் கலிலேய தீவிரவாதி தலைவராகிய கிஸ்கலா யோவானால் பிரமாணிக்கம் இல்லாதவராகச் சந்தேகிக்கப்பட்டார். ஏனெனில் யோசேப்பு பெரும்பாலான நேரத்தை கிளர்ச்சிக் காரர்களை ஒழுங்குபடுத்துவதை விட அடக்குவதிலேயே செலவழித்தார். முதலில் யூதர்கள் புலோரின் படைகளைத் தோற்கடிப்பதில் வெற்றி கண்டனர். அவனுடைய உதவிக்கென அழைக்கப்பட்ட சீரிய பிரதிநிதி செஸ்தியு கால்லுசின் படைகளும் தோற்கடிக்கப்பட்டன. இதன் விளைவாக அனுபவமிக்க படைத்தளபதி வெஸ்பாசியனை நீரோ அனுப்பி வைத்தார். அவர் 66-67-இன் குளிர்காலத்தில் அந்தியோக்கியாவில் தனது படை அலுவலைத் தொடங்கி விரைவில் கலிலேயாவிற்கு எதிராகப் படையெடுத்தார். ஓராண்டிற்குள் யோதபதாவில் யோசேப்பு சரணடைதலுடன் கலிலேயாவின் அனைத்து இடங்களும் வீழ்ந்தன.

வடக்கு பாலஸ்தீனம் மீண்டும் ஒருமுறை உரோமைக்குக் கீழ்படுத்தப்பட்டது. உரோமையரின் ஐந்தாவதும் பதினைந்தாவதுமாகிய இரு சேனைகள் செசரியாவில் பனிக்காலத்தில் நிறுத்தப்பட்டன (67-68). பத்தாவது சேனை ஸ்சிதோபோலிசில் (பேத்துசான்) அமர்த்தப்பட்டது. இதற்கிடையில் யூதர்கள் இதுமேயரின் உதவியை நாடினர். ஆனால் உதவிசெய்யவந்த இதுமேயர்கள், சூழ்நிலை மோசமானது என்பதை விரைவில் உணர்ந்து பின்வாங்கி விட்டனர். அந்நேரத்தில் எருசலேம் கிறிஸ்தவர்கள் பெரேயாவிற்கு தப்பியோடி பெருமளவில் பெல்லா-வில் தங்கியதாகத் தெரிகிறது.

68-இன் இளவேனிற்காலத்தில் யோர்தான் பள்ளத்தாக்கு வழியாக, வழியிலிருந்த எதிரிகளின் தலைமையிடங்களைக் (சமாரியா, எரிகோ, பெரேயா, மக்கேரு, கும்ரான் முதலிய) கைப்பற்றி எரித்தழித்துக்கொண்டு வெஸ்பாசியான் எருசலேமை நோக்கி முன்னேறினார். 68-ஆம் ஆண்டு ஜூன் 9-இல் நீரோ இறந்திராவிடின் அவர் உடனடியாக எருசலேமைத் தாக்கி இருப்பார். இக்காரணத்தினால் வெஸ்பாசியான் தனது செயல்களை நிறுத்திவிட்டு உரோமையில் நடப்பதை கவனிக்கலானார். 69-ன் இளவேனிற்காலத்தில் எருசலேமில் ஒரு உள்நாட்டுப் போர் மூண்டது. நாட்டில் உரோமையர்கள் விட்டுச் சென்றதை சூறையாடியவனாய் கியோராவின் மகன் சீமோன் தன் குழுவினரோடு வெற்றி உலா வந்தான். இறுதியாக அவன் எருசலேமை நோக்கித் திரும்பினான். கிஸ்கலா யோவானுடைய கொடுங்கோலாட்சியினால் சோர்வுற்றிருந்த அம்மக்கள் புதிய தலைவரை வரவேற்றனர். சீமோன் நகரிலேயே ஆட்சிபுரிந்த வேளையில் யோவானும் அவனது குழுவினரும் கோவிலுக்குள் பின்வாங்கித் தங்களை மூடிக் கொண்டனர்.

5. எருசலேமின் முற்றுகை (69-70):- அது நான்கு பேரரசர்களின் ஆண்டாக இருந்தது. உரோமையில் நீரோவிற்கு பின் வந்த கால்பா 69 ஜனவரியில் கொல்லப்பட்டார். பின்னர் ஒத்தோ பேரரசரானாலும் விரைவிலேயே விதேல்லியுவினால் மாற்றப்பட்டார். அவரும் 69 டிசம்பர் வரை மட்டுமே ஆட்சி புரிந்தார். 69 ஜூனில் வெஸ்பாசியான் எருசலேமிற்கு எதிராக போர் தொடங்கி இயக்கியதாலும், உரோமைப் படைகள் ஜூலை 1-இல் அவரை வெற்றி வீரர் என்று போற்றியதாலும், எருசலேமின் முற்றுகையைத் தொடருமாறு தனது மகன் தீத்துவை விட்டு விட்டு அவர் உரோமைக்குத் திரும்பினார்.

முறையான முற்றுகையானது பாஸ்காவிற்கு சற்று முன்னர் 70-இன் இளவேனிற்காலத்தில் தொடங்கியது. நகரானது வடதிசையினின்று மட்டுமே நுழையக் கூடியதாக இருந்த காரணத்தினால் (மேற்கு, கிழக்கு மற்றும் தெற்கு திசைகளில் ஆழமான பள்ளத்தாக்குகள் அதனை சூழ்ந்திருந்தன), வடகிழக்கு திசையில் ஸ்கோபு மலைமேல் தீத்து பாளையம் இறங்கினார். பாஸ்காவின் போது உரோமையரின் பார்வையில் நகருக்குள் கிளர்ச்சிகள் ஏற்பட்டன. ஆனால் யூதரோ பொது எதிரியை சந்திக்க ஒன்றுப்

பட்டனர். பின்னர் தீத்து மதில்சூழ்தலை மேற்கொண்டார். நகரக் காப்பாளர்களின் பார்வையிலேயே முற்றுகையிடப்பட்ட நகரினின்று தப்பியோட முயலும் அனைவரையும் சிலுவையில் அறைந்துகொன்று குவித்தார். பசியும் தாகமும் பெருமளவில் காணப்பட்டன. இதன் விளைவாக ஜுலையில் உரோமையர் அந்தோனியா கோட்டையில் நுழைந்து அதைத் தரைமட்டமாக்கினர். இந்த வலிமையான இடத்தினின்று கோவிலை நோக்கி செல்வதற்குத் தீத்துவால் முடிந்தது. அபுமாதம் (ஆகஸ்ட்) 8-ஆம் நாளில் வாயில்களுக்கு தீயிடப்பட்டு அடுத்த நாள் வழி ஏற்படுத்தப்பட்டது. தீத்து கோவிலை விட்டுவிட விரும்பினாலும் சரணடைதலை விலையாகக் கேட்டார். ஆனால் மக்களோ மறுத்தனர். 10-ஆம் நாள் போரானது மேலும் தொடர்ந்தபோது ஒரு போர்வீரன் கோவிலின் அறைகளுள் ஒன்றில் எரியும் தீப்பந்தம் ஒன்றை வீசினான். அதனை அணைக்கத் தீத்து முயன்றாலும், நிலவிய குழப்பத்தினால் மேலும் பல நெருப்புப் பந்தங்கள் வீசப்பட்டன. புனித இடமானது அழிவதற்கு முன்னர், தீத்துவும் அவருடைய சில அதிகாரிகளும் அதனுள் நுழைந்து பார்வையிட முடிந்தது. கிழக்கு வாசலுக்கு எதிராக உரோமைப் பட்டயங்கள் விரைவிலேயே நடப்பட்டன. போர்வீரர்கள் உரத்த குரலில் தீத்துவை வெற்றி வீரர் என்று அறிவித்தனர்.

யூதர்கள் படுகொலை செய்யப்பட்டனர். கிஸ்கலா யோவான் மேல்நகரிலிருந்த ஏரோதுவின் அரண்மனைக்கு பின்வாங்கினார். மீண்டும் ஒருமுறை முற்றுகை அமைக்கப்பட்டது. 70 செப்டம்பருக்குள் நகரானது கைப்பற்றப்பட்டு, சூறையாடப்பட்டு, தரைமட்டமாக்கப்பட்டது. சில பகுதிகளை தவிர்த்து அதனுடைய சுவர்கள் நொறுக்கப்பட்டன. ஓர் உரோமைப்படையானது நகரில் நிறுத்தப்பட்டது. கிஸ்கலா யோவான், கிரோவின் மகனான சீமோன், கோவிலிலிருந்து எடுக்கப்பட்ட ஏழு கிளைகளையுடைய விளக்குத்தண்டு முதலியன உரோமையில் 71-இல் நடைபெற்ற தீத்துவின் வெற்றிப்பவனியில் அங்கம் வகித்தன. நாடு முழுவதிலும் கிளர்ச்சியாளர்களின் சிறுசிறு குழுக்களை (எரோதியும், மசாதா, மக்கேரு) வெல்ல வேண்டியிருந்தது. மசாதாவினை 73 வரை அடிபணியவைக்க முடியவில்லை.

அதுமுதல் உரோமை மாகாணத்திற்கென பொறிக்கப்பட்ட நாணயங்களில் ''கைப்பற்றப்பட்ட யூதேயா'' என்ற சொற்றொடரே தோன்றியது. இஸ்ராயேலின் இக்கால நவீன நாட்டை உருவாக்கும்வரை, யூதமக்கள் வாழ்ந்து கொண்டிருக்க வேண்டிய ஒரு உண்மையை இச்சொற்றொடர் வெளிப்படுத்தியது. கோசிபாவின் மகன் சீமோன் குறுகிய காலத்திற்கு ''எருசலேமிற்கு விடுதலை'' அளித்தார். அப்போது கோவில் பலியானது மீண்டும் துவக்கப்பட்டது. இதைத் தவிர்த்து, 70-இல் நிகழ்ந்த எருசலேமின் அழிவானது புனித நகரைத் தரைமட்டமாக்குவதைவிட ஆழ்ந்த பொருளைக் கொண்டிருந்தது. எருசலேமில் மட்டுமே யாவேக்கு பலியிடுகின்ற பல்லாண்டு செயலானது எருசலேமினை யூதருக்கு உலகின் மையமாக்கியது. இனி கோவில் அங்கு இல்லை. இதுவரை இல்லாத அளவிற்கு நாட்டின்மேல் உரோமை ஆதிக்கம் செலுத்தியது. எருசலேமின் வீழ்ச்சி கடந்த காலத்தினுடன் கொண்ட முடிவான முறிவைக் குறிப்பிட்டுக் காட்டியது. இனிமேலிருந்து யூத சமயமானது வேறுபட்ட திசையில் வெளிப்படும். இந்த அழிவினால் கிறிஸ்தவ சமயமும் பாதிக்கப்பட்டது. உரோமையருக்கு அவர்களும் யூதரைப்போன்ற அடிமைப்படுத்தப்பட்ட மக்களாவர். யூதருக்கு துரோகிகளாகவும் இருந்தனர். சிதறிப்போன பாலஸ்தின கிறிஸ்தவ அகதிகள் இயேசுவினுடைய வாழ்வின் நினைவுகளையும் நற்செய்தி நூல்களில் நாம் காணும் பாலஸ்தின நிலைமைகளையும் உடன் கொண்டு சென்றனர்.

6. புரட்சிகளுக்கு இடைப்பட்ட காலம் *(71-132):-* எருசலேமைச் சிதைவுகளில் விட்டுவிட்டு தீத்து சென்றபின்பு உரோமை இராணுவ ஆதிக்கத்தைத் தொடர ஒரு காவல் படை அங்கு நிறுத்தப்பட்டது. யூதருடைய

வாழ்வு எளியதாக இல்லை. உரோமை குடி மக்கள் பிளாவியா நெயாபோலிசில் (இன் றைய நப்லுசு) குடியமர்த்தப்பட்டனர். எம் மாவுவில் 800 ஓய்வுபெற்றவர்களுக்கு சொத்து வழங்கப்பட்டது. அக்கால எலும் புக்கலங்களும் கல்லறைகளும் சான்று பகர் வதுபோல எருசலேமிலும் பழைய குடிமக்க ளாகிய யூதரும் கிறிஸ்தவரும் உரோமையரு டன் சேர்ந்து வாழ்வதற்காகத் திரும்பி வந்த னர். வெஸ்பாசியான் யூதாவின் மொத்த நிலத்தையும் தனது தனிச்சொத்தாக உரிமை பாராட்டினார். மக்கள் குத்தகை வார விவசா யிகளாக அந்நிலத்தில் உழைத்தனர்.

யாவேயின் கோவிலுக்கு அரை செக்கிலை வரியாக செலுத்திவந்த யூத சமுதாயத்தவர் அதே அளவு பணத்தை இப்போது யூபிடர் கபிதோலினுவின் உரோமை கோவிலுக்கும் அளிக்க வேண்டயதாயிற்று. சமய செயல்மு றையானது செபக்கூட வழிபாட்டின் சில முறைகளுக்கும் தோராவைத் தீவிரமாகப் படிப்பதற்கும் மாறியது. தோரா யூதரை ஒன்று கூட்டும் குறிக்கோளாக ஆகியது. கோவிலின் அழிவுடன் தலைமைக்குருவை தலைவராகக் கொண்ட சனேதிரின் சங்கச் செல்வாக்கும் மங்கியது. முறையே முதலில் சக்காயின் மகனாகிய யோகனான் ராபியின் தலைமையின் கீழும், பின்னர் இரண்டாம் கமாலியேல் ராபியின் கீழும் யாமீனியாவில் அமைக்கப்பட்ட 72 மூப்பர்களைக் (ராபிக ளைக்) கொண்ட புலமைமிக்க சனேதிரின் சங்கம் யூத சமுதாயத்தில் அதிகாரப்பூர்வ நிலையை மேற்கொண்டது. யூதேயா உரோ மையரால் ஆளப்பட்டு வந்தாலும் இந்த சனேதிரின் சங்கம் ஒரு குறிப்பிட்ட அளவு தன்னாட்சியை கொண்டிருந்தது. காலக்க ணிப்பை அது குறிப்பிட்டது. நீதி மன்றமாக வும் அது செயல்பட்டது.

பாலஸ்தீனத்திலும் சிதறிப்போன பகுதிக ளிலும் இஸ்ராயேலை மீண்டும் அமைப்ப தற்கான ஏக்கம் மக்களிடையே எப்போதுமே இருந்தது. கி.மு.586-இல் எருசலேமின் அழி விற்குப்பின் நடைபெற்றவை பற்றிய நினை வால் இந்த ஏக்கம் தூண்டப்பட்டது. தனது ஆட்சியின் முடிவில் பார்த்தியருடைய அச்சு றுத்தலைத் திரேசன் எதிர்கொண்டிருந்த போது 115-116-இல் பேரரசின் பல்வேறு பகுதிகளில் (சீரேனே, எகிப்து, சைப்ரசு, மெசபொத்தாமியா) யூதருடைய கிளர்ச்சி கள் நிகழ்ந்தன. இந்த எழுச்சிகள் ஓரளவிற்கு கொடுமைப்படுத்தப்பட்டதிலிருந்தும், யூத ரிடையே அப்போது நிலவிய மெசியா எதிர் பார்ப்புகளினின்றும் தோன்றின. மெசபொத் தாமியா புரட்சியை இறுதியாக அடக்கிய தளபதி உரோமையனாக்கப்பட்ட மூராகிய லூசியு குயேத்து என்பவராவார். இதற்குச் சன்மானமாக யூதேயாவின் ஆளுநர் பதவி அவருக்கு அளிக்கப்பட்டது. ஆயினும் இச் சூழ்நிலையை கையாள்வதற்கு அனுபவ மிக்க தலைமை வேண்டியிருந்தது என்பதை இந்த நியமனம் சுட்டிக் காட்டுகிறது.

7. இரண்டாவது புரட்சி (132-135):- யூதே யாவில் தீர்க்கப்படாத நிலைகள் இறுதியாக இரண்டாவது புரட்சியாக வடிவம் எடுத்தன. அதற்கான காரணங்கள் உறுதியாக அறியப்ப டவில்லை. எருசலேமின் இடத்தில் ஒரு கிரேக்க உரோமை நகரைக் (ஏலியா காபி தோலினா) கட்டவும் யாவேயினுடைய ஆல யச் சிதைவுகளின் மேல் யூபிடருக்கு ஒரு ஆலயம் கட்டுவதற்கும் அதிரியான் எடுத்த முயற்சியே இப்புரட்சியைத் தூண்டிவிட்டது என எதியோ காசியு குறிப்பிடுகிறார். விருத் தசேதனத்தை தடை செய்யும் அரச ஆணையே இப்புரட்சிக்கு காரணம் என அதிரியனின் வாழ்வு என்னும் நூல் குறிப்பி டுகிறது. அதிரியன் முன்னர் விதையடித் தலை தடை செய்திருந்தார். ஆனால் இக்கா லத்திலோ அத்தடையினை புதுப்பித்து விருத்தசேதனத்தையும் அதனுடன் இணைத் தார். இந்த ஆணையானது நேரடியாக யூதருக் கென விதிக்கப்படாவிடினும் ஒருமுக்கிய சமய பிரச்சினையில் அது அவர்களை பாதித் தது. இரண்டு காரணங்களுமே உண்மையாக இருக்கலாம்.

எவ்வாறாயினும் யூதர்கள் மீண்டும் ஒரு முறை உரோமையருக்கு எதிராக எழுந்தனர். அவர்கள் இந்த எழுச்சியை ''எருசலேமின்

விடுதலை'' என்றும் ''இஸ்ராயேலின் மீட்பு'' என்றும் கருதினார்களென அவர்களால் பொறிக்கப்பட்ட நாணயங்கள் காட்டுகின்றன. ராபி அகீபா அவர்களது சிந்தனைத்தலைவராகவும், குரு எலயாசர் அவர்களது ஆன்மீக தலைவராகவும் கோசிபா எனப்படும் சீமோன் அவர்களது இராணுவத் தளபதியாகவும் இருந்தனர். கோசிபா கிறிஸ்தவ ஏடுகளில் பார்கோக்குபா (கோக்குபாவின் மகன்) என்றழைக்கப்படுகிறார். இவர் இராணுவத்தலைவராக மட்டுமின்றி விடுவிக்கப்பட்ட எருசலேமில் இருந்திருக்கக்கூடிய தனது தலைமையகத்தினின்று அரசியல் அளவிலும் நாட்டை ஆண்டார். உரோமையர்கள் உருவாக்கிய யூதேயாவின் ஆட்சிப் பிரிவுகளையும் பரந்த ஆட்சி அமைப்பினையும் அவர் காத்து வந்தார். யூதேயா இப்போது அவருடைய தனிப்பட்ட சொத்தாக இருந்தது. வார விவசாயிகள் தங்களுடைய வாடகையை அவருடைய கருவூலத்திற்குச் செலுத்தி வந்தனர். உரோமையருக்கு எதிரான அவருடைய போர் தந்திரங்கள் கொரில்லா போர்முறையை சேர்ந்தனவாக இருந்தன. நாடு முழுவதிலும் பல கிராமங்களிலிருந்தும் புறக்காவல் பகுதிகளிலிருந்தும் தனது தாக்குதல்களை நடத்திவந்தார்.

புரட்சியின் தொடக்கத்தில் உரோமை ஆளுநராகிய தினேயு உருபு உரோமைப் படைகளை நாட்டில் கொண்டிருந்தாலும் உதவியற்றவனாக இருந்தார். சீரியாவின் பிரதிநிதியாகிய புப்லிசியுமர்செல்லு தனது படைகளுடன் துணைக்கு வந்தார். ஆனால் அதிரியான் பிரிட்டனிலிருந்து தனது சிறந்த தளபதி செக்ஸ்து யூலியு செவெருசை அழைத்து யூதேயாவிற்கு அனுப்பி வைத்தார். வலிமையான இடங்களிலும் பாலைவனக் குகைகளிலும் அடைக்கலம் புகுந்திருந்த யூதர்களை நீண்ட காலத்திற்கு பட்டினியால் துன்புறுத்திய பிறகே, புரட்சியை அடக்குவதில் செவெரு வெற்றி பெற்றார். வீட்டு உடமைகள், விவிலிய சுருள்கள், குடும்ப பழம்பொருட்கள் ஆகியவற்றுடன் தப்பிய குடும்பத்தினர் முராபாத், ஏவெர், செயலிம் பள்ளத்தாக்குகளில் குகைகளை உபயோகித்தனர். எங்கேதியிலிருந்த அதிகாரிகள் தங்களுடைய தளபதியான கோசிபாவின் மகன் சீமோனுடைய கடிதங்களை எடுத்துக்கொண்டு ஏவெர் குகைகளுக்கு தப்பியோடினர். எருசலேமானது உரோமையரால் மீண்டும் கைப்பற்றப்பட்ட போது சீமோன் பின்வாங்கி பெத்தேரில் (இன்றைய பித்தீருக்கு அருகில் எருசலேமிற்கு 9கி.மீ. மேற்கு தென்மேற்கில்) தனது இறுதி எதிர்ப்பை காட்டினார். அங்கே அதிரியானுடைய ஆட்சியின் 18-ஆம் ஆண்டில் (134-135) போர் தனது உச்சகட்டத்தை அடைந்தது. உரோமையரால் முற்றுகையிடப்பட்டு பெத்தேர் இறுதியாக வீழ்ந்தது. உடனடியாக ஏலியா காபிதோலினாவை கட்டுவதற்கென அதிரியான் எருசலேமை மீண்டும் தரைமட்டமாக்கினார். ''தொலைவிலிருந்தும் தனது மூதாதையருடைய இல்லத்தை பார்க்க முடியாதபடிக்கு யூத மக்கள் அனைவரும் அந்நேரம் முதல் எருசலேமை சுற்றியுள்ள பகுதிகளில் நுழைவதினின்று முழுமையாகத் தடுக்கப்பட வேண்டும்'' என அவர் அவர் கட்டளையிட்டார்.

இரண்டாவது புரட்சியில் யூதரின் தோல்வியானது 1800 ஆண்டுகளுக்கு அவர்களது முடிவிற்கு முத்திரையிட்டது. 1967 வரை, பண்டைய புனித நகருக்கும் பல்லாண்டுகாலம் அந்த இனத்திற்கு ஒன்று கூட்டும் இடமாயிருந்த கோவில் வளாகத்திற்கும் அவர்கள் தலைவர்களாக இருக்கவில்லை. கி.பி. 70-இன் அழிவிற்கு பின்னர் நகரும் கோவிலும் மீண்டும் கட்டப்படும் என்ற நம்பிக்கை நிலவியது. கோசிபாவின் மகன் சீமோனுடைய தோற்றத்தினால் இந்த நம்பிக்கை வலுவூட்டப்பட்டது. மெசியா உருவமாகவும் அவர் கருதப்பட்டார். (எனவே ''விண்மீனின் மகன்'' என்னும் பெயர் ராபி அகீபாவினால் அவருக்கு அளிக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. காண்க எண் 24:17). ஆனால் இது நிறைவு செய்யப்படாத நம்பிக்கையாகவே முடிந்தது. இன்றைய காலங்கள்வரை யூதர்கள் கொண்டிருந்த கடைசி முக்கிய பாலஸ்தீன அரசியல் தலைவர் இவரே. இக்கால முதல் எருசலேமிற்கு திரும்புதலும்

கோவிலை திரும்பக் கட்டுவதும் யூதருடைய செபத்தின் ஒரு பகுதியாகவே உள்ளது.

இக்காலத்தில் யூதேயாவில் நிலவிய கிறிஸ்தவ திருச்சபையைப் பற்றி சிறிதளவே அறியப்படுகிறது. இப்போதுதான் செபக்கூடத்திற்கும் திருச்சபைக்கும் இடையிலான தெளிவான முறிவு நிகழ்ந்தது என்பது உறுதி. 70-க்குபின்னர் கிறிஸ்தவர்கள் எருசலேமிற்கு திரும்பிய போது 107-இல் வேதசாட்சியாக மரிக்கும் வரை ஆயராக இருந்தவரும் கிளோப்பாவின் மகனுமான சிமெயோன் திருச்சபைக்குத் தலைமை வகித்தார். (காலிபாத் முறையில் இயேசுவின் உறவினர்களின் வாரிசுகளே எருசலேம் திருச்சபையை ஆண்டனர் என்று காட்ட சிலர் இவரை இயேசுவின் சகோதரர் சீமோனுடன் அடையாளப் படுத்தமுயன்றுள்ளனர்) சிமெயோனுக்குப் பிறகு, அதிரியான் ஆட்சி காலம் வரை (ஏறக்குறைய 132 வரை) 13 மற்ற யூத கிறிஸ்தவ ஆயர்கள் எருசலேம் திருச்சபையை ஆண்டனர். அவர்கள் முறையே யுஸ்து, சக்கேயு, தொபியா, பென்யாமின், யோவான், மத்தியா, பிலிப்பு, செனெக்கா, யுஸ்து லேவி, எப்பிரேம், யோசேப்பு மற்றும் யூதாசு ஆகியோராவர். ''சிமெயோனின் வேதசாட்சி மரணத்தின்மூலம் பல்லாயிரக்கணக்கான விருத்தசேதனம் செய்யப்பட்டோர் கிற்ஸ்துவில் விசுவசிக்கலாயினர்'' என யுசேபியு குறிப்பிடுகிறார். சிதறிப்போன இடங்களில் மட்டுமின்றி யூதேயாவிலும் ஆக்கப்பூர்வமான மேய்ப்புப்பணி திட்டம் இருந்தது என்பதை இது வலியுறுத்துகின்றது.

## இடறு குழி (PITFALL)

*புலம்பல் 3:47; சங் 119:85; உரோ 11:9.* ஒரு மனிதன் மறைபொருளாகவும், புரிந்து கொள்ள முடியாததுமான ஓர் ஆபத்தில் அல்லது தவறுதலில் அல்லது தவிர்க்க முடியாத கொடுமையில் வீழ்வதை இவ்வார்த்தை உருவகமாகக் குறிக்கிறது.

## இடறும் கல் (STUMBLING BLOCK)

இது மனிதனை இடறிவிழச் செய்யும் கல் *(லேவி 19:14; எரே 6:21)*. தங்கமும் வெள்ளியும் இடறலாய் உள்ளது என எசக்கியேல் இறைவாக்கினர் கூறுகிறார் *(7:19; 14:3-4.7; 44:12)*. விசுவாசமற்றவருக்கு இறைவனே இடறல் கல்லாய் இருப்பார் *(எச 8:14)*. இக்குறிப்பு பொறி, கண்ணி என்ற பொருளில் பயன்பட்டுள்ளது. இக்குறிப்பு சிறப்பான முக்கியத்துவமுடையது. ஏனெனில் புதிய ஏற்பாட்டில் இது இருமுறை இயேசுவுக்கே சாற்றிக் கூறப்படுகிறது *(உரோ 9:32-33; 1 பேதுரு 2:8)*. புதிய ஏற்பாடு இடறும் கல்லை உருவகமுறையில் மட்டுமே பயன்படுத்தியுள்ளது. இது மெசியாப் பொருளையும் ஒழுக்கப் பொருளையும் கொண்டுள்ளது. கிறிஸ்துவுடனோ *(மத் 11:6; 13:21.57; 15:12; 16:23; 17:27; 24:10; 26:31; யோவான் 6:61; உரோ 9:32-33; 11:9; 1 கொரி 1:23; கலா 5:11; 1 பேதுரு 2:8)*, மற்றவர்களுடனோ *(மத் 13:41; 18:6.7; உரோ 14:13-21; 16:17; 1 கொரி 8:13; 2 கொரி 11:29; 1 யோவா 2:18; திருவெளி 2:14)* தகுதியற்ற உறவு கொள்ளுதல் ஆன்மீக அழிவையே கொண்டுவரும்.

## இடித்துப் பிழிந்த தூய்மையான எண்ணெய் (BEATEN OIL)

இது, திருஉறைவிடத்தில் எரியும் விளக்குகளுக்குப் பயன்படுத்தப்பட்ட *(லேவி 24:2; யாத் 27.20)*, அல்லது நாள்தோறும் பலிகளோடு பயன்படுத்தப்பட்ட *(யாத் 29:40; எண் 28:5)*, ஓர் உயர்ரக எண்ணெய் ஆகும். இது சாலமோன் கீராமோடு பண்டமாற்றாகப் பயன்படுத்திய பொருட்களில் ஒன்றாகும் *(1 அர 5:11)*. பழுத்த ஒலிவ விதைகளை உரலில் போட்டு அரைப்பதால் இந்த எண்ணெய் கிடைக்கிறது. செக்கில் போட்டு ஆட்டப்படாத எண்ணெய் மிக சுத்தமான சிறந்த எண்ணெய் என்று கருதப்பட்டது. அவ்வாறு செக்கில் தயாரிக்கப்பட்ட எண்ணெய்யானது இரண்டாம் தரமானது; அது மீண்டும் செக்கில் போட்டு ஆட்டப்பட்டால் முதல்தரமான எண்ணெய் என்று கருதப்பட்டது.

## இடியின் மக்கள் (BOANERGES)

தெளிவற்ற பொருளில் செபதேயுவின் மக்களாகிய யாக்கோபுக்கும் யோவானுக்கும்

இயேசுவால் அளிக்கப்பட்ட பெயர் (மாற் 3:17).

இச்சொல்லானது ஏன் பொருத்தமாக உள்ளது என்பதை குறிப்பிடாமலே ''போவனேர்கெஸ்'' என்பதை ''இடியின் மக்கள்'' என்று மாற்கு மொழி பெயர்க்கிறார். இச்சகோதரர்கள் தங்களுடைய மன இயல்பில் புயல் போன்றவர்களா (மாற் 9:38; லூக் 9:54)? அவர்கள் ஒரு காலத்தில் தீவிரவாதிகளாகவோ அல்லது புரட்சிகர கிளர்ச்சியாளர்களாகவோ இருந்தவர்களா (மாற் 10:37)? அவர்கள் இரட்டையர்களாக இருந்து, அதனால் இப்பெயரானது தியோஸ்கூரி (விண்ணக இரட்டையர்) பற்றிய பழமையான புராணக் கதையின் சிந்தனை வெளிப்பாடாக உருவானதா?

இச்சொல்லானது அடிப்படையில் செபதேயுவின் மக்களை மட்டுமின்றி அனைத்து அப்போஸ்தலர்களையுமே இவ்வாறு வர்ணித்தது என்பதற்கு சிறிதளவு எழுத்து மூலமான ஆதாரம் உள்ளது.

**இடியும் மின்னலும்** (THUNDER AND LIGHTENING)

வழக்கமான ஆனால் அச்சமூட்டக்கூடிய இடியும், மின்னலும், விவிலியக் கண்ணோட்டத்தில் இறைவனின் வல்லமையை வெளிப்படுத்துவனவாகக் காணப்படுகின்றன. இஸ்ராயேல் நாட்டில் இலையுதிர் காலத்திலும், வசந்த காலத்திலும், இடியும், மின்னலும், மழையும் தோன்றுவது வழக்கம் (யோபு 26:14; சங் 77:18; ஏச 29:6; மாற் 3:17; யோவா 12:29; உப 4:12; திருவெளி 14:2; யாத் 19:16; எரே 10:13; மத் 24:27; 28:3). மேற்கண்ட மேற்கோள்கள் இடியையும், சத்தத்தையும் குறிக்கின்றன. கீழ்காணும் மேற்கோள்கள் மின்னலையும் அதன் ஒளியையும் குறிக்கின்றன (யோபு 36:32; 37:3.11.15; அ.ப. 9:3; யாத் 9:23; 20:18; 1 அர 18:38; சங் 28:7). மேகங்களுக்கிடையேயான நேர், எதிர் மின் சாரத்தினால் மின்னலாகிய ஒளியும், இடியாகிய ஒலியும் ஏற்படுகின்றன. விவிலியத்தில் இடி, மின்னல் ஆகியவற்றின் வருணணை மிகவும் சிறப்பாக அமைந்துள்ளது. மின்னும் மின்னல் (சங் 143:6; எச 21:10) பூமியை திடீரென ஒளிரச் செய்யும் ஒளிவெள்ளம் (மத் 24:27), அம்பு போன்ற பாய்ச்சல் (நாகூ 2:4), அருங்காட்சியாக பூமியை வந்தடையும் விதம் (லூக் 10:18), குறிப்பிட்ட இலக்கை அடையும் விதம் (யோபு 36:32), இடியின் அதிர்வு முழக்கம் (ஏச 6:4) இவை அனைத்தும் விவிலிய ஆசிரியர்களின் உயிர் சித்திரமாய் விவரிக்கும் திறனைக் காட்டுகின்றன. மின்னல் யாவேயின் வாளாகவும் (உப 32: 41), வேலாகவும், அம்பாகவும் (அப 3:11) கூறப்படுகின்றது. இடி அவரது குரலாகவும் விவரிக்கப்படுகிறது (உப 5:22; சங் 28:3-9; சீரா 45:5; யோவா 12:28-29). பெரும் இடியுடன் கூடிய புயல் இறைக்காட்சி தோற்றத்தைச் சுட்டுகிறது (யாத் 19:16-20; சங் 17:7-15; அப 3:4-15). எனவே இடியும் மின்னலும், வானுலக அரியணையோடு தொடர்புள்ளதாக வருணிக்கப்படுகிறது (எச 1:4-28; திருவெளி 4:5). இயற்கைச் சக்திகளின் மேல் யாவே கொண்டிருக்கும் கட்டுபாட்டை புயல் எடுத்தியம்புகிறது (யோபு 28:26; எரே 10:13); அவரது ஆற்றலின் கருவியாகும் (சங் 104:4); குறிப்பாக அவருடைய எதிரிகளைத் தண்டிப்பதற்குப் பயன்படும் கருவியாகும் (உப 32:41; திருவெளி 16:18). நீதி 5:4-5; அப 3:3-இல் குறிக்கப்படும் இடியுடன் கூடிய புயல் ஏதோம் திசையிலிருந்து வருவது தற்செயலானதன்று, தண்டனையாக வருவதாகும். சாதாரணமாய் இத்தகைய புயல் தெற்கிலிருந்து வந்தது.

**இடைக் கச்சை** (WAIST CLOTH)

இடுப்பில் அணியப்பட்ட உள்ளாடையாகும். இது தோலாலோ (2 அரச 1:8) அல்லது துணியாலோ (எச 13:1) செய்யப்பட்டது. வேலையாட்கள் வேலை செய்யும்போது வெளி ஆடையைக் களைந்துவிட்டு உள்ளாடையுடன் (இடைக் கச்சை) வேலை செய்தனர் (யோபு 12:18; ஏச 5:27; எரெ 13:1-2.4.6-7.10-11). காண்க ஆடை.

**இணைப்பாளர்** (MEDIATOR)

I. பொருள்:- தாவீதைக் கொல்ல சவுல் விரும்பியபோது, யோனத்தான் தாவீதைக் காப்பாற்றத் தலையிட்டது (1 சாமு 19:1-7) விவிலிய வரலாற்றிலும், பிற வரலாறுகளி

லும் இடையீட்டாளர் இடைநின்று இணக்கம் ஏற்படுத்தும் செயலுக்கு ஒரு சிறந்த எடுத்துக் காட்டாகும் *(1 சாமு 25:1-35; எஸ்த 7:1-7; அ.ப.12:20)*. இவ்வித இணைப்பாளரது குறுக்கீட்டால் முறியவிருந்த பல உறவுகள் முறியாது காக்கப்படுகின்றன. சமாதானம் செய்விக்க முயலும் இணைப்பாளர் அச்சுறுத்தும் ஆளிடம் சென்று, அஞ்சிடும் ஆளுக்காகப் பரிந்துரை செய்து, இருதரப்பாருக்கும் அமைதியும் இணக்கமும் ஏற்படுத்துவார். இவ்வாறு, ஒத்த ஆற்றல் கொண்ட இரண்டு கட்சிகளுக்கிடையே சென்று அமைதி ஏற்படுத்த இணைப்பாளர்கள் தேவை என்பதை இஸ்ராயேலரின் திருச்சட்டம் முன்னுணர்ந்தது *(யாத் 21:22; யோபு 9:33)*. பிளவும் மோதலும் எற்படும்போதுதான் இணைப்பாளரின் பணி தேவைப்படுகிறது என்பதில்லை. பிற நேரங்களிலும் தேவைப்படுகிறது. இத்தகைய நேரங்களில், தலைவன் ஒருவன் தனக்குக் கீழிருப்போரிடையே சில பணிகளைச் செய்து முடிப்பதற்காகச் சிலரை அனுப்பி வைக்கலாம்; அத்தகையோரும் இணைப்பாளர், இடையீட்டாளர் என்று ஒரு பரந்த பொருளில் பெயர் பெறுவர்.

பழைய ஏற்பாட்டு எபிரேய மொழியில் சமாதானம் செய்வித்தல், பரிந்துரைத்தல் போன்ற பணிகளைச் செய்யும் '' இடையீட்டாளர்'' என்பதற்கு நேரடியான தனிச்சொல் இல்லை. இறைவனுக்கும் மனிதனுக்கும் இடையேயுள்ள உறவைச் சுட்டும்பொழுது இப்பணியின் தனித்தன்மை தெளிவாகிறது. ஆதலால், விவிலியத்தைச் சேராத பழங்காலப் புறச்சமயத்தார் தங்களுக்கும் தங்கள் தலைமைத் தெய்வங்களுக்கும் இடையே தொடர்பேற்படுத்தும் பாலங்களாகப் பல குட்டித் தெய்வங்களையும், ஆவிகளையும், பிறகு அரசன், பூசாரி போன்ற மனிதர்களையும் ஏற்படுத்திக் கொண்டார்கள் என்பதில் வியப்பில்லை. அவர்களின் தலைமைத் தெய்வங்கள் யாவும் கடந்தநிலைத் தத்துவம் கொண்ட கடவுளாக இல்லாத காரணத்தால், இத்தகைய இடையீட்டாளர்களும் பரிந்துரையாளர்களும் தோன்ற வாய்ப்பிருந்தது. ஆனால் இஸ்ராயேலரின் இறைவன் தனித்தன்மை வாய்ந்த தனியொருவர்; அனைத்தையும் கடந்து முழுமை நிறைந்த கடவுள். இவ்வாறு முற்றிலும் வேறுபட்ட கடவுளுக்கும் மனிதருக்கும் நடுவே இடைநின்று பரிந்துரை செய்ய யாரால் இயலும்? பவுல் கூறுவது போல ''ஒருவர் மட்டுமே இருந்தால் இணைப்பாளருக்கு இடமில்லை, கடவுளோ ஒருவர்தான்'' *(கலா 3:20)*. அதே நேரத்தில் விவிலிய மனிதன் கடவுளுக்கு முன்னால் தனக்குள்ள பொறுப்புகளை நன்கு உணர்ந்து செயல்படுறான். தனிமனிதன் ஒருவன் தான் வாழும் கூட்டத்தில் முற்றிலும் அழுந்திப் போயிருந்த அப்பழங் காலத்திலும் மேலே குறிப்பிட்ட தனிமனிதனின் பொறுப்புணர்வு தெளிவாக உணரப் பட்டது. ''கடவுளுக்கு எதிராகப் பாவம் செய்த ஒருவனுக்காக அவரிடம் பரிந்து பேசக் கூடியவன் யார்?'' என்று ஏலி தம் முதுமை வயதில் மொழிகிறார். ஆதலால் ''நமக்கிடையே இன்று வழக்குத் தீர்ப்பவன் எவனுமில்லையே!'' என்று இறைவனிடம் யோபு கூறுவது முற்றிலும் உண்மையாகிறது *(யோபு 9:33)*. இருந்தும், பல இணைப்பாளர்களையும் பரிந்துரையாளர்களையும் நாம் விவிலியத்தில் காண்கிறோம். இது நமக்கு வியப்பானதாகவும், முரணானதாகவும் தோன்றலாம். ஆனால் இவர்கள் எல்லாம் கடவுளிடமிருந்து திருக்கட்டளை பெற்றவர்கள் என்ற பரந்த பொருளில்தான் இணைப்பாளர்களாகின்றனர். முரணாகத் தோன்றும் இச்செயல்தான், இறைவன் உறவற்ற ஒருவராக இருக்க விரும்பவில்லை என்பதையும் மனிதருடன் ஒன்றிய உறவு கொள்ள விரும்புகிறார் என்பதையும் நமக்கு எடுத்துரைக்கிறது.

புதிய ஏற்பாட்டில், மனிதனுக்கும் இறைவனுக்கும் இடையே சமரசம் செய்விப்பவராக இயேசு வருகை தருகிறார். அவர் ஒருவரே கடவுளும் மனிதனும் ஆனவர் என்ற முறையில் கடவுளின் பெயரால் மனிதரிடமும், மனிதரின் பெயரால் கடவுளிடமும் பேசுவதற்கு ஏற்புடையவராய் இருக்கிறார். இவ்வாறு மனித வரலாற்றிலேயே முதல் முறையாகவும், இறுதி முறையாகவும்

''மனுக்குலத்துக்கும் இறைவனுக்குமிடையே இணைப்பாளராக'' இருக்கப் பெருமைபெற்றவர் இயேசு ஒருவரே ஆவார் *(1 தீமோ 2:5; காண் எபி 8:6; 9:15; 12:24).*

II. பழைய உடன்படிக்கையில் இணைப்பாளர்கள்:-

*1.* வரலாற்று இணைப்பாளர்கள்:- அ. ஆபிரகாமின் வழியாகத்தான் ''மண்ணின் மக்களினங்கள் அனைத்தும் ஆசிபெறும்'' *(ஆதி 12:3).* அவர் வழியாகத்தான் இஸ்ராயேலரும் தம்மண்ணின் வளத்துக்கும், மக்களின் பெருக்கத்துக்கும் ஆசிபெற்றனர். ஒரு சில மரபுப்படி, புறமதத்து அரசர் அபிமெலக்குவிற்காகவும் *(ஆதி 20:7. 17 தொ),* சோதோம் நகருக்காகவும் *(18:22-32)* ஆபிரகாம் இறைவனிடம் பரிந்து பேசினார்.

ஆ. மோசே:- இஸ்ராயேல் மக்களை விடுவிக்கவும், அவர்களுடன் உடன்படிக்கை செய்து கொள்ளவும், அவர்களுக்குத் திருச்சட்டம் நல்கவும், வழிபாட்டு முறைகளை ஏற்படுத்தவும் யாவே இறைவன் மோசேயைத் தேர்ந்து கொண்டார். ஆண்டவருக்கு முன்னால் அவரது மக்களுக்குத் தாமே பொறுப்பு என்பதால், அவர்களுக்குத் தலைவராகவும், சட்ட திட்டங்களை வகுப்பவராகவும், இறைவனிடம் பரிந்துரை செய்பவராக மோசே செயலாற்றுகிறார். இவர் தாம் பெற்ற திருக்கட்டளையின் காரணமாக, இயேசுவுக்கு அடுத்தபடியில் ''இடையீட்டாளர்'' என்ற சிறப்புப் பட்டத்திற்கு உரியவர் *(கலா 3:19)* என்பதில் ஐயமில்லை. இருப்பினும் இப்பட்டம் இவருக்கு முன்குறிப்பிட்ட பரந்த பொருளில்தான் பொருந்தும்.

விடுதலைப் பயணத்திற்குப் பிறகு, மோசே தன்னிடமிருந்த பொறுப்புகளையும் அதிகாரங்களையும் ஒரு சிலருடன் பகிர்ந்து கொள்கிறார்.

இ. குருக்கள்:- லேவியர்களின் குருத்துவம், வழிபாட்டிற்கும், திருச்சட்டத்திற்கும் பணிபுரிய இறைவனால் தேர்ந்தெடுக்கப்படுகிறது. அவர்களின் வழிபாடுகள் இறைவன் இஸ்ராயேலுக்காகச் செய்த வியத்தகு செயல்களையும், அதனால் அவருக்கு அவர்கள் மீது இருக்கும் உரிமைகளையும் எடுத்துரைத்து, அவர்களுக்கு இறைவனின் ஆசியைப் பெற்றுத் தருகின்றன *(எண் 6:24-27).* மக்கள் தனியாகவோ, குழுவாக இணைந்தோ செலுத்தும் புகழ்ச்சிகளையும், வேண்டுதல்களையும் இறைவன்முன் படைப்பது குருக்களின் கடமையாகும்.

ஈ. அரசன்:- அடுத்து, தூய ஆவியினால் நிரப்பப் பெற்று, நடுவர்களின் வாரிசாக அரசன் நியமிக்கப்படுகிறான் *(நீதி 6;34; 1 சாமு 10:6; 16:13).* மக்களுக்குத் தொண்டு செய்ய அவன் அரசனாய் நியமனம் பெற்றதை இறைவாக்கினர் அவனுக்குத் தெரிவிக்கின்றனர் *(1 சாமு 9-10; 16).* அவன்தான் அபிடேகம் பெற்றவன், யாவேயின் மெசியா. யாவே அரசனைத் தன் மகனென நடத்துகின்றார் *(2 சாமு 7:14; சங் 2:7).* அவனுடைய மக்கள் அவனை ஒரு தேவதூதனாகவே கருதுகின்றனர் *(2 சாமு 14:17).* கடவுளுக்கு முன்னால் அரசன் தன் மக்களின் பிரதிநிதியாக நிற்கிறான், குரு என்ற பட்டம் அவனுக்கில்லை. எனினும் அவன் வழிபாட்டுச் சடங்குகளையும் நிறைவேற்றுகிறான்; குருக்களின் அணியாகிய எப்போத்தை அணிந்தும், பலிகளை ஒப்புக்கொடுத்தும், இஸ்ராயேல் சார்பாக மன்றாடியும் ஒரு குருவுக்குரிய பணிகளைச் செய்கிறான். இஸ்ராயேலின் இறைவனே உலக வரலாற்றை நடத்திச் செல்வதால், மற்ற அன்னிய மன்னர்களின் செயலிலும் இறைவனின் திட்டம் நிறைவேறுவதை இறைவாக்கினர் கண்டறிந்து கூறுகின்றனர் (எ.கா.) நெபுக்கதுனேசார் *(எரே 27:6),* சைரஸ் *(ஏச 41:2-5; 44:28; 45:1-6).*

உ. இறைவாக்கினர்:- பரம்பரையாக வரும் குரு, அரசன் இவர்களிலிருந்து இறைவாக்கினர் வேறுபட்டவர். யாவேயே, அவரது வாழ்வில் தலையிட்டு, அவரைத் தம் பணிக்கு அழைத்து அவருக்குத்தன் அருட்கட்டளையைத் தருகிறார். இறைவன் மக்களுக்கு விடுக்கும் வேண்டுகோள், பாவத்திற்கு அவர் விடுக்கும் தீர்ப்புகள், நல்லோ

ருக்கு அவர் கொடுக்கும் வாக்குறுதிகள் ஆகிய இறைவார்த்தைகளை ஏந்திச் செல்வதே இறைவாக்கினரின் தலையாய கடமையாகும். இதன் விளைவாக, தன் மக்களின் இன்பதுன்பங்களுக்கும், நன்மை தீமைகளுக்கும் தானும் பொறுப்பாளி என்ற உள்ளுணர்வுடன், தன் மக்களுக்காக இடைவிடாது இறைவனிடம் பரிந்துரை செய்கின்றனர்: *(எ.கா)* சாமுவேல் *(1 சாமு 7:7-12; 12:19-23)*, ஆமோஸ் *(7:1-6)*, எரேமியா *(15:11; 18:20; 42:2)*. இறுதியாக எசக்கியேல் *(9:8; 11:13)* இறைவனின் மக்களுக்குத் தீங்கு ஏதும் நேராது காக்கின்ற காவல் வீரனாக இறைவன் தன்னை நியமித்துள்ளதை ஒரு காட்சி வாயிலாகக் கண்டுணர்ந்தார் *(எச 33:1-9; 3:17-21)*.

இவ்வாறு, இஸ்ராயேல் மக்களின் வரலாற்றில், பொறுப்பான பலரை இறைவன் நியமித்து, உடன்பாட்டின் நியதிகள் ஒழுங்காக நிறைவேறுமாறு பார்த்துக் கொள்ளச் செய்தார். ஆனால் இதுபோன்ற சிறப்புப் பணிகளால், பொதுமக்கள் இறைவனுடன் கொள்ளும் தனியுறவு தடுக்கப்படவில்லை. மாறாக இச்சிறப்புப் பணிகள் அனைத்தையும் மக்களின் நலனுக்காகவும், அவர்களுக்காக இடைநின்று பரிந்துரை செய்வதற்காகவுமே இறைவன் ஏற்படுத்தினார்.

*2. இறுதிக்கால வருகையின் இணைப்பாளர்கள்:-* வரலாற்று இணைப்பாளர்களின் பண்புக்கூறுகள் பலவற்றை, இறுதிக்காலத்தில் வரவிருந்த ஒப்பற்ற இணைப்பாளரின் மேல் இறைவாக்கினர் எற்றிக் கூறினர். ஆனால் அவர்கள் தீட்டிய சித்திரங்கள் இயேசுவைப் பற்றி ஓரளவு முன்னறிவித்த, பழைய மறைபொருள் மிக்க உருவங்களின் தன்மைகளை விஞ்சியதாக இருந்தன.

'புதிய மனுக்குலம்' அழைக்கப்படும் வேளையில், பழைய இணைப்பாளர்களைப் போல பலர் புதிதாகத் தோன்றுகின்றனர். சில சமயங்களில் அரச மெசியாவாகவும், சில சமயங்களில் இறைவாக்கினராகவும், மீட்பின் நற்செய்தியை அறிவிப்பவராகவும் *(ஏச 61:1 தொ; உப 18:15 - யூதர்களின் விளக்கவுரையின்படி)*, மிகச் சில சமயங்களில் குருவாகவும் *(செக் 4:11 - இப்பண்பு கும்ரான் மரபினரால் வளர்ச்சி பெற்றது)*, இவர்கள் தங்கள் இணைப்புப் பரிந்துரைப் பணியைச் செய்கின்றார்கள்.

ஏசயா *40:55*-இல் காட்டப்படும் இறைஊழியனின் உருவகம் சிறிது புதிரானது. அவர் இறைவனுக்கும் மனிதருக்கும் இடையே புரியும் இணைப்பாளர் பணியின் காரணமாக இஸ்ராயேலரின் எஞ்சிய மக்கட்தொகுதிக்கு ஓர் உருவக வடிவம் தருகிறார். ''நீதித் தீர்ப்பைப் புறவினத்தாருக்குக் கொண்டுவரவும்'' *(ஏச 42:1)*, சிதறிப்போன இஸ்ராயேலரை ஒன்று திரட்டவும் புறவினத்தாருக்கு ஓர் ஒளியாக இருக்கவும் *(42:6; 49:5-6)*, மக்களின் உடன்படிக்கையாக இருக்கவும் *(42:6; 49:8)*, அதாவது மீட்படைந்த இஸ்ராயேலையும், மனம் திரும்பிய நாடுகளையும் ஒன்று சேர்க்கவும், இறைவன் அவரை ஒரு இறைவாக்கினராக அழைத்துள்ளார். எனவே அவரது பணி முன்னைய இறைவாக்கினரைப் போல மீட்பின் நற்செய்தியை அறிவித்தலும், மக்களுக்காக மன்றாடுவதும் மட்டுமன்று, மாறாக இப்பொழுது அவர் ''அனைவரின் பாவங்களையும் சுமக்க வேண்டும்'', அத்துடன் அவரது துயரப்பாடுகளின் மூலம் மக்களின் மீட்புக்கு வழிவகுக்க வேண்டும் *(52:14; 53:13)*. அவர் தமது உயிரையே ஒரு புனிதப்பலியாக ஒப்புக் கொடுக்கிறார் *(53:10)*. இதன்மூலம் ஒரு புதுவகையான குருத்துவ இணைப்பாளர் நிலையை அவர் அறிமுகம் செய்கிறார்.

தானியேல் *7:13. 18*-இல் கூறப்படும் மனுமகன், கடவுளின் தீர்ப்பால் மகிமைப் படுத்தப்படுவதற்கு முன்னர், புறமதத்தினரால் கொடுமைக்குள்ளாகும் புனித மக்களைக் காட்டும் உருவகமாக உள்ளார். அவர் உலகனைத்தையும் ஆளுவார் *(7:14.27)*. அதன் மூலம் யாவேயின் அகில உலக அரசாட்சியை உறுதிப்படுத்துவார். பழைய ஏற்பாட்டில், இறுதிக்காலத்தில் தோன்றும் இப்பல்வேறு இணைப்பாளருக்கிடையேயுள்ள உற

வும், தொடர்பும் வரையறுக்கப்பட வில்லை, இந்த முன்னறிவுப்புகள் எல்லாம் இயேசுவில் நிறைவேறும் போதுதான் முன் னர்க் குறிப்பிட்ட பல்வேறு இணைப்பாளர் களின் பண்புகளும் இவரிலே ஒன்றிணைந்த அழகும் உண்மையும் புலனாகும்.

*3. வானதூதர்களின் பரிந்துரைக்கும் பணி:-* மனித இணைப்பாளர்களின் இயலா மையை நெடுங்காலமாகவே புறமதத்தினர் உணர்ந்து வந்தனர். ஆதலால்தான் அவர்கள் இடையிருந்து பரிந்துரை செய்ய, சிறிய தேவதைகளின் துணையை' நாடினர். ஆனால் இஸ்ராயேலர் இந்தப் பலதெய்வக் கொள்கை அனைத்தும் கடந்த இணைப்பா ளர் ஒருவரின் வருகைக்கு அவர்களைத் தயார் செய்தது. பெத்தேல் என்னும் புனிதத் தலத்தின் வானதூதர்கள் விண்ணுக்கும் மண் ணுக்கும் ஓர் ஏணி அமைத்ததுபோல யாக் கோபு காட்சி கண்டதாக ஒரு விவிலியக் குறிப்பு கூறுகிறது *(ஆதி 28:12)*. பாபிலோன் அடிமைத் தனத்திலிருந்து தாயகம் திரும்பிய பின் வானதூதர் பற்றிய கொள்கை இஸ்ரா யேலரிடையே பெருவளர்ச்சி கண்டது. மக்க ளுக்காக வானதூதர் வேண்டுவதும் *(செக் 1:12 தொ.)*, இஸ்ராயேலரின் சார்பில் அவர் கள் தலையிடுவதும் *(தானி 10:13. 21; 21:1)*, விசுவாசிகளுக்கு அவர்கள் கொணர்ந்த உத வியும் *(தானி 3:49 தொ 6:23; 14:34-39; தோபித்து)*, அன்பர்களின் செபங்களை அவர்கள் ஆண்டவர் முன் சமர்ப்பித்ததுவும் *(தோபி 12:12)* விவிலியத்தில் இடம்பெறு கின்றன. மலாக்கியாவும், விந்தைக்குரிய தூதர் ஒருவரைப் பற்றி விளக்குகிறார். அவர் உடன்படிக்கையின் வானதூதர், அவரது ஆலய வரவு இறுதிக்கால மீட்பினைத் தொடங்கி வைத்தது *(மலா 3:1-4)*. இங்குக் கூறப்படும் வானதூதர் ஒரு படைப்புப் பொருள் அல்லர்; மாறாக இறைவனே, தம் மக்களின் கறைநீக்கவும், அவர்ளை மீட்டு உய்விக்கவும் வானதூதர் வடிவிலே வருகை தருகிறார்.

III. *புதிய ஏற்பாட்டின் இணைப்பாளர்:-* புதிய ஏற்பாட்டின் நுழைவாயிலில், மனி தனுக்கும் இறைவனுக்குமிடையே நிகழப் போகும் ஒரு புதிய உடன்படிக்கைக்கு முன் னுரையாக, விண்ணிலிருந்து வந்த இணைப் பாளரான கபிரியேல் தூதர் ஒரு கலந்துரையா டலைத் தொடங்கி வைக்கிறார் *(லூக் 1:5-38)*. திட்டவட்டமான பதில் ஒன்றை மரியாள் அவருக்குத் தெரிவிக்கின்றாள். 'சீயோனின் மகள்' என்ற முறையில் தன் இனத்தாரது சார்பில் பேசி, இறைமகனும், அரச மெசியா வுமானவருக்குத் தாயாக மாற இணக்கம் தெரிவிக்கிறாள். யோசேப்பு *(மத் 1:18-25)*. எலிசபெத்து *(லூக் 1:39-56)*, சிமியோன், அன்னாள் *(2:33-38)* ஆகிய அனைவரும் ஆண்டவரின் மீட்புக்காகக் காத்திருக்கிறார் கள். அவர்களுக்கெல்லாம் மரியாளின் வழி யாக வந்துதித்த 'மீட்பரை' ஏற்றுக் கொள்வ தல்லால் வேறு செயல் ஒன்றுமில்லை *(2:11)*. அவள் வழியாகத்தான் மனுக்குலம் இயேசுவை அறிகிறது; இயேசுவும் மனுக்கு லத்தை அறிந்து கொள்ளுகிறார். அவர் இறைவனின் ஒரே மகனாக இருந்தபோதி லும், அவர்தம் தொண்டினைத் தொடங்கும் நாள் வரும்வரைக்கும் *(யோவான் 2:1-12)*, மரியாள்-யோசேப்பு இவர்களின் விருப்பத் துக்குப் பணிந்து ஒழுகுகிறார்.

*1. ஒப்பற்ற இணைப்பாளர்:-* கடவுளுக் கும் மனிதனுக்கும் இடையே இயேசுக்கி றிஸ்துதான், பழைய உடன்படிக்கையைவி டச் சிறந்த *(எபி 8:6)* புதிய உடன்படிக்கை யின் இணைப்பாளர் ஆவார் *(9:15; 12:24)*. இனிமேல் அவர் வழியாகத்தான் மனிதர் கடவுளை அணுக இயலும் *(7:25)*. இந்த உண்மை பலவடிவங்களில் புதிய ஏற்பாட் டில் இடம் கண்டுள்ளது. இஸ்ராயேலின் எஞ்சிய மக்களின் பெயராலும், அவர்களின் நலனுக்காகவும், அத்துடன் உலக மக்கள் அனைவருக்காவும் இயேசு இறந்து, உயிர்த்து, தூய ஆவியைப் பெற்றார். அவரது இணைப்பாற்றல் அனைத்துப் படைப்புக ளையும் *(கொலோ 1:16; யோவா 1:3)*, பழைய உடன்படிக்கையின் வரலாற்றையும் நிறைவு செய்கிறது *(1 பேதுரு 1:11)*. தந்தை இயேசுவை அழைத்தாலும் *(எபி 5:5)* அவ்வ ழைப்பினை இயேசு ஏற்றதாலும்தான் *(10:7*

தொ.) இயேசு இணைப்பாளர் ஆகிறார். இது பழைய ஏற்பாட்டு இணைப்பாளர்களுக்கும் பொருந்தும் (காண் 5:4). ஆனால் இயேசுவைப் பொறுத்த அளவில் அழைத்தலும் ஒப்புதலும் அவருடைய வாழ்வு என்னும் மறைபொருளின் மையப் பொருளாக இருக்கிறது. ''மகன்'' என இருந்த அவர் (1:2 தொ), "ஊனும் இரத்தமும் பெற்றுக் கொண்டு" (2:14) ''மனிதனானர்'' (1 தீமோ 2:5). இவ்வாறு அவர் தான் உறவுபடுத்தி வைக்கும் இரண்டு சாராருக்கும் சொந்தமானவர் ஆகிறார்.

இறுதிக் கால இணைப்பு முயற்சிகளை நிறைவேறச் செய்வதன் மூலம், ''மகன்'' பழங்கால இணைப்பு முயற்சிகளுக்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்கிறார். அவர்தாம் ''ஆபிரகாமின் வழித்தோன்றல்'' (கலா 3:16), அவர் வழியாகத்தான் இஸ்ராயேலரும், மற்ற நாட்டினரும், ஆபிரகாமுக்கு வாக்களிக்கப்பட்ட வாக்குறுதிகளைப் பெறுகின்றனர் (கலா 3:15-18; உரோ 4). அவரே புதிய மோசே, புதிய விடுதலைப் பயணத்தின் வழிகாட்டி; புதிய உடன்படிக்கையின் இணைப்பாளர், புதிய இறைமக்களின் தலைவர், அவர் இனிமேல் இறைவனின் ஊழியனாக இருப்பதில்லை; மாறாக '' மகனாகவே'' இருந்து மேற்குறிப்பிட்ட புதிய பணிகளை ஆற்றுகிறார். (எபி 3:1-6). அவர் ஒரே சமயத்தில் அரசரும், தாவீதின் மகனும் (மத் 21:4-9) ஏசயாவால் முன்னறிவிக்கப்பட்ட இறைவனின் ஊழியனும் (மத் 12:17-21), இறைவாக்கினரும், மீட்பின் நற்செய்தியை அறிவிப்பவரும் (லூக் 4:17-21), மனுமகனும், இறுதி நாளின் நீதிபதியும் (மத் 26:64), தம் வருகையால் ஆலயத்தைப் புனிதப்படுத்தும் தேவதூதனும் (காண் லூக் 19:45 தொ யோவா 2:14-17) ஆகிய அனைவரும் ஆவார். அவர் தம் மக்களின் மீட்பையும் உய்வையும் முற்றிலும் முடிவுற்றதாக்கப் பாடுபடுகிறார். அவர் தம்மில் அரசுரிமை, குருத்துவம், இறைவாக்குரிமை ஆகிய மூன்று பண்புகளையும் கொண்டுள்ளார். அவரே இறைவனின் வார்த்தையானவர். ஆதலால் அவரது வருகை மனித வரலாற்றுக்கு முற்றிலும் மாறுபட்ட ஒரு புதியபோக்கைக் கொண்டு வருகிறது. ''மனிதக் கரங்களால் கட்டப்படாத ஆலயத்தில்'' அவர் இருந்து கொண்டு (எபி 9:11), தம் உடன்பிறப்புகளுக்காக எப்போதும் மன்றாடும் இணைப்பாளராக உறைகிறார் (7:5). உண்மையில் ''கடவுள் ஒருவரே; கடவுளையும் மனிதரையும் இணைப்பவரும் ஒருவரே'' (1 தீமோ 2:5). அவரே மனிதனான இயேசு கிறிஸ்து, எக்காலத்துக்கும் உரிய உடன்படிக்கையின் இணைப்பாளர்.

2. ஒப்பிலா இணைப்பாளரும், அவரது திருச்சபையும்:- கிறிஸ்துதான் தன்னேரிலாத் தனித்தன்மை பொருந்திய இணைப்பாளர் என்பதால், மீட்பின் வரலாற்றில் மனிதனின் முயற்சியும் பங்கும் அகற்றப்படுவதில்லை. அவரது திருச்சபையில் பணிபுரியும் அனைவரையும் அவரது இணைப்புப் பணியில் பங்கு பெற அவர் அழைக்கிறார். ஏனெனில் இயேசு தம் உடலாகிய திருச்சபையின் உறுப்பினர் ஒவ்வொருவரையும் தன் இணைப்புப் பணியில் தொடர்புடையவராக மாற்றுகிறார்.

அ. அப்போஸ்தலர்:- இயேசு தாம் உலக வாழ்வின்போது, தமது நற்செய்தியைப் போதிக்கவும் இறையரசு வேரூன்றியதற்கான அறிகுறிகளைச் சாதிக்கவும் தம்மோடு உழைக்க மனிதர்களை அழைத்தார் (மத் 10:7 தொ). இவர்கள் இயேசுவின் இணைப்புச் செயலைத் தொடர்ந்து ஆற்றுகின்றனர். அவரது இறப்பு-உயிர்ப்பு இவற்றிற்குப்பின் தமது இணைப்புப் பணியைத் தொடருமாறு அவர் அவர்களுக்குக் கொடுத்த திருக்கட்டளை, உலகனைத்திலும், இனிவருகின்ற எல்லாக் காலத்திலும் அவர்களால் நிறைவேற்றப்படும் (மத் 28:19 தொ). இந்த இணைப்புப் பணியை அவர் காணமுடியாத உலகிலிருந்து செயலாற்றுவார். இவருடைய வார்த்தைக்கும், திருச்சபைக்கும், திருமுழுக்கிற்கும் நற்கருணைக்கும், பாவ மன்னிப்புக்கும் இனி அவருடைய அப்போஸ்தலர்களே பொறுப்பாவார்கள்.

ஐம்பதாம் நாள் திருநாளிலிருந்து, அவர் தம்தந்தையிடமிருந்து தாம் பெற்ற தூய ஆவியால் திருச்சபையை நிரப்பிக் கொண்டிருக்கிறார். அன்றிலிருந்து, ''ஒரே உடலும் ஒரே ஆவியும்... ஒரே ஆண்டவரும்... ஒரே கடவுளும்....'' (எபே *4:4* தொ) என்ற நிலை ஏற்பட்டது. ஆனால் இந்த உடலுள் புதிய உறுப்பினர்களைச் சேர்ப்பதற்குத் திருமுழுக்குத் தருதல் வேண்டும் (அ.ப. *2:38*), தூய ஆவியைத் தருவதற்கு அவர்கள் மேல் கைவிரித்தல் அவசியமாகிறது (*8:14-17*). உடலின் வாழ்வையும் வளர்ச்சியையும், இறைவனின் கொடைகளைப் பகிர்ந்து பங்கீடு செய்தலையும் தூய ஆவி கவனித்துக் கொள்வார். இக்கொடைகளைப் பெற்றவருள் சிலர் தற்காலிகமாகத் தொண்டு புரிவர்; வேறு சிலர் நிரந்தரமாகத் தொண்டாற்றுவர். இவர்களின் பல்வேறு தொண்டுகளும், அப்போஸ்தலர்கள் திருச்சபையின் வளர்ச்சிக்காகச் செய்த பல்வேறு பணிகளின் தொடர்ச்சியே ஆகும். ஆதலால் இப்பணிகளைச் செய்வோர் உண்மையில் வேறு புதிய இணைப்பாளர்கள் ஆவதில்லை; இவர்களின் தொண்டு ஒரே இணைப்பாளரான இயேசுவின் பணிக்குப் புதிதான அம்சங்கள் எதையும் அளிப்பதில்லை; மாறாக அனைத்து மக்களையும் அடைவதற்கு ஏற்ற கருவிகளாக இயேசுவே இவர்களைத் தொண்டாற்றச் செய்கிறார்.

கிறிஸ்துவின் உடலுறுப்புகளாகிய கிறிஸ்தவர்கள் இவ்வுலகை நீத்து மாட்சியிலிருக்கும் தங்கள் தலையாகிய கிறிஸ்துவுடன் ஒன்றிணைந்த பின்னர் அவர்களது பணிகள் நிறைவு பெறுகின்றன. ஆனால் இன்னும் இவ்வுலகில் இடைவிடாது போராடிக் கொண்டிருக்கும் கிறிஸ்தவர்களுக்கு, வெற்றியைச் சுவைக்கும் விண்ணகக் கிறிஸ்தவர்கள் பேருதவி புரிகின்றனர். அவர்கள் கிறிஸ்துவின் அரசுரிமையில் பங்கேற்றவர்களாய் (திருவெளி *2:26* தொ *3:21*; காண் *12:5*; *19:15*) இறைவனின் நீதி விரைவில் வெளித்தோன்ற வேண்டுமென விரும்பும் (*6:9* முழு *8:2-5*; *9:13*) மண்ணகப் புனிதரின் மன்றாட்டுகளை இறைவன் முன் எடுத்துச் செல்கின்றனர் (*5:8*; *11:18*). இறுதியில் வரும் நிறைவான வெற்றி ''செம்மறியின் செந்நீரையும்'', சாட்சிகளின் வீர மரணத்தையும்'' சார்ந்ததாக இருக்கும் (*12:11*). கிறிஸ்து தம் விண்ணேற்றத்திற்கும், இறுதி வருகைக்கும் இடைப்பட்ட காலத்தில், தமது மக்களின் பங்கேற்பு இல்லாமல் தம் அரசுரிமையை அவர் செயலாற்றுவதில்லை. அவ்வரசுரிமை ஒரே சமயத்தில் மண்ணிலும் நிலவுகிறது (*12:6*; *14*; *22:17*; காண் *7:1-8*), விண்ணிலும் மகிமை துலங்க விளங்குகிறது (*12:1*; *21:2*; காண் *14:1-5*).

ஆ. மரியாள்:- உயிர்த்த கிறிஸ்துவின் இணைப்புப் பணியில் மரியாளுக்கு ஒரு தனியிடம் உண்டு. விண்ணக இணைப்பார் உலகுக்கு வருகை தரும்போது, அவருக்குத் தாயாக இருக்க மரியாள் அழைக்கப்பட்டாள்; அத்துடன் அவர் செய்த முதல் அருங்குறி அவளது வேண்டுதலின் பேரில்தான் நிகழ்ந்தது. இவற்றை நோக்கும்போது, திருச்சபையைப் பொறுத்த வரையில் கண்ணுக்குத் தெரியாத வகையில் கன்னிமரி செய்கின்ற செயல் என்ன என்ற கேள்வி பிறக்கிறது. தொடக்கத் திருச்சபையில், மரியாள் மிக முக்கியத்துவம் வாய்ந்தவளாக இருந்த போதிலும், ஏனையோரைப்போல ஓர் உறுப்பினராகத்தான் இருந்தாள் (அ.ப. 1:14); அவளுக்கெனத் தனிச் சிறப்புகளோ, சலுகையோ இருந்ததாகத் தெரியவில்லை. அப்போஸ்தலர் செய்த பணிகளுடன் ஒப்பிடுகையில் அவள் எவ்விதச் சிறப்புப் பணியையும் செய்யவில்லை. ஆனால் விண்ணக இணைப்பாளர் இறக்கும் தருவாயில், தம்முடையவர்க்குத் தாயாக விளங்கும் திருகட்டளையைத் தம் தாய்க்கு விட்டுச் செல்கிறார் (யோவா *9:26-27*). அப்படியானால், மரியாளின் இறப்புக்குப்பின் இந்தத் திருக்கட்டளை தீர்ந்து விட்டது என்று எண்ணமுடியுமா? தான் இறந்த பின்னும், தன் திருமைந்தன் தனக்கிட்ட திருக்கட்டளையைத் தலைமேற்கொண்டு கண்ணுக்குப் புலனாகா வகையில் கடமையாற்ற மாட்டாளா? தேர்ந்தெடுக்கப்பட்ட அனைவரையும் போல, மரியாளும் இயேசுவின் அரசுரிமையிலும், அவரது பரிந்துரைப் பணியிலும் பங்கு பெறுகிறாள்.

அத்துடன், புதிய ஏற்பாடு அவளுக்கு "இறைமகனின் தாய்", "இறைமக்களின் தாய்" என்ற சிறப்புப் பெயர்களைச் சூட்டி மகிழ்கி றது. இதைப் புதிய ஏற்பாடும் சுட்டிக் காட்டு கிறது.

*3.* இயேசுவும் வானதூதரும்:- ஒப்பற்ற ஒரே இணைப்பாளராகிய கிறிஸ்து, இறைவ னின் திருமுன்னிருந்து இறங்கி வந்து, மறுப டியும் திரும்பிச் சென்று விட்டார். இச்செயல் அவரைப் பழைய ஏற்பாட்டு வானதூதர்களு டன் ஒப்புமைப்படுத்துவதுபோலக் காட்ட லாம். இதனாலும், மத்திய ஆசியப் புறச்சம யங்களின் செல்வாக்காலும், ஆதிக்கிறிஸ்த வர் சிலர் இயேசுவையும், வானதூதர்களை யும் ஏறக்குறைய ஒரே படியில் வைத்து ஒப்பிடலாயினர். இந்தத் தவறான கருத்துக ளைத் தகர்த்தெறிய சில சீரிய விளக்கங்கள் தேவைப்படுகின்றன (கொலோ *2:18* தொ; எபி *1:4-14*; காண்க: திருவெளி *19:10*). கிறிஸ்து 'வானதூதர்களுக்கும்' தலையானவர் (கொலோ *2:10*); அவரோடு சேர்ந்து கிறிஸ்த வர்களும் வானதூதருக்குத் தீர்ப்பிடுவார்கள் (*1* கொரி *6:3*). புதிய ஏற்பாட்டிலும், வானதூ தர்கள், பரிந்துரைக்கும் பணியையும், இறை வனின் திட்டங்களை நிறைவேற்றும் கருவி களாய் இருக்கும் பணியையும் (எபே *1:14*), தொடர்ந்து செய்கின்றார்கள். ஆனால் இப்ப ணிகளை அவர்கள், இணையற்ற இணைப் பாளராகிய 'மனுமகனின் தூதுவர்களாக'த் தான் செய்து முடிக்கிறார்கள் (மத் *24:30*).

IV. முடிவுரை:- இறைவனையும் இவ்வுலக மக்களையும் இணைக்கின்ற ஏணிகளாய் இருந்து இறைமக்கள் செய்யவிருந்த ஏற்ற மிகு இணைப்புப்பணியை முன்னறிவிப்ப தாகவும், அதற்கு ஆயத்தம் செய்வதாகவும் தான் இறைவன் தமக்கும் தம்மக்களுக்கும் இடையே பாலமாக விளங்க ஏற்படுத்திய பல்வேறு இணைப்பாளர்களின் பணி தோற் றம் அமைகிறது. இஸ்ராயேலின் இவ்வி ணைப்புப் பணி இயேசுவின் பணியில் முற் றுப் பெற்றது. அப்பொழுது அவர் இறைவ னின் ஒரே மகனாக, எடுத்தியம்பவியலாத மாட்சியில் இருப்பதால், அவர் ஒருவரே ஈடு இணையற்ற இணைப்பாளர் ஆகிறார். இருந் தும், புதிய இஸ்ராயேல் என்னும் உடலின் தலை என்ற அளவில், தம் உடலின் மூலம் தான் இப்பொழுது அவர் தம் இணைப்புப் பணியைச் செய்கிறார்.

மனுமகனின் மகிமை பொருந்திய வரு கையின்போது, மனிதர் புரியும் இணைப்புப் பணி மங்கி மறைந்து போகாது, பட்டொளி வீசி பாரெல்லாம் தெரியுமாறு துலங்கும். இது முரணாகத் தோன்றலாம். இதற்கு இறு திக்காரணம் அன்பே உருவான இறைவன் தான் (*1* யோவா *4:8*). மனிதருடன் இருக்க வும் (மத் *1:23*; திருவெளி *21:3*), அவர்களு டன் தமது தெய்வீகத் தன்மைகளைப் பகிர்ந்து கொள்ளவும் (*2* பேதுரு *1:4*) அவர் விழைகிறார்; ஆதனால் தம்திட்டங்களை நிறைவேற்றுவதற்கு அவர்களுடன் இணைந்தே அவர் செயலாற்றுகிறார். மனி தன் மனிதனுடன் கொள்ளும் ஒன்றிப்பின் மூலமாகத்தான், தாம் மனிதருடன் ஒன்றி இணையும் ஒப்பற்ற கொடையை மனித ருக்கு இறைவன் தந்தருளுகின்றார் (*1* யோவா *1:3*).

## இதயத்தின் கடினத்தன்மை (HARDNESS OF HEART)

இறைவனிடமிருந்து பிரிக்கப்பட்ட மனித னுடைய படிப்படியான காழ்ப்பானது இத யத்தின் கடினத்தன்மை அல்லது குருட்டுத் தன்மை என்று அழைக்கப்படுகிறது. இதயத் தைக் கடினமாக்குவதென்பது, ஒருவன் பிடி வாதமும் கல்மனமும் கொண்டிருக்கும்படி யாக இதயத்தைக் கொழுக்க வைப்பது, காதுகளை மூடிக்கொள்வது, கண்களை மறைப்பது, உறங்குவது, மயக்க நிலை யினை உண்டாக்குவது, அல்லது மந்த நிலை, அல்லது பொய்ம்மை நிலையினை உருவாக்குவதென்பதாகும். இந்நிலையா னது, புறவினத்தாரையும், இஸ்ராயேலர்க ளையும் மற்றும் இயேசுவின் சீடர்களையும் கூட அனைத்து மக்களையும் பாதிக்கலாம்.

*1.* இதயத்தினுடைய கடினத்தன்மையின் தொடக்கத்தில்:-

அ. உண்மை நிகழ்வு:- யாத்திராகமம் மற்றும் ஏசயா நூல்களிலிருந்து இரு முக்கிய

வாசகங்கள் இஸ்ராயேலின் சமய சிந்தனையை எடுத்துக்காட்டுகின்றன. பாரவோன் இஸ்ராயேலைச் செல்ல அனுமதிக்காததன் காரணம், இறைவன் அவனுடைய இதயத்தைக் கடினமாக்கியதே (*யாத் 4:21; 7:3; 9:12; 10:1; 20:27; 11:10; 14:4*), அல்லது அவனே தன்னுடைய இதயத்தைக் கடினமாக்கிக் கொண்டதே (*யாத் 7:1;3-14.22; 8:15; 9:7. 34-35*). முதலாவதை இரண்டாவது திருத்துவதாகத் தவறான எண்ணத்தை எழுப்பாமல் இருக்க, இப்பகுதிகளில் இவ்விரு விளக்கங்களும் அடுத்தடுத்து வைக்கப்பட்டுள்ளன. இதனால் ஓர் இறையியல் பிரச்சினை எழுகிறது. மனிதனுடைய இதயத்தின் கடினத் தன்மைக்கு அவனே காரணமென்பதில் வியப்பில்லை. ஆனால் இறைவனே இதற்கு ஆதரவு அளித்து அதற்குக் காரணமாகவும் உள்ளார் என்பதை எவ்வாறு அனுமதிப்பது?. ''தாம் விரும்புவது போல் இறைவன் ஒருவன் மேல் இரக்கம் வைக்கிறார். இன்னொருவனை அடங்காமனத்தினர் ஆக்குகிறார்'' என்று (*உரோ 9:18*) பவுல் தெளிவாக எடுத்துரைக்கிறார்.

பழைய ஏற்பாட்டில் இறைவன் ஏசயாவிற்கு ஒரு பணியினை அளிக்கின்றார்; ''நீ போய் இந்த மக்களுக்கு. 'கேட்டுக் கேட்டும் நீங்கள் உணராதீர்கள், பார்த்துப் பார்த்தும் நீங்கள் அறியாதீர்கள்' என்று சொல். அவர்கள் கண்ணால் காணாமலும் காதால் கேட்காமலும் உள்ளத்தால் உணராமலும் இருக்கும்படி இம்மக்களின் உள்ளத்தை மழுங்கச் செய்; காதுகளை மந்தமாக்கு; கண்களை மூடு'' (*ஏச 6:9-10*). தவறானது என்று ஒதுக்கப்பட வேண்டிய இப்பகுதியானது, இஸ்ராயேல் கிறிஸ்துவை எதிர்க்க பயன்படுத்திய மறுதலிப்பை விளக்குவதற்கு இயேசுவாலும் (*மத் 13:13*), அவருடைய சீடர்களாலும் (*மத் 13:14-15; அ.ப. 28:25 தொ*) பொருள் அளவில் மீண்டும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

ஆ. பாவமும் இதயத்தின் கடினத்தன்மையும்:- மக்களுடைய இதயத்தின் கடினத்தன்மையானது கடவுளால் நேரடியாக விரும்பப்படாமல், முன்நோக்கப்பட்டது என்று கூறுவது மட்டுமே போதுமான விளக்கமாகுமா? உண்மையில், செமித்திய மொழியின்படி, இறைவன் அனுமதிப்பதை நேரடியாக விரும்புவதாகக் கூறுவது மரபாகும். இப்பதிலானது, ஒரு குறிப்பிட்ட எல்லைவரை ஏற்புடையதாய் இருந்தாலும், தட்டிக் கழிப்பதாக தோன்றுகிறது. இறைவனை மன்னிப்பதற்குப் பதிலாக, இதயத்தினுடைய கடினத் தன்மையின் அச்சுறுத்தல்களும். அது செயல்படுதலும் எப்பின்னணியில் வடிவமைக்கப்பட்டன என்று கவனிப்பது சரியானதாகும். இதயத்தைக் கடினப்படுத்துவதென்பது ஏற்றுக் கொள்ள மறுப்பதன்று; மாறாக, இது பாவ நிலையின் மீது தீர்ப்பைக் கொண்டு வருதலாகும்; பாவமானது புலப்படும் விதத்தில் தன் கனிகளை வெளிக்கொணர விரும்புதலாகும். எனவே,' இதயத்தின் கடினத்தன்மையானது, இறைச் சீற்றத்தினால் உண்டாவதன்று; மனிதன் துக்கப் படாத பாவங்களுக்காக அவனைத் தண்டிக்கிறார் இறைவன். மனிதன் தனது இதயத்தைக் கடினமாக்கும் போது பாவம் புரிகிறான். இறைவன் இதயத்தைக் கடினமாக்கும் போது பாவத்தின் ஊற்றாக இல்லாமல், நடுவராக இருக்கிறார். இதயத்தின் கடினத்தன்மையானது, மனம் மாற மறுத்து, இறைவனிடமிருந்து பிரிக்கப்பட்ட நிலையிலேயே உள்ள பாவியினுடைய பண்பை விவரிக்கிறது. அது பாவத்தின் உள்ளடங்கிய தண்டனையாகும்; பாவியினுடைய தீய இயல்பைக் காட்டுகிறது. ''எத்தியோப்பியன் தன் தோல் நிறத்தை மாற்ற இயலுமா? சிறுத்தை தன் புள்ளிகளை மாற்ற முடியுமா? அப்படி முடியுமானால், தீமையே செய்யப் பழகிக் கொண்ட நீங்களும் நன்மை செய்யக்கூடும்'' (*எரே 13:23*).

2. பொருள்:- அ. இறைவனின் திட்டத்தில்:- இத்தகைய சூழ்நிலையில் பொருளைக் காண பவுல் முயற்சித்தார். முதலாவதாக, இறைவனுடைய பராமரிப்புத் திட்டத்திற்குள் அவர் செல்கிறார். இறைவனிடமிருந்து எதுவுமே தப்புவதில்லை. பாரவோனுடைய தனிப்பட்ட முடிவில் பவுல் அக்கறை கொள்ளாவிடினும், இறுதியாக இறைம

கிமை ஒளிவீசுவதற்கு அவன் கருவியாக உள்ளான் (யாத் 9:16; 14:17-18). இஸ்ராயேல் தன்னுடைய இதயத்தின் கடினத்தன்மை யால், புறஇனத்தவர் திருச்சபைக்குள் வருவ தற்கு அடிகோலுகிறது (உரோ 9); மேலும் இறைவனது திட்டமானது, உயிர் வாழ வேண்டிய எஞ்சியுள்ளோருக்காகவே முழு வதுமாக பணிக்கப்பட்டுள்ளது. அடுத்து, இஸ்ராயேலுடைய இதயத்தின் கடினத்தன் மையானது இறைவனின் கடுமையையும். அவரது கோபத்தின் எல்லையையும் காட்டு கிறது. இறைவன் மக்களோடு உடன்ப டிக்கை செய்வதென்பது வேடிக்கைக்காக அன்று. அப்படியிருக்க, கவனமின்மை (லூக் 17:26-29), தன்னிறைவு (உப 32:15). இறு மாப்பு (உப 8:12 தொ; நெக 9:16) ஆகிய வற்றை அவர் எவ்வாறு பொறுத்துக் கொள் வார்? இறுதியாக இதயத்தின் கடினத்தன்மை யானது இறைவனின் பொறுமையினையும் காட்டுகிறது. அவர் பாவியை அழிக்காமல், கிளர்ச்சி செய்பவர்களுக்குத் தொடர்ந்து தனது கரத்தை நீட்டுகிறார் (உரோ 10:21; ஏச 65:2; ஒசே 11:1-2; எரே 7:25; நெக 9:30). இவ்வாறு இறைவன் பாவியைத் தம்பால் ஈர்க்க விரும்புகிறாரோ அல்லது அவனு டைய நிலையிலேயே அவனை விட்டுவிடு கிறாரோ, எப்படியிருப்பினும், தமது இரக் கத்தை மீண்டும், மீண்டும் காட்டுகிறார்.

ஆ. இருமனச் சூழ்நிலை:- ஒளியின் உருவ கத்தின் மூலமாக இவ்வுண்மையை மேலும் ஆழமாகப் புரிந்துக்கொள்ள யோவான் முயற்சிக்கிறார். தன்னைப் பெறுவதற்குத் தயார் செய்யப்படாதவர்களை ஒளியானது குருடாக்குகிறது (யோவா 3:19 தொ). அதே போல் இறைவனும், என்றும் பிரசன்னமாயி ருக்கும் தனது அன்பினால், பாவியின் மனத் தில் மறுக்கும் எதிர்ச்செயலைத் தூண்டுகி றார். இதனாலேயே, இறைவனின் முன் தயாரிக்கும் செயல்களாகிய புதுமைகள், பாரவோனுடைய இதயத்தைக் கடினமாக்கு கின்றன; பாலைவனத்தில் மோசேக்கு எதிரா கவும் (எண் 14:11; சங் 106:7), அப்பங்களைப் பலுகச் செய்தபிறகு மீண்டும் இயேசுவிற்கு எதிராகவும் (யோவா 6:42-43) முணுமுணுக் கின்ற இஸ்ராயேலருக்குப் புதுமைகள் மதிப் பற்றவையாக விளங்குகின்றன. அவர்களு டைய உள்ளங்கள் மழுங்கியிருந்ததால், இயேசுவின் சீடர்களும் அவற்றை அறிந்து கொள்ள முடியவில்லை (மாற் 6:52; 8:17-21). மனிதர்கள் தூய ஆவிக்கு வருத்தமூட்டுவதற் காக (ஏச 63:10; அப 7:51), அதேபோல் குணமாக்கும் மருந்தாக, அளிக்கப்படும் இறை தண்டனைகள் (ஆமோ 4:6-11), அல் லது மனமாற்றத்திற்கான இறைவாக்கினரின் வேண்டுகோள்கள், செயலற்றவையாகவும், சில நேரங்களில் எதிர்விளைவை ஏற்படுத்து பவையாகவும் உள்ளன (2. அர 17:13-14; எரே 7:25 தொ). அதனால் மனிதர் தூய ஆவியைத் துயருறச் செய்கின்றனர் (ஏச 68: 10; அ.ப. 7:51).

3. இறைவனின் வெற்றி:- தன் தன்மையி லிருந்தே ஊட்டமளிக்கப்படுகின்ற இந்த இதயத்தின் கடினத்தன்மை, பாவத்தின் உறு தியானது, மனமாற்றத்தினாலன்றி, வேறுமு றையில் நீங்காது; ''இன்று நீங்கள் அவரது குரலை கேட்பீர்களாகில், உங்கள் இதயங்க ளைக் கடினப்படுத்திக் கொள்ளாதீர்கள்'' (சங் 95:7-8; எபி 3:7-8. 12). ஆனால், கடின மான பாவியை எவ்வாறு மனமாற்றுவது? ''ஆண்டவரே, உம் வழிகளிலிருந்து நாங்கள் பிறழும்படி விட்டதேன்? உமக்கு அஞ்சாத படி எங்கள் உள்ளத்தைக் கடினமாக்கிய தேன்? உம்முடைய ஊழியர்களை முன்னிட் டும் உம் உரிமைச் சொத்தாகிய கோத்திரங் களை முன்னிட்டும் எங்கள் பக்கமாய்த் திரும்பியருளும்'' (ஏச 63:17). இறைவன் தீமையின் அழிவை நொறுக்கி, தனது மணம களின் இதயத்திற்குள் செல்லும் வழியை அறியமுடியும் என்று விசுவாசி அறிந்திருக்கி றான் (ஒசே 2). இறுதி வார்த்தை இறைவ னுக்கே உரியது. ஆகையால்தான், மனிதனு டைய கல்லான இதயமானது ஒருநாள் உணர்ச்சியுள்ள இதயத்தினால் மாற்றப்படும் என்றும் (எச 36:26) இறைவனின் ஆவியான வர், மனிதனால் செய்ய முடியாததையும் செய்யக்கூடியவர் ஆவார் என்றும் இறை வாக்கினர் அறிவிக்கிறார். இப்போது கிறிஸ்து வந்துவிட்டார். இறைவனுடைய

படிப்பினைகளுக்கு ஆர்வமிக்கவனாக ஒருவனை உண்டாக்க ஆவியை அவர் அளித்துள்ளார். எனவே, இஸ்ராயேலின் வாரிசாகிய திருச்சபையானது, நமது விரோத மனப்பாங்கையும் அவரது இரக்கத்தினால் வலிந்து மாற்றுமாறு இறைவனிடம் வேண்டுகிறது (வழிபாட்டு செபம்).

**இதயம்** (HEART)

I. முன்னுரை:- 'இதயம்' என்னும் சொல் எபிரேயமொழியில் பரந்துபட்ட பொருளில் பயன்படுத்தப்படுகிறது. பொதுவாக நமது வழக்கில் இதயம் என்பது உணர்வுகளோடு தொடர்பு கொண்ட ஒன்றாகவே கருதப்படும். ஒருவன் தனது இதயத்திலிருந்தே பிறரை அன்பு செய்கின்றான், அல்லது வெறுக்கின்றான்; ஆசைப்படுகின்றான், அல்லது அச்சம் கொள்கின்றான். அறிவு சார்ந்த வாழ்வில் இதயம் எவ்விதப் பங்கும் ஏற்பதில்லை.

ஆனால் எபிரேயத்திலோ 'இதயம்' என்ற சொல் மனிதனுள்ளிருக்கும் அனைத்தையும் உள்ளடக்கும் பொருளில் கையாளப்படுகிறது. உணர்வு (2. சாமு 15:13; சங் 21:3; ஏச 65:14), எண்ணம். ஆராய்வு, திட்டமிடல் போன்ற பொருள்களிலும், நினைவு, விழிப்புணர்ச்சி, மனம் போன்ற பொருள்களிலும் அடிக்கடி 'இதயம்' என்ற சொல் எடுத்தாளப்படுகின்றது. 'பரந்த இதயம்' (1. அர 5:9) என்பது அகன்ற அல்லது ஆழமான அறிவைக் குறிக்கிறது. 'உன் இதயத்தை எனக்குக் கொடு' என்பது 'எனக்குச் செவிசாய்ப்பாய்' (பழ 23:26) என்று பொருள்படும். 'கடின இதயம்' என்னும் தொடர் குறுகிய, ஏற்க மறுக்கும் மனத்தைக் குறிக்கும். 'இதயம்' என்ற சொல்லின் பொருள் சூழ்நிலைக்கேற்ப அறிவு சார்ந்ததாகவோ (மத் 8:17), அறிவுக்கு அப்பாற்பட்டதாகவோ (அப 7:51) அமையலாம். எனவே மனிதனின் இதயம் அவனது உணர்ச்சிமிகு, அறிவார்ந்த, சுதந்திரமான, தனித் தன்மையாகும். இதயத்துக்கு இணையாக உளம், மனம், உள்மானம் என்ற சொற்களும் பயன்பட்டுள்ளன.

II. மனிதனின் இதயம்:- *1. உடலின் ஒரு பகுதி:-* இப்பொருளில் இதயம், அல்லது மனம் அரிதாகவே பயன்பட்டுள்ளது (1. சாமு 25:37; 2. அரச 9:24). மனம் உணவால் திடம் பெறலாம் (நீதி 19:5) திராட்சை இரசத்தால் மகிழ்வுறலாம் (சங் 104:15).

*2. உணர்ச்சிகளின் இருப்பிடம்:-* மனிதனுடைய எல்லா உணர்ச்சிகளும் இதயத்துக்கு அல்லது மனதுக்குச் சாற்றிக் கூறப்படுகின்றன. மனம் மகிழலாம் (பழ 27:11; அப 14:17); வருத்தப்படலாம் (நெக் 2:2); கலக்கமுறலாம் (2. அர 6:11); ஆற்றல் கொண்டிருக்கலாம் (2. சாமு 17:10); உரமில்லாது போகலாம் (ஏச 35:3); அஞ்சலாம் (35:4); பொறாமையால் ஏங்கலாம் (பழ 23:17); நம்பலாம் (32:11); முழுமனதுடன் ஒப்புக் கொடுக்கலாம் (2. நாள் 29:31); பகைமை கொள்ளலாம் (லேவி 19:17); அல்லது அன்பு செய்யலாம் (உப 13:3). இதயத்தின் உணர்ச்சிகள் சில சமயங்களில் உயிர்ச்சித்தமாகவும் புலனீடாகவும் விவரிக்கப்படுகின்றன. மனம் கலக்கமுறுகிறது (ஆதி 42:28); அதிர்ச்சியுறுகிறது (45:26); உருகிப் போகிறது (சங் 22:14; லூக் 24:32); திகிலடைகிறது (1. சாமு 28:5); துடிக்கிறது (சங் 38:10); வயிற்றெரிச்சல் கொள்கிறது (உப 19:6); சோர்வடைகிறது (பழ 13:12); உடைந்து போகிறது (சங் 69:20). இதயம், தீய (உரோ 1:24), நல்ல (10:1) ஆசைகளின் இருப்பிடமாகக் கருதப்பட்டது.

*3. அறிவின் இருப்பிடம்:-* முன்பு கூறியது போல் எபிரேயர் கருத்துப்படி இதயம் அல்லது உள்ளம் அறிவு வாழ்க்கையின் மையமாக இருந்தது. எண்ணும் செயல் உள்ளத்தில் நிகழ்கிறது (நீதி 5:16; மாற்கு 2:6). சிந்தனைக்குரிய இடம் இதயமே (1. நாள் 29:18). வாழ்வின் ஆழ்ந்த உண்மைகள் உள்ளத்தில் தியானிக்கப்பட்டன (சங் 4:4; லூக் 2:18). எபிரேய மொழி புலனீடான முறையைக் கொண்டிருந்ததால், ''சிந்திப்பதை'' ''தனக்குள் (இதயத்துக்குள்) சொல்லிக் கொள்ளல்'' என்று (ஆதி 27:41; சங் 10:6) விவரித்தனர். இதயத்தில் மனிதன் திட்டங்கள் செய்கிறான், அறிவைத் தேடுகிறான்.

நினைவுகளைச் சேர்த்து வைக்கிறான். இதயத்துக்கும் சிந்தனைக்கும் உள்ள தொடர்பு எவ்வளவு நெருங்கியதென்றால், இதயத்தை அறிவு (யோபு 3:3) என்று மொழிபெயர்க்கலாம்.

4. சித்தம் மற்றும் ஒழுக்க வாழ்வின் இருப்பிடம்:- இதயம் அறிவு வாழ்வின் மையம் என்ற கருத்திலிருந்து அது சித்தம் மற்றும் ஒழுக்க வாழ்வின் மையமாகும் என்ற கருத்து இயற்கையாக அமைகிறது. உள்ளம் சதித்திட்டங்களை வகுக்கிறது (பழ 6:18). அது தீயதாகவும் வஞ்சகமிக்கதாகவும் ஆகக் கூடும் (11:20; எபி 3:12). அதனால் அதிலிருந்து தீய எண்ணங்கள் வெளிவரும் (மத் 15:19). அது செருக்குறலாம் (உப 8:14). அது கடினப்படலாம் (செக் 7:12); முரட்டுத்தனம் கொள்ளலாம் (மத் 19:8). அது கனமாகி விடலாம் (சங் 119:70); இறைப் பற்றற்றதாக இருக்கலாம் (யோபு 36:13); அது இறைவனிடமிருந்து மாறி விடலாம் (1. அர 11:2). கடின அல்லது முரட்டு இதயம் ''விருத்த சேதனம் செய்யப்படாமை'' என்று விவரிக்கப்படுகிறது (எரே 9:26; அ.ப. 7:51). ஒருவன் தன் இதயத்தையே முழுவதும் நம்பியிருக்கலாம் (எண் 15:39). அல்லது அவன் இதயம் ஏமாற்றப்படலாம் (ஏச 44:20). வஞ்ச நாவால் இரண்டகம் பேசலாம் (சங் 12:2). மனிதனிடம் விரும்பப்படுவது மென்மையான இதயமே, கடின இதயமன்று (2. அர 22:19). நல்ல இதயம் ஆண்டவர் முன் நிறைவுள்ளது (1. அர 8:61), குற்றமற்றது (சங் 119:80), சுத்தமானது (51:10), நேர்மையானது (32:11), சீரிய செம்மனமானது (லூக் 8:15) தூயது (மத் 5:8), ஒருமனப்பட்டது (எபே 6:5), விருத்த சேதனம் செய்யப்பட்டது (எரே 4:4; உரோ 2:29), நொருங்குண்டது (சங் 34:18); நிறைவையும், முழுமையையும் குறிக்க ''முழுஇதயத்தோடும்'' என்ற பதம் பயன்படுத்தப்படுகிறது (உப 6:5). மனிதன், விரும்பினால், இதயத்தைத் தூய்மைப்படுத்தலாம் (சங் 73:13) அல்லது புதுப்பிக்கலாம் (எச 18:31). இதயம் கல்வி பயிலக் கூடியது; ஆண்டவரைத் தேடி பின்பற்ற (2. நாள் 12:14) அல்லது சட்டத்தின்படி ந.்.க்க (எஸ்ரா 7:10) மனம் வைக்கலாம். மெய்யறிவிலும் (பழ 2:1) அல்லது நன்னெறியிலும் (23:19) மனத்தைச் செலுத்தலாம்; பொதுவாக இதயம் வஞ்சனையுள்ளது, மிகவும் கெட்டுப் போனது (எரே 17:9), நம்பத்தகுந்ததன்று (பழ 28:26), தீமை நிறைந்தது (ஆதி 8:21; திருவுரை 9:3).

5. இதயமும் புறத்தோற்றமும்:- 'இதயம்' கண்ணுக்குப் புலப்படாத உள்ளுறுப்பே; எனினும் ஒருவன் பிறரோடு கொள்ளும் தொடர்புகளில், உறவுகளில் இருப்பிடமாகக் கொள்ளும் மனப்பான்மையே மனிதனுக்கு முக்கியமானது என்பது தெளிவு. பொதுவாக, ஒருவனின் புறத்தோற்றம் உள்ளத்தில் இருப்பதன் வெளிப்பாடாக அமைய வேண்டும். இவ்வாறிருந்தால் ஒருவருக்குள்ளிருக்கும் இதயத்தை அவரின் முகப்பாவங்களிலும் (சீரா 13:25), வார்த்தைகளாலும் (பழ 16:23), செயல்களாலும் (லூக் 6:44) மற்றவர் மறைமுகமாகவாகிலும் அறிகின்றனர். ஆனால் நடைமறையில் ஒருவனது வார்த்தைகளும் செயல்களும் அவனது இதயத்தை எடுத்துக்காட்டுவதற்கு மாறாக அதனை மூடி மறைக்கப் பயன்படுகின்றன (பழ 26:23-26; சீரா 12:16). ஏனெனில் மனிதன் மறைக்கும் ஆற்றலுள்ளவன்; இப்பண்பு மிகவும் ஆபத்தானது; உள்ளொன்று வைத்துப் புறமொன்று காட்டுவதால் இதயமே ஏமாற்றுதலின் இருப்பிடமாக மாறிவிடுகிறது. இப்படிப்பட்ட இரண்டகப் போக்கு மிகப் பெரிய தீவினை (பாவம்) ஆகும். இப்போக்கினை விவிலியம் தீவிரமாக கண்டிக்கிறது (சீரா 27:24; சங் 28:3 தொ).

6. இறைவனும் இதயமும்:- இறைவன் தன்னை அழைப்பதை உணர்ந்தாலும் ஏமாற்று வழியில் தப்பிக்க மனிதன் எத்தனிக்கின்றான். இறைவன் எரியும் நெருப்பு (உப 4:24). இறைவனின் அடிப்படையான ஆணைகளை ஒருவன் எவ்வாறு நிறைவேற்ற இயலும்? இறைவனின் மக்களாம் இஸ்ராயேலரே தமது கடமைகளை ஆற்றுவதில் தயக்கமும்,ஏமாற்று வேலையும் காண்பித்தார்கள். உண்மையான மனமாற்றத்தைத்

தவிர்ப்பதற்காகப் புறச் சடங்குகளாலும் (வெளி வழிபாடுகளாலும்) (ஆமோ 5:21) வஞ்சக வார்த்தைகளாலும் (சங் 78:36 தொ) இறைவனைச் சாந்தப்படுத்த முயல்கின்றனர்.

எனினும் இம்முயற்சி பொய்த் தோற்றமே யாகும். மனிதனைப் போலக் கடவுளை ஏமாற்ற முடியாது: ''மனிதன் வெளித்தோற் றத்தைக் காண்கின்றான்; ஆனால் இறைவன் இதயத்தின் ஆழத்தை நோக்குகின்றார்'' (1. அர 16:7) ''இறைவன் இதயத்தைத் தேடுகின் றார்; ஒவ்வொருவருடைய நடத்தையையம் பரிசோதிக்கிறார்'' (எரே 17:10; சீரா 42:18); அவர்களுடைய பொய்யை ஆண்டவர் வெளிக்கொணர்கிறார். ''இம்மக்கள் உதட் டால் நம்மைப் போற்றுகின்றனர்; அவர்க ளது உள்ளமோ நம்மை விட்டுத் தொலை வில் இருக்கின்றது'' (ஏச 29:13) என்கின்றார். ஆன்மாவில் உள்ள ஆழத்தையும் ஆவியின் உள்ளாழத்தையும் ஆண்டவர் ஊடுருவிப் பார்க்கின்றார் (எபி 4:12...) என்பதை மனி தன் அறிந்திருக்கின்றான். ஆண்டவரை அணுகுவதென்பது அவரில் அவனது இத யத்தை இழக்கத் துணிவதேயாகும் (எரே 30:21).

7. புதிய இதயம் தேவை:- புறச்சடங்குகள் மட்டும் போதாது என்பது படிப்படியாக இஸ்ராயேலருக்குப் புலப்பட்டது. கடவு ளைக் காண வேண்டின், ஒருவன் தன்முழு இதயத்தோடு அவரைத் தேட வேண்டும் (உப 4:29), தன் நெஞ்சத்தை நிரந்தரமாக இறைவனோடு இணைக்க வேண்டும் (1. சாமு 7:3), தனது முழு ஆன்மாவோடு ஆண்டவரை அன்பு செய்ய வேண்டும் (உப 6:5) என்பதை இஸ்ராயேலர் தெளிவாக உணரத் தொடங்கினர். இச்செயல் இறைச் சட்டங்களுக்குப் பணிய வேண்டும் என்ப தையும் உள்ளடக்குகிறது. ஆனால் இஸ்ரா யேலரின் வரலாற்றை முறையாக நோக்கி னால் இதனைச் செயலில் காட்டும் திறம் இல்லாதவர்களாகவே தென்படுகின்றனர். அவர்களது பாவம் அவர் தம் இதயத்தையும் பாதிக்கிறது. ''இம்மக்கள் கடின இதயமும் அடங்காத போக்கும் கொண்டவர்கள்'' (எரே 5:23) ''தூய்மையில்லா இதயமுடைய வர்கள்'' (லேவி 26:41) ''இருமனம் கொண் டவர்கள்'' (ஓசே 10:2), இறைவனில் நம் பிக்கை கொள்ளாமல் தங்களது சொந்தச் சிந்தனைகளின்படியும், தீய உள்ளத்தின் பிடி வாதப்படியுமே நடந்தவர்கள்'' (எரே 7:24; 18:12). இதன் பலனாகத் தீராத் தீவினை அவர்களைத் தீண்டியது. அவர்கள் ஆற்றக்கூ டிய அறச் செயலாக இருந்த ஒன்றே ஒன்று அவர்களது இதயங்களைக் கிழித்துக் கொள் வதும் (யோவேல் 2:13), உடைந்த உள்ளத் தோடும், திருந்திய மனத்தோடும் இறைவ னுக்குத் தங்களையே தகனப் பலியாக்குவ தும் (சங் 51:19) தங்களில் தூய்மையான உள்ளத்தைப் படைக்க ஆண்டவரை வேண் டுவதுமே (சங் 51:12) ஆகும்.

II. புதிய இதயம்:- 1. உறுதி மொழி:- இஸ்ராயேலருக்கு அமைதி அளிக்க இறை வன் தேர்ந்த திட்டமும், செய்த அறிக்கையும் இதுவேயாகும். இறைவனின் நெருப்பு, அன்பின் நெருப்பு, இறைவன் தன் மக்களை அழிக்காமல் இருப்பதற்கு இவ்வன்பு நெருப்பே காரணமாகிறது. இந்த எண்ணமே அவரது இதயம் பூரிக்கச் செய்கிறது (ஓசே 11:8). மீண்டும் அவளது உள்ளத்தோடு உரை யாடவே, உறுதியற்ற தன் மனைவியாம் இஸ்ராயேலை இறைவன் பாலைவனத் திற்கு இட்டுச் செல்கின்றார் (ஓசே 2:16). இச்சோதனைகளுக்கெல்லாம் ஒரு முடிவு வரும்; ஒரு புதிய காலம் பிறக்கும். இப்பு திய காலத்தில் இஸ்ராயேலரின் இதயவாழ் வில் இறைவனே புனிதம் பூக்கச் செய்கிறார். ஆண்டவர் இஸ்ராயேலரின் இதயத்தையும் அவர்களது மரபினரின் இதயத்தையும் விருத் தசேதனம் செய்து, அவர்கள் தம் முழு இதயத்தோடும் ஆன்மாவோடும் அவரை அன்பு செய்ய அழைக்கின்றார்; ஏனெனின் இறைமக்கள் என்றென்றும் வாழ வேண்டு மென்பது இறைத்திட்டம் (உப 30:6) இஸ்ரா யேலர் இனிமேல் முணுமுணுக்கவோ முரண்டு பிடிக்கவோ மாட்டார்கள். ஏனெ னில் ''இறைவன் அவர்களுடன் ஒரு புதிய உடன்படிக்கையைச் செய்வார்; தமது திருச்

சட்டத்தை அவர்களது உள்ளங்களில் பதிப்பார்; இஸ்ராயேலரின் இதயங்களின் மீது அதனை எழுதுவார்'' (எரே 31:33). இவற்றையெல்லாம்விட மேலானதாக, இஸ்ராயேலருக்கு இறைவன் புதியதோர் மனத்தை அருளுவார் (எரே 32:39). 'அவர் ஆண்டவர்' என்று அறிந்து கொள்ளும் இதயத்தை அவர்களுக்கு அருளுவார் (எரே 24:7; உப 29:3). 'உங்களில் புதியதோர் உள்ளத்தையும் புதிய மனத்தையும் உங்களுக்கென உண்டாக்கி கொள்ளுங்கள்' (எச 18:31) என்னும் கட்டளைக்குபின் அவர்களிடமிருந்து தாம் எதிர்பார்க்கும் இதனை அடைய அவரே அவர்களுக்கு அருந்துணையாய் இருக்க உறதியளிக்கின்றார். ''நாம் உங்கள் மேல் தூய நீரைத் தெளிப்போம்; உங்களுக்கு புதியதோர் உள்ளத்தை அருளுவோம்; அதனில் புதிய ஆவியை ஊட்டுவோம்! உங்கள் உடலிலிருந்து கல்லான இதயத்தை எடுத்துவிட்டு உணர்ச்சியுள்ள உள்ளத்தை உங்களுக்குக் கொடுப்போம்'' (36:25...). இவ்வாறு, இறைவனுக்கும் இறைமக்களுக்கும் இடையே நிலைத்து நிற்கும் தொடர்பு உறுதிப்படுத்தப் படுகிறது.

2. இறைவன் அளிக்கும் கொடை:- கிறிஸ்து இயேசுவின் வழியாகவே இறைவனின் உறுதி மொழி நிறைவேறியது.

அ. ஒத்தமை நற்செய்திகளில், இறைவாக்கினரின் படிப்பினைகளைப் போதித்துக் கொண்டு போகும்போது பரிசேயரின் சட்ட முறைகளை, கண்டிப்பினைச் சாடுகிறார் இயேசு. பாவம் என்பது இதயத்திலிருந்து வெளிவருவதே என்பதைச் சுட்டிக் காட்டுகின்றார். ''உள்ளத்தினின்றே தீயஎண்ணம், கொலை, விபச்சாரம், மோகம், களவு, பொய்ச் சான்று, பழிச்சொற்கள் ஆகியவை வெளிவரும். இவையே மனிதனை மாசுபடுத்துகின்றன'' (மத் 15:19. தொ) இறைவன் எதிர்பார்க்கும் தாராள உள்ளத்தை நினைவுபடுத்துகின்றார். மனிதன் இறைவனின் வார்த்தையைச் சீரியசெம்மனத்தில் ஏற்க வேண்டும் (லூக் 8:15). 'தன் முழு உள்ளத்தோடும் முழு ஆன்மாவோடும் இறைவனை அன்பு செய்ய வேண்டும்' (மத் 22:37). தன் சகோதரனைத் தன் முழு உள்ளத்தோடு மன்னிக்க வேண்டும் (மத் 18:35). தூய உள்ளத்தோர் இறைவனைக் காண்பார்கள் என்று வாக்களிக்கின்றார் (மத் 5:8). இதயத்தில் சாந்தமும் தாழ்ச்சியும் உள்ளவன் இறைவாக்கினரிலும் மேம்பட்டவன்; ஏனெனில் தூய்மையே உருவான தேவன் தம் சீடர்களுக்குத் தூய்மையினைத் தருகின்றார் (மத் 9:2; 26:28). தமது உயிர்ப்பிற்குப்பின் தம் அப்போஸ்தலர்களுக்கு உள்ளொளி தருகின்றார். அவர்களோடு உரையாடுகின்றார்; மறைநூலைத் தெளிவாக்குகின்றார்; அப்போஸ்தலர்களின் உள்ளம் உருகியது (லூக் 24:32).

ஆ. கிறிஸ்துவில் நாம் கொள்ளும் விசுவாசமே, கிறிஸ்துவை நமது இதயத்தில் ஏற்றுக் கொள்வதே, உள்ளத்திற்குப் புத்துயிர் அளிக்கின்றது; வேறொன்றால் இவ்வுயிரைப் பெற முடியாது. பவுல் கூறுகின்றார்; 'இயேசு ஆண்டவர்' என உன் வாயினால் அறிக்கையிட கடவுள் அவரை இறந்தோரிடமிருந்து உயிர்ப்பித்தார் என உன் உள்ளத்தில் விசுவாசித்தால் நீ மீட்புப் பெறுவாய். ஆம், உள்ளத்தால் விசுவசிப்பவன் இறைவனுக்கு ஏற்புடையவன் ஆவான்; வாயினால் அறிக்கையிடுகிறவன் மீட்புப் பெறுவான்; ஏனெனில் 'அவர்மேல் விசுவாசம் வைக்கிற எவனும் ஏமாற்றம் அடையான்' என்பது மறைநூல் வாக்கு'' (உரோ 10:9...). விசுவாசத்தினால் நம் அகக்கண்கள் ஒளி பெறுகின்றன (எபே 1:18); விசுவாசத்தினால் கிறிஸ்து உள்ளங்களில் குடிகொள்கிறார் (3:17); விசுவாசிகளின் உள்ளங்களுக்குப் புதியதோர் ஆவி அனுப்பப்படுகிறது; அந்த ஆவி 'அப்பா, தந்தாய்' என்று அழைக்கின்றார் (கலா 4:6). ஆவியோடு ''இறைவனின் அன்பும்'' உள்ளங்களில் பொழியப்படுகிறது (உரோ 5:5). இவ்வாறு, 'அறிவையெல்லாம் கடந்த இறை அமைதி கிறிஸ்து இயேசுவுக்குள் நமது உள்ளத்துக்கும் மனத்துக்கும் அரணாக இருக்கும் (பிலி 4:7); இதுதான் ''நிந்தனையால் உள்ளம் உடைந்தவரின்'' பலியின் மேல் அமைக்கப்பட்ட புதிய உடன்படிக்கையாகும்.

இ. யோவான்:- கலக்கத்திலிருந்தும் மருட்சியிலிருந்தும் நம்மை விடுவிக்கும் வண்ணம் உண்மை இறைவனை அறியும் ஆற்றலையும், இறைத் தொடர்பையும், அன்பையும், முடிவில்லா வாழ்வையும் அண்ணல் கிறிஸ்து அடியவருக்கு அளித்தார் *(யோவா 14:27; 1 யோவா 5:20; எரே 24:7; 1 யோவா 1:3)*; சிலுவையில் அறையப்பட்டு மேன்மையுற்ற கிறிஸ்துவின் வழியாகவே இவையனைத்தும் நமக்குக் கிட்டுகிறது. இயேசுவில் விசுவாசம் கொள்பவர்களின் உள்ளத்திலிருந்து உயிருள்ள நீர் ஆறாய்ப் பெருக்கெடுத்து ஓடும் *(யோவா 7:38; 19:34; 4:14)*. விசுவாசிகளுக்கு வாழ்வளிக்கும் பொருட்டு இயேசுவே இவர்களின் இதயத்திற்கு எழுகின்றார் *(6:56)*. யோவானின் நற்செய்தியின்படி இயேசுவே புதிய இஸ்ராயேலர் இதயம் என்று கூட இயம்பலாம். இந்த இதயம் இறைத் தந்தைக்கும் இறைமக்களுக்கும் (விசுவாசிகளுக்கும்) இடையே ஒரு புதிய உறவையும் ஒற்றுமையையும் உருவாக்குகின்றது. ''நான் அவர்களுக்குள்ளும், நீர் எனக்குள்ளும் இருப்பதால் அவர்களும் ஒருமைப்பாட்டின் நிறைவை எய்துவார்களாக'' *(17:23; 11:52; அ.ப. 4:32)* ''நீர் என் மீது கொண்டுள்ள அன்பு அவர்களுக்குள் இருக்கவும் நானும் அவர்களுக்குள் இருக்கவும் உமது பெயரை அவர்களுக்கு அறிவித்தேன், இன்னும் அறிவிப்பேன்'' *(யோவா 17:26)*.

**இதலா** *(IDALAH - நினைவு)*

செபுலோனில் உள்ள ஒரு நகரம் *(யோசு 19:15)*. இந்நகரம், கலிலேயாவிலுள்ள பெத்திலகேமுக்குத் தென் பகுதியில் ஒரு கி.மீ. தொலைவிலுள்ள இக்கால கிர்பெத்-ஏல்-கவாரா என்று பொதுவாகக் கருதப்படும். தால்மூத்தில் இந்நகரம் 'குரியே' என்றழைக்கப்படுகிறது.

**இதிபாசு** *(IDBASH - தேனைப்போல் இனிப்பு)*

யூதா குலத்தைச் சேர்ந்த ஒருவர். ஏதாமின் மகன் *(1 நாள் 4:3)*.

**இதிரயாம்** *(ITHREAM - கூட்டமான, மக்கள் நிரம்பிய)*

தாவீது கெபிரோனில் இருந்த போது எகிலா மூலமாகத் தாவீதுக்குப் பிறந்த ஆறாவது மகன் இதிரயாம் ஆவர் *(2 சாமு 3:5; 1 நாள் 3:3)*

**இதிரா** *(ITHRA - நிறைவான)*

அமாசாவின் தந்தை. இவர் தாவீதின் சகோதரியான அபிகாயிலை மணந்திருந்தார் *(2 சாமு 17:25)*. இதன்படி இவர் இஸ்ராயேலான இதிரா என்றழைக்கப்பட்டார். ஆனால் எழுபதுநூல் வாசகத்தில் *1 நாள் 2:17*-இன் படி அவர் இசமயேலான இதிரா என்று அழைக்கப்படுகிறார் *(2 சாமு 17:25; 1 அர 2:5.32)*. இது மேலான வாசகமாகத் தெரிகிறது.

**இதிரான்** *(ITHRAN - மேன்மையான)*

*1.* குலத்தலைவர் தீசோனின் மகனும், ஏதோமைச் சேர்ந்த கோரியரான சேயிரின் பேரனும் ஆவார் *(ஆதி 36:26; 1 நாள் 1:41)*.

2. ஆசேர் இனத்தைச் சேர்ந்த சோப்பாக்கின் புதல்வர்களில் ஒருவர் *(1 நாள் 7:37)*. ஒருவேளை இவரே எத்தேர் *(4)* ஆக இருக்கலாம்.

**இதிரியர்** *(ITHRITES - ஈடெடுப்பற்ற, முதன்மையான)*

இதிரியர்கள் கிரியத்து - எயாரிமோடு தொடர்புடைய யூத இனத்தைச் சேர்ந்தவர்கள் *(1 நாள் 2:53)*. தாவீதின் வலிமை மிக்க வீரர்களுள் ஈரா, காரேபு ஆகிய இரு இதிரியர்கள் இருந்தனர் *(2 சாமு 23:38; 1 நாள் 11:40)*. சில விளக்கவுரையாளர்கள் இவர்கள், எத்தேர் என்ற ஆணின் பெயரிலிருந்தோ அல்லது யாத்திர் அல்லது எத்தேர் என்ற பெயருடைய நகரிலிருந்து தோன்றியவர்கள் என்று நம்புகின்றனர்.

**இதிலாபு** *(JIDLAPH - அவர் அழுகிறார் அல்லது தூக்கமற்றிருக்கிறார்)*

நாகோருக்கும் மில்க்காவுக்கும் பிறந்த ஏழாவது மகன் *(ஆதி 22:22)*.

**இதினான்** (ITHNAN - *கொடுக்கப்பட்ட)*

யூதாவின் பகுதியின் தென் எல்லையில் நெகேபில் உள்ள ஊர் *(யோசு 15:23).* கெதேசு மற்றும் சிப்புக்கு அருகிலுள்ளது *(1 நாள் 4:7).* யூதாவின் வழித் தோன்றலான எதினானோடு தொடர்பு படுத்தப்படலாம். இவ்விடத்தை உறுதியாக அடையாளம் காட்ட முடியவில்லையென்றாலும் பெயேர்-செபவுக்கு தென்மேற்கில் 60 கி.மீ. தொலைவில் வாடி உம்-எதினானின் மேலுள்ள இக்கால கிர்பேத்-ஏல்-செபரீயேவாக இருக்கலாம். சில அறிஞர்கள், இதற்கு முன் வரும் பெயரோடு இதையும் சேர்த்து காசோர்-இதினான் என்று வாசிப்பர்.

**இதுமா** (ITHMAH - *தூய்மை)*

தாவீதின் வலிமை மிக்க வீரர்களுள் ஒருவர். தாவீதின் 30 வலிமை மிக்கவர்களோடு நாளாகம ஆசிரியரால் சேர்க்கப்பட்டவர்களில் இவரும் ஒருவர். இவர் மோவாபு இனத்தைச் சேர்ந்தவர் *( 1 நாள் 11:46).*

**இதுமேயா** (IDUMEA - *ஏதோமித்தரின் நாடு)*

ஏழுபது நூலாலும் யோசிபசாலும் ஏதோமிற்குப் பதிலாக இச்சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. இப்பகுதி சாக்கடலுக்கு தென் கிழக்கில் உள்ளது. எருசலேமின் வீழ்ச்சிக்குப் பிறகு (கி.மு. 586) யூதாவின் வடபகுதியை ஏதோமியர் கைப்பற்றினர் என்பது பல சுட்டிகாட்டுதல்களால் அறியப்படுகிறது *(சங் 137:7; எச 25:12; 35:12-15; ஒப).* இந்த ஆக்கிரமிப்பு ஏதோமியர்களால் மட்டுமல்ல, அராபிய குலத்தினராலும் ஏற்பட்டது. அராபியர்கள் கி.மு. 4 ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு ஏதோமை கைப்பற்றியதாகத் தெரிகின்றது. புதிய ஏற்பாட்டு காலத்திற்குமுன் பழங் கால ஏதோம் நபத்தேய அரசாக மாறியது. இதுமேயாவுக்கும் யூதேயாவுக்குமிடையேயுள்ள எல்லை கெபிரோனுக்கு வடக்கில் பேத்துசூருக்கு அருகில் ஓடுகிறது. இந்த எல்லைக்குத் தெற்கில் நெகேபிலுள்ள பகுதிகள் இதுமேயாவைச் சேர்ந்தவையாகும். இப்பகுதி செலூக்கியர்கள், அசமோனியர், ஏரோதியர் ஆகியோரின் காலத்தில் அடிக்கடி கைமாறியது. கி.மு. 164-இல் யூதா மக்கபேயு, சுதந்திரமான இதுமேயாவுக்கு எதிராக பேத்துசூரைப் பலப்படுத்தினார் *(1 மக் 4:61).* இதுமேயாவை, அழித்து பாழ்படுத்தினார் *(5:33.65).* இதுமேயாவை அசமோனிய ஆட்சியாளர் யோவான் இரிக்கானு (கி.மு. 135-105) கைப்பற்றினார். இவர் இதுமேயர்களை யூதமதத்தை ஏற்றுக்கொள்ளும்படி கட்டாயப்படுத்தினார். பெரிய ஏரோதின் குடும்பம் இதுமேயர்களைச் சார்ந்தது. கி.மு. 63-இல் பாம்பே இதுமேயாவுக்கு தல தனியாட்சி அளித்தார். கி.மு. 37-இல் பெரிய ஏரோது, இப்பகுதியை மீண்டும் யூதேயாவோடு சேர்த்தார். யோவான் இரிக்கானு இதுமேயாவை கைப்பற்றிய பின்பு, இதுமேயா யூதேயாவின் ஒரு பகுதியாகவே (அசமோனியர், ஏரோது, உரோமையர் ஆகியோரால்) செயல்படுத்தப்பட்டது. புதிய ஏற்பாட்டில் இதுமேயா ஒருமுறைதான் குறிக்கப்படுகிறது. இயேசுவின் பொதுப்பணிக் காலத்தில், இதுமேயாவிலிருந்தும் திரளான மக்கள் அவரிடம் வந்தனர் *(மாற் 3:8).*

**இதுலா** (ITHLAH - *உயர்ந்த இடம்)*

தாண் இனத்தைச் சேர்ந்த ஒரு சிற்றூர் *(யோசு 19:42).* இடம் சரியாக அடையாளம் தெரியவில்லை. ஆயினும் சிலர் பேத்து-கோரோனுக்கு வடமேற்கில் 7 கி.மீ. தொலைவிலுள்ள இக்காலத்திய சில்தாவை அடையாளம் காட்ட முயன்றுள்ளனர்.

**இத்தாமார்** (ITHAMAR - *பனைமர நிலம்)*

குருக்கள் பாரம்பரியத்திலும் நாள் ஆகமத்திலும், எஸ்ரா நூலிலும் மட்டும் இப்பெயர் காணப்படுகிறது. ஆரோனின் புதல்வர்கள் நாதாபு, அபிகு, எலயாசர், இத்தமார் ஆகியவர்களில் இத்தாமார்தான் கடைசி. பாபிலோன் அடிமைத்தனத்திற்குப் பின்பு வந்த மரபின்படி, ஆரோனின் 4 புதல்வர்களும் அவர்கள் தந்தையோடு குருத்துவப் பணிக்காக அர்ச்சிக்கப்பட்டார்கள் *(யாத் 28:1; எண் 3:2-3; 1 நாள் 24:2; காண்க எண் 20:25-28; லேவி 8-9).* நாதாபும் அபிகுவும் தங்கள் தந்தைக்கு முன்னரே மகப் பேறின்றி இறந்து போயினர். எலயாசர், இத்தாமார் ஆகியோர்

குருக்களாகப் பணிபுரிந்தனர் (லேவி 10; எண் 3:4; 1 நாள் 24:2). எலயாசர் தலைமைக் குருவாக்கப்பட்டார். எப்படியிருப்பினும் இத்தாமார் பாலைவெளியில், எல்லா லேவியர்களுக்கும் (யாத் 38:21), கெரிசோனிய வம்சத்தினருக்கும் (எண் 4:28), மெராரியின் புதல்வர்களுக்கும் (எண் 4:33, 7:8) தலைவராக இருந்தார். இத்தாமாரிலிருந்து ஏலியின் குடும்பம் தோன்றியது (1 சாமு 14:3; 22:9; 1 நாள் 24:3). பாபிலோனிலிருந்து எஸ்ராவோடு எருசலேமிற்கு இத்தாமார் குடும்பத்தைச் சேர்ந்த குருக்கள் வந்தனர் (எஸ் 8:2).

**இத்தாய்** (ITTAI - யாவேயோடு)

1. இத்தாய் பற்றுறுதியுடைய பெலிஸ்தியப் போர் வீரர். அவர் தன் சொந்த நாடான காத்திலிருந்து நாடுகடத்தப்பட்டவர். தன்னைப் பின்பற்றிய 600 பேர்களோடும் அவர்களுடைய குடும்பங்களோடும், அப்சலோம் கிளர்ச்சியின் போது, தாவீது எருசலேமை விட்டு ஓடியபோது, அவர் தடுத்தும் அவரைப் பின் தொடர்ந்து சென்றார் (2 சாமு 15:19-22). எப்பிராயிம் காட்டில் நடந்தபோரில் யோவாபு, அபிசாய் ஆகியவர்களோடு சேர்ந்து இவரும் தாவீதின் படைக்குத் தலைமை தாங்கினர். இந்தப் போரில் அபிசலோமின் கிளர்ச்சி அடக்கப்பட்டது (2 சாமு 18:2 தொ).

2. பென்யாமின் இனத்தில் இரிபாயின் மகன் இவர். தாவீதின் ஆற்றல் மிக்க போர்வீரர் ''முப்பது'' பேரில் ஒருவர் (2 சாமு 23:29). 1 நாள் 11:31-இல் ஈத்தாய் என்றழைக்கப்படுகிறார்.

**இத்தாய்** (HIDDAI - மகிழ்ச்சியான)

இவர் 'முப்பதின்மர்' என்று அழைக்கப்படும் தாவீதின் ஆற்றல் மிக்கவர்களுள் ஒருவர் (2 சாமு 23:30). இவர் எப்பிராயிம் மலைநாட்டில் காகசு நீரோடை அருகே வாழ்ந்து வந்தவர் (2 சாமு 23:30). 1 நாள் 11:32-இல் 'கூராய்' என்று அழைக்கப்படுகின்றார்.

**இத்தாலா** (ITALA)

காலத்தால் முந்திய விவிலிய இலத்தீன் வாசகம். இது வுல்கத்தா வாசகத்திற்கு முன்பே அல்லது அதைச் சாராது எழுதப்பட்டது என்று பொதுவாக ஏற்றுக்கொள்ளப்படும். ஆனால் சில அறிஞர்கள் இதையும் வுல்கத்தா வாசகத்தையும் ஒன்றாக்குவர். சில சமயம் இத்தாலா தொல் இலத்தீன் வாசகங்களின் தொகுப்பைக் குறிக்கப்பயன்படுகிறது; குறிப்பாக அதன் இத்தாலியப் பிரிவைக் குறிக்கப்பயன்படுகிறது. ஒருவேளை இத்தாலா என்ற பெயர் வட இத்தாலியில் பரவலாகப் பயன்படுத்தப்பட்ட வாசகத்திலிருந்து வந்திருக்கலாம்.

**இத்தாலியா** (ITALY)

திரேனியன் கடலுக்கும், அதிரியாதிக்குக் கடலுக்கும் இடையில் அமைந்த ஒரு நீண்ட தீபகற்பம். வடக்கில் ஆல்ப்ஸ் மலையிலிருந்து தெற்கில் கடல்வரை பரவியுள்ள இத்தாலியா நாடு 1120 கி.மீ. நீளமுடையதாகவும், 160 முதல் 240 கி.மீ. அகலமுடையதாகவும் உள்ளது. அப்பெனின் மலைத்தொடரே இத்தீபகற்பத்தின் முதுகெலும்பாக அமைந்துள்ளது. இதன் மேற்குப் பகுதியில் வளம்நிறைந்த சமவெளிகளும் பள்ளத்தாக்குகளும் காணப்படுகின்றன. மிகப்பெரிய நதியாகிய தைபர் எத்ரூரியாவுக்கும் லாத்தியுமுக்கும் இடையில் பாய்கிறது. இதற்குத் தென்பக்கத்தில் மிகவும் வளம்நிறைந்த கம்பானியா உள்ளது. தலைசிறந்த துறைமுகங்கள் மேற்கில் நேப்பிள்சிலும், ஜெனோவாவிலும், கிழக்கில் பிரிண்டிசியிலும் உள்ளன.

கி.மு. 5ம் நூற்றாண்டில் வாழ்ந்த சிராக்குசைச் சேர்ந்த அந்தியாக்கு என்னும் வரலாற்று ஆசிரியரின் கூற்றுப்படி, கி.மு. 13-ம் நூற்றாண்டில் இத்தாலியின் தென்மேற்குப் பகுதியை ஆண்ட 'இதாலோஸ்' என்ற அரசனின் பெயரிலிருந்தே 'இத்தாலி' என்ற பெயர் அந்நாட்டுக்கு சூட்டப்பெற்றது. முதலில் இப்பெயர் இந்நாட்டின் தென்மேற்குப் பகுதிக்கு மட்டுமே வழங்கப்பட்டு வந்தது. நாளடைவில், வடக்கில் உரோமையர்களின் இத்தாலிக்கும், சிஸ்ஸால்பைன் காலுக்கும் எல்லையாக அமைந்து ரூபிகோன் நதிவரை உள்ள பகுதிக்கு இப்பெயர் அளிக்கப்பட்டது. பொது வழக்கில் இப்பெயர் ஆல்ப்ஸ்

மலை அடிவாரம் வரையிலுமுள்ள முழு நாட்டிற்கும் வழங்கப்பட்டது. உரோமையர், இத்தீபகற்பத்தில் உரோமையைச் சேராத மக்கள் வாழ்ந்த பகுதியைக் குறிக்க இப்பெயரைப் பயன்படுத்தினர்.

புதிய ஏற்பாட்டில் அ.ப. 18:2; 27:1; 27:6; எபி 13:24 முதலியவற்றில் இத்தாலியா குறிப்பிடப்பட்டுள்ளது. அ.ப. 10:1 இத்தாலியப் பட்டாளத்தைப் பற்றிக் கூறுகிறது. புதிய ஏற்பாட்டில் குறிப்பிடப்பட்டுள்ள இத்தாலிய நகரங்களாவன: ஆப்பியன் சாலை, சந்தை, புத்தெயோலி, இரேகியும், உரோமை, 'மூன்று விடுதி''.

உரோமையிலிருந்து யூதர்களைப் புறம்பாக்கிய கிளாதியு சட்டத்தின் விளைவாக இத்தாலியிலிருந்து விரட்டப்பட்டபின், அக்கிலா, பிரிசிக்கில்லா, ஆகியோரை கொரிந்தில் பவுல் சந்தித்தார் (அ.ப.18:2). அகிரிப்பாவால் பவுல் விடுதலை அடைந்தபின், அவரும் அவரது தோழர்களும் உரோமையை நோக்கி செல்லும் அலக்சாந்திரியாக் கப்பலில் பயணம் செய்தனர் (27:1-6). எபிரேயருக்கு எழுதப்பட்ட திருமுகம், ''இத்தாலிய நாட் டுச் சகோதரர்கள் உங்களுக்கு வாழ்த்துக் கூறுகின்றனர்'' (எபி 13:24) என்று ஒரு தெளிவில்லாத குறிப்பைத் தருகிறது.

**இத்தாலியப் பட்டாளம் -** (ITALIAN COHORT)

உரோமைப் படையின் ஒரு பகுதி. கி.பி. 69-157ல் செசரியாவில் இரண்டாவது இத்தாலிக்கா பட்டாளம் ஒன்று இருந்ததாக எழுத்துப் பொறிப்புகள் கூறுகின்றன. கி.பி. 69-ம் ஆண்டுக்கு முன்பே செசரியாவில் இத்தாலிக்கா பட்டாளம் இருந்தது என்பதற்குச் சான்றுகள் இல்லையெனினும், இத்தகைய பட்டாளம் ஒன்றை மனத்தில் வைத்தே லூக்கா இவ்வாறு எழுதுகிறார். உரோமைக் குடியுரிமையோடு இத்தாலியைச் சேர்ந்தவர்கள்தான், அதாவது சுதந்திரக் குடிமக்களோ அல்ல விடுதலை செய்யப்பட்டவர்களோ இப்பட்டாளத்தில் அதிகமாக இருந்திருப்பார்கள் என்று லூக்கா கருதியிருக்கலாம்.

''இறைவனுக்கு அஞ்சி வாழ்ந்த'' நூற்றுவர் தலைவன் இப்படிப்பட்ட ஒரு படைப்பிரிவின் ஓர் அதிகாரி.

**இத்தியர்** (HITTITES)

இத்தியர் என்பவர்கள் சிறிய ஆசியாவிலும் வடக்கு சீரியாவிலும் உள்ள மக்களாவர். இவர்கள் எகிப்திய பதிவேடுகளில் 'கெத்த' என்றும் அசீரிய பதிவேடுகளில் 'காத்தி' என்றும் பழைய ஏற்பாட்டில் ஏத்தையர்கள் அல்லது ஏத்தின் புதல்வர்கள் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளனர். 1906-இல் துருக்கியில் உள்ள போகாஸ்கோய் என்ற இடத்தில் நடத்தப்பட்ட ஆராய்ச்சிகளிலிருந்து கிடைத்த குறிப்புக்களிலிருந்துதான் இத்தியர்களைப் பற்றி அறியமுடிகிறது. கி.மு. மூன்றாவது ஆயிரம் ஆண்டுகாலத்திலே இத்தியர்கள் எல்லையாக கருதப்பட்ட பகுதியில் மக்கள் குடியேறியிருந்த போதிலும் இத்திர்கள் கி.மு. 19-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர்களாகக் குறிப்புகள் உணர்த்துகின்றன. ஆனால் கி.மு. மூன்றாவது ஆயிரம் ஆண்டில் வாழ்ந்தவர்கள் இத்தியர்கள்தானா என்பது சந்தேகத்திற்குரியது. இந்தோ-ஐரோப்பிய மக்களாகிய இத்தியர்கள் கி.மு.2 000க்கு முன்னால்தான் சிறிய ஆசியாவில் குடியேறினார்கள். இன்று போகாஸ்கோய் என்று அழைக்கப்படும் தலைசிறந்த நகரமாகிய கத்துசா கி.மு.1900 வரையிலும் இத்தியரின் கைக்கு மாற்றப்படவில்லை. இன்றைய வரலாற்று ஆசிரியர்கள் இத்தியரின் வரலாற்றை மூன்று காலங்களாகப் பிரிக்கின்றனர்.

1) பழைய அரசாட்சி:- கி.மு.1900 முதல் 16 ஆம் நூற்றாண்டுவரை இத்தியரின் ஆட்சிப் பகுதியானது அனத்தோலியாவை மையமாகக் கொண்டிருந்தது. மேலும் வடக்கு சீரியா வெற்றிகொள்ளப்பட்டது. மெசபொத்தாமியா இத்தியரின் படையினால் தாக்கப்பட்டு அவர்களின் ஆட்சிப்பகுதியானது பெரிதாக்கப்பட்டது. இத்தியர் அரசாட்சியில் ஏற்பட்ட குழப்பத்தினால் இத்தியர்களைக் கூரியர்கள் தாக்கி வடக்கு சீரியாவை தனிப்பட்ட ஆட்சிப்பகுதியாக்கினர்.

*2) இத்தியரின் பேரரசு:-* கி.மு.15ஆம் நூற்றாண்டில் இரண்டாம் துதலியாவின்கீழ் இத்தியரின் ஆட்சிப்பகுதியானது வெளியிலிருந்து வரும் தாக்குதல்களை எதிர்த்து நிற்கின்ற அளவிற்கு வளர்ச்சி அடைந்தது. சுப்பிலுவியுமாவின் ஆட்சிக்காலத்தில்தான் இத்தியரின் ஆட்சியானது உச்சநிலையை அடைந்தது. எகிப்திய அரசனான இரண்டாம் இராமசேசு இத்தியரின் ஆட்சிப்பகுதியை கைப்பற்றும் நோக்குடன் வடக்குப் பகுதி நோக்கி படையெடுத்துச் சென்ற பொழுது காதேசு என்ற இடத்தில் முவாட்டலி என்பவரால் தோற்கடிக்கப்படுகின்றார். சில ஆண்டுகள் கழித்து எகிப்தியருக்கும் இத்தியருக்குமிடையே ஒரு ஒப்பந்தம் செய்யப்பட்டது. இந்த ஒப்பந்தமானது இத்தியரின் இளவரசியை பாரவோனுக்கு மணம் செய்து கொடுத்ததின் மூலம் உறுதி செய்யப்பட்டது. கி.மு.1200க்குப்பின் இந்த அரசு பெலிஸ்தியர்களால் தோற்கடிக்கப்பட்டதாகத் தெரிகிறது.

*3) புதிய இத்திய அரசுகள்:-* தைளருசு, வடக்கு சீரியா போன்ற இடங்களில் புதிய இத்திய அரசுகள் உருவெடுத்தன. கி.மு. பன்னிரெண்டாம் நூற்றாண்டு முதல் எட்டாம் நூற்றாண்டுவரை வடசீரியாவானது காத்தியின் நிலப்பகுதியாக விளங்கிற்று என்று அசீரிய பதிவேடுகளில் காணப்படுகின்றது. இந்த ஆட்சிப்பகுதிகள் கி.மு.9 அல்லது 8-ஆம் நூற்றாண்டில் அசீரியர்களால் கைப்பற்றப்பட்ட அசீரியர்கள் மாகாணங்களோடு சேர்க்கப்பட்டன.

இத்தியர்களின் அரசியல் அமைப்பைப் பொறுத்த வரையில் அதிகாரம் முழுவதும் அரசனின் கையில் இருந்தது. விவசாயம் தான் அவர்களது முக்கியமான தொழிலாகும். அவர்களது பொருளாதாரமே விளைச்சலை வைத்துதான் நிர்ணயிக்கப்பட்டது. இத்தியர்கள் கொண்டிருந்த சட்டங்களைப் பற்றிய இரண்டு தொகுப்புக்கள் இன்றும் காக்கப்பட்டு வரப்படுகின்றன. ஆனால் கமுராபியின் சட்டநூலைப் போன்று அவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்த சட்டத் தொகுப்புகள் அல்ல.

ஆயிரம் ஆண்டுகளாக பண்டைக்காலக் கிழக்கத்திய நாடுகளில் நடந்த போர்களில் பயன்படுத்தப்பட்ட எளிதான முறையில் அமைக்கபெற்ற குதிரைகள் பூட்டப்பட்ட தேர்களை உருவாக்கித்தந்த பெருமை இத்தியர்களைச்சாரும்.

இத்தியர் ஆட்சிப்பகுதியானது பல மொழிகள் பேசப்பட்டுவந்த பகுதியாகும். இத்தியமொழி இந்தோ-ஐரோப்பிய மொழியாகும். லூவாயின் என்பது இத்திய மொழியோடு தொடர்புடைய மற்றொரு இந்தோ-ஐரோப்பிய மொழியாகும். இத்திய வரலாற்று பதிவேடுகளில் சுமேரியமொழி, அக்காதிய மொழி, கூரிய மொழி போன்ற அன்னிய மொழிகள் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன.

இத்தியரின் சமயமானது எண்ணிலடங்காத தெய்வங்களைக் கொண்டிருந்தது. இவர்கள் வானிலையைக் குறிக்கும் தெய்வமாகிய தெசுப்பு, அவரது மனைவியாகக் கருதப்பட்ட கெப்பா, இவர்களின் புதல்வர் சரூமா போன்ற கூரியர்களின் தெய்வங்களைத் தங்கள் தெய்வங்களாகக் கொண்டு வழிபட்டனர். சூரியக்கடவுளைப் பாதுகாவலராகக் கொண்டிருந்தனர்.

இவர்களின் இலக்கியங்களில் தனித்தன்மையுடைய கூறுகள் ஒன்றும் இல்லை. ஆனால் வரலாற்று நிகழ்ச்சிகளை எடுத்துக் கூறும்பாணி சிறிது வித்தியாசமானதாக இருக்கும். இத்தியர்களின் ஓவியங்கள், சித்திரவேலைப்பாடுகளில் அழியாமல் எஞ்சியிருப்பவைகள் இன்னும் பேணிக் காக்கப்பட்டுவருகின்றன. இத்திய ஓவியங்களில் அதிகமானவை புதிய ஆட்சிகாலத்தைச் சேர்ந்தவையாகும்.

*4. பழைய ஏற்பாட்டில் இத்தியர்கள்:-* இத்தியர் இனத்தின் குலப்பெயர் முதியவர் கேத்து ஆவார். கேத்து கானானின் புதல்வராவார் (ஆதி 10:15; 1 நாள் 1:13) இவ்வாறு இவர்கள் கானானியர்களோடும் சீரியா பாலஸ்தீனத்தில் உள்ள பெனிசியர்களோடும் இணைத்துக் கூறப்படுகின்றனர். ஆதி

23-இன்படி, ஆபிரகாம் கெபிரோனில் இருந்த காலத்தில் இத்தியர்களும் அங்கு வாழ்ந்து கொண்டிருந்தனர். ஏசா இத்தியப் பெண்களை மனைவியாக்கிக் கொண்டார் *(ஆதி 26:34; 27:46; 36:2)*. இஸ்ராயேல் மக்களுக்கு முன்னால் கானான் நாட்டில் குடியிருந்தவர்களாக கூறப்படுகின்றவர்களில் இத்தியர்களும் குறிப்பிடப்பட்டுள்ளனர். யோசுவா நூலில் *(1:4)* பாலைவனமும் லெபனோனும் தொடங்கி யூப்பிரத்திசு மாநதிவரையிலும் மேற்கே பெருங்கடல் வரையிலும் அடங்கிய இத்தியருடைய நாடெல்லாம் உங்களுக்கு எல்லையாக இருக்கும் என்று வாக்களிக்கப்பட்ட நாடு என்ற பகுதிக்கு விளக்கம் தரப்படுகின்றது. இருப்பினும் இப்பகுதியில் கூறப்பட்டுள்ள எல்லைப்பகுதிகளுக்கும் கானான் நாட்டின் எல்லைப் பகுதிகளாக தரப்பட்டிருந்த மற்ற குறிப்புகளுக்கும் எவ்வித தொடர்பும் இல்லை. எனவே யோசு *1:4* என்ற பகுதி இத்திய நாட்டின் எல்லைப்பகுதியை விவரித்து இருக்கலாம் என்று கருதப்படுகின்றது.

*நீதி 1:26*-இல் இத்தியர்களின் நாடு என்பது சீரியாவிற்கு வட பகுதியிலுள்ள அசீரியர்களின் கத்தி நாட்டைத் குறிக்கின்றது. இத்தியரான அகிமெலக்கும் *(1 சாமு 26:6)* ஊரியாவும் *(2 சாமு 11:3 தொ)* தாவீதின் ஆட்களாகக் கருதப்பட்டனர். சாலமோன் ஆட்சியிலும் இத்தியர்களும் இருந்தார்கள் *(1 அர 9:20)*. சாலமோனின் அன்னிய நாட்டைச் சேர்ந்த மனைவிகளில் இத்தியப் பெண்களும் உள்ளடங்குவர் *(1 அர 11:1)*. சாலமோன் மன்னன் குதிரைகள், தேர்கள் போன்றவைகளை விற்பனை செய்த பொழுது அந்த வியாபாரத்தில் இத்தியர்களும் பங்கு கொண்டார்கள் *(1 அர 10:29)*. எருசலேமின் தந்தை ஓர் எமோரியர், தாய் ஒரு இத்தியப்பெண் என்று எசக்கியேல் கூறியபொழுது இத்தியர்களின் மரபும் வாழ்ந்து வந்திருக்கவேண்டும் *(எச 16;3.45)* இஸ்ராயேல் மக்கள் கானான் நாட்டிற்கு வருவதற்கு முன்னால் அந்நாட்டில் இத்தியர்களும் வாழ்ந்தார்கள் என்பதைப்பற்றிய குறிப்புகள் இத்தியர்களின் பதிவேடுகளில் காணப்படவில்லை. இருப்பினும் ஒரு நிலத்தை வைத்து கெபிரோனில் செயோரின் புதல்வராகிய எப்பிரோனுக்கும் ஆபிரகாமிற்கும் ஏற்படுகின்ற ஒப்பந்தத்தின் சிலகூறுகள் இத்தியர்களின் சட்டத்தைப் பிரதிபலிப்பது போல் தோன்றுகிறது *(ஆதி 23:11.17)*

வடக்கு சீரியாவிலுள்ள இத்தியர்களின் ஆட்சிப்பகுதியானது விவிலியத்திற்கு அப்பாற்பட்ட பதிவேடுகள் குறிப்பிட்டுள்ள எல்லைப்பகுதியைவிட தென்புறத்தில் பரந்து விரிந்து சென்றிருக்க வாய்ப்புக்கள் உண்டு. பழைய ஏற்பாட்டு நூல்கள் எழுதப்பட்ட காலத்தில் கானானேயர்களுடன் இத்தியர்களை இணைத்துக் காலமயக்கமாக்க கூறியிருக்கவும் வாய்ப்புக்கள் உண்டு. மேலும் ஆங்காங்கே பிரிந்து வாழ்ந்த இத்தியர்களின் குடும்பங்களிலிருந்து அகிமெலக்கும் ஊரியாவும் வந்திருக்கலாம் என்று ஏற்றுக் கொள்வதில் அல்லது எண்ணுவதில் எந்தவித பிரச்சினையுமில்லை.

**இத்திரோ** (JETHRO - மேதகு, மேன்மையுள்ள)

மிதியான் நாட்டுக் குரு. மோசேயின் மாமனார் *(யாத் 3:1; 4:18)*. இவர் யாத் *2:18*-இல் இரகுவேல் என்று அழைக்கப்படுகின்றார் (மேலும் காண் கோபாபு). எகிப்திலிருந்து தப்பியோடியபோது மோசே மிதியானில் இத்திரோவிடம் அடைக்கலம் புகுந்தார். இவருடைய புதல்விகளுக்குப் பாதுகாப்பு அளித்ததற்காக மோசே இவர்கள் வீட்டில் வரவேற்கப்பட்டார். பிறகு, இவரது மகள் சிப்போராவை மணந்து மோசே இவருடைய மந்தையைக் கவனித்து வந்தார் *(யாத் 2:16; 3:1)*. மோசே எகிப்துக்குத் திரும்பிய போது அவரது மனைவி சிப்போராவும், புதல்வர்கள் கெரிசோமும், எலியேசரும் இத்திரோவுடன் தங்கியிருந்தனர். மோசே இஸ்ராயேலரை எகிப்திலிருந்து விடுவித்து நடத்திக் கொண்டு வந்தபோது இத்திரோ மோசேயை சீனாய் மலையில் சந்தித்தார். இஸ்ராயேலர் விடுதலை அடைந்தது பற்றியும் யாவேயின் வெளிப்பாடு பற்றியும் மகிழ்ந்து, நன்றிப்பலிகள் ஒப்புக்கொடுத்தார். நீதி வழங்குவது பற்றி மோசேக்கு

ஆலோசனை அளித்தார் (யாத் 18). இந்நிகழ்ச்சியுரை நீதித்துறையை வழிபாட்டுத் துறையிலிருந்து பிரித்து, அதை மோசேயின் அதிகாரத்திற்குட்பட்டதாக்குகிறது. இது யூத நீதி வழங்கும் முறை இத்திரோவின் ஆலோசனையால் தோன்றியது என்பது விநோதமாக இருக்கிறது. ஒருவேளை தொடக்ககாலத்தில் இஸ்ராயேலர் தங்கள் நீதி வழங்கும் முறையில் மிதியானிய அல்லது கேனியா முறைகளைச் சார்ந்திருந்திருக்கலாம். இத்திரோவும் அவருடன் இருந்தவர்களும் மோசேயுடன் செல்லவில்லை (18:27). மோசேயின் மாமனாரின் வெவ்வேறு பெயர்களை ஒத்துப்போக வைப்பது முடியாத காரியம். இத்திரோ எலோயீம் பாரம்பரியத்தில் காணப்படுகிறது. இத்திரோ ஒரு கேனியர் ஆவார். மிதியானியருடன் தொடர்புடைய அலைந்து திரியும் கொல்லனாக இருக்கலாம் (நீதி 1:16). சில அறிஞர்கள், இவரிடமிருந்துதான் யாவேயைப் பற்றி மோசே அறிந்திருக்கக்கூடும் என்று கருதுவர். போதிய சான்றுகள் இல்லை. வேறு சிலர் இத்திரோ பிதாக்களின் இறைவனாகிய ஏலின் குருவாவார் என்று கருதுவர் (காண்க இரகுவேல் என்பதற்கு ஏலின் நண்பன் என்பது பொருள்).

**இத்துரேயா** (ITUREA - எத்தூரைச் சேர்ந்த)

இத்துரேயா என்பது கலிலேயாவிற்கு வடகிழக்கே எதிர்-லெபானோனில் உள்ள ஒரு பகுதியாகும். இங்கு இசுமயேல் இனத்தைச் சேர்ந்த அராபியர்கள் வாழ்ந்து வந்தனர். பிலிப்புவின் ஆளுகைக்கு உட்பட்ட பகுதிகளில் இத்துரேயாவும் கூறப்பட்டுள்ளது (லூக் 3:1). இசுமயேலின் புதல்வராகிய எத்தூரின் வழிவந்தவர்கள்தான் இத்துரேயர்கள் (ஆதி 25:15). இவர்கள் காது, ரூபன், மனாசே ஆகிய இனத்தவர்களுக்கு எதிரிகளாக விளங்கினதாக 1 நாள் 5:19-இல் கூறப்பட்டுள்ளது.

'இத்துரேயா' என்ற இடம் இருந்த எல்லைப் பகுதியை நில ஆராய்ச்சியாளர்களால் அறுதியிட்டு உறுதியாகக் கூற இயலவில்லை. வடக்கு பாலஸ்தீனத்தைச் சேர்ந்த இத்துரேயர்களைப்பற்றி கிரேக்க, உரோமை எழுத்தாளர்கள் அடிக்கடி குறிப்பிட்டுள்ளனர். ஆனால் இத்துரேயாவும், திரக்கோனித்தும் இரண்டு வேறுபட்ட மாவட்டங்களா, அல்லது ஒரே மாவட்டம் தானா என்பது தெளிவாக இல்லை. கலிலேயாவிற்கு வடக்கே இத்துரேயர்கள் வாழ்ந்திருக்க வேண்டும் என்று யோசிபஸ் கூறுகின்றார். இத்துரேயர்கள் எதிர்-லெபானோனின் மேற்கு மலைச்சரிவுப் பகுதியில் வாழ்ந்த மலை தேசத்தைச் சேர்ந்த மக்களாவார்கள்.

கிரேக்கர், உரோமையர்களைப் பொறுத்தவரையில் இத்துரேயர்கள், நாகரீகம், பண்பாடு, கலாச்சாரம் இல்லாத மக்களாகவே கருதப்பட்டனர். பாலஸ்தீனத்தில் உரோமையர்களின் ஆட்சி ஆரம்பிப்பதற்குச் சற்று முன்னால்தான் பிரிந்து கிடந்த அவர்கள் ஒரு மக்கள் குழுவாக ஒன்று சேர்கின்றனர். இத்துரேயர்கள் வாழ்ந்த லெபனோன் பகுதியானது மென்னேயுசின் புதல்வர் தோலமியால் கி.மு.85 முதல் 40 வரை ஆட்சி செய்யப்பட்டது. இவருக்குப்பின், பாம்பே, லெபனோனில் இருந்த பல கோட்டைகளை அழித்தார். அரசின் பரப்பளவையும் சுருக்கினார். இந்நிலையில் இத்துரேயர்களுக்கு முதலாம் லிசானியாஸ் அரசனானான். அவன் கி.மு. 36-இல் இறந்தான். அந்தோனியின் தூண்டுதலின் பேரில் இவ்வரசின் பெரும்பகுதி கிளியோப்பத்திராவுக்குக் கொடுக்கப்பட்டது. இதற்குப்பின் இப்பகுதியின் வரலாறு தெளிவாக இல்லை. ஒருவேளை இப்பகுதி நான்கு பாகங்களாகப் பிரிக்கப்பட்டு, இதில் ஒரு பகுதி லிசானியாவுக்கு அடுத்து ஆட்சிக்கு வந்தவனும் கிளியோபத்ராவின் சிற்றரசனுமான செனோதோரசுக்குக் கொடுக்கப்பட்டிருக்கலாம். இப்பகுதியை அகுஸ்து பெரிய ஏரோதுக்கு அளித்தார். இதில் ஒரு பகுதிக்கு கி.மு.4-இல் ஏரோதனின் மகன் பிலிப்பு சிற்றரசனானான். அவன் கி.பி.34-இல் இறந்தபோது, இப்பகுதி அகிரிப்பாவின் ஆட்சிக்குள் சேர்க்கப்பட்டது.

**இத்தோ** (IDDO - யாவே அறிவார்)

1. அபினதாபின் தந்தை. அபினதாபு, யப்போக்கு ஆற்றுக்கரையிலுள்ள மகனாயிம் பகுதிக்குத் தலைவனாகச் சாலமோனால் நியமிக்கப்பட்டவராவர் (1 அர 4:14)

2. கெரிசோன் குலத்தைச் சேர்ந்த ஒரு லேவியர் (1 நாள் 6:21). இவர் 6:41-இல் அதாயா என்றழைக்கப்படுகிறார்.

3. செக்கரியாவின் மகன். கிலயாத்திலுள்ள மனாசேயின் பாதி இனத்தவர்களுக்கு தாவீதால் தலைவனாக நியமனம் செய்யப்பட்டவர் (1 நாள். 27:21).

4. சாலமோன் (2 நாள் 9:29), இரகபெயாம் (12:15), அபியா (13:22) மற்றும் இஸ்ராயேல் அரசன் எரொபயாம் ஆகியோரின் ஆட்சிக் கால வரலாற்றுக்கு மூலநூல்களில் ஒன்றுக்கு ஆசிரியராகக் கூறப்படும் இவர் ஒரு காட்சியாளரும் இறைவாக்கினருமாவார். இவர் யூதாவின் அரசர்களான இரகபெயாம் மற்றும் அபியாவுக்கு எதிராகவும், இஸ்ராயேல் அரசன் எரொபயாமுக்கு எதிராகவும் கி.மு. 10-ஆம் நூற்றாண்டில் இறைவாக்கு உரைத்தார். இந்த இறைவாக்குகளின் தொகுப்பை, தன் வரலாற்றுக்கு மூலநூலாக நாளாகம ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

5. இறைவாக்கினரான செக்கரியாவின் தாத்தா (செக் 1:17; எஸ் 5:1; 6:14). இவர் கீழே 7-இல் குறிக்கப்படுபவராக இருக்கலாம்.

6. பாபிலோனில் கெபார் ஆற்றங்கரையிலிருந்த யூத அகதிகளின் குடியிருப்பான கசிப்பியாவில் இருந்த ஒரு லேவியர் குடும்பத் தலைவர். இவரது குடும்பம், எஸ்ராவின் வேண்டுதலுக்கு இணங்கி, ஆலய ஊழியர்களாக இருக்க அவரோடு எருசலேமுக்குச் சென்றது (எஸ் 8:16-17).

7. பாபிலோனிய அடிமைத்தனத்துக்குப் பின் எருசலேமிற்கு திரும்பிய குருக்கள் குடும்பம் ஒன்றுக்குத் தலைவர்(நெக 12:4.16). இவர் 5-இல் மேற் குறிக்கப்பட்டவராகவும் இருக்கலாம்.

8. புறவின மனைவியை ஒதுக்கி விடுமாறு எஸ்ராவால் கட்டாயப்படுத்தப்பட்டவர்களுள் ஒருவர். இவர் யாதாய் என்று எஸ்ராவில் (10:43) அழைக்கப்படுகின்றார்.

**இந்திய யானைப் பாகன்** - (INDIAN DRIVER)

யானையை நடத்திச் செல்பவர். ஐந்தாம் அந்தியோக்கு மன்னனின் ஒவ்வொரு போர் யானைக்கும் ஓர் இந்திய நடத்துனர் இருந்ததாகக் கூறப்படுகிறது (1 மக் 6:37).

**இந்தியா** (INDIA)

ஆசியாவில் இமய மலைகளுக்குத் தெற்கே உள்ள ஒரு நாடு. இரு முறை எஸ்தர் நூலில் அகசுவேரு அரசனின் நாட்டின் கிழக்கு எல்லையாக இந்நாடு குறிப்பிடப்பட்டுள்ளது (எஸ் 1:1; 8:9).

இந்தியா, அக்கேமேனியப் பேரரசின் (கி.மு.559-330) மாகாணமாக இருந்தது என்று பாரசீகநாட்டு எழுத்துப் பொறிப்புகள் கூறுகின்றன. ஆனால் இந்தியாவின் பரப்பளவு பற்றி அவை ஒன்றும் கூறவில்லை. இந்தியாவைப் பற்றி ஒரு சில குறிப்புகள் மட்டுமே இருந்ததால், தங்கள் நாட்டுக்குள்ளேயே வாழ்ந்து வந்த பழைய ஏற்பாட்டு எழுத்தாளர்களுக்கு தொலைநாடான இந்தியாவைப் பற்றி தெரியாமலிருப்பதில் வியப்பொன்றும் இல்லை. இந்தியா அக்கேமேனியப் பேரரசின்கீழ் இருந்தபோது அதைப் பற்றி பாலஸ்தீன நாடு சிறிது அறிந்திருக்கலாம். ஆனால் அலக்சாந்தர் பேரரசரின் காலத்தில்தான் (கி.மு.323), சிந்து நதிப் பள்ளத்தாக்கைப் பற்றியும் அங்கு வாழ்ந்த மக்களைப் பற்றியும் மத்திய தரைக் கடல் நாடுகள் அறிய வந்தன. எஸ்தர் நூலும், முதலாம் மக்கபேயர் நூல்களும் இக்காலத்தைச் சேர்ந்தவையே ஆகும். கி.மு. இரண்டாம் நூற்றாண்டில் செலூக்கிய அரசனுடைய படையில் யானைகளும், இந்திய யானைப் பாகர்களும் இருந்ததாக முதலாம் மக்கபேயர் நூல் கூறுகிறது (1 மக் 6:37). ஆனால் 1 மக் 8:8-இல் மூன்றாம் அந்தியோக்கு மன்னன் (223-187 கி.மு.) இந்தியாவை தனது ஆளுகைக்குள் வைத்திருந்தான் என்று கூறப்பட்டிருக்கிறது. இது தவறானதாகும்.

கிரேக்கர், உரோமையர் காலத்தில் புவியியல் அறிவு வளர்ச்சியுற்றாலும், உரோமையர் எகிப்து, செங்கடல் வழியாக இந்தியா

வோடு போதிய வியாபாரம் செய்துவந்தாலும், பழைய ஏற்பாட்டைப்போல், புதிய ஏற்பாடும் இந்தியாவைப் பற்றி அறிந்திருக்கவில்லை. அல்லது அதைப்பற்றிக் கவலைப் படவில்லை.

**இந்தியர்** *(INDIAN)*

*யானையை நடத்துகின்ற யானைப்பாகன். ஐந்தாவது அந்தியோக்கு அரசனின் ஒவ்வொரு போர் யானையும், ஒரு இந்திய யானைப்பாகனை கொண்டிருந்ததாக கூறப் படுகிறது (1 மக் 6:37).*

**இபிதாகு** *(JEPHTHA - அவர் (இறைவன்) கருப்பையைத் திறப்பார் )*

*1. பெயரும் பொருளும்:- இபிதாகு என்ற எபிரேயப் பெயர் ஒரு இடப்பெயராகவும் வருகிறது (யோசு 15:43). இது இபுதாவேலின் சுருக்கமாகும். இபுதாவேலுக்கு ''இறைவன் (கருப்பையைத்) திறக்கிறார்'' அல்லது ''இறைவன் (கைதியை) விடுவிக்கிறார்'' என்று பொருள் கூறலாம் (யோசு 19:14-27). இதோடு தொடர்புடைய மற்ற எபிரேய ஆள் பெயர்கள் ''யாவே நிறந்துவிட்டார்'' என்று பொருள்படும் பெத்தகியாவும் (1 நாள் 24:16; எஸ் 10;23; நெக 9:5; 11:24) தேல்-ஏல் அமர்னா ஏடுகளில் வரும் யப்திக் அத்தாவும் ஆகியவையாகும்.*

*2. இபிதாகின் வரலாறு:- இபிதாகு ஒரு படைத்தலைவர். யோர்தானுக்கு கிழக்கில் அம்மோனியர், பெலிஸ்தியர்களைத் தோற்கடித்து, இஸ்ராயேலில் ஒரு நடுவராக ஆனார் (நீதி 10:6; 12:1).*

*இவர் கிலயாத்து என்பவருக்கு ஒரு விலைமகள் வழியாகக் கிலயாத்து என்ற ஊரில் பிறந்தவர். இவரது ஒன்று விட்ட சகோதரர்கள் வளர்ந்த பின், தங்களோடு இவருக்கு உரிமையில்லை என்று கூறி இவரைத் தூரத்தி விட்டனர். இபிதாகு வடகிழக்கிலுள்ள தோபு நாட்டிற்கு ஓடிப்போய், திக்கற்றவர்களும் கொள்ளையடிப்போரும் அடங்கிய ஒரு குழுவிற்குத் தலைவனானார் (நீதி 11:1-3).*

*இதற்கிடையில், இஸ்ராயேலரின் சிலை வழிப்பாட்டுக்குத் தண்டனையாக இறைவன் அவர்களை பெலிஸ்தியர், அம்மோனியர்களிடம் கையளித்தார். இவர்கள் இஸ்ராயேலர்களை 18 ஆண்டுகள் ஒடுக்கித் துன்புறுத்தினர் (10;6-8). இவர்கள் யோர்தானைக் கடந்து, நாட்டைப் பாழாக்கினர் (10:9). கிலயாத்தில் பாளையம் இறங்கினர். துன்புற்ற இஸ்ராயேலர் தங்கள் பாவங்களுக்கு மனம் வருந்தி, இறைவனிடம் விடுதலை வேண்டினர் (10:10-16).*

*அப்போது கிலயாத்தில் ஆற்றல் மிக்க தலைவர் இல்லை. ஆகவே, கிலயாத்தின் பெரியோர் இஸ்ராயேல் படைக்குத் தலைமை தாங்க இபிதாகை அழைத்தனர். இவர் தனக்குச் செய்யப்பட்ட அநீதியை நினைவுபடுத்த, கிலயாத்தின் பெரியோர், போருக்குப் பின் இபிதாகே தலைவராக இருப்பார் என்று உறுதி அளித்தனர் (11:4-11).*

*இபிதாகு கிலயாத்துக்குத் திரும்பிய பின் அம்மோனியர்களின் அரசனுக்குத் தூது அனுப்பினார். அவன், இஸ்ராயேலர் எகிப்திலிருந்து வருகையில் அநியாயமாகத் தனது நாட்டை எடுத்துக் கொண்டதாகக் குற்றம் சாட்டினான். இதற்கு, இஸ்ராயேலர் அமைதியாகவே அவனது நாட்டைக் கடந்து செல்லவே விரும்பினர்; ஆனால் முந்தைய அம்மோனிய அரசன் சீகோன் இஸ்ராயேலின் வேண்டுகோளைப் புறக்கணித்து, அவர்களோடு வன்மையாகப் போரிட்டான்; இறைவன் இஸ்ராயேலர்களுக்கு வெற்றி அளித்து அம்மோனிய நாட்டையும் கொடுத்தார்; அவர்களும் அங்கு பல ஆண்டுகளாக வாழ்ந்து வந்துள்ளனர் என்று இபிதாகு பதில் அளித்தார். ஆனால் அம்மோனிய அரசன் இந்த விளக்கத்தை ஏற்க மறுத்து, போருக்குத் தயாரானான் (11:12-28).*

*ஆண்டவரின் ஆவி இபிதாகின்மேல் வந்தது. அவரும் அம்மோனியர்களுக்கு எதிராகப் போர் செய்ய முன்னேறினார். அப்படிச் செல்லும் போது அவர் வெற்றி பெற்றால்*

போரிலிருந்து திரும்பி வரும்போது தன் வீட்டின் வாயிலிருந்து எவர் வருவாரோ அவரை ஆண்டவருக்கு பலியாக ஒப்புக் கொடுப்பதாக வாக்குறுதி அளித்தார். அவர் வெற்றி பெற்று திரும்பிய போது அவரது ஒரே பிள்ளை, கன்னியான மகள், நடனமாடி அவரை எதிர் கொண்டாள். அவரது வாக்கு றுதியிலிருந்து காப்பாற்ற அவளுக்குக் கண வனோ மகனோ இல்லை. அவளும், தான் தன் தோழியரோடு இரண்டு மாதங்களுக்கு காடுகளில் சுற்றித் திரிந்து தன் கன்னிமையை முன்னிட்டு கதறி அழுதபின் அவரது வாக்கு றுதியை நிறைவேற்ற வேண்டிக் கொண் டாள். இபிதாகு இதற்கு ஒப்புக்கொண்டு, குறிப்பிட்ட காலத்திற்குப்பின் தன் வாக்குறு தியை நிறைவேற்றினார். இந்நிகழ்ச்சிகளின் நினைவாக ஒவ்வொரு ஆண்டும் நான்கு நாட்களுக்கு இபிதாகின் மகளுக்காக இஸ்ரா யேலர் மங்கையர்கள் புலம்புவது ஒரு வழக் கமாயிற்று *(11:34-40)*.

போர் வெற்றியுடன் முடிந்தபின் எப்பிரா யிம் இனத்தைச் சேர்ந்த சிலர், அம்மோனி யர்களுக்கு எதிராகப் போர் செய்யச் சென்ற போது தங்களை அழைக்காததற்காக, தண்ட னையாக இவரையும் இவர் வீட்டையும் எரிக்கப்போவதாக சவால் விட்டனர். இரு குழுவினருக்கும் போர் நடந்தது. எப்பிராமி யர்கள் தோல்வியுற்றனர். யோர்தான் துறைக ளைக் கிலயாத்தியர்கள் பிடித்து, தப்பியோ டிய எப்பிராயிமியர்களை மொழி உச்சரிப்பு மாறுபாட்டால் அடையாளம் கண்டுபி டித்து, அத்துறைகளிலேயே கொன்று போட் டனர். *12:1-6*-இன்படி 42 ஆயிரம் எப்ராயிமி யர்கள் அப்போரில் கொல்லப்பட்டனர்.

இபிதாகு இன்னும் ஆறு ஆண்டுகள் நடுவ ராக ஆட்சி செய்தார். அவர் இறந்தபின் கிலயாத்தில் அடக்கம் செய்யப்பட்டார்.

*3. பிரச்சினைகள்:-* இபிதாகின் நிகழ்ச்சி யுரை பல கேள்விகளை எழுப்புகிறது. அவற் றில் ஒன்று மனிதப்பலியாகும் *(காண் ஆதி 22; 2 அர 16:3; 21:6*-உம் தொல்பொருட்சான் றுகளும் இப்பழக்கத்திற்குச் சான்று பகர்கின் றன). இவர் தனது வாக்குறுதியில் மனிதப்ப லியை மனதில் கொண்டிருந்தாரா என்பதை உறுதி செய்ய ஒரு வழியுமில்லை. அப்படிக் கொண்டிருந்தாலும் தனது ஒரே பிள்ளையின் உயிரைப் பலியிட அவர் எண்ணியிருக்க மாட்டார். ஆயினும் அவர் தனது வாக்குறு தியை நிறைவேற்றியதாக நிகழ்ச்சியுரை கூறு கிறது.

*4. பொருள்:-* முக்கிய நடுவர்களில் ஒருவ ராக, யாவே தம் மக்களுக்கு அளித்த முக்கிய விடுதலை வீரர்களுள் ஒருவராக இபிதாகு நினைவு கூறப்படுகிறார் *(1 சாமு 12:11)*. புதிய ஏற்பாட்டில் எபிரேயருக்கு மடல் எழுதிய ஆசிரியர் இபிதாகை விசுவாசத்தின் வீரர்களில் ஒருவராகப் போற்றுகிறார் *(எபி. 11:32)*.

**இபிரி** *(IBRI - எபிரேயன், ஊழியன்)*

தாவீதின் சமகாலத்தில் வாழ்ந்த ஒரு லேவியன். யாசியாவின் புதல்வர். மெராரி யின் வழித்தோன்றல் *(1 நாள் 24:27)*.

**இபினியா** *(IBNIJAH - யாவே கட்டுவாராக)*

ஒரு பென்யாமின் குலத்தினர். எருசலே மில் வாழ்ந்தார். இரகுவேலின் தந்தையா வார் *(1 நாள் 9:8)*. இவர் அதே வசனத்தின் முன்பகுதியில் வரும் இபுனயாவாக இருக்க லாம்.

**இபுகார்** *(IBHAR - அவர் (இறைவன்) தேர்ந் தெடுக்கிறார்)*

எருசலேமில் தாவீதுக்குப் பிறந்த புதல்வர் களில் ஒருவர். இவருடைய தாய் தாவீது டைய மனைவியருள் ஒருவராவர். வைப் பாட்டி அல்ல *(2 சாமு 5:15; 1 நாள் 3:6; 14:5)*.

**இபுசாம்** *(IBSAM - வாசனைப் பொருள்)*

இசக்கார் இனத்தைச் சேர்ந்த தோலாவின் புதல்வர்களில் ஒருவர் *(1 நாள் 7:2)*. குடும்பத் தலைவராக விளங்கினார்.

**இபுசான்** *(IBZAN - விரைவான (குதிரை))*

சிறிய நீதிபதிகளில் ஒருவர். இவர் இபிதா குக்குப் பிறகு, இஸ்ரயேலுக்கு ஏழு ஆண்டு

கள் நீதி வழங்கி வந்தார். இவருக்கு முப்பது புதல்வர்களும் முப்பது புதல்வியர்களும் இருந்தனர். இந்த எண்ணிக்கை இவரது செல் வத்தைக் குறிக்கிறது. இவர் தமது முப்பது புதல்வியர்களையும் தனது இனத்துக்கு வெளியில் மணம் முடித்துக் கொடுத்தார். அதே போன்று வெளியிடத்துப் பெண்க ளைத் தமது புதல்வர்களுக்கு மணம் முடித்து வைத்தார். இது இவரது பரந்த செல்வாக்கை எடுத்துக் காட்டவல்லது *(நீதி 12:8-10)*. இவ ரது ஊரான பெத்திலகேம், நாசரேத்துக்கு வடகிழக்கில் ஆசேலின் எல்லையில் செபு லோனில் இருந்தது *(யோசு 19:15)*. வர லாற்று ஆசிரியர் யோசிபசிலிருந்து தொடங்கி சில விளக்கவுரையாளர்கள், இந்த ஊர் புகழ்பெற்ற பெத்திலகேம் என்று கருதி, ரூத்தின் கணவரும் தாவீதின் மூதாதை யருமான போவாசுதான் இந்த இபுசான் என்ற கருதியுள்ளனர்.

**இபுதா** ( IPHTHA *இறைவன் (கருப்பையைத்) திறப்பாராக)*

இலிபுனா-மாரேசா மாவட்டத்திலுள்ள செப்பேலாவிலுள்ள யூதாவைச் சேர்ந்த ஒரு சிற்றூராகும் *(யோசு 15:43)*. இது ஆசானுக்கு அருகில், வாடி தார்குமியாவுக்கும் வாடி அப்ராதிசுக்கும் இடையில், கெபிரோனுக்கு வடமேற்கில் 10 கி.மீ. தொலைவிலுள்ள இலாக்கீசு நகருக்குக் கிழக்கேயுள்ள இப்போ தைய தார்குமியா என்ற ஊராக இருக்கலாம்.

**இபுதாவேல்** (IPHTAHEL - *இறைவன் திறப்பா ராக)*

செபுலோனுக்கும் ஆசேருக்கும் இடையி லுள்ள எல்லையில் அமைந்துள்ள ஒரு பள் ளத்தாக்கு *(யோசு 19:14, 27)*. நாசரேத்துக்கு வடமேற்காக உள்ள வாடி ஏல் மெலக்கு இப்பள்ளத்தாக்காக இருக்கலாம்.

**இபுதேயா** *(*IPHDEIAH - *யாவே மீட்பாராக, விடுவிப்பாராக)*

சாசாக்கின் புதல்வர்களில் ஒருவர். பென் யாமின் குலத்தைச் சேர்ந்த ஒரு குடும்பத்தின் தலைவர் *(1 நாள் 8:25)*.

**இபுலயாம்** (IBLEAM - *மக்களின் குழப்பம் அழிக்கிற)*

இசக்கார் இனத்தைச் சேர்ந்த நகரங்களில் ஒன்று. இஸ்ராயேலுக்கும் மெகிதோவுக்கும் இடையில் அமைந்திருந்தது *(2 அர 9:27)*. மனாசேக்கு அளிக்கப்பட்ட இசக்கார் ஆசே ரில் உள்ள நகரங்களின் பட்டியலில் குறிக்கப் படுகிறது *(யோசு 17:11)*. ஆனால் அங்கி ருந்து மனாசேயால் கானானியரை விரட்டிய டிக்க முடியவில்லை *(நீதி 1:27)*. தாவீது காலத்தில்தான் இவ்விடம் வெல்லப் பட்டது.

இவ்வூரின் அருகில்தான் ஏகூவின் படையி னர் யூதாவின் அரசனான அகசியாவை கூர் என்ற ஏற்றத்தில் கொன்று போட்டனர் *(2 அர 9:27)*. எழுபது நூல் வாசகப்படி இங்கு தான் சல்லூம் யூதாவின் அரசன் செக்கரியா வைக் கொலைசெய்து ஆட்சியைக் கைப்பற் றினார் *(2 அர 15:10)*. யோசு 21:25-இன் எழுபது நூல் வாசகப்படி இந்த ஊர் மனாசே யில் கெகாத்தியருக்குரிய லேவியர் நகரங்க ளில் ஒன்றாகும். இதுவே பலியாம் என்ற ஊராகும் என்று கருத இடமிருக்கிறது *(1 நாள் 6:70)*.

கி.மு.15-ஆம் நூற்றாண்டில் பாலஸ்தீனத் தில் மூன்றாம் துட்மோசால் கைப்பற்றப் பட்டு அவன் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வரப்பட்ட நகரங்களில் ஒன்றாக இந்த ஊர் குறிக்கப்படுகிறது. யூதித் 4:4-இல் குறிக்கப்ப டும் பேல்மாயின் நகரமே இதுவாக இருக்க லாம்.

இது மெகிதோவுக்கு தென் கிழக்கில் 16 கி.மீ. தொலைவிலும், எனீனுக்குத் தெற்கில் 2 கி.மீ. தொலைவிலும் உள்ள இக்கால தேல்-பெலாமே தான் இந்த ஊர் என்று அடையாளம் காட்டப்படுகிறது.

**இபுனயா** *(*IBNEIAH - *யாவே கட்டுகிறார்)*

பாபிலோனிய அடிமைத்தளையிலிருந்து திரும்பி வந்து எருசலேமில் வாழ்ந்த பென் யாமின் குலத்தினர். எரொகாமின் புதல்வரா வார் *(1 நாள் 9:8)*.

**இமனேயு** (HYMENAEUS )

இமனேயு ஒரு கிறிஸ்தவர். பவுலின் எதிர்ப்பாளர்களான இமனேயுவும் அலக்சாந்தரும் விசுவாசத்தையும் மனச்சாட்சியையும் புறக்கணித்ததால் சாத்தானிடம் கையளிக்கப்பட்டார்கள் *(1 திமோ 1:20)*. இமனேயுவும் பிலேத்தும் உயிர்த்தெழுதல் ஏற்கனவே நிகழ்ந்து விட்டது என்று சொல்லிச் ''சிலருடைய விசுவாசத்தையே தகர்த்தவர்கள்'' *(2 திமோ 2:18)*.

**இமால்க்குவே** (IMALKUE )

அலக்சாந்தரின் புதல்வன் அந்தியோக்கு என்பவனை வளர்த்து வந்த அராபிய மன்னன் இமால்க்குவே ஆவார். இது கிரேக்க, உரோம எழுத்தாளர்களிடமிருந்தும் விவிலியப் பகுதிகளிலிருந்தும் *(2 சாமு 4:4; 2 அர 10:2; 11:2)* இளவரசனின் தோழர்கள் முக்கிய பதவிகள் வகித்தனர் என்பது தெளிவாகிறது. தெமேத்ரியுவுக்கு எதிராக படைவீரர்கள் முணுமுணுத்தபோது, முன்பு அலக்சாந்தரின் ஆதரவாளரான திரிபோ, தெமேத்திரியுவுக்கு எதிராக ஒரு போட்டி அரசனை நிறுவும் வாய்ப்பைக் கண்டார். அலக்சாந்தரின் மகன் ஆறாம் அந்தியோக்குவை அரசனாக அறிவிக்கும் சூழ்ச்சிக்கு இமால்க்குவேயின் உதவியை நாடினார் *(1 மக் 11:38-40)*. சூழ்ச்சி வெற்றி பெற்றது. அந்தியோக்கு அரசனானான். தெமேத்திரியுவின் வீரர்கள் அவனைப் புறக்கணித்து, அந்தியோக்குவோடு சேர்ந்து தெமேத்திரியுவுக்கு எதிராகப் போரிட்டு அவனைத் தோற்கடித்து விரட்டினர் *(11:54-55)*.

**இமிரா** (IMRAH - முரண்டு செய்பவன், விடாப்பிடியாளன்)

ஆசேரின் இனத்தைச் சேர்ந்த சோப்பாகின் புதல்வர்களில் ஒருவர் *(1 நாள் 7:36)*.

**இமிரி** (IMRI - யாவே உறுதியளித்தார், பேச்சாற்றல்)

1. பாபிலோனிலிருந்து திரும்பி வந்த யூதாவைச் சேர்ந்த ஊத்தாயின் மூதாதையர் *(1 நாள் 9:4)*. நெக 11:14-இல் காணப்படும் அமரியாவும் இவரும் ஒருவராக இருக்கலாம்.

2. நெகமியாவின் காலத்தில் எருசலேம் சுவரைப் பழுது பார்க்க உதவிய சாக்கூர் என்பவரின் தந்தை *(நெக 3:2)*.

**இமிலா** (IMLAH - நிறைவு)

இறைவாக்கினரான மீக்காயாவின் தந்தை இமிலா என்பவர் ஆவார். *(1 அர 22:8-9; 2 நாள் 18:7-8)*.

**இமினா** (IMNA - கடவுள் பாதுகாப்பாராக)

ஆசேர் இனத்தைச் சேர்ந்த ஏலமின் புதல்வர்களில் ஒருவர் *(1 நாள் 7:35)*.

**இமினா** ( IMNAH - நற்பேறு)

1. ஒரு குடும்ப முதல்வரது பெயர். ஆசேரின் புதல்வர்களில் ஒருவர். இவரது வழித்தோன்றல்கள் இமினியர்கள் என்றழைக்கப்பட்டனர் *(ஆதி. 46:17; எண். 26:44; 1 நாள் 7:30)*.

2. ஒரு லேவியர். அரசன் எசக்கியாவோடு சமகாலத்தவரான கோரேயின் தந்தை *(2 நாள் 31:14)*.

**இம்மானுவேல்** (IMMANVEL - இறைவன் நம்மோடு)

ஏச 7:10-17-இல் பிறப்பு அறிவிக்கப்பட்டுள்ள குழந்தைக்கு ஏசயா அளிக்கும் பெயர் இது. இப்பகுதியின் பின்னனியானது கி.மு.7 35-இல் நிலவிய நெருக்கடி நிலையாகும் யூதாவை அசீரியாவிற்கு எதிராக கூட்டணியில் சேர்ப்பதற்கென இஸ்ராயேலின் பெக்காவும் தமஸ்குவின் இரசீனும் யூதாவைத் தாக்க அச்சுறுத்தினர். அப்போது அசீரியாவின் உதவியை நாடுவது ஆகாசின் எண்ணமாகும்; உண்மையில் அப்படி நாடவும் செய்தார். இந்த எண்ணத்திற்கு எதிராக எதிராளிகளின் முயற்சி வெற்றிபெறாது என்ற உறுதிமொழியின் அடையாளத்தை ஏசயா அரசனுக்கு அளித்தார். பக்தியைவிட அவிசுவாசம் கொண்டவராய் ஆகாசு அடையாளத்தை மறுத்துவிட்டார். அசீரிய போர்க்கலங்களின்மீது அவர் அதிக நம்பிக்கை வைத்

தார். அப்போது ஆண்டவருடைய அருங்குறியினையே ஏசயா அளிக்கின்றார். தனது குழந்தை பருவத்தில், தெய்வங்களின் உணவாகிய பால் மற்றும் தேனால் ஊட்டப்படும் குழந்தை உடனடியாக பிறக்கும். குழந்தையானது சிந்திக்கும் வயதை அடைவதற்கு முன்பே எதிரிகளின் தாக்குதல் கைவிடப்படும். ஆனால் அரசானது இதுவரை அறிந்திராத தொல்லைகள் அதனைத் தொடரும். அநேகமாக ஏச 7:18-25 என்றபகுதி தனித்தனி கூற்றுக்களின் தொகுப்பாகும். பொருளடக்கம் அல்லது தூண்டு சொற்களோடு கொண்ட ஒப்புமையால் பதிப்பாசிரியர்களால் இங்கு இணைக்கப்பட்டிருக்கலாம். குழந்தையை அடையாளம் கண்டபிடிப்பது பற்றியபிரச்சனைக்கு இவை எவ்வித உதவியும் அளிக்கவில்லை. 8:8-இல் உள்ள சொற்றொடரானது சமய மனவல்லயச் செபமாகப் பயன்பட்ட வழிபாட்டு மொழியாக இருக்கலாம்.

விளக்கவுரையாளர்கள் பரந்த அளவில் வேறுபட்ட கருத்துக்களை அளித்துள்ளனர். அதில் எதுவுமே எளிதானதல்ல. சில பழைய விளக்கவுரையாளர்கள் தாயும் சேயும் அக்காலத்தில் பிறந்த குழந்தைகள் அனைவரையும் குறிக்கும் கூட்டுப்பெயராகும் என்றும் இவர்கள் யாவரும் இறைவாக்கினருடைய முன்மொழிகளுக்கு கால அட்டவணையாக அமைவர் என்றும் விளக்கினர். வேறுசிலர் பெண்ணையும் குழந்தையையும் ஏசயாவினுடைய மனைவி மற்றும் மகன் என்று எண்ணினர். பெருமளவு ஏற்கத்தக்க கருத்தின்படி, ஆகாசை தொடர்ந்து அரியணை ஏறிய அவரது மகன் எசக்கியாவே அக்குழந்தை என்பது ஏற்றுக் கொள்ளத்தக்க ஒரு கருத்தாகும். இக்கருத்தானது கால வரையறைப் பிரச்சினைகளை எழுப்புகிறது. ஆனால் இக்காலத்தைச் சேர்ந்த கால வரையறை தெளிவாக இல்லை. ஆகவே இது ஒரு கடுமையான தடையாக அமையவேண்டியதில்லை.

இறைவாக்கினர் அளித்த அருங்குறியினை நினைவுபடுத்துவதற்கு பொருத்தமானவரான எசக்கியா தோன்றுகிறார். இந்த அருங்குறியானது ஒரே சமயத்தில் உறுதிமொழியும் அச்சுறுத்தலுமாகும். வரவிருக்கும் ஆபத்திலிருந்தான உடனடி மீட்பின் உறுதிமொழியாகவும், பிற்கால பேரழிவினுடைய அச்சுறுத்தலாகவும் இது உள்ளது. சூழ்நிலையைப் பொறுத்தமட்டும் ஆகாசினுடைய விசுவாசமின்மை மற்றும் சமயம் சாராத கொள்கைக்கான தண்டனையாக மட்டுமே இந்த அச்சுறுத்தல் உரைக்கப்படலாம். வாக்குறுதியின் அடிப்படையானது தாவீதினுடைய மரபினுடைய மெசியா கருத்தின் ஒளியிலேயே புரிந்து கொள்ளப்படவேண்டும். மெசியா கோட்பாட்டில் தாவீதினுடைய மரபின் நீடித்த நிலையானது அடிப்படையானதாகும். மரபிற்கான வாரிசினுடைய பிறப்பானது மரபினுடைய தொடர்ச்சிக்கும் அதன்மேல் அளிக்கப்பட்ட வாக்குறுதிகளுக்குமான அடையாளமாகும். கூடிய விரைவில் தொடரவிருக்கின்ற குழந்தையின் குழந்தைப்பருவத்தில் வாக்குறுதிகளின் உண்மைத்தன்மைகள் காணப்படும். ஆகவே குழந்தையானது ஒரு அருங்குறியாக உள்ளது. நீண்டகால இடைவெளிக்குப்பின் தொடரவிருக்கும் அச்சுறுத்தலின் மெய்மை வாக்குறுதியினின்று வெளிப்படும். அரசின் மீது அன்னியப் படையெடுப்பின் தண்டனையைக் கொணரவிருக்கும் இன்றைய பிரதிநிதியின் அவிசுவாசத்திற்கும் அப்பாற்பட்டு, குழந்தையின் பிறப்பானது மரபின் நீடித்த நிலையினை உறுதிப்படுத்துகிறது. இந்த அருங்குறியானது மரபு பற்றிய எண்ணத்துடன் நெருங்கி இணைக்கப்பட்டிருப்பதால் அக்காலத்தில் பிறந்த குழந்தைகளையோ, எசயாவின் குழந்தைகளையோ விட அரியணை வாரிசையே அடையாளம் உணர்த்துகிறது.

இப்பகுதியினுடைய மரபுவழி கருத்தானது இயேசுவினுடைய கன்னிப்பிறப்பின் நேரடி முன்னுரைப்பதாகும். பல இக்கால விளக்கவுரையாளர்கள் இயேசுவினுடைய அல்லது ஆள் அடையாளம் நிர்ணயிக்கப்படாது மெசியாவினுடைய பிறப்பை நேரடியாக முன்னுரைப்பதாகக் கொள்கின்றனர். இக்கருத்துக்கு எதிராக சில ஆய்வுகள்

உண்டு. ''ஆல்மா'' என்ற எபிரேயச் சொல் எழுபது நூலில் கன்னி (பார்த்தனோஸ்) என்று மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. இது சரியென்று கூற முடியாது. ''ஆல்மா' என்ற சொல் கலியாண வயதுடைய இளமங் கையை உணர்த்திற்று. இந்த இளம் பெண் பொதுவாக இன்னும் திருமணம் ஆகாத வள்; ஆனால் கன்னியை உணர்த்தவில்லை. கன்னியைக்குறிக்க ''பெத்துலா'' என்ற எபி ரேயச் சொல் பயன்பட்டது. ''பார்த்தனோஸ்'' என்ற சொல் கிரேக்கத்தில் சில சமயம் கன்னியல்லாத பெண்களையும் குறிக்கப்ப யன்பட்டுள்ளது. ஆகவே எழுபதுநூல் இச் சொல்லைப் பயன்படுத்தும்போது கன்னி மையை உணர்த்துகின்றதா என்பது தெளி வாக இல்லை. மத் 1:22-23-இல் இப்பகுதி யைப் பயன்படுத்தியிருப்பது இயேசுவினு டைய கன்னிப்பிறப்புப்பற்றிய முன்னறிப்பா கப் புரிந்து கொள்வதாகத் தெரிகிறது. இங்கு புதிய ஏற்பாட்டில் பழையஏற்பாட்டினை இத்தகையச் சூழ்நிலையில் பயன்படுத்தும் முறையை மனதில் கொள்ளவேண்டியது அவசியமாகும். இத்தகைய பகுதிகள் பரந்த ஒப்புமையிலும் அல்லது தூண்டு சொற்கள் பற்றிய கோட்பாட்டிலும் பெரும்பாலும் பயன்படுத்தப்படுகின்றன. எபிரேய வாசகத் தோடு எவ்வித தொடர்புமில்லாத ''பார்த்த னோஸ்'' என்ற தூண்டுசொல்லை மத்தேயு பயன்படுத்துகிறார். ஆனால் இக்கருத்தின் பின்னனியினின்று மத்தேயு கன்னிப்பிறப்பு பற் றிய வாசகத்தை உபயோகிக்கிறார் என்பது முழுவதும் தெளிவாக இல்லை. தாவீது மரபின் வாரிசினுடைய பிறப்புப்பற்றிய முன்னறிவிப்பாக ஏசயா கொள்ளும் பொரு ளையே மத்தேயுவும் சுட்டிக்காட்டலாம். தாவீது மரபுவரிசை இங்கே முழுமையாக அடைகிறது. இப்போது மரபிற்கான ஒவ் வொரு வாரிசும் தோன்றும்போது உறுதிய ளிக்கப்பட்ட அரசமரபின் வழியாக வரும் மீட்பு இயேசுவில் நிறைவெய்துகிறது. இந்த வரிசையை அவர் முடித்து வைக்கிறார்.

வேறுசிலர் இப்பிரச்சினைக்கு இரட்டை அடையாள விளக்கமளிப்பர். ஆகாசின் காலத்துச் சூழ்நிலையும் ஏச 7:14-க்கு மத் தேயு அளிக்கும் விளக்கத்தையும் சேர்த்துப் பார்க்கும் கணிப்பு இரட்டை நிறைவேறுத லைக் கோருவதாகத் தெரிகிறது. இதில் இம் மானுவேலும் அவருடையதாயும் அடையா ளப்பொருள் கொள்கின்றனர். அதாவது இள மங்கை உடனடியாக ஆகாசு அல்லது ஏசயா வின் மனைவியையும், முன்னோக்காக கன்னி மரியாளையும் குறிக்கின்றது; அதே போல் இம்மானுவேல் உடனடியாக எசக் கியா அல்லது ஏசாயாவின் மகனையும் முன் னோக்காக இயேசுவையும் குறிக்கின்றது.

இம்மானுவேலின் அக்கால அடையாளம் பற்றிய மற்ற வரலாற்றுச் சான்று இன்மை இத்தகைய விளக்கத்தைப் பாதிக்க வேண்டி யதில்லை. இத்தகையச் சான்றுகள் இன்மை யால், இம்மானுவேலின் ஆள் பற்றிய எந்த விளக்கமும் யூகமாகவே இருக்கும். மேற்கூ றிய விளக்கம் இம்மானுவேல் இறைவாக்கு மெசியா மற்றும் தாவீது பற்றிய சூழ்நி லைக்கு பொருந்துவதாக உள்ளது. இவ் வாறு இயேசுவின் பிறப்பு இம்மானுவேல் (இறைவன் நம்மோடு) என்பதின் இறுதி நிறைவேறுதலாக அமைகிறது. இறைவன் தமது மக்களோடு கொண்டுள்ள உடன்ப டிக்கை வரலாற்றில் எப்போது நிலையாக வுள்ள கருத்தின் உச்ச நிலையாகவும் பாவத் தினின்றும் சாவினின்றும் மனுக்குலம் பெறும் விடுதலையின் அடையாளமாகவும் உள்ளது.

**இம்மேர்** (IMMER - செம்மறி) - ஆள்

தாவீது காலத்தைச் சேர்ந்த குருக்களின் ஒரு பிரிவிற்கு தலைவர் ஆவார் (1 நாள் 24:14). எரேமியாவின் எதிரியான பசிகூர் என்பவர் இப்பிரிவைச் சேர்ந்தவராக அடை யாளம் காட்டப்படுகிறார் (எரே 20:1). இப்ப ரம்பரை பாபிலோனிய அடிமைத்தனத்தி னின்று திரும்பி வந்த குருக்களைக் கொண் டுள்ளது (1 நாள் 9:12; எஸ் 2:37; காண்க நெக 7:40). இவர்களில் இருவர் எஸ்ரா வால் புறஇன மனைவியரை ஒதுக்கி விடு மாறு கட்டாயப் படுத்தப்பட்டனர். (எஸ்ரா 10:20). இக்குடும்பத்தைச் சேர்ந்த சாதோக்கு என்பவர் நெகமியா எருசலேம் மதிலை பழுதுபார்க்க உதவி செய்தார் (நெக 3:29).

இவர்கள் நாடு கடத்தப்பட்டுத் திரும்பிய பின் எருசலேமில் வாழ்ந்த குருக்களின் பட்டியலில் சேர்க்கப்பட்டிருக்கிறார்கள் (நெக 11:13).

**இம்மேர்** (IMMER - செம்மறி) - இடம்

பாபிலோனியாவில் உள்ள ஒரு இடம். இவ்விடம் இன்று கண்டுபிடிக்கப்படவில்லை. இங்கிருந்து யூத அகதிகள் பாலஸ்தீனத்திற்கு திரும்பி வந்தனர். ஆனால் இவர்களிடம் தாங்கள் இஸ்ராயேலின் வழி வந்தவர்கள் என்று நிரூபிக்கக் கூடிய மரபுக்கொடிச் சான்றுகள் எதுவும் இல்லை (எஸ் 2:59; நெக 7:61).

**இயசேர்** (IEZER)

அபியேசரின் சுருக்கமாகும். மனாசேயின் வழித்தோன்றல் இவர். இயசேரியரின் குடும் மூதாதையரானார் (எண் 26:30). காண்க அபியேசர் - 1.

**இயந்திரம்** (ENGINE)

2 நாள் 26:15- கருவி, கண்டுபிடிப்பு; எச 26:9-மதில் இடிக்கும் இயந்திரம்.

ஆற்றலை வேலைக்குப் பயன்படுத்த உதவும் இயந்திரக் கருவி. இங்கு போரில் உதவும் கருவியை இது குறிக்கிறது.

1. வரலாறு:- போர் இயந்திரங்கள் முதலில் அசீரியர்களால் மேற்கு ஆசியாவில் பயன்படுத்தப்பட்டன. அவர்கள் முற்றுகையிடுவதற்கும், வில் எய்துவதற்கும் சக்கரங்கள் உள்ள கோபுரங்களைப் பயன்படுத்தினர். கற்களையும், ஈட்டிகளையும் எறிய உதவும் கவண்கள் பிற்காலத்தில்தான் கிரேக்க நாட்டிற்கு வந்தன. இத்தகைய போர்க் கருவிகள் அலக்சாந்தராலும் (356-323 கி.மு.) அவருக்குப் பின் கிரேக்க படைகளாலும், உரோமையர்களாலும் பயன்படுத்தப்பட்டன (1 மக் 6:51-52; 13:43).

2. பழைய ஏற்பாட்டில் போர்க்கருவிகள்:-

அ) மதிலை இடிக்க உதவும் இயந்திரம்:- போரின் போது சுவர்களையும் வாயில்களையும் இடிக்கப் பயன்பட்டது (எச 26:9).

ஆ) கவண்கள்:- யூதாவின் ஊசியா கோபுரங்களிலிருந்தும், மதிலின் எல்லா மூலைகளினின்றும் அம்புகளையும் பெரிய கற்களையும் எறியக் கூடிய பலவிதக் கருவிகளைச் செய்தார் என்று 2 நாள் 26:15 கூறுகிறது. ஆனால் மத்தியதரைக்கடல் பகுதிகளில் கவண்களும், அதைப் போன்ற மற்ற கருவிகளும் ஊசியாவின் ஆட்சிக் காலத்திற்குப் பிறகே பழக்கத்துக்கு வந்தன. நாளாகமம் ஏறக்குறைய கி.மு.300-ம் ஆண்டில் எழுதப்பட்டது என்று கூறப்படுவதால், 2 நாள் 26:15-இல் கால முரண்பாடு இருப்பதாகத் தோன்றுகிறது.

**இயற்கைக்கு மாறான பாலினப் பாவம்** (HOMOSEXUALITY)

இது ஆண் மற்றொரு ஆணோடு புணர்ச்சிக் கொள்ளும் செயலாகும். பழங்கால மேற்காசிய நாடுகளில் இயற்கைக்கு மாறான பாலினச் செயல்கள் பெருமளவில் பரவியிருந்தன என்பது விவிலிய குறிப்புகளின் மூலம் தெளிவாகத் தெரிகிறது. லோத்-தின் விருந்தாளிகள் மீது இத்தகைய தகாத பாவச் செயலில் சோதோம் நகர மக்கள் ஈடுபடமுயன்றதன் மூலம், அந்நகரின் இழிந்த நிலையும் புலனாகிறது (ஆதி 19:4-5; நீதி 19:22). சட்ட நூல்களில் இத்தகைய பாலினப்பாவங்கள் மரண தண்டனைக்குரிய அருவருப்பான செயல்கள் என்ற நிலையில் தடை செய்யப்பட்டிருந்தன (லேவி 18:22; 20:13). நேர்ச்சைகளை செலுத்த 'நாயின் சம்பளம்' கடவுளின் ஆலயத்தில் பயன்படுத்தப்படலாகாது என்னும் அறிவிப்பானது சமய சார்புடைய ஆண் விபச்சாரத்தைக் குறிப்பிடுவதாய் இருக்கலாம். அன்னிய சமயசடங்குகளுடன் இணைந்த இப்பழக்கமானது, இப்பாலினப் பாவத்தை விவிலியம் வெறுப்பதற்கு ஒரு காரணமாக இருக்கலாம். இத்தகைய ஆண் விபச்சார விடுதிகள் யோசியா அரசனால் இடித்து தரைமட்டமாக்கப்பட்டன (2 அர 23:7; 1 அர 14:24; 15:12; 22:46).

இத்தகைய பாவச்செயல்களில் ஈடுபடுவோர்கள், பவுல் பழித்தும் கண்டனம் செய்வோரில் அடங்குவர் (1 கொரி 6:9; உரோ

1:27). சட்ட திட்டங்கள் நாத்திகர், பாவிகள் மற்றும் சோதோமியருக்காக அளிக்கப்பட்டன என்று கூறப்படுகிறது (1 தீமோ 1:10) யூதா 7, சோதோம் கொமோராவின் இந்த இயற்கைக்கு மாறான காம இச்சையினையும் அதற்காக தண்டனையினையும் நினைவுப்படுத்துகின்றது. இயற்கைக்கு மாறான பாலுணர்ச்சி, மணவாழ்வில் தாறுமாறு, விபச்சாரம் போன்றவை ஞான 14:26-ல் பழித்துக் கண்டணம் செய்யப்படும் தீயச் செயல்களுள் சிலவாகும்.

**இயார்** (IYYAR)

எபிரேய ஆண்டுக் குறிப்பேட்டில் இரண்டாம் மாதம் இது. ஏப்பரல்-மே, - சித்திரை மாதங்களுக்கு இணையானது. அக்காதிய வழக்கிலிருந்து எடுக்கப்பட்டது. இதன் முன்னாளைய கானானியப் பெயர் ''சீவ்'' என்பதாகும்.

**இயே - அபாரிம்** (IYE-ABARIM - அபாரிமின் அழிவு)

இஸ்ராயேல் மக்கள், அவர்களது பாலைவனப் பயத்தில் ஒபோத்துக்கு அடுத்து செரேது பள்ளத்தாக்கு (எண் 21:11-12) அல்லது தீபோன்காதுக்கு (33:44-45) முன் பாளையம் இறங்கிய இடமாகும். கிழ்த்திசையை நோக்கிப் பயணம் செய்து நேராய் மோவாவுக்கு எதிரிலுள்ள பாலைவனத்தில் இருக்கும் இயே அபாரிம் என்னும் இடத்தில் பாளையம் இறங்கினார்கள். அங்கிருந்து புறப்பட்டு செரேது சமவெளியில் பாளையம் இறங்கினார்கள். இயே அபாரிம் மோவாபின் தென்கிழக்கு எல்லையில் அமைந்துள்ள ஒரு பாலைவனப் பகுதியாகும். எண்.33:45-இல் இது ஈயீம் என்றழைக்கப்படுகிறது. இது சாக்கடலுக்கு தென்கிழக்கில் செரேது ஓடைக்கருகிலுள்ள மகாயி அருகில் இருந்திருக்கலாம்.

**இயேசு** (JESUS - யாவே மீட்டார்)

1. சீராக்கின் தந்தையும் சீராக் நூலின் ஆசிரியரின் பாட்டனுமாவார் (சீராக் நூலின் முன்னுரை).

2. சீராக்கின் மகன். சீராக் நூலின் ஆசிரியர்.

3. இயேசுக் கிறிஸ்து. காண்க.

4. இயேசுக் கிறிஸ்துவின் முன்னோரில் ஒருவர் (லூக் 3:29).

5. இயேசு பரபா. காண்க பரபா

6. யுஸ்து (3) என்றழைக்கப்பட்ட ஒரு யூத கிறிஸ்தவர் (கொலோ 4:11).

**இயேசு கிறிஸ்து**

இயேசுவிற்கு இறைவனின் செம்மறி, தாவீது மகன், இறைமகன், மனுமகன், இணைப்பாளர், இறைவார்த்தை, இறைவாக்கினர், தூயவர், மீட்பர், ஆண்டவர், இறைவனின் ஊழியர் போன்ற பட்டங்களுடன் அவரது பணியினைக்குறிப்பிடும் மெசியா என்னும் பட்டத்துடன் திருப்தியடையாத ஆதித்திருச்சபையானது இயேசு என்னும் சொந்தப் பெயரையும், கிறிஸ்து என்னும் அலுவல் பெயரையும் ஒன்றாக இணைத்தது (மத் 1:1.18; 16:21; மாற் 1:1; யோவா 1:17; 17:3). இயேசுகிறிஸ்து என்று கூறும்போது, திருச்சபையானது விசுவாசிகளால் அறிவிக்கப்பட்ட பட்டத்தையும் மற்றும் உலகில் வாழ்ந்த வரலாற்று மனிதரையும், நெருக்கமாக இணைக்கிறது. இதுவே மூல உண்மையும் விளக்கமும் ஆகும். இரண்டு சொற்களில் ஒன்று மற்றதைத் தன்னுள் மறைத்துக் கொள்ளும் எந்த விவரிப்பும் நற்செய்தியைப் பிரதிபலிக்கவில்லை. பின்னர் இயேசுவைப் பற்றிய அறிவுக்கு இட்டுசெல்லும் இயக்கத்தை, திறனாய்வு இரண்டு காலக்கட்டங்களாகப் பிரிக்கவேண்டும்; செபத்துடன் கூடிய தியானத்தின்மூலம், உயிருள்ள மனிதருடன் தொடர்பினை ஏற்படுத்த, முறையாக அதனை மீண்டும் அமைக்கவேண்டும். இக்கட்டுரையானது, இயேசு செய்த அனைத்தையும்பற்றி விரிவாகக் கூறப்போவதில்லை; ஏனெனில், அதைப்பற்றி எழுதப்படக்கூடிய நூல்களைத் தாங்கிக் கொள்ள இவ்வுலகே போதாது (யோவா 21:25); தலைவரின் ஆட்தன்மை

மீதே முழுக்கவனம் செலுத்துகிறது. இலக்கிய திறனாய்வின் கண்டிப்போடு, நாசரேத்தூர் இயேசுவை அறிவதென்பது, புதிய ஏற்பாடு ஆசிரியர்கள் பதிலளிக்க முயலும், 'நீங்கள் என்னை யாரென்று கூறுகிறீர்கள்?' என்று இயேசுவே கேட்ட கேள்விக்கு செவி மடுப்பதாகும். இதற்கான விடையானது இக்கேள்வியை எழுப்பிய வரலாற்று மனிதரிடமே ஒருவரை மீண்டும் கொண்டு வந்து சேர்க்கின்றது.

I. நாசரேத்தூர் இயேசு:-

நற்செய்தி நூல்கள் இன்றைய வரலாற்று நூல்களினுடைய கோட்பாட்டின்படி தொகுக்கப்பட்ட இயேசுவின் வரலாறுகள் அல்ல. அவை விசுவாசத்தை வளர்த்து உறுதிப்படுத்துவதற்காக விசுவாசிகளால் எழுதப்பட்டவை; அவர்களிடையே ஒளியை பரப்பி, பாஸ்கா விசுவாசத்தினால் மாற்றப்பட்டு, அவரைப்பற்றிய நினைவுகளை ஒன்றாக இணைத்து முறைப்படுத்தி எழுதப்பட்டவை. ஆனால் இவை உன்னிப்பான திறாய்விற்கு உட்படுத்தப்படும்போது, நாசரேத்தூர் இயேசுவிடம் உறுதியுடன் சென்றடைய ஏதுவாகின்றன.

1. இயேசுவின் இறுதிக்கால நிலை:- தன்னுடைய வார்த்தையினால் இறையரசு தொடங்கியுள்ளது என்பதே இயேசு அறிவித்த நற்செய்தியாகும். ''உங்கள் கண்களோ பேறு பெற்றவை; ஏனெனில் அவை காண்கின்றன. காதுகளும் பேறுபெற்றவை; ஏனெனில் அவை கேட்கின்றன. நான் உங்களுக்கு உறுதியாகச் சொல்லுகிறேன்; இறைவாக்கினர், நீதிமான்கள் பலர் நீங்கள் காண்பதைக் காணவிரும்பியும் காணவில்லை. நீங்கள் கேட்பதைக் கேட்கவிரும்பியும் கேட்கவில்லை'' (மத் 13:16-17 இ). அப்படியானால் அவர்கள் கண்டதும் கேட்டதும் என்ன? முதலாவதாக இயேசுவே விளக்கும் பேய் ஓட்டுதல்: ''நான் பேய்களைஓட்டுவது கடவுளின் விரலால் என்றால், கடவுளின் அரசு உங்களிடம் வந்துள்ளது'' (லூக் 11:20 இ); உண்மையில், பகைவன் வெல்லப்படுகிறான்: ''வானத்தினின்று மின்னலைப் போலச் சாத்தான் விழக்கண்டேன்'' (10:18). அடுத்து, இயேசுவே கூறவதுபோல, புதிய காலம் தொடங்கிவிட்டது என்பதை எடுத்துக்காட்டும் புதுமைகள் உள்ளன; 'குருடர் பார்க்கின்றனர், முடவர் நடக்கின்றனர், தொழுநோயாளர் குணமடைகின்றனர், செவிடர் கேட்கின்றனர், இறந்தவர் உயிர்க்கின்றனர்''. இறுதியாக, உறுதியான தேர்வாக இயேசு குறிப்பிடுவது; 'எளியவர்க்கு நற்செய்தி அறிவிக்கப்படுகிறது' (மத் 11:5-6 இ). ஏனெனில், இயேசு இவ்வாறு பேசும்போது ஏசயாவின் இறைவாக்கு நிறைவேறுகிறது என அவர் கூறுகிறார் (ஏச 29:18; 35:5; 61:1).

அவருடைய நோக்கில் அறிவிப்பு இறுதிக் காலத்தைச் சேர்ந்ததாகும் என்பதே உண்மை. சுருக்கக்கூறினால் கடவுளின் திட்டத்தை இது நிறைவேற்றுகிறது. இயேசு, பழைய ஏற்பாட்டை பொறுத்தவரை இத்தகைய நிலையினையே எடுக்கிறார். இறைவாக்கினர்களில் இறுதியானவரும் மிகப் பெரியவரும் ஆவார் யோவான் என்று அவர் கூறுகிறார்; ''நான் உறுதியாக உங்களுக்குச் சொல்லுகிறேன். பெண்களிடம் பிறந்தவர்களுள் திருமுழுக்கு யோவானுக்கு மேலான எவரும் தோன்றவில்லை'' ஆனால், இறைவனின் ஆட்சியானது புதிய காலத்தனை புகுத்தியிருப்பதால், ''விண்ணரசில் மிகச் சிறியவன் அவரினும் பெரியவன்'' என்று தொடர்ந்துரைக்கின்றார் (மத் 11:11).

இறையரசினுடைய அடிப்படை புதுமையானது, அது அங்கே இருக்கிறது என்பதில் மட்டுமில்லாமல் அதனுடைய தன்மையிலும் அடங்கியுள்ளது. ''திருமுழுக்கு யோவான் நாள்முதல் இதுவரை, விண்ணரசு பலவந்தத்திற்கு உள்ளாகி வருகிறது; பலவந்தம் செய்வோர் அதை (நுழைய விரும்புகிறவர்களிடமிருந்து) கைப்பற்றுகின்றனர்'' (மத் 11:12). எனவே, சட்டவல்லுநர்கள், தங்களது வாதங்கள் மற்றும் நுட்பம் ஆகியவற்றால் ஏற்படுத்திய ஓய்வு நாள் மற்றும் சமய சடங்குகளின் அமைப்பைப் போற்றிக் காப்போருக்கு எதிராக இயேசு ஒரு நிலை

யினை எடுக்கவேண்டும் (மத் 15:1-20; 23:1-33). ஆனால், அதே சமயம் இறையரசை நாட்டுபற்று மற்றும் உலக விடுதலையோடு இணைத்து குழம்பியுள்ள அவரது காலத்தவரின் நம்பிக்கைகளையும் அவர் தூய்மைப்படுத்த வேண்டும் (மத் 16:22; 20:21; 21:9 இ; லூக் 19:11; 22:38; 24:21; யோவா 6:15; அ.ப. 1:6). இயேசு தனது அணுகுமுறையில் திருமுழுக்கு யோவானிடமிருந்தும் மாறுபட்டவராக உள்ளார் (மத் 11:3). யோவானைப் போன்று நிறைவான மனமாற்றத்தைக் கோரினாலும், பழிவாங்கும் இறைவனின் உடனடித் தண்டனையினைப்பற்றி அறிவிக்காமல் (மத் 3:7-12), அருள்தரும் ஆண்டினைப்பற்றி அவர்களுக்கு போதிக்கிறார் (லூக் 4:19). இதையே தமது தனிச்சிறப்பான சூழ்நிலையென, இயேசு கருதுகின்றார். புதையலை கண்டுபிடிப்பவர்களுக்கு மகிழ்ச்சி உறுதியளிக்கப்படுகிறது (மத் 13:44). இந்த நேரத்தை அனுபவிப்பவர்கள் பேறுபெற்றோர்.

2. இயேசுவைப்பற்றிய தீர்மானம்:- இந்த நேரம் எப்போது வரும் என்று வியந்து கொண்டிருப்பதில் ஒரு பொருளும் இல்லை; ''இறைவனின் அரசு கண்களுக்குப் புலப்படும் முறையில் வராது. 'இதோ இங்கே! அதோ அங்கே!' என்று சொல்வதற்கில்லை. ஏனெனில், இறைவனின் அரசு இதோ! உங்களிடையே உள்ளது'' (லூக் 17:20-21). இறைவனின் ஆட்சி என்பது இனியும் ஒரு எதிர்காலத்தில் வருவதன்று. எல்லாருக்கும் எட்டக்கூடியதாக உள்ளது. மெசியாவின் காலத்தை அறிந்து கொண்டு இயேசுவை நோக்கினாலேபோதும், அப்படியானால் இவர் யார்?

அதிகாரத்துடன் போதிப்பதால் (மாற் 1:22), இந்த இயேசு விவிலியத்தை விளக்கும் சாதாரண போதகர் மட்டுமல்லர். இறைவாக்கினர்களைப் போன்று இறைவனின் கூற்றுக்களை அவர் வெறுமனே அறிவிக்கவில்லை; மாறாக, ''இதை நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்...''(மத் 5:22.28.34.39.44) என்றும், இரகசியமாக கேட்ட வினாவிற்கு, எல்லாரும் அறிய பதிலுரைப்பது போல, ''நான் உறுதியாக உங்களுக்குச் சொல்லுகிறேன்...'என்னும் முன்னுரையுடன் உறுதியான அறிவிப்பாகக் கூறுகிறார். பழைய ஏற்பாட்டின் தலைசிறந்த மனிதர்களுடன் தம்மை ஒப்பிட்டு பேசவும் துணிகிறார்: ''யோனாவிலும் மேலானது இதோ! இங்குள்ளது. சாலமோனிலும் மேலானது இதோ! இங்குள்ளது'' (மத் 12:41-42; லூக் 11:31-32).

இதனால்தான், இறைவனை நோக்கிய மனமாற்றம் என்பது இயேசுவைப் பின்பற்றி, அவரைச் சார்ந்தோ அல்லது எதிராகவோ தேர்வு செய்வதாகும். ''என்னோடு இல்லாதவன் எனக்கு எதிராய் இருக்கிறான். என்னோடு சேகரிக்காதவன் சிதறடிக்கிறான்'' (மத் 12:30). இயேசுவிற்கு செவிமடுப்பது இறைவனுக்கே செவிமடுப்பதாகும். ஏனெனில், பாறையின் மீது ஒருவனது வீட்டைக் கட்டுவதற்கு இது ஒப்பாகும் (மத் 7:24). ஆனால் புரியாத நிலையிலான இயேசுவின் நடத்தை எதிர்படும் போது, இத்தகைய தேர்வை எவ்வாறு செய்வது? இயேசு இதனை நன்றாகவே தெரிந்து வைத்திருக்கிறார்; ''என்னைப்பற்றி இடறல்படாதவன் பேறுபெற்றவன்'' (மத் 11:6).

ஆதலின் இயேசு தமது உரிமைக் கோரிக்கையை எண்பிக்க வேண்டும். தமது தன்மையை ஏற்க மறுக்காமல் தந்தையுடன் தனக்குரிய தனிப்பட்ட உறவினை வெளிப்படுத்த வேண்டும். அனைத்து விசுவாசத்திற்கும் முன்னடையாளம் என்று கூறப்படும் விசுவாசத்தை (எபி 12:2), அவர் கொண்டிருந்ததால் (மாற் 9:23) அவருக்கு எல்லாம் முடியும். இறைவனிடம் அவர் தமது அப்பாவிடம் (மாற் 14:36) பேசுவதுபோலவே பேசுகிறார். தானியேலின் வெளிப்பாட்டு மரபோடு தம்மை இணைத்தவராய் (தானி 2:23-30), தந்தையிடம் தனிப்பட்ட உறவினைக் கொண்டுள்ள மகனாகத் தாம் இருப்பதால், மறையுண்மைகள் தமக்கு வெளிப்படுத்தப்பட்டுள்ளன என்று கூறவும் அவர் துணிகிறார் (மத் 11:24 தொ இ), அப்படியிருந்தும் அனைத்தையும் பற்றி தமக்கு தெரி

யும் என்று உரிமை கொள்ளாமல் (மாற் 13:32) தமது விருப்பத்தினை தமது தந்தையிடமே ஒப்படைக்கிறார் (14:36; மத் 20:23). ஆயினும், கடவுளின் தூதர்களின் நீண்ட அட்டவணையில் தமக்கென ஒரு சிறப்பான இடத்தினை உரிமை கொண்டாடியவராய் (மாற் 12:6), இறையரசைத் தம்மோடு ஒன்றாக்குகிறார். இதையே விதைப்பவன் உவமை எடுத்துக்காட்டுகிறது (மத் 13:3-9 இ). இறைவனின் தனிப்பட்ட அணுகுமுறையின் அடையாளமான (லூக் 15) ஏழைகள் மற்றும் பாவிகளுடன் அவர் நடந்து கொள்ளும் முறையும் இதனையே வலியுறுத்துகின்றது.

3. இயேசுவும் எதிர்காலமும்:- இயேசுவினுடைய வாழ்வு ஒரு நல்ல யூதனுடைய வாழ்வாக உள்ளது. ஆனால், யூத மரபுகளுக்கு மேற்பட்டவராய், ஏற்கனவே குறிப்பிடப்பட்ட இறைவனுடனான தமது தனிப்பட்ட உறவின் மூலமாக, இறைவனின் விருப்பத்திற்கேற்ப அவற்றினை மதிப்பீடு செய்கிறார். சட்டங்களையும், இறைவாக்குகளையும் நிறைவேற்றவே அவர் வந்தார் (மத் 5:17). அவர் எடுத்துக்கூறும் முழுமையான அன்புபற்றிய மேல்வரிச்சட்டம் நுட்பமான வாதமுறைகளை விலக்கிவிட்டு, இயேசுவை பின்பற்றாதவர்களுக்கு இயலாத ஒன்றாக உள்ளது. அவரோடு நெருங்கி சார்ந்திருந்தால் மட்டுமே, இதனைக் குறிவைத்து அடையமுடியும்: ''என்னிடம் வாருங்கள்.. என் நுகம் இனிது, என் சுமை எளிது'' (மத் 11:25-30). அவரது காலத்தவருக்கும் அப்பாற்பட்டவராய், புறவினத்தாரும் மீட்பு பெறுவர் என்று அறிவிப்பதன் மூலம், இறைவாக்கு மரபிற்கும் பிரமாணிக்கம் உள்ளவராக இயேசு இருக்கிறார் (லூக் 13:28 இ)

இக்குறிக்கோளை அடைவதற்காக, தாம் விட்ட இடத்திலிருந்து திருச்சபை இப்பணியினைத் தொடரும் என்று இயேசு எண்ணியிருந்தாரா? இன்று நாம் காணும் வடிவில் திருச்சபையினை இயேசு ஏற்படுத்தினார் என்று நம்புவது சூதற்றநிலையாகும். அவரது மரணத்திற்குப் பின்னர் இரண்டாம் வருகைக்கு முன் (ஆண்டவரின் நாள்) ஓர் இடைப்பட்ட காலத்திற்கு இடமில்லை என்று எண்ணுவதும் தவறாகும்.

தம்மைச் சுற்றிச் சீடர்கள் குழுவை (லூக் 10:1), அதிலும் குறிப்பாக பன்னிருவர் குழுவைத் தம்மோடு சேர்த்துக் கொண்டார் (மாற் 3:12). இவர்கள் அவரைப் பின்பற்றி (லூக் 9:57-61) அவரது செயல்களையும் பிரசன்னத்தையும் பரப்பவேண்டும். இது ஏற்றுக் கொள்ளப்படும் வரலாற்று நிகழ்ச்சியானாலும் எப்போது நிகழ்ந்தது என்று துல்லியமாகக் கூறமுடியாது. கும்ரானில் உள்ள பிரிவினைச் சமுதாயத்தினைப் போன்று திருச்சபையினைத் தொடங்க அவர் எண்ணவில்லை என்பது உறுதி. ஆனால் உண்மையான இறைமக்களை முன்னறிகுறி காட்ட விரும்புகிறார் (மத் 19:28 இ). அதே சமயம், திருமுழுக்கு யோவானைப்போல் இல்லாமல், இறைவனின் ஆட்சியானது வளரக்கூடியது (மாற் 4:29; மத் 13:24-30); சீமோன் தனது தோழர்களை விசுவாசத்தில் உறுதிப்படுத்த வேண்டும் (லூக் 22:32); அவரது மரணத்திற்குபின் அவரது சீடர்கள் துன்புற வேண்டும் (மத் 9:15 இ; மாற் 8:34 இ; லூக் 6:22 இ) என்பதை அவர் உறுதியாக அறிந்திருந்தார். இதனால்தான், இறைவன் தேர்ந்தெடுத்தோர் அடங்கிய இறுதிக்கால சமூகத்தை விவரிக்க கும்ரானில் பயன்படுத்தப்பட்ட ''சோத்'' அல்லது ''ஏதா'' என்ற அரமேயிக்குச் சொல்லுக்குச் சமமான, ''எக்லேசியா'' அல்லது திருச்சபை என்ற சொல்லை இயேசு பயன்படுத்தியிருக்கக்கூடும். ஆனால் திருச்சபை என்ற சொல் நற்செய்திகளில் இருமுறைதான் வருகிறது (மத் 16:18; 18:17). இயேசு தமது மரணத்திற்கு பின்னர் ஒரு குறிப்பிட்ட கால கட்டத்தினைப்பற்றிய எண்ணம் கொண்டிருந்தார் என்பதை மறுப்பதானது, புதிய ஏற்பாட்டின் உண்மைகளை மிக எளிமைப்படுத்துவதாகும். ஆயினும், அவரது மரணத்தோடு, முடிவு நிகழும் என்னும் தனிப்பட்ட தீர்மானத்தினை இது விலக்கவில்லை (மாற் 9:1).

இறுதி வாக்கியத்தின் பொருளை நன்குபுரிந்து கொள்வதற்கு, இயேசுவின் மற்ற வாக்

குகளையும் கவனத்தில் கொள்ள வேண்டும். உயிர்த்தெழுதலைப்பற்றிக் குறிப்பிடாத இறைவாக்குகள் தெளிவாக காட்டுவது போல், இயேசு தாம் விரைவில் சாகப்போவ தைப்பற்றி முன்அறிந்திருந்தார் (லூக் 13:31 தொ; 17:25; மாற் 9:12). அவர் தமது மர ணத்தை இறைவனுடைய திட்டமாக ஊழிய மாக, பரிகாரப்பலியாக காண்கிறார் (மாற். 10:45); தமது மரணத்திற்கு முந்தின நாள், ஒருவருக்கொருவர் சேவை புரிதலைத் தமது மரபுரிமை உடமையாகத் தமது சீடர்களுக்கு விட்டுச் செல்கிறார் (லூக் 22:25-27).

இயேசு தமது விருப்பத்திற்கு மாறாக, தம்மைவிட வலிய பகைவரின் கரங்களால் கொல்லப்பட்ட மனிதன் என்று நாம் தீர்மா னிப்பதைத் தடுக்க இக்குறிப்புகள் உதவுகின் றன. பல விரிவுரையாளர்கள் இறை ஊழிய னோடு இயேசு தம்மை ஒன்றாக்குவதாக மேலும் விளக்கம் அளிப்பர். இயேசு, மனும கனின் முடிவான தமது முடிவினைப்பற்றி ஏசயா நூலில் வரும் ஊழியனைப் பற்றிய பாடல்களின் சொற்களில் எடுத்துக் கூறுகின் றார் (ஏச 52:13-53:12); 'அவரது கீழ்ப்படிதலா னது அவர் 'பட வேண்டும்' என்று கூறப்படு வதில் வெளிப்படுகிறது (லூக் 17:25); அவ ரது வாழ்வின் பலி பலருக்காக ஒப்புக்கொ டுக்கப்படுகிறது (மத் 20:28 இ; 26:28 இ; லூக் 22:16.28.30); மற்றும் அது அவர் ஏற்ப டுத்தும் உடன்படிக்கையுமாகும் (லூக் 22:20).

தமது மரணத்தைப்பற்றி இம்முறையில் அறிந்திருந்தால் இயேசு, ஏன் தமது உயிர்த் தெழுதலைப் பற்றியும் அறிந்திருக்கக்கூ டாது? இயேசுவின் இறப்பு மற்றும் உயிர்ப் புப் பற்றிய மூன்று துல்லியமான பெரிய முன்னறிவிப்புகளும் (மத் 16:21 இ; 17:22 தொ இ; 20:18 தொ. இ; லூக் 24:25 தொ 45) முதல் சமுதாயத்தின் செல்வாக்கை ஐய மின்றி வெளிப்படுத்துகின்றன; ஆனால், குறுகிய காலத்திற்குள் தாம் உயிர்ப்பது பற் றிய இயேசுவின் விசுவாசத்தினையும் அவ ரது வார்த்தைகளிலேயே காணலாம். எல்லா பக்தியுள்ள யூதரைப்போன்று, காலத்தின் இறுதியில் தாமும் உயிர்த்தெழுவோம் என் பதை அவர் அறிந்திருந்தார் (மத் 22:23-32 இ); மேலும், காலத்தின் இறுதிக்கட்டத்தி லும், ஏற்கனவே குறிப்பிட்டது போல், தமக் கென ஒரு சிறப்பிடத்திற்கு அவர் உரிமைக் கொண்டாடினார். இறைவனுடனும், மனித ருடனும் தாம் கொண்டிருந்த தனிப்பட்ட உறவினைப்பற்றி உறுதியாக அறிந்திருந்த இயேசு, தமது பணியின் இறுதிக்கட்ட வெற் றியினைப்பற்றியும் தமது சார்பாக தமது தந்தையின் சிறப்பான குறுக்கீடு பற்றியும் எவ்வாறு சந்தேகப்பட்டிருக்க முடியும்? ஆனாலும், உயிர்த்தெழுதலில் கொண்டி ருந்த இத்தகைய நம்பிக்கையானது, அவர் மனித நிலையில் பங்குபெறவில்லை என்று கூறவில்லை: கெதுசமனியில் அவர் திகி லும், மனக்கலக்கமும் உற்றார் (மாற் 14:36). இறைவனாலும் தாம் கைவிடப்பட்டுவிட்ட தாக உணர்ந்தார் (மாற் 15:34); ஆயினும் தாமே மகன் என்பதை அவர் அறிந்திருந்தார்.

இறுதிக் கேள்வியாக, தாம் யாரென்று வெளிப்படுத்த, இயேசு ஒரு குறுக்கு வழி யினை தேர்ந்தெடுத்து, யூதர் மத்தியில் நில விய மெசியா, இறைமகன், மணமகன் போன்ற சொற்களைப் பயன்படுத்தினாரா? நற்செய்தி நூல்களில் இதற்கிணையான பட் டங்களை இயேசு பயன்படுத்தியுள்ளார். இயேசுவினால் பயன்படுத்தாதவை என்று உறுதியிட்டு கூறப்படமுடியாத சொற்களான 'மகன்', 'மனுமகன்' என்ற சொற்களை தவிர்த்து, ஆதித்திருச்சபை, இயேசுவைத் தாம் 'இறைமகன்' மற்றும் 'மெசியா' என்று சொல்லச் செய்தபோது ஆதித்திருச்சபையா னது இயேசுவின் எண்ணத்தை விளக்குகிற தேயன்றி, சிதைக்கவில்லையென ஆய்வா ளர்கள் கூறுகின்றனர். மெசியா என்னும் சொல்லின் தெளிவற்ற நிலையானது சிலுவை மரணத்தின்மூலமாக மட்டுமே நீக் கப்படும் என்பதால், இயேசு தம்மை 'மெசி யா' என்று அறிவிக்க முயற்சி எடுக்க வில்லை. தனது உண்மைநிலையினை வெளிப்படுத்த வேண்டாமென தமது சீடர் களை தடுக்கும் போதும் (மாற் 8:27-30 இ), யெருசலேமில் நுழைகையில் தம்மை தாவீ

தின் மகன் என்று போற்றுவதற்கு அனுமதிக்கும் போதும் *(மத் 21:1-9 இணை)*, 'நீர் கடவுளின் மகனா? என்ற தலைமைக்குருவின் கேள்விக்கு 'நீரே சொன்னீர்' என்று மறைபொருள்மிக்க முறையில் பதிலுரைக்கும் போதும் *(மத் 26:64)*, தம்மைப்பற்றி தனது காலத்தவர் சரியாக அறிந்துகொள்ள ஆவன செய்கிறார். 'வெளிப்படுத்துபவர்' என்னும் தமது நிலைமையில், தாம் மனிதருடன் ஏற்படுத்த விரும்பிய உண்மையான உறவினைப் பற்றி தவறான வடிவத்தை அளித்திருக்கக்கூடிய இப்பட்டங்களுக்கு, இயேசு எத்தகைய முக்கியத்துவமும் அளிக்கவில்லை. அவர் தம்மை இறைவனுடனும், அனைத்து மனிதருடனும் தனிப்பட்ட உறவு கொண்ட மனிதனாக வெளிப்படுத்தும் போது, ''நீங்களோ நான் யாரென்று சொல்லுகிறீர்கள்?'' என்னும் இறுதியான கேள்வியை அவர்களிடம் கேட்கிறார் *(மத் 16:15 இ)*.

II. இயேசு, ஆண்டவர், கிறிஸ்து மற்றும் இறைமகன். இயேசு சிலுவையில் மரணமடைந்து, பல்வேறு காட்சிகளில் தம்மை உயிருள்ளநிலையில் வெளிப்படுத்தும்வரை, சீடர்களால் இக்கேள்விக்கு சரியான பதில் காண இயலவில்லை. இயேசுவின் முன்முயற்சிக்குத் தங்களது விசுவாசத்தினால் பதிலுரைத்ததன் மூலம், நாசரேத்தூர் இயேசு என்பவரின் வாழ்வு மற்றும் மறையுண்மையின் பொருளை சீடர்கள் கண்டுபிடித்தனர். இப்பொருளை விளக்குவதற்காக, மரபுமொழியில் நிலவிய சொற்களை எடுத்து அவற்றிற்கு புதிய பொருளை அளித்து, இயேசுவைப்பற்றி அவர்கள் பேசினர். ஒவ்வொரு ஆசிரியரின் விளக்க முயற்சிகள் அவர்கள் பெற்ற கொடைகளுக்கும், வாழ்ந்த சூழ்நிலைக்கும் ஏற்றவாறு பலவகைப்பட்டதும், தடவித்தேடும் தன்மையும் கொண்டதாகவும் இருந்தன. இந்த கிறிஸ்து இயல் உறுதியாகவே வரலாற்றினை அடிப்படையாகக் கொண்டதாயினும், அதன் மூலக்கூறுகள் பாலஸ்தீன அடிப்படையினையும் கிரேக்க விளக்கங்களையும் ஒன்றாகக் கொண்டதாய் இருப்பதனால், அதனுடைய அடிப்படையினை உறுதியாக காணமுடியாது. ஆயினும், இயேசுவின் மறையுண்மையை வெளிப்படுத்தும் முதல் முயற்சிகளைச் சுட்டிக்காட்டி வெவ்வேறு நற்செய்தியார்களின் தனிப்பட்ட கருத்துக்களை எடுத்துக் கூறலாம்.

*1. மறையுண்மை பற்றிய முதல் அறைகூவல்:-* பாஸ்கா அனுபவத்தை வெளிப்படுத்தும் பல்வேறு வழிகளின் மூலம், ஓரளவு உறுதியான வரலாற்று வளர்ச்சியைப் பிரதிபலிக்கும் நான்கு கருத்துக்களை நாம் குறிப்பிடலாம். இரண்டாம் வருகைபற்றிய எண்ணம் கிறிஸ்துவாகிய இயேசுவின் விண்ணக உயர்வை உறுதிப்படுத்துகின்றது. மீட்பளிக்கும் சிலுவைபற்றிய எண்ணம் ஊழியன் மேல் தனது கவனத்தை நிலைப்படுத்துகிறது. இறுதியாக, மனிதராகிய இயேசுவைப் பற்றி. அவருடைய மனிதநிலை மற்றும் உலகத்துடன் அவர் கொண்டுள்ள உறவினைப்பற்றிய மறையுண்மைகளைப் பற்றிய கேள்விகள் கேட்கப்படுகின்றன. பவுலின் இறையியல் மற்றும் நற்செய்தி படைப்புகள் ஆகியவற்றிற்கு முந்திய விசுவாச அறிக்கைகள் மற்றும் பாடல்களை முதன்மையாக இக்கட்டுரை பயன்படுத்துகிறது. ஆனாலும், புதிய ஏற்பாடு இறையியலால் ஏற்பட்ட முன்னேற்றங்கள் சுட்டிக் காட்டப்படும்.

அ. விண்ணகத்திற்கு உயிர்ப்பிக்கப்பட்ட இயேசு, ஆண்டவர் மற்றும் கிறிஸ்து:- உயிருள்ள இயேசுவுடன் தொடர்பு கொண்ட பின்னர், ''இறைவன் அவரை இறந்தோரிடமிருந்து உயிர்த்தெழச்செய்தார்'' என்று சீடர்கள் பறைசாற்றுகின்றனர் *(1 தெச 1:10; உரோ 10:9; [illegible]; கலா 1:1; 1 பேதுரு 1:21; அ.ப. 4:10)*. இந்த அறிவிப்பு மறைநூல் வாசகம் ஒன்றின் மீதான சிந்தனையின் விளைவு அன்று *(1 கொரி 15:4)*. இயேசு உயர்த்தப்படுவதையும் அரியணை ஏறுதலையும் பாஸ்கா அனுபவம் கோருகிறது என்ற விசுவாசத்தின் உடனடி அறிவிப்பாகும். இது ஸ்தேவான் *(அ.ப.7:56)*, பவுல் *(7:3; 22:6; 26:13)* ஆகியோரின் அனுபவங்களில் தெளிவாகுகிறது. இதை எடுத்துக்கூறும் போது, உயிர்ப்புப்

பற்றிய யூத இறையியல்நடை பயன்பட்டுள்ளது.

இந்த கிறிஸ்தவ விசுவாசத்தினுடைய தொடக்ககாலச் சான்றுக்கு ஒத்தவாறு, 'எமது ஆண்டவரே, வாரும்' என்ற பொருளுடைய 'மாரனாதா' *(1 கொரி 16:22; அ.ப. 22:20; 1 கொரி 11:26)* என்னும் பழமையான அரமேயிக் வாழ்த்தொலி காணப்படுகின்றது. மகிமைப்படுத்தப்பட்டு, விண்ணக அரியணையில் அமர்ந்துள்ள இந்த இயேசுவே இறுதிக்கால 'நீதிபதி' என்பதை இது தெளிவுப்படுத்துகின்றது. காலத்தின் இறுதியில் வருகின்ற சாதாரண வருகையாக இல்லாமல், ''இயேசுவே வரலாற்றின் ஆண்டவர்' *(மத் 28:20)* என்பதை மனித வரலாறு முழுவதும் தொடர்ந்து வெளிப்படுத்துகின்ற, மகிமைப் படுத்தப்பட்ட இயேசுவின் இரண்டாம் வருகையினைப் *(அ.ப. 1:11)* பற்றிய உண்மையான பொருளையும் இது அளிக்கின்றது.

கிரேக்க திருச்சபையின் படைப்பாகக் கருதப்படும், விசுவாசத்தின் வெளிப்பாடாகவும், சமய சடங்குகளின் பின்னணியிலும் உபயோகிக்கப்படும், ''இயேசு ஆண்டவர்'' *(1 கொரி 12:3; உரோ 10:9; பிலி 2:11)* என்பது மற்றுமொரு சொற்றொடராகும். இது விசுவாசத்தின் வறண்ட கொள்கையாக இல்லாமல், ஆண்டவரை அறிந்து, அடிபணியும் செயலாகும். இதுவே இயேசுவின் வருகையின் குறிக்கோள்.

இவ்வாறு அறிவிக்கப்பட்ட நிகழ்ச்சியின் இயல்பானது, மறைநூல்களின் மூலம் தெளிவாக்கப்படும். மெசியா பற்றிய முன்னறிவுப்புகளின் துணையால் *(2 சாமு 7:14; சங் 2:7; 110:1)*, இயேசுவே 'ஆண்டவரும் மெசியாவுமாக ஆக்கப்பட்டார்' *(அ.ப. 2:36)*; அவரே இறைவனின் மகனாக நியமிக்கப்பட்டார் *(உரோ 1:4; அ.ப. 13:33)*; அவர் கடவுளின் வலப்புறத்தில் அமர்ந்துள்ளார் *(அ.ப. 7:56; 2:33 தொ; 5:31; மாற் 14:62 இ; உரோ 8:24)*; மற்றும் இறுதியாக, இறைவனின் எல்லாம் வல்ல நிலையில் அவர் பங்கு பெறுகிறார் *(மத் 28:18)* என்று அவர்கள் உணர்ந்துகொண்டனர்.

உயர்த்தப்படுதல் என்ற கருத்தின் நோக்கில், மெசியா இறைமகன், ஆண்டவர் என்றும் சிறப்புப் பெயர்கள் முதலில் ஒத்த பொருளையே கொண்டிருந்தன; இவை இயேசுவின் மரணம் அல்லது உலக வாழ்வுடன் நேரடித்தொடர்பு கொண்டவையல்ல; நாசரேத்தூர் இயேசு இஸ்ராயேலின் நம்பிக்கைகளை நிறைவேற்றி, எல்லா காலத்திற்கும் ஆண்டவராக உருவானார் என்று சாதாரணமாக இவை கூறுகின்றன.

புதிய ஏற்பாட்டு ஆசிரியர்களின் இறையியல் வளர்ச்சிகள் இங்கிருந்து துவங்குகின்றன. எனவே பவுல், எழுபது நூல் மொழிப்பெயர்ப்பில் இறைவனை மட்டுமே குறிக்கின்ற 'ஆண்டவர்' என்னும் பெயரை இயேசுவிற்கு மாற்றுவதை ஏற்றுக்கொள்வதோடு *(உரோ 10:2; பிலி 2:11; 1 கொரி 2:8; 15:25; எபே 1:20)*, ''புறவினத்தாரின் ஆண்டவர்களிடமிருந்து '' இயேசுவை வேறுபடுத்தியும் கூறுகிறார் *(1 கொரி 8:5; 10:21)*; ''நமதாண்டவராகிய இயேசு கிறிஸ்து'' என்னும், சொற்றொடரின் தொடக்கம் இதுவே. எனவே, நற்செய்தியாளர்கள், மக்கள் இயேசுவை வெறுமனே ராபி அல்லது 'போதகர்' என்று அழைக்காமல் 'ஆண்டவர்' என்று அழைக்கின்றதைச் சித்தரிக்கின்றனர் *(மத் 8:25; லூக் 7:19 இ)*.

ஆ) இயேசுவின் நன்மை விளைவிக்கும் மரணம்:- இயேசுவின் அவமானத்திற்குரிய மரணத்தினால் ஏற்பட்ட இடறலின் காரணமாக, பாஸ்கா விசுவாசமானது மறைநூல்களில் புரியக்கூடிய பொருளைத் தேடுகின்றது. தமது உலக வாழ்வின் போது இயேசு, துன்புறும் மற்றும் மாட்சிமைபடுத்தப்படும் ஊழியனைப்பற்றிய முன்னறிவிப்புக் குறிப்புகளின் மூலமாக, தனது முடிவைப்பற்றி மறைமுகமாக விளக்கினார். ஆதித்திருச்சபை தனது ஆண்டவருக்கு 'ஊழியன்' என்னும் பெயரை அளித்து *(அ.ப. 3:26; 4:25-30)*, ஏசயாவின் வார்த்தைகளினால், நிகழ்ந்து

விட்ட நிகழ்ச்சிகளின் பொருளை விளக்குகின்றது (ஏச 52:13 - 53:12). இயேசு உயர்த்தப்பட்டு(அ.ப.2:33; 5:31), மகிமைபடுத்தப்பட்டுள்ளார் (3:13). இவ்வாறு இயேசுவின் பாடுகள், பேதுருவின் திருமுகத்திற்கு (1 பேதுரு 2:21 - 25) முந்திய ஒருவாசகத்திலும், பிலிப்புவின் உபதேசத்திலும் விளக்கப்படுகிறது (அ.ப. 8:30 - 35). விசுவாசத்தின் தொன்மையான வாசகங்களில் ஒன்று இயேசு 'மறைநூலில் உள்ளபடி நமது பாவங்களுக்காக இறந்தார்' (1 கொரி 15:3) என்று கூறுகின்றது. நமக்காக என்னும் இந்த முன்னிடைச்சொல் இங்கும், மற்ற பகுதிகளிலும் (கலா 1:4; 2 கொரி 5:14 தொ 21; உரோ 4:25; 8:32; 1 பேதுரு 3:18; 1 யோவா 2:2), குறிப்பாக நற்கருணை சொற்றொடரிலும் (லூக் 22:20; 1 கொரி 11:24) இயேசுவின் மரணத்தினுடைய மீட்பின் மதிப்பினை குறிப்பிடுகின்றது.

ஊழியன் என்னும் பெயரின் பொருளுக்கு ஒத்த பொருளையுடைய மற்ற சிறப்பு பெயர்களும் அதே உண்மையினை வெளிப்படுத்தவே பயன்பட்டுள்ளன. இயேசுவே 'நீதியுள்ளவர்'(அ.ப.3:14); மனிதரை வாழ்விற்கு நடத்திச்செல்பவர்(அ.ப.3:15; 5:31); இறைவனின் மாசற்ற செம்மறி (1 பேதுரு 1:19 தொ; யோவா 1:29, 36). இவரே பாவமாசற்ற தலைமைக் குரு; புதிய ஏற்பாட்டின் இணைப்பாளர் (எபி 2:14-18; 4:14).

இதுமுதல், பவுலின் பிற்காலத் திருமுகங்களில் காணப்படும் 'மீட்பர்' என்னும் சொல் (தீத் 1:4; 2:13; 3:6; 2 திமோ 1:10) கிரேக்க சமயங்களின் கூட்டுச் செல்வாக்கினால் பழக்கத்தில் கொண்டுவரப்படுகின்றது. பரிகாரக் கோட்பாட்டை ஆழமாகப் புரிந்துகொள்ளுவதற்கு (உரோ 3:23 தொ) இட்டுச் செல்கின்ற, மரித்து உயிர்த்த கிறிஸ்துவோடு ஒன்றுபட்ட ஞானஸ்நானம் பெற்றவர்களைப் பற்றிய பவுலின் மறைபொருள் மிக்க போதகத்தின் (கலா 2:19; உரோ 6:3 - 11) முன்னேற்றத்தினையும் இப்போது முதல் நாம் காணலாம்.

இ) மனிதனாகிய இயேசு:- மரணத்திற்கு பின்னும் உயிருடன் இருக்கின்றவரின் தோற்றம் பற்றி அதிக அக்கறை கொள்ளும் போது, அப்போஸ்தலிக்க திருச்சபையானது, விரைவிலேயே தனது கவனத்தை இயேசுவின் உலக வாழ்வின்மீது திருப்புகிறது.

இவ்வாறு, உயிர்த்தெழுந்தார் என்று தான் விசுவாசிப்பவரின் வாழ்வை மற்றவருக்கு தெரிவிக்கவும் (அ.ப. 10:37 தொ), விசுவாசிகள் எவ்வாறு வாழ வேண்டும் என்பதற்கு முன்னுதாரணமாக அதனை எடுத்துரைக்கவும், ஏற்பட்ட இரட்டை தேவைகளுக்கு விடையாக நற்செய்தி மரபு உருவெடுக்கிறது. ஆண்டவராகிய இயேசுவின் மீதுள்ள விசுவாசத்தையே ஒற்றுமைப்படுத்தும் கூறாகக் கொண்டு அவரைப்பற்றிய கடந்த கால நினைவுகள் படிப்படியாக ஒன்று சேர்க்கப்பட்டு விளக்கப்பட்டன. இதனைச் சுற்றி இந்த வாழ்க்கைக்கும் புத்தொளி அளித்து உருமாற்றம் அளிக்கும் இந்த ஒளியில் மனிதனாகிய இயேசுவின் உருவம் வெளிப்படுகிறது.

அவருடைய வார்த்தைகள் மற்றும் மீட்பளிக்கும் மரணத்தைவிட அவரின் உலக வாழ்வின் மீது பவுல் குறைந்த அளவே ஆர்வமுடையவராயிருக்கிறார். எபிரேயருக்கு எழுதப்பட்ட திருமுகம் இயேசுவினுடைய துன்பங்களின் பொருளை விளக்குகின்றது. இயேசு தனது மரணத்தைத்தாமாகவே விரும்பி ஏற்றுக் கொண்டார் (எபி 10:7); துன்பங்களினால் அவர் நிறைவாக்கப்பட்டார் (2:10); மகிழ்ச்சிக்குப் பதிலாகச் சிலுவையின் நிந்தையைத் தாங்கினார் (12:2); துன்பங்களின் மூலம் அவர் கீழ்ப்படிதலைக் கற்றுக் கொண்டார் (5:7 தொ); நம்மை விசுவாசத்தில் நடத்திச்சென்று, அதனை முழுமைக்கு கொண்டு வருபவர் இவரே (12:20).

துவக்கத்திற்குத் திரும்புகின்ற இந்த இயக்கமானது, நாத்தான் போன்றவர்களின் முன்னறிவிப்புகள் (2 சாமு 7:12 தொ) அல்லது

சங் 16:10-தொ ஆகியவற்றின் துணைக் கொண்டு அமையும் இயேசுவின் தோற்றம் பற்றிய கேள்விகளைக் கொண்டதாக உள்ளது. இயேசுவின் வாழ்வானது, உடலளவில் உலகைச் சார்ந்ததாகவும், ஆவியினால் விண்ணகத்தைச் சார்ந்ததாகவும் (உரோ 1:3 தொ; 1 பேதுரு 3:18; 1 திமோ 3:16) இருவகை முறைகளைக் கொண்டதாக உள்ளது. ஆவியின் மூலம் உள்ளார்ந்த முறையில் மாற்றப்பட்டவராய், இயேசு அபிடேகம் பெறுகிறார். இது முதலில், அவர் அரியணை ஏறும் சமயத்திற்கான அரச அபிடேகமாகவும் (எபி 1:9), பிறகு அவரது பணியின் நிமித்தம் திருமுழுக்கின்போது இறைவாக்கு அபிடேகமாகவும் (அ.ப. 10:38; 4:27; லூக் 4:18), பொருள் கொள்ளப்படும். தாவீதிற்கு அளிக்கப்பட்ட வாக்குறுதியின் நிறைவேற்றமாகக் கருதப்படும் உயிர்தெழுதலானது (அ.ப.2:34 தொ; 2 திமோ 2:8), இயேசுவைத் தாவீதின் மகனாகக் காண இட்டுச் செல்கிறது (உரோ 1:3 தொ; 2 திமோ 2:8; அ.ப. 13:22 தொ; 15:16; மாற் 12:35 தொ). இதற்கொத்த முறையில் இயேசுவின் தலைமுறைப்பட்டியல்களும் அமைக்கப்படுகின்றன (மத் 1:1-17; லூக் 3:23-37). மறைநூல்களின் நிறைவேற்றமான வெளிப்படையான கிறிஸ்தியலாக இருந்தாலும், இயேசுவின் பாலபருவம் பற்றி (மத் 1-2; லூக் 1-2) மரபுகளால் உருவாக்கப்பட்ட நற்செய்திகளின் முகவுனாளிலும் இது எடுத்துக்காட்டப்படுகிறது. மிக ஆழமான இறையியலை வெளிப்படுத்துகிற நிகழ்ச்சியுரை வரலாறானது, 'ஆண்டவர் என்று நாம் வழிபடுகிறவரின் ஆரம்பம் என்ன?' என்னும் கேள்வியை எழுப்பிப் பதில் அளிப்பதிலேயே முக்கியமாகக் கவனம் செலுத்துகிறது.

ஈ) அனைத்து படைப்பிலும் முதல் பேறானவர்:- மேலும், இன்னும் முந்திய காலத்திற்குச் செல்லுகிறது. இக்கருத்து மீட்பராகிய இறைவன் மறையியல் ஞானவாதிகளின் புராணக் கதையினால் தூண்டப்படாமல், படைப்பிற்கும் இறுதி காலத்திற்கும் இடையிலுள்ள ஒற்றுமையினைக்காட்ட ஆர்வமாக உள்ள யூத வெளிப்பாட்டு மரபுகளால் தூண்டப்பட்டதாகத் தெரிகிறது. இவ்வாறு, ஏனோக்கின் நூலில் மனுமகனின் முந்தையவாழ்வு குறிப்பிடப்பட்டுள்ளது; மற்ற சில பகுதிகளில், சில குறிப்பிட்ட யூத வட்டாரங்கள், படைப்பின் துவக்கத்திலே செயலாற்றும் ஞானத்தைத் தியானிப்பது வழக்கம் (யோபு 28:20-28; பாரு 3:32-38; பழ 8:22-31; சீரா 24:3-22; ஞான 7:25 தொ). பிலி 2:6-11-இன் பின்னணியில் அமைந்துள்ள மிகப் பழமையான பாடலானது, ஒன்றன்பின் ஒன்றாகக் கொண்ட மூன்று கட்டங்களில் இயேசுவை விவரிக்கிறது. அவர் இறைவனின் தன்மையில் இருந்தார். உலக வாழ்க்கையின் போது தம்மையே வெறுமையாக்கினார். பின்பு விண்ணகத்திற்கு உயர்த்தப்பெற்றார். இறை ஆளால் ஒருவித மண்ணக இயல்பு எடுத்துக் கொள்ளப்பட்டதென இப்பகுதி கூறவில்லை; மாறாக, இயேசுவின் பிரசன்னமானது எல்லா காலகட்டத்திற்கும் பரவியுள்ளது என்று காட்டவே முயல்கிறது. இயேசுவின்மூலமே அனைத்தும் வாழ்கின்றன; அவர்மூலமே நாமும் கடவுளிடம் வருகிறோம் (1 கொரி 8:6); பாலைவனத்தில் மக்களைப் பின்தொடர்ந்த பாறையும் இவரே (10:4). இறுதியாக, பவுலின் இறையியல் வளர்ச்சிக்கு முன்னதாக, இயேசுவே காணப்படாத கடவுளின் சாயல், எல்லா படைப்புகளிலும் முதல் பேறானவர் (கொலோ 1:15), இறைத்தன்மை முழுமையாகக் குடிகொண்டுள்ளவர் (2:9) என்று அழைக்கிறார்.

இயேசுவின் முழுமையான நீதி மற்றும் புனிதத்துவத்தை உறுதிப்படுத்திய பின்னர் (அ.ப.3:14), புதிய ஏற்பாடு, அவரது இறைத் தன்மையைப் பற்றி அறிவிக்கிறது. நாசரேத்தூர் இயேசு கூறிய சுட்டிகாட்டல்கள் வெளிப்படும் பொருளிலும், பவுலுக்கு இறைவனால் வெளிப்படுத்தப்பட்டு (கலா 1:12), அவரால் போதிக்கப்படும் நற்செய்திக்கு உரிய (உரோ 1:9) மகனுடைய முந்தைய வாழ்வினை அடிப்படையாகக் கொண்டுள்ளதால், மெசியாப் பொருளுக்கு அப்பாலும் செல்லும் பொருளிலும் இறைமகன் ஆவார். இயேசுவே இறைமகன்: மக

னைப்பற்றிய இயேசுவின் வார்த்தைகளை எதிரொலித்து (மத் 11:27 இ; 21:37 தொ இ; 24:36 இ), நற்செய்தியில் அடிக்கடி போதிக் கப்படும் (மாற் 1:11; 9:7; 14:61; லூக் 1:35; 22:70; மத் 2:15; 14:33; 16:16; 27:40. 43), கிறிஸ்தவவிசுவாசம் இதுவே (1 யோவா 4:15; 5:5). இத்தகைய முன்னேற்றமுள்ள வெளிப்பாட்டின் உச்சநிலை, இயேசு இறை வனோடு இறைவனானர் என்ற அறிவிப்பா கும் (இது அநேகமாக உரோ 9:5 - இலும் ஓரளவிற்கு எபி 1:8; தீத் 2:13-இலும் உறுதி யாக யோவா 1:1. 18; 20:28-இலும் உள்ெடங் கியுள்ளது).

முந்தைய வாழ்வின் துணைமுடிவாக இயேசுவின் திருச்சபை மற்றும் அண்டம் சார்ந்த கூறு வெளிப்படுத்தப்படுகின்றது. திருச்சபை அவரது உடல்; அதற்கு அவரே தலைவர் ஆவார் (கொலோ 1:18); விண்ண கம், மண்ணகம், கீழுலகம் ஆகிய முப்பகுதி களிலும் அவர் பயணம் செய்தமையால் (பிலி 2:10), அவரது ஆட்சி உலகெங்கும் பரவியுள்ளது. அவர் இறந்தவரினின்று பிறந்த தலைப்பேறு ஆனமையால் (கொலோ. 1:18), அவரே 'மகிமையின் ஆண்டவர்' (1 கொரி 2:8) அல்லவா?

இக்கருத்துடன் பல்வேறு சிறப்புப்பெயர்கள் இணைந்துள்ளன. இயேசுவே புதிய ஆதாம் (1 கொரி 15:15. 45; உரோ 5:12-21); அவரி லேயே கடவுள் அனைத்தையும் ஒன்று சேர்க் கிறார் (எபே 1:10); மக்களை ஒன்றாய் இணைப்பதால் அவரே நம் சமாதானம் (2: 13-16). அவரே புதிய உடன்படிக்கையின் இணைப்பாளர் (1 திமோ 2:5; எபி 9:15; 12:24).

2. நற்செய்தி விளம்பும் மறைபொருள்:- இயேசுவின் மறைபொருளை உணர்வதற் கான முதல் முயற்சிகளை நாம் செயற்கை யான முளையிலேயே ஒன்று சேர்த்துள் ளோம். ஆனால், நற்செய்தி நூல்கள் மட் டுமே அதிகாரப் பூர்வமான உண்மையான கிறிஸ்தியல்களாகும். நான்கு நற்செய்திகள் எழுதப்படுவதற்கு முன்னர், இயேசுவைப் பற்றிய மறைபொருளை நற்செய்தி மரபு விளக்கிக் கூறுவதில் ஈடுபட்டிருந்தது. கிறிஸ்து இயல் பற்றிய ஒவ்வொரு நற்செய் தியின் பகுதியிலும் மற்றும் ஒத்தமை நற் செய்தி அமைப்புக்கு முந்திய அமைப்பிலும் இதைக் கண்டுணரலாம். இயேசுவின் உலக வாழ்வு பற்றிய ஆர்வமானது, இயேசுவின் எந்த வாழ்க்கை வரலாற்றையும் சாராமல், தன்னிலேயே குறிப்பிட தக்க அளவில் பொருள் பொதிந்தது. இன்னும் துல்லிய மாக, அது இருவகை அக்கறை காட்டுகிறது. முதலாவதாக அது ஒரு வகை புராணக்கதை என்னும் நிலைக்குத் தாழ்த்த முயற்சிப்பவர் களுக்கு எதிராக, இயேசுவின் வெளிப்பாடு வரலாற்றை ஆதாரமாகக் கொண்டது என உறுதியோடு கூறுகிறது. அடுத்து, பழ மையை தோண்டுவதிலேயே முனைப்பாக உள்ள தொல்பொருள் ஆராய்ச்சியாளருக்கு எதிராக, முன்னர் வாழ்ந்த இயேசு இன்றும் வாழ்கிறார்; நிகழ்காலக் கிறிஸ்தவர்களோடு பேசுகிறார் என்று உறுதியோடு வெளிப்ப டுத்துகிறது. நற்செய்தி நூல்கள், நாசரேத்தூர் இயேசு என்னும் நிகழ்ச்சியின் உண்மை வடிவங்களேயாகும்.

புதிய ஏற்பாட்டில் கிறிஸ்து இயல் என்று ஒன்று இருக்குமாயின் அது நற்செய்தி நூல்க ளுக்கு முற்பட்ட நற்செய்தியே ஆகும். இந்த கிறிஸ்து இயலானது, ஒரு முறையாக அமைக்கப்பட்டதோ, கடிதங்களை ஒன்று சேர்த்து அமைக்கப்பட்டதோ அன்று; இப் போது ஆண்டவராக உள்ள இயேசுவின் மறைபொருளைப் பிரசன்னப்படுத்தி வெளிப்படுத்த வேண்டும் என்ற ஒரே எண் ணத்துடன் உருவாக்கப்பட்டது. நான்கு நற் செய்திகளும், தூய ஆவியில் அறிவிக்கப் பட்ட ஒரே நற்செய்தியைக் குறிப்பிட்டு, இவ்வெளிப்படுத்துதலின் பல்வேறு கூறு களை நமக்கு அளிக்கின்றன. இந்த ஆய்வா னது, இத்தலைப்பின் கீழ் சில சுருக்கமான குறிப்புகளை அளிப்பதன்மூலம் முடிவடை யும்.

அ) புனித மாற்கு:- சாத்தானை வென்ற தன் மூலம் நம்மை மீட்ட நாசரேத்தூர்

இயேசுவில் இறைமகனை கண்டுணருமாறு தமது வாசகர்களை அழைக்கிறார். காலத்தின் இறுதியில்தான் இயேசுவில் தனிப்பட்ட முறையில் ஆட்தன்மையில், இறைவனைச் சந்திக்கும் உண்மை நிகழும் என்பதை வலியுறுத்துகிறார். மத்தேயு அல்லது லூக்காவுடன் ஒப்பிடும்போது, மாற்கு 'இறைமகன்' என்னும் சொல்லை அளவோடு பயன்படுத்துவதை நாம் நோக்குவது அவசியம், ஒரு நிகழ்ச்சியில் பேய்களின் வாயினின்று வரும் சொற்களிலும் *(மாற் 5:7)*, பேயோட்டுதலின் தொகுப்பிலும் *(மாற் 3:11)* தவிர்த்து, வெளிப்பாட்டின் மூன்று உச்சக்கட்டங்களில் மட்டுமே இச்சொல் வருகிறது. திருமுழுக்கின்போது *(1:11)* மறு உருவானபோது *(9:7)* இறைவனே இச்சொல்லைப் பயன்படுத்துகிறார். இறுதியில் நூற்றுவர் தலைவன் இச்சொல்லைக் கொண்டு இயேசுவுக்கு அஞ்சலி செலுத்துகிறான். யூத மதத்தின் காலம் முடிவுக்கு வந்துவிட்டது என்பதை குறிப்பிட, ஆலயத்திரை கிழிகிறது; இந்த நிலையிலேயே, புறவினத்தாரின் சொற்களாகக் கூறப்படும் ''உண்மையில் இவர் கடவுளின் மகன்'' *(15:39)* என்னும் சொற்றொடர், இயேசுவினுடைய மரணத்தின் ஆற்றலைப் பறைசாற்றுகின்றது.

ஆ) புனித மத்தேயு:- உயிர்த்த இயேசுவின் கொள்கை வெளிப்பாட்டுடன் நற்செய்தியினை உச்சநிலைக்குக் கொண்டு வருகிறார்; ''எல்லா அதிகாரமும் எனக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. நான் உலகமுடிவுவரை எந்நாளும் உங்களோடு இருக்கிறேன்'' *(மத் 28: 18-20)*. இறைவாக்கினர் தானியேல் முன்னறிவித்ததுபோல *(தானி 7:13)*, உலகளாவிய உரிமை அளிக்கப்பட்ட மனுமகனாக இயேசு தம்மை அறிமுகப்படுத்திக் கொள்கிறார். தந்தை அனைத்தையும் அவருக்குக் கையளித்துள்ளதால் *(11:27)*, சாத்தானிடமிருந்து இத்தகைய உரிமையினைப் பெற மறுத்துவிடும் இயேசு *(4:8 தொ)* எவ்வாறு பகைவர்களை வெற்றி கொண்டார் என்பதைக்காட்ட இந் நற்செய்தி முயல்கிறது. இறைவனின் அரசு கிறிஸ்துவுனுடைய அரசாகும். இதைக் காட்ட, இயேசு இஸ்ராயேலின் பழமைக்கு நிறைவு அளிக்கவே வந்தவர் என்பதால், மத்தேயு ஆதித்திருச்சபையின் மறைநூல் வாதத்திற்கு முக்கியத்துவம் தருகிறார். மற்றவற்றைவிட இவர் ஓர் ஒப்பற்ற திருச்சபையின் நற்செய்தியை எழுதியுள்ளார். கடந்த கால நிகழ்ச்சிகளை அவரது காலத்திற்குப் பிரசன்னப்படுத்துகிறார்.

இ) புனித லூக்காஸ்:- தான் திருச்சபையின் மீது கொண்டுள்ள அக்கறையைத் தனது நூலாகிய அப்போஸ்தலர் பணியில் வெளிப்படுத்துகிறார். மேலும் இறைவாக்கினருடைய அறிவிப்பின் காலத்திற்கும் திருச்சபையின் காலத்திற்கும் இடையில், இயேசுவின் காலம் என்ற ஒன்று உண்டு என்றும் உறுதியாகச் சுட்டிக்காட்டுகிறார் *(லூக் 16:16; 22:35-38; அ.ப. 2:1)*. திருச்சபையின் காலத்திற்கு இயேசுவின் வாழ்வு முக்கியத்துவம் அடைகிறது. திருச்சபைக்கான இறைவனின் திட்டத்தில், எடுத்துக்காட்டான மதிப்புடைய முதல் செயலாகும். இதனை அடிப்படையாக் கொண்டே வரவிருக்கும் காலமானது செயல்படுகிறது. கடந்தகால நிகழ்ச்சி எப்போதும் பிரசன்னமாக உள்ளது. மற்றொரு கோணத்தில் இயேசுவின் உருவமானது ஏழைகளுக்காக *(லூக் 4:18)*, பாவிகளுக்காக *(லூக் 15)*, உலகில் உரிமையற்றவர்களுக்காக தம்மையே அளிக்கின்ற இரக்கமிக்க மீட்பரைப் பற்றியதாகப், *(லூக் 3:6; 9:38. 42;அ.ப. 10:38)* பெரும்பாலும் உள்ளது. இறுதியாக, 'இறைமகன்' என்னும் சொல்லிற்கு ஒரு கண்டிப்பான பொருளைத்தந்து, 'கிறிஸ்து' என்னும் பெயரிலிருந்து அதனைத் தெளிவாக வேறுபடுத்தி காட்டுகின்றார் *(லூக் 1:35; 22:70)*.

ஈ) புனித யோவான்:- இயேசுவின் முன் வாழ்வு பற்றிய பாரம்பரிய அறிக்கையுடன் நூலைத் தொடங்கி கிறிஸ்துவில் தந்தையின் மகிமையினையும், தனது உலக வாழ்வுக் காலத்தில் அவர் நிறைவேற்றிய செயல்களில் அடையாளமாக ஏற்கெனவே காண்க்கூடிய உயிர்ப்பின் மகிமையினையும் காட்டுகிறார். விண்ணகத்திலுள்ள மனுமகன். இங்கே இருக்கிறார், விண்ணகம் திரும்புகிறார்

(யோவா 3:13.31; 6:62; 13:1; 14:28; 16:28; 17:5). இயேசுவின் சாவுக்குரிய உடலில் வெளிப்படுத்தப்பட்ட இறைவனின் வார்த்தை அவரே (யோவா 1:14). இவர் மட்டுமே நிறைவான தீர்மானமாக வெளிப் பாட்டாளர். அவருக்கு விசுவாசத்தை அளிப் பது வாழ்வாகும் (யோவா 3:16, தொ 36; 11:25 தொ). முடிவில்லா நிலை (யோவா 8:58; 10:38) அல்லது தந்தையில் இயல்பாக உள்ள நிலை (யோவா 10:30; 14:9 தொ 20; 17:21) பற்றிய வாக்குகள் அவரிடமிருந்தே வருகின்றன.

யோவானின் நூல் மற்வர்களிடமிருந்து பெரிதும் வேறுபட்டதாகும். திருச்சபை வாழ்விற்கு பொருளளிக்கக்கூடிய நாசரேத்தூர் இயேசுவின் ஆள் மற்றும் அவரது உலக செயல்களுக்கு விசுவாசிப்பவரை மீண்டும் மீண்டும் நடத்திச் செல்வதால், ஒப்பற்ற நற்செய்தி என்று அழைக்கப்படலாம். அருட் சாதன வாழ்வு, திருமுழுக்கு (3:22-30) மற் றும் நற்கருணை (யோவா 6) ஆகியவற்றி லும் இந்நிலை உண்மையானதே.

III. முடிவுரை:- முடிப்பதற்கு முன்னே, 'திருவெளிப்பாடு' என்னும் நூலிலும் சில குறிப்புகளைச் சுட்டிக்காட்ட வேண்டியது அவசியம். அது பல முக்கிய செய்திகள் குறிப்பாக சமயச்சடங்கு முறை வாழ்வுக்கு சந்திக்குமிடமாக உள்ளது. திருச்சபையினை நடத்திச்சென்று ஆள்கின்ற (திருவெளி 1-3) ஆண்டவராகிய உயிருள்ள கிறிஸ்துவை இந் நூல் காட்டுகின்றது. எல்லாவற்றிற்கும் மேலாக துன்புற்ற பாடுகளின் தழும்புக ளைத் தாங்கிய செம்மறியின் உருவத்தை அதில் காண்கிறோம் (திருவெளி 5). பகை வர் மீதான திருச்சபையின் வெற்றியினை உறுதிப்படுத்துகிறார் (6:15 தொ; 17:14). தமக்கும் திருச்சபைக்கும் இடையிலான திரு மணத்தை இறுதிக்காலத்திற்குக் குறித்து வைக்கிறார் (திருவெளி 19:7 தொ; 21:9). மனித வரலாற்றின் ஆண்டவராகிய இவரே 'முதலும் இறுதியும்' (1:17), தொடக்கமும் முடிவும் (22:13), அகரமும் னகரமும் (1:8; 21:6), ஆமென் (3:14), இறைவனின் அபிடே கம்பெற்றவர், மற்றும் இறுதியாக, எல்லா மாட்சிமைக்கும் மகிமைக்கும் உரிய அரச ருக்கெல்லாம் அரசர் ஆண்டவருக்கெல்லாம் ஆண்டவர் (19:19; 17:14) ஆவார்.

இப்போது ஆண்டவரும் கிறிஸ்துவுமாக உள்ள நாசரேத்தூர் இயேசுவின் மறைபொரு ளைப் பற்றிய இத்தகைய செய்திகளை ஒரே திட்டத்திற்குள் வரையறை செய்வதென்பது இயலாதது. நமக்காக வாழ்ந்து மரித்த இந்த இயேசுவின் பிரசன்னத்தை சில குறிப்பிட்ட மக்களுக்கு உண்மையென வெளிப்படுத்தும் நோக்கத்தைக் கொண்ட ஒரு இயக்கத்தை இவை வெளிப்படுத்துகின்றன. இயேசு என் னும் உண்மை மற்றும் கிறிஸ்தவ விளக்கம் என்பவற்றிற்கு இடையிலான உறுதியான இணைப்பைக் கொண்டு மரபுக் கோட்பாடு மதிப்பிடப்படுகிறது. ''ஊன் உருவில் வந்த இயேசு கிறிஸ்துவை ஏற்றுக் கொள்ளும், கொள்ளச் செய்யும் ஏவுதல் எல்லாமே இறை வனிடமிருந்து வருகிறது'' (1 யோவா 4:2). தம்மையே வெளிப்படுத்தவும், பிறருக்கு அறிவிக்கவும், விசுவாசமானது தனது ஆரம்ப பருவத்தில் பாலஸ்தீன யூதர், பரவி யுள்ளோர், சுற்றியுள்ள கிரேக்கர் போன்ற அக்காலத்திய பல்வேறு கலாச்சாரங்களைச் சார்ந்திருப்பதாகத் தன்னை காட்டியது. பல வேறு நாகரீங்களுக்கு ஏற்ப இவ்வாறு தன்னை மாற்றியமைத்துக் கொள்வதன் மூலம் திருச்சபை எல்லாவித எதிர்கால விளக்கங்களுக்கும் வழியேற்படுத்தி, முன்கு றித்துக் காட்டுகிறது. புதிய ஏற்பாட்டிற்கு பின்னர், திருமறையை விளக்கவுரையாளர் கள், இவ்வியக்கத்தைத் தொடர்கின்றனர். சான்றாக, விளக்கமானது எல்லா காலத்திற் கும் உரியது என்று குறிப்பிடப்படாமல் இயேசுவின் தன்னறிவு, அவரது இயல்பு மற்றும் அவரது ஆட்தன்மை, ஆகியவை பற்றி காலப்போக்கில் பல விவாதங்கள் எழும். இன்றும் இயேசு கிறிஸ்துவின் மீதான விசுவாசம் காணப்படும் பல்வேறு கலாச்சாரங்களில் இம்முறை கடைபிடிக்கப் பட வேண்டும்.

**இயேசு சோதிக்கப்பட்டது**

ஆவியானவரால் தூண்டப் பெற்று பாலை வனத்துக்குச் சென்ற இயேசு அலகையால் நாற்பது நாள்காலம், சோதிக்கப்பட்டார் *(மாற் 1:12-13; மத் 4:1-11; லூக் 4:1-13; எபி 2:18; 4:15)*. இறைமகன் இயேசு மனிதனாகப் பிறந்தார் சோதிக்கப்பட்டார். கடவுளின் மனிதரெனக் காட்ட சோதனையை வென் றார். ''அவர் நம்மைப் போல ஒருவராயிருப் பதால், பாவம் தவிர மற்றெல்லாவற்றிலும் சோதனை, துன்பங்களுக்கு உட்பட்டவரா னார்'' ஆகவே அவர் நம்முடைய சோதனை வேளையில் இரக்கம்கொண்டு உதவக் கூடி யவர் (எபி 4:15) என்று எபிரேயருக்கு எழு தப்பட்ட திருமுகம் கூறுகிறது. யோவான் நற்செய்தி இயேசு சோதிக்கப்படுவதைக் கூற வில்லை. மற்ற நற்செய்திகள் இதைப்பற்றி 5 கருத்துக்களைக் கூறுகின்றன. அ. இயேசு சோதனையைச் சந்தித்தார். ஆ. பாலைவனத் திலே சோதிக்கப்பட்டார். இ. நாற்பது நாள் பாலைவனத்தில் இருந்தார். ஈ. ஆவியால் தூண்டப்பட்டு அங்கு சென்றார். உ. சாத்தா னால் சோதிக்கப்பட்டார்.

மாற்கு நற்செய்தி மட்டும் காட்டுவிலங்கு களைப் பற்றிக் கூறுகிறது. ஆனால் நோன் பைப் பற்றிக் குறிப்பிடவில்லை. மத்தேயு, லூக்காஸ் நற்செய்திகளில் இயேசுவுக்கும் சாத்தானுக்குமிடையே நடந்த உரையாடல் நாடகப் பாணியில் தரப்பட்டுள்ளது. அல கையின் கருத்துக்களை உபாகமத்திலிருந்து மேற்கோள் கூறி *(6:13.16; 8:3)*, இயேசு அவற்றை உறுதியாக நிராகரிக்கிறார். இறை மகன் என்ற அளவில், அப்பத்தினால் மட் டும் வரும் வாழ்வுக்கு ஊக்கமளிக்கவும், இறைவனைப் போலிப்பகட்டான புதுமை யால் சோதிக்கவும், இறைவன்பால் கொண் டுள்ள முழுப்பிரமாணிக்கத்தைக் கைவிட வும் மறுத்து விடுகிறார்.

இயேசுவின் சோதனையைப் பற்றிய நிகழ்ச்சியுரைகள் பல விதங்களில் புரிந்துக் கொள்ளப்படுகின்றன.

1. இவை இயேசுவின் சுய வாழ்க்கை விவரிப்பாகும். இதை இயேசு மட்டும் தான் சீடர்களுக்கு தம் மெசியாத் தூதை விளக்கிக் காட்ட, அவர் கூற, சீடர்கள் எழுதியிருக்க லாம். ஆனால் இயேசு தம் போதனையில் சுயவாழ்க்கை குறிப்புகளை வெகு அரிதாகத் தான் தருகிறார். மேலும் இந்நிகழ்ச்சியின் இலக்கிய வடிவம், இயேசுவின் கூற்றைவிட அவரைப்பற்றிய சிந்தனையையே சுட்டிக் காட்டுகின்றது.

2. இவை இயேசுவும் இவ்வுலகில் மனித னாகப் பிறந்து பிறமனிதரைப் போலவே சோதிக்கப்பட்டார் என்பதை விளக்குவதற் காக எழுதப்பட்டவை பக்திமிக்க கற்பனை யாகும். இதில் வெற்றி பெற மறைநூலில் போதிய கருவிகளையும் உதவிகளையும் கண்டார்; பகட்டான புதுமைகளை அடிப்ப டையாகக் கொண்ட விசுவாசத்தை நிராகரிக் கிறார். ஒரு காலத்திற்குத் தனிமையையும் நோன்பையும் அனுபவித்தார்; அலகையின் ஏமாற்றும் தாக்குதல்களை வென்றார் என்று காட்ட எழுதப்பட்டதாகும் இந்த கற்பனை மிக்க நிகழ்ச்சியுரையாகும்.

3. இறுதியாக இயேசுவின் பணிக் காலத் திற்கு முன்னுரையாக அவர் சாத்தானையும் அதன் அதிகாரத்தையும் வென்றார் எனக் காட்டுவதற்காக எழுதப்பட்டது இது.

மத்தேயுவின் வரிசை லூக்காவின் வரிசை யிலிருந்து மாறுபடுகிறது. லூக்கா தரும் இரண்டாம் சோதனையை மத்தேயு மூன்றா வதாகத் தருகிறார். இதில் யாருடைய வரிசை சரியானது? எருசலேமை மையமாகக் கொண்ட தமது இறையியலுக்கேற்ப, எருச லேமில் சோதனைகள் முடிவு எய்துகின்றன என்று காட்ட லூக்கா வேண்டுமென்றே சோதனை வரிசையை மாற்றிக் கூறுகிறார் என்று கூற இடமிருக்கிறது. மத்தேயுவும் லூக்காவும் இயேசுவுக்கும் அலகைக்குமி டையே ஒரு நாடகப் பாணி உரையாடலைப் புகுத்தித் தங்கள் நிகழ்ச்சியுரைகளைத் தரு கின்றனர். அலகை எளிதில் நம்பத் தகுந்ததா கத் தோன்றும் மூன்று பிரச்சினைகளை எழுப்புகிறது. உபாகமத்திலிருந்து எடுத்துக் காட்டு கூறி, அவற்றை இயேசு நிராகரித்து விடுகிறார்

இச்சோதனைகள் எவ்வாறு நிகழ்ந்தன? அலகை ஏதோ ஒரு புலப்படும் உருவத்தில் இயேசுவின் முன்நின்றும், இயேசுவை மலைச் சிகரத்திற்கும் தேவாலய முகட்டிற்கும் தூக்கிச் சென்றும் அவரைச் சோதித்தது என்று ஏற்றுக் கொள்ள வேண்டுமா? அவசியமன்று. இவையாயும் இயேசுவின் மனதிலேயே நிகழ்ந்திருக்கக்கூடும். ''மிக உயர்ந்த மலை'' (மத் 4:18); அதிலிருந்து '' ஒரு நொடிப் பொழுதில்'' உலக அரசுகள் அனைத்தையும் அவற்றின் மாட்சிமையையும் காட்டுதல் போன்ற குறிப்புகள், இயேசுவின் மனச் சோதனையை நற்செய்தியாளர்கள் நாடகப் பாணியில் எடுத்துக் கூறுகின்றனர் எனக் காட்டுகின்றன. இயேசு பாலைவனத்தில் தான் இருந்த இடத்திலேயே சோதிக்கப்பட்டார். இது மத் 4:1-11-இலிருந்து தெளிவாகிறது. சோதனை முடிவில் இயேசுவை அவர் இருந்த இடத்திலேயே காண்கிறோம். அலகை புலப்படும் வடிவம் எடுத்திருக்கத் தேவையில்லை. நாடகப் பாணியில் கூறும் இலக்கிய அமைப்பை இறையியல் உட்கருத்துடன் குழப்பக்கூடாது.

இந்நிகழ்ச்சியுரை பற்றிய குறிப்புகள் இயேசுவிடமிருந்தே தோன்றியிருக்க வேண்டும். நாம் கொண்டிருக்கும் வடிவில், இந்நிகழ்ச்சியுரை ஆதித்திருச்சபையின் படைப்பாகும். சோனைகள் உண்மையானவையே (எபி 2:18; 4:15). அவை புறத்திலிருந்து வந்தன; அவரது ஆன்மாவைப் பாதிக்கவில்லை. சோதனைகளால் அவர் களங்கமடையவில்லை. பாவத்தில் விழவில்லை. அலகை அவரை வெல்ல முடியவில்லை.

ஞானஸ்நானத்திற்கும் பொதுப்பணிக்கும் இடையில் வரும் இச்சோதனை நிகழ்ச்சி, இயேசுவின் வாழ்வில் ஒரு முக்கிய இடம் வகிக்கிறது. ஞானஸ்நானத்திலே இயேசு மெசியாவாகத் திருநிலைப்படுத்தப்படுகிறார். யாவேயின் துன்புறும் ஊழியனாக நியமிக்கப்படுகிறார். இந்த அலுவலிலிருந்து வழுவச் செய்ய-இறைவனது சித்தத்துக்குப் பணியாது இருக்கச் செய்ய-அலகை இயேசுவைச் சோதிக்கிறது. இது இஸ்ராயேலரின் வரலாற்றை ஒத்ததாகும். இறைமக்களாக இருக்க அழைக்கப்பட்ட மக்கள் பாலைவனத்தில் சோதிக்கப்பட்டனர் (உப 8:3; 6:13. 16). ஆனால் பிரமாணிக்கம் தவறிப் போயினர். இயேசுவோ தமது அழைப்பிலிருந்து வழுவவில்லை. பிரமாணிக்கமுள்ளவராகத் திகழ்ந்தார். சோதனையில் இயேசு வெற்றி பெறுகிறார் (லூக் 4:4.8.12). அவரே உண்மையான இஸ்ராயேல், யாவேயில் உண்மையான ஊழியன். இச்சோதனைகள் இயேசு எத்தகைய மெசியாவாக இருப்பார் என்று காட்டுகின்றன. அவரால் ஏற்படுத்தப்பட்ட புதிய இஸராயேல் இறைவனது வார்த்தைகளால் வாழுகிறது. அவரது வாக்குறுதிகளின் மேல் நம்பிக்கை இழப்பதில்லை. உலகத்தையன்று, இறைவனைமட்டுமே ஆராதித்துப் பணி செய்கிறது.

இஸ்ராயேலர் பாலைவனத்தில் சோதிக்கப்பட்டதை மாதிரிகையாகக் கொண்டு மத்தேயு, லூக்கா தங்களுடைய மூன்று சோதனைகளையும் அமைத்திருக்கலாம். உபாகமத்திலிருந்து கொடுக்கப்படும் எடுத்துக்காட்டுகள் இதனைச் சுட்டுகின்றன. 40 நாட்கள் உண்ணா நோன்பு இருந்தபின் இயேசு சோதிக்கப்பட்டார் என மத்தேயு கூறும் போது, இயேசு நாற்பது நாளும் சோதிக்கப்பட்டதாக லூக்கா கருதுவதாகத் தெரிகிறது. இந்த நிகழ்ச்சியுரையில் கொடுக்கப்பட்டிருக்கும் சோதனைகள் நீண்டகாலச் சோதனைகளின் உச்ச கட்டமாகும்.

**இயேசுவின் ஞானம் - (WISDOM OF JESUS)**

இது ஒரு ஞானவாத நூலாகும். இதற்கு முதல் மூன்று நூற்றாண்டுகளில் காலம் குறிக்கலாம். இது மூலத்தில் கிரேக்க மொழியில் எழுதப்பட்டது. ஆனால் இப்போது இது இரு கோப்திக் கையெழுத்து பிரதிகளில் மட்டும்தான் நமக்குக் கிடைத்துள்ளது. இதில் ஒன்று எகிப்தில் செனோபோஸ்கின் என்ற இடத்திலுள்ள பழங்கால கிறிஸ்தவ துறவியர் இல்லத்தில் 1946-இல் கண்டுபிடிக்கப்பட்டது. இப்போது நாக் கம்மாதி நூல் நிலையத்தில் உள்ளது. இது யுக்னோஸ்தோசின் கடிதத்தை அடிப்படையாக வைத்து

எழுதப்பட்டதைப் போல் உள்ளது. இது, உயிர்த்த இயேசு, பன்னிரு சீடர்கள், ஏழு பெண்கள் இவர்களுக்கிடையில் நடக்கும் ஒரு உரையாடல் போல் உள்ளது. இவர்களின் கேள்விகளுக்குப் பதில் அளிக்கும் வழியாக இயேசு, கண்ணுக்குப் புலப்படாதவைகள், மனிதக் கணிப்புக்கு அப்பாற்பட்ட வானங்களுக்கு மேலான உலகம், அங்கு வாழும் தெய்வீகமானவர்கள் ஆகியவற்றைப் பற்றிய பல அண்டம் சார்ந்த வெளிப்பாடுகளை அறிவிக்கிறார். இவையெல்லாம் யூக்னோஸ்தோசின் நூலிலிருந்து எடுக்கப்பட்டதாகத் தெரிகிறது. இதன் பின்சேர்க்கைப் பகுதியில், மரிய மக்தலேன் (ஞானவாத இலக்கியத்தில் முக்கிய இடம் பெற்றவர்) சீடர்களின் தொடக்கம் பற்றியும், பணி பற்றியும் விபரம் அறிகிறாள்.

இந்த நூலுக்கும் பெர்லினில் உள்ள புகழ் பெற்ற இதே தலைப்பைக் கொண்ட கையெழுத்து நூலுக்கும் உள்ள தொடர்பு இன்னும் தெளிவாகத் தெரியவில்லை.

**இயேசுவின் பெயர்**

இக்கட்டுரையானது, 'இயேசு' என்னும் பெயர் பலபெயர்களில் ஒன்று என்கிற நிலையில், என்ன கூறுகிறது, எதைக் குறிப்பிடுகிறது என்பதைப்பற்றி விளக்கும்.

*1. ''இந்த இயேசு'':-* பெயரானது, சாதாரணமாக மனித மொழியில், குறிப்பாக விவிலிய மொழியில் குறிப்பிடப்படுவதைப் போல, தனிப்பட்ட மனிதனையும், அவனது நிலையான தனித்துவத்தையும் குறிப்பிடுகின்றது. மற்றவரல்லாத, எல்லாமும் அவராகவே உள்ள, பல இடங்களில் *(அ.ப. 1:11; 2:36; 5:30; 9:17)* குறிப்பிடப்படும் இந்த இயேசுவை இப்பெயர் குறிப்பிடுகின்றது. மனித உருவில் தோன்றியவர் மற்றும் விசுவாசத்தினால் இறைமனிதர் என அறிக்கையிடப்படுபவர் என்ற இரண்டிற்குமுள்ள தொடர்ச்சி மற்றும் அது பற்றிய பல்வேறு கிறிஸ்தவ உண்மைகளை இச்சொல் குறிப்பிடுகின்றது. ''நீங்கள் சிலுவையில் அறைந்த இந்த இயேசுவை, கடவுள் ஆண்டவராகவும் மெசியாவாகவும் ஆக்கினார்'' *(அ.ப. 2:36)*, ''உங்களிடமிருந்து எடுக்கப்பெற்ற இயேசு,....அவ்வாறே மீண்டும் வருவார்'' *(1:11)*.இவர் பாடுபட்டு இறந்ததால் 'மகிமையும் மாட்சிமையும்' இவருக்கு முடியெனச் சூட்டப்பட்டதையும் காண்கிறோம் *(எபி 2:9)*. ''நீ துன்புறுத்துகிற இயேசுவே நான்'' *(அ.ப. 9:5; 22:8; 26:15)* என்று கூறி தமஸ்குவிற்கு செல்லும் வழியில் பவுலை மனம் மாற்றிய காட்சியும் இத்தகையதே. தனது மக்களை விட்டு அகலாமல் உள்ள அவர், கடவுளின் பிரசன்னத்தைமட்டுமல்லாமல், பவுல் அப்போது அனுபவித்த வல்லமையைக் கொண்டுள்ள விண்ணக மனிதரும், பகைமையோடு பவுல் துன்புறுத்திவரும் கலிலேயாவைச் சேர்ந்த ''இறைநிந்தனையாளரும்'' உண்மையில் ஒருவரே என்பதையும் இக்காட்சி பவுலுக்கு வெளிப்படுத்துகின்றது. ''ஊனக்கண் கொண்டு கிறிஸ்துவைப் பார்க்காமல்'' *(2 கொரி 5:16)* பவுல் செயல்பட்டிருக்கலாம். எக்காலத்திற்கும் அவரைக் கிறிஸ்து இயேசு ஆட்கொண்டார் *(பிலி 3:12)*. ஆண்டவராகிய கிறிஸ்து இயேசுவின் அறிவைப்பற்றி எண்ணும்போது, அவர் இதுவரை கொண்டிருந்த அனைத்து சிறப்புகளும் ஒன்றுமில்லாதவையாக உள்ளன *(பிலி 3:8)*. உலகை இறைமுழுமையால் நிரப்புகின்ற இந்தக் கிறிஸ்து *(கொலே 1:15-20)*, 'ஆண்டவராகிய இயேசு' என்று நீங்கள் ஏற்றுக்கொண்ட கிறிஸ்துவாகவே உள்ளார்'' *(2:6)*.

*2. நாசரேத்தூர் இயேசு:-* மனித உடலுடன், சட்டத்திற்கு உட்பட்டவராக, ஒரு பெண்ணிடம் *(கலா 4:4)*, சீரியாவின் ஆளுநராக கிரனேயு ஆண்டபோது *(லூக் 2:2)*, தாவீதின் குடும்பத்தின் வழிவந்த யோசேப்பின் குடும்பத்தின் மூலம் *(1:27)* இயேசு உலகில் தோன்றினார். கலிலேயாவில் உள்ள நாசரேத்து என்னும் ஊரில் வாழ்ந்தார். எல்லா யூத குழந்தைகளைப் போன்று, சுத்திகரிப்பின்போது அவர் பெற்ற பெயரானது *(லூக் 1:31; 2:21; மத். 1:21; 25)*, இஸ்ராயேலில் தனிச்சிறப்புமிக்க ஒன்றல்ல *(சீரா 51:30)*. ஆனால், இச்சிறுகுழந்தையில் கடவுள்

இம்மானுவேலாக, 'கடவுள் நம்மோடு, தோன்றுவதன் மூலம் (*மத் 1:23*), அவரோடு இருந்து அவரில் மீட்பரான யாவே தோன்றுவார் (*உப 31:71*) என்று முதல் இயேசுவாகிய யோசுவாவிற்கு அளித்த வாக்குறுதி நிறைவேற்றப்படுகிறது. அவரது தோற்றம் சாதாரணமான ஒன்றாக இருந்ததால், அவரைக் குறிப்பிடுவதற்கு வழக்கமாக நடைமுறையில் உள்ளதுபோல் அவரது தந்தையின் பெயரையோ, முன்னோரின் பெயரையோ இணைத்து கூறாமல் (*சீரா 51:30*), அவர் வாழ்ந்த ஊராகிய நாசரேத்தின் பெயரை அவரது பெயருடன்சேர்த்து அழைக்கலாயினர். பிற்காலத்தில் மத்தேயு மற்றும் லூக்காவின் தலைமுறை அட்டவணைகள் இயேசுவின் அரசவழி மரபினை வலியுறுத்துகின்றன. விசுவாசத்தின் முதல் அறிவிப்புகள் நிகழ் காலத்தில் அவர் அழைக்கப்பட்டபடியும், அவர் சென்றபிறகு நிலவிய நினைவுகளின் படியும் 'நாசரேத்தூர் இயேசு' என்று அழைத்தனர் (*யோவா 19:19;அ.ப.2:22; 4:10; 6:14; 22:8*).

3. நற்செய்தி நூல்களில் இயேசு:- கிறிஸ்துவையும் அவரது பணிகளையும் குறிப்பிட நற்செய்தி நூல்கள் 'இயேசு' என்னும் பெயரைரே பயன்படுத்தின. பொதுவாக அவர் தலைவர் அல்லது குரு என்னும் பொருள்பட 'ராபி' என்றும் (*மாற் 4:38; 5:35; 10:17*), இறந்து மாட்சிமை அடைந்த பின்னர் 'ஆண்டவர்' என்றும் அழைக்கப்பட்டதாகத் தெரிகிறது. சில குறிப்பிட்ட விதிவிலக்குகளைத் தவிர்த்து (*மத் 21:3; லூக் 7:13; 10:1*), நற்செய்திகள் எப்போதும் வெறுமனே இயேசுவைப் பற்றியே கூறுகின்றன. இயேசு தமது மாட்சியை முழுமையாக வெளிப்படுத்துவதற்கு முன்னர், மக்கள் அனைவரும் அவரைச் சாதாரண மனிதனாகப் பார்த்த காலத்திற்கு முன் நிலவிய மொழியைச் செயற்கையாக மீண்டும் கொணர முயலும் முயற்சி அன்று இது. செயற்கைமுறை எதுவுமில்லாமல் விசுவாசத்தின் இயக்கத்தைப் பின்பற்றி ஆண்டவர் (*அ.ப. 1:21; 2:36; 9:17*), கிறிஸ்து *2:36; 9:22; 18:28*), மீட்பர் (*5:31; 13:23*), இறைவனின் மகன் (*9:20; 13:33*), கடவுளின் ஊழியன் (*4:27. 30*) போன்ற மீட்பு மற்றும் இறைப்பட்டங்களையே ''இந்த இயேசுவுக்கு'' நற்செய்திகளும் அளிக்கின்றன. இவை இயேசுவைப்பற்றிப் பேசும்போதெல்லாம், நற்செய்தி என்பது இயேசுவின் (*8:35*), கிறிஸ்து இயேசுவின் (*5:42; 8:12*), ஆண்டவராகிய இயேசுவின் (*11:20; 15:35*) நற்செய்தியைப் போதித்தலே என்பதைச் சரியான மரபாகக் கொண்டுள்ளன. இயேசுவின் தெய்வீகக் குணங்களையும், அவரது எல்லா செயல்களிலும் ஒரே மகனின் மாட்சிமையினையும் (*யோவா 1:14*), மனுமகனுக்கு அளிக்கப்பட்டுள்ள சிறப்பினையும் (*1:51; 3:14*) அடிக்கடி சுட்டிக்காட்டும் யோவான் நற்செய்தி, இயேசுவின் பெயரை உச்சரிக்கக் கிடைக்கும் சந்தர்ப்பங்களையெல்லாம் விடாமல், அது தேவைப்படாத நிலையிலும், சாதாரண உரையாடல்களில் மீண்டும் மீண்டும் பயன்படுத்துகிறது (*யோவா 4:6. 21; 11:32-41*); இவ்வார்த்தை வரும்பொழுதெல்லாம், 'இயேசு கிறிஸ்து மனிதனாக வந்தார்' (*1 யோவா 4:2*) என்பதை அறிக்கையிடக் கொண்டுள்ள விருப்பத்தால், இப்பெயரானது அதுவரும் இடங்களில் எல்லாம் வாழ்வின் வார்த்தையினுடைய (*1:1*) செலவாக்கினை வெளிப்படுத்துவது தெளிவாகிறது.

4. எல்லா பெயர்களிலும் மேலான பெயர்:- இயேசுவின் பெயரினின்றும், அது வெளிப்படுத்தும் தாழ்ச்சி, உண்மையான மனிதத் தன்மை ஆகியவற்றினின்று கிறிஸ்துவ விசுவாசம் விலகாமல் இருப்பதன் காரணம், இப்பெயர் எல்லாப் பெயர்களினும் மேலாக இருப்பதும், விண்ணிலும், மண்ணிலும், மண்ணிற்குக் கீழும் அனைத்தும் அதற்குமுன் முழந்தாளிட்டு இருப்பது மேயாகும் (*பிலி 2:9* தொ). இயேசு என்ற பெயர் ஆண்டவரின் சொந்தப் பெயராகவும் ஆயிற்று. இஸ்ராயேல் மீட்பிற்காக கடவுளின் பெயரை அழைத்தபோது (*யோவே 3:5*), அவர்களை மீட்க எப்போதும் அவர்களோடே இருக்க, கடவுளே அளித்த 'யாவே' என்னும் பெயரையே உச்சரித்தனர் (*யாத் 3:14* தொ). இப்பெயரானது, அசாதாரண

மான அழுத்தமும் திடமும் உள்ள ஒரு ஆட்தன்மையை வெளிப்படுத்தியது. இயேசுவின் பெயரும் அதேபோன்ற எல்லாம் வல்ல இறைவலிமையினையும், வெல்லமுடியாத ஆற்றலையும் கொண்டிருந்தாலும், நமக்கு அறிமுகமான பண்புகளையே, கொண்டிருந்தது. நமக்குச் சொந்தமான, தம்மையே எப்போதும் நமக்களித்த ஒருவரின் முன்னிலையில் நாம் நம்மையே காண்கிறோம்.

மனுக்குலத்தின் தனிப்பட்ட மீட்பும்(அ.ப. *4:12*), திருச்சபையின் தனிப்பட்ட செல்வாக்கும் *(3:6)*, திருச்சபையின் தனிப்பட்ட வல்லமையும் இயேசுவேதான்: ''இயேசு கிறிஸ்து உன்னைக் குணமாக்குகிறார்'' *(9:34)*. திருச்சபையின் முழுப்பணியும் இயேசுவின் பெயரால் பேசுவதாகும் *(5:40)*. இவ்வாறு தனது மனமாற்றத்திற்கு அடுத்த நாள், தமஸ்குவில் உள்ள செபக்கூடத்தில், பவுல் இயேசுவைப் பற்றிப் போதிக்கிறார் *(9:20)*. ஏதென்சிலுள்ள மக்கள் மன்றத்தில் ''இயேசுவைப் பற்றியும், உயிர்ப்பைப் பற்றியும் அறிவிக்கிறார்'' *(7:18*. கொரிந்துவில், ''சிலுவையில் அறையப்பட்ட இயேசுவைப் பற்றி அறிவிக்கிறார்'' *(1 கொரி 2:2)*. அனைத்து கிறிஸ்தவரின் வாழ்க்கையானது ''ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவின் பெயருக்காகத் தனது வாழ்வையே அர்ப்பணிப்பதில்'' அடங்கியுள்ளது *(அ.ப. 15:26)*. மேலான மகிழ்ச்சி இயேசுவின் பெயருக்காக இழிவு படத்தக்கவர்களாகக் கருதப்படுவதிலும் *(5:41)*, ஆண்டவராகிய இயேசுவின் பெயருக்காகச் சாவதிலும் *(21:13)* அடங்கியுள்ளது.

**இயேசுவின் போதனைகள்**

இது, நான்கு நற்செய்திகளில் மட்டும் தனிப்பட்ட விதத்தில் காணப்படும் போதனைகளின் தொகுப்பாகும். புதிய ஏற்பாட்டின் மற்ற பகுதிகளில் அரிதாகவே இயேசுவின் போதனைகள் நேரடியாகக் குறிக்கப்படுகின்றன *(1 கொரி 11:24-25* நேரடிக்கூற்றுக்கு எடுத்துக்காட்டாகும்). இயேசுவினுடையவை என்று பிற மூலங்களிினின்று குறிப்பிடப்படும் போதனைகள், அவற்றின் உண்மைத் தன்மை ஏற்கக்கூடியதாக இருப்பினும் அவரது முக்கிய போதனைகளுக்கு சிறிதளவே புதிய கருத்துக்களைச் சேர்க்கின்றன. புதிய ஏற்பாடானது, விண்ணகம் சென்ற இயேசுவுக்கு உரியவை என்று கூறப்பட்டு, ஆவியால் நிரப்பப்பட்ட மனிதனுக்கு இறைவாக்கு முறையின் மூலமாக அறிவிக்கப்பட்ட *(திருவெளி 1:10-3:22)* வார்த்தைகளைக் கொண்டுள்ளது. மேலும், ஆதித்திருச்சபையில் முதன் முதலாக சேகரிக்கப்பட்ட இறை ஏவுதலுக்கு உட்பட்ட சிந்தனைகளையும், இயேசுவின் மரணத்திற்கு முற்பட்ட, நினைவு கூறப்பட்ட சொற்களையும் நற்செய்திகள் கொண்டுள்ளன என்று கூறலாம். நற்செய்தியாளர்களோ அல்லது அவர்கள் கையாண்ட மரபுகளோ நடுநிலைமையுடைய போதனைகளை எடுத்துக்கூறிய செய்தியாளர்கள் அல்ல. ஆனால், அவரையோ அல்லது அவருடைய செய்தியைப்பற்றிய தங்களுடைய உறுதிப்பாட்டை ஓரளவாவது எடுத்துக்காட்டவே அவரது போதனையை அவர்கள் பதிவு செய்தனர்.

நற்செய்தி நூல்கள் ஆராயப்பட்டு, இலக்கிய மற்றும் வரலாற்று திறனாய்வு முறைகளால் ஒப்பிடப்படும்போது, இயேசுவின் போதனையில் மைய முக்கியத்துவத்தைக் கொண்டு, அவருடைய சொற்களுக்கும் செயல்களுக்கும் (உ.ம். இறையரசின் வருகை, பாவிகளுக்கு மன்னிப்பு அளித்தல், மற்றும் துன்புற்று மரணம் அடைவது வரையிலான கீழ்படிதல்) ஒன்றிணைப்பை அளிக்கின்ற சில குறிப்பிட்ட தலைப்புகள் தோன்றுகின்றன. இவற்றை விளக்குவதோடு, இறைவன் மற்றும் நமக்கான அவருடைய சித்தம் பற்றிய போதனைகளும், தம்முடைய மனிதத்துவம் மற்றும் பணி பற்றிய இயேசுவே புரிந்து கொண்ட விதத்தையும் காண நாம் முயலவேண்டும்.

இயேசுவின் போதனைகளின் விளைவுகளை வெளிக்கொணருவது பிற்கால சந்ததியினரது கடமையாக இருந்திருக்கிறது. இவ்விளைவுகள், அவரது கூற்றுக்கள் நேரடியாக அறிவித்த தலைப்புகளும் அவருடைய கூற்

றுக்களில் உட்கருத்தாக அமைந்த தலைப்புகளும் ஆகும். ஒத்தமை நற்செய்திகள் எழுதி முடிக்கப்பட்ட காலத்திலேயே இவ்வலுவல் துவங்கிவிட்டது என்று கருத காரணம் உள்ளது. நான்காவது நற்செய்தியின் தோற்றத்துடன் இயேசுவின் போதனையானது புதிய ஏற்பாட்டு காலத்தில் மிகத் தெளிவான மற்றும் மிகவும் ஒன்றிணைந்த மறு வடிவமைப்பினைப் பெற்றது. யோவான் மற்றும் ஒத்தமை நற்செய்திகளுக்கு இடையே உள்ள உறவுபற்றி எந்தநிலை எடுக்கப்பட்டாலும், எந்தத் தலைப்பையும், அதைப்பற்றி அதன் இரு வேறுபட்ட அமைப்புகளில் முதலில் படிக்காமல் அது பற்றிய இயேசுவின் போதனைகளை இரு அமைப்புகளிலிருந்தும் தாறுமாறாக ஒன்று சேர்த்து ஒரு விவரிப்பை அளிக்க பெரும்பாலான அறிஞர்கள் உடன்படுவதில்லை.

1. இயேசு போதகர்:- இயேசு, அவருடைய சீடர்களாலும் எதிரிகளாலும் (மாற் 12:14) பொதுவாக மக்களாலும் போதகர் என்று கருதப்பட்டார். லூக்கா தவிர மற்ற நற்செய்தியாளர்கள் அனைவரும் ''ராபி'' அல்லது அதன் வேறுவடிவமான ''ராபோனி என்னும் 'அரமாயிக்' சொல்லையே கொண்டுள்ளனர். அவர் வெளிப்படையாக திறந்த வெளியிலும், செபக்கூடங்களிலும், ஆலயத்திலும் போதித்தார். தனது சீடர்களுக்கு தனியாகப் போதித்தார். அக்கால யூத போதகர்களைப் போன்றே அவர் சீடர்களைச் சேர்த்தாலும், அவர்களைப்போல விவிலிய விளக்கப்பள்ளியை உருவாக்காமல், தனது போதனைகளை அறிவிக்கத் தமது சீடர்களை அனுப்புகிறார் (மாற் 6:7-13). ஏற்றுக்கொள்ளப்பட்ட போதகர் என்ற நிலையில் நடத்தை மற்றும் கோட்பாடு பற்றிய கேள்விகளில் அவர் கலந்தாலோசிக்கப்பட்டார். விவாகரத்து உரிமை பற்றி அவரிடம் கேட்கப்பட்டபொழுது மாறுபட்ட சிறப்பான போதனையை அவர் பதிலாக அளித்ததை நற்செய்தி நூல்கள் குறிப்பிடுகின்றன (மாற் 10;1-12). மேலும், விபச்சாரம் பற்றிய தனிப்பட்ட குற்றச்சாட்டு (யோவா 7:53-8:11), ஒரு குடும்பத்தகராறு (லூக் 12:13-15, செசாருக்கு யூதர்கள் வரி செலுத்த வேண்டிய சட்டமுறை (மாற் 12:13-17) பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளது. இறையியல் கேள்விகளில், மிக முக்கிய கட்டளை பற்றிய கருத்து (மாற் 12:28-34; லூக் 10:25-28), உயிர்ப்பு பற்றிய சதுசேயருடைய எதிர்ப்பிற்கு பதில் (மாற் 12:18-27), வரவிருக்கும் காலத்தில் வாழ்வுபெற நிபந்தனைகள் அளித்தல் (மாற் 10:17-22), பிறவியிலேயே குருடனான ஒருவனைப்பற்றிய சீடர்களின் சந்தேகத்தை தீர்த்தல் (யோவா 9:2-3), மீட்பு பெற குறிக்கப்பட்டோரின் எண்ணிக்கைப் பற்றி ஓரளவு உறுதியளித்தல் (லூக் 13:23-24), போன்றவற்றைப்பற்றிக் கேட்கப்பட்டு பதிலளிக்கிறார். சங்109-யைக் குறிப்பிட்டு, மெசியா தாவீதின் வழிவந்தவரா என்பதுபற்றிய விவாதத்தைத் தொடங்கி வைப்பவராக இயேசுவே காட்டப்படுகின்றார் (மாற் 12:35-37). இத்தகைய அனைத்துச் செயல்களிலும், இயேசு அக்கால போதகர்களின் எண்ணத்திற்கு உட்பட்டு நடப்பவராகவும் சில கருத்துக்களிலாவது அவர்களைப் போன்றவராகவும் உள்ளார்.

மேலும் இயேசு தமது செயல்களுக்கு விளக்கமளிப்பவராகவும் (மாற் 11:15-17), அல்லது மலைப்பொழிவு மற்றும் மாற் 13-ல் உள்ள வெளிப்பாட்டு உரை முதலிய விரிவான சொற்பொழிவுகளை அளிப்பவராகவும் காட்டப்படுகிறார். இச்சொற்பொழிவுகள்பற்றிய ஆய்வு இவை ஓரளவு நற்செய்தியாளர்களின் தொகுப்பையும், அவற்றில் உள்ள போதனைகள், கேள்விகள் மற்றும் திறனாய்விற்கு அளிக்கப்பட்ட பதில்கள் என்றும் சுட்டுகிறது. மாற் 4:1-33-இல் உள்ளது போன்ற உவமைகளின் தொகுப்பு, அல்லது மத் 13-இல் உள்ள பெரிதும் விரிவுபடுத்தப்பட்ட தொகுப்பு போன்றவையும் இத்தகையனவே. இறையரசைப்பற்றி உவமைகளில் அறிவிப்பவராக இயேசு காட்டப்படுகின்றார். மாற் 4:10-12-இல் உள்ள கடினமான போதனைகள், இயேசு தம்மீது தாமே வித்தித்துக்கொண்ட பணிக்கும், பொது இறைவாக்குரைத்தல் மற்றும் தனிப்பட்ட அறிவுரை அளித்தல் (ஏச 6:9-10; 8:16) என்னும்

இறைவாக்கினரின் இருவித பொறுப்பபிற்கும் இடையில் ஒரு இணைந்த நிலையினைக் காட்டுகின்றன. ''பொது அறிவிப்பு மற்றும் தனிப்பட்ட விளக்கம்'' என்னும் முறையானது யூத போதகர் முறைகளிலிருந்து அறியப்படுகிறது. இதற்கு இயேசுவின் போதனைகளில் எடுத்துக்காட்டுகள் காணப்படுகின்றன (மாற் *7:1-23; 10:2-12*). மாற்கில் இம்முறை காணப்படுவதை, உவமைகளில் காணப்படும் மறைவுத் தன்மையை விளக்க நற்செய்தியாளர் பயன்படுத்தும் செயற்கை யுக்தியாகப் பல அறிஞர்கள் கருதுகின்றனர். இது எவ்வாறு இருப்பினும், சில உவமைகள் முதலில் கேள்விகளுக்குப் பதிலாகக் கூறப்பட்டன. அவை இப்போது காணப்படும் சூழ்நிலையிலிருந்து அவற்றைப் பிரித்து எத்தகைய கேள்விகளுக்கு அவை பதிலளிக்கின்றன என்பதைக் கருத்தில் கொண்டு, அவற்றை மிகவும் நிறைவான முறையில் புரிந்து கொள்ள இயலும்.

இயேசுவிற்கும் ராபிகளுக்கும் இடையில் இணையமைப்புத் தன்மை இருந்தாலும், அவருடைய காலத்தவரைக் கடிந்து கூறுகின்ற சொற்களை நற்செய்தி நூல்கள் கொண்டுள்ளன (மத் *23:1-36*-ல் உள்ள நீண்ட விவாத உரையில் பதிக்கப்பட்டுள்ள மாற் *12:38-40*-இன் சுருக்கமான கூற்றுக்கள்). அவர்களுடைய, போதனையின் தொகுப்பு ''மனிதர்களின் பாரம்பரியமாகக்'' கருதப்படுகிறது (மாற் *7:7*), மேலும், இயேசுவின் போதனையானது பொது வியப்பையும் சில நேரங்களில் மறுப்பையும் உருவாக்கியது (மாற் *1:22, 27; 6:2; 11:18*). கப்பர்நகூம் செபக்கூடத்தில், அவருடைய சொற்களும் பேயோட்டுதலும், மறைநூல் அறிஞர்களைப்போலன்றி அதிகாரத்துடன் உரைக்கப்பட்ட இப்புதிய போதனைபற்றிக் கேட்பவரை வியப்படையச் செய்தன (அதாவது, அவர் சாதாரண போதகர்களைப் போலன்றி, புதிய கோட்பாடுகளை அறிமுகப்படுத்தக்கூடிய சலுகையுடைய நியமிக்கப்பட்ட போதகரைப்போன்று போதித்தார் என்ற பொருள் படலாம்). போதகர் என்ற நிலையில் அவருடைய பணியானது குணமாக்குவதோடு நெருங்கிய தொடர்புடையதும் (லூக் *5:17; 6:6; 13:10-11*), ஆற்றல் மிக்க செயலைச் செய்யுமாறு அவர் வேண்டப்பட்டபோது 'போதகரே' என்ற அழைக்கப்படுவதும் (மாற் *4:38; 5:35; 9:17; 38; 10:51*; இக்கருத்து யோவா *3:2*-இல் வெளிப்படையாக உள்ளது) குறிப்பிடத்தக்கன. இப்பெயரானது, இக்கால வழக்கைவிட பரந்ததாக பொருள் கொண்டது. ஆகவேதான் இதற்குப்பதிலாக ''தலைவர்'' என்ற மாற்றுச்சொல்லை சில நேரங்களில் லூக்கா பயன்படுத்துகிறார். வரவிருக்கும் காலத்தில் உயர்ந்த இடங்களுக்கான செபதேயவின் மக்களுடையவேண்டுகோளும் (மாற் *10:35-37*) உருமாற்றத்தின் போதான பேதுருவின் மதி மயங்கிய கூற்றும் (மாற் *9:5*), இப்பெயருக்கு, சாதாரண பொருளுக்கும் அதிகமாக பொருள் அளிக்கும் ஆதிகால கிறிஸ்தவப் போக்கைக் காட்டுகின்றன. இப்போக்கு நான்காம் நற்செய்தியில் வெளிப்படையாகிறது. அதில் ''ராபி'' என்ற சொல்லை இறைமகனுடனும் இஸ்ராயேலின் அரசனோடும் ஒன்றாக்குவது மட்டுமில்லாமல் (யோவா *1:49*), இயேசுவினுடைய போதனையின் பொருளடக்கம் அவருடைய சுய வெளிப்பாடாகவும் (யோவா *17:14-31; 8:12-30*) அமைந்துள்ளது.

எல்லா நற்செய்திகளிலும் இத்தகைய போதனைச்செயலின் பொருள் இன்னும் சிறிது விரிவாக்கப்படுகிறது. பொதுமக்களின் கருத்தின்படி, அவர் ஒரு இறைவாக்கினர், திருமுழுக்கு யோவானின் வாரிசு அல்லது முந்தைய காலத்தின் இறைவாக்கு ஆவியைப் புத்துயிர் ஊட்டுபவர் (மாற் *6:15; 8:28*). ''சொந்த ஊரிலும் சுற்றத்திலும் தம் வீட்டில் தவிர மற்றெங்கும் இறைவாக்கினருக்கு மதிப்பு உண்டு'' (மாற் *6:14*) என்னும் பழமொழியானது, இயேசு இக்கருத்தினைக் குறிப்பாக ஏற்றுக்கொள்வதை வெளிப்படுத்துகிறது. ''இறைவாக்கின் எருசலேமுக்கு வெளியே மடிவது முறையாகாதே'' என்னும் லூக் *13:33*-ன் கூற்று, இறைசெய்திக்காக துன்புற்ற இறைவாக்கினர்களுடன் இயேசு தம்மை ஒன்றாக்குவதாகக் கூட்டுகிறது. அவருடைய போதனையின் பெரும்பகுதியானது

அமைப்பிலும், முறையிலும், உட்பொருளிலும் இறைவாக்கினரின் போதனையோடு நெருங்கிய தொடர்புடையதாக உள்ளது. மாற் 1:15-இல் வரும் அவருடைய செய்தியின் தொடக்க சுருக்கமானது, அதனுடைய சொல் தேர்வின்மூலம் இறைவாக்கை நிறைவேற்றுவதன் முன்னோடியாக, இயேசுவுக்கு இறைவாக்கினர் மரபில் உடனடியாக இடமளிக்கிறது. அவருடைய அழைப்புப்பற்றிய அவருடைய ஐயமற்ற உணர்வை, 'போதகர்' என்னும் பெயர் போதிய அளவு வெளிக்கொணரவில்லை. பொதுமக்களின் கருத்து ஓரளவிற்கு இறைவாக்கினர் கருத்துடன் நெருங்கி வந்தது. தாம் செய்வதை சுட்டிக்காட்டுவதற்கு, அவரே மனுமகன் என்ற பெயரையே தேர்ந்தெடுத்ததாகத் தெரிகிறது.

2. போதனையின் வடிவங்கள்:- இயேசுவினுடைய போதனையின் வடிவங்கள், வடிவத்திறனாய்வு அமைப்புகளின் மூலம் அறியப்படலாம். உவமைகளும் கூற்றுக்களும் ஒன்றோடொன்று சேர்ந்திருந்தாலும், இரண்டிற்குமிடையே பரந்த வேறுபாடு உள்ளது. கூற்றுக்கள் அவற்றின் மாதிரிகைப்படியோ (அதாவது மேற்கோளுரை, அறிவுரை, மற்றும் ஆசிர் போன்று) அல்லது அவை வெளியிடபட்ட கலாச்சார சூழ்நிலையின்படியோ (இறைவாக்கு, வெளிப்பாடு மற்றும் ஞான மரபுகளைப் போன்று) தொகுக்கப்படலாம். கூற்றுகள் பற்றிய இத்தகைய ஆய்வானது, எழுதப்பட்ட இயேசுவினுடைய மரபினுடைய பல்வேறு கருத்துகளுக்குள்ளும் சிறிது நுண்ணோக்கு அளிக்கிறது. கூற்றுகளின் மூலத்தன்மையைத் தீர்ப்பிட வாய்ப்பளிக்கிறது. அவை பிறருக்கு எடுத்துக் கூறப்பட்ட தொடக்க காலத்தில் அவற்றைப் பாதித்தவைகளையும் அறிய வாய்ப்பளிக்கிறது.

இந்த கூற்றுக்கள் மூலத்தில் அரமாயிக் மொழியில் கூறப்பட்டன. இந்நற்செய்திகளுடைய கிரேக்க வாசகத்தின் பின்னணியில் அரமாயிக் நடை, மொழி மற்றும் மரபுக் கூறு பற்றிய தெளிவான ஆதாரங்கள் இருப்பதைக் காட்ட அறிஞர்கள் பெரிதும் விழைந்துள்ளனர். தனிப்பண்புகள் மற்றும் பல் வேறு இணையமைப்புகளுடன் கூடிய எபிரேய பாடல் வடிவங்கள் அடிக்கடி காணப்படுவது கவனத்திற்குக் கொண்டுவரப்படுகிறது. இக்கூற்றுக்களைப் பாலஸ்தீன அரமாயிக் மொழிக்கு மீண்டும் மொழிபெயர்ப்பதானது, செமித்திய பாவகையின் பொதுவான இயல்பாகிய வார்த்தைகளை வைத்து விளையாடும் பண்பைக் காட்டுவதாகத் தெரிகிறது. அரமாயிக் மொழியில் இக்கூற்றுகள் முன்னரே உன்னிப்பாக படிக்கப்பட்டு தியானிக்கப்பட்டு ஏசாயாவின் நடையையும் கம்பீரத்தையும் பின்பற்றி அமைக்கப் பட்டிருப்பதாகக் கூறப்படும். இத்தகைய இறைவாக்கு வடிவம் மற்றும் மொழியை பயன்படுத்துவதன் மூலம், தனது சொற்கள் மறக்கப்படாமலிருக்க என்று போதகர் உறுதி செய்துள்ளார்.

இயேசுவின் போதனைகள் அனைத்தும் உவமைகள், தொடர்பற்ற போதனைகள் மற்றும் சொற்பொழிவுகளால் வெளிப்படுத்தப் படுவதில்லை. ஒத்தமை நற்செய்திகளில் ஓர் அளவுப்பகுதி ''அறிவிப்புக்கதை'' அல்லது சிறிய நிகழ்ச்சியுரையாக இருக்கலாம் (உ.ம். மாற் 2:15-17). இது சூழ்நிலையை மிகச் சுருக்கமாக எடுத்துக்கூறி, அதில் ஈடுபடும் ஆட்களைப்பற்றிக் கவலைப்படாமல், கேள்விக்குப் பதிலாகவோ அல்லது ஒரு செயலுக்குப் விளக்கமாகவோ அமையும் இயேசுவின் கூற்றுக்கு இட்டுச் செல்லுகிறது. இயேசுவினுடைய போதனையானது பேச்சோடு நின்று விடாமல், ஓரளவு செயல்களிலும் அறிவிக்கப்படுவது குறிப்பிடத்தக்கது. திருமுழுக்கு யோவான், இயேசுவின் பணியைப் பற்றி அறிந்துவர தூதுவர்களை அனுப்பிய பொழுது, அவருடைய பதிலானது அவரது குணப்படுத்தும் பணியையும் சுட்டிக்காட்டுகிறது (மத் 11:2-6; லூக் 7:18-23). இவ்வாறு, ஒத்தமை நற்செய்திகளில் நன்கு குறிப்பிடப் பட்ட வடிவை உடைய ''புதுமை நிகழ்ச்சி'' களையும் பொதுவான அல்லது நன்கு குறிப் பிடப்பட்ட வடிவம் இல்லாவிடினும் இயேசுவே ஆண்டவர் என்பதை வெளிப்படுத்துகின்ற ''ஆண்டவர் நிகழ்ச்சிகளையும்'' கணக்கில் எடுத்துக்கொள்வது அவசியமா

கும். சீடர்களை அழைத்தல், இயேசுவே மெசியா என்று அறிவித்தல், உருமாற்றம், எருசலேமிற்குள் நுழைதல் மற்றும் ஆலயத்தைத் தூய்மைப்படுத்துதல் ஆகியவற்றை இவை கொண்டுள்ளன.

நான்காவது நற்செய்தியில் உவமைகள் இல்லை எனலாம். சில முதுமொழிகளே உள்ளன. அவையும் உரையாடல்களிலும் நீண்ட உரைகளிலும் உள்ளடங்கிப் போகின்றன. இந்த நூலில் வரும் நாடக உரையாடலானது (உ.ம். நிக்கோதேமுவுடன் *3:1-15*), ஒத்தமை நற்செய்திகளில் அதிகம் காணப்படுவதில்லை. இந்நூலில் வரும் நீண்ட பின்னிப்பிணைந்த உரைகள் ஒத்தமை நற்செய்திகளில் வரும் தளர்வான தொகுப்பபுகளுக்கு ஒத்ததாய் இல்லை. மாறாக கிரேக்க மெய்யியல் சமய உரைகளோடு ஒப்புமை கொண்டுள்ளது. யோவானின் சொற்பொழிவுகளில் காணப்படும் கிரேக்க மாதிரி சொல்வழக்கு, எதிர்பார்த்ததைவிட அதிக அளவில் பாலஸ்தீனத்தில் அறியப்பட்டு இருந்ததாக சாக்கடல் ஏடுகள் காட்டினாலும், நான்காவது நற்செய்தியில் இயேசுவின் போதனை தோன்றுகின்ற வடிவங்கள், ஒத்தமை நற்செய்திகளின் எளிய வடிவங்களை வேண்டுமென்று மாற்றியமைத்திருப்பதாகவே இன்னும் தோன்றுகிறது.

*3. பாரம்பரியத்தில் மாற்றங்கள்:-* இயேசுவின் சொற்கள் (மற்றும் செயல்கள்) எந்த அளவிற்கு நம்பகமான விதத்தில் பாதுக்காக்கப்பட்டிருந்தன என்பது பற்றிய முடிவில் அறிஞர்கள் பெரிதும் மாறுபட்டு உள்ளனர் என்றாலும், நான்காவது நற்செய்தி எழுதப்படுவதற்கு நீண்ட காலத்திற்கு முன்னரே, இந்த மாற்றங்கள் நடைபெற்றிருந்திருக்கலாம். முதலில் நிரூபிக்கப்பட வேண்டியது என்ன என்பது பற்றி முதலில் தெரிந்து கொள்ளாமல், மூலப்படிவத்திலிருந்து இரண்டாவது தரமானவற்றைப் பிரித்தெடுப்பதற்கானப் புறநிலை அளவைக் கண்டுபிடிப்பது எளிதானதல்ல. இயேசுவின் போதனையை எடுத்துக்கூறும்போது, ஆதிக்கிறிஸ்தவ சமூகத்தின் எந்த பழக்கங்களும் விருப்பங்களும் அவரது சொற்களையும் செயல்களையும் நினைவு கூறும்படிச் செய்தன என்பதை நினைவிற் கொள்வது அவசியமானதாகும். தொடக்கத்திலிருந்தே ஒருவித தேர்வு முறை ஏற்பட்டிருக்கக்கூடும். சொற்களும் மையக்கருத்துக்களும் எவ்வாறு மாற்றியமைக்கப்பட்டுள்ளன என்பதைக் காண்பது, எழுதப்பட்ட நற்செய்திகளை ஒப்பிடுவதன் மூலம் இயலும்.

பல உவமைகளில், பிற்கால மாறிய சூழ்நிலைகளின் செல்வாக்கைக் கண்டுணரலாம். உதாரணமாக, மத் *22:1-14*-இல் வரும் திருமண விருந்து உவமையினை அதற்கிணையான லூக் *14:16-24*-இல் வரும் பெருவிருந்து பற்றிய உவமையுடன் ஒப்பிடும்போது, உவமையின் மூலக்கரு உடனே தெரிகிறது. அது அழைக்கப்பட்ட விருந்தினருக்கு உயர்ந்த உணவை தயாரித்து, பின்னர் அவர்கள் வரமறுத்தபோது அனைவருக்கும் பொதுவாக அதனை அளித்த மனிதனைப்பற்றிய உவமை ஆகும். இயேசுவிற்குப் பதிலளிக்க மறுத்து, பாவிகளுக்கு அவர் நற்செய்தி அளிப்பதைக் குறை கூறிய பரிசேய விரோதிகளுக்கு இவ்வுவமை உடனடியாகப் பொருந்துகிறது. நகருக்கு வெளியிலுள்ள மக்களை மீண்டும் மீண்டும் அழைக்கின்ற லூக்காவின் வடிவமானது (லூக் *14:23-24*), திருச்சபையின் புறவினத்தாருக்கான பின் வந்த பணியின் தொடர் உருவகமாகத் தெரிகிறது. மத் *22:6-7*-இல் கிறிஸ்தவ பணியாளர்களின் வேதசாட்சி மரணம் மற்றும் எருசலேமின் அழிவு ஆகியவற்றை மறைவாக சுட்டிக் காட்டுகின்ற பரந்த தொடர் உருவக வளர்ச்சி உள்ளது. இவ்வாறு, இறைவாக்கினர்கள் முதல் இறுதித்தீர்ப்பு வரையிலான வரலாற்றின் திட்டமாக உவமையை அது மாற்றுகின்றது. முதலில் ஒரு தனிப்பட்ட உவமையாகத் தோன்றிய மிகவும் புதிரான மத் *22:11-14* என்ற பகுதி (லூக்காவில் இல்லை) அதற்கு முந்திய ஒன்றோடு சேர்க்கப்பட்டு ஒழுக்கமற்ற, மனந்திருந்தாத புறவினத்தாரை அனுமதிப்பதிலிருந்து ஆதித்திருச்சபையை காப்பதற்கான ஒரு எச்சரிக்கையாக அமைந்திருக்கலாம்.

இயேசுவின் காலத்தவருக்குக் கூறப்பட்டதை மாற்றி அமைத்தல், ஒழுங்குபடுத்துதல் மற்றும் தொடர் உருவமாக்குதல் மூலமாக தங்களது அவசியத்திற்கேற்ப பயன்படுத்துகின்ற ஆதித்திருச்சபையின் மனப்போக்கை இந்த உதாரணம் தெளிவாக்குகிறது. அவர்கள் இறுதிக்கால சவாலை (உடனடி) எதிர்காலத்திற்கு மாற்றினர், திருச்சபையின் புறவினத்தார் பணிக்கு இடமளித்தனர், மற்றும் அறிவுரை பாணியளித்து தங்களது வாழ்விற்கான விதிமுறைகளைக் கண்டுபிடித்தனர்.

ஒத்தமை நற்செய்திப் பாரம்பரியத்தின் தனிப்பட்ட அமைப்புகளை இப்போது ஆராய்ந்தால் சில குறிப்பிட்ட தனிக்கூறுகள் ஒவ்வொன்றிலும் ஆதிக்கம் செலுத்துவதாகத் தோன்றுகிறது. இவ்வாறு, மத்தேயுவிற்கேயுரிய பகுதிகளில் மனுமகனின் வருகையை முன்னறிவித்தலை நோக்கிய போதனையின் மீது குறிப்பிடத்தக்க கவனமும், யூத சட்டத்தினுடைய நிலையான முக்கியத்துவத்தின் மீதான அதிக அழுத்தமும் உள்ளன. லூக்காவின் சிறப்புப் பகுதிகள், புறவினத்தார் மற்றும் அவபேறுடையோர் ஆகியோருக்கான கிறிஸ்தவப் பணியில் தனிப்பட்ட நாட்டம் கொண்டுள்ளன. அவ்வாறே மாற்குவும் தனக்கே உரிய அக்கறையைக் கொண்டுள்ளது. அவரது போதனையைப் பற்றிய ஒருமித்த வடிவமைப்பதற்காக, இயேசுவின் சொற்கள் மதிப்பீடு செய்யப்படும்போது, அவை காணப்படும் அமைப்பு வகைகளுக்கும், அவற்றை மாற்றியமைக்க காரணமாக இருந்தவற்றிற்கும் சிறிது முக்கியத்துவம் அளிப்பது அவசியமானது.

*4. முக்கியத் தலைப்புக்கள்:-* ஒத்தமை நற்செய்திகளில், இறையரசானது இயேசுவின் போதனையில் ஆதிக்கம் செலுத்துகிறது. இச்சொற்றொடரின் அடிப்படையான உட்பொருளானது, ராபிகளின் மரபு வழியாக, பழைய ஏற்பாட்டிலிருந்து (சிறப்பாக சங்கீதங்கள், மற்றும் உபஏசயவிலிருந்தும்) எடுத்துக்கையாளப்படுகிறது. அவற்றில் இறைவன் ஏற்கனவே அரசராக உள்ளார் மற்றும் அவரது வெளிப்படையான வெற்றியில் இறுதியாக ஆட்சிபுரிவார் என்னும் இரட்டை உறுதிப்பாட காணப்படுகிறது. வளர்ச்சி பற்றிய கருத்தைச் சார்ந்துள்ள இயேசுவின் உவமைகளில் இந்த இரட்டை நிலை உள்ளது. எபிரேய எண்ணத்தில், இயற்கையினுடைய புரிந்துக்கொள்ளமுடியாத நடைமுறைகள் (மாற் 4:27), இறைவன் தனது மக்களின்அன்றாடவாழ்வினைப்பாதுகாக்கின்ற மறைபொருளான மேலாண்மைக்கு அடையாளமாகும். அதே நேரத்தில், உருவகத்தினுடைய உவமேய போதகம் வரலாற்றின் கால கட்டத்தில் இந்த மேலாண்மை ஆற்றலுடன் செயல்படுவதைச் சுட்டிக்காட்டுகிறது. முதல் நூற்றாண்டு பாலஸ்தீனத்தில், இத்தகைய இறைமேலாண்மையின் விளக்கம் உடனடி வெற்றி பற்றிய ஆர்வமிக்க எதிர்பார்ப்பிற்கு நேரடி பதிலுரையாகத் தோன்றுகின்றது. பக்திமிக்க அமைதிப்போக்கு மற்றும் புரட்சிகரமான தீவிரவாதம் என்னும் இந்நம்பிக்கையின் இருவடிவங்களும், கும்ரான் பிரிவினை இலக்கியத்தில் ஒன்ற சேர்ந்திருப்பது குறிப்பிடத்தக்கது. பரந்த அளவில் புகழ்பெற்று விளங்கிய வெளிப்பாட்டு இலக்கியங்கள் பிரபல்யமாயிருந்தன; எதிர்பார்ப்புகளை ஊக்குவித்தன. இதைப்பற்றி இயேசு கவலைப்படவில்லை என்று கூற முடியாது. இது அவருடைய போதனையில் தானி.7-கொண்டிருந்த பாதிப்பிலிருந்து தெரிகிறது. இப்பகுதியிலிருந்து மனுமகன் என்னம் சொல்லும், துன்பத்தின் அவசியமும், ''மிக உன்னதரின் புனிதர்களாக'' விளங்க சீடர்களை ஒன்று சேர்ப்பதும் பெறப்பட்டிருக்கலாம். இதற்கு மாறாக இயேசு எவ்விதத்திலும் வெளிப்பாட்டு இலக்கிய உணர்வுகளுடன் தம்மை ஒன்றுபடுத்தவில்லை. சுத்தி செய்தல் மற்றும் இஸ்ராயேலின் வெற்றி, மற்றும் எதிரியின் தோல்வி ஆகியவை வரலாற்று இறையரசுக்கும் தேவையாகும் என்ற வெளிப்பாட்டு எதிர்பார்ப்பை நினைவில் கொள்ளும்போது, அவரது போதனையின் தனிச்சிறப்பைக் காணலாம். எதிரி என்பது பேய்களின் சக்திகளையோ, அல்லது புறவின பகைவர்களையோ, அல்லது இரண்

டும் சேர்ந்ததாகவோ கருதப்படலாம். சில யூதர்கள் புறவினத்தாருடைய சிலைவழி பாடு மற்றும் ஒழுக்கமுறையைக் கண்டனம் செய்து, அவர்களுடைய மனமாற்றத்தைக் குறிக்கோளாகக் கொண்ட ஒரு உயிரோட்ட முள்ள இயக்கத்தைத் துவக்கினர் (மத் 23:15). மற்றவர்களோ, இறைவன் இக்காலத்தை தீய சக்திகளிடம் ஒப்படைத்துள்ளார்; இறை வன் தலையிட்டு தமது வெற்றியை உறுதிப் படுத்துகின்ற வரவிருக்கும் காலம்பற்றிய அடையாளத்தைப் பெறும் வரையில் ஒன் றும் செய்வதற்கில்லை என்று குறைந்த அளவு நம்பிக்கையுடையவராக இருந்தனர்.

இயேசு இத்தலைப்புக்களை மாறுபட்ட விதத்தில் பயன்படுத்தினார். ஒரு வகையில் அவர் எதிரியை பேயின் சக்திகளுடன் ஒப் பிட்டார்; அவரது பேயோட்டும் செயல்கள் இதற்கு தெளிவான சான்றாக உள்ளன. தீமை யின் போட்டி அரசு பயங்கரமாகப் பிளவு பட்டு இறுதியை நோக்கி செல்கிறது என் பதை உறுதியுடன் அறிவிக்க (சாத்தானின் வீழ்ச்சி பற்றிய காட்சி: லூக் 10:18) அரசு உருவகத்தை அவர் பயன்படுத்தியிருக்கக்கூ டும் (மாற் 3:24). இக்காலமானது பேயிடம் அளிக்கப்பட்டுள்ளது என்னும் கோட் பாட்டை அவர் நிராகரித்தார் (லூக் 4:5-8) என்னும் மரபினை, இயேசுவின் சோதனை பற்றிய நிகழ்ச்சியுரை காத்துவருகின்றது. மேலும், இயேசுவினுடைய குணப்படுத்தும் செயலானது பேயோட்டுவதைவிட பரந்த தாக உள்ளது. அவர் முடமானவர்களைக் குணப்படுத்தி அசுத்த நோய்களின் அவமதிப் பினின்று மனிதர்களை விடுவித்தார். இயேசு வைப் பொறுத்தவரையில் இறைவனின் அர சுரிமைக்கான முக்கிய எதிர்ப்பானது, தவ றான வழியில் செல்கின்ற மக்கள் நிறைந் துள்ள தவறான உலகமேயாகும்.

புறவினத்தார்பால், குறிப்பாக யூதர்கள் தினமும் தொடர்பு கொண்டவர்கள்பால், இயேசு பொறுமை, மன்னிப்பு மற்றும் அன்பு ஆகியவற்றைக் காட்டினார். போதித் தார் (லூக் 6:27-35). ஆயக்காரர் மற்றும் பாவிகளுடனான தொடர்பின் காரணமாக அவர் அவப்பெயர் பெற்றார் ('பாவிகள்' என்பது சட்டத்தைப்பற்றி கவலைபடாத யூதர்களை விட, புறவினத்தாரையே அதிகம் குறிப்பிட்டது). அவர் புறவினத்தாரை அவர் களுடைய அறியாமை மற்றும் அநீதிக்காக வெறுக்கவுமில்லை, மற்றும் அவர்களது வழிகளை ஏற்றுக்கொள்ளவுமில்லை (மாற் 7:37-இல் வரும் வஞ்சப்புகழ்ச்சி பற்றிய சிறந்த விளக்கம், மாற் 7:15-இல் வரும் பிரிவுபடுத்தும் சடங்கு உணவு விதிமுறை களை அவர் நிராகரிப்பதாகும்). நெருக்கடி செய்யப்பட்டால் ஒழிய (மத் 8:5-13), மற்ற நேரங்களில் அவர் தமது போதனையை தமது மக்களுக்கு மட்டுமே அளித்தார். தமது சீடர்களுக்கும் அவ்வாறே கற்பித்தார் (மத் 10:5-6). ஆனால் அதே நேரத்தில், அவர்களி டையே உள்ள புறவினத்தார் மீது அவர்க ளுக்கு ஒரு புதுப்பொறுப்பை அளித்து, தொடர்ச்சியான விரோதக் கொள்கையால் விளையப்போகும் அழிவைப்பற்றியும் எச்ச ரிக்கிறார். (மாற் 13-இன் வெளிப்பாட்டு மொழியானது இவ்வாறு, ஒருவகையில் விளக்கப்படவேண்டி உள்ளது).

இயேசுவின் போதனையில் அரசின் வரு கையை தடைசெய்பவர்களாக புறவினத்தார் இல்லாமல், மனந்திருந்தாத இஸ்ராயேலரே இருந்தனர்; அவரது முதன்மையான அறி விப்பானது, ''இறையரசு நெருங்கிவிட்டது; மனந்திரும்பி இந்த நற்செய்தியை நம்புங்கள் '' (மாற் 1:15) என்பதாகும். மனந்திரும்புத லுக்கான கோரிக்கையானது யூத போதனை யைச் சார்ந்ததாகும், திருமுழுக்கு யோவான் இதை ஏற்கனவே போதித்துள்ளார். (மத் 3:2). இயேசுவுடனான வேறுபட்ட, முரண் பாடான வடிவமானது, அவர் கடினமான, மனந்திருந்தாத இதயத்தை, பாவிகளிடையே இல்லாமல், நீதிமான்களிடையே கண்டதா கும் (மாற் 2:17). இவர்கள்தான் பாவிகளுக் கும் அவர் நற்செய்தி அளிப்பதைக்கண்டு சீற்றங்கொண்டார்; ஊதாரி மைந்தன் மற்றும் திருமண விருந்து போன்ற உவமைகளில் (லூக் 15:11-32; மத் 22:1-10) அவரது பதிலைக் கேட்டனர். புதிய இறைசெயலுக்கு முன்ன டையாளம் தவறானது என்று விவாதித்து,

காலத்தின் அடையாளங்களைப் படிக்க முடியாதவர்கள் என்று கடிந்து கொள்ளப்பட்டவர்களும் இவர்களே (லூக் 12:54-56). ஓய்வு நாளில் அவர் குணப்படுத்திய செயல்கள் இறைவனின் மாட்சிமைக்கு அவமதிப்பானவை என்று கூறி, மறைநூல் வல்லுநர்களின் விதிகள் பற்றிய பிரச்சினையை உருவாக்கியவர்கள் உண்மையில் பரிசேயரே. இது, விதியை கடைபிடிப்பதை வெளிப்படையானதாக மட்டுமே உண்டாக்கி, அதனுடைய இறைவாக்கு மற்றும் சுயமான சவாலை அழித்ததற்கு எதிரான இயேசுவின் வன்மையான கண்டனங்களை (மத் 23:1-36; லூக் 11:37-52) உண்டாக்கியது.

சுமையான சட்டத்தைக் கடைப்பிடிப்பதை இறைவனால் ஏற்றுக்கொள்ளப்படுவதற்கு ஒரு நிபந்தனையாக ஆக்காததால், சட்டம் பற்றிய மறைநூல் அறிஞரின் சுமைக்கு மாறாக இயேசுவின் நுகம் எளிதானதாக இருந்தது (மத் 11:29-30). ஆனால், ஒருமுறை ஏற்றுக்கொள்ளப்பட்டு சீடனாக்கப்பட்ட பிறகு, ஒரு குழந்தையைப் போன்று ஆகவேண்டும் (மாற் 10:5); தீய ஆசைகளை வெட்டிவிட வேண்டும் (மாற் 9:43-47); தேவையானால், தனிப்பட்ட உடமைகளையும் (மாற் 10:17-27), தனது உயிரையுமே இழக்கவும் (மாற் 8:34-35) தயாராயிருப்பதும் அவசியமாகும். இத்தகைய கடுமையான கோரிக்கைகள் இயேசுவினுடைய பணியின் நெருக்கடியான சூழ்நிலையில் உருவாயின என்பதில் சந்தேகமேயில்லை (மாற் 6:7-11-இல் சீடருக்கான அறிவுரையில் காண்க). ஆனால், அவை புனித இறைவனுக்கு அவருடைய மாட்சிமையில் எவ்விதத்திலும் குறையாத மேல் வரிச் சட்டத்தையே மனிதர் முன்நிறுத்தும் விளைவைக் கொண்டிருந்தன. மறைந்துள்ள புதையல் மற்றும் விலை உயர்ந்த முத்து பற்றிய உவமைகள் காட்டுவது போன்று (மத் 13:44-45), மனிதனை தீர்மானம் செய்யும் நிலைக்குக் கொண்டு வருவது இயேசுவின் எண்ணமாகும். மறைநூல் அறிஞரின் பாரம்பரியம் போலன்றி, அவரது நன்னெறி போதனையின் பொதுவான நோக்கம் இதுவே. இறை அன்பு, மன்னித்தல் போன்ற இறைவனின் மேலாண்மைப் பண்புகளில், ஒருவகையில், பங்குபெறுவதாகிய ''இறையரசிற்கும் நுழையும்'' பொறுப்பை அவர் மனிதருக்கு அளித்தார் (மத் 18:23-25; அரசு மற்றும் வாழ்வு: மாற் 9:43-47; அரசு மற்றும் நேர்மை: மத் 6:33). துறத்தல் என்பது இயேசுவினுடைய போதனையின் ஒருதலைப் பண்பன்று; மனிதர் இறைவாழ்வைப் பெற்றுப் பகிர்ந்து கொள்ள வேண்டுமெனில், அது ஒரு உள்ளார்ந்த தேவையாகும்.

தீர்மானத்திற்குரிய வாய்ப்பானது வரையறையில்லாமல் திறந்திருப்பதன்று. அவருடைய வேண்டுகோளுக்கு பதிலளிக்காததால் தன் காலத்தவருக்கு ஏற்படவிருக்கும் பயங்கர விளைவுகளைப் பற்றி இயேசு எச்சரித்தார். தீர்ப்பு பற்றிய குறிப்பானது அவரது போதனையில் முதன்மையானதாக மட்டுமன்று (பெரும்பாலும் கணக்குக் கொடுத்தல் உருவகத்தால் வெளிப்படுத்தப்படுவது: மத் 25:14-30), அவசரமானதாகவும் உள்ளது. இஸ்ராயேலானது, வெட்டப்படும் அபாயத்திலுள்ள கனிகொடாத அத்திமரம் போன்று உள்ளது (லூக் 13:6-9). சில கூற்றுகளில் (மாற் 9:11), இஸ்ராயேலின் ஊழை முடித்து விட்டு, அரசின் புதிய காலத்தை துவக்குகின்ற விரைவான முடிவை நோக்குபவராக இயேசு தோன்றுகிறார்.

இத்தகைய எல்லா போதனைகளிலும், சீடர்களின் குழுவை இயேசு தம்முடன் நெருங்கி இணைத்துக் கொள்கிறார். அவர்கள் அவரது போதனையைக் கற்று, பிறருக்கும் அளிக்கவே வேண்டும்; அவர்கள் போதித்தல், குணப்படுத்துதல் என்னும் அவருடைய பணிகளைப் பகிர்ந்து கொண்டனர். சீடர்களை வரவேற்பதோ அல்லது ஒதுக்குவதோ என்பது இயேசுவையே வரவேற்பது அல்லது ஒதுக்குவதாகும் (மத் 10:40; லூக் 10:16). குரு மற்றும் சீடர்களுக்குள் உள்ள இந்த ஒன்றிப்பு இயேசுவின் போதனைப்படி திருச்சபையின் அடித்தளமாகும். இவர்களே அரசினைப் பெறவேண்டிய (லூக் 13:32), மேலாண்மையிலும் தீர்ப்பிலும் பங்க

கொள்ள வேண்டிய (லூக் 22:28-29), எல்லா வற்றிற்கும் மேலாக இயேசுவுடன் துன்புற வேண்டிய (மாற் 8:34-35) சிறு மந்தை ஆகும். ஒரு கட்டத்திலாவது, அரசு வருவ தற்கு முன்னதாக சில சீடர்கள் மணமகனின் துன்பத்தில் பங்கேற்பார்கள் (மாற் 10:35-45) என்று இயேசு நம்புவதாகத் தெரிகிறது. அப்பத்தையும் இரசத்தையும் அவர் தமது இறுதி இரவுணவில் அளித்தபோது கூறிய வார்த்தைகள், அவருடைய வாழ்வை (உடலை) பகிர்வதற்கு நிபந்தனையாக அவர்கள் அவரது பலியிலும் (இரத்தத்தி லும்) பங்கு கொள்ளவேண்டும் என்று பொருள் கொள்வதாகத் தெரிகிறது. இறுதி யில், முழுமையான தோல்வியின் மூலமே அவரது மேலாண்மையைக் கொணரவேண் டும் என்பதே, இறைவனின் சித்தம் என் பதை உறுதியாக உணர்ந்தும், தாம் இறந்தது இறைவனுக்காக மட்டுமன்றி, ''பலருக்காக வும்'' ஆகும் என்ற நம்பிக்கையோடும் மர ணத்திற்குத் தனியாகவே சென்றார்.

தமது மரணத்திற்குபின் என்ன நிகழும் என்றும் இயேசு எதிர்பார்த்தார் என்பது பற்றி அறிஞர்களிடையே சிறிதளவே ஒற் றுமை உள்ளது. நேரடியான அறிவிப்பு, உவமைகள் மற்றும் செயல்கள் மூலமாக (லூக் 11:20), தம்மையும் தமது சீடர்களையும் எண்பிப்பதாயும், அக்கறையில்லாதவர்க ளுக்கு தண்டனையாகவும் அமையவிருந்த அரசின் அருகாமையைப் பற்றி அவர் அறி வித்தார். தமது மரணமானது உயிர்ப்பில் எண்பிக்கப்படும் என அவர் எதிர்பார்த்தார் என்பது (சீடர்கள் இப்பொருளை கொண்டி ராவிட்டாலும்) பாரம்பரியத்தில் உறுதியாக நிறுவப்பட்டுள்ளது. மனிதனுடனான இறை செயல்களை முடிப்பதானது உடனேயோ அல்லது நீண்ட அல்லது குறுகிய இடைவெ ளிக்குப் பின்னரோ நடைபெறும் என்று அவர் எதிர்பார்த்தார் என்பது மட்டுமே தெளிவில்லாமல் உள்ளது. இறைவனைப் பற்றிய இயேசுவின் போதகம்: காண்: இறை வன் (பு. ஏ); அவரது ஆட்தன்மையைப் பற்றி: காண்க: கிறிஸ்து மற்றும் பிறதனிப் பட்ட தலைப்புகள், குறிப்பாக: மணமகன்; அவரது பொதுப் போதகம்: காண்க. ஒழுக்க நெறிஇயல் (பு. ஏ).

5. வளர்ச்சி:- இயேசுவினுடைய போத னையின் வளர்ச்சியானது, மூன்று முக்கிய கோணங்களில் நான்காவது நற்செய்தியில் நிகழ்கின்றது. ஒத்தமை நற்செய்தியின் இறு திக்கால இயல் மறுஆய்வு செய்யப்படுகி றது; ''இறையரசு'' என்பது ''முடிவில்லா வாழ்வு'' என்பதற்கு முழு இடம் அளிக்கி றது. தூய ஆவியைப் பற்றி போதனை வளர்ச்சியடைகிறது. ஒத்தமை நற்செய்தி ஏடுகளில் மறைந்துள்ள கிறிஸ்து இயல் விளக்கம் பெறுகிறது. மற்றும், சீடர்களின் சமூகம் தொடர்வதின் பொருள் பற்றிய உணர்வு சார்ந்த சிந்தனை உள்ளது. மேலும் காண்க: யோவானின் நற்செய்தி.

**இயேசுவின் விசாரணை**

1. யூதர்களின் தலைமைச் சங்கமும் நீதிமன் றமுமான செனத்திரீன் முன்னால் நடந்த இந்த விசாரணை நற்செய்திகளில் விவரிக்கப் பட்டிருக்கும் வடிவில், யூத நீதிமுறைக்குப் புறம்பானது என பெரும்பாலோர் கருதுகின் றனர். எனவே புதிய ஏற்பாட்டிலே உள்ள இந்த நிகழ்ச்சி தவறாக இருந்திருக்க வேண் டும். ஏனெனில் யூதர்கள் தங்கள் நீதிமு றையை மிக நுணுநுணுக்காய்க் கடைப்பிடித் தனர். இதற்கு மாறாக, இரு பதில்கள் தரப்ப டுகின்றன. அ) கி.பி. 70-இல் யெருசலேம் அழிக்கப்பட்டபோது இந்நிகழ்ச்சி நடந்த காலம் பற்றிய குறிப்பும் அழிந்திருக்க வேண்டும். ஆ) புதிய ஏற்பாட்டு விவரிப்பு கள், முந்திய அல்லது பிந்திய வழக்கத்தோடு ஒத்துப்போகவில்லை என்றால் பிலாத்து வின் விசாரணைக்கு இயேசுவைக் கைய ளிக்க நடந்த முன்விசாரணையாக இது இருக் கலாம். யூத தலைவர்கள் அளவுக்கதிகமாக இயேசுவின் மேல் வெறுப்புக் கொண்டிருந்த தால் நீதிமுறையான விசாரணை அவசியமற் றதாகக் கருதியிருக்கலாம்.

இயேசு மெசியா என்று உரிமை கொண் டாடியது யூதர்களுக்கு ஒரு குற்றமாகப்பட வில்லை. மோசே சட்டத்தை மீறியதாக

அவரைக் குற்றம் சாட்டவில்லை. ஆனால் சட்டத்திற்குப் பரிசேயர் அளித்த விளக்கத்திற்கு மாறான விளக்கம் அளித்தார் என்றும், சட்டத்தை மீறியவர்களோடு நட்புக் கொண்டார் என்றும் கூறினர். இயேசுவின் மேல் சாட்டப்பட்ட மற்ற குற்றங்கள் பல. இயேசுவைப் பேல்செபூல் பிடித்திருக்கின்றது என்றனர் (மத் *10:25*; மாற் *3:22* தொ; *6:14*). இயேசு வியாபாரிகளை விரட்டியது கோயில் குருக்களை மதிக்காததாகும் (மாற் *11:15-19*). எந்த அதிகாரத்தால் தமது செயல்களைச் செய்வதாக விளக்க இயேசு மறுத்துவிடுகிறார் (மாற் *11:27-33*). மேலும் இயேசு மக்களைத் தூண்டி குழப்பத்தை விளைவித்து அதன் விளைவாக உரோமையரின் பதிலடிக்குக் காரணமாகலாம் என தலைமைச் சங்கத்தினர் கருதினர் (யோவா *11:47* தொ). இறை நிந்தனை கூறுவதாகவும் குற்றம் சாட்டினர். மத்தேயுவும் மாற்கும், மெசியா, இறை நிந்தனை ஆகிய இரண்டு குற்றச்சாட்டுக்களையும் சேர்த்தே கூறியுள்ளனர் (மத் *26:63-64*; மாற் *14:61-62*). ஆனால் இவைகளைத் தனித்தனியாகக் கூறும் லூக்காவின் விவரிப்பே சரியென அறிஞர்கள் கருதுகின்றனர் (லூக் *22:67-69*). யூத வழக்கப்படி இறைநிந்தனையைக் கேட்கும்போது ஒருவர் ஆடையைக் கிழித்துக் கொள்வார். அதையே பெரிய குரு செய்கிறார். மெசியா உரிமை கொண்டாடியதன்று, இறைநிந்தனையே, மோசே சட்டப்படி, சாவுத் தண்டனைக்கு உகந்ததாகும் (லேவி *24:16*; யோவா *19:7*). ஆனால் இக்குற்றச்சாட்டுகள் பிலாத்துவின் முன் செல்லாது. ஆனால் மரணதண்டனை அளிக்கத் தலைமைச் சங்கத்திற்கு அதிகாரமில்லை. அதற்கு பிலாத்து ஒப்புதல் தர வேண்டியது அவசியம் (யோவா *18:31*). எனவே குருக்கள் இயேசுவுக்கு எதிராகப் பல குற்றச் சாட்டுகளைச் சேகரித்தனர். இக்குற்றச் சாட்டுகளைக் கொண்டாவது பிலாத்து இயேசுவுக்கு மரணதண்டனை அளிப்பார் என எண்ணினர்.

2. பிலாத்துவுக்கு முன்னால்:- நற்செய்தியாளர்கள், குறிப்பாக லூக்கா, உரோமையர்களைப் பற்றி உயர்வாகவே எழுதியுள்ளனர். ஏனெனில் அவர்கள் புற இனத்தாரை மனந்திருப்ப இது ஒரு வழியெனக் கருதினார். பிலாத்து ஒரு கொடூரமான மனிதன். யூதர்களின் பாஸ்காப் பண்டிகையின்போது எத்தகைய குழப்பமும் நேரிடாமல் பார்த்துக் கொள்வதில் கருத்தாயிருந்தவர். இருப்பினும் அவர் இயேசுவின் மேல் மிகுந்த தயை காட்டினார்.

இயேசுவின்மேல் சாட்டப்பட்ட பல குற்றங்களில் (மாற்கு *15:3*) மூன்று மட்டும் சிறப்பாக லூக் *23:4*-இல் குறிக்கப்படுகின்றன. அவை:

அ. இயேசு மக்களிடையே கிளர்ச்சி செய்தார் (லூக் *23:2*)

ஆ. செசாருக்கு வரிசெலுத்த வேண்டாமென்கிறார். ஆனால் லூக் *20:25*-இல் பின்னணியில் இது பொய்க் குற்றமாகும்.

இ. தானே அரசரென உரிமை கொண்டாடினார். இக்குற்றம் ஒவ்வொரு நற்செய்தியிலும் நான்கு முறையாவது வருகிறது. யோவான் பன்னிரண்டு முறை குறிப்பிடுகிறார். இவைகளைக் கேட்டு மனம் குழம்பிப் பிலாத்து தீர்ப்பை மற்றவர்கள் எடுக்க விட்டு விடுகிறார். ஏரோதிடம் அனுப்புகிறார் (லூக் *23:6-13*). ஆனால் அவருக்கு இயேசுவின் மேல் அதிகாரம் இல்லையாதலால் அவர் இயேசுவைப் பிலாத்துவிடம் திருப்பியனுப்பினார். மேலும் பிலாத்து இயேசுவை, பரபாவுக்குப் பதிலாக விடுதலை செய்ய நினைத்தார். அதுவும் முடியாமல் போகவே அவர் கையைக் கழுவி, தன் தீர்ப்புக்குத் தான் பொறுப்பில்லை என்று கூறுகிறார் (மத் *27:24*).

ஒத்தமை நற்செய்திகளில், இயேசு இந்த விசாரணையின்போது பெரும்பாலும் மௌனம் காக்கிறார். ''நீ யூதர்களின் அரசனோ?'' என்ற பிலாத்துவின் கேள்விக்கு இயேசு அளிக்கும் பதில் பிலாத்துவை மேலும் குழப்புகிறது (யோவா *18:33-38*). சிலுவையின் மேல் வைக்கப்பட்ட குற்ற அறிக்கை, இயேசு அரசஉரிமை கொண்டாடியதால்,

உரோமைக்கு எதிராகக் கிளர்ச்சி உண்டாக்கியவராக அறிவிக்கிறது *(19:18).*

**இயோன்** (IJON - அழிவு, சிதைவு)

பாலஸ்தீனத்தின் வடகோடியில் இருக்கும், இஸ்ராயேலின் முக்கியமான நகரமாகும். சீரியநாட்டு அரசன் பென்-அதாத், பாசா ஆட்சிக் காலத்தில், யூதாவின் அரசன் ஆசாவின் தூண்டுதலால் இஸ்ராயேலின் நகரமான இயோனைக் கைப்பற்றினார் *(1 அர 15:20; 2 நாள் 16:4).* பிற்காலத்தில் அசீரிய நாட்டைச் சேர்ந்த மூன்றாம் திகிலாத்து பிலேசர் *(733. கி.மு.)* பெக்காகின் காலத்தில் இந்நகரைக் கைப்பற்றி அங்குள்ள மக்களை நாடு கடத்தினார் *(2 அர 15:29).*

*1 அர 15:20*-இல் சீரியர்கள் தமஸ்குவிலிருந்து படையெடுத்து வந்தபோது நகரங்கள் வடக்கிலிருந்து தெற்காக வரிசையில் குறிக்கப்படுகின்றன. ஆகவே இயோன் ஆபேல்-பெத்து மாக்கவுக்கு வடக்கிலுள்ள சமவெளியில், வித்தானி மற்றும் கெசிபானி ஆறுகளுக்கிடையில் இடம் காட்டப்படுகிறது. ஆனால் அதற்குப் போதிய தொல்பொருள் ஆய்வு ஆதரவு இல்லை. மெர்ச்-அய்யூன் என்ற நகரமும் மாவட்டமும் இப்பெயரை ஒத்து வந்துள்ளன.

**இய்யிம்** (IIM - பாழடைந்த சிதைவுகள், அழிவுகள்)

யூதாவின், தென் கோடியில் ஏதோமின் எல்லை ஓரமாக யூதாவின் இனத்தவர்களுக்கு அளிக்கப்பட்ட நகர்களில் ஒன்று *(யோசு 15:29).* இது பாகலாவுக்கும் ஏசேமுக்கும் இடையில் உள்ளது. பேயேர்-செபாவுக்கு வடக்கிலும் அனாபுக்குத் தெற்கிலும் உள்ள இக்கால தெயீர்-ஏல்-காமி என்ற இடத்தில் இய்யிம் இருந்திருக்கலாம்.

**இரகபியா** (REHABIAH - யாவே விரிவாக்கினார்)

இரகபியா என்பவர் மோசேயின் பேரபிள்ளையும் எலியேசரின் புதல்வனுமாவார் *(1 நாள் 23:17; 24:21; 26:25).* தேவாலயத் திருப்பணிக்காக ஒதுக்கி வைக்கப்பட்ட லேவியக் குடும்பங்களில் ஒன்றிற்குத் தலைவராயிருந்தார்.

**இரகபெயாம்** (REHOBOAM - மக்கள் பெருகுவார்களாக)

இரகபெயாம் சாலமோன் மன்னரின் புதல் வரும் வாரிசும் ஆவார் *(கி.மு. 922-915; 1 அர 11:43; 1 நாள் 3:10; 2 நாள் 9:31).* இவர் செக்கேமில் இருந்த முதியோர்களின் பேச்சைக் கேட்காமல் சர்வாதிகார ஆட்சி ஆளத் தலைப்பட்டார். மக்கள் இதை எதிர்த்தனர். யூதா இஸ்ராயேலிலிருந்து பிரிய இது காரணமாயிருந்தது *(1 அர 12:1-20; 2 நாள் 10:1-19).* சாலமோனின் சிலைவழிபாடு இப்பிளவுக்குக் காரணமாயிற்று என்று விளக்கப்படுகிறது *(1 அர 11:29-36; 12:15).* பிரிக்கப்பட்ட யூதாவின் முதல் மன்னர் இவரே. இவர் தன் நாற்பத்தி ஒன்றாம் வயதில் அரசபதவி ஏற்று பதினோரு வருடங்கள் அரசாண்டார். இவருடையதாய் அம்மோனிய வம்சத்தைச் சார்ந்த நகாமா என்பவராவார். தன் ஆட்சியில் மக்களைக் கடுமையாக நடத்தினார். சிலை வழிபாட்டில் ஈடுபட்டார். அதற்குத் தண்டனையாக எகிப்தின் அரசனாக விளங்கிய சீசாக்கு பாலஸ்தீனத்தின் மீது படையெடுத்துப் பெருஞ்சேதம் விளைவித்தார் *(1 அர 14:21-31).* இதற்கு முக்கிய காரணம் இரகபெயாமின் பாவமே என்றும், மனம் திருந்தியதால் அழிவு குறைவே' என்றும் ஓர் விளக்கம் தரப்படுகிறது *(2 நாள் 12).* இரகபெயாம் இஸ்ராயேலோடு போரிடத் துணிந்ததைச் செமாயா என்ற இறைவாக்கினர் தடுக்கிறார் *(2 நாள் 11:1-4).* எகிப்திய படையெடுப்பைத் தடுக்க பல அரண்கள் அமைக்கப்பட்டன. சீசாக்கின் இறப்பிற்குப்பின் எகிப்து பாலஸ்தீன நாட்டைத் தாக்கத் துணியவில்லை. இன்றும் இலாக்கீசிலும் அசெக்கிலும் உள்ள கோட்டை அரண்கள் பாழ்பட்டுக் கிடக்கின்றன.

இரகாபயாமுக்கு *18* மனைவிகளும் *60* வைப்பாட்டிகளும் *28* புதல்வர்களும் *60* புதல்வியரும் இருந்தனர் *(2 நாள் 11:21).* தன் புதல்வர்களை நாட்டின் பல பகுதிகளுக்குத் தலைவர்களாக்கினார். அவர்களுடைய

விருப்பப்படி மாக்காவுக்கு பிறந்த இரகபெயாமின் மகன் அபியா அரசனானார் (11:22-23).

**இரகலாயா** (REELAIAH - யாவே இடி முழங்கினார்)

பாபிலோனியாவிலிருந்து செருபாபேலுடன் நாடு திரும்பியவர்களில் பட்டியலில் முதலில் இடம் பெறுபவர்களின் பெயர்களில் இவரும் ஒருவர் (எஸ் 2:2). நெக 7:7-இல் இராகமிய என்றழைக்கப்படுகிறார்.

**இரகுவேல்** (RAGUEL - இறைவனின் நண்பர்)

1. இவன் எகுபத்தானாவில் வாழ்ந்த நப்தலியின் கோத்திரத்தைச் சார்ந்தவர். இவர் எதினாவின் கணவனும் சாராவின் தந்தையுமாவார். இந்த சாரா தோபியாவின் மனைவி (தோபி 3:7).

**இரகுவேல்** (REUEL - இறைவனின் நண்பன்)

1. இவர் எசாவுக்கும் இஸ்ராயேலின் மகளான பாசமாத்துக்கும் பிறந்த மகன் ஆவார். ஏதோணியக் குலத்தலைவர்களான நகாத்து, சேரா, சம்மா, மிசா போன்றவர்களின் தந்தையும் இவரே (ஆதி 36:4; 10:13;17; 1 நாள் 1:25;37). இத்தலை முறைக் குறிப்பு இஸ்ராயேலர், ஏதோமியர் மற்றும் அராபிய குலங்கள் போன்றவற்றிற்கு உள்ள நெருங்கிய தொடர்பைப் புலப்படுத்துகிறது.

2. யாவே பாரம்பரியப்படி மோசேயின் மாமனாருடைய பெயர் இரகுவேல் ஆகும் (ஆதி 2:18; எண் 10:29). இவர் சாதாரணமாக எத்திரோ என்றழைக்கப்படுகிறார்; இரகுவேல் இனப் பெயராக இருக்கலாம்.

3. காது கோத்திரத்தின் தலைவரும் எலியாசாபு என்பவரின் தந்தையும் ஆவார் (எண் 2:14). இவர் தெகுவேல் என்றும் அழைக்கப்படுகிறார் (1:14; 7:42.47; 10:20).

4. இவர் பென்யாமின் குலத்தைச் சேர்ந்த மெசுல்லாம் என்பவரின் பாட்டனார் ஆவார் (1 நாள் 9:8).

**இரகூ** (REU - நண்பன் நட்பு)

இரகூ, சேம் என்பவரின் வழித்தோன்றலும் பெலேகு என்பவரின் மகனும் செருக்கு என்பவரின் தந்தையும் ஆவார். ஆபிரகாம், இயேசு ஆகியோரின் மூதாதையர் (ஆதி 11:18-21; 1 நாள் 1:25; லூக் 3:35).

**இரகொபோத்திர்** (REHOBOTH -IR)

இது அசிரியாவில் நினிவே, காலா முதலிய நகரங்களுக்கு இடையில் நிம்ரோது என்பவரால் கட்டப்பட்ட நகரமாகும் (ஆதி 10:11).

**இரகொபோத்து** (REHOBOTH - பரந்த இடம்)

1. கெரார் பள்ளத்தாக்கில் ஈசாக்கும் அவரின் உடனூழியர்களும் தோண்டிய கிணறுகளில் ஒன்றின் பெயர் இராகாபோத்து ஆகும் (ஆதி 26:17-22). முன்பு வெட்டிய இரு கிணறுகளையும் பெலிஸ்தியர்கள் கைப்பற்றிக்கொண்டதால், ஈசாக்கு மூன்றாவது கிணற்றைத் தோண்டி அதற்கு இப்பெயரைச் சூட்டினார். பேயேர்செபாவுக்கு தென் மேற்கே சுமார் 32 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள கிர்பெத்துருகெய்பே என்ற இடத்தில் பழைய இரகொபோத்து இருந்திருக்கலாம். இங்குப் பல அகன்ற கிணறுகள் உள்ளன.

2. ஏதோமியரின் தொடக்கக் கால அரசர்களில் ஒருவரான சாவூல் வாழ்ந்த இடமாகும் (ஆதி 33:37; 1 நாள் 1:48). இது பற்றி ஒன்றும் அறிவதற்கில்லை.

**இரகோபு** (REHOB - திறந்தவெளி, சந்தை)- ஆள்

1. சோபாவின் அரசன் அதாதெசர் என்பவரின் தந்தை இரகோபு ஆவார் (2 சாமு 3:3.12)

2. நெகமியாவின் காலத்தில் செய்யப்பட்ட உடன்படிக்கையில் கையொப்பமிட்டவர்களில் ஒருவர் இரகோபு ஆவார் (நெக 10:11).

**இரகோபு** (REHOB) - இடம்

1. ஓர் அரமேய அரண் (எண் 13:21). காண்க பேத்து-இரகோபு.

2. ஆசேர்குலத்தவருக்கு யோசுவாவால் பங்கீடு செய்யப்பட்டு ஆக்கோ சமவெளி

யில் அமைந்திருந்த ஒரு நகரம் (யோசு 19:28.30). இது இஸ்ராயேலரின் தாக்குதலை எதிர்த்து நின்றது. கானானிய மக்கள் இங்குத் தொடர்ந்து வாழ்ந்து வந்தனர் (நீதி 1:31). பிற்பாடு இது ஒரு லேவிய நகரமாக்கப்பட்டது (யோசு 19:32; 1 நாள் 6:75). இது இருந்த இடமாக ஆக்கோவிலிருந்து கிழக்குத் தென் கிழக்கில் 11 கி.மீ. தொலைவிலுள்ள தேல் ஏல்-கார்பி அடையாளம் காட்டப்படுகிறது.

3. கானானிய, இஸ்ராயேலர் காலங்களில் பேத்துசான் பள்ளத்தாக்கில் இருந்த முக்கிய நகரம். இவ்விடம் விவிலியத்தில் குறிப்பிடப்படவில்லையென்றாலும் இவ்விடம் பற்றிய குறிப்புகள் எகிப்திய ஏடுகளில் காணப்படுகின்றன. இவ்விடத்தில் நிகழ்ந்த அகழ்வாய்வுகள் இதுவரைக் கண்டுபிடிக்கப்பட்டவைகளில் கற்களில் பொறித்த நீண்ட எபிரேய வாசகங்களை வெளிக் கொணர்ந்துள்ளன.

**இரக்கத்தின் இருக்கை** (MERCY SEAT)

இது உடன்படிக்கை பெட்டகத்தின்மேல் தங்கத்தாலான ஒரு தட்டாகும். 2 1/2 முழ நீளமும் 1 1/2 முழ அகலமும் கொண்டது. இதுவே 'இரக்கத்தின் இருக்கை' என அழைக்கப்படுகிறது. இதைக் குறிக்கும் எபிரேயச் சொல்லுக்கு ''பரிகாரம் செய்யும் இடம்'' என்று பொருள். இந்த தங்கத்தாலான தட்டு பெட்டகத்தின் 'மூடி' அல்ல. மாறாக இது பெட்டகத்தின் மேலே உள்ள இரண்டு கெரூபிம்களைத் தாங்க அவற்றோடு இணைக்கப்பட்ட அடித்தளமாகும். இது கடவுளின் கால்மனை என்று அழைக்கப்பட்டது. இதில்தான் கடவுள் தங்கி இருந்தார் (1 நாள் 28:2; சங் 99:5; 132:7). பரிகார நாளில் இதன் மேல் தலைமைக்குரு பலி விலங்கின் இரத்தத்தை தெளிப்பார்.

**இரக்கம், இரக்கமுள்ள** (MERCY, MERCIFUL)

விவிலியத்தில் ''இரக்கம்'' பல இடங்களில் வேறுபடுகின்றது. கடவுளுக்கும் இயேசுவுக்கும் இதைப் பயன்படுத்தும்போது அவர்கள் பாவிகள்மேல் கொண்ட உள் ஒத்துணர்வையும் அல்லது மக்களுக்கு உதவிபுரிகின்றபோது உண்டாகின்ற அன்புத் தன்மையையும் குறிக்கலாம். இது பெற்றோர்கள் பிள்ளைகள்மேல் கொள்ளும் பாச உணர்வை அல்லது ஏக்கத்தைக் குறிக்கலாம்; மன்னிக்கும் மனப்பான்மையைக் குறிக்கலாம். பொதுவாக இறையன்பைக் குறிக்கிறது. இவ்வன்பு உடன்படிக்கை மக்கள்பால் இறைவன் காட்டும் அருள்மிக்க மீட்புச் செயல்களில் வெளிப்படுகின்றது. மனிதனின் இரக்கம் என்பது ஒரு மனிதன் மற்றொரு மனிதன் தேவைகளை நிறைவு செய்ய முற்படும் நல்ல குணம் ஆகும். இது சமூக உறவால் விளக்கப்படும்.

1. பழைய ஏற்பாட்டில் கடவுளின் இரக்கம்:- இரக்கம், பரிவு என்பது பொதுவாக ஒரே தாய் வயிற்றில் பிறந்தவர்கள் தங்களுக்குள் காட்டிக்கொள்ளும் அன்பின் வெளிப்புற அடையாளம் அல்லது தாய் பிள்ளைகளுக்குக் காட்டும் அன்பாகும். யாவேயின் இரக்கமும் இதே குடும்பச் சூழ்நிலையிலேயே விளக்கப்படுகின்றது. யாவே இஸ்ராயேலின் தந்தையாக இருக்கின்றார் (சங் 103:13; ஏச 63:15-16; எரே 31:20); தாயாக இருக்கின்றார் (ஏச 49:15); கணவனாக இருக்கின்றார் (ஏச 54:4-8; ஓசே 1-3). ஆண்டவர் பாவம் செய்த மனிதனை அல்லது நன்றி மறந்த மனைவியை அன்போடும் மன்னிக்கும் மனப்பான்மையோடும் வரவேற்கின்றார்.

யாவேயின் இரக்கத்தை குடும்ப அன்பு உணர்வாக மட்டும், உள்ளார்ந்த உணர்வாக மட்டும், பார்ப்பது தவறு. பழைய ஏற்பாட்டில் இறைவனின் இரக்கமானது அவரது பிரமாணிக்க நேர்மை தீர்ப்பு (ஓசே 2:14) மற்றும் நிலையான அன்பு ஆகியவற்றில் வெளிப்படுகின்றது. தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களுடன் செய்த உடன்படிக்கையின்பால் காட்டும் பற்றுதியிலும் வெளிப்படுகின்றது (யாத் 33:19; ஏச 63:9). உடன்படிக்கை உறவுக்குப் புறம்பான மக்களுக்கு இரக்கம் அருளப்பட்டதாக ஒருதரம் கூடக் கூறப்படவில்லை. இறை ஆள்தன்மைக்குள் உள்ள அன்பை அல்லது பாசத்தை இரக்கம் உணர்த்தினா

லும் (2 நாள் 36:15), அது வரலாற்றில் புறச்செயல்களில் செயல்முறையாகக் காட்ட படுவதைத்தவிர, அது பழைய ஏற்பாட்டில் ஒருபோதும் விவரிக்கப்படுவதில்லை. பொதுவாக, தமது தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களோடு உடன்படிக்கை உறவைப் பிரமாணிக்கமாக நிலைப்படுத்தும் யாவேயின் அன்புச் செயலே இரக்கமாகும்.

கடவுள் பல வழிகளில் தனது இரக்கத்தை வெளிப்படுத்தினார். தனிப்பட்டோர் அல்லது நாட்டின் உறவை அவரோடு மீண்டும் அமைக்கும் மன்னிப்பின் வழியாக (உப *13:17;2* சாமு *24:14; 2* அர *13:23;* சங் *25:6; 40:11; 51:1; 79:8; 103:4;* ஏச *54:8; 55:7;* புலம்பல் *3:32;* தானி *9:9.18;* ஓசே *1:6-7;* யோவே *2:18;* மீக் *7:19;* அ.ப. *3:2;* செக் *1:12.16);* தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களை அவர்களுடைய பகைவர்களிடமிருந்து காப்பாற்றுவதின் வழியாக (நெக *9:27-28;* சங் *25:6; 40:11; 69:16; 79:8;* ஏச *30:18;* எச *42:12);* தமது உறுதிமொழியை நிறைவேற்றுவதின் வழியாக (உப *13:17;* எச *33:26);* நாடுகடத்தப்பட்ட தமது மக்களை ஒன்று சேர்த்து அவர்களது நாட்டில் மீண்டும் அமைத்தல் வழியாக (உப *30:3;* ஏச *14:1; 49:13;* எரே *12:15;* எச *39:25);* பாலைவனத்தில் அவர்களுக்குத் துணைபுரிவதின் வழியாக (நெக *9:19;* ஏச *49:10);* அவர்களைத் தம்மோடு ஒப்புரவாக செய்வதின் வழியாக (2 அர *13:23;* ஒசே *2:19.23),* இறைவன் தமதுப் புறச்செயல்கள் வழியாகத் தொடர்ந்து அவர்களை அன்பு செய்கிறார். அவர்களது தேவைகளை நிறைவு செய்கிறார். தீமையிலிருந்து பாதுகாக்கிறார் (யாத் *33:19;* ஏச *54:10).* உடன்படிக்கைக் கடமைகளை, வெறும்கடமைக்காக அன்று, அன்பினால் நிறைவேற்றுவதே யாவேயின் இரக்கமாகும்.

இஸ்ராயேல் மக்கள் எந்த நேரத்திலும் இறைவனின் இரக்கத்தை நாடலாம் (சங் *51:1; 57:1; 79:8; 86:16; 123:2;* தானி *9:18;* ஏச *33:2).* தங்கள் நேர்மையின் நிமித்தமோ எந்த உரிமையின் பொருட்டோ இப்படி நாடவில்லை. மாறாக இறைவன் அவர்களோடு உடன்படிக்கை செய்திருந்தார். கடவுளே இஸ்ராயேல் மக்களைத் தேர்ந்தெடுத்துக் கொண்டார். எனவேதான் அவர்கள் இறைவனிடம் இரக்கத்தை எதிர்பார்த்தார்கள். எனவேதான், மோசே ''எல்லா அதிகாரமும் கொண்டுள்ள ஆண்டவராகி கடவுளே, அருள்நோக்கும் தயவும் பொறுமையும் அளவில்லாத இரக்கமும் பொருந்திய கடவுளே'' (யாத் *34:6;* நெக *9:17;* சங் *86:15; 103:8; 145:8;* யோவே *2:13;* யோனா *4:2)* என்று கூறுகின்றார். இறைவனின் இரக்கம் இஸ்ராயேல் வரலாற்றில் நிரம்பிக் காணப்படுகின்றது. வரலாறு முடியும்போது, இறுதிக்கால நன்மைகளில் இறைவனின் இரக்கமும் காணப்படும் என்று இஸ்ராயேலர் நம்பினர் (ஏச *14:1; 49:13; 54:7;* எரே *12:15; 33:26;* எச *39:25;* செக் *1:16).* சில இடங்களில் கடவுள் இரக்கமற்றவராகக் காணப்படும்போது, அவரது உடன்படிக்கையின் நிலையை வைத்தே இவைகளை நாம் பார்க்க வேண்டும் (யோபு *27:22;* புலம்பல் *2:17. 21; 3:43;* செக் *11:6;* எரே *13:14;* எச *7:4; 5:11; 7:9; 8:18; 9:10; 24:14).*

2. பழைய ஏற்பாட்டில் மனிதனின் இரக்கம்:- பழைய ஏற்பாட்டில் மனிதனின் இரக்கம் மற்றொரு மனிதன் துன்பப்பட்டபொழுது, வறிய நிலையிலிருக்கும்போது எழுகிறது. இத்தகை இரக்கமின்மையே பொதுவாக விவரிக்கப் படுகிறது. வெகு அரிதாகவே போரில் தோற்றவர்களுக்கு இரக்கம் காட்டப்பட்டது (உப *7:2; 16;* எரே *6:23; 21:7).* சிலசமயங்களில் தோற்றவர்களுக்கு இரக்கங்காட்ட இறைவன் தலையிடுகிறார் (1 அர *8:50;* 2 நாள் *30:9;* சங் *106:46;* எரேமி *42:12).* சிலைகளை வணங்கியவர்களுக்கும் (உப *13:8)* கொலையாளிகளுக்கும் (உப *19:13)* பொய்ச்சாட்சி கூறியவர்களுக்கும் (உப *19:21)* நீதிமுறையிலும் இரக்கம் மறுக்கப்பட்டது. ஆனில் நெகமியா *(1:11),* தானியேல் *(1:9),* சவுல் (1 சாமு *23:21)* போன்றோர் தங்களைக் கைதியாகக் கொண்டிருந்தவர்களிடமிருந்து எதிர்பாராத முறையில் இரக்கம் பெறுகின்றனர்.

எங்கே குடும்பங்கள் இருக்கின்றனவோ அங்கே இரக்கம், அன்பு, உதவி செய்தல் போன்றவைகள் இருந்தன. சமூக உறவுகள் இவற்றை வரையறை செய்தன. இவ்வாறு இரக்கம் சகோதரர்களுக்குக் காட்டப்பட்டது (ஆமோ 1:11; செக் 7:9). இரக்கம் பெறுவதில் அடுத்த முக்கிய இடத்தைப்பெறுவது இனம் அல்லது சமூகமாகும். அயலாரும் நண்பர்களும் இரக்கம் பெற்றனர் (யோபு 19:21; பழ 21:10). பிறரைச் சார்ந்திருப்பவர்களான பிள்ளைகள், முதியவர்கள், ஏழைகள், அனாதைகள், விதவைகள் ஆகியோர் இரக்கம் பெறச் சிறப்புரிமை பெற்றிருந்தனர். ஏனெனில் சமூகத்தின் அக்கறையும் உதவியுமில்லாவிட்டால் இவர்கள் கதியற்றவர்களாகவும் வறியவர்களாகவும் ஆவார் (சங் 72:13; எச 16:5). போரில் வெற்றிபெற்றோர் இத்தகைய கைவிடப்பட்டவர்களுக்கு இரக்கம் காட்டவில்லை (2 நாள் 36:17; ஏச 13:18; 47:6). பழைய ஏற்பாட்டில், இறை இரக்கத்தைப் போல் மனித இரக்கமும் உறவுச் சூழ்நிலையில் புரிந்துக் கொள்ளப்படுகிறது. மனித உறவு, இறைவனோடு கொள்ளும் உறவின் பகுதியாகுகிறது. உண்மையிலே இறைவனை அன்புசெய்ய விரும்பினால், ஒருவன் தன் அயலானை அன்பு செய்ய வேண்டும். மனிதனுக்குக்காட்டும் இரக்கம் ஆண்டவருக்குச் செலுத்தும் வழிபாடாகும்.

3. புதிய ஏற்பாடு:-

அ) இயேசுக் கிறிஸ்துவின் இரக்கம்:- நற்செய்திகளில் நோயுற்றோர், துன்புறுவோர் மீண்டும் மீண்டும் இயேசுவின் இரக்கத்தை வேண்டுகின்றனர் (மத் 9:27; 15:22; 17:15; 20:30-34; மாற் 5:19; 9:22; 10:47; லூக் 17:13; 18:38). இந்த வேண்டுதல் உதவிக்கும் குணமாக்குவதற்கும் எழுப்பப்பட்ட கூக்குரலாகும். இரக்கம் காட்டுதல் உதவி செய்வதாகும் என்று புரிந்து கொள்ளப்பட்டது. மக்களின் துன்பங்களைப் பார்க்கும்பொழுது இயேசு அவர்கள்மீது மனம் இரங்கினார் (மத் 9:36; 14:14; 20:34; 15:32; மாற் 8:2; 1:41; 6:34; லூக் 7:13). இந்த உள்ளுணர்வு புறச்செயலாக உருவெடுக்கிறது. இயேசுவின் இரக்கச் செயல் குருடனைப் பார்வைப்பெறச் செய்தது (மத் 20:34); தொழுநோயாளியைக் குணமாக்கியது (மாற் 1:41); நெடுநேரம் போதிக்க வைத்தது (மாற் 9:34); இறந்தவனை உயிர்ப்பிக்கச் செய்தது (லூக் 7:13); பசியாய் இருப்பவர்களை வயிறார உண்ணச் செய்தது (மத் 15:32; மாற் 8:2). இயேசுவின் இரக்கம் மனிதனுக்கு முழுமையை அளித்தது. பாவங்களை மன்னிப்பதில் இயேசுவின் இரக்க குணம் வெளிப்பட்டதாக எபிரேயருக்கு எழுதப்பட்ட திருமுகத்தில் பார்க்கின்றோம் (2:17; 4:6). புதிய ஏற்பாட்டில் இரு இடங்களில் அது இறுதிக்காலப்பொருளில் விவரிக்கப்படுகிறது (2 தீமோ 1:16.18; யூதா 21). 1 பேதுரு 1:3-இல் ''இயேசு கிறிஸ்துவின் உயிர்தெழுதலால் இறைவன் தம் இரக்கப்பெருக்கத்திற்கேற்ப நமக்கு வற்றாத நம்பிக்கை தரும் புதுப்பிறப்பை அளித்தார்'' என்று பார்க்கிறோம்.

ஆ) கடவுளின் இரக்கம்:- பழைய ஏற்பாட்டுக் கண்ணோட்டத்தில் கடவுளின் இரக்கமும் புதிய ஏற்பாட்டுக் கண்ணோட்டத்தில் கடவுளின் இரக்கமும் ஒன்றாகவே உள்ளது. இறைவன் உடன்படிக்கையின் போது கொடுத்த வாக்குறுதிகளின்படி தவறாதவர் என்பதை லூக் 1:50.54.72.78-இல் காண்கின்றோம். 1 பேதுரு 2:10 என்பது ஓசே 2:23ஐ நமக்கு நினைவூட்டுகின்றது. இரக்கம் பற்றிய பழைய ஏற்பாட்டுப் பின்னணியிலேயே, உரோ 9-இல் வரும் தர்க்கமும் கலா 6:16; 1 திமோ 1:2; 2 யோவா 3; யூதா 2-இல் வரும் ஆசீர்களும் அமைந்துள்ளன. இரக்கம் பற்றிய புதிய ஏற்பாட்டுப் பொருளைப், பழைய ஏற்பாட்டு ஒளியில்தான் நிறைவாகப் புரிந்து கொள்ளக்கூடும். புதிய ஏற்பாட்டில், மத் 5:7; உரோம 12:1; எபே 2:4; யாக் 5:11; 1 பேதுரு. 1:3-இல் காணப்படும் 'இரக்கம்' பழைய ஏற்பாட்டில் காணப்படும் இரக்கத்தினால் புதிய பொருளைப் பெறுகின்றது. இறைவனின் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களாகிய இஸ்ராயேலர் திருச்சபையாக மாறிவிட்டனர். இறைவனது அன்புநிறை பிரமாணிக்கம் என்றும் மாறாமலே இருந்தது. இறைவன் இரக்கத்தை பலவழிகளில் காட்டியுள்ளார். மலடி எனப்படும் எலிசபெத்துக்கு

முதிர்ந்த வயதில் குழந்தை பெறும் பேற்றினைத் தந்தார் (லூக். 1:58); நோயுற்ற எப்பாப்பிராதித்துக்கு குணமளித்தார் (பிலி 2:27). கிறிஸ்தவர்களைச் சித்திரவதைச் செய்த சவுலுக்கும் மன்னிப்பும் புதுவாழ்வும் தந்தார் (1 தீமோ 1:13). இறைவனின் இரக்கத்தால் திருப்பணியை மேற்கொண்டவர்கள் தளராமல் ஊழியம் புரிந்தார்கள் (2 கொரி 4:1). கடவுளின் இரக்கம் இயேசு கிறிஸ்துவின் வழியாக நமக்கு மீட்பு கொடுத்தது (உரோ 9:23; 11:30-32; 12:1; எபே 2:4). கிறிஸ்துவில், இறைவனது உடன்படிக்கை, இறுதியான அன்புநிறைந்து, நிறைவான உறுதிப்பாட்டையும் எந்த சக்தியாலும் உடைக்க முடியாத முத்திரையையும் (உரோ 8:38-39) அளிக்கிறது.

இ) மனிதனின் இரக்கம்:- மறுபடியும் பழைய ஏற்பாட்டு கண்ணோட்டத்தில் இரக்கம் இங்கு வெளிப்படுகின்றது. ஒரு மனிதன் மற்றொரு மனிதனுக்குச் செய்யும் உதவிகளின் வழியாக இரக்கம் வெளிப்படுகின்றது (மத் 18:27; லூக் 10:37; 16:24; உரோ 12:8; பிலி 2:1; கொலோ 3:12; எபி 10:34; யாக் 3:17; 1 யோவா 3:17). சமுதாயத்தில் இருப்பவர் யாராக இருந்தாலும் ஒருவருக்கொருவர் உதவி புரிந்து இரக்கத்தைக் காட்ட வேண்டும். ''உங்கள் தந்தை இரக்கமுள்ளவராய் இருப்பது போல் நீங்களும் இரக்கமுள்ளவர்களாய் இருங்கள்'' (லூக் 6:36; மத் 5:7) என்று இயேசு கூறுகின்றார்.

**இரக்கா** (RECAH - முழுவதுமான)

இது யூதாவில் உள்ள ஓர் இடம் (1 நாள் 4:12). இது இருந்த இடம் தெரியவில்லை. வாசகமும் பழுதுபட்டிருக்கலாம். எழுபது நூல் இவ்விடத்தை இரக்காபு என்றழைக்கிறது (2:55)

**இரக்காத்து** (RAKKATH - கடற்கரை)

இது நப்தலி நாட்டிலுள்ள ஓர் அரண் சூழ்ந்த நகரம் (யோசு 19:35). இது திபேரியுவுக்கு வடக்கே சுமார் 2.5 கி.மீ. தொலைவில் கலிலேயாக் கடற்கறையில் தேல் கெலத்தியே அல்ல தேல் அரக்காத்து என்ற இடத்தில் இருந்திருக்க வேண்டும்.

**இரக்காபு** (RECHAB - தோரோட்டி)

1. இவன் பேரோத்தில் இருந்த பென்யாமின் குலத்தவராகிய இரிம்மோனின் மகன் சவூலின் மகன். இசிபோசத்தின் தலைமையில் இயங்கி வந்த கூட்டத்தில் இவரும் பானாவும் தளபதிகளாக இருந்தனர். இவர்கள் தங்கள் தலைவனின் தலையை வெட்டி (2 சாமு 4:2 5:8) அதைத் தாவீதிடம் கொண்டு வந்து, அதற்காகத் தாவீது பரிசளிப்பார் என எதிர்பார்த்தனர். ஆனால் தாவீது அவ்விருவரையும் கொன்றுவிடக் கட்டளையிட்டார் (2 சாமு 4:9-42).

2. ஆகாபின் வீட்டாரின் ஆட்சியை முடிவடையச் செய்த ஏகூவின் ஆதரவாளனான யோனதாபு என்பவரின் தந்தை அல்லது மூதாதை (2 அர 10:15-27). இவரது பெயரால் நாடோடிகளாய் வாழ்ந்த ஓர் இனம் இரக்காவியர்கள் என்றே அழைக்கப்பட்டது (எரே 35). இவர்கள் யூதாவின் பாழ்வெளிகளில் சுற்றிக் கொண்டிருந்ததால், நெபுக்கதுனேசார் யூதாவை தாக்கியபோது இவர்கள் எருசலேமில் அடைக்கலம் புகுந்தனர். எரேமியா அனைவரையும் ஆலயத்தில் உள்ள ஓர் அறையில் அடைத்து வைத்து அவர்களுக்குத் திராட்சை ரசம் அளித்து குடிக்கும்படிக் கூறினார். அவர்களோ மறுத்து விட்டனர். ஏனென்றால் இரக்காபின் மகன் யோனதாபு அவர்களுக்கு இட்ட கட்டளைபடி அவர்கள் திராட்சை இரசம் குடிக்கவோ வீடுகட்டவோ விதை விதைவிதைக்கவோ கூடாது. அவர்கள் காலமெல்லாம் கூடாரங்களிலேயே வாழ வேண்டும். இந்த கட்டளைகளுக்கு அவர்கள் கீழ்ப்படிந்து வாழ்ந்ததாக கூறினார்கள். இந்தப் பற்றுறுதியை எரேமியா யூதாவின் மக்களுக்கு உதாரணமாய்க் காட்டி இஸ்ராயேலர் எப்படி கடவுளின் கட்டளைகளுக்கு பிரமாணிக்கமாய் இருக்க வேண்டும் என்று கற்பிக்கிறார். அதே நேரத்தில் இரக்காபியரை வாழ்த்துகிறார் (எரே 35:6-19).

இஸ்ராயேலர் பாபிலோனியாவிலிருந்து திரும்பியபின் இவர்களும் ஓர் குழுவாக வாழ்ந்தனர் என்பதற்கான திடமான ஆதாரங்கள் இல்லை. நெகமியா எருசலேமைப்

புதுப்பித்தபோது அதன் ஓர் வாயிலை பழுது பார்க்கும் பணி இரகாப்பியனான மல்கியா விடம் ஒப்படைக்கப்பட்டதாக நெக *3:14*-இல் வாசிக்கிறோம். பிற்காலத்தில் சூழ்நி லைகள் இவர்களின் வாழ்க்கையை மாற்றிய மைத்தது. நாடு திரும்பியபின் இவர்கள் யபேசில் வாழ்ந்தனர் *(1 நாள் 2:55)*. ''ஆண்ட வர்முன் நிற்பது'' என்பது யூதர்களின் வழி பாட்டைக் குறிக்கும். யூத மரபுச் செய்திப் படி இந்த இரக்காபியர்கள் யூத குருக்களுக்கு தங்கள் புதல்வியரை மணம் முடித்துக் கொடுத்து அதன் மூலம் ஆலய பணியில் நுழைந்தனர் எனலாம்.

இவர்கள் பல இடங்களில் வசிக்கிறார்கள் என சுற்று பயணிகள் கூறுகிறார்கள். பென் யாமின் தூதெல்லா என்பவர் அரேபியாவில் திராட்சை இரசம் பருகாமலும் இறைச்சி உண்ணாமலும், திருநூல் படிப்பதிலுமே காலத்தைச் செலவிடும் ஒரு இலட்சம் யூதர்க ளைக்கண்டதாக குறிப்பிட்டுள்ளார். 19-ஆம் நூற்றாண்டில் யோசேப்பு உல்பு என்பவர் இவர்களை மெசபொத்தோமியாவிலும் ஏம னிலும் கண்டதாகக் குறிப்பிட்டுள்ளார். வேறு சிலர் இத்தகைய ஒரு குழு சாக்கடல் அருகில் வாழ்வதாகவும் கூறுகின்றனர். 9-ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்தில் சிலர் குடிபழக்கத்தை முற்றிலும் ஒதுக்கிப் பக்தி யோடு வாழ்ந்து வந்தனர். இவர்களும் தங் களை இரக்காபியர் என அழைத்துக் கொண் டனர்.

*3.* நாடு கடத்தப்பட்டுத் திரும்பியபின் பேத்து-கக்கரேம் மாவட்டத்தை ஆண்ட மல் கியாவின் தந்தை *(நெக 3:14)*. இவர் 2-இல் குறிக்கப்பட்டவராக இருக்கலாம். அப்படி யென்றால், மல்கியா, இரக்காபின் மகன் என்ற அளவில் ஓர் இரக்காபியர் ஆவார்.

**இரக்காபியர்** *(*RECHABITES*)*

காண்க இரக்காபு-2.

**இரக்கேம்** *(*REKEM - நட்பு*)* - ஆள்.

*1.* யாவேயின் கட்டளைப்படி மோசே இஸ்ராயேல் மக்களுடன் சேர்ந்து கொன்ற எமோரிய மன்னன் சீகோனின் சிற்றர்சர்க ளான ஐந்து மிதியானிய அரசர்களில் இவ ரும் ஒருவர் *(எண் 31:8; யோசு 13:21)*, மிதியானியர் பாகால்-பேயோர் வழி பாட்டை இஸ்ராயேலில் புகுத்தியதாலும், சிமியோனின் வழித்தோன்றலான சிம்ரி என் பவன் மிதியானிய இளவரசி கொசுபி என்ப வளை மனைவியாக்கிக் கொண்டதாலும் இறைவன் மிதியானியரை இவ்வாறு பழி வாங்கினார் *(எண் 25)*.

*2.* யூதாவைச் சேர்ந்த இவர் காலேபுடைய வழித் தோன்றலும், எபரோனின் மகனும் சம்மாய் என்பவனின் தந்தையும் ஆவார் *(1 நாள் 2:43;44)*.

**இரக்கேம்** (REKEM) - இடம்

இது யோசுவா பென்யாமின் கோத்திரத் திற்கு ஒதுக்கிய பகுதியின் எல்லைக்குள் இருந்த ஒரு நகரம் ஆகும் *(யோசு 18:27)*. இது இருந்த இடம் பற்றி ஒன்றும் தெரிய வில்லை.

**இரக்கோன்** *(*RAKKON - கடற்கரை, நெருக்க மான இடம்*)*

இது தாண் பகுதியில் உள்ள ஓர் கிராமம் *(யோசு 19:46)*. இது மத்தியதரைக்கடலின் வடக்கில் தேல் ஏல்-ரெக்செயித்து என்னுமி டத்தில் இருந்திருக்கலாம்.

**இரசீன்** (REZIN*)*

இரசீன் என்பவர் தமஸ்கு நகர கடைசி அரமேய மன்னன். தமஸ்குக்கு அருகே அமைந்திருந்த மிட்-காதாரா என்னம் ஊரில் பிறந்து தமஸ்குவின் தலைவனானார் *(கி.மு. எட்டாம் நூற்றாண்டு) (எச 7:8)*. அசீரிய அரசனான திகிலாத்து பிலேசார் என்ற மன்ன னுக்கு சீரியா மன்னன் இஸ்ராயேல் மன்னர்க ளைப்போல் கப்பம் கட்டினார் *(2 அர 15:19. 20)*. இரசீன் மன்னன் இஸ்ராயேல் அரசனான பெக்கா என்பவனுடன் சேர்ந்து கொண்டு, யூதேயாவையும் ஆசீரியாவை எதிர்க்கும் கூட்டணியில் சேர வற்புறுத்தினான் ஆனால் யூதாவின் மன்னன் ஆகாசு அதில் சேர வில்லை, எனவே யூதேயாமீது படையெ

டுத்து வந்து ஏலாத்தின் யூதர்களை துரத்தி விட்டு அரமேயர்களை அங்குக் குடியேற வைத்தனர் *(2 அர 16:5.6; ஏச 7:1.6)*. எருசலேமின்மீது செய்த ஆக்கிரமிப்பு தோற்ற பின்னும், ஆகாசு மன்னன் பயந்து தன் நாட்டுச் செல்வங்களைக்காட்டி அசீரிய மன்னனின் துணையை நாடினார். ஆனால் இறைவாக்கினர் ஏசயா பயப்படாமல் இறைவன் மீது நம்பிக்கை வை எனக் கூறிய அறிவுறையைப் பொருட்படுத்தவில்லை கி.மு.733-இல் மூன்றாம் திகிலாத்து பிலேசார் இஸ்ராயேலின் மீது படையெடுத்து பெக்காவைக் கொன்று ஓசேயாவை அரசனாக்கினார் *(2 அர 15:29. 30)*. இரசீன் 'புல்லிமானைப்போல்' தமஸ்குவிற்குத்தப்பி ஓடினார். அங்கும் அசீரியப் படைகள் முற்றுகையிட்டன. கி.மு.732-இல் தமஸ்குவை அசீரியர்கள் கைப்பற்றினர். இரசீன் கொல்லப்பட்டார் *(2 அர 16:9)*.

**இரசேப்பு** (RESHEPH - தீப்பிழம்பு)-ஆள்

*1.* இவர் எப்பிராயிம் குலத்தைச் சேர்ந்தவர். இவர் இரப்பா என்பவரின் மகனும் தேலா என்பவரின் தந்தையும் ஆவார் *(1 நாள் 7:25)*.

இரசேப்பு என்ற சிறப்புப் பெயரைப்பொதுப் பெயர்ச்சொல்லாக மொழிப்பெயர்த்துள்ளனர் *(உப 32:24; சங் 76:4; 78:48; யோபு 5:7; உ.ச. 8:6)*

*2.* இரசேப்பு என்பது ஒரு கானானியக் கடவுளாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இதன் உருவம் தலைப்பாகையுடனும் கொம்புகளுடனும் காணப்படுகின்றது. எனவே இது கொள்ளைநோயின் கடவுள் என்றும் அழிவின் கடவுள் என்றும் வர்ணிக்கப்படுகிறது *(உப 32:34; சங் 78:48)*.

**இரசேப்பு** (REZEPH - சூடாக்கப்பட்ட கல், அரண் செய்யப்பட்ட இடம்) - இடம்

எசக்கியாவுக்குச் சனகெரிபு மன்னனின் படைத்தளபதி அறிவித்த செய்தியில் குறிப்பிட்ட கோசான், காரான் ஆகிய நகரங்களுடன் இரசேப்பு நகரமும் குறிப்பிடப்பட்டது *(2 அர 19:12; எச 37:12)*. இவை அசீரியர்களால் கைப்பற்றப்பட்டன எனவும் இவ்விடத்தின் தெய்வங்கள் அவைகளைக் காப்பாற்ற முடியவில்லை என்றும் கூறப்படுகிறது. ஏபெல் சிங்கர் என்ற இடத்திற்கு மேற்கில் இரசேப்பு அமைந்துள்ளது. இது அசீரியர்களின் முக்கியமான இடமாகக் கருதப்பட்டது. இது மூன்றாம் சால்மனேசர் காலத்திலேயே அசீரியாவுடன் இணைக்கப்பட்டது.

**இரசேன்** (RESEN - பாதுகாக்கப்பட்ட இடம், கடிவாளம்)

அசீரியாவில் நினிவே நகருக்கும், காலா நகருக்கும் இடையே நிம்ரோத்து என்பவரால் கட்டப்பட்ட மாபெரும் நகரம் இரசேன் ஆகும் *(ஆதி 10:12)*.

**இரசோன்** *(*REZON - மேல் குடி மகன், இளவரசன்*)*

இவர் எலியதாவின் மகன். இரசோன் என்பவர் சாலமோன் மன்னனுக்கு பகைவனாக இருந்த ஓர் அரமேயத் தலைவனாவார். தன் வாழ்வின் தொடக்கத்தில் சோபாவின் அதாதெசர் என்பவனுக்கும் பணியாளனாக இருந்தார். பின் அங்கிருந்து பிரிந்துசென்று திருடர் கூட்டத்திற்கு தலைவனானார். சாலமோன் காலத்தில் தமஸ்குமேல் இஸ்ராயேலரின் பிடிப்பு வலிமையிழக்கும் நிலையிலிருந்தபோது இரசோன் அதை வென்று புதிய வலிமைமிக்க ஒரு அரமேய ஆட்சியை உண்டாக்கினார் *(1 அர 11:23-25)*. முதலாம் பென்-அதாது என்பவரின் பாட்டனாரான கெசியோன் என்பவரும் இரசோனும் ஒரே ஆள் எனக் கருதப்படுகிறது *(15:18)*.

**இரட்டை நாவுள்ளவர்கள்** *(*DOUBLE-TONGUED*)*

இச்சொல்லின் பொருள் அவ்வளவு தெளிவாக இல்லை. இது விவிலியத்தில் *1 தீமோ 3:8*-இல் மட்டும் தான் காணப்படுகிறது. இச்சொல்லின் கிரேக்க மூலம் சொல்லின் பொருள் ''சொன்னதே சொல்லுதல்; செய்ததே செய்தல்'' ஆக இருக்கலாம். மற்றொரு மொழி பெயர்ப்பில் ''உண்மையில்லாத'' என்று கூறப்பட்டுள்ளது. திருத்தொண்டர்கள் அனைவரும் உண்மையைப் பேச வேண்டும். இரட்டை நாவுள்ளவர்கள் என்ற பதம்

நேர்மையற்றவர்கள், வாய்மை அற்றவர்கள் என்பதை உணர்த்தலாம். ஆசிரியர், திருத் தொண்டர்களைச் செய்ததையே திரும்பிச் செய்யாதீர்கள், சொன்னதையே மறுபடியும் சொல்லாதீர்கள் என்று அறிவுரை கூறியது சந்தேகப்படக்கூடியதாக இருக்கின்றது. கிரேக்க சொல்லும் இலத்தீன் சொல்லும் 'இரண்டு மொழிகளைப் பேசுவதை' மட்டும் குறிக்கவில்லை; ஏமாற்றுதல், வேடம் பூணுதல் என்ற பொருளையும் கொடுக்கின்றன.

**இரண்டாம் தொகுதி அல்லது பகுதி** (SECOND QUARTER)

இது எருசலேமின் ஒரு பகுதியாகும். இங்குதான் குல்தா என்ற இறைவாக்கினி வாழ்ந்து வந்தாள். இப்பகுதி ஆலயத்தின் மேற்கு பகுதி சுவருக்கும், பாதுகாப்பு சுவரின் வடக்கு பகுதிக்கும் இடையில் அமைந்துள்ளது (*2 அர 22:14; 2 நாள் 34:22*). இது தாவீது நகருக்கு மேற்கில், திரோப்பியன் பள்ளத்தாக்கின் குறுக்கில் அமைந்திருந்தது. இது அரசர்கள் காலத்தில் வளர்ச்சியடைந்தது. பிற்காலத்தில் இது, நெகமியாவால் கட்டப்பட்ட சுவற்றுக்குள் சேர்க்கப்பட்டது. செப் *1:10*-இல் இது புதிய நகர் பகுதி என்று குறிக்கப்படுகிறது. குல்தா என்ற இறைவாக்கினிதான் இஸ்ராயேலின் அரசனான யோசியாவின் ஆட்சியில் ஆலயம் பழுதுப்பார்க்கப்பட்டபோது கிடைத்த சட்ட நூலை 'இறைவனுடைய வார்த்தைதான்' என்று உறுதியாகக் கூறி ஏற்கச் செய்தாள்.

**இரண்டாம் வருகை** (SECOND COMING)

கிறிஸ்துவின் இறுதிக்கால வருகையைக் குறிக்கப்பயன்படும் ஒரு சொற்றொடராகும். ஆண்டவர் மீண்டும் தோன்றுவதைப் பற்றி எபி *9:28*; 2 பேதுரு *1:16* ஆகிய பகுதிகள் விவரித்தாலும், இரண்டாம் வருகை என்ற சொற்றொடர் புதிய ஏற்பாட்டில் காணப்படவில்லை. மத் *24:3*; 1 தெச *2:19*; யாக் *5:27*; 2 பேதுரு *3:4* ஆகிய இடங்களில் வருகை என்று மட்டும் பேசப்பட்டாலும் கூறவரும் கருத்து ஒன்றே. இச்சொற்றொடர் கி.பி.*150*-ஐ ஒட்டி வாழ்ந்த யூஸ்தீன் காலத்திலிருந்து ஒரு கலைச் சொல்லாகப் பயன்பட்டதாகத் தெரிகிறது.

**இரண்டாவது ஆதாம்** (SECOND ADAM)

உரோ *5:14-19*; 1 கொரி *15:21-23. '45-50*; ஒருவேளை பிலி *2:5-11* ஆகிய பகுதிகளில் கூறப்படும் கிறிஸ்து பற்றிய கருத்துக்களை விவரிக்கப் பயன்படும் சொற்றொடராகும்.

முதல் மனிதன் ஆதாம், மண்ணிலிருந்து வந்தவர், மண்ணைச்சார்ந்தவர். அவரது பாவம் சாபத்தைக் கொண்டு வந்தது. அவரில் எல்லா மனிதரும் மரிக்கின்றனர். இதற்கு மாறாக, இரண்டாம் அல்லது கடைசி ஆதாம் அல்லது விண்ணிலிருந்து வந்த இரண்டாம் மனிதனாகிய கிறிஸ்து மகிமை பெறுகிறார்; உயிர்தரும் ஆவியாகிறார். அவரில் விசுவாசிகள் உயிர் பெறுகின்றனர்; மகிமைப்படுத்தப்படுகின்றனர்.

**இரண்டாவது மரணம்** (SECOND DEATH)

திருவெளிப்பாட்டில் மட்டுமே குறிப்பிடப்பட்டுள்ள இச்சொற்றொடர், ''நெருப்பு மற்றும் கந்தகத்தால் எரியும் கடல்'' என (திருவெளி *21:8; 20:14*) யோவானால் அடையாளச் சொற்களில் விவரிக்கப்படுகிறது. உடலின் மரணத்தால் மறைசாட்சி கூறித் துன்புறுவோருக்கு (*2:10-11*) வாக்களிக்கப்பட்ட வாழ்வின் வெற்றி வாகையின் பின்னணியில் இக்கருத்து யோவானின் வழக்கில் தெளிவாக விவரிக்கப்படுகிறது. மேலும், தூய்மையாக உள்ளோரும், புனிதப்படுத்தப்பட்டவரும் புதிய வாழ்வின் முதல் உயிர்ப்பில் பங்கு பெற்றிருந்தால், இதனை அனுபவிக்க மாட்டார்கள் (*20:6*).

இரண்டாவது மரணம் என்பது, விசுவாசிகளுக்கு வாக்களிக்கப்பட்ட இறைமுன்னிலையில் வாழும் வாழ்க்கைக்கு எதிர்மாறானது (திருவெளி *21:3-4; 22:3-5*). வாழ்வின் நூலில் பெயர் எழுதப்படாதவர்களோடு (*20: 15*), சாவும், பாதாளமும் இந்த இரண்டாம் மரணத்தை அனுபவிக்கும் (*20:14*). இச்சொற்றொடர் ராபிகளின் மரபிலிருந்து வருவதாகத் தெரிகிறது (உப *33:6*; எரே *51:39*).

**இரண்டு சுவர்களுக்கிடையேயுள்ள வாயில்**

எருசலேமின் தென் கிழக்கில் உள்ள நகர வாயில் *(2 அர 25:4; எரே 39:4; 52:7)*. ஒருவேளை இது ஊருணி வாயிலாக *(நெக 2:14; 3:15)* இருக்கலாம்.

யூதாவின் அரசனான செதேக்கியாவும் அவனுடைய போர் வீரர்களும் இரண்டு சுவர்களுக்கு இடையிலிருக்கும் வாயிலின் வழியாக இரவோடு இரவாய் பட்டணத்தை விட்டு வெளியேறி பாலை நிலத்தை நோக்கித் தப்பியோடினார்கள்.

**இரதாமின்** *(RATHAMIN)*

தெமேத்திரியு என்ற சீரிய மன்னன் (கி.மு. *150)* சமாரியாவிடமிருந்து யோனத்தான் மக்கபேயுக்கு அளித்த *3* நகரங்களில் ஒன்று *(1 மக் 11:34)*. மற்ற இரு நகரங்களான அபேய் ரேமாவும் இலிதாவும் பாலஸ்தீனத்தில் இருப்பதால் இந்நகரம் பாலஸ்தீனத்திலே தான் இருக்கவேண்டும். ஆனால் இதற்கு வேறெந்த அடிப்படையும் இல்லை. இது சாமுவேலின் சொந்த ஊரான இராமாவைச் சூழ்ந்த ஒரு பகுதியாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

**இரத்த ஊறல்** *(DISCHARGE)*

மேக வெள்ளை, வெட்டை போன்ற நேய்களைக் குறிக்க ஐந்நூல் பயன்படுத்தும் ஒரு சொல்லாகும். ஆதிபெற்றோரின் பாவத்தால் வந்த வியாதிகளில் இதுவும் ஒன்று, இது ஒரு கொடிய தொற்று வியாதி; இது பெண் குறியின் வழியில் அரிப்பை உண்டு பண்ணும். லேவி *15:19*-இல் இரத்த ஊறலில் மாதவிடையையும் சேர்த்துக் கூறுகிறது. காண்க: இரத்தப் போக்கு.

**இரத்த நிலம்** *(FIELD OF BLOOD)*

அப *1:19*-இல் மட்டும் சிறப்பாகக் குறிப்பிடப்படும் வார்த்தை. 'அக்கலிதாமா' என்ற மூலச் சொல் கிரேக்க மொழியில் பலவிதமாக மொழி பெயர்க்கப்பட்டுள்ளதால் மூலச் சொல் எது என்று குழப்பமாக உள்ளது. காண்க. அக்கலிதாமா.

**இரத்தப் பழி** *(BLOOD GUILT)*

விலங்குளின் அல்லது மனித இரத்தத்தைச் சிந்துதல் சட்டமுறைப்படி பழிக்குரியதாகும். திருடன் கன்னமிட்டுத் திருடுகையில் வேண்டுமென்று அவனைக் கொல்லுதல் *(யாத் 22:2-3)*, வீடு கட்டுகையில் மேல்மாடியிலிருந்து கால் நழுவிக் கீழே விழுந்து மடிதல் *(உப 22:8)*, கொலை செய்தவனை அடைக்கல நகருக்குள் இரத்தப் பழிவாங்குதல் *(உப 19:10; 2 நாள் 19:10)* போன்றவை இரத்தப் பழிகளாகும்.

இரத்தப் பழிபற்றிய ஒழுங்குகளுக்கு அரசர்களும் கட்டுப்பட்டவர்களாவர். கிபயோனியர்களைக் கொன்றதற்காக, சவுலின்மேல் இரத்தப் பலிவாங்கத் தாவீது கோரப்படுகிறார் *(2 சாமு 21:1 தொ)*. உரியாவைக் கொன்றதற்காக தாவீதே இரத்தப்பழிக்குரிய தண்டனை பெறுகிறார் *(51:14)*. ஆனால் மெசியாக் காலத்தில் ''எருசலேமின் இரத்தக் கறைகளும்'' தூய்மைப்படுத்தப்படும் *(ஏச 4:4)*.

இரத்தப்பழி என்ற பதம் புதிய ஏற்பாட்டில் காணப்படவில்லையாயினும், பிலாத்து இயேசுவில் ''இரத்தத்தின் மட்டில்'' தான் குற்றமற்றவன் என்று, பொறுப்பை முழுவதும் யூதர்கள் மேல் சுமத்த முயலுகிறார் *(மத் 27:24-25)*. அப *5:28*-இல், யூதச் சங்கத்தினர் ''அந்த மனிதனின் இரத்தப் பழியை'' தங்கள் மேல் சுமத்துவதாக அப்போஸ்தலர்களைக் குற்றம் சாட்டினர்.

**இரத்தப் பழிவாங்குவோன்** *(AVENGER OF BLOOD)*

தன் இனத்தின் ஒருவனைக் கொலை செய்தவனின் குடும்பத்தையோ இனத்தையோ சேர்ந்த ஒருவனைக் கொன்று பழிதீர்க்கும், கொல்லப்பட்டவனின் இரத்த உறவினனோ அல்லது இனத்தைச் சேர்ந்தவனோ இரத்தப் பழிவாங்குவோன் என்றழைக்கப்பட்டான். இப்பழக்கம் பழங்கால மேற்காசிய மக்களிடையே இருந்தது போல், இக்கால ஆதிவாசிகளிடையேயும் காணப்படுகிறது. இறப்பால் தகர்க்கப்பட்ட சமன்பாட்டை மீண்டும்

அமைப்பது இந்த இரத்தப் பழிவாங்கும் வழக்கத்திற்கு ஒரு விளக்கமாகும். ஒரு கொலை மற்றொரு கொலையால் சமன் செய்யப்படுகிறது.

பழைய ஏறபாட்டில் கொலை செய்யப் பட்டவனின் நெருங்கிய உறவினனே இப் பழி தீர்க்க வேண்டும். உறவுமுறை இரத்த பழிவாங்குவோனைக் கவனமாக விவரிக்கி றது (எண் 35:12). அவருடைய பொறுப்பும் தெளிவாக விவரிக்கப்படுகிறது *(35:19-21; உப 19:12)*.

தற்செயலாக நடக்கும் கொலையை வேண்டுமென்று செய்த கொலையிலிருந்து வேறுபடுத்தி, மோசே சட்டம் இரத்தப் பழி வாங்குதலைக் கட்டுப்படுத்துகிறது. தற்செய லாகக் கொலை செய்தவன், ஆண்டவரு டைய பீடத்திற்கோ *(யாத் 21:14; 1 அர 2:28-31)* அல்லது ஆறு அடைக்கல நகரில் ஒன்றுக்கோ *(யாத் 21:13; எண் 35:9-15; உப 19:6-10; யோசு 20:1-9)* ஓடி அங்கு அடைக்க லம் தேடலாம். அங்கு அதன் எல்லைக்குள் அதன் குரு சாகும்வரை, பாதுகாப்பாக இருப்பான். அடைக்கல நகரம் அவனுக்கு நாடுகடத்தப்பட்ட இடமாக, உண்மையில் ஒரு சிறைச் சாலையாக அமைந்தது.

இந்த இரத்தப் பழிவாங்கும் நிகழ்ச்சிக ளில் சில பழைய ஏற்பாட்டில் விவரிக்கப்ப டுகின்றன. தன் சகோதரர்களின் சாவுக்குப் பொறுப்பான மிதியானியர்களைக் கித யோன் கொன்றார் *(நீதி 8:18-21)*. சவுல் காரணமாகிய தங்கள் சககுடிமக்களின் இறப் பைக் கிபயோனியர் புழிதீர்த்தனர் *(2 சாமு 21:1-9)*. ஆனால் போரில் கொல்லப்பட்ட தன் சகோதரன் அசாயேலின் இறப்பை யோவாபு பழிதீர்த்தது, இரத்தப் பழிதீர்த லுக்கு ஒரு மாதிரிகையன்று *(2 சாமு 3:27.30. 31 தொ; 2 அர 2:5)*.

பிற்காலத்தில் பல அரசாங்க நிறுவனங்கள் நீதி வழங்கத் தொடங்கிய பின் இப்பழக்கம் இஸ்ரா‌யேலில் கைவிடப்பட்டது.

**இரத்தப் போக்கு, பெரும்பாடு** (FLOW OF BLOOD)

லூக்கா பயன்படுத்தும் இந்த சொல் ஹிப் போகிரடெஸ், திஸ்கோரிதஸ், காலன் இவர் களின் மருத்துவ நூல்களில் காணப்படுகிறது.

லேவியர் சட்டப்படி, மாதவிடாய் இரத் தப் போக்கு ஒரு பெண்ணை ஏழு நாட்களுக் குத் தீட்டுடையவர்களாக, தூயமையற்றவ ளாக ஆக்கியது (லேவி15:19 தொ). இக்கா லத்தில் அவளைத் தொட்டவர்களும் அந் நாள் மாலைவரைத் தீட்டுடையவர்களானார் கள்.

இரத்தப் போக்குடைய ஒருபெண்ணை இயேசு குணமாக்கியது தனிச்சிறப்புடையது *(லூக் 8:43; மாற் 5:25)*. எக்காரணத்தினால் இந்த இரத்தப் போக்கு அவளிடம் ஏற்பட்ட தாயிருந்தாலும், இரத்தம் தொடர்ந்து வடி வது அவளைத் தொடர்ந்து தீட்டுடையவ ளாக ஆக்குகிறது. அவள் இயேசுவின் ஆடை யைத் தொட்டது, அவரைச் சடங்குமுறைத் தீட்டுடையவராக ஆக்கினாலும்,ஆற்றல் மாய சக்தியாகப் பாய்வதால் என்பதை விட அவ ளது விசுவாசமே அவளுக்குக் குணமளித்தது என்பதுவே இந்நிகழ்ச்சியுரையின் செய்தியா கும்.

**இரத்த மணமகன்** (BRIDEGROOM OF BLOOD)

சிப்போரா தன் கணவன் மோசேக்குக் கொடுத்த பெயராகும் *(யாத் 4:25-26)*. ஆண்ட வரது கோபத்தைத் தணிக்கவும் மோசேயின் உயிரைக்காப்பாற்றவும், சிப்போரா, தங்கள் தலைமகன் கெரிசோமுக்கு விருத்தசேதனம் அதாவது நுனித்தோல் அறுவை செய்தாள். இப்படி அறுக்கப்பட்ட நுனித்தோலால், தன் கணவனின் பிறப்புறுப்புகளைத் தொட் டாள். இதை வாசகம், ''மோசேயின் பாதங்க ளைத் தொட்டு'' என்று செயற்கை மொழி யில் கூறுகிறது. இச்செய்கையால் மோசேக் கும் இச்சடங்கைச் செய்தாள் என்று கூறலாம் (ஏனெனில் அவருக்கும் இச்சடங்கு இது வரை செய்யப்படவில்லை எனத் தெரிகி றது). இதுவரை, பருவம் எய்தியபோதோ அல்லது திருமணத்தின் போதோ செய்யப்

பட்ட இச்சடங்கு குழந்தைகளுக்கும் செய்யப்படும் சடங்காக மாற்றியதற்கு விளக்கமாக இந்த நிகழ்ச்சியுரை புகுத்தப்பட்டிருக்கலாம்.

**இரத்தம்** (BLOOD)

மனித, விலங்கு, தாவர வாழ்வுக்கூட அவசியமான நீர்த்தன்மையுடைய பொருளாகும் (காண்க ஆதி 49:11-12; உப 32:14).

1. பழைய ஏற்பாடு:- இச்சொல்லின் இயல்பான பொருளைத்தவிர, உயிருக்கே சமமான பொருளில் உருவகமாகவும் இதற்குப் பொருள் அளிக்கலாம். இவ்வாறு ஆபேலின் இரத்தத்தின் ''குரல்'' பழிவாங்கக் கதறுகிறது (ஆதி 4:10). ஆதி 9:4-6-இல் நோவா, மனிதனுடைய அல்ல விலங்கின் ''இறைச்சியை அதன் உயிராகிய இரத்தத்தோடு'' உண்ணக் கூடாது என்று தடை செய்யப்படுகிறார். இரத்தம் வடிக்கப்படாத விலங்கின் இறைச்சியை உண்ணக்கூடாது என்று தடை உயிருள்ள விலங்குகளையோ அல்லது இன்னும் சூடான இரத்தத்தைக் கொண்டுள்ள விலங்குகளையோ உண்ணும் கொடிய, காட்டுமிராண்டிப் பழக்கத்தை எதிர்ப்பதற்காகவும் இருக்கலாம். ஒரு வேளை இத்தடை, பலிக்காக ஒப்புக் கொடுக்கப்படும் இரத்தத்தின் முக்கியத்துவத்தையும் உணர்த்தலாம். இறைவன் மனிதனைத் தம் உருவில் உண்டாக்கியிருந்ததால் மனித இரத்தம் சிந்தப்படுவது தடை செய்யப்பட்டிருந்தது (9:6). மனித இரத்தத்திற்கு இறைவன் கணக்குக் கேட்டபோது, அவர் மனித உயிரைத் தமது பாதுகாப்பில் எடுத்துக் கொண்டார். இரத்தத்திற்கும் உயிருக்குமிடையே நெருங்கிய உறவை அமைத்தார். இதனால் ஆபேலைக் காயின் கொன்றதோடு தொடங்கிய கொலை செய்யும் பழக்கத்தைத் தடுக்க இறைவன் எதிர் பார்த்தார்.

இந்த தடையை மோசேயின் சட்டம் மாற்றவில்லை, விலங்குகளின் இரத்தமும் கொழுப்பும் பீடத்திற்குக் கொண்டுவரப்பட்டு, அவை மனிதனுக்கல்ல இறைவனுக்கே சொந்தமானவை என்பது சுட்டிக் காட்டப்பட்டது. குருக்கள் பீடத்தின்மேல் இரத்தத்தைத் தெளிக்கலாம். ஆனால் மற்ற இஸ்ராயேலர்களைப் போல் அவர்களும் அதையும் கொழுப்பையும் உண்ணக்கூடாது (லேவி 3:16-17; 7:22-27). பீடத்தின் மேல் ஒப்புக் கொடுக்கப்பட்ட கொழுப்பும் இரத்தமும் அடையாளமாகப் பரிகாரத்தை உணர்த்தின; ஆகவே அவை இறைவனுக்கே சொந்தமானவையாகும். பாலைவனத்தில் இஸ்ராயேலர் அலைந்து திரிந்த காலத்தில் மாட்டையோ, செம்மறியாட்டையோ வெள்ளாட்டையோ கொன்று பலிசெலுத்துதல் சாட்சிக் கூடார வாயிலின் முன்புதான் செய்யப்பட வேண்டும் (லேவி 17:3-5). பாலஸ்தீனத்தை வென்று குடியேறியபின், பாலஸ்தீனத்தில் எங்கும் விலங்குப்பலி செலுத்த குரு அனுமதிக்கப்பட்டிருந்தார். ஆனால் விலங்கின் இரத்தத்தை உண்ணக் கூடாது (உப 12:15-16. 21-25; 1 சாமு 14:35).

லேவி 17:11-இன்படி இறைவன், தமது மக்களின் ஆன்மாக்களுக்குப் பாவப் பரிகாரமாக, இரத்தத்தை அளித்திருந்தார். ஏனெனில் உயிருள்ள காரணத்தால் இரத்தமே பரிகாரம் செய்கிறது. விலங்கு இரத்தத்தை உண்ணக் கூடாது என்ற தடை மீண்டும் மீண்டும் கூறப்பட்டு; யூதர்களால் கடைப்பிடிக்கப்பட்டது (17:10.12-13). பரிகார நாளில், விலங்கு இரத்தம் சிந்தும் சடங்கின் வழிபாட்டுப் பொருள் உச்சநிலை அடைந்தது எனலாம். அன்று, பெரிய குரு இரத்தத்தைத் திருத்தூயகத்தினுள் கொண்டு சென்று, இரக்க இருக்கையின் மீது தெளித்தார் (4:6. 14-15). உயிரின் சாரம் என்ற அளவில், விலங்கு இரத்தம் உண்மையான உயிருக்காகப் பரிகாரம் செய்தது. அடையாளமுறையில் பலி ஒப்புக் கொடுப்பவரின் பாவங்களுக்காகப் பரிகாரம் செய்தது.

2. புதிய ஏற்பாடு:- பழைய ஏற்பாட்டில், ஆபிரகாம் இறைவனோடு உடன்படிக்கை செய்து கொண்டபோது, தனது சொந்த இரத்தத்தையே சிறிது சிந்த வேண்டியிருந்தது (ஆதி 17:24). பிற்காலத்தில் மனிதப் பாவங்களுக்குப் பரிகாரமாக விலங்கு இரத்தம்

கோரப்பட்டது. புதிய ஏற்பாட்டில், கிறிஸ்துவின் இரத்தத்தினால் மக்கள் பரிகாரம் அடைகின்றனர்; *1 யோவா 1:7*-இன்படி ''இறைமகன் இயேசுவின் இரத்தம் எல்லாப் பாவத்தினின்றும் நம்மைத் தூய்மைப்படுத்துகிறது''. சிலுவையில் கிறிஸ்துவின் குற்றமற்ற இரத்தம், மனுக்குலத்தின் பாவமிக்க இரத்தத்திற்குப் பதிலாக, சிந்தப்பட்டது. ஆண்டவரது இறுதி இரவுணவில், திராட்சை இரசம் கிறிஸ்துவின் இரத்தமாக மாறி, பரிகார இரத்தமாகிறது.

புதிய ஏற்பாட்டில் நற்கருணையின் இரத்தம், எபிரேயக் கருத்திலிருந்து சிறிது வேறுபடுகிறது. இயேசுவின் இரத்தம் பானமாக அளிக்கப்படுகிறது (*மத் 26:27* தொ; *மாற் 14:23* தொ; *லூக் 22:20*; *யோவா 6:53* தொ; *1 கொரி 11:25* தொ). ஆனால் அதன் அருட்சாதனப் பொருள் எபிரேய மாதிரிகையையே கொண்டுள்ளது. ஏனெனில் இரத்தம் உயிராக இருக்கிறது. அது நற்கருணைவழியாக இயேசுவிடமிருந்து அவரது சீடர்களுக்கு அளிக்கப்படுகிறது (*யோவா 6:53* தொ; *1 கொரி 10:16*). நற்கருணை நிறுவின நிகழ்ச்சியுரைகளில் எல்லாம், நற்கருணை இரத்தம் புதிய உடன்படிக்கையின் இரத்தமாகும். இங்கு *யாத் 24:8* சுட்டிக் காட்டப்படுகிறது. மத்தேயுவிலும் மாற்கிலும், பாவக் காணிக்கை மற்றும் குற்றக் காணிக்கையின் இரத்தத்தைப்போல், நற்கருணை இரத்தம் பரிகாரம்செய்யக் கூடியது. இயேசுவின் இரத்தம் பரிகாரம் செய்யக் கூடிய பலியாகும் என்ற கருத்து திருமுகங்களில் அடிக்கடியும் தெளிவாகவும் காணப்படுகிறது. இயேசு அவரது இரத்தத்தால் பரிகாரச் சாதனமாவார் (*உரோ 3:25*). அவருடைய இரத்தத்தால் நாம் இறைவனுக்கு ஏற்புடையவர்களாகுகிறோம் (*5:9*). அவரது இரத்தத்தின் வழியாய் நாம் மீட்பு அடைகிறோம் (*எபே1:7*). அவரது இரத்தத்தால் இறைவனுக்கு அருகே கொணரப்பெறுகிறோம் (*2:13*). அவர் சிந்திய இரத்தத்தால் இறைவனுக்கும் மனிதருக்குமிடையே சமாதானம் உண்டாக்குகிறார் (*கொலோ 1:20*). இயேசுவின் இரத்தத்திற்கும், பலி விலங்குகளின் இரத்தத்திற்குமிடையேயுள்ள ஒற்றுமை வேற்றுமை எபிரேயருக்கு எழுதப்பட்ட திருமுகத்தில் நீண்ட அளவில் தரப்படுகிறது. இயேசுவின் இரத்தம் விலங்குகளின் இரத்தத்தைவிட மேலானது (*எபி 9:12* தொ). இரத்தம் மட்டுமே ஆற்றலோடு சுத்தி செய்யும் சாதனமாகும் (*9:20* தொ). இரத்தம் சிந்துதல் இல்லாமல் பாவமன்னிப்பு இல்லை (*9:22*). ஆனால் விலங்கின் இரத்தம் பாவங்களை நீக்க முடியாது (*10:4*). கிறிஸ்து தமது சொந்த இரத்தத்தால் மீட்பை நிறைவேற்றியுள்ளார் (*9:12*). அவருடைய இரத்தத்தின் ஆற்றலால் தூயகத்துள் நுழைய நமக்குத் துணிவு உண்டு (*10:19*). ஆபேலின் இரத்தம் பழிவாங்கக் கூக்குரலிடுவதைவிட (*12:24*) புதிய முடிவில்லா உடன்படிக்கையில் இரத்தம் (*13:20*) பாவ மன்னிப்புக்காக மிக உரத்த குரலில் கூக்குரலிடுகிறது. இயேசுவின் இரத்தம் நம்மேல் தெளிக்கப்படுகிறது (*1 பேதுரு 1:2*). அது மாசு மறுவற்ற செம்மறி போன்ற கிறிஸ்துவின் விலைமதிப்பில்லா இரத்தமாகும் (*1:19*). அது எல்லா பாவத்தினின்றும் நம்மைத் தூய்மைப்படுத்துகிறது (*1 யோவான் 1:7*). அவற்றிலிருந்து நம்மை விடுவிக்கிறது (*திருவெளி 1:5*). இயேசு தமது இரத்தத்தால் மக்களை மீட்டார் (*5:9*). அவரது இரத்தத்தினால் புனிதர்கள் வென்றுவிட்டனர் (*12:11*).

எருசலேம் சங்கத்தில், புறஇனக் கிறிஸ்தவர்கள் ''மிருக இரத்தத்தை''... உண்ணக்கூடாது என்று அப்போஸ்தலர்கள் தீர்மானம் செய்தனர் (*அ.ப. 12:29*). இங்கு உயிருள்ள விலங்குகளின் இரத்தம் குறிக்கப்படுகிறது. இவ்வாறு, கலப்பு மக்களினங்களைக் கொண்ட கிறிஸ்துவ மக்களிடையே, பழைய ஏற்பாடு யூதச் சட்டத்தைக் கட்டாயப்படுத்தினர். அதே சமயம், இப்பழக்கத்தை மிகவும் வெறுப்பாகக் கருதிய யூதக் கிறிஸ்துவர்களுக்கு இதில் விட்டுக் கொடுத்தனர்.

**இரத்தம் சிந்துதல்** (SHEDDING OF BLOOD)

எபிரேயருக்குத் திருமுகம் எழுதிய ஆசிரியரின் கருத்துப்படி ''இரத்தம் சிந்துதல் இல்லாமல் மன்னிப்பு என்பது இல்லை'' (எபி

9:22). உடன்படிக்கை செய்தல், தூய்மைப்படுத்துதல் முதலியவற்றைப் பற்றி மோசே சட்டத்தின் நிபந்தனைகளை ஆசிரியர் குறிப்பிடுகிறார். ''இளங்காளைகள், ஆட்டுக்கிடாய்களின்'' இரத்தம் சிந்திய பலி, சுத்தி செய்ய அவசியமானதாகும் (9:19-21. 25-26). இந்தப் பழக்கத்தைக் கிறிஸ்து கடந்து சென்று, ''பல்லோர் பாவங்களைப் போக்கும் பொருட்டு ஒரே முறையில்'' அவரது இரத்தத்தையே ஒப்புக் கொடுத்தார் (9:28). முடிவில்லாத உடன்படிக்கை ஆற்றலுள்ளதாக ஆவதற்கு இணைப்பாளரின் மரணம் தேவைப்பட்டது.

**இரத்த வியர்வை** (BLOODY SWEAT)

லூக் 22:44-இல் ''கொடிய வேதனைக்குள்ளாகவே, மேலும் உருக்கமாகச் செபித்தார். அவருடைய வியர்வை பெரும் இரத்தத் துளிகளாக நிலத்தில் விழுந்தது'' என்று கூறப்பட்டுள்ளது. இப்பகுதி சில முக்கிய கையெழுத்துச் சுவடிகளில் காணப்படவில்லை. இரத்தம் வியர்வையாகக் கொட்டிற்றா அல்லது வியர்வை இரத்தத்தைப் போல் பெருந்துளியாக விழ்ந்ததா என்று கூறமுடியாது. இக்கூற்று இயேசு அனுபவித்த மிகுந்த துன்பத்தைக் காட்டுகிறது. சிலர் இக்கூற்றை உருவகமாக எடுத்துக் கொண்டிருக்கின்றனர். வியர்வையும் இரத்தமும் கலந்தது என்பது இயற்கையான விளக்கமாயினும் அப்படியிருக்க வேண்டும் என்பதில்லை. எப்படியிருந்தாலும் இது இயேசுவின் மனிதத் தன்மைக்குத் தெளிவான சான்றாகும். இப்பகுதி போன்றவை இயேசுவின் மனிதத்தன்மையை மிகைப்படுத்தி அவருக்கு இழுக்காகலாம் என்பதனால் இவ்வசனம் பல பிரதிகளில் நீக்கப்பட்டிருக்கலாம். ஆனால் இப்பகுதியில் காணப்படும் நடை லூக்காவுக்கே உரியது. ஆகவே இதை லூக்காவே எழுதினார் என்று ஏற்றுக் கொள்ளலாம்.

**இரபா** (RABBAH - பெரிய நகரம்)

1. யூதாவின் பகுதியில் கிரியத்து எயாரிம் அருகிலுள்ள ஓர் ஊர் (யோசு 15:60). இது அமர்னாஏடுகளில் உருபத்து என்றும் எகிப்திய வாசகங்களில் உருபுத்தே என்றும் அழைக்கப்படும் இடமாக பொதுவாக அடையாளம் காட்டப்படுகிறது. ஒரு வேளை இரபா உருபுத்து எம்மாவுக்கு அருகிலுள்ள கிபெத்து பிர்-ஏல்.கிலூ (கிர்பெத்து அமீதா) இருக்கிற இடத்தில் இருந்திருக்கலாம்.

2. இது அம்மோனின் தலைநகரம் (யோசு 13:25; உப 3:11). இது யோர்தான் நதிக்குக் கிழக்கே 36 கி.மீ. தொலைவில் யாபோக்கு சிற்றாறு பாயும் பள்ளத்தாக்கில் உள்ளது. யோர்தானுக்கு அப்பால் உள்ள பகுதியிலே அம்மோனியர்களுக்கு உரிய நகரமாக மறைநூலில் பேசப்படுகிறது இந்நகரம் மட்டுமே (2 சாமு 12:26). இது நீரால் சூழப்பட்ட நகரம் என்றும் கூறப்படுகிறது (12:27). ஆறாம் நூற்றாண்டில் அழிக்கப்பட்ட இந்நகரம் கிரேக்கர்களின் காலம் வரை மீண்டும் கட்டியெழுப்பப்படவில்லை. கிரேக்கர்கள் இந்நகரை எழுப்பி அதற்கு பிலதெல்பியா எனப் பெயரிட்டனர். ஆனால் அராபியர் இதைக் கைப்பற்றியவுடன் இப்பெயர் மறைந்துவிட்டது, இப்போது அம்மானை என்றே அழைக்கப்படுகிறது. தமஸ்குவிற்கும் அரேபியாவிற்கும் இடையேயான வாணிப வழி இந்நகரின் வழியே செல்கிறது.

புதைபொருள் ஆராய்ச்சியின்படி இந்நகரம் கி.மு. 13-ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டிருக்க வேண்டும். கி.மு. 10-ஆம் நூற்றாண்டிற்கு முன் நடந்த நிகழ்ச்சிகளை மறைநூல் விளக்கும்போது இரண்டு இடங்களில் மட்டுமே இந்நகரின் பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது (உப 3:11; யோசு 13:25). தாவீது அரசர் அம்மோனியரின் தலைநகரை முற்றுகையிட்ட நிகழ்ச்சியை விளக்கும் போது இந்நகரின் பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது (2 சாமு 11-12). இதற்கு இணையான மற்ற விவிலிய பகுதிகளிலும் இப்பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது (1 நாள் 20:1-3). இதன்பின் இரபா இஸ்ராயேலர்களின் கைவசமே இருந்தது. ஆனால் 9-ஆம் நூற்றாண்டில் இது தன்னை இஸ்ராயேலிடமிருந்து விடுவித்துக் கொண்டது. ஆமோஸ் இந்நகரத்தைச் சபித்தார் (ஆமோ 1:14). இதன்பின் கி.மு. 7ம் நூற்

றாண்டில்தான் ஏரேமியா இதைப்பற்றிப் பேசுகிறார் (ஏரே 49:2-3). இறுதியாக அரேபி யர்கள் வந்து இந்நகரை முற்றிலுமாக அழிக் கபோவதை எசக்கியேல் குறிப்பிடுகிறார் (எசே 21:20; 25:5). இதற்குப்பின் மறைநூலில் இந்நகரைப்பற்றி எங்கும் பேசப்படவில்லை.

**இரபா** *(REBA - நான்காவது)*

இவர் மோசே தலைமையில் சென்ற இஸ் ராயேலர்களின் படை கொன்ற ஐந்து மிதியா நாட்டு அரசர்களில் ஒருவர் (எண் 31:8; யோசு 13:21). இஸ்ராயேல் மக்கள் மிதியா நாட்டு வழிபாடுகளை ஏற்றதை எதிர்த்து நடந்த போர் இது என எண் 2:31-இல் கூறப்பட்டுள்ளது. இந்த 5 மிதியா நாட்டு அரசர்களும் எமோரிய அரசனான சிகோ னின் சிற்றரசர்களாவர். சீகோனின் நாடு பிற்பாடு ரூபானியர்களுக்குப் பங்கீடு செய் யப்பட்டது.

**இரபாவேல்** *(REPHAEL - இறைவன் குணமாக் குகிறார்)*

இவர் ஒபேது ஏதோம் குடும்பத்தைச் சேர்ந்த செமாயா என்பவரின் இரண்டாம் புதல்வர் (1 நாள் 26:7). இவர் எருசலேம் ஆலயத்தில் வாயிற்காவலராகப் பணியாற் றிய ஒரு திறமைமிக்கவர். பாரம்பரியத்தின் படி தாவீது இவரை அப்பணிக்கு நியமித்தார் எனக் கருதப்படுகிறது.

**இரபிசாகே** *(RAB-SHAKEH)*

அரசனுக்குப் பானம் அளிப்பவர்களின் தலைவன் என்பது இச்சொல்லின் பொருள். பொதுவாக அரசர்களுக்கு பணிவிடை புரிப வர்களின் தலைவன் இப்பெயரால் அழைக் கப்பட்டான் (2 அர 18:17; ஏச 36:2-37:8). அசீரியாவிலும் பாபிலோனியாவிலும் இத்த கைய மேலதிகாரிகள் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்தனர். மேலும் இவர்கள் சில சம யங்களில் படைத்துறை நிர்வாக பொறுப் பையும்கூட கொண்டிருந்தார்கள்.

**இரபிசாரி** *(RAB-SARIS - உடனிருக்கும் பணி யாள்)*

ஓர் அசீரிய (2 அர 18:17) மற்றும் பாபிலோ னிய (எரே 39:13) அதிகாரியின் பட்டம். இது தலைமை அண்ணகனைக் குறிக்கும் (தானி 1:3). இது எபிரேய மொழியிலும் மற்ற செமித்திய மொழியிலும் பயன்படுத் தப்பட்ட ஓர் அசீரியச் சொல். அசீரிய அரச வையில் இவர்களுடைய பணிகளைப் பற் றிச் சில அசீரிய ஏடுகள் குறிப்பிடுகின்றன.

**இரபிதிம்** *(REPHIDIM - ஓய்வு, சமவெளி)*

இஸ்ராயேல் மக்கள் எகிப்திலிருந்து வாக் களிக்கப்பட்ட கானான் நாட்டுக்குச் செல் லும் வழியில் சின் பாலைவெளிக்கும் சீனாய் பாலைவெளிக்கும் இடையே அவர் கள் தங்கிய ஓரிடம் (யாத் 17:1; 19:2; எண் 33:14.15). இந்த இடம் நமக்கு மூன்று நிகழ்ச் சிகளை நினைவுபடுத்துகிறது. இங்குதான் இஸ்ராயேல் மக்கள் மோசேயிடம் தண்ணீ ருக்காக முறையிட்டனர். எனவே தான் இதை 'மாசா மெரிபா' என்றழைப்பர். அம லேக்கு என்ற மன்னன் தோற்கடிக்கப்பட்டது இவ்விடத்தில்தான். இதன் நினைவாக ஒரு பலிப்பீடம் இங்கு அமைக்கப்பட்டதால் 'யாவே நிசி' (கடவுள் என்னை உயர்த்தி னார்) என்று அழைக்கப்படுகிறது (யாத் 17:1-16). மேலும் மோசேயின் மாமனார் எத்திரோ நீதிபதிகளை நியமிக்கும்படி ஆலோசனை கூறியது இவ்விடத்தில்தான் (யாத் 18).

இவ்விடம் சீனாய் தீபகற்பத்தின் தென்மு னையில் அமைந்துள்ள எபெல் மூசா, வாடி பெய்ரான் மற்றும் வாடி ரெபாயீடு போன்ற மூன்று இடங்களுள் ஒன்றாகும் எனக் கருதப் படுகிறது.

**இரபித்து** *(RABBITH - அநேக)*

இது இசக்காரின் எல்லைப்புறத்தில் அமைந்துள்ள ஒரு நகரம் (யோசுவா 19:20). இது, ஒருவேளை செபுலோன் எல்லையி லுள்ள (19:12) ஒரு லேவியர் நகரமான (21:18; 1 நாள் 6:72) தபராத்தோடு அடையா ளம் காட்டப்படலாம்.

**இரபிமாகு** *(RABMAG)*

நெபுக்கதுனேசாரின் அதிகாரிகளுள் ஒருவ ரான நேரிகால்- சரசேர் என்பவரின் பட்டம்

(ஏரே 39:3). பொதுவாக பாபிலோனிய அரசனின் அவையில் பணியாற்றிய அதிகாரிகளில் சிலர் இப்பெயரால் அழைக்கப்பட்டனர். இது அக்காடியச் சொல்லான ரபி - முகி என்ற சொல்லிலிருந்து வந்திருக்கலாம். இந்த அக்காடியச் சொல் அசீரிய ஏடுகளில் காணப்படுகிறது. ஆனாலும் இதன் பொருள் இன்னும் தெளிவாகப் புலப்படவில்லை.

**இரப்பா** (REPHAH ஆதரவு, செல்வம்)

இவர் எப்பிராயீம் குலத்தில் தோன்றியவராவார். யோசுவாவின் மூதாதையர் (1 நாள் 7:25).

**இரப்பாயா** (REPHAIAH - யாவே குணமளிக்கிறார்)

1. இவர் தாவீது, சாலமோன், செருபாபேல் ஆகியோரின் வழித்தோன்றல்களில் ஒருவர். எசாயா என்பவரின் மகனும், ஆர்னான் என்பவரின் தந்தையும் ஆவார் (1 நாள் 3:21).

2. சேயிர் மலையில் வாழ்ந்த அமலேக்கியர்களை அழித்துவிட்டு அங்குக் குடியேறிய ஐந்நூறு சிமியோனியர்களில் ஒருவர். ஈசீயின் புதல்வர்களில் ஒருவர் (1 நாள் 4:42).

3. இவர் இசக்கார் குலத் தோன்றலும் தோலா என்பவரின் மகனும் ஆவார் (1 நாள் 7:2).

4. இவர் பென்யாமின் கோத்திரத்தைச் சார்ந்த யோனத்தானின் வழிவந்த சவுலின் வழித்தோன்றல்களில் ஒருவர் ஆவார். இவர் பினியா என்பவரின் மகனும் எலயாசா என்பவரின் தந்தையுமாவார் (1 நாள் 9:43). இவர் இரப்பா என்றும் அழைக்கப்படுகிறார் (8:3).

5. கூர் என்பவரின் மகனும் நெகமியாவின் காலத்தில் எருசலேமின் மதிற்சுவரைக் கட்ட உதவியவர்களுள் ஒருவரும் ஆவார். யூதேயாவின் ஐந்து மாகாணங்களில் ஒன்றின் ஒரு பாதிக்குப் பொறுப்பாக இவர் அமர்த்தப்பட்டார் (நெக 3:9).

**இரப்பாயிம்** (RAPHAIM)

இவர் யூதித்தின் மூதாதையர். யூதித்தின் மரபுமுறை அட்டவணையில் இவர் அகிதூபு என்பவரின் மகனும் கிதயோனின் தந்தையுமாவார் என குறிப்பிடப்பட்டுள்ளது (யூதி 8:1).

**இரப்பாயிம்** (REPHAIM - அசுரர்கள் வலிமை மிக்கவர்கள்) - ஆள்

1. இஸ்ராயேல் மக்களுக்கு முன்னால் பாலஸ்தீன நாட்டில் வசித்த மக்கள் இரப்பாயிம் எனப்பட்டனர் (1 நாள் 20:4). இவர்களை அசுரர்கள் எனக் கூறுவதுமுண்டு. இவர்களை மோவாபியர்கள், ஏமியர் எனவும், அம்மோனியர்கள், சமுசம்மியர் எனவும் அனாக்கியர் (உப 2:11.20) எனவும் அழைப்பர். ஓர் இனத்தைக் குறிக்கும் பெயராக உகரித்திய இலக்கியங்களிலும் காணப்படுகிறது.

2. இச்சொல் நிழல்களையும் இறந்தவர்களையும் யூதத் தத்துவப்படி செயோல் எனப்படும் பாதாளச் சிறையில் குடியிருப்பவர்களையும் குறிக்கிறது. அவர்கள் கடவுளைப் போற்றமுடியாது (சங் 88:10). அவர்களுக்கு ஞானமும் புரிந்து கொள்ளும் சக்தியும் இல்லை (பழ 9:18; 21:18).

**இரப்பாயிம்** (REPHAIM) - இடம்

யோர்தானுக்கு அப்பால் வாழ்ந்தவர்களாக இரப்பாயியர் குறிக்கப்படுகின்றனர். இவர்களின் வழித்தோன்றல்கள் பெலிஸ்தியாவில் காணப்பட்டனர். எருசலேமுக்கு அருகிலுள்ள ஒரு பள்ளத்தாக்கு இப்பெயரைக் கொண்டுள்ளது. யோசு 17:15 இவர்கள் யோர்தானுக்கு அப்பால் வாழ்ந்ததைக் குறிக்கலாம். ஆனால் உறுதியாகக் கூறமுடியாது. யோர்தானுக்கு அப்பாலுள்ள வட பகுதியிலுள்ள பாசான் பகுதி முழுவதும் ''இரப்பாயியர் நாடு'' என்றழைக்கப்பட்டது (உப 3:13). பாசினின் அரசனான ஒகு இரப்பாபியரில் கடைசியானவர் என்றழைக்கப்படுகிறார் (உப 3:11; யோசு 12:2; 13:12).

எருசலேமுக்கு தென்மேற்கிலுள்ள இரப்பாயிம் பள்ளத்தாக்கு யூதாவுக்கும் பென்யாமினுக்கும் எல்லைகளாக அமைந்திருந்தது *(யோசு 15:8)*. இது பெத்திலகேமுக்கு வெகு தொலைவில் இருக்கவில்லை *(2 சாமு 23:13-14; 1 நாள் 11:15-15)*. இப்பகுதியில் பலதடவை தாவீது பெலிஸ்தியேரோடு போர் செய்தார் *(2 சாமு 5:17-1; 23:13-14; 1 நாள் 14:8-9)*. இவற்றிலிருந்து இவ்விடம் தன் பெயரைப் பெற்றிருக்கலாம். இது ஒரு செழிப்பான பகுதி *(ஏச 17:5)*. இதன் இக்காலப் பெயர் ஏல்-பாகா ஆகும்.

**இரப்பான்** *(REPHAN)*

பாலைவனத்தில் அலைந்து திரிந்தபோது இஸ்ராயேலர் வழிப்பட்ட ஒரு தெய்வத்தின் பெயரின் சிதைவாகும். பாபிலோனிய மொழியில் சனிக்கிரகத்திற்கு இதே பெயர் வழங்கப்படுகிறது *(அ.ப 7:43)*.

**இரப்பியா** *(RAPHIA)*

காசாவிலிருந்து தென்மேற்கே 24 கி.மீ. தொலைவில் அமைந்திருந்த ஒரு நகரம். விவிலியத்தில் இது குறிப்பிடப்படவில்லை என்றாலும் பழைய ஏற்பாட்டுக் காலத்தில் ஆசியாவுக்கும் எகிப்துக்கும் இடையில் உள்ள ராணுவசாலையில் பாலஸ்தீனத்தின் கடைசி நகரமாய் இருந்ததால் முக்கியத்துவம் பெற்றிருந்தது. எகிப்திய எல்லையில் உள்ளதால் இது பல போர்களைக் கண்ட ஊராகும். இங்குதான் இரண்டாம் சார்கோன் எகிப்தை கி.மு. 720-இல் தோற்கடித்தார். நான்காம் நூற்றாண்டுவரை பெரும்பாலும் இது யூதர்களின் கைவசமிருந்தது. எகிப்தின் தொலமி பிலோபாத்தர் இதனை ஆட்சி செய்து வரும் காலத்தில் கி.மு. 217-இல் முதலாம் பெரிய அந்தியோக்குவைத் தோற்கடித்தார். இதன்பின் அலக்ஸாண்டர் யன்னாயு கி.மு. 97-இல் கைப்பற்றினார். அதன்பின் கி.மு. 55-இல் கபினூ இதை ஒரு கிரேக்க நகரமாக மாற்றினார்.

**இரப்பு** *(RAPHU)*

இவர் பென்யாமின் குலத்தைச் சேர்ந்த பலித்தியின் தந்தை. கானான் நாட்டுக்குள் மோசேயால் அனுப்பப்பட்ட பன்னிரண்டு உளவாளிகளுள் ஒருவர் *(எண் 13:9)*.

**இரப்போன்** *(RAPHON)*

இது கர்னயிம் என்ற இடத்திற்கு அருகே அமைந்திருந்த ஓர் நகரம். இங்குதான் யூதா மக்கபே சீரிய தளபதியான தெமோத்தியுவை தோற்கடித்தார் *(1 மக் 5:37-43)*.

**இரமலியா** *(REMALIAH - யாவே மகிழ்ச்சியுற்றார்)*

இவர் தகாத முறையில் ஆட்சியைக் கைப்பற்றிக்கொண்ட பெக்கா என்பவரின் தந்தை ஆவார் *(2 அர 15:25)*.

**இரமியா** *(RAMIAH யாவே உயர்த்தப்பட்டார்)*

எஸ்ராவின் காலத்தில் புறவின பெண்களை மணம் முடித்தவர்களின் பட்டியலில் இவர் பெயரும் இடம் பெறுகிறது *(எஸ் 10:25)*.

**இரமேத்து** *(REMETH - உச்சி)*

இது இசக்காருக்கு ஒதுக்கப்பட்ட பகுதியில் அமைந்துள்ள ஓர் எல்லையோர நகரம் ஆகும் *(யோசு 19:21)*. இதுவும் இராமோத்து *(1 நாள் 6:73)* மற்றும் யாரிமுத்து *(யோசு 21:29)* ஆகிய நகரங்களும் ஒரே இடத்தின் பல பெயர்களாக இருக்கலாம்.

**இரயாயா** *(REAIAH - யாவே பார்த்தார்)*

1. இவர் யூதா நாட்டைச் சேர்ந்தவர். இவர் சோபாலின் மகனும் யாகாத்துவின் தந்தையுமாவார் *(1 நாள் 4:2)*. 1 நாள் 2:52-இல் இவர் அரோயே என அழைக்கப்படுகிறார்.

2. இவர் ரூபன் குலத்தைச் சார்ந்தவர். இவர் மீக்காவின் மகனும் பாகாலின் தந்தையுமாவார் *(1 நாள் 5:5)*.

3. ஆலய ஊழியர்களின் குடும்பத்தின் தலைவன் அல்லது செருபாபேலோடு நாடு திரும்பிய நெத்தினிமியர்களின் தலைவன் *(எஸ் 2:47; நெக 7:50)*.

**இரயுமா** (REUMAH - மிக உயர்ந்த, மேலான)

இவள் ஆபிரகாமின் சகோதரர் நாகோரின் வைப்பாட்டியும் தேபாகு, ககாம், தகாசு, மக்கா ஆகியோரின் தாயும் ஆவாள் (*ஆதி 22:24*). இவர்கள் தமஸ்குவின் வடக்கில் அமைந்துள்ள அரமேயக் கோத்திரங்களின் தலைவர்களாவர்.

**இரவு** (NIGHT)

இரவு என்பது சூரியன் மறைந்ததிலிருந்து அடுத்த நாள் சூரியன் உதிக்கும் வரைக்கும் உள்ள நேரம் ஆகும். யூதர்களுக்கு இருளும் ஒளியும் எவ்வாறு மாறுபட்டதோ அவ்வாறே இரவும் பகலும் ஆகும் (*ஆதி 8:22; சங் 1:2*). நாட்களை பகலும் இரவும் என்றே கூறுவார்கள் (*ஆதி 7:4.12; யாத் 24:18; 1 அர 19:8*). பழைய ஏற்பாட்டில் ''இரவு'' என்ற சொல் இருநூறு தடவைக்கு மேல் வந்துள்ளது. இரவின் தொடக்கம் ''மாலை'' என்றும் அதன் முடிவு விடியல் என்று அழைக்கப்படும். யூதர்கள் கூறுகின்ற ''நள்ளிரவு'' (*யாத் 11:4; 12:29; 1 அர 3:20*) இரவைச் சமமாகப் பிரித்தது (*சங் 90:4; புல 2:19; சங் 130:6; ஏச 21:11-12*). பிற்கால யூதர்கள் இரவை மூன்று சாமங்களாகவும், கிரேக்க, உரோமையர்கள் நான்கு சாமங்களாகவும் பிரித்தனர்.

சில இரவுகள் மட்டும் முக்கியமான இரவுகளாக கருதப்படுகின்றன. விழாக்காலத்து இரவுகள் (*ஏச 30:29*); வேதனைமிக்க இரவுகள் (*யோபு 7:3*); நகரம் அழிவுற்ற இரவு (*ஏச 15:1*). ஏசயா நூலில் இரவுகள் ஆசீர்களின் அடையாளமாகவும் (*ஏச 16;3*); மீக்கா நூலில் இரவுகள் குழப்பத்தின் அடையாளமாகவும் (*மீக் 3:6*), குறிப்பாக யோபுவில் இரவு நேரம் களக்கமும் குழப்பமும் நிறைந்த நேரமாகவும் கூறப்படுகின்றது (*யோபு 4:12 தொ; 24:14; 35:10; 36:20*). இரவு என்பது பழைய ஏற்பாட்டிலும் புதிய ஏற்பாட்டிலும் இறைவெளிப்பாடு அறிவிக்கப்படும், கனவு தோன்றும் காலமாக எண்ணப்பட்டது (*தானி 7:2*). இரவு பேய்களின் செயல்களுக்குரிய நேரம் என்பதற்கு பழைய ஏற்பாட்டில் அதிகச் சான்றுகள் இல்லை. இக்கருத்து பிற்கால யூதத்துவத்தைச் சேர்ந்தததாகும்.

புதிய ஏற்பாட்டுக் காலங்களில் இரவுகள் மணிகளாகவும் சாமங்களாகவும் (*லூக் 12:39*) பிரிக்கப்பட்டுள்ளன. மாலை, நள்ளிரவு, கோழி கூவும் பொழுது, காலை என்று *மாற் 13:35* பிரிக்கிறது. யோவான் நற்செய்தியில் இரவு ஒரு தீய அறிகுறியாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது (*யோவா 9:4; 11:10*). இது சாவுக்கும், வேலையின் முடிவுக்கும் ஓர் அடையாளம். உரோ *13:12*-இல் இரவானது தீமையின் இருள்சூழ்ந்த நேரமாகும். மீட்பின் நாள் தோன்றும் போது, இந்த இரவு மறைந்துவிடும். இரு எதிர் முரண்பட்ட ஆன்மீகக் கோட்பாடுகளின் அடையாளமாக இருளுக்கும் ஒளிக்கும் உள்ள வேறுபாடு முனைப்பாக எடுத்துக் கூறப்படுகிறது. இவையாவும், அடிப்படையில், ஒழுக்க எதிர்நிலைகளைக் காட்டுகின்றன. கும்ரான் சமூகத்தில் இத்தகைய எண்ணங்கள் நிலவி வந்ததாகக் கண்டெடுக்கப்பட்ட சுவடியிலிருந்து தெரிகின்றது.

**இராகமா** (RAAMA, RAAMAH - நடுங்குகிறது, ஆடுகின்ற)

இவர் 'கூசு'வின் மகள். இவருக்கு சேபா, தெதான் என்ற இருபிள்ளைகள் உண்டு. இப்பெயர்களைப் பார்க்கும்போது இவை அரேபிய பகுதிகளின் இடப்பெராக இருக்கலாம் என எண்ணத்தோன்றுகிறது (*ஆதி 10:7; 1 நாள் 1:9*). சேபா, இராகமாவிலிருந்து வணிகர்கள் மிக அருமையான வாசனைப் பொருட்களையும் சிறந்த தைலங்களையும் இரத்தினக் கற்களையும் பொன்னையும்'' விற்றுப் பண்டமாற்றம் செய்தனர் (*எச 27:22*).

எழுபதுநூலில் இப்பெயர் இரக்மா என்று குறிப்பிடப்பட்டுள்ளதால் இது பாரசீக வளைகுடாவில் தோலமி என்ற வரலாற்று ஆசிரியரால் அதேபெயரில் கூறப்படும் நகராக இருக்கலாம் என கருதப்படுகிறது. வேறு சிலர் தென்மேற்கு அரேபியாவில் உள்ள 'மா' என்ற இடத்திற்கு அருகில் உள்ள

இராகமா என்ற நகரமே இது என்றும் கூறுவர்.

**இராமிய** (RAAMIAH)

இரகலாயாவின் மற்றொரு பெர். பாபிலோனிலிருந்து செருபாபேலோடு திரும்பியவர்களில் ஒருவர் (நெக 7:7).

**இராகாபு** (RAHAB - அகன்ற, பெரிய)

1. யோசுவா எரிகோ நகருக்கு ஒற்றர்களை அனுப்பியபோது அவர்களுக்கு தங்குமிடம் கொடுத்து அவர்கள் உயிரைக்காத்த ஒரு விலைமகளின் பெயர் இது (யோசு 2:1-21). இதற்குப் பதிலாக இஸ்ராயேல் நகரைக் கைப்பற்றும்போது தன்னையும் தன் குடும்பத்தையும் காப்பாற்றுமாறு அவர்கள் வாக்குறுதி செய்யுமாறு கேட்டாள். அவர்களும் இணங்கினர். அவள் தனது வீட்டின் சன்னலின் சிவப்புக் கயிற்றை அடையாளமாகக் கட்டிவைத்தாள். நகரம் பிடிபட்டபோது யோசுவா இந்த வாக்குறுதியை நினைவுகூர்ந்து இராகபுவையும் அவள் குடுப்பத்தையும் காப்பாற்றினார் (6:17.22-25) பழைய ஏற்பாட்டிலே வேறெங்கும் இதைப்பற்றி பேசப்படவில்லை. ராபிகளின் பாரம்பரியம் இவள், உலகத்தில் இருந்த நான்கு அழகான பெண்களில் ஒருத்தி என்றும், எரேமியா உள்ளிட்ட இறைவாக்கினர்களுக்கும் குல்தா இறைவாக்கினர்களுக்கும் மூதாதை என்றும் கூறுகிறது.

புதிய ஏற்பாட்டில் மத்தேயு அளிக்கும் இயேசுவின் மரபுமுறைக் கொடியில் இராகாபு சால்மோனின் மனைவியும் போவாசின் தாயுமாவாள் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது (மத் 1:5). ஆனால் மத்தேயு குறிப்பிட்ட இந்த இராகாபுதான் யோசுவா நூலில் வரும் இராகாபு என்னும் கருத்து ஐயத்திற்குரியது. ஆயினும் மீட்பு வரலாற்றில் இறைவன் புறவினத்தைரையும் சேர்த்துள்ளார் என்று நினைவுபடுத்த மத்தேயு இராகாபுவைப் புகுத்தியிருக்கலாம். நற்செயல்களால் நீதிமான் பிழைப்பான் என்பதற்கு உதாரணமாக இந்த இராகாபு யாக் 2:25-இல் கூறப்பட்டுள்ளாள். இந்த இராகாபு எபி 11:31-இல் விசுவாசத்தினால் அழிவிலிருந்து தப்பினாள் எனக் கூறப்பட்டுள்ளது.

2. தொடக்கக் காலத்தில் யாவேயால் அழிக்கப்பட்டதாகக் கூறப்படும் புராணத்தில் வரும் வேதாளமாகும். இது பற்றிய கதைகள் பாபிலோனிய, கானானிய மதங்களில் உண்டு; இஸ்ராயேலின் இறைவனின் மேலாண்மை வல்லமையை சுட்டிக்காட்ட வல்லமை மிகுந்த இக்கதைகளைப் பழைய ஏற்பாடு சுட்டிக் காட்டுகிறது. பழைய ஏற்பாட்டிலே இப்பெயர் கவிதை வடிவில் எழுதப்பட்ட பகுதிகளில் மட்டுமே குறிப்பிடப்பட்டுள்ளது (யோசு 9:13; 26:12; சங் 89:10; எச 30:7; 51:9-10). இவையாவும் கி.மு. 7-ஆம் நூற்றாண்டிற்குப்பின் எழுதப்பட்ட நூல்களிலேயே காணப்படுகின்றன. இச்சொல்லின் பொருள் இன்னும் தெளிவாகப் புலப்படவில்லை. சிலர் இது கர்வமுள்ள முரட்டுத்தனமுள்ள என்ற பொருளைக் குறிக்கிறது என்பர். மற்றும் சிலர் கோபம் என்று பொருள் படும் அக்காதிய சொல்லிருந்தும் கர்ச்சித்தல் என்று பொருளுடைய எகிப்தியச் சொல்லிலிருந்தும் வந்திருக்கலாம் என்பர்.

**இராகாம்** (RAHAM - இரக்கம், பரிவு)

இவர் யூதாவின் வழித்தோன்றலில் ஒருவர். இவர் சேமாவின் மகனும் யோர்க்கயாமின் தந்தையும் ஆவார் (1 நாள் 2:24).

**இராகியு** (RAGES)

இது பாரசீக பேரரசின் வடகிழக்கே உள்ள அரண் சூழ்ந்த முக்கியமான நகரங்களில் ஒன்று; தோபி 1:14; 4:1.20; 5:5; 6:12; 9:2- ஆகிய 6 இடங்களில் இது குறிப்பிடப்பட்டுள்ளது. இங்குத் தோபித்து தன் உறவினன் கபேலுக்குப் பத்து தாலந்து வெள்ளியைக் கடன் கொடுத்திருந்தார் (4:1.20). இரபேல் என்ற வானதூதர் இப்பணத்தை வாங்கிவர இராகியுவுக்கு சென்று வர தோபித்துவின் மகன் தோபியாவுக்கு வழிகாட்டினார் (5:5; 6:12; 9:2). யூதி 1:5.15-இல் இது பொதுவான ஒரு பகுதியாக குறிப்பிடப்பட்டுள்ளது. இதன்படி ஆர்பகசாதுக்கு எதிராக நெபுக்கதுனேசார் இப்பகுதியில்தான் போரிட்டார். அம்போர்ஸ் மலைத்தொடரின் தெற்கே

அமைந்துள்ள இந்நகரம் காஸ்பியன் கடலுக்கு எல்லையாக விளங்கியது. மேதியாவின் மகா அலக்சாண்டர் மற்றும் அவரது வழி வந்தவர்களின் காலத்திய போர்களில் இந்நகரம் முக்கிய பங்கு வகித்தது. ஈரானில் பழங்காலத்தில் நாகரிகத்தோடு விளங்கிய நகரங்களில் இதுவும் ஒன்று. புதைபொருள் ஆராய்ச்சியின்படி இந்நகரில் கி.மு.5000 லிருந்து மக்கள் குடியிருந்திருக்க வேண்டும் எனக்கூறலாம். இடையிடையே நில நடுக்கத்தாலும், அரேபியர்கள், மொகலாயர்கள், ஆப்கானியர்கள் பார்த்தியர்கள் ஆகியோரின் தாக்குதலாலும் இந்நகர் சேதப்படுத்தப்பட்டது. சொரோயாஸ்திரிய மதம் இவ்விடத்தில் சிறந்து விளங்கியது. கி.பி.7-13 நூற்றாண்டுகளில் இது மகமதியர்களின் செல்வாக்கு உள்ள நகராக விளங்கிற்று.

**இராக்கால்** *(RACAL - வணிகம்)*

இது யூதாவின் தென்பகுதியில் உள்ள ஓர் ஊர். ஆனால் இதன் சரியான அமைவிடம் தெளிவாகக் குறிப்பிடப்படவில்லை. இந்த ஊருக்குத்தான் தாவீது அமலேக்கியர்களிடமிருந்து கைப்பற்றிய செல்வங்களில் ஒரு பகுதியை அனுப்பிவைத்தார் *(1 சாமு 3029)*.

**இராக்கேம்** *(RAKEM - பூப்பண்ணை)*

இவன் மனாசேயின் பேரனும் செரேசுவின் மகனும் ஆவார் *(1 நாள் 7:16)*.

**இராக்கேல்** *(RACHEL )* - காண்க ராக்கேல்

**இராசி** *(RASSIS)*

இது சிலிசியாவுக்கு அருகே உள்ள ஓர் இடம் அல்லது பகுதி. இவ்விடத்தில் வாழ்ந்த மக்கள் ஓலபெரினேயின் படைகளால் நாசமாக்கப்பட்டனர் (யூதி 2:23). தார்சு என்ற பெயர்தான் இவ்வாறு மருவி வழங்கப்பட்டது என்பர் சிலர். வேறுசிலர் இன்றைய ஆர்சுஸ் அன்று இராசி எனப்பட்டது என்பர்.

**இராஸ் ஸம்ரா** *(RAS-SHAMRA)*

இது சீரியாவில் உள்ள ஓர் மலையின் பெயர். இதற்கு சதக்குப்பி (சீரகம்) மலை எனப் பொருள்படும். இங்குதான் பழங்கால உகாரித்து அமைந்திருந்தது என்பர்.

**இராதாய்** *(RADDAI - மிதிப்பவன்)*

இவர் பெத்திலகேமைச் சார்ந்த ஈசாயின் ஐந்தாவது மகன். எனவே இவர் தாவீதினுடைய மூத்த சகோதரன் *(1 நாள் 2:14)* ஆவார்.

**இராபேல்** *(RAPHAEL - இறைவன் குணமாக்கினார்)*

தொபியாநூலில் அசரியா என்ற பெயரில் மேதியாவிலுள்ள இராகியுவுக்கு தொபியாவுடன் செல்கிறார். அசுமதேயு என்ற தீய சக்தியை கட்டுப்படுத்தி அதனால் இரகுவேலின் மகளான சாராளை தொபித்தின் மகனான இளைய தொபியா மணம் முடிக்க உதவுகிறார். தொபித்தின் கண்களில் இருந்த வெள்ளை படலத்தை நீக்கி அவர் பார்வைச் பெறச் செய்ய அனுப்பப்பட்ட ஓர் குணமளிக்கும் வானதூதர். இவர் பெயர் வேதாகமத்தில் காணப்படுகிறது.

இப்பெயர்கள் பார்திய மற்றும் பாபிலோனிய மூலங்களிலிருந்து வந்திருக்கலாம் எனத் தால்மூத் கூறுகிறது. இவை பெரும்பாலும் திருமறை நூல் வரிசையில் இடம் பெற்றுள்ள நூல்களில் காணப்படுவதில்லை. ஏனோக்கு ஆகமம் *20:3*-இல் இராபேல் வானதூதர்களின் வரிசையில் இரண்டாவது இடத்தையே வசிக்கிறார் எனக்கூறப்படுகிறது.

பலவழிகளில் இராபேலும் மிக்கேலும் ஒப்புமை படுத்தப்பட்லாம். பிற்கால இலக்கியங்களிலேயே இப்பெயர்கள் காணப்படுகின்றன. வானதூதர்கள் மனிதர்களின் பிரச்சனைகளில் தலையிடுகிறார்கள் என்று வளர்ந்து வந்த ஒரு நம்பிக்கையை இது குறிக்கிறது. ஏனோக்கு நூலில் தீர்ப்புநாள்வரைத் தடுத்து வைப்பதற்காக அசாசேலை இருளில் இராபேல் தள்ளுகிறார். காட்சிகளுக்கு விளக்கம் அளிக்கிறார். இறைவனுடைய இறுதித் தீர்ப்பைச் செயல்படுத்தும் வானதூதர்களில் இவரும் ஒருவர்.

**இராப்பா** *(RAPHA - இறைவன் குணமாக்கி னார்)*

இவர் பென்யாமினின் ஐந்தாவது மகன் *(1 நாள் 8:2)*. ஆனால் இது ஆதி 46:21-இல் கொடுக்கப்பட்டுள்ள பென்யாமின் புதல்வர் களின் பட்டியலில் குறிக்கப்படவில்லை. இந்த பட்டியலின்படி நாமான் என்பவனே ஐந்தாவது மகன். எகிப்தில் பிறந்த இராப்பா வுக்குப் பிள்ளைகள் இல்லாமலிருந்திருக்க லாம் அல்லது வெகு சிலராய் இருந்திருக்க வேண்டும். அவர்கள் பென்யாமினின் மற்ற வழித்தோன்றல்களுடன் சேர்க்கப்பட்டிருக்க வேண்டும்.

**இராப்பா** *(RAPHAH)*

இவர் பென்யாமின் குலத்தைச் சேர்ந்த சவுலின் வழிவந்தவர் *(1 நாள் 8:37)*. இவன் பினியாவின் மகனும் எலயாசாவின் தந்தையு மாவார். *1 நாள் 9:43*-இல் இவர், இரப்பாயா என்றழைக்கப்படுகிறார்.

**இராமசேசு** *(RAMSES, RAAMESES, RAMESSES - ரா பெற்றெடுத்தாள்) - ஆள்*

எகிப்தை ஆண்ட பத்தொன்பதாம், இருப தாம் அரசமரபுகளில் பதினொரு பேர் இப் பெயரை கொண்டிருந்தனர். அமர்னா காலத் திற்குப்பின் இக்காலத்தில் எகிப்திய அரசாங் கம் மீளவும் கழிமுகப்பகுதியில் அமைக்கப் பட்டது.

*1. முதலாம் இராமசேசு (கி.மு. 1319-1320).* கோரேமேபுவின் முதல் அமைச்சரும் அவ ருக்குபின் ஆட்சிக்கு வந்தவரும் ஆவார். பத்தொன்பதாம் அரசமரபைத் தொடங்கி வைத்தார். ஓனைச் சேர்ந்த சூரியகடவுளான ராவையும், பாலைவனம், இடி, மலைகள் ஆகியவற்றின் கடவுளான சேத்துவையும் இவர் காலத்தில் மக்கள் வழிப்பட்டனர்.

*2. இரண்டாம் இராமசேசு (1299-1232).* இவரது அறுபத்து ஏழு ஆண்டுகள் நீண்ட ஆட்சி, எகிப்தில் ஓர் அழியாத நினைவை ஏற்படுத்தியது. பல நினைவுச் சின்னங்கள் எழுப்பி தன் பெயரையும் அதோடு சேர்த்துக் கொண்டார். அபு-சீம்பல், கர்னாக்கு போன்ற கோயில்கள் இவர் காலத்தில் கட் டப்பட்டன. இவருடைய வெற்றி இவரது வழித்தோன்றல்களுக்கு ஓர் எடுத்துக்காட் டாக விளங்கிற்று. இவருக்குபின் எகிப்தில் உள்நாட்டு, வெளிநாட்டு குழப்பங்கள் அதிக ரித்தன. இவர்தான் எகிப்தின் கழிமுகப் பகு தியில் கிடங்கு நகரான இராமசேசு நகரை கட்டினார். இவர்தான் இஸ்ராயல் மக்களை அடிமைப்படுத்திய பாரவோன். இவரின் ஆட்சியின் தொடக்கத்தில் இத்தியர்கள் பெலிஸ்தியர், மைசியர்கள் ஆகியோரால் பெரும் தொல்லைகள் ஏற்பட்டன. இவர்கள் கடல் வழியாகவும் நிலவழியாகவும் எகிப்தை தாக்கினர். இரண்டாம் இராமசேசு வின் 21-ஆம் ஆண்டில் இத்தியர்களுடன் சமாதான உடன்படிக்கை செய்து கொண் டார். இதன்படி இருவரும் இணைந்து மற்ற பகைவர்களை அழிக்க வேண்டும். எனெ னில் அப்போது அசீரியர்களின் பலம் சிறிது வளர்ந்திருந்தது. இதன்பின் 40 ஆண்டுகள் அமைதி நிலவியது. இவர் வாழ்ந்த காலத்தி லேயே இவரை மக்கள் கடவுளாக வழிப்பட் டனர். இவருக்கு பின் வந்த மெர்-நெப்தா ஆட்சிக்குப்பின் இந்த அரசமரபு ஆட்சி முடி வுற்றது. இதன் பின் எகிப்தின் 20-ஆம் வம்சத்தினர் பொறுப்பேற்றனர்.

*3. மூன்றாம் இராமசேசு (கி.மு. 1198-1167)* இருபதாம் அரசமரபின் இரண்டாம் அரசன் தன் முன்னோர்களைப் பின்பற்றி தன் ஆட்சி யையும் சிறப்பாக அமைக்க முயன்றார். ஆனால் இவர் ஆட்சி காலத்தில் குழப்பங் கள் மிகுந்திருந்தன. இவர் இரண்டு முறை தனது மேற்கு எல்லைப்பகுதியை லிபியாவி டமிருந்து காப்பாற்றிக் கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இவரது ஆட்சியின் இறுதியில் சூழ்ச்சிகளும் உள்நாட்டு குழப் பங்களும் போர்களும் மிகுந்திருந்தன. அதன் விளைவாகக் கொலை செய்யப்பட்டார். இவருக்கு பின்வந்த அரசர்கள் அவ்வளவு குறிப்பிடும்படியாக அமையவில்லை.

*4. நான்காம் முதல்-பதினோறாவது இராம சேசு (கி.மு. 1167-1085).* இந்த எட்டுப்பேரும் 21-ஆவது அரசமரபைச் சேர்ந்தவர்கள். நான்

காம் இராமசேசின் சிலை ஒன்று கானானிய நகரான மெகிதோவில் கண்டெடுக்கப்பட்டது.

கி.மு. 1100-இலிருந்து பாரவோனின் ஆட்சி பெரிதும் பாதிக்கப்பட்டது. அரச குலத்தவரும், படை தளபதிகளும் திபிசுவில் உள்ள அமோன் ஆலய குருக்களும் பதவிக்காக போட்டியிட்டுக் கொண்டனர். இப்போட்டியிலிருந்து படை தளபதி ஒருவன் கி.மு. 1090-இல் எகிப்தின் 21-ஆம் வம்சத்தை துவங்கினான். இந்த அரசு, அரச குலத்தவர் சிலருக்கும் குருக்களுக்கும் பிரித்து கொடுக்கப்பட்டது.

**இராமசேசு** (RAAMSES, RAMESES - ராம்சேசின் மாளிகை) - இடம்

எகிப்தின் பத்தொன்பதாம், இருபதாம் அரசமரபுகள் (கி.மு. 1319-1085) ஆண்டகாலத்தில் நைல்நதியின் வடகழிமுகப்பகுதியில் அமைந்திருந்த அரசர் தங்கும் நகரம் இது. இராமசேசுப்பகுதியை இஸ்ராயேலின் மூதாதையர்களுக்கு யோசேப்பு அளித்தார் (ஆதி 47:11). பாரவோனுக்காக இஸ்ராயேலர் உணவுக்கிடங்குகள் கட்டிய இரு இடங்களில் இதுவும் ஒன்று. இஸ்ராயேல் மக்கள் எகிப்தின் அடிமை தனத்திலிருந்து மீண்டு கிளம்பிய போது இந்நகரத்திலிருந்தே கிளம்பியிருக்க வேண்டும் (யாத் 12:37; எண் 33:3-6). எகிப்திய ஆதாரங்களின்படி பார்த்தால் இரண்டாம் இராமசேசுதான் இந்நகரை யேழுப்பி இப்பெயரையும் அதற்கு இட்டார் எனலாம். திபிசு தெற்கே உள்ள பருவகால தலைநகராகவும் இராமசேசு வடக்கே உள்ள நிரந்தரமான நிர்வாகத் தலைநகராகவும் விளங்கின (ஆதி 47:11). இங்கே துறைமுகமொன்றும் இருந்தது. எகிப்திய கவிதைகளில் இந்நகர் பழவளமும் மீன்வளமும் மிகுந்த நகர் என புகழப்பட்டுள்ளது. சிலர் இது சீனாய் பாலைவனத்திற்கு அருகாமையில் இருந்தது என்பர். எனினும் இதன் அமைவிடம் பற்றிய தெளிவான கருத்து எதுவும் கூறமுடியாது.

**இராமத்து மிசுபே** (RAMATH-MIZPEH - காவல் கோபுர உச்சி)

இது யோர்தானுக்கு அப்பால் காது இனக் குடியிருப்பின் எல்லையைக் குறிக்கும் நகர்களில் ஒன்று (யோசு 13:26); வழக்கமாகக் கிலயாத்தைச் சேர்ந்த மிசுபே என்று அடையாளம் காட்டப்படும். யோர்தானுக்கு 23 கி.மீ. தொலைவிலும் யாப்போக்கு ஆற்றுக்குத் தெற்கில் 8 கி.மீ தொலைவிலுமுள்ள கிர்பெத்து எலாதா என்னுமிடத்தில் இருந்திருக்கலாம்.

**இராமத்து லெகி** (RAMATH-LEHI - தாடை எலும்புக்குன்று)

இந்த இடத்தில் சிம்சோன் கழுதையின் தாடை எலும்பை ஆயுதமாகக் கொண்டு 1000 பெலிஸ்தியர்களைக் கொன்று தீர்த்தார் (நீதி 15:17).

**இராமா** (RAMAH - உச்சி, உயர்ந்த)

1. இது பென்யாமின் கோத்திரத்தாருக்கு கிடைத்த யூதா, இஸ்ராயேல் நாடுகளின் எல்லைப்பகுதியில் உள்ள ஓர் நகரம் (யோசு 18:25; மத் 2:18). சவுலின் ஊரான கிபயாவுக்கு அருகில் உள்ளது (நீதி 19:13). யூதர் நாட்டை வடக்கிலிருந்து தாக்குவதற்காக இஸ்ராயேலின் மன்னனான பாசா இந்நகரை பலப்படுத்தினார். பாசா தன் வடக்கு எல்லைபகுதிகளைச் சீரியாவிடமிருந்து காப்பாற்றுவதில் கவனம் செலுத்திக்கொண்டிருக்கையில் யூதாவின் அரசனான ஆசா இராமாவை தாக்கி அந்நகரின் கற்களையும் மரங்களையும் எடுத்துச் சென்று தனது நகர்களான கெபா, மிசுப்பா ஆகிய நகரங்களை பலப்படுத்த பயன்படுத்திக் கொண்டார் (1 அர 15:17.21-22; 2 நாள் 16:1.5-6). கி.மு. 587-இல் நெபுக்கதுனேசார் தளபதிகள் இஸ்ராயேல் மக்களை இந்நகரிலேதான் கூட்டி, பின் பாபிலோனியாவுக்கு அழைத்துச் சென்றனர். இங்கு எரேமியா இறைவாக்கினருக்கு விடுதலை அளிக்கப்பட்டது (எரே 40:1.4). பென்யாமின் மக்கள் நாடு திரும்பியபின் இந்நகரிலேயே தங்கினர் (எஸ் 2:26; நெக 7:30;11:33). இந்நகருக்கு அருகிலேதான் இராக்கேலின்

கல்லறை உள்ளது *(1 சாமு 10:2; எரே 31:15; மத் 2:18)*.

எருசலேமின் வடக்கே உள்ள நகரங்களை பற்றி பேசும் போது இராமா அடிக்கடி பேசப்படுகிறது *(நீதி 4:5; 19:13-14; யோசு 18:25; ஏச 10:29; ஒசே 5:8; எஸ் 2:26; நெக 7:30)*. இதையெல்லாம் பார்க்கும் போது எருசலேமுக்கு வடக்கே 8 கி.மீ. தொலைவில் உள்ள ஏர்-இராம் என்ற நகரமே இராமாவாக இருந்திருக்கலாம்.

*2.* இது ''நெகேபின் இராமா'' ஆகும். சிமியோன் கோத்திரத்தைச் சேர்ந்த ஊர். இதன் மற்றொரு பெயர் பாகலாத்து-பேர் ஆகும் *(யோசு 19:8)*. இவ்வூர் மக்களுக்கு தாவீது அமலேக்கியர்களிடமிருந்து பெற்றக் கொள்ளைப்பொருட்களில் ஒரு பகுதியைக் கொடுத்தார் *(1 சாமு 30:2)*. எபிரோனுக்கு தென்-தென் கிழக்கில் 45 கி.மீ. தொலைவிலுள்ள கிர்பெத்து காசாவாக இருந்திருக்கலாம்.

*3.* ஆசேர் பகுதியின் எல்லையில் உள்ள ஓர் நகரம் இது *(யோசு 19:29)*. ஆசார் பகுதியில் வடக்கு பகுதியில் இது அமைந்திருந்தது என்பது விவிலியத்திலிருந்து தெளிவாகிறது. இருந்தாலும் இதன் சரியான அமைவிடம் இன்னும் சரியாக புலப்படவில்லை. ஆசாரில் உள்ள ''இராமாவும்'' நப்தலியில் உள்ள ''இராமாவும்'' ஒன்றே என்று சிலர் கூறுவர். சில சமயம் தீருக்கு தென் தென்கிழக்கில் 21 கி.மீ. தொலைவிலுள்ள இரமியேவாக அடையாளம் காட்டப்படுகிறது.

*4.* நப்தலியில் இருந்த ஓர் அரண் சூழ்ந்த நகரம் *(யோசு 19:36)*. இது மேற்கூறப்பட்ட மூன்றாவது இடத்தோடு அடையாளம் காட்டப்பட்டாலும் சப்பேத்துக்கு மேற்கு-தென்மேற்கில் 24 கி.மீ. தொலைவிலுள்ள இக்கால ஏர் இராமேயாக இருக்கலாம்.

*5.* இது எப்பிராயிம் மலைநாட்டில் உள்ள ஓர் சிறு நகரம். இதன் மற்றொரு பெயர் இராமத்தியிம்-சோபீம் ஆகும். இது சாமுவேலின் சொந்த ஊர். இங்கேயே இவர் தங்கியிருந்தார்; பின் இங்கேயே அடக்கம் செய்யப்பட்டார் *(1 சாமு 1:1.19; 2:11; 7:17; 8:4; 25:1; 28:3)*. இவரின் சொந்த ஊரான இராமாவிலிருந்து இவருடைய பெற்றோர்கள் ஆண்டுதோறும் 'சீலோ'வுக்கு சென்று வழிபாடு நடத்துவதுண்டு *(1 சாமு 1:3)*. சாமுவேல் இங்கு ஓர் பீடத்தை எழுப்பினார். இங்கிருந்து கில்கால், பெத்தேல், மிசுப்பா ஆகிய பிற இடங்களுக்கும் சென்று பணியாற்றினார். சவுல் இங்குதான் அபிசேகம் பெற்றார் *(8:4-10)*. தாவீதை அரசனாக அபிடேகம் செய்தபின், இந்நகருக்கு சாமுவேல் திரும்பினார். தாவீது சவுலின் பகைமையிலிருந்து தப்பித்துக்கொள்ள இந்நகருக்கே விரைந்தார் *(19:18)*. கி.மு. 145-இல் இந்நகரும் இதை சூழ்ந்திருந்த பகுதியும் சமாரியாவிலிருந்து பிரிக்கப்பட்டு யூதாவோடு சேர்க்கப்பட்டது *(1 மக் 11:34)*. யூசேபியு இந்நகர் தான் புதிய ஏற்பாட்டிலே வரும் அரிமத்தியா என்கிறார் *(மத் 27:57; யோவா 19:38)*.

*6.* இராமோத்து கிலயாதின் மற்றொருபெயர் *(2 அர 8:29; 2 நாள் 22:6)*.

**இராமாவியர்** *(RAMATHITE)*

சிமொயி *(13)*-இன் இனப்பெயர். இவர் தாவீதரசருடைய திராட்சை தோட்டத்தின் தலைமை விவசாய மேற்பார்வையாளர் ஆவார் *(1 நாள் 27:27)*. இதற்கு இராமா நகரத்தைச் சேர்ந்தவர் என்று பொருள் கொள்ளலாம். பல நகரங்கள் இப்பெயரில் இருந்ததால் இங்கு இது எதைக் குறிக்கும் என்று தெளிவாக கூறிவிடமுடியாது.

**இராமோத்து** *(RAMOTH - உச்சி)*

*1.* கிலயாத்தில் உள்ள ஊர் *(உப 4:43; யோசு 28:8; 21:38; 1 நாள் 6:80)*. காண்க இராமோத்-கிலயாத்து.

*2.* நெகேபின் இராமோத்து *(1 சாமு 30:27)*. காண்க இராமா-2

*3.* இசக்கார் பகுதியிலுள்ள கெரிசோமியருக்கு அளிக்கப்பட்ட ஒரு லேவிய நகரமாகும் *(1 நாள் 6:73)*. யாரிமுத்து-2 ஆகவோ

*(யோசு 21:29)* அல்லது இரைமேத்து ஆகவோ *(19:21)* இருக்கலாம். இது, பேத்து-சானுக்கு வடக்கில் *12* கி.மீ. தொலைவிலுள்ள கோகபு ஏல்-காவா என்ற இடமாக இருந்திருக்கலாம்.

**இராமோத்து கிலயாது** *(RAMOTH-GILEAD)*

இது 'காத்' தின் கிழக்கு பகுதியில் இருந்த கிலயாத்தில் இருந்த ஓர் முக்கியமான கோட்டை. இது சில நேரங்களில் வெறுமனே இராமா எனவும் அழைக்கப்படுகிறது. யோர்தானுக்கு அப்பால் இருந்த மூன்று அடைக்கலம் புகும் நகரங்களில் ஒன்றாகவும் *(உப 4:43; யோசு 20:8)*, ஒரு லேவியரின் நகராகவும் *(யோசு 21:38; 1 நாள் 6:80)* இது விளங்கியது. சாலமோனின் ஆறாவது பகுதியின் ஆளுநர் இந்நகரிலேயே தங்கினார் *(உப 4:43; யோசு 21:38; 1 அர 4:13)*. இஸ்ராயேல் அரசு இரண்டாக பிரிந்தபோது *(கி.மு.935)* இது சீரியர்களால் தாக்கப்பட்டு அவர்கள் நாட்டோடு சேர்க்கப்பட்டது *(1 அர 15:20)*. ஆகாபு இதை மீண்டும் கைப்பற்ற முயற்சி செய்து தோற்றார் *(1 அர 22)*. பத்தாண்டுகளுக்கு பின் ஆகாபுவின் மகனான யோராமும் யூதாவின் அகசியாவும் இந்நகரை கைப்பற்றி அங்கே ஏகூவைக் கண்காணிப்பாளராக ஏற்படுத்தினர். இங்குதான் எலியாவின் சீடர் ஏகூவை அரசனாக அபிடேகம் செய்தார் *(2 அர 8:28-9:28)*. இதைப்பற்றி விவிலியம் பின் குறிப்பிடவில்லை.

இது யோர்தானுக்குக் கிழக்கில் *45* கி.மீ. தொலைவிலும் வாடி சோமேரின் கரையிலுள்ள அம்மானுக்கு வடக்கில் *66* கி.மீ. தொலைவிலும் உள்ள தேல் இராமித்து இருக்கிற இடமாக இருந்திருக்கலாம்.

**இராம்** *(RAM - உயர்ந்த)*

*1.* இவர் கெசிரோனின் மகன். தாவீதின் மூதாதையரில் ஒருவர். எனவே இவர் இயேசுவுக்கும் மூதாதையர் *(ரூத் 4:19; 1 நாள் 2:9; மத் 1:3-4)*.

*2.* யூதாவைச் சேர்ந்த ஏரகுமேல் என்பவரின் மூத்தமகன் *(1 நாள் 2:25.27)*.

*3.* இவன் எலிகூ குடும்பத்தின் தலைவர். இந்த எலிகூ யோபுவின் நண்பர்களில் ஒருவர் *(யோபு 32:2)*.

**இராயப்பர்** *(PETER)*

காண்க பேதுரு

**இரிக்கானு** *(HYRCANUS)*

*1.* தோபியாவின் பேரனும் யேசேப்பின் எட்டாவது மகனும் ஆவர் இவர் கி.மு.226-இல் பிறந்த இவர், தோலமி ஆட்சியாளர்களுடன் சேர்ந்து கொண்டதால் தனது குடும்பத்தினின்று உறவு முறிந்தவனானார். தனது சகோதரர்களில் இருவரை கொன்ற பின்னர், அராகு-ஏல்-எமீரிலுள்ள யோர்தானுக்கு அப்பாலுள்ள கோட்டைக்கு தப்பியோடினார். மூன்றாவது பெரிய செலூக்கிய, மூன்றாம் அந்தியோக்கு சீரிய-பாலஸ்தீனத்தை வென்ற பின்னரும் தோலமிகளுக்குப் பிரமாணிக்கமுள்ள நேர்மையான ஒரு சுதந்திர ஆட்சியாளராக அவர் அங்கு தன்னை ஏற்படுத்திக்கொண்டார். சுற்றியுள்ள மக்களைச் சூறையாடிச் சேர்த்த குறிப்பிடத்தக்க செல்வங்களை அவர் ஆலய கருவூலத்தில் சேமித்துவைத்ததாகத் தெரிகிறது *(2 மக் 3:11)*. 175-இல் வலிமைமிக்க நான்காம் அந்தியோக்கு எப்பிபான் அரியணை ஏறிய சிறிது காலத்திற்குள்ளாக இரிக்கானு தற்கொலை செய்து கொண்டார்.

*2.* முதலாம் யோவான் இரிக்கானு:- அசமோனிய பெரிய குருவும் யூதேயாவின் அரசனுமானவர் *(கி.மு.135-104)*. சீமோன் மக்கபேயுவின் இளைய மகனாகிய இவர் 137-இல் யுதேயாவின் மீதான செலூக்கிய படையெடுப்பைத் திருப்பியடித்து, இரண்டு வருடங்களுக்கு பிறகு தனது தந்தையும் இரு சகோதரர்களும் கொல்லப்பட்டபின், அரியணையைக் கைப்பற்றினார். ஏழாவது அந்தியோக்கு சிதேதெசு யூதேயாவிற்கு எதிரான தனது முற்றுகையை உடனடியாக புதுப்பித்தார். இரிக்கானுவை எருசலேமில் கிட்டத்தட்ட ஒரு வருடத்திற்கு முற்றுகையிட்ட பின்னர், இரிக்கானுவை பெரும் கப்பம் கட்டச் செய்தார்; போர்க்கைதிகளைக் கூட்

டிச் சென்றார். மற்றும் யூத படைகளின் போர்கருவிகள் அகற்றினார். 129-இல் பார்த்தியரால் அந்தியோக்கு கொல்லப்பட்டது மற்றும் அவரது வாரிசாகிய இரண்டாம் தெமேத்திரியு எதிர்கொண்ட உள்நாட்டு குழப்பத்தையும் பயன்படுத்தி, உரோமையுடனான தனது தந்தையின் தோழமையை இரிக்கானு மீண்டும் புதுப்பித்துத் தனது சுதந்திரத்தை மீண்டும் அடைந்தார். யோர்தானுக்கு அப்பால் மெதேபாவையும் வடக்கில் செக்கேமி வரையிலும் தெற்கே இதுமேயா வரையிலும் வென்று யூத ஆதிக்கத்தை அவர் பரப்பினார். சில ஆண்டுகள் கழித்து அவரது பிள்ளைகள் சமாரியாவையும் எசுதிரலோன் பள்ளத்தாக்கையும் கைப்பற்றினார்.

கெரிசிம் மலையிலிருந்த சமாரியர்களின் கோயிலை அழித்தார். விருத்த சேதனத்தையும் யூத சட்டத்தையும் ஏற்குமாறு இதுமேயரை வற்புறுத்தினார். இவ்வாறு அச்சத்திற்குரிய ஆட்சியாளராக இரிக்கானு விளங்கினார். மேலும் ஆதிக்கமிக்க பரிசேயருடன் இவர் தனது உறவை முறித்துக்கொண்டு தன்னுடைய கிரேக்க அரச முறை எண்ணங்களுக்கு சார்பாக இருந்த சதுசேயருடன் சேர்ந்து கொண்டார். இவ்வாறு யுதேயாவினுடைய சுதந்திரத்தை மீண்டும் ஏற்படுத்தி அதனுடைய அரசியல் ஆதாயங்களை உயர்த்திய வேளையில் இரிக்கானு அசமோனிய மரபினை சமயம் சாராத சக்தியாக மாற்றியமைத்தார். அவரைத் தொடர்ந்து அவரது ஐந்து மகன்களில் மூத்தவனாகிய முதலாம் அரித்தோபுல் அரியணை ஏறினார்.

*3.* இரண்டாம் யோவான் இரிக்கானு:- அலக்சாந்தர் யன்னேயு மற்றும் சலோமி அலக்சாந்திராவின் மூத்த மகனும், முதலாம் யோவான் இரிக்கானுவின் பேரனுமாவார். கி.மு. 76-இல் தனது தந்தைக்குப் பின்னர் இவர் பெரிய குருவானார். 67-இல் மறைவிற்கு பின்னர், மாகாண ஆட்சியாளரானார். ஆனால் மூன்று மாதங்களுக்குப் பின்னர், தனது மூர்க்கமான இளைய சகோதரன் இரண்டாம் அரித்தோபுலுக்கு அப்பதவியை விட்டுக் கொடுக்குமாறு அவர் வற்புறுத்தப்பட்டார். 63-இல் பாம்பே எருசலேமை கைப்பற்றிய பின்னர், இரிக்கானுவை மீண்டும் தலைமைக்குருவாக ஏற்படுத்தினார். ஆனால் உண்மையான அதிகாரம் இதுமேய அந்திப்பத்தரிடம் இருந்தது. அரித்தோபுல் மற்றும் அவரது புதல்வர்கள் அலக்சாந்தர் மற்றும் கபினு ஆகியோரின் கிளர்ச்சிகளைத் தொடர்ந்து, உரோமை புறமாகாண ஆளுநர் பாலஸ்தீன ஆட்சி முறையை மாற்றியமைத்து, இரிக்கானுவைப் பதவியினின்று நீக்கினார். யூலியு சீசர் பாம்பேயை வென்ற பின்னர் இரிக்கானு தனது பிரமாணிக்கத்தை எடுத்துக்காட்டினர். அதனால் சீசர் அவரை மீண்டும் தலைமைக் குருவாகவும் பெயரளவு ஆட்சியாளராகவும் ஏற்படுத்தினார். ஆனால் மீண்டும் அவர் யூதேயாவின் கருவூல அதிகாரியாக இருந்த அந்திப் பத்தரின் கைப்பொம்மையாகவே இருந்தார். 47-இல் அந்திப்பத்தர் தனது புதல்வர்கள் பெரிய ஏரோது மற்றும் பாசேல் ஆகியோரை முறையே கலிலேயாவிற்கும் எருசலேமிற்கும் ஆளுநர்களாக ஏற்படுத்தினார். அவர்களும் இரிக்கானுமேல் ஆதிக்கம் செலுத்தினர். 42-இல் மாற்கு அந்தோணி அவர்களை யூதேயாவின் மண்டல ஆளுநர்களாக ஏற்படுத்தினார். இரண்டு ஆண்டுகளுக்கு பின்னர் இரிக்கானுவையும் பாசேலையும் பதவியினின்று நீக்கி, தான் அரசனாவதற்கென அரித்தோபுலுவின் மகன் அந்திகோனு பார்த்தியரின் உதவியை நாடினார். இரிக்கானுவின் செவிகளை வெட்டி விட்டு அதன் விளைவாக தலைமைக் குரு நிலையை மீண்டும் அடைவதற்கு அவரை தகுதியற்றவராக்கினார். இரிக்கானு சிறைப்படுத்தப்பட்டுப் பார்த்தியாவிற்கு கொண்டு செல்லப்பட்டாலும் திரும்புவதற்கு 36-இல் அனுமதிக்கப் பட்டார். அவர் பெரிய ஏரோதுவால் 30-இல் தூக்கிலிடப்பட்டார். இவ்வாறாக அரியணைக்கான அசமோனிய உரிமம் முடிவுற்றது.

**இரிசா** (RISSAH - மழை தெளிக்கப்பட்ட)

பாலையில் அலைந்து திரிந்தபோது இலிபுனாவுக்கும் கெகாலாதாவிக்கும் இடையே இஸ்ராயேல் மக்கள் தங்கிய ஓர் இடம் (எண் 33:21-22).

**இரித்தமா** (RITHAMAH)

பாலைவனத்தில் கசரோந்துக்குப் பிறகு, இஸ்ராயேலர் தங்கிய இடம் (எண் 33:18-19).

**இரிசிப்பா** (RIZPAH - கனலான நிலக்கரி)

இவள் அய்யாவின் மகளும் சவுலின் வைப்பாட்டியும் ஆவாள். சவுல் இறந்தபின் அபிநேர் இவளைத் தன் மனைவியாக்கி கொண்டார் (2 சாமு 3:7). இது ஆட்சிக்கு உரிமை கோருவதற்குச் சமமாகும் (1 அர 2:22). பெயராவில் அரசனாக இருந்த சவுலின் மகன் இசிபகால் அபிநேரின் பிரமாணிக்கத்திற்குச் சவால் விட்டார். எனவே அபிநேர் இஸ்ராயேலின் தலைவனான தாவீதுடன் தொடர்பு கொண்டார் (2 சாமு 3:7-21). சவுல் கிபயோனியரைக் கொன்றதால் தான் பஞ்சம் வந்தது என்று நினைத்த தாவீது சவுலின் ஏழு புதல்வர்களையும் இரிசிப்பாவின் இருபுதல்வர்களையும் மேராப்பின் ஐந்து புதல்வர்களையும் தூக்கிலிடக் கிபயோனியர் கைகளில் ஒப்படைத்தார் (2 சாமு 21:1-9). இரிசிப்பா இவர்களின் சடலங்களை அறுவடைக் காலம் முதல் மழைக் காலம் வரை பறவைகளும் விலங்குகளும் உண்ணாமல் பாதுகாத்து வந்தாள். இதை அறிந்து தாவீது அவர்களுக்கு முறையான அடக்கம் அளித்தார். அதன் பின் ஆண்டவர் நாட்டின் மீது இரக்கம் கொண்டார் (21:10-14).

**இரிசியா** (RIZIA)

இவர் ஆசேரின் குலத்தில் ஒரு குடும்பத்தின் தலைவனும் வலிமை மிக்க போர் வீரனுமாவார். உல்லாவின் மகன் (1 நாள் 7:39).

**இரித்தமா** (RITHMAH)

பாலைவனத்தில் கெசரோத்துக்குப் பிறகு இஸ்ராயேலர் தங்கிய இடம் (எண் 33:18-19).

**இரிபாத்து** (RIPHATH - பேசப்பட்ட)

இரிபாத்து என்பவர் கோமேரின் மகனும் யாப்போத்துவின் பேரனும் ஆவார் (ஆதி 10:3). இவர் செமித்திய இனத்தவரல்லர். இவருடைய சகோதரர்களான அசுக்கனாசு, தோகருமா மற்றும் தந்தை கோமேரைப் போல இவரும் அன்டோலியனாக இருக்கலாம். இப்பெயர் கோமோரில் தோன்றிய இனத்தையம் குறிக்கும். 1 நாள் 1:6-இல் இரிபாத்துக்குப் பதிலாக தீபாத்து பயன்பட்டிருக்கிறது.

**இரிபாய்** (RIBAI)

பென்யாமின் குலத்தின் கிபயா என்ற இடத்திலிருந்து தாவீதின் வலிமை மிக்க முப்பது வீரர்களில் ஒருவராக மாறிய இத்தாய் என்பவரின் தந்தையே இரிபாய் ஆவார் (2 சாமு 23:29; 1 நாள் 11:31).

**இரிபிலா** (RIBLAH - செழிப்பான)

ஒரோன்தெசு ஆற்றின் கிழக்குக் கரையிலுள்ள காதேசு பகுதியில் உள்ள கூம் என்ற ஏரிக்கு தெற்கே 34 கி.மீ. தொலைவிலுள்ள ஒரு சிறிய நகரம் இரிபிலா ஆகும் (எச 6:14). எகிப்தியர்கள் மற்றும் பாபிலோனியர்களுடன் யூதா நாடு போரிட்ட காலத்திலிருந்து இரிபிலா நகரம் முக்கியத்துவம் பெற்றிருந்தது.

இஸ்ராயேலின் எல்லையைக் குறிக்கும் இடங்களில் இரிபிலாவும் ஒன்று (எண் 34:11; எச 6:14). மெகிதோ, காதேசு ஆகிய இடங்களில் கிடைத்த வெற்றிகளுக்குப்பின் இரண்டாம் நெக்கோ இரிபிலாவில் எகிப்திய படைத் தலைமையகத்தை நிறுவினார். கி.மு. 609-இல் இவர் இஸ்ராயேலின் அரசன் யோவாசவைச் சிறைப்பிடித்தார்.

நெபுக்கதுனேசாரைக் கொதித்தெழச் செய்யும் எக்காரியத்தையும் செதேக்கியா மன்னன் செய்யக்கூடாது என எரேமியா இறைவாக்கினர் கூறியதைக் கேட்காமல், போர் காரியத்தில் இறங்கியதால், இரிபிலா நகரை நெபுக்கதுனேசார் படைத்தளமாக மாற்றினார். எருசலேமை பாபிலோனியர் அழிக்கையில் செதேக்கியா எரிகோவுக்குத் தப்பி ஓடினார். ஆயினும் அவரைப் பிடித்து, அவரின் முன்னால் அவரது புதல்வரைக் கொன்று, அவரையம் பாபிலோனுக்கு எடுத்துச் சென்றனர் (2 அர 25:5-7. 20-21; எரே 39:5-7; 52:9-11. 26-27).

**இரிம்மோனோ** *(RIMMONO)*

இரிம்மோன்-2 என்ற இடத்தின் மற்றொரு பெயர் *(1 நாள் 6:77).*

**இரிம்மோன்** *(RIMMON - மாதுளை, இடி இடிப்பவர்)* - ஆள்

*1.* இவர் ஒரு பேரோத்தியர். இசிபோசத்தைக் கொன்ற பானா, இரக்காபு என்பவர்களின் தந்தை *(2 சாமு 4:2.5.9).*

*2.* சீரியனாகிய நாமானும், சீரியா அரசனும் வழிபட்ட தெய்வம் ரிம்மோன் ஆகும். அசீரியர்கள் இதை இரமானு என அழைப்பர் *(2 அர 5:18).*

**இரிம்மோன்** *(RIMMON)* - இடம்.

*1.* தென் யூதாவில் நெகேபு பகுதியில் அமைந்துள்ள ஒரு நகரம். இதன் முழுப்பெயர் 'ஆயின் ரிம்மோன்' ஆகும். இந்நகரம் சிமியோனுக்குக் கொடுக்கப்பட்டபோது *(1 நாள் 4:32)* பேயேர்செபா மாவட்டத்தின் ஒரு பகுதியாக்கப்பட்டது *(யோசு 15:32).* அடிமைத்தனத்திலிருந்து நாடு திரும்பிய மக்கள் இவ்விடத்திலேயும் குடியேறினர் *(நெக 11: 29).* செக்கரியாவின் கடைசி அதிகாரத்தில் இரிம்மோன் வரையிலுள்ள யூதாவின் மலைநாடு சமவெளியாகும், எருசலேம் ஒங்கி உயர்ந்து நிற்கும் என்று கூறப்பட்டுள்ளது *(செக் 14:10).*

*2.* அசோகிசு என்ற சமவெளியின் தென் கோடியில் மத்திய செபுலோனில் உள்ள இன்றைய உருமன்னே என்ற நகராக இரிம்மோன் அடையாளம் காட்டப்படுகிறது *(யோசு 19:13).* இது நசரேத்தூருக்கு வடக்கு வடகிழக்கில் 10 கி.மீ. தொலைவில் உள்ளது. இது மெராரியப்பிரிவைச் சேர்ந்த ஒரு லேவிய நகரமாகும் *(1 நாள் 6:77).* யோசு 21:35-இல் உள்ள திம்னா, இரிம்மோனாகத் திருத்தப்படவேண்டும்.

*3.* கிபயாவிற்கு அருகில் உள்ள ஒரு பாறை. பென்யாமின் கோத்திரத்தில் எஞ்சியிருந்தவர்கள் தங்களை அழிக்க வந்த இஸ்ராயேலுக்கு அஞ்சி இரிம்மோனுக்கு ஓடிப்போனார்கள் *(நீதி 20:45-47; 21:13-14).* பிறகு இஸ்ராயேலர் தூது அனுப்பி, அங்கிருந்த 600 பென்யாமின் குலத்தினரை அழைத்துவந்து கிபயாவிலுள்ள யாபெசு மற்றும் சீலோ போன்ற இடங்களிலிருந்த பெண்களுக்கு மணமுடித்து வைத்தனர். பேத்தேலுக்குக் கிழக்கில் 6 கி.மீ. தொலைவிலுள்ள *(நீதி 21:13-14)* இக்கால இரமுன் என்ற கிராமம் இருக்கும் இடமாக இருந்திருக்கலாம்.

**இரிம்மோன் பேரேசு** *(RIMMON-PEREZ - கனவாய் மாதுளை)*

இது யாத்திரைப் பயணத்தில் இரித்தமாவுக்கும் இலிபுனாவுக்கும் இடையே இஸ்ராயேல் மக்கள் தங்கிய இடம் ஆகும் *(எண் 33:19-20).*

**இரியா** *(IRIJAH - யாவே பார்க்கிறார்)*

பென்யாமின் குலத்தைச் சேர்ந்த ஒரு காவலாளி. எரேமியா அனாத்தோதில் இருந்த தமது சொத்தைக் குடிமக்கள் முன்னிலையில் பாகம் பிரிக்கக் கருதி எருசலேமை விட்டுப் புறப்பட்ட போது, அவர் நாட்டைப் புறக்கணித்து கல்தேயர் பக்கம் சேரப் போவதாகக் குற்றம் சாட்டி அவரைக் கைது செய்தவர், ஒரு வேளை, இவராக இருக்கலாம் *(எரே 37:11-14).*

**இரின்னா** *(RINNAH - பாடல் கூச்சல்)*

இரின்னா என்பவர் சீமோனின் புதல்வரும் யூதாவின் தென் குலத்தில் ஒருவரும் ஆவார் *(1 நாள் 4:20).*

**இரு கடன்காரர்கள்** - உவமை.

இந்த உவமை கடவுள் பாவமன்னிப்பளிப்பதை எடுத்தியம்புகிறது. பரிசேயன் சீமோனுடைய விட்டு விருந்தின்போது பாவி ஒருத்தி ஆண்டவரை அணுகிப் பாவ மன்னிப்பு கோருகிறாள். அந்நேரத்தில் சீமோன், இயேசு உண்மையான இறைவாக்கினரா என ஐயப்படுகிறார். எனவே இயேசு இந்த உவமையைக் கூறுகிறார் *(லூக் 7:36-50).* தலைவனொருவன் கடன்காரர் இருவரது கடனை மன்னிக்கின்றான். அதில் யாருக்கு அதிகமாக மன்னித்தானோ அவனே தலைவனை அதிகமாக அன்பு செய்கிறான். அதுபோல

இயேசுவின் கால்களைக் கண்ணீரால் கழுவி எண்ணெய் பூசியவள் அவரை அதிகமாக அன்பு செய்கிறாள். எனவே அவளது பாவங்கள் மன்னிக்கப்பட்டன. ஆனால் விருந்தோம்பலை சரியாகச் செய்யாத சீமோன் இயேசுவை அன்பு செய்யவில்லை. பாவ மன்னிப்பையும் விரும்பவில்லை. இந்த உவமையில் கடன்காரர்கள் பாவிகளாவர். கடன் கொடுத்தவர் இறைவனாவார். அதிகமாக மன்னிப்புப் பெற்ற கடன்காரன் தன் சுமை அகற்றப்பட்டு இறைவனுக்கு அன்பையும் நன்றியையும் தெரிவிப்பான்.

## ''இருக்கிறவராக இருக்கிறவர் நானே''

எரியும் முட்புதரில் மோசே சந்தித்த, இஸ்ராயேலின் இறைவனுடைய உடன்படிக்கைப் பெயரான யாவேயை விளக்கும் சொற்றொடராகும் *(யாத் 3:14)*. இக்கூற்றுக்கு ''நான் யாராய் இருப்பேனோ அவராய் இருப்பேன்'', ''நான் படைப்பவற்றையெல்லாம் நான் படைக்கிறேன்'' என்று ஆய்வாளர்கள் பலவாறு விளக்கம் அளிப்பர். இது யாவே என்ற சொல்லின் வேர்ச் சொல்லின் பொருளாகிய ''இருத்தல், நிகழச் செய்தல்'' போன்றவற்றை வைத்துச் சொல்லாடலாகும். நான்காவது நற்செய்தியில் வரும் ''நானே'' என்று தொடங்கும் வாக்குகள் *(யோவா 6:35; 14:6;....)*, யாத் 3:14-இல் எதிரொலிப்பதாக கருதப்படுகிறது.

## இருக்கை, இடம்

இது சிம்மாசனம், நாற்காலி*(2 அர 4:10)* அமர்வதற்குப் பயன்படும் எந்த சாதனத்தையும், இடத்தையும் குறிக்கப் பயன்பட்டுள்ளது. விவிலிய ஆதாரக் கூறுகளை வைத்து நாற்காலி, முக்காலி இவற்றை பிரித்துக் காட்டுவது கடினமாக உள்ளது. சில வேளைகளில் சிம்மாசனத்திற்கும் நாற்காலிக்குமிடையேயுள்ள வேறுபாடு அவ்வளவு தெளிவாக இல்லை. பெரும்பாலும் அரச சிம்மாசனம் இறைவனுடைய சிம்மாசனத்துக்குத் தொடர்புடையதாக காட்டப்பட்டுள்ளது.

அதேபோல் இது எவ்வாறு செய்யப்பட்டது, எந்தெந்தப் பொருள்கள் பயன்படுத்தப்பட்டன என்பதைப் பற்றி அதிகம் சொல்வதற்கில்லை. எகிப்தியர்களின் புதை பொருள் ஆராய்ச்சியை வைத்துத்தான் நாம் இதைப்பற்றிச் சொல்ல முடியும். ஏனெனில் மரவேலை செய்வதில் குறிப்பிடத்தக்க வளர்ச்சி அடைந்திருந்தன மேற்காசிய நாடுகள். ஆனால் பாலஸ்தீனர்கள் எந்த அளவுக்கு இதைப்பற்றி அறிந்திருந்தார்கள் என்பது ஊக மதிப்பாகத்தான் சொல்ல முடியும். ஏறக்குறைய கி.மு. *701*-ல் யூதாவின் அரசனான எசேக்கிய செனகெரிப்புக்கு கொடுத்த பொருட்களில் நாற்காலியும், படுக்கையும் இடம் பெற்றுள்ளன.

அ. அரியணை, அரசவை இருக்கை:- இது மோவாபு அரசனான எகிலோனின் அரியணையையும் *(நீதி 13:20)*, சவுல் அரசவையில் உணவு உண்ண பயன்படுத்தும் இருக்கையையும் *(1 சாமு 20:18.25)*, சாலமோனின் அரியணை அருகில் பதுசேபா அமர இடப்பட்ட இருக்கையையும், சாலமோனின் இருக்கையையும் *(1 அர 10:19)*, அரசு அதிகாரிகளுக்காக அரசவையில் அமைக்கப்பட்டிருந்த இருக்கைகளையும் *(1 அர 10:5)*, பாரசீக நாட்டு அரசவையிலே ஆமானுக்கு கொடுக்கப்பட்ட இருக்கையையும் குறிக்கின்றது.

ஆ. பல்லக்கின் இருக்கை *(உச 3:10)*

இ. சாதாரண நாற்காலி அல்லது முக்காலி:- இது ஆலய வாசற்படியில் இருந்த ஏலியின் இருக்கையையும் *(1 சாமு 1:9)*, சாலையோரங்களில் உள்ள இருக்கையையும் *(1 சாமு 4:13, 18)*, எலியாவின் மேற்அறை இருக்கையையும் *(2 அர 4:10)* குறிக்கின்றது.

ஈ. செபக்கூட இருக்கைகள்:- முதல் நூற்றாண்டு செபக்கூடங்கள் அனைத்துமே அழிந்து விட்டன. ஆனால் கப்பர்நாகூம் ஊரில் இருந்த கி.பி. 3-ஆம் நூற்றாண்டு செபக் கூடத்தை தோண்டியெடுத்தபோது இரண்டு கல்லாலான இருக்கைகள் கிடைத்தன. நற்செய்தியில் சொல்லப்படுகின்ற ''முதல் இருக்கைகள்'' *(மத் 23:6; மாற் 12:39; லூக் 11:43; 20:46)* மூப்பர்களுக்கு ஒதுக்கப்பட்டவை. அவர்களின் முதுகு பேழையை

நோக்கியும், மக்களை பார்த்தவர்களாகவும் அமர்ந்திருந்தனர். ''மோசேயின் இருக்கை'' (மத் 23:2) யானது சிறப்பான இருக்கை, இந்த யூத மூப்பர்களில் ஒருவருக்காக ஒதுக்கப்பட்டதாகும். இவர் புலமைச் சிறப்பு பெற்றவராக இருந்திருக்கலாம்.

உ. உருவகப் படுத்தப்பட்ட இருக்கை: யோபு நூலில் (யோபு 23:3) ''இருக்கை'' ஆண்டவர் வாழும் இடத்தைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளது. எச 28:2-இல் தீர் தான் ''தெய்வங்களின் இருக்கையில் அமர்ந்திருப்பதாகச் செருக்குற்றாள்'' என்று சொல்லப்பட்டுள்ளது. பழ 9:14 மடமை, தன்னை ஒரு ஒழுக்கம் கெட்ட பெண்ணாக ஆக்கிக் கொண்டு பொது இடத்தில் அமர்ந்திருப்பதாக சொல்கிறது. சங் 1:1-இல் ''பழிகாரர் கூட்டம்'' என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதே போல் ஆமோஸ் 6:3-இல் ''வன்முறையின் அரியணை'' என்பது அநீதிகள் நாட்டில் நிலவி வருவதைக் குறிக்கின்றது. எச 8:3 ''இருக்கை'' என்பது சிலையோ அல்லது உருவங்களோ வைப்பதற்கான அடித்தளத்தையோ அல்லது மடக்குழியையோ குறிக்கின்றது.

ஊ. பேழையின் மேற்பகுதி இரக்க இருக்கை என்றழைக்கப்பட்டது.

**இருபொருள் வாதம்** (DUALISM)

இச்சொல் பதினெட்டாம் நூற்றாண்டிலிருந்து, இருவேறு தத்துவங்களாகக் கொள்ளும் கோட்பாடுகளுக்கு பயன்படுத்தப்படும் சொல். ஒன்று சோராஸ்டிரியன் நம்பிக்கையில் இருந்து வருகின்றது. இதில் இரு சமமான எதிர் சக்தியுள்ள கடவுள்களிடையே உள்ள போராட்டத்தில் நம்பிக்கையுள்ளது. இதை ''அண்ட இருபொருள் வாதம்'' என்றழைக்கலாம். அக்ரீமான் என்பவர் தீயவைகளின் கடவுள்; ஓர்மசாடு நல்லவைகளின் கடவுள் என்று எண்ணப்பட்டனர். தீமைகள் நிறைந்த இவ்வுலகம் அக்ரீமான் அடியில் உள்ளது. இவ்வுலகின் நல்ல எதிர்காலம் ஓர்மசாடு கைகளில் உள்ளது. இருவருக்குமிடையே போராட்டம் இருந்துகொண்டே இருக்கும். தீமையின் கடவுளை எதிர்த்து நல்லவர்கள் எதிர்காலத்தில் கைம்மாறு பெறுவார்கள். இது போன்ற இருமைக் கொள்கை, தீமை என்ற பிரச்சினைக்குப் பதில் அளிப்பதாகக் கருதப்பட்டது.

இரண்டாவது வகை. ''இயல் கடந்த இருபொருள் வாதம்'' ஆகும். இது உடல், ஆன்மா ஆகியவற்றின் ஒத்துப்போகாத் தன்மையைப் பற்றி ஆராய்கின்றது. இதைப் பித்தாகொரியன், ஓர்பிக் சமயங்கள் போதித்தன. பிளேட்டோ மற்றும் சில தத்துவ ஆசிரியர்கள் இதை நம்பினார்கள். இந்த வாதத்தின்படி ஆகாயத்தில் முன்பே இருக்கும் ஆன்மாவுக்கு உட்பட்டது உடல். உடல் ஆன்மாவின் சிறைச்சாலையாக இருக்கின்றது. ஆன்மாவின் கல்லறையாக இருக்கின்றது. அதை இழிவுபடுத்துகிறது. உடலிலிருந்து ஆன்மாவுக்கு கொடுக்கப்படும் விடுதலைதான் மீட்பு ஆகும். மேலும் உடலிலிருந்து ஆன்மா விடுதலை பெற வேண்டுமானால் உடலை ஒறுக்க வேண்டும். நோன்பு வாழ்க்கை மேற்கொள்ள வேண்டும்; மறைபொருளின் சமய சடங்குகளில் பங்கு கொள்ள வேண்டும். ஆன்மா உடலிலிருந்து முழுவதுமாக விடுதலை அடைந்து என்றென்றும் வான்லோகத்தில் வீற்றிருக்க வேண்டுமானால், கட்டுப்பாடுகளுடனும், சமயக் கோட்பாடுகளுடனும் நாம் எண்ணிக்கையில்லா மறுபிறவி எடுக்க வேண்டும். இக்கருத்தோடு வேறொரு கருத்து ஒன்றிப் போகின்றது; உலகப் பொருட்கள் யாவும் நிறைவற்றவை; ஆனால் ஆவி நிறைவுள்ளது; நல்லது.

அடிமைத்தனத்திற்கு முன்பு வாழ்ந்த யூத மக்களிடையே அண்டம் சார்ந்த இருபொருள் வாதம் சிறிது காணப்பட்டது. இதற்கு பதிலாக 'ஒரே கடவுள்' என்ற கோட்பாடு அவர்களால் வளர்த்துப் பராமரிக்கப்பட்டது. உலகத்தையும் மனிதனையும் படைத்து ஆட்சி செய்யும் யாவே நேரிடையாகவோ அல்லது மறைமுகமாகவோ, உலகத்தில் காணப்படும் தீமைகளுக்கெல்லாம் பொறுப்பு; அதே நேரத்தில் நன்மைகளுக்

கும் அவரே பொறுப்பு. அதே சமயத்தில் மக்கள் அசுத்த ஆவியை நம்பினார்கள் என்பதற்கு பல சான்றுகள் உள்ளன. ஆனால் இது பின்னணியிலேயே இருந்தது. சாத்தான் கடவுளால் அனுப்பப்பட்ட ஆள். கடவுளுக்கு சரிநிகரானது அல்ல; அவருடைய எதிரியுமல்ல.

எப்படியிருப்பினும் அடிமைத்தனத்திற்குப் பிறகு சாத்தான் கடவுளுக்கும் மனிதனுக்கும் பகைவனாக எண்ணப்பட்டான். சாத்தான் சோதனை கொடுப்பவன் மட்டுமல்ல; மக்களை கொடுமைப்படுத்தி அழுத்துவதும், பாவத்திற்கும் தீயசெயல்களுக்கும் காரணமாக இருப்பதும் சாத்தானின் வேலைகளாகும். இக்கருத்தையொட்டியே பெர்கியாவில் காணப்பட்ட சமயங்கள் இருவுலக வாழ்வை நம்பினார்கள். இவ்வுலகம் தீமை நிறைந்தது; ஏனென்றால் சாத்தானால் இவ்வுலகம் ஆளப்படுகின்றது. மறுவுலகம் நன்மை நிறைந்தது. ஏனென்றால் அது கடவுளால் ஆளப்படுகின்றது. ஆனால் சொராஸ்டிரியன் இருபொருள் வாதம் இஸ்ராயேலரிடையே இடம் பெறவில்லை. எப்படியிருப்பினும் எல்லாம் யாவேயின் அதிகாரத்திற்கு உட்பட்டிருக்கின்றது. கடவுள் தன்னுடைய நோக்கத்திற்காகவே சாத்தானையும் தீமைகளையும் இவ்வுலகில் இருக்க விடுகின்றார்.

கிரேக்க மொழியும் வழியும் பின்பற்றிய யூதர் சமுதாயத்தில் தவிர, யூத சமுதாயத்தில் இயல்கடந்த இருமைக் கோட்பாடு காணப்படுவதில்லை. இறைவன் எல்லா ஞானமும் அறிவும் நன்மையும் உள்ளவராக இருக்கின்றார். எனவே அவர் மனிதனின் நலனுக்காகவும் மகிழ்ச்சிக்காகவும் உண்டாக்கப்பட்ட உடல் உட்பட்ட உலகம் நல்லதாகவே இருக்கின்றது. தவமிருத்தல் விதிவிலக்காகவே தான், ஒழுங்கன்று. இறப்புக்குப் பின் மறுவாழ்வு உண்டு என்று நம்பப்பட்டது. உடலோடு உயிர்த்தெழுதல் என்ற மதக்கோட்பாடு அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. இறந்தபின் பாதாளங்களில் இருக்கும் உடலானது ஆன்மாவோடு ஒன்று சேர்ந்து உயிர்த்தெழுகின்றது. மனிதன் நல்லது, தீமையானது என்ற இரு உணர்வுகளோடு படைக்கப்பட்டிருக்கின்றான். இது யூத சமுதாயத்தில் காணப்படும் மனிதவியல் இருபொருள் கோட்பாடு ஆகும்.

யூத சமூகத்திலிருந்து அண்டம் சார்ந்த இருபொருள் தத்துவத்தை கிறிஸ்துவ மதம் பெற்றுக் கொண்டது. சாத்தான் என்பது தீமையே சுயமானதாக, ஆட்தன்மைப்படுத்தப்பட்டதாகப் பெரும்பாலோரால் ஏற்றுக் கொள்ளப்படுகின்ற ஒரு கருத்தாகும். இரு கருத்துக்களில் ஒன்று தீமை உருவானது, மற்றொன்று நன்மையே உருவானது. ஆன்மாவோடு உடல் உயிர்த்தெழும். திருவெளிப்பாட்டில் இந்த இருபொருள் வாதம் உச்ச நிலையை அடைகின்றது. மேலும் கிரேக்க மொழியும் வழியும் பின்பற்றிய யூதர் சமுதாயத்தில் காணப்பட்ட இயல் கடந்த இருமைக் கோட்பாட்டைக் கிறிஸ்துவ மதம் ஏற்றுக் கொண்டது. பவுல் இரு கோட்பாடுகளையும் இணைக்கிறார். பவுலுக்கு சரீரமாகிய உடல், ஆசைகள் அதிகம் கொண்டிருப்பதால் அது தீயதாகக் காணப்படுகின்றது. இதுவே பாவத்திற்கும் சாவிற்கும் காரணமாகும். அவர் உயிர்த்தெழுதலை ஏற்றுக் கொண்டார். எப்படியிருப்பினும் உயிர்த்த உடல் சரீரத்தாலும் இரத்தத்தாலும் ஆவதல்ல. ஆனால் ஆன்மீக உடலாக மாற்றப்படுகின்றது. ஏனெனில் மனிதனின் சரீரமும் இரத்தமும் இறையரசை உரிமையாகப் பெற முடியாது.

கிறிஸ்துவ ஞானவாதம் கிரேக்க மொழியும் வழியும் பின்பற்றிய யூதர் சமுதாயத்தில் காணப்பட்ட இயல் கடந்த இருமைக் கோட்பாட்டை ஏற்றுக் கொண்டுள்ளது. உலகப் பொருள்கள் கீழான அல்லது தீய ஆவியால் உண்டாக்கப்பட்டுத் தன்மையாலே தீமையானவை. ஆவியின் உலகம் நல்லது. மனிதன், முன்பே இருக்கும் நல்ல ஆன்மாவையும் இதனை சிறைப்படுத்தியும் கறைப்படுத்தியும் இருக்கும் உடலை (சரீரம்)யும் கொண்டவன். மீட்பு என்பது உடலில் அடைபட்டிருக்கும் ஆன்மா அடைகின்ற சுதந்திரமே. இதை நோன்பினாலும், ஒறுத்தல்களினாலும்

சமய சடங்குகளினாலும் அடையலாம். அதற்கு ஞானவாதம் மனிதன் ஒருமுறை மறுபிறவி எடுக்கமுடியும் என்று கூறுவது போல் தோன்றுகிறது. இயல்கடந்த இரு மைக்கோட்பாட்டை கிறிஸ்துவ சமுதாயம் ஏற்றுக் கொண்டது. இதுவே கிறிஸ்துவ மதத்தில் ஒறுத்தல் வாழ்க்கைக்கும் சந்நியாச வாழ்க்கைக்கும் வழிகோலியது எனலாம்.

**இரு மக்கள் - உவமை** - *(மத் 21:28-32)*.

இங்கே உண்மையான, நேர்மையான மன மாற்றம் விண்ணரசை அடைய ஒரே வழி என்கிறார் இயேசு. மாறாக வெளிவேடமா னது அழிவுக்கே மனிதனை இட்டுச் செல் லும். ஆலயத்திலே தலைமைக் குருக்களும் மறைநூல் அறிஞரும் இயேசுவின் அதிகா ரத்தை எதிர்த்த வேளையிலே அவர் இந்த உவமையைக் கூறினார். தோட்டத்திற்குப் போக மாட்டேன் எனக் கூறி, பின்னர் மனம் வருந்திச் சென்றவனைப் போல ஆயக்கார ரும் விலைமாதரும் செய்து, இறைவனின் அன்பைப் பெறுவார்கள். போகிறேன் எனக் கூறி போகாத மகன்போல் யூத சமயத்தலை வர்கள் தங்களைத் தாங்களே புண்ணியவான் களாகக் கருதுபவர்கள், இறைவனை இழப் பார்கள். எனவே விசவாசமும் மனமாற்ற மும் விண்ணரசில் நுழைய அவசியம் தேவை.

**இருமனத்தோர்** *(DOUBLE-MINDED)*

இச்சொல் உறுதியற்ற, தள்ளாடும் மனநி லையுள்ளவர்களைக் குறிக்கிறது. நம்பிக்கை யுறுதியின்மை, ஐயப்பாடு, நிலையற்ற தன்மை, நேர்மையற்ற தன்மை, ஏமாற்றுத லையும் கூட குறிக்க வல்லது.

இச்சொல் புதிய ஏற்பாட்டிலும், திருச் சபை தந்தையரின் நூல்களிலும் காணப்படுகி றது. செபத்தில் காணப்படும் ஐயத்தையும் தயக்கத்தையும் குறிக்கிறது. யாக் *1:7-8; 4:8-* இல் விசுவாசத்திற்கும் உலகிற்கும் இடை யில் ஊசலாடும் நிலையற்ற போக்கைக் குறிக்கிறது. தந்தையரின் நூல்களில், இச் சொல் விசவாசமின்மையால் எழும் ஐயத் தையும், இறைவன் ஒருவருடைய மன்றாட் டைக் கேட்டு அருள தான் தகுதியற்றவன் என்ற உணர்வையும் குறிக்கிறது. சில நூல்க ளில், இறைவனது ஆற்றலின்மேல் நம்பிக் கையின்மையும், இறைவனது நோக்கம் நிறைவேறும், இயேசு விரைவில் தோன்று வார் என்பவற்றில் விசவாசமின்மைக்கும் இச்சொல் குறிக்கிறது. இது இருதலைவர்க ளுக்குப் பணிபுரிபவர்களிடம் காணப்படும் விசுவாசமின்மைக்கும் பற்றுறுதியின்மைக் கும் ஒத்தது *(மத் 6:24; லூக் 16:13)*.

**இரும்பு**

*1.* சில்லா பெற்ற தூபால் - காயீன் என்பவன் வெண்கலத்தாலும் இரும்பாலும் எல்லா விதமான கருவிகள் செய்யும் கொல் லன் ஆனான் என்று வாசிக்கிறோம் *(ஆதி 4:22)*.

விவிலியத்தில் இரும்பு, வாள், ஈட்டி முனை *(1 சாமு 17:7)*, அம்பு முனை, தளவாடங்கள், விவசாயக் கருவிகள் *(2 சாமு 12:31; யோபு 19:24; எரே 17:1; ஆமோ 1:3)* படுக்கை *(உப 3:11)* முதலியனவை செய்யப் பயன்பட்டுள்ளது. எருசலேம் ஆலயம் கட்டு வதில் ஏராளமான இரும்பு பயன்பட்டுள் ளது *(1 நாள் 22:3.14.16; 29:2)*. அரசவையினர் ஆலயப் பணிக்காக *100,000* தாலந்து *(3450* மெட்ரிக் டன்) இரும்பைக் கொடுத்தனர் *(1 நாள் 29:7)*.

கி.மு. 12-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பலவகைக் கருவிகளும் அணிகலன்களும் பாலஸ்தீனத்தில் கண்டெடுக்கப்பட்டுள் ளன. விவிலிய பெனுயேல் என்ற இடத்திற்க ருகில் முகாரேத்-ஏல்-வார்தே என்னுமிடத் தில் பழங்காலத்து இரும்புச் சுரங்கம் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. இரும்பு உருக்குவே லைகள் சேர்ந்த பல பணிமனைகள் மெகிதோ மற்றும் தேல் செம்மே போன்ற இடங்களில் காணப்படுகின்றன. இவை சாலமோன் காலத்தைச் சேர்ந்தவையாக இருக்கலாம்.

பெலிஸ்தியரின் வருகைக்குமுன்பே, கானானியர் இரும்பைப் பயன்படுத்தியிருந் ததாகத் தெரிகிறது. இவ்வாறு எரிகோவை

அழித்தபோது ஆண்டவரது கருவூலத்தில் சேர்த்த பொருட்களில் இரும்புப் பாத்திரங்களும் அடங்கும் (யோசு 6:24). கானானியர்களிடமிருந்தும் (22:8), மிதியானியர்களிடமிருந்தும் (எண் 31:22) கொள்ளையடித்தப் பொருட்களில் இரும்பும் குறிப்பிடப்படுகிறது. மேலும், ஏபால் மலையில் பீடம் கட்டிய போது இரும்புக் கருவிகளைப் பயன்படுத்துவதை மோசே தடுத்ததாகக் கூறப்படுகிறது (உப 27:4). யோசுவா காலத்தில் பேத்து செயான், இசிரியேல் பள்ளத்தாக்கு கடற்கரைச் சமவெளி ஆகியவற்றில் வாழ்ந்த கானானியர் இரும்பால் செய்த தேர்களைக் கொண்டிருந்தனர் (யோசு 17:16; நீதி 1:19). கோலியாத்தினுடைய ஈட்டி முனை அறுநூறு செக்கேல் (8 கிலோ) இரும்பால் செய்யப்பட்டிருந்தது (1 சாமு 17:7). பெலிஸ்தியர் எபிரேயர்களை வென்ற போது, எபிரேயர் இரும்புக் கருவிகளையும், ஆயுதங்களையும் பயன்படுத்துவதற்குத் தடை விதித்தனர். எபிரேயர்களிடையே அரசாட்சி ஏற்பட்டபின், இரும்பினால் செய்யப்பட்ட பொருட்களும், போர்க்கருவிகளும் முக்கிய இடம் பெற்றன (2 சாமு 8:8; 12:31; 1 அர 22:11; 2 அர 6:5; 1 நாள் 20:3; 22:3; 29:7; எச 27:19).

2. உருவக முறையில் இரும்பு:- விவிலியத்தில் இரும்பு வலிமைக்கும் கடினத்தன்மைக்கும் அடையாளமாகப் பயன்பட்டுள்ளது (உப 28:48; ஏச 48:4; யோபு 19:24; எரே 17:1; சங் 2:9; 105:18; திருவெளி 2:27; 12:5; 19:15). எகிப்து இரும்புக் காளவாய்க்கு ஒப்பிடப்பட்டுள்ளது (உப 4:20; 1 அர 8:51; எரே 11:4). நீர் யானையின் உறுப்புகள் இரும்புக் கம்பிகள் போல் இருந்தன (யோபு 40:20). இலவியதாத்தான் இரும்பை வைக்கோலைப் போல நசுக்குகிறது (41:18). முரண்டு செய்யும் இஸ்ராயேலின் கழுத்து இரும்புக் கப்பிக்கு ஒப்பிடப் படுகின்றது (ஏச 48:4). தானி 7:7-இல் வரும் நான்காம் விலங்கு, அஞ்சி நடுங்கவைக்கும் தோற்றமும் மிகுந்த வலிமையும் கொண்டதாய் இருந்தது. அதற்குப் பெரிய இரும்புப் பற்கள் இருந்தன. அவற்றைக் கொண்டு தூள் தூளாக நொறுக்கி விழுங்கியது. மிகச் சிறந்த உருவகம் ''இரும்பு இரும்பைக் கூர்மையாக்கும்; ஒருவனது அறிவு இன்னொருவனால் கூர்மையாக்கப் பெறும்'' (பழ 27:17) என்ற கூற்றில் வருகிறது.

**இரும்புக் கொல்லன்**

இரும்புத் தாதுவினின்று அதனைப் பிரித்தெடுத்து இரும்பினின்று கருவிகளை உருவாக்குபவனே கொல்லன். தாவீதின் காலம் வரை இத்தியரும், பெலிஸ்தியருமே இத்தகைய கொல்லர்களைத் தம்மிடம் கொண்டிருந்தனர் (நீதி 1:19; 1 சாமு 13:19-21). இரும்பு வாள்களையும் (1 சாமு 17:7), தேர்களையும் (யோசு 17:16) இஸ்ராயேலர்கள் கொண்டிருக்கவில்லையாதலால் அவர்கள் பலம் குறைந்திருந்தனர். கொல்லர்கள் கோடாலிகளையும் (உப 19;5), சங்கிலிகளையும் (சங் 105:18; 107:10), உளிகளையும் (யோபு 19:24), சிலைகளையும் (தானி 5:4); சிறைக் கதவுகளையும் (அப 12:10) இன்னும் பலவற்றையும் செய்தனர்.

**இருள் (DARKNESS)**

ஒளியின்மை இருளாகும். 'இருள்' பழைய ஏற்பாடு, புதிய ஏற்பாடு இரண்டிலுமே உருவக வழக்கிலே கூறப்பட்டிருக்கிறது.

1. பழைய ஏற்பாடு:- இருளானது பெரும் குழப்பத்தின் ஆக்கக் கூறாகும். தொடக்கத்தில் ஆழத்தின்மீது இருள் பரவியிருந்தது. கடவுளின் முதல் படைக்கும் செயலானது ஒளியைப் புகுத்தி இருளை மறையச் செய்ததாகும் (ஆதி 1:2-3). ஆதி 1:2 பகுதியில் இருளினுடைய புராண, கற்பனைக் கதைப் பண்பானது ஓரளவு மறைக்கப்பட்டிருக்கிறது. ஏனெனில் கடவுள் இருளை இரவு என்று அழைக்கிறார். இரவையும் பகலையும் அடுத்தடுத்து நிலைப்படுத்துகிறார். குறிப்பிட்ட காலத்தில் வெளிக்கொணரும்படி ஓர் அறையில் இருளைத் தொகுத்து வைக்கிறார் (யோபு 38:19; சங் 104:20).

இருள் குழப்பத்தின் ஆக்கப்பொருளாக இருப்பதால், அது சீரழிவு, மற்றும் தீமை

யின் ஆக்கப்பொருளாக அமைந்திருக்கிறது. உருவ வழக்கில், கற்பனைக் கதை பண்புகளையும் கொண்டிருக்கிறது. இருளானது பேரிடரைக் குறிக்கிறது (ஏச 5:30). உலக அழிவின் போது, தோன்றும்போதே கதிரவன் இருண்டு போவான் (13:10). எகிப்தியரைத் துன்புறுத்திய பத்துக் கொள்ளை நோய்களில் இருளும் ஒன்று (யாத் 10:22). மிகவும் வருத்தும் பேரிடரானது நண்பகலில் இருள் சூழ்வதாகும் (ஆமோ 8:9). இஸ்ராயேலருடைய விடுதலை நாள் என எதிர்பார்க்கப்படும் ஆண்டவருடைய நாள் ஒளிமிக்க நாளன்று, இருள் சூழ்ந்த நாள் தான் (யோவே 2:2; ஆமோ 5:18 தொ செப் 1:15 தொ). இருள் சூழ்ந்த நாள் தீயவனுக்கு அருகில் இருக்கிறது (யோபு 15:23).

யூதா அரசானது இருளில் மலையின்மேல் அகப்பட்ட வழிப்போக்கனைப் போன்றது. இருள் அவனை மூடிக்கொள்கிறது. அவன் இடறிவீழ்ந்து மடிகிறான் (எரே 13:16). இருள் தோல்வி, அடிமை நிலை, அடக்குமுறையாகும் (ஏச 9:1; 42:7; 47:5). இருள் தீமையின் மூலப்பொருள். காரிருளில் தீயவன் தன் வேலைகளைச் செய்கிறான் (யோபு 24:16; எச 8:12). இருளானது சாவைச் சார்ந்தது. சவக்குழியிலும், பாதாளத்திலும் இருள் சூழ்ந்துள்ளது (யோபு 10:21; 17:13). ஒளி இறைவனைச் சார்ந்தது. இறைவன் ஒளியில் உறைகிறார். ஒரு சில வாசகங்களில் இறைவன் இருளில் தன் இருப்பிடத்தை அமைத்துக் கொள்வதாகக் காண்கிறோம். இங்கு இருள் எனப்படுவது, இறையருள் வெளிப்பாட்டுத் தோற்றத்தின் மேகங்களைக் குறிக்கிறது (2 சாமு 22:12; 1 அர 8:12; சங் 18:12). யாவே மனிதனுக்குத் தோன்றும் போது தம் ஒளியை மறைக்க வேண்டும். ஏனெனில் எந்த மனிதனும் இறையின் ஒளியைக் கண்டபின் உயிரோடிருக்க முடியாது. இருளைப் பற்றிய பழைய ஏற்பாடு உருவகங்கள் கும்ரான் ஏடுகளிலும் காணப்படுகின்றன. ''ஒளியின் மக்களுக்கும் இருளின் மக்களுக்கும் நடைபெறும் போராட்டம்'' என்ற ஆவணத்தில் நாம் இத்தகைய உருவகங்களை காணலாம்.

2. புதிய ஏற்பாடு:- பழைய ஏற்பாட்டில் கூறப்பட்ட உருவகங்கள் புதிய ஏற்பாட்டிலும் கையாளப்படுகின்றன. உன் கண் கெட்டிருந்தால், தீயவை கொண்டிருந்தால், உன் உடல் முழுவதும் இருண்டிருக்கும் (மத் 6:23). பாவிகள் இருளினுள் தள்ளப்படுவார்கள் (8:12; 22:13; 25:30). மத் 24:29; மாற் 13:24 என்ற பகுதிகளில் இறுதித்தீர்வையின் போது தோன்றும் பேரழிவுஇருள் குறிப்பிடப்படுகிறது. பாவமாகிய இருள் மிக்க உலகினுள், ஒளியாகிய மனுஉரு எடுத்த இறை வார்த்தை ஒளிர்கிறது. இருளோ அதனை ஏற்றுக் கொள்ளவில்லை (யோவா 1:5). இயேசுவைப் பின்செல்பவன் இருளில் நடக்க மாட்டான் (8:12; 12:46). கடவுள் ஒளியாயிருக்கிறார். இருள் என்பது அவரிடம் இல்லை (1:5). மனிதர்கள் ஒளியை விட இருளையே விரும்புகிறார்கள் (3:19).

புனித பவுலுக்கு இருள் என்பது தீயநெறியாகும் (உரோ 13:12; 2 கொரி 6:14). கிறிஸ்துவர்கள் ஒரு காலத்தில் இருளில் இருந்தவர்கள். இப்பொழுது ஆண்டவருக்குள் ஒளியாய் இருக்கிறார்கள் (எபே 5:8). அவர்கள் இருளின் பயனற்ற செயலைச் செய்பவரோடு சேரக் கூடாது (5:11). இவ்வுலகு இருளில் மூழ்கியிருக்கிறது (6:12). கிறிஸ்து இருளின் ஆதிக்கத்தினின்று நம்மை விடுவித்துள்ளார் (கொலே 1:13). தீயவருக்கு இருளுலகம் ஒதுக்கப்பட்டுள்ளது (2 பேதுரு 2:17).

**இரகேம்** (REGEM - நண்பன்)

இவர் யூதாவின் கலேபியப் பிரிவின் யாதாய் என்பவனின் புதல்வர்களில் ஒருவர் (1 நாள் 2:47).

**இரகேம்-மெலக்கு** (REGEM-MELECH - அரச நண்பன்)

செக்கரியா இறைவாக்கினார் காலத்தில், நோன்பைப் பற்றி ஆலய குருக்களிடம் விசாரித்துவர பெத்தேல் கிராம மக்களால் சரேசரோடு எருசலேமுக்கு அனுப்பப்பட்ட துணையாளர்களுள் ஒருவரே இரகேம்-மலேக்கு என்பவர் ஆவார் (செக் 7:2-3).

**இரகூம்** *(REHUM - இரக்கம்)*

*1.* இவர் பாபிலோனிய அடிமைத்தளையிலிருந்து செருபாபேலோடு நாடு திரும்பியவர்களில் ஒருவர் *(எஸ் 2:2)*. நெக 7:7-இல் உள்ள 'நெகூம்' என்ற வார்த்தையை எழுதும்போது ஏற்பட்ட தவறாக இருக்கலாம்.

*2.* இவர் பாலஸ்தீனம் உட்பட யூப்பிரத்திசு நதிக்கு அப்பால் உள்ள மாகாணத்தை ஆண்ட ஒரு பாரசீக அரச அலுவலகர்; நாடு திரும்பிய பின் அர்த்தாசெருசு என்ற மன்னனுக்கு எருசலேமைக் கட்டியெழுப்பும் யூதர்களுக்கு எதிராக கடிதம் எழுதிய சிமிசாய் எனும் மறைநூல் வல்லுனனுடன் இவர் இணைந்து செயல்பட்டார் *(எஸ் 4:8-16)*. இவ்விருவரும் தங்களின் துணையாளர்களுடன் இணைந்து அரசாணை பெற்று வேலையை நிறுத்தினர் *(எஸ் 4:17-24)*.

*3.* பானியின் மகனான இரகூம் ஒரு லேவியராவார். எருசலேமின் மதிற் சுவர்களைப் புதுப்பிப்பதில் நெகமியாவுக்கு உதவியவர்களில் இவரும் ஒருவராவார் *(நெக 3:17)*.

*4.* இவர் எஸ்ராவின் உடன்படிக்கையில் கையெழுத்திட்டவர்களில் ஒருவர் ஆவார் *(நெக 10:25)*. இவர் 3-இல் குறிப்பிடப்பட்டவராக இருக்கலாம்.

*5.* நாடுகடத்தலுக்குப்பின், செருபாபேலோடு திரும்பியவர்களில் இவர் ஒரு குருகுலத்தின் மூதாதையர் *(நெக 12:3)*. இவர் காரீம்-1-ஆக இருக்கலாம் *(12:15)*.

**இரெபேக்கா** *(REBECAH)* காண்க. ரெபேக்கா.

**இரே, இரா** *(RE, RA)*

இது எகிப்திய சூரியகடவுளின் பெயர். திபிசு நகரம் இக்கடவுளின் முக்கியமான வழிபாட்டு மையமாக விளங்கிற்று.

**இரேகியம்** *(RHEGIUM)*

இது தென் இத்தாலியில் மெசினா சலசந்தியில் அமைந்துள்ள ஓர் துறைமுக நகரம் ஆகும். பவுல் தனது உரோமைப் பயணத்தின்போது இங்கே சிலகாலம் தங்கினார் *(அ.ப. 28:13)*. இப்போது இது டி-கலபிரியா என்று அழைக்கப்படுகிறது.

**இரேசா** *(RHESA - தலை)*

இவர் இயேசுவின் முன்னோர்களில் ஒருவரும் செருபாபேலின் வழித்தோன்றலும் ஆவார் *(லூக் 3:27)*

**இரேயி** *(REI - நட்பான)*

இவர் தாவீது மன்னனின் அரியணைக்காக நடந்த போராட்டத்தில் அதோனியா கிளர்ச்சி செய்தபோது, சாலமோனுக்குத் துணையாயிருந்த ஓர் யூதேய நாட்டு அலுவலகர் *(1 அர 1:8)*.

**இலகாது** *(LAHAD - சோம்பேறி)*

இலகாது யூதாவின் வம்சத்தைச் சேர்ந்தவர். யாகாத்தின் புதல்வர் *(1 நாள் 4:2)*. இவரது குடும்பம் சோராயர் குடும்பங்களைச் சேர்ந்ததாகக் கருதப்படுகிறது.

**இலகாபிம், இலகாபியர்** *(LEHABIM )*

எகிப்தியரின் சந்ததியில் வந்தவராகப் பெயரிடப்பட்ட ஒரு குழு. இவர்கள் உலூதிம், அனாமிம், நெப்துகிம், பத்துருசிம், கசுலுகிம், கப்பதோரிம் போன்ற சந்ததியினரில் ஒருவராகக் கருதப்படுகின்றனர். இவர்கள் பொதுவாக லிபியர் என்று அடையாளம் காட்டப்படுகின்றனர். காண்க. லிபியா

**இலகி** *(LEHI - தாடை எலும்பு)*

யூதாவில் தாடைபோன்று இயற்கையிலே அமைந்த ஒரு இடத்திற்குக் கொடுக்கப்பட்ட பெயராக இருக்கலாம். அல்லது நீதி 15:9-17.19-இல் உள்ள நிகழ்ச்சியைப் பிரதிபலிக்கும் பெயராக இருக்கலாம். அதாவது சிம்சோன் பெலிஸ்தியர்களின் பயிர்களை எரித்ததால், அவர்கள் இலகிக்கு ஒரு படையுடன் வந்தபோது, யூதாவினர் அவரைப்பிடித்துக் கயிறுகளால் பிணைத்து அவர்களிடம் ஒப்படைத்தனர். அப்போது, சிம்சோன் அங்குக்கிடந்த ஒரு கழுதையின் தாடை எலும்பை எடுத்து ஆயிரம் பெலிஸ்தியர்களைக் கொன்றார். எனவே அவ்விடம் ''தாடை எலும்புக்குன்று'' எனும் பொருள்

படும்படி இராமாத்து-லேகி'' என்றழைக்கப் பட்டது. இது 2 சாமு 23:11-12-இல் குறிக்கப் படும் நிகழ்ச்சி நடந்த இடமாகவும் இருக்க லாம். இது பேத்து செமேசுப்பகுதியில், சோராவுக்கும் திமினாவுக்கும் இடையில் இருந்திருக்கலாம்.

**இலகுமாம்** (LAHMAM - அப்பம், ரொட்டி.

செப்பேலாவில் இலாக்கீசு மாவட்டத்தின் யூதாவின் ஊர்களில் ஒன்று *(யோசு 15:40)*. இது பெயித் இப்ரினுக்குத் தெற்கில் 4 கி.மீ. தொலைவிலும் இலாக்கீசுக்கு அருகிலு முள்ள இக்கால கிர்பெத் ஏல்-இலகும் ஆக இருக்கலாம்.

**இலகுமி** (LAHMI - வீரன்)

இவர் இத்தியரான கோலியாத்தின் சகோத ரன். யாயிரின் மகன் எல்கனானால் கொல் லப்பட்டார் *(1 நாள் 20:5)*. 2 சாமு 21:19-இன்படி, இவர் கோலியாத்தையே கொன்ற தாகத் தெரிகிறது. இது எழுத்தரின் பிழை யாக இருக்கலாம்.

**இலகேம்** (LEHEM )

யூதாவில் உள்ள கண்டுபிடிக்க இயலாத ஒரு இடமாகும் *(1 நாள் 4:22)*. இந்த இடம் இருந்ததா, இல்லையா என்ற சந்தேகம் இருந்தாலும், இருந்திருந்தால் இது, மோவாபை ஆண்டு முடிந்தபின் யோவாசும் சாராபும் வந்து தங்கிய இடமாக இருக்க வேண்டும் என்பதே பலர் கொள்வதாகும். இலகேம் என்ற பெயர் அங்குக் குறிக்கப்பட் டால் இது பெத்திலகேமின் சுருக்கமாகும். இந்த விளக்கம் யூதாச் சூழ்நிலையில் பொருத்தமாகவுள்ளது.

**இலக்கதேமானியர்**

இலக்கதேமானியர், கிரிசின் தென்பகுதி யான இலக்கோனியாவின் தலைநகரான இலக்கதேமோனில் வாழ்ந்தவர்கள். கி.மு.2 70-க்கு முற்பட்ட காலத்திலிருந்தே இவர்க ளுக்கும் யூதருக்குமிடையே நட்புறவு இருந் தது. கி.மு.168-இல் பெரியகுரு யாசோன் இலக்கதேமோனில் அடைக்கலம் புகுந்தத னால், அங்கு ஒரு யூத குடியிருப்பு இருந்தி ருக்க வேண்டும் என்பது புலனாகிறது *(2 மக் 5:9)*. மக்கபேயருக்கும், ஸ்பார்த்தருக் கும் இடையே இருந்த நட்புறவு யோனத்தா னின் காலத்தில் புதுப்பிக்கப்பட்டது என்பது யோனத்தான், ஏறக்குறைய கி.மு.146-இல், ஸ்பார்த்தருக்கு எழுதிய கடிதத்திலிருந்து தெளிவாகிறது *(1 மக் 12:6-18)*. இக்கடிதத் தைப்பற்றி பல சந்தேகங்கள் எழுந்தாலும், அறிஞர் பலர் இதை ஒரு சிறந்த சான்றாகவே கருதுகின்றனர். ஸ்பார்த்தரின் மன்னர் முத லாம் அரையோசு தலைமைக்குரு ஒனியா வுக்கு வாழ்த்து கடிதம் அனுப்பியதாக யோனத்தான் எழுதுகிறார் *(1 மக் 12:20-23)*. *1 மக் 14:20-22* ஸ்பார்த்தர் யோனத்தானுக்குப் பின்வந்த சீமோனுக்கு எழுதிய கடிதத்தைக் கொண்டுள்ளது. *1 மக் 15:16-22* உரோமைய ருக்கும் யூதருக்கும் இடையே உள்ள உறவை கூறுகையில் ஸ்பார்த்தரைப் பற்றியும் கூறுகி றது.

**இலக்கியம்**

பரந்த பொருளில் இலக்கியம் என்பது எழுதப்பட்ட அனைத்தையும் குறிக்கும். முத லில், எழுதப்பட்டவை செயல் நோக்கத்திற் காக உபயோகப்படுத்தப்பட்டன. பழைய ஏற்பாட்டில் வணிக சாசனங்கள், கணக்கு கள், கடிதங்கள், அரசு அதிகாரிகளின் அட்ட வணைகள் *(1 அர 4)*, வரி அட்டவணைகள், மக்கள் தொகை அட்டவணைகள் (எஸ் 2) மற்றும் ஆட்சியமைப்பு சாசனங்கள் போன்ற பல்வேறு வகையான இலக்கியங்கள் குறிப் பிடப்பட்டுள்ளன. தொடக்கத்தில் சாபங்க ளும் அவற்றின் வல்லமையை மேம்படுத் திக் காட்ட, மந்திர எழுத்துக்களால் எழுதப் பட்டு இருக்கலாம் *(செக் 5:1; எச 2:9 தொ)*.

மிகக் குறுகிய பொருளில், இலக்கியம் என்பது ஒரு குறிப்பிட்ட இனத்தவரின் வாழ்க்கை மற்றும் எண்ணங்களைப் பற்றிய கலை நயமான கட்டுரைகள், கவிதைகள் மற்றும் உரை நடைப்பகுதிகள் ஆகியவற் றைக் குறிக்கும். விவிலிய இலக்கியமானது, மேற்காசிய மற்றும் கிரேக்க-உரோமை இனங்களினால் தயாரிக்கப்பட்ட இலக்கி யங்களுக்கு இணையாக உள்ள பல்வேறு வகைகளைத் தன்னுள் கொண்டுள்ளது.

*1. தோற்றம்:-* பழைய ஏற்பாட்டின் எல்லா விதமான இலக்கிய முறை, நடைகளுக்குப் பின்னாலும் பாரம்பரியத்தால் கையளிக்கப்பட்ட வாய்மொழி அமைப்பு உள்ளது. கோத்திரங்களின் பிரதிநிதிகளுடைய காலத்தில் ஆட்சியமைப்பிற்கோ, சடங்குகளுக்கோ எழுத்துமுறை தேவையாயில்லை. அரச அமைப்பிலிருந்ததுதான் எழுத்து இலக்கியம் தோன்றியது. அண்டை நாடுகளுடன் உறவுமுறையை வளர்ப்பதற்காக அரசனுக்கு, உலக நிகழ்ச்சிகளில் பரந்த அறிவு மனப்பான்மையையும், தங்கள் பணியை வெளிப்படுத்துவதற்கு தேவையான பல்வேறு முறைகளையும் அறிந்த எழுத்தாளர் தேவைப்பட்டனர். 'அறிஞர்களுடைய ஞானத்தின் புரவலனாக சாலமோன் இருந்தான்' என்னும் வரலாற்று மைய உண்மையானது, அரண்மனை மற்றும் கோவில் சம்மந்தமாக சாலமோன் அறிஞர்களுக்கு ஒரு பள்ளியை ஏற்படுத்தியதன் காரணமாக இருக்கலாம். மற்ற நாட்டு மொழிகளைப் படித்தல், மற்றும் எழுது முறையினை அறிந்து அரச எழுத்தர்கள் தகுந்த முறையில் நடத்தல் ஆகிய இரண்டுக்கும், எழுத்தர்களுக்கு மாதிரிகையும், வாசகங்களும் அவசியமாயின. கானானியரை வழிமரபாகக் கொண்டு தனது வாழ்க்கை நிலைக்கேற்ற மாதிரிகைகள், நடை ஆகியவற்றோடு அகில உலக இலக்கியப் பாரம்பரியத்தில் இஸ்ராயேல் காலெடுத்து வைத்தது. இஸ்ராயேல் இலக்கியத்தின் பெரும்பகுதி, வகைகள், நடை, வார்த்தையமைப்பு மற்றும் சமய, நல்லொழுக்கு எண்ணங்கள் முதலியவற்றில் பழங்கால மேற்காசிய இலக்கியத்திற்கு இணையாகவே உள்ளது.

*2. ஞான இலக்கியம்:-* எழுத்தர்களின் கலையையும் தன்னுள் அடக்கிய ஞானம் என்னும் சொல் உலகளாவியது. எகிப்து மற்றும் பாபிலோனியாவில் வாழ்ந்தவர்கள் தங்களது எழுத்துத்திறன் மற்றும் பொருள் அமைப்பினால் கல்வி, ஒழுக்கம், வாழ்க்கை முறை மற்றும் இலக்கிய வடிவம் ஆகியவைப்பற்றி தங்களது சுய ஞானத்தையும், எண்ணங்களையும், குறிக்கோள்களையும் ஞான நூல்களில் வெளிப்படுத்தினர். இந்நூல்களின் மூலமாகவே முதலில் சாலமோனுடைய அறிஞர்களும் கல்விக் கூடமும் பயிற்சி பெற்றனர். இவற்றை நன்கு அறிந்திருந்தனர். பழமொழி ஆகமத்தில் இணைக்கப்பட்டிருக்கும் பல்வேறு சிறு சேர்க்கைகளில் ஒன்று எகிப்தைச் சார்ந்த 'அமெனமோப்-பின் ஞானம்' என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்டிருக்கலாம். இஸ்ராயேலின் பழமையான இலக்கியம் மற்ற நாடுகளின் ஞான நூல்களின் மொழிபெயர்ப்பு மற்றும் அவற்றின் தழுவல்கள் ஆகும். இவை படிப்படியாக வளர்ந்து யாவேயின் ஆற்றலைக் காட்டும் இஸ்ராயேலின் ஞானமாக உருவெடுத்தன என்பதில் சிறிதளவே சந்தேகம் இருக்க முடியும். மற்ற நாட்டு மாதிரிகளுடன் ஒப்பிடும்போது பொதுப்பாணி பழமொழியின் தாக்கமானது முக்கியத்துவம் வாய்ந்ததாகவே இல்லை.

பழங்கால ஞானமானது செயல்முறையானதும் ஒருதலையானதுமாகும். வாழ்க்கைக்கு ஏற்ற பல அறிவுரைகளை நோக்கும் போது இத்தகைய ஞானமானது அரச அதிகாரிகளின் வட்டாரத்தில் தோன்றியது என்பது தெரிகிறது (பழ 25:1). பிற்காலப்பகுதியான பழ 1:9-இல் காணப்படும் சேர்க்கையானது ஞானத்தின் மீபொளதீகத் தன்மை பற்றிய அன்னியச் சிந்தனைத்தாக்கத்தை வெளிப்படுத்துகிறது. சமயம் மற்றும் வாழ்க்கை மெய்யியல் ஆகியவற்றின் பிரச்சினைகளும் காலப்போக்கில் உணரப்பட்டு ஞானிகளால் ஏற்றுக் கொள்ளப்பட்டன. இதை யோபு நூலில் காணலாம். இந்நூலில் காணப்படும் ஞானமும் சங்கீதமும் கலந்த நடை, பிற்காலச் சங்கீதங்களிலும், திருவுரை நூலிலும் காணப்படுகிறது. ஆனால், சீராக் நூலோ பாரம்பரியமான வழியிலேயே செல்கின்றது. சாலமோனின் ஞான நூல் கிரேக்கப் பொதுப்பாணி மெய்யியல் தாக்கத்தைக் கொண்டிருக்கிறது. இதில் பழங்கால யாப்பு அமைப்பு பெருமளவுக்கு இல்லை எனலாம்.

*3. சட்டங்கள்:-* அரண்மனை எழுத்தர்கள் அரச கோவில், ஆலயம் போன்றவற்றின்

செயல்களிலும் ஈடுபாடு செலுத்த வேண்டியிருந்தது (2 அர 22:3; எரே 36:10-12). சடங்குகளைப்பற்றிய பாரம்பரியங்களைப்பற்றிக் குறிப்பிட்ட முறையில் எழுதுவதற்கு இது பெரிதும் ஒரு விதத்தில் தூண்டியிருக்கலாம். ஒரு விதத்தில் எழுத்தர்கள் வழிபாட்டு இலக்கியத்தின் பாரம்பரியக் காப்பாளர்கள் ஆனார்கள். நாடு அமைக்கப்படுவதற்கு முன்பே உப 26:1-6-இல் குறிப்பிட்டிருப்பது போல சங்கீதங்களின் ஏட்டுத் தொகுப்பும், குருக்களின் ''தோராவும்'' இருந்திருக்கலாம். பெரும்பாலும் ஒரு நாட்டின் முதல் தேவையாக எழுதப்பட்ட சட்டங்கள் இருந்திருக்கின்றன. இஸ்ராயேலில் சட்டத்தின் தொடக்கம் இருவகையானது; ஒன்று இறைவனின் பெயரால் அளிக்கப்பட்ட குருவின் கட்டளைகள், அறிவுரைகள், சோதனைகள் ஆகியவற்றின் வாய்மொழிப் பராம்பரியம்; மற்றது தர்க்கவாதத் தீர்ப்புகளில் வெளிக்கொணரப்பட்ட சமூக உரிமைகள் பற்றியதாகும். பின்னவை நடையிலும், கருத்திலும் மேற்காசிய சட்டமுறைமையைத் தழுவியவையாகும். இவை கானானியரிடமிருந்து எடுக்கப்பட்டவை என்று உறுதியாகக் கூறலாம். விரைவில் இவையும் இறைவனின் சட்டங்களாகவே கருதப்பட்டன. சாதாரண மனிதன் எல்லாவற்றையும்விட சமூக உரிமைச் சட்டங்களிலேயே, அக்கறை காட்டினான். அறிஞர்களும், சமூக நிகழ்ச்சி மற்றும் நீதிமன்றங்கள் ஆகியவற்றில் தாங்கள் ஈடுபடவேண்டிய முறைகளைப் பற்றிய விதிகளை எழுதவே முதலில் விரும்பினர். எனவே, முதன் முதலில் எழுதப்பட்ட தொகுப்புகளில் ஒன்று நீதிநெறி சட்டங்களைப் பற்றியது (யாத் 21:1-22;27) என்று கூறுவதற்கு தக்க காரணமுண்டு. இறுதியில் சேர்க்கப்பட்டுள்ள (22:17-27) குருத்துவச் சட்டங்களின் மறுக்க முடியாத முறையில் வலியுறுத்திக் கூறும் சட்டநடை யாவே பாரம்பரியத்துக்கு ஏற்றவாறு மாற்றியமைக்கப்பட்டு ஆலயத்தோடு தொடர்புடைய வட்டாரங்களில் போதிக்கப்பட்டன என்று காட்டுகிறது.

இத்தகைய எண்ணத்துடனும் நோக்கத்துடனும் பல விதிகள் இருந்ததால் அவற்றை பலகையில் பொறித்து பொதுவாக வைக்க வேண்டியது அவசியமாயிருந்தது. எனவே 'தோரா' என்னும் எபிரேயச் சொல்லிலிருந்தும் வெட்டுதல், பொருத்துதல், பொறித்தல் என்னும் சொற்களிலிருந்தும் வார்த்தைகள் உருவாயின. புனித இடத்தில் நுழைவதற்கும், ஆசீர் பெறுவதற்கும் நிபந்தனையாக இத்தகைய புனித சட்டங்கள் வாயிலில் பொறித்து வைக்கப்பட்டன. இத்தகைய புனித சட்டங்களின் பிரதிபலிப்பை 2 சாமு 5:6-8-ல் வரும் காரணகாரியக் கதையில் காணலாம். ''குருடரும், முடவரும் உமது இல்லத்தில் (அதாவது ஆலயத்தில்) நுழையார்''. எருசலேமில் இத்தகைய, ஆலயத்தில் நுழைவதைப்பற்றி கட்டளைகள் பத்துகட்டளைகள் போன்ற அமைப்பில் உடன்படிக்கையில் அடிப்படை கட்டளைகளுடன் இணைக்கப்பட்டிருந்தன. இவ்வாறு, நுழைவதற்கான கட்டளைகள் என்ற முறையில் (சங் 14;23:1-4) திருவழிப்பாட்டிலும், வருடாந்தர உடன்படிக்கையை புதுப்பித்தலிலும் (சங் 81:94) இடம் பெற்றன. யாத் 32-இல் உள்ள சம்பவம் மற்றும் யாத் 24:7-இல் உள்ள உடன்படிக்கையின் புத்தகம் ஆகியவற்றின் பின்னணியில் அக்காலத்தில் பலவகையான பத்து கட்டளைகள் எழுதப்பட்டிருக்கலாம் என்று எண்ண இடமிருக்கிறது.

வாய் மொழியாலும், எழுத்தினாலும் அமைந்த இச்சிறு நூல்களின் தொகுப்புகளைக் கொண்டே, பெரிய சட்ட நூல்கள் எழுதப்பட்டன. யோசியாவின் காலத்தில் ஆலயத்தில் கண்டெடுக்கப்பட்ட சட்ட நூல் உபஆகமத்திற்கான மூலநூல்களில் ஒன்றாகும். நாடு கடத்தப்பட்டு மீண்டும் அமைக்கப்பட்ட (கி.மு.520) யூத இனத்தாரின் சட்ட நூல் என உப ஆகமம் (உப 4:45-27:9; 28) விளக்கப்படுகின்றது. புனிதம் பற்றிய சட்டம் (லேவி 17-26), எச 40:48-இல் கொடுக்கப்படும் ஆலய ஒழுங்கு, குருக்கள் பாரம்பரியத்தில் தொகுக்கப்படும் சட்டம் ஆகியவை சற்றுப் பிற்காலத்தைச் சேர்ந்தவையாக இருக்கலாம்.

*4.* வரலாற்று இலக்கியம்:- இஸ்ராயேல் இலக்கியமானது மற்ற பண்டைய மேற்காசிய நாடுகளினின்று வேறுபட்டு நிற்கும் இரு பண்புகளில் இதுவும் ஒன்று. தொடக்கத்திலிருந்து அரச ஆண்டு குறிப்புகளைத் தொகுப்பது எழுத்தர்களின் பணியாகும். அவையில் கூறப்பட்ட கதைகள், தாவீதின் செயல்கள், சாலமோனின் சிறப்பு ஆகியவற்றை அவர்கள் அறிந்திருந்தனர். ஆலயத்துடன் அவர்கள் கொண்டிருந்த நெருங்கிய தொடர்பின் காரணமாக யாத்திராகமக் கதைகள், 'எகிப்திலிருந்து உன்னை வெளி நடத்திய உன் கடவுளாகிய இறைவன்' என்னும் விசுவாசக் கோட்பாடு போன்ற திருவிழாக்களில் கூறப்பட்ட கதைகளையும் பாரம்பரியங்களையும் அறிந்திருந்தனர். இறைவனால் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் என்னும் இஸ்ராயேலின் வரலாற்று அடித்தளம், யாவே தான் வரலாற்றின் ஆண்டவர் என்ற சமய உணர்வை வரலாற்றுக்கு அளித்தது. இதைப் பழங்கால மேற்காசிய மக்கள் அறியார்.

இதன் ஆரம்ப கட்டமானது அவையின் உயிருள்ள பாரம்பரியமும், பெரும் சம்பவங்களுடன் ஆன வாய்மொழித் தொடர்பு மாகும். சவுல்-சாமுவேல் மற்றும் சவுல்-தாவீது போன்ற பாரம்பரியங்களிலும், தாவீதின் இறுதி ஆண்டுகள் மற்றும் சாலமோனின் வளர்ச்சி போன்றவற்றிலும் வாய்மொழி நடையையும், வீரகாவியப் பாணியையும் எளிதில் காணலாம். அவை, முதன் முதலாக எப்போது எழுதப்பட்டன என்று யாரும் கூற இயலாது. அவற்றில் சில சாலமோனின் பணிகளைப் பற்றிய புத்தகத்திலிருந்து *(1 அர 11:41)* சேர்க்கப்பட்டிருக்கலாம். யூத மற்றும் இஸ்ராயேல் அரசர்கள் பற்றிய நாளேடுகள் பெரும்பாலும் அரசர் ஆகமத்தில் குறிக்கப்படுகின்றன. இவை மூல ஏடுகள் என்று கூற முடியாது. இவை பெரும்பாலும் வீரகாவிய, பொதுப்பாணி விவரிப்புகள், இறைவாக்கினர்களைப் பற்றிய கதைகள் ஆகியவை அடங்கிய தொகுப்புகளாகும்.

பழைய ஏற்பாட்டு வரலாற்றின் பெரிய தொகுப்பு, யாவே பாரம்பரியத்தில் காணப்படும் நாட்டுக் காவியமாகும். மூலக் தொடக்கக்காலம், குல முதியவர்கள், யாத்திரை ஆகியவை பற்றிய வீரகாவியக் கதைகளையும் காரணக் கதைகளையும் பயன்படுத்தி, படைப்பு முதல் கானான் மீதான வெற்றிவரையுள்ள தாவீது பாரம்பரிய இஸ்ராயேலின் வரலாற்றை யாவே பாரம்பரிய ஆசிரியர் எழுதினார். அழைப்பு மற்றும் தந்தையருடனான உடன்படிக்கையை நிறைவேற்றுதல் என்னும் சமய கண்ணோட்டத்துடன் இவ்வரலாறு எழுதப்பட்டது. நிலையான பாரம்பரியத்தின்மீது பெருமதிப்பு கொண்டிருந்தாலும், யாவே பாரம்பரிய ஆசிரியர், வெறும் தொகுப்பாளர் அல்லர். அவர் உண்மையான ஆசிரியர், தனது பாரம்பரியத்தில் தனது முத்திரையைவிட்டுச் சென்றுள்ளார்.

இவை அனைத்தின் அடிப்படையில், உப ஆகமம்வரை வரலாறு எழுதப்பட்டது. இது மோசேயின் இறுதி நாட்களிலிருந்து எருசலேமின் அழிவு (கி.மு.597) வரையிலான வரலாற்றையும், 27 ஆண்டுகளுக்கு பின்னர் யோயாக்கின் விடுதலை செய்யப்பட்டது பற்றியும் விவரித்தது. யாத்திரையிலிருந்து யோர்தான் வரையிலான நிகழ்ச்சிகளை, யாவே பாரம்பரியத்தைச் சார்ந்து, மிக சுருக்கமாக மோசேயின் உரையில் கூறுகிறது. ஆசிரியரின் இறையியலுக்கும் சமய செயல்பாட்டிற்கும் மூலமாகிய சட்டம் பின்னரே துவங்குகின்றது. மக்களின் விதியானது, சட்டத்துடன் கொள்ளும் தவறான அல்லது சரியான உறவைப் பொறுத்தவாறு அமைக்கப்படுகிறது. யூத சமூகம் மீண்டும் அமைக்கப்பட்டபின் வரலாற்றை அறிவதன் மூலம் வாழ்க்கைப் பாதையை அமைத்துக் கொள்ளுமாறு இந்நூல் எழுதப்பட்டது. நாடு கடத்தப்படுவதற்குமுன் தொடங்கி, பின்னர் புதுப்பிக்கப்பட்டதாகக் கூறப்படும் கருதுகோள் ஏற்றுக்கொள்ளப்பட முடியாத ஒன்று.

நெகமியாவின் நினைவுச் சின்னமானது மேற்காசிய அரச குறிப்புகளின் இலக்கிய நெறியைப் பின்பற்றி ''நான்'' நடையையும்

அரசனுடைய செயல்களை விவரித்தலையும் கொண்டுள்ளது. ஆளுநருடைய இத்தகைய நற்செயல்கள் அனைத்தும் எழுதப்பட்டு, கடவுள் அவரை நினைவுகூர்வதற்காக, ஆலயத்தில் கடவுளின் திருமுன் வைக்கப்படுவதற்காக எழுதப்பட்டன. இடைபுகுத்தப்பட்ட சடங்குகளுக்கான விதிமுறைகள் பெரும் இடத்தை ஆக்கிரமித்துக் கொண்டன. வரலாறு சில புதிய சற்று கட்டுக்கதையான சம்பவங்களைக் கொண்ட ஒரு சிறிய அமைப்பே ஆகும். பின்னர், குருக்கள் பாரம்பரியம் விவரிக்கப்பட்ட யாவே பாரம்பரியத்துடன் இணைக்கப்பட்டது. இந்த இணைந்த நூலும் உபஆகமம் வீரகாவியமும் ஒன்று சேர்க்கப்பட்டது. அதன் விளைவாக இந்த ஒன்றிப்பின் முதல்பகுதியாகிய ஆதியாகமம்-உபஆகமம் தொகுப்பு சட்டநூல் பண்பைக் கொண்டுள்ளது. அதன் உரிமையிலேயே அது ஒரு நூலாகும்.

முன்னோரின் வரலாறு பற்றிய மெய்யில் விளைவுகளை நாளாகமப் பாரம்பரியம் ஏற்றுக்கொண்டது. இதில், இஸ்ராயேல் என்பது யூதாவை மட்டுமே குறிக்கிறது. இதன் வரலாறு தாவீது முதல் எஸ்ரா வரையில் எடுத்துக்கூறப்பட்டுள்ளது. பழைய கால வரலாறு அனைத்தும் பழைய குல மரபுப்பட்டியல் வடிவில் கொடுக்கப்படுகின்றது. பழைய பாரம்பரியங்களும் அறிவு பூர்வமான முடிவுகளும் சேர்ந்து அமைந்துள்ளது. கதைகளின் மூலமான பாரம்பரியத்தின் வளர்ச்சி, ஆசிரியருடைய கருத்தியலான செயல்திறனை வெளிப்படுத்துவதை எளிதாக எடுத்துக்காட்டுகிறது. மூல நாளாகம ஏடுகளில் நெகமியாவிற்கு இடமே இல்லை. அது எஸ்ரா நிகழ்ச்சிக்குக் கொடுக்கப்பட்டது. அது நெகமியாவை பின்பற்றி தனிப் பாரம்பரியமாக விளங்குகிறது.

பிற்காலத்தில், யூத வரலாற்று இலக்கியமானது, உண்மையான வரலாற்று உணர்வை இழந்து, அதிகமதிகமாய் கட்டுக்கதையாக மாறிவிட்டது. ஆனால் மக்கபேயர்களின் விடுதலை போராட்டம் பற்றிய நூல்களில் மீண்டும் புத்துயிர் பெறுகிறது.

5. கவிதை இலக்கியம்:- கவிதையும் தொடக்கத்தில் வாய்மொழி முறையிலேயே விளங்கிற்று. நிலைப்படுத்தப்பட்ட பாரம்பரியம் இருந்தாலும் அறிந்தோ அறியாமலேயோ கவிதைகள் மொழியிலும் கருத்துகளிலும் நவீனப்படுத்தப்பட்டிருக்கலாம். தவறுகளும் புகுந்திருக்கலாம். எழுதப்பட்ட ''ஊர்'' வாசகம்கூட பல்வேறு வடிவங்களில் இருந்திருக்கலாம்.

'வாழ்க்கை' பற்றிய பழைய இஸ்ராயேலின் கருத்திலிருந்து புனிதமான கவிதைகளுக்கும் மற்ற கவிதைகளுக்கும் இடையில் எந்தவித கூர்மையான வேறுபாடும் காண இயலாது. ஆனால் புனிதமான கவிதையை தவிர்த்துப் பொதுப்பாணி கவிதையைப் பற்றி பேச இயலும்.

அ. பொதுப்பாணி கவிதைகள்:- பழைமையான வகைகளில் ஒன்று. வல்லமை பொருந்திய, சந்தம் பொருந்திய ஆசீர்களாகும். இவை திருமணம் போன்ற தனிவாழ்வின் ஆடம்பரங்களின் போதும் (ஆதி 24:60) அல்லது இறக்கும் தந்தையின் இறுதி வார்த்தைகளாகவும் (ஆதி 27) மற்றும் சமுதாய சடங்குகளிலும் (எண். 6:22-27) மற்றும் சாபங்களாகவும் (எண் 22-24) கூறப்பட்டன.

இவ்விதக் கவிதைகள் குலம் போற்றும் பாடல்களுடன் இணைந்தே காணப்படுகிறது. இவை குல இயல்பு மற்றும் ஊழியைப் பற்றி எடுத்துக் கூறுகின்றன (ஆதி 4:23; 27:27-29.34-40). ஆற்றல்மிக்க கூற்றாக உருவாக்கப்பட்டு, பெரும்பாலும் இறக்கின்ற மூதாதையரின் வாயினின்றுவரும் கூற்றாக அமைக்கப்பட்டிருக்கும். ஒரு வம்சத்தின் விதியும், அன்றைய நிலையும் அதன் முன்னோருடைய ஆசீர் அல்லது சாபத்தின் விளைவு என்று விளக்கப்படுகின்றன. இத்தகையவற்றின் தொகுப்பினை ஆதி 49; உப 33, பாலாமின் அருள்வாக்கு மற்றும் தாவீதின் இறுதி வார்த்தைகள் (2 சாமு 23:1-7) ஆகியவற்றில் காணலாம்.

திராட்சை தோட்டதிலும் அறுவடையின் போதும் பணியாளர் பாடும் சிறு பாடல்

களை (நெக 4:4), நாடோடிப்பாடல்களில் சேர்க்கலாம். ஆற்றல் மிக்க மந்திரகுணம் உடையதாகவும் இப்பாடல் இருக்கும்: (உ.ம்.) கிணறு தோண்டும் பொழுது, ''மேன் மக்கள் தண்டாயுதங்களைக் கொண்டு உன்னைத் தோண்டினர்'' என்று பாடும் பாடல் (எண் 21:17-18); மற்ற உதாரணங்கள்: பெரும்பாலும் வேசியின் பாடலைப் பற்றி பாடும் இகழ்ச்சிப் பாடல்கள் (ஏச 23:16); குடிகாரப்பாடல் (22:13); மற்றும் காவல்கார னின் பாடல் (5:1).

கல்லறையில் புதைக்கும்பொழுது ''எங்க ளது சகோதரனே'' என்று ஒப்பாரி வைக்கும் பெண்களாக தொழில்புரிபவர்கள் (2 சாமு 3:33-34; எரே 9:16; 22:18) பாடும் பாடல்கள் ஒலித்தன. தனிப்பட்ட துக்ககரமான பாடல் களுக்கு அவை தூண்டுதல் அளித்தன (2 சாமு 1:19-27). நகரின் அல்லது மக்களின் அழிவின் போது பாடும் பாடல்களில், அவற்றின் நடை சாதாரணமாகவும், வஞ்சப் புகழ்ச்சியா கவும் இருந்தது. பெரும்பாலும் இவை இறைவாக்கினர்களால் பின்பற்றப்பட்டும் (ஆமோ 5:2), சில நேரங்களில் வெற்றிகர மான இகழ்ச்சிப்பாடலின் தொனியிலும் அமைக்கப்பட்டன (ஏச 47).

திருமணம் மற்றும் கூட்டங்களின் போது, பாடல்களிடையே காதல் பாடல்களும் இடம்பெற்றன. புகழ்பெற்ற விளையாட்டு மற்றும் பாடல்களால் அமைக்கப்பட்ட பழைய பாலினப்பெருக்கச் சடங்குகளின் எதிரொலிகளும் இப்பாடலில் காணப்பட் டன.

போர்க்களத்திலோ, அல்லது போரிலிலி ருந்து வீரர்கள் வெற்றிகரமாய் திரும்பி வரும் பொழுதோ கட்டப்பட்ட சிறிய போர்ப்பா டல்களிலிருந்து (நீதி 11:34; 1 சாமு 18:7) பெரிய பாடல்கள் தோன்றின. (உ-ம்) புகழ்ச் சிப் பாடலின் நடையின் தாக்கத்திற்கு உள் ளாகி அமையப்பெற்ற தெபோரா-வின் பாடல் (நீதி 5); மிரியாமின் பாடல் (யாத் 15) பொதுப்பாணி பாடலாக இல்லாமல் இருக்கலாம். ஆனால், இறைவனின் வெற் றிச் செயல்களைப் புகழ்ந்து திருவிழாச் சடங் குகள் தோறும் பாடப்படும் பாடலாகும். இவ்வாறு, இது புனிதப் பாடலாக அமைகி றது.

ஆ. வீரகாவியக் கவிதைகள்:- வீரகாவியக் கவிதைகளும், பண்டைய இலக்கியங்களில் காணப்படுகின்றன. 'ஆண்டவனின் போர் கள்' என்ற நூலும் 'யாஸார்' நூலும் ஒன்றே என்று கருதுவதற்கு தக்க காரணங்களும் உள்ளன. வெற்றிகள் மற்றும் முதல் அரசர்க ளைப் பற்றி செய்யுள் நடையில் எடுத்துக்கூ றும் நாட்டுப்பற்றுடைய வீரப்பெருங்காப் பிய வகையை சேர்ந்தது இந்நூல். சுதந்திர, தனிப்பட்ட வீரபராக்கிரம காவியங்களின் பாடல்களிலிருந்து இக்கவிதைகள் தோன் றின.

இ. புனிதச் சடங்கிற்கான கவிதை:- இவற் றில் பல்வேறு பிரிவுகளுடன் கூடிய சங்கீதங் களான சடங்குகளுக்கான பாடல்கள் அடங் கும். இவை, வெவ்வேறான சடங்கு, வழி பாட்டுச் செயல்கள் மற்றும் சூழ்நிலைக ளோடு குறிப்பிட்ட பிரிவும் பலதரப்பட்ட சடங்கு மற்றும் திருவழிபாட்டு செயல்களி லிலும் தருணங்களிலும், தத்தம் அலுவலு டையவை; வேறுபட்டவை. மேலும் புனிதச் சடங்குக் கவிதைகளில், பொதுவான புகழ்ச் சிப் பாடல்கள், குறிப்பிட்ட விழாக்களுக் கான பாடல்கள், முக்கியமாக, இறைவன் அரியணை ஏறும் விழாவின் பாடல்கள், பொதுத்துன்பம், ஆபத்து போன்ற காலத் தின் செப தப நாட்களில் பெரும்பாலும் அரசனால் பாடப்படும் தேசிய புலம்பல் சங்கீதங்கள், பொது செப சங்கீதங்கள், நோயிலோ மற்ற துன்பத்திலோ வருந்திய தனிமனிதன் 'பாவ காணிக்கை' செலுத்தும் போது பயன்படுத்தும் தனிப்பட்ட புலம்பல் சங்கீதங்கள், தனிப்பட்ட நன்றிச் சங்கீதங் கள், சடங்குகளின் விழா பவனியின் வருகை, ஆலய வாசல்களின் வழியே நுழை தல், போன்ற பல்வேறு செயல்களை விளக் கும் விழா வழிபாடுகளைப் பிரதிபலிக்கும் பாடல்கள் முதலியவை அடங்கும்.

புனித சடங்கிற்கான கவிதைகளுடன் வழி பாட்டுமுறை, இறைவாக்கினர்களின் இறை கூற்றுகள் சேர்க்கப்பட வேண்டும். (உ-ம்) அரசனை அபிடேகம் செய்தல் (சங் 2;109;71), அல்லது புலம்பல் சங்கீதத்தைப் பாடும் போது கூறப்படுபவை; மேலும், திருவழி பாட்டின் சாதாரண அல்லது காரண பகுதியா கக் குரு கூறும், ஆசீர்கள் மற்றும் சாபங்கள், இவை இறைகூற்றுகளைப்போன்று மாற்றப் பட்டு சங்கீதங்களோடு இணைக்கப்பட்டன. அரசனுடைய சத்தியமும், உறுதிவாக்கும் உரிமைப்பத்திரமும் (சங் 101) கூட குறிப்பி டப்படலாம்.

அபக்கூக்கு மற்றும் யோவேல் போன்ற இறைவாக்கினர்களின் நூல்களும் குறிப் பிட்ட சமயத்தில் மரபுமுறை வழிபாடுக ளாக தோன்றியிருக்கலாம்.

ஞான சங்கீதங்கள் அவற்றின் நோக்கத்தி லும் உந்து காரணத்திலும் சமய மனப் பான்மை உடையவையாகவே விளங்கின. மேலும் மேலும், அத்திசையிலேயே அவை செல்கின்றன. ''கடவுளின் மீதான அச்சமே ஞானத்தின் ஆரம்பம்''.

ஈ. எழுதப்பட்ட வாசகங்கள்:- எழுதி வைக்கும் முறை காலப்போக்கில் ஏற்பட ஆரம்பித்தது. ''ஆண்டவனின் போர்கள்'' என்பது எழுதப்பட்ட நூல் என விரிவான யாவே பாரம்பரியத்தாலும் உபாகம பாரம்ப ரியத்தாலும் எடுத்துக் கூறப்படுகிறது. நாடு கடத்தப்பட்டதற்குப் பிற்காலத்தில் தோன் றிய கவிதைகள் அனைத்தும் உடனே எழுதப் பட்டதாக தெரிகிறது. இதற்குச் சான்றாக புலம்பலாகமத்திலும், பிற்காலச் சங்கீதங்க ளிலும் காணப்படும் அகர வரிசை அமைப்பு களைச் சுட்டிக்காட்டலாம். இது செவியை விட கண்ணிற்கே முக்கியத்துவம் தரும் அலங்காரம் ஆகும்.

எ. அங்கீகரிக்கப்பட்ட திருமுறைப்பட்டி யலுக்குப்பின் தோன்றிய சமயக் கவிதைகள்:- இவற்றில் ஒருபகுதி அவ்வப்போது எழுதப் பட்டு, கதை இலக்கிய தலைவர்களின் வாய் மொழியாகக் கூறப்படும் கவிதைகளும் தானியேல் மற்றும் அவருடைய, நண்பர் கள், தோபியா, யூதித்து, அல்லது சீராக் நூலைப் போன்ற ஞானிகளின் நூல்களும் ஆகும். மற்றொரு பகுதி சாலமோனின் சங்கீ தங்கள், சாக்கடல் சுருள்கள் போன்ற தனிப் பட்ட தொகுப்புகளாகும். பாரம்பரிய பாதையில் செல்ல இது முயல்கிறது; ஆனால், சங்கீதத்தையும் ஞானாகம நடை மற்றும் எண்ணங்களையும் இணைத்து வெளிப்படுத்துகிறது. கும்ரான் ஏடுகள் ஏரா ளமான விவிலிய நினைவுகூர்தல்களையும் பாரம்பரிய நன்றி சங்கீதங்களின் நடையின் சிதைவுகளையும் கவிஞனின் வெளிப்படை யான மற்றும் மறைபொருளான அனுபவத் தின் சுட்டிக்காட்டல்களையும் மற்றும் சமய சிந்தனைகளையும் சிறப்புப் பண்புகளாகக் கொண்டுள்ளன.

6. இறைவாக்கு இலக்கியம்:- இது இஸ்ரா யேலின் இலக்கியத்தின் தற்படைப்பாற் றலை விளக்கும் இரண்டாவது அங்கமா கும். இவற்றில் எகிப்திய மற்றும் பாபிலோ னிய மாதிரிகள் பயன்பட்டிருப்பதுபோல் தோன்றினாலும், பண்டைய மேற்காசிய நாடுகளில் இறைவாக்கு இலக்கியத்தோடு ஒப்பிடுவதற்கு எதுவுமில்லை எனலாம். தோற்றத்திலும் உள்ளத்திலும் இஸ்ராயே லின் இறைவாக்கினர்கள் பண்டைய மேற்கா சிய நாடுகளுக்கு ஒத்த கருத்துக்களை கொண் டிருந்தனர். அந்நாடுகளைச் சேர்ந்த நபிகள் கூறியவை அற்ப ஆயுசுடன், காற்றோடு மறைந்து போயின. இஸ்ராயேலில், இறை வாக்கினரின் சொற்கள் மாத்திரமே உலகளவு சிறப்பு மிக்க இலக்கியத்தை ஏற்படுத்தின. இறைவாக்கினர்களின் ஆன்மீக தற்படைப் பாற்றல் சிறப்பும், உண்மையும், இஸ்ராயே லின் சமயத்தினுடைய தனித்துவமுமே இதற்கு காரணமாகும். அதாவது, இறைவ னைப் பற்றிய அவர்களது எண்ணமும், அனு பவமுமேயாகும். சங்கீதங்களின் சமயம், ஆலயத்துடனும் வழிபாட்டுச் சடங்குகளுட னும் நெருங்கிய உறவு கொண்டிருந்த இறை வாக்கினர்களின் ஆன்மீகப் பின்னணியாகும்.

அ. இறைவாக்கினரின் கூற்றுகளும் கவி தைகளும்:- இறைவாக்கினர்களின் ஆரம்ப

காலக் கூற்றுக்கள் அந்தந்த நேரத்தின் பரவச மான உந்துதல்களிலிருந்து தோன்றின. இவை சிறுசிறு, தனிப்பட்ட பகுதிகளாகும். இவை இறைவனது நற்பேற்றையோ அல்லது தீமையானவையோ பற்றிய இறைகூற்றுக்கள் அல்லது குறிப்பிட்ட வரலாற்று நிலைக்கேற்ற படிப்பினைகள் (2 சாமு 5:19. 23-24) ஆகியவற்றைப் பற்றியவையாகும். தோற்றத்திலும் வடிவத்திலும் இவை சமய பரவச நிலையுடையாரோடும், பழைய காட்சியாளரின் காட்சிகளுடனும் (எண் 24:17) அவர்களது ஆசிர் அல்லது சாபங்களின் வல்லமை பொருந்திய சொற்களோடும் தொடர்புடையன. இவை வரப்போகும் செயல்களைப் பாதிக்கும் ஆற்றல் கொண்டிருந்தன. காட்சிகள், கருத்தமைப்பு, வரப்போகும் நிகழ்ச்சிகளைப் பற்றிய உயிர்சித்தமான விவரிப்பு, உணர்ச்சிகள் ஆகியவை இறைவாக்கினரின் மனதில் சித்திரங்களால் மாறும் காட்சிகள், விவரிப்பதற்கு பதிலாக குறிப்பாக சுட்டிக்காட்டுதல், உருவகங்கள் முதலியவற்றைத் தோன்றச் செய்தன. இவை அனைத்தும் பரவச நிலையுடனும் காட்சிகளுடனும் உள்ள உறவை சுட்டிக்காட்டுகின்றன. இதுவே பிற்காலத்திற்கும் பொருந்தும். இறைவனுடைய ஏவுதல் என்ற கருத்தின் பாதிப்பால், இறைகூற்றின் மரபான வடிவாயிற்று, இது ''இறைவன் சொல்வதாவது; இவர்களுக்கு போய் சொல்'' என்னும் தூதுவரின் செய்தியாயிற்று. இந்த பிற்கால வடிவில், செவிப்புலன் முக்கியத்துவம் பெற்றதாய் விளங்குகிறது. ஆனால் காட்சியில் இது இல்லாமல் இல்லை.

இறைவாக்கு உரைகளில் காணப்படும் ஆசிர் மற்றும் சாபம் பற்றிய அமைப்புகள், வரவிருக்கின்ற நற்பேறு அல்லது அழிவினைப்பற்றிய விவரிப்புக்களைக் கொடுக்க வாய்ப்பு அளிக்கின்றன. பாரம்பரிய இறைவாக்கு நடை ஆமோசிற்கு முன்பே முழுவளர்ச்சியை அடைந்துவிட்டது. யாவே என்ன செய்வார் என்பதைப்பற்றி மட்டும் கூறாமல், பழைய நிலையினின்று மாறுபடுகிறது. இதன் அமைப்பு பின் வருமாறு உள்ளது; ''ஏனெனில், இன்னார் இதை இப்படி செய்ததால் (சொன்னதால்), நான் இப்போது இதை, அதை இவ்வாறு செய்வேன்'', அல்லது ''நான் இப்படி செய்வேன்; ஏனெனில் இவர் இப்படி செய்தார்''. இவை, விவரிக்கப்பட்ட அல்லது உள்நோக்குடன் அமைக்கப்பட்ட இறைவாக்குகள் என்று கூறப்படும். கருத்தின்படி, அழிவு (மிரட்டல்கள்) பற்றிய இறைகூற்றுக்கள், நற்பேறு மற்றும் மீட்புப் (வாக்குறுதிகள்) பற்றிய இறைகூற்றுக்கள் என வேறுபடுத்தலாம். முன்னதில் திட்டுதல் மற்றும் கடிந்துரைத்தல், அடிக்கடி சங்கீதங்களின் புலம்பல் நடையைப் பயன்படுத்தும் மக்களின் பாவங்களைப் பற்றிய பட்டியல், சாபத்திற்கு இணையான மிரட்டல் ஆகியவை முதன்மை பெறுகின்றன. பின்னதில் அதாவது வாக்குறுதிகள், நாடுகடத்தப்பட்ட காலம் மற்றும் அதற்கு பிந்திய காலங்களில், முதன்மை பெற்றன. இவற்றில் யாவே உடன்படிக்கையை நினைவுகூர்தல், அவரது நம்பிக்கை மற்றும் அன்புடன் கூடிய கருணை போன்றவை சாதாரண உந்து காரணங்களாகின்றன.

இறைவாக்கினர்களின் கதைகளிலும், ஆமோசிலும் காணப்படுவது போல, பழைய கூற்றுக்கள் குறுகியவையாக இருந்தன. இவற்றில் அறிமுக மற்றும் முடிவுரை வடிவங்களைக் கொண்டு மூல அமைப்புகளை ஒன்றிலிருந்து ஒன்றை எளிதாகப் பிரிக்கலாம். இவை இரண்டு அல்லது மூன்று முதல் எட்டு அல்லது பத்து விவிலிய வசனங்களை மாத்திரமே கொண்டிருக்கும். விவரிக்கப்பட்ட இறைகூற்றுக்கள் நீண்டதாக இருக்கலாம். ஆயினும், இரண்டாம் ஏசயாவின் தொகுப்புக்கூட 46 தனித்தனியான கூற்றுக்களைக் கொண்டிருக்கிறது. அவருடைய சீடர்களிடமிருந்து தோன்றிய 3-ஆம் ஏசயா என்றழைக்கப்படும் இறைவாக்குகள் நீண்டவையாகவும், மரபு வழி பாட்டு அமைப்புகளைப் பின்பற்றியவையாகவும் உள்ளன. இந்த பதினொரு அத்தியாங்களும் 14 வேறுபட்ட இறைவாக்குகளைக் கொண்டுள்ளன. எரே 2 போன்ற நீண்ட உரைக்கோவைகளும், சிறிய அமைப்புகளின் மூலம் தனித்தனிப்பண்பை வெளிப்ப

டுத்துகின்றன. ஆயினும், இங்கும் நியாய மான உண்மையான தொடர்பு தளர்ச்சியா கவே உள்ளது.

தங்களது கருத்துக்களை உள்ளத்தில் பதிய வைக்க, காலப்போக்கில் இறைவாக்கினர் கள் எல்லா காவிய நடைகளையும் அமைப்பு களையும் பயன்படுத்தியுள்ளனர். இறை வாக்கினரின் கூற்றுக்களே, கவிதைகளாக அமைந்தன. பெரும்பாலும் யாப்பு அமைப் போடு கூடிய நிறைவான கவிதைகளாக அமைந்தன. சிறப்பாக எரோமியாவின் இறைவாக்குகள், பல் வேறுபட்ட இலக்கிய வகைகளின் இலக்கணமாக உள்ளன. எரேமி யாவிலும் (முக்கியமாக புலம்பல் சங்கீதம்) 2-ம் ஏசயாவிலும் (புகழ்ச்சிக் கீதங்களின் எண்ணங்கள் மற்றும் வடிவங்கள், குறிப்பாக அரியணையேற்ற கீதம்) சங்கீத நடையின் தாக்கம் முதன்மை பெறுகிறது.

ஒருவேளைசட்டஆசிரியர்களாக ''ஞான- எழுத்தர்களின்'' பாதிப்பின் விளைவாக உரைநடையில் இறைவாக்கு மறையுறைகள் வெளிவந்தன. இவை உபஆகம அறவுரை மற்றும் எச்சரிக்கைகளுக்கு ஒத்தவை. இவை, எரேமியா மற்றும் எசக்கியேல் நூல்க ளைப் போன்று சார்ந்தவையாகவும், இலக்கி யமாகவும் அமைந்திருந்தன. இதன் வளர்ச்சி யிலும் இறைவாக்கு உரைகளின் வாய்மொ ழிப் பாரம்பரியம் ஒரு பங்கு வகித்தது.

ஆ. நூல்கள்:- இறைவாக்கு நூல்கள் என் பவை, வாய்மொழியாக வழிவந்த சிறுநூல்க ளின் தொகுப்புகளாகும். இவை பின்வரும் முறையில் அமைக்கப்பட்டவை ஆகும்: அழிவைப்பற்றிய இறைவாக்குகள் முதலி லும், பின்னர் மீட்பு மற்றும் மீண்டும் அமைத்தல் பற்றிய இறைவாக்குகள். இறை வாக்குகள் பெரும்பாலும் தூண்டு சொற் களை மையமாக வைத்துத் தொகுக்கப்பட் டன. சில இடங்களில், பாரூக்கின் நூல் அல்லது ஆமோ *7:10*-இல் உள்ளது போன்று வாழ்க்கை கதைகளும், கட்டுக்கதைகளும் இவற்றுடன் இணைக்கப்பட்டன. முன் னுரை மற்றும் முடிவுரை விதிமுறைகள் பாதுகாக்கப்பட்டன. குறுகிய இறைக்கூற் றுக்கள் பெரும்பாலும் இணைப்புச் சொற் களே இல்லாமலும், சில சமயங்களில் 'ஏ னெனில்' அல்லது 'எனவே' என்னும் சொற் களாலும் சேர்த்து இணைக்கப்பட்டன.

ஒரு பகுதி வாய்மொழியாகவும் மறுபகுதி எழுத்து மூலமாகவும் உள்ளவற்றை இணைத்துப் பதிப்பிக்கும் செயலில், ஏசயா வின் சீடர்கள் போன்ற அமைப்புக்கள் முக் கிய பங்கினை வகித்துள்ளன. ஏசயா மற்றும் 2-ஆம் ஏசயா ஆகியோர் இணைந்த நூல்க ளின் தொகுப்பு இத்தகைய வகையைச் சேர்ந் ததே. இஸ்ராயேல் அரசை மீண்டும் நிலைநி றுத்தும் நம்பிக்கையை உறுதிப்படுத்தவும், நல்லறிவு புகட்டவும் வேண்டிய நோக்கத் திற்காக, சமூகத்தின் சமய தேவைகளுக்காக இந்த இணைத்துப் பதிப்பித்தல் தேவைப் பட்டது எனலாம்.

7. வெளிப்பாட்டு நூல்களும் மிட்ராசிக் நூல்களும்:- இறைவாக்கு இலக்கியத்தின் கடைசி பிரிவாக இருப்பது வெளிப்பாட்டு நூல்களும், மிட்ராசிக் நூல்களுமாகும். பழைய ஏற்பாட்டிலேயே வெளிப்பாட்டு இலக்கியத்தின் ஆரம்பத்தை தொடக்கத்தை ஏச *24-27*; யோவே; செக் *9-14*; எசக்கியேலின் ஒரு பகுதி; மற்றும் தானியேல் ஆகியவற் றில் காண்கிறோம். தானியேல் நூல் வர லாற்று கதைகளான மிட்ராசிக் இலக்கியத்து டன் இணைந்து உள்ளது.

அ. வெளிப்பாட்டு இலக்கியம் என்பது புலமைமிக்க பொதுப்பாணியைச் சேராத இலக்கிய வகையாகும். இவற்றின் ஆசிரியர் களிடம், தாங்கள் ஏவுதல் பெற்றவர்கள் என்ற உணர்வு ஆழ்ந்து கிடக்கிறது. இவர்கள் தங்களது சொந்த இறை அனுபவங்களை எடுத்துக் கூறினர். பழைய இறைவாக்குக ளைப் புரிந்து கொள்ளும் உரிமை தங்க ளுக்கு மேலிருந்து வந்ததாகவும் தங்களை இறைவாக்கினர்களின் வாரிசாகவும் கருதி னர்.

ஆ. மிட்ராசு இலக்கியம்:- இது விவிலி யப் பகுதிகளுக்கு அளிக்கப்பட்ட விளக்கவு

ரைகளின் தொகுப்பாகும். இது அலாக்கா, அக்கதா என இரு வகைப்படும். அலாக்கா விவிலியச் சட்டப் பகுதிகளுக்கு அளிக்கப் பட்டவிளக்கங்களின் தொகுப்பாகும். இது மோசேயின் ஒழுக்கச் சட்டங்களிலிருந்தும் சடங்குச் சட்டங்களிலிருந்தும் அதிகாரப்பூர் வமான வாழ்க்கை முறையை எடுத்துக்கூறும். இது அந்த அந்தக் காலத்தில் ஏற்படும் பொருளாதார, குடும்ப, அரசியல், சமூக, சமய மாற்றங்களுக்கேற்ப யூத ஆன்மீகத் தலைவர்கள் அளித்த மாற்றங்கள், தழுவிய விளக்கங்கள் ஆகியவற்றை உள்ளடக்கியது.

சட்டமல்லாத விவிலியப் பகுதிகளுக்கு அளிக்கப்பட்ட விளக்கங்களின் தொகுப்பாகும் அக்கதா என்ற இலக்கியம். யூத வரலாற்றிலிருந்து, விசுவாசிகளின் ஆன்ம வாழ்வுக்கு நலம் தரும் பாடங்களையும் எடுத்துக் காட்டுகளையும், அறிவுரைகளையும் வெளிக்கொணர, யூத ராபிகளின் முயற்சியின் விளைவாகும் இந்த இலக்கிய வகை. இதில் குறுகிய அல்லது நீண்ட வரலாற்றுக் கருவை அடிப்படையாகக் கொண்ட ஒரு கதை பல கற்பனை விவரங்களுடன் சுதந்திரமாகவும் தாராளமாகவும் விவரிக்கப்பட்டு, ஆசிரியரின் நோக்கத்திற்கேற்ப வாசகர்களுக்குப் போதகம் அளிக்கப்பட்டு, அறிவுரை வழங்கப்பட்டது. இதை ஒரு துணைவரலாற்று வடிவம் எனலாம். இந்த வகைக்கு ஞான *10-14*-இல் ஒரு சிறந்த எடுத்துக்காட்டு காணப்படுகிறது. இந்த விளக்கங்கள் அடங்கிய தொகுப்புகள் எதுவும் நூல் வடிவம் எடுத்ததாகத் தெரியவில்லை. ஆனால் ரூத், யோனா, தோபியா, யூதித்து, எஸ்தர்-போன்ற நூல்களும், தானியேலில் சில பகுதிகளும் *(1-6; 13-14)* அக்கதா மிட்ராசு இலக்கியத்திற்குத் தொடக்க மாதிரிகைகளாக இருக்கலாம் என்று அறிஞர்கள் கருதுவர்.

**இலக்கூம்** *(*LAKKUM - *தடை, கோட்டை)*

நப்தலி நாட்டின் எல்லையில் உள்ள ஓர் ஊர் *(யோசு 19:33)*. இவ்வூர் கிர்பெத்து கொராக்குக்குத் தென்மேற்கில் சுமார் 4 கி.மீ. தொலைவிலுள்ள கிர்பெத்துஏல்-மன்சூராவாக அடையாளம் காட்டப்படுகிறது. இங்கு யோர்தான் நதி கலியேயக்கடலிலிருந்து தொடங்குகிறது.

**இலசம்** *(*LESHEM*)*

இலாயிசு-*1*-இன் மற்றொரு பெயர்.

**இலசயா** *(*LASEA*)*

கிரேத்துவின் தெற்கு கடற்கரையிலுள்ள நகரம் *(அ.ப. 27:8)*. இது செந்துறை அல்லது நல்ல துறைமுகம் என்றழைக்கப்பட்ட இடத்துக்கருகில் இருந்தது. இப்பெயர் வெறெந்தப் பழங்கால இலக்கியங்களிலும் காணப்படவில்லை.

**இலசாரோன்** *(*LASHARON - *சாரானைச் சேர்ந்த)*

இவ்விடத்தைச் சேர்ந்த அரசனை யோசுவா வென்றார் *(யோசு 12:18)*. அநேகமாக 'சாரோன்' என்பது நகரத்தின் பெயர் அல்ல. ஆனால் உண்மையில் இது சொற்றொடரின் ஒரு பகுதியாகும். ''சாரோனின் அபேக்கு'' என்றும் சொற்றொடரில் சாரோனின் அபேக்கை மற்றவற்றிலிருந்து வேறுபடுத்திக்காட்ட, 'சாரோன்' என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**இலத்தீன்**

உரோமையர்கள் பேசிய மொழியே இலத்தீன். இயேசு அறையப்பட்ட சிலுவையில் எழுதப்பட்டக் குற்ற அறிக்கை எபிரேயம், இலத்தீன், கிரேக்கம் ஆகிய மொழிகளில் எழுதப்பட்டதாகக் கூறப்படுகிறது *(யோவா 19:20; லூக் 23:38)*. இத்தாலியில் உள்ள ஒவ்வொரு படித்தவனும் இலத்தீன், கிரேக்கம் ஆகிய இருமொழிகளையும் பயன்படுத்தினான். பாலஸ்தீனத்தில், அரசு அலுவர், இராணுவம், சட்டம் இவற்றில் ஈடுபட்டவர்களே இலத்தீன் மொழியை அறிந்திருந்தனர்.

**இலத்தீன் வுல்கத்தா மொழிபெயர்ப்பு** *(*LATIN VULGATE*)*

கி.பி. நான்காம் நூற்றாண்டின் இறுதியில், எரோனிமு என்பவரால் செய்யப்பட்ட விவிலியத்தின் இலத்தீன் மொழிபெயர்ப்புத்தான் வுல்கத்தா மொழி பெயர்ப்பு என்று அழைக்

கப்படுகிறது. ''வுல்காத்துஸ்'' என்றால் பொதுமை, எளிமை என்பது பொருள். உயரிய இலக்கிய நடையில் எழுதாமல், எல்லோருக்கும் விளங்கும் வண்ணம், எளிய வர்களும் படிக்கும் வகையில், விவிலியம் இலத்தீனில், மொழியாக்கம் செய்யப்பட் டது. அதற்கு தான் வுல்கத்தா அல்லது எளிமையான மொழிபெயர்ப்பு என்று பெயர் கொடுத்து அழைத்தார்கள். இந்த வுல்கத்தா மொழிபெயர்ப்பின் பாதிப்பு பல நூற்றாண்டுகளுக்கு, ஏன் இன்றைய நாளில் கூட காணப்படுகிறது. இந்த எளிமையான வுல்கத்தா எப்படிப் பிறந்து வளர்ந்தது என்ப தைத் தொடர்ந்துக் காணலாம்.

கி.பி. நான்காம் நூற்றாண்டின் இறுதியில், அப்போது நிலவிவந்த விவிலியத்தின் பழைய இலத்தீன் மொழி பெயர்ப்பு எல் லோர்க்கும் திருப்தி அளிப்பதாயில்லை. குறிப்பாக உரோமை திருச்சபையின் தலை வர்கள், இதில் காணப்பட்ட குறைகளைக் களைய வேண்டும் என்று விருப்பம் கொண் டனர்.

பழைய இலத்தீன் மொழிபெயர்ப்பு எழு பது நூல் என்ற கிரேக்க மொழி மொழிபெ யர்ப்பையே தழுவி எழுதப்பட்டது. பழைய ஏற்பாடு எழுதப்பட்ட மூல மொழியாகிய எபிரேய விவிலியத்தை இதில் பின்பற்ற வில்லை. அத்துடன் காலப் போக்கில், பழைய இலத்தீன் மொழி பெயர்ப்பில் படி வம் எடுத்தமுறையில், பல தவறுகள், பிழை கள் புகுந்து வளர ஆரம்பித்தன. இச்சூழ்நி லையில் தான், கி.பி. 382 ஆண்டை ஒட்டியக் காலத்தில் தமாசுஸ் என்ற பாப்பானவர், இப்பழைய இலத்தீன் மொழி பெயர்ப்பைத் திருத்த திட்டமிட்டார். எனவே அப்போது விவிலிய அறிஞராயிருந்த யுசேபியு எரோ னிமு என்பவரை, இத்திருத்தம் செய்யும் பணியை செய்ய பணித்தார். இந்த எரோ னிமு இன்றைக்கு ஜெரோம் என்று அழைக் கப்படுகிறார். இவரும் இப்பெரும் பணியை ஏற்றுக் கொண்டு, வேலையைத் தொடங்கி னார். இயேசு பிறந்த பெத்திலகேமில் தங்கி இப்பணியை செய்தார். கி.பி. 383-ஆம் ஆண்டு தனது முதல் திருத்தத் தொகுதியை தமாசுஸ் பாப்பானவருக்கு அனுப்பினார். இம்முதல் தொகுதியில் 4 நற்செய்திகளை யும் திருத்தம் செய்திருந்தார். இதற்கு எழு திய முகவுரையில் இவ்வாறு குறிப்பிடுகி றார். ''நான் பல பழைய கிரேக்க சுவடிகளை ஒப்பிட்டுப் பார்த்து இத்திருத்தத்தை செய்தி ருக்கிறேன். ஆனால் எங்கு அவசியமானத் தேவையிருந்ததோ அங்கு மட்டும்தான் திருத்தம் செய்துள்ளேன். மற்றபடி, மக்கள் இதுவரை, பழைய இலத்தீன் மொழிபெ யர்ப்பில் பழக்கத்தில் பயன்படுத்திவந்த சொற்றொடர்களை அப்படியே வைத்திருக் கிறேன்'' என்று விளக்கியிருக்கிறார்.

இவ்வாறு எரோனிமு எடுத்துக்கொண்ட கொள்கை முறையினால்தான், பலயிடங்க ளில் ஒரே வார்த்தை வேறுவிதமாக மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது. உதாரணமாக பெரியகுரு என்பது மத்தேயு நற்செய்தியில் முக்கிய குரு என்று மொழிபெயர்க்கப்பட்டி ருக்கிறது. அதே வார்த்தை மாற்கு நற்செய்தி யில் உயர்ந்த குரு என்றும், யோவான் நற்செய்தியில் நிறைவான குரு என்றும் மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது.

இதையடுத்து, புதிய ஏற்பாட்டின் மற்ற புத்தகங்களை, எரோனிமு எப்போது எவ் வாறு திருத்தம் செய்தார் என்பதைப் பற்றி கருத்து வேறுபாடுகள் அறிஞர்களிடையே காணப்படுகின்றன. பொதுவாக, நற்செய்தி யல்லாத மற்ற புதிய ஏற்பாட்டுப் புத்தகங் களை, மேலெழுந்த வாரியாகவே எரோ னிமு திருத்தம் செய்தார் என்று பலரும் கருதுகின்றனர். ஒருசில அறிஞர்கள், கீழ்க் காணும் கருத்தைத் தெரிவிக்கின்றனர். வுல் கத்தா மொழிபெயர்ப்பில், நற்செய்தியல் லாத மற்ற புத்தகங்களை எரோனிமு தொட் டுத் திருத்தவேயில்லை என்பர். எரோனிமு அல்லாத மற்றவர்கள் தான் புதிய ஏற்பாட் டில் நற்செய்தியல்லாத புத்தகங்களை திருத் தினர் என்று வேறு சிலர் கூறுவர். ஆனால் பின்பு எரோனிமுவே அத்திருத்தத்தை செய் தார் என்று அவர் பெயரை அதற்குக் கொடுத் தனர் என்பர்.

பழைய ஏற்பாட்டைப் பொறுத்தவரை, எரோனிமு நற்செய்தி நூல்களைத் திருத்தி முடித்தவுடன் முதலில் சங்கீதங்களைத் திருத்தினார். இதற்கு எழுபதுநூல் என்ற கிரேக்க மொழி பெயர்ப்பையே நோக்கீட்டுச் சுவடியாகப் பயன்படுத்தினார். எரோனிமு செய்த இந்த சங்கீத திருத்தத்திற்கு உரோமைச் சங்கீதம் என்று பெயரிட்டு அழைத்தார்கள். இத்திருத்திய சங்கீதங்கள் கிறிஸ்துவ வழிபாட்டில் பயன்படுத்தப்பட்டன. இன்றும் உரோமையில் பேதுருவின் பேராலயத்திலும் மிலானிலும் இப்பழைய மொழிபெயர்ப்புதான் வழிபாட்டில் பயன்படுத்தப்படுகிறது.

மேற்கண்ட மொழிபெயர்ப்பில் எரோனிமுவிற்கே திருப்தியில்லை. ஏனென்றால் அவர் திருத்தியபோது பயன்படுத்திய கிரேக்க மொழிபெயர்ப்பு சிறந்ததல்ல என்று அவர் கருதினார். எனவே செசரியா நகர் நூலகத்திலிருந்து, ஒரிஜன் தயாரித்த ஆறுபடிவ விவிலியத்தில், ஐந்தாவது பத்தியில் எழுதப்பட்டிருந்த எழுபது நூல் பிரதியைப் பெற்று, அதன் அடிப்படையில் மற்றொரு புதிய திருத்தத்தை சங்கீதங்களுக்கு கொடுத்தார். இவ்வாறு எரோனிமுவால் இரண்டாம் முறையாக செய்யப்பட்ட சங்கீதங்களின் திருத்தம், ''கால் சங்கீதங்கள்'' என்று அழைக்கப்பட்டது. அவை பிரான்சு நாட்டில் அதிகமாக வழிபாட்டில் பயன்படுத்தினர். எனவே அந்நாட்டின் பெயரை வைத்து அவை ''கால் சங்கீதங்கள்'' என்றழைக்கப்பட்டன.

இந்த இரண்டாம் முறையில், எரோனிமுவால், மொழிபெயர்க்கப்பட்ட கால் சங்கீதங்கள்தான் விவிலியத்தின் வுல்கத்தா மொழிபெயர்ப்பில் இடம் பெற்றுள்ளன. இந்த கால் சங்கீதங்கள்தான் கவர்டேல் என்பவர் செய்த ஆங்கில மொழிபெயர்ப்பிற்கு நோக்கீட்டுச் சுவடியாக அமைந்தது. அதேபோல 'பெரிய விவிலியம்' என்ற விவிலிய ஆங்கில மொழிபெயர்ப்பிற்கும் இது அடிப்படையாய் அமைந்தது.

இதன் பிறகு எரோனிமு, மூன்றாவது முறையாக சங்கீதங்களை மொழி பெயர்த்ததாகத் தெரிகிறது. இம்முறை எபிரேய மூல மொழி சங்கீதங்களைப் பெற்று, அதனுடன் ஒப்பிட்டுப் பார்த்து திருத்தம் செய்தார். இம்மொழி பெயர்ப்பு மிகவும் நுணுக்கமாக, மூலநூலை ஒத்திருக்கும் வகையில் செய்தார். இவ்வளவு நல்ல மொழிபெயர்ப்பு மக்களிடத்தில் நல்ல வரவேற்பு பெறவில்லை என்றுதான் சொல்லலாம். அதனால்தான் இப்போது இம்மொழிபெயர்ப்பு ஒரு சில பழம் ஏடுகளிலேயே காணக்கிடக்கிறது. இம்மூன்றாம் மொழிபெயர்ப்பிற்கும், கால் மொழி பெயர்ப்பிற்கும் பலயிடங்களில் முக்கியமான வேறுபாடுகள் காணப்படுகின்றன. குறிப்பாக சங் *14:3*-இல் காணப்படும் வசனம் *(உரோ 3:13)* எரோனிமுவின் மூன்றாவது மொழிபெயர்ப்பில் காணப்படவில்லை. ஆக அது பிற்காலத்தில் சேர்க்கப்பட்ட வசனம் என்பது புரிகிறது. ஆனால் இவ்வசனம் கால் சங்கீத மொழிபெயர்ப்பில் காணப்படுகிறது.

இவ்வாறு சங்கீதங்களைத் திருத்தி முடித்தபின், பழைய ஏற்பாட்டின் மற்ற புத்தகங்களையும் திருத்தி முடித்தார் எரோனிமு. இதற்கும் எழுபது நூல் என்ற கிரேக்க மொழி பெயர்ப்பையே எரோனிமு பயன்படுத்தினார். ஆனால் இந்த திருத்தத்திலும் எரோனிமுவிற்குத் திருப்தியில்லை. கடைசியாக விவிலியத்தின் எபிரேய மூல நூலிலிருந்து மொழிபெயர்ப்பு செய்வதுதான் சரியான முறை என்றுணர்ந்தார். எனவே மறுபடியும் விவிலியத்தை, எபிரேய மூலநூலையே நோக்கீட்டுச் சுவடியாக பயன்படுத்தி திருத்தம் செய்தார். மொழிபெயர்ப்பில் சந்தேகங்கள் எழுந்த போது, எபிரேயமொழி அறிஞர்கள், ராபிகளை கலந்தாலோசித்தார். எனவேதான் சில நேரங்களில் வுல்கத்தா மொழிபெயர்ப்பும் தார்கும் என்று அழைக்கப்படும் அரமேய மொழிபெயர்ப்பும் ஒத்து செல்வதை நாம் காணலாம்.

இவ்வாறு அரும்பணி செய்து, தயாரித்த எரோனிமுவின் வுல்கத்தா மொழிபெயர்ப்பினை பலர் சந்தேகக் கண்கொண்டு பார்க்கத்துவங்கினர். பழைய வசனங்களில் பழகி

போன பக்தர்களுக்கு எரோனிமு புதியதாக புகுத்திய மாற்றங்கள், புதிய சொற்றொடர்கள், விவிலியத்தின் புனிதத்தை புதைத்துவிடும் என்ற அச்சத்தை உண்டாக்கியது. எனவே எரோனிமு மீது குற்றபழி சுமத்தவும் தலைப்பட்டனர். எரோனிமு மூல மொழியின் உண்மைகளைத்தான் மக்களுக்குத் திறந்துக் காட்டினார் என்பதை அவர்களால் புரிந்துக் கொள்ள முடியவில்லை. புனித அகுஸ்தினார்கூட எரோனிமு பணியின் மீதுக் கோபம் கொண்டார். எழுபதுநூல் என்ற கிரேக்க மொழிபெயர்ப்பை விட்டுவிட்டு, ஏன் எபிரேய விவிலியத்தை பின்பற்ற வேண்டும்? அப்படியென்றால் எழுபதுநூல் இறைவனின் ஏவுதலால் எழுதப்பட்டது என்பதை சந்தேகிக்கின்றீர்களா? என்ற கேள்விக் கணையை விடுத்தார்.

எரோனிமுவும் சற்று கோபத் தன்மைக் கொண்டவர், காரணத்தைத் தெரிந்துக் கொள்ளாமல் குற்றப்பழி கூறியவர்களைக் கடுமையாக கண்டித்து சாடினார். தன் நண்பர் ஒருவருக்கு எழுதிய கடிதத்தில், தன்மீது இவ்வாறு குற்றம் சாற்றுபவர்களை அவர்கள் இரண்டு கால் கழுதைகள் என திட்டி சாடுகிறார்.

இந்த எதிர்ப்புகள் தற்காலிகமாகவே எதிரொலித்தன. பிறகு அனைவரும் எரோனிமு செய்த மொழிபெயர்ப்பின் மேன்மையை புரிந்துக் கொண்டனர். மேலைய நாடுகள் முழுவதும் எரோனிமு செய்த இலத்தீன் மொழிபெயர்ப்பை ஆர்வமுடன் ஏற்றுக் கொண்டன. இவ்வாறு இது பொதுவான எளிதான மொழிபெயர்ப்பு என்ற பட்டத்தையும் பெற்றுக் கொண்டது.

ஆனால் காலப்போக்கில், எரோனிமு தயாரித்த இவ்வழகிய மொழி பெயர்ப்பில் பிழைகள் புகுந்தன. இப்பிழைகளில் படிவம் செய்பவர்களால் அறியாமலேயே செய்யப்பட்டவைகள் உண்டு. அல்லது வேண்டுமென்றே, பழைய இலத்தீன் சொற்றொடர்களில் மனதைப் பறிகொடுத்தவர்கள், அக்குறிப்பிட்ட சொற்றொடர்களை எரோனிமுவின் மொழிபெயர்ப்புடன் சேர்த்து எழுதியதும் உண்டு.

இவ்வாறு பிழைகள் நிரம்பிய எரோனிமுவின் மொழிபெயர்ப்பை திருத்த மத்திய நூற்றாண்டுகளில் பல முயற்சிகள் நடந்தன. பல திருத்தங்களும், திருத்திய பதிப்புகளும் செய்யப்பட்டன. ஆல்குயின், தெயோடல்ப், லான்பிரான்க், ஸ்டீபன் கார்டிங் என்பவர்கள் எரோனிமு செய்த வுல்கத்தா இலத்தீன் மொழிபெயர்ப்பை, மத்திய நூற்றாண்டுகளில் திருத்தம் செய்த முக்கியமானவர்களாவர்.

கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் பாரீஸ் பல்கலைக் கழகமும், மற்றவர்களும், வுல்கத்தா மொழிபெயர்ப்பில் செய்ய வேண்டிய திருத்தங்களைப் பற்றி ஒரு தொகுப்பு செய்தனர். ஆனால், இவ்வாறு பலரும் திருத்த முற்பட்டபோது, அங்கு மேலும் பல பிழைகளும் தவறுகளும் சேர்ந்துக் கொண்டேதானிருந்தன. தற்போது நமக்கு, 8000த்திற்கும் அதிகமான வுல்கத்தா மொழிபெயர்ப்பு பழஞ் சுவடிகள் கிடைக்கின்றன. அத்தனை பழஞ் சுவடிகளும் ஒன்றுக்கொன்று ஏதாவது ஒரு விதத்தில் வேறுபாடுகளைக் கொண்டிருக்கின்றன. சில வேறுபாடுகள் நம்மால் புரிந்துக் கொள்ள முடியாமல் மாறுபட்ட கருத்துக்களை தருவதாய் அமைந்துள்ளன.

1546-இல் நடைப் பெற்ற திரிதெந்தீன் பொதுசங்கம், இலத்தீன் மொழிபெயர்ப்பைப் பற்றி ஒருமுடிவெடுத்தது. அதாவது விவிலியத்திற்கு ஒரு சிறந்த இலத்தீன் மொழிபெயர்ப்பைத் தயாரிக்க வேண்டும் என்பதுதான். இச்சங்கத்திற்குப் பிறகு, சங்கத்தின் தீர்மானத்தின்படி, ஐந்தாம் சிக்ஸ்டஸ் என்ற பாப்பானவர் 1590-ஆம் ஆண்டு இலத்தீன் மொழிபெயர்ப்பின் ஒரு புதியப் பதிப்பை திருத்தங்களுடன் வெளியிட்டார்.

ஐந்தாம் சிக்ஸ்டஸ் இறந்தபிறகு இவருக்குப் பின்வந்த எட்டாம் கிளமென்ட் என்ற பாப்பு 1592-இல், மற்றொரு இலத்தீன் மொழிபெயர்ப்பின் திருத்தியப் பதிப்பை வெளியிட்டார். இவர் தனக்கு கிடைத்த

பழைய எல்லா மொழி பெயர்ப்புகளையும் ஒப்பிட்டுப் பார்த்து, இப்பதிப்பை வெளியிட்டார். சிக்ஸ்டஸ் வெளியிட்ட பதிப்பிற்கும், கிளமென்ட் வெளியிட்ட பதிப்பிற்கும் வேறுபாடுகளிலிருந்தன. குறைந்தது 3000 வேறுபாடுகள் அங்குக் காணப்பட்டன.

எட்டாம் கிளமென்ட் வெளியிட்ட இலத்தீன் மொழி பெயர்ப்பின் பதிப்புதான், திருச்சபை அங்கீகரித்த மொழிபெயர்ப்பாக, இன்றும் உரோமன் கத்தோலிக்கத் திருச்சபையில் பயன்படுத்தப்படுகிறது.

1901 ஆண்டிலிருந்து ஆசீர்வாதப்பர் சபையைச் சார்ந்த விவிலிய அறிஞர்கள், இலத்தீன் மொழிபெயர்ப்பில் மீண்டும் ஒரு புதிய திருத்திய பதிப்பைக் கொண்டு வர முயற்சி செய்கின்றனர். பழைய ஏற்பாட்டு புத்தகங்களைத் திருத்தி முடித்து வெளியிட்டுள்ளனர்.

இதைவிடுத்து இங்கிலாந்தில் ஆங்கிலிக்கன் சபையைச் சார்ந்த விவிலிய அறிஞர்கள் புதிய ஏற்பாட்டின் திருத்திய இலத்தீன் மொழி பெயர்ப்பை வெளியிட முயற்சி எடுத்துக் கொண்டனர். 1889-ஆம் ஆண்டு மத்தேயு எழுதிய நற்செய்தியை வெளியிட்டார்கள், 1954-ஆம் ஆண்டு புதிய ஏற்பாட்டின் நிறைவாக திருவெளிப்பாட்டின் இலத்தீன் மொழி பெயர்ப்பை வெளியிட்டார்கள்.

**இலத்தூசிம், இலத்தூசியர்** (LETUSHIM - கூர்மையான)

இவர்கள் ஆபிரகாம், கெத்தூரா ஆகியோரின் பேரரான தெதானின் வழித்தோன்றல்களான அராபிய மக்கள் (ஆதி 25:3). இவர்கள் சீனாய் தீபகற்பத்தில் வாழ்ந்திருக்கலாம். தெதானின் மற்ற வழித் தோன்றல்கள் அசூரியர் மற்றும் இலயூமியர் ஆவர்.

**இலபனோன்** (LEBANON)

- காண்க. லெபனோன்.

**இலபானா** (LEBANA - வெள்ளையான)

பாபிலோனிய அடிமைத்தனத்தினின்று திரும்பியவர்களின் அட்டவணையில் ஒரு குடும்பத்தின் பெயராகும் (நெக 7:48).

**இலபோனா** (LEBONA)

செக்கேமுக்குப் போகும் வழியில், சீலோவுக்கு வடமேற்கில் 5 கி.மீ. தொலைவிலுள்ள ஒரு நகர் (நீதி 21:19). இது கான் ஏல்-லூப்பான் என்ற இக்காலக் கிராமம் இருக்கும் இடத்தில் அமைந்திருந்திருக்கலாம்.

**இலப்பிதோத்து** (LAPPIDOTH - தீவட்டிகள், மின்னல்ஒளி)

இலப்பிதோத்து என்பவர் இராமா, பேத்தேல் என்னும் ஊர்களுக்கு இடையே வாழ்ந்த தெபோரா என்னும் இறைவாக்கினளின் கணவர் ஆவார். (நீதி 4:4).

**இலமுவேல்** (LEMUEL - இறைவனுக்குச் சொந்தமான)

மாசாவின் ஓர் அரசன் (பழ 31:1.4; 30:1). ''தாயால் கற்பிக்கப்பட்டவன்'' என்று சாற்றிக் கூறப்படும் ஓர் அரசன். மாசா என்ற எபிரேயச்சொல் இறைகூற்று அல்லது இறைவாக்கு என்றும் மொழிபெயர்க்கப்படலாம். இது இப்பகுதியில் வரும் போதனை, தாய் தன் மகனான அரசனுக்கு அளிக்கும் ஞானமாகும் என்று சுட்டுகிறது.

ஆதி 25:14; 1 நாள் 1:30-இல் மாசா ஓர் இடப் பெயராகும். வட அராபிய மக்களோடு தொடர்புடையது.

**இலயூமியர்** (LEUMMIM - மக்கள் கூட்டம்)

ஆபிரகாம், கெத்தூரா ஆகியோரின் பேரரான தெதானின் வழியாகத் தோன்றிய அராபிய மக்களில் ஒரு குழுவினர் (ஆதி 25:3)

**இலவங்கம்** (CINNAMON, CASSIA)

கி.மு. 1650-ஐ ஒட்டி சீனாவிலிருந்து பாலஸ்தீனத்திற்கும் அதைச் சுற்றியுள்ள பகுதிகளுக்கும் கொண்டு வரப்பட்ட ஒரு மரமாகும். அதன் பட்டை நறுமணமிக்க எண்ணெய்யைக் கொண்டிருக்கும். சில இடங்களில் கருவாப்பட்டை என்றும் கூறப்படுகிறது. இது படுக்கை அறைகளிலும் (பழ 7:17) ஆடைகளிலும்(உ.ச.4:14) பரிசுத்த அபிடேக எண்ணைய் செய்வதிலும் (யாத் 30:23) பயன்

பட்டுள்ளது. பாபிலோனின் விற்பனைப் பொருள்களில் இலவங்கமும் ஒன்றாகும் (திருவெளி 18:13).

இலவங்கத்தின் காய்ந்த மலர்கள் இஸ்ரா யேலர்களால் விரும்பிப் பயன்படுத்தப்பட் டன. அது '' கசியா'' என்று அழைக்கப்பட் டது. இந்தக் காய்ந்த மலர்கள், வெள்ளைப் போளம், சந்தனம் ஆகியவற்றோடு சேர்த்து, நறுமணப் பொருட்களாக பயன்பட்டன (சங் 45:8). தீரின் விற்பனைப் பொருட்களில் இதுவும் ஒன்று (எச 27:19). யோபுவின் இரண்டாம் புதல்வி '' கெத்சீயா'' என்ற ழைக்கப்பட்டாள் (யோபு 42:14). கும்ரானின் மூன்றாம் குகையில் கண்டெடுக்கப்பட்ட செப்புச் சுருளில் ''கசியா மரத்தால் செய்யப் பட்ட தூப பாத்திரம்'' என்ற வாசகம் உள் ளது.

**இலவியத்தான்** (LEVIATHAN )

படைப்பின் தொடக்கத்தில் யாவேயால் அடக்கி ஒடுக்கப்பட்ட தொடக்க காலத்தைச் சேர்ந்த வேதாளத்தின் பெயர். எஸ்திராஸ், ஏனோக் போன்ற வெளிப்பாட்டு இலக்கி யங்களில், புராணக் குழப்பத்தைச் சேர்ந்த படைப்பாகவும் பெண் உருவமுடைய அச் சந்தரும் கொடும் விலங்காகவும் விவரிக்கப் படுகிறது. இதைப்போன்ற விவரிப்புகள் பாபிலோனிய இலக்கியங்களில் காணப்படு கின்றன. இவற்றில் இலவியத்தான் தரைவி லங்காகும். ஆனால் இஸ்ராயேல் இதை ஒரு கடல் விலங்காக கருதினர்.

யாவே தமது வாளினால் இலவியத்தான் எனும் பாம்பைத் தண்டித்தார் (ஏச 27:1). அவனது தலையை உடைத்து விட்டார் (சங் 74:14). இதேசொல் திமிங்கிலத்தைக் குறிப்ப தாகவும் பெரும் மீனைக் குறிப்பதாகவும் அமைகிறது (யோபு 41:1 தொ; சங் 104:26). இலவியத்தான் என்பது புராணங்களில் வரும் தீயசக்தியின அடையாளமான ஒரு இராட்சச விலங்கு ஆகும். இத்தீயசக்தி எப் பொழுதும் இறைவனால் தோற்கடிக்கப்பட் டுக் கொண்டேயிருந்தாலும். இந்த யுகத்தின் முடிவில் அது விடுவிக்கப்பட்டு முடிவான ஒரு தோல்வியை அடையும் எனக் கூறப்படு கிறது.

**இலவோதிக்கயா** (LAODICEA)

இது தென்மேற்குச் சிறிய ஆசியாவைச் சேர்ந்த ஒரு நகரம். இது மேயாண்டரின் துணை நதியான இலிக்குசின் பள்ளத்தாக் கில் இருந்தது. சிலசமயம் இது பிரிகியாவின் தென் மேற்கில் இருந்ததாகவும் காரியாவைச் சேர்ந்ததாகவும் கருதப்படுகிறது. தென் மேற் கில் இலாவோதிக்கயா இருக்கும் மட்ட மான குன்று இலிக்குசின் துணைநதிகளான அசோப்பு, கப்புருசு ஆகியவற்றால் பாதுகாக் கப்படுகிறது. இந்நகரம், எபேசு நகரிலிருந்து மேயாண்டர் வழியாக சீரியா செல்லும் நெடுஞ்சாலையில் அமைந்திருந்தது. இல வோதிக்கயாவின் கிழக்கில் 16 கி.மீ. தொலைவில் கொலேசையும், வடக்கில் 13 கி.மீ. மைல் தொலைவில் எராப்பொலியும் உள்ளன.

பிளினி இலவோதிக்கயாவின் முந்தையப் பெயர்களாகத் தியேசுப்பொலி, இரோவாசு ஆகியவற்றைக் கொடுக்கிறார். இது செலூக் கியர்களால், ஒருவேளை இரண்டாம் அந்தி யோக்கு அரசனால், சுமார் கி.மு.250-இல் அமைக்கப்பட்டது. இவர் அந்நகரத்தைத் தன் மனைவியின் பெயரான இலவோதிக்கா என்னும் பெயரால் அழைத்தார். இத செலூக் கியர்களின் கோட்டையாக இருந்தது. கி.மு.1 90-இல் மகனேசியாவில் மூன்றாம் அந்தி யோக்குவின் தோல்விக்குப்பிறகு, இலவே திக்கயா பெர்கமு ஆட்சியின்கீழ் வந்தது. ஆனால் கி.மு.133-க்குப்பிறகு உரோமையர் ஆட்சியில் இது எல்லா துரைகளிலும் வளர்ச்சி அடைந்தது. கி.பி.முதல் நூற்றாண் டில் இலவோதிக்கயா புவி அதிர்ச்சியால் பாதிக்கப்பட்டபின், அதன் முக்கியத்துவம் குறைந்துவிட்டது.

இலவோதிக்கயா நல்ல வளமையான நிலங்களாலும், மேய்ச்சல் நிலங்களாலும், கம்பளம் நெய்யும் தொழிலாலும் பெயர் பெற்றிருந்தது. ஐயோனியவின் நகரங்களு டன் போட்டி போடும் அளவுக்குச் சிறந்து

விளங்கியது. கி.மு.2-ஆம் நூற்றாண்டி லேயே அது தனக்கென்று தேவதைகளின் உருவம் பொறித்த நாணயங்களை அடித்தது. இங்கு கிரேக்க மொழி பேசுவோரும், சீரியர் களும், உரோமையர்களும், உரோமையர்க ளாக மாற்றப்பட்ட அதே நாட்டைச் சேர்ந்த வர்களும் வாழ்ந்து வந்தனர்.

இலவோதிக்கயா திருவெளிப்பாட்டில் கூறப்படும் திருச்சபைகளுள் ஒன்று (திரு வெளி *1:11; 3:14*). இலவோதிக்கயா, கொலோசை (கொலோ *2:1; 4:15*), எரா போலி (கொலோ *4:13*) ஆகிய நகரங்களில் வாழ்ந்த கிறிஸ்தவர்களோடு கொண்டிருந்த உறவு இலிக்குசு பள்ளத்தாக்கில் ஏற்பட்ட சமய வளர்ச்சியைப் பிரதிபலிக்கிறது. இந்நக ரம் செலூக்கியர், துருக்கியர் படையெடுப்பு களால் நாசமாக்கப்பட்டு 13-ஆம் நூற்றாண் டுக்குப்பின் கைவிடப்பட்டது. நகரத்தின் அகழ்வாராய்ச்சியில் பல உண்மைகள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. நகரின் சுற்றுச்சு வர் காணப்படுகிறது. நகரின் தென்மேற்கு பகுதியில் உரோமானிய கலையில் கட்டப் பட்ட அரைவட்ட வடிவமான விளை யாட்டு அரங்கம் உள்ளது. வாட்போர்களும் நடைபெற்றன. விளையாட்டு அரங்கத்தின் அருகிலுள்ள பெரிய கட்டிடம் உடற்பயிற்சி நிலையமாகவோ, நீச்சல் குளமாகவோ இருக்கலாம்.

**இலவோதிக்கயாருக்குத் திருமுகம்**

இது கொலோ *4:16*-இல் குறிக்கப்படும் இலவோதிகயாவிலுள்ள கிறிஸ்தவர்களுக் குப் பவுல் எழுதிய கடிதமாகும். இது ஒரு சுற்றுமடல் அல்லது பகிரங்கத் திருமுகமா கும். இது எப்போது எழுதப்பட்டது என்று கூறமுடியாது. ஆனால் நான்காம் நூற்றாண் டில் திருச்சபையின் தந்தையர் இதற்கு எதி ராக எச்சரிக்கின்றனர். இது ஒரு திருமுறை சேராத நூலாகும். ஆனால் பல இலத்தீன் கையெழுத்துப்பிரதிகளில் அவ்வப்போது காணப்படுகிறது. சிக்கல்மிக்க வரலாற்றையு டையது. சிலகாலங்களில் திருமுறையைச் சேர்ந்த நூலாக ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கி றது. சிலகாலங்களில் நிராகரிக்கப்பட்டிருக் கிறது.

இது இலத்தீன் மொழியில் உள்ளது. ஆனால் இதில் கிரேக்கப்பாதிப்பு காணப்படு கிறது. இது ஒரு தொகுப்பு நூலாகும். திரு முறை சேர்ந்த பவுலின் திருமுகங்களிலி ருந்து அப்படியே எடுக்கப்பட்ட தொடர் பற்ற பதங்களைக் கொண்டது. பிலிப்பிய ருக்கு எழுதப்பட்ட திருமுகத்தைப் பெரிதும் சார்ந்து எழுதப்பட்டுள்ளது. இதில் கலாத்தி யர், 1,2 திமோத்தேயு, 1, 2 பேதுரு, மத்தேயு ஆகியவற்றின் பாதிப்பும் சுவடுகளும் காணப்படுகின்றன.

இலத்தீன் பிரதியில் 247 சொற்கள் உள் ளன. புதிதாக ஒன்றையும் கூறவில்லை, ''மனிதர்களாலும் மனிதன் வழியாகவோ ஏற்படுத்தப்படாமல் இயேசுக்கிறிஸ்துவி னால் அப்போஸ்தலராக ஏற்படுத்தப்பட்ட பவுலாக நான் இலவோதிகயாவிலுள்ள சகோதரர்களுக்கு'' என்று தொடங்குகிறது. அவர்கள் கிறிஸ்துவில் நிலைத்திருப்பதற் காக நன்றி கூறுகிறது. பதிதத்தைப்பற்றி எச்சரிக்கிறது. கிறிஸ்துவில் துன்புறும் எல் லாருடனும் பவுல் கொண்டுள்ள பிணைப்பை எடுத்துக் கூறுகிறது. அவர் துன்புறுபவர்களில் மகிழ்ச்சியடைகிறார். ஏனெனில் அவர்களில் இறைவனே செய லாற்றுகிறார். மன்றாட்டுகள் வெளிப்படை யாகச் செய்யப்படவேண்டும். உண்மை எதுவோ, கண்ணியமானது எதுவோ, நீதி எதுவோ, தூயது எதுவோ, இனியது எதுவோ, எதெல்லாம் நற்பண்புடையதோ, எதெல்லாம் புகழ்ச்சிக்குரியதோ அவற்றைச் செய்யும்படி பணிக்கிறது இந்நூல். ''இக்கடி தத்தை நீங்கள் வாசித்தபின் கொலொசைத் திருச்சபையிலும் வாசிக்கச் செய்யுங்கள். கொலொசையிலிருந்து வரும் கடிதத்தை நீங் களும் வாசியுங்கள்'' என்று இம்மடல் முடி கிறது.

**இலாக்கீசு** *(LACHIS - கைப்பற்ற முடியாத)*

இலாக்கீசு யூதாவின் முக்கிய நகரங்களில் ஒன்றாகும். அந்நகரம் இருந்த இடம் எருச

லேமின் தென்மேற்கில் 45 கி.மீ. தொலை வில் செப்பேலாவிலுள்ள தேல் எத்-துவேய்ராக என்னும் இடத்தில் இருந்திருக்க லாம். இந்நகரம் அபிருக்கு உதவி செய்ததாக வும், அவர்கள் அரசனைக்கொன்று, எகிப் துக்கு விசுவாசம் உடையவர்களாய் இருந் தார்கள் என்றும் அமர்னா ஏடுகளில் கூறப் பட்டுள்ளது. இலாக்கீசு யோசுவாவினால் முற்றுகையிடப்பட்டு கைப்பற்றப்பட்ட நக ரங்களில் ஒன்று (யோசு 10). யூதாவின் நகரங்களுள் ஒன்றாக கருதப்பட்ட இலாக்கீ சிலிருந்துதான் செனகெரிபு எருசலேமின் மீது படையெடுத்தார் (2 அர 18;14). இங்கு தான் அமசியா கொலை செய்யப்பட்டார் (2 அர 14:19; 2 நாள் 25:27). இரகபெயாம் இதை பலப்படுத்தினார் (2 நாள் 11:9). நெபுக்கது னேசார் எசக்கியாவுக்கு எதிராக படையெ டுத்து வந்தபோது, எருசலேம் வீழுமுன், கடைசியாக கைப்பற்றப்பட்ட இரண்டு நக ரங்கள் இலாக்கீசும், அசக்காவும் ஆகும்.

இலாக்கீசின் அகழ்வாராய்ச்சி ஸ்டாக்கே (1932-1938) என்பவரால் நடத்தப்பட்டது. இலாக்கீசு 18 ஏக்கர் பரப்பளவுடையது. இது முடியாட்சியில் எருசலேமைவிட பெரிய தாக இருந்திருக்க வேண்டும். வெண்கல காலத்தில் (கி.மு.1250-1200) இது இஸ்ரா யேல் மக்களால் அழிக்கப்பட்டது. அதன் பின் மக்கள் இந்நகரத்தில் குடியேறியதற் கான தடயங்கள் ஏதுமில்லை. ஆனால் இந்ந கரம் கி.மு.701-இல் அசீரியர்களால் அழிக்கப் பட்டது தெளிவாக உள்ளது. கி.மு.588-587-இல் இது பாபிலோனியர்களால் சூரையா டப்பட்டு கி.மு.586-400 வரை கைவிடப்பட் டிருந்தது.

இரும்பு காலத்தில் இது இரகபெயாம் அரசனால் பலப்படுத்தப்பட்டது. இதில் கோட்டையுடன் கூடிய அரண்மனையும், இரட்டைச்சுவரும் முக்கியமானவை. இரட் டைச்சுவர் செங்கற்களால் பாறை மீது கட் டப்பட்டுள்ளது. இந்தக் கோட்டைச் சுவரில் இடையிடையே கோபுரங்கள் கட்டப்பட் டன. கி.மு.1600-1200 இடைப்பட்ட காலத் தில் இருந்த கோவிலின் சில பகுதிகளும், விக்கிரகங்களும், தூப கலசங்களும் கண்டுபி டிக்கப்பட்டுள்ளன. பல முத்திரைகளும், முத்திரை பதிக்கப் பெற்ற சாடியின் கைப்பி டிகளும், தொன்மையான எழுத்தினால் எழு தப்பட்ட சாசனங்களும் மிகவும் முக்கியமா னவை ஆகும். இது பாபிலோனியர்களால் அழிக்கப்படுமுன் கோட்டைத் தலைவ னுக்கு எசேக்கியாவால் எழுதப்பட்ட இலாக் கீசு கடிதங்கள் குறிப்பிடத்தக்கவை. இக்கடி தங்கள் விவிலியத்தில் குறிப்பிடப்படாத ஒரு இறைவாக்கினரைப்பற்றிப் பேசுகின் றன. இவற்றில் பல அரசர்கள் பண்பாட் டைத் தாழ்த்துவதாகக் குறை கூறப்பட்டுள்ள னர்.

**இலாசருஸ் திவேசும்** *(LAZARUS AND DIVES)*

ஏழையும் பணக்காரனும்; இலாசர்=இறை வனால் உதவி செய்யப்பட்டவன்)

இலாசர் இயேசுவால் கூறப்பட்ட ஏழை யும் பணக்காரனும் உவமையில் வரும் ஏழை (லூக் 16:19-31). இலாசர் சாதாரணமாக யூதர்களிடையே நிலவிய பெயர். இயேசு வின் உவமையில் ஏழையின் பெயர் இலாசர் என்று கூறப்படுகிறது. ஆனால் பணக்கார னின் பெயர் கூறப்படவில்லை. ஆனால் இவ்வுவமையில் வரும் இலாசரும், பெத்தா னியாவின் இலாசரும் வேறு வேறு நபர்கள். இந்த இரண்டு பேருக்கும் இடையே தொடர்பு உண்டா என்பதைப் பற்றி பல்வே றுபட்ட கருத்துகள் கூறப்படுகின்றன.

உவமை இரு பகுதிகளைக் கொண்டுள் ளது. 1. பூலகக் காட்சி: புண்களால் மூடப் பட்ட உடலுடைய இலாசர் பணக்காரன் வீட்டு வாயிலில் அமர்ந்திருக்கின்றார். ஆனால் பணக்காரன் பட்டாடை உடுத்தி பகட்டான வாழ்க்கை நடத்தினார். அப்ப ணக்காரனின் பந்தியில் சிந்தினவற்றைக் கொண்டு பசியாற இலாசர் விரும்பினார். நாய்கள் கூட அவரது புண்களை நக்கும். 2. மறுஉலகக் காட்சி: சாவு அவர்களுடைய வாழ்க்கை நிலையை மாற்றி அமைத்தது. இலாசர் வானதூதர்களால் ஆபிரகாமுக்கு அருகில் அழைத்து செல்லப்பட்டார். பணக்

காரனோ கீழுலக நெருப்பில் தள்ளப்பட்டார். இலாசர் உவமையில் பேசியதாகவே கூறப்படவில்லை. ஆனால் பணக்காரன் தன் நாவைக் குளிர வைக்க இலாசரை அனுப்பும்படி ஆபிரகாமை கேட்கின்றார். ஆபிரகாம் மறுத்துவிடுகிறார். ஏனெனில் அவர் துன்புறுவது நீதியாகும். மேலும் இடையே உள்ள பாதாளத்தை கடக்க இயலாது. மீண்டும் பணக்காரன், இலாசரைத் தன் சகோதரர்களிடம் அனுப்பும்படி கேட்கிறார். ஆபிரகாம் மீண்டும் மறுக்கிறார். ஏனெனில் அவர்களை வழிகாட்ட மோசேயும் சட்டங்களும் உள்ளன. இவற்றைப் புறக்கணித்தால் உயிர்ப்பு போன்ற புதுமைகளும் ஒருவனை மனவருந்தச் செய்ய முடியாது.

இவ்வுவமையானது தன்னலமுள்ள பணக்காரர்களுக்கு எச்சரிக்கை. ஏழை பணக்காரர்களின் மாறுபட்ட முடிவுகள், இறைவனுடைய போதனையை கேட்கவில்லை என்றால் உயிர்ப்புபோன்ற புதுமைகளும் மன மாற்றத்தை உண்டாக்க முடியாது என்னும் கருத்துகளைக் கூறுகின்றது.

**இலாசர்** (LAZARUS - கடவுள் உதவிசெய்கிறார்)

இலாசர் பெத்தானியாவில் வாழ்ந்தவர். இவர் இயேசுவின் நண்பரும், மார்த்தா, மரியா ஆகியோரின் சகோதரனும் ஆவார். இயேசுவால் உயிர்ப்பிக்கப்பட்டபின், பாஸ்காவிற்கு ஆறு நாட்களுக்குமுன் இரவு உணவின்போது இருந்தார் (யோவா 11:1-44; 12:1-11). இந்நிகழ்ச்சி யோவான் நற்செய்தியைத் தவிர வேறு எந்த நற்செய்தியிலும் கூறப்படவில்லை. இலாசரின் உயிர்ப்பும், இறப்பிற்கும் உயிர்ப்புக்கும் இடைப்பட்ட நாட்களும் இயேசுவினுடைய உயிர்ப்பின் வெளிப்படையான முன்னடையாளங்களாகும்.

**இலாசா** (LASHA - பிளவு)

இலாசா கானானியர் வாழ்ந்த பகுதியில் எல்லைகளைக் குறிக்கும் நகரங்களில் ஒன்று (ஆதி 10:19). ஆனால் இந்த இடம் தெளிவாகத் தெரியவில்லை. இல்ாசா இலாயிசுதான் என்ற நகருடன் ஒப்பிடப்படுகிறது (யோசு 19:47; நீதி 18:20). யூத பாரம்பரியத்தைக் கொண்டு, கல்லிரோலுக்கு கிழக்கிலுள்ள மலைப்பிளவும் வெப்பநீர் ஊற்றுகளுக்குப் புகழ் பெற்றதுமான கல்லிரோவாக இருக்கலாம் என்று எரோனிமு கூறுகிறார். பெரிய ஏரோது நோய்வாய்ப்பட்டிருந்தபோது இந்த இடத்திற்குச் சென்றார்.

**இலாசுதன்** (LASTHENES)

யோனத்தான் காலத்தில் இவர் கூலே-சீரியாவின் ஆளுநராயிருந்தார். யோசிபஸ் இவரை கிரேத்தனான இலாசுதன் எனக் கூறுகிறார். இவர் கூலிப் படைகளைத் தெமேத்திரியு மன்னனுக்குக் கொடுத்தார். மேலும் இவர் ''உறவினன்'' என்ற பட்டப் பெயரையும் பெற்றிருந்தார். யோனத்தானும் அவரது அரசாங்கமும் தெமேத்திரியுவால் அங்கிகாரம் பெற்றபோது, அவர் இலாசுதனுக்கு எழுதப்பட்ட மடலின் ஒரு நகல் பெற்றார். அதில் யூதர்கள் நண்பர்கள் என எழுதப்பட்டிருந்தது. அரசன் அவர்களுக்கு நன்மை செய்யக் கோருகிறார். யூதேயா முழுவதையும் சமாரியாவினின்று பிரிக்கப்பட்ட அபேய்ரேமா, இலிதா, இராமத்தாயிம் முதலிய மூன்று நகரங்களையும், அவர்களுக்குக் கொடையாகத் தரும்படியும், இவைகளிலிருந்து வரும் வருமானத்தையும், நிலம், மரம், இவைகளிலிருந்து வரும் வருமானத்தையும் எருசலேமில் பலியிடுகிறவர்கள் பராமரிப்புக்காக பயன்படுத்தவும், பத்திலொரு பகுதியும், திரையும், உப்புத் தீர்வையும் மன்னித்ததாகவும் அந்த மடலிலே அரசர் எழுதுகிறார்.

**இலாதா** (LAADAH - பருத்த கழுத்து அல்லது தொண்டை உடையவர்)

இவர் யூதாவின் குலத்தைச் சேர்ந்தவர். செலாகுவின் வழித்தோன்றல். மரேசாவின் மக்களின் மூதாதையர் (1 நாள் 4:21; யோசு 15:44).

**இலாதான்** (LADAN - தொண்டையில் சதைப் பிடிப்புடைய)

1. இலாதான் யோசுவாவின் மூதாதையரில் ஒருவர். ஓர் எப்பிராயிமியர் (1 நாள் 7:26)

*2. இலாதான் கெரிசோனிய லேவியர்.* இவருடைய பெயரிலிருந்துதான் பல குடும்பப்பெயர்கள் வருகின்றன. இவர் கெரிசோனியர்களின் மூதாதையர் *(1 நாள் 23:7-9; 26:21).* இவரும், யாத் 6:21; எண் 3:18-இல் வரும் இலிபுனியும் ஒருவரே என்று தோன்றுகிறது.

**இலாபான்** *(LABAN) - காண்க. லாபான்.*

**இலாமேக்கு** *(LAMECH - வலிய இளைஞன்)*

*1. யாவே பாரம்பரியம்:-* இலாமேக்கு, காயினின் வழிவந்த மத்துசாவேலின் மகனும், ஆதா சில்லா ஆகியோரின் கணவரும் ஆவார். ஆதா கூடாரவாசிகளுக்கும், ஆயர்களுக்கும் தந்தையான யாபாலையும், வீணையும் கின்னரமும் வாசிப்பவர்களின் தந்தையான யூபாலையும் பெற்றாள். சில்லா இரும்பு, பித்தளை இவற்றை கொண்டு வேலை செய்வோரின் தந்தையான தூபால்க் காயினையும் அவன் தங்கை நாகமாவையும் பெற்றாள் *(ஆதி 4:18-24).* இலாமேக்கிலிருந்துதான் பல தாரங்களை மணந்து கொள்ளும் வழக்கம் ஆரம்பமாயிற்று என்று கருதப்படுகிறது.

*2. குருக்கள் பாரம்பரியம்:-* இலாமேக்கு சேத்துவின் வழி வந்த மெத்துசாவேலின் மகனும், நோவாவின் தந்தையும் ஆவார் *(ஆதி 5:25-28).* நோவா பிறந்தபோது இலாமேக்கின் வயது 182. அவர் மேலும் 595 ஆண்டுகள் வாழ்ந்து தம் 777 வயதில் இறந்தார். எனினும் ஆதி 5:29 யாவே பாரம்பரியத்தைச் சேர்ந்தது. இறைவனின் சாபத்தை மட்டுப்படுத்துபவராக விவரிக்கப்படும் இந்த நோவா வெள்ளத்தோடு தொடர்பு உடையவராக மூலத்தில் இருந்திருக்கமாட்டார்.

*3. இலாமேக்கின் பாடல்:-* வாளின் பாடல் என கூறப்படும் இப்பாடல் இலாமேக்கினால் இயற்றப்பட்டது *(ஆதி 4:25-24)* இது மனநிலையில் *நீதி 15:16; 1 சாமு 18:7*-ஒடு ஒத்துள்ளது. இது மனித அகந்தையும் பாவமும் பெருகியிருப்பதைப் பிரதிபலிக்கிறது.

*4. பொருளில் ஒற்றுமை:-* மனித இனம் நாகரிகத்தில் வளர்ந்ததுபோல பாவத்திலும் வளர்ந்தது; என்றாலும் இது ஓரளவாவது மன்னிப்புப் பெற்றது. ஏழு என்ற எண் பல முறை வருவது ஒருமைப்படுத்தும் உந்து நோக்கத்தை கொண்டுள்ளது: காயீன் பொருட்டு 7 முறை பழி, இலாமேக்கின் பொருட்டு 77 முறை பழி, அவர் 777 ஆண்டுகள் வாழ்ந்தார்.

*5. புதிய ஏற்பாட்டில்:-* லூக். 3:36-இல் கூறப்பட்டுள்ள தலைமுறை அட்டவணை குருக்கள் பாரம்பரியத்தோடு ஒத்து போகின்றது. அளவிடமுடியாத தவறை மன்னிப்பது பற்றிய இயேசுவின் கூற்று *(மத் 18:22)* இலமேக்கின் பாடலைச் சுட்டிக் காட்டுவதாகத் தெரிகிறது.

**இலாயிசா** *(LAISHAH - சிங்கம்)*

எருசலேமின் வடகிழக்கிலுள்ள பென்யாமின் கோத்திரத்தின் ஊர்களில் ஒன்றாகும் *(ஏச 10:30).* ஏசயா இறைவாக்கினர் எருசலேமின் மீது படையெடுத்துவரும் எதிரியைப் பற்றி கூறும்போது இலாயிசாவைக் கல்லீம், அனதோத்து ஆகிய ஊர்களுக்கு இடையில் கூறுகின்றார். அது இருந்த இடம் இன்றைய கிர்பெத் ஏல்-இசவியே-ஆக இருக்கலாம். அது பழங்கால அனதோத்து ஆகிய அனாத்துக்குத் தென்கிழக்கில் 2 கி.மீ. தொலைவில் உள்ளது.

**இலாயிசு** *(LAISH - சிங்கம்) - ஆள்*

இலாயிசு பலித்தியேலின் தந்தை ஆவார். சவுல் தன் மகளும், நாடுகடத்தப்பட்ட தாவீதின் மனைவியுமான மீக்காளை பலித்தியேலுக்கு மணம் செய்து கொடுத்தார் *(1 சாமு 25:44).* இசிபாகல் அவளை பலித்தியேலிடமிருந்து கொண்டுவந்து தாவீதிடம் ஒப்படைத்தார் *(2 சாமு 3:15).*

**இலாயிசு** *(LAISH - சிங்கம்) - இடம்.*

யோசு *14:47*-இல் இலசம் என்றும் பின் 'தாண்' என்றும் அழைக்கப்பட்ட இலாயிசு வடக்குப் பாலஸ்தீனத்திலுள்ள கானானியரின் நகரமாகும் *(நீதி 18:7.14.27.29).*

**இலாயேல்** (LAEL - இறைவனுக்குச் சொந்தமான)

கெரிசோனிய லேவியரான இவர் எலியாசாபுவின் தந்தை (எண் 3:34).

**இலிக்கவோனியா** (LYCAONIA)

இலிக்கவோனியா சிறிய ஆசியாவின் மத்திய பகுதியில் கடல் மட்டத்திலிருந்து 900 மீட்டர் உயரத்திலுள்ள அனத்தோலிய பீடபூமியாகும். இதனைச் சுற்றி, கிழக்கில் கப்பதோக்கியா, வடக்கில் கலாத்தியா, மேற்கில் பிரிகியா, பிசிதியா, தென்கிழக்கில் சிலிசியா ஆகியவை அமைந்துள்ளன. முற்காலத்தில் கொள்ளையர்களால் சீரழிக்கப்பட்ட இது பொருளாதாரத்தில் மிகவும் பின் தங்கியதாகவும், வரலாற்று முக்கியத்துவம் அற்றதாகவும் விளங்கியது. இதன் முக்கிய நகரங்களான தெர்பை, இல்சித்திரா, இக்கோனியா முதலியவற்றைப் பவுலும் பார்னபாவும் தமது முதல் நற்செய்திப் பயணத்தில் பார்வையிடுகின்றனர் (அ.ப. 14:6). இங்கு யூதர் பலர் வாழ்ந்தனர், இவர்கள் இலிக்கவோனிய மொழியில் பேசினர் என அப்போஸ்தலர் பணி குறிப்பிடுகிறது (14:8-11). கி.மு. 25-லிருந்து இலிக்கவோனியாவின் பெரும்பகுதி உரோமைப் பேரரசின் கீழ் கலாத்தியா மாகாணத்தைச் சேர்ந்ததாய் இருந்தது.

திமோத்தேயுவின் தாய் ஒரு யூதப்பெண். இவர் இலிசித்திராவில் சிறிது காலமாவது தங்கியதாகத் தெரிகிறது (16:1-2). பவுல் இலிக்கவோனியா வழியாக இரண்டுமுறை கடந்து சென்றார் (14;16:1-5). மூன்றாம் முறையும் சென்றிருக்கக் கூடும் (18:23). இலிக்கவோனியத் திருச்சபைகள் பவுலின் வேதபோதகத்தால் ஏற்படுத்தப்பட்டவையாகும். கலாத்தியருக்கு எழுதப்பட்ட திருமுகம் இவர்களுக்கும் அனுப்பப்பட்டிருக்கலாம். ஆனால் இலிசித்திராவுக்கு பவுல் முதல் தடவை வந்தது பற்றிய செய்திகளை விட (14:8-20) இந்தத் திருச்சபைகள் பற்றி அதிக விவரங்கள் கொடுக்கப்படவில்லை. மூன்றாம் நூற்றாண்டில் இங்குத் திருச்சபை மிகவும் முன்னேறியிருந்தது.

**இலிக்கி** (LIKHI - எடுத்தல்)

மனாசே கோத்திரத்தைச் சேர்ந்த செமிதாவின் மகன் (1 நாள் 7:14). இது கேலேக்குக்குப் பதிலாக எழுத்தரால் செய்யப்பட்ட பிழையாக இருக்கலாம் என்று இதற்கு இணையான பெயர்பட்டியல் காட்டுகிறது (எண் 26:30; யோசு 17:2). இப்பகுதியில் வரும் மற்ற பெயர்களைப்போல், இது ஓர் இடத்தைக் குறிக்கலாம்.

**இலிக்கியா** (LYCIA)

சிறிய ஆசியாவின் தென்மேற்குப் பகுதியில் அமைந்த மலைப்பாங்கான மாவட்டமே இலிக்கியா. இதன் வடமேற்கே காரியாவும், வடக்கே பிசிதியாவும், பிரிகியாவும், வட கிழக்கே பம்பிலியாவும், கிழக்குத் தெற்கு, மேற்கில், மத்திய தரைக்கடலின் வடபகுதியான இலிக்கியக் கடலும் இலிக்கியாவை சூழ்ந்துள்ளன.

உரோமையரின் ஆட்சிக்குமுன் இலிக்கியா பாரசீகர்களாலும், மகா அலக்சாந்தராலும் தோலமியினராலும் ஆளப்பட்டது. கி.பி. 43-இல் உரோமை ஆட்சியின்கீழ் வந்தது. 74-இல் பம்பிலியாவோடு இணைக்கப்பட்டது. அப்போதும் இலிக்கியர் தங்களுக்குள் ஒற்றுமையாக கூட்டாட்சி நகரங்களாக இணைந்து வாழ்ந்தனர்.

இலிக்கியா நாட்டுத் துறைமுகங்களில் முக்கியமானவை மீராவும்(அ.ப.27:5) பாத்தராவும் (21:1) ஆகும். இவை இயற்கையிலே அமைந்த துறைமுகங்களாகும். மேலும் மத்தியதரைக் கடலின் மேற்குப் பகுதியிலிருந்து எருசலேம் விழாவுக்குச் செல்லும் யூதர்கள் பயணத்தில் தங்கிச் செல்லும் துறைமுகங்களாகவும் இருந்தன.

பவுல் தனது மூன்றாம் பயணத்திலிருந்து திருப்பியபோது, பாத்தராவில் கரையிறங்கினார். அங்கிருந்து, தீருக்குக் கப்பல் ஏறினார் (அ.ப.21:1-3). பவுல் உரோமைக்கு அனுப்பப்பட்டபோது, அவர் பயணம் செய்த கப்பல் மீராவில் தங்கியது. இங்கு பவுலும் மற்ற கைதிகளும் இத்தாலிக்குப் போகும் அலக்

சாந்திரிய கப்பலுக்கு மாற்றப்பட்டனர் (27:1-8).

**இலிசானியா** (LYSANIAS)

இயேசு தமது பணிவாழ்வைத் தொடங்கியபொழுது இலிசானியா அபிலேனே நாட்டுச் சிற்றரசனாக இருந்தார் (லூக் 3:1-2). எந்த இலிசானியாவைப் பற்றியும் எக்குறிப்பும் இல்லை. ஆனால் யோசிபஸ் கி.மு. 36-இல் அந்தோனி, கிளியோபத்திராவினால் மரணத்திற்குட்பட்ட ஒரு இலிசினியாவைப் பற்றிக் கூறுகிறார். ஆனால் இது புதிய ஏற்பாட்டுக் குறிப்புக்கு ஒத்துவராது.

இலிசானியாவை அபிலேனே நாட்டுச் சிற்றரசனாகக் காட்டும்போது லூக்கா தனது காலக்கணக்கீட்டில் தவறுகிறார் எனக் காட்டுவதுபோல் தோன்றுகிறது. ஆனால் அதே பெயரால் பலர் அபிலேனே நாட்டை ஆண்டிருக்கலாமென்பதால் லூக்கா இங்கு எவ்விதத்திலும் தவறவில்லையெனப் பலர் கருதுகின்றனர். மேலும் ஏன் லூக்கா இங்கு இலிசானியாவைக் குறிப்பிடுகிறார் என்பது தெளிவாக இல்லை. இயேசு அபிலேனே நாட்டில் புகவே இல்லை.

**இலிசித்திரா** (LYSTRA)

இது இலிக்கவோனிய நகரங்களில் ஒன்று. இக்கோனியா நகரை விட்டுச் செல்லுமாறு வற்புறுத்தப்பட்ட பவுலும் பார்னபாவும் அடுத்து இலிசித்திராவுக்குத்தான் சென்றனர் (அ.ப. 14:6). இங்கு ஒரு முடவனைப் பவுல் குணப்படுத்த, அவர்களைச் சேயுஸ், எரிமசு எனவும், கடவுளே தங்கள் மத்தியில் இறங்கி வந்ததாகவும் கொண்டாடிய இலிசித்திரா நகர மக்கள் (14:6-18) அவர்களுக்குப் பலியிட ஆரம்பித்ததைப் பவுல் தலையிட்டு மிகமுயற்சி எடுத்து நிறுத்தினார். அங்கு நற்செய்தியைப் போதித்தார்.

இக்கோனியாவிலிருந்து வந்த யூதர்கள் இந்நகரக் குடிகளிடம் பவுலும் பார்னபாவும் ஏமாற்றுக்காரர்கள் என்று கூறி நம்ப வைத்தனர். இதனால் அவர்கள் பவுலை உணர்விழக்கும் வண்ணம் கல்லாலெறிந்தனர் (14:19). ஆனால் இந்நிகழ்ச்சி அவர்கள் மீண்டும் வந்து மனந்திரும்பியவர்களை உறுதிப்படுத்த எவ்வகையிலும் தடையாயில்லை (14:21; 16:1). பவுலும் சிலாவும் இந்நகர்வழியாகத் திரும்பிய போது திமோத்தேயு அவர்களுடன் சேர்ந்து கொண்டார் (16:1-3).

இலிசித்திரா திமோத்தேயுவின் சொந்த ஊராகும் (16:2). பவுல் இலிசித்திராவில் பட்ட துன்பம் 2 திமோ 16:2-இல் குறிப்பிடப்படுகின்றது. இலிசித்திரா இருந்த இடம் எதுவென்று தெரிந்தாலும் பழைய நகரத்தின் நினைவுச் சின்னங்கள் எதுவும் இங்கில்லை.

**இலிசிமாக்கு** (LYSIMACHUS)

1. தோலமியின் மகன் ஆவார். எஸ்தர் ஆகமத்தைக் கிரேக்க மொழிக்குக் கொணர்ந்தவர் இவர் எனக் கூறப்படுகிறது (எஸ்த 11:1).

2. இவர் மெனலாவுவின் சகோதரர். மெனலாவு பெரியகுரு யாசோனைப் போட்டி விலை கூறி அகற்றிவிட்டு, நான்காம் அந்தியோக்கு எப்பிபானிடமிருந்து பெரிய குருப் பதவியைப் பெற்றார் (கி.மு. 171). மெனலாவு ஒரு கொடுங்கோலன் என்றும் காட்டு விலங்குபோல் கோபமுள்ளவரென்றும் பழைய ஏற்பாட்டில் காண்கிறோம் (2 மக் 4:25). இவர் தான் இல்லாதபோது தனது சகோதரன் இலிமாக்குவை ''தலைமைக் குருவின் பகரஆளாக'' நியமித்தார் (4:29).

தன் சகோதரனுடைய உதவியோடு கோவில் சொத்துக்களை அபகரித்து விற்றார். மக்களின் கோபத்திற்கு ஆளானபோது மக்களின்மேல் மூவாயிரத்துக்கும் மேற்பட்ட போர் வீரர்களை ஏவினார். ஆனால் மக்கள் அவர்களை எதிர்த்துப் போராடி ஆலய கருவூலத்திற்கருகே இலிசிமாக்குவைக் கொன்றனர் (4:39-42).

**இலிதா** (LYDDA)

இது யோப்பாவுக்கு தென்கிழக்கில் 18 கி.மீ. தொலைவிலுள்ள பழைய ஏற்பாட்டு உலோத்து ஆகும். நாடுகடத்தலுக்குப்பின், இங்கு யூதர்கள் மீண்டும் குடியேறினர் (எஸ்

2:3; நெக 7:37; 11:35). கிரேக்கர்கள் காலத்தில் இது இலிதா என்றழைக்கப்பட்டது. சேலூக்கிய அரசன் இரண்டாம் தெமேத்திரியு இந்த நகரையும் அதைச் சுற்றியுள்ள பகுதிகளையும் அசமோனிய யோனத்தான் மக்கபேயுவுக்கு, கி.மு. 145-இல் கொடுத்தார் (1 மக் 11:34). யூலியு சீசர் யோவான் இரிக்கானுவின் கீழ் யூதர்களுக்கு ஆதிக்கம் அளித்தார். காசியு 45-இல் நகரைக் கைப்பற்றி மக்களை அடிமைகளாக விற்றார். அவர்களை மாற்கு அந்தோனி விடுவித்தார். கி.பி. 66-இல் எருசலேமை நோக்கிப் படையெடுத்த செசித்திய கல்லு இந்நகரை அழித்தார். இருவருடங்களுக்குப்பின் வெஸ்பாசியன் படையெடுப்பின்போது இங்கு மக்கள் குடியேறினர். 200-ஐ ஒட்டி உரோமைக் குடியிருப்பாக மாறியது. தியோசுபொலி என்று பெயர்பெற்றது.

புதிய ஏற்பாட்டுக்காலத்தில் ஒரு தொடக்கத் திருச்சபையின் இல்லமாக இருந்தது (அ.ப. 9:32.36). இங்குதான் பேதுரு, ஐனேயா என்ற திமிர்வாதக்காரனைக் குணப்படுத்தினர் (9:33.34). கி.பி.70-இல் எருசலேம் அழிக்கப்பட்டபின் இந்நகரம் ராபிகளின் கல்விக்கூடமையமாக மாறியது.

**இலிதெபீர்** (LIDEBIR)

கிழக்குக் கிலயாதிலுள்ள ஓர் இடம் (யோசு 13:26). காண்க தெபீர்-2-இடம்.

**இலிபியா** (LIBYA) - காண்க விபியா.

**இலிபுனா** ( LIBNA - வெள்ளையான)

1. பாலைவனத்தில் இஸ்ராயேலர்கள் பாளையம் இறங்கிய ஓரிடம். இது லாபானாக இருக்கலாம் (உப 1:1) என்று சில அறிஞர்கள் கருதுகின்றனர். ஆனால் இது எந்த இடம் என்று தெரியவில்லை.

2. செப்பேலாவிலுள்ள ஒரு கானானிய நகர். பெலிஸ்திய எல்லைக்கருகில் மக்கேதாவுக்கும் இலக்கீசுக்கும் இடையில் உள்ளது. இது கைப்பற்றப்பட்டு (யோசு 10:29-30; 12:15) யூதாவின் பகுதியில் சேர்க்கப்பட்டது (15:42); பிற்பாடு ஒரு லேவிய நகரமாக ஒதுக்கப்பட்டு குருக்களுக்கு அளிக்கப்பட்டது (21:13). யூதாவில் யோரம் ஆட்சி செய்தபோது இந்நகர் கிளர்ச்சி செய்தது (2 அர 8:22). பிற்காலத்தில் அசீரிய அரசன் சனகெரிபு இலக்கீசைக் கைப்பற்றியபின், இந்நகரைத் தாக்கினார் (14:8; ஏச 37:8).

இலிபுனா எங்கு இருந்தது என்பது அறியப்படவில்லை. இது வாடி ஏலாவின் தென் கரையிலுள்ள தேல் எஸ்-சாபியாக முன்பு அடையாளம் காட்டப்பட்டது. இலக்கீசுக்கு வடவடமேற்கில் 10 கி.மீ. தொலைவிலும் காதுவிலிருந்து தெற்கில் 6 கி.மீ.தொலைவிலும் உள்ள தேல்-போர்னாவாக இருக்கலாம்.

**இலிபுனி** (LIBNI - வெள்ளையான, இலிபுனாவைச் சேர்ந்தவர்)

1. இவர் இலிபுனா நகரத்திலிருந்த லேவியரின் கோத்திரத்தைச் சேர்ந்த குரு ஆவர்; கெரிசோனின் மக்களில் ஒருவராவார் (யாத் 6:17; எண் 3:18.21; 1 நாள் 6:17.20). இலிபுனியர் என்றழைக்கப்பட்ட கெரிசோனிய குடும்பத்தின் குலப்பெயர் மூதாதையர் (எண் 3:21). இலிபுனி தனி மனிதனின் பெயராகவும் அவரின் வழித்தோன்றல்களான அந்நகரத்தவரையும் குறிப்பதாக அமைகிறது.

2. மெராரியின் வழித்தோன்றலான ஒரு லேவியர் (1 நாள் 6:29).

**இலிலித்து** (LILITH - அருவருப்பான, நாற்றமுடைய கிளவி)

இதனைத் தனிமையான இடங்களில் உலவும் பெண்பேய் என்கின்றனர் (எச 34:14). கி.மு.8-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கானானிய நாட்டுப்புற இலக்கியங்களிலும் விவிலியத்திற்குப் பிற்பட்ட யூத நாட்டுப்புற இலக்கியங்களிலும் குழந்தையைத் திருடிச் செல்லும் சூனியக்காரியாக வருணிக்கப்படுகிறது. இப்பெயர் சுமேரியச் சொல்லாகிய காற்று அல்லது ஆவி எனும் பொருளிலிருந்து பெறப்பட்டதேயொழிய எபிரேயச்

சொல்லாகிய 'இரவு' என்பதிலிருந்து வந்தது அல்ல.

ராபிகளின் பாரம்பரியப்படி இவள் ஆதாமின் முதல் மனைவியாவாள். தனக்குச் சமத்துவம் கொடுக்கப்படாததால் அவரை விட்டகன்றுபோனாள். இவளைச் சுமேரிய பேலித்-இலி அல்லது கானானிய பாகலாத்துக்குச் சமமாக்குகின்றனர். பிற்கால யூதப் பாரம்பரியத்தில் இவளுடைய சந்ததிகள் ''இலிலித்துவின் புதல்விகள்'', மனிதர் தங்கள் கனவில் புணர்ச்சி கொள்ளும் காமம் நிறைந்த பேய்களாவர்.

**இலீனு** (LINUS - *வலை*)

இவர் திமோத்தேயவுக்கு வாழ்த்து அனுப்பும் ஒரு கிறிஸ்தவர் *(2 திமோ 4:21)*. இவரைக் கிளாதியாவின் மகன் எனக் கூறுவது நம்பக் கூடியதாக இல்லை. இரேனியு தமது மடலில் ''பேதுருவும் பவுலும் உரோமைத் திருச்சபையை உருவாக்கி அதை ஒழுங்குபடுத்தி வைத்தபின் அங்கு இலினுவை ஆயராக நியமித்தார்கள். அந்த இலினுவே திமோத்தேயுவுக்கு வாழ்த்து அனுப்புபவர்'' என்று குறிப்பிடுகின்றார். இரேனியுவைத் தொடர்ந்து பல திருச்சபைத் தந்தையர்கள் இப்பரம்பரைக் கருத்தையே ஏற்றுக் கொண்டாலும் தெர்துல்லியன் கூற்றுப்படி கிளமெந்துதான் உரோமையின் அப்போஸ்தலரால்லாத முதல் ஆயர். எனவே பல சந்தேகங்கள் எழுந்தாலும் யுசேபியுவின் குறிப்புப்படி கி.பி.64-72 வரை இவர் ஆயராக இருந்திருக்க வேண்டும். மேற்கத்தியத் திருச்சபை இவரது விழாவை செப்டம்பர் 23-ஆம் நாள் கொண்டாடுகிறது.

**இலீசியா** (LYSIAS)

கி.மு.166-165-இல் அந்தியோக்கு எப்பிபானால் சீரியாவின் மேற்பார்வையாளராக அனுப்பப்பட்டவரே இந்த இலீசியா. இவர் யூதா மக்கபேக்கு எதிராகத் தோலமி, நிக்கானோர், கோர்க்கியா எனும் படைதளபதிகளை அனுப்பித் தோல்வி அடைந்ததால், அடுத்த ஆண்டில் தாமே அவரை எதிர்த்துச் சென்றார். இலீசியா எருசலேமுக்குத் தெற்கே பேத்சூர் என்னுமிடத்தில் தம் படைகளோடு தங்கினார். ஆனால் யூதா மக்கபேயும் இதில் வெற்றி பெற்றதாகத் தெரியவில்லை *(1 மக் 4:34-35)*. எனவே அந்தியோக்கு எப்பிபானின் ஒப்புதலின்பேரில் இருவரும் ஒரு சமாதான உடன்படிக்கைக்கு வந்தனர் *(2 மக் 11)*. இதனால் யூதர்கள் வழிபாடு செய்வதற்கான தடைகள் நீங்கின. இது பக்திமிகுந்த யூதர்களுக்குப் பெருமகிழ்ச்சி தருவதாக அமைந்தது. இதைத் தொடர்ந்து 'யூதா ஆலயத்தை செயூஸ் வழிபாட்டினின்று' தூய்மைப்படுத்தினார். யூதர்கள் ஆலய அர்ப்பண விழாவை கொண்டாடினர்.

கி.மு.164-இல் மீண்டும் இலீசியா எருசலேமைப் பிடித்தாலும் ஆட்சியில் ஏற்பட்ட பல குழப்பங்களால் யூதர்களோடு ஒரு உடன்படிக்கைக்கு வந்தார். கி.மு.162-இல் தெமேத்திரியு, அரசனானபோது இலீசியா இறந்தார் *(1 மக் 6:28-7:4)*.

**இலீசியா கிளாதியு** (LYSIAS CLAUDIUS)

இலீசியா கிளாதியு என்பவர் பவுல் எருசலேமில் கைது செய்யப்பட்டபோது ஆயிரம் போர் வீரர்கள் கொண்ட உரோமைப் படையின் தளபதியாக இருந்திருக்க வேண்டும். இவர் தனது உரோமைக் குடியுரிமையை விலைக்கு வாங்கி *(அ.ப. 22:28)* அதனைப் பெற்றார்.

எருசலேமில் பவுலைக் குறித்துக் கலவரம் ஏற்பட்டபோது இவர் அவரைக் கூட்டத்தினின்று விடுவித்து *(அ.ப. 21:31.36;22:24)*, அவர் உரோமைக் குடிமகனென்று கண்டுபிடித்து *(22:24-29)*, யூதத் தலைமைச் சங்கத்தால் விசாரிக்கச் செய்து *(22:30)*, பின்பு செசரியாவுக்குத் தக்க பாதுகாப்புடன் பவுலை அனுப்பி வைத்தார் *(23:23-33)*. ஆளுநன் பெலிக்சுக்கு இவர் அனுப்பிய கடிதம் அப்போஸ்தலர் பணியின் ஆசிரியராலே எழுதப்பட்டிருக்க வேண்டும்.

**இலீதியா** (LYDIA) - ஆள். காண்க லீதியா.

**இலீதியா** (LYDIA) - இடம்

இலீதியா சிறிய ஆசியாவின் தென்மேற்குப் பகுதியில் உள்ள நாடாகும். முன்காலத்தில் இலீதியர்கள் இங்கு வாழ்ந்ததால் இது

இவ்வாறு அழைக்கப்படுகிறது. இதன் அதிகமான பகுதிகள் ஆற்றுப்பள்ளத்தாக்குகளிலே அமைந்துள்ளன. தங்கள் கடற்படையை விரிவுபடுத்தும் ஆவல் இன்றி வாழ்ந்தனர். அதே நேரத்தில் தங்கள் நாட்டின் எல்லைப்புறத்திலிருந்த கிரேக்க நகரங்களோடு அடிக்கடி போர்புரிந்தனர். இவர்களது தலை நகரமாகிய சார்திசு அமைந்திருப்பதிலிருந்தே அவர்கள் உள்நாட்டுப் பலத்தையே பெரிதும் நம்பினர் என்பது புலனாகும்.

இலீதியா, இத்தியர் காலத்தில் அவர்களின் கலாச்சார தாக்கத்திற்கு உட்பட்டது. வெண்கலக் காலத்திற்குப் பிற்பட்ட காலத்தில் இலீதிய அரசுபற்றி அசீரிய, பாரசீக, கிரேக்கக் குறிப்புகளில் காணப்படுகிறது. இலீதிய அரசர்களில் மிகச் சிறந்தவனான கிரோசு *(கி.மு.1560-546)* வரலாற்று ஆசிரியர்களின் பார்வையில் அன்றைய செல்வம் மிகுந்த ஆசிய பேரரசர்களில் ஒருவனாகத் தோன்றினார். எபேசு நகரில் இவர் கட்டிய அர்தெமி கோவில் கிரேக்கக் கலை வளர்வதற்கு இவர் எவ்வளவு உதவியுள்ளார் என்பதைக் காட்டுகிறது.

பாரசீக மன்னனான சைரஸ் கி.பி.546-இல் இலீதியாவின் தலை நகரான சார்திசைக் கைப்பற்றிவிட்டார். எனவே கி.மு.334 வரை இலீதியா தன் ஆட்சி உரிமையை இழந்தது. பின் இது மகா அலக்சாந்தரின் ஆட்சிக்குட்பட்டது. அப்பொழுதும் இதன் பண்பாடும் கலைகளும் கட்டிக் காக்கப்பட்டன. பின் செலுக்கியர்களாலும் *(1 மக் 3:3)* பிற மன்னர்களாலும் சிலகாலம் ஆளப்பட்டது. உரோமையர் ஆட்சியின்கீழ் எல்லாவகையிலும் சிறப்புற்று விளங்கியது. தியோக்கிளோசியன் கி.பி.297-இல் இதனைத் தனி மாவட்டமாக்கினார்.

இவர்கள் பேசிய மொழி என்னவென்று தெளிவாகத் தெரியவில்லை. இலீதியாவின் கலை கிரேக்க, பாரசீகக் கலையின் அம்சங்களை உள்ளடக்கியுள்ளது. துணிகளுக்கும், கம்பளங்களுக்கும் பெயர் பெற்றது இலீதியா. இலீதியர்கள் கம்பளி தயாரிப்பதிலும், வண்ணமிடுதலிலும் வாசனைத் திரவியங்கள் செய்வதிலும் வல்லவர்கள். அனடோலிய தாய் கடவுளையும், இளமைமிக்க ஆண் கடவுளையும் இவர்கள் வழிபட்டனர். இலீதியாவிலும் பிரிகியாவிலும் மூன்றாம் அந்தியோக்கின் *(கி.மு.223-187)* காலத்தில் 2000க்கும் மேற்பட்ட யூதர்கள் பாபிலோனிலிருந்து இங்கு வந்து குடியேறினர். திருவெளிப்பட்டில் குறிக்கப்படும் ஏழு ஆசிய திருச்சபைகளில் முக்கியமான தியத்தைரா, சார்திசு, பிலதெல்பியா ஆகியவை இங்கிருப்பதன்மூலம் கிறிஸ்தவம் இங்கு பெற்றுள்ள வளர்ச்சியை அறிந்து கொள்ளலாம்.

**இலெந்துலுவின் கடிதம்**

கி.பி.13-15 நூற்றாண்டுகளைச் சேர்ந்த நூல்; கிறிஸ்துவின் உடல் தோற்றத்தை விளக்கும் நூல் ஆகும். இது ''உரோமையரின் நாளேடு'' வடிவில் இருந்தாலும் யூதேயாவில் இருந்து ஓர் உரோமை அதிகாரியான இலெந்துலு உரோமை மூப்பர் சபைக்கு எழுதிய கடிதவடிவில் உள்ளது. இது மத்திய காலத்தில் நிலவிய கிறிஸ்துவின் தோற்றம் பற்றிய கருத்துக்களை விவரிக்கிறது. இத்தலைப்பு தொடக்காலத்திலிருந்தே மக்களிடையே பெரிதும் விரும்பப்பட்டது. யுசேபியு கிறிஸ்து, பேதுரு, பவுல் ஆகியோரின் வண்ணத்தில் வரையப்பட்ட படங்களைப் பார்த்திருப்பதாகக் கூறுகிறார். இப்படிப்பட்ட பல படங்களை லூக்கா வரைந்தார் என்பது தொன்மையான பாரம்பரியமாகும்.

**இலேக்கா** *(LECAH - நடந்து போகிற)*

ஏர் என்பவரின் மகனும் சேலாவின் வழித்தோன்றலும் ஆவார் *(1 நாள் 4:21)*. ஆனால் வாசகச் சூழ்நிலையில், இலேக்கா, யூதாவின் பகுதியைச் சேர்ந்த ஒரு கிராமமாகத் தெரிகிறது. இதே சூழ்நிலையில் குறிக்கப்படும் மரேசா, எபிரோனுக்கு வடமேற்கில் அமைந்திருப்பதால், இலேக்காவும் இதே பகுதியில் இருந்திருக்க வேண்டும். ஆனால் இதை அடையாளம் காட்ட முடியவில்லை.

**இலேயா** *(LEAH)* - காண்க லேயா.

**இலேவி, இலேவியர்** *(LEVI, LEVITE)* காண்க லேவி, லேவியர்

**இல்லிரிக்கும்** *(ILLYRICUM - மகிழ்ச்சி)*

அதிரியாக் கடலின் கிழக்கு கடற்கரைப்ப குதியில் உள்ள ஒரு உரோமையர்களின் மாகாணம் ஆகும். புனித பவுலின் பயணங்க ளின் முடிவு எல்லையாக இவ்விடம் சொல லப்படுகின்றது (உரோ 15:19). இவர் இவ்வி டத்தை அடைந்தற்கான எவ்வித சுட்டிக்காட் டலும் கிடையாது. ஏனெனில் பவுலின் பணிக்கால முடிவில் தல்மத்தியாவுக்கு தீத்து சென்று விட்டதாக உள்ள குறிப்பைத் தவிர *(2 திமோ 4:10)* வேறு இல்லை. இம்மாகா ணம் கி.பி.9-ஆம் ஆண்டில் உரோமையர்க ளால் தல்மத்தியா, பன்னோனியா, மேசியா என்று மூன்று மாகாணங்களாகப் பிரிக்கப் பட்டது.

**இல்லேல்** *(HILLEL - இறைவனைப் போற்றி னார்)*

*1.* எப்பிராயிமிலுள்ள பிராத்து என்ற ஊரி லிருந்த நடுவர் அபிதோனின் தந்தை *(நீதி12: 13-15)*

*2.* முதியவரான இல்லேல்:- தால்மூது பற்றிய அறிவாற்றல் மிக்கவர். மேலும் வாய் மொழி வழக்குச் சட்டத்தின் வளர்ச்சியில் ஒரு முக்கிய வல்லுநர் *(60 கி.மு. - கி.பி. 20)*

தால்மூது மூலங்கள் இல்லேலைப் பற்றி எண்ணிக்கையற்ற கதைகளையும், பல கூற் றுகளையும், உவமைகளையும், கட்டளைச் சட்டங்களையும் இவர் தந்ததாக சொன்னா லும், அவரது வாழ்க்கைக்கு ஒரு முழு உருவம் கொடுக்க வேண்டிய பொருட்கள் மிகவும் உறுதியற்று இருக்கின்றன. இல் லேல் பாபிலோனியாவைச் சேர்ந்தவர். வெகு முன்னேறிய பாலஸ்தீன கல்விக்கூ டங்களில் அவருடைய படிப்பை தொடரப் பாலஸ்தீனத்திற்கு வந்தார். முக்கியமாக செமாயா, அப்தாலியோன் ஆகிய இரண்டு பெரிய விரிவுரையாளர்களிடம் கல்வி கற்க வந்தார். ஏழ்மையிலிருந்தாலும் அவர் முயற் சியால் முன்னேறிய கதை மக்களிடையே பரவியது. அவருடைய காலத்திய அலாக்கா முறை விளக்கவுரையாளர்களைத் திருப்திப டுத்தும் வகையில் அவர் சட்டப்பூசலுக்குத் தீர்வு கண்டதிலிருந்து அவருடைய மேன் மைமிக்க திறமைகள் வெளிப்பட்டன. பெனே பாத்திராவை அதாவது பாஸ்கு காலத்தில் காணிக்கை கொணர வேண்டிய' கடமை, ஓய்வு நாளில் விலக்குகளையும் தாண்டிச் செல்கிறது என்பதை இவர்தான் ஏற்படுத்தினார்.

'நாசியாக' அதாவது கோயில் வரவு செலவு பார்ப்பவர்களின் தலைவராக இல் லேல் நியமிக்கப்பட்டார் என்று வரலாறுகள் கூறுகின்றன. நவீன விளக்கவியல் கோட்பா டுகளைப் பயன்படுத்துவதில் நிபுணராக இருந்ததால் வாய்மொழி தோராவின் கொள் கையை விரித்துக்கூறுவதிலும், ஆழமாக ஆராய்ச்சி செய்வதிலும், தால்மூதை படித்து ஆய்ந்து அதன் வளர்ச்சியை காண்பதில் முக்கிய பங்கு வகிக்கிறார். விவிலிய விளக்க வுரையில் அவர் பயன்படுத்திய ஏழு விதிமு றைகள் பிறகு வந்த விளக்கமுறைக் கோட் பாடுகளுக்கு மாதிரிகையாகவும் அடித்தள மாகவும் அமைந்தன.

சக நண்பன் சம்மாய்க்கும் அவருடைய போதனை கூடத்திற்கும் மாறாக, இல்லேல் தன்னுடைய போதனைக்கூடத்தில் தாராள தன்மையைக் காட்டினார். அதாவது பெரும் பாலும் சட்டம் சொல்லுவதை அப்படியே விளக்கி அதன்படி நுணுநுணுக்கமாக நடப்ப தைத் தூண்டுவதைவிட தாராளமான முற் போக்குக் கொள்கையை ஆதரித்தார்.

மூல வரலாறு பல கதைகளைத் திரும்பத் திரும்பச் சொல்வதில் மகிழ்கின்றன. அவை யெல்லாம் இல்லேலின் பொறுமையான குணத்தையும், சம்மாயின் அதிருப்திபடக்கூ டிய குணத்தையும் வேறுபடுத்திக் காட்டு கின்றன. ஒற்றைக் காலில் நின்று கொண்டு தோரா முழுமையும் ஒரு மாணவனை சம் மாய் படிக்கச் சொன்னாராம். அவன் இல்லே லிடம் போனபோது ''மற்றவர்கள் உனக்கு செய்யும் எதையெல்லாம் வெறுக்கிறாயோ அதையெல்லாம் நீயும் அவர்களுக்குச் செய் யாதே''. ''இதுதான் தோரா, மற்றதெல்லாம்

விளக்கவுரைகளே, நீ போய் கற்றுக்கொள்'' என்று அவனை அனுப்பி வைத்தாராம்.

பிர்க் ஆபோத் என்ற ஒருவர் வேறு எந்த ஒரு அறிஞனையும் விட இல்லேலின் வாக்குகளை அதிகம் எடுத்தாளுகின்றார்.

இல்லேல் இரண்டு பெரிய சட்டங்களை மாற்றி அமைப்பதில் பொறுப்புமிக்கவராக இருந்திருக்கிறார். ஒன்று, ஓய்வு ஆண்டின் போது வரவேண்டிய கடன்களைத் தள்ளிவிடுவது பற்றியது *(உப 15:2)*, மற்றது, நகரங்களுக்கு மதில்களை எழுப்பும்போது வீடுகளை விற்பனை செய்வது சம்பந்தமானது *(லேவி 25:29-30)*. இல்லேலின் வழித்தோன்றல்கள் 'நாசி' என்ற பதவியில் இருந்தார்கள். அவர்களில் ஒருவர்தான் இளவரசன் யூதா ராபி *(கி.பி.220)*; இவர் மிஸ்னாவைத் தொகுத்தவர். இல்லேலின் முறையில் அழுத்திச் சொல்வது பரிசேய, தால்மூது யூதமதத்தில் அதிகமாக காணப்பட்டது. இவர், பவுலின் ஆசிரியர் கமாலியேல்-1-இன் தந்தையாகவோ தாத்தாவாகவோ கருதப்படுகிறார்.

**இவ்வா** *(IVVAH - அழிவு, சிதைவு)*

இவ்வா என்பது ஒரு நகரம். அது இருந்த இடம் அறியப்படவில்லை. எசக்கியா ஆண்ட பதினான்காம் ஆண்டில் அசீரிய அரசன் சனகெரிபு யூதாவிலிருந்த அரண் சூழ்ந்த நகர்கள் அனைத்தையும் முற்றுகையிட்டுப் பிடித்தார். அசீரியாவிற்கு எதிராக எசக்கியா கொண்டிருந்த கொள்கையை விட்டுவிடச் செய்ய, அசீரிய தூதர்கள், கெமாத், அரபாத், செப்பர்வயீம், ஏனா, இவ்வா ஆகிய நகரங்கள் கைப்பற்றப்பட்டதைச் சுட்டிக் காட்டினர் *(2 அர 18:34; 19:13; ஏச 37:13)*.

இது ஒரு சீரியா நகர நாடாகும். கி.மு.8-ஆம் நூற்றாண்டில் அசீரியர்களால் கைப்பற்றப்பட்டது. இது அவ்வாவாக இருக்கலாம். அவ்வாவின் மக்களை அசீரியர்கள் நாடுகடத்தி, வட அரசு வீழ்ச்சிக்குப்பின் சமாரியாவில் குடியேற்றினர்.

**இளஞாயிறு** *(DAWN)*

இது அதிகாலைப் பொழுதைக் குறிக்கும் சொல் *(யோபு 38:12; லூக் 1:78)*. இதையெல்லாம்விட முக்கியமாக இது காலையில் தோன்றும் வீனஸ் நட்சத்திரத்தில் வெளிப்படும் ஒரு எமோரிய தெய்வத்தின் பெயராகும். யோபு ஆகமத்தில் 'விடியற்கால விண்மீன்கள்'' என குறிப்பிடப்பட்டிருப்பது மேலே கூறிய பொருளில்தான் *(யோபு 3:9; 41:18)*. லூக் *1:78-79*-இல் இளஞாயிறு பாவ இருள் அகற்றும் மெசியாவின் ஒளியைக் குறிக்கும்.

**இளமான்** *(FAWN)*

இளமான் *(உ.ச.4:5;7:4)*, கலைமான் *(2:9)*, இளங்கலைமான் *(2:17; 8:14)* ஆகிய சொற்கள் உருவகமாக, காதலன், காதலி ஆகியோரின் அழகை விவரிக்கப் பயன்பட்டுள்ளன.

ஆதி *49:21*-இல் ''அழகிய மான் குட்டிகள் ஈனும் கட்டவிழ்ந்த பெண்மானுக்கு'' நப்தலி ஒப்பிடப்படுகிறார்.

**இளைப்பாறுதல், ஓய்வு** *(REST)*

மனித வாழ்வானது குழப்பம், அமைதி, உழைப்பு மற்றும் இளைப்பாற்றி ஆகியவை மாறி மாறி வரும் தன்மை கொண்டது. முழு வாழ்வானது, துரத்துதல், மற்றும் பற்றிக் கொள்ளல், தேடுதல் மற்றும் மகிழ்ச்சியோடு உடைமையாகக் கொள்ளல், ஆசை மற்றும் திருப்திகொள்ளல் என எதிர்மறைகள் இணைந்து அமைவதைக் கோருவதாகத் தெரிகிறது. மனிதன் வெற்றிபெற்றால், திருப்தியின்றி மீண்டும் முயல்வதற்காகவே அது உள்ளது. இந்தப் போக்கை அறிந்து கொண்ட திருவுரையாளர் இத்தகைய வருவதும் போவதுமான நிலையை மறுத்து ஒதுக்கிவிட்டு வீணான யாவற்றையும் முடிவுக்குக் கொண்டுவரும் சாவை எதிர்பார்க்கிறார் *(திருவுரை 1-2)*. ''இரவிலும் பகலிலும் மனிதனுக்கு ஓய்வென்பதே இல்லை; ஒருவன் எப்போதுமே கண்டுபிடிக்காத நிலையில், அதனை விரும்புவதில் என்ன நன்மை?'' *(திருவுரை 8:16-17)*. இறைவனின் விழிப்பான கண்களின் கீழ், இப்போதைய தருணத்தின் தன்னடக்கமான மகிழ்வை ஏற்றுக் கொள்ளுதலே போதுமானதாகும். விவிலிய மரபானது பொதுவாக மாறுதல்களை ஏற்

றுக்கொண்டு, அவற்றின் பொருளை கண்டு பிடிக்கிறது. மனிதரில் முன்னணியில் உள்ள வையும், பின்னடைந்தவையும் ஒன்றிணைக் கப்பட்டு, இறைவனில் தூய்மைப்படுத்தப்ப டுகின்றன. உண்மையான இளைப்பாற்றி செயலற்ற நிலையன்று, செயலின் நிறைவா கும். இவ்வுலகின் இவ்வகையான ஓய்வா னது, விண்ணகத்தின் முன் சுவையாகும்.

I. ஓய்வும் வேலையம்:- அதனுடைய தொடக்கத்திலிருந்து இஸ்ராயேலானது ''ஓய்வு நாளை புனிதப்படுத்தவேண்டியிருந்தது'' *(யாத் 20:8)*. அறுவடை காலத்திலும், மற்ற வேலை மிக்க காலங்களிலும், ஆண்ட வருக்கென ஒரு ஓய்வு நாளை ஒப்புக் கொடுக்க வேண்டியிருந்தது *(34:21)*. இக்கட் டளைக்காக இரண்டு முக்கிய காரணங்கள் அளிக்கப்பட்டன.

*1.* இளைப்பாறுதல், விடுதலையின் ஒரு அடையாளமாகும்:- விலங்குகளும், வயல் ஊழியர்களும் இளைப்பாற அனுமதிக்கப் பட வேண்டுமென உடன்படிக்கை நூல் கூறுகிறது *(23:12)*. இந்த மனிதத்தன்மை யுள்ள நோக்கோடு, உபஆகமம் வரலாற்றிலி ருந்து இன்னொரு காரணத்தையும் சேர்க்கி றது: இஸ்ராயேல், எகிப்தில் தன்மீது சுமத் தப்பட்ட உழைப்பினின்று பெற்ற விடுத லையை இவ்வாறு நினைவு கூறவேண்டும் *(உப 5:15)*. இளைப்பாற முடியுமென்பது, விடுதலையின் ஒரு அடையாளமாகும்.

*2.* இளைப்பாறுதல், படைத்தவரின் ஓய் வில் பங்கு பெறுதலாகும்:- குருக்கள் மர பின்படி, மனிதன் ஒய்வுநாளைக் கடைபிடிக் கும்போது, வானத்தையும், பூமியையும் படைத்த பின்னர் வேலையை நிறுத்தி விட்டு, ஏழாம் நாளில் ஓய்வெடுத்த இறை வனை பின்பற்றுகிறான். ஓய்வுநாளை கடை பிடிப்பது யாவேயையும் அவருடைய விசு வாசிகளையும் ஒன்றிணைக்கிறது *(யாத் 31: 17; ஆதி 2:2-3)*. எனவே, ஓய்வு நாள் புனித மானதாயிருப்பின், அதனை புனிதப்படுத்து பவர் இறைவனே *(எச 20:12)*. இளைப்பாறு தல் என்பது உள்ளிருக்கும் இறைவனின் சாயலை வெளிப்படுத்துவதாகும்; ஒருவன் சுதந்திரமானவனாக மட்டுமின்றி, இறைவ னின் மகனாகவும் இருக்கிறான்.

*3.* இறைப்பாறுதலும் விழா கொண்டாட் டமும்:- ஓய்வு நாள் என்பது வேலை செய் வதை நிறுத்துவதோடு நின்றுவிடாமல், படைத்தவரும் மீட்பருமானவரை மகிழ்வு டன் புகழ்வதில்,ஒருவருடைய ஆற்றல்களை திருப்புவதில் அடங்கியுள்ளது. ஓய்வு நாளை பொறுப்புடன் கடைப்பிடிப்பவன் ''ஆண்ட வரில் தனது மகிழ்ச்சியைக் கண்டடைவ தால்'' *(எச 58:13-14)*, அது ''மகிழ்ச்சி'' என்றும் அழைக்கப்படலாம். ஓய்வு நாளா னது கடவுளுடைய மறைபொருளுக்குள் செல்ல வழியளிக்கிறது; ஆனால் ஓய்வு நாளின் இளைப்பாறுதலையும் இறைவனை யும் ஒன்றாக்க கிறிஸ்து தோன்ற வேண்டும்.

II. இறை ஓய்வினை நோக்கி

மற்றுமொரு வழியில், இஸ்ராயேலானது, தனக்கு அளிக்கப்பட்ட இளைப்பாறுதலின் ஆன்மீக குணத்தை கண்டுபிடிக்க நடத்தி செல்லப்படுகிறது. உறங்குதல், சுவாசித்தல் மற்றும் ஆபத்து அல்லது உழைப்பிற்கு பின் னர் ஏற்படும் இடைஓய்வு போன்ற மற்ற கருத்துக்கள், ஓய்வு நாள் கருத்தோடு சேர்க் கப்படவுள்ளன. அலைந்துதிரிதல், போர் மற்றும் நாடு கடத்தப்படுதல் போன்ற தொல் லையூட்டும் அனுபவங்களுக்குப்பிறகு, இறைவன் மட்டுமே ஓய்வளிக்க முடியும் என்பதை இஸ்ராயேல் அறிந்து கொள்ளும்.

*1.* வாக்களிக்கப்பட்ட நாடு, இறை ஓய் வின் அடையாளம்:- எகிப்திலிருந்து விடு விக்கப்பட்ட எபிரேயர்கள் அடிமைத்தனத்தி னின்று சுதந்திர நாட்டிற்கு ஓடினர். தாவீது அரசன் ''தன்னுடைய பகைவர் அனைவரிட மிருந்தும் இளைப்பாறுதல் அளிக்கப்படும்'' *(2 சாமு 7:1)* வரை, ஓய்விற்கான நம்பிக்கை யானது, படிப்படியாகப் பெறும் வெற்றி யின் கனியாக இருக்கும் *(நீதி 1:19.21; யோசு 21:43-44)*. ஆலயத்தை அபிடேகம் செய்யும் போது, சாலமோன், ''தாம் மொழிந்தப டியே தம் மக்கள் இஸ்ராயேலுக்குச் சமாதா

னத்தை அருளிய ஆண்டவர் போற்றி'' (1 அர 8:56) என்று அறிவிக்க முடியும். ''அமைதியின் அண்ணலுடைய'' நாட்களில், இறைவன் இஸ்ராயேலுக்கு ''அமைதியும் சமாதானமும்'' அருளுவார் (1 நாள் 22:9). அதுமுதல், ''ஒவ்வொருவனும் தன்தன் திராட்சைத் தோட்டத்தின் நடுவிலும், அத்திமரத்தின் அடியிலும் பாதுகாப்போடு'' வாழ்வான் (1 அர 4:20; 5:5). இது முழுவதும் பூவுலகைச் சேர்ந்த ஒய்வாக இருப்பினும் யாவேயே இந்த ஒய்வுக்குப் பாதுகாப்பு அளிக்கிறார். அவரே ஆலயத்தில் ஒய்வெடுக்க தீர்மானித்துள்ளார் (சங் 132:14). தம்மை நாடியவர்களை அவர் நாடிச்சென்று, அவர்களுக்கு இளைப்பாறுதல் அளிக்கிறார் (2 நாள் 14:6).

எனவே, இவ்வுலகைச் சார்ந்த ஒய்வின் இயல்பும், கால அளவும், உடன்படிக்கைக்கு விசுவாசமாக இருப்பதைப் பொருத்ததாகும். ஆனால் ஒய்வானது விரைவாக இறைவனுக்கு எதிரான கிளர்ச்சி மற்றும் பின்னடைதலாகச் சீர்கேடடைகிறது (உப 32:15; நெக 9:25-28). அமைதியான மனநிறைவும் சூழலில் மீட்பு ஏற்படும் போது (ஏச 30:15), ஆகாசு யாவேயின் பகைவர்களுக்கு அஞ்சுகிறார் (7:2.4); தன்னுடைய விசுவாசக் குறைவினால் இறைவனைச் சோர்வடையச் செய்கிறார் (7:13). அதன் விளைவாக, நாடு கடத்தப்பட்டு அலைந்துதிரிய வேண்டிய அச்சம் மக்கள் மேல் விழுகிறது. ஆனால், தண்டனைகளின் துன்பங்களுக்குப்பின் யாவேயாலேயே தாங்கள் மீட்கப்படுவோம் என்பதை மக்கள் புரிந்துக்கொள்வார்கள் (எரே 30:10-11). இஸ்ராயேல் மீண்டும் ஒரு முறை இளைப்பாறுதல் (31:2), கவலையற்று நடனமாடுதல், மகிழ்ச்சி மற்றும் இறை ஆசியின் நிறைவு (31:12-13) முதலியவற்றை நோக்கித் தனது வழியை அமைத்துக் கொள்ளும். ஆயன் தனது ஆடுகளை நல்ல மேய்ச்சல் நிலத்திற்கு நடத்திச் செல்கிறார் (எச 34:12-16; ஏச 40:10-11). இந்த முன்நோக்கில், கொடை அளிப்பவராகிய இறைவன் அளிக்கப்பட்ட நாட்டிற்கு வழி நடத்துகிறார். இஸ்ராயேல் இறை ஒய்வின் பாதையில் பயணம் செய்கிறது.

2. உறுதியான இளைப்பாற்றியின் முன்சுவை:- இஸ்ராயேலானது, ஆன்மீக இளைப்பாற்றியின் மகிழ்ச்சியை பல்வேறு வழிகளில் கண்டுபிடிப்பதற்கு முன்னர், ஆண்டவரின் நாளுக்காகக் காத்திருக்க வேண்டியதில்லை. துன்பம் (சங் 55:8), சோதனை (66:12) மற்றும் தன்னுடைய ஒன்றுமில்லாமை (39:14) ஆகிய அனுபவ நேரங்களில் ''எளிதாக சுவாசிக்க'' அனுமதிக்குமாறும், அல்லது 'தனது ஊனுடலுக்கு பாதுகாப்பு'' அளிக்குமாறும் (16:9) சங்கீத ஆசிரியர் இறைவனிடம் கேட்கிறார். இளைப்பாற்றியை அளிக்கும் நீர் அருவிக்கு அழைத்துச் செல்கின்ற மேய்ப்பரிடம் தன்னை ஒப்படைக்கிறார் (சங் 23:1 தொ). இத்தகைய உள்ளமைதியைச் சட்டம் அளிக்கிறது; நன்மைதனத்திற்கான வழியை எடுப்பதென்பது ''ஒய்வு பெறுவதாகும்'' (எரே 6:16). ''அச்சுறுத்துவோர் யாருமின்றி மந்தைபோல மேய்ந்து இளைப்பாற'' ஏழைகளால் முடியும் (செப் 3:13). ஆனால், அதற்கு முரண்பட்ட நிலையில், தீமைபுரிவோர், அமைதிப்படுத்த முடியாத கொந்தளிக்கும் கடலைப் போன்று இருப்பார்கள் (ஏச 57:20).

தேடுதல் மற்றும் அவா நிறைவு, ஆர்வம் மற்றும் மகிழ்ச்சியோடு அடைதல் போன்ற பல்வேறு நிலைகளை ஒரே நேரத்தில் கொண்டிருக்கும் அன்பின் அனுபவத்துடன், உன்னத சங்கீதத்தின் காதலி அலைதலுக்கு முற்றுப்புள்ளி வைக்கின்ற முழுமையான ஒய்வினைப்பற்றி நண்பகல் வேளையில் கனவு காண்கிறார் (உ.ச. 1:7). உண்மையில், ஒரு சமயத்தில், தனது அன்பிற்கு உரியவரின் அரவணைப்பில் அன்பின் நோயை கொண்டிருப்பதாக கருதினாலும் (2:5-6), மற்றொரு சமயத்தில், தான் மீண்டும் விட்டுவிடக்கூடாது என்று கருதுபவரின் பின்னால், முழுமூச்சுடன் தேடிச் செல்கிறாள் (3:1-2. 4). உண்மையான பொருளில், அன்பிற்குரியவர் மரணத்தின்மூலம் அவளுடைய பாதையை செம்மைப்படுத்தும்வரை, இந்த நிலையற்ற ஏற்ற இறக்கத்தை அவள் கடக்க மாட்டாள் (8:6). ஞானம், தன்னுடைய பங்கிற்கு, தன்னைத் தேடுபவர்களுக்கு இளைப்பாற்றியை

வாக்களிக்கிறது. இது தேடுதலுக்குரிய பரிசாகும் (சீரா 6:28). ''நான் சொற்ப முயற்சி செய்தேன்; ஆனால் வெகு இளைப்பாற்றியைக் கண்டேன்'' (51:27) என்று ஞான ஆசிரியர் கூறுவதற்கு, உயர்வான செயலான இளைப்பாற்றிக்கும் அதற்கே உரிய ஓய்வின் இடத்திற்கும் இஸ்ராயேலைத் தேர்ந்தெடுக்க, ஞானம் முதல் முயற்சியை எடுத்ததே காரணமாகும் (24:7-11).

யோபுவிற்குத் தன்னுடைய துன்பங்களை மேற்கொள்ள இறைவனுடைய ஓய்வின் இந்த முன்சுவையே போதுமானதாக இருந்ததா? ''மூச்சு விடவும்'' இறைவன் அவரை அனுமதிக்கவில்லை (யோபு 9:18). பின்னர் ஏன் அவர் மரணத்தையும் அதன் ''அமைதியான உறக்கத்தையும்'' விரும்பியிருக்கக்கூடாது (3:13)? ஆனால், கல்லறையின் காரிருளை உயிர்ப்பின் ஒளி ஊடுருவும் போது, எல்லாம் மாற்றமடையும்: ''நீ இறுதிவரை பிரமாணிக்கமாயிரு; நீ இறந்து அமைதி பெறுவாய், முடிவு காலம் வந்தவுடன் உனக்குரிய பங்கை பெற்றுக் கொள்ள நீ எழுந்து வருவாய்'' (தானி 12:13). எனவே, விசுவாசிப்பவருக்கு, இறந்தோரின் உறக்கமானது, இறைவனது ஓய்வின் முன்சுவையாகும்.

III. இயேசு கிறிஸ்து, ஆன்மாக்களின் இளைப்பாற்றி

1. இளைப்பாறுதலும் மீட்பும்:- பரிசேயருக்கு எதிராக, ஓய்வு நாளின் உண்மையான பொருளை இயேசு வெளிக்கொணர்கிறார்: ''ஓய்வு நாள் இருப்பது மனிதனுக்காக; மனிதன் இருப்பது ஓய்வுநாளுக்காக அன்று'' (மாற் 2:27); எனவே, இது வாழ்வை காப்பதற்காக உண்டாக்கப்பட்டது (3:4); இளைப்பாறுதலானது மனிதனுடைய விடுதலையைக் குறிப்பிட்டு, படைத்தவருடைய மகிமையை'' போற்ற வேண்டும். நோய்களைக் குணமாக்குவதன்மூலம் இயேசு இந்த அடையாளத்திற்கு உண்மையான பொருளைக் கொடுக்கிறார். பல ஆண்டுகளாக ''கட்டி வைக்கப்பட்டிருந்த'' பெண்ணை விடுவிக்கிறார்'' (லூக் 13:16). ஓய்வு நாள் முன்குறித்துக் காட்டியதை அடைவதன் மூலம் அவர் தன்னை ''ஓய்வு நாளுக்கும் ஆண்டவர்'' என்று காட்டுகிறார் (மத் 12:8). கிறிஸ்துவின் மூலமாக, இளைப்பாறுதலானது இறைவனுடைய பிள்ளைகளின் விடுதலையைக் குறிப்பிட்டுக் காட்டுகிறது. நமக்கு இந்த இளைப்பாற்றியையும் விடுதலையையும் அளிப்பதற்காக, தலைசாய்க்கவும் இடமில்லாத நிலையை (மத் 8:20) மீட்பர் விரும்புகிறார். சிலுவையில் மரணமடையுமட்டும் அவர் ஓய்வுகொள்ள மாட்டார் (யோவா 19:30).

2. இறைவனுடைய இளைப்பாற்றியின் வெளிப்பாடு:- ஓய்வு நாளில் தாம் செயலாற்றுவதை எண்பிக்க, இயேசு ''என் தந்தை இந்நேரம் வரை செயலாற்றுகிறார்; நானும் செயலாற்றுகிறேன்'' என்கிறார் (யோவா 5:17) இறைவனில் இளைப்பாறுதலும் பணி புரிதலும் ஒன்றையொன்று ஒதுக்குவன அன்று; இறைவாழ்வின் யாவும் கடந்த பண்பினை வெளிப்படுத்துபவைகளாக உள்ளன. பணிபுரியும்போது இளைப்பாறுதலின் மறைபொருளை ஞானம் அறிவிக்கிறது (சீரா 24:11). அறுவடை செய்வோர் மற்றும் இயேசுவினுடைய பணியானது, சோர்வுற்று வேதனைப்படுகின்ற ஆடுகளுக்கு மகிழ்ச்சி அளிப்பதற்காகவே (மத் 9:36; யோவா 4:36 தொ); ஏனெனில், தன்னிடம் வருகின்ற ஆன்மாக்களுக்கு இயேசு இளைப்பாற்றியை அளிக்கிறார் (மத் 11:29).

3. விண்ணக ஓய்வு:- வாக்களிக்கப்பட்ட நாட்டிற்குள் புகுதலால் தங்களை எதிர்நோக்கியுள்ளதாக எபிரேயர்கள் விசுவசித்த ''இறைஅமைதி''யானது ''கடவுளுடைய மக்களுக்கும்'', இயேசுகிறிஸ்துவிற்கு விசுவாசமாகவும் கீழ்ப்படிதலோடும் நடந்து கொண்டவர்களுக்கும் மட்டுமே ஒதுக்கப்பட்டிருந்தது. எபிரேயர்களுக்குத் திருமுகம் எழுதிய ஆசிரியர். சங் 95-க்கு அளித்த விளக்கவுரை இத்தகையதே (எபி 3:7-4:11). இந்த இளைப்பாற்றி விண்ணகமே. அதை ''ஆண்டவரில் இறந்தோர் கண்டடைவர்; ''இனித் தங்கள் உழைப்பினின்று இளைப்பாறுவார்கள். ஏனெனில் அவர்கள் செய்த நன்மையே

அவர்களோடு கூடவரும்'' (திருவெளி 14: 13). மேலும், விண்ணகத்தில் இளைப்பாறு தல் என்பது, தங்களது செயல்களை நிறுத்து வதாக இல்லாமல், முழுமைப்படுத்துவதா கும். செம்மறியை ஆராதிப்பவர்கள் பக லிலோ, இரவிலோ ஓய்வெடுப்பதே இல்லை (14:11). (நான்கு) உயிருள்ள படைப்புகளும், மும்மடங்குத் தூய்மைய டைய இறைவனின் புகழை, இரவிலும் பகலிலும் ஓய்வின்றிப் பாடுகின்றன (4:8).

**இழவுத்துயர்** *(MOURNING)*

புலம்புதலும் மற்ற அடக்கச் சடங்கு முறைகளும் அடக்கத்தைப் போலவே முக் கிய கடமைகளாகவே கருதப்பட்டன. இவைகளில் பங்கு பெற முடியாதவர்க ளுக்கு இது ஒரு பேரிழப்பாகத் தோன்றியது (1 அர 14:13; யோபு 27:15; எரே 16:4.6; 22:18; 25:33; 34:5). துக்கத்தில் பங்குக் கொண்ட அனைவரும் புலம்பலிலும் பங்கு கொண் டார்கள் (1 சாமு 25:1; 28:3; 2 சாமு 1:12; 2:31; 1 அர 13:29-30; எரே 16:5; 22:18). முதன் முதலாக குடும்ப அங்கத்தினர்கள் அனைவ ரும் இதில் பங்குக் கொண்டார்கள் (ஆதி 23:2; 50:10; 2 சாமு 11:26; எச 24:16). கோணி ஆடை உடுத்தி (எரே 4:8; 49:3; யோவே 1:13; மீக் 1:8) ''ஐயோ! ஐயோ!'' (ஆமோ 5:16) என்று புலம்புவார்கள். அரசன் அல்லது அரசியோ இறந்தால் ''ஐயோ சகோதரனே! ஐயோ சகோதரியே!'' (எரே 22:18; 1 அர 1330) என்று புலம்புவார்கள். இறந்து மறுபடியும் வாழ்வு பெறும் தெய்வத்தின் துக்கத்தைக் கொண்டாடுவதின் முறையை செக் 12:11-14-இல் விளக்குகின்றார். கண்ணீர் சிந்த வேண் டிய நேரத்தையும் இடத்தையும் குறிப்பிடு கின்றனர் (மலா 2:13; மத் 11:17; லூக் 7:32). இறந்தவுடன் புலம்பல் ஆரம்பமாகின்றது (ஆதி 33:2). அதுவும் இறந்த உடல் முன்பு ஆரம்பமாகின்றது (மத் 9:23; மாற் 5:38). கல்லறைக்குச் செல்லும்போது புலம்பினர். துக்கம் இறந்த உடலை அடக்கம் செய்த தோடு முடிவு பெறுவதில்லை; அது ஏழு நாள் வரைக்கும் நீடிக்கும் (ஆதி 50:10; 1 சாமு 31:13; 1 நாள் 10:12; யூதி 16:24). ஆனால் மோசேக்கும் ஆரோனுக்கும் இத்துக்கம் முப் பது நாள் கொண்டாடப்பட்டது (எண் 20:29; உப 34:8). யாக்கோபுக்கு யூதர்களின் முறைப் படி எழுபது நாள் கொண்டாடப்பட்டது (ஆதி 50:3).

புலம்பல் சடங்குகளில் புலம்புதலையே தொழிலாகக் கொண்டவர்கள்தான் முக்கிய இடத்தைப் பெறுகின்றனர் (2 நாள் 35:25; சங் 12:5; எரே 9:17; எச 27:32; ஆமோ 5:16). குறிப்பாக பெண்கள் இதில் முக்கிய இடம் பெற்றனர். அவர்கள் ''பாடகிகள்'' (2 நாள் 35:25) என்றும், '' ஒப்பாரி வைக்கும் பெண் கள்'' (எரே 9:17) என்றும் அழைக்கப்பட்டார் கள். இவர்கள் இதில் மந்திர அறிவும் கொடையும் கொண்டிருந்ததாகத் தெரிகிறது. இதன் இரகசியத்தை, தலைமுறை தலைமு றையாகத் தங்கள் தோழியர்களுக்கும் கற்றுக் கொடுத்தார்கள் (எரே 9:20). பெண்கள் தங் கள் உள்ளத்துக் கிளர்ச்சிகளை ஒப்பாரி வழி யாக எடுத்துரைப்பதில் சிறப்புப் பெற்றவர் கள். ஒப்பாரி வைப்பதைத் தொழிலாகக் கொண்டவர்களுக்கு ஊதியம் கொடுக்கப் பட்டது. புலம்புவதை அவர்கள் பெரும்பே றாகக் கருதினார்கள் (மத் 9:24). ஒப்பாரி வைப்பவர்கள் வெறும் அழுகையோடு நிற் பதில்லை. மாறாக ஒப்பாரியில் கவிதை புனைவார்கள். கவிதையின் நீளம் இறந்தவரின் முக்கியத்துவத்தைப் பொருத்து இருக்கும். பழைய ஏற்பாட்டில் பல இரங் கற்பாக்கள் காணப்படுகின்றன. தாவீது சவு லின் மீதும் அவர் மகன் யோனத்தான் மீதும் புலம்பல் பாடினார் (2 சாமு 1:18-27). மேலும் தாவீது அபினேரின் பொருட்டு ஒப்பாரியிட்டு அழுதார் (2 சாமு 3:33-34). எரேமியாவின் ஒப்பாரியிலும் பாபிலோன், தீர், எகிப்து நாட்டின் மீது பாடப்படும் ஒப்பாரியிலும் வசையும் வஞ்சகப்புகழ்ச்சி யும் கலந்திருப்பதை நாம் பார்க்கலாம் (ஏச 14:4-21; எச 27:2 தொ; 32:2-16). பொதுவாக ஒப்பாரிகளை அலசிப்பார்க்கும் போது மூன்று முக்கிய கருத்துக்களைக் காணலாம்.

1. இறந்தவனைப்பற்றி பாடப்படும் புக ழுரை:- இப்புகழுரை வரலாற்று உண் மையை அளவுகடந்து செல்லும். இறந்தவ

னின் அழகையும், பெருந்தன்மையையும், தாராள குணத்தையும், உடல் வலிமையையும், அவன் செய்த நல்லவைகளையும், அவன் குடும்ப வரலாற்றை பின்னணி வைத்தும் பாடப்படும் (எச 19:2.10); போரில் அவன் காட்டிய வீரச் செயல்கள் (2 சாமு 1:27; எச 32:27); அவனுக்கே உரித்தான மற்றவரோடு ஒப்பிடமுடியாத மனித தன்மை (2 சாமு 1:19; ஏச 14:10; எச 27:32) ஆகியவை இடம் பெறும், மேலும் இறந்தவனின் பெயர் இப்பாடலில் இடம்பெறும் (2 சாமு 1:26; 3:33; எச 19:2 தொ; 26:17 தொ; 27:3 தொ; 28:12 தொ; 32:2 தொ).

2. ''ஒப்பாரி'' பெரும்பாலும் ''எவ்வாறு'', ''என்ன'' என்ற சொற்களிலேயே ஆரம்பிக்கும். கொடிய சாவினை அடைந்தவனைப்பற்றி உணர்ச்சிப் பெருக்கோடு பாடப்படும். பகைவன் மீது பழித்தீர்க்கும் உணர்ச்சியையும் அல்லது சாப உணர்வையும் இப்பாடலில் காணலாம் (2 சாமு 1:21). குறிப்பிட்ட மரணங்களினால் உண்டாகும் மகிழ்ச்சி தடுக்கப்படுகிறது (2 சாமு 1:20). முன்பிருந்த மேன்மையையும் வளமையையும் தற்போதுள்ள துன்பத்தோடு ஒப்பிட்டு புலம்புவார்கள். உதாரணமாக புலம்பல் ஆகமம் 1; வானின்று வீழ்ந்த விடிவெள்ளி (ஏச 14:12); சிறைபட்ட சிங்கம் (எச 19:8); கேதுரு மரங்களின் செருக்குற்ற நிலை (31:10) ஆகிய உருவகங்கள். செயோலில் உள்ள அயர்ச்சி நிறைந்த வாழ்வு, இவ்வுலக வாழ்வோடு அடிக்கடி ஒப்பிடப்படுகிறது.

3. ''ஆறுதல் கூறுவது'' ஒப்பாரியின் மற்றொரு கருத்தாகும். அவன் இவ்வுலகில் விட்டுச்சென்ற செல்வங்கள், பெற்ற நற்பெயர்கள், அடக்க சடங்குகள் நிறைவுபெற்றத் தன்மைகள் அனைத்தும் ஆறுதல் கூறுவனவாக உள்ளன.

புலம்பற் பாட்டில் இரண்டாம் பாகம் எப்போதுமே முதல் பாகத்தைவிடச் சிறியதாகத்தான் இருக்கும். உரையாடல் வகையைச் சேர்ந்த புலம்பல்களும் காணப்படுகின்றன. முடிவில் ''கீழுலகுக்கு இறங்கு; அங்கே விருத்தசேதனமில்லாதவர்களுடன் உறங்கு'' (எச 32:19), ''வலியோர் வீழ்ந்தது எங்ஙனம்'' (2 சாமு 1:19.25.27); ''ஐயோ! ஐயோ! வல்லமை மிக்க நகரே!'' (திருவெளி 18:10); ''நாங்கள் புலம்பினோம் நீங்கள் மாரடிக்கவில்லை'' (மத் 11:7) ஆகிய பல்லவிகளை பாடகர் குழு பாடும்.

புலம்பற் பாட்டை இசைக்கருவிகளுடன் பாடினார்கள். புல்லாங்குழல்தான் பெரும்பாலும் பயன்படுத்தப்பட்டது (எரே 48:36). புலம்பலுக்கு மட்டுமன்று மகிழ்ச்சிகரமான நிகழ்ச்சிகளுக்கும் புல்லாங்குழலே ஊதப்பட்டது (1 அர 1:40; ஏச 5:12; 30:29). சாதாரண ஒரு ஏழையின் அடக்கத்திற்குக் கூட இரு புல்லாங்குழல்கள் ஊதப்பட்டன என்று அறிகிறோம்.

இப்புலம்பல்களில், இறைவனது பெயர் குறிக்கப்படுவதில்லை. இறப்புக்கும் யாவேயின் வழிபாட்டுக்குமிடையேயுள்ள உறவு ஏற்றுக்கொள்ளப்பட்ட காலத்திலும் அவர் பெயர் குறிப்பிடப்படவில்லை (2 சாமு 1:14 தொ-யை 1:14-ஓடும்; 3:39-ஐ 3:33-ஓடும் ஒப்பிடுக). இதிலிருந்து இறந்தவர்கள் தெய்வமாக்கப்படவில்லை என்று எண்ணிவிடக் கூடாது. தெய்வங்களுக்காகப் புலம்புதல், பாலினப்பெருக்க வழிபாட்டின் முக்கிய கூறாகும் (நீதி 11:30-40).

உலகில் வாழ்ந்து மரித்த மனிதனைப்பற்றி பாடப்படும் புலம்பல் பெரும்பாலும் அவன் உலகில் பெற்ற நல்ல மதிப்பீடுகளை வைத்தே அமைகின்றது. அவன் மறுவுலகில் பெறவிருக்கும் வாழ்வை அடிப்படையாகக் கொண்டு அமையவில்லை.

**இறக்கை** (WING)

இவ்வார்த்தை பல பொருள்களில் விவிலியத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளது. பொதுவாக இது ஒரு பறவையின் இறக்கைகளைக் குறித்தாலும், இது உருவகமாகப் பயன்படுதல் சிறப்புமிக்கதாகும். படையெடுப்பையும் (எரே 48:40; 49:22), மேலும் பகைவர்களின் அச்சத்தையும் (ஏச 10:4), நாட்டின் பெருமைமிக்க பொறுமையையும் வல்ல

மையையும் (எச 17:3,7), யாவே இஸ்ரா யேல்பால் காட்டிய நிலையான கவனிப்பை யும் (யாத் 19:4; உப 32:11), மறைந்து போகும் செல்வத்தையும் (பழ 23:5), தீர்ப் பின் புயலையும் (ஓசே 4:19), விடியற்காலை யின் விரைவையும் (சங் 138:9) இறக்கை உவமையாக விவரிக்கின்றது. ''சிறகடித்து ஒலியெழுப்பும் உயிரினங்கள் உடைய நாடு'' என்பது பூச்சிகளோ அல்லது சிறகு போன்ற பாய்களையுடைய கப்பல்களோ நிறைந்த நைல் நதி கழிமுகத்தைக் குறிக்க லாம் (யாத் 25:20; ஏச 6:2; 18:1; எச 1; 3:14; 10). யாவே மேகத்தின் இறக்கைகள் மேல் பறப்பதாகக் கூறப்படுகிறது (உப 33:26; சங் 18:10; 68:4; 104:3). யாவேயின் இறக்கைகள் பாதுகாவலின் சின்னங்களாகும் (சங் 16:8; 35:7; 56:1; 65:7). எருசலேம் தேவாலயம் யாவேயின் இறக்கை ஆகும் (சங் 56:1). இறக்கைகளையுடைய இதிகாச விலங்குகள் யாத் 25:20; ஏச 6:2; எச 1; 3:14; 10; திருவெளி 4:6 தொ 9:9 ஆகிய பகுதிகளிலும் இறக்கையு டைய பெண் உருவங்கள் செக் 5:11; திரு வெளி 12:14-இலும் குறிக்கப்படுகின்றன.

### இறந்த உடல்களைப் பாடம் பண்ணுதல்

இறந்த உடல்கள் அழியாதவாறு பாது காக்கும் கலை எகிப்தில் ஆரம்பமா னது. விவிலியத்தில் இதைப் பற்றி அவ்வள வாக குறிப்பு காணப்படாததாலும், கானான் நாட்டின் கல்லறைகளிலிருந்து கண்டுபிடிக் கப்பட்ட உடல்களின் நிலையிலிருந்தும், எபிரேயர்களிடையே இப்பழக்கம் இல்லை என்பது தெரிகிறது.

விவிலியத்தில், இறந்த உடலைப் பாடம் பண்ணுவதைப் பற்றிய நேரடிக் குறிப்பு ஆதி 50:2-3. 26-இல் மட்டுமே காணப்படுகிறது. இங்கு யாக்கோபின் உடலும், யோசேப்பின் உடலும் பரிமளவகைகள் பூசி பாடம் பண் ணப்பட்டன என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அவர்கள் எகிப்தில் முக்கியமானவர்கள் என்று காட்டுவதற்கும், கானான் நாட்டில் புதைக்கப்படும் வரை அவர்கள் உடலை அழியாமல் காப்பதற்காகவுமே அவர்களின் உடல்கள் பாடம் பண்ணப்பட்டன (ஆதி 50:13; யாத் 13:19; யோசு 24:32). ஆசாவின் உடலுக்கும் (2 நாள் 16:14), இயேசுவின் உடலுக்கும் (யோவா 19:39-40), பரிமளத்தை லங்கள் பூசப்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது. ஆனால் அது உடலைப் பாடம் பண்ணுவதற் காக அல்ல; மாறாக அது ஒரு சுத்திகரிப்புச் சடங்கேயாகும்.

பாடம் பண்ணுதலுக்கான எபிரேயச் சொல் ஆதி 50:2-3.26-லும், உ.ச. 2:13-லும் மட்டுமே காணப்படுகிறது. யாக்கோபின் உடலைப் பாடம் பண்ண நாற்பது நாட்கள் ஆனது. மேலும், யோசேப்புக்குச் சேவை செய்து வந்த மருத்துவர்களே அதைச் செய் தார்கள். எபிரேயர்கள் முடிவற்ற வாழ்வு, உயிர்ப்பு போன்றவற்றை நம்பியதாலும், எகிப்திய மதத்தை அவர்கள் வெறுத்ததா லும், பாடம் பண்ணுவதற்கு அதிகச் செல வானதாலும் எபிரேயர்கள் இப்பழக்கத்தைக் கடைப் பிடிக்கவில்லை.

### இறந்தோரின் உறைவிடம்

இஸ்ராயேலின் ஆசிரியர்களும் இறை வாக்கினர்களும் இறந்தவர்களிடம் குறி கேட்டலையும் மற்றும் இரகசியச் சிந்தனை கள் ஆகியவற்றையும் தடுத்தனர் (உப 18:11; சங் 106:28; ஏச 8:19). '' மறைவான காரியங் கள் நம்முடைய இறைவனாகிய ஆண்டவ ருக்கே உரியவை; வெளிப்படுத்தப்பட்ட வைகள் மட்டுமே நமக்கு உரியவை'' என்று சட்டம் கூறுகிறது (உப 29:29). இறந்தோரின் முடிவு மற்றும் விதியினைப் பற்றி பழைய ஏற்பாடு எந்த முறையான கோட்பாட்டை யும் கூறவில்லை. அது கூறுவதெல்லாம் பிரபலமான பொதுப்பாணி கதைகளில் உள்ள கருத்துக்களையே. புதிய ஏற்பாடு இறுதித் தீர்ப்பின் போதான வெகுமதி மற் றும் தண்டனைப் பற்றித் தெளிவாக குறிப் பிட்டாலும், இறந்தோரின் உடனடி நிலை பற்றி ஒன்றுமே தெளிவாக கூறவில்லை.

1. எபிரேய கருத்து:- பழங்காலத்தைச் சேர்ந்த மற்றவரைப் போலவே எபிரேயரும், இறந்தோர் உலக வாழ்வை முடித்துக் கொண்டாலும், வாழ்க்கையை முடிக்க

வில்லை என நம்பினர். உலகிற்கு வெளியே, கடவுள் அணுகக்கூடிய இடத்தில் அவர்கள் வாழ்கின்றனர் (யோபு 26:6; சங் 139:8; ஆமோ 9:2); பழைய வாழ்வைப்பற்றி மறந்து அங்குத் தங்குகின்றனர் (சங் 88:12); உலக இன்பங்கள் அங்குக் கிடைக்காது (சீரா 14:16); சரீர இச்சையினின்று விடுதலை பெற்றவர்களாய் (யோபு 3:7), அதே சமயத்தில் கடவுளது பிரசன்னத்தினுடைய அனுபவத்தைக் கொண்டிருக்க மாட்டார்கள் (சங் 88:6). ஆகவே, போற்றுவதற்கும், நன்றி கூறுவதற்கும் ஏதுமின்றி இருந்தனர் (சங் 6:5; 30:9; 88:12-13; 115:17; ஏச 38:18; சீரா 17:27-28). இப்பகுதியானது வழக்கமாக பூமியின் அடியிலும் (எண் 16:30), பெருங்கடலின் கீழ்ப்பகுதியிலும் (யோபு 26:7), மலைகளின் அடியிலும் (யோனா 2:6) அமைந்திருப்பதாகக் கருதப்பட்டது. சூரியன் மறையும் மேற்கு பகுதியில் இப்பகுதி இருப்பதாக (ஏனோக் 22:1-5) மற்றொரு கருத்து கூறுகிறது. வாழ்வோர் அனைவரின் இறுதிப் பொது இடமாக வர்ணிக்கப்படும் இப்பகுதி (யோபு 20:3; ஏனோக் 22:3), இருளும் பேயிருட்டும் உள்ளதாகவும் (யோபு 10:20-21), ஆழ்ந்த நிசப்தம் சூழ்ந்ததாகவும் (சங் 94:17; 115:17), அல்லது கதவுகளை உடைய நகரமாகவும் (யோபு 38:17; ஏச 38:10; ஞான 16:13; சீரா 51:9; மத் 16:18) காட்டப்படுகிறது.

இந்த இடத்தில் குடியிருப்போர், உறுதியற்ற துவக்கமும் பொருளும் கொண்ட 'ரெபாயிம்' என்று அழைக்கப்பட்டுள்ளனர். உலகப்பதவி நிலையை அவர்கள் திரும்பப் பெற்றாலும் (ஏச 14:9-10; எச 32:21.24), களைப்புற்றவர்களாகவும் (யோபு 3:17), வலிமையற்றவர்களாயும் விவரிக்கப்பட்டனர் (சங் 88:4). அதன் தனிப்பட்ட அம்சமாக அவர்கள் எப்போதும் தாகத்தால் தவித்தனர் (ஏச 5:13). இறந்தோரின் உறைவிடத்திற்குச் செல்லும்வழி, ஒரு வழிப்பாதையானாலும் (யோபு 16:22), ஆலோசனைக்காக தனிப்பட்ட ஆவிகள் அழைக்கப்படலாம் (1 சாமு 28:13). இம்முறையில் அவர்கள் ''ஒளி'' என்றும் உலகிற்கு வந்த 'கீழுலகப்பார்வையாளர்' என்றும் அழைக்கப்பட்டனர்.

2. பண்டைய கிழக்கத்திய கலாச்சாரத்தின் இணையான கருத்துகள்:- மெசபொத்தாமியா மற்றும் கானானிய, இலக்கியத்திலிருந்து இணையான கருத்துக்களை குறிப்பிடுவதன் மூலம், விவிலிய எழுத்தாளர்கள் செமித்திய கதைகளிலிருந்து கருத்துக்களை வெளிப்படுத்தினார்களேயன்றி புதியதாக எதையும் கண்டு பிடிக்கவில்லை என்பது தெரிகிறது.

அக்காதிய நூல்களிலும் இறந்தோரின் உறைவிடம் நிலத்திற்குக் கீழான ஆட்சி எனவும், சில இடங்களில் நீருக்கு அடியிலும், அல்லது மேற்கில் உள்ளதாகவும், கதவுகளை கொண்ட நகரமாகவும் காட்டப்படுகிறது. இப்பகுதி இருள் சூழ்ந்ததாயும் திரும்ப முடியாத பாதையைக் கொண்டதாகவும் உள்ளது. மற்றவர்களின் கருத்துகளை போலவே, இங்கு வாழ்வோர் இடைவிடா தாகத்தால் துன்புற்றனர். இராஸ்சம்ரா உகாரித்திய பாடல்களில் இவ்விடம் நிலத்திற்கு அடியிலும் மலைகளுக்கு அடியிலும் உள்ளதாகவும் ஒரு நகரமாகவும் விவரிக்கப்படுகிறது. அந்நகரின் தலைவன் மண்ணை உண்பவராகவும், அதனை முழுமையாக குடிப்பவராகவும் விவரிக்கப்படுகிறார்.

3. பழைய ஏற்பாட்டுச் சொற்றொடர்:- பழைய ஏற்பாட்டில் இறந்தோரின் தங்கும் இடம் பல பெயர்களால் குறிப்பிடப்பட்டுள்ளது. பெரும்பாலானவை ஒரே பொதுவான பெயர் சொல்லின் பல்வேறு வடிவங்களாகும். மெசபொத்தாமிய வாசகங்களுக்கு இணையாகவும் இவற்றை குறிப்பிடலாம்.

அ) பாதாளம் (யோபு 33:18; சங் 16:10; 30:9; ஏச 38:17; 51:14; யோனா 2:6). ஆனால் பழைய வடிவங்கள் இதனை 'பாழான' என்னும் சொல்லில் இருந்து பயன்படுத்துகின்றன.

ஆ) படுகுழி (சங் 28:1; 88:4. 6; ஏச 14:15; எச 32:18).

இ) மரணத்தின் நாடு (யோபு 28:22; 30:23; 38:17; சங் 6:5; 9:13; பழ 7:27). மரணத்தின்

வீடு; சங் 22:15-இல் இச்சொல் ''மரணத்தின் தூசி'' எனப்படுகிறது. இச்சொற்றொடருக்கு இணையான சொல்லும் அக்காதிய இலக்கியத்தில் காணப்படுகிறது.

*ஈ) பூமி (யாத் 15:12; சங் 71:20; யோனா 2:6)* 'கீழுலகு' என்றும் கூறப்படுகிறது (எச 31:14). பூமிக்கு மூன்று பகுதி கீழுள்ள இடம் என்னும் அக்காதிய சொற்றொடரும் இதனையே குறிப்பிடுகிறது.

*உ) கீழுலகம் (யோபு 26:6; 28:22; சங் 88:11; பழ 15:11; 27:20; திருவெளி 9:1).*

ஆயினும் சிறப்புப் பெயரின் முழு அழுத்தமும் கொண்ட ''செயோல்'' என்ற ஒரு பெயருள்ளது. இச்சொல் 66 முறை பயன்படுத்தப்படுகிறது. ஆனால் வேறு எந்தச் செமித்திய மொழியிலும் இச்சொல் பயன்படுத்தப்படவில்லை. ஆகவே அதன் சொல்லியலும், துல்லியமான பொருளும் விவாதத்திற்குரியன. இச்சொல், ''கேள், விசாரி'' என்னும் சொற்களிலிருந்து தோன்றியதாகவும் இறந்தவர்களிடமிருந்து தீர்க்கத்தரிசனம் கேட்கப்பட்ட இடம் என்றும் கூறும் கருத்து, பொதுவாக ஏற்கப்படக் கூடியதாய் உள்ளது. இவ்வினைச் சொல்லானது பழைய ஏற்பாட்டில் தடுக்கப்பட்ட, இறந்தவர்களிடமிருந்து குறிகேட்டலோடு இணைத்துக் கூறப்படுகின்றது (உப 18:11; 1 நாள் 10:13). இதனுடைய அக்காதிய சொல் ஆவிகளிடம் ஆலோசனை பெறுபவனையும், தென் அரேபியமொழி சில நேரங்களில் 'தீர்க்கத்தரிசனத்தையும்' குறிப்பிடுகிறது. எனினும், இச்சொல்லானது புறவினத்தாரின் தொல்பொருள்களில் பாதுகாக்கப்பட்ட ஒன்றாகும். எழுபதுநூல் வழக்கமாய் ''பாதாளம்'' என்னும் சொல்லையே பயன்படுத்துகிறது.

*4. புதிய ஏற்பாடு:-* இறந்தோரின் உறைவிடம் ''பாதாளம்'' என்று மட்டுமே அழைக்கப்படுகிறது (மத் 11:23; 16:18; லூக் 10:15; 16:23; அ.ப. 2:27.31; திருவெளி 1:18; 20:13-14). இதனுடைய பழைய ஏற்பாட்டு விளக்கத்துடன் புதிதாக எதுவும் இணைக்கப்படவில்லை.

*5. ஆட்தன்மைப்படுத்துதல்:-* இறந்தோரின் உறைவிடமானது அகன்ற தொண்டையுடன் அல்லது திறந்த வாயுடன், இடைவிடா பசியுடன் அலையும் பேயினைப்போன்ற ஆட்தன்மைப் படுத்தப்படுகின்றது (பழ 1:12; எச 5:14; அ.ப. 2:5). இராஸ்சம்ரா உகாரித்திய கதையிலிருந்து இம்முறை எடுத்தாளப்படுகிறது. நரகத்தைப் பற்றிய இடைக்காலப் படங்களில் இவ்வுருவகம் காணப்படுகின்றது.

கானானிய கதைகளில் 'கீழ் குழி' என்னும் சொல்லானது, உகாரித்திய ''கவ்ரான்'' என்று கடவுளாக ஆட்தன்மைப்படுத்தப்படுகிறது. இச்சொல்லானது, பழைய ஏற்பாட்டில் ''பேத்கோரோன்'' என்ற பெயரில் காணப்படுகிறது (யோசு 16:5).

*6. இறந்தவரின் உறைவிடம் மற்றும் நரகம்:-* இறந்தோரின் உறைவிடம் தண்டனைக்குரிய அல்லது துன்புறும் இடமாகப் பழைய ஏற்பாட்டில் எங்கும் குறிப்பிடப்படவில்லை. பயங்கரமான நரகம் என்னும் கோட்பாடு, ஈரானிய எண்ணங்களால் கிரேக்க காலத்தில் இஸ்ராயேலில் வளர்ந்தது. இச்சொல் முதலில் ஏனோக்கு நூலில் காணப்பட்டாலும், இறந்தோரின் உறைவிடத்திற்கும் பாவிகள் தண்டனை பெறுமிடத்திற்கும் பல வேறுபாடுகள் இந்நூலிலேயே கூறப்படுகின்றன. பாதாளத்தில் வாழ்வைத் திருத்துதல் என்பது இல்லை என சீராக்கின் மகன் இயேசு கூறுகிறார் (சீரா 41:4). புதிய ஏற்பாட்டில் மற்ற இடங்களில் எல்லாம், முக்கியமாக திருவெளி 20:13-14-இல், இதே வேற்றுமை நிலவுகிறது. லூக் 16:23-இல் மட்டும் தான், உவமையில் வரும் செல்வந்தன் பாதாளத்தில் துன்புறுவதாகக் கூறப்படுள்ளது. 'பாதாளம்' என்னும் சொல், 'செயோல்' என்பதனையோ அல்லது செமித்திய எண்ணங்களையோ குறிப்பிடாமல், அன்றைய கிரேக்க மரபையே பிரதிபலிக்கலாம். 2 பேதுரு 2:4-இல் 'படுகுழியில் தள்ளி' என்பது, எதிராகக் கிளம்பிய தூதர்களைப் பயங்கரத் தண்டனைக்கு உட்படுத்துவதை குறிக்கிறது. கிரேக்க 'பாதாளம்' எனுப்

சொல் 'படுகுழி' என்பதன் மறுசொல்லாக மாறியது போல, இவ்வித்தியாசமும் தெளிவில்லாமல் இருக்கிறது (ஞான *30:10-14; 4:10-19; 5:1*). இது, வளர்கின்ற எண்ணம் என்பதைவிட, குழப்பம் என்றே கருதப்பட வேண்டும். ஏனெனில் பிற்கால யூத சிந்தனைகளிலும் இறந்தோரின் உறைவிடமும், துன்புறும் இடமும் வித்தியாசப் படுத்தப்படுகின்றன.

### இறந்தோர் தொடர்பு சாதனம் (ஆவியுலக இடையீட்டாளர்)

வருங்காலம் பற்றிய செய்தியை தரக்கூடியவராகவும், பயனுள்ள அறிவுரை தரக்கூடிய திறமை உள்ளவராகவும் ஊகிக்கப்படும் இறந்தோரின் ஆவிகளிடம் ஆலோசனை கேட்க மாந்திரீகம், குறிகூறுதல் போன்றவற்றில், ஈடுபடுபவர் இவ்வாறு அழைக்கப்படுகிறார் (ஏச *8:19*). இதனுடைய எபிரேயச் சொல்லானது, இரகசிய கலைகளைக் கடைபிடிப்பவரால் பெறப்படும் அறிவினையோ அல்லது கடைபிடிப்பவருடன் கலந்தாலோசிக்கப்படுகின்ற ஆவிகளுடனான நெருக்கத்தினையோ குறிப்பிடுகின்றது. ''அறிமுகமாக ஆவியைக் கொண்டிருப்பவரோ'' அல்லது கலந்தாலோசிப்பவரோ இவ்வாறு அழைக்கப்படுகிறார். எபிரேயச் சொல்லானது ''தந்தை, முன்னோர்'' அல்லது ''திறத்தல், குழி'' ஆகியவற்றுடன் தொடர்பு கொண்டிருக்கலாம். இறந்தோருடன் ஆலோசனை செய்வது பற்றி விவிலியத்திற்கு புறம்பான கதைகள், சில நேரங்களில் ஆவியை அழைப்பதற்காகத் தூண்டுதலையும் கொண்டிருக்கும் (*1 சாமு 28:13; ஏச 29:4*). இச்சொல்லானது எப்போதும் பில்லி சூனியக்காரன் பற்றிய சொல்லுடன் இணைந்ததாகவும், ஒருமுறை ''இறந்தவர்களிடம் குறி கேட்கிறவனையும்'' குறிப்பிட்டுக் காணப்படுகிறது (*உப 18:11*).

மோசேயின் சட்டம் மரண தண்டனை விதிப்பதன் மூலம் (லேவி *20:27*), பில்லி சூனியக்காரரை நாடிச் செல்வதைத் தடை செய்கிறது (*19:31; 20:6*). வாக்களிக்கப்பட்ட நாட்டிலிருந்து இஸ்ராயேலால் வெளியேற்றப்பட்ட மக்களினங்களுடன் இத்தகைய குறி கூறுதல் தொடர்பு கொண்டிருத்தல் (உப *18:9-14*), அநேகமாய் எகிப்தோடு கொண்ட தொடர்பும் (ஏச *19:3*), மற்றும் இறைவாக்குரைத்தலுக்கும் (குறி கூறுதலின் பிற வகைகளான) மாந்திரீகத்திற்கும் இடையிலான வேறுபாடு (உப *18:9-22*) முதலியவையே இதற்கான காரணங்களாகும். வருங்காலத்தைப் பற்றிய செய்திக்காக இறைவாக்கினர்கள் மற்றும் ஆவியுலக இடையீட்டாளர்கள் ஆகிய இருவரிடமும் நாடினாலும், மாந்தீர்கர்களின் கூற்றை நம்பக் கூடாது (ஏச *8:16-20*). சவுல் இறைவாக்கினர்கள் மூலமும் மற்ற உரிய வழிகள் மூலமும் ஆண்டவரிடமிருந்து இறைகூற்றைப் பெறமுடியாத போது (*1 சாமு 28:6*), ஒரு சூனியக்காரியின் மூலம் இறந்த சாமுவேலுடன் தொடர்பு கொள்கிறார் (*1 சாமு 28:7-14*). சாமுவேல் பொதுவான அறிவுரை தர மறுத்து, ஒரு இறைவாக்கினராக, உயிரோடிருந்த இறைவாக்கினர்களிடமிருந்து வாக்கு பெற முடியாமை மறைமுகமாகக் குறிப்பிடும் நிராகரிப்பை உறுதிப்படுத்துகிறார் (*1 சாமு 28:15-19; 13:13-15; 15*).

சில சமயங்களில் இஸ்ராயேலிலும், யூதாவிலும் சூனியக்காரர்கள் நீக்கப்பட்டிருந்தாலும் (*1 சாமு 28:3; 2 அர 23:24*), அவர்களது கலைகள் முழுமையாக அழிக்கப்படவில்லை (*21:6*). ஆணும் பெண்ணும் குறி சொல்வதில் ஈடுபட்டிருந்தாலும் (லேவி *20: 27*), சவுல் குறிப்பாக ஒரு பெண்ணையே நாடினார் (*1 சாமு 28:7*).

### இறப்பு

பழைய ஏற்பாட்டில் சாவைப்பற்றி இஸ்ராயேலர் கொண்டிருந்த கருத்துக்களில் வளர்ச்சியைக் காண்கிறோம். ஆனால் இம்முன்னேற்றம் முற்போக்காகப் படிப்படியாக வளர்ந்தது அன்று. உதாரணமாக பல்லாண்டுகளுக்குப் பின்னர் உருவாகிய சீராக் ஆகமத்தில் இறப்புப் பற்றிக் காணப்படும் கொள்கை, முதலில் உருவாகிய ஐந்நூல்களில் காணப்பட்ட கொள்கையிலிருந்து எந்த வகையிலும் வேறுபடவில்லை. பழைய ஏற்

பாட்டில் இறப்பைப்பற்றிக் கூறப்பட்ட கருத்து, மரணத்தோடு வாழ்வு முடிவடைகிறது என்பதே.

சாதரணமாக வாழ்க்கையைப்பற்றி ஒருவன் எத்தகைய கருத்து கொண்டிருக்கின்றானோ, அதன் அடிப்படையில் தான் இறப்பைப்பற்றிய கருத்தும் அமையும். இது இஸ்ராயேலரைப் பொறுத்த வரையில் மிகவும் உண்மை. அவர்கள் மனிதனை உயிரோட்டமுள்ள ஒரு உடலாகத்தான் எண்ணினார்களே ஒழிய, உடலெடுத்த ஆன்மாவாகக் கருதவில்லை. இந்த எண்ணத்தின்படி உடலில் உயிரோட்டம் முடியும்போது, அனைத்து இன்றியமையாத செயல்களும் முடிவு பெறுவதாக அவர்கள் கருதினார்கள்.

ஒருவன் இறக்கும் போது அவனுடைய ஆன்மா, உடலிலிருந்து பிரிந்து செல்கிறது. அது ''ஓர் உள்ளுயிராக'' (NEPES) தனிதன்மையோடு 'செயோலில்' வாழ்கிறது. ஆனால், அதனால் இன்றியமையாத எத்தகைய செயலையும் செய்ய இயலாது. இறந்தவர்கள் இறைவழிபாடுகளில் பங்கு பெற இயலாது *(சங் 6:6; 30:10; 88:11; 115:17; ஏச 38:11.18)*. இந்தப் பின்னணியில்தான் இயேசு, ''கடவுள் வாழ்வோரின் கடவுளேயன்றி இறந்தோரின் கடவுள் அல்லர்'' *(மத் 22:32; மாற் 12:27; லூக் 20:38)* என்று கூறினார். இறப்பு மனிதனின் இயற்கையான முடிவாக ஏற்றுக் கொள்ளப்பட்டது *(2 சாமு 14:14)*. முதியவனாக நிறைந்த வாழ்நாட்களைக் கடந்து, வலிமை குன்றாமல், நல்ல கிழப்பருவத்தில் இறப்பது நிறைவான சிறந்த இறப்பாகக் கருதப்பட்டது *(ஆதி 25:8; யோபு 21:23 தொ; 29:18-20)*. இத்தகைய நிறைவான இறப்பைப் பெறுபவன், எளிதாக அமைதியாக இறக்கிறான். நொடிப் பொழுதில் செயோலைச் சென்றடைகிறான் *(யோபு 21:13)*. அவன் உரிய காலத்திற்கு முற்பட்ட இறப்பை அடையான். நோயும் அவனை வாட்டாது. நோயுள்ள இறப்பு ஒருவனுக்குக் கசப்பூட்டுகிறது *(யோபு 21:15)*.

இன்பவனம் பற்றிய கதை *(ஆதி 2-3)* எதை உணர்த்துகிறது என்றால், மனிதன் இறக்க வேண்டியவனாக இறைவனால் படைக்கப்படவில்லை. முதல் பாவத்தின் காரணமாய் மனிதன் அந்நிலையைப் பெற்றான். இன்பவனம் பற்றிய கதையில் வரும் உருவகவத்திலும் மனிதன் வாழ்வு தரும் கனியைத் தின்பதால் முடிவில்லா வாழ்வைப் பெறுகிறான். பாவம் புரிந்ததால் அவன் தோட்டத்திலிருந்து விரட்டப்பட்டான். அவன் வாழ்வு தரும் கனியை உண்ண அனுமதிக்கப்படவில்லை.

இக்கதையானது மெசபொத்தாமியாவில் வழங்கிய 'கில்காமிசின் கதையோடு ஒத்திருக்கிறது. இக்கதையில் கில்காமிஸ் வாழ்வின் கனியைத் தேடிக் கண்டுபிடிக்கிறான். ஆனால் திருட்டின் காரணமாக அதை இழக்கிறான். அதே போன்று ''அடபா'' கதையிலும், வான்வீடு கதையோடு ஒற்றுமையைக் காண்கிறோம். 'அடபா' கடவுளர்கள் திருமுன் அனுமதிக்கப்படுகிறான். அவனுக்கு அங்கு இறப்பின் உணவு, இறப்பின் பானம் அளிக்கப்பட்டால் பெற்றுக் கொள்ளக்கூடாது என்று எச்சரிக்கை வழங்கப்பட்டது. ஆனால் அவனுக்கு உண்மையில் வழங்கப்பட்டது 'வாழ்வின் நீரும் வாழ்வின் உணவும் தான்'. அவன் அதைப் பெற்றுக் கொள்ளவில்லை.

இறப்பு முதல் பாவத்தின் வழியாகத் தான் வந்தது என்பது சீரா 25:24-க்குமுன் பழைய ஏற்பாட்டில் வேறு எங்கும் கூறப்படவில்லை. ஆனால் இறப்போடு வாழ்வு முடிந்துவிடவில்லை என்ற கருத்தைக் காண்கிறோம். சங்கீத ஆசிரியர் 16:9 பகுதியில் ''என் ஆன்மாவைப் பாதாளத்தில் விடமாட்டீர். உம் புனிதர் அழிவு காண விடமாட்டீர்'' என்று மகிழ்கிறார். சங் 49:6-இல் கடவுள் தம்மைப் பாதாளத்திலிருந்து காப்பார் என்று நம்பிக்கை தெரிவிக்கிறார். இத்தகைய கருத்துக்கள் சங்கீதங்களில் பல இடங்களில் காணப்படுகின்றன. இவை திடீரென்று வரும் உரிய காலத்திற்கு முற்பட்ட மரணத்திலிருந்து இறைவன் காப்பதைத்தான் குறிக்கும்.

இருந்தாலும் சங்கீதங்களில், இத்தகைய குறுகிய எல்லையைக் கடந்து வாழ்வைப் பற்றியும் இறப்பைப்பற்றியும் பல இடங்க ளில் காண்கிறோம். உதாரணம் சங் 49. இதைவிடத் தெளிவாக இருப்பது சங் 73:23-இல் காணப்படும் குறிப்பு: ''ஆண்டவரை விட எனக்கு வானுலகிலோ, மண்ணுல கிலோ உள்ளவர் யார்?'' ஆண்டவருடைய வாக்குறுதிகளும் அவருடைய இரக்கப்பெ ருக்கும் முடிவற்றதாக இருந்தால், பற்றுறுதி கொண்ட இஸ்ராயேலன் அவற்றை எந்த விதத்திலாவது அனுபவிக்கும் வாய்ப்புப் பெற வேண்டும். எவ்வாறு அனுபவிப்பது என்பது பற்றி இஸ்ராயேலருடைய முதல் கட்ட நம்பிக்கையில் எதுவும் தெளிவாகக் கூறப்படவில்லை.

சாவைப்பற்றி இஸ்ராயேலர் கொண்டி ருந்த நம்பிக்கையானது பெருமளவு படைப் பைப்பற்றிய அண்ட இதிகாசங்களில் ஊறியி ருந்தது. குழப்பத்திற்கும் அமைதியான ஒழுங்கிற்கும், இருளுக்கும் ஒளிக்கும் நடை பெறும் போர், சாவிற்கும் வாழ்விற்குமான போருமாகும். அக்காலத்திய செமித்திய கதைகளில் வாழ்வும் சாவும் மாறி மாறி வெற்றி கண்டு வந்தன. ஆனால் இஸ்ராயே லர் யாவே மீது கொண்ட நம்பிக்கை எத்த கையதென்றால் இறைவன் வல்லமையால் தீமையை அழிக்க முடியாது அல்லது சாவின் மீது வெற்றிக் கொள்ள முடியாது என்று அவர்களால் நினைத்துக்கூட பார்க்க முடிய வில்லை. கண்டிப்பாக அனைவரையும் தொடும் சாவு இறைவனைத் தொட முடி யாது.

அவர்கள் யாவே, இறுதியில் இருள், தீமை, குழப்பம் அனைத்தின் மீதும் வெற் றிக் கொள்வார் என்று நம்பினர். இந்த நம்பிக்கை யாவே இறப்பின் மீது வெற்றிக் கொள்வார் என்ற நம்பிக்கையாக வளர்ந்தது. இது பழைய ஏற்பாட்டில் சற்றுப் பிற்பட்ட காலத்தில்தான் வளர்ந்தது. தானியேல் ஆக மத்திற்குமுன் பழைய ஏற்பாட்டில் இறந்த வர்களின் உயிர்ப்பு பற்றிய நம்பிக்கை எங் கும் காணப்படவில்லை. கி.மு. 2-ஆம் நூற் றாண்டைச் சார்ந்த தானியேல் ஆகமத்தில் தான் முதலில் காண்கிறோம். ஆன்மாவின் முடிவில்லா வாழ்வைக் கூறும் ஞான ஆக மம், அலக்சாந்திரியா பிரிவைச் சார்ந்த யூதம தத்தின் படைப்பாகும். ஆன்மாவின் முடி வில்லா வாழ்வு யூத நம்பிக்கைக்கும் மனப் பான்மைக்கும் புறம்பானதாகும். இது எப் போதுமே பழைய ஏற்பாட்டிலோ புதிய ஏற்பாட்டிலோ ஒருபோதும் ஏற்றுக் கொள் ளப்படவில்லை.

2. புதிய ஏற்பாடு:- புதிய ஏற்பாடு இறப்பு பாவத்தின் விளைவு, தண்டனை என்று வெளிப்படையாக, தெளிவாகக்கூறுகிறது. உரோ 5:12 தொ என்ற பகுதியில் இதனைத் தெளிவாகக் காண்கிறோம். இங்கு ''ஒரு மனிதனுடைய பாவத்தால் பலருக்கும் சாவு விளைந்தது போல, ஒரே ஒருவருடைய ஏற்புடைய செயலால் எல்லா மனிதருக்கும் வாழ்வு அளிக்கப்பட்டது'' என்று வாசிக்கி றோம். ஆதாமில் எல்லோரும் இறந்தது போல கிறிஸ்துவில் அனைவரும் உயிர் பெறுவர் (1 கொரி 15:22). புதிய ஏற்பாட்டில் வழங்கும் இன்னொரு கருத்து ''கிறிஸ்து தன் இறப்பின் வழியாகச் சாவின் மீது வெற்றி கொண்டார்'' என்பது. சாவுதான் கிறிஸ்து வெற்றிக்கொண்ட இறுதி எதிரி (15:25). அவர் சாவின் வல்லமையை அழித்தார் (2 திமோ 1:10). அவர் சாவைத்தன் கையில் கொண்டிருந்த அலகையைச் சாவின் வழியா கவே அழித்து விட்டார் (எபி 2:14). கிறிஸ்து இயேசுவுக்குள் உயிர்தரும் ஆவியானவரின் சட்டம் என்னைப் பாவம், சாவு என்பவற் றின் சட்டத்தினின்று விடுதலை செய்து விட்டது (உரோ 8:2). கிறிஸ்து இறந்ததும் உயிர்த்ததும் இறந்தோர் மீதும் வாழ்வோர் மீதும் ஆட்சி செலுத்தவே (14:9). இறந்தோரி டமிருந்து உயிர்த்தெழுந்த கிறிஸ்து இனி மேல் இறக்க மாட்டார். இனி அவர் சாவின் ஆட்சிக்கு உட்பட்டவர் அல்லர் (6:9) அனை வருக்காகவும் ஒருவர் இறந்தார் என்றால் அனைவரும் இறந்து போயினர். அவர் அனைவருக்காகவும் உயிர் துறந்ததோ வாழ் கிறவர்கள் இனி தங்களுக்கென வாழாமல், தங்களுக்காக இறந்து உயிர் துறந்தவருக்

கென வாழ வேண்டும் என்பதற்காகவே (2 கொரி 5:14 தொ). கிறிஸ்து சாவை ஏற்கும் அளவுக்குத் தாழ்த்தினார். எனவே கடவுள் மகிமையையும் மேலான பெயரையும், அவருக்கு அளித்தார் (பிலி 2:5 தொ). கிறிஸ்துவின் இறப்பில் பங்கு கொண்டால் கிறிஸ்து சாவின் மீது கொண்ட வெற்றியிலும் பங்கு பெறுவோம். இது உரோ 6:2 தொ என்ற பகுதியில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

கிறிஸ்துவன் கிறிஸ்துவின் மரணத்திற்குள் ஞானஸ்நானம் பெற்று, புதுவாழ்வுக்கு அவரோடு உயிர்த்தெழுந்தவன். அவருடைய மரணத்தில் பங்கு கொண்டால் அவரோடு இணைக்கப்படுவோம் (உரோ 6:5). பழைய மனித இயல்பு கிறிஸ்துவோடு சிலுவையில் அறையுண்டுள்ளது. நாம் கிறிஸ்துவோடு இறந்தோமாயின் அவரோடு வாழ்வோம் (6:8). நாம் பாவ வாழ்க்கையைப் பொறுத்த மட்டில் செத்தவர்கள். கிறிஸ்து இயேசுவுக்குள் கடவுளுக்காக வாழ்கிறவர்கள் (6:11). ஊனியல்புக்கு ஏற்றபடி வாழ்ந்தால் சாவோம். ஆனால் ஆவியானவரின் செயலால், உடலின் செயல்களைச் சாகடித்தால் வாழ்வோம் (8:13). ''நான் கிறிஸ்துவோடு சிலுவையில் அறையப்பட்டிருக்கிறேன். இனி, வாழ்வது நானல்ல. என்னில் வாழ்பவர் கிறிஸ்துவே'' (கலா 2:20) என்று பவுல் கூறுகிறார். ''உலகம் எனக்கு அறையுண்டதாய் இருக்கிறது. நான் உலகத்திற்கு அறையுண்டவனாய் இருக்கிறேன்'' (6:14).

கிறிஸ்துவில் விசுவாசம் ஒருவனை இறப்பினின்று காப்பதில்லை. ஆனால் ஒருவன் எப்போதும் சாகான் என்று உறுதியளிக்கிறது (யோவா 11:26). திவ்ய நற்கருணையில் பங்கு கொள்வதால் ஒருவன் சாகான். முடிவில்லா வாழ்வைப் பெறுவான்'' என்று கூறப்படுகிறது (6:50). முடிவில்லா வாழ்வு என்ற கருத்தோடு இணைந்திருக்கும் மற்றொரு கருத்து ''இரண்டாவது சாவு'' என்பதாகும் (திருவெளி 2:11; 20:6,14; 21:8). இரண்டாவது சாவினால் ஒருவன் முடிவில்லா வாழ்வை இழக்கிறான். கிறிஸ்துவர்கள் இறக்கும் போது கிறிஸ்துவிலே இறக்கிறார்கள் (1 தெச 4:16).

## இறுதி இராவுணவு (LAST SUPPER)

ஒத்தமை நற்செய்திகளும் (மத் 26:17-30; மாற் 14:12-26; லூக் 22:7-38) பவுலும், (1 கொரி 11:23-26) கிறிஸ்து தாம் பாடுபடுவதற்கு முந்தின நாள் இரவு தம்முடைய சீடர்களோடு உண்ட இறுதி உணவின் நிகழ்ச்சியுரைகளை எடுத்துக் கூறுகின்றன. ஆனால் யோவான் இந்த உணவைப்பற்றி குறிப்பிட்டாலும் (13:2 தொ), ஆண்டவரின் இரணவு உணவு ஒரு திருவருட்சாதனமாக ஏற்படுத்தியது பற்றி துல்லியமான குறிப்பு இல்லை. ஆனால் அப்பம் பலுகிய பின் வரும் அறவுரையில் குறிப்பாக (6:51-56) திருவருட் சாதனத்தன்மை எடுத்துக்கூறப்படுகிறது.

இந்த இறுதி உணவு விவரிப்புப் பற்றிய சூழ்நிலை, வார்த்தைகள், நோக்கம், இவற்றைப் பற்றிய கருத்து வேறுபாடுகள் நிலவுதல் தவிர்க்க இயலாத ஒன்று. மறையுண்மை பற்றித் திருச்சபைகளில் நிலவும் மாறுபட்ட கருத்துக்கள், இறுதி இரவுணவுபற்றிய பிரச்சினையை மேலும் சிக்கல் மிக்கதாக்குகின்றன. இதை நாம் கவனத்தில் கொள்ள வேண்டும்.

1. இராவுணவிற்கான சூழ்நிலைகள்:- இராவுணவு பற்றிய பிரச்சினைகள் பாடுகள் பற்றிய காலவரையரையுடன் தொடர்புடையதாக அமைகின்றன. மற்றும் திருச்சபையிலே இருந்து வருகின்ற பாரம்பரியங்களும் நற்செய்தியாளர்கள் நால்வரும் இறுதி இராவுணவானது இயேசு பாடுபட்ட வெள்ளிக்கிழமைக்கு முந்திய வியாழன் இரவு நடந்தது என்று ஒத்துக் கொள்கிறார்கள். யூதர்கள் நேரத்தை கணிப்பிடும் முறையில் அதாவது, சூரியன்மறைவதிலிருந்து அடுத்த சூரியன் மறையும் வரை கணக்கிட்டால், ஒத்தமை நற்செய்தியார்கள் இராவுணவும் பாடுகளும் பாஸ்கா திருவிழா நாளில், அதாவது நீசான் மாதம் 15-ஆம் நாள், நடந்தது என்று கருத இடமிருக்கிறது. இக்கணிப்பின்படி இறுதி இரவுணவு பாஸ்கு உணவாகும். ஆனால் யோவான் தன்னுடைய நற்செய்தியில் வெளிப்படையாகவும, தெளிவாகவும் பாடுகளானது பாஸ்காவிற்கு முந்திய நாள், அதா

வது பாஸ்காவிற்கு தயாரிப்புநாளில், அதாவது நீசான் 14-ஆம் நாள், நடந்தது என்று கூறுகின்றார். அதாவது இயேசு பாடுபட்ட அந்த ஆண்டு பாஸ்கா திருவிழா வெள்ளிக்கிழமை அன்று ஓய்வு நாளன்றே வந்தது (யோவா 18:28; 19:14, 31). எனவே இதை வைத்துப் பார்கின்றபோது இறுதிஇராவுணவு பாஸ்கா உணவாக இருப்பதற்கு வாய்ப்பில்லை. ஏனென்றால் பாஸ்கா செம்மறியானது மதிய வேலைக்குப் பிறகுதான் கொல்லப்பட வேண்டும். அதாவது இயேசு சிலுவையில் தொங்கிக் கொண்டிருந்த சமயம் ஆகும். இது இயேசுவின் மரணத்தையும் பாஸ்குச் செம்மறியையும் இணைக்கும். பவுலின் கருத்துடன் ஒத்து போவதாய் அமைகின்றது (1 கொரி 5:7). விவிலிய ஒத்தமை நற்செய்தி காலக்கணிப்பா அல்லது யோவானின் காலக்கணிப்பா என்ற பிரச்சினை பற்றி அறிஞர்கள் வலுவாக வேறுபடுவர். திருச்சபை வழக்கில் உரோமைக் கத்தோலிக்கத் திருச்சபை நற்கருணையில் புளியாத அப்பத்தைப் பயன்படுத்தி ஒத்தமை நற்செய்திகளுக்கு ஆதரவு அளிக்கிறது. கிரேக்கத் திருச்சபை, சடங்கில் புளித்த அப்பத்தைப் பயன்படுத்தி, யோவான் காலக்கணிப்பைப் பின்பற்றுகிறது.

2. இந்த மாறுபட்ட கருத்துடைய பாரம்பரியங்களை ஒற்றுமைப்படுத்த பல கருதுகோள்கள் எடுத்துக் கூறப்பட்டுள்ளன. சிலரது கருத்துப்படி மாற்கிலுள்ள காலவரைக் குறிப்புக்கள் முரணானவையாக உள்ளன. குறிப்பாக 14:12-இல் ''புளியாத அப்பத் திருவிழாவின் முதல் நாள்'' (நீசான் 15) ''பாஸ்காச் செம்மறியைப் பலியிடும்'' நாளோடு (நீசான் 14) தவறாக ஒன்றாக்கப் பட்டுள்ளது. தொடக்கத்திலே யோவானின் பாரம்பரியத்தை ஒத்திருந்த மாற்கு பாரம்பரியம் பாஸ்கா உணவோடு இறுதி இரவுணவை ஒன்றாக்கிப் பிற்காலத்தில் இடைச் செருகப்பட்டதாகவும், குறைந்த உண்மைத் தன்மையுடையது என்றும் சிலர்கருதுவர். மற்றும் சிலர், இந்த வேறுபாட்டிற்குக் காரணம் அரமேயிக்கிலிருந்து கிரேக்கத்திற்குத் தவறான மொழி பெயர்ப்புதான் என்று கருதுகின்றனர். வேறுசிலர் லூக் 22:15-இல் வரும் குறிப்பை, பாஸ்கு உணவை உட்கொள்ளும் ''நிறைவேறாத ஆவல்'' என்று விளக்கமளித்து, யோவனின் மரபில் சேர்க்கின்றனர். ஆனால் வேறுசிலர், அதே குறிப்பு, இயேசுவின் ஆழ்ந்த ஆவலை எடுத்துக்காட்டும் செமித்திய மொழி மரபே தவிர, நிறைவேறாத ஆவலைக் குறிக்கவில்லை என்று கருதுவர். அறிஞர்கள் கிறிஸ்து இறந்த ஆண்டு பாஸ்கா விழாவானது பரிசேயர், சதுசேயர் இவர்களால் வெவ்வேறு நாட்களில் கொண்டாடப்பட்டது; இதற்குக் காரணம் அந்த ஆண்டு முழுநிலவு பற்றிய கணிப்பு இரு குழுவினரிடையே வேறுபட்டது என்பர்; ஆனால் இதற்குப் போதிய உறுதியான சான்றுகள் இல்லை. இதற்குக் காரணம் காலத்தைக் கணிப்பதில் அவர்களிடம் விளங்கிய அறியாமையும் கிறிஸ்து இறந்த ஆண்டுக்கணிப்பு தெளிவாகவும், குறிப்பாகவும் தெரியாததும் ஆகும். எனவே அறிஞர்கள் ஏதாவது ஒரு நற்செய்தி பாரம்பரியத்தைத் தங்களுக்கு ஆதாரமாக பயன்படுத்திக் கொள்கின்றனர். எனவே பொதுவாக பாஸ்கா உணவையும் இறுதி இரவுணவையும் ஒன்றாகக் கருதும் அறிஞர்கள் அதற்கான விளக்கத்தை ஒத்தமை நற்செய்திகளில் ஆராய்கின்றனர்.

இறுதி இரவுணவுக்குப் பாஸ்கா விளக்கம் அளிப்பதை மறுத்துக் கூறுபவர்கள் பின்வரும் காரணங்களைச் சுட்டிக் காட்டுகின்றனர். அ) பாஸ்கா உணவின் முக்கிய கூறாகிய பாஸ்காச் செம்மறி குறிக்கப்படவே இல்லை. ஆ) புளியாத அப்பத்தைக் குறிக்கும் கலைச் சொல்லுக்குப் பதிலாக, சாதாரண அப்பத்தைக் குறிக்கும் கிரேக்கச் சொல் பயன்பட்டுள்ளது. இ) பாஸ்காச் சடங்கில் வரும் நான்கு இரசக் கிண்ணங்களுக்குப் பதிலாக ஒன்று, அல்லது அதிகம் போனால் இரண்டு மட்டுமே குறிக்கப்பட்டுள்ளன. மேலும் தொடக்கக் காலத்திருச்சபை சடங்குமுறை பாஸ்கா உணவின் சிறப்புக்களைக் கொண்டிருக்கவில்லை. நற்கருணை ஏற்படுத்தப்பட்ட சூழ்நிலை பாஸ்கா உணவானால் அது ஆண்டுக்கு ஒரு முறைதான் கடைப்பிடிக்கப்பட்டிருக்க வேண்டும்.

ஆனால் திருச்சபையின் மரபு வாரம்தோறும், ஏன் நாள்தோறும், நற்கருணையைக் கடைபி டித்துள்ளது.

இந்த காரணங்கள் உறுதியானவை அன்று. நற்செய்தியாளர்களின் நோக்கம் பாஸ்கு உணவை விவரிப்பது அன்று. கிறிஸ்துவின் சிறப்பான சொற்களையும் செயல்களையும் தொகுத்துத் தருவதே, அல்லது அவை திருச்ச பையால் கடைப்பிடிக்கப்பட்ட முறையில் எடுத்துக் கூறுவதே ஆகும். பழைய ஏற்பாட் டிலும் மற்ற யூத,கிரேக்க இலக்கியங்களிலும் புளியாத அப்பத்தைக் குறிக்கும் சொல்லுக் குப்பதிலாகச் சாதாரண அப்பத்தைக் குறிக் கும் சொல் பயன்பட்டுள்ளது என்பது அறி ஞர்களால் தெளிவாக எடுத்துக் காட்டப்பட் டுள்ளது. இறுதிக்கால நோக்கில், வரவிருக் கும் காலத்தில் நிகழவிருக்கும் ''செம்மறி யின் இரவுணவின்'' முன்னோடியாக அல் லது முன் சுவையாக, திருச்சபை ஆண்டவ ரின் இரவுணவை அடிக்கடி கடைப்பிடித்த தாகத் தெரிகிறது.

மற்றுமொரு கருத்து:- இயேசுவும் அவரு டைய சீடர்களும் நண்பர்கள் குழுவாக இருந்தனர். நண்பர்களில் சிலநேரங்களில் ஒன்று கூடித் தங்களுடைய உள்ளார்ந்த அன்பை, சமய உணவைப் பகிர்ந்து கொள்வ தில் வெளிப்படுத்திக் கொண்டனர். இத்த கைய பகிர்ந்து உண்ணுதல், விழாக் காலங்க ளில், குறிப்பாகக் கலியாணம், இறப்பு, விருத்தசேதனம் ஆகிய நாட்களில் இடம் பெற்றது. ஆயினும் இவை சமயம் சார்ந் தவை என்பதற்கு எவ்விதச் சான்றுகளும் இல்லை. இருப்பினும், யூதர்கள் தங்கள் குடும்பங்களில் நண்பர்களுடனோ அல்லது குடும்பத்துடனோ சேர்ந்து உண்ட உணவு எப்போதும் சமயப் பண்புடையது. ஏனெ னில் அப்பம், இரசத்தின்மேல் இறைவ னுக்கு ஆசீர் கூறப்பட்டது.

3. பின்வரும் விளக்கம் சிறிது திருப்தி அளிப்பதாக உள்ளது. (அதையும் சுருக்கமா கவே தருகிறோம்). கிறிஸ்து ''ஜூப்லி''க் காலக்கணிப்பைப் பயன்படுத்தியிருக்க வேண்டும். அதன்படி பாஸ்கு விழா எப்போ தும் புதன் கிழமையன்று கொண்டாடப் பெற்றது. ஆகவே இயேசு தமது இறுதி உணவாகிய பாஸ்கு உணவைச் செவ்வாய்க் கிழமை மாலை உண்டிருக்க வேண்டும். அதிகார வர்க்கத்தைச் சார்ந்த குருக்களும் மற்ற சதுசேயரும் மற்றொரு காலக் கணிப் பைப் பின்பற்றி வெள்ளிக்கிழமை மாலை பாஸ்கு உணவை உண்டிருக்க வேண்டும். அன்றுதான் அவர்கள் பாஸ்கு செம்மறியைக் கொன்றிருக்க வேண்டும். ஆகவேதான் இயேசுவின் இறுதி உணவின்போது செம்ம றியைப் பற்றிய குறிப்பு ஒன்றும் காணப்பட வில்லை. இவ்விரு காலக்கணிப்புகளையும் மனதில் கொண்டால், இறுதி உணவு, பாடு கள் பற்றி ' பல முரண்கள் எளிதில் தீர்கின் றன. ஆனாலும் முற்றிலும் நாம் தெளிவு அடைவதில்லை.

ஆதிக் கிறிஸ்துவமும், நமது வழிபாட்டு முறையும், இறுதி இரவு உணவு பாஸ்கு உணவுதான் என்று ஏற்றுக் கொண்டதாகத் தெரிகிறது. பாஸ்கு உணவு விழா ஆதிக் கிறிஸ்தவர்களிடையே வழக்கில் இருந்தது (அ.ப.12:3; 20:6; 1 கொரி 5:7-8). இன்றும் நமது பூசைப் பலி உணவில் புளியாத அப்பத் தைப் பயன்படுத்துகிறோம். பாஸ்கு உண வுக்கும் நற்கருணைப் பலியுணவுக்கும் உள்ள தொடர்பு லூக் 22:16-ஆல் குறிப்பாக அறியப்படுகிறது. கிறிஸ்துவின் இறப்பு பாஸ்கு விழாவின்போது நடந்ததால் பாஸ்கு விழா பற்றிய கருத்துக்கள் நமது பரிசுத்த வார வழிபாட்டுச் சடங்கிலும், பாஸ்குக் கால வழிபாட்டிலும் பெரிதும் இடம் பெறு கின்றன. இவையாவும், இறுதி இரவு உணவு பாஸ்கு உணவுதான் என்று உறுதியாக நிரூ பிக்காவிட்டாலும், இறுதி இரவு உணவு பாஸ்கு விழாச் சூழ்நிலையில் நடந்தேறியது என்று நாம் ஐயமின்றி அறிய ஏதுவாகுகின் றன.

**இறுதிக்கால இயல்** (ESCHATOLOGY)

இது இறுதி நாட்களில் நடைபெறவுள்ள நிகழ்ச்சிகளைப்பற்றிய விவிலியக் கருத்தா கும் (எபி 1:2; ஏச 2:2-4; ஓசே 3:5). பழைய

ஏற்பாடு சமுதாயத்தின் (இஸ்ராயேல்) எதிர் காலத்தை முக்கியத்துவப்படுத்துகின்றது; புதிய ஏற்பாடு தனிப்பட்டவரின் ஊழி பற்றி கவனம் செலுத்துகின்றது.

I. பழைய ஏற்பாடு

எபிரேயர்கள் யாவேயை வரலாற்றின் ஆண்டவராக வழிபட்டனர். அவர் சீனாய் மலையில் (இஸ்ராயேலை எகிப்தினின்று மீட்ட பின்னர்) யாவே தமது தேர்ந்தெடுக் கப்பட்ட மக்களுடன் உடன்படிக்கையினை ஏற்படுத்தியதோடு நில்லாமல், புதியதாக தோற்றுவிக்கப்பட்ட எபிரேய நாட்டையும் ஆதரித்துக் காத்து வந்தார். ஐந்நூலின் சில நூல்கள் பாலைவனத்தில் திரிந்த போது இறைவன் வழிகாட்டியதை விவரிக்கின்றன; 1-2 சாமுவேல் மற்றும் 1-2 அரசர் நூல்கள் இஸ்ராயேலின் அரசாட்சி முறையுடன் இறைவனின் அணுகுமுறைகளைப் பற்றி விவரிக்கின்றன. பிற்கால இறைவாக்கினர்க ளின் சில நூல்கள் வழக்கமாக ஆண்டவரின் நாள் (அல்லது தீர்ப்பின் நாள்) என்ற கருத் தின் அடிப்படையில் இஸ்ராயேலுடன் எதிர் காலத்தில் இறைவன் கொள்ளும் தொடர்பி னைக் குறிப்பிடுகின்றன.

*1. இறைவாக்கினர்கள்:-* இறைவாக்கினர் களுக்கு ஆண்டவரின் நாளானது நேர்மையா னவர்களுக்கு மீட்பு, நம்பிக்கை மற்றும் நியாயம், உரிமை மெய்ப்பித்தலின் நாளாக வும் நேர்மையற்றவர்களுக்கான தீர்ப்பு மற் றும் அழிவின் நாளாகவும் இருக்கும். இது, உடன்படிக்கையின் ஒப்பந்தங்களைப் பின் பற்றுவோருக்கு ஆசியையும், தங்களது பொறுப்பை புறக்கணிப்பவர்களுக்கு சாபங் களையும் உறுதியளிக்கின்ற மோசேயின் உடன்படிக்கைக்கு இணையானதாகும். பிற் கால வெளிப்பாட்டுக் காட்சியாளர்களைப் போல இல்லாமல், அவரது நாள் வரும் வரை ஆண்டவர் வரலாற்றை தொடர்ந்து ஆள்வார் என்று இறைவாக்கினர்கள் நம்பி னர்.

*அ. நாடுகடத்தலுக்கு முன்னர்:-* ஆண்டவ ரின் நாளைப்பற்றி பேசும் இவ்வாக்கினர்க ளில் கி.மு.8-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஆமோஸ் மற்றும் ஓசேயா ஆகியோரும் இருந்தனர். கடுமையான ஆமோஸ், ஆண்ட வரின் நாளானது அவர்கள் எதிர் பார்ப்பது போல ஒளியாக இல்லாமல், இருளும் சோர் வும் கொண்டதாக இருக்குமென சமாரிய எபிரேயருக்குக் கூறுகிறார் (*ஆமோ 5:18-20*). பாவம் நிறைந்த இஸ்ராயேலுக்கான இறை வனின் இரக்கத்தையும் கருணையினையும் ஆமோஸ் குறைத்துக்கூறினாலும் (ஆமோ *9:11-15*) ஓசேயா பெருமளவில் அதனை ஈடுகட்டுகிறார். இறைவனுடைய தண்ட னையினை ஒதுக்கிவிடாமல், ஓசேயா எப்பி ராயிமின்பால் இறைவனின் அன்பையும் (ஓசே *11:1* தொ), தமது 'மகனை' அழிக்க விருப்பமில்லாமல் இருப்பதையும் (*11:8-9*), அவனை புதுப்பித்து மீண்டும் எழுச்சியூட்ட விரும்பும் இறைவனின் ஆவலையும் (*2:15-23*) அழுத்தமாகக் கூறுகின்றார்.

*ஆ. நாடு கடத்தப்பட்ட நிலையில்:-* 587-586-இல் ஏற்பட்ட எருசலேமின் வீழ்ச்சி மற்றும் தென்னாட்டு அரசினரை பாபிலோ னுக்கு நாடு கடத்தியதைத் தொடர்ந்த, யூதா வின் எதிர்காலமானது இருள் சூழ்ந்ததாய்க் காணப்பட்டது. பாபிலோனுக்கு அருகில் வசித்த நாடு கடத்தப்பட்டவர்களுடன் தம்மை ஒன்றுபடுத்திக் கொண்ட எசக்கி யேல் தீர்ப்பைப்பற்றிய வார்த்தைகளைப் பயன்படுத்தாமல், யூதாவின் புதிய இதயம் மற்றும் கீழ்ப்படிதல் தன்மை பற்றி முன்னறி வித்தார் (எச *36:26-27*). அதன் தந்தையரின் நாட்டிற்கு திரும்புதல் பற்றியும் அவர் குறிப் பிட்டார் (*36:28* தொ). மேலும், வடக்கு மற்றும் தெற்கு அரசுகளின் இணைப்பு (*37:15-27*), இறந்தோரிடமிருந்து அவர்களின் உயிர்ப்பு (*37:1-14*), புதிய ஆலயம் மற்றும் நிலத்தை பகிர்தல் பற்றியும் (*40-48*) அவர் கூறுகிறார். அதே முறையில் இறைவாக்கி னர் ஏசயா அல்லது அவரை தொடர்ந்து வந்தவர், இஸ்ராயேலின் எதிர்கால மீட்சி (ஏச *60-62*) மற்றும் யூதாவின் சமாதான ஆட்சி (*65:13-25*) ஆகியவை பற்றிக் கூறி விட்டு, ''ஆண்டவரை வழிபட அனைத்து மானிடரும்'' வந்து சேரும் புதிய வானம்

மற்றும் புதிய பூமி பற்றிய காட்சியுடன் *(66:22-24)* தனது ஆறுதல் செய்தியை முடிக்கிறார்.

இ. நாடுகடத்தலுக்கு பிற்பட்ட இறைவாக்கினர்கள்:- முந்தைய இறைவாக்கினர்கள் இறை தீர்ப்பை இஸ்ராயேல், யூதா மற்றும் அதனைச் சுற்றியுள்ள நாடுகளுடன் இணைத்தது போல, செப்பனியாவைப் போன்று (செப் *1:14-18; 2:4-15*), இறைவாக்கினர் மலாக்கியாவும், இறை தீர்ப்பானது தீமை புரியும் மற்றும் அகந்தை மிக்க எல்லா நாடுகளையும் உள்ளடக்குமாறு விரிவுபடுத்துகின்றார் (மலா *3:19*). அவரது செய்தி நேர்மையற்றவர்களுக்கு துயரமிக்கதாய் இருந்தது போன்றே, விசுவாசிகளுக்கு எழுச்சியூட்டுவதாகவும், ஊக்கமூட்டுவதாகவும் இருந்தது. நீதிக் கதிரவனின் குணமளிக்கும் சிறகுகளின் பாதுகாப்பை அவர்கள் விரைவில் அனுபவிப்பர் *(3:20)*.

*2.* இறை வெளிப்பாட்டுக் காட்சியாளர்கள்:- நன்மை தீமை ஆகிய வரலாற்றுச் சக்திகள் மீது முழுமையான ஆதிக்கத்தை இறைவன் கொண்டுள்ள வரலாறுபற்றிய இறைவாக்கினர்களின் நோக்கை , திருவெளிப்பாட்டு நோக்கிலிருந்து அறிஞர்கள் வேறுபடுத்துகின்றனர். இறைவாக்கினர்களுடன் சேர்ந்து ஆண்டவரின் பெரும்மாற்றத்தின் நாளினை ஏற்றுக்கொள்ளும் இறைவெளிப்பாட்டுக் காட்சியாளர்கள், மனித செயல்களின்மீது இறைவன் தனது ஆதிக்கத்தை மீண்டும் உறுதிப்படுத்தக்கூடிய ஓர் இறை தலையீட்டை எதிர்பார்த்தனர். தானி 7-12, அரசினையும் தீர்ப்பிடக்கூடிய திறமையினைப் பெறக்கூடிய புனிதர்களுக்கு எதிரான போர் *(7:21-22)*, தன்னை மட்டுமே சிறப்பித்து, தனது பெயரை மட்டுமே புகழக்கூடிய ஒரு அரசனின் தோற்றம் *(11:36-43)*, பெருங்கலாபனை மற்றும் விடுதலை *(12:1-4)* ஆகியவை பற்றி வெளிக்காட்டுகின்றது. மற்றொரு இறைவெளிப்பாட்டு விவரிப்பில் (ஏச *24-27*), இறைவன் உலக அரசனை தண்டிப்பார் *(24:21-23)*, தீமையை குறிப்பிட்டு நிற்கும் பெயர் தெரியாத நகரை அழிப்பார் *(25:1-5)*, இலவியாத்தான் என்னும் மிருகத்தை வெட்டி வீழ்த்துவார் *(27:1)* என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. அதனுடன், அவர் யூதாவிற்கு முழுமையான சமாதானத்தை அளித்து *(26:1-5)*, யாக்கோபின் செல்வத்தை மீட்டுதருவார். இரு ஏற்பாடுகளுக்கும் இடைப்பட்ட காலத்தில் இடைப்பட்ட ஊழிகளால் நிரப்பப்படும்படியாக, இறைவனுக்கும் உலகிற்கும் இடையில் கருதப்பட்ட இடைவெளி விரிவடைந்தது.

II. புதிய ஏற்பாடு

பழைய ஏற்பாட்டில் ஆண்டவரின் நாள் பற்றிய கருத்தை மீண்டும் உறுதிப்படுத்துவதோடல்லாமல், புதிய ஏற்பாடு அதனை விரிவடையவும் செய்கின்றது. ஆண்டவரின் நாள் என்பது இயேசுவின் முதல் மற்றும் இரண்டாவது வருகையை குறிப்பிடுவதாக ஏற்றுக்கொள்ளப்படுகிறது. வருங்கால மீட்பின் நிறைவேறுதலில் இஸ்ராயேல் தன் முதன்மையை இழக்குகிறது, தனி நபரின் ஊழ் முக்கியத்துவம் பெறுகிறது.

இயேசுவும் அப்போஸ்தலரான பவுலும் எதிர்காலம் பற்றிய தங்களுடைய அக்கறையைத் தங்களது படிப்பினை மற்றும் போதனையின் திட்டத்திற்குள் உள்ளடக்கினர். தமது துன்பம் மற்றும் மரணத்திற்குச் சில நாட்கள் முன்னர், ஆலயத்தில் தமது இறுதி அறிவுரைக்குப் பின்னர் ஆலயத்தின் அழிவு பற்றிய சீடர்களின் கேள்விக்கு இயேசு பதிலளிக்கும்போது, ஆலய அழிவு மற்றும் உலக முடிவிற்கு முன்னர் ஒரு சில அடையாளங்கள் தோன்ற வேண்டுமெனக் குறிப்பிடுகின்றார் (மாற் *13*). ஏறக்குறைய கி.பி. 51-இல் எழுதிய இரண்டு திருமுகங்களில், தனது இரண்டாவது வேதபோதகப் பயணத்தின் போது தெசலோனிய விசுவாசிகளுடன் விவாதித்து, இயேசுவின் வருகையைப் பற்றிய சில தவறான கருத்துக்களைத் திருத்துவதற்குப் பவுல் முயல்கிறார். அவர்கள் கிறிஸ்துவின் இரண்டாவது வருகைக்கென ஆவலுடன் காத்திருப்பதைப் பாராட்டுகின்ற அதே வேளையில் (*1* தெச *1:10*), இறந்தோரிடமிருந்து உயிர்த்தெழுந்தவர்களும் இன்னும்

உயிரோடு இருப்பவர்களும் ஒன்றாக இணைந்து ''வான வெளியில்'' (4:17), அறியாத நேரத்தில் (5:2, இரவில் திருடன் வருவதைப்போல) ஆண்டவரை சந்திப்போம் என்று குறிப்பிட வேண்டியது அவசியமெனப் பவுல் கருதுகின்றார். தெசலோனிக்காவில் மதம் மாறியவர்கள், இயேசுவின் உடனடிவருகையின் காரணமாய் இனி உழைக்கத் தேவையில்லை என்று அவரது முதல் திருமுகம் சுட்டுவதாகப் புரிந்து கொண்ட போது, ஒரு சில நிகழ்ச்சிகள் நடப்பதற்கு முன்னர் கிறிஸ்து திரும்பிவரமாட்டார் (2 தெச 2:1-4); எனவே சோம்பேறியாக மாறியுள்ள விசுவாசிகள் மீண்டும் பயனளிக்கும் ஊழியத்தில் ஈடுபட வேண்டும் என்று பவுல் தனது இரண்டாவது திருமுகத்தில் பதிலளிக்கிறார் (3:6-13). தனது பிந்தைய கடிதங்களில் இத்தகைய விளக்கங்களைப்பற்றி அப்போஸ்தலர் குறிப்பிடாவிட்டாலும், வரவிருக்கும் தீர்ப்பின் நாளைப்பற்றி விசுவாசிகளை மீண்டும் மீண்டும் எச்சரிக்கிறார்.

1. நிகழ்கால இறுதிக்கால இயல்:- இயேசுவும் பவுலும் அரசின் நிகழ்கால ஆரம்பத்தையும் அரசின் எதிர்கால முழுமையினையும் வேறுபடுத்துகின்றனர். இயேசுவின் கலிலேய பணிக்கு முன்னர் அவரது அறிவிப்பினை மாற்கு குறிப்பிடுகின்றார், ''காலம் நிறைவேறிற்று, கடவுளின் அரசு நெருங்கி விட்டது, மனந்திரும்பி நற்செய்தியை நம்புங்கள்'' (மாற் 1:14; மத் 4:17). அதில் இறையரசு தொடங்கப்பட்டுவிட்டது; பேய்களின்மீது வெற்றி கொண்டவராக இயேசு காட்டப்படுகிறார். மத்தேயுவின் கருத்துப்படி பல்வேறு புதுமைகளை நிறைவேற்றி (மத் 11:4-5) சாத்தானின் அரசினை வீழ்ச்சியடையச் செய்த இயேசு (12:28) பழைய ஏற்பாட்டு இறைவாக்கினர்களும் நீதிமான்களும் எதிர்பார்த்த நிலையினை உருவாக்கினார் (13:17).

மத்தேயு மற்றும் மாற்கு அரசின் முழுநிறைவு பற்றிய கருத்தினை ஒதுக்காவிட்டாலும் (மத் 19:28; 25:31-46; மாற் 13:3-37), அரசின் எதிர்கால முழுநிறைவினைப் பற்றி மற்ற இரு ஒத்தமை நற்செய்தியாளர்களையும்விட லூக்கா மிகவும் அழுத்திக் கூறுவதாகத் தெரிகிறது. லூக்கா நற்செய்தி கி.பி. 70-க்கு பின்னர் எழுதப்பட்டிருப்பின், மாற் 1:14 (லூக் 4:14-15) மற்ற பகுதிகள் பற்றிய அவரது விளக்கத்தின்படி, கிறிஸ்துவின் வருகை தாமதப்படுவதை ஏற்று அவரது நற்செய்தி அமைவதாக நமக்குத் தோன்றலாம். அதே சமயம், 'இறுதிக்காலத்திலிருந்து' ''இன்றைய நாளுக்கு'' லூக்கா கொண்ட மாற்றமும், சாத்தானின் வீழ்ச்சி மற்றும் சீடர்களின் அதிகாரம் பற்றிய இயேசுவின் வார்த்தைகளும் (10:18-19), இயேசுவின் வருகையின் தாமதத்தால் ஆதித்திருச்சபையில் ஏற்பட்ட குழப்பத்தை நீக்குவதற்காக, இயேசுவின் இறுதிக்காலம் பற்றிய கருத்தினை லூக்கா பயன்படுத்தவில்லை என்பதைத் தெளிவுபடுத்துகின்றது.

ஒத்தமை நற்செயதியாளர்களின் நிகழ்காலம், வருங்காலம் என்னும் தளமட்டமான வேறுபாட்டினை, அப்போஸ்தலரான யோவான் செங்குத்தான இருமைவாதமாக மாற்றுகிறார். அதில் விசுவாசிகள் கீழிலிருந்து மேலாக, அதாவது இறப்பு மற்றும் உலகினின்று வாழ்வு விண்ணகம் செல்லும் விதமாக மாற்றியமைத்திருப்பதாக முதல் நோக்கிலேயே தோன்றுகிறது. விசுவாசிகள் இந்த வாழ்விலேயே முடிவில்லா வாழ்வை கொண்டுள்ளனர் என்னும் இயேசுவின் உறுதிமொழி (யோவா 3:36; 5:24). இறந்தோரினின்று இலாசரை உயிர்ப்பித்ததன் மூலம் உயிர்ப்பின் இன்றைய உண்மை நிலை மற்றும் முடிவில்லா வாழ்வின் தொடர்நிலை ஆகியவற்றை வெளிப்படுத்துதல் (11:25-44), தனது காலத்தவர்கள் ஒளியாகிய தம்மை ஏற்று, ஒளியின் மக்களாக வேண்டும் என்னும் அவசர செய்தி (12:35-36) ஆகியவை இயேசுவின் வாக்குகளில் முனைப்பானவையாகத் தெரிகின்றன. ஆனால் யோவான் தளமட்டமான அல்லது காலம் சார்ந்த இறுதிக்கால இயலை பிளேட்டோ அல்லது ஞானவாதிகளின் செங்குத்தான இருமைவாதமாக மாற்றவில்லை. உண்மையில், தனிநபரின் நிறைவேறிய செங்குத்தான ஊழுக்கு

ஒரு திருத்தமாக அண்டத்தின் எதிர்கால தளமட்டமான நிறைவு தேவைப்படுகிறது, என்று அவர் விளக்குகிறார் (யோவா 12:47-48; 5:28-29). நிகழ்காலம் பற்றிய இதே போன்ற அழுத்தம் பவுலின் நூல்களிலும் காணப்படுகின்றது. 2 கொரி 6:2-இல் ஏச 49:8-யைப் பற்றி விளக்கும்போது 'ஏற்பு டைய காலமும்' 'மீட்பின் நாளும்' வந்து விட்டதாகக் கூறுகின்றார். மற்ற பகுதிகளில், மீட்பு மிக அருகில் இருப்பதால், கிறிஸ் துவை ஏற்றுக்கொள்ளுமாறு தனது சீடர்க ளைத் தூண்டுகிறார் (உரோ 13:11-14; 'மிக அருகில்' பிலி 4:5).

2. எதிர்கால இறுதிக்கால இயல்:- மக்கள் அனைவரின் பாவங்களைத் தம்மீது ஏற்றுக் கொண்டு, மீட்பை நிகழச்செய்த கிறிஸ்து (எபி 9:26), தமது மீட்புப்பணியை முழு மைப்படுத்த மீண்டும் ஒருநாள் வருவார் (எபி 9:28; 10:25; யாக் 5:7-9; 1 பேதுரு 1:5) என்று மற்ற புதிய ஏற்பாட்டுப் பகுதிகள் குறிப்பிடுகின்றன. கிறிஸ்துவின் மீட்பானது தனிநபர் மற்றும் சமுதாயம் ஆகிய இரண் டையும் கொண்டிருப்பதால், உடல் மரணம், ஆன்மாவின் இடைக்காலநிலை, உடலின் உயிர்ப்பு ஆகிய தனி நபரின் முடிவை கிறிஸ்துவின் இரண்டாம் வருகை, தீர்ப்பின் நாள், இறையரசு மற்றும் வானமும் வையக மும் மீண்டும் உருவாதல் ஆகியவற்றை ஒன்றாகக் கொண்ட உலகின் எதிர்கால நிறை வின் ஒரு பகுதியாகக் கருதுவது மிக அவசிய மாகும்.

அ. கிறிஸ்துவின் இரண்டாம் வருகை:- உயிர்த்தபின்னர் நாற்பது நாட்கள் கழித்து விண்ணகம் சென்ற கிறிஸ்து (அ.ப.1:3, 11) அனைவரும் காணும் விதத்தில் (திருவெளி 1:7), வல்லமையோடும் மாட்சியோடும் மீண்டும் வருவதாக வாக்களித்தார் (மத் 24:30; 1 தெச 4:16-17). இயேசுவும் பவுலும் இந்நிகழ்ச்சி விரைவில் நடைபெறப்போவ தாகப் போதித்திருந்தாலும், இரண்டாவது வருகைக்கான குறிப்பிட்ட நாளைப்பற்றிக் கணக்கிடுதலுக்கு எதிராக அவர்கள் எச்சரிக் கின்றனர் (மத் 24:27,36; 1 தெச 5:2).

ஆ. உயிர்ப்பு:- மனித உடலின் உயிர்ப் பைப்பற்றிய பழைய ஏற்பாட்டு உட்கருத் துக்களைப் புதிய ஏற்பாடு தெளிவுபடுத்து கின்றது. ஆண்டவர் இறந்தவருக்கெல்லாம் உயிருள்ளவரின் இறைவனாக உள்ளார் (மத் 22:32) என்னும் இயேசுவின் வார்த்தைகளை நற்செய்தி நூல்கள் கொண்டுள்ளன. மேலும், இயேசு உயிர்ப்பை நம்பினார் என்றும் அவை குறிப்பிடுகின்றன. (இக்கருத்தில், உயிர்த்தெழுதலை மறுக்கும் சதுசேயரிடமி ருந்து விலகி, அவர் பரிசேயருக்கு நெருங்கி யிருந்தார்). பவுலும் உடலின் உயிர்ப்பை ஏற்றுக்கொண்டார். தெசலோனிக்கா மக்க ளுக்கு எழுதும் போது, இறந்து மீண்டும் உயிர்த்து எழுந்ததாக தான் விசுவசிக்கும் இயேசு (1 தெச 4:14), மீண்டும் வரும்போது ''உறங்குபவர்களை'' எழுப்புவார், அதா வது, ஏற்கனவே இறந்தவர்களையும் உயிரு டன் உள்ளவர்களுடன் ஒருங்கு சேர்ப்பார் (4:14-18). விசுவாசிகளின் உயிர்ப்பானது இயேசுவின் உயிர்ப்பிலேயே நங்கூரமிட்டி ருப்பதாக, அவர் கொரிந்தியருக்கு விளக்கு கின்றார். ஏனெனில், இறந்தோரிடமிருந்து உயிர்த்தெழுந்த கிறிஸ்து (1 கொரி 5:4), தாம் மீண்டும் வரும்போது தமக்குரியவர்களை வாழ்விற்கு உயிர்ப்பிப்பார் (15:23).

விசுவாசத்தினாலும், அவருக்கு ஏற்பட்ட கிறிஸ்துவினுடைய காட்சியின் சான்றாலும் உடலின் உயிர்ப்பை ஏற்றுக்கொண்டாலும், மனித உடலின் இறப்பிற்கும், உயிர்த்த உட லுடனான ஆன்மாவின் ஒன்றிப்புக்கும் இடையிலான ஆன்மாவின்நிலை பற்றி பவுல் சிறிதளவே எழுதியுள்ளார். அழிவில் லாமை இறைவனுக்கு மட்டுமே உரியதாக அவர் கருதினார் (1 திமோ 6:16); மனித உயிர்கள் இச்சிறப்பை கொண்டிருப்பதாக அவர் ஒருபோதும் கற்பிக்கவில்லை. உடல ளவில் இறந்தவுடன் மனிதன் வாழும் நிலை யினை இழக்கிறான் என்று சுட்டிக்காட்டா மல் இருப்பதில் உன்னிப்பாக இருந்தாலும், ஆன்மாவிற்கு இயல்பாகவே அழிவில்லை என்னும் பிளேட்டோவின் கருத்திற்கு பவுல் ஆதரவு தரவில்லை. கொரிந்தியருக்கு எழு திய இரண்டாம் திருமுகத்திலும் அழியும்

வாழ்வானது உடனடியாக விண்ணகத்தி லுள்ள ஆண்டவருடனான புதிய வாழ்க்கை யுடன் இணைவதற்காக, உயிர்த்த உடலி னால் உடுத்தபட தான் ஏங்குவதாக அவர் அறிவிக்கிறார் (2 கொரி 5:1-4).

இ. தீர்ப்பு:- நேர்மையானவர்களுக்கு மீட்பு, நேர்மையற்றவர்களுக்கு அழிவு என் னும் இறைவாக்கு வேறுபாட்டைப் புதிய ஏற்பாடு தொடர்ந்து கடைப்பிடிக்கிறது. இயேசு, காட்சி வெளிப்பாட்டின் மனுமகனு டன் தம்மை ஒன்றுபடுத்தி, நாடுகள் இருகு ழுவாகப் பிரிக்கப்படுமாறு அவர்முன் ஒன்று சேர்க்கப்படும் என்று தமது சீடர்களிடம் கூறுகின்றார்; நேர்மையான வாழ்வு வாழ்ந்த வர்கள் முடிவில்லா வாழ்வையும் இறையர சையும் பெறுவர்; நற்செயல் புரியத்தவறிய வர்கள் முடிவில்லா தண்டனையைப் பெறு வர் (மத் 25:31-46). யோவானின் விவரிப்புப் படி ஒருவர் செய்த நன்மை தீமைக்கேற்ப வாழ்வு அல்லது தீர்ப்புக்கேற்ற உயிர்ப்பை இயேசு போதிக்கின்றார் (யோவா 5:28-29; திருவெளி 21:12-15). பவுலும் அதே போன்ற தொரு தீர்ப்பைப் பற்றிக் கற்பிக்கிறார் (உரோ 2:1-11; கலா 6:7-10).

ஈ. எதிர்கால வாழ்வு:- நீதிமான்கள் என கிறிஸ்துவால் தீர்ப்பிடப்பட்டவர்கள் அவ ரோடு முடிவில்லா வாழ்வு வாழ்வார்கள். புதிய ஏற்பாடு ஆசிரியர்கள் முடிவில்லா வாழ்வு பற்றி மட்டுமே கூறிவிட்டு, அதனு டைய இயல்பைப்பற்றி கூறாவிட்டாலும், அது பாவத்தின் ஆதிக்கமற்ற, ஆசிர்வதிக்கப் பட்ட அனுபவமாகும் என்று குறிப்பிடுகின் றனர். இத்தகைய விண்ணக வாழ்வானது உண்ணுதல், குடித்தல், உடலுறவு போன்ற பொதுவான செயல்கள் இல்லாத ஒன்றாகும் என இயேசு குறிப்பிடுகிறார் (மத் 22:30 இ). பவுலும் ஆன்மீக உயிர்த்த உடலை, இன் றைய மனித பருப்பொருளான, மண்சார்ந்த உடலிலிருந்து வேறுபடுத்துவதாகத் தோன் றுகிறது (1 கொரி 15:42-50).

இறைவன் மனிதனை முடிவில்லா துன் பத்திற்கும் நரக தண்டனைக்கும் தீர்ப்பிடுவ தாக விவிலியம் எங்குமே குறிப்பிடாவிட் டாலும், ஒரு சிலர் இறைவனுடன் கொள் ளும் முழுமையான தோழமையினை இழந் துவிடுவதை புதிய ஏற்பாடு சுட்டிக்காட்டு கின்றது. மக்கள் நேர்மையற்றவர்களாக வாழ்வதை விவிலியம் கண்டித்து, அவர் களை மனந்திரும்பி, விசுவாசித்து, நற்செ யல் புரியுமாறு தூண்டுகிறது.

பவுலின் கூற்றின்படி, கிறிஸ்து தமது மீட்புப்பணியை முழுமையாக நிறை வேற்றி, படைத்த ஆண்டவரின் மேலாண் மையை அனைத்துப் படைப்புகளுக்கும் தெளிவுபடுத்திய பின்னர், நிகழ்காலத்தின் இறுதி நாளில், உலக அதிகாரத்தின் அனைத்து வல்லமைகளும் வெற்றிக்கொள் ளப்படும்; இங்கே குறிக்கப்படும் இறுதி வெற்றியானது கடவுளின் அதிகாரத்திற்குச் சாவையும் பாவத்தையும் அடிபணியச் செய் வதாகும் (1 கொரி 15:24-27).

உ. புதிய வையகம்:- பழைய ஏற்பாட்டு, குறிப்பாக ஏசயாவின் உருவகங்களைக் கையாண்டு, வயது முதிர்ந்த அப்போஸ்தல ரான யோவான் பாவம் மற்றும் போரினால் அச்சுறுத்தப்படாத மக்களுடன் இறைவன் நேரடியான தோழமை கொண்டுள்ள புனித நகரமாக புதிய எருசலேமைக் காண்கிறார் (திருவெளி 21:1-2). வீழ்ச்சிக்கு முன்பிருந்த தைப்போன்று வானமும் பூமியும் ஒன்றுபட் டிருப்பதை கண்டபின்னர் (21:2), இறைவ னின் அரியணையிலிருந்து புறப்படும் வாழ் வளிக்கும் நீரினால் ஊட்டப்பெற்று மீண்டும் உருவாகும் ஏதேன் தோட்டத்தினை யோவான் படம்பிடித்து காட்டுகின்றார் (22:1-3). மனித உயிர்கள் முழுமையான மீட்பை இவ்வுலகில் அனுபவிப்பர் என் பதை யோவான் உறுதிப்படுத்துகின்றார்.

### III. இறையியல் சிந்தனைகள்

பத்தொன்பதாம் நூற்றாண்டில் இறுதிக்கா லம் பற்றிய படிப்பினைகள் பெருமளவு ஒதுக்கப்பட்டன. இவ்வுலகைச் சார்ந்த வாழ் வில் ஏற்பட்ட முன்னேற்றத்திற்கு ஆட்பட்டு இவ்வாறு நிகழ்ந்திருக்கலாம். ஆனால்,

இதற்கு நேர்மாறாக 20-ஆம் நூற்றாண்டில் குறிப்பாக பெரிய சமூக எழுச்சிகளின் காலத்தில், இறுதிக்கால இயலின் சில குறிப்பிட்ட கருத்துக்கள், குறிப்பாக பழமைவாத கிறிஸ்தவரிடையே, முக்கிய கவனத்தைப் பெற்றன.

*1. காலத்தின் அடையாளங்கள்:-* இரண்டாவது வருகைக்குமுன் நிகழக்கூடிய அடையாளம் பற்றிய இயேசுவின் விளக்கமானது, எருசலேம் ஆலயத்தின் அழிவுபற்றிய சீடர்களின் கேள்வி, தலைவர்களுக்கு இறைவன் *(மாற் 13:1-4)* அளித்த அடையாளங்களை அவர்கள் விளக்க இயலாமை பற்றிய இயேசுவின் கருத்து *(மத் 16:2-4; லூக் 12:54-56)* ஆகியவற்றின் பின்னனியில் நோக்கப்பட வேண்டும். அவர் இந்த அடையாளங்களை, எதிர் கிறிஸ்து *(மத் 24:4-5)*, போர்கள் மற்றும் போர்களைப் பற்றிய வதந்திகள் *(24:6)*, இன்னல் *(24:10-12.24)*, மற்றும் அண்ட மாற்றங்கள் *(24:29)* என முறையாக வரிசைபடுத்தியிருந்தாலும், இந்நிகழ்ச்சிகள் காலவரிசைப்படி நிகழும் என்று இயேசு குறிப்பிடவில்லை. தமது காலத்தவர் தமது மறுவருகையின் நேரத்தைப்பற்றிக் கணிப்பதை தடுக்கும் அவர் *(24:27.36)*, முதலாம் மற்றும் இரண்டாம் வருகைக்கு இடைப்பட்ட காலமானது இன்னல் மற்றும் அழிவு ஆகியவற்றால் நிரம்பியதாக இருக்கும் எனச் சுட்டிக் காட்டுகிறார். ஆனாலும், நற்செய்தியின் உலகளாவியபோதனையை அனுமதிப்பதற்கும், செயல்படுத்தப்படுவதற்கும், இறைவனின் அருளுக்கு அவர் பெருமளவு இடைவெளி அமைக்கிறார் *(மத் 24:14; உரோ 11:25-26)*.

தெசலோனிக்கிய கிறிஸ்தவர்களை அமைதிப்படுத்துவதற்காக இரண்டாம் வருகைக்கு முந்தைய காலத்தைப்பற்றிய தனது விவரிப்பைப் பவுல் எளிமைப்படுத்துகின்றார். எதிர்கால நிகழ்ச்சிகளை மனிதப்போராட்டத்துடனும் சமய வலிமையினைப்பெற முயற்சி செய்கின்ற அக்கிரமி மனிதனின் தோற்றத்துடனும் அவர் நிறுத்திக் கொள்கிறார் *(2 தெச 2:3-12)*. இயேசுவைப் போன்று பவுலும், விழிப்பாயிருந்து தங்களது நேரத்தை இறைவனின் பணியில் பயன்படுத்துமாறு விசுவாசிகளைத் தூண்டுகிறார்.

*ஆ. திரு ஆயிர ஆண்டுக்கோட்பாடு:-* சாத்தானின் இறுதித் தாக்குதலுக்கு முற்பட்ட கிறிஸ்துவின் மற்றும் உயிர்துறந்த விசுவாசிகளின் ஆயிரம் ஆண்டு ஆட்சி பற்றிக் குறிப்பிடும் திருவெளி *20:1-8*-இல் காணப்படும் தெளிவில்லாத கருத்து கவனம் ஈர்த்துள்ளது. ஆனந்தப்பரவசம், இன்னல்கள், மற்றும் ஆயிரமாண்டு ஆட்சி ஆகியவற்றிடையே எழும் சிக்கலான உறவுமுறை பற்றிய பல் வேறு விளக்கங்கள், பழமையான கிறிஸ்தவர்களைத் தொடர்ந்து பிரித்து வருகின்றன.

காண்க ஆண்டவரின் நாள், ஆயிரமாண்டுக்காலம்.

**இறுதிச்சாவை வருவிக்கும் பாவம்**

பொதுவாக பாவம் நம்மை சாவுக்கு அழைத்துச் செல்கின்றது. புதிய ஏற்பாட்டில் *1 யோவா 5:16-17*-இல் நான்கு முறை 'பாவம்' என்ற சொல் பயன்படுத்தப்பட்டிருக்கின்றது. யோவான் இறுதிச்சாவை வருவிக்காத பாவம், இறுதிச் சாவை வருவிக்கும் பாவம் என்று பிரித்துக் காட்டுகின்றார். கடவுளிடமிருந்து பிறக்காதவர்களே இவ்விரு பாவத்தையும் செய்கின்றார்கள் *(1 யோவா 5:18)*. யோவான் எண்ணப்படி சாவான பாவம் செய்பவர்கள் திருச்சபையினின்று வெளியே தள்ளப்படுவார்கள். உதாரணமாகத் தன் சகோதரனை வெறுக்கிற எவனும் கொலைக்காரன். கொலைகாரன் எவனிடத்திலும் முடிவில்லா வாழ்வு நிலைத்திருப்பதில்லை *(3:15)* அல்லது இயேசுவை மறுக்கச் செய்யும் எந்த ஏவுதலும் கடவுளிடமிருந்து வருவதன்று. எதிர் கிறிஸ்துவை ஏவும் ஆவயே அது. இவர்களை மனம் திரும்பி புத்துணர்வு பெறச் செய்வது அரிது. எனவே இவர்களுக்காக வேண்டுவது தேவையற்றது *(எபி 6:4-6; 10:26-31; 12:15-17)*. காண்க பாவம், பாவிகள்.

**இறுதி விருப்பப்பத்திரம், ஏற்பாடு** *(*TESTAMENT*)*

இது ஒருவர் தனது நிலத்தையோ சொத்தையோ இறுதிவிருப்ப ஆவணத்தின் மூலம்

எழுதிக் கொடுப்பதாகும். இது அவர் இறந்த பின் செயல்படுத்தப்படும் ஈசாக்கின் ஆசீர் வாதம் (*ஆதி 17*); எலியாவின் ஆவியை இரண்டு மடங்கு பெற எலிசாவின் வேண்டு கோள் (*2 அர 2:9*); செலோபகாத்துவின் பெண்கள் (*எண் 36*); இவற்றில் நிலத்தைக் கொடுப்பதைப்பற்றி பேசப்பட்டாலும் மிக வும் குறைந்த குறிப்புகளே காணப்படுகின் றன. இஸ்ராயேலின் சட்ட முறைகளின்படி சொத்துக்கள் பகிர்ந்து கொள்ளப்பட்டிருக்க லாம் ஒரு அறிவாளி அல்லது தத்துவ மேதை யின் ஞான செல்வத்தைக் குறிக்க இதே எபிரேயச் சொல் பயன்படுத்தப்படுகிறது.

புதிய ஏற்பாட்டுக்காலத்தில் தியாதெக்கே என்னும் கிரேக்க வார்த்தை ஏற்பாடு என் னும் பொருள்படும். ஆனால் அரிஸ்தோபா வின் ஒரு பகுதியில் அதே சொல் உடன்ப டிக்கை என்ற பொருளில் வந்துள்ளது. இந்த உடன்படிக்கையில் இருவருக்கிடையே ஒப் பந்தம் செய்யப்பட்டு அதில் ஒருவராவது சத்தியம் செய்வதால் கட்டுப்பட்டிருக்க வேண்டும்.

புதிய ஏற்பாடு, பழைய ஏற்பாட்டைப் பின்பற்றி, உடன்படிக்கை என்ற சொல் லையே பயன்படுத்துகிறது. ஆனால் எபி 9-இல் இந்தச் சொல் விருப்ப ஆவணம் என்ற பொருளில் வந்துள்ளது. இந்த விருப்ப ஆவ ணம் கொடுப்பவரின் இறப்புக்குப் பின்தான் செயல்முறைக்கு வருகின்றது. அதுபோ லவே பழைய ஏற்பாட்டில் பலிப்பொருளின் இறப்பு பழைய உடன்படிக்கையை ஏற்படுத் தியதுபோல், கிறிஸ்துவின் இறப்பு புதிய உடன்படிக்கையைஏற்படுத்தியது. கலா3:15-18-இல் பவுல் இதே ஒப்புமையைப் பயன்ப டுத்துகிறார். ஆபிரகாமோடு செய்த உடன்ப டிக்கை கட்டுப்பாடுடையது. ஆகையால் அவருக்கு பின்வந்த சந்ததியார் மாற்ற முடிய வில்லை. பிற்காலச் சட்டம் என்ன கூறியிருந் தாலும், உடன்படிக்கையின் சந்ததியான கிறிஸ்து வாக்குறுதியைப் பெறுகிறார்.

''ஏற்பாடு, உடன்படிக்கை'' ஆகிய இரண்டு வார்த்தைகளும் புதிய ஏற்பாட்டில் காணப்படுகின்றன. இந்த இரண்டு வார்த் தைகளும் பெறுபவர் மாற்றமுடியாத ஏற் பாட்டைக் குறிக்கின்றன.

## *இறை அரசு*

இறைவனால் ஆளப்படும் அரசு பற்றி விவிலியத்தில் குறிக்கப்பட்டிருந்தாலும் இக் கருத்திலே தொடர்ச்சியான வளர்ச்சியிருந் தது என்பதை மறுக்க முடியாது. ''இறைவ னின் அரசு அருகில் உள்ளது'' இதுவே திருமுழுக்கு யோவான், இயேசு இவ்விரு வர் போதனையின் முக்கிய குறிக்கோள் (*மத் 3:1; 4:17*). இயேசு மண்ணுலகில் நிலை நாட்ட வந்த புலன்களுக்கெட்டாத இந்த உண்மைப்பொருள் எதில் அடங்கி உள்ளது, அதன் இயல்பு என்ன, அதன் வேண்டுகோள் கள் யாவை என்று அறிய நாம் புதிய ஏற்பாட்டைப் புரட்ட வேண்டும். இருப்பி னும் இக்கருத்து பழைய ஏற்பாட்டில் உரு வாகிறது. இறையரசின் வருகைக்காகத் தயா ரித்து வருகையை அறிவித்த பொழுது அதன் முக்கியத் தோற்றங்களைப் பழைய ஏற்பாடு குறிப்பிட்டுள்ளது. இக்கருத்து தொடர்ந்து வளர்ந்து வந்திருக்கிறது.

I. பழைய ஏற்பாடு:- தெய்வீக அரசு என் பது முற்கால மேற்காசிய மதங்களுக்கெல் லாம் பொதுவான கருத்தாகும். இறையர சின் மண்ணுலகப் பிரதிநிதியாகிய மனித அரசனின் புனிதச் சிறப்பை எடுத்துரைக்கப் புராணங்கள் இக்கருத்தைப் பயன்படுத்தின. தெய்வீக ஆட்சியை விளக்கும்பொழுது பழைய ஏற்பாடு, ஒரே கடவுளை வணங்கும் தன்மை, தம் அரசியல் அதிகாரம் பற்றிய கருத்து, இறுதிக்கால மறை உண்மை அனைத்தோடும் ஒரு புதிய பொருளைப் புகுத்தியது.

*1. இஸ்ராயேல் இறைவனின் அரசு:-* யாவே-அரசன் என்ற கருத்து பழைய ஏற் பாட்டின் தொடக்கத்திலிருந்தே உருவாக வில்லை. ஆபிரகாம்; ஈசாக், யாக்கோபின் கடவுள், மோசேக்குத் தம் பெயரை வெளியி டும்போதும் கூட அரச குணங்களைக் கொண்டிருக்கவில்லை (*யாத் 3*). ஆனால்

கானான் நாட்டில் இஸ்ராயேலை நிலை நிறுத்தியபின் யாவேயினுடைய தனித் தன்மையையும் அவர் மக்களின் நிலையையும் சுட்டிக்காட்டும் வெளியடையாளமாக இக்க ருத்து தோன்றுகிறது. யாவே இஸ்ராயேல் மேல் ஆட்சி செய்கின்றார் (நீதி 8:23; 1 சாமு 8:7). இறைவழிபாடு, விண்ணுலகில் அவரு டைய வான தூதர்கள் செய்வதுபோல மண் ணுலகிலும் அவர் மக்கள் நிறைவேற்றும் ஒரு பணி; வழிபாட்டுப் பாடல்களிலும் (சங் 24:7-10), இறைவாக்கினரின் கவித்தத்துவத்தி லும் (ஏச 6:1-5) இந்த அடிப்படைக் கருத் தைக் காணலாம். இதன் பல்வேறு பண்பு களை விவிலிய ஆசிரியர்கள் விவரிக்கின்ற னர். விண்ணுலகிலும் (சங் 11:4; 103:19), மண்ணுலகிலும் (47:3) அவர் படைத்த முழு உலகிலும் (93:1 தொ; 95:3 தொ.) யாவே என்றென்றும் ஆட்சி புரிகின்றார் (யாத் 15:9). எல்லா நாடுகள் மேலும் அரசாட்சி நடத்து கின்றார் (எரே 10:7.10). இருப்பினும் அவை களுக்குள் ஒரு நாட்டை தனித்த விதமாகத் தம் சொந்த ஆட்சிப் பகுதியாகத் தேர்ந்தெ டுத்துள்ளார். அதுதான் இஸராயேல். அதைத் தம் உடன்படிக்கையால் குருத்துவ அரசாக வும் புனிதப்படுத்துவதற்காக ஒதுக்கப்பட்ட நாடாகவும் ஆக்கியுள்ளார் (யாத் 19:6). எனவே யாவேயின் ஆட்சி தமது அரசாகிய இஸ்ராயேலில் தனிப்பட்ட முறையில் வெளியாகிறது. எருசலேமில் தன் மக்கள் நடுவே (சங் 48:3; எரே 8:19) அந்தப் பேரரசன் இருக்கின்றார். அங்கிருந்து தன் மக்களுக்கு ஆசி வழங்குகின்றார் (சங் 134:3). ஓர் ஆயன் தன் மந்தையை நடத்துவதுபோல (சங் 80; காண் எச 34) வழிநடத்துகின்றார், காப்பாற் றுகின்றார், ஒன்று சேர்க்கின்றார். இவ்வாறு உடன் படிக்கைக் கோட்பாடு தெய்வீக அர சுக்கருத்து வடிவில் சிறந்த முறையில் உரு வெடுக்கின்றது. அதற்கு முழுவதுமே ஒரு புதுப்பொருளை அளிக்கிறது. சேனைகளின் தலைவராகிய (ஏச 6:5) யாவே உலகத்தின் போக்கைக் கட்டுப்படுத்துவதால் அவர் அதை ஆட்சிபுரிகின்றார். அதன் நிகழ்ச்சி களை வழிமுறைப்படுத்துபவர் அவரே. ஏனெனில் அவர்தான் அவைகளை வழிநடத் திச் செல்கின்றார், அவைகள் மேல் தீர்ப்பிடு கின்றார். யாவே உலகின் அரசர் என்ற உண்மை அவருடைய மக்கள் அனுசரிக்கும் ஒழுங்குமுறையிலிருந்து தெரியவேண்டும், அவரது ஆட்சி வெளிப்படவேண்டும் என்று விரும்புகின்றார். இந்த முதல் வேண்டு கோள் அவர் ஆட்சிக்கு அரசியல் வடிவம் கொடுக்கவில்லை, ஒழுக்க நெறிவடிவம் கொடுக்கிறது. இது தெய்வீக அரசைச் சார்ந்த பழைய கருத்துக்களையெல்லாம் துண்டித்து விடுகிறது.

2. இறை அரசும் இஸ்ராயேலின் அரசுத் தன்மையும்:- இருப்பினும் இஸ்ராயேலான இறையரசு ஓர் அரசியல் அமைப்பைப் பெற் றுள்ளது. அது காலப்போக்கோடு வளர்ச்சிய டைகிறது. ஆனால் மக்கள் தமக்கென ஓர் அரசனை ஏற்கும்பொழுது அந்த மனித நிறு வனம் யாவேயின் அரசுக்குக் கட்டுப்பட்ட தாய் இருக்க வேண்டும். உடன்படிக்கையின் அடிப்படையில் அமைக்கப்பட்ட இறை யாட்சியின் ஓர் அங்கமாக அமைய வேண் டும். இவ்வுண்மை ஒரு பக்கம் முடியரசுக்கு எதிராக அப்போது எழுந்த எதிர்ப்பை விளக் குகிறது, (1 சாமு 8:1-7.19தொ); மற்றொரு பக்கம் இறைவன் பெயரால் வந்த தூதர்கள், சவுல் (10:24), தாவீது (16:12), இறுதியாக தாவீது அரச மரபினர் அனைவரும் யாவே யால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் எனத் தெரிவிக்கின்றனர். இப்போதிலிருந்து இறை யரசு பக்கத்திலுள்ள பிற மக்களைப்போல அகில உலக அரசியலில் ஈடுபட்டுப் பூவுலக ஆதரவுக்காக ஒரு மனித அரசாட்சியைக் கொண்டிருந்தது. சந்தேகமின்றி இஸ்ராயே லின் அரசர்கள் சாதாரண அரசுத்தன்மையை நிலைநாட்டவில்லை. யாவேயிடம் இருந்து தங்கள் அரசுத்தன்மையைப் பெறுகின்றனர். அவருக்கு அவர்கள் பணிபுரியவேண்டும் (2 நாள் 13:8; காண் 1 நாள் 28:5). தாவீதின் வழித்தோன்றல்களைத் தன் புதல்வர்களாக யாவே கருதுகின்றார் (2 சாமு 7:14; சங் 2:7). இருப்பினும் முடியரசின் செயல் முறை தெளிவின்றித் துலங்குகின்றது. இறை ஆட்சி யின் குறிக்கோள் அரசர்களின் இவ்வுலகப் பேராசையோடு ஒன்றுபடவில்லை. சிறப் பாக அவர்கள் இறைச்சட்டத்தைக் கண்டுண

ரத் தவறினர். எனவே இறைவாக்கினர், அரசியல் திட்டம் திருமறைத் திட்டத்திற்குக் கட்டுப்பட்டிருக்க வேண்டுமென ஓயாது நினைவூட்டுகின்றனர். அரசர்களின் பாவத்திற்காக அவர்களைக் குறை கூறுகின்றனர். வரவிருக்கும் தண்டனைகளை எடுத்துரைக்கின்றனர் (எடுத்துக்காட்டாக தாவீது 2 சாமு 12; 24:10-17). விசுவாசமுள்ள யூதர்களுக்குப் பெரிய குழப்பத்தை இறுதியாகக் கொணர்ந்து எருசலேமின் அழிவுநாள் இந்த அரசுச் செயல்முறையை முடிவுறச் செய்யும் வரை இஸ்ராயேல் அரசு வரலாறு கண்ணீரிலும் குருதியிலும் எழுதப்படுகின்றது (சங் 89:39-46). மானிட அரசர்கள் தாம் அதிகாரத்தைப் பெற்ற அரசரிடமிருந்து பிரிந்துகொண்டதே தாவீது அரச மரபின் அழிவிற்கு மூல காரணம் (காண் எரே 10:21).

3. யாவேயின் இறுதி ஆட்சிக்காக எதிர்பார்த்தல்:- இஸ்ராயேலின் அரசு வீழ்கின்ற காலத்தில் அந்நாட்டின் சமயத் தலைவர்கள் முடியாட்சிக் காலத்தைத் தாண்டி, தாங்கள் மீளவும் நிலைநாட்ட விரும்பிய முன்னைய மூல இறையாட்சியை (காண் யாத் 19;6) எதிர்நோக்கியிருக்கின்றனர். இறுதிக்காலத்தில் இஸ்ராயேல் தம் சொந்த இயல்புகளைத் திரும்பப் பெறும் என்று இறைவாக்கினர் அறிவிக்கின்றனர். உறுதியாக அவர்கள் தங்கள் வாக்குறுதிகளுள் வருங்கால அரசன், மெசியா, தாவீதின் புதல்வனுக்கும் இடம் கொடுக்கின்றனர். சிறப்பாக நாடு கடத்தலின் இறுதிக்காலத்திலிருந்து யாவேயின் அரசுக்கருத்து மீண்டும் மிக முக்கியத்துவத்தைப் பெறுகிறது. யாவே ஓர் ஆயனைப்போலத் தம் மந்தைகளைக் காப்பாற்ற, மீண்டும் ஒன்று சேர்க்க, தம் நாட்டிற்கு வழிநடத்தத் தொடங்குகிறார் (மீக் 2:13; எச 34:11...; ஏச 40:9தொ) எருசலேமில் அறிவிக்கப்படும் ஒப்பற்ற நற்செய்தி: ''உங்கள் கடவுள் ஆட்சி புரிகின்றார்'', என்பதாகும் (ஏச 52:7; காண் செப் 3:14 தொ). மேலும் இந்த ஆட்சி படிப்படியாக அகில உலகிற்கும் பரவுவதை அங்குக் காணலாம். எல்லா இடங்களிலிருந்தும் யாவே அரசரை வழிபட மக்கள் எருசலேமுக்கு வருவார்கள் (செப் 14:9; ஏச 24:23).

இந்த ஒளிமயமான வாக்குறுதிகள் ஒரு வழிபாட்டுச் சூழ்நிலைக்கு மாற்றப்பட்டு சில பழைய சங்கீதங்களின் கருத்துக்களை இசைத்து நாடுகடத்தலுக்குப் பின்னெழுந்த பாடல்கள் இறுதிக்கால இறையாட்சியை முன்னதாகவே இசை முழக்கம் செய்கின்றன. அந்த உலகலாவிய பேராட்சி தெய்வீகத் தீர்ப்பினால் வெளியிடப்பட்டு எல்லா நாடுகளிலும் பறைசாற்றப்படுகிறது, கண்டு உணரப்படுகிறது (சங் 47; 96-99; காண் 145; 11தொ). இறுதியாக அந்தியோக்கு எப்பிபானின் துன்புறுத்தல் காலத்தில் தானியேலின் திருவெளிப்பாடு பெருமிதத்தோடு இறைவாக்கினரின் வாக்குறுதிகளைப் புதுப்பிக்கிறது. இறைவனின் யாவும் கடந்த ஆட்சி மனிதப் பேரரசுகளின் அழிவின் மேல் நிலைநாட்டப்பெறும் (தானி 2:44). இக்கருத்தை விளக்க இவ்வுலகில் அரசியல் அதிகாரங்களைச் சுட்டிக்காட்டும் மிருகச் சின்னங்களுக்கு மாறாக மனுமகன் விண்ணக மேகங்களில் வருகிறார் என்ற சின்னம் பயன்படுகிறது (7). அவர் வருகை தீர்ப்போடு வரும், அதன்பிறகு அரசுரிமை மனுமகனுக்கும் இறைவனின் புனித மக்களுக்கும் என்றென்றும் வழங்கப்படும் (7:14.27). இவ்வாறு யாவேயின் ஆட்சி மக்களையே உறைவிடமாகக்கொண்ட தெளிவான அரசாய்த் துலங்கும் (காண் யாத் 19;6). ஆனால் அந்த அரசு இனிமேல் இந்த உலகத்தைச் சார்ந்ததாக இராது. அத்தகைய வாக்குறுதியைத்தான் ஞானாகமம் எதிரொலிக்கிறது. தீர்ப்புக்குப் பின் நீதிமான்கள் நாடுகளுக்குக் கட்டளையிடுவர், மக்களை ஆண்டு வருவர். ஆண்டவர் என்றென்றும் அவர்களை ஆண்டு நடத்துவார் (ஞான 4:8).

திருமுறைப் புற இலக்கியங்கள் காட்டுவதைப்போல, பல நூற்றாண்டுகளாகத் தயாரித்தபின் யூத மக்கள் இனிமேல் அந்த ஆட்சியை எதிர்நோக்கியே வாழ்வர். அடிக்கடி அந்த எதிர்நோக்கு அரசியல் வடிவத்தில் வெளிப்படுகிறது. மெசியா தாவீதின் அரசை மீண்டும் நிலைநாட்டுவார் என அவர்கள் எதிர்பார்க்கின்றனர். ஆனால் இறை நெறியில் முதிர்ந்த மக்கள் இங்கு உள்ளார்ந்த

உண்மையைக் கண்டுணர அறிவர். யூத மறை வல்லுநரின் கூற்றுப்படி, சட்டத்திற்குச் கீழ்ப் படிந்துதான் நீதிமான் விண்ணக அரசின் ஊழியத்தை ஏற்றுக் கொள்கின்றார். அரசின் நற்செய்திக்குச் செவிமடுக்க வேண்டிய நம் பிக்கை அத்தகையது. வலிமை மிக்க ஆனால் இரு பொருள்படும் இத்தகைய நம்பிக்கைக்கு அரசு பற்றிய நற்செய்தி பதில் அளிக்கும்.

II. புதிய ஏற்பாடு

1. சொல்:- மத்தேயு நற்செய்தி இறையரசு என்ற சொல்லை நான்கு முறைதான் பயன்ப டுத்தப்படுகிறது *(12:28; 19:24; 21:31-43)*. இதற்குப் பதிலாக விண்ணரசு என்ற சொல்லை முப்பத்து நான்கு முறைப் பயன் படுத்துகிறது. விண்ணரசு என்ற சொல் புதிய ஏற்பாட்டில் மற்ற நூல்களில் காணப்பட வில்லை. இது அரமேயிக் பதத்தின் சொற் பொருள் மொழிபெயர்ப்பாகும். தனது யூத-கிறிஸ்தவர்களின் உணர்வுகளுக்கு மதிப்ப ளித்து மத்தேயு இதைப் பயன்படுத்தியிருக்க வேண்டும்.

-மற்ற புதிய ஏற்பாட்டு நூல்களில் இறைய ரசு என்ற சொல்லே பயன்பட்டுள்ளது. மாற் கில் பதினான்கு தடவையும், லூக்கில் இரு பத்திரண்டு தடவையும் யோவானில் இருத டவையும், அப்போஸ்தலர்பணியில் ஆறு தடவையும் பவுலின் திருமுகங்களில் எட்டுத் தடவையும், திருவெளிப்பாட்டில் ஒரு தட வையும் இச்சொல்பயன்பட்டுள்ளது. இந் நூல்களில் இச்சொல்லுக்கு இணையான மற்ற சொற்களும் இறையரசை உணர்த்தப் பயன்பட்டுள்ளன.

2. இறையரசின் நற்செய்தி:-

அ) இயேசு தம் போதனையில் இறையர சிற்கு முதலிடம் கொடுக்கின்றார். கலிலே யாவின் சிறு நகரங்களில் அவர் அறிவித்தது அரசின் நற்செய்தியாகும் *(மத் 4:23; 9:35)*. ''இறையரசு'' என்று மாற்கு எழுதுகின்றார். யூதமறை வல்லுநர் மொழிக்கு உடன்பட்டு, ''விண்ணரசு'' என்று மத்தேயு எழுதுகின் றார். இந்த இரண்டு சொற்றொடர்களும் ஒரே பொருள் கொண்டவை. போதனை யைத் தொடர்ந்து புதுமைகளும் அரசின் முன்னிலைக்கு அடையாளங்களாகத் துவங் குகின்றன. அதன் பொருளை அவைகள் நம்மை உணரவைக்கின்றன. அதன் வருகை யோடு பாவம், சாவு ஆகியவை மூலம் அலகை மனிதன் மேல் கொண்ட ஆட்சி முடிவிற்கு வருகின்றது. ''இறைவனின் வல் லமையால் நான் தீய ஆவிகளை ஓட்டுகின் றேன் என்றால் இறையரசு உங்கள் மத்தியில் வந்துள்ளது'' *(மத் 12:28)*. ஓர் உறுதியான முடிவு இருக்க வேண்டியது இதன் விளைவு. இயேசுவின் சீடராக அரசின் வேண்டு கோளை ஏற்கக் கட்டாயம் மனம் திரும்ப வேண்டும்.

ஆ) அப்போஸ்தலர்கள் தம் தலைவரோடு வாழ்ந்ததிலிருந்து அரசின் நற்செய்தியைப் பறைசாற்றும் பணியை, ஏற்கின்றனர் *(மத் 10:7)*. ஐம்பதாம் நாள் விழாவிற்குப் பின்னர், புனித பவுலின் போதனையிலும் கூட, அரசு நற்செய்தி போதனையின் மையக் கருத்தாக விளங்குகிறது *(அ.ப. 19:8; 20:25; 28:23.31)*. இறை அரசில் நுழைவதற்காகவே மனம் திரும்பிய விசுவாசிகள் எண்ணற்ற இன்னல் களை அனுபவிக்கின்றனர் *(14:22)*. ஏனெ னில் இறைவன் தன் மாட்சிமைக்கும் அரசுக் கும் அவர்களை அழைத்துள்ளார் *(1 தெச 2:12)*. இனிமேல் நற்செய்தியின் முழுப்பொ ருள் அழைப்புக்கும் இறையரசோடு இயேசு வின் பெயரை மட்டும்தான் சேர்த்துக் கொள் ளவேண்டும்; அரசை அடைய இயேசுவில் விசுவாசம் கொள்ள வேண்டும் *(அ.ப. 8:12)*.

3. இறையரசின் மறையுண்மைகள்:- இறையரசு புலனறிவைக் கடந்த உண்மை. அதன் இயல்பை இயேசு மட்டும்தான் தெரிவிக்க முடியும். இருப்பினும் சிறியோ ருக்கும் தாழ்ச்சியுள்ளோருக்கும் மட்டுமே அவர் அதை வெளிப்படுத்துகிறார். இவ்வு லக விவேகிகளுக்கும் அறிவாளிகளுக்கு மன்று *(மத் 11:25)*. வெளிமக்களுக்கன்று, ஆனால் தன் சீடர்களுக்கு அறிவிக்கின்றார். வெளிமக்களுக்குப் புரியாத புதிராக இருக் கின்றது *(மாற் 4:11)*. நற்செய்திகளைக் கற்பிக்

கும் முறை, குறிப்பாக உவமைகளில், அரசின் மறையுண்மைகளைப் படிப்படியாக வெளிப்படுத்துதலிலே பெரும்பாலும் அடங்கியுள்ளது. உயிர்ப்புக்குப் பிறகு இந்தக் கற்பிக்கும் முறை முழுமை பெறும் *(அ.ப. 1:3)*; தூய ஆவியின் செயல் இதை முடிவுக்குக் கொண்டு வரும் *(காண்க: யோவா 14:26; 16:13தொ)*.

அ) அரசின் முரண்பாடுகள்:- யூதத்துவம் பழைய ஏற்பாட்டின் இறுதிக்காலம் பற்றிய வாக்குரைகளைச் சொல்லுக்குச் சொல்லோடு கூடிய பொருளை எடுத்துக்கொண்டு அரசின் வருகை வியப்புத் தருவதாயும் உடனடியாக வருவதாயும் வெளிப்படுத்தியது. இயேசு அதை முழுதும் வேறு முறையில் புரிந்து கொள்கின்றார். இறை வார்த்தை மனிதர்களுக்கு உரைக்கப்பட்டபோது அரசு வருகிறது. அத்தகைய விதை நிலத்தில் விதைக்கப்பட்டு வளர வேண்டும் *(மாற் 4:26-29)*, மாவில் புதையுண்ட புளிக்காரம் போல உலகை மேலுயர்த்தும் *(மத் 13:33)*. அதன் தாழ்ச்சியான தொடக்கம் இவ்வாறு அதற்கு வாக்களிக்கப்பட்ட வருங்காலத்திற்கு வேறுபாடாக உள்ளது. உண்மையில் இயேசு பாலஸ்தீனத்தைச் சார்ந்த யூதர்களுக்கு மட்டும் அவ்வார்த்தையை உரைக்கவில்லை. அவர்களிலும் ஒரு சிறிய மந்தையான சீடருக்கு அரசு அளிக்கப்படுகிறது *(லூக் 12:32)*. ஆனால் அதே அரசு வானகத்துப் பறவைகளெல்லாம் தங்கும் ஒரு பெரிய மரமாக மாற வேண்டும் *(மத் 13:31தொ)*. அது எல்லா நாடுகளையும் தன்னுள் ஏற்றுக் கொள்ளும். ஏனெனில் அது எந்த ஒரு நாட்டுக்கும், யூத மக்களுக்கும்கூட, கட்டுப்பட்டதன்று. இந்த உலகில் எந்த அளவிற்கு மனிதர்கள் இறைவாக்கை ஏற்கின்றனரோ அந்த அளவிற்கு *(மத் 13:23)* அது கண்ணுக்குப் புலப்படாத உண்மைப் பொருளாகத் துலங்கக் கூடும். உண்மையில் அதன் வருகை எந்தவித உலக வெளித் தோற்றத்தினாலும் கண்டுணரும்படி அமையவில்லை *(லூக் 17:20 தொ)*. இருப்பினும் ஒரு நிலத்தில் கோதுமை களைளுடன் கலந்திருப்பது போல அது வெளித் தோற்றத்தில் காணப்படுகிறது *(மத் 13:24)*. இதைப்பெற்ற சிறிய மந்தை *(லூக் 12:32)* பேதுருவின்மேல் கட்டப்பட்ட திருச்சபை, புதிய இஸ்ராயேல் என்ற மண்ணுலக உருவத்தோடு தோன்றுகிறது. விண்ணக அமைப்பு மனித ஆட்சியைப் போல் இல்லாதிருப்பதை கவனிக்க வேண்டும். மக்கள் தம்மை அரசனாக்க விரும்பிய பொழுது இயேசு தம்மையே மறைத்துக் கொள்கின்றார் *(யோவா 6:15)*. முழுவதுமே தனிப்பட்ட பொருளில், மெசியா என்ற பெயரால் தன்னை அழைக்க அனுமதிக்கின்றார்.

ஆ) அரசின் வளர்ச்சிப் பருவங்கள்:- அரசு வளர்ச்சி பெறுகிறது என்று எண்ணும்பொழுது அது காலக் கணிப்பையும் மனதிற் கொண்டிருக்க வேண்டும். ஒரு பெருளில், காலம் உறுதியாக நிறைவு பெற்றுவிட்டது. அரசு இங்கே இருக்கிறது. திருமுழுக்கு யோவானிலிருந்து அரசின் சகாப்தம் தொடங்கியுள்ளது *(மத் 11:12 தொ)*. இது திருமணத்தின் காலம் *(மாற் 2:19; காண் யோவா 2:1-11)*. அறுவடையின் காலம் *(மத் 9:37 தொ; காண் யோவா 4:35)*. ஆனால் வளர்ச்சியின் உவமைகள் (விதை, கடுகு விதை, புளிக்காரம், களையும் நல்ல கோதுமையும், மீன்; காண் மத் 13) அரசின் வரலாற்றுத் தொடக்கத்திற்கும் அதன் முழு நிறைவுக்கும் இடையே உள்ள தாமதத்தைக் குறிப்பிடுகின்றன. இயேசுவின் உயிர்ப்பிற்குப்பின் மாட்சிமையில் அவர் புகுதலும், நீதிபதியாகத் திரும்ப வருதலும் ஆகிய இவ்விரண்டின் பிரிவு *(அ.ப. 1:9 தொ)* இந்த இடைக்காலத்தின் தன்மையை வெளிக்காட்டி முடிவுறும். இதுவே சாட்சியின் காலமாக இருக்கும் *(அ.ப. 1:8; யோவா 15:27)*. இதுவே திருச்சயையின் காலம். இக் காலத்தின் இறுதியில் தன் முழுநிறைவில் அரசு வந்து சேரும் *(காண் லூக் 21:31)*. கடந்து செல்லல் நிறைவேறும் *(லூக் 21:14 தொ)*. இதுவே இறுதிக்காலத்தின் விருந்து *(லூக் 21:17)*. அங்கே எல்லா இடங்களிலிருந்தும் அழைக்கப்பட்டோர் குல முதியவர்களோடு விழாக் கொண்டாடுவார்கள் *(லூக் 13:28 தொ; காண் 14:15; மத் 22:2-10; 25:10)*. இந்த அரசின் தொடக்கத்திலிருந்து முடிவு வரை,

அவர்களின் உடல் உயிர்ப்பும் மாற்றுருவும் பெற்ற பிறகு (1 கொரி 15:50; காண் 6:10; கலா 5:21; எபே 5:5) விசுவாசிகள் அதைத் தம்முரிமையாக்கிக் கொள்ள அழைப்புப் பெறுகின்றனர் (மத் 25:34). இதற்கிடையே, தம் செபங்களால் அதன் வருகைக்காகத் தொழுது வேண்டுகின்றனர் ''உமது அரசு வருக'' (மத் 6:10இ)

இ. அரசில் நுழைய நிபந்தனைகள்:- அரசு இறைவனின் தலைசிறந்த கொடை, உண்மையான வெகுமதி, தன் உடைமையெல்லாம் விற்று அக்கொடையைப் பெற வேண்டும் (மத் 13:44 தொ), ஆனால் அதைப் பெறுவதற்கு, சில நிபந்தனைகளை நிறைவேற்ற வேண்டும். அது, நீதியின்படி கருதப்படும் வெகுமதியன்று; இறைவன் தன் திராட்சைத் தோட்டத்தில் மனிதர்களைத் தாமாகவே வேலைக்கு அமர்த்துகிறார், தாம் விரும்பியதைத் வேலையாட்களுக்குக் கொடுக்கின்றார் (மத் 20:1-6). இருந்தபோதிலும், எல்லாம் இறையருளாக இருந்தால், மனிதன், அந்த அருளுக்குப் பதில் அளிக்க வேண்டும் ''தீமையில் வண்மை பெற்ற பாவிகள்'' கிறிஸ்துவுக்கும் இறைவனுக்கும் உரிய அரசில் உரிமைப் பேறு அடையார். அரசைத் தமதாக்கிக் கொள்ளமாட்டார்கள் (1 கொரி 6:9தொ; கலா 5:21; எபே 5:5; காண் திருவெளி 22:14 தொ). ஆன்மாவில் ஏழ்மை (மத் 5:3), குழந்தைபோன்ற மனப்பாங்கு (18:1-4; 19:14), இறைவனுடைய அரசையும் அவருடைய ஏற்புடையதையும் முதலில் தேடுதல், அரசுக்கும் அதன் நீதிக்காகவும் முயற்சித் தேட்டம் (6:33), இடுக்கண்களை ஏற்றுக் கொள்ளல் (5:10; அ.ப. 14:22; 2 தெச 1:5), தன் உடைமையெல்லாம் துறத்தல் (மத் 13:14 தொ; காண் 19:23), பரிசேயர்களை விடச் சிறந்த ஒழுக்கம் (5:20), சுருக்கமாக, தந்தையின் விருப்பத்தை நிறைவேற்றல் (7:21), சிறப்பாக சகோதர அன்புச் செயலை நிறைவேற்றுதல் (25:34); அரசில் நுழைந்து இறுதியில் அதைத் தன் உரிமையாக்கிக் கொள்ள விரும்புகிறவரிடம் இவை அனைத்தும் கோரப்படுகின்றன. ஏனெனில் எல்லோரும் அழைக்கப்பட்டிருந்தாலும் எல்லோரும் தேர்ந்தெடுக்கப்பட மாட்டார்கள். திருமண உடையில்லா விருந்தினன் வெளியே அனுப்பப்படுவான் (22:11-14) தொடக்கத்தில் மனத் திருப்பம் தேவை (காண் 18:3). இந்தப் புதிய பிறப்பு இல்லையெனில் இறை அரசைக் காண முடியாது (யோவா 3:3 தொ). பழைய ஏற்பாட்டுக் காலத்தைப் போல யூத மக்களினத்தைச் சேர்ந்தவர்களாய் இருக்க வேண்டுமென்பது இறையரசுக்கு இனிமேல் முக்கிய நிபந்தனை அன்று. ''விண்ணக அரசின் விருந்தில் பங்குபெற கிழக்கிலிருந்தும் மேற்கிலிருந்தும் அநேகர் வருவர். அதே வேளை அரசைச் சார்ந்த மக்கள் வெளியே தள்ளப்படுவர்'' (மத் 8:11 தொ). சில உவமைகள் தீர்ப்பின் நிலையைத் தெளிவாக விளக்குகின்றன. களையையும் நல்ல கதிர் மணியையும் பிரித்தல் (13:24-30), மீன்களைப் பொறுக்கி எடுத்தல் (13:24-30), கணக்குக் கொடுத்தல் (21:8-15; 25:15-30): இவைகள் அனைத்தும் ''விழித்திரு'' என்ற வேண்டுகோளை உள்ளடக்கியவையாகும் (25:1-13).

4. இறையரசும் இயேசுவின் அரசுத் தன்மையும்:- புதிய ஏற்பாட்டில் இறையரசு, மெசியாவின் ஆட்சி இவ்விரண்டு கருத்துக்களும் நெருங்கிய தொடர்புடையன. ஏனெனில் மெசியா அரசர் இறைமகனேயாவார். அரசு பற்றிய மறையுண்மையின் மையத்தில் இயேசுவின் இந்த இடம், ஒன்றன்பின் ஒன்றாக மூன்று நிலையில் காணப்படுகிறது. அந்நிலை வழியே அரசின் மறையுண்மை செல்ல வேண்டும். இயேசுவின் மண்ணுலக வாழ்வு, திருச்சபையின் காலம், பொருட்களின் இறுதி நிறைவு பெறல்.

அ. தம் வாழ்நாளில் இயேசு அரசன் என்ற பெயரைப் பயன்படுத்த மிகவும் தயங்குகின்றார். இறைவாக்கினரின் வாக்குறுதிக்கு இணங்கி (மத் 21:1-11) மெசியாவின் பெயரை ஏற்றுக் கொண்டால் அவர் அதனுடைய அரசியல் தொடர்புகளை ஒதுக்கிவிட வேண்டும் (காண் லூக் 23:2). அவர் வெளிப்படுத்தும் அரசு ''இந்த உலகைச் சார்ந்தது அன்று''. அது உண்மைக்குச் சான்று பகரும் சாட்சிகளினால் வெளிப்படுத்தப்படுகின்றது

(யோவா 18:36 தொ) மாறாக இறையரசின் குறிக்கோளைத் தமதோடு ஒன்றாக்க அவர் தயங்கவில்லை. இறையரசுக்காக எல்லாவற்றையும் விட்டுவிடல் (லூக் 18:29), அவர் பெயருக்காக எல்லாவற்றையும் விட்டுவிடுதல் ஆகும் (மத் 19:29; காண் மாற் 10:29). மனிதர்களுக்காகக் காத்திருக்கும் இறுதிக் கால பரிசை முன் கூட்டியே விளக்கும் போது, மனுமகனின் அரசையும் தந்தையின் அரசையும் ஒன்றுபடுத்திப் பேசுகிறார் (மத் 13:41 தொ). அவர் தந்தை அவருக்குக் கொடுத்ததுபோல அவர் அப்போஸ்தலருக்கு அந்த அரசை அளிப்பதாக உறுதி கூறுகிறார் (லூக் 22:29 தொ).

ஆ. அவரது உழைப்பின் நேரம்வரை அவர் அரச நியமனம் நடைபெறாது. அதன் பிறகுதான் தம் தந்தையோடு அதே ஆசனத்தில் அமர்கின்றார் (திருவெளி 3:21). பிறகுதான் இறைவன் வலப்புறம் அமர்ந்து மகிமைபெறுகின்றார் (அ.ப. 2:30-35). திருச்சபையின் நிறைவு காலத்தில் இறைவனின் ஆட்சி கிறிஸ்துவின் ஆட்சி வழியாக மனிதர்கள் மேல் செலுத்தப்படுகின்றது. அவரே உலகனைத்திற்கும் ஆண்டவர் (பிலி 2:11). தந்தை தம் மகனை அரசர்களுக்கு அரசராக ஆண்டவர்களுக்கு ஆண்டவராக நியமித்துள்ளார் (திருவெளி 19:16; 17:14; காண் 1:5).

இ. காலக்கடைசியில் கிறிஸ்து, தன் பகைவர்களையெல்லாம் வென்றவர், தந்தை இறைவனுக்கு அரசைக் கையளிப்பார் (1 கொரி 15:24). பிறகு இந்த அரசுரிமையை நமது ஆண்டவர் கிறிஸ்து முழுவதும் பெற்றடைவார் (திருவெளி 11:15; 12:10). விசுவாசிகள் கிறிஸ்துவினுடையதும், இறைவனுடையதுமான அரசை உடைமையாக அடைவார்கள் (எபே 5:5). இவ்வாறு, இறைவன், எல்லாவற்றிற்கும் தலைவன், தன் அரசின் முழுப் பொறுப்பையும் ஏற்றுக் கொள்வார் (திருவெளி 19:6). இயேசுவின் சீடர்கள் இந்த அரசின் மாட்சிமையில் பங்கு கொள்ள அழைக்கப்படுவர் (3:21). ஏனெனில் இவ்வுலகில் இயேசு அவர்களின் கடவுளும் தந்தையுமானவர்க்கு அரச குருக்களாக அவர்களை ஆக்கியிருந்தார் (1:6; 5:10; 1 பேதுரு 2:9; காண்க யாத் 19:6).

## இறை ஆவி (SPIRIT OF GOD)

இறை ஆவியானவரை இறைத்தந்தையிடமிருந்தும் இறைமைந்தனிடமிருந்தும் பிரிக்கமுடியாது. அவர் மற்ற இருவரோடும் ஒன்றியே இயேசு கிறிஸ்துவில் தம்மை வெளிப்படுத்துகிறார். ஆயினும், அவர் தனி ஆளாய் இருப்பதால் தமக்கே உரித்தான முறையில் தம்மை வெளிப்படுத்துகிறார். மகன் தாம் யாரென்றும், தாம் இடைவிடாது கண்ணோக்கும் இறைத்தந்தை யாரென்றும் தாம் எடுத்துக் கொண்ட நம் மனித இயல்பிலே தெளிவாய் விளம்புகிறார். ஆகவே, இத்திருமைந்தனுடையவும் திருத்தந்தையுடையவும் தனிச் சிறப்புகள் சிலவற்றை நம்மால் சிறிது உணர முடிகிறது. ஆனால், தூய ஆவியானவரைக் குறித்துக் காட்டும் தனி வடிவோ சொல்லோ நம் மனித அனுபவத்தில் காணோம். எல்லா மொழிகளிலும் அவரது பெயர், இயல் நிகழ்ச்சியிலிருந்து எடுக்கப்பெற்ற காற்றையோ மூச்சையோ குறிக்கும் ஆவி எனும் பொதுப் பெயரே. (எபிரேயத்தில் ''ரூஆஹ்'' கிரேக்கத்தில் ''ப்னவுமா'', இலத்தீனில் ''ஸ்பீரித்துஸ்'' காண்க ) இதனால்தான், ''உமது ஆவியை நீ அனுப்பினால் அவை (விலங்குகள்) படைக்கப்படும்; உலகனைத்தும் புத்துயிர் பெறும்'' (சங் 104:30) என, ஒரே வசனத்தில், கால மாறுபாட்டைக் கணித்தாலும் தெய்வீக மூச்சின் அண்ட சாயலையும், இதயங்களுக்கு உயிர் ஊட்டும் தூய ஆவியின் அருட்பொழிவையும் சம பொருத்தமாக வைத்துக்கூற ஆசிரியரால் முடிந்தது.

ஆவியானவரைத் தொட்டுணர முடியாது. அவரது குரலைக் கேட்கலாம் அல்லது அவர் கடந்து செல்வதைச் சில வியத்தகு அருங்குறிகளால் சற்று உணரலாம்; ஆனால், எங்கிருந்து வருகிறார், எங்குச் செல்கிறார் என்பதைப் புரிந்துகொள்ள இயலாது (யோவா 3:8). தாம் ஆட்கொண்டு உருமாற்றிய இன்னொருவர் வழியாகவே அவர் எப்போதும் செயலாற்றுகிறார். மாபெரும் அறிகுறிக

ளால் உலகனைத்துக்கும் புத்துயிர் அவர் அளிக்கின்றார் *(சங் 104:30)* என்பதற்கு ஐய மில்லை. ஆனால் அவரது செயல் எப்பொழு தும் உள்ளே இருந்தே அரும்புகிறது; ஒரு வித உள்ளுணர்வாலேயே அவரை நாம் உணர்ந்துகொள்கிறோம்; ''உங்களில் அவர் தங்கி இருப்பதால் அவரை நீங்கள் அறிவீர் கள்'' *(யோவான் 14:17)*. ஆவியானவரின் பெரும் அடையாளங்கள் - நீர் தீ, காற்று போன்ற இயற்கை உலகைச் சார்ந்தவை; தெளிவான உருவடிவம் கொண்டிராதவை. இவை, நம்மைச் சூழ்ந்திருக்கும் ஒருவித பிரசன்னத்தையும், எதிர்க்க முடியா வண் ணம் மேன்மேலும் நம்மை அதிரவைக்கும் ஒரு விரிவாக்கத்தையும் எல்லாவற்றிற்கும் மேலாய் நமக்கு நினைவுறுத்துகின்றன. இறைத் தந்தை, திருமகன் இவர்களைப் போல ஆவியானவரும் அதே அளவு மறை பொருள் ஆனவர்தான். ஆயினும் கடவுள் ஒரு மறை பேருண்மை என்பதை ஆவியான வர்தான் அதிகம் நமக்கு நினைவுபடுத்துகி றார். ''கடவுள் ஆவியானவர்'' (யோவான் *4:24)* என்பதையும், ''ஆண்டவர் ஆவியான வர்'' *(1 கொரி 3:17)* என்பதையும் ஒருபோ தும் நாம் மறந்துவிடாதபடி இந்த இறை ஆவியானவர் செய்கிறார்.

I. பழைய ஏற்பாடு:- இறை ஆவி இங்கு ஓர் ஆளாக இன்னும் வெளிப்படுத்தப்பட வில்லை; ஆனால், அரும்பெரும் செயல்க ளைச் செய்யும்திறனைக் கொண்ட மனிதர் களை உருவாக்கும் ஒரு தெய்வீகச் சக்தியா கக் காட்டப்படுகிறார். இச்செயல்கள் இறை மக்கள் தம் அழைத்தலில் உறுதியாயிருக்கத் துணைபுரிபவையாயும், தூய கடவுளின் தொண்டர்களாயும் ஒத்துழைப்பாளர்களா யும் அவர்கள் உருவெடுக்க உதவுபவையா யும் இருக்கின்றன. இந்த ஆவி கடவுளிடமி ருந்து வருகிறது. கடவுளிடம் இட்டுச் செல்கி றது: எனவே, இது புனித ஆவி ஆகும். இஸ்ரயேலரின் கடவுளிடமிருந்து வருகிறது, உடன்படிக்கை செய்து கொண்ட அக்கடவு ளுக்கு அவர்களை அர்ப்பணிக்கின்றது: எனவே, இது புனிதப்படுத்தும் ஆவி ஆகும். இச்செயலும் இவ்வெளிப்பாடும், மீட்பின் மெசியா வழி, வார்த்தை மற்றும் சாட்சி ஆகியவை கூறும் இறைவாக்கினர் வழி, திருநிலைத் தொண்டு, அர்ப்பணம் ஆகிய பலி வழி எனும் மூன்று வழிகளில் கூறப்படு கின்றன: இம்மூன்று வழிகளிலும் ஆவியைக் குறையறப் பெற்றுக்கொள்ள இஸ்ரயேல் மக்கள் அழைக்கப்படுகிறார்கள்.

1. ஆவியும் மீட்பும்:-

அ. நீதிபதிகள்:- இஸ்ரயேலரின் நீதிபதி கள் இறை ஆவியால் எழுப்பப்படுகிறார் கள். இவ்வலுவலை அவர்கள் எதிர்பார்க்க வில்லை; இதற்காக எம்முறையிலும் அவர் கள் முன்தயாரிப்பு கொண்டிருக்கவில்லை. இதை எதிர்த்து மறுக்க அவர்களுக்குத் திற னும் இல்லை. சிம்சோன் கிதயோன், சவுல் போன்ற நாட்டுப்புறத்து எளிய மக்கள் திடீரென முழு உருமாற்றம் பெறுகின்றனர். வலுவும் முனைப்பும் சார்ந்த வீரச் செயல்க ளைப் புரியும் ஆற்றல் படைத்தவர்களாய் இவர்கள் மாறுவது மட்டுமன்று; புது ஆளுமை பெற்றுக் குறிப்பிட்ட ஓர் அலு வலை ஆற்றி மக்களை விடுவிக்கும் தூதை நிறைவேற்றும் திறம்பெற்றவர்களாகவும் ஆகின்றனர். இவர்களின் கரங்களாலும், ஆவியாலும் இறை ஆவி யாத்திரை மற்றும் பாலைவனம் எனும் வீரகாவியத்தை நீடிக்கச் செய்கிறார்; இஸ்ரயேலரின் ஒன்றிப்புக்கும் மீட்புக்கும் உறுதியளிக்கிறார்; ஆகவே, பரி சுத்த மக்களின் ஊற்றாய் அவர் உள்ளார். அவரது செயல் திடீரென எழும் இனம் புரியாத கட்டுப்பாட்டைச் சுட்டிக்காட்டும் உவமை உருவக அணிகளால் விளக்கப்படி னும், இவற்றிலும் இறை ஆவியின் செயல் உள்ளரங்கமானதாகவே உள்ளது. ஓதினி யேல்மேலும், இபிதாகின்மேலும், ஆவியா னவர் திடீரென இறங்கி இருக்கிறார் *(நீதி 3:10; 11:29)*; கழுகு தன் இரைமேல் வந்து பாய்வதுபோல அவர் இறங்குகிறார் *(நீதி 14:6; 1 சாமு 11:6)*; ஒருவன் கவசத்தை அணிந்து கொள்வதுபோல் ஆட்கொள்கிறார் *(நீதி 6:34)*.

ஆ. அரசர்கள்:- நீதிபதிகள் தற்கால மீட்பர் களே; அவர்களது தூது முடிந்ததும் ஆவியா

னவர் அவர்களிடமிருந்து நீங்கிவிடுகிறார். அவர்கட்குப்பின் வரும் அரசர்களோ நிலையான அலுவலைப் பெறுகின்றனர். இவர்களைத் திருநிலைப்படுத்தப் பயன்படுகின்ற அபிடேகச் சடங்கு, ஆவியானவரின் அழியாத முத்திரையை இவர்கள் பெறுவதையும், அதனால் இவர்கள் புனித மகத்துவம் பெறுவதையும் தெரிவிக்கிறது *(1 சாமு 10:1; 16:13)*.

இ. மெசியா:- இஸ்ரயேலருக்கு மீட்பு, நீதி, அமைதி ஆகியவற்றை அளிக்கும் பிரமாணிக்கமுள்ள இறைத் தொண்டர்களாக அரசர்களை ஆக்க, அபிடேகச் சடங்கு மட்டும் போதுமானதாய் இல்லை. இதை நிறைவுறச் செய்ய, ஆவியானவரின் ஆழ்ந்த ஊடுருவலான செயல் தேவைப்பட்டது. இதோ மெசியா (தனி அபிடேகம் பெற்றவர்) எனச் சுட்டிக்காட்டப்படக்கூடிய நேரடி இறை அபிடேகம் தேவையாய் இருந்தது. இந்த மெசியா மேல் தூய ஆவி இறங்கி வருவார் என்பது மட்டுமன்று; அவர் மேல் வந்து தங்குவார் *(ஏச 11:2)* அவரில், பெசலேல் *(யாத் 35:31)* அல்லது சாலமோனில் காணப்பட்டதுபோல, ஞானம், அறிவுக்கூர்மையும், தாவீதிடம் காணப்பட்டது போல் விவேகமும் வலிமையும், இறை அறிவும் அச்சமும் ஆகிய எல்லாக் கொடைகளும் இருக்கச் செய்வார். சுருங்கக்கூறின் இஸ்ரயேலரிடையே விளங்கிய சீரிய இறைபக்தர்களின் எடுத்துக்காட்டாக இம்மெசியாவை ஆவியானவர் ஆக்குவார். இவ்வாறு, இக்கொடைகள் இவ்வழியில் ஆளப்படும் நாட்டிற்கும் புனிதமும் மகிழ்வும் நிறைந்த காலத்தைக் கொண்டு வரும் *(ஏச 11:9)*.

2. ஆவியும் சாட்சியும்:-

அ. 'நபி' யார்கள்:- இறைவாக்கினருக்கு முன்னோடிகளாய் இருந்த இப்பெரியார்கள் சமய உயர் எழுச்சியில் கைதேர்ந்தவர்கள், ஆனால், இறைச் செயலால் எழும் ஞானப் பரவசத்தை, மனிதத் தூண்டுதலால் எழும் வெளி மயக்கத்திலிருந்து பிரித்துத் தெளிய பன்முறை இவர்கள் தவறிவிடுகின்றனர். எனினும், யாவேயின் வல்லமைக்குச் சான்று பகர்வதால், இவர்கள் இஸ்ராயேலரிடையே உயிருள்ள சக்திகளாய் விளங்குகின்றனர். மெய்யங்கடவுளின் பேரால் இவர்களை இப்படிப் பேசவைக்கும் இந்த வல்லமையில், இறை ஆவியானவரின் பிரசன்னத்தை நாம் புரிந்துகொள்ளலாம் *(யாத் 15:20; எண் 11:25 தொ; 1 சாமு 10:6; 1 அர 18:22)*.

ஆ. இறைவாக்கினர்:- முக்கியத்துவம் அல்லது மதிப்புப்பெற்ற இறைவாக்கினர்கள், குறிப்பாக, மிகப் பழையவர்களில் எவரும் ஆவியைப் பற்றிக் குறிப்பிடக்காணோம். தம்மை ஆட்கொள்ளும் சத்தியை இறைவனின் கரம் என அழைக்கவே அடிக்கடி விரும்புகின்றனர் *(ஏச 8:11; எரே 1:9; 15:17; எச 3:14)*. இப்படிச் செய்வது, இறை ஆவியைத் தாம் கொண்டிருப்பதை அவர்கள் உணரவில்லை என்பதனால் அன்று; முன்னோடிகளாயிருந்த நபிமாரைப் போன்றன்றி வேறுவிதத்தில் அவரைத் தாம் கொண்டிருப்பதை உணர்ந்ததாலேதான். இவர்களின் அழைப்பும் கடமையும் வேறுப்பட்டவை, சிறப்பானவை. இக்கடமையை முழுவதும் இவர்கள் உணர்கின்றனர். அதைத் தவிர்க்க இவர்கள் தம் முழு ஆளுமையோடு ஏங்கினாலும், பேசும்படி வற்புறுத்தும் உயர்ந்ததொரு ஏவுதல் தம்மில் இருப்பதை இவர்கள் உணர்கிறார்கள் *(ஆமோ 3:8; 7:14 தொ; எரே 20:7 தொ)*. அவர்கள் கூறும் வாக்கு அவர்களுக்கே தொல்லைதான். இருப்பினும் அவ்வாக்கு அவர்களிடமிருந்தே வருகிறது; ஆனால் அது அவர்களின் சொந்தப் படைப்பு அன்று: அவர்களை அனுப்பும் இறைவனின் வாக்கு அது. இம்முறையில்தான், இறைவார்த்தையானவருக்கும் இறை ஆவியானவருக்கும் இடையே இருக்கும் இணைப்பு காட்டப்படுகிறது. எலியா காலத்திலிருந்தே இந்த இணைப்பு வெளிப்படுகிறது *(1 அர 19:12 தொ)*. இந்த இணைப்புக்கு முடிவு இல்லை. எனவே ஆவியானவர் தம் செயலாக்கத்துக்குத் தொண்டுபுரியப் புதுப்புது இறைவாக்கினரை உருவாக்குவதோடு நின்றுவிடாமல், இச்செயலின் உள்ளார்ந்த மறைபொருளைச் சிறிது அவர்கள் உணரவும் செய்கிறார். ஆவியானவர் வெறும் புத்தியும்

பலமும் மட்டும் அல்லர்; இறைவனைப் பற்றியும் அவரின் வழிகளைப் பற்றியுமான திரு அறிவும் ஆவர் (காண் ஏச 11:3).

இந்த ஆவியானவர் இறைமாட்சியை வெளிப்படுத்தும் அளவுக்குத் (எச 3:12; 8:3) திருவாக்கை இறைவாக்கினருக்குத் தெளிவு படுத்துகிறார். அதே வேளையில், மக்களோடு பேசவோ (11:5), வர இருக்கும் தீர்வையை அவர்கள்முன் நின்று பறைசாற்றவோ தேவையான வலுவையும் கொடுக்கிறார் (2:1; 3:24). இங்ஙனம், இவர்களை ஆவியானவர் சாட்சிகள் ஆக்குகிறார்; இச்செயலால் அவரே இறைவனுக்குச் சான்று பகர்பவர் ஆகிறார் (நெக 9:30; காண் செக் 7:12).

3. ஆவியும் அர்ப்பணமும்: யாவேயின் ஊழியன்:-

மெசியா சார்பிலே விடுதலை அளிக்கும் ஆவியானவரின் பங்கும், வார்த்தையும் தீர்வையையும் அறிவிக்கும் இறைவாக்கினரின் பங்கும், ஏற்கெனவே ஏசயா காட்டும் மெசியாவில் மிளிர்கின்றன; யாவேயின் ஊழியனில் நிறைவுறுதியாய்க் கூறப்படுகின்றன. கடவுள் தம் ஆவியை அவர்மேல் தங்கச் செய்கிறார்; ஆகவே மக்களினங்களுக்கு அவர் நீதியை அறிவிப்பார் (ஏச 42:1; காண் 61:1 தொ). இறைவாக்கினர்தான் நீதியைப் பறைசாற்றுவார், ஆனால் அரசர் நீதியை வழங்குவார்; யாவேயின் ஊழியனோ தம் வேதனையின் பலனால் பலரை நீதிமான்களாக்குவார் (53:11). அதாவது நீதியில் அவர்கள் நிலைத்திருக்கும்படி செய்வார். இங்ஙனம், இவரது தூதுப்பணியில் அரசுரிமைப் பண்பும் கலந்துள்ளது. இறைவாக்கினர் வேலையும் மீட்பாளர் வேலையும் அதே ஆவியால் இவரில் ஒன்றாய்க் கூடி இணைகின்றன. இத்தோடு தமக்கு உரித்தான பலிகளில் இறைவன் மகிழ்வதுபோல, இந்த ஊழியன் மீதும் அவர் பூரிப்படைகிறார் (42:1); இந்த ஊழியனின் வாழ்வு, சாவு முழுவதுமே பாவிகளின் பரிகாரமாகவும் அனைவரின் மீட்பாகவும் இறைவனுக்க நேர்ந்துவிடப்படுகிறது. இவ்வண்ணம் தூய ஆவியானவர் புனிதப்படுத்துபவராயும் உள்ளார்.

4. மக்கள் மீது ஆவியானவர்:-

இறைவாக்கினரிலும் இறை ஊழியரிலும் ஆவியானவர் ஆற்றும் செயல் இறைவாக்குரைப்பதாய் உள்ளது: பாலைவனத்தை விளைநிலமாக்கும் நல்ல மழையைப் போல (ஏச 32:15; 44:3; எச 36:25; யோவே 3:1 தொ), அல்லது உலர்ந்த எலும்புகட்கு உயிரூட்டும் மூச்சுப்போல (எச 37), மக்கள் யாவர்மீதும் ஆவியானவர் பொழியப்படுவார் என்பதை அறிவிப்பதாய் உள்ளது. ஆவியானவரின் இந்த அருள் மழை ஒருவிதப் புதுபடைப்பாகும்; செழிப்பான வயல் வெளியில் நேர்மையும் நீதியும் வீற்றிருப்பதாகும் (ஏச 32:16) புகழ்பாடி (சங் 51:15) உருக்கமாய் மன்றாடும் (செக் 12:10), வார்த்தைக்கு இயல்பாகப் பணியும் (ஏச 59:21; சங் 143:10), அவரது குரலுக்குச் செவிமடுக்கும் நெஞ்சங்களையும் உருவாக்குவதாகும். ஆவியானவரால் புதுப்பிறப்பு அடையும் இஸ்ரயேலர் தம் கடவுளைக் கண்டுணர்வர்; கடவுளும் தம் மக்களைக் கண்டடைவார்: ''இஸ்ரயேல் வீட்டார் மேல் நமது ஆவியைப் பொழிவோம்; இதன்பின், அவர்களிடமிருந்து நம் முகத்தை மறைக்கமாட்டோம்'' (எச 39:29).

இந்தக் காட்சி பழைய ஏற்பாட்டிலே எதிர் பார்க்கப்படும் நம்பிக்கையாகவே உள்ளது. ''ஆவியானவர் இன்னும் அருளப்படவில்லை''; எனவே, அவர் நிலையாகத் தங்கியிருக்கக் கூடுமாயில்லை. ஐயமின்றி, தொடக்கத்திலேயே, செங்கடல் கடத்தல், மேகம் என்பவற்றில், தூய ஆவியானவர் மோசே வழியாகச் செயலாற்றி, இஸ்ரயேலரை இளைப்பாறும் இடத்துக்கு இட்டுச் செல்வதைக் காண்கிறோம் (ஏச 63:9-14). அதே வேளையில், மக்கள் பரிசுத்த ஆவிக்கு வருத்தம் கொடுக்கவும் அவரது செயலுக்கு ஊனம் வருவிக்கவும் கூடுமானவர்களாய் இருப்பதையும் பார்க்கிறோம் (63:10). இந்தக் கொடை நிறைவானதாயும் இறுதியானதாயும் ஆக, இந்த ஆவி நேரடியாகத் தாமே இறங்கி வந்து செயலாற்ற வேண்டும்.

''நீரே, யாவே, நீரே எங்கள் தந்தை... யாவே, உம் வழிகளிலிருந்து நாங்கள் பிறழும்படி விட்டதேன்?...ஆ, வானத்தைக் கிழித்து நீர் இறங்கிவர மாட்டீரா?'' *(63:15-19)* என்று மக்கள் கதறும் வண்ணம் கடவுள் ஈடு இணையற்ற ஓர் அருங்குறியை அளிக்க வேண்டும். இதே வானங்கள் திறக்கும், தந்தையான கடவுள் இவ்வுலகில் இறங்கி வருகிறார். இறைவன்பால் இதயங்கள் திரும்புகின்றன: இவையே தூய ஆவியின் செயல் நிகழ்ச்சியாய் இருக்கும்; அது கிறிஸ்து இயேசுவில் இறுதித் திட்டமாய் அவர் தரும் வெளிப்பாடாய் இருக்கும்.

*5. ஆவியும் வார்த்தையும்:-*

பழைய ஏற்பாட்டின் தொடக்கத்திலிருந்து இறுதிவரை, கடவுளின் ஆவியும் வார்த்தையும் எப்பொழுதும் இணைந்தே செயலாற்றுகின்றனர். மோசேக்குக் கடவுள் கொடுத்த சட்டவாக்கை மெசியா அனுசரித்து அதன் நிறை நீதியைப் பெற முடிகிறது என்றால், ஆவியை அவர் கொண்டிருக்கிறார் என்பதே இதற்குக் காரணம். வார்த்தைக்கு இறைவாக்கினர் சாட்சி பகர்கிறார் என்றால், அவரை ஆவியானவர் ஆட்கொண்டுள்ளார் என்பதே காரணம். மக்களினத்தாருக்கு மீட்பு வார்த்தையை இறை ஊழியர் கொணர முடிகிறது என்றால், அவர்மேல் ஆவியானவர் தங்கியிருக்கிறார் என்பதே காரணம், ஒரு காலத்தில் இஸ்ரயேலர் தம் இதயத்தில் இந்த வார்த்தையைக் கொண்டிருக்கக்கூடும் என்றால், ஆவியானவரில்தான் இது நிகழும். வார்த்தையும் ஆவியும் ஒன்றிலிருந்து ஒன்று பிரிக்க முடியாதவை; ஆயினும் தத்தம் தனிச் சிறப்புப் பண்புகளைக் கொண்டுள்ளன. ஊனைப்பிளந்து காட்டும் வாளைப்போல வார்த்தை வெளியிலிருந்து உள்ளத்தை ஊடுருவுகிறது; ஆவியோ நீர்மம் போன்றது; புலப்படா நுண்பொருளாய் எங்கும் பரவுகிறது. வார்த்தை தன்னை யாவரும் கேட்டு உணரும்படி செய்கிறது எனவே புலன்களுக்குப் புலப்படுகிறது. ஆவியோ காணக்கூடாத விதமாகவே இருந்துவிடுகிறது. எனவே புலன்களுக்கு அப்பாற்பட்டது. வார்த்தை ஒரு வெளிப்பாடு; ஆவியோ ஓர் உள்மாற்றம். வார்த்தை நிமிர்ந்து நின்று மேடையில் முழக்கமிடுகிறது; ஆவியோ இறங்கி வந்து, எங்கும் பரவி, இரண்டற இணைந்துவிடுகிறது. இவ்விதக் கூறுகளின் பகுப்பும் அவைகளுக்கிடையே உள்ள தொடர்பும் புதிய ஏற்பாட்டில் காணக்கிடக்கின்றன; ஆவியானவரின் செயலால் மனுவான இறைவார்த்தையானவர் அதே ஆவியானவரால் அன்றி எதையும் செய்கிறதில்லை; அவரது அலுவலின் முழுநிறைவு அந்த ஆவியானவரைக் கொடையாகப் பொழிவதாகிறது.

II. புதிய ஏற்பாடு

*1. இயேசுவில் ஆவியானவர்:-*

அ. இயேசுவின் திருமுழுக்கு:- திருமுழுக்கு யோவான் மெசியாவின் வருகைக்காகக் காத்திருந்தார். அதேவேளை, தம் முழு வல்லமையோடு இறங்கிவரும் ஆவியானவருக்காகவும் காத்திருந்தார். அந்த ஆவியானவர் வெறும் மனித வேலையை அகற்றிடுவார்; அதனிடத்தில் எதிர்க்கவொண்ணா இறைச் செயலை ஆற்றிடுவார்; ''நீங்கள் மனந்திரும்பியதைக் காட்ட உங்களுக்கு நான் நீரால் ஞானஸ்தானம் கொடுக்கிறேன். அவர் பரிசுத்த ஆவியாலும் நெருப்பாலும் உங்களுக்கு ஞானஸ்நானம் கொடுப்பார்'' *(மத் 3:11)*. பரம்பரை வழிவரும் அடையாளங்களிலே மிக எளிதில் எவரும் அணுக முடியாத தீயை மட்டும் எடுத்துக் காட்டி யோவான் இங்குப் பேசுகிறார். இயேசு இதை மறுக்கவில்லை; ஆனால், யோவானுக்குக் குழப்பம் ஏற்படுத்தும் முறையில் இயேசு அதை நிறைவுபடுத்துகிறார். இயேசு திருமுழுக்குப் பெறுகிறார்; அவ்வேளையில் ஆவியானவர், வானங்கள் திறக்க, அவர் மீது புறாவைப்போல் இறங்கி வருகிறார். எளிய உருவம், ஆனால், தெய்வீக உருவம் இது, காற்றோடும் நீரோடும் தொடர்பு கொள்ளும் ஒரு சாதாரணப் பறவை வடிவம் இது. ஒழிக்கப்படப்போவதாய் யோவான் நம்பும் நீர்முழுக்கு இயேசுவின் செயலால் ஆவி முழுக்காக ஆகிறது. பாவிகளோடு ஒட்டுறவாடும் இயேசு எனும் இம்மனிதரே, வாக்களிக்கப்பெற்ற மெசியா என்றும் *(லூக் 3:22; சங் 2:7)*, உலகின் பாவத்திற்காகப் பலியிடப்

படும் செம்மறி என்றும் (யோவா *1:29*), அன்பார்ந்த மகன் என்றும் (மாற் *1:11*) ஆவியானவர் சுட்டிக்காட்டுகிறார். ஆனால், வெளியே தம்மைப் பகட்டாய்க் காட்டிக் கொள்ளாமல் மூடுமறைவான முறையில் செயலாற்றுகிறார். மைந்தன் திருமுழுக்குப் பெறுகிறார்; தந்தை மகனோடு பேசுகிறார்; ஆவியோ ஒன்றும் பேசவும் காணோம், செய்யவும் காணோம். ஆயினும், தந்தை மகன் உரையாடலுக்கு ஆவியானவரின் பிரசன்னம் தேவை. ஆவி இருப்பது தேவைப்படினும், இவர் மௌனமாயும் செயலற்றவர் போலும்தான் இருக்கிறார். தந்தையின் பேச்சிலே இவர் ஒரு சொல்லும் கூட்டக் காணோம்; மைந்தனின் செயலைச் சிறிதும் இவர் பெருக்கக் காணோம்; அப்படியென்றால், இவர் என்னதான் செய்கிறார்? தந்தை மகன் இணைப்பு நிகழக் காரணமாய் உள்ளார்: தந்தையிடமிருந்து வரும் அன்பு, ஆதரவு, பெருமிதம் எத்தகையது என்பதை இயேசுவுக்கு எடுத்து உணர்த்துகிறார்; மைந்தனுக்கேற்ற மனநிலையை இயேசுவிடம் உருவாக்குகிறார்; கிறிஸ்துவின் அர்ப்பணம் அன்பார்ந்த மகனது பலியின் முதற்கனிகளோடு திருத்தந்தை திருமுன் தூபம் போல் வரவைக்கிறார்.

ஆ. தூய ஆவியினால் இயேசு கரு எடுத்தார்:- இயேசுவில் ஆவியானவர் பிரசன்னம் அவர் திருமுழுக்குப் பெறும்போது அறிவிக்கப்படுகிறது; ஆனால், தொடக்கத்திலிருந்தே அவரோடு இருந்தார். இயேசுவின் திருமுழுக்கு ஓர் அழைப்பன்று; மெசியா பணி சூட்டல் ஆகும்; 'இதோ' என்று முன்பே இறைவாக்கினர் வழியாகச் சுட்டிக் காட்டப்பட்டிருந்தாலும் (ஏச *42:1; 52:13*), காலம் வரும் வரை மறை பொருளாயிருந்த தம் ஊழியனும் மைந்தனுமானவரைக் கடவுள் தம் மக்கட்கு அறிமுகப்படுத்துவதாகும். நீதிபதிகள், இறைவாக்கினர், அரசர்கள் போன்றோர் தூய ஆவியால் சிலவேளைகளில் ஆட்கொள்ளப்படுகின்றனர். பிறக்க மூன்று மாதங்களுக்கு முன்பே திருமுழுக்கு யோவான் ஆவியால் கவர்ந்து கொள்ளப்படுகிறார். இயேசுவிலே முன்பில்லாத புதிய ஆளுமைப்பண்பு எதையும் ஆவியானவர் உண்டாக்கக் காணோம். இயேசுவின் முதல் நொடியிலிருந்தே, அவரோடு ஆவியானவர் இருக்கிறார். தாயின் கருப்பையிலிருந்தே அவருக்கு இருப்புக் கொடுக்கிறார்; அவரை இறைமகனாக அமைந்து உருவாக்குகிறார். குழந்தைப் பருவத்தைக் குறிப்பிடும் இரு நற்செய்திகளும் இந்தத் தொடக்கச் செயலைக் கோடிட்டுக் காட்டுகின்றன (மத் *1:20*; லூக் *1:35*). பழைய ஏற்பாட்டு அறிவிப்புகளோடு மரியாள் பெற்ற அறிவிப்பை ஒப்பிட்டு, வெறும் அர்ப்பணம் மட்டுமன்று, அதைவிட மேலான காரியம் இங்கு நிகழ்கிறது என்பதை லூக்கா தெளிவாய்க் காட்டுவது விளங்கும். சிம்சோன் (நீதி *13:5*), சாமுவேல் (*1* சாமு *1:11*), திருமுழுக்கு யோவான் (லூக் *1:15*) மூவரும் கருவிலிருந்தே ஏறத்தாழ முழுமையாகவும் நேரடியாகவும் இறைவனுக்கு அர்ப்பணம் செய்யப் பட்டனர். இயேசு எந்தச் சடங்கின் துணையாலுமன்று, எந்த மனிதனின் இடையீட்டாலும் அன்று, மரியாளில் ஆவியானவர் ஆற்றும் செயலால் மட்டுமே இறைவனுக்கு அர்ப்பணமாகிறார். உருவெடுப்பதால் மட்டுமன்று தம் இருப்பு முழுவதாலுமே தூய கடவுளின் மகனாகிவிடுகிறார் (லூக் *1:35*).

இ. ஆவியானவரில் இயேசு செயலாற்றுகிறார்:- தம் செயல் தொடர்பு அனைத்திலும் தம்மில் ஆவியானவர் செயலாற்றுதை இயேசு வெளிப்படுத்துகிறார் (லூக் *4:14*) அலகையினால் சோதிக்கப்பட இயேசு ஆவியானவரால் அழைத்துச் செல்லப்படுகிறார் (மத் *4:1*); பேய் பிடித்தவர்களை ஆவியானவரால் விடுவிக்கிறார் (*12:28*); நற்செய்தியையும் இறைவாக்கையும் ஏழைகளுக்கு வழங்குகிறார் (லூக் *4:18*). ஆவியானவரில் அக்களிப்போடு தந்தையை அணுகுகிறார் (லூக் *10:21*). தீமை மீதும் சாவின் மீதும் வெற்றிக் கொள்ளும் அவர்தம் புதுமைகள், அவரது வார்த்தையின் வன்மை மற்றும் உண்மை, இறைவனோடு அவர் கொள்ளும் உள்ளார்ந்த நேரடி உறவு இவை எல்லாம் அவர் மேல் ஆவியானவர் தங்கியுள்ளார் என்பதற்கும் (ஏச *61:1*), அவரே எதிர்பார்க்கப்பெற்ற

இறைவாக்கினர், மீட்புத் தரும் மெசியா, அன்பார்ந்த ஊழியன் என்பதற்கும் சான்று பகர்கின்றன.

தேவ ஆவியால் தூண்டப் பெற்ற இஸ்ரயேலர்களிலே ஆவியானவரின் வெளிப்பாடு சிறிது காலம் மட்டும் நீடிப்பதாயும் தற்காலிகமானதாயுமே இருந்தது. இயேசுவிலோ இது நிரந்தரமானதாய் உள்ளது. இறைவாக்கை ஏற்பவராய் அவர் இல்லை. அதை அறிவித்து விளக்குபவராய் உள்ளார். புதுமை ஆற்றுவதில் நொடிநேரமும் அவர் காத்திருப்பதில்லை. மிகச் சாதாரண செயலாகவே அது அவரிடம் தோன்றுகிறது. இறைமறை உண்மைகளை அவர் புதிதாய் அறியவருவதில்லை. மூடு மறைவின்றி இறைவன் திருமுன்னே அவர் எப்பொழுதும் வாழ்கின்றார். அவரைப்போல எவரும், அளவில்லா முறையில் (யோவா 3:34) ஆவியானவரைக் கொண்டிருக்கக் காணோம்.

ஆம், ஆவியானவரை இயேசு கொண்டிருந்ததுபோல, வேறு எவரும் எக்காலத்திலும் கொண்டிருந்ததில்லை. தேவ ஏவுதலைப் பெற்றிருந்த பழைய ஏற்பாட்டுப் பெரியார்கள் தம் ஆளுமையோடு தம்மைவிட அதிக வலுவுள்ள சக்தி ஒன்றால் தாம் ஆட்கொள்ளப்படுவதை உணர்ந்தனர். இயேசுவில், இத்தகைய வலுவந்த ஏவுதலோ தூண்டுதலோ இருப்பதை நமக்குச் சுட்டும் அறிகுறி எள்ளளவேனும் காணோம். இறைவனின் வேலைகளைச் செய்ய ஆவியானவரின் வெளி உதவி அவருக்குத் தேவை இல்லை என்றுகூடச் சொல்லலாம். தந்தையை எப்படி அவர் உதறித் தள்ள முடியாதோ அப்படியே ஆவியானவரையும் அவர் உதறிவிட முடியாது; இது உண்மை. தந்தை எப்போதும் அவரோடு இருக்கிறார் (யோவா 8:29). ஆவியானவரும் அவரைக் கைநெகிழ்ந்திருக்க முடியாது. ஆவியானவரின் தாக்குதலோ வலுவந்தமோ இயேசுவிடம் இல்லை என்பதே இவரது இறைத்தன்மையின் அடையாளமாயுள்ளது. வெளியிலிருந்து தாக்கும் ஒரு சக்தியாக ஆவியானவரை இயேசு உணரவில்லை. ஆவியானவரில் அவர் இருக்கிறார். அவரில் ஆவியானவர் இருக்கிறார்; அவர்தம் சொந்த ஆவியானவராயிருக்கிறார் (காண் யோவா 16:14 தொ).

2. ஆவியானவரை அனுப்புவதாக இயேசு வாக்களிக்கிறார்:-

இயேசு ஆவியானவரால் நிரப்பப்பெற்றவர்; ஆவியானவராலேயே அனைத்தையும் செய்பவர்; எனினும் வெகு அரிதாகவே அவர் ஆவியானவரைப்பற்றிப் பேசுகிறார். தம் செய்கைகள் எல்லாவற்றிலும் ஆவியானவரைச் சுட்டிக் காட்டுகிறார்; எனினும் இயேசு நம்மோடு இருக்கும்வரை தம்மிலிருந்து வேறுபட்ட ஆள் ஆவியானவர் என எடுத்துக்காட்ட அவரால் முடியவில்லை. ஆவியானவர் பொழியப்பட்டு அறியப்பட, இயேசு வானகம் சென்று மகிமை பெற வேண்டும் (யோவா 7:39; 16:7). அப்பொழுது இயேசுவிடமிருந்து வரும் இந்தத் தேவ ஆள் ஆவியானவர் என்று மனிதர் கண்டுணர்வர். மேலும், இயேசு தம் சீடர்களிடமிருந்து பிரியும் கட்டம் வரும்போதுதான், தற்காலிகமாகச் சீடர்களை அனுப்பும்போதும் (மத் 10:20), சாவினால் அவர்களை விட்டு நிரந்தரமாகப் பிரியும் முன்பும் (யோவா 14:16 தொ. 26; 13:13 தொ) தூய ஆவியைப் பற்றி அவர்களிடம் பேசுகிறார்.

ஒத்தமை நற்செய்திகளில், இக்கட்டு வேளை, கலாபனைக் காலம், நீதிமன்றங்கள் போன்ற முக்கிய கட்டங்களில் மட்டும்தான் ஆவியானவர் தம்மை வெளிக்காட்டுவது போல் தோன்றுகிறது (மாற் 13:11). ஆனால், இறுதி இரவு உணவுக்குப்பின் வரும் பிரியாவிடை உரையில்தான் இயேசு மனம் திறந்து பேசுகிறார். தீய உலகம் இயல்பாகவே இயேசுவை வெறுக்கிறது; எனவே, சிலவேளைகளில் கொடும் கலாபனைகளை எழுப்பும்; அவருடைய சீடர்களை இடைவிடாது பயமுறுத்தி நசுக்கப்பார்க்கும் (யோவா 15:18-21). அதனாலே ஆவியானவர் ஒவ்வொரு நாளும் அவர்கட்குத் துணையாய் இருப்பார் (14:16 தொ).

இயேசு தம் வாழ்க்கையால் தம் தந்தையை அறிவித்தார் (யோவா 5:41; 8:50;

*12:49*); இதேபோல், சீடர்களும் ஆண்டவருக்குச் சாட்சி பகரவேண்டும் (*மாற் 13:9*; யோவா *15:27*). இயேசு அவர்களோடு இருந்தபோது அவர்கள் எதற்கும் அஞ்சவேண்டியிருந்ததில்லை; அவரே அவர்களுக்குத் துணையாளராயிருந்தார்; அவர்கள் சார்பில் வாதாடி ஆதரித்தார்; பல இக்கட்டுகளினின்றும் அவர்களைக் காப்பாற்றினார் (யோவா *17: 12*). ஆனால், அவர் அவர்களை விட்டுப்பிரிந்து விண்ணகம் சென்றபிறகு அவரது இடத்தில் ஆவியானவர் துணையாளராயிருப்பார் (*14:16; 16:7*). இயேசு அல்லர் அவர்; ஆயினும், அவர் தம் சொந்தப் பெயரால் பேசார்; ஒருபோதும் பிரியாது இணைந்திருக்கும் இயேசுவைப்பற்றியே பேசுவார்; பேசி இயேசுவை மகிமைப்படுத்துவார் (*16: 13* தொ). ஆவியானவர் சீடர்களுக்கு ஆண்டவரின் செயல்களையும் சொற்களையும் நினைவுறுத்துவார்; ஆழமாய் அறிவுறுத்துவார் (*14:26*). இயேசுவின் பெயரால் உலகை நேருக்கு நேர் சந்திக்கவும், அவரது சாவின் செம்பொருளை உய்த்துணரவும், இந்த அதிர்ச்சிதரும் சாவு நிகழ்ச்சியில் நிறைவேற்றப்பட்ட பாவத்தின்மேல் தீர்ப்பு, சாத்தானின் தோல்வி, இறை நீதியின் வெற்றிவிழா (*16:8-11*) போன்ற இறைபேருண்மைகளுக்குச் சாட்சியம் கூறவும் தேவையான வலுவைச் சீடர்களுக்கு ஆவியானவர் அளிப்பார்.

*3.* ஆவியானவரை இயேசு அனுப்புகிறார்:-

மரித்து உயிர்த்த இயேசு தம் ஆவியானவரைத் தம் கொடையாகத் திருச்சபைக்குக் கொடுக்கிறார். ஒரு மனிதனின் உயிர் எவ்வளவு உயர்ந்து இருப்பினும், அவனது செல்வாக்கு எவ்வளவு சிறந்து இருப்பினும், அவன் மரித்ததும், இறந்த காலக் கூறாக அவன் மாறிவிடுகிறான். அவன் தொடங்கிய வேலை தொடர்ந்து நடைபெறலாம்; ஆனால், அது அந்த ஆளுக்குச் சொந்தமானதாகாது. மனிதர்களின் போக்கில் அதுபோகட்டும் என்று விட்டுவிடுவதைத் தவிர அந்த ஆளால் வேறொன்றும் செய்ய முடியாது. இயேசு சாகும் போதோ, கடவுளின் கையில் தம் ஆவியைக் கையளிக்கிறார்; அதே செயலால், தம் திருச்சபைக்குத் தம் ஆவியானவரைக் கையளிக்கிறார் (யோவா *19:30*). இயேசு உயிரோடிருக்கும் வரை, இயேசுவின் மனித உருவாலும் அவரது செயல்துறையாலும் ஆவியானவர் வரையறுக்கப்பட்டதுபோல் இருந்தார். ஆனால், இதோ, மனுமகன் தந்தையின் வலப்பக்கம் உயர்த்தப்பட்டு மகிமை பெறுகிறார் (*12:23*); எனவே, மீட்புப் பெற்ற மனுக்குலம் முழுவதையும் இயேசு இறைபாதம் ஈர்க்கிறார் (*12:32*), ஆவியானவரை அதன்மேல் பொழிகிறார் (*7:39; 20:22* தொ; அ.ப. *2:33*).

*4.* ஆவியானவரைத் திருச்சபை பெறுகிறது

கடவுளிடமிருந்து பிறப்பவை அனைத்தும் ஆவியானவரிடமிருந்தே பிறக்கின்றன (யோவா *3:5*) தொ). ஆகவே, புதுப்பிறப்பாகிய திருச்சபையும் அவரிடமிருந்தே பிறக்க முடியும், இதனால்தான், அப்போஸ்தலர் பணி 'ஆவியானவரின் நற்செய்தி' ஆகத் திகழ்கிறது.

இந்த அப்போஸ்தலர் பணியில் நான் காணும் ஆவியின் செயல், ஏற்கெனவே பழைய ஏற்பாட்டில் காணக்கிடக்கும் இரு இறை பண்புகளையும் கொண்டு விளங்குகிறது. ஒன்று, பொது முறை கடந்த வியத்தகு நிகழ்ச்சிகள் பல உள: இறை ஆவியைப் பெற்றுப் பரவசமாகும் மக்கள் (அ.ப. *2:4.5. 11*), உடல் நலம் மீண்டும் பெறும் பிணியாளரும் பேய்பிடித்தோரும் (*3:7; 5:12.15*), சீடர்களின் வீரமும் துணிவும் (*4:13.31; 5:20; 10:20*). மற்றொன்று, இந்த அதிசயங்கள் இறுதியான மீட்பின் அடையாளங்களாயும், மனந்திரும்புதல் சாத்தியமானது, பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன, திருச்சபையில் கடவுள் தம் ஆவியானவரைப் பொழியும் நேரம் வந்துவிட்டது' எனும் உண்மைக்கு உறுதி அளிப்பவையாயும் உள்ளன (*2:38; 3:26; 4:12; 5:32; 10:43*)

இந்த ஆவியானவர் இயேசுவின் ஆவியே. இவர் இயேசுவின் வேலைகளை மீண்டும் ஆற்றுகிறார்; இயேசுவின் சொற்கள் மீண்

டும் பறைசாற்றப்படவும் (4:30; 5:42; 6:7; 9:20; 18:5; 19:10.20), அவரது செபம் மீண்டும் செபிக்கப்படவும் (அ.ப. 7:59 தொ=லூக் 23:34.46; அ.ப. 21:14=லூக் 22:42) அப்பம் பிடுவதில் அவரது நன்றிப்புகழ் எந்நாளும் மீண்டும் ஒலிக்கப்படவும் செய்கிறார். இயேசுவைச் சூழ்ந்திருந்த சீடர்களிடையே இருந்த சகோதர ஒற்றுமையை மீண்டும் நிலவச் செய்கிறார் (அ.ப. 2:42; 4:32). கிறிஸ்து வாழ்ந்தபோது சீடர்கள் கொண்டிருந்த வாழ்க்கையை மீண்டும் அவர்கள் வாழ முயற்சித்ததனால்மட்டும் இந்த ஒன்றியம் உருவாகவில்லை. தாம் உயிரோடிருந்த போது இயேசு அவர்களை ஒன்றாய் இணைத்துவைக்க எவ்வளவோ முயன்றார்! இப்போது அவர் அவர்களது கண்களுக்கு மறைந்துவிட்டார். அவரது மாதிரிகை தங்களைச் சிலுவைக்கு இட்டுச் செல்லும் என அவர்கள் நன்கு அறிவார்கள் எனினும், அவர்கள் ஒரே மனமும் ஒரே உள்ளமும் உடைத்தோராய் அவரது அடிச்சுவட்டைப் பின்பற்றுகின்றனர்; இயேசுவின் ஆவியானவரை அவர்கள் பெற்றுக்கொண்டதே இதற்குக் காரணம்.

புதிதாய்ப் பிறந்த திருச்சபையை 'மண்ணுலகின் இறுதி எல்லைவரைக்கும்' (அ.ப. 1:8) இட்டுச் செல்லும் வல்லமை இந்தப் பரிசுத்த ஆவியே. விரைவில் இவர் புற இனத்தாரையும் நேரடியாக ஆட்கொள்கிறார் (10:44): இங்ஙனம், ''எல்லார் மேலும் தாம் பொழியப்பட்டுள்ளதை'' (2:17) எண்பிக்கிறார்; பிலிப்பு (8:26.29 தொ), பேதுரு (10:20), பவுல், பார்னபா (13:2.4) போன்று தாம் விரும்பியவர்களைத் திடீரெனத் தேர்ந்தெடுத்துத் தூதுரைக்க அனுப்புகிறார். தொடக்கத்தில் மட்டும் அன்று; தொடர்ந்து அவர்களுக்குத் துணையாயிருந்து, அவர்களின் அப்போஸ்தலச் செயல் அனைத்தையும் வழிநடத்துகிறார் (16:6 தொ). அவர்கள் எடுக்கும் முடிவுகட்கு அவர் தம் அதிகார முத்திரையை அளிக்கிறார் (15:28). ''கடவுளின் வார்த்தை நம்பப் பெற்றுப் பரவி வருகிறது'' என்றால் (6:7; 12:24), மகிழ்வோடு முன்னேறும் இந்த உந்துதலுக்கு உள்ளார்ந்த ஊற்று தேவ ஆவியானவரே ஆவார் (13:52).

5. புனித பவுலில் ஆவியானவரின் அனுபவம்:-

அ. ஆவியானவர்: நம்மில் உள்ள கிறிஸ்துவின் மகிமை:- தம் புனித ஆவியின் வல்லமையால் இயேசுவை உயிர்ப்பித்து (உரோ 8:11) உயிர்தரும் ஆவியாக அவரை ஆக்கிய (1 கொரி 15:45) இறைத் தந்தையே, உயிர்த்த ஆண்டவரின் மாட்சியாக (2 கொரி 3:18) அந்த ஆவியானவரை ஆக்கியுள்ளார். தம் சாயலாக நம்மை உருவாக்கும் ஆண்டவரின் மாட்சி நம்மில் இருப்புக்கொள்வதே இத் தூய ஆவியின் அருட்கொடை ஆகும். இதனால்தான், கிறிஸ்துவையும் ஆவியானவரையும் பிரித்துவைத்துப் பேசுவதற்கில்லை. கிறிஸ்துவில் வாழ்வது ஆவியில் வாழ்வதே; வாழ்வது கிறிஸ்துவே (கலா 2:20) உள்ளுயிர் ஆவியானவரே (உரோ 8:2.10); கிறிஸ்து இயேசுவுக்குள் இருப்பது (உரோ 8:1) ஆவியானவருக்குள் வாழ்வதே (8:5..-) என்று பவுல் கூறுகிறார்.

ஆ. ஆவியானவரின் அடையாளங்கள்:- ஆவியானவரில் வாழ்வது இன்னும் அவரை முகமுகமாய்க் கண்டுணர்ந்து இன்புறும் வாழ்வன்று; விசுவாச வாழ்வாகவே இன்றும் உள்ளது. எனினும் நிகழ்ச்சி உறுதிபெறும் உண்மை அனுபவம் அது; அடையாளங்கள் வழியாக அவரது பிரசன்னம் தெளிவுபெறும் அனுபவம் அது. இந்த அடையாளங்கள் தம்மில் பெரிதும் வேறுபடலாம். எனினும், நோய்களைக் குணமாக்கும் வரம், பல்வகைப் பரவசப் பேச்சுவரம், போன்ற வெளியரங்க அருங்கொடைகளும் சரி (1 கொரி 12:28 தொ; 14:12), விசுவாசம், நம்பிக்கை அன்பு ஆகிய உள்ளார்ந்த உயர்கொடைகளும் சரி (12:31), எல்லாமே நற்செய்திக்குச் சான்று பகர்ந்து பணிபுரிய உள்ளன (1 தெச 1:5 தொ; 1 கொரி1:5 தொ); கிறிஸ்துவின் மறை உடலைக் கட்டி எழுப்ப உள்ளன (1 கொரி 12:4-30).

மனிதனின் புறச்செயல்கள், உளநிலைகள், கடவுள் நமக்கருளும் கொடைகள்

இவற்றின் வழியாக (1 கொரி 2:12) இந்த அடையாளங்கள் எல்லாம், ''ஓர் ஆள் பிரசன்னமாயிருக்கிறார்; நம்மில் இவர் சான்று பகர்கிறார் (உரோ 8:16), பரிந்து பேசிச் செபிக்கிறார் (8:26), நம் உளத்தோடு தம்மையே ஒன்றிக்கிறார் (8;16) நம் உள்ளங்களில் 'அப்பா' எனக் கதறுகிறார் (கலா 4:6), மெய்யாகவே நம்மில் இவர் இருக்கிறார்'' என்பதை நாம் கண்டுணரச் செய்கின்றன.

இ. ஆவியானவர்: புது வாழ்வின் ஊற்று:- பல்வேறு உரு எடுப்பினும், ஆவியானவரின் அனுபவம் அடிப்படையில் ஒன்றே. குற்றம் சாட்டப்பட்டு ஏற்கனவே சாவுக்குத் தீர்வையிடப்பட்ட மனிதனின் அவல நிலை இடத்திலே உயர்வாழ்வு வருகிறது; நம்மை அடிமைப்படுத்தி வைத்திருந்த எழுத்துச் சட்டத்தின் இடத்திலே ஆவியானவரின் புதுநெறி நுழைகிறது (உரோ 7:6). சட்டத்தின் சாப இடத்திலே வாக்களிக்கப்பட்ட ஆவியானவரில் ஆபிரகாமுக்குக் கிடைத்த ஆசி அரும்பிச் சட்டத்தின் சாபத்தை அகற்றுகிறது (கலா 3:13 தொ). சாவை விளைவிக்கும் எழுத்துச் சட்ட உடன்படிக்கை இடத்திலே வாழ்வு தரும் ஆவியானவரின் உடன்படிக்கை இருப்புக் கொள்கிறது (2 கொரி 3:6). ஊனியல்பு சட்டத்தால் வரும் பாவப் பிடி நீங்கி, ஆவியானவருடையவும், நீதியினுடையவும் சட்டம் இடம் பெறுகிறது (உரோ 7:18-25; 8:24). ஊனியல்பின் செயல்கள் நீங்கி ஆவியானவரின் அருட்கனிகள் இடம் பெறுகின்றன (கலா 5:19-23); பாவியின்மேல் தாக்க இருந்த தேவ கோபத்தின் வேதனையும் நெருக்கடியும் நீங்கி (உரோ 2:9), ஆவியானவரின் மகிழ்ச்சியும் அமைதியும் இடம் பெறுகின்றன (1 தெச 1:6; கலா 5:22).

இந்த வாழ்வு நமக்குத் தரப்பட்டுள்ளது; ஆவியானவரில் வாழும் நமக்கு அருட்கொடை எதிலும் குறைவே இல்லை (1 கொரி 1:7). ஆயினும், நாம்போராட வேண்டும்: ஏனெனில், இவ்வுலகில் இதுவரை ஆவியானவரை அச்சாரமாகவும் (2 கொரி 1:22; 5:5; எபே 1:14) முதற்கனியாகவும் மட்டுமே (உரோ 8:23) நாம் கொண்டுள்ளோம். ஊனுக்கு எதிராகப் போராட ஆவியானவர் நம்மை அழைக்கிறார். அவர் நம்மோடு ஏற்கெனவே இருக்கிறார் என்பதற்கு அடையாளங்கள் பல இருப்பினும், அவர் நமக்கு இடைவிடாது விடும் ஆணைகளும் அவற்றோடு கலந்தே உள்ளன. ''ஆவியானவரே நமக்கு உயிர் ஊட்டுபவராயிருப்பதால், ஆவியானவரே நாம் செயலாற்றவும் செய்கிறார்'' (கலா 5:25; காண் 6:9; உரோ 8:9.13; எபே 4:30); ஊனியல்பு உள்ளவர்களாய், கிறிஸ்துவில் குழந்தைகளாய் இருந்த நம்மை ஆவி பெற்றவர்களாய் முதிர்வடைந்த மனிதர்களாய் உருவாக்குகிறார் (1 கொரி 3:1).

ஈ. ஆவியானவரும் திருச்சபையும்:- திருச்சபையே ஆவியானவரில் பிறந்த இந்தப் புதுப்படைப்பு. இத்திருச்சபையை ஆவியானவரிடமிருந்து பரிக்க முடியாது; திருச்சபையில் ஆவியானவரின் அனுபவம் கிட்டுகிறது; அதன் பேருண்மைகளை உணர அது உதவுகிறது. திருச்சபையைக் கட்டி எழுப்பவும் தேவ ஆலயத்தைத் திருநிலைப்படுத்தவும் (1 கொரி 3:16; எபே 2:22) மிகப் பயனுறுதியாக உதவுவதால்தான் அருங்கொடைகள் அதிக மதிப்புள்ளவையாய் உள்ளன (1 கொரி 12:7; 14:4). ஆவியானவர் இடைவிடாது தம் செயலையும் மறை உடலின் ஒற்றுமைக்காக ஓயாது உழைத்துக் கொண்டேயிருக்கிறார் (1 கொரி 12:13). நட்புறவின் ஆவியானவர் (எபே 4:3; பிலி 2:1) இதயங்களில் அன்பு எனும் ஒப்புயர்வற்ற கொடையைப் பொழிகிறார் (1 கொரி 13:2 கொரி 6:6; கலா 5:22; உரோ 5:5). தம்முடைய ஒன்றியத்துள் மக்கள் அனைவரையும் ஈர்க்கிறார் எபே 4:4).

உ. கடவுளின் ஆவியானவர்:- ''ஒரே உடலும் ஒரே ஆவியும் உண்டு....ஒரே ஆண்டவர்...ஒரே கடவுள்'' (எபே 4:4 தொ). கடவுளின் ஆவியானவராய்த் தாம் இருப்பதால் அவர் அனைவரையும் ஒன்றிக்கிறார்; பரிசுத்த கடவுளின் ஆவியாய் இருப்பதால் அனைவரையும் பரிசுத்தமாக்குகிறார் (2 கொரி 1:22). இறைவனை நாம் அண்டிவரத்

துணைபுரியவும், இறைவனோடு உயிருள்ள தொடர்பு கொண்டவர்களாய் நம்மை ஆக்க வும், தெய்வீக உள்ளத்தின் ஆழத்தை நாம் கண்டுணரவும், கடவுளின் மறைபொருளைச் சிறிது நாம் உய்த்துணரவும் *(1 கொரி 2:10* தொ), ஆவியானவரின் எல்லாச் செயல்க ளும் நம்மைத் தூண்டுகின்றன. ஆவியானவ ரில்தான் நாம் கிறிஸ்வை அறிகிறோம்; இயேசு ஆண்டவர் என அறிக்கையிடுகி றோம் *(12:3)*; இறைவனைப் பார்த்துச் செபிக்கிறோம் *(உரோ. 8;26)*; அவரை, 'அப்பா, தந்தாய்' எனப்பெயர் சொல்லி அழைக்கிறோம் *(உரோ 8:15; கலா 4:6)*. ஆவியானவரை நாம் கொண்டிருக்கும் முதல் நொடியிலிருந்தே, உலகில் எதுவும் நம்மை அழிக்க இயலாது; ஏனெனில், கட வுள் தம்மையே நமக்குக் கொடுக்கிறார்; நாம் அவரில் வாழ்கிறோம்.

**இறை ஏவுதல்** (INSPIRATION )

கத்தோலிக்கக் கோட்பாட்டில், விவிலிய மும் பாரம்பரியமும் வெளிப்படுத்தப்பட்ட கோட்பாட்டின் எழுதப்பட்ட, வாய்மொழி மூலங்களாகும். பொதுவாக இறை ஏவுதல் என்பது விவிலியத்தின் தோற்றத்தில் இறை வனது செயலைக் குறிக்கும். நாம் இதனை, இறை ஏவுதலில் விசுவாசம், இறை ஏவுத லின் பரப்பு, இறை ஏவுதல் பற்றிய இறையி யல் கருத்து மற்றும் தவறின்மை ஆகிய தலைப்புகளின் கீழ் காண்போம்.

*1.* இறை ஏவுதலில் விசுவாசம்:- பிற்காலத் தில் வளர்ச்சியடைந்த நிலையில் பாதிக்கக் கூடிய இந்த விசுவாசத்தின் வேர்கள் மோசே, இறைவாக்கினர்கள், ஞான இலக்கிய ஆசிரி யர்கள், போதிக்கும் தொழிலைக் கொண்ட குருக்கள் ஆகியோரை இறை ஏவுதல் செயல் படச் செய்தது என்ற இஸ்ராயேலின் விசுவா சத்திலிருந்து தொடங்குகின்றன. இவர்கள் இதில் வேறுபடலாம். மோசே இறைவனின் விருப்பத்தை இஸ்ராயேலுக்கு அறிவிக் கின்ற தனிச்சிறப்பான இடையீட்டாளராக இருந்தார். ஆண்டவரின் வார்த்தையைப் பேசுபவராக இறைவாக்கினர் இருந்தார். ஞானம் 'யாவேயின் கொடையாக இருந் தது. குருக்கள், மோசேயுடைய போதிக்கும் பணியினை, தழுவிய முறையில், தொடர்ந்து செயல்படுத்தினர். எரே *18:18* குருவின் அறிவுரை, ஞானிகளின் ஆலோ சனை, மற்றும் இறைவாக்கினரின் வார்த்தை என்னும் மூன்று அருங்கொடைகளைப்பற்றி கூறுகிறது.

கி.மு.400-க்கும் கி.பி.100-க்கும் இடைப் பட்ட காலத்தில் திருநூல்களின் இறைதுவக் கம் பற்றிய உறுதியான விசுவாசம் யூதமதத் தில் தோன்றுகிறது. ராபிகள் இறை ஏவுத லின் உயர்நிலையை ஐந்நூல்களுக்கும் அதற் கடுத்த நிலையை இறைவாக்கினர்களுக்கும் அதற்கும் கீழான நிலையினை மற்ற நூல்க ளுக்கும் அளித்தனர். இறைவன் சொல்லச் சொல்ல, இறை ஏவுதல் பெற்ற ஆசிரியர்கள் வாசகங்களை எழுதினர் என்று இறை ஏவுத லைப் புரிந்து கொண்டனர். ஆகையால் ராபிகளின் வாதங்களில் ஒவ்வொரு வாக்கிய மும் இறைவெளிப்பாட்டைக் கொண்ட இறைக்கூற்றாகவும் எந்தப் பிரச்சினையினை யும் தீர்க்கக்கூடிய மீறமுடியாத விவாதமாக வும் கருதினர். திருநூல்களின் இறைதுவக்கம் பற்றிய யூத விசுவாசத்தையும் சொல்லச் சொல்ல எழுதப்பட்டது என்னும் கோட் பாட்டையும் வேறுபடுத்தி நோக்க வேண் டும்.

திருநூல்களின் இறைதொடக்கம் மற்றும் அதிகாரம் பற்றிய யூதமதத்தின் நம்பிக்கை யில் இயேசுவும், புதிய ஏற்பாடு ஆசிரியர்க ளும் பங்கு கொண்டனர் என்பதைக் காட்டக் கூடிய விதத்தில் புதிய ஏற்பாட்டில் ஏறக்கு றைய *350* பழைய ஏற்பாட்டு வாசகங்கள் எடுத்துக் கூறப்படுகின்றன. இறை ஏவுதல் பற்றிய புதிய ஏற்பாட்டின் கருத்து 2 திமோ *3:14-17* மற்றும் 2 பேதுரு *1:19-21*-இல் வெளிப்படையாக உள்ளது. கிறிஸ்தவ இறையியலில் 'இறை ஏவுதல்' என்னும் சொல்லுக்கு மூல ஆதாரமாக 2 திமோ *3:14-17* என்ற பகுதி உள்ளது. ஆயினும், இச்சொல் விளக்கப்படவில்லை. சொல்லச் சொல்ல எழுதப்பட்டது என்ற கருத்தும் இல்லை. 2 பேதுருவின் பகுதி இறைவாக்கி

னைப்பற்றி வெளிப்படையாகக் கூறுகிறது. இறைவாக்கு ஒரு போதும் மனிதரின் விருப் பத்தால் உண்டானதில்லை. மனிதர் பரிசுத்த ஆவியால் தூண்டப்பட்டு கடவுளின் ஏவுத லால் பேசினர். இந்த உருவகம் இறைத்தூண் டுதலையும் இயக்கத்தையும் சுட்டிக் காட்டு கிறது. சொல்லச் சொல்ல எழுதும் கருத்தை அன்று.

புதிய ஏற்பாடும் இறை ஏவுதலுக்கு உரிமை கொள்ளவில்லை, இந்த விசுவாசத் தின் வளர்ச்சியைப்பற்றித் தடம் காணமுடி யாது. ஆயினும் தொடக்கத் திருச்சபை இஸ் ராயேல் கொண்டிருந்த இறைவாக்குரைக் கும் அருங்கொடையினைத் தானும் கொண் டிருப்பதாக நம்பியது (அ.ப. 2:16-20; 11:27; 13:1; 1 கொரி 12:28-29; 14:37; எபே 4:1).

தொடக்கத்திலிருந்தே திருச்சபையின் தந் தையர் விவிலியத்தின் இறைத்தொடக்கம் மற்றும் விவிலியத்தின் அதிகாரம் பற்றிய நம்பிக்கையை ஏற்றுக் கொண்டிருந்தனர். பலர் இறை ஏவுதலை விளக்குவதற்காகச் ''சொல்லச் சொல்ல எழுதுதல்'' என்னும் சொற்றொடரையே பயன்படுத்துகின்றனர். யூதமதத்திலிருந்து இச்சொல்லை எடுத்தாளு கின்றனர்; பல தந்தையர்கள் இக்கருத்தையும் ஏற்றுக் கொண்டனர். மற்ற தந்தையரின் கருத்துக்கள் இத்தகைய கருத்தைக் கொண்டி ருக்கவில்லை. அவர்கள் கருத்துப்படி விவி லியத்தின் ஆசிரியர் இறைவனே; மனித ஆசிரியர் இறைவனின் கருவியே ஆவார்; விவிலியம் இறைவனின் வார்த்தை ஆகும். 2-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த தந்தையரின் இலக்கியம், புதிய ஏற்பாட்டைப் பழைய ஏற்பாட்டுக்குச் சம அதிகாரமுடையதாக எடுத்துக்காட்டத் தொடங்குகின்றன. இந்த விசுவாசத்தின் வளர்ச்சிக்குத் தடம் காட்டமு டியாது. ஆனால் அதன் வேர்களை ஆதித்தி ருச்சபையின் இறைவாக்குரைத்தல் மற்றும் அப்போஸ்தலத்துவம் பற்றிய கருத்துகளில் காணலாம்.

இறையியல் பற்றி வாதம் 19-ஆம் நூற் றாண்டுவரை, உடனடி இறையியல் பிரச்சி னையாகத் திருச்சபையில் உருவாகவில்லை; 1870-ஆம் ஆண்டின் வத்திக்கான் சங்கத்தின் அதிகாரப்பூர்வமான அறிவிப்புவரை திருச்ச பையின் அறிவிப்புகள் எந்நோக்குடனும் இப்பிரச்சினையைத் தொடவில்லை. புனித நூல்கள், மனிதத் தொடக்கம் கொண்டவை யானாலும் தன்னுடைய அதிகாரத்தால் ஒப்பு தல் அளித்ததாலோ அல்லது எந்தவிதத் தவ றுமின்றி இறைவெளிப்பாட்டை அவை கொண்டிருப்பதனாலோ திருச்சபை அவற்றை ஏற்றுக் கொள்ளவில்லை; மாறா கத் தூய ஆவியின் இறை ஏவுதலால் இறை வன் அவற்றின் ஆசிரியராக இருப்பதன் பொருட்டே திருச்சபை அவற்றை ஏற்றதாக அச்சங்கம் அறிவித்தது. விவிலியத்தின் இறை ஏவுதலை மறுப்பதானது பதிதமாகக் கண்டனம் செய்யப்பட்டது. சங்க அறிவிப் பானது இறை ஏவுதலின் இயல்பினைப் பற்றிப் பல்வேறு விறுவிறுப்பான இறையி யல் ஆய்வுகளையும் தர்க்கங்களையும் தொடங்கி வைத்தது. 13-ஆம் சிங்கராயர் 1893-ஆம் ஆண்டு ''பராமரிப்புமிக்க இறை வன்'' என்னும் திருமுகத்தின்மூலம் தலை யிட்டு, ''இறைவன், இறை ஏவுதல் பெற்ற ஆசிரியர்களைத் தமது இயற்கை கடந்த செயலால் இயக்கி எழுதும்படித் தூண்டி னார். தாம் கருதியவற்றை மட்டுமே அவர் கள் எழுதும்படி தூண்டினார். அவற்றை அவர்கள் சரியானபடி அறிந்து, பிரமாணிக்க மாய் எழுதவிரும்பி, தகுந்த சொற்களால் வழுவா உண்மையோடு அவற்றை வெளிப் படுத்தும்படி அவர்களுக்கு உதவினார். இவ் வாறாக மட்டுமே இறைவன் விவிலியத்தின் ஆசிரியராக இருக்க முடியும்'' என்று அறி வித்தார். நூலினை எழுதுவதற்கான எல்லா செயல்களிலும் முதல் காரணமாக இறைவன் செயலாற்றுகிறார் என்னும் வலியுறுத்தப் பட்ட அறிவிப்பு 1893-ஆம் ஆண்டிலிருந்து இறையியல் சிந்தனையானது இயங்குவ தற்கு அடிப்படையாக அமைந்திருந்தது.

2. இறை ஏவுதலின் அளவு:- அ) இறை ஏவுதலுக்கு உட்பட்ட நூல்கள் எவையென எவ்வாறு தீர்மானிப்பது? ஆ) தனி நூல்களில் இறை ஏவுதலுக்கு உட்படாத பகுதிகள் ஏதே

னும் உள்ளனவா? என்னும் இருகேள்வி களை இங்கு நாம் ஆய்வு செய்வோம்.

அ. இறை ஏவுதல் என்பது அனுபவத்தி னால் வருவதன்று; மற்றும் நூல்களின் அமைப்பு மற்றும் சிறப்பியல்புகளின் மூலம் அறியப்படக்கூடியதுமன்று. பதித சீர்திருத்த வாதிகளுக்கு இப்பிரச்சினை அவசரம் மிக்க தாய் ஆயிற்று. அவர்கள் வேதசத்தியப் பாரம் பரியத்தை நிராகரித்துவிட்டு வாசகருடன் பேசுகிற ஆவியானவரின் உள்சான்றைத் தவிர, வேறு எந்த அளவு கோலினையும் காணமுடியவில்லை. புறவியலான அளவு கோலினைத் தேடுதல், இறைவாக்குகள் மற்றும் அப்போஸ்தலத்துவத்தினை அடிப்படை யாகக் கொண்ட அளவுகோலை உருவாக்கு வதற்குப் பிரிவினைச்சபை இறையியல் வல் லுநர்களை இட்டுச் சென்றது. நவீன காலப் புலமையில் இந்நூல்களின் இலக்கியத் தோற் றம் பற்றிய நோக்கு இக்கோட்பாட்டினை ஆதரிப்பதைக் கடினமாக்குகிறது. தன்னு டைய பாரம்பரியத்தைத் தவிர்த்து வேறு எந்த அளவு கோலும் தகுதியுடையதன்று என்னும் கருத்தினைக் கத்தோலிக்கத்திருச் சபை எப்போதுமே கொண்டிருந்தது. ஏனெ னில், மனிதனுக்கு வெளிப்பாடு எந்த வேறு வழியிலும் வந்தடையவில்லை. வருவதற்கு வேறு எந்த இடைநிலையும் இல்லை; மற் றும் இறைஏவுதலானது இறைவெளிப்பாட் டின் மூலம் மட்டுமே அறியப்படமுடியும்.

ஆ. சில விளக்கவுரை பிரச்சினைகள், வாசகத்தின் அனைத்துப் பகுதிகளுக்கும் சம மாக இறை ஏவுதல் செலுத்தப்படவில்லை என்று கூறுமாறு சில இறையியல் அறிஞர் களை இட்டுச் சென்றன. இக்கோட்பாடுகள், பொதுவாக, வெளிப்படுத்தப்பட்ட கோட் பாடுகளைக் கொண்ட பகுதிகள் மட்டுமே அல்லது வெளிப்படுத்தப்பட்ட பகுதிகள் மட்டுமே இறைஏவுதலுக்கு உட்பட்டவை என்ற வடிவம் எடுத்தன. இவை, பழைய ஏற்பாட்டிலிருந்து எடுத்துக் காட்டப்பட்ட பகுதிகள் போன்ற முக்கியம் குறைந்த பகுதி களை இறை ஏவுதலினிருந்து விலக்கின. இக்கோட்பாடுகள் விவிலியத்தில் சமயத் தின் முக்கியத்துவத்தைச் சரியாக வலியுறுத் தின. ஆனால் கோட்பாட்டுடன் சமயத்தைத் தவறான முறையில் ஒன்றாக்கின. இலக்கிய அமைப்புகளின் கொள்கையை ஒதுக்கின. 13-ஆம் சிங்கராயர் தனது திருமுகத்தில் இக் கோட்பாடுகள் அனைத்தையும் வெளிப்ப டையாக நிராகரித்தார்.

3. இறை ஏவுதல் பற்றிய இறையியல் கோட்பாடு:- இறை ஏவுதல் பற்றிய பாரம்ப ரிய விசுவாசத்தின் போதனையை, இறைஏ வுதல், இறை ஆசிரியத்தன்மை, மற்றும் இறைவார்த்தை ஆகிய கூறுகளில் சுருக்கிக் கூறலாம். பொதுவாக இக்கூறுகள் முறைப் படி ஒரே தன்மையுடையவை அல்லது; அவற்றினிடையேயுள்ள வேறுபாட்டை, ''இறை ஏவுதலின் மூலமாக, விவிலியம் தன் னுடைய வார்த்தையாக இருக்கும் விதத்தில் இறைவனே விவிலியத்தின் ஆசிரியராவார்'' என்ற கூற்றில் காணலாம். பாரம்பரிய விசு வாசம் இக்கூறுகளின் பொருளை விளக்கிக் கூறவில்லை; அறிவுசார்ந்த முறையிலும், கோட்பாட்டில் சரியான முறையிலும் அவற் றினை விளக்குவது இறையியலின் கடமை யாக உள்ளது.

சொல்லச் சொல்ல எழுதுதல் ஆகிய ராபிக ளின் கோட்பாடு பல தந்தையரால் ஏற்றுக் கொள்ளப்பட்டு 19-ஆம் நூற்றாண்டின் இறு திவரை கத்தோலிக்க மற்றும் பிரிவினைச் சகோதரனின் இறையியலில் ஆதிக்கம் செலுத்தியது. திருநூல்களில் அமைப்பிலும் நடை முறையிலும் உள்ள வித்தியாசங்க ளைக் கணிப்பிலே கொள்ளாமல் கீழ்த்தர மான மற்றும் இயந்திரத்தனமான கருத்தாக இது உள்ளது. இக்கோட்பாட்டைத் தவிர்க்க மேற்கொள்ளப்பட்ட சில இறையியலாரின் முதிர்ச்சியடையாத முயற்சிகள் சரியாக உரு வாக்கப்படவில்லை. லெயோனார்டு லேசி யுஸ் (1587) என்பவர் மனித முயற்சியால் உருவாக்கப்பட்ட நூலானது, பின்வந்த இறை ஒப்புதலினாலும் அங்கீகாரத்தினா லும், இறை ஏவுதலுக்கு உட்பட்டதாக ஆக லாம் என்று கூறினார். சியன்னா சிக்ஸ்து (1575) என்பவர் திருச்சபை அங்கீகாரம் மட்

டும் போதுமானது என்று கூறினார். வத்திக் கான் சங்கத்திற்குச் சற்று முன்னர் இக்கருத்து மீண்டும் 'கானேபெர்க்' (1850) என்பவரால் புதுப்பிக்கப்பட்டது. ஜாக்ன் (19-ம் நூற்றாண் டின் தொடக்கம்) என்பவரின் கருத்துப்படி இறை ஏவுதலானது தவறின்மைக் கொடை யில் அடங்கியுள்ளது. ஆனால் சிக்ஸ்து மற் றும் ஜாக்ன் ஆகியோரின் கருத்துக்கள் வத் திக்கான் சங்கத்தினால் வெளிப்படையா கவே நிராகரிக்கப்பட்டது.

அண்மைக்கால இறையியல் கருத்துக்கள், புனித நூல்கள் தோன்றுவதில் நேரடியான இறை தூண்டுதலில் அடங்கியுள்ளது இறை ஏவுதல் என்ற நிலையைக் கொண்டுள்ளன. இந்நிலை, பின்பு வந்த இறை அல்லது திருச்சபையின் அங்கீகாரம், அல்லது தவறில் லாதிருக்க எதிர்மறையான உதவி போன்ற கோட்பாடுகளைவிட அதிகமானது. இது சொல்லச்சொல்ல எழுதுதல் ஆகிய கோட் பாட்டின் ஒன்றுமின்மையையும் கருத்தில் கொள்கிறது. இந்த ஆய்வுகளின் விளைவா கப் புனித நூல்களை உருவாக்குகின்ற இறை ஏவுதலுக்கும், உண்மைக்கு இறைவனால் அளிக்கப்படுகிற சான்றாகிய வெளிப்பாட் டிற்கும் இடையிலுள்ளவேறுபாடு வெளிப் படுகிறது. இறைஏவுதல் பெற்ற ஆசிரியர் எழுதுவது வாசிப்பவர்களுக்கு வெளிப்பா டாகும்; தனது அறிவைச் சாதாரண மனித முறையிலேயே பெற்றிருக்கலாம் என்ப தால், அது ஆசிரியருக்கு அது வெளிப்பா டாக இருக்க வேண்டிய அவசியம் இல்லை.

1870-இல் விவிலியக் கருத்துகளையும் அவற்றின் வார்த்தை அமைப்புகளையும் வேறுபடுத்தக்கூடிய ஒரு கருத்தை பிரான்சே லின் முன் மொழிந்தார். இதன்படி இறைஏவு தல் கருத்துகளை மட்டுமே பாதிக்கிறது; இக்கருத்துக்கள் வெளிப்பாட்டின் மூலமா கவோ அல்லது ஆசிரியர் ஏற்கெனவே கொண்டிருக்கும் கருத்துக்களைக் குறிப்பா கத் தெரிவித்தலாலோ ஆசிரியருக்குத் தெரி யப்படுத்தப்படுகின்றன. வார்த்தை அமைப் பானது ஆசிரியருடையதே; இதில் தவறுக ளுக்கு எதிரான எதிர்மறை உதவியினைத் தவிர்த்து வேறு எந்த இறைத்தாக்கமும் இல்லை. பேசப்பட்ட சிந்தனை, பேசப்ப டாத சிந்தனை என்ற வேறுபாட்டைப் புகுத் தியதற்காக இறையியல் வல்லுநர்கள் இந்தக் கோட்பாட்டைக் குறை கூறியுள்ளனர். இத்த கைய வேறுபாட்டை இக்கால உளவியல் ஏற்றுக்கொள்ளாது. மேலும் இலக்கிய வடி வங்கள் பற்றிய அண்மைக்கால ஆய்வுகள், இந்த முறையில் வடிவத்தையும் பொருள டக்கத்தையும் பிரிப்பதைக் கடினமாக்குகின் றன. விவிலியத்தின் பொருளடக்கத்தில் பெரும்பகுதிகளைக் கோட்பாட்டுக் கருத் துக்களாக ஆக்கமுடியாது என்பதையும் இக் கோட்பாடு கணக்கிலேயே கொள்ள வில்லை. வாதத்திற்கு ஏற்றதாக இல்லாத நம்பிக்கை, பயம், ஆசை, கோபம் மற்றும் இதே போன்ற உளவியல் நடைமுறைகளை யும் விவிலியம் கூறுகிறது. இறுதியாக, இக்கோட்பாடானது வார்த்தைகள் மற்றும் வார்த்தைகளுக்கான எதிர்மறை உதவியைச் சேர்த்தல் ஆகியவற்றுக்குப் பதிலாக, சொல் லச் சொல்ல எழுதும் முறையை கருத்துக ளுக்குச் சாற்றிக் கூறுகிறது.

1895-1896-இல் எம்.ஜே. லெக்ரான் பரவ லாக ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒரு கருத் தினை முன்மொழிந்தார். பிரான்சேலின் தனது அடிப்படை கோட்பாடாக கொண்டி ருந்த ஆசிரியர் என்னும் எண்ணத்திற்குப் பதிலாக, இறைஏவுதல் என்னும் எண்ணத் தின்மேல் லெக்ரான் தனது கருத்தை உரு வாக்கினார். இறைவனுக்கும் மனித ஆசிரிய ருக்கும் இடையில் உள்ள கூட்டுறவானது, மூலகாரணத்திற்கும், துணைக்காரணமாகிய கருவிக்கும் இடையில் உள்ள கூட்டுறவி னைப் போன்று புரிந்துக் கொள்ளப்பட வேண்டும். துணைக் காரணம் பற்றிய தாமஸ் அக்வீனாஸின் கருத்துப்படி, முழுவி ளைவில் ஒவ்வொரு காரணமும் காரணமாக இருக்கக் கூடிய கூட்டுறவு காரண அமைப்பு இது ஒன்றேயாகும். துணைக்காரணமானது தனக்குரிய ஆற்றலைக் கொண்டிருந்தாலும் மூலகாரணத்தின் ஆற்றலினால் உயர்த்தப் பட்டுச் செயல்படுத்தப்படுவதால் தன் விளைவை அடைகின்றது. எனவே, இறை

வன், வரலாற்றில் அவனுடைய காலம், நிலைமை, ஆளுமை, சிந்தனை மற்றும் பேச்சில் பழக்க வழக்கங்கள் ஆகியவற் றோடு கூடிய முழு மனிதனை ஏற்றுக் கொள்கிறார். மூலக்காரணத்தால் ஏற்றுக் கொள்ளப்படுவது இப்பண்புகள் எதையும் மாற்றாமல், எதிர்பார்க்கும் முடிவிற்கு அவற்றைப் பயன்படுத்துகின்றது. மனிதனு டைய கருவி தகுதியானது, நூல் எழுதுவதற் கான அவனது ஆற்றலாகும். முழு மனித னும் அவன் இருக்கும் நிலையிலேயே ஏற் றுக் கொள்ளப்படுவதால் அவனால் உரு வாக்கப்பட்ட நூலும் பிறருடையதாக அன்றி அவனுடையதாகவே உள்ளது. இறைவாக்கி னர் தான் அறிவிக்கும் உண்மையானது வெளிபடுத்தப்பட்டதாகவோ அல்லது அனு பவத்தினால் அறிந்ததாகவோ இருந்தாலும், அதனைப் புரிந்துக்கொள்ள உதவும் ''இறை வாக்கு ஒளி அளித்தல்'' என்னும் அக்வீனா சின் கருத்தை, லெக்ரான் மற்றும் பிறரும் சேர்ந்து ஏற்றுக்கொண்டனர். அறிவின் சக்தி களில் இயல்பான நிலைகளும் மேலான விதத்தில் புரிந்து கொள்ளச் செய்யும் தனிப் பட்ட இயக்கமாக இந்த ஒளி அளித்தல் புரிந்து கொள்ளப்படுகிறது. இந்த ஏற்பாடா னது விருப்பம், செயலாற்றும் சக்திகளை இயக்குகின்றது. இவ்வாறு, லக்ரானின் கரு துகோளில் கருத்துக்களின் அமைப்பும் அவற் றைச் சொற்களாக எடுத்துக் கூறுதலும் இறை ஏவுதல் பெறுகின்றன. 'வார்த்தை இறை ஏவுதலை'' இவ்வாறு புரிந்து கொள்ளுத லைப் பழங்காலத்து சொல்லச் சொல்ல எழுதுதலோடு குழப்பிவிடக் கூடாது.

மேலும் பல அண்மைக்கால ஆசிரியர்கள் இக்கருத்தினை மேலும் நயப்படுத்தியுள்ள னர். பி.பேனோவின் கருத்துப்படி எழுத்தா ளரின் பிரச்சினையானது புரிந்து கொள்ளுவ தைப்பற்றி அன்று, எடுத்து கூறுதலைப்பற்றி யதாகவே உள்ளது. எனவே குறிப்பாக, இறை ஏவுதலுக்கு உட்பட்ட எழுத்தாளரை இயக்குகின்ற 'இறைவாக்கு ஒளி அளித்தல்' ஆராய்ச்சி சிந்தனையைச் சார்ந்ததன்று; அவ ரது நோக்கத்திற்கு ஏற்ற வடிவம் நடை ஆகியவற்றைத் தேர்ந்தெடுக்க எழுத்தாள ருக்கு வாய்ப்பளிக்கின்ற செயல்பாட்டு இயக்கமாகும். எழுதப்பட வேண்டியதன் செயல்பாட்டுத் திறனாய்வின் ஒளி அளித்த லில், அவர் இறைஏவுதல் அருங்கொடைக்கு இடம் அளிக்கிறார். விவிலிய நூல்கள் உரு வாக்கப்படலில் உள்ள சிக்கலான இலக்கிய முறையைக் கருத்தில் கொண்டு இப்பிரச்சி னையைப் போனோதான் முதலில் ஆராய்ந்த வர். செயல்பாட்டு திறனாய்வுக்கு ஒளி அளித்தல், இறைஏவுதலுக்குட்பட்ட நூலைத் தயாரிக்க பங்குகொண்ட அனைவரையும், அவர்களுடைய பங்கிற்கேற்ப பாதித்தது, 'ஆசிரியர்' மற்றும் 'நூல்' என்பவை நவீன கருத்துக்களாகும். அவற்றை அப்படியே பழைய உலகிற்கு மாற்றிக் கூறக் கூடாது.

கார்ல்ரானரின் கருத்துப்படி இறைஏவுதல் அருங்கொடையானது பிற்காலத் தலைமு றைகளில் தொடராமல், ஆதித்திருச்சபைக்கு மட்டுமே உரிய சிறப்பியல்புகளில் ஒன்றா கும். தனிப்பட்ட எழுத்தாளர்கள் என்று இல்லாமல். திருச்சபையே புதிய ஏற் பாட்டை எழுதியது. பிரிங்க்மேனின் கருத் துப்படி இக்கொடையானது அப்போஸ்தலர் களையும் அவர்களது நெருங்கிய துணையா ளர்களையும் கொண்ட, அப்போஸ்தலிக்கப் பணியின் ஒரு பகுதியாகும்.

இறைஏவுதல் கோட்பாடானது பலவழிக ளில் முழுமையடையாமலேயே உள்ளது என்பதை இறையியலார் பொதுவாக ஏற்றுக் கொள்கின்றனர். 'ஆசிரியர்' மற்றும் 'நூல்' என்னும் சொற்களை நவீன அளவில் புரிந்து கொள்ளும் இக்கோட்பாட்டின் வெறும், ஏட் டுத்தன்மை, பேனோவில் நூல்களிலும் போதுமானமட்டும் விலக்கப்படவில்லை. சில விவிலிய நூல்களே ஒரே ஆசிரியரால் எழுதப்பட்டவை. பெரும்பாலானவை பெயர் தெரியாதவர்களை ஆசிரியர்களாகக் கொண்டுள்ளன. அவை வளர்ச்சியின் நீண்ட கால முறையின் முடிவுகளாக உள்ளன. எல்லாம் இல்லாவிடினும், பெரும்பாலான விவிலிய நூல்கள் அமைக்கப்பட்டு வாய் மொழியாகவே கையளிக்க அனுப்பப்பட் டன. இத்தகைய நூல்களில் எழுதுவதை

மட்டுமே பாத்திக்கும் இறைஏவுதல் அருங்கொடையினைப்பற்றிப் பேசுவது உண்மைக்கு ஏற்றதாக இல்லை. எதிர்கால ஆய்வுகள், இறைஏவுதலின் சமூகப் பண்பை வலியுறுத்தும் என்பதில் ஐயமில்லை. இந்தச் சமூகப் பண்பு பழங்கால இலக்கிய அமைப்புகளின் சமூகப்பண்புகளுக்கேற்ப விளக்கப்படும். ஆதிகால ஏழுத்தாளரோ அல்லது பேச்சாளரோ தன்னைத் தனிப்பட்ட கலைஞராகக், கருதவில்லை. எந்தச் சமூகத்தில் எந்தச் சமூகத்திற்காகப் பேசினாரோ அந்தச் சமூகத்தின் பிரதிநிதியாகவே பேசினார். ஒருவிதத்தில் இஸ்ராயேலும் திருச்சபையுமே விவிலியத்தின் உண்மையான ஆசிரியர்களாகக் கருதப்பட வேண்டும். பழைய ஏற்பாட்டில், குருக்கள், இறைவாக்கினர்கள், சட்ட வல்லுநர்கள் மற்றும் ஞானிகள், புதிய ஏற்பாட்டில் அப்போஸ்தலர்கள் போன்ற தங்களது பிரதிநிதிகளென, கருதப்பட்டவர்கள் மூலம் இரண்டும் தங்கள் பணியினைச் செயல்படுத்தினர்.

*4.* தவறாமை அல்லது வழுவாமை:- இது திருச்சபையின் விளக்க உரையின் பொருளாக எப்போதும் இருந்ததில்லை. ஆனால் திருச்சபையில் எவ்வளவு தெளிவாக விசுவாசிக்கப் பட்டதென்றால் இறையியல் வல்லுநர்கள் இதை ஒரு விசுவாச சத்தியமாக ஏற்றுக் கொண்டனர். துணைமுடிவான தவறாமை என்ற கருத்து ஓரளவு சிக்கலான இறை ஏவுதல் கருத்தைப் பொறுத்தது. தவறாமைப் பற்றிய அடிப்படைவாதிகளின் கருத்தை ஆதரிக்க முடியாது. சில விளக்கவுரை பிரச்சினைகள், தவறாமை பற்றி இன்னும் துல்லியமான கருத்தினை உருவாக்குமாறு நவீன இறையியல் வல்லுநரைத் தூண்டின. ஆனால், பெரும்பாலான கருத்துக்கள் முதிர்ச்சியடையாதவையாகவும், சரியாக உருவாக்கப்படாதவையாகவும் இருந்தன. ஆதியாகமம் பொய்யான கதைகள் மூலம் உண்மையை வெளிப்படுத்துவதாக ஒருவர் கூறுகிறார். வேறுசிலர் திருச்சபையின் வழுவாமை போன்ற விசுவாசம் மற்றும் ஒழுக்கம் சம்மந்தப்பட்ட காரியங்களுக்குள் விவிலியத்தின் தவறாமையை வரையறை செய்தனர். வேறொருவர் ''தொடர்பு உண்மை'' என்னும் கோட்பாட்டினை எடுத்துக்கூறினார். அதன்படி ''முழுமையான அல்லது வரம்பில்லாத உண்மை'' என்னும் சொல்லை வேறு பொருளில் பயன்படுத்தினார். ''ஒரு கலாச்சாரத்தின் கருத்துக்கள் மற்றொரு கலாச்சாரத்திற்கு உரியவை அல்ல'' என்றார்.

இக்கோட்பாடுகள் நவீன வரலாற்று மற்றும் இயற்கை இயலுக்கு ஏற்ப ''தவறாமை'' என்னும் கருத்தை நயப்படுத்த எடுத்த முயற்சிகளேயாகும். வரலாறும் இயற்கை அறிவியலும் விவிலியத்தின் ஒரே சீராகவுள்ள இறை அறிவு சார்ந்த வழுவாமையைப் பாதுகாக்க இயலாத ஒன்றாக ஆக்குகின்றன. நவீன விளக்கவுரையானது இத்தகைய எளிய, பரந்த பலவற்றையும் உள்ளடக்கும் விளக்கத்தைத் தேடுவதில்லை. ஒவ்வொரு பிரச்சனையும் அதனுடைய பின்னணியிலேயே தீர்க்கப்பட வேண்டும் என்று நினைக்கின்றது. ஆயினும், இப்பிரச்சினைகளை நடத்தும் முறையினைக் கவனிக்கின்ற விளக்கவுரை படிப்பினைகளிலிருந்து சில பொதுவான விதிமுறைகள் உருவாயின.

அ) மனித ஆசிரியர் எந்தப் பொருளில் சொல்கிறாரோ, அதே பொருளில் மட்டுமே விவிலிய வார்த்தைகள் எப்போதும் உண்மையாக உள்ளன. அந்தப் பொருள் என்ன என்பதை உறுதியாக அறிவதற்கு முன்னர், விவிலிய எழுத்தாளர்களின் முறைமைகளையும் பேச்சுகளையும் ஒருவன் நன்கு அறிந்திருக்க வேண்டும்.

ஆ) வழுவுகின்ற மனிதனிலிருந்து வழுவாத எழுத்தாளரை ஒருவன் வேறுபடுத்திக் காட்டவேண்டும். தவறான நம்பிக்கைகளை மனிதன் கொண்டிருக்கலாம். அவை சில நேரங்களில் தங்களையே உறுதியாகக் காட்டிக்கொடுத்துவிடும். வழுவாமை என்பதற்கு இத்தவறுகள் கூறப்படவில்லை என்பது பொருள். இவை புலப்படாதவை என்பதல்ல.

இ) வழுவாமை என்பது வழக்கமான மனித மொழியில் வழக்கு முறையில் புரிந்து

கொள்ளப்பட வேண்டும். விவிலியமானது, பொதுப்பாணி முறையையும் கலைச் சொல் தன்மையற்ற மொழியையும், உருவகங்க ளையும், முரணுரைகளையும், தோராயமான கூற்றுக்களையும், தொலைநோக்கு நிகழ்ச்சி யுரைகளையும், நாடோடிப் பாடல்களையும் கதைகளையும், புராணங்களையும் பயன்ப டுத்துகிறது.

ஈ) வழுவாமை என்பது மேற்காசியமக்க ளின் மனப்போக்கையும், செமித்திய மொழி களின் பண்புகளையும் கணக்கில் கொள்ள வேண்டும். மேற்காசிய மக்களின் மனப் போக்கு மீபெளதீகத் தன்மையோ வாத முறையோ கொண்டதல்ல. எபிரேய மனப் போக்கு தொடர்ந்து கருத்தியலான சிந்தனை யையும் நுட்பமான வேறுபாடுகளையும் எடுத்துக்கூறவல்லது அன்று. அதனுடைய கூற்றுக்கள் யாவும் ஒரே தர இலக்கணத் தன்மையுடையன, நுட்பவேறுபாடுகள் இல் லாதவை.

உ) வழுவாமை இலக்கிய வடிவங்களின் அமைப்பில் சிந்திக்கப்பட வேண்டும்.

ஊ) தவறாமை எழுத்தாளர்களின் தனிப் பட்ட நடை அமைப்பில் கருதப்பட வேண் டும்.

எ) எழுத்தாளர் பொருட்களைப்பற்றி அவை உள்ள நிலையிலேயே பேசுவதற்கு எப்போதும் விரும்புவதில்லை. இவ்வாறு, பொருட்கள் அவற்றின் வெளிப்புறத் தோற் றத்தின்படி விவரிக்கப்படுகின்றன; பொது வான செம்மையற்ற அடையாளங்கள் பயன் படுகின்றன. குறிப்பிட்ட பின்னனிக்கு மட் டுமே ஏற்புடைய அறிவுரை அளிக்கப்படுகி றது. எதிரடித்தாக்கு முறை பயன் பட்டுள் ளது. பொதுப்பாணி உரையின் பண்புகளும் காணப்படுகின்றன.

தவறாமைக்கு எதிராக இயற்கை அறிவிய லிலிருந்து எழுதப்பட்ட பிரச்சினைகள், விவிலிய மொழியானது அறிவியல் தன்மை யற்றது என்றும், பருப்பொருள் பற்றிய கருத் துக்கள் அதனுடைய காலங்களைச் சேர்ந் தவை என்றும் காட்டுகின்றன. ''அறிவியல் உண்மை'' மற்றும் ''அறிவியல் தவறுகள்'' ஆகியவை நவீன கருத்துக்கள் என்பதை இப்போது நாம் காண்கிறோம். இவை, விவி லியத்தில் தோன்றவில்லை. உண்மையோ தவறோ எந்த அறிவியல் கூற்றையும் விவிலி யம் கூறவில்லை. தவறாமை அல்லது வழு வாமை என்பதற்கு எதிராக எழுப்பப்பட்ட பிரச்சினைகள் அனைத்தும் இலக்கிய அமைப்புகள் வரலாறு, வரலாற்று நூல் பற் றிய பழங்கால கருத்துக்கள் ஆகியவற்றில், விடை காண்கின்றன.

இறைஏவுதல் என்பதின் விளைவுகளான பலவற்றில் விவிலியத்தில் ஒற்றுமையும் அதன் பயனுடைமையும் மற்ற சிறப்புக் கருத்துக்களாகும்.

**இறைச்சிப் பாத்திரம்** (FLESH POT)

கறிசமைக்க உதவும் கொதி கெண்டி அல் லது இறைச்சி நிறைந்த பாத்திரம் என்பதைக் குறிக்கும். ''நாங்கள் எகிப்திலே இருந்து போது இறைச்சி நிறைந்த பாத்திரங்க ளண்டை உட்கார்ந்து, வயிறாரா அப்பம் சாப்பிட்டு வருவோமே'' என்று பாலைவ னத்தில் இஸ்ராயேல் மக்கள் முறையிட்டார் கள் (யாத். 16:3). 'எகிப்தில் நிறைய இறைச் சியும், அப்பமும் அவர்களுக்கு உண்ணக் கிடைத்தது' என்று இஸ்ராயேலர் உரிமை கொண்டாடுவது உண்மையில் அதிர்ச்சித ரும் வாக்கு மூலமாக இருக்கிறது. ஏனென் றால் இறைச்சி எளிதாக ஏழைகளுக்கு கிடைக்கும் உணவல்ல.

**இறைத்திட்டம்** (PLAN OF GOD)

'முந்தினவற்றைச் செய்து முடித்தவரும்' 'ஒன்றுக்குப்பின் ஒன்றாகத் திட்டமிட்டவ ரும்' (யூதி 9:5) ஆகிய இறைவன் அனைத்தை யும் 'அளவோடும், கணக்கோடும், நிறை வோடும்' (ஞானம் 11:21) ஏற்பாடு செய்கி றார். அதாவது, மனித வரலாறு அறிவற்ற விதியின் தூண்டுதலுக்கேற்ப அமைவ தில்லை. இறைவனின் திருவுளத்தின் பல னாகத் தனது முடிவை நோக்கிச் சென்று கொண்டிருக்கும் வரலாறாக ஒருமுகப்படுத்

தப்படுகிறது. காலங்களுக்கு முன்பே இறைவனால் நிச்சயிக்கப்பட்டிருக்கும் அந்த இறுதிநிலை இரு முக்கியமான அம்சங்களைக் கொண்டுள்ளது: கிறிஸ்துவில் மீட்பும், மாந்தர் அனைவரின் மீட்பும் ஆகும். இறைவனின் திருவுள்ளத்தின், கால நிறைவில் கிறிஸ்துவுக்குள் நிறைவேற்ற ஏற்பாடாக அவர் வைத்திருந்த இந்தத் தயவான திட்டத்தின் மறைபொருள் இத்தகையதே (எச 1:9-10; 3:11). இது மிகப் பல நூற்றாண்டுகளாக மறைத்துவைக்கப்பட்டிருந்து, பழைய ஏற்பாட்டில் கிறிஸ்து மனிதனாக நுழையும் வரை முழுமையாக அறிவிக்கப்படவில்லை (எபே 1:9-10; 3:11). இது மிகப் பல நூற்றாண்டுகளாக மறைத்துவைக்கப்பட்டிருந்து, பழைய ஏற்பாட்டில் கிறிஸ்து மனிதனாக நுழையும்வரை முழுமையாக அறிவிக்கப்படவில்லை (3:1-12). இருந்தபோதிலும் இத்திட்டம் எல்லாத் திரு வரலாற்றிற்கும் விவிலியத்திற்கும் ஒற்றுமையும் தெளிவும் வழங்குகிறது. குறிப்பிட்ட பதங்களில் (சொற்களில்) அதனுடைய தனிச்சிறப்பான அறிவிப்பு பழைய ஏற்பாட்டில் அரிதாக இருப்பினும் இத்திட்டம் பழைய ஏற்பாட்டின் அமைப்பு முழுவதிலும் மென்மையாக இழைந்தோடுகிறது.

I. பழைய ஏற்பாடு:- இறைத்திட்டத்தின் முடிவற்ற தறகாலிகமான முதல் அளவீடுகளை நமக்கு வழங்குகிறது பழைய ஏற்பாடு. இஸ்ராயேலின் திருவரலாற்றுப் பின்னணியில் அதன் விசுவாசத்தின் பல்வேறு நிலைகளுக்கொத்த வேறுபட்ட இலக்கிய வழக்குகளில், இத்திட்டத்தின் முதல் அறிவிப்புகள் காணக்கிடக்கின்றன.

1. விசுவாச அறிக்கைச் சடங்குகள்:- உபாகமம் பல சடங்கு உரை மூலங்களைக் கொண்டிருக்கிறது. விசுவாச அறிக்கைகள் (உப 26:5-10), மறைக்கல்வி விதிமுறைகள் (யாத் 12:26-27; உப 6:20...), குருக்களின் மறையுரைக்குறிப்புகள் (யோசு 24:2-15) யாவும் ஒரே படிவத்தைப் பின்பற்றி எழுதப்பட்டிருக்கின்றன. இது இஸ்ரயேலின் இறைநம்பிக்கையின் (விசுவாசத்தில்) மையமாக இறைத்திட்டம் இருந்ததைக் காட்டுகிறது. அப்போது ஒரு தனி இனம் என்ற முறையில் இஸ்ராயேல் தனது வரலாற்றை மறையுணர்வோடு புரிந்துக்கொண்டது. இறைவன், தமது பங்காக, இஸ்ராயேலின் முன்னோர்களைத் தேர்ந்துகொள்ளல், ஒரு தலைமுறையையும் நாட்டையும் வழங்க உறுதியளித்தல், மனிதர் கணிக்க முடியா நிகழ்ச்சிகள் மூலம் உடன்படிக்கையை நிறைவேற்றல், விந்தையான விடுதலைப் பயணம். சீனாய் மலையில் உடன்படிக்கை, திருச்சட்டமளிப்பு, கானான் மீது வெற்றி - இத்தனையையும் செய்திருந்தார். வருங்காலம் காத்திருக்கிறது. செயல்களில் ஒரளவு வெளிப்படுத்தப்பட்டிருந்த திட்டத்தை இறைவன் முழு நிறைவிற்குக் கொண்டு வருவார் என்பதில் ஐயம் என்ன இருக்கமுடியும்? இஸ்ராயேல் மக்கள் அப்போது நிகழ்ந்து கொண்டிருக்கும் நாடகமொன்றில் முழுமையாகப் பங்கேற்கிறோம் என உணர்ந்திருந்தார்கள். ஆயினும் நாடகத்தின் முடிவு ஓரளவே அறிவிக்கப்படுகிறது.

2. நிகழ்ச்சிகளைப் பற்றிய இறைவாக்கினர் உணர்வு:- இந்த முற்கோளுக்கு (முன்னுணர்வு) இறைவாக்கினர் புது அம்சங்களைக் கொண்டு வருகின்றனர். உண்மை என்னவென்றால், ''தம் ஊழியர்களாகிய இறைவாக்கினர்களுக்குத் தம் மறைபொருளை வெளிப்படுத்தாமல் ஆண்டவராகிய இறைவன் ஏதும் செய்வதில்லை'' (ஆமோ 3:7). நிகழ்ச்சிகள் நடப்பதற்கு முன்னால் அவைகளுக்குக் காரணமாக இறைவனின் ஒரு நோக்கம் (ஏச 5:19; 14:26; 19:17; 28:29; 46:10; எரே 23:18-22), ஒரு திட்டம் (மீக் 4:12), ஒரு விருப்பம் (ஏச 44:28; 46:10; 48:14; 53:10) எப்போதும் இருக்கிறது. இறைவாக்கினர் இறைமக்களுக்கு உணர்த்தும் மறையுண்மையும் இதுவே. இவ்வுண்மைக்கு அவர்களது நாட்டின் வரலாற்றிலுள்ள சான்றுகளைக் கவனித்திற்குக் கொணருகின்றனர். எகிப்திலிருந்து வந்த பயணத்திலிருந்து இஸ்ராயேலை மகனின் நிலைக்கு உயர்த்த இறைவன் விரும்பினார் (எரே 3:19.20). இவ்வுண்மையின் ஒளியிலே இந்த நன்றி மறந்த மக்களின் தற்போதைய வாழ்வு ஆராயப்பட

வேண்டும். இவ்வுண்மை இம்மக்களின் உண்மையான மனமாற்றத்தினுடைய தேவையை உணர்த்துகிறது. ஏனெனில் இறைத்திட்டம் இன்றைய வரலாற்றையும் தொடர்ந்து இயக்கிய வண்ணம் இருக்கிறது. நெபுக்கதுனேசார் தனது நுகத்தை இஸ்ராயேல்மீதும் சுற்றியுள்ளநாடுகள்மீதும் சுமத்துகிறாரென்றால், அது கடவுளின் ஊழியன் என்றமுறையில்தான் (எரே 27:4.8), பாவம் புரிந்த இம்மக்கள்மீது கடவுள் கொண்ட கோபத்தின் கருவி (எரே 25:15) என்ற முறையில்தான் அவர்செயல்படுகிறார். புறவின நாடுகளில் ஒன்று தனது அழிவைச் சந்திக்கிறதென்றால், அது இறைவனின் முடிவின் பலனாக, அவரது தீர்ப்பை அறிவிப்பதற்காகத் தான் (எரே 49:29; 50:45). சைரஸ் அரசன் கிழைநாடுகளின் தலைவன் ஆகிறாரென்றால் அது இறைவனின் விருப்பத்தை நிறைவேற்றவும் இஸ்ரயேலின் விடுதலையை உறுதிப்படுத்தவுமே (ஏச 44:28; 46:10; 48:14). கடைசியாக, இறுதிநாட்களைப் பற்றிய தங்களின் முன்னறிவிப்புகளில், இறைவாக்கினர் எந்த முடிவை நோக்கி இறைவன் வரலாற்றை நடத்திக் கொண்டிருக்கிறார் என்பதை அறிவிக்கின்றனர். இஸ்ராயேலும், எல்லா நாடுகளும் பங்குபெறும் ஒரு மீட்புதான் அது (2:1-4). கடந்த கால நிகழ்ச்சிகள் எந்த அளவுக்கு இம்மீட்பின் முன்னடையாளங்களாக இருந்தனவோ அந்த அளவுக்கு இம்மீட்பைப்பற்றிய விளக்கம் கூறுகின்றன. ஆனால் இம்மீட்பு காலவரைக்குட்பட்ட எத்திட்டத்தையும் கடந்ததாக இருக்கும்; ஏனெனில் இறைத்திட்டத்திற்கொப்ப, பாவிகளின் மீட்பிற்கு அழைப்பு விடுப்பதாக அது உள்ளது. இத்திட்டத்தின் முழுமையும் உள்ளடக்கும் ஒவியம் ஒன்றைத் தீட்டுகின்றனர் இறைவாக்கினர். சிலவேளைகளில் இத்திட்டத்தின் எல்லா அம்சங்களும் ஒரே சேர்க்கையில் இணைகின்றன. ஒன்றன் பின் ஒன்றாக இஸ்ராயேலின் கடந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் மூன்றையும் கண்முன் கொணரும் எசக்கியேலின் உவமை இதற்கோர் எடுத்துக்காட்டு (எச 4:16).

3. வரலாற்றுத் தொகுப்புகள்:- விசுவாச அறிக்கைகளும் நிகழ்ச்சிகள் பற்றி இறைவாக்கினர் உணர்வும் வரலாற்று விளக்கத்திற்கு அதன் தனிப்பட்ட அம்சமான எண்ண அமைப்பை வழங்குகின்றன. இன்றைய அறிவியலின் கணிப்புப்படி, வரலாற்றுக் கூற்றுகள் வேறுபட்ட மூலங்களையும் மதிப்பையும் உடையனவாயிருக்கின்றன என்றாலும், அவைகளை ஒன்றிணைத்துப் பயன்படுத்துதல் இம்முயற்சிகளுக்கு வெறும் ஏட்டளவில் உள்ள விளக்கங்களைக் கடந்த, ஒரு நிலையான மதிப்பைத் தருகின்றது. விசுவாசம் வரலாற்றின் தொடர்ச்சியை வெளிப்படுத்துவதன் மூலம் அதனை ஒன்றுபடுத்துகிறது. (யாவே பாரம்பரியத்தின் தொகுப்பிலேயே இவ்வுண்மை காணக்கிடக்கிறது). விசுவாசம் இறைவின் சட்டங்களைச் சுட்டிக்காட்டி வரலாற்று வளர்ச்சியை விளக்குகிறது (நீதி 2:11.13-இல் உள்ளது போல்). இக்கோணத்தில் நோக்கும்போது எல்லா நிகழ்ச்சிகளும் ஒரே மீட்புத் திட்டத்திற்குள்ளேயே காணப்படுகின்றன. இஸ்ரயேலின் எதிர்காலமே நேரடியாகக் குறிப்பிடப்பட்டாலும் அகில உலக நோக்கும் அதில் இருக்கிறது (ஆதி 9:12; 10; 12:3; 49:10). காலம் உருண்டோட புது நிகழ்ச்சிகள் திட்டத்தின் அடிப்படையான அம்சங்களை இன்னும் தெளிவாக அறிவிக்கின்றன. குருகுல வரலாற்று அறிஞன் பின்பு சுருக்கி திருத்தியமைத்த முன்னைய மரபுகளின் தொகுப்புகளோடு, உபாகமத்தின் ஆசிரியர், வெற்றியின் வரலாற்றையும் (யோசுவா), நீதிபதிகளின் வரலாற்றையும் (நீதிபதி) அரசாட்சி வரலாற்றையும் (சாமுவேல், அரசராகமம்) நாட்டு நிறுவனங்களின் தோல்விவரை, இணைக்கின்றார். அதே அடிப்படையான குறிப்புகளை உபயோகித்து நாள் ஆகமப் பாரம்பரிய, ஆசியர் யூத இனம் மறுபடியும் சக்தி பெறுவதன் வரலாற்றைச் (நாளாகமங்கள், எஸ்ரா, நெகமியா) சேர்ப்பதன் மூலம் விளக்கத்தை நிறைவு செய்கிறார். இங்கே மனித திட்டங்களை முறியடிக்கும் சக்தி வாய்ந்த இறைவனின் முடிவற்ற திட்டமொன்று செயல்படுகிறது என்று நிரூபிக்கப்படுகிறது (சங் 33:10தொ). உண்மையில் இவ்வரலாற்றுத் தொகுப்புகள் நேரடியாக இஸ்ராயேலின் செபமாக ஆகின்றன (சங்

*77:78; 105;106)*. வரலாற்று நிகழ்ச்சிகள் வாயிலாக அறிவிக்கப்படும் இறைத்திட்டத்தை அறிவதன் மூலம் விசுவாசம் ஊட்டம் பெறுகிறது.

*4.* ஞான மரபின் சிந்தனைகள்:- அதே காரணத்திற்காக, மற்றவேளைகளிலெல்லாம் உலக எண்ணங்களிலிருந்து விடுபட்டிருக்கும் ஞானிகளின் சிந்தனை, சில பாடங்களைப் புகட்டுவதற்காக வரலாற்றைப் பயன்படுத்துகிறது. ஞானமரபு, மனிதரின் வழிகளிலிருந்து பெரிதும் மாறுபட்டுள்ளது (ஏச *55:8*). பாவிகள் புரிந்துக்கொள்ள முடியாததாக உள்ளது (சங் *94:10*). இறைவனின் வழிகளை ஆராய்கிறது. இந்த ஒற்றுமைக்கு ஊறு விளைவிப்பவர் சங்கத்திருவுரையாளர் ஆவர். தொடர்ந்து சுழன்று கொண்டேயிருக்கும் உலகியல்பு நிகழ்ச்சிகளையும் (திருவுரை *1:4.11*), காலத்தின் புரிந்துகொள்ள முடியாமையைப் பற்றியும் *(3:1-11)* அவர் பழிக்கிறார். மறைபொருளின் உணர்வு உள்ளத்தில் ஆழப் பதிந்துள்ள அவருக்கு எளிதான தீர்வுகள் திருப்திகரமாக அமைவதில்லை. மற்ற பகுதிகளில் எண்ணப்போக்கு முற்றிலும் மாறுபட்டிருக்கிறது. சீராக்கு, தன் மூதாதையரின் மாதிரிகையைப் பற்றித் தியானிக்கிறார் (சீரா *44-50*). ஞானகமத்தின் ஆசிரியர் குலமூலத் தந்தையருடையவும் விடுதலைப் பயணத்தினுடையவும் வரலாற்றில், இறைவன் தனது திட்டத்தை உலகில் நிறைவேற்றும்போது மீண்டும் மீண்டும் கையாளும் அவரது வழி காட்டுதலின் அடிப்படைச் சட்டங்களைக் கண்டுபிடிக்கிறார் (ஞான *10-19*). இத்திட்டத்தில் தாங்கள் பங்கு பெறுவதையும் அதன் மாபெரும் நிறைவுக்காகக் காத்திருப்பதையும் அறிந்த மனிதர்களுக்கு இது ஒரு முக்கியமான பாடம்.

*5.* வெளிப்பாட்டு நூல்களின் பங்கு:-

ஞானமும் இறைவாக்கும் சந்திக்கின்ற இடத்தில், வெளிப்பாட்டு வழக்கு, இறைவெளிப்பாட்டால் எழுதப் பெற்ற விவிலியத்தின் முதல் நூல்களில் ஒளியில் மீட்புத் திட்டத்தைப் பற்றிய இஸ்ராயேலின் சமீப கால எண்ணத்தை இறுதியாக ஒன்றுபடுத்தி வழங்குகிறது. ஏற்கனவே இறைவாக்கினர் ஏசயா (ஏச *25:1*) தீமையின், நகரத்தினுடைய அழிவு இறைத்திட்டத்தின் விளைவுதானென்று விளக்குகிறார். ஆனால் தானியேல் நாட்டின் பழைய வரலாறு, இன்றைய நிலை, இறுதிநாட்களைக் கொண்டுள்ள எதிர்காலம் இவையனைத்தும் உள்ளடக்கிய ஒரு கருத்தை வழங்குகிறார். அரசுகள் மாறிக் கொண்டேயிருக்கின்றன. ஆனால் அவைகளின் தொடர்ச்சி பல்லாண்டுகளாக வாக்களிக்கப்பட்ட இறைவனின் அரசிற்குத் தயார் செய்கிறது (தானி *2:7*). துன்புறுத்தும் சக்திகள் இறைவனின் மக்கட்கு எதிராகச் சதித் திட்டங்கள் தீட்டுகின்றன. இஸ்ரயேல் தன் மீட்பை நோக்கிச் சென்றுகொண்டிருக்கும் போது, அச்சக்திகளோ அழிவைநோக்கிச் சென்று கொண்டிருக்கின்றன *(8:19-26; 10:20-12:4)* இதுதான் மறைபொருள் *(2:22, 27,28)*; அதன் கருப்பொருள் ஏற்கெனவே வேதாகமம் சுழியில் அடங்கியுள்ளது (தானி *9*). போலி வெளிப்பாடுகளிலும் இதே கருத்தொன்றிப்பு காணக்கிடக்கிறது. அதுவே புதிய ஏற்பாட்டுக்காலத்து யூத மறையின் தனி அம்சமாகவும் விளங்குகிறது.

இவ்வாறாகத் திட்டம் பழைய ஏற்பாடு முழுவதிற்கும் அடிப்படைப் பொருளாக அமைந்திருக்கிறது. திருவரலாறு திட்டத்தின் நிறைவு ஆகும். இறைவார்த்தை வெளிப்பாட்டில் அதனை அறிவிக்கிறது. இங்ஙனம் இறைவனைப் பற்றிய மறையுண்மைகளின்மீது மனிதன் ஒரு வகையான சொந்தம் கொண்டாடலாம் என்று அன்று, மாறாக இறைவன் தன் அன்பினால் தனது திட்டத்தைப்பற்றிய அறிவை மனிதனுக்குச் சிறிது சிறிதாக வழங்குகிறார். அதே வேளையில் மனித வாழ்வின் பொருளையும் தெளிவாக்குகிறார்.

II. புதிய ஏற்பாடு:- அதே திரையில்தான் புதிய ஏற்பாடு முழுவதும் தீட்டப்பெறுகிறது. அது மிகவும் முக்கியமான, இறுதிக் கொடையை வெறுமனே அறிவிக்கிறது; ஏனெனனில் இயேசுவெனும் வரலாற்று

நிகழ்ச்சியில் இறைத்திட்டத்தின் முழுமையும், அதன் நோக்கமும் வரலாற்றின் உருவில் நிறைவேற்றப்படுதலும் அறிவிக்கப்படுகின்றன.

*1. இறைத்திட்டத்தில் இயேசு:- அ)* தயாரிப்புக்காலத்தின் சிகரத்தில், காலத்தின் நிறைவில், இயேசு இறைத் திட்டத்தின் மையத்தில் தம்மைக் காண்கிறார். இந்த உணர்வு பல்வேறு கூற்றுகளில் வெளிப்படையாகக் காணப்படுகிறது: தந்தை இயேசுவை அனுப்புதல் (மத் 15:24; யோவா 6:57; 10:36), இவ்வுலகில் அவரின் வருகை (மத் 5:17; மாற் 10:45; யோவா 9:36), தந்தையின் திருவுளத்தின் நிறைவு (யோவா 4:34; 5:30; 6:38), மறை நூலின் நிறைவு (லூக் 22:37; 24:7; 26:44; யோவா. 13:18; 17:12), அல்லது அவரது பாடுகளின் தேவை (''மணமகன் .... வேண்டும்'' மாற் 8:31; லூக் 17:25; யோவா 3:14; 12:34), அவருடைய நேரம் வருதல் (யோவா. 12:23). இக்கூற்றுகளெல்லாம் ஓர் இடுக்கண்மிக்க நிலை நீடிப்பதை வெளிப்படுத்துகின்றன. இயேசுவின் செயல்கள் எப்போதும் இவ்வாழ்க்கைச் சூழ்நிலையின் விளைவுகளே ஆகும். அரசின் நற்செய்தியை அவர் போதிக்கிறாரென்றால் (மத் 4:17-23), நோயுற்றோரைக் குணமாக்கி (11:3) தீய ஆவிகளை விரட்டுகிறார் என்றால், அது வரவேண்டியவர் அவர்தானென்றும் இறையரசு அண்மையிலுள்ளதென்றும் (12:28) காட்டுவதற்காகவே. எனவே அவரில் இறைத்திட்டம் முக்கியமானதொரு திருப்பம் பெறுகிறது. முடிவை முன்னறிவித்த மறைநூல் அவரில் நிறைவு பெறுகிறது. சிலுவையிலிருந்து மகிமைக்குக் கடக்கும் அவரது உலக வாழ்வின் முக்கியத்துவத்தை மறைநூல் தெளிவாக்குகிறது. அதேவேளையில் இறைவாக்குகள் யாவும் எப்படி உண்மை நிகழ்ச்சிகளோடு ஒன்றுபடுத்தப்படவேண்டும் என்பதை விளக்குவதன் மூலம் அவரது உலக வாழ்வு மறைநூலைத் தெளிவாக்குகிறது.

ஆ) செயல்கள் வழியாக அறிவிக்கப்படும் இவ்வெளிப்பாட்டோடு, இயேசு இன்னும் தெளிவான கூற்றுகளைச் சேர்த்தார். அரசின் மறையுண்மைகளை அறிவிக்கும் உவமைகள் மூலம் (மத் 13:11...) மீட்புத் திட்டம் எப்படி ஒரு மாறுபாடான முறையில் நிறைவெய்தும் என்பதைக் காட்டுகிறார். அவரின் இறப்பு திட்டத்தின் மையப்புள்ளி (21:38-36). ''கட்டுவோர் விலக்கிய கல்லே மூலைக் கல்லாய் அமைந்தது'' (21:42), அதன் பயனாக, அரசு என்ற திராட்சைத் தோட்டம் இஸ்ரயேலிடமிருந்து எடுக்கப்பட்டு மற்ற குடியானவர்களிடம் அளிக்கப்படும் (21:43). இறுதி, காலத் திருமணத்தைக் கொண்டாடும் விருந்திற்குத் தேர்ந்து கொள்ளப்பட்ட இஸ்ராயேல் மக்கள் வர மறுக்கவே, வெளியிலுள்ள ஏழைகளுக்கும் பாவிகளுக்கும் அது அளிக்கப்படுகிறது (22:1-11 இ). உலகில் அரசு நிறுவப்படுதல், அகில உலகும் திடீரென மாற்றப்படுவதன் மூலம் நிகழாது. இயேசு விதைக்கும் இறைவார்த்தை, மண்ணில் விதைகள் போல, இதயங்களில் மெல்ல வேரூன்றும், தோல்விகளும் மிகச் சிறந்த வெற்றிகளும் அதற்கு வரும் (13:1-9; 18-23). அனைத்தையும் கடந்து, சிறியதொரு விதையிலிருந்து வளர்ந்த மரம்போல (13:31-32இ) இறுதியில் அரசு உலகனைத்தையும் நிரப்பும். மாவில் வைக்கப்பட்ட புளிப்புமாவைப்போல அது புவியை மாற்றும் (13:33 இ). பலகாலம் கடக்க வேண்டியிருக்கும். எனவே நெருங்கிவிடும் அவரது பாடுகள், மூன்றாம் நாளில் அவரது உயிர்ப்பு, மனுமகனாக மாட்சியில் விண்ணகம்செல்லுதல் ஆகிய (24:30-31) வரவிருக்கும் பல்வேறு நிலைகளை இயேசு உணர்கிறார். விண்ணரசு நிறுவப்படலைப்பற்றி அவர் பேசும்போது, அதன் ஆரம்பமும் நிறைவும் வெவ்வேறானவை என்பதைச்சுட்டிக்காட்டுகிறார் (13:24-30. 47-49இ). ஆகவே முடிவுக்காலம்பற்றிய இறைவாக்குகளுள், இதுவரை எதுவும் திருமுழுக்கு யோவானின் போதனைகூட காணமுடியாத ஒன்றைப் புதிதாகச் சேர்க்கின்றனர். இறைவனின் திட்டத்தில் நாட்களின் முடிவுக்கும் காலத்தின் நிறைவுக்கும் இடைப்பட்ட ஒரு புதிய பொழுதிற்கு இடமிருக்கிறது (28:20). இந்த இடைக்காலத்தை முன்கூட்டியே உணரும் இயேசு, தம் திருச்ச

பையை நிறுவுவதன்மூலம் அரசிற்குக் காணக்கூடிய ஒரு உருவமொன்றை வழங்கு கிறார் (*காண்க மத் 16:18*).

*2. மீட்பின் திட்டத்தைப் போதித்தல்:-* ஆதிக்காலத் திருச்சபை பிரமாணிக்கமாக இவ்வுண்மைகளை முழுமையாக ஏற்றுக் கொண்டது. உலகிற்கு அது போதிக்கும் நற்செய்தி அரசைப் பற்றியதுமட்டுமன்று; மீட்பரும் இறைமகனுமான இயேசுவில் வந்துள்ள, அவரின் பெயரில் விசுவாசம்கொள்ளும் அனைவரும் பெறக்கூடிய மீட்பைப் பற்றியதும் ஆகும் (*அ.ப. 2:36-39; 4:10-12; 10:36; 13:23*). இங்ஙனம் இறைத்திட்டத்தின் இறுதி இரகசியத்தை வெளிப்படுத்துவதில், அப்போஸ்தலர் காலத்துத் திருச்சபை, யூதருக்குப் போதிக்கும்போது, சிலுவையின் மூலம் விளைந்த இடறலை வெல்ல வேண்டியிருந்தது. தாம் அனுப்பிய மீட்பரின் இறப்பை கடவுள் அனுமதித்திருக்க முடியும் என்பதை எவரேனும் எவ்வாறு புரிந்துகொள்ள முடியும்? ஆனால் விவிலியம் மீண்டும் மீண்டும் தெளிவாக்குவதுபோல, இந்த இறப்பு மிகவும் கவனமாய்த் தீர்மானிக்கப் பட்ட திட்டத்தின் விளைவாகும்; இறைவன் முன் அறிந்த ஒன்றாகும் (*அ.ப. 2:23; 4:28*). மறையுண்மைகளைக் காக்க முனையும் போது எழும் பிரச்சினை மட்டுமன்று இது. சிலுவையின் முரண்பாட்டைப்பற்றிய கிறிஸ்துவச் சிந்தனை நேரடியாக இறைத் திட்டத்தின் மையத்திற்கே செல்கிறது. ''மறைநூலில் உள்ளபடி கிறிஸ்து நம்முடைய பாவங்களுக்காக இறந்தார்'' (*1 கொரி 15:3*). துன்புறும் நீதிமானைப் பற்றிப் பலவழிகளில் மறைநூல்கள் முன்னறிவிப்பது தற்செயலாக நிகழ்ந்த ஒன்றன்று. இவ்வாறாக மனுமகன் எங்ஙனம் மீட்பைப் பெற்றுத் தருவார் என்பதை மறைநூல் காட்டுகிறது.

*3. இறைத்திட்டத்தின் மறையறிஞரான பவுல்:-*

*அ. ஒரு நிறைவான பொதுநோக்கு:-* புனித பவுலின் இறையியல் முழுவதும் இறைத் திட்டத்தை அதன் முழுமையில் முன்னறிவிப்பதன்றி வேறன்று (*அ.ப. 20: 27*). புனித பவுல் ஆதித் திருச்சபையின் எண்ணங்களைக் குறிப்பாக சிலுவையின் முரண்பாட்டை எடுத்துக்கொண்டு வடிவம் வழங்குவதால், அவரின் திருமுகங்களில் எல்லாவிடங்களிலும் அடிப்படைப் பொருளாய் அமைவது இதுவே (*1 கொரி 1:17-25; 2:1-5*). இரு இடங்களில் இப்பொருள் அவரது கருத்தின் முன்னனிக்கு வந்து பேசப்படுகிறது. முதலாவது கிறிஸ்துவிலும் அவரது திருச்சபையிலும் முடிவுறும் இறைத்திட்டத்தின் முழுநோக்கைச் சுருக்கமாகத் தரும் இணைப்பு. கடவுள் அன்பு செய்யும் மனிதருக்கு இத்திட்டம் இணைக்கப்பட்ட பல்வேறு நிலைகளில் அறிவிக்கப்படுகிறது. அந்நிலைகள், முன்னேற்பாடு, அழைப்பு, ஏற்புடைமையாக்கப்படல், மகிமைபடுத்தப்படல் ஆகியவையாகும் (*உரோ 8:28-30*). இக்குறிப்புகள் எபேசியருக்கு எழுதப்பட்ட திருமுகத்தின் தொடக்கத்திலுள்ள பாடலில் இன்னும்விரிவாக விளக்கம் பெறுகின்றன (*எபே. 1:3-14*). முன்னமேயே முடிவு செய்யப்பட்டு, காலத்தின் நிறைவில் நிறைவேற்றப்பட்ட அந்த 'தயவான திட்டம்' அங்கே இறை சித்தத்தின் மறைபொருளாகக் குறிப்பிடப்படுகிறது. கிறிஸ்து முழுவதும் தெளிவாக்கிய மறைபொருள் இதுவே. இதன் பணியாளராகத்தான் பவுல் நியமிக்கப்பட்டார்.

*ஆ. இஸ்ரயேலின் ஊழ்:-* இந்த நிறைவான நோக்கிற்குள், இறைத்திட்டம், மிகவும் முரண்பட்ட முறையில் நிறைவேற்றப் பெறும், ஒரு காரியத்தைச் சுட்டிக்காட்டுகிறார் பவுல். அது மீட்பின் திட்டத்தில் இஸ்ரயேலின் ஊழ் ஆகும். எல்லா மனிதரின் மீட்பை உறுதிப்படுத்த ஒரு தனிப்பட்ட இனத்தைச் சார்ந்த மக்களைப் பிரித்து வைத்து, அவர்களுக்கு தனி உரிமைகள் வழங்குவதும் (*உரோ 9:4 தொ*), வெளித் தோற்றத்திற்கு அவர்களை மட்டும் மீட்பின் பாதையில் நடத்துவதும் ஏற்கெனவே ஒரு விநோதமான முறையாக இருந்தது. ஆனால் அவருடைய இந்த மக்கள் இயேசுவைப் புறக்கணிப்பதோடு திருப்தியடையாமல், நற்செய்தியை மறுத்து இதயத்தைக் கல்லாக்

கிக் கொள்ளும்போது அதைப்பற்றி என்ன சொல்லமுடியும்? இம்முறையும் இடறல் மிகுந்ததாக இல்லையா? யாருடைய அழைப்பும் கொடைகளும் மாற்றத்திற்கு அப்பாற்பட்டவையாக உள்ளனவோ *(11:29)* அந்த இறைவன் இஸ்ராயேலை நிராகரித்து விட்டாரா? *(11:1)*. ஒருபோதும் இல்லை. இந்த இதயத்தைக் கல்லாக்கிக் கொள்ளுதலே மறை நூலில் முன்னறிவிக்கப்பட்டது *(9:23; 10:19-11:10)*; மீட்பின் திட்டத்தின் ஒரு பகுதியாக ஆகிறது. இறைவன் தனது இரக்கத்தில் அனைவரையும் பங்குபெறுவோர்களாக்க, கீழ்ப்படியாமையிலும் அனைவரையும் சேர்க்க விரும்பினார் *(11:30-32)* இடைக்கால நடவடிக்கையாகப் பலன் தராத ஒலிவக்கிளைகளை வெட்டிவிட்டு, அவைகட்குப் பதிலாகப் புறவினத்தாரை ஒட்ட வைக்க விரும்பினார் *(11:16-24)*. இவ்வாறாக மீட்புத்திட்டத்தில் இஸ்ரயேலின் தனிச்சலுகை என்னவென்று விளங்குகிறது. இஸ்ராயேலின் வழியாக இறைவன் மனிதரோடு தன் உறவைப் புதுப்பித்துக்கொண்டார். இஸ்ரயேலின் பாவத்தின் மூலம் அவர் இறுதியில் மீட்பைக் கொணர்ந்தார். தனிச்சலுகையின் காலம் முடிவுறுகிறது. யூதரையும் புறவினத்தாரையும் ஒரே திருச்சபையில் இணைப்பதன்மூலம் இறைவன் எல்லா மனிதரையும் கிறிஸ்துவில் ஒன்று சேர்க்க விரும்புகிறார் *(எபே 2:14-22)*. இந்த ஏற்பாட்டிற்கு இஸ்ராயேலின் எஞ்சியோர் மட்டுமே பதில் அளிக்கின்றனர் *(உரோ 11:1-6)*. ஆனால் மக்களில் பெரும்பகுதியினர், எல்லாப் புறவினத்தாரும் திருச்சபையில் சேர்ந்தபின் தாங்களாகவே பதிலிறுப்பர் *(11:25-27)*. எனவே பழங் காலத்தில் இஸ்ராயேலின் வரலாறு செய்தது போல, திருச்சபையின் வரலாறு கடவுளின் திட்டத்திற்கிணங்காது நழுவித் தப்பிப்பதில்லை. திருச்சபையின் வரலாறு இறைவனின் இறுதித்திட்டத்தை வெளிப்படுத்துகிறது.

*4. வருங்காலத்தில் இறைத்திட்டத்தின் நிறைவு:-*

பழைய ஏற்பாட்டில் அறிவிக்கப்பட்டபடி, இறைத்திட்டம் இறுதிக்காலத்தில் நிறைவெய்தும். திருநூல்கள் இம்முடிவை முன்னறிவித்தன. இது இப்போது அடையப் பெற்றுள்ளது; தொடங்கப்பட்டு காலத்தின் மையத்திலிடப்பட்டுள்ளது என்ற உண்மையைப் புதிய ஏற்பாடு அறிந்துள்ளது. இருந்த போதிலும் அத்திட்டம் முழுவதும் நிறைவெய்தவில்லை. திருச்சபையின் காலமே இறைத்திட்டத்தின் இறுதி நிலையாகும். ஆனால் திருச்சபையின் காலமும் ஒரு முடிவை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறது. ஆகவே, எல்லாவற்றின் நிறைவையும் நினைவுக்குக் கொண்டுவரும் ஒரு கிறிஸ்தவ இறுதிக்காலவியலுக்கு இடமிருக்கிறது. இந்த முன்னோக்கில் முடிவுக்குத் தயார் செய்யும் வரலாறும் இடம் பெறுகிறது. முதல் மூன்று ஒத்தமை நற்செய்தியில் இறுதிக்கால வெளிப்பாடாக அமைந்த கூற்றுகளுடையவும் *(மாற் 13இ)*, பவுலின் சொற்களுடையவும் *(1 தெச 4:13-17; 2 தெச 2:1-12; 1 கொரி 15:20,28)*, யோவானின் திருவெளிப்பாட்டினுடையவும் முக்கிய செய்தி இதுவே. யோவானின் திருவெளிப்பாடு பழைய விவிலியச் சான்றுகளை, கிறிஸ்துவினுடையவும், திருச்சபையின் அனுபவத்தினுடையவும் ஒளியில் விளக்குவதோடு மட்டுமன்றி, வருங்காலத்தை உறுதியோடு ஆராய்ந்து இறைத் திட்டத்தை அதன் நிறைவுக்குக் கொண்டு வரும் நிகழ்ச்சிகளை நேரடியாக நோக்குகிறது. எதிர்க்கிறிஸ்துவின் தூண்டுதல்கள், தண்டனைகள், வரலாற்றின் தீய திருப்பங்களில் எழுதப்படும் இறுதித் தீர்ப்பின் முன்னோடிகள் இவையாவும் தற்செயலாக நடப்பவை அல்ல. இறைவன் முன்னமேயே அவைகளை அறிந்திருக்கிறார். இவைகள் வழியாகவே, தாம் தேர்ந்து கொண்டோரின் எண்ணிக்கை நிறைவடையும் நாளை நோக்கி மீட்பு செல்லும்படி இறைவன் செயலாற்றுகிறார் *(திருவெளி 7:1-8)*. அப்போது கடவுளே அனைத்திலும் அனைத்துமாய் இருக்குமாறு *(1 கொரி 15:28)* மகன் தந்தையிடம் அனைத்தையும் திருப்பி ஒப்படைக்க முடியும் *(15:24)*.

**இறைநிந்தை** *(BLASPHENEY)*

முதலில் இச்சொல் இறைவனுக்கு எதிரான நிந்தையை மட்டும் குறிக்கிறது. இது,

இறைவனையோ அவரது பெயரையோ செயல்களையோ சொல்லாலோ செயலாலோ இழிவுபடுத்துவது, பழித்துக் கூறுவதாகும், இது தெரிந்து, விரும்பிச் செய்யும் பாவம் (*எண் 15:30*), இறைவனுக்கு எதிராக அவமரியாதையாகப் பேசுதல் (*ஏச 37:6*), அவரைச் சபித்தல் (*லேவி 24:11,16; 1 சாமு 3:13*; திருவெளி *16:9.11.21*). இரண்டாவது, அவதூறு கூறுதல், குற்றங்கூறுதல், சபித்தல், புறக்கணித்தல், பழித்துக் கூறுதல் வசை கூறுதல் ஆகியவற்றைக் குறிக்க நிந்தை என்ற சொல் பயன்படலாம் (காண்க உரோ *3:8; 1* கொரி *4:13; 1* பேதுரு *4:4*).

இறைவனின் மூல மாதிரி எதிரிகள் எப்போதும் அவரை நிந்தை செய்பவர்களாவர் (*2 மக் 9:28*; திருவெளி *13:1; 17:3*). பழைய ஏற்பாட்டில், பாலைவனத்தில் இஸ்ராயேலர் தங்கக் கன்றை வழிபட்டதை ஒரு இறை நிந்தையாக நெகமியா விளக்குகிறார் (நெக *9:18*). இரபிசகேயின் பழித்துரை ஆண்டவருக்கே எதிராகச் சொன்ன பழிப்பாகும் என்று ஏசயா யூதாவின் அரசன் எசக்கியாவுக்கு ஆறுதல் கூறுகிறார் (*ஏச 37:6*). ஏலியின் மக்களுடைய குருத்துவப் பணி மிக திடுக்கிடச் செய்யவல்லது. அது இறைவனுக்கு சாபமாகும். இறை நிந்தனைக்குத் தண்டனை கல்லால் எறிந்து கொள்ளப்படுதலாம் (*லேவி 24:16*).

புதிய ஏற்பாட்டில் இயேசு பாவத்தை மன்னித்ததை இறை நிந்தனை என்று யூதர்கள் குற்றம் சாட்டினர் (*மத் 9:3*). இயேசு தமது விசாரணையின்போது, தாம் இறைமகன் என்று உரிமை கொண்டாடியது இறைநிந்தனையாகும். ஆகவே அவர் சாவுத் தீர்புக்குள்ளாக வேண்டும் என்று யூதத் தலைமைச் சங்கம் கூக்குரலிட்டது (*மத் 26:63-66; மாற் 14:61-64; யோவா 10:33,36*).. பிற்பாடு ஸ்தேவானுக்கு எதிராக அவர்கள் இதே குற்றம் சாட்டுகின்றனர் (*அ.ப. 6:11*). நற்செய்தியைப் பவுல் போதித்தபோது . யூதர்களே நிந்தையான மொழியைப் பயன்படுத்துகின்றனர் (*அ.ப. 13:45; 18:6*). நிந்தை என்ற புறவினப் பாவத்துக்கு யூதர்களின் மாதிரிகளையே காரணம் என்றார் பவுல் (*உரோ 2:24*). அவர் தான் மனந்திரும்புமுன், கிறிஸ்தவர்களை இறைநிந்தனை சொல்லும்படி வலுவந்தம் செய்தார் (*அ.ப. 26:11*). அவரே இறைவனை நிந்தித்தார் (*1 திமோ 1:13*). இறைவன் பெயருக்கு இழுக்கு ஏற்படாது பார்த்துக் கொள்ளும்படி எச்சரிக்கிறார் (*1 திமோ 6:1*).

பரிசுத்த ஆவிக்கு எதிராகச் செய்யும் பாவம் இறைநிந்தனையின் மிகக் கொடிய வடிவமாகும். யூதர்கள் இயேசு பேய் பிடித்தவர் என்று குற்றம் சாட்டியபோது, பரிசுத்த ஆவிக்கு எதிராக அவர்கள் செய்யும் பாவத்தின் பயங்கர விளைவை அழுத்திக் கூறுகிறார். இத்தகைய பாவம் இம்மையில் மட்டுமன்று மறுமையிலும் மன்னிக்கப்படாது (*மத் 12:32*). அது என்றென்றும் தீராத பாவமாக இருக்கும் (*மாற் 3:28-30*).

**இறைபற்றில்லாதவர்**

நிலையிலும் செயலிலும் இறைவனிடமிருந்த, தொடர்பு நீங்கிப் புறம்பாக்கப்பட்டவர்கள்; இறைவனுக்கு எதிரானவர்கள், அவருக்கு எதிராகச் செயலாற்றுபவர்கள். இவர்கள் இறைவன் அருகே வரமாட்டார்கள் (*யோபு 13:16*). இவர்களது மகிழ்ச்சி இமைப் பொழுதில் மறையும் (*20:5*). இவர்களது நம்பிக்கை அழிந்து போகும் (*8:13; 27:8*; பழ. *11;*) தங்கள் சினத்தைப் பேணுவர் (*36:13*), நல்லவர்களைக் கொடுமைப்படுத்துவர் (சங் *119*); தீயன செய்வர்; பேதமை பேசுவர் (*ஏச 9:17*). இக்கருத்தில், இவர்கள், இறைவனைத் தவிர்த்த, சிலைவழிபாடு (*எரே 2:11*; ஒசே *4:12*), உலகப்பற்று (*எரே 23:15*) போன்றவற்றில் ஈடுபாடு உடையவர்கள். இதோடு தொடர்புடைய மற்ற சொற்கள் தீயவர்கள் (*யோபு 16:11*; சங் *74:18*), அறிவிலிகள் (சங் *14:1; 74:22*) போன்றவையாகும்.

புதிய ஏற்பாட்டில், இறைபற்றின்மை ''இலௌகீகக் கட்டுக் கதைகளையும்'' (*1 தீமோ 4:7*) ''இலௌகீக வீண் பேச்சுக்களையும்'' (*6:20; 2 தீமோ 2:16*), ஒருவேளை, ஞானவாதக் கதைகளையும் போதனைகளையும்

குறிக்கிறது. பாவ நிலையிலுள்ள எல்லா மனுக்குலத்தையும் குறிக்க இச்சொல் பயன் பட்டுள்ளது (*யூதா 14-19*). இவ்வாறு இறை பற்றற்றவர்களுக்கே சட்டம் கொடுக்கப்பட் டுள்ளது (*1 தீமோ 1:19*). கிறிஸ்து பாவிகளுக் காக மரித்து ஏற்புடையவர்களாக மாற்றுகி றார் (*உரோ 4:5; 5:6*).

**இறைப்பற்றுள்ளவர்** (*GODLY*)

பிறர்பால் அன்பு, இரக்கம் காட்டுபவர்க ளையும் (*மீக் 7:2*) இறைவனிடம் பிரமாணிக் கமுள்ளவர்களையும் (*சங் 12:1; 86:2*) குறிக் கும் சொல்லாகும். இது மேய்ப்புப்பணி திருமுகங்களிலும் 2 பேதுருவிலும் முதன் மையாகக் காணப்படுகிறது. இது பக்தியைக் குறிக்கிறது (*1 தீமோ 2:2-பக்தியும் ஒழுக்க மும் உடையவர்களாய்க் கலக்கமில்லா அமைதி வாழ்வு நடத்துமாறு*). இத்தகைய பக்திமிக்க வாழ்வு ஞானவாதிகளின் பக்தி நோக்கிலிருந்து வேறுபடுத்தப்படுகிறது (*4:7-8*). 2 பேதுரு திருமுகத்தின் ஆசிரியர் கிறிஸ்துவர்களின் ஒழுக்க வாழ்வைத் தவ றான நெறியில் வாழ்பவர்களின் நடத்தையி லிருந்து வேறுபடுத்த இச்சொல்லைப் பயன் படுத்துகிறார் (*2 பேதுரு 1:6-7; 3:11; 2:9*).

**இறை புகழ்ச்சியுரை** (*DOXOLOGY*)

இது இறைபுகழ்ச்சி வாய்ப்பாடு எனப்ப டும். ஐந்நூலில் ஆண்டவரின் செயல்கள் போற்றப்படுகின்றன என்று கூறப்படுகிறது (*ஆதி 24:27; யாத் 18:10*). யூதச் சடங்குகளில் இந்த ஆசீர், எல்லாப் பாடலுக்குப் பின்னும் (*1 நாள் 16:36; சங் 41:13; 72:18; 89:52; 106:48; 150:1-6*). நீண்ட செபங்களின் முடிவிலும் அல்லது கடவுளின் பெயரை உச்சரிக்கும் ஒவ்வொரு சமயமும் கூறப்பட்டது. பாஸ் குச் சடங்கில் இரசம் பருகப்படும் போதெல் லாமும், கூடாரத் திருவிழாவில் கூடாரம் கட்டப்படும் போதும் இப்புகழ்ச்சியுரை கூறப்பட்டது. இது சில நேரங்களில் செபங்க ளின் தொடக்கத்திலும் காணப்படுகிறது (*1 நாள் 29:10; தானி 2:20; லூக் 1:68; 2 கொரி 1:3; எபே 1:3; 1 பேதுரு 1:3*) மனிதர்களின் பாவத்தினால் வரும் தண்டனைகளிலிருந்து இறைவனின் புகழைப்பாடுபவர்கள் காப் பாற்றப்படுவார்கள் (*உரோ 1:25; 2 கொரி 11:31*).

சங்கீதம் 29-இல் மற்றொரு புகழ்ச்சி கீதம் ஆரம்பமாகின்றது. இதில் இறைவன் செய்த நன்மைகளுக்காக ஆண்டவரைப் போற்று கின்றார்கள். 'அவர் புகழ்பாடுங்கள்' என் றும், ''என்றென்றும் போற்றுங்கள்'' என் றும் கூறப்பட்டுள்ளது.

கிறிஸ்துவர்களின் புகழ்ச்சிக் கீதம் கடவு ளுக்கே உரியது. அரிதாகத்தான் கிறிஸ்துவுக் குக் கூறப்படுகிறது (*மத் 21:9; மாற் 11:9; லூக் 19:38; உரோ 9:5; திருவெளி 5:12*). சில நேரங்களில் 'கிறிஸ்துவின் வழியாய்'' (*உரோ 16:27; 1 பேதுரு 4:11*) என்றும் ''பரிசுத்த ஆவியின் ஐக்கியத்தில்'' என்றும் முடிவடையும்.

பவுலில் திருமுகங்களில், முகமன் கூறுவ திலும் (*கலா 1:5*) நன்றியுரைத் தொடக்கத்தி லும் (*1 கொரி 1:3-5*), இறுதி ஊக்குரையிலும் (*1 திமோ 6:15-16*) முடிவுரையிலும் (*பிலி 4:20*) இப்புகழ்ச்சியுரை வருகிறது.

ஆண்டவரின் செபத்தின் முடிவில் சில பிரதிகளில் காணப்படும் ''ஏனெனில் அர சும் வல்லமையும் மாட்சிமையும் என்றென் றும் உமக்குரியதே'' என்ற புகழ்ச்சியுரை லூக்காவில் காணப்படவில்லை (*லூக் 11:4*). மத்தேயு நற்செய்தியின் நம்பத்தகுந்த, முக் கிய பிரதிகளிலும் காணப்படவில்லை. இந்த முடிவுரை 1 நாள் 29:11-யை அடிப்படையா கக் கொண்டதாக இருக்கலாம். இது திதாக்கே என்ற திருச்சபை நூலில் காணப்ப டுகிறது.

**இறைமகன்** (*SON OF GOD*)

எபிரேய மொழி வழக்கில் ''மகன், மக்கள்'' என்பன நேரிடையான இரத்த உறவை மட்டும் குறிப்பிடுவதில்லை. ஒரு குழுவைச் சார்ந்திருப்பதையும் அவை குறிக்கின்றன; ''இஸ்ராயேல் மக்கள்'', ''பாபிலோனிய மக்கள்'' (*எச 23:17*) ''சீயோன் மக்கள்'' (*சங் 149:2*), ''இறைவாக்கினர் மக்கள்'' (*2 அர 2:5*), ''மனுமக்கள்'' (*எச 2:1; தானி 8:17*);

அத்துடன் ஒருசில குணநலன்களைக் கொண்டோரையும் 'மகன்' என்ற சொல் சுட்டி நிற்கும்; சமாதானத்தின் மக்கள் (லூக் 10:6), ''ஒளியின் மக்கள்'' (லூக் 16:8; யோவா 12:36). மனிதனுக்கும் இறைவனுக்குமுள்ள உறவை எடுத்துக் கூறவும் இச்சொல் பயன்படுகிறது; இப்பொருளை ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

I. பழைய ஏற்பாடு:-

இறைவனது பேரவையில் உள்ள வான தூதர்களே ''இறை மக்கள்'' என்று ஒரு சில இடங்களில் பழைய ஏற்பாடு குறிக்கிறது (உப 32:8; சங் 29:1; 89:7; யோபு 1:6). இது கானானிய புராண வழக்கிலிருந்து பெறப்பட்டதாக இருக்கலாம் என்று தோன்றுகிறது. ஆனால் அவ்வழக்கில் மகன், மக்கள் என்பவற்றால் இரத்த உறவே சுட்டப்பட்டது; விவிலியத்தில் யாவேக்கு துணை இல்லையாதலால் இப்பொருள் பொருந்தாது. ஆதலால் விவிலிய வழக்கில் ''மக்கள்'' என்ற சொல்லிற்கு வான தூதர்கள் கடவுளின் வானக வாழ்வில் பங்கேற்றிருக்கிறார்கள் என்பதே பொருளாக அமையும்.

1. இஸ்ராயேல் என்னும் இறைமகன்:- ''மகன்'' என்ற சொல்லை இஸ்ராயேலுக்குப் பொருத்திப் பார்க்கும்போது, இறைவனுக்கும் அவரது மக்களுக்கும் உள்ள தொடர்பு, மனித உறவினருக்குள் இருக்கும் உறவுபோல் தோன்றுகிறது. விடுதலைப்பயண நிகழ்ச்சிகளில் இஸ்ராயேல் சுவீகார மகவுரிமையை உணர்ந்துவிட்டது (யாத் 4:22; ஓசே 11:1; எரே 3:19; ஞான 18:13); இறுதிக்கால விடுதலையைப் புதிய விடுதலைப் பயணம் என்று எரேமியா முன்னறிவிக்கும்போது இதையே குறிக்கிறார் (எரே 31:9.20). இந்த அனுபவத்திலிருந்து மகன் என்கிற பட்டம் (பன்மையிலுந்தான்) இறை மக்கள் கூட்டத்திற்கு உரியது என்றே கொள்ளலாம்; மக்கள் தந்தையாகிய இறைவனுக்கு தங்களை ஒப்புக் கொடுத்த சமய அர்ப்பணத்தின் மேன்மையை வலியுறுத்தவும் (உப 14:1 தொ. காண் சங் 73:15), அவர்கள் நன்னெறியிலிருந்து தவறிய போது கண்டித்துத் திருத்தும் உரிமையைச் சுட்டவும் இவ்வுறவுப் பெயர் உதவியது (ஓசே 2:1; ஏச 1:2; 3:1.9; எரே 3:14). யூதர்கள் தம் பக்தி முறையில் தாமெல்லாம் இறைமக்கள் என்று கொண்ட உணர்வு மிக முக்கியமானதாகும். இவ்வுணர்வே கல்லறைக்கு அப்பாலுள்ள வருங்கால மீட்பைப்பற்றிய நம்பிக்கைக்கு அடிகோலியது (ஏச 63:8; காண் 63:16; 64:7; ஞான 2:13.18). நீதிமான்கள் வானதூதர்களைப் போல் இறைமக்களென என்றுமே போற்றப் பெறுவர் (ஞான 5:5).

2. அரசன் என்னும் இறைமகன்:- அரசர்களின் தெய்வீகத் தோற்றத்தை மேற்காசிய நாடுகள் சமயவுண்மையாக ஏற்றன. பழைய ஏற்பாடு இதை ஏற்கவில்லை. சாதாரண மனிதன் போலவேதான் அரசனும்; தெய்வச் சட்டங்களை அவனும் கடைபிடிக்க வேண்டும்; அவனும் அதே விதமான நீதித் தீர்ப்புக்கு உள்ளாவான். தாவீதையும் அவரின் சந்ததியையும் கடவுளே தேர்ந்து கொண்டார். இதனால் இறை மக்களின் கதியோடு அவர்களும் இரண்டறக் கலந்துள்ளது தெளிவாகும். யாவே தமக்கும் அரச குலத்திற்கும் உள்ள உறவை வெளிக்காட்டவே நாத்தான் என்னும் இறைவாக்கினர் மூலம் அறிவிக்கிறார்; ''நாம் அவனுக்குத் தந்தையாக இருப்போம்; அவனும் நமக்கு மகனாக இருப்பான்'' (2 சாமு 7:14; காண் சங் 89:27 தொ). இப்போதிருந்து யாவேயின் மகன் என்பது ஓர் அரச பட்டமாகும். அரசர்களுக்கெல்லாம் 'யாவேயின் மைந்தன்' என்னும் பட்டம் மெசியாவின் பட்டமாகப் பின்னர் மாறியது (ஏச 7:14; 9:1; சங். 2:7).

II. புதிய ஏற்பாடு

1. இயேசு. இறைவனின் ஒரே மைந்தன்:-

அ. ஒத்தமை நற்செய்திகளில்:- 'கிறிஸ்து' என்னும் பெயருடன் தொடர்புபடுத்தப்பட்டு, 'இறைமகன்' என்ற சிறப்புப் பெயர், மெசியாவின் சிறப்புப் பட்டங்களுள் ஒன்றாகத்தான் தோன்றும் (மத் 16:16; மாற் 14:61 தொ). இதன் காரணமாக ஏற்படும் குழப்பங்களைத் தீர்த்து வைப்பது இயேசுவிற்கு அவசியமாகிறது; தொடக்கத்திலிருந்தே, பாலை

வனச் சோதனை நிகழ்ச்சி இரண்டு மாறுபட்ட விளக்கங்களை வெளியிடுகிறது; சாத்தானைப் பொறுத்த அளவில், இறைமைந்தனாய் இயேசு இருந்தால் அவர் மனித சக்திக்கு மீறிய ஆற்றலையும், சிறிதேனும் அகலாத இறைவனின் பாதுகாப்பையும் கொண்டிருத்தல் வேண்டும் *(மத் 4:3.6)*; இயேசுவைப் பொறுத்த அளவில், இறைமைந்தன் கடவுளின் சித்தம் அன்றி வேறு உணவையோ உதவியையோ எதிர்பாராது இருத்தல் வேண்டும் *(4:4.7)*. மண்ணக மெசியா பற்றிய கருத்துக்களை உதறித்தள்ளியதன்மூலம் இயேசு தமக்கும் தம் தந்தைக்கும் இடையேயுள்ள பிரிக்க முடியாத நெருக்கமான உறவினை உறுதி பெறச் செய்தார். பேய் பிடித்தோர் முன்பு இயேசுவின் இந்த மனப்போக்கைச் சிறப்பாகக் காணலாம் *(மாற் 3:11; 5:7)*. பேய் பிடித்தோரின் பேச்சு, இயேசு உண்மையில் யார் என்பதைப் பேய்கள் அறிந்து அறிக்கையிடுவது போலத் தோன்றுகிறது *(1:34)*; ஆனால் அவை தெளிவில்லாமல் இருந்த காரணத்தால் இயேசு அவ்வறிக்கைகளைத் தடை செய்கிறார். ஆனால், ''நீரே கிறிஸ்து; நீரே இறைவனின் திருமகன்'' என்று பேதுரு கூறியது *(மத் 16:16 தொ)* அவரது ஆழ்ந்த விசுவாசத்தின் அறிக்கையாகும். இருந்தும் எத்தகைய தவறும் நேர்ந்துவிடாதபடி இயேசு கவனமாய் இருந்துகொள்கிறார். ஏனெனில் அவரது இறைமகன் என்ற பட்டம் அவருக்கு எதிர்கால இவ்வுலக மகிமையை உறுதிப்படுத்தவில்லை. மாறாக மனுமகன் தம் சாவின்மூலமே மகிமையை அடையமுடியும் *(16:21)*.

''இறைவனின் மகனாகிய மெசியா நீர் தானோ?'' என்று கயபா கேட்டபோது *(மத் 26:63; மாற் 14:61)*, இத்தொடர் மண்ணக மெசியாவையே குறிக்கக்கூடும் என்று இயேசு உணர்ந்தார். வேறொரு கோணத்தில் கவனத்தைத் திருப்பும் வகையில் இயேசு மறைமுகமாகப் பதிலுரைத்தார்; மனமகனுக்குரிய பண்புகளுடன் தலைமை நீதிபதியாகத் தாம் வரவிருப்பதை முன்னறிவிக்கிறார். ''அப்படியானால் நீ இறைவனின் மகனோ?''... ''நான் கடவுளின் மகன் என்று நீங்களே சொல்லுகிறீர்கள்'' *(லூக் 22:70)* என்ற ஆணித்தரமான பதிலில், மெசியா என்பதற்கும் மனுமகன் என்பதற்கும் இயேசு தெய்வீகத் தன்மை தருகிறார் என்பது தெளிவாகிறது. இது ஒரு புதிரான வெளிப்பாடாகும். கடவுளால் கைவிடப்பட்டுச் சிலுவையில் தொங்கிய போதும் இயேசு தமது உரிமைக் குரலில் உறுதி தளராது இருந்தார். இறக்கும் மட்டும் தந்தைமீது அவருக்கிருந்த நம்பிக்கை சிறிதும் குறையவில்லை *(லூக் 23:46)*. அவரது சாவு அனைத்துப் புதிர்களையும் குழப்பங்களையும் நீக்கி, கிறிஸ்துவ விசுவாசத்தின் தொடக்கமாக இருந்தது என்பதை, நூற்றுவர் தலைவனின் அவிசுவாச அறிக்கை வெளிப்படுத்துகிறது *(மாற் 15:39)*.

அப்போதுதான், தமக்கும் தம் தந்தைக்குமுள்ள உறவின் தன்மைபற்றி இயேசு முன்னர் கூறிய சில விளங்காத புதிர்கள் விளங்கின. இறைவனுக்கு அவர் திருமைந்தன் *(மத் 11:27; 21:37; 24:36)*. அதனால்தான் அவரால் இறைவனை ''அப்பா தந்தையே'' என்று அன்புடன் அழைக்க முடிகிறது *(மாற் 14:36; லூக் 23:46)*. அவருக்கும் இறைவனுக்கும் இடையே மிகநெருக்கமான உறவு இருந்தது; ஒருவரை ஒருவர் நன்கு அறிந்திருந்தனர்; உள்ளவற்றை எல்லாம் இருவரும் பகிர்ந்து கொண்டனர் *(மத் 11:25 தொ)*. ''நீரே என் அன்பார்ந்த மகன்'' *(மாற் 1:11; 9:7)* போன்ற தேவ அறிக்கைகளுக்கு இயேசு இவ்வாறு முழுப் பொருளையும் கொடுக்கிறார்.

ஆ. இயேசுவின் மகன் உறவின் மறைபொருளை அவரது உயிர்ப்பின் பின்னர்தான் அப்போஸ்தலர்களால் புரிந்து கொள்ள முடிந்தது. உயிர்ப்புத்தான் சங்கீதம் 2:7-ஐ நிறைவு செய்தது (அ.ப. 13:33). இயேசு கயபாவுக்கு முன்னரும், சிலுவையிலும் தாம் இறைமைந்தனே என்று கூறியது உயிர்ப்பில்தான் உண்மையென மெய்ப்பிக்கப்பட்டது. ஐம்பதாம்நாள் விழாவிலிருந்து அப்போஸ்தலர்களின் சாட்சியமும், கிறிஸ்துவ விசவாச அறிக்கையும் ''இயேசு இறைமைந்தன்'' என்பதையே பொருளாகக்

கொண்டு விளங்கின (அ.ப. 8:37; 9:20). இயேசுவின் குழந்தைப் பருவத்தைக் கூறும் போது மத்தேயுவும், லூக்காவும் இவ்வறிக்கையினை மறைமுகமாக வலியுறுத்துகின்றனர் (மத் 2:15; லூக் 1:35). இக்கருத்து பவுலின் திருமுகங்களில் இன்னும் வளர்ச்சியடைந்து காணப்படுகிறது. இறைவன் தம் ஒரே மைந்தனை உலகுக்கு அனுப்பியுள்ளார் (கலா 4:4; உரோ 8:3). அவரது இறப்பின் மூலம் நம்மையெல்லாம் தம்முடன் சமாதானம் செய்துவைப்பதே இறைவன் கொண்ட நோக்கமாகும் (உரோ 5:10). இப்போது அவரைத் தம் ஆற்றலில் இறைவன் நிலைப்படுத்தியுள்ளார் (1:4). இறைவன் நம்மைத் தம் மகனோடு இணைந்திருக்க அழைக்கிறார் (1 கொரி 1:9). ஏனென்றால் அவர் நம்மைத் தமது மகனது அரசிற்குள் அழைத்துக் கொண்டார் (கொலோ 1:13). கிறிஸ்தவ வாழ்க்கை என்பது நம்மீது அன்புகூர்ந்து, நமக்காகத் தம்மையே கையளித்த இறைமகன்மேல் நம்பிக்கை வைத்து வாழ்வதும் (கலா 2:20), இறைவனின் கோபத்திலிருந்து நம்மை விடுவிக்க அவர் வானத்திலிருந்து வரும் நாளுக்காகக் காத்திருப்பதும் ஆகும் (1 தெச 1:10). இதே கருத்து எபிரேயர் திருமுகம் முழுவதிலும் நிறைந்துள்ளது (எபி 1:2; 5:8).

இ. யோவானின் இறையியலில் இயேசுவின் இறைமகவுரிமை மிகவும் முக்கியம் வாய்ந்த ஒரு மையக் கொள்கை ஆகிறது. ஒரு சிலரின் விசுவாச அறிக்கை கட்டுப்படுத்தப்பட்டதாகக் காணப்படுகிறது (யோவா 1:34. 51; சிறப்பாக 11:27). ஆனால் இயேசு, தந்தைக்கும் மகனுக்குமுள்ள உறவினை மிகத் தெளிவாக எடுத்துக் கூறுகிறார். இருவருக்கும் இடையே செயலிலும், மாட்சிமையிலும் ஒற்றுமை உண்டு (யோவா 5:19.23; 1 யோவா 2:22 தொ). தந்தை தம் மகனுக்கு அன்பு செய்வதால், வாழ்வளிக்கும் ஆற்றலையும் (யோவா 5:21.25 தொ), நீதி செலுத்தும் ஆற்றலையும் (5:22.27) எல்லாவற்றையும் வழங்குகின்றார் (5:20). இயேசு தந்தையை மகிமைப்படுத்துவதால், அவர் தந்தையிடம் திரும்பும்போது தந்தை அவரை மகிமைப்படுத்துவார் (யோவா 17:1; 14:13). இவ்வாறு வார்த்தை மனுவுருவான செய்தி தெளிவும் செறிவும் பெறுகின்றது. உலகைக் காப்பதற்காக இறைவன் தம் மகனை உலகுக்கு அனுப்பி வைத்தார் (யோவா 4:9.14). அவரே இறைவனை வெளிப்படுத்தும் ஒரே மைந்தன் ஆவார் (1:18). அத்துடன் அவரே தந்தையிடமிருந்து வரும் முடிவில்லா வாழ்வை மனிதருக்கு வழங்குகிறார் (1 யோவா 5:11 தொ). மைந்தனில் விசுவாசத்தை ஏற்படுத்துவதே தலையாய பணி ஆகும் (யோவா 6:29; 20:31; 1 யோவா 3:23; 5:5.10). மைந்தனை விசுவசிப்பவன் நித்திய வாழ்வடைவான் (யோவா 6:40); அவரை விசுவசியாதவனோ தண்டனைக்குள்ளாவான் (3:18).

2. மனிதர்-கடவுளின் தத்துப் பிள்ளைகள்:-

அ. ஒத்துமை நற்செய்திகளில்:- பழைய ஏற்பாடு வளர்ப்புப் பிள்ளைகள் பற்றிக் கொண்டிருந்த கருத்து புதிய ஏற்பாட்டிலும் அடிக்கடி வலியுறுத்தப்படுகிறது. இயேசு, தம் சீடர்களுக்குக் கடவுளை, ''எங்கள் தந்தையே'' என்று அழைக்கக் கற்றுக் கொடுப்பதோடு, சமாதானம் செய்பவர்களையும் (மத் 5:9), கருணையுடையவர்களையும் (லூக் 6:35), உயிர்த்தெழும் உத்தமர்களையும் (20: 36) 'கடவுளின் மக்கள்' என்ற சிறப்புப் பெயரால் அழைக்கிறார்.

ஆ. பவுலின் திருமுகங்களில்:- இக்கொள்கை விரிவும் விளக்கமும் பெறுகிறது. இஸ்ராயேலரின் தனிச் சலுகையாகக் கருதப்பட்ட வளர்ப்புப் பிள்ளைகளின் சிறப்புரிமை (உரோ 9:4), கிறிஸ்துவின் மேல் கொண்ட விசுவாசத்தால் கிறிஸ்துவர் அனைவருக்கும் இன்னும் உயர்ந்த முறையில் உரியதாகின்றது (கலா 3:26; எபே 1:5). தங்களை இறைவனின் தத்துப் பிள்ளைகளாக மாற்றும் தூய ஆவியை அவர்கள் தம்முள் கொண்டுள்ளனர் (கலா 4:5 தொ; உரோ. 8:14-17). ஆதலால் அவர்கள் அந்த ஒரே மைந்தனின் உருவத்தைத் தம் வாழ்வில் உருவாக்கவும் பிரதிபலிக்கவும் கேட்டுக் கொள்ளப்படுகின்

றனர் (உரோ 8:29). அவருடன் அவர்களும் உடன் உரிமையாளர் ஆகின்றனர் (8:17). இதனால் அவர்கள் மகினின் உண்மை வாழ்வில் பங்கேற்று, புதிய பிறப்பெடுகின்றார்கள் (தீத் 3:5; 1 பேதுரு 1:3; 2:2). இவ்வாறு ஒரு புத்தம் புதிய வாழ்வினை வாழச் செய்வதே திருமுழுக்கின் பயனாகிறது (உரோ 6:4). எனவே உண்மை மகன் கிறிஸ்துவில் நாமனைவரும் உரிமை மக்கள் ஆகிறோம். இறைவன் நம்மைத் தண்டித்துத் திருத்திப் பணி கொள்ளச் செய்யும்போதும் (எபி 12:5-12), நம்மை தமது மக்களாகவே நடத்துகிறார்.

இ. யோவானின் நூல்களிலும் இக் கொள்கை இதைப் போலத்தான் விளக்கம் பெறுகிறது. மனிதன் நீரினாலும் ஆவியினாலும் புதுப்பிறப்பு பெறவேண்டுமென இயேசு நிக்கோதேமுவிற்குக் கூறுகிறார் (யோவா 3:3.5). கிறிஸ்துவில் விசுவாசம் வைப்போருக்கு இறைமைந்தர் ஆகும் ஆற்றலை கடவுள் வழங்குகிறார் (1:12). இதனை உலகம் உணராவிட்டாலும் நாமனைவரும் இறைமகனின் வாழ்வில் திளைக்கிறோம் என்பது நமக்கு ஒரு நிகழ்கால உண்மையாகும் (1 யோவா 3:1). இறுதிநாள் வரும்பொழுது இவ்வுண்மை அனைவருக்கும் தெளிவாகப் புலப்படும். அப்பொழுது நம் இறைவனை நேராகக் காண்பதால் நாமும் இறைவனைப் போலவே இருப்போம் (1 யோவா 3:2). ஆதலால் 'இறைமகன்' என்பது இனிமேல் இறைவனின் அன்புக்குரியவர்களைச் சுட்டிக்காட்டும் வெறும் சிறப்புப் பட்டம் மட்டுமன்று; மாறாக மனிதர் அனைவரும், தமது உரிமை மக்களாக்கிய இறைவனின் இயல்புகளில் இரண்டறக் கலந்து உவப்படையும் உயர்வினைக்காட்டும் உறவுப் பெயராகும் (2 பேதுரு 1:4).

**இறை மகிமைக்காட்சி** (THEOPHANY)

இது மனிதனுக்கு கேட்காமலே அளிக்கப்படுகின்ற இறை உயிரினுடைய அல்லது இறைவனுடைய தோற்றம் அல்லது சிறிது காலத்திற்கே இருக்கக் கூடிய நிலையற்ற வெளிப்பாடாகும். இந்த வரையறையின் ஒளியில் விவிலிய நிகழ்ச்சிகளின் பொருளைக் கீழ்கண்டவாறு தரப்படுத்தலாம்.

அ) தற்காலிக வெளிப்பாடுடைய இறைமகிமை காட்சிப் பொருள்,

ஆ) ''பெயர்'' மற்றும் ''மகிமை'' என்னும் கருத்துக்கள் மூலம் ''கூடாரத் தோற்றம்'' என்று அழைக்கப்படுவதுடன் தொடர்புடை பொருள். இல்பொருளானது கண்டிப்பான முறையில் இறைமகிமைக் காட்சியின் பொருளாக இல்லை. ஏனெனில், மனிதரிடையே இறைவன் உறைவது போன்ற வெளிப்பாட்டின் மிக நிலையான வடிவை இது சுட்டுகிறது. இ) முழு மனித வாழ்வின் இறைவெளிப்பாடாகிய மனு உருவாதல் பற்றிய மிக முன்னேறிய பொருள் இங்கு உள்ளது. இக்கட்டுரை, முதல் வகை பொருளைப்பற்றி மட்டுமே கவனம் கொண்டுள்ளது.

சிறிது காலமே இருக்கக் கூடிய நிலையற்ற காட்சிகள் விவரங்கள் இன்றி குறிக்கப்பட்டுள்ளன. இவ்வாறு யாவேயின் குரல் தோட்டத்தில் நடந்தவாறு கேள்வி கேட்பதும், தண்டனைகளை அறிவிப்பதாகவும் உள்ளது (ஆதி 3:8). 16:7-14; 21:17-இல் உள்ள ஆகார் கதைகளில், விண்ணிலிருந்து வரும் குரல், மீண்டும் 22:11.15-இல் காணப்பட்டாலும் அதை இறை மகிமை காட்சிக்கு என்று கூறுவது கடினம். மேலும், பாலாம் கதையிலும் (எண் 22:21-35) தடைசெய்யும் தோற்றமாக உள்ள ஆண்டவரின் தூதர் இவ்வாறே உள்ளார். மேலும், குருக்கள் மரபும் 'தோன்றுதல்' என்னும் சிறப்புச் சொல்லை, அதிக விளக்கமின்றி பயன்படுத்துகின்றது (ஆதி 17:1; 35:9; யாத் 6:3). யாக்கோபு (ஆதி 32:22-32) மற்றும் மோசே மீதான தாக்குதல்கள் (யாத் 4:24-26; ஆதி 38:7), உண்மையில் இயற்கையான செயல்களின் உதாரணங்களாக உள்ளன. இவ்வாறாக முதல் நிகழ்ச்சியில், தோல்வியுற்ற ஒரு பேயின் கதை யாவேக்கு மாற்றப்பட்டுள்ளது; மற்ற இரண்டு பகுதிகளில், நோயும் மரணமும் இறைவனுடைய செயல்களாக விளக்கப்பட்

டுள்ளன. இவ்வாறே, கனவுகளும் *(ஆதி 23:3; 28:10-17)* இறை மகிமைக் காட்சிகளாக ஆவதில்லை. ஆனால், காட்சிக்கும், இறை மகிமை காட்சிக்குமிடையே வேறுபாடு காணப்படுவது எப்போதுமே இயலக் கூடிய தல்ல.

இவ்வாறு, ஆதி 15-இல் உள்ள இறைமகி மைக் காட்சியானது ஒரு காட்சியாகவே விவரிக்கப்பட்டுள்ளது. யாவேயின் வார்த் தைகளை அறிமுகப்படுத்த ''அஞ்சாதே'' என்னும் சிறப்பு சொற்றொடர் உள்ளது. சூரியன் மறையும் வேளையில், ஆபிரகாம், ஆழ்ந்த தூக்கத்தில், வெட்டப்பட்ட உடன்ப டிக்கை விலங்குகளின் துண்டங்களுக்கிடை யில், புகைகின்ற ஒரு தீச்சட்டியையும், உலவி நின்ற ஒரு தீப்பந்தத்தையும் காண்கி றார். *15:12*-இல் உள்ளஆழ்ந்த தூக்கமானது இயற்கைக்கு அப்பாற்பட்ட உறக்கமாகும் *(ஆதி 2:21; யோபு 4:13 = 33:15)*; புகையும் நெருப்பும் *(ஆதி 15:17)* இறை மகிமைக்காட் சியின் சிறப்பியல்புகளாகும். ஆயினும், இறை வார்த்தையின் காட்சி *(15:1)*, ஆழ்ந்த தூக்கம் *(15:12)*, மற்றும் தீச்சட்டி மற்றும் தீப்பந்தம் *(15:17)* ஆகியவை, இறை மகி மைக்காட்சி வகையிலிருந்து இக்கதையினை நீக்குகின்றன. இவ்வாறே, ஆதி 18-இல் வரும் கதை இறை உருவமாற்ற வகையைச் சேர்ந்ததாகும். இம்மரபின் பல தெய்வ பின் னணி, தெளிவாக உள்ளது. ஆபிரகாமிற்கு மூன்று மனிதர்கள் தோன்றுகின்றனர், மற் றும் ஆண்டவர் அவருக்குத் தோன்றி பேசுகி றார். இறைவன் தோன்றிப் பேசுகின்ற கதை யானது, மூன்று தெய்வங்கள் மனிதனுக்கு தோன்றுகின்ற கதையின் மேல் திணிக்கப்பட் டிருக்கலாம்; அல்லது, இறைவன் இம் மூன்று மனிதர்களில் ஒருவராக உருமாற்றம் கொண்டிருக்கவேண்டும்.

*1. மனித தன்மையில்லாத வடிவில் இறை மகிமைக்காட்சிகள்:-* ஒரு எரியும் தீப்புதரில் ஆண்டவரின் தூதர் எவ்வாறு மோசேக்கு தோன்றினாரென யாத். *3* விவரிக்கின்றது. இவ்வாறு, இறை மகிமை காட்சியானது இறைவனின் காட்சியையும், அவருடைய சொற்களின் விவரத்தையும் (கேட்டல்) கொண்டுள்ளது. இப்பகுதியின் சிறப்பியல் பானது எரியும் சுடராகும் *(யாத் 13:21; 19:18; 24:17;* லேவி *10:1-3;* எண் *11:1-3; 16:35)*. எலியா கதைகளிலும் *(1 அர 18-19; 2 அர 1; 2:11)* இலக்கிய இறை மகிமைக்காட்சிகளி லும், புதிய ஏற்பாட்டிலும் சிறப்பியல்பாக எரியும் தீ அமைந்துள்ளது. இறைவனுடைய மகிமையைப் பற்றிய பல குறிப்புகள் உண் மையில் இறை மகிமைக்காட்சிகளாக இல்லை; ஆனால், மகிமையினின்று திடீரெ னத் தண்டிக்கும் தோற்றம் *(எண் 14:16; 16:19; 20:6)* மேலே குறிப்பிடப்பட்ட திடீர் நெருப் பிற்கு இணையானது. இவ்வாறு, தீயானது மகிமைபோன்று திருத்தலத்தில் நிலையாக உள்ளது. ஆனால், இறைவனுடைய கோபத் தினைச் செயல்படுத்த திடீரென வெளிப்படு கின்றது.

''மேகமானது'' *(யாத் 24:15-18; 40:34-35;* எண் *9:15-23)* இறை மகிமைக் காட்சியை பற்றியல்லாமல், ''கூடாரத்தோற்றத்தை'' விவரிக்கின்றது. ''பெயர்'' என்பது தோன்று வதற்குப் பதிலாக தங்கியிருப்பதால், ''பெ யர்'' என்ற பொருள் கூடாரத் தோற்றத்தின் சிறப்பியல்பை அதிகமாக கொண்டுள்ளது. ஆயினும், ஏச *30:27-28*-இல் இறைவனின் பெயரானது, எரிகின்ற நிலையில் புகையு டன், தீர்ப்பிடுவதற்கென கிழக்கிலிருந்து வருகிறது.

யாத். 19-இன் கம்பீரமான இறை மகிமைக் காட்சியில், மேகத்தினுடைய கருமையான பகுதியில் தன்னை மறைத்துக்கொண்டு *(19:9)*, ஆண்டவர் இஸ்ராயேலிடம் தனிப் பட்ட விதமாக வருகிறார். சடங்குளால் தயாரிக்கப்பட்ட மக்களை நோக்கி *(19:14-15)*, குறிப்பிட்ட காலத்தில் *(19:16)*, இடி, மின்னல் கருமேகம் மற்றும் தொடர்ச்சியான முரசொலி ஆகியவை தொடர பேசுவதற்காக ஆண்டவர், தீயில் மலைமீது வந்தமர்கிறார். மக்கள் ஆண்டவரைப் பார்க்க விரும்பி எல்லை மீறி வராதபடி எச்சரிக்கை செய்யப் படுகின்றனர். ஆனால் மோசே மேலே செல் கிறார். இயற்கை நிகழ்ச்சிகளும், வழிபாட்டு

சிறப்புகளும், புராண மொழியும், பழைய ஏற்பாட்டின் உயர்ந்த இறைமகிமைக்காட்சியினை முன்னிருத்துவதற்கென ஒன்று சேர்கின்றன. இதனின்றும், மற்ற இறைமகிமைக் காட்சிகளினின்றும் சிறப்புப் பண்புகள் வெளிப்படுகின்றன. அவை இறை முன்முயற்சி, பல்வேறு வெளிப்பாட்டு வாய்ப்பாடுகள், இறைவனுக்கும் மனிதருக்கும் இடையிலான சந்திப்பும் உறவும், இறைமகிமைக் காட்சியின் நோக்கம் பற்றிய விவரம், மற்றும் மனிதரிடையே ஏற்படும் பக்திமிகு அச்சம் ஆகியவையாகும்.

2. மனித வடிவில் ஆன இறை மகிமைக் காட்சிகள்:- சீனாய் மலைக்காட்சிகளே, பழைய ஏற்பாட்டின் உண்மையான இறை மகிமைக்காட்சிகளாகும். மோசே, ஆரோன். நதாபு, அபியூ மற்றும் இஸ்ராயேல் பெரியோரில் எழுபது பேர் எவ்வாறு இறைவனை கண்டார்களென *யாத் 24:9-11* விவரிக்கிறது. அவர்கள் ஒரு உருவை கண்டனர் என்பது உட்பொருளாகும். பாதங்களைப்பற்றிய குறிப்பு மனித வடிவைச் சுட்டுகிறது. அவர்கள் இறைவனைக் கண்டு, எவ்வித தீங்கினையும் அடையாமல் இருந்தனர் என்பதால் இக்கதை குறிப்பிடத்தக்கதாகும். இது இறைவனைக் காண்பதோ அல்லது அவரது குரலைக் கேட்பதோ (*உப 4:33; 5:24*), உயிருக்கு ஆபத்தானதாக இல்லாவிட்டாலும், மிகவும் ஆபத்தானது (*யாத் 33:20; நீதி 13:22*) என்னும் கருத்திற்கு முரண்பட்டதாக உள்ளது. ஆயினும், இப்பகுதி காட்டுவதுபோல் மனிதர்கள் இறைவனைக் கண்டும், கேட்டும் உயிருடன் வாழ்ந்தார்கள் (*யாத் 3:6; 19:21; எண் 12:6-8; நீதி 6:22-23; ஏச 6:5*). பழைய ஏற்பாட்டுக் காட்சிகளில் இறைவனுடைய சொற்களைக் குறிப்பிடாமல், அமைதியாக இருப்பதாக இது மட்டுமே உள்ளதால், இக்கதை தனித்துவமிக்கதாக உள்ளது. இது ஒரு கேட்டல் அன்று, இறைமகிமைக் காட்சியாகும். அனேகமாக இக்கதையானது, முக்கிய உடல்சார்ந்த மற்றும் ஆன்மீக செயல்களை அருகருகே வைக்கும் நோக்கத்தை மட்டும் கொண்டதாக இருக்கலாம்.

*யாத் 33:17-25*-இல் ஆண்டவருடைய முகத்தையன்றி (மகிமை?), பின்புறத்தை மட்டும் காண மோசேக்கு வாக்களிக்கப்படுகின்றது. ஆனால் *ஆதி 32:20; எண் 12:6-8; யோபு 4:12-16* ஆகியவை போன்று, *யாத் 33:11* என்ற பகுதி வேறுபட்ட ஒரு கதையைக் கூறுகின்றது. *எண் 24:4; ஏச 6; எச 1; தானி 7* ஆகியவற்றில் இறைவனுடைய மனித உருவமானது காட்சி அல்லது கனவிலும் பார்க்கப்படுகிறது; அதாவது, இறைமகிமைக்காட்சிப் பொருளின் ஒரு பகுதி மட்டும் இவற்றில் உள்ளது. மேலும் இறைவனின் தூதர் யாவேயின் தூதர் போன்ற மனித குணநலன்களுடன் இறைவன் தோன்றுவதைப்பற்றிக் கூறுகிற பல கதைகள் உள்ளன. நிகழ்ச்சியுரைகள் சுட்டுவது போல் இவையெல்லாம் யாவேயைப்பற்றிய கதைகளே (*ஆதி 16:13; யாத் 3:2. 5-7*).

3. இலக்கிய இறைமகிமைக் காட்சிகள்:- *நீதி 5:4* (*சங் 114:5-8*) நிலநடுக்கம் பற்றியும் இடிமின்னல், புயல் பற்றியும் கூறுகின்றது. இயற்கைச் செயல்கள் *சங் 18:7-15; 29; 68:7-9; 77:16; 97:4-6; 144:5* ஆகியவற்றிலும் காணப்படுகின்றன. வழிபாட்டுச் செயல்கள் மூலமாக மட்டுமே இவை எவ்வாறு விளக்கப்பட முடியும் என்பதை காண்பது கடினமாக உள்ளது. இறுதிக்கால இறை மகிமைக்காட்சிகளை, *ஏச 30:27; 63:1-6; செப் 1:14; உப 33:2; அப 3* ஆகியவற்றில் காணலாம்.

4. புதிய ஏற்பாட்டில் இறைமகிமைக் காட்சிகள்:- புதிய ஏற்பாடு, *அ ப 7:30; எபி 12:18.29* ஆகியவற்றில், பழைய ஏற்பாட்டு பகுதிகளைச் சுட்டிக்காட்டுகிறது. இறைமகிமைக்காட்சியுடன் உடன் நிகழ்பவை உள்ளன. அவை (அ) தீ (அ.ப. 2:3; 1 கொரி *3:13; 2 தெச 1:7*); (ஆ) வான தூதர்கள் (2 தெச *1:7*); ஆனாலும், அப்போஸ்தலர் பணியில் பல வானதூதரின் காட்சிகள் உள்ளன (*அ.ப. 5:19; 8:26; 10:3; 12:7; 27:23; மத் 14:11 இ; மாற் 1:13; லூக் 22:43*); (இ) இறைமாட்சிமையின் கெருபிம் (*எபி 9:5*); (ஈ) இறைமகிமை (*லூக் 2:9; 1 கொரி 15:40; 2 கொரி 3:7*) என்பவையும் உள்ளன. உண்

மையில், புதிய ஏற்பாட்டில் உண்மையான இறைமகிமைக் காட்சிகளே இல்லை. ஏனெனில், அவற்றின் இடத்தை கிறிஸ்துவிலான இறை வெளிப்பாடு எடுத்துக்கொண்டுவிட்டது (*யோவா 1:14; கொலோ 1:15; எபி 1:1-3*). இயேசு கிறிஸ்துவின் இண்டைாவது வருகையானது, அன்மையில் நிகழவிருக்கும் இறை மகிமைக்காட்சியாகும்; இறைமகிமைக்காட்சியின் சொற்றொடர்களால் விவரிக்கப்படுகிறது (*மத் 16:27; 24:30; 26;64; மாற் 8:38; 13:26; லூக் 9;26*). உயிர்த்த கிறிஸ்துவின் காட்சிகளும், உருமாற்றமும் இறைமகிமைக் காட்சிகள் என்று சரியாகக் கூற முடியாது.

**இறை மனிதன்** *(MAN OF GOD)*

இஸ்ராயேலில் தொடக்க கால இறைவாக்கினர்களுக்கு அளிக்கப்பட்ட பெயராகும். குறிப்பாக இறைகூற்று அளிப்பதும் (சில நேரங்களில் குறிப்பார்க்கும் முறையிலே) வியப்பானவைகளை நிறைவேற்றுவதும் இதில் அடங்கும். இச்சொல்லானது, பெயரிடப்படாத இறைவாக்கினர்கள் (*1 சாமு 2:27; 1 அர 13; 2 நாள் 25:7.9*), மோசே (*உப 33:1; யோசு 14:6; 1 நாள் 23:14; 2 நாள் 30;1; எஸ் 3:2*), இறைவாக்கினரென எண்ணப்பட்ட ஆண்டவரின் தூதர் (*நீதி 13:6,8*), சாமுவேல் (*1 சாமு 9:6-10*) செமேயியா (*1 அர 12:22; 2 நாள் 11:2*), எலியா (*1 அர 17:18.24*) மற்றும் எலிசா (*2 அர 1:9-13; 5:8-15*) ஆகியோருக்குப் பயன்படுகிறது. பிற்காலங்களில் இறைவாக்கினர்களைத் தவிர்த்து, தாவீது போன்று இறைவனுடன் சற்று சிறப்பான தொடர்பினைக் கொண்டவர்களாகக் கருதப்பட்ட சிலருக்கும் இச்சொல் பயன்பட்டதாகத் தெரிகிறது (*நெக 12:24.36; எரே 35:4*). *1 திமோ 6:11* மற்றும் *2 திமோ 3:17*-இல் இச்சொல் பயன்படும் போது, கிறிஸ்தவப் பக்தியைக் கருத்தில் கொண்டுள்ளது.

**இறையாட்சி முறை** *(THEOCRACY)*

இறைவனால் ஆளப்படும் ஒரு நாட்டின் நிர்வாகமே இறையாட்சி எனப்படும். இந்த வார்த்தை விவிலியத்திலிருந்து தோன்றாவிட்டாலும், எபிரேய மக்கள் வாழ்க்கையிலே இது முக்கிய இடத்தைக் கொண்டிருந்தது. இவ்வார்த்தை முதன்முதலாக யோசிபசால் என்பவரால் பயன்படுத்தப்பட்டது. இவர் இதைக் குடியாட்சி, முடியாட்சி போன்றவற்றுடன் வேறுபடுத்திக் காட்டுகின்றார். இறையாட்சி, இறைவன் மக்களை ஆள்பவர், சட்டத்தைத் தருபவர், உலகை ஆள்பவர் போன்ற எண்ணங்களைக் குறிக்கிறது. வரலாற்றிலே இறைவனது ஆட்சி இடையாளர் இல்லாத இறையாட்சியாகத் தோன்றவில்லையானாலும் வரலாற்றின் முடிவிலே இவ்வாட்சி செயல்படும் என்பது உறுதி என விவிலியம் கருதுகிறது.

இறுதிக்கால இறையாட்சி இருவிதங்களில் எதிர்பார்க்கப்படுகிறது. ஒன்று, இறையாட்சி, ஆண்டவரின், உடனடியான, இடையாளர் இல்லாத ஆட்சியாகும் (*ஏச 2:2-4; 24:23; செப 2:8-13*). மற்றது. மெசியாவைப் பிரதிநிதியாகக் கொண்ட இறையாட்சியாகும் (*ஏச 9:2-7; 11:1-9; ஆமோ 9;11*). இங்கு வரலாற்று எல்லைக்குள் அடங்கும் இறையாட்சியைப் பற்றிப் பார்ப்போம்.

இஸ்ராயேலர் வரலாற்றிலே மூன்று விதமான இறையாட்சி பேசப்படுகிறது.

1. அருங்கொடை இறையாட்சி:- சீனாய் மலையிலே இஸ்ராயேல் மக்கள் உடன்படிக்கைச் செய்த வேலையிலே இறைவன் அம்மக்களுக்கு அரசரானார் (*யாத் 19:6*). இஸ்ராயேல் கூட்டு இன ஆட்சி முறை பெற்றனர். இஸ்ராயேலின் பன்னிரு கோத்திரங்கள் இத்தகைய அரசாட்சிக்கு முந்திய கூட்டுஇன ஆட்சியையே குறிக்கின்றன (*ஆதி 29:31-30:24; 49:2-27*). இந்தக் குழுவின் தலைவர், அரசர் இறைவனே ஆவார் (*நீதி 8:23; 1 சாமு 8:7*). பேழையே இந்த அமைப்பின் மையப் புனித இடமாகும் (*எண் 10:35-36; எரே 3:16-17*). இந்த ஆட்சியிலே சேனைகளும், அரசியல் அமைப்புகளும் இல்லை. ஆனால் ஆபத்தான வேளையிலே ஆண்டவரின் ஆவி சிலர் மேல் இறங்கிவர அவர்கள் அந்த ஆபத்தை முறியடித்தனர் (*நீதி 3:10; 6:34*). இவர்கள் நீதிபதிகள் என அழைக்கப்படுகின்றனர். இவர்கள் அருங்கொடை பெற்ற தலை

வர்கள், ஆண்டவரின் ஆவியின் ஆற்றலில் அவரது பிரதிநிதியாக விளங்கினர். இவர்கள், ஆவியின் ஆற்றலின் கீழ் ஆண்டவரது திருவுளம் பற்றி இறைவாக்கு உறுதி கொண்டிருந்தனர். மக்களை ஒன்றுகூட்டிச் செயல்படச் செய்தனர் *(நீதி 3:28; 7:7.9.15. 8:7)*. நீதிபதிகளைத் தவிர குருக்களும் இறைவாக்கினர்களும், அரசாட்சிக்கு முந்திய காலத்து இறையாட்சியில் இறைகருவிகளாக விளங்கினர் *(4:4-7; 20:28; 1 சாமு 14:41)*.

2. அரச இறையாட்சி:- இஸ்ராயேலர் அரசர்கள் வேண்டுமெனக் கேட்டபோது, ஆண்டவரை அவர்கள் ஒதுக்கி விடுவார்களோ என அஞ்சி இந்த வேண்டுதல் மறுக்கப்பட்டது *(1 சாமு 8:7; 10:27)*; கண்டனம் செய்யப்பட்டது *(ஒசே 8:4; 9:9; 13:10-11)*. இருப்பினும் அரசர்கள் இறைவனாலேயே நியமிக்கப்படுகிறார்கள் எனவும் மக்கள் நம்பினர் *(1 சாமு 12:12)*. இறைவாக்கினர்கள் அரசர்களை நியமிக்கவும் நீக்கவும் அதிகாரத்தைப் பெற்றிருந்தனர் என அவர்கள் நம்பினர் *(13:14; 15:23; 2 அர 9:1-13)*. அரசர் என்பதற்குப் பதிலாக '' ஆண்டவரின் அபிடேகம் செய்யப்பட்டவர்'' *(சங் 2:2)* என அழைக்கப்பட்டார். ஆண்டவரின் உரிமையின் பேரில் மன்னன் ஆவார் *(1 சாமு 10:1)*. இஸ்ராயேலர் அரசனின் மக்கள் அல்லர்; யாவேயின் மக்களாவார் *(13:14; 2 அர 9:6)*. அரசர் யாவேயின் மேய்ப்பர் *(2 சாமு 5:2)*. இறைவன் அரசனைத் தத்து மகனாக ஏற்றுக் கொண்டதால் அவருக்கு அரசனாகும் உரிமை கிடைக்கிறது. அப்போதும் யாவேயே அரசராவார் *(ஏச 6:1)*. அது ஒரு விசுவாச சத்திமாகும் *(ஏச 43:15; 44:6; செப் 3:15)*.

3. குருத்துவ இறையாட்சி:- நாடுகடத்தப்பட்டுத் திரும்பிய பின் காலத்தின் தொடக்கத்தில் அரசனும் குருவும் கடவுளின் பிரதிநிதிகளாகக் கருதப்பட்டனர் *(செக் 4:14; 6:12-13)*. சைரசின் கட்டளையால் அங்கீகரிக்கப்பட்டு நிலைநிறுத்தப்பட்ட யூதாவிலுள்ள சமயச் சமூகம் *(எஸ் 6:3-5)* குருத்துவத்திற்கும் குருக்களுக்கும் அதிக முக்கியத்துவத்தை கொடுத்தது. பாரசீகர், ஆட்சியின் கீழ், யூத அரசாட்சியின்மை குருக்களின் அதிகாரத்தை வளரச் செய்தது. '' தலைமைக்குரு'' அல்லது ''பெரிய குரு'' என்ற பட்டம் முதல் முறையாகத் தோன்றுகிறது *(ஆகா 2:2; செக் 3:1)*. பாரசீகர், கிரேக்கர் உரோமையர் காலத்தில் குருகுலத்தவர் ஆன்மீக, சமயக் காரியங்களில் நடுவர்களாகவும் இணைப்பாளர்களாகவும் விளங்கினர்.

இறையாட்சி பற்றிய புதிய ஏற்பாட்டுக் கருத்து முதன்மையாக இறுதிக் காலத்தைச் சேர்ந்ததாகும். காண்க. இறையரசு.

**இறைவனிடம் ஆலோசனை கேட்டல்** *(INQUIRE OF GOD)*

இதை இறை வழிநடத்துதலை நாடுதல் எனலாம். குருவின் மூலமோ, இறைவாக்கினரின் மூலமோ அல்லது கடவுளை நேரடியாகக் கேட்பதன் மூலமோ இந்த இறைவழி நடத்துதல் அதாவது பிரச்சனையான சமயங்களில் இறைவனிடம் ஆலோசனை கேட்கப்படுகிறது. பழங்காலத்தில் இஸ்ராயேலர்கள் குருவின் மூலமும் *(நீதி 18:14. 17; 1 சாமு 22:10)* இறைவாக்கினரின் முன்னோடியான காட்சியாளர் மூலமாகவும் *(9:9)* கடவுளிடம் ஆலோசனை கேட்டனர். குருவும், இறைவாக்கினரும் ஆலயத்தின் பீடப் பணிகளைச் செய்தனர். இறை சித்தத்தை அறிந்து கூறினர். ஊரீம் தும்மீம் என்ற திருவுள சீட்டாலோ *(எண் 27:21; 1 சாமு 14:36-42)*, ஏபோத்து *(1 சாமு 23:9-13; 30:8)*, ஒருவேளை தெராபீம், திருஉருவங்கள் *(நீதி 18:14)*, பலிகள் *(ஒசே 3:4)* ஆகியவற்றைப் பயன்படுத்தி குருகள் இறைசித்தத்தை அறிந்து கூறினர். இறைவாக்கினர் எப்படி விசாரிப்பார் என ஒருவரும் அறியார். காண்பதும் கேட்டலும் காட்சியாளரின் சிறப்புச் செயல்களாகும். இவர் பரவசக் காட்சியையும் பயன்படுத்தினார். சில நேரங்களில் இசையும் முழங்கும் *(1 சாமு 10:5; 2 அரச 3:15)*.

தனிப்பட்டவரின் நலனுக்காக அல்லது நாட்டு நலனுக்காக இவ்வாறு விசாரிக்கப்படும் *(1 சாமு 9:9)*; குறிப்பாக அரசன்,

போருக்குச் செல்லுமுன் இவ்வாறு குரு மூலம் வெற்றி தனக்குக் கிட்டுமா என விசாரித்தான் *(1 சாமு 23:2.4; 2 சாமு 5:19.23; 2 அர 3:11; 2 நாள் 18:4.6-7; நீதி 1:1; 20:23)*. கனவுகளும், ஊரீமும், இறைவாக்கினரும் கடவுளின் சித்தத்தை அறியப் பயன்பட்டன *(1 சாமு 28:6)*. இவற்றைத் தவிர சில குறி சொல்பவர்களும், மந்திரவாதிகளும் கூட இருந்தனர் *(1 சாமு 28:3; ஏச 8:19; உப 18:10-11)*. இறந்தோர் ஆவி மூலம் வருங்காலம் உரைப்பவர்களும் *(1 சாமு 28:8; ஏச 8:19)* தெரபீமும் *(நீதி 17:5; 18:13-14.17-18.20; ஓசே 3:4; செக் 10:2)*, தூணும் *(ஓசே 3:4)*, பெட்டகமும் *(நீதி 20:27)* பீடமும் *(2 அர 16:15)* ஆகியவையும் பயன்பட்டன. மேலும் பாகால்-செப்பு *(2 அர 1:2-3, 16)* மில்கோம் *(செப் 1:5)* போன்ற அந்நிய தேவர்களும் ஆலோசனை கேட்கப்பட்டனர்.

இறைவாக்கினர்கள் தோன்றியபின் இறைவாக்கினர்கள் மூலமாகவே மக்கள் கடவுளிடம் ஆலோசனை கேட்டுக் கொண்டனர். பிந்தைய இறைவாக்கினர் உள் உந்துதலிலும் நம்பிக்கை கொண்டிருந்தனர். பாபிலோனிய அடிமைதளத்தினின்று மீண்டு வந்தபின் குருக்கள் இதில் சிறப்பிடம் பெற்றனர். சாலமோன் காலத்திலிருந்து அன்றாடக் காரியங்களில் தேவ திட்டத்தை அறிய மக்கள் ஞானிகளை விசாரித்து அறிந்து கொண்டனர் *(எரே 18:18)*. செபக்கூடங்கள் வந்ததும், செபத்தில் நேரடியாக கடவுளை ஆலோசனை கேட்கும் பழக்கம் எற்பட்டது. புதிய ஏற்பாட்டு காலத்தில் இறைவனிடம் ஆலோசனை கேட்க செபம் முக்கிய சாதனமாகியது. கிறிஸ்தவர்கள் ஆண்டவர் இயேசுவின் பெயரால் செபிக்க கற்பிக்கப்பட்டனர் *(யோவா 14:13-14; 15:16; 16:23.26; அ.ப. 2:21; உரோ 10:13)*.

**இறைவனின் உருவும் சாயலும்**

பழைய ஏற்பாட்டில் 'இறைவனின் சாயல்' என்பதன் பொருளை விளக்கும் போது, கிறிஸ்தவ காலத்தில் நிலவிய இறையியல் அனுமானங்களைத் தள்ளி வைப்பது மிகவும் அவசியம். அது புதிய ஏற்பாட்டில் ஏற்றுக்கொள்ளப்பட்டபோது ஏற்பட்ட பல் வேறு மாற்றங்களிலிருந்து ஒதுக்கி, அச் சொற்றொடரைத் தனித்து நோக்க வேண்டும். இதன்மூலம் மட்டுமே, பழைய மற்றும் புதிய ஏற்பாட்டுக்கருத்துக்களை, அவற்றிற்குரிய வித்தில் புரிந்து கொள்ளக் கூடும்.

மனிதன் இறைவனின் சாயலாகப் படைக்கப்பட்டதாக ஆதியாகமத்தில் குருத்துவப் பாரம்பரிய நிகழ்ச்சியுரை கூறுகின்றது. இது புலனீடாக ஒத்திருத்தலை முதன்மையாக உணர்த்துகிறது. ஆனால் இறைவனோடு தொடர்பு கொண்ட நிலையில் மனித ஆளுமை என்ற கருத்தியலான கூறையும் உணர்த்துகிறது. வீழ்ச்சியின் மூலம் கடவுளின் சாயலை மனிதன் இழந்து விட்டதாகப் பழைய ஏற்பாடு எப்போதுமே கூறியதில்லை.

புதிய ஏற்பாட்டில், இறைவனின் சாயல் என்பது (இரண்டு பகுதிகளைத் தவிர்த்து) மனிதனுக்கு உரியதன்று என்றே கூறப்படுகிறது. மூல முன்மாதிரிகையான முழுமையான பிரதிபலிப்பாகிய கிறிஸ்துவின் சாயலாக அது கருதப்படுகிறது. கிறிஸ்துவோடு கொண்ட உறவின் மூலம், விசுவாசிகள் அதே சாயலாக மாற்றப்படுகிறார்கள். இந்நிலையானது இறுதிக்கால நம்பிக்கையாகவும், (ஓரளவிற்கு) இன்றைய உண்மையாகவும் உள்ளது.

1. பழைய ஏற்பாடு

அ. ஆதாரம்:- முதன்மையான பழைய ஏற்பாட்டு ஆதாரங்கள் குறைந்த அளவிலேயே உள்ளன. இக்கருத்து காணப்படும் பகுதிகள் ஆதி *1:26-27; 5:1-3; 9:1-7* ஆகியவை ஆகும். இவை யாவும் குருக்கள் பாரம்பரியத்தைச் சேர்ந்தவை. 'இறைவனின் சாயல்' என்னும் சொல் காணப்படாவிட்டாலும், இக்கருத்து சங் *8*-இல் கவிதை நடையில் காணப்படுகிறது. இவற்றோடு சம்பந்தப்படாதவையாக இருந்தாலும், சீரா *173*; ஞான *2:23-24; 7:25* என்னும் குறிப்புகளும் சேர்க்கப்படலாம்.

ஆ. மொழிவாரியான ஆய்வு:- மொழிவாரியான பிரச்சினைப்பற்றி சில பூர்வாங்க குறிப்புக்கள் உதவியாக இருக்கும். ஆதி 1:26-இல் ''உருவிலும் சாயலிலும்'' என்ற இரு சொற்கள் பயன்பட்டுள்ளன. ஆதி 1:26-இல் செய்யப்பட்ட தீர்மானம் 1:27-இல் நிறைவேற்றப்படும் பொழுது, முதல் சொல் மட்டுமே பயன்பட்டுள்ளது. ஆதி 5:1 இரண்டாவது சொல்லும், ஆதி 9:6-இல் முதல் சொல்லும் மட்டுமே பயன்பட்டுள்ளன. 5:3-இல் ஆதாமிற்கும் அவரது மகன் சேத்திற்கும் இடையிலுள்ள ஒத்தநிலையினைப்பற்றிக் கூறும் போது இரண்டு வார்த்தைகளும், ஆனால் நேர்மாறான வரிசையில் பயன் படுத்தப்பட்டுள்ளதைக் காணலாம்.

உருவம் என்ற சொல் பழைய ஏற்பாட்டில் பதினேழு முறை காணப்படுகின்றன. பரிசேலனையில் உள்ள பகுதிகளில் இச்சொல் ஐந்து முறை காணப்படுகின்றது. மற்ற பத்துப் பகுதிகளில் இச்சொல்லுக்கு (சிலை, மாதிரி, படம்) என்ற பொருள் தெளிவாக உள்ளது. மீதியுள்ள இரு பகுதிகளில் (சங் 39:7; 73:20) நிழல், கனவு என்னும் பொருள் பொருத்தமாக உள்ளது. இவ்விரண்டு இடங்களில் வரும் சொல் வேறுபட்ட அராபிக் மூலச் சொல்லிலிருந்து வந்ததா என்பதும், மற்ற பத்து பகுதிகளில் 'வெட்டுதல்' என்று பொருள்படும் அராபிக் சொல்லிருந்து வந்ததா என்பதும் பற்றிய கருத்து விவாத்திற்குரியதாகும்.

ஆதி 1:26-இல் காணப்படும் 'சாயல்' என்னும் இரண்டாவது சொல் கருத்தியலான பொருளையுடையது. அவ்விதத்திலேயே பயன்பட்டுள்ளது. ஆயினும், 'திட்டம்' என்னும் பொருளிலும் பயன்படலாம்.

1:26-இல் இரண்டு சொற்களும் பயன்படுத்தப்பட்டுள்ளது. கடினமாக ஒரு கருத்தை வெளிப்படுத்த ஆசிரியரின் போராட்டத்தைச் சுட்டலாம் அல்லது ''உருவம்'' என்ற சொல் புலனீடான பொருளில் மட்டும் எடுத்துக்கொள்ளப்படுவதைத் தவிர்ப்பதற்காக இருக்கலாம். மொழி ரீதியான சுருக்கமான ஆய்வுப்படி, சொற்களும் பயன்பட்டுள்ள விதத்தில் அதிக வேறுபாடு இல்லை என்பதைச் சுட்டுகிறது.

இ. விளக்கம்:- குருக்கள் பாரம்பரிய ஆசிரியரின் சொற்களுக்குப் பொருள்காண பல முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

ஒரு கோடி எல்லையில் 'உருவம்' மற்றும் 'சாயல்' ஆகிய வார்த்தைகளை மிகவும் புலனீடான பொருளில் ஏற்று, சொற்பொருள், உடல் அளவில் ஒத்திருக்குமுறையில் இறைவனின் புலனீடான உருவமாவான் என்று அல்லது இறைவனின் புலனீடான உண்மையான உருவத்தையோ மாதிரியையோ பாவனையாக வைத்து மனிதன் செய்யப்பட்டவர் என்று விளக்கமளிப்பதாகும். கில்கமிஷ் இதிகாசத்தில் விவாதத்திற்குரிய ஒரு பகுதியானது இந்த இரண்டாம் விளக்கத்திற்கு ஆதரவு அளிப்பதாகத் தெரிகிறது. ஆனால் அதில் வரும் சிக்ரு என்னும் சொல்லானது 'மாதிரி' என்றில்லாமல் ''மனரீதியான உருவம்'' என்றே பொருள் படுகிறது. மனிதனைக் கடவுளின் உருவகமாகப் படைப்பது பற்றி பாபிலோனிய அல்லது சுமேரிய இதிகாசங்களில் (பல்வேறு உதாரணங்கள் உண்டு) உள்ள புராணக் குறிப்புகள் கற்பனை செய்யப்படக் கூடியவையே, ஆயினும் ஆதி. 1-இன் மற்ற பகுதிகளில் புராணக் கதைகளில் கவனம் கொள்ளும் ஆசிரியர் அவற்றை வேண்டுமென்றே நிராகரித்திருக்க வேண்டும் என்று கருதப்படுகிறது. மனிதன் கடவுளின் இரத்தத்தினைத் தனது நரம்புகளில் கொண்டுள்ளான் எனும் பாபிலோனிய நம்பிக்கை உறுதியாக இங்கு இல்லை. ஆதி 1:27-இல் உள்ள நிலையின்படி மனிதன் கடவுளின் சாயலாகப் படைக்கப்பட்டான் என்னும் கருத்திலிருந்து, ஆணும், பெண்ணும் என்ற வேறுபாடு பற்றிய கூற்று தெளிவாக பிரிக்கப்பட்டிருப்பது, ஆணும், பெண்ணும் முறையே ஆண் கடவுள் மற்றும் பெண் கடவுளின் சாயலாக படைக்கப்பட்டவர்கள் என்னும் சுமேரிய சமய சடங்குகளில் நிலவும் கருத்தினை முற்றிலும் விளக்குவதாக இருக்கலாம்.

*இறைவனின் உருவும் சாயலும் (தொடர்ச்சி)*

மற்றொரு கோடி எல்லையில், உருவம் என்னும் சொல்லுக்குப் புலனீடானபொருள் அளிப்பதை விலக்கி அதற்கு 'ஆளுமை', 'தன்னறிவு', 'தன் முடிவுரிமை', 'அழியாமை' (ஞான 2:23-24), 'காரணம்', 'தீர்ப்பிடும் திறன்', 'சுதந்திர முடிவாற்றல்', 'ஒழுக்கத்திறன்'என்பன போன்ற சொற்களைப் பயன்படுத்தி முழுவதும் ஆன்மீக விளக்கம் அளிக்கப்படும்.

குருக்கள் பராம்பரிய ஆசிரியரின் கருத்துப்படி இறைவனின் உருவம் என்பது அனைத்து மக்களுக்கும் உரிய என்பாகும். எகிப்திய கருத்துப்படி அரசருக்கு மட்டுமே உரியதல்ல, தனிப்பண்பதாகும். வீழ்ச்சி பற்றி நிகழ்ச்சிரையை அவர் எங்குமே குறிப்பிடவில்லை. உண்டாக்கப்பட்ட மனிதன் இறைவனின் உருவமாக இன்னும் இருப்பதை, அவன் கொலை செய்யக்கூடாது என்று பெரும் வெள்ளத்திற்குப்பின் அளிக்கப்பட்ட காரணமாகக் கூறுகிறார்.

மனிதன் இறைவனை ஒத்திருப்பது, சேத்தன் தந்தை ஆதாமை ஒத்திருப்பதற்கு இணையானது. இதில் உடல் அளவிலான சாயல் முழுவதும் ஒதுக்கப்படவில்லை. இன்னும் பையன் அவனது தந்தையின் உயிருள்ள உருவம் என்றே பேசுகிறோம்.

ஆதி 1:26-இல் மனிதன், படைக்கப்படுதல் அறிமுகப்படுத்தும் முறையும், 9:1-7-இல் மனித வாழ்வு விலங்கின் வாழ்வைவிட உயர்ந்தது என்றும், இத்தகைய மாறுபாடு இறைவனின் உருவம் என்பதோடு தொடர்புடையது என்றும் சுட்டிக்காட்டப்படுவதும் இறைவனின் உருவம் என்ற சொற்றொடரால் ஆசிரியர் மனிதனுடைய தனிச்சிறப்பை விளக்க முனைகிறார் என்பதும் தெளிவாகின்றது.

ஓர் இடத்தில் இல்லாத ஆட்சியாளருக்குப் புற அடையாளமாகச் சிலை இருப்பது போல (தானி 3) மனிதன் இறைவனின் உருவமாக இருக்கிறான் என்று ஆசிரியர் கருதியிருக்கக் கூடும் என்று ஏற்றோம் என்றால் உடனடியாக மனிதன் இறைவனின் பிரதிநிதியாகச் சிறப்பையும், அதிகாரத்தையும் பெறுகிறான் என்பது தெளிவாகும். விலங்குகளோடு ஒப்பிடும்போது மனிதன் நிமிர்ந்து நிற்கும் நிலைபற்றிய குறிப்பும் இங்கு உள்ளடங்கலாம். மனிதனும் விலங்குகளும் வேறுபட்டவை; அவற்றின் வேறுபாடு தெளிவாகவே இருக்க வேண்டும் (லேவி 20:15-16). இறைவனுக்கும் மனிதனுக்கும் இடையே உடற்கூறு ஒற்றுமை இங்குக் கருத்தில் உள்ளடங்கும் என்பது, உப 4:15-24-இன் பின்னணியில் ஒதுக்கப்படக்கூடாது. 'ஒரேப்' மலையில் எத்தகைய வடிவமும் காணப்படாவிடினும் இறைவனுக்கு வடிவமுண்டு என்பது மறுக்கப்படவில்லை. பழைய ஏற்பாட்டில் வரும் சில இறைமகிமைத் தோற்றக்காட்சிகளில் (ஏச 6; எச 1) அவர் வடிவம் கொண்டிருந்தார் என்பது வெளிப்படையாகுகிறது. பழைய ஏற்பாட்டில் இறைவனைப் பார்க்க முடியும், பார்க்க முடியாது என்பது பற்றி விநோதமான ஊசல்நிலை காணப்படுகிறது. ஆதியாகமத்தின் ஆசிரியர் கூறவிரும்புவது மனிதர் இறைவனின் உருவத்தைச் செய்யலாம் என்பதன்று. இதை அவர் கடுமையாக மறுத்திருப்பார். மனிதனைத் தமது உருவமாகப் படைத்தார் என்று மட்டுமே கூறுகிறார். 'சாயல்' பற்றி குறிப்பிட்டு, இருவருக்குமிடையேயுள்ள இடைவெளியினையும் விளக்குகின்றார். வெளிப்புற ஒத்தநிலையினைக் குறிப்பிடுவதன் மூலம் ஆன்மீக ஒத்தநிலை மறுக்கப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. பழைய ஏற்பாடு மனிதனை உடலும், ஆன்மாவும கொண்ட இருமைப் பொருளாகக் கருதவில்லை; மனிதப்பண்புகளை இறைவனுக்குச் சாற்றிக் கூறுவது பல இடங்களில் காணப்கிறது. இது முதிராத சிந்தனைப் போக்கின் அடையாளமன்று. மறுபுறத்தில் குருக்கள் பாரம்பரிய ஆசிரியர் இறைவனுக்கு மனிதப் பண்புகளைச் சாற்றிக் கூறும் முறையை முடிந்த அளவு தவிர்க்கிறார். ஆகவே உருவம் என்னும் புலனீடான சொல்லைப் பயன்படுத்தும்போது, கருத்தியலான ஒன்றை எடுத்துக் கூற விரும்புகிறார் எனலாம்.

மனிதனுககும், இறைவனுக்கும் புறஒத்த தன்மை இருப்பதாய் பொதுவாக கருதப்பட்டாலும் குருக்கள் பாரம்பரிய ஆசிரியர் கருத்தியலாகக் கூறும் முறையை ஓரளவு கொண்டிருந்ததாகத் தெரிகிறது. அவர், இறைவனின் உருவம் என்பதற்கு ஆளுமை என்று பொருள் கொண்டார் என்று நாம் ஏற்றுக் கொள்ளலாம். இப்படிக் கூறும் போது, தத்துவ இயல் அறிஞர்கள் கூறுவதுபோல், ஆளுமை தன்னாட்சியுடைய சுயமாக-நிர்ணயிக்கும் உயிர் என்று பொருள் கொள்வதைத் தவிர்க்க வேண்டும். இறைவன் மனிதனை அவனுடைய படைப்பவர் என்ற அளவில் நிர்ணயிக்கிறார். இறைவனின் உருவம் என்பது அதிகாரத்தை அளிப்பதையும், இறைவன் மனிதனை அந்த அதிகாரத்தைச் செயல்படுத்தும் முறையில் அமைந்திருப்பது பொறுப்பினையும் உள்ளடக்குகிறது.

'இறைவனது உருவம்' என்பது கீழான படைப்புகளை ஆள்கின்ற திறன் அல்லது அவ்வாறு செய்யக்கூடிய திறன் என்று விளக்கப்படக் கூடாது என்றாலும் (சீரா 17:3), இரண்டும் நெருங்கிய தொடர்புடையனவாகும். மனிதர் மீதான கடவுளின் அன்பு, பிரிவு, வானதூதரைவிடச் சிறிதளவே தாழ்ந்த நிலையினை அவனுக்கு அளித்தது, அவனுடைய ஆளுமையை செயல்படுத்த அரச மரியாதைகளை அளித்தது போன்றவற்றை குறிப்பிடும் சங் 8-இல் இத்தகைய நிலை காணப்படுகின்றது. மகிமை மற்றும் பெருமை ஆகியவற்றால் மனிதன் மூடிசூட்டப்பட்டிருப்பது அவனது வெளிப்புற அழகினையும் உட்புறச் சிறப்பினையும் வெளிப்படுத்துகின்றது. ஏதேனில் உள்ள தீர் நாட்டு அரசனைப்பற்றிய புராணக் கதையானது (எச 28:12.17) அழகு மற்றும் ஞானம் ஆகிய இரண்டும் இணைந்த ஒரு நிலையினைக் குறிப்பிடுகின்றது. மனிதனுடைய சிறப்பு, வல்லமை மற்றும் நற்பண்புகள் போன்றவை, மனிதனது கலாச்சாரப் பணிக்காக இறைவனால் அளிக்கப்பட்ட கொடைகள் (ஆதி 1:26.28) எள்று சங் 8-இல் கூறுவதாகவும் நான் கருதலாம்.

2. புதிய ஏற்பாடு

அ. புதிய ஏற்பாட்டில் பழைய ஏற்பாடு கருத்துக்களின் சுவடுகள்:-

'இறைவனின் உருவம்' என்ற பழைய ஏற்பாட்டுக் கருத்து, எவ்வித மாற்றமுமின்றி புதிய ஏற்பாட்டில் 1 கொரி 11:7; யாக் 3:9 ஆகிய இரண்டு இடங்களில் காணப்படுகின்றது. 1 கொரி 11:7-இல் 'உருவம்' மாட்சியோடும் இணைத்துக்கூறப்படும்போது, யாக்கோபு சாயல் என்ற சொல்லைப் பயன்படுத்துவது கவனிக்கத்தக்கது. அவ்வாறே, உரோ 1:23-இல் சாயல் பண்பட்டுள்ளது. உருவம் என்பது மூல முன்மாதிரிகையை உணர்த்துவதாகத் தெரிகிறது. உருவம் என்ற சொலின் இந்தப்பொருள் மாற்றம் எபி 10:1-இலும் காணப்படுகிறது. அங்கு நிழலோடு ஒப்பிட்டு வேறுபடுத்தப்படுகிறது.

ஆ. புதிய ஏற்பாட்டில் கருத்து மாற்றம்:-

'உருவம்' என்பதிலிருந்து ''மூலமுன்மாதிரிகையின் நிறைபிரதிபலிப்பு'' என்று பொருள் மாறுபடுவது, புதிய ஏற்பாட்டில் முடிவாகத் தீர்மானம் செய்வதாக அமைகிறது. மூலமுன்மாதிரிகையோடு நிறை ஒற்றுமையுடையது. இந்தப் பொருளில் கிறிஸ்துவே இறைவனின் உருவம் என்னும் கருத்தைவிட வேறெதுவும் கிறிஸ்துவில் இறைவனின் வெளிப்பாட்டின் மிகப்பெரும் தாக்கத்தைத் தெளிவாக்குவதில்லை. ஞானம் என்பது, 'எல்லாம் வல்லவரது மகிமையொளியுடன் தூயசுடர்', 'முடிவில்லா ஒளியின் எதிரொளி', 'கடவுளுடைய வேலைத்திறனின் கறைபடியாக் கண்ணாடி', 'அவருடைய நம்மைத்தனத்தின் சாயல்' என்றெல்லாம் ஞான 7:25-26 விவரிக்கின்றது. மகன் என்ற அளவில் கிறிஸ்துவுக்கு இந்த விவரிப்பு எபி 1:3-இல் எடுத்துக் கூறப்படுகிறது; ''கடவுளுடைய மாட்சிமையின் சுடரொளியாகவும், உள்ளியல்பின் சாயலாகவும் விளங்கும் இவர்'' என்று தொடக்கத்திலேயே கூறுவதன் மூலம், கிறிஸ்து உண்மை ஆகிறார் என்னும் உறுதியால் நூல் முழுவதிலும் ஆசிரியர் ஆட்கொள்ளப்பட்டுள்ளார் என்று காட்

டுகிறார். யோவானின் நூல்களில் ''இறைவனின் உருவம்'' என்ற சொற்றொடர் காணப்படாவிட்டாலும் அதுவே அவற்றிற்கு மையக் கருத்தாக உள்ளது. மனுஉடல் எடுத்த கிறிஸ்துவில் 'தந்தையிடமிருந்து வந்த ஒரே மகன் என்னும் மகிமையானது வெளிப்படுகிறது' (யோவா 1:14), மற்றும் 'கிறிஸ்துவைக் காண்பது தந்தையைக் காண்பதற்குச் சமம்' (யோவா 12:45; 14:9) ஆகும். மனிதர்கள் ஏற்கெனவே இறைவனின் பிள்ளைகளாக இருந்தாலும், கடவுளுடைய அல்லது கடவுள் வெளிப்படும், கிறிஸ்துவினுடைய உருவாக விளங்கிடும், மேலும் அதிக மகிமையுடன் கூடிய எதிர்காலம் உண்டு என்னும் சிந்தனையிலேயே முக்கியத்துவம் கொண்டதாக 1 யோவா 3:2 அமைந்துள்ளது. பவுலின் சிந்தனைகளில் இக்கருத்து மாற்றம் முழுமையாக செயல்படுத்தப்படுகிறது.

இ. பவுலின் கருத்து:-

கிறிஸ்துவே இறைவனின் சாயல் என்னும் புதிய சிந்தனை பவுலின் நூல்களில் மிக நிறைவாக விளக்கப்பட்டு, மனிதனின் ஊழி என்னும் பிரச்சினையுடன் இணைக்கப்படுகிறது. ''அன்பார்ந்த மகனாகிய'' (கொலோ 1:13) கிறிஸ்துவே ''கட்புலனாகாக் கடவுளின் சாயல்'' என்று கொலோ 1:15 குறிப்பிடுகிறது; ''கடவுளது சாயலான கிறிஸ்து'' என்று 2 கொரி 4:4-இல் நாம் வாசிக்கிறோம். ஆனால், இவற்றில் பவுல் எல்லாவற்றிற்கும் மேலாகச் செயல்முறை விளைவுகளைப் பற்றியே அக்கறை உள்ளவராக இருக்கிறார். அவரைக் கவர்ந்திருப்பது அவருடைய நற்செய்தியே அன்றித் தத்துவம் அன்று. பீலோவில் காணப்படுவது போல் விண்ணக மனிதனுக்கும் (ஆதி 1:26) மண்ணக மனிதனுக்கும் (ஆதி 2:7) இடையேஉள்ள வேறுபாட்டுடன் கூடிய ஆதி 1:2 என்ற பகுதிபற்றிய விளக்கத்தை ஏற்றுக் கொண்டு பீலோ இறைவனின் உருவான மனிதனை வார்த்தையோடு ஒன்றாக்குவது போல் பவுல் இறைவனின் உருவான மனிதனைக் கிறிஸ்துவோடு ஒன்றாக்குகிறார் (1:26) இதை 1 கொரி 15:45-46-இல் தெளிவாகக் கூறுகிறார். இப்பகுதியில் மண்ணிலிருந்து படைக்கப்பட்ட, ஆகவே மண்ணகத்தைச் சேர்ந்த, படைப்பில் உயிர் உள்ளவன் ஆன முதல் மனிதன் ஆதாமையும், உயிர் தரும் ஆவியான இறுதியான அல்லது இரண்டாம் ஆதாமையும் ஒப்பிட்டு வேறுபடுத்துகிறார். ஈரானிய மனுஉரு புராணத்துடன் ஏதாவது தொடர்பு இருக்க கூடுமாயின், பிற பகுதிகளில், பவுல் கிறிஸ்துவின் முந்தைய வாழ்வைப்பற்றிச் சாதரணமாகக் குறிப்பிட்டிருந்தாலும் (கொலோ 1:15 'படைப்புக்கெல்லாம் தலைப்பேறானவர்', பிலி 2:6 'கடவுள் தன்மையில் விளங்கிய அவர்') இப்பகுதியில் கிறிஸ்துவின் முந்தைய வாழ்வைப்பற்றி ஒன்றும் கூற வில்லை, மாறாக வேண்டுமென்றே இக்கருத்தைத் தவிர்ப்பதாகத் தெரிகிறது. விண்ணிலிருந்து வந்த மனிதன் (1 கொரி 15:47) முந்தைய வாழ்வுடையவர் அல்லர். ஆதி 1:26-இல் உள்ள இறைவனின் சாயலான மனிதனோடு கிறிஸ்துவை ஒன்றாக்கும் பவுல், அண்டவியல் மீட்பு பொருளில் அல்லது இயல் பொருளிலேயே அக்கறை கொள்கிறார் என்பது தெளிவு.

''இறைவனது உருவாகும்'' (ஆதி 1:26) என்பது மனிதனுக்கு ஒரு வாக்குறுதியாகவே இருந்தது. இதை மனிதன் கிறிஸ்துவோடு கொள்ளும் தொடர்பில் மட்டும் தான் அடைய முடியும் என்ற சிந்தனை பவுலை முழுவதும் ஆட்கொள்கிறது. பிலி 2:6-8-இல் கிறிஸ்து தமக்கு உரிமையாகிய இறைவன் வடிவத்தை அல்லது இறைவன் தன்மையைக் கைவிட்டு அடிமையின் வடிவத்தையும் மனிதனின் சாயலையும் ஏற்றார் என்று பவுல் கூறுகிறார். இரண்டிலும் இருத்தலின் வடிவத்தையே குறிப்பிடுகிறார்.

கிறிஸ்தவர்கள் இக்கிறிஸ்துவில் இருப்பதனால், கிறிஸ்தவ சமுதாயத்தில் நிலவும் உறவுமுறைகளில் இந்த உறவுமுறை செயல்படும். கொலோ 3:9 தொ-இல் பழைய மனிதனைப் புதியமனிதனாக மாற்றிக் கொள்ளும்படி பவுல் அறிவுரை கூறுகிறார். இப்புதிய மனிதர் ''தன்னை உண்டாக்கியவரின் சாயலுக்கேற்ப உண்மை அறிவில்'' புதுப்பிக்கப்

படுகிறார். இப்புதிய மனிதர் சாதி. சமூக, சமய பிரிவினைகள்பொருள் அற்றும்போகும் புதிய சமூகத்தை உருவாக்குவார். அதில் ''கிறிஸ்துவே எல்லாமுமாகவும் எல்லாரிலும் இருப்பார்'' (காண்க எபே 4:22-26). எல்லாவற்றிற்கும் மேலாகக் கிறிஸ்தவர்கள் 'எல்லா நற்பண்புகளையும் பிணைத்து நிறைவு அளிக்கின்ற அன்பை அணிந்து கொள்ள வேண்டும்' (கொலோ 3:14). 'அவர்கள் தம் மகனின் சாயலுக்கேற்ற உருவைத் தாங்குவதும் (உரோ 8:29), ஆகவே இறைவனின் சாயலைத் தாங்குவதுமே மனிதர்களுக்குரிய இறைவனின் திட்டமாகும். ஏனெனில் இரண்டு சாயல்களுக்கும் வேறுபாடு இல்லை. இது இறுதிக்கால நம்பிக்கையாக இருந்தாலும் ஓரளவு நிகழ்கால உண்மையுமாகும். ஏனெனில் ''நாமனைவரும் மூடுதிரையில்லா முகத்தினராய் ஆண்டவரின் மாட்சிமையைக் கண்ணாடி போல் காட்டுகிறோம். ஆகவே மேன்மேலும் மாட்சிமை ஒளிபெற்று, அதன் சாயலாகவே உருமாற்றம் அடைகிறோம். இவையெல்லாம் ஆவியாகிய ஆண்டவரின் செயலே'' (2 கொரி 3:18; பிலி 3:20-21).

## இறைவனின் கடுஞ்சினம் (WRATH OF GOD)

இறைவனின் புனிதத்தையும் அன்பையும் அறியாமல் அவருடைய கடுஞ்சினத்தைப் பற்றிப் பேசுவது வெறுப்பைத் தருவதாக இருக்கும். ஆனால், இறைவனுடைய அருளைப் பெறுவதற்கு மனிதன் தனது பாவங்களுக்காக மனம் வருந்தவேண்டி இருப்பது போல, விசுவாசியும் இறைவனின் அன்பைச் சரியான முறையில் அணுக வேண்டுமாயின், இறைசினத்தின் மறைபொருளையும் அறிய வேண்டும். இறைசினத்தின் மறைபொருளை மனித அனுபவத்தின் புராண வெளிப்பாடாக குறைக்க விரும்புவது, பாவத்தின் விபரீதத்தை தவறாகப் புரிந்து கொள்வதாகும், இறையன்பின் துன்பியல் கூறை மறந்துவிடுவதாகும். புனிதத் தன்மைக்கும் பாவத்திற்கும் இடையில் அடிப்படையான ஒவ்வாமை உள்ளது. மறுப்புக்கிடமின்றி, மனித கோபமே, இறைசினமாகிய மறைபொருளின் உண்மையை வெளிப்படுத்த நமக்கு ஏதுவாகுகிறது; ஆனால், மறைபொருளின் நமது அனுபவமானது, முதன்மையாக மொழியுடன் தொடர்புடையதாகவும், வேறொரு தோற்றத்தைக் கொண்டதாகவும் உள்ளது.

1. மனிதனின் கோபம்

அ) கோபம் கண்டிக்கப்படுதல்:- காயினுடைய பொறாமை (ஆதி 4:5), ஏசாயுவினுடைய சீற்றம் (ஆதி 27:44 தொ), மற்றும் தங்களுடைய சகோதரி கற்பழிக்கப்பட்ட பின்னர் சிமேயோன் மற்றும் லேவி ஆகியோரால் எடுக்கப்பட்ட அளவு கடந்த பழி வாங்குதல் (ஆதி 49:5 தொ; 34:7-26; யூதி 9:2) போன்ற பிறருக்கு எதிரான சீற்றத்தின் வன்மையான எதிர்செயல்களை இறைவன் கண்டிக்கிறார். இத்தகைய கோபம் பொதுவாக கொலை செய்வதற்கு இட்டுச் செல்கிறது.தங்களுடைய காலத்தில் ஞான ஆசிரியர்கள், ''தங்களுடைய நாசித்துவாரங்களின் மூச்சையே அடக்க முடியாதவர்'' என்று, உருவகமாக விவரிக்கப்பட்ட முன் கோபிகளின் முட்டாள்தனத்தை (பழ 29:11) கண்டிக்கிறார்கள். அநீதிக்கு வழிகோலுகிற கோபத்தினையுடைய (பழ 14:17; 29:22; யாக் 1:19-20) மூர்க்கர்களிலிருந்து (குறுகிய சுவாசமுடைய மனிதன்) (பழ 14:29; 15:18) வேறுபடுத்தி தன்னடக்கமுள்ள ஞானிகளை (நீண்ட சுவாசமுடையோர்) அவர்கள் வியந்து பாராட்டுகின்றனர். இயேசு, கோபத்தை அதனுடைய சாதாரண விளைவுகளின் மட்டத்தில், கொலைக்குச் சமமாக்கும் அளவிற்குச் செல்கிறார் (மத் 5:22). பவுல் கோபத்தினை பிறரன்புடன் ஒவ்வாததாக தீர்ப்பிட்டு (1 கொரி 13:5), அதை முழுக்க முழுக்கத் தீமையெனக் கூறுகிறார் (கொலே 3:8) இறைவன் அருகாமையில் இருப்பதனால், கோபத்திற்கு வழிவகுப்பதை விட்டுவிட வேண்டும் (1 திமோ 2:8; தீத் 1:7).

2. தூய கோபம்:- மனிதனுடைய கிளர்ச்சிக்குப் பதிலான கடவுளின் எதிர் செயலின் காணக் கூடிய வெளிப்பாட்டினை எடுத்துக் கூறும் தூய கோபத்தின் எடுத்துக்காட்டுகளை விவிலியம் நமக்குத் தருகிறது. இவ்

வாறு இஸ்ராயேலரின் விசுவாச மின்மைக் காக (யாத் 16:20), ஓரேபில் நடந்த பதிதத்திற் காக (யாத் 32:19.22), வழிபாட்டினை புறக்க ணித்ததற்காக (லேவி 10:16), கொள்ளை பொருளுக்கு எதிரான கட்டளையைக் கடைப்பிடிக்கத் தவறிய தற்காக (எண் 31: 14), அவர்களுக்கெதிராக மோசே சினந்தெழு கிறார். இறைவனே புகழ்கிற ஆர்வமுடைய பினகாசு (எண் 25:11), மற்றும், போலி இறைவாக்கினர்களைக் கொன்று (1 அர 18:40), அரசனுடைய ஐம்பது வீரர்கள் மீது வானின்று நெருப்பை வரவழைத்த (2 அர 1:10.12) எலியா ஆகியோர் இத்தகையவர் களே. இறுதியாக, ஏத்தென்ஸ் சிலைவழி பாட்டிற்கு எதிராகப் பவுல் கொண்ட சீற்றம் நம் கண்முன் வருகிறது (அ.ப. 17:16). இந்த இறைமனிதர்கள், சிலைகள் மற்றும் பாவத் திற்கு முன்னால், எரேமியாவைப் போன்று இறை சினத்தினால் நிரப்பப்பட்டிருந்தனர் (எரே 6:11; 15:17). இவ்வாறு அவர்கள் இயேசுவின் சினத்தை ஓரளவு முன்னடையா ளமாகக் குறித்துக் காட்டுகின்றனர் (மாற் 3:5).

ஆனால், இறைவன் மட்டுமே முரண்பா டின்றி கோபத்துடன் எதிர் செயலாற்ற முடி யும். பழைய ஏற்பாட்டில் கோபம் மற்றும் சினத்துடன் தொடர்புள்ளசொற்கள், மனித னுக்குச் சாற்றிக் கூறப்படுவதுபோல் ஐந்து மடங்கு இறைவனுக்கும் சாற்றிக் கூறப்படு கின்றன. ஒரு முறைக்கும் மேலாகக் கடும் சீற்றம் கொண்ட பவுல் (அ.ப. 15:39) பின்வ ரும் அறிவுரையை கொண்டுள்ளார்: ''நீங் களே பழிவாங்காதீர்கள், அதை இறைவ னின் சினத்திற்கு விட்டுவிடுங்கள். ஏனெ னில், பழிவாங்குவது என் உரிமை; நானே பதிலுக்கு பதில் செய்வேன் என்கிறார் ஆண் டவர் என்று எழுதியுள்ளது'' (உரோ 13:19). இவ்வாறு, சினமானது இறைவனுக்கே உரி யது; மனிதனுக்குரியதன்று.

II. இறைவனின் சினம்

அ. பழைய ஏற்பாடு:

1. உருவங்களும் உண்மையும்:-

அ) இது உண்மையானது:- இறைவன் கோபத்தில் எதிர் செயலாற்றுகிறார். இறை வனின் சினத்தை வெளிப்படுத்துகின்ற எல் லாவிதமான இறைஏவுதல் பெற்ற உருவங்க ளையும் ஏசயா சேகரித்துத் தருகிறார். அவ ரது உதடுகள் கடும்சினத்தால் துடிக்கின்றன. அவர் நாக்கு பொசுக்கும் நெருப்பைப் போன்றது. அவர் மூச்சு, கழுத்தளவு பாயும் வெள்ளம் போல் வருகிறது. அவர், பொங்கி யெழும் சீற்றம் கொண்டு, விழுங்கும் நெருப்பு, பெருமழை, சுறாவளிக்காற்று, கல் மழை, இவற்றால் தம் தண்டிக்கும் ஆற் றலை வெளிப்படுத்துவார். நெருப்புக்குழி ஒன்று அரசனுக்கும் தயாராக்கப்பட்டுள்ளது; ஆழ்ந்து அகன்ற அக்குழியில் நெருப்பும் விறகும் ஏராளமாக நிறைந்துள்ளன; ஆண்ட வரின் மூச்சு கந்தக மழைப்போல் அவற்றின் மேல் நெருப்பு மூட்டும்'' (ஏச 30:27-33). நெருப்பு, சுவாசம், சூறாவளிக் காற்று, மற் றும் பெருவெள்ளம் போன்று, அவரது கோபம் தீ மூட்ட, அது பரவுகிறது (எச 20:33). போதையளிக்கும் மதுவைப்போன்று (எரே 25:15-38), இதுவும் கிண்ணத்திலிருந்து குடிக்கப்பட வேண்டும் (ஏச 51:17).

இச்சினமானது மரணத்தையும், அதனு டன் செல்கின்ற அனைத்தையும் தனது விளைவாக கொணர்கிறது. பஞ்சம், ஓட்டம் மற்றும் கொள்ளைநோய் ஆகியவற்றில் ஒன் றினை தாவீது தேர்ந்தெடுக்க வேண்டும் (2 சாமு 24:13 தொ). மற்ற சமயங்களில் இறை வனின் சினமானது நோய்கள் (எண் 17:11), தொழுநோய் (எண் 12:9-10), அல்லது மர ணம் (1 சாமு 6:19) ஆகியற்றைக் கொணர்கி றது. அவரது சினமானது, எல்லா கடினப் பட்ட பாவிகள் மேலும், முதலில் இஸ்ரா யேல் மீதும், விழுகிறது. ஏனெனில் இஸ்ரா யேல் எல்லா தூய்மையும் நிறைந்த இறைவ னுக்கு அருகிலுள்ளது (யாத் 19:32; உப 1:34; எண் 25:7-13). இச்சினம் சமுதாயத்தையும் (2 அர 23:26; எரே 21:25) அல்லது தனிநபர்க ளையும், இறுதியாக முழு நாடுகளையும் (1 சாமு 6:9) தாக்குகிறது; ஏனெனில், யாவேயே உலகம் முழுமைக்கும் இறைவ னாக உள்ளார் (எரே 10:10). இந்த உறுதிப்

பாட்டை வெளிப்படுத்த தவறுகின்ற நூலோ. ஏடோ விவிலியத்தில் இல்லை எனலாம்.

ஆ) வன்முறை உணர்வை உடையவராக விவரிக்கப்படும் இறைவனின் முன்னிலையில், அறிவு எதிர்த்தெழுந்து, அவருக்கு ஏற்றனவையல்ல என்று தீர்மானிக்கப்பட்ட உணர்வுகளினின்று இறைத்தன்மையை தூய்மைப்படுத்த முயல்கிறது. இவ்வாறு, விவிலியத்தின் ஒரு போக்கு சாத்தானை இறைசினத்தின் பிரதிநிதியாக ஆக்குதலாகும் *(1 நாள் 21; 2 சாமு 24)*. மற்ற மதங்களில் இப்போக்கு மிகவும் பொதுவானதாக உள்ளது. எது எப்படியிருந்தாலும், இறைசினத்தினுடைய மறைபொருள் உண்மையைப் புராணக்கதையாக்கும் திசையிலோ அல்லது இறைசினத்தினை மற்றவர்களுக்குச் சாற்றிக் கூறியோ விளக்குவதற்கு விவிலியத்தின் சமய உணர்வானது ஒருபோதும் இடமளிப்பதில்லை.

வெளிப்பாடானது நமக்கு மனித உருவங்களில் வந்தாலும் அவை சாதாரண உருவங்களாக மட்டுமே இருந்துவிடுவதில்லை. உண்மையான உணர்ச்சிகளால் கிளறப்பட்டவராகத் தோன்றிய இறைவன், அவற்றிற்கு இடமளிக்கிறார்; அவற்றை, அடக்குவதில்லை *(ஏச 9:11)* அல்லது திசை திருப்புவதில்லை *(எரே 4:8)*, ஆனால் தம்மிடம் திரும்ப வருகிறவர்களிடம் அவர் திரும்புவது போல் *(2 நாள் 30:6; யாத் 34:6; ஏசா 63:17)*, தம்முடைய சினத்தையும் அவரால் கட்டுப்படுத்திக் கொள்ள முடியும், கட்டுப்படுத்துகிறார் *(ஒசே 14:5; எரே 18:20)*. இறைவனின் கோபம் மற்றும் இரக்கத்தின் உணர்வுகள் ஒன்றுக்கொன்று எதிராக முனைகின்றன *(ஏச 54:8 தொ சங் 30:6)*. ஆனால், இரண்டும் தமக்கே உரிய வழிகளில், மனிதன்பால் இறைவன் கொண்டுள்ள ஆர்வமிக்க பற்றை வெளிப்படுத்துகின்றன. அவருடைய சினமானது நரகத்துடன் ஒப்பிடப்படவுள்ள இறுதிநாள்வரை நிறுத்தி வைக்கப்பட்டுள்ளது. அவருடைய இரக்கமுள்ள அன்பு விண்ணகத்தில் என்றும் ஆட்சி புரிகின்றது. ஆனால் இப்போது பாவியை மனந்திரும்ப அழைக்கின்ற தண்டனைகளில் இங்கு செயல்புரிகிறது. இஸ்ராயேல் படிப்படியாகவும், பல்வேறு வழிகளிலும் வெளிக்கொணர்ந்த இறைசினத்தின் மறைபொருள் இதுவே.

2. சினமும் புனிதத் தன்மையும்:-

அ) மிகவும் புனிதமிக்க இறைவனை ஆராதித்தல்:- தொன்மையான வாசகங்களின் ஒரு தொகுதியானது இதன் அறிவுக்குப் பொருந்தாக பண்பை வெளிப்படுத்துகிறது. யாவேயின் புனிதத்துவத்தை நோக்கி கண்மூடித்தனமாக நெருங்குபவர்களை மரணம் அச்சுறுத்துகிறது *(யாத் 19:9-25; 20:18-21; 33:20; நீதி 13:22)*. பேழையைத் தாங்கச் சென்றபோது ஊசா மின்னலால் தாக்கப்பட்டார் *(2 சாமு 6:7)*. இதன் ஒளியிலேதான் சங்கீத ஆசிரியர்கள் துயரம், நோய், வயதுக்கு முற்பட்ட மரணம் மற்றும் பகைவர்களின் வெற்றி ஆகியவற்றை புரிந்து கொள்வர் *(சங் 88:16; 90:7-10; 102:9-12)*. இத்தகைய நோக்கு, தீமையை அது இருக்கும் தன்மையிலேயே பார்ப்பதால் ஊடுருவிச் செல்லும் தன்மையுடையது; ஆனால் விளக்கப்படாத தீமையை இறைசினத்திற்குச் சாற்றிக் கூறுவது அறிவுக்கு ஒத்ததாகத் தெரியவில்லை. ஆயினும், இத்தகைய சினத்திற்குக் கீழே எல்லா நிகழ்வுகளிலும் உள்ள இறைபிரசன்னம் பற்றிய ஆழமான விசுவாசமும், இறைவனுடைய புனிதத்தன்மையின் முன்னிலையில் மரியாதைக்குரிய பய உணர்வும் அமைந்துள்ளன *(ஏச 6:5)*.

ஆ) சினமும் பாவமும்:- பிற்கால வாசகங்களில், விசுவாசியினுடைய வாழ்வைப் பற்றியே வினா எழுப்பக் குறுக்கிடுகின்ற இறைவல்லமையின் மீதான அச்சமிக்க வழிபாட்டோடு விசுவாசி மனநிறைவு பெறுவதில்லை. மாறாக, இறை சினத்தின் பொருளைக் காண முயலுகிறான். இஸ்ராயேல் இதனை வஞ்சக வெறுப்பாகவோ தான் தோன்றித்தனமாகவோ எடுத்துக் கொள்ளவில்லை. இத்தகைய கருத்தானது ஒருவருடைய குற்றத்தையே மற்றொருவருக்கு மாற்றிவிடுவதாய் இருக்கும். மாறாக, இஸ்ரா

யேல் தன்னுடைய பாவத்தை ஏற்றுக்கொள் கிறது. முணுமுணுப்பவர்களையும் (எண் 11:1), கொடிய நாக்குடைய மிரியாமையும் (எண் 12:1-10) தண்டிக்கும் போது, இறை வனே அடிக்கடி குற்றம் புரிந்தவர்களைச் சுட்டிக்காட்டுகிறார். சில நேரங்களில் சமுதா யமே, இறை சினத்தைத் தன்மேல் வரவ ழைக்கிறது (யாத் 32). ஆக்கானைப் பொறுத் தவரை, குற்றவாளியைக் கண்டுபிடிக்க திரு வுளச்சீட்டுகள் போடப்பட்டன (யோசு 7). மனிதனுடைய பாவம் இருந்ததால்தான் அங்கு இறைசினமும் இருந்தது. நீதிபதிகள் நூலின் தொகுப்பாளர் இஸ்ராயேலுடைய வரலாற்றினைப் பொது மக்களின் பதிதம், இறைசினம் மற்றும் இஸ்ராயேலின் மன மாற்றம் என்னும் மூன்று நிலைகளில் வடிவ மைக்கும் போது, இத்தகைய உறுதிப்பாட்டி னால் வழிநடத்தப்படுகிறார்.

இவ்வாறு, பாவியால் இறைவனுக்கு எதி ராகக் கொண்டுவரப்பட்ட நடவடிக்கைக ளில் எண்பிக்கப்படுபவர் இறைவன் ஒரு வரே (சங் 51:6). இறைசினத்தின் அடிப்படை பொருளானது, தூய அன்பின் பொறா மையே என்பதை பாவி கண்டறிவான். இறைவாக்கினர்கள், உடன்படிக்கையின் மீதான மக்களின் விசுவாசமற்ற நிலையின் மூலம், கடந்த காலத் தண்டனைகளை விளக் குகின்றனர் (ஒசே 5:10; ஏச 9:11; எச 5:13). அரிபுழு, உளுப்புப் பூச்சி, சிங்கம், வேடன், கரடி முதலான ஒசேயின் அச்சமூட்டும் உரு வங்கள் (ஒசே 5:12,14; 7:12; 13:8) இறை அன்பு எவ்வளவு முக்கியத்துவமிக்கது என்ப தைக்காட்ட முயல்கின்றன. இஸ்ராயேலின் தூயவர். தன்னுடைய தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களில் பாவத்தை அனுமதிக்க முடியாது. அவர்களுக்கு அளிக்கப்பட்ட பணியை நாடு கள் தாண்டிச் செல்லுமாறு செய்கின்ற அவர் களுடைய அகந்தைக்கு ஏற்றவாறு, சினமா னது நாடுகளின் மீது விழுகின்றது (ஏச 10:5-15; எச 25:15 தொ). இறைவனுடைய சினமானது இவ்வுலகின்மீது சுற்றி வட்டமி டுகிறதெனில், அதற்கு அது ஒரு பாவ உலகாக இருப்பதே காரணம். இந்த அச்சுறுத் தும் சினமானது பேரச்சத்தினால் மனித னைத் தாக்கி அவன் தனது பாவத்தை அறிக் கையிட்டு, அருளை எதிர்நோக்கச் செய்கி றது (மீக் 7:9; சங் 90:7-8).

3. சினத்தின் காலம்:-

சமய உணர்வின் வளர்ச்சியானது இன் னும் நிறைவு பெறவில்லை. குருட்டு வழி பாட்டிலிருந்து, பாவத்தை வெளியிடும் நிலைக்குமாறி, பாவியைத் தாக்கி வீழ்த்து கின்ற புனிதத்தன்மையைப் பற்றிக் கொள் ளும் நிலையை அடைந்தபின்னர், பாவியை மீண்டும் வாழ்விற்கு கொணர்கின்ற அன் பினை ஏற்றுக் கொள்வதற்கு மனிதன் இன் னும் முன்னேற வேண்டும்.

அ) சினமும் அன்பும்:- தமது சினத்தை வெளிப்படுத்தும்போது, இறைவன் வலி மையற்ற மனிதனைப்போல் நடந்து கொள் வதில்லை. அவர் தமது உணர்ச்சிகளை அடக்கியாளுகிறார். சில நேரங்களில் சின மானது ''பற்களிடையே இருக்கும் இறைச் சியை அவர்கள் மென்று தின்று கொண்டிருக் கும்போதே'' (எண் 11:33) எபிரேயர்களை உடனடியாகத் தாக்குகிறது. மிரியாமின் நிகழ்ச்சியிலும் இவ்வாறு நிகழ்கிறது (எண் 12:9). ஆனால், இது பொறுமையற்ற நிலை யல்ல; ஏனெனில், இறைவன் ''சினங் கொள்ள தாமதிப்பவர்'' (யாத் 34:6; ஏச 48:9; சங் 103:8). அவருடைய இரக்கம் எப்போதும் மிக அருகாமையில் உள்ளது (எரே 3:12). வன்மையான உருவங்களின் இறைவாக்கி னர் எனப்படும் ஒசேயா நூலிலும், ''நமது கோபத்தின் ஆத்திரத்தை நிறைவேற்ற மாட் டோம். மறுபடியும் எப்பிராயிமை அழிக்க மாட்டோம்; ஏனெனில் நாம் இறைவன், வெறும் மனிதனல்ல'' (ஒசே 11:9) என்று நாம் வாசிக்கிறோம். இறைவன் சினத்தினு டைய இறைவனாக இல்லாமல், இரக்கத் தின் இறைவனாக உள்ளார் என்பதை மனி தன் படிப்படியாக உணர்கிறான். நாடு கடத் தப்பட்ட அடையாள தண்டனைக்குப் பிறகு, இறைவன் இஸ்ராயேலிடம் கூறுவ தாவது: ''குறுகிய காலந்தான் நாம் உன் னைக் கைவிட்டோம், ஆனால் மிகுந்த இரக் கத்தோடு உன்னைச் சேர்த்துக் கொள்வோம்.

பொங்கிய கோபத்தில் ஒரு நொடிப்பொழுது உன்னிடமிருந்து நம் முகத்தைத் திருப்பிக்கொண்டோம்; ஆயினும், முடிவில்லாத அன்போடு உன்மேல் இரக்கம் கொள்வோம்'' (ஏச 54:7-8). இரக்கத்தின் வெற்றியானது, மக்களுடைய பாவங்களுக்காக மரணத்திற்கு வீழ்த்தப்பட்ட விசுவாசமிக்க ஊழியனின் துன்பத்தைக் கருத்தில் கொள்கிறது; இது அநீதியையே நீதியாக மாற்றுகிறது (ஏச 53:4.8).

ஆ) சினத்தினின்று விடுவிக்கப்படுதல்:- இறைவன் தமது சினத்தினால் கொணர்ந்த தண்டனைகள் படிப்பிக்கும் நோக்கத்தை மனிதனுனக்கு வெளிப்படுத்துகிறார் (ஆமோ 4:6-11). ஏனெனில், இறைவன் கட்டுக்கடங்காத தூண்டுதலுக்கு உட்படாமல். தனக்குரிய காலத்திலேயே தண்டிக்கிறார். இறைசினமானது, இரக்கத்தின் பெருந்திட்டத்தின் ஒரு பகுதியாக தன்னையே வெளிப்படுத்துகிறது. எனவே, இது மனிதனை முடக்குகின்ற அழிவுக்குரிய பேயுருவாக இல்லாமல், இறைவனுடைய அன்பினுக்கு மனம் மாறுவதற்கான, அவனுக்கு விடப்பட்ட அழைப்பாக உள்ளது (எரே 4:4).

இறைவனுடைய நோக்கமானது இதயம் நிறைந்த அன்பு என்பதால், அவருடைய சினத்திலிருந்து விடுவிக்கப்படுமாறு இஸ்ராயேல் வேண்டலாம். அதனுடைய பலிகள், மந்திரத்தின் மூலம் இறை ஆற்றலை மயக்குகின்ற விருப்பத்தினின்று எழாமல், இறைநீதியின்மீது கொண்ட விசுவாசத்தினின்று எழுகின்றன. இது இறைவன் தமது சினத்தைத் திரும்ப பெற்றுக்கொள்வார் என்பதையே வேண்டுதல் செபங்களும் வெளிப்படுத்துகின்றன. மோசே விசுவாசமற்ற மக்களுக்காகவும் (யாத் 32:11.31-32; எண் 11:1-2; 14:1-12...), அல்லது தனிப்பட்ட பாவிக்காகவும் (எண் 12:13; உ.ப. 9:20) வேண்டுகிறார். இவ்வாறே, ஆமோஸ் இஸ்ராயேலுக்காகவும் (ஆமோ 7:25) எரேமியா யூதாவிற்காகவும் (எரே 14:7 தொ; 18:20), யோபு தனது நண்பர்களுக்காகவும் (யோபு 42:7-8) வேண்டுகிறனர். இதன் விளைவாக, இறைசினத்தின் விளைவுகள் குறைகின்றன (எண் 14; உப 9); அல்லது கட்டுப்படுத்தப்படுகின்றன (எண் 11; 2 சாமு 24). வேண்டுதல்களைச் சமர்ப்பிக்கும் விதம், இஸ்ராயேலுக்கும் இறைவனுக்கும் இடையிலுள்ள உறவு முறியவில்லை எனக்காட்டுகின்றன (யாத் 32:12; எண் 14:15-16; சங் 74:2). இந்த உரையாடலில், வேண்டுபவர்கள் தங்களது வலிமையற்ற நிலைக்காக மன்றாடி (ஆமோ 7:2.5; சங் 79:8), இறைவன் எல்லாவற்றிற்கும் மேலாக இரக்கமும் பிரமாணிக்கமும் உள்ளவர் என்று அவருக்கே நினைவூட்டுகின்றனர் (எண் 14:18).

இ) சினமும் தண்டனையும்:- கடினமான பாவியை வீழ்த்துகின்ற சினத்தை அழுத்திக் கூறும் நிலையினின்று, பாவியினுடைய மனமாற்றத்திற்காகவும் திருந்துதலுக்காகவும் ஏற்ற தண்டனைகளை வலியுறுத்தும் நிலைக்கு முன்னேறும்போது, இறைவனது சினத்தைப்பற்றிய முந்தைய கருத்தினை இஸ்ராயேல் முழுமையாக விலக்கிவிடுவதில்லை. மாறாக, துல்லியமாக அதற்குரிய இடத்தை அளிக்கிறது. அதாவது, இறுதிநாளில் அது நிறைவேறும். ஆமோஸ் குறிப்பிட்ட இருளின் நாளானது (ஆமோ 5:18 தொ.), பாவங்கள் மன்னிக்கப்பட்ட பக்தியுள்ளோரைத் தவிர (சங் 30:6; 65:3-4; 103:3) யாருமே தப்பிக்க முடியாத, ''சினத்தின் நாளாக'' (செப் 1:5-2:3) மாறுகிறது. இந்நாள் புறவினத்தாருக்கும் (சங் 9:17-18; 56:8; 79:6 தொ), இஸ்ராயேல் சமுதாயத்தில் உள்ள பாவிகளுக்கும் (சங் 7:7; 11:5-6; 28:4; 94:2) சினத்தின் நாளாக உள்ளது.

இவ்வாறாக. இருவிதமான சினம் வேறுபடுத்தப்பட்டது. வரலாற்றின் காலப்போக்கில், இறைதண்டனைகள் நிரந்தரமாக தாக்கி வீழ்த்துகின்ற இறைசினமாக இல்லாமல், இறுதி சினத்தை முன்குறிக்கின்ற உருவங்களாக உள்ளன. அவற்றின் மூலம், காலத்தின் இறுதியில் விழவேண்டிய சினமானது, எல்லா புனிதமும் மிக்க இறைவனுடைய அன்பின் ஒரு கூறை வெளிப்படுத்தி நலந்த

ரும் பணியைச் செய்கின்றது. தம்முடைய பாவம் நிறைந்த மக்களோடு இறைவன் கொள்ளும் இந்த சந்திப்புகள், இந்த இறுதி சினத்தின் பொருளிலேயே புரிந்து கொள் ளப்பட வேண்டும். இப்போது பொறுமை யோடு வருகிறார். இறுதிச் சினத்தைச் செயல்படுத்துவதைத் தள்ளிவைக்கிறார் *(2 மக் 6:12-17)*. அருளின் இறுதிக்காலத்திற்கு முன் சினத்தின் காலம் செல்லவேண்டும் என்பதை வெளிப்பாட்டு இலக்கிய ஆசிரியர் கள் தெளிவாகக் கண்டனர்: ''எம்மக்களே, உங்கள் அறைகளில் நுழைந்து கொள்ளுங் கள், உள்ளிருந்து கதவைச் சாத்திக் கொள் ளுங்கள்; ஆத்திரம் தணியும் வரையில் கொஞ்ச நேரம் நீங்கள் மறைந்திருங்கள்'' *(ஏச 26:20; தானி 8:19; 11:36)*.

ஆ. புதிய ஏற்பாடு

முன்னோடியான திருமுழுக்கு யோவா னின் போதனையிலிருந்து *(மத் 3:7)* புதிய ஏற்பாட்டின் இறுதி பக்கங்கள்வரை *(திரு வெளி 14:10)* அருளின் நற்செய்தியானது தனது செய்தியின் அடிப்படை உறுப்பாக இறைவனின் சினத்தைக் கொண்டுள்ளது. அதனை விட்டுவிடுவதென்பது, கடவுளின் சினமென்பது ''நல்ல இறைவனுக்கு'' முற் றிலும் புறம்பானது என்று கூறிய மார்சியோ னின் பதிதக் கருத்தை மீண்டும் புதுப்பிப்ப தாக இருக்கும். ஆனால், கிறிஸ்துவின் வரு கையானது, பழைய ஏற்பாட்டின் அடிப்ப டைக் கருத்துக்களை நிறைவேற்றும் போது அவற்றை மாற்றியும் அமைக்கின்றது.

*1. உருவங்களும் உண்மையும்:-*

*அ) இறை ''உணர்ச்சியும்'' சினத்தின் விளைவுகளும்:-* பழைய ஏற்பாட்டு உருவங் கள் தொடர்ந்தாலும் பொருளில் மாற்றமுள் ளது. நெருப்பு *(மத் 5:22; 1 கொரி 3:13.15)*, அடியோடழிக்கும் ஆவி *(1 தெச 1:8; 2:8)*, மது, கிண்ணம், மதுப்பிழியும் ஆலை, சினத் தின் எக்காளங்கள் *(திருவெளி 14:10.8; 16:1 தொ)* ஆகிய அனைத்துமே உபயோகிக்கப் பட்டாலும், இறைவனுடைய எதிர்செய லின் உளநிலையை விளக்குவதற்குப் பதி லாக, அதன் விளைவுகளை விவரிக்கின்றன. நாம் இறுதிக்காலங்களில் நுழைந்துள் ளோம். திருமுழுக்கு யோவான் தண்டனை யின் நெருப்பைப் போதிக்கிறார் *(மத் 3:12)*. திருமண விருந்து பற்றிய உவமையில் இயேசு அவருடைய சொற்களை எதிரொ லிக்கிறார் *(மத் 22:7)*. இயேசுவினுடைய கருத்தின்படியும், பகைவனும் நம்பிக்கையற் றவனும் அழிக்கப்பட்டு *(லூக் 19:27; 12:46)* முடிவில்லா நெருப்பில் எறியப்படவேண் டும் *(மத் 13:42; 25:41)*.

*ஆ) இயேசுவின் சினம்:-* புதிய ஏற்பாடு, இறைஏவுதல் பெற்ற வார்த்தைகளின் பேரச் சத்திற்கு அப்பாலும், புனிதம் நிறைந்த இறைவனுக்கும் அவருடைய பாவமிக்க மக் களுக்கும் இடையில் மூழ்கடிக்கப்பட்ட இறைவாக்கினர்களின் துன்பியலுக்கு அப்பா லும் செல்கிறது. இவை இரண்டிற்கும் மேலான பேரச்சமும் துன்பியலும் நிறைந்த தாக கடவுளாகிய மனிதனின் எதிர்செயல் உள்ளது. இயேசுவில் இறைவனின் சினம் வெளிப்படுத்தப்படுகிறது. இயேசுவின் நடத்தையானது, எப்போதுமே கிளர்ந்தெ ழாத 'ஸ்டோயிக்' கினுடையது போன்றதாக இல்லை *(யோவா 11:33)*. ஏனெனில், அவர் ஆற்றலுடன் சாத்தானை ஆணையிடுகிறார் *(மத் 4:10; 16:23)* பேய்களை அச்சுறுத்துகிறார் *(மாற் 1:25)*. பேய்த்தனமான சூழ்ச்சிகளையு டைய மனிதர்களுக்கு எதிராக *(யோவா 8:44)*, குறிப்பாக பரிசேயர்களுக்கு எதிராகக் *(மத் 12:34)* கடும் சினம் கொள்கிறார். அவரு டைய கோபமானது இறைவாக்கினர்களைக் கொன்றவர்களுக்கு எதிராகவும் *(23:33)*, போலி வேடதாரிகளுக்கு எதிராகவும் எழுகி றது *(15:7)*. யாவேயை போன்று இயேசுவும், இறைவனை எதிர்க்க எழுகின்றவனை நோக்கி தமது சினத்தைத் திருப்புகின்றார்.

கீழ்படியாதவர்களையும் *(மாற் 1:43; மத் 9:30)*, குறைவான விசுவாசத்திற்காக தமது சீடர்களையும் *(மத் 17:17)* இயேசு கடுமையா கக் கடிந்து கொள்கிறார். எல்லாவற்றிற்கும் மேலாக, இரக்கத்தின் தந்தையால் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஊதாரி மைந்தனின் மூத்த சகோதரனைப்போன்று *(லூக் 15:28)*, இரக்

கம் காட்டாதவர்களுக்கு எதிராக (மாற் 3:5) அவருடைய சினம் கிளர்ந்தெழுகிறது. இறுதியாக, விருந்தளித்த தலைவனைப் போன்றும் (லூக் 14:21). அல்லது இரக்கமற்ற ஊழியனின் தலைவனைப் போன்றும் (லூக் 18:34), நீதிபதியின் சினத்தை இயேசு காட்டுகின்றார். எனவே, அவர் மனம் வருந்தாத நகரங்களைக் கண்டிக்கிறார் (மத் 11:20-21), மற்றும் ஆலயத்திலிருந்து விற்பணையாளர்களை விரட்டுகிறார் (மத் 21:12-13), மற்றும் கனிகொடாத அத்திமரத்தை சபிக்கிறார் (மாற் 11:21). இறைவனுடைய சினத்தைப் போன்று, செம்மறியின் சினமும் வெறுமையான வார்த்தையல்ல (திருவெளி 6:16; எபி 10:31).

2. சினத்தின் காலம்:-

அ) நீதியும் சினமும்:- தம்முடைய மண்ணுலக வருகையின்மூலம் நமதாண்டவர் மீட்பின் வரலாற்றை இரண்டு கால கட்டங்களாகப் பிரித்தார். இந்தப் புதிய செய்திக்குப் பவுல் இறைவல்லுநர் ஆவார். விசுவாசிப்போர் அனைவரின் நலனுக்காக இறைவனின் நீதியையும் அவிசுவாசிக்கு இறைவனின் சினத்தையும் கிறிஸ்து வெளிப்படுத்தினார். பழைய ஏற்பாட்டில் வலியுறுத்தப்பட்ட புலன்சார்ந்த தண்டனைகளைப் போன்று, இச்சினமும் இறைவனின் இறுதி சினத்தை முன்நோக்குகிறது. திருமுழுக்கு யோவானின் நோக்கில் மெசியாவின் இவ்வுலக வருகை இறுதிக்கால வருகையோடு இணைகின்றது. அதனால் இயேசுவின் பணி மக்கள்மேல் வரும் இறுதித் தீர்ப்பாகிறது. நீதியும், இறைசினமும் இறைசெயலின் இரு பரிமாணங்களாக, முழுமையாக வெளிப்படுத்தப்படும் இடைக்காலத்தை இயேசு துவக்கினார் என்று பவுல் கற்பிக்கிறார் சமுதாய சக்தியை இறைவனுடைய கருவியாக, ''தீமை செய்பவனைப் பழிவாங்கக் கடவுளால் குறிக்கப்பட்ட ஏவலார்களாக'' (உரோ 13:4) பயன்படுத்துவதுபோன்ற சில பழைய ஏற்பாட்டுக் கருத்துக்களைப் பவுல் கொண்டிருக்கிறார். ஆனால் பவுலின் முக்கிய பணியானது இறைவனின் முன்னால் மனிதனுடைய புதிய நிலையை விவரிப்பதாகும்.

ஆ) சினத்திலிருந்து இரக்கத்திற்கு:- தொடக்கத்திலிருந்து மனிதன் பாவியாவான் (உரோ 1:18-32), மரணத்திற்கு உரியவன் (3:20). அவர் உண்மையில், அழிவின் விளிம்பில் உள்ள ''சினத்தின் கலன்'' (9:22; எபே 2:3), இறைசினத்தின் குறியாக உள்ளான். ''கடவுளின் சினமே விசுவாசம் கொள்ளாதவன்மேல் வந்து தங்கும்'' (யோவா 3:36) என்று எழுதுவதன் மூலம் யோவான் இதனை மாற்றியமைக்கிறார். மனிதன் பிறவியிலேயே பாவியாக இருப்பதால், இறை அமைப்புகளில் மிகமிக புனிதமானதையும் அவன் தீமைக்கு மாற்ற முடியம். எனவே, புனித சட்டமானது ''சினத்தை கொணர்கிறது'' (உரோ 4:15). ஆனால் இறைவனுடைய திட்டமானது இரக்கமிக்கதாய் இருப்பதனால், சினத்தின் கலன்கள், மனமாற்றத்தை தேர்ந்தெடுத்து, மகிமைக்கென அவர் முன்னரே தயாரித்து வைத்த ''இரக்கத்தின் கலன்களாக'' மாறலாம் (9:23). புறவினத்தாரோ யூதரோ யாரும் இதைச் செய்யலாம் ''ஏனெனில், அனைவருக்கும் இரக்கம் காட்டுவதற்காக இறைவன், அனைவரும் கீழ்ப்படியாமையின் கொடுமையால் கட்டுண்டு கிடக்கச் செய்தார்'' (11:32). பழைய ஏற்பாட்டில் உள்ளது போன்றே, இறைவன் தமது சினத்திற்குக் கட்டுக்கடங்காத சுதந்திரம் அளிப்பதில்லை. பாவியை பொறுத்துக் கொள்வதால் தமது ஆற்றலையும், பாவியை மனமாற்றத்திற்கு அழைப்பதால் தமது நன்மைதனத்தையும் வெளிப்படுத்துகிறார்.

3. சினத்தினின்று விடுவிக்கப்படுதல்:-

அ) இயேசுவும் இறைவனின் சினமும்:- கிறிஸ்துவின் வருகையினால் ஏற்பட்ட அடிப்படை மாற்றமானது, ''வரவிருக்கும் சினத்தினின்று'' (மத் 3:7) நம்மை விடுவிப்பது இதுமுதல் சட்டமாக இல்லாமல், இயேசுவே ஆவார் (1 தெச 1:10) என்பதாகும். இறைவன் இனி ஒருபோதும், நம்மை சினத்திற்கு ஆளாக்காமல் மீட்பிற்கு உட்படுத்தினார்'' (1 தெச 5:9). ''இறைவனுக்கு ஏற்பு

டையவர்களாகி, இறுதித்தண்டனைக்குத் தப்பி மீட்பு பெறுவோம்'' என அவர் நமக்கு உறுதியளிக்கிறார் (உரோ 5:9). மேலும், நம்முடைய விசுவாசமே நம்மை ''மீட்பு பெறுபவர்களுடன்'' சேர்க்கிறது (1 கொரி 1:18). அவர் மூலமாக நாம் இறைவனுடைய நீதியாக உருவாவதற்காக (2 கொரி 1:18) இயேசு, பாவமாக உருவாகி, ''உலகின் பாவத்தை போக்கிவிட்டார்'' (யோவா 1:29). நாம் ஆசீர்வதிக்கப்படுவதற்காக, சிலுவையில் இறப்பதன்மூலம், அவர் சபிக்கப்பட்டவரானார் (கலா 3:13). அன்பு மற்றும் புனிதத்தின் வலிமை இயேசுவில் ஒன்று சேர்ந்ததன் மூலம், பாவம் ஆகியவர்மேல் சினம் விழும்போது, அன்பே வெற்றிக் கொள்கிறது. சினத்திற்கு பின்னால் அன்பினைத்தேடி அலைகின்ற மனிதனின் நீண்ட பயணமானது, இயேசுவின் மரணத்தில் நிறைவுபெற்று ஒன்று சேர்கிறது. அவரில் விசுவாசங்கொள்வோர் அனைவரும், எப்போதும் சினத்தினின்று விடுவிக்கப்படுவதற்காக, இறுதி சினத்தை எதிர்நோக்குகின்ற தருணமாக இது உள்ளது.

*ஆ) சினத்தின் நாளினை எதிர்பார்த்திருத்தல்:-* இறைவனின் சினத்தினின்று முழுமையாக விடுவிக்கப்பட்ட பின்னர், திருச்சபையானது சாத்தானுடன் போர் புரியும் இடமாகத் தொடர்ந்து உள்ளது. ஏனெனில், ''அலகை கடுங்கோபத்துடன் நம்மிடையே வந்துள்ளது'' (திருவெளி 12:12). அவன் பெண்ணுடனும், அவளுடைய சந்ததியுடனும் போரிட்டு, இறைசினத்தினுடைய கொடிய மதுவினால் நாடுகளை மயக்க வந்துள்ளான் (14:8 தொ). ஆனால், திருச்சபையோ இறைசினத்தின் மீதான இந்த நையாண்டியின் மீது எப்பயமும் கொள்ளவில்லை; புதிய பாபிலோன் வீழ்ச்சியுறும் என்பதில் அது உறுதியாக உள்ளது. ஏனெனில், ''எல்லாம் வல்ல இறைவனின் கடுஞ்சினம் என்னும் ஆலையின் மீது நடக்கின்ற'' (19:15) அரசர்க்கெல்லாம் அரசரானவர் வருகிறார். இவ்வாறு, இறுதி நாளில், இறைவனுடைய வெற்றியைப் பற்றி அது உறுதி கொண்டுள்ளது.

## இறைவனின் செம்மறி *(LAMB OF GOD)*

புதிய ஏற்பாட்டின் பல நூல்களில் (யோவான், அப்போஸ்தலர் பணி, 1 பேதுரு. மற்றும் குறிப்பாக திருவெளிப்பாடு), கிறிஸ்து செம்மறியாகக் காட்டப்படுகிறார்; இக்கருத்தானது பழைய ஏற்பாட்டிலிருந்து, இரு வேறுபட்டநோக்குகளிலிருந்து வளர்ச்சியுறுகிறது.

1. *இறைவனின் ஊழியன்:-* தனது விரோதிகளால் துன்புறத்தப்பட்ட நிலையில் இறைவாக்கினர் எரேமியா தன்னை ''வெட்டுவதற்குக் கூட்டிக் கொண்டு போகப்படும் செம்மறிக்கு'' ஒப்பிடுகின்றார் (எரே 11:19). இதன் விளைவாக, ''அடிப்பதற்கு இழுத்துச் செல்லப்பட்ட ஆட்டுக்குட்டி போலும், உரோமம் கத்தரிப்போன் முன்னிலையில் கத்தாத செம்மறியாடு போலும்'' (ஏச 53:7) தோன்றுகிற, மரிக்கும்போதும் மக்களின் பாவங்களுக்காக மன்றாடும் இறைவனின் ஊழியனுக்கு இந்த உருவகம் சாற்றிக் கூறப்படுகின்றது. ஊழியனுடைய தாழ்ச்சியினையும், வருவதை ஏற்றுக் கொள்ளும் பொறுமையினையும் வலியுறுத்தும் இப்பகுதியானது, எத்தியோப்பிய அரசியின் அண்ணகனுக்குப் பிலிப்பு விளக்குவதுபோல, கிறிஸ்துவின் இறுதி நிலையினைப்பற்றி முழுமையாக அறிவிக்கின்றது (அ.ப. 8:31.35) தலைமைச்சங்கத்தின்முன் இயேசு பேசாதிருந்ததையும் (மத் 26:63), பிலாத்துவிற்குப் பதில் கூறாமல் நின்றதையும் (யோவா 19:9), நற்செய்தியாளர்கள் குறிப்பிடும்போது இந்நிகழ்ச்சியினையே பின்நோக்குகின்றனர். நான்காவது நற்செய்தியின்படி, இயேசுவை, ''உலகின் பாவங்களைப் போக்குகிற இறைவனின் செம்மறி'' (யோவா 1:29; ஏச 53:7.12; எபி 9:28) என்று திருமுழுக்கு யோவான் சுட்டிக்காட்டும்போது, இதனையே குறிப்பிடுவதாகக் கருதலாம்.

2. *பாஸ்காச் செம்மறி:-* அடிமைகளாயிருந்த தமது மக்களை எகிப்தியரிடமிருந்து விடுவிக்க கடவுள் தீர்மானித்தவுடன், 'மறுவற்றதும், ஆண் பாலானதும், ஒரு வயதுடையதுமான' (யாத் 12:5) செம்மறியை நெருப்

பில் சுட்டு, இரவில் அதனை உண்டு, அதனுடைய இரத்தத்தினால் தங்களது வீட்டு வாசல் முகப்பில் முத்திரையிடுமாறு, ஒவ்வொரு எபிரேய குடும்பத்திற்கும் இறைவன் கட்டளையிடுகின்றார். இந்த முத்திரையின் மூலம், எல்லா எகிப்திய தலைப்பேறுகளையும் அழிக்க வரும் இறைவனின் தூதரிடமிருந்து, அவர்கள் மட்டும் காப்பாற்றப்படுகிறார்கள். பழைய கருத்தை மேலும் வளப்படுத்தி, யூத மரபானது பிற்காலத்தில் செம்மறியின் இரத்தத்திற்கு மீட்பின் பொருளை அளிக்கின்றது: ''விருத்தசேதன உடன்படிக்கையின் இரத்தத்தினாலும், பாஸ்கா இரத்தத்தினாலும். நாம் உங்களை எகிப்தினின்று விடுவித்தோம்''. பாஸ்கா செம்மறியின் இரத்தத்தினாலேயே எகிப்திய அடிமைத்தளையினின்று எபிரேயர் விடுவிக்கப்பட்டு, புனிதப்படுத்தப்பட்ட மக்களாகவும் குருக்களின் அரசாகவும் ஆனார்கள் (*யாத் 19:6*), உடன்படிக்கையால் இறைவனோடு பிணைக்கப்பட்ட மோசேயின் சட்டத்தின்படி ஆளப்பட்டனர்.

கிறிஸ்துவ மரபானது கிறிஸ்துவில் உண்மையான பாஸ்காச் செம்மறியைக் காண்கிறது (பாஸ்கா திருப்பலியின் தொடக்கவுரை). பேதுருவின் முதல் திருமுகத்தின் அடிப்படையாகவும் யோவானின் நூல்கள் மற்றும் எபிரேயருக்கான திருமுகத்தில் எதிரொலிப்பதாகவும் உள்ள ஞானஸ்நான உபதேசத்தில், அவரது மீட்புப்பணி முழுமையாக விவரிக்கப்படுகின்றது. இயேசுவே, தமது இரத்தத்தினை விலையாகக்கொடுத்து மனிதரை மீட்கின்ற (*1 பேதுரு 1:18 தொ; திருவெளி 5:9 தொ; எபி 9:12-15*), மறுவற்ற (*யாத் 12:5*), அதாவது பாவமற்ற (*1 பேதுரு 1:19; யோவா 1:29; திருவெளி 5:6*) செம்மறியாவார். சிலைவழிபாட்டிலிருந்து தோன்றிய (*1 பேதுரு 1:14.18; 4:2 தொ*) ஒழுக்கக் கேட்டிற்கு அளிக்கப்பட்ட தீய உலகிலிருந்து, மண்ணுலகினின்று அவர்களை, அவர் இவ்வாறு மீட்டார் (*திருவெளி 14:3*). அதனால் அவர்கள் இப்போதுமுதல் பாவத்தினை ஒதுக்கி (*1 பேதுரு 1:15 தொ; யோவா 1:29; 1 யோவ 3:5-9*), அரச குருத்துவத்திருக் கூட்டமும், உண்மையான பரிசுத்த குலமும் ஆகின்றனர் (*1 பேதுரு 2:9; திருவெளி 5:9 தொ; யாத் 19:6*), பழி கூற முடியாத வாழ்க்கையின் புனித வழிபாட்டை இறைவனுக்கு அளிக்கக்கூடியவர்களுமாகிறார்கள் (*1 பேதுரு 2:5; எபி 9:14*). இறையரசின் ஒளிக்காக அவர்கள் புறஇனத்தாரின் இருளை விட்டு விட்டனர் (*1 பேதுரு 2:9*); இதுவே அவர்களது புனித யாத்திரையாகும். செம்மறியின் இரத்தத்தினால் (*திருவெளி 12:11*) பாரவோனை மாதிரியாகக் கொண்ட சாத்தானை வெற்றி கொண்டதனால் அவர்களுடைய மீட்பினைக் கொண்டாடும் ''மோசேயின் மற்றும் செம்மறியின் நன்றிப்பாடலை'' (*திருவெளி 15:3; 7:9 தொ; 14-17; யாத் 15*) அவர்கள் இசைத்துப் பாடலாம்.

கிறிஸ்துவில் உண்மையான பாஸ்கா செம்மறியைக் காணும் இப்பாரம்பரியம் கிறிஸ்தவத்தின் துவக்கத்திற்கே செல்கின்றது. நமது பாஸ்காவாகிய கிறிஸ்து பலியிடப்பட்டதால், ''நேர்மை, உண்மை'' என்னும் புளியாத அப்பத்தையே உண்ணுமாறு பவுல், கொரிந்து நகர விசுவாசிகளுக்கு அறவுரை கூறுகிறார் (*1 கொரி 5:7*). செம்மறியாகிய கிறிஸ்துவைப்பற்றிப் புதிய படிப்பினை எதையும் இங்கு அவர் பரிந்துரைக்கவில்லை. கி.பி.55-57-இல் இத்திருமுகத்தை எழுதுவதற்கு முன்னர் நிலவிய, கிறிஸ்தவ பாஸ்காவின் சமயச்சடங்குப் பாரம்பரியத்தையே அவர் குறிப்பிடுகின்றார். யோவானின் காலக்கணிப்பினை ஏற்கும் பட்சத்தில், கிறிஸ்துவின் மரணம் பற்றிய நிகழ்ச்சியே இம்மரபிற்கான அடிப்படையினை அளித்திருக்கக் கூடும். புளியாத அப்பவிழாவிற்கு முந்திய இரவில் (*யோவா 18:29; 19:14.31*), இவ்வாறு சட்ட முறைமைகளின்படி பாஸ்கா நாளில், கோவிலில் செம்மறியாடுகள் பலியிடப்படும் அதே பிற்பகல் வேளையில் (*யோவா 19:33*). இயேசு கொலை செய்யப்பட்டார். அவரது மரணத்திற்குப் பின்னர், மற்ற குற்றவாளிகளுக்கு செய்தது போல, அவருடைய கால்களை அவர்கள் முறிக்கவில்லை (*யோவா 19:33*). பாஸ்கா செம்மறி பற்றிய சடங்குமுறைக் குறிப்பு

நிறைவேறுவதை நற்செய்தியாளர் இந்நிகழ்ச்சியில் காண்கிறார் (யோவா 19:36; யாத் 12:46).

3. விண்ணகச் செம்மறி:- பாஸ்கா செம்மறியாகிய கிறிஸ்து பற்றிய கருத்தினை முழுமையாகப் போற்றிக் காக்கும் அதே வேளையில், பலியிடப்பட்ட செம்மறியின் வலுக்குறைவானநிலைக்கும் விண்ணக மாட்சிமைக்கு அவர் உயர்த்தப்படுதல் அளிக்கின்ற வல்லமைக்கும் இடையே குறிப்பிடத்தக்க வேறுபாட்டினை திருவெளிப்பாடு ஏற்படுத்துகிறது (திருவெளி 5:9 தொ). மீட்பின் பலியினால் செம்மறியாக உள்ள கிறிஸ்து, அதே நேரத்தில், தீமையின் வல்லமையின் கீழ் அடிமைகளாக இருந்த இறைமக்களை விடுவித்த வெற்றியின் மூலம் ஒரு சிங்கமாகவும் உள்ளார் (5:5 தொ 12:11). இறைவனின் அரியணையினை அனுபவித்துக் கொண்டு (22:1.3) விண்ணக உயிரினங்களின் ஆராதனையினை பெறுகின்ற அவர் (5:8.13; 7:10), இறைவல்லமையினை அணிந்தவராக உள்ளார். அவரே கொடியவர்களுக்கு எதிராக இறைவனுடைய தீர்ப்புக்களைச் செயல்படுத்துகிறார் (6:1). அவருடைய சினம் அவர்களைப் பயத்தில் ஆழ்த்துகின்றது (6:16). ஒன்றுபட்ட தீயவர்களின் வல்லமைக்கு எதிராக அவர் நடத்திச் செல்கின்ற இறுதிக்கால போரின் வெற்றியானது, 'அரசருக்கெல்லாம் ஆண்டவர்' என்று அவரைப் புனிதப்படுத்தும் (17:14; 19:16...). திருச்சபையை அடையாளமாகக் குறிக்கும் விண்ணக எருசலேமுடன் மணவிழா நிறைவேற்றப்படும் போது, அவருடைய மூலகருணை நிலையினை அவர் திரும்பப் பெறுவார் (19:7.9; 21:9) பின்னர், விண்ணக ஆசீரின் உயிருள்ள நீரின் ஊற்றுகளுக்கு நடத்திச் செல்வதற்கென, செம்மறியானவர் ஒரு மேய்ப்பனாகத் தோன்றுவார் (7:17; 14:4).

**இறைவனின் செயல்கள்** (WORKS OF GOD)

''செயல்கள்'' என்னும் சொல் எண்ணற்ற அர்த்தங்களைக் கொண்டிருக்கலாம். அசைவு, உழைப்பு, உண்டாக்கப்பட்ட பல பொருட்கள் மற்றும் குறிப்பாக ஊனுடலின் பணி போன்ற பலவற்றை இது குறிப்பிடலாம். இறைவனுக்குக் குறிப்பிடும்போது, அவரது வெளிச்செயல்களின் அனைத்தையும் இது குறிப்பிடுகின்றது. ஒவ்வொரு நிகழ்ச்சியிலும், அதனை நிறைவேற்றிய பணியாளரைக் குறிப்பிடுவதால் மட்டுமே, அச்செயலினைப் புரிந்து கொள்ளமுடியும். ஒவ்வொரு மனித செயலின் பின்னும், இறைவனின் இணையற்ற செயலான அவருடைய சொந்த மகனைக் கண்டுபிடிக்கும் முயற்சியுள்ளது. அம்மகனோடு செயல் தொடர்பு கொள்கிறது; தனக்கே உரிய வழியில் அவரை எடுத்தியம்புகிறது.

I. பழைய ஏற்பாடு

1. இறைவனின் செயல்:- முதலில், இறைவனின் செயல்கள் வரலாற்றிற்குள் உட்படாதவையாக, ஆனால், தனது உண்மையில் வரலாற்றைக் கொண்டதாக உள்ளன என்பது முக்கியமாகக் கருத்தில் கொள்ளப்பட வேண்டியதொன்றாகும். இறைச்செயல், படைப்பு, மீட்பு ஆகிய இரு கூறுகளைக் கொண்டுள்ளது. பழைய ஏற்பாட்டில் வெளிப்பாடு ஒரு குறிப்பிட்ட திசையிலேயே செல்கிறது: இஸ்ராயேல் கடவுளின் படைப்புச் செயலில் ஆர்வம் கொள்வதற்கு முன்பாக, அவர் தனது வரலாற்றில் செயல்படுவதை உணர்ந்து கொள்கிறது.

அ) வரலாற்றில் இறைவனின் செயல்:- இறைச்செயலானது 'ஒப்பிடமுடியாத செயல்கள் மற்றும் வல்லமைகளிலும்'' (உப. 3:24), இஸ்ராயேலின் மீட்பு, மக்கள் பாலைவனத்தில் கண்ட யாவேயின் வியத்தகு நிகழ்ச்சிகள் (சங் 95:9), வாக்களிக்கப்பட்ட நாட்டில் குடியேறுதல் (உப. 11:2-7; யோசு 24:31) ஆகியவற்றிலும் தம்மையே வெளிக்காட்டத் தொடங்குகின்றது. இந்தக் கடந்தகாலம் பற்றிய சிந்தனைகள் ஆர்வத்தைத் தூண்டுகின்றன: ''இறைவனின் செயல்களை வந்து பாருங்கள்'' (சங் 66:3-6). கடந்த காலத்தை நினைவுகூர்தல் மட்டும் போதாது (சங் 77:12); இடைவிடாமல் அனைத்தையும் அமைப்பவரின் (ஏச 22:11)

இன்றைய செயல்களும் கவனிக்கப்பட வேண்டும் *(ஏச 5:12; சங் 28:5)*. பாபிலோனுக்குக் கடத்தப்படுவேதோ *(அப 1:5)* அல்லது அடிமைத்தளையினின்று விடுதலையோ *(ஏச 45:11)*, எதுவாயினும் அவரது நாளில் அவரது செயல் வருவதை முன்குறித்துக் காட்டுவது அவசியம் *(ஏச 28;21)*. நாடுகளையோ *(ஏரே 51:10)* அல்லது மீட்பாளர் சைரசையோ *(ஏசா 45:1-6)* இடையாளராகக் கொண்டு செயலாற்றி இறைவன் தம்மால் தேர்ந்து கொள்ளப்பட்ட மக்களாகிய இஸ்ராயேலருக்காகத் *(ஏச 43:1; 44:2)* தனது மீட்புப் பணியினை நிறைவேற்றுவார் *(ஏச 41:4)*.

இறைச்செயலானது அனைத்திற்கும் மேலாக, குழுவாகக் கருதப்படும் இஸ்ராயேலின்மீது தமது கவனத்தைத் திருப்புகின்றது. இதனால் அது தனிப்பட்டவர்கள்மீது அக்கறை கொள்ளவில்லை என்று கூறமுடியாது. இறைவனால் தமது மக்களுக்கெனத் தேர்ந்து கொள்ளப்பட்ட மோசே மற்றும் ஆரோன் *(1 சாமு 12:6)*, தாவீது மற்றும் இறைவாக்கினர்கள் ஆகியோர்மேல் மட்டுமின்றி, தொபியா நூல் விரிவாகக் கூறுவது போல ஒவ்வொரு தனிப்பட்ட மனிதர் மேலும் அவர்களின் அன்றாட வாழ்விலும் கூட இறைச்செயல் அக்கறை கொள்கிறது, முழுமையான *(உப 32:4)*, பிரமாணிக்கமும் உண்மை உள்ளதுமான *(சங் 33:4)*, ஆழ்ந்த பண்புள்ள *(சங் 92:5-6)*, நன்மையும் அன்பும் நிறைந்த *(சங் 146:9-17; 138:8)* அவரது செயல்கள் இத்தகையவையே. இவை மனிதன் இதயத்தில் பொங்கிவழியும் மகிழ்ச்சியை எழச்செய்யவேண்டும்.

ஆ) படைப்பில் இறைவனின் செயல்:- தொடக்கத்திலிருந்தே இஸ்ராயேலானது, வானமும் பூமியும் படைத்தவரை *(ஆதி 14:19)*, பல்வேறு விண்மீன்களையும், மலைகளையும் காற்றையும் உருவாக்கியவரை *(ஆமோ 5:8; 4:13)* வியந்து போற்றியது. நாடுகடத்தப்படுதலோடு படைப்புச் செயலானது வரலாற்று ஆண்டவரின்மீது நம்பிக்கை கொள்ளத் தூண்டுதலுக்குக் காரணமாகிறது. இத்தகைய நிலையான சிறப்புமிக்க, ஆற்றல்மிக்க செயலானது ஆண்டவரின் ஆற்றல் மற்றும் பிரமாணிக்கத்திற்கு உறுதியான உத்தரவாதச் சான்றாக இருப்பது உண்மையில்லையா *(ஏச 40;12 தொ)*? வானங்கள் *(சங் 19:2)*, பூமி *(சங் 102:26)*, அனைத்துப் படைப்பிற்கும் மேலாக அமைக்கப்பட்ட மனிதன் *(சங் 8:4-7)* போன்ற அவரது கரங்களின் அனைத்துச் செயல்களுக்காகவும் அவர் புகழப்படுகின்றார். ஏற்றுக்கொள்ளப்படுகிற வியக்கத்தக்க அழகுமிக்க *(யோபு 36:24 தொ)* அவரது செயல்களுக்காக அவருக்கு நன்றி செலுத்த வேண்டும் *(சங் 145:10)*. தான் இறைவனின் படைப்பு என்பதை அறிந்தவனாய், இறைவன் தனது படைப்பினை வெறுக்க மாட்டார் *(யோபு 10;3)* என்பதால் மனிதன் இத்தகைய உறுதிப்படுத்தப்பட்ட விசுவாசத்தினின்று உண்மையான துணிவு கொள்ள வேண்டும்; அதேசமயம் மனிதனும் அதே போன்ற அளவற்ற தாழ்ச்சியினைக் கொண்டிருக்க வேண்டும்; ஏனெனில், ஒரு படைப்புப் பொருள் படைத்தவரை நோக்கி 'நான் உன்னுடைய செயலல்ல' என்று கூறமுடியமா? *(ஏச 29:16; 45:9; ஞான 12; உரோ 9:20-21)*.

இ) ஞானம், இறை கைவினைஞர்:- வரலாற்று இறைவனிலிருந்து படைத்த இறைவன் வரையிலான இயக்கமானது, இறைவனில் படைப்பாற்றல் மிக்க வார்த்தையான உலகின் வளர்ச்சியை இயக்குகின்ற ஆவியைக் காணும் இறுதி முயற்சியில் முடிவடைகின்றது, படைப்பிலும் *(சீரா 42:15-43:33)*, காலத்திலும் *(44:1-50:29)* இறைசெயலினைப்பற்றி சீராக் நூல் தியானிக்கிறது. ஞானநூல் வரலாற்றின் இறையியலைக் காண முயல்கிறது *(ஞான 10-19)*. இவ்வுலகில் இறைஞானம் செயல்படுவதை இரண்டுமே அடையாளம் காண்கின்றன. படைப்பின் சிற்பியான *(பழ 8:3)* இந்த அரச ஞானமானது, இறைவனது திட்டத்தின் தொடக்கத்திலேயே, அவரது தொல் பழங் காலத்துச் செயல்களுக்குமுன் அவரால் உண்டாக்கப்பட்டது. ஞானம் குறிப்பாக இஸ்ராயேலில் வாழ்வதையே தேர்ந்தெடுத்தது

(சீரா 24:3-8). ஆனால், அனைத்துப் பொருட்களின் சிற்பியாக இருந்தமையால் (ஞான 7:21), அனைத்திற்கும் முன்னரே இருந்தது (சீரா 24:9). தனது செயல்களின் மூலம், மனிதர்கள், இயற்கை மற்றும் வரலாற்றின் ஆண்டவரை அறிந்து கொள்ள இது உதவுகிறது.

2. மனிதனின் செயல்கள்:-

தன்னைப் படைத்த கடவுளைப் போன்று, மனிதனும் இடைவிடாமல் வேலையில் ஈடுபட்டிருக்க வேண்டும்.

அ) மனித செயலின் தொடக்கம்:- மனிதனைச் செயல்படுத்துவது அவனது உள்ளார்ந்த தேவை மட்டுமல்ல, இறைவனின் சித்தமும் ஆகும். இன்பவனக் காலத்திலிருந்தே இறைவனின் திட்டத்துடன் ஒத்திருக்கும் கட்டளையின் வடிவத்தில் இந்நிலை அவனுக்கு வெளிப்படுத்தப்படுகிறது (ஆதி 2:15-16). இவ்வாறு இறைச்செயலில் இருந்து பொங்கிவருவதாக மனித செயல்கள் தோன்றுகின்றன. ஆயினும் அவை அவனிடமிருந்து தனது நிலையிலான சுயமுயற்சியையும் ஈடுபாட்டையும் தேர்ந்தெடுத்தலையும் கோருகின்றனர். மனித சுதந்திரத்திற்கு இறைவனின் சித்தம், அவனுக்குப் புறம்பான சட்டவடிவில் செயலளவில் அளிக்கப்படுகிறது. அச்சட்டத்திற்கு அவன் பணிய வேண்டும்.

ஆ) மனிதனின் முக்கிய செயல்கள்:- சட்டத்தின் கட்டளைகள் உருவாவதற்கு முன்னரே உழைப்பு மற்றும் பலுகிப்பெருகுதல் என்னும் இரு முக்கியப் பணிகள் மனிதனால் நிறைவேற்றப்பட வேண்டியவை என, படைப்புப் பற்றிய விவரிப்பு வெளிப்படுத்துகின்றது.

மனிதன் பலுகிப்பெருகும் பணியைக் கொண்டுள்ளான். உலகினை மக்கள் இனத்தினால் நிரப்ப (ஆதி 1:28) இறைவனின் சாயலை வெளிப்படுத்துகின்ற தனது சாயலில் (5:1 தொ) பிள்ளைகளைப் பெற்றெடுக்க வேண்டும். இத்தகைய கடமையின் விளைவாகவே, குலமுதியவர்களின்இனம் இஸ்ராயேல் மக்களை ஈன்றெடுக்கிறது. இம்மக்கள் உலகிலுள்ள எல்லாக்குடும்பங்களுக்கும் இணைப்பாளர்களாக இருக்கின்றனர். இம்மக்களிலிருந்தே கிறிஸ்து பிறக்கிறார். இவ்வாறு படைப்பு மற்றும் மீட்பின் வரலாறு என்னும் இருவித காரணங்களினால், ஊனுடலின் செயலானது பொருள் கொள்கிறது. மனிதனுடைய பாவத்தினால் நிலம் சபிக்கப்பட்டிருப்பினும் (ஆதி 3:17 தொ), மனிதன் உலகில் ஆதிக்கம் செலுத்தி அதனைக் கீழ்படுத்த உழைக்க வேண்டும் (1:28). உழைப்பு மனிதனை வாழ அனுமதித்தாலும் (3:19), வழிபாட்டில்தான் உழைப்பு முழுமையான சமயச் சிறப்பினை அடைகின்றது. இறைவனின் மகிமைக்காகக் கட்டப்பட்ட தேவாலயமே இஸ்ராயேலில் தலைசிறந்த படைப்பாகும்.

பலுகச் செய்வதைத் தீட்டுபடுத்துவதாலோ (உரோ 1:26-27), தமது கைகளால் செய்யப்பட்ட பேசமுடியாத சிலைகளை வணங்குவதாலோ (1 கொரி 12:2), மனிதன் தனது இருமுக்கிய பணிகளின் நோக்கத்திலிருந்து தவறிப்போகக்கூடிய அபாயத்திலிருப்பது உண்மையே. மனிதச் செயல்கள் இத்தகைய இழி நிலை அடைவதைத் தடுக்க சட்டத்தின் கட்டளைகள் விரும்புகின்றன. சட்டமும் கட்டளையிடும் பல்வேறு மற்ற செயல்கள் உள்ளன. இவற்றிலிருந்து யூதமதம் பிச்சையிடுதல், நோயளிகளைச் சந்தித்தல், இறந்தவரை அடக்கம் செய்தல் போன்ற அயலாரைப் பற்றிய செயல்களைப் பொறுக்கி எடுத்துப் போதிக்கிறது. இவை யாவும் முதன்மையான நற்செயல்களாகும்.

இ. செயல்களின் நோக்கம்:- சட்டத்தினால் குறிப்பிடப்பட்ட செயல்கள் அனைத்தும் இறையரசிற்குக் கொண்டு செல்பவை என்னும் உண்மையை யூதமதம் ஒருபோதும் மறந்ததேயில்லை. ஆயினும், வாதத்திறமையானது மனிதனுடைய முயற்சியைச் சட்டத்தினுடைய சொற்களின்மேல் திருப்பிவிட்டு, பலசமயங்களில் நிறைவேற்றப்படவேண்டிய செயல்களின் உண்மையான பொருளை மறைப்பதாய் உள்ளது. எல்லாவற்றிற்கும்

மேலாக உடன்படிக்கையினை ஓர் ஒப்பந்தம் என்று தவறாகப் புரிந்து கொண்டு, அதைத் செயல்படுத்துபவர்களிடையே தங்களால் இயலக்கூடியவற்றின்மீது அதிக நம்பிக்கை யினை உண்டாக்கி, நிறைவேற்றப்பட்ட செயல்கள், மனிதனுக்கு இறைவன் மீது உரிமையை அளிப்பதாகவும் அவனுக்கு உள் ளார்ந்த நேர்மையை அளிக்கவல்லதாகவும் எண்ணச் செய்தது. கடவுளின் மகிமையை வெளிப்படுத்துதல் மட்டுமே மனிதனில் செயல்படுகிறது என்னும் மனித செயல்க ளின் தனிச்சிறப்பான பொருளை எடுத்துக் கூற இயேசு, சமயத்தை இழிவுபடுத்தும் எண்ணத்திற்கு எதிராகப் போராடுகிறார்.

II. புதிய ஏற்பாடு

*1. இயேசு கிறிஸ்துவின் செயல்:-* ''என் தந்தை இந்நேரம் வரை செயலாற்றுகிறார்; நானும் செயலாற்றுகிறேன்'' *(யோவா 5:17).* இவ்வார்த்தைகளில் தந்தையினுடையவும் மகனுடையவும் செயல்களின் ஒருமைப் பாட்டை வலியுறுத்துகிறார். தந்தையின் செயல் மகனின் செயலில் முழுமையாக வெளிப்படுகிறது.

*அ) இயேசு கிறிஸ்து, இறைவனின் தலை சிறந்த படைப்பு:-* தந்தையின் காணக்கூடிய உருவமாக உள்ள இயேசுவே பழைய ஏற் பாட்டில் பேசப்படும் ஞானமாகும். அவர் வழியாக அனைத்தும் தொடக்கத்தில் உண் டாக்கப்பட்டன. அவராலேயே மீட்புச் செயல் வரலாற்றில் நிறைவேறுகிறது. தமது உவமைகளில் படைப்பு மீண்டு உயிர்பெறச் செய்கிறார். எடுத்துக்காட்டாக கோதுமை மணி, மற்றும் பலியினுடைய வளர்ச்சியின் முறைகளின் தொடர்பை வெளிப்படுத்தும் உவமை *(யோவா 12:24).* ஊன் சார்ந்த முறையில் பலுகிப்பெருகுதலில் மறைந் துள்ள பொருளையும் *(லூக் 11:27-28),* ஆல யம் வழிபாடு ஆகியவற்றின் ஆழ்ந்த பொரு ளையும் *(யோவா 4:21-24)* எடுத்துக்கூறி, மனிதச் செயல்களைத் தவறாகப் புரிந்து கொள்வதிலிருந்து காப்பாற்றுகிறார். அர சின் எதிர்பார்ப்பினையும், சட்டத்திற்குக் கீழ்ப்படிய வேண்டியதையும் அவர் தம்மி லேயே ஒருமுகப்படுத்துகின்றார். மனிதனு டைய செயலானது இறைவனுடைய சாய லில் நிறைவேற்றப்பட வேண்டும் என்பது உண்மையாயின், இனிமேல், தந்தையின் விருப்பப்படி எவ்வாறு நடப்பது என்பதை அறிய, இயேசு எவ்வாறு செயலாற்றுகிறார் என்று கண்டால் மட்டும் போதுமானதாகும்.

*ஆ) இயேசுவும் தந்தையின் செயல்களும்:-* ஒத்தமை நற்செய்திகள், இயேசுவின் புதுமை கள் மற்றும் அவரது திருச்சபையின் வரு கைக்காகத் தயாரிக்கும் பணிகளைப் பற்றி விவரித்தாலும் இயேசுவின் செயல்களைப் பற்றி அரிதாகவே பேசுகின்றன *(மத் 11:2).* ஆனால், முற்றிலும் மாறுபட்ட நிலையில், தந்தை அளித்த செயல்கள் அனைத்தையும் கிறிஸ்து நிறைவேற்றினார் என்பதை யோவான் காட்டுகின்றார் *(யோவா 5:36).* அவர் மெசியா மட்டுமன்று, இறைமகனும் ஆவார் என்பதற்கு இவை சான்று பகர்கின் றன; ஏனெனில், செயலாற்றுபவர்களி டையே குழப்பம் விளைவிக்காமல், அவை தந்தையின் செயல்களோடு ஒருமைப்பாடு கொண்டுள்ளன. தாமே அனைத்துச் செயல்க ளுக்கும் காரணம் என்பது போல, தந்தை மகனுக்கு முழுவதும் நிறைவேற்றப்பட்ட செயல்களை அளிக்கவில்லை *(யோவா 14: 10; 9:31; 11:22.41-42),* மேலும் நிறைவேற்றச் சொல்லிக் கட்டளையிடுவது போலவும் அவர் செயல்களை அளிக்கவில்லை *(யோவா 4:34; 5:10).* உலகில் நிறைவேற்றப் பட வேண்டும் என்று இறைவன் விரும்பிய, அனைவரின் மீட்பு என்னும் தனிச்சிறப்பான பணியினை நிறைவேற்றித் தந்தையை மகி மைப்படுத்துவதே மகனின் பணியாகும். இச் செயலின் நிறைவே சிலுவையாகும் *(யோவா 17;4).* கிறிஸ்துவின் அனைத்துச் செயல்களும் இதனுடன் தொடர்புபடுத்தப்ப டுகின்றன. அவை, இயேசுவின் பணியினு டைய முத்திரையாக மட்டுமல்லாமல் *(6:27),* மகனின் மூலமாக தந்தையையும் வெளிப்படுத்துகின்றன *(14:9-10).* பிரிக்கமு டியாத அளவு தம்மைத் தந்தையுடன் இணைக்கின்ற அன்பிலும், மகன் என்ற அளவிலும், தந்தையைப்போன்று தாமும்

செயலாற்றுபவராக இருப்பதை மகன் காட்டுகிறார்.

இ) கிறிஸ்து, மனித செயல்களை வெளிப்படுத்துபவர்:- பாவ உலகிற்கு வந்த பின், இயேசு மனித செயல்களையும் வெளிப்படுத்துகிறார். இவ்வெளிப்பாடானது தேர்வாகவும் தீர்ப்பாகவும் உள்ளது, ''இப்போது இதுதான் தீர்ப்பு; ஒளி உலகிற்கு வந்துள்ளது. மனிதர்களோ ஒளியைவிட இருளையே விரும்பினர். ஏனெனில் அவர்களுடைய செயல்கள் தீயனவாயிருந்தன. பொல்லாது செய்பவன் எவனும் ஒளியை வெறுக்கிறான். தன் செயல்கள் தவறானவை என்று வெளியாகாதபடி அவன் ஒளியிடம் வருவதில்லை. உண்மைகேற்ப நடப்பவனோ, தன் செயல்கள் கடவுளோடு ஒன்றித்துச் செய்தவையாக வெளிப்படும்படி ஒளியிடம் வருகிறான்'' (யோவா 3:19-21), கிறிஸ்து மனிதரிடையில் தோன்றி, அவர்களின் நிலையை வெளிப்படுத்துகின்றார். இச்சந்திப்பிற்கு முன்னர், ஒரு விதத்தில் அவர்கள் இருளிலேயே வாழ்ந்தனர் (1:5); இதைப் பாவநிலை என்று குறிப்பிட முடியாது (9:41; 15:24). கிறிஸ்து தம் வருகையால், மனிதரின் தன்மையின் ஆழத்தை வெளிப்படுத்துகிறார். அதுவரை, அதன் நன்மை தீமை பற்றி அரை குறை உணர்வே கொண்டிருந்தனர். தங்களுடைய கடந்தகால வாழ்க்கையின் அடிப்படையில் மனுமகனைப்பற்றி அவர்கள் எடுக்கும் தீர்மானம், அவர்களுடைய கடந்த காலத்தைத் தொகுத்துத் தருகிறது; அது இருக்கும் நிலையை வெளிப்படுத்துகிறது. நற்செயல்கள் கிறிஸ்துவுக்குக் காட்டும் இறுதிப்பற்றினைத் தகுதியாகப் பெறுவதில்லை; மாறாக, இப்பற்றானது செயல்களின் நன்மைத்தனத்தை வெளிப்படுத்துகின்றன (எபே 5:6-14)

2. கிறிஸ்தவனின் செயல்கள்:- விசுவாசி தன் செயலை இயேசு கிறிஸ்துவின் செயலை மாதிரியாக வைத்து அமைக்கும் போது தன் செயலுக்கு முழுப்பொருள் அளிக்கிறான். தூய ஆவியின் மூலம், அன்பின் புதிய சட்டத்தினை நிறைவேற்றவும், கிறிஸ்துவின் உடலைக் கட்டியெழுப்புவதில் ஒத்துழைக்கவும் அவனால் கூடுமானதாகுகிறது.

அ) விசுவாசம், தனித்தன்மையுடைய செயல்:- ஒத்தமை நற்செய்திகளின் படி, தூய கருத்துடன் நற்செயல்களைச் செய்யவேண்டும் என்று இயேசு கோருகிறார் (மத் 5:16) இது முதன்மையான கட்டளைகளில் (மத் 22:36-40) சட்டத்தின் கட்டளைகளிடையேயுள்ள ஒற்றுமையினை இயேசு காட்டுகிறார். இந்த முறையில் யூதமரபினால் திணிக்கப்பட்ட எண்ணற்ற செயல்களில் இன்றியமையாதவையான எளிமை மற்றும் தூய்மையினை அவர் செயல்படுத்துகிறார். நான்காவது நற்செய்தியில் இந்த எளிமை மேலும் தெளிவாகத் தோன்றுகிறது. ''கடவுளுக்கேற்ற செயல்களைச் செய்ய நாங்கள் என்ன செய்யவேண்டும்?'' எனக் கேட்கும் யூதருக்கு ''அவர் அனுப்பியவரை விசுவாசிப்பதே கடவுளுக்கேற்ற செயல்'' என்று இயேசு பதிலுரைக்கின்றார் (யோவா 6:28-29). தந்தையின் செயல்களை நிறைவேற்றுகின்ற இயேசுவின் மேல் கொண்ட விசுவாசத்தால் இறைவனின் சித்தம் சுருக்கமாகத் தரப்படுகிறது.

ஆற்றலோடு விவாதித்திடக் கூடியவரான பவுல் சட்டத்தின் செயல்களால் ஏற்புடைமை என்னும் கருத்தை நிராகரிக்கும் போது இதனையே கூறுகின்றார்; மீட்பின் மூல ஆதாரமாக இருப்பது சட்டமோ, செயல்களோ அல்ல; மாறாக, விசுவாசத்தினால் ஏற்றுக்கொள்ளப்பட்ட சிலுவையும் அருளுமே. செயல்களால் மட்டுமே மீட்புப் பற்றிய திறனாய்வானது யூத சட்டத்திற்கு மட்டுமே உரியதன்று. தாங்களாகவே மீட்படையக்கூடும் என்று தற்புகழ்ச்சி கொள்ளும் எல்லாச் சமய வழக்கிற்கும் இது பொருந்தும்.

ஆ) அன்பு, விசுவாசத்தின் செயல்:- செயல்கள் மீட்பின் மூல ஆதாரமாக இல்லாவிட்டாலும், அவை விசுவாசத்தின் அவசியமான வெளிப்பாடாக உள்ளன. யாக்கோபு

இதனை வற்புறுத்துகிறார் (யாக் 2:14-26); பவுலும் அவ்வாறே (எபே 2:10). ஆவியின் கொடைகளாக உள்ள 'விசுவாசத்தின் செயல்களும்' சில உள்ளன (கலா 5:22-23). 'அன்பின் மூலம் செயல்படும்' விசுவாசத்தையே இயேசு கேட்கிறார் (கலா 5:6). பலவாறாக உள்ள தீய செயல்களுக்கு மாறாக (கலா 5:19 தொ), முழுசட்டத்தினையும் கொண்டுள்ள கட்டளையினைக் கடைப்பிடிப்பதில் விசுவாசத்தின் செயல்கள், தொகுத்து அமைக்கப்பட்டுள்ளன (கலா 5:14). 'விசுவாசத்தின் செயலும், அன்பின் உழைப்பும்' இத்தகையதே (1 தெச 1:3). அவரது வருகைக்காக எதிர்பாத்திருக்கும் வேளையில் தனது விளக்கினைப் பற்ற வைத்தும் (மத் 25:1-13), தாலந்துகளை இலாபகரமாகப் பயன்படுத்தியும் (25:14-30), சகோதரரை அன்பு செய்தும் (25:31-46) நாம் இருக்க வேண்டும் என்று இயேசு கற்பித்தார். அன்பின் கட்டளையானது அவருடைய சொந்த ஏற்பாடேயாம் (யோவா 13:34). அப்போஸ்தலர்கள் இப்படிப்பினையை ஏற்றுக் கொண்டு அதனுடைய விளைவுகளை வெளிக்கொணர்ந்தனர்.

இ) கிறிஸ்துவின் உடலாகிய திருச்சபையினை கட்டியெழுப்புதல்:- சில குறிப்பிட்ட தனிப்பட்டவர்களுக்குக் கொண்டுவரப்பட்ட ஆறதலில் அன்பின் செயலானது முழுமையினைக் காண்பதில்லை. இந்தக் குறிக்கோளுக்கு அப்பால் நித்தியத்திலிருந்து முன்னோக்கப்பட்ட, அவரது உடலாகிய திருச்சபையினைக் கட்டியெழுப்பும் கிறிஸ்துவின் மாபெரும் பணியில், அன்பு ஒத்துழைக்கிறது. ஏனெனில் ''அவரது கைவேலையாக உள்ள நாம் செய்ய வேண்டுமென்று இறைவன் முன்னேற்பாடு செய்த நற்செயல்களில் நாம் ஈடுபடுவதற்கே கிறிஸ்து இயேசுவுக்குள் நாம் படைக்கப்பட்டோம்'' (எபே 2:10). மனிதனுடைய செயலின்மேல், சிறப்பையும் முடிவற்ற முக்கியத்துவத்தையும் அளித்து எல்லாவற்றிலும் செயலாற்றுகிற இறைவனின் செயலுடன் மனிதன் ஒத்துழைப்பதாகிய மறைபொருள் இதுவே (1 கொரி 1:9; 15:58; உரோ 14:20; பிலி 1:6). இந்த புதிய முன்னோக்கில் விண்ணக வெகுமதியானது, மனிதன் இவ்வுலகில் செய்யும் செயல்களுடன் இணைக்கப்படலாம்: ''ஆண்டவருக்குள் இறப்பவர் பேறுபெற்றோர்; ஏனெனில், அவர்கள் செய்த நன்மையே அவர்களோடு கூட வரும்'' (திரு 14:13).

**இறைவனின் பிரசன்னம்/திருமுன்** (PRESENCE OF GOD )

விவிலியத்தின் இறைவன் மிக உயர்ந்தவர் மட்டுமின்றி, எல்லாவற்றிக்கும் மிக அண்மையில் உள்ளவரும் ஆவார் (சங் 119:151). தமது முழுநிறைவினால் உலகினின்று பிரிந்து நிற்கும் மேலானவர் மட்டும் அல்லர்; மாறாக உலகோடு இணைக்கப்படக்கூடிய உண்மையாகவும் அவர் உள்ளார். இந்த இறைவன் தமது படைப்புகளுக்கு படைப்பாளியாகவும் (ஞான 11:25; உரோ 1:20) தம் மக்களுக்கு மீட்பராகவும் (யாத் 19:4 தொ), அவரது மகனுக்கும் (யோவா 8:29) மகனின் ஆவியால் உயிரூட்டப்பட்டு அவருடைய பிள்ளைகளாக அவரை அன்பு செய்பவர்களுக்குத் தந்தையாகவும் (உரோ 8:14.28) விளங்குகிறார். முதலும் இறுதியுமாக உள்ள அவர் காலத்தில்மீது ஆதிக்கம் செலுத்துவதன் மூலம் எல்லாக் காலங்களிலும் பிரசன்னமாக உள்ளார் (ஏச 44:6; 48:12; திருவெளி 1:8.17; 22:13). ஆனாலும், இறை பிரசன்னமானது புலன் சார்ந்த அடையாளங்களால் தன்னையே வெளிப்படுத்தினாலும் அது ஆன்மீக உயிரின் பிரசன்னமேயாகும். தமது படைப்பைச் சூழ்ந்து கொண்டுள்ளது. அவரது அன்பு (ஞான 11:24; சங்139) அதற்குப் புத்துயிர் அளிக்கின்றது (அ.ப. 17:25-28) இறைவன் தமது அன்பை மனிதனுக்கு அளித்து, தமது பிரசன்னத்தின் ஒளிமிக்க சாட்சியாக அவனை ஆக்க விரும்புகிறார் (யோவா 17:21).

I. பழைய ஏற்பாடு

மனிதனைப் படைத்த இறைவன், அவனுக்குப் பிரசன்னமாக இருக்க விரும்புகிறார். மனிதன் பாவத்தின் மூலம் இந்தப் பிரசன்னத்திலிருந்து விலகி ஓடிவிட்டாலும்,

இறை அழைப்பானது வரலாற்றின் மூலம் அவனைப் பின்தொடர்ந்தவாறே உள்ளது; ''ஆதாம், நீ எங்கே இருக்கிறாய்?'' (ஆதி 3:8-9).

1. இறை பிரசன்னம் பற்றிய வாக்குறுதி:- தமது பிரசன்னத்தைப்பற்றி உறுதியளித்திருந்த சலுகை பெற்ற ஆன்மாக்களுக்கு இறைவன் முதலில் தம்மைக் காண்பித்தார். இவ்வாறு அவர், தமது உடன்படிக்கையைச் செய்துகொண்டு ஏற்படுத்திய தந்தையார்களுக்கும் (ஆதி 17:7; 26:24; 28:15), தமது மக்களை விடுவிக்கப் பொறுப்பேற்றிருந்த மோசேக்கும் (யாத் 3:12) இறைவன் தம்மைக் காண்பித்தார். இவர்களுக்கு அவர் தம்முடைய பெயரையும் அதன் பொருளையும் வெளிப்படுத்தி, அவர்களுடைய தந்தையரோடு இருந்தது போல, அவர்களுடைய தந்தையரின் இறைவன் அவர்களோடும் இருப்பார் என்று உறுதியளிக்கிறார். இறைவன் தம்மை யாவே என்று அழைத்து, முடிவற்றவர், மாறாதவர் மற்றும் நம்பிக்கைக்கு உரியவர் என்று பொருள் படுமாறு ''இருக்கிறவர் நாமே'' என்று தம்மை விவரிக்கின்றார். அல்லது மீண்டும், அங்கு எப்போதும், எல்லா இடங்களிலும் தம்முடைய மக்களுடன் நடந்து செல்கின்றவர் என்ற பொருளில் ''இருக்கிறவர் நாமே'' என்றும் (3:13 தொ; 33:16) விவரிக்கின்றார். உடன்படிக்கைக் காலத்திலிருந்து அளிக்கப்பட்ட இந்த எல்லாம் வல்ல பிரசன்னத்தின் உறுதிமொழியானது (34:9-10), இறைவன் தமது மக்களை நடத்திச் செல்லப் பயன்படுத்திய யோசுவா மற்றும் நீதிபதிகள் (யோசு 1:5; நீதி 6:16; 1 சாமு 3:19), அரசர்கள் மற்றும் இறைவாக்கினர்கள் (2 சாமு 7:9; 2 அர 18:7; எரே 1:8.19) முதலிய தூதுவர்களுக்கும் புதுப்பிக்கப்படுகிறது. ஏசயா முன்னறிவிக்கப் பிறந்து, மக்களின் மீட்பாக விளங்கவிருக்கும் குழந்தையினுடைய பெயரும் பொருள் மிக்கதாகும்; ''இம்மானுவேல், அதாவது கடவுள் நம்மோடு'' (ஏச 7:14; சங் 46:8).

இறைவன் தமது மக்களை நாடுகடத்துவதன் மூலம் தண்டிக்க வேண்டியுள்ளபோதும், அவர் அவர்களைக் கைவிட்டுவிடவில்லை. அவரது ஊழியனாகவும் சாட்சியாகவும் விளங்குகின்ற இம்மக்களின் மேல் (ஏச 41:8 தொ; 43:10) அவர் ஆயனாகவும் (எச 34:15-16.31; ஏச 40:10-11), அரசனாகவும் (ஏச 52:7), மணமகனாகவும், மீட்பராகவும் (54:5-6; 60:16) விளங்குகின்றார். தமதுவாக்குறுதிகளின்மீதான உறுதியின் பொருட்டு இம்மக்களைச் சுதந்திரமாக விடுவிக்கப் போவதாகவும் (52:3.6) ''யாவே அங்கே இருக்கிறார்'' (எச 48:35) என்று இனி அழைக்கப்படவுள்ள புனித நகருக்கு அவருடைய மகிமை திரும்பும் என்றும் அவர் அறிவிக்கிறார் (ஏச 52:3, 6); இவ்வாறு, எல்லா நாடுகளுக்கும் தமது பிரசன்னத்தைத் தெளிவாக்குவார் (45:14-15). அவர் அவைகள் அனைத்தையும் தமது ஒளியில், எருசலேமிற்குக் கூட்டிச் சேர்ப்பார் (ஏச 60). இறுதியாக, இறுதிநாளில், அவர் உலகளாவிய நீதிபதியாகவும் அரசராகவும் விளங்குவார் (மலா 3:1; செக் 14:5.9).

2. இறைப்பிரசன்னத்தின் அடையாளங்கள்:- இறைவன் பல்வேறு அடையாளங்களின்மூலம் தம்மை வெளிப்படுத்துகிறார். சீனாயி மலையில் நிகழ்ந்த இறைமகிமைத் தோற்றம் புயல், இடி, நெருப்பு மற்றும் காற்று ஆகியவற்றினால் (யாத் 20:18 தொ) இறையச்சத்தை ஏற்படுத்தியது. இவ்வடையாளங்களை இறைவனது மற்ற இடையீட்டுகளிலும் காண்கிறோம் (சங் 29;18:8-16; ஏச 66:15; அ.ப. 2:1 தொ; 2 பேதுரு 3:10; திருவெளி 11:19). ஆனால், தமது நண்பர்களாகிய ஆபிரகாம் (ஆதி18:23-33). மோசே (யாத் 33:11) மற்றும் எலியா (1 அர 19:11 தொ) ஆகியோருடன் உரையாடும் போது, தென்றல் வீசும் இன்பவனத்தின் அமைதியான நிலையைப் போன்ற (ஆதி 3:8) முற்றிலும் மாறுபட்ட சூழ்நிலையிலும் ஆண்டவர் தோன்றுகிறார்.

இறைப்பிரசன்னத்தின் அடையாளங்கள் ஒளி வீசுகின்றவையாக இருந்தாலும், இறைவன் மறைபொருளில் பொதியப்பட்டுள்ளார் (சங் 104:2). மேகம் மற்றும் நெருப்புத்

தூணின் மூலமாக அவர் தனது மக்களைப் பாலைவனத்தில் வழிநடத்துகிறார் (யாத் 13:21), முதலில் உடன்படிக்கைப் பேழை வைக்கப்பட்டிருந்த கூடாரத்தையும் (யாத் 40:34) பின்னர் திருத்தூயகத்தையும் (1 அர 8;10 தொ) தம்முடைய மகிமையால் நிரப்பியவராய் அவர் அவர்களிடையே வாழ்கிறார்.

3. இறை பிரசன்னத்திற்கான நிபந்தனைகள்:- இத்தகைய மறைபொருள்மிக்க, பரிசுத்த பிரசன்னத்தை அணுகுவதற்கு, தேவையான நிபந்தனைகளை இறைவனிடமிருந்து அறிவது அவசியமாக உள்ளது.

அ) இறைவன் மீதான ஆர்வம்:- இறைவன் அளிக்கின்ற அடையாளங்களுக்கு மனிதன் பதிலளிக்க வேண்டும். இக்காரணத்தினால், இறைவெளிப்பாட்டின் நினைவு இணைந்துள்ள பெயேர் செபா மற்றும் பெத்தேல் (ஆதி 26:23 தொ; 28:16-19) போன்ற இடங்களில், மனிதன் இறைவனை வழிபடுகின்றான். ஆனால், இறைவன், எந்த இடத்திற்கோ, அல்லது பருப்பொருளால் ஆன உறைவிடத்திற்கோ மட்டும் கட்டுப்பட்டவரல்லர். உடன்படிக்கைப் பேழையை அடையாளமாகக் கொண்ட இறைப்பிரசன்னமானது, பாலைவனத்தில் தாம் வழிகாட்டுகின்ற மக்களோடு சேர்ந்து பயணம் செய்கிறது. அவர்களிடையே தமது இருப்பிடத்தையும் புனித உறைவிடத்தையும் ஏற்படுத்திக் கொள்ள விரும்புகிறது (யாத் 19:5; 2 சாமு 7:5-6.11-16). தாவீதின் சந்ததியோடும், தாவீதின் வீட்டிலும் வசிக்க இறைவன் விரும்புகிறார். சாலமோன் அவருக்கு ஒரு தேவாலயத்தைக் கட்டுவதை ஏற்றுக்கொண்டாலும், இந்த ஆலயம் அவரைத் தன்னுள்ளேயே கட்டுப்படுத்தக்கூடிய ஆற்றலை பெறவில்லை என்னும் உணர்வு அங்கு நிலையாக உள்ளது (1 அர8:27; ஏச 66:1). அவருடைய பெயரை உண்மையில் அழைக்கும் அளவிற்கு அவர் அங்கு உள்ளார் (1 அர 8:29-30.41 தொ; சங் 145:18). அதாவது, விசுவாசமிக்க இதயத்துடன், உண்மையான வழிபாட்டின்மூலம் அவருடைய பிரசன்னத்தை அங்கு தேடும் அளவிற்கு, அவர் அங்கு காணப்படுகிறார்.

மேட்டு இடங்கள் மற்றும் அவற்றின் ஊழல்களை அழித்து, இத்தகைய வழிபாட்டை ஏற்படுத்தும் எண்ணத்துடன் உபாகமச் சீர்திருத்தம், ஆண்டிற்கு மூன்று முறை எருசலேம் யாத்திரை செல்வதை ஏற்படுத்தி, மற்ற இடங்களில் பலிகளை அளிப்பதைத் தடை செய்தது (உப. 12:5; 16:16). எருசலேமிற்குச் செல்வதென்பது, ஆண்டவரைக் கண்டடையப் போதுமானது என்ற பொருளில் கூறப்படவில்லை. அங்கு மக்களால் நிறைவேற்றப்படுகின்ற வழிபாடானது, நம்மைச் காண்கிற இறைவனுக்கு அளிக்க வேண்டிய மரியாதை, மற்றும் நம்மோடு பேசும் இறைவனுக்குரிய நமது விசுவாச உறுதிப்பாடு ஆகியவற்றை வெளிப்படுத்த வேண்டும் (சங் 15:23). இல்லையென்றால், ஒருவன் தனது இதயத்தில் அவரிடமிருந்து மிகத்தொலைவில் இருக்கிறான் (எரே 12:2). மேலும், மனிதர்கள் ஆலயத்தைக் கள்வர்களின் குகையாக மாற்றிவிட்டதால், அதனுடைய அழிவைப்பற்றி அறிவித்து, கடவுள் அதனை விட்டுவிடுகிறார் (எரே 7:1-15; எச 10-11).

மற்றொரு புறம் மூதாதையரைப்போல இறைவனுடன் நடப்பவர்களுக்கும் (ஆதி 5:22; 6:9; 45:15) எலியாவைப் போன்று அவர் முன் செயலாற்றுபவர்களுக்கும் (1 அர 17:1) வாழ்பவர்களுக்கும் (சங் 16:8; 22:4; 119:168), தங்களது துன்பங்களில் அவரை வேண்டுகின்றவர்களுக்கும் (சங் 34:18 தொ) தாழ்ந்த நொறுங்கிய உள்ளத்துடன் (ஏச 57:15) நன்மையை நாடுகின்றவர்களுக்கும் (ஆமோ 5:4, 14), துன்புறுவோர்க்கு உதவி செய்பவர்களுக்கும் (ஏச 58:9) அருகிலேயே உள்ளார் இறைவன். இத்தகைய விசுவாசிகளே ஒழுக்கக்கேட்டிற்கு உள்ளாகாமல் இறைவனின் பிரசன்னத்தில் என்றென்றும் வாழ்வர் (ஞான 3:9; 6:19).

ஆ) இறைவனின் கொடை:- ஆனால், இத்தகைய உறதி மனிதனுடைய ஆற்றலில்

உள்ளதா? தூய இறைவனின் முன்னிலையில், இறைவனால் மட்டுமே குணமாக்கப்படக்கூடிய சீர்கேடாகிய (எரே *17:1.14*) தனது பாவத்தைப்பற்றி மனிதன் உணருகிறான் (*ஏச 6:1-5*). மனிதனுடைய இதயத்தைமாற்றி, அதில் தம்முடைய சட்டத்தையும் தமது ஆவியையும் முத்திரையிட இறைவன் வந்தால், எவ்வளவு நல்லது! (எரே *31:33;* எச *36:26* தொ). புனிதப்படுத்தப்பட்ட மக்களை இறைவனுடைய உறைவிடமாக மாற்றுகின்ற புதிய உடன்படிக்கையின் கனியாகிய இம்மறுமலர்ச்சியை இறைவாக்கினர்கள் அறிவிக்கின்றனர் (எச *37:26* தொ). மனிதரிடையே உறைவதால் மகிழ்வடைகின்ற ஞானத்தைத் தங்களுக்குள் பெறுவதன் மூலம், அவருடைய சித்தத்தினை அறிந்து, அவருடைய நண்பர்களாக உருவாக, இறைவன் தமது ஞானத்தையும், தமது தூய ஆவியையும் அனுப்புவாரென ஞான ஆசிரியர்களும் அறிவிக்கின்றனர் (பழ *8:31;* ஞான *9:17* தொ; *7:27-28*).

II. புதிய ஏற்பாடு

*1. இயேசுவில் பிரசன்னத்தின் கொடை:-* கன்னி மரியாளின் மீது இறங்கியதன் மூலம், இஸ்ராயேலுக்கு வாக்களிக்கப்பட்ட கொடையினை, தூய ஆவி கொண்டு வந்தார்: ஆண்டவர் அவளோடு உள்ளார் மற்றும் இறைவன் நம்மோடு உள்ளார் (லூக் *1:28.35;* மத் *1:21* தொ). உண்மையில், தாவீதின் மகனாகிய இயேசு ஆண்டவரும் ஆவார் (மத் *22:43-44*). சிறியோர்களுக்குத் தமது பிரசன்னம் வெளிப்படுத்தும் (மத் *11:25* தொ) உயிருள்ள இறைவனின் மகன் ஆவார் (மத் *16:16*). நம்மிடையே வாழ்வதற்காகவும் (*1:14*), அவருடைய தந்தையின் மகிமையை வெளிப்படுத்துவதற்காகவும் ஊனுடலெடுத்த (யோவா *1:14*) இறைவனின் வார்த்தை அவரே. அவரது உடலே உண்மையான ஆலயம் (*2:21*). தம்மோடு என்றுமுள்ள தமது தந்தையைப்போன்று ''இருக்கிறவர் நாமே'' என்று அழைக்கப்படுகிறார் (யோவா *8:28-29; 16:32*), அப்பெயரில் உள்ளடங்கியுள்ள, பிரசன்னத்தின் உறுதிமொழிக்குத் தமக்கேயுரிய நிறைவேற்றத்தை அளிக்கிறார். இதன் விளைவாக, அவரிலேயே இறைத்தன்மையின் முழுமையும் உள்ளது (கொலோ *2:9*). தமது பணியை முடித்தபின்னர், தம் சீடர்களோடு என்றும் இருப்பதாக அவர்களுக்கு உறுதியளிக்கிறார் (மத் *28:20;* லூக் *22:30; 23:42-43*).

*2. ஆவியில் பிரசன்னத்தின் மறைபொருள்:-* உயிர்த்த இயேசு தனது சீடருக்குத் தோன்றுவதென்பது, அவர்களிடையே தமது பிரசன்னத்தை உடலுக்குரியதாகச் செய்வதற்கன்று; ஏனெனில், அக்கணம் முதல் அவர்கள் அதனை இழப்பது நல்லது (யோவா *16:7*). ஆனால் அவர் வாழ்கின்ற இடத்தில், விசுவாசத்தின் மூலம் அவரைக்கான அவர்களைத் தூண்டுவதற்கு இது உதவியாக உள்ளது. அவர் தமது தந்தையுடன் வாழ்கிறார் (*20:17*); துன்புறுவோர் அனைவரிலும் அவர் பிரசன்னமாகியுள்ளார்; அவர்களிலே பணிபுரியப்பட வேண்டுமென விரும்புகின்றார் (மத் *25:40*). அவருடைய வார்த்தையைக் கொண்டுவருபவர்களிடம் இருக்கிறார். அவர்களிலே தாம் செவிமடுக்கப்பட வேண்டுமென அவர் விரும்புகிறார் (லூக் *10:16*); அவருடைய பெயரால் செபிக்க ஒன்று கூடுவோரின் இடையிலும் அவர் உள்ளார் (மத் *18:20*).

விசுவாசிப்போரிடையில் மட்டுமே கிறிஸ்து இருப்பதில்லை. தமது மகிமையை வெளிப்படுத்தி அதே நேரத்தில் ''நீ துன்புறுத்துகிற இயேசு நாமே'' (அ.ப. *9:5*) என்று பவுலுக்கு வெளிப்படுத்தியதுபோல், அவர்கள் துன்புறும்போது அவர்களிலேயே உள்ளார். உண்மையில், விசுவாசத்தினால் தம்மைப் பெற்றவர்களிலும் (கலா *2:20;* எபே *3:17*), தமது உடலினால் ஊட்டம் பெறுவோரிலும் (*1* கொரி *10:16-17*) அவர் வாழ்கிறார். அவருடைய ஆவி அவர்களில் வாழ்ந்து, உயிரளித்து (உரோ *8:9. 14*), அவர்களை இறைவனின் ஆலயமாகவும் (*1* கொரி *3:16-17; 6:19;* எபே *2:21-22*), கிறிஸ்துவின் உறுப்பினர்களாகவும் ஆக்குகிறது (*1* கொரி *12:12-13. 27*).

அதே ஆவியினால், அவருடைய உடலை உண்டு இரத்தத்தைக் குடிப்போரில் இயேசு வாழ்கிறார் (யோவா 6:56-57, 63). அவருடைய தந்தை அவரில் இருப்பது போன்று, அவர் அவர்களில் இருக்கிறார் (14:19-20). இந்த ஒன்றுபட்ட நிலையானது, இயேசு தந்தையிடம் திரும்பிச் சென்று தனது ஆவியை அனுப்பியுள்ளார் என்று சுட்டிக் காட்டுகிறது (16:28; 14:16 தொ), இதனாலேயே, உடலுக்குரிய நிலையில் அவர் அவர்களிடையே இல்லாமல் இருப்பது மேலானது (16:7). அப்படி இல்லாமலிருத்தல் ஆவியின் கொடையால் அடைகின்ற உள்ளார்ந்த பிரசன்னத்திற்கு நிபந்தனையாகும். இக்கொடையின் விளைவாக, தந்தையையும் மகனையும் இணைக்கின்ற அன்பினைச் சீடர்கள் தம்முள் கொண்டுள்ளனர் (17:26). இக்காரணத்திற்காக, இறைவனும் அவர்களில் உறைகின்றார் (1 யோவா 4:12).

3. தந்தையின் மகிமையில் பிரசன்னத்தின் முழுமை:-

நமக்கென பவுல் ஆசிக்கின்ற, இந்த ஆண்டவரின் பிரசன்னம் (2 தெச 3:16; 2 கொரி 13:11), நமது அழியக்கூடிய உடலிலிருந்து நாம் விடுவிக்கப்படாதவரையில் முழுமை பெறாது (2 கொரி 5:8). பின்னர், நம்மில் உள்ள ஆவியின் மூலம் உயிர்த்தபின் (உரோ 8:11), எல்லோரிலும் எல்லாமுமாய் உள்ள இறைவனை நாம் காணலாம் (1 கொரி 13:12; 15:28). பின்னர், அவருக்கு அருகில் இயேசு நமக்கென ஆயத்தம் செய்திருக்கும் இடத்தில், அவருடைய மகிமையை (யோவா 14:2-3; 17:24), மனிதரிடையே இறைவனின் உறைவிடமாகிய புதிய எருசலேமின் ஒளியைக் (திருவெளி 21:2-3.22-23) காண்போம். பின்னர், ஆவியினுடைய கொடையின் மூலம் தந்தை மற்றும் மகனுடைய பிரசன்னம் நம்மில் முழுமையடையும் (1 யோவா 1:3; 3:24).

விசுவாசிக்கிற ஒவ்வொருவருக்கும் ஆண்டவர் அளிக்கின்ற பிரசன்னம் இத்தகையதே. ''நான் கதவண்டை நின்று தட்டுகிறேன்'' (திருவெளி 3:20). இப்பிரசன்னமானது ஊனுடலுக்கு எட்டக்கூடியதோ (மத் 16:17), ஒரு குறிப்பிட்ட மக்களுக்கென ஒதுக்கப்பட்டதோ (கொலோ 3:11), ஒரு இடத்திற்கு மட்டுமே கட்டுப்பட்டதோ அன்று (யோவா 4:21). தமது முழுமையைக் கொண்டுள்ள கிறிஸ்துவின் உடலில் அனைவருக்கும் அளிக்கப்பட்ட (கொலோ 2:9) ஆவியின் கொடையாகும் இது (உரோ 5:5; யோவா 6:63). இந்த முழுமையில் நுழைகின்ற விசுவாசியில் அவர் வாழ்கின்றார் (எபே 3:17 தொ). மணமகளுடன் சேர்ந்து ஆவியின் மூலமாக ''வாரும்'' (திருவெளி 22:17) என்று அவருக்குப் பதிலளிக்கின்ற ஒவ்வொருவருக்கும் ஆண்டவர் இக்கொடையை அளிக்கின்றார்.

## இறைவனின் பிள்ளைகள் (CHILDREN OF GOD)

1. 'இறைமகன்' என்னும் ஒருமைச் சொல்லானது முக்கியமாக கிறிஸ்துவிற்கும், பழைய ஏற்பாட்டில் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களின் அரச பிரதிநிதி அல்லது மக்கள் அனைவரையும் மொத்தமாகக் குறிக்கவும் பயன்படுகிறது.

இறைவனின் ''பிள்ளைகள்'' மற்றும் ''புதல்வர்கள்'' என்பனவற்றிற்கு இடையே வேறுபாட்டை வலியுறுத்துவதன் மூலம் நாம் பெறக்கூடியது சிறிதளவே. எந்நிலையிலும் இச்சொல்லானது பழைய ஏற்பாட்டிலும் புதிய எற்பாட்டிலும், பெரும்பாலும் இறைவனுடனான நல்லொழுக்க அல்லது ஆன்மீக உறவினையே குறிப்பிடுகின்றது. ''இஸ்ராயேலர்'' என்று குறிப்பிடும் போதும் உடல்சார்ந்த உறவைக் கடந்து செல்லுகிறது. புதிய ஏற்பாட்டில், விசுவாசிக்கும் புறவினத்தார் வெளிப்படையாக ஏற்றுக் கொள்ளப்பட்டு, விசுவாசியாத இஸ்ராயேலர்கள் விலக்கப்படுவதில் இது முற்றிலும் தெளிவாகிறது. மனித குலம் இறைவனின் பிள்ளைகளாக இருக்கக்கூடிய தகுதியுடையதாக இருந்தாலும், அவர்கள் அப்படி உண்மையில் இருந்ததாக, சில விதிவிலக்குகளைத் தவிர்த்து, இச்சொல்லானது அவர்களுக்குப் பயன்படுத்தப்படுவதில்லை. ஆனால், கிறிஸ்துவிலும், கிறிஸ்துவின் மூல

மாகவும் மட்டுமே மனிதர்கள் இவ்வுறவிற்குள் சுவிகாரமாக ஏற்றுக் கொள்ளப்படவோ அல்லத மீண்டும் பிறக்கவோ செய்கின்றார்கள். மனித இனத்திற்கான இறைவனுடைய மகிமை மிக்க திட்டமானது, கிறிஸ்துவின் மூலம் ஏராளமான பிள்ளைகளை மகிமைக்கு கொண்டுவருவதன் மூலம்- அதாவது, கிறிஸ்துவினுடைய மகனுக்குரிய கீழ்ப்படிதலைப் பிறருக்கு மாற்றுவதன் மூலம்-நிறைவேற்றப்படும். இவ்வாறேயன்றி, வேறெந்த, தானாகே உருவாகும் வேறு எந்த வளர்ச்சியினாலும், ''இறைவனின் பிள்ளைகளுடைய மகிமை மிக்க விடுதலை'' வருவதில்லை (*உரோ 8:21*). இவ்வாறே ''கிறிஸ்துவினுடைய முழு பருவத்தின் அளவை அடைந்து முதிர்ச்சி பெற்ற மனிதனாவோம்'' (*எபே 4:13*).

*2. இறைவனின் பிள்ளைகளின் (மக்களின்) சொற்றொடர்கள்:-* ''பிள்ளைகள்'' மற்றும் ''மக்களுக்கு'' இடையே ஏதாவது வேறுபாடு இருக்குமாயின், அவ்வேறுபாடானது இயற்கை அல்லது தோற்றம் மற்றும் தரம் அல்லது உறவு ஆகியவற்றிற்கிடையே உள்ளது போன்று அழுத்த வேறுபாடு உடையதே. இத்தகைய வேறுபாடானது புதிய ஏற்பாட்டில் மங்கலான நிலையில் கண்டுபிடிக்கப்பட்டாலும், பழைய ஏற்பாட்டில் வேறுபாட்டினைக் குறிப்பிடுவது இயலாததாக உள்ளது. இந்த உறவைக் குறிப்பிட, அழுத்தவேறுபாடுடைய பல சொற்கள் பயன்பட்டுள்ளன.

*3. பழைய ஏற்பாட்டு வழக்கு:-* விவிலிய நூல்களின் இறுதிப் பதிப்பில் குறிப்பிடப்படுவது போன்று, உடல் சார்ந்த முறையில் தந்தை மற்றும் பிள்ளைகளைப் பெற்று, கோத்திரம் அவரினின்று உருவாதல் போன்ற இறைவனைப்பற்றிய யூதரல்லாதோரின் கருத்திற்கு எபிரேயச் சிந்தனையில் இடமே இல்லை எனலாம். *உப 32:6; மலா 2:10; சங் 2:7; 110:3* ஆகிய பகுதிகளுக்கு புறவினத்தாரின் இறைவனைப்பற்றிய கருத்தின் அடிப்படையில் பொருள் கொடுக்கக் கூடுமானால், அது விதிவிலக்கே ஆகும்.

இறைவன், உடல் சார்ந்த முறையில் அல்லாமல், அறஒழுக்க முறையிலேயே தந்தையாகக் கருதப்படுவதே பொது மரபாகும். *ஏச 1:2*-இல் உள்ள குறிப்பானது தந்தையின் அக்கறை மற்றும் பிள்ளைகளின் கல்வி பற்றியதென தெளிவாக உள்ளது.

''பிள்ளைகளைப் பேணினோம், வளர்த்தோம்;

அவர்களோ நம்மை எதிர்த்தார்கள்''.

ஒருவகை உடல் சார்ந்த பொருளில் இல்லாமல், அரைகுறையான இயல்பான நிலையிலில்லாமல், இத்தகைய பொருளிலேயே நாம், ''இஸ்ராயேல் நம் மூத்த புதல்வன்'' (*யாத் 4:22*); ''நீங்கள் உங்கள் கடவுளாகிய ஆண்டவருடைய பிள்ளைகளாக இருங்கள்'' (*உப 14:1*); ''எகிப்திலிருந்த நம் மகனை அழைத்தோம்'' (*ஓசே 11:1*) என்பனவற்றைப் புரிந்துக்கொள்ள வேண்டும். ஓசேயாவில்தான் இச்சொல்லில் ஒழுக்க உட்பொருளானது தனிப்பட்ட விதமாக தெளிவுபடுத்தப்படுகிறது. *ஓசே 1:10*-இல் பதிதம் மற்றும் அவிசுவாசநிலை ஆகியவற்றிற்கான தண்டனையானது நிறைவேற்றப்பட்டு முடிந்து விட்டது என்று கருதப்படும் எதிர்காலத்தில் மட்டுமே, இஸ்ராயேலானது ''உயிருள்ள இறைவனின் மக்கள்' என்று அழைக்கப்படும். ''எம் மக்கள் அல்லர்'' (*ஓசே 1:9*) என்னும் சொற்றொடரில் அழிவு முழுவதும் மாறும் என்ற எதிர்காலத்திற்கான நம்பிக்கை அடங்கியுள்ளது. எனவே, எதிர்கால மீட்பின் காட்சியில்,

இஸ்ராயேலுக்கு நாமே தந்தை

எப்பிராயிமோ நமக்குத் தலைப்பேறான பிள்ளை (*எச 31:9*).

என்று இறைவன் கூறுகிறார்; மற்றும் *ஏச 43:6; 2 கொரி 6:18*-இல் இது சுட்டிக் காட்டப்படலாம். தண்டித்து திருத்தப்பட்டு, தூய்மைப்படுத்தப்பட்டு, இறுதியாகத் திரும்பி வருகின்ற நாடுகடத்தப்பட்டவர்கள் இறைவனுடைய மகன்களாகவும், மகள்களாகவும் குறிப்பிடப்பட்டுள்ளனர் (*ஏச 30:1,9; எச*

3:4.19.22). பாரம்பரிய யூதர்களால் அவர்கள் சபையிலிருந்து விலக்கப்பட்டிருந்தாலும், ஆபிரகாமும் இஸ்ராயேலும் தங்களைச்சொந்தம் பாராட்டாவிடினும், இறைவன் தங்களுடைய தந்தை என்று உரிமைக் குரலெழுப்புபவர்களுடைய இறைவனை நோக்கிய உணர்ச்சியூட்டும் உரையில், ஏசா 63:16-இல் சமய உறவே தெளிவாக உள்ளது (திருமுழுக்கு யோவானின் உரையில் மத் 3:8-9=லூக் 3:8: மனந்திருந்தியவர்க்கேற்ற செயலைச் செய்து காட்டுங்கள். 'ஆபிரகாமே எங்களுக்குத் தந்தை' என்று சொல்லிக் கொள்ளத் துணிய வேண்டாம். இக்கற்களிலிருந்தும் ஆபிரகாமுக்கு மக்களை எழுப்பக் கடவுள் வல்லவர் என்று உங்களுக்குக் கூறுகிறேன்'').

வெளிப்பாட்டு நூல்களில், பின்வரும் வழக்குமுறைகள் குறிப்பிடப்படலாம்; ஞான 2:18-இல், நேர்மையான இறைபற்றுடைய மனிதர், அவனை துன்புறுத்தத் தயாராகும் பகைவர்களால் பழிக்கப்படுகின்றனர். இறைவன் அவரைக் காப்பாற்றி, அவர் இறைவனின் மகன் என்று கூறுவதை நிரூபிக்கிறாரா பார்ப்போம் என்று அவர்கள் கூறுகின்றனர் (சிலுவையில் இயேசுவின் பால் கூறப்பட்ட வசைமொழிகள்; மத் 27: 40). ஞான 5:5-இல் அவர்கள் ஒரு மறுதலிப்பை உரைக்கின்றனர் (ஏச 53:4-இல் உள்ள மனமாற்றத்தைப் போன்று): ''அவருடைய வாழ்வை நாம் மடமை என்று எண்ணினோம், அவர் முடிவு இழிவானதென்று நினைத்தோமே!. கடவுளின் புதல்வர்களுள் அவருக்கு இடம் கிடைத்ததெப்படி?'' மற்ற பகுதிகளில் இறைவனின் மக்கள் என்பவர்கள் புறவின நாடுகளினின்று வேறுபட்ட இஸ்ராயேலர் ஆவார் (எண் 21:29-இல் மோவாபியர் கேமோசின் மகன்களாகவும் மகள்களாகவும் இருப்பதைக் காண்க: மலா 2:11; யூதி 9:4.13; எஸ்த 16:16; ஞான 9:7; 12:19.21; திருவுரை 36:12: தலைப்பேறான மகன்).

2. புதிய ஏற்பாட்டு வழக்கு:-

அ. ஒழுக்க உட்பொருள்:- புதிய ஏற்பாட்டில் இச்சொல் (பிள்ளைகளோ அல்லது புதல்வர்களோ) இஸ்ராயேலுக்கு மட்டும் சாற்றிக் கூறும் குறுகிய பொருள் கைவிடப்பட்டு ''இறைவனின் இஸ்ராயேலுக்கு'' (ஏச 63:16) சாற்றிக் கூறப்படும் அளவுக்கு இச்சொல்லின் ஒழுக்கப்பொருள் மிக உறுதியாக அமைக்கப்பட்டதாகஉருவாகிறது. ஓசே1:10-இல் எடுத்துக் கூறப்பட்டு, புறவினத்தாரை ஏற்றுக்கொள்வதற்குச் சாற்றிக் கூறப்படும் உரோ 9:7-8.25-36-இல் இது குறிப்பிடத்தக்க வகையில் காணப்படுகிறது (கலா 3:7: ''விசுவாசத்தில் வாழ்கிறவர்களே ஆபிரகாமின் மக்கள்''). மாறுபட்ட நிலையில் ஆழ்ந்த ஆன்மீக மனப்பான்மையினின்று விலக்கப்பட்டு சாதாரண தேசிய உரிமையானது யோவா 8:41-42. 44-இல் கடுமையாக மறுக்கப்படுகிறது. ''எங்களுக்கு ஒரே தந்தை உண்டு; கடவுளே அவர்''. இயேசு அவர்களை நோக்கி கூறியது ''கடவுள் உங்கள் தந்தையாயிருப்பின் எனக்கு அன்பு செய்வீர்கள்..அலகையே உங்கள் தந்தை'' (பிந்தைய சொற்றொடருக்கு காண்க: மத் 13:38; ''தீயோனுடைய மக்கள்''; அ.ப. 13:10: ''அலகையின் வழிவந்தவனே''). மேலே குறிப்பிடப்பட்ட திருமுழுக்கு யோவானின் சொற்களுடன் இவை ஒப்பிடப்படலாம் (மத் 3:8-9 இ).

ஆ. இயேசுவின் வாக்குகள்:- பவுலின் திருமுகங்களிலிருந்து சில பகுதிகளில், இயேசுவின் இறப்பு மற்றும் உயிர்ப்பைத் தொடர்ந்து, கிறிஸ்தவ புறவினத்தாரை அனுமதிப்பதன்மீது பிரச்சினைகளின் சிந்தனைகள் காணப்படுகின்றன. யோவா 8-இல் ஏற்கனவே சுட்டிக்காட்டப் பட்ட பகுதியானது இதே முத்திரையைக் கொண்டிருக்கிறது என்று கூறலாம். இதனுடைய கருத்தானது, பவுலின் எண்ணத்திற்கு குறிப்பிடத்தக்க முறையில் ஒத்த சொற்களைக் கொண்டுள்ளது: ''வீட்டில்அடிமைக்கு நிலையான இடமில்லை; மகனுக்கே எப்பொழுதும் இடமுண்டு. எனவே, மகன் உங்களுக்கு விடுதலையளித்தால்தான். உங்களுக்கு உண்மையான விடுதலை கிடைக்கும்'' (யோவா 8:35-36). இத்தகைய பகுதிகளில், உயிர்த்தெழுதலுக்கு பிற்பட்ட திருச்சபையின் எண

ணம் மனப்போராட்டம் ஆகியவற்றின் எதிரொலியை காணக்கூடுமாயின், இயேசுவினுடைய பணியின் உண்மையான நிலைக்கு இயல்பாகவே பொருந்துவதாக தோன்றுகின்ற பழைய ஏற்பாட்டுச் சிந்தனையைத் தொடர்ந்து, அதை இன்னும் ஆழப்படுத்துகின்ற சொற்கள், ஒத்தமை நற்செய்திகளிலும் உள்ளன. இத்தகைய பகுதிகள், மத் 5:9: ''சமாதானம்செய்வோர் பேறுபெற்றோர், ஏனெனில், அவர்கள் இறைவனின் மக்கள் எனப்படுவர்'' (அவர்கள் வானதூதர்களாக மாற குறிக்கப்பட்டுள்ளனர் என்று லூக் 20:36-இல் வருவதுபோல் பொருள் அளிக்க இடமளிக்கிறது). மற்றும், மத் 5:44-45; ''நானோ உங்களுக்குச் சொல்லுகிறேன்: உங்கள் பகைவர்களுக்கு அன்பு செய்யுங்கள்; உங்களைத் துன்புறுத்துவோருக்காகச் செபியுங்கள். அப்பொழுது வானகத்திலுள்ள உங்கள் தந்தையின் மக்களாயிருப்பீர்கள். அவர் நல்லோர் மேலும் தீயோர் மேலும் தம் கதிரோனை உதிக்கச் செய்கிறார்''. தங்களது அயலார் மீது ஆழ்ந்த அக்கறையுள்ளவர்களாகவும், குணத்தினால் இறைவனுடனே சேர்ந்தும் உள்ள நடுநிலை தவறாத நல்லோர் இவர்களே. காண் லூக் 6:35 (''உன்னதரின் மக்கள்'').

இக்கருத்தை, கிறிஸ்தவர்கள் என்பவர்கள் தந்தை கவனம் செலுத்தாத வேசிப்பிள்ளைகளாக இல்லாமல், விண்ணக தந்தையின் கவனமுள்ள கண்டிப்பின் கீழுள்ள, இறைவனின் உண்மையான மக்கள் என்பதற்கு துன்பம் ஓர் அடையாளமாக விளக்கப்படுகின்ற எபி 12:5-8-இல் உள்ள சொற்களோடு ஒப்பிடலாம். இயேசுவின் மற்றொரு போதனையும் உண்டு. அதாவது, மத் 12:48-50 (மாற் 3:33-35; லூக் 8:21); ''யார் என் தாய்? யார் என் சகோதரர் என்று சொல்லி, தம் சீடர் பக்கம் கையைக்காட்டி, 'இதோ, என் தாயும் என் சகோதரரும். வானகத்திலுள்ள என் தந்தையின் விருப்பப்படி நடக்கிறவன் எவனோ அவனே என் சகோதரனும் சகோதரியும் தாயும் ஆவான்''. மகனுடைய கீழ்படிதல், மற்றும் எல்லா சகோதரரிலும் முதல்பேறான இயேசு ஆகிய பவுலின் கருத்துக்கள் இங்கே உள்ளன. மீண்டும் மத் 11:25; லூக் 10:21-22-இல் உள்ள புகழ்பெற்ற சொற்றொடரானது இதே எண்ணத்தை நினைவூட்டுகிறது; ஏனெனில், இங்கு கிறிஸ்து, மகன் என்ற தனிப்பட்ட நிலையில் மற்றவர்களுக்கு இறைவனின் தந்தை நிலையை வெளிப்படுத்தக் கூடியவராக உள்ளார். இவ்வாறு, அவர்களும் சுவிகாரப் பிள்ளைகளாகிறார்கள்.

இ. சொல்லின் வரையறுக்கப்பட்ட பொருள்:- பழைய ஏற்பாடானது தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களைவிட, (அல்லது ஒரளவு சிறப்பான பொருளில் அவர்களது துணையாளர்களையும் சேர்த்து) மற்றவர்களை இறைவனின் மக்களாகப் பார்ப்பதைவிட மேற்பட்ட நிலையில், புதிய ஏற்பாடானது அனைத்து மக்களும் இறைவனின் பிள்ளைகள் என்னும் கோட்பாட்டினை அளிப்பதாகத் தெரியவில்லை. லூக்காவின் தலைமுறை அட்டவணையில் ஆதாம் கடவுளின் மகன் என்பது உண்மையே (3:38). மற்ற மனிதர்கள் அனைவரும் அவரினத்தைச் சேர்ந்தவர்களே (அ.ப. 17:28). ஆனால், இப்பகுதிகளை எடுத்துக்காட்டாகப் பயன்படுத்த முடியாது. யோவா 10:35-இல் சங்.82:6-யை விநோதமான முறையில் எடுத்துக் கூறல் (சங்கீதத்தில் ''உனனதரின் மக்கள்'' என்பதுடன் தொடரக் கூடிய ''நீங்கள் தேவர்கள்'') இறைவனின் வார்த்தை யாருக்கு வந்ததோ அவர்ளுக்கு மட்டுமே உரித்தாக்கப்பட்டுள்ளது. இவ்வாறு, எல்லா மக்களும் இறைவனின் பிள்ளைகளாகக் கூடியவர்களாக இருந்தாலும், உண்மையில் சுவிகரிக்கப்பட்டவர்கள், அல்லது ஈன்றெடுக்கப்பட்டவர்கள் அல்லது புதிதாய் பிறந்தவர்கள் (யோவா 3:3; 1 பேதுரு 1:3; 2:2) அல்லது இறைவனால் பிறப்பளிக்கப்பட்டவர்கள் (யாக் 1:18) மட்டுமே இறைவனின் பிள்ளைகளாகின்றனர்.

சுவிகாரம், ஈன்றெடுத்தல், பிறப்பு போன்ற பலவேறு உருவங்கள், பிள்ளைகள் மற்றும் புதல்வர்களுக்கிடையே புரிந்துக் கொள்ளக்கடிய வேறுபாடு இருப்பதாகச்

சுட்டுகின்றன. ''பிள்ளைகள்'' என்பது பிறத்தல் அல்லது ஈன்றெடுத்தல் என்னும் உருவகங்களுக்கும், ''புதல்வர்கள்'' என்பது சுவிகரித்தல் மற்றும் தகுதியளித்தல் என்னும் உருவகங்களுக்கும் பொருத்தமானதாக உள்ளது. ஆனால், இவற்றிற்கு இடையிலுள்ள வேறுபாட்டை வலியுறுத்துவதில் எவ்வித பயனுமில்லை. ''புதல்வர்கள்'' மற்றும் ''பிள்ளைகள்'' ஆகிய இரண்டு சொற்களையுமே பவுல் பயன்படுத்துகிறார். யோவான் ''பிள்ளைகள்'' என்ற சொல்லை மட்டுமே உபயோகிக்கிறார் (கிறிஸ்துவைப் பற்றிய குறிப்புகளையும் யோவா *8:35*-யையும் தவிர்த்து) இவ்வாறு பயன்படுத்துவது நடையைச் சேர்ந்ததாக இருக்கலாம்.

ஈ. இறைவனின் தயவால் பிள்ளைகள் ஆகுதல்:- இச்சொல்லின் வரம்புக்குட்பட்ட பொருளில் புதிய ஏற்பாட்டின் ''இந்த புதல்வர்கள்'' என்ற கருத்தின் மிகச்சிறப்பான கூறை மிக நெருங்கி ஆய்வு செய்யவேண்டும். அக்கூறு மகன் என்ற நிலை தன்மையாலும் உள்ளார்ந்த பண்பாலும் கிறிஸ்துவுக்கு மட்டுமே உரியது. அவர் இடையாளராக இருந்து மனிதனுக்கு அளிக்கலாம். அவரில் மட்டுமே அது மனிதனுக்கு உரிமையாகக் கூடும் என்பதாகும். இவ்வாறு, யோவா *1:11-12*: ''தமக்குரிய இடத்திற்கு வந்தார்; அவருக்குரியவர்களோ அவரை ஏற்றுக் கொள்ளவில்லை. ஆனால், அவர் தமது பெயரிலே விசுவாசம் வைத்துத் தம்மை ஏற்றுக் கொண்ட அனைவருக்கும் கடவுளின் மக்களாகும் உரிமை அளித்தார்''; அல்லது, பவுலின் சொற்களில் (உரோ *8:29*): ''கடவுள் யாரை முன்பே தேர்ந்து கொண்டாரோ, அவர்கள் தம் மகனின் சாயலுக்கேற்ற உருவைத் தாங்கும்படி முன்குறித்திருக்கிறார்; சகோதரர் பலருள் தம் மகன் தலைப்பேறானவராய் இருக்க வேண்டுமென்றே இப்படிக் குறித்தார்'' (காண் எபி *2:10*).

அதே பொருளை மற்றொரு முறையில் கூறும் விதமாக பவுல் (அடிக்கடி இல்லாவிட்டாலும்) ''சுவிகாரம்'' என்ற ஒப்புமையை உபயோகிக்கிறார். அடிமை நிலையினை மகனின் நிலையோடு ஒப்பிட்டு வேறுபடுத்தி இயேசுவே உரைத்த மகனுக்குரிய கீழ்ப்படிதலின் கூக்குரலை உரைக்கக் கூடியதானது ''பிள்ளைகளாகும் தேவ ஆவியின்'' (அல்லது சுவிகாரத்தைக் கொண்டு வருகின்ற ஆவியின்) கொடையே என்றும் பவுல் கூறுகின்றார்; ''பிள்ளைகளாக்கும் தேவ ஆவியையே பெற்றுக் கொண்டீர்கள் (சுவிகாரத்தைக் கொண்டு வருகின்ற ஆவி). அந்த ஆவியினால் நாம், ''அப்பா, தந்தாய்'' எனக் கூப்பிடுகிறோம். நாம் இவ்வாறு கூப்பிடும் போது தேவ ஆவியானவரே நாம் கடவுளின் பிள்ளைகள் என்று சான்று பகர்கிறார்'' (உரோ *8:15-16*). கலா *3:23-4:7*-இல் இந்த மகனுக்குரிய மனப்பான்மையானது விசுவாசத்தினுடைய முழு உணர்வுள்ள பதிலுடன் இணைந்தே செல்கின்றது என்பதைக் காட்டும் விதமாக, இந்த சிந்தனையானது முழு விவரத்துடன் அமைந்துள்ளது. எனவே, பிலி *2:15*-இல் மற்றவர்களுக்கு மிகவும் மாறுபட்ட நிலையில் கிறிஸ்தவர்கள்தான் நேர்மையற்ற தவறான போக்குடையவர்களின் நடுவில், குற்றமற்ற மாசற்ற இறைவனின் பிள்ளைகள் (உப *35:5*-இல் உள்ள, அவரது தகுதியற்ற பிரதிநிதிகளாகிய இறைவனின் குற்றமற்ற பிள்ளைகளை மறைவாகச் சுட்டிக்காட்டி) என்று விவரிக்கப்படுகின்றனர்.

''ஞானஸ்நான மறுபிறப்பு'' என்பது இவ்வுறவினுடைய அருட்சாதன விளம்பலாகும். யோவா *3:5*-இல் வரும் நீர் மற்றும் ஆவியை மறுபிறப்புடன் இணைப்பதானது அதனில் ஒரு மறைவான சுட்டிக்காட்டலைக் காணச்செய்கிறது. மற்ற விதத்தில் இப்பதத்திற்கு நெருங்கி வரும் புதிய ஏற்பாட்டுப் பகுதி தீத் *3:5*-இல் உள்ளது: ''புதுப்பிறப்பைத் தரும் முழுக்கினாலும் புத்துயிர் அளிக்கும் பரிசுத்த ஆவியினாலும்''; ஞானஸ்நானக் கருத்து சுவிகாரச் சுட்டிக்காட்டலைக் கொண்டிருந்தால் 1 பேதுரு *3:21:21*-வும் இதனுடன் சேர்க்கப்பட வேண்டும்.

1 யோவா *3:1*-இல் சில விளக்கவுரையாளர்கள், சாதாரண சுவிகாரத்திற்கும் தன்மை

யால் வரும் உறவு முறைக்கும் இடையில் சிறிது வேறுபாட்டினைக் காண்கின்றனர் என்பதும் கூறப்பட வேண்டும்: ''பரம தந்தை நம்மிடம் காட்டிய அன்பு எவ்வளவு என்று பாருங்கள்! நாம் கடவுளின் மக்கள் என்று அழைக்கப்படுகிறோம். அவருடைய மக்களாகவே இருக்கிறோம்'' ஆயினும், மற்றவர்கள் ''அவருடைய மக்களாகவே இருக்கிறோம்'' என்பதை வெறுமனே ''அழைக்கப்படுகிறோம்'' என்பதைவிட அடுத்த வசனத்திலேயே குறிப்பிடப்பட்டுள்ள வருங்கால நிலையோடு சேர்த்து, வேறுபடுத்தும் முறையில் கையாளுவர்.

உ. மகன் தன்மையும் எதிர்காலமும்:- கிறிஸ்தவர்கள் ஏற்கனவே இறைவனின் பிள்ளைகளாக இருந்தாலும், இந்நிலையின் முழுமையான வெளிப்பாடு இன்னும் வர வேண்டி உள்ளது (அல்லது கிறிஸ்துவின் இன்னும் முழுமை வெளிப்பாட்டில் உறுதிப்பாடு எதிர்பார்க்கப்படுகிறது) என்னும் அறிவிப்பை 1 யோவா 3:1-இல் காண்கிறோம். கிறிஸ்து தோன்றும்போது இவ்வாறு நிகழும் இறைவனுக்கு மகனாய் இருக்கும் தன்மையானது, இறுதியாக வெளிப்படுத்தப்பட வேண்டிய உயர்ந்த முடிவுடன் ஊழைக் கொண்டுள்ளது என்னும் புதிய ஏற்பாடு கோட்பாட்டுடன் ஒத்துக்போகிறது. இது ''இறைவனின் பிள்ளைகளுக்குரிய மகிமையும் விடுதலையும்'' என உரோ 8:21-இல் விவரிக்கப்படுகின்றது. இச்சூழ்நிலையில், இது நம்பிக்கையிழப்பு, அழிவு மற்றும் மரணத்திற்கு அடிமைப்பட்டிருக்கும் நிலையிலிருந்து விடுதலை அடைவதை உணர்த்துவதாகத் தெரிகிறது. இவ்விடுதலையானது, உண்மையான மகன் தன்மையினுடைய மாட்சிமை பெறப்பட்ட உடனே பலரறிய வெளிப்படுத்தப்படும். இதே ஊழை ''புதல்வர் பலரை மகிமைக்கு அழைத்துச் செல்லுதல்'' என எபி 2:10 விவரிக்கின்றது. முழுமையாக கீழ்ப்படிந்தவராகவும், இறைவனுடைய நிறைவான மகனாகவும் உள்ள கிறிஸ்து வழியைத் தொடங்கி வைத்துள்ளார் (எபி 2:10-18; 5:8-9). அவர்களுக்கென்ற இறைவனின் திட்டம் முழுமையாக நிறைவேறுதலுக்கு அவரில் மற்றவர்களைக் கொண்டு வருவதென்பது இன்னும் மீதமுள்ளது. இத்தகைய நம்பிக்கையைத் தனிப்பட்ட நபர்களுக்கு எடுத்துக்கூறி, வெற்றிபெறும் ஒவ்வொருவனும் இறைவனின் மகன் ஆவான் என திருவெளி 21:7 வாக்களிக்கின்றது. இதுவே கிறிஸ்தவனுக்குச் சாற்றிக்கூறப்படும் மெசியாவின் உறுதிமொழியாகும் (2 சாமு 7:14). ஆனால் எபே 4:13-இல் இந்நம்பிக்கையானது முழுவளர்ச்சி அடைந்த முதிர்ச்சியின் உயர்ந்த எதிர்பார்ப்பாகத் தோற்றம் பெற்றுள்ளது; ''இறுதியாக நாம் எல்லோரும் கடவுளின் திருமகனைப்பற்றிய விசுவாசத்திலும் அறிவிலும் ஒருமைப்பாட்டை எய்துவோம், கிறிஸ்துவினுடைய முழுப்பருவத்தின் அளவை அடைந்து முதிர்ச்சிபெற்ற மனிதனாவோம்'' இதுவே மனித இனத்தினுடைய வரவிருக்கும் காலமாக இருக்கும்.

## இறைவனின் பெயர்கள் (NAMES OF GOD)

இறைவனின் பெயரைப் பற்றி அறிந்திருப்பது, இறைவன் பற்றிய விவிலியத்தின் கோட்பாட்டைப் புரிந்து கொள்ள மிகவும் அவசியமானது. விவிலியத்தின் கேள்வி இறைவன் இருக்கிறாரா என்பதன்று. மாறாக இறைவன் யார்? எப்படிப்பட்டவர்? என்பதேயாகும். இறைவன் இருக்கின்றார் என்ற உண்மையை விவிலியம் விளக்குவதில்லை. மாறாக இறைவன் எப்படி மனிதனிடம் உறவு கொண்டுள்ளார் என்பதை விளக்குகிறது. இஸ்ராயேல் மக்களின் இறைவன் யாவேயாவார். 'யாவே' என்னும் பெயரைத் தவிர வேறுபல பெயர்களும் விவிலியத்தில் அவருக்கு வழங்கப்படுகின்றன. ஒருவரின் பெயர், அவருடைய முழுத் தன்மையை விளக்கிக் காட்டும். ஒரு பெயர் ஒரு நபரின் முழுமையான தோற்றத்தைக்கூட எடுத்துக்காட்டலாம். மோசேக்குக் கடவுள் தம்மை வெளிப்படுத்தத் தமது பெயரைச் சொல்லுகிறார் (யாத் 3.) கடவுளின் பெயரிலிருந்தே அவரை நாம் அறிந்து கொள்கிறோம். விவிலியத் திருநாட்டின் அண்டைய நாடுகளில் பல்வேறு கடவுள்களின் பெயர்கள் வழங்கப்பட்டு வந்தன. இப்பெயர்களுக்

கிடையில் இஸ்ராயேல் மக்களும் தங்கள் கடவுளுக்கென ஒரு பெயரை அறிந்திருந்த னர். கடவுளின் முழுத்தன்மையும் அவரு டைய பெயர்களில் வெளிப்படுகின்றது (*யாத் 23:20-21*). கடவளின் பெயர் சக்திமிக்க தாகவும், புனிதனமானதாகவும், அதிகாரம் கொண்டதாகவும் காணப்படுகிறது (*யாத் 20:7; உப 5:11*). கடவுளின் பெயர் மக்களி டையே அவர் கொண்டுள்ள பிரசன்னத்தைக் குறிக்கிறது. கடவுளின் பெயர் மகிமை நிறைந்ததாகும். கடவுளின் பெயரை வெளிப் படுத்தியவர் கடவுளே. மனிதனோடு உறவு கொள்ள விழையும் கடவுளின் திருவெளிப் பாடே அவரது பெயராகும். ஒரு பெயருக் கும், அப்பெயரைத் தாங்கிய நபருக்கும் இடையேயான உறவு மிகவும் நெருக்கமான தாகும். கடவுளின் பெயரை அறிவது அவரை அறிவதாகும் (*சங் 9:10; 91:14*). இயேசுவின் பணி இறைவனின் பெயரை வெளிப்படுத்துவதேயாகும் (*யோவா 17:6, 26*).

கடவுளின், 'யாவே' என்னும் பெயர் மோயீசன் வழியாக அருளப்படுகிறது. யாவே என்பது மீட்பின் கடவுள் எனப் பொருள்பட்டது. யாவே, தாம் ஆபிரகாமின் கடவுள், ஈசாக்கின் கடவுள், யாக்கோபின் கடவுள் எனக் கூறுகிறார் (*யாத் 6:2-3*). யாவே என்னும் பெயருக்கு, உங்களுக்கு உதவ உங்களோடு இருக்கிறேன் என்பதா கும். (காண்க:யாவே). யாவே என்னும் இப்பெயரைத்தவிர கடவுளுக்கு விவிலியத் தில் வேறுபல பெயர்களும் வழங்கப்படு கின்றன. அவை பொதுவாகக் கடவுளின் தெய்வீகத்தன்மையின் பட்டப் பெயர்களா கவே அமைந்துள்ளன.

கிழக்கித்திய மக்கள் பொதுவாக 'ஏல்' என்னும் சொல்லைக் 'கடவுள்' என்னும் பொருளில் பயன்படுத்தினர். எனவே கட வுளை ஒரு பெயரிட்டு அழைத்தால் 'எல்' என்னும் சொல் அப்பெயருக்கு முன்னால் இணைக்கப்படும். யாவேயுக்கு, ''ஏல்'' என்று ஆரம்பிக்கக் கூடிய வேறுபல பெயர்க ளும் உண்டு.

*1. ஏல் சத்தாய்:* இது 'எல்லாம் வல்லவர்' கடவுள் என்னும் பொருளில் பயன்படுத்தப் பட்டது. மூதாதையர்களின் காலங்களில், யாவேக்குப் பதிலாகக் கடவுளுக்கு இப்பெ யர் வழங்கப்பட்டது. 'மலைகளில் ஒருவர்' எனவும் இப்பெயர் பொருள்பெற்றது.

*2. ஏல் எலியோன்:* இது 'உயர்த்தப்பட்ட வர்' கடவுள் என்னும் பொருளில் பயன்ப டுத்தப்பட்டது. கடவுள்களிலேயே உயர்த்தப் பட்டவர் இவர் எனப் பொருள்பட்டது. மெல்க்கிசதேக்கு ஏல் எலியோனின் குருவா வார் (*ஆதி 14*).

*3. ஏல் ஓலாம்:-* இது 'முடிவில்லாதவர்' கடவுள் என்னும் பொருளில் பயன்படுத்தப் பட்டது (*ஆதி 21:33*). உயிருள்ள கடவுள் எனவும் இது பொருள்பட்டது. யாவே முடி வில்லாக் கடவுள் என அழைக்கப்படுகிறார் (*ஏச 40:28*).

*4. ஏல் பெத்தேல்:-* கடவுள் பெத்தல் எனும் இடத்தில் தம்மை வெளிப்படுத்தி யதை இது குறிக்கும் (*ஆதி 35:7*).

*5. ஏல் ராய்:* 'கடவுள் என்னைப் பார்க்கி றார்' என்ற பொருளில் இப்பெயர் கடவு ளுக்கு வழங்கப்பட்டது (*ஆதி 16:13*).

*6. ஏல் பெரித்:* 'உடன்படிக்கையின் கட வுள்' என இது பொருள்பட்டது (*நீதி 9:46*).

*7. ஏல் எல்லோகே இஸ்ராயேல்:* ''ஏல், இஸ்ராயேலின் கடவுள் ஆவார் என இது பொருள்பட்டது (*ஆதி 33:19-20*).

கடவுளுக்கு எலோகிம் என்ற பொதுப் பெயரையும் விவிலியம் குறிப்பிடுகிறது. இது தவிர எலோவா, பாகால், ஆதோன் போன்ற பெயர்களும் சில இடங்களில் பயன்படுத்தப்படுகின்றன. மேற்கூறிய பெயர்களைத் தவிர, கடவுளைக் குறிக்கப் பல நபர்களும் பொருள்களும் உருவமாகப் பயன்பட்டுள்ளன.

*1. பாறை:-* யாவே பாறையாக வருணிக் கப்படுகிறார் (*ஏச 30:29; ஆதி 49:24*). பாறை

என்பது வலிமை மற்றும் நிலையானது என் பதன் சின்னமாகும். எனவே பாறை இறைவ னின் வலிமையையும், நிலையான நிலை யையும் குறிக்கிறது.

*2. தந்தை,சகோதரன், உறவினன்:- கடவுள் தந்தையாகவும் (எண் 1:9), சகோதரனாகவும் (எண் 1:12), உறவினனாகவும் (எண் 1:12) கூறப்படுகின்றார்.*

*3. அரசன், நீதிபதி, மேய்ப்பன்:- கடவுள் இஸ்ராயேலின் அரசனாகவும் (நீதி 8:23) நீதிபதியாகவும் (ஆதி 18:25), மேய்ப்பனாக வும் (ஏச 40:11) கூறப்படுகிறார்.*

இஸ்ராயேலின் கடவுள் உயிருள்ள கடவு ளாகவும் *(1 சாமு 17:26. 36; 2 அர 19:4.16; எரே 10:10)*, தொடக்கமும் முடிவுமாகவும் *(ஏச 44:6; 48:12) ''என்றும் வாழ்ந்தவர்'' என்றும் (7:9, 13, 22) கூறப்படுகிறார்.*

**இறைவனின் மக்கள்** *(PEOPLE OF GOD)*

பழைய ஏற்பாட்டில் யாவேக்கும் அவரு டைய மக்களுக்குமிடையே நிலவிய தனித்து வமிக்க உறவுமுறையினை சுட்டிக்காட்டு கின்ற பல்வேறு சொற்றொடர்களில் ஒன்று *(எண் 11:29; 16:41; நீதி 5:11.13; 1 சாமு 2:24; 2 சாமு 6:21; 2 அர 9:6; செப் 2:10; நீதி 20:2; 2 சாமு 14:3)*; அதையொத்த பொருளில் புதியஏற்பாட்டிலும் பயன்படுகிறது.

*1. பழைய ஏற்பாடு:-* இஸ்ராயேலானது யாவேயின் ''சொத்து, உடைமை, உரிமைச் சொத்து'' *(யாத் 19:5; உப 4:20; 7:6; மலா 3:17)*; அவரது ''ஊழியன் *(சங் 135:14; ஏச 48:20)*; அவரது ''மகன்'' *(யாத் 4:22-23; ஓசே 11:1)*; அவரது ''மந்தை'' *(சங் 95:7)*; அவரது ''புனித மக்கள்'' *(உப 14:2; 28:9; ஏச 62:12)*. ''இறைவனின் மக்கள்'' என்னும் பதம் சில முறையே தோன்றினாலும், மக்கள் என்னும் சொல்லானது உடைமை உரிச்சொல்லுடன் (''எனது மக்கள்'', ''உமது மக்கள்'', ''அவ ரது மக்கள்'') அடிக்கடி வருகின்றது.

''யாவேயின் மக்கள்'' என்னும் பதம், பொதுவான விரோதிக்கு எதிராக பாதுகாப் புப் போர் புரிய ஒன்று சேர்ந்த உடல் வலிமையுள்ளவர்களின் கூட்டத்தினைக் குறிப்பதாக, முடியாட்சிக்கு முன்னர் இனக் கூட்டாட்சிக்காலத்தில் புனிதப் போரின் வழிபாட்டு அமைப்பில் தோன்றியிருக்க லாம் *(நீதி 5:11. 13; 20:2)*, இந்த அமைப்பிற்கு பின்னால், தனித் தன்மையுடைய உடன்ப டிக்கை உறவு உள்ளது. இதன்படி வரலாற் றில் சில குறிப்பிட்ட வலிமை மிக்க செயல்க ளின் மூலம் இஸ்ராயேல் மக்களை ஏற்ப டுத்தி அவர்களுடன் உடன்படிக்கை செய்து கொண்ட யாவேயை விசுவாச அறிக்கை செய்தனர் *(உப 26:5-9; யோசு 24:2-13)*. உடன்படிக்கை சட்டத்திற்குப் பிரமாணிக்கத் தோடு கூடிய இவ்வுடன்படிக்கையின் வழி பாட்டுப் புதுப்பித்தல், தொன்மையான இஸ் ராயேலின் வழிபாட்டின் மையமாக அமைந் திருந்ததாகத் தெரிகிறது.

உப 4 *(யாத் 19:4-6; உப 7:6-12; 32:8; சங் 135)* இஸ்ராயேலோடு யாவே கொண்டிருந்த உறவின் தன்மையை ஏழாவது நூற்றாண்டு இறையியல் சொற்களில் எடுத்துக் கூறுகி றது. இஸ்ராயேலின்மீது இறைவன் அன்பை வெளிப்படுத்தும் அளவிற்கு அதனில் கவரக் கூடியதாகவோ *(உப 7:7)* அல்லது நற்குணமு டையதாகவோ *(9:5-6)* ஒன்றுமில்லாவிடி னும், அன்பில் உருவாக்கப்பட்ட அவரு டைய மகிமையான தேர்வின் காரணமாக *(4:37; 7:6; 14:2; சங் 135:4)*, இஸ்ராயேல் யாவேயின் உடைமையாக உள்ளது *(உப 4:20)*. உடன்படிக்கையின் வாக்குறுதிகளை இஸ்ராயேல் அனுபவிப்பதென்பது கடமை களுக்கு பிரமாணிக்கமாயிருக்க வேண்டும் என்ற நிபந்தனைக்கு உட்பட்டுள்ள நிலை யில் *(4:40)*, யாவே தமது உடன்படிக்கைக்கு பிரமாணிக்கமாக உள்ளார் *(4:31)*.

தாவீது மற்றும் சாலமோனுடைய பேரர சின் பரந்த மாட்சிமையானது, இறைவ னோடு இஸ்ராயேல் கொண்டிருந்த சிறப் பான உறவுமுறையை, அதனுடைய வாழ் வின் அடித்தளமாகவும் விதிமுறையாகவும் சுருக்கித் தருவதாகத் தோன்றும்போது, ஒன் பதிலிருந்து ஏழாவது நூற்றாண்டு வரையி

லான இறைவாக்கினர்கள், இவ்வுறவுமுறையானது இஸ்ராயேலைத் தீர்ப்புக்குள்ளாக்கியது என்று போதித்தனர்; இஸ்ராயேலின் பிரமாணிக்கமின்மையால் உடன்படிக்கையானது முறிக்கப்பட்டு விட்டது; எனவே இனிமேல் அவர்கள் ''என் மக்கள்'' அல்லர் (ஓசே 1:9; உப 4:27; ஏச 1:10; ஆமோ 3:2).

ஆயினும், ஆண்டவரின் விசுவாசம் மாறாததாக உள்ளது (ஓசே 2; உப 4:31). மனந்திருந்திய ''எஞ்சியோர்'' ஆண்டவரின் மக்கள் என்று இஸ்ராயேல் மீண்டும் அமைக்கப்படுதலை இன்னும் எதிர்பார்க்கலாம் (ஓசே 2:23; எரே 31:31-34; ஏச 11:16-20). அடிமைத்தனத்திற்கு பிற்பட்ட இறைவாக்குகளில் மீண்டும் அமைக்கப்படுதல் பற்றிய கோட்பாடானது, எல்லா நாடுகளையும் உள்ளடக்குமுறையில் சில நேரங்களில் நாட்டு எல்லைகளையும் முறித்துக் கடந்து செல்கிறது (செக் 2:10-12; ஏச 45:18-25; 49:6; 55:4-7). ஆனால் இத்தகை உலகவியலான பொதுமைப்பண்புக்கு எதிராக ஒரு வலுவான ஒதுங்கியிருக்கும் சமயம் போக்கு எழுந்தது; பிற்கால யூதத்துவத்தின் வழிகாட்டும் கூறாக அமைந்தது.

2. புதிய ஏற்பாடு:- ''இறைவனின் மக்கள்'' மற்றும் அது தொடர்பான பதங்கள், ''பழைய இஸ்ராயேலை'' விவரிக்க பயன்படடிருக்கலாம் (எபி 11:25; மத் 1:21; லூக் 1:68; உரோ 11:1-2). ஆனால், முடிவான புதிய ஏற்பாட்டு வழக்கு, இயேசு கிறிஸ்துவின் மீது கொண்ட விசுவாசத்தில் அமைக்கப்பட்ட திருச்சபையோடு இறைவனின் மக்களை ஒன்றாக்குகிறது (உரோ 9:25-26; 2 கொரி 6:14; தீத் 2:14; எபி 8:10; 1 பேதுரு 2:9-10; திருவெளி 21:3). அதே போன்ற பழைய ஏற்பாட்டு நிறைவேறல் என்ற இதையொத்த பணித்திட்டத்தில், புதிய ஏற்பாடானது திருச்சபையை உண்மையான இஸ்ராயலாகவும் (உரோ 9:6; 1 கொரி 10:18; கலா 6:16), ஆபிரகாமின் உண்மையான வித்தாகவும் (கலா 3:29; உரோ 9:7-8), உண்மையான விருத்தசேதனமாகவும் (பிலி 3:3) மற்றும் உண்மையான ஆலயமாகவும் (1 கொரி 3:16) காண்கிறது.

**இறைவனின் மலை, யாவேயின் மலை** (MOUNTAIN OF GOD, OR YAHWEH)

கடவுள் வசிக்கும் இடங்களைப் பற்றிய கானானியர் மற்றும் மெசபொத்தாமியர்களின் நம்பிக்கைகளை நினைவுபடுத்தும் முறையில், இஸ்ராயேலின் இறைவன் தங்கியுள்ள, அல்லது தமது மக்களுக்கு தமது பிரசன்னத்தை அவர் அளித்த இடத்தினை அவர்கள் பெரும்பாலும் மலை என்றே குறிப்பிட்டனர். ஆனால், எப்போதும் ஒரே குறிப்பிட்ட மலையினை அவர்கள் குறிப்பிடவில்லை. சீரியப்படையின் தளபதிகள், மலை நாட்டில் இஸ்ராயேலர்களிடம் தாங்கள் தோல்வியுற்றதற்குக் காரணம், கனானியத் தெய்வங்களைப்போன்று இஸ்ராயேலின் இறைவனும் ஒரு மலை தெய்வமாக இருப்பதே என்று பென்-காதாதிற்கு அறிவுறுத்துகின்றனர் (1 அர 30:23). தொன்மையான உலகில், தேவர்களின் இல்லங்களாக கருதப்பட்ட மலைகள், வழிபாட்டு இடங்களாகவும் கருதப்பட்டன (உப 12:2); அவ்வாறே, இஸ்ராயேலிலும், இறைவனுடன் தொடர்பு கொண்டிருந்த மலைகள், வழிபாடு மற்றும் திருயாத்திரை இடங்களாவும் இறைமகிமைத் தோற்றத்திற்குரிய இடங்களாகவும் கருதப்பட்டன.

பழைய ஏற்பாட்டில் இரண்டு மலைகள் ''இறைவனின் மலை'' அல்லது ''ஆண்டவரின் மலை'' என்று அறியப்படுகின்றன; ஒன்று சீனாய் அல்லது ஓரேபு (யாத் 3:1; 4:27; 18:5; 24:15; எண் 10:53; 1 அர 19:8) மற்றது எருசலேமிலுள்ள தேவாலயக் குன்று (ஆதி 22:14; ஏசா 2:3 ஆண்டவரின் மலை; 30:29; சங் 24:3 ஆண்டவரது மலை). பின்னர் குறிப்பிடப்பட்டது ''அவருடைய அல்லது என்னுடைய (இறைவனுடைய) புனித மலை'' (சங் 48:1; ஏச 65:11) என்றும் அழைக்கப்படுகிறது. ஆனால், இச்சொற்றொடரானது இஸ்ராயேலின் முழு நாட்டையும் குறிப்பிடுகின்றது (ஏச 65:25; எச 20:42; யாத் 15:17). இறைவன் உறையவிரும்பும் மலையாகிய எருசலேமிலுள்ள ஆலய மலையைக் கண்டு கடவுள்களின் மலையான

பாசான் பொறாமைப்படுவதாக சங் 68:15-17 விவரிக்கின்றது.

இறை வழிபாட்டினை ஒரு மலையுடன் தொடர்புபடுத்திய மக்களுக்கு, வேறு தெய் வத்துடன் தொடர்புள்ள வேறு எந்த மலையி லும் யாவேயை வழிபடாமலிருப்பது முக்கி யமானதாகும் (உப 12:2). இறைவனை எந்த மலையில் வழிபட வேண்டும் (சீயோன் அல்லது கெரிசீம்) என்பது யூதரையும் சமாரி யரையும் பிரிக்கின்ற முக்கிய பிரச்சினையாக இருந்தது; இயேசு இப்பிரச்சினையைத் தீர்க்க விரும்பினார் (யோவா 4:20-24).

சில கிரேக்க திருத்தங்கள் கிபயோனின் நகரில் ஒரு ''ஆண்டவரின் மலையைக்'' குறிப்பிடுகின்றன (2 சாமு 21:6,9). ஆனால், உண்மையில் ''ஆண்டவர் தேர்ந்துகொண்ட சவுலின் நகராகிய கிபயோன்'' என்பதே சரியான வாசகமாக இருக்கலாம்.

**இறைவனின் விரல், கைவண்ணம்** (FINGER OF GOD)

கடவுளின் சக்தியை குறிக்கும் ஒரு உருவ கம். விரல் வேலைசெய்ய உதவும் ஒரு கருவியாக நோக்கப்படுகிறது. கடவுளுக்குச் சாற்றிக் கூறும்போது இது சிறப்பாக உண் மையாகும். பலதடவைகளில் விரல், கை என்றும் புரிந்துக் கொள்ளப்பட்டு, இரண் டும் தெய்வீகச் சக்தியைத்தான் குறிக்கிறன. இவ்வாறு கடவுளுடைய கரம்தான் எகிப்திய பாரவோன் மன்னன் மேலும் அவனுடைய மாந்திரிகர்கள் மேலும் கொள்ளை நோய்க ளைக் கொண்டுவந்தது (யாத் 8:19). கல் பலகையில் சட்டம் கடவுளுடைய விரலி னால்தான் எழுதப்பட்டது (யாத் 31:18; உப 9:10). விண்ணகம் படைக்கப்பட்டது கடவு ளுடைய விரல்களின் வேலையாகும் (சங் 8:3). கடவுளின் விரலால்தான் இயேசு பேய் களை ஓட்டினார் என்று கொள்ளலாம். அதா வது தீய ஆவிகளின் மேல் தெய்வீக சக்க தியை அவர் பெற்றிருந்தார் (லூக் 11:20).

இதற்கு எதிர்மாறாக மனிதர்களுடைய விரல்களும் கரங்களும் சிலைகளைச் செய்வ திலும் (ஏச 2:8), வேறு மதிப்பற்ற செயல்க ளைச் செய்வதிலும் ஈடுபடுகின்றன (17:8). துன்ப காலத்தில் விசுவாசிகள் இறைவனது கரம் ''குறுகிவிட்டதாக'' எண்ணக்கூடாது (59:1); மாறாக அவர்களின் கைகள் இரத்தப் பழியால் கறைபட்டுள்ளதாலும், அவர்க ளின் விரல்களில் அக்கிரமம் நிறைந்துள்ளதா லும் அவர்கள் இறைவனிடமிருந்து பிரிக்கப் பட்டிருப்பதுவே அவர்களது துன்பங்களுக் குக் காரணம் (59:3).

**இறைவனின் வீடு** (HOUSEHOLD OF GOD)

இறைவனின் வீடு என்பது விசுவாசிக ளின் கூட்டமான உயிருள்ள கடவுளின் திருச் சபையே ஆகும். திருச்சபையின் உறுப்பினர் கள் அனைவரும் இணைந்தே இந்த கடவு ளின் வீடு அல்லது குடும்பம் என அழைக்கப் படுகின்றர் (1 திமோ 3:15; 1 பேதுரு 4:17; எபே 2:19).

**இறைவனுக்கு அஞ்சுவோர்** (GOD-FEARERS)

யூதசமயத்தில் பக்தி கொண்டு செபக்கூட வழிபாட்டில் பங்கெடுத்த புறவினத்தார் இறைவனுக்கு அஞ்சி வாழ்ந்தவர்கள் என்ற ழைக்கப்படுகின்றனர். இவர்கள் யூத சட்டங் களில் சிலவற்றையும் கடைப்பிடித்தனர் (அ.ப. 10:2; காண்க 13:50; 16:14; 17:4:17; 18:7). இவர்கள் யூத மதத்திற்கு முழுவதும் மனந்திரும்பியவர்கள் அல்லர். ஏனெனில் இவர்கள் இன்னும் விருத்த சேதனம் பெற வில்லை. ஆனால், பக்தியுள்ள புறவினத்தார் ஆவர்.

**இறைவன்** (GOD )

I. முன்னுரை

விவிலிய நூலானது இறைவனைப்பற்றி கட்டுரையோ அல்லது ஒரு தொகுப்பு நூலோ அன்று. தனித்து நின்று பிற பொருட் களை விவரிப்பதுபோல், இறைவனை ஒரு பொருளாக எண்ணி, அது விவரிப்பதும் இல்லை, இறைவனைப்பற்றிப் பேசவும் அழைப்பதில்லை. மாறாக, இறைவனின் குரலைச் செவிமடுத்துக் கேட்கவும், பின் அதற்குத் தக்கவாறு, அவரது மகிமையை உணர்ந்து, அவருக்குப் பணிவிடை புரிவது

மான நமது பதிலை அளிக்கவும் அது நம்மைக் கூவி அழைக்கிறது. நாம் பணிவும், நன்றியும் கொண்ட உள்ளத்தோடு வாழ்வோமேயானால், இறைவன் தம்மைப்பற்றி என்ன கூறியுள்ளார் என்பதை விவிலிய நூலிலிருந்து வரைப்படுத்திக் கொள்ள முடியும். பழைய ஏற்பாட்டில் இறைவாக்குரைப்பவர்கள் மூலமாகவும் பின் புதிய ஏற்பாட்டில் தம் ஒரே மகனின் (இயேசு கிறிஸ்து) வழியாகப் பேசிய பொழுதும், ஒரே மாதிரிகையாக இறைவன் தம்மைப்பற்றிப் பேசவில்லை (எபி 1:1 தொ). மற்ற எந்தக் கருத்தையும் விட, பழைய ஏற்பாட்டிற்கும், புதிய ஏற்பாட்டிற்கும் உள்ள இந்த முக்கிய வேற்றுமையை நாம் கண்டுணர வேண்டும்; ஏனெனில் ''கடவுளை யாரும் கண்ணால் கண்டதில்லை; தந்தையின் அணைப்பிலுள்ளஒரேபேறானவர்தாம்அவரை வெளிப்படுத்தினார்''. (யோவா 1:18). எனவே, பழைய ஏற்பாட்டில் காணும் பழிவாங்கும் கடவுளுக்கும், புதிய ஏற்பாட்டில் காணும் அன்பின் கடவுளுக்கும் இடையே உள்ளதாகக் கருதப்படும் மாற்றுக் கொள்கையை நாம் தவிர்க்க வேண்டும். அதேபோல், இரு ஏற்பாட்டிலும் காணும் ஒரே இறைவனின் மறைபொருளை, கிறிஸ்து ஒருவர்தான் வெளிக்கொணருகிறார் என்ற உண்மையையும் நாம் பற்றிக் கொள்ள வேண்டும்.

II. பழைய ஏற்பாடு

*1.* இறைவனே முதலானவர்:- ''ஆதியிலிருந்தே'' (ஆதி 1:1; யோவா 1:1) இறைவன் இருக்கிறார்; அவர் இருப்பது, வேறெந்த விளக்கமும் கூறவேண்டாத முதல் உண்மையாகும். அவருக்குத் தோற்றமும், உருவாகுதலும் இல்லை. பழங்கால மேற்காசிய நாடுகளில் உள்ள மதங்களில், எப்படித் தெய்வங்களின் தோன்றுதலால் உலகம் உண்டாயிற்று என்று கூறுகின்ற இறை மரபுக்காவியங்களை, நாம் பழைய ஏற்பாட்டில் காண்பதில்லை. ஏனெனில் ''அவர் ஒருவரே முதலும், முடிவுமாவார்'' (ஏச 41:4; 44:6; 48:12), இவ்வுலகமானது முழுவதும் அவரது கைவேலை, அவரது படைப்பு.

அவரே முதலாக இருப்பதால், தம்மை அறிமுகப்படுத்திக்கொள்ளத் தேவை அவருக்கு இல்லை. தாம் கடவுளாக இருக்கின்ற ஒரே காரணத்தால், மனிதன் தம்மை ஆவியின் மூலம் அறிந்துகொள்ளல் வேண்டும் என எதிர்பார்க்கிறார், மாறாக, இறைவன் இருப்பதை ஒரு படைப்புப் பொருளைக் கண்டுபிடிப்பதுபோலவோ அல்லது படிப்படியாக அறிந்து ஏற்றுக்கொள்வது என்றோ கருதக்கூடாது. ஏனெனில் அவரை அறிவது என்பது அறியப்படுவதும் (ஆமோ 3:2) ஒருவர் இருப்பதின் அடிமூலத்திலே அவரைக் கண்டுபிடிப்பதும் ஆகும். அவரிடமிருந்து விலகி ஓடுங்கால், அவரது பார்வையே நம்மைத் தொடர்ந்து வருவதாகக் காண்பதுமாகும் (ஆதி3:10; சங் 139:7).

இறைவனே முதலாவதாக இருப்பதால், அவர் தம்மை வெளிப்படுத்திய உடனே, அவரது ஆள்தன்மை, எதிர்ச்செயல்கள், அவரது திட்டங்கள் எல்லாம் திட்டவட்டமாக வரையறுக்கப்படுகின்றன. ஒரு மனிதன், சிறிதளவு அவரை அறிந்துகொண்ட உடன், அந்த வினாடியிலிருந்து கடவுள் தன்னிடமிருந்து குறிப்பான ஒன்றை விரும்புகிறார் என்பதையும், தான் எங்கு செல்கிறோம், என்ன செய்கிறோம் என்பதையெல்லாம் அறிந்துள்ளார் என்பதையும் உணருகிறான்.

இவ்வாறு இறைவனின் வரம்பில்லா முன்னுரிமையை, பழைய ஏற்பாட்டின் முதல் ஐந்து நூல்களில் இருவகை ஒன்றையொன்று நிறைவு செய்யும் வழிகளில் நாம் காண்கிறோம். யாவே மரபுவழியானது, யாவேயை உலகத்தின் முதலிலிருந்து நிலைநிறுத்தி, எரியும் முட்புதர்காட்சிக்கு முன்னதாகவே, தமது திட்டத்தைச் செயல்படுத்துபவராகவும் காண்பிக்கிறது. அதற்கு மாறாக, ஏலோகிம் என்கிற மரபு வழியானது இறைவன் திருநாமத்தை மோசேக்குத் தெளிவுபடுத்தியதை அவ்வளவு வலியுறுத்தவில்லை; ஆனால் அதே நேரத்தில் இந்த இரு மரபு வழக்கு கொள்கைகளும் ஏல் என்கிற திருநாமத்தை ஏறக்குறைய விளக்கும் இருபெயரைக் குறித்தாலும், அவற்றின் அடித்தளத்

தில், இறைவன் தம்மை ஏற்கனவே வெளிப் படுத்திக் கொண்டிருக்கிறார் என்கிற உண் மையை நமக்குப் புலப்படுத்துகின்றன. ஏனெனில், மோசே கண்ணுக்குத் தெரியாத ஆனால் தெளிவாகக் கடவுளை ஏற்கெனவே உணர்ந்திருந்ததால் மட்டுமே, யாவேயை உண்மையான இறைவன் என அறிந்து கொள்ளுகிறார். இவ்வாறு அறிவால் கண்டு ணரும் கடவுள், வெளிப்பாட்டின் கடவுளாக ஒன்றிணைகிறார். இறைவனின் இந்த ஒன்றி ணைப்பின் முன்னுரிமை, மனிதனின் ஆவிக் கும் தெளிவுபடுத்தப்படுகிறது. இந்த உண் மைதான், விவிலிய நூல் முழுவதிலும் இறைவனை யாவே, ஏலோகிம் என்று உட னடியான, நிலையான ஒன்றிணைப்பதாக வும், இஸ்ராயேல் மக்களுக்கு தம்மை வெளிப்படுத்தும் கடவுளை, மற்ற நாட்டு மக்களால் பெயரிடப்படுகின்ற கடவுளோடு ஒன்றிணைப்பதாகவும் நாம் அறிகிறோம்.

இதனால்தான் எப்பொழுதெல்லாம் இறைவன் தம்மைக் காட்சிகளில் வெளிப்ப டுத்துகிறாரோ, அப்பொழுதெல்லாம் தம்மை ''உங்கள் தந்தையின் கடவுள்'' (யாத் *3:6*), ''உங்கள் தந்தையர்களின் கடவுள்'' *(3:15)* ''உங்கள் கடவுள்'' *(6:7)*, ''இரக்கமும் தயவும் உள்ள இறைவன்'' *(34:6)*, ''உன் கடவுள்'' (நெருங்கிய உறவில்) *(ஏச 41:10: 43:3)* அல்லது சாதாரணமாக'', ''கடவுள் '' *(1 அரச 18:21 36 தொ)* என்ற பொருள்களைக் குறிக்கும் ''ஏல், ஏலோகிம்'' என்ற பெய ரால் தம்மைப் பெயர் சொல்லி அழைக்கின் றார். 'கடவுள்' என்ற பெயருக்கும்; 'யாவே' என்ற பெயருக்குமிடையில், ஒரு உயிருள்ள உறவு ஏற்படுத்தப்படுகிறது. அதோடு புலன் கடந்த மெய்ம்மை விவாத, முறையையும் நாம் காண்கிறோம். எவ்வாறெனின் தம்மை 'யாவே' என்று அறிவிப்பதற்காக, இஸ்ரா யேலின் கடவுள் தம்மைக் கடவுளாகக் காண் பிக்கிறார். ஆனால் அதே நேரத்தில் தம்மை 'யாவே' எனக் காண்பிப்பதில் 'கடவுள் யார், ' அவர் எப்படிப்பட்டவர்' என்பதையும், புதுவகையிலே தெரிவிக்கிறார்.

2. ஏல், ஏலோகிம், யாவே:- 'ஏல்' என்கிற சொல்லானது நடைமுறையில் 'ஏலோகிம்' என்ற சொல்லின் பொருள் கொண்ட தொன் மையான காவியச் சொல்லாகும். 'ஏலோ கிம்' அல்லது நாம் கூறும் கடவுள் என்ற சொற்களைப் போல், 'ஏல்' எனும் சொல், இறைத்தன்மை உடைய பொதுப் பெயராக வும், அத்தன்மையை உடையவர் யார் எனக் குறிப்பிடும் தனி நபரின் சிறப்புப் பெயராக வும் உள்ளது. 'ஏலோகிம்' என்ற சொல் பன்மையைக் குறிக்கும். ஆனால் மாட்சிமை சம்பந்தமாக அன்று. ஏனெனில் எபிரேய மொழியில் இத்தகைய கருத்து இல்லை. மேலும் பல கடவுள் கொள்கையினைக் குறிக்கும் பன்மையும் அன்று. ஏனெனில் இத்தகைய மனநிலை இஸ்ராயேல் மக்களி டத்தில் இல்லை. ஆனால் இத்தகைய பன் மையான கருத்து, ஒருவேளை செமித்திய இனத்தைச் சேர்ந்தவர்களின் பொது எண்ண மாக இருக்கலாம். ஏனெனில் அவர்கள்தான் இறைத்தம்மையை சக்திகளின் சேர்ப்பு எனப் பன்மையில் கண்டறிந்தனர்.

*அ) ஏல்:-* 'ஏல்' என்பது, இஸ்ராயேல் இனத்தவர்க்குப் புறம்பே அறியப்பட்டு வழி படப்பட்டது. அது ஒரு பொதுப்பெயராக நிற்கையில், செமித்திய இனத்தார் கொள் ளும் இறைத்தன்மையைச் சுட்டிக் காட்டுகி றது. ஆனால் தனி நபரின் பெயராக நிற்கை யில், மேற்காசிய நாடுகளில், அதுவும் குறிப் பாக பெனிக்கியா, கானான் என்ற பகுதிக ளில், அது எல்லாவற்றிற்கும் மேலான ஒரு கடவுளைக் குறிப்பதாக உள்ளது. செமித்திய இனத்தாரின் தூய ஆனால் வலுவற்ற, பின் னால் தோன்றிய கவர்ச்சியூட்டிச் சீரழிக்கும் பல தெய்வங்களைக் கொண்ட மதங்களால் மறைக்கப்பட்டு வழிபடப்பட்ட 'ஏல்' தனித் தன்மையும் மேலாண்மையும் கொண்ட பொதுக் கடவுளா? 'ஏல்' என்கிற கடவுள், செமித்திய இனத்தாரின் பல்வேறு குழுக்க ளைக் கட்டிக் காக்கும் முதற் கடவுளா? அல்லது ஒவ்வொரு குழுவிற்கும் தனித்தனி யாக கடவுளாக இருந்து, மற்ற குழுக்களு டன் ஏற்படும் போராட்டத்தில் ஒற்று மையை ஏற்படுத்த முடியாமல், இறுதியில் பலதெய்வங்களைவைத்து வழிபடும் கோயி லில் சரணடைந்த ஒரு உருவமோ? இந்த

வரலாறு தெற்றெனப் புலனாகாவிட்டாலும், ஒரு உண்மை நிச்சயமாகத் தெரிகிறது. அதாவது மூதாதையர்கள் 'ஏல்' என்ற கடவுளை, ''ஏல் ஏலியோன்'' *(ஆதி 14:22)*, ''எல் ராய்' *(16:13)*, 'எல் சத்தாய்' *(17:1; 35:11; 48:3)* ''எல் பெத்தேல்'' *(35:7)*, 'ஏல் ஓலாம்'' *(21:33)* என்ற பெயர்களால் அழைக்கின்றனர். அதுவும் குறிப்பாக சாலேம் நாட்டு அரசனான மெல்க்கிசதேக்கு என்பவரின் கடவுளான 'ஏல் ஏலியோன்' என்ற பெயரில் உள்ள 'ஏல்' எனும் கடவுள், ஆபிரகாமின் கடவுளுக்குச் *(14:20 தொ.)* சமமாகக் கருதப்பட்டார். இந்த உண்மைகள் எல்லாம், இஸ்ராயேலரின் கடவுள் ''உலகத்தின் நடுவராகவும்'' *(18:25)* அதே நேரத்தில் தெரிந்துகொள்ளப்பட்ட மக்களைத் தவிர்த்த புற இனமக்களாலும் உண்மையான கடவுள் என அறிந்து கொள்ளப்பட்டு, வழிபாடு பெறுபவராகவும் இருக்கிறார், என்ற உண்மையினை விளக்குகிறது.

இவ்வாறு ஏற்றுக்கொள்ளல் விதிவிலக்கான ஒன்றாகும். பெரும்பாலான நிகழ்ச்சிகளில் புற இனத்தாரின் கடவுள்கள், கடவுள்கள் அல்லர் (எரே 2:11; 2 அர 19:18). ஏல் ஏலோகிம், நடைமுறையில் யாவே என்ற பெயரில் தமது மக்களுக்கு வெளிப்படுத்துவதால் மட்டுந்தான் உண்மையான கடவுளாக அறியப்படுகிறார். ஒப்புமையற்ற ஆள்தன்மையுடன் விளங்கும் யாவேயின் திருமுகம் பலவகைப்பட்ட புறஇனத்தவரால் விகாரப்படுத்தப்பட்டுத் தெளிவில்லாமல் இருந்தாலும், ஏற்றுக் கொள்ளக் கட்டாயப்படுத்தும் நிலையமைதியையும் உயிராற்றலையும் கொண்டிருந்தது.

ஆ) யாவே:- யாவே என்ற பெயரில் கடவுள் தாம் யார், தாம் செய்வது என்ன, தமது பெயர் என்ன, தமது செயல் முறை யாது என்பவற்றைத் தெளிவுபடுத்துகிறார். அவரது செயல் முறை இதுவரையில் கேட்டிராத, வியத்தகு ஒன்று; அவரது பெயரோ மறைபொருளானது. 'ஏல்' தம்மை, மூதாதையர்கட்குப் பழகிய நாட்டில் எளிய, சாதாரணமாக அறியும் வகையில் தம்மை வெளிப்படுத்தியதால், யாவே, கொடூரமான பாலைவனச் சூழ்நிலையிலும், துயரம்நிறைந்த நாடு கடத்தலிலும், அஞ்சத்தக்க நெருப்பின் உருவமாகத் *(யாத் 3:1-15)* தம்மை மோசேக்கு வெளிப்படுத்துகிறார். யாத் *33:18-23; 34:1-7*-இல் வரும் ஒன்றையொன்று நிறைவு செய்யும் இறைவன் வெளிப்பாடானது அச்சம் தருவதாகவே உள்ளது. இருப்பினும், இவ்வாறு தூய்மையில் எரிக்கும் இறைவன், பிரமாணிக்கமுள்ளவரும் மீட்பளிக்கும் இறைவனாகவும் உள்ளார். அவர் ஆபிராகாமையும், அவரது இனத்தையும் *(3:6)* நினைவு கூறுகிறார்; எகிப்து நாட்டில் எபிரேயமக்கள்படும் அவதியினைக் காண்கிறார் *(3:7)*; அவர்களை விடுவிக்க உறுதி கொள்கிறார் *(3:8)*; மேலும் அவர்களுக்கு வளம் அளிக்கச் சித்தம் கொள்கிறார்; யாவே என்ற பெயரில் அவர் தம்மை வெளிப்படுத்துவதானது, அவர் செய்யும் வேலைக்குச் சான்று பகர்வதாய் உள்ளது. எனவே இப்பெயரானது உண்மையிலே மறைத்தன்மை கொண்டது; ''இருக்கிறவராக இருக்கிறவர் நானே'' *(3:14)* என்ற நெருங்க முடியாத உண்மையினை எடுத்துக்கூறுகிறது. யாரும் அவரைக் கட்டாயப்படுத்தவோ அல்லது உட்புகுந்து அறியவோ முடியாது. ஆனால் அதே நேரத்தில் இப்பெயரானது ஓர் நேர் உண்மையைக் கூறுகின்றது. அதாவது ''நான் இருக்கிறேன்'' என்ற மீளமுடியாத உறுதியையும், வெற்றி கொள்ளமுடியாத மீட்பு அளிக்கும், சக்தியும் அசாதாரண ஆக்கமும் கவனமும் கொண்ட இறைவன் திருச்சந்நிதியையும் அது விளக்குகிறது. யாவே என்ற பெயர் சுட்டிக்காட்டுவது 'இருத்தல்' என்ற வினைச் சொல்லையே. அந்த வினைச்சொல்லும் முழுமுதற் கடவுளை மெய்யியல் கருத்துப்படி உடனே எடுத்துக் கூறாவிட்டாலும், சாதாரண ஒரு 'இருத்தல்' ஆக இல்லாமல், எப்பொழுதும் இருந்து, பயன்தரும் 'இருக்குத் திருச்சந்நிதியாக' நமக்கு எடுத்துக்காட்டுகிறது. ஆனால் இறைவன் இந்தத் திருச்சந்நிதானம் படைப்பு முழுவதையும் அதன் தொடக்க நாளிலிருந்து முடியும் நாள் வரைக்கும், தழுவிய ஒன்றாகவும், காலம் மூன்றையும் ஒருங்கிணைப்பதாகவும் உள்ளது; ஏனெ

னில், ''தொடக்கத்திலிருந்தே தலைமுறைகளைப் பிறப்பித்தவர் யாரோ, அவரே யாவே ஆகிய நாம். முதலும் இறுதியும் ஒன்றாகிய யாவே நாமே'' *(ஏச 41:4)*. ஏல், ஏலோகிம் என்ற பெயர்கள், இயற்கைசார்ந்த மதங்களை, உண்மைக் கடவுளுடன் தொடர்புபடுத்தும் உறவினைக் காட்டுகின்றன. இருப்பினும் 'யாவே' எனும் பெயர் இஸ்ராயேல் மக்களுக்கு மட்டும் அறிவிக்கப்பட்டதொன்று; மேலும், அச்சொல்லின் உட்பொருளை, யாவேயின் வழிகாட்டினை வாழ்வில் அறிந்தவர்களால் தான், உணரமுடியும். எனவேதான், மூதாதையர்களின் மதத்தினையும், அவர்கள் வழிபட்ட கடவுளின் முகத்தோற்றத்தையும் ஆராய முற்படுவோமேயானால், மோசேக்கு முன்னமே 'யாவே' எனும் கடவுள் தெரிந்தவரா என்பது தேவையற்ற ஒரு ஆராய்ச்சியாக முடிகிறது. அப்படி கடவுளின் பெயர் மற்ற மதங்களில் தெரியப்படுத்தியதொன்றாக இருந்தாலும், அது ஏதோ ஒரு பொருளான தொடர்ச்சியாகும். எப்படியெனில் யாவே, தனக்குமட்டும் உரிய, மனித நிலைக்கு அப்பாற்பட்ட முதல் முயற்சியால் தம்மை வெளிப்படுத்துகிறார். அம்முதல் முயற்சியாலேயே, அவர் இஸ்ராயேல் மக்களை 'விலைக்கு வாங்கி', தனது உரிமை மக்களாக உருவாக்குகின்றார்.

*3. கடவுள் தம்மைப்பற்றியே கூறுகின்றார்:-*

யாவே எனும் பெயர், இறைவனால் தம்மை ''நான் இருக்கிறேன்'' என்னும் பொருள் படும் ''யாக்வே'' எனும் சொல்லால் தன்மையில் வெளிப்படுத்தியதை மனிதன் படர்க்கையில் அவரைப்பற்றிக்கூறும் சொல்லாகும். இறைவன் தம்மைப் பல்வேறு வாய்ப்பாடுகளில் வெளிப்படுத்தும்பொழுது எல்லாவற்றையும் குறிக்கும் இப்பெயருக்கு விளக்கம் அளிக்கிறார்.

*அ) உயிருள்ள இறைவன்:-* இறைவன் தம்மைப்பற்றி, ''நான் வாழ்ந்து கொண்டுள்ளேன்'' எனும் வாய்ப்பாடானது, ஒரு வேளை பிற்காலதில் எசக்கியேல் இறைவாக்கினரின் படைப்பாக இருக்கலாம். எது எப்படி இருப்பினும், தொன்றுதொட்டு இஸ்ராயேல் மக்களிடையே வழங்கிவரும் ''உயிருள்ள யாவே'', ''வாழும் ஆண்டவர்'' *(நீதி 8:19; 1 சாமு 17:26.36; 2 அர 19:16) 1 அர 17:1;* என்ற இறைவனைப் பற்றிய பொது வாய்பாட்டுரையே அது. அப்பெயர் கடவுள் திருச்சந்நிதியின்முன் மனிதன்பெற்ற அனுபவத்தை எடுத்துக் கூறுகிறது. உடனடியான, முழுவதும் தானே இயங்கும் அவரது சிறப்பான செயல்புரியும் திருசந்நிதியைக் குறிப்பிடுகின்றது; அச்சந்நிதியானது ''சோர்வோ களைப்போ, இல்லாததாகும்'' *(ஏச 40:28)* ''கண்ணயர்வோ தூக்கமோ இல்லாதவரின்'' *(சங் 121:4)*, தமது மக்களை யார் தொட்டாலும் உடனே செயலாற்றும் திருச்சந்நிதியாகும் *(1 சாமு 17:26.36; ஒசே 2:1; தானி 6:21)*. ஓரேபு மலையில், அவர் தமது பெயரை வெளிப்படுத்தியபோது அவர் பேசிய மொழி அவரது வாழ்வின் உட்செறிவையும், அவர் செயலின் கருத்தையும் விவரித்துக் கூறுகின்றது. ''நான் கண்டேன்...நான் குரலையும் கேட்டேன்...நான் அறிவேன்...நான் உறுதி கொண்டுள்ளேன்.. நான் உன்னை அனுப்புகிறேன்'' *(யாத் 3:7-10)*. இந்த வெளிப்பாடுகளால் தயாரிக்கப்பட்டு ''நான் இருக்கிறேன்'' என அறிவிக்கப்பட்ட வாக்கானது இவற்றைவிடக் குறைவான செயல் திறன் கொண்டதாக இல்லை.

*ஆ) புனிதமான இறைவன்:-* ''எனது புனிதத்தால் நான் அதை உறுதி கூறுகிறேன்'' *(ஆமோ 4:2)*, ''நாமே புனிதமானவர்'' *(ஒசே 11:9)* வாழ்வினை வழங்கவும், சுட்டெரிக்கவுமான, இந்தத் தவிர்க்கமுடியாத, செறிவுற்ற உட்சக்தியைத்தான் 'புனிதம்' என்கிறோம். ''இறைவன் புனிதமானவர்'' *(ஏச 6:3)*, ''அவரது திருப்பெயர் புனிதமாமே'' *(ஆமோ 2:7; லேவி 20:3; ஏச57:15)*. அவரது புனிதத்தன்மையானது அவரது மக்களைத் தூயதாக்குகின்றது *(யாத் 19:6)*. இத்தகைய அவரது தூய்மையானது இறைவனுக்கும், மனிதருக்குமிடையில் எந்த ஒரு மனிதனும் கடக்கவொண்ணா, அதள பாதாளத்தைத் திறந்து காட்டுகிறது. எந்த மனிதனும் அவரது வருகையைத் தாங்க முடியாது. வான

மண்டலம் சுழல்கின்றது, மலைகள் உருகு கின்றன'' (*நீதி 5:4 தொ; யாத் 19:16*). எல்லா உயிரினமும் நடுங்குகின்றது, பாவம் செய்த மனிதன் மட்டுமன்று, கொழுந்துவிட்டு ஒளி ரும் சேராபீம்களும் இறைவன் முன் தோன்ற தற் தகுதியற்றவர்களாய் நடுங்குகின்றனர்'' (*ஏச 6:2*)

இ) ''நாம் பொறாமை நிறைந்த கடவுள்'' (*யாத்20:5*):- இறைவனின் உள்ளுரைச் செறி வின் மற்றொரு குணம் யாதெனில் அவரது பொறாமை பொதிந்த ஆர்வக்கனலாம். இதையே தாம் செய்வதிலும், தொடுவதி லும் வெளிப்படையாக்குகின்றார். அவ ருக்கு முக்கியமானதொன்றையோ அல்லது அவரால் தூய்மைப்படுத்தப்பட்டு புனிதமா கக் கொள்ளப்பட்ட எதையுமோ, எந்த ஒரு வெளிச்சக்தியும் மாசுபடுத்துவதை அவரால் பொறுத்துக்கொள்ள முடியாது. அவர் எடுக் கின்ற எந்த ஒரு செயலும் தோல்வி அடைவ தைப் பொறுத்துக் கொள்ள முடியாது (*யாத் 32:12; எச 36:22..*) அதோடு அவர் ''தன் மகிமையையும் யாருக்கும் விட்டுக் கொடுக்க முடியாது''.

ஈ) ''என்னைத் தவிர பிறிதொரு கடவுள் உங்களுக்கு இல்லை'' (*யாத் 20:3*):-

இறைவனின் பொறாமை எதில் அடங்கி யுள்ளது என்றால், தம்மைத் தவிர்த்த பிறி தொரு கடவுளை ஏற்பதில்தான். இஸ்ரா யேல் மக்களின் இறையொருமைக் கொள் கையானது அவர்களால் ஆழ்ந்து சிந்தித்துக் கண்ட மீபௌதீக உண்மையுமன்று; அரசி யல் ஒன்றிப்பினாலோ மத வளர்ச்சிக் கொள் கையாலோ ஏற்பட்டதுமன்று. இஸ்ராயே லில் இருந்த நம்பிக்கை கொள்கைகளைப் போலவே, இந்த ஒரு கடவுள் விசுவாசமும் தொன்மையானது. ஏனெனில் எல்லா நாடுக ளுக்கும் உரிமையாளரான ஒரே இறைவ னால் தேர்ந்தெடுக்கப்பட்ட உரிமை நாடு இஸ்ராயேல்; எனவே அக்கடவுளையே எங்கள் முழு முதல் இறைவனாக ஏற்றுக் கொள்கிறோம்'', என்ற தேர்வின் உறுதியால் எழுந்த கொள்கையாகும். இவ்வாறு இந்த இறையொருமை விசுவாசம், பலகாலமா கவே பல தெய்வங்களைக் குறிக்கும் சின் னங்களைப் பொறுத்துக் கொள்ள முடிந்தது. உதாரணமாக மோவாபு (*நீதி 11:23*) மலை யில் கெமோசு என்ற தெய்வத்தை ஏற்றுக் கொண்டது, ''யாவேயின் மரபுரிமை'' (*1 சாமு 26:19; 2 அர 5:17*) கடந்த நாடுகளில் அவரை வணங்க இயலாமல் இருந்தது. ஆனால் தொடக்கத்திலிருந்தே அத்தகைய தெய்வங்கள் யாவேயோடு சேர்ந்து இருப் பதை, யாவே பொறுத்துக் கொள்ள வில்லை. மேலும் இஸ்ராயேல் நாட்டு வர லாறு, யாவே, எகிப்து நாட்டு கடவுள்கள், கானான் நாட்டு பாகால், அசூர், பாபிலோன் நாட்டு அரச தேவர்கள் ஆகியோர்மீது வெற் றிகொண்டு இறுதியில் வேறெந்த பொய்க் கடவுளும் இல்லாதவாறு செய்வதையே விளக்குகிறது. இத்தகைய வெற்றிகள் சிலச மயங்கள் அருஞ்செயல்கள் மூலமாக இருந் தாலும், அடிப்படையில் ஒரு கடவுளின் மேல் வைத்த விசுவாசத்தையே நிலையான அடிப்படையாகக் கொண்டது. யூதா, எருச லேம் நகர்களின் அழிவை முன்கூட்டியே அறிவித்த எரேமியா எனும் இறைவாக்கி னர், புறநாடுகளின் கடவுள்கள் ''கடவுள் களே அல்ல'' (*எரே 2:11*) எனவும் ''அவை கள் இருப்பது இல்லை'' (*5:7*) எனவும் சாதாரணமாகவே குறிப்பிடுகின்றார். நாடுக டத்தலின்போது, சிலைவழிபாட்டின் கவர்ச் சியால் ஈர்க்கப்பட்டு, தோற்றுப்போய், அவ மானத்தால் நிலையிழந்து இருந்த மக்கள் உள்ளத்திலிருந்தும் ''எமக்கு முன்னமேயோ அல்லது பின்போ எந்த ஒரு கடவுளும் தோன்றவில்லை; நாமே யாவே, எம்மைத் தவிர வேறு மீட்பர் உங்களுக்கு இல்லை'' (*ஏச 43:10 தொ.*) என்ற இறைவனின் குர லொலி முழங்குகிறது. ஒரேபு மலையின் ஞாபகம் நிலைத்திருக்கிறது. அதோடு வேறு பட்ட பகுதிகளிலும் காணக்கிடக்கும் ஆன்மீ கத் தொடர்ச்சி ஊன்றி கவனிக்க வேண்டிய தொன்றாகும். யாவே ஒருவர்தான் கடவுள், ஏனெனில் அவர் ஒருவர்தான் மீட்பளிக்க முடியும்; ''முதலும் முடிவும் அவரே''; வெகு அருகில் உள்ளவர்; உற்றுக் கவனிப்ப வரும் அவரே. சிலைவழிப்பாடானது, மக் களை மீட்கும் அவரது உறுதியை சவாலுக்கு

அழைப்பதோடு, என்றும் எங்கும் இருந்து செயல்படும் யாவே என்பதை மறுப்பதால், அது தனக்கு எதிராகப் போரிடும் சக்தி என யாவே கருதுகிறார்.

உ. ''நாம் கடவுள், மனிதனல்ல'' (ஓசே 11:9):- இறைவன் மனிதனிடமிருந்து முற்றிலும் மாறுபட்டவர். அவர் ஆவியானவர், மனிதன் ஊனுடல் (ஏச 31:3) வலு வற்றவன்; புல்லைப்போல் அழிந்துவிடுபவன் (ஏச 40:7). இந்த மாறுபாடு, எவ்வளவு அடிப்படையில் வேறுபட்டதென்றால், மனிதன் அதைத் தவறாகவே விளக்கிக் கூறுகிறான். இறைவனின் சக்தியில் மனிதன் பயனுள்ள சக்தியை மட்டுமே காண்கிறான், ஆனால் அவருடைய பிரமாணிக்கத்தைக் காண்பதில்லை (எண் 23:19); ''நானே புனிதமாக உங்கள் மத்தியில் வாழ்கிறேன், அழிவை நான்விரும்புவதில்லை'' (ஓசே 11:9) என்று கூறும் இறைவனின் புனிதத்தில் அவரது அருகாமையும் இளகிய உள்ளத்தையும் காணாது, தனக்கும் இறைவனுக்குமிடையில் உள்ள கடக்க முடியாத இடைவெளியையே காண்கிறான். இறைவன் எல்லாவற்றையும் கடந்து நிற்கின்றார் என்ற கட்புலனுக்கடங்காத அதே உண்மைதான், உயர்ந்ததும், புனிதமானதுமான இடத்தில் உறையும் உயர்ந்த கடவுள் என்ற உண்மையையும் அதே கடவுள்தான் மனம் வருந்தி தாழ்ந்த நிலையில் வாழும் மனிதனோடும் வாழுகிறார் (ஏச 57:15) என்ற உண்மையையும் ஒரே சமயத்தில் வெளிக் கொணர்கிறது. எல்லா சக்தியையும் கொண்டவர், அதே நேரத்தில் வறியவர்களின் கடவுள். புயல் மத்தியிலும் (யாத் 19:18 தொ) தென்றல் காற்றின் நடுவிலும் (1 அர 19:12) தமது குரலொலியை மக்கள் கேட்கும்படிச் செய்கிறார். மோசே கூட அவர் முகத்தைப் பார்த்திராத அளவுக்குக் கண்ணால் காணக்கூடாதவர் (யாத் 33: 23). ஆனால் மனிதனின் ஏக்கத்திற்கு செவிமடுக்கையில், தமது இதயத்தையே அளிக்கிறார். மனிதன் தன் கைவண்ணத்தால் வழிபாடு செய்யும் எந்த ஒரு தன்னுருவையும், அவர் தடுத்தார். ஆனால் அதே நேரத்தில் நாம் காணும் எந்த ஒரு பொருளின் அடித்தளத்திலும், நமது கற்பனைக்குத் தன்னைவெளிப்படுதுகிறார். எந்தவித ஒப்புமையும் இல்லாத, ''தனித்த அவர்'' (ஏச 40:25) ''முழுவதும் மற்றவர்''; ஆனால் அதே நேரத்தில் எங்கும் நிறைந்து, நமக்கு வேற்று ஆளாய் இல்லாமல் இருக்கிறார். நாம் செய்யும் செயல்களாலே, தன்னுடைய செயல் முறையையும் எதிர்மறைச் செயல்களையும் விளக்குகின்றார்: உதாரணமாக, களிமண்ணைத் தமது கையால் எடுத்து மனிதனாக உருவாக்குகின்றார் (ஆதி 2:7). நோவாவின் பெட்டகத்தில் நுழைந்த எவரும் அழிவுறாவண்ணமாய், அப்பெட்டகத்தின் கதவுகளைத் தாழிடுகிறார் (ஆதி 7:16). போரில் வெற்றிக் கொண்ட தலைவனைப்போல் முழுங்குகிறார் (யாத் 15:3) தனது மந்தையின் மீது ஆயன்காட்டும் பரிவுபோல், நம்மீதும் காண்பிக்கிறார் (எச 34:16). அண்டசராசரங்களைத் தன்கையில் அடக்கியுள்ள அவர்தாம், சிறிய நாடான இஸ்ராயேலுக்கு, திராட்சைத் தோட்டத்திற்கு அதைப் பயிரிடுவோர் காட்டு பரிவையும் (ஏச 5:1-7), தந்தையும் தாயும் மகனுக்குக் காட்டும் அன்பையும் (ஓசே 11:1; ஏச 49:15), காதலில் கட்டுண்ட மனிதன்காட்டும் உணர்ச்சி விழைவினையும் (ஓசே 2:16) காண்பிக்கிறார். இவ்வாறு மனிதப் பண்புகளை இறைவனுக்குச் சாற்றிக் கூறுதல் எளிமையாக இருந்தாலும், அது உண்மைக் கடவுளின், முக்கிய குணங்களை, ஆழ்ந்த, செறிந்த அளவில் வெளிக்கொணர்கின்றது; ஏனெனில், இறைவன் மனிதனைத் தன்னுருவில் படைத்தார் என்றால் தம்மை மனிதனின் எதிர்ச்செயல்களாலே விளக்க முற்படுகின்றார். சந்ததியோ, துணையோ அல்லது பாலினப்பண்போ எதுவுமில்லாமல் நம்மைக் கடந்து இருந்தாலும், மனித அளவில் நமக்குக் குறைந்த அளவில் அவர் இல்லை. ஆனால் மாறாக மனிதனைப் பற்றி நாம் கனவு காணும் முழுமையை அவர் பெற்றிருக்கிறார்; ''பொய் சொல்வதற்குக் கடவுள் மனிதன் அல்லர்; மனத்தை மாற்றிக்கொள்ள ஒரு மனிதப்பிறவியும் அல்லர்'' (எண் 23: 19). இறைவன் எப்போதும் நம்மைக் கடந்தவர். அதுவும் எப்போதும் நாம் எதிர் பார்க்காத முறையில் கடந்தவர்.

4. மனிதன் கடவுளுக்கு அளித்த பெயர் கள்:-

பழைய ஏற்பாட்டின் இறைவன், தன்னை அறிந்து கொண்டவர்கள் பழகும் விதத்தி லும் அழைக்கும் பெயர்களிலும் தம்மை வெளிப்படுத்துகிறார். கூட்டு வழிபாட்டில் இறைவனுக்கு வழங்கும் அதிகாரபூர்வமான பெயர்களுக்கும், அவரவர் தனிப்பட்ட பக்தி யினால் இறைவனுக்கு வழங்கும் பெயர்க ளுக்கும் பிரித்து வேறுபாடு காண்பித்துவிட லாம் என முதலில் நாம் எண்ணக்கூடும். உண்மையில் அதே பெயர்களும் தொனியும் கூட்டு வழிபாட்டிலும் தனிநபரின் செபத்தி லும் காணப்படுகின்றன. இறைவன் ''இஸ் ராயேலரின் பாறை'' (ஆதி 49:24; 2 சாமு 23:3) என்பது எவ்வளவு உண்மையோ, அவ் வளவு உண்மை இறைவன் ''என் பாறை'' (சங் 18:3 தொ; 144:1) என்பதும், அல்லது வெறுமனே ''பாறை'' (சங் 18:32) என்பதும்; அதைப் போலவே ''எனது கேடயம்'' (சங் 18:3; 144:2) ''நமது கேடயம்'' (சங் 84:10; 89:19) என்பவையும்; அதைப்போலவே, ''அவரது மக்களின் ஆயன்'' (மீக் 7:14) ''எனது ஆயன்'' (சங் 23:1) என்பவையும் ஆகும். இவைகளெல்லாம் இறைவனை எதிர்கொள் ளுதல், நேரடியானது உயிருள்ளது என்பதின் அடையாளங்களாகும்.

இந்தச் சொற்றொடர்களெல்லாம் ஒவ் வொருநாளிலும் நாம் பயன்படுத்தும் எளி மையான அன்றாட வாழ்வினை விளக்கும் சொற்கள்தாம். விவிலிய நூலானது, புறஇ னத்தெய்வங்கட்கு எகிப்திலும், பாபிலோனி யாவிலும் வழங்கும் நீண்ட பிரார்த்தனைத் தொடர்களை, அறிந்ததில்லை. இஸ்ராயேல ரின் கடவுள் அளவுகடந்த வல்லமையுள்ள வர், ஆனால் அதே நேரத்தில் மனிதருக்கு எளிதாகத் தோன்றுபவர். அவரே 'மிக உயர்ந் தவர்' (ஏலியோன்), 'என்றும் உறைபவர்' (ஓலாம்), 'புனிதமானவர்' அதே நேரத்தில் ''என்னைக் காணும் இறைவன்'' (ஏல் ராய், ஆதி 16:13). இறைவனின் ஏறக்குறைய எல் லாப் பெயர்களுமே அவருடைய மக்களுக் கும், அவருக்குமிடையே உள்ள உறவைத் தெரிவிப்பதாகவே உள்ளன: ''ஈசாக்கின் பேரச்சம்'' (ஆதி 31:42. 53), ''யாக்கோபின் வல்லமை மிக்கவர்'' (ஆதி 49:24), ''ஆபிர காம், ஈசாக்கு, யாக்கோபின் கடவுள்'' (யாத் 3:6), ''இஸ்ராயேலின் கடவுள்'', 'நமது கடவுள்', 'எனது கடவுள்', 'எனது ஆண்ட வர்'. மேலும் ஊனுருக்கொண்ட மனிதனிட மிருந்து பிரிக்கும் மிக முக்கியமான சொற் றொடராகிய '' புனிதமான இவரே'' என்பது கூட, ''இஸ்ராயேலரின் புனிதமானவர்'' (ஏச 1:4) எனக்குறித்து, புனிதம் என்பதே இறைவனின் மக்களுக்குத்தான் உரியது என் பதையும் விளக்குகிறது. இவ்வாறு ஒன்றோ டொன்று கொண்ட இருவகை சொத்துரிமை யில்தான், உடன்படிக்கையின் மறைபொரு ளையும் இறைவன் தம்மால் ஈன்றெடுக்கப் பட்ட தனது ஒரே திருமகன் இயேசு கிறிஸ்து வோடு இணையும் உறவினைத் திட்டவட்ட மாகத் தெளிவுபடுத்துவதையும் நாம் காண்கி றோம்.

III. புதிய ஏற்பாடு

1. இயேசு கிறிஸ்துவில் தந்தையை அணு குதல்:-

இயேசுவில்தான், இறைவன் முழுவதும் வரையறுக்கப்பட்டவிதமாகவும், தம்மை வெளிப்படுத்துகிறார்; தமது சொந்த மக னையே நமக்குக் கொடையாக அளித்துள் ளார். அதற்கு மேல் தமக்கென எதுவும் மீத்துக்கொள்ளவோ அல்லது கொடுக்கவோ அவரிடம் ஏதும் இல்லை (உரோ 8:32). கிறிஸ்துவின் வாழ்வு, இறப்பு, உயிர்ப்பின் மூலம் மனிதன் கடவுளை அணுக முடியு மாறு இறைவன் செய்த இந்த ஒப்பற்ற செயலை, புதிய ஏற்பாட்டில் தாய்த்திருச் சபை கண்டுணர்ந்து உறுதிப்படுத்துகிறது. இவ்வாறு இறைவனின் சிறப்பான, உறுதி யான செயலானது, அவரவரின் தொலை நோக்கிற்கேற்ப, பல்வேறு பெயர்களைத் தாங்கி நிற்கிறது. மிகப் பழைய விசுவாச அறிக்கை இவ்வாறு விளக்குகிறது: ''சிலு வையில் அறையப்பட்ட இந்த இயேசு வையே இறைவன், ஆண்டவராகவும் கிறிஸ் துவாகவும் ஏற்படுத்தினார்.....இந்த வாக்கு றுதி உங்களுக்கும், உங்கள் மக்களுக்கும், வெகுதொலைவில் உள்ள மற்றவர்கட்கும்

உரியது'' (அ.ப.2:36-39); ''அவர் வழியாக, மனந்திரும்புதலும், பாவப்பொறுத்தலும் அடைவர்'' (அ.ப.5:31). இந்தச் சொற்றொடர்கள் வெளிப்படையாக எதையும் குறிக்காவிடினும் ''கிறிஸ்துவென்னும்'' (கொலோ 1:27: 2:2) இறைவனின் மறை உண்மையைப் பற்றிக் கீழ்க்கண்ட பவுலின் சுருக்க விளக்கத்திற்குச் சான்று பகர்கின்றன: ''அவர் வழியாக நாம்...தந்தையை அணுக (எபே 2:18; 3:12). மேலும் யோவானின் விளக்கத்தையும் எண்பிக்கிறது: ''ஒருவரும் இறைவனை என்றுமே கண்டதில்லை, தந்தையின் அணைப்பிலுள்ள ஒரே பேறானவர்தாம் கிறிஸ்துவின் மேல், இறைவனின் உறைவிடமாகிய விண்ணகம் திறக்கப்படுகிறது (அ.ப.7:56; யோவா 1:51; மாற் 1:10) என்று அறிந்திருக்கிறது. ''இறைவனின் திருவருட்செயல் வெளிப்பாடு'' (உரோ 3:21), ஒப்புரவாக்கல் (உரோ 5:11; எபே 2:16), ''நமது முகங்களில் இறைவனின் மாட்சிமையின் ஒளிவீச்சு'' (2 கொரி 3:18) ''இறையறிவு'' (யோவா 17:3) ஆகிய பல்வேறு அமைப்புகளிலும் பெயர்களிலும் வெளிப்படுத்தப்படும் உண்மைகளும் நாம் உய்த்துணரும் கிறிஸ்து வாழ்வின் அகநிலைகளின் அடிப்படையும் ஒன்றானதாகும். அதாவது இறைவன் அண்மையில் உள்ளார்; கிறிஸ்துவில், கேட்டிராத முறையில் தமது சக்தியையும், அன்பையும் வெளிப்படுத்துவதன் மூலம், அவரை ஏற்றுக் கொள்பவர்கட்குத் தம்மை அளிக்கிறார்.

எனவே இறுதியில் நாம் அறிவது இந்த ஒன்றுதான் - இயேசு கிறிஸ்துவில் விசுவாசம் வைத்து உண்மைக் கடவுளை அறிவதாம்; ''நித்திய வாழ்வு என்பது...உண்மையான இறைவனையும் அவர் அனுப்பிய இயேசு கிறிஸ்துவையும் அறிவதுமே'' (யோவா 1:3). இயேசுவைச் சந்திப்பதன்மூலம், ஒருவன், அவன் யூத மதத்திலிருந்தோ புறமதத்தாரிடமிருந்தோ வந்தவனாக இருந்தாலும், அவன் அறிவினால் உருவாக்கப்பட்டவனாகவோ, இஸ்ராயேல் மரபுப்படி வந்தவனாகவோ இருந்தாலும், இறைவனின் உண்மையான திருமுகத்தையும், அவரது உயிருள்ள திருச்சந்நிதியையும் கண்டுணர்வான்.

2. இயேசு கிறிஸ்துவில், உண்மைக் கடவுளின் திருவெளிப்பாடு:-

அ) சிலை வழிபடுவோர்:- சிலைவழிபடுவோர், கிறிஸ்துவில், உண்மைக் கடவுளின் திருமுகத்தையும், தனது பாவத்தின் உள்சாயலையும் காண்கிறான். கிறிஸ்துவின் நற்செய்தியானது ஒரே சமயத்தில், ''அழிவில்லாக் கடவுளின் மாட்சிமையை விடுத்து, அதற்குப் பதிலாக அழிந்துபோகும்'' (உரோ 1:23) உருவங்களுக்கு மாறுகின்ற புறவின விவேகத்தின் நெறிபிறழும் தன்மையையும் அந்த நெறி பிறழும் தன்மையின் மூலத்தையும் நமக்குத் தெற்றெனக் காட்டுகின்றது. இந்த நெறிபிறழும் தன்மையின்மூலம் ''கடவுளை மறந்து, படைப்புப்பொருட்களுக்கு வழிபாடு செய்வதிலும்'' (1:25) ''அவருக்கு மகிமை அளிக்க மறுப்பதிலும்'' (1:21), இறுதியாக, ''மனிதனின் இழிந்த நிலையிலும், அவனது இறப்பிலும்'' (1:32) அடங்கியுள்ளது. இத்தகைய ''சிலை வழிபாட்டைக் கைவிடுவதிலும்...இயேசு கிறிஸ்துவிற்காக ஏங்கி நிற்பதிலும்'', புறஇனத்தவன்'' வாழும் உண்மைக் கடவுளைக் காண்கின்றான்'' (1 தெச 1:9); ''எந்த இறைவனின் மகிமையிலிருந்து அவன் துரத்தப்பட்டிருக்கிறானோ (உரோ 3:23) அந்த இறைவனின் மகிமையை (2 கொரி 4:6) அவன் கிறிஸ்துவின் முகத்தில் காண்கிறான்.

ஆ) இறைவனைத் தேடும் புற இனத்தவன்:- தட்டுத்தடுமாறி இறைவனைத் தேடும் புற இனத்தவன் (அ.ப.17:27) ஆக இருப்பினும், ஞானத்தின் உதவியால் இறைவனைப் பற்றுகின்ற நிலைமையைக் கொண்டிருந்தால் (1 கொரி 1:2; உரோ 1:20-இல் இயேசு கிறிஸ்துவில் அவன் கண்டுணரும் உண்மை, புதியதன்மையில் குறைந்தது அன்று; ஏற்படுகின்ற மாற்றமும் குறைவுள்ள ஒன்றும் அன்று. இயேசு கிறிஸ்துவின் கடவுளில், அவன், உண்மையாகவே என்றுமிருக்கும், மாற்றமில்லா, எல்லா சக்தியையும் கொண்ட, எல்லா அறிவையும் உள்ளடக்

கிய, அளவிடமுடியாத நம்மையையும், விரும்பத்தக்கதுமான' 'இறைத்தன்மையை காணுகிறான். ஆனால் இந்த அடைமொழி கள், பேதமற்ற, மீபௌதீக நிரூபணங்க ளைக் கொண்டிருப்பதில்லை; ஆனால் இறைவன் தம் திருமுகத்தை நம் பக்கம் திருப்பி, தமது அருளை பொழிகின்ற (எண் 6:25) அவரது தொடக்க முயற்சிகளை மறை பொருளாக விளங்குகின்றன. அவரது யாவும் அறிந்த தன்மை, நம்மைத் தொடர்ந்து வரும் அவரது இரகசியப்பார் வையாகவும் (மத் 6:4), நமது உள்ளத்தின் ஆழத்தை ஊடுருவி ஆராய்வதாகவும் உள் ளது (லூக் 16:15). அவரது எல்லாம் வல்ல சக்தி எவ்வளவு பெரியது என்றால், ''இக்கற் களிலிருந்து ஆபிராகாமுக்கு சந்ததியை எழுப்பவல்லது'' (மத் 3:9); ''அது ஏதாவ தொரு படைப்பை உருவாக்குவதாயிருந்தா லும்'' சரி, (உரோ 4:17), ஆபிரகாமுக்கு ஒரு மகனைப் பிறப்பிப்பதாக இருந்தாலும் சரி, இறந்துபோன இயேசுவை மீண்டு உயிர் பெற்று எழச் செய்வதாயினும் சரி (4:24) அவரால் முடியாத கரியம் எதுவுமில்லை. தாம் கூறிய வார்த்தையில் அவர் காட்டும் உறுதிப்பற்றும், தமது உறுதிமொழிக்கு அவர் கொடுக்கும் வலுவும், அவரது நித்திய நிலைபேறுடைமையாகும்; ''மேலும் தன் னுடைய உரிமை மக்களுக்கு, உலகம் உண் டானது முதலிலிருந்தே அவர் நிச்சயப்ப டுத்தி இருக்கும் அரசாகும்'' (மத் 25:34). ''நாம் அவரது பகைவர்களாய் இருந்த பொழுதே (உரோ 5:10), அவர் நம்மை முதலில் அன்புசெய்தது (1 யோவா 4:10.19) என்பது அவரது நன்மைத்தனம் இதுவரைக் கேட்டறியா வியப்பு என்று எடுத்தியம்புகி றது. இறைவனைப் பற்றிய இயற்கையான அறிவு - அது உண்மையானதால்- இறுதி யிலே, உலகத்தைப் பற்றிய ஆழ்ந்த அறிவா கும்; இயேசு கிறிஸ்து வெளிப்படுத்தியது, இறைவனின் நேரடித் திருச்சந்நிதானமும், உயிர்வாழும் இறைவனின் தனிப்பட்ட அன் பின் தழுவலுமாகும். ஏனெனில் '' இறை வனை அறிவது, அவரால் அறியப்படுவதா கும்'' (கலா 4:9).

இ) யூதர்கள்:- இறைவனின் வருகைக்கா கக் காத்திருந்த யூதர்கள், ஒருவகையில் இறைவனை முன்பே அறிந்தவர்கள்தான். தமது தனிப்பட்ட தேர்வின் மூலம், தமது அழைப்பை யூதர்கள் உணரும்படி செய்துள் ளார். உடன்படிக்கை மூலம், அவர்களது வாழ்விற்குப் பொறுப்பேற்றுள்ளார். இறை வாக்கினர்கள் வழியாக அவர்களுக்குத் தமது வார்த்தையை ஏற்கெனவே பேசியுள்ளார் (எபி 1:1), தன்னுடன் உரையாடும் படி அவர்களை அழைக்கும் உயிருள்ள கடவுள் அவரே. ஆனால் இந்த உரையாடல் எந்த அளவிற்குச் செல்லும் என்றோ, அந்த அள வில் கடவுளை உட்படுத்தும் என்றோ, என்ன பதிலை இம்மனிதன் அளிப்பான் என்றோ, பழைய ஏற்பாடு அறுதியிட்டுக் கூறமுடியவில்லை. ஏனெனில் இறைவனுக் கும், அவரது உண்மையுள்ள உழியர்கட்குமி டையே இன்னும் இடைவெளி அதிக முண்டு. இறைவன், ''இரக்கமும் தயவும் உள்ளவர்'' (யாத் 34:6); வாழ்க்கைத் துணை யிடம் காணும் உள்ளக் கிளர்ச்சியை நம் மீது பொழிபவர்; தந்தையின் இரக்கத்தோடு நம்மை அணுகுபவர்; ஆனால் இத்தகைய உருவக தோற்றங்களுக்குப் பின்னால், நமக் கென இரகசியமாக இறைவன் என்ன வைத் திருக்கிறார் என்பது நமக்கு திரைமறைவா கவே உள்ளது.

ஆனால் இந்த இரகசியத்தை, இயேசு கிறிஸ்துவில் இறைவன் வெளிப்படுத்துகி றார். அவர் வழியாக, உள்ளங்கள் ஒன்றை ஒன்று பரிமாறிக்கொள்ளுதலும் நீதித் தீர்ப் பும் நடைபெறுகிறது. இயேசு கிறிஸ்துவை ஏற்றுக்கொள்ள மறுத்தவர்கள் அவரது தந் தையே ''எங்களது கடவுள்'' எனக்கூறுவது வீணாகும். ஏனெனில் அவர்கள் அவரது தந்தையை அறியாதவர்கள், பொய் பேசுப வர்களே (யோவா 8.54; காண்க 8:19). ஆனால் இயேசுவை ஏற்பவர்களுக்கு, எந்த இரகசியமும், அது எப்படிப்பட்டதாயினும் மறைக்கப்படுவதில்லை அந்த இரகசி யத்தை, ஊடுருவிச் செல்ல முடியாத இறை வனின் மறைபொருளை, கண்டுணர்வார் கள். அவரது திருமகன் ''நான் தந்தையிடம்

கேட்டதெல்லாவற்றையும், உங்களுக்குத் தெரியப்படுத்தியுள்ளேன்'' *(யோவா 15:15)* என நம்பிக்கையுடன் கூறும்பொழுது, அவர்கள் அதை கண்டுணர்வர். இனிமேல் அவர்கட்கு எந்தவித உருவகமோ அல்லது உவமையோ, உண்மையை விளக்கத் தேவையில்லை. ஏனெனில் இயேசு அவர்களுக்குத் தந்தையை முழுவதும் திறந்து காட்டுகிறார் *(16:25* இனிமேல் அவர்கள் கேள்வி ஏதும் கேட்கத் தேவையில்லை *(16:23)*, அமைதியற்று அல்லலுறுவதில்லை *(14:1)*; ஏனெனில் அவரது சீடர்கள் அவரது தந்தையைக் கண்டு கொண்டார்கள் *(14:7)*.

ஈ) கடவுள் அன்புருவானவர்:- ''நம்மீது வானகத் தந்தை கொண்டுள்ள அன்பின் இரகசியத்தை'' (யோவா 4:16), இயேசு கிறிஸ்துவின் மூலமாக அல்லாமல் வேறெவரிடமிருந்தும் நாம் அறியமுடியாது *(4:8.16)*. பழைய ஏற்பாட்டிலே இத்தகைய அன்பை நாம் ஓரளவுக்குத்தான் காணமுடிகிறது. ஏனெனில் 'அன்புசெய்' என்பது இறைவனின் பெருங்கட்டளையாகும் *(உப 6:5; மத் 22:37)*; மேலும் இறைவனின் தன்மையை எடுத்துக்கூறுகையில் *(யாத் 34:6)* அவர் அளவு கடந்த நன்மை உள்ளவர் (உ.ச. *8:6*தொ) என்பதும் இதனாலே. ஆனால் இவையெல்லாம், உருவகங்களை மாற்றி அமைக்கும் மனிதனால் கையாளப்பட்ட சொற்களாகும். ஆனால் இயேசு கிறிஸ்து ஒருவரில்தான், உலகத்தின் படைப்பு, அமைப்பு, இறுதி முடிவு என்கிற செயல்களெல்லாம், தமது அன்பின் செயலே என ஐயமற்ற முறையில் இறைவன் நிரூபிக்கிறார். ''அவரால் மிக்க அன்பு செய்யப்பட்ட அவரது ஒரே மகனை'' *(மாற் 1:11; 12:6)* நமக்காக சாவுக்கு கையளித்தபோது, 'தான் படைத்த இவ்வுலகத்தை அன்பு செய்வதே' *(யோவா 3:16)* தமது உறுதியான நோக்கு என்பதை ஆணித்தரமாக விளக்குகிறார் *(உரோ 5:8)*; மேலும் இவ்வாறு தம் ஒரே மகனை நமக்குக் கையளிப்பதின் மூலம், தமது ஒரே மகனை எவ்வளவு அதிகமாக அன்பு செய்தாரோ, அதே அளவு நம்மையும் அன்பு செய்கிறார் என்பதையும், நாமும் அவரை, அவரது திருமகன் எவ்வளவு அதிகமாக அன்பு செய்தாரோ அதே அளவு, அன்பு செய்யக்கூடியவர்களாகவும் ஆக்குகிறார். தந்தையையும், மகனையும் இணைக்கும் தூய ஆவியாக அன்பெனும் கொடையை நமக்குப் பரிசாக அருளுகிறார்.

*3.* இயேசு கிறிஸ்துவின் திருமுகத்தில் இறைவனின் மகிமை:- இறைவனின் உண்மையில் பங்குபெறும் பேற்றினை உய்த்துணரும் கிறிஸ்தவ உறுதிப்பாடு அறிவு சார்ந்த முறையில் வரும் தீர்மானம் அன்று. அதாவது ''தமது ஒரே மகனைக் கையளித்த இறைவன், நமக்குத் தேவையான எதையும் தர மாட்டாரா? *(உரோ 8:32)* என்பதை அறிவு தெளிவாக்கலாம். ஆயினும் இந்த உண்மை, நமது பகுப்பறிவின் அறிவால் வருவதில்லை. மாறாக, ஊனுடலில் வாழும் நமக்காக நம்மில், வார்த்தை மனு உருவெடுத்து நம்மில் தங்கி வாழ்ந்து செயலாற்றுகிறார் என்ற நிபந்தனையற்ற வெளிப்பாட்டிலிருந்து நாம் அறிகிறோம். உண்மையில் கிறிஸ்துவில் ''மனிதன் மேல் இறைவன் கொண்டுள்ள அன்பு வெளிப்படுகிறது'' *(தீத் 3:4)*. ''யாரும் பார்த்திராத'' *(யோவா 1:18)* அவரைத்தான் கிறிஸ்து நமக்கு வரைபடமாக்கி விளக்கிக் காட்டுகிறார். ''தந்தையின் மாட்சிமையின் சுடரொளியாகவும் அவருடைய உள்ளியல்பின் சாயலாகவும் (எபி 1:3) அவர் ''என்னைக் காண்பவன், தந்தையைக் காண்கிறான்'' *(யோவா 14:9)* என்பதன் மூலம், தந்தையைக் காணப்படக்கூடியவராக்கி, நாம் அவரைப் பார்க்கச் செய்கிறார். இச்செயல் ஏதோ, ஒருபொருளின் மறு உருவமில்லை; ஒரு நகலின் மறு பிரதி அல்ல. ஆனால் அவர் ஒருவர் மட்டும் அவரால் ஈன்றெடுக்கப்பட்ட மகன் ஆதலாலும், தந்தையில் இருப்பவராதலாலும், தன்னில் தந்தையைக் கொண்டிருப்பவர் ஆதலாலும் *(யோவா 14:40)*, இயேசுவால், தந்தையை நோக்காமல், ஒரு வார்த்தை கூறவோ, ஒரு செயலைச் செய்யவோ, தம்முடைய மன எழுச்சிகளை அவரிடமிருந்து பெற்றிடாமல், அல்லது தனது செயலையும் அவரை நோக்கிச் செயல்படுத்தாதவராக இல்லாமல்

(யோவா 5:19 தொ.30) ஒரு வார்த்தை கூறவோ, ஒரு செயலைச் செய்யவோ முடியாது. தந்தையைக் கண்ணுறாமல் எதுவும் செய்ய முடியாதவராக இருப்பதுபோலவோ தாம் யார் என்பதையும், தந்தையை விட்டுப் பிரிந்து தனித்து நின்று சொல்ல முடியாதவராக இருக்கிறார் (மத் 11:27). அவர் செய்கின்ற எல்லாச் செயல்கட்கும், அவர் இருக்கின்ற நிலைக்கும் அடித்தளமாக, தந்தையின் அன்பும், திருச்சந்நிதியும் உள்ளன. இதுவே அவரது ஆளுமையின் இரகசியமாகவும், அவரது முகத்தில் ஒளிரும் மகிமையின் அறிவொளியாகவும் (2 கொரி 4:6) இருப்பதோடு, அவரது ஒவ்வொரு செயலையும் முத்திரையிடுகிறது.

*4.* நம் ஆண்டவர் இயேசு கிறிஸ்துவின் கடவுள்:- இயேசுவின் கடவுள் அவர் தந்தையே, அவரை இயேசு அழைக்கையில் சிறு குழந்தைக்குரிய உரிமைப்பாங்குடனும், மன உணர்ச்சியுடனும் 'அப்பா' என்கிறார். தந்தை, அதே சமயத்தில், இயேசுவின் கடவுளும் ஆவார். ஏனெனில் தந்தையானவர், யாரிடமிருந்தும் பெறாமல் தனக்குத் தானே இறைத்தன்மையைக் கொண்டிருப்பதோடு, தொடக்கத்திலிருந்தே தாம் ஈன்ற ஒரே மகனுக்கு அதைக் கொடுப்பவராகவும், தந்தையும் மகனும் இணைந்து வாழும் தூய ஆவிக்கும் அவரே அந்த இறைத்தன்மையை அளிப்பவராகவும் உள்ளார். இவ்வாறு இயேசுவே, தந்தையும், கடவுளும் ஒருங்கிணையும் இறைத்தன்மையாகிய மறை உண்மையையும், ஒரே இறைவன் மூன்று ஆட்களாய் உள்ளார் என்ற மறை உண்மையையும் நமக்கு வெளிப்படுத்துகிறார். இதைத்தான் பவுல் மும்முறை எடுத்துக்கூறுகிறார்: ''நமது இயேசு கிறிஸ்துவின் தந்தையும், கடவுளுமானவர்'' (உரோ 15:6; 2 கொரி 11:31; எபே 1:3). மூவொருகடவுளை, நாம் புரிந்து கொள்ளும் வகையில் இயேசு விளக்குகிறார். இதற்காக, இறைவன் பிள்ளைக்குரிய சார்புடைமையில், அவருடைய சாயலில் நம்மைப் படைத்து, முன்னேற்பாடு செய்துள்ளார்.

இறைவன் திருமுன் உள்ள படைப்புகளில் கிறிஸ்து ஒருவரே முழுமை பொருந்திய மாதிரியாக இருப்பதால், அவர் உண்மைக் கடவுளின் மொத்த உருவமைப்பைத் தந்தையில் வெளிக்காட்டுகிறார்; அக்கடவுள் யாரெனில், தம்மை இஸ்ராயேலருக்கு வெளிப்படுத்தியவரும், நேர்மையுள்ள ஞானத்தோடு தம்மை வெளிப்படுத்துபவரும் ஆவார். இயேசுவின் கடவுளானவர், பழைய ஏற்பாட்டில் தம்மைப்பற்றித் தாம் அறிவித்த குணங்கள் அனைத்தையும், மனிதன் கற்பனை செய்து பார்க்க முடியாத அளவிற்கு முழுமையாகவும், தனிச்சிறப்பாகவும் கொண்டவர். நம் யாருக்கும் இல்லாதது போல், அவர் இயேசுவுக்கு 'முதலும், முடிவுமாவார்'. அவரிடமிருந்தே கிறிஸ்து வருகிறார்; மீண்டு அவரிடமே கிறிஸ்து திரும்பச் செல்லுகிறார்; எல்லாப் பொருட்களின் விளக்கம் அவரே, அவரிடமிருந்தே எல்லாம் உருப்பெருகின்றன; அவரது திருவுள்ளம் எப்படியும் நிறைவுபெற வேண்டும்; அதே நேரத்தில் தன்னிறைவு கொண்டவரும் அவர் ஒருவரே; தூய்மையும், நன்மையும் நிறைந்தவர் அவரே, ஒரே அண்டவரும் அவரே. ஒப்புமை இல்லாத ஓர் உயிர் அவரே. இத்தந்தையின் மதிப்பை எடுத்துக் காட்டுவதற்காக, ''தாம் (அன்பு செய்யும்) அத்தந்தையை உலகம் அறியும்பொருட்டு (யோவா 14:31), இயேசு; படைப்பின் மகிமை எல்லாவற்றையும் தியாகம் செய்கிறார்; அலகையின் சக்தியை நேருக்கு நேர் சந்திக்கிறார்; இறுதியில் சிலுவையின் கொடுமையையும் தாங்கிக் கொள்ளுகிறார். இயேசுவின் கடவுள் உயிர்வாழும் கடவுள்; தமது மக்களை, பாசத்தோடும், உள்ளக்கிளர்ச்சியோடும் அன்பு செய்து, அவர்களைக் கண்ணும் கருத்துமாய்க் கட்டிக் காப்பவர், எனவேதான், இப்படிப்பட்ட இறைவனின் அன்பின் கனல், (பாவத்தால் இழந்த) அரசை, மீண்டும் தமது தந்தையிடம் சேர்க்கும் வரையில் (லூக் 12:50) கிறிஸ்துவைச் சுட்டெரித்துக் கொண்டே இருக்கிறது.

*5.* இறைவன் ஆவியானவர்:- தந்தையும், மகனும் இவ்வாறு தூய ஆவியில்தான் எதிர்

கொள்கின்றனர். இந்த ஆவியில்தான் கிறிஸ்து தம்மைப்பற்றி ''நீரே எனது மகன்'' என்று தந்தை கூறுவதைக் கேட்கிறார், தமது மகிழ்வையும் பெறுகிறார் (மாற் 1:10). இவ்வாறு அத்தந்தைக்கு மகனாக இருக்கும் மகிழ்வை இந்த ஆவியில்தான் மீண்டும் தந்தைக்கே திருப்பி அளிக்கிறார் (லூக் 10: 21). இவ்வாறு இயேசு ஆவியில் மட்டும் தான் தந்தையோடு இணையக் கூடுமாதலால், தந்தையை அறிவிக்கையில் இயேசு தூய ஆவியை வெளிப்படுத்தாமல் இருக்க முடியாது.

இவ்வாறு ஆவியை ஓர் ஆள் என விவரிக்கையில், இயேசு, ''இறைவன் ஆவியானவர்'' (யோவா 4:24) என்றும், அதே நேரத்தில் இது என்ன பொருள்படுகிறது என்பதையும் வெளிப்படுத்துகிறார். இவ்வாறு தந்தையும், மகனும் ஆவியில் ஒன்றித்திருப்பது மற்றவரை உடைமையாகக் கொண்டு மகிழ்வதற்காக அன்று; மாறாக ஒருவர் தம்மை மற்றவருக்குக் கொடுக்கவே; கொடுப்பதை இந்த ஒன்றிப்பு உண்டாக்குகிறது. இவ்வாறு கொடையாகவுள்ள, தூய ஆவி, தந்தையும், மகனும் இணையும் இந்த ஒன்றிப்பை முத்திரை இடுகிறதென்றால், தன்மையாலே, அவர்கள் இருவரும் கொடையாக இருக்கிறார்கள்; அவர்களின் பொதுவான உட்தன்மை, கொடுப்பதும், 'அடுத்தவரில் வாழ்வதும், அடுத்தவருக்கு வாழ்வு அளிப்பதுமேயாகும். இவ்வாறு வாழ்வு, தொடர்பு, தனியுரிமை ஆகியவைகளின் சக்தியாக இருப்பவர் ஆவியாகும். கடவுள் ஆவியானவர் என்பது அவர் எல்லாம் வல்லவர் என்பதையும், தம்மையே முழுவதும் அளிக்க வல்லவர் என்பதையும், தம்மையே மேலாண்மையோடு உறுதிப்படுத்திக் கொள்பவர் என்பதையும், அதே நேரத்தில் எல்லாவற்றினின்றும் முழுவதும் விலகி நிற்கவும் முடிபவர் என்பதையும் உணர்த்துகின்றது. மேலும் தமது படைப்புப் பொருள்களை முழுவதும் தமக்கே உரிமையாக்கிக் கொள்ளவும், அதே நேரத்தில் அப்படைப்புப் பொருள்கள் தங்கள் தனித்தன்மையுடன் வாழும்படி அமைக்கவும் வல்லவர் என்று உணர்த்துகின்றது. இது கடவுள் சடப்பொருளால் ஆனவர் இல்லை என்று கூறுவதிலிருந்து முழுவதும் வேறுபட்டது; எல்லா வரைமுறைகளையும் கடந்து, எல்லாப் பின்வாங்கு நிலைகளையும் கடந்து நிற்பதாகும். முடிவில்லாக் காலத்திற்கும், அதே நேரத்தில் ஒவ்வொரு வினாடியும் வாழ்வு மற்றும் ஒன்றிப்பின் ஒரு புதிய, முழுமையான ஆற்றலாகும்.

**இறைவன் சித்தம்** (WILL OF GOD)

இறைவனின் சித்தம் மற்றும் திட்டம் ஆகியவற்றின் உள்ளுறைத் தன்மைப்பொருள் ஒன்றேயாகும். ''எல்லா மனிதரும் மீட்பு பெறவேண்டும் என்பது இறைவனுடைய விருப்பம்'' (1 திமோ 2:4) என்று கூறுவதன் மூலம் பவுல், எல்லா இறைவாக்குகளையும், இயேசுவினுடைய செய்தியையும் தொகுத்துத் தருகிறார். இறை சித்தத்தின் எல்லா வரலாற்று வெளிப்பாடுகளும், ஞானத் திட்டத்தில், ஒரே முழுதான திட்ட அமைப்பின்படி ஒருங்குபடுத்தப்படுகின்றன. ஆயினும், முழு திட்டத்தினுடைய ஒவ்வொரு தனிப்பட்ட வரலாற்று வெளிப்பாடும், ஒரு தனிப்பட்ட நிகழ்ச்சியின்மீது அக்கறை கொண்டுள்ளது. அந்நிகழ்ச்சியில் கடவுளுடைய தலைமை நிலையை ஏற்றுக் கொள்வதற்காக மனிதன், ''உமது சித்தம் நிறைவேறட்டும்'' என்று செபிக்கிறான். இவ்வாறு, ஏற்கனவே முடிவடைந்த வரலாறானது, காலத்திற்கு முன்னரே அனைத்தையும் முன்குறித்து வைத்த இறைவனின் திட்டத்தை வெளிப்படுத்துகின்றது. அதே நேரத்தில், இறைவனின் சித்தத்திற்கு கீழ்ப்படிகின்ற மனிதன், கடவுள் எதிர்காலத்தை நடத்திச் செல்கிறார் என்பதை அறிந்தவனாய், எகிர்காலத்தை உறுதியான நம்பிக்கையுடன் எதிர்கொள்கிறான்.

உள்ளார்ந்த உடன்பாடு மற்றும் விரும்பி செயலாற்றும் கடமை மனிதனுக்கு இருப்பதால், மனிதனுக்கான இறைவனுடைய சித்தமானது ஒரு சிறப்பான அமைப்பினை ஏற்றுக்கொள்கிறது. மனிதனுக்கு அளிக்கப்பட்டுள்ள இறைசித்தமானது தவிர்க்க முடியாத விதியாக இல்லாமல், ஒரு அழைப்பாக, ஒரு

கட்டளையாக, மனிதன் மீது விடுக்கப்பட்ட ஒரு வேண்டுகோளாக உள்ளது. சட்டமானது, இறைவன் விரும்புவது என்ன என்பதை, தெளிவாக வெளிப்படுத்தப்பட்ட ஒரே தொகுப்பாக ஒன்று சேர்த்துத் தருகிறது. சட்டம் என்பது ஒரு அமைப்பாக இருக்கும் வரையில், அது செயலற்றதாக உள்ளது. என்றும் நிகழ்கால நிகழ்ச்சியாக உள்ள, மனிதனுடைய பதிலை தூண்டியெழுப்புகின்ற, உரையாடலைத் தொடங்குகின்ற தன்னியலான விருப்பத்தினை சட்டத்தில் கண்டுபிடிக்க முயற்சி தேவைப்படுகிறது. இவ்வொளியில் காணும்போது, சொல்லும் செயலுமாக உள்ள அவருடைய வார்த்தையை ஒத்ததாக இறைவனின் சித்தம் உள்ளது. இறைவனின் சித்தமானது, முதலில் அவருடைய விருப்பத்தினை வெளிப்படுத்துகின்ற செயலாக உள்ளது. இப்பொருளில் இறைவனுடைய சித்தத்தை ஒரு முழுத்திட்டமாகத் தொகுத்துத்தரும் அவரது திட்டத்தோடோ அல்லது அவரது விருப்பத்தைச் செயல்முறையில் விளக்கும் சட்டத்தோடு மட்டும் ஒன்றாக்கப்படுவதில்லை.

முன் குறித்தல், தேர்ந்தெடுத்தல், அழைத்தல், விடுதலை, உறுதிமொழிகள், தண்டனைகள், மீட்பு முதலான இறைசித்தத்தின் பல்வேறு வெளிப்பாடுகளைப் பற்றிய விளக்கங்களுக்குச் செல்வதற்குப் பதிலாக, விண்ணுலகில் நிறைவேற்றப்படுகின்ற அதே நேரத்தில் மண்ணுலகிலும் அது நிறைவேற்றப்பட வேண்டும் என்று நாம் காட்ட வேண்டும் (மத் 6:10). இறைவனின் மீட்புச் சித்தமானது தன்னிலேயே பயனிறைவுடையது; மனிதனுடைய விருப்பத்தினை ஒடுக்குவதற்காக இல்லாமல், முழுமைபடுத்துவதற்காக இறைசித்தம் அதனை எதிர்கொள்கிறது. இதனை அடைய, இறைவன் மனிதனுடைய தீமையை வென்று, விருப்பங்களை ஒருவருக்கொருவர் பகிர்ந்து கொள்ள வேண்டும்.

I. பழைய ஏற்பாடு

தொடக்கத்திலிருந்தே படைத்தவரது சித்தமானது ஆதாமிற்கு இருவிதங்களில் தோன்றுகிறது. முதலாவது அது விலங்குகளின் மீதான ஆற்றல் மற்றும் நிறைவான கூட்டாளியின் பிரசன்னம் ஆகியவற்றுடன் இணைந்த தாராளமான ஆசீராகும். இரண்டாவது, மனித சுதந்திரத்திற்கான வரையறையாகும்: ''நீ.. உண்ணாதே'' (ஆதி 2:17). பின்னர், நாடகம் துவங்குகிறது. அவனுடைய உண்மையான சுதந்திரத்தின் மையமாகிய சார்ந்துள்ள நிலைக்கு துணைபுரிய உருவாக்கப்பட்ட, படிப்பிக்கின்ற சோதனையாக இத்தடையை அறிந்து கொள்ளாமல், தன்னுடைய மேலாண்மை நிலையின் மீதான பொறாமையின் சித்தம் என்று கருதும் ஆதாம் கீழ்ப்படிய தவறுகிறார் (3:5 தொ). இறைவன் மீண்டும் உரையாடலை தொடங்கும்போது (3:9), இறை சித்தமானது பாம்பின்மீதான சாபமாக உருவாகிறது (3:14); ஆணுக்கும் பெண்ணுக்கும் இறுதி வெற்றி பற்றிய வாய்ப்பினால் ஓரளவு ஒளிமயமாக்கப்பட்ட தண்டனையின் அறிவிப்பாக இது உள்ளது (3:15-19). பழைய ஏற்பாட்டில் இறைவனின் சித்தம் பற்றிய பிரச்சனையின் அடிப்படை இத்தகையதாகும்.

1. இறைவன் தமது சித்தத்தை வெளிப்படுத்துதல்:-

இந்நிலையின் இறைசித்தமானது பாவமிக்க மனித சமுதாயத்திற்கு நேரடியாகவும், உலகலாவிய முறையிலும் ஒருபோதும் இனி வெளிப்படுத்தப்படப் போவதில்லை. இறைவன் வரலாற்றின் இடையில் நுழைவதன் மூலமும், சட்டத்தை அளிப்பதன் மூலமும், ஒரு தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களுக்கான இறைசித்தம் பற்றிய தனிப்பட்ட அறிவிப்பாக இது உள்ளது.

அ. வரலாற்றில்:- இஸ்ராயேல் முதலில் யாவேயின் பெரும் செயல்களில் அவரது இரக்கம் மிக்க, அன்பான சித்தத்தைத் தெரிந்துக் கொள்கிறது. இஸ்ராயேலை தம்முடைய மக்களாக உருவாக்குவதே அவருடைய விருப்பமாக இருந்ததால் (1 சாமு 12:22), எகிப்தின் அடிமைத்தளையினின்று இஸ்ராயேலை விடுவித்து (யாத் 3:8), கழுகுகளின் இறக்கைகளின் மேல் அதனை உயர்த்த (19:4) யாவே தீர்மானித்தார். நாடு

கடத்தப்பட்ட சோதனை காலத்திற்குப் பின்னர், புறவினத்தாரின் உதவியையும் கொண்டு எருசலேமை மீண்டும் அமைக்கவும், பேராலயத்தை மீண்டும் கட்டியெழுப்பவும் ஆண்டவர் விரும்புகிறார் (*ஏச 44:28*). இதன் மூலம், இறைவன் சாவையன்று வாழ்வையே (*எச 18:32*), துன்பத்தையன்று, அமைதியையே (*எரே 29:11*) விரும்புகிறார் என்பதை இஸ்ராயேல் உணரவேண்டும். இத்தகைய வெளிப்பாட்டினைக் கொண்டிருக்கும் விருப்பமானது அன்பையே சுட்டிக் காட்டுகிறது.

சட்டத்தை அளிப்பது அன்பின் அடையாளமே. ஏனெனில் ''நீ அந்தக் கட்டளையின்படி நடக்கும் பொருட்டு, அது உனக்கு மிகவும் அண்மையிலேயே இருக்கிறது; அது உன் வாயிலும் இதயத்திலும் உள்ளது'' (*உப. 30:14*) என்பதை இஸ்ராயேல் புரிந்துக் கொள்வதற்குச் சட்டம் வழிவகுக்கிறது. சங்கீத ஆசிரியர்கள், இறைசித்தத்துடனான தொடர்பின் அனுபவமான, ஒப்பிடமுடியாத பெருமகிழ்ச்சியின் ஊற்றை பாடல்களில் தொகுத்தனர் (*சங் 1:2*). நாடு கடத்தலுக்குப் பிற்பட்ட இலக்கியத்தில் ''இறை சித்தத்தினால்'' ஆசிர்வதிக்கப்பட்டவராக தோபியா தோன்றுகிறார் (*தோபி 12.18*). ''உம் திருவுளப்படி நடக்க எனக்குக் கற்பித்தருளும்'' (*சங் 143:10*) என்னும் ஆர்வமிக்க செபமும் உள்ளது.

ஆ. இறைஏவுதல் பெற்ற சிந்தனையில்:- இறைவாக்கினர்கள், ஞானிகள் மற்றும் சங்கீத ஆசிரியர்கள் இறைசித்தத்தின் யாவும் கடந்த நிலையை உணர்கிறார்கள்; இந்த இறை விருப்பத்தை உயர்ந்த முறையில் ஆராதிக்க, ஒவ்வொவரும் அதன் எதாவது ஒரு பண்பை வலியுறுத்துகின்றனர்.

(i) அதன் மேலாண்மையான சுதந்திரம்:- ''அவர் தீர்மானிக்கிறார்; அவர் முடிவை யார் மாற்றக்கூடும்? எதை விரும்புகிறாரோ அதை அவர் செய்து முடிக்கிறார்'' (*யோபு 23:13*). அவர் உலகுக்கு அனுப்புகின்ற வார்த்தையானது, ''அவர் விரும்பியதையெல்லாம் செய்து முடிக்கிறது'' (*ஏச 55:11*). அழிவைப்பற்றியதாக இருந்தாலும் அது நடைபெறுகிறது (*10:23*), கடவுள் மனித பரிந்துரைகளை விட்டுவிட்டு தன்னுடைய விருப்பத்தையே பின்பற்றுகிறார் (*40:13*). இறைவனின் எல்லாம் வல்லமை மற்றும் முழுச் சுதந்திரம் ஆகியவை பற்றிய இத்தகைய உறுதிக்கூற்றுகள் காணப்படுகின்றன. படைத்தவர் என்னும் நிலையில் வானத்திலும் பூமியிலும் எல்லா ஆற்றலையும் அவர் கொண்டுள்ளார்; இயற்கையின் சக்திகள் அவருக்கு உட்பட்டு பணிகின்றன (*சங் 135:6; யோபு 37:12; சீரா 43:13-17*). தமது வேலைப்பாட்டின் தலைவர் என்னும் நிலையில், மனித இதயத் துடிப்பிற்கும் அவர் வழிகாட்டுகிறார் (*பழ 21:1*); விருப்பப்படி அரசுகளை அளிக்கிறார் (*தானி 4:14.22.29*). அவர் விரும்பிய போது உயர்த்தவும் தாழ்த்தவும் செய்கிறார் (*தோபி 4:19*). சில நேரங்களில் தன்னிச்சையாகத் தோன்றும் இறை விருப்பத்தின் மேலாண்மையான சுதந்திரத்துடன் முரண்படும்போது (*எச 18:25*) ஆதாமைப்போன்று எதிர்த்தெழ மனிதன் சோதிக்கப்படலாம். இந்நிலையில் குயவன் களிமண்ணைத் தனது விருப்பத்திற்கேற்ப உருவாக்கும் பாரம்பரிய உதாரணத்தைப் பயன்படுத்தி, படைக்க பட்டவன் என்ற நிலையில் மனிதனுடைய அடிப்படை சார்புநிலையை மறைநூல் அவனுக்கு நினைவுறுத்துகிறது. ''அவருடைய விருப்பத்தை யார் எதிர்க்கக்கூடும்? அற்ப மனிதா! கடவுளுக்கு எதிர்வினா விடுக்க நீ யார்? (*உரோ 9:19 தொ; எரே 18:1-6; ஏச 29:16; 45:9; சீரா 33:13; ஞான 12:12*). படைப்பானது, தன்னை படைத்தவருடைய சித்தத்தின் எந்தவொரு வெளிப்பாட்டையம் தாழ்மையுடன் ஆராதிக்க வேண்டும்.

(ii) இறைசித்தத்தின் ஞானம்:- மறைபொருளை ஆராதிப்பதென்பது, அறிவாற்றலை இழப்பதன்று; அவரது சித்தத்தைச் செயல்படுத்துவதை ஆள்கின்ற ஞானம், இறைநீதி, குறிக்கோள் மற்றும் திட்டத்தை பற்றிய அறிவு ஆகியவற்றின் மீதான செழுமைமிக்க விசுவாசத்தைச் சார்ந்திருப்பதாகும். வெறும் சாதாரண மனித

அறிவாற்றல் இறைவனுடைய சித்தத்தைப் புரிந்து கொள்ள முடியாது (ஞான 9:13); ஆனால் அதற்காக செபிப்பவனுக்கு ஞானத்தின் கொடையானது நுண்ணிறிவு அளிக்கின்றது (9:17). அப்போது ''என்றென்றும் நிலைத்திருக்கும் ஆண்டவருடைய திட்டமும் அவரது இதயத்தின் எண்ணங்களும்'' (சங் 32:11) மனிதனுடையவற்றினின்று முற்றிலும் மாறுபட்டிருப்பதை (பழ 19:21) நாம் காணலாம்.

(iii) நற்செயலாற்றும் விருப்பம்:-

இறைவனுடைய சித்தமானது நற்செயலாற்றுதல், நல்ல விருப்பம், இரக்க உணர்வு, கருணை உணர்வு போன்ற சொற்களில் இங்கு வெளிப்படுத்தப் படுகிறது. மற்ற மொழிகளில் உள்ளதுபோல எபிரேய மொழியிலும் ''ஒருவரை விரும்புதல்'' என்பது, அவரை அன்பு செய்வதாகும். இப்பொருளில் இறைவன் தமது ஊழியனையும் (ஏச 42:1), தமது மக்களையும் (சங் 44:4), நேர்மையாளர்களையும் (சங் 22:9) விரும்புகிறார். தம்முடைய தேர்ந்தெடுக்கப்பட்டவர்களில் இரக்கம், மன்னிப்பு மற்றும் நன்மைத் தனம் (ஓசே 6:6; மீக் 6:8; எரே 9:23; ஏச 58:5 தொ) ஆகியவற்றை அன்பு செய்கிறார் அதாவது விரும்புகிறார்.

2. மனிதனுடைய மறுப்புடன் முரண்பாடு:-

இறைவனுடைய அன்புச் சித்தமானது மனிதனுடைய பாவ விருப்பத்துடன் மோதுகிறது. ஆதாமினுடைய வரலாறு எப்போதுமே நிலவுகிறது. சான்றாக, இறைவாக்கினர் ஆமோஸிற்கு செவிமடுப்போம். விசுவாசமற்ற இஸ்ராயேலுக்கு ஆசீயளிக்கும் விருப்பமானது தண்டிக்கும் விருப்பமாக உருவாகிறது (ஆமோ 1:3.6); தேர்ந்தெடுக்கப்பட்டவராக இருப்பதன் விலை இதுவே (3:2). மனிதன் தன்னுடைய ஆண்டவரை ஒருபோதும் ஏற்றுக்கொள்ளவில்லையென்றால் (4:6-11), இறுதி தண்டனைக்கு அவன் தயாராகட்டும் (4:12). இதயத்தைக் கடினப்படுத்துவதன் மிரட்டலானது மனிதன்மீது பளுவைச் சுமத்துகின்றது. தண்டனைக்கான இறைவனின் சித்தமானது உணர்ச்சியற்றதன்று; ஏனெனில், எஞ்சியிருப்போராவது உயிர்பிழைப்பர் (ஏச 6:13; 10;21) என்று கூறும் போது தமது முடிவிலிருந்து ''திரும்புவதற்கு'' தம்முடைய விருப்பத்தை மாற்றுவதற்கு அவர் எப்போதும் தயாராக உள்ளார் என்பது தெரிகிறது (எரே 18:1-12; எச 18; யாத் 32:14; யோனா 3:9-10). ''அக்கிரமி தன் தீய வழியை விட்டு மனந்திரும்பி உயிர்வாழ வருவதை'' (எச 18:23) காணும்போது அவர் பெருமகிழ்ச்சி கொள்கிறார்.

இறைவனே பாவியின் நிலையை தமது கரத்தில் எடுக்காத வரையில், இச்சித்தமானது பயனற்ற எண்ணமாகவே இருக்கும். அவருடைய முறையானது, தமது, விசுவாசமற்ற துணையாளரின் சித்தத்தை உள்ளார்ந்த கவர்ச்சியால் ஈர்ப்பதும் (ஓசே 2:16), இஸ்ராயேல் தன்னுடைய சித்தத்தைப் பின்பற்ற அதற்கு ஒரு புதிய இதயத்தை அளிப்பதுமாகும் (எச 36:26-27; எரே 31:33). இம்முடிவிற்காக, ஒரு ஊழியனை உருவாக்கி, தம்முடைய சித்தத்திற்கு கீழ்ப்படியக்கூடிய விதத்தில் அவனை அமைக்க (சங் 39:8-9), தினமும் காலையில் அவனுடைய செவியை அவர் திறந்துவிடுகிறார் (ஏச 50:5). இந்த ஊழியன் காரணமாக, ''ஆண்டவரின் திருவுளம் நிறைவேறும்'' (53:10). அதே சமத்தில், இறைவனின் சித்தமானது கட்டாயத்தை விடுத்து அன்பையே பயன்படுத்துகிறது. அன்புக்குரியவர், தனது மணமகள் விரும்புவதற்குமுன் அவளை எழுப்புவதில்லை (உ.ச. 2:7; 3:5; 8:4). ஆனால், அவள் தனது காதலனிடம் திரும்பிவர விரும்பும்போது (ஓசே 2:17-18), ''என் அன்புடையாள்'' (ஏச 62:4) என்று இறைவனாலேயே அழைக்கப்பட அவள் தகுதியுடைவளாகிறாள்.

II. புதிய ஏற்பாடு

புதிய ஏற்பாட்டின் தொடக்கத்திலேயே, அருள் நிறைந்தவளும் ஆண்டவருடைய அடிமையுமாகிய மரியாள், தாழ்ச்சியோடும் கீழ்ப்படிதலோடும் இறைவனின் சித்தத்தை வரவேற்கிறாள் (லூக் 1:28.38). ஒப்புயர்வற்ற நீதிமானாகிய இயேசு, ''இதோ இறைவா

உமது திருவுளத்தை நிறைவேற்ற'' (எபி *10:7.9)* உலகிற்கு வருகிறார். ''இறைவனுடைய மனதிற்கு உகந்தவராக, அவர் விரும்பியதெல்லாம் செய்யக்கூடிய மனிதனாகிய அவர்'' (அ.ப. *13:22*), தாவீதை விட உயர்ந்தவராக உள்ளார்.

1. கிறிஸ்துவும் இறைவனின் சித்தமும்:-

அ) இயேசு தந்தையின் முன்னுரிமைகளை வெளிப்படுத்துகிறார்:-

இறைவனுடைய இதயத்தை ஒடுக்க விரும்புகின்ற பரிசேயர்களுடைய தொல்லைப்படுத்தும் மனப்போக்குக்கு எதிராக, இறைவன் தமது நன்மைகளை அளிப்பதில் முற்றிலும் கட்டுபாடற்றவராக உள்ளார் என்று இயேசு அறிவிக்கிறார். அன்பினால் ஆளப்படும் இந்தச் சுதந்திரம், திராட்சைத் தோட்டமும் உரிமையாளரும் என்னும் உவமையில் தோன்றுகிறது. ''உனக்குக் கொடுத்தபடியே கடைசியில் வந்த இவனுக்கும் கொடுப்பது என் விருப்பம். என் விருப்பம் போலச் செய்ய எனக்கு உரிமையில்லையா? நான் நல்லவனாய் இருக்கிறேன் என்பதால் உனக்குப் பொறாமையோ?'' (மத் *20:14-15*). அவ்வாறே, மெசியாவின் வெளிப்பாட்டைச் சிறுவருக்கென ஒதுக்கி வைப்பதும் *(11:25)*, அரசைக் கொடையாகத் தம்முடைய சிறு மந்தைக்கு அளிப்பதும் (லூக் *12:32*), இறைவனின் விருப்பமாகும். அவரது விருப்பத்தை நிறைவேற்றுவோர் மட்டுமே இந்த அரசில் நுழைவர் (மத் *7:21*); ஏனெனில், அவர்கள் மட்டுமே அவரது குடும்பத்தின் உறுப்பினர்களாக உள்ளனர் *(12:50)*.

ஆ) தனது தந்தையின் விருப்பத்தை இயேசு நிறைவேற்றுகிறார்:- நான்காவது நற்செய்தியில் இயேசு தம்முடைய தந்தையின் சித்தத்தைப்பற்றி பேசாமல், ஒரு பணியை உள்ளடக்கிய இறைவனின் சித்தமாகிய, தம்மை அனுப்பினவரின் சித்தத்தைப் பற்றிப் பேசுகிறார். இவ்விருப்பத்தினால் இயேசு ஊட்டமளிக்கப்படுகிறார் (யோவா *4:34*); அதனை நிறைவேற்றுதலே அவருடைய ஒரே ஆசை *(5:30)*; ஏனெனில், தன்னை அனுப்பினவரைத் திருப்திபடுத்தும் அனைத்தையும் அவர் செய்கிறார் *(8:29)*. தன்னிடம் வருகிற அனைவருக்கும் உயிர்ப்பையும், முடிவில்லா வாழ்வையும் கிறிஸ்து அளிக்க வேண்டுமென்பதே இறைவனுடைய சித்தம் *(6:38* தொ). இச்சித்தமானது இயேசுவிற்கு ஒரு ''கட்டளையாக'' தோன்றினாலும் *(10:18)*, மகனுடைய கீழப்படிதலானது தந்தையின் சித்தத்தில் அவரது சித்தமும் பங்கு பெறுவதற்காக *(15:10)*, ''தந்தை அவரை அன்பு செய்கிறார்'' *(10:17)* என்பதன் அடையாளத்தை அதில் காண்கிறார்.

இறை சித்தத்துடனான இயேசுவின் முழுமையான பற்றுதலானது, ஒத்தமை நற்செய்திகளின் படி, பாடுகளில் காணவேண்டிய துன்பமிக்க ஏற்பினைத் தாழ்த்தாமல், தெளிவானதாகச் செய்கிறது. கெதுசமனியில் 'நான் விரும்புவதும்', நீர் விரும்புவதும்' எதிரிடையாக இருப்பதை இயேசு தொடர்ந்து காண்கிறார் (மாற் *14:36*). ''என் விருப்பம் அன்று, உம் விருப்பமே நிறைவேறட்டும்'' என்னும் இயேசுவின் விடாப்பிடியான செபமானது மனப்போராட்டத்தினை அழிக்கிறது (லூக் *22:42*). அக்கணம் முதல், தந்தையால் முழுவதும் கைவிடப்பட்டதாகத் தோன்றினாலும், தாம் ''அன்பிற்குரியவன்'' என்று கிறிஸ்து தொடர்ந்து உணர்கிறார் (மத் *27:43* இ; சங் *22:9*). தமது உலக வாழ்வின்போது, எருசலேமின் பிள்ளைகளை மீண்டும் ஒன்று சேர்க்கவேண்டும் என்ற ஆசையினை இயேசு அடைய முடியவில்லை *(23:37)*; ஆனால், தம்மையே பலியாக்கும் தமது சித்தத்தின் மூலம் அவர் மண்ணுலகில் தீயை மூட்டினார் (லூக் *12:49*).

2. ''உம்முடைய சித்தம் செய்யப்படுவதாக'':-

வானகத்தைப் போலவே பூமியிலும் இறைவனின் சித்தம் இயேசுவில் நிறைவேறியதால், ஆண்டவர் கற்பித்த செபத்தில் கேட்கப்படுவோம் என்பதில் கிறிஸ்தவன் உறுதியாக இருக்கலாம் (மத் *6:10*). கிறிஸ்துவை உண்மையாகப் பின்செல்பவர், அச்சித்தத்தினை அறிந்து, செயல்படுத்த வேண்டும்.

அ) இறைவனின் சித்தத்தை உய்த்துணர்தல்:- இறைவனின் சித்தத்தை உய்த்துணர்தலும், செயற்படுத்துதலும் ஒன்றையொன்று சார்ந்த நிபந்தனைகளாகும். இயேசுவின் கோட்பாட்டைப் பாராட்டுவது இறைவனின் சித்தத்தை நிறைவேற்றக் கோருகிறது (யோவா 7:17); ஆனால், மற்றொரு புறம், இயேசுவிலும் அவருடைய கட்டளைகளிலும், கடவுளின் கட்டளைகளை அறிய வேண்டியது அவசியமாகிறது (14:23-24). பாவியின் விருப்பம் மற்றும் இறைவனின் விருப்பம் என்னும் இரு விருப்பங்களுக்கு இடையிலான சந்திப்பின் மறைபொருள் இங்கே உள்ளது. இயேசுவிடம் வருவதற்கு ஒருவன் தந்தையால் ''ஈர்க்கப்பட'' வேண்டும் (6:44). கிரேக்கச் சொல்லின்படி இந்த ஈர்ப்பு வலுக்கட்டாயமானதாகவும், மகிழ்ச்சியானதாகவும் உள்ளதாகும். இறைவனின் சித்தத்தினை அறிந்துகொள்வதற்கு, சட்டத்திலுள்ள சொற்களை மட்டும் தெரிந்து வைத்திருத்தல் போதாது (உரோ 2:18). இயேசுவால் அளிக்கப்பட்ட தூய ஆவியால் மட்டுமே இயலக் கூடியதாயினும், ஒரு நபருடனான பற்றுதல் மிக அவசியமானது (யோவா 14: 26).

வேறுபடுத்துதலின் மனித ஆற்றலானது மெய்ப்பிக்கப்பட்டால், ''இறைவனின் சித்தம் என்ன, நல்லது ஏது, தூய ஆவியினால் இறைவனுக்கு உகந்தது எது, தலை சிறந்தது எது'' ஆகியவற்றை தூய ஆவியினால், உய்த்துணர அவனால் முடியும் (உரோ 12:2). உய்த்துணர்தலின் இந்த ஆற்றலானது, அன்றாட வாழ்வையும் கடந்து பாதிக்கிறது; ஏனெனில், ''அவரது சித்தம், ஞானம், மற்றும் ஆன்மீக உணர்வு ஆகியவற்றின் முழு அறிவிற்கு'' (கொலோ 1:9) அது திறந்துவிடுகிறது. இத்தகைய நிலையானது ஆண்டவருக்கு உகந்த வாழ்வை உருவாக்குகிறது (1:10; எபே 5:17). ''இறைவன் விரும்பினால்'' என்னும் சொற்றொடர் (1 யோவா 5:14) முற்றிலும் புதிய பரிணாமத்தைப் பெறுகிறது (அ.ப. 18:21; 1 கொரி 4:19; யாக் 4:15), ஒவ்வொரு செபமும் ''அவருடைய விருப்பப்படியான'' செபமாக வெளிப்படுகிறது (1 யோவா 5:14). ஏனெனில். ''இறைவனுடைய சித்தத்தின் மறைபொருளுக்கு'' (எபே 1:13-14) ஏற்ற சூழ்நிலையை முன்கொள்கிறது.

ஆ) இறைவனின் சித்தத்தைச் செயல்படுத்துதல்:- தலைவர் விரும்புவதை அறிந்துகொண்டு, அதனைச் செயல்படுத்தாமலிருப்பதில் என்ன நன்மை உள்ளது (லூக் 12:47; மத் 7:21; 21:31)? இந்தச் செயல்முறை இவ்வழக்கமானது, மனித உணர்ச்சியால் வழிநடத்தப்படும் வாழ்விற்கு (1 பேதுரு 4:2; எபே 6:6) எதிரான கிறிஸ்தவ வாழ்வை (எபி 13:21) உண்மையில் உருவாக்குகிறது. நமக்கான மேலும் துல்லியமான, இறைவனின் சித்தம் என்பது, தூய்மை (1 தெச 4:3), நன்றியுணர்வு (5:18), பொறுமை (1 பேதுரு 3:17). நல்வாழ்வு (2:15) என்பவையாகும். ''நீங்கள் எதையும் விரும்பவும் செயலாற்றவும் தம் திருவுளம் நிறைவேற, உங்களில் செயலாற்றுபவர் கடவுளே'' (பிலி 2:13) என்பதால், இறைவனுடைய சித்தத்தை நிறைவேற்றுவது இயலக்கூடியதே. இந்நிலையில், விருப்பங்களின் ஒற்றுமையும், அருள் மற்றும் விடுதலையின் உடன்பாடும் அங்குள்ளது.

**இறைவன் தரும் படைக்கலன்கள்** (ARMOUR OF GOD)

''இறைவன் தரும் படைக்கலன்கள்'' என்ற பதம் ஒரு போர் வீரனுக்கு தேவையான அனைத்து ஆயுதங்களையும் குறிக்கிறது. இது இறைவன் தம் தலைமைக்குட்பட்டவர்களுக்கு அளிக்கும் ஆற்றலையும் உதவியையும் உருவகமாகக் குறிக்கின்றது. பழைய ஏற்பாட்டு புதிய ஏற்பாட்டு ஆசிரியர்கள் ஆயுதங்களை உருவகமாகப் பயன்படுத்துகின்றனர். அவர்கள் காலத்துப் போர் ஆயுதங்களைக் கடவுளிடமிருந்து பெற்றுக் கொண்ட ஆன்மீக ஆயுதங்களோடு ஒப்பிடுகின்றனர். இந்த உருவக முறையைக் குறிக்க ''படைக்கலமாக அணிந்து கொள்ளுதல்'' என்ற பதத்தைப் பயன்படுத்துகின்றனர் (1 பேதுரு 4:1). பொதுவாக ஆயுதங்களைக் குறிக்கும் பகுதிகள்: உரோ 6:13; 13:2; 2

கொரி 6:7; 10:4; சில இடங்களில் தாக்கும் அல்லது பாதுகாக்கும் தனி ஆயுதங்கள் குறிக்கப்படுகின்றன: மார்புக் கவசம் (1 தெச 5:8; திருவெளி 9:9), தலைச் சீரா (1 தெச 5:8; ஏச 19:17), வாள் (எபி 4:12).

எல்லா ஆயுதங்களும் இரண்டு இடங்களில் பேசப்படுகின்றன. லூக்கா. 11:22-இல் வரும் இயேசுவின் உவமையில் பேல்செபூல் தன் உடைமைகள் பறிபோகாமல் போராடப் பயன்படுத்தும் எல்லா ஆயுதங்களையும் மனதில் வைத்து ஆசிரியர் பேசுகின்றார். ஆனால் அவனிலும் வலியவன் வரும்போது சாத்தானின் ஆயுதங்கள் பறிக்கப்படுகின்றன; உடைமைகள் பங்கிடப்படுகின்றன.

இரண்டாவது (எபே 6:11.13) இடத்தில் இறைவனின் ஆயுதங்கள் தொடர் உருவகத்தில் பேசப்படுகின்றன. இங்கே இவற்றின் அடையாளப் பொருள்கள் முழுவதுமாகத் தெளிவாகப் பேசப்படுகின்றன. இந்தப் போர் இறைவனுக்கும் அலகைக்குமிடையே நடக்கின்றது. மனிதனின் பகைவன் மனிதன் அல்லன்; மனிதத் தன்மையைக் கடந்தவன். மனிதன் கடவுளின் பலத்தை நம்பினால்தான் இதில் வெற்றியடைய முடியும். கடவுளின் ஆயுதங்கள் உண்மை, நீதி, அமைதி, விசுவாசம், மீட்பு, ஆவி இவற்றை உள்ளடக்கியது. ஆவியில் செபிப்பதும், கடவுளின் வார்த்தை என்னும் வாளை முழுவதும் நம்புவதும், எல்லாத் தாக்குதலையும் எதிர்க்க இடைவிடாது விழிப்போடு இருப்பதும், வெற்றிக்காக முழுவதும் அர்ப்பணித்திருத்தலும், ஆகியவற்றால் கிறிஸ்துவின் படை சாத்தானின் எல்லா எதிர்ப்புக்களையும் தாக்குதல்களையும் முறியடிக்க முடியும். படை வீரர்கள் இந்தக் கருவிகளை முழுமையாகப் பயன்படுத்தினால் மட்டுமே தீயசக்திகளுக்கு எதிராகச் செய்யும் ஆன்மீகப் போரில் வெல்ல முடியும். இந்த ஆயுதங்கள் இறைவனால் கொடுக்கப்பட்டாலும், மனிதன் அவற்றை அணிந்துக் கொள்ளவேண்டும். அப்போதுதான் உடனடிச் சோதனைகளை மேற்கொள்வதன் மூலம், ''இருளில் மூழ்கிய இவ்வுலகின் மீது ஆதிக்கம் செலுத்துவோராகிய'' எல்லாச் சோதனைகளின் மறைந்திருக்கும் மூலத்தை வெல்ல முடியும்.

பவுல் இந்தப் போரை நற்செய்தியின் மறைபொருளோடு தொடர்புபடுத்துகிறார். செபத்தின் மூலம் கடவுளை முற்றிலும் நம்பினால், கடவுளின் சக்தி மனித பலவீனத்தில் செயலாற்றுகிறது. கடவுளின் அமைதி இறுதி வெற்றிக்குச் சாதனமாகிறது. இப்போர் நற்பண்புகள் தீமையை வெற்றிக்கொள்வதல்ல. அல்லது மனித எதிரிகளுக்கு எதிராக சுயநேர்மையின் போராட்டம் அல்ல; அல்லது மன, உளவியல் சமன்பாடு அடையும் வழியல்ல; மாறாக மூலத்தீமையின் தந்திரத்தை விசுவாசி தன் இதயத்திலேயே எதிர்கொள்ளும் எந்த சூழ்நிலையிலும், கடவுளின் அதிகாரம் சாத்தானின் அதிகாரத்தின்மேல் எண்பிக்கப்படும் வழியாகும். எந்த ஆயுதம் அதிகப் பலனளிக்கும் என்பது மனிதனின் தேவையைப் பொறுத்ததல்ல. மாறாக வெற்றி பெற வேண்டிய பகைவனின் வலிமையைப் பொறுத்தது. சாத்தானின் ஆயுதங்கள் மனிதனைத் தோற்கடிக்கப் போதுமானவை. ஆனாலும் இறைவனின் சக்தியை மேற்கொள்ள போதாதவை. கடவுளின் ஆயுதங்கள் (ஆவி, வார்த்தை...) மனிதனால் பயன்படுத்தப்படும் போது சாத்தானின் தாக்குதலை வெற்றியோடு போராட வேண்டிய ஆற்றலை மனிதனுக்கு அளிக்கின்றன.

**இறைவாக்கினர்** (PROPHETS)

I. பழைய ஏற்பாடு:- 1. இஸ்ராயேலில் இறைவாக்கின் வேறுபாடும் ஒருமைப்பாடும்:- பண்டைய எல்லா மேற்காசியப் பகுதிகளிலும் வருவதுணர்த்துதலைத் தொழிலாகக் கொண்டு (எண் 22:5 தொ; தானி 2:2; 4:3-4) அதன் மூலம் உயர்ந்த உயிர்களிடமிருந்து செய்திகளைப் பெறத் தகுதியானவர்கள் என்று கருதப்பட்ட மனிதர்கள் இருந்தனர். பெரும் காரியத்தைத் தொடங்குவதற்கு முன்னதாக, அறிவுரைக்காக, இப்படிப்பட்டவர்களை மக்கள் அவ்வப்போது அணுகினர். இத்தகைய செயல்களை நிறைவேற்றுவதும்,

இஸ்ராயேலுடைய இறைவாக்கினர்களின் கடமைகளில் ஒன்றாகும் (1 அர 22:1-29). ஆனால் அவர்கள் அளித்த செய்தியின் இறைத்தோற்றம், தொடர்ச்சி, பொருளடக்கம் ஆகியவை இஸ்ராயேலின் இறைவாக்கினர்களை முன்பு கூறியவர்களிடமிருந்து வேறுபடுத்திக் காட்டின.

அ. தொடக்கம்:- விவிலிய இறைவாக்கு எங்குத் தொடங்குகிறது? இறைவாக்கினர் என்னும் தலைப்பு ஆபிரகாமிற்குத் தரப்பட்டாலும் இப்பெயர் காலமயக்கமாக அவருக்குப் பிற்காலத்தில் அளிக்கப்பட்டதாகும் (ஆதி 20:7). கடவுளின் உண்மையான பிரதிநிதியாகிய மோசே (யாத் 3:4). ஏதோ மற்றொரு இறைவாக்கினர் என்பதற்கு மேலாக (எண் 12:6-8), இறைவாக்குப் பணியினையே உருவாக்கியவராக உள்ளார் (யாத் 7:1; எண் 11:17-25). உபஆகமம் மட்டுமே அவருக்கு இப்பெயரை அளித்தாலும் (உப 18:15), பல இறைவாக்கினர்களில் ஒருவராக அவரைக் குறிப்பிடவில்லை. அவருக்கு பின்னர் அவருக்கு நிகராக எவரும் இருந்ததில்லை (உப 34:10). நீதிபதிகளுடைய காலத்தின் இறுதியில் 'இறைவாக்கினர் புதல்வர்கள்'' (1 சாமு 10:5-6) என்று சில குழுக்கள் தோன்றின. அவர்களுடைய தவறான செயல்கள் (1 சாமு 19:20-24), அவர்கள் கானனேனியரின் ஆதிக்கத்தால் பாதிக்கப்பட்டிருந்தனர் என்று காட்டின. அவர்கள் அழைக்கப்பட்டவர் என்னும் பொருளுடைய ''நாபி'' என்ற பெயர் பெற்றனர். ஆனால், இப்பெயருடன், பழைய பெயர்களாகிய 'திருக்காட்சியாளர்' (1 சாமு 9:9), 'காட்சி காண்பவன்' (ஆமோ 7:12), மற்றும் எலியா மற்றும் எலிசாவின் முக்கியப் பெயரான (2 அர 4:9) 'கடவுளின் மனிதர்' (1 சாமு 9:7-8) என்பன வழக்கில் நிலைத்திருந்தன. மேலும் நாபி என்ற பெயர் யாவேயின் உண்மையான இறைவாக்கினர்களுக்கு மட்டுமே உரிய ஒன்றாக இருக்கவில்லை. அவர்களோடு பாகாலின் தீர்க்கதரிசிகளும் ''நெபியீம்'' என்றழைக்கப்பட்டனர் (1 அர 18:22). இவர்கள் இறைவனால் உந்தப்படாமலே, ஆனால் இறைவாக்குரைத்லைத் தொழிலாகக் கொண்ட போலி இறைவாக்கினர்களாவர் (1 அர 22:5-6), இறைவாக்குரைத்தலைப் பற்றிய பல்வேறு சொற்களைப் பற்றிய ஆய்வானது, இறைவாக்கின் பல்வேறு பண்புகளை வெளிப்படுத்துகிறது. ஆய்வு மேலும் தொடரும்போது, அடிப்படையாக அமைந்துள்ள ஒற்றுமையானது தெளிவாகும்.

ஆ. தொடர்ச்சி:- இறைவாக்கினர்களுடைய சீடர்களின் மூலமாக, உண்மையான இறைவாக்குப் பாரம்பரியம் தோன்றியது. மோசேக்கு அளிக்கப்பட்டதுபோன்று (எண் 11:17), எலியாவிடமிருந்து எலிசாவிற்கு தரப்பட்டது போன்று (2 அர 2) ஆவி அருளப்படுகிறது. ஏசயா தனது சீடர்களைப் பற்றி குறிப்பிடுகிறார் (ஏச 8:16); எரேமியாவுடன் பாரூக்கு சேர்ந்து காணப்படுகிறார். மோசேக்கும் மேலாக இறைவாக்கு பணியினை செயல்படுத்துகின்ற யாவேயின் ஊழியன் தான் கேட்டதைப் போதிக்கின்ற இறைவாக்கினரின் மனப்பான்மையை ஏற்கிறார் (ஏச 50:4-5; 42:2 தொ). உயிருள்ள இம்மரபில் மறைநூல் காலத்துடன் வளர்கின்ற ஒரு பங்கை இயல்பாகக் கொண்டுள்ளது (ஏச 8:16; எரே 38:4). எசக்கியேலின் வாயில், யாவே தனது வார்த்தைகளை மட்டுமன்றி, நூலையே வைக்கிறார். குறிப்பாக நாடு கடத்தலின் தொடக்கத்திலிருந்தே, இறைவாக்கு மரபுபற்றிய உணர்வு, இஸ்ராயேலைப் பின்னோக்காகப் பாதிக்கிறது (எரே 7:25; 25:4; 29:19; 35:15; 44:4). ஆறுதலின் நூலானது (ஏசயாவின் குழுவைச் சேர்ந்தது) ஆண்டவருடைய பழைய இறைவாக்குகளை நினைவுகூறும்போது இத்தகைய பாரம்பரியத்தையே சார்ந்துள்ளது (ஏச 45:21; 48:5). ஆனால், இத்தகைய அளவுக்கூறுகளினின்று மாறுபட்ட ஒற்றுமையின் ஊற்றினை இறைவாக்கு மரபு கொண்டுள்ளது. பலர் இறைவாக்கின் தொடக்கமாக ஆவியைக் குறிப்பிடாவிட்டாலும் (1 சாமு 10:6; மீக் 3:8; ஒசே 9:7; யோவே 3:1-2; எச 11:5) ஆதியிலிருந்தே அனைத்து இறைவாக்கினர்களும், அதே இறை ஆவியால் உயிரூட்டப்பட்டனர். அவர்கள் இடையிலான சார்பு நிலை எவ்வாறு இருப்பினும் கடவுளிடமி

ருந்தே அவர்கள் வார்த்தையைப் பெற்றனர். இறைவாக்கு அருங்கொடை, மனிதன் தனது சொந்த முயற்சிகளால் கண்டுபிடிக்க முடியாதவற்றை அறியச் செய்கின்ற வெளிப்பாட்டின் அருங்கொடையாகும் (ஆமோ *3:7*; எரே *23:18*; *2* அர *6:12*). அதே சமயம், அதனுடைய இலக்கானதுபலதரப்பட்டதாகவும்தனித்துவமிக்கதாகவும் உள்ளது; அதாவது இயேசு கிறிஸ்துவில் ஒருமுகப்படுத்தி, நிறைவேற்றப்படவுள்ள மீட்பின் திட்டமாகும் (எபி *1:1-2*).

இ. *சமுதாயத்தில் இறைவாக்கினர்:-* இவ்வாறு, ஒரு மரபினை உருவாக்கிய பின்னர், இறைவாக்குப் பணியானது, இஸ்ராயேல் சமுதாயத்தில் ஒரு உறுதியான நிலையினையும் கொண்டுள்ளது. அதனுடன் ஒன்றியைந்ததாய் இருந்தாலும், சமுதாயத்தினை அது ஈர்த்துக் கொள்வதில்லை. இறைவாக்கினர் குருவுடன் சேர்ந்து அரசனுடைய முடிசூட்டுச் சடங்கில் ஒரு பங்கு வகிப்பதைக் காண முடிகிறது (*1* அர *1*). வரலாற்றின் ஒரு குறிப்பிட்ட காலம் வரை, அரசர், குரு மற்றும் இறைவாக்கினர் ஆகிய மூவரும் ஒருவருக்கொருவர் மாறானவர்களாக வேறுபடுத்தப்பட்டவர்களாக இருந்தாலும், பொதுவாக ஒருவரையொருவர் சார்ந்துள்ள நிலையில் இணைக்கப்பட்டு, இஸ்ராயேல் சமூகத்தினுடைய மூன்று தூண்களாக உள்ளனர். எங்கெல்லாம் நாடானது ஓர் அமைப்பைக் கொண்டிருந்ததோ, அங்கெல்லாம் அரசனுக்கு ஆலோசனை கூற இறைவாக்கினர்கள் இருந்தனர்; நாத்தான், காது, எலிசா, குறிப்பாக ஏசயா மற்றும் சில சமயங்களில் எரேமியாவும் இவ்வாறு செயலாற்றியுள்ளனர். எடுக்கப்பட்டுள்ள செயலானது இறைவனுடைய விருப்பத்திற்கேற்ப உள்ளதா? ஒரு கொள்கை மீட்புத் திட்டத்திற்குத் தெளிவாகப் பொருந்துகிறதா? என்று தெரிவிக்க வேண்டியது அவர்களுடைய முன்னுரிமையாக இருந்தது. ஆனாலும், குறுகிய, துல்லியமான பொருளில் இறைவாக்குப் பணியானது, அரச பதவி மற்றும் குருத்துவம் போன்று ஒரு நிறுவனமன்று. இஸ்ராயேல் தன்னுடைய முயற்சியினாலேயே ஒரு அரசனை உருவாக்க முடியும். ஆனால், ஒரு இறைவாக்கினரை உருவாக்க முடியாது (உப *17:14-15*), இறைவாக்கினர், வாக்களிக்கப்பட்டவராயினும் (உப *18:14-19*) இலவசமாக அளிக்கப்பட்ட இறைவனுடைய தூய கொடையாவார். இறைவாக்கு தடைசெய்யப்பட்ட காலத்தில் இது குறிப்பாக உணரப்பட்டது (*1* மக் *9:27*; சங் *73:9*). ஏற்கெனவே வாக்களிக்கப்பட்ட இறைவாக்கினரை எதிர்பார்த்து இஸ்ராயேல் அக்காலத்தில் வாழ்ந்தது (*1* மக் *4:46*; *14:41*). இத்தகைய சூழ்நிலைகளில் திருமுழுக்கு யோவானின் போதனைகளுக்கு யூதர்கள் ஏன் உணர்ச்சிப்பூர்வமாக பதிலளித்தனர் என்பதைப் புரிந்து கொள்ளுதல் எளிதானதே (மத் *3:1-12*).

2. *இறைவாக்கினரின் தனிச்சிறப்பான ஊழ்:- அ. இறை அழைத்தல்:-* சமுதாயத்தில் இறைவாக்கினர் தனக்கென ஒரு இடத்தைக் கண்டாலும், அவரை இறைவாக்கினராக நிலைப்படுத்துவது இறையழைத்தலே. மோசே, சாமுவேல், ஆமோஸ், ஏசயா, எசக்கியேல் மற்றும் சிறப்பாக யாவேயின் ஊழியன் ஆகியோருடைய அழைப்பில் இது தெளிவாகிறது. எரேமியாவின் பாடல்வடிவ சுய வெளிப்பாடுகள் இக்கருத்தைக் கூறுகின்றன. இறைவன் முழுவதும் முன்முயற்சி எடுக்கிறார். இறைவாக்கு மனிதரின்மீது ஆதிக்கம் செலுத்துகிறார்; ''ஆண்டவராகிய யாவே பேசுகிறார், இறைவாக்கு உரைக்காதவன் எவன்? (ஆமோ *3:8*; *7:14-15*). தாயின் கருவிலேயே கடவுளுக்காக அர்ப்பணிக்கப்பட்ட (எரே *1:5*; ஏச *49:1*) எரேமியா, இறைவன் தன்னை ஏமாற்றிவிட்டதாகப் பேசுகிறார் (எரே *20:7* தொ). இறைவனது கரம் தன்மீது உறுதியாக அழுத்துவதை எசக்கியேல் உணர்கிறார் (எச *3:14*). அழைப்பானது, இயலாமை பற்றிய உணர்வை எரேமியாவில் வெளிக்கொணர்கிறது (எரே *1:6*). ஏசாயாவில் பாவ உணர்வை எழுப்புகிறது (ஏச *6:5*). இறைவனுடைய வார்த்தையைப் பேசுகின்ற, இறைவாக்கினருடைய வாயையே உபகரணமாகக் கொண்ட ஒரு பணிக்கு இது எப்போதும் நடத்திச் செல்கி

றது (எரே 1:9; 15:19; ஏச 6:6-7; எச 3:1 தொ).

ஆ. இறைவாக்கினருடைய செய்தியும் அவரது வாழ்வும்:- சில அர்த்தமுள்ள (முப்பதுக்கும் மேற்பட்ட) அங்க அசைவுகள், வாய் வார்த்தையினுடைய வெளிப்பாடுகளுடனோ அல்லது அதற்கு முன்போ நிகழும் (எரே 28:10; 51:63; எச 3:24-5:4; செக் 11:15). வெளிப்படுத்தப்பட்ட வார்த்தையானது வெறும் வார்த்தையாக இல்லாமல், வாழ்வாக உள்ளது. அறிவிப்பதை நிறைவேற்றுகின்ற இறைவனின் செயலில் ஒரு அடையாளப் (மந்திரமல்ல) பங்கேற்பினை இது உடன் கொண்டுள்ளது. நிலத்தை வாங்குதல் (எரே 32), நோய் மற்றும் மன அங்கலாய்ப்பு (எச 3:25-26; 4:4-8; 1:18) போன்ற சில அடையாளச் செயல்கள் உடனடி விளைவுகளைக் கொண்டுள்ளன. பெரிய வெளிப்பாடுகளில் திருமண மற்றும் குடும்ப வாழ்வானது வெளிப்படுத்துதலில் வாகனமாக அமைவது அவசியம் குறிப்பிடப்பட வேண்டிய ஒன்றாகும். ஒசேயின் திருமணம் இத்தகையதே (1:3). ஏசயா 'இறைவாக்கினள்' (ஏச 8:3) என்று மட்டுமே குறிப்பிட்டாலும், அவளும் அவளுடைய பிள்ளைகளும் மக்கள் திரளுக்கு அறிகுறியாக அமைகின்றனர் (8:18). நாடு கடத்தலின்போது இந்த அடையாளங்கள், எரேமியாவின் கன்னிமை (எரே 16:1-9), எசக்கியேலின் மனைவியை இழந்த நிலை (எச 24:15-27) போன்றவை, எதிர்மறை அடையாளங்களாக உருவாகின்றன. இவை, கற்பனை செய்யப்படாத, ஆனால் வாழ்ந்து காட்டப்பட்ட, ஆகவே உண்மையுடன் இணைக்கப்பட்ட பல்வேறு அடையாளங்களாகும். செய்தியானது, அதனைக் கொண்டிருப்பவர்களுக்கு அப்பாற்பட்டதாக இருக்க முடியாது. இது, இறைவாக்கினரால் உருவாக்கப்பட்ட கருத்தாக இல்லை, அவரிலேயே உயிருள்ள இறைவனை (எலியா) தூய இறைவனை (எசாயா) வெளிப்படுத்துவதாகும்.

இ. துன்பங்கள்:- அனுப்பப்படாமல் (எரே 27:15). தங்களுடைய சொந்தத் தூண்டுதலையே பின்பற்றி (எச 13:3), தங்களுடைய பெயராலேயே பேசுகிறவர்கள் (எரே 14:14-15; 23:16), போலி இறைவாக்கினர்களாவர். உண்மையான இறைவாக்கினர்கள் மற்றொருவர் தங்களைப் பேசச் செய்கிறார் என்பதை உணர்ந்தனர். அதனால் தங்களுடைய அனுபவத்திலிருந்து மட்டும் பேசியபின் (2 சாமு 7) தங்களைத் திருத்திக் கொள்ளவேண்டிய கடமையை உணர்கிறார்கள். இந்த மற்றொருவரின் பிரசன்னமும் (எரே 4:19), பெரும்பாலும் ஒரு உள் போராட்டத்தை உருவாக்குகிறது. ஏசயாவின் அமைதியானது இப்போராட்டத்தை ஒரு கணநேரக் காட்சியை மட்டுமே காட்டுகிறது: ''தம் முகத்தை மறைத்துக் கொள்ளும் யாவேக்காக நான் காத்திருப்பேன்'' (ஏச 8:17). ஆனால் மோசேயும் (எண் 11:11-15) எலியாவும் (1 அர 19:4) சோர்வின் நெருக்கடியை அனுபவிக்கின்றனர். கசப்புடன் புகார் செய்கின்ற எரேமியா, ஒரு கட்டத்தில் தன்னுடைய அழைப்பினின்று திரும்பிவிடுபவராகவும் காணப்படுகிறார் (எரே 15: 18-19; 20:14-18). எசக்கியேல் மனக் கசப்பினாலும் கோபத்தினாலும் நிரப்பப்பெற்று, மதி மயங்கியிருந்தார் (எச 3:14-15). யாவேயின் ஊழியன், தோற்றத்திற்கு மடத்தன்மையையும் அமைதியின்மையும் அனுபவிக்கிறார் (ஏச 49:4). இறுதியில், அரிதாகவே கடவுள், இறைவாக்கினர்கள் தங்களது பணியில் வெற்றியடையும் நம்பிக்கையினைப் பெற அனுமதிக்கிறார் (ஏச 6:9-10; எரே 1:19; 7:27; எச 3:6-7). ஏசயாவினுடைய நம்பிக்கையானது மக்களுடைய இதயங்களைக் கடினமாக்குவதில் முடிவடைகின்றது (ஏச 6:9-10 = மத் 3:14-15; யோவா 15:22). ''மனிதன் செவிமடுப்பானோ இல்லையோ'' அதைப் பற்றிக் கவலைப்படாது எசக்கியேல் பேச வேண்டும் (எச 2:5-7; 3:11.27); இதனால், ''நானே யாவே என்பதை மனிதர் அறிந்து கொள்வர்'' (எச 36:38). ஆனால், இறைவனை அறிந்து ஏற்றுக் கொள்ளுதல் பின்னரே வரும். இறைவார்த்தையானது அதனுடைய உடனடி விளைவுகளை எல்லா வழிகளிலும் கடந்து செயல்படுகிறது. ஏனெனில், அதனுடைய செயல்திறமையானது இறுதிக் கால நிலையில் அமைந்துள்ளது. வார்த்

தையோ இறுதியில் நம்மீதே கவனத்தைச் செலுத்துகிறது (1 பேதுரு 1:10 தொ).

ஈ. மரணம்:- ஆகாபின் ஆட்சிக் காலத்திலும் (1 அர 18:4.13; 19:10.14), அநேகமாக மனாசேயின் காலத்திலும் (2 அர 21:16), உறுதியாக யோயாக்கிமின் காலத்திலும் (எரே 26:20-23) இறைவாக்கினர்கள் ஒட்டு மொத்தமாகப் படுகொலை செய்யப்பட்டனர். இப்படுகொலைகளில் அசாதாரணமான எதையும் எரேமியா காணவில்லை (எரே 2:30). நெகமியாவின் காலத்தில், அவர்களைப்பற்றிக் குறிப்பிடுவது சாதாரணமாகி விட்டது (நெக 9:26): ''இறைவாக்கினர்களைக் கொன்ற எருசலேமே'' என்று இயேசுவும் கூறுகிறார் (மத் 23:37). இறைவாக்கினர்களின் மரணமே அவர்கள் அனுபவித்து வாழ்ந்த இறைவாக்குகளின் மனிமுடி என்னும் எண்ணமானது இந்த அனுபவத்தின் ஒளியில் மெதுவாக வெளிப்படுகிறது. இறைவாக்குப் பாரம்பரியத்தின் சுருக்கமாக அமைந்துள்ள யாவேயின் ஊழியனின் பணியானது, அவரது விருப்பப்படியான காட்சியில் தொடங்கி (ஏச 42:2), கொலை செய்யப்பட்ட செம்மறியின் மௌனத்தில் முடிவடைகின்றது (ஏச 53:7). இந்த நிறைவேறுதல் முன்னோக்கப்பட்ட சிகரமாக உள்ளது. மோசே காலத்திலிருந்தே இறைவாக்கினர்கள் மக்களுக்காக வேண்டுகின்றனர் (ஏச 37:4; எரே 7:17; 10:23-24; எச 22:30). யாவேயின் ஊழியன், பாவிகளுக்காக வேண்டுகிற அதே வேளையில், தனது மரணத்தினால் அவர்களை மீட்பார் (எச 53:5.11-12).

3. இறைவாக்கினரும் அக்கால நிறுவனங்களும்:- இறைவாக்கினருக்கும் மக்களுக்கும் இடையிலான திடீர் சந்திப்பானது, பழைய உடன்படிக்கையோடும் அதனுடன் தொடர்புடைய சட்டம், சமூக அமைப்புகள், வழிபாடு, ஆகிய நிறுவனங்களோடும் எவ்வாறு செயல்பட்டது என்பது பற்றிச் சிறிது பார்ப்போம்.

அ. சட்டம்:- இறைவாக்குப்பணியும் சட்டமும் இரு மாறுபட்ட விருப்பங்களையோ, அல்லது இரு வேறுபட்ட மனப்பாங்குகளையோ காட்டவில்லை. மாறாக அவை வேறுபட்ட அலுவல்கள், வேறுபட்ட செல்வாக்குடையவை, ஆனால், ஒன்றையொன்று ஒதுக்குபவை அல்ல. முழு நிறைவு எய்துவதில் உள்ளார்ந்த தொடர்புடையவை. எல்லாக் காலங்களுக்கும், எல்லா மனிதருக்கும் உள்ள கடமை என்ன என்று சட்டம் முடிவு செய்கிறது. இறைவாக்கினருடைய முதல் பணியானது சட்டத்திற்கு எதிரான குற்றங்களைக் கண்டிப்பதாகும். சட்டத்தின் பிரதிநிதிகளிடமிருந்து அவரை வேறுபடுத்துவதென்பது, ஒரு வழக்கின்மீது தீர்ப்பிடுவதற்கு முன்னர் அதனைப் பற்றிச் சுட்டிக்காட்டும்வரை இறைவாக்கினர் காத்திருக்க வேண்டியதில்லை; ஆனால், உரிய சட்ட அதிகாரமோ அல்லது உரிமைச் சான்றோ இல்லாமல் தனது அதிகாரத்தை செயல்படுத்துவார். அப்போதைய தருணத்தில், இறைவன் அவருக்கு வெளிப்படுத்துவதிலிருந்து, நிலவுகின்ற சூழ்நிலைக்குச் சட்டத்தைப் பொருத்திக் காண்பிப்பார். நாத்தான் தாவீதிடம் 'நீரே அம்மனிதர்' (2 சாமு 12:7) என்று கூறியதுபோல, அவர் பாவியிடம் குற்றச்சாட்டுகளைக் கூறுவார். அவர் பெரும்பாலும் திடுக்கிடச் செய்யும் முறையில் (1 அர 20:38-43) உண்மைகளை எடுத்துரைப்பார் (1 அர 21:20). ஓசே (4:2), எரேமியா (7:9) ஆகியோர் பத்துக்கட்டளைகளுக்கும், எசக்கியேல் (18:5-18) சட்டங்கள் மற்றும் நிலையான பழக்கங்களுக்கும் வேண்டுகோள் விடுக்கின்றனர். சம்பளத்தைத் தராமலிருத்தல் (எரே 22:13; மலா 3:5), மோசடி (ஆமோ 8:5; ஒசே 12:8; மீக் 6:10-11), நீதிபதிகள் கையூட்டுப்பெறுதல் (மீக் 3:11; ஏச 1:23; 5:23), குறிப்பிட்ட காலத்தில் அடிமைகளை விடுவிக்க மறுத்தல் (எரே 34:8-22), பணம் கடன்தருவோரின் மனிதாபிமானமற்ற நிலை (ஆமோ 2:8) மற்றும் ''எளியோரின் முகத்தை உருக்குலைத்தல்'' (ஏச 3:15; ஆமோ 2:6-8; 4:1; 8:4 தொ) போன்றவை சட்டத்திற்கும் உடன்படிக்கைக்கும் எதிரான பல்வேறு குற்றங்களாகும். இறைவாக்கினர்கள் வேண்டுகோள் விடுக்கின்ற சட்டத்தினுடைய சாரமானது, எழுதப்பட்ட வாசகத்தை

மட்டும் கொண்டிருப்பதில்லை. ஒவ்வொரு நிகழ்ச்சியிலும், இறைவாக்கினர் தமக்குச் செவிமடுப்பவர்களுடன் செயல்படுத்து வதை எழுத்துப்படிவம் நிறைவேற்ற முடியாது. இறைவாக்கினர் தன்னிலுள்ள அருங்கொடையின் ஆற்றலால், ஒவ்வொருவருடையவும் மனச்சாட்சியைத் தூண்டுயெழுப்பி, ஒளியை ஏற்கவோ நிராகரிக்கவோ செய்யத் தூண்டுகிறார். எனவே, இறைவாக்கு எழுகின்ற உண்மைச் சூழ்நிலையில், சரியானதானது மறுக்கப்படுவதோடு மட்டுமன்றி, தகாத வழியில் பயன்படுத்தப்பட்டு (மீக் 3:9-10; எரே 8:8; அப 1:4), கசப்பானதாக மாற்றப்படுகிறது (ஆமோ 5:7; 6:12). நன்மையானது தீமையென்றும், தீமையானது நன்மையென்றும் அழைக்கப்படுகிறது (எச 5:20; 32:5). இத்தகைய ஏமாற்றுதலைச் சோர்வின்றி எரேமியா கண்டிக்கிறார் (எரே 6:6). மேய்ப்பர்கள் செம்மறியினுடைய நீரைக் கலக்கிக் குழப்புகின்றனர் (எச 34:18-19). வலிமையற்றோர் வழிதவறி நடத்திச் செல்லப்படுகின்றனர் (ஏச 3:12-15; 9:15; ஆமோ 2:7). மக்கள் குற்றமுடையவர்களாயினும் தனிப்பட்ட முறையில் நடத்தப்படுவதில்லை (ஓசே 4:9; எரே 6:28; ஏச 9:16), ஆனால், இறைவாக்கினர்கள், சட்டங்களைத் தடுத்து நிறுத்தி (ஓசே 5:1; ஏச 10:1) அவற்றைப் பொய்யாக்குகின்ற குருக்களையும், மற்ற அனைத்துப் பொறுப்பாளர்களையும் வன்மையாகத் தாக்குகின்றனர் (ஏச 3:2; எரே 5:4-5). இத்தகைய சூழ்நிலைக்கு எதிராக, சட்டம் பாதுகாப்பின்றி உள்ளது. உரிய விதிமுறைகள் இல்லாத நிலையில், தனிநபர், இறைவனுக்கும் தீயோனுக்கும் இடையில், ஆவிகளைத் தேர்ந்து தெளிதலைக் கடைப்பிடிக்கவேண்டும். இத்தகைய சூழ்நிலையில், இறைவாக்கினர் இறைவாக்கினரை எதிர்ப்பதைக் காண்கிறோம் (எரே 28).

ஆ. மரபுகள்:- பாவம் மட்டுமே கேள்விக்குரியதாக இல்லாமல், சமூகமும் மாறிவிட்டது. இறைவாக்கினர்கள், ஆடை அணிதல் (ஏச 3:16-23), இசை (ஆமோ 6:5); அல்லது சமூக உறவுகள் ஆகியவைப்பற்றிய பாரம்பரிய ஒழுக்க முறையில் புகுந்துவிட்ட புதுமைகளையும் அறிந்திருந்தனர். எல்லாச் சமூக நிலைகளிலும், மாறுதல்கள் வளர்ச்சியடையவே, சாமுவேல் முன்னோக்கிய சூழ்நிலையை இஸ்ராயேல் இப்போது அனுபவிக்கத் தொடங்கியது (1 சாமு 8:10-18). எகிப்தில் தங்கிய நாள்முதல், தலைவன்-அடிமை என்ற உறவு, சமூகத்தின் மையக் கூறாகிறது. முடியாட்சிக்கு எதிரான சில கருத்துக்களைத் தவிர (ஓசே 13:11), பழைய நிலைக்குத் திரும்பிச் செல்ல இறைவாக்கினர்கள் விரும்பவில்லை. அது அவர்களுடைய பணியாக இருக்கவில்லை. இக்காலத்திலும் தங்களை நடத்திச் செல்லக்கூடியதாக எதிர்பார்க்கப்பட்ட, பழைய சாதனையின் பேரின்ப உருவத்திலுள்ள பொது நன்மையை எதிர் நோக்குகின்ற, யூதர்களின் பழமைச்சிந்தனையை அவர்கள் எதிர்க்கின்றனர். ''ஆண்டவர் நம் நடுவில் இருக்கிறார் அல்லவா?'' (மீக் 3:11) என்று கூறுகிறவர்களுடையவும் ''என் இளமையின் நண்பரே'' (எரே 3:4; ஓசே 8:2) என்று ஆண்டவரை அழைக்கின்றவர்களுடையவும் உற்சாகம் இத்தகையதே. ஒரு கணநொடியில் ''ஆண்டவர் தமது முந்தைய வியத்தகு செயல்களையெல்லாம் அவர்களுக்காகப் புதுப்பிப்பார்'' (எரே 21:2) என்று எண்ணுபவர்களும் இத்தகையோரே. இறுதியாக, எதுவுமே மாறவில்லை ''நாளை என்பது இன்றைய தினத்தைப் போன்றதே'' (ஏச 56:12; 47:7) என்று நம்புகிறவர்களுடைய உற்சாகமும் இத்தகையதே, போலி இறைவாக்கினர்களின் மென்மையான வார்த்தைகளால் மனநிறைவடைந்து (எரே 23:17), இன்றைய நிலைமையின் உண்மைக்குத் தங்களுடைய கண்களைத் திறக்க இயலாதவர்களாக உள்ளனர். ஆனால், இறைவனுடைய இறைவாக்கினர்கள் பழமைக்கு எதிரானவர்களாக இருக்கவில்லை. ஏலியா ஒரேபிற்குத் திரும்புகிறார்; ஓசேயாவும் (11:1-5), எரேமியாவும் (2:2-3) பாலைவன நினைவுகளாலும், இரண்டாம் ஏசயா யாத்திரை நினைவுகளாலும் (ஏச 43:16-21) ஈர்க்கப்படுகின்றனர். ஆனால், அவர்கள் உண்மையான பழமையினை அதன் அழிந்து கொண்டிருக்கும் சுவடுகளோடு குழப்புவதில்லை. நாட்டினுடைய சமயத்தின் உண்மையான அடிப்படையை

மீண்டும் சிறப்பித்துக்காட்ட அவர்கள் பழமையைப் பயன்படுத்துகின்றனர்.

இ. வழிபாடு:- இறைவாக்கினர்கள், பலிகளுக்கும் (எரே 7:21-22; ஏச 1:11 தொ; ஆமோ 5:21-25) பேழைக்கும் (எரே 3:16), ஆலயத்துக்கும் (எரே 7:24-26:1-15) எதிராகக் கடுமையாகச் சாடுகின்றனர். ஆனால் அதே ஆலயத்தில்தான் ஏசயா தன் அழைப்பைப் பெற்றார் (ஏச 6); எரேமியா போதித்தார் (எரே 7). பெத்தேலில் உள்ள புனித இடத்தில் ஆமோஸ் போதித்தவாறே அவர்களும் போதித்தனர் (ஆமோ 7:13). அவர்களது சொற்கள் உண்மையான சூழ்நிலையைக் கருத்தில் கொள்கின்றன; பலிகள் புனிதத்துவத்தைப் பாழாக்குகின்ற நிலையை அடையும்போது, அவர்கள் அவற்றைக் கண்டிக்கின்றனர். கிறிஸ்தவ வழிபாட்டுச் செயல்கள், இதே நிலையில் நிறைவேற்றப்படும் போது அவை இதே கண்டனத்துக்குரியவையே. இதில் அவர்கள் அடையாளங்களின் சார்புடைய மதிப்பீட்டைப் பற்றியே பேசுகின்றனர். இந்த அடையாளங்கள் எப்போதும் இருந்ததில்லை. அவைகளில் நிகழ்கால வடிவத்தில் எப்போதும் இருக்கப் போவதில்லை (ஆமோ 5:25; எரே 7:22). இவைகள் தங்கள் சொந்த ஆற்றலால் தூய்மையாக்குவதுமில்லை, மீட்பதுமில்லை (எபி 10:1). இப்பலிகள் கிறிஸ்துவினுடைய தனிச்சிறப்பான பலியோடு உறவு கொண்டிருந்தால் ஒழிய எந்தவித மதிப்பும் இல்லாதவையாகின்றன. இறைவாக்கினர்களுடைய நிகழ்கால முறையீடு, இறைவெளிப்பாட்டில் அளிக்கப்பட்டுள்ள, பலியினைப் பற்றி இறுதியாக மற்றும் உறுதியாகப் புரிந்து கொள்வதற்கான வழி கோலுகின்றன. நாடு கடத்தலுக்குப்பின் வழிபாடு மற்றும் இறைவாக்குப் பணியும் எசக்கியேல் (எச 40:48; ஏச 58:13), மலாக்கியா, ஆகாய் ஆகியோரில் ஒன்றிணைந்தன. பிற்காலத்திய யூத சடங்கு முறையானது, பெருமளவிற்குஇறைவாக்கினரின் செல்வாக்கால், தூய்மைப்படுத்தப்பட்டதாகும். சட்டமில்லாத சமூகத்தையோ, வழிபாட்டுச் சடங்கு முறையில்லாத சமயத்தையோ இறைவாக்கினர் ஒருபோதும் கற்பனை செய்ததில்லை.

4. இறைவாக்கினரும் புதிய முறைமையும்:- இறைவாக்கினர்கள் உயிருள்ள இறைவனை அவரது படைப்புகளோடு இன்றைய தருணத்தின் தனித்துவத்தில், உயிருள்ள நிகழ்காலமெனும் தனித்தன்மை நேரத்தில் இணைத்தனர். ஆனால். இந்தக் காரணத்திற்காகவே, அவர்களது செய்தி எதிர்காலத்தை நோக்கியுள்ளது. அவர்கள் எதிர்காலத்தைத் தண்டனை, மற்றும் மீட்பு என்னும் அதன் இரு கூறுகளோடு வருவதைக் காண்கின்றனர்.

அ. தண்டனை:- தனிப்பட்ட குற்றச் செயல்களுக்கு அப்பாற்பட்ட நிலையில் ஏசயா, எரேமியா மற்றும் எசக்கியேல் ஆகியோர் சமுதாயத்தினுடைய பாவத்தின் தொடர்ச்சியைக் காண்கின்றனர் (மீக் 7:2; எரே 5:1). இப்பாவம் வரலாற்று நிகழ்ச்சியில் வேரூன்றியுள்ள கடுமையான உண்மையாகும் (ஏச 48:8; எச 20; ஏச 64:5) இப்பாவமானது செதுக்கப்பட்டுள்ளது (எரே 17:1). துருவைப்போலும் தோலின் நிறத்தைப் போலும் ஒட்டிக் கொள்கிறது (எரே 13:23; எச 24:6). இறைவாக்கினர்கள் இந்தச் சூழ்நிலையினை வரலாற்றுக் காலத்தில் எடுத்துரைக்கின்றனர். பாவமானது இத்தருணத்தில் தனது உச்ச நிலையை அடைந்துவிட்டது என்று அவர்கள் அறிவிக்கின்றனர். சோதோம் நிகழ்ச்சியில் இறைவன் ஆபிரகாமை பார்க்க அனுமதித்தது போல (ஆமோ 4:11; ஏச 1:10). இவர்களையும் பார்க்க அனுமதிக்கின்றார். இவ்வாறு அவர்களுடைய செய்தியானது, குறிப்பிட்ட தற்காலிகக் குறிப்புகளோடோ அல்லது அவை இல்லாமலோ, ஆனால் மிக விரிவான அளவில், ஒரு கண்டனத்தை அறிவிக்கும். இஸ்ராயேல் உடன்படிக்கையை முறித்துவிட்டதால் (ஏச 24:5; எரே 11:10), உறுதியான விளைவுகள் பின் தொடரும் என்று இறைவாக்கினர் எதிர்பார்க்கிறார். யாவேயின் நாளை வெற்றி தரும் தருணமாக நாடு

எதிர்நோக்குகிறது; ஆனால், எதிர்மாறான சூழ்நிலைகளில் அந்நாள் வரவிருப்பதை இறைவாக்கினர்கள் அறிவிக்கின்றனர் (ஆமோ 5:18 தொ). கனிகொடாது ஏமாற்றும் திராட்சைத் தோட்டமானது, தோட்டக் காரரால் அழிக்கப்படும் (ஏச 5:1-7).

ஆ. மீட்பு:- இறைவன் தண்டிக்கக் கூடியவர் மட்டுமல்லர்; எல்லாவற்றிற்கும் மேலாக அவர் மீட்பராவார் என்பதை ஆமோசின் காலத்திலிருந்தே இறைவாக்கினர்கள் நன்கு அறிவர். பின்னர், ''பிடுங்கிப் பறிக்கவும், இடித்துத்தகர்க்கவும், அழித்து ஒழிக்கவும், கவிழ்த்து வீழ்த்தவும், கட்டி உயர்த்தவும், நட்டு வைக்கவும்'' எரேமியா அனுப்பப்படுகிறார் (எரே 1:10). இஸ்ராயேல் உடன்படிக்கையை முறித்துவிட்டாலும், அதுவே முடிவன்று. உடன்படிக்கையின் காரணராகிய யாவேயும் தனது வாக்குறுதிகளை முறிக்க எண்ணுகின்றாரா? இக் கேள்விக்குப் பதிலளிக்க எந்த ஞானியும் முன்வரமாட்டார். ஏனெனில், இஸ்ராயேலர் கடந்த காலத்தில் இறைவனுடைய பற்றுறுதியை பணயம் வைத்தனர். அவருக்குப் பிரமாணிக்கமற்றவர்களாயினர். அதனால் பாவத்தில் சிறையுண்டனர். ஆனால், ஞானி மௌனமாக இருக்க வேண்டிய இடத்தில் (ஆமோ 5:13), இறைவாக்கினர் பேசுகிறார். உரிய தண்டனைக்குப் பிறகு, தாம் செய்ய வேண்டுமென்பதற்காக இல்லாமல் (எச 16:61), மகிமைக்காக மட்டுமே (ஏச 48:11) தம் மக்களை மன்னிப்பதில் கடவுள் வெற்றி பெறுவார் என்று இறைவாக்கினர் மட்டுமே சொல்லக் கூடியவராய் உள்ளார். உடன்படிக்கை பற்றிய பிரச்சினைகளுக்கான இறைவாக்குக்குப் பதிலாக, திருமணம் என்னும் உருவகத்தின்கீழ் உடன்படிக்கை பற்றி கோட்பாடு வளர்ந்தது. ஒசேயாவின் காலம் முதல், இந்த உட்கருத்து புரிந்து கொள்ளப்படுகிறது. திருமணம் என்பது ஒரு ஒப்பந்தமாக இருந்தாலும் அன்பிற்குப் புறம்பே அதற்குப் பொருளில்லை. எனவே அன்பு என்பது கண்டிப்பான பழிவாங்குதலை இயலாததாகவும், மன்னிப்பினை இயலக்கூடியதாகவும் மாற்றுகிறது.

இ. புதிய உடன்படிக்கையின் முன்னறிவிப்பாளர்கள்:- நாடு கடத்தலும், அதைத் தொடர்ந்த சிதறிப்போதலும் தண்டனையை நிறைவேற்றுகின்றன. சட்டமானது இஸ்ராயேல் தனது வலிமையற்ற நிலையினை உணரச் செய்ததாயின் (உரோ 7), இந்த உண்மைக்குச் சமுதாயத்தினுடைய கண்களை இறைவாக்கினர்கள் திறந்து விட்டதே காரணமாகும். பின்னர், இரக்கத்தின் காலம் தொடர்கிறது. நாடு கடத்தப்பட்ட காலம்முதல் வருங்காலத்திற்கான உறுதிமொழிகளை அளிக்கும்போது இறைவாக்கினர்கள் இரக்கத்தைப்பற்றிப் பேசுகின்றனர். முந்தைய அழிந்து மறைந்து கொண்டிருக்கும் நிறுவனங்களை மீண்டும் அமைப்பது பற்றி அவர்கள் உறுதிமொழி அழிக்கவில்லை (எரே 31:32), மாறாகப் புதியதோர் உடன்படிக்கையைப் பற்றப் பேசுகின்றனர். எரேமியாவால் அறிவிக்கப்பட்ட இந்தப் புதிய உடன்படிக்கை (எரே 31:31-34). எசக்கியேல் (எச 36:16-38) மற்றும் இரண்டாவது ஏசயா (ஏச 55:3; 54:1-10) ஆகியோரால் மீண்டும் எடுத்தியம்பப்படுகிறது. புதிய தொலைநோக்கில் சட்டமானது அடக்கி வைக்கப்படவில்லை; புதிய நிலையை ஏற்றுக் கொள்ளுகிறது. வாக்குறுதியின் ஒரு நிபந்தனையாக இருப்பதிலிருந்து, உறுதிமொழியின் 'ஓர் இலக்காக மாறுகிறது (எரே 31:33; 32:39-40; எச 36:27). இது ஒரு பெரிய புதிய அமைப்பாகும். ஆனால் விவிலிய வெளிப்பாட்டின் எல்லாக் கூறுகளையும் பொருத்தமட்டில், இறைவாக்கினர்கள் மேலும் பல புதியவற்றை அமைக்கின்றனர். இறைவாக்கு அனுபவமானது அனைத்தையும் புதுப்பிப்பதற்காக, எல்லாவற்றுடனும் தொடர்பு கொண்டுள்ளது. தங்களது வாழ்க்கை முறை மற்றும் கோட்பாடுகளின் மூலமாக, 'பழைய சட்டத்தின் கிறிஸ்தவர்கள்' என்று குறிப்பிடத் தகுதிபெற்ற மக்கள் திரளின் தலைவர்களாக இறைவாக்கினர்கள் திகழ்ந்தனர்.

ஈ. உறுதியான ''இன்று'':- மீட்புப் பற்றிய கருத்துக்களை இவ்வாறு புதுப்பித்தலானது, நாடு கடத்தப்படுதல் மற்றும் திரும்பி வருத

லினுடைய சூழ்நிலைகளினின்று பிரிக்கப் பட முடியாததாக உள்ளது. அவருடைய அருங்கொடையின் சிறப்பினால் இரண்டு உண்மைகளும் அவருக்கு வெளிப்படுத்தப்ப டுகின்றன. மனிதன் துணையற்ற தனது ஆற் றலால் அடைய முடியாத அறிவின் வடிவங் களில், வருங்காலத்தைப் பற்றி முன்னுரைத் தலானது பல்வேறு வடிவங்களை எடுக்க முடியம். இது சில நேரங்களில் அண்மை எதிர்காலத்தில் நிகழ்வதைப்பற்றியதாக இருக்கலாம். இவை அவ்வளவு முக்கியத்து வம் கொண்டவை அல்லவாயினும் இவை முழுவதும் எதிர்பாராமல் நிகழ்வன (ஆமோ *7:17;* எரே *28:15-16; 44:29-30; 1* சாமு *10:1-2;* லூக் *22:10* தொ). இத்தகையமுன்னறிவிப்பு கள், ஒருமுறை நிறைவேற்றப்பட்டபின், மிகத் தூர எதிர்காலத்தில் நிகழக் கூடியவற் றைச் சுட்டிக்காட்டும் அடையாளங்களாகின் றன. இந்த எதிர்கால நிகழ்ச்சிகளே முக்கியம் மிகுந்தவை. இந்தத் தூர எதிர்காலம் மற்றும் வரலாற்றின் இறுதி விளக்கத்தையே இறை வாக்கு தனது முக்கிய குறிக்கோளாக நோக் குகிறது. இறைவாக்கு உருவாக்கப்பட்ட சூழ்நிலைகள் எப்போதும், இஸ்ராயேலினு டைய தற்கால வரலாற்றுப் பின்னனியோடு பின்னிப் பினணக்கப்பட்டுள்ளன. ஆனால், தீர்மானமான உலகளாவிய உட்கருத்தும் உடன்சேர்ந்து அறிவிக்கப்படுகிறது. காட்சி யாளர்கள் தாங்கள் அனுபவிக்கிற நிகழ்ச்சிக ளின் வழியாக மீட்பினை விவரிக்கிறார்கள் என்றால், அது அவர்களுடைய சூழ்நிலை யின் வரையறைகளின் விளைவாகும்: ஆனா லும் எதிர்காலம் ஏற்கெனவே நிகழ்காலத் தில் செயல்படத் தொடங்கிவிட்டது என் றும், அது குறிப்பிடுகிறது. வருங்காலமா னது 'சிறப்பு மிக்க ''இன்று'' ஆக இருப்ப தால், இறைவாக்கினர்கள் நிகழ்காலத்தை வருங்காலத்துடன் இணைத்துத் தொடர்புப டுத்துகின்றனர். எதிர்கால உண்மையானது, நிகழ்காலச் சூழ்நிலையில் காணப்படுகின்ற எல்லா வரலாற்று இலக்குகளையும் விஞ்சி அமையும் என்பதை உயர்வு நவிற்சி அணி பயன்படும் முறை நன்கு எடுத்துக்காட்டுகி றது. தனது இலக்கிய வடிவங்களைப் பாராட்டச் செய்வதற்குப் பதிலாக, இறை வாக்கு முறையில் பேசுவது செவிமடுப் போரை அல்லது வாசகர்களை ஒரு முழுமை நிகழ்ச்சியை நோக்கி வழிப்படுத்துகிறது. வெளிப்பாட்டு இலக்கியமானது பழைய சட்டத்தின் இறைவாக்குகளைவிட அதிக அளவில் அரசியல் விருப்பு வெறுப்புகளி னின்று விலகியிருப்பதால் சிறப்பு மிக்க வெளிப்பாடாக உள்ளது. காலத்தை வரை யறை செய்தல், எண்கள் மற்றும் கற்பனை யான படைப்புகள் ஆகியவற்றைப் பயன்ப டுத்தும் போது, அது இத்தகைய வெளிப் பாட்டை நோக்கியே செயல்படுகிறது. எல் லாவற்றிற்கும் மேலாக நிகழ்கால வரலாறு பதிவு செய்கின்ற அனைத்திலும், வரலாற் றின் மையமாகவும் முடிவாகவும் இருக்க போகும் இந்த முழுமையான நிகழ்ச்சி யையே அது முன்குறிக்கின்றது.

II. புதிய ஏற்பாடு

*1.* இறைவாக்குகள் நிறைவேறுதல்:- புதிய ஏற்பாடானது பழைய ஏற்பாட்டு இறைவாக்குகளின் உணர்வுப் பூர்வமான நிறைவேறுதலாகும். இறைவாக்குரைகள் அனைத்தின் சுருக்கத்தையும் குறிப்பாக ஊழி யன் பாடல்களைத் தன்னகத்தேயும் கொண் டுள்ள ஏசயாவின் நூலானது, இரு ஏற்பாடுக ளுக்கும் இடையில் இன்றியமையாத இணைப்பாக உள்ளது. இறைவாக்கு நிறை வேறுதலின் முறையையும், அதன் வரவிருக் கும் உண்மை நிலையினையும் முன்னுரைப் பதால், இது இவ்வாறு உள்ளது. மீட்பின் நற்செய்தி பெற்ற குறைவான வரவேற்பி னைக் குறிப்பிடுவதற்கு நற்செய்தியாளர்கள், ஏசயாவின் வாசகத்தையே பயன்படுத்துகின் றனர் (மத் *13:14-15;* யோவா *12:39-40).* அ.ப. *28:26-27* ஆகிய பகுதிகளில் ஏச *6:9*-வும்; உரோ *10:16;* யோவா *12:38* ஆகிய பகுதிகளில் ஏச *53:1*-வும்; உரோ *10:21*-வில் ஏச *65:2*-வும் எடுத்துக் கூறப்படுகின்றன).

உண்மையில், இறைவாக்குகளை நிறை வேற்றுகின்ற இயேசுவினுடைய வாழ்க்கை நிகழ்ச்சிகளைப் புதிய ஏற்பாடு வலியுறுத்து மாயின், இறைவாக்கினர் அனைவரும் ஒன் றுபட்ட நிலையில் (அ.ப. *3:18-24;* லூக்

*24:27)* மிகமுக்கியமான மறைபொருளாகிய அவரது இறப்பு மற்றும் உயிர்ப்பு ஆகியவற்றைத் தமக்கேயுரிய முறையில் எதிர்நோக்கியிருந்தனர் என்பதை நாம் மறக்கக்கூடாது. இறைவாக்கின் இலக்காகப் பாடுகளே பல முறை குறிப்பிடப்பட்டிருந்தாலும் *(மத் 26: 54-56; அ.ப. 3:18; 13:27)*, அடிக்கடி இரண்டுமே ஒன்றாகக் கொள்ளப்பட்டுள்ளன, நற்செய்தியைப் பதிப்பித்தலின்போது உபயோகிக்கப்பட்ட, எம்மாவு பாதையில் நமது ஆண்டவருடைய விளக்கவுரையானது, கிறிஸ்துவின் மறைபொருளைப் பற்றிக் கூறுகின்ற நூல்களைப் பல்வேறு வகைகளாகப் பிரித்துக்காட்டும். சொல்லமைப்புகளை மீண்டும் இணைக்கிறது. ''இறைவாக்கினர்கள்''. ''மோசேயும் மற்ற எல்லா இறைவாக்கினர்களும்'', ''எல்லா மறை நூல்களும்'', ''மோசேயின் சட்டமும் இறைவாக்கினர்கள் மற்றும் சங்கீதங்களும்'' *(லூக் 24:25.27.44; அ.ப. 2:30; 26:22; 28:23; உரோ 1:2; 1 பேதுரு 1:11; 2 பேதுரு 3:2)* போன்ற சொற்றொடர்களை, எம்மாவுக்கப் போகும் வழியில் இயேசு அளித்த விளக்கமுறை மீண்டும் இணைக்கிறது. இம்முறையே நற்செய்திகளின் பதிப்பிலும் பயன்பட்டுள்ளது. பழைய ஏற்பாடு முழுவதும் புதிய ஏற்பாட்டின் இறைவாக்கு ஆகிறது; ''இறைவாக்கு நூலாக மாறுகிறது'' *(2 பேதுரு 1:19-20)*.

2. புதிய அமைப்பில் இறைவாக்குப் பணி:-

அ. இயேசுவின் சூழ்நிலை:- செக்கரிய *(லூக் 2:36)*, எல்லாருக்கும் மேலாக திருமுழுக்கு யோவான் ஆகியோருடைய இறைவாக்குரைகளின் பொருளாக இயேசு தோன்றுகிறார். இறைவாக்குப் பணிக்கும் அதனுடைய இலக்காகிய கிறிஸ்துவிற்கும் இடையிலுள்ள வேறுபாட்டை வெளிப்படுத்த யோவானுடைய பிரசன்னம் தேவைப்பட்டது. ஒவ்வொருவரும் யோவானை இறைவாக்கினராகவே பார்க்கின்றனர். பழைய இறைவாக்கினர்களைப் போன்று அவரும் சட்டத்தை வாழ்கின்ற அனுபவங்களாக மொழி பெயர்க்கின்றார் *(மத் 14:4; லூக் 3:11-14)*. இறைவனின் சினம் மற்றும் மீட்பு உடனடியாக வருவதைப்பற்றி அவர் அறிவிக்கின்றார் *(மத் 3:2.8)*. குறிப்பாக, பிறரால் யார் என்று அறியப்படாமல் அருகிலிருப்பவரை இறைவாக்கினால் உணர்கிறார் யோவான்; அவரை சுட்டிக் காட்டுகிறார் *(யோவா 1:26.31)*. இயேசுவைப்பற்றிச் சான்றுரைத்த அனைத்து இறைவாக்கினர்களும் யோவான் வழியாகப் பேசுகின்றனர்; ''திருச்சட்டமும் இறைவாக்கினர் அனைவரும் யோவான் வரை இறைவாக்கு உரைத்தனர்'' *(மத் 11:13; லூக் 16:16)*.

ஆ. இயேசு:- இயேசுவினுடைய நடத்தையானது திருமுழுக்கு யோவானிடமிருந்து தெளிவாக வேறுபடுத்தப்பட்டிருந்தாலும் *(மத் 9:14)*. பல இறைவாக்குக் குணங்கள் அவரிடம் காணப்படுகின்றன. அவர் 'காலங்களின் அருங்குறிகளைத் தெரியப்படுத்துகிறார்' *(16:2-3)*, அவை நிறைவேறுவதைப் பற்றி அறிவிக்கின்றார் *(மத் 24-25)*, ஏற்றுக் கொள்ளப்பட்ட மதிப்பீடுகளை அவர் அணுகுமுறையானது, இறைவாக்கினருடையதைப் போன்று ஆய்வு செய்வதாக இருந்தது; இதற்குச் சில எடுத்துக்காட்டுகள்: அதிகாரத்தின் திறவு கோல்களைத் தம்மிடம் கொண்டு, மற்றவர்கள் நுழைவதைத் தடுப்பவர்கள்பால் காட்டிய கடுமை *(லூக் 11:52)*; சமய வெளிவேடத்திற்கு எதிரான கோபம் *(மத் 15:7; ஏச 29:13)*; யூதர்கள் பெருமை பாராட்டுகின்ற 'ஆபிரகாமின் பிள்ளைகள்' என்னும் பெயருக்கு எதிரான சவால் *(யோவா 8:39; 9:28)*; அறிவதற்குக் கடினமாக உள்ள, ஆன்மீக உரிமைப் பேறு பற்றிய விளக்கம்; ஆலயத்தைத் தூய்மைப்படுத்துதல் *(மாற் 11:15 தொ; ஏச 56:7; எரே 7:11)*; சடப்பொருட்களால் ஆன தலப்புனித இடம் அழிக்கப்பட்டபின் வரும் முழுமையான வழிபாடு பற்றிய அறிவிப்பு *(யோவா 2:16; செக் 14:21)*. எல்லாவற்றிலும் இறுதியாக, தனது செய்தியானது இறைவாக்கினர்களைக் கொன்ற அதே எருசலேமினால் *(மத் 23:37-38; 1 தெச 2:15)* மறுக்கப்பட்டு *(மத் 13:13 தொ)* நிராகரிக்கப்படுதலை அவர் காண்கிறார். இந்தக்கூறு முந்தைய இறைவாக்கு நூல்களில் காணப்படுகிறது. தமது மர

ணத்தை அறிவித்து அதன் பொருளையும் விளக்கிறார். அவரே அவருக்கு இறைவாக்கினர். தமது கதியின் தலைவர் தாமே என்று காட்டுகிறார். இறைவாக்குகளில் குறிப்பிடப்பட்டுள்ளபடி, தந்தையின் திட்டத்தை நிறைவேற்றுவதற்காக, அந்தக் கதியை ஏற்றுக்கொள்கிறார்.

புதுமையான அடையாளங்களுடன் சேர்த்து மேற்கூறப்பட்டவைகளைக் கருத்தில் கொண்டால், மக்கள் கூட்டம் அவருக்கு இறைவாக்கினர் என்ற பட்டத்தைத் தன்னிச்சையாக அளித்ததில் வியப்பில்லை (மத் *16:14;* யோவா *4:19; 9:17*). தனிப்பட்ட சூழ்நிலைகளில் இப்பட்டத்திற்கு, மறைநூலில் முன்னறிவிக்கப்பட்ட மிகச் சிறந்த இறைவாக்கினர் என்பது பொருளாகும் (யோவா *1:21; 7:40*). ஆனால் இயேசு இச்சிறப்புப் பெயரை முக்கியமல்லாத விதத்திலேயே ஏற்றுக் கொள்கிறார் (மத் *13:57*); ஆதித்திருச்சபையும் இப்பெயரை வெகுசிறிதே பயன்படுத்தியுள்ளது (அ.ப. *3:22-23;* லூக் *24:19*). இயேசுவினுடைய ஆளுமை, ஒரு இறைவாக்கினரைச் சூழ்ந்துள்ள மரபைவிட எல்லாவிதத்திலும் மேம்பட்டு உள்ளது; அவரே மெசியா, இறைவனின் ஊழியன், மனுமகன். தமது தந்தையிடமிருந்து அவர் பெற்றுள்ள அதிகாரமானது, முழுவதும் அவருக்கே உரியது. மகனுக்குரிய அந்த அதிகாரம் அவரை இறைவாக்கினர் நிலைக்கு மேம்பட்டவராக நிறுவுகிறது (எபி *1:1* தொ.) அவர் தமது செய்தியைப் பெறுவது உண்மையே. ஆனால் யோவான் கூறுவது போல அவரே மனுவுருவான இறைவனுடைய வார்த்தை ஆவார் (யோவா *1:14*). இதன் விளைவாக, எந்த இறைவாக்கினராவது உண்மைக்கும் வாழ்விற்கும் ஊற்றாகத் தன்னையே அளிக்கமுடியுமா? ''ஆண்டவர் கூறுவதாவது'' என்றே இறைவாக்கினர்கள் வழக்ககமாகக் கூறுவர். ஆனால், இயேசுவோ ''உண்மையிலும் உண்மையாக உங்களுக்குச் சொல்கிறேன்'' என்கிறார். அவரது பணியும் ஆட்தன்மையும் வேறுபட்ட அமைப்பைச் சேர்ந்தவை.

இ. திருச்சபை:- ''ஒருநாள் இறைவாக்கு வரம் இல்லாமற்போகும்'' என்று பவுல் விளக்குகிறார் (1 கொரி *13:8*). ஆனால், அது காலத்தின் இறுதியில் நிகழும். இவ்வுலகிற்குள் கிறிஸ்துவின் வருகையானது, இறைவாக்கு அருங்கொடையை அழிப்பதற்குப் பதிலாக, ஏற்கனவே முன்னறிவித்ததைப் போன்று அது மேலும் பரவும்படியாகத் தூண்டுகிறது. ''எல்லாரும் இறைவாக்கினர் ஆக வேண்டும்'' என்பதே மோசேயின் விருப்பமாகும் (எண் *11:29*). இந்த விருப்பமானது 'இறுதி நாட்களில்' நிறைவேறுவதை யோவேல் காண்கிறார் (யோவா *3:1-4*). பெந்தகொஸ்தே நாளில் இவ்விறைவாக்கு நிறைவேறியதாக பேதுரு அறிவிக்கிறார்: இயேசுவின் ஆவியானது எல்லா ஊனுக்கும் அளிக்கப்பட்டுள்ளது. இறைவனுடைய புதிய மக்களில், காட்சியும் இறைவாக்கும் சாதாரண நிகழ்ச்சிகளாக உள்ளன. அப்போஸ்தலிக்க திருச்சபையில் இறைவாக்குக் கொடையானது ஆற்றல் மிக்கதாக அடிக்கடி நிகழ்கிறது (அ.ப. *11:27-28; 13:1; 21:10-11*). தான் உருவாக்கிய திருச்சபைகளில், இப்பணியானது குறைத்து மதிப்பிடப்படக்கூடாதென பவுல் விரும்புகின்றார் (1 தெச *5:20*). அதைப் பரவசப் பேச்சு வரத்திற்கு மேலானதாகக் கருதுகிறார் (1 கொரி *14:1-5*). ஆனாலும், எல்லைகளுக்கு உட்பட்டு சமூகத்தின் நன்மைக்காக இது செயல்படுத்தப்பட வேண்டியது அவசியமாக உள்ளது (*14:29-32*).

பழைய ஏற்பாட்டைப் போலவே, புதிய ஏற்பாட்டிலும் இறைவாக்குப் பணியானது, வருங்காலத்தை முன்னறிவிப்பதையே ஒரே செயலாக கொண்டுள்ளது, அது ''ஞான வளர்ச்சி தருகிறது, ஊக்கம் ஊட்டுகிறது, ஆறுதல் அளிக்கிறது'' (*14:3*); போதிக்கும் பணியை ஒத்திருக்கின்ற இச்செயல்கள். திருவெளிப்பாட்டின் இறைவாக்கு ஆசிரியர், இறைவாக்கினர் (1 கொரி *14:32*) மற்றும் அதிகாரத்திலுள்ளோரின் கட்டளைகளுக்கு (*14:37*) ஏற்ற முறையில், ஏழு திருச்சபைகளுக்கும் அவற்றின் உண்மை நிலையினை வெளிப்படுத்துவதோடு தொடங்குகிறார்

(திருவெளி 2-3). இறைவாக்கினர், சமுதாயத்தைத் தனக்குகீழ் கொண்டு வருவது போன்றோ திருச்சபையை ஆள்வது போன்றோ நடிக்கவில்லை (1 கொரி 12:4-11). ஆவிகளைத் தேர்ந்து தெளிதல்பற்றிய விதிமுறைகளின் மூலமாக, உண்மையான இறைவாக்குரைத்தலானது இறுதிவரை கண்டுணரப்படும். பழைய ஏற்பாட்டிலும், உபாகம ஆசிரியர், இறைவாக்கினர்கள் போதித்த படிப்பினைகளில் அவர்களுடைய இறைப்பணியின் உண்மையான அடையாளத்தை காணவில்லையா (உப 13:2-6)? இன்றும் அது அவ்வாறே உள்ளது. ஏனெனில், இறைவாக்குரைத்தலானது அப்போஸ்தலிக்க காலத்தோடு முடிந்துவிடவில்லை. திருச்சபையில் பல்வேறு புனிதர்களின் பணிகளை, இறைவாக்கு கொடையடன் குறிப்பிடாமல் புரிந்து கொள்ள முயல்வது கடினமானதே. இறைவாக்குரைத்தலானது பவுல் குறிப்பிட்ட விதிமுறைகளுக்குக் கீழ்ப்பட்டதாகவே உள்ளது.

**இறைவாக்கினர் புதல்வர்கள்** (SONS OF THE PROPHETS)

இச்சொற்றொடர் பெரும்பாலும் இறைவாக்கினர்களின் சொந்த மகன்களைக் குறிப்பதில்லை. மாறாக ஒரு குறிப்பிட்ட பிரிவையோ, குருவின் சீடர்களையோ குறித்து நின்றது. இச்சொல் கி.மு. 11-ஆம் நூற்றாண்டில் சவுல், சாமுவேல் காலத்தில் வழக்கிற்கு வந்தது. பின் நாளடைவில் இறைவாக்கினர்களின் கூட்டம் என்றும் (1 சாமு 10:5) குழு என்றும் (1 சாமு 19:20), மாறியது. மீண்டும் கி.மு. 9-ஆம் நூற்றாண்டில் எலிசாவின் காலத்தில் இக்குழுச் சொல் வழக்கிற்கு வந்தது (2 அர 2:3; 3:11; 4:1.38; 6:1-2). பொதுவாக அரசர்களே இவர்களை அலுவலர்களைப் போல அமர்த்தியிருந்தனர். ஒரு குறிப்பிட்ட காரியத்திற்கு கடவுளின் விருப்பத்தை அறிந்து கூறுவது இவர்களது பணியாகும். சில போலியான இறைவாக்கினர்களும் அரசர்களிடம் இருந்து கொண்டு அவர்களை தவறான பாதைக்கு வழிநடத்தியிருக்கிறார்கள். எருசலேம் நகரம் அழிந்த போது இவர்களது காலமும் முடிவுற்றது (1 அர 18:4; 22:6; 2 அர 23:2; எரே 26:7-8.11).

**இறை வார்த்தை** (WORD OF GOD)

'வாழும் கடவுள் மனிதனோடு பேசுபவர்': இது மறைநூல் தன் இறைவனிடம் கண்ட அரும் பெரும் பண்புகளில் ஒன்று. எனவேதான் ''ஊமைச்சிலைகளைப்'' (1 கொரி 12:2) பார்த்து, ''உங்களுக்கு வாய் உண்டு, பேசுவதில்லை'' (சங் 115:5; பாரு 6:7) என்று மறைநூல் எள்ளி நகையாடிற்று. மனுவுருவான இறைவனின் வார்த்தையை (லோகோஸ்) மையமாகக் கொண்டு சுழலும் புதிய ஏற்பாட்டிற்குத் தயார் செய்ய, பழைய ஏற்பாடு இவ்வார்த்தைக்கு மிகவும் முக்கியத்துவம் அளிக்கலாயிற்று.

I. பழைய ஏற்பாடு

1. இறைவன் மனிதனோடு பேசுகின்றார்:- அலக்சாந்திரியா நாட்டு ஞானிகள் தங்கள் சிந்தனையின் மூலம் உருவாக்கிய கற்பனைச் சித்திரம், ''லோகோஸ்''. ஆனால் பழைய ஏற்பாட்டு மனிதன் கண்ட தேவ வார்த்தையோ தன் அன்றாட அனுபவ வாயிலாகத் தெளிந்த உண்மையாகும். ஏனெனில் தனது இறைவன் சலுகை பெற்ற சிலரோடு நேரடியாகப் பேசி, அவர்கள் மூலம் தம் மக்களோடும் மனித இனத்தோடும் உறவு கொள்ள விழைவதை அவன் கண்கூடாகக் கண்டான்.

அ) இறைவாக்கு உரைப்பது பழைய ஏற்பாட்டின் அடிப்படைக் கூறுகளில் ஒன்றாகும்:- எப்படியெனில் எல்லாக்காலங்களிலும் தாம் தேர்ந்தெடுத்த சிலரோடு இறைவன் பேசுகின்றார். தாம் பேசிய வார்த்தையைப் பிறருக்கு அறிவிக்கும்படி அவர்களுக்கு ஆணையிடுகின்றார். இவ்வாறு இறைவாக்கை ஏந்திச் செல்வோரே இறைவாக்கினர் என்று பொதுவாக அழைக்கப்படுகின்றனர். இறைவாக்கினர்களோடு இறைவன் பேசும் விதம் பற்பல: ''காட்சிகளிலும் கனவுகளிலும்'' (எண் 12:6; காண் 1 அர 22:13-17) பேசுகின்றார்; ஒருவித இனந்தெரியா உள்ளத் தூண்டுதலால் பேசுகின்றார் (2

*அர 3:15; எரே 1:4)*; மோசேயுடனோ ''நேர் முகமாகப்'' பேசுகின்றார் *(எண் 12:8)*. ஆனால் பல சந்தர்ப்பங்களில் அவர் எப்ப டிப் பேசுகின்றார் என்பது பற்றிய செய்திகள் தெளிவாகத் தெரிவதில்லை *(ஆதி 12:1)*. எனினும் இறைவன் எப்படிப் பேசுகின்றார் என்பது அவர்களுக்கு முக்கியமன்று. இவ்வி றைவாக்கினர் அனைவரும் 'இறைவன் தங்க ளோடு பேசுகின்றார்' என்பதையும், இறை வார்த்தை தங்களுள் எப்படியாவது, வன்மு றையைப் பயன்படுத்திக்கூட *(ஆமோ 7:15; காண்க: 3:8; எரே 20:7 தொ)*, நுழைந்து விடுகிறது என்பதையும் எவ்வித ஐயத்திற் கும் இடமின்றி உணர்கின்றனர். மேலும் தங்களுடைய வாழ்வின் போக்கையே மாற் றியமைப்பது இவ்வார்த்தைதான் என்பத னையும் உணர்கின்றனர். தங்களுள் வார்த் தையானது கொந்தளித்துக் குமுறி கொப்பு ளித்து எழும் விதங்கண்டு, 'இது இறை ஆவியின் செய்கையே' என்று அவர்கள் விளம்புகின்றனர். இருப்பினும், சில சமயங் களில் சில விந்தையான முறைகளில், ஆனால் உளவியல் விதிகட்குட்பட்ட விதங் களில் இறைவார்த்தை எழுவதும் உண்டு. மனித உள்ளங்களைத் தொட இறைஞானம் இம்முறைகளையே பயன்படுத்தி *(பழ 8:1-231.32-36; ஞான 7-8)*, நல்வாழ்வுக்குரிய முறைகளைக் கற்பிக்கின்றது; மறை உண் மைகளின் உட்பொருளை வெளிப்படுத்து கின்றது *(தானி 5:11தொ; காண்க: ஆதி 41:39)*. வார்த்தை வரும் வழி எத்தகையது ஆயினும், மனிதனின் வார்த்தையைப் போன்று அது மாறுபடுவதில்லை; தவறுக் குள்ளாவதில்லை. ஏனெனில் இவ்விறை வாக்கினரும் ஞானிகளும் தங்கள் வார்த் தையை வாழும் இறைவனிடமிருந்து நேரடி யாகப் பெறுகின்றனர்.

ஆ) இறை வார்த்தையானது, இன்றிருந்து நாளை மறையும் மண்ணவர் கண்களில் படாமல் மறைத்து வைக்கப்பட வேண்டிய இரகசியமும் அன்று; அல்லது சிறப்புச் சலுகை பெற்ற விண்ணவர் குழுவிற்கே உரிய அமுத மொழியும் அன்று. மாறாக இறைவாக்கினர் வழியாக இறைவன் தொடர்புகொள்ள விழையும் இறைமக்கள் ஒவ்வொருவருக்கும் அறிவிக்கப்பட வேண் டிய நற்செய்தியாகும். எனவே ஒருசில ஞானிகளே தவமிருந்து பெறக்கூடிய அனுப வம் அன்று தேவ வார்த்தை; ஏனெனில் ''தமது தூதுவர் மூலம் தங்கள் அனைவரோ டும் இறைவன் பேசியுள்ளார்'' என்பதை உலகறிய ஏற்றுக்கொள்ளவே இஸ்ராயேல் அழைப்புப் பெற்றுள்ளது. எடுத்த எடுப்பில் இவ்வார்த்தை தவறாகப் புரிந்து கொள்ளப் பட்டு, புறக்கணிக்கப்பட்டால் *(எரே 36)*, ஐயத்திற்கு இடமில்லாத அருங்குறிகள் தோன்றி, அதன் உண்மைக்குச் சான்று பக ரும். புதிய ஏற்பாட்டுக் காலத்தையொட்டி, ''பற்பல முறையிலும் பல்வேறு வகையி லும் முற்காலத்தின் இறைவன் நம் முன்னோ ரிடம் பேசினார்'' *(எபி 1:1)* என்பது யூதகு லத்தின் அறிக்கையாகவே மாறிவிடுகின்றது.

2. இறைவார்த்தையின் இயல்புகள்:- இறைவார்த்தை அ) வெளிப்படுத்தவும் ஆ) செயல்புரியவும் வல்லது. இவ்விரு இயல்பு களும் பிரிக்கமுடியாத ஆனால் வேறுபட்ட கூறுகளாகும்.

அ) இறைவன் தம் பேச்சின் மூலம் வெளிப்படுத்துகின்றார்:- மனிதனின் சிந்த னையோடு தம் சிந்தனைகளைத் தொடர்புப டுத்த விரும்பி இறைவன் பேசுகின்றார். அதன் விளைவாக இறைவனின் சொற்கள் மனித வாழ்வின் சட்டமாகவும் நியதியாக வும் மாறிவிடுகின்றன; அவன் கண்கள் காணும் பொருள்கள், சம்பவங்கள் ஆகிய வற்றின் உட்பொருளை வெளிப்படுத்துவ தாக அமைகின்றன; அவன் எதிர்காலத்துக்கு உறுதியளித்து, வரவிருப்பவைகளை முன் அறிவிப்பதாவும் அமைகின்றன.

1) தங்கள் வரலாற்றின் ஆரம்பத்திலி ருந்தே இஸ்ராயேல் மக்கள் இறைவாக்கைத் தங்கள், வாழ்வின் சட்டமாகவும் நியதியாக வும் ஏற்றுவந்திருந்தனர். சீனாய் மலையின் உடன்படிக்கை ஏற்படுத்தப்பட்ட காலத்தில் மோசே மக்களுக்குப் பத்து ''வாக்குளில்'' அடங்கிய பத்துக் கட்டளைகளை இறைவன்

பெயரால் அளித்தார் (*யாத் 20:1-17; உப 5:6-22; காண்க: யாத் 34:28; உப 4:13; 10:4*). இப்பத்துக் கட்டளைகள் ஒழுக்கத்தையும் மதத்தையும் அடிப்படையாகக் கொண்டதொரு சாசனமாக இருந்தன. இறைவன் ஒருவரே என்ற இவ்வறிக்கையும், இறைவன் கொடுத்த அடிப்படையான கட்டளைகளுமே ''இறைவன் பேசுகின்றார்'' என்பதை இஸ்ராயேல் உணர்வதற்கு முதன்முதலாக வழிகோலின. இக்கருத்தை வலியுறுத்த எண்ணிய சில விவிலியப் பகுதிகள் சீனாய்மலைக் காட்சியைப் புனைந்து பெரிது படுத்திக் காட்டலாயின; மேகத்தின் நடுவிலிருந்து இறைவன் நேரடியாக இஸ்ராயேல் மக்களோடு பேசுவதாகவும் படம் பிடித்துக் காட்டின (*காண்க: யாத் 20:1; உப 4:12*). எது எப்படி அமைந்தாலும், இறைவனின் திருச்சட்டம் இறைவார்த்தையின் பெயரால்தான் அமுலுக்குக் கொண்டுவரப்படுகிறது என்பது குறிப்பிடத்தக்கது. எனவேதான் ஞானிகளும் சங்கீத ஆசிரியர்களும் சட்டத்தை இன்பம் சொட்டும் தேன்கூடாகக் கருதலாயினர் (*பழ 18:13; 16:20; சங் 119*).

2) ''எகிப்து நாட்டிலிருந்து உன்னை விடுவித்த ஆண்டவராகிய நாமே, உன் கடவுள்'' (*யாத் 20:2*); இத்தகைய அறிக்கை ஒன்று இறைவன் கொடுத்த ஒவ்வொரு திருச்சட்டத்தோடும் என்றுமே இணைந்து வந்திருந்தது. இவ்வறிக்கை இறைவனின் குணங்களையும், அவர் இவ்வுலகில் ஆற்றிவரும் அருஞ்செயல்களையும் வெளிப்படுத்திற்று. உண்மையில், சட்டம் அதிகாரம் பெறுவதே இவ்வறிக்கை விளம்பும் உண்மையின் அடிப்படையில் தான். மேலும் இஸ்ராயேல் ஒருவரே கடவுள் எனும் ஞானத்தைப் பெற்றது தன் சுயசிந்தனையால் அன்று; மாறாக ''தாம் ஒருவரே கடவுள்'' (*யாத் 3:13-15; காண்க: உப 6:4*) என்று இறைவன் தம்மைப் பற்றியே முன்னோருக்கும், பிறகு மோசேக்கும் வெளிப்படுத்தியதின் விளைவேயாகும். மேலும் மீட்பின் வரலாறு படிப்படியாக மலர்ந்தபோது, அவ்வரலாற்றின் உட்பொருளை இஸ்ராயேலுக்கு விளக்கிவந்தது இறைவார்த்தையாகும். நாட்டிற்கு ஏற்பட்ட பெருஞ்சோதனைகளில் இறைவனின் உள்ளத்தில் இருந்த திட்டத்தை வெளிப்படுத்தியதும் இறைவார்த்தையே (*யோசு 24:2-13*). இவ்வாறு இறைவனின் திட்டத்தை வரலாற்று நிகழ்ச்சிகளில் காணும்அறிவு, மனிதன் தானாக கண்டுபிடித்த ஒன்றல்ல; மாறாக, தேவவார்த்தையைப் பெற்ற இறைவாக்கினர் இவ்வறிவை எடுத்தியம்பினர்; ஞானிகள் இதற்கு மெருகேற்றினர் (*ஞான 10-19*); சுருங்கச் சொல்லின் இறைவனின் வார்த்தையே இஞ்ஞானத்தைக் கூற்றுக்கொடுத்தது.

3) இறுதியாக, இறைவார்த்தை காலவரையைக் கடந்து எதிர்கலத்தையும் வெளிப்படுத்த வல்லமை உடையது. இறைவனின் திட்டத்தில் அடுத்த கட்டத்தைப் படிப்படியாக வெளிப்படுத்துகின்றது (*ஆதி 15:13-16; யாத் 3:7-10; யோசு 1:1-5*). உடனடியாக நடக்க இருப்பவைகளைக் கூறுவதோடு இறைவன் தம் திட்டத்தை நிறைவுக்குக் கொண்டு வரும் 'இறுதி நாட்களில்' நிகழவிருப்பவைகளையும் இறைவார்த்தை வெளிப்படுத்துகின்றது. இறைவனது அரசு முழுமையாக நிறுவப்படும் விதத்தைப்பற்றி இறைவாக்கினர் எடுத்துரைப்பவை அனைத்தும் இதனுள் அடங்கும்: இவ்வாறு இறைவார்த்தையின் கூறுகளான சட்டம், வெளிப்பாடு, வாக்குறுதி ஆகிய மூன்றும் இஸ்ராயேல் வரலாறு முழுவதிலும் ஒன்றோடு ஒன்று இணைந்தும் சார்ந்தும் காணப்படுகின்றன. இவை மூன்றும் மனிதனின் பதிலுக்காக எதிர்பார்த்து நிற்கின்றன. இதைப்பற்றிப் பிறகு பார்ப்போம்.

ஆ) பேசும்போதே இறைவன் செயலாற்றுகின்றார்:- இறைவார்த்தை மனிதனின் சிந்தனைக்கு விருந்தாக அமைவதோடு கூட, இறைவனின் விருப்பத்திற்கேற்ப அனைத்தையும் சாதிக்கக்கூடிய சக்தியாகவும் திகழ்கின்றது (*யோசு 21:45; 23:14; 1 அர 8:56*). இறைவன் தம் வார்த்தையை ஓர் உயிருள்ள தூதுவனாக அனுப்புகின்றார் (*ஏச 9:7; சங் 107:20; 147:15*). எவ்விதத்திலாவது அது மனிதனை வசப்படுத்திவிடுகின்றது (*செக் 1:6*).

தன் பணியை முடிக்கும்வரை இறைவன் அவ்வார்த்தையைக் கண்காணிக்கின்றார் (எரே 1:2). உண்மையில், தான் அறிவிப்பது வரலாற்றைச் சார்ந்ததாயினும் சரி, அண்டங்களைச் சார்ந்ததாயினும் சரி, அல்லது மீட்புத் திட்டத்தின் முடிவைப்பற்றியதாயினும் சரி, அனைத்தையும் வார்த்தை தவறாது நிறைவேற்றுகின்றது (எண் 23:19; ஏச 55:10 தொ).

1) வார்த்தையின் இத்தகைய ஆற்றலைப் பிற மேற்காசிய மக்களும் அறிந்திருந்தனர். ஆனால் அத்தகைய ஆற்றலை மாயா மந்திர சக்தியாகக் கருதினர். பழைய ஏற்பாடு வார்த்தையின் செயல்திறனை முதன்முதலில் இறைவாக்கினரின் வார்த்தையில்தான் கண்டது; இறைவன் வெளிப்படுத்துகிற திட்டங்களை அவர் நிச்சயம் நிறைவேற்றுவார் என்பது உறுதி. எனவே வரலாறு என்பது இறைவன் கொடுத்த வாக்குறுதிகள் நிறைவேறுவதாகும் (காண்க: உப 9:5; 1 அர 2:4; எரே 11:5). இறைவன் திருவாய் மலர, காரியங்கள் நிகழ்கின்றன (ஏச 44:7 தொ). எகிப்தில், ''ஒரு வார்த்தை சொன்னார்; பூச்சிகள் படையெடுத்தன'' (சங் 105:31,34). பாபிலோனில் அடிமைத்தனத்தின் முடிவின் போது அவ்வாறே ஆண்டவர் எருசலேமைப் பார்த்து, ''நீ குடியிருப்பு ஆவாய்'' என்றார். சைரஸ் அரசனை நோக்கி ''நீயே நமது மந்தையின் மேய்ப்பன்'' (ஏச 44:26.28) என்று மொழியலானார்.

2) மேற்கூறியவை யாவும் வரலாறு கண்ட உண்மைகள் என்றால், வரலாறு மட்டுமன்று, இறைவனின் படைப்புப் பொருள்கள் அனைத்துமே அவர் வார்த்தைக்குக் கீழ்ப்படிகின்றன என்பதில் சந்தேகம் கொள்ளலாமா? ''அவர் ஒரு வார்த்தை சொல்லவே எல்லாம் உண்டாயின'' (சங் 33:6-9; காண்க: ஆதி 1; புல 3:37; யூதி 16:14; ஞான 9:1; சீரா 42:15) என்று படைத்தவரின் முதல் செயலை வார்த்தையின் வடிவில் குறிப்பதும் பொருந்தும். அந்நாளிலிருந்து இன்று வரை அதே வார்த்தை விண்மீன்களையும் (ஏச 40:26), கடல்களையும் (44:27), இயற்கையனைத்தையும் (சங் 107:25; 147:15-18; யோபு 37:5-13; சீரா 39:17. 31) ஆட்சி செய்து, வையகத்தில் செயலாற்றிவருகின்றது. வயலில் விளைந்தவை மனிதனை உண்பித்து உயிரூட்டுவதைக் காட்டிலும், இவ்வார்த்தை விண்ணிலிருந்து விழுந்த மன்னாவாக இறைப்பற்றுள்ளவர்களை உண்பித்து, உயிர் கொடுத்துப் பாதுகாத்து வருகின்றது (ஞான 16:26; காண்க: உப 8:3).

3) படைப்பிலும் வரலாற்றிலும் இறைவார்த்தையின் ஆற்றல் மெய்ப்பிக்கப்பட்டது. ஆதலால் இறுதி நாட்களில் மீட்புத் தருவதாக இறைவன் அளித்த வாக்குறுதிகளும் மெய்யாகும் என்பது உறுதி. ''இறைவனின் வார்த்தை என்றென்றைக்கும் நிலைத்திருக்கும்'' (ஏச 40:8) இக்காரணத்திற்காகவே ஒவ்வொரு நூற்றாண்டிலும் இறைமக்கள் தங்கள் எதிர்காலத்தை எடுத்துக்கூறும் வார்த்தைகளைப் பயபக்தியுடன் தொகுத்து வைக்கின்றனர். ''இறுதி நாட்கள்'' வரும்வரை நிகழும் எல்லா நிகழ்ச்சிகளுக்கும் அர்த்தம் உண்டு என்பது இவர்களின் நம்பிக்கையாகும் (தானி 9).

3. பேசும் இறைவனின் முன் மனிதனின் நிலை:- இறைவார்த்தை உள்ளத்தைத் தட்டுகிறது என்பது மனித அனுபவமாகும். அதை அவன் தட்டிக் கழிக்க முடியாது. வார்த்தையை ஏந்திச் செல்பவனின் பணியோ மிகவும் பொறுப்பு வாய்ந்ததாக அமைகின்றது. வார்த்தையைக் கேட்பவனோ தான் விதியையே மாற்றியமைக்கக் கூடிய ஒரு நிலைக்கு அமைக்கப்படுவதை உணர்கின்றான்.

அ) பழைய ஏற்பாட்டில் இறைவார்த்தை ஏந்திச் செல்லும் பணியாளன் ஆனந்தப் பரவசம் அளிப்பவனாக இருந்ததில்லை. மாறாக இறைவாக்கினர் எதிர்ப்புக்கும் துன்புறுத்தலுக்கும் உள்ளாவதைக் காண்கிறோம். இறைவன் தம் வார்த்தைகளை இறைவாக்கினர்க்கு அளித்து, அவைகளை அவர்கள் பயமின்றி அறிவிப்பதற்கு வேண்டிய சக்தியையும் அளிக்கின்றார் என்பதில் சந்தேகம் இல்லை (எரே 1:6-10). இறைவாக்கினரோ

தாம் ஏந்தும் பணிக்கு இறைவன்முன் பொறுப்பாளியாகின்றார். ஏனெனில் மனித வாழ்வின் தலையெழுத்தையே இப்பணி நிர்ணயிக்கின்றது (எச 3:16-21; 33:1-9). தன் கடமையிலிருந்து அவர் தப்பிஓட முயன்றாலோ (யோனாவின் வாழ்வில் நடந்தது போல்: யோனா 1:3), இறைவன் வன்முறையைப் பயன்படுத்தி அவரை இழுத்துக் கொள்ள முடியும். பல இறைவாக்கினர் மனஅமைதியையும், ஏன், உயிரையும் கூடப் பொருட்படுத்தாது தங்கள் பணியை நிறைவேற்றி உள்ளனர். இத்தகைய ஆழ்ந்த கடமையுணர்ச்சிக்கு அவர்கள் பெற்றது எண்ணற்ற தொல்லைகளே (எரே 15:16 தொ). இத்தகைய கடின உழைப்பிற்கு உடனடியாக ஊதியமும் கிடைப்பதில்லை (1 அர 19:14).

ஆ) வார்த்தைக்குச் செவிமடுத்தல்:- வார்த்தையைக் கேட்போர் உள்ளத்தில் பணிவும் நம்பிக்கையும் நிறைந்திருக்க வேண்டும். இவ்வார்த்தை இறைவனது வெளிப்பாடாகவும் மனிதவாழ்வின் நியதியாகவும் விளங்கும்பட்சத்தில், அது அவர்களுக்கு ஒளியாகின்றது (சங் 119:105). இவ்வார்த்தை வாக்குறுதி என்ற அளவில் மனிதனின் எதிர்காலத்திற்கு உறுதியளிப்பதாயும் அமைகின்றது. எனவே இத்தகைய வார்த்தையை ஏந்திவருபவனின் நிறைகுறைகளைப் பாராது (மோசேயாக இருக்கட்டும் அல்லது இறைவாக்கினராய் இருக்கட்டும்) செவிமடுப்பது கடமையாகின்றது (உப 6:3; ஏச 1:10; எரே 11:3-6). பெற்ற வார்த்தையை ''உள்ளத்தில் பதித்து'' (உப 6:6; 30:14), அதன்படி நடப்பதோ (உப 6:3; சங் 119:9.17.101) அதை அடித்தளமாக்கி நம் நம்பிக்கையை அதில் எழுப்பவதோ கேட்பவனின் பொறுப்பாகும் (சங் 119:42.74.81; 130:5). இறைவார்த்தையை ஏற்று வாழ்பவனிடம் செறிவுமிக்க ஓர் ஆழ்ந்த ஆன்மீகப் போக்கு உண்டாகும். அம்மனப்பான்மையில் ஞானவாழ்வின் அனைத்துத் தடயங்களையும் காணலாம். வாழும் இறைவனையும் அவர் திட்டங்களையும் வார்த்தை வெளிப்படுத்துவதால், அங்கு விசுவாசத்தைக் காணலாம். இறைவனின் இல்லத்தில் நுழைய வார்த்தை வாக்குறுதியாக அமைவதால், நம்பிக்கைக்கு இடமுண்டு. வார்த்தை வாழ்க்கையின் சட்டமாக (காண்க: உப 6:4) மாறுவதால் அன்பு சுடர்விடுகின்றது.

4. ஆட்தன்மைப்படுத்தப்பட்ட இறை வார்த்தை:- தேவ வார்த்தையைப் பழைய ஏற்பாட்டின் பல அம்சங்களில் ஒன்றாக மட்டும் கருதுவது தவறு. மாறாக, வரலாற்றையே படைத்து, அதற்குப் பொருளும் தந்து அனைத்திற்கும் உயிரோட்டம் அளிக்கின்றது தேவ வார்த்தை. அதே வார்த்தை மனிதரிடையே நற்செய்தியாக உலவும் போது, அது அவர்களின் விசுவாச வாழ்க்கையின் வளர்ச்சிக்குப் பெருந்துணையாக உள்ளது. இவ்வளவு முக்கித்துவம் வாய்ந்த வார்த்தை, ஞானமும், இறை ஆவியும் உருவம் பெற்றதுபோல, ஓர் ஆளாக உருவகம் பெற்றது என்றால் அதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை. வார்த்தையானது (இறைவனை) வெளிப்படுத்தும் போதும் (சங் 119:89); குறிப்பாக இறைவனின் ஆணைகளை நிறைவேற்றும் போதும் (சங் 145:15; 107:20; ஏச 55:11; ஞான 18:14 தொ) இவ்வாறு உருவகம் பெற்றது. புதிய ஏற்பாடு வார்த்தையின் செயல்களை முழுமையாக மனிதருக்கு வெளிப்படுத்துவதற்கு முன்னரே விவிலியத்தின் பிற பகுதிகளில் இறைவார்த்தையின் அளப்பரிய ஆற்றல் அறிந்து போற்றப்பட்டது.

II. புதிய ஏற்பாடு

இறைவார்த்தை பற்றிய பழைய ஏற்பாட்டின் கருத்துக்கள் புதிய ஏற்பாட்டிலும் சில பகுதிகளில் காணக்கிடக்கின்றன (காண்க: மத் 15:6). வானதூதர் வாயிலிருந்து மலர்ந்த வார்த்தையிலே (லூக் 1:37 தொ. 45) மரியாள் நம்பிக்கை கொள்கிறாள். திருமுழுக்கு யோவானும், பழைய ஏற்பாட்டில் இறைவாக்கினர் பெற்றதுபோல, வார்த்தையைப் பெறுகின்றார் (லூக் 3:2). ஆனால் இக்காலம் முதல் வார்த்தையான மறைபொருள் இயேசுவையே மையமாகக் கொண்டுள்ளது.

1. இறைவனின் வார்த்தையும் இயேசுவின் வார்த்தையும்:-

அ) வார்த்தை செயலாற்றுகின்றது, வெளிப்படுத்துகின்றது:- பழைய ஏற்பாட்டில் இறைவாக்கினருக்கு அறிவிக்கப்பட்ட வகையில் இறைவார்த்தையானது இயேசுவுக்கும் அறிவிக்கப்பட்டதாக ஓரிடத்திலும் நாம் வாசிப்பதில்லை. எனினும் அவ்வார்த்தை பழைய ஏற்பாடு கூறுவது போல, எதையும் சாதிக்கவல்ல சக்தியாகவும், வெளிப்படுத்தவல்ல ஒளியாகவும் யோவான் நற்செய்தியிலும் ஒத்தமை நற்செய்திகளிலும் விளங்குகின்றது.

சாதிக்கவல்ல சக்தி:- தமது வார்த்தையால் இயேசு இறையரசின் வெளி அடையாளங்களான அருங்குறிகளைச் செய்கின்றார் (*மத் 8:8,16; யோவா 4,50-53*). அதே வார்த்தையால் இயேசு பாவமன்னிப்பு ஈந்து (*மத் 9:1-7*), உள்ளத்திற்கு நலன் அளிக்கிறார். (இவ்வுள நலனின் வெளிச்சின்னமே அருங்குறியாகும்). பன்னிருவருக்குத் தமது அதிகாரத்தை வழங்கி (*மத் 18:18; யோவா 20,23*), புதிய உடன்படிக்கையின் அடையாளச் சின்னங்களை ஏற்படுத்துவதும் தமது வாயிலிருந்து மலர்ந்த சொல்லால்தான் (*மத் 26:26-29*). இவ்வாறு படைக்கும் சக்தி வாய்ந்த வார்த்தை, அவரில், அவர் வழியாக வையகத்திற்கு மீட்பளித்துச் செயலாற்றி வருகின்றது.

வெளிப்படுத்தவல்ல ஒளி:- இயேசு இறையரசின் நற்செய்தியை அறிவிக்கின்றார்; அவ்விறையரசின் மறையுண்மைகளை உவமைகள் வழியாக வெளியிட்டு (*மத் 13:11*), ''வார்த்தையை அறிவிக்கின்றார்'' (*மாற் 4:33*). வெளித்தோற்றத்தில், ஓர் இறைவாக்கினராகவோ (*யோவா 6:4*) இறைவன் பெயரில் கற்பிக்கும் சட்டவல்லுநராகவோ (*மத் 22:16*) தோன்றினாலும், இயேசு தமக்கே உரிய 'அதிகாரத்துடனும்' (*மாற் 1:22*), 'என்னுடைய வார்த்தைகளோ ஒழியவே ஒழியா!'' (*மத் 24:35*) என்ற உறுதியோடும் பேசுகின்றார். இயேசுவின் இத்தகைய மனநிலை மற்றொரு உண்மைக்கு நம்மை இட்டுச் செல்கின்றது. (இவ்வுண்மையில் நான்காம் நற்செய்தியாளரும் மிகுந்த ஆர்வம் காட்டுகின்றார்). அதாவது, இயேசு 'பேசுவது கடவுளின் வார்த்தைகளாகும்'' (*யோவா 3:34*). ''தந்தை அவருக்குக் கற்பித்ததையே'' (*8:28*) இயேசுவும் கூறுகின்றார். எனவேதான், 'அவருடைய வார்த்தைகள் ஆவியும் உயிருமாகின்றன' (*6:63*). இயேசுவிடம் காணப்பட்ட இத்தனிப்பட்ட பண்பை வலியுறுத்த எண்ணி, இந்நற்செய்தியாளர், 'பேசுதல்' என்ற சொல்லை அடிக்கடி பயன்படுத்துகின்றார் (*3:11; 8:25-40; 15:11; 16:4*). ஏனெனில் இயேசு 'தம்மை பற்றிப் பேசாது' (*12:49 தொ; 14:10*). 'தம் தந்தை அவருக்கு முன்பு கூறியவற்றையே' (*12:50*) பேசுகின்றார். இவ்வாறு இறைவாக்கினர் வழியாகப் பழைய ஏற்பாட்டில் அறிவிக்கப்பட்ட வார்த்தை இயேசுவில் முழுமை பெறுகின்றது.

ஆ) மனிதன் வார்த்தையை எதிர் கொள்ளல்:- தேவ வார்த்தை மனிதனை இறைவனோடு நேரடியாகத் தொடர்புக் கொள்ளச் செய்வதால், அதனை எதிர்க்கொள்ளும் போது, மனிதன் அவருக்குச் சார்பாக அல்லது எதிராக வாழ்க்கை நிலையை மாற்றியமைக்க அழைக்கப்படுகிறான். இவ்விரு நிலைகளில் எந்நிலையைத் தேர்ந்தெடுப்பினும் அதன் விளைவுகளைக் குறித்து இயேசு கூறியவற்றை ஒத்தமை நற்செய்திகள் நமக்குத் தெளிவாக அளிக்கின்றன. விதை விதைப்பவன் உவமையில் மனிதர் வெவ்வேறு விதங்களில் வார்த்தையை (இறையரசை) ஏற்றுக் கொள்வதைக் காண்கிறோம். எல்லோரும் 'கேட்கின்றனர்', ஆனால் 'அதைப் புரிந்து கொண்ட' (*மத் 13:23*) அல்லது 'ஏற்றுக்கொண்ட' (*மாற் 4:20*) அல்லது தங்கள் மனதில் 'பதித்துக்கொண்ட' (*லூக் 8:15*) ஒரு சிலரே அதன் பலனைப் பெறுகின்றனர். மலைப்பொழிவில் புதியசட்டத்தை அறிவித்தப்பின் இயேசு 'தம் வார்த்தைகளைக் கேட்டு அதன்படி நடப்பவர்களின்' நிலைமையை வேறுபடுத்திக் காண்பிக்கின்றார் (*மத் 7:24-36; லூக் 6:47-49*). முதல்நிலை பாறையின் மீது எழுப்பிய வீட்டிற்கு ஒப்பா

கும்; மற்றதோ மணலில் கட்டப்பட்ட வீட்டிற்குச் சமமாகும். இவ்வுவமைகள் மனிதன் தான் தேர்ந்தெடுக்கும் நிலையைப் பொறுத்து தீர்ப்புக்குள்ளாவதை விளக்குகின்றன. மனிதன் வார்த்தையை ஏற்றுக் கொள்ளும் விதத்தைப் பொறுத்து தீர்ப்பு பெறுவான். 'என்னைப் பற்றியும் என் வார்த்தைகளைப் பற்றியும் வெட்கப்படுகிறவன் எவனோ, அவனைப் பற்றி மனுமகனும் தன் தந்தையின் மாட்சியில் வரும்போது வெட்கப்படுவார்' (மாற் *8:38*).

நான்காம் நற்செய்தி இக்கருத்துக்களை இன்னும் அழுத்தம் திருத்தமாக விவரிக்கின்றது. இயேசுவின் வார்த்தைகளைக் கேட்ட மக்களிடையே ஏற்படும் பிரிவினையை எடுத்துக்காட்டுகிறது (யோவா 10:19); ஒரு சாரார், அவர் மீது விசுவாசம் கொண்டு *(2:22; 4:39. 41.50)* அவருடைய வார்த்தையைக் கேட்டு *(5:54)*, கடைப்பிடித்து *(8:51* தொ; *14:23* தொ; *15:20)* அதில் நிலைத்திருக்கின்றனர் *(8:31)*. வார்த்தையும் அவர்களுள் நிலைத்திருக்கின்றது *(5:38; 15:7)*, இவர்கள் முடிவில்லா வாழ்வைக் கொண்டுள்ளனர் *(5:24)*; என்றுமே சாகார் *(8:51)*. இயேசுவின் வார்த்தைகள் மற்றொரு சாரார்க்குக் கடினமாகத் தோன்றுகின்றன *(6:60)*; இவர்கள் அவ்வார்த்தையைக் 'கேட்கமுடிவதில்லை' *(8:43)*. எனவே வார்த்தையை ஏற்காது, கிறிஸ்துவையும் மறுதலிக்கின்றனர். இறுதி நாளில் இவர்கள் இயேசுவின் வார்த்தையைக் கொண்டே தீர்ப்பிடப்படுவர் *(12:48)*. ஏனெனில் இவர்கள் ஏற்க மறுத்தது இயேசுவின் வார்த்தைகளை அல்ல, உண்மையே உருவான *(17:17)* தந்தையின் வார்தைகளையேயாகும் *(12:49; 17:14)*. எனவே ஒருவன் தன் வாழ்வை இயேசுவைக் குறித்தோ, அவரது வார்த்தையைக் குறித்தோ, இறைவனைக் குறித்தோ அதற்கேற்ப அமைத்துக் கொள்வதில் வேற்றுமைகள் இருக்க முடியாது, அனைத்தும் ஒன்றுதான். வார்த்தையின் வழிவாழ முடிவெடுத்தவன் விசுவாசம், நம்பிக்கை, அன்பு ஆகிய மூன்றும் கலந்த தெய்வீக வாழ்வில் இடம் பெறுகின்றான். வார்த்தைக்குச் செவிசாய்க்க, வாழ்க்கையை மேற்கொள்பவன் இருள் சூழ்ந்த தீய உலகில் புகுகின்றான்.

2. திருச்சபையில் வார்த்தை ஆற்றும் பணி:-

அ) தேவ வார்த்தையின் சாதனைகள்:- இயேசு ஆரம்பித்த மீட்புப்பணியை, இறை வார்த்தை தொடர்ந்து நடத்திச் செல்லும் காட்சியை, அப்போஸ்தலர் பணியும் அவர்கள் எழுதிய மடல்களும் நமக்குப் படம் பிடித்துக் காட்டுகின்றன. அப்போஸ்தலர்களின் வார்த்தைகள் ஏதோ தங்கள் குரு ஆற்றிய அறிவுரைகளை வரிசையாகத் தொகுத்து வார்த்தைக்கு வார்த்தை அப்படியே எடுத்துரைத்தவை என்று கூற முடியாது. மாறாகத் தொடக்க காலத்திருச்சபையின் போதகத்தில் அறிவிக்கப்பட்ட நற்செய்தியையே அவர்கள் மாற்றமின்றிப் போதித்தார்கள் (காண் மத் *10:14; 1* கொரி *7:10.12.25*). வார்த்தைக்குத் தொண்டாற்றுவதே அப்போது அப்போஸ்தலர்களின் தலையாய பணியாக அமைந்தது (அ.ப. *4:29* தொ; *6:24*). உலகனைத்தும் கேட்கும்படி அவர்கள் இவ்வார்த்தையைப் போதிப்பதிலும் *(8:4.25; 13:5; 18:9* தொ; *1* தெச *1:8)*, கள்ளங்கபடற்ற உள்ளத்தோடும் கடுகளவும் திரித்துக் கூறாமலும் எடுத்துரைப்பதிலும் (2 கொரி 2:17; 4:2) எவ்விதப் பயமுமின்றித் துணிவுடன் தேவ வார்த்தையை அறிவிப்பதிலும் (அ.ப. *4:31*; பிலி *1:14)* அவர்களின் பணி அடங்கியிருந்தது.

இவ்வார்த்தை தன்னிலேயே மீட்பளிக்கும் ஆற்றலுடையது. எனவேதான் வார்த்தை வளரும்போது அது திருச்சபையின் வளர்ச்சியாகக் கருதப்பட்டது (அ.ப. *6:7; 12:24; 19:20*). ஒரு அப்போஸ்தலரைக் கட்டுப்படுத்தக்கூடிய விலங்குகளுக்கு அவர் அறிவிக்கும் வார்த்தையைக் கட்டுப்படுத்த சக்தி கிடையாது (2 திமோ 2:9). இறைவனின் வார்த்தை 'மீட்பளிக்க வல்லது' (அ.ப. *13:26*); 'வாழ்வு வழங்க வல்லது' (பிலி *2:16*); உண்மையானது (1 திமோ *1:15*; 2 திமோ *2:11*; தீத் *3:8*); உயிருள்ளது; ஆற்றல் மிக்கது (எபி *4:12*). விசுவாசியின் உள்ளத்

தில் வார்த்தையின் செயல்திறனை எடுத்து ரைக்க எத்தனை சொற்கள்! மேலும் விசுவா சிகள் தங்கள் திருமுழுக்கின்போது புதுப் பிறப்பு அடைந்தது வார்த்தையில் அவர்கள் கொண்ட விசுவாசத்தால்தான் *(1 பேதுரு 1:23; யாக் 1:18; காண் எபே 5:25)*. பழைய ஏற்பாட்டில் இறைவனின் படைப்பிலும், பிறகு இஸ்ராயேலின் வரலாற்றிலும் வெளிப்பட்ட வார்த்தையின் அதே ஆற்றல், மீட்புப்பணியிலும் வெளிப்பட்டது. அவ் வாற்றல் இயேசுவின் வார்த்தைக்கு உரிய தாக நற்செய்திகள் விளம்பின. அதே ஆற்றல் அப்போஸ்தலர் பணியிலும் வெளிப்பட்ட தில் ஒன்றும் ஆச்சரியப்படுவதற்கில்லை. ஏனெனில் விண்ணேற்பு அடைந்து, இறைவ னின் வலப்புறத்தில் அமைந்திருக்கும் இயே சுதானே அப்போஸ்தலர்கள் வழியாகப் பேசி, அவர்கள் போதிக்கும் வார்த்தையை யும் அருஞ்செயல்களால் உறுதிப்படுத்துகின் றார் *(மாற் 16:20)*.

ஆ. இறைவார்த்தையின்முன் மனிதன்:- இயேசு நற்செய்தியை அறிவித்தபோது நிகழ்ந்ததுபோல், அப்போஸ்தலர் அவர் வார்த்தையை அறிவிக்கும்போதும் கேட்ட வரிடையே பிரிவினை, பிளவு ஏற்படுகின் றது. சிலர் தேவ வார்த்தையைப் புறக்கணித் தார்கள் *(அ.ப. 13:46; 1 பேதுரு 2:8; 3:1)*; வேறு சிலர் அதை ஏற்றுக் கொண்டார்கள் *(1 தெச 1:6)*; இக்கூட்டத்தார் வார்த்தையைப் பெற்று *(1 தெச 2:13)*, அதற்குச் செவிமடுப்ப வர்கள் *(கொலோ 1:5; எபே 1:13)*. வாழ்க்கை யில் அதைக் கடைபிடிக்கும் வண்ணம், இவர்கள் பணிவோடு ஏற்றுக்கொள்கின்ற னர் *(யாக் 1:21 தொ)*; மீட்படைவதற்காக அதன்வழி ஒழுகுகின்றனர் *(1 கொரி 15:2; காண் திருவெளி 3:8)*. இறைவார்த்தை தங்க ளுள் குடிகொள்ளுமாறு *(கொலோ 3:16; 1 யோவா 1:10; 2:14)* அதை அவர்கள் மகி மைப்படுத்துகின்றனர் *(அ.ப. 13:48)*. அவசி யமானால் வார்த்தையின் பொருட்டு அவர் கள் துன்புறவும், மறைசாட்சிகளாய் உயிர்து றக்கவும் தயங்குவதில்லை *(திருவெளி 1:9 தொ; 6:9; 20:4)*. இறுதியில் அதே வார்த்தை யின் உதவி கொண்டு தீயசக்திகளை முறிய டிக்கின்றனர் *(திருவெளி 12:11)*. இவ்வாறு தேவ வார்த்தை வரலாற்றில் செயலாற்றி, மனிதனின் உள்ளத்தில் விசுவாசம், நம் பிக்கை, அன்பு ஆகிய வித்துக்களை விதைக் கிறது.

*3. இறைவார்த்தை பற்றிய மறையுண்மை:-*

*அ.* மனுவுருவான வார்த்தை:- இறைம கன் இயேசு என்னும் மறையுண்மையோடு வார்த்தையை மிகவும் நெருங்கிய முறையில் ஒப்பிடுவதன் மூலம் யோவான் மிக ஆழ்ந்த உண்மைகளை நமக்கு அளிக்கின்றார். இறை மகன் என்ற முறையில் இயேசுவே தம்மிலே நிலைகொள்ளும் வார்த்தையாவார். அதா வது இயேசுவே இறைவனின் வார்த்தையா வார். படைப்பிலும் வரலாற்றிலும், மீட்பின் இறுதிப்பணியிலும் வெளிப்பட்ட வார்த்தை யின் ஆற்றல் அனைத்துக்கும் மூல காரணம் அவரே. 'இறைவாக்கினர் வழியாக நம் முன்னோரிடம் பேசிய கடவுள், இப்போது தம் மகனின் வாயிலாக நம்மோடு பேசுகின் றார்' *(எபி 1:1 தொ)* என்று கூறும் எபிரேய ருக்கு எழுதப்பட்ட மடலிலிருந்து தெளிவா கின்றது.

வார்த்தை என்ற தகுதியில், இயேசு ஆதி யில் கடவுளோடு இருந்தார். கடவுளாயும் இருந்தார் *(யோவா 1:1 தொ.)*. உண்டா னவை அனைத்தையும் படைத்த வார்த்தை அவரே *(1:3; காண்க எபி 1:2; சங் 33:6 தொ)*. உலகின் இருளைப்போக்கி மனிதருக்கு இறைவனைக் காட்டிய ஒளிமயமான வார்த்தை அவரே *(யோவா 1:4.9)*. பழைய ஏற்பாட்டில் வார்த்தையின் செயல்திறனி லும் வெளிப்படுத்தும் தன்மையிலும் மறை முகமாகத் தம்மை அவர் வெளிப்படுத்திக் கொண்டு வந்தார். காலம் நிறைவேறிய போதோ, வார்த்தையானவர் மனுவுருவாகி *(1:14)*, வெளிப்படையாகவே வரலாற்றில் புகுந்தார். பிறகு 'அவரது மாட்சிமையைக் கண்டோம்' *(யோவா. 1:14)* என்று சொல் லும் வகையில் மனிதன் தொட்டு உணர்வ தற்கு உரியவரானார் *(1 யோவா 1:1 தொ)*.

இதன்மூலம் இயேசு தம் இரட்டைப் பணிகளாகிய இறைவனை வெளிப்படுத்துதலையும், மனிதருக்கு மீட்பளிப்பதையும் முழுமைபெறச் செய்துள்ளார். தந்தையின் ஒரே மகன் என்று விளம்பி, மனிதர் தந்தையை அறிந்துக்கொள்ளச் செய்திருக்கிறார் *(யோவா 1:18)*. மனிதரின் மீட்புக்காக உலகிற்கு அருளையும் உண்மையையும் கொண்டு வந்துள்ளார் *(1:14.16 தொ)*. உலகுக்கு வந்த வார்த்தை, அன்றிலிருந்து, மனித வரலாற்றின் இதயமாக மாறிவிட்டது. எப்படியெனில் அவர் வருகைக்குமுன், வரலாறு அவரது மனுப்பிறப்பை எதிர்நோக்கி ஏங்கி நின்றது; அவர் வருகைக்குப்பின் அவருடைய இறுதி வெற்றியை எதிர்நோக்கி நடைபோடுகின்றது. ஏனெனில் அவரே இறுதியுத்தத்தில் தம்மையே முழுமையும் வெளிப்படுத்தியும், தீயசக்திகளை முறியடித்தும் இறையரசு இவ்வுலகில் நிரந்தரமாக வெற்றிவாகை சூடுவதற்கு வழிகோலுவார் *(திருவெளி 19:13)*.

ஆ. மனுவுருவான வார்த்தையை மனிதன் ஏற்கும் விதம்:- தம்மிலே நிலைக்கொண்டிருக்கும் வார்த்தையாகிய கிறிஸ்து மனுவுரு எடுத்த பிறகு, அவரையும் அவரது வார்த்தைகளையும் மனிதன் ஏற்றுக்கொள்ளும் விதத்தைப் பொறுத்தே அவன் இறைவனோடு மேற்கொள்ளும் உறவும் அமையும் என்பது சொல்லாமலே விளங்கும். அவருடைய வருகை உலகை இரண்டாய்ப் பிரித்துவிட்டது. ஒருபுறம், இருள் அவரை ஏற்றுக்கொள்ளவில்லை *(யோவா 1:5)*; தீய உலகு அவரைத் தெரிந்து கொள்ளவில்லை *(1:10)*; ஏன், அவருடைய சொந்த மக்களே அவரை ஏற்றுக் கொள்ளவில்லை *(1:11)*. இந்நிலைதான் அவருடைய வாழ்வு பாடுகளில் முடிவதற்கு வழிகோலிற்று. அதே சமயத்தில் சிலர் 'அவர் பெயரில் விசுவாசம் கொண்டனர்' *(1:12)*; இவர்கள் ''அவருடைய நிறைவிலிருந்து அருளுக்கு மேல் அருளைப் பெற்றனர்'' *(1:16)*. இயற்கையிலேயே கடவுளின் பேறான அவர் *(1:14.18)*, அவர்களுக்குக் கடவுளின் மக்களாகும் உரிமையளித்தார் *(1:12)*.

இவ்வாறு மனுவுருவான வார்த்தையை மையமாகக்கொண்டு நிரந்தரமான ஒரு நாடகமே நடப்பதைக் காண்கிறோம். இறைவாக்கினர் வழியாக இறைவன் மனிதனோடு பேசி இந்நாடகத்தைத் துவங்கிவைத்தார். இவ்விறைவாக்கினர் மலர்ந்த இறைவாக்குகள் வழியாக வார்த்தையானவர் தம்மையே வெளிப்படுத்தலானார். பிறகு மனிதனோடு நேரடித் தொடர்பு கொள்ளத் துடித்தார்; தந்தையும் இவ்வுலகிற்கு அவரை அனுப்ப மனம் உவந்தார். காலம்நிறைவுற்றபோது, வார்த்தை மனுவுருவானார். அன்று மறைவாகச் செயலாற்றித் தம் வருகைக்கு முன்னேற்பாடுகள் செய்துவந்த அவர், இன்று மனிதர் புலன்களால் உணரும் வண்ணம் அவர்களிடையே குடிகொள்ளலானார். இவ்வாறு கடவுளே பூமிக்கு வந்துவிட்டதால், வார்த்தையின் சவால் மாறினதாக எண்ணலாகாது. ஏனெனில் இன்றும் வார்த்தையில் விசுவாசம் வைத்து, அவரை ஏற்றுக்கொள்பவனே இறைமகனுக்குரிய *(1 யோவா 1:12)* வாழ்வில் இடம் பெறுகின்றான். வார்த்தையை ஏற்காது புறக்கணிப்பவனோ இருளில் தள்ளப்பட்டு தீர்ப்புக்குள்ளாகின்றான் *(காண் 3:17 தொ)*. உலகில் தோன்றும் ஒவ்வொரு மனிதனும் இவ்வாழ்க்கைப் பிரச்சினையைச் சந்தித்தே ஆகவேண்டும். இயேசு கிறிஸ்து அறிவித்த நற்செய்தியை நேரடியாகக் கேட்க வாய்ப்புப் பெற்றவர் யாவரும் அறியும் வண்ணம் பதிலிருக்க வேண்டும். அவருடைய வார்த்தையை (இன்னும்) முழுமையாக அறிய வாய்ப்புப் பெறாதோர் தங்கள் அறிவுக்கெட்டிய நிலையில் ஏற்றுக்கொள்ள வேண்டும். எனவே ஒவ்வொரு மனிதனின் உள்ளத்திலும் வார்த்தையானவர் பேசுகின்றார்; அவனது பதிலுக்காகவும் காத்து நிற்கின்றார். அவன் தரும் பதிலைப் பொறுத்தே அவனுடைய நித்திய வாழ்வு அடங்கியுள்ளது.

**இறை வெளிப்பாடு** *(REVELATION)*

விவிலியத்தின் மறை வரலாற்றுவெளிப்பாட்டை அடிப்படையாகக் கொண்டது. இந்த அடிப்படையே அம்மறையை மற்ற மறைகளிலிருந்து பிரித்துச் சிறப்பிக்கிறது.

சில மறைகள் எந்த வெளிப்பாட்டையும் ஏற்பதில்லை. எடுத்துக்காட்டாக பௌத்த மதம் ஒரு தத்துவ ஞானியின் மனித அறிவுக்கு உட்பட்ட அனுபவத்தைத் தன் தொடக்கமாகக் கொண்டுள்ளது. மற்ற மறைகள் தங்கள் கொள்கைகளை விண்ணக வெளிப்பாடாகக் காட்டுகின்றன. வெளிப்பாட்டையும் புராணக் கதாநாயகர்களோடு இணைத்துக் காட்டுகின்றது. மாறாக விவிலியத்தில் வெளிப்பாடு வரலாற்று உண்மை நிகழ்ச்சியாகவும், அதன் நோக்கம் வெளிப்படையாகவும் உள்ளது. நூல் வடிவிலோ வலிமையான பாரம்பரியம் வழியாகவோ வெளிப்பாட்டின் சொற்கள் பாதுகாக்கப்பட்டு வந்துள்ளன. குரானும் இக்கோணத்தில் விவிலியத்தை ஒத்துள்ளது. ஆயினும் விவிலிய வெளிப்பாட்டை உறுதிப்படுத்துகின்ற அடையாளங்கள் தவிர ஒரே ஒருவரின் போதனையை அடிப்படையாகக் கொண்டு அமையவில்லை. வெளிப்பாடு அதன் மையமும் முழுமையுமான கிறிஸ்துவில் நிறைவு பெறுமுன் 15 அல்லது 20 நூற்றாண்டுகளின் வளர்ச்சியைக் கொண்டுள்ளதைக் காண்கிறோம். கிறிஸ்தவனுக்கு விசுவாசம் என்பது வரலாற்று வாயிலாக மக்களிடம் ஒப்படைக்கப்பட்டுள்ள வெளிப்பாட்டை ஏற்றலாகும்.

I. பழைய ஏற்பாட்டில்:-

ஏன் இத்தகைய வெளிப்பாடு? மனிதனுடைய சிந்தனைக்கும் சொல்லுக்கும் முழுவதும் அப்பாற்பட்டவர் இறைவன் என்பதே இதற்குக் காரணம் (யோபு 42:3). அவர் மறைவாயிருக்கும் இறைவன் (ஏச 45:15). மனிதன் தன் பாவத்தால் அவரோடு கொண்ட நெருங்கிய உறவை இழந்து விட்டதால், அவர் அவனால் இன்னும் எட்டாத் தொலைவில் அணுக முடியாதவராகிவிட்டார். அவருடைய திட்டம் ஒரு மறைபொருள் (ஆமோ 3:7). தன்முன்னிருக்கும் பாதையைக் காண இடமளிக்காமலே மனிதனின் அடிச் சுவடுகளை வழிநடத்துகிறார் (பழ 20:2). வாழ்க்கைப் புதிர்களுக்கு மனிதன் தன் சுய பலத்தால் விளக்கம் காண இயலாது (சங் 73). அவற்றைக் கண்டுபிடிக்க ''அனைத்தையும் தன்னுள் மறைத்து வைத்திருக்கும்'' (உப 29:28) இறைவனை நோக்கி அவன் திரும்ப வேண்டும். இல்லையெனின் ''அவருடைய மாட்சியைக் (யாத் 33:18) காண இயலாது (தானி 2:17 தொ). இவ்வாறு மனிதன் இறைவனை நோக்கித் திரும்பு முன்னரே இறைவன் மனிதனுடன் உரையாட முன்முயற்சி எடுக்கின்றார்.

1. இறைவன் தன்னை வெளிப்படுத்தும் முறை:-

அ. பழங்கால முறைகள்:- இரகசியங்களைக் கண்டுபிடிக்க, பழைய ஏற்பாட்டு மேற்காசிய மக்கள் குறி சொல்லுதல், சகுனம் பார்த்தல், கனவுகள், சீட்டுப்போடுதல், சோதிடம் போன்றவற்றைப் பயன்படுத்தினர். பழைய ஏற்பாட்டு மக்கள், நெடுங்காலத்திற்கு இம்முறைகளில் சிலவற்றைக் கையாண்டனர். இம்முறைகளில் காணப்பட்ட பலதேவர்கள் கோட்பாடு அல்லது மாய வித்தைகளை அகற்ற முற்பட்டாலும் (லேவி 19:26; உப 18:10 தொ; 1 சாமு 15:23; 28:3;) அவற்றிற்கு சில சமயங்களில் முக்கியத்துவம் அளித்து வந்தனர். தன் மக்களின் இத்தகைய குறைமிகு முறைகளை மாற்றியமைக்கும் வண்ணம் இறைவன் தம் வெளிப்பாட்டைப் பாரம்பரிய முறைகள் வாயிலாக அளித்தார். குருக்கள் ஊரீம் தூமீம் வழியாக அவரிடம் ஆலோசனைகேட்டு (எண் 27:2; உப 33:8; 1 சாமு 14:41; 23:10 தொ) அதன்படி மக்களுக்குப் போதித்தனர் (யாத் 18:15 தொ; 33:7-11; நீதி 18:5 தொ). யோசேப்பு சகுனம் பார்க்கும் கோப்பை ஒன்றை வைத்திருந்தார் (ஆதி 44:2-5). கனவுகள் விண்ணகச் செய்திகளைத் தாங்கி வருபவைகளாகக் கருதப்பட்டன (ஆதி 20:3; 28:12-15; 31:11 தொ; 37:5-10). இக்கருத்து பிந்திய காலங்களிலும் நிலவி வந்தது (நீதி 7:13 தொ; 1 சாமு 28:6; 1 அர 3:5-14). ஆயினும் இறைவனால் இறைவாக்கினருக்கு அனுப்பப்பட்ட கனவுகளினின்று (எண் 12:6; உப 18:20) சகுனம் பார்ப்பதையேத் தொழிலாகக் கொண்டவர்களின் கனவையும் (லேவி 19:26; உப 18:20) பிரித்துணர்வதில் காலப்போக்கில் முன்னேற்றம் காணப்பட்டது. சகுனம் பார்ப்பவர்களுக்கு எதிராக இறைவாக்கினர்களும் (ஏச 28:7-13;

எரே 23:25-32), ஞான நூல் ஆசிரியர்களும் (திருவுரை 5:2; சீரா 34:1-6) போராடி வந்தனர்.

ஆ. இறைவாக்கு வெளிப்பாடு:- மேற்கூறப்பட்ட முறைகளை இறைவாக்கினர் எப்போதும் கடந்து நின்றனர். இறைவெளிப்பாட்டு அனுபவங்கள் இரண்டு முறைகளில் அவர்களுக்க வழங்கப்பட்டன. காட்சிகள் வாயிலாகவும், இறைவார்த்தையைக் கேட்பதன் வழியாகவும் (எண் 23:3 தொ. 15தொ) அளிக்கப்பட்டன. காட்சிகள் தம்மிலே புதிராக உள்ளன. இறைவாக்கினர்கூட இறையுண்மைகளைப் பற்றியோ அல்லது எதிர்கால நிகழ்ச்சிகளைப் பற்றியோ தெளிவாக அறிய இயலவில்லை. காட்சியில் காணப்படுபவை அடையாளங்களாகவே மறைத்து வைக்கப்படுகின்றன. இந்த அடையாளங்களில் சில கீழைநாட்டு மறைகளில் ஏற்கெனவே வழக்கிலிருந்தவை (1 அர 22:16; ஏச 6:1 தொ; எச 1). வேறு சில புதிதாக உருவாக்கப் பெற்றவை (ஆமோ 7:1-9; எரே 1:11 தொ; எச 9). ஒவ்வொரு காட்சியிலும் உள்ள அடையாளங்களுக்கு இறைவார்த்தையே பொருள் கொடுக்க வேண்டும் (எரே 1:14 தொ; தானி 7:15-18; 8:15...). காட்சிகளின்றியே பலமுறை இறைவார்த்தை அளிக்கப்பட்டது. இறைவார்த்தையைப் பெற்றுக் கொண்ட வழிபற்றிக்கூட குறிப்பிட்டுக்கூற இயலாத நிலையில் அவற்றைப் பெற்றனர் இறைவாக்கினர் (ஆதி 12:1 தொ; எரே 1:4 தொ). பழைய ஏற்பாட்டு இறைவெளிப்பாட்டோடு இணைந்த அடிப்படை அனுபவங்கள் இத்தகையதே.

இ. ஞானத்தின் சிந்தனைகள்:- இறைவாக்கினர்களைப் போலன்றி தத்துவ ஞானிகள் நேரடி வெளிப்பாட்டின் முடிவாகத் தங்கள் கொள்கைகளை வெளியிடவில்லை. ஞானம் மனித சிந்தனைக்கும் அறிவுக்கும் ஏற்றது (பழ 2:1-5; 8:12.14). ஆயினும் அது இறைவனின் கொடையே (பழ 2:6). ஏனெனில் அறிவனைத்தின் ஊற்று ஞானமேயாகும் (8:15-21; 32:36; 9:1-6). இன்னும் குறிப்பிட்டுக் கூற வேண்டுமாயின் இறையூக்கம் பெற்ற சிந்தனைக்குப் பொருளாய் அமைந்தவை அனைத்தும் முழுமையாக இறைவெளிப்பாட்டிலிருந்தே எடுக்கப்பட்டவை. அவையாவன: படைத்தவரைத் தனக்குரிய முறையில் வெளிப்படுத்தும் படைப்பு (சங் 18:1; சீரா 43), அவர் திட்டங்களை அறிவிக்கின்ற வரலாறு (சீரா 44:50); இறைச்சட்டத்தையும், இறைவாக்கினரின் கூற்றுகளையும் கொண்ட திருநூல் (39:1 தொ) போன்றவை. இத்தகைய ஞானம் மனித கண்டுபிடிப்பன்று, மாறாக இறைவாக்கு வெளிப்பாட்டை நிறைவு செய்கின்ற மற்றொரு முறையாகும். வெளிப்பாட்டிற்குத் துணை நிற்கும் இறை ஞானத்தைப் பொறுத்தமட்டில் அதன் வழிகாட்டியான ஆவியானவர் எப்படி யாவும் கடந்த உண்மையோ அவ்வாறே இறைத் தன்மையின் பிரதிபலிப்பின் ஞானம் என்பதும் யாவும் கடந்த உண்மையாகும் (ஞான 7:15-21). இவ்வாறு மனிதருக்கு அது அளிக்கின்ற ஒளி இயற்கை கடந்த இறை அறிவாகும் (7:25 தொ; 8:4-8).

ஈ. வெளிப்பாட்டு இலக்கிய வெளிப்பாடு:- பழைய ஏற்பாட்டின் இறுதியில் இறைவாக்கு நூல்களும் ஞானம் பற்றிய நூல்களும் வெளிப்பாட்டு இலக்கியத்தில் கலந்து காணப்படுகின்றன. இறைவனைப் பற்றிய மறைபொருளை வெளிப்படுத்துதல் என்பதே வெளிப்பாட்டு இலக்கியத்தின் இலக்கணமாகும். இத்தகைய விளக்கம் இறை ஆவியைவிட (தானி 4:5 தொ; 15:5.11. 14) ஞானத்தோடு அதிகத் தொடர்பு கொண்டுள்ளது (தானி 2:23; 5:11.14). கனவுகளையும் காட்சிகளையும் இதற்கு மூலமாகக் கொள்ளலாம். திருநூலை ஆழ்ந்து தியானிப்பதன் வழியும் வெளிப்பாடு தூண்டப்படலாம் (9:1 தொ) எவ்வாறாயினும் கனவுகள், காட்சிகள், திருநூல் யாவற்றிற்கும் பொருள் காணச் செய்வது இயற்கை கடந்த இறை ஒளியளிக்கும் இறைவார்த்தையாகும்.

2. இறைவன் வெளிப்படுத்துபவை:-

இறைவெளிப்பாட்டின் நோக்கம் மறையைச் சார்ந்தவையாகவே எப்போதும் உள்ளது. பெரும்பான்மையான பழங்கால மறை

களில் உள்ள திருநூல்களில் மிதமிஞ்சி காணக்கிடக்கின்ற அண்டக் குறிப்புகளோ இயல்கடந்த ஆராய்ச்சிச் சிந்தனைகளோ இறைவெளிப்பாட்டில் இல்லை. மனித மீட்புக்கு வழிகோலும் தம் திட்டங்களை இறைவன் வெளிப்படுத்துகின்றார். மனிதன் இறைவனைச் சந்திக்க வேண்டுமென்பதற்காக இறைவன் தம்மையே வெளிப்படுத்துகின்றார்.

அ. இறைவன் தன் திட்டங்களை வெளிப்படுத்துகின்றார்:- பாவம் செய்த குலத்தின் உறுப்பினனாகத் தோன்றியதால் இறைவன் தன்னிடம் என்ன எதிர்பார்க்கின்றார் என்பதைக் குறிப்பிட்டு அறிய இயலாதிருக்கின்றான் மனிதன். எனவே அவன் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்பதற்கான சட்டங்களைக் கொடுக்கின்றார் இறைவன். அவருடைய வார்த்தை அறிவுரையாகவும், சட்டமாகவும் மாறுகின்றது (யாத் 20:1 தொ). இவ்வாறு மனிதன் தான் அனுசரிக்க வேண்டிய (உப. 29:28) ''வெளிப்படுத்தப்பட்ட உண்மைகளை'' கொண்டிருக்கிறான். திருச்சட்டத்தின் மதிப்பீடு இறைவனிடமிருந்து பிறந்தது. எனவே மற்றெல்லா நியமங்களை விட உயர்ந்ததாகவும், இறை வழி நிற்போருக்கு இனிமையானதாகவும் மாறுகின்றது (சங் 119:24.97 தொ). சமூக நிறுவனங்கள் (எண் 11:16 தொ), அரசியல் நிறுவனங்கள் (1 சாமு 9:17), பண்பாட்டு அம்சங்கள் (யாத் 25:40) போன்ற இறைமக்களின் நிறுவனங்கள் அனைத்தும் வெளிப்பாட்டின் பொருளாகின்றன. பழைய ஏற்பாட்டு இறைமக்களைப் போலவே இந்நிறுவனங்களும் தற்காலிகமானதாக இருந்தாலும் புதிய ஏற்பாட்டில் நிறைவுபெற்ற மீட்புக்கு முன்னடையாளங்களாக இருந்தன. முன்னுரைக்கப்பட்ட அறிகுறிகளாகவும் உள்ளன.

இறைப் பராமரிப்பில் இறைமக்கள் அனுபவித்த நிகழ்ச்சிகளின் பொருளைத் தம்மக்களுக்கு வெளிப்படுத்துகின்றார் இறைவன். மீட்புத் திட்டத்தில் காணக்கூடிய தொடர் அம்சங்களைக் கொண்டதாக இந்நிகழ்ச்சிகள் உள்ளன. மீட்புத்திட்டத்தின் இறுதி நிறைவுக்கு முன் தயாரிப்பாகவும், முன்வடிவமாகவும் ஆகின்றன. இத்தகைய இருவித பணியினால் இந்நிகழ்ச்சிகள் கண்ணுக்குப் புலப்படாத மறைத்தன்மையுடைய ஒரு தோற்றத்தை அளிக்கின்றன. ''இறைவன் தன் திட்டத்தைத் தம் ஊழியர்களான இறைவாக்கினருக்கு வெளிப்படுத்துகின்றாரேயன்றி வேறல்ல'' (ஆமோ 3:7). வரலாற்றாசிரியர்கள், இறைவாக்கினர்கள், சங்கிதாசிரியர்கள், தத்துவ ஞானிகள் ஆகியோர் இறைவார்த்தைக்கும் வரலாற்று உண்மைக்குமிடையே ஏற்பட்ட இணைப்பிலிருந்து தோன்றி, இறைப்பராமரிப்பினால் உருவான வரலாற்றுக்குச் சமயப் பொருள் கொள்வதில் ஒருவருக்கொருவர் முந்திக் கொள்கின்றனர். நிகழ்ச்சிகள் இறைவார்த்தையை நம்பச் செய்து, மக்களை விசுவாசத்திற்கு இட்டுச் செல்கின்றன. ஏனெனில் நிகழ்ச்சிகளும் அடையாளங்களை ஒத்தவையே (யாத் 14:30 தொ) இறை வெளிப்பாட்டு நிகழ்ச்சிகளை அன்றாட வாழ்வின் நிகழ்ச்சிகளாகவோ அல்லது தற்செயலாக நடந்தவைகளாகவோ கருதாது (எரே 27:4-11; ஏச 15:1-6) இறைத்திட்டத்தில் இடம் பெற்றவைகளாகக் கொள்ளும் வண்ணம் இறைவார்த்தை ஒளியூட்டுகின்றது.

கடைசியாக ''இறுதி நாட்களைப்பற்றிய'' மறைபொருளைப் படிப்படியாக இறைவன் வெளிப்படுத்துகின்றார். அவருடைய வார்த்தை ஒரு வாக்குறுதியாகின்றது. வாக்குறுதி என்ற முறையில் நிகழ்காலத்தையும் உடனடியான எதிர்காலத்தையும் கடந்து மீட்புத் திட்டத்தின் முடிவை முன்னறிவிக்கின்றது. தாவீது மரபின் எதிர்காலத்தை வெளிப்படுத்துகின்றது (2 சாமு 7:4-16); எருசலேம் மற்றும் ஆலயத்தின் இறுதி மாட்சி (ஏச 2:1-4:60; எச 40-48) துன்புறும் ஊழியனின் பணி (ஏச 52:13-53:12) போன்றவை பற்றியும் அறிவிக்கின்றது. இந்த இறைவாக்கு வெளிப்பாடு இன்றும் உருவகமாக மறைந்து காணப்பட்டாலும் புதிய ஏற்பாட்டின் அறிவை முன்னறிவிக்கிறது.

ஆ. இறைவன் தம்மையே வெளிப்படுத்துகிறார்:- இவ்வுலகில் நடைபெறச் செய்கின்ற

நிகழ்ச்சிகள் வாயிலாகவும் இறைவன் தம்மையே வெளிப்படுத்துகின்றார். அவருடைய படைப்பு அவரை அவருடைய ஞானத்திலும் மேலாண்மையான வல்லமையிலும் வெளிப்படுத்துகின்றது (*யோபு 25:7-14; பழ 8:23-31; சீரா 42:15-43:33*). படைப்பு அவரை உருவகமாக வெளிப்படுத்தும் அடையாளங்களின் தொகுப்புப் போன்றது. எடுத்துக்காட்டாக, மேகத்தில் மறைந்தும் (*யாத் 13:21*), நெருப்புப்போல எரிந்தும் (*யாத் 3:2; ஆதி 15:17*), பேரிடியாக முழங்கியும் (*யாத் 19:16*), தென்றல் வாயிலாகவும் (*1 அர 19:12 தொ*) இறைவன் தம்மை வெளிப்படுத்தியிருக்கின்றார். இந்த அடையாளங்களைப் புறவினத்தவர் ஏற்றுக்கொண்டாலும் அவற்றிற்கு மாறான வேறுபொருள் கொண்டனர் (*ஞான 13:1 தொ*). படைப்பு வழி வந்த வெளிப்பாடு படைத்தவரின் ஆற்றலையும், அழகையும் ஒப்புமையால் இறைமக்கள் கண்டுணரச் செய்கின்றது (*13:3 தொ*).

இஸ்ராயேலின் வரலாற்றில் எல்லாவிடத்தும் இறைவன் தம்மை தனிச்சிறப்பு வாய்ந்த முறையில் வெளிப்படுத்துகின்றார். அவருடைய செயல்கள் அவர் யார்? எத்தன்மையர்? என்பதை எடுத்துக் காட்டுகின்றன. தீர்ப்பளிக்கும், அச்சத்திற்குரிய இறைவன், போரிடுகின்ற இறைவன், வெற்றி கொள்ளும் வல்லமையுள்ளவர், ஆறுதல் அளிக்கும் இரக்கத்தின் இறைவன் (*ஏச 40:1*), மீட்பளிக்கும் இறைவன் என எடுத்துரைக்கின்றன. விவிலியத்தில் இறைவனுக்கு இலக்கணம் கூறுவது (*யாத் 34:6 தொ.*) தத்துவ சிந்தனையின் பயனாலன்று. மாறாக வாழ்க்கை அனுபவத்தின் பயனாகவே, பல நூற்றாண்டு அனுபவத்தின் வாயிலாக அடைந்த இந்த அடிப்படை உண்மை இறைவன் மீது விசுவாசம், நம்பிக்கை, அச்சம், அன்பு ஆகிய உணர்வை ஏற்படுத்துகின்றது. இந்த உணர்வு மறைசார்பு கொண்டவர்களிடம் இயல்பாகவே காணக்கிடக்கின்ற உணர்வை குறை நீக்கி நிறைவு செய்கின்றது. இறைவன் படைத்தவர், தலைவர், அரசர், ஆண்டவர். ஆனால் இஸ்ராயேலரிடம் தந்தையாகவும், கணவராகவும் தன்னைக் காட்டுகின்றார். எனவே இறைவன்மீது கொள்ள வேண்டிய அச்சம் பக்தியோடு இணைந்து அன்புறவுக்கு இட்டுச் செல்ல வேண்டும் (*ஓசே 6:6*).

பழைய ஏற்பாட்டு இறைவன் தம்மைத் தம் ஆள் உறவில் வெளிப்படுத்தினாரா என்ற வினா தேவையாகின்றது. இங்கு எடுத்து இயம்ப இயலாத அனுபவ உலகில் நுழைகின்றோம். யாவேயின் தூதர்கள் வெளிப்படுத்திய ஒரு சில காட்சிகள் பழைய ஏற்பாட்டு நூல்களில் சித்தரிக்கப்படுகின்றன. இவைகளின் வழியாக மறைந்திருக்கும் இறைவன் காணக்கூடிய உரு எடுக்கின்றார் (*ஆதி 16:6; 21:17; 31:11; நீதி 2:1* ). ஆபிரகாம், மோசே, எலியா, மிக்கேயா, ஏசாயா, எசக்கியேல், செக்கரியா போன்றோரின் காட்சிகள் இந்நூற்களில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. ஆயினும் இறைமாட்சி அடையாளங்களால் மறைத்து வைக்கப்பட்டிருக்கின்றது. இறைமாட்சியைக் (*1 அர 22:18; ஏச 6:1 தொ*) குறிக்கும் சின்னங்களான நெருப்பு, காற்று போன்ற அண்ட அடையாளங்களும், பாபிலோனிய கலைவழி வந்த அடையாளங்கள் (*எச 1*) சிலவும் இதற்குச் சான்றுகள். இருப்பினும், யாவே தம்மைப்பற்றிய விளக்கத்தை ஒருபோதும் அளித்ததில்லை (*எச 1:27 தொ*). ''*முகமுகமாய்*'' (*எச 33:11; எண் 12:8*) நின்று இறைவனோடு பேசிய மோசேகூட அவரைக் கண்டதில்லை (*யாத் 33:20; 30:11; எண் 12:8*). அவரை உற்றுநோக்காதிருக்கும் வண்ணம் தம் கண்களை மூடிக்கொண்டனர் மக்கள் (*யாத் 3:6; 1 அர 9:9 தொ*) மோசேக்குப் பெயரை அறிவித்தலாகிய உயர்ந்த வெளிப்பாட்டை அளிக்கின்றார் (*யாத் 3:14*). ஆயினும் அவருடைய தன்மை இன்றும் மறைபொருளாகவே உள்ளது. ஏனெனில் மோசேக்கு ''இருக்கிறவர் நாமே'' என்றே பதிலளிக்கின்றார். இப்பதிலுரை ஒரு மறைபொருளின் அறிக்கை என்பது தெளிவு. இஸ்ராயேல் மக்களைச் சுற்றியிருந்த புறவினத்தவர் தம் கடவுள் மீது ஆதிக்கம் செலுத்தியது போல இஸ்ராயேல் மக்கள் தம் இறைவன் மீது செலுத்தும் முறையில் அவருடைய பெயரை அவர்கள் கொண்டிருக்கவில்லை.

தம்மைப் பற்றிய மறைபொருளை ஓரளவு மனிதனுக்கு அறிவித்தாலும் இறைவன் முழுவதும் கடந்து நிற்கின்றார். அவருடைய ஆளுமையில் இணையாவிடினும் அவரு டைய வார்த்தையாலும், அவருடைய ஞானத்தின் செயலாலும் ஒளிபெற்றுள்ள னர். அவருடைய ஆவியால் புனிதப்படுத்தப் பட்டுள்ளனர். ''இறுதி நாட்களில்'' இன் னும் அதிகம் அவர்களுக்குச் செய்வார். அப் போது ''அவருடைய மாட்சிமை'' வெளிப் படுத்தப்பட்டு அனைத்து மாந்தரும் அதைக் காண்பர் *(ஏச 40:5; 52:8; 60:1)*. இதுவே உன்னத வெளிப்பாடாகும். அதுபற்றிய குறிப்புகளும் விளக்கங்களும் முன்னறிவிக் கப்படவில்லை. இறுதி மாட்சியை வெளிப் படுத்தும் நிகழ்ச்சியே அது எப்படி நிகழும் என்று வெளிப்படுத்தும்.

II. புதிய ஏற்பாடு:- பழைய ஏற்பாட்டில் தொடங்கிய வெளிப்பாடு புதிய ஏற்பாட்டில் நிறைவு பெறுகிறது. ஆனால் பழைய ஏற் பாட்டில் பல நடுவர்கள் வழியாக ஒருவரிட மிருந்து மற்றவருக்க அளிக்கப்பட்டது. புதிய ஏற்பாட்டில், ஒரே சமயத்தில் வெளிப் பாட்டின் ஊற்றும் பொருளுமாகிய இயேசு கிறிஸ்துவையே மையமாகக் கொண்டுள் ளது. கிறிஸ்துவிலுள்ள வெளிப்பாடு மூன்று படிகளைக் கொண்டது. முதலாவது; இயே சுவே தம் அப்போஸ்தலர்களுக்கு வெளிப் பாட்டை அளிக்கின்றார். இரண்டாவது நிலையில் அப்போஸ்தலர்கள் மற்ற மக்க ளுக்கு அறிவிக்கின்றனர். தூய ஆவியின் துணையால் திருமறையும் மக்களுக்கு எடுத் துரைக்கின்றது. மூன்றாவது நிலையில் இறையுண்மைகளை நேரடிக் காட்சி மனிதர் களுக்கு விசுவாச அறிவின் இடத்தை நிரப் பும்போது, வெளிப்பாட்டின் இறுதிக் கட் டம் நிறைவேறும். இம்மூன்று நிலைகளை யும் வேறுபடுத்திக்கூறும் பொருட்டு புதிய ஏற்பாட்டில் வேறுபட்ட சொற்கள் பயன்ப டுத்தப்பட்டுள்ளன. வெளிப்படுத்துதல், காட்சியளித்தல், அறிவித்தல், விளக்குதல், காட்டுதல், வெளிப்படையாகப் பேசுதல், அப்போஸ்தலர் எடுத்துரைத்தல், போதித் தல் போன்றவையாகும் அச்சொற்கள். இக்க ருத்துக்கள் அனைத்தும் புதிய ஏற்பாட்டு பல்வேறு நூற்களில் காணக்கிடக்கின்றன.

*1.* ஒத்தமைப்பு நற்செய்திகளும் அப் போஸ்தலர் பணியும்:-

அ. இயேசு கிறிஸ்துவின் வெளிப்பாடு:-

*1.* நிகழ்ச்சிகள் வழி வெளிப்பாடு:- பழைய ஏற்பாட்டில் இறைவனின் மீட்புத் திட்டம் பற்றிய அறிவு மறைத்தே வைக்கப் பட்டிருந்தது. அதன் இறுதி நிறைவு வாக்க ளிக்கப்பட்டிருந்தாலும் அடையாளங்கள் வழியே அளிக்கப்பட்டது. இத்திரையைக் கிழித்து, ஐயம் அனைத்தையும் களைந்தெறி வது கிறிஸ்து என்னும் நிகழ்ச்சியாகும். இயேசுவின் மரணத்தினாலும் உயிர்ப்பினா லும் உச்சநிலை அடைந்த அவருடைய வர லாற்று முடிவு வரலாற்றில் நிறைவேறும் வாக்குறுதியின் உண்மையான உட்பொ ருளை எடுத்துரைக்கின்றது.

2. வார்த்தை வழி வெளிப்பாடு:- இயேசு தம் செயல்களுடையவும் வாழ்வினுடைய வும் மறைபொருளை வார்த்தைவழி மக்க ளுக்கு எடுத்துரைக்காவிடில், நிகழ்ச்சிவழி வந்த வெளிப்பாடு புரியாத ஒரு புதிராகவே இருந்திருக்கும். விண்ணரசுபற்றிய உவமை களில் ''உலகம் தோன்றியது முதல் மறைந் துள்ளதை'' வெளியாக்குகின்றார் *(மத் 13: 35)*. அவர் தம் போதகங்களை அடையாளங் களிலேயே மக்கள் கூட்டத்திற்கு மறைந்தி ருந்தாலும் விண்ணரசைப்பற்றித் தம் சீடர்க ளுக்குத் தெளிவாக விவரிக்கின்றார் *(மாற் 4:11; மத் 13:10; லூக் 8:9)*. மீட்புத் திட்டத்தின் இறுதிநிலையே விண்ணரசாகும். மனுமகன் பாடுபடவும், கொலையுண்டு மூன்றாம் நாள் உயிர்த்தெழவும் வேண்டும் *(மத் 16:21; மாற் 8:31-33; லூக் 9:22)* என்பதை எடுத்து ரைக்கும்போது மறைநூலில் கூறியிருப்ப வைகளின் உட்பொருளை வெளிப்படுத்து கின்றார். அவர் வழியாக வெளிப்பாடு தன் முழுமை நோக்கிச் செல்கின்றது. ''வெளிப் படாதபடி ஒளிந்திருப்பது ஒன்றுமில்லை. வெளியாகாதபடி மறைந்திருப்பதும் ஒன்று மில்லை'' *(மாற் 4:22; லூக் 8:17)*.

*3. இயேசுவழி வெளிப்பாடு:-* இயேசுவின் போதனைகளிலும் போதனை வழியாகவும், அவருடைய வாழ்க்கை நிகழ்ச்சிகள் வாயிலாகவும் அவரில் நிறைவு பெற்ற வெளிப்பாட்டை மக்கள் காண இயலும். இயேசு தாம் எடுத்துரைத்த விண்ணரசையும் மீட்பையும் தம்மிலே கொண்டிருந்தது மட்டுமல்ல, அவரே இறைவனின் உயிருள்ள வெளிப்பாடும் ஆவார். உயிருள்ள இறைவனின் மகனாக இருப்பதால் *(மத் 66:16)* அவர் மட்டுமே தந்தையை அறிவார். அவருக்கே தந்தையை வெளிப்படுத்தும் ஆற்றலுமுண்டு *(மத் 11:27; யோவா 1:18; 3:35; 17:29; 10:14-15)*. இது ஒருபுறமிருக்க, ஊனும் இரத்தமும் அறிந்துகொள்ள இயலாத அளவு அவருடைய ஆளுமையின் மறைபொருள் உள்ளது. அதைத் தந்தை வெளிப்படுத்தினாலன்றி தெரிந்துகொள்ள முடியாது *(மத் 16:17)*. இவ்வெளிப்பாடு ஞானிகளுக்கும் விவேகிகளுக்கும் மறைக்கப்பட்டு சிறுவருக்க மட்டுமே அளிக்கப்பட்டுள்ளது *(மத் 11:25; லூக் 10:21-22)*. பழைய ஏற்பாட்டில் காண இயலாத தந்தைக்கும் மகனுக்கும் இடையேயுள்ள இத்தகைய நெருங்கிய உறவே இயேசு அறிவித்த வெளிப்பாட்டில் உச்சநிலை அடைகிறது. இயேசு தாம் துன்புற வந்த மனுமகன் என வெளிப்படுத்துகின்றார் *(மாற் 8:31 தொ)*. உயிர்த்தபின்னர்கூட இயேசு தம் மாட்சியின் முழுமையில் தம்மை உலகிற்குக் காட்டவில்லை.

ஆ. வாய்மொழி வந்த வெளிப்பாடு:-

*1) திருச்சபையில் வெளிப்பாடு:-* இயேசுவின் செயல்களையும் சொற்களையும் ஒருசிலரே அறிந்திருந்தனர். அறிந்தவர்களிலும் வெகுசிலரே அவரில் நம்பிக்கை கொண்டு அவருடைய சீடராயினர். ஆனால் அவர் அறிவித்த வெளிப்பாடு உலக முழுமைக்கும் உரியது. எனவேதான் இயேசு தமது அப்போஸ்தலர்களுக்கு அறிவித்ததோடு பிறமக்களுக்கும் அவர்கள் அறிவிக்க வேண்டுமெனப் பணிக்கின்றார் *(மத் 19:26 தொ)*. அவர்கள் உலகெங்கும்போய் படைப்பிறகெல்லாம் நற்செய்தியை அறிவிப்பர் *(மத் 28:19 தொ; மாற் 16:15)*. அவர் உயிர்த்தபின் அவர்களைத் தம்சாட்சிகளாக்குகின்றார் *(அ.ப. 1:8)*. அவரைக் கண்டோம், அவருடைய வார்த்தைகளைக் கேட்டோம் என்ற அளவில் மட்டும் அவர்கள் அவருக்குச் சான்று பகரவில்லை. அவருடைய சொற்களையும், செயல்களையும் எடுத்துரைக்கும் ஆற்றலும் பெற்றிருந்தனர். உங்களுக்கு செவிசாய்ப்பவன் எனக்கு செவி சாய்கிறான் *(லூக் 10:16)* என்று கூறி அவர்களுடைய சான்றை உறுதிப்படுத்துகின்றார். உலக வரலாற்றில் எவ்வாறு இயேசுவின் வெளிப்பாடு நுழைந்தது என்பதை அப்போஸ்தலர் பணி நன்கு விளக்குகின்றது. இறைவார்த்தை எருசலேமிலிருந்து உலகின் கடையெல்லை வரை பரவுகின்றது. திருமறையின் பணி, அப்போஸ்தலர் பணியின் தொடர்ச்சி, பரிசுத்த ஆவியின் வருகை முதல் உலகின் இறுதி நாள் வரைத் தொடரும் பணி இது.

*2) தூய ஆவியின் வெளிப்பாடும் செயலும்:-* திருச்சபையில் அறிவிக்கப்பட்ட வெளிப்பாடு, தூய ஆவியின் செயல் இவற்றின் தொடர்பு பற்றி அப்போஸ்தலர் பணி எடுத்துரைக்கின்றது. ஐம்பதாம்நாள் முதல் திருச்சபைக்குத் தூய ஆவி அளிக்கப்படுகின்றார். அப்போஸ்தலர்களின் சான்றுபற்றி அறுதியிட்டுக்கூறத் துணைபுரிந்தவர் அவரே *(அ.ப. 18:2; 2:1-21)*. அவருடைய ஒளியால் திருநூலின் முழுப் பொருளையும் கிறிஸ்துவின் இவ்வுலக வாழ்வின் பொருளையும் கண்டுணர்வர் அப்போஸ்தலர். இவ்விரு (திருநூல், கிறிஸ்துவின் வாழ்வு) கோணங்களின்று அவர்கள் அவருக்குச் சான்று பகர்வர் *(அ.ப. 2:22-41)*. இவ்வாறு மக்களுக்கு எடுத்துரைக்கப்பட்ட வெளிப்பாட்டை ஆவிக்குப் பணிவோர் விசுவாசத்துடன் பெறுவர். திருமுழுக்குவழி மீட்புப் பாதையில் நுழைவர் *(2:41-47)*.

இ. வெளிப்பாட்டின் முழுமையை நோக்கி:- இயேசுவினால் ஆரம்பிக்கப்பட்டு, அப்போஸ்தலர்களாலும் திருச்சபையாலும் போதிக்கப்பட்ட வெளிப்பாடு இன்னும் அடையாளங்களால் மறைத்து வைக்கப்பட்டிருப்பதால் நிறைவடையவில்லை. ஆனால்

இக்குறைபட்ட வெளிப்பாடு வரலாற்றின் இறுதியில் வரவிருக்கின்ற முழுமையான வெளிப்பாட்டை முன்னறிவிக்கின்றது. மனு மகன் தன் மாட்சிமையோடு தம்மை வெளிப்படுத்துவார் (லூக் 17:30; மாற் 13:2-6; மத் 24:30). ''இப்போதைய உலகிலிருந்து'' ''வரவிருக்கின்ற உலகிற்குள்'' மக்கள் கடந்து செல்லுவர்.

2. அப்போஸ்தல மடல்கள்:-

அ. இயேசுகிறிஸ்துவின் வெளிப்பாடு:-

1) மீட்பின் வெளிப்பாடு:- அப்போஸ்தலர்களின் மடல்களில் இயேசுவின் சொற்களைப் பற்றிய குறிப்புகள் அதிகம் காணப்படாவிடினும் அவருடைய மரணமும் உயிர்ப்பும் அவற்றின் மையமாக அமைந்துள்ளன. இந்நிகழ்ச்சிகள் வழியாக இஸ்ராயேலருக்கு வாக்களிக்கப்பட்ட மீட்பு வெளிப்படுத்தப்படுகின்றது. உலகம் தோன்றுமுன்னே முன்னறிவிக்கப்பெற்ற மாசுமறுவற்ற செம்மறியாம் கிறிஸ்து இந்த இறுதிக்காலத்தில் நமக்காக வெளிப்படுத்தப்பட்டார் (1 பேதுரு 1:20). தம்மைத்தாமே பலியிட்டு, பாவங்களைப் போக்க ஒரே முறை உலகில் தோன்றினார் (எபி 9:26). நம் மீட்பராம் இயேசுகிறிஸ்து உலகிற்குப் பிரசன்னமானதால் இறையருள் வெளிப்படையாயிற்று (2 திமோ 1:10). திருச்சட்டமும் இறைவாக்கினரும் முன்னறிவித்த திருவருட்செயல்முறை அவரில் வெளியாக்கப்பட்டுள்ளது (உரோ 3:21; 1:17). தலைமுறை தலைமுறையாக மறைவாயிருந்த இறைத்திட்டம் அவரில் வெளிப்பட்டது (உரோ 16:26; கொலோ 1:26; 1 திமோ 3:16). தலைமை ஏற்போருக்கும் அதிகாரம் தாங்குவோருக்கும் வெளிப்படுத்தியுள்ளது போலவே (எபே 3:10), இறைவன் தம் திருவுளத்தின் மறைவான திட்டத்தை நமக்கு அறிவித்தார் (எபே 1:9). இதுவே மீட்புத் திட்டத்தின் இறுதியான மறைபொருளாகும்.

2) இறைமறையுண்மையின் வெளிப்பாடு:- கிறிஸ்துவில் வெளிப்படுத்தப்பட்டது மீட்பு வரலாறு மட்டுமன்று, இறைவனே அவரில் வெளிப்படுத்தப்பட்டார். படைப்பு அவருடைய கட்புலனாகா நிறைவின் முதல் வெளிப்பாடு. ஆயினும் பாவிகளான மக்களினம் அதை விரைவில் மறந்துவிட்டது (உரோ 1:19 தொ). எனவே பழைய ஏற்பாடு அவருடைய மாட்சி பற்றிய வெளிப்பாட்டை ஓரளவே கொணர்ந்தது. இறுதியாக ''கிறிஸ்துவின் முகத்தில் இறைமாட்சிமையின் அறிவொளி மிளிரும்படி செய்கின்றார் இறைவன் (2 கொரி 4:6). இவ்வாறு ஏச 40:5-இல் கூறியுள்ள இறைவாக்கு நிறைவுறச் செய்கின்றார். அவருடைய செயலிலும், அவருடைய ஆள் தன்மையிலும் விளங்கிய, கிறிஸ்து என்பவரின் ஆழ்ந்த பொருள் இதுவே.

ஆ. அறிவிக்கப்பட்ட வெளிப்பாடு:- வெளிப்படுத்தப்பட்டவை அனைத்தையும் அப்போஸ்தலர்கள் தங்கள் சுய ஆற்றலால் புரிந்துக்கொள்ள இயலவில்லை. ஆனால் அவற்றைப் புரிந்துகொள்ள உள்ளொளியூட்டும் அறிவுத்திறன் அவர்களுக்கு அளிக்கப்பட்டது (மத் 16:17). மகனைப் பவுலுக்கு வெளிப்படுத்த தந்தை திருவுளங்கொண்டபோது இயேசு கிறிஸ்து அருளிய திருவெளிப்பாட்டின் வாயிலாக நற்செய்தியைப் பெறுகின்றார் பவுல் (கலா 1:12.16). எல்லாவற்றையும் ஊடுருவிக் காண்கின்ற, ஏன் இறைவனின் உள்ளத்தின் ஆழத்தையுங்கூடக் காண்கின்ற ஆவியானவர் உண்மை ஞானமாகிய சிலுவையின் மறைபொருளை அவருக்கு உணர்த்தினார் (1 கொரி 2:10). தேவ ஆவியின்வழியாகக் கிறிஸ்துவின் மறைபொருள் அப்போஸ்தலர்களுக்கும் இறைவாக்கினருக்கும் அறிவிக்கப்பட்டது போல இவருக்கும் அறிவிக்கப்பட்டது (எபே 3:3 தொ). எனவேதான் அப்போஸ்தலர் அறிவித்த நற்செய்தி மனிதனின் சிந்தனையில் உருவான கட்டுக்கதையன்று (கலா 1:11). அது ''விசுவசிக்கும் ஒவ்வொருவருக்கும் மீட்பளிப்பதற்கு கடவுளின் வல்லமையாய் உள்ளது'' (உரோ 1:16). நற்செய்தியின் மறைபொருளை எடுத்துரைக்கும் போது (எபே 6:19) பவுல், ஊழூழியாக மறைத்து வைக்கப்பட்டிருந்து இப்போது வெளிப்படுத்தப்பட்ட மறைபொருளான திட்டத்தை

எல்லோருக்கும் எடுத்துரைக்கின்றார் *(3:9 தொ)*. மீட்பை உறுதியளிக்கும் விசவாசத்திற்கு இட்டுச் செல்லும் இறைவெளிப்பாட்டை எடுத்துரைப்பதே அப்போஸ்தலப் போதகத்தின் தன்மையாகும்.

இ. முழு வெளிப்பாட்டை நோக்கி:- விசுவாசத்தின் முதன்மை ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு மட்டுமே நிலைத்திருக்கும். இயேசுவின் இவ்வுலக வாழ்வில் வெளிப்படுத்தப்பட்ட இறைவனின் அன்பை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றது *(தீத் 3:4)*. இயேசு ஏற்கெனவே தம் மாட்சிமையை அடைந்து விட்டாலும் இது தொடர்ந்து நடைபெறுகிறது. ''மகத்துவமிக்க இறைவனும், நம் மீட்பருமாகிய இயேசு கிறிஸ்து மாட்சிமையில் பிரசன்னமாகும்போது'' *(தீத் 2:13; லூக் 17:30)* இது முடிவடையும். இயேசுவின் இந்த வெளிப்பாடு *(1 பேதுரு 1:7-13)* தலைமை ஆயரின் இந்தத் தோற்றம் *(5:4)* கிறிஸ்தவ நம்பிக்கையின் பொருளாகிறது *(2 தெச 1:7; 1 கொரி 1:7; தீத் 2:13)*. நம்முடைய உயிராகிய கிறிஸ்து தோன்றும்பொழுது நாமும் அவரோடு மாட்சிமையில் தோன்றுவோம் *(கொலோ 3:4)*. நம்மோடு, இத்தகைய மகிமையுடன் கடவுளுடைய மக்கள் வெளிப்பட வேண்டுமென்று படைப்பனைத்துமே ஏக்கத்தோடு எதிர் நோக்கியிருக்கின்றது *(உரோ 8:19-23)*. விசுவாச வாழ்வுக்குப் பதிலாக அவரை முகமுகமாய்க் காணும் பேறுபெறும் *(1 கொரி 13:12; 2 கொரி 5:7)* விவரிக்க இயலா ஒப்பற்ற நிகழ்ச்சியாகும் அது.

*3. புனித யோவான்*

யோவானின் நூல்களில் வெளிப்பாட்டின் கருத்து ''காட்டினார்'' அல்லது ''வெளிப்படுத்தினார்'' என்ற சொலலாலேயே குறிக்கப்பட்டிருக்கின்றது. ஆயினும் வெளிப்பாடு பற்றிய கருத்துக்களை நூல்களின் எல்லா பகுதிகளிலும் காணலாம்.

*அ) இயேசு கிறிஸ்துவின் வெளிப்பாடு:-*

*1)* இயேசுவின் காணக்கூடிய வெளிப்பாடு:- மனுவுருவெடுத்த இறைமகன் இயேசுவின் ஆளுமை வெளிப்பாட்டின் மையமாக அமைந்துள்ளது. ''அவர் இஸ்ராயேலருக்கு வெளிப்படும் பொருட்டே திருமுழுக்கு யோவான் சாட்சியம் பகர்ந்தார்'' *(யோவா 1:31)*. அதன் பயனாக ''அவர் தோன்றினார்'' *(1 யோவா 3:5-8)*, அதாவது புலன்களால் தொட்டுணரும் பொருளாக மாறினார். அவருடைய சாகோதரர் விரும்பியதுபோல பொது மக்கள் கவனத்தைக் கவரும் *(யோவா 7:4)* வெளிப்பாடு அன்று அவர் கொடுத்த வெளிப்பாடு. மாறாக, ஓரளவு இரகசியமான, முரண்பாடான, புரிந்துக்கொள்ள இயலாத வெளிப்பாடு, சிலுவையில் உயர்த்தப்படுதலில் முடிவடைந்த வெளிப்பாடு *(12:32)*; பாவங்களைப் போக்கவும் அலகையின் செயல்களைத் தொலைக்கவும் வந்த வெளிப்பாடு *(1 யோவா 3:5-8)*. தாம் உயிர்த்த பின்னரே தம் சீடர்களை உறுதிப்படுத்தும் பொருட்டு தம் மாட்சிமையைக் காட்டினார் *(யோவா 21:1-14)*.

*2)* இயேசு கிறிஸ்துவில் இறைமாட்சிமையின் வெளிப்பாடு:-

புலனுக்குட்பட்ட இயேசுவின் தோற்றத்தில் யாவும் கடந்த பொருள் பொதிந்திருந்தது. இறைவன் மக்களுக்களித்த தலைசிறந்த வெளிப்பாடு இதுவே. இயேசுவின் சொற்கள் வாயிலாக வெளிப்பாடு அளிக்கப்பட்டது. இறைவனைக் கண்ட இறைமகன் *(யோவா 1:18)* இறைமாட்சிமையை முதலில் மறைமுகமாகவும், பின் தம் இறுதி உணவின்போது தெளிவாகவும் எடுத்துரைக்கின்றார் *(16:19)*. அவருடைய செயல்கள் வழியும் வெளிப்பாடு கொடுக்கப்பட்டது. மக்கள் அவரில் விசுவாசம்கொள்ளும் பொருட்டு அவர் செய்த அருஞ்செயல்கள் அவருடைய மாட்சிமையை எடுத்துரைக்கும் அடையாளங்களாயிருந்தன *(2:11)*. தந்தையிடமிருந்து அவர் பெற்ற மாட்சிமை ஒரே பேறான அவருக்கு ஏற்ற மாட்சிமையே *(1:14)*. இவ்விரு (போதனை, அருஞ்செயல்கள்) முறைகளில் அவர் தந்தையின் பெயரை மக்களுக்கு வெளிப்படுத்தினார் *(17:6)*. அதாவது தந்தையின் தன்மையை வெளிப்படுத்தி

னார். அது பழைய ஏற்பாட்டு வெளிப்பாட்டனைத்தின் சிகரமாய் அமைந்தது *(1:17)*. வாழ்வளிக்கும் வார்த்தையைக் கண்டு, கேட்டு, தொட்டுணர்ந்த நற்செய்தியாளர் *(1 யோவா 1:1)* இயேசுவில் உயிர் வெளிப்படுத்தப்பட்டது *(1:2)*, இயேசுவில் இறைவன் நம்மீது வைத்த அன்பு வெளிப்படுத்தப்பட்டது *(4:9)* என்று தனது அனுபவத்தின் பொருளைச் சுருக்கமாகத் தருகிறார்.

*ஆ) போதிக்கப்பட்ட வெளிப்பாடு:-*

இயேசு கிறிஸ்துவின் வெளிப்பாடு அனைத்து மக்களாலும் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. அவரை ஒரு சிலரே அறிந்திருந்தால் மட்டும் இது நிகழவில்லை. அவரை ஏற்றல் என்பது ஒரு தனி அருள் ஆகும். ''என்னை அனுப்பிய தந்தை ஈர்த்தாலோழிய எவனும் என்னிடம் வர இயலாது'' *(யோவா 6:44)*. எனவேதான் ''கடவுளிடமிருந்து கற்றுக் கொள்பவர்'' *(6:45)* சிலரே. பலர் ஒளியை வெறுத்து இருளை விரும்பினர் *(3:19)*. ஏனெனில் அவர்கள் பொல்லாத தலைமுறையைச் சார்ந்தவர்கள். எனவே தான் உலகிலிருந்து பிரித்து, தந்தை இயேசுவுக்கு அளித்தவர்களுக்கு மட்டுமே தந்தையின் பெயரை வெளிப்படுத்துகின்றார் *(17:6)*. தந்தையின் பெயரை யாருக்கு வெளிப்படுத்தினாரோ அவர்களிடம் தமக்குச் சான்று பகரும் பணியையும் ஒப்படைக்கின்றார் *(16:27)*. இப்பணி மிகவும் கடினமானது. இப்பணியை நிறைவேற்ற இயேசுவின் சொற்களையும் செயல்களையும் பற்றிய ஆழ்ந்த அறிவு தேவை. ஆகவேதான் அவர் இவ்வுலகை விட்டுச் சென்றபின் நிறையுண்மையை நோக்கி வழி நடத்தும் ஆவியானவரை அவர்களுக்கு அனுப்புவார் *(16:12 தொ)*. மக்கள் அனைவரும் விசுவாசித்து வாழ்வு பெறும் பொருட்டு இயேசு கிறிஸ்துவின் வெளிப்பாட்டை அப்போஸ்தலர்களின் சான்று ஆவியின் துணையுடன் எடுத்துரைத்தது. ''உயிர் வெளிப்படுத்தப்பட்டது அதனை நாங்கள் கண்டோம். அதற்குச் சான்று பகர்கின்றோம்'' *(1 யோவா 1:2)*. ''தந்தை தம் மகனை உலகில் மீட்பராக அனுப்பினாரென்று கண்டோம்; அதற்குச் சான்று பகர்கின்றோம்'' *(4:15)*. இந்தச் சாட்சியை ஏற்பதால் முதல் சாட்சிகளைப் போல், ஒவ்வொருவரும்'' பரம தந்தையோடும் அவர் மகன் இயேசு கிறிஸ்துவோடும் உள்ள நட்புறவில்'' *(1:3 தொ)* பங்குகொள்ள இயலும்.

*இ) முழு வெளிப்பாட்டை நோக்கி:-*

இறைமாட்சிமை விசுவாசத்தின் வாயிலாகத்தான் இன்னும் சிந்திக்கப்பெறுகின்றது. இச்சிந்தனை ஊனுருவான வார்த்தையிலும், வார்த்தை வழியும்தான் நடைபெறுகின்றது. மனிதன் இறைவனில் வாழ்கின்றான். ஆனால் அவன் தன்னிறைவை இன்னும் அடையவில்லை. ''இப்போது நாம் இறை மக்களாயிருக்கிறோம். இனி எத்தன்மையராய் இருப்போம் என்பது இன்னும் வெளிப்படவில்லை''. அவரது வருகையின்போது அவருடைய மாட்சியில் தம்மைக் கிறிஸ்து வெளிப்படுத்தும் நாள் வரும் *(2:28)*. அப்போது அவரோடு நாமும் வெளிப்படுத்தப்படுவோம். ''அவரைப் போலவே நாமும் இருப்போம். ஏனெனில் அவர் இருப்பது போல் அவரைக் காண்போம்'' *(3:2)*. கிறிஸ்தவ நம்பிக்கையின் பொருள் இத்தகையதே.

*4. திருவெளிப்பாடு:-*

யோவானின் திருவெளிப்பாடு நூல் உண்மையிலேயே ஒரு வெளிப்பாடாகும் *(திருவெளி 1:1)*. இயேசுவின் இவ்வுலக வாழ்வு பற்றி இந்நூல் கூறுவதில்லை. மாறாக திருச்சபையின் உலக வரலாற்றையும் முன்னுரையாக்க் கொண்ட அவருடைய இறுதி வெளிப்பாடு பற்றியே கூறுகின்றது. கிறிஸ்தவ இறைவாக்கு வடிவம் என்ற அளவில் *(1:3)* கிறிஸ்துவின் பாடுகள், உயிர்ப்பு ஆகியவற்றின் வழிவந்த மீட்பு பற்றிய செய்தியையும் கொண்டுள்ளது. இக்கோணத்திலிருந்து காட்சியாளர் பழைய இறைவாக்கு நூல்களுக்குத் திருந்திய பொருள் *(5:1; 10:8 தொ)* அளிக்கிறார். இவ்விறைவாக்குகளுக்கு விளக்கம் அளிக்கும் திறவுகோலைக் கொண்டிருப்பதால், அதைப் பயன்படுத்தி கிறிஸ்து என்

னும் மறைபொருளை அவருடைய பிறப்பிலிருந்தே விளக்கிக் காட்டுகின்றார் *(12:5)*. சிலுவையில் அடைந்த மரணம் பற்றியும் *(1:18; 5:6)*, மாட்சியில் அவர் தோன்றும் நாள் பற்றியும் *(19:11-16)* எடுத்துரைக்கிறார். திருச்சபை ஏங்கி எதிர் நோக்கியிருக்கும் கிறிஸ்துவின் வருகை எனும் இந்த இறுதி நாள் நிகழ்ச்சியில் *(22:17)* யோவானுடைய சான்றின் தாக்கம் அடங்கியிருக்கிறது.

யோவானின் திருவெளிப்பாடு இரண்டு உறுதியான இறைவெளிப்பாடுகளிலிருந்து எழுகின்றது. ஒன்று வேதாகமம் எடுத்துரைப்பவை. மற்றொன்று அவற்றை நிறைவு செய்யும் கிறிஸ்துவின் வெளிப்பாடு. இவ்விரண்டையும் ஒன்றுக்கொன்று ஒளியூட்டும் விசுவாசத்தின் அறிவுச் சுனைகளாகக் கொண்டு நூலாசிரியர் இறுதி நிறைவளிக்கின்றார். உலகின் மீதும் சாத்தான் மீதும் இறைச்சக்தி வெற்றிக்கொள்ள, வேதகலாபனை ஒரு முரண்பாடான வழியென்பதை இந்நூலிலிருந்து திருச்சபை தெளிவாகக் கண்டுணரக்கூடும். விண்ணக யெருசலேம் பற்றிய முழு வெளிப்பாட்டிற்காகக் காத்திருக்கும் கிறிஸ்தவர்கள் *(22:22)* துன்பங்களின் மத்தியில் விசுவாசத்தின்வழி அதைக் காண முடிகிறது. இவ்வாறு ''நேற்றும் இன்றும், என்றுமே மாறாத இயேசு கிறிஸ்து'' (எபி *13:8*)வின் வெளிப்பாடு உலக வரலாற்றை அதன் தொடக்க முதல் இறுதிவரை ஒளிர்விக்கின்றது.

**இன்னாசியார் எழுதிய திருமுகங்கள்** *(*EPISTLES OF IGNATIUS*)*

சீரியாவிலுள்ள அந்தியோக்கு ஆயர் இன்னாசியார். கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் தாம் உரோமைக்குக் கொலைக் கைதியாக எடுத்துச் செல்லப்பட்டபோது ஏழு திருமுகங்களை எழுதினார். சிமிர்னாவிலிருந்து எபேசு, மக்னேசியா, திராலெஸ், உரோமை ஆகிய இடங்களிலுள்ள சபைகளுக்கும் துரோவாவிலிருந்து பிலதெல்பியா, சிமிர்னா சபைகளுக்கும், போலிகார்ப்பு என்னும் சிமிர்னா ஆயருக்கும் எழுதினார். இந்தத் திருமுகங்களில் காணப்படும் முக்கிய செய்தி என்னவென்றால், கிறிஸ்துவுக்காக நாம் படும் துன்பம் மிகவும் சிறந்தது என்பதாகும். இந்தத் திருமுகங்களை எழுதியவராகிய இன்னாசியார், பல இன்னல்கள் பட்டபின் கொலையாவதற்காகவே உரோமைக்கு கைதியாகப் போகிறார். ஆதித் திருச்சபைக்கு வேதகலாபனைகளின் காரணமாக பயங்கரமான சோதனைக்காலம் ஆரம்பமானது. வேதகலாபனைகள் குறிப்பாக உரோமைய மன்னர்களால் ஏற்பட்டது. இத்திருமுகங்கள் திருச்சபைத் தந்தையர்களின் இலக்கியத்தில் ஒரு முக்கிய பாகமாகத் திகழ்கிறது. இவை திரேசன் காலத்தில் (கி.பி. *98-117*) எழுதப்பட்டவை. சொற்றொடரிலும், நடையிலும், கருத்திலும், சுட்டிக்காட்டல்களிலும் இத்திருமுகங்கள் புதிய ஏற்பாட்டுத் திருமுகங்களை ஒத்திருக்கின்றன. ஆசிரியர் பவுலையும் யோவானையும் அறிந்திருக்கிறார். இந்தத் திருமுகங்களில் திருச்சபையின் நிர்வாக அமைப்புமுறை அழகாக விளக்கப்படுகிறது. ஆயர் பதவியின் அதிகாரத்தை வலிமையாக ஆதரித்துப் பேசுவதால் இவை இறையியல் முக்கியத்துவம் பெறுகின்றன. ஒரு ஆயரின் பணிகள் எவ்வாறு அமைய வேண்டுமென இவை எடுத்துரைக்கின்றன. ஆயரின் பிரசன்னம் அல்லது அனுமதியின்றி எந்த வழிப்பாட்டு நிறுவனத்திற்கும் மதிப்பில்லை. கிறிஸ்துவுக்குப் பணிவது போல, ஆயருக்கு எல்லா விசுவாசிகளும் பணிய வேண்டும். இத்திருமுகங்கள் குறிப்பாக ஆசியாவிலுள்ள திருச்சபைகளுக்கே எழுதப்பட்டன; ஆசியத் திருச்சபைகளில் யூதர்களின் பல சடங்கு முறைகள் நுழைய அரம்பித்ததால் ஆயர்களின் பணிகள் விளக்கப்படுகின்றன. தோசேத்திய பதிதத்திற்கு எதிராக இயேசு கிறிஸ்துவின் உண்மையான மனித உடல் பற்றி சிந்தனைகளையும் இத்திருமுகங்களில் நாம் காணலாம். கத்தோலிக்கத் திருச்சபை என்னும் சொல்லை முதன்முதலில் பயன்படுத்தியவர் இவரே. இத்திருமுகங்கள் நல்ல நடையில் எழுதப்பட்டவை. இன்னாசியாரின் உள்ளக்கருத்துக்களை அவை படம் பிடித்துக் காட்டுகின்றன.

**இன்னோம்** *(HINNOM - மகன்களின் பள்ளத்தாக்கு)*

பென்யாமின், யூதா கோத்திரங்களுக்கு இடையே எல்லையைக் குறிக்கும் எருசலேமின் தெற்கே உள்ள ஆழமானப் பள்ளத்தாக்கு *(யோசு 15:18; 18:16)*. எரே 19:2- இன்படி கர்சித் வாயில் அல்லது ''பானை ஓட்டு வாயில்'' நகரத்திலிருந்து இப்பள்ளத்தாக்குக்கு இட்டுச்சென்றது. இக்கால யாப்பா வாயிலுக்கு அருகிலுள்ள வாடி-ஏர்-ராபாபி என்பதுதான் இப்பள்ளத்தாக்கு என்று பொதுவாக கருதப்படுகிறது. இது பழைய நகரத்தின் மேற்கு மதிலுக்குக் கீழே வடக்கு தெற்காக பரவியிருக்கிறது. பிறகு கெதிரோன் திசையில் கிழக்குப்பக்கமாக கூர்மையாக வளைந்திருக்கிறது. இன்னோம் என்ற பெயர் தாவீது நகரத்தின் கிழக்கே தீரோப்போயோன் கணவாய்க்கு முதலில் சூட்டப்பட்டது என்பதற்கு ஒரு சில மூல ஆதாரங்கள் இருக்கின்றன. முடியாட்சி காலத்தில் வாடி-ஏர்-ராபாபிக்கு இப்பெயர் மாற்றப்பட்டிருக்கலாம் என்று அவைகள் கூறுகின்றன.

அரசர், நாள், எரோமியா ஆகமங்கள் இப்பள்ளத்தாக்கு கெதிரோனோடு சந்திக்கும் இடத்திலுள்ள தோப்பேத்து என்றழைக்கும் இடத்தில் மோலக்கு, பாகால் சிலைகளுக்கு நேர்ச்சையாக குழந்தைகளை எரித்து பலி கொடுப்பதையும், அன்னிய கடவுளர்களுக்கு வழிபாடு செய்வதையும் திரும்பத் திரும்பக் குறிப்பிடுகின்றன *(2 அர 23:10; 2 நாள் 28:3; 33:6; எரே 32:25)*. இவ்வாறு இன்னோம் பள்ளத்தாக்கு கெட்ட பெயர் பெற்று விளங்கியதால்தான் ஏரேமியா பள்ளத்தாக்கின் சிலை வழிபாடுகளை கண்டித்த போது பெயர் சொல்லாமல் கண்டனம் செய்தார் *(எரே 2:23)*. இது ''பழிவாங்குநாளில்'' 'படுகொலைப் பள்ளத்தாக்கு' என்று அழைக்கப்படும் என்று கூறுகிறார் *(எரே 7:31-32; 19:5-6)*. இந்தமாதிரி எரித்து பலிகொடுக்கும் கண்ணோட்டமே 'நெருப்பாலான நரகம்' என்ற கற்பனைக்கு வழி வகுத்தது *(மத் 5:22)*. கிரேக்கத்தில் 'கேகன்னா' என்று அழைக்கப்படுகிறது. 'இன்னோம் பள்ளத்தாக்கு' நாடு கடத்தலுக்குப்பின் யூதா, சிமியோன் இவர்களின் பழைய பகுதி முழுவதும் பெயேர்செபா வரையிலும் உள்ள பகுதியில் பரவி அமைந்திருந்த குடியிருப்புகளுக்கு வடக்கு எல்லையாக கொடுக்கப்படுகிறது *(நெக 11:30)*.

யூத, ஆதி கிறிஸ்தவர்களின் கல்லரைகளை (ரோமையர் காலத்திலிருந்து பைசாண்டியன் காலம் வரை உள்ளவைகள்) பள்ளத்தாக்கின் தெற்கு பகுதியில் மலைமுகடுகளில் இன்றும் காணலாம். அங்கு யூதாசின் வெள்ளிக் காசுகளுக்கு வாங்கிய 'குயவனின் நிலம்' இருந்ததாக பாரம்பரியம் கூறுகிறது.



ஈ இரண்டு எபிரேய வார்த்தைகளின் மொழி பெயர்ப்பு.

அ) ''போவதும் வருவதுமாக இருப்பது'' என்று பொருள்படும் ''செபுஸ்'' என்ற சொல். இவை ''உஸ்ஸ்'' என்று சத்தம் எழுப்பும். சில மொழி பெயர்ப்புகள் கொசு என்று பொருள் கொண்டுள்ளன.

ஆ) கலப்பு பூச்சிகள், வண்டின் கூட்டம் (யாத் 8:17-18. 20. 25. 27; சங் 78:45; 105:31).

இரண்டுமே இரண்டு இறகுள்ள பூச்சிகள். முதல் ரகம் (அ)''வீட்டு ஈ''-யாக புரிந்துக் கொள்ளப்படுகிறது. பரிமள தைலத்திற்குள் விழுந்து தைலத்தின் நறுமணத்தை அழிப்பதே இதனுடைய பழக்கமாகும் (திருவுரை 10:1). ஆனால் கீழை நாட்டில் இந்த இனம் தொல்லை கொடுப்பதாகவும், மிக வலுவந்தமானதாகவும் கருதப்பட்டது. இது கைப்பற்ற வருகிற எகிப்திய படையை உருவகமாகக் காட்டுகிறது. குளவி வகையான குதிரை ஈ குதிரைகளையும், கால்நடைகளையும் வாகனத்தில் செல்லுகின்ற மனிதர்களைக்கூடத் தாக்குகிறது. எக்கரோனின் மக்கள் ஈக்களின் தெய்வமான பாகால்செபூபை, ஈக்கள் செய்கின்ற தீய செயல்களைத் தவிர்ப்பதற்காக வழிபட்டார்கள் (2 அர 1:2-3).

இரண்டாவது (ஆ)வகை யாத்திரையின் போது நான்காவது கொள்ளை நோயாகக் கடவுளால் அனுப்பப்பட்ட கொட்டுகின்ற ஈ-ஆகும். சங்கீதங்களிலும், யாத்திரை ஆகமத்திலும் ''ஈக்களின் திரள்'' என்று மொழி பெயர்க்கப்படுகிறது. இது பல்வேறு வகைகளைக் குறிப்பிடுகிறது: வீட்டு ஈ, ஊதாநிறப் புட்டி ஈ, நாய் ஈ, பார்காஸ் கொசுவினம் அல்லது தபநித் ஈ; பார்காஸ் கொசு அறுவடையின்போது வேலைசெய்பவர்களுடைய கண்கள், காதுகள், மூக்கு ஆகியவற்றில் நுழைந்து தொல்லை கொடுக்கவல்லது. 'ஸ்தோமாக்ஸில் ல்சித்ரான்ஸ்' என்ற ஈ மனிதன், விலங்கு ஆகியவற்றின் கால்களைக் கடிக்கிறது. முட்டைப்புழு (யோபு 25:6; ஏச 14:11), புழு (யாத் 16:24; உப 28:39; யோபு 7:5; 17:14) ஆகியவைகள் ஈக்களின் லார்வாக்கள்.

**ஈசபேல்** (JEZEBEL - இளவரசன், உயர்த்தப்பட்ட, பாகாலைப் போற்றும்)

பாகாலைப் போன்றும் ஒரு பெனிசியப் பெயரின் மாற்றமடைந்த எபிரேய வடிவமாக இருக்கலாம் (1 அர 19:2).

1. இஸ்ராயேலின் அரசனான ஆகாபின் மனைவி. சீதோனியர்களின் அரசனான எத்துபாகாலின் மகளான இவள் பெனீசிய குலத்தைச் சேர்ந்தவள் (1 அர 16:31). மெனான்டரின் கூற்றுப்படி இவள் பெனீசியா பாகால் வழிபாட்டின் குரு. ஈசபேல் கீழை நாட்டு அரச வம்சத்தின் முழுமையான உரிமைகளைக் கட்டிக்காக்கவும், பெனீசிய பாகால் வழிபாட்டில் ஊன்றி நிற்கவும் தன் வாழ்நாள் முழுவதும் மிகவும் பாடுபட்டாள். இப்போக்கைத் தன் கணவன் ஆகாபின் ஆட்சியின்போது மட்டுமின்றி, தனது இரு புதல்வர்களாகிய அகசியா, யோராம் ஆகியோரின் ஆட்சியிலும் கடைப்பிடித்தாள். யூதாவின் அரசியான இவளது மகள் அத்தாலியாவும் தன் தாய் ஈசபேலின் போக்கைத் தொடர்ந்து பின்பற்றினாள் என்று கூறப்படுகிறது (2 அர 8:18). மற்றெந்த வெளிநாட்டு அரசிகளைப்போலவே ஈசபேலும் தொடக்கத்திலிருந்தே தனக்கே உரிய வழிபாட்டு உரிமையைக் கோரி வந்ததாகத் தெரிகிறது (1 அர 16:31-33; காண்க 11:8). பாகாலின் இறைவாக்கினர்களை ஆதரித்து, அவ்வழிபாட்டை இஸ்ராயேலில் புகுத்துவதிலும் (1 அர 18:19), யாவேயின் இறைவாக்கினர்களை துன்புறுத்துவதிலும் (18:4), எலியாவை நாட்டை விட்டே வெளியேற்றுவதிலும் (19:1-3) அளவுக்கதிகமான முயற்சி எடுத்து அவற்றில் வெற்றியும் கண்டாள். 2 அர 9:22-இல் கூறப்படும் ஈசபேலின் ''வேசித்தனமும், மாயவித்தையும்,'' யாவேயின்

வழிபாட்டுக்கெதிராக அவள் செய்த கொடுமைகளைக் குறிப்பதற்காகவே என்பது தெளிவு (காண்க ஒசே 4:12).

நாபோத்தின் திராட்சை தோட்டம் பற்றிய நிகழ்ச்சியில் கீழை நாட்டுப் பேரரசரின் பண்பு, இஸ்ராயேல் நாட்டு மன்னனின் பண்பிலிருந்து எவ்வளவு மாறுபட்டதெனப் படம்பிடித்துக் காட்டப்படுகிறது. நாபோத்து தனது திராட்சைத் தோட்டத்தை விற்கமாட்டேன் என்று கூறியபோது ஆகாபு அரசன் அதனை ஏற்றுக்கொள்ள விழைந்த போது, ஈசபேல் ''நீர் இஸ்ராயேலை இப்படித்தான் ஆட்சி செய்து வருகிறீரா'' (1 அர 21:7) என்று எள்ளி நகையாடினாள். சட்டப்படி நாபோத்தின் மேல் நடவடிக்கை எடுப்பதாக நடித்து நாபோத்தைக் கல்லாலெறியச் செய்தவளும் இவளே. இவள் சாவதற்கு முன்னால் தன் கண்களில் மைதீட்டி, தலையை அலங்கரித்து, ஏகூவிடம் மரியாதையின்றிப் பேசினாள். பின் மாடியிலிருந்து தள்ளப்பட்டு இறந்தாள். அவளது இரத்தம் சுவரை நனைத்தது. அவள் குதிரைகளால் மிதிக்கப்பட்டாள். அவளது உடலை நாய்கள் தின்றன. இவ்வாறு அவளைப் பற்றிய எலியாவின் வாக்கு நிறைவேறிற்று. இந்த மனசாட்சியற்ற, சபிக்கப்பட்ட அரசப்பெண்ணின் முடிவு யாவருக்கும் பாடமாயிற்று (2 அர 9:30-37).

2. தியத்திரா நகரக் கிறிஸ்தவர்களைச் சிலை வழிபாட்டுக்கு இட்டுச் சென்ற போலி இறைவாக்கினிப் பெண்ணுக்கு ஈசபேல் என்ற பெயர் திருவெளி 2:20-இல் கொடுக்கப்பட்டுள்ளது.

**ஈசாக்கு** (ISAAC - அவர் சிரித்தார்)

ஈசாக்கு என்பவர் ஆபிரகாமிற்கும் சாராவிற்கும் மகனாகப் பிறந்தவர். இவர் அவரது தந்தை ஆபிரகாமிற்கு நூறாவது வயது நடக்கும் பொழுது பிறந்தார் (ஆதி 21:5.7). ஈசாக்கிற்கு நாற்பது வயது நடந்தபொழுது ரெபேக்காவை மணந்து கொண்டார் (24:64; 25:20). 60 வயதில் ஏசாவும், யாக்கோபும் இவருக்குப் பிறந்தனர் (25:26; 1 நாள் 1:34). இவர் கெபிரோனில் தனது 180வது வயதில் இறந்தார் (ஆதி 35:27-29). மக்கபேலாவிலுள்ள குகையில் தன் மனைவியுடன் அடக்கம் பண்ணப்பட்டார் (49:31).

I. சொல் விளக்கம்:-

ஈசாக்கு என்ற பெயரின் தோற்றத்திற்கான பல பொதுப்பாணி விளக்கங்கள் உண்டு. முதிர்ந்த வயதில் தனக்கு மகன் பிறக்கப் போகிறார் என்ற வாக்குறுதியை எண்ணி புன்முறுவல் பூக்கும் ஆபிரகாமின் சிரிப்போடும் (ஆதி 7:17 தொ), சாராயின் இகழ்ச்சியான சிரிப்போடும் (18:11-15), அவனது பிறப்பால் 'இறைவன் எனக்கு மகிழ்ச்சி அளித்தார்' என்று சாராள் கொள்ளுகின்ற மகிழ்ச்சியோடும் (21:6) நெருங்கிய தொடர்புடையதாகும் இப்பெயர். இவ்வாறு அவர்களின் சிரிப்பை உணர்த்தும் வகையில் தோன்றிய பெயர்தான் 'ஈசாக்' ஆகும். ஆனால் இறையருளை உணர்த்தக்கூடிய விளக்கம் உண்மைக்கு நெருங்கியதாகும். ''இறைவன் சிரிப்பாராக'' அதாவது, ''அவன் மேல் அன்போடும் கருணையோடும் நோக்குவராக'' என்பது சாலப் பொருந்தும்.

II. பழைய ஏற்பாட்டில் ஈசாக்கு:-

ஆபிரகாம், யாக்கோபு, யோசேப்பு ஆகியோரோடு ஒப்பிடும்போது ஈசாக்கின் கதை தன்மையிலும் எடுத்துக் கூறப்படும் முறையிலும் பலவீனமானது. அவர் அவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தவர் அல்லர். அவர் தம் தந்தைக்காகவோ, அல்லது மகனுக்காகவோ வாழ்வதாகத் தெரிகிறது. அவர்களின் நிழலாகவே அமைகிறார்.

பெயேர்-செபா மற்றும் பெயேர்-லாகாய்-ரோயி போன்ற வழிபாட்டு மையங்களில் அவரது கதைகள் தொகுக்கப்பட்டு பாதுகாக்கப்பட்டதாகத் தெரிகிறது. இந்த இடங்களின் முக்கிய ஆளாகத் தெரிகிறது. அவரது வாழ்வு முக்கியமாக இவ்விடங்களைச் சுற்றியே சுழலுகிறது (ஆதி 21; 22:19; 26:23.33; 28:10; 24:62; 25:11). இக்கதைகளில் ஆபிரகாமுக்கும் யாக்கோபுக்கும் இணைப்பாளராகவே தோன்றுகிறார்.

ஈசாக்கு வாக்குறுதியினால் பிறந்த குழந்தையாவார். இறைவன் இஸ்ராயேல் மக்கள்

மீது கொண்டிருக்கும் பிரமாணிக்கமான உற வினைச் சுட்டிக் காட்டும் உயிருள்ள அடை யாளமாக ஈசாக்கு விளங்குகின்றார். வாக்கு றுதி கொடுத்த இறைவன் அதை நிறைவேற் றுகிறார். எனவே இஸ்ராயேல் மக்கள் அவர் மீது நம்பிக்கை வைத்து அவரைச் சார்ந்து வாழலாம். ஈசாக்கு குறிப்பிடத்தக்க ஒருவரா கத் தோன்றவில்லையென்றாலும் இறைவன் அவர் வழியாகத்தான் இஸ்ராயேல் மக்க ளுக்கு மீட்பளிக்கின்றார், எதிர்காலத் தலை முறையினருக்கு தனது அருளை வழங்குகின் றார். ஈசாக் ஆசிர் அளிக்கப்பட்ட மகனாவார்.

*1. ஈசாக்கின் பிறப்பு (ஆதி 21:1-7):-* ஆபிர காம் வயதானவராகவும், சாரா மலடியாக வும் இருந்தபோதிலும் இறைவன் அவர்க ளுக்கு ஒரு மகன் பிறப்பான் என்று வாக்கு அளிக்கின்றார் (*ஆதி 15:4; 17:15-19; 18:9-15; 15:5*). சாரா கருவுற்று ஒரு மகனைப் பெற்றெ டுக்கின்றாள். அவனை ஈசாக்கு என்று அழைத்து, ''கடவுள் எனக்கு மகிழ்ச்சி அளித் தார்'' என்றும் இதைக் கேட்கிற யாவரும் என்னோடு சேர்ந்து மகிழ்வார்கள் என்றும் சாரா சொன்னாள் (*ஆதி 21:6*). சாராவின் அவநம்பிக்கைக்கு மாறாக இறைவன் தம் வாக்குறுதியில் வழுவாமைக்கு ஒரு சிறந்த அடையாளமாகக் குழந்தை திகழ்கிறான். ஆனால் பெற்றோர் நன்றியுணர்வோடு உடன்படிக்கையினால் பிறந்த மகன் என்ற முறையில் ஈசாக்கு பிறந்த எட்டாம் நாள் அவருக்கு விருத்தசேதனம் செய்கின்றனர். (*லூக் 1:59; 2:21; அ.ப.7:8; பிலி 3:5; ஆதி 21:4*).

*2. ஈசாக்கும், இசுமயேலும் (ஆதி 21:8-14; 25:9-11):-* ஈசாக்கு இறை ஆசிரைப் பெற்றுத் தன் குலத்தைப் பலுகி பெருக்கச் செய்வார் என்ற இறைவனின் வாக்கில் நம்பிக்கை கொண்டிராத சாரா இசுமயேலை வீட்டை விட்டு துரத்தி விட வேண்டுகிறாள். ஈசாக்கு பால்குடி மறந்த நாளன்று விருந்து நடந்து கொண்டிருந்த பொழுது இசுமயேல் தனது மகன் ஈசாக்கோடு கேலி பண்ணி விளையா டுவதைக் கண்டு இசுமயேல் தனது மகனின் உரிமையில் பங்காளியாகி விடுவானோ என்று அஞ்சி இசுமயேலையும், அவனது தாயையும் வெளியே அனுப்பி விடுமாறு ஆபிரகாமிடம் கூறுகின்றாள்.

ஆபிரகாம் இதைக் கேட்டு மனம் வருந்து கின்றார். ஆனால் இறைவன் சாரா கூறுவ தின்படி நடக்குமாறு கூறி, ஈசாக்கின் வழியா கத்தான் ஆபிரகாமிற்கு சந்ததி தோன்றும் என்றும் உறுதி அளிக்கின்றார் (*ஆதி 21:12; உரோ 9:7; எபி.11:18*). கடவுளின் வாக்குறுதி கள் அனைத்தும் இயல்புமுறைப்படிப் பிறந்த இசுமயேலின் வழியாக அல்லாமல், வாக்குறுதியின் பயனாய்ப் பிறந்த ஈசாக்கின் வழியாக இஸ்ராயேல் மக்களுக்கு அருளப் பட்டு நிறைவேற்றப்படும் (*கலா 4:21-31*). எனவே ஆபிரகாமும் ஆகாரையும் அவளது பிள்ளையையும் வீட்டை விட்டு அனுப்பு கின்றார்.

ஆபிரகாமின் வழிவந்த இவர்கள் பலுகிப் பெருகி இஸ்ராயேலர்களாகவும், இசுமலே யர்களாகவும் பிரிந்து வாழ்ந்தனர் என்று மரபு கூறுகின்றது. விவிலியமானது ஆபிரகா மின் இறப்பைப் பற்றி கூறியுள்ள பகுதியில் தான் இசுமயேலையும், ஈசாக்கையும் சேர்த்து குறிப்பிட்டிருக்கின்றது (*ஆதி 25:9-11*).

*3. ஈசாக்கை பலியிடச் செல்லல் (ஆதி 22:1-19):-* ஈசாக்கின் சிறுபிராயத்தில் ஒரே ஒரு நிகழ்ச்சி எடுத்துக் கூறப்படுகிறது. ஆபிர காம் கடவுளின் கட்டளைப்படி ஈசாக்கைப் பலியிட அழைத்துச் செல்கின்ற நிகழ்ச்சியில் விசுவாசம், கீழ்ப்படிதல் ஆகிய இரண்டு பண்புகள் மேலோங்கி நிற்கின்றன. ஆபிர காம் இறைவன் கேட்டது என்னவென்று அவருக்கு நன்கு தெரிந்து, ஈசாக்கு கடவுளின் கட்டளைக்குக் கீழ்படிதலோடு பதிலளிப் பார் என்றும் நம்பிக்கை கொண்டு செயல்ப டுகின்றார். ஈசாக்கு தந்தையின் அன்பிலும், இறைவனின் பராமரிப்பிலும் நம்பிக்கை கொள்கின்றார் (*ஆதி 22:6-8; ஞான 10:5; எபி 11:17-19*). ''இதோ நெருப்பும் கட்டைகளும் இருக்கின்றன. தகனப்பலிக்கு வேண்டிய விலங்கு எங்கே?'' (*ஆதி 22:7*) என்ற ஈசாக் கின் கேள்வி வெகுளித்தனமானதன்று. அவ ரது தந்தை வழிநடத்திச் செல்லும் பயணம்

அசாதாரணமானது என்பதை சிறுவன் உய்த்து ணர்ந்திருப்பதைக் காட்டுவதாக அமைந்துள்ளது. ஆகவே ஈசாக்கு தன்னைப் பலியிடுவதற்காகப் பயன்படுத்தப் போகும் விறகுக் கட்டைகளைச் சுமந்து கொண்டு கீழ்ப்படிதலோடு நடந்து செல்வதாக காட்டப்படும் காட்சியானது, பழைய ஏற்பாட்டில் கிறிஸ்துவின் மனநிலையை படம் பிடித்துக் காட்டுகின்ற நிகழ்ச்சிகளாகக் கருதப்படுகின்ற காட்சிகளில் முதல் தரத்தில் வைத்து மதிக்கப்படுகின்றது.

ஆபிரகாம் கொண்டிருந்த உறுதியான நம்பிக்கையினால் தனது மகனை இரண்டாம் முறை கொடையாகப் பெறுகின்றார் (ஆதி 21:1-3). ஆபிரகாமின் முந்தைய அவிசுவாசத்தோடு ஒப்பிடும் போது, ''ஈசாக்கு'' என்ற கொடை பொருள் பொதிந்ததாகும். ஏனெனில், அது இறைவனின் அசைக்கமுடியாத பற்றுறுதியை எடுத்துக்காட்டுகிறது.

4. ஈசாக்கும் ரெபேக்காளும் (24:62-67):- ஆபிரகாம் முதிர்ந்த வயதினராய் இருந்த பொழுது தனது நம்பிக்கையுள்ள பணியாளன் ஒருவனை ஆரான் பகுதிக்கு அனுப்பி, அங்குள்ள தனது உறவினர்களின் பெண்களில் ஒருத்தியை ஈசாக்கிற்கு மனைவியாக அழைத்து வருமாறு அனுப்புகின்றார் (ஆதி 24:1-61). இதன்மூலம் அவர் சமயத்தின் தூய்மையைப் பேணிப் பாதுகாக்க வேண்டும் என்று விரும்புகின்றார். மேலும் ஈசாக்கிற்குக் கானானியப் பெண்களை மணப்பதற்கான வாய்ப்பினையும், வாக்களிக்கப்பட்ட நாட்டை விட்டு வெளியே செல்வதற்கான வாய்பினையம் இச்செயலின் மூலம் தடுத்து நிறுத்துகின்றார்.

ஆபிரகாம் அனுப்பிய பணியாளன், பெத்துவேலின் மகளும், லாபானின் தங்கையுமாகிய ரெபேக்கா என்பவளை அழைத்து வந்தான். ஈசாக்கு அவளை மணந்து கொண்டார்.

5. ஏசா, யாக்கோபு ஆகியோரின் பிறப்பு (ஆதி 25:19-28):- சாராவைப் போன்று ரெபேக்காவும் மலடியாக இருக்கின்றாள். ரெபெக்காவின் மலட்டுத்தன்மை யாவேயின்மேல் கொண்டிருக்கும் விசுவாசத்தை சோதித்துப் பார்ப்பதற்கான வழிபோல் தோன்றுகின்றது. ஆனால், ஈசாக்கு மனம் சோர்ந்து விடாமல் தனது மனைவிக்குப் பிள்ளைப்பேறு அளிக்குமாறு இறைவனிடம் மன்றாடுகின்றார். அவரது மன்றாட்டு கேட்கப்பட்டு (ஆதி 25:21) ரெபேக்கா ஏசா, யாக்கோபு என்ற இரண்டு பிள்ளைகளைப் பெற்றெடுக்கின்றாள். வயிற்றில் இருக்கும் போதே போரிட்டுக் கொண்டிருந்தது இந்த இருவரின் எதிர் காலம் பற்றி ஆண்டவரின் திருவுள்ளமானது என்ன என்று அறிவிக்கப்பட்டபொழுது வாக்குறுதி புதுப்பிக்கப்படுகின்றது.

மேலும் குழந்தை பிறக்கும் பொழுது மூத்தவனின் காலை, இரண்டாவது புதல்வன் பிடித்துக் கொண்டு பிறந்ததால் கடவுள் அளித்த வாக்குறுதியின்மட்டில் மீண்டும் அச்சம் ஏற்படுகிறது. பெற்றோரின் மாறுபட்ட அன்பும் இந்த அச்சத்தை மேலும் வலுப்படுத்துகிறது. ஈசாக்கு வேட்டைக்காரனான ஏசாவையும், ரெபேக்கா அமைதியான யாக்கோபையும் அன்பு செய்தனர் (ஆதி 25:28).

6. ஈசாக்கும், அபிமெலக்கும் (ஆதி 26):- ஈசாக்கு தனக்கும் அபிமெலக்குக்கும் இடையே ஏற்பட்ட தொடர்புகளில் மட்டும் தான் தனித்து நின்று செயல்படுபவராக காட்டப்படுகின்றார். மற்ற நிகழ்ச்சிகளைப் பொறுத்தவரையில் தந்தை அல்லது மனைவியின் சொல்படி செயல்படுகின்றார். இந்நிகழ்ச்சியில் ஈசாக்கு ஆசீர்வதிக்கப்பட்ட மனிதராகக் காட்டப்படுகின்றார்.

நாட்டில் பஞ்சம் உண்டானபொழுது ஈசாக்கு அபிமெலக்கின் ஆட்சிப் பகுதியாகிய கெரார் நாடு செல்கின்றார். அப்பொழுது ''ஆண்டவர் அந்நாட்டிலே குடியிரு. நாம் உனக்குத் துணையாயிருப்போம்; உன்னை நாம் ஆசீர்வதிப்போம் என்கின்றார்'' (ஆதி 26:3). ரெபேக்காவின் அழகை முன்னிட்டு தனக்கு ஏற்படும் தீங்கினை நினைத்து ஈசாக்கு அஞ்சியபொழுது, கடவுளின் பாதுகாப்பால் அந்த அச்சம் நீக்கப்படுகின்றது (26:6-11). ஈசாக்கு அந்த நாட்டிலே விதை விதைத்தார். ஆண்டவர் அவரை ஆசீர்

வதித்தபடியால் நூறுமடங்குப் பலனை பெற்றார். செல்வமுள்ளவராகவும், செல்வாக்கு உள்ளவராகவும் திகழ்ந்தார் (26:12-13). இவ்வாறு வலிமையுடையவராக வளர்ந்ததால் அபிமெலக்கு ஈசாக்கை நாட்டை விட்டு போகும்படி வேண்ட அவரும் புறப்பட்டு போய் கெரார் பள்ளத்தாக்கில் குடியேறினார். அந்தப் பள்ளத்தாக்கில் கிணறு ஒன்றை வெட்ட அதிலிருந்து நீரூற்று ஒன்று சுரந்தது (26:17-22).

பின் ஈசாக்கு பெயேர்-செபாவுக்குச் சென்றபொழுது யாவே அவருக்குத் தோன்றி 'உன் தந்தை ஆபிரகாமின் கடவுள் நாமே' என்று கூறி அவரை ஆசீர்வதிப்பதாக வாக்களிக்கின்றார். ஈசாக்கு அங்கே ஒரு பீடத்தை எழுப்பி இறைவனைத் தொழுதார் (26:23-25). மேலும் அபிமெலக்கும் அவரது உற்ற நண்பர்களுடன் ஈசாக்கிடம் வந்து, அவர் ஆண்டவரால் ஆசீர்வதிக்கப்பட்டவர் என்பதை அறிந்து கொண்டு அவரோடு உடன்படிக்கை செய்து கொள்ளத் தீர்மானித்திருப்பதாகக் கூறுகின்றார்.

7. ஈசாக்கு யாக்கோபை ஆசீர்வதித்தார் (ஆதி 27):- ஈசாக்கின் வாழ்க்கையில் இந்நிகழ்ச்சி மிகவும் மனத்தை உருக்கும் முக்கியமானதொன்றாகக் கருதப்படுகின்றது. மிகுந்த கலைப்பண்போடும், ஆற்றலோடும், இக்கதை யாவே பாரம்பரியத்தால் எடுத்துக் கூறப்படுகிறது. ஈசாக்கு தனது மூத்த மகனை ஆசீர்வதித்து பிறப்புரிமை வழங்க விரும்புகின்றார். இருப்பினும் தனது தாயினால் ஊக்குவிக்கப்பட்ட உற்சாகப்படுத்தப்பட்ட இளையமகன் தந்திரமாக நடித்து ஈசாக்கின் ஆசிரையும் பிறப்புரிமையும் பெற்று விடுகின்றார்.

தனக்கு அளிக்கப்பட வேண்டிய ஆசிரை யாக்கோபு பெற்றுச் சென்று விட்டதை அறிந்தவுடன் ஏசா அலறி, ஏங்கித் தன்னையும் ஆசிர்வதிக்குமாறு தந்தையிடம் வேண்டுகிறார். இருப்பினும் யாக்கோபிற்கு அளிக்கப்பட்ட ஆசிரை திரும்பிப் பெற இயலாது என்பதால் ஈசாக்கு மனம் உருகி ''நீ உன் வாளினாலே வாழ்க்கை நடத்தி உன் தம்பிக்கு பணிபுரிவாய், ஆனால் ஒரு காலத்தில் அவனது அதிகாரத்தை உதறித்தள்ளிவிடுவாய்'' என்று ஆசிரளிக்கின்றார் (27:40).

ஏசா அவனது சகோதரன் மேல் வெறுப்புக் கொண்டு அவனைக் கொலை செய்வதற்காக வழிதேடுகின்றார். யாக்கோபு வாக்களிக்கப்பட்ட நாட்டிலிருந்து ஓடி விடுகின்றார் (27: 41-45). தன் தாயை மீண்டும் பார்க்கவில்லை.

8. ஈசாக்கின் இறப்பு (ஆதி 35:27-29):- ஈசாக்கிற்கு 180-வது வயது நடக்கும் பொழுது கெபிரோனில் இறந்து விடுகின்றார். பின் மக்கபேலாவிலுள்ள குகையில் தனது புதல்வர்களால் அடக்கம் பண்ணப்படுகின்றார். இக்குகையில்தான் ஆபிரகாம், சாரா, ரெபேக்கா போன்றவர்களும் அடக்கம் பண்ணப்பட்டனர் (35:27-29; 49:32). ''முதுமையும் ஆயுள் நிறைவும் உள்ளவராய்'' (35:29) என்ற பதம் அவர் வாழ்வில் பெற்ற ஆசீர்களின் சான்றாய் உள்ளது.

''ஆபிரகாமின் கடவுள், ஈசாக்கின் கடவுள், யாக்கோபின் கடவுள்'' (யாத் 3:6.15-16) ''ஈசாக்கின் பயபக்தி'' (ஆதி 31:42) போன்ற சொற்றொடரில் இஸ்ராயேல் பாரம்பரியத்துக்கு ஈசாக்கின் முக்கியத்துவம் அடங்கியிருக்கிறது. ஆமோ 7:9 ஈசாக்கு வட அரசைக் குறிக்க, இஸ்ராயேலுக்கு இணையாகப் பயன்படுத்தப்படுகிறது.

III. புதிய ஏற்பாட்டில் ஈசாக்கு:-

ஆதியாகம கதையினைப் பொறுத்தவரையில் ஈசாக்கைப் பலியிட அழைத்துச் செல்லும் நிகழ்ச்சிதான் புதிய ஏற்பாட்டில் தெளிவாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஆபிரகாம் தன் ஒரே புதல்வனைப் பலியிடப் போகும் நிகழ்ச்சிக்கும், கிறிஸ்துவின் பலிக்குமிடையே உள்ள தொடர்பினை பவுல் விளக்கவில்லையென்றாலும் 'நாமும் ஈசாக்கைப் போல வாக்குறுதியின் பிள்ளைகள்' (கலா 4:28; உரோ 9:6-13) என்று நினைவுறுத்துகின்றார். இறப்புவரைக்கும் ஈசாக்கு பணிந்திருந்ததுபோல, கிறிஸ்துவும் தந்தையின் திருவுளத்துக்குப் பணிந்து தம்மையே பலியாக்கினார். தம்மை வழங்குகின்ற இந்த ஒப்பற்ற பலியில் பங்கு கொள்ள கிறிஸ்தவர்கள் ஒவ்வொருவரும் அழைக்கப்பட்டிருக்

கின்றனர். ஈசாக்கின் பலி கிறிஸ்துவுக்கு ஒரு அடையாளம். அப்பலியை முழுமையாக நிறைவேற்றிக் காண்பித்தவர் கிறிஸ்துவே; ஈசாக்கின்பலி கிறிஸ்தவர்களுக்கு ஒரு அடையாளம்; ஏனெனில் அவர்களே ஆவியில் ஆபிரகாமின் வித்துக்கள். இத்தகைய கருத்தினை ஆதி திருச்சபை விரிவாகப் போதித்து வந்திருக்கின்றது.

**ஈசாக்கின் ஏற்பாடு** (TESTAMENT OF ISAAC)

ஒருவேளை கி.மு. முதலாம் நூற்றாண்டில் எழுதப்பட்ட ஒரு பழைய ஏற்பாட்டு போலி வாழ்க்கை நூலாகும். இதை கி.பி.2-ஆம் அல்லது 3-ஆம் நூற்றாண்டுக் கிறிஸ்தவர்கள் மாற்றி அமைத்தனர். ஆனால் அதன் மூலத் தன்மையைப் பாதுகாத்தனர். இது கும்ரான் குழுவின் போக்கை ஒத்திருக்கிறது. நோன்பு, சடங்கு, ஒழுக்கத் தூய்மை ஆகியவை வலியுறுத்தப்படுகின்றன.

**ஈசாய்** - (JESSE)

இப்பெயர் அபிசாய் என்ற பெயரின் சுருக்கமாகலாம். இவர் யூதா இனத்தவரும் பேரேசின் வழித்தோன்றலும் போவாசு, ரூத் ஆகியோரின் பேரனும், ஓபேத்தின் மகனும், அரசன் தாவீதின் தந்தையுமாவார் (ரூத் 4:21-22; மத் 1:5-6; லூக் 3:31-32).

ஈசாய் யூதா இனத்தைச் சேர்ந்த ஒரு நிலக்கிழார். பெத்திலகேமின் பெரியோர்களில் ஒருவர் (1 சாமு 16:4-5). இவருக்கு ஏழு புதல்வர்கள் இருந்தனர் என்று கூறப்பட்டாலும் நான்கு பேரின் பெயர்கள்தான் கொடுக்கப்பட்டிருக்கின்றது. அவர்களில் கடைசியானவர் தாவீது ஆவார் (17:12-14; 1 நாள் 2:13-15). சவுலின் அரசவைக்கு தாவீது அழைக்கப்பட்டபோது, ஈசாய் அரசனுக்கு அன்பளிப்பு அனுப்பி வைத்தார் (1 சாமு 16:20). பிற்காலத்தில் சவுலிடமிருந்து தப்பியோடி தாவீது அகதியாகத் திரிந்தபோது, ஈசாயும் அவரது வீட்டாரும் அதுல்லாம் குகையில் தாவீதோடு சேர்ந்து கொண்டனர். அவர்களை அவர் பாதுகாப்பிற்காக மோவாபுவுக்கு அனுப்பி வைத்தார் (22:1-4). இந்நிகழ்ச்சி மோவாபிய பெண்ணான ரூத்தின் வழியாகத் தாவீது குடும்பம் தோன்றியது என ரூத் 4:21-தொ-இல் கூறப்படும் பாரம்பரியத்தோடு ஒத்துப் போவதோடு, நெருங்கிய உறவையும் சுட்டுகிறது. தாவீது ''ஈசாயின் மகன்'' என்று நகைப்பாக அழைக்கப்பட்டாலும் (22:7-9; 1 அர 12:6), அதுவே வணக்கத்திற்குரியதாக மாறியது (1 நாள் 29:26; அ.ப.1 3:22). மெசிய அரசன் ''ஈசாயின் தளிர்'' என்றழைக்கப்படுவது அவர் தாவீதின் வழித்தோன்றல் என்பதைக் குறிக்கிறது. இப்பதம் இறைவனது வாக்குறுதிகள் மெசியாவில் நிறைவேறுதலின் அடையாளமாயிற்று (ஏச 11:1-10; உரோ 15:12).

**ஈசி** (ISHI) - இறைவனின் பெயர்

இஸ்ராயேலோடு இறைவன் கொண்டிருந்த உடன்படிக்கையை எடுத்துக் காட்டும், இறைவனுக்குச் சாற்றிக் கூறப்படும் அடையாளப் பெயராகும் (ஓசே.2:18). இதை சில வாசகங்கள் ''என் கணவன்'' என்று மொழிபெயர்க்கின்றன. புறவினத்தாரைப் போன்று ''பாகால்'' என்று இறைவனை அழைக்காமல், மீட்பின் நாளில் இஸ்ராயேலர்கள் இறைவனை இப்பெயர்கொண்டு அழைப்பர்.

**ஈசி** (ISHI - இறைவன் காப்பாற்றி விட்டார், நலம் தருகின்றன) - ஆள்

1. யூதா இனத்தைச் சேர்ந்த எரகுமேல் குலத்தைச் சேர்ந்த ஒருவர். அப்பாயிமின் மகன் (1 நாள் 2:31).

2. யூதா இனத்தவருள் ஒருவர். சோகேத்து, பென்சோகேத்து ஆகியோரின் தந்தை (1 நாள் 4:20).

3. சிமியோனின் வழித் தோன்றல்களில் ஒருவர். இவரின் புதல்வர்கள் அமலேக்கியரைச் சேயீர் மலையில் தோற்கடித்து, அங்கு குடியேறினர் (1 நாள் 4:42-43).

4. மனாசேயின் பாதிக் கோத்திரத்தாரின் குடும்பத் தலைவர்களில் ஒருவர் (1 நாள் 5:24). இக்குடும்பம் யோர்தானுக்கு அப்பாலுள்ள பகுதியைக் கொண்டிருந்தது.

**ஈசோப்பு அல்லது ஏசோப்பு** (HYSSOP)

ஈசோப்பு என்பது சீரிய நாட்டு மணப்பூண்டுச் செடி என்றும் கூறப்படும் ஒருவகை

சிறிய புதர்ச்செடியாகும். யோவா 19:29-இல் இது குறிக்கப்படுவதால், இது எத்தகைய செடி என்பது பற்றி பல நூற்றாண்டுகளாக விவாதங்கள் நடந்துள்ளன. கிரேக்க சொல் லின் பொருள் முழுமையாக கூறப்படாவிட் டாலும் இது இன்னும் பதினொரு இடங்க ளில் குறிக்கப்படுவதால், அதன் பொருளைக் கண்டுபிடிப்பது அதிக கடினமானதன்று. இது நீல நிற மலர்களுடன் தென் ஐரோப் பிய நாடுகளில் காணப்படும் செடிஅன்று, ஏனெனில் இது பாலஸ்தீன நாட்டைச் சேர்ந் ததன்று.

முதல் பாஸ்காவின் போது, பலியிடப் பட்ட செம்மறியாட்டின் இரத்தத்தை எபி ரேய வீடுகளின் வாசலின் மேற்புறத்தில் பூச ''ஈசோப் கொத்து'' பயன்பட்டதாகக் குறிக் கப்பட்டிருப்பது *(யாத் 12:22)*, மற்ற பல குறிப்புகளுக்கு அடிப்படையாக இருக்க லாம். தொழுநோயை தூய்மைப்படுத்துவது பற்றிய லேவியர் சடங்குகளில் *(லேவி 14:4. 6.49. 51-52)*, செங்கிடாறி சடங்கு *(எண் 19:6. 18)* ஆகிய சடங்குகளில் கேதுருக் கட்டை மற்றும் சிவப்பு நூல் ஆகியவற்றுடன் ஈசோப்பும் குறிப்பிடப்படுகிறது. லேவியர் சட்டத்தில் இவை மூன்றும் சேர்ந்து பலி பறவையின் இரத்தத்தில் தோய்க்கப்பட்டு தொழுநோயிலிருந்து தூய்மைப்படுத்தப்பட வேண்டிய மனிதன் அல்லது வீட்டின்மீது ஏழுமுறை தெளிக்கப்பட்டது. செங்கிடாறிச் சடங்கில் பலியிடப்படும் செங்கிடாறியுடன் சேர்த்து இவைமூன்றும் எரிக்கப்பட்டன.

அரசராகம ஆசிரியர் சாலமோனைப்பற்றி கூறும்போது, ''கேதுருவிலிருந்து... சுவரிலி ருந்து கிளம்பும் ஈசோப்புவரை மரங்களைப் பற்றி பேசினார்'' *(1 அர 4:33)* என்கிறார். இச்சொற்றொடர் மிகப்பெரிய மரத்திலி ருந்து மிகவும் தாழ்ந்த புதர்ச் செடிவரை அனைத்து மரவகைகளையும் குறிப்பிடுகின் றது. தாவீதுக்குரியதாக கூறப்படும் மன் னிப்பு சங்கீதத்தில், தூய்மைப்படுத்தும் சடங் கில் ஈசோப்பினை அடையாள உபயோக மாக அரசர் குறிப்பிடுகிறார் *(ஈசோப்பினால் என்னை தூய்மையாக்கும் சங் 50:7)*.

மோசே சீனாய் மலையின் மேல் பழைய உடன்படிக்கையைப்பற்றி வாசித்த பின்னர் *(யாத் 24:6-8)* செந்நிற கம்பளி மற்றும் ஈசோப்பினால் இரத்தத்தினையும் நீரையும் மக்கள்மீதும் புத்தகத்தின்மீதும் தெளித்து முத்திரையிடுவதையும் பற்றி எபி 9:19 குறிப் பிடுகிறது. ஆனால், பழைய ஏற்பாட்டுப் பகுதி ஈசோப்பினைப்பற்றி ஒன்றுமே குறிப் பிடவில்லை.

*மத் 27:48; மாற் 15:36* ஆகிய பகுதிகள் கோலினைப்பற்றி குறிப்பிட்டாலும், யோவா 19:29-இன் படி சிலுவையில் இயேசு விற்கு காடியினை அளிக்க ஈசோப்பு உபயோ கிக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. ஈசோப்பு இந்நிகழ்ச்சியில் பொருத்தமுடையதாகத் தெரியவில்லை. ஆகவே அறிஞர்கள் பல வாறு விளக்கம் அளிக்க முயன்றுள்ளனர். இப்பகுதியில் ஈசோப்புக்குப்பதிலாக ஈட்டி அல்லது வேல் என்ற சொல்லை அரமேயிக் மொழிபெயர்ப்பு பயன்படுத்துகிறது. இது, மத்தேயு, மாற்கில் வரும் கோல் என்ற சொல்லோடு ஒத்துப்போகிறது. யோவான் கையாண்ட முறை உள்நோக்கமுடையதாக வும், உருவகப் பொருளுடையதாகவும் இருக்கக்கூடுமா?

பழைய ஏற்பாட்டு மீட்பு இறையியலில் ஈசோப்பு ஒரு இணைந்த பங்கு வகித்தது. இங்கு அது இயேசுவினுடைய மரணத்தின் பலித்தன்மையைச் சுட்டலாம். மற்றொரு கருத்தின்படி ஈசோப்பும் கடற்காளானும் கோலில் வைக்கப்பட்டன. இதன்விளை வாக, ஈசோப்பு இவைகளின் குளிர்விக்கும் செயல் சேர்க்கப்படுவதால், அது குறிப்பிடப் பட்டிருக்கலாம்.

**ஈத்தாய்** (ITHAI - *யாவேயோடு)*

பென்யாமின் இனத்திற்குரிய கிபயாவைச் சேர்ந்த இரிபாயின் மகன் ஈத்தாய் ஆவார். தாவீதின் வலிமை மிக்க 30 படை வீரர்களுள் இவரும் ஒருவர் *(1 நாள் 11:31)*. இந்த வாசகத்திற்கு இணையான பகுதியில் இத் தாய் (2) என்றழைக்கப்படுகிறார் *(2 சாமு 23:29)*.

**ஈத்தியேல்** (ITHIEL - *இறைவன் என்னோடு இருக்கிறார்)*

1. பென்யாமின் குலத்தைச் சேர்ந்த சல்லு வின் வழி மூதாதையர். நாடுகடத்தப்பட்டுத்

திரும்பியபின் இவர் எருசலேமில் வாழ்ந் தார் (நெக 11:7).

2. இவர் பழமொழி 30:1-இல் சொல்லப்ப டுகின்ற இருவரில் ஒருவர். மற்றவர் உக்கால் என்பவராவார். இவர்களைப் பார்த்து யாக் கேயின் மகனான ஆகூர் தனது ஞான உரையை வழங்குகிறார். ஏழுபது நூலும் வுல்கத்தாவும் மேற்கண்ட இரு பெயர்களை யும் ஆட்களின் பெயராக எடுத்துக் கொள்ள வில்லை. அதற்குப் பதிலாக, பலவாறான மொழி பெயர்ப்புகள் அளிக்க முயற்சிகள் எடுக்கப்பட்டுள்ளன.

**ஈட்டி**

இது ஒரு கூரிய எறியும் கருவியாகும். யோவாபு மூன்று ஈட்டிகளை அபிசலோமின் இதயத்தில் பாய்ச்சிக் கொன்றார் (2 சாமு 18:14).

1 மக் 6:51-இன்படி இக்கருவி இயந்திரத்தி லிருந்து எறியப்பட்டது. இது எரியக்கூடிய பொருளுடன் பிணைத்து கொளுத்தப்பட்டு எறியப்பட்டது (எபே 6:16 - தீக்கணை).

**ஈட்டுத்தொகை, மீட்புப் பணம்**

அடிமைப்பட்ட ஒருவனை அல்லது எக்கா ரணத்தினாலே ஒரு குறிப்பிட்ட நிலைக்கு ஆட்பட்டவனை அந்நிலையிலிருந்து மீட்க, விடுவிக்க, அவனது சுதந்திர நிலையை மீண் டும் அடையத் தரப்படும் விலையே அல்லது பணமே ஈட்டுத்தொகை, அல்லது மீட்புப் பணம் (யாத் 21:30; 1 சாமு 14:45; யோபு 33:24; 36:18-19; சங் 49:7-9; பழ 6:35; ஏச 43:3; எரே 31:11). இயேசு வாழ்ந்த வாழ்க்கை யும், அவரது துயரமும், சிலுவைச் சாவும் நாம் பாவம், சாவு, சட்டம் ஆகியவற்றி னின்று விடுதலைபெற அளிக்கப்பட்ட விலையாகும் (மத் 20:28; மாற் 10:45; 1 திமோ 2:6; காண்க ஏச 52:13-53:12).

**ஈயம்**

நீலமும், சாம்பல் நிறமும் கலந்த உலோ கப் பொருளாகும். இப்பொருள் கனமானது, எளிதில் வளையக்கூடியது, நிறம் மங்கிப் போகக்கூடியது.

ஈயம் கனமான உலோகமாகக் கருதப்பட் டது (சீரா 47:18-20). உலோகப் பொருள்க ளின் பட்டியலில் ஈயமானது கடைசியாகக் குறிப்பிடப்பட்டுள்ளது (எண் 31:22; எச 22:18.20). சீராக்கு நூல் 22:14-இல் இதற்கு அறிவற்றவன் அல்லது மூடன் என்று பெயரி டப்பட்டிருக்கிறது. எப்படியிருப்பினும் இது ஒரு முக்கியமான உலோகமாகும். மேலும் ஈயத்தோடு வெள்ளியை சேர்த்து மட்கலத்தி னுள் இட்டு உருக்கப்பட்டு தூய்மையான வெள்ளிபோக, மற்றவைகள் நீக்கப்படுகின் றன (எரே 6:27-30). ஈயமானது எடைகுண்டு கள், மீன் வலையில் இணைக்கப்பட்டுள்ள குண்டுகள் (யாத் 15:10), தூக்கு நூல் குண்டு கள், கனமான மூடிகள் (செக் 5:7-8) தயாரிக் கப் பயன்படுகின்றது. எகிப்து, பாலஸ்தீனா நாடுகளில் நடத்தப்பட்ட ஆராய்ச்சிகளில் ஈயத்தால் செய்யப்பட்டிருந்த சிலைகள் கண் டெடுக்கப்பட்டன. இரும்பு எழுத்தாணி யால் பொறிக்கப்பட்ட ஈயப்பலகைகளுக்கு அல்லது பாறைகளில் வெட்டப்பட்ட எழுத்து வடிவங்களில் ஊற்றப்பட்ட ஈயத்திர வத்திற்கு யோபு ஆகமம் 19:24-இல் குறிப்புக் காணப்படுகிறது. ஆமோ 7:7-8-இல் 'தூக்கு நூற்குண்டு' என்று மொழிபெயர்க்கப்படும் எபிரேயச் சொல் 'ஈயத்தைக்' குறிக்கலாம்.

தீர் நாட்டில் வெள்ளீயம், காரீயம் போன்ற உலோகப் பொருட்கள் விற்கப்பட்டன (எச 27:12). சிறிய ஆசியாவில் ஈயச்சுரங்கங்கள் காணப்பட்டன. கி.மு.3400-க்கு முன்னால் ஈயக்கலவையானது எகிப்தில் கண் மையாக பயன்படுத்தப்பட்டு வந்தது.

**ஈயிம்** (IYIM)

இயே-அபாரிம் என்ற பெயரின் சுருக்கமா கும் (எண் 33:45).

**ஈரா** (IRA - கவனிப்புள்ள)

1. மனாசே இனத்தைச் சேர்ந்த யாயீர் வழி வந்தவர். இவர் தாவீதின் குருவாக இருந்த அதிகாரிகளில் ஒருவர் (2 சாமு 20:26). இப்ப தவி குருத்துவத்தன்மையைக் கொண்டிருக்க வில்லை. இதைப் போன்ற தாவீதின் அலுவ லர்கள் பட்டியலில் (2 சாமு 8:18) குருவின் அலுவல் அரசர் பணியில் முதலிடங்களை வகிப்பதாகும் என்று கூறப்பட்டுள்ளது (1 நாள் 18:17).

2. இக்கேசின் மகன். தெக்கோவா ஊரைச் சேர்ந்தவர். தாவீதின் வல்லமை மிக்க படை வீரர்களில் ஒருவர் (2 சாமு 23:26; 1 நாள்

*11:28)*. தாவீதின் படையில் ஆறாவது மாதத்திற்குப் பொறுப்பான பிரிவிற்கு இவர் தலைவனாய் இருந்தார் *(1 நாள் 27:9)*.

*3.* இதிரியரான இவர் தாவீதின் வலிமை மிக்க *30* வீரர்களில் ஒருவர் *(2 சாமு 23:38; 1 நாள் 11:40)*. இவரை யாயீரியர் என்றழைக்கும் சில பழங்கால வாசகங்களின் அடிப்படையில் *1*-இல் மேலே குறிக்கப்பட்டவராக இருக்கலாம்.

**ஈராது** (IRAD - வேகமான)

யாவே பாரம்பரியப்படி காயின் வழித்தோன்றல்களில் பெருவெள்ளத்திற்கு முற்பட்ட காலத்தைச் சேர்ந்த மூதாதையரில் ஒருவர். காயினின் பேரனும் ஏனோக்கின் மகனும் ஆவார். இவர் மெகுயாவேலின் தந்தையாவார் *(ஆதி 4:18)*. ஆதி *5:15-20*-இல் வரும் யாரேத்தும் இவரும் ஒருவராகக் கருதப்படுகின்றனர்.

**ஈராம்** (IRAM - விழிப்புள்ள)

ஏதோம் இனத்தில் குலமுதல்வர்களில் ஒருவர் *(ஆதி 36:43; 1 நாள் 1:54)*.

**ஈரி** (IRI - கவனிப்புள்ள)

இவர் பென்யாமின் குலத்தைச் சேர்ந்தவர் *(1 நாள் 7:7)*. ஒரு வேளை ஈரி என்பதும் ஈர் என்பதும் ஒரே பெயராக இருக்கலாம்.

**ஈரு** (IRU - கவனிப்பவன்)

யூதா குலத்தினரின் தலைமுறைப் பட்டியலில் குறிப்பிடப்பட்டுள்ள எப்புன்னேயின் வழிவந்த காலேபின் புதல்வர்களில் ஒருவர் *(1 நாள் 4:15)*.

**ஈரோன்** (YIRON)

நப்தலி இனப் பகுதியிலுள்ள நன்கு பாதுகாப்புடைய நகரமாகும் *(யோசு 19:38)*. இது ஒரு வேளை இக்கால யாரூனாக இருக்கலாம்.

**ஈர்** (IR - கழுதைக் குட்டி, காவலாளி)

பென்யாமின் இனத்தைச் சேர்ந்தவர் *(1 நாள் 7:12)*. *1* நாள் *7:7*-இல் குறிப்பிட்டிருக்கும் உராயி (ஈரி) என்பவரும் இவரும் ஒரே ஆளாக இருக்கலாம்.

**ஈர்சேமேசு** (IR-SHEMESH - சூரியன் நகரம்)

தாண் இனத்தவருக்கு அளிக்கப்பட்ட கானானிய நகரம் *(யோசு 19:41)*. தாண் இனத்தவர் வெல்ல முடியாத கார்-கரேசு நகரமாக இருக்கலாம் *(1:35)*. மற்ற இடங்களில் பேத்துசெமேசு *(1)* என்றழைக்கப்படுகிறது. இவ்விடம் தேல்-ஏர்-ரூமெயிலே என்று அடையாளம் காட்டப்படுகிறது.

**ஈர்நாகாசு** (IR-NAHASH - பாம்பின் நகரம்)

இப்பெயர் நகரையா அல்லது ஆளையா குறிக்கிறது என்பது தெளிவாக இல்லை. யூதா குலத்தினர் வாழ்ந்த ஒரு நகரம். இது எங்கிருந்தது என்பது தெரியவில்லை *(1 நாள் 4:12)*. *1* நாள் *4:14*-இல் ''தொழிலாளிகளின் பள்ளத்தாக்கு'' பற்றி குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதிலிருந்து இப்பகுதி எழுதப் பெற்ற காலத்தைக் கணித்துக் கொள்ளலாம் (காண்க நெக *11:35)*. அப்படியானால், இந்நகரம் பென்யாமின் நாட்டில் எருசலேமுக்கு வடக்கே இருந்திருக்க வேண்டும்.

பெயித் கிப்ரினுக்கு அருகில் உள்ள தெயிர் நாகாஸ்தான் இந்நகரம் என்று சிலர் கூறுவதை நாம் புறக்கணிக்க முடியாது. ஆனால் இந்நகரம் அராபாவிற்கு வட எல்லைக்கருகிலுள்ள கிர்பெத் ஏன்-நாகாஸ் தான் என்று கூறுவது அநேகமாக தவறானதாகும்.

*1* நாள் *4:12*-இல் யூதாவைச் சேர்ந்த தெனின்னா ஈர்நாகாசின் தந்தையராக அல்லது நிறுவியவராக விவரிக்கப்படுகிறார்.

**ஈர்ப்பேல்** (IRPEEL - இறைவன் குணமளிக்கிறார்)

பென்யாமின் குலத்தாருக்குக் கொடுக்கப்பட்ட ஒரு நகரம் *(யோசு 18:27)*. இதனோடு குறிப்பிடப்பட்டிருக்கும் மற்ற நகரங்களிலிருந்து, இந்நகர் எருசலேமிற்கு வட மேற்கில் உள்ள மலைப் பகுதியில் அமைந்திருந்தது என்பது தெளிவாகிறது. இந்நகர் அநேகமாக எருசலேமிலிருந்து வடமேற்காக *10.5* கி.மீ. தொலைவிலும், கிபயோனுக்கு வடக்கிலும் அமைந்துள்ள இக்கால ராபாத் நகரமாக இருக்கலாம்.

**ஈலாய்** (ILAI - உயர்த்தப்பட்ட)

அகோகியரான ஈலாய் தாவீதின் வலிமை மிக்க *30* படைவீரர்களுள் ஒருவராவர் *(1 நாள் 11:29)*. *2* சாமு *23:28*-இல் இவர் சல்மோன் என்று அழைக்கப்படுகின்றார்.

வரைபடம் 1

# முதுபெரும் தந்தையர் காலத்து விவிலிய உலகு

(கி. மு. 2000 – 1600)

## ஆபிரகாமின் அழைப்பும் பயணமும்

காஸ்பியன் கடல்
அராரத்து
கோமேர்
இத்தியார்
மத்தியதரைக்கடல்
தோகருமா
கர்க்கமிசு
ஆரான்
நினிவே
அசிரியா
காலாகு
அசூர்
மெசபொத்தாமியா
யூப்பிரடீசு நதி
ஆலெப்போ
உகரித்து
அமாது
பிபுலோசு
சீரியா
ததிமோர்
மாரி
திகிரிசு நதி
மதாய்
அக்காது
சீதோன்
தமஸ்கு
ஆசோர்
மெகிதோ
கானான்
செக்கேம்
அம்மோன்
சோவான்
பெத்தேல்
ஆயி
எருசலேம்
கெரார்
சாலேம்
கெபிரோன்
மம்ரே
லோத்து
பெயேர்-செபா
ஏதோம்
பாபிலோனியா
பாபிலோன்
ஏலாம்
ஊர்
பாரசீக வளைகுடா
லிபியா
பிரமிடுகள்
கெலியோப்பொலி
நைல் நதி
எகிப்து
சீனாய்
மிதியான்
அரேபியா
பாலைவனம்
தேதான்
செங்கடல்
குஷ்
0 100 200 300 400 500
கி. மீ.


மத்தியதரைக்கடல்
நைல் டெல்டா
நாணல் கடல்
நாணல் கடல்
இராம சேசு (தானிசு)
பாகால் செபோன்
கோசேன்
சொக்கோத்
பித்தோம்
கசப்பு ஏரிகள்
நூர் பாலைவனம்
கெலியோபொலி
மெம்பிசு
எகிப்து
நைல் நதி
விடுதலைப் பயணத்தின் நடம்
சூயெஸ் வளைகுடா
பாரான் வனாந்தரம்
சின் பாலைவனம்
தொபிகா
பாரான்
இரபிதிம்
சீனாய் மலை (ஓரேபு)
சீனாய் தீபகற்பம்
ஆசெரோத்
செங்கடல்
அக்கபா வளைகுடா
மீதியான்
ஏலாத்து
திமினா
ஏதோம்
காதேசு பார்னேயா (மெரிபா)
அசிமோன்
யக்கான்
சின் வனாந்தரம்
ஒபோத்து
பூனோன்
கோர்மா
பெயேர்-செபா
கானான்
பெலிஸ்திய சமவெளி
கெபிரோன்
அராது
எரிகோ
சாக்கடல்
எசிபோன்
நெபோ மலை
மேதபா
தீபோன்
ஆரு
ஆர்னோர்
மோவாபு
இஸ்ராயேல் மக்களின் விடுதலைப் பயணம்
(அறிஞர்களின் பொதுவான கருத்துப்படி)
0 20 40 60 80 100
கி.மீ.



கானான் நாடு
(இஸ்ராயேலின் 12 கோத்திரங்கள் வாழ்ந்த நிலப்பகுதிகள்)
Scale : 1,700 000
0 5 10 20 40
சீதோன்
சீரியா
தமஸ்கு
லெபனோன் மலை
எர்மோன் மலை
சீதோனியர்
தீர்
தாண்
காதேசு
காசோர்
ஆக்கோ
மேரோம் ஏரி
யோர்தான் நதி
8
6
வ
பாசான்
10
கின்னரோத் ஏரி
கோலான்
3
கர்மேல் மலை
தாபோர் மலை
அபேக்கு
9
தோர்
தானாக்கு
பேத்துசான்
கிலயாது
தோத்தான்
3
பெருங்கடல்
எபால் மலை
கெரிசிம் மலை
இராமோத்து
பெனியேல்
செக்கேம்
சுக்கோத்து
யோர்தான் நதி
அமோரியர்
யோப்பா
11
சீலோ
7
5
ஓபிரா
யாசெர்
இரபா
எக்கரோன்
12
எரிகோ
பெத்தேல்
ஆயி
கில்கால்
இராமா
கெசிபோன்
எருசலேம்
நெபோ மலை
அசோத்து
பெத்லகேம்
அஸ்கலோன்
1
4
அரேபியர்
கெபிரோன்
காசா
சிப்பு
பெசேர்
தெபீர்
சாக்கடல்
இத்தியர்
பெயேர் செபா
அரோயர்
மோவாபியர்
இரகொபோத்து
2
தாமார்
ஏதோம்
1. ரூபன்
2. சிமியோன்
3. மனாசே
4. யூதா
5. தாண்
6. நப்தலி
7. காது
8. ஆசோர்
9. இசக்கார்
10. செபுலோன்
11. எப்பிராயிம்
12. பென்யாமின்

# பாலஸ்தீன் நாடு
(இயேசுவின் காலத்தில்)

Scale: 1  1,700,000

0 5 10 15 20




சீதோன்
லெபனோன் மலை
இத்துரேயா
அபிலேன்
தமஸ்கு
சிரெப்தா
கெர்மோன் மலை
சீரியா
தீர்
பெனிக்கியா
பிலிப்புச் செசரியா
தாண்
திரக்கோனித்து
கொராசின்
பெத்து சயிதா
கப்பர் நகூம்
கானாவூர்
தொலமாய்
மகதலா
கலிலேயா
கலிலேயாக் கடல்
கர்மேல் மலை
திபேரியா
நாசரேத்து
தாபோர் மலை
காதாரா
நயீன்
மத்தியதரைக் கடல்
சலேம்
தெக்காப்பொலி
செசரியா
சமாரியா
ஐனோன்
நதி
சமாரியா
ஏபால் மலை
கெரிசிம் மலை
சிக்கார்
செக்கேம்
கெராசா
அப்பொல்லோனியா
யாக்கோபின் கிணறு
யோர்தான்
அந்திப்பத்திரி
யோப்பா
அரிமத்தியா
பேத்து பாரா
பெத்தேல்
எப்பிராயிம்
இலிதா
பிலதெல்பியா
எரிகோ
ஒலிவு மலை
எம்மாவு
பெரயா
எருசலேம்
கும்ரான்
அயின் கெரேம்
பெத்து பாகே
எசிபோன்
பெத்தானியா
அசோத்து
யூதேயா
பெத்திலகேம்
அசுக்கலோன்
யூதேயாவின் பாலைநிலம்
காசா
கெபிரோன்
சாக்கடல்
பெயேர்-செபா
இதுமேயா


புனித பவுலின்
தூதுரைப் பயணங்கள்
முதல் பயணம் கி.பி. 46—48 (அப். பணி 13—14)
உரோமைப் பயணம் கி.பி. 59—62 (அப். பணி 27—28:16)
தாகியா
மோசியா
தல்மாத்தியா
அதிரியாக் கடல்
இத்தாலியா
உரோமை
மூன்று விடுதி
ஆப்பியு சந்தை
புத்தயோலி
திராக்கே
கருங்கடல்
மக்கதோனியா
தெசலோனிக்கா
பிலிப்பி
அர்மேனியா
சிசிலி
இரேகியும்
சிரக்கூசா
மால்த்தா
அதிராமித்தியம்
ஆசியா
கலாத்தியா
கொரிந்து
அந்தியோக்கியா
(பிசிதியா)
இக்கோனியா
எபேசு
பிசிதியா
இலிசித்திரா
தெருபை
கொலோசை
பெருகை
கப்பதோக்கியா
சிலிசியா
கினிது
அத்தாலியா
பம்பிலியா
மீரா
பதுமோ
கிரேத்து
பேனிக்க
சல்மோனே
கவுதா
செந்துறை
இலசயா
அந்தியோக்கியா
செலூக்கியா
சாலமி
பாப்போ
சீரியா
சைப்ரஸ்
மத்தியதரைக்கடல்
சீரேன்
சீதோன்
தமஸ்கு
லிபியா
செசரியா
அந்திப்பத்திரி
எருசலேம்
0 100 200 300
கி. மீ.
அலெக்சாந்திரியா
எகிப்து


புனித பவுலின்
தூதுரைப் பயணங்கள்
இரண்டாம் பயணம்
கி.பி. 49—52 (அப். பணி 15:39—18:22)
மூன்றும் பயணம்
கி.பி. 53—57 (அப். பணி 18:22—21:16)
கருங்கடல்
போந்து
பித்தினியா
மீசியா
ஆசியா
பிரிகியா
கலாத்தியா
பிசிதியா
பம்பிலியா
சிலிசியா
சீரியா
பெனிக்கியா
சைப்ரஸ்
கிரேத்து
மத்தியதரைக்கடல்
எகிப்து
அலக்சாந்திரியா
எருசலேம்
செசரியா
தொலமாய்
தீர்
அந்தியோக்கியா
செலூக்கியா
தார்சு
தெர்பை
இலிசித்திரா
இக்கோனியா
அந்தியோக்கியா (பிசிதியா)
எபேசு
சிமிருனா
சர்தை
தியத்திரா
பெருக மோன்
மித்திலேன்
கீயு
சாமு
மிலேத்து
கோசு
உரோது
பாத்தரா
செசரியாவுக்கு
எருசலேமுக்கு
துரோவா
ஆசோ
சமொத்திராக்கு
நெயாப்-பொலி
பிலிப்பி
அம்பிப்பொலிஸ்
மக்கதோனியா
தெசலோனிக்கா
பெரோயா
அப்பொல்லோ-னியா
கொரிந்து
ஏதன்சு
கெங்கிரேயா
அக்காயா
0 100 200 300
கி. மீ.

# ஆசிரியரது பிற நூல்கள்

**விவிலிய அறிமுக நூல்கள்**

| | | |
|---|---|---|
| 1. | "தோரா" அல்லது "ஐந்நூல்" | (ஆதி, யாத்திரை, லேவியர், எண், உப ஆகமங்கள்) |
| 2. | வரலாற்று நாயகன் | (யோசுவா, நீதிபதிகள், 1,2 சாமுவேல், 1,2, அரசர்கள், 1,2 நாள், எஸ்ரா, நெகேமியா, 1,2, மக்கபேயர்கள்) |
| 3. | இஸ்ராயேலின் காவலர்கள் – I | (பொது முன்னுரை, ஆமோஸ் ஓசேயா, மீக்கா) |
| 4. | இஸ்ராயேலின் காவலர்கள் – II | (எசாயா, செப்பனியா, நாகூப், அபக்கூக்கு, எரேமியா, எசேக்கியேல், ஆகாய், செக்கரியா, ஒதியா, மாலக்கி, யோவேல்) |
| 5. | ஞான நூல்கள் | (யோபு, பழமொழி, சங்கீதங்கள், திருவுரை, உன்னத சங்கீதம், ஞானநூல், சீராக்கு) |
| 6. | சில கதைகளும் காட்சிகளும் | (யோனா, ரூத்து, தோபியா, எஸ்தர், புலம்பல், பாரூக்கு, தானியேல், யூதித்து) |
| 7. | நான்கு வடிவ நற்செய்திகள் | (மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான் நற்செய்திகள்) |
| 8. | புனித பவுலின் திருமுகங்கள் – I | (பவுலின் வாழ்க்கை வரலாறு, மற்றும் 1 தெசலோனிக்கர், கலாத்தியர், பிலிப்பியர், 1 & 2 கொரிந்தியர், உரோமையர், பிலமோன் ஆகிய திருமுகங்களுக்கு அறிமுகங்கள்) |
| 9. | புனித பவுலின் திருமுகங்கள் – II | (2–ஆம் தெசலோனிக்கர், கொலோசையர், எபேசியர், தீத்து, 1–ஆம், 2–ஆம் திமொத்தேயு ஆகிய திருமுகங்களுக்கு அறிமுகங்களும், பவுலின் இறையியலும்) |

**விளக்கவுரை நூல்**

| | | |
|---|---|---|
| 10. | லூக்காவின் நற்செய்தி | (அருள்வாக்கு மன்றப்பதிப்பு) |
| 11. | விவிலியச் சித்திரக் கதைகள் | **பழைய ஏற்பாடு:** (காயின் ஆபேல், ஆபிரகாம், யாக்கோபு, யோசேப்பு, மோசே, யோசுவா, சிம்சோன் ரூத்து, சாமுவேல், சவுல், தாவீது, அரசன் தாவீது) |
| 12. | விவிலியக் களஞ்சியம் – I | **புதிய ஏற்பாடு:** |
| 13. | விவிலியக் களஞ்சியம் – II | |
| 14. | விவிலியக் களஞ்சியம் – III | |
| 15. | விவிலியக் களஞ்சியம் – IV | |
| 16. | விவிலியக் களஞ்சியம் – V | |

**தயாரிப்பில் உள்ளவை :**

1. விவிலியச் சித்திரக் கதைகள் (பழைய ஏற்பாடு, புதிய ஏற்பாடு)

*கிடைக்குமிடம்*

**தியான ஆசிரமம்**

13, மாதா கோவில் தெரு, சென்னை – 600 028.

**மற்றும் மறைமாவட்ட மேய்ப்புப் பணி நிலையங்கள்.**